அறிவிட் டறியாமை போக்குமூ ரெங்களு
ரன்னிய மொன்று மிலாதவூ ரெங்களூர்
குறியிட் டிதென்னவொண் ணுதவூ ரெங்களூர்
கோசங்க ளைந்துங் குலைந்தவூ ரெங்களூர். 4

புத்தி விகற்ப மறுக்குமூ ரெங்களூர்
பூரண போதமே யானவூ ரெங்களூர்
வித்தும் விளைவு மிலாதவூ ரெங்களூர்
விண்முதற் பூதம் விளைந்தவூ ரெங்களூர். 5

எட்டுத் திசையு நிறைந்தவூ ரெங்களு
ரேகாந்த மாகி யிருக்குமூ ரெங்களூர்
தட்டற்ற யோகிக டங்குமூ ரெங்களூர்
தன்ம பாவங்க டவிர்ந்தவூ ரெங்களூர். 6

உலகத்தை யெல்லா மொருக்குமூ ரெங்களு
ருண்மையொன் றாகியொன் றானவூ ரெங்களூர்
சிலுகற்ற சிற்பர மானவூ ரெங்களூர்
சிந்தனை விட்டுத் தெளிந்தவூரெங்களூர். 7

உன்னப் படாவுணர் வானவூ ரெங்களு
ருள்ளொளி யாகி யிருக்குமூ ரெங்களூர்
கண்ணுக் கணித்தா யிருக்குமூ ரெங்களூர்
கள்ளப் புலனைக் கழிந்தவூ ரெங்களூர். 8

கத்துஞ் சிலுகு மிலாதவூ ரெங்களூர்
காண்பானுங் காட்சியு மற்றவூ ரெங்களூர்
சுத்த வெளியிலே தோன்றுமூ ரெங்களூர்
சோம்பர் சுகமென் றுணர்ந்தவூ ரெங்களூர். 9

உலக முழுது முதித்திட மெங்களு
ரொருமே வையு மற்றிட மெங்களூர்
கலகா நிலை யாகிய தெங்களூர்
கருணா கர னூர்கழ லெங்களூர். 1

இந்தி யக்கள்வர் சேர்வில தெங்களு
ரின்ப நற்பயி ரோங்கிய தெங்களூர்
பந்த மற்றவர் பற்றிட மெங்களூர்
பார்வை யற்ற பரம்பொரு ளெங்களூர் 2

கோசங் குலைந்ததென் றாதேடா காளங்
கூரறி வானதென் றாதேடா காளம்
பாசம் பறிந்ததென் றாதேடா காளம்
பரமே பரமமென் றாதேடா காளம்.

பற்றற்று நின்றோமென் றாதேடா காளம்
பார்ப்பறப் பார்த்தோமென் றாதேடா காள
முற்ற வுணர்வேயென் றாதேடா காள
முள்ளொளி யானோமென் றாதேடா காளம்.

உள்ளது போதமென் றாதேடா காள
முலகமோக் காளமென் றாதேடா காளம்
வெள்ள வெளியிதென் றாதேடா காளம்
வேதஞ் சொன்னவண்ண மாதேடா காளம்.

ஊனே மறிவதென் றாதேடா காள
முணர்வே பிரமமென் றாதேடா காள
நானே யவனுமென் றாதேடா காள
நானுவ தில்லையென் றாதேடா காளம்.

உண்மை வடிவேயென் றாதேடா காள
முட்புறம் பில்லையென் றாதேடா காளந்
திண்மை யறிவேயென் றாதேடா காளந்
திசைதிசை தோறுநின் றாதேடா காளம்.

சாதி கழிந்ததென் றாதேடா காளஞ்
சங்கை தவிர்ந்ததென் றாதேடா காளஞ்
சோதி சுகமேயென் றாதேடா காளஞ்
சொல்லவொண் ணாததென் றாதேடா காளம்.

பாடுதுறை - பாங்கிக்குரைத்தல்.

அடிநான்காய்த் தம்முளொத்துவந்த இரட்டைக்குறள் வெண்செந்துறை

சொல்லெல்லா நாத மென்னவும் பெற்றேஞ்
சும்மா விருக்கை தொழிலாகப் பெற்றே
நல்லவ னன்பரு ணாஞ்சேரப் பெற்றே
நாயனார் தாந்தந்த வாழ்விது பெண்ணே.

மேன்மை கல்வி விழுப்பம் வியப்பினிற்
றானே னுள்ளஞ் சலித்து விழாவகை
ஞான நாயக னேகுறிக் கொள்ளென்னை
யானை யாவறி யேனுன் னடைக்கலம். 2

காம லோபங் கதமத மாதியிற்
போம தாமுளம் போயதி டாவகை
யேம நானறி யேன்குறிக் கொள்ளெனைச்
சேம மேதெளி வாயுன் னடைக்கலம். 3

வஞ்ச மேமகிழ் வேமடி மானமா
நஞ்ச மேயுள நண்ணியி டாவகை
யெஞ்ச வில்லறி வேகுறிக் கொள்ளெனை
யஞ்சி னேனடி யேனுன் னடைக்கலம். 4

சமய வாதங்கள் சாற்று பேதக்கலைச்
சுமையி லேயுளந் தான்றுவ ளாவகை
யமைவி லேனையஞ் சேலென் றருளிடு
விமைய வாவிறை வாவுன் னடைக்கலம். 5

விரத மோடு தவம்பல வெந்நெறிப்
புரைத னூடுளம் போய்ப்புலம் பாவகை
வரத னேகுறிக் கொள்ளெனை மாக்கனி
யிரத னேயிறை வாவுன் னடைக்கலம். 6

சீத மோடழ றீமை நலங்குல
மேத மொன்றற வேயுள மொத்திட
நாத னேகுறிக் கொண்டு நடத்தெனை
யாத னேனறி யேனுன்ன டைக்கலம். 7

பஞ்ச மோடு மழையடை பூசனோய்
நெஞ்சி னுரை நிலைகுலைக் கத்தகு
நெஞ்ச தொன்றி னிலைதள ராவகை
யஞ்ச லென்றரு ளாயுன் னடைக்கலம். 8

மிஞ்சி யேமிடை செய்விகற் பங்களா
னெஞ்சொர் போதொரு வர்க்கு நிலாமைகண்
டஞ்சி வந்துன் னடைக்கலம் பூண்டவென்
னெஞ்சு மேவி யிருந்தரு ளின்மலா. 9

தாக மேபசி யேதணி யாதிடுஞ்
சோக மோகத் துளந்துவ ளாவகை
யேக நல்லறி வேகுறிக் கொள்ளெனை
யாக னேயடி யேனுன் னடைக்கலம். 10



பாடுதுறை - வாழ்க்கைப்பாடு.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

தன்னிலே யெல்லா மிருக்கு மாகிற்
றானெல்லாத் துள்ளு மிருப்ப னாகிற்
பின்னிலன் முன்னில னுவ னாகிற்
பெரிது முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. 1

குணக்குன்று தானு யிருப்ப னாகிற்
குணமிலி தானு யிருப்ப னாகி
லிணக்கொன்று மின்றி யிருப்ப னாகி
லின்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. 2

அண்ட மணுவாப் பெரிய னாகி
லணுவண்ட மாகச் சிறிய னாகிற்
கொண்டார்கள் கொண்ட வடிவ னாகிற்
கூடி முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. 3

நல்லதுந் தீயது மல்ல னாகி
னனுந்தா னாகி யிருப்ப னாகி
லில்லது முள்ளது மல்ல னாகி
லின்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. 4

ஒளியா யிருளா யிருப்ப னாகி
லுருவா யருவா யிருப்ப னாகிற்
களியாக் களியா யிருப்ப னாகிற்
கடிதின் முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. 5

ஓரா யிரம்பே ருடைய னாகி
லுண்மைக் கொருபேரு மில்லை யாகில்
வாராதே நம்பால் வருவ னாகில்
வந்து முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. 6

இருக்கச்செய் தேயெங்கும் போவ னாகி
விளமை மூப்பின்றி யிருப்ப னாகி
லருக்கற்குந் தானொளி யாவ னாகி
லன்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. 7

சொல்லாதே சொல்லி யிருப்ப னாகிச்
சுகசொரூ பன்னா யிருப்ப னாகி
யெல்லாமா யல்லா திருப்ப னாகி
லின்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. 8

கண்ணின்றி யாவையுங் காண்ப னாகிக்
கையின்றி யேகைப் பிடிப்ப னாகி
லண்ணிய னாயதி தூர னாகி
லன்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. 9

வித்தின்றி யேநாறு செய்வ னாகில்
விளையாதே போகம் விளைப்ப னாகிச்
சத்திய மும்பொய்யு மல்ல னாகிச்
சால முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. 10

எக்காலு மென்றுங் கெடாத வன்மை
யெப்பொரு ளுந்தந்த வப்பொருளை
யக்காய்ப் புகுந்துநின் றாட வேண்டுந்
தொந்தசி யென்றுநின் றாட வேண்டும். 11



பாடுதுறை - காரணற்காணக் காணத்திகழ்ச்சி.

ஈற்றடிமிக்குவந்த நான்கடிக் கலித்தாழிசை.

தொழுந்தேவர் நின்றயாத் தான்பப் பிறப்பி
லழுந்தே லெனவெனைத்தா னடிப் புரத்தி
யழுந்தூர் பொழுதி லுரைத்தா னுரைத்த
செழுந்தேற லுண்ணாச் செவியுஞ் செவியே
தேசிகன் சீர்கேளாச் செவியுஞ் செவியே. 1

அரும்பி முளையா யலராகிக் காய்த்துக்
குரம்பை பழுத்துதிர்ந்தோர் கொள்கையா யின்றும்
திரும்பிப் புகாமே சிவன்கோயில் கொள்ள
விரும்பத் தவமில்லா மெய்யென்ன மெய்யே
மெய்க்கோயி லாகாத மெய்யென்ன மெய்யே. 2

ஒளிக்கு மொளியா மொளியுருவங் கொண்டு
வெளிக்க ணெழுந்தருளும் வேதியனைக் கண்டு
துளிக்கு மருவி சொரியச் சொரியக்
களிக்குந் திறமிலாக் கண்ணென்ன கண்ணே
கருணைக் கழல்காணாக் கண்ணென்ன கண்ணே. 3

பொற்றா மரையவனாப் புத்தேளி ராயவர்தஞ்
சற்றா மரசாய்ச் சகத்தே பிறந்திறந்து
சுற்றா மரைபோற் சுழலா வகையாண்ட
நற்றா மரைமுரலா நாசியு நாசியே
ஞான மணங்கவரா நாசியு நாசியே. 4

உயர்ந்தவா ஞேரு மொளிமறையும் போற்றப்
பயந்தவா பாராதிப் பார்மிசையே யென்னை
யயர்ந்தவா றோடி யழிவேனை யாள
நயந்தவா பாடாத நாவென்ன நாவே
நற்சொரூபா னந்தனென்னா நாவென்ன நாவே. 5

மலரோன் முதலோர் மறைகோடி கோடி
கலைதேடி நின்றயரக் கண்காண வந்தென்
றலைதேடித் தந்த தடந்தாளிற் றூவ
வலர்தேடிப் போகா வடியு மடியே
யாலயஞ் சூழ்போகா வடியு மடியே. 6

குழலே யனையமொழிக் கோல்வளையார் மாயச்
சுழலே யுழலுமனத் தொல்வினையேன் செல்லு
மழலே யனைய பிறப்பறுத்த வம்பொற்
கழலேவல் செய்யாத கையென்ன கையே
கடிமலர் தூய்த்தொழாக் கையென்ன கையே. 7

உவமந் தனக்கி லுபநிடதந் தேடுஞ்
சிவமுந் திருவுருவாய்த் தீயேன தெல்லாப்
பவமுங் கெடவருளும் பங்கயத்தே வீழத்
தவமுன்பு செய்யாத தலையுந் தலையே
தலைவன்றாள் சூடாத தலையுந் தலையே. 8

சீர்பாடு மூவர்கள்பாற் றேவர்கள்பாற் செம்மைமிகு
மார்பாடுஞ் சாராத வானந்தன் றான்வந்திங்
கோர்பாடு மில்லே னுளமறிய வுட்புகுந்த

நேர்பாடு தானினையா நெஞ்சென்ன நெஞ்சே
நெக்குநெக் குள்ளுருகா நெஞ்சென்ன நெஞ்சே. 9

இம்மை மறுமை யெனப்பகரு மின்னல்சேர்
பொய்ம்மை யுருவாகிப் பொன்றுமைப் போதமாய்
மெய்ம்மையா னந்தம் வெறுமின்ப மாய்விளங்குந்
தம்மைப் பெறவில்லார் தரமென்ன தரமே
தற்சொரூப மாகாதார் தரமென்ன தரமே. 10



பாடுதுறை - நெஞ்சிற்கமைவுரை.



நேரிசைவெண்பா.

உப்பகன்ற நீர்க்கூழு முண்டாற் பசிகெடுமா
லப்பதுண்டு கூவல்குள மாறதனி—லிப்படியைப்
பார்த்தமையாய் நெஞ்சே பரந்தெழுந்து சென்றாலும்
போர்த்துளதின் மேல்வருமோ பேறு. 1

பல்காய நற்கறியும் பானெய்ப்பழத் தோட்டிசில்
செல்வாய தேசஞ் செறிந்தாலு—மெல்லவுனை
யூட்டாவூ முண்டே லுறுபிணி யாதொன்றால்
வீட்டாதோ நெஞ்சே விரைந்து. 3

நல்ல வறுசுவைதா னுக்கினுனி மாத்திரமே
யெல்லை யிருவிரலே யல்லதிலை—மெல்ல
விருவிரலைத் தான்கடக்க மாட்டாதே நெஞ்சே
பொருகடலைத் தான்கடப்பாய் போய். 3

ஆடை யழகினைநன் காதரித்தே யாங்கதற்கென்
றோடி யுறுபொருளுக் குற்றுழன்றாய்—கூடியதேல்
வண்ணு னெவிமருவார் வைப்பிடமற் றின்னவற்றா
லெண்ணுயோ நெஞ்சே யிடர். 4

கந்தையொடு வெண்ணீறு கண்முழைபாழ்ங் கோயில்பல
முந்தையுள சீத முறுமென்னின்—வெந்துயரக்
கோடையினிற் கோவணமுங் கூடமிகை யித்தனைகா
ணுடையினிற் காரியந்தா னுங்கு. 5

நீயா யமையாய் நினைந்தோடிக் கிட்டாமை
யேயா வமைந்தா யிடர்நெஞ்சே—சாயோ
கடையானார்க் காய்பசிக்கே கால்குலைவர் கற்றோ
ரடையாரோ வாங்கமைவின் பால். 6

அமையாதே பெற்றதனா லாங்காங்கு நன்றென்
றிமையா தெழுந்தோடு கின்றாய்—சமையாச்
சிறுமைக்கு வித்ததுவாந் தேறாய் மனனே
மறுமைக்கு மஃதே மறைப்பு. 7

ஆற்றங் கரைப்பசுத்தா னக்கரையோ டிக்கரையாய்த்
தோற்றும் பசுப்பைத் தொடர்வுறுமே—யாற்ற
வதுவேபோ னெஞ்சே யலைந்தலைப்பட் டோடு
மிதுவே யுனக்கிதனாற் பேறு. 8

இருந்தவிடத் தேதும்வரக் கண்டிருப்ப தன்றோ
பெருந்தகைமைக் காபரணம் பேதாய்—மருந்தெனவே
யாங்கினியார் தங்கடையிற் சென்றிடினு மாதரியார்
பாங்கிதுகாண் பாழ்நெஞ்சே பார். 9

உணர்ந்தார்க் குடம்பு மிகையென் றுலக
முணர்ந்தா ருணர்ந்தே யுரைத்தா—ரிணைந்தாம்
பொருண்முழுதும் விட்டாலும் பொய்யுடம்பிற் காதன்
மருளதுவா நெஞ்சே மறித்து. 10

இல்லாத தில்லை யுளதுதவி ராதென்று
நல்லார் துணிபொருளை நாடுங்கா—லெல்லா
மமைந்தபடி யேவருமா லாங்கசைவெ னெஞ்சே
சமைந்தபொரு டாமறிவார் தாம். 11

இங்கேதன் னானுயிரை யேதமறக் கண்டவிடத்
தங்கே யெலாமமைய லாயிருக்க—வெங்கேனுங்
காடு மலையுங் கடந்துடம்புக் காய்வருந்தி
யோடுவதே னெஞ்சே யுரை. 12

அமைதற் குபாய மறிந்திடநீ வேண்டிற்
கமையுற்ற ஞானக் கரும்பைத்—தமையுற்ற
வாரியர்பாற் பெற்றங் கவரடிக்கே யேவலினை
யோரியல்பாற் செய்நெஞ்சே யுற்று. 13

நீடுந் தலைகீழ்கான் மேலாகி நின்றாலுங்
கூடும் படியொழியக் கூடாதா—லோடி
வருந்தாம லுள்ளபடி வந்திடக்கண் டாறி
யிருந்தாலோ நெஞ்சே யினிது. 14

நல்லோரை மேவி நலங்கிடக்க வங்குள்ள
பொல்லாங்கு கொண்டோடிப் போகாதே—யெல்லா
மருளியவா செய்தங் கலதொழிநீ நெஞ்சே
பொருளியல்வே றில்லையினிப் போற்று. 15

வைதலும் வாழ்த்துதலும் வார்த்தையினிற் கற்பித்து
நையுமது நெஞ்சே நலமன்று—மெய்தும்
புரையிடத்து வாயுப் புரைக்குமொலி யென்றே
யுரையிடத்துக் கோளொழிநீ யுற்று. 16

ஒன்பதுவா யாலு மலஞ்சொரிய வூத்தைகமழ்
புன்புலையாங் குற்றப் புலாலுடம்பை—யன்புடனே
யேத்துவார் வைவா ரிழிவுரைப்பா ரல்லாதா
ராத்தமா மெய்யுணர்வார்க் காங்கு. 17

வாயுவன னீர்பிணிதான் மற்றும் பலபலவா
வாயசட வேதுவினு லாம்பயனுக்—கேயவொரு
செற்றநலங் கொண்டிலையேற் சேதனவே துத்தனையு
மற்றவண நெஞ்சே மதி. 18

ஆர்வமொடு செற்றத்தை யாரிடத்துங் கொள்ளாதே
சாரமுள தெவ்விடத்துந் தான்கொண்டு—தீரவுணர்
நல்லோர்தஞ் சொல்லை நழுவாமை நீகொண்டு
நில்லா யிதுவே நெறி. 19

பெற்றதுவே கொண்டமைந்து பேரிழவிற் கொல்காதே
குற்றநல மென்கோள் குறுகாதே—மற்றும்
பயனின் மொழியாதே பார்த்துளமே நல்லோர்
நயமுமற வாதே நட. 20

பொய்க்கனவும் பேய்த்தேரும் போலுமுடல் போமளவுஞ்
சிக்கெனவே நாதன் றிருவடியை—நெக்குருகிப்
பூண்டுவிடா தேகிடந்து போற்றியிடு நெஞ்சேநீ
மீண்டுபிற வாதே விட. 21

ஆண்ட வியல்பை நினைந்து நினைந்துருகி
வேண்டிமிக மெய்யன்பை மேன்மேலு—மாண்ட
வடியிணையே பூண்டமைவா மாரமிர்தை நெஞ்சே
யொடிவரவே நீயுண் டிரு. 22



பாடுதுறை - வளவி யுடன்படுத்தல்.

*அடியிரண்டாய்த் தம்மு ளொத்துவந்த*
*குறள் வெண்செந்துறை.*

இமைத்து விழிப்பதற் கில்லை வாணு
ளிதிலுள்ள துன்பங்க ளெண்ணில் கோடி
யமைத்தனைப் பார்த்தல் லலறு நெஞ்சே
யாண்டவ னென்றென் றரற்ற வாரீர். 1

மின்னிலு நொய்திவ் வுடம்பின் றன்மை
மேன்மேலும் வந்திடும் வேத னைக
ளன்னதே யிவ்வுடம் பாவ தானு
லாய்வானை யெப்போது மாய வாரீர். 2

இல்லாது வேண்டினும் வந்தி சையா
வுள்ளது தள்ளினு மோட்டு மானு
லெல்லாம் வரக்கண்டோ ரிச்சை யின்றி
யிருந்த படியே யிருக்க வாரீர். 3

என்னுணை கேளிஃ தொன்று நெஞ்சே
யேதேனுஞ் செய்தினி யுள்ள காலந்
தன்னுக நாயோமை யாண்டு கொண்ட
தாள்களை யோவாது சாற்ற வாரீர். 4

பொன்று முடம்பு பொருந்து மின்பம்
புன்னுனை நீராகும் புன்மை நெஞ்சே
யென்றபி னெல்லாம் வீழ விட்டே
யிருந்த படியே யிருக்க வாரீர். 5

ஒன்றெனி லாயிர கோடி துன்ப
மோய்வின்றி யேவரு மோரி னெஞ்சே
யொன்றுமற் றுள்ளநா மாயி ருந்தே
யுளநாள் கழிக்க வொருப்படீரே. 6



## தடையகற்றுகேது காண்டல்.

---

### பாடுதுறை - முத்திரை.

அடிநான்காய்த் தம்முளொத்துவந்த
குறள் வெண்செந்துறை.

செத்துப் பிறக்கக் கொடாதெங்கள் முத்திரை
செம்பிற் செறிக்கப் படாதெங்கள் முத்திரை
யத்தத்தி அத்திர மாமெங்கள் முத்திரை
யாலின்கீழ் நால்வர்க் கரன்சொன்ன முத்திரை. 1

எண்ணி விலக்கிட் டிடாதெங்கள் முத்திரை
யெண்ணுவா ரெண்ணங் கடந்திட்ட முத்திரை
பண்ணி யழிக்கப் படாதெங்கள் முத்திரை
பார்ப்பறப் பார்க்கும் பரஞான முத்திரை. 2

வெண்ணூலிற் கோவைப் படாதெங்கள் முத்திரை
வேதமா நூலின் விளைகின்ற முத்திரை
பெண்ணு ணலாத பெருமான்றன் முத்திரை
பேசற் கரிய பெரியோன்றன் முத்திரை. 3

---

### பாடுதுறை - மெய்ஞ்ஞானவிளக்கம்.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

ஆடு பார்க்குதேடா வாரக் கோனே
யடையப் படர்ந்துதேடா வாரக் கோனே
யோடி மறியேடா வாரக் கோனே
யுள்ளே மறியேடா வாரக் கோனே. 1

குறுகவனை குறுகவனை கோலக் கோனே
குரவனடி குறுகவனை கோலக் கோனே
குறுகவனைத் தவிழவிராய் கோலக் கோனே
குரம்பைதனைக் குலையவிராய் கோலக் கோனே. 2

ஓடிப்பிடி காட்டோநான் போகு தேனே
யோடாமை புள்ளே மறிக்கு தேனே
யோடாமை புள்ளே மறித்த வாறே
யோவாமை நின்று நடுங்கு தேனே. 3

ஓவாதே நின்று நடுங்கு மென்னை
யுள்ளே புகத்திரியத் தள்ளு தேனே
காவா நரகமுங் கைக மூன்று
கருதுமங் கொன்றையுங் காண்கி லேனே. 4

காணுதே நின்று கழியு மென்னைக்
காலிட்டுக் காலிட்டுப் பாயு தேனே
காணுத கண்ணைத் துடைக்கு தேனே
கதிர்போ லறிவங்கே காண்கு தேனே. 5

அறிவா லனைத்தையுங் காண்கு தேனே
யறிந்த வறிவா யிருக்கு தேனே
பிறியா வறிவா யெனையு மந்தப்
பேச்சற் றிடத்தி லொளிக்கு தேனே. 6

பேராமை பேச்சற் றிடத்தே வைத்துப்
பேரின்பப் பாற்சோ றிடுகு தேனே
யாராதே நான்வாரி யுண்கு தேனே
யடையவு நானு யிருக்கு தேனே. 7

உண்டு களித்துநின் றுடு தேனே
யோவா தொளிரநின் றுடு தேனே
யண்ட மழிந்துநின் றுடு தேனே
யலைவறக் கொட்டிநின் றுடு தேனே. 8

உண்மைக் குழலைநின் றூது தேனே
யுரைமாண்டு சும்மா விருக்கு தேனே
வண்மைக் கருணை வளத்தை யுன்னி
மறுகி யுடைந்துக்குப் போகு தேனே. 9

ஆதார மிக்குநின் றுடாய் கோனே
யதிசய மிக்குநின் றுடாய் கோனே
சாதியை விட்டெறிந் தாடாய் கோனே
சதுரினை விட்டெறிந் தாடாய் கோனே. 10



## உபதேசக்கிரம முணருமா றுரைத்தல்.



### கைவல்லிய நவநீதம்.

நித்திய வநித்தி யங்க ளிண்ணயந் தெரிவி வேகம்
மத்திய விகப ரங்கள் வருபோகங் களினி ராசை
சத்திய முரைக்க வேண்டுஞ் சமாதியென் றாறு கூட்டம்
முத்தியை விரும்பு மிச்சை மொழிவர்சா தனமிந் நான்

சமந்தமம் விடல்ச கித்தல் சமாதானஞ் சிரத்தை யாறு
சமமகக் கரண தண்டந் தமம்புறக் கரண தண்டம்
அமர்தரு கருமம் பற்றா தறுத்தலே விடலென் றாகும்
மமர்செயுங் காம மாதி வரினடக் குதல்ச கித்தல்.

சிரவணப் பொருளைத் தானே சித்தஞ்சிந் திக்கு மாறு
சரதமா வைக்கு மித்தைச் சமாதான மென்பர் மேலோ
பரமசற் குருநூ லன்பு பற்றலே சிரத்தை யாகும்
வரமிகு சமாதி யாறு வகையின்சொற் பொருளி தாமே.

சாதன மின்றி யொன்றைச் சாதிப்பா ருலகி லில்லை
ஆதலா லிந்த நான்கு மடைந்தவர்க் கறிவுண் டாகும்
நூதன விவேகி யுள்ள நுழையாது நுழையு மாகில்
பூதசன் மங்கள் கோடி புனிதனும் புருட னாமே.

இவனதி காரி யானே னிந்திரி யங்க ளாலும்
புவனதெய் வங்க ளாலும் பூதபௌ திகங்க ளாலும்
தவனமூன் றடைந்து வெய்யிற் சகித்திடாப் புழுப்போல்
பவமறு ஞான தீர்த்தம் படிந்திடப் பதறி னானே.

ஆனபின் மனைவி மக்க ளர்த்தவே டணைகண் மூன்றில்
கானவர் வலையிற் பட்டுக் கைதப்பி யோடு மான்போல்
போனவன் வெறுங்கை யோடே போகாத வண்ணஞ் செ
ஞானசற் குருவைக் கண்டு நன்றாக வணங்கி னானே.

வணங்கிநின் றழுது சொல்வான் மாயவாழ் வெனுஞ்சோ
உணங்கினே னைய னேயென் னுள்ளமே குளிரும் வண்ண
பிணங்கிய கோச பாசப் பின்னலைச் சின்ன மாக்கி
இணங்கிய குருவே யென்னை யிரட்சித்தல் வேண்டு மென்

அன்னதன் சிசுவை யைய னுமைமீன் பறவை போலத்
தன்னகங் கருதி நோக்கித் தடவிச்சந் நிதியி ருத்தி
உன்னது பிறவி மாற்று முபாயமொன் றுண்டு சொல்வேன்
சொன்னது கேட்பா யாகிற் றொடர்பவந் தொலையு மென்றான். 8

சொன்னது கேட்க மாட்டாத் தொண்டனு னுலுஞ் சுவாமி
நின்னது கருணை யாலே நீரென்னை யாள லாமே
உன்னது பிறவி மாற்று முபாயமொன் றுண்டென் றீரே
இன்னதென் றதைநீர் காட்டி யீடேற்றல் வேண்டு மென்றான். 9

அடங்கிய விருத்தி யானென் றறிந்தபின் செறிந்த மண்ணின்
குடம்பையுட் புழுமுன் னூதுங் குளவியின் கொள்கை போலத்
தொடங்கிய குருவு மான்ம சொரூபமே மருவ வேண்டி
யுடம்பினுட் சிவ னைப்பார்த் துபதேச மோது வாரே. 10

தன்னையுந் தனக்கா தாரத் தலைவனை யுங்கண் டானேல்
பின்னையத் தலைவன் றானுப் பிரமமாய்ப் பிறப்புத் தீர்வன்
உன்னைநீ யறிந்தா யாகி லுனக்கொரு கேடு மில்லை
என்னைநீ கேட்கை யாலே யீதுப தேசித் தேனே. 11

என்னைத்தான் சடனு வுள்ளத் தெண்ணியோ சொன்னீ ரையா
தன்னைத்தா னறியா மாந்தர் தரணியி லொருவ ருண்டோ
பின்னைத்தா னவர்க ளெல்லாம் பிறந்திறந் துழலு வானேன்
நின்னைத்தா னம்பி னேற்கு நிண்ணய மருளு வீரே. 12

இன்னது தேகந் தேகி யிவனென வுணர்வான் யாவன்
அன்னவன் றன்னைத் தானென் றறிந்தவ னுகு மென்றார்
சொன்னபின் றேகி யாரித் தூலமல் லாம லென்றான்
பின்னது கேட்ட வையர் பிழையு நகையுங் கொண்டார். 13

தேகமல் லாமல் வேறே தேகியார் காணே னென்றாய்
மோகமாங் கனவில் வந்து மூளைத்தவ னெவனீ சொல்வாய்
சோகமாங் கனவு தோன்றாச் சுழுத்திகண் டவனார் சொல்வாய்
ஆகநீ நனவி லெண்ணு மறிவுதா னேது சொல்வாய். 14

நனவுகண் டதுநான் கண்ட நனவுள நினைவு நீங்கிக்
கனவுகண் டதுஞ்சு ழுத்தி கண்டதும் வேறென் றேபோல்
தினமநு பவிப்ப தொக்குந் தெரியவு மில்லை சற்றே
மனதினி லுதிக்கும் பின்னே மறைக்குமத ருளு வீரே. 15

தாலத்தின் மரங்கள் காட்டித் தனிப்பிறை காட்டு வார்போல்
ஆலத்தி னுடுக்கள் காட்டி யருந்ததி காட்டு வார்போல்
தூலத்தை முன்பு காட்டிச் சூக்கும சொரூப மான
மூலத்தைப் பின்பு காட்ட முனிவரர் தொடங்கி னாரே. 16

அத்தியா ரோப மென்று மபவாத மென்னுஞ் சொல்லும்
உத்தியாற் பந்தம் வீடென் றுரைக்கும்வே தாந்த மெல்லாம்
மித்தையா மாரோ பத்தாற் பந்தமா மபவா தத்தால்
முத்தியா மிவ்வி ரண்டின் முந்தியா ரோபங் கேளாய். 17

ஆரோப மத்தி யாசங் கற்பனை யாவ வெல்லாம்
ஓரோர்வத் துவினில் வேறே யோரோர்வத் துவினை யோர்தல்
நாருடு பணியாய்த் தோன்றல் நாணுகித் தநியிற் றோன்றல்
நீருடு கானற் றோன்றல் நிறந்தலம் வெளியிற் றோன்றல். 18

இப்படிப் போல நாம ரூபங்க ளிரண்டு மின்றி
ஒப்பமா யிரண்டற் றொன்று யுணர்வொளி நிறைவாய் நிற்கும்
அப்பிர மத்திற் றோன்று மைம்பூத விகார மெல்லாம்
செப்புகற் பனையி னாலே செனித்தவென் றறிந்து கொள்ளே. 19

கற்பனை வந்த வாறு காட்டினோங் காண்ப வெல்லாஞ்
சொற்பனம் போலு மென்றே துணிந்தவன் ஞானி யாவான்
செற்புதை மழைக்கா லம்போய்த் தெளிந்தவா காசம் போல
அற்புத முத்தி சேரு மபவாத வழியுங் கேளாய். 20

அரவன்று கயிறென் றூற்போ லாளன்று தறியென் றூற்போல்
குரவன்சொல் லுபதே சத்தாற் கூறுநா லொளியைக் கொண்டு
புரமன்று புவன மன்று பூதங்க ளன்று ஞானத்
திரமென்னும் பிரம மென்று தெளிவதே யபவா தங்காண். 21

படமுநூ லும்போற் செய்த பணியும்பொன் னும்போற் பார்க்கில்
கடமுமண் ணும்போ லொன்றுங் காரிய கார ணங்கள்
உடன்முதற் சுபாவ மீறு வொன்றிலொன் றுதித்த வாறே
அடைவினி லொடுக்கிக் காண்ப தபவாத வுபாய மாமே. 22

சுத்தியில் வெள்ளி போலத் தோன்றிய தோற்ற மான
சத்தியும் பொய்யே யென்றாற் சத்திசா தனமா வந்த
முத்தியும் பொய்யா மென்னில் மோகநித் திரையி லங்கால்
நித்திரை தெளியு மாபோ னிருவாண நிலைமெய் யாமே. 23

இம்பரி னஞ்சை நஞ்சா விரும்பினை யிரும்பா லெய்யும்
அம்பினை யம்பாற் பற்று மழுக்கினை யழுக்கான் மாய்ப்பர்
வம்பியன் மாயை தன்னை மாயையான் மாய்ப்பர் பின்னைத்
தம்பமா மதுவுங் கூடச் சவஞ்சுடு தடிபோற் போமே. 24

இந்தமா யையினாற் சீவர்க் கேழவத் தைகளுண் டாகும்
அந்தவே ழவத்தை தம்மை யடைவினின் மொழியக் கேளாய்
முந்தவஞ் ஞான மூடன் முளைத்தல்கா ணாத ஞானம்
சந்ததங் கண்ட ஞானந் தழல்கெடல் குளிர்மை யாதல். 25

பிரமமாந் தனைம றந்த பேதைமை யேயஞ் ஞானம்
பரனிலை காணே மென்று பகர்தலா வரண மூடல்
நரனொரு கருத்தாற் சீவ னானென முளைத்த றோற்றம்
குரவன்வாக் கியத்தாற் றன்னைக் குறிக்கொளல் பரோட்ச ஞானம்.

தத்துவ விசாரஞ் செய்து சகலசந் தேக மும்போய்
அத்துவி தந்தா னாத லபரோட்ச ஞான மாகும்
கத்தனுஞ் சீவ பேதங் கழிவதே துக்கம் போகல்
முத்தனா யெல்லாஞ் செய்து முடிந்ததா நந்த மாமே. 27

இதுநினக் கறியும் வண்ண மிப்படி யொருதிட் டாந்தம்
புதுமையாங் கதைகேள் பத்துப் புருடரோ ராற்றை நீந்தி
உதகநீ ரத்தி லேறி யொருவனோன் பதுபே ரெண்ணி
அதனொடு தசமன் றானென் றறியாமன் மயங்கி நின்றான். 28

அறியாத மயலஞ் ஞான மவனில்லைக் காணே மென்றல்
பிறியாவா வரண மாகும் பீழைகொண் டழல்விட் சேபம்
நெறியாளன் றசம னுண்டு நிற்கின்றா னென்ற சொல்லைக்
குறியாக வெண்ணி நெஞ்சிற் கொள்வது பரோட்ச ஞானம். 29

புண்ணிய பதிகன் பின்னும் புருடரோன் பதின்மர் தம்மை
எண்ணுநீ தசம னைவை யென்னவே தன்னைக் காணல்
கண்ணினிற் கண்ட ஞானங் கரைதல்போ வதுநோய் போதல்
திண்ணிய மனத்தி லையந் தெளிதலா நந்த மாமே. 30

தசபுமான் றனைக்கண் டாற்போற் சற்குரு மூர்த்தி.யேயென்
நிசவடி வினையான் காண நீர்காட்டல் வேண்டு மென்றான்
அசிபெறு மிலட்சி யார்த்தந் துவம்பதந் தற்ப தங்கட்
கசிபத வைக்கியஞ் செய்யு மதுசெயு முண்மை கேளாய். 31

விண்ணொன்றை மகாவிண் ணொன்று மேகவிண் ணொன்றும் பாவின்
மண்ணொன்று கடவிண் ணொன்று மருவிய சலவிண் ணொன்றும்
எண்ணுங்கற் பனைபோ லொன்றே யெங்குமாம் பிரம மீசன்
நண்ணுங்கூ டத்தன் சீவ னென்குசை தங்ய மாமே. 32

பூச்சிய வீசன் சீவன் புகல்பத மிரண்டி னுக்கும்
வாச்சியம் லட்சி யந்தான் மலமிலாப் பிரம மான்மா
காச்சிய பாலி னெய்போற் கலந்தொன்றாங் கடைந்தெ டுக்கும்
ஆச்சிய மென்ன வுன்னை யறிந்துநீ பிறிந்து கொள்ளே. 33

பிறிவதெப் படியென் றக்காற் பிணமாகு முடனென் றும்
அறிவினைக் கொல்லல் வேண்டு மைம்பூத விகார மன்றோ
வெறியதோர் துருத்தி மூக்கின் விடுவது போலுன் மூக்கால்
எறிபிரா ணனுநீ யல்லை யிராசத குணவி காரம். 34

காரணமா மனது புத்தி கருத்தாவா மவையான் மாவோ
தரமுள விரண்டு கோசஞ் சத்துவ குணவி காரம்
வரமறு துயிலா நந்த மயனையு நானென் றோதே
விரவிய தமவஞ் ஞான விருத்தியின் விகார மாமே. 35

சத்தொடு சித்தா நந்தஞ் சமந்திரஞ் சாட்சி யேகம்
நித்தியம் வியாபி யான்மா நீயது வாவ றிந்து
பொத்தொடு சடந்துக் காதி பொருந்துமே தங்க ளான
குத்திர பஞ்ச கோசக் குகைவிட்டு வெளியி லாவாய். 36

பஞ்சகோ சமும்விட் டப்பாற் பார்க்கின்ற பொழுது பாழே
விஞ்சிய ததுவல் லாமல் வேறொன்றுந் தெரியக் காணேன்
அஞ்சன விருளே யோநா னகமென வநுப விப்பேன்
வஞ்சமில் குருவே யென்ற மகன்மதி தெளியச் சொல்வார். 37

முன்புகல் தசமன் புத்தி மோகத்தா லெண்ணி யெண்ணி
ஒன்பது பேரைக் கண்ட வொருவனுந் தனைக்கா ணாத
பின்பவ னிடையிற் கண்ட பெரியபா ழுவனே பாராய்
அன்புள மகனே காண்ப தடங்கலுங் காண்பா னீயே. 38

தூலசூட் சுமவஞ் ஞானந் தோன்றுமூன் றவத்தை தாமும்
காலமோர் மூன்றுஞ் சன்மக் கடலெழுங் கல்லோ லங்கள்
போலவே வந்து வந்து போனவெத் தனையென் பேனுன்
ஆலமர் கடவு ளாணை யவைக்கெலாஞ் சாட்சி நீயே. 39

கல்லார்கண் டறியு மென்னை யேதுகொண் டறிவே னென்று
சொல்லாதே சுயமாஞ் சோதிச் சுடருக்குச் சுடரே யுண்டோ
பல்லார்முன் றசமன் றன்னைப் பார்ப்பதுந் தனைக்கொண் டேதான்
அல்லாமற் பதின்மருள் ளொருவனிடத் தான்றோ பாராய். 40

அறிவுக்கு மறிவு மெய்ய றிவுமே யான்றனென் றென்றும்
அறிவற்ற குதர்க்க மூடர்க் கனவத்தை பலமாய்த் தீரும்
அறிபடும் பொருளீ யல்லே யறிபடாப் பொருளு மல்லே
அறிபொரு ளாகு முன்னை யநுபவித் தறிவாய் நீயே. 41

வடநூல்வல் லவர்கள் சொல்லும் வாசகப் பொருள்சே ராமல்
இடராகிற் பொருளாம் வண்ண மிலக்கணை யுரையாற் கொள்வார்
திடமான வதுவு மூன்றாஞ் செப்புவர் விட்ட தென்றும்
விடலிலா தென்றும் விட்டு விடாததென் றும்பே ராமே. 42

கங்கையிற் கோஷ மென்றுங் கறுப்புச்சேப் போடு தென்றும்
தங்கிய சோயந் தேவ தத்தனென் றுஞ்சொல் வார்கள்
இங்குதா ரணங்க ளாக்கி யிக்கூற்றன் றுரைத லாலே
அங்கநூல் விரோத மான சொல்லெலாம் பொருளாக் காணே. 43

பன்னிய சோய மென்னும் பதங்களின் வாச்சி யார்த்தம்
அன்னிய தேசங் கால மவனிவ னென்ப வெல்லாம்
சொன்னவிவ் விரோதம் விட்டுத் தொடரிலக் கியங்வி டாமல்
உன்னிடுந் தேவ தத்த னொருவனை வெளியாக் காட்டும். 44

தத்துவ மெனும்ப தங்கள் விரமமாய்ச் சாட்சி யான
வத்துவை விடாமற் பேத வாச்சியார்த் தத்தை விட்டு
நித்தமு மதுநீ யாகு நீயது வாகு மென்னும்
அத்தமு மகண்ட மென்றே யபேத வைக்கியங் காட்டும். 45

கடநீரின் மேக நீரிற் கண்டவா னிரண்டும் பொய்யே
குடவானும் பெரிய வானுங் கூடிபொன் றுமெப் போதும்
இடமான பிரமஞ் சாட்சி யிரண்டிலும் போது மேகம்
இடமாகச் சொல்லா தூதி சிவோகமென் றிருந்தி டாயே. 46

தஞ்சமாங் குருவுஞ் சொன்ன தத்துவ வழிதப் பாமல்
பஞ்சகோ சமுங்க டந்து பாழையுந் தள்ளி யுள்ளில்
கொஞ்சமா யிருப்பும் விட்டுக் கூடத்தன் பிரம மென்னும்
நெஞ்சமு நழுவி யொன்றும் நின்றபூ ரணத்தைக் கண்டான். 47

அனுபவா நந்த வெள்ளத் தழுந்தியே யகண்ட மாகித்
தனுகர ணங்க ளாதி சகலமு மிறந்து சித்தாய்
மனதுபூ ரணமாய்த் தேக மானசற் குருவுங் காண
நனவினிற் சுழுத்தி யாகி நன்மகன் சுபாவ மானான். 48

அளிமக னெடும்போ திவ்வா றானபின் மனது மெள்ள
வெளியில்வந் திடவு ணர்ந்தான் விமலதே சிகனைக் கண்டான்
துளிவிழி சொரியப் பாதந் தொழுதுவீழ்ந் தெழுந்து சூழ்ந்தான்
குளிர்முகச் சுவாமி கேட்கக் கும்பிட்டு நின்று சொல்வான். 49

ஐயனே யெனதுள் ளேநின் றநந்தசன் மங்க ளாண்ட
மெய்யனே யுபதே சிக்க வெளிவந்த குருவே போற்றி
உய்யவே முத்தி நல்கு முதவிக்கோ ருதவி நாயேன்
செய்யுமா றொன்றுங் காணேன் றிருவடி போற்றி போற்றி. 50

சிட்டனிவ் வாறு கூறத் தேசிகர் மகிழ்ந்து நோக்கிக்
கிட்டவா வெனவி ருத்திக் கிருபையோ டருளிச் செய்வார்
துட்டமாந் தடைகள் மூன்றுந் தொடராமற் சொரூப ஞான
நிட்டனா யிருக்கி னீதே நீசெயு முதவி யாமே. 51

நீநானென் றிரண்டி லாம னிறைந்தபூ ரணமா யெங்கும்
நானுகத் தெளிந்த ஞான நமூவுமோ குருவே யென்றான்
தானாகும் பிரம ரூபஞ் சற்குரு நூலாற் றோன்றும்
ஆனாலுந் தடைக ளுண்டே லநுபவ முறைத்தி டாதே. 52

தடையவை யெனிலஞ் ஞான சந்தேக விபரீ தங்கள்
படர்செயு மிந்த மூன்றும் பலசன்மப் பழக்கத் தாலே
உடனுடன் வரும்வந் தக்கா லுயர்ஞானங் கெடுமி வற்றைத்
திடமுடன் கெடுப்பாய் கேட்டல் சிந்தித்த றெளித லாலே. 53

அக்கினி கட்டுப் பட்டா லற்பமுஞ் சுடமாட் டாது
மக்கின ஞானத் தாலே வந்தபந் தழும்வே வாது
சிக்கெனப் பழகிக் கேட்டல் சிந்தித்த றெளித லாலே
விக்கின மடஞ்சந் தேகம் விபரீதம் போக்கு வாயே. 54

பிரமபா வனையை மூடிப் பேதங்காட் டுவதஞ் ஞானம்
குரவன்வாக் கியநம் பாமற் குழம்புவ தாஞ்சந் தேகம்
திரமறு சகமெய் யென்றுந் தேகநா னென்று முள்ளே
விரவிய மோகந் தானே விபரீத மென்பர் மேலோர். 55

சொல்லிய மகனே யெங்குஞ் சூழ்வெளி யிருக்க மண்ணைக்
கெல்லிய பின்பு தோன்றுங் கிணற்றினு காசம் போலே
ஒல்லையாம் பிரம நூலா லுற்றது போலே தோன்றும்
எல்லையி னுமெப் போது மேகமென் றிருந்து வாழ்வாய். 64

கானனீர் கிளிஞ்சில் வெள்ளி கந்தர்ப்ப நகர்க னூர்
வானமை கயிற்றிற் பாம்பு மலடிசேய் முயலின் கோடு
பீனமாந் தறிபு மானிற் பிரபஞ்ச மெல்லாம் பொய்யே
ஞானமெய் மகனே யுன்னை நம்மாணை மறந்தி டாதே. 65



நார்குழி பறித்து மெள்ள நாட்டிய நெடிய கம்பம்
உரமுறக் குத்திக் குத்தி யுறைப்பிக்கு முபாயம் போலே
பரமசிற் சொரூபந் தன்னிற் பற்றிய மனோவி ருத்தி
திரநிலை பெறச்சந் தேகந் தெளிதலை மொழிகின் றேனே. 66

நற்கருத் துடையோ னாகி ஞானவா னாகி நின்றோன்
மர்க்கட நியாயம் போலே மகாபூத விகாரந் தொட்டு
நிர்க்குண விதேக முத்தி நிலைபரி யந்தஞ் சொன்ன
சற்குரு வினைவி டாமற் சந்தத மநுச ரித்தான். 67

சந்ததம் புருடன் றன்னைச் சாயைபோல் விடாம லன்பாய்
மைந்தனை நோக்கிச் சாட்சி மாத்திர மாய்நின் றாயோ
சிந்தையி லைய மெல்லாந் தீர்ந்தவோ தெளிவி னுள்ளே
அந்தரங் கலந்த துண்டோ வநுபவ முரைசெய் வாயே. 68

எனவுரைத் தருளு மாசா னிருபதம் வணங்கி யெந்தாய்
சனனவன் காட்டின் மோகத் தமத்தெழு பேதப் பேய்கள்
உனதரு ளுதய வெற்பி லுபதேச வருக்கன் றோன்றி
மனவிழி தெரிய ஞான வான்கதிர் பரந்தா லுண்டோ. 69

மந்திர மூர்த்தி தன்னுன் மாற்றிய பேய்போ னாலும்
எந்திர மெழுதிக் கட்டி யினிவரா வகைசெய் வார்போல்
முந்தியுன் னுபதே சத்தான் மோகம்போ னாலு மையா
புந்திநின் றுறைக்க வின்னம் புகலும்வி ணப்ப முண்டே. 70

ஆகமப் பிரமா ணத்தா லறியென்றும் வாக்குக் கெட்டா
தேகமாம் பிரம மென்று மிதயத்தா லுணர்வா யென்றும்
சோகமா மனத்திற் கெட்டாச் சுயஞ்சோதி யென்றுஞ் சொன்னீர்
மோகமா மிரண்டு சங்கை முளைத்தன பறித்தி டீரே. 71

மற்றைமுப் பிரமா ணத்தால் வத்துவின் னையங்கூ டாதே
உற்றதோர் விடயம் பூத முபயமன் றாத லாலே
குற்றமாங் குணவி சேடங் கூடாம லிருக்கை யாலே
இற்றது வாக்குக் கெட்டா தென்பது மறிவாய் நீயே. 72

வாக்கியத் தனக்கெட் டாது வத்துவென் றுரைத்த வேதம்
வாக்கிய விருத்தி யாலவ் வத்துவைக் காட்டிற் றன்றோ
வாக்கியங் களிலே மான மாவதே தென்றா யாகில்
வாக்கிய மிரண்டு மெய்யே மறைகள்பொய் யாது கேளாய். 73

தன்பதி யல்லாப் போக டமையல்ல னல்ல னென்றான்
அன்பனைக் கேட்ட போ மவன்வெட்கி மௌன மானான்
என்பது போல நீக்கி யிதன்றிதன் றெனச்சே டித்த
பின்பரப் பிரமந் தன்னைப் பேசாமற் காட்டும் வேதம். 74

முந்திய சங்கை தீர மொழிந்ததை யறிந்து கொள்வாய்
பிந்திய சங்கை தீரப் பேசுமுத் தரமீ கேளாய்
இந்தியங் களுக்கு ராச னிதயமா மதிலென் னங்கள்
புந்தியு மனமு மென்றே புறத்தகத் தலாவி யாடும். 75

உன்முகம் போற்கண் ணாடிக் குள்ளொரு முகங்கண் டாற்போல்
சின்மய வடிவின் சாயை சித்துப்போற் புத்தி தோன்றும்
இன்மயே விருத்தி யந்த நிழல்வழி யாயு லாவும்
தன்மகன் மகனை யித்தைத் தானென்றே ஞான மென்பார். 76

உருக்கிய தராநீர் நாக வுருவங்க ளாறும் போல
விருத்திகள் கடப டாதி விடயமாய்ப் பரிண மிக்கும்
அருட்பல விடய மெல்லா மாபாசன் றேற்று விக்கும்
இருட்டினில் விளக்குங் கண்ணு மில்லாமற் பொருள்கா ணாதே.

எரிகின்ற விளக்காற் கண்ணா லிருட்பொருள் காணல் வேண்டும்
தெரிகின்ற சகத்தைக் காணச் சென்றிடிற் கண்ணே போதும்
விரிகின்ற சகத்தைக் காண விருத்தியும் பலமும் வேண்டும்
புரிகின்ற விருத்தி போன்றே போதுமெய்ப் பொருள்காண் போர்
[க்கே. 78

விருத்தியும் பலமுங் கூடும் விகாரமே மனமென் பார்கள்
கருத்தெழு விருத்தி வேண்டுங் கணக்கினுன் மனத்திற் கெட்டும்
வருத்திய பலமா மித்த மனத்திற்கெட் டாது கண்டாய்
அருத்தமிப் படியென் றைய மகன்றுநீ தெளிந்தி டாயே. 79

வஞ்சகமில் பரமார்த்த குருவே சொன்ன வழிகளறிந் தேஞா னியோர் வசனங் கேளீர், சஞ்சலமற் றகண்டபூ ரணமாய்ச் சித் தந் ததாகார மாவதன்றோ சமாதி யோகம், உஞ்சலையோத் தலை வதுதன் சுபாவ மாகி யொருகணத்திற் பலவுலகா யுதிக்கு மிந்த, நெஞ்சகம்வத் துவிலசையா திவாத தீப நிலையடைவ தெப்படியோ நீர்சொல் வீரே. 80

கருதுமனே குணமூன்று மூன்றி லொன்று கதித்தெழுந்தான் மற்றிரண்டுங் காந்து நிற்கும், தருமமிகுஞ் சத்துவமே லானபோ து சன்மார்க்க மானதெய்வ சம்பத் துண்டாம், மருவுரசோ குண மாகி லுலக தேக வாதனையாஞ் சாத்திரவா தனையு மாகும், அரு மகனே தமோகுணமே லான போதி லசுரசம்பத் துண்டாகு மறிந்து கொள்ளே. 81

மனதுசத் துவசொரூப மற்றி ரண்டும் வந்துகலந் தனையவற் றை மாற்றி னுற்போம், தனதுசன் மார்க்கத்தைவிடா திருந்த போது தமோகுணமும் ரசோகுணமுஞ் சமிக்கும் பின்னைக், கன பரிணு மஞ்சலனம் போம்போ னக்காற் களங்கமற்று நின்றவா காசம் போலும், நினதுளமப் படியாமப் பிரமத் தொன்றாய் நிருவி கற்ப சமாதியிலே நிற்குந் தானே. 82

களங்கமற்ற கண்ணாடி தன்முன் வேறோர் களங்கமற்ற கண் ணாடி காட்டும் போது, விளங்கியதன் மயமாகி யபேத மாகி விகற் பமின்றி நிருவிகற்ப மானாற் போல, அளந்தறியப் படாவிபுவாய்ச் சத்தாய்ச் சித்தா யானந்த மாம்பிரமத் தைக்கிய மான, உளந்தெ ளிந்த படியிருந்தா லுலக மெங்கே யுலைவெங்கே யென்றுசங்கை யொழித்தி டாயே. 83

ஏகமாய் மனமிறந்தாற் சீவன் முத்த ரிருக்குமட்டும் பிராரத்த மெதனை யுண்பார், போகமா னதுபுசித்துத் தொலைப்ப தன்றோ புசிப்பதென்றான் மனந்தானும் போன தன்றோ, சோகமா மனமிறந்தாற் போக மில்லை தோன்று மெனின் முத்தரென்று சொலக்கூடாதே, மோகமா மிதுதெளியக் குருவே நன்று மொழிந் தருள்வாய் தெளிந்ததன்றோ முத்தி தானே. 84

மனநாசஞ் சொரூபமென்று மரூபமென்றும் வகுத்துரைப்பா ரிருவகையா வருமிவற்றில், வினவாத சீவன்முத்த ரிடத்திலொன் றும் விதேகமுத்த ரிடத்திலொன்று மேவுங்கண்டாய், தனதான

ஆனா லையா குருவே காண்ப தசத்திய மென்றாலும்
நானா விவகா ரந்துய ரலவோ ஞான சுகந்தருமோ
போனா லன்றோ நன்றா நிட்டை பொருந்திடல் வேண்டாவோ
தானா நிட்டை புரிந்தாற் செய்கை தவிர்ந்தவ னெப்படியோ. 91

தெரிதரு மகனே யாரம் பத்தொடு தீரும் விவகாரம்
உரியதி யானமும் விவகா ரங்களு முள்ளத் தொழிலன்றோ[போ
துரிய பரம்பொரு ளானவர் வேறொரு தொழில்செய் வதுமுண்
அரிய சமாதிகள் பழகுவ னேலவ னொரு டனுமன்றே. 92

உத்தம குருவே யாரு டருமா யொருதொழி லற்றவருள்
சித்த மடங்கு தியானா திகள்சிலர் செய்குவ தென்னென்றால்
இத்தல மருவும் பிராரத் தப்பிறி வெப்படி யப்படியே
முத்தரும் வெகுவித மாகுவ ரென்பது முன்னே சொன்னேனே.

நல்லவ னேகே ளுலகுப காரம் ஞானிகள் விவகாரம்
அல்லது வேறொரு பெறுபே றும்மிலை யதனாற் பிணியுமிலை
வல்ல சிருட்டி முதற்பல தொழிலால் வருபுண் ணியபாவம்
எல்லவ ருக்கு மநுக்கிர கஞ்செயு மீச னடைந்திலனே. 94

ஈசனு மாயரு வாயுரு வாகி யெழுந்தரு ளுங்குருவே
ஈசனு ஞானியு மொப்பென் றீரே யெப்படி யொப்பென்றால்
ஈசனு ஞானியு மமதை யகந்தை யிகந்தது னாலொப்பாம்
ஈசனு மாம்பல சீவரு மாமுல கெல்லா மிவனாமே. 95

எல்லாச் சீவரு மிவனா மென்றீ ரிவன்றான் முத்தியடைந்
தெல்லாச் சீவரு முத்தி பெறும விருப்பா னேனையா
எல்லாச் சீவரும் வெவ்வே றாளா லிவனெல் லாமலனே
எல்லாப் பொருளு முரைத்தருள் குருவே யிதைநீர் மொழியீரே.

அகமெனு மான்மா பூரண மேக மநேக விதஞ்சீவர்
அகமெனு மந்தக் கரணோ பாதிக ளளவிலை யாதலினால்
சகமுழு துங்குளிர் சந்திர னேகஞ் சலசந் திரர்பலராம்
சகமதி லேரி குளஞ்சிறு குழிசால் சட்டி குடம்பலவால். 97

சட்டி குடங்களி லொன்று நசித்திடி னதினுட் சலசந்த்ரன்
ஒட்டு முதற்சந் திரனொடு கூடு மொழிந்தவை கூடாவே
கட்டு முபாதி நசித்திடு சீவன் காரண வான்மாவில்
கிட்டு மயிக்க முபாதி கெடாதவர் கேவல மாகாரே. 98

இவனயன் மால்சிவ னுகிய விசரோ டெப்படி யொப்பாவான்
சிவன்முதன் மூவரு மகில சிருட்டி திதிநா சங்கள்செய்வார்
அவர்பிறர் மதிகளு முக்கா லங்களு மறிவார் விபுவாவார்
தவமிகு குருவே யிவனுக் கவையிலோர் சற்றுங் காணேனே. 99

தடத்து நீர்நிலாத் திரியொளி யுபயமுந் தழுவுமூர் தனைக்காக்கும், குடத்து நீர்விளக் கினிலொளி யிரண்டுமோர் குடும்பமாத் திரங்காக்கும், அடுத்த மைந்தனே ஞானியு மீசனு மறிவினுற் பிறிவில்லை, கெடுத்த மாயையின் குணங்களான் மேலென்றுங் கீழென்றும் பிரிவாமே. 100

இலக்க மாயிரஞ் சுருதியா லூகத்தா லென்மன மசையாமல், பெலக்க வேண்டுமென் றருள்குரு வேயகப் பிராந்திபோய்த் தெளிவானேன், துலக்க மானகண் ணுடியை யடிக்கடி துலக்கினுற் பழுதன்றே, அலக்கண் மாற்றிய தேவரீ ரெனக்குரை யமிர்தங்க டெவிட்டாவே. 101

ஆன பாவிக ளடைவன நரகங்க ளவசிய மானுலும்
தான மந்திர விரதவோ மங்களாற் றவிருமென் பதுபொய்யோ
ஈன மாம்பல சன்மசஞ் சிதவினை யெத்தனை யானுலும்
ஞான மாங்கனல் சுடுமென்ற மறைமொழி நம்பினல் வீடுண்டே.

அழிவி லாததற் பதந்தனை மைந்தனே யகமுகத் தவர்சேர்வார்
வழிந டப்பவர் பராமுக மாயினுன் மலர்ந்தகண் ணிருந்தாலும்
குழியில் வீழ்வர்கா ணப்படி வெளிமுகங் கொண்டுகா மிகளானேர்
பழித ரும்பிற விக்கட லழுந்துவர் பரகதி யடையாரே. 103

சிறந்த நன்மையுந் தீமையு மீசனுர் செய்விக்குஞ் செயலன்றே, பிறந்த சீவர்க ளென்செய்வ ரவர்கண்மேற் பிழைசொலும் வழியேதோ, துறந்த தேசிக மூர்த்தியே யென்றிடிற் சுருதிநூற் பொருண்மார்க்கம், மறந்த மூடர்கள் வசனிக்கும் பிராந்திகாண் மைந்தனே யதுகேளாய். 104

திகழ்ந்த வீசனுர் சிருட்டியுஞ் சீவனுர் சிருட்டியும் வெவ்வேறே
சகந்த னிற்பொது வீசனுர் சிருட்டிகள் சராசரப் பொருளெல்லாம்
அகந்தை யாமபி மானங்கள் கோபங்க ளாசைக ளிவையெல்லாம்
இகழ்ந்த சீவனுர் சிருட்டிக ளாகுங்கா ணீசனுர் செயலன்றே. 105

மூவ ராம்பரன் சிருட்டிக ளுயிர்க்கெலா முத்திசா தனமாகும்
சீவ ஞர்செயுஞ் சிருட்டிக டங்களைச் செனிப்பிக்கும் பிணியாகும்
தாவ ராதிக ணசித்திடி லொருவர்க்குஞ் சனனங்க ணசியாவாங்
கோவ மாதிக ணசித்திடிற் பந்தமாங் கொடும்பிற விகள்போமே.

ஈசர் காரியம் பிரளயத் தொழியவு மெவர்பவ மொழிந்தார்கள்
தேச காலதே காதிக ளிருக்கவுஞ் சீவகா ரியமோகம்
நாச மாக்கிய விவேகத்தி னுயிரொடு ஞானமுத் தர்களானுர்
பாச மோகங்கள் பசுக்களின் செயலன்றிப் பசுபதி செயலன்றே.

இந்தச் சீவனுல் வருமறு பகையெலா மிவன்செய லென்னுமல்
அந்தத் தேவனுல் வருமென்ற மூடர்க ளதோகெதி யடைவார்கள்
இந்தச் சீவனுல் வருமறு பகையெலா மிவன்செய லல்லாமல்
அந்தத் தேவனு லன்றெனும் விவேகிக ளமலவீ டடைவாரே. 108

மனைவி லங்கறு மைந்தனே கற்பக மரங்களல் புனன்மூன்றும், தனைய டைந்தவர் வறுமையுஞ் சீதமுந் தாகமுந் தவிர்த்தாளும், அனைய வீசனு மடைந்தவர்க் கருள்செய்வ னகன்றவர்க் கருள்செய்யான், இனைய குற்றங்க ளெவர்க்குற்ற மாகுமென் றெண்ணிநீ யறிவாயே. 109

ஒன்று கேண்மக னேபுமான் முயற்சியா லுறைத்துமா றடார்க்கீசன், நன்று செய்யவே காட்டிய நூல்வழி நடந்துநல் லவர்பின்னே, சென்று துட்டவா தனைவிட்டு விவேகராய்ச் செனித்தமாயையைத்தள்ளி, நின்று ஞானத்தை யடைந்தவர் பவங்கள்போ நிச்சய மிதுதானே. 110

இந்த ஞானந்தான் வருவதெப் படியெனி லிடைவிடா விசாரத்தால், வந்த டைந்திடும் விசாரந்தா னேதெனின் மனுதியாஞ் சரீரத்தில், இந்த நானெவன் சித்தெது சடமெது விரண்டுமொன் றாக்கூடும், பந்த மேதுவீ டேதென வுசாவுதல் பகர்விசா ரமதாகும்.

இன்ன வாறந்தப் பிரமத்தை யறிவிக்கு மிலக்கணத் தால்வேதம், சொன்ன ஞானமும் விசாரத்தால் வருமன்றிச் சுருதிநால் படித்தாலும், அன்ன தானங்க டவங்கண்மந் திரங்களா சாரங்கள் யாகங்கள், என்ன செய்யினுந் தன்னைத்தா னறிகின்ற நிலைதனால் வாராதே. 112

துளங்கு தர்ப்பண மழுக்கறக் கைக்கொண்டு துலக்கினாற் போமன்றி, விளங்கு புத்தியா லுலகிலார் துலக்கினார் விமலநீத சிக மூர்த்தி, களங்க மாகுமஞ் ஞானமு மப்படிக் கருமத்தாற் கழுவா மல், உளங்கு றித்தஞா னத்தினா லெப்படி யொழியுமீ தருள் வீரே. 113

தர்ப்ப ணத்தினிற் களிம்புவாஸ் தவமலஞ் சகசமா தலின்மைந்தா கற்ப னிங்கினிற் கருதிறஞ் சகசமாக் கூறத்தகன் றுரோபம் [டும் தர்ப்ப ணத்தினி லழுக்கற வேண்டுநாற் சாதனத் தொழில்வேண் கற்ப னிங்கிலா ரோபமே கூறப்பொன் றுகண்டிட மனம்போதும்.

இங்கு மப்படிச் சத்திதா கந்தத்தி லிடர்சடம் பொய்மூன்றும் தங்கு மாயையின் கற்பித மன்றியே சகசவாஸ் தவமன்றே பங்க மாகுமஞ் ஞானத்தைக் கருமங்கள் பகைசெயா தறவாக்கும் அங்க ஞானமே கருமவஞ் ஞானத்தைக் கடிகின்ற கருப்பாமே.

மனைக்குள் வைத்தபண் டங்களை மறந்தவன் வருடநா ளறுகாலும் தினைத்து ணைக்குமின் கிட்டுமப் படியிந்த நின்மல வான்மாவும் அனர்த்த மானதன் மறதியைக் கெடுத்தறத்தன் னறிவினாற் காணா தனத்த கர்மங்க ளனுதினஞ் செய்யினுங் காணுமோ காணாதே. [மல்

இனமு மன்றுநுகர் பின்னைநோய்க் கிரங்கியே யிம்பண்ட மெதிர்காட்டிக், கனம ருந்துக ளொளித்தனைத் தரைக்கின்ற கருணைதற் றாய்போலே, மனைய றங்கள்செய் மகங்கள்செய் கன் றென்று மலர்த்தவா சகஞ்சொல்லும், நினைவு வேறுகாண் சுவர்க்க கா மிகளக்க நிச்சயந் தெரியாதே. 117

கன்று சூதுநீ விருப்பினுன் மகங்கள்செய் காமத்தின் மனை தானால், கொன்றும் பெண்டொடு கலவிசெய் பெனிலிவன் குறை பெலாக் தொடாவென்றே, தன்றும் வேதத்தின் சம்மதஞ் சகல முந் தவிர்வதே கருத்தாகும், வின்று மிவ்விதி பென்னெனிற் பூருவ நியமமாம் விதியன்றே. 118

மதுவி றைச்சிக ளுண்ணென்ற சுருதியின் மனத்துபா ரெனல் பாராய், மிதுன விச்சையும் புத்திரோற் பத்தியால் விரும்பென்ற விதிபாராய், இதையும் விட்டொழி யதிசயிட் டிகவங்கிச் சிகழ்ச்சி யற் றதும்பாராய், அதைய றிந்துகன் மங்களா சைகளொழிந் தா னந்த மடைவாயே 119

உலக மானவஞ் ஞானமுங் கருமமு முறவென்ற வழிகூடும்
பலவு மானவஞ் ஞானமு ஞானமும் பகையென்ப துளதானல்
நிலவி லேமறுப் போலவஞ் ஞானமு நிமலஞா னத்தோடே
குலவி நின்றிந்தச் சிருட்டிகள் செய்யவுங் கூடுமோ குருமூர்த்தி.

சொரூப ஞானமும் விருத்திஞா னமுமென்று சோதிஞா னமுமிரண்டாம், சொரூப ஞானமே விருத்தியின் ஞானமாய்த் தோன்றும்வே றிலேமைந்தா, சொரூப ஞானமஞ் ஞானசத் துரு வன்று சுழுத்தியிற் கண்டாயே, சொரூப ஞானத்தின் மருவுமஞ் ஞானத்தைச் சுடும்விருத் தியின்ஞானம். 121

அருத்தி மாயையைச் சுழுத்தியிற் சுடாததற் சொரூபஞா னந்தானே, விருத்தி ஞானமாய்ச் சுட்டதெப் படியெனில் வெய் யிலா லுலகெங்கும், பரித்த சூரியன் சூரிய காந்தத்திற் பற்றியக் கினியாகி, எரித்த வாறுபோற் சமாதியில் விருத்தியா லெரிக்கு மென் றறிவாயே. 122

அருளு மையனே திரிவித கரணத்தா லாகிய தொழிலெல் லாம், கரும மல்லவோ விருத்திஞா னமுமந்தக் கரணகா ரியமன் றோ, உரிய கர்மமஞ் ஞானத்தைக் கெடுக்குமென் றோதிஞ லாகா தோ, பெரிய ஞானமென் றதற்கொரு பெயரிட்ட பெருமையை யுரையீரே. 123

விருத்தி ஞானமந் தக்கர ணத்தொடு விருத்தியா கினுமைந்தா
ஒருத்தி மக்களே தங்களிற் பகைக்கின்ற துலகெங்கும் கண்டோ
கருத்த ஞகிய புருடதந் திரங்களாங் கருமங்க ளவைபோல [மே
வருத்த ஞானமோ புருடதந் திரமன்று வஸ்துதந் திரமாமே.

கண்ட றிந்தது ஞானங்கேட் டதுதனைக் கருதுபா வனையோ கம், கண்ட பேர்சொலக் கேட்டது மறந்துபோங் கண்டது மறவா தே, கண்ட வஸ்துமெய் தியானவஸ் துக்கள்பொய் கறுவியஞ் ஞா னத்தைக், கண்ட வக்கணங் கொல்வது ஞானமே கருமமன் றறி வாயே. 125

சருவ முத்தியைத் தருகின்ற தியானமுஞ் சத்திய மன்றென் றால், சருவ முத்தியுஞ் சத்திய மன்றென்று சங்கியா தேநீகேள், உருவங் கேட்டவன் றியானிக்கும் பொழுதிலவ் வுருவம்வாஸ் தவமன்றே, உருவ மாகுமப் பொழுதுகண் ணுற்கண்ட வுருவம் வாஸ் தவமாமே. 126

சடம தாகிய தியானமெய் யாகிய சர்வமுத் தியைநல்கும், தி
டம தானதெப் படியெனி லவரவர் தியானமே பிறப்பாகும்,உடல
மாசையாற் றியானிக்கிற் றியானித்த வுடல்களா குவர்மைந்தா,
தொடர்ப வங்கெடச் சொரூபமே தியானிக்கிற் சொரூபமா குவர்
மெய்யே. 127

பிரம ரூபத்தைத் தியானித்த பேர்களும் பிரமமா குவரென்
றால், நரச ரீரமாங் குரவனே விசாரமேன் ஞானமே னென்றதே,
பரம பாவனே பரோட்சமாம் பின்பந்தப் பரோட்சமே யபரோட்
சம், திரவி சாரமா ஞானமா முத்தியாந் தீர்வையீ தறிவாயே. 128

வீட தாம்பரி பூரண சொரூபத்தில் விருத்திஞா னமுங்கூடிச்
சேட மாகினு லகண்டமா மநுபவ சித்தியெப் படியென்றால் [யும்
சாடி நீர்மண்ணைப் பிரித்ததேற் றும்பொடி தானுமண் ணொடுமா
ஊடி ஞானமு மறிவிலா மையைக்கெடுத் தொக்கவே கெடுந்தானே.

இந்த நிச்சய முத்தரு ளநுபவ மிருப்பதெப் படியென்றால்,
சிந்தை யற்றபூ மண்டல விராசனுஞ் சிசுவும்போற் சுகமாவர்,பந்த
முத்திகண் மறந்துபோ முண்டென்று பலர்சொலி னகையாவர்,
அந்த ரத்தையுண் டுமிழ்ந்ததோர் கொசுகெனு மவர்களை நகை
யாரோ. 130

மலடி மைந்தனுந் தாணுவிற் புருடனும் வான்மலர் முடிசூடி
இலகு கந்தர்ப்ப நகரிலே சுத்திகை யிரசதம் விலைபேசிக்
கலக மாய்முயற் கொம்பினாற் குத்தியே களைத்திரு வருமாண்டார்
அலகை யாயினு ரெனும்விவ காரத்தை யறிந்தவன் மயங்கானே.

மாயை யென்பது பொய்யெனி லதுபெற்ற வகையெலாம்
பொய்யாமே, தாயை யன்றிமக் களுக்கொரு பிறவியுஞ் சாதியும்
வேறுண்டோ, சேய சொர்க்கமு நரகமு நன்மையுந் தீமையும்
பாராமல், தூய சத்துச்சித் தாநந்த பூரண சொரூபமா யிருப்
பாயே. 132

பங்க யாசனன் முதற்பல தேவரும் பாருள பெரியோரும்
கங்கை யாதியாந் தீர்த்தமுந் தேசமுங் காலமு மறைநாலும்
அங்க மாறுமந் திரங்களுந் தவங்களு மசத்திய மெனச்சொன்னல்
எங்க ளுயக னேயத ற்குற்ற மில்லையோ மொழியீரே. 133

சொற்ப னந்தனிற் கண்டதைப் பொய்யென்று சொல்வது
பிழையானல், அற்ப மாயையிற் றோன்றிய சகங்களை யசத்தெனல்

பிழையாமே, சொற்ப னந்தனிற் கண்டதைப் பொய்யென்று சொல்லலா மெனின்மைந்தா, அற்ப மாயையிற் றோன்றிய சக மெலா மசத்திய மெனலாமே. 134

பொய்யை மெய்யென்ற மூடர்புண் ணியரென்று புராணங் கூப் பிடுமாணுல், மெய்யை மெய்யென்ற ஞானிக்குக் குற்றங்கள் விதித்தசாத் திரமுண்டோ, பொய்ய தேதெனி னுமரு பங்களாம் பூதமா கியமாயை, மெய்ய தேதெனிற் சச்சிதா நந்தமாய் வியா பிக்கு மான்மாவே. 135

மாயை யென்பதே தடையரா ரெப்படி வந்தது வருவா னேன், மாயை யென்பது பிரமத்தின் வேறெனின் வஸ்துவு மிரண்டாமே, மாயை யென்பதும் பிரமமு மொன்றெனின் வஸ்து வும் பொய்யாமே, மாயை யென்றமே கங்களுக் கொருசண்ட மாருத குருமூர்த்தி. 136

அதனை யின்னதென் றுரைத்திடப் படாமையா லவாச்சிய வடிவாகும், இதுத னக்குள துடலியா னுலகுமெய் யெனுமவ ருடையோர்கள், கதையி லாதபொய் வந்ததிப் படியென்று கண் டபே ரிலைமைந்தா, விதன மாயையேன் வந்ததென் றும்புத்தி விசாரமற் றதனாலே. 137

அருவ மாகுமா யாவிவித் தைகள்வினை யாடுமுன் றெரி யாவே, உருவ மாம்பல கந்தர்ப்ப சேனையா யுதிக்கபின் வெளி யாகும், பிரம சத்திக ளநந்தமா மதைக்கண்டு பிடித்திடல் கூடா தே, பரவு பூதங்கள் கண்டனு மானத்தாற் பலருக்கும் வெளி யாமே. 138

காரி யங்களுஞ் சத்தியா தாரமுங் காணுமற் றதுமாயம்
பாரி னின்றமா யாவியுஞ் சேனையும் பார்ப்பவர் கண்காணும்
வீரி யந்திகழ் வித்தையா யினசத்தி வெளிப்படா ததுபோலே
பேரி யற்பிர மத்துக்கு மூலகுக்கும் பிறிதுசத் திகளுண்டே. 139

சத்தி சத்தனைத் தவிரவே றன்றுகாண் சத்தனு மாயாவி, வித்தை காட்டிய விந்திர சாலம்பொய் வித்துவான் மெய்போலப், புத்தி மைந்தனே சத்திமா னுகிய பூரண வான்மாவின், வத்து விர் ணயஞ் சொன்னதிட் டாந்தத்தின் வழிகண்டு தெளிவாயே. 140

இல்லை யாகிய சத்தினை யுண்டென்ப தெப்படி யெனக்கேட்கில், புல்லை யாதியா மசேதனப் பொருளெலாம் பூத்தாக்காய்ப் பனபாராய், நல்லை யாமக னேயதிற் சிற்சத்தி நடந்திடா திருந்தக்கால், தொல்லை யாய்வருஞ் சராசர வுயிர்க்கெலாஞ் சுபாவங்கள் வேறுமே.
141

ஆர்க்குங் காணவொ மறியவும் படாதென்று மவாச்சிய வடிவென்றும், சேர்க்கு நாமரூ பப்பயிர் வித்தென்றுஞ் செப்பிய சிற்சத்தி, போர்க்கு மாறெங்ஙன் பிரித்திடப் படாதெனிற் பிரமமா வதையொன்றுப், பார்க்கு மாறெங்ஙன் முத்தியா குவதெங்ஙன் பரமசற் குருமூர்த்தி.
142

வாயுத் தம்பனஞ் சலத்தம்ப னம்மணி மந்திர மருந்தாலே
தேயுத் தம்பனஞ் செய்திடு வதிலதிற் சிறந்தசத் திகளெங்கே
தீயச் சச்சிதா னந்தமாய் வேறென்று நினைந்திடா திருப்பாயேன்
மாயச் சத்தியோ டீகன்றி மந்திர மறைகளிற் காணேமே. 143

மேலு மன்னனின் வியத்தமே வியத்தமாம் விவகரித் திடவேண்டில், காவி ருன்மன்னைக் குடமென்ப ரக்குட நசிப்பது நாவாலே, பலு நாமரூ பங்களை மறந்துமண் பார்ப்பதே பரமார்த்தம், சிவ போதகற் பிதங்களை மறந்துநீ சின்மய மாவாயே. 144

பூரிக் கும்கன சச்சிதா னந்தத்திற் பொய்சடந் துயரென்றும், தூரத் தாயினுஞ் சேதான் றுமாயு விபரீதந் துடைப்பதெப் படியென்றால், நீரிற் றோன்றுந்தன் னிழல்தலை கீழதாய் நின்றதெ யினுநேராய்ப், பாரிற் றோன்றிய தன்னைநோக் கிடலதப் பாழ்நிழல் பொய்யாமே.
145

ஞானங் காரண மறிபொருள் காரிய நாமரூ பப்பேய்கள்
ஊன தெப்படி யழிந்ததெப் படியென வாய்ந்துதல் பலனன்றே
மான மாந்தனை நீக்கசொப் பனசகம் வந்ததும் பாராமல்
போன துக்கினை யாமதுன் போதமாய்ப் பூரணமா யிருப்பாயே.

அசத்தி லெப்படி யென்பட் டும்பாமுக மாகின லம்பட்டும்
நிசத்தி னுள்ளியிப் பார்வையா லிப்படி நீக்காப் பழக்கத்தால்
வசத்தி னுன்மனை யென்றுமே மாத்திர வடிவமா யிடின்மைந்தா
சுகத்த தேகத்தி லிருப்பினு மானந்தக் கடல்வடி வாவாயே. 147

இகமான குருநாத னேசச்சி தானந்த மெனுமிலக் கணமறியேன், அகலாத சத்தாவ தேதெனிற் றாவதே தானந்த யேதென்

றிடில், மிகுகால மூன்றுங் கெடாதிருப் பதுசத்து வேறுபா டறி
தல் சித்தாம், மகிழ்காம நுகர்போது சுகமாகு மநுபூதி வாழ்
வென்ப தாநந்தமே. 148

நாசச் சரீரத் திருக்குஞ் சரீரிதனை நால்வேத மாவாக்கியம்,
நீசச்சி தாநந்த மென்றிடினு மாசிரியர் நீபிரம மாகுமெனினும்,
மாசற்ற சச்சிதா நந்தனா னென்னவிவன் மன்னுமநு பவமெங்ஙனே, கோசப் புரங்களை யிடித்துத் தகர்க்குமத குஞ்சரக் குரு
நாதனே. 149

சென்மாந்த ரஞ்செய்த வினைகளுட றருமெனிற் செல்கால
மிவனுண்டலோ, கன்மாநு பவநரக சொர்க்கமெனில் வருகின்ற
காலத்து மிவனுண்டலோ, உன்மாத யாதனு வுடல்கடவு ளுடன்
மநுட வுடன்மாறி மாறியழியும், தன்மாய வுடல்கெடினு மிவனி
ருப் பதுகொண்டு சத்தென்ப தொக்குமகனே. 150

இருளாக மூடுஞ் சுழுத்தியி லிராத்திரியி லிரவிசுட ரற்ற
பொழுது, மருளாம விருளையும் பொருளையுந் தெரிகின்ற வகை
கொண்டு சித்தாகுமே, பெருவாழ்வு மிக்கதா னேதன்னி டத்தி
னிற் பேராத பிரியமதனால், அருகாத பிரியஞ் சுகத்தில்வரு மாத
லா லாநந்த மாமைந்தனே. 151

விடயசுக மதில்வருதல் பிரியமாத் திரமாகும் வெகுபிரிய
மான்மாவிலாம், விடயசுகம் வருபிரிய மாறிவரு மான்மாவில் வெகு
பிரிய மாறாதுகாண், விடயசுகம் விடலுமாங் கொளலுமா மான்
மாவை விடுவதெவர் கொள்வதெவர்பார், விடயசுக போகங்கள்
விடுமவனை யவனால் விடப்படா தொருநாளுமே. 152

தாகப் படும்பொருளி லும்மகன் பிரியமாந் தனயனிலு முடல்
பிரியமாம், ஆகத் திலும்பிரிய மிந்திரிய மாங்கரண மதனிலும்
பிரியமுயிராம், ஏகப் பிராணனிலும் வெகுபிரிய மான்மாவி லிந்த
வான் மாமுக்கியம், ஊகத்தி னுற்கௌண மித்தைகர்த் தாமூன்று
மோரொன்றி லதிகமகனே. 153

புலியுமநு கூலமெனி லிட்டமாம் பகைசெயிற் புதல்வனெனி
னும்வெறுப்பாம், உலகிலிரு வகையுமல் லாதபுல் லாதியி லுதா
சீன மாமாதலான், மலினமறு சின்மயன் பலவகையு மிப்படி மகிழ்
ச்சியில் விருப்பமிகழான், அலகிலா நந்தவடி வாகுமுன் சொரூ
பத்தை யாராய்ந்து பார்மைந்தனே. 154

மானஞ்சி றந்தகுரு நாதனே யாநந்த வகைகளைத் தனே யென்னிலோ, ஞானந்தி கழ்ந்தபிர மாநந்தம் வாசனு நந்தம்விட யாநந்தமென், ருநந்த மூன்றுவித மெட்டுவகை யென்பர்சில ரவ் வைந்து மிதிலடக்கம், யானந்த வகைசொலக் கேண்மைந்த னே யெட்டு மிஃதின்ன தின்னதெனவே. 155

போகத்தில் வருசுகம் விடயசுக நித்திரைப் போதுளது பிரமசுகமாம், மோகத்த னந்தலிற் சுகம்வாச னச்சுக முழுப்பிரிய மான்மசுகமாம், யோகத்தி லுளதுமுக் கியசுகமு தாசின முற்ற சுக நிசசுகமதாம், ஏகத்தை நோக்கலத் துவிதசுகம் வாக்கிய மெ ழுந்தசுக ஞானசுகமே. 156

இவ்வா றுரைசெயுஞ் சுகபே தங்களி னியல்பா மவைசொல மகனேகேள், ஒவ்வா நனவினி லுழல்வா னிடர்கெட வுறங்குஞ் சயனம துறுநேரம், செவவா மனமக முகமா மதிலொளிர் சித் தின் சுகநிழல் சேருங்காண், அவ்வா றிவனுள மகிழ்வா மநுபவ மதுதான் விஷயசு காநந்தம். 157

ஈனந் தருசுக விடயந் திரிபுடி யிடரா மெனமன மசையாமல், சேனந் தனது குலாயந் தனில்விழு செயல்போ னித்திரை செறி சீவன், தானந் தமில்பர னுடனென் றுவனொரு தனையல் லதுபிற தினையாமல், ஆநந் தமயனு மாவன் சுகமிகு மதுதா னுயர்பிர மா நந்தம். 158

தூங்குஞ் சுகமது பிரமச் சுகமெனல் சுருதிப் பொருள்விழி துயில்வோர்கள், தாங்கும் மலரணை நன்று கச்சிலர் சம்பா திப்பது தானாகம், தீங்குந் நன்மையு மாண்பெண் முறைமையுந் தெரியா தமளிசெய் பொழுதேபோல், ஆங்குள் வெளிகரு மறியா வநுபவ மதனு லதுபிர மாநந்தம். 159

ஒன்று கியபிர மாநந் தச்சுக மொழிவா னேன்வெளி வருவா னேன், என்றுன் முன்செய்த கருமம் வெளியினி விழுக்குஞ் சுழுத்திவிட் டெழுந்தோனும், நன்று யினசுக மகலான் வெளியி லு நடவான் மறதியும் பெறமாட்டான், அன்று மெனவிருந் துறங் குஞ் சிலகண மதுவே வாதனை யாநந்தம். 160

நிசமா னதுமுக் கியமோ குடத்துள நீரன் றேவெளி யிரந் தான், வசமா வகங்கா மறைந்தா னிசமது படிந்தான் முக்கிய வகையாகும், நிசையார் திருசிய மறியா தேதுயில் செறியா

தேயுடல் தறிபோல, அசையா தேமதி சமமா கியநிலை யதுதான் முக்கிய வாநந்தம். 161

மனுடன் மனுடகந் தருவன் றேவநன் மாகந் தருவனெண் பிதிரோடே, பனுமா ஜானர்கள் கருமத் தேவர்கள் பகர்முக் கிய ரிந் திரனுசான், கனமார் பிரஜா பதியன் விராட்டுபொன் கர்ப்பப் பிரமனென் றின்னோர்கள், பினவா நந்தங்க ளுரையாம் பிரளய வெள்ளக் கடல்பிர மாநந்தம். 162

எவனு கினுமிந்தத் துரியா தீதத்தி லேழாம் பூமியி லிருந்தானேல், அவனு ரதன்சுகன் சிவன்மா லயன்முத லறிவோ ரநுபவ சுகபோதம், விவகா ரதிர்சய மிதுவே யநுபவ மெனமுன் சொல்லிய விவகாரி, உவமா னமுமறி மகனே யவனடி யுதிரும் பொடிக ளென் முடிமேலே. 163

குளிரிளகல் வெண்மை யென்ற பதங்களினு னீர்மூன் று கூறுயிற்றே,ஒளிதவனஞ் செம்மையென்ற பதங்களா லக்கினியு மொருமூன் றுமோ, வெளிமுதலாஞ் சகமசத்து மூடமிட ரெனப்பிரித்து விலக்கி வேதம், எளிதறிய மூண்மொழிந்த சத்தாதி யெனும்பிரம மேகந் தானே. 164

நித்தியம்பூ ரணமேகம் பரமார்த்தம் பரப்பிரம நிதானஞ் சாந்தம், சத்தியங்கே வலந்துரியஞ் சமந்திருக்குக் கூடத்தன் சாட்சி போதம், சுத்தமிலக் கியஞ்சநா தநஞ்சிவன் தத்துவம்விண் சோதி யான்மா, முத்தம்விபு சூக்குமமென் றிவ்வண்ணம் விதிகுணங்கள் மொழியும் வேதம். 165

அசலநிரஞ் சனமமிர்த மப்பிரமே யம்விமலம் வசனு தீதம்
அசடமநா மயமசங்க மதுலநிரந் தரமகோ சரம கண்டம்
அசமநந்த மவிநாசி நிர்க்குணநிட் களநிரவ யவம நாதி
அசரீர மவிகார மத்துவித மெனவிலக்கா மநேக முண்டே. 166

இன்னவகை விதிவிலக்குக் குணங்கணன்றாய்ச் சேர்ந்தொருமித் தெல்லாங் கூடிச், சொன்னபொரு ளொன்றன்றி யிரண்டில்லை யொருபொருளைச் சொல்லுஞ் சொற்கள், பின்னபத மாமதனுற் சத்தாதி குணப்பொருளாம் பிரம மேகம், அன்னபொரு ளொருமையறிந் தகண்டபரி பூரணமா யாவாய் நீயே. 167

நிர்குணவத் துவின்குணங்க ளுரைப்பதுதாய் மலடியென நிகரென் னுதே, சற்குணனே வத்துநிலை யுரையாம லறியவல்ல

மந்திரிமுன் னுரைசெய்வான் மாசிலாப் பரம்பொருளை வகுத்துச் சொன்னாய், சிந்தைமுத லாம்பொறிக ளாருறு மெட்டரிதாந் திறத்தி னாலே, யந்தமில்சின் மாத்திரமாய் விண்ணி னுநொய் தாம் பரம மணுவே யாகு, முந்துபிர மாண்டமெலா மவ்வணுவி லே தோன்றி முதிர்ந்து மாயும். 191

தடமான வதன்புறமில் லாமையினால் விண்ணாகுந் தனிப் போ தத்தா, லிடமான விண்ணன்றா மின்னதெனத் தெரிவரிய வியல்பி னாலே,திடமாக விலதாகுஞ் சற்பாவத் தாலுளதாய்ச் செப்ப லாகும்,புடமாக விளங்குதவாற் சித்தாகு மறிவதிலாப் பொருட்டாற் கல்லாம். 192

தானாகு மிகநொய்தா மாகாயத்திற் சகத்திரளாஞ் சித்திரத்தைத் தானே கோட்டு, மானாத வுலகமெலாந் தனதுசோதி யாதவினா லதற்குவே றயலொன் றில்லை, நீநானுஞ் சகபேத வடிவந்தானு நிற்கின்ற வதன்வடிவாய் நீங்கா தென்றும்,நாநாவாம் பொருட்புணர்வா னடந்ததாகு நடக்கவிட மிலாமையினா னடவா தாகும்.

அடைவதற்கொன் றிலாமையினா லில்லையாகு மவ்வரதஞ் சத்தையினுண் டாகுமென்று, புடைபெயர்நன் மதியமைச்சன் புகலக்கேட்டுப் போதவியந் தநன்பின்பு பூபனையுன், னுடையவுணர் வுரையென்ன வவனுஞ்சொல்வா னுலகத்தி லுறுதியிலா வுறுதி தானே, தடையறுசிற் பரம்பொருளி னுறுதியாகுந் தற்பரத்தினியல்பின்னஞ் சாற்றக் கேளாய். 194

கருத்ததனாற் சங்கற்ப விகற்ப மெல்லாங் கைவிடுதல் கைக்கொள்ளப் படுவ தாகுந்,திருந்தமுறு தன்விரிவுங் குவிவு தானுஞ் சிருட்டியுங்கற் பழுமாகுந் திரள்வே தாந்தக், கருத்தமுறு வாக்கியத்தி னிட்டை யாகு மவ்வேத வாக்கியத்துக் கயனு மாகு, முறுத்திகழு முள்ளதில திரண்டினுக்கு முன்னாகு மவையிரண்டி னுருவு மாகும். 195

சராசரமா முலகனைத்து மனரு பத்தாற் றான்செய்யும் விளையாட்டாஞ் சகமாய் நின்றும், புராதனமா மொருமையினிற் பிரியாதாகும் பூரணசின் மாத்திரமாம் பொருளை சொன்னாய், கிராசையுளத் தவரறியும் பரமீ தென்று நிருபனுரைத் திடநிருதி நெஞ்சுட் கொண்டு, விராவமுத மழைசொரியக் குளிர்ந்த வாபோன் மிகக்குளிர்ந்தாள் சாந்தமுற விளம்ப லுற்றான். 196

அற்புதமா யமுதமா யறிவே யாகி யத்தமன முதயமிலா வருக்கன் போலாய்ப், பொற்புமிகும் புந்தியுள வும்மைப் போல் வார் பொன்னடியை முடியாகப் புனைந்தா ரன்றோ, தற்பரமா முலகாளும் வேந்த ராவோர் தமையுணர்ந்தோ ரைச்சேர்ந்தாற் றளர்வுண் டாமோ, நற்பயன்போல் வருமுமக்கிங் கரிதின்றேனு நான்செய்யுங் கைம்மாறு நவிலு மென்றான். 197

சிலையரக்கர் குலமென்று மெட்டிக் காட்டிச் செறிகனித்தே மாவனையாய் செகத்தி லொன்றுங், கொலைபுரியா தொழியென்று வேந்தன் கூறக் கொலையொழித்தே னென்றரக்கி கூற லோடுந், தொலைவருமூ றுணவாநீ செய்யுமாறென் சொல்லெனமன் னவன் கேட்பத் தொல்லை நாளி, லலைவில்சமா தியிலிருந்து பசியை வென் றே னவ்வகையே யின்றுமிருந் தாற்ற லுற்றேன். 198

தெள்ளமுத தாரணையால் வேண்டுங் காலந் தேகமுட னிருந் தப்பாற் றேகந் தீர்வே, னுள்ளநிறை யுணர்வுடையே னென்றுங் கொல்லே னுண்மையென வுரைத்தேக வன்று வாளைக், கொள் ளரிய நட்பெளிதிற் கொண்டேம் நீயெங் குலமகளா யெம்பதிக் குக் கூட வேகிற், கள்ளருட விரைதருநூ முடல்போ மட்டுங் கருதுமுடல் வாதனைகள் கழலா கண்டாய். 199

ஆதலினாற் பதகருட விரையைக் கைக்கொண் டரும்பசி போய்ச் சமாதிதனை யடையின் வாறு, காதலுடன் பலகாலுஞ் செய்தி யென்று காவலன்கூ றவுமரக்கி கனிகூர்ந் தேகப், போதக மன் னார்தமது நகர மேவிப் பொன்மனைபுக் காரிரவி பொலிய வந் தான், பாதகர்மூ வாயிரவை யாறு நாளிற் பார்த்திபனீந் தானரக்கி பற்றிக் கொண்டாள். 200

பூமகள்போ லங்கிருந்த வடிவைக் கன்றுற் போதிலொழித் தரக்கர்குலப் பூவை யாகிப், பாமராம் பாதகரைத் தோண்மேற் கொண்டு பார்த்திபனோ டமைச்சனுக்கும் பண்பு கூறி, யேமமுறு மிமகிரியிற் சமாதி மேவ வேகினு ளின்றளவு மிந்த வாறே, கோ மகனு மரக்கியுட் பாறு ரென்று குரிசிலுக்கு வசிட்டமுனி கூறி னானால். 201



## மனத்தின் கதை.

இந்தக் கதையை விளையாட் டென்ன விசைத்தோ மெவர்க்கு
மந்தத் தமதா முடலொன் றயலா முடலொன் றவற்றிற்
சிந்தைச் சரீரம் விரைவிற் செயல்க ளெல்லாஞ் செய்து
தொந்தித் தலையு மற்ற தூல வுடலொன் றறியா. 202

என்றான் வசிட்ட னவனை யிந்தச் சடமா மனத்துக்
கொன்று வடிவ மிலதா முள்ள வடிவை விரித்து
நன்று யுரைப்பா யென்று ஞானக் குரிசில் கேட்பப்
பொன்று விதிசொற் படியே போத முனிவன் புகல்வான். 203

அகில சத்தி யுடைத்தா யநந்த மான பரமம்
புகல்சங் கற்பத் தோடே பொருந்தும் வடிவே மனமா
மிகலுஞ் சத்தோ டசத்தா யிரண்டி னுள்ளுந் தோன்றிப்
பகருந் தொழில்க ளோடே பயில்வா வினையு மதுவே. 204

எங்கே யெனினுந் தோன்று மிந்த மனத்தை முத்திச்
சங்கே தத்தா லாகந் தன்னிற் கூட்டி னன்றாம்
பங்கே ருகனே தியதோர் பழைய கதைநீ கேட்பாய்
வேங்கே தழுமச் சழுமாய் வெறும்பொய் யாமோர் வனமே.

அதினோர் கோடி நீள மநந்த கோடி காத
மதிலோர் புருடன் கண்கை யெண்ணி லாத வுடையோன்
சிதறு நின்ற நினைவோன் சேறு யகன்ற வடிவோன்
பதறு நின்ற கணையம் பலவுங் கரத்தாற் பற்றி. 206

தனைத்தான் சிதற மோதித் தகர்ந்தே யுலறி யலறி
யனைத்தாந் திசையு மோடி யவச மாகி யடிபட்
டனைத்தா முறுப்புந் தளரா யிருளாய் நசிக்க மிருந்த
வினைத்தாழ் வுறுபாழ்ங் கிணற்றில் வீழ்ந்து கெடுவா னெவனும்.

மீட்டு மெழுந்து வந்து மெய்யின் மோதிக் கதறி
யோட்டந் தனிலே சுழலு முயர்முன் னிறைந்த கருவேற்
காட்டின் முறிய விழுந்து கனலிற் புழுப்போற் பதைக்கும்
வாட்டந் தவிர்ந்து கதலி வனத்தின் மகிழ்வுற் றிருக்கும். 208

கதலி வனத்தை விட்டுக் கருவேல் வனத்திற் சுழலும்
பதறிக் கிணற்றில் வீழும் பலகா லுழலக் கண்டு
விதறு வகையாம் பற்றி வீணே வருந்து நீயா
ரேதுசெய் கின்றாய் நினைவென் னென்ன வவனீ திசைத்தான்.

யானென் றொருவ னில்லை யிங்கோர் செயலுங் காணே
னீநின் றுரைக்க நினைந்து நின்றாற் றளரா நின்றே
னூனென் றியவெம் பகைநீ யுன்று வின்ப துன்ப
நானின் றறிந்தே னென்று நல்குந் தன்னை நோக்கி. 210

இடிக்கு முகிலின் மழைபோ லிரங்கிக் கதறி யழுதா
ஞொடிக்கு ளழுகை விட்டு நாணுக்கந் தன்னை நோக்கி
வெடிக்க நகைத்தா னெடிதா மீள வெமது முன்னே
தடிக்கு மங்க மனைத்துந் தானே யடைவே தவிர்த்தான். 211

விதியின் வசத்தா லிவனே ரிடமே மேவ லுற்று
னெதிர்வந் தொருவ னயலே யிவன்போ லடியுண் டேக
முதல்வந் தவனைப் போலு மொய்ம்பா யுணர்ந்த வந்தப்
பதிகன் றானும் போனான் பழைய வடிவ மொழிய. 212

பிறிது மொருவன் வந்தப் பெரிய கிணற்றில் வீழ்ந்தான்
சிறிதல் லாத காலந் திரும்பி யேறக் காணேம்
வெறிதுன் றியவவ் வனத்தில் வேறு மொருவன் வரலு
மறிது மென்னைத் தகைத்தே யான தெல்லா முரைத்தேன். 213

ஓதிற் றொன்றுங் கேளா தரப்பி யிகழ்ந்து மென்மேன்
மோதிக் கொண்டு போனான் மூர்க்க னவனைப் போல்வார்
வாதிப் புறவர் நிறைந்து வயிர முள்ளாற் செறிந்து
பீதிக் கிடமா யிருள்சூழ் பெருங்கா டென்று முளதால். 214

அறவே கொடிதாய் வெந்த வடவி யெனினு மதிஞர்
நறவே கமழ்ந்து குளிர்ந்த நந்த வனம்போன் மகிழ்வர்
மறவே லரசே யென்ற வசிட்ட முனியை நோக்கித்
அறவே புரிவா யிவற்றைத் தோன்றச் சொல்வா யென்றான். 215

கேட்ட குரிசி லறியக் கிளர்மா முனிவ னுரைப்பா
னொட்ட வடியு முடியு நடுவு மின்றிப் பொய்யாங்
கூட்ட மாகி யாழ்ந்து கொடிதாய் விகற்ப நெடிதா
மீட்ட வுலகத் தியல்பே யாமுன் சொன்ன வனமே. 216

புகையார் வனத்திற் புருடன் புலம்பிச் சுழலு மனமே
தகையா நின்ற காமுந் தனிவி வேகந் தானே
பகையா மிதனு முள்ளம் பரத்தை யறிந்தா னினதான்
மிகையார் மனங்க ளிகழ்ந்து வேட்கை வசத்தோ டினவால். 217

விதறி யோடு மனங்கண் மேவு நரகங் கிணறு
கதலி வனம்விண் ணுலகாங் கருவேல் வனமண் ணுலகாஞ்
சிதறி விழுந்த கிணற்றிற் றிரும்பி யேறு தொழிந்தோன்
பதறி நரகம் புகுந்து பாவந் தொலையா ததுவாம். 218

முனையார் முள்ளென் றதுதான் மோக மனிதர் மடவார்
நினையா வின்ப துன்ப நின்று லடைந்தே னீயே
வினையா மென்ற துணர்வால் வீயு மனநொந் துரைத்த
தனையா ரழுத தென்ற தாசை யறுக்கு மலக்கண். 219

போதம் பாதி யாகிப் புரண மாகா மனந்தான்
காதல் விடினுந் தயர்தல் கதறி யழுத ததுவாஞ்
சீத மாக மகிழ்ந்து சிரித்து நின்ற தென்ற
தேத மில்லா ஞானத் தேக மான மகிழ்ச்சி. 220

முடிவின் ஞானத் தாலே மோகம் விட்ட மனந்தான்
வடிவை மாய்க்கும் பொழுது மகிழு மதுவே மகிழ்வாம்
நெடிய மொய்ம்பி னாலே நிறுத்திக் கேட்டே மென்ற
தொடிவின் ஞான வலியா லுள்ள மொருப்பட் டதுவே. 221

அங்கத் தறைந்து கொண்ட தடர்கற் பனைக ளாலே
பங்கப் படுவன் றுயராம் பரந்தோ டினதென் றதுதான்
மங்கத் தருவா தனையான் மருண்டு சுழல்வ தாகுஞ்
சங்கற் பமும்வா தனையுந் தனைத்தான் வலைபோற் றளைக்கும். 222

கோச காரப் புழுப்போற் கொடுங்கற் பனைவா தனையாற்
பாச மடைவ ரியாரும் பகர்ந்த மனத்தின் கதையை
மாசி லாத மனத்தான் மதித்து மனத்தை மாய்ப்பாய்
தேச முடையா யென்று தெளிந்த வசிட்ட னுரைத்தான். 223



## பாலன் கதை.



முழுதுசத் தியுமாய்ப் புரணமா யென்று முடிவறு பிரமமா வதுதான், பழுதின்ஞா னிகடம் மனமலா தில்லைப் பரமமா மிதிவிலா தில்லை, யெழுதருஞ் சத்தி யாவுமா யிலங்கு மிவைகளோர் காலமொன் றுளதாம், வழுவிலாப் பிரம முடையசிற் சத்தி மறிதரு முடல்களிற் றோன்றும். 224

## சித்தன் கதை.

தங்கள்சங் கற்பத் தாலறி வில்லோர் சாலமோ கிப்பர்நல் லறிஞர், பொங்குநல் விசார மதியினுன் மயங்கார் புந்தியாற் பொய்ம்மையை யொழித்துத், துங்கமெய் யுணர்வாய் பந்தமற் றிருந்துந் தொடர்புறு பந்தமுண் டென்று, பங்கமுற் றயரே லமலமா யழியாப் பரம்பொருள் பந்தமுற் றிடுமோ. 232

அந்தமற் றொன்றாய் விகற்பமற் றறிவா யழிவிலாப் பரம் பொரு ளிருக்கப், பந்தமுற் றவரார் முத்திபெற் றவரார் பாவனை விகற்பமே யனைத்துஞ், சிந்தனை விரிவு பந்தமா மதனைத் தீர்ந்திடன் முத்தியா மனத்தின், றொந்தலீ லையினுற் றாரமா மணித்துத் தாரமு மண்ணிதாய்த் தோன்றும். 233

## உற்பத்திப் பிரகரணம்.

ஆய மனத்தின் செயல்செயலா மதனு லொழிந்த தொழிந் துளதா, மேய மனத்தி னலைவொழித்தோர் மிகவு நல்ல தியானத் தோர், தூய மனமா யிடில்வெற்பாற் சுழலாக் கடல்போற் பிறப் பிறப்பா, மாயை மயக்கங் கெடுமென்று வசிட்டன் மீண்டு முரை செய்வான். 234

தனையா நிற்கும் பலபோகச் சங்கற் பஞ்சேர் மனவிருத்தி
முனையால் வளரு மாமாயை மோக மென்னு நச்சுமரம்
வினையா நின்ற மனநோய்க்கு மேலோர் விதித்த பரிகார
மினையா தெளிதா யதனுலே யியற்ற லாகு மிதுகேட்பாய். 235

மிகமா வுறுபல் பொருள்களையு மேவா தொழித்தோர் மனம்வென்றோர், சுகமா யெளிதாய்த் தனக்குரித்தாக் துயர்தீர் நிராசை யறிவரியோர், சகமார் மனிதப் புழுவொப்பார் சான்றோ ருரைத்த நூற்பழகி, யகமா கினைவு தீர்மனத்தா லயரு மனமதைத் திருப்பிடலாம். 236

இரும்பா விரும்பு திருந்துவபோ லியற்று மனத்தான் மனந் திருந்தும், திரும்பா நிராசை வடிவாகிச் செறியுந் தன்று லியற்றுவ தாய், விரும்பா நின்றோர்க் கெளிதான வெய்ய மனத்தி னுபசாந்தி, பெரும்பா ரந்தீர் நற்கதியாம் பிறிதோர் கதியு மன்றுகா.

வாவு மனத்தை யசங்கற்ப வாளா லறுக்கி னிறைந்தெங்கு, மியாவு மதுவாம் பொருடோன்று மிந்த வழியி னறிவாலே, மேவு மனதை விழுங்கியதின் மேலா மாயா விகற்பமெலா, மோவு மதியா லறிவுகடந் துளத்தை விழுங்கும் பொருளுணர்வாய். 238

வருந்தி முயன்று மனந்தன்னை மாற்றி யில்லை யுண்டென்று, திருந்த பதத்தி லிருந்திடுவா யிடர்நீர் செல்வ மிடரின்றிப், பொருந்த வேண்டு மனம்வென்றாற் புவன மூன்றுந் துரும்பாகுந், திருந்த வினிதன் றனவெல்லாந் தீதாய்த் தோன்றின் மனமாளும். 239

சித்த விண்ணிற் றிகழறிவாந் தியானத் தாலே யறிவென்று
மொத்த படையா லேயமற வுளத்தை யறுப்பா யறுத்த தற்பின்
மெத்து துயர்போ மவனிவனென் மேவு மென்ன தறுவிதுவாய்
வைத்த வினைவே மனமிதனை மறப்பாம் வாளா லறுத்திடுவாய்.

பெருகத் திரண்ட முகிலெல்லாம் பெருங்காற் றாலே யொருவுதல்போல், வருகற் பனைசா சத்தாலே மனம்போ யிறக்கு மனமிறந்தாற், பொருகற் பாந்த மாருதமும் பொங்கு கடலும் புவியனைத்து, முருகச் சுடும்பன் னிருகதிரு மொருகால் வரினு மிடருண்டோ. 241

தன்னைக் கொண்டே தனையறுக்கிற் றுறுப்ச் சகல பூமிக்கு
முன்னைத் தலைமை போலின்ப முதிர நிறைந்து வகற்பனைக்கே
துன்னித் திகழ்தற் பதம்பற்றிச் சுகத்தை யடைவாய் பலவாக
வுன்னிப் படர்கற் பனைச்செல்வ முடைய மனமே யுயிர்ப்பகையாம்.

உள்ளப் பகைவன் பலவிதமா யுறுகாட் சிகளால் வெல்லாமற், றெள்ளத் தகுசந் தோடமெனுஞ் செல்வ முடைய நிராசையினும், கள்ளத் தனிகெந் சினைவெல்வாய் கற்றோர்க் கன்பாய் நின்மலமாய்க், குள்ளக் குளிர்ந்தாங் காரத்தாற் கூறு காது சமபாவம். 243

தாழ்வு முயர்வு மில்லாத சமமா வகையாற் பிறப்பில்லா
வாழ்வு நல்கும் பரமபத மாறுப் பதமா மலைவாலே
வீழ்வு றுத மனமரிதாம் வெம்மை கனலை விடாததுபோ
லாழ்வு செய்யு மலைவுமன மகலா வறிவி னலைவுமனம். 244

அலைவு மந்த மனமூலகா மலைவு போகின் மனங்கெடுமிந்
நிலையே தவறு றாற்கருத்து நிமல விடும் துணிபொருளும்

துலைவி லலைவே மனமாயை தொடர்வா தனையு மதன்பொயா
மலையு மனமு மதுவதனை மாறு விசாரத் தான்மாய்ப்பாய் 245

மெத்து கின்ற வாதனையை விட்டான் மேலா நலமுளதாஞ், சத்தி னசத்தி னிடைநின்று சைதன் னியத்திற் சாட்டியத்தி, லொத்து நடுநின் றலைவதுவே யுள்ள மாகு மிவ்வுள்ளஞ், சித்தின் முயல்வாற் சித்தாகுஞ் சடத்தின் முயல்வாற் சடமாகும். 246

ஊக்க முளதாய் மனமொன்றி னுறைக்கி லதுவா மாதலினாற்
றூக்கு மனத்தை மனத்தாலே தள்ளி யேறித் தளர்வின்றி
யாக்க மழிவில் பதம்விரைவி லடைவாய் மனத்தை மனத்தாலே
நீக்க வலதாங் தகைமைத்தா நிருப னிறுத்து நெறிபோல. 247

பிறவிக் கடலிற் காதலெனும் பெருவாய் முதலை பிடித்தீர்க்க
விறவுச் சுழியாற் சுழலுமவர்க் கிதய நாவா யெட்டாவா
மறமுற் றுளத்தை யுளத்தாலே மாய்த்துப் பிறப்பில் வருந்தாம
லுறவுற் றனைநீ யுய்விப்பா யுயிர்க்குப் பிறரா லுய்வுண்டோ. 248

எந்த வெந்த வாதனைக ளிதயத் தெழுந்த வவையெல்லா
மந்த வந்த விடத்தழிக்கி லதுவே மாயைக் கழிவாகு
முந்து போக பேதமென மொழிந்த விருவா தனைவிட்டு
வந்த பாவா பாவங்கண் மாற்றி விகற்ப மறமகிழ்வாய். 249

அறிபவற் றாசை யறிவது தானே யவித்தையு மனமுமாண் டதுவாம், பொறிபயி லாசை துன்பமா நிராசை புகலரு முத்தியா மின்பம், பிறிவறு தனது முயற்சியா லுண்டாம் பேதைய ருண் டெனு மவித்தை, செறிதரு பொய்யாய் நாமமாத் திரமாய்ச் சித் தெனத் தேர்ந்திடி லிலதாம். 250

என்றலு மிராம னவித்தையின் செல்வத் தெழுந்தற நெரு ங்கு மிவ்விருடா, னென்றுமிங் கின்றி யெவ்வகை நீங்கு முறைத் தரு ளின்னநீ யென்ன, வன்றவ னுரைப்பான் வன்றுயர் முட் சேர் வன்பவக் குழியின்மன் னுயிரை, யொன்றவிழ்த் தகறே னொக்கவிழ் மாயை யுண்டெனி னுண்மைநோக் கில்லை. 251

பிறப்பெனு மாயைக் கரையதா யெங்கும் பிறிவறு பெரும் பொரு டோன்றி, விறப்புறு மாயைக் கிச்சையே வடிவா மித னுடை நாசமே வீடு, சிறப்பில்சங் கற்பஞ் சிதைந்திடி லிதுதான் றேய்ந்திடுஞ் சித்தெனுங் கதிரோன், புறப்படி லிருப விசும்பில்வா தனையாம் பொங்கிருள் போமெனப் புகல. 252

கண்டன வனைத்து மாயையே யென்றாய் கண்ணெனுந் தத்து வத் தாலே, கண்டற வதுதான் கரைந்துபோ மென்றாய் தத்துவ மாவதே தென்ன, வெண்டவ னுரைப்பான் காண்பவற் றிடை சென் றெய்திடா தெங்கணுஞ் சமமா, யுண்டென லாகி நாமமற் றுயர்ந்த வுணர்வதற் பரமா முணர்வே. 253

இவையெனு மனைத்துஞ் சிற்கன மாகி யிறப்பிலாப் பிரமமே யென்று, நவையுறு மனமாங் கற்பனை யில்லை நாசமும் பிறவியு மென்னு, மவையெலாம் புவன மூன்றினு மில்லை யறுவகை விகா ரமு மில்லைக், கவையறு சமமாங் குறிபெறு மறிவு மாத்திரங் காணநின் றுளதால். 254

கேவல மாகிக் கேவல வொளியாய்க் கேடறு சுத்தமாய் விரி வா, யோவலி லறிவு மாத்திர மாகி யுறுதுய ரொன்றுமற் றுறி, மேவரு மிரக மனைத்தினுக் கொத்து விகாரமற் றுளபொரு ளிடத் தே, தாவருந் தனது நினைவையே விரும்பித் தன்வயத் தெழுந்த தோ ரறிவு 255

செப்பிய வறிவு முடிவில்சங் கற்பஞ் செய்ததிற் சென்றிடு மிதுதா, னிப்பிர மத்தின் மனமதா மிதனுக் கெண்ணில்சத் திக ளுள வாகுங், கப்பிலா தெங்கு நிரந்தரஞ் செய்யுங் கடுமையா மிம் மனந் தனிலே, யப்பிலே தோன்றுந் திரைகள்போற் பேத மாகிய வல்லபந் தோன்றும். 256

உள்ளுறு சங்கற் பத்தினுந் தோன்று முள்ளமற் றதனினு லொடுங்குந், தள்ளுறு காற்று லெழுந்ததீக் கொழுந்து சமிப்பதுங் காற்றினாற் போல, நள்ளுறு பிரம மன்றுநா னென்று நாடுதன் மனத்துறு பந்த, மெள்ளுறு மிடமும் பிரிவிலாப் பொருளை யா மெனு மழுத்தமே வீடாம். 257

மடமையுந் துயரு மவையவை நிறைந்த வடிவமு முடையனு னென்றே, படர்தரு மனத்தின் கேற்றபன் னடையாற் பாசமும் பந்தமு முளவாஞ், சடமுறு மிவற்றி லேதுமொன் றல்லேன் றசைநாம் பெண்புரீ ரல்லே, னுடலின்றே லான பரமனா னென்னு முறுதியோர் மாயைசெற் றுணர்க்கே தார். 258

தானலா தான வுடன்முதற் பொருளிற் றனெனும் பாவனை யாய, வூனமா மாயை யுணர்விலோர் விதிக்க வுள்ளதா முணர்வு ளோர்க் கிலதா, மானத நினைக்க நைம்பொறி யியற்று மன்ன

வர்க் கமைச்சர்போல் விரைவி, லானநன் மதியான் முயற்சியாற்
போகத் தாசைவா தனையைவே றறுப்பாய். 259

என்னுடை மைந்த ரென்னுடை நிதிநா னிவனவ னிதுவது
வென்னு, மின்னுடை நிலைமை யிந்த்ரசா லத்தால் வீங்கிய வாத
னை யோங்கும், நன்னுடை நிலையஞ் ஞானமா நிலைபோய் நாசமா
யையிற்கருத் தொழிவாய்,நின்னுடை வடிவி லவற்றைநீ யென்றே
நினைவிலார் போல்வருந் துவதென். 260

மூகமாய்ச் சடமாய்ச் சுகாசுகங் களிலே மூழ்கியோர் பயனற
வருந்துந், தேகமார் நீயா ரகோவகோ வீதோர் சித்திர மிருந்
தவா காணு, யேகமாய் மெய்யா யிலங்கிய பிரம மெங்குமா யிருக்
கவுந் தோன்றாச், சோகமாய்ப் பொய்யாய் விளங்குறு மாயை
தோன்றுறா திருக்கவுந் தோன்றும். 261

மற்றுமொன் றுரைக்க வள்ளலே கேட்பாய் மடமையாம்
பூமியேழ் பதமா, முற்றுள ஞான பூமியேழ் பதமா மொழிந்த
விப் பதங்கடம் மிற்றும், பற்றுள வாகு மொன்றொடொன் றளா
விப் பயில்வன பதங்கண்மட் டிலவா, மற்றமில் சொரூப நிலை
பெறல் வீடா மதினமு வுறுதனு னெனலே. 262

அடக்கமா யுரைத்தே மஃதறிந் தவர்க்கு மறிகிலா தவர்க்கு
நற் குறிக,டொடக்கமில் சன்மாத் திரமதா மறிவின் சொரூபநின்
றசைவிலா தவரே, விடற்கருங் காம முதற்பகை கடந்தோர் மெய்
யறி விலார்கடப் பரியோர், நடக்குறு காட்சி விதத்தில்வீ
ழறிவே நோக்கருஞ் சொரூபத்தி னழுவல். 263

சொரூபம்விட் டகலன் மோகமாம் வேறு சொல்விட முன்பு
பின் பில்லை, யொருபொரு ணினைவை யொழித்துமே லப்பா
லொருபொரு ணினைவுறி லந்த, விருபொரு ணடுவு ணினைவற
விருக்கு மிதுசொரூ பத்தியல் பிதுதான், மருவுகற் பனைமாண்
டசைவில்கற் போலாய் வருநனுச் சுழுத்தியிர் வடிவாம். 264

நானெனும் பிரிவும் பேதமு மற்று நல்லறி வாயசை யாத[ கேட்பா
மானத நிலையே சொரூபமா முன்சொன் மடமையாம் புவிபதங்
யீனமாம் விந்து நனவுமே னனவு மியன்றமா நனவுமந் நனவி
லானதோர் கனவுங் கனவுமிக் கனவி லடர்நனு வுஞ்சுழுத் தியுமே.

இத்திற மேழு மேகமாய் நெருக்குற் றிவைபல பெயர்களை
யெய்துஞ், சித்திலே நின்றே றறிவுமே யின்றிச் செறிபல மின்றி

மேல் வந்து, வத்தியா நிற்குஞ் சித்தசீ வாதி வருபெயர் செயல் களுக் கிடமாய், வித்துரு பமதாய் நின்றிடு மதனால் விதைநன வாமுதற் பதமே. 266

இதுவறி வுக்கு முதலவத் தைபதா மிதத்துறப் பிறந்தபின் னிவனு, னிதுவென தெனப்பண் டிலாமையா னெய்தா யெழுந் துள வறுதியே நனவா, மிதுதனை யொழிய விவனவ னேனை யிது வது வென்னதென் றெண்ணு, மிதுமுதற் பிறப்பிற் றொடர்ச்சி யாய்ப் பருக்கு மிந்தநிச் சயம்பெரு நனவாம். 267

அறிந்துள தெனினு மறிகிலா தெனினு மழுந்துறத் தானது வாகிச், செறிந்துள நனவிற் சித்தநாச் சியமே செய்வது நனக் கனு வாகு, மெறிந்தகா னலினீர் சுத்திகை வெள்ளி யிருமதி யிவைமுதற் பலவாய்ப், பிறிந்தபே தங்க ளனவிலே பழகும் பெற்றியாற் கனவுடல் விதமாம். 268

அற்பகா லத்தி லனேகமாந் செயல்கண் டறிந்தன மெனுங் கன வழிந்து, முற்படு செயலை நினைவது கனவா முந்துகண் டதனை நா ளகன்று, பிற்படக் காணும் பொருள்களை மறந்து பெரும் பொழு துணர்வுற நோக்குஞ், சொற்பன நனவு போனன வக்கே தோன்றுமிச் செயல்களு நனவே. 269

அறுவகை யவத்தை யகற்றிய சீவ னடைந்துள வவத்தையி னியற்கை, யுறுசட மாகி மேல்வருந் துயர்கூ றுணர்வுள தாமிது சுழுத்தி, துறுபுவ னங்க ளிதனிடை யிருளிற் றொலைவுறு மிப்பத மேழும், பெறுவன பேத மொன்றுநா ருகும் பேதைமை யவத் தையிவ் வேழும் 270

ஞானபூ மிகைமுடி விற் பேத மாக நவிலுவர்வா தியரவற்றி னமக்கு நல்ல, தானநிலை யிவையறிதன் ஞான மாகு மறிந்த விவற் றந்தமே யழிவில் வீடா, மானமுறு சுபம்விரும்பல் விசார மெய்தன் மனஞ்சிறுக வுண்மையிலே மன்னி நிற்ற, லினமறு சங்கற்ப மறல்ப தார்த்த வெண்ணமறுத் திடலுரிய மிவையே ழாகும். 271

இவையறிந்தோர் மோகமெனு மளற்றில் வீழா ரிவற்றியலா முத்திவழி விடாப்பீண் டில்லை, நவையுறுமோ கத்தொடுநா மடைவ தென்னே நல்லோரா னன்று ஞானச், சுவைபெறுது திராசையினு லென்று நாடல் சுபம்விரும்ப லாகுமிந்தச் சுபேச்சை

மூற்றிக், கவையறுநல் லோரியற்கை யாசாரங்கள் கைவருதல் விசாரமாக் கருதல் வேண்டும். 272

இனையசுபம் விரும்பலொடு விசார மென்ற விரண்டுநிறை தனும்விடயத் திச்சை மாற்றி, நினைவுருவி வதுசித்தஞ் சிறுக லாகு நிகழ்த்தியவிம் மூன்றானு நெஞ்சந் தன்னில், வனைதருமவ் விரத்தியினா லுண்மைப் போத மன்னுதலே யுண்மைநிலை மருவ லாகு, மனையனவிந் நான்காலு முண்மைப் போதந் தழுந்தியயற் சங்கமற லசங்க மாகும். 273

அறைந்தபத மைந்தாலுந் தானும் போதந் தழுந்தியவின் பத்தமைவாற் புறனு முள்ளு, முறைந்தபதார்த் தங்கண்மறந் தயலோர் வன்பா லுணர்வதுவே பதார்த்தநினை வொழிதலாகு, நிறைந்தவிவை யாராலும் பேதம் போக்கி நிலைபெறுதற் சுபாவத் தே நிற்றருனே, மறைந்தபொருள் வெளியாக்குந் துரிய மாகு மாசறுசீ வனின்முத்தர் வழியி தாகும். 274

சொன்னதன்மே லுடலிறந்த முத்தர் மேவுந் துரியாதீ தப் பதமாந் துரியச் செல்வந், தன்னுணர்வாற் றனையறிந்த பெருமை சான்ற தலைவனா லெய்தலுறுந் தன்மை யாகு, மன்னியவிப் பத மடைந்த சீவன் முத்தர் மகிழ்ச்சிமறுக் கத்தழுந்தா மரபி னானே, யன்னியர்சொல் வழிதுயில்விட் டெழுந்தார் போல வடுத்தன செய் குவர்செய்யா ராகி வாழ்வார். 275

இஞ்ஞான பதமேழு மிகவும் புந்தி யெய்தினர்க்கல் லது தோன்றா விவற்றை யெய்தி, லஞ்ஞான மிலேச்சனே யெனினுந் தேகி யதேகியெனி னும்முத்த னையமில்லை, மெய்ஞ்ஞான மென்பதுதான் மனத்தின் கட்டு விடுதலிது வெறிவிதுவே வீடு பேறும், பொய்ஞ்ஞானக் கானலினீர் முதலா மோகம் பொய்யெனப்போ மடமையும்பொய் யென்னிற் போகும். 276

தனையறியு நிட்டையுளோர்க் கெய்த லாகுந் தத்துவவூ மிக ளறிந்த தலைமை மேலோர், நினையவுந்தா முவுமுரியார் பொறிக ளென்னு நெடும்பகைவென் றோரழியா நிலையி னின்றோர், துனை தருபல் லுயிரிறைஞ்ச மேலாய் வாழுஞ் சுரேந்திரரு நரேந்திரருந் துரும்பாய்த் தோன்று,மனையபெரும் பதம்பெற்றோ ரவரே யாகு மல்லாதோர் பவக்கடலி லமிழ்ந்தா நிற்போர் 277

உளமொடுங்கு முபாயமே யோக மாகு முணர்வுறுபூ மிக
ளிந்த வுபாய மாகும், வளமிகுமிப் பூமிகளா லன்றி யிந்த மாதேவ
பெரியபத மருவ லாகா, வளவறுநீ நான்றான்வே றென்று மின்றி
யபேதமா யகாமயமா யமூல மாகிக், கிளர்சுகமாய்ச் சாந்தமா யறி
வா யொன்றாய்க் கேடின்றிப் பெயரின்றிக் கீழ்மே லின்றி. 278

பாவனையு மபாவனையு மதனு மீறும் பற்றுமுள தும்மிலதும்
பலவுந் தேக, மேவறிவு மடைமையுமென் றிவைக ளின்றி விண்
ணிலே யிருப்பதாய் விசால மாகி, யாவதுமா யன்றாகி மனத்தால்
வாக்கா லெட்டரிதா யின்பத்தி லின்ப மாகி, யோவரிய நிறைவி
னிறை வாகி யாவை பொருளிடமாய்த் தன்றுற்று முணரு
மொன்று. 279

தோன்றியவை விளக்கத்தா லுண்மையா மைம்பொறிக்குந்
தொடர்பாய் நிற்கு, மான்றபதார்த் தங்களெலா மறிவினு லெவ்வழி
யுண்மை யாக மாட்டா, வென்றறிவா னறிபொருளா மிரண்
டினிடை யறிவானுங் கிடைத்த தேய, மூன்றியறி பொருளறிவா
னறிவிலெனை யுற்றிடுவை தாயர்க்க மிடு. 280

ஓரிடம்விட் டோரிடத்தே யுள்ளமுறி வைத்தினடி யுண்மை
யாகிப், பேரிலதா யுணர்விலதாய்ச் சடமிலதா யதுநீயாய்ப் பிரியே
லென்றுங், கூரியபுத் தியினுலே யூகித்துக் குடம்பியெனுங் குறிப்
பை மாற்றித், தூயதாம் படிமனத்தின் றலைக்கருத்து விருக்க
படி தணிந்து நிற்பாய். 281

பிறப்பிறப்பாம் பூட்டைகளைப் பிணித்துழற்றும் வாதனையாம்
பெரிய பாச, மறப்பெரிய முயற்சியினு லறுத்திடுவாய் பரமமா
மறிவின் முன்னே, புறப்பமெய்பொய் யாமுள்ளம் புனைவிகற் பங்க
ளனைத்தும் பொய்மையைக் காட்டுந், திறப்புளவின் னிலைதாயு மிலைதானை
நீலதிறஞ் செறிவ தேய்போல். 282

சோகமுறு சங்கற்ப காசத்தான் மனமானிற் றொன்று தொ
ட்ட, மோகமெனு மூம்பனி விட்டகலுஞ் சரற்கால முதிர வந்
தான், பாகம்விளங் குவதென்ன கல்லறிவு மாத்திரமாய் மாயா
தாகி, யேகமாய் வடிவின்றிப் பிறப்பிறப்பி லாப்பிரம மிலங்கு
கொர்தாய். 283

14

## திதிப்பிரகரணம்.

### சுக்கிரன் கதை.

எழுது வோனு மெழுதிடமு மெதிர்காண் பொருளு மிலதாகி
வழுவி லாத விண்ணிடையே வந்து தோன்று மோவியந்தான்
பழுதின் மேவுந் தனைத்தானே பாரா நிற்கும் பலபொறியு
நழுவு துயிலி னுலன்றி நனவான் மேவுங் கனவொக்கும். 284

கரியாய்ச் சமமாய் நொய்தாகிக் கலந்த விகற்பந் தீரறிவிற்
பரியா நின்ற வுலகமெலாம் பற்றிப் பாய்தல் கண்ணடியிற்
றெரியா நின்ற பொருள்போலாஞ் செறிகா ரணகா ரியமின்றிப்
புரியா நின்ற வுலகெல்லாம் பொலிந்து பிரமத் திடையிருக்கும்.

சொன்ன வுலகங் களுக்குருவந் தோன்று நின்ற மாத்திரமாம்
பின்ன மின்றி யாவையுமாய்ப் பேரா வறிவாய்ப் பெருவிண்ணாய்
மன்னு பிரம மொன்றென்றே வருந்தி முயன்று பாவிப்பா
யன்ன நிலையே கைவந்தா லவைவற் றுள்ள மறிவுருவாம். 286

சீற்றுப் பலசே ரொருகற்போற் கிளருஞ் சகங்கள் செறிபிர மந், தோற்றப் படுமா லிரண்டென்னத் தொடர்கா ரணம்வே றிலாமையினு, லாற்றச் சகமென் றுன்றிலதா மறிவே யுளதா மனைத்துலகும், தேற்றப் பிரமத் திருக்குமிவை தெளிய வெள்ளி கதைகேட்பாய். 287

முன்ன மொருநாட் பிருகுமுனி முதுமந் தரமால் வரைச் சாரன், மன்னு தவஞ்செய் யுழியவன்றன் மைந்தன் மதிமான் மதியனையோன், றன்ன தாதை கழற்பிரியான் றனிமெய்ஞ் ஞான மஞ்ஞான, மென்னு மிருபார் வையினடுவே யியங்கா நின்ற பெரு ம்பதத்தோன். 288

### தாம வியாள கடர் கதை.

சங்கஞ்செய் மயல்போய்த் தொந்தந் தவிர்ந்தொன்றைச் சார்வ தின்றிச், சிங்கிசெய் கூட்டி னின்றுஞ் சேணுறச் செல்லும் புட்போற், றுங்கமோ கத்தி னின்றுந் தூய்மனம் வெளியிற் போந்து, பங்கமா மையந் தீரப் பற்றெனு மனைத்துந் தீரும். 289

ஆன்றவம் மனம்பூர் ணத்தை யடைந்துபூ ரணவெண் டிங்கள்
போன்றுற விளங்கு மிந்த நிலையிலே பொலிவுற் றோர்கண்

மூன்றுமூர்த் திகளாந் தேவ முதல்வர்க்குங் கருணை செய்வ
தூன்றிய விசாரத் தாலே யுயர்பொரு ளெய்த வேண்டும். 290

உலகெது நாமா ரென்ன வுற்றுநின் றுணரு மட்டுங்
கலகமார் பிறவி மோகங் கங்குல்போன் மூடி நிற்கு
மலகறு முலகுந் தாமு மழிவில்சிற் சோதி யென்றே
சலனமில் கண்ணாற் கண்டோர் தத்துவ நிலைமை கண்டோர். 291

அகிலசத் தியுமா யொன்று யநந்தமா மறிவு தானே
சகலபா வனைக்கு முள்ளா மெனக்கண்டோர் தம்மைக் கண்டோர்
பகர்வுறு நானு மில்லை பிறிதிலை பரமே யுண்டென்
றிகழுற வுள்ள தில்ல திடையுறக் கண்டோர் கண்டோர். 292

நெறியிடை வந்தோர் கூட்ட நெறிசெல்வோர் காணு நேர்போற்
செறிதரு போக மெல்லாஞ் சேதனர் காண்ப ரன்றே
யறிவினான் மனதை வென்று தற்பரமே பெரிதாய்க் காண்பார்
பிறகது துயரா மென்றே பெரியன போகம் வேண்டார். 293

நலங்கிய சிறைநீர் மன்ன னகர்மட்டு மகிழ்வு கூரு
மலங்கல்வேல் வெற்றி வேந்த னவனியுஞ் சிறிதென் றெண்ணுங்
கலங்குறு மனதை வெல்வோர் கைகையாற் கால்கள் காலா
லிலங்குபற் பல்லா லங்க மியாவுமிப் படிமுன் சேர்க்க. 294

பகைமன வெற்றி யல்லாற் பவக்கடல் வங்க மில்லை
வகைபடு முலகிற் செல்வர் வரிசையோர் மறுவி லாதோர்
மிகையுயர் புருடர் கீர்த்தி மிக்கவ ரென்போ ருள்ளக்
குகையிடைத் தொழில்க ளைந்தார் கொடுமனப் பாம்பைக்
[கொன்றார். 295

மனமெனும் வினையை வென்றோர் மலரடி முடிமேற் கொள்வா
மினநர கங்க ளென்னு மிராச்சியந் திருந்து வாழ்க்கை
முனமுறு பாவ மென்னு முப்பகைக் களிற்றி னாலுங்
கனமயற் படைக ளாலுங் காணமாம் பகையை வெல்வாய். 2

துனிமனச் செருக்கு மாய்த்துத் தொடர்பொறிப் பகை வெல்விற், பணிபடு பதுமக் கான்போற் படர்தவா தனை மாளுந், தனியறி வொன்றே யென்று சாதித்திம் மனம்வெ டின், கனியிருள் செறியும் பேய்போற் கருத்தில்வா தனைவ தும்.

மந்திரி யெனலா முண்மை மருவுறும் விசாரத் தாலே
யிந்திரி யங்க ளென்னு மிடர்ப்பகை யறுத்த லாலே

தந்திரி யெனலா மிட்டஞ் சமைத்தலா லேவ லாளா
நொந்திரி கிலாத வுள்ள நோக்கிய விவேகத் தோர்க்கே. 298

ஆலிக்கு மின்பத் தாலே யன்புறு மனைவி யாகும்
பாலிக்கு மியல்பி னாலே பாவன தந்தை யாகுஞ்
சீலிக்கு முறுதி யாலே தேடரு நட்பு மாகுந்
தூலிக்கும் வினைக ளில்லாத் தூய்மனம் விவேகத் தோர்க்கோ. ( )

நல்லன நூல்க ளாலே நல்லன நெறியை நோக்கி
நல்லன தியானஞ் செய்து நல்லனு பவத்தை நண்ணி
நல்லன சித்தி நல்கு நல்லதாய்த் தன்னை மாய்க்கு
நல்லதோர் தாதை யாகி நல்லவர்க் குள்ளந் தானே. 300

துணிவுறு திடமாய்ச் சாலத் துகளற நோக்கி யாதும்
பிணியறக் கண்டு ஞானப் பேருணர் வுணர்த்தப் பட்டாற்
பணிவுறு மிதயந் தன்னிற் பழுதிறன் குணத்தி னாலே
மணியென விளங்கா நிற்கு மாசறு முள்ளந் தானே. 301

மனமணி பேதச் சேற்றின் மறைந்தொரு வருக்குந் தோன்றாக்
கனமுறு விவேக நீராற் கழுவினாற் சித்தி காட்டும்
வினவுறு விவேக வன்பான் மெய்ம்மையை மதியாற் கண்டு
சினமுறு பொறியை வென்று நீர்வரும் பிறவி தீர்வாய். 302

இத்திறத் திவனு னென்றே யிறுகிய வறுதி வீறு
மத்திறம் புந்தி யாலே யழுந்தமா யகற்றி மற்ற
மெய்த்திறம் பற்றி யீயா மதினின்று விழைந்த செய்வாய்
பொய்த்திற மனத்தி னோடே புசித்தவை பந்த மாகா. 303

நிலைபெறும்படி நானெனும் வாதனை நின்றால்
வலைபுகுந்தபுள் ளாமென மூவரு மடிவர்
கொலைசெ யற்கெளி தாசையே யுயிர்க்கெலாங் கூற்றாய்த்
தொலைவி லுன்பமா சையைசையே துன்பமி லின்பம். 304

அறிவதா யறிவே மெய்யா யமலமா யனைத்தா யறிப்
பிறிவுறு வரவு போக்கில் பிரமமே யுளதா மந்தச்
செறிபொருட் சத்தி தோற்ற மாத்திரஞ் சகமாய் நிற்கும்
பொறிகள்பல் காட்சி பொய்யே பொருண்மெய்யே யென்று வா
[ழ்வாய். 305



## வீம பாச திடர் கதை.



இதுநமக் கிதுநமக்கென் றிரங்குறு பொல்லா வாழ்வா
லுதவியோர் சாம்ப ரேனு முறப்பெறு தாதா ரிக்குச்
சுதமுறு முலக மெல்லாந் துரும்புபோற் காண்போர் தம்மால்
விதனங்க ளனைத்தும் வாரா மிருகங்க ளுலர்புற் றீண்டா. 306

ஒழிவறு முயற்சி தன்னு லாகத்தா லுயர்ந்த நூலா
லிழிவற வியற்று வோர்கட் கெப்பய னெறிநி னெய்தா
வழிபடு நன்னூ லாளர் வருபயன் கருத்தாச் செய்யி
லழிவற முற்று முற்றி யளவறு பயனை நல்கும். 307

வருத்தமற் றச்சஞ் சோக மதுமின்றி நன்னூற் பின்போ
யொருத்தரா லேவ லின்றி புலாவுக நசிக்க வேண்டா
வருத்தங்க ளகர்த்த மாது மளவில்போ கங்க ளேறுயாம்
பெருத்தவா பத்தாஞ் செல்வம் பேரின்ப நிராசை தானே. 308

இடும்பைசேர் சங்க மின்றி யியற்கையா சார மெய்திக்
குடும்பமாந் துயரிற் றின்பங் குறித்திடாப் பெருமை யோர்க்கு
நெடும்புகழ் வாணாள் செல்வ நிறைகுணா மனைத்து முண்டாய்ப்
படும்பலன் வசந்த காலக் கொடிகள்போற் பலிக்கு மன்றே. 309

தவங்களாற் றெய்வ நீராற் சாத்திரங் கனிறுற் போகாப்
பவங்களை யுயர்க்கோர் பாதம் பணிந்துபற் றறுக்க வேண்டு
மவங்களாங் காமங் கோப மறவுக்கீதுயக் கியற்கை யான
சுவங்களி னடந்து நன்னூற் றுறைநின்றே றுயர்ந்த மேலோர்.

நானெனும் பொருள்கா ணுதோர் ஞானவா காயங் காணார்
நானெனும் பொருளைக் கண்டோர் ஞானவா காய மாவார்
நானெனு மகங்கா ரக்கார் ஞானவின் மதியை மூடி
ஞனெனும் பரம வாம்ப வன்பமலர் விரியா தன்றே. 311

மடிவறு பிறவி யென்னு மாத்திர னெனக்கி ளென்னு
நெடியபல் பணைக ளிட்டு நிரயமாங் காய்கள் காய்க்கு
முடிவறு துயமாங் கார முளையாக விளையா நிற்கு
மிடியிலா ஞானத் தீயால் வேரொடும் வெந்து போமே. 312

என்றுறு மிவ்வாங் கார மெவ்வுரு வுடைத்தெவ் வாறு
வென்றிட லாகுந் தேக மேவியு மேவா தாயு

நின்றொரு காலம் வென்று னேருறு பயனே தென்று
நன்றுணர் வள்ளல் கேட்ப ஞானமார் வசிட்டன் சொல்வான். ()

மூவகை யுலகி லிந்த வகங்கர மும்மை யென்று
மேவரு மிரண்டு நன்று மிகவுமொன் றீன மாகும்
யாவதும் பரமு நாமே யீறில மெமைய லாதோர்
பாவனை யிலதென் றோரும் போதமே பரமாங் காரம். 314

செந்நெல்வா வினுஞ்சற் றுகிச் செகங்களுக் கயலா யென்று
மன்னுது மெனக்கொள் போத மற்றையாங் கார மாரு
மிங்கிலை யிரண்டுஞ் சீவன் முத்தர்பா லிருந்தீ டேற்றித்
துன்னரு முத்தி நல்குஞ் சுழல்வுறு பந்த நல்கா. 315

கரசர ணாதி மட்டா நானிவ னென்று காணுந்
திரமது தானே மூன்று மகங்கரஞ் செகத்தோர்க் கெல்லா
முரியதா மிகவும் பொல்லா துற்பவ மென்னு நச்சு
மரமெழு மூல மாகும் வருந்தியு மொருக்க வேண்டும். 316

கொடிதிது கொடிது சாலக் கொடிதிதன் கொடுமை யாலே
முடிவறு முயிர்க ளெல்லா மோகமுற் றறிவு கெட்டார்
கடிதிலவ் விரண்டி னாலுங் கடிந்திதெவ் வளவு விட்டாய்
படிவுறவ் வளவே யெய்தும் பரமமாந் தற்ப தார்த்தம். 317

ஏற்றமா மகங்கா ரங்க ளிரண்டினாற் பரம மெய்தி
யூற்றமா மவற்றை நீங்கி யோரகங் காரு மின்றி
யாற்றலா னிற்றி யென்னி லறவுயர் பதம தாகுந்
தோற்றுட னனெ னமை சுருதிகள் சொல்லு முத்தி. 318

இதனியல் புரைக்கக் கேண்முன் னிசைத்துள தாமன் முன்னோ
ரதமுற மடிந்த பின்ன ரனையசம் பரன்வே கித்து
மதமுறு மிமையோர் சேனை வதஞ்செய்வா னுபாயந் தன்னை
விதமுற வினைய வாறு நினைந்தனன் விஞ்சை வல்லான். 319

தானவ ரெனமுன் னஞ்செய் தாமனை முதலா மூவர்
ஞானமில் லாமை யாலே நானென தென்று பொய்யாய்
வானவர் போரின் மாண்டார் மற்றினி ஞான நன்னூற்
போனவர் விவேகத் தோராய்ப் புணர்ந்தமா யத்தாற் செய்வேன்.

மெய்யுணர் வுறுத லாலே வெறும்பொய்யா மகங்கா ரத்தி
னையுறார் விண்ணோர் சேனை நலிவுற வெல்வ ரென்று

மையுறு மனத்தி னெண்ணி மாயையா லவரைச் செய்தான்
மொய்யுறு வேலை தந்த மொக்குள்போன் மூவர் வந்தார். 321

அனைத்தையு மறிந்தோர் தம்மை யறிவென வறிவாற் கண்டோர்
வினைத்தொட ரிலாதோ ரொன்றின் விருப்பமும் வெறுப்பு மில்
நினைத்துள நிகழ்கா லத்தி லெய்திய நிலையி னிற்போர் [லோர்
தினைத்துணை யெனினு மைய மிலாதவர் தெளிவு சான்றோர். 322

பேரினால் வீமன் பாசன் றிடனெனப் பிரிக்கப் பட்டோர்
சீரினா லுலகை யெல்லாந் திரணமாய்த் தேருஞ் சுந்தர்
போரிலே போமி னென்று சம்பரன் புகலப் போகி
நேரிலா வமர ரோடு நெடுஞ்சமர் புரிய லுற்றார். 323

எண்ணிலா வருடம் வெம்போ ரியற்றின ரிவர்க ளைஞ்சிற்
றுண்ணென வெனதி யாருந் தோற்றா ரெதிர்த்த போது
நுண்ணறி வாலே யாமா ரென்றுற நோக்க லோடும்
புண்ணிய மிலாதோர் வாழ்வு போலது பொய்யாய்ப் போகும்.

மற்றினி யிந்த வாற்றல் வாதனை யாலே பந்தம்
பற்றுறு மதனை நீங்கிற் பந்தம்போம் விவேகத் தாலே
யுற்றறி வுண்மை சேரி லுளத்தில்வா தனைபோம் போனா
லற்றமில் சித்த நெய்தீர் தீபம்போ லாகு மன்றே. 325



## ஆரூரன் கதை.



ஒழியாத துயர்மாயை யெனுமா பத்தை யொழிக்கமன நாச மோ ருபாய மாகு, மிழியாத மெய்ஞ்ஞானப் பொருளை யெல்லா மியம்பக்கேட் டயராம லிதயங் கொள்வாய், பழியான போகத்தி னிச்சை தானே பந்தமா மதுவிடலே பரம மாகும், வழியான பன்னூலாற் பயன்கொ ளென்ன வருந்தாம லிவ்வழியே வருதல் வேண்டும். 326

இன்பமிதா மின்பமிதா மென்ற வெல்லா மெரியெனநஞ் செனை நினைக வெற்றத் தாழ்வாய்க், அன்புறுபோ கம்பலகாற் றேர்ந்து நெஞ்சிற் றேயாம லெளிதருந்திற் சுகமே யாகும், வன்புமின் மனத்தோற்ற நாச மாகு மனத்தினது நாசமே மகத்தாந் தோற்

றம், நன்பரம ஞானிகணெஞ் சிறந்து போகு நடைவிலங்கா மறி
விலர்க்கு நவைகூர் நெஞ்சம். 327

ஆனந்த நிராநந்த மிரண்டு மில்லை யசைவுமசை வின்மையு
மா மவையு மில்லை, யினந்நீர் சத்தசத்தன் றிவற்றுக் கெல்லா
மிடையல்ல ஞானிமன மென்ற லோடுந், தானந்த மிலாவறிவா
யுலகின் மேலாந் தத்துவத்தி னுலகிருக்குந் தன்மை தன்னை,
ஞானந்தான் வளர்பொருட்டா யுரைப்பா யென்று நாதனியம் பிட
வசிட்ட னவில்வ தானன். 328

வேறிலா தெவ்விடத்து மேவி நின்று மேவாம னுண்மையி
னால் வேறும் விண்போற், கூறிலாச் சிற்பாவ மெங்கு நின்றுங் கூறு
படு மவற்றொன்றுங் கூடிப் பற்றாப், பேறிலாச் சங்கற்ப மனைத்து
மின்றிப் பேரின்றி யழிவின்றிப் பேத மின்றி, யூறிலா வாகாயங்
கோடி கூறு வரித்தவற்றி லொருகூற்றை யொப்ப நொய்தாம்.

நன்றிதரு முண்மைமுதற் பெயர்கள் பெற்று ஞானிகள்பா
னிமலமா ஞான மாகி, யொன்றுமல வுருவான குடும்ப ரூப
மொன்றாகித் தனைத்தெரிவித் துணர்வே மெய்யாய்த், தன்று
ணைச்சின் மாத்திரத்துக் கயலற் றிந்தச் சந்தாமாத் திரமயமாஞ்
சகங்க ளெல்லாந், துன்றுதிரை முதலாகப் பிறந்த வெல்லாஞ்
சூழ்கடலில் வேறாகாத் தொடர்ச்சி போலாம். 330

துனைதருபல் பிறப்பாகிக் கொடிதாய்ப் பொல்லாச் சுபாவ
மாந் தனையறியாச் சுமடர்க் கென்றுந், தனையறிந்தோர்க் கொளி
யுருவா யெல்லா மொன்றாய்த் தானாக வனுபவிக்குந் தன்மை யா
லே, நினைவொடுசெய் வோன்செய்கை செயலிம் மூன்று நிகழ்
விக்கும் பாவித்த நினைவுக் கெல்லா, மனையசுவை யாய்நிற்கும் பிற
விப்போக மருந்துவோர்க் கப்போக மாகி நிற்கும். 331

அத்தமன முதயமில்லை யெழுத னிற்ற லயல்போதல் வருத
லெனு மனைத்து மில்லை, யித்தலத்தி னில்லையிலா திருக்க வில்லை
யித்திறமாஞ் சித்துமல மில்லா மெய்யாய்ச், சுத்தமுறு தானே
தன் னிடத்தி னிற்குஞ் சொன்னநெறி யேசுகமாய்ச் சொல்லே
ாலே, மெத்தவெகு ரூபமாந் தற்சு பாவம் விரிந்தெங்குஞ் சிற்
பெயரால் விளங்கி நிற்கும். 332

இன்னசுபா வந்தானே யொளியாய் நிற்கு மிருளாகு
மொன்றாகு மீறில் கூறாந், தன்னுடைய தொழிலாலே தானே

பூர்ண தத்துவம்விட் டிவனவனு னென்னுந் தன்மை, புண்ணியபா வனையாலே மெள்ளச்சிவ னுருவாகிக் குடும்பியெனு மோகத் தாலே, பன்னியநா னாத்துவத்தி லழுந்திப் பாவா பாவம்பு முதல்விட லாம் பதத்தி னிற்கும். 333

அப்பதத்தி னின்றுபுரி யட்டகத்தை யளவிலசை வாலமைக் கு மமைத்தி டாநா, மிப்பரிசி னின்றலேவ வடிவ மான வெழு பிறவி வகைமாலை யியற்று மெங்கு, மொப்பரிய தற்பிரம சுபாவத் தாலே யுரைத்தநெலா மெழுமீண்டு மொடுங்கிப் போகு, மெய்ப் படிவ மில்லாத விண்ணிற் கானல் விரிவதுபோன் மனதினில் விரிந்து தோன்றும். 334

படர்மதத்தாற் றனைப்பிறர்போற் றோன்று மாபோற் பகுத்த விலா வந்தச்சிற் பாவந் தானே, படர்பொய்போற் றோன்றிய தாற் சத்த மாதி யைம்புலனு மேதொன்று மறியா நின்றாய், தொடர்கின்ற வதுவிந்த வான்மா வாகுந் தோற்றமெலாந் தானுகித் துன்னி நின்ற, விடமுடைய பரப்பிரம மிதுவே யிதுக் கிப்பிரமப் பெயரியல்பா மிதில்வே றில்லை. 335

பொருகடலிற் றிரைமுதலாய்ப் பிறந்த வெல்லாம் புனலாகி விளங்காமற் பழுதி யாமோ, வொருபொருளாம் பிரமமாத் திரமே யல்லா துபயமெனுங் கற்பனைப்பே ரொன்று மில்லை, யெரியி டத்திற் சூடுமாத் திரமே யல்லா லிரண்டென்றே யவ்வகைபோ லென்று மொன்றாந், சரியைகிரி யாயோகப் பதத்தின் முத்திச் சாதனங்க ளிறைத்தவர்க்கே சாற்றல் வேண்டும். 336

இயற்கைகுணஞ் சோதித்து முன்னே பின்னோ யாவையு மாம் பிரமமே யென்னல் வேண்டும், வியப்புறவா சையிழுமல்வார்க் கிவ்வா றோதின் மீளாத நிரகில் வீழ்த்த தாகும், தியக்குறு மோகத்தாசை தீர்ந்து புத்தி தெளிந்தவனைப் போல்வார்க்கே திட முந் தோன்றும், மயக்கமற வுணர்த்தவல்ல குருவைக் கிட்டா வருந்தி யுத்தன் பிறப்பறுக்கு மகனு மாங்கே. 337

விளக்குமிர வியுமலரு முண்டா யுண்டாம் விசொளியும் பகற்பொழுதும் விரையும் போலத், துளக்கமில்சித் துண்டாயி னுண்டா ஞாலந் தோற்றமது மாத்திரமே சொரூப மாகும், விளக்க பரமார்த்தத்தா லில்லை யென்னக் கேட்டுமே பாற்கடல்போற் கெம்பீ ரத்தா, லளக்கரிதாய்ச் சித்தமம் பமல மாகி யப்புதமா கின்மொழியென் றன்னைச் சொல்வான். 338

இம்மொழிக ளாலிமைப்போ திருளா மீள விமைப்போது வெளியாகு மிவ்வா றாகி, மைம்முகிலா லற்பமாய் வெய்யிற் சீதம் வந்துவந்து போகின்ற மழைநா ளொத்தேன், மெய்ம்முனிவே யநந்தமாய்ப் பலவா யொன்றாய் வியாதா யளக்கரிதாய் விளக்க மெய்திச், செம்முறையா மாத்துமதத் துவத்துக் கிந்தச் செய் தொழில்கள் வந்தவா செப்பு கென்றான். 339

மெய்யான பொருளுடைய வாக்கி யத்தின் மெய்ப்பொரு ளாய் முன்னொடுபின் விரோத மின்றிக், கையாரு நெல்லியெனக் காட்ட வல்ல கட்டுரையே யாமிங்குக் கழறிற் றெல்லா, மெய்யான ஞானவிழி வெளியாய்ப் போதம் விரியவுதித் தாலென்சொ லென் னும் வித்துக், கையார வலிதெளிதென் றுள்ள வாறு கலக்கமற நிலைநின்று காண்டி யன்றோ. 340

தன்னுருவ மாய்வதற்கே முயல்வ தாகித் தமமொழிந்த வவிச்சையினாற் சகல மான, வின்னலுறு குற்றமிலா விச்சை யெய்து மெய்கணைகள் கணையாலே நஞ்சை நஞ்சாற், றுன்னுபகை பகையாலே தீது தீதாற் றுடைப்பதுபோ லவித்தைதனைத் துடைத் தல் வேண்டு, முன்னியுறப் பார்த்தனுமே யிதன்சு பாவ மொழிந் துபோய்த் தன்மாய்வா னுதவு மின்பம். 341

நனிமெய்யாய் மாயையில தென்றிவ் வாறு நாடுவாய் ஞானி யாய் ஞானம் பெற்றாற், றுனிசெயுமீ துளமாயை யறிநி யன்றே துகளிலா நற்போதந் தோன்று மட்டும், பனிமாயை யில்லையென வென்சொல் லாலே பழுதில்லா வறுதியுறப் பற்றி நிற்பாய், புனித முறு பிரமமே யெல்லா மென்று புந்தியிற்கண் டோர்முத்தி பொரு ந்தி னோரே. 342

பேதமுறு புந்தியே மாயை யாகும் பெரிதுவருந் தியுமிதனைப் போக்கல் வேண்டும், போதமுறு பேற்றினா லன்றி மாயைப் பொரு நதியின் கரைதோன்றா பொருந்தத் தோன்றி, லேதமறு மப்ப தமே யிறவா வீடா மிம்மாயை பிறப்பிடமே தென்ன வேண்டாஞ், சேதமுறக் கொல்வழியே தென்று தேர்வாய் சிதைவுற்றா விதனி யல்பு தெரியு மன்றே. 343

யாதினிற்றோன் றியதென்றும் யாதி தென்று மிறந்தநெறி யாதென்று மிறந்தாற் றோன்று, மாதலினால் வன்றுயரின் சாலை யான வவித்தையெனு நோய்க்குமருந் தருந்தச் செய்தாற், றீது

பயில் பிறப்பென்னுங் கடலின் மூழ்காய் செறிகாற்றுத் தன்னுரு
வாஞ் சேணி றன்றாற், சாதமுறக் திரிவதுபோற் றன்பாற் றோன்
றுஞ் சத்தியிரு லாத்துமதத் துவமின் றெல்கும். 344

நொய்யநெடுஞ் சிற்கடறன் னிடத்தே யற்ப நுடக்கத்தாற்
கணம்விளங்கு நுண்மை னோக்கா, லையமறத் தற்பதமொன்
றகண்ட மென்றே யமுக்துவா யக்கடலி லசைந்தா சற்றே, மொய்
யறிவாஞ் சிற்சத்தி கணகா லத்தின் முழுதுமாசத் தியினு முழுவன்
கத் தோன்றித், துய்யவிடங் காலமொடு தொழில்கள் மூன்று
தாயனசத் திகடம்மைத் தனையாய்ச் சேர்க்கும். 345

தனதுசுபா வத்தையறிக் தநந்த மான தற்பதத்தி லிருந்தந்
சிற் சத்தி தானே, யெனதுருவின் வளமென்றே யறிவுற் றுற்போ
லென்னுறுமிப் படியுருவை யிதுபா விக்கி, லனுசுதமா யப்பொழு
தே பெயர்க ளெல்லை யாதியாம் பார்வைகள்வந் தடையா நிற்கும்,
கனவிகற்பந் தருவடிவாய்ச் சித்த ரூபங் கவரிடங்கா லந்தொழிற்
குக் கலந்த பற்றாம். 346

சங்குரைசெய் சித்தினுடை யுருவந் தன்னை யாவருஞ்சேத்
திரக்கியனென் றியம்பா நிற்ப, ராங்கதுவும் பாதனையைச் செய்யா
நின்றே யகங்கார பாவனையை யடையா நிற்கும், வாங்கருமாய்
காரமுநிச் சயிப்ப தாகி மவினமுறு புத்தியா மலந்தேர் புத்தி, வீங்
கியகற் பனைவடிவாய் மனன நெஞ்சாம் விகற்பமிரு மனம்பெறியா
மெல்ல வந்தே. 347

கரசரண மயவுடலம் பொறிகளைம்பர் கவல்லுறலிப் படி
யன்றோ கலந்து சிவன், விரவியபாங் கற்பமெனும் பாசத் தாலே
வீக்குண்டு தன்பவலை விசப் பட்டுத், தாமறவி னதையடைவே
யடையா நிற்குஞ் சத்திமய மாமனபிக் தன்மை யாகிப், பொரவ
கங்கா ரதைத்மெயிக் கோசகாரப் புழுப்போற்றன் னிச்சையிற்
பூணும் பந்தம். 348

தானேசங் கற்பித்துத்தன் மாத்தி ரத்தாற் றனிவலையா மூட்
டொழில்க டன்னைக் கட்டக், காமேனது சிங்கம்விலங் குற்ற தென்
னக் கவலையின்றன் மிகவுமனங் கரைந்து சோரு, மானுக மனம்புத்
தி ஞானஞ் செய்கை யகங்காரம்வா தனையுடலம் பகுதி மாயை,
யூறுனை மலங்கருமம் பந்தஞ் சித்த மோக வித்தை யிச்சையென
வுரைப்ப ரன்றே. 349

அப்பரிசோ ரோரிடத்தி லோரொன் றுக வாசாபா சத்தினு
லமைத்துச் சொன்ன, வொப்பரிய சகவிரிவா மிவற்றை யெல்லா
முட்கொள்ளும் பலமிதனி லொன்று மில்லை, கப்புடைய நெடுவட
த்தை வடத்தின் வித்துக் கரந்திருப்ப தொக்குமிடர்க் கவலைத்
தீயின், வெப்பமிகக் கோபப்பா மெடுத்து நங்க வேட்கையெனு
ங் கடற்றிரையான் மெலியு முள்ளம். 350

பெருகியவித் துயர்களா லவசமாய்த்தன் பிதாமகனை மற
ந்துமிகப் பீடை யுற்றுக், கருகியவிம் மனந்தன்னை யளற்றி லானை
க் கரையேற்றி விடுவதுபோற் கரையி லேற்றாய், வெருவுசரா மர
ணமெனும் விடத்தால் வெந்து மிகுநலந்தீங் கெனும்பகையான்
மெலியு நெஞ்சக், கருள்புரியா நரர்மனித வடிவ மான வரக்கரே
யருள்வடிவ மான வள்ளால். 351

இவ்வகையே சிற்பாவ சிவ பேத மியல்வடிவாம் பிரமத்தி
னிடையே நின்று, வவ்வியபா வனையாலே வந்த கோடி வாராநின்
றனகோடி வருவ கோடி, தெய்வவரை யருவிநீர்த் துளிபோல் வந்
தோர் சிலர்பிறவி யொன்றிரண்டு மூன்று சேர்ந்தோர், நைவுரு
சென் மங்கள்சிலர் நூற்றின் மிக்கோர் நாடரிய பவஞ்சிலர்க ணண்
ணி நின்றோர். 352

சிலர்சிலர்கள் கின்னரர்கந் திருவரானோர் சிலர்விச்சா தரருர
கர் திரளாய் நின்றோர், சிலரருக்க ரிமகிரணன் வருண னானோர்
சிலர்பிரமன் றிருநெடுமால் சிவனாய் நின்றோர், சிலர்மறையோர்
சிலரரச ராகி நின்றோர் சிலர்வணிகர் வேளாண்மைச் செயலி
னின்றோர், சிலர்விலங்கு பறவைகளூர் வனவாய் வந்தோர் சில
ரிலைகாய் பழமூலந் திரண மானோர். 353

சிலர்மயேந் திரசைலஞ் சையமேரு தென்மலய மந்தரமாய்ச்
சிறந்து நின்றோர், சிலர்கடம்பஞ் செம்பிரந் தாலஞ் சாலஞ் சிறந்த
தமா லங்களாய்ச் செறிந்து நின்றோர், சிலருவரி தயிர்நெய்பாற்
கருப்பஞ் சாறு தேனொடுநீர் பெருங்கடலாய்ச் சேர்ந்து நின்றோர்,
சிலர்திசைகள் சிலர்நதிக ளாகி நின்றோர் சிலர்மேலோர் சிலர்கீ
ழோர் சிவ ரானோர். 354

கையினா லறையுண்ணும் பந்து போலக் காலனா லறையுண்டு
கணக்கி லாத, மெய்யிலே புகுந்தலுத்து விவேகம் பெற்றும் விரகி
லார் சிலர்பிறப்பின் மீண்டும் வீழ்ந்தார், மையினான் மூன்றுலகாம்
பணதி செய்து வருகிற்கும் போமாகி வளர்ந்து வாளாய், பொய்யி

ஞன் மிகவிரியும் வேலை யூடே பொருதிரைபோற் பரபதத்தே புரிந்த மாயை. 355

தெரிந்துணர்ந்தோ னிவ்வாறு செப்ப லோடுஞ் சீவன்றான் மனப்பதத்தைச் சேர்ந்து நின்றும், விரிஞ்சனெனும் பெயர்பெற்ற தெவ்வா றென்று வித்தாரத்தா லுள்ளபடி விளம்பு கென்ன, வரிந்தமன் கேட் டனும்வசிட்ட னுரைப்பான் வள்ளா லந்தநெறி கேட்ட னுமே யகில ஞாலம், புரிந்தநெறி யறிதியிதன் றன்மை யெல்லாம் புந்தியுறக் கேட்டுணர்வு பொருந்து வாயே. 356

திசைகால மாதிகளாற் றன்னுடைய சத்தியினாற் றிரியாச் சீவன், பசையான லீலையினாற் றிசைகால மாதிகளாற் பயின்ற மேனி, யிசையாகின் றுளபோதே சீவனுக்குப் பரியாய மென்னப் பட்ட, வசையான வாதனையின் வசத்தாலே யலையுமனம் வந்து தோன்றும். 357

செயல்செயலின் மைகளிரண்டுஞ் சேர்ந்தெழுந்த மனச்சத்தி செயலை மேவி, யியல்பின்முத லுப்தாகிச் சத்தவிதை யிரதத்தி லெழுவ தான, வயர்தருவின் பாவனையைப் பாவிக்குங் கனாத்திலே யுடனே யந்த, வியனலைவின் றன்னெறியா லந்தமனங் கன தையினை மேவு மன்றே. 358

பரிசவிதை யிரதத்தி லெழுவதாங் காற்றசைவைப் பாவித் துன்னும், விரிதருவின் காற்றிரண்டின் மெய்ந்நெருக்கி லேதின் றாம் வெந்தீத் தோன்றி, யிருதிறச்சத் தப்பரிசந் திடமாகப் பழுக் கழுறு மியல்பி னாலே, யுருவதன்மாத் திரைமேவு மியற்றென்றி னுடன்மேவு முள்ளந் தானே. 359

கனாத்திவிர தத்தியல்பைப் பாவிக்க வீரறிவக் கருத்தி னுண் டாங், குனாத்தினையத் திறங்களொடுங் கூடுமனங் கனாத்திலே குறித்து நாடி, மனாத்தினைப்பா வித்தலுந்தன் மாத்திரத்தால் பாரறிவு வருமிவ் வாறே, தனாத்தபூ தத்தன்மாத் திரம்வளைத்து வளைத்துருவாய்ச் சகமாய்த் தோன்றும். 360

திகழ்ந்தவனற் பொறியென்னத் திகழ்வடிவை விண்ணிலே தெரியக் காணு, மகங்கரமாந் தொழின்மேனிப் புந்தியுடன் விதையோடு மணுகி யந்தப், புகன்றதெலாஞ் சேர்ந்துபுரி யட்டகமா யுயிர்களுளப் பூவில் வண்டா, மிருக்ககிங் கூட்டரவாற் பாவிக்கு மிகவிளங்கு மேனி தன்னே. 361

பாவனைமுற் றிடத்தூல மேனியாய் வில்வத்தின் பழம்போற் சித்த, மேவுகரு விற்பாய்ந்த பொன்னிறம்போன் மிகவிளங்கி விமல விண்ணிற், றுவரமுண் டாய்நிற்கு மந்தவொளி தன்னு டைய சுபாவந் தன்னாற், கேவலமேற் றலைகீழ்காற் பக்கங்கை நடு வயிறுக் கிளர்ந்தோ னாகும். 362

முந்தியகா லத்தினால் வெளியாகி நின்மலமா மூர்த்தி யாகிப்
புந்தியொடு சத்துவமாய் புச்சாகம் விஞ்ஞானம் பொறியு மேவு
மந்தவவ னேயகில பிதாமகனாய் முழுதுணர்ந்த வயனா மன்னான்
சுந்தரமா யுத்தமமாய்த் திகழ்கின்ற தன்வடிவைத் தோன்ற னோ
[க்கி. 363

குன்றாத வற்குணத்தோன் மூன்றாகா லமும்வெளியாக் குறிக்கும் வேதா, வொன்றாகிச் சின்மயமே யுருவமாய்க் கரை காணா வுயர்வா னத்தின், முன்றானுண் டாகியதென் னெனநினைந் தா னழுக்கிலா முழுஞா னக்கண், ணன்றுவப் போதுதித்தோன் பலகோடி சிருட்டிமுத னடத்தக் கண்டான். 364

சாதிகுலந் தருமமெலா முணர்ந்த வற்றை லீலையினாற் றான் கற் பித்தா, னேதரிய லீலையினாற் சங்கற்பத் தாற்பிறக்கு மாயினவை யெல்லா, மேதமுறு கந்தர்ப்ப நகரம்போ லறம்பொருள்வீ டின்ப மெய்த, மேதகைய பலகோடி சாத்திரங்க ளவர்க்காக விதித்தான் வேதா. 365

விரிஞ்சனுரு வாமனத்தா லிச்சிருட்டி யிற்சிருட்டி மேவி நின்றும், புரிந்தலரு மலரெல்லாம் வசந்தகா லத்தினாற் பூப்ப தொ க்கும், பிரிந்தசுரர் நரர்முதலோர் தத்தஞ்சங் கற்பத்தாற் பிறவி யுற்றார், தெரிந்தனைய சங்கற்ப மறிற்பிறவார் செய்மாண்ட தீபம் போல. 366

வானநிக ராமனத்தாங் கற்பனைமாத் திரம்வானா வளரா நிற்கு, மானசுக நனவுதனிற் கனவுபோ விராகவனே யறிதி யன்றே, யீனமுறப் பிறப்பில்லை யிறப்பில்லை யெவ்விடத்து மொன் றா மென்றும், ஞானபர மார்த்தத்தா லிவையெல்லாம் பொய்யாக நண்ணு மன்றே. 367

வெங்காதற் பெரும்பாம்பு நெளிபுற்றாங் குடும்பபரம் வெறும் பொய் யென்றே, யிங்காசை யறநீக்கி யெல்லையிலாப் பரமபதத் திருந்து வாழ்வாய், சிங்காரக் கந்தர்ப்ப நகரிருந்தென் சிதைவுற்

றென் றீதோ நன்றோ, பங்கான மனைமக்கள் வாழ்ந்தாலென் கெட்டாலென் பாச மாயை. 368

தாரதன மிருமென்னிற் றனையாகு மப்பாசந் தனைத்துக் கொண்டா,லாரதனை யறுத்தகலும் விரகுடையா ரறிவில்லா ராசை விஞ்சிக், கூரிதையா மப்போகத் தழுன்றழுக்குங் கொடுந்துயரைக் குறித்த போதே, நீரதையா மறிஞர்க்கு விரத்தியுள தாய்ச் சித்தந் தெளியு மன்றே. 369

ஆனதிறத் தாற்குடும்ப பாரமியா பாரத்தி லுறுகும்போது, போனபொருட் கிரங்காமற் பொருந்துபொருண் மாத்திரமே புசித்து வாழ்வாய், இனமுற வருபொருளைச் சிந்தியார் வந்தபொருட் டேதென் றென்னார், ஞானபர ராமேனோர்க்குச் சுபாவமாங் குணமிதுவே நளினக் கண்ணாய். 370

கண்டவெல் லாம்பொய்யென் றுள்ளத்தி லெண்ணித்தினும் வெங் காத லீத்த, பண்டிதரா முழுதுணர்ந்த பெரியோரை யீராது பாச மாயை, யுண்டிலையென் பவற்றிடையி னத்தமாம் பதம் புந்தி யூன்றப் பற்றி, விண்டவுடற் குடப்புறம்பா முலகைப் பற்றுதலும் விடலும் வேண்டா. 371

எக்கருமத் திலுமிச்சை யனிச்சையற நின்றுணர்வை யெய்தினோர்க்கே, யக்கருமங் களிலறிவு பற்றாதா மரையிலைமே லம்பு போலத், தொக்கபொறி விடயங்கள் சுவையுறகின் மனமாரத் தோன்றில் வீரா, தக்கவுணர் வுணர்ந்தோராய்ப் பவக்கடல்கள் கடந்தன்றே சுகந் திளைத்தாய். 372

உச்சமுறு பதம்வேண்டி லனைத்துமா தனையிலுநின் னுள்ளந் தன்னை, நிச்சயமா முனைவாமே நிக்குவாய் மலரின்மணை நீங்கு மாபோற், றச்சமுறு வாதனையாந் தாங்கரிய பவக்கடலிற் றுனைவார்க் கெல்லா, மச்சமற நல்லறிவு மரக்கலமாய்க் கரைசேர்ப்ப மயலொன் றுண்டோ. 373

பராபரங்கண் டோரனைத்தும் பின்செல்வ குலவியல்பு பற்றார் நீங்கார், சராலயகத் தளவனைத்தும் பற்றார்கள் குணியத்துத் துயர மெய்தார், விராவுகிய நியுத்தன்னார் வெய்யவன்போ லுலகறிப்பர் மேன்மை சான்றோர், இராகவனே யிவ்வாறு நடத்தியென வசிட்ட முனி யியம்ப லோடும். 374

பரத்துவகே ளிவ்வாறு பரமமுனி பரமபதம் பகரக் கேட்டுத், திரத்துவமா நிறைந்தான்போற் சீராம னமலமாய்த் தீர்ந்து சித் தந், தரத்துவமை யில்லாத மெய்ஞ்ஞான நல்லமுதாற் றதும்பித் தண்ணென், றுரத்துவளர் சந்திரன்போ னிறைவுற்றான் வசிட்ட னுமீண் டுரைப்ப தானான். 375

ஒருகால மரன்படைப்ப னொருகால மயன்படைப்ப னுலக மெல்லா, மொருகால யரிபடைப்ப னொருகால முனிவர்படைப் புள்ள தாகு, மொருகாலம் புயத்துதிப்ப னொருகால்வா ரியினுதி ப்ப னுயர்ந்த வேதா, வொருகாலண் டத்துதிப்ப னொருகால்விண் ணகத்திலே யுதிப்ப னன்றே. 376

வன்மரங்க ளேநெருங்கு மொருபடைப்பி லொருபடைப்பின் மனிதர் துன்னும், பன்மலைக ளேநெருங்கு மொருபடைப்பி லொ ருபடைப்பிற் படர்மண் ணாகுங், கன்மயமா மொருபடைப்பி லொருபடைப்பிற் றசைமயமாய்க் காண லாகும், பொன்மயமா மொருபடைப்பி லிப்படியே பலவிதமாம் பூமி தானே. 377

வான்முதலா மண்முதலா நீர்முதலாந் தீமுதலா மற்றை வா யுத், தான்முதலா மிப்படியே சிருட்டிதொறு மோரொன்று தலை மை யாகும், யான்முதலோ ரயன்சிருட்டி சிலேடையா வுனக்கு ரைத்தே னிந்த வாற்றான், மேன்முதலா நியமமிதற் கொன்றாக விலதுபல விதமாய்த் தோன்றும். 378

கிருதமுத லுகநாலு மீண்டுமீண் டுற்பவிக்குங் கிளைத்து ஞால த், தொருபொருளும் வளைத்துவளைத் தநந்தமடங் குற்பவமா யுழலா தில்லை, யிருள்பெருகு மாமாயை வன்னலைக்கு முன்னிலை யா மியாமிங் கோத, வருமறைதேர் தாருரான் கதைகேட்டு யிராம வென வறைவ தானான். 379

முக்குணந் தானே மூன்றுட லாகி மூலமா மூன்றுல கிற்கு, மக்குணந் தன்னிற் றமங்கொள்சங் கற்ப மாவது பகுதியின் செய லாற், றுக்கமாய் வருந்திப் பாதலப் புழுவாந் தூயசத் துவங்கொ ள்சங் கற்ப, மிக்கநற் றரும ஞானம்வீ டுளதாய் வேந்தர்வேந் தெனமிக விளங்கும். 380

இராசத குணசங் கற்பமிவ் வுலகி லியல்புறு சுவிப்பியா மியங் கும், விராகிய விந்த மூன்றையும் விட்டு மெய்ம்மையாய்த் தா னில தென்னி, னிராகுல மாக வளையசங் கற்ப நிமலமாம் பரம

மடையுந், துராசையாம் பார்வை யனைத்தையு நீக்கித் துகண்மன
மனத்திறு ணிறுத்தி. 381

உள்ளினும் புறத்து மெழுந்தசங் கற்ப மொருக்கிட வொருப்
பட நினைவா, யெள்ளருந் தவங்கள் கற்பகோ டிகணீ யியற்றினும்
பாதலம் பூமி, தள்ளருந் துறக்க மேவினு முனக்குச் சாற்றுசங்
கற்பமாய் வல்லாற், றெள்ளிய பரம பதத்தினை மேவத் தியக்கமி
லுபாயமீவே றில்லை. 382

துயர்களும் விகாரங் களுமிலாப் பிரம சுகஞ்செய்சங் கற்பநா
சத்தை, முயலுதி நனிசங் கற்பமாங் கயிற்றின் முடிவறு பாவனை
யெல்லா, மியல்புறு கோவை யாலெழு மந்தக் கயிற்றினை யெளிதி
னி லறுத்தான், மயல்கொள்பா வனைக ளெங்ஙனே தானாய் மடியு
மோ வறிகில மைந்தா. 383

துனிசெய்சங் கற்ப மின்றிமுன் வந்து தோன்றிய தொழில்
வழி நிற்பாய், பனிசெய்சங் கற்ப மாண்டிடி லறிவு பார்வைக ள
னைத்தினும் பற்றாத், தனியுயர் பிரம பதமடைந் தகில விகற்பமாந்
தனையெலாந் தள்ளி, யினியறு யேகத் துவத்தினிலே சுழுத்தி யிதய
முற்றின்பமே பெறுவாய். 384

என்னலு முயர்சங் கற்பமே தென்ன வெழுந்ததும் வளர்ந்
ததுமாய்ந்து, சன்னமா கியது மெங்ஙன மென்று தவஞ்செய்தா
குரனை மைந்தன், பன்னியே கேட்ப வதற்கவ னுரைப்பான் பர
மமா யுண்டெனல் வடிவாய், மின்னிய சுபமா மறிவுகாண் பதற்
றின் மேவுற வெழுதல்சங் கற்பம். 385

அற்பமா யெழுந்து தானுளா தாகி யடைவிலே பையப்பையப்
பருத்துறத், தற்பர மனமாந் தெளிவுற மூடிச் சடத்துவந் திடத்தி
னுண் டாக, வற்பவ முகில்போல் வளர்வுறு மைந்தா வுணர்வு
காண் பவற்றினை யுன்னி, நிற்பதாந் தனக்கு வேறுபோற் கண்டு
நிகழ்த்துசங் கற்பமாய் நிகழும். 386

அறிவெனும் விதைசங் கற்பமா முளையா மனையசங் கற்பமாந்
தன்னைப், பிறிவுறத் தானே செய்துதான் பிறக்கும் பெரிதுற
வளர்ந்திடுந் தானே, செறிதுய ரொழிய வின்பமொன் றில்லை யா
தலாற் செப்புசங் கற்ப, நெறியுற நினையே னிற்புறு நில்லயி னிமிட
மும் பாவனை நினைவேல். 387

இவ்வள வான பாவனை யாலே யின்பமா மினையசங் கற்பம்,
தவ்வுறப் பெரிய முயற்சிகள் வேண்டாந் தாக்குபா வனையெலா
மொழித்த, வவ்வகை யாலே யிறந்துபோந் தன்னெஞ் சலர்வுறு
பூவினைக் கசக்கிற், கைவரு வருத்த மொன்றுள தாகுங் கழறிய
விதற்கது வேண்டா. 388

எழுந்தசங் கற்ப பாவனை விட்டா விறந்துபோ மிதனையிங்
கிதனு, லழுந்துற மாய்த்து மனத்தினுன் மனத்தை யறுத்துநின்
னறிவினீ நிற்பா, யுழுந்துருள் பொழுதின் முடியுமீ தரிதோ வுல
கமும் வானமு மொக்கு, முழுந்திய பொய்யாய்ப் போம்விகற் பந்
தான் முளைத்தவை யன்றிமுன் னிலதால். 389

தண்டுலத் தோலுஞ் செம்பினிற் களிம்புஞ் சகசமாய்த்
தொழில்விசே டத்தால், விண்டுபோ மதுபோற் புருடனு மலத்
தை மேவியே போக்குத லியல்பாங், கொண்டசங் கேத மொழித்
துநீ முயல்வாய் குருவின்வல் லபவிளக் கத்தாற், கண்டன மெனல்
வி ஞ்ஞனுநீ தானுங் கண்டன பரம்பொருட் பொலிவே. 390

கசன் கதை.

முடிவறு காலந் தன்னின் மொழிதரு மாண்டு நூறு
நொடியள வெனினும் பற்று நிகனையே நெடிதாய் நோக்கி
யொடிவறு பார வேட்கை யுறுவதென் பொருள்க ளுன்னிப்
படர்வதா முள்ளத் தாசை பற்றற வொருக்கி நிற்பாய். 391

மாலற வெங்ங னின்று யங்ஙனே வாழ்வாய் பாரிற்
கோலநன் மணிகள் வேண்டா திருக்கவுங் குருகிப் பாயுஞ்
ஞாலநன் னிழல்போ லுண்டா மாத்திரந் தோற்ற மான
ஞாலமும் பரமந் தன்னி னலம்பெறத் தோன்று மன்றே. 392

ஆதலாற் பரமந் தன்பா லகர்த்தனே கர்த்தனே யென்
றோதுபா வனைக ளுண்டா முற்றபற் றிலாமை யாலே
சாதமி லகர்த்த னுருஞ் சந்நிதி மாத்தி ரத்தான்
மேதகு கர்த்த னுமிவ் விரண்டலால் வேறு மேவா. 393

அகத்தனிற் கர்த்தன் றன்னி லமைந்ததே தகனி னிற்பாய்
முகத்தமா மிரண்டு மின்றி முனைத்தெழு மனத்தை நூங்கி
மிகத்தனி திரமாய் நிற்றி யகத்தனு விளம்பு நேரிற்
சுகத்தனு நிற்றி யேனு நன்றிது ஆயபொன் றில்லே. 394

முன்னிய சுத்த னாகி யான்சக முறைசெய் கின்றே
னன்னிய நினைவி லாமை யாலதில் விகார மில்லை
யென்னது நீநான் செய்கிறேன் செய்திலே னென்னும் பார்வை
யுன்னிய பொழுதே துன்ப முடலெனா னென்பா ருண்டோ. 395

பொய்யுட லுனை யென்னின் மூவேழு நரகு மங்கே
வெய்யவன் றுயரா மேது மெய்ம்மையா னென்ன வேண்டா
வையமில் கேள்வி நல்லோர் நினைவரோ வனைத்தா லூனுங்
கையுறத் தின்ப ரேனு நாய்ப்பிணங் கவரார் நீசர். 396

நாமுட லென்று பாசாங் குரைக்கின் குருடாய்ப் போகுந்
தோமுறு மதனைத் தூரத் துரப்பரேற் சோதி ஞான
மாமுகி லிலாதி லப்போல் வயங்கிடு மிதைய கண்ணே
லேமுறு பிறவி வேலை யிருங்கரை யெளிது தோன்றும். 397

அனைத்தினுங் கர்த்த னல்லே னயனில னல்லே னென்ன
நினைத்துளத் தமுதி யாகி நிற்றியா லதனிற் றெய்வ
லனைத்தினுங் கர்த்த னென யானது மதுவா னென்ன
நினைத்ததை யொன்று மின்றி நிச்சய மாகிற் பாய். 398

அன்றெனி லொன்று மல்ல னொன்றுதா னாகு மென்றே
நின்றவிப் பதத்தி னன்று நிற்பதத் தனியீ திப்பா
யொன்றெனும் பதத்தைக் கண்ட வுத்தமர் தம்பா லிப்பர்
துன்றுவா தனைசெய் பந்தந் தொல்லைவி டகன்றத் திர்தல். 399

புலன்களிற் பழகிச் சித்தம் புகுந்தவா தனைகண் முன்னே
யலம்பெற மாற்றி விட்டுக் கசிந்தவா தனையுந் தீர்வாய்
நலந்திக முருள்சந் தோட மட்புறந் தனமிங் கானு
மலந்தவிர் குணங்களாக மனத்தமுங் காது செய்வாய். 400

உள்ளுறு தொழில்கள் முற்று மொருக்கிய குணர்வைப் பற்றி
மெள்ளவாங் கதுவு மந்தக் காரணங்க ளுடனே விட்டுத்
தள்ளுவ வெல்லா மெத்தாற் றள்ளிறு மதுவுந் தள்ளித்
தெள்ளுணர் வுள்ளஞ் செய்வகை தேசிரு வனைத்துந் தீர்த்து. 401

வாதனை வடிவ மான விகாரங்க ளற்றி வற்றைப்
பேதமாய்ப் பழகு மேலும் பிராணனி லியக்கந் தானு
மியாதுமே லத்தோ டற்று மின்னகை மென்ன நின்று
மியாதுநீர் சாந்த னயென் றுயிலைய மறுநீ மெய்யால். 402

உளத்தினி லனைத்து மாற்றி யுலகிலோர் பற்ற தின்றித்
துளக்கிலா நிலையி னின்றோர் துகளறு முத்த ராவா
ரளக்கரு மீச ராவா ரவர்களே சமாதி தானுங்
கொளத்தகு கருமந் தானுங் கூடினும் விடினு முத்தர். 403

இருதயத் தாசை யொன்று மிலாமையா லெண்ணப் பட்ட
கருமங்கள் செய்துந் தீர்த்துங் கையுறு பயனொன் றில்லை
யொருவழிப் படநீள் கால முளமொருப் படுத லாலே
பெருகுவா தனைதீர் நெஞ்சிற் பேசுநா லனைத்தும் வேண்டா. 404

மறுகுவா தனைக ளீர்ந்த மவுனத்தை யொழிய வேறே
றுறுகதி நல்ல தில்லை யுணர்வன வுணர்ந்த தாகுந்
துறுதிசை பத்துஞ் சுற்றி மீண்டதாந் தொல்லை ஞாலத்
தறுதியா யுண்மை கண்டோர் சிலர்தின்றே ரவத்தின் பாய்வோர்.

தேகத்தை நோக்கி யன்றே செகமெலாந் திரிவ தல்லா
லேகத்தை நோக்கி யன்றே வெங்களும் பஞ்ச பூத
நாகத்தை மண்ணைக் கிழை நாடினு மாறு காதே
மோகத்தை விடுது மென்றே திடமுற்றார் முழுதும் பற்றார். 406

ஊகமின் மூகர்க் கெல்லா மூழிவெங் கடலாஞ் சென்ம
மோகமி லூகத் தோர்க்கு முன்னூறு கோவின் குளாஞ்
சோகமின் ஞானி நெஞ்சிற் றொடர்ந்தசிற் றின்பம் பற்றாப்
போகமில் சிற்றார்ப் புன்பெண் பொலிநகர் விடலைக் கென்றும்.

பிரமமாஞ் சுத்த வேலை நுரைகளாம் பிறங்க லெல்லாம்
பரமவா தித்தன் முன்னர்க் கானலாம் பரவை ஞாலந்
திரமதா மிதனை முன்னே செப்பினன் வியாழன் றந்த
வரமகன் கசனும் பேரோன் மற்றது வள்ளல் கேட்பாய். 408

கசனுயர் சமாதி நீங்கி யொருபகற் களிக்கு நெஞ்சன்
வசமறத் தழுத முத்த வசனத்தன் யாது செய்கேன்
றிசையுற வெங்கு செல்கேன் றீர்ப்பதென் கொள்வ தென்று
மிசையுயர் கற்ப நீர்போன் மேதினி யெங்கு நானே. 409

மேனியிற் புறத்தி னுள்ளின் மேலொடு கீழிற் றிக்கில்
வானில்லை யகத்தி லெங்கு நானன்றி மற்றொன் றில்லை
யானிலா விடமு மில்லை யெனதிடத் திலாது மில்லைத்
தானிகழ் பொருள்வே றில்லை சச்சிதா னந்த மென்றான். 410

## திதிப்பிரகரணம்.

கொள்ளற் பாலது துயரிலா தவர்நிலை குறுகத்
தள்ளற் பாலது தீயவர் நெறியெனுஞ் சழக்கே
யெள்ளற் பாலதா முலகமே தியாமெவ னென்றே
தெள்ளற் பாலது குரவரா லறிவினுற் றீர. 411

வருந்து நிற்பது தனையறி நெறியிலே மனத்தாற்
றிருந்து நிற்பது கருமத்தி லழுந்திலாச் செய்கை
பொருந்து நிற்பது தீயவ ரல்லவர் புணர்ச்சி
யருந்து நிற்பது நானென்ப தாக்குதிற் பதுவே. 412

நீர்க்கத் தக்கது நரம்பொடும் பெறுமுடற் றியக்கம்
பார்க்கத் தக்கது மூழு தாசிக் குள்ளுறை பரமே
மீர்க்கத் தக்கதே பிரகிருதி விடத் திலும் பாரி
னீக்கத் தக்கிலாப் புழுதியுந் தித்தொன்றே நிற்கும். 413



## உபசாந்திப்பிரகரணம்.

### சனகராசன் கதை.

சற்குருவின் மகனுரைத்த படியேயிவ் வுலகெலாஞ் சொரூபமாகும், விசிவங்களின் பிறப்பிறப்பா யிருளையை யிராசதகா மதத்தை மேவும், புருடார்த்தத் திடைப்புகுப்த் தன்சமக்கு மண்டபமே போல நிற்கும், இராமசத் தவகுணத்தன் போல்வார்கள் சகதபயக் நீக்கு நிற்பார். 414

வழுவறுசத் தவகுணத்தோர் தோறுமிக்கு மரவென்ன மாயா பாச, கழுவறிலால் லப்பிரம காமதுவே யென்றெண்ணி நாமும் மேவே, மூழு தலகம் வேறொன்று போகமொழிப் பாய் பிரம மூலக் கித்தி, லெழுவனகம் பலவெல்லாங் கடலிலலை போன் மெய்யா யில்லை யன்றே. 415

சோகமில்லை மோகமில்லை பிறப்பில்லை பிறப்பிறப்பிற் சுழல்வா ரில்லை, போகமென விக்கென்று முன்னமொரு வேளுள்ள திரங்க வேண்டா, மோகமுற வருவனபோ வனகினையேற் றெய்தனக வொன்றுமில்லை, மாகனசத் துவகுணத்தோ டொருவனு மிட செல்லா மாற்றி நிற்பாய். 416

சமமாகிச் சொரூபத்தே நிலையாகித் திரமதியாய்ச் சாந்த
னாகி, யமர்மனன மௌனியாய் நன்மணிபோற் றொளிர்ந்துநய
ரனைத்துந் தீர்வாய், நிமலமுற நிகழ்காலத் தொழிற்செய்தி யா
வையினு நேயமின்றி, நமதெனக்கொள் ளுதல்விடுக விரன்பிறமுத்
துன்பமெலா நாசஞ் செய்வாய். 417

இனிப்பிறவா முடிவான பிறப்பிலே மெய்ஞ்ஞான மௌனிதி
லுண்டாம், பனிச்சுடர்வெண் ணிந்திலங்க ளுத்தமமா மூர்ங்கி லெல்
லாற் படுவ துண்டோ, சௌனித்தவரின் மேலோராய் நல்லோராய்
மித்திராய்த் தெளிந்தோ ராகி, யளித்தமறு முத்தராய் ஞானிக
ளாங் குணமெல்லா மவரைச் சேரும். 418

மெத்தென்ற சரித்திரத்தி னவர்தம்மை யுலகெலாம் விரும்
புந் தன்மை, கொத்தொன்று வனமூங்கிற் குழலிசையான் மகிழ்
விலங்கின் கூட்டம் போலு, மித்தன்மை யாவருக்கும் பொதுவமை
யினு வியம்பியதா மிதனில் வேறாய்ச், சத்தென்ற வழியிரண்
டேழ் பவந்தீர்ப்ப வர்க்கவற்றைச் சாற்றக் கேண்மோ. 419

தேசிகன்சொற் பிழையாம லனுட்டிக்கிற் பையப்பையத்
தியக்க நீங்கிப், பேசியசென் மத்தாத லித்தகில பிறப்பினு லாதல்
பேறும், மாசறுவிற் பத்திசிறி துண்டாகு மனத்தாற்பன் மனமுத்
தாலே, யேசறுமா காசபலம் விற்பவதுபோன் மெய்ஞ்ஞான
மௌனிதி லுண்டாம். 420

இவ்விரண்டி லாகாச பலம்போல மெய்ஞ்ஞான மௌனத்
தன்மை, செவ்வியவள் ளான்முன்போர் கதையிலே யான்சொல்லத்
திருந்தக் கேட்பாய், தென்மலைவி லாடத்தென் னென்றுயிலேவன்
விதரணத்தோன் செல்வமிக்கோ, னவ்வியம்பில் விதேகநா டாளா
வோன் சனகனென மரசர்கோமான். 421

சற்குணத்தாற் கடலனையான் சக்கரத்தா னெனவுலகந் தாங்
குவோ, னற்குணஞ்செய் வசந்தவு னறுமலர்ந்த நந்தவனத்தி
னயந்து மேவி, தற்குரிய தந்திரர்கள் புறநிற்பத் தனியிருப்ப வகிக்
கும்வேலை, சிற்குரிய மனமுடைய சித்தர்கணம் பாடியபன் செவி
யிற் கேட்டான். 422

வெறியாரும் பொருப்புறைவோர் விழிப்புநத்தின் மேவா
தோர் விளம்பு கீத, நெறியார்பன் னவன்கேட்ட பழமுனைப்பா
டெடியவனை நினைவிற் கொள்வா, யறிவாலு மறிவொருவுங் கூடிய

கூட்டாவிலெழு மறிவா னந்தம், பிறியாத வான்மதத் துவத் தெழுந்த நாமதனைப் பேணல் செய்வாம். 423

காண்பானுங் காண்பனவுங் காட்சியும்வா தனையுடனே கழல விட்டுச், சேண்பாவு காட்சிக்கு முதலொளியா மச்சொரூபஞ் சிந் தை செய்வா, மேண்பாலா முள்ளதில தெனுமிரண்டி னிடை யெய்தி யிறவிலாதாய், மாண்பான வொளிக்கெல்லா மொளியாமச் சொரூபத்தை மதித்தல் செய்வாம். 424

அகமகமென் றனைத்துயிரி னிடத்துமிருந் தனவரத முறைப் பதாகி, நிகழொளியா யான்மதத் துவமான சொரூபத்தை நினைத் தல் செய்வாந், திகழிதய குகையுறையுந் தேவதையை விட் டயலே தெய்வந் தேடல், மிகவரிய கைத்தலத்தை யெறிந்துசிறு மணிதேடும் வேட்கை போலாம். 425

மாளாத காதலினும் பற்சுதா மிக்கொடியின் வனத்தைக் கட்டு, நீளாசை யனைத்துமறுத் தவர்க்கன்றே விப்பயன்று னோரா திற்றுந், கோளான பொருளனைத்தின் முன்பொடுபின் பிரிவாம லிலாத் தோற்றங் கண்டு, மீளாத பவனையாற் கட்டுண்பார் வேச னீய மெனிதன் றன்றால். 426

எழுந்தெழுந்து சீறுகின்ற விந்திரியப் பாம்புகளை யிதயந் தன்னி, லழுந்துவிவேக கத்தடியால் வச்சிரங்கொண் டிந்திரன் வெற் பரர்வித்தன்ன, விழுந்திடவே ஆறுவென்றுஞ் சாந்தியினாற் சாமோதி யிடர்தீர் செந்த, முழுந்துக வடிவாந்தற் பதநிலையைப் பெறுமிதுவே முத்தி யென்ன. 427

தெளிவுடைய சித்தர்களைத் திகழ்வுறப்பா டியசிதந் தெளியத் தேட்டுக், களிதருமைந் தினக்குடை யெரிகேட்ட பாம்பென்னக் கலங்கி மன்னன், குளிர்பொழிவின் றகமடைந்தா னெனவனையும் விடைகொடுத்துக் கோயில் புக்கா, னளிக்குந்தசெய் யெமலைத்தி னொருவனை யிருத்துதனி நட னுற்றான். 428

பறக்கின்ற பறவைகளின் சிறகென்ன வனவரதம் படைத் துவனி, யிறக்கின்ற வுலகமடை நோக்கிவாய் விட்டிரங்கி யியம்ப லுற்று, மறக்கன்றி யவத்திலுறன் றனமருமிவ் வுலகிடையா னத் தேவர்க்கோ. திறக்கின்ற மயக்கத்தாற் கல்லிடைகற் போலு ருண்டு நெரிந்தேத னத்தோ. 429

காலமொரு கான்முடியா திதனிடையென் னாறுண்டோர் கணமு மில்லை, சாலவிது தனைமதித்து வன்காத விடைவிழுந்து தளர்வ தேனான், ஞாலமதி யாற்கெட்ட வெனைப்போல வினார் சொல்லற் பாற்றோ, சீலமறு வாணாளைப் பெரிதாக நினைவதேத சிசி யந்தோ. 430

எல்லையிலா வண்டத்தி லியானுளும் புவிநோக்கி னிறையு மில்லை, யல்லலுறு மிதுபெரிதா வாதரித்து நிற்பதேத யந்தோ வந்தோ, புல்லிமையற் றினிதாகி புதாரமாச் செயப்படாப் பொருளீ தென்னத், தொல்லுலகி லொருபொருளுங் காணேனித் தொடர்ச்சிநிலை யென்னே யென்னே. 431

தலைவர்தலை மேலுறைவோர் நாட்களினுற் றழ்ந்தோர்க்குத் தாழவீழ்வர், நிலையில்பெரு மையையுமுதி நினைக்கின்ற நெஞ்சே யின் னினைவி தென்னே, தொலைவில்பெரும் போகங்கள் பெரியோர்கள் கிளையோடுந் தோன்றித் தோன்றி, புலைமையாண் டார் முன்னு ளிந்நாளிங் கிவையனைத்தி லுமுதி யென்னே. 432

மண்ணூடு மன்னவரு மவர்தனமு மாண்டனரால் மலையை யொக்கும், விண்ணூடு மிந்திரரு மவர்வாழ்வும் போயினவின் மீனை யொக்கு, மெண்ணூடும் பிரமருமண் டமும்புதங் களுமிருந்த வெல்லை யில்லைக், கண்ணூடு மவையெங்கே நின்வாழ்க்கை நிலை யென்னே கவலு நெஞ்சே. 433

செல்லாத மாயையிரு ளிரவிலே தேகமயத் தியக்க மான, பொல்லாத நீள்கனவாந் துளியத்தி லிச்சையினுற் புண்டே னென்னிற், கல்லாத புல்லியனேன் சிசிகா ணனவாதல் காணு கட்க, ளெல்லாம்போ யினபோமா விறவாதொன் றுய்யன்று மொழி ஞட் காணேன். 434

நடுவின்முடி வினிலடியி னன்றுன பொருளொன்று நோக்கத் தில்லைப், படுபொருளெல் லாமிறப்ப மகத்திறு வேலுயர் பட்ட தன்றோ, கடுவினைக ளூடோறுங் காய்துயர நாடோறுங் களை யொன் றில்லாக், கொடுமைகளே நாடோறுஞ் செய்கின்ற றறிவில் லார் குரம்பைக் கூத்தால். 435

பாலகனு யஞ்ஞானத் தழுந்துவனுற் காளையாய்ப் பாவையா ராற், சாலவருந் துவன்விருத்தன் றுனுழிக் குறிப்பத்தாற் றளர்ந்து சாவன், மேலவிவ னெக்காலத் தென்செய்வான் மாயக்கூத் திருந்த

வாறே, ஞாலமெலா மாடரங்காய்ப் பொறிமேள மாய்மனப் பேய் நடிக்கு மன்றே. 437

உள்ளத்தின் முடிமேலே யில்லாமை வீற்றிருக்கு மூலகி லென்றுங், தெள்ளூற்ற நல்லறத்தின் சிரத்திலே யெப்பொழுதுந் தீமை வாழு, மெள்ளற்ற வின்பத்தின் றலைமேலே துன்பங்க ளிருக்கு மென்றாற், கொள்ளத்தக் கனவான குற்றமிலாப் பொரு ளேது குறிப்பு ளேற்கே. 438

விழிப்பதுவு மிமைப்பதுவுஞ் சகத்தோற்ற மொடுக்கமா மே லோ ருண்டாற், பழிப்பரிய வன்னூர்முன் னென்போல்வா ரென் னென்று பகரலாவ, ரிழிப்பரிய விசித்திரமாஞ் சம்பத்து மாபத்தா மிதயங் காயி, லொழிப்பரிய விசித்திரமா மாபத்துஞ் சம்பத்தா முள்ளம் வேண்டில். 439

வெம்மாய வாழ்வன்றே யுயிர்க்கெல்லாம் பிறப்பிடமாய் விளம்புகின்ற, தம்மாவிங் கிதனிடையே யழுந்துமவர்க் கின்ப மூள தாவ தெங்ஙன்,மைம்மாயை யென்னுமரம் பணையிலைபூ காய் பழத்தால் வரம்பற் றோங்க,விம்மால்செய் மனம்வேரா மிம்ம னந் தான் சங்கற்ப மென்பதாகும். 440

சங்கற்ப நாசத்தா லெளிதாக மனநாசந் தானே யெய்து, மங்குற்ற மனமிறக்கிற் சநநமர ணங்களெனு மரமு மாயு, மிங்கி ப்பா லெனைத்திருடுங் கள்ளனைக்கண் டேன்கண்டே னிவன்பேர் நெஞ்சம், பொங்குற்ற நெஞ்சத்தா னெடுநாளு ணேந் தேனின்று பொன்று விப்பேன். 441

இத்தனைநாண் மனமுத்தைத் துளைத்திலே னின்றுதுளைத் தியைந்த நூலாற், சித்திரமாய்க் கோத்தணிவன் முழுதுணர்ந்த தேசிகராற் றெளிந்தே னெல்லாஞ், சுத்தபர மாநந்தந் தோற்று விக்கு நல்லறிவாஞ் சோதி பெற்றேன், மெத்தவிவ ஞெனதிங் கிவையெனும்பொய் யுள்ளொழித்தேன் மீண்டு நாடேன். 442

பேதிக்கு மனமென்னும் பெரும்பகையை முழுவலியாற் பிளந்து வென்றேன், வாதித்த துயரெல்லா மாற்றினே னுப சாந்த வாழ்வு பெற்றேன், சாதித்த விவேகமே யுனைவணங்கி னே னென்று சனகர் கோமான், சேதித்த மனவலைவெல் லாமொழித் துத் தானேசித் திரம்போ னின்றான். 443

வாளாசித் திரம்போல நெடிதிருந்து சனகர்பிரான் மாய்ந்து நெஞ்சை, மீளாநல் லுபசாந்த நிறைநெஞ்சா லுலகியல்பை மேவிப் பார்த்தான், முளாண்மை யாவியற்றும் பொருளேது கைக்கொள் ளத் தக்க தேது, கோளான கற்பனையென் சுபாவவறி வாமெனக் குக் குறிக்குங் காலே. 444

சுத்தமாய்ச் சொரூபமா மென்னுரு வலால்வேறு தோன்றக் காணேன், வத்தியான் வாராத பொருணயவேன் வந்தபொரு ளனைத்துந் தள்ளே, னித்தமாய்த் தன்னிலையி னிற்குமென தறி வுருவி னிலையா நிற்பே, னுத்தவா றேதுவரு மதுவருக வென்ற மூர்த்தி யொருமை யானான். 445

வானேகு கதிரிரவி நாளியற்றும் வாறென்ன வந்து வந்து, தானேதோன் றியதொழிலைப் பற்றின்றிச் செய்துமெனச் சனக னெண்ணித், தீனேய வருகாலஞ் செல்கால மிமையளவுஞ் சிந்தை செய்யா, னூனேறு நிகழ்காலத் தோரிமைப்பி னகைதலைா டுலாவ லுற்றான். 446

பேசியதன் விசாரத்தாற் சனகர்பிரான் பெரும்பேறு பெற்ற தல்லால், வாசியுள மற்றொன்றால் வந்ததல்ல வாரிச மலர்க்கண் மாலே, யாசிலதாய்ச் செவ்வியதாய்த் தனதான விசாரத்தா லடை வ தல்லாற், றேசிகரில் லாவினர் செய்தொழிலாற் பெறலாமோ சிற்சொ ரூபம். 447

புறப்பேறு களைவேண்டி யியற்றுகின்ற புண்ணியத்தைப் புவியி லுள்ளோர், சிறப்பான நல்லறிவு மிகவேண்டு மென்று முதற் செய்யிற் பேறு, மிறப்பான வாபத்து விளைநிலமா யிருந்து துயர் வேலை யாகிப், பிறப்பான நச்சுமர வித்தாகும் பேதைமை யைப் பிளக்கல் வேண்டும். 448

இலங்கியசிந் தாமணியா மிதயமெனுஞ் சாக்கறையி லிருக் கும் போதங், கலங்கலிலா விவேகியர்க்குக் கருதுபொருள் கற்ப கம்போற் கணத்தி னல்கும், துலங்குவிசா ரம்படைத்துப் பேதை மையோய் நல்லறிவு தோன்றி னோரை, விலங்குகவ சத்தோரா யம்புகள்போற் காமாதி விகற்பந் தாக்கா. 449

பரமாதித் தனைமறைத்துக் கறுத்தறிவு முக்கனித்துப் படர்ந்து மீண்டு, திரமான வகங்கார முகில்விவே கக்காற்றுற் சிதறிப் போகும், வரமான பதம்வேண்டிற் றன்மனத்தி னுசைமுதன் மாற்ற வேண்டு, முரமான புவிமையுத லுமுதன்றே விளைபயன்க ளுதவின் றன்றே. 450

-~~-

## புண்ணியபாவனர் கதை.



மோக வஞ்ச நாயிக்கொடி முளைத்தெழு மூலஞ்
சோக மாசுணை யிருந்தர சாள்வதோர் சூழ
லாக மேமுத லியாமெனக் காணுமஞ் ஞான
மேக மாகிய பராபரந் தோன்றினு லிறக்கும். 451

அனித்த மிச்சக மென்பதை நாடொறு மகத்தி
னுனித்து நோக்கினர் சனகனைப் போலநுண் ணறிவாற்
றனித்த மெய்ப்பொருள் பக்குவத் தறிகுவர் தனத்தால்
மனித்த ராற்கரு மத்தினாற் றேவரால் வாரா. 452

சனன மற்றினார்க் கவருடை முயற்சியே சாறுந்
தினமு மிங்கினை நானெனுஞ் சிறுமைதான் சிதைவி
லனக மாயுல கெங்குமாம் விசாரமொன் றாகு
மனனு றத்தன தயர்ச்சிதான் காண்புற வருமால். 453

பற்றுவி டென்றி றண்டுறப் பற்றலும் விடுதலுறு
முற்றவை மனத்து ருப முயர்பக்க மதுவேறில்லை
முற்றுறு பற்றுவிட்டின் மோகமுந் துயரும் விட்டுத்
தற்றுள பற்றுவிடு துடைத்தசை யாது நிற்பாய். 454

மயலின்மை பகுத்தமின்மை மடமின்மை வருத்தமின்மை
செயலின்மை கருமமின்மை தியக்கின்மை விகற்பமின்மை
பயமின்மை தவட்சியின்மை பகையின்மை குறையொன்றின்மை
கயமின்மை கடினமின்மை கடினமாய்க் கழறலின்மை. 455

விடுபடற் றிரண்டு நீக்க மேலவா மிடத்து மேவி
நிடுவா துனைக வின்றி நிகழ்த்திய குணங்க ளிற்றும்
பிடுறு நினைவா றாலாற் பெரிப்புற்றுப் பிறவி வேலை
பூடுற மயன்மீன் வாரு முயர்க்கவா தனைபாஞ் சாலம். 456

வாதனை யென்னுமிந்த வலைபுக்கி வாளா வீர்க்க
மோதுரு நைக்காழ்சிந்து முகிலெனச் சிந்தி
பாதவங் குடாரத்தாலே படிப்படிபோ னெஞ்சை
மீதற மாய்த்து மேலாம் பதத்திலே திரமாய்

ஏகுதல் வருத றுஞ்சல் விழித்திட லிருக்க னிற்ற
லாகிய வெல்லாம் பொய்யென் றழுந்தியுள் ளாசை நீர்வாய்
சேகுற வலையுஞ் சித்தம் பகுதியாற் சித்தின் பின்னே
போகலூன் மணத்தாற் சிங்கந் தனைத்தொடர் பூசை போலாம்.

மடங்கல்வீ ரியத்தாற் பெற்ற தசைதின்று மார்ச்சா லம்போற்
றொடர்ந்துசென் மனனுஞ் சித்தாற் றோன்றிய பொருளைப் பற்றும்
படர்ந்துகாண் பவற்றைப் பற்றின் மனங்கெடாப் பந்தம் போகாத்
திடங்கொள்காண் பவற்றை நீக்கிற் சித்தம்போய் முத்தி யாகும்.

யானிவை யிரண்டு மில்லென் றெண்ணிமே ருவைப்போ னிற்பா
யூனிற மில்லா விண்போ லுளத்தநுய் நல்லு ளத்தே
தானும்வை யமுமாய்க் காண்பான் காண்பன தும்மி லூடே
மேனிகழ் காட்சி யென்று நின்னைநீ விடாது தேர்வாய். 460

இனியன வினிமை கொள்வா னிரண்டெய்விட் டிவற்றி னூடே
தனிமிக பூினிமை நாடித் தற்பா மயமாய் நிற்பாய்
ஙனிபல துய்ப்பான் றுய்ப்ப திரண்டிக்கு நடுவே தானே
யனிசம்பற் றின்றி நிற்கு மதுபற்றி யதனு னிற்பாய். 461

காதலாற் கட்டி னுய்யார் கயிற்றினுற் கட்டி னுய்வா
ராதலா லாசைக் கட்டை யசங்கற்பத் தறுப்பாய் நானென்
றோதுபா வனையை நானென் றுகதோர் வாளால் விட்டி
யேதமில் சுபாவம் பாவித் தெழுபவ மிலாவீ டெய்தி. 462

அனைத்துயிர்க் கச்ச மில்லா நிலைநிற்பா யதுல வென்ன
வினைத்தொட ரகம்பா வத்தின் வேட்கைநீ யென்ற நின்சொன்
னினைத்திடின் மிகவு மாழ மீடகங் கார நாகந்
தனைச்செயி னுடல மென்னு மோதுவைத் தவிர்க்கின் றோறும். 463

அகமென்ன லொழிக்கிற் றானே யங்கமு மடியி லிர்ந்த
நகமென விறக்கு மன்றே யென்றுயர் நாதன் கூற
மகமுனி யுரைப்பான் வள்ளால் வாதனை மாற்று மாறு
நிகழ்வுறு தேய ஞேய மிரண்டென நினைப்பர் கற்றோர். 464

இந்தகம் பொருட்கு வாறு னியாமிவை யெமக்கு வாறு
ணர்துறு மிவற்று லன்றி நாமில்லை நம்மா லன்றி

சத்தசத் தென்னப் பட்ட சகலபா வனையி லென்றுங்
கொத்தற வாசை மாற்றிக் குறைவில்பே ருளத்த னாகிச்
சுத்தநல் லுதார மான சொரூபத்தி னிற்பாய் பெத்த
முத்தமா மாசை யின்ப துன்பங்கண் முழுது நீக்கி. 473

பேனமுந் திரையு மில்லாப் பெருங்கடல் போல நிற்பாய்
மானவ கேண்மற் றொன்று மாசிலா விசார முள்ளோர்க்
கானநிச் சயநா லுண்டா மடிதலை மட்டு நானே
யீனனுற் றவர்தாய் தந்தை யென்பதோ ரறுதி தானே. 474

கன்றிய பந்தமாகு மிது மெய்ம்மை கருதா வாற்று
னின்றன வனைத்தின் மேலோ னெல்லின்வா லினுஞ் சற்றேநா
னென்றிரண் டாவ தான நிச்சய மெய்து மென்னி
லொன்றிய முத்தி யுண்டா முத்தமர்க் குடைமை யாகும். 475

புவியெலா மெனது ரூபம் பொன்றுத லிலனு னென்று
குவிவறக் காண்டன் மூன்று நிச்சயங் குறைவில் வீடா
மவியுறு முலகு நானு மனைத்தும்பொய் விண்போ லென்றுந்
தவிர்கில மென்ற னுலா நிச்சயந் தனிவீ டாகும். 476

சூனியம் பகுதி மாயை பிரமஞ்சிற் சோதி ஞான
மீனமில் புருட னன்மா வீசானன் சிவமே நித்த
மானவை யென்ன லாமொன் றிரண்டெனு மகல்பே தத்தால்
வானுயர் சகம்ப டைக்கும் விநோதத்தால் வளரு மொன்றே. 477

ஒன்றெனும் பரம ரூபத் தொருசத்தி யொருமை யாலே
நின்றெழு கின்ற தன்றே நின்னது பிறர தென்றும்
பொன்றிய திருந்த தென்றும் பொருள்களிற் கருமந் தன்னி
லென்றுமின் பத்துன் பங்க ளிதயத்தி லூன்ற வேண்டாம். 478

யாதினு முயர்ந்து மாளாப் பதம்பற்றி யிதய மென்றுஞ்
சீதமா யின்பத் துன்பஞ் சேர்கிலார் பிறப்பிற் சேரார்
சாதுகொள் பகைகொ ளொத்தல் தஞ்சம்வல் லபங்க ளுள்ளோ
ரோதிய நெறியிற் செல்லு முத்தமர் பிறப்பிற் சேரார். 479

இழிவுயர் விரண்டு மெண்ணு ரிச்சைகோ பங்க ளெய்தார்
தொழிறொழி லிலாமை விட்டோர் துன்னிய பிறப்பிற் சேரா

ரெழில்பெற விளங்கி யார்க்கு மினியன வினிதிற் சொல்வோ
ரழிபொரு ளனைத்தின் சால்பை யறிந்துளோர் பிறப்பிற் சோரார்.

உன்னுருவை நீகாணு ஞானக்கண்ணி லொன்றலா வாசை யெனுங் காச மூறு, மன்னதுதீர்த் துளக்கமலத் துள்ளேநொய்ய வறிவுடைய வுன்மனத்தா லுன்று லுன்னே, யின்னபடி யென நோக்கி மயக்கமெல்லா மிறையுமற வொழித்தின்ப மெய்தி நிற் பாய், பின்னவனே யெனமுன்னே னுரைத்தா னென்று பெருந் தகைக்கு வசிட்டமுனி பேசினனே. 481



மாவலி கதை.



இச்சையாம் விறகு மாண்டா லெண்ணமாம் வன்னி மாறு
நிச்சய மாகுந் தேயத் தியாகமா நெடுந்தே ரேறி
மெச்சிய வுதாரக் கண்ணால் வேட்கையான் மிகவும் வாடுங்
கொச்சைஞா லத்தை நோக்கிக் குறைவற விருப்பாய் தீரா. 482

நொய்யதா யொருமய லின்றிநோ யெலா நீங்கி
மெய்ய தாகிய பிரமமா நிலையிது வீரா
வைய மின்றியிந் நிலையுறி லறிவில ரேனு
மையன் மேவல ரிராமநீ யிவ்வகை வாழ்வாய். 483

நல்ல புந்தியும் விவேகமு மெனவிரு நண்பா
லல்ல றீர்ந்திடு மொருவரை யென்னினு மணுகிற்
சொல்லு பல்பொருட் சுற்றங்க டெக்கறத் தீர்ந்து
புல்லு திண்மையி னுலன்றித் துயரெலாம் போகா. 484

மயலி லாமையா னூல்களான் மகத்துவ முதலா
முயர்கு ணங்களால் வருந்தியு மனத்தினை யுய்க்கிற்
றுயர்க ணீங்குமூ வுலகுறு செல்வமுந் தொக்குப்
பயன ளிக்கினு முயர்வுறு மனமெனப் பயிலா. 485

மனநி றைந்திடு லமுதமாய் நிறைந்திடும் வையந்
தனது தாட்செருப் புலகெலாந் தோன்முச் சுந்தரம்போற்
கனநி ராசையா னிறையுநெஞ் சாசையிற் கவிழா
தினமு மாசையா னிறைமனங் குறைவென்றுந் தீரா. 486

அகத்தி யன்கவர் கடலென நன்னெஞ்சை யழிக்கு
மிருத்த மாவிலா மனமென நிறைமதி விளங்காப்
பகுத்த பாற்கட னிறைவுறுப் பரிமளக் கோக
னகத்தி ருயகி திருமுக நலம்பெறத் தோன்ற. 487

மதியை மேகம்போல் வெண்டலச் சுதையினை மைபோ
லதிக நன்னெஞ்சை யாசையாம் பேயழ கழிக்கும்
பொதியு மாலெலா நீக்கிவன் பவப்பயம் போக்கி
முதிர்மனத்தின்மால் பிணிப்பறின் முத்திவே றுளதோ. ()

ஐய துன்பமு மின்பமு மென்பன வினைத்தின்
மைய வியாவையு மடிந்ததோ ரிடமெது மனத்தின்
வெய்ய மோகந்தீ ரிடமெது வேட்கைக ளெல்லாங்
கைய றப்பட்ட விடமெது கருணையா லுரையாய். 489

நிராசை யாகியே யினைப்பெலா நீங்கிட மேது
விராவு பேரின்பத் தழுகிதாய் விரிவிட மேது
பராப ரங்தெளிந் துணர்ந்தநீ பகர்தியென் னெஞ்சை
யராவு துன்பம்விட் டினைப்பெலா மாறுதற் கென்றேன். 490

எந்தை யப்பொழு துரைசெய்வான் மைந்தகே ளியம்ப
வந்த மற்ற விசாலமா யளவற வகன்று
சுந்த ரத்ததாங் தேசமுண் டண்டத்தின் றொகுதி
வந்து இத்திருந் திறப்பதற் கிடமதாய் வயங்கும். 491

ஆய தேயத்தி லேம்பெரும் பூதமு மில்லைச்
சேய குன்றில்லை வனமில்லைத் தீர்த்தங்க ளில்லைத்
தூய தேவரே முதலிய தொல்லுயி ரில்லை
நாய கன்பெருஞ் சுடரெனு மொருவனே நண்ணும். 492

முழுதுங் காண்பவன் முழுதினுஞ் செறிபவன் முதல்வன்
பழுதில் சாந்தனுய் நிறைந்துவா ளாவுறை பண்போன்
வழுவி லாவிவ னுக்கிய மந்திரி வசத்தாற்
றழுவு செய்கை களியாவையு நடத்திடுந் தானே. 493

இல்ல துள்ளதா முள்ளது மில்லதா மிமைப்பிற்
புல்லு மந்திரி நினைத்திடி லிவனென்றும் புசிக்க
வல்ல தில்லையொன் றறிகிலன் மன்னனை விடாது
செல்லுந் தன்மையாற் கேவல மனைத்தையுஞ் செய்யும். ()

இந்த மந்திரி தன்னெதி ரியாவையு மியற்ற
வந்த மன்னவ னென்றுமே காந்தத்த ஞகு
மைந்த வென்றுரைத் தருளிய பிதாவைநான் மகிழ்ந்து
புந்தி யாலந்த வகையெலாம் வினவினேன் புகழ்ந்து. 495

அறவி லாசமா யாதியும் வியாதியு மின்றி
நிறைவி தானவத் தேசமே ததுதனை நேருந்
திறவி யாதது யாதின லெய்துமத் தேசத்
திறவி லாதவம் மன்னனுர் மந்திரி யாவன். 496

புவன மியாவையும் விநோதத்தா லடர்த்தவென் புயத்தா
லவனம் மந்திரி யுடனடர்ப் புறுவலி யமர்ந்த
தெவன றைந்தருள் கென்றனு மென்பிதா விசைப்பான்
கவன நீள்வலி மந்திரி வேகமார் கடப்பார். 497

தேவர் தானவ ரெண்ணறு கோடிக டிரண்டு
மேவ வென்றலர் ருலநே மிகண்முத லென்ற
மேவ ரும்படைக் கலமெலா மவன்மிசை விட்டான்
மாவ ருங்கல்வி லறைந்தபூ வெனமுனை மடியும். 498

விளிவ ருந்திற லந்தமந் திரியந்த வேந்தா
லெளிது வென்றிடில் வணங்குறு மிவ்வகை யின்றே
லளிய மேருவை யசைப்பினு மசைப்பரி தாகு
மொளிகொ ளூகபுந் தியினலால் வெலப்படா னெருங்கே. ()

ஊக புந்தியா லல்லதவ் வமைச்சனை யுற்ருல்
வேக நாகம்போ லெரித்திடும் வேந்தனே டமைச்ச
னேக ராச்சியஞ் செய்யுமத் தேசமு மியாவுஞ்
சோக மற்றிடக் கேளென விரித்திது சொன்னன். 500

முன்ன நாஞ்சொன்ன தேசமோர் முடிவிலா முத்தி
மன்ன னென்றது மாசிலா மணியென வயங்குந்
தன்னில் வேறிலா வாத்தும தத்துவந் தானே
யன்ன வேந்தனு லமைத்தமந் திரிமன மாகும். 501

விடைய மியாவையு மொருப்பட வொருக்கிநல் விராக
முடைமை யாவது பரமமாம் யூகமென் றுரைத்தேந்
தடையி லாமனம் விராகத்தால் வெலப்பட்ட தன்மை
படைசெய் மத்தமா தொழுவத்து ளகப்பட்ட பண்பே. 502

கற்ற றிந்திலார் மனத்தைநாற் கூறெனக் கற்பித்
துற்ற போகத்தி னுபயமு நூல்வழி யொன்றும்
பெற்ற தேசிகன் பூசையி லொன்றுமாய்ப் பேணிற்
றுற்ற கங்குல்போய் விவேகமாஞ் சுடர்வந்து தோன்றும்.

சிறித றிந்தவர் மனத்தைநாற் கூறெனச் செய்து
பொறிவ சத்தொன்றுந் தேசிகர் பூசையி லிரண்டு
மறியு நூற்பொருண் மனனத்தோர் கூறுமே யாக்கி
னெறிவி வேகத்தா லொன்றுணர் ஞானமே நிரம்பும். 504

ஞான முற்றவர் மனத்தைநாற் கூறென நாட்டி
யான நூலினும் விராகத்து மனுபவந் தனினு
மான நற்குரு பூசையின் வழியினுஞ் செலுத்தி
லீன மற்றநன் முத்திவந் தெய்திடு மெளிதின். 505

மிக்க வறிவால் விசாரத்தான் மெய்ம்மை யுணர்வு நிராசையுநீ
யொக்க வென்றுங் கைக்கொள்வா யூற்ற மான நிராசையினாற்
றக்க விசாரம் விசாரத்தாற் றவிரா நிராசை தம்மாற்றுந் [லாம்.
தொக்கு நிரம்பும் வாரிதியுந் தொடர்மே கமுந்தூன் னுதல்போ

நாட்டி னியல்பு வழுவாம னட்டோர்க் கிதமா நற்பொருள்க
ளீட்டி முன்ன மதனாலே யினிய குணத்தி னுயர்ந்தோரைக்
கூட்டி யவரா னிராசையினைக் கூடி யதனால் விசாரத்தைத்
தீட்டி யதனான் மெய்ஞ்ஞானந் தெளிந்தான் முத்தி சித்திக்கும்.

என்னிங் குள்ள தப்பாலென் னெல்லை சொல்லப் பட்டுளதென்
றுன்னு மெல்லை யில்லாதென் சொல்லு நானார் நீயாரிம்
மன்னு முலக மேதென்று மயக்கந் தீர வருளென்ன
வன்ன தெல்லாந் தெரியவிரித் தவனுக் கிவனன் றறிவித்தான்.

வருங்கற் பகவிண் விரைந்தேக வந்தேன் பலசொல் லியும்பயனென்
சுருங்கச் சொல்லும் பயன்கேளாய் தோன்ற விங்குள் ளதுவுஞ்சித்
தொருங்கப் புறத்துஞ் சித்தெல்லை யுள்ள துஞ்சித் தெல்லையற
நெருங்குற் றதுஞ்சித் தியான்சித்து நீசித் துலக நிறைசித்தே.

தெரிக்கும் பொருளுந் தரிசனமுந் தீர்ந்து வெறுந்தின் மல வடிவாய்ப், புரிக்கு முதயம் விடாதென்றும் பொலியும் பரமப் பொருளானேன், வரிக்குங் காட்சி யிலாவறிவே வடிவா யொரு

காலேயெங்கும், விரிக்கு நிறைவா யுபசாந்த வெளியா யறிவா
மிருபொருளுன். 510

ஓங்குஞ் சின்மாத் திரப்பொருளா மோங்கா ரத்தை யுண் ணிணைந்து, தூங்குந் தியான பானுவித் தொடர்சங் கற்ப மெல்லாம் போய், வாங்குந் தொழிலே டணையைய மனன ஞான ஞேய மிவை, தாங்கு ஞாதா வனைத்துமறத் தனிச்சித் திரம்போ னெடிதி ருந்தான். 511

எங்கே யெங்கே மனமோடி யினையோ ரென்ன வீழ்ந்தழுந்து
மங்கே யங்கே நின்றெழுப்பி யகண்ட வறிவி லடைவிப்பாய்
சங்கே தமதா யிவ்வாறு சாதித் துளமா மதகரியை
வெங்கே தமறத் தனைத்தெல்லா விசாரத் தாலும் வீடணைவாம்.



## பிரகலாதன் கதை.



சித்தப் பிரம மெல்லாம்போய்த் தெளிந்த பரம சுகம்பெற்றுச்
சுத்தப் பிரமத் தினைப்பாற முடிவாம் விசாரந் தோன்றுகவென்
றத்தப் பதும மமைத்தருளி யமல னேக வவன்றுதியான் [ன்.
மெத்தப் பரவி மலர்தூவித் தொழுதான் விவேகி களின்மிக்கோ

பணிவார் கடலிற் றிரையென்னப் பரம புருடன் மறைந்த தற்பின், னினிதாம் பதுமா சனத்திலிருந் திறைவன் றுதிக ளோத் தியபின், சனியா விசாரந் தந்தனித்தான் சகந மறுக்குந் தனி மூர்த்தி, நனிநா நம்மை யாரென்று நாடு வோமுள் ளெனநி னைவான். 514

யானார் முன்ன மெவனானே னிந்தப் புவியா டம்பரத்தி
லானா திருந்து நின்றோடி யழுது சிரித்து மகிழ்ந்தயர்ந்தே
னானா வான சகமல்லே னகங்கல் புல்லு மண்மரங்க
டானாய்ப் புறம்பா யசேதனமாஞ் சகமா னென்னத் தக்கனாவோ.

இல்லா விடத்துண் டாய்மூக மெனலாய்க் காற்றி வியங்குவதாய்ச்
செல்லா நின்ற சிலநாளிற் சிதைந்து சடமா முடனானே
னில்லா தாய்ப்பொய்க் கேதோன்றி நிராகா ரமதா யறிவின்றிப்
புல்லா வறிவிற் செவிக்குணவாய்ப் பொன்றுஞ் சத்த நானோமோ.

தோலி லன்றி யறிவரிதாய்த் தோற்ற மின்றிக் கணத்திறந்து
கோலு மறிவா லறிந்தறிவு கூடாப் பரிச நானல்ல
காலி லசைந்து வசித்துருவாய்க் காதன் மிக்குக் கணத்திறக்குந்
தாலு வுணவாய்த் திரவியத்திற் சனித்துச் சடமாஞ் சுவைநானே.

கணத்தி னிறக்குங் காண்ப வற்றிற் காட்சிதன்னிற் பற்றுகிப்
புணர்ப்பில் காண்பா னிடத்தி றக்கும் போதமில்லா வொளிநானே
குணக்கு மூக்கா மசேத னத்தாற் குறிப்பதாகிச் சடமாகி
மணக்கு நொய்ம்மை நியமங்கள் மருவு கந்த நானுமோ. 518

எனதற் றெண்ண மெல்லாம்போ யிளைப்பற் றைந்து பொறிம யல்போ, யனக வறிவாய்த் தொழிலின்றி யறியும் பொருடே ரறிவே யாய்க், கனமா யுள்ளும் புறம்பினுநிட் களமா யுண்டா மாத்திர மாய்ச், சநந மாரண மிலா வென்னைத் தயங்கக் கண்டேன் சத்தியமே. 519

காதி கதை.

மாலதற் குரைப்பா னந்தணு விந்த மண்முத லியாவையு மனத்தின், பாலுற விருப்ப தன்றியே புறத்திற் பயில்வதோர் காலமு மிலதா, மூலமில் கனவு மயக்கமு மதமு முதலிய நெறி களி லியாருஞ், சீலமாய் நோக்கி யனுபவிக் கின்றார் சிந்தையுட் சகமிருப் பதுவே. 520

இவனவ ஞானி ததுவென நென்றே யிடரின்மூழ் குவரறி வில்லா, ரவனியா முழுது நாமெனு முண்மை யறிந்தவ ரழுங்கிநின் றயரார், பவனமார் பொருளிற் பகிர்வுறு மனர்த்த பாவனை புந்தி யிற் பொருந்திக், கவருறு ரதனி லிவர்கண்மோ கத்திற் கவல்வு றார் தத்துவங் கண்டோர். 521

உத்தாலகன் கதை.

இவ்வகையே யிம்மாயை யறநெடிதாய் வெலற்கரிதா யேறித் தாழ்ந்து,வெவ்வியமா மோகங்கள் விளைவித்துப் பரமத்தின் மேவி நிற்கு, மவ்வகையா னுரைக்கின்றே னவரதஞ் சொரூபத்தை

யடையா தாரைப், பவ்வமென வருந்துயரின் மூழ்குவிக்கு மிம் மாயைப் பண்பு தானே. 522

சித்தசய மாத்திரமாந் தெய்வமருந் தாலன்றிச் சென்ம வெந்நோய், சத்தியமே பிறமுயற்சி யானையினுந் தீராது தகைமை மிக்கோய், வைத்தநிகழ் காலத்துங் கணத்தில்வரு மியல்புறவா கியத்தாற் பற்றி, யொத்துவரு மெதிர்கால மிறந்தகா லங்கருதா ருளமி லாதார். 523

சங்கற்பம் வேட்கையறு சந்தானங் கணந்தோறுந் தவிர்த்தி யென்னின், மங்குற்ற மனோலயந்தா னதுவாகு மனோலயத்தை மருவு போதம், பங்கற்ற பிரத்தியக்சே தனமாகு மதற்குமனோ பாவமென்ப, தங்குத்தா னிலாவியல்பா மாதலினுன் மனோவிகற்ப மின்றிப் போமே. 524

அற்றமறு சத்தியமு முயர்சிவமுந் தற்பரம வத்தை தானு
முற்றறிவு நிறைசுகமு மலமறவு மனைப்பந்த முழுதுந் தீர்த
லுற்றவழி வேதந்தை யொழித்துமுறி யுதந்தா னுறுதி யாகக்
குற்றமறு சற்புருடர் கோதறுநூல் களின்மனத்தைக் கூட்டியெ
[ன்றும். 525

அனவரத முறைத்தல்விடல் பற்றலிவைப் புறவிழித்த லனைத்துஞ் செய்து, மனனமறு சுகவானாய்ச் சற்சின்மாத் திர பரனாய் வாழ்தி மைந்தா, கனமலமாங் காண்பவைநீ றுள்ளத் தின் மலமறுத்துக் காதற்பாச, மெனவுயர்கோ ரையையறுத்து நின்னறிவிற் றற்பரனா யிருத்தி யன்றே. 526

நலனிழிவாஞ் சங்கேதத் தாசையெனும் விசிகையை நண் ணு யாகிச், சலனமுறு விருப்புவெறுப் பறவுணர்வின் சாரபரந் தானாய் வாழ்வா, யலகறகா னிவையனைத் தையுமென தாம் வாதனைக ளறுத்தொன் றென்றே, நிலையிலிட் டையிலாதிச் சற்சின்மாத் திரபரனாய் நின்று வாழ்வாய். 527

எனதுபிற தவென்று மென்னையறச் சகநிலையி லிரண்டற் றொன்றாய்க், கனவயிரத் தப்பமென வுணர்வுருவைப் பற்றிநிலை கண்டு நிற்பா, யனகமுடை னமலமா யகண்டமாந் தன்னறிவி லமைவென் றுண்டாந், சனனமயக் கத்துக்குக் காரணமாம் பிரிவன்று தவிர்ந்து போமே. 528

சரீரமாத் திரத்தாசை புந்தியாற் றனல்லா தனதா னென்றே, பரிவுறலான் மக்கண்மனை குடும்பமெனும் பாவனையாற் பருக்கு முள்ளம், விரியுடிகங் காரவிகா ரத்திஞன் மமதைமல விநோதந் தன்ஞ, அரியவென திதுவென்னும் பாவனையான் மிகப்பருக்கு முள்ளந் தானே. 529

ஆதிவியா தியின்விரிவா லவைமாறித் தேறுதலா லகற்றல் பற்ற, ஊதியமா முயற்சியிஞற் பிறவிதொறு மிகப்பருக்கு முள்ள மைந்தா, மாதர்மணி தனமுதலா நேயத்தா லாபத்தால் வருலோபத்தாற், போதுபொழு திவைநன்று நலத்திஞற் பருத்துள்ளம் பூரிப் பாமே. 530

துராசையெனும் பால்பருகித் தொல்போக மெனுங்காற்றுற் றொடர்மொய்ம் புண்டா, யிராகமுறு வழியுலவி மனப்பாம்பு மிகப்பருக்கு மிராம கேளாய், புராதனவுத் தாலகன்போ லைம்பூதத் தையும்பொடியாப் போகப் பண்ணி, நிராகுலமாம் புந்தியிஞ லிதயத்தே நினைத்திடுவென நிகழ்த்த லோடும். 531

யாருமின்றி யாராலு மெய்தற் கரிதா கியமுறைமைதான்
சாருமுத்திப் பதமெனலாந் தன்னி லொருகாற் றனிமேவி
யாருமலைக்குன் றியின்றமைமே லருணச் சருமம் விரித்ததன்மே
லோருமனத்தின் செயல்குறுக்கி யுணர்வான் புத்தன் போலாகி.

புண்டரீக வாத னத்திற் புத்தன் போலுத் தரமுகஞ
யண்ட மிரண்டு மிருகுதிமே லாக்கிப் பிரமாஞ் சலிபண்ணி
மண்டு கின்ற வாதனையின் மருளு மனத்தை மீள்வித்துத்
தண்ட லில்லா நிருவிகற்ப சமாதிப் பொருட்டிவ் வகைநினைந்
[தான். 533

வாராய் மூட மனமேநின் மாய வாழ்க்கை களிற்பயனென்
றீரா விடரே முடிவில்வருஞ் செயலிற் பெரியோர் சேருவரோ
வாரா வமுதாஞ் சாந்தியைவிட் டழியும் போக மாதரிப்போ
ரோரார் மலர்க்கற் பகக்கான்விட் டெரிகூர் விடவெங் கானுறுவார்.

அயனு டுற்றுப் பாதலத்தி லணுகி ஞயா கினுஞ்சாந்தி
வியனு ரமுதை யொழிந் தந்த மிக்கதிருவா ணம்பயிலாய்
...ஞ யதுபோல் விசித்தி ரமாய்ப் பாவாபாவ மயவடிவே
...ா மிந்தச் செயல்கள் பெரி திடராமென்று மினிதாகா. 535

சத்தா திகளா மித்தொழில்க டம்மான் மண்டூ கம்போலப்
பித்தாய் மூர்க்க மனமேயேன் பிரமிக் கின்றாய் விடாதவமே
யெத்தாற் சிறிது தனையடைந்தா யெதிலே யின்ப முறுகின்றாய்
நித்தா ரமுதாய்ச் சமமாகு மதினீ நிலைசே ராநெறியென். 536

படர்மூர்க்க மாமனமே வீணாய்த்தோன்றிப் பருக்கின்ற செவித்தொழில்கள் பயின்றுசத்தந், தொடர்கின்ற புந்தியினா லசுணமாப்போற்றுஞ் சுறவேண்டா தோலின் றொழிலைமேவி, யடர் பரிச மூகமா மதனாற்றுன்ப மடியாகப் பிடிக்கன்பா மியானைபோல, மடமைமிகு மூர்க்கமா மனமேயென்று மாறாத வாபத்தை மருவவேண்டாம். 537

ஒளியுருவத் திரளைக்கு விழியின்செய்கை யுற்றுநீ வெவ்விளக்கை யுணராதாகி, விளிதலுறும் விட்டில்போல் வேகவேண்டா வெய்யமன மோகாவின் விருத்திமேவி, யெளிதருந்தி யுணவுகளின் மணத்தினாலே யிரைத்தூண்டிற் கவர்மீன்போ லிறக்கவேண்டா, நளினவித யத்தாளுயிர் நெறிபோய்க்கந்த நாட்டத்தாற் கட்டுண்ணே னனைவண்டேபோல். 538

உரைத்தவ சுணங்களிறு விட்டின்மீன்றே னைசையூ றொளியிரத நாற்றமென்ன, நிரைத்தவிவற் றொன்றொன்றான் மாய்ந்துபோகு நிலையழிக்கு மவையைந்து நேரேகூடிக், கரைத்தலுறு பவர்க்கின்ப மெங்கேயுன்றன் கட்டுக்கு வாதனையே கயிற்றுச்சாலம், புரைத்தெழுநெஞ் சேயதுவே போகுமாகிற் பொருவில்சய மஃதுனக்குப் புகலுங்காலே. 539

தசைபயில் பாதந் தொட்டுத் தலைமட்டும் வெவ்வே றாய்ந்து
மிசைவுற யானங் கில்லை யானெனு நிலையெங் குண்டோ
திசையெலாம் விழுங்கி மேலாஞ் சித்ததாய்க் காண்ப தின்றி
யசைவற வெங்குந் தானு மென்றுல கனைத்துங் காண்கேன். 540

முதுவிவே கத்தாற் போத மொய்ம்பினா லிந்த வுன்னைக்
கதுமெனக் கொல்லா நின்றேன் காணுதி கவலை நெஞ்சே
யிதுதசை யிதுபுண்ணீ ரீதென் பிவையுள வுயிர்ப் பாய்ப்
பொதுளிய வாத மிங்கே யகமெனல் பொருந்திற் றெங்கே. 541

தசைகள்வே றுதிரம் வேறு தடியென்பு வேறு மெய்யி
லசைவுவே றறிவு வேறு வகமெனல் பொருந்திற் றெங்கே
விசைவிழி யிதுகோ லீது வியன்செவி யிதுமூக் கீது
பசைவுறு நாவி திங்கே யகமெனல் பயின்ற தெங்கே. 542

தெய்வயோ கத்தா லின்று தேறினன் சொரூபச் செம்பொன்
கைவழி கவருஞ் ஞானக் கள்வன்மீண் டிவனைச் சேரே
னைவகைப் பொறிக ளொன்று வாதனை யற்றி ருந்துந்
தைவரு புறனிற் றத்தம் புலன்களிற் றுவா நின்ற. 543

வாதனை பொறிகட் கெல்லா மன்னுகா ரணமன் றுகு
மாதலான் மூர்க்க மான வைம்பொறி நீவிர் நெஞ்சி
னேதவா தனைகண் மாற்றிக் கருமங்க ளெல்லாஞ் செய்விர்
வேதனைத் துன்ப மொன்றுங் கிஞ்சிது மேவா தென்றும். 544

கூடுசெயுந் தன்வாயி னூலாற் பொன்றுங் கோசகா ரக்கிரு மிக் கூட்டம்போல, வோடுபொறி யெனுஞ்சி சுக்காள் மயலால் வீணே யுலர்ந்திடுவீர் பொறிக்கெல்லா முறையுளான, நீடுமன னேயொடுங்கிப் பொறிகளோடு நீவேறற் றுத்துமதத் துவத்தை நேரே, நாடுதிபற் றற்றொன்றாய் முத்தியான ஞானவடி வினைநிலை யாய் நண்ணு வாயே. 545

ஆசகலா விடயவிட விடேசியாகி யனந்தமா நானெனும்வா தனையைத் தீர, மாசறவிட் டிச்சையெலா மொழிப்பதென்னு மந் திரயுத் தியினாலே மறுசென் மம்போய்த், தேசமுறு பகவானு யச் சமெல்லாந் தீர்விடமா வாய்மனமே திரள்சங் கற்பம், வீசுதரு மயல்கொடியாய் நீயாங்காட்டை வெட்டிநெடும் பூமியிலே விநோ தஞ் செய்வேன். 546

ஆவரண மில்லாமை யுதாரத்தன்மை யழியாத தேசுடைமை யகண்ட நீர்மை, யாவதுந்தா னுமுறைமை யச்சமின்மை யேகமாந் தன்மைமன மெழுந்தோ டாமை, யோவலிலா துடனுறையிக் குணங்களென்னு முத்தமிகள் சுமங்கலிக ளொப்பி லாதார்,பாவனை யொன் றுஞ்சொரூப மடைந்தேற் கென்றும் பன்னியரா யுளங்க வரும் பாவைமாரே. 547

தேங்காது தன்வசமாய் விரிந்தபுந்திச் செயலாலே யிவ்வாறு திறத்தி லெண்ணிப், பூங்காவி சிறிதலர்ந்தாற் போலப்பாதிப் புரை விழியோன் புண்டரிகா தனத்திற் புல்கி, யோங்கார மேனோக்குந் தொனியதான வுத்தமனீண் முழக்காலே யுச்ச ரித்தான், பாங் காக நாவறையு மணியினூடு பயின்றுதடை யற்றோசை படர்வ [தேபோல். 548

இன்னுயிரைப் புறத்தகற்ற வல்ல தான விரேசகப்பேர் கிர மந்தா னியாக்கை முற்றுங், கொன்னுறுபா ழாக்கினதா னிறைந் து யர்ந்த கும்பமுனி குரைகடலைக் குறைத்த தேபோற், பின்ன மில்சிற் சுவைநிறைந்த வாகா சத்திற் பிராணனிறைந் துளவிதயப் பெருந்தீ மண்டி, யன்னவுடன் முழுதுமெரித் துளதோங் காரத் தாதியாங் கிரமத்தி லவத்தை யீதே. 549

அவ்வவத்தை வேண்டளவு நிகழ்ந்த தன்றே யடையோகத் தாலல்ல வடையோ கந்தான், வெவ்விடர்நல் குவதன்றே வதற் குப் பின்பு வியனோங்கா ரத்தினது வேற்றுக் கூறு,தவ்வலறச் சம நிலையா மவத ரத்திற் சலனமிலாக் கும்பகப்பேர் தரிக்கப் பட்ட, வெவ்வமறு கிரமமுள தான தன்றே யியம்பியவிப் பிராணங்க ளெல்லாற் றிற்கும். 550

புறத்தகத்துங் கீழ்மேறிக் காகா சத்திற் புரிந்தசையாப்பிரா ணங்கள் புரண மாகித்,துறத் துருத்தி யிடைதடைப்பட் டனபோ னின்று தோன்றிமுத லேயுடலைச் சுட்ட வங்கி,நிறத்தவிடி போற்க ணத்தி லவிந்த தன்றே நீகார வெளிறெனவெண் ணீறு யங்க, முறத்தெரிந்த தாலதற்கே யுடலென் பெல்லா மொழுங்காகத் தோன்றிநரம் புடனே நின்ற. 551

சுகமாய கருப்பூரப் பாய றன்னிற் றுயில்வதுபோ லெலும்பு நிரை தோன்றிற் றன்றே,மிகமோது பவனத்தா லந்த நீறு விசை ந்தெழுந்து கணப்போதில் விசும்பைச் சுற்றித், திகழ்வான சரற் காலந் தன்னின் மேகஞ் செறிபனிபோ லோரிடத்திற் சென்று சேர்ந்த, விகலாத விவ்வவத்தை வேண்டு மட்டு மியலோங்கா ரத் திரண்டாங் கிரமத் தெய்த. 552

அவத்தையிது நிகழ்ந்ததடை யோகத் தன்று லடையோகம் பேரிடரை யளிப்ப தன்றே,வவற்றினிற்பின் பிரணவத்தின் மூன் றாங் கூறு யமையுறுப சாந்திதரு மவத ரத்தி, லுவப்புறுபூ ரணத் தாலே பூர கப்பே ருளகிரமம் பிராணங்கட் குண்டாயிற் றன்றே, யுவத்திரமி லாவந்த வவத ரத்தி லுயிரெல்லா முணர்வினமு தத் துட் புக்க. 553

உகுபனிதோய்ந் தாலொப்ப வதிசீ தத்தை யுற்றபிரா ணங்க ளெலா மொழுங்கி னாலே, ககனமுறு புகைதண்கா ராகு மாபோற் ககனநடு வுறமதியாய்க் கலையின் கூட்ட, மிகவுநிறைந் தந்தமதி

மண்ட லத்தில் வியன்சுதைதா ரையையுயிர்கண் மேவப் பெற்ற, திகழ்விசும்பி னின்றிழிந்த வமுத தாரை சேடமா முடனீற்றிற் சென்று வீழ்ந்த. 554

அரன்சிரநின் றிழியமுத கங்கை போன்ற வமுததா ரையினா லே யமல மாகிக், கரங்களொரு நான்குடன்வெண் மதித்தே சாகிக் கருணைமால் வடிவென்னக் காண லாகி,யுரங்கிளருத் தாலகன்மெய் தோன்றிற் றன்றே யுயாமுத மயமான வுயிர்க ளெல்லாங்,குரம்பை யது தனைநிறைத்துச் சூழ்ந்துள் ளான குண்டலிமற் றினைப்பூசை குயிற்றி நின்ற. 555

இத்திறத்திற் பங்கயவா தனத்தி ருந்தோ னியாக்கைநிலை யழியாம லியற்றிப் பின்னர்,மத்தமுறு பிரமரம்போற் சுழலு நெஞ்சை வன்பினாற் றகைவுற்றான் மவுனி யாகி, மெத்துபிரா ணாபான வேக நோக்கி மெல்லெனவுண் டாக்கினன்வல் விடய நின்று,தத்து பொறி களைவருந்தி வேறு செய்தான் சற்றுமறப் புறப்பரிசந் தள் ளி னானே. 556

பற்றறுதிண் ணியமதியோ னுள்ளே தோன்றும் பரிசமெலா ந் தள்ளுகின்ற பார்வை யாலே, யற்றனவாக் கினன்மூலவாயில் செ ம்மி யங்கத்தொன் பதுவாயி லனில மெல்லாங், குற்றமற முகம டைத்தாற் புறத்து வாரங் கும்பத்துக் கடைபடல்போற் குறித்த டைத்தா, னுற்றலய மெனுங்குணத்தைச் சேர்ந்த நெஞ்சை யுயரி தய வாகாயத் தொடுக்கி னானே. 557

உரத்தமத கரியையுபா யத்தால் விந்தத் துட்குழியிற் சேர்ப் பதுபோ லொடுக்கி நெஞ்சைச், சரற்ககனம் போனிமல தெளி வைச் சேர்ந்து தள்ளினான் பற்றிப்பாய் தன்மை யாலே, வரந்து டைய விகற்பமெலா மீள மீள வருவனவெண் டினபடியே வந்து தோன்ற, பரப்புறுதோற் றங்களைவன் னெஞ்சான் மாய்த்தான் பகைவரைவா ளாற்றுரன் படுப்ப தேபோல் 558

விகற்பமெலா மிறத்தலுமே யிதய விண்ணில் விவேகபா னு வைமறைத்து விரிந்த கங்குல், சகத்தினிலு ளஞ்சனத்தின் பார்த் தப் போதே தன்னுள்விவே கத்தாலே தவிர்த்தா னத்தை, யகந் திருணன் றாய்க்கெடலுஞ் சுடர்வந் தெய்த வம்முனிவ னதனையுங் கண் டகற்றி மாய்த்தான், நிகழ்ச்சியொளி யகலுதலுஞ் சுழன்று நெஞ்ச நிசியினடிப் போலுறக்க நேர்ந்த தன்றே. 559

போகாத துயிலினையு மறுத்தான் றாக்கம் போகுதலு மாகாச போதம் வந்த, தாகாச போதமழிந் திடலும் வல்லை யவன்மனமோ கஞ்சேர்ந்த வந்த மோக, நோகாமன் மனத்தினைவிட் டேகுமாறு நூக்கினான் பேரிதய நோக்கு மிக்கோ, னேகாத விரவுதரு மந்த கார மிவ்வுலகி னின்றகற்று மிரவி போல. 560

அன்ன காலையி லிருள்சுடர் துயின்மயக் கனைத்தையு மறுத்தோட்டி, மன்னு மோரவத் தையையடைந் தொருகணம் வருத்தமா றியதுள்ள, மின்ன றீர்ந்துட னேயனைத் துருவமா மறிவையெய் தியதன்றே, நன்னெ டுங்கரை தடுக்கநின் றெதிர்த்துமுற் றலநிறைந் திடுநீர்போல். 561

அவ்வி டத்தினிற் காண்பது காட்சியற் றனந்தமா நல்லின்பஞ், செவ்வி யாநந்த முற்றன னமுதமார் தெண்கடற் குளித்தென்ன, மெய்வி டக்கழன் றநீதனு யொருதல மேவினன் சதாநந்தப், பௌவ மாயின னெங்கனு மொத்தசற் பாவமே வடிவானான். 562

பரந்த வுள்ளத்தி னொருமையின் செறிவினைப் பழகலாற் பெருஞ்சித்து, நிரந்த ரித்தெங்குஞ் சமமதா யினன்புவி நிறைவுறும் வெயிலென்னத், திரந்த ருஞ்சித்தி னொருமையை நெடும்பகற் செறிபரி சயஞ்செய்ய, வரந்தை தீர்ந்தசற் பாவசா மானிய மடைந்தன னதனாலே. 563

என்ற வசிட்டன் றனைவள்ள லெதுசத் தாசா மானியமென்
றன்று வினவ வவனுரைப்பா னகல்சிற் சாமா னியவடிவா
யொன்று மொன்று மில்லாமை யுறுபா வனையி னுறைப்பாலே
தன்ற னுள்ளங் கரைந்தேகிற் சத்தா சாமா னியமதுவே. 564

தேற்ற மாங்காண் பனநீங்கிச் சித்தி னிடையே சித்திறக்கிற்
சாற்று முயற்கொம் பெனநொய்தாஞ் சத்தா சாமா னியமதுவே
தோற்றும் புறனுள் ளாய்ப்பலவாய்த் துவக்கு மாகு மிவையனைத்
மாற்றி யகன்று மனநிற்கி லதுசத் தாசா மானியமே. [து

அறிந்து சமாதி யடைந்தோர்க்கு மனுபூ தியினின் றெழுந்தோர்க்குஞ், செறிந்து தோன்று மூடர்க்குத் தெரியா தாமிப் பெருங்கண்ணு, முறிந்து பிறவி யறுஞ்சீவன் முத்த ரான சித்தரெலாம், பிறிந்தி டார்விண் பயில்காற்றும் பெரிதா மண்ணி விரதமும்போல். 566

——o——

## சு ர கு க தை.



இந்தவொழுங் காலுணர்வை யுணர்வினா லுணர்ந்துலகி விய
ங்கா நின்றே, யந்தமறும் பெரும்பதத்தே யாறுதியாற் காண்கி
ன்ற வனைத்து மாளச், சந்ததஞ்சா தித்ததனைப் பெறுமளவு நூல்
குரவன் றனிநெஞ் சாலே, பந்தமறு தத்துவத்தை விசாரித்தே
பெறவேண்டும் பதுமக் கண்ணாய். 567

மயலின்மை சாதனைநாற் பொருட்போதங் குருயமமாம் வழி
களாலே, யுயர்பதவி பெறலாகு மன்றியுணர் வொன்றினா லுய
தற் காமா, வியலுபதே சம்பெற்றுக் கூறியதாய்க் களங்கமிலா
திருக்கு மாகில், வியனுறுசா தனமுழுது மிலதேனும் புந்தியினால்
வீடு கூடும். 568

என்றானை முகநோக்கி யிகத்தொழிலோ டிருந்தேயுஞ் சமாதி
யெய்தி, யொன்றான வுணர்வுற்றான் போலிடர்தீர்ந் தானொருவ
னொருவன் செய்கை, யின்றானைத் தனியிடத்திற் சமாதியடைந்
தானிவரின் மிக்கோ னெவ, னன்றாக வருளுகென விராகவன்
கேட் டலும்வசிட்ட னவில்வ தானான். 569

ஆற்றுமதத் றாவமன்றான் முக்குணத்தால் வருஞ்சகமென்
றறிந்தோர்க் குள்ளே, தோற்றுகின்ற சீதளமே ததுதனையே சமா
தியெனச் சொல்லு மன்றே, யூற்றமறக் காண்ப வற்றோ டுறவுநமக்
கிலதென்றே யுரத்துத் தண்ணென், றேற்றசமா தியிலிருப்ப னொ
ருவனொரு வன்றொழிலோ டிருப்ப னன்றே. 570

இவ்விருவ ரிதயமுந்தண் ணென்றிருக்கில் வேற்றுமையோ
ரிறையு மில்லை, யவ்விதய சீதளமே யநந்ததவப் பயனாமவ் வனுபூ
திக்கே, கவ்வியிருப் போனுள்ளங் காரியத்தா லலையுமெனிற் கவலை
யாகுஞ், செவ்வியவச் சமாதான முன்மத்த நடனம்போற் சிறப்
பின் றாகும். 571

வருத்தமிலா வுன்மத்த நடத்தினன்வா தனைமாய்ந்த மனத்
தோ னாகிற், றிருத்தமுற வவன்கூத்துத் தெளிவுற்றோன் சமாதிக்
குத் தீர னாம்,பெருத்ததொழிற் சேரறினார் பெரியவனுஞ் சேர
றினார் பேத நாடி, லொருத்தனொருத் தனைவிஞ்சா ரிருவருமொத்
தை யமில்வீ டுற்றா ரன்றே. 572

சாலவும்வா தனைபோகி லிம்மனஞ்செய் தொழில்புரிந்துந் தான்செய் யாதாஞ், சீலமன நெடிதகலி லருகிருந்தார் செப்பு மொழி தெரியா தாற்போற், றாலமனந் தொழில்விடினுஞ் செய் ததாம் வாதனையே துன்னு மாகிற், கோலவுட லசைவறினுங் கன விலே வரைநின்றுங் குழிவீழ் வார்போல். 573

தொலைவிறொழிற் செய்புமனந் தொழினீங்கி லதுதானே சுகச மாதி, யலைவறுகை வல்லியமும் பரமாநந் தமுமென்றே யறி வாய் நெஞ்சி, னலைவுதிர மெனுமிரண்டு மத்தியாநந் தியானமெனு முபயத் தாக்கு, நிலையுறுகா ரணங்களா மாதலிலிம் மனமுளைக்கு நீர்மை தீர்ப்பாய். 574

சிந்தனைவா தனையின்றித் திரமான மனத்திணையே தியான மென்ப, ரந்தவுப சாந்தமுமக் கேவலத்தன் மையுமென்று மதுவே யாகு, மிந்தவுயர் பதப்பொருட்டு வாதனைசா லவுநேர்மை யெய்த வேண்டுஞ், சந்ததம்வா தனையில்லா மனந்தொழிலி லாப்பதத் தைச் சாரு மத்தால். 575

நெருக்கமுறு வாசனையே நெஞ்சினது தொழிற்றிரமா நீங் காத் துன்பம், பெருக்கவிடு மாதலினால் வாதனையை மிகநேர்மை பிறக்கச் செய்வாய், வருக்கமுறு பலபொருளி னொனெனும்பா வனை மனத்தான் மாற்றி யெங்ங, னிருக்குதியங் ஙனமிருப்பாய் வரை யிலே மனையிலே யெங்கே யேனும். 576

இல்லுறைவோர் சமாதான விதயத்தோ ரகங்கரமா மேதந் தீர்ந்தோர், புல்லுமனை யேகாந்த வனமாகுங் கடைவீதி புக்குக் காண்போர், செல்லவர வுலாவியும்பற் றுமையினாற் கடைவழிச் செல் லாதார் போல்வார், நல்லறிவு நிறைந்தோர்க்கு மப்படியே காடொக்கு நாடு தானே. 577

துயில்விழிப்புச் சொலல்செலவு தொடர்ந்தாலு மகமுகமாந் தொடர்பா லென்றும், பயின்மனையூர் நாடெல்லாம் பழுவம்போற் காண்பவரே பரம சீலர், செயிரிலா வகமுகத்தா லெல்லாமா காச மாய்த் தீருஞ் சித்த, முயிரனையாய் சீதளம்வந் துண்ணிறையிற் சீதளமா முலக மெல்லாம். 578

இதையமைய லாலெரியி னுலகெலாங் காட்டெரிபோ லெரிந்து தோன்று, முதையமுறு முயிர்க்கெல்லா முள்ளிருப்ப தேயுறத்து முண்டாய் நிற்குஞ், சுதைபயினார் புவிகால்விண் டொகுவரைதீ

ணதிதிக்குச் சூழ்ந்த வெல்லாம், புதைதலுறு முட்கரண தத்து வத்தின் பங்குகளாய்ப் புறத்தி னிற்ப. 579

உள்ளுணர்வி லின்புறுவோன் பொறிகளாற் கருமங்க ளுய்ப் போ னாயுங், தள்ளுசுக துக்கவசஞ் சாராதோ னநவரதஞ் சமாதி யுற்றோ, னுள்ளுகின்ற தனைப்போலெவ் வுயிருமெனப் பிறபொ ருள்க ளோடே யென்ன, வெள்ளுபயத் தாலன்றி யியல்பாலே கண்டானே யெல்லாங் கண்டோன். 580

இன்றிறவு வந்தாலுங் கற்பாந்தத் தெய்துகினு மிலங்கு ஞா னி, கன்றியசேற் றுறுபொன்போற் களங்கமுறா னெல்லாமாய்க் கண்ணா யாறிப், பொன்றலடி முடிவின்றி யொன்றாயின் பத்தள வாய்ப் பொலிதே சாகித், துன்றியகாட் சிகளில்லாக் குறியுடை த்தா மெனச்சுருதி சொல்லு மன்றே. 581

யானாரிச் சகமெங்ஙன் பிறப்பிறப்பெங் ஙனமென்றே யிதயத் துள்ளே, யானாம லிப்படியே யாராயின் மகத்துவமே யடைதி சாலத், தானான சுபாவனா யிருந்துளநின் விசாரத்தாற் றானே நெஞ்சே, நீநாடும் படிதோன்றித் தன்னுருவிட் டினைப்பாறித் துன்ப நீங்கும். 582

வெம்புதல்போய்த் தண்ணென்ற வுன்மனதுக் கிவ்வுலகின் வியாபா ரங்கள், செம்புகர்வே ழத்தினுக்கான் குளப்படிபோற் றோன்றுமா றீன நெஞ்சுக், கம்புவியி றொழில்சிறிதே யாகினு நீந் திடவரிதா மாவின் பாதப், பைம்புனலுங் கிழக்கொதுகுக் கெல்லைகரை காணாத பரவை யன்றோ. 583

எத்தனையெத் தனைநீத்தா யகிலத்தைப் பரஞ்சுடரா யெறிக் குஞ் சோதி, யத்தனையத் தனைதோன்று மெந்நாண்மட் டனைத் தும்விடா யந்நாண் மட்டுந், தத்துவமாம் பொருளெய்தா சகல மும்போ னாற்சேடந் தானாஞ் சித்தந், தொத்தறவேற் றுமையெல் லாம் போகாதேற் சமமான சோதி தோன்றா. 584

பேதமுறு பொருளொருமை தோன்றாதேற் றன்னைத்தான் பெறுவ தெங்கே, யாதலினாற் றனைப்பெறுதற் பொருட்டாக வனை த்தினையு மகற்றல் வேண்டு, மேதமற வனைத்தையும்விட் டாயெ ன்னிற் சேடித்த திறவா வீடா, மேதகைய பதமதுவாஞ் சுரகு வெனும் பெயர்கீர்த்தி வேடர் வேந்தே. 585

கரண மீரைந்து மன்னியஞ் சடமெனுங் கணக்கிஞ ஞனன் றித், திரளை னக்கில வுடன்முத ஞனலன் சேடமே தெனநோக் கில், விரவு சிவனே சேடமா மின்னதும் வேறென்றுற் றெரிகி ன்ற, துரவி தானவே றென்றிஞற் றெரியுமீ துயர்ந்ததத் துவ மாகா. 586

தெரிவ தாகிய விதனையு மகற்றுவன் றெரிபொரு ளுஞமோ
பெரிது சேடமாய் விகற்பமற் றமலமாம் பேரறி வியாஞரு
மரிய யன்சிவ னிந்திர னந்தக ஞதியா மிடந்தோறுஞ்
சுரிகொண் முத்தினுண் ணூலென நிற்குமாற் றென்றுமிவ் வுயர்
[போதம். 587

பகவ ஞருமிவ் வாத்தும தத்துவம் பரமமாஞ் சிற்சத்தி
சகநி கழ்ச்சியா நோயின்றி வெருவுறுந் தனிவடி வுடைத்தாகிக்
கருப முற்றையும் விழுங்கியெப் பொருளினுங் கலந்துறண் ணிய
மிகும பாவபா வங்களற் றயனுறை வீடள வுளதாகி. [தாகி

சத்தி யாவுக்கு முறைவிட மாமிது தனித்தனிச் சந்தாகிப்
பத்தி யாகியிச் சகத்தினிற் காண்பன யாவையும் பலவாகச்
சித்த சைந்துள விசாலமா மல்லது சிறிதும்வே றிலதாகுந்
தொத்து பற்றின்றிக் காண்பதற் றெழுபவந் தொடர்மயக் கழு
மற்றே. 589

சுழுத்தி யிற்றிர முற்றவன் றெழுமெனத் துகள்று சமஞகி, யழுத்த மாகிய வாத்தும தத்துவத் தமர்ந்தன னெனத்தீர்ந்து, விழு த்த கும்பக மெய்தினன் விவேகத்தின் மெய்ம்மைநிச் சயத்தாலே, வழுத்த ருந்தவக் கவுசிகன் விப்பிர மரபினை யடைந்தென்ன. ()

பாந்த சொற்களாற் பயனென்கொல் பயனெலாம் பாறி
நிரந்த ரஞ்சம மாய்மனந் தன்னுளே நிகழ்ந்து
சுரந்த வின்பமாய் நிகரிலா வொருவிழி தோன்றித்
திரந்த னிற்றெரி கின்றதா லென்றனன் றெளிந்தோன். 591

## பாசவிபாசர்கதை.

ஆசைவன் பாசத் திரளினுற் கட்டுண் டரும்பிணி யீக்கடிக் கணுங்கி, யேசுறு போகக் கதைகளான் மொத்துண் டிச்சைமுட் கோலினு லலைந்து, காசுறு கருமச் சேற்றிலே யழுந்திக் கடுஞ்ச கக் காட்டிலே சுழன்று, வீசுமா மோகத் தளிர்நிழற் றுயிலும் வீரனே சிவனு மொருது. 592

மேவுறு துன்பப் பெருஞ்சுமை சுமந்து மீட்கிபோக் கிவை
யுடற் புண்ணு, யீவறு பிறவிக் குழியில்வீழ் சீவ வெருத்தினை
யிக்குழி நின்று, மோவலின் முயல்வா லெடுப்பதே வலியா முயர்ந்
தஞா னிகளுற வுளதே, ஞவிகர் நாவாய் தருவபோ லாக நல்கு
வர் பவக்கடல் கடக்க. 593

எவ்விடத் தில்லை நல்லஞா னிகளா மீர்ங்கனி மலர்குளிர்
சோலை, யவ்விடங் கானன் மேடதா மாங்கே யமர்பவ ரறிவிலா
ரன்றே, கவ்விய செல்வ நட்புநூல் சுற்றங் கருமமா திகளெலா
முதவா, செவ்விய மனமே யுதவுறல் வேண்டுஞ் சீவனைச் செல்
கதி யேற்ற. 594

நெறியுற விடாம லுடனுறை நட்பா நெஞ்சமாத் திக்தினைக்
கூடிச், சிறிதுநா டுதலுஞ் சீவனுய் வுறுமாற் சிங்கியா மிந்தவூ
னுடலை, முறிதரு காட்ட மோட்டினே ராக முற்றுறு சுருத்திஞ
ேனுக்கி, யறிபிலிவ் வளவா லறிந்துசேர்ந் திடலா மண்டரு மிறை
ஞ்சுபே ரறிவை. 595

நிறைபெருங் கடலொத் துரையெலாங் கடந்து நிகரறப் பற்
றற வெறிதாய்க், குறைவில்சிற் சுடரின் கொழுந்துடன் கூடிக்
கோதற வசைவறக் குலாவு, மறைவறு துரிய விழிவெளிப் படு
மேன் மற்றத னுடனது நிகரா, முறைமையிற் றுயில்வோர்க் கண்
ணிதா வுவமை மொழியலாய்த் தோன்றிடு மன்றே. 596

ஆணவவ் வவத்தை வடிவெலாம் பரிக்கு மம்பரம் போலகன்
றுளதா, மீனநெஞ் சுடன்சே ரகங்கர மிறந்தா லெப்பொரு ளிட
த்தினு மிருக்குந், தீனமில் பரமா நந்தமாய்த் தோன்றுந் திகழ்பர
மாத்தும வடிவாந், தானனி முயலிற் கிடைத்திடுந் துயில்வோர்
தன்மைபோற் றம்மினு டுவதாம். 597

உரைகளுக் கெட்டா துளத்தனு பவிக்கி லுறுவதா முறைந்
தவத் துரியங், கரையறு மிவைகண் முழுதுமப் பொருளாங் கன
பரி ஞமியா முள்ளம், வரைவற வொடுங்கி லுட்புற மெங்கு மன்
னிய சராசர வடிவாம், புரையறு தேவ தேவனும் பரமப் பொரு
ளனு பவப்படுந் தானே. 598

அதற்பின் விடய வாதனைக ளறுவ தாகு மதற்பின்னர், விரு
ப்பி லாத பொருளினுடை விளக்க மாகு மதற்பின்னர்ச், சுதப்பன்
பில்லாச் சமத்து வத்தாற் சொரூபந் தன்னிற் பரிணம, மிதத்தி
லுளதா முயர்ந்தோர்க்கு மென்ன வொன்று வடிவிதுவே. 699

மனத்தை மனத்தான் மாய்வித்து மாசில் பொருளைக் காணேலோர், தினத்து மூலகின் றுயர்மாயாச் சித்தமிறக்கிற் செறிசு கத்தாற், கனத்த வுணர்வின் மதிநிகழுங் கழறு மிதற் கோ ரிதிகாச, மினத்தி னினியாய் கேட்டியென விசைத்தான் வசிட்ட னிராமனுக்கே. 600



## வீதகவ்வியன் கதை.



பற்றிலதாய் நின்மலமா மனமகிலவகா ரப்பயினும் பந்த மேவாப், பற்றுளதேற் சனிறவும் படைத்தாலும் பந்தமே பயினு முள்ளிற், பற்றிலதா யினியதொழில் பயில்சீவன் புறத் தொழில்கள் பண்ணி னுறினும், பற்றறப்பண் ணுவிடினும் பண்ணு வோன் புசிப்போனும் பான்மை மேவா. 601

என்னனுமே பற்றுவ தெத்தன்மை யெப்பற்று லெய்தும் பந்தம், றுன்னருமவீ டெப்பற்று லெய்தலாம் தொடர்பற்றைத் துடைக்கு மாறென், பன்னுகென முராமனுக்கு முனிபகர்வா னுடலுயிரைப் பகுப்ப கொன்று, முன்னுமிலா தடலினைதம் புதல்பற்று மதனாலே யுளதாம் பந்தம் 602

ஈதனைத்துஞ் சொரூபமே யானின்கெத்தை யிச்சிப்பே னைதயிகழ்வே னெனல்பற் றின்மை, மாதுயர்தி ரிதுசீவன் முத்தர் மெய்யின் மன்னுமா வியானில்லைப் பிறரு மில்லை, மேதகு மின் பங்களெலா மேயின் மேவ மேவாதென் மேவாதா யிடுக வென்றே, யோதியவா றன்றேபற் றின்மை யுண்டே லுயர்வீட் டுக் கிதுநெறியென் றுணர்த்தி யன்றே. 603

கருமமிலா மைமையகிருங் பார்கருமம் பற்றுர் கருதுமவன் விட்டிடாண்டுங் கண்டா லொப்போர், மருவியபற் றிலாதவரென் றுரைப்பர் மேலோர் வருகருமப லாதிகளைக் கருதாத் தாலே, யொருவலற மனத்தாலே நிபுண மாக வொருவுதல்பற் றின்மை யென வுணர்த்தி யித்தாற், பெருகவரும் தொழிலனைத்துஞ் சூற்றுந் தீர்ந்து பெறலரிய முத்தியையும் பெறு நல்கும். 604

புழுமுதலாம் பல்பிறப்பிற் றோன்றிப் பல்காற் புதமெலாங் கடற்றிரைபோற் பொன்றுந் தன்மை, பாழுது தருதும் பற்றில து

படர்ச்சி யாகும் பற்றுத்தா னிருவகையா மவற்றி னொன்று, நழுவுபய னிலியொன்று வணங்கற் பாற்று நவின்றபய னிலிமூடர் நண்ணற் பாற்றும், வழுவறுதத் துவமுணர்ந்தோர்க் குடைமை யாக வணங்கற்பாற் றும்பற்று மருவுந் தானே. 605

ஆத்துமதத் துவவுணர்வால் விவேகந் தன்னு லடைவாக வுண்டாம்பின் பணுகாச் சன்ம, மேற்றமுள தொழுதகைய பற்றீ தாகு மீதன்றிப் பயனிலியாம் பற்றே தென்னி, லூற்றமுறு முணர்வின்றி யுடலமுன்னு முறுபொருளி னுளுண்டா முலகந் தன்னிற், றேற்றமுறு பிறவிமீண் டுள்ள தாக்குந் தோன்றலே யிவையிரண்டுந் துணிந்து கொள்ளே. 606

வளையாழி கைதரித்த செங்கண் மேனி வணங்கற்பாற் றும் பற்றின் வசத்தி னாலே, யிளையாமல் விவிதமாந் தொழிலி னாலே யெவ்வுலகு நன்றாக விரங்கிக் காக்கு, முளையாத விஞ்ஞானக் கதி சேர் சித்த ருலகபா லகராதி யுரைத்த வாறே, விளையாடி வணங் கற்பாற் றென்னும் பற்றால் விரிந்தசக மூர்த்தத்தின் மேவி நின்றார்.

கேடான நல்லதெனு நினைவி னாலே கிளர்போக வசத்தாலே கிட்டி நெஞ்சம், வீடாத பயனிலியாம் பற்றி னாலே வெறும்பிணத் துக் கழுகுபோல் வீழு மன்றே, பாடான பயனிலியாம் பற்று ளோர்க்குப், பன்னரகங் களும்வீடாய்ப் பண்ணப் பட்ட, வீடான பயனிலிப்பற் றுள்ளோ ரென்னு மிளவிறகா னரகவெரி யெரியு மன்றே. 608

விச்சையெனும் விழிநன்றாய் விளங்கப்பட்டு வெம்மாய விட யத்தின் மீட்சி யெய்தி, யிச்சையுறு பற்றென்ப தெங்கு மில்லா வியன்மனத்தோ டிருப்பவரே யிறவா முத்தர், நிச்சயமா யெப் போது மெவற்றின் பாலு நிற்பவனு யனைத்துடனு நிற்போ னாகி, யெச்செயலுஞ் செய்வோனுஞ் சீவன் முத்த னியற்றியவிம் மனத் தின்ற னியல்பு கேளாய். 609

தொழிலினினை விற்பொருளில் விண்ணின் மேல்நிமூ ருழ் திசையிற் புறப்போகத் தொகுதி தம்மி, விழிதருமைம் பொறி நடையி லுள்ளி னிற்கு மின்னுயிரிற் சென்னியிலா நநத்தி னுவி, லழியும்விழி களின்மூக்கிற் புருவந் தன்னி லகங்கா ரத்திற் சீவனி லுள் ளாகா சத்தில், விழிநனவிற் சொப்பனத்திற் சுழுத்தி தன் னில் வெள்ளொழுக விழமைந்தின் வியன்வகன் னாத்தில். 610

சலனத்திற் றிரத்திலடி நடுவி லீற்றிற் சமீபத்திற் றூரத்திற் சரீராங் கத்திற், பலபண்டந் தன்னிற்சே தனத்திற் சத்த பரி சாதி களின்மகிமை பயிலின் பத்தி, இலவுவராத் திற்போக்கிற் காலப் பண்பி லொருசிறிதும் பற்றும உணர்வி லாறி, நிலவிய காண் பனசிறிது பயின்று மெங்கு நிராசையாய்ப் பரசுகத்தி னிற்கு நெஞ்சே. 611

செப்பியவத் திறநின்று பற்றொன் றின்றிச் சீவத்தன் மை யைச்சேராச் சீவன் முத்த, ரிப்புவியிற் றொழிலெல்லாஞ் செய்க நீர்க வின்பவுணர் வன்செய்கை யியற்றி னாலுந், தப்பறவே விட் டாலுந் தொழில்க டன்றாற் றருபயன்க ளொருசிறிதுந் தாக்க மாட்டா, மைப்புயல்கள் பலவிதமா யெழுந்த போதும் வானகத் திற் பற்றாத வகையே போல. 612

அன்றியே யறுதனையுந் தீர நீக்கி யறிபொருளின் முடிவான வறிவாற் றுன்னி, பொன்றுமுப சாந்தனைப் பளிங்கு போலுள் ளொளிமேவிச் சிவனொரு மித்து நிற்ப, வன்றுணர்சிற் சுகராகிப் பெரியோ ராகி ஞானபர ராய்ப்பரம நன்றாய்ப் பெற்றோர், நின் றசைவார் புறத்தின்மயிற் பீலி போல நிலைகலங்கார் மேருவைப் போ னெஞ்சி னுள்ளே. 613

அறிபொருளை விட்டகன்று லழியுஞ் சித்த மந்நிலை வியா பார மனைத்து மில்லாச், செறிநனவிற் சுழுத்தியா மிதனை நாளுந் திராத பரிசயமே செய்யச் செய்யப், பிறிவின்முது துரியமா மென் பர் மேலோர் பிழையிலா விதனிலே நிலைமை பெற்றுக், குறி யறுமா நந்தமே காந்த சிலக் கொள்கையா லுறுநந்தங் கூடு மன்றே. 614

அந்தவனு நந்தமா நந்த மென்னு மறிவினதீ தந்தன்னை யடைந்து ளோனைத், தொந்தமிலா யோகியெனச் சொல்ல லாகுந் துரியாதீ தந்தனையுந் துன்னி னேனும், பந்தமுறு பவம்போய்த் தா மதத்தால் வந்த பலவபிமா னங்கள்போய்ப் பரம வின்ப, நந்த விற்றன் மயமாஞ்சற் பாவந் தன்னி னன்னீரி லுப்புப்போ னன்று மொன்றும். 615

சடமசட மெனுநோக்க மிரண்டி னூடே தனியாகி நின்றபர தத்து வத்தை, யிடவியபோ தாரண்ய முதலாம் வேத மிராமனை பலகாலு மியம்பு மன்றே, படருறுகாண் பனகாட்சி மேவும் போ

திற் பரம்பொருளின் பற்றுகிப் பயின்ற வின்பந், திடவறுபூ தியி
ன்வடிவா மாதலாலே திகழ்பிரம சாரமெனச் செப்புந் தானே.

தெரிபொருளுந் தரிசனமுஞ் சேரும் போதிற் சேர்ந்தசுக
வறிவுமிகச் சிறந்த தாகுந், தெரிபொருளால் வளைப்புண்டாற்
பந்த மாகுந் தெரிபொருளை விட்டகன்றாற் றிடங்கொள் வீடாந்,
தெரிபொருளுந் தரிசனமுஞ் சேரும் போதிற் சேர்ந்தவநு பூதி
யிடர் தீர்ந்த தாகுந், தெரிவுறவாங் கதுபற்றி நிற்பாய் நீநின் றிர
நிலையாஞ் சுழுத்திதனைச் சேரு வாயே. 617

அதுதுரிய நிலையடையு மடைந்த போதி லான்மாத்தான்
றாலமல வணுவு மல்ல, திதமுறுமுன் னிலையல்ல படர்க்கையல்
ல சித்தசித்துண் டில்லையெனுந் திறங்க ளல்ல, வுதிதமுறு
நானல்ல பிறனு மல்ல வொருவனல வநேகநல வுலக மென்றே,
யிதுவெனக்காண் பனவாகிச் சித்த மாதி யிருமூன்றிற் றிரியத்துக்
கிடமாய் நிற்கும். 618

ஆங்கதுவே யதீதபத மாத லாலே யதுகிஞ்சி லன்றெங்கு
மதுவே யாகும், பாங்குறுவீ டென்றும்ப ருலகி லில்லைப் பாதலத்
திற் பூதலத்திற் பார்க்கி லில்லை, வீங்கியவா சைகளெல்லா மிறந்த
காலை விரிந்தமன மிறப்பதுவே வீடென் றோது, மோங்கியவீ
டெனக்குளதென் றுள்ளே யெண்ண முண்டாகின் மீண்டுமன
முற்ப விக்கும். 619

நினைப்புமிகி லிவனுக்குப் பிறப்பிறப்பு நீங்காது வன்பந்த
நிலைய தாகு, மனைத்தினுக்கு மதீதமா யுருவ மெல்லா மாகியகன்
றுத்துமதத் துவமே நிற்கில்,வினைத்தொடராம் பந்தமெது முத்தி
யேது வேரறச்சிந் தையைக் கெடுப்பாய் மேல தாகத், தனைத்
தெளிந்து நிறைந்தமல நெஞ்சாய் நல்ல சாந்தியையுற் றோர்விரும்
பார் சற்று மொன்றும். 620

வெந்தோடு மாயத்தாங் கருவேற் காட்டை வெட்டுமழுப்
பரமசுக மேவுந் தானஞ், சந்தோடஞ் சாந்தியெனு மரப்பூங்
கொத்துச் சாற்றுறுமிந் திராசையுறிற் றளர்வு றீரு, மந்தோபார்
குளப்படியா முனையா மேரு வாசைக்குரு விக்கூடா மவனி மூன்
றும், வந்தோர்புன் றுரும்பாகு நிராசை பூண்ட மாறுத வலங்கார
வடிவு ளோர்க்கே. 621

காயத்தில் வேறாகத் தன்னைக் கண்டோன் காயமீ ரினுமறி
யான் கன்னற் கட்டி, தீயிற்கா யினுமரிந்த போது மின்பந் தீராத
வாறுபோற் றெளிந்த ஞானி, மாயத்தின் மோகத்தாற் பேத
மாகான் மணந்தபர புருடன்மேன் மனஞ்சேர் மங்கை, நேயத்
தான் மனைத்தொழில்கள் செய்யுமாபோ னிகழ்தொழிற்செய்
யினும்பரத்தி னிலைமை நீங்கான். 622

பண்டத்திற் பற்றின்மை யாலே சித்தம் பயில்சாந்தி முத்தி
தரும் பகர்ந்த முத்தி, பிண்டத்தோ டிருந்தாலு மிராவிட் டாலும்
பேறுகும் பற்றறுத்த பெரியோர்க் கென்பர், மண்டுற்ற நேயமற
வாழ்வோ ரின்பம் வருஞ்சீவன் முத்தராம் வளர்நேயத்தாற்,
றெண்டுற்று வாழுமவர் பந்த முற்றோர் சொன்னமூன் றுமவனே
தூய முத்தன். 623

வருதொழிலின் விருப்புறான் வந்த மான வழிநிற்பன் சென்
றவற்றை மனத்தி னெண்ணான், கருமமுழு வதுமியற்றுந் தொடர்
பந் தத்திற் கலந்தவர்பான் மனம்பற்றான் கவலை கூரான், மருவிய
வோர் பத்தர்பாற் பத்த னாகும் வஞ்சகர்பால் வஞ்சகனும் வாலர்
தம்பாற், பருவமுறு வாலனும் விருத்த ரானோர் பால்விருத்த னாந்
தீரர் பானு மாங்கே. 624

விடலைபால் விடலையாந் துயருற் றோர்பால் வெந்துயர முறு
நிலைமை விடாத புந்தி, திடமுளதா மாநந்த நிறைந்து தோன்றுஞ்
செவ்வியனும் புண்ணியர்தஞ் சிறப்பே செய்யு, மடமையிலா வழி
ஞானுந் தெளிந்தோ னாகு மதுரமுள னாந்தீன மனமில் லோனுஞ்,
சுடர்குளிரின் மதிகருதி லெரிகீழ் நோக்கிற் றுளங்கிவிய வான்
சீவன் முத்தன் றாயோன். 625

இதுவெனத்தோன் றியவெல்லாஞ் சிற்சொரூப மிவ்வண்
ணம் பலசத்தி யிலங்கு மென்றே, புதுமைகளின் வியப்புறாச் சீவன்
முத்தர் புனலசைவால் வேற்றுமையே போலத் தோன்று, முது
சுழிபோ லவும்விண்ணின் மயிலின்றேறுகை முன்புகடி. தசைத்த
லுமே முத்தின் கூட்டங், கதுமெனமெய் போற்றோன்றல் போல
வுந்தான் கனத்தசக மனத்தசைவாற் கடிது தோன்றும். 626

என்ன வோதனு மியாதினு லசைந்திடு மியாதியினு லசை
யாது, சொன்ன நெஞ்சகந் திருத்தலா னெறியெது சொல்லெனு
மிராமற்குப், பன்னு மாதவ னுரைசெய்வா னெள்ளிலே யென்

ணையும் பனிதன்னின், மன்னு வெண்மையும் போன்மனத் தசை வுதான் மருவியே மிகத்தோன்றும். 627

சித்த நாசத்தி னெறியிரண் டியோகமுந் தெளிந்தஞா னமு மாகு, மொத்த யோகந்தான் மனத்தூறு தொழிலினை யொருவ ழிப் படமாற்றல், சுத்த ஞானந்தா னலம்பெறக் காண்பதாந் தொடர்மன மேதென்னின், மெத்து மாகம பூடண ருரைத்தது விசையுயி ரசைவாகும். 628

உரைசெய் யாருயிர் தடைப்படி னுள்ளமு மொழியுநெஞ் சசைவற்றூற், புரைசெய் சன்மம்போ மாதித்தன் போய்விழிற் புவித்தொழில் போமாபோல், வரைசெய் மார்பனே யென்றனு முடலெனு மனையின்விண் ணிடைநாளும், விரைவி லோய்வற வுழல்பிரா ணனதியை விலக்குமா றெதுவென்றான். 629

முனிவ னோதுவா னூலொடு மறிஞரை முன்னியே விரா கத்தை, நனிமு யன்றுகற் றிதனினூற் குடும்பமா நடைவிலங் கது விட்டுத், தனிநி ராசைதா னிறைந்திடில் விரும்பிய தற்பொருட் டியானத்தா, லனிச நீள்பக லொருமையே விளங்கிட வடுத்தசா தனைதன்னால். 630

ஏக தத்துவக் கனபரி சயத்தினு லிவ்வுயிர் தடையெய்தும்
தேக பூரகா தியினுயி ரினைப்பறத் திட்டமுறு பழக்கத்தா
லூக மாகவே காந்தமுற் றுள்ளுணர் யோகபா வனைதன்னுன்
மேக மேனியாய் பிராணனி லசைவுதான் விலக்கிடப் படுமன்றே.

பிராண வத்தினுச் சாரண முடிவினிற் பிறந்தசொல் லூறு முண்மை, விரவு நாட்டத்தாற் றுயில்பவ னுணர்வுதான் வெளிப் படி னுயிர்நிற்கும், பரவு தாலுமூ லஞ்செறி யிதழினைப் படருநா வாற்றள்ளி, யுரவி னுனுயர் புரையிமேல பிராணனை யோட்டினு னுயிர்நிற்கும். 632

நாடு மங்குலி பன்னிரண் டெல்லையி னூசியி னுனிதன்னி
னீடு வானத்தி லறிவுக ளிறந்திடி னில்பெற வுயிர்நிற்குந்
தேடு சாதனை யானுயர் புரைவழி சிங்குவைமேல் விரவீரா
றாடு போயுயி ரெல்லையி னின்றுணர் வொளிக்குமே னுயிர்நிற்கும்.

புருவ நாப்பணே கண்மணிப் பார்வைதான் பொருவில்சாந் தியின்மாய்ந்து, தெருளுநுங் கேதன வறிவங்கு தெரிவறிற் றிரி

வுரு துயிர்நிற்குங், கருது கின்றவிர் நெறிகளா லநேகசங் கற்பகற் பிதபேதத், தருள்செ யும்பல தேசிகர் சொற்களா லசைவற வுயிர் நிற்கும், 634

இந்த யோகங்க ளறிவெலா மிளைப்பற வியற்றுசா தனையாலே
வந்து மேற்பிற வாதவர்க் குபாயமாய் வந்துறும் பழக்கத்தா
லுந்து மாருயி ரசைவுதான் கெடுமெனி லுள்ளமுஞ் சமித்தாறுஞ்
சிந்தை தான்சமித் தாறுமேற் செல்கதி சேடமாய் விடுந்தானே.

விகற்ப வாக்கெலா மெப்பத நோக்கியே மீளுமப் பதந்தானே, விகற்ப மற்றிடிற் சேடிக்கு மெனமுனி விளம்பலும் விறல்வீர, னிகழ்த்தி யோகத்தை யுறுமனம் பொறிகளி னெறிசெலாச் சமந்தன்னை, நிகழ்த்தி ஞயினி யுண்மைஞா னத்தையு நிகழ்த்தென முனிசொல்வான். 636

ஆதி யந்தமி ரேற்றமே தன்வடி வாகிய பரமிங்குச் [ஞானம்
சோதி யாய்நின்ற தென்னுமிவ் வுறுதியே தூகளறு மெய்ஞ்
பேதி யாநின்ற கடபட வடிவமாம் பெரும்பொருட் பலசத்தி
தீதி றற்பரம் வேறில தென்றுணர் திண்மையே நற்காட்சி. 637

செகங்கண் மூன்றினு முண்மையாம் பொருளறி திறமெதுவெனச்செப்பில், செகங்க ளியாவையுந் தற்பொருள் வடிவெனத் திரமுறு நிறைவாகுஞ், செகங்க ளியாவையுஞ் சொரூபமே யிதிற்றிக ழுபாவபா வனையெங்கே, செகங்க ளிற்செறி பெத்தமுத் திகளெனத் தியங்குவேற் றுமையெங்கே. 638

பிறிது காண்பன வில்லைநெஞ் சில்லைமெய்ப் பிரமமே யவையாகிச், செறியு மாலிவை யாவுமொன் றாகிய சிற்பர விசும்பாகு, நெறிகொள் பந்தம்வீ டெங்குள விதுவென நிகழ்பெரு வடிவாகிக்; குறிய தும்பெரும் பிரமமே நின்றது குறைந்திருந் ததுநெஞ்சே. 639

ஒருமை யாகவே வுணர்வினு லுணர்தியா லுருவைநன் குறநோக்கிற், றருவுங் கற்களும் படங்களு முதலிய சற்றும்வேற் றுமையில்லை, மருவு சங்கற்ப மெங்குள சீவனும் வையகப் பொருளியாவு, மருக லின்றிய சாந்தரூ பம்பெரு மடிமுடி வுறநோக்கில். 640

சுத்த மானதற் பரத்தினைத் தழுவியே தொடர்ந்தவுண் மதியாலே, யொத்து நிற்பவர் தம்மையெப் போகம்வந் தூறுபிணி

செயவற்று,மெத்து போகத்தை முதலிய பகையெலாம் விசாரமே மிருந்தோர்தம், புத்தி யைச்சிறி தசைத்திடா வசந்தனுற் பொரு ப்பசை வதுமுண்டோ. 641

உரைத்த பன்மைக ணினைவிலே யுள்ளதா முண்மையா யிவ துள்ளே, நிரைத்த பல்வகை வாவியிற் பிறிவிலா நிகழ்தருநீர் போலக், கரைத்த லன்றியிவ் வறுதிசேர் மதியுளோர் களங்கமில் வீடுற்றோர், புரைத்த லன்றியே நலனுறக் கண்டநற் பொருளு மிங் கிதுதானே. 642

ஈது வேறொன்று முத்திசென் றுறுநெறி யியம்புதுங் கேள் வீரா, வீத கவ்விய னென்றொரு பெருந்தவன் விந்தவெற் பிடை வாழ்வோன், காத லாலுயர் கன்மகாண் டத்திலே காமமட் டற நின்று, கேதமாதியே வியாதிவன் பவந்தரு கிரியையான் மிக நொந்தான். 643

நிருவி கற்பமாஞ் சமாதியின் பொருட்டுமுன் னிகழ்கிரி யைகளெல்லா, மொருவி விட்டனன் பன்னசா லையினிடை யுற்ற னன் கலைத்தோன்மேன், மருவு பெத்தபங் கேருகா சனத்தனன் வருகுதி மிசைவைத்த, விருக ரத்திரள் விரலின ளிவ்வகை யிருந்தன னொருப்பட்டு. 644

பாந்து நிக்குறு மனத்தினைப் பையப்பையப் பார்த்தமீட் டனனுள்ளே, நிரந்த ரித்தனன் புறத்துள பரிசங்க ளீத்தன னெழுங்காலே, ஆரந்த சித்தத்தின் றிரதிலே விரும்பினன் றுக ளறு மனத்தாலே, புரந்த நற்றவ வீதகவ் வியமுனி புலப்பட நினைவுற்றான். 645

வியப்பு டைத்திது மீளுவித் திருக்கவும் விசையுறி ரசை வுற்றுத், தியக்கு றெஞ்சகந் திரதிலே யன்றியே சிறுசரு கெனவோடும், பயக்கு மின்பமில் கடநின்று படமுறும் படநின்று கட மெய்து, மயக்க மேவுபல் பொருள்களிற் போய்விழு மரங்களிற் குரங்கேபோல். 646

விழிமு தற்பொறி யாய்மனத் துவாரமாய் மேதையின் றிய மென்றே, யொழிவி லாவபி மானத்தெசை யைம்பொறி புணர்ந்து காண் புறுநானே, கழியுமிந்திரியங் காணல மாகவே கலங்குகே னந்தோநீ, ரழிவில் சின்மயப் பகவனுப் சகலசான் றுகிதின் றனை ளுனே. 647

அன்ன தன்மையுற் றறிஞன் மிக்கயா னறிந்தகண் முத
லைந்தும், பின்ன மாகியே வானுல கத்தினைப் பிரிந்தபா தலம்போ
லாம், பன்ன கங்களும் வழிச்செலு மவர்களும் பறையரு மறை
யோரு, மென்ன வச்சமுற் றுயர்ந்தசின் மாத்திர மிந்தியத் தரு
கெய்தா. 648

சாறு வாகனாய்ச் சாரண னாகிநாற் றடந்திசை பலியேர்க்
கப், பாறு நெஞ்சமே வீணிலே வருந்துதல் பயனில படியீதே,
யாறி யேவினை யாடுநீ யுணையறி வென்னும்வா தனைபொய்யாம்,
வேறு பாடுதான் மிகுந்துள மனத்தொடு மெய்யுணர் வொன்றாகா.

சுகமி ருக்குனா னென்ன லகங்காரத் துன்மதி யிதுநீதா
மகம திப்பினா லிவனவ னாகுநா னென்னுமிவ் வாரம்ப
மிகவ கற்றுவா யுன்வடி வெதுவெனில் விசாரமின் மையதாகு
மிகவி சாரத்தா லழிந்திடும் பரிதியா லிருள்கழி வதுபோல. 650

முன்னந் தோற்றமற் றிப்பொழு துனக்கென வுருவின்றிம்
முறையாலே, பின்னுந் தோன்றலை யென்னுடை நெஞ்சமே
பெரிதுநீ பெறுநன்மை, யின்ன றீர்தெய்வ சகாயத்தா லிடரிலா
வின்பமுற் றியானென்றுந், துன்னு சாந்தனாய்த் துரியமா மென்
சொரூ பத்திலே சுகிக்கின்றேன். 651

எனவொ ருப்பட்டு வாதனை தீர்முனி யிந்திய மலைவின்றி,
மனனை வன்பினா னிறுத்தினன் விறகினை மாய்த்ததீச் சிகை
யுள்ளே, நனிய டங்கல்போ லிவனுயி ரொழுங்கிலே நன்கொடுங்
கினமூக்கி, னுனிநுண் பார்வையாற் சிறிதலர் கமலமே நோக்கங்க
ணிகரான. 652

சிரங்க ழுத்துட ருனங்கள் சமமுறச் சிலையிலே வகுத்
தென்ன, நிரந்த சித்திர மென்னமுன் னூறியான் டிருந்தன
னிமிடம்போற், பரந்த காருநாள் வெள்ளத்தி னைக்கரிற் படிந்த
திங் கிவன்மேனி, யுரங்கொண் மாமுனி யுணர்ந்தனன் மண்ணினு
ளுடலசைந் திலதென்றே. 653

ஓங்கார முடிவாகத் தீர்க்க மான வோசையெனு நாவுடனே
பொறிக ளூற்ற, தேங்காத புலனெல்லா மனத்தைக் காற்றுத் தீர்
வதுபோற் றீர்ந்தனன்சே னிடையே கங்கு, னீங்காது போ
லிருண்மாத் திரமுன் றோன்றி நிகழ்தலுங்க ளினன்சோதி நே

முன் ரேன்றப், பாங்காகக் கணமதனைப் பார்த்துத் தீர்த்தான் பயிலிருடே சிரண்டுமெறப் பாறிப் போன. 654

அவத்தையிது தனைமனத்தாற் பற்றி மேலோ னங்குதித்த மனந்திரண மென்ன முற்றுங், தவிர்த்தனரே ரிமைப்பிலதற் பின் னப்போதே சனித்தசிசு வறிவொத்துச் சால நொய்தாய், நிவக்கு மொளி பெறுமறிவைப் பெற்றுப் பாதி நிமிடம்பா தியிலெண்ண நீக்கி நின்ருன், றுவக்குறுகாற் றசைவுவிடல் போலச் சித்தின் றொடர்காட்சி மாற்றினன் றுகளி லாதோன். 655

வருசிற்சா மானியத்தை யடைந்தான் சத்தா மாத்திரமே வடிவானன் சுழுத்தி மேவி, யிருபொற்குன் றெனநின்ருன் சுழுத்தி யூற்ற மெய்தியபின் றுரியவடி வெளிதி னுற்ரு, னரு குற்ற நிராநந்த மாய மாயா வாநந்த மாயசத்தா கியுஞ்சத் தாகி, யொருவுற்ற வசனங்கட் கெட்டா தான வொருபொருடா னுய் நின்ரு னொப்பி லாதான். 656

சூனியமென் பார்க்கதுவாய்ப் பிரம மென்று சொல்லுவார்க் கதுவாய்விஞ் ஞான மென்று, தானியம்பு வோர்க்கதுவாய்ப் புருட னுகிச் சாங்கியர்க்கு மியோகியர்க்கீ சன்ரு னுகி, யீனமில்லைச வாக மர்க்குச் சிவனுய்க் கால மென்பாருக் கதுவாய்மத் தியர்கட் கெல் லா, மானமுறு மத்தியமாய்ச் சமமாய்க் காணு மனத்தினர்க்கெல் லாமான பொருடா னுனன். 657

அடர்பிறப்போ டிறப்பின்றி யாதியன்றி யாதியா யொன்ருகி யநேக மாகித், தொடர்சகள நிட்களமாய் விண்ணி னெய்தாய்த் துய்தான நிலையீச னுகி யொல்லைத், திடமுறநின் றிருபதினு யிர மாண் டெல்லை செருக்குறவேண் டியபடியே சகத்து லாவிப், படர்மனயீண் டெழாதவகை சமித்தொன் ருனன் பகர்வீத கவ் வியனும் பரம யோகி. 658

---

## உபசாந்திப் பிரகரணம்.

உள்ளும் புறம்பு மசைவின்றி யுயிரு மனனு மொடுங்குமெனிற்
றள்ளுறும மொருகாலுந் தாது வெல்லாஞ் சடத்துறையும்
தெள்ளி யறிவ தறிந்தாசை நீர்ந்து புந்தி தெளிந்திதயங் [தோர்.
கொள்ளும் பந்த மெலாமறுத்தோ ரன்றோ வுண்மை குறித்தறிந்

என்ற முனியை விவேகத்தி னெழுச்சி யாலே மனமிறக்கிற்
றுன்றுகின்ற மயித்திரியை முதலாங் குணமெவ் விடத்தொன்றுங்
குன்ற மனையா யுரையென்ற விராக வற்கு முனிகூறு
மொன்று மருவு முருவுமென வுளத்தி னாச மோரிரண்டே. 660

சீவன் முத்தி தனிலுருவ நாசஞ் சித்தந் தனக்குளதாங்
தாவி லுடறீர் முத்திதனிற் சாற்று மருவ நாசமுறு
மேவு சித்த முண்டாகி விடரா மிறக்கின் மிகுமின்பம்
பாவி யுள்ள மெழாதபடி பண்ணி யதைநா சம்பயில்வாய். 661

பகுதி வழியின் குணபார மெனவென் றபிமா னம்பண்ணற்
றகுதி யுண்மை யறியாது தளர்வெஞ் சாஞ்சி வனுமதுவே
தொகுதி யான சுகாசுகத்தைத் தொடர்ந்து நிற்குஞ் சுகாதிகளின்
மிகுதி யதையா திம்மனமே மிகுமா யைக்கு விளைமுளையே. 662

மனத்தி னுண்மை யுரைத்தனமே மனத்தி னாசஞ் சொல
க்கேட்பாய், கனத்த கிரியை யுயிர்ப்பதையா வகைபோற் சமமாங்
காட்சிதனி, வினைத்த வின்ப துன்பங்க ளிறையு மதையா திருப்ப
வர்க்கே, யனத்த மான வுள்ளந்தா னழிந்ததென்ப ரறிந்தோரே.

மாவுச் சவமா பத்தாக்க மந்தங் கார்ப்பண் ணியமதங்கண்
மேவுற் றனபோ தியாதெவரை யவர்க்கே யுள்ளம் வீந்துளதாங்
தாவுற் றெழுந்த பேதைமையே மனமா மதுவே தவிர்ந்தொழியி
லோவற் றுள்ள நாசமெனு முறுபே ருண்மை யுதித்திடுமால்.

ஆய குணமா மயித்திரியா திகள்சேர் நல்வா தனையடைந்து
தீய மறுசன் மமுமிலதாஞ் சீவன் முத்தர்க் கத்தமன
மோய மனதுக் கிதுவாகு முருவ நாச மிதுதனிலே
மேய குணங்கள் வசந்தத்தின் விரிபூங் கொத்தா மெனவிளங்கும்.

தத்துற்ற வுள்ளத்தி னருவ நாசஞ் சரீரமிலா முத்தியனிட்
களமாய்ச் சாரு, மெத்துற்ற நற்குணங்க டரிக்கு முண்மை வீந்
துளதாய் மேனியிலா விமல வீடாய்ச், சுத்தத்தா யுடறீர்ந்த முத்
தர்க் கெய்துந் தொடர்பாய்ச்சத் துவநாசஞ் சொருப மாகிச், சித்
தத்தி னருவநா சப்போர் பெற்ற திகழ்பதத்தி லொன்றுமிலைச்
செப்புதற்கே. 666

குணங்குணமி லாமைசீர் சீரிலாமை குலவுதய மத்தமன மகிழ் வரு யை, யிணங்கொளிவல் லிருளிரவு பகன்முச் சந்தி யியலுண் மை யில்லாமை யிடைபொன் றில்லைப், புணர்ந்துளதற் பதமது தான் மாயக் கூத்தும் புந்தியும்வென் றகன்றவர்க்குப் புகலே யாகு, மணங்கவருங் காற்றுமுத லனைத்தி னுக்கு மருவிடமாய் நிற்கின்ற வானம் போல. 667

துன்பமெலா மிறந்தறிவே வடிவா யேகச் சுழுத்தியாய்த் தாமதரா சதந்தோன் றும,வின்பமிகுந் தழகாமப் பதத்தே விண் ணி னியாக்கையாய்ப் பெரியோரா யிலங்கு மோலோர், வன்படர் நெஞ் சறவுறைவ ரென்ற லோடுங் வளர்கொடிமுந் திரிகைநிகர் மாயைக்கேது, முன்பயில்வித் ததற்கெதுவித் ததற்கென் வித்து மொழிந்தவதற் கெதுவித்து மொழிவாய் நாலும். 668

என்றிரா கவன்கேட்ப வசிட்டன் சொல்வா னெழுந்துளவா ரம்பசுபா சுபங்க ளென்னுந், துன்றுமுளை தந்தருளு மேனி வித் தாஞ் சொன்னபெரு மாயையெனுஞ் சூழ்கொ டிக்கு, நின்றவுட லெனும்வித்துக் கெதுவித் தென்னி னீண்டபா வாபாவ நிறைந் நாளுங், கன்றுதுய ரெனுமணிக்கு வைப்பாஞ் செப்பாங் காத லின்பின் ஞேடுகின்ற கவலை நெஞ்சே. 669

இல்லதுள தெனுமிந்தத் திடனெஞ் சாலே யெல்லையறப் பிறக்குமா விதனைத் தானே, புல்லுகின்ற கனவிலநு பவிப்ப ரன் றே புவித்தொழிலாங் கொடிகளை பொருந்திச் சுற்று, மல்லன் மன மெனுமரத்துக் கிரண்டு வித்தா மாவியசை வொன்றும்வா தனையழுத்தஞ், சொல்லுமிரண் டாவதா மென்று கொள்வாய் சூரியன்றூல் குலம்விளங்கத் தோன்றுந் தோன்றூல். 670

உண்டாகி யெவ்விடத்து முற்ற போத முயிரசைவா லுணர் வுறும்ப் போதந் தன்னை, மண்டாமற் றடுக்கைபெரு நன்மையா கும் வளர்போதங் காண்ப வற்றை மருவு மாலாற்,றண்டாத காண் பவையே மனத்துக் கென்றுந் தவிராத துயராமத் தனிப்போ தந் தான், மிண்டாத சுழுத்தியிற்போ தம்போ னிற்கில் வீடதுவே றதுவிமல பதம்வே றில்லை. 671

ஆதலா லுயிரசைவால் வாதனைப்பா லழுத்தத்தா லறிவை விரி வாக்கா யென்னி, லோதுபிறப் பறுமறிவின் விரிவே யுள்ள முள்ளத்தா லிவ்வனந்த வுயிர்கள் வாழ்வாஞ், சேதனயோ கிக

ளெல்லாம்பிராணு யாமந் தியானமருந் தூகத்தின் றிறங்களாலே, பேதமன மொடுங்குவது பொருட்டா யன்றோ பிராணவா யுவை நிறுத்திப் பிடிக்கின் ருரே. 672

உள்ளத்தை யொடுங்கு விக்குஞ் சமத்து வத்துக் குயர்ந்தகா ரணமாகுஞ் சுகமுண் டாக்கு, நள்ளுற்ற வறிவையெழ வொட் டா தாக்கு நல்லுயிரின் றடையென்று நல்லோர் சொல்வர்,தெள் ளியபல் பொருளறிவை விளக்கு வித்துச் சேர்ந்தவா தனையாலே செனிப்ப தாகி, விள்ளக்கண் டனுபவிப்ப தானெஞ் சுக்கு மேலி ரண்டா முற்பத்தி விளம்பக் கேட்பாய். 673

திடமான பாவனையான் முன்பி னெண்ணந் தீர்ந்துபதார்த் தந்தனைச்சேர் வுறக்கைக் கொள்கை, மடமான வாதனையாங் கடுவே கத்தால் வல்லையிற்று னேபொன்றை மதித்து நாடி, யுட னேயவ் வுருவாய்வேற் றெண்ண மெல்லா மொழித்திடுமிவ் வாத னையின் வசத்தி லோடித், தொடர்பான புருடனுமாங் கதன்மெய் யாகித் தோன்றும்பொரு ணன்றென்றே துவண்டு மாலாம். 674

வாதனையின் வேகத்தின் விவசத் தாற்றன் வடிவினைவிட் டனைத்தினையு மயக்க மாகத், தீதமைபுந் தியிற்காணு மதவ சத் தாற் றியங்குதல்போ லிம்மனத்தைத் தெரியக் கூறி, லேதமுறு காட்சியெது தானல் லாத தியானெனும்பா வனையேது பொருளல் லாத, தோதுபொரு ளெனுங்கருத்தே ததுவே சித்த முறுபிறவி சரைமரண முண்டா மித்தால். 675

மெத்துறுவன் பரிசயத்தாற் பதார்த்தந் தன்னின் மேவு மொரு பாவனையான் மிகச்ச லிக்குஞ், சித்தமுள தாற்பிறப்பா திகளு முண்டாந் தீர்வதுகொள் வதுவடிவாந் திரளி லொன்று, மித்தனையும் பாவியா தனைத்து நீங்கி யெப்போது நின்ற தப்போ தெழாது சித்த, மொத்துளவா தனைபொழிவா ளினைவு நீரி னுய ர்ந்தவுப சாந்திதரு முளமாய் வுண்டாம். 676

சகப்பொருளி லோரிடத்தோர் நினைவு மின்றேற் றனியிதய சூனியவிண் டன்னி னுள்ள, நிகழ்ச்சியுறத் தோன்றுவதெப் படி யே வள்ளா னெஞ்சுக்கம் மட்டிருவ மெனநினைப்பே, னுகப்புறு மின் பத்தாலும் பொருண்மெய் யானு முள்ளுறுபல் பொருணி னைவே யுளத்தின் மேனி, மிகப்படர்காண் பவைதொழிற்கா கா

தென் றெண்ணும் விண்ணிணுநொய் யவர்க்கெங்ஙன் விளையு
முள்ளம். 677

அபாவமே பற்றலபா வம்பாவித்த லாய்ந்துண்மைப் .பொ
ருள்காண்டன் மனமாய் வென்பர், சுபாவமா மனைத்தையுமுள்
ளகற்றிச் சீதச் சுதைபோலு மிவ்விதய நடக்கு மென்னிற்,றவாத
தொழி லுற்றாறு மந்தச் சித்தந் தன்வடிவி லாததெனச் சாற்
றுங் கண்டாய், குவான்மநுசன் மந்தருவா தனைதுன் னுதோர்
குலாலவட்டம் போற்றிரிவர் குறைவின் முத்தர். 678

வறுத்தவிதை யொப்பாகி யின்ப மின்றி மநுசநந மற்றவா
தனைசேர்ந் துள்ளோ, ரொறுத்தவிடர் தீர்சீவன் முத்த ராகு
முண்மையுரு வடைந்தமன முடையோ ரன்னோர், நிறுத்துணர்
ஞா னக்கரையுற் றவருமன்னோர் நெஞ்சமிலா தவரன்னோர் நிமல
மாகப், பொறுத்தவுட னீங்கிலா காச ரூபம் பொருந்தினரன்
னோரென்று புகல்வ ரன்றே. 679

உயிரினைசை வொன்றுவா தனையொன் றுகவுபயமா மனத்
தின்விதை யிவற்றி னொன்று,பயில்வுறமாய்ந் தாலிரண்டு முடனே
மாயும் பகருறுவா தனைவசத்தாற் பிராண னோட்ட,முயிரசைவால்
வாதனையு முண்டா மத்தா லுள்ளமெனும் விதைக்குவிதை முளை
யொ மூங்காம், பயில்வுறுவா தனையுயிரி னசைவி ரண்டும் பலவி
தங்காண் பவைவித்தாய்ப் படரு மன்றே. 680

ஆதலினாற் காண்ப வற்றை விடுத லாலே யாருயிரி னசைவு
வா தனையி ரண்டும், பாதவம்வே ரற்றாற்போல் வேரற் றேகும்
படரறிவே காண்பவற்றின் பயில்வித் தாகுஞ், சேதனங்தோன்
றுதெனிற்காண் பனவு மில்லைச் செறிதயில மில்லாமற் றிலமுண்
டாமோ, பேதமுற வுட்புறங்காண் பனவொன் றில்லைப் பிறம்
போற்சங் கற்பிக்கும் பிறக்கும் போதம். 681

சங்கற்பத் தறிபொருளை யறிவு தன்பாற் றனேநோக் கிடுங்
கனவிற் றனது சாவு, மங்குத்தே சாந்தரமுந் தன்வசத்தா லடை
வதுபோ லறிபொருளை யறிவு காணும், பங்கிட்டு முன்னறிந்த
தறியா தேனும் பகரறிவுக் கெதுபத்தி பாய்ந்த தத்தைத், துங்
கத்தம் வருத்தத்தால் விசார முள்ளோர் துடைப்பதுவே வெம்
மாயை துடைத்த தாகும். 682

அதுதுடையா மாத்திரமே மாமோகத்தை யடைந்ததா மதுதுடைத்த மாத்திரந்தான், மூறுகதியென் றுரைப்பாறி கின்ற தன்றோ முடிவில்பிறப் பரந்தைதான் முளரிக் கண்ணே, கதுவுறு சாட்டியமில்லா வறிவி லாமை கடும்பவமில் லாதசுகங் காட்டு மன்றே, சதுரனே யசடனே யாநந் தத்தைத் தவிர்ந்தொன்று மறிவ தறச் சலனந் தீர்வாய். 683

அறிபொருளைப் பற்றாத வறிவு பெற்றோ லாயிரங்கா ரியஞ் செயினுஞ் சடமி லாத, தறிவின்மை யதுவொரு மறிபவற்றை யற் பமுமுள் ளாகாச மனுகா தென்னி, லறிஞனவ னசடமா மறிவி லாமை யவன்சிவன் முத்தனவ னாகுந் தன்பா, லறிதருவா சனையொழிவா லொன்று முன்னே தருங்குழவி யூமனறி வொத்து நிற்கும். 684

அன்று சடபா வனைநீங்கி யகண்ட வறிவின் மையைப்பெற லா, மொன்று மதனுன் பினையறி வொன்றிற் பற்று தொருவகை யாய், நின்ற பலவை தனைநீங்கி நிருவி கற்ப சமாதியினாற், றுன்று விண்ணிற் கருநிறம்போற் றெரியா நந்தந் துன்னுமால். 685

நன்மை யான வதிற்பற்றி னாடா வறிவா மியோகிக்குத்
தன்மை யந்தா னுதலினாற் றனியா னந்த மதனுடன்போந் [தோன்
றுன்று நிலைபோக் கொலிபரிசந் தொடர்ந்து மவற்றிற் பற்று
வன்மைச் சடனன் றாநந்த மிலனென் றறியான் மகாசுகத்தன்.

இந்த நோக்கந் தனைப்பற்றி யினைத் தொழிலோ டிசைந்தாலும்
வெந்த துயரின் கரையேறி விந்த குணத்தின் கடலாவா
யந்த வுயர்சன் மாத்திரமின் வறிவின் வித்தா மவ்வறிவு
முந்து சன்மாத் திரநின்று முளைக்குந் தேசி லொளிபோல. 687

இடமார் சத்துக் கிருவடிவா மேககாரா விருவடிவாந்
தடமா ரேக மொருவடிவாஞ் சாற்று மிவற்றைப் பிரித்திடக்கேள்
கடமே படமே யுள்ளதெனக் கருவக் காணும் பாவனைகள்
படருஞ் சத்தாம் ரூபத்தின் பிரிவாற் பலவா மதுவொன்றே. 688

சற்றும் விசேட மறவிட்டுச் சன்மாத் திரமாய்ப் பற்றின்றி
யொற்றை வடிவா மகாவடிவா மதுவே சத்தைக் குறும்பதமா
மற்றுங் கால சத்தைகலா சத்தை வத்துச் சத்தையென [வாய்.
வுற்ற சத்தை மூன்றுமொழிக் கொன்றுஞ் சன்மாத் திரத்துறு

கால சத்தை தன்சத்தை வேறாய்க் கருது தொழில்விடினோர்
சீல நன்றா கியசத்து ரூபி யெனினும் பொருள்சேரா
கோல விவிதப் பதநல்குங் கொள்கை பலபா வனையுண்டா
மூலங் கண்ட தநேகத்துக் கதுநன் றாகு முறையெங்கே. 690

சத்தா சாமா னியமொன்றுந் தனிப்பா வித்துப் பரிபூர்ணச்
சுத்தா நந்த னாய்த்திசைக ளெல்லாந் துன்னி நின்றிடுவாய்
சத்தா சாமா னியமட்டின் கோடி யேதங் கதுதானே
சுத்தா கார மிதன்வித்தா மதினின் றிதுதான் றோன்றிடுமே. 691

மொழிசத் தாசா மானியத்தின் முடிவி லெண்ண மெல்லாம் போ, மொழிவ தேதங் கதுதானல் லுணர்வின் பதமா முதலது வா, மழிவி லதற்கு வித்தில்லை யாங்கே யிறந்து விகாரமறத், தழிய வுணர்வு நிலைபெறுமப் பதஞ்சார்ந் தவர்மீண் டிடர்சாரார்.

அதுவே பேத வனைத்திற்கு மேது வதனுக் கேதுவிலை
யதுவே சார மனைத்திற்குஞ் சார மதனிற் சாரமிலை [ளா
யதுவாம் பெரிய தர்ப்பணத்தி லனைத்துப் பொருளின் பார்வைக
யதுவீ தென்ப தெலாந்தோன்று மருகின் மரங்கள் வாவியிற்போல். 693

அதுவே யமலஞ் சரையற்ற தஃதாத் துமநந் துவமதுவே
சதுரா வதுவந் தறிவுள்ளஞ் சாற்று முபசாந் தியையடையுந்
திதமா யறிந்தவ் வடிவாவாய் சென்ம மற்ற பதம்பெறுதி
முதல்வா வென்ன விராமனுமம் முனியை நோக்கி மொழிகின்றான்.

அன்ன விதைக ளின்ன தெனவனைத்து முரைத்தா யநந்த மெனச், சொன்ன பதமெம் முயற்சியினாற் றுன்ன லாகும் விரைவி லெனை, மன்னு முனிசொல் வான்றுன்ப விதையா மிவற்றின் வகைமேன்மே, லென்னென் றுரைத்தே னவற்றவற்றின் முயல்வால் விரைவிற் பதமெய்தும். 695

சத்தா சாமா னியக்கோடி பதத்தே சார்வுற் றொருகாலே, கொத்தா கியவா தனைபுருட வருத்தத் தாற்கோ ளறவிட்டுச், சொத்தா கியதத் துவமுணர்ந்து தொலையா வடிவா நிலையமிழ்ந்து, வுற்றாய் கணப்போ தென்னினுமக் கணத்தே யுறுமப் பதமடை வாய். 696

நிகழ்சத் தாசா மானியத்தி னுருவா நிலைய நேர்தியெனிற்
பகரு மனதிற் சற்றதிக வருத்தத் தாலப் பதம்பெறுதி
திகழுஞ் சித்தத் துவத்தினுறு தியானஞ் செய்யி னைதற்கதிக
மிகவும் வருத்த முறுதலினு லக்கப் பதத்தை மேவுதியால். 697

மூந்து வெறிதே யறிபொருளிற் றியானந் தோன்று மூகில்வண்ணு
விந்த வறிவின் சம்பவத்தா லென்று மெங்கு மெய்தாதாற்
றெருந்த மான வாதனையை வருந்தித் துடைத்தா யெனிலதனுல்
வெந்த வாதி வியாதியெலாம் விரைவிற் றுகளா யகன்றிடுமே.

முன்னஞ் சொன்ன வருத்தங்கண் முழுதுஞ் செயினும் வேரோடே, சொன்ன மலையைப் பிடுங்கிடினுந் தொடர்வா தனையை விடலரிதா, லுன்னு மனமெம் மட்டொழியா துறுவா தனையம் மட்டழியா, தன்ன படிவா தனையெம்மட் டழியா துளமம் மட்டொழியா. 699

உண்மை ஞான மெம்மட்டும் வாரா தம்மட் டுளமழியா
திண்மை யுளமெம் மட்டழியா திகழ்தத் துவமம் மட்டெய்தா
தண்மை யுறுவா தனையெம்மட் டழியா தம்மட் டுணர்வணுகா
வண்மை யுணர்வெம் மட்டணுகா வருவா தனையம் மட்டழியா.

செறிவா ஞான மனமாய்வு திரள்வா தனைமாய் விம்மூன்றும்
பிறிதாங் கார ணங்கடமைப் பெறுசா தித்தற் கரிதாகும்
நெறியா மதனுல் விவேகிகளா னிலைகூர் புருட வருத்தத்தாற்
பொறியார் போக மயல்தூரப் போக்கி யிவைதாம் பொருந்துவதாம்.

இனைய மூன்றுஞ் சமமாக வியற்று ரெம்மட் டம்மட்டு
மனைய பதமெய் தாவருட மாயி ரங்கள் சென்றாலும்
வினையில் காலஞ் சமமாக மிருநா ளியற்றின் மிகப்பலிக்கு
நினைவி லொன்றென் றுவியற்றி னிலைகூ டாகிட் பலமாகும். 702

ஒக்க வியற்றி விம்மூன்று மூளத்தின் கட்டெல் லாமொழிக்குஞ்
சிக்க லாது தாமரைநூல் வளையஞ் சிதையிற் சிதையாதோ
தொக்க பிறவித் திரள்கடொறுந் தொடர்ந்து வந்த வாதனைதான்
மிக்க கால யோகத்தின் பழக்கத் தல்லால் விடாதெங்கும். 703

பிறவா தனையை விடலொக்கும் பிராண வாயுத் தடையென்று
திறமா யறிஞ ரியம்புவராற் றிடமா யதுவுஞ் செயவேண்டு
முறுவா தனையை விடினுள்ள முள்ள மல்லா மையையடையு
நிறையா ருயிரைத் தடுக்கினுமா நினக்கே திச்சை யதுசெய்வாய்.

பிராணு யாம வன்பழக்கம் பேறுங் குருச்சொல் லுபாயங்கள்
விராவா சனம்போ சனமியோகம் விளம்பு மிவற்று லுயிரொடுங்கு
மிராமா சங்க விவகார மின்மை பவபா வனையின்மை
யொராகா ரந்தீ ரிடநோக்க லுரைத்த விவற்றல் வாதனைபோம்.

பகைவா தனைமாய்ந் திடிற்சித்தந் தோன்றாப் பவன மொடுங் கிவிடிற், றொகைதீர் துகளந் தரத்துண்டோ சொன்ன பிராண னசைவேது, மிகையா ருள்ளத் தசைவதுவே யதனாற் பிராண விசைத்தடைதான், றகைசேர் மதிமான் களுக்கியல்பாய்த் தப்பா தியற்றத் தக்கதுவே. 706

ஊக நன்மையா லல்லது வெலப்படா துள்ளம்
வேக மத்தமா வங்குசத் தலால்வெலப் படுமோ
வேக போதத்தை யறியதனல் லவருட னெய்தல்
சோக வாதனை விடலுயிர் தோன்றாறு தொடுக்கல். 707

உரைசெய்நால் வகையு நெஞ்சை யொடுக்குமூ கங்க ளாகும்
புரையிலா விவற்றுக் குள்ள மொடுங்குதல் புயன்ம ழைக்குத்
தரையுறு தூளி போலாஞ் சாற்றுமூ கங்க ளன்றி
விரைவினெஞ் சடர்ப்பார் தீபம் விட்டிரு ளிருளாற் றீர்ப்பார்.

வலியினால் விரைந்தூ கங்க ளன்றியே மனத்தை வெல்வா
ரொலிமதக் களிற்றைக் கஞ்ச வளையநூ லொன்றாற் சேர்ப்பார்
மெலியுமம் மூர்க்க ருள்ளம் வெருவினொந் தறநொய் தாகி
நலியுமென் றொன்று நம்பா நகராற்று வெருளு மான்போல். 709

தவமகந் தீர்த்தஞ் சேவை யருச்சனை தான மாதி
யவமயக் கத்தா னீணாள் விலங்குபோ லவத்தர் வாழ்வர்
பவமுறு மிவற்றை விட்டுப் பரிசுத்த பரம போதங்
கவரறப் பற்றி யெல்லாக் காதலு நீக்கி நிற்பாய். 710

நோக்கும் பொருளாற் றறநன்றாய் முதலாய் நுனிக்குங் கருத் தற்றுத், தாக்கு மறிவின் பதமான வொன்றை நாடிச் சான்றோ னே, வீக்கும் விசார மறவிதயத் துறைவாய் தொழிலை மேவு கினு, மாக்கஞ் செய்வா னலாதபத மடைதி சமமாஞ் சீர்விளங்க.

தனது மனத்தை யொருகாலே விசாரத் தாலே சமிப்பித்த
வனகன் பிறவிப் பயன்பெற்றோ னற்ப மெனினு மிதயத்தே
வினவு விசார மெழிலதுதான் விடாது பழகு மியோகத்தாற்
கனம தாகிப் பல்விதமாங் கப்பா யிரமாய்ப் பலவாகும். 712

தக்க விசார மெனும்பூத்த தருப்பூ வட்டத் தொருதாளாய்த்
துக்க விசாரக் குறைக்காற் றசைத்தற் கரிதாய்த் துவட்சியிலா
மிக்க நிலையா நிலைபோக்கு விழித்த துறங்க லுமோரார்மனத்திற்
புக்க விசார மில்லாரேற் பொன்றி றோரா மெனப்புகல்வர். 713

கெடாத சிற்கண் ணனீதான் கிளர்மே லவர்க ளுடனேதான்
விடாதிவ் வுலகே தியாமாரென் றுரைக்க மெல்ல விசாரிப்பாய்
தடாதுட் பொருடேர் வித்தைக்கு விசாரந் தானே தனிஞானங்
கடாவி யறியத் தக்கதனிற் காணும் பாலின் மதுரம்போல். 714

நன்று ஞானச் சமனோக்கா றுடம் பொருட்குச் சமந்தானே
யொன்றுத் தரித்தோன் றீனமுறு னுள்ள மஞ்சான் விவசமுறு
னன்றுஞ் சுத்த மபத்தியநஞ் சடுத்த தேனு மவனருந்தி
யின்று யிமைப்பி லிறுகொந்த திறந்த தனங்கண் டதுபோலாம்.

கரள காள மொப்பனபாற் கருப்பஞ் சாறு தனதாகில்
விரவு புந்தி பற்றுமன் மெய்ம்மை யுணர்ந்தோர் சமமாவார்
சிரமங் கரிந்தோர் சிபந்தந்தோர் செறுந சென்று றுறவென்று
றுரவு ஞானத் தொருநோக்கா லொக்கக் காண்ப ருட்குளிந்து.

மூட விந்தி யங்கடமை மோக விடய நிலைதன்னி
லோட வொட்டா தாரனெவ்வ மொழிந்த புந்தி யாற்றடுப்பர்
கேடி லுண்மை யறிந்தினைப்பற் றுணர்வாந் தன்னைக் கிட்டானை
நீடுந் தியங்கள் கெடவருந்து நிலைச்சிற் றனிமை மானினம்போல்.

சங்க மடியாப் பொருளுண்டாஞ் சங்க மடியா வாபத்தாஞ்
சங்க மடியா வாசைவருஞ் சங்க மடியாப் பிறப்புண்டாஞ்
சங்க மறுத்தல் வீடென்பர் சங்க மறுத்தல் பிறப்பறுத்தல்
சங்க மறுத்துப் பொருள்களினீ தனிச்சி வனின்முத் தியைப்பெறு
[வாய். 718

என்ற முனியை யனைத்தையு மென்னும் பனிக்குச் சாற்காலந்
தூன்று கடுங்காற் றெப்பாயிச் சங்க மேது சொல்லென்ற
வென்றி யிராமற் கவனுரைப்பான் மிருபல் பொருள்பா வாபாவத்
தொன்று மகிழ்வு பொறுமைகளை யுறுதன் மலின வாதனையே.

சாற்று மலின வாதனையே சங்க மாகுஞ் சிவனின்முத்தி
தோற்று முடற்கு முறுபிறவி யின்றி யின்ப துன்பங்கள்
மாற்றி விசுத்த வாதனைதான் மருவுஞ் சீவன் முத்தரலா
லூற்ற மடைந்த சினர்பிறவி யுறுவா தனையின் பெயர்சங்கம்.

பிரிய மருமை யிடராதி பீடியாம னிற்றியெனில்
விரியு மாசை பயங்கோப மிலனுய்ச் சங்கம் விட்டவனீ
கரிய துயரா லினையாது கலந்த சுகத்தான் மகிழாது
புரியு மாசை வசம்போகா திருக்கிற் சங்கம் போக்கினனீ. 721

சம்பத் தாபத் திரண்டினுநீ சமமாய் வந்த தனுசரிக்கி
னம்பற் சங்க மகன்றவனீ நாளுந் திரள்வத் துவிற்சமமாய்
விம்பத் திதயச் சத்துவனாய் மேவும் பகுதித் திறமியற்றி
யிம்பர்ச் சங்க மறுத்தின்ப மிசைவா யிராம வெனச்சொன்னான்.



நிருவாணப் பிரகரணம்.

புசுண்டன் கதை.



மீட்டு முரைப்பான் றிசைகால மறலான் மறைத லறவிளங்கி
யோட்ட மிறத்த லடிமுடிவற் றென்று யறிவு மாத்திரமா
நாட்டு பிரம முளவேறொன் றில்லை யென்றுள் ளேநாடிக்
காட்டு நானென் பதுவிட்டுக் காய மில்லாப் பெரியோனாய். 723

ஏக வுருவா யுபசாந்த மோன மெய்தி நின்னுணர்விற்
சோக மற்ற சுகியாவாய் தொடராஞ் ஞான நினைவெம்மட்
டாகும் பிரம பாவனைமே வாதம் மட்டும் புவிவலையிற்
போக மயலெம் மட்டம்மட் டுளமா தியின்கற் பனைபொருந்தும்.

சித்த மாயை மனஞ்சீவ னென்று மில்லைத் திகழ்பிரம [மனே
மொத்த வொன்றாய்ப் பெருங்கடல்போ லுகண்டு வளரு முத்த
பொத்த வுடலை நானெனலெம் மட்டுக் காணு மிப்பொருளில்
வத்து வெனும்பா வனையெம்மட் டம்மட் டுளமா தியின்மயக்கம்.

எனதீ தென்னு மாலெம்மட் டம்மட் டுளமா தியின்மயக்க
மனக வுள்ளே முகமாகி யதனுன் மும்மை யுலகென்னுங்
கனமி றரும்பை யறிவனலி லோமஞ் செய்யிற் கார்வண்ண
மனனை முதலா மயக்கங்க ளவனு ளென்றும் வாராதே. 726

படர்சித் துருவாய்ப் பிரிவிலனாய்ப் பாரா வாரம் பற்றிலனாய்த்
திடமுற் றனது கனவடிவை நினைசங் கற்பஞ் சேராதே
கடனு வுயிர்கொல் லுறுபகைவன் கருத்தில் வஞ்ச மிலாநட்பிற்
றொடர்பா னவனே யெனக்காணு மவனே கண்டோன் றாய்தாக.

பற்றத் தகுவாக் கியப்பொருளைப் பயிறன் னெஞ்சாற் பாவித்தோர்க், குற்றுப் புகல்சொற் றிரளுள்ளே யொடுங்கும் வெந்த நில நீர்போற், கற்றுப் பரமப் பொருளேக்கார் கண்ணு மறிவைக்

கண்டறியார், வற்றத் திரணம் போல்வாளாத் திரிவர் மனச்செய்
கையிலெவரும். 728

ஆய மூடர்க் களித்தபொரு ளாற்றில் வீழ்ந்த பொருளொக்குந்
தீய வவரோ டுரைத்தவுரை சேணை நோக்கி நாய்க்குரைத்தன்
மேய மடமா பத்தினிட மெய்ம்மை யுணரார்க் கெவ்வாபத்
தேய வனுகா திம்மாயை யெழுவ தறிவி லோர்க்கருளால். 729

மெல்லி தாகிக் குளப்படியாம் விவேக புந்திக் காமுலக
மல்ல லாகிக் கரைகாணு வாழ மாகு மறிவில்லோர்க்
கெல்லை யிலதா யறிபொருளா லெண்ணப் படாதாய்ச் சாந்தமுமாய்ச்
சொல்லு மெல்லா மாய்நினைவு தோன்றாச் சற்சிற் சுகமுண்டாம்.

கொத்தா கியவா தனைமுற்றுங் குறிக்கொண் டறிந்து கைவிட்டுச்
சத்தா சாமா னியவடிவ மாறுற் றனிவீ டதுவென்ப [வித்
ரொத்தா ரியரோ டொளியுநா லுணர்ந்து முணர்வொன் றையும்பா
தத்தாற் சத்தா சாமானியந் தானு குமாகு மறுவீடே. 731

துயிலை யுள்ளே யுறுமந்த மாகும் விதையூ டுறுமுளைபோற்
பயில்வா தனைகள் சுழுத்தியதாம் படருஞ் சன்மம் பலகொடுக்குஞ்
செயிர்செய் மனன முள்ளிறந்து செறிவா தனைக டுயில்சுழுத்தி
குயிலுஞ் சடமாந் திறத்தாலே கொடிய பிறவித் துயரளிக்கும்.

அவிஞ்ஞை தன்னின் முதற்கூற்று லயற்கூற் றிரண்டு மோரு
ணர்வாற், றவிர்ந்து போமட் டுஞ்சுட்டுச் சலன மின்றி யொன்று
வாய், நிவந்த பிரம மிதுவல்ல வென்னு மறுதி நீடவிஞ்ஞை, யுவ
ந்த பிரம மிதுவென்னு மறுதி யவிஞ்ஞை யொழிந்ததுவே. 733

நக்கன் முதலாந் தேவர்க்கு நார தாதி யிருடிகட்கு
மிக்க நிமல விதயத்தின் மேவு மறுதி யுனக்குறுகத்
தக்க குமரா வெனுமுனியைச் சங்க ராதி யென்றனிவர்
துக்க மேவா நிச்சயமென் சொல்வா யென்ன முனிசொல்வான்.

கிஞ்சி லாகி விரிந்துசகத் திரளாய்க் கிளைத்த வீவையெல்லாம்
விஞ்சு பிரம மேயறிவு பிரம மேதி னிப்பிரமம்
பஞ்ச பூதம் பிரமநாம் பிரம நமது பகைபிரமந்
தஞ்ச நட்புக் கிளைபிரமஞ் சங்க ராதி நிச்சயமே. 735

அறிஞர்க் குலகா நந்தமய மறியா தவருக் கிடர்மயமாஞ்
செறிந்த விருளா மந்தகர்க்குச் செங்க ணுள்ளோர்க்கொளியாரும்

பிறிவில் பிரம மனைத்துமென நாடிற் பிரம மவனேயா
நறிய வமுதுண் டவனமுத மயத்தை நண்ணு திரானன்றே. 736

எறிபே ரொளிமாத் திரமமல மெவர்க்கு முணர்வெங் கணுமுளது
பிறியா வுபசாந் தச்சித்துப் பிரம மென்ப தனுபவமா
நெறிபோ மறியா வொருவனைநெஞ் சன்றி நோக்கி லெத்தோற்றஞ்
செறிவா மஃதெங் கணுமுளதாஞ் சித்தாம் பிரம மாகின்றேம்.

சகல சங்கற் பப்பலனுய்ச் சகல வொளிக்கு மொளியாகிச்
சகல மான கொள்கையுந்தீர் தனிச்சிற் பரத்தை யேத்துகிற்பாஞ்
சகல சங்கற் பமுமற்றுச் சகல சந்தோ டமுமற்றுச்
சகல வாரம் பமுமற்ற தனிற்சிற் பரத்தை யேத்துகிற்பாம். 738

என்னு மறுதி யுடையோரா யெல்லா நினைவு களுமின்றி
முன்னு முண்மை யாராயனார் முழுமெய் சாந்தஞ் சமமென்னுந்
துன்னு பதத்தே சுகித்திருப்பர் சமமா நிராசை தொடர்மனத்
மன்னு புந்தி நிறைநீரர் வாழ்விற் சாவின் மகிழ்ந்தயரார். [தோர்

செறிந்த மேலோ ரேவியது செய்வ தறியார்க் குறுபயனை
தறிந்து மெனைநீ வினவியதிங் கறைவன் கேட்டி வாதனைநாற்
பிறிந்தி டாத குற்றங்கண் முத்த மென்னும் பெருமாலை
யெறிந்து பூணு திருக்கின்ற விதயத் தாரை யமனணுகான்.

அறுதி மரத்துக் கீரிவா ளாக்கை வல்லிக் கெரிபுழுவா
மருகு கின்ற மனத்துன்ப மருவா தவரை யமனணுகா
னிறுதி யுடலா மரத்தினைச்சூழ்ந் திரங்கு மனத்திற் றலைவைத்து
முறுகு மாசைப் பாம்படரா முதன்மை யோரை யமனணுகான்.

இராக வெகுளி விடம்பெருக விதயப் புற்றி லோபமெனு
மராவந் தணுகி விழுங்காத வறிஞர் தம்மை யமனணுகான்.
விராவி வேக நீர்சுவறி மெய்யாங் கடலில் வடவனலாய்ப்
பராமல் வெகுளி வேரறுத்த பண்பி னோரை யமனணுகான். 742

கடின மான வெந்திரத்திற் கலந்த திலம்போன் றுவதென்னக்
கொடிய மதனாற் றேய்தலுறுக் கொள்கை யோரை யமனணுகான்
முடிவி லாத நின்மலமா முத்திப் பதத்தே சித்தத்தி
னெடிய துயர்ந்தீர்ந் திளைப்பாறு நிலைபெற் றோரை யமனணுகான்.

ஓது மிவையாங் குற்றங்க ளேழனும் பிறவிக் காரணங்கள்
பேத மின்றி யொன்றான பெரிய மனத்தைத் துயர்செய்யா
வாதி வியாதி களிற்றோன்றி யகலா மயக்காற் சலிக்குமிடர்
தீதில் பேத மறவொன்றாஞ் சித்தத் தருகுஞ் செல்லாதே. 744

இதைய விண்ணை யிருளாக்கி யிச்சை கோபத் தெழுமெண்ணஞ்
சிதைவில் பேத மறவொன்றாஞ் சித்தத் தருகுஞ் செல்லாதாற்
றுதைநீப் பொருள்க ளச்சொற்க ளோரம் பங்க ளக்குணங்க
ளுதைய மான சமமேவி யொன்று மனதை யுட்புகுதா. 745

மயக்க முபாதி மலமின்றி வாய்மை யாகி மேவிதமாய்த், துயக்
குந் தொழிதீர் பொருள்வசத்தே தொடர மனதைச் செயவேண்
டும், பயக்கு நெடுஞ்சூ னியகல்கி யகத்த மாகும் பன்மைப்பே,
யியக்கங் காணாப் பொருள்வசத்தே யெய்த மனதைச் செய
வேண்டும். 746

தனையுள் ளுணர்வா னுடிதலே சகல விடர்க்கும் போக்கிடமா
முனையொப் பார்கட் கெளிதென்னை யொப்பார்க் கரிதா முயர்மு
வினைகட் கெல்லா மப்பாலா மேலாங் கோடி தனைமேவு [னிவா
மினைய பதஞ்சா மாணியத்தே யெழும்புந் தியசெங்கனம்பெறுவார்.

ஞான நோக்குக் கொப்பானவாய் ஞான நோக்கி னன்புளதா
மான குணங்கட்கிடையொன்றை யடைந்தே துன்ப மெலாமறுத்து
மான நல்வாழ் வினைவளர்த்து மாயா திருக்குங் காரணமா
யின மற்ற வுயிர்நோக்க மென்று மங் குணமுற் றனனென்றான். 748

ஓது மனவி னறிந்திருந்து முயிர்நோக் கெனநீ யுரைசெய்த
தேது பகரென் றடியம்புகண்ட னிசைக்கு நீயிங் கெதிர்காணும்
பூத வுடலா மனைந்திவை பொருந்து மிதய புண்டரிகச்
சீத மலரி னுள்ளிரண்டு செறியும் பிராண னபானனென. 749

தோற்ற முடைத்தாய் மேன்மையதாய்த் தான்றும் பவன
மிவ்விரண்டு, மாற்ற லுடைய தறிவிப்பின் செல்வ னயர்வன்
றியிலென்று, மேற்ற விதயாம் பாத்திரவி மதியா வனவின்
னிடையுமுள, வூற்ற முடனே கனேபரமா மெந்திரங்கொண் டிலா
வுவனை. 750

நன்று மேன்மே மேவிடுவ கனவு கனவு சுழுத்திகளி
லொன்றுஞ் சாமாபத்த முன் னுரைத்த பிராண பானங்கள்

பின்ரு திவற்றின் கதியென்றும் பின்செல் வேற்குச் சுழுத்தியிலே
நின்ரு னுடைய வாதனைபோ னிகழ்வா தனைக ணீங்கினவால்.

அரவிந்த வளையநா லொன்றைக் கூரு ராயிரமிட் டதிலொ
ருகூ ரெப்பென் ருனுந், தரமொவ்வா தறச்சிறிதா யுண்டாய் நின்
றுந் தாக்கியறி வரிதவற்றின் கதியின் றன்மை, விரவிந்தப் பிரா
ணன்விடா தசைவாஞ் சத்தி மேவியொழி யாதுலவு மேனி யுள்
ளே, திரமின்றிப் புறத்தினுமுள் ளினுமெப் போதுந் திரும்பாது
மேற்போதல் செய்கை யாகும். 752

மற்றையபா னனுமசைவாஞ் சத்தி மேவி மாறும லுலவுமக
வாகி யத்தி, லுற்றவுட லிற்கீழே யோடா நிற்கு முழுநனவு கனவி
லுமிவ் வுயர்பி ராணன், முற்றுறமீள் வதுநன்ரு மறிந்தோர்க் கின்ப
முழுதளிக்கு மிதனியல்பை மொழியக் கேளாய், பெற்றபுறத்
தீரா று விரன்மட் டோடும் பிராணன்மீட் டடைவுறல்பூ ரகமாய்ப்
பேசும். 753

புறநின்று சாலவுமுள் ளடங்க வன்பு பொருந்தாம லபான
னுடற் புகுத லெய்தும், திறனொன்று மதனையும்பூ ரகமாய்ச் செப்
புந் தீரவபா னனுமொளித் துப் பிராணன் ருனு, மறவுமித யத்தசை
வற் றிருக்கு மெம்மட் டம்மட்டுங் கும்பகமா மவத்தை யாகு, மிற
வறுநல் யோகியரீ தனுபவிப்ப ரெக்கலையுங் கற்றுணர்ந்த வேதத்
தோனே. 754

மருவிதய விண்ணினுந்தன் னியயத்தூடே வருத்தமறப்
பிராணன்கள் புறநோக் கெய்தல், புரிவுறவுண் மேவுமிரே சகங்
தா னுகும் புறநோக்க முறுவாயு பொருந்து மூக்கி, லுருவியத
னுனியளவாங் கதியை முன்ன முறப்புறப்பூ ரகமாமென் றுரைப்
பர் முன்னோர், விரிவுறநா சியினுனிநின் றகன்றீ ரா று விரலளவாங்
கதிபுறப்பூ ரகமாம் வேறே. 755

புறத்திலே பிராணனொளித் திடவபானன் புறப்படா திருக்
கப்பூ ரணவவத்தை, நிறத்தபுறக் கும்பகமா மபானன்ருேற்ற நிக
ழ்வடிவாம் வாயுவினுண் ணேக்கந்தானே, திறந்தபுற ரேசகமா
மிதுவேமுத்தி சேர்விக்கு நித்தனுஞ்சிந் திக்கலாகு, மறித்தலறப்
புறனுட்சேர் கும்பகாதி வருகதிகள் விடா துணர்ந்தோர் மறித்தும்
வாரார். 756

நாடுபிரா ணாபான னியற்கை யாகநா னுரைத்த விக்கதிக ளு
னி ரண்டும், வீடுதரு வனவிரவும் பகலு மேவ வேண்டுவன விரை
வறவிவ் வியாபா ரத்திற், கூடினராய்ப் புறம்போகா துளத்தைக்
காப்போர் குறைவில்சில நாளினிலே கூடா நிற்பர், தேடுமிது பரிச
யிப்போர் விடய வேட்கை சோர்வே தியர்நாய்த்தோற் றீண்டு
வாரோ·

போகினுநிற் கினுங்கனவு நனவுற் றாலும் பொருந்துநோக்
கினுவானோர் பூணார் பந்தஞ், சோகமுறார் பேறெல்லாம் பெற்ற
தாகுஞ் சொன்னவித யக்கமல நின்று தோன்று, மேகுபிரா ணன்
புறத்தே விரலீ ராறி னெல்லையிலே யிறந்திடுமா லபானன் றானு,
மாகுபுறத் தேவிரலோர் பன்னி ரண்டி னளவினுதித் துளக்கமலத்
தடங்கி மாயும். 758

விராவிவரும் புறநின் றபான னென்னும் வியன்மதிய மேனி
யெல்லாங் குளிர விக்கும், பிராணனெனுஞ் சூரியன்றன் கனலா
லுள்ளே பேசியவிவ் வுடற்பாகம் பிறக்கப் பண்ணு, மிராதுழலு
மபானனெனு மதியி னுட்சே ரியற்கலைகள் பிராணனெனு மிரவி
யாலே, யுராவிவிழுங் கப்பட்ட தெங்கே யந்த வுயர்பதமுற் றாற்
பின்னை யொருநோ யுண்டோ. 759

அவ்வகையே பிராணனெனு மிரவி யுட்சே ரணிகலைக ளபான
னெனு மிந்து வாலே, வவ்விவிழுங் கப்பட்ட தெங்கே யந்த வன்
பதமுற் றாற்பின்னை வருமோ சன்மங், கவ்வுபிரா ணனைவிழுங்க
வபான னேறக் கலந்தவபா னனைவிழுங்கப் பிராண னேறக,
விவ்விரண்டி னடுவாக நிற்போ ரென்று மெழுபிறவி யிடர்பின்னை
யெய்தா ரன்றே. 760

ஆடுகின்ற பிராணனையத் தருகு மேவி யபானனையத் தருகுந்
றுப் பிராணா பானை, னாடுமயில் சிற்பரத்தை யேத்து கின்ற னுந்
றவபா னன்றேற்ற மொழிந்து நிற்க, நீடுபிரா ணனுமிறக்க மூக்கி
னுச்சி நேர்விசும்பிற் சிற்பரத்தை நீக்க மில்லை, னுமேல மொன்று
மறக் கலைகள் சூழ நாகர்தொழும் பதம்பெற்றே னல்ல நோக்கால்.

எனதுமனம் பிராணசமா தியிற்றுஞ் சொன்ன விவ்வொழுங்கா
னின்மலதத் துவத்தே யென்றுந், தனியிடர்தீர் நெறியினுவா
மிந்த நோக்கந் தனைப்பற்றிச் சென்றதுபோல் வருவ தெண்ணே,
னினிநிகழ்கா லத்தியல்பி னன்றுமின்றே துணிதுலைபற் றேன்

சிறிதாகிச் சமாதிதவிர் புறநோக்கி யியானிருப்பத் திசைக
ளெல்லாம், வறிதாகிக் காட்டசமா தியின்மவுன மிருப்பனபோல்
வழக்க மின்றி, யெறிவாளால் வெட்டுதற்கா மிருண்மூடி முழை
வனங்க ளெங்குந் துன்றி, வெறிதான வப்போதில் விரைவி
லெழுந் தோரொளிமுன் விளங்கக் கண்டேன். 775

வெண்ணிறத்த முகில்கோடி வெண்டிங்கள் கோடியென விள
ங்குந் தேசைக், கண்ணகத்தி னோக்கலுமே நந்திமுதல் வரவுமை
யாள் கைமேற் கைவைத், தெண்ணறச்சங் கரன்வரனு மாணாக்க
ருடன்விரைவி லெழுந்து பூசை, பண்ணுதற்கா னவைகொடு
போய்ப் பன்மலர்தூய்த் தூரத்திற் பணிந்து போற்றி. 776

திங்களினு மிகக்குளிர்ந்து செவ்விதாய் நோயெல்லாந் தீர்க்
கப் பட்ட, வங்கனூற வருணோக்கஞ் செய்தானை வணக்கத்தா
லருக்கி யத்தாற், றுங்கவுப சாரத்தான் மந்தார நன்மலரின் சோ
னை தன்னாற், சங்கரனை யேத்தினே னுமையையுமப் படியேத்தித்
தாளில் வீழ்ந்தேன். 777

ஈசனியற் கணங்களையு முமைசேடித் திரள்களையு மின்ப
மாக, நேசமுட னேத்தியபின் னிறைமதியைக் குளிர்விக்கு நீர்மை
வாக்காற், றேசுடையோ னெனைநோக்கி யுரைசெய்தான் சாந்தியி
னாற் றீர வாறி, யாசறநல் லனதருநின் னறிவுகடற் பதத்தினிலை
யான வன்றோ. 778

தடையின்றித் தவமுனக்கு நடந்ததோ சார்வனதாஞ் சார்ந்
த வன்றோ, விடயங்க ளிறந்தனவோ வென்றுலகின் காரணமாம்
விமலன் கூற, விடையவனை யான்வணங்கி வேண்டுகோ ளானுரைத்
தேன் விண்ணோர் கோவே, யடைவுறநின் னருள்பெற்றார்க் கடை
வரிதொன் றிலைப்பயங்க ளொருகும் வாரா. 779

சகத்தினுனைத் தாழ்ந்தோரைத் தாழாதா ரில்லையுனைச்
சரணந் தாழ்ந்த, மகத்துவர்வாழ்ந் தனரெங்கே யதுதேச மது
நாடு மலைய தாகுந், தொகுத்துளமுன் னையிலறத்துக் குறுபலமா
மிக்காலந் தொடர றத்துக், குருத்தமழை யாம்பின்சே ரறத்துக்கு
வித்தாகு முன்னை நாடல். 780

ஞானவமு தத்துக்கோர் நிறைகுடமாந் தீரதையா நன்னி லாவுக்
கூனமிலா மதியாமெய் வீட்டுக்கு வழியாகு முன்னை நாட

லானவுனை நாடலெனு மணிதிகழ்சிந் தாமணியை யடைவுற் றே
யான், றீனமுறு மனைத்தாபத் தின்றலையை மிதிக்கின்றேன் றேவர்
[தேவே. 781

என்றுதுதித் தெழிற்கருணை முகமலர்ந்த முதன்மூலத் திறைவன் றன்னை, மென்றுணைத்தாண் மீட்டிறைஞ்சிக் கேட்ட தொரு பொருளுரைக்க விளங்கக் கேளாய், குன்றிலுறை யருட் கடலே நின்னருளா லறிவெல்லாங் குறைவற் றேனுக், கொன் றுளது சந்தேக மதனைமதி யருள்வாயென் றுரைக்க லுற்றேன்.

தீவினையெல்லாமறுத்து மங்கலமெல் லாமுதவுந் தேவ பூசை, யாவதெனக் கேட்டனுமே யருள்செய்வான் றெய்வந்தா னியா தென் றேருதிற், கேவலமே யரியல்ல வானல்ல பூதவுடற் கிடைத்த தல்ல, வோவுமன மன்றடியு முடிவுமிலாச் செயப்படா வுணர்வே தெய்வம். 783

தேகமுதற் பிரிவுகளாய்ச் சிறியனவாம் பொருள்களிலத் தெய்வமுண்டோ, பாகமறப் பணிதியற வடிமுடிவற் றுளவுணர் வே பரம போத, மாகலினு லதுதெய்வ மருச்சித்தற் குரித்தாகு மறிவி லாத, மூகருக்கு வடிவமுத லருச்சனையே யியல்பென்று மொழியு மன்றே. 784

செல்வழியோ சனைநடக்க மாட்டாதார் குரோசவழி செல் லு மாபோற், பல்வடிவி லருச்சிப்ப ரறிவில்லா ரறிவுநிலை யடை யா ரென்று, சொல்வர்பரா பரமற்ற சிற்ககன மெவ்விடத்துந் துன்றி நிற்கு, மல்வழியாங் கற்பங்க ளனைத்தினுமா யாததனு லதுவே தெய்வம். 785

அறிவுசம பாவனைசந் தோடமெனு மலர்களா லந்தத் தே வாம், பிறிவரிய வாத்துமதத் துவத்தையருச் சிப்பதே பெரிய பூசை, குறிவடிவிற் பூசனைபூ சனையல்ல வகண்டமெனக் கூறுந் தெய்வ, நெறிகொள்புறத் தொழில்களா னொராதிங் கதனாலே நிறையு மின்பம். 786

தெள்ளறிவெல் லாக்கலைக்கு மெட்டாதெல் லாக்கருத்துஞ் சேர்ந்துண் ணிற்கு, முள்ளதில திரண்டினடு சத்தாசா மானி யமே யுருவாய் நிற்குந், தள்ளரிய பெருஞ்சத்தா மாத்திரமெய் யாந்தெய்வந் தானு மீதே, யெள்ளரிய விதுவிகற்ப வடிவாகி லு ணர்வுருவை யிழந்து வேறும். 787

அங்கத்தே சேர்ந்தனமென் றெண்ணலான் மாமோக வளற்றி லாழும், பொங்குற்ற துன்பத்தாற் றுன்பமுறக் கீழ்க்கீழே போகுந் துன்பஞ், சங்கற்ப மாத்திரத்திற் றுன்பமுறுஞ் சங்கற்பந் தவிர்ந்த மட்டி, லிங்குற்ற துன்பமறுஞ் சங்கற்ப மேதுன்ப மிலதே லின்பம். 788

தன்னுடைய விவேகமெனும் பெருங்காற்றாற் சங்கற்ப முகிலைத் தள்ளி, மன்னுசரற் காலத்தின் வானம்போ னின்மலத்தை மருவா நிற்கு, முன்னுடைய சங்கற்ப மெனுமழுக்கை யுன்னாலே யுனக்கு மாற்றித், துன்னிமிகு தெளிவுற்றுப் பரமாநந் தக்கடலிற் றுளைந்து வாழ்வாய். 789

ஆற்றுமதத் துவஞ்சகல சத்திமா னுமவற்றி னடனத் தாலே, தோற்றுகின்ற பந்தம்வீ டெல்லாஞ்செய் திடுஞ்சமமாய்த் தூய சித்தாய், வேற்றுருவெல் லாமியற்று மிதனுக்கிச் சாசத்தை வியோம சத்தை, சாற்றுகின்ற காலத்தின் சத்தைநிய திசத்தை தடமா சத்தை. 790

திடஞான சத்திதொழிற் சத்திதொழிற் செய்கிற்போன் செய்யாதோனு, மிடமான சத்தியிவை முதற்பரம சத்திகளுக் கெல்லை யில்லை, மடமான மிளிர்சத்தி சநநமர ணங்கடரும் வையமெங்குந், தடமான மீட்சியெனுஞ் சத்தியாற் பிறப்பிறப்புத் தவிரு மன்றே. 791

அனைத்தான பூசையினு மங்கத்தைச் சுடுதலே யமல மாகும்
வினைத்தேக வுடலைநா னென்னுமது விடுதலே மிகுந்த பூசை
யினைத்தான தியானத்தாற் பூசிக்கச் சித்துருவா யிலக்கம் பானு
தினைத்தாகு மெனவொளிகட் கொளியாமுட் சிற்சுடர்நா னென்று
[சேர்க. 792

கரையறு பரமா காசங் கதித்தறப் பெருத்த கண்டம்
புரையறு மதன்கீழ் மெல்லை யற்றவிண் பொற்றுட் கஞ்ச
நிரைபயின் முடிவி றிக்கு நீண்டற வுயர்ந்த தோள்க
ளுரையுயர் நாநா லோக மொளிகொளா யுதங்க ளாமே. 793

எண்ணில் கோடி பிரமாண்ட மிதயத் தொருபா லிளைப்பாறும்
வண்ண வொளிசேர் பரவிசும்பின் பாரா பாரா வடிவிதுவாம்[மிவ்
கண்ணன் பிரமன் சிவன்மகவான் முதல்வா னவரார் கவின் பெறு
வண்ணல் வடிவி லுரோமநிரை யாகு மிந்த வனைத்துயிரும். 794

விவிதா ரம்பம் புரிவனவா யுலகாம் பொறியின் விளைக்கயிருய்த்
தவிரா விச்சை முதற்பலவாஞ் சத்தி யவன்மே னியிற்றங்கு
மவிரா நின்ற விவன்பரம தேவென் றறிந்தோ ரருச்சிப்போர்
செவிதாஞ் சின்மாத் திரமாறே னனுப வித்த திகழான்மா. 795

எங்கு முறைவோ னெவரானு மெய்தப் படுவோ னெல்லையறத்
தங்கு பதங்கட் காதார மாவோன் சுத்தா மாத்திரமே
யங்க மாவோன் சகத்திரளை யடைவி னடத்துங் காலத்தைத்
துங்க வாயில் காப்பவனு யுடையோன் சுத்த சுயஞ்சோதி. 796

நயன மூக்குச் செவிதொக்கு நாக்கு மனமாஞ் சத்திகளா
லியல்பி லெங்கும் விடயங்க ளருந்தி யெண்ணங் களுக்கெல்லா
மயலை தாகு மெவ்விடத்தும் பரம சிவமென் றகத்தெண்ணி
யுயர்தெய் வத்தை விதிநெறியே யோங்கு பூசை செயவேண்டும்.

தன்ன தறிவே வடிவாகித் தயங்கு தேவின் பூசைக்கு
மன்னு முபசா ரங்களெலா மரபன் றுகு மெப்போது
மின்ன லன்றிக் குளிர்ந்தழிவற் றேக மாகி யமுதாகித்
துன்னு தன்போ தத்தாலே தூய பூசை செயல்வேண்டும். 798

ஒழியா துள்ளே பரிசுத்த வுணர்வா மறிவே ததுதானே
யிழியா தான தியானமது தானே யியல்பா மருச்சனையாம்
விழிதோல் செவிநா மூக்கைந்தால் விடயங் கொள்ளிற் றுயில்செய்
யின், மொழிகூ றிடிலே கிடினுயிர்க்கின் முற்று முணர்வா யிடல்
வேண்டும். 799

திகழாத் துமதத் துவத்தினுயர் தியான முபகா ரங்களொடு
நிகழ்பூ சனையா மிவ்வழியா லன்றிப் பிறிதோர் நெறிகளினாற்
புகழ்மெய் யுணர்வு கிடையாது புராண தியான பூசையினை
யிகழ்மூ டர்கள்செய் யினும்பதின்மூன் றிமைப்பிற் பசுவீந் துள
பேறும். 800

இயலார் கடவு ளாந்தன்னை யிமைநா றளவு பூசிக்கி
லயமே தத்தி லாயிரமாம் பேறு மரைநா ழிகைபூசை
முயல்வா ரிலக்க மயமேதப் பயனைப் பெறுவர் முறைமையினாற்
பயனார் பூசை யொருகடிகை பண்ணி விராச சூயபலம். 801

பாசு மின்றி யுள்ளுணர்வைப் பதினைங் கடிகை பூசிக்கி
விராச சூய விலக்கங்க ளிவ்வா றெருநா ளருச்சிக்கி

லாகி லாத பரவொளியி லமர லாகு மிதுதானே
யேசில் பரம யோகமிது தானே பரம கிரியையுமே. 802

புறனாம் பூசை யிதுவாகும் போதக் கடவு ளுட்பூசை
திறனாய்க் கேட்பா யெப்போதுந் தேகத் துறையு மித்தேவை [வோ
மறவா திந்தப் பரசிவத்தை வருவோ னிருப்போன் றுயின்றெழு
ளிறனார் போக விடயங்கள் புசிப்போன் விடுவோ னெனநினைந்து.

வெருவா யடைந்த பொருள்களிலே மேவித் தனது மெய்யுணர்
தகுநீர் முழுக்கான் மலமற்றுத் தப்பில் போத பூசனையான் [வாங்
மிகுநற் போத விலிங்கத்தை மேவு பூசை செயல்வேண்டும்
பகுதி யில்லா விப்போதம் பயிலா திருக்கு மிடமுண்டோ. 804

பெருகு மனத்தின் மனனத்திற் பிராணா பானன் றன்னடுவி
லிருத யங்கந் தாந்தாலு விடையிற் புருவத் திடையின்மூக்
குருவி னுனியின் முப்பத்தா றுற்ற பதத்தி னுள்ளத்தின்
றிருகல் கடந்த மற்றகப்பாற் செறியும் போத தேவதையே. 805

என்ன துடலிற் சிற்கதிரா யிலங்கு தெய்வ நானென்னை
யுன்னு மனங்கண் வாக்குக்க ளுடைய சத்தித் திரளெல்லாம்
பின்ன மின்றி நாயகனைப் பிரியா மகளிர் போலுளுந்
துன்னு மென்றே யநவரதந் தொடர்பா வனைசெய் திடல்வேண்டும்.

சகத்தை நிவேதித் திடுஞ்சித்த மெனது வாயிற் றனிக்காப்போ
னகத்து வாயிற் பயிலேவ லாளா மெனக்கு நற்சிந்தை
யுவப்பி னுடற்பூண் ஞானங்க ளுற்ற கரண மொருபத்தா
நிகழ்ச்சி யுறுவா யில்களாகு மென்னு மெண்ண நீங்காமல். 807

அவ்வா றான விவனவனா னந்த மாகாப் பிரிவற்றுத்
தவ்வா தெல்லாம் பரித்தொன்றாய்ச் சாலநிறைந்தெல் லாநிறைவித்
தெவ்வா யினுமோர் சமனாகி யியலா சார மியலொளிகொண்
டொவ்வா தாய்ச்சித் தாய்நின்றே யொழியே னென்றே பூசிக்க.

அமல மாகப் பூசையினா லதிகத் தெளிவை யெய்திடலாஞ்
சமம தாயெல் லாமான தடம்புந் தியினா லுடலறிவு
சமமென் றப்பா லாஞ்சித்தைப் பெற்ற தொன்றாற் றொடர்பாக
விமல மானோர் பூசிக்க வேண்டு மென்பர் விடாதென்றும். 809

எட்டா தொன்றை வேண்டுமென விதற்கா யிரங்கா திச்சைவழி
முட்டா வறிவாற் பூசித்தன் முறைமை யன்ன பானத்தாற்

றட்டா துயர்ந்த செல்வத்தாற் சயனு சனம்வா கனங்களினுற்
கிட்டா நின்ற சுகமனைத்தா லறிந்து கிளர்பூ சனைசெய்க. 810

ஆதி வியாதி பயின்மோக வாரம் பத்தா லனைத்திடரா
னீதி பயிலு மிராச்சி யத்தா னிறையு மிடியால் விசித்திரமாந்
தீதி ரொழில்க ளாமலராற் சித்தை யறிந்து பூசிக்கக்
கோதில் போக நவைபோகங் கொளனீக் குதலா லருச்சிக்க. 811

நிருவிகார பாவனையா னேர்ந்த பொருளை யினித ருந்தி
யொருவி யிறந்த பொருளினையே யுருமை யுணர்வின் பூசனையாம்
வெருவு துன்ப மின்பமுதன் மேவு மனைத்து முணர்வுருவாய்க்
கருதல் வேண்டுமழிவறுசிற் கடவுள் பூசை யொழியாதோர். 812

என்று மெல்லா வடிவானு மெல்லா விடங்க டம்மானுந்
துன்று மெல்லாம் பிரமமெனத் துணிந்து பூசை செயல்வேண்டு
மன்றெ னுமல் விரும்பாம லடைந்த போக மெலாமறினர்க்[போல்.
கொன்று சுபாவத் தாற்புசித்தற் குரித்தாங் கடற்கு நதித்திரள்

நீச முயர்வா நோக்கங்க ணோர்ந்தா விறையும் பற்றுமற்
றேச காலத் தொழிற்குரித்தாய்ச் சேரா நின்ற சுபாசுபத்தை
யாசு விகார மறக்கைக்கொண் டதனுற் பூசை செயல்வேண்டும்
பேசு பரமார்ச் சனைவிதியிற் பெரிது மிவைநற் றிரவியமே. 814

இனைய திரவி யங்களெலா மினிதாஞ் சாந்தி யொன்றுனு
நினைபா வனையாற் புளிப்பு றைப்பு நிறைந்த கைப்புத் துவர்ப்பனைத்
றினையு மின்றிச் சித்திரமாந் தித்திப் பாலே செறிந்தனவா [தின்
யனைய சாந்தி மதுரத்தா லறவே நிறைந்த தருந்தவனே. 815

தக்க சாந்தி பயிலாத சத்தி யாலே பாவிக்கிற் [தியி
றொக்க பொருளாய்க் காண்பதெலாஞ் சுவையா யினைப்பிற் றாய்ம
னுக்க விரதம் போலாகு முயர்ந்த சமமாஞ் சாந்தியினுன்
மிக்க வறிவா கியுங்கற்போல் விளங்கு முணர்வாற் பாவிக்க. 816

தேச காலத் தொழிலொழுங்காற் சேர்ந்த பொருளின் சுகாசுகத்
யீசு மயக்கங் களினுலே மெய்யிற் கடவு ளருச்சனைசெய் [தின்
தாசை யெல்லாம் புந்தியினு லன்றி நிற்பா யுயர்மாயை
நீச மாயை தனைநீக்கு நெடுஞ்சங் கற்ப நஞ்சறுக்கும். 817

கருதி மலத்தான் மலமறுக்குங் காரு வென்ன மாயைதனைப்
பெருமா யையினுற் செறல்வேண்டும் பெரிய மாயை காரணமாம்.

பொருளன் றுயுங் குருவாக்காற் புகலும் பொருளாய்க் காரணமாய்
மருவு முணர்வாந் தன்னுருவை வழுவா தளிக்கு முணர்வோர்
[க்கே. 818

குரவ னுபதே சத்தொழுங்கு குறிப்பான் மகன்பான் மிகவ ளர்ந்து, விரவு மென்னிற் காட்டரிதாய் வெளிநில் லாதா கினுந் தானே,பரம ரூபம் வெளிநிற்கும் பன்னூற் பொருளாற் குருமொழியாற், றரவு மரிதாந் தன்னறிவாற் றானே யறிந்து பெறவேண்டும். 819

ஆசான் மொழியா னூற்பொருளா லன்றிப் பெறவு மரிதாகுந்
தேசார் குருநூன் மாணுக்கன் சிறக்க விம்மூ வருங்கூடிற்
பாசா தீதப் பரமெய்தும் பன்னு ணீங்கா விக்கூட்ட [வதுபோல்.
மேசா வுணர்வைத் தரும்பகற்போ தெல்லாத் தொழிலுந் தரு

சொன்ன நெறியி லறிஞர்தினந் தோறுந் தேவார்ச் சனைபுரியி
லென்னை முதலோர் தொண்டர்களா லேத்த மிக்க பதமடைவ
ருன்னு சகமில் லாதிருந்து முண்டு போற்றேற் றிடுந்தோற்ற
மன்ன தொழிந்து வேறில்லை யரிய தவத்திற் பெரியோனே. 821

முந்தைப் பிரம முதலான மொழிகட் கெல்லாந் தெரிகின்ற, தெந்தப் பொருளாங் கதுசித்தென் றெண்ணு வாயன் னதுதோன்றித், தொந்தித் தறியும் பொருள்போலாய்த் தொடரும் பெயர்க்கு முரித்தாகி, யந்தக் கரண பாவனையா லகந்தை தனையும் பின்செல்லும். 822

சேரு மிந்த வகந்தைக்குத் தேச கால பாவனையாய்ச்
சாரும் பாங்கித் திரளான சத்தித் திரளுண் டாந்தானே
நேரு மிவைசூழ் சற்பாவ நிகழ்சீ வப்பேர் பெற்றுடனே
கூரும் புந்தி யெனலாகிக் கோளின் மூட ரிடத்திருக்கும். 823

சத்தங் கிரியை ஞானமெனுஞ் சத்தித் திரள்க ளுடன்கூடி
யொத்த கணந்தா னொருகணத்தி லுன்ன றன்னை யுண்டாக்கு
மெத்த சங்கற் பத்தருவின் வித்தா மென்ன மனம்விளையுந்
தொத்து புரியட் டகவடிவாஞ் சொல்லுக் கதுபாத் திரமென்பர்.

அன்ன மனதுக் குயர்பரம னூலே வடிவாஞ் சத்திகளை
யின்ன வளவென் பதற்கரிதா மிதுதான் விசும்பு முதலான
துன்னு வடிவங் களைமேவித் தொகுதத் துவங்க டமைச்செய்யு
முன்னு பாழிற் கூனிகள்போன் மொழிந்தமனவா தனைதோன்றும்.

சகப்பேர் பெறுமிவ் வாதனைதான் றவிரி லழியாச் சாந்தியதா
மகப்பா வனையி லிச்சகத்தி லலைகைத் தேரா நீர்தன்னி
லுகப்பா மறுதி யுள்ளோர்க ளுபதேசிக்க வொண்ணுதோர்
மிகப்பா விகளாஞ் சீசீயென் றிகழ்வா ரவரை மெய்யுணர்ந்தோர்.

பரம முணர்ந்தோர் விவேகியர்க்கே பரம வுபதே சம்பகர்வர், திரமின் மயக்கத் திழிந்தோர்க்குச் செப்ப நினையார் சொப்ப னத்தில், வரனை நனவிற் கன்னிகைக்கு மகிணை ளுக்கு மியல்போக் கும், விரத முனியே நீசொன்ன விறைவுக் குண்மை விளம்பின மால். 827

இனிதுண் டாக வுனக்கென்பா லேகு வோமா மென்றுமை யும், புனிதன் றானும் பரிவாரம் புறத்துச் சூழ விண்ணகன்றான், பனிநன் மலரஞ் சலிசொரிந்து பணிந்தே னன்று முதலந்தத், துனியி னெறியான் மெய்யுணர்வைத் தொடர்பாற் பூசை செய் கின்றேன். 828

இன்று மென்றும் பதறும விபற்று பூசா விதானத்தாற்
றுன்று கின்ற வாதனைகள் சுமையன் றியிலே சுமக்கின்றே
னன்று வந்த கிரியைகளோ டாசா ரங்கண் மலராக
நின்ற பூசை தனிற்குறைவு நிறைவு காணே னிராப்பகலே. 829

கொன்னு வானுங் கொள்பொருளுங் கூட லுயிர்க்கெல் லாம்பொ
நள்ளு மந்தக் கூட்டத்தே ஞான யோகிக் கவதான [லுவா
முள்ள தேதங் கதுதானே யுயரான் மாவுக் கருச்சனையாந்
தெள்ளு மிந்நோக் காற்சங்கஞ் சேரா மனத்தாற் சகத்துறைவாய்.



## வில்வபலக்கதை.



விழிப்பினே டிமைப்பிற் சித்தஞ் சகத்தினை விளைத்தொ டுக்கு
மொழித்துவா தனைபி ராண னெடுக்கத்தா லுளத்தை மாய்ப்பா
யிழித்தபே தைமையின் றேற்ற மொடுக்கமா மிரண்டி னுலுஞ்
சுழித்திடு கரும மெல்லாந் தோன்றிடு மொடுங்கு மன்றே. 831

ஆதலாற் குரவ னன்னு லகல்கிலாச் செறிவால் வன்பிற்
பேதைமை யுளத்தை மாய்ப்பாய் பிராணனைத் தடைசெய் தாலும்

வேதன வசைவு தீர விடுகினுஞ் சித்தம் போகுந்
தீதறு மதுவே மேலாம் பதமெனச் செப்பு மன்றே. 832

தெரிபொரு டரிச னஞ்சேர் கூட்டத்திற் சேர்ந்த வின்பம்
விரிபர மார்த்த மாகு மதற்குமே வினிவே றில்லைப்
புரிதரு பிரம நோக்கா மதனினாற் பொன்றுஞ் சித்தம்
வரிசையாஞ் சித்த நாசம் வஞ்சமி லின்பந் தானே. 833

தேய்ந்திடல் வளர்த லில்லைத் தெரிவுறு மறைந்து போகா
வாய்ந்துணர் ஞானி சித்தஞ் சித்தமன் றதன்பே ருண்மை
யேய்ந்தநா நாத்து வத்தோ டன்னிய மெய்தல் சித்தந்
தோய்ந்தபோ தத்தாற் செம்பு சொன்னமா வதுவே போலாம். ()

சித்தெனுந் தத்து வந்தான் சித்தமாய்ச் சகத்தி லோர்காற்
றொத்திய விநோதஞ் செய்து துரியமா மவத்தை மேவி
நித்தமாந் துரியா தீத நிலைமையா மாத லாலே
பித்தறு முலகாய்ப் பன்மை யாய்நிற்கும் பிரம மொன்றே. 835

## சிலைக்கதை.

செவ்வி தாங்கலில் வனசமுஞ் சங்கமுந் திகிரியு மெனுங்கீற் று, வவ்வு கின்றதோர் சுழுத்தியா மவத்தையாய் மருவுறு மது போலத், தவ்வில் சித்தினு ளுலகங்கண் முழுவதுந் தங்குமால் வேறன்றி, யெவ்வி டத்திலியா தெப்படி யிருந்ததவ் விடத்தினப் படியென்ப. 836

நானுவாம் பணதிகளுண் ணண்ணுகினு மொருமையே நண் ணுங் கற்போ, லானுத சகங்களையுள் ளடக்கினும்வேற் றுமைமே வா தறிவொன் றேயாங், கானுர்பங் கபமெல்லாம் வேறன்றிக் கன்மயமாங் கணக்கே போல, வானுர்சிற் சொரூ பத்தைப் பிரியா த தன்மயமாம் வைய மெல்லாம். 837

விரிசிலையி லெழுதியபங் கயமாதி யுதித்தத்த மித்த துண் டோ, திரிபுவனங் களுஞ்சித்தி லப்படியே வில்வக்காய் செறிந்த மச்சைப், பரிசினின்முன் னுரைத்ததுபோன் முடிவில்லா விகார த்தாற் பரந்த வண்டந், துரிசிலா வறிவினிடைத் துன்னுமால் வே றென்று சொல்ல வொண்ணு. 838

பிரமத்தின் சற்பாவ வடிவான பேருலகின் பேத மெல்லாம், பரமார்த்த சுழுத்தியாய்ச் சாந்தமாய்ச் சமமாகிப் பயின்ற சித்தா ய்க், காமுற்ற தன்னுருவாங் கண்ணாருங் கல்லிடைத்தா மரைகள் போலத், திரமற்ற சிருட்டியெலாம் பயனில்லை யுடல்களெலாஞ் சேரா தென்றும். 839



## அருச்சுனன் கதை.



வாசுதே வப்பெயரு மருச்சுனனு மும்படைத்து வருமப் போதில், வீசுதார் திரிதராட் டிரன்மைந்தர் கிளைஞரொடும் விச யன் மேலே, யேசுபோர் செய்யவருந் தன்கிளைஞர் மரணத்துக் கிரங்கிப் பார்த்த, ஞசுசரா சனம்வளையா னதுபொருட்டா னுப தேச மருளு மாயேன். 840

விசயனெனும் பெயருடற்கு விண்டுவெனு ஞானவுடல் விள ம்பு முண்மை, யிசைவுறக்கே ளநந்தமாய்த் தெரிவரிதா யடிமுடி வற் றிருக்கு முன்னை, யசைவறப்பா ரருச்சுனா வறிவுருவங் குற்ற ங்க ளின்றி நிற்குந், தசையுடலி லொருகாலும் பிறப்புறா யிறப் புறாய் சத்தாய் நின்றாய். 841

பிறப்பில்லை யிறப்பில்லை யிவனென்ன வடிவில்லைப் பின்புண் டாகா, வறப்பழைதாய் நித்தமா யழிகின்ற சரீரத்தி லழியாச் சற்று, முறப்புரியுந் தொழில்களைநீ யோயாது சங்கத்தை யொருக் கிச் செய்வா, யிறப்பில்பிர மார்ப்பணவா சாரமுறிற் பிரமமா யிமைப்பி னிற்பாய். 842

ஈசனிடத் தெப்பொருளுஞ் சமர்ப்பித்து மிருமீசன் வடிவ மெய்திப், பாசமுறு முயிர்க்கெல்லா மீசனாய்ச் சங்கற்பப் பற்று மாய்த்து, நீசமனாய்ச் சாந்தமனத் தினனாகி முனியாய்ச்சந் நியாசி யாகி, யேசறாயோ கியுஞான வானுமாய் முத்தியினை யெய்து கென்ன. 843

சங்கமறுத் திடல்பிரமார்ப் பணமீசு ரார்ப்பணமே சந்நி யா தம், பங்கமறு ஞானமே யோகமே யெனுமிவற்றின் பகிர்ச்சி யா தோ, செங்கண்முகி லேயென்ற விசயனுக்கு மாலருள்வான் செறி சங் கற்ப, மங்குறவா தனைகெடமே வார் நினைவிலா விடம்பரம மெத்து வென்பர். 844

ஏகமெனும் பிரமத்துக் குறுமுத்தி யோகமே யிலங்கு ஞான, மியோகமுமாங் கதுவென்ப ருலகமுநா னும்பிரமத் தருவென் றோர்த, லாகுபிர மார்ப்பணமாங் கருமபலம் விடல்சந்நி யாத மா குஞ், சோகமுறு சங்கற்ப மறுத்தலே சங்கத்தைத் துடைத்த தென்பர். 845

எண்ணமனைத் தினுமீச னொருவனே யென்றிருமை யெண்ணந் தீர்தல், புண்ணியவீ சுரார்ப்பணமா மெனைநாடி யெனக்கன் பாய்ப் பூசித் தென்னை, நண்ணியெனைத் தொழுதென்னைத் துதித் தாயே னானெனுநின் சொரூபச் சோதி, யுண்ணிறையும் பரமஞ் சா மானியமென் றிரண்டுவடி வுண்டெ னக்கே. 846

சங்காழி ப்யில்க ரத்தை முதலான வங்கஞ்சா மானி யந்தான்
மங்காம ல்டிமுடிவற் றொன்றாய வடிவுபர வடிவ மாகு
மிங்கான பிரமமெனப் பரமமென விசைப்பதெலா மிந்த ரூபஞ்
சிங்காம லிதுதனைநீ தெளிவளவு நாலுபுயத் தேவை யேத்து. ()

அக்கடவுட் பூசையினா லறிவுநிறைந் ததனாலப் பதமுஞ் சேர் வை, மிக்கபர மாகியவென் னுருவமுறிற் பிறவிநோய் மீண்டு சேராப், பக்கவபி மானம்போய் மோகம்போய்ச் சங்கம்போய்ப் பரமே மெய்யாய்த், துக்கசுக தொந்தம்போ யாசைபோ யறிவுற் றோர் தொடர்வ ராங்கே. 848

காமமுறு சங்கற்ப மின்றியா ரம்பமெலாங் கலந்து நிற்போ ர், தாமமுறு ஞானத்தீ யாற்கருமங் களைச்சுட்ட சான்றோ ரென் பர், சேமமுமேல் வரும்பொருளுஞ் சிந்தையறத் தொந்தமறச் சித்தா முண்மை, தோமறப்பெற் றெப்போதுந் தோற்றுதொ ழில் வழிநிற்பாய் துளக்க மின்றி. 849

வீசியவூ ழிக்காற்று மேலிடினும் விந்தமலை வெடித்த போதும், தேசிகனாற் கற்பித்த செந்நெறியை மதிமான்க டிறம் பல் செய்யார், மாசறுமெய்ஞ் ஞானமிலா மடமையால் வாதனை மெய் வடிவாய் நிற்கும், காசறுமெய்ஞ் ஞானமெனும் பெருங்கடல் கோத் தாலதனுட் கரைந்து போமே. 850

என்றருளித் திருநெடுமா லிமைப்போது மோனம்போ லிரு த்த லோடும், வென்றிமிகு விசயன்மகிழ்ந் துரைசெய்யும் வகை கேளாய் மெய்ம்மை வீரா, கன்றுதுய ரனைத்தும்போ யெனது

மதி பரம்பொருளைக் கலந்த தையா, துன்றிரவி காணவிரி கமலம்
போ லெனவிசயன் சொல்லு மன்றே. 851



## சதவுருத்திரர்கதை.



அக்குரு கொருகால் விண்போ யரன்புரத் தானைக் கண்டு
மிக்கசங் கரனு னென்றே மெய்ம்மையாய் நினைத்த லோடு
நக்கன துருவ மாகி நயந்தவா வீச னூட்டிற்
றெக்கபல் கணங்க ளோடுஞ் சூக்கமெய்ஞ் ஞானத் தோடும்.



## வேதாளகதை.



சுழுத்தி மௌனத் தினனுகித் தொடரு மனத்தி னெழுச்சியற
வழுத்து மலக்கற் பனைநீக்கி யகண்ட பதத்தி லிருவெனலும்
வழுத்து கரண மவுனஞ்சொன் மவுனங் காட்ட மவுனமெனச்
செழித்த மூன்றுந் தெளிந்திடமேற் சுழுத்தி மவுனஞ் செப்பெ
[ன்ன. 853

வாக்கு மௌனஞ் சொற்றடையாம் வளிர்திந் திரிய மடக்குவித்த
ருக்கு கரண மவுனமதாந் தனது சேட்டை யெலாம்விடுதல்
வீக்குங் காட்ட மவுனமதாம் விளங்கு சித்த வியாபார
நீக்க மில்லா மூவகையாய் நிகழ்த்து மவுன மிவையாகும். 854

வன்பி லியற்று மிம்மூன்று மவுனங் காட்டத் தவர்க்கியல்பா
முன்பி னின்றிப் பிறிவின்றி மொய்த்த துயரற் றிருக்கின்ற
வின்ப வனுபூ தியர்க்கெனினு மிலாதார்க் கெனினு மிதுதானே
துன்ப மொன்று மணுகாத சுழுத்தி மவுன மெனச்சொல்வர்.

பன்மை மோகத் திவ்வுலகைப் பற்றி யுள்ள படியுணர்ந்து
தன்மை நிலையா யையமற ஞானே சுழுத்தி மவுனமதாஞ்
சின்ம யனேக வறிவுருவாஞ் சிவமே யிவையா வையுமென்னுந்
தொன்மை முடிவி னிலைதானே சுழுத்தி மௌன மெனச்சொல்
[வர். 856

நின்ற விண்ணுண் டல்லவுமா நிகழு மனைத்து முளதிலதா
மென்று சமமுஞ் சாந்தமுமா யிருத்தல் சுழுத்தி மவுனமதா
மொன்று சுழுத்தி மௌனந்தா னுபய விதமா மியோகியர்க்குத்
துன்று கின்ற சாங்கியமுந் தூய தான யோகமுமே. 857

தெளிவா ஞான வுணர்வாலே தினமு மேக சமாதியினு
ளளவாஞ் சங்கை யாலறிந்த வவர்சாங் கியயோ கியராகு
முளதாம் பிராணன் முதல்வாயு வுபசாந் தியினு கத்தாலே
யெளிதா முடிவி னுயர்பதத்தை யியைந்தோ ரியோக யோகியரே.

பண்ணப் படாத வுபசாந்த பதமே யெவர்க்கும் பற்றுகு [ங்
மெண்ணத் தகுசாங் கியரெய்து மிடமே யிடமா மியோகியர்க்கு
கண்ணத் தகுவா தனைவலைசூழ் கடிய பிராணன் மனமிரண்டு
நண்ணப் படுசெய் தொழிறீர நசிக்கி லதுவே பரமபதம். 859

வினவி நோக்கா மையிற்சித்த மெய்போற் றோன்றும் பொய்யே
கனவிற் றனது மரணந்தான் காணு நின்று முளதாமோ [யாங்
வனக வேகப் பொருட்பழக்கத் தழுத்தம் பிராண னுள்ளடக்கன்
மனனை யடக்க லிவைமுத்தி வசனப் பொருளாஞ் சுருக்கத்தில்.

உரமா மொருமைப் பொருட்பழக்க முயிரி னொடுக்க முளத்தொடுக்கந், தரமா மொன்று பலிக்குமெனிற் றம்மிற் றுமூன் றும் பலமாம், பரமா முயிர்நெஞ் சிலதாகிற் பயிலா தெவர்க்கும் பாவனைக, டிரமா மிவையொன் றுமலரு மணமுந் திலமுந் தயில மும் போல், 861

ஆதா ராதே யம்போலா மதிலொன் றிறக்கி லயலதும்போ
மோதா நின்ற விவைமாயி னுயர்ந்த வீடு முதவிடுமான்
மீதா கியதன் பரிசயத்தால் வெளியாய் நினைவு போமளவு
மேதா கினுமோர் தத்துவத்தி விறுக வேண்டும் பாவனையே. 862

நெடுநாட் பழகுஞ் சுபாவத்தா னெஞ்சி னொருமை யொன்றுண்டா, முடனே மிருமித் திரளெல்லா மொருங்கிப் போகும் பிறப்பிறப்பி, னிடமார் கனவு போய்விழித்த விகல்வே தாளமிசைத்தவினுத், தடமார் புயனே கேட்டியெனத் தவமார் வசிட்டன் சாற்றிடுவான். 863

விந்த வனத்தோர் வேதாளம் வேறோர் நாட்டில் வெம்பசியால்
வந்து புகுந்தோர் நல்லோன்பால் வரம்பில் பலியேற் றுண்மகிழு

மூந்து பசித்தீ முடுகிடினு முன்வர் தோர்க்கு நியமின்றி
நிந்தை யின்றிக் கொலைபுரியா நெடியோர் நெறியை நீங்குவரோ.

கானின் றந்த வேதாளங் கடுந்தீப் பசியா னீதியினு
லான வூகத் தாற்சனத்தை யசன மாக்க நகரெய்தித்
தான நிருப னிரவுதிரி சமயத் தவனைத் தான்கண்டு
வானி லிடிபோல் வேதாள மன்னற் குரைத்த படிகேளாய். 865

மன்னா வென்கைப் பட்டனையால் வானே றனைய வென்றாலே [மே
யுன்னா ருயிரிற் றனையினியென் னுணவா குதியென் றுரைத்தனு
நின்னா னெறியா லன்றியெனை நெருங்கிற் றலைநீ றெழுமென்னச்
சொன்னான் மன்னன் வேதாளஞ் சொன்ன மன்னற் கெதிர்சொ
[ல்லும்.

நீதி யின்றி யுனையடரே னெறியே யுரைக்கே னிருபாகே
தீதி லிரவா ளருக்கெல்லாஞ் சிறுமை தீர்க்குந் திறத்தனையா
லாத லாலென் குறைதீர்ப்பா யையப் பாடாங் குறைகேட்டு [கும்:
நாத னெனின் சொற்கொடையா னன்று நிறைப்பா யெனவுரைக்

எந்த வெய்யோன் கிரணங்கட் கிந்தப் பிரமாண் டங்களெலாஞ்
சிந்துஞ் சிறிய வணுத்திரளாய்த் திகழு மெந்த மாருதத்தி
லந்த மில்லாக் ககனமெனு மணுக்கள் விளங்கு மளவின்றி
வந்த கனாமேற் கனவுற்று மாறுந் தெளிவா மொளிவடிவென். 868

அரம்பைத் தண்டு ளூட்போயு மந்தந் தண்டே யாவதுபோல்
வரம்பி லுள்ளுள் ளேயெனினு மற்றொன் றாகா வணுவேது
நிரம்பு மண்டம் விண்ணுயிர்க ளிகழுங் கதிர்பொற் கிரியனைத்தும்
பரம்பு பரமா ணுக்களெனப் பயின்று நீங்கா வணுவேது. 869

அங்க மொன்று மறப்பரம வணுவா மெந்த மாகிரிக்குத்
தங்கு கற்போற் செறிந்தொன்றுஞ் சகங்கண் மச்சை யாமென்று
துங்க வேதா ளஞ்சொன்ன சொற்கு நகைத்துச் சுடர்மௌலி
யங்க ணரசன் சொன்னவெலா மடைவே கேட்டி யிராகவனே.

உதித்த விந்தச் சிற்பானு ளுலகா மிவையெல் லாம்விளங்கு
மதித்த விமல விஞ்ஞான வடிவாம் பரம வாதித்தன் [வாங்
கதித்த வொளியா மிவ்வெய்யோன் கதிர்க்கிவ் வுலகெல் லாமனு
துதித்த விந்த மார்த்தாண்டன் சுடராற் றோன்றி விளங்கிடுமால்.

கால முண்மை விசும்புண்மை கண்ணு யசையு மறிவுண்மை
சால விமல வறிவுண்மை தன்னை முதலா முண்மையெலாஞ்
சீலப் பரமப் பெருங்காற்றிற் சிறுதா ளாகித் திகழ்ந்திடுமாற்
கோல மலரின் மணம்போற்றுங் கொண்ட சொரூப சுபாவத்தால்.

உலக நாமப் பெருங்கனவி லொன்றின் மேலொன் ருக்கனவு
பலபற் றியுந்தன் வடிவைவிடாப் பயில்சாந் தத்தால் விரிபிரம
மிலகுங் கதலி யுள்ளுள்ளே யிலையே யாகு மியல்பென்ன
வலகி லாத வுள்ளுள்ளே யான போது மப்பிரமம். 873

சூக்க மாயெட் டாமையினற் சொன்ன பரமே பரமாணு
நீக்கு மெல்லை யிலாமையினு னெடிய மேரு முதலனைத்தின்
ருக்கு மூல மிதுவாகுந் தடமே ருவையா திகளிதற்கு
நோக்கும் பரமா ணுவைப்போல நடங்கி விளங்கு நோக்கிடினே.

எட்டா மையினற் பரவணுவா மிவனே நிறைவாற் பெரியகிரி
தட்டா வவய வங்களெலாந் தரித்து மவையில் லாப்புருடன்
முட்டா விஞ்ஞா னத்துருவாய் முழுது பொருட்கு மிடமாகு
மெட்டா விதற்கு விஞ்ஞான சார மச்சை யிவையனைத்தும். 875

இயல்விஞ் ஞான மாத்திரத்தி னிடையே யுலக மிருக்குமென
வுயர்மன் னவனே தனுங்களோ வுளத்தே தன்னை யுணர்வுற்று
மயலில் விசாரத் தாற்சாந்த மனவே தாளந் தனியிடம்போய்த்
துயர்கொள் பசியை மறந்தசையாத் தூய தியானத் திருந்ததுவே.

---

## பகீரதன் கதை.

---

அசைவிலா வுட்போ தத்தா லனைத்தினு முளத்தை வாங்கி
யிசைவசெய் திச்சை யின்றி யிளைப்பறப் புந்தி யாறி
விசையிலா நெஞ்சா னெஞ்சை விண்ணென விமல மாக்கி
யசைவறு மவுனி யேகன் சாந்தமே வடிவ மாகி. 877

பகிரத னுரைப்பா னையா பயில்சரை மரண மோக
மகிலமா மச்சஞ் செய்யு மருந்துயர்க் கவதி யேது
[illegible]ழ்வுற வருள்வா யென்னத் திரிதல னுரைப்பான் மன்னு
[illegible]று நேயந் தன்னை நிறைவடி வாக நோக்கில். 878

அன்றுபோந் துன்ப மெல்லா மகப்பந்த மனைத்து மாயு
மொன்றலா வையம் போகு முறுகரு மங்கண் மாயு
நன்றதா னேயந் தானு ஞானமே வடிவ மாகி
நின்றதற் சொரூப மாகு நிகழ்த்திட விதனைக் கேளாய். 879

எங்கணு முளது நித்த மெழுதலத் தமித்த தில்லை
யங்கண்மெய் யறிவு சாந்த மமலமச் சுதங்கு ணங்க
டங்குத லில்லை யீதொன் றுளதெனச் சாற்ற லோடும்
பங்கமின் முனியை நோக்கிப் பகீரத னுரைக்க லுற்றான். 880

ஒழிந்துள வுடல மாதி யொன்றையுங் காணா னாகி
யிழிந்துள தொழில்க ளெல்லாந் திரமின்றி யேக நின்றான்
மொழிந்துள வறிவே யாகி முட்டற விருப்ப தெங்ஙன்
பொழிந்துள கருணை யையா புகலெனப் புகல லுற்றான். 881

திரிதுல னுரைப்பான் மன்னா சித்தந்தா னிதய விண்ணில்
விரியுஞா னத்தா னேய நிட்டையை மேவும் பின்னர்ப்
பெரியதா மனைத்து மேனிப் பெருந்தகை யாய சிவன்
பரிபவ மாய சன்மம் பயில்வுறா துலகின் மீட்டே. 882

ஆற்றும தத்து வத்தி னகல்கிலா ஞான நிட்டை
யூற்றமா முண்மை ஞானத் துறுபொருட் காட்சி யிந்தத்
தோற்றமாங் குறிகள் சேர்தன் ஞானமாய்ச் செல்வர் சொல்வர்
வேற்றுள வழிகண் முற்றும் விதனவஞ் ஞானந் தானே. 883

ஏதம தாக நானென் றெண்ணுத லிறந்த போது
காதலு முனிவுந் தீர்க்குங் களைகணாய்ப் பிறவி நோய்க்கு
மேதகு மருந்தா ஞானம் வெளிப்படு மென்று சொன்ன
சேதன முனிவ னான திரிதுலற் கரசன் செப்பும். 884

மலைமிசை மரம்போ னீணாள் வன்புற விந்த மெய்யி
னிலைபெற நானென் றெண்ணா நீக்குவ தெங்ங னென்னத்
தலைமைசேர் குரவன் சொல்வான் றன்மன வருத்தந் தாமே
தொலைவுறு போகத் தெண்ணந் துவக்கறத் துடைத்து நீக்கி. 885

விரிவுறு முண்மை மேவில் வினையகங் கார மாளும்
புரிவற விவற்றை யெல்லாம் புந்தியாற் றீர நீக்கித்
துரிசலை வின்றி நின்றா யென்னிற னென்னுந் தோற்றந்
தெரிகிலா ததுவே நீயாந் தெளிந்ததற் பரமு மஃதே. 886

அனைத்துள விசேட நீங்கி யச்சமற் றேட ணைக்குட்
டினைத்துணைப் பற்றற் றின்மை சிக்கெனச் சேர்ந்து செல்வம்
வினைப்பகைக் கீந்து நானென் பதுவிட்டு மேனிச் செய்கை
தனைத்துறந் தவர்பா லையந் தனையிரந் தெனையும் விட்டு. 887

நிற்பர மாயிவ் வாறு நிற்கின்மே லுக்கு மேலாந்
தற்பர நீயே யாதி யென்றவன் சாற்றக் கேட்டு
வெற்படர் தோளா னெஞ்சிற் செய்வதாந் தன்மை மேவிப்
பற்பல தன்செய் கைக்கே பகிரத னிற்ப தானான். 888

சிறிதுநாட் கழிந்த பின்னர்ச் சிறந்ததோர் வேள்வி செய்து
நெறிவளர் செல்வ முற்று நீசமு முயர்வு நாடி
வறியரா மறையோர் தெய்வங் கிளைமுதல் வந்தோர்க் கீந்து
பிறிவறு துகிலொன் றன்றிப் பிறிதிலன் மூன்று நாளில். 889

யாவரு மிரங்க யாது மினிமையாந் தனது நாட்டை
மேவரும் பகைவற் கீந்து வேறறு துகிலொன் றானோன்
றூவரு முனியாய் ஞான முனிக்குணஞ் சார்ந்து தன்ன
தோவறு நாடு நீங்கி யொருவனா யுலாவ லுற்றான். 890

முகத்தினாற் பெயராற் கண்டோ ரறிகிலா மூதூர் தோறு
நகத்துயர் வணங்க டோறு நண்ணினன் றீர னாகி
யகத்திலே டணைக ளெல்லா மவிழ்த்தனன் சிறிது நாளி
லிகத்துயர் சாந்தி யாற்றன் னிடத்தினைப் பாறி னானே. 891

படிமுழு துழல்வா னோர்காற் பகைவற்குத் தான்முன் னீந்த
கடிநகர் புக்கா னெல்லாக் கரணமும் வென்றோன் சென்று
மடியிலா வமைச்சர் மற்றோர் மனையெலா மைய மேற்றான்
முடியுடை யிவனை நோக்கி யிரங்கினார் முன்பு கண்டோர். 892

அதிகபூ சனைகள் பண்ணி யரசுசெய் தருளு கென்றே
பதிபெறு பகைவன் றானும் பகரவும் பலியீ யன்றி
யெதிரொரு திரண மேனு மிச்சையற் றிருந்து சின்னாட்
புதிதென் றெவரும் வெம்பப் போயினன் புறத்துந் தானே.

சாந்தியே வடிவாய்ப் புந்தி தளர்வின்றி யின்ப மெய்திக்
காந்திசேர் தன்சொ ரூபக் கண்ணிலே விநோத மேவிப்
போந்திசை யதனில் வந்த குருவினைப் புகழ்ந்து சேர்ந்து
தாந்திரி வுற்றா ரன்னார் சைலத்தில் வனத்தி னாட்டில். 894

குருவுமா ணாக்கன் றானுங் குறைவறு சமத்தை மேவி
யிருவரு நிலைமை யொப்போர் விநோதத்தா லாக்கை தாங்கிக்
கருவுட லிருந்தென் போயென் காமித்த படியு லாவி
யொருமையி னுள்ள வாற்றா னுறைகென வுறைக்க வுன்னி. 895

துன்புறு வாருந் தத்த சுகத்தினு மத்தி மத்து
மின்புறூர் தனங்கண் மாத ரியைந்திடி யிருநாற் செல்வ
முன்புற விரும்பிச் சித்தர் தந்தவை மோக மின்றி
மென்புலொத் தொழிந்தார் வேறோர் மேதகு நாட்டிற் சென்றார்.

---

## சிகித்துவசன் கதை.

வகிர்த்துகிமிர் மனமென்னு மாப்பறவை தனைமுன்ன மாற்றி யோட்டிச், சிகித்துவசன் றனைப்போலச் சாந்தறு யுன்னிடத்தே செறிவா யென்னச், சுகித்துணர்வி னின்றுளவச் சிகித்துவச னுரையா சொல்வா யெல்லாந், சகித்துணர்வு மேன்மேனு நிறைவதற்கென் றவன்கேட்பத் தவனுஞ் சொல்வான். 897

துவாபரமா முகத்துமுத லுண்டானே னேழுமனுத் துஞ்சு மெல்லைத், திவாகரனோர் மாளவத்தே சத்திறைவன் சிகித்துவசன் செங்கோல் வேந்த, னவாமுதலீக குணமில்லோ னுதாரமுத னற்குணங்க ளனைத்து முள்ளோன், விவாதமறு மோனத்தோன் சமதமமாங் குணநிறைந்தோன் மிகவு நல்லோன். 898

சூடாலை யெனுங்கன்னி சுராட்டிரமன் னவனளித்த தோகை போல்வாள், வீடாத நற்குணத்தாற் றனையொப்பா ளவளையவன் விவாகஞ் செய்தான், வாடாத நிலையொன்றிப் பிறிவின்றிச் செய்தொழில்கண் மாறு பாடற், றீடான பலகலைக்கும் வல்லவரா யிருவருமொத் தினிது வாழ்ந்தார். 899

ஈருடலுக் கோருயிர்போ லிருவருஞ்சேர்ந் திளமைநல மினிது துய்த்தார், சீருடைய வருடங்க ளிவ்வகையே யெல்லையறச் செல்ல லோடு, மோருறுதி யிலாவிளமை யுடைந்தகுட நீர்போல வொழுகிப் போக, நீருறுசெந் தாமரைமேற் பனியிடிபோற் சரை வந்து நேர்ந்த தன்றே. 900

கரதலத்து நீரதுபோ னித்தலும்வா ளுண்மெல்லக் கழன்று செல்லத், திரண்மழைநாட் சுரைக்கொடிபோற் றீராமா லொன்றுமே தீர்க்க மாக, விரவுசரற் காலத்தி லாற்றுநீர் போலழகு விரைவி லோடப், புரமுறுநற் சுகங்க ளெல்லாஞ் சிலைவிடுத்த சரங்களைப்போற் போயிற் றன்றே. 901

கதலியுறு கருப்போல நிராசையைத்தங் கதுபயன்றீர் காரியந்தா, னிதமுறவாங் கவர்நினைவா ரெத்தையடைந் துள்ளமீண் டெங்கும் வீழா, ததுமிகநன் றவ்வகையா னதுகிடையா திம்மோகத் தழுந்து வார்க்குத், திதமுறவத் தியாத்துமதத் துவநூலே பிறவிநோய் தீர்ப்ப தன்றே. 902

ஆற்றுமதத் துவஞான மொன்றுணு மலதுபிறப் பறுதென் றெண்ணி, யூற்றமுறு தற்பரரா யதின்மனமா யதிற்சேர்ந்த வுயிராய் நித்தஞ், சாற்றுமதி னிட்டையரா யதற்கடுத்தோர் சார்வாய்ச்சான் றோர்கள் பூசைக், கேற்றசெய லாற்சிறிது மிடைவிடாப் பரிசயமா யிரண்டு பேரும். 903

தம்மிற்று முணர்ந்துளரா யதற்கடுத்த வாசாரந் தரித்து நீணாள், விம்முற்ற மகிழ்ச்சியராய் விளங்கினர் பின்பந்த விவேக மங்கை, யம்மைக்கா நல்லபத வொழுங்கினும் பேரறிஞ ரருளிச் செய்த, செம்மைச்சாத் திரப்பொருள்க டரிக்கலா மளவறிந்து திருந்தக் கேட்டு. 904

எள்ளுறு வியாபாரம் வியாபார மில்லாமை யிரண்டு மின்றி, வெள்ளிதாய் விளங்கியநற் புந்தியாற் சூடாலை விசாரிக் கின்று, டெள்ளியே தன்னைமுத லேக்கிநா னென்றெத்தைச் செப்பு கின்று, முள்ளுறு விம்மோக மாருடைய தெவ்வாறெங் குதித்த தெத்தால்.

முதலான வுடல்சடமா மூகமா நாமென்று மொழிய லாகா
விதமான கருமஞா னேந்தியங்கள் சடமாகி வெவ்வே றுரு
மதனுறு னன்றுகுந் தடியினு லோடுகளை யசைக்கு மாபோற் [றே.
றிதமாகா மனத்தாலே யிவையிவைத் துஞ்சேட்டை செய்யு மன்

செறிதருசங் கற்பமெனுஞ் சத்தியுளா தாய்ச்சடமாஞ் சித்தந் தானு, மெறிகவனுற் கற்போலப் புந்தியினிச் சயத்தாலே யியக்க மெய்து, மறிவுறுபுந் தியுஞ்சடமா மறுதியிட லேவடிவா யகங்கா ரந்தா,னெறியுறுசெய் கையையுறுமாற் பள்ளத்தா லோடு நதி நீர்க ளேபோல். 907

நீதகங்கா ரஞ்சடமாய்ப் பயனிலியா யவசமாய்ச் சிவ ஞலே, சாதமுறு மிதுசிறுவர் மயக்கத்திற் பேய்தோன்றுந் தன்மை போலா, மோதியசீ வனுந்தொழிலே வடிவாய்க்காற் றுருவாகி யிதய முற்று, மேதகைய சுகுமார மாயுள்ளே மற்ருென்ருன் மேவி வாழும். 908

ஆற்றுமதத் துவவறிவென் றறிந்தேனீ தறிபொருளா லழுக்கு மேவா, தேற்றுமென துருவமா யசிரணமாஞ் சித்துருவாற் சீவன் வாழுந், தோற்றுபொருள் களின்மயங்குஞ் சித்துருவாற் சீவன்வாழ் தொடர்ச்சி கூறிற், காற்றதனுன் மணம்போலும் பள்ளத்தா னீர்போலுங் கருதுங் காலே. 909

பொய்யாகிச் சடமான வறிபொருளின் புணர்ச்சியாற் போதரூப, மையான சடமாகிப் பெருநீருட் கனல்போற்றன் வடிவை விட்டு, மெய்யான சித்துருவ மிப்படியே யறிபொருளை மேவலாலே, யையோபொய் யாய்ச்சடமா மறிவிஞ லறிவிக்க வறிந்த தன்றே. 910

இந்தவறி வெத்தாற்கா ணப்பட்ட தென்னில்வே றேது மில்லை யந்தமில்கா லத்தாலே யறியவேண் டியதறிந்தே னம்ம வம்மா முந்துவறி வின்பரப்பை முடிவாக மனங்கரண முதல வெல்லாஞ் சிந்தனைசெய் யாமையா லுதித்தனவாஞ் சிந்தித்தாற் சேரப் பொய்யே. 911

எல்லையில்பே ரறிவேயிங் குளதிதனைப் பேருண்மை யென்றுஞ் சொல்வா, ரல்லலுறுங் களங்கமறச் சமமாகி யகங்கரமில் வடிவ மாகித், தொல்லையொளி யொருகாலே துலங்குவதாய் நித்த பரி சுத்த மாகி, மல்லலுயர் பிரமமெனப் பரமமெனப் பெயர் பெற்று வழங்கு மன்றே. 912

இவ்வாறு தினந்தோறுந் தன்சொருபத் தேகளிக்கு மிதய நோக்காற், றவ்வாத பகுதியிலே யாயாசை போய்ச்சங்கஞ் சற்று மின்றி, யொவ்வாத தொந்தனைபோய்த் தொழிலின்றிப் பற்றுவீ டொன்று மின்றிக், கவ்வாத வியற்ருெழில்செய் துயர்பரமப் பெரும்பேற்றுற் கருத்து முற்றி. 913

உள்ளுறுபூ ரணமெய்தி யுவமைகடப் பாலாகி யொருவ ராலுந், தெள்ளியள விடவொண்ணு நிலையாந்தன் விவேகத்தின்

செறிப ழக்க,வெள்ளமுறத்தன்சொருபம் வெளியாய்மென் மலர்க் கொடிபோல் விளக்க முற்று, ளெள்ளரிய வயிரவமாம் பேரெ ழில்கூ ரிவள்பொலிவை யினிது நோக்கி. 914

கண்டறியா வழகிதென மிகவியந்து சிகித்துவசன் கழற லுற்றான், பண்டையிள நலமீண்டு படைத்தனைபோ லலங்காரம் பலபெற் றாய்போ, லண்டரமு துண்டனைபோ லார்க்குமுற வரிய பத மடைவுற் றாய்போன், மண்டுகின்ற வாநந்த நிறைந்தனைபோற் பொலிகின்றாய் மாசி லாளே. 915

போகத்துக் கிரங்காது சாந்தமா யூற்றமாய்ப் பொலிவுண் டாகி, யேகத்திற் சமமாய்க்கெம் பிரமா யுனதுமன திருப்ப தென்னே, தேகத்திற் பெறுமழகுஞ் சித்தத்திற் போழகுஞ் சேர்ந்த தெங்ஙன், னீகற்பா லுரையென்னக் காதலற்குச் சூடாலை நிகழ்த்த லுற்றாள். 916

கிஞ்சிலுமின் றிக்கிஞ்சில் வடிவான விதுவிட்டுக் கிஞ்சி லன் றி, விஞ்சுமொரு வடிவுற்றே னதனாலே சீருடைத்தாய் விளங்கா நின்றேன், கிஞ்சிலே கிஞ்சிலெனச் சுபாவநிலை யாயுதயங் கெடுதி யின்றாய், விஞ்சுவதே தனையறிந்தே னதனாலே சீருடைத்தாய் விளங்கா நின்றேன். 917

அருந்தாமற் றாரிதாம் போகங்க ளருந்தினபோ லமைந்தின் புற்று, வருந்தாமல் விருப்புவெறுப் பிலவதனாற் சீருடைத்தாய் வாழா நின்றேன், பெருங்கோபம் பற்றிரண்டுஞ் சிறுதொழிற்பாங் கியரறிவாம் பெரிய பெண்கண், மருங்கேசாத் திரநோக்கிற் களிக் கின்றே னதனாற்சீர் வாழ்வு பெற்றேன். 918

கிஞ்சின்மாத் திரமுருவி லாதவுல குக்கெல்லாங் கிளர்தே வாகி, யெஞ்சலில னென்றென்பா லின்புறுவ னதனாற்சீ ரெழில் பெற் றேனான், புஞ்சமுறு மிவையெல்லாம் விட்டனன்வே றே பொய்யு மெய்யு மாகி, விஞ்சுமது முற்றுமடைந் தேனதனாற் சீரு டைத்தாய் விளங்கா நின்றேன். 919

கண்ணாற்பல் காணத்தாற் கருத்தாலிங் கெதுகாண்கே னது தான் கிஞ்சி,னண்ணாம லதற்பிறிதாய்க் கிஞ்சிலா தொன்றுள்ளே நன்றாய்க் காண்கேன், பண்ணான சிரிதெனச் சூடாலை சொன்ன வற்றைப் பற்றிப் பாரா, னெண்ணாம னகைத்தவளைச் சிகித்துவ சன் வேறொன்றை யியம்ப லுற்றான். 920

வஞ்சியிடை யாயிசையா ததுசொன்னாய் சிறியோர்போன் மருளா நின்றாய்,விஞ்சுதரா திபர்வாழ்வின் மிளிர்கின்ற புன்னிலே மிளிரா நிற்பாய்,கிஞ்சிலேவிட் டுக்கிஞ்சி லாதடைந்தோர் முன்னிலே யைக் கிட்டாரென்னிற், பஞ்சிலடி யாயவர்தா முன்னிலேயாய் விள ங்குவதெப் படியே சொல்வாய். 921

அருந்தனுருப் போகத்தா லகமகிழ்ந்தே னென்றதனை யகற் று கிற்பார், பொருந்துமிடி யினர்போனிர்ப் பாக்கியரா மவரெங்ஙன் பொலிவார் சொல்வாய், இருந்துறக்காண் பனைகாணேம் வே றேகாண் குதுமென்று செப்பு கிற்பா, ரிருந்துரைக்கு மிவ்வுரை யை விடாமலவர் விளங்குவதெப் படியே சொல்வாய். 922

ஆதலாற் பேதையா யறிவிலியா யலைபவளா யநேகஞ் சொல் லாற்,போதநீ களிக்கின்ற யெனவெடிக்க நகைத்தயலே போனான் மன்னன்,மதரா ளதற்கிரங்கித் தன்னறிவி னிளைப்பாறி மகிழா னுகிப்,பேதமா,யென் னுரையை மன்னனறிந் திலனென்று பேசுற் றாளே. 923

பின்னருமன் னனுந்தானுந் தலைநாட்போற் பேதமறப் பெ ருநாள் வாழ்ந்தார், துன்னுமமை வாயாசை யொன்றுமிலா திருந் துஞ்சூ டாலை தானே, யுன்னியுய ராகாசந் தனிநடக்க வியற்றுது மென் றுறுபோ கங்க, ளின்னலற வனைத்தையும்விட் டேகாந்தச் சுகாசனத்தி லிருக்கை யெய்தி. 924

நாயகனை யிமைப்போது நீங்காதா னல்லமுதா ஞானந் தன்னை, யாயவனுக் கநேகவுபா யத்திற லறிவித்து மனைய மன் னன், றாயறிவி லிளைப்பாறப் பெற்றிலன்மா யோகினியாஞ் சூடா லலைக்கு, மேயகுணங் களுமறிந்தா னில்லைப்பா லகர்விஞ்சை மே வா தாற்போல். 925

ஒல்லும்வகை யுரையென்ன விராவகன்கேட் டனும்வசிட்ட னுத்த ரிப்பா, னல்லவுப தேசந்தா னம்பிக்கை மாத்திரத்தை நன் றாய்ச்செய்த,லெல்லையிலா வறிவுக்குச் சுத்தமா மகனறிவே யேது வென்று, சொல்லுதலு மீண்டந்த முனிதனுக்கு ரகுநாதன் சொல்லு கிற்பான். 926

மகனறிவே யேதுவெனிற் குருவசன மேதுவாய் வருவ தெங்ஙன், மிகுமறிவுக் கெனக்கேட்ப வசிட்டனதற் குரைசெய்

வான் விந்த வெற்பி,னகல்வனத்தி லொருவேடன் பெருங்குடும்பி
யவனொருநா ளடவி தன்னிற்,புகுநெறியிற் பலகறையொன் றினைக்
கெடுத்துத் தேடினன் புலம்ப லோடும். 927

மூன்றுநா டேடியபின் முழுமதிநேர் மணியொன்று முன்
னே கண்டா, னென்றுபல கறைதேட வேழுலகும் பெறுமணி
யை யெதிர்ந்தான் வேடன்,ஞான்றவுப தேசத்தாற் கல்வியான் ஞா
னமுறு மதுவே போல, வூன்றுறவொன் றைக்கருத வொன்றுவெ
ளிப் படுங்குருவி னுபதே சத்தால். 928

நலனுறுபே ரறிவுக்குக் குருவசனங் காரணத்தை நண்ணு
தேனும், பலகறைநன் மணிக்கேது வானற்போ லேதுவாய்ப் பல
த்தை நல்குங், குலவுசிகித் துவசன்றான் ஞானமிலா மையின்மோ
கங் கூடிச் சாலச்,சுலபமுறு தன்செல்வம் பெருங்கனலென் றெண்
ணியே துன்ப முற்றான். 929

அருந்தானம் பலகொடுத்தான் றவமிகச்செய் தான்றீர்த்த
மனைத்துந் தோய்ந்தான், வருந்தாமை யவற்றாலும் பெற்றிலன்
பே ரிடராலே மனநொந் தோர்நா, ளிருந்தானே காந்தத்தின்
மடிமேலே சூடாலை யிருக்கச் செய்து,பெருந்தாப முறுகின்ற துய
ரெல்லா மவளுக்குப் பேச லுற்றான். 930

ஆண்டவர சினும்புசித்த செல்வத்து மின்றுநா னைச
யற்றே, னீண்டவனம் புகநயந்தேன் றுக்கசுக மாபத்து நிதிக ளெ
ல்லா, மாண்டவனத் துறைவேரைத் துயர்செய்யா புவிபொருட்
டான் மயங்க வேண்டா, காண்டகுதன் கிளைநாசந் தோன்றுத
நாட்டினும்வன் காடு நன்றே. 931

பற்றின்றித் தனியிருக்கு மனத்தைப்போற் பனிமதியும் பது
மத் தோனும், பொற்றிரள்சே ரிந்திரனுஞ் சுகமடையா ரதலிற்
கான் போகு மென்னைக், குற்றமெனை விலக்கலைநீ கணவர்நயந் தது
விலக்கார் குலத்தின் மாதர், சிற்றிடையா யென்றுரைத்த மன்ன
னுக்குச் சூடாலை செப்ப லுற்றாள். 932

வசந்தநாண் மலர்விளங்குஞ் சரற்காலங் காய்விளங்கு மரபு
போல, விசைந்தநாட் செய்தொழில் விளங்குமாற் சரையாலே
யாக்கை நைந்தாற், பசைந்தமா லறவனமே போகலா மிளமைநா
ட் பான்மை யன்று, மசைந்திடா தொழிகவெனச் சூடாலை சொல்
லியதற் கரசன் சொல்வான். 933

தடாதொழிவா யேகாந்த வனம்புகுந்தே நிற்பேனென் சற்றுந் தாழேன், படாமுலைசீ சிறிதையுயா லுடன்வருதற்காகாசீ பாரைத் தாங்கி, விடாதிருத்தி நன்மனையிற் கணவரகன் றுற்குடும்ப மெலிவுறுமற், கெடாதளித்தல் குலமகளிர் விரதமென நீர்படிவான் கிளர்ந்து போனான். 934

பகற்பொழுது சென்றதற்பின் சந்தியை திகள்பண்ணிப் பாவை யோடுஞ், சுகித்தமளி யெனநிலத்திற் றுயில்வுற்றா னள்ளிரவிற் றுயிலும் வஞ்சி, யகத்திருப்ப மெல்லவெழுந் தவளறியா வகையேகி யறிந்தோர்க் கெல்லா, நகர்க்குறுநேலா வுதுமென்று யாவரையு நிறுத்திப்போய் நகரை நீத்தான். 935

சடமகலாப் பெருந்திருவே யுனைத்தொழுதே னில்லென்று தன்னேறே டேகி, யடவிபுகுந் தான்றினமோர் பன்னிரண்டிற் பலகிரியு மாறு நீங்கிப், படர்சனங்கள் செலற்கரிதாய் மந்தரவெற் புக்க கருகாம் புழுவம் புக்கான், மடலவிழ்பங் கயவாவி மலர்ப்பொழில்சூ ழவ்விடத்தில் வசிப்ப தானான். 936

சாலையமைத் தான்மூங்கிற் றண்டிழைத்தான் கமண்டலமுஞ் சமைத்தா னக்கு, மாலையுங்கந் தையுங்கனிகா யமைப்பனபாத் திரங்களுமான் றோலுஞ் சேர்த்தான், மேலையுயர் தவந்தொடங்கிச் சந்திய மமுஞ்செபமும் விடிந்த சாமஞ், சோலைமலர் பறித்தலிரண் டாஞ்சாம மிவ்வகையே தொழில்க ளாக்கி. 937

கடவுள்பூ சனைமூன்றுஞ் சாமநா லாஞ்சாமங் கனிகாய் கொள்ளல், படரிரவெல் லாஞ்செபமா மிவ்வாறு தவம்புரிந்தான் பகர்ந்த வேந்தன், மடவரலிங் கரையிரவிற் கண்விழித்தா டன்னருகு மன்னனைக் காணு, ளிடர்மருவி வாழ்வகன்று வனம்புகுந்தா னரசனென விரங்கி வாடி. 938

பதியொழிந்து கதியில்லைக் குலமகளிர்க் கரசனைநாம் பயிறுமென்று, மதிநினைந்து சாளரத்தாற் புறப்பட்டு வானேகி வானிற் சித்த, ரதிகமிதோர் மதியென்ன முகந்திகழப் போகின்றா ளாங்கே கண்டாள், கதிர்வடிவா ளுடனிரவிற் றனிப்போமன் னனைக் கண்டு கருது கிற்பாள். 939

இனியிவன்செய் வனவென்னென் றெண்ணுதலு மேற்செய்வ தெல்லாங் கண்டாள், கனிமொழியா டிரும்பினு ளின்றிவனை

நாஞ்சேறுங் கால மல்ல, துனியறப்பின் சேர்வதே விதிநெறியா மெனமீண்டு தொல்வீ டுற்றாள், வினவினர்க்கு மன்னவனோர் காரணத்தே கினனென்று விளம்பி யார்க்கும். 940

அரசனெழுங் காற்புவியைத் தனிக்காத்தாள் சமநோக்கா லணங்கு போல்வாள், வரிசையுடன் பதினெட்டாண் டகன்றுரு டாலேயுந்தன் மனையில் வாழ்ந்தாள், புரைசெறிகா னகத்திருந்தான் சிகித்துவச னவன்பாலும் போவ தற்கு,விரவியநா ளிதுவென்ன விருளிலே புறப்பட்டு விண்ணிற் போனாள். 941

மாருதத்தின் கழுத்தேறி மறைந்துபோய் மந்தரமா மலேயைச் சேர்ந்தா, ளாரமற மணிப்பூண்க ளின்றியே கருத்துலர்ந்த வங்க மாகி, யோருடனின் றதுகண்டா ளறிந்திலண்மா யோகத்தா லுணர்ந்து மன்னைக், கூறுமிடர் சிறிதடைந்து தன்னிலே மனத்தோடு கூற லுற்றாள். 942

அறியாமை யறக்கொடிதந் தோவந்தோ வதனுலிவ் வரசனெந்தான், பிறியாத ஞானமும்போ கழம்விடு மின்றளிப்பேன் பிறிதொன் றில்லேச், சிறியாணம் மனைவியிவ னென்றிகழா வகைவேறோர் தேக மேவி, நெறியாக வுணர்த்துவன்பே தைமைதீரு நெஞ்சினனாய் நிருப னின்றான். 943

பக்குவமா தலினிந்த விமலமனத் தேயறிவு பற்றிப் பாயுந், தக்கதிது வென்றெண்ணி யொருசிறிது தியானத்தாற் றூன்வே றாகி, மிக்கதொரு வேதியன்சே யாய்க்கணவன் முற்குதித்தாள் விண்ணி னின்று, மக்கணமே யவனேக்கிக் கடிதெழுந்தங் கிகார மனைத்துஞ் செய்தான். 944

பொன்னிறத்தன் வெண்டாள மாலேயன்வெண் டுகிலுடையன் புரிவெண் ணூலோ,னன்னிலத்தை விடச்சிறிது மேனிற்போன் றனைநோக்கி நடவிங் கென்று, தன்னிடத்தா தனங்கொடுத்தான் சிகித்துவசன் மறையவன்செய் தாலு மீண்டு,மன்னியற்கைத் தவமுனியே யுனைத்தொழுதே னென்றுமறு மாற்றஞ் சொல்லி. 945

ஆதனத்தி லிருத்தலுமே மன்னுரைப்பான் கடவுண்மகனைநீதான், போதலினுற் பயன்பெற்றே னின்றன்றோ வென்றுபலபூசை பண்ணி, யேதமற விட்டதே வதையென்றே கருதினனிவனு மந்தப், பூதலமன் னனைநோக்கி நின்குணமும் வினயமுமார் பொருந்து கிற்பார். 946

அதனாலே நீடூழி வாழ்தியா லுபசாந்தமான நெஞ்சால், விதமான கற்பனையற் றரியதவம் வீடுபெற மிகச்செய் தாயோ, சத வேள்வி வாசவனோர் வேந்தனும் பதம்விட்டுத் தவவனத்தை, யிதமாக நினைந்துறைத லசிதார விரதமெனு மியற்கை யொக் கும். 947

என்றமறை யவன்றனைப்பார்த் தாசனுரைப் பானிங் கென் னியற்கை யெல்லா, நன்றுணர்வுற் றுய்தேவ னுதலா விதில்வியப்பு நண்ணாற் பாற்று, நின்றனைநீ யார்புதல்வ னின்பெய ரென் வருபொருளே னிகழ்த்து கென்ன, வொன்றுமொழி யாது ரைப்பக் கேட்டியென மறையவன்சே யுரைக்க லுற்றான். 948

நாரதனென் றொருமுனிவன் மெய்ஞ்ஞான விளக்கொப்பா னன்னீர்க் கங்கைத், தீரமுறு பொற்றலத்திற் சமாதியிருந் தானந் தத் தியானம் விட்டோர், நேரமிருப் புழிவிளையாட் டொலியொன் று செவியுறவந் நெறியைப் பார்த்தான், பேரழகி லரம்பைதி லோத் தமையொப்பா ரிரண்டுசில பெண்கள் வந்தார். 949

கங்கையினீர் விளையாட்டிற் களிப்புறுவார் புருடரயல் காணு வாற்றாற், சங்கையறத் துகிலில்லா ரவர்வரத்தைக் கண்டுமனந் தாவி யோடித், துங்கவிவே கந்துறந்து சுகமடைய வுயிரலைந்து தொடர்ந்து நிற்கும், பங்கமிலா நாரதன்றன் மனநழுவிச் சுக்கில மும் பாய்ந்த தன்றே. 950

என்னனுமே நின்மொழியா மின்னமுதா லுளங்குளிர்ந்தே னெனினும் வேறு, பன்னுமொழி பரம்பொருள்போ லறிவரிதாற் குவிந்துளதாற் பத்தி சொல்வாய், பின்னருயர் பரம்பொருளை வருந்தியுங்கேட் கின்றேன்மேற் பேசு கென்ன, மன்னனுரை செயக்கேட்டுச் சூடாலை யாமறையோன் மைந்தன் சொல்வான். 951

நழுவுமன மெனுமத்த மதகயத்தை நாரதனார் நல்வி வேகப், பழுதில்பெருந் தூணிலே நற்புத்தித் தோட்டியாற் பற்றிக் கட்டித், தழுவுபடி கக்குடத்திற் றுதுவைவிட் டான்பாலைச் சால வார்த் தான், செழுமதியம் பாற்கடலில் வளர்வதுபோற் கருவளர்ந்து சிறந்த தன்றே. 952

குடநின்று புறப்பட்ட குமரனுக்கு விஞ்சையெனுங் குறைவில் செல்வப், படலங்க ளுண்டாக்கிப் பிதாமகன்பாற் கொடுபோ

கப் பதுமத் தோனுங், கடனென்று பேரனுக்கு மெய்ஞ்ஞானக் கரைகாணக் காட்டி விட்டா, னுடனந்நா ளன்னவனுற் குடம்பெற லாற் கும்பனெனு மொருபேர் பெற்றேன். 953

செய்யகலை மகளெனக்குத் தாயாங்கா யத்திரிதான் சிறிய தாயா, மையில்சதுர் வேதமெனுந் தோழருடன் விளையாடி வந்தே னென்ன, வையவுனைத் தரிசித்தேன் பெறவேண்டும் பேறெல் லா மமையப் பெற்றேன், மெய்யிதுவென் ருன்மன்னன் கும்பனு தற் கிவ்வாறு விளம்ப லுற்ருன். 954

எனையுரைத்தே னுனக்குமுத னீயாரென் செய்கின்ரு யெனு க்கு நீயு, முனையுரைப்பா யென்றலுமே மன்னனுரைப் பான்பிற விக் குள்ள மஞ்சி, வினையறுகா னகம்புகுந்தேன் சிகித்துவசன் பேர்நாட்டில் வேந்தாந் தன்மை, தனையிகழ்ந்திங் கிருக்கின்றேன் பிறவிக்கே விடாமலுளந் தவியா நின்றேன். 955

இப்பரிசே தவத்தொழிற்கு வேண்டினவெல் லாந்தேடி யியற்ரு நின்றுஞ், செப்பரிய துயர்விட்டுப் பெருந்துயர்சேர்ந் தேனமுதந் தீநஞ் சான, தொப்பரியா யென்றலுமே கும்பனுரைப் பான்குரவ னுணர்த்து ஞான, மெய்ப்படவந் தாற்சுகமாம் போது போக் குங்கிரியை விநோத மன்றே. 956

ஞானமில்லா தவர்க்கெல்லாங் கிரியையே கதியாநற் கிரியை வேந்தா, வீனமுறு வாதனைமாத் திரம்பலமா தலிற்பலமு மெய்த நல்கு, மானமுறு மிருதுவரின் முன்பலங்க ளங்ஙனே மாய்தல் போல,வூனமுறு வாதனைமாய்ந் தாற்கிரியை யுறுபலமு மொழிந்து போமே. 957

பலமதனை யொருகாலும் பலியாத சரவணத்தின் பரிசு போல, வலமருவா தனைதீர்ந்த கிரியையுமேற் பலந்தன்னை யளிக்க மாட்டா, வுலகமெலாம் பிரமமெனும் பாவனையா லஞ்ஞான மொழிந்து போனுன், மலமுறுவா தனைதோன்ரு கானலினீ ருண் டென்று மதிப்பா ருண்டோ. 958

வாதனைமாத் திரம்விட்டாற் சனைமரண முறுபிறவி மருவா தான, தீதில்பத முண்டாகும் வாதனையோ டேசேர்ந்த சித்தந் தானே,பேதைமையஞ் ஞானமாம் வாதனைதீர் மனந்தானே பிறவா

ஞான, மேதமறு ஞானத்தா னேயமுணர்ந் தாற்பிறவி யெய்தா தன்றே. 959

ஞானமிக நன்றென்றே யயன்முதலா நல்லோர்க ணவிலா நிற்க, நீநயவா திருந்தனையென் யானிவ் வுலகெங்ங னோர்ந்த தெங்ஙன், றானமுற விறக்குமென நினைகிலையென் பேதையர்போற் றளர்கின் றாயெ, ஞானகுர வரையிறைஞ்சிப் பந்தம்வீ டெப்படியென் றறிகி லாயென். 960

நிறையறிவின் சமமான நோக்கினரைச் சேவித்து நிரந்தரித்துப், பொறையுடனே வினவினான் முத்திபெறு நுண்ணறிவு பொருந்து மென்னா, மறையவன்போ தித்தலுமே கண்கணீர் சொரிந்திரங்கி மன்னன் சொல்வா, னிறையவனே யறப்புதுமை யுன்னாலே யுணர்வுற்றே னேழை யானே. 961

மடமையாற் பெரியவர்தஞ் சேவையைவிட் டுத்தனியே வனத்தில் வந்தே, னிடர்மேவு பாவமெலா மின்றொழிந்தேன் வனத் தினீ யெய்தி யென்னைக், கடனாக வுணர்த்துதலாற் குருநீயென் பிதாநீயென் காத லோனீ, திடமான மாணாக்க னாய்த்தொழுகின் றேன்கருணை செய்ய வேண்டும். 962

உதாரமிக வுண்டாகி யுணர்வுற்றாற் றுன்பமெலா மொழிப்ப தாகிச், சதாசுகமாம் பொருளாக நீயறிந்த தேதகனைச் சாற்று கிற்பாய், பிதாமகனைப் பாயென்ற மன்னனுக்குக் கும்பன்றான் பேசுகிற்பான், கதாவியெழு மனமொருப்பட் டுணர்தியே லுனக்குண்மை கழறு கிற்பேன். 963

சொன்னதுகைக் கொள்ளாது விநோதத்தாற் கேட்பவர்க்குச் சொன்ன வார்த்தை, பன்னியுமோர் பயனாகா திருளிலே விழிக்குணர்வு பலிப்ப துண்டோ,வென்னவுமன் னவனுரைப்பான் வேதவிதி யேநீயிங் கிசைத்த வெல்லா, நின்னருளாற் கைக்கொண்டு சத்தியமே நன்றாக நினையா நிற்பேன். 964

என்று மன்ன னுரைசெய்ய வெழிலார் கும்ப னுரைசெய்வா
னொன்று மறியாப் பாலகனுக் குரிய தந்தை யுரைப்பதுபோல்
வென்றி மன்னா நானுனக்கு விளம்பு முறையை வினவாது
நன்றி தென்றே கேளென்று ஞானந் தோன்ற நவில்வுற்றான். 965

மன்னா வீதோர் கதைகேட்பாய் மற்றிக் கதையி னுறுபொருளைப், பின்னா னுரைக்கேன் முன்னாளிற் பெரியோ னொருவன் பெருஞ்செல்வன், பன்னா நின்ற கலைநூல்கள் பலவும் வல்லோன் ஞானமிலோ, னன்னா னுயர்சிந் தாமணியை யறவே முயன்று தேடுற்றான். 966

மிக்க வருத்தத் தாற்றீர மேவ வேண்டு மெனுமுயல்வாற்
றக்க மணிகிட் டினவருந்திச் சால முயன்றாற் கேன்பிடையா
தொக்க சுடர்மா மணிதன்முன் றோன்றி மதியின் விளங்கிடவு
நக்க மணியைக் கைக்கொள்ளா நாநா விதமாய் நாடுற்றான். 967

சிந்தா மணியன் றிதுவேறோர் சிறுமா மணிசிந் தாமணிதா
னொந்தா ராய்ந்து வாணாட்போய் நடங்கும் போதல் லால்வருமோ
னைந்தா னும்பா வியர்க்கெய்தா நல்லோர் சிலர்க்கு நண்ணா னுறுந்
தந்தாம் வினையை நினையாமற் றளர்ந்தாற் கடிதி னெய்திடுமோ.

மனித னானென் றவமற்பம் வல்ல பங்கள் சிறிதில்லைத் [டுமோ
துனிசெய் நிர்ப்பாக் கியனெனக்குத் தோன்றா மணிமுன் றோன்றி
நனியின் னழுந்தே டுதுமென்று நன்மா மணியை யெடுத்திலனாற்
புனித மணியும் போயினதாற் பொல்லா தார்க்கு நலனாமோ.

மீண்டும் வருந்தித் தேடுற்றான் வெம்பிச் சிலநா ளுழன்றனவே
யாண்டு மறைந்து சிலசித்த ரவனை நகுவான் காட்டுவிக்கக்
கீண்ட வளையின் முறியொன்று கிடப்பக் கண்டா னறிவில்லான்
மாண்டசிந்தா மணியிதென மகிழ்ந்து வியந்து கைக்கொண்டான்.

வெந்த மணியை மிகப்பேணி மிக்க நிதியெல் லாம்விட்டான்
வந்த மணியெல் லாமளிக்கு மற்றநிதிக ளென்னென்றே
சிந்தை செய்தா னித்தேசந் தீயோ ருண்டு சுகமில்லை
யிந்த விடந்தீ தெனவனத்தி லிருந்து சுகிப்போ மென்றகன்றான்.

வாழ லாமென் றெண்ணிப்புன் மணியால் வருத்த மெலாமுற்றுந்
தாழ நின்றான் வேறொன்று சாற்றக் கேளாய் புந்திக்குச்
சூழ வறிவுண் டாக்குவிக்குந் தொல்லை விந்த வனத்திடையே
வேழ மொன்று கரிகட்கு மேலா மிகவு முயர்ந்ததுவே. 972

வயிரத் தினுமீண் டறக்கூராய் வலிதா கியகோ டிரண்டுளது, பயில்வுற் றிருப்புக் கயிற்றாலே பாகன் பிணித்து விலங்கிட்டான்,

செயிர்பற் றியபல் பிணிப்பாலே சிந்தை தளர்ந்து கொம்பிரண்
டாற், குயில்வித் துளவன் கட்டெல்லாங் குலைத்த தொருநாற் கடி
கையிலே. 973

விலங்கு முறிந்த படிகண்டான் வேழந் தலைவீழ்ந் துயர்பாகன்
கலங்கி வீழ்ந்தா னவன்வீழக் கண்ட களிறு கருணையினான்
மலங்க வதஞ்செய் யாதகல மற்றப் பாகன் மீண்டெழுந்து
சலங்கொண் டேகி யக்களிற்றைத் தானே தேடி யெதிருற்றான்.

ஒருகா னிடையே யக்கரியை யுற்றான் குழியொன் றுண்டாக்கிச்
சருகாற் கொடியான் மறைவித்தான் றந்தி சிலநா டிரிந்தங்கே
வருகா லையில்வீழ்ந் ததுகுழியில் வந்த பாக னறப்பிணித்தான்
கருதா நின்ற துயரோடுங் களிறு நின்ற திப்போதும். 975

தனது வீட்டிற் சிறையிருக்குந் தனிமா வலிபோ னின்றகரி
முனமுன் வீழ்ந்த பகைப்பாகன் மூளை சிதறிற் றெனில்வந்து
வனவெங் குழியிற் கட்டுண்டு மயங்க வேண்டா மதுபோல
வினவி நிகழ்கா லத்தான்மேல் வினைநோக் காதார் மெலிகுவரே.

என்ற லோடுஞ் சிகித்துவச னெந்தாய் சிந்தா மணியாலும்
வென்றி வேழந் தன்னாலும் விளம்பு கதையை விளக்குகெனவோதா
நின்ற கும்ப னுரைசெய்வா னெடுநூற் பொருள்கள் பலவுணர்ந்
னன்றி ஞான மில்லாதோ னன்மா மணிதே டியவன்றான். 977

என்ன வுரைத்த துணையாநீ யெல்லா நூலுங் கற்றுணர்ந்து
மன்னு சாந்தி பெற்றிலையா னணியென் றதுதா னேதென்னி
லுன்னு வஞ்ச மறவெல்லா மொழித லாகுந் துயரனைத்துந்
துன்ன வில்லா வதுதேடத் தொடங்கி யரசு துறந்தனையால். 978

மனையுங் கிளையுந் துறந்திங்ஙன் வனத்தில் வந்தாய் நாடக
ன்று, யனைய சகலத் தியாகநிறை வாகு மனவி லதன்விகற்ப, நினை
வில் வளர்ந்து விண்மூடு நீல முகில்போ லுன்மறைக்க, வினைய சக
லத் தியாகமுய ரின்ப மல்ல மகத்தல்ல. 979

பிறிதொன் றுயர்ந்த துளததுதான் பெருநாண் முயன்று
லெய்துமென, வெறிய விகற்ப மனநிறைய மிக்க தியாகம் போயி
னதாம், நெறிகொள் சகலத் தியாகம்போய் நினது தவமாம் வலை
யின்முறி, யறிவில் விகற்ப விழிபாற்கண் டதுநன் றென்றே யழுங்
குதியால். 980

அளவற் றெளிதாஞ் சுகமகற்றி யரிதா யற்ப மாம்பொருளி, னுளமுற் றவரே யுயிர்க்கொலைஞ ருயர்வஞ் சகரென் றுலகுரைக்கும், வளமிக் குயர்சிந் தாமணிநீ வந்த தென்றெண் ணரியதவத் தாற், றளர்வற் றிலைபெற் றிலையொன்றுந் தந்தி யென்ற தினிக்கேளாய். 981

மதமா வென்ற துணையாகும் வைராக் கியமும் விவேகமுமே
யதனின் கொம்பா முன்குணங்க ளானை மேற்கொண் டுழல்பாகன்
விதமா வுன்னை மெலிவிக்கு மிருமஞ் ஞான மதனாலே
சிதறு நின்று யரங்கைகளாற் செலுத்து மவனாற் கரிபோல. 982

இருப்புக் கயிறும் விலங்குகளு மிச்சா பாச மென்பனவாம், பெருக்க விவற்றாற் கட்டுண்டாய் பேசு மிரும்பின் மிகவன்பா, மிருப்புக் கயிறும் விலங்குகளு மிகுநாட் செல்லிற் றேய்ந்தொழியுஞ், செருக்கு மாசை மேன்மேலே திடமாய் வளருந் தீர்க்கமுற. 983

மூரிக் கயிறும் விலங்குகளு முறித்த தானை யென்றதுதான்
பாரிச் சுகமெல் லாநீமுன் பற்றறத் தொழித்த படியாகுஞ்
சூரிற் பாகன் வீழ்ந்ததுநின் றுறவின் மடமை வீழ்ந்ததுவாம்
பேரிச்சையைநீக்கிடிற்பின்னைப் பிறவிதரும்பேதைமையுண்டோ.

போக மயலை விரத்தியினாற் போக்க நினையி லஞ்ஞான
மேக நினைந்து வெட்டுமரத் திருக்கும் பேய்போ னின்றலையு
மோக மறவே போகங்கண் முற்றும் விவேகத் தால்விட்டால்
வேக முறப்போ மஞ்ஞானம் வெட்டி வீழ்ந்த மரப்பேய்போல்.

மட்டில் போக மெலாமொழித்தான் மடமைத் தொடர்ச்சியெல்லாம்போம், வெட்டி வீழ்ந்த மரநின்று வீழ்ந்து போம்புட் கூடுகள்போற்,கிட்டி வனநீ யடைந்தவேளை ஞானம் வீழ்ந்துளதாற், றட்டில் சகலத் தியாகமெனுந் தனிவா ளாற்கொன்றிலையதனை. 986

அதனான் மீள முளைத்தெழுந்த வஞ்ஞா னத்தா லறநொந்தாய், மதமா வுக்குப் படுகுழியை வகுத்தான் பாக னென்றதுதான், றிதமா யுனக்குத் தவத்தன்பஞ் செறியஞ் ஞானஞ் சேர்த்தியதாஞ், சுதமார் குழிமேன் மென்கொடிக ளியாங்கு தவஞ்சேர் கற்றெழில்கள். 987

இவ்வா றின்று மிடர்தவமா மிந்தக் குழியி லுழக்கின்றாய்,
வெவ்வாள் வலிமா வலிசிறையாய் மிருபா தலத்தி லிருப்பது
போற்,றவ்வா மொழிமென் குடாலை சாற்று ஞான மிழந்தனையே,
னைவாய் சகலத் தியாகத்தை நழுவி னையே னவில்கென்ன. 988

வேந்த னுரைப்பான் பார்விட்டேன் வீடு விட்டே னிதிவிட்டேன்
காந்தை தனைவிட் டேன்சகலத் யாகங் கைவிட் டதுமற்றேன்
றோர்ந்து புகலென் றனுங்கும்பன் செப்பு வானீ தேசமுதற்
சார்ந்த வெல்லாம் விட்டாலுஞ் சகலத் யாக மன்றாகும். 989

எல்லாத் தினும்பற் றுண்டுனக்கவ் விச்சை யெல்லா மறவிட்டு
நல்லார்க் குரிய நல்லின்ப நண்ணு கென்ன மன்னுரைப்பான்
மல்லார் புவிவிட் டதுசகல மன்றேல் வனமே யெனக்குளது
கல்லாற் றருவா னிறைகாட்டிற் காத லுறுவா தனைவிட்டேன். 990

இனிநான் சகலத் தியாகத்தை யெய்தி னேனென் றனுங்
கும்பன், கனியார் மரமு நெடுமலையுங் கழன்றாற் சகல மன்றுனக்
குத், துனியார் பற்றுண் டனைத்தினுமத் துன்பந் துறந்தாற்
சுகமென்னப், புனிதா விதுவு மன்றாகிற் புகல்வே னெனப்பூ பதி
புகலும். 991

கந்தை தண்டு செபமாலை கலைத்தோல் பாண்டங் கமண்டலமுண்
டெந்தையிவற்றை விடுகின்றே னென்று கூட்டி யெரிகொளுத்திச்
சிந்தை களித்து வெற்றுடலாய்ச் சிக்கற் றனன்பற்றில னென்றே
முந்தை யறிஞன் முகநோக்கி மொழிய லுற்றான் சிகித்துவசன்.

அம்ம வம்ம கடவுண்மக னனவுன்ன லறிவுற்றேன், மம்ம
ராழிந்தேன் கேவலமாய் மலங்க ளற்றே னிதுவென்று, விம்மு
சங்கற் பத்தெய்தா வேறொன் றறயா வையும் விட்டேன், செம்மு
பொருளின் றிரளெல்லாஞ் செகந மளிக்கும் பந்தனையே. 993

பொருள்க ளெம்மட் டெம்மட்டுப் போன தெம்மட் டம்மட்
டுந், தெருளு மனந்தான் சுகமடையுஞ் செயித்தே யந்தச் சுகம்
பெற்றேன், மருள்செய் பந்தங் களுமற்றேன் மாசிலாத திகம்பர
னு, யருள்செய் சகலத் யாகத்தை யடைந்தேன் வேறென் னுள
வென்றான். 994

கும்ப னுரைப்பான் சகலமும்விட் டிலைநீ யிந்தக் கூத்தாடல்,
வம்பு காணென் றனுமன்னன் மனத்தி னினைந்து மீண்டொட்

பான், வெம்பு கரணப் பாம்புகள்சேர் வெள்ளென் பூறு முடலொ
ன்றே, ்யிம்பர் மீந்த தெனக்கிதனை யின்றே யெளிதின் விடுகின்
றேன். 995

காண்டி யென்றோர் வரையேறிக் கவிழு மளவி லுயர்கும்ப
னீண்டி தென்னே யிவ்வுடற் றென்ன குறைசெய் ததுபேதாய்
மாண்டு பயனென் னிளங்கன்றை வல்லே றடர்ந்து முனிவதுபோ
ற்றண்டி விழுந்து மெய்விடினுஞ் சகலத் யாகி யாகாயே. [ற்

எத்தா லுடலமசைகின்ற தெதுதான் பிறவி கருமத்தின்
வித்தாய் நின்ற ததுவிட்டால் வேந்தா வெல்லாம் விட்டனவா
நித்தா ரமிதென் றனுமுடலை யசைத்துப் பிறவி நிறைவித்தாய்த்
தத்தா நின்ற தேததனைத் தவிறு மாறு சொல்லென்ன. 997

இயலார் கும்ப னுரைசெய்வா னெல்லாச் சகமு மிதுவாகி
வியனுர் சீவன் பிராணனென மேவு பெயர்கள் பலபெற்றுப்
பயனுர் சடமு மசடமுமன் றாகிப் பரந்த சித்தத்தை
யுயர்வோர் சகல மென்றுரைப்ப ருலகு மிதுபந் தமுமிதுவே. 998

சனன கருமங் களின்வித்தாய்த் தருவை யசைக்குங் காற்றேபோ
றினமு முடலை யசைப்பதுவுஞ் சித்த மிதனைத் தீர்வதுவே [ற்
யனக சகலத் தியாகமதா மதுவே பரம வானந்தம்
வினவு பிறவெல் லாமிகவும் வெருவு கின்ற வெந்துயரே. 999

சகலத் யாகந் தனைச்செய்து சாந்த னுய்மற் சரமின்றிப்
பகுதி நிலையாற் றெளிவுற்றுற் பயின்ற வடிவே ததுநீயாய்
நிகழு வாயென் றனுமன்ன னுரைப்பா னீசொன் னெஞ்சுக்குப்
பகரு முதலாம் வடிவேதெப் படிநான் றீர்ப்ப துரையென்ன. 1000

மற்றுங் கும்ப னுரைசெய்வான் மனதுக் குருவம் வாதனையே
யுற்ற மனமென் றுரைக்குமுறை யுறுவா தனையின் பரியாயங்
குற்ற மெல்லாங் குவிந்திருக்குங் கூடா ரானென் பதுதானே
செற்ற மனமா மரத்துக்குத் திகழும் விதையாந்தேர்வேந்தே.

ஆதியிலுண் டானவித னங்குரந்தா னனுபவமெய் யாயறுதி
யிடுவ தாகி, யோதுமுரு வன்றியிலே யுதிக்குமதத்தை யுரைசெய்
வர் புந்தியென வுரைத்த விந்த, நீதியுறு புந்தியெனு மங்கு ரத்தி
ற்றவளர்வைக் கொம்பைச்சங் கற்ப மென்பர், பேதமிவை யா
சித்தம் புந்தி பெரியமன மென்பதெலாம் பேர்க டாமே. ()

இனையமன மெனும்பொல்லா மரத்தின் கொம்பை யெப்பொழுதும் வெட்டிவே ரீர்த்து மாய்ப்பாய், வினையுருவா தனைபணைகள் பலகாய் காய்க்கும் வேதனைவா ளாலுள்ளே வெட்டின் மாயு, நினைவறப்பற் றறமவுன மாகி வந்து நேர்ந்ததுசெய் வாருள்ளே நெஞ்சைச் செற்றோ, ரனையமரப் பணைவெட்டற் கௌண மென்ப ரதன்வேரை யறுத்தலே யறநன் றென்பார். 1003

ஆதலினான் மிகநல்ல நெறியா லேநீ யந்தமன மரத்தின்வே ரறுத்துச் சுட்டாற், சாதமுறா தென்றனுமே மன்னன் சொல்வான் றனிமரத்தின் வித்தாகு மகம்பா வத்தை, மாதவனே சுடக் கனலே தெனவுங் கும்பன் மறுத்துரைப்பா னுறுரென் றெண்ணுகின்ற, போதவிசா ரந்தானே மனத்தின் வித்தைப் பொன்றுவிக்குங் கனலெனவும் பூபன் சொல்வான். 1004

என்னுடைய புந்தியினு லெண்ணி னேனு னிச்சகநா னல்லமல வுடனு னல்ல,நுன்னுபொறி களுமல்ல மனமு மல்ல தொடர்புந்தி யல்லவகங் கார மல்ல,வின்னசட மாதலினு லெனவுங் கும்பனிவையன்றேல் வேறுர்நீ யியம்பு கென்ன, மன்னனுரைப் பானெல்லாம் படைத்தளித்த மாசறுசின் மாத்திரமாம் வடிவநானே. 1005

இந்தவடி வாமெனக்கோ ரேது காணே னிடர்மனத்தாருவின்விதையா மகங்கா ரத்தை, யுந்தும்வகை யறிகிலே னுந்தவுந்த வோடிவரு மிதனுனுள் ளூடைந்தே னென்ன, வந்தணன் சொல்வான்மன்னு கார ணத்தை யன்றியோர் காரியமுண் டாக மாட்டா, முந்துமகங் காரகா ரணத்தை நாடி மொழியென்ன மீண்டரசன் மொழிவ தானுன். 1006

அகமென்னுங் குற்றத்தின் கார ணந்தா னறிவாகு மவ்வறிவிங் கடங்கு மாறென், மிகவுங்காண் பவற்றிலறி வெழுத லாலே மெலிகின்றேன் காண்ப வற்றை விடுமா றெங்ஙன், புகல்கென்ன மீண்டந்தக் கும்பன் சொல்வான் போதத்தின் காரணநீ புகன்முற் பின்னை, நிகழுங்கா ரணமுமகா ரணமுஞ்சொல்வே னினக்கு நானெனவதற்கு நிருபன் சொல்வான். 1007

புகன்றவுடன் முதற்பொருளுண் டாத லாலே போதமுளதாமவைபொய் யானு லில்லை, யகங்காரவே தனமென்னு மனத்தின் வித்து மடங்கிவிடு மெனவதற்குக் கும்பன் சொல்வா,

னுகர்ந்தவுட லாதியுள தேற்சித் துண்டா முடலாதி பல்பொருள்க
ளிலாத போதி, னிகழ்ந்தவறி வெப்படியே நின்ற தென்று நிகழ்த்
தென்ன மீண்டந்த நிருபன் சொல்வான். 1008

காசரண முதலங்க முதலாய்ச் செய்யுங் கருமபல முளதாய்
க்கை யாளுங் காயங், குரவவில தெனும்படியென் னென்னக் கும்
பன் கூறுவான் கார ணத்தைக் கூடாதென்னில், விரவியகா ரியந்
தானு மிலதா மந்த வேதனமு மயக்கமே மிகுமயக்கால், வருவன
வெல் லாமிலதா மேது வின்றி வருபொருள்பொய் யாங்கயிற்றில்
வருநா கம்போல். 1009

என்றனுமே யாதிமுத னுள்ள வேதா வியற்றியபல் படைப்
பாகு மிந்த ஞால, நின்றவவ னிதற்குக்கா ரணமல்லாத நெறியே
தென் றனுங்கும்ப னிகழ்த்து கிற்பான், றுன்றுசிருட் டியின்
முன்பு வெறிதாய்ச் சாந்தந் தொடர்பிரம மேயுளதாய்த் துலங்கு
மந்த, வொன்றொழிய விரண்டில்லாக் கார ணத்தா னுயர்வேதா
காரணத்தை யுறுனென் றோத. 1010

காவலன்பார்த் துயர்பிரமம் வேதா வுக்குக் காரணமன் றோ
வென்னக் கும்பன் சொல்வான், கேவலமச் சுதமநந்தஞ் சாந்தஞ்
சுத்தங் கேடுபிறப் பிடர்தோற்றங் கிட்டா தென்றும், பாவனை
யற் றடிமுடிவற் றொன்றாய்த் துன்றிப் பகர்வரிதாய் நாடரிதாய்ப்
பரம நிற்கும், தாவரிய வதுவெங்க னேது வெத்தாற் சமைப்பவ
னாய்ப் புசிப்பவனாய்ச் சாரு மாறே. 1011

ஆதலினா லீதொன்றுஞ் செய்த தல்ல வடுந்துளவிச் சுக
மில்லை யறிவு மட்டு,மேதருசங் கற்பிதமே வேதா வாகு மெய்யாக
வறிவின்றி வேறொன் றில்லைச், சேதனமாத் திரத்துதித்த சிருட்
டி யந்தச் சேதனமே வடிவென்று செப்ப லாகு, மோதியசெய்
வோன்புசிப்போ னிரண்டு மல்ல வுறுபவந்தீர் பிரமமே யுள்ள
வெல்லாம். 1012

திடமுறநிச் சயித்துள்ளே யஞ்ஞா னத்தைச் சிதைவித்தா
லஞ்ஞானஞ் சிதைந்த தேயாம், படர்கருமச் சிதைவினா லன்றி
மோகம் பகர்நிலைமை நழுவாது பகரஞ் ஞான, மடைவுறத்தேய்ந்
திடிற்பழைய நிலைமை நீங்கா வாதிபத மாமதனா லாதி தேவன்,
றடமுறுசிற் சொருபத்தாற் றன்மனத்தாற் றுனேநித் தனுஞ்
சிருட்டி தந்து நல்கும். 1013

ஆற்றுமதத் துவமான வதனாற் றானே யயனென்று சொலப்
பட்ட தகில மாகித், தோற்றுமிவை யுபசாந்தச் சொரூப மாகுந்
தோன்றலே யெனவொக்குஞ் சொன்ன வெல்லா, மேற்றனவே
படைப்பவனின் மையினால் வைய மில்லையா மதனாற்பல் பொரு
ளோக் கில்லைத், தேற்று கின்ற விவ்வகையா லறிந்தே னன்றாய்ச்
சிவமானேன் வேறொன்றுந் தெரியக் காணேன். 1014

எனைத்தொழுதேன் பல்பொருளோக் கறிவினாலே யிப்படி
பொய் யாய்த்தோன்றிற் றிப்போ தத்தா, வினைப்பினுப சாந்த
மாய் விசும்பி னைப்போ னிற்கின்றே னெனநிருப னிகழ்ந்த லோ
டுந், தனைத்தருகும் பனுஞ்சொல்வான் றேச காலந் தடந்திசைச்
சிந் தனைத்தொழில்கள் சார்ந்த வெல்லா, மனைத்தையுங்காண் பது
சகத்தைப் பிறித்துக் காண்கை யதுவெடுநா ளிற்சாந்த மாகிப்
போகும். 1015

சாந்தமுற வழிவற்ற பிரம மாங்கே தனிநிற்கு மெனக்கும்
பன் சாற்ற லோடும், வேந்தனறி வுற்றுமிக விளங்கி நின்றான்
வெம்மாயைக் குகைநின்று வெளியி லானா, னந்திறமே பணநி
யறக் கும்பன் சொன்ன வதுகுறித்துத் தனதாமித் தற்ப தத்தே,
காந்தியுறச் சேர்ந்தொளித்தான் மனமுங் கண்ணுங் கட்டுரை
யற் றாணிறைந்தான் கணத்தி லாங்கே 1016

ஒருமுகுர்த்த மிருந்துணர்ந்து விழித்த லோடு முயர்கும்ப
னுரைசெய்வா னுவாதாய் நன்றாய், நிருமலமாய்ச் சுத்தமா மிக
மெத் தென்று நிருவிகற்பங் களுக்கெல்லா நிலய மாகித், திருமிகு
மிப் பதத்திலே சுகமாய்த் துன்பந் தீர்ந்தனையோ வுள்ளுணர்வு
தெளிவுற்றாயோ, வருமயக்க மொழிந்தனையோ ஞேய நன்றா
யறிந்தனையோ காண்பனகண் டனையோ வென்றான். 1017

நரபால னதற்குரைப்பான் பகவனேநின் னருளாலே பெருஞ்
செல்வ நலத்தான் மிக்குப், பரமாகி யனைத்திற்கு மேலாய் விஞ்சு
பதங்கண்டே னகோவகோ பரம ஞானந், திரமான பெரும்பெரி
யோர் கூட்டங் கிட்டாத் தெள்ளமுதாய்ப் பேரின்பந் தேங்க நல்
கும், வரமாநின் கூட்டத்தா லொருகா லத்தும் வாராத நல்லமுது
வரப்பெற் றேனால். 1018

அனந்தமா மிவ்வமுத மெனக்கு முன்னா ளரிதான தென்ன
வெனக் கும்பன் சொல்வான், மனந்தனிலே சாந்தியாய்ப் போ

கங்கைத்து வன்பொறிமீண் டுளமடைமை மாய்ந்த போதே, புனந் தருசெங் குசும்பைநீ ரழுக்குப்போன புடவையிலே நிறமுறல் போற் புதல்வர் நெஞ்சிற், கனந்தருநற் குருவசனங் கலந்து நன் றுங் காயமலங் களுமரத்தின் காய்கள் போற்போம். 1019

உள்ளத்தி லிருமையென வொருமை யென்ன வுன்னுதலஞ் ஞானமிவை யொழிதன் ஞானந், தெள்ளுற்ற கதியுமது தெளிந்து முத்தி சேர்ந்தனைசித் தமும்விட்டாய் செல்வ னாகித், தள்ளுற்ற மலநீங்கி மௌனி யாகித் தனிநிற்பா யென்றலுமே தமையு ணர்ந்தோர், கொள்ளுற்ற தொழிலெல்லா மனத்த தன்றே கொள்ம னமன் றியினடக்குங் கொள்கை யென்னே. 1020

உரையெனமன் னவன்கேட்பக் கும்பன் சொல்வா னுள மென்று சொன்னதுவே றென்று மன்று, கரையறுபல் பவந்தரு வா தனையே யுள்ளங் கண்டதனை யறிந்தாலக் கவலை யில்லை, வரை யறக்கண் டவர்கருமங் களிற்சரிக்கும் வாதனைதான் மறுபிறப்பை வழங்கா தந்தப், புரைமனஞ்சத் துவமென்பர் சித்தமென்று போத மில்லாச் சித்தத்தைப் புகல்வ ரன்றே. 1021

ஞானமனஞ் சத்துவமே யென்று சொல்வர் ஞானமிலா தார் சித்தநடையி னிற்ப, ரீனமறு ஞானிகள்சத் துவத்தேநிற்ப ரே தொன்று சுவர்க்கம்வீ டெல்லா நல்கு, மானவையெல் லாம்விட் டுச் சமமாஞ் சோதி யானாலே தாகுதியிங் கதுநீ யாகு, மூனமுறு பொருளொன்றுங் கைக்கொள் ளாம லுள்ளமதை வறநிற்பா யுறு தி யாக. 1022

நெஞ்சிலா தவர்பிறவி நெடுந்தூ ரம்போ நீணிலத்திற் றுய ரொன்று நேர்ந்த தல்ல, வஞ்சுமன மதைதவிலுண் டான தாகு மசைவசையா மைகளிரண்டு மயிக்க மாக்கிச், சஞ்சலமாற் றிச் சித்தாம் படிநில்லென்னத் தரணிபன்சொல் வானமிக்கஞ் சார்வ தெங்ஙன், விஞ்சுமசை வசையாமை யிரண்டுமொன்றாய் விடும் படிசொல் லெனக்கும்பன் விளம்ப லுற்றான். 1023

உவரிநீர் போலுலகெல் லாமொன்றன வுணர்வுமாத் திரம துதா னுற்ற புந்தி, கவர்வுறுத லாலசையு நிறையு நீர்தான் கல் லோலத் தாலசையுங் கணக்கே போலச், சிவமுணர்வு மாத்திர மெய்ப் பிரம மாதித் திரள்பெயராய்ப் புகல்பொருளைச் சகமென் றெண்ணித், தவமருபே தையர்காண்ப ரறிவு தானே சற்றசைந்த மாத்தி ரத்தாற் சருக்க முண்டாம். 1024

உண்டான சிருட்டிதா னன்றுப் பார்க்கி லொழிந்துபோ முறுதியா யுணரா வாற்றாற், கண்டார்கள் கயிற்றிலே பாம்பென் பார்போல் காட்சியுறுங் கலைநூலாற் கற்றோர் சார்வாற், றண்டாத பரிசயத்தாற் சிலகா லத்திற் றுவைமன நின்மலமாய்ச் சசிபோ னிற் கிற், பண்டாய வநுபூதி மயமாய்த் தானே பாக்கியவான் களுக்கிந் தப் பார்வை தோன்றும். 1023

உலகத னுதய நாச முண்மையை யுரைத்தே னித்தை
நலனுறச் செய்து நாடி நழுவுறு நயந்த வண்ணம்
விலகலற் றெதிர்ந்த வெல்லா மெய்ப்பதந் தாக்கி நிற்பாய்
திலகமாஞ் சொன்ன நாடு சேர்வனுன் கால மீதே. 1024

அயனுல கினும்பொன் னூற்றங் கெனைக்கா ணென்னிற்
பயமுற முனியு மெங்கை நாரதன் பரிந்த மைந்த
ருயர்குரு முனியப் பண்ண வொருசற்று மொண்ணு மன்று
மயலறப் பேத நீக்கி மகிழ்ந்திதை நோக்கி நிற்பாய். 1025

போதுநா மென்னக் கும்பன் மறைநதனும் பூப னென்னுஞ்
சீதளஞ் சந்தஞ் சாந்தந் தெள்ளமு தாற லொக்கு
மீதொரு பதவி யென்னு விருந்தவா றென்னே யென்னே
கோதிலன் சந்து வத்திற் குளிர்வுறச் செய்த தென்றான். 1026

ஆனவா தனைக ளின்றி யசைவற்றுப் பேரா னுகி
மோனமாய் நிருவி கற்ப மாய்ப்பற்று முற்று மற்ற
தானமே யமுந்திக் கற்போற் றருவைப்போற் சுவர்போ லின்றான்
போனரு டாலே பண்டைப் பொற்கொடி வடிவ மெய்தி. 1207

அம்பரத் தேகி யந்தப் புரம்புக்கா னவனி காவ
னம்பர மென்று காத்தா னடைந்தது வருட மூன்று
கும்பனுய்க் கணவன் காட்டைக் குறுகியாங் கவனைக் கண்டா
டம்பமாய் நிருவி கற்ப சமாதியி லிருத்தல் கண்டு. 1028

அறிவிப்போ மென்று சிங்க நாதத்தா லாத்த மட்டிற்
பொறியுற்ற தில்லை மேன்மேற் றெளித்திவன் பூபன் றன்னை
மறியத்தன் னுதனும் வீழ்ந்து மறிந்திலன் மற்றென் னென்று
நெறியுய்க்குங் கும்பன் மேனி மேவிமை நினைப்ப தானுள். 1029

உத்தமன் றற்ப தத்தோ டொன்றினன் வியப்பி தம்மா
வித்தனி யுடலைப் பார்த்தா லிதயத்தி னறிவின் விந்தாஞ்

சத்துவ சேட முண்டேற் றலேவனேப் புணர்வ மெல்லென்
றத்தியால் வாழ்து மன்றே லங்கனே வடிவம் விட்டு. 1030

மறுபவ முருத வண்ண மாசறு பதத்தைச் சேர்து
மறுதியீ தென்ன வுன்னிப் பரிசத்தால் விழியா லன்று
னுறுமறி வுக்கு வித்தா யுற்றசத் துவசே டந்தா
னிறுதியற் றிதயந் தன்னி லிருந்தது கண்டா ளென்ன. 1031

கேட்டனு மிராமன் சொல்வான் கிளர்மனந் தீர மாய்ந்து
காட்டலோட் டம்போற் சுத்தக் கண்ணிலே கலந்து ளோருக்
கிட்டுசத் துவசே டந்தா னெங்ஙனே யிருக்கு மென்ன
வாட்டமின் ஞான மிக்க வசிட்டமா முனிவன் சொல்வான். 1032

வித்தினுட் பூவுங் காயு மேவல்போ லிதயந் தன்னிற்
சித்தின்கா ரணம தான சத்துவ சேட நிற்கு
முத்தனும் மனமி றந்தான் மொய்யுடல் போகா போகத்
தொத்தவின் பத்துன் பங்கள் சார்தலற் றொருமைத் தாகும்.

ஆதலா லிராம னேயவ் வணங்கனு ளந்த மெய்விட்
டேதமி லாதி யந்த மின்றிய வறிவி னுட்போய்
மேதகு சத்து வஞ்சேர் வேந்தனெஞ் சசையப் பண்ணித்
தீதிறன் னுடலின் மீளச் சேர்ந்தனள் கூடார் புட்போல். 1034

கும்பன்மெய் யாகிப் பூமே லிருந்தனள் குழல்போற் பாடத்
தம்பமா யிருந்தோன் மெய்யிற் சத்துவ குணஞ்சார் போதந்
தும்பிநேர் பாட்டைக் கேட்டுப் பையப்பையச் சூரி யன்சே
ரம்புயம் போல்வி ரிந்து வவன்மன நிலையா யிற்றே. 1035

கண்டனன் கும்பன் றன்னேக் களிப்புறு மனத்த னுகித்
தண்டலி லருளா லென்னே வாழ்விப்பான் றுனே வந்தான்
பண்டையக் குரவ னென்று பரவிநன் மலர்தூ வேய்த்த
மண்டல வேந்தன் றன்னே மற்றவ னோக்கிச் சொல்வான். 1036

இங்குநின் றகன்ற நாடொட் டின்றள வுன்பாற் சித்தம்
பங்கற நின்ற தண்டர் பதியுநின் கூட்டம் போல
வங்கித மல்ல வென்ன வண்ணலே வாழ்ந்தே னின்றுந்
துங்கமா யுற்ற வின்ப சமாதியிற் றுயரந் தீர்ந்தேன். 1037

நிருவிகற் பத்தி லின்ப நிறைந்தபொன் னாட்டி லில்லே
யொருமையுற் றதனே மேவி யும்பரி லிம்பர் தன்னிற்

றிரிவனென் றரசன் சொல்லக் கும்பனுஞ் செப்பு கிற்பா
னரியவா நந்த வாழ்வி லயர்வெலா மறவாழ்ந் தாயோ. 1038

பேதமே வடிவ மான துன்பங்கள் பேதித் தாயோ
போதல்போ தினிதாஞ் சங்கற் பத்தினிற் பூண்ட வின்பந்
தீதென வேருஞ் செற்றுச் சமதரி சனமுற் றாயோ
யாதினும் வீடு பற்றற் றியைந்தசெய் தின்புற் றாயோ. 1039

எனலுநின் னருளாற் பங்கிற் றெய்வத்தா லெலாம்விட் டப்பான்
மனநிலை நின்றேன் மாயை கரைகண்டேன் வருபே றெல்லாங்
கனமுறப் பெற்றேன் கேட்கக் காணவேண் டுவதொன் றில்லை
யனவர தமுநி றைந்தே னயர்வற்றேன் பிறவி யற்றேன். 1040

பயமற்றேன் போக மற்றேன் பற்றற்றேன் சமமாய் நின்றே
னுயர்வுற்றே னெல்லா மானே னொருசெய லற்றேன் விண்ணு
ளியலொத்த தெளிவாய்ச் சாந்த மெய்தினே னென்றான் மோகச்
செயன்முற்றுங் கடந்த சிந்தைச் சிகித்துவ சப்பேர் மன்னன்.

அவ்வகை யிரண்டு பேரு மாத்தும தத்து வத்தின்
செவ்விய விசாரத் தாலுந் தெளிதரு மொழிக ளாலுந்
தவ்வறு நேய மிக்கோர் தம்மிற்று முணர்த லுற்று
வெவ்வன மோடை குன்று வேறற வெங்கும் வாழ்ந்தார். 1042

இயலறி வன்பு செய்கை யிணையற்றோர் பற்றும் வீடு
மயலற விட்டுத் தென்றற் கசைவுறு வடகுன் றொப்பார்
பயிலுட லொருகாற் றானி படர்விப்பா ரொருகா னீறு
வியனுற வணிவ ரோர்காற் சந்தன விரையே சேர்வார். 1043

சிறிதுநா ளுடனே வாழ்ந்து தேமொழி வேந்தை நோக்கிப்
பிறிவுறு கணவன் சால வுதாரமாய்ப் பீடை யற்றான்
செறியெழில் விடலை யாகுஞ் செல்வம்பூ மனையு மெல்லாம்
வறியபோ லவமாய்ப் போமால் வாழுந ரிலாமை யாலே. 1044

இழிவரு ஞானம் பெற்றோ ரியல்புறத் தானே வந்த
தொழிவுற விடுவ ரன்றி யுண்மையை யுணர்ந்த தென்னும்
வழிபடு மன்ன னம்பான் மணஞ்செயற் கான தொன்றை
யழிவறு மறிவி னுலிங் கமைத்துமென் றுளத்தி லெண்ணி.

தலைவனை நோக்கிச் சொல்வாள் சதமக னுலகி னின்றோர்
நிலைபெற விழாவுண் டாங்கே நேருநா ளதோரா டியானு

மூலவற நிற்றல் வேண்டு முயர்விதி வலியார் வெல்வர்
மலைமிசை யிரவி போங்கால் வருவளிவ் விரைவி லிங்கே. 1046

நீங்கரு முணர்வி னோடு நீயிவ ணிருத்தி யென்றோர்
தேங்கமழ் மலரின் கொத்தைச் சிகித்துவ சனுக்கு நல்கி
யோங்கினள் விசும்பி லேகி யவன்விழி யுறுத மட்டிற்
றூங்கிய கும்பன் மேனி தவிர்ந்துதன் வடிவ மானாள். 1047

இந்திர னிருக்கை யெய்ந்த வில்லம்புக் கறியா வண்ணா
மந்திர நெறியின் மன்னன் காரிய மரபிற் செய்து
சந்திர வதனி மீண்டுங் கும்பனாய்த் தலைவன் றன்பால்
வந்திழி வுற்றுச் சால வாடிய முகத்தள் போலாய். 1048

பனிபடர் மதிய மென்னப் பங்கய மென்னச் சோம்பி
நனிமுகம் வாடிச் சிந்தை யயர்விலா னணுக லோடும்
புனிதனு யகனு நோக்கிப் பொருக்கென வருந்தி யெந்தாய்
துனியுறு கின்றாய் போன்றாய் துயரெனத் துடைத்தி யென்று.

தத்துவ ஞான முற்றோர் தளர்வுறார் மகிழார் கஞ்சப்
பத்திரம் பயின்ற நீரிற் பற்றுமோ வென்ற லோடுங்
குத்திர மேனிக் கும்பன் விளம்புறு குழலின் பண்போற்
சித்திர மாக வொன்றைச் சிகித்துவ சனுக்குச் செப்பும். 1050

உடலுள வளவுங் கன்மேந் தியந்துட னுறல்செய் யாரேற்
றிடமுறச் சமசித் தத்தே செறிபவ ரறிஞ ரல்லார்
சடர்களே யாவர் தானே சார்வுறு மவத்தை வென்று
விடநினைத் தறிவி லாதார் வீணிலே மெலிந்து நைவர். 1051

திலமுள வளவும் போகாத் தயிலம்போற் றேக மட்டும்
பலபல வவத்தை நீங்கா பற்றற விவற்றைத் தீர்ப்போ
ரலகிலா விண்ணை வாளா லறுப்பவ ரொக்கு மன்றே
மலவுட லவத்தை நீக்கி லதற்கொக்கும் வாழ்வுண் டாமோ. 1052

ஒருபான் ஞானேந் தியத்துடனு மொருபால் கன்மேந் தியத்துடனும், வருமா றுளதா முடலுக்கு மலமேரான் முதலா மெல்லோருந், தெருள்பான் மையரா யினுந்தேக வவத்தை நீரா தென்றுணர்கை, யருகா நின்று வழுவாம லுறுதி யான விதிநெறியே.

கற்ற வறிஞ ரறிவில்லோ ரெல்லாங் காணப் படுபொருளா
யுற்ற படியால் விதிவசத்தே யுறுவர் கடவி லுறுநீர்போ

ணித்த மறிஞர் சமபுந்தி நிலையாற் கைகா லசைதலின்றாற்
பெற்ற வுடலம் விடுமளவும் பெயரா விதியைப் பின்செல்வர். 1054

இரங்கித் தேம்பி யறிவில்லோ ரின்பத் துன்பங் களின்மூழ் கிக்,குரம்பைத் திரள்க ளெடுத்தவற்றாற் குறையா விதியைப் பின் செல்வர், நிரம்பப் புகன்றே ஞன்பட்ட நெறியிற் றுன்பந் தனைக் கேளா, யரங்கட் குவமை யாந்துன்ப மன்பர்க் குரைத்தா லாறு தோ. 1055

கொத்தார் மலர்நந் துனையகன்று குதித்து விண்போய்ப் பொ ன்னுலகின், மெய்த்தா தையைச்சேர்ந் திந்திரன்முன் மேவி மீண்டிங் குறவெண்ணித்,தத்தா விண்ணின் றிழிந்திரவிக் கருகே காற்றின் றடநெறியா, வித்தா ரணிசேர் வுறவருவா னெழிலைப் பதத்தி லேகுதனும். 1056

ஏக லுற்ற துர்வாச னென்னு முனியை யெதிர்கண்டு
மாக மட்டி லடிதொழுது மற்று முனிவன் றனைநோக்கி
நீக றுத்த துகிலுடுத்தாய் நெறிநீர் பிறனை விழைபவர்போற்
போக லுற்று யென்றவனைப் போத முனிவுற் றம்முனிவன். 1057

இதுசொல் லுதலா லிரவுதொறு மெழிலேந் திழையா யிருத் தியென,முதுவன் சாப முரைத்தலுமம் மொழிகேட் டிரங்கி முனி தானாம், பதுமம் புகழ்ந்து வேண்டுதற்குப் பார்த்தே னிமைப் பின் முனிமறைந்தா, னதுகண் டனொநாந் திங்களுந்தே னணங் காந் தன்மை யகலாதே. 1058

குருவா னவர்மா தவர்முதலோர் கூட்டங் காணக் கூசாம,லிரு ள்வாய் மகளா யெவ்வண்ண மிருப்பே னெனவுஞ் சிகித்துவசன், வெருவா தொழிநீ புலம்புதலான் மேவு பயனென் விதிவலியால், வருமே வருக வுடற்கல்லான் மாசி லறிவிற் பற்றுதே. 1059

அறிவா லுயர்ந்த நீதுன்பத் தமிழ்ந்தற் குரித்தோ வறிவற்ற, சிறியா ரன்றோ வுள்ளயர்வா ரென்று தேற்றித் தம்மிற்றும், பிறி யா வின்ப துன்பங்கள் பிரிவற் றிருந்தா ரவ்வளவி,னெறியார் கும் பற் கணங்குருவ நேர்வான் போல்வெய் யவனொளித்தான். 1060

அந்தி வரலு நியமங்க ளாற்றி யிருந்தா ரதுகாலை,
முந்து மரசன் முகநோக்கி மொழிவான் கும்பன் றளர்ச்சியொடு,
மிந்த வுடல்வீழ் வதுபோன்மே லெழுதல் போனின் றியங்குதல்

போல், வந்து பெருநா ளொடும்பெண்மை மன்ற வென்னை வளைந்ததுவே. 1061

கூந்தல் வளர்கின் றதுபாராய் கொங்கை யெழுகின் றதுபா ராய்,சேர்ந்து வருமே கலைபாராய் செறியு முன்பி லுண்டான,காந் தை வடிவா னதுபாராய் காவ லாவென் றிரங்கினனுய்ச், சாந்த முறுகும் பனுமிருந்தான் றலைவன் றுனுந் தளர்ந்திருந்தான். 1062

ஞான வானீ விதிநெறியை நன்று யறிந்தா யுறற்பால
தான துற்று லிரங்கலையென் றரச னுரைப்ப வுயர்கும்பன்
றுனுஞ் சொல்வா னினிச்செயலென் றப்பா விதியை யார்தடுப்பார்
மேனி பெண்மை யாயிரவு மேவக் கடவே னென்றுரைத்து. 1063

பாய லொன்றி லவ்விரவு பயின்றூர் வெறிதே விடியளவின்
மேய பெண்மை தனைவிட்டு மீண்டு கும்ப வடிவாக
வேய வில்வா றிராப்பெண்ணு யிரவு போனுற் கும்பனுமா
யாய கன்னி யழியாம லமர்ந்தாள் சின்னுட் சூடாலை. 1064

அன்னுள் கும்ப மேனியளா யரசன் றனைப்பார்த் தொருபகலின்
மன்னு நித்த மிராப்பெண்மை வருமேன் மடவா ரியல்பின்றி
யென்னு ளிருப்ப தொருகணவ னெய்த வேண்டு முனையலது
பின்னு மையுமூ வுலகினுமியான் பேணே னன்பாற் பெருமையினுல்.

மனைவி யாக விவாகத்தால் வரிப்பாய் நிசிக்கெப் போதுமெனை
யினைய தியற்றிற் றீங்குநல மிரண்டு மில்லை யெனலோடு
மனைய விருப்பே நன்றென்று னரச னதுகேட் டனுங்கும்பன்
புனையு நலத்தா வணிமாதப் புரணை யின்று புரவலனே. 2066

திங்க ளுதிக்குங் காலத்திற் செய்க விவாக மெனச்செப்பி
யங்க ணரச னொடுமேவி யணியு மணிப்பூண் சந்தனங்க
டுங்க மலையிற் கொடுவந்து தூய்நீர்க் கங்கை தனின்மூழ்கிப்
பொங்கு நெறியாற் கடவுளர்தென் புலத்தோர் தவத்தோர் கழல் போற்றி. 1067

கிரியை யொழியார் பலம்விரும்பார் கிளர்கற் பகநல் கியவெ ண்படட், டெரிய தெனச்சாத் தினர்வெய்யோ னுயர்ந்த வெற்பி னி டைச்சென்றுன், பெரிய விந்து தோன்றுதலும் பேசு முறைமைக் கிரியைகளா, லரிய நியமஞ் செய்துமணஞ் செய்தா னரச னப் போது. 1068

இவ்வா றுயர்மந் தரவெற் பிடையே மணஞ்செய் திவர்கள்
கவ்வா வின்பந் துய்த்துக் கடஞ்சூழ் வனங்க டோறுஞ்
செவ்வாய் மயின்மன் னவனுந் திரிந்தார் தினமும் மூன்றில்
வெவ்வா ளரசன் றுயிலும் வேலை தனிற்சூ டாலை. 1069

சென்று சென்று மன்னன் றேச நீதி நடாத்தி
யொன்றும் பாய றன்னி லொழியா தவள்போன் மீளு
மன்றன் மதனி கைப்பேர் மனைவி யான மாது
நின்ற சிலநா ளிற்பின் னெஞ்சி லொன்றை நினைப்பாள். 1070

உற்ற போகங் களிற்பற் றொன்று திவனுக் கென்றுந்
துற்ற போகங் களினுற் சோதிப் போமென் றெண்ணிக்
கற்ற மாயை யாலே கைத வம்மொன் றிழைத்தாள்
சுற்றுந் தேவர் நெருங்கச் சுரர்கோன் வனத்திற் றோன்ற. 1071

வந்த மகவான் றன்னை மன்னன் கண்டு வணங்கி
முந்து பூசைஃ செய்து முதல்வ நீயிங் கெய்த
வெந்த வறமுன் செய்தே னென்ன விமையோ ரிறையு
மந்த மன்னை நோக்கி யன்பா லிவ்வா றறைவான். 1072

உனது குணத்தி னலத்தா லும்ப ருடனுன் வந்தேன்
கனக வுலக முமக்கே கடவ தாமங் குள்ளோர்
நினது வரவு நோக்கி நின்று ரரம்பை முதலோர்
வனச வதன மலர மார்த்தாண் டனைப்போல் வருவாய். 1073

கற்ப மளவு மிருந்து கடவுட் போக மெல்லாஞ்
சிற்ப மன்றித் துய்க்கச் சீவன் முத்தி மன்னு
வற்பந் தாழா தடைவா யழைப்பான் வந்தே னென்ற
சொற்பங் கிகளைக் கேட்டுத் தூய மன்னன் சொல்வான். 1074

அங்குந் துறக்கத் தின்ப மனைத்து மறிவே னெந்தா
யிங்கென் றங்கென் றில்லை யெங்குஞ் சுவர்க்க மெனக்குப்
பொங்குஞ் சுகமே யெங்கும் பொன்று டதனால் வேண்டேன்
றங்கும் பதமே வென்றே சற்றும் பற்றற் றுரைப்ப. 1075

மடங்கி யமரர் கூட்டம் வந்த வழியே போகத்
தொடங்கு மாயை பலவாற் சோதித் திடவு நெஞ்ச
மடங்கி விடுதல் கண்டு மயலோர் மாயை யாலே
தடங்கண் மயில்சூ டாலை தனிச்சோ தனைசெய் தனளே. 1076

திங்க ளுதித்த வளவிற் செபித்துக் கங்கைக் கரையிற்
றுங்க வரச னிருப்பத் தோகை யன்னாள் புறம்போய்க்
கொங்கு மலரா னிறைந்த கோல வமளி யொன்றிற்
றங்கு மொருதூர்த் தனைத்தான் சங்கற் பித்துப் புணர்ந்தாள். 1077

சந்தி முடித்து மாதைச் சார றோறுந் தேடி
வந்த வழியிற் புணர்ந்து மகிழு மவரை நோக்கிச்
சிந்தை விகற்ப மின்றிச் சித்த மகிழ்ந்தங் கவரை
முந்த விடையூ றறநீர் முயங்கு மென்று போனான். 1078

போகி மறைந்து முகூர்த்தம் போன பின்ன ரிவளும்
வேகி யாது போனான் விகற்ப மின்மை காண்பா
னேகி யமளித் தொடர்ச்சி யெழிலும் வடிவுந் தோன்ற
யோகி முன்னர் நின்று ளொதுங்கி நாணி வணங்கி. 1079

மதனி கைப்பெயர் மங்கையு மிவ்வணம் வருந்தி
விதன முற்றனள் போனிற்ப வேந்தனுஞ் சமாதி
யதனை யுற்றிருந் தானறி வுற்றனன் பார்த்துக்
கதம றக்குளிர் புந்தியான் மெல்லெனக் கழறும். 1080

விரைவில் வந்ததென் முயங்குறு மகிணனை விட்டு
நிரைவ ளைக்கையாய் மீண்டுபோ யின்பமே நிறையென்
றுரைசெய் காலையின் மதனிகை யுரைசெய்வா ளுயர்ந்த
புரையி லாதவர் பிழைபல பொறுப்பது புகழே. 1081

மாத ராரிய லளவறு பேதமாய் மருளுங்
காத லோவெனி லென்மடி கருமமொன் றறியா
ராத லாலென தரும்பிழை பொறுத்தரு ளென்னப்
போத பாரகன் மதனிகைக் கிவ்வுரை புகன்றான். 1082

வாணி லேமமா முனைக்கினு முனிவெங்கண் வாரா
தான மேலவை நிகழ்வரென் றன்மையே யுன்னை
மேன யந்தபெண் ணெனவிரும் பலனென்று வேந்த
னீன மில்லதோர் சமமுறு பார்வையோ டிருப்ப. 1083

கண்டு நின்றரு டாலையுங் கருத்திரு ணிலைவாண்
மண்டி ராகமுங் கோபமும் வேரற மாய்த்தான்
மிண்டு போகமுஞ் செல்வமு மேவிடா வினைத்
திண்டி றற்புயன் ஞானத்தின் கரைகண்டு சேர்ந்தான். 1084

மறைதன் மட்டினி மதனிகை வடிவினை மாற்றி
முறைமை யானகு டாலையாய் முன்னிற்ப னென்று
மிறைவன் முன்புகு டாலையாய்த் தோன்றவு மிவளைப்
பொறையி னின்றவ னோக்கிநல் வியப்பொடு புகலும். 1085

வடிவும் வார்த்தையு மொடுக்கமு மற்றுள குணமு
முடிவி லாதகு டாலைபோற் றோன்றினை முன்னே
நெடிய கண்ணிநீ யாரென நிருபதி கேட்பக்
கடிம ணஞ்செய்கு டாலைநா னெனமற்றுங் கழறும். 1086

கும்ப வேடமு மதனிகை வேடமுங் கொடுநா
னம்ப னேயுனை யுணர்த்தினேன் ஞானத்தி னிலைமை
யிம்பர் மாயையாற் சோதனை பண்ணினே னிவற்றைக்
கம்ப மின்றிய தியானத்தாற் காண்குதி யென்ன 1087

ஞான யோகமாந் தியானத்தா னரபதி நோக்கி
மான ராச்சியந் துறந்தது முதலிவண் வந்து
தான லஞ்செய்கு டாலையாய்த் தோன்றிய தளவா
யீன மின்றியே யாவையு முணர்ந்தன னிருந்து. 1088

தியான நீங்கிநன் புளகமே நிறைந்தனன் றிண்டோ
டயர்வு மன்புமீ தென்னெனத் தயங்குகு டாலை
குயாச லந்தழீஇ நெடிதிருந் தொன்றுமேற் கூறு
னியாய மன்னவ னுநந்தத் தமிழ்ந்தன னிமிடம். 1089

மடியின் மேலந்த வஞ்சியை வைத்தவ னுரைப்பான்
முடிவில் பேரிருட் குகைநிகர் மோகநின் றென்னை
நெடிய புந்தியா லுய்த்தனை யுனக்கெவர் நிகரோ
கொடிம ருங்குலா யியற்றுகைம் மாறுமொன் றுளதோ. 1090

வருப வக்கடற் கரையிலாய் நிராசையை மருவுந்
தரும மேயிதற் கென்கைம்மா றுளதெனச் சாற்றத்
தெரிவை யோதுவா ளுணங்குபல் கிரியையிற் றியங்குங்
கருமங் கண்டுனை யுய்விக்க நாடினேன் கவன்று. 1091

நீயி தற்கெனை மேம்பட நிகழ்த்துவ தென்னே
மேய புன்றொழி னினைவுகள் சங்கற்ப விகற்ப
மாய தெத்தனை யவையெலா மகற்றினை யன்றோ
தூய நாயக வென்னலும் வேந்தனுஞ் சொல்வான். 1092

ஐய மற்றன னுசையற் றேன்பிறி வற்றே
னெய்ய விண்ணையொத் தேன்பொருள் வடிவமாய் நடங்கேன்
செய்ய லாவதோர் கிட்டையுற் றேன்சித்த மசிழ்ச்சி
வெய்ய துன்பமொன் றிலனிது வதுவென விளங்கேன். 1093

சோதி மண்டலத் தெழுந்ததாய்ச் சுவரினிற் படாமன்
மீது விஞ்சுதல் குறைதலற் றிருப்பதோர் விளக்கந்
தீதி லாவெனக் குவமையாஞ் சகத்தினைத் தீர்ந்து
யாது மேவிவின் னிற்பதற் கிணையொத்து நின்றேன். 1094

உண்டெ னுந்தன்மை யென்னுரு வேறென்று முரைக்கக்
கண்டி லேனத ஞலெனைக் கருணைசெய் குருநீ
மூண்ட கப்பதந் தொழுதன னென்றவன் மொழியத்
தொண்டை வாயவண் மேற்செயல் சொல்லுதி யென்ருள். 1095

கசன்கதை.

தெளிவின் மிக்குயர் சிசித்துவ சன்கதை செப்பின னிவ்வாறே
யளிய கிற்றியா லருந்துய ரனுகலே யணையவ னெறிபோலக்
குளிர்மு கச்சுரர் குருமக னுணர்ந்தன னதுகுறித் துணர்கென்ன
வெளிப்ப டவவ னுணர்ந்துள நெறியினை விளம்புதி யெனக்கேட்
டான். 1096

குரிசில் கேட்டலும் வசிட்டனங் குரைசெய்வான் குருமகன்
கசனென்பான், றெரிய நத்தொடு பதப்பொரு டெரிந்துளோன்
றேவர்தே சிகன்முன்போய், விரிபி றப்பெனுங் கூட்டினின் றுயி
ரெனும் வெங்கரி புறம்போகைக், குரிய வாறெது கூறெனக் கேட்
டனு மும்பர்மந் திரிசொல்வான். 1097

அனத்த மாமக ரங்களுக் குறையுளா யகன்றவிப் பவவேலை,
கனத்த தோர்சக லத்தியா கத்தினாற் கடக்கலா மென்றோதக், தன
த்தை யாதியாஞ் சகலமும் விட்டனன் றனியனாய்க் கசன் சென்று,
வனத்தின் மேவின னெட்டியாண் டிருந்தனன் மறித்தவன் பிதா
வந்தான். 1098

வந்த தந்தையை வணங்கியே சகலமு மாற்றியே யெட்டாண்டு
சிந்தை யுற்றிருந் துந்துயர் தீர்ந்திலே னிமலனே யென்னென்று

றொந்து கூறலுஞ் சகலமு நீக்கென றவன்றமீ ளவும்போனான்
தந்தை போனபின் வற்கலை முதலிய சகலமு மறநீத்தான். 1099

பானு மாமதி முகிலுடு முதலிய பற்றறு சாற்கால [தாதை
வான மொத்தனன் றமியனாட் கசன்சென்று வனத்தின்மீ ளவுந்
யான வன்றனை யெய்தின னன்பினா லடிதொழு தயர்வெய்தி
யான னிங்குள வற்கலை முதலிய யாவையு மறநீத்தேன். 1100

யாது நீத்துமென் பாலினைப் பாறிலே னினிச்செய லேதென்னத்,
தாதை கூறுவான் மனத்தையே யுலகெலாஞ் சகலமென் றுரை
செய்வ, ராத லான்மன மகற்றுதல் சகலமு மகற்றுத லதனாலே,
கேத நீங்குமென் றகன்றனன் மந்திரி கிளர்கச னிதுசெய்தான்.

சித்த மேதென நாடின னறிந்திலன் றேகமா திகளெல்
லாஞ், சித்த மன்றெனிற் குறைசெயா விதனையான் றீர்க்குமென்
பயனென்னச், சித்த மேதெனச் சுரர்குரு விடத்துறச் சென்று
கேட் டனுமன்னான், சித்த மாவது நானெனச் செப்புவர் சித்
தத்தை யறிவுற்றோர். 1102

உயிர்க ளியாவையு முள்ளுற நானென வுன்னுபா வனைதானே
செயிர்செய் சித்தமென் றுரைத்தனு மிங்கிது தீர்ப்பதுமிகவன்பாம்
வயிர மாவது தீர்வதெவ் வகையென மறித்துமந் திரிசொல்வான்
வெயில்செய் தன்பமோர் சிறிதிலையகங்கரம் விடமிக வெளிதாகும்.

அலர்க சக்குமுன் னிமைக்குமு னகங்கர மகற்றுத லெளிதாகும்
பலவு ரைப்பதென் னேகமா யநந்தமாய்ப் பரமசித் தேயாகிக் [குஞ்
குலவு சுத்தமாய் விண்ணினு நண்ணிதாங் குறைவிலாப்பொருணிற்
சலன மற்றதைப் பாவனை செய்துப சாந்தனா யிடர்தீர்வாய். 1104

சுத்த மித்தையே யாதலி லகங்கரந் தொலைந்துபோ மெய்யான
தத்து வந்தனை நினைதலாற் சித்திலே சாற்றகங் கரமெங்கே
மெத்து நீரிலே புழுதியுங் கனலிலே மேவுதோ யமுமுண்டோ
நித்த ரூபத்தை நினைந்திவ னானெனு நிச்சய மறதிப்பாய். 1105

திக்குங் காலமு முதலிய வசத்தறு சிறுவடி வறத்துன்பந்
தொக்க வன்னவற் றுன்மறை யாமலே சூக்கமாய் நொய்தாகி
மிக்க சோதியா யனந்தமா யொன்றுமாய் மெய்யறி வொன்றேயாந்
தக்க விந்நிலை நில்லென வுரைத்தனன் றலைமையா முபதேசம்.

சீவன் முத்தனா நிலைமைபெற் றகங்கரந் தீர்க்கென தென்னு
மன், மேவு முட்பந்தம் வீழ்ந்துபோய்ப் புந்தியில் விகற்பங்களனைத்

தும்போய்ப், பாவ முற்றிய கசனின்ற நிலையினீ பற்றுத லறநிற்பாய், கேவ லத்திந்த வகங்காம் பொய்ம்மையாங் கெடுத்தல்பற்றுதல்வேண்டாம். 1107

பொய்ய தாமுயற் கொம்பினைப் பற்றவும் போக்கவு நினைப்பாரா
ரைய னேபர போதபூ ரணத்திலே யயலொன்று வருமாறென்
பொய்ய தாகிய வநேகபா வனையினைப் பொருந்தல்புன் பிறப்பாகு
மைய மின்றிய வேகபா வனையினி லழுந்துதல் பவந்தீர்தல். 1108



## மித்தையா புருடன் கதை.



இருமையோ டொருமை நீக்கி நின்றதி லெய்தி யின்ப
மருவுவாய் மித்தை யான புருடன்போல் வருந்த வேண்டாங்
குரிசிலே யெனவு மெந்தாய் கூறுபொய்ப் புருட னேனோ
னொருபய னின்றித் துன்ப முற்றவ னுலந்த வாறென். 1109

ஞானமா மமுதி னாலே நலம்பெற நிறைந்த தேனு
மியானறி வுறவித் தன்மை யியம்பென விராமன் கேட்ப
மானமார் வசிட்டன் சொல்வான் வள்ளலே நகைக்கு மூல
மானவிக் கதையான் சொல்வ தறவியப் புளாறு மன்னோ. 1110

ஒருதலத் தேகாந் தத்தி லுற்றரு ளியத்தி லுண்டாய்
மருவுமத் தலத்தி னிற்போன் மாயையெந் திரம யத்தோர்
புருடனுண் டஞ்ஞா னத்தோன் புன்மையா யிளமைப் பண்பாய்
மிருதுவாம் புந்தி யுள்ளோன் கேவல மிகுந்த மூர்க்கன். 1111

வானிலே சுருண்டு தோன்று மயிர்ச்சுருண் மருத்த லத்திற்
கானனீ ரென்ன வன்னோன் றோன்றியே கலந்த பாழிற்
சூனிய மலாதொன் றில்லை யாதொன்று தோன்றிற் றங்கே
மானவ வனுவு மன்னோன் மற்றவன் வளர்வு மாங்கே. 1112

வேறு மாயே யெப்போதும் விளங்குந் தன்மை யவன்காணோன்
கூறு வானோர் சங்கற்பங் கூடி னான்விண் ணினைப்பேணி
யூறு படாமல் வைக்குநுமீ தயர்ந்த தேயென் றுளத்துன்னித்
தேறு மூவகை யுடன்விண்ணைச் சேமிப் பானோர் வீடமைத்தான்.

அந்த மனையில் விண்ணினைவைத் தளிக்கின் றேனென் றதிலாசைப், பந்த முறனு மவன்விடு படர்கா லத்தா லழிவெய்தி,

யிந்த மருத்தாற் றரங்கம்போ லிருந்து முடிவால் வருடம்போற்
சிந்தி யொழிய வவன்கண்டு சேண்போ யினதென் றலறுற்றான்.

நில்லா வீட்டில் விண்ணேயோ நீயெங் ககன்று யொருகணத்தி
லல்லா யானு யெனவீட்டி னுகா சத்துக் கறப்புலம்பிப் [வர்
பொல்லா மனத்தான் மீண்டங்கோர் புதிய கிணறு சமைத்தொரு
கொல்லா திதனி லிருத்துமெனக் கூபா காச பரனுனன். 1115

கால மதனுற் கூபர்தான் கழித லோடுங் கதறுற்றான்
சால வருந்தி மீண்டங்கே தனைக்காப் பதற்கோர் குடம்பண்ணிக்
கோல முடைய தெனமகிழ்ந்து கும்பா காச பரனு
னீல முகிலே யக்குடமு நிகழ்கா லத்தா லுடைந்ததுவே. 1116

நம்பி நம்பி யடைந்ததெலா நாச மெய்தத் திருவிலியக்
கும்ப விண்ணுக் கழுததற்பின் குண்ட மொன்றங் கேகல்லித்
தம்ப மென்று தற்பரனுய்ச் சார்ந்தா னந்தக் குழிதனையுந்
தும்பி கால மழித்துளதாற் றுன்னு மிருளைச் சுடர்போல. 1117

குண்ட விண்ணுக் கழுததற்பின் குலவு நாற்சா ரகங்கட்டி
மண்டு மருள்கூர் தற்பரனுய் வாழ்ந்தா னந்த மனைதனையு
மண்ட முழுதுங் கொல்கால மழிவு செய்ய வதற்கழுது
சண்ட பவன னிடைப்பட்ட சருகு போலத் தளர்ந்துலைந்தான்.

தடனூர் நாற்சார்க் கழுததற்பின் றற்காப் பதற்கோர் குதிர்பண்ணி
யிடனூர் குதிர்புக் கவனிருப்ப விதுவுங் கால னிறப்பித்தா
னுடனே குதிர்விண் ணிறுக்கழுதா னென்றே வீடு குதிர்குண்டங்
குடநாற் சார மென்பவற்றாற் குறைவில் காலங் துயருற்றான். 1119

விண்ணே வீட்டி லடைத்தவனுய் வீட்டில் விண்டான் றானுகி
யுண்ணே வுற்ற பெருந்துயரா லுழைக்கும் பிழைக்கு மோரொருகா
லெண்ணி நிற்ப திதுபோவ திதுவென் றறியா னிவனென்று
புண்ணி யத்தின் வடிவானேன் புகல வீரன் புகலுற்றான். 1120

பொய்யா மனிதன் கதையாலென் புகன்றாய் மாயா புருடனையே
யையா விவன்விண் காத்தனனென் றறைந்த தேதென் றருள்கென்ன
மெய்யாம் வசிட்ட னுரைசெய்வான் மித்யா புருட னென்றவிவன்
மையார் முகிலே சூனியமாம் வானி லெழுந்த வகங்கரமே. 1121

இந்த வுலகெல் லாமிருக்கு மிந்த விண்ணே தனுநிறைவுற்
றந்த மின்றிச் சிருட்டிதனக் காதி தனிற்று னேனிற்கு

மைந்த வதன்பா லகங்கார மருத்திற் பரிசம்வருவதுபோன்
மூந்துதோன்றித் தனைக்காக்க முயன்றான் வடிவாய் முளையாதோன்.

கூவங் குண்டங் குடநாற்சார் குழிரென் பனவாங் குரம்பைகளை
மேவ நாநா விதமாக விதித்து மீண்டு மீண்டிமூந்து
தாவ முற்று னுடறுளுந் தனைக்காத் தனனென் ருகாச
பாவ னைக்கே நிலைப்பட்டான் பாழே வருத்திப் பதைத்தனனல்.

விண்ணு னென்றே சேமித்து விட்டா காச மாதிகளி [ர்க்
னண்ணு மெவிவுற் றிடுமித்தை யான்போல் வருந்தா தொழிகமல
கண்ணு விண்ணின் மிகப்பெரிதாய்க் களங்க மற்று நண்ணியதா
யெண்ணு லடங்கா வழிவில்சிவ மியலாத் துமதத் துவந்தானே.

அவ்வாத் துமதத் துவங்காண லாமோ வெவர்க்கு மகப்படுமோ
விவ்வா றிருக்க வுடலிறந்தா விதயா காச மாத்திரத்தை
வெவ்வா ளரசே நானிறந்தே னென்று மெவிவர் விவேகமிலோர்
தவ்வா விசும்பு கடாதிகடாங் தகர்ந்த போது தணந்திடுமோ.

கடம துடைந்தால் விண்பிரியா காய மழிந்தா லுயிரழியா [ய்த்
தடவி தாஞ்சின் மாத்திரமாய்ச் சத்தாய் விண்ணி னுண்ணியதா
தொடரு மணுவுக் கணுவாகுஞ் சொரூப மைந்தா நானென்று
படரு மனுபூ தியினளவே பயிலுங் குடம்போ னசித்திடுமால்.

யாது மென்று மெவ்விடத்து மிறத்தல் பிறத்த லிலதாகு
மோதும் விவர்த்த ரூபத்தா லுலகாய்ப் பிரம மேவளரு
மாத லாலிவ் வுலகெல்லா மடியு முடியு நடுவுமறப்
பேத மறப்பா வாபாவம் பிறவாப் பொருளொன் றிடர்தீர்வாய்.

ஆபத் துக்கெல் லாநிலய மகிந்த மவச மவிவேகம்
பாபத் துக்கு முதன்மடமை பவவித் தழிவைப் பற்றியது
தாபத் துக்கோ ரிடமான தகவி லகங்கா ரந்தன்னை
நீபற் றில்லா வறிவாலே நீக்கி லதுவே நிமலநிலை. 1128

## விரதத்திரய கதை.

ஆதலாற் காண்பவற்றி னுண்மைநிலை யிப்படியே யறிவில் வையம்,
பேதமாய் வேறொன்றிற் பிறந்ததிலைக் கயிற்றிலராப் பிறப்ப தே
போ, லாதபனில் வேறிலையா தபமென்றே பாவித்தோர்க் காத பந்
தான், பேதமற வாதபனும்பேனுமிரு விகற்பமிது பேசுங் காலே.

பொன்னில்வேற் றுமையன்று கேயூர மெனநினையிற் பொன்
ஞென்றேயா, மின்னதே நிருவிகற்ப மென்பரா விரவிவெயி
லென்று நாடின், மின்னுகதி ரிரவிக்கு வேறுபோ லாங்கண்டாய்
விவித மாகத், துன்னுநா நாத்துவம்விட் டறிவதிலா நல்லறிவிற்
றுணிந்து நிற்பாய். 1130

சங்கற்ப மெனும்புரண சத்தியினைத் தற்பரமந் தானே தன்னுற்
பொங்குற்ற வாயுவலை வைச்செய்யு மாறுபோற் புரிந்த போது [ப்
சங்கற்ப விரியுருவா யயல்போலாய்ச் சகவடிவாய்த் தனைத்தா னுடி
பொங்குற்ற மனமாகுஞ் சங்கற்ப மயமாமிப் புவிவையைக் காண்க.

தெரிபொருளென் றுளதல்ல பொய்புமல சொப்பனத்தின்
றிரள்போற் றோன்றுந், தெரிபவன்கேட் போன்சொல்வோன் பரி
சிப்போன் மணங்கொள்வோன் செல்வோன் மீள்வோன், புரிவன
வெல்லாந்தானே புரிதாரு மலவெல்லாம் பொருளென் றோர்வாய்,
புரிதருநின் றொழிலெல்லா மலமறுநின் மாத்திரமாம் பொருளே
கண்டாய். 1132

பெரும்பெரிய வடிவான பிரமமே யாதலாற் பிறிதொன்
றில்லை, வரும்பொருளெல் லாமறிவின் கனதையா யிருந்தவிவ்
வைய மெல்லாங், கரும்புயலே யறிவேயாங் கற்பனையே றில்லையாற்
காணப் பட்ட, வரும்பொருள்க டமிலறிவுண் டாதலினு லறிபொ
ருளா மனைத்து மில்லை. 1133

ஆதலினுற் பந்தம்வி டென்குளது வீடிதென வடுத்த பந்த,
மீதெனவென் றுவதெல்லாம் வலிந்தகற்றி யபிமான மிறையு
மின்றித், தீதுதவிர் மௌனியாய்ப் பொறிவென்று மானமதந்
தீர்மே லோனு, யோகியநின் காரியஞ்செய் திராமனே யகங்கார
மொழிந்து நிற்பாய். 1134

மோகத்தில் வருமைய மெல்லாம்போ யறுதிநிலை முற்றும்
பற்றி, மாகத்தன் மாயோகி மகத்தான தியாகியாய் வாழ்தி யெ
ன்ன, மேகத்தை நிகர்வள்ள லிம்மூன்று குணங்களைவை விளம்
பா யென்ன, யோகத்தை யுணர்முனிவ னக்குணமூன் றையுந்
தோன்ற வுரைக்க லுற்றான். 1135

மூன்றுவகை விரதமெனு மிதுதன்னைப் [illegible]
போக, வென்றுபரம் பொருளறியுட்
கோ டெய்தி, வான்றுணையாஞ் சங்க

பிறவி மயக்கை நோக்கித், தோன்றுணர்வி லாறுதலில் லாமையி
ளுன் மோகித்துத் துவண்டே னென்றும். 1136

இச்சகமாம் பழங்குடிலி லிளைப்பாறி நான்றிரிவ தெங்ஙன் னென்று
மச்சமறு நிச்சயமா மொழுங்கையருள் வாயென்று மன்பாற்கேட்ப
நிச்சயமா யரனருள்வா னையமெலா மறுத்தறுதி நிலைமை பற்றி
மெச்சியமா கத்தன்மா போகிமாத் தியாகியாய் விடுவை யென்ன.

செப்பியவிம் மாகத்தன் மாபோகி மகத்தான தியாகி யென்ற
விப்பரிசு விளங்கவரு ளெனக்கேட்ட பிருங்கீசற் கீசன் சொல்வான்
வெப்பமுறு மிராகமுனி வின்பமிட ரறம்பாவ மிகுமிவற்றின்
றப்பில்பலா பலமிவற்றில் விருப்பமறச் செய்வோனே தனிமா கத்
தன். 1138

மோனமுற வகங்கரமு மானமுமற் சாமும்போய் முடுகி
வாடா, தீனமிலா தனசெய்வோ னெங்கணுமன் பறச்சாட்சி யென
லா யிச்சை, தானறவே காரியஞ்செய் வோன்வெருட்சி யானந்தந்
தாக்குறாதோ, ஞனசம னுய்த்தொழிலா விடர்சுகங்க ளுதயமுறு
தவன்மா கத்தன். 1139

சனனத்தின் மரணத்தி லுதயத்தி லத்தமனந் தனினே ராகி,
மனமொத்தோன் மாகத்த னெனத்தெளிவாய் மாபோகி மரபு
கூறிற், சினமுற்றோன் றீனைநீக்கா னென்றைவிரும் பான்பகுதி
சேரத் துய்ப்போன், வினவுற்ற மாபோகி யிவன்பெருமை மீளவு
நாம் விளம்பக் கேளாய். 1140

மிகவெருவ லானந்த மில்லவாய் மயக்கமே விளைப்ப தான,
சுகமிடர்கள் புசித்தவற்றூற் கலங்காதோன் சராமரணந் தொடரு
மாபத், தகலரசு மிடிகளுநன் றெனப்புசிப்போன் புளிப்புக்கைப்
பழற்சி யுப்புப்,பகர்நிறைவு குறைவுசம மாய்ப்புசிப்போன் மாபோ
கிப் பான்மை யோனே. 1141

உப்பினியல் பெனநன்மை தீமையிரண் டிறுஞ்சமமா யொத்
து நிற்போன், றப்புறுமா போகியா மகத்தான தியாகிகுணஞ்
சொல்லக் கேளாய், தப்பிலறம் பாடமிடர் சுகமரணஞ் சநநமெ
லாஞ் சேரத் தள்ளுஞ், செப்பமுள புந்தியுளோன் மகத்தான
தியாகியெனத் தெளிந்து கொள்வாய். 1142

அனைத்தாசை யனைத்தைய மனைத்தான தொழிலனைத்தா
மறுதி யாவுந், தினைத்தானு மேவாத புந்தியோன் றன்னைமகத்

தியாகி யென்ப, ரனைத்தான வறம்பாவ மனமனனத் தொழிலித
யத் தெல்லாந் தீர்ந்தோன், வினைத்தாய பிருங்கிசா மகத்தான
தியாகியென விளம்பு மன்றே. 1143

தெரிபவற்றி லெண்ணமாய்க் காணுமிவை யெவ்வளவத் திர
ள்க ளெல்லாங், கரிசறுநன் றுய்விட்டோன் மகத்தான தியாகியெ
னக் கருணை யீச, ஞரியபிருங் கீசனுக்கு முன்னுளோ தினனிந்த
வுயர்ந்த நோக்கைப், பரிசயமுற் றுப்பிடித்துத் துயரொழிவா யுல
களிக்கும் பதுமக் கண்ணா. 1144

நித்தமுறு முதயமுள தாகியா குவதனந்த நிமல மேக
மத்தகைய பிரமமே யுளதுவிகற் பத்தெண்ண மயலொன் றில்லை
யித்திறமென் றேபாவித் தழுக்கிலனாய்ச் சுகமேவி யியற்றுஞ் செய்
சுத்தவிமலச்சாந்த முறவெல்லா மேவுவாய் சுத்த வீரா. [கை

தீங்கிடர்தீர் பிரமமாய்க் கற்பனையெல் லாமேவிச் செய்கைக் கொன்
யோங்கியவித் தாய்ப்பரம ரூபமாய்ப் பெரிதாகி யுயர்மகத்தாய்[று
வீங்கியபா வனையெல்லா நிறைவதாய் மெய்ஞ்ஞான வீரா கிஞ்சி
வீங்கிலதென் றுரைப்பதா மாகாய மேதநவே யென்றுமுண்டால்.

அன்னியமா மோரிடத்தி லிதுகிஞ்சி லெனவென்று மசத்
துஞ் சத்துந், துன்னதுறு தென்றுள்ளே திடநிலையா யகங்காரந்
துடைத்து நிற்பா, யுன்னுள்ளே முகமாகிப் புறத்தின்வரு வன
வெல்லா மொருங்கு செய்து, பின்னுமொழி விடார்மேவா துருவை
மிலா வகந்தையைமீ பிரிய வென்றான். 1147



## இட்சுவாகுகதை.

அழுந்து வசத்தி லிருப்போனை யம்பு யத்தி னீர்போல
வெழுந்த லோப மோகமுத லெக்குற் றமும்வன் புறவிலா
முழுந்து முநிறை முதற்குணங்கண் முகத்தி லழகாய்ச் சிறிதகலா
விழுந்து பாவ மெல்லாம்போ மிகுவா தனைக்கட் டறுமெல்ல.

வேகந் தேயு மலோபருணை மெலியுங் காம வினையடங்கு
மோகம் போயெங் கொளிக்கிநிமோ முநிகிக் கிளரா தைம்பொறி
சோகந் தாவி யடாது சுகமே மேவிட் டெழுமட்டா [கள்
தாகந் நீரக் குளிர்ந்துள்ளே சமந்தான் றிடமா லெவ்விடத்தும்.

ஊனார் பிறவிக் கடல்கடப்போர்க் குரிய விளைப்பா றுதலெய்த
நானு ரிந்தச் சகமெங்ங ணுடும் பரம னராது
மானு விடய போகத்தா லாவ தென்னே வென்னுமதி
தானும் பரம வுபாயமெனச் சாற்றுங் கண்டாய் சற்குணனே. 1150

எங்கு நின்று வந்ததிச் சிருட்டி யிதற்கெப் படியுருவ
மங்கு மூலக மெம்மட்டு மற்று ருடைய தெதுகால
மிங்கி தெதனு லெனவுணர்ந்தி யேறிக் குறைந்த விப்பிறவிப்
பொங்கு மயக்கை வலையகலும் புட்போ னீங்கும் வகைபுகல்வாய்.

என்ற லோடு மறப்புதிதா மெண்ணில் காலத் தோடே நீ
நன்று விவேக விசாலத்தாற் சொன்ன வினவே விதிப்பொருளைப்
பொன்று விக்கு மென்றுமனுப் புகல்வான் சிறிதாக் காணுமிவை
யொன்று மில்லைக் கந்தர்ப்ப வூர்போன் மருப்பூ மியிற்சலம்போல்.

இஞ்சில் காரணங் கருக்கெட்டாக் கிளர்வா னிலஞ்சற் றுப்புமுடிவி
லெஞ்ச விதைா மழிவின்றி யிருந்த தென்று மான்மாவாம்
விஞ்ச மந்தப் பெருங்கண்ணு டியிலே தேய விரிவிடய
பஞ்ச பூத சிருட்டியெலாம் பத்தி பாய்ந்து விளங்கிடுமால். 1153

பிரமத் தினவா யொளியுருவாய்ப் பிறந்து பிறங்குஞ் சத்திகடாம்
விரவிப் பிரமாண் டத்தினது மேனி யாகி நின்றசில
வுரவு பலபூ தந்திரளி னுருவ மாகி நின்றசில
சுரர்பொற் பதியாய் நின்றசில தோன்று சகத்தி னிலையிதுவே.

பந்த மில்லை விடில்லைப் படர்ந்தீர் பிரம மேயுளதா
மந்த வயிக்கிய மில்லையிரண் டில்லை யறிவே வளர்ந்தெழுந்த
சிந்து தரங்கப் பங்கத்தாற் றிகழு கின்ற நீர்போல
வந்த மில்லா வறிவுருவே விளங்கு மயலொன் றிலதாகும். 1155

பந்த முத்தி நினைவுகளைப் பயிலா தோட்டி யுன்வசமாய்
முந்து பிறவிப் பயமெல்லா முற்று மொழித்து நிலைநிற்பா
யந்த நீசங் கற்பனையை வடைந்தாற் சின்மாத் திரவுருவு
வந்து சிவத் துவமடைந்த வாரி யலையா வதுபோல. 1156

ஆதி காலத் தெழுந்தமைந் நினைய சிவ ருழல்கின்ற
போது மின்ப துன்பமயக் குளத்துக் கொழிய வுனக்கில்லை
மீது தெரியா விராகுமதி மேவித் தெரிதல் போலவுநீ
பூதி யளவா முயிர்காணும் பொருளாற் காணப் படுமன்றே. 1157

கலைக ளாலுங் குருவாலுங் காண்டற் கரிய பான்றனை
கலைமை யான சாத்திகஞ்சேர் தன்புத் தியினூற் றன்றேலே
நிலையில் வெளியா நெறிபோவார் நெறிசேர் காட்சி களிற்புந்தி
செலவு பற்றில் லாததுபோற் றெவ்வாங் கரணங் களைக்காண்பாய்.

இணைய கரணங் களைப்பற்ற விகற்த விரண்டு மியல்பல்ல
வினைசெ யுடல முதற்பொருள்கண் மேவு மியல்பின் மேவிடுக
வனைய பொருள்கள் புந்தியினு லகல நீக்கி யதிசிதம்
புனையுட் கரணத் தினுனையெப் போதும் பரம மயமாவாய். 1159

உடனு னென்னும் புந்திபிறப் புற்ற கட்டா மொருகாலு
மிடர்தீர் வீடு விருப்புறுவோர்க் கியல்பன் றுகு மிப்புந்தி
திடமாங் கிஞ்சின் மாத்திரமு மில்லாச் சின்மாத் திரவடிவன்
றடவா ளினுநா னதுவென்னுஞ் சமமாம் புந்தி பிறப்பறுக்கும்.

தெளியுமீரி லுட்புறம்பு செறியும் வெயில்போற் பொருளனைத்தி
லொளிகொ ளான்மா நின்றிடமோ வுருவ மெல்லா முட்புகுந்து
வெளிசெய் பளிங்க டொறும்பொன்னின் விசித்தி ரம்போல் விளங்
கலரிய வஃதல் லாவுருவா யான்மா வுடைய சகமாகி. 1161[கிடமா

காச வடவைக் கனல்படர நடுக்கஞ் செய்யுங் காலமெனு
மூசு கடலிற் சகத்திரளா முடிகு நதிகள் பல்லுயிராம்
வீசு தரங்கத் தொடுபாய்ந்து நிறையா தந்த வேலையயு
மாச மனஞ்செய் யகத்தியனு மான்மா வென்று வகுத்துணர்வாய்.

தான லாதாய் முன்சொன்ன சகத்தின் றிரளா யுடன்முத
லான பொருளின் சாலத்தை யான்மா வென்ப தறத்தள்ளி
ஞான சற்பா வத்தன்னை நனிமேற் கொண்டு மனைத்தோறு
மீன மில்லா மதிவேந்தே யிச்சை யான படிநிற்பாய். 1163

தனங்க ளோடே தாயின்மகனைத் தாய்தான் மறந்து மிகத்தேடி
மனங்கள் றுதல்போற் சாமரண மருவா தம்மை யறியாமற்
செனங்கள் சலித்துக் கெட்டேனுன் செறியு நாத ரிலாதவனு
னெனக்கொள் காயம் போமளவி லெழுந்தேனுவா வென்றழுவார்.

மதியோ டிரவி கதிர்வன்னி மணிக ளிற்சே ரொளிகளைப்போன்
முதிரு மரங்கள் கனியிலைய முதலா யினபோ லுருவிகளிற்
பிதிருந் துளிகள் போற்சாலப் பிறங்கும் பிரமத் திடைதோன்றுங்
கதிகொள் புந்தி முதலாகக் கற்பி தஞ்சே ரிச்சகமே. 1165

அதுதா னறியார்க் கிடர்நல்கி யதுவே யதுவல் லாததுபோற்
றிதமாய் நிற்கு மிம்மாயைச் சித்தி ரந்தா னற்புதமே
பொதுவா யங்க மத்தனையும் புணர்ந்து பிறிவற் றிருக்க வுந்தா
னிதமா யுயிரை யுயிர்காணு திருக்க மயக்கு மியாரையுமே. 1166

பாம விண்ணே சகமெல்லா மென்று பாவித் தாசையறிற்
பிரம கவச னின்பமுள பெரியோ னுகு நானென்னும்
பொருளை நீக்கி நினைவின்மை வடிவா நினைவாற் பொருளனைத்து
முருவ மில்லை நிராலம்ப முணர்வு சாந்த மெனநினைவாய். 1167

இதுவே நன்றி தன்றென்று மிதுவே வித்தா மிடமொழுங்குக்
கதுதான் சமமா மங்கியில்வெந் தழிந்தா விடருக் கவசமென்
பொதுவாநலந்தீங் கெனும்பேத மபாவமென்னும் பொருவாளால்
விதமாம் புருட வருத்தத்தான் மெல்ல மனதில் வெட்டுதியால்.

நினைவான் முடிக்குங் கருமமெனு நீண்ட பெரிய வன்காடு
தனைநீ நினைவின் மையினாலே சுடுந்து பாம பதமேவி
வினைதீ ருனது விவேகத்தை மேவி யென்று நிலைநிற்பாய்
புனைதா ரிக்கு வாகுவெனும் புகழா னிறைந்த பூபதியே. 1169

உலகின் பரப்பை யுள்ளாக்கி யுன்று நினைவுக் கப்பாலாய்க்
கலக மடவார் பொருளென்னுங் காத னழுவி நானென்னுங்
குலவு மிருள்போய் விவேகநிலை கூடி மவுன பாநந்த
மிலக வடைந்தோ னெடுங்கால மிவனே துன்ப மில்லானே.

சாந்த னாகிச் சமநிலையாய்ச் சால நொய்தா யறிவுருவை
வேந்த னேசந் ததநினைவா யென்று மனுமீன் டுரைசெய்வா
னுய்ந்த நூலா னல்லோரா லறிவை வளர்க்க வேண்டுமுத
லேய்ந்த யோகத் துக்குமுதற் பூமி யிதுவே யாக்கில்லை. 1171

அயர்வில் விசார மிரண்டாகு மசங்க பாவ மூன்றாகும்
பயினு நாலாம் விலாபினியே படர்வா தனையைப் பற்றாக்கு
மயர்வில் சுத்த நல்லறிவின் மயமா நந்த வடிவைந்தாம் [வே.
னுயில்சாக் கிரம்பா திகளில்லாத் தொடர்பி வனின்முத் தியுமிது

அறிவி லாமை வடிவாகி யகலா நந்த மொன்றானுந்
செறியும் வடிவாய்ச் சுழுத்தி யைப்போற் றிகழு மாறு மூயர்பூமி
பிறிவில் சமமா யறநொய்தாய்ப் பெரிது நன்றாய்ச் சாந்தமதாய்
வெறிய தூரியங் கேவலமாம் வீடே யேழாம் வியன்பூமி. 1173

மன்னு விடயம் விடுதலினால் வாழு மிவ்வே ழாம்பூமி
தன்னை நிருவா ணத்துருவாய்ச் சான்ற துரியா தீதபத [னஞ்
மென்ன வுரைத்தார் சிலர்வேறே யிவ்வே ழவத்தை களின்முன்
சொன்ன வவத்தை யொருமூன்றுந் தொடர்சாக் கிரமாக் கருதுவ
[தாம். 1174

சகங்கள் கனவிற் றோற்றரவாந் தன்மை நாலா வதுகனவா
நிகழா நந்த மொன்றொடு நெருங்கு வடிவ மைந்தென்று
புகன்ற வவத்தை சுழுத்தியதாம் போத மின்மை வடிவாகித்
திகழ்ந்த வாறு மவத்தையினைச் சிறந்த துரிய மெனலாகும். 1175

துரியா மனவாக் கெட்டரிதாய்த் தனதே சுண்மை வடிவான
துரியா தீதப் பதவவத்தை தூய வேழா முயர்பூமி
பிரியா துள்ளே வசமான பிரத்தி யாகா ரத்தாலே
தெரியா தாகிக் காண்கின்ற திரள்க ளனைத்தும் போமாகில். 1176

முழுது வடிவ மாயொன்று மான்மா முழுது சத்தியினுங்
கெழுமு நதியி னுவரிகளிற் கிலா லம்போ னின்றொளிரு
மொழிவி னினைவின் பரப்பிலதா யொன்றுஞ் சற்பா வந்தன்னிற்
றழுவு கூறு மாத்திரமா யுணர்வாய்ச் சகல சகங்களையும். 1177

என்று மனுமீண் டுரைசெய்வா னியைந்த புலன்போ கத்தாசை
நின்ற தெம்மட் டம்மட்டு நிகழ்சீ வப்பேர் பெறுமான்மா
வொன்று மவிவே கத்தாலவ் வாசை யுண்டாந் தன்னாலே
யன்று நிருபா விவேகத்தா லந்த வாசை யழிவெய்தும். 1178

காத லென்று போமன்று கலந்த சீவத் திறம்விட்டுத்
தீதி லாத பரப்பிரமத் திறத்தை யான்மா சேர்ந்திடுமாற்
கேத மாக மேனின்றுங் கீழே யெய்துங் கீழ்நின்று
மேத மில்லா மேலேசென் றெய்து நெடுநா ளிவ்வான்மா. 1179

கனமார் பிறவிப் பெரும்பூட்டைக் கருத்தாங் கயிற்றிற் கடமாகே
லெனநீ திதற்கு நானென்றே யிறுகும் பிராந்தி விவகார
நனிமோ கத்திற் செறிபவர்யா ரந்த நவைசேர் வஞ்சகரே
துனிவேன் மன்னா கீழ்நின்றுங் கீழே சரிக்கத் தக்கவரே. 1180

இதற்கு நானீ தெனக்கவன்மற் றிவனா னுனென் றிடுமோக
விதத்தை யுயர்புந் தியினாலே விட்டோர் மேற்கு மேற்செல்வோர்
திதத்த னொளிகூ ரான்மாவைச் சிறிதுந் தாழா துறப்பற்றி
யுதித்த சகத்தைத் தற்புரண வுருவ மாக நோக்குதியால். 1181

யாதி யாதெப் பொழுதெதிர்ந்த தவற்றி லென்னே சொலப்பட்ட
தோது மவையெல் லாந்தடைதீ ருணர்வின் விலாச மேனன்றுந்
தீதி லறிவு மாத்திரமாந் திறனுக் காலச் செயம்பண்ணிக்
கோதின் மனத்தோ டிருப்பவன்சேர் குறைவில் சுகத்தோ டேது
[நிகழே. 1182

இல்ல தன்றுண் டல்லவறி வில்லா வுருவி லறிவுருவ
மல்ல வான்ம வுருவமல வயலன் றுலக மெனநினைவாய்
சொல்லு மிந்தச் சொரூபமுறத் தொடர்ந்த பகுதி போயிறக்கும்
புல்லு தேசங் காலமல புறத்தோர் நிலையன் றுபர்முத்தி. 1183

அகங்கா ரத்தி னகமென்னு மோக மழிந்தாற் பாவனையா
மிகும்பேர் பெற்ற பகுதியந்த மேவு மிதுவே வீடாகுந் [டம்
தொகுஞ்சாத் திரத்தின் பொருணினைவிற் றுவள்வு நாநா விதவின்
புகுங்கா வியவேட் கையுமனைத்து விகற்பத் துயரும் பொருந்தா
[மல். 1184

அன்னான் சமமா மழிவில்லா வான்மா வாய்நின் றின்பமுறு
மென்னு கினுமொன் றடிப்பவனு மென்னு கினுமொன் றுண்பவனு
முன்னு தெங்கா கினுமொருபா லுறங்குவோனு மாங்கவனே
பொன்னார் பூமி முழுதாளும் பூபா லனைப்போற் பொலிவுறுமால்.

வருணாச் சிரம வாசார வழிநா னடத்து நடைநீங்கி, யருகா வுலகின் வலைய கன்றோ னருங்கூ டகன்ற கேசரிபோ, னிருபா வுரைகட் கெட்டரிபோ னேடிப் பிறக்கு நிலைநீத்தோ, னருசோ பையைச்சேர்ந் தவன்மறைபோ பொளிக்க நாளில் விண்டலம் போல். 1186

தெளிவு கப்பீ ரங்கள்கிரி சேர்ந்த பெரிய சுனைபோல்வன்
களிகொள் பரம சுகச்சுவையாந் தன்பாற் றனே கலங்காம
லெளிது சுகிப்பன் சுருமபல மெல்லாம் விட்டோ னழிவின்றி
பொளிரு நிறைவோ னிருவினையே தென்றுந் தாக்கா னென்
[றனுகாள். 1187

பத்தி பாய்ந்தாட் பற்றுத பளிங்கு போலக் கருமபலம்
பத்தி பாய்ந்தாட் பற்றேதான் பலநின் மனித குடனுறைந்தும்
பத்தி யாலர்ச் சித்தாலும் பகைபா லடலை யரிந்தாலும்
பத்தி பாச்ச லுற்றதுபோற் பவிலு மகிழ்வு துயரறியான். 1188

துதிகள் கடவு ளோமங்க டொடர்பூச் சிபன்பூ சைக ளில்லோன்
விதிசெய் நீதி யாசார மேவப் படுவோன் மேவாதோ [போ
னெதிருந் தன்னு ளுலகோர்க ளிறையும் வெருவா வகையிருப்
னுசித மான வுலகத்தி லொன்றால் வெருவா துறைகிற்போன்.

பற்று முனிவு பயஞ்சுகங்கள் பயிலா னெனினும் பயின்றிடினுஞ்
சொற்ற வெவர்க்கும் பிரேமையந் தொடரா னெனினு நன்பாலர்
பெற்ற பிரமே யத்துறினும் பெரிய மனத்தோன் காசியிற்சா
வுற்ற பொழுது நாய்க்கறிப்போ ருழைசாவுறினு முறும்பதங்கேள்.

ஞான மடைந்த பொழுதிலிவ னல்வீ டுற்றோன் மனமிறந்தோ
னீன மான வகம்பாவப் பிராந்தி யன்றோ விடர்பந்த
மான விடா வதுமடைமை யந்த காரங் கெடலன்றோ
மான மிருந்த விவனெய்தின் மனிதர் பூசை செயவேண்டும். 1191

போற்ற வணங்கப் பூசிக்கப் புகழ வருந்திப் போய்க்காண
வாற்ற வுரியோ னெவனவன்வன் பிறவி யறுப்போர்க் கனவரதஞ்
சாற்று மகத்தாற் றீர்த்தத்தாற் றவத்தாற் றானத் தாற்கிட்டா
ஆற்ற வறிவாற் பிறவியறுத் துயர்த்தோன் பத்தி தரும்பயனே.

பரிந்திவ் வாறு கற்பித்துப் பகவன் மனுவாம் பேருடையோன்
விரிஞ்சன் றனது நகரத்தைப் புக்கா னிக்கு வாகுவெனும்
விரிந்த புகழ்மன் னனுமந்த விதியே பற்றி நிலைநின்றான்
வரிந்த கழற்கா லிராமனென வசிட்ட முனிவ னருள்செய்வான்.



## மானுவேடன் கதை.



குறிநீர் வடிவாய்ப் பிறப்பிறப்பிற் கொடுநீள் கால மயக்கறலாற்
பிறியர வின்பந் தறிஞனுக்குப் பேசுங் குறியிவ் வளவன்றோ
வெறிகூ ராசை சினமோகம் விதன மூலோப மாபத்துச்
சிறிதா நிபுண நானுமெனச் செப்பி வசிட்டன் மீண்டுரைப்பான்.

மறையோ னொருவன் றன்னுடைய மகிமை கடந்து சூத்திரனாய்
முறைநிர் வதுபோற் சீவனென முளைத்தா னீசன் சிருட்டிதொறு
நிறைநீ டுயிர்க ளளவின்றி நிகழு மூலச் சித்தசைவாற்
றுறைதோ றவைதாந் தோன்றியொற் றொடர்கா ரணமிங் கிதைதா
[கும். 1195

ஈச னிடைநின் றற்பவமா யெழுந்த வுயிர்க டாஞ்செய்த
வீசு கருமங் களினாலே மேன்மேற் பிறவி களைமேவுந்
தேச முடையாய் காரிபகா ரணத்தின் செய்தி யிதுவாரு
மேசு பிறவி கருமமெனு மிரண்டி னுக்கு மிப்படியே. 1196

பரம மதனி லகாரணத்தாற் பரந்த வுயிரெல் லாமுண்டாம்
விரவு மதற்பின் பவர்க்கெல்லா மிகத்தாஞ் செய்த கருமங்க
ளுரிய சுகதுக் கங்கடமக் குறுகா ரணமாந் தனையறியாப்
பிரமை தனிற்சேர் சங்கற்பம் பேசு கருமங் களின்மூலம். 1197

பந்த நிதானஞ் சங்கற்ப மன்றோ வதுநீ பற்றறுப்பாய்
முந்து சங்கற் பந்தவிர்ந்தான் முத்தி யதுவா மதுதன்னைப் [றின்
புந்தி யதனாற் பரிசுயிப்பாய் பொருளும் பொருள்கொள் பவனுமு
மைந்த மெள்ள வெப்போது மறவா தொழிப்பாய் சங்கற்பம்.

கொள்ளும் பொருளா கவும்வேண்டா கொள்வோன் வடிவா கவும்வேண்டா, வெள்ளுங் கருத்தெல் லாநீக்கி யெதுசே டித்த ததுவாவாய், கள்ளும் பொருளொன் றினையிந்த நாளும்பொறிக ளுறிலாங்கே, தெள்ளும் பற்றுள் ளதுபந்தஞ் சிறக்கும் பற்றில் லது முத்தி. 1199

அற்ப முனக்கொன் றினிதாகி லதனாற் பிறப்பி லகப்பட்டாய் [றாய்
பொற்ப வுனக்கொன் றினுமினிமை பூணுதென்னிற் பிறப்பகன்
நிற்ப நடப்பப் பொருட்டிரளி னினக்குத் திரள முதலாகத்
தற்ப மூறுபொன் முடிவாகச் சற்று மினிமை யுறவேண்டாம்.

பற்றி லாதென் னுண்ணுறியென் பண்ணு நின்று மெனைவிதி
யுற்ற செய்வோன் புசிப்போனன் றுபசாந் தியனீ மதிமான்போன்
மற்று நல்லோர் சென்றபொருட் கிரங்கார் வருவ மதித்தெண்ணார்
முற்று நிகழ்கா லப்பொருளை முறையா லெய்திக் கைக்கொள்வார்.

மதமா மோக மையன்முதன் மனத்திற் பிணித்த காழுகளாந்
திதமா மனத்தை மனத்தாலே சேதித் திடலா மறிவோரா
விதமா நெடுங்கூர் விவேகத்தா விரும்பா விரும்பை யறுப்பதுபோல்
விதமா மனத்தை மனத்தாலே வீய்ப்பாய் பிறவி மயக்கறவே.

அழுக்கை யழுக்காற் கழுவுவர்கொ லம்பை யம்பாற் றடைசெய்வர்
வழக்கு நஞ்சை யெதிர்நஞ்சான் மாற்று கிற்பர் மதியுடையோ
ரொழுக்க முறுமுன் றுளிவாக் குபாயந் தால றுக்கமென [ய்.
விழுக்க மாமொன் றுயர்பரமா மிதுசேர்ந் தந்த விரண்டொழிப்பா

மேக மலையாய் கைகால்கண் மேவு மிந்த வுடறனே
போக முண்ணச் சீவனுக்குப் பொருந்து மால வுருவாகும்
பாக மருவு சங்கற்ப மயமாய்ப் பவபா வனைபண்ணுஞ்
சோக மனஞ்சீ வனுக்குருவாஞ் சூக்க வாதி வாகியமே. 1204

மெய்யாய் மூல மீறின்றி விகற்ப மறுசின் மாத்திரமே
மொய்யார் சீவன் பரவடிவா மூன்று குவது முண்டகம்போற்
கையாய் சுத்த துரியபதங் கண்டா யிதுவே யிதிலமூர்த்தி [டா.
மையார் முதற்சொல் வடிவிரண்டு மாற்றி யவைநா னெனவேண்

என்னு முனியை யிராமனும்பார்த் தெந்தாய் நனவு கனாச்சுழுத்தி
துன்னு மதுவா யினமூன்றிற் றோன்று மதுவாந் துரியத்தை
யுன்னி விசேட முறவுரைப்பா யுயர்ந்த முனிநா யகவென்ன
மன்னு மமுத மழைபோலும் வாக்கால் வசிட்ட முனியருள்வான்.

அகமென் பதுமென் றெதுவு முளது மிலது மறவிட்டு
நிகழுஞ் சமமாய்ப் பற்றறந்தன் னிலைக்கே நிற்ற றுரியமதாந்
தகுதன் னிலையாய்ச் சமமாகிச் சுகத்தின் றொழிற்குச் சான்றாகிப்
புகல்சீ வனின்முத் தியுமாகிப் பொருந்தும் பனைநீர் நிலைதுரியம்.

இதுதா னனவு கனவல்ல விடர்சங் கற்ப மிலாமையினாற்
பொதுவாஞ் சுழுத்தி தானன்று போத மின்மை நீர்தலினாற்
சதுரா விந்தச் சகநன்றாந் தனது நிலைக்கே சமித்திறக்கு
முதுஞா னிகட்கிங் கிதுதுரிய மூடர்க் குலகந் திரநிலையாம். 1208

யானு மெண்ண மறிற்சமந்தா னெய்திச் சித்த மொருகாலு
மானு வினைசெய் யாதபடி யாக்கிற் றுரிய நிலைநிற்கு
ஞானு நீத னாங்கிழவோ னெனினு ஞான நனிமேவ
மேனு னடந்த தொருசரிதை கேட்பாய் மேதை கனின்மிக்கோய்.

பெரிய வடவி யொன்றிடையோர் பெரிய முனிவன் மகாமவுனம்
புரியு நிலையோ னவன்றனையோர் பொருவில் வேடன் வந்தணுகி
யெரியு மென்னைக் கணைபடவொரு திங்கோர் கலைமி யோடியதாற்
றெரிய வஃதெங் ககன்றதெனச் செப்பு முனிவ வெனக்கேட்டான்.

கேட்ட கிராதன் றனையந்தக் கேடின் முனியார்த் தினியோனை
காட்டி னுறைவோர் சமநிலைமைக் கண்ணு முனிவர் கணநாங்க
ளாட்டு விவகா ரம்புரியு நவையாங் கார மாகிலநாங் [ரோ.
கூட்டு பொறியின் றொழிலெல்லாங் கொள்ளு மனஞ்செய் குவதன்

அதனு லகங்கா ரத்துருவா மந்த மனநிச் சயமாகத்
திதமாய் நழுவி நெடுநாளாஞ் செறிசாக் கிரசொப் பனசுழுத்திப்
பதமா மவையொன் றையுமறியேம் பரம துரிய நிலையானேம்
விதமாய்க் காணப் படுபொருள்கள் விமல துரியத் திலவென்றான்.

நீதின் முனிவ னுரைபொருள்க டெரியா வேட னுங்ககன்று
னுத லாற்கே டுரியத்துக் கயலோர் நிலையு முளதன்று
லேத மான விகற்பமெலா மிறந்த வறிவே துரியமதா
மீத லாதிங் கயலொன்று மில்லைக் கண்டா யிராகவனே. 1213

கண்ட நனவு கோரமதாங் கனவு சாந்த மெனப்பெயராங்
கொண்ட சுழுத்தி மூடமதாங் கூறு மிம்மூன் றவத்தைகளும்
விண்ட மனத்தின் வடிவாகும் விளம்பு மிம்மூன் றையும்விட்டாற்
றண்டு மனம்போ மனமிறந்தாற் சத்தா யொன்றுஞ் சமநிலையாம்.

அந்த நிலையே யோகிகடா மிரிதிற் சாதித் தடைகின்றார்
வெந்த துயர்செய் சங்கற்ப விகற்ப மில்லாத் துரியத்தே
மைந்த நிலையா யிடர்தீர்வாய் மகத்தா யுயர்ந்த முனிவரராய்ப் [ர்.
பந்த மிலராய்ப் பேதமறும் பழையோர் விடாதிப் பதந்துறைவா



## நிருவாணப்பிரகரணம்.



எனைத்து ஞான நன்னூலி னியம்பு மறுதி யாதென்னி
லனைத்துங் கனவு காண்பதுவே யன்றே வனிஞ்சை யிங்கில்லை
வினைத்தின் கவலை செய்கின்ற வெய்ய மாயை தானில்லை
நினைத்துன் பழமற் றுபசாந்தத் திறமா மினுமே நிகழ்பிரமம்.

சாந்த மாகிச் சிதம்பரமாய்ச் சமமாய் நொய்தா யான்மாவா
யேய்ந்து சத்தி யளவிலாதா யிடும்போர் பிரம மெனுமிதற்கே
சேர்ந்த பலநிச் சயம்பண்ணிச் சிலர்பா ழென்பர் பரமேசன்
வாய்ந்த வுருவ மென்பர்சிலர் மாவிஞ் ஞான மென்பர்சிலர். 1217

எல்லா நீக்கி மகாமவுனத் திருப்பாய் நிருவா ணத்தினுய்ப், பொல்லா மனம்போய்ச் சித்தம்போய்ப் புத்தி போய்த்தா னென்பதுபோய்ச், சொல்லா வூமை குருடுசெவி டொத்துத் தூய வான்மாவி, னில்லா யுள்ளே முகமாகி நித்த நொய்தாய் நிறைமதியாய்.

ஙனவிற் சுழுத்தி நிலைமேவி நன்று மெல்லா முள்ளகற்றித்
தனதிச் சையில்வந் ததுபுறத்தே சமைப்பாய் சித்த முண்டாகை
கனதுக் கமதாஞ் சித்தமறிற் கனத்த சுகமாஞ் சித்தத்தை [ய்.
யுனதுட் படுத்தி யுணர்வின்மை யாலே யொழிப்பா யுணர்வுருவா

சோக நன்மை தீமைகளைச் சூழ்வுற் றிருந்துஞ் சமமாகிப்
பாக மின்றிக் கற்போலப் படிந்து நிற்பாய் பலபிறவி
மோக மகனு மவ்வளவு முயலுந் தனது முயற்சியினு
னூக மனையாய் சுகதுக்க நடுவுள் ளதுநீ நாடலையாய். 1220

இந்த வளவாந் தன்முயற்சி யிடர்தீர் முடிவில் பதமளிக்குஞ்
சிந்து கலைக ணிறைமதிபோற் சீத வமுதே யுண்ணிறைய
வந்த வறிவன் சுகமடைவ னகில வுலகின் பொருட்சார
முந்த வறிந்து செயற்செய்யா தவனுய் முத்தி யெய்திடுமே. 1221

யோக பூமி யேழுக்கு முறுசெய் தொழில்க ளெவ்வண்ண
மாக விந்தப் பூமிகளை யடைந்த யோகிக் கெதுகுறிகண்
மோக மில்லா யுரையென்ன முனிவ னிராமற் குரைசெய்வான்
போக வசஞ்செல் பவன்மீண்டோ னென்று புருட ரிருவகையாம்.

சுவர்க்க முத்தி களைவிரும்பித் தொடரு மவர்தங் குறிகேளா
யுவக்கும் வீடே யெவ்வளவிற் றுலக நடையே யுயர்ந்ததென
நிவக்கு மறுதி யாற்செய்வோ னெடும்போ கத்திற் செல்பவனு
மெவர்க்கும் விவேக முறுபிறவி யெய்தற் கரிய வியல்பினதே.

எறியுங் கடலி னுகத்துளையி லாமைக் கழுத்துப் புகுவதுபோற்
பொறிவெம் பிறவி யநேகத்தாற் புருடன் விவேகி யெனப்பிறந்து
முறியும் பிறவிப் பயனிலதிம் மோக மமையுஞ் செய்தொழிலாற்
செறிவ தென்னே யிவற்றுலே தினங்க ளெல்லாஞ் சென்றிடுமால்.

தொழிலின் மிகுதி யற்றுயர்ந்து துயர்தீ ரஃதே தென்றுள்ளே
யழிவி லறுதி யுள்ளோனே யடங்கத் திரும்பு மவனுருங் [னு
கழிவின் மயல்போய்ப் பவக்கடலைக் கடப்ப தெவ்வா றெனவுன்
மொழிவில் விசாரத் தால்விரத்தி யுள்ளே யுறுவ னுள்வேண்டா.

உதார மான தொழில்களிலே முயன்று நாளு முண்மகிழ்வன்
கதாவு கின்ற கிராமியமாங் கருமச் சழுக்கிற் குச்சரிப்பன்
விதான கருமங் களைச்செய்வன் விளம்பான் செய்த கருமங்கள்
பதாதி யுலகோர் வெருவாத படிமெத் தென்ற தொழில்புரிவன்.

தீய வினைக்கஞ் சுவனென்றுஞ் செறியும் போக வேட்கையுறு
னேய நயமாய் மெத்தென்றுஞ்சிபுண மாகி யிடம்பொழுதுக்
கேய வுரைகளுரைசெய்வா னிவ்வா றுன விவன்றனே
யாய பொழுது முதற்பூமி யான வொன்றை யடைந்தவனே. 1227

ஒக்க மூன்று கரணத்தா லுயர்நல் லோரைப் பின்செல்வன் [ன்
மிக்க நன்னூ லெங்கணும்போய் விருப்பிக் கொணர்ந்து பரிசயிப்ப
ஞெக்க சுருக மறுப்பதற்குத் துணிந்திவ் விசாரம் படைத்தவனே
தக்க பூமி யறிந்தோனுந் தருமா றியனு மற்றவனே. 1228

இருளில் விசார மெனுநாமத் திரண்டாம் பூமி யெய்தினை
னுஞ், சுருதி மிருதி நல்லொழுக்கந் தொடர்தா ரணை நற் றியா
னங்கண், மருவு கருமங் களைக்கேட்பான் மாசில் விருத்திப் பொ
ருணிகழ்த்தும்,பெருகு புகழ்சேர் பண்டிதரிற் பெரியோர் தம்மை
யினிதடைந்து. 1229

செறியும் பதார்த்தப் பிரிவறிந்து செய்யுந் தவிருங் காரியங்க
ளறிவன் செல்வ மானமனைக் கதிபன் மனையை யறிவதுபோன்
மறியு மதமாற் சரியமபி மான முலோப மோகமெலாம் [போல்.
வெறிது புறத்தெய் தினுஞ்சிறிதாய் விடுவன் பாம்பு தோல்விடல்

மதியிவ் வாறுள் ளவனூலால் வணங்கு குருவா னல்லோரா
லதிகங் குய்யப் பொருளனைத்தி னறுதி யறிவ னதற்பின்னர்
முதிர்பற் றின்மை யெனப்பெயரா மூன்று மற்றைப் பூமிதனைப்
புதிதா மலரின் மெல்லணைபோற் பொருந்தி நிற்பன் பொலிந்தவனே.

உள்ள படியே நூற்பொருளி னொழுக்கந் திரமாய்க் கைக்கொண்டு
தள்ளின் முனிவ ரிடந்தோறுந் தளர்வொன்றில்லாமெய்ஞ்ஞானத்
தெள்ளு கதையி னொழுங்குகளாற் றீர்க்க வாயு ளதுகழிப்பன்
பள்ளி கொளவு மிருப்பதற்கும் படர்ந்த பாறை யிடமாவன்.

பாயு மனமா றியநலத்தாற் பற்று வின்பஞ் சமமாகித்
தோயு மடவி களினுலவித் தொக்க காலஞ் செலவிடுவ
ளுயு நன்னூற் பரிசயத்தா லறங்கள் செயலான் மானிடருக்
கேயு மிந்தப் பொருளுக்க மிலங்கு முள்ள படியாக. 1233

உற்றமூன்றும் பூமியைச்சேர்ந் துணர்ந்தோன் றனேயனுபவிக்கும்
பற்றி லாமை யிருவகையாம் பகுத்து நாமிங் குரைசெயக்கேண்
முற்று சாமா னியமொன்று முதிர்ந்த சேட்ட மொன்றுகு [ய்.
மற்றிவ் விரண்டு மோரொன்றி விரண்டு வகையா மனுகுலத்தோ

பொருள்க டமிற்செய் பவனல்லேன் புசிப்போ னல்லேன்
றெளிவோனுங், குருவு மல்லே னெனப்பற்றில் குணமாஞ் சாமா
னியவிரத்தி, பருகு துன்ப மின்பமெலாம் பண்டை வினையால்
வருமன்றே, யருள்செய் கடவுள் வசந்தானு மமைப்போ னுதை
லெனக்கெங்கே. 1235

கொல்வ தான பொருநோயாங் கொடிய போகப் பரப்பெல்லாஞ்
செல்வ மெல்லா மாபத்துக் கிடமாஞ் செத்தல் பிறப்பதற்கா
மொல்வ தான நற்புத்திக் குள்ள கவலை நெடுநோயாஞ்
சொல்வ ஞால மெலாங்காலன் றொலைக்க முயலும் விடாதென்றே.

பண்ட மனைத்தின் பற்றற்ற பகர்பா வனையுள் ளுறவுண்டாங்[க்குக்
கொண்ட வுயர்வாக் கியப்பொருளைக் குறிப்பா லுழுந்து மனத்தோர்
கண்ட விதுசா மானியமாங் கவர்பற் றில்லா விந்நெறியா
லண்டு பெரியோர் கூட்டரவா லறிவி லாதோர் நீக்கத்தால். 1237

தானு முணர்வி னுட்டெளிவாற் றக்க புருட வருத்தத்தா
லானு நன்னூற் பரிசயத்தா லங்கை நெல்லி தோன்றுதல்போ
லூனூர் பிறவிப் பெருங்கடலி னுயர்கா ரணமாம் பெரியகரை
தேனு ரலங்கன் மணிமார்பா தெளியக் காண்கின் றனதிடமாய்.

செய்வா னுனன் றீசன்றான் செய்வா னலதென் பழவினைதா
னிவ்வா றுன சொற்பொருளி னெண்ண மெல்லா நிச்சயமாய்க்
கவ்வா ததிநா ரத்தகற்றிக் கலந்த சாந்த மோனநிலை
பெய்வான் கருணை முகிலேமுன் பேசு சேட்டப் பற்றின்மை.

அகத்திற் புறத்தின் மேல்கீழி லாசை களிலா காயத்திற்
சகத்திற் பொருளிற் பொருளல்லா தவற்றிற் சடத்திற் றனியறிவிற்
பகுத்துக் கருதா துபசாந்தம் பயின்று நினைவற் றொளியற்று
மிகுத்துப் பிறப்பற் றடிமுடிவின் மேன்மை சேட்டப் பற்றின்மை.

மகிழ்வாம் வாச மதுரமுடன் வருநற் றொழிலாந் தளிர்மேவித்
தகவா மனத்தா னுனிசேர்ந்து தடையா முள்ளு நிறைந்தறிவா
மிகுமோர் கமல மடைந்துட்சேர் விவேக விரவி யான்மலர்ந்து
பகர்மூன் றாமிப் பூமிதனைப் பலமாய்ப் பலிக்கும் பற்றின்மை. 1241

மோக மில்லா தவர்செறிவான் முதுநல் லறத்தின் சமுகத்தாற்
காக தாலீ யம்போலக் கருத்தி லுதிக்கு முதலான
யோக பூமி யுதித்தலுமே யுள்ளே யமுத முளையொப்பா
மேக விவேக நீர்பாய்ச்சி யிதுகாத் தளிக்கப் படுமுயன்றே. 1242

விடுதி யாலே தழைக்குமிது விசாரத் தாலவ் விடுதிதனை
வடிவி னுழவர் நென்முளைபோல் வருந்தி வளர்க்க நாடோறு
மொடிவின் மறுபூ மிக்கிந்த வொன்றே சநந பூமியென
முடிவில் வெளியா மதிவிரண்டா மூன்றும் பூமி தனைப்பெறலாம்.

சேட்ட மெனச்சொல் பற்றின்மை சேர்ந்தான் மூன்றும் பூமியதா
மீட்டு புருடன் சங்கற்ப வெண்ண மொன்று மில்லெனக் [ன்
கேட்ட குமர னுரைசெய்வான் கீழாங் குலத்தோ னுணர்வில்லோ
பூட்டு தொழிலோன் பொல்லாதோன் புகன்றயோக மில்லாதோன்.

அவனுக் கெங்ங னேயுண்டா மறைந்த நன்மை யிதுநிற்க [றை
விவண முயர்பூ மியிலொன்றை யிரண்டை மூன்றும் வேறொன்
கவர்வுற் றடைந்தோ னுயிர்மாய்ந்தாற் கலந்து மேவுங் கதியேது
தவறிற் பெரியோ யுரையென்னச் சான்றவசிட்ட னுரைசெய்வான்

மூட னாகிப் பலகுற்ற மூடு மவனுக் கனேகமென
நீடு பிறப்பா முதற்பூமி நேரு மட்டும் பிறப்பகலா
நாடு மிதுவன் றியிற்காக தாலீ யம்போ னல்லநெறி
கூடு மெனினு மதனாலே குறைவி னிராசை யதுபிறக்கும். 1246

அன்றி நல்லோர் கூட்டரவா லடுத்த விராக மதுபிறக்கு
மொன்று நிராசை யுறுபோதே யோக பூமி யுறறப்பா
துன்று மதனாற் பிறப்பகலுந் தொகுநூற் பொருளின் சுருக்கமிதா
நின்ற யோக பூமியுட னிதன மடைந்தோர் நெறிகேளாய். 1247

யோக பூமி யம்சம்விடா துறலாற் பழைய தீவினைபோ
மாக விமான மதற்பின்பு வந்து கொடுபோய் வானவர்வாழ்
நாக முதலா முயர்பதியி னன்மே ருவின்சூழ் பொழின்முழையிற்
போக மடவா ரொடுங்கூடிப் புணர்ந்து சிந்தை களிகூர்வன். 1248

அருந்து போக மாய்தவிறு லளவில் பண்டை யிருவினையும்
பொருந்த மாயு மப்போது புவியிற் பிறப்பர் யோகிகடாந்
திருந்து செல்வங் குணஞ்சுத்தஞ் சிறந்த நல்லோர் மனைப்பிறந்து
வருந்தி முன்னம் பழகுதலால் வழுவா யோக நெறிநிற்பர். 1249

விதமாஞ் சகத்தைச் சாக்கிரத்தின் மிகப்போ தந்தீர் புந்தியினாற்
பொதுவாய் நோக்கு மதனாலிப் பூமி மூன்றுஞ் சாக்கிரமா
[illegible]காவே தனிக்கே வலமியோகிக் காரி யப்பேர் பெறுதிறமா
று லிவனே யுய்ந்தவனென் றேத்தத் தோன்று மறிவிலர்க்கும்.

செயலி னூரிய மிகச்செய்வோன் செய்யத் தகாத செய்யாதோ
னியல்பி னொழுக்கந் தனினிற்போ னியாவ னவனே யாரியனு
முயனு மொழுக்க நூற்சித்த முந்து நிலைமை விவகாரம்
புயலி னிறத்தோ யுள்ளபடி பொருந்து மவனே யாரியனும்.1251

முதலா மியோக பூமியிலே முளைக்கு மிரண்டா வதின்மலருந்
தனையு மூன்று வதிற்பலிக்குந் தனியா ரியனுந் திறமியோகி
யிதனி லிறந்தா னெடுங்கால மிருந்து சுத்த சங்கற்பத்
துதவு போகங் களையருந்தி யோகி யாய்மீண் டுற்பவிப்பான்.1252

மூன்று பூமிப் பரிசயத்தான் மூடத் தன்மை யிறந்தழியே
யான்ற ஞானே தயமுண்டா யாகி யந்த மறவிரிந்து
பூன்ற மதியி னுதயம்போற் பொலியு மனத்திற் போதமுற
வூன்று யோகத் துடன்சேர்ந்த வுள்ள முடைய யோகிக்கே.1253

சமம தாகச் சொப்பனம்போற் சகத்தி லனைத்து நோக்கிடுவ
ரமர நாலாம் பூமிதனை யடைந்தோர் முதற்பூ மிகண்மூன்றுங்
குமர னேசாக் கிரமாகுங் கூறு நாலா வதுகனவாம்
விமல சித்தஞ் சரற்கால மேக சாலம் போலிறக்கும். 1254

சிறக்குஞ் சற்பா வந்தானே சேட மாக நின்றிடுவர்
பறக்குஞ் சித்த மிறத்தலினாற் படர்ந்த விகற்ப மெலாந்தோன்று
வுறக்குஞ்சுழுத்திப் பதமென்ன வுரைக்குமைந்தாம் பூமியிற்போய்
நிறக்கும் விசேட மனைத்துமற நிற்ப னென்று நிலைமட்டில்.1255

இருமை யென்னு மிருள்போயுள் ளறியா நின்ற பேருணர்வோ
னருமை யான சுழுத்திநிலை யாகி நிற்ப னனவரதம்
பொருவி லுண்ணேக் குடனிற்பன் புறத்திற் றொழிலிற் புரிந்தேயு
மொருமையுபசாந்தத்தாலே யுறக்கமிருந்தோன் போற்றெரிவன்.

அழுந்து மாரிய மெனுநாமத் தாறும் பூமி யடைந்தொழுங்கி
னெழுந்து பலவா தனையிலனா யிப்பூ மியிலே பரிசயிப்ப
னுழைந்து நானென் பதுமென்று ததுவு முளது மில்லாதுங்
கழிந்து வெறிதே நினைவிலனாய்க் காணு னிருமை யொருமைகளை.

செறியு முடிச்சு மையமும்போய்ச் சீவன் முத்த சுபாவத்தா
ல், வெறிது வீடன் றியும்வீடு விளைந்தோ வியத்தின் விளக்கொப்
பான், பிறிவில் விண்ணில் வெறுங்குடம்போற் பிறிது புறனுட்
சூனியமா, யெறியுங் கடலி னிறைகடம்போ லெங்கும் புறனுண்
ணிறைந்திருப்பன். 1258

இவனே யுளதாய்ச் சிறிதாங்கே யிவனே சிறிது மிலனுவன்
றவரு வாரும் பூமியிலே தனினின் றேழாம் பூமிதனை
யவனே யடைவ னுடலின்றி யடையு முத்தி யதுவாகுங்
கவர்சாந் தமுமே மொழிக்கெட்டாக் கனபூ மிகளி னெல்லையிதாம்.

குலவு முடறீர் முத்தியெனக் கூறு மேழாம் பூமிதனைச்
சிலர்நற் சிவமென் றுரைசெய்வர் சிலர்சூ னியமென் றுரைசெய்வ
ரிலகு பொருளென் றுரைப்பர்சில ரியைந்த கால மென்பர்சிலர்
விலகு பகுதி யென்பர்சிலர் வெவ்வே றாக விசாரித்து. 1260

அயலோ ரான்ம விகற்பத்தோ ரவதா னந்தீர் பேதத்தோ
ரியல்பா லிதுவென் றறிவிக்க வெட்டா விதனை மிகவருந்தி
முயல்வா ராகி யறிவிப்பர் மொழிந்த பூமி யிவையேழு
மயறீர் நிலையாற் பரிசயிக்கில் வருத்தஞ் சிறிதும் வாராதே. 1261

மிகவு மதத்து மதம்பொழிந்து மெத்தென் றினிதா நடையு
டைத்தாய்ப், புகர்கொ டுதிக்கை நுனிபதறிப் பொருகோட் டிணை
சங் கிணைநிகராம், பகடுண் டனர்த்தம் பண்ணுமது படுக்கப் படுமே
லப்போழுதே, சுகமாய் விரைவி னரர்கடப்பர் சொன்ன பூமிப்
பரப்பெல்லாம். 1262

வழியுங் கடமாக் களிறதனை வன்பாற் கொல்லா திருப்பளவு
மிழியுந் துயரார் போர்க்களத்தி லெவனே சுபட னுமென்ன
மொழியுந் தவனே நீசொன்ன மூரிக் களிறே தமர்க்களமே
தழியும் படியே துறைவிடமே தருள்வா யென்று னருண்மூர்த்தி·

இராக வர்க்கு முனிசொல்வா னீதுண் டாக வெனல்வடிவாய்ச்
சோக விச்சை யெனப்பெயர்கொள் சொரிமா மதத்த வெங்களிறு
தேக மென்னும் பெருங்காட்டிற் றிரளாஞ் செருக்கு மிகச்செய்யும்
வேக மதத்த விந்தியமாம் வெங்கன் றுகளை யுடைத்தாகும். 1264

இனிது நாவா லுரைசெய்யு மிதய மென்னுங் காட்டுறையும்
பனிவல் வினைக்கோ டிரண்டுளவாம் பலவா தனையா மதஞ்சொரியு
மனிச மெங்கும் படர்வடிவா மறிவில் பிறவி நோக்கங்கண்
முனிவி லடுபோர்ப் பூமிகளா மூரி யிச்சை மதகளிறே. 1265

வெற்றித் திறமுந் தோல்விகளு மேன்மே லல்கி யிச்சையெனுஞ்
செற்றக் களிறு தீனர்களாஞ் சீவத் திரளைச் சங்கரிக்கு
நிற்றத் தொழில்வா தனைபாவ நெஞ்சு மதிசங் கற்பங்கள்
பற்றும் பிறவு மிதன்பெயராய்ப் பண்ட மாய்நெஞ் சுள்ளிருக்கும்.

நிலைமை யென்னு முயர்கலையா னிறைந்த வலியால் வினை
நுத்தாற், றொலைவில் பொருளிபா வையுமாகித் துன்னி யொன்று
மிச்சைதனை, யுலவி லெல்லா வகையாலு மியோகி வெல்வ துத்
தமமா, மலைவோ டதுண் டாகவென லகத்தே தழைக்கி லது
கேளாய். 1267

பேசு மிதுதா னிற்பளவும் பிறப்பா நச்சு விடுசிகைதா
னூச மடையா திராகவனே ஞானச் சுருக்க மிதுகேளாய்
பாச முறவீ துண்டாக வென்று படரு மனந்தானே
யேசு பிறவி யிம்மனத்தி னிறவே முத்தி யிவ்வளவே. 1268

மருளு மயறீர் விமலன்பால் வடித்துத் தெளிந்த வுபதேசந்
தருதல் கண்ணு டியின்புறத்திற் றபிலத் துளிபோ லிளைப்பாறுந்
தெருளு முணர்வா லிம்மோகந் தீர்த்து விச்சை யங்குரமா
யுருவ மனங்கிஞ் சிதுந்தோன்று துணர்வி லாமை மாத்திரத்தால்.

ஊறு வனர்ந்தந் தருமிச்சை யொருகால் வரினு மப்போதே
யாறு விடயத் துணர்வின்மை யான வதனு லறுத்திடுவாய்
கூறு மிச்சை பலவடிவாய்க் கோத்த தெனினு மெவ்வுடலின்
மாறு தான வாதனையை மாற்று நிரா துணர்வின்மை. 1270

தன்னு முடிவின் றியினித்தை நச் சுவத்தின் றிரளை விருப்புறல்போ
றென்னும் பிரத்தி யாகாரத் திறத்தி னூலே வாதனையை [ற்
றன்னு மிச்சை மாத்திரமாய் நயவா திருக்கு மப்போதே
யுள்ளு வெறிதே யிருப்பதுவே யுணர்வி லாமை யுறுமுயற்சி. 1271

எனதீ தென்னு மறிவுதனை யிடர்தற் பனைபென் றுரைசெய்வார்
கனமா மறிவின் பாவனையாற் காண்ப தெல்லாங் கைபகவி
லனகா திடமேனை கற்பனைக ளற்ற தென்று ருயர்நல்லோர்
மனமா நினைவே சங்கற்ப மனத்தி னினைவற் றதுசிவமே. 1272

எட்டி யறிந்த தறியாத திரண்டும் பாவிப் பதுநினைவாம்
பட்ட மரம்போ லினையிரண்டும் பற்று நினைவு தனைமறந்து [ய்த்
வட்ட மிடுமியா வையுமிறையின் மறந்து சான்ற மதியுடைத்தா
திட்ட முறத்தோன் றுதலில்லாத் திறத்தோ ருகி நிலைநிற்பாய். ()

கேளா நின்று னிவனென்ன வொருவன் கிட்டா மையினாலே
தோளா லுயரக் கையெடுத்துத் தோன்று நின்று சொல்கின்று
மீளா தான வசங்கற்பம் விமல மான பாமபதம்
வாளா வுள்ளே பாவிக்க மாட்டா ரதனை யென்னம்மா. 1274

செறிபார் முழுதாள் பவன்பதமுந் திரண மென்னப் பரமபதம்
வெறிதே யிருக்கு மிருப்பினுன் மேவு மன்றே பேரூர்க்கு
நெறிபோம் பதிகன் றனதிருதா ளினையா திருக்க நடப்பதுபோற்
பொறிகூர் தனது தொழினடக்கும் பூறு வாளா விருந்திடவே.()

இங்குப் பன்னும் பலவாலெ ளியம்பு சுருக்க மிதுகேளாய்
சங்கற் பந்நான் பவபந்தஞ் சங்கற் பந்தீர்ந் ததுமுத்தி
பங்கற் றெல்லை யழிவிலவை பவமற் றுறு மறிவுருவே
துங்கச் சகங்க ளெனநோக்கிச் சுகமெய் படியப் படிநிற்பாய். 1276

ஒழியா நிலையா முபசாந்த யோக மென்ப துணர்வின்மை [வா
கழியா யோக நிலையினனுய்க் கவர்பற் றொழித்துத் தொழில்செய்
யிழியா நியற்றப் படாவுள்ள மிறந்த யோக முணர்வின்மை
வழியான் மிகவு மதின்மையமாய் வல்லே நிற்பாய் மகிழ்ந்தபடி. 1277

எனக்கீ தென்னு முணர்வுடைமை யிடர்விட் டகலா துணர்வின்
யனர்த்த மில்லா விடனிக்கு மாசை யேதிங் கதுசெய்வாய் [மை
சனிப்பில் சிவமெங் கனுமுளது சாந்தஞ்சுபஞ்சித் துருவென் றுங்
கனத்த வந்த வொருநிலைவே கருமத் தியாக மிராகவனே. 1278

என்று வசிட்ட முனிராமற் கிசைத்தா னென்று வான்மீகி
சொன்னு னாறா யிரங்கிரந்தத் தொகையாற் பரத்து வாசனுக்குப்
பின்னு ளதிலா றாயிரத்தைப் பிரித்தா னிவ்வா றுலகுய்யப்
பன்னு மறைநேர் கான்மீர பண்டி தப்பேர் பரமகுரு. 1279

சாத்தி ரத்திற் பெரியதிது தடங்கா வியத்திற் பெரியதிது
மாத்தி ரத்தின் மெய்ஞ்ஞான வழியாற் பெரிய திதுஞான
நேத்தி ரத்திற் பெரியோர்க்கு நிதிபோற் பெரிய திதுகதிசேரான்
கோத்தி ரப்பொற் பாத்திரத்திற் குதித்த வமுதாம் வாசிட்டம்.

மலரோன் வாழி நாமாது வாழி வசிட்ட முனிவாழி
யுலகா ளிராமன் மிகவாழி யுயர்வான் மீக முனிவாழி
நலமார் பரத்து வாசமுனி நாளும் வாழி வாசிட்டம்
பலமா வாழி கான்மீர பண்டி தப்பேர் முனிவாழி. 1281

தேமென் மலரோன் பதம்புகழ்வோ தெளிந்த வசிட்டன் பதம்பரவோ, விராமன் கமலப் பதந்துதிக்கோ வியன்வான் மீகி பதமேத்தோ, பாமன் கீர்த்திப் பாத்துவசன் பதமே பழிச்சோ ாசிட்ட, நாமம் பெறுநூற் பதம்வியக்கோ நான்சேர் பதத்தை ளன்கோ. 1282

பரம மேனி வசிட்டமுனி பச்சை மேனி யிராமற்குப்
பிரம ஞான முணர்வித்த பெருவா சிட்ட நன்னூலைத்
திரம தாகக் கற்பளவே சீவன் முத்திப் பதஞ்சேர்வ
ருரம தாக வுள்ளுணர்வோ ருறுபே றெங்ங னுரைப்பதுவே. (



## ஞானவாசிட்ட வமலராமாயணம்.



எவனுளந் தன்னிலே யிலகுஞ் சித்தொளி
யவனவ னியினுள விடய மாகிய
பவமுறு சாக்கிரம் பயின்ற நித்திரையி
னவமுறு கனவுபோ னயந்து காணுமே. 1

ஆயவிப் பிரபஞ்ச மவித்தை மூலமா
மேயது முடிவினும் விலகுஞ் சூன்யமாய்ப்
பாயவிம் மத்தியிற் பயனின் றுதலாற்
றாயநல் விவேகிக டுச்ச மென்பரே. ()

முன்னமு மில்லை யிந்தத் திருசிய வத்து முற்றும்
பின்னையு முடிவி லில்லை பிரித்திடி னுத லாலே
யன்னவை மத்தி யத்து மபாவமென் றறிந்து கொள்வாய்
பன்னுறு கனவு போலப் பார்த்திட வேண்டு நண்ப. 3

ஆவதாற் சித்தந் தெளியுமட் டந்த வற்புத சகுணமா நிறைந்த
தேவதே வனைநீ யுபாசனை புரிதி திகழ்பரி பாகமுண் டாகிப்
பாவமில் பரம தத்துவ நிலைதான் பலித்திடும் நிர்விக்ன மாக
வேவமில் சுருதி சம்மத மிதனை வியற்றுக சிரத்தையோ டென்ன.

இத்தகு சிவோபா சனையினுற் சுத்த மெய்திய மனேதிடத் தாலே, யத்தகை யனேக மோகவா ரம்ப மனுகுறு தமசினைச் சயித்தே, யுத்தம குருசாத் திரவுப தேசத் தூறுவிசு வாசவம் மனத்தா, னித்தமா யோக நிலைபெறக் கரணேந் தியநிரோ தன ஞ்செய வேண்டும். 5

அம்முறை சமாதி கணப்பொழு தேனு மமர்மனத் தாற்பரா ன் மாவை, யிம்மையிற் றரிசித் திடவத னலே யிவண்மு னந் தம சினுன் மறைந்த, வும்முயர் புந்தி யிரவிரு ளகல வுயர்கதி ருதயம துண்டாந், தம்மிகு கரும முயற்சியே தாரதோ சார்ந்திடாச் சிவனரு ளிலதேல். 6

அனேகசன் மாந்திர புண்ணிய பலத்தா லடைந்திடு ஞான மங் கதனை, மனேறெளி வுடைய ஞானியா முத்தர் மகிமையா லனுமிதித் திடலா, முனைதசத் தருவா மெக்கரு மத்தா லாற்றிடு மிச்சமு சாரந், தனையமித் தருவாங் கன்மமே முத்தி தருவதா மிராகமீத் திடினே. 7

எதுபரி யந்தம் வெளிமுகப் பார்வை யிருக்குமவ் வளவுமே விகற்பத், திதியுறு பிரபஞ்ச பாவனை தோன்றுஞ் செழுங்கட லலையசை வளவே, துதைந்திடுங் கரையை யொழிந்திடு னிலைத்த வுதகமே போலுமெய்ப் பிரமஞ், சுதந்தர வடிவாய் நிறைந்திடுஞ் சோகந் தோன்றிடா தெனத்துணி மகனே. 8

தரங்கநின் றலைக்குந் திரணமே போலச் சந்தேகாடம் விதனை மென் றிவற்றி, னரந்தைசெய் பங்க முற்சாக மென்று மலைகளாற் பவக்கட லலைவோர், திரம்பெறு பெரியோர் குழுவொ டென்னைச் சேர்ந்திடார் திறம்பெற வேண்டி, னிரந்தர மனோநா யுவையகத் தடக்கி நிர்ச்சல னம்பெற வேண்டும். 9

ஆகிய விராட்டு விரணிய கருப்ப னவ்வியா கிருதனு மென்னு, மாகிய தூல சூக்கும மூல மருவுறு சமட்டியாஞ் சகத்து, மோகமா மவத்தை மூன்றொடும் விடுத்து மொழிந்திடு துரியமாய் நின்ற, சோகமில் பிரம பதமது கிடைக்கத் தொடர்பினிற் றியானிக்க வேண்டும். 10

ஆதலாற் சகல கருமமும் விடுத்தே யான்மாவில் விருப்புற விருத்த, மீதுசம் சாரச் சக்கரச் சுழிநீர் செறிகுவே பாவமேன் றியாமே, யோதிய துணைக்கு முமுட்சுவா கிய முசுற்றிடு போதனை தோட, பேதமுண் டாகா தவற்றினை யாய்ந்து பிறழ்தரா தியற்றிட வேண்டும். 11

தேகமிந் திரிய மனப்புத்தி யிவற்றிற் சிறந்ததன் குறிய நான்கு, பாகமாங் கோசா திகளை னக்கம் பகர்திற் சிறந்தது பிரம, மாகுநா னெனச்சீ வாத்துமா தன்னி லனுதினந் தியானமே புரிய, வேகமாம் பிரம சொரூபான்ம ஞான மியைதர முத்தனாகின்றான்.

சிவனைப் போது சர்வபூ தத்துஞ் செறியாத்ம னுகிய தனை மேவுறத் தன்னுட் சர்வமாம் பூதம் வேறுபா டறக்காணின்
ர், குழுமந் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தித் தானமூன்

றும்விடுத் தப்பா, லாவதாந் துரியா னந்தமா பதத்தை யடைந்
திடின் முத்தனு குவனே. 13

மேவுமிச் சிவன் றனக்குள சாக்ரம் விதிதரு சொப்பன மூல
மாவதா கியவா சனையொடு கரும மஞ்ஞான நித்திரை யாதி
போவற நீங்கு சுகாத்மிகை யாகு முயர்தரு துரியம தென்னு
மேவமில் பரம மாயிருந் திடுத லிசையோக முடிவான சமாதி. 14

சாத்திர விசாரங் குருவுப தேசந் தனதநு பவவாக்கி யார்த்த
நேத்திர மாக வப்பியாசிக்க நிலைதரு சகலசித் தியுமாஞ்
சாத்திய வேத நியதியீ தெல்லாச் சங்கற்ப விகற்பமும் விடுத்துப்
பாத்திய மாக நிரந்தரம் பழகிப் படர்மன நிலைபெறக் கடவாய்.

பிரத்தியட் சமதா மிந்தமா ஞானம் பிரயோச னங்குருசீ
டர்க்கு, விரித்திட வேண்டி லிவ்விரு வர்களு மிக்கசால் புடை
யரா யிருப்பின், றரித்திடற் குரிய கைவல்ய ஞானந் தரும்புரு
டார்த்தங்க ளனைத்தும், பொருத்தமா யடைதற் குரியரா குவர்
மேற் புகன்றிடு லொப்பிவர்க் கியாரே. 16

---

ஸ்ரீ சொரூபானுபவ சுவாமிகள் அருளிச்செய்த

## சொரூபவுந்தியார்.



### காப்பு.

கிஞ்சின் ஞரிவாகிக் கீழ்மே னடுவாகி
நெஞ்சி னறிவரிய நிண்ணயமாய்—மிஞ்சியரு
ளுள்ளபொருள் சிற்சொரூப வுந்தியா னைப்பாடிற்
கள்ளமறப் போக்குவிக்குங் காண். 1

### நூல்

சொல்லற் கரிய சொரூபநன் னிட்டருக்
கல்லற் பிறப்பேதென் றுந்தீபற
வளர்சரு வேசனென் றுந்தீபற. 2

ஏக சிதாகாச வெல்லை கடந்தவர்
போக மிறந்தாரென் றுந்தீபற
முத்த ரவரேயென் றுந்தீபற 3

காட்சிக்கெட் டாதொன்றைக் கண்டு தெளிவார்க்குத்
தாட்சி யணுகாதென் றுந்தீபற
தானவ னாகுமென் றுந்தீபற. 4

எட்டப் படாதொன்றை யெட்டிக்கொண் டார்களுக்
கெட்டப் படாததின் றுந்தீபற
யெல்லா மவரேயென் றுந்தீபற. 5

தன்னுருக் கண்டு தனிப்பட்ட ஞானிக்குப்
பின்னுரு வில்லையென் றுந்தீபற
பேத மிறந்ததென் றுந்தீபற. 6

நித்தியா னந்த நிலையறி வாருக்குச்
சத்தியந் தானாமென் றுந்தீபற
சாந்த சொரூபரென் றுந்தீபற. 7

எல்லா மிறந்த விடங்குரு வாங்குரு
சொல்லாமற் சொன்னதென் றுந்தீபற
சுத்த வெளியதென் றுந்தீபற. 8

சுட்டுத லற்றுத் துரிய மிறந்தபின்
கட்டுக் குலைந்ததென் றுந்தீபற
காவலா காசமென் றுந்தீபற. 9

கண்டது சிற்சத்தி கொண்டது தான்சிவ
நின்றது மிச்சமென் றுந்தீபற
நின்மல வாகாச முந்தீபற. 10

தர்ப்பணச் சாயல்போற் சைதன்னி யந்தன்னி
விப்பிர பஞ்சமென் றுந்தீபற
இல்லை யிதுவென்றே யுந்தீபற. 11

சித்துத்தா னென்றுசித் தேசக மாக்கண்டோர்
சத்துத்தா னென்றவ ருந்தீபற
சங்கை யிறந்தாரென் றுந்தீபற. 12

நானென் றிருந்தானின் றானென் றறிந்தபின்
றானென்று கண்டாரென் றுந்தீபற
சந்தேகந் தீர்ந்தாரென் றுந்தீபற. 13

ஆங்காரங் கெட்டு நிராங்காரம் பட்டபின்
போங்காரங் கெட்டதென் றுந்தீபற
உள்ளதே யுள்ளதென் றுந்தீபற. 14

தோற்றுவ தெல்லாஞ் சுபாவ மெனக்கண்டோர்
சாற்றும் வகையேதென் றுந்தீபற
தன்னை யிழந்தாரென் றுந்தீபற. 15

ஏகா சனங்கண் டிருந்தமெய்ஞ் ஞானிக்கு
யோகா சனமேதென் றுந்தீபற
ஒடுங்கிற்று வையமென் றுந்தீபற. 16

தன்னைச் சுபாவ வறிவென் றறிந்தவர்
பின்னைப் பிறவாரென் றுந்தீபற
பேச்சுக் கிடமற்ற துந்தீபற. 17

பஞ்சகோ சத்தைப் பகுத்தறிந் தோருக்கு
நெஞ்ச மிறந்ததென் றுந்தீபற
நிட்டைய தாகுமென் றுந்தீபற. 18

ஆத்தும தத்துவ மாந்தன்னைக் கண்டபின்
கோத்து நிறைந்ததென் றுந்தீபற
குறையவர்க் கில்லையென் றுந்தீபற. 19

அந்தக் கரண மறிந்து துறப்பார்க்குப்
பந்த மிறந்ததென் றுந்தீபற
பாழ்வெளி யுள்ளதென் றுந்தீபற. 20

சத்த மிறந்த தலந்தனிக் கண்டபின்
புத்தி யிறந்ததென் றுந்தீபற
போத மிறந்ததென் றுந்தீபற. 21

தேகாதி யன்றெல்லாஞ் சித்தெனக் கண்டோர்க்கு
மோகாதி யில்லையென் றுந்தீபற
முத்தி நிலையதென் றுந்தீபற. 22

ஏக நிராமய மென்றறி ஞானிக்குத்
தாக மிராதுபின் னுந்தீபற
தன்னனு போகமென் றுந்தீபற. 23

சொல்லற நின்ற சுகாதீத ஞானிக்கு
இல்லற மற்றதென் றுந்தீபற
ஏக சிதாகாச முந்தீபற. 24

எல்லாம் பரமார்த்த மென்றறி ஞானிகள்
சொல்லா ரவருண்மை யுந்தீபற
சொன்னாற் றெரியுமென் றுந்தீபற. 25

ஐய மிறந்தறி வானந்த முற்றபி
னுய்யப் பதமேதென் றுந்தீபற
உண்மைய தாகுமென் றுந்தீபற. 26

துச்சமன் றித்துச்சந் தானென்று கண்டபி
னச்ச மிறந்ததென் றுந்தீபற
அறிவானந்த மாயிற்றென் றுந்தீபற. 27

ஆனந்தங் கெட்டு நிரானந்த மானபின்
னானந்த மானதென் றுந்தீபற
தடையற்று நின்றதென் றுந்தீபற. 28

கூடல் பிரிதல் குவிதலற் றோர்நெஞ்சு
நாடல் பிரிகேதென் றுந்தீபற
நானற்ற போதமென் றுந்தீபற. 29

எல்லாஞ் சுகவடி வென்றறி ஞானிக்கு
எல்லாஞ் சுகமேயென் றுந்தீபற
இச்சை யிறந்ததென் றுந்தீபற. 30

பற்றறப் பற்றிப் பகைப்பற்ற நெஞ்சருக்
குத்தர மற்றதென் றுந்தீபற
ஒப்பனை யற்றதென் றுந்தீபற. 31

உண்டில்லை யென்ற விருவகை யிடையொன் றுமக்
கண்டது மிச்சமென் றுந்தீபற
ககன வடிவதென் றுந்தீபற. 32

ஒப்பற்ற வொன்றை யுணர்ந்தமெய்ஞ் ஞானிக்குச்
செப்பத் தருவதென் றுந்தீபற
சித்தே பிரமமென் றுந்தீபற. 33

சிற்கக னத்தொன்றிச் சேர்ந்தமெய்ஞ் ஞானிநெஞ்
சொக்க விறந்ததென் றுந்தீபற
உணர்வொன் றிருந்ததென் றுந்தீபற. 34

உன்னா திருந்த விடம்பொரு ளாமெனச்
சொன்னா னருங்குரு வுந்தீபற
சும்மா விருக்கவென் றுந்தீபற. 35

நினைத்துணை யன்றியே யில்லைநா னற்றபின்
பினைத்துணை காணேனென் றுந்தீபற
பெரிய மவுனமீ துந்தீபற. 36

மெய்மைமெய் யென்று விரித்தறி ஞானிக்குச்
செய்ய கருமமே துந்தீபற
சீவன் சிவமென்றே யுந்தீபற. 37

சித்தப் பிராந்தி தெளிந்தநன் னிட்டர்கள்
சுத்தப் பிரமமென் றுந்தீபற
சொல்லொணா தானந்த முந்தீபற. 38

சித்துருத் தானாய்த் தெளிந்தமெய்ஞ் ஞானிக்குச்
சத்துரு வில்லையென் றுந்தீபற
சஞ்சல மற்றதென் றுந்தீபற. 39

பூரண மொன்றே புராதன மானதென்
ஆரணஞ் சொன்னதென் றுந்தீபற
ஆசானுஞ் சொன்னானென் றுந்தீபற. 40

முத்துநன் னீரு முயங்கி யிருந்தாற்போ
லெத்திசை யொன்றேயென் றுந்தீபற
ஏகசித் தாகுமென் றுந்தீபற. 41

கள்ள மனச்செயல் கண்டு தெளிந்தபின்
வெள்ள வெளியேயென் றுந்தீபற
வேத முடிவதென் றுந்தீபற. 42

இருந்த வடிவேகண் டிருந்தமெய்ஞ் ஞானிக்குப்
பொருந்தும் பயமேதென் றுந்தீபற
போக்குவா வற்றதென் றுந்தீபற. 43

மிச்சமாய் நின்ற வெளிசிவ மாக்கண்டோர்க்
கச்சம் பின்னேதங்கே யுந்தீபற
ஆகார மற்றதென் றுந்தீபற. 44

நெய்யற மாண்ட நிலைவரைத் தீபம்போற்
கையற மாண்டதென் றுந்தீபற
காணாப் பெருமையென் றுந்தீபற. 45

சித்துஞ் சடமுஞ் சிதைந்த விடந்தனிற்
சத்தாந் திசையொன்றே யுந்தீபற
சகசம தாகுமென் றுந்தீபற. 46

நீநா னெனுஞ்சடபேத மிறந்தபின்
ஞானா யிருந்ததென் றுந்தீபற
தாரக மானோமென் றுந்தீபற. 47

சரித்துஞ் சரியா திருந்த பிரமம்
விரித்த பரியாய முந்தீபற
மெய்யறி வொன்றேயென் றுந்தீபற. 48

நிர்க்குண நின்மல நின்மய மானபி
னெக்குணங் கெட்டதென் றுந்தீபற
வெல்லையின் னில்லையென் றுந்தீபற. 49

ஆகாச மென்ன வசையா வடிவொன்றே
சாகா திருந்ததென் றுந்தீபற
சத்திய மேயீதென் றுந்தீபற. 50

சொற்பிர காச சொரூபந் தலைப்படின்
நிஷ்பிர பஞ்சமென் றுந்தீபற
நீங்காச் சிவோகமென் றுந்தீபற. 51

## சொரூபசாரம்.

சிற்சொரூபந் தானே செகசொரூப மானவெலாந்
தற்சொரூப சாரமாய்ச் சாற்றவே - பொற்சொரூப
மச்சுருவாம் போல வதுவதுவாய்த் தோற்றுமொரு
சொச்சொரூபந் தானே துணை. 1

பூதாதி யைந்து பொறிபுலன்க ளெல்லாஞ்சித்
தேதாதி யந்தமவை யெல்லாஞ்சித் - தோதரிய
கற்பனையுஞ் சித்தனைத்துங் காண்பானுங் காட்சியுஞ்சித்
தற்பமும்வே றில்லாமை யால். 2

புத்திவிகற் பத்தாற் பொருந்துசக பேதமெலாஞ்
சத்தியம்போற் றோன்றுவது சாட்சியன்றோ - முத்திமுதற்
சுத்த மசுத்தஞ் சுகாசுகங்க ளுள்ளதில
தத்தனையுஞ் சத்தாத லால். 3

பார்த்ததிசை யெல்லாம் பரிபூ ரணசொரூபந்
நிர்த்தமெல்லா மானந்த சிற்சொரூபங் - கீர்த்திக்குந்
தோத்திரங்க ளெல்லாஞ் சுகசொரூப நம்மையலால்
வேற்றுருவ மேதாகு மே. 4

அய்யா சகத்தோற்ற மாதர மெல்லாநீ
பொய்யாறு சோதியெனப் போதித்தான் - மெய்யாக
வுற்றுணரி ஞனென் றுரையா ரொருவரிலை
முற்றுணர்வா னானே முதல். 5

நம்மையறி வேவடிவா நாங்கண்டோ நம்மையன்றிச்
செம்மை யுலகத் திரள்காணோ - நம்மைநா
முற்றுப்பா ரிருந்தோ மல்லா லொருகாலு
மிற்றுப்போ னோமோ வியாம். 6

எல்லாரு நானு மிருந்துரைப்பா ராகிலெனை
யல்லாம லீச னளவுமிலை - சொல்லாலே
பெற்றமகன் றம்பி பிதாப்பே ருரைத்தொருவற்
குற்றவுடல் வேறாகு மோ. 7

நாமா யிருந்தோமு நாமேநா மல்லவாய்ப்
போமாறு போகும் பொருளுநாம் - யாமத்துந்
தானே யுறங்கிச் சகத்துருவாய்த் தோற்றிவிழித்
தானே யவன்போலத் தான். 8

ஆகமா யாருயிரா யஞ்ஞான மாய்ஞானப்
போகமா யின்பப் பொருளாகி - யேகமாஞ்
சிற்சொரூப மாகியெல்லாச் செய்கையுமா நம்முடைய
தற்சொரூப மேதான தால். 9

ஆனந்த மென்பா ரதீதமென்பார் நான்மறைக்குந்
தானந்த மாஞ்சர்வ சாட்சியென்பார் - ஞானநூல்
சொன்ன குறியெல்லாந் தொடராத வென்வடிவுக்
கென்னகுறி சொல்லுவேன் யான். 10

நானோ வதுவோ வதுநானோ நானதுவோ
ஞானோ தயமோநா தாந்தமோ - மோனமோ
சுத்தமோ சூனியமோ தோற்றுஞ் சுபாவநிலை
யித்தனையு மல்லவா மே. 11

புத்தோக முத்தோகம் பூரணா னந்தோகஞ்
சத்தோகஞ் சித்தோகஞ் சாந்தோகஞ் - சுத்தோக
மாரணங்க டேடரிய வற்புதோ கஞ்சகல
காரணமாஞ் சைதன்யோ கம். 12

சொல்லாச் சுவானுபவா தீதச் சுகாநந்த
மெல்லாமு நாமா யிருந்தோமே - தொல்லைவினை
யற்றோ மெனுஞ்சொலவு மற்றோமே நம்மைநாம்
பெற்றோம் பிழைத்தோம் பிளாய். 13

சந்ததமு நீங்காத் தனியரசு பெற்றோமே
தொந்தச் சுகாசுகமுஞ் சுட்டோமே - சிந்தனையை
வாட்டியதே காதி வனவாசம் விட்டோமே
வீட்டிற் குடிபுகுந்தோ மே. 14

நனவிற் றசேந்திரிய நாட்டியங்கள் பார்ப்போங்
கனவின் மனக்கூத்துங் காண்போம் - நினைவில்
சுழுத்தியிலே யில்லாத சூனியக்கூத் தாடி
விழுப்பொருளாய் நாமிருப்போ மே. 15

நானென் றிருந்தவனோ நான்கண்டே னுகிலை
ஞானென் றுருத்தரிக்க வொட்டேனே - ஞான
வடிவான நானேநான் மற்றுளநா னெல்லாம்
படிவா னிறந்தொழிப் பான். 16

சாயையென வாழ்குடும்பந் தன்னைச் சுமந்தாலு
மாயையெனு மேக மறைத்தாலுந் - தூயவெளி
தானாய் விளங்கிச் சகசாட்சி யாயிருக்கு
ஞானாதித் தன்றானே நாம். 17

கது வந்தானு மேதேனு செய்தானு
ரீதிலின்புற் றிருந்தானு - மேதேனும்
ுகா வண்ணந் தனியே தெரிந்திருக்கு
ுகா ரந்தானே நாம். 18

டிவிட்ட பம்பரம்போ லாசைமுத விக்கரணங்
டி முடித்தானுங் கூடோமே - சாட்டியதிற்
ந்த மற்றேமே தற்சொருப மானேமே
ம்பந்தம் போனவா றே. 19

ஞான மெத்தா லழிந்ததோ வாராயும்
ஞான மெத்தால் விளைந்ததோ - மெய்ஞ்ஞானச்
மைபனு பூதித் தெளிவுபெற்ற தெங்ஙனே
மையல்லா லேதுகண்டோம் யாம். 20

யெல்லா நாமாய் விளங்கியபின் னுமாய
யெல்லா மெங்கேனும் போயவோ - மெய்பொய்
வகைக்கு நாமே யிடமானேந் தொந்தித்
வகைக்கு மெட்டாம லே. 21

கிநா மென்றேமே செல்வநம தென்றேமே
கிநா மென்றேமே பொய்யன்றே - வாகமுத
ா யிருந்தநுமெய் நாமசங்க மானதுமெய்
மாவித் தேபோற் றினம். 22

மதி யூகமதி போன்ஞான வஞ்ஞானக்
முநாங் கண்டு கழித்தோமே - சிலமா
போது நம்மிலே யாரோப மானவெலா
போது பொய்யான வே. 23

ய்தானே யின்பப் பொருளாய்ப் பரம்பரையின்
ப்யாச் சுகம்போல் விளைந்தக்கா - லேயோநா
ங்கே பிறந்தோ மெதைத்தெய்வ மாத்தொழுதோ
ங்கே யடைந்தோ மியாம். 24

ாகி யோவிருந்தோ மார்க்கோவீ னுக்குழைத்தோம்
ா யிரமாகப் பேதித்தோம் - பூசையினி
மாலே தேடரிய நம்மைநாங் கண்டோமே
மா பிழைத்தோ மடா. 25

கள்ள மனத்தைக் கரைத்துருகப் பொற்றேமே
யுள்ளபடி நம்மை யுணர்ந்தோமே - தெள்ளமுதச்
சச்சிதா நந்தமுநாந் தாமா யிருந்தோமே
யச்செல்லா நாமாகை யால். 26

கண்ணலாற் காட்சியுண்டோ காதலாற் கேட்பதுண்டோ
விண்ணலா லேதும் விரிந்ததுண்டோ - வெண்ணுங்காற்
கானலா றோடிவரக் கண்டதுபோற் றோற்றுகினுந்
தானலா துண்டோ சகம். 27

என்னைத் தவிரமற்றிங் கேதுமிலை யென்றனை
பொன்னைத் தவிரவிலாப் பூடணம்போற் - பொன்னையுரு
வேறாக்கிப் பேருரைத்த வேற்றுமைபோ னம்மையுமவ்
வாறாப் பகுத்துரைத்தோ மால். 28

வாக்கிற்கு மெட்டா மனத்திற்கு மெட்டாது
தேக்கிட்டா லுந்தெவிட்டாத் தெள்ளமிர்த - நாக்கினீ
ரூறல்போ லெம்மிலே யூறியூ மைக்குடம்போல்
வேறறநா மாயிருந்தோ மே. 29

ஏதுசிவா னந்தமோ வேதுசிவா காரமோ
வேது சிவன்செயலோ வென்றதே - யேதும்
பிறிவாகா வொன்றாகாப் பேதமா காத
வறிவா நிறைவே யது. 30

தானறியுந் தத்துவங்க ளெல்லாந் தனக்கனியந்
தானதுவே யன்றென்று தள்ளுங்கால் - ஞானமாய்த்
தள்ளுமவ னாயிருக்குந் தன்றாற்றா னென்றுணர்ந்து
கொள்ளுமது வேசாந்த மாம். 31

சாந்தமே தற்சாட்சி தற்சாட்சி யேபிரமம்
போந்த பிரமமே பூரணமா - மாய்ந்துணர்ந்த
சுத்தபரி பூரணமே தோன்றாச் சுவானுபவஞ்
சித்தமிலை தானே சிவம். 32

சித்தம் பிறந்து சகம்பிறந்து நானெனவோர்
சுத்தன் பிறந்தவழி கண்டோமே - சித்த
மடங்காமை யேமாயை யம்மாயை மாய்ப்பார்
திடந்தானே சாயுச்சி யம். 33

எல்லையற்ற சென்ம மெடுத்தோ மிறந்தோமென்
றல்லலுற்ற பீதி யழிந்தோமே - தொல்லுலக
மெல்லாங் கடுவெளியா யென்வடிவா மென்றன்வடி
வல்லாது பொய்யாத லால். 34

காலங் கருதிக் கடவுளரைக் கைகூப்பிச்
சாலவிர தங்களெலாஞ் சாதித்தே - மேலுணர்வா
லீதெல்லா நாமலவென் றெண்ணியனந் தானந்த
போதநா மாகாத போது. 35

நித்தியமா யேகமாய் நின்மலமாய்ப் பூரணமாய்ச்
சத்தியமா யானந்த தற்போத - சுத்தராய்ச்
சித்தநிலை பெற்றவராய்த் தீர்ந்தசன னத்தவரா
யுத்தமரா வுள்ளார்க் குறும். 36

வெட்டெனவும் பேசார் வெகுளார் முகங்கோணா
ரிட்டபதார்த் தம்பெரியோர்க் கேற்றுவைப்பார் - துட்டர்களைச்
சேரா ரியாவர்க்குந் தீங்குரையார் கண்சிவந்து
பாரார் பிறவிதீர்ப் பார். 37

பொன்னும் பொருளைப் பொருளாக வும்போற்று
ரென்று நலந்தீங் கெடுத்துரையார் - சென்றசில
காரியத்தை நோக்கிக் கழியா ரிழிவுசெயா
ராரியரே தாமாகு வார். 38

வேத விதியை வெறுத்துரையா ருள்ளளவு
மோத லுருக லொழித்திரார் - சாதன்
மறவார் கருத்தினி மன்றுலகில் வாஞ்சை
பிறவார் பிறவாத பேர். 39

சித்த சலனந் திடுக்கெனவுஞ் சற்றுமுறார்
முத்திவழி கேட்கவே மோகிப்பார் - புத்திபோய்
மாடுமனை வீடுமனை மக்கள்செல்வ மாற்சரியங்
கூடியழுந் தார்பக் குவர். 40

ஆர்க்கு வருவிருந்தென் றுவனவும் போவனவும்
தீர்க்கநிலை யன்றித் தெளிவரோ - பார்க்குங்கால்
சாந்தராய் நித்தியராய்த் தத்துவவே தத்தவராய்த்
தீர்ந்தநிலை நின்றார் சிலர். 41

சங்கற்ப சாலச் சகத்தோற் றமவையெலா
மிங்கற்ப மென்னா திழிவரே - பங்கமற
விம்மை மறுமை யிரண்டிடத்து மப்பாலுந்
தம்மையன்றிக் காணா தவர். 42

சத்தப் பிராந்திசத சத்தாம் பிராந்தியெலாஞ்
சித்தப் பிராந்தியென்றே தேறுவார் - முத்தர்தா
மாரோப மாகு மவத்தைதொறுந் தோற்றியழி
யாரோபம் பொய்யாத லால். 43

தேகா லயத்திற் சிதாகாச தேவதையை
யாகாய சாந்தி மலராலே - யேகாந்த
மந்திரத்தாற் பூசைசெயு மாதவரை யாதரித்துச்
சந்ததம்வாழ் வார்க்கார் சரி. 44

முக்கனியும் பாற்சோறு முன்பிருக்க நாயருந்திக்
கக்கியசோற் றுக்குக் கருதுவா - ரெக்கலைக்கு
மெல்லாப் பொருட்கு மிரும்பொருள்யா மென்னாமல்
வல்லார்க் கடிமைபுகு வார். 45

செம்மையறியார் செகத்தோற் றமவறியார்
தம்மையறி யார்வினையுந் தாழ்வறியார் - தம்மிலே
யந்தரராய் வீணே யவமதிப்பார் நல்லோரை
யெந்தவழி போவா ரிவர். 46

ஐங்கணையும் பூவா மறுகா லளிநாணா
மென்கரும்பாம் வில்லனங்கன் வீரனும் - வன்காத
லேற்றுவனா மெல்லாம்பொய் யிப்படியே பாருலகத்
தோற்றமெலா மெய்தானா சொல். 47

காலமோ தேவதையோ கன்மமோ மாமாயைச்
சீலமோ விம்மனத்தின் செய்கையோ - கோவியநல்
லுச்சாக மோநலந்தீங் குத்தரிப்ப தேததிலே
யெச்சார்பு மில்லா விவர்க்கு. 48

தன்னைத்தான் தேடாச் சதிகார ரேன்பிறந்தா
ரன்னத்தால் வந்தவுட லார்தாமார் - முன்னம்
விடுத்தவுட லெத்தனையோ மீண்டுமீண் டின்பா
லெடுத்தவுட லாறா யிரம். 49

பொய்யாக்கப் பொய்யைப் பொருளைப் பொருளாக்க
மெய்யாக் குருவொருத்தன் வேண்டிற்றே - ஐயமேகா
பூபாலராகிப் பொலிந்திடுசீ வன்களெலா
மாபாச மென்பதுவே யாம். 50

ஒன்றிலே தோற்று முலகப் பிரதிபிம்ப
மொன்றுபோற் றோற்றுத லுண்மையென்றே - யென்றும்
பொருளாகப் பாராத புன்மையறி வோர்க்கே
மருளார் பொறிபோல வாம். 51

தன்னை யறியாமற் றானே தனைத்தேட
லென்ன புதுமையிதை யென்சொல்வேன் - மன்றுலகிற்
றண்ணீரி னின்றுகொண்டு தாகந் தணியார்போ
லெண்ணீர்மற் றேதுரைப்போம் யாம். 52

சாத்திரங்கள் கத்தித் தலைவீங்கு வீர்குலமுங்
கோத்திரமுங் கொண்டுவினை கூட்டுவீர் - சாத்திகரா
யும்மாலே யும்மையுணர்ந் தோயாத் தொழில்விட்டுச்
சும்மா விருக்கொணா தோ. 53

ஆசித்துத் தெய்வத் தடையாள மொன்கொளுத்திப்
பூசித்துக் கைகூப்பிப் போற்றுவார் - நேசிக்குந்
தானே யதுவோ சதுரான தெய்வமென
வூனே நிழல்வா குறார். 54

தேரைத் திருநாளைச் சேவிப்பார் தம்மைவிட்டங்
காரைத் தொழப்போற ஐயமேகா - தேரிடையே
பார்க்கின்ற தெய்வம் பரிபூரணமலவோ
யார்க்குந் தெரியாத தோ. 55

மூலைக்கு ளேயிருந்து மூச்சடக்கிப் பேச்சடக்கிச்
சாலக் கனயோகஞ் சாதிப்பார் - மேலுணர்வு
கண்டிருக்கச் சாதனையேன் காயத்தை யேவலித்திங்
குண்டிருக்க வெண்ணுகிறா ரோ. 56

கட்டப் படாமற் கரபாத் திரத்தரிப்பார்
மட்டித் தொருகோ வணதாரர் - சிட்டர்போற்
றாங்காமற் றாங்குஞ் சுகமும் பெறுவாரே
யாங்கார நீங்குவரா ரேல். 57

எச்சாத் திரம்வேண்டு மெச்சா தனைவேண்டும்
பிச்சாட்டல் லோகெடுவாய் பேதையர்க்குப் - புச்சாண்டி
காட்டுவார் போலவந்த கற்பனையை மெய்யெனப்பா
ராட்டுவார் தம்மைக்கா ணார். 58

ஆண்பெண் ணலியென் றனேக விதமாகக்
காண்பனவு மொன்றாகக் காண்பனவு - மாண்புடைய
சித்தினிடத் தோற்றமல்லா லுண்டோ விவைதெளியா
ரெத்தனைசா தித்தாலு மென். 59

எவ்வா றெவரிருந்தெ னெவ்வா றெவர்போயென்
னெவ்வாக்கூட் டிற்றணிமை யொத்ததே - யெவ்விதமு
நீங்குவார் நீங்கா நிலையிலனு பூதிகண்டு
தூங்குவார்க் கன்றோ சுகம். 60

விண்ணுருவ மீசனென்பார் வேற்றுருவஞ் சீவனென்பார்
கண்ணு பிரவியும்போற் காணென்பார் - திண்ணமதா
யத்துவித மாகா தவையிரண்டு மாகாத
சித்துருவந் தானே சிவம். 61

சுத்த சடமான சுக்கிலங்கொட் பீகரித்துச்
சித்தந் துலங்கலந்து சீவித்துச் - சத்தியம்போல்
வந்தபொழு திதெல்லா மாயையென்றே தற்சொருபந்
சிந்தைசெய்வா ரன்றோ சிவம். 62

நேற்றின்று நாளையென நிச்சயித் திராப்பகலை
மாற்றுசயஞ் சோதி வடிவாகி - யேற்றபடி
யென்றுமொரு நாளா யிருக்குந் திருநாளைச்
சென்றுதொழு வாரே சிவம். 63

ஞானநூல் கற்றாலு நற்றுறவு பூண்டாலு
மோன சமாதி முயன்றாலுந் - தானாகி
யெல்லாக் கவலையுமற் றின்புற் றிருப்பதுவே
சொல்லாரு முத்திச் சுகம். 64

மாகேள்வி பெற்றாலு மாயோக முற்றாலுந்
தேகேகந் திரியந் திரிந்தாலு - மாகருணை
சேரா குருபார்த்தி தேறார் பெறார்பேறு
சேராத முத்திச் சுகம். 65

இச்சை யநிச்சை பரவிச்சை யோடுழனுங்
கொச்சைப் பிராரத்வக் கூழர்காள் - பிச்சைமுத
லேற்று ரிடுவா ரிவரென் றுணர்ந்தீரேற்
காற்றுடிக் காலாக லாம். 66

என்னைநான் கண்டபடி யிப்புவியி லெல்லோருந்
தன்னையே காணத் தருங்காலுஞ் - சொன்னே
னொளிநாட்ட மோடுமன முண்ணோட்டம் பெற்று
வெளிநாட்ட மாகா விடின். 67

கன்மந் தவறுமற் காலந் தவறுமற்
சென்மந் தவறுமற் செய்வரேற் - கன்மவிதி
செய்வான் செயலிரண்டுஞ் சித்தந்தே கண்டுதெளிந்
தாய்வார் பொருளாகு வார். 68

உள்ளபடி கண்டுகளித் தூற்றுருக மாட்டாத
கள்ளரையுங் கண்டு களித்தோமே - கொள்ளையா
விந்திர சாலக்கமல மெத்தனைபுட் பித்தாலுஞ்
சந்திரனுக் குண்டோ சலம். 69

தீங்கடர்ந்து மேன்மேற் செனித்தகரு வேலடியின்
மாங்கனிவந் தூற்றதொப்ப வாய்த்ததே - யாங்காங்கு
மெல்லாருந் தேடுபொருள் யாமாக வேயருள
வல்லான் றிருத்தாண் மலர். 70

நானு யிருந்ததெங்கே நானபிமா னித்ததெங்கே
வானுள மண்ணுள வாஞ்ஞையெங்கே - ஞானகுரு
தேசிகனு ரெங்கே சிவசிவா முத்தியெங்கே
பேசிடவா யெங்கே பிளாய். 71

என்னையே யல்லாமல் யான்பெற்ற தேதுமில்லை
யென்னையான் பெற்றிருந்த தெப்போது - மென்னையன்றிப்
பந்தமில்லை வீடுமில்லை பார்க்கிலிவை யாவையுஞ்
சிந்தனையு மில்லாத தே. 72

செப்படிபோற் காட்டியரு டேசிகனை யோவனைத்து
மிப்படியோ சித்துணர்ந்த வென்னையோ - மைப்படியுஞ்
சென்மமுடி வாகவந்த தேகா லயத்தினையோ
வென்மயமாய்ப் போற்றுவேன் யான். 73

அன்னமய கோசமா மாகமே யுள்ளளவுஞ்
சொன்னபடி கேட்கிற் சுகமடைவா - யென்றுறுங்
கெட்டபாழ் வாசனையைக் கிட்டாதே யாதேனு
மிட்டபடி கண்டே யிரு. 74

பொறிகா ளெனைநெடுநாட் போற்றிவளர்த் தேனே
யறிவாநந் தப்பொருளா னானேன் - பிறிவாகு
முங்களையு நானு வுணர்ந்துகொண்டே னீங்களினி
யிங்கழியா தொன்றா யிரீர். 75

ஆசையே யுன்னா லலைந்துவிட்டே னென்றாலு
நீசெய்யுப காரத்தி னின்றேனே - தேசிகனை
யுன்னா லடைந்தே னுனைக்கூடி முத்தியினு
மென்னாணை நானா யினேன். 76

கோபமே யுன்னாற் குறைநீர்ந்தே னீயெழும்பித்
தாபமே செய்யுஞ் சலிப்பாலே - யாபத்து
நீங்கியுப சாந்தியிலே நின்றேன் கனவிலுமீ
யேங்கியெழும் பாதே யிரு. 77

லோபமே யுன்னை யுறவுகொண்டே னுன்னுருவம்
பாவமே யென்பருண்மை பற்றாதார் - நீபெருக
வார்ச்சிக்க வேபடுவா யாபாவி யுன்னாலே
யார்ச்சிக்கப் பட்டே னமைவு. 78

நெஞ்சகமே நானேநீ நீயேநா னென்றிருந்தும்
வஞ்சகமா யுன்னை மறந்தேனே - தஞ்ச
முனக்குநா னென்பதுவு முண்மையே யுண்மை
யெனக்குநீ வேறா யிராய். 79

ஓடித் திரிந்தா யுழைத்தாய் பிழைக்கும்வழி
தேடிப் பலகலையுஞ் சிந்தித்தாய் - நாடியொரு
சற்குருவைத் தந்தாயென் சித்தாய் தயவுசெய்த
நிற்குதவி யென்செய்தே னே. 80

உன்னுருவாய் நானிருந்த வுண்மைபோ லென்மனமே
யென்னுருவாய் நீவந் திசைந்தாயே - செய்ந்நன்றி
பாராட்டு வாருனைப்போ லுண்டோ பராபரத்
சீராட்டின் மாறா திரு. 81

ஆசைவர்க்க மெல்லா மகற்றிப் பொறைமுதலாந்
தாசவர்க்கஞ் செய்யநலந் தந்தாயே - நேசத்தா
லாதிகா லந்தொடுத்தே னன்புவிடா னெஞ்சேநன்
னீதியா லென்போல நில். 82

என்னெஞ்ச மொருலவ யானுமது போலிருந்தே
யின்னெஞ்ச சமமாகா விட்டேனே - யென்னெஞ்ச
மென்போ லசையா திருக்கவது போல்யானும்
பொன்போ லிருந்தேன் பொலிந்து. 83

ஏதுவர வேண்டு மதுவருக வென்னைவிடத்
தேதகல வேண்டு மஃதகல்க - கோதென்று
பிச்சையுந் தள்ளேன் பிரமபத மும்வேண்டே
னெச்செயலு நானுகி னேன். 84

எங்கேநான் போற்றுவது மென்னையே தேவதையென்
றெங்கே தொழுவதுநா னென்னையே - யெங்கே
யிருந்துகிடந் தோடுவது மென்னிடத்தே நானே
யருந்துவதுங் கொள்வானு மாம். 85

தன்னிடத்தி லேதோற்றித் தன்னிடத்தி லேயிருந்து
தன்னிடத்தே கூடுஞ் சகத்தெல்லாந் - தன்னைவிட
வேறன் றெனக்காண்ப ரல்லாலிவ் வீடுபெற்றோர்
மாறென்று காண்பரோ மற்று. 86

ஏதுக்கா சைப்படுவா ரேதுக் ககங்கரிப்பா
ரேதுக்கு மாற்சரிய மெய்துவா - ரேதுக்குந்
தாமே சராசரமாய்த் தானுவா ரேழ்புவிக்கு
மாமேரு வொத்துவாழ் வார். 87

மாதிக்கு மாறி மதிகருகித் தீக்குளிர்ந்திவ்
வாதித்தன் றெற்குவடக் கானாலுஞ் - சோதித்து
முன்னிலைமை யாராய்ந்த முத்தரே யெஞ்ஞான்றுந்
தன்னிலைமை குன்றா தவர். 88

பிச்சை முதலாப் பிரமபத மீறாக
விச்சை வரினு மிசைந்தானுஞ் - சொச்ச
நலங்காதார் தாமதுவாய் நாடாதார் சித்தங்
கலங்காதா ரேஞானி காண். 89

வந்தித் துரைப்பார் வழிபடினும் வண்கணார்
நிந்தித் துரைத்தாலு நெஞ்சுரார் - சிந்தையற்று
மேகா டவிவரினும் வெய்யோ னுதித்தாலு
மாகாயம் போல்வா ரவர். 90

எந்தெந்தப் போக மெதிராகு மவ்வளவுக்
கந்தந்தப் போக மனுசரிப்பார் - பந்தமற்று
நீதித் தனிநிலையே நிற்பர்கிர ணம்பரவு
மாதித்தன் போலே யவர். 91

சித்துருவ மாகிச் செகசாட்சி தாமான
முத்தரைக்கா மாதி முனியாவே - சித்தத்தி
விங்கற்ப வாசனைக ளெல்லா மெடுத்தருந்திச்
சங்கற்ப மில்லாத தால். 92

எங்கும் பொதுவா யிருக்குமொரு சீவன்முத்தர்
தங்குமிடந் தானே தலவாசம் - மங்கவர்கள்
பார்வையே தீர்த்தமவர் பாதார விந்தமலர்ச்
சேவையே சாயுச்சி யம். 93

மெத்தென்ற சொல்லும் விருப்பமற்ற நோக்குமெலாஞ்
சத்தென்ற நெஞ்சுந் தளர்நடையுஞ் - சித்தத்
தடங்கா மகிழ்வு மனவரதம் பெற்ற
திடந்தானே ஞானி செயல். 94

எல்லா விடத்து மெமைக்கண்டோ மெம்மிடத்தி
லெல்லாமுங் கண்டோமென் றேகமாக் - கல்லாமை
கற்ற வனுபூதி கைகண்டார் மற்றேது
மற்றார்சீ வன்முத்த ராம். 95

தானேக னாகியுப சாந்தனாய் நின்மலனாய்
வானே முதற்றன் வடிவாகு - ஞானி
விடுத்ததொழி லெல்லாம் விலக்காகு மன்றே
யெடுத்ததொழி லாசார மாம். 96

ஞானானு சந்தான ஞானிக்கு நீராட
லூனுகந்த கோலஞ் சதாசார - மானமற
வாங்கிப் புசிப்பதுவே மாபூசை சஞ்சாரந்
தீங்கற்ற சுத்தசமா தி. 97

அண்டமெலாந் தானா யறிவு வடிவாகக்
கண்டபரா னந்தசிவா காரருக்குத் - தண்டித்துத்
தள்ளும் பொருளேது தள்ளா விதிவழியே
கொள்ளும் பொருளெதுவா கும். 98

பெற்றபே ரின்பப் பெரியோர் சரித்திரத்தைக்
குற்றமென நாடுங் கொடியோர்கள் - பற்றறுக்
கோசகா ரப்புழுப்போற் கோடான கோடிசென்ம
மாசார்வ ரென்றே மதி. 99

நித்த நிராகார நின்மலா நந்தமய
சுத்த பரிபூ ரணசொரூப - வத்துவித
மெல்லாமுந் தாமா யிருப்பார் கருணைபெற
வல்லா ரவராகு வார். 100

உள்ளமற்றா ருள்ளத் துறுபொருளற் றாருள்ளக்
கள்ளமற்றார் ஞானக் கீரையற்றார் - தெள்ளமுதச்
சிற்பரமு மற்றார் சிவானுபவந் தானுமற்றார்
கற்பனையு மற்றார்கள் காண். 101

பருவசா ரத்தாற் பலிக்குமனு பூதிச்
சொருபசா ரத்தின் சுவையை - யிருசெவியா
லுண்டிருக்க வல்லா ருலகமெலாந் தாமாகக்
கண்டிருக்க வல்லார்கள் காண். 102

## அத்துவிதரச மஞ்சரி.

சீராரு மத்துவித மேயுண்மை யென்றுமிகத் தெருட்டு தற்குப்
பாராருங் கயவுருவ ரவுருவம் புணர்வடிவம் பரிந்து சாத்தி [பா
யேராரும் வரமொருங்கு நல்கும்விக்கி னேசனென திதயத் தின்
னேராரு மத்துவிதந் தனையறியும் விசேடமெலா நிகழ்த்துவானே.

எத்திசையும் பத்திபாய்ந் திலங்குறுமுள் வாயில்புனை ரெழி
ற்கண் ணாடிப், பித்திமனை தனைமருவு பாலனுக்கு வெளிவருதல்
பெருவன் பாம்போற், குத்திரக்கற் பனைமயமாய் மிகப்பொலிபல்
வகையுருவங் கொண்டு வேறு, மத்திரவஞ் ஞானமதை மருவுபுரு
டனுக்குமுத்தி யடைதல் வன்மைய.

சோரர்களாற் கொடியவா ரணியவழி யினையண்மித் தாயர்கூர் பூமா
னீரகஞ்சேர் தன்னூரை நன்குதெரிந் தோன்மொழியா னேருமா
சிரடார்நற் சாந்திமுதற் சாதனங்க ளிறைந்தமிகச் சிறந்த பூமா[று
னோரறிசற் குருநாதன் மொழியாற்றற் பதநிலையை நேருவானே. 3

நிருபனுடைக் குமாரனுக்குத் தனதான தத்துவத்தை நிகழ்த்
தலாலே, வருநயவ நீர்மைகழ லக்கழன்று நிருபனியல் வாய்க்கு
மாபோற்,சொருபசுக வொருபொருளீ யெனச்சொல்குரு வுபதே
சச் சொற்களாலே,மருவுகருத் துருத்துவமாய்த் தொருகைமெய்ப்
பொருளேனோ வாய்க்கு மன்றே. 4

திரமலடி மைந்தனுக்குத் தேககுண லாங்குணங்கள் செறித
லூறும், புரையறுமக் குணங்களெலாம் பொன்றுதலும் வெட்ட
வெறும் பொய்யா மென்னப், பிரமமயக் கூடத்த நித்தசுக போத
தனுப் பிரத்தியக்குக்,குரமருவு பந்தமுத்தி யென்பதும்புன் மாயக்
கத்தா லொளிரா நிற்கும். 5

தெரிகின்ற துறைதிமிரம் போபாக வர்சுமிகச் செறிக்கோ தானு
க்கே, யெரிகின்ற விளக்கொளியாற் கண்ணுற்ற லாங்கதுதா னியங்
குங் கொல்லோ, திரிகின்ற வசிசார திட்டிமிகு அன்பெனச்
சொல் செகங்க ளெல்லாம், புரிகின்ற வுண்மைவிசா ரத்தினர்க்குக்
கிஞ்சினுமே பூணு தன்றே. 6

போற்றுமொரு சித்சோதி தானேயின் வுதைருவாய்ப் பொலி
யா நிற்குந், தேற்றமுற வாராயின் வேறுபொரு ளொன்றேனுந்
செறிவ தில்லைத், தோற்றமைப் சுதிகாண மாம்பழுதை யல்லாது
தன்று சர்ப்பந், சாற்றுறுமே வொருபொருடா னதுதற்கெவ்
வாற்றானுந் தக்க தாமே. 7

திறப்படவீ தெனத்தோன்று நாலமெலாம் பிராந்திமாத்
திரமே யென்று, முறப்பொலிந்தன் னியமின்றிச் சுகமயமா மான்
மாவே யுண்மை யாகுந், திறப்புறநின் றொளிருதலான் றாலமது
முண்மையெனத் தெரிக்க னென்று, லறப்புதுமை சுத்திவிர தித்
தாற்றன் னியமெனவன்று ளுகா னேகா. 8

சொல்லுநிலை வுறுபோது மற்றெழு முன்னுமது தொலைந்த
போது, மில்லதுதா னென்றுமின்றுலக மிலங்குமின்ற திறம்பு
தாமே,பல்லதநி சயமென்னை போதுமேக் திரால மான திங்குப்,

குப், புல்லுறுமா யாவியினுற் கற்பிதமென் ருனுமிகப் பொலியு மன்றே. 9

இந்துதினங் துவிதமகன் றிரிந்திடினும் புருடனுக்கிங் கிசைதற் கண்ணில், வந்துறையுந் திமையினுற் பலவடிவந் தாளுகி வயங்க லேய்ப்ப, நந்தலில்சன் மயப்பூமா வெனுஞ்சொருப மொன்றேனு நாநா வாகிச், சந்ததந்தற் கற்பிதமாந் தமப்படலக் கூட்டுறவாற் றயங்கு மன்றே. 10

மட்டற்ற வெறும்பிராந்தி யால்விரிந்து திரநாளு மருவா தான, கட்டப்புன் புவனவட்டங் கொள்ளிவட்டந் தனையுறழக் காணல் வேண்டும், முட்டற்ற தெய்வகதி யாற்பிராந்தி நட்டமெழன் முந்து மாறுற், றுட்டத்திண் புவனமது முன்னுட்போல் பின்னுளுந் தோன்ரு தன்றே. 11

நிலைமையிலா விவ்வுலகங் கந்தர்ப்ப நகரம்போ னிகரற் ருேங்குந், தலைமைசெறி ஞானமெனும் பெயர்பூண்ட வம்பரத்திற் சாலத் தோன்று, மூலைவகல வெமக்கான்ம வுணர்வுதிக்கின் வெயிலெறித்தா லொழியு மின்போன், மலைவுசெயு மந்தவிந்த வுலகமெலா மக்கணத்தின் மறைந்து போமே. 12

ஆரோப மானசகத் தடங்கவடை விளிலொடுக்கு மருந்தி றத்தாற் சீராரு நமதுசித்தஞ் சிவமயமே யாகிநனி சேட மாகும் போராரு மத்தகயம் பரர்ச்செற்றுப் படுகுழியிற் புணரா தென்று னேராது மில்லாமற் கேவலந்தா னென்றேயாய் நிகழு மன்றே. 13

இம்பருட லின்றெழுக வலதுறைக சஙியருக்க ளிருக்கு மட்டும், விம்பமயச் சித்துருவாய் விளங்குமெனக் கதனுலே விசேடமென்னே, கும்பமிப்போ துடைக வன்றிச் சிரகால நிலைபெறுக கும்பம் பம்பு, மம்பரத்தி னுக்கனுமாத் திரமேனும் விசேடமென்ப தனுகு ருதே. 14

தங்குறுசிந் தனையினமுத் தத்திறுற் ருேற்றுகின்ற தையற் கண்டிவ், வங்கனைமற் றவளென்றே நீறுள்வெய் துயிர்த்திரங்கு மவனைப் போலுஞ், சங்கற்ப மாத்திரத்தாற் பலவிகற்ப மாய்த்தோற்றுஞ் சகங்க ளெல்லா, மிங்குச்சத் தியமென்றே மந்தமதி யினொர்வாளா வேற மாலும். 15

தன்னியல்பிற் றற்சுவையாய்ச் சச்சிதா னந்தமதாய்த் தயங்குமென்பாற், றுன்னியமா மோகத்தா லுன்டெனச்சொற் றிடுகிக்

தத் தொன்மை ஞால, மன்னியவோ ரிடத்தினுங்கா ணப்படா
தருவுருவே வடிவ மாகு, மன்னியவிண் ணோவியமே போலுமென
வையமற மதித்து மியாமே. 16

வானிறம்போற் றிகழுத்தி யாசபே தத்தினுன் மறைபட் டாலு
ஞானகன மானபொருள் கண்டவொரு தற்சுவையை நனிநீங் காதா
ஊனமுறு பற்பலசு ராசுரவி சித்திரத்தோ டொன்றி னுலுந் [தே.
தானமரும் படவியல்பைச் சித்திரவத் திரமென்றுந் தணந்தி டா

சத்தியசிற் சுககனமா யகண்டிதமாய்த் தெளிபொருளாய்த் தானு மான்ம,தத்துவவத் துவைபொருவ னென்றே மிகத்தெளி வன்றீறடையொன் றின்றிப், பொத்துடலிந் தியமுதலி யவற்றைம யல் வாதனைகள் பூண்டு நிற்கு, மத்தமதி யினனென்ன தியானென் றே சங்கையற மதித்தன் மானும். 18

செங்கதிரோன் வெங்கதிரா லெதிர்நிகழும் பேய்த்தேரைத் திரத் தீர்ந்து, கங்கையினற் குளிர்புனலைப் புனிதமுறு மதிமான் கள் கைக்கொண் டாங்கு, மங்குலைை வெறும்பொய்ப்பசை யில தெனத்தூ ரத்தகற்றி மாதீ ரத்தார், பொங்கினிய வொருசுவையை முனிவர்க ளநுபவிப்பர் பொலியுள் ளத்தே. 19

ஒன்றாகு மண்ணியதா மிகவெளிதா மினைத்தாகு மொப்பி லாத, நன்றான வம்பரத்தி னனிதோன்று நாலமெலா நருவித் தெங்கும், நன்றேசாற் பாவுமெழி லாத்துமதத் துவவிரவி தன்னை யையோ,வன்றீய மூடவுல குளாகதிரை யாதரித்து மதியா வன்றே.

மன்னியவா னந்தவொளி வடிவமதாய் நிகழினுமிம் மாஞா லத்தை, யன்னியமா மெனப்பாவித் தறிவில்லான் பெருந்தாப மடைவன் சீசீ, மின்னியநீ பாதிகளிற் றிருசியமாய் மிளிர்தருந் தன்மேனிச் சாயை, தன்னினைவே றென்றெண்ணி மாமோகத் தினின் மூழ்குந் தனிச்சே யொத்தே. 21

மடமான மாயைதன தருவமிலா வான்முதலாம் வகைகளா லே, திடமான வசங்கவொரு சின்மயனைப் பேதிக்கத் தக்க தன் றாம், திடமான மழைத்தாரை தன்னுடைய துளிகளின்பொன் றியன் க ளாலே, யிடமான பசும்பதும பத்திரத்தை நனைப்பவரித் தென் கொ லாமே. 22

தோற்றரவு மாத்திரமிங் குருவான சகலிகற்பந் தொகுதி யெல்லா, மூற்றமுறு சங்கமெலா மொருவியசின் மயமென்னை

யொட்டா தன்றே, மாற்றருமா ரோபிதமா மவிஞதி விசித்திரதன்
மங்க ளெல்லாந், தேற்றமிகு நிருமலமாய் வெளியுருவாம் வியோம
த்தைத் தீண்டுங் கொல்லோ. 23

பரிபுரண மாகிநிறைந் திருக்குமொரு கரியான பரமா மென்
பால், விரிவுறுசாக் கிரத்திறொடு சொப்பனமே சுழுத்தியென
விளம்பப் பட்ட, திரிவிதமா மவத்தைகளு நாடோறும் பிறப்பிறப்
புச் செறிந்த வாகி, வரியமரு முரகபதி வபுவினிற்கஞ் சுகங்கள்
போல் வயங்கு மன்றே. 24

சொப்பனமே சாக்கிரமே யெனப்புகலும் விசேடமிது சொ
லால்வந் தன்று, துப்புறுமா யாமயமா குதலந்த விரண்டினுக்குந்
துலிய மேயா, மப்படியே பிரத்தியக்குப் பராக்கென்னும் விகற்ப
மூநா மத்தா லான, தெப்பொழுது மெய்ஞ்ஞான சுகமேயிவ்
விரண்டினுக்கு மியல்ப தாமே. 25

புறப்பொருளின் வருவிசன சம்பந்தத் தாலிளைப்புப் பொரு
ந்து ருதாய்ப், பறப்பறவிந் தியவழிச்செல் லாதடங்கிச் சகவிகற்பப்
பற்றொன் றின்றிச், சிறப்பமர்தன் னுணர்ந்த மாத்திரமாய்த் தனித்
திருக்குஞ் சித்தம் பெற்றோ, ருறப்படுசாக் கிரத்தினுநற் சுழுத்
தியநு பவத்தினிலைத் துவகை கூர்வார். 26

காயமுயல் வுறுதருமக் கட்டுற்றோ ரென்னைமிகக் கருத்த
னென்றே, யேயநினைக் கின்றனரே லதனாலென் னிருந்தபடி யிருக்
கின் றேனுற், றோயவரு மேகமதிற் புக்காலென் றறமூடர் துணி
யப் பட்ட, தூயகுளிர் மதியமவ்வா றம்புதத்தி னளைத்தேனுந்
தோயுங் கொல்லோ. 27

மித்தையதாய்த் தோன்றுறுமேற் றோன்றுறுக விவ்வுலக
விசித்தி ரந்தா, னத்துணையாற் றத்துவவித் தாகிநிக ழெனக்கு
வரு மானி யேதோ, சுத்தமயக் காங்கனவிற் பயந்தருகைப் பக
டாதி திகழு மேனு, மொத்தவிது சொப்பனமே யென்றனுசந்
திப்பவனுக் குறுமோ பீதி. 28

அனைத்துலகு மசத்தென்றே நெடுங்கால நன்றாக வாய்ந்தோ
ர்ந் தோனும், இனைத்தெனினும் பிரியாதத் தியாத்துமதிட் டியைச்
சத்தஞ் செறிந்தே நிற்பா, னனத்தகுமிங் கானனந்தா னெக்கானு
மில்லையென வொருப்பட் டோனு, மணித்திகழ்தன் முகங்காண
விரைந்தத்தங் கைக்கொள்ளன் மானு மன்றே. 29

வேண்டியவா றிருக்கும் வேந்த, னத்துறுமன் னுயிர்களா லேவல்
கொளற் கெக்காலு மரிய னாமே. 36

பரமார்த்த நோக்குமுடை யவனுக்கு முன்னெறிபின் பண்
ணப் பட்ட, தருமாதன் மத்தொழில்க ளாற்சம்பத் தேவிபத்தே
சற்று மின்றாம், பெருமேகம் பொழிதருநீர் முழுக்காலும் வெப்ப
மிகப் பெறுத லாலு, மெரிமேவு பாலைவனத் தின்பயிருக் கேற்ற
முட னிழிவு மின்றே. 37

நல்லவினை யாலுண்டாஞ் சம்பத்தே யாதல்ல தொழிந்த
தாதல், வல்லையனு பவித்தோனுய்ப் புருடன்மிகு திருத்தியினை
மருவு வானு, லல்லல்செயும் பாம்பாட்டி தன்வயத்தி லகப்பட்ட
வரும்பு யங்கம், புல்லியவை னியற்றுதண்ட விதிகளாமேங் குறச்
சமர்த்துப் பொருந்தாங் கொல்லோ. 38

ஆன்மவறி வுடையவன்முற் கருமபரி பாகவச மடைந்தோ
னேனும், தான்மருவு தன்பரம வைதியிதா மெனத்தேறித் தளர்
வு நண்ணான், கான்மருவு வழிச்செல்வோன் கால்வருத்த மெய்
துகினுங் கிராமாங் கத்தின், மேன்மருவு வழியளவைத் தெளிந்
துவருந் திடைவிசன மேவா னன்றே. 39

அகம்புறமும் பரமான்மா வொருவனே யாமெனநன் கறிந்த
ஞானி, மிகுந்தவிச னமதுறினு மோர்சிறிதுங் கிலேசமே மேவா
னன்றே, செகங்கலங்கு மோர்முகத்தே விசயமுற வொருநோக்
காங் கீர னாமே, னகம்பரவு மொட்டலரால் வருந்துறினுங் கிலே
சமற்ப முறுவ னன்றோ. 40

ஞாலமதி னுறுவிபவ நனிபரம வற்புதமாய் நண்ணு மே
னுஞ், சாலவத னதுவாய்மை தனையறிந்த மாதீரன் றனைமயக்கா,
கோலமட வரல்வேடங் குரம்பையின்மே லலங்கரித்துக் கொள்ளா
நின்றேன், கேளவினைத் தாற்றனைத்தே தா விடலையையா யினுமயக்
கக் கிட்டா னீடே. 41

அகத்தினிரந் தரமேலா யிலங்குகின்ற வான்மவடி வாய்நிற்
போனே, யிகப்பொருள்க டமிறுநு முன்போல விசனமே யியைவ
தில்லை, யிகழ்ச்சியறத் தெய்வகதி யானதோபோ ரிடத்துற்று விலங்
ம்பா டன்னோ, னுகத்தினின்முன் போலெளிய னெனக்கருதிப்
புகன் றுலைவ துண்டாங் கொல்லோ. 42

பெரியவிழி மருவுறுதன் மகிமைசெறி பெரியோனைப் பெரு
ஞானத்துக், குரியசுப குணங்களெலங் கரிப்பனபோ லுஞ்சுயம்
வந் தொன்று நிற்கு, மரையனவன் றன்வயனுய்ச் சுகிர்தனு யிருக்
கினவற் காளா னோரும், புரையருமவ் வரையனையே நானெவந்
தொன்றிமிகப் பொலிவ ரன்றே. 43

அஞ்ஞான மேயில்லை யிவ்வுலக முளதாமென் றறைவ தெ
ங்கே, விஞ்ஞான வடிவாஞ்சீ வேசரே கமெனச்சொல் விகற்பஞ்
செய்த்தா, மெய்ஞ்ஞான வொருசுவையாய்த் தனித்துநிரு மல
மாகி விளங்குந் தானு, மெஞ்ஞான்றும் பரிபூரண கேவலமாம்
பிரமமே யானு கின்றேன். 44

சமாதியவத் தையிலுதித்தொற் றைக்கொம்ப னுபதேசஞ்
சாற்ற லாலு, மமானமயப் பரமசிவேந் திரனெனுங்கே சிகவரி
யா னனுஞ்ஞை யாலுஞ், சமாவிருக்கச் சதாசிவமா தவரேறிவ்
வத்துவிதச் சுவைப்பூங் கொத்தே, யமாலுடைக்கு மகமுகமா
மறிவுடையோ ராதரத்தா லெய்தற் பாற்றும். 45



சுத்தசதா சிவயோகி வரியானே தியவிந்தத் தூய நன்னூல்,
புத்திநல முடையோர்க்கும் பவநோய்க்கோ ரவுடதமாய்ப் புகல
லாகுங், கொத்துறுபா தகங்களுக்குக் கடுவாகு முபநிடதக் குறிப்
பாமேலா, முத்தமமா மாநந்த வமுதநிறை குடமாமென் றுரை
ப்பர் மேலோர். 1

தூய்யசதா சிவப்பிரம மெனுமுனிவன் வடமொழியாற் சொ
ல்லப் பட்ட, செய்யவத்து விதரசமஞ் சரிநூலைச் செந்தமிழ்ப்
பாச் செய்து தந்தான், வையமிசைப் பொலிகமுனி மாகர்வாழ்
சோதிலிங்க வடிவ மான, வையன்முத்தி ராமலிங்க குருபரனென்
னகம்வாக்கு மனைமந்து நின்றே. 2



## ஆத்மவித்யா விலாசம்.

வடதருவி னீழலின்மேல் வாசமது புரிந்தருளும் வடிவினனைப்,
படுதரமாம் விஞ்ஞான முத்திரையி னெறிதிகழ்பங் கயக்கை யா
னை, முடிவிலரு டருமரிய வொருவனைத் தேசிகனை முதன்மை யா
னைத், திடமுளகை வல்லியவா னந்தமெனுங் கந்தனைத்தைச் சேவி
ப் பாமே. 1

நிரவதியாஞ் சமுசார நீரதியி னிதம்விழுந்து நெரிய லான
நரவுலகர் தமைக்கடத்தி யொளிருமெழி லுவாவாய் நாட லாகிப்
பரமதபே தனமான கூடமெனு மாயுதமாய்ப் பகரலான[தேனே.
பரமசிவேந் திரனெனுமென் னுரியன்றன் பாதுகையைப் பணிகின்

பரமசிவேந் திரனுமென் றேசிகன்றன் றிருவருளின் பாங்கி னாலே, பரமசுக திவ்வியமா மகிமையினை யுணர்ந்துபினம் பள கற் றோங்குந், திரவெளிலே விசிராந்தி தனையடைந்து ரசமற வுஞ் செறிய லான, வாமுறுமிச் சிலமொழியால் வத்துவினைச் சிறிதுயான் வழுத்து வேனே. 3

நிருபமமாய் நித்தியமாய்த் தொழிலிலதாய் நிட்களமாய் நீத்து மாயை, யரிகுணமே யிலதான வடிவாகி யடர்விகற்ப மனைத்து நீத்தே, வருசகமா தியினசுத்த மருவாதாய் ஞானமய வடிவ மான, பரமமதா மான்மாவு மொருநிலையா யொளிருமெனப் பகர் வர் மேலோர். 4

தன்னுடைய வசித்தையினுற் றனையுண்டே கருமமவை தம் மை நாளு, மென்னுடைய தெனப்பரித்திங் கேங்கியே கிடந்துபின மீச னேக்காற், பன்னுறுஞ் சகசிவ பரமெனுமிப் பந்தமதைப் பறித்து வீசித், தன்னுடைய வான்மாவின் ஞானத்தான் முனிவர னுஞ் சயிக்கின் றனே. 5

மாயையின்றன் வயத்தினுற் சுழுத்திதனை மருவியே மாழ்கு நாப்பண், ணுயிரம்புன் சொப்பனங்க ளவைநோக்கி யலறியே யம ரும் வேலை, அபயதுர பான்வசன மதனினுற் றுயர்தருமச் சுழு த்தி நீங்கி, யேயொருவ னெங்கேனு மானந்த வாரிதியி லிலங்கு மாதோ. 6

பருமரிய பிரகிருதி யியல்பதனை யொழித்துநிச படிவ மான, திருமருவு சத்தான வானந்த வறிவதனைச் சேர்ந்து போலாங், குருவரனற் கருணைபொழி திருட்டியினும் பொருண்மையினைக் குலவு மேவி, யுபமதிலை யுறுஞானி யுலைவறு முவப்பினொடு முலவு வானே. 7

தேசிகன்றன் றிருவருளாற் சச்சிதா னந்தமெனத் திகழ லான
மாசகன்ற தன்வடிவிற் படிந்திடுந் தியஞானி மவுனி யாகி
வீசுகின்ற போகந்தை விட்டிழிச் சுகமியல்பை விரவி னேனு
யாசகந்தன் மீதிலே யெங்கேனு மோரதிரு னமர்கின் றானல். 8

சற்குரவன் கருணையெனும் பெருந்தாங்க சம்பந்தந் தனி
னாற் றோன்று, நற்குணநல் லியல்புறுநல் லதிசயசீ தலமனத்த
னான வோரோர், சிற்குரிய பதிவரனிங் கெல்லையொடு முவமை
யற்ற சித்தின் பத்தே, தற்குரிய விட்டமது தனைப்போலத் தினம்
ரமித்துச் சரிக்கின் றேனே. 9

சீராருங் குருபரன்றன் கருணையெனுந் தினகரன்பொற் றே
சி னாலே, காராரு முள்ளிருளென் னவித்தைதனைக் கறையறவே
கடந்தோ னான, வேராரும் ஞானவரன் லீலையினை யெய்தியெங்கு
மெல்லையே யில்லா, நீராரு மானந்த நீரதியி னிதம்படிந்து நிகழ்கின்
றேனே. 10

செனித்துவருங் கிரமமதின் மாறுகவைம் பூதத் திரள்கடம்
மை, யனித்தமென நாடோறும் புந்தியினு விலயமது வாற்றி மே
லாய்த், தனித்தபரி சிட்டமதா மாத்துமதத் துவைத்தையொரு
தடையில் லாமன், முனித்திரளின் வரன்றியானே முற்றியருட்
சாந்தனாய் முதிரு மாதோ. 11

இவ்வுலகம் யாவுமொரு சாரமற்ற தன்றியுமா யிகமே யென்
னுத், தவ்வின்மனந் தனித்தேறி யாசையினை வேரறுத்த சூர
னாகித், தெவ்வெனும்புன் மதமான மற்சரத்தை யறுத்தெரிந்து
தெளிந்தோ னான, வவ்வியமில் லோரொருவ னனுதினமுஞ் சஞ்சரி
த்திங் கமர்வா னன்றே. 12

மலமிலநல் லான்மாவி லொருசிறிது முண்மையதாய் மாயை
யேனுங், குலவுமதன் காரியமா மேனுமிலை யெனவுணர்ந்திற் றுறி
த்துள் ளோனா, புலவலறு மானந்த நிறைந்தொளிரும் யோகியெ
னு முயர்ந்த மேலோ, னிலவுதன துள்ளமதிற் றிருத்தியொடு நித்
தியமு நிகழ்கின் றேனே. 13

அகமதொடு நீயெனவே யுறுத்துகின்ற வபிமான மறுத்தோ
னாகி, மகிழளிக்கு மனந்தசன வாசார மதுதனையே மருவி னோனா
ய்ப், பகையதறும் விமலமதா மானந்த வாரிதியிற் படிந்தோ னாகி,
யிகமதுறும் பாலனைப்போ லேகமதா யெந்நாளு மிலங்கு
வானே. 14

கருமமதன் சாலமதைத் தணந்தவனா யந்தகனுக் காதி
லானா, யருமைசெறி சடனாகி யான்மாவில் ரமிப்பவனா யமல மான,
பெருமைமிகுந் துறவினைய மேற்கொருவ னனவரதம் பிறங்க

பொங்கியெழுங் காரியத்தி னீட்டமதைப் போக்கினனாய்ப் பொலி யும் பிராஞ்ஞன், றங்கிடுவ னெங்கெனினும் பூரணமா மெல்லையி னிற் றனிய னாகி. 22

சஞ்சலமென் மனக்குரங்க மதுதனைவி சாரமென்பா சத்தி னாலே, யஞ்சிடநன் றுகநிதம் வயம்புரிந்தம் மாரணமா மடவி யூடே, சஞ்சரிக்கு மெங்கெனினு மோரொருவன் சன்மயனாய்ச் சாந்த னாகித், துஞ்சலிலைப் புரிந்திருப்பன் றன்னுடைய வெளிவீட்டிற் றுலங்க மாதோ. 23

வயம்புரிந்த நிரமன மெனுங்கூர்மை வலிமிகுந்த வாளி னாலே, பயந்தரும்வெஞ் சித்தமெனும் பெரும்புலியைப் பலியாற் றிப் பயமி லாத, நயம்புரியு மாரணிய மதுதனிலே யோரொருவ னலம தாகச், சுயந்தனிச்சை போலுலவி யனுதினமு மங்கல மாய்ச் சுடர்வா னன்றே. 24

சற்புருட ரிருதயமென் றுமைரயை விரிதல்புரி தந்து மே லாந், தற்பிரம ஞானமதை யருள்பெருமை யுறுமோரோர் சாந்தி மேய, வற்புதநற் றுறவிறைவ னெனுமருணன் றோடமொன்று மனுகா னாகிச், சற்பிரிய சிற்ககனந் தனினாளு மருளொடுஞ்சஞ் சரிக்கின் றானால். 25

இவ்வுலகந் தனைத்தோற்றி வைக்குமெழிற் காரணமா யில கஞ் ஞான, வவ்விருளை மாற்றுவிக்குங் கிரணமெனு ஞானமதை வாய்ந்தோ னான, செவ்வியசுத் தமதான விந்துவென்மு னீந்திர னுந் தேவர் போற்று, மவ்வியமி லறிஞனவ னகண்டமெனும் பத மதனி லலர்கின் றானே. 26

தன்னுடைய வானந்த வமுதமதைத் தெளித்தலினுந் தன தாண் மேவி, யின்னறருந் சந்தாப சந்ததியை யிறையளவு மில்லா தோட்டி, மின்னுமுயர் யோகமெனு மம்புதஞ்சஞ் சலமில்லா விருத்தி யோடு, மென்னவிசித் திரமன்றோ சிதம்பரத்தி லென் னுமே யிலங்கு மாமே. 27

அளவின்மலர்ச் சுகந்தமதோ கரமான சஞ்சார மதனி னா னே, வளர்சிரம மனைத்தினையுந் தணந்துமிக நிருமலமாய் வயங்க லான, தெளியநற் றுறவியெனுங் கவின்வாய்ந்த காவியுஞ்சித் தே யாகிக், கரிமிகுமங் கானகத்திற் கவலையற வுலவிமிகக் களி க்கு மன்றே. 28

முத்தியெனும் ரசம்வழியும் பழம்வாய்ந்து முராஜுன முமல நீத்த, சத்தியவிஞ் ஞானமஞே கரமான வழகுநிறை தளிரும் வாய்ந்தே, சுத்தபய மற்றொளிரும் வித்தார மாவனத்திற் றுகளில் லோரோர், புத்தமுத யதியெனுங்க லாபநனி விளையாடிப் பொலி யுந் தானே. 29

சாரமற்ற புவனமெனு மருக்தலத்தைச் சேய்மையினிற் றணந்து மேலாஞ், சாரமுற்ற வானந்த வுதகநிறை சின்மயவிச் சரசி னூடே, கோரமற்ற பரமஹம்சன் யாவஞே வோரொருவன் குளித்து லாவித், தீரமுற்ற தன்மனத்தி னிச்சையினிற் றிருத்தியொடுந் திகழ்வன் மாதோ. 30

நிகிலநல வாகமங்க ளெனுந்தளிர்கண் மிகமிகவு நிறைந்த தான
நிகமமுடி முடியான சீதளமா மலர்கணிறை நீண்ட காவிற்
சுகமுறுமின் னதிமதுர சுத்தமஞே கரமான சொற்க ளார்ந்த
திகழுமெதி யிந்திரனென் கோகிலமுந் தினம்பாடித் திரியு மாமே.

மோகமத மிகநிறைந்த குஞ்சரத்தை யதமாக்கி முடிவில் லாத, சோகமது தருஞ்சருவ பாபமெனும் பெரும்புலியைத் தூர நூக்கி, யேகமதை யறிந்தொளிருத் தமனுன வுயர்ந்தசிங்க மிறுமாப் பெய்தி, வேகமதை யொழித்தினிய வித்தார கானனத்தில் விளங்குந் தானே. 32

அஞ்ஞான மெனுமரிய மிருகவர னேறவொண்ணு வமலமான, விஞ்ஞான வுத்துங்க சிருங்கசிக ரம்பொலியும் வியன்றேயத்தே, சுஞ்ஞான சலிலமதிற் சீதளமா மங்கமொடுந் துறவியான, செஞ்ஞான மதம்பொழியுங் கலபமது சஞ்சரித்துத் திகழுமோரே. 33

நாசியின்றன் னுனியதனி லனவரதந் திருட்டியினை நாட்டினேரு, யேசனுறு நாமமுத விவையினின்றும் விருத்திகளை யிழுத்திட் டோனுய்த், தேசதுறு நதியினருங் கரைகளினிற் றத்துவத்தைத் தியானிப் போனு, யாசதரும் பெருந்துறவி யெங்கேனு மோரொருவ னமர்கின் றானே. 34

மன்னுதிசை யதனைநனி யம்பரமாய் மருவிமகா மவுனி யாகித்
தன்னுளெழு மாசையின்மை தன்னுலே யலங்கிருத சாந்த னுகிப்
பன்னுகர தலம்பயிக்க பாத்திரமாய்ப் பற்றியொரு படிறி லாமற்
றுன்னுதரு தலநிலய மாமுனிவன் மங்கலமாய்த் துலங்கு வானே.

சனங்கனற்ற நதியினுடைத் தீரமமை மண்டபமாந் தனிமை வீட்டின், மனங்குளிரும் கவின்வாய்ந்த புளினமதா மனதினுக்கு மகிழ்வு காலும், வனம்பெருநற் சயனமதிற் சமஞ்சாந்த மின்பறி வாம் வத்து வூடே, தினம்விழித் துத் துறவிறைவ ஞெரொருவ னித்திரையே செய்வன் மாதோ. 36

பூதலமே மிருதுவினு மிருதுவதாஞ் சயனமதாய்ப் பொலிவ ஞகிச், சீதளமாம் வாதமதே முக்கியசா மரமாகிச் செறிந்து பூ ன்ற, கோதிலதா மதியமதே தீபமதா யுடையோனுய்க் குளிர்ந் தோ ஞகித், தீதிலனு யெதிராச சேகரனிங் கோரொருவன் றிக ழ்வா னம்மா. 37

அதிவிமல நதிவாரி நாற்புறமும் புடைசூழ்ந்தே யலங்கா ரிக் க, வதனமேவு ளதிவிபுல சிலாதலமாம் பலகையின்க ணருமை யா கப், பொதியமலை தனினுதித்த தென்றனனி மந்தமந்தம் பொலி ந்து வீச, வெதியிறைவ ஞெரொருவன் சுத்தமதா நித்திரையோ டிருப்பா னன்றே. 38

மனமதனிற் றினந்தினமு மேகமதாம் வத்துவினை மகிழ்வி னேடு, மனனவனு சந்தானம் புரிபவனுய் மகத்தான மவுனி யாகி, மனைகடொறுங் கரபுடத்தில் வந்தவந்த பயிக்கமதை மாந் தி ஞெனு, புனவரிய சடவடிவ ஞேரொருவன் றெருவதனி னுலவு வானே. 39

சேடமறச் சகமதனைச் சிறப்பாகக் கிரமலயஞ் செய்தே பின் னுஞ், சேடமுறு மகண்டமெனும் வத்துபர தந்திரனுய்த் திகழ்வ னுன, தேடரிய வோரொருவ னுகர்வினையான் முகமதனிற் செ றிவ தாகித், தோடமருங் கவளமதை யயின்றுதினம் விளையாடித் துலங்கு மாங்கே. 40

தன்னுளத்திற் றிரட்டியவா னந்தகோ சம்மதனைச் சார்ந் தோ ஞகி, யுன்னுமெழிற் சந்தனசி தளத்தையுறு மிதயமதை யுடையோ னுன, பன்னுபுகழ் யோகியொன்று நிந்தனையே பண் ணுனுய்ப் பாரின் மீதி, லன்னியம தொன்றினையுங் காதலித்துள் ளானந்த மடைந்தி டானே. 41

அருள்பொழியுஞ் சாத்திரத்தின் சாலமதை யதிதூரத் தக ற்றி மேலா, யிருளிரியு நன்றூன விவகார மதுதனையு மெலாவற் றூனு, மருளதென விடுத்துமிகப் பூரணமாம் பதவியினை மருவி

யோகி, யுருளசைவ தில்லாத தீபமென வொளிர்ந்திடுவ னுண்மை தானே. 42

திருணமொடு பங்கமிகப் பூசிமலிந் திடுமரிய தேகி யாகித், திருணநிகர் தரவிசுவந் தனைநோக்கி மருளாத தெருள ஞன, வருணிறைய வுறும்யோகி சரைமான மற்றகவி னகத்தின் மேவிப், புரணவிசி ராந்தியுற்றுக் கானனத்திற் றனியாகப் பொலிவானம்மா.

எவ்வுருவ மநுதனையும் பார்த்திலனாய் வார்த்தையொன்று மியம்பா னாகிச், செவ்வியநல் வசனமதைச் சிறிதேனுஞ் சிரவணமே செய்யா னாகி, யொவ்விலவின் பூமியினி னிட்டையினை யெப்பொழுது முற்று னாகித், தெவ்விலவிவ் வருந்தவனென் மாயோகி காட்டமெனச் செறிகின் றானே. 44

சாதிமுத லபிமான மற்றவனா யுயிர்களிவை சருவத் தூடு, மோதரிய பூரணத்தைக் காண்பவனா யகிலார்த்த வுண்மை தன்னைச், சாதுரிய மாகவறி சதுரோனா மெதிராசன் சாந்த னாகித், தீதகனு மூடனைப்போற் கூடமதாய்ச் சஞ்சரித்துத் திகழ்வானன்றே. 45

வாருவின்றன் மூலமதைத் தலையணையாய்ப் போர்வையதும் வான மாக, வாகின்ற பிருதிவியைச் சயனமென வனுதினமு மாக்கி நின்றே, யூகமொன்றி விரதியெனும் வனிதையினை மிகத்தழுவ லுற்றோ னாகிச், சோகமின்றி யாநந்த பரவசனா யோரொருவன் றுயிலு வானே. 46

சென்றொழிந்த பேதவா தனைகளொடுந் தன்னுடைய சிறந்த ஞான, மென்றொளிரு மழுவொழி யுல்லாசப் பொதுமகளி ரிவர்களோடும், வென்றபுகழ் நிறைமறையின் முடிவாமந் தப்புரத்தில் விரிவ தான, நன்றறியு மெதிராச னோரொருவன் மிகரமித்து நடிப்பா னன்றே. 47

செய்யவயி ராகமெனும் வித்தார மார்க்கமதைச் செறிந்த தாகி, மெய்யுறுமின் ஞானமெனு மிக்கொளிருந் தீபமதான் மிளிர்வ தான, பொய்யறுநற் றத்துவமென் மாளிகையிற் படிபுகழப் பொலிய வேறித், துய்யவொரு துறவிறைவன் முத்தியொடு நித்தியமுஞ் சுகிப்பன் மாதோ. 48

அருணிறையும் விசனதல வுற்பலமா மாலையையு மழகு வாய்ந்த, தருணியரி னிச்சையெனப் தற்றதொரு கற்பகவல்லி தனை

யுஞ் சீராம், பொருணிறையு மபமான வழுதமெனுங் குடிகையை யும் பொலிய மேலாங், தெருணிறையு மான்மாவைத் தெரிந்த வனிங் கோரொருவன் சேர்ந்துய் வானே. 49

பொல்லாத தோடமெனும் புந்தியினு னிடேகமதைப் புரி ந்தி லானு, யல்லாத வருங்குணமென் புந்தியினுற் சிறிதேனு மடைந்தி லானு, யுல்லாச மாயையின்றன் காரியமில் லெனத்து மென வுணர்ந்து மேலா, நல்லோனென் மாமுனிவ னேயொரு வ னொதுமலினை நயந்து ளானே. 50

சென்றவெவ்வை தமையுமொரு சிறிதேனு நினையானுய்ச் செ றிப வாகி, நன்றுவரு பவையினையுஞ் சிறிதுமுளந் தெண்ணுனாய் நயன நோக்க, நின்றவிவை யெவைதமையு நோக்கலொடு நினைத்த லின்றி நிமல ஞகி, வென்றசமத் தார்த்தசம ரசனான மேயொரு வன் விளங்கு வானே. 51

நிகிலகர ணங்களையு நிக்கிரக மிகப்புரிந்த நெறிய னாகி, யகில விட யங்களின்ற னுசைதமை யறுத்தெறிந்த வமல னாகிச், சகல நல வுத்தமமா மெல்லையெனுந் திருத்தியினைச் சார்ந்தோ னானை, புகலுபுக ழெதிவரிய னேயொருவன் சஞ்சரித்துப் பொலிவா னன்றே. 52

ஒல்லையுறு மெதனையுந்தி யாகமது வொருபொழுது முஞற்று ஞகி, யல்லலற வனுகாத வதனையென்றும் விரும்பாத வசல ஞகி, நல்லதுறு துறவிறைவ னேயொருவ ஞயாச நஞுகா ஞகித்,தொல் லையற வுண்ணிகழு மாநந்த மனுபவித்துத் துயில்வன் மாதோ.53

இன்பநிறை வுறுமரிய ஞானமெனும் பெருகனவ தென்ன லான, துன்பமறு நல்விமல வேவீதாமன் பதவியினைத் தொடர்ந்து மேலா, மன்புநிறை துறவிறைவ னேயொருவன் பந்தமொழித் தகன்றோ ஞகித், தன்புனித விச்சைவரந் தனியஞய்ச் சஞ்சரித் துச் சமைவா னன்றே. 54

இனிப்புறுமிவ் வகிலவித விசுவவிகா ரங்களெல்லா மில்லா தான, தனிப்பெரிய வத்துவினிற் படிந்துலய மானமனத் தானே யான, மனப்பகைய தெனப்புகலு மடிந்தார கங்களுக்கு மன்ன ஞனோன், வனப்புறுமன் னியமதன மேட்சைசேய யின்றிநிதம் வயங்கு மாதோ. 55

பெருங்குரவன் கருணைபொழி திருட்டியினா னன்றாகப் பெ
ற்ற தானை, வொருங்குமுடி வறும்பெரிய சேதனத்தி னாகார முற்
றா னாகி, நெருங்குமலச் சகவிகற்ப பேதமெலா மிகமிகவு நெரித்
தோ னானை, விருங்கருணைப் பரமம்ச னோரொருவ னரிதாக விலங்
கு வானே. 56

வருணமொடு மாசிரம விவத்தையினை யெடுத்தெறிந்து வளம
தாகிப், பொருணிறையும் வித்தைகளை யனைத்தினையும் வெகுதூ
ரம் போக நூக்கிப், புராணபரி பூரணவா னந்தசித்து மாத்திரமா
ய்ப் புலன்க ணீத்துத், தெருணிறையுந் துறவிறைவ னெஞ்ஞா
ன்று நின்றுபரி சேடிப் பானே. 57

எவ்விதமாம் பொருள்களுக்கு நாசமதை யின்பமுட னிய
ற்றி னானை, யவ்விதமே நுகரவரும் பெருவினையை யத்தியந்த
மயின்றா னாகிச், செவ்விதமாந் தேகபந்த மனைத்தினையுஞ் சிறப்
பாகத் தீர்த்தோ னானை, யொவ்விதமே செயும்பிரானானுன் கேவல
மச் சிவமாயே யொளிர்வா னன்றே. 58

அசைவினொடு மனந்தமென்ப தின்றியென்று நாமமொன்று
மணுகு றாதா, 'யிசைவினொடுஞ் சந்ததமு மானந்த போதகன
வியல்ப தாகி, 'யிசிவுறுமெய் விகற்பமது மில்லாதாய் முதலதுவா
யேக மாகி, நசிவறுநற் பரமசிவ தத்துவமாம் வத்துவேதோ நடி
க்கு மாமே. 59

அக்கரமாய்ச் சரையிலதா யெஞ்ஞான்று முதயமதை யணுகா
தாகித், துக்கமெலாங் கடந்ததுவாய்ச் சுத்தமதாய்ச் சூக்கமத்
துஞ் சூக்க மாகித், தொக்கவபூ ருவமாகி விஞ்ஞான மயமாகித்
துகளில் லாதாய், மிக்கபர தத்துவமாம் வத்துவேதோ வொன்று
நித மிளிரு மாலோ. 60

சுகமதினுஞ் சுகமதுவா யமரமொடுந் தூரமென்றுந் தொ
டரா தாகிச், சகமதெனுஞ் சமுசார சாகரத்தின் றரணமதிற்
சார மாகி, யகமலரிற் சமரசமாய்ப் பயம்பார மணுகாதா யரிய
தாகிப், புகழுறுறு தத்துவமா மேதோவொன் றனுதினமும்
பொலியு மாதோ. 61

அரசமதாய்க் கந்தமொடு முருவமதை யணுவளவு மணுகா
தாகி, விரசமதாய்ச் சத்தவத்தொ டறக்கொடிய தமசினையு மேவா

யடைந்தனு தினமு, மினிமைய தாக விருக்கலா ஞானத் தென்
றெணி ஞானிகட் சார்ந்து, தனியவர் பாத பூசனை புரிந்து நாடொ
றும் வினவினர் நன்றாய். 3

இருவரி லரசன் றனக்கறி வோங்க விருவகைச் சார்பையு
மகற்றிக், கருவுடற் காவ றனையுங்கை விடுத்துக் கருத்தசை யாது
மெய் யுணர்வை, மருவிடி லகப்பற் றற்றுமேல் வீடு வாய்த்திடு
மதற்குமெய்ஞ் ஞானக், குருவரு ளின்றி விளங்கிடா தெனவே
கொண்டனன் மனத்தினிற் றுணிவே. 4

சீவர்க ளிடத்தி லருள்சிவ பத்தி திருந்திய துறவு மெய்ஞ்
ஞான, மாவதோர் வடிவாம் வேதமா முனியை யமலவா ரணி
யத்தி லடைந்தே, தேவர்க டேவே துன்பமோர் காலுஞ் சென்
றிடா முத்திதா னெய்திச், சாவதும் பிறப்பு நீங்குமோர் நெறி
யைச் சாற்றெனத் தாழ்ந்திட முனிவன். 5

இருவகைச் சார்பாம் புறப்பற்றை நீக்கி யிச்சையின் மீட்டதி
னினைவு, மொருவியே யுடற்கா வலையுங்கை விடுத்தே யுட்கர ணங்
கள்வா தனையுங், குருவரு ணெறியே யொடுக்கிடில் வீடுங் கூடு
ந்தா னாகவே பவத்தின், கருவழிந் திடுமிந் நெறியைநீ விரைவிற்
கைக்கொண்டு செல்லென வுரைத்தான். 6

அந்நெறி குருவா லையமுந் திரிவு மகன்றிடத் துணிவதாக்
கேட்டு, முன்னெறி யான வரசியற் கையினின் முயன்றனன் சிறி
துநா ளொருநாட், பின்னெறி யதனை நினைந்தனை வரையும் பெயர்
ந்திட விடைகொடுத் தரசன், மன்னெறிக் கோல மகன்றந்தப்
புரத்தில் வதிந்தன னொருவனாய்த் தனித்தே. 7

ஆண்டதோ ரரசு தனிலும்போ கத்து மாசையற் றேனினி
வேண்டேன், மாண்டதோர் வனத்தி லொருவனாய்த் தனித்தே
மனத்தசை வறுத்துவீ டடைவேன், பூண்டவென் மனமிங் கினி
த்திரும் பாது போகத்தைப் பொருளென வெண்ணி, வேண்டல
னீங்க ளரசனா வேறே விதித்துக்கொ ளுங்களென் றுரைத்தான்.

இவ்வர சியற்கை யற்பமற் றிதனை லெய்திடுந் துன்பினுக்
களவின், றவ்வகை யதனை யூகமின் மையிரு லறிகிலீர் நீங்களின்
பென்றே, யெவ்வகை நினைந்தி ரினியெக்கா லுங்கட் கிதின்ப மல
தெனத் தோன்று, மெவ்வமற் றிதனுக் கூகமே தோன்றா தாங்க
ளுக் குலகபூ ருதிக்கும். 9

என்றுமற் றனேக மாவிரித் தாச னெடுத்தமைச் சர்கடமக் கியம்பி, நின்றுபின் னவரை நிலுமென நிறுத்தி நிதிதனும் பொன்மனை விடுத்தே, சென்றுபின் னகர வீதியி னடக்கத் திரண் டனை வர்களும்பின் றொடர்ந்து, வன்றுய ரடைந்து வாடியே மெலிந்து வாரியி னோசையி னழுதார். 10

அவரவர் வினையி னவரவர் வருவா ரவரவர் வினையள வுக்கே
யவரவர் போக மென்றதே யாயி னுருக்கார் துணையதா குவர்க
ளவரவர் தேக முளபொழு துடனே யாதர வாரென நாடி
யவரவ ரடைத னெறிகன்மத் தடையு மாதர வாதர வாமோ

வினையுள வளவுங் கூடியே நிற்கும் வினையகன் றிடிற்பிரிந் திடுமால், வினையினால் வருமா தரவினி னியற்கை மெய்யுணர் வத் தகை யலவே, வினையிலை யுங்க ளிடத்தினு ளிருக்க மெய்யுணர் வொன்றையே நாடி, வினையறு கானம் புகுதவே வேண்டி விரும் பினே னீர்நிலு மிங்ஙன். 12

என்றுநல் வேந்த னேதிலார் போல வேகின னனைவருங் கண்ணீர், நின்றெதிர் சொரிய வாய்விட்டே யலறி நின்றனர் தமர்கள்பின் னேகி, யின்றெமை யாவர் காத்தளித் திடுவ ரினி யைநீ யேகுத னீதி, யன்றென வுரைத்தா ரவர்களை நோக்கி யர சனீ துரைத்தன னன்றே. 13

உறவாகு மெனவெணீர் தொடர்வதியல் பன்றாகு முயிர்கட் கெல்லா, முறவாகு ஞானநனி பகையாகு மஞ்ஞான முய்த்து நோக்கி, னுறவான வதையடைந்து பகையான விதைநீங்கி யொரு மை யாக, வுறவாத றனக்குத்தா னேயெனமற் றுறவுவிடுத் துறையு மென்றான். 14

தந்தைதா யிருவருந்தம் புதல்வனெனும் வாஞ்சையினாற் றம்பின் னேகி, மைந்தவா வெங்களிரு வரையுமெவர் காப்பதற்கு வைத்தாய் நீதான், சிந்தைதா னுனக்கெங்கே மகனேயுன் றிரு முகத்தைத் திரும்பிக் காட்டாய், நொந்துதான் பெற்றவயி றெரி கின்ற தெனவுரைக்க நோக்கி மன்னன். 15

அறிவைநோக் கிடிலதற்குத் தாய்தந்தை யிலையிவ்வுட லதனை நோக்கி, லிறையுநீ ருபாதான காரணமன் றிருமாயை யினிலுண் டாகுங், குறியிதுவிங் காயின்மன்னி லெனைப்பெறு தவரிலையக் கொள்கை நீரு, நிறையுமதி யிலரோநீர் நில்லுமென விருவரையு நீத்துப் போனான். 16

அரிவையர்க டமக்கிலக் கணங்கூறு நூலதனி லதனை யெல்லா, முரிமையதா வுடையவளா மினியமனை தொடர்ந்தேகி யுருகி நின்று, பரிவினுட னடிகள்பணிந் தரற்றியே பதைபதைத்துப் பனிகண் பாயத், தரியனுனை விடுத்துலக மதனிலொரு கணமேனுஞ் சாவே னென்றாள். 17

நின்னுடைய நாயகனை நினதுள்ளே யுறநோக்கி நிற்க மாட்டா, துன்னுடைய நாயகனென் றென்றனையே கருதிநீ யுழல்வ தென்னே, மின்னனைய விடையாய்கே ளனைவருக்கு நாயகனோர் மேலா மீச, னன்னவனை யேதேடிப் போகின்றே னெனவரசற் கரிவை சாற்றும். 18

ஞானமா னதுபொருவே நூலதனிற் றுறவதற்கு நவில்வ தில்லா, வானமா திலையலவோ விடுகவென வறையும்பதி யான வுன்னை, யீனமா விடுகவென வறையுமதோ துறவறமிங் கெனக் கென் சொல்லு, மானதா னுமையொழிந்து கதியிலையே யென வெளியா னடுத்தே னென்றாள். 19

ஆகமத்தின் விதிதவறா தறைந்தனைநீ விவேகியே யாவா யானுந், தேகமுதற் பிரபஞ்ச மதனினசை விடுத்துவனஞ் செல்லா நின்றே, னாகமுனை யாயெனுனை தடுத்ததுன்றன் விரதமல நாடு தன்னிற், போகுதியென் றவனைவிடுத் தேதிலனைப் போலகன்று போகா நின்றான். 20

விரிவாய ஞானமதை யுணர்ந்தாறு மடந்தைபதி விலங்க நிற்ற, லரிதாய தகைமையினா லேங்கியே பதைபதைத்தங் கவனை நோக்கித் தரியாது கதறியே வினைதனையே நொந்து தான் றளர்ந்து நின்று, தெரியாது மறைந்தவிடந் தனின்மிகவு முருகியே தேம்பி வீழ்ந்து. 21

வேந்தனே யுனைவிடுத்து முலகமதி லிருக்கவோ விதித்தா னீசன், தீர்ந்ததோ வுமக்கெனக்கும் வினைதானு மின்றளவிற் சேர்ந்து நிற்கும், போந்தவுமை யெக்காலங் காண்பேனோ வினி யெனவே புலம்பி மாதுந், சார்ந்தனள்பின் றிரும்பியே நகர தனின் மாதுலன்றன் சார்பு தன்னில். 22

அரசனந்த நகர்விடுத்துத் தேசநா டெனுமகன் றடவி சென்றே, யிரவுபக லகிலையே நிலையாக விருந்தவர்க ளிடமே சேர்ந்து, பரகுருவி னுபதேசத் தரியபொருள் வினவியவர் பகரக்

கேட்டுத், திடமனமா யொருவராற் கலங்காத ஞானியாய்த் திக ழுகி. 23

நகர்தனி லேகிப் பிச்சை நண்ணியே மனைகடோறு
மகமகிழ்ந் தங்கை யேற்றே யவ்விடத் தருந்தி யாங்கே
செகமுளோர் பேயென் றெண்ணிச் சிரித்திட நாண மின்றி
யிகபரத் திச்சை யற்றே யேகனா யுலாவ லுற்றான். 24

பொருந்திவா ழிடமொன் றாகிப் பொருந்திடும் பற்றொன் றெண்ணி, யிருந்தில னோரி டத்து மெங்கெங்கு மொருவ னாகித், திருந்திய சமாதி விட்டுத் திரும்பிடா துறைக்க வன்றி, யிருந் திருந் திடங்க ளெங்கு மேகமே நோக்கி நின்றான். 25

தோன்றிடு முலக மெங்கே தோன்றிடு மென்ன நோக்கித்
தோன்றிடு நினைவி லென்றே தோன்றிய நினைவு தானுந் [றே
தோன்றிடு மிடத்தைப் பார்த்துத் தோன்றிடுஞ் சொரூபத் தென்
தோன்றிடும் பொருள்க ளெல்லாஞ் சொரூபமே யென்று கண்டான். 26

தோன்றிடும் பொருள்க ளுண்டாய்த் தோன்றிய யின்ப மாகித், தோன்றிடு மதனா லந்தச் சொரூபமே யென்று கண்டு, தோன்றிடுஞ் சொரூபந் தன்னிற் றோன்றுமே தசத்தே யென்று, தோன்றிடுஞ் சொரூபந் தானாய்த் துளக்கமற் றிருந்தான் வேந்தன். 27

கடிநகர் தோறுஞ் சென்றுங் கானகந் தோறுஞ் சென்றும்
படிவல மாக வந்தும் பார்வைமா றட்ட மின்றி
மடிவிலா மனத்த னாகி மாசிலா நிலைமை பெற்று
முடியுடை வேந்தர் வேந்தன் முத்தியே வடிவ மானான். 28

முத்தியே வடிவ மான முடியுடை வேந்தர் வேந்த
னெத்திசை தனக்கும் ராச னெனையிட வேறில் லென்று
சத்திய மாக வெண்ணித் தன்னிட மதனிற் றன்னைச்
சுத்திசெய் தனைத்து மாகிச் சுயஞ்சோதி யாகி நின்றான். 29

தன்னையே யன்றி யொன்றுந் தானுதி யாவி டத்தின்
மின்னையே யொத்த வைய மித்தைகற் பிதமே தென்றும்
பொன்னையே யன்றி வேறு பூடண மிலது போல
வென்னையே யன்றி யொன்று மில்லெனத் தேர்ந்தான் வேந்தன்.

உலகினை வேற தாக வுணர்ந்திடிற் பந்த மாகு
முலகினைத் தானே யாக வுணர்ந்திடின் முத்தி யாகு
மிலகிடத் தோன்ற லெல்லா மென்னினை வேயென் றெண்ணி
யிலகிடக் கண்டு வேறற் றிருந்தன னிளமை வேந்தன். 31

ஏகசக் கரம தாக விருந்தர சாள்வோன் செல்வப்
போகமுந் திரண மாமப் போதநாட் டரசி யற்கை
யூகபுந் தியினு லாசா னுபதேசத் தாள வந்தச்
சோகமற் றிடுநா டெய்தித் தொழிலெலா முடித்தான் மன்னன்.

பந்தம்வீ டென்று மில்லை பரம்பொரு ளொன்றே யென்றுந்
தந்தஞ்சங் கற்பத் தாலே சாலமோ கிப்பர் தீயோ
ரந்தமா திகளு மில்லா வரும்பொரு ளுமே யென்று
சந்தத நோக்கி யந்தத் தற்பரந் தானே யானன். 33

குறைவிலா நிறைவ தாகிக் குளிர்ந்திளைப் பாறி வேந்த
னிறையள வேனுந் துன்ப மின்றியே யின்ப மாகி
யுறைவிட மின்ன தென்ன வோரிட மின்றி யெங்கும்
நிறைவதே யிடமாய் நின்று னிகரின்மா ராசன் றனே. 34

எங்குமாய் நிறைந்து நின்ற வேகராச் சியம தாள்வோன்
றங்குத லின்றி யெங்குந் தானெனக் கண்ட தாயோ
னிங்குறைந் தகன்ற பாண்டத் தியல்பினெஞ் சருவம் பற்றி
யங்குரு வகற்றி நின்று னைந்தி யாகி வேந்தன். 35

அவனியி னினக்கு மேலோ ராசனு மில்லை யிங்குத்
தவவடி வாகி யெஞ்ஞுஞ் சரித்திட லெற்றி னுக்கோ
நவமதா யுடலி தோடே நண்ணுவ தெனையீ தன்றி
யிவனெனக் கருள வேண்டு மெனக்கறி வோங்கு மாறே. 36

பதத்தினை வேண்டின் முன்னம் பற்றிநின் றில்ல றத்தைப்
பதப்பட நிறுத்தி யேகல் பண்பதா மேலா முத்திப்
பதத்தைவேண் டிடிலோ ஞானப் பார்வையிற் கூடு நீயெப்
பதத்தினை வேண்டி யிந்தப் பரதேசி யான தென்றான். 37

அமைவுடை யமைச்சின் மிக்கோ யடைவுடன் வினவிக் கேட்டா, யிமையள வேனுஞ் சித்த மிதுவது மெனவோ டாது, சமைவுடன் கேணீ சொன்ன சங்கைக்குத் தரங்க ணன்றாய், நமைவிட வேறோர் வேந்து நாட்டிலை யென்ப தொக்கும். 38

பதமதை வேண்டி னில்லைப் பதப்பட நிறுத்தி யேக
விதமென்ற லொக்கு முத்தி யெய்துநன் ஞானப் பார்வை
விதமதிற் றோன்று மென்றாய் விருப்பமாய்க் குடும்ப பாரத்
திதமதா யழுந்து வோருக் கெங்ஙனம் பார்வை தோன்றும். 39

மனமிரு பொருளைப் பற்ற மாட்டாதட் டாவ தான
வினமவை புறநோக் கான வேதிறைற் கூடும் வீடு
கனவுண்ணோக் காகு மில்லங் கருதிய புறநோக் காகு
மனகவிவ் வூகந் தோன்ற வறைகுவ காமே கேளாய். 40

தென்றிசை நடப்போர் கங்கை சென்றுதோய்க் கிலையோதா, னன்றியு மவனி வாழ்க்கைக் கனைச்சங்க ருடனே கங்க, மொன்றியே யூகஞ் செய்வோ ருலகவேக் காரி யோர்க, வவின் றிசை நோக்கா யில்லி னிற்பவர் முத்தி சேரார். 41

பாசந்தான் பகைய தாகப் பார்வைபெற் றிடிற்ப வத்தில்
பாசந்தான் வைத்துப் பின்னும் பற்றவுங் கூடி யேயதான்
பாசந்தான் பகைய தென்ற பகருநான் மட்டே கற்றோர்
பாசந்தான் விடவு மாட்டார் பரமொலா மெனவாய்ப் போக்கும்.

அந்தமா தியுமி லாவீ டடைந்துடற் பிறப்ப றுக்கச்
சுந்தர ஞானம் போதுந் துறவற மேதுக் கென்றே
மந்தரி காரி யோரை மதித்தநா னுரைக்குஞ் சொற்றி
யந்தம தான பேருக் கத்தனை வினைப்ப தென்றும். 43

தோன்றுகின்ற பொருளியல்பும் தோற்றுவிக்கும் பொருளியல்பும், தோன்றவுணர்க்கி யாமுரைக்கச் சோகமுற்றே கேட்டிடுவாய், தோன்றுபொருள்க ளநித்தமுமாய்த் துய்மையின்றித் துக்கமுமாய்த், தோன்றுந் தோற்று விக்கும்பொருள் சுகமாய்ச் சுத்த நித்தமுமாம். 44

பால னான பருவம்போம் பன்னு குமாரப் பருவம்போங்
கோல மான தருணம்போங் கோலை யுன்றிக் குனிந்தெழுந்து
காலன் மாய்க்க வீனைஞ்ஞருங் கல்லென் றழுது போமற்றி
லேயலப் பிணமென் றொருபெயரிட் டிடுகாட் டிடுத லொருதலையே.

கருவி னின்று மழிந்துபோங் கண்ட குழந்தை யிலுமழியும்
பருவந் தனிலும் போந்தருணப் பருவந் தனிலு மழிந்துபோ
முருவ நரைத்து மூப்படைந்து மொழிந்து போந்தன் காலையினு
மொருவி யழிதல் யெல்லாரு முலகத் துடலின் வாழ்க்கையுமே. 46

பஞ்ச பூத மழிந்துபோம் பானுத் திங்க ளுடுக்கள்போம்
வஞ்ச வசுரர் மடிந்திடுவர் மாகர் பதம்போம் வல்லரக்கர்
அஞ்சு வார்கள் போகிபதந் அஞ்சும் பிரமன் பதந்தானுந்
அஞ்சுந் திருமால் பதந்அஞ்சுந் அஞ்சா தொன்றே பரமபதம்.

தோலி ரத்த மெலும்பிறைச்சி சுக்ல மேதை மச்சை யொன்றுய்த், தாலி கரித்த வுடம்பாகுந் தொட்ட வெவையுந் தன்வடிவாய்க், கோலி யடக்கிக் கொளுமிதனைக் கூறு கூறு நோக்காது, போலி புணர்வோர் மகிழ்வெய்தும் புனித மென்றும் பரமபதம்.

அரந்தை யதனை யொழுங்காக வறையக் கேணீ யவனியெல்லாம், பாந்த சிருட்டி திதியொடுக்கம் பண்பாய் நிகழுஞ் சிருட்டிதனில், பொருந்து பெரிய துன்பைந்து போய்மாண் டுறிலதெண்மடங்கே, யிருந்த திதியு மிரண்டாகு மிளமை யென்று மூப்பென்றும். 49

விருத்த பருவ மிகத்துன்பம் விளங்கு மிளமை யிரண்டவையின், வருத்து மிளையின் மிகத்துன்பம் வளமை யிளமை மூன்றுகுங், கருத்த தறியாக் குழந்தையென்றுங் குமாரமென்றுங் காளையென்று, மருத்த மறியா ததிற்துன்ப மடையும் பாலப் பருவத்தில். 50

ந்தை தாய ராசிரியர் தாங்கண் முனித றனக்கஞ்சிச்
சிந்தை கலங்குங் கவுமாரஞ் சிறந்த காளைப் பருவத்தின்
முந்து பசிநோய் காமநோய் முடுகித் தணிக்கப் பொருடேட
விந்தப் புவனத் திரவியக விடைய றுத தொழிற்துன்பம். 51

பொருளுண் டாகிற் காப்பதனுற் பொருந்துந் துன்ப மாசாகி
னொருதம் மிகுந்த வரசரா லுதவுந் துன்ப மொருகுடைக்கீழ்
திருப ளுகி னேய்மரண நேரு மென்னும் பயந்தானும்
வருவ தெனையோ மறுமையினி லென்னும் வாடித் துன்புறுமே.

மாகர்க் கசுரர் பகையுளது மகிழ்ச்சி வாட்ட மிகவுமுள
தாகத் தகலா நோயுமுள தனங்க னுளது நசையுளது
போகந் தழுந்தன் மிகவுளது பொன்ற லுளது கற்பத்தே
சோகத் திறங்க லிவையுடைய துறக்கந் தென்னை சுகமுளதே.

தேவர் மனிதர் துன்பத்தின் றிறங்க ளிவ்வா றுகியிடி
லாவ கீழா மிருகமுத லசா ரீர மைவகையி

லோவ வில்லாத் துன்புக்கோ ருவமை யில்லை நிரயத்தி
னேவ துன்பஞ் சொல்வதென்னை நோயே பவத்திற் சுகம்விடே.

இந்த விழிவை யுடைய விந்த மாயை யசத்தே
யந்த வுயர்வை யுடைய வந்தப் பிரமஞ் சத்தே
தந்த மனதிற் றேர்ந்தோர் தள்ளி யெஃதை நிற்ப
ருந்தன் மனதி னன்று யூகித் தமைச்ச பாராய். 55

பொய்யென் றிதனை யறிந்தோர் பொருந்தி நிற்ப துளதோ
மெய்யென் றதனை யறிந்தோர் மேவா திருப்ப துளதோ
வைய முளதோ விதனி லமைச்ச பாராய் நன்று
யுய்ய வறிவி லாதோ ருழல்வர் நீக்க மாட்டார். 56

பொய்யை மெய்யென் றறிந்து போத மின்மை யாலே
மெய்யைப் பொய்யென் றெண்ணி மெலிந்தே யுழல்வ ருலகர்
பொய்யைப் பொய்யென் றறிந்து போத குருவி னருளின்
மெய்யை மெய்யென் றறிந்தே மெலிவு தீர்வ ருயர்ந்தோர். 57

துன்பந் தோன்றி லெவருந் துறந்திங் கேகராய்த் தவிர்த்தே
யின்பந் தேட வியற்கை யின்ப மென்றே தோன்றி
லன்ப தாக நீங்கா ரவர்கட் கெங்ஙன் கடிம்
நன்கார் பரம ஞான நாட்ட மமைச்ச சொல்லாய். 58

இழிவை யுணர்ந்தா லுயர்வை யெவருந் தேடி யோர்ந்து
மிழிவை யுணரா ருயர்வை யெய்த நோக்கா ரென்று
மிழிவை யிழிவென் றுணரா வெந்தக் காலம் வாய்ந்து
மிழிவை யுடையோர்க் கமைச்ச விதனை யூகித் துணராய். 59

பேத வாதி களைப்போற் பிரபஞ் சம்மே லுளவே
யித கன்ற தலவே யெமையன் றியதில் லென்றே
போத விழியிற் றுறந்த புனிதத் துறவே கண்டாய்
சீத மதிபோற் குளிர்ந்து செனன வெட்பந் தீரும். 60

இருந்த விடத்தி லிருந்தே யெய்த லாமென் றுரைக்கிற்
றிருந்து விமல மனத்தோர் தீர ரெனினு மொழிந்தே
பொருந்தி யோகாங் கத்திற் போத மடக்க வேண்டும்
வருந்து மனத்தோர்க் கென்னை வாய்ந்த தமைச்ச சொல்லாய்.

முனமே யனைத்து முடித்து முழுது முணர்ந்தோ ரில்லின்
இனமே சென்று நின்று மேக நீங்கா ரென்னில்
தினமே யகமாய் நிற்போர் செகத்தி னியல்பை யுணரார்
கனமாம் யாழ்ப்பா ணத்தின் கப்ப லோட்டம் போல. 62

ஒருத்த ரொரு ருளனை யொருவேந் தாக்கின் முன்னம்
இருக்கு மிடத்தை நீக்கி யேக ராச தானி
இருக்கு மன்றி முன்க ணிருக்கு மோதான் சொல்லாய்
திருக்கு ஞான முடையோர் செகத்தை மெய்யென் றுழலார். 63

மனையினின் றுறும் பொருளுயிர்ச் சார்வின் வருத்தனங் கெடுதலின் மகிழ்ச்சி, இனிமையில் வாட்டம் விடயவின் பதினெட்டுணை யாயினு மாசை, பினையதிற் றமது பிரவிர்த்தி தானும் பேசுமிந் நான்குமில் லெனினும், தனையுணர் வதற்குச் சாதகஞ் செயுங்காற் றள்ளியின் னிற்றலே தகுதி. 64

ஈதுறு மனையின் பினையிகழ்ந் தந்தச் செம்பொரு ளின்பமே வேண்டிச், சாதக மதனிற் றொடங்குங்கால் விடயந் தடையதாஞ் சாத்திய மான, போதினி லவையுந் தோன்றிடா தந்தப் பொருளிலா னந்தமே விடவே, ஆதலிற் றுறவின் ஞானமஞ் ஞான மாகுமென் றறைகுவர் பெரியோர். 65

இல்லற மதனி லுறைந்துளோ ரிடத்தி விருப்பினு ஞானங்கீழிரும்பிற், புல்லிய மாரத் தினமென விளங்கும் போக்கியில் வினைத்துற வென்றும், நல்லற மடைந்தோ ரிடத்துறை ஞான நற்றங்க மிசையிரத் தினம்போல், எல்லையி லொளியாய் விளங்கிடு மாயி னிச்சிறப் பன்றுஞா னிகட்கே. 66

முனமனை வர்களு முறைவது மில்ல முத்தியை யுணர்ந்தறிஞர்களும், பினமதி னின்ற படியினுஞ் சங்கை பேசுவர் துறவுடையோரை, இனமதை விடுத்து மில்லற மதுவே தலையென வியம்புவ தன்றோ, மனமதி னிதனை யூகிநீ யமைச்ச மகிமையன் றில்லஞா னிகட்கே. 67

ஆடிய சகல மடங்குமே கவலமு மகற்றியே யொளிப்படை கொண்டு, மூடிய விருளை முழுதையும் வீசி முடிவில்வீ டதனையே யுணர்ந்தோர், நீடிய ஞால மிசையினிற் பால னிசமரு ளுடையன் பேய்பிடித் தோன், கூடிய குணத்தி னூரிற்போய்க் குடியின் கூலியா ளினினியல் படைவார். 68

சகம தெல்லாம், மனமதனிற் சாலமென வுணர்ந்தவரிவ் வுலகின் பின் மைய னீங்கும். 75

கதிரவன்முன் னிருளிருக்கு நயனமுடை யொருவன்குழிக் கண்ணே வீழும், அதிகவலிச் சூரனமர்க் களத்துவெரு வுவன்கி ருத மனையக் காரம், இதமுளபா யசமுநிரம் பருந்தினன்கூழ் தனிற்செய்வ னிச்சை யென்றால், விதமிவைநான் கினுக்குங்குறை யதின்ஞானிக் கிழுக்காகும் விடயஞ் சென்றால். 76

இங்குறைந்த பாண்டமதின் வாதனையில் வாதனைக ளிருக்கு மென்றல், துங்கவறி வுடையோர்கட் கின்றியமை யாததொழி றொடங்கி நிற்றல், அங்கியைத்தம் பனம்வல்லார்க் கனல்சுடாததின் வினைக ளடுக்கா தென்றல், தங்கும்வினைக் கேதுவாம் விடய மதில் விருப்பாதி சாரா தென்றல். 77

உணர்வுடைய ஞானியெவை புரிந்திடினு மிழிவிலிழி வுரைத்த தாகின், இணையிலிரு நியமனென்பர் யூகமில வதனுன்மற் றெவைகள் செய்தும், அணைவதிருழ் வெறுமவனே நியன்மிக ஞான மதற் காருந் தாழ்வோ, நனுகினன்றே ஞானமொரு வனைஞானி யெனப்பெயரு நண்ணி நிற்றல். 78

கருவயிற்றை யுடையதுவுங் கனவயிற்றை யுடையதுவுங் கருதிப் பெண்ணின், உருவதனைக் குறிப்பதிலேக் கிடிற்றோன்று முளபடியே யுலகு தன்னில், குருவையடைந் தவனருளிற் சொரூபத்தை யநுபவமாக் குறித்து ளோரும், இருவையத் திடம்பமாய்த் தமைஞானி யென்போரு மேதிற் றோன்றும். 79

அருச்சுனர்க்கு மிராமருக்கு மதிகார மவைபார்த்தே யறைந்த நூலின், கருத்தறியாய் ஞானமொன்றே பிரமாணஞ் சரிதையது கணக்கன் றாகும், விருத்தமறி வாசார முடையோனே ஞானியில்லோன் விருத்த னாகும், திருத்தமுட னமைச்சவிது துணிவென்றே யுட்கொள்வாய் தீர னாகி. 80

என்றங் கனேக மாய்விரித்தே யிராச யோகி யுரை செய்து
நின்று வாக்குத் தனையடக்கி நிமிடத் தகற்றி மனத்தினையும் [ன்
ஒன்று மில்லா வெறும்பாழா யொன்றுஞ் சமாதி தனையடைந்தா
நின்றங் கமைச்ச னிதுகண்டிந் நேர்மை புதிதென் றதிசயித்தான்.

இந்த வுணர்வு நமக்கின்ன மெய்த வில்லை நாமிங்கே
எந்த வுணர்வு கொடுநிற்பே மென்ன வமைச்சன் யூகித்து

வந்த வழியே தான்றிரும்பி வளப்ப முடைய மாபுரிக்கே [ம். 82
பந்த முடையோ ருடனிருந்து பகர்ந்தா னரச னியற்கை யெல்லா

கேட்ட பேர்கண் மிகவியந்து கிட்டா தென்று மிம்முனிபோல்
தேட்ட முடனே யவரவர்க டேடி வந்து பணிந்திடவும்
வாட்ட முடனே தாய்தந்தை மனையாள் பதத்தில் வீழ்ந்திடவும்
நாட்ட மாறு பாடின்றி நகைசெய் திருந்தா னற்றவனே. 83

வந்த பேர்க ளுடன்வார்த்தை மலரா திருப்ப தவரறிந்து, பந்த முடையே நமக்கென்னை பகர்ந்தாற் றேன்று மெனத்திரும்பித், தந்த மிடத்திற் சென்றார்க டவனுஞ் சிறிது நாட்கழித்துத், தொந்த மொன்று மில்லாத சுயமா முத்தி தானுனன். 84



தத்துவ மசியென் றுரைக்குமுப் பதத்திற் றருவன்ன நான்கதா மவையும், ஒத்துறு தொந்தற் பதமவை தம்மி லொன்றொன்று மசியினி லிரண்டாம், தொத்துத லகன்று சுத்தமா யிருத்த றொல்லதிட் டானந்தா னுதல்,ஒத்துறு மவையி லொன்றொன்றே யசியி லோரிரண் டங்கமுஞ் சிவமே. 85

சுத்தமாய் நின்று லிச்சைசுத் திபதாந் தொல்லதிட் டானமாய் நின்றால், சித்தமா ஞானஞ் சுத்திய தாகுஞ் சிவத்தினுக் கங்கமாய் நின்றால், மத்தமாங் கிரியை சத்திய தாகும் வகுத்தவிம் மூன்றுமற் றொழுங்கில், சித்தமாய்ச் சுத்தி யிலாவிடின் மீட்டிந் தேகமொன் றெடுக்குமென் றுணர்வாய். 86

தொம்பதம் விளங்கின் மேல்வினை மறைத்த தொல்லிரு ளகன்றுபோ யொளிக்கும், தம்பத மான தற்பதம் விளங்கிற் சஞ்சித மாயைபோ யொளிக்கும், அம்பத மான வசிபதம் விளங்கி லரும்பிரா ரத்தம்போ யொளிக்கும், செம்பர வருளே வடிவதா யான்மாச் சிவத்தினுக் கங்கமாய் நிகழும். 87

பிறாரத்த முடன்பா டென்றெந்த நெறியும் பேசிடு மிந்நெறியதற்குப்,பிறாரத்த முடையோ ரருகரே யன்றும் பிராரத்தம் புசித்திடு வோர்கட்,கருதிந்த மாயா தனுகர ணங்க ளதனினுற் சிவத்துவ மதனை, உறுதுமற் றவரைச் சீவன்முத்தர்களென் றுரைத்திடப் படுவதெப் படியோ. 88

அன்னைதன் முலைப்பா லருந்திடும் பருவ மகன்றப்பாற் பருவம்வந் ததற்பின், அன்னைதன் முலைப்பா லருந்தவேண்டிடினு

மம்முலை வற்றியே யிடும்போல், பின்னையின் போகம் புசித்திடும் பருவம் பெயர்ந்தப்பாற் பருவம்வந் ததற்பின்,பின்னையின் போகம் புசிக்கவேண் டிடினும் பிராரத்த நீங்கியே யிடுமால். 89

இருள்வடி வதுவு மருள்வடி வதனி லெய்தியே மறைந்திடு மிந்த, மருள்வடி வதுவு மோவடி வதனின் மறைந்திடு மோவடி வதுவும், அருள்வடி வதனின் மறைந்திடு மந்த வருள்வடி வதுவு மச் சிவத்தில், தெருள்வடி வான சத்தியாய் முன்போற் றிகழு மென் றசியுரைத் திடுமே. 90

வடிவதவ் விருள தாய்நிற்குங் காலை மன்னுயிர் பசுவதாய் நிற்கும், வடிவதிம் மாயை யாய்நிற்குங் காலை மன்னுயிர் சீவனாய் நிற்கும், வடிவதவ் வோவ தாய்நிற்குங் காலை மன்னுயிர் சீவன் முத் தனுமாம், வடிவதவ் வருள தாய்நிற்குங் காலை மன்னுயிர் பரமமுத் தனுமாம். 91

இருளுறு பசுவ தாய்நிற்குங் காலை யிருளது வாகியே நிக ழும், மருளுறு சீவ னாய்நிற்குங் காலை மருளது வாகியே நிகழும், தெருளுறு மோவின் முத்தனாங் காலைத் தெருள்பிர ணவமதாய் நிகழும், அருளுறு பரம முத்தனாங் காலை யருளதாய் நிகழுமவ் வருளே. 92

இருளது வாகி நிகழ்ந்திடுங் காலை யிரும்பதி யாகியே நிக ழும், மருளது வாகி நிகழ்ந்திடுங் காலை மகபர மாகியே நிகழும், தெருள்பிர ணவமாய் நிகழ்ந்திடுங் காலைச் சிவலிங்க மாகியே நிகழும், அருளது வாகி நிகழ்ந்திடுங் காலை யச்சிவ மாகுமச் சிவமே. 93

அரியவவ் வருளே மூன்றியல் பதுவு மைந்துநற் குறியுமாய் நிகழும், இரியுத லில்லாச் சத்தையாய்ச் சித்தா யின்பமாய் நிற் குத லியல்பாம், கிரியையு ஞான மும்மிச்சை யதுவுங் கிளர்திரோ தையும்பரை யதுவும், உரியது குறியாம் விரியிலை யைந்தா யொடு ங்கிடி லொன்றதாய் நிற்கும். 94

பிரணவ மதுவு மூன்றியல் பதுவும் பிறங்குமைங் குறியுமாய் நிகழும், திரமுற வவ்வு முவ்வுமவ் வதுமாய்த் திருந்தவே நிற் குத லியல்பாம், உரமுறு நவ்வு மவ்வுமச் சிய்யு மோங்கிய வவ்வும் யவ் வதுவும், விரவுறு குறியாம் விரியிலை யைந்தாய் மேவிடி லொ ன்றதாய் நிற்கும். 95

மருளுறு மாயை யதுவுமூன் றியல்பும் வாக்குமைங் குறியு மாய் நிகழும், உருவுறு தமசு ரசசுசத் துவமா யொன்றியே நிற் குத வியல்பாம், பிருதிவி யுஞ்ச லமுமன லதுவும் பெருகிய வாயு வும் வானும், வருகுறி யாகும் விரியிலே யைந்தாய் வந்தொடுங் கிடிலொன்றாய் நிற்கும். 96

உலகினில் விடய விச்சையை யுடையோ னுணவதற் கேற் கவே கூட்டி, இலகிடப் புசித்தான் முயற்சிமேன் மேலு மேறியே வளர்ந்திடு மதுபோல், குலவிடும் வீட்டி லிச்சையே யுடையோன் கொண்டதற் கேற்கவே யுணவை, இலகிடப் புசித்தான் முயற்சி மேன்மேலு மேறியே வளர்ந்திடு மன்றே. 97

தமகுணப் புசிப்பே மயக்கத்தை யளிக்குந் தருமிரா சதகு ணப் புசிப்பே, மமதையை யளிக்குஞ் சத்துவப் புசிப்பே மயக் கமு மமதையு மகற்றி, அமலநல் லுணர்வே யளித்திடு மதனு லவையிரண் டினுநசை யகற்றி, நிமலசத் துவமே வருத்தலை யாக நின்றுசத் துவப்புசிப் பருந்தும். 98

அடிசின்முன் னுரைக்கு மறுசுவை யவையை யருந்திடு காலையி னேக்கிக், கடினமு முறைப்பு மிராசத மவையிற் கழிந்திடும் புராதன மூசல், மடிவுறு தமசென் றிருமையு மகற்றி மாலைகா லைப்பொழு தகற்றிக், கடினவுச் சியிற்சத் துவகுணப் புசிப்பே கைக்கொண்டு தினமருந் திடுமால். 99

இடம்பொரு ளேவன் மூன்றையு முடையோர்க் கித்தகை யுணவுறு மந்த, இடம்பொரு ளேவன் மூன்றையு மகன்றோர்க் கித்தகை வுணவுறு ததனல், திடம்பெற வூரி னுச்சியி லேகித் திரு வருள் புசிப்பித்த தென்றே, விடம்பெறி னுங்கைப் பெற்றதை யருந்தில் விமலமாய் நின்றிடுஞ் சித்தம். 100

சவிகற்ப நிருவி கற்பநிட் டையதுஞ் சத்துவ குணத் தில்வந் ததுவாம், இவிகற்ப நீங்கி வருடமா யிரமங் கிருந்திடி னும்பி னுடம் விழிக்கும், செவிதனி லடையுஞ் சகசநிட் டையதே திருவருு டன் னில்வந் ததுவாம், தவிருதல் கூட லின்றியே யங்குத் தங்கிநின் றிடுநின்ற படியே. 101

அருளண்ட மாகி வுயிர்பிண்ட மாகு மண்டமுந் தோற்றன் மாத் திரமாய், அருள்நின்ற தாகிற் பிண்டமு மதுபோ லாகியே நின்றிடு மண்டம், அருள்வடி வாகிற் பிண்டமு முயிரா யருளிற்று

தான்மிய மடையும், அருளந்தச் சிவத்துக் கங்கம தாகி யமர்ந்து நின் றிடுநின்ற படியே. 102

சகசநிட் டையது லபித்திடுங் காலே தம்முயற் சியதொன் றுமின்றிச்,சகசம தாகித் தன்னுள மதனிற் றுனின்றிங் கிடைவிடா தாறும், சுகவரு ளமுத மதனையே யருந்தித் தொல்வடி வதுமெள் ளக் கரைந்து, சுகவருள் வடிவாய்ச் சுட்டெலா மருளாய்த் தோன்றிநின் றிடுநின்ற படியே. 103

சத்துவ குணமே வருத்தனை யாகித் தங்கியே யுளத்தினு ளனின்றால், ஒத்தநு நிட்டை கூடிடு மிலதே லொருவியிச் சகலகே வலத்தைத்,தொத்தறு மன்றிக் குணமுமா யையினிற் றோன்றின தாதலா லித்த, ஒத்தறு நிட்டை யுண்மையே யன்று முபாசக நிட்டையென் றுணர்வாய். 104

எங்கெங்கு நோக்கின் மருண்மய மாகி யிருந்திடும் பந்தமாந் திசையில், தங்குந்தன் வடிவ மருண்மய மாகித் தயங்கியே நின் றது குறிபோல், எங்கெங்கு நோக்கி லருண்மய மாகி யிருந்திடு முத்தியாந் திசையில், தங்குந்தன் வடிவ மருண்மய மாகித் தங்கியே நிற்குதல் குறியே. 105

அருள்வடி வதுவே பார்வையிற் றெக்கி லகப்படா தென்று நின் றிலகும், மருள்வடி வதுவே பார்வையிற் றெக்கில் வந்தகப் பட்டுநின் றிலகும், அருண்மரு ளடுவா மோவடி வதுவே யகப்படும் பார்வையொன் றுக்கே,மருள்வடி வுலகு மோவடி வோர்க்கு வாய்த்திடும் பார்வையொன் றுக்கே. 106

பழுதையிற் கிளிந்தில் கட்டையி னின்றும் பாம்பும்வெள் ளியுங்கள்வ னும்போல், எழுதரு மாரோ பிதமநிட் டான மிலங் கிடி லாதது போலும், முழுதுணர் சிவம்வந் ததித்தவிச் சீவன் முத்தருக் குலகமின் றதித்தல், கழுதிர தம்போற் காட் சிமாத் திரமாய்க் கவும்விவ காரமே யின்றாம். 107

கனவது போல்விவ காரமுண் டென்னிற் கனவது நீங்கியே விழித்தால்,கனவிடுநன் றுணரு மாங்கவர் தமக்குக் கனவுவந் துத வுத லுண்டோ,கனவுமுன் கண்ட கிளவுமாத் திரமாய்க் காணுறு மதந்தது போலக், கனவித் வுலகுஞ் சீவன்முத் தருக்குக் காணன்மாத் திரமதாய் நிகழும். 108

மகற்றி, அன்னிய நூலை யோதுத லகற்றி யன்னிய கேள்வியு
மகற்றி, அன்னிய பாக மருந்துத லகற்றி யன்னிய வகையறத்
தொடங்கி. 115

சமயநற் கிரியை யனைத்தையும் விடினுந் தனக்கந்தப் பிர
ணவ வமுதம், அமைய நின்றூறி யதனையே யருந்தி யவ்வடி
வாயிடு மளவும், சமயிகள் பாக மதனையே கொண்டு தற்பர நிவே
த்தியம் புரியும், அமைதியை விட்டான் மேற்கொளா தென்ப
தறிந்ததை நியமமாய்க் கொள்ளும். 116

சடுத்தல மதினு மிலிங்கமே யாகித் தானெனல் விடுத்தருந்
தியபின், கொடுத்தவன் றானுங் கொடுத்திடு பொருளுங் கொள்ளு
வோன் றானுமொன் றாக, அடுத்தவிம் மாயா வடிவதை நோக்கி
யகற்றியவ் வோமய மாக, விடுத்தனு தினமும் புசித்திடி லனைத்
தும் விமலவோ மயமதாய் விடுமே. 117

இன்னதன் மையவாஞ் சுத்தபா வனையி லிரும்பிரா நத்
தம்போ லொளித்துந், தன்னது னின்றிங் கிடைவிடா தாறுந்
தக்கதோர் பிரணவ வமுதம், அன்னதை யருந்தி முன்வடி
வதுவு மங்ஙன மோமய மாகி, இங்கில மதனிற் றேற்றன்மாத்
திரமா யியங்குதல் சீவன்முத் தியதே. 118

அறிவிலாக் குழந்தைப் பருவத்தின் முலைப்பா லருந்திடுங்
குமாரங்கா ளையினில், அறிவிலாக் குழந்தை யருந்துதல் கண்டு
மதினசை சகசமா யிலதின், அறிவிலாச் சீவத் துவப்பரு வத்தி
னருந்திடு மாயையி னுணவை, அறிவிலாச் சீவ ரருந்துதல் கண்டு
மதினசை சகசமா யின்றாம். 119

அனமதும் பாலுஞ் சருக்கரை கண்டு மங்கனி வகைகளுந்
தேனும், இனமவை யொன்றாய்க் கூட்டிய ருசியி னிதயநின்
றிடைவிடா தூறும், கனபிர ணவவமு தத்தையே யருந்திக்
களிப்பவர் மீட்டுமிச் சகத்தின், பினமுறு விடய வின்பையெண்
ணிடுமோ பிராரத்த மும்மிலை யவர்க்கே. 120

உபயநல் லமுதே புசித்தனு தினமு முபயமே வடிவது வாகி,
அபயமென் றுரைக்கு முயிர்களுக் கிரங்கி யஞ்சலென் றவர்களை
நோக்கி, உபயவந் நெறியின் பயனைமுன் னுணர்த்தி யுபநிடச்
சுருதிநின் றுரைக்கும், அபயமற் றொன்று மிலாதவிந் நெறியே
யனுக்கிர கம்புரிந் திடுமால். 121

ளத்திற் றானும் வேறொன்றா லெய்தா தெய்திற் றாயினும்பின்
குத்திர மாகிப் போமெனவே கொள்ளார் மேலோ ரீதன்றே. 129

சத்யா சத்ய வத்துவினைத் தகவே பிரித்துத் தானறியில்
கொத்தாய் மற்றை மும்மூன்றுங் கூட வுடன்வந் தவனையுறும்
அத்தா லதுநீ யென்றுரைக்கு மமல வாக்கி யப்படியே
ஒத்தாற் பிரமந் தானேயே யுணருங் குருவி னருளாலே. 130

இந்த நான்கு சாதனமு மில்லா தவர்கட் கொருகாலும்
அந்த ஞானம் வெளியாகா தங்கி நயனந் தொடுதோன்றிப்
பந்த மறவே புரைத்திடினும் பாழுக் கிறைத்த நீரொக்கும்
மூந்த நான்கு சாதனமு முத்தி யடைவோர்க் குறவேண்டும். 131

பண்டித்தலத்தை யுழவாளர் பண்டிமுகத்தில் கொழுப்பிணிக்கின்
மண்டித்தடையற் றுழுமஃதின் மயக்கமுடையோர்க் கறிவருளின்
மிண்டிப் பயமு மறமும் விட்டு வேண்டும் படியே சரிக்குமெனக்
கண்டித் திறந்தோர்க் குபதேசங் கழலார் ஞான சற்குருவே. 132

இந்நேர் நெறியிற் சாதனங்க ளிவைநான் கினும்வந் தெய்தியதேல்
தன்னேர் குரவன் றனையடைந்து சாற்றுஞ் சீடா சாரமுறை
அந்நேர் பிசகா தேவல்புரிந் தருடன்மீதிற் சுரப்பளவும் [னம்.
பின்னே திரிந்து மவன்கொடுக்கப் பெறவே வேண்டும் விஞ்ஞா

ஞான மார்க்க மிருவகையாய் நவில்வர் விகங்கம் பிபீலிகையென்
றூன வகையில் விகங்கமே யமல வேத முடிவதனில்
ஞான மாகும் பிபீலிகையே நவிறந் திரத்தின் ஞானமாம்
ஆன விகங்கத் துணராமற் றதனின் வழியே யுணர்ந்திடுவாய். 134

ஆசான் மானைக் கன்றுடைய வதிகா ரங்க ளவைபார்த்தே
பேசா நிற்கும் விகங்கமதைப் பிரம மொன்று மேமெய்யாய்
மாசா ருலகம் பொய்யாக மானைக் கன்ற னனுபவத்தில்
தேசாய் விளங்கி யக்கணமே சிரத்தை பிறந்து திடமாக. 135

உலகை மெதினின் றுதித்திடுமென் றுன்னி நோக்கி னிவைவதனில்
இலகு வுதிக்கு மெனாகினைவு மெதினின் றுதிக்கு மெனநோக்கில்
திலக வழிவு தனிலென்றே சேர வனைத்து மழிவாலும்
கலக மிடுதத் துவமெல்லாங் கலங்கா வழிவா யேகமையும்.

உலக மிலங்கும் வகையுண்டா யுதித்தின் பமதா யுருநாமத்,
திலக விளங்கு மிவையைந்தி லியம்பு மூன்மூன் றங்கிசமும்,

குலவு சொரூப சம்பந்தங் கூறும் பினிரண் டங்கிசமும், கலக
மாயா சம்பந்தங் கருதி னோக்கிற் கற்பிதமே. 137

மூன்றங் கிசமு மதிட்டான மொழியும் பினிரண் டங்கிச
மும், ஆன்ற வதிலா ரோபிதமா மதனுஞ் சொரூபங் காரண
மாய்த், தோன்று முலகு மசத்தாகுஞ் சொரூப மொன்றே சத்
தாகும், ஊன்றி நோக்கி லெக்காலு முளதே தோன்று மில
திலதே. 138

நாம ரூபந் தனைமெய்யாய் நாடி யிடத்தின் முப்பொருளாம்
நாம ரூபந்தனைப் பொய்யாய் நாடி யிடத்தி லொருபொருளாம்
நாம ரூபந் தனைமெய்யாய் நாடிற் சீவ னவனேயாம்
நாம ரூபந் தனைப்பொய்யாய் நாடிற் பிரம மவனேயாம். 139

ஆடி யதனிற் றோன்றுநிழ லதுபோல் விகற்பந் தீர்ந்தறிவில்
கோடி விவித சகந் தோன்றுங் கொளுங்கா ரணகா ரியமின்றி
நாடி வேறு போற்பாய்த லுக மதத்தாற் றன்னிழலே
ஓடிப் பாயு மதுபோலென் றுரைப்பர் பிரம வாதிகளே. 140

ஒருவி கற்பங் களுமில்லா வொன்றும் பிரம மதினின்றே
ஒருவி கற்ப நினைவாலே யுலகு சீவ பரமாகும்
ஒருவி னினைவை முப்பொருளு மொழிக்கு மதுவே முப்பாழாம்
ஒருவி கற்ப நினைவதனுக் குதிக்க வொடுங்க விடமதுவே. 141

தனது மாயை தன்னாலே தனையே யநேக மாய்க்காணும்
தனது ஞானந் தன்னாலே தனையே யேக மாய்க்காணும்
தனது சத்தி யிவையிரண்டுஞ் சத்தி மானுந் தனையன்றித்
தனது சத்தி வேறாகா ததனுந் தனே தானிகழும். 142

என்று நிலையி லொருபடியா யிருந்து தனையே கண்டிருக்கச்
சென்று நினைவிற் பரசிவ செகமாய் விரியு முன்னிலையில்
நின்று நினைவைத் தானெறிக்கி னேர மூன்றுஞ் சென்றொடுங்கு
மென்று கண்டோன் மூன்றுப்பா ழிறந்த சொரூப மேயன்றே.

அடியு முடியு நடுவுமிலா வகண்ட வொளியா மொருதனையே
கடிய நினைவா மாயையினாற் கலக்கி வேறு மனேகமாய்ப்
படிக மலையிற் சுனைக்கனைப்போற் பார்த்த லெனவே யதிட்டான
முடிவிற் றன்னைத் தான்கண்டே மோக மின்றிப் பார்த்திருப்பன்.

இந்த நெறியி னுணரார்க் கியம்பும் பிறவி கையினெறிய
வந்த வழிக்கும் போம்வழிக்கும் வாத மின்றி யொழுங்காகப்

பந்த மவையை நியதிகொடு பார்த்தே யொன்றென் றுயகற்றி
எந்தப் பொருளுனின் றதைக்கண்டே யெல்லா மதுவாயுணர்ந்திடுக.

வந்த வாறு நெறியுரைக்கின் மாயை தோன்றும் பிரமத்தில்
அந்த மாயை தனிலீச னகில விடய மாய்நிகழும்
இந்த வான்மா மற்றவையி லேக தேச விடயமதாம்
வந்த வாறே யொடுக்கிவிடில் வயங்கும் பிரம மேயென்றும்.

அந்தப் பிரமந் தனினின்றே யகிர்வாச் சியமாம் பிணைதோன்றும்
அந்தப் பிணையின் மாயைவரு மதனிற் பாதத் துவமதனில்
வந்தப் படியே வியோமமதில் வருங்கா லபர மதினின்றே [ன்.
தொந்தப் புருடன் புருடனிலே தோன்றும் பகுதி பகுதியின்மா

மதியி னகங்கா ரந்தோன்றி வகுத்த மூன்று குணமாகும்
அதிக சாத்து விதகுணத்தி லாகு மனஞா னேந்திரியம்
விதியா யிராச தகுணத்தில் வெளியாங் கரும விந்திரியம்
ஓதிய தமச குணத்தினு லுண்டாந் தன்மாத் திரையைந்தும். 148

அவையைப் பஞ்சீ கரிக்குமிடத் தாகு மைந்து மாபூதம்
இவைக ளிருபத் தெட்டுமுட னியம்பு மாயை பின்னையுமே
கவைசெய் முப்ப தாகுமிவை கண்டப் படியே தாநெழுங்கில்
சிவையி னருளா லியதிபணிற் சேரும் பிரமந் தானுக. 149

முப்ப தினையு நீங்கிநிற்க மொழியு மவத்தை பத்தாகச்
செப்பு நனவு கனவினுடன் சீவ சுழுத்தி பரநனவு
வெப்ப மகன்ற பரகனவு வியோமஞ் சிவசாக் கிரங்கனவு
ஒப்பு மிலது மூன்றும்பா மூண்மை யான குருவொன்றே. 150

பூத நீங்கிற் பருப்புப்போம் பொறிக ணீங்கிற் காட்சிபோம்
ஓதுக் தக்க ரணம்போகி னுளவா தனைபோ மிருள்போகில்
போதந் தோன்றும் புருடன்றன் போகிற் சர்வஞ் ஞத்வாதி
போதம் போகுங் காலபரம் போகி லவ்வா தனைபோகும். 151

வந்த வியோம நீங்கிவிடில் வாங்கு மிரண்டாம் பாழ்பரத்தின்
தொந்த நீங்கி னுலகம்போந் தோன்று மாயை தானீங்கில்
பந்த முறுமவ் வாதனைபோம் பகர வொண்ணுப் பிணைநீங்கில்
அந்த மூன்றும் பாழ்போகு மனைத்து மான சிவந்தோன்றும். 152

ஏதே தகன்ற தநுமுன்ன மியற்றுந் தொழில்க டன்னிடத்தப்
போதே யகன்றவ் வனுபவத்திற் போக்க வேண்டு மெலாமகற்

சித்த நானாய்ச் சத்தமுன்னாய்ச் செப்புங் கந்த மீறாக
ஒத்த விடய மைந்தினையு முணரு ஞானேந் திரியனாய்
சத்த முதலைந் தினையுணர்ந்து சாற்றும் வசனா திகள்செய்ய
வைத்த கருமேந் திரியனாய் வகுத்து விளையா டாநிற்கேன். 161

உம்பர் நானாய் நரர்நானா யூர்வ நீரு றைவநானாய்
வெம்பு மிருகங் களுநானாய் விகங்க மொடுதா பரநானாய்
அம்பு நானாய்ப் புவிநானா யனலு நானாய் வளிநானாய்த்
தம்ப வாகா யமுநானாய்த் தானே விளையா டாநிற்கேன். 162

தந்தை நானாய்த் தாய்நானாய்த் தனையர் நானாய்த் தமர்நானாய்ச்
சிந்தை மகிழ்தா ரமுந்தவனுஞ் செப்பு தமையன் றம்பியுடன்
விந்தை புரிபூ டணநானாய் வீடு தாதா பொருளானாய்ப்
புந்தி மகிழ்கூர் தனுநானாய்ப் பொருந்தி விளையா டாநிற்கேன்.

தோற்ற நானாய்த் திதிநானாய்த் துடைத்த னாய்த் திரோபாவம்
ஏற்ற மான வனுக்கிரக மிரண்டு நானா யிவையைந்தாள்
சாற்ற லாகா தொழிலனைத்துந் தகவே யடக்கி யன்றுமுதல்
தேற்ற மான சந்நிதியினாற் றிருந்த விளையா டாநிற்கேன். 164

தங்கத் தனந்த விதமாகித் தானே நிகழும் பணிதியெல்லாம்
தங்கத் திறைக்கோர் காலையினுந் தான்வே றாகத் தோன்றாதின்
பங்கற் றொளிரு மென்னிடத்திற் பலவாய் நிகழுஞ் சகமுழுதும்
பங்கற் றொளிரும் யானென்றே பார்த்து விளையா டாநிற்கேன்.

சத்தை யன்றி யொருபொருளுந் தானே யுண்டா யிருக்குமோ
சித்தை யன்றி யொருபொருளுந் தேஜ சுண்டாய் விளங்குமோ
மித்தை யான சகமுழுதும் விளங்கு மதினின் றதினாலே
எத்தை நோக்கி மகிழ்ந்திடினு மியானே யென்று மியான்மகிழ்
[கேன். 166

நித்த மாகி யேநிற்கி னிகழுங் கால பரிச்சேதம்
ஒத்த பரிபூ ரணமாகி லோதுந் தேச பரிச்சேதம்
மத்த மான தேகமே யாகின் வத்து பரிச்சேதம்
சித்த மாகி யிம்மூன்றுஞ் செல்லா யென்னுள் யான்மகிழ்கேன்.

சத்தை வேறொன் றிலாமையினாற் சாதி பேத மதுமாயை
சித்தை விடவே றிலாமையினாற் செப்பும் விசாதி பேதமது
மித்தை நிரவ யவமாகின் வேறு வேறாஞ் சுவகதமும்
மித்தை யான வென்னிடத்தின் மேவி விளையா டாநிற்கேன். 168

என்னை யெனது நினைவினு லிதுவாய் நானு வாய்க்காண்கேன்
என்னை யெனது நினைவிலதி னேக மாய துவாய்க்காண்கேன்
என்னை யன்றி யொருபொருளு மிங்கு மங்கு மிலையதனுல்
என்னை யிங்கு மங்குமா யானே கண்டு நான்மகிழ்கேன். 169

எல்லா நானு யன்றுமுத லிருந்து விளையா டாநிற்க
எல்லாம் வேறென் றெண்ணியே யிருந்து மோக மடைந்தேனை
எல்லா முடைய வருட்சத்தி யிரங்கி மோக மறவீச
எல்லா நானுய்ப் பண்டைப்படி யிருந்து விளையா டாநிற்கேன். ()

இதுவே துணிவென் றறியாதா ரென்று நீந்தா ரிடர்க்கடலை
இதுவே துணிவென் றறிந்தோர்க ளென்று நீந்தார் சுகக்கடலை
இதுவே வேத முரைப்பதுவு மீசன் முதலோ ரனுபவமும் [மே.
இதுவே துணிவென் றங்கையினி லெடுப்பேன் மழுவைச் சத்திய

விடய மீதி லுபரதியு மேவு முயிர்மே னனியருளும் [னடம்
அடையு மாசான் மேலன்பு மந்தப் பிரம ஞானமுமே
தடையே யின்றி யிவைநான்கோர் தனுவா யுடையோர் தமைஞா
உடையோ ரென்ப ரல்லாரை யுரைப்பர் சோர ஞானியென்றே.

ஆசா ரங்க ளவையில்லா வசட ரிடத்தில் விஞ்ஞானம் [ம்
தேசாய் விளங்கா தபரமதுஞ் சிறப்பே யின்றிச் சண்டாளர்
மாசார் பாண்டந் தனிலுறையும் வான்கங் கையினீ ரினினிழிவா
ஏதா கினும்யோக் கியத்தானத் திருந்தாற் பிரகா சத்தையுறும். ()

கான்ற சோற்றின் விடயமதைக் கண்டு முனங்கை விடுத்தொழிந்தே, ஆன்ற வாசா னடிபரவி யமல வேத நெறிசென்று, தோன்ற வனுபூ தியிற்பரம சுகத்தை யடைந்தோர் பினும்போய்த்தேர், போன்ற விடய மேவிடுமோ பொருந்தி லவர்ஞா னியையொக்கும். 174

இயம நியமத் துடையரா யெழிலார் ஞான யோகராய்
உயர்நற் குருவி னருளாலே யோரஞ் ஞான நிவிர்த்தியையும்
சுயசித் தாந்த வாதியையுந் தோன்று மனுபூ தியிலடைந்தோர்
பயனில் விடயந் தனைவிரும்பார் பற்று யுழலு மற்றையரே. 175

அலைவை யிறந்த விடத்தந்த வானந் தம்மற் றவ்வின்பம்
அலைவை யுடைய விடத்தென்ற லறியா மையினு லெவ்விடத்தும்
அலைவை யிறந்த விடத்தன்றி யானந் தஞ்சற் றும்முறியா
தலைவை யுடைய விடத்தாங்கை யென்றே யறிகு ரலையாரே. 176

சுணங்கன் றனது ரசமிதென்றே தோன்ற வறியா தெனும் பின்கண், இணங்கி மகிழு மதினின்ப மெய்தும் விழிகா ணுதென் போல், பிணங்க லெல்லாஞ் சுகமென்றே பேணிப் போகந் தனை விரும்பும், குணங்கொண் ஞானி யொருவனுமே கொள்ளா னின் புண் டெனப்போகம். 177

அகத்தி லுளதே புறத்துண்டா மகத்தில் லாதே புறத்தில்லை, சகத்தி லுள்ளோ ரோதிடுமித் தகைமை யென்று மதுபோலத், தகர்த்திவ் விடய மனுபவமாய்த் தனையே கண்டோர் புறத்துறினுந், தகர்த்த படியே நின்றுவிடுஞ் சாரா திதயத் துளபடியே. 178

போட வேண்டும் புடமெல்லாம் போட்டுத் தங்க மாகினதில்
கேட தான களிம்பென்றுங் கிட்டா தஃதி னியதிபணிச்
சேட மான சிவமாகித் தினமு மதுவாய் நின்றிடுவோர்க்
கீட தான மாயை யென்று மிலதே யாகிற் போய்விடுமால். 179

எறியிற் கதிரோன் சாளரத்தி லிருந்து தோன்றும் பூதவணு
அறிவிட் டெறியும் பேரொளியி லஃது தோன்று ததுபோல
அறிவிற் றோன்று மூலகெனினு மகண்டா கார வறிவதனில்
செறியத் தோன்று சிற்றறிவிற் செகம்போல் விளங்கி யிடுமன்றே.

கனியும் பாலுஞ் சருக்கரையுங் கலந்த வன்ன நிரம்பவே
அனிசம் புசிப்போர் நீர்க்கூழை யருந்த நினைக்கு மோவஃதின்
இனிய குருவி னருளாலே யிருளு நீங்கி யானந்தம்
கனியு முடையோர் விடயமதை நனுகார் நனுகி னகைக்கிடமே.

போகத் துறைவோன் றன்மனையைப் பொருந்திப் பிறர்க் கிச்சிடவை துண்டோ, லகத் துறைவோன் றன்மனையை யிதய மொத்துப் பிறர்தமக்குச், சோகத் திறனும் போகத்தைச் சுக மென் றீயு மோவியின், மோகத் துறைவோ ரகன்றோர்கண் மொழிவ ரவரைப் பதித ரென்றே. 182

இதுவே நான்கு சாதனமு மியல்பா யுடையோ ரெய்துநெறி
இதுவே யென்று மாருத விருளின் றிமிரைத் தானறுக்கும்
இதுவே ஞான னந்தாசம் ரமிக்கச் செய்யும் விஞ்ஞானம் [யே.
இதுவே யுனக்கு முறுதியென விசைத்தா னினையா னருளுமை

யனையமறைப் பழுமர்பி தீன்படிய மகத்தி லிருளிறந் தும் மொளி பிறந்தும், பின்னவி மாயை தாக்கி யாயும் பிரபஞ்ச

மருந்தியு மிவையின், உனிகின்று பார்க்கிற் பஞ்சகு தகமு முண்
டெனக் கேயிவை தீரா, துனிகின்று பார்க்கி னிவைகட்கா ளானே
னொருவிருத் தாசல மடைந்தே. 184

என்னையே தோன்று வகைகொலை புரிந்து மினியதோர்
ஞானமா ணிக்கந், தன்னையே களவு புரிந்துமற் றதன்மேற் றவிர்ந்
திடா மயக்கத்தைக் கொண்டும், பின்னையு மதிலே காமத்தைப்
பெற்றும் பேச்சிறந் ததுவென வுரைத்தும், இன்ன வைம்பாத
கங்கட்கா ளானே னெழில்விருத் தாசல மடைந்தே. 185

இத்தகை சூத கங்கள்பா தகங்க ளெய்தியு மிடமுதற் பற்
றும்,ஒத்தவிவ் வுடலிந் தியங்கா ணங்க ளொன்றுந்தாக் கறவெட்ட
வெளியில், வைத்தெனைக் கண்டு பாழ்செய்த தந்தோ மலையையே
நம்பியு முலகில், இத்தனை கொடுமை யுடையவித் தலந்தா னென
க்கென்றே யிருந்ததோ வறியேன். 186

---

மேலாஞ் சதுட்ட சாதனங்கண் மேவி நிறைந்த பேர்க்குரைக்கின்
மேலா மதுநா மெனத்திடமாய் விளங்கு மவையில் லாதவர்க்கு
மேலாம் பரமன் மான்மழுவாய் விளங்கி யுரைத்தும் விளங்காது
மேலாஞ் சாத னங்கள்வர மேவ வேண்டுஞ் சாதுசங்கம். 187

உண்டாய்த் தோன்றி ரமித்திடுத லொருநம் வடிவே யுருநாமம்
கண்டே யிடன்மாத் திரமல்லாற் கருதிப் பார்க்கின் வேறில்லை
பண்டே முதலித் தகவாகும் பலவாய்க் காணன் மைத்திரிவால்
விண்டாற் றிரிவை யேகமாய் விளங்கு நமது வடிவமே. 188

எந்தச் சத்தி லசத்தாகு மிந்த வுலகு சத்தாகும்
எந்தச் சித்தி லசித்தாகு மிந்த வுலகந் தான்விளங்கும்
எந்த வின்பிற் றுன்பாகு மிந்த வுலக மின்பாகும்
அந்தச் சச்சி தானந்த மதுவே நமது வடிவாகும். 189

எல்லா நாமே யெனவறிந்தா லெல்லைதை நினைவா னினைத்திடுதல்
சொல்லா லெல்லைதயுரைத்திடுத லொழிலா லெல்லைதச்செய்திடுதல்
நில்லா வுலகை வேறெனவே நினைத லுரைத்த றொழில்புரிதல்
நல்லா ரனைத்து நாமெனவே நாடா ரவையி னொன்றையுமே. 190

நானு வாகத் தோன்றியிடு நாமரூப மிவையனைத்தும்
நானு வல்ல வொருநாமே நாடி மகிழுஞ் சித்திரங்கள்

தானுஞ் சித்தா காசத்திற் றன்னைத் தானே தான்றானே
தானுங் கருவி யிளில்வரைந்து தானே நோக்கி மகிழ்ந்திடுதல்.

தங்கந் தானே பணிதியாய்ச் சாற்றும் விதமாய் விளங்குதலின்
அங்க முதலாஞ் சகங்களா யறிவே விளங்கு மயலில்லை
இங்கங் கென்றே பங்கொன்று மில்லை யகண்ட வறிவொன்றே
அங்க வறிவு தோன்றளவுந் தோன்று நாநா விதரூபம். 192

இன்று னன்று னிருவதுவென் றியம்பு முலகம் வேறன்று
நன்று னந்த லீலையினுற் றன்னைத் தானே தன்னிடத்தில்
அன்று னின்று னதுவிதுவென் றனந்த விதமாய்த் தான்பகுத்தே
உன்று நின்று தானடிக்கு மொருகூத் தெனவே யியம்புவரால்.

தங்க மொன்றே பணிதிகளிற் சாற்றும் விதங்கள் வெவ்வேறு
தங்க விலக்க ணமுமன்று தங்கம் விடவும் வேறன்று
தங்க மழியா பணியழியிற் சாற்று மிந்தத் தகைமைபோல்
எங்கு நிறைசித் தாகம்மி லிலகு மிந்த வுலகமே. 194

தானுண் டாகி யுலகுண்டாந் தானுண் டாகி லுயிருண்டாந்
தானுண் டாகிற் பரமுண்டாந் தானுண் டாகில் வீடுண்டாந்
தானுண் டாகிற் பஞ்சதொழிற் றானுண் டாகுந் தனையன்றித்
தானுண் டோமற் றவையதனுற் றானே யனைத்தும் வேறில்லை.

மந்த விருளிற் கயிற்றரவின் மாறு பாடாய்த் தோன்றுதல்போல்
இந்த வுலகு முயிர்களுமவ் வீசன் றானு முயிரடையும்
பந்தம் வீடு மீசன்செய் பஞ்ச கிருத்தி யங்களுமே
அந்த நமது சொரூபத்தி லாரோ பிதமாய் நின்றிலகும். 196

அனந்த விதமாங் கிற்றையுடைத் தாகுஞ் சிலையொன் றதைப்பார்க்கின்
அனந்த விதமாய்த் தோன்றியிடு மந்தக் கிற்றுஞ் சிலையொன்றே
அனந்த முடைய நம்மிடத்தி லகில மந்தத் தகைமைபோல்
அனந்த விதமாய்த் தோன்றியிடு மறிவே யன்றி வேறில்லை. 197

மையே மிருகித் திரைமோக மயக்கிற் கனவைக் கனவுதனில்,
பொய்யே யெனத்தோன் றுதவர்க்கே புகல வேண்டு நனவுணர்ந்
தோர், மெய்யே போலத் தோன்றிநனி விளங்குஞ் சகஞ்சற் குரு
வன்றிப், பொய்யே யெனத்திட் டமதாகப் பொருந்தத் தோன்று
தொருகாலும். 198

கனவி னனவே புணர்ந்துயர்ந்தோர் கனவென் றெருவற்
குரைத்திடினும், கனவி தெனவே காணுது காணுந் தனக்கென்

றறிவுதிக்கின், வினவி லதுபோ னனவையுந்தம் விகற்ப மெனவே
யுரைத்திடினும், நினைவி னிசமாய்க் கொள்ளாது நிசமாந் தனக்
கென்ஃறறிவுதிக்கில். 199

கனவைக் கனவென் றுணர்ந்தவனைக் கனவி னீயா ரெனவொருவ
வினவி லவனு நனவதனில் விளங்குந் தனையே யுரைப்பனதில் [ன்
நனவை நினைவென் றுணர்ந்தவனை நனவி னீயா ரெனவொருவன்
வினவிலவனு மகண்டமதாய் விளங்கும் பிரம மேயென்பன். 200

நனவிற் றூனே ரிடத்திருக்க நவினித் திரையின் மோகத்தால்
கனவிற் றேசாந் தரமுதலாய்க் காணு மனேக விதமஃதின்
வினவி னூமு மகண்டமதாய் விளங்கி யசையா திருந்திடவே
கனவிம் மாயை தனில்விதமாய்க் காணுந் தேசாந் தரமுதலாய்.

கனவிற் றோன்றும் பொருளெல்லாங் கனவிற் கனவென் றுணர்ந்தக்கால், நனவில் விவகா ரந்தோன்று நவிற்று மிந்தத் தகைமைபோல், நனவிற் றோன்றுஞ் சகமனைத்து நமது சங்கற் பம்மெனவே, நனவிற் றோன்றி யிடுங்காலை நமது சொரூபந் தோன்றியிடும். 202

மனத்திற் கனவிற் கனவெனவே மதிக்கி னந்த விவகாரத்
தனத்த முறினுங் கலக்கமுறு னதிக முறினு மகிழ்ச்சியுறுன்
மனத்தி னனவில் விவகார மயங்கி நீங்கா திருப்பனதின்
கனத்த சகஞ்சங் கற்பமெனக் கண்டாற் றனைநீங் காதிருப்பார்.

சிங்கா தனத்தில் வீற்றிருக்குஞ் சிறப்பா ரரசுங் கனவடைந்து
மங்காப் புலைத்தன் மையைமேவி வருந்து வோன்றன் னனவுணரி
அங்காஞ் சோக மோகமெலா மந்தக் கணமே நீங்குமதின் [ன்
இங்காஞ் சீவத் துவமோக மிரியுந் தனைத்தேர்ந் தக்கணமே. 204

கனவைக் கனவென் றுணர்ந்தந்தக் கனவி னனவை நோக்கிடினக்
கனவை யொழிந்த வக்கணமே காணு நனவில் விழிக்குமதின்
நனவைச் சங்கற் பமென்றுணர்ந்து நனவிற் றனையே நோக்கியிடின்
நனவை யொழிந்த வக்கணமே நமது சொரூபத் தேவிழிக்கும்.

கனவை யொழிந்து நனவதனைக் கண்டார் நனவி னின்றுபினக்
கனவை நோக்கி யிடின்முன்னங் கண்ட படியே தோன்றுமதில்
நனவை யொழிந்து தன்சொருப நன்று யுணர்ந்தோ ரதினின்று
நனவை நோக்கி நினைவுகொடு நாடின் முனம்போற் றோன்றியிடும்.

உறக்க மோக மதிற்கனவி னுலக முயிர்கள் விவகாரம் [தின்
சிறக்கு மெய்போற் றோன்றியதைத் தேரிற் பொய்யாய் விடுமஃ
மறக்கு மாயா மோகமதின் மாசார் பந்தம் வீடதெனப் [மால்.
பிறக்கு மவைக டமைத்தேரிற் பேசும் பொய்யாய்ப் போய்விடு

ஒருவ னுளதா கையிற்கனவு முண்டா முறக்க மோகமதின்
ஒருவ னிலதா கையிற்கனவு மொருகா லையினு மிலதாகும்
சொருப நமதுண் டாகையினுற் றோன்று நாநா விதசகநம்
சொருப மிலதே லிலையதனுற் றோன்று மனைத்துஞ் சொரூபமே.

படிகத் தடுத்த நிறங்களதிற் பத்தி பாயு மந்நிறமாய்ப்
படிக மாகி நீங்கினதிற் பகரு மிந்தத் தகைமைபோல்
முடிவி னமது சொரூபத்தின் மோகஞ் செயுமா யையிற்றோன்றும்
முடிவில் பந்தம் வீடதுமின் மொழியு மாயை யென்பதுமில். 209

பழுதை யதனிற் றோன்றியிடும் பாம்பை யுள்ள படிநோக்கில்
பழுதை யாயே தோன்றியிடும் பாம்பு மதுவாய் விடுமஃதின்
பழுதில் சிவத்திற் றோன்றியிடும் பன்மை யுலகை நோக்கியிடின்
பழுதில் சிவமேயாய்த்தோன்றும் பன்மையுலகு மதுவாய்ப்போம்.

தோன்றி விளங்கும் பொருளெல்லாந் தொல்வே தாந்த விசாரணை
ஊன்றி நோக்கி யனுதினமும் யூக மதனிற் பரிசயித்தால் [யில்
தோன்றி விளங்கு மறிவொன்றே சொன்மாத் திரமாய் விடுமுலகம்
ஊன்றி நோக்கா தவர்கட்கே யுளதுபோலத் தோன்றியிடும். 211

ஏக மாகி நின்மலமா யிருக்கு நமக்கிப் பந்தமெனும்
மோகம் வந்த தேதென்று முன்பின் பாரா திப்பந்தம்
போக வழியே தெனநாடிப் பொருந்தும் வேத விசாரணையால்
யூக மதனிற் சிதைக்கினதி னுள்ள வியல்பு பின்றோன்றும். 212

பரவை தானே யோரலையிற் பலவாய் விளங்கு மோரலையில்
பரவை நீங்கி யொன்றாகிப் பழைய படியே விளங்குமதின்
பரவுஞ் சொரூபஞ் சங்கற்பப் பகுதி யதனிற் பலவாகிப்
பரவு மசங்கற் பத்தொன்றாய்ப் பழைய படியே விளங்கியிடும்.

கடங்க டமது காரணத்தைக் காட்டி டாது முன்விளங்கும்
படங்க டாமு மப்படியே பகர்கா ரணமு நீங்காது
சடங்க ளாகு மிச்சகமும் தான்முன் விளங்குங் காரணமாம் [தே.
இடங்கொள் சொருபத் தையுங்காட்டா திருக்கு மதைவிட்டகலா

மரத்தை நோக்கின் மதகரியு மறைந்து விளங்கு மதைநோக்கின்
மரத்தை மறைத்துத் தான்விளங்கும் வாறுபோலச் சகமுழுதும்
பரத்தை நோக்கி னதின்மறைந்து பரமாய் விளங்குஞ் சகநோக்கில்
பரத்தை மறைத்துத் தான்விளங்கும் பரமே யனைத்து மாதலினால்.

நாகந் துதிக்கை தனைநோக்கி னுசி காமுந் தோன்றியிடும்
நாக நயனந் தனைநோக்கி னயனஞ் செவியுந் தோன்றியிடும்
ஏக கருவி பார்த்தபடி யிரண்டு விதமும் விளங்குமதின்
ஏக பரமும் பார்த்தபடி யிலகு முலகுஞ் சித்ததுமாய். 216

ஊனும் போக மெமதென்றே யுன்னல் விசார மிலாமையினால்
நீநா னவைக ளிவைகளென நிலைபோல் விளங்கி யிடுமிந்த
நானு விதமாஞ் சகமுழுது நாமே யன்றி வேறில்லை
தானாய் நோக்கிற் றானாகுஞ் சகமாய் நோக்கிற் சகமாகும். 217

மாயை யெனுமிவ் வுரைக்கருத்த மதிக்கின் யாதொன் றிலா ததுவே, மாயை யெனவிப் படியிருக்க மதிப்ப ரதனை யிருவகையாய், மாயை மெய்யென் றுரைத்திடுவர் மயக்கப்பட்டுத் தனை மறந்தோர், மாயை பொய்யென் றுரைத்திடுவர் மயக்க நீங்கித் தனையறிந்தோர். 218

நாம ரூபந் தனைநோக்கி நாடன் மனமும் புறமுகமும்
நாம ரூபந் தனைநீக்கி நாட லறிவு முண்முகமும்
நாம ரூபத் தெவ்வளவு நாட்டஞ் சொரூபந் தோன்றாது
நாம ரூப நாட்டம்விடி னமது சொரூபந் தோன்றியிடும். 219

அரைய குமாரன் புலையருட னணுகி மறந்து மொருவரால்
அரைய குமார னெனவறிபி லஃதெப் போது மறவாதின் [ன்
தரையி லாசா னெழுந்தருளித் தனைப்பார்த் ததுநீ யெனவுரைக்கி
புரையி லதுவா மூவவத்தை பொருந்தும் பொழுது மறவானால்.

படியிற் பொருளின் மெய்யொன்று படிறென் றிந்த விருவகையும்
முடிவின் மெய்பொய் யறிந்திடலா மொழியு மிந்தத் தகைமைபோ
கொடிய வுலகை மெய்யெனவே கூறு மதையு மறிந்திடலாம் [ல்
முடிவிற் சகம்பொய் யேயாகு முத்தி யொன்றே மெய்யாகும்.

அகிலந் தோன்றும் பொழுதுமறைந் ததிட்டா னமதாய் விளங்கியிடும், அகில நீங்கிற் றான்விளங்கு மந்தச் சச்சி தானந்தம், அகிலந் தோன்றும் பொழுதுமறைந் ததுதோன் றுதல்போ லது

தோன்றில், அகிலந் தோன்று ததனின்மறைந் ததனு லகில
மசத்தாமே.                                                    222

முத்தி யாதோ வெனவெண்ணி முயங்க வேண்டா மிஃதறுதி
முத்தி யுளதேற் பந்தமுண்டா முத்தி யொருநா ளையுமில்லை
முத்தி தானுஞ் சகம்வேறின் மோக மதிற்காண் பதைப்போக்கின்
முத்தி யாகு மிந்நிலையை முயன்று வருந்தி நிலைகொள்வாய். 223

இல்லா மாயை தங்கணிலை யாரு நிற்க வம்மம்ம                [மாய்
பொல்லாப் பிறப்பிற் பட்டதுமாய்ப் பொக்க மிகவுந் தவிர்ந்தது
நல்லா ரிணக்கஞ் சேர்ந்ததுமாய் ஞான விசார முதித்ததுமாய்
எல்லா மாம்வீ டடைந்ததுமா யார்க்குங் காட்டி மறைந்திடுமே;

எல்லா நீங்கிச் சற்குருவை யெங்குந் தேடி யடைந்தருளி
நல்லா ருணரு ஞான நூ லவின்று விசாரஞ் செய்வதுவும்      [கும்
பொல்லாமனத்தை யொடுக்கிநிட்டை பொருந்திநோக்கல்லாநோக்
இல்லா மாயை தனைத்துணிவா யில்லை யெனவே காண்குதற்கே.

விளக்குஞ் சகங்க ளனைத்தினிலும் விளங்கு நாமா திகணீங்கி
விளங்கு மதைநோக் கிடநோக்கில் விளங்கும் பிரம மக்கணமே
விளங்கு நாமா திகளுமதாய் விளங்கும் வேறாய் விளங்காது
விளங்கு மித்த நிலையெவர்க்கும் விளங்கு மவிரோ தமதாயே. 226

நாம ரூபம் விளக்கல்பரம் நாட லாயிரா மவைமாயை
நாம ரூபந் தனைநோக்கி நாடச் செய்த லஞ்ஞானம்
நாம ரூபத் திவ்வளவு நாட்ட மெனவே செய்தல்வினை
நாம ரூபந் தனைநோக்கி நாடி யிடத்தி வினைவிகழும்.          227

உருவ நாம நோக்கிடத்தி லனைத்தா மித்த வைவகையும்
உருவ நாம நீக்கிடத்தி லொன்று மிவைக ளிலவாகிச்
சொரூப மொன்றே யிருந்திடுஞ் சொன்ன விவைக ளைவகையும்
சொரூப மன்றி வேறில்லை தோன்றும் விவகா ரத்திசையில். 228

விவகா ரத்திற் பகுப்புநாமா விரியும் பரமாத் தும்மதனில்
சிவகா ரமதாய் விளங்கிநிற் சிவமே யநேகத்து மாதலினுல் [மெய்
பவகா ரியத்தை யுடையோர்க்குப் பகுப்பே யென்றுந் தோன்றியபி
பவகா ரியத்தை யொழித்தோர்க்குப் பகுப்பொன் றின்றிச் சிவந்
தோன்றும்.                                                    229

பந்தத் தினையிற் பலவென்றும் பரமாத் தத்தி லொன்றென்றும்
இந்தச் சடத்து சொரூபத்தி லென்று மில்லை நோக்கிடின்

எந்தக் காலு மொருபடித்தா யிலங்குஞ் சொரூப மிவைமாயா
தொந்த மதனிற் றேன்றியிடுஞ் சொரூபத் தாரோ பிதமாகும்.

மித்திய வாதி வேதாந்தி விளங்குஞ் சைவ சித்தாந்தி
சத்திய வாதி யிருவர்களுஞ் சாற்றுந் தங்கட் கடுக்காதை
மித்திய வாதி சகத்தினுக்கு விளம்புஞ் சிருட்டி முடிவினின்றும்
சத்திய வாதி சிவமொழிந்து சற்றும் வேறில் லெனவுரைக்கும்.

சகம தென்ப திலையெங்குந் தானே நின்று விளங்கியிடும்
சகம தெனவே தோன்றிடுதல் தமது சங்கற் பம்மதனி
லகம தனிலே கண்டுணரா தவையிற் சிக்கிப் பந்தமுறு
மகம தனிலே கண்டகற்றி லப்போ பண்டைப் படிநிகழும். 232

பந்த மின்றி வீடின்றிப் பரமே யெங்கும் விளங்கிடவும்
பந்தம் வீடுண் டெனவுரைத்தல் பார்க்கின் மாயா மோகமதில்
சிந்தை விரிவே பந்தமதாஞ் சிந்தை யொடுக்க மேவீடாம்
இந்த வகையாம் பந்தம்வீ டியம்பு மபவா தமதாகும். 233

தோன்றி நிகழு முலகெல்லாஞ் சொரூப மேமற் றுருநாமம்
தோன்றி நிகழ்தன் மாயையே சொரூபம் விடவும் வேறன்று
தோன்றி நிகழு முருநாமஞ் சொரூபம் விடவே றெனவுன்னித்
தோன்றி நிகழ்தல் பந்தமதாஞ் சொரூப மெனவே யுணல்வீடாம்.

உருவ நாம மவைக்கிருப்பு முதிப்புஞ் சொரூபத் தினையன்றி
உருவ நாம மவைதமக்கே யொருகா லையினு மிலதாகும்
உருவ நாம மவைநோக்க லொருவி நமையே நோக்கியிடின்
உருவ நாம நிகழ்ந்திடா தொருநம் வடிவா யேநிகழும். 235

பந்த மென்றும் வீடென்றும் பயிலு நினைவே பந்தமதாம்
பந்த மெங்காம் வீடெங்காம் பரத்தை விடவே றிலாமையினுல்
தந்தஞ் சங்கற் பந்தனிலே தாமே மோகித் திடுமுயிர்கள்
தந்த மசங்கற் பந்தனிலே தாமே நீங்கி யிடுமோகம். 236

உருவ நாமந் தனைநோக்கி லொருதன் னிலையை நீங்கினதாம்
உருவ நாமந் தனைநீக்கி லொருதன் னிலையே நின்றதுவாம்
உருவ நாம மவையிரண்டு மொருதன் வடிவே யெனக்காணில்
உருவ நாமந் தானேயா யொளிரு மதுவே முத்தியுமாம். 237

கொள்ளு நெறியே தேகபந்தங் கூடும் வீடே தெனவேண்டாம்
உள்ளும் புறம்பு மெனுமிவையி லுதவு மெஃது தனக்கதனின்

றெள்ளுஞ் சங்கற் பங்களெலா மிரிய நோக்கி நின்றதன்னை
உள்ளும் புறம்பு மின்றியெங்கு மொளியாய்க் காண லாகியிடும்.

ஒளியே யெங்கும் விளங்கிடுமவ் வொளியில் விளங்கு முலகெல்லா
ஒளியே யன்றி வேறுமோ வொளியை யறியா ருலகென்பர் [ம்
ஒளியே யன்றி யுலகுதனக் கொருகாரணமு மிலையதனால்
ஒளியே யனைத்துந் திரைநுரைக ளுவரியலது வேறுமோ. 239

மாயை வேறொன் றெனவுன்னி மதிக்க வேண்டாம் பேதமதி
மாயை யாகு மற்றதனை வருந்தி முயன்று பேர்த்திடுக
மாயை நீங்கு மிந்தமதி வந்த வழியே தெனவேண்டாம்
மாயை நெறியி லம்மதியை வதைக்கி லதுவந் ததுதோன்றும்.

தனது சங்கற் பந்தனிலே சகங்க ளாகி விளங்கியிடும்
தனது சங்கற் பந்தனிலே சகம்போ யொடுங்கு மதனாலே
தனது வடிவே சகங்களெலாந் தன்னை விடவே றிலைதங்கம்
தனது வடிவை விடப்பணிக டாம்வே றாகி விளங்கிடுமோ. 241

எல்லா நாமெய் படியாவோ மென்ன வேண்டா மிலக்கணம்பார்த்
தெல்லா நோக்கி யிடமிடத்தி லிருப்புந் தோற்ற ரவுமின்பும்
எல்லா விடத்து முண்டாகு மியல்பு மவையே பிறித்திட்டால்
எல்லா மெங்கே தோன்றிடுமோ விதனாலெல்லா நாமாகும். 212

விகற்ப மிலது முதற்றோன்றி விளங்கும் விமல மதினின்றும் [ல்
விகற்ப மதனிற் சகந்தோன்றும் விண்ணிற் பீலிதோன்றுதல்போ
விகற்ப மதிற்றோன் றுவதொழிந்து வேறில் லெனவே விடுத்ததனை
விகற்ப மின்றி யேநோக்கின் விளங்கும் விமலந் தானேயே. 243

இந்த விடய மவையில்வரு மின்பும் பேரின் பத்திருந்தே
வந்த தேசை மிட்டமது வந்து கிடைத்த வக்கணமே
அந்த முகமாய் மதிதிரும்பி யறிவா னந்தங் கணம்பொசிக்கும்
அந்த முகமே யெக்காலு மாகி னனைத்து மடைந்ததுமாம். 244

விருத்தி யொன்று மில்லாமல் விளங்கு நிலையே நாமதனில்
விருத்தி தோன்றின் முன்பினின்றி விளங்குஞ் செகசீ வபரங்கள்
விருத்தி நீங்கின் முப்பொருளும் விளங்கி டாமற் றதனாலே
விருத்தி தானே பந்தமதாம் விருத்தி யொழிவே வீடாகும். 215

நிருவி கற்ப சமதிடத்தி னின்று விகற்ப முதித்தாவில்
ஒருமுப் பொருளு முதித்துவிடு மொருங்கே மூல விகற்பமதை

ஒருவி னமது நிலைதோன்று மொருமுப் பொருளு மதுவாகும்
குருவி னருளி னிந்நிலையைக் கூட வேண்டு நெறிநின்றே. 246

ஏக பரத்திற் றோன்றுலகி லெங்கும் விடய மாதல்பரம்
ஏக விடய மாதலுயி ரிந்த வுயிர்க்கே முத்தியினி
ஏக விடய முதற்றள்ளி யெங்கு மாகும் விடயமதும்
ஏகத் தள்ளி மற்றுலகு மிறக்கிற் பண்டைப் படிநிகழும். 247

எங்கும் விடய மாம்பரத்துக் கிருளெக் காலு மிலையாகும்
தங்கு முயிர்க்கே மறதியுண்டாந் தன்னுற் றளவே கூடிடா
எங்கும் விடய மாம்பரமே யேக விடய வுயிர்போலத்
தங்கிக் குருவா யெழுந்தருளித் தன்னு முயிர்கண் மறதியெலாம்.

தன்னை மறைத்த பந்தமதைத் தள்ளி நீங்கிற் றன்விளங்கும்
தன்னை மறந்த தேபந்தந் தன்னை யறிந்த தேமுத்தி
தன்னை விடவோர் பொருளில்லை தானே பிரம மாயையும்பின்
தன்னை விடவே றுய்விளங்கா தானே யாகி விளங்கியிடும். 249

தன்னை யறியா வியற்கையினிற் சத்தே போல விளங்கியிடும்
தன்னை யறிந்த வுடனசத்தாய்த் தானே விளங்கு மிவ்வுலகம்
தன்னை யறியு மளவுமிவை தன்னை விடவே றிலையெனவே
தன்னை நோக்கி யிடினவையுந் தானாய் விளங்கு முடிவதனில். 250

இல்லா மாயை தானிருந்தென் னிறந்தென் னவைபந் தமதாகா
இல்லா மாயை தனைமெய்யா யெண்ணு மதியே பந்தமதாம்
இல்லா மாயை தனைப்பொய்யா யெண்ணு மதியே முத்தியதாம்
இல்லா மாயையில்லையென்றே யியல்பாய்த்தோன்றுந்தன்னிலையில்.

நினைவே மூல மற்றதனி னின்று விரியு மும்முதலும்
நினைவை நீங்கி லவைமூன்று நினைவி லொடுங்கு மதனாலே
நினைவே பந்த நினைவொழியி னிலைமை யான முத்தியுமாம்
நினைவே நீங்கி யனுதினமு நின்ற நிலையே நின்றிடுக. 252

நினைவு நீங்கி அருநாம நீங்கு மவையைத் தள்ளிடினும்
நினைவு நீங்கு மற்றவையி னினக்கே திச்சை யதினின்று
நினைவு நீங்கி நின்றிடமே நிலைமை யான முத்தியென்று
நினைவு கொண்டந் நிலையைவிட்டு நீங்கா தென்று நின்றிடுக. 253

நினைவை நீக்கி நோக்கியிடி னிமல சொரூபந் தோன்றியிடும்
நினைவை மேவி நோக்கியிடி னிலையி லுலகந் தோன்றியிடும்

நினைவி லுலக மறிந்ததுவு நீங்கிச் சொரூப மறிந்ததுவும்
நினைவி னோக்கிற் றுனில்லை நிகழு மாயா மோகமதில். 254

தனது நிலையிற் றுனிற்கச் சாற்று மாயா மோகமதில்
தனது வடிவை மறந்துயிர்போற் றங்கி நீங்கிற் றுனிகழும்
தனது வடிவு தோன்றளவுஞ் சத்தே போல விளங்கியிடும்
தனது வடிவு தோன்றளவிற் றுனே யசத்தாய் விளங்கியிடும். 255

கான னீருங் கயிற்றரவுங் கட்டை யதனிற் கள்வனுமே
ஆன வவைதம் மதிட்டான மாகு மவைக டோன்றளவும்
ஆன வவைமெய் போற்றோன்று மதுபோற் சகமு மதிட்டானம்
ஆன சொரூபந் தோன்றளவு மசத்தல் லாது போல்விளங்கும்.

அதிட்டா னமது தோன்றளவு மதுமெய் போல விளங்கியிடும்
அதிட்டா னமது தோன்றியபின் னசத்தே யாகி விளங்கியிடும்
அதிட்டா னமது தோன்றளவு மசத்தென் றெணியேநோக்ககற்றி
அதிட்ட னமதாந் தனைநோக்கி லசத்தே யாகி விளங்கியிடும். 257

தன்னைச் சீவ னெனத்திரிவாய்த் தானின் றுணர்த லஞ்ஞானம்
தன்னைப் பிரம மெனத்துணிவாய்த் தானின் றுணர்த லேஞானம்
முன்னைத் தொடர்ச்சி விடயமது மூல வரவும் வாதனையும் [டா.
பின்னை யொருங்கே யொழிந்துவிடும் பேணல்விடுத லவைவேண்

நிமல நெஞ்சை யுடையோர்க்கு நிலத்தி லாசா னெழுந்தருளி
விமல தத்துவ மசியெனவே விளம்பி லவனுக் கக்கணமே
மும்மல நீங்கிச் சிவம்விளங்கு மோக நெஞ்சை யுடையோர்க்கு
மும்மலச் சார்வாம் வாதனையே மூடி மிகவு நிறைந்திடுமே. 259

எங்கே நிறுத்தி னங்கிருக்கு மியல்பை யுடைய நெஞ்சுடையோர்க்
கிங்கோர் மயக்கங் களுமில்லை யிச்சை யிறந்த நிலையாகின்
அங்கே யாசா னெழுந்தருளி யதுநீ யெனவே யுரைத்தவுடன்
அங்கே சொரூப நாமெனவே யறுதி யாகத் தோன்றியிடும். 260

ஒருவ வேண்டு மனைத்துமென வுன்ன வேண்டா வினைநீங்கில்
ஒருவு மனைத்தும் வினையுளதே லொன்றி மேவு மற்றவையை
ஒருவல் பற்ற லவையைவிடுத் துள்ள படியே முடியுமெனச்
சொருப நாமே யெனத்திடமாய்த் தோற்று மதற்கே முயன்றிடுக.

விளக்குஞ் சொரூப நோக்காது விளங்கு மூலகை நோக்கியிடின்
விளக்குஞ் சொரூபந் தோன்றாது விளங்கு முலகே தோன்றியிடும்

விளக்குஞ் சொரூபந் தனைநோக்கி விளங்குமூலக நோக்கமறில்[ம்.
விளக்குஞ் சொரூப மேதோன்றும் விளங்குமூலகு மதுவாய்ப்போ

தன்னை மறைத்த பந்தமதைத் தள்ளி நீக்கித் தனையறியில்
தன்னை விடவோர் பொருளுமின்றித் தானே தானுய் விளங்கியிடும்
தன்னை யறியு மவ்வளவுந் தன்னை விடவே றிலையென்றே
தன்னை நோக்கி யொருநிலைவாய்ச் சாதித் திடவே மிகவேண்டும்.

மூல வக்க ரம்மதனின் மூன்றக் கரமு நின்றதுபோல்
நீல வுற்ப லம்மதனி னிறமுன் மூன்று நின்றதுபோல்
சீல மதனி னைக்கியிடிற் சீவன் பரமச் செகமூன்று
கோல மவையுஞ் சொரூபமதாய்க் கூடி நிகழு மொன்றுமே. 264

பகுத்து நின்ற தற்சொரூபம் பரசீ வருக்குச் சாட்சியதாய்ப்
பகுத்து நிற்குஞ் சாட்சியையே பார்த்துத் தத்துவ மசியென்று
வகுத்து மாவாக் கியங்கூறு மற்றிச் சீவன் றனையல்ல [பார்த்தே.
தொகுத்துக் கேட்ட திவனெனினுஞ் சொன்ன திவன்சாட்சியைப்

இந்தச் சீவன் கற்பிதமே யின்றி வேறோர் பொருளல்ல
அந்தச் சொரூப மிவனுகா னந்தச் சீவ னென்றுகும்
இந்தச் சீவ னதுநாமென் றெண்ணிச் சோகம் பாவிக்க
அந்தச் சொரூப மாய்விடுவ னவனை விடவே றிவனிலதின். 266

இந்த நெறியி லனுதினமு மேகாந் தத்தி லொருநிலைவாய்ப்
பந்த முத்தி மார்க்கமதைப் பகுத்து வந்த வழிப்படியே
தொந்த மகற்றிப் பழையபடி சொரூப மதனி னின்றிடென
இந்த வகையே யருள்புரிந்தா ளெனையாள் விருத்த வம்பிகையும்.



வடிவினைநோக் காதுளத்தின் வண்மையைத்தே ருதலினென்றன்
கொடியவுரை பாராது கொள்ளுவர்மே லோருருத்தம். 1

தனைத்தவிர வேயொன்றைத் தான்வேறாய்க் கண்டுவிடிற்
பினைச்சென்ம நீங்காது பிரமானு பவமலவே. 2

தன்னைவிட வேறொன்றுந் தானில்லாத் தன்னிடத்திற்
றன்னினைவி னாலே சகம்போலத் தோன்றிடுமே. 3

எங்குஞ் சிதம்பரமா யெங்கு நிறைந்திருக்கத்
தங்குநினை வாலன்றே சகம்போலத் தோன்றிடுமே. 4

தங்கு நினைவதனைச் சாராது நீக்கிடத்தில்
எங்குஞ் சிதம்பரமா யிருளறவே கண்டனமே. 5

பந்தவிரு ளிற்கயிறு மாசுணம்போற் றோன்றுதலின்
இந்தவுல கென்னிடத்தி லிலகுமா ரோபிதமாய். 6

பழுதையினின் றோர்சத்தி பாம்புபோற் றோன்றுதற்குப்
பழுதையினுண் டதைப்போலப் பரத்தினுமுண் டோர்சத்தி. 7

ருணியஞ்சித் துப்பிரமஞ் சுத்தசிவம் பரமென்று
தானிகழ்தல் வேறில்லை தனக்கே பரியாயம். 8

சங்கற்ப சத்தியினாற் சகம்போலத் தோன்றியிடுஞ்
சங்கற்ப சத்தியதுந் தன்னைவிட வேறில்லை. 9

தன்சத்தை யேயுண்டாய்த் தானிருக்கு மெப்போதுந்
தன்சத்தை தன்னிற் சகத்திற்குத் தானிருப்பே. 10

தன்சித்தே தோன்றித் தானிருக்கு மெப்போதுந்
தன்சித்தி னாலே சகமும் விளங்கிடுமே. 11

தன்னின்பே யின்பமாய்த் தானிருக்கு மெப்போதுந்
தன்னின்பி னாலே சகமின்பாய்த் தோன்றிடுமே. 12

தனாதுசங் கற்பத்தி னாலுண்டா தலிற்சகமுந்
தனாதங் கிசமொன்றுஞ் சகத்தி னிகழ்ந்திடுமே. 13

தனாதங் கிசமொன்றுந் தான்பிறித்துத் தானோக்கில்
தனாதங் கிசந்தோன்றுஞ் சகம்போ யொளித்திடுமே. 14

தானாய்ப்பார்த் திடுமிடத்திற் சகலமுந்தா னாய்த்தோன்றுந்
தானாய்ப்பா ராவிடத்திற் சகலமும்வே றாய்த்தோன்றும். 15

தனைத்தவிர வேறொன்று தான்காணி லவனுக்குப்
பிணைப்பயமும் போகாது பெரும்பயமு நீங்காது. 16

தன்னினைவி னாலே சகமாய் விரிந்ததெனத்
தன்னினைவை நீங்கித் தானா யிருந்தனமே. 17

உண்டா யொடுங்குவது முண்டான தன்னிடத்தே
யுண்டாகு மென்றே யொடுங்கி யிருந்தனமே. 18

ஐந்து தொழிலு மைந்தொழிலைத் தானடத்து
மைந்து கருத்தாவு மாகி யிருந்தனமே. 19

இவ்வடிவு நாமல்ல வென்று நியதிபண்ணி
யவ்வடிவை நோக்கிடத்தி லனைத்துநா மேயாணும். 20

இவ்வடிவு பந்தமென வெண்ணியே நீக்கிடத்தி
னெவ்வடிவுந் தானா யிருந்தே னதிசயமே. 21

இப்பந் தனைபோக வெண்ணியே நீக்கிடத்தி
லெப்பந் தமுமாகி யிருந்தே னதிசயமே. 22

இவ்வடிவந் தானாகி யெங்குந் திரிவேனுக்
கெவ்வடிவுந் தானா யிருக்கிலினி யென்செய்வேன். 23

உலக முயிர்பரமென் றுரைத்திடுமூ வகைப்பொருளு
மிலகவே யானாக வென்னனுபூ தியிற்கண்டேன். 24

எனைத்தவிர வேறொன்று மில்லையெனக் கண்டளவிற்
பினைத்தவிப்பு நீங்கிப் பிரமமா யேயிருந்தேன். 25

தன்னுடைய சந்நி தானந் தனினின்று
பின்னுலக மெல்லாம் பிறிவில் விளங்கிடுமே. 26

சங்கற்ப மென்றுஞ் சகமென்றும் வேறில்லை
சங்கற்ப மேசகமுஞ் சகமேசங் கற்பமதும். 27

ஓரிடத்திற் கூவு முரையுமப் படியெதிரிட்
டோரிடத்திற் கூவுதலி னுலகு நினைவேயாம். 28

நினைவென்ற சங்கற்ப நிசவடிவை நோக்கிடத்தில்
தனையன்றி வேறில்லை தங்கத்திற் பணிதியைப்போல். 29

எவ்வெவ் வடிவுதொறு மிருந்துநினை வெப்படியோ
வவ்வவ் வடைவே யடைந்தே யிருந்தனமே. 30

அவ்வவ் வடிவு மவ்வவர்க்கே தோன்றியிடு
மெவ்வடிவு மியாமென்ன விருந்தனுபூ தியிலறிந்தேன். 31

எல்லா வடிவு மியாமெனவே காண்பதன்றி
யெல்லா ரனுபவமு மியாமறிய வேண்டுவதில். 32

எல்லோ ரனுபவமு மிதுவெனவே கண்டிடனு
நில்லா நினைவதனி னிசமாகக் கூடியன்றே. 33

நினைவதனை நீக்கி நிஜசொருபங் கண்டவர்க்கு
நினைவதனைக் கூட நினையா தொருகாலும். 34

எந்தப் பொருள்களினின் றெய்தியிடு மின்பனைத்து
மந்தப் பிரமத்தி னானந்த லேசமதே. 35

அந்தப் பிரம வானந்தந் தானடைந்தோர்
எந்தப் பொருள்களினு மின்புளதென் றெண்ணுவரோ. 36

ஒருகுடைக்கீ ழரசாள்வோ னோருருக் கரசாகக்
கருதுவனோ வதினொன்றுங் கலங்கா திருந்தனமே. 37

காண்பதெல்லாந் தன்னுருவாய்க் காண்பதன்றி வேறாகக்
காண்பதுவு முண்டோ கயிற்றைவிட வரவுண்டோ. 38

பேதவா தியைக்குறித்துப் பேசுமறை செகசிருட்டி
பேதமீங் கின்றதென்றும் பிரமமே யுளதாகும். 39

தோற்ற மொடுக்கமில்லை தோற்றமொடுக் கத்தினுள்ள
மாற்றரிய பெத்தமுத்தி மருளென் றறிந்தனமே. 40

முத்தியுள்ள தென்றெண்ணின் மொய்பந்த முண்டாகும்
புத்தியினி லஃதொருவிப் போதமா யிருந்தனமே 41

வாரிபல வடிவான வாறுபோற் சங்கற்ப
நேரினாற் றான்றானே நிலையில்சக மாய்நிகழும். 42

சகமென்றுந் தானென்றுஞ் சாற்றிடுதன் மாத்திரமே
யகமதிற்றேர்ந் திடுமிடத்தி லகண்டமா யிருந்ததுவே. 43

சத்தே யுளதென்றுஞ் சகமதனிற் றானின்று
சத்தேபோற் றோன்றியிடுந் தான்சித்தே யெக்காலும். 44

தோற்றிடுத றன்சத்தே தோற்றிடுந்தன் சத்தையினிற்
றோற்றிடுமிச் சகமனைத்துஞ் சொற்றிடுங்கற் பிதவடிவே. 45

சத்தைக்கே தோற்றரவு தானுண் டசத்தினுக்குச்
சத்தைப்போற் றோற்றமில்லை சத்தையினிற் றானிகழும். 46

சத்தையிட மாய்நின்றே தான்வேறு போற்றோன்றிச்
சத்தைபோ லேநிகழுஞ் சகமசத்தே யல்லவோ. 47

அசத்தொருகா லையுந்தோன்றா தந்தவுள சத்தையே
யசத்தையுள தின்விளக்கு மதிட்டான மாய்நின்றே. 48

தோற்றிடுதல் சத்தையே தோற்றிடுமிச் சத்தையினிற்
றோற்றிடுமிச் சகமனைத்துஞ் சொல்லாய் முடிந்ததுவே. 49

சத்தைக்கே தோற்றரவுஞ் சார்ந்திடுமா னந்தமதுஞ்
சத்தையில் லாதிந்தச் சகத்தினுக்குத் தானுண்டோ. 50

சித்துக்கே யுள்ளிருப்புஞ் சேர்ந்திடுமா னந்தமதுஞ்
சித்தில்லா திந்தச் செகத்தினுக்குத் தானுண்டோ. 51

தோன்றுவது சித்தே தொல்லுலகு நாநாவாய்த்
தோன்றுவது கற்பிதமே சொரூபமன்றி வேறுண்டோ. 52

சொரூபலக் கணஞ்சகத்திற் றோன்றி விளங்குதலாற்
சொரூபமே யென்று துணிந்தே யமைந்தனமே. 53

அறியாமை யாலே யகிலம்போற் றோன்றியிடும்
அறியாமை நீங்கிடத்தி லறிவாயே தோன்றியிடும். 54

நிலைபிறிந்த போது நிலையினில்வந் திடுபோதும்
நிலைபிறியா தேநிகழு நிசசொரூப மல்லவோ. 55

கண்டிடுத லெல்லாங் கனசொரூப மேயன்றோ
கண்டிடுதல் வேறென்று கலங்குவது மென்னையோ: 56

தோன்றி விளங்குவது தொல்லுல குக்குமுண்டோ
தோன்றி விளங்குவது சொரூபத்துக் கேயன்றோ. 57

ஆதலினாற் காண்பதெல்லா மறிவுருவே யெனக்கண்டு
போத விழிதிறந்து பொருளா யிருந்தனமே. 58

முன்வினையாஞ் சஞ்சிதத்தின் முடிச்சை யவிழ்த்தனமே
பின்வினையா காமியத்தைப் பிடித்துப் பிசைந்தனமே. 59

ஒருகாலு நிலைகலங்கா துண்டாய்ப்பெற் றதிலமைந்து
வருகாலஞ் செல்கால மதியா திருந்தனமே 60

பார்த்தவிட மெங்கும் பரிபூ ரணமாகிக்
கோத்திருந்த பாழ்தனிலே குடியா யிருந்தனமே. 61

செகமதையுந் தான்விழுங்கிச் சீவனையு முள்வாங்கி
யகமதுவும் புறமுமிலா வகண்டமாய் நின்றனமே. 62

அதுவிதுவென் றிடமில்லா வகண்டபரி பூரணமாம்
பொதுவதனிற் குடியாகிப் புகுந்தே யிருந்தனமே. 63

தந்தையார் தாயார் தாரமார் புத்திரரார்
பந்தமா ரெல்லாம் பரமா யிருந்தனவே. 64

ஊரே துலகே துடலேதுண் பொருளேது
சார்பே துளவெலாந் தானா யிருந்தனமே. 65

படித்தறிந்த போதே பலகலையா கமங்களெல்லா
மெடுத்தெறிந்து விட்டேனை விடவே றிலையென்றே. 66

ஓவதனின் மூவெழுத்து மோரெழுத்தே யானதுபோற்
சிவபர சிவமூன்றுஞ் சித்தொன்றே யல்லவோ. 67

—

அல்லும் பகலு மசைவற வம்மானே
மேவிநின் றேதவ மேவினே னம்மானே
அனைத்துஞ் சொரூபமென் றனுபவத் தம்மானே
ஆறுறு மைந்து மதுவாங்கா ணம்மானே
இரண்டு மெல்லாநா மென்றுகண் டம்மானே
ஏதும் பகைப்பற் றிருந்தேன்கா ணம்மானே
என்சத்தே தோன்றி யிடும்பின்னை யம்மானே
என்னின்பே யின்பா மெய்துங்கா ணம்மானே
எல்லாஞ் சத்தாச்சித் தின்பங்கா ணம்மானே
என்று மெனையுங்கண் டெய்தினே னம்மானே
இன்பமே யெய்தி யிருந்தேன்கா ணம்மானே
எந்தப் பொருளினு மின்பெய்த லம்மானே
என்னின்ப மேயென் றிசைந்தேன்கா ணம்மானே
இனியோர் பொருளைய மெண்ணிநின் றம்மானே
இச்சை செய்யேனறி வின்பமில் லம்மானே
ஆசை பயமவை யற்றேன்கா ணம்மானே
ஆனந்த நித்திய ஞானநா லம்மானே
நிகழ்கால மதுதனி னேரிட்ட தம்மானே
நியாசையிற் றுய்த்து நிலைநிற்கே னம்மானே
என்னினைவி லென்னை யிதுவென்றே யம்மானே
இன்னுரு வாய்கண் டிருக்கேன்கா ணம்மானே
என்னினை வின்மையி லேகமா யம்மானே
என்னையே யான்கண் டிருக்கேன்கா ணம்மானே
இங்குமங்கு மென்னை யானேகண் டம்மானே
ஏதுங் கவலையற் றிருக்கேன்கா ணம்மானே
என்றனை யெனையன்றி யிலையொன்று மம்மானே
இதுதனி வெளமுழு வேந்துவே னம்மானே.

—

பொதுவுறத் தருமம் பண்ணிப் புகல்வினை சமம தாகி
அதுவிது வென்னுஞ் சித்த மமலமா யநித்த நித்தம்
இதுவென வுணர்ந்த நித்தத் திகபரத் திச்சை யற்ற
சதுரர்க ளிடத்திற் பாசந் தகர்ந்திடும் பத்தி தோன்றும். 1

பத்திதான் பதிந்த காலைப் பகரங்கத் தலம டைந்து
சுத்திய யங்க மந்தத் தொல்லருட் சத்தி யாகி
நித்தியா னந்த லிங்க நேரதாய்த் தரிக்கப் பட்டுத்
தித்தியா நின்ற வின்பந் திருத்தியிற் களிக்கு மென்றும். 2

சமரசம் பதிந்த காலைத் தலமயிக் கியத்த டைந்திங்
கமரங்க மான வான்மா வந்தச்சிற் சத்தி யாகி
விமலமா லிங்கந் தன்னை விளங்குநெஞ் சினிற்ற ரித்து
நிமலமாம் பரமா னந்த நிஜதிருத் தியிற்க ளிக்கும். 3

ஆனந்தம் பதிந்த காலை யச்சர ணத்த டைந்து
வானந்தத் தங்க மாகு மகபரா சத்தி யாகித்
தானந்தப் பிரசா தத்தைத் தரித்துச்சோத் திரத்தி லென்றும்
ஊனந்த மில்லா வின்ப வோசையிற் களிக்கு மென்றும். 4

அனுபவம் பதிந்த காலை யடைந்துநற் பிராண லிங்கத்
தெனுமங்க வாயு நின்றங் கெழிலாதி சத்தி யாகி
உனுஞ்சர லிங்கந் தன்னை யொன்றுந்தொக் கினிற்ற ரித்தாட்
பனுமந்தப் பரமா னந்த பரிசத்திற் களிக்கு மென்றும். 5

அவதானம் பதிந்த காலை யடைந்தந்தப் பிரசா தத்தை
இவனுனை தேயு வங்க மிச்சைநற் சத்தி யாகி
நவமான சிவலிங் கத்தை நயனமற் றதிற்ற ரித்திங்
குவமான மில்லா வின்ப வுருவினிற் களிக்கு மென்றும். 6

நயிட்டியம் பதிந்த காலை நன்மயே சுரத்த டைந்து
சயித்திய சலமா மங்கந் தருஞான சத்தி யாகி
வியப்புறுங் குருலிங் கத்தை மேவுநா வினிற்ற ரித்திங்
குயப்பெறு பரமா னந்த வுருசியிற் களிக்கு மென்றும். 7

சற்பத்தி பதிந்த காலைத் தரும்பத்தத் தலம டைந்து
முற்பகர் தரையா மங்க மொய்யதாங் கிரியை யாகித்
தற்பரா சார லிங்கந் தரித்துநா சியினி லந்தச்
சிற்பரா னந்த கந்தந் தேர்ந்ததிற் களிக்கு மென்றும்.

ஒருபத்தி தானே யாரு மொருதலந் தானே யாருய்
ஒருவங்கந் தானே யாரு மொருமுகந் தானே யாருய்
ஒருலிங்கந் தானே யாரு மொருமுகந் தானே யாருய்
ஒருவின்பந் தானே யாரு மொன்றதாய்க் களிக்கு மென்றும். 9

அநாதியிற் சிவமே லிங்க மபிந்நமே யங்க மாகும்
அநாதியில் வபிந்ந மேயிவ் வங்கம தாயிற் றென்றால்
அநாதியச் சிவமே யந்த வங்கத்திற் புறம்புந் தோன்றும்
அநாதியக் குருவத் தீக்கைக் கருத்தமு மிவையே யாகும். 10

## உபதேச சித்தாந்தக் கட்டளை.

ஆத்மாக்களை முத்தியிலே விடவேண்டி வாக்குமநாதீத கோசரமாகிய அருட்சத்திதானேபாசவைராக்கியம், சீவகாருண்ணியம், ஈசுவரபக்தி, பிரமஞானமென்கிற நான்குமே ஒரு திருமேனியெனக்கொண்டருளிய ஞானாசாரியார், இனிப்பிறவாத முடிந்த பிறப்பில் நித்தியா நித்தியவத்து விவேகம், இகமுத்தரார்த்த பரபோகவிராகம், சமையாதிசட்கம், முமுட்சுத்துவமென்கிற சாதன சதுஷ்டய சம்பத்தியே ஓர் வடிவெனக்கொண்ட சற்சீடனுக்கு அநுக்கிரகம் பண்ணுமுறைமை:—

உலகத்தின் கண்ணே வைத்தியராயினோர் ஒருவனது வியாதியை நிச்சயம் பண்ணி இத்தனை தினத்தின்மேல் ஔடதங் கொடுக்க வேண்டுமென்று நியம மிருப்பினும், ஓரோர் அசாத்திய வியாதியை யுடையவனுக்குக் கண்டவக்கணமே கனமாகிய பூபதி முதலிய ஔடதங்களைக் கொடுத்து உடனே திருப்ப வேண்டும்; அதுபோலச் சாதனங்களையுடைய தீவரதர பக்குவனுக்கும் ஓராண்டாகிலுஞ் சோதித்து அநுக்கிரகம் பண்ண வேண்டு மென்றாலும், ஓரோர் அதி தீவரதர பக்குவனுக்கு அந்தக்கணமே இந்த உபதேச சித்தாந்தத்தை அநுக்கிரகம் பண்ணிப் பவரோகத்தை உடனே நிவிர்த்தி பண்ண வேண்டும். இந்த உபதேச சித்தாந்த மார்க்கத்தி லொழிந்து, மற்றைய மார்க்கத்திலே பவரோக நீங்காதோ வென்னின், பாதாதிகேசபரியந்தம் அக்கினி பற்றிக் கொண்டவனுக்கு விழுந்ததுறையிலே அவனை விழுங்கி மேவிடப்பட்ட மடுவிலேயன்றிக் கொஞ்ச ஜலத்தில் பிரவேசிக்கில் உடனே யவிக்க முடியாது; அது

போல அதிதீவரதர பக்குவனுக்குடனே அவனையும் விழுங்கி மேலிடப்பட்ட அகண்டாகார ஞானம் இம்மார்க்கத்திலே பிரவேசித்த அக்கணமேயுண்டாம். அஃதெப்படியென்னின், சற்குரு சந்நிதியிலே சற்சீடனானவன் தேனிரம்பிய மலரைத் தேடும் அளிகள்போலப் பூதலமெங்குந்தேடி வெப்பந்தீராமல் வந்தடைந்து கண்ட அக்கணமே உள்ள மகிழ்ச்சியையடைந்து தாரகமாகிய சிவமே யெனக்கண்டு அவருடைய அருள் சுரக்கும்படி பண்ணிக்கொண்டு சுவாமி! நானார்? இந்த நாநாவாகிய வுலகமேது? இது ஆரையுடையது? எனக்குச் சனனமரணம் வந்தவாறேது? இது யாதினாலே நீங்கும்? இவற்றை யனுக்கிரகஞ் செய்யவேண்டும்; இவற்றிற் பிரதமத்தில் அடியேன் நானாரென்றுவிண்ணப்பஞ்செய்தபடிக்கு என்னையறிவித்தால் மற்றைய நான்கும் அடியேனே விண்ணப்பஞ் செய்வேனென்று சற்சீடன் நானாரென்று கேட்க, ஆசாரியரனுக்கிரகம் பண்ணுகிறார்:—நல்லது, உன்னைக் கரதலாமலகம்போலக் காட்டுகிறோம், நீ நன்றாய்ப் பார்க்கக்கடவாயென்று திருவடியைச்சூட்டி அஸ்தமத்தக சையோகம்பண்ணிக் கிருபாதிருஷ்டியினாலே நோக்கி இங்கேயுண்டாய் விளங்குவதெல்லாம் நீயே யென்ன, சுவாமி! இங்கேயுண்டாய் விளங்குவதெல்லாம் நானெப்படியாவேன்? ஆனால் உனக்கிங்கே என்ன பிரகாசியா நிற்கிறதென்ன, சுவாமி! நாமரூபமயமாகிய உலகமே தோன்றுகிறது: ஆனாலந்தவுலக மெவ்விடத்தினின்றுந் தோன்றுகிறதென்ன, சுவாமி! என்னுடைய நினைவிலே நின்று தோன்றுகிறது; ஆனால் நினைவுவெறு உலகம்வேறோவென்ன, சுவாமி! உலகமெதிரிட்டுக் காண்கையினாலே வேறுதானே; ஆனால் உலகமாகிய நாமரூபத்தை நீக்கி நினைவைப்பாரென்ன, சுவாமி! அப்படி பார்க்குமிடத்தில் நினைவைக்காணேன்; ஆனால் நினைவைநோக்கி நாமரூபத்தைப் பாரென்ன; சுவாமி! அப்படி பார்க்குமிடத்தும் நாமரூபத்தைக் காணேன், ஆனால் நாமரூபமயமாகிய உலக மேதென்ன, சுவாமி! என்னுடைய நினைவுதானே; ஆனால் அந்நினைவு எங்கே நின்று தோன்றுகிறதென்ன, சுவாமி! என்னிடத்திலே நின்று தோன்றுகிறது; ஆனால் நினைவுவேறு நீவேறோ வென்ன, சாவமி! என்னினைவாகையினாலே வேறின்றி நான்றானே; ஆனால் நினைவை நீக்கி யுன்னைப்பாரென்ன, சுவாமி! யான் பிரகாசியா நிற்கின்றேன், ஆனால் நினைவு நீ யெப்படி யாவாயென்ன, சுவாமி! நினைவு என்னைவிட

வேறுதானே; ஆனால் உன்னைப் பிரித்து நினைவைப் பாரென்ன, சுவாமி! அப்படி பார்க்குமிடத்தில் நினைவைக் காணேன்; ஆனால் நினைவு யாதோவென்ன, சுவாமி! நினைவானது நானுமல்ல என்னை விட வேறுமல்ல; ஆனால் அஃதெப்படியென்ன, சுவாமி! தங்கத்தினிடத்திலே பணிதியானது தங்கமுமல்லாமல் தங்கத்தைவிட வேறுமல்லாமல் கற்பிக்கப்பட்டதுபோல நினைவுமென் னிடத்திலே கற்பிதம்; ஆனாலிந்த நினைவு வேறேசத்தையோவென்ன, சுவாமி! அதற்கு வேறே சத்தையில்லை என்னுடைய சத்தையே தோன்றி விளங்காநிற்கிறது; ஆனால் இங்கே தோன்றுவதெல்லாம் யாதென்ன, சுவாமி! இங்கே தோன்றி விளங்குவதெல்லாம் நானே; ஆனால் நாமுன்னம் எல்லாம் நீயேயென்று சொன்னோமே, அதற்குனக்கு ஐயந்தோன்றிற்றே, இப்போது எல்லாம் நானே யென்று நீ சொன்னது திரிவோ நன்றாய்ப் பாரென்ன, சுவாமி! முதற்றிரிவினாலே எல்லாம் நானெப்படி யாவனென்று கேட்டேன், சுவாமி கடாக்ஷத்தினாலே திரிவுபண்ணிக் கொண்டிருந்த அஞ்ஞானவிருள்போய்த் துணிவாகத்தானே எல்லாம் நானேயெனக் கண்டேன்; ஆனால் உன்னைக்கண்ட இடத்தில் அனுபவமெப்படி யிருந்ததென்ன, சுவாமி! அகண்டாகார மயமாய்ச் சுட்டிறந்த சுகாதீதமாய்ப் பழுதையினிடத்திற் பாம்பொருகாலு மில்லாததுபோல், உலகமுயிர் பரமென்பது ஒருகாலு மில்லாததாய்ப் பிரகாசியா நிற்கிறது; ஆனாலிதுவே தற்சொரூபமுத்தி. இதிற் கலக்கமில்லாமல் தேகபதனபரியந்தம்நிற்பாயாக. இஃதன்றி அந்தமுத்தி நீயானதுக்குக்குறி; மற்றைநான்கும் நீ யுன்னனுபவப்படிக்குச் சொல்லென்ன, சுவாமி! நாநாவிதமாகிய பிரபஞ்சம் என்னிடத்திலே ஆரோபிதம்; அது சங்கற்பத்தையுடையது; அந்தச் சங்கற்பத்தையுடைய ஆரோபிதமாகிய பிரபஞ்சம் அதிட்டானமாகிய என்னைவிட வேறல்லவென்று காணாததிரிவினாலே எனக்குச் சனனமரணம், எல்லாம் நானே யென்றறிவில் சனன மரணமில்லை. இப்படிமற்றைய நான்கும், சுவாமி கடாக்ஷத்தினாலே எனக்கனுபவமாயிற்று; நல்லது, நம்முடைய அனுபவமுமிதுவே: சுருதியினுடைய முடிவிலே சொல்லுவதுமிதுவே: உன்னுடைய வனுபவமு மிப்படியே யாகில் இதுவே உபதேசசித்தாந்தம் என்று இதிற் கலக்கமில்லாமல் வாழ்வாயாகவென்று ஆசீர்வாதஞ் செய்தார்.

தாரணை யாகுந் தற்சொரூ பத்தை
நாட றியான நவிற்றிடு புறமும்
உள்ளு மறவவ் வொளிதா னேயாய்
ஒத்துநின் றிடலே யோங்கிய சமாதி
ஆதலி னிந்த வட்டயோ கமதும்
பிரம சித்தி பெறுதற் கங்கம்
என்னனு மாகு மினிப்புத் தியதும்
பயனல வோவெனிற் பகர்ந்திடு புத்தி
இடம்பொரு ளுறவு மின்பங் கீர்த்தி
என்றை விதமா மிவையைந் தினையும்
நன்றாய்த் தேரி னன்முத் தியதாம்
இஃதினை யன்றி யிம்மா யாவித
சம்பந் தந்தனைத் தானினைத் திடுதல்
அறியாமை யாகு மஃதினைக் கேண்மின்
இடமு மழியா விடமே யிடமாம்
பொருளு மழியாப் பொருளே பொருளாம்
உறவு நீங்கா வுறவே யுறவாம்
சுகவிர திசய சுகமே சுகமாம்
புகழும் பெரியோர் புகழ்தலே புகழாம்
ஆகையிற் புத்தி யாகிய விதங்கள்
எழிலார் வீடே யிவ்வகை யன்றி
மாயையி லுளதாய் வந்திடு சித்தி
புத்திக ளென்று புகலிரண் டினையும்
அடைந்திட நினைத்த லபலம தாகும்
எதிறு லென்னி லியம்பிடு மாயா
சம்பந் தத்தைத் தானடை குதற்கும்
சத்திய முத்தி சம்பந் தத்தை
அடைந்திடு மதற்கு மாகிய வருத்தம்
எட்டுணை யானு மிச்சையச் சங்கள்
உள்ளின் றியேவிட் டொன்றிய காயக்
கிலேசம் பண்ணிக் கிளர்தவ மதனில்
அடைந்திட வேண்டு மாகிய விந்த
இரண்டு வகைக்கு மேற்றமுந் தாழ்வும்
இன்றி வருந்த மெய்தல் சமமாம்
இத்தகை வருத்த மெய்தப் பட்டும்

அனித்தப் பொருளை யடைகுத லபலம்
அழியாப் பொருளை யடைகுதல் சபலம்
அன்றியு நன்று யறிந்த விடத்தில்
அவைக ளிரண்டு மசத்தா தலினல்
இன்பமோர் காலு மிலையவை தமினின்
றடைந்திடு மின்ப மலையா வறிவின்
ஆனந்த லேச மஃதறி யாமையில்
இவைகளி னிடமா யெய்திவந் ததுபோல்
அறிந்திடு மதனு லறிவா னந்தம்
பொருந்திடிற் சகல புத்திசித் திகளும்
ஏககா லத்தி லெய்தின தாகும்
இதுவன்றி வேத மெழிலா கமத்தும்
புருடார்த்த மாகப் புகலுன் கினிலும்
சிவமடை குதலே சிறப்பென வோதும்
அச்சிவ மென்னு மழகிய வீட்டை
ஐயந் திரிவு மறவே யடைதல்
எம்மார்க் கத்தா லென்றிடில் வேத
முடிவினின் மொழியு மொய்ம்நெறி யதனில்
அடைந்திட வேண்டு மம்மார்க் கத்தின்
ஒழுங்கைக் கேண்மி னுபநிட மதனில்
ஏக மேவா வத்துவி தீயம்
பிரமமே யென்று பேசிடு மதற்குச்
சுசாதி விசாதி சுவகத பேதம்
சொல்லிய மூன்றுஞ் சொருபத் தின்மை
என்றது வாகி னெழில்வே தாந்தப்
பக்கந் தனக்குப் பகர்ந்திடும் பந்தம்
வீடிவை யிரண்டின் விவகா ரத்துணி
வெத்தகை யென்னி லியம்பிடக் கேண்மின்
நித்திய மாகையி னிகந்திடு கால
பரிச்சே தமதும் பரிபூ ரணத்துவம்
ஆகையிற் றேச வறைபரிச் சேதமும்
ஏகம தாகி னியம்பிடு வத்து
பரிச்சே தமதும் பகர்ந்திட வொண்ணு
தறிவாய்ச் சத்தா யானந் தமதாய்ப்
பந்தமுத் தியெனப் பகர்விவ காரம்

அநீத மாகி யசைவற விளங்கும்
தன்னிடந் தனிலே சங்கற்ப சத்தி
சங்கற்ப மல்லா தசங்கற்ப சத்தி
என்றிவை யிரண்டுண் டிவையிற்சங் கற்ப
சத்தி யேதென்னிற் சாற்றிடக் கேண்மின்
நினைவுரு பமதா நிகழ்த்திடு மதற்கு
வடிவே தென்னில் வகுத்திடு நாமம்
உருவ மயமே யோரோ ரிடத்தில்
ஒருவன் கூவு முறையது தானே
எதிரிட் டப்படி யெழுதுவது போல
நினைவது வென்று நிகழ்த்திடு நாமம்
உருவது வென்று மொருபே தமுமில்
தவிற்றிடு ரூப நாம மயமும்
மாயா மயமே மாயையென் றதுதான்
யாதொன் றில்லா ததுமாயை யாகும்
உள்ளது மலவா யுருப்பெயர் மயமாய்
நினைவுரு பமதாய் நிகழ்சங் கற்ப
சத்திசத் தாய தற்சொரு பமதாம்
அதிட்டா னத்தி லாரோ பிதமாம்
ஆரோ பிதமு மதிட்டான மின்றி
விளங்கா ததுபோல் விளங்கிடுந் தன்னைத்
தவிரச்சங் கற்ப சத்தியுந் தோன்று
திக்ககை தோன்று மிருஞ்சங் கற்ப
சத்தி மயமாஞ் சருவங் களையும்
சத்தாய் நிகழுந் தற்சொரு பத்தில்
ஆரோ பிதமென் றறிந்தமை யாது
புறம்பெனச் சத்திய புத்தியைப் பண்ணிப்
பார்த்திடு மிடத்தில் பரமுயிர் செகமென்
றுரைத்திடப் பட்ட வொருமுப் பொருளும்
விளங்கிடு மவையை விளம்பிடக் கேண்மின்
சங்கற்ப சத்தி தன்மய மான
நாமரு பமதை நாட்டிடு செகமாம்
அவற்றினை நோக்கு மறிவே யுயிராம்
அவற்றினை விளக்கு மறிவே பரமாம்

இத்தகை யாக வியம்புறுப் பொருளும்
உதித்துடு மிந்த வுயிர்பர மிரண்டில்
மேற்பரஞ் சர்வ விடயம தாகும்
சீவனே வேக தேச விடயம்
இந்தச் சீவ னிப்படி பொய்யாய்ச்
சடமாய்த் தோன்றுஞ் சகத்தி னுடைய
புணர்ச்சியிற் சடமாய்ப் போத வடிவை
விட்டட னிச்சை விளங்கிடு ஞானக்
கிரியை யுடைத்தாய்க் கிளக்கு மிவையில்
கன்ம முண்டாய்க் கன்மந் தன்னால்
தோற்ற முடைத்தாய்த் தொன்று தொட்டுச்
செனன மரணஞ் சென்று டன்வரும்
இத்தகை புரியு மிச்சங் கற்ப
சத்தியே பந்தந் தருமசங் கற்ப
சத்தியின் வடிவினிச் சாற்றக் கேண்மின்
பிராந்தியி லொருவன் பிசகிமா றுகத்
திக்குக டம்மைத் தேரு மிடத்தில்
சூரிய னின்று தோற்றிய திசையைக்
கண்டுந் துணிவாய்க் காண்குதல் கூடா
தையமாய்த் தோன்று மடுத்த பிராந்தி
உண்ணின்று நீங்கி னுள்ள படியே
துணிவாய் நேரே தோற்று மதன்றி
மந்த விருளின் மறைந்திடு கயிற்றைப்
பாம்பு போலப் பார்த்திடு மிடத்தில்
பாம்பல வென்றும் பழுதையே யென்றும்
ஆறத னாலே யறிந்திடு போதும்
துணிவது வாகத் தோன்று தந்த
மந்தாந்த கார மாறிடிற் றென்றும்
அஃதினைப் போல வறிந்திடு சாத்திர
சென்னிய ஞானஞ் செப்புத லின்றிக்
கிருதகிருத் தியனுய்க் சிளர்சா தனங்கள்
நான்கு முடைத்தாய் ஞானா சிரியர்
அருளதி னாலே யாரண முடிவாம்
மாவாக் கியத்தின் வகுத்திடு பொருளை

விருப்பம துடனே விசாரணை பண்ணி
இச்செக சீவ விருப ரம்மவைக்
கதிட்டான மாகிய வப்பர சொரூபம்
தானே யென்று தன்னுள் ளிருளை
யகன்று சமாதியென் றறைந்திடு கின்ற
சமாதான புத்தி தானது பிறந்து
தனதுசங் கற்ப சத்தியி னாலே
ஆரோ பிதமா யநேகத் துவங்கள்
விளங்கின வென்றும் விளங்கிடு மிவைக்கதிட்
டானந் தானே யாமென வென்றும்
பழுதையி னிடத்திற் பாம்பொரு காலும்
இல்லா தஃதி னிவ்வா ரோபிதம்
இலையென நீங்கி யெழிலதிட் டானம்
ஆய்திற் குதலே யசங்கற்ப சத்தி
இதுவே முத்தி யிச்சங் கற்பம்
அசங்கற்ப மென்ன வறைந்திடு மிவற்றுக்
கதீத னேதா னாகையி லவையின்
உளதாம் பந்த மோங்கிய முத்தி
இவைதமக் கதீத னென்னலு மாகும்
இத்தகை யொருவ னெழிற்குரு வருளில்
ஐயந் திரிபற வறிந்து சொரூபம்
தன்னுடைச் சந்நி தான மதனில்
சங்கற் பத்திற் றுறு னாவாய்
விரிந்தது வென்றும் விரிந்திடு மெனவும்
அசங்கற் பத்தி லடங்கிடு மென்றும்
இவையே பந்த மெழில்வீ டென்றும்
இவைக ளிரண்டு மென்கணோர் காலும்
இலையிவை விளங்க லெம்மிட மதனில்
ஆரோ பிதமென் றறிந்த வறிவு
கலக்க மில்லாமற் காத்திர நீங்கும்
தன்னள வதனுந் தயிலதா ரையினில்
நின்றிடின் முடிவி னிகழ்பந்த முத்திக்
கதீதம தாகு மழகிய பிரம
சித்தி யதனைச் சேருவ னேனோ.

மாயை தோன்றும் வகையே தென்னில்
அஞ்ஞா னத்தா லச்சொரூ பத்தை
மறந்தாயி ரிதுவெனு மாயையைக் காணும்
ஒருமுத லான வுயிர்க்கிரு ளென்றால்
பாசிவ மதற்கே பந்தமுண் டாகும்
மேலு மோர்சிவம் விளங்குத லிலையில்
ஒருகா லையினு மொருவாப் பந்தம்
என்றெனி லந்த வெழிற்சொரூ பற்குப்
பந்த முத்தி பகர்ந்திட லாகா
உன்னரு ளதனி னுபக்கிர மத்தை
அன்றெ னக்குநீ யருளிய வகையே
சொல்கே னந்தச் சொருப வொளியில்
கதிரொளி தோன்றுங் கானலே போலப்
பேசவொண் ணாத பின்னு சத்தி
தோன்றிடு மதனிற் சொருபசித் சத்தி
சாயை பதியிற் சகமுயிர் பாமென
ஓர்முப் பொருளு முடனே விளங்கும்
எத்தகை யென்னி லியம்பிய பின்னை
திரிகுண சமுகஞ் சேர்ந்து திகழும்
சத்துவ குணத்திற் சாயை யேபரம்
எண்ணரி தாந்த விராசத குணத்தில்
சாயைக ளேயுயிர் தாமத மிரண்டாம்
இருண்மா யையென விருளுயி ரவையை
மறைத்தே நிற்கு மாயை சகமாம்
தனுமுத லான சகமதுண் டாகக்
கணைக்கது வாகிக் கன்மமு நிகழும்
இத்தகை யின்னு மிருஞ்சத்தி தன்னில்
ஐந்து பொருளு மன்றே திகழும்
இதிற்பந்த முத்தி யிசைத்திட லாகும்
இராசத குணத்தி லிசைந்திடு சாயை
ஆகிய வுயிர்க ளதிட்டான மான
தற்சொரூ பத்தைத் தாமத விருளால்
மறந்தழு வகையாய் மாயையி னுழலும்
சத்துவ குணபரந் தனக்கொரு காலும்

இருளே யில்லா வியற்கையி லருளில்
தனதங் கிசமுயிர் தானென வறிந்து
கூடத்தில் வீழ்ந்த குழந்தையை யெடுக்குந்
தாயே வீழ்ந்த தனையனின் பரமே
மாயை தனிலே வந்துரு வைக்கொண்
டைந்து தொழிலு மடைவுட னடைந்தி
இருவினை மாற்றி யெழிலெய்திட் டான
தற்சொரு பத்தைத் தானடை விக்கும்
இருளது நீக்கி யிருந்த விடத்தில்
உயிர்பர மிரண்டு முடனுயிர் மேலவர்
பின்னு சத்தியிற் பெற்றிடு முத்தி
உயிர்பர மிரண்டு மொன்றே யாகி
அபின்னு சத்தியி லடைந்திடு முத்தி
அபின்னையைப் பார்த்தே யதுநீ யென்ன
அருமறை யோது மதுவறி யாமல்
பின்னையைப் பார்த்தே பேத வாதிகள்
பாவனை யென்றே பகுத்தனை செய்வர்
உயிரின் சாட்சி யொருதா னேயாம்
பரத்தின் சாட்சி பரமே யேயாம்
அப்பால் விளங்கு மதுசிவ மேயாம்
பின்னு சத்தியிற் பிரிவைக் குறித்தே
இவ்வகை மூன்று மியம்புவ ரன்றிப்
பார்த்திட நோக்கிற் பரம்பொரு ளொன்றே
இப்பரம் பொருளே யெழிற்சிவ தரிசனம்
என்றே முன்ன மியம்பிய தனையே
சுட்டொடு நோக்கின் மூன்றிடு மூன்றாய்
சுட்டின்றி நோக்கின் மூன்றிடு மொன்றாய்
மூன்று மிறந்த முப்பா ழதனில்
தற்சிவ சொரூபந் தானாய் விளங்கும்
பின்னு சத்தியிற் பிறந்தது மூன்று
பின்னை தனிலே பெயர்த்தே யொழிக்கும்
அப்பால் மௌனத் தருகிய சிவமே
அழகிய சிவத்தி னவேத நிர்மயம்
பின்னை நிகழும் பெயரா தென்றும்

அதிட்டான மான வச்சிவ நேயம்
உலகமாய்த் தோன்றி னுயிரு மருளும்
விளங்கிடுஞ் சிவமாய் விளங்கிடும் போதில்
உயிரு மருளு மொருசிவ மேயாம்
இத்தகை கண்டே னெழிற்சிவ தரிசனம்
சிவனமக் கருளிய சிவதரி சனத்தின்
படியே யுனக்குநம் பார்வையி னுண்டாய்
விளங்கிற் றங்கிலை விட்டுநீங் காது
நில்லென வருளிய நிமலநா யகமே
மலந்தினு நாயை வளப்பம தடைய
சிங்கா தனத்திற் சேர்த்துவைத் ததுபோல்
எனக்கே நகைவரு மென்று சரித்திரம்
எனக்கு மிந்த வெழிற்சிவ தரிசனம்
அளித்தனை யிதற்கோ ரறைகைம் மாறென்
பனையே யுனக்கே பாங்கா னென்னைக்
காத்தரு காத்தாய் கடைபோ கக்கண்
பார்த்தெனை விடாது பரிந்துகொண் டருளே.



சத்தினி பாதந் தான்பிறந் திதயம்
சுத்தம தடைந்து தொல்லைமூ வலரும்
கான்றசோ றதனிற் கண்டென விடுத்து
வீட்டின் பினையே விரும்பிடு முகம
விசாரணை செய்ய வேண்டிடு முத்தி
உண்மையின் மும்முத லுண்மைய தாகும்
அம்மைதயு மன்றி யவனியி லோர்பொருள்
உணர்ந்திடு மிடத்தி லுருவுட னுமம்
தோன்றுதன் முனமே தோன்றிடுஞ் சிவமதை
இருளினிற் றெரியா திருவெனச் சுட்டி
எய்திடு மாயை யிருவினை யதனின்
ஆகையிற் பதிபசு வானவை மாயை
கருமமுந் தோன்றுங் கருவிதி னுக்கின்
மும்முத லவையின் முத்தியிற் பசுவை
விடவேண்டு மென்னும் விருப்ப மதனில்
இருவகை யாகு மிரும்பதி பசுவும்

மூவகை யாகு மும்மலந் தனின்மற்
றவைதனக் குக்குறி யதுவிது வாகும்
அதுவிது நீங்கி லவைமூன் றகலும்
அவையினின் மூல மாணவ மாகும்
அறுவைக் கழுக்கை யகற்றிடு மூவரும்
சாணமும் போலச் சாற்றிய விரண்டு
மூலங் கெடுக்க மூலனை கூட்டி
உற்பவ முதலா யுரைத்திடு மைந்து
தொழில்செய் திடுவன் றன்மையி லேனின்
றந்தகன் கண்ணி லப்பட லந்தனை
எடுத்திடு முனமதற் கேற்றவு டதங்கள்
சேர்த்திடி னிதமாய்த் தீர்ந்திடு காலம்
பொருதது போலும் புகன்றிடு மாயைப்
பிறப்பினுக் கஞ்சிப் பிறப்பைநேர் நீக்கும்
நெறியே தெனவந் நெறியினை யுரைப்பார்
ஆரெனத் தேடி யரற்றிடு காலையின்
சிவமே ஞான தேசிக னாகும்
அவனரு ளாலே யாகம நெறியின்
ஐந்து தொழிற்கு மரனே யுரியன்
ஆமென் றுயிர்பொரு ளச்சார் பெவையும்
உடற்கா வலையு மொருங்கே நீக்கி
அருளினை நோக்கி யாசா னருளில்
உச்சியி னிற்கு முபலம் போல
ஆணவ மாயை யவையினிற் றோன்றும்
மறப்பு நினைப்பு மாற்றிடி லல்பகல்
அற்றவீ டென்றே யறைந்திடு மாகமம்
அவ்வீ டதனி னனுபவந் தன்னின்
பெத்தத்தி னிற்கும் பெற்றியைப் போல
இதுவெனத் தோன்று மெவையவை யனைத்
நியதிசெய் ததுவாய் நிற்றல் சமாதி
சமாதியை நீக்கிய சாக்கிரந் தனினும்
சிவமே யைந்து செய்கையி னடித்தல்
கண்டுதற் செயலைக் கைவிட வேண்டும்
கவை நெறியை யெய்திப் பாலன்

பித்தன் பசாசன் பெற்ற குணங்கள்
மருவியே நிற்றல் வாய்மை நெறியாம்
தேகாந் தத்திற் சிவமே சேர்வன்
இஃதா கமநெறி யினியா ரணநெறி.



சாதனை நான்குந் தன்னிடத் துதித்த
பின்னர் விசாரம் பேத மபேதம்
எனவிரண் டவையு மீசனு முயிரும்
இருமுத லென்றே யியம்புதல் திரிவு
ஒருமுத லென்ற லொள்ளிய காட்சி
ஆகையின் வேதத் தத்துவி சாரம்
செய்திட வேண்டுஞ் சிறப்பெனி லாகமம்
அன்றது சிறப்பா மத்தியான் மிகம்
சொல்லிய பிரபல சுருதியே சிறப்பு
இத்தக வன்றி யெழிலார் சுருதி
ஆரண னுரையி னவைமற் றெல்லாம்
மற்றோ ருரையின் மறையினைப் பற்றி
நிற்கு மதன்றி நிமலன் சுவாசம்
வேத மாகமம் விளங்கிய வாக்காம்
அதனுண் முந்திய தருமறை யாகும்
இதற்கதி கார மின்றிய வைசியர்
சூத்திர ராதி சொல்லிய பேர்க்கு
விசாரணை பண்ணி விளங்கிட லாகும்
அவரவர் சரிதை யவரவர்க் கேயாம்
பத்தியு ஞானமும் பகர்வயி ராகமும்
எக்குலத் தோர்க்கு மெய்திட லாகும்
அறிவே குலமென் றறைந்திடு முலகம்
நற்குலம் வினைவி னெண்ணின தாகும்
மூன்று கடனு முனைமுடித் தோர்க்கே
ஞானவி சாரணை நாடிமேற் கொள்ளும்
காமா திக்கு நாநா விதமாம்
பிரபஞ் சத்தின் பிறப்பிடந் தானே
தெவரினை யுடைய தெமக்கிப் பிறவி
சப்தின தெந்த வெறுவி னிஃதும்

நின்றிட லொருவி நித்திரை தன்னில்
கண்டிடுங் கனவிற் காட்சியி தென்று
நனைவே ருகத் தானுணர்ந் திடலின்
உடன்முதற் றள்ளி யொருசிவ நாமென்
றிருளகன் றுறுதி யிதயத் துதித்துக்
கந்தர்ப்ப நகரங் கண்டிட லிற்சகம்
கண்டிவ் வுறுதி கலக்கமில் லாமல்
நிற்றல் சமாதி நிலையிது வாகும்
உடலந் தத்தி லொன்றுவன் முத்தி
இதுநின் மலமுடை யிதயருக் காகும்
மலினநெஞ் சுடைய மகற்கு முன்னு
விதமா மசுத்தம் விலக்கும் பொருட்டுச்
சுத்தவா தனையைத் தொடங்கி
மனோலயஞ் செய்யின் வாய்த்திடும் வீடே.



விரிவுறு முருவ நாமம நகற்றின் விடயங்கள் விளங்குறு விதனுன், மருவுறு பொறிபோம் பொறியறக் கரண மாய்ந்துறுங் கரணமாய் நலினும், புருடன்முன் னேழுஞ் சுத்தமோ ரைந்தும் போமிதாற் சச்சிதா நந்தந், கிரியைபற் றிலங்கு மென்றனள் விருந்த கிரியமர் பெரியநா யகியே. 1

உளப்படு முருவ நாமம நகற்றி னுள்ளசற் சிற்சகந் தோன்றும், வளப்படு மிதனு னுலகுகண் ணுடி வருநிழ லாநிழன் மறிந்தால், விளக்குறு ஞான வெளியதா மிதனின் வினையுமின் பெனவெனக் கிசைத்தாள், கிளக்குறு தவத்தோர் தரித்துறை விருத்த கிரியமர் பெரியநா யகியே. 2

பழுதையென் றுணரிற் றன்முனர்த் தோன்றும் பாம்புமப் பழுதையா மதுபோன், முழுதுண ரறிவாந் தன்னையே காணின் முரணுறு சராசர மெவையு, மெழுதரு மறிவா விளங்குமென் றிசைத்தா ளெழுபவத் துடைத்தெனை யளித்த, கெழுமணி முத்த நதிசெறி விருந்த கிரியமர் பெரியநா யகியே. 3

சொரூபமே தானென் றுணர்தரிற் பரனுந் துகளுறு சிவனுஞ் சகமு, மருவுதன் னின்னி லெழுந்தமித் தைகளாம் வந்திடு பந்தம்வீ டிலவா, மொருவுயிர் தானென் றுணரிலம் மூன்று முள

மாணிக்கப் பைவிரித்து வாழுநாகர் பாருறைவோ
ராணிப்பொன் போன்றமறை யாகமங்கள் - பேணி
யுருவே யருவே யொளியே வெளியே
தெருளே யருளே சிவமே - பொருளேயென்
றேத்துஞ் சுகசொருப மின்னருளே யோர்வடிவாய்
நாத்துதிசெய் பேரு நயந்தருளித் - தீர்த்தனென
வந்தபிரா னேயேன் மலதிமிரம் போக்குதற்கென்
சிந்தைகுடி கொண்ட செழுஞ்சோதி - வந்தனைசெய்
யன்பர்க் கெளியா னதிகரே யாயிடினும்
வன்பர்க் கரிதாய மாணிக்க - மன்புக்க
மந்தரமே மத்தாக வாசுகியே நாணாகச்
சந்திரன்றா னாக்கடலே தாழியா - வந்தரர்தம்
வன்பிற் கடைய வருமமுதம் போன்றெழா
நன்பிற் பெருகியெழு மாரமுதத் - தன்பத்
திரையாழி வீழ்ந்தவரைத் தீதறியா முத்திக்
கரைமேல் விடுக்குமொரு கப்பல் - விரவிவரு
மாகமே யாதி யநேகபிர பஞ்சமெலா
மேகமாய்க் காட்டு மெழிற்சித்தன் - மாகசுர
ரேமாக்க வெம்மனோ ரியாரு மிறுமாக்கக்
கோமாக் கருணைமழை கூர்மேகம் - பாமரருங்
கண்ட பொழுதே கசிந்துகசிந் தன்புருகித்
தொண்டுசெய மேவுஞ் சுவைக்கரும்பு - பண்டு
பிரம னகந்தை பிறங்கா தடங்கப்
பரம வொளியாய்ப் படர்ந்து - சிரமனந்த
கோடி படைத்துக் குலவுலகெ லாந்தானாய்

... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...

நம்மை யழுக்கறவே தானுடைத்த வன்றியுயிர்
வெம்மை யழுக்கு மிகத்துடைத்துச் - செம்மைதரு
வீட்டின்ப வெள்ளத்து மேன்மைபெற வேமூழ்க
காட்டுமணி முத்தா நதியுடையான் - மீட்டரிய
மெத்து கடமாதி வெறும்பொய்க் கதிட்டானச்
சத்திதனுமோர் மேன்மைத் தருகாடன் - மொய்த்து
வரும்பிப குருவமாய் மன்றுபொரு ளொல்லா
மொருங்கே சுகமான ஆயான்

... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...

றுன்றுது கேட்டி யுளாஞ்சற் றசைந்தக்கான்
மூன்றும் பரமுயிர்கண் மொய்த்தெழுந்த - மன்று
வுலக மிவைதோன்று முளமிறந்தா லிந்தக்
கலகமெலாம் பொய்யாய்க் கனதை - யிலகியதோர்
மெய்யொன்றே யாகு மினிரு முளத்துருவ
னையா வுருவமொடு நாமமாம் - பொய்யுளந்தா
லுன்னினைவு நீதென்றே யூகத்தா னுக்குமிடத்
தந்நினைவு நாமவுரு வாகுங்கா - ணந்நினைவு
கோடி கணத்திற் குதித்தெழலா லிவ்வுலகு
நாடற் கருவுருவ நாமமாய்ப் - பீடுபெறத்
தோற்று நினைவைத் துணித்தாற்சற் சிற்சுகமே
மாற்றற் கரிதாய் வயங்கலுறுஞ் - சாற்றுமிதா
லுள்ளமே யிவ்வுலகா மிவ்வுலகே யுள்ளமா
முள்ளமலா தேயுலக மொன்றில்லை - யுள்ளே
மதுராங் கருஞ்சாத்தன் வன்கோயின் முன்னே
சதுரங்க மாபலமாத் தங்கும் - குதிரைகரி
தேரா ளெனும்பெயருஞ் செப்பியபேர் கொள்ளுருவு
மோராது பொய்யென்று நீக்கியே - தேருமிடத்
தாற்றிடுமக் காலத்து முள்ளமண்ணே மற்றெல்லாம்
வெற்ற வெறும்பொய்யாய் விடுமிவைபோற் - சொற்ற
பெயருருவ மானவெல்லாம் பேணாது நீக்கிற்
செயிரறுசித் தொன்றே திகழு - மியல்பாங்
கடலிற் றிரைநுரை காண்டிவலை மொக்கு
ளிடமுற் றெழினு மிதுபொய் - யிடமுறுமெய்
யாவ தெதுவென் றறியுமிடத் தப்பொருளின்
மேவு திரைநுரை வெண்டிவலை - தாவியெழு
மொக்கு ளெனும்பெயரு மொழிபெயர்கொள் ளும்முருவு
மொக்கவெறும் பொய்யா முருசியுடன் - றக்க
நெகிழ்ச்சி குளிர்ச்சிமய நீரொன்றே மெய்யாம்
பகுக்கு மவைபோலப் பாரிற் - றொகைக்கரிதாய்க்
காணுமுரு நாமங் காணாது பொய்யாகு
மாணுறுசற் சிற்சுகமே வாய்மையாம் - மாணு
இருப்பதுசத் துச்சத்தா லெண்ணுருவ நாம
மிருப்பதுபோற் றோன்றும்வே றில்லை - யுரைப்பரிதாய்த்

கீசற்றுந் தோன்றாது நின்றக்கான் - மாசற்ற
மெய்ச்சிவமே யாகு மிளிருமிதா லுன்பெருமை
யச்சிவந் தானே யறியுங்காண் - மெச்சு
முறவா லுயர்வா லுனைப்போ லெனக்குப்
பிறிதா ருளரதனாற் பேணி - யறவாழி
யான்குமர தேவன்பா லன்புடனே தூதுசெல்ல
நான்கருதி யுன்பா னவிற்றினேன் - யான்புகலு
மவ்விறைவ னென்று மமருமிடஞ் சொல்லக்கேண்
மௌவன் மணக்கு மலர்ச்சோலை - செவ்விதரு
முக்தா நதிசூழ் முதுகிரியா மாங்குசீ
விஸ்தார மாய்ச்செல்லு வேலைதனிற் - கத்துஞ்
சமயமெனும் பொய்வேடர் தம்மைமிக நாடி
யமருமுற வாமென் றணுகேல் - கமைவி
லரிவையர்தா மென்றியம்பு மாமாவை நாடேல்
கருது விடயமெனுங் கானின் - மருவு
நெறிதப்பிப் போயதனு ணின்று மயங்கேல்
பொறிமத்த மாவொடுபோ ராடேல் - செறிவுற்ற
காமமெனும் பங்கத்திற் காலிடேல் கோபமெனுந்
தூம வழன்மிதித்துத் துள்ளியிடே - ஞமவுரு
முன்பின் புடைபெயர்ந்து முன்னிநோக் காதேகி
யன்பெலா மோருருவே யானவரு - மின்பமய
மாகி யிருப்போரு மரியதவச் செல்வர்களு
மேகமெனுந் துணிவை யெய்தினரு - மோகமறு
வீரசைவ நாயகரும் வேத முனிவரரு
மோரா கமசைவ வுத்தமரும் - பாரோரு
நாற்றிசையுஞ் சூழவர் நாப்ப ணுடுச்சூழ
மேற்றிகழு மிந்து விளங்குதற்போற் - போற்றுங்
குமாரதே வென்னுமோர் கோமா னிருப்ப
னமாவென் றவன்சபையை நாடி - யெமாலன்பு
தன்னடிக்கீழ் வைக்கத் தருகருணை செய்தானைப்
பொன்னடியென் சென்னி பொறித்தானை - மன்னு
பவளமலை யுபய பாரிசத்துஞ் செம்மை
திவளருவி தாங்குந் திறம்போ - னவமார்
கழுநீர் தொடையல் கலந்தபுயத் தானை

வழுநீத்த பாமாலை மன்னைத் - தொழுவார்க்கு
வேண்டிய வேண்டிய வெல்லா மிகவளிக்கு
மீண்டிய தெய்வ மிருந்தருவை - மாண்டறியா
வானந்த செல்வ மளிக்குஞ்சிந் தாமணியை
வானந் துதிக்கவரு மாதவத்தைத் - தினமே
னேதுபிழை செய்தாலு மேழையே னுக்கிரங்கித்
தீதனிவ னென்னாத தெய்வத்தை - யோதும்
பழமலையான் பாகம் பதியா விளமை
யழகுடனே வாழுமுமை தம்மை - வழுவாது
தந்தசச்சி தானந்த சாகரத்தி லூடாடுஞ்
செந்திருவா ழுங்குமர தேசிகனைச் - சிந்தைதனி
பொன்னே மரகதமே பூரணமே யாரணமே
யன்னே முதுகிரியா ராரமுதே - மன்னேயென்
றேத்திப் பணிந்தங் கெழுந்து கரஞ்சிரமேற்
சேர்த்துப்பின் கைகட்டிச் சென்றுநின்று - சீர்த்தவனை
யுன்பவனி கண்டங் குணதுகடைக் கண்ணோக்க
மன்புடனே பெற்ற வரிவைதா - னின்பம்
பெறுவ தலாலவித்தைப் பேரிருளில் வாடி
யுறுவளோ யாவு முதிக்கச் - செறியும்
பகுதியெனும் பெளவத்துப் பாடொலியி னோசை
மிகுதி வருந்துவளோ மேனி - யகமென்று
மூலவகங் காரமெனு மூரிமத வேளினாற்
சால மயங்கத் தகுவளோ - கோலியே
கத்துசம யக்குயிலின் காரொலியா லானந்த
நித்திரைபண் ணாது நிகழ்வளோ - சுத்தமுறுஞ்
சாத்தீக மாயையெனுஞ் சந்திரனால் வெம்புவளோ
காத்தாள்வாய் மற்றிவளைக் காவென்றே - யாத்தன்
திருவடியில் விண்ணப்பஞ் செய்து வணங்கி
யிருமைதரு மிவ்வுலக மெல்லா - மொருமைபெறு
பேரின்ப மாகியென்றும் பேரா திருந்தவிந்தச்
சீரின்ப நாயேன் செறிந்தோங்கத் - தாரம்பா
யின்றிவளுக் கீத லெழில்வள்ளா லென்றியம்பி
நன்றெனவே சம்மதிப்ப நன்குரைத்து - மன்றலுறு
சற்குமர தேவன் றருங்குவளை மாலைநெஞ்சே
யிற்பெறவே வாங்கிவா வின்று.



## தத்துவராய சுவாமிகள்

### திருத்தாலாட்டு.

என்ன தியானென் றினியொருகா லத்தினுள்ளு
முன்ன லறவூ னுயிர்வேறு செய்தானே.
பூண்ட புலன்கள் பொறிவழியே போகாமே
மீண்டிரு வென்று விளம்பும் பெருமானே.
புற்கடந் தோன்றாத வண்ணம் புரளாமே
மற்கட மாமனத்தை மாட்டும் பெருமானே.
பொய்யாகு மெய்யில் வேறாகும் புருடனைக்
கையா மலகமெனக் காட்டும் பெருமானே.
உனைமறைய மூடி முணர்விலா மாயைக்
கனவிருளைக் காணென்று காட்டும் பெருமானே.
கண்ட விருளைநீ காணாதே யவ்விருளைக்
கண்ட வறிவைநீ காணென்று சொன்னானே.
கண்ட வறிவுதனைக் கொண்டென்னைக் கண்மறைத்த
பண்டை யிருளைநீ பார்த்துக்கா ணென்றானே.
கங்குலா மாயவிருள் காண்கிலேன் காண்கின்ற
தெங்கு மறிவென் றிசைக்க விசைந்தானே.
சாதமா மிவ்வுடல நானல்லேன் சான்றாகும்
போதமே நானென்னப் போதிக்கும் போதகனே.
உதிப்ப தெல்லாமு முணர்வன் றுணர்வை
மதிப்பதுவும் விட்டுநீ வாளாவி ரென்றானே.
சித்தசித் தீசத் திரிவிதமுந் தீர்ந்தபா
ழித்தனைக்கு முற்பத் தியுமிதுவே யென்றானே.
மும்மைப் பாழ்தீர மொழியா மொழியாலே
நம்மைப்பா ரென்று நவிலும் பெருமானே.
அபாவ பாவங்களுக் கப்பாலாய் நின்ற
சுபாவமாந் தன்சோதி சொல்லாமற் சொன்னானே.
இவ்வா றறிந்தபரி சென்னவொண்ணா வின்பத்தைச்
செவ்வாய் மலராமற் செப்பும் பெருமானே.
ஆனந்த வெள்ளமென தங்கைக் கனியாக
மோனந்தன் னாலே மொழியும் பெருமானே.



## பிள்ளைத் திருநாமம்.

### வருகைப்பருவம்.

பரவுமிமை யோர்கண் முனிவர்மறை யோது
பரிசுதனை நாடி யறிவுறுர்
படர்பெருக மேனி யருள்கொடெனை யாளு
பரிசுபடி மேவி யரியதா
ளரவுகயி றுகை யறியினில தாமென்
றருமறையி னோது முவமைதா
னனுபவம தாக வகிலநிக ழாம
லறிவு வடிவாக வறிவுதா
னிரவில்வரு சோம னிருமையில தாகும்
விழியினுள மாசு கழியவே
யெனுமறையி னீதி யிலகவிறை சீவ
னெனநிகழு பேத மிரியவே
வரவுதிரி வான மதிவிழியின் மாசு
கழியவரு நாதன் வருகவே
மனுடர்வடி வாகி வருகருணை வாரி
வருக வெனையாளி வருகவே.

### தாற்பருவம்.

முன்னஞ்செயு மாதவ கோடிகளான்
முதுநான் மறையோது
முனிவோர் தமினுற் பவியாமறையின்
முடிவிற் றுணிவுற்றுப்
பன்னும்பொரு ளானபரம் பொருளே
பொருளென் றலதொன்றிற்
பற்றற்றுறவும் பகையும் புகழும்
பழியுங் கழியோடும்
பொன்னுஞ்சம மாக நினைந்திகழும்
பரமுந் தருமின்பப்
போகங்களெலா மோகங்களெனும்
படிபுந் தியின்வைத்துத்
தன்னந் தனியே யடைவா ருறவே
தாலோ தாலேலோ
தனிநாயகனே யெனயா ளுடையாய்
தாலோ தாலேலோ.

சப்பாணிப்பருவம்.

வெறிகமழ் திருவடி மலரென் றலைமிசை
வைத்தரு ளித்தாவி
விடயமுண் விழிமுதல் புலனவை யெழுறை
விட்டி ரெனப்பேசி
மறிகட லலையென வுறுமனன் மலைவற
வைத்தொ ரிமைப்போதின்
வடிவறி வெனவறி வகைசெய்த வறிவுறு
குற்ற மதைக்கூறி
யறிவறி பொருளறி பவனென நிகழ்தரு
முப்பரி சைத்தீர
வறிபொரு ளறிவினி லறிவறி பவனிவண்
முற்றறி வித்கூடக்
குறியறு குறிகுறி யெனவரு ளியவிறை
கொட்டுக சப்பாணி
குருபர பரசிவ சிவகர கரமலர்
கொட்டுக சப்பாணி.
தூஞ்சல் விழித்தல் பிறத்த லிறத்தல்
சுருங்கல் விரித்தலெனச்
சொல்லும் விதங்களு மற்றள வற்ற
சுகோததி யாய்நினைபு
நெஞ்சு நினைப்பு மறப்பற நின்மல
நிட்கள மாயறிவாய்
நிற்ப விருப்ப கிடப்ப நடப்பன
நிற்பிறி தற்றெருகா
லெஞ்சுத லின்றிய வெவ்வுரு வென்றுண
ரவ்வுரு வுற்றுணர்வா
ரெவ்வள வவ்வள வாகிய நின்னுரு
வென்னுரு வாயிடவென்
குஞ்சியின் வைத்த நுணர்ப்பது மங்கொடு
கொட்டுக சப்பாணி
கும்பிடு மன்பர்த மென்புரு கும்பர
கொட்டுக சப்பாணி.

### செங்கீரைப் பருவம்.

அவனியி னன்றியில் வினைநா கந்தரு
நன்றே யுண்டாகி
லமருல கந்தரு மறிய விழுந்திடு
மங்கோ டிங்கோடும்
பவனி தனங்கெடும் வகையிலர் பங்கய
நின்று ளன்பாகிப்
பணிகில ரென்றரு மறைபக ரும்பர
செங்கோ செங்கீரை
தவவடி வென்றுகொள் சடையுடை செந்நூலி
றண்டே கொண்டாடித்
தமையுணர் வின்றிய சமயிகள் பந்திசெல்
சங்கே தஞ்சாடிச்
சிவமக மென்றுள தெளிவு தரும்பர
செங்கோ செங்கீரை
சிவகர சிந்தனை யறவருள் கந்தா
செங்கோ செங்கீரை.

---

### அம்புலிப்பருவம்.

முனிவரன் சொருபன் றருங்கமுன்
முடிவறிந்தில னரியுநான்
முகனு மன்றணி முடிவறிந்தில
னெனமொழிந்தன மறைபல
மினிவரும்பவ மொழியவிவன்பதத்
யுறவுடம்புட னினியவி
டிதுவெனும்படி தெரியவிங்கொரு
மொழிமொழிந்திருள் வெளியொரீட
அனிதமிங்கித முறுமகப்புற
மறநிறைந்துள வயலயா
வறிவனந்தமெய் யளவினின்பமெ
னுருவெனும்படி யருளினன்
மனிதனென்றிட வாவிசைந்தவன்
வருகவென்றபின் வருகவே
மறுமொழிந்திடும் வடிவுதந்திட
வருகவம்புலி வருகவே.

சிற்றிற்பருவம்.

பேசக் கருதப் பட்டவனன் றெனையாளும்
பித்தன் குறிகேடன் பெண்ணுணவி யல்லான்
றேசத்திறை யொன்றிற் றட்டா னுறவற்றுன்
சென்மப்பகை யன்றற் சேர்வா ருயிருண்பான்
கூசப்படு வார்நான் மறையன் குணனில்லான்
குருவற்றவ னிங்கோ ருருவற்றவ னென்றே
யேசித்தில மெஞ்சிற் றில்லஞ் சிதையேலே
யெமையாளுடை யாய்சிற் றில்லஞ்சிதை யேலே

சிறுதேர்ப்பருவம்.

நாவிற்ப டாதசுவை செவியிற்ப டாதவொலி
நண்ணப் படாத பரிச
நயனப் படாதவொளி நாசிப்ப டாதமண
நாவிற் படாத காணம்
பூவிற் படாதகனம் வெளியிற் படாதபுரை
வளியிற் படாத வொலிதோய்
புனனிற் படாதநெகிழ் வனலிற் படாததெற
லினனிற் படாத வொளிவர்
தோவிற் படாதுபடு மதியிற் படாதகுளி
ருணர்விற் படாத வுணர்வா
யொன்றிற் படாதொருவ ருள்ளப் படாதுமறை
யோதப் படாம லொளிருந்
தேவிற் படாதமிகு தேவர்க் கெலாமிறைவ
சிறுதே ருருட்டி யருளே
தேனித்து நான்மகிழ வாழ்வித்த மாமுனிவ
சிறுதே ருருட்டி யருளே.
மண்ணு தரத்தினரா் மாறுத வாழ்வுலகின்
மட்கப் படாத வொளிசோ்
வாடப் படாதமலர் வீடப் படாதநிதி
கோடுற்ற யாழி னிசையிற்
பண்ணுத வோசையொரு பாவிற் படாதவியல்
காவிற் படாத கனியோர்
பாகத் தடாநறவு போகத் துருவினிமை
மோகித்த பண்டை யிமையோ

காற்றை நிறுத்தவாங் கல்வலைக்க வாநமது
சேற்றமன னென்செயலாந் தீரவதை - மாற்றித்தா
ஞேவே யளித்தபிரா ஞண்மை யிருந்தவா
நாவே மறவா நவில்.

அல்லாதா ரல்லா தவரா ரவரவர்க
ளெல்லா மெமக்கெம் பிரானுவா - ரெல்லாக்
காணங் கடந்தான் கடையேனைக் கண்டு
சரணங் கடந்தான் றமர்.

விழித்திருந்து தூங்குவார் மெய்யுள்ளத் துள்ளே
முழித்திருந்த ஞான முனியே - யொழிப்பறநீ
யாட்டி யருள்கூத்தை யாற்று யருளாலே
காட்டியருண் மெய்ஞ்ஞானக் கண்.

இங்கேவந் தின்னம் பிறவாம லீசாநின்
பங்கே ருகப்பாதம் பற்றினேன் - சங்கேத
சாத்திரமும் பாரேன் சதுமுகன்மால் வாழ்வையனு
மாத்திரமும் பாரேன் மறந்து.

அறுதி யுனைத்தந்தா யாங்கென்னைக் கொண்டா
யுறுதி யுனதோ வெனதோ - மறைகோடி
யன்புற்றாய் நின்ற வழியாப் பதம்பெற்றே
னென்பெற்று யென்பா லிறை.

என்னிய மானிடரை யேத்துவீ ரின்புலவீர்
தன்னிய வல்லான் சரணிற்க - மன்னும்
பொருளு லையுமோர் பொழுதே யருள்வான்
கருணு லயனே கலந்து.

விட்டிடமுந் தொட்டிடமுங் காணு வெறுங்குருட்டுப்
பெட்ட ரறுசமயப் பித்தேறித் - தட்டுப்
படாதே பரனவன்றன் பங்கே ருகத்தாள்
விடாதே மனனே விளம்பு.

கூறுங் கரணநீ கூறரிய கொள்கைநீ
மாறுங் கொடிய மயக்குநீ - தேறும்
பரிசுநீ யானுற் பரனேநின் பண்பிங்
குரைசெய்வார் யாரே யுரை.

மொட்டாதெ னெஞ்ச மொருகாலி தென்னென் றுணரவும்பர்க்
கெட்டா தவனென்னை யாளுடை யானரு ளில்லவர்க்கே.

வல்லாள னிங்கொரு மானுட னாகிவந் தாண்டுகொண்டு
பொல்லாத வென்றன் மனத்திற் புகுந்தபின் போதமதா
யெல்லா மிருந்தது வேறு படாமலி தென்செய்தவா
நல்லா னருளிருக் கும்படி யோவிந்த நன்னலனே.

அறிவே யறிவு மறிபொரு ளானதும் போயடங்குஞ்
செறிவே கழன்றொளிர் செஞ்சுட ரேபின்னுந் தேய்ந்துவெறுங்
குறியேது மின்றிய தோர்குறி யேயிவை யாவையுமா
நெறியே யறிகின்றி லேன்சிறி யேனின் னிலைமையதே.

இலனென் றினிச்சென் றிரக்கின் றிலனிங் கியாவரையுங்
குலனென்று கோத்திர சாத்திரக் கத்துகள் கூறகிலே
னலன்வந்து மற்றை யறுசம யச்சிறு காயகிலேன்
றலன்வந்த தத்துவ னாரெம்மை யேயின்று சார்ந்தனரே.

இசையா னலனென்னை யாளுடை யானிங் கியங்களுட
னசையாத நெஞ்சுகொண் டன்பா னிணைந்தழி யும்முடம்பி
னசையான தின்றி நலஞ்செய்வ ராயினற் றுடலையின்
மிசையார வைத்தென்று மெய்யான தன்னை வெளிப்படவே.

சின்னப்பூ.

ஓதி யுணர்பவர்கட் கொன்றுந் தெரியாத
சோதி சொரூபானந் தச்சுடரே - வாதிகடந்
தத்தமுத்தி மாற்றவல்லார் தப்புவார் சார்ந்தவரைப்
பெத்தமுத்தி மாற்றவல்லார் பேர்.

ஊன்று மடியவர்தம் முள்ளத்தே யுள்ளபடி
தோன்றுஞ் சொரூபானந் தச்சுடரே - யான்றமைந்த
விண்ணு ணலியலார் வேதாக மத்தாயும்
பெண்ணு ணலியலார் பேர்.

துளிபாய்கண் டொண்டர் தொலையா நறவுண்
டளிபாடு மானந்த நாடே - யொளிவேதந்
தானகத் திற்கரியா ரென்பார் சமயத்தார்
நானகத் திற்கரியார் நாடு.

சொரூபா அனந்தனென்று தூமறைகள் சொல்லும்
பெருமானுக் கிட்டதெல்லாம் பேர்.

பண்ணார் மொழிக்கிள்ளாய் பார்மிசைமேல் வந்தாண்ட
வுண்ணா ரமுதுவந்தா னாருரையாய் - கண்ணூறு
வெள்ளம் பரக்க வெறுமின்ப மேவிளையு
முள்ளம் பரம்பரனுக் கூர்.

வண்ணப் பசுங்கிளியே வாழ்வித்த நாயனார்
நண்ணப் படுகின்ற நாடுரையா - யெண்ணுற்ற
வானந்த மாக வருநாடா மேனுடு
மாநந்த நாடென் றறி.

செஞ்சொற் பசுங்கிளியே செம்மேனி கொண்டெம்மை
யஞ்சற்க வென்றுண்டா றுறுரையாய் - வஞ்சக்
கருக்கெடுக்கு ஞானக் கனப்பொழியக் கண்ணீர்
பெருக்கெடுக்கும் பேரன்பு பேசு.

மலையேது சொல்லாய் மாரகதமே வந்தென்
றலையேறு தாளுடையான் சாரச் - சிலையக்
கணமே கனியாகக் கண்ணளிக்க வல்ல
குணமே யெனையுடையான் குன்று.

பாகனைய செஞ்சொற் பசுங்கிளியே பாரில்வரும்
வாகனமே தாண்ட மறையவனுக் - காகம்
வருங்கருவை மாற்ற மனுடனைப்போல் வந்த
பெருங்கருணை யென்றுநீ பேசு.

பண்டோற்கு மின்சொற் பசுங்கிளியே தொண்டெனைக்
கொண்டாற் குரிய கொடிகூறாய் - மண்டிக்
கெடுக்கு மனங்கெடுத்துக் கேடிலா வின்பங்
கொடுக்குந் தருமக் கொடி.

இன்பா லளிப்பே னிளங்கிளியே யெங்கோமான்
முன்பாய் முழங்கு முரசுரையா - யன்பா
லறையு மறையே யவனியுளோர் துன்பம்
பறைய வறையும் பறை.

நறவு கனியொடுபா லலகக் கிளியே
யிறைவர் படையே தியம்பாய் - யிறவித்

தொகைதுணிக்குந் தெய்வச் சுடர்ஞான வாளே
பகைதுணிக்க வேந்தும் படை.

செங்கனிவாய்ப் பைங்கிளியே தேசிகன்ற னாதரஞ்செய்
கொங்கலர்தார் யானறியக் கூறிக்கா - ணிங்கெனுட
லாமாலை யனுக் ககமாலை மாற்றினர்தம்
பாமாலை யென்றே பகர்.

இரட்டைமணிமாலை.

நின்றன போன்று நிலையாத வாழ்க்கையை
யொன்றென வுன்ன லொழிநெஞ்சே - யின்றென்னை
யாண்டா னடிக்குருகு மன்பலான் மற்றொன்றும்
வேண்டா மெனநீ விடு.

நிகழ்கின்ற தெல்லாமு நின்மலமே யானு
மிகழ்கின்ற வாறுதா னேதோ - புகழ்வின்றி
நாடப் படாவெங்க ளையகனார் சீர்பாதஞ்
சூடப் படாதார்தாஞ் சொல்.

மும்மணிக்கோவை.

கண்ணு ளனையன்றிக் காணாது கண்ணவன் கண்ணொழிய
வெண்ணாது சிந்தைகொண் டேத்தாது நாவிறை தாளொழிய
நண்ணாது சென்னி நயவாது நாசிநற் சீரொழிய
வுண்ணா செவியவ் வொளியொடல் லாதுரு காவுடம்பே.

உடம்பே—மலநிணமூளை வழுவென்பிறைச்சிப்
புலவுநாறிப் புழுச்சொரியும்மே
தலையே—நில்லாப்பொருளை நிலையெனநினைந்து
பொல்லாதவரைப் போய்ப்பணியும்மே
கண்ணே—மலம்பொதிந்தியற்றிய வடிவினைமறையக்
கலன்புனைமாதர் கவின்காணும்மே
மூக்கே—உடன்மணமுணரா தொருமணங்கொண்டு
முடைமணமாறி மொத்துண்ணும்மே
வாக்கே—அறம்பொருளின்பம் வீடெனநான்கின்
றிறங்கெடவெரியுந் தீச்சொரியும்மே
செவியே—பிறனில்வாழும் பெண்மைகேட்கும்
புறனுரையன்றி யறனுரைபெறுவே

கையே—மடக்கொடிமாதர் வயிற்பணிசெயும்புல
னடக்கிடுசொருபற் காம்பணிசெயாதே

மனமே—ஏதுசெய்தா லேதாமென்று
காதற்கடலின் கரைகாணுமே

யானே—குடும்ப மென்று மடங்கற் காட்டி
னிடும்பைக்கெல்லா மிடமா யினனே
யின்ன தன்மைய னென வென்னை
யாரணை மறியாக் காரணக் கடவுளென்
றாரணங் கெடுத்த பூரண புராணன்
சொரூபா னந்த னிருபாத ங்கள்
புலைய னேனுக் களிக்கத் தலையே
பற்றா வளித்த பொற்றா ளல்லது
மற்றோர் தெய்வம் வணங்கறி யாவே

கண்ணே—அருவிபாய வருளாணண்ட
வுருவமன்றி யொன்றுங்காணுவே

மூக்கே—மெய்கழல்புறவுளன் மெய்புருந்தருளிய
மொய்கழன்முளரி மணமூரா தும்மே

வாக்கே—கருவினையறுத்த கழலிணை கனவினு
மருவலன்றி மற்றறியாவே

செவியே—கூறுமன்பர் குறைகழற்றொடுத்த
வாயமிர்தருந்து யாராவாமே

கையே—என்பணியுடம்பாம் வன்பிணிமருத்துவன்
றன்பணியன்றித் தானறியாதே

மெய்யே—விழிர்தன்வந்து மெய்யேதன்னுட்
புகுதவுரோமம் புளகஞ்செயுமே

மனமே—நெக்குநெக்கு நீராவுருகி
யுக்குநாத வெளிபுக்கதுவே

யானே—யானெனவின்றி யெல்லாமான
தேனினையருந்திச் சிவமாயினனே
யோதின னெல்லாப் பேதமும் போந்த
வாதனை யன்றி மற்று
நாதனை யொழிய நான்கா ணேனே.

காணும் பொருளெல்லாங் கண்ணாகக் காண்பவர்க்குக்
கோணுஞ் சமயிகடங் கொண்டாட்டம் - வேணுமே
சூழ்ந்திருக்கு நாடுஞ் சொரூபானந் தன்பதத்தே
வாழ்ந்திருப்ப தல்லாது மற்று.

நான்மணிமாலை.

பூவை வண்ணனும் பொன்னொளி வண்ணனுந்
தீவண் ணனுமெனச் சிறந்த மூவரு
முண்ணிகழ் ஞானக் கண்ணாற் காணும்
வண்ண மில்லா வண்ணல் வண்ணங்
காணப் படாஅன் காண்பவ னாகுங்
கேட்கப் படாஅன் கேட்பவ னாகுஞ்
சொல்லப் படாஅன் சொல்பவ னாகு
முயிர்க்கப் படாஅ னுயிர்ப்பவ னாகு
மியக்கப் படாஅ னியக்குவ னாகும்
புணரப் படாஅன் புணர்பவ னாகு
முணரப் படாஅ னுணர்பவ னாகுஞ்
செய்யப் படாஅன் செய்பவ னாகு
மையப் படாஅ வறிவா மெய்யன்
புவியிற் றிண்மை புனலி னெகிழ்பு
தீயின் வெம்மை வாயுவிற் சலனம்
வானிற் புரைத்தல் பானுவிற் றேசு
மதியிற் றண்மை மன்னுயிர்க் குணர்ச்சி
திதியுற முன்னே செய்த முதியோ
னவையுந் தன்னிற் றோன்றிநின் றிறக்க
வவைதனக் கில்லா தாமவி கார
மாகி நின்ற வேகன் சொரூபன்
யோக மெட்டு முணர்ந்த பாகத்
தெருள்புரி சிந்தைப் பெருமா தவர்க
ளருள்விருப் புறவா னஞ்சி நிற்க
மருளா மெனையோர் பொருளா நினைந்தென்
னிருளார் யாக்கை நீக்க வருளா
மின்னொடும் புகுந்துதன் பொன்னடி பணித்தென்
கன்னெஞ் சுருக்கிக் கண்மா ருமை
மஞ்சனஞ் சொரியவே நெஞ்சினை நடுக்கி

பஞ்ச லஞ்ச லென்று தஞ்சமில்
யாக்கையும் பொருளு மாவியும் வாங்கி
நோக்கி னென்வினை நூறிப் பூக்கமழ்
பாதந் தலைமிசைப் பதித்துப் பழமறை
யோது முபாதி யான பேதப்
பந்தமுஞ் சீவனும் பரனு மாகி
வந்த மாயா பேதம் வந்த
விடந்தொறுங் காட்டி யிரண்டு பாதியுங்
கடந்து நின்ற கண்ணே யாகி
புலவு முடற்குயிர் மலரி னாற்றஞ்
சொல்லி னிற்பொரு ளேய்மணிச் சோதி
திலத்தி னெண்ணெய்ப் பலத்தி னின்சுவை
விறகினிற் செந்தீ பாலி னறுநெய்
யென்ன நின்ற விப்பொருளியா
னென்ன வென்னிற் காட்டிப் பின்னர்ச்
செய்தருள் விரகு செப்பும்வகை யறியேன்
கைதவ மின்றிக் கண்டும் பொய்தவ
மெய்யே யுருகி வீழா
வையே கண்க ளருவிபாய் கிலவே.

அருவமாய் நின்றவொளி யப்படியே நிற்க
வுருவமாய் வந்த வொருவன் - சொருபன்றான்
வாழ்த்தி மகிழ்ந்திருக்க மாட்டாதே மாஞாலம்
பார்த்த வுடம்பைப் பரிந்து.

பருதிகள் பல்லா யிரங்கதி ரும்மிரு ளப்பகலா
வொருதிசை கால முலக மொழிவற் றொளிருந்தன்மை
சுருதிக ளாயிரஞ் சொல்லவு நஞ்சொரு பன்பதங்கள்
பொருதிகன் மார்க்கிகள் காண்கிலர் கத்திக்கண் பூத்தவினே.

தரவுரி யவர்வே றில்லை யிச்சகத்
தானமைத் தனனே யென்பார்க் கரிய
செங்க ணெடுமால் செய்தன னென்பார்
பங்கயத் தவனே படைத்தன னென்பா
ரிந்திரன் முதலா விமையவ ராலே
வந்ததிச் சகத்தென மதிப்பார் சிந்தை

பாயி னிலதா மல்ல துண்டா
மாயையிச் சகத்து வந்த தென்பார்
முக்குண வடிவா மூலப் பகுதி
யிக்கட லுலக மீன்ற தென்பா
ரொலியே தந்ததிவ் வுலக மென்பார்
மலியும் வினையான் வந்த தென்பா
ரணுவிவ் வுலகை யாக்கிய தென்பார்
கணிகர் புத்தியின் கற்பனை யென்பார்
சூனியத் துலகு தோன்றிய தென்பா
ரான்றவ ரொருவ ராலு மன்று
பூதந் தன்னின் புணர்ச்சி யென்பா
ரேது மியல்ப தில்லை யென்பா
ரிப்பரி சளவி லாத வாதிகள்
சொற்பொரு ளறிந்து மெய்ப்பொரு ளறியாது
கற்ற வளவிற் றர்க்கஞ் சொல்லிக்
கூவற் பூட்டைக் குண்டிகை போல
வோவற் றுற்பவத் துழல்பவ ராவ
ரோமெனும் பதத்தி னுட்பொரு ளென்று
தூமறை பாவுஞ் சொருபா னந்தன்
மையற் பிறவி வன்பகை யறுக்குஞ்
செய்ய சேவகன் சிவப்பிர காசன்
மனக்கணக் கிடாமல் வந்திப் பவர்க்குத்
தனைக்கணத் தருள வல்ல தத்துவன்
ஞானந் தன்னிற் றேன்றி
மோனந் தன்னின் முடிய முற்றுமே.

நகலுறு மேசொரு பானந்த நாத நதிகதங்கள்
சகலமுஞ் செல்வது சாகரத்தே தர்க்க சாத்திரங்கற்
றிகலுறு மார்ச்சிக ளெல்லா வழியு முடிவிற்சென்று
புகலுறு முத்தியி னென்னுது நின்று பொருதிடவே.

தோற்றுவ வெல்லாஞ் சொரூபன் சொரூபமே
யூற்றமா மண்ணீ ரொளியெங்கே - காற்றெங்கே
வானெங்கே மாலா மனனெங்கே மாமாயை
தானெங்கே யானெங்கே தான்.

கலிப்பா.

திருவாரு மருண்மேகஞ் செழுங்கருணை முகந்தெழுந்தோ
ருருவாயென் சென்னியெனு மொருமலைமா முகடேறி
யிகபரம தறமூடி யானெனதங் கறமூழ்கி
யகமிதம தறமின்னி யமலமெனுந் தனுவிளங்க
சுருதிகளின் முடிபெனவுந் தூயவரு ளாகமமு
மிருதிபுரா ணாதிகளும் விளம்பவினை மறிவரிய
பொருவில்பரம் பொருளதெனும் பொற்புடைய மெய்ஞ்ஞானப்
பெருமழைய தொருமொழியிற் பொழிந்துபிர ளயமதுற
நீங்காத மாயையுட னிகளமதத் துவமடிய
வாங்கார மதமான மாமரங்கள் பறித்தெடுத்துக்
கற்பனையும் விரதமுமாங் கனிபிளிறச் சுழித்தமுக்கிப்
பற்பலவாஞ் சமயமெனும் பறவையின மிரிந்தகல
வறம்பாவ ஞானமுட னரியவளம் பெருகவினை
திறம்பாத நனவதனிற் றிகழ்தரவே குதித்தோடி
யிருவினையாங் கரைபுரள வெல்லையற மிகப்பொங்கிக்
கருதருமா மோகமெனுங் கலக்கமறத் தெளிந்தெழுந்து
சரியையுடன் கிரியைவனந் தானுழக்கி யாதாரங்
கருதுகலை மண்டலமாங் கருமவியோ கதுதொலைத்துப்
பூதவியல் பையைந்தாம் பொழிலழித்து மீதோடி
வேதமறை வருநான்கு மிலங்கிவினைத் தெழிலாரு
நனவதெனு நிலனழித்து நன்கில்கன வதுமருவி
மனமுதலா நான்கினுடன் மகிழ்விடயம் பிராணாதி
நனவெனவே நடித்துவினை நாடழித்துக் காலோடி
புனலரிய சுழுத்தியெனு மொப்பரிய நிலம்புகுந்து
திறம்பாத பிராணாதி திகழ்தரமா மாயையினின்
மறந்தேது மறியாத மாநிலனுங் கழித்தோடி
யவ்வியத்த மெனுமடவி யழித்தறிவாந் தனைநோக்கி
மெய்வியத்த மாந்துரிய மிகப்பரந்து விளையாடி
யகநோக்கி னறிவாகுந் தனையன்றி யேதுமின்றிச்
சகநோக்கிற் றன்கரியாய்ச் சகமதுசாக் கியமாகுங்
கருதரிய காரணமா வங்களெலாங் கழித்துவினை
பெரியநில னதுவழித்துப் பேசரிய நிலன்மேவி
யறிவறிவா னறிபொருளு மறிவரியா மையுமறவே

யிறாகலதா யிவணமென விளம்பவிர கேதுமிலா
வரியநில னதுவழித்தங் களவறவே தான்மிகுத்துத்
தரிசறவே சத்தாதி யுலகழித்துச் சமைந்தெழுந்த
நித்தாதி குணமதெனு நிலன்மருவி நினைவரிய
பற்றாகும் பெருங்கடலைப் பழுதறவே தானாக்கி
யாதியுட னந்தமிலா மலைதிரைநீத் தளவிறந்த
போதவெளம் பரந்துபரி பூரணமோங் கியநாடன்.

உலகினுட னுயிர்பரமா யுணர்வாயொண் பொறிபுலனா
யலகினவை முழுதுமலா வரியபிரா னுருவாகிக்
குலமறையு மரசர்களுந் தடுமாறக் குவலயத்தே
நிலவியெமைச் செய்தவள நிகழ்த்துறுமா றறிகிலமே.
அறிவானு மறிபொருளு மறிவுமறு மமலமதாஞ்
செறிவாகித் திகழுசிவப் பிரகாச ருருவாகி
மறையோடங் கமரர்கண மலறிமுறை யிடப்புவியிற்
சிறியேமைச் செய்தவளஞ் செப்பிடுமா றறிகிலமே.

ஞானவினோதன் கலம்பகம்.

அடியேனை யாள வருண்மேனி சாத்திப்
படிமீதில் வந்த பரனே - கொடியேனென்
றெண்ணு விமைப்பளவி னிங்ஙனே வீடளித்த
கண்ணு கடைபோகக் கா.

ஒன்றாயும் பலவாயு முருவாயு மருவாயு
மன்றாயு நின்றாலு மறிவேநின் னருளுருவம்
மணங்கமழுஞ் செங்கமல மலரடிக்கு வடிவுணர்ந்தா
ருணர்ந்ததுவே வடிவாகு முணர்வேநின் னொளியுருவம்.

தேவர்க்குந் தேவுநீ தெளிவிற்குந் தெளிவுநீ
மூவர்க்குங் கோவுநீ முற்றுயிர்க்கு மூலநீ
எப்பொருட்குந் தோற்றநீ யெவ்வுயிர்க்கும் வீடுநீ
மெய்ப்பொருட்கட் டோற்றநீ மெய்யினர்க்கு மெய்யநீ.

வானுநீ நிலனுநீ வளியுநீ வெளியுநீ
யூனுநீ யுயிருநீ யுண்மைநீ யின்மைநீ
தோற்றநீ யிறுதிநீ துன்பநீ யின்பநீ
மாற்றநீ மனனநீ மற்றுநீ முற்றுநீ.

உறவே யுயிர்கட் குயிரே யொருபற்று மற்றநின்ற
துறவே சுடர்ச்சொரு பானந்த னேதுயர் நிரக்கண்ட
திறவே யழிவுப டாச்செல்வ மேயென்றுந் தித்திக்கின்ற
நறவே சிறியே னுரைப்பதெவ் வாறுனை ஞாலத்திலே.

வேறொன் றெனுமந்த வேறெங்கே யம்மானை
வேறொன்று மில்லை வெறுமறிவே யம்மானை
பேறென்ப திப்படியே பேறென்றோ வம்மானை
பேரின்பம் பேசும் வகையென்றோ வம்மானை.

கூறுஞ் சுருதிகளின் கூறெங்கே யம்மானை
கூறுமற் கூறியவா கொண்டாடா யம்மானை
யாறுந் திறந்தான்வந் தேறுங்கா ணம்மானை
பண்ணைல்சொரு பானந்த னம்பொற்றா ளம்மானை.

அச்சமறுத் தாண்டானென் றாடாமோ வூசல்
ஆண்டருளுந் திறம்பாடி யாடோமோ வூசல்
மெச்சியவன் கழல்பரவி யாடாமோ வூசல்
வெறுமறிவே யானேமென் றாடாமோ வூசல்.

இச்சகத்தே மெய்ச்சொருபா னந்தனெனத் தோன்றி
யின்பவெள்ளத் தழுத்திவிட வெண்ணையுமாட் கொண்ட
பிச்சனென வும்பாடி யாடாமோ வூசல்
பெருங்கருணைப் பெருமானென் றாடாமோ வூசல்.

தானே வணங்குமென் சென்னியென் றுவினைச் சாற்றுதொறு
மூனே யுருகு முரோமஞ் சிலிர்க்கு முகுமென் கண்ணீர்
நானென்று மொன்று மறிகின்றி லேன்வெறு ஞானகனத்
தேனே யருட்சொரு பானந்த தேகந்த செல்வினையே.

புண்ணி யம்மவன் கொண்டதொ ராகமே
போத மேசொரு பானந்த ராகமே
பண்ணி யன்னதி தாரத்த னல்லனே
யன்ப ரானவர்க் கேயத்த னல்லனே

மண்ணி யங்குகா றீர் வானுமாய்
வைத்த ளித்து மறைத்திடு வானுமாய்ப்
பண்ணி யும்மழித் தும்வினை யாடுமே
பழைய நான்மறை யேயுரை யாடுமே.

தந்தையொடு தாய்மைந்தர் முன்பினுடன் வந்தார்
தாரமொடு பேர்மிகு கூறுமுற வாகும்
பந்தமென மேவந்த தொந்தமிவை யொன்றிற்
பட்டதல காணுமிவை விட்டுவிட நேரா
வந்தமுத ருனின்றி யென்றுமுள தானே
யண்டமுத லாயன்றி நின்றபொரு ளுமா
விந்தவுல கேவந்து தந்தருளு மாரு
தெந்தைசொரு பானந்த னென்றுமொழி யீரே.

குத்திரம தாவுலகர் பிச்சையிட வென்றுசில
கூறியருள் வேறு படுமக்
குறத்தியல ணுயகர் திறத்தின்வழு வாதவருள்
கூறுமவள் வேறு நினைவா
மித்தனை விடாய்நினைவை பிட்டுநினை யாயறி
விறந்திட விருந்த படிபா
ரெங்குமறி வேயினிய கம்புற மிறந்திட
விருந்துவி டிருந்த படியே
சுத்தமறை யோதவறி யாதபொரு டன்னைவெளி
சொன்னபடி யுன்னி நமையா
டுய்யசொரு பானந்தர் செய்பகழ லோதொரு
துவட்சியுள சொல்லி விடவோ
வெத்தியெனை யாளுடைய நாயகனு மெம்பணி
யிசைந்து கொளுமோ வெனுமதே
யெப்படி நினைந்தனெகொ லப்படிய தாகுமிதி
லேதமொரு போது மிலதே.

கற்றவர்க ளாவாருங் கருத்துடைய ராவாருங்
கருதிற் றெல்லாம்
பெற்றவர்க ளாவாரும் பிறந்தவர்க ளாவாரும்
பீடு சேர்ந்த
நற்றவர்க ளாவாரு ஞானிகடா மாவாரு
நன்மை யெல்லாந்
துற்றவர்க ளாவாருஞ் சொருபானந் தர்க்கடிமைத்
தொழில்செய் வாரே.

தீர்த்த மாவதுஞ் செய்தவ மாவது
மார்த்த மாவது மர்ச்சனை யாவதுஞ்
சேர்த்த மாவது மென்சொரு பானந்தர்
வார்த்தை கேட்கை மதியே மதிக்கொளே.

## நெஞ்சுவிடு தூது.

செய்யவொரு பானந்தன் சீராரம் போருகத்தா
ளைய மறப்புணரு மன்புடையாய் — வெய்ய
கொடியேன் றனையிக் குரம்பையினின் றேத்த
வடியே னுடன்பிறந்த வன்னே — முடியாத
தேட்டுவிப்பா யுண்மை தெளிவிப்பாய் நீயோரை
யாட்டுவிப்பா யெல்லாநீ யல்லையோ — வீட்டுநெறிக்
கேகாந்த மாய்நீ யிராதபோ தெவ்வுலகு
மோகாந்த காரத்தா னூடாதோ — யோகியர்க
ளுன்னையே நோக்குவதிங் கோதுகின்ற வெப்பொருட்கு
மன்னையே யாவதை யறிந்தன்றோ — வென்னுடைய
தாயே யெனது தமரற்றத் தாவெனுழிப்பாய்
நீயேகாண் வேறில்லை நெஞ்சமே — நாயனு
ங்கந்தையா னீசன் றனைக்கூடி மாறிந்து
வந்தனா னன்றியிடர் மாறுது — சிந்தையா
லொட்டா தவனெங்கே யெங்கேயென் றெவ்விடத்துந்
தட்டாதே செல்லுமிடஞ் சாற்றக்கேள் — சிட்டர்கண்முன்
றெள்ளிய சீராம் சிவலோகம் வைகுந்தம்
வெள்ளி மலையாற் கடல்வேத — முள்ளும்
பரமபத மிந்தப் பாரிலையோ நாதன்
வரந்தரு தென்றில்லை மன்று — திருவரங்க
மண்டபமா மானேக்கா வாரூர் முதலிறைவன்
பண்டிருந்த கோயிலெலாம் பாராதே — தண்டலைசூழ்
பொன்னித் திருமாலிருக்குந்தன் பொன்னருளாற்
கன்னித் திருமேடை காதலித்து — முன்னேயத்
தென்பாண்டி நாட்டைச் சிவலோக மாக்கிய
மின்பா லியம்பு முனையிலங்க — வன்பதனாற்
புண்ணியர்கள் சூழப் புராண வரும்பொருளைத்
தண்ணளியும் பண்டைச் சதுமறையும் — விண்ணவரும்
வந்துசூழ் சிந்தை வடகுடபால் வந்திப்போர்
சிந்தைநோ யெல்லாஞ் சிதையும்வகை — யெந்தைபிரான்
மெய்யன்பர் தஞ்சூழ வீற்றிருக்கு மெய்ம்மையினிற்
பொய்யொன்று மில்லைநீ போகுங்கால் — மையறு

றேறுதிறு னின்னை யுடையா னடியார்கள்
　　போதுபோ தென்றுமற் போகார்கள் 　　யாதவர்க்குப்
பாங்கா வுவந்து பணிசெய்து நீயும்போய்ப்
　　பூங்கோயில் வாய்தற் புறஞ்சென்று 　　லாங்கமரர்
தங்கோனு மாலுஞ் சடாதரனு நான்முகனு
　　மங்கோடிங் கோடங் கலமந்து 　　நங்கோ
னிடன்பார்த் தொதுங்கு மிவருடனே நின்று
　　நுடங்காதே பூங்கழற்கு நோற்றே 　　ருடன்போய்த்
திருவாய் தலிற்றடையச் சீரடியார் தங்கட்
　　கொருகாலு மில்லை யுடையா 　　னருகளவும்
போகலா மென்றுநீ போகாதே பொங்கொளிசேர்
　　மாகலா வல்லியர்கள் வாழ்த்தெடுப்பப் 　　போகமா
மாரா வமிர்தோ டடியார்கள் வாழ்ந்திருக்குஞ்
　　சீரார் திருவோலக் கந்தன்னைத் 　　தூரத்தே
கண்டார்த்து நீயும் பணிந்தேத்திக் காயமுறுந்
　　திண்டாட்ட மெல்லாஞ் சிதையும்வகை 　　பண்டை
யடியா ரடியா ரடியாரங் கேவன்
　　முடியாமே செய்தவர்க்கு முந்தி 　　மடைவெள்ளந்
தானெடுத்த வெல்லையினிற் றந்துவனை யித்தலத்தின்
　　மானிடத்து வந்துதித்த மாமணியே 　　மானடுக்க

* * * *

என்பட் டெறுங்கவலென் றின்பத் திருத்தோண்மே
　　லின்புற் றிறையுடனென் றாகாதே 　　யென்பாவ
மங்ஙனே செய்ய வடுக்கி னடியேனு
　　மிங்ஙனே மாண்டுவிடு மித்தனைக 　　ளெங்ஙனே
துன்புறுவ துன்பிறவித் தொன்னெடுங்கா லந்துணிந்தா
　　யின்புறுவ தப்படியே யின்புறுவா 　　யன்பதனு
ளென்று மடியருட லில்லானை யோருங்கா
　　லென்று மடியருட லில்லானைப் 　　பின்றுமல்
வெய்ய திரிபுரமுஞ் சுட்டானை மெய்ப்படவே
　　ஐய மறையாலுஞ் சுட்டானை 　　மெய்யாக
வானு மடிமைபுகுந் தாளானை வல்வினையேன்
　　றானு மடிமைபுகுந் தாளானை 　　வேனில்வே
ளெய்யப் படுங்கோலஞ் செய்தானை யென்னையிங்ஙன்
　　செய்ய திருக்கோலஞ் செய்தானை 　　யையமற

பாடத்தா வென்றும் பணிந்தென்றும் பாதமே
சூடத்தா வென்றுந் தொழுதேத்தி யாடித்
குறைகா லமுமடியார் குற்றேவல் செய்ய
விறைவா வருளென்றென் றின்னே முறையோவென்
றுற்று தழிவானை யஞ்சேலென் றாருளாற்
றேற்றாய்நீ செய்தகன்ற சிந்தைநோய் மாற்றாயென்
றெல்லாப் படியுமிரந்தான் மறுமாற்றஞ்
சொல்லா திரானிருந்தாற் சொல்லுதற்கு நல்ல
மதிசொல்லக் கேளின் மலரடிக்கு நோற்க
விதியிலார் செய்குவதென் மேலென் றிதுவேநீ
விண்ணப்பஞ் செய்து வினையே னடிகூடப்
பண்ணத் திருவுள்ளம் பற்றுவித்தங் கண்ண
லருண்மாலை வாங்கிக் கொடாயேனைக் காயு
மருண்மாலை வாராமுன் வா.

*    *

அல்லா லயனு லனங்கனு லன்னையாற்
பொல்லா வினையேன் புகுந்ததுய - ரெல்லாஞ்
சொருபானந் தற்குத் துயரறுத்தாட் கொள்ளும்
பெருமாற்கு நெஞ்சமே பேசு.

அஞ்ஞவதைப்பரணி.

படைப்பானும் வியன்ஞாலங் காக்கு மாழிப்
படையானும் படைத்தளிக்கப் பட்ட வெல்லாந்
துடைப்பானுஞ் சுருதிகளுந் தொழுது போற்றுஞ்
சொருபானந் தச்சுடரைத் தொழுதல் செய்வாம்.

தலைபலவாய்ப் பெயர்பலவா நதிக ளெல்லாஞ்
சாகரத்தி னொருநீராந் தன்மை போலப்
பலபலவாய்ச் சொல்லுநெறி யெல்லாஞ் சொல்லப்
பட்டவொரு பொருளிணையாம் பணிதல் செய்வாம்.

அழியாத வீடென்னும் பழைய வூர்கண்
டறியாதா ரதுகாண வேண்டி யாறு
வழியாகுஞ் சமயங்கள் கொண்டு தம்மில்
வழக்குப்பே சுஞ்சழக்கு மாழ்க வென்றே.

கடைதிறப்பு.

மடைய வொழிமறு மதநிலை திதிபெறு
மமிர்து பருகிடு மவர்கடை திறமினோ.

உலக மனித்தமெனு வுணர்வது நித்தமெனு
வுருவரு வற்றவரோ ருருவு தனைக்கொடுநுங்
கலக மனத்திடையே யிலக முதற்பகரும்
கலைகளை விட்டெறிவீர் கடைதிற மின்றிறமின்.

நம்மையா ளுடையநா யகனையே நனவினுங்
கனவினுங் நவிலுமா றன்றியே ரொன்றுநஞ்
செம்மையா னதுதெரிந் திடுதல்கண் டிலமெனத்
தெரியுமா தரவினிர் கடைதிறந் திடுமினோ.

விழியாலுல கழியாவெறு முணர்வாய்விடும் வகையா
லொழியாவமிர் துண்பீரும துயர்பொற்கடை திறமின்.

ஒழித்தே யுள்ள முணர்வடைய
வொழியா வொருவன் வருமளவும்
விழித்தே யுறங் தும் விளங்கிழையீர்
மேவுங் கபாடந் திறமினோ.

உருநாம மொன்றுமிலா வொளிகருணு கரனென்னுந்
திருநாமம் பெறவந்த திறன்பாடத் திறமினோ.

செத்தபிண மிடுகாடு சுடுகா டென்று
செப்புவர்க ளறியாதார் சிலர்தந் நெஞ்சத்
தொத்ததுதா முணராதுண் டுடுத்து வாழு
முயிரோடு பிணம்பயில்கா டொழிய விட்டே

அறங்காட்டி னிருசெவிமீ தழற்காட்டி னுற்போலு
மலகை வாழும்
புறங்காட்டிற் கொப்பதுமிப் புறங்காடே வேறுண்டோ
புறம்பு கூற.

வெய்யமற மறப்பெருத்து விடயமெனி னெப்பொழுதும்
வெறுத்து மெய்யே
யையமறத் துறந்தவர்க ளருவருத்த திதுசுடுகா
டாகை யன்றோ,

தின்றுலுஞ் சிலரரிந்து தீற்றிடினுந் தீக்குளே
தள்ளி னுலுங்
கொன்றுலு மஞ்சாதார் குலைகுலைந்த திக்காடு
கொடிதா யன்றோ.

பேய்.

ஒன்றென்று நின்றசில பலவென்று நின்றசில
வுபயத்து நின்ற சிலபே
யன்றென்று நின்றதனை யாமென்று சொல்லியுட
லடகிட்டு விட்ட சிலபேய்.

இலதென்று நின்றசில வுளதென்று நின்றசில
விறைதன்னை நெஞ்சி னுணரும்
வலதின்றி மங்குமல வுடறங்கு கின்றதவ
வடிவங்கள் கொண்ட சிலபேய்.

தண்டைப் பிடித்தசில சிகையைத் தரித்தசில
சடையைப் பரித்த சிலவே
முண்டித்து விட்டசில முடியைப் பரித்தசில
முகவிற் பொறித்த சிலபேய்.

அலைகெட் டிரானபல தலைகெட்ட நூல்பழகி
யதுமுக்ய மாக மிகவே
கலைகற்ற பேய்களொடு சிறுகிட்டு லாவுவன
கரையற்ற பேய்க ளுளவே.

பருகு ளத்தமிழ் தம்பொழி நூல்களைப்
படிக மோதிப் பழித்துக் கழிப்பன
இருகு ளத்தொடு தர்க்கங்க ளேயுரை
செய்யு நூல்கற்றுத் தெத்தர்க ளாவன.

வயிறு சாலும் வளர்த்தற் பொருட்டிந்த
வானஞ் சென்று வரக்கா லுடையன
கயிறும் கம்பையு மேடும் பிறர்க்கொரு
காட்சி போல்வரும் புத்தகக் கையின.

உழலைத் தாளினை யாதன வுணவிற் காவன தேடுவ
வுணர்வைத் தானுண ராதன வுலகத் தார்நக வாழ்வன
கழலைத் தானுரை யாடுவ கதறத் தான்முசி யாதன
கனகத் தேமன னுவன கருவிப் பேய்பல கோடியே.

மெய்வருந்திக் குரவனடி விரும்பா தொன்றும்
விட்டிடனுந் தொட்டிடனு மறியா தேகின்
றவ்வருகு பட்டனவாய் மிகவுந் தம்மை
யகமகிழ்த்துத் திரியும்பே யனேகங் கோடி.

### உவமை.

அருவாய பரனுருவா யருள்வ தொன்றை
யஞ்சாதே சிலவளவை கொண்டு தாமுங்
குருவாகிச் சிலகுருப்பேய் கூறுந் தன்மை
குருடர்க்குக் குருடர்நெறி கூறல் போலும்.

### தேவி.

தத்தமதிகொடு தர்க்கசமயிகள் சத்தமறிவதொர் தத்வமோ
சித்தமயலது கெட்டவவர்தெரி சிக்கவுரியதொர் சித்திபோ.

### உட்பரிவாரம்.

உரையிறந் துணர்விறந் திடனுணர்ந் திடுவரே
யுணவுமங் கையில்வரும் பலியுகந் திடுவரே
திரையிறந் தளவிறந் துவபரங் கடலினை
செறிதரும் படிவருந் திருவகம் படியரே.

தமர்பிற ரற்றார் சமயமு மற்றார்
சகவியல் பற்றார் தமையொழி வற்று
ரமர்விட மற்று ரறிவயர் வற்று
ரறமற மற்று ரவரடி யாரே.

இருணெறி விட்டா ரிருமையும் விட்டா
ரிலக நடப்பா ருலகு கடப்பா
ரருணெறி நிற்பா ரமர விருப்பா
ரறிவுரு வுற்று ரவரடி யாரே.

### குறி.

பூண்கின்ற வுடலாதி யாமிந்தப் புவனத்திற்
காண்கின்ற பொருளெல்லாங் கனவாகக் கண்டனனே.

### காமாதி படைச்சேருக்கு.

கோப மிக்கபோ தெவர்க ளாறுவார்
குறுகு வோர்தமைக் கொடிய நோய்புகுஞ்
சாப மிட்டுமா தவர்களாயினூர்
தலைமை மிக்கதந் தவமி ழப்பரே.

### ஞானவிநோதன் படைச்சேருக்கு.

மாசாய நாவுடையார் வாய்திறந்தா லவர்களுடன்
பேசாம லிருந்துவிடு மஃதன்றே பெருந்தகைமை.

வைதாரை வாழ்த்தினர்போன் மறந்தென்று மறக்கொடுமை
செய்தாரை யறியாத செயலன்றோ செயலாதல்.

பொதுவதுவா நிறைந்தவந்தப் பரம்பொருள்போல் யாவர்க்கு
மதுவதுவா யிருந்துவிடு மஃதன்றோ வவிரோதம்.

எரியான கோப மெழுபோதி னுறி யினிதாய கூறியெதிரே
சிரியா திரர்கள் பெரியோர்கள் சிற நினைவார்கள் வேறு சிலரே.

வாணு ளொழிந்தாலும் வாய்விண்டு தாம்வேண்ட
நாறு தொழிகுவரோ நன்றாய நாவுடையார்.

புலன்றலை கொண்டேறு புன்போக மேன்மேற்
புணர்ந்திட வுண்டாகி வந்தாலு மாறா
வலந்தலை கண்டாசை யொன்றோ டுறாதே
யறிந்தவர் சந்தோடம் வந்தாறி னரே.

அஞ்ஞானழிவு வகை.

இருளொளித் திரவிமு னிற்குமோ பஞ்சுதா
னெரியின்முன் னிற்குமோ வெங்கனே யரவமுங்
கருடன்முன் னிற்குமோ ஞானமே வந்துறுங்
கண்ணின்முன் னிற்குமோ வெண்ணுறுங் கன்மமே.

அழியுமிக் காயமுங் கழியுமுன் னிளமையு
மன்புறுங் கிளைஞரு மின்புறும் போகமு
மொழியுமிச் செல்வமொன் றுகலீ யுன்னியோ
வுடையநா யகனைநெஞ் சுணர்வுறு தொழிவதே.

குறித்திடலற் றிடத்ததனைக் குறிப்பவரைக் கொடுத்தே
கறுத்தவிருட் டலைக்கதுவக் கரித்தனைவிட் டழித்தே.

சும்முலக்கை.

அருவரையா யிரஞ்சிரங்கொண் டருமறைக ளறியாத
பொருபரையாங் கண்டனமே சும்மேலோ சும்முலக்காய்.

மாயவடி வளவாகி மதியிலியா வுழல்வேற்குத்
தாயவடி குட்டினன்காண் சும்மேலோ சும்முலக்காய்.

பின்னமொழி வகைபுகுந்தென் பெருங்கருணைப் பெருமானார்
சொன்னமொழி யொன்றேகாண் சும்மேலோ சும்முலக்காய்.

நம்மாலே காண்கின்ற நாமும்போய் நாமாகிச்
சும்மாவே யிருந்தனங்காண் சும்மேலோ சும்முலக்காய்.

குணலை வாழ்த்து.

என்னை யொளித்தமை பாடீரே
யென்னுயி ருண்டமை பாடீரே
தன்னை யளித்தமை பாடீரே
தத்துவ நாதனைப் பாடீரே.

துன்னி நிறைந்தொழி யாது நின்று
சொரூபா னந்தச் சுடர்வையந்
தன்னி னடந்தமை பாடீரே
தானெனை யாண்டமை பாடீரே.

மோகவதைப்பரணி.

குரவ னடியிணை மருவி யுலகவர்
கொடிய பவவிருள் குலையுமா
றிரவு பகலற நிகழு மறிவொளி
யிதய வெளியினி னிலகவே.

காடு.

உன்னவரி தாயதிரு வுருவுதன்னை
யுணருமதி மாறொழிய மானு மில்லை
பன்னுகலை யொழியவொரு கலையு மில்லை
பரமாம்ச மென்பதல்லாற் பறவை யில்லை.

தேவி.

அயர்வு நினைவறு மகமென் மலரினி
லகில புவனமு மில்லையே
யுயிரு நிகழ்விலை பரமு நிகழ்விலை
யிறைவி யுணர்வொளி யுள்ளதே.

பேய்.

நாத னறிவென்று மாமறை நாலின் முடிவெங்கு மோதிய
ஞான நெறிகண்டும் வீடுற நாளு நினைவின்றி நீள்வினை
வேத நெறியென்று மீள்வறு வீடு பிறிதின்றி வானக
மேவு மிதுவென்று நாடொறும் வேள்வி சயநின்ற பேய்சில.

ஆனவுட லிந்தி யாதிக ளாடு மனபுந்தி மானத
மாருயிர்கள் பந்த வீடுக ளாதி யிறையென்ற போதமும்

சயமுற்றுப் பொருண்முற்றுத் தமிழிட்டுச் சொலவா
ரியமிட்டுச் சொலவொட்டொட் டெனவட்டித் திடுமே.

குருதர்க்கத் தினில்வெற்றிக் கொடியிட்டுக் கொளுமே
யொருதர்க்கக் கழுதைச்சொற் றொருதர்க்கத் தழுதே.

உவமை.

உட்கி டந்தமல னொழிவு றாதபுனல்
கொண்டு டம்புகழு வுற்றபேய்
மட்கு டந்தனின் மலத்தை வைத்ததுபு
றந்து டைப்பவனை மானுமே.

சும்முலக்கை.

உகைக்குமனத் தாருடைய வரனெல்லாங் குரவனடி
துகைக்குமள வானதுகாண் சும்மேலோ சும்முலக்காய்.

ஒன்றாயும் புறக்கரண முட்கரண மொடுங்கிடவே
தோன்றாமை தோன்றியதே சும்மேலோ சும்முலக்காய்.

ஏன்றுமென் றறிந்திலேயா சகலமுமாய் விடத்தோன்றுந்
தோன்றாமை தோன்றியக்காற் சும்மேலோ சும்முலக்காய்.

சான்றாகு மறிவொழியச் சாக்கியமாஞ் சகத்தென்றுந்
தோன்றாது கண்டாயே சும்மேலோ சும்முலக்காய்.

விரியுமிடத் துலகறியும் புரியுமிடத் துணர்வறியுந்
துரியமதிற் றுரிசளகாண் சும்மேலோ சும்முலக்காய்.

அங்குணரா மையுமுணர்வு மாகியகோ ளறவிருந்து
தங்கினர்காண் சுகமடைவார் சும்மேலோ சும்முலக்காய்.

தெரியாதென் பதுந்தெரிந்த விடத்தல்லாற் றெரியாத
துரியாதி தம்மிதுகாண் சும்மேலோ சும்முலக்காய்.

துரியாதி தந்தன்னிற் புரிந்தாலுந் தொல்பிறவித்
துரிசான தொழியாகாண் சும்மேலோ சும்முலக்காய்.

அஞ்சுதல்கண் டாயதிகம் பிறப்பதுகண் டாய்துரியந்
துஞ்சல்பிறப் பொழித்தல்காண் சும்மேலோ சும்முலக்காய்.

கேட்டதென் றறியாத வதீதத்தைக் கேடின்றிச்
சூட்டினது பரவுடல்காண் சும்மேலோ சும்முலக்காய்.

சொல்லாத மறைமுடிவைச் சொல்லாமற் சொன்னதனைச்
சொல்லாட விரகுண்டோ சும்மேலோ சும்முலக்காய்.
சாத்திரமென் செயநமக்குத் தர்க்கமய லறுத்தபிரான்
ஸ்ரோத்திரமே வேண்டுவது சும்மேலோ சும்முலக்காய்.

### கூழ்வார்ப்பு.

நினைத்துமறந் திச்சகத்தை யெல்லாநே ரேயொறுத்துப் [ரே.
பாராண்ட, மனத்தை யறுத்துமறு மாற்றந் தின்றுகொள்ள வாரீ
போக்கும் வரவு மறுத்தகழல் போற்றிப் போதக் கூழுண்டு
வாக்கு மனனு மறந்திடத்தே வாளா விருக்க வாரீரே.
ஆக்கை யறுத்துக் கரணங்க ளறுத்துச் சிவ பரமறுத்து
வாக்கை யறுத்நா னந்தக்கூ ழுண்ண வாரீர் வாரீரே.

இல்லறந் துறவென் றிலை வேண்டினார்
யாவ ரேனும் வருகென் றிடுவதே
நல்ல றம்மென யாவர்க்கு நல்கினார்
நாதர் வெல்களக் கூழுண்ண நல்கியே.

### குணலைவாழ்த்து.

மரண பவங்கண் மடிந்திடவே
வடிவு புனைந்து வரும்பெருமான்
சரண நிகழ்ந்தமை பாடீரே
சந்தத மப்பதம் பாடீரே.

பவமாயம் வேரறப் பார்த்திறைவன்
பதத்திலும் பண்டை நாமொழிந்து
சிவமா யிருந்தமை பாடீரே
சிவப்பிர காசனைப் பாடீரே.

புத்திக்கு மெட்டரி தாயபொருள்
புவனியில் வந்தைம் புலன்களினுந்
தித்திக்கு மாறினைப் பாடீரே
தேசிக ராசனைப் பாடீரே.

ஞான நடங்கண்டு முன்னநம்மை
யோருரு வாய்வந் துணர்த்திக்கண்ட
ஞான நடத்தனைப் பாடீரே
நடரா சன்றனைப் பாடீரே.

## மங்கலவாழ்த்து.

புரியும் விழிதந்த கழல் வாழியே
புறமக மிருந்த பொருள் வாழியே
துரியமு மிறந்த சுடர் வாழியே
சொலவற விருந்த சுகம் வாழியே.

பேத மபேத மறுத்தவன் வாழியே
பேதமை தீர வளர்த்தவன் வாழியே
போத மபோத மறுத்தவன் வாழியே
பூரண போத சமுத்திரம் வாழியே.

துறந்தவர் கைப்பட் டிருந்தவன் வாழியே
தொடர்ந்து பிடித்துப் புரந்தவன் வாழியே
யிறந்த வுளத்திற் றிகழ்ந்தவன் வாழியே
யிரங்கி யெனக்குத் தருங்கழல் வாழியே.

மறந்து நினைக்கப் படாதவன் வாழியே
மயங்கு மனத்தர்க் கிலாதவன் வாழியே
பிறந்து மரிக்கப் படாதவன் வாழியே
பெருங்கரு ணைக்கற்ப காடவி வாழியே.

உருவருவொ டௌதிலது மொழியில்பரன் வாழியே
யுளபொருளை யுணரிலவை யுதறுமவன் வாழியே
கருவழியை யழியவரு காசரணன் வாழியே
கழலும்விழி கருணையுட னருள்சொருபன் வாழியே.

தொழுமவா ரவிவாங்கி யவங்களுஞன் வாழியே
சுகமக மானசாந்தி நெஞ்சினுன் வாழியே
யெழுபவ நாசமாஞ்சொல் லொன்றினுன் வாழியே
யிமையவர் மூவர்தாந் தொழும்பிரான் வாழியே.

அலைவ மென்றங் கலையிறு தர்க்கப் பாசமோசகன் வாழியே, யதுநீ யென்றங் கருமறை யுச்சத்தி னேறு மோர்பொருள் வாழியே, சொலவர வென்றுந் தொடர்வரு சற்சிற் சுகாநி காரணன் வாழியே, சொருபா னந்தன் கலைபுனை தத்துவப் பிரகாச யாமுனி வாழியே.

அமிர்தசாரம்.

எந்தக் குலமாயென் னெந்தக் கலியாயென்
னெந்தச் சமயத் தெவராயென் - சிந்தைத்
துறவிதருஞ் சொல்லே தூய்தாவ தல்லாற்
பிறவிதருஞ் சொல்லே பிற.

இம்மை மறுமை நிலையன் றெனவிடுக
செம்மை நெறிநடக்க சித்தந் - தமைமீட்க
தம்மை யுணர்ந்தோர் தலைப்படுக தத்துவத்தின்
மெய்ம்மை யறிக விரைந்து.

பெறலரிது மக்கட் பிறவிபெற் றாலு
மறிவுநா லாய்த லரிதே - யதினுந்
துறவுடைய ராத லரிதே யதின்மெய்
யறிவுடைய ராத லரிது.

அறிவுள்ள தல்லதில தென்றறிவான் ஞானி
யறிவான் முழுது மறிவ - னறிவை
னறிவறி யாமை யறவிருந்த வண்ணல்
மறையோது வான்பொரு டான்.

அருந்தல் பொருந்த லவையொக்கு மேனும்
பெருந்தகையோ ருள்ளம் பிறிதே - திருந்து
மனத்தின்வே றேபதியு மைந்தனுமம் மாதின்
றனத்தின்வே றல்லவே தான்.

தீதென நன்றெனச் சிந்திப்ப ரோதெளிந்தோர்க்
கோதன மன்றோ வுலகெலாம் - பாதவத்திற்
றீராத னன்றுதல் சிந்தித் திடச்சாத
வேதாவிற் குண்டோ விதி.

விண்ணே பெரிது மிகவீசன் கைவழியா
மண்ணே யதுபெற்ற மாமாயை - யெண்ணிற்
சிவனிற் பெரியாரிற் சிந்தையிலார் வைத்தா
ரவனிற் பெரியா ரவர்.

எங்கே வெளிப்படுக வென்றோ னெழின்ஞானி
யங்கே வெளிப்படுதற் காரணித்தே - யெங்கும்

வொழிந்தமா மாயவிரு ளுள்ளொளியா யும்ப
ரெழுந்தஞா னத்தா விறும்.

பிண்ட வுருவிற் பிறத்தலாற் கர்ப்பத்திற்
பிண்ட வுருவா யிருத்தலா லுணுளும்
பிண்ட மிடவேண் டுதலா லுடற்பிண்டம்
பிண்ட மெனப்பேர் பெறும்

திடம்படு சீலந் திகழ்கல்வி கேள்வி
யிடம்படு மேதைசீ ரெல்லாம் பசுமட்
குடம்படு நீர்போற் குடும்பியைக் கைவிட்
டுடம்பொடு கூட வரும்.

சிந்தா குலமனிதர் சீசீ செவிமுதலா
மைந்தானு மீடழிவ ரல்லரோ - வைந்திலொரு
வேட்கை யசுண மிபம்விட்டின் மீன்வண்டு
கேட்கைமுத லோரொன்றிற் கேடு.

இன்னலா மீட்டுங்கா லீட்டினால் யாவரையு
மொன்னல ராக்கு முயிரிறுக்கு - மன்னு
மனத்தைவே றும்மயக்கு மாநடுக்கஞ் செய்யுந்
தனத்தின்வே றுண்டோ தவறு.

மடம்படு மிப்பிறவி மாற்ற நினைவார்க்
குடம்பு மிகையென் றுணர்வுற் - றடங்கத்
துறவா மனிதர்க் கெளிதன்றே துஞ்சிப்
பிறவா நெறியைப் பெற.

ககனமு மான்மாவுங் காரணனு மில்லை
சகலமு மாமதித்தஞ் சார்வார் - பிறவி
வகைவினை யுண்டு மதிபொன்ற மாய்தல்
சுகதன்றன் முத்தித் துணிவு.

காரணமே யான்மாக் கணபங்கி நித்தப்
பூரணமா மீசன்வான் பொய்யே - மாரணமே
வீடென்று முத்திகளின் வேறுவிப் புத்தனெனு
மூடன்றான் சொன்ன மொழி.

உருவரு வுண்டில்லை யொன்று பல-
பொருளியல்ப தானளமே

சடர்பல ராயவத்தை சார்தலான் மாக்கள்
கடனென்றான் வைசேடி கன்.

ஆவ சடங்க ளான்மாவே யாமனம்போ
லோவு மவத்தையுறு முன்னுணர்விற் - பாவனையாற்
கூடுமோ வீடு குணம்போய்க் குணியுண்டோ
ரூடுபோய்த் தியுண்டோ சொல்.

பகுதிபுமான் மெய்ப்பகுதிப் பாலே விகுதி
சகலந் தனதென்கை பந்தமாம் - விகுதியாம்
யாதும் பகுதி யுடையதெனக் கில்லையெனும்
வேதனஞ் சாங்கியன்றன் வீடு.

முன்னரே யுண்டேற் பகுதிதான் முத்தியிலே
பின்னுஞ் சடமாம் பகுதி பெறக்கூடா
தன்றாலே வீடெய்த மாகினீ சற்குருவைக்
கொன்னே விரும்பியதென் கூறு.

மடவன் பசுபதி வாலறிவன் பாசஞ்
சடமா மியல்பு சமமா - முடன்வியாபம்
பண்டுளவை மூன்றும் பசுபாசம் போயிறையைக்
கண்டுறைதல் சைவன் கதி.

ஈசனது தோற்றமே தெல்லாம் வியாபித்தாற்
பாச மிலாதான் பதியென்னிற் - பாசமெனில்
விண்டிடா தாம்பதியான் மெய்காரணம் வேறுண்டாங்
கண்டிடா நின்ற கதிக்கு.

பாசமாம் பந்தம் பசுப்பெத்தன் முத்தனு
மீச னநாதி யிலர்ஞான - பூசையா
லம்மோக மாற்றி யவரொன்றல் வீடென்றான்
சம்மேனி தச்சைவன் றான்.

பெத்த மநாதி கெடுமாயின் பின்கெடுமே
முத்தியும் பாசந்தான் முன்னுள தேற்கெடுமே
சத்தி யெனில்வெம்மை போறுற் றழலுண்டோ
யுத்தி யிலதிரண் டொன்றாகா தொன்றுகெடின்
முத்தி கெடலோ மொழி.

அகில மிறைமுன் பனுத்திரளை செய்யுஞ்
சகலாத் துமாக்க டனையா மலங்க

பேறிழ வில்லை பெறுவானு மீவானும்
வேறில தென்றறிகை வீடு.

தானே சகத்தாய்ப் பகரினது தான்சடமாந்
தானே பிறப்பாக்கிற் றொழிக்கிற் - றானேதன்
கண்ணைக் கலக்கிக் கடவுளா முன்சிவம்போய்
வெண்ணெய்க் கழுமோ விளம்பு.

நாராய ணதிதிரு நாமந் தரித்தலா
லாரா தனையா லடிமையெனப் - பேராழி
தோயிற் பொறியால்வை குந்த பதந்தந்தை
தாயிற் றருஞ்சீ தரன்.

மண்ணு விடுநாமம் வாளெரியா விட்டகுறி
புண்ணு முடம்பொழிந்தாற் போகாதோ - விண்ணாட்டின்
வைகுந்த மேவுதிரு மாலுருவங் காணவொரு
மெய்கொண் டிருக்குமதோ வீடு.

அவிகார மேபிரம மாயையினு லாகி
யிவிகார மெல்லா மிறக்கும் - பவமான
வூனதும்பொய் ஞான முதித்ததும்பொய் யஞ்ஞானம்
போனதும்பொய் மற்றுமெலாம் பொய்.

அவிகாரத் தன்மை யவிகாரங் காணி
னவிகாரந் தானல்ல வாகு - மவிகார
மாயை யறியி னவிகார மாயையய்
வீயுமத் தாரறிவார் வேறு.

தோற்ற நிலையுறுதி செய்தலாற் றேல்லுலகி
னேற்ற விருளெல்லா மிரித்தலாற் - போற்றவருஞ்
சங்கரன்மா லன்முகனுய்த் தற்பரனாய் நிற்கின்றான்
வெங்கதிரோ னல்லதில்லை வேறு.

ஈசன் முனிய வொலிறு விழவிழ்ந்தான்
மாசுணை வாயின் மறைப்புற்றான் - றேசினு
லற்பவமா முள்ளத் திருளொழியா னொருருவன்
றற்பரனு வல்லனோ தான்.

போதல் வருதலுளன் பூரணனு மல்லனிவன்
பாதிகா டோன்றான் பகலவன்றன் - சோதியா

யிந்திர சால விருளொழியா னென்னலாஞ்
சந்திர னென்செயலாந் தான்.

தனுகம் வினையே தரில்வினைதான் செய்ய
முனுக முளதாய் முடியு - மனுதியெனி
லெஞ்ஞான்று முத்தி யிலதாகு மிவ்வூழிற்
கஞ்ஞான மாகு மடி.

மந்திர மானதெலாம் வார்த்தையே யன்வார்த்தை
யந்தர வானின் குணமாகுமே - யந்த
பலியா தருள்குருவைப் பாவியா துற்றில்
வலிதா னவன்றன் வலி.

மருந்தா னுருவரிம் மாநீ ருலகத்
திருந்தா யெனக்கண்ட தில்லை - மருந்தாவ தென்
யார்க்கு மிழிவு விளைப்பதாம் யாக்கையெனு
நீர்க்குமிழி நூன்கட்டி நீ.

ஆதியே தந்தா னிலாமை யறிந்தவர்கள்
சாதியே தந்நெறிதாஞ் சாற்றுவரோ - சாதிநல
நல்லார் தொழுதக்க தான முடையரோ
யல்லா ரிழிகுலத்தா ரார்.

அறன்சாரா வுள்ளத் தறியா வழுக்குப்
புறன்சாரு நீராலே போமே - திறன்சாரா
வோடுந்நீர்த் தந்தா னுடற்கே யுளம்விளக்க
வாடுந் தீர்த்தந்தா னறிவு.

சலமுழுகி நீர்தேடிப் பூத்தேடிச் சாணி
நிலன்மெழுகி யர்ச்சியா நிற்பர் - புலநிலவு
முள்ளத்தே நின்ற வுலப்பில்லா மானந்த
வெள்ளத்தே நின்று விடாய்த்து.

இந்நெறி யிந்நெறியென் றெம்மார்க்க மும்பகர்க
வந்நெறி யெல்லா மறிந்தவறி - வெந்நெறியா
லெய்தலா மந்த நெறியென் றறைந்தமறை
மெய்தவா விட்டி னெறி.

ஓது முறையின் பொருளுணர்ந் துன்னபடி
போத மறியாப் புலவர்தா - மோது

மொருகோடி நூறு யிரத்தானு முண்மை
யருகூடு போகா ரவர்.

அறியப் படுமளவை கொண்டளவை யெல்லா
மறியக் கடவ வறிவை - யறிய
விருப்புற் றிடுவான் விறகதனைக் கொண்டு
நெருப்புச் சுடுவா னிகர்.

தர்க்கநெறி யென்றக்காற் றம்ப மிகப்பெருகுந்
தூக்க மிகப்பெருகுந் தோற்றக்காற் - றர்க்க
நிலைபெறுவ தொன்றல்ல நெஞ்சுகன்றக் கத்துந்
தலைபறியே யெய்துபயன் றான்.

உரைத்த நுரையா நுரைக்குஞ் சமயம்
பரத்தை யறிவுற்ற பான்மை - மரத்தி
னவயவத்தி னேரொன் றறிந்தார் மரமா
வவயத்தைக் கொண்டவா றும்.

கருத்துகட் கிடாய்க் கறிபலவா விச
னுரைத்ததென் றென்றுணர வொட்டா - புரித்திங்
கிலதுள தென்னு முளதில தென்னுங்
கலதியர்க டஞ்சமயக் கத்து.

எய்த வெளிதா மிறையரு ளில்லையே
லெய்த வரிதா மியாவர்க்கு - மெய்தெளிந்தா
லெம்மார்க்கத் தோடு மிகலற் றிருக்குமதே
சன்மார்க்க மாகுநெறி தான்.

இயமநிய மாதனம் வாயு விசையங்
கமையுறு பிரத்தியா கார - மமைவுறு
தாரணை தக்க தியானஞ் சமாதியென
வேரணியும் யோகங்க ளெட்டு.

ஏம முறுமியம மீரைந் திவைதம்மிற்
றூய்மை யருளூண் சுருங்கற் பொறைசெவ்வை
வாய்மை நிலைமை வளர்விப்ப மாற்றுவ
காமங் களவு கொலை.

வாய்மை யெனப்படுவ தியாதெனின் வாய்மையினத்
தீமையி லாதவெனச் செப்புவர்க - டேய்மைமிக

வேதாந்தம் பரமா முலப்பினை யொன்றென்பர்
வேத முடிவுணர்ந்தோர் மெய்.

மம்மர்செய் யாமை வதையாமை யெவ்வுயிர்க்குந்
தம்முணர்ந்தோர் தம்மை வதையாமை - தம்மை
யெறிபடை கானீ ரெரியிற் படாமை
யறிகை யெனவறிவா ரால்.

மருளையில் வஞ்சனையி லெப்பொருளு மெனவு
மருளை யெண்ப ரறிஞர் - மருவியபிற்
றன்ன தல்லாத வுடம்பைத் தனதென
வென்னல் களவா மென்று.

அரிவையர் தம்மை யணுகாமை யாதும்
பிரம சரிய மெனும் பெறுதற்
கரிய பிரமத்தோன் றுரைப் பிரம
சரிய முடையவரே தான்.

தாயொடு தந்தைமகத் தாரத்தால் சுற்றுவார்
தீயவனு மேமொக்கக் காணுமது செய்கையாம்
தூய நிலைமை சுருதி நெறிக் கணிவு
தாயாரோ மென்புகுதார்.

பிழைசெய்தார் தம்மைத்தாம் வென்றுவிட வேண்டு
மிகல்செய்யா தென்றும் பொறுக்க - விகல்செய்யிற்
கோபத்தை யொன்றையுங் கொல்க வதுவல்லா
றுபத்தை யெல்லா மறும்.

அற்புத யோகிக் கறுகல மாவது
நற்பது ருவ தெனவுரைக்க லாமென்ற
பொற்புறு சீரில் புறத்தூய்மை யுட்டூய்மை
சிற்பொருளா லுள்ளத் தெளிவு.

தவஞ்செபஞ் சந்தோட மாத்திகந் தானஞ்
சிவன்றரு கல்விரதஞ் சித்தாந்தக் கேள்வி
யுவந்த சிவபூசை யொண்மதிநாண் பத்து
நியத்த நியமங்க ளாம்.

தவமென்ப தூன்சுருக்கித் தம்முடம்பை வாட்ட
லெவனுண் பிறவியெனக் கெய்திற் றெத்தாலே

சிவமான முத்தித் திறனேதென் றோர்தல்
பவமாறப் பண்ணுந் தவம்.

கூடியது கொண்டமைதல் சந்தோடங் கோகநக
னாடி முதலா நவில்கின்ற வெப்பதமும்
வீடிப் பரமுளத்தே மெய்காண் மகிழ்ச்சிசந்
தோட மெனுஞ்சுருதிச் சொல்.

ஆத்திகம் வேதநெறித் தோற்றமா மாதரத்தோ
டீத்தல் பயன்கருதா தீகையாங் - காத்திரத்தால்
வந்தித்தல் வாயார வாழ்த்தன் மனத்திறையைச்
சிந்தித்தல் பூசை செயல்.

பிரமந்தா னுய்த்தெளியப் பேசுமறைக் கேள்வி
திரிவன்னத் தோர்கட்குஞ் சித்தாந்தக் கேள்வி
புரையில்புரா ணக்கேள்வி பொய்யிலா மாதர்
சுரதவே ளாளர்க்கு மாம்.

மந்திரந் தாரக மாதியா மன்னிருடிச்
சந்த மதிதெய்வந் தான்கொண்டு - முந்தி
யுரைவாய் துடியுள்ள லொன்றிற்கொன் றோரா
யிரமாம் பயனுண் டிவை.

வெறுதே யரிதெனினு மேன்மேல் விருப்ப
மறுதே யிதுவே யறம்பொரு ளின்ப
மிறுதான வீடு மெனக்குரவ னேவன்
மறுதுசெயன் மாவிரத மாம்.

ஆசின் மறைநெறியி னுதரவு தான்மதியான்
றேச வழக்கிற் சிறந்த மறைநெறியி
லாசிது வென்னுங் கருமத் தருவருத்துக்
கூசுத னுணமெனக் கொள்.

செவ்வே யுடலுங் கழுத்துஞ் சிரமுமுற
வெவ்வா தனத்தே யிருந்தவர்க்கும் - கைவந்து
வாத முதனோய் நவியா மதியுடையோ
ராதன மென்ப தது.

வாங்கிப் பதினாறு மாத்திரை நான்மடங்கு
தாங்கித்தற் பாதி தனைவிடக் கால்வலத்தால்

ருறைதரு கர்ப்பா சயமென் றுடற்கே
யறைதரு மாசயங்க ளைந்து.

ஈரேழு நாடி யிடைபிங் கலைசுழுனை
வாருணை நாப் பூடா வைரிய லம்புடைகாந்
தாரிபை சுனிசங் கினியத் திசிகுவை
கூரு புகழி குகூ.

பிராண னபான னுதானன் வியான
னராவிசயன் றேவதத்த னுமை - கிருகரனே
பெயரந்தரி யாமி முக்யன் பிரபஞ்சன்
வைரன் சமானன் வளி.

மூலாதிட் டான மணிபூ ரகம்விசுத்தி
யேனு மனுகத மாஞ்ஞை யிருமூன்றின்
மேலாதா ரத்துமதி வெய்யோன் விசுத்தியிற்றீ
மூலாதாரத் துறைய மூண்டு.

உன்ன வருங்காமங் கோப முலோபமுடன்
மன்னுறு மோகமத மாச்சரியந்
தன்னை மிகமதிக்குந் தம்பம் பொறுமையெனு
மின்னல் விகாரங்க ளெட்டு.

ஒன்றிற் பிறந்த வுளதாத லோங்கிவளர்
வன்றிப் பருத்த லறத்தேய்தல் - பொன்ற
லெனுமாறு பாவமு மிவ்வுடற்கே ஞான
கனமாந் தனக்கில்லை காண்.

வீடுபெற் றில்லை பிறிதொன்றி னுற்றன்னை
வீடுபெற் றில்லை பிறிதொன்றைத் தன்னுளும்
வீடுபெற் றில்லைதன் னுற்றன்னை யிவ்வாறு
கோடியு மில்லை தனக்கு.

அன்னபா னங்கள் பிராண னதேயாகு
மன்னு மகிழ்வு மடிவு மனத்தன
வின்னலா மூத்த லிறத்த லியாக்கைய
ளுன்னுக்கு நாடி விலது.

மயனுடல் வாக்கு மனனென்று மாந்தர்
துயருறு மின்பமுந் துன்பமுந் துய்க்கச்

செயலுரை சிந்தனை தீமையு மன்று
முயல்வன காரக மூன்று.

உருவுணர வொண்ணா வகையுணர்வை யொன்றா
மருவிய வாணவ மாயை - கருமங்கண்
மூக்குந் தவிடு முமியு மிவையாக்கை
யாக்கும் பவவித்துக் காம்.

சுத்தமாஞ் சாத்திகமுந் தூய்மை யிராசதமு
மத்திம ராசதமு மாந்தர்க்கு - நித்த
மறிவறி யாமை மயற்றின் புணர்ச்சி
குறியுடைய மூன்று குணம்.

நீதி கருணை நிலைமை யளிமானம்
போத மவையின்மை போரிற் புறங்கொடுத்தல்
மேதக் கவர்ப்பழித்தல் வேண்டா தனவிகழ்தல்
வாதக் குணமு மதி.

அறிவுடைமை யைந்தடக்க லாகந் தழுந்து
நெறியுடைமை சொல்வன்மை நீர்மை - பெறலரிய
வத்து விதஞானத் தாதார மண்மையிவை
பித்தகுண முவமெனப் பேசு.

பொறிபிற ழாமை புகழ்க்குறுநீ ணுக்கல்
குறிமதுனை கோப மிலாமை - பொறையோர்
நியமின் றியவினை கெஞ்சாத் துவளை
கபமொன் றியகுணமுக் கான்.

ஆதிபௌ திகமாதி தெய்விக மான்மிகமென்
றோது துயர்மூன்றி னுட்க - வறுமிடியின்
வாத மழைவேனில் வன்னி பனியாதி
பௌதிக மாகும் படர்.

வாயு முதலேனை மானிடர் மாப்பறவை
பேயசுரர் நாகத்தார் பீடையாம் - காயத்தின்
மானஞ் சினமவா மாச்சரிய மாதிமனத்
தானதுய ராதியான் மா.

இடனில் கருப்புகுத லிங்குப் பிறந்த
னடையுடன் மூத்த னரைத்தல் - மடமை

நினைவறச் சாத னிரயம் புகுத
லினையவை தெய்விக மாம்.

மகப்பற்ற தாகும் வருஞ்சுற்ற மெல்லாஞ்
சகப்பற்றுச் சங்கற்ப மெல்லா - முகப்புற்ற
வெப்பொருளு மத்தப்பற் றிவ்வே டனைமூன்று
மெய்ப்பொருள் கண்டால் விடும்.

காணுமது நேரே நனவா நிலைபேறு
காணுமற் காணு மதுகனவா மொன்றையுங்
காணு தொழிகை சுழுத்தியாங் காணுமை
காணுங்கட் கில்லை யவை.

ஐய மனது மபிமான மாங்கார
மையலற வேதுணிதன் மாமதியாஞ் - செய்ய
வருசிந் தனைசித்த மாகு மவையே
யொருநான்கா முட்கரண மொன்று.

காசினிநீர் தீகால்வான் கந்தஞ் சுவையொளியூ
றோசைமா பூத முறுகுணங்கண் - மாசில்
செவிமெய்கண் வாய்மூக்குச் செப்பியநாண் பூத
மவையறியு மைம்புலன்க ளாம்.

ஓதுகுணம் வான்முதலா வொன்றிற்கொன் றேறுமுறை
யீத னடைபோக் குதலின்ப - நீதிவாய்
கையொடு கால்பா யுருபத்தங் கன்மங்கள்
செய்யும் புலனாகச் செப்பு.

பூதநிறம் பொன்வெண்மை செம்மை கருமைபுகை
யோது முருவ மதற்குரைக்கி - னீதி
சதுர மதிபாதி மூன்ருறு கோண
மதியமாம் வட்டமிவை யாம்.

புத்தி கருமப் புலன்பத் ததின்விடயஞ்
சத்த வசனாதி தான்பத்துச் - சித்த
மகமான வன்னுன் கறிவா னொருவ
னகமா கியவிருபத் தைந்து.

தசைமயிர்தோ லென்புசிரை தண்ணிணீர் மூளை
யுதிரம் பெலம்பசி தாக முறக்க
மிதுன மறப்பிருப்பு மேலோங்க லோடல்

கநிகிடத்தன் மானபயங் காதல் கதநா
ணிதமாம் புறத்திருபத் தைந்து.

விகுதி யிருபத்து மூன்றும் பகுதியு
நாலாறு கண்ட புருடனுங் கால
முயர்ந்த வியோமம் வியோமா தியமன்
றியம்பு மிவையிருபத் தெட்டு.

தலமுதலான் மாவிறு சத்திசிவம் வித்தை
சலமில் சதாசிவ மீசன் - கலைமாயை
யேறுவிச்சை கால மிராக நியதியையந்
தாறுசுத்தஞ் சுத்த மலா.

பூதமிறங் கோசம் புறவேலு முன்வேலும்
வாதம் விகார மலக்குணங்க - ளாதார
மேக புருடன்வினை பெந்தா வவத்தையெ
னவாக விவைதொண்ணூற் றாறு.

உலவாத தத்துவத்தி னுண்மை யுணர்ந்தா
லிலவா மிவையியம்ப லென்னை - பலவாகக்
கண்ணிலவு மாசடையார் கண்டாற் பலவாமோ
தண்ணிலவோன் றல்லவோ தான்.

முத்திற னான குணத்தன மூன்றவத்தை
யுத்தமமாஞ் சாத்திகமா முணர்ச்சிக்கு
மத்திம ராசத மாண்ட சுழுத்திதா
னத்தம மாமதம தாம்.

நனவு முதலவத்தை நல்வகையோ ரொன்றின்
நனவுமுத லானவுங் கண்டார் - கனவா
நனவு முதலனவுங் காணார்கள் காண்பர்
நனவாக ஞானகனம்.

கனவி னனவு புலன்வழக்க மாகு
கனவிற் கனவு நினைவா - கனவின்
மனநினை வின்மை சுழுத்திநினை வின்மை
தனதாந் துரியந் தான்.

கனவி னனவேபோற் கண்ட னனவாங்
கனவினிற் கண்டு மறத்தல் கனவாங்

கனவிற் சுழுத்திகா ணுமைகாண் பானே
யனுமதித்த லாமற் றது.

சுழுத்தி நனவொன்றுந் தோன்றுமை தோன்றல்
சுழுத்தி கனவாஞ் சுழுத்திச் - சுழுத்தி
யரிய வறிவா லழிக்கை சுழுத்தித்
துரியமாஞ் சொல்லிறந்த பாழ்.

துரிய நனவா மிதமுணர்ந்த போதந்
துரியக் கனவா மகமுணர்ந்த - போதந்
துரியச் சுழுத்தி வியோமந் துரியத்
துரியம் பரமாகச் சொல்.

சந்தித் திடம்புருவந் தன்னினிலே சாக்கிரமாங்
கந்தரத்தி னிற்கை கனவாஞ் சுழுத்தியர
விந்த மெனுமிதய மேவலா முந்திக்கு
நால்விரலி னுலா வது.

நனவிற் பதினாற் கரணமு நான்கு
கனவிற் சுழுத்தி கருதலற மூன்றுந்
தனதாகை வேறுகை தான்றுரிய மற்ற
தெனதியா னற்ற விடம்.

ஒருக்க நனைப்போங் கனைப்போ முளத்தை
தரிக்கத் தியானத்திற் றற்சுழுத்தி போகு
மரிக்குஞ் சமாதி துரியம திதம்
புரித்துப் பரம்விளங்கப் போம்.

சுழுத்தி நனவின்வரிற் றோன்றியிடுஞ் சீவன்
பழிப்பிலதீ தத்திற் பரமன் - விழித்திலனேற்
றீதொருங்க வாண்ட குரவன் றிருக்கோல
மேதொருங்கித் தோன்று மென.

அதுநீயா னுயென்னு மப்பதங்கண் மூன்றி
னதுவென் பதுபிரம நீயென் - பதுசீவ
னுறு யெனும்பதந்தா னவ்விருவ ரைக்கியமா
மூனு முபாதி யொழித்து.

புகலு மறையவத்தை காலம் புவன
மிகலுருணர் தியிறைவர் செய்கை - தகவே

யகார வுகார மகார மதனுற்
சகலமுந் தாரக மாம்.

அஞ்ச வுருவிருபத் தோரா யிரத்தறுநூ
றெஞ்ச லுறுமின் றியம்பாமற் றுமியம்பித்
தஞ்சப் பிரமத்திற் றன்னைவறன் றென்னுணர்ந்த
துஞ்ச லொழிக்குந் துணை.

இவைமுதற் றத்துவங்க ளேவைதகள் செய்கை
யவனிமுதற் பூத மைந்தை - புலன்கள்
கோசம் பொறிபுலன்கள் கூறுங் கரணமெலா
மீசன் றிருவைஞ் செழுத்து.

நாராய ணாய நமவென் பொருள்சிவ
னோரா திறைவேக மென்றறிகை - பேர்வேறு
காரண காரிய காயத்தா லொன்றாகும்
பூரண போதப் பொருள்.

ஊக்கி யறுதியிட வொன்றா வொருதன்மைப்
போக்கி யிலாத பொருடா னருளாலே
பாக்கியத்தால் வந்து பலிக்கி னலதில்லை
வாக்கியத் தாற்காணு மது.

அறிவா னறிவென்ன வாகத்தே சிவ
னிறைவோ னென்பாருண் டிருவர் - பிறியாச்
சுபாசுபங்க ளாவிவரைச் சொல்லவரு மேக
லுபாதிகளா னல்லதா மொன்று.

இதமக மெய்து மிரண்டி னொழிவா
மதிய தனையறிந்த மாத்திரமே சிவ
னிதன பவங்க டமக்கில்லை சித்த
னதனை யறிவா னவன்.

எப்பொருட்குங் காரணமா யெப்பொருட்கு மீசனா
யெப்பொருட்குந் தோற்ற மிலையிறைவா - வெப்பொருட்கு
மல்லா திலதா யகமும் புறமுநிறைந்
தெல்லா மறிவா னிறை.

உபாதி யொழிந்தா லுயிர்பரங்க ளொன்றே
சுபாசுபா ராய்நின்ற தோற்ற - முபாதி

கடாகாய மாகாயம் வேறாகக் காண்கை
யடாகா ணறிவென்றே யாம்.

அறியாத மாயைக் கடியறியத் தேடி
னறிவா லறியவொணு தாகு - மறியாமைக்
கேது வறியி லறிவா விருட்கேது
சோதியைக் கொண்டறிந்து சொல்.

போதக்கண் பூதங்கள் பொய்யா மவைமெய்யாம்
பேதக் கடாதிப் பிறழ்வுகளிற் - பேதங்கள்
சுத்திகையின் வெள்ளியின்மெய் தோன்றப் படுங்கனவு
நித்திரையைப் பாரந் நிலை.

அயலாக மெய்போ லநந்தபே தத்தை
மயலாகக் கண்டமா மாயத் - துயில்போனு
லெண்படு மிவ்வுலக முண்டாமா றெங்ஙனே
கண்படைபோ யுண்டோ கனு.

வன்னி யிருக்கமரம் வன்மிகையூ ஞனதே
தன்னிகழ்ச்சி யின்றேலித் தன்மையா - ஞன்னை
தன்னிகழ்ந்தா னுண்டோ சகத்துன்பஞ் சற்குருவால்
வன்னிகண்டா னுண்டோ மரம்.

யோகாதி மூன்று முணர்வதனுக் கங்கமா
மாகா தெனிற்பதங்க ளாயழியுந் - தேக
மொழிய வருமுத்தி யொன்றுதற்கு ஞான
விழியை யலதில்லை வேறு.

பொறிவா யறிபுலன்கள் போதக் காண
வறிவான வெல்லா மடங்கி - யறிவா
யறிவா னறிவ தறியும் பொருளென்
றறியா தறிவ தறிவு.

அலையிலே கன்ம மடியிலே யாக்குந்
தலையிலே ஞானந் தரிக்கு - மலையா
தருமறை நூலே யறியுஞா னத்தின்
பெருமை யறியார் பிறர்.

இன்பக்கண் ணீராட்டி யேத்தி யெழின்மலரா
வன்பிட்டுத் தம்மை யமிர்தாக்கி - முன்புற்ற

சிற்சட மெல்லாஞ் சிவமாக நோக்கல்சிவப்
கர்ச்சனை யாகு மது.

யோகத் தபாவமெனும் யோகமது கைகூடி
னேகப் பொருளதனு ளெய்திடி - மேக
மதுவா மிதுவன் றெனுமைகண்ட மான
வதுவாகை மாயோக மாம்.

புணர்பாவ புண்ணியங்க ளென்னவிறந்த வெல்லா
முணர்வா மெரிகொளுவி னுய்ந்திடா - வுணாவாமை
கூடவெந் தெழுந்த துய்ந்திடா துறைமுந்தமாங்
காடுவெந் திட்டக் கால்.

யோகத்தா லேகத்தைக் கூடா திடையினுயிர்
போகிற்றன் பொல்லா வுலகிற் புகாதல்ல
யாகத்தா னெய்து பயனெல்லா மெய்திப்பின்
யோகத்தான் முத்தி யுறும்.

தந்த வறியாமை போகவுந் தான்போகா
திந்த வுடனிற்ப தென்னென்னி - னுந்துங்
குசவன்கை விட்டாலுங் கூடா திகிரி
விசைவந் திடாதே விட.

தருபயன் வேண்டாத் தருவினைகள் சாந்தி
கருதிகள் கேள்வி துறவி - குருவைப்
பெறுதற்கிங் கேது பெறற்கரிய முத்தி
யறிதற்கிங் கேது வவன்.

இறையா முடன்முதல் லெத்தமீ ருக
விறையோனே யானல்லே னென்று - மறைமீ
யதுவானு மென்ற தெதுவானே னென்று
விதுநீகா னென்பா னிறை.

உள்ளந் தனினின் றொளிர்த்தான் பரன்குரவன்
கள்ளந் தனைத்தவிர்த் துக் காட்டினான் - வள்ள
லுருவான கோலமோ வக்கோலங் காணக்
குருவான கோலமோ கூறு.

துயிற்புணர்ப்பாற் கர்ப்பந் தொடுகெடவி ராமை
மயிர்ப்படா மின்மினியின் வன்னி - முயற்கோ

டெருத்தின்பான் மெய்யுணர் வில்லாதான் பண்ணுங்
குருத்துவமு நேராகக் கொள்.

காய நிலையின்மை கண்டான் கருத்துச்செந்
தீயி னடுவுற்றான் சித்தஞ் - சினவரவின்
வாயுறுமண் டேகத்தி னெஞ்சம் வரியுழுவை
தாயவ னுள்ளஞ் சமம்.

தம்பாற் றவந்தூய்மை வாய்மை தயாவிலா
ரும்ப னடிபேணு ருள்ளபொரு - ணம்பார்
பொருள்செய்ய வாதரிப்பார் போக நினைவா
ரருள்செய்ய லாகா தவர்.

சித்திபா நிற்குஞ் சிலர்க்கு விபரீதப்
புத்தியா குஞ்சிலர்க்குப் போதமே - சுத்தமாம்
பானீய மொன்றேனும் பாம்புண்டா னஞ்சீனு
மானீயு நல்ல வமிர்து.

கழல்போற்ற வாயாரக் கண்மல்க வுள்ள
மழல்சேர் மெழுகி னழிவெய்த யாக்கை
யெழில்சேர் குருபரன்ற னேவலை செய்க
நிழல்போல முன்பினு நின்று

சந்தனந் தாம்பூலந் தாரா தனஞ்சயன
மந்தனம் பொய்வெய்ய மாற்றங்கள் - சிந்தைக்
காவபி மானங் கழூச்சிகளிப் பின்ன
குரவன்முன் மேவாது கொள்.

அங்கையுற்ற நீராக்கொண் டாக்கை பொருளாவி
பங்கயக்கண் ணாற்கொண்டு பண்டைவினைச் - சங்கையறப்
பூத மலமுழுதும் போத மெனநிகழ்த்தப்
பாதமலர் வைத்தான் பரன்.

ஆக்கை முதற்சித்த மீறாக வெப்பொருளு
நோக்கு மவன்றன்னை நோக்கா தவைசடமாச்
சாக்கியா நின்றவவன் சற்குருவா வந்தபான்
வாக்கில் வெளிப்படுங்காண் வந்து.

போக்கு மனமொருக்கிப் போதமங் கில்லாமை
நோக்கிய நோக்காலந் நோக்கத்தை - நோக்கென்றான்

றேன்றத வண்ணம்போய்த் தூஞ்சிற் றிருளறிவாச்
சான்றாகி நின்றேனுன் றான்.

வினைப்பய னென்னையினி மேவாவின் றாதி
யனைத்து மழிந்து மழியே - யெனக்கின்று
முன்பக்கங் கீழ்மேன் முதலிடையீ றென்றனவு
மென்பக்கற் காணே னியான்.

இல்லது முள்ளது மெல்லா மறிவேனு
னெல்லாப் பொருள்கட்கு மேதுவா - மெல்லா
வுலகும் படைத்தழித்துக் காத்துணர்வா யொன்று
மிலகும் பரமேசன் யான்.

விரிந்தா னுலகறியு மேனோக்கா னுள்ளே
புரிந்தாற் றனையுணரும் போத - மருந்தவா
மாட்சி யுடைய பரமனேவா மற்றிதன்
காட்சியு மாட்சியுங் கண்டு.

காணங்க ளிற்கலந்து காணாமை நின்றான்
காணங் களைபொருக்கிக் கண்டான் - றனைத்தான்
காணியாய் நின்ற விவனேத கண்டாய்
மாணம் பிறப்புற்ற பால்.

அறிவென் பதனா லறியும் பொருளு
மறிவு மறிவானு மாகும் - பிரிவின்றிச்
சொல்லாட லில்லாத் துரியாதி தம்பிறக்க
வெல்லா மவிழ விரு.

தேய்ந்து தெரிவு தெரியாமை யென்பதற
மாய்ந்த தெனவும் வகையில்லை - மாய்ந்ததுவும்
போந்த விடத்தே புகுது மதுதொழிய
மாய்ந்த விடத்தில்லை மற்று.

அடங்குகை யாலே யறிதமு நின்னை
மடங்கொள் சுழுத்தியை மாணும் - இடங்கொள்ள
நில்லாக் கனவே துரிய நிலையிரண்டு
மல்லாமை யாலவத்தை யாம்.

அதீதம் பொருளென் றலப்பொருளை தென்று
னதீதம் பொருளா வறிந்த - புதனெருவ

னுண்டாங்கா ணென்றான் றுரைத்தா னுரைத்தனுமே
கண்டா னதுகாணுங் கண்.

பிறிதற் கறிவிருந்த பெற்றியே னென்ன
வறிவிற் கறிவா விருந்த - வறிவை
யறிவே யறிகின்ற தன்றி யறியப்
பிறிதேது மில்லை பிறழ்வு.

அகமிதங்க ளில்லை யறிவயர்வு மில்லை
யிகபரங்க ளென்றறிய வில்லை - சகமு
மெரியினுக்கு வெம்மையுரு வென்ன விறைவா
வுருவதற்கு நேரே யுணர்வு.

பூத மறிந்த வறிவுயிராம் போதமா
யாது மறிந்தவறி வீசனும் - பேதமறப்
புல்லிற்றெங் கேயென்றான் புத்தேளிர் கோக்கண்ணீர்
மல்கித்தான் வீழ்ந்தான் மகன்.

பின்ன மறிந்த செயல்போலப் பின்னமே
தன்னை யறிந்ததுவுந் தற்செயலாய் - நின்ன
செயன்மாண் டதுகாண் சிவமென்று னீச
னயன்மா லறியா வவன்.

ஒருக்கவே றில்லா வுணர்வாம் பரமும்
பருக்க விடயமெனப் பண்ணி - யருட்சொருபன்
பேசா திருவென்னப் பேதங்கா ணுதிருந்தான்
வாசாம கோசரத்தே மாண்டு.

இலங்க வறித னனவாகு மெங்குங்
கலங்க வறிதல் கனவாம் - புலன்கெட்ட
தெல்லாஞ் சுழுத்தியா மிம்மூன் றவத்தையினு
மல்லா ததுகா ணறிவு.

உளனு முயிரு முணர்வு முடனிறந்து
யானு மிறந்து பரனிறந்து கோனே
வடிவோது மாறின்றி வாக்கிறந்து நீயிப்
படியே யிருக்கும் படி.

திரண்ட சமவாய்ந் தீர்பாழிற் சிவ
னிரண்டாம்பா ழிற்றேன்று மீச - னிரண்டும்போய்

மூன்றும்பா ழிற்றோன்று மூன்றும் பதப்பொருளாஞ்
சான்றுரு மில்லாத் தனி.

ஆவபா வாபாவந் தீர்ந்த வகோசரமு
மோவு மவத்தைகளி னொன்றுக்கிச் - சீவபரந்
தானற் றிருந்த தனிப்பதங்கா ணீதென்று
மோனத் திருந்தான் முனி.

நோக்கினன் றுனய் நிகழ நுனிதமறை
வாக்கினற் கூறிய வான்பொருளை - நோக்கிச்
செயிர்தீர்ந்தே னென்றெழுந்தான் மைந்தன் சிலையின்
றுயிரீந்த மீனதனுக் கொப்பு.

நிறைவுற்ற தெவ்வாறு நின்மலனுந் தன்னை
யறிவித்த வாறறிய லாகா - நிறைய
முழுத்துமா லானந்த முந்நீரி னுள்ளே
யழுத்துமூ மைக்குடத்தி னும்.

இருந்த படியே யிருந்தபடி காண
விருந்த படியே யிறைவ - னிருந்தபடி
யப்படியே யென்னு மஃதொழிய வப்படியை
யெப்படியே யென்றுரைக்கே னியான்.

ஊனுன யூனிற் குயிரானு யுள்ளுணர்வு
தானுனய்ப் போயத் தமரானு - யானுன
யென்னுன டொண்ணு விறையானு யாதுமாய்
நின்னுன யென்னுனய் நீ.

காண்டகையே யென்கைக் கடனன்றே யில்லேனின்
றண்டகைதான் சூடார்க் கயலன்றே - மாண்டேன்
சயம்புவே யென்னினுரை தானுண்டோ வெவ்வா
றியம்புவே னென்றறியே னியான்.

நாரணனு நான்முகனு நாடப் பெருரின்ன
மாரணமுஞ் சொல்ல வறிகுதில்லை - காரணநின்
செம்மா மலர்ப்பாதஞ் சென்னிப் பொறித்தாய்க்குக்
கைம்மாறு காண்கிலேன் காண்.

ஒல்லை யுலகு படைத்தழிக்க வுன்னுணர்வால்
வல்ல சொரூபாவென் வஞ்சமனக் - கல்லைத்

திரித்தருள வேண்டியொரு தேசிகனுங் கோலந்
தரித்தருள வேண்டியதே தான்.

சொருப வெனக்குன் றுணைமலர்த்தாள் சூட்டிற்
றிருவரு ளேயொப்பே மென்றோ - வருளாலே
நின்னை ரனையானே நீயு மருளாலே
யென்னை ரனையே னியான்.

வந்திக்கச் சென்னிவாய் வாழ்த்த மனனுருக
விந்தத் திருக்கோலத் தெம்பெருமான் - வந்தெனக்குப்
பொன்னங் கழலருளிற் பூரணமே போ தச்சொருப
வின்னம் பிறப்பே யினிது.

என்கை பணிசெய்ய வெம்பெருமாற் கெம்பெருமா
னென்கை பணியாக வென்வாக்கு - நின்கீர்த்தி
கற்றென்றும் பாடக் கனியமனங் காணிறைவா
மற்றொன்றும் வேண்டேன் வரம்.

அளித்தான் றிருமேனி யைம்புலனுங் கொண்டு
களித்தான்பே ரானந்தக் கண்ணீர் - குளித்தான்
குளித்தானம் பாலென்றுங் கூர்ந்தன்பான் மீண்டு
மளித்தா னருட்சே வடி.

## சசிவர்ணபோதம்.

அலகை யச்ச மறவக வான்களு
மூலகின் முத்தி பெறும்பரி சோதுவாம்.

புணர்ந்த பாவமெ லாம்பரி பூரண
முணர்ந்த ஞானி விழிபட வோடுமே.

## வேறு.

எழிலாரு ஞானி புகழென்னை கூற வுயர்வீ டிவன்சொல் வழிசெய், தொழிலாளர் சேர்கை யதுகேளு முன்னை யிதிகாச மொன்று சொலவே. 1

தந்தாபமற்ற பானேவல்செய்த வவனுற்ற பேறுதனைமுன் [வே. செந்தாமரைக்கண் முதற்வந்கெம்மண்ண திருவாய் மலர்ந்த திது2 உவமிப்பின்ஞானி விழிபட்டுமுன்னை வினைவிட்டு முத்தியுலகிற் றவமற்றவெய்ப வினையேபுரிந்த சசிவர்ண னெய்துகதையே.

இடனேமுத லாக வுவந்திறைமோ னேவும்பணி செய்திவ னுஞ்சிலநா, ளுடனேயிவ னேதிரு மேனிதனக் குரியானென வுற்றன னும்பனொடே. 14

நன்றாய்முனி தாள்வழிபா டதனு னுவித மான பிறப்பினை விட், டொன்றாகிய வீடுண ருத்தமர்கட் குளசாதன நான்கு முதிர்ந்தனவே. 15

முனிவன்றிரு முன்புள தன்குறைதான் மொழிவான்சில வஞ்சலி குஞ்சியதாய்ப், பணிவந்திரு கண்கள் பதங்களிலே பல கால்வலம் வந்து பணிந்தனனே. 16

அருளேவடி வாகிய மாமுனிதா னறியாதவர் போல வழுங் கலுறும், பொருளேதென மைந்த னடுங்கினனிப் பொல்லாத பவப்புண ரிக்கெனவே. 17

வெருவும்பிற விக்கடல் வித்தாமுன் வேதாகமகீதை விளம்பு மதைக், குருவுந்தன தன்பன் மனத்தளவிற் கொளுமாறு தொகுத்திது கூறிடுமே. 18

வேறு

மரண பவங்க ளான புனலை யுடையது மதியை. விழுங்கு காம வரவு பெரியது, காண வொழுங்க ருத விடய விரைநுகர் கணமொ டியங்கு மீன மிகவு முகள்வதே. 19

பெருமித மென்று கூறும் பெருமை யுடையது பிணிக ளெ னுங்கெ டாத புலவு கமழ்வது, வருமிட ரின்ப மான திரைகள் பொருவது மனமெனும் வஞ்ச ராஜ மகர முறைவதே. 20

அளவி லகந்தை யாமை யபரி மிதமுள தவாவு நிறைந்த வாழ மறிய வரியது, களவு நெருங்கு பாரு மலையு முடையது கலக விடங்கண் மேவு கிருமி நெளிவதே. 21

அகனொடு நன்கி லாத நுரைக டருவது † துறவியி னின்ப மான கரையை விடவகன், மகளிரொ னுந்தவாத வலிய சுழியது மறவியு மஞ்சு கோப வடவை யெரிவதே. 22

† துறவெனு மின்பமான கரையை யகழ்வது என்றும் பாட முண்டு.

பூசனையு மனுசகல பொருளுமறி தமையு
மீசனையும் வேறதற வறிவதறி வெனவே. 36

தானெனு முடம்பது தனைத்தவிர வேறு
யானெனு மருத்தமுள வோவருளு கெனவே. 37

வேறு.

எனதாடை பொன்பூ மகன்றையல் பாய்மா விபங்கண் முகங் கால்கை மெய்யென்ன வென்றுந், தனதா யுரைப்பான் வகுத்திந்த வூனைத் தானென் றயர்த்துஞ் சொலத்தக்க தன்றே. 38

நானாக வூராழி யார்வென்னில் வீணு தண்டாக வன்மார்பு தட்டாக மொட்டா, நாளா மலர்ச்சென்னி கூந்தற் கொடித்தேர் நாளுரு மூர்வானில் வேறாக நாமே. 39

கிடக்குஞ் சாம்பண்ணி யுண்ணின், னொருத்தன் கைபாத கண்ணங்கண் மெய்போ லியக்குங், கிடக்குந் நடத்தா விடத்திவ் வுடம்புங் கிடக்கும் மொருத்தன் னடத்தா விடத்தே. 40

ஒருகூறு மலமாகு மொருகூ றுடம்பா மொருகூறு மனமாகு முண்டாற்ற வன்ன, மிருகூறு நீயாகி லொருகூறு நீயா மிழிக்கும் மலஞ்சோ ரிடப்பட்ட துடலே. 41

கிளரா நரகத்தாண்ணு மன்னஞ் சுடக்கை கிட்டப் பொறுதே யிருந்தார் முனிந்தார், தளரா துறப்பொன்று முயிர்போக வன்றே தழற்பள்ளி மீதே துயின்றார் சகித்தே. 42

இழற்பாவை கண்ணாடி யிற்பாவை கைகா னிமிர்க்கும் முடக்கும் மிவன்செய்த வெல்லாம், தொழிற்பால வாமற்றிவ் வுடலஞ் செய் தொழிலுஞ் சுடர்ஞான வடிவான வன்செய்த தொழிலே.

அறிகின்ற பொருளொன்று மறிவானில் வேறே யானுமிவ் வூனாக நானென்ன லாமோ, செறிகின்ற புள்ளல்ல வேகூடிவ் வகையே செடமான வுடனின்னில் வேறென்று தெளியே. 44

நிலமாகும் வர்க்கென்ற னெகிழ்கின்ற நீரா நெருப்பா மிதிற்கட்ட வெல்லாமு மநிலஞ், சலமான புரையான வானிந்த வுடலஞ் சடமான வைம்பூத வுருவங்க டாமே. 45

விழிமைப்பு மானென்னில் ரவியாதி யாலே விளங்கின்ற தல்லால் விளங்காமை யாலே, யொழியப் படுங்கன்ன முதனான்கு மூன்ற னுருக்கண்ட கண்டன்னை யொப்பாக வுன்னே. 46

அறியாப்பொருள் காரண மாயைகுறித் தறியும்பொருள் காரிய மாமுலகிந், நெறியாற்றிகழ் நான்மறை யந்தமெலாம் நீயன் றெனவோது நிரந்தரமே. 56

அறியும்பொருளன் றறியாப் பொருளன் றறிவாகிய நீயெனு மப்பொருடான், பொறியின் வழிநின் றறியும் பொருளோ போ தக்கண் விழித்தறி யும்பொருளே. 57

வேதப்பொருடா னிதுவே றுசொலும் வினையாவையு மன் றொரு வேறுமிலாப், போதப்பொரு ளந்தமறைக்கணியாம் புனி தப்பொரு டத்வ மசிப்பொருளே. 58

வேறு.

நிமல மாம்பர மதுவெ னும்பொரு ணீயெ னும்பொருள் சீவனே,
யமல மான விரண்ட மிக்கிய மசிப தப்பொரு ளாவதே. 59

அருமை யாகிய பிரம முன்னிலை யாகு மாருயிர் பின்னிலை
யிருமை யாய விரண்ட மிக்கிய மெய்து மாறெவ னென்னவே. 60

உபாதி யால்வரு பேத மேயிவர் பேத மன்றுரு வுயிரினின்
கபாதி யாமுடல் போலி றைக்குள கார ணாதிகள் காயமே. 61

ஈசன் முற்றறி வான்வி யாபி யெவைக்கு மேது வியம்புமா
காச கன்னிரு பாதி பாவனை கார ணாதிக ளாவதே. 62

நீதி யாலிரு பாதி நீக்கிட நீயெ னச்சொல் பதத்தினு
மாதி யாகிய தத்ப தத்து மசுத்த சுத்த முரைத்துமே. 63

ஆக மூன்றிக ழேழு நானென றுவம்ப தத்தி லசுத்தமே
சோக மின்றிய சாட்சி நானென றுவம்ப தப்பொருள் சுத்தமே.

அகில காரண மாதி நானென றம்ப தத்தி லசுத்தமே
சகல காரண சாட்சி நானென றம்ப தப்பொருள் சுத்தமே. 65

செறிந்த காரண காரி யங்கள் சிதைந்து மேலுறு சித்ததா
யறிந்த வாதனை தானு மற்றதவ் வசிப தப்பொரு ளாவதே. 66

அசுத்த மாகிய விருப தத்தினு முக்கி யப்பொரு ளாவதே
விசுத்த மான திலக்கி யப்பொரு ளென்று சொல்லுவர் விமலரே.

முரண்ட சீவ பரங்க டம்முடன் முக்கி யப்பொரு ளாவதே
யிரண்டில் வேறறு சிற்சொ ரூப மிலக்கி யப்பொரு ளாவதே. 68

ஊக்கி யப்பர சிவர் தங்க ளுடம்பி ரண்டுமி லக்கணு
வாக்கி யப்படி நீக்கி ஞலொரு வத்து வேபர வத்துவே. 69

ஓரில் விட்டதும் விட்டி டாதது முபய மும்மென வுணர்வுளோர்
தேரி லக்கணை திரிவி தத்தி லிசைப்பர் மற்ற தியம்புவாம். 70

மஞ்சு கூப்பிடு மென்றல் போலவும் வடப கீரதி யுள்ளதே
விஞ்சு கோடம தென்றல் போலவும் விட்ட லக்கணை யாவதே 71

சிவலை நின்றது வெள்ளை போயின தென்று செப்புதல் போலவே
கவலை யன்றிவி டாத லக்கணை யென்று நீகொள் கருத்திலே. 72

மேவும் விட்டு விடாத லக்கணை மெய்ம்மை யாதெனி லந்தவித்
தேவ தத்த னெனும்பொ ருட்படி சிந்தை செய்திடு தீரவே. 73

விட்ட லக்கணை தனையும் விட்டு விடாத லக்கணை தனையுநீ
விட்டு விட்டு விடாத லக்கணை யான்விளங்கு விளங்கவே. 74

போது மேவிய தேசம் விட்டொரு புருட னைக்கொளு மாறுபோ
லோது மீருடல் கண்டு விட்டத னுண்மை காண வுணர்ந்திடே.

வேறு.

பிரியாவுயிர் காரிய மாமுடலும் பிரமத்துறு காரண மாமுடலுங்
கரியாகிய வாதனை யுங்கழியக் காட்டும்படி கண்டுகொள் கண்ணு
[றவே.

காரணத்திர ணிற்பினு மப்பொருளைக் காணக்கிடை யாதவை கையறவே, மரணப்படி னும்மது கண்டுகொளும் வழியில்லை யெனும்படி நீமதியே. 77

எந்தக்கர ணங்களு மேவனு விதில்வாதனை யால்விட யங்களொடே, வந்தக்கர ணங்கள் பொருந்தல்களு வவைமாய்தல் சுழுத்தி யவத்தையதே. 78

வேறு.

வினவிற் பரத்தையறி வுறுதற் கவத்தைபுலன் வினைமாறியே
நனவிற் சுழுத்திநிலை வரினப் பொருட்டிகழு நலமாகவே. 79

திவிதத் தவத்தைகளை யறிவுற்ற வத்துரிய நிலைசிவனே
யிவிதத்தி லப்புருட னனவுற்ற வத்துரிய நிலையீசனே 80

அகிலத் தரிப்பரம துரியப் பொருட்டுரிய மதுவாகையே
புகலுற்ற தத்வமசி யெனுமுப் பதத்தின்முடி பொருளாவதே. 81
நிமலப் பொருட்சுருதி நெறியிற் பெறக்கருணை நிதிகூறவே
யமலப் பொருட்பெறுத லருமைத் தெனக்கழறி யடிவீழவே. 82
தமரக் கலைக்களவு தெரிவற்ற தற்பொள்க டமையீகுவா
னமரர்க் களப்பரிய பதநற் புனற்கொடுசெய் தபிடேகமே. 83
பளனத்தில் வைத்தவயிர் இனின்மிச்சி விட்டினிய பரிவோடுமா
தவளப் பொடிக்கவச மெனவிட் டுடற்பகைக டலைசாயவே. 84

உதகத் துடற்பொருளோ டுயிர்கைக்கொ டுச்சிமிசை யொரு போதொடே, பதகத் தலந்தைவிட விருகைத் தலத்தொடிரு பதமேவியே. 85

ஒழியப் புலக்கறுப நிடதப் பொருட்டெரிய வுளஞான மாம், விழியைக் கொடுத்துமொழி யெனமுப் பதப்பொருளும் வெளியாகவே. 86

கனவைத் தொலைக்கிமுடி துரியத்தை முற்றவிறை நவினீதியே
மனவர்க்க மற்றவுரு பவமுற்ற சிற்கன வலியோதுமே. 87

வேறு.

புரண மாகவெ புறம்புள புலன்களு மந்தக்
கரண மியாவையும் வழங்கிட நனவெனக் கண்டேன்.

புரண மாகிய புறம்புள புலன்கெட வந்தக்
கரண மியாவையும் வழங்கிடங் கனவெனக் கண்டேன். 88

மரண மாகிய தசையிது வெனும்படி மனுதி
கரண மியாவையு மிறந்துள சுழுத்தியுங் கண்டேன். 89

எஞ்ச லின்றியெக் கரணமு மிறந்திருண் டிருந்த
அஞ்ச லந்துணர் போதமாந் துரியமுங் கண்டேன். 90

துரிய மாகிய போதமோர் துளக்கமற் றனைத்தின்
கரிய தாயிருந் திடம்பர னனவெனக் கண்டேன். 91

புணர்ந்த விச்சகத் தொழித்துணர் போதமாந் தனையே
யுணர்ந்த மற்றது பரன்றன வெனும்படி யுணர்ந்தேன். 92

சான்று சாக்கிய மிறந்திடத் தானிருந்தமையுந்
தோன்று முவிடம் பரன்சுழுத் தியதெனத் துணிந்தேன். 93

மரித்த தென்றுணர்ந் துரைத்ததும் மரித்திடந் தனிலே
தெரித்த போதமே ததுபான் றுரியமாய்த் தெளிந்தேன். 94

இறையெ னும்பொருட் டுரியமே யென்னையாண் டவனே
மறையி னந்தநற் பதப்பொரு ளனவென மதித்தேன். 95

பண்டை விச்சுவ வாதனைப் பழுதுபோய் முழுதுங்
கண்ட கண்ணதே யாகிய கனவதுங் கண்டேன். 96

காட்சி யாவையுங் கண்ணதா யக்கணுங் கரைந்த
மாட்சி யாகிய வகோசர முறக்கமாய் மதித்தேன். 97

அருந்த வாமறை யந்தமா மகோசரந் தனினீ
யிருந்த வாறறி வித்தவா றெங்ஙன மிசைப்பேன். 98

எம்பி ரானிடந் தொறுமிடந் தொறுமது மதுவாய்த்
தம்பி ரானடஞ் செயும்வகை சாற்றுமா றறியேன். 99

ஆவி யேயடி யேன்செய்கைம் மாறுனக் கென்னிற்
பாவி யேனது தானுமுன் னுடையதாம் பண்டே. 100

ஆவல் செய்தென தாக்கையுள் ளளவுநின் னடியார்க்
கேவல் செய்வதே யன்றிமற் றென்றுநா னறியேன். 101

இறவி லெப்பத மும்பெற வேண்டிலே னென்றும்
பிறவி வேண்டுவ னின்றிருப் பணிசெயப் பெறினே. 1(2

வேறு.

என்றுபல கால்விழு மெழுந்தொழு மழும்புரியு மென்னை யினியா
னின்றுபல வாகவுரை செய்தவவ னன்பினொடு நெஞ்சுருகியே.

ஏட்டிலறி வின்றியிறை தன்னிலறி வின்றியிவ் வுடம்பி னுடனே
வீட்டினுறை வானையினி வீடுபெறு மென்பது விளம்புகிலமே.

வஞ்சவலி யானரகில் வீழ்பிதிர ரங்கரகு பாழ்படமிகா
விஞ்சைவலி யாலடைய வேறினர் சுராதிபர்கண் மேனுலகமே.

தேவரு மனித்தரு மிவன்றொழில் வியந்துரை செயப்படுவதோ
மூவரும் வணங்கிமுடி யாலவன தேவல்செய முந்துறுவரே. 106

ஞானியை நரன்சுர னெனுதொழிக ஞாலமுய நாத னருளான்
மேனியது கொண்டுதனை நல்கவரு மென்றறையும் வேத முடிவே.

## பரமானந்ததீபம்.

அஞ்செழுத்தி னுருவாகி யறிவு மாகி யாதிநடு வீறாகி யனா
தி யாகிச், செஞ்சடையிற் கொன்றைமல ரணிந்தோ னாகித் தே
னாகிப் பாலாகிச் செகமே யாகி, மஞ்சுலவுங் குழலுமையோர்
பாக னாகி மகிழ்ச்சியுட னெனையாண்ட குருவு மாகி, வஞ்சமறத்
தொழுமடியா ருளத்தின் மேவும் வள்ளறனைப் புகழ்ந்தேத்தி
வணங்கு வாமே. 1

மாலயனா யுருத்திரனாய் மகேச னாகி மன்னுசதா சிவனாகி
வானோ ராகிக், காலமொரு மூன்றினுமாய் முனிவோ ராகிக் கக
னமுதற் பூதபவு திகமு மாகிச், சீலமுடன் றொழுமடியார்க்கெ
ளியோ னாகித் திரைகடலாய் மறைமுடிவாய்ச் சிறியேற் கன்
பாய், மேலுமருட் குருவடிவாய் வந்தாட் கொண்ட மெய்ப்
பொருளை யுளத்தில் வைத்துக் கருது வாமே. 2

எவ்வுயிரு மெப்பொருளு படைத்த கோமா னெங்குமொ
ன்றாய் நின்றிலங்குஞ் செம்பொற்சோதி, யிவ்வுலகி லன்புடனே
யர்ச்சித் தேத்து மெளியோர்க ளனுதினமுங் கருதிச் செய்த
பவ்வமெலாம் பற்றறுக்குங் கருணைக் கண்ணன் பார்வதியோ
பாகம்வைத்த வேக நாதன், தி வியபொற் றாளிரண்டுங் கருத்
தின் னோக்கித் தினந்தினமுந் துதித்திறைஞ்சிப் போற்று வாமே.

எல்லார்க்கும் பரமசிவன் றுணையு மாகி லெவ்வ
னருள் சேர்ந் திருக்குமன் றே, பொல்லார்க்கு மியா
புரிந்தி டாமற் பொறிவழியின் மனம்பொருந்திச் ச
மல், நல்லார்க்கும் பெரியோர்க்கு மெளியோர்கட்கு
மிரக்கமுண்டாய் நடப்பா யாகிற், பல்லோர்க்கு மு
யிருக்குமெங்கோன் பரிவினொடு கருணையருள் பாலி— —..-

புலைகளொடு கொலைகளவு கட்கா மத்
தாமல் நிற்பா யாகில், மலைமகளோர் பா
பான் மாதவமு நிலைக்குமிந்த வழிநில்லார்
ம்புபோல் மனத்தள் ளா
நிலைதவிரு மெழுபிறப்ப
ளோதும் வாறே.

தன்னரசு நாடுவிட்டுக் காடுபோய்க்கு தனிக்கொண்டிப் பசு
வாகிப் பாசத் தாலே, பொன்னை மண்ணைப் பெண்ணைநித்தந் தே
டித்தேடிப் பொய்யுட லுக் கின்பதுன்பம் வேண்டி வேண்டி, மின்
னனையார் கொங்கைச்சகண் டேங்கித் தூங்கி விருப்பு வெரு
ப்புற்றழுந்தி விரசால் வெந்தே, தன்னுடைய பதியறியத் திற
மில்லாமற் றயங்குவார்க ளெண்ணிறந்த கோடி யாமே. 6

முன்னுனிற் றன்னைமறந் திச்சைக் காளாய் மூலத்தி லாங்
கார வடிவாய்த் தோன்றி, பொன்னையுந் திகைப்பூண்டு மிதித்தாற்
போல வென்னதென்று மியானென்று மிழிவுற் றேங்கித், தன்
னாலே தான்கெட்டால் மன்றுளாடுந் தம்பிரா னென்செய்வா
னவன்பொற் றாளைப், பன்னாளும் பூசித்தாற் குருவாய்த் தோன்
றிப் பக்குவத்திற் றன்னையறி விப்பா னன்றே. 7

என்னதென்று மியானென்றும் விருப்புற் றென்று மென்
னுடலம் பருத்ததென்று மிளைத்த தென்றாக், தன்னுடலைத்
தானென்று மதிக்கையாலே தன்மாதன்ம மிருவினையுந் துணி
வாய்த் தேடிப், பின்னுமுட லெடுப்பதற்கே கர்த்தாவாகிப் பிற
விவிடாய் கொண்டுழன்றா நெஞ்சே கேளாய், நின்னுடலைப் பகு
த்தறிந்து வேறாய்க் கண்டு நின்றறிவைத் தானாகத் தேடிப் பாரே. 8

அவைக்குழுத லெழுதாயும் விருத்திக் தோங்கித் தொல்
லைவினைக் கிடாகத் தோற்றுங் காயங், கவைக்குதவி யற்றபுழு
மேச்சற் கூடாங் கஸ்தியுறு மலமூத்திரக் கடமென் றெண்ணித்,
தவத்துடையோ ருடல்தளர்ந்து குழுவா முன்னந் தன்னுடலைப்
பகுத்தறிவாற் றள்ளி யேறிப், பவக்கடலைக் கடப்ப தன்றிப்
பிராந்தா னாகிப் பவக்கடலிற் படிவர்களோ படிந்திடாரே. 9

அன்னைதந்தை துணைவர்சுற்றம் பெண்டிர் மக்க ளச்ச
மட்டத் தொட்டிழுத்த மாடு மாடு, கன்னிதியங் கன்னலொடு
சென்னற்கெல்லா நானெனதென் றலைக்கழுற்றுக் கவலைக் கா
ளா, பென்னசன்ம மெடுத்த துத்தாய் நெஞ்சே கேளாய் யினி
யேனுஞ் சுருதியுக்தி தெறியு டொன்றிக், தன்னையின்னு னென்
று யறும்பா கித்தாற் சமசார துக்கமெல்லாம் வெளியாங்
10

ஆணவகா மியமாயை மலமோர் மூன்று மடுத்தறிவைக் கெடுக்குமதை யடுக்கப் போமோ, சாணளவுக் கேறிவந்தால் முழுத்துக் கப்பாற் றாழ்த்திவிட்டுத் தனக்காளாய்ப் படுத்திக் கொள்ளும், வாணிபர்செய் தொழிலதுபோற் கருத்தாய் நோக்கி மலமூன்றும் புசிப்பறவே திறப்பா யாகி, லாணவா திமலமறும் பரமானந்த வமுதருந்தி வாழ்ந்துசுகித் திருக்க லாமே. 11

முத்திபெறும் வழியேது யானு றென்றன் மூடபவந் தொலையும்வகை யாதோ வென்று, பத்தினியுட னருட்குருவின் சன்னிதானப் பணிவிடைசெய் தொழுக்க முண்டாய் விசாரித் தன்பா, யுய்த்துணர்ந்து நடுவினீ கணப்போ தேனு முனதுளக்கண் மாறுமறப் பார்த்தா யானுற், சத்தொடுசித் தானந்த வடிவாயெங்குந் தானுகி நின்றபதம் பெறுவ தாமே. 12

தொட்டிடமும் விட்டிடமுஞ் சொல்லிக் காட்டித் தோற்றமொடுக்கங் களிரண்டும் விரித்துக் காட்டிச், சிட்டருடை பக்குவத்தைச் சுற்றிப் பார்த்தே திருவருளைக் கொடுக்க வல்லோனு சானுகு, மிட்டதொரு கட்டளைக்கி யெதிர்சொல்லாம லின்பதுன்ப மிரண்டினுக்கு மிடங்கொ டாமற், சட்டமுடன் விட்டிடறில் நிஷ்டை யோகஞ் சாதிக்கு முத்தமர்கள் சீட ராமே. 13

சாதனமாஞ் சதுட்டயத்தின் விசாரத் தாலே சந்தேகமுள்ளதெலாந் தவறிப் போகும், பேதமறப் பிரமமொன்றே நித்தமென்றும் பிரபஞ்ச மநித்தமென்று மறிந்தா யானு, லாதரவாய்ப் பரோக்ஷமென்ப ததுவே யாகு மபரோக்ஷக் ஞானமென்ப தியாதோ வென்முற், காதலுடன் சொல்லாமற் சொல்லிக் காட்டுங் காரணதே சிகனருளாற் பெறுவ தாமே. 14

சொற்பனத்தில் மலடிபிள்ளைப் பெற்றுப் போலுஞ் சோரனென்று கட்டையைக்கண் டொளித்தாப் போலுஞ், சற்பமென்று பழுதையைக்கண் டயர்ந்தாப் போலுஞ் சடத்தை மெய்யென் றறிவிழந்தோர் பிராந்தா ளாகுஞ், சொற்பனங்கண் டெழுந்துபொய்யென் றறிந்தாப் போலுஞ் சோரனென்றோன் கட்டையிதென் றறிந்தாப் போலுஞ், சற்பமென்றோன் பழுதையிதென் றறிந்தாப் போலுஞ் சடத்தை மித்தை யென்றறிந்தோன் ஞானி யாமே 15

மண்ணிடத்திற் ரோற்றுகின்ற கடத்தை நீக்கி மண்ணென்று மதித்தறியில் மண்ணே யாம்போற், றன்னிடத்திற் ரோற்றுகின்ற குமிழி தன்னைத் தண்ணென்று மதித்தறியிற் றண்ணீராம் போற், பொன்னிடத்திற் ரோன்றுகின்ற வுடைமை தன்னைப் பொன்னென்று மதித்தறியிற் பொன்னே யாம்போற், றன்னிடத்திற் ரோன்றுகின்ற சடத்தை நீக்கித் தானென்று மதித்தறிவே சாக்ஷி யாமே. 16

ஒண்ணாகி யொன்றினுக்குள் மூன்றுண் டாகி யொருமூன்றுக் கிருமூன்று யதிலொன் றுக்குள், விண்ணாகி யொன்றிலொன்று யைந்துண் டாகி விரிந்தவைந்தி லொவ்வொன்றுக் கவ்வைந் தாகிப், பெண்ணாகி யாணாகி நாணு வாகிப் பிரிந்துலகீ ரேழாகிப்பிரமாண்ட மாகி, மண்ணாகி மண்ணுடைந்து மாறுமூன்று வந்தவழி யூடொடுங்கி யொன்றுங் காணே. 17

ஆவரணம் விக்ஷேப மவித்தை மாயை யவைநான்கும் முக்குணத்திற் செனித்த தாகு, மாவரணம் விக்ஷேப மவித்தைமாயை யவைநான்கின் காரியங்க ளியாதோ வென்னி, லாவரணம் விக்ஷேப மவித்தை மாயை யவைநான்கிற் சிவசீவன் ஜகத்துண் டாகிற், றுவரணம் விக்ஷேப மவித்தை மாயை யவைநான்கிற் பெயர்சாக்ஷி நீயாங் காணே. 18

ஆறுறு தத்துவத்தின் வகையே தென்னி லாக்கையெனுந் தூலமதி லிருமூன் ருகு, மீருறு சூக்குமத்துக் கிருப தாகு மியல்பான காரணத்துக் கோரைந் தாகுங், கூறுது பூதமைந்துங் கூடக் கூட்டிக் குலவுசிவ தத்துவமென் ரோது நூல்கள், வீறுறு தத்துவங்கள் முப்பத் தாறும் வேறுகக் கண்டறிவே சாக்ஷி யாமே. 19

என்னுடைமை யென்பூமி யென்வெள்ளாமை யென்வீடு யென்வாச லென்றுப் போல, யென்னுடல மென்பிராண னிந்தியத் தோ டென்னுடைய மனம்புத்தி முதலா யுள்ள, துன்னுடைய காரியமா யிருக்கை யாலே யுன்னையின்னு னென்றறியா ததுநீ யல்ல, வுன்னுடைய காரியங்க ளனைத்தும் வேறு யுணர்ந்தறியு முயர்சாக்ஷி நீயாங் காணே. 20

செவியுடம்பு கண்மூக்கு நாக்குத் தாழ்வாய் சென்னிகழுத் தடுகன்னஞ் சிறுநீர் தாரை, குவிமுலைமார் பிடைதுடைதோள்

வயிறு கைகால் குண்டிதொப்புள் தசைநரம்போ டென்பு ரோம, மிவைமுதற்கொண் டென்னதென்றே தன்ன தாகு வியம்பினு னக் கன்னியமா யிருக்கை யாலே, யவையனைத்துந் தானல்லச் சடமா மென்றே யாய்ந்தறியு முயர்சாக்ஷி நீயாங் காணே. 21

அஸ்தியுடன் மாமிசந்தோல் நரம்பு ரோம மைந்துமுனக் கன்னியமா யிருக்கை யாலே, யஸ்தியுடன் மாமிசந்தோல் நரம்பு ரோம மைந்துமுதற் பிருதிவியின் கூற தாகும், அஸ்தியுடன் மாமிசந்தோல் நரம்பு ரோம மைந்தினையு நீயறிவா யதுநீ யல்ல, வஸ்தியுடன் மாமிசந்தோல் நரம்புரோம மைந்தினுக்கு முயர் சாக்ஷி நீயாங் காணே. 22

மூத்திரம்வாய் நீர்வேர்வை யுதிரம் விந்து முதலைந்து மன் னியமா யிருக்கை யாலே, மூத்திரம்வாய் நீர்வேர்வை யுதிரம் விந்து முதலைந்துஞ் சலத்தினுடை கூற தாகும், மூத்திரம்வாய் நீர்வேர்வை யுதிரம் விந்து முதலைந்து நீயறிவா யதுநீ யல்ல, மூத் திரம்வாய் நீர்வேர்வை யுதிரம் விந்து முதலைந்துக் குயர்சாக்ஷி நீயாங் காணே. 23

பசிதாக நித்திரைமை துனஞ்சோம்ப லைந்தும் பகுத்தறியி லன்னியமா யிருக்கை யாலே, பசிதாக நித்திரைமை துனஞ்சோ ம்ப லைந்தும் பகுத்தறியி லக்கினியின் கூற தாகும், பசிதாக நித் திரைமை துனஞ்சோம்ப லைந்தும் பகுததறியில் நீயறிவா யதுநீ யல்ல, பசிதாக நித்திரைமை துனஞ்சோம்ப லைந்தும் பகுத்தறியு முயர்சாக்ஷி நீயாங் காணே. 24

ஓடலிருந் திடல்நடத்தல் படுத்தல் தாண்ட லோரைந்து மன்னியமா யிருக்கை யாலே, யோடலிருந் திடல்நடத்தல் படுத் தல் தாண்ட லோரைந்து மாருதத்தின் கூற தாகும், மோடலிரு ந் திடல்நடத்தல் படுத்தல் தாண்ட லோரைந்து நீயறிவா யதுநீ யல்ல, வோடலிருந் திடல்நடத்தல் படுத்தல் தாண்ட லோரை ந்துக் குயர்சாக்ஷி நீயாங் காணே. 25

இராகமொடு மோகம்வெட்கம் பயந்து வேஷ மிவையைந்து மன்னியமா யிருக்கை யாலே, இராகமொடு மோகம்வெட்கம் பயந்து வேஷ மிவையைந்துங் ககனத்தின் கூற தாகு, மிராக மொடு மோகவெட்கம் பயந்து வேஷ மிவையைந்தும் நீயறிவா

யதுநீயல்ல, இராகமொடு மோகம்வெட்கம் பயந்து வேஷ மிவை யைந்துக் குயர்சாக்ஷி நீயாங் காணே. 26

தசைநரம்பு துவக்குமயி ரென்பு வாய்நீர் தன்னொடுசுக் கி லங்குறுதி சிறுநீர் வேர்வை, பசிதாக மைதுனங்கண் ணுறக்க ஞ் சோம்பல் படுத்தலிருந் திடல்நடத்த லோடல் தாண்டல், திசைபுகழு மிராகமொடு மோகம் வெட்கந் துவேஷமச்ச மிவ் வகைக ளிருபத் தைந்து, மிசைபெறுமைம் பூதபஞ்சீ கரண தூல மெனுமுடலுக் குயர்சாக்ஷி நீயாங் காணே. 27

தூலவுட நீயல்ல வென்று போனாற் றொந்தசட் பாவவிகா ரங்க ளேது, தூலவுட னீயல்ல வென்று போனார் றொந்தமா மானமி மானமேது, தூலவுட னீயல்ல வென்று போனாற் றொ ந்தகுல கோத்திரவன் ஞாதி யேது, தூலவுட னீயல்ல வென்று போனாற் றொந்தாதிக் குயர்சாக்ஷி நீயாங் காணே. 28

தேகாதிப் பிரபஞ்ச நாம ரூபந் தேர்ந்தறியி லன்னியமா யி ருக்கை யாலே, தேகாதிப் பிரபஞ்ச நாம ரூபந் தேர்ந்தறியிற் பூதமைந்தின் கூற தாகுந், தேகாதிப் பிரபஞ்ச நாம ரூபந் தேர் ந்தறியில் நீயறிவா யதுநீ யல்லத், தேகாதிப் பிரபஞ்ச நாம ரூ பந் தேர்ந்தறியு முயர்சாக்ஷி நீயாங் காணே. 29

அணுத்திரண காட்டமுத லண்ட பிண்ட மகண்டமெங்கு மன்னியமா யிருக்கை யாலே, அணுத்திரண காட்டமுத லண்ட பிண்ட மகண்டமெங்கும் பூதமைந்தின் கூற தாகு, மணுத்தி ரண காட்டமுத லண்ட பிண்ட மகண்டமெங்கும் நீயறிவா யதுநீ யல்ல, லணுத்திரண காட்டமுத லண்ட பிண்ட மகண்ட மெங்கும் யுயர்சாக்ஷி நீயாங் காணே. 30

சமட்டியாந் தூலசரீ ரத்தை நன்றாய்ச் சார்ந்தறியி லன்னி யமா யிருக்கை யாலே, சமட்டியாந் தூலசரீ ரத்தை நன்றாய்ச் சார்ந்தறியி லின்றதுவே பஞ்ச பூதஞ், சமட்டியாந் தூலசரீ ரத்தை நன்றாய்ச் சார்ந்தறியில் நீயறிவா யதுநீ யல்ல, சமட்டி யாந் தூலசரீ ரத்தை நன்றாய்ச் சார்ந்தறியு முயர்சாக்ஷி நீயாங் காணே. 31

பிருதிவியப் புடன்றேயு வாயுவா காசப் பிரிவைந்து மன் னியமா யிருக்கை யாலே, பிருதிவியப் புடன்றேயு வாயுவா கா

சப் பிரிவைந்துஞ் சூக்கபூ தங்க ளாகும், பிருதிவியப் புடன்றேயு வாயுவா காசப் பிரிவைந்து நீயறிவா யதுநீ யல்லப், பிருதிவியப் புடன்றேயு வாயுவா காசப் பிரிவைந்துக் குயர்சாக்ஷீ நீயாங் காணே. 32

ஞானமுடன் சுரோத்திரஞ் சமானன் வாக்கு நான்குமுனக் கன்னியமா யிருக்கை யாலே, ஞானமுடன் சுரோத்திரஞ் சமானன் வாக்கு நான்குமுதற் சப்தமதின் குணம தாகும், ஞானமுடன் சுரோத்திரஞ் சமானன் வாக்கு நான்கினையு நீயறிவா யதுநீ யல்ல, ஞானமுடன் சுரோத்திரஞ் சமானன் வாக்கு நான்கினுக்கு முயர்சாக்ஷி நீயாங் காணே. 33

மனதுதொக்கு வியானனுடன் பாணி நான்கு மதத்தறியி லன்னியமா யிருக்கை யாலே, மனதுதொக்கு வியானனுடன் பாணி நான்கு மதித்தறியிற் பரிசமதின் குணம தாகு, மனதுதொக்கு வியானனுடன் பாணி நான்கு மதித்தறியில் நீயறிவா யதுநீ யல்ல, மனதுதொக்கு வியானனுடன் பாணி நான்கு மதித்தறியு முயர்சாக்ஷி நீயாங் காணே. 34

புத்திசட்சு வுதானனுடன் பாத நான்கும் புகன்றறியி லன்னியமா யிருக்கை யாலே, புத்திசட்சு வுதானனுடன் பாத நான்கும் புகன்றறியில் ரூபமதின் குணம தாகும், புத்திசட்சு வுதானனுடன் பாத நான்கும் புகன்றறியில் நீயறிவா யதுநீ யல்ல, புத்திசட்சு வுதானனுடன் பாத நான்கும் புகன்றறியு முயர்சாக்ஷி நீயாங் காணே. 35

சித்தமொடு சிங்ஙுவை யபானன் குய்யஞ் செறிநான்கு மன்னியமா யிருக்கை யாலே, சித்தமொடு சிங்ஙுவை யபானன் குய்யஞ் செறிநான்கு மிரத்தமதின் குணம தாகும், சித்தமொடு சிங்ஙுவை யபானன் குய்யஞ் செறிநான்கு நீயறிவா யதுநீ யல்ல, சித்தமொடு சிங்ஙுவை யபானன் குய்யஞ் செறிநான்குக் குயர்சாக்ஷி நீயாங் காணே. 36

ஆங்கார மாக்கிராணங் குதம் பிராண னவைநான்கு மன்னியமா யிருக்கை யாலே, யாங்கார மாக்கிராணங் குதம் பிராண னவைநான்குங் கந்தமதின் குணம தாகு, மாங்கார மாக்கிராணங் குதம் பிராண னவைநான்கு நீயறிவா யதுநீ யல்ல, வாங்

கார மாக்கிராணங் குதம் பிராண னவைநான்குக் குயர்சாக்ஷி நீயாங் காணே. 37

சோத்திரஞா னஞ்சமானன் வியானன் வாக்குத் தொக்கு மனம் புத்திசட்சு வுதானன் பாணி, தேற்றுசித்த மாங்கார மபானன் பாதஞ் சிங்நுவையாக் கிராணங்குதம் பிராணன் குய் யஞ், சாற்றுமிவை யைநான்கு மியாதோ வென்னிற் றன்மாத் திரா பஞ்சகத்தின் குணமென் றுகு. மேற்றவபஞ் சீகிருத சூக்கு மபூத மெனுமுடலுக் குயர்சாக்ஷி நீயாங் காணே. 38

சூக்கவுட னீயல்ல வென்று போனுற் றெருந்தபலா பலப சியா திகடா னே து, சூக்கவுட னீயல்ல வென்று போனுற் றெரு ந்தமாஞ் சத்தவச ஞதி யே து, சூக்கவுட னீயல்ல வென்று போ னுற் றெருந்தசாஞ் சல்லியரா காதி யேது, சூக்கவுட னீயல்ல வென்று போனுற் றெருந்தங்கட் குயர்சாக்ஷி நீயாங் காணே. 39

சர்வவிங் திரியகர ணம்பி ராணன் சார்ந்தறியி லன்னியமா யிருக்கை யாலே, சர்வவிங் திரியன் கரணம் பிராணன் சார்ந்த றியின் மாத்திரையே யீன்ற தாகும், சர்வவிங் திரியங் கரணம் பிராணன் சாந்தறியில் நீயறிவா யதுநீ யல்ல, சர்வவிங் திரியங் கரணம் பிராணன் சார்ந்தறியு முயர்சாக்ஷி நீயாங் காணே. 40

சமட்டியாஞ் சக்கும சரீரந் தன்னைச் சார்ந்தறியி லன்னி யமா யிருக்கை யாலே, சமட்டியாஞ் சூக்கும சரீரந் தன்னைச் சார்ந்தறியி லீன்றதுவே சூக்க பூதம், சமட்டியாஞ் சூக்கும சரீரந் தன்னைச் சார்ந்தறியில் நீயறிவா யதுநீ யல்லச், சமட்டி யாஞ் சூக்கும சரீரந் தன்னைச் சார்ந்தறியு முயர்சாக்ஷி நீயாங் காணே. 41

சத்தபரி சமுருவ மிரத கந்தந் தானைந்து மன்னியமா யிரு க்கை யாலே, சத்தபரி சமுருவ மிரதகந்தந் தானைந்தும் விக்ஷே பசத்தி யாகுஞ், சத்தபரி சமுருவ மிரத கந்தந் தனுமூல நீயறி வா யதுநீ யல்ல, சத்தபரி சமுருவ மிரத கந்தந் தானைந்துக் குய ர்சாக்ஷி நீயாங் காணே. 42

மூலவுட னீயல்ல வென்று போனுல் முரண்மேவு மறிவறி யா மைகடா னேது, மூலவுட னீயல்ல வென்று போனுல் முர ண்பிரிய மோதபிர மோத மேது, மூலவுட னீயல்ல வென்று

போனால் முரண்மூட சடசூனியந்தா மேது, மூலவுட னீயல்ல வென்று போனால் முரணாதிக் குயர்சாக்ஷி நீயாங் காணே. 43

சமட்டிகா ரணசரீ ரத்தை நன்றாய்ச் சார்ந்தறியி லன்னிய மா யிருக்கை யாலே, சமட்டிகா ரணசரீ ரத்தை நன்றாய்ச் சார்ந்தறியில் விக்ஷேப மீன்ற தாகும், சமட்டிகா ரணச ரீரத்தை நன்றாய்ச் சார்ந்தறியில் நீயறிவா யதுநீ யல்ல, சமட்டிகா ரண சரீ ரத்தை நன்றாய்ச் சார்ந்தறியு முயர்சாக்ஷி நீயாங் காணே.

ஆறாறு தத்துவமும் பெருக்கிப் பார்க்கி லவையனைத்தும் பிரமாண்ட மாகி நிற்கும், பூரண பிரமாண்டந் தனைப்போதிக் கிற் பொருவிலதாம் விக்ஷேபத் தொடுங்கிப் போகும், வாறான விக்ஷேப சத்தி தானும் வலிதான பிரகிருதிக் குள்ளாய் நிற்கும், வேறான பிரகிருதி நித்த சுத்த விபுவான பிரமத்தோ டொன்றிப் போமே. 45

தானாகி நின்றிலங்கு மொன்றுக் குள்ளே சராசரமெல் லாந் தோன்றி யொடுங்கிப் போகும், தானாகி நின்றிலங்ரு மொன்றை விட்டார் சராமரணத் துவந்தனையைத் தள்ள மாட்டாய், தானாகி நின்றிலங்கு மொன்றை பற்றிச் சற்குருவின் சன்னிதியிற் காத்தா யானாற், தானாகி நின்றிலங்கு மொன்றோ டொன்றித் தற் சாக்ஷி தானாகி வாழ்க லாமே. 46

கோசமைந்து மொவ்வொன்றாய்ப் பிரித்து வேறாய்க் குறித்தறியி லன்னியமா யிருக்கை யாலே, கோசமைந்து மொவ்வொன்றாய்ப் பிரித்து வேறாய்க் குறித்தறியில் விக்ஷேப மீன்ற தாகுங், கோசமைந்து மொவ்வொன்றாய்ப் பிரித்து வேறாய்க் குறித்தறியில் நீயறிவா யதுநீ யல்ல, கோசமைந்து மொவ்வொன்றாய்ப் பிரித்து வேறாய்க் குறித்தறியு முயர்சாக்ஷி நீயாங் காணே. 47

அன்னமய மென்பதுவே தூல தேக மாகுமினிப் பிராண மய மனோமயத்தோ, டன்னியவிஞ் ஞானமயத் துடனிம் மூன்று முற்ற தொரு சூக்கும சரீர மாகும், பின்னமுறு மானந்த கோச மொன்றும் பெருகியகா ரணதேக மென்பர் மேலோர், பன்னரிய வுடல் மூன்றுங் கோச மைந்தும் பகுத்தறியு முயர்சாக்ஷி நீயாங் காணே. 48

காரணசூக் குமதூல தேக மூன்றுங் கண்டறியி லன்னிய மா யிருக்கை யாலே, காரணசூக் குமதூல தேக மூன்றுங் கண்

டறியில் விக்ஷேப மீன்ற தாகுங்,காரணசூக் குமதூல தேக மூன் றுங் கண்டறியில் நீயறிவா யதுநீ யல்ல, காரணசூக் குமதூல தேக மூன்றுங் கண்டறியு முயர்சாக்ஷி நீயாங் காணே. 49

சாக்கிரஞ்சொப் பனஞ்சுழுத்தி யவத்தை மூன்றுஞ் சார்ந் தறியி லன்னியமா யிருக்கை யாலே, சாக்கிரஞ்சொப் பனஞ்சுழு த்தி யவத்தை மூன்றுஞ் சார்ந்தறியில் விசுவாதி தொழில தாகு ஞ், சாக்கிரஞ்சொப் பனஞ்சுழுத்தி யவத்தை மூன்றுஞ் சார்ந் தறியில் நீயறிவா யதுநீ யல்ல, சாக்கிரஞ்சொப் பனஞ்சுழுத்தி யவத்தை மூன்றும் சார்ந்தறியு முயர்சாக்ஷி நீயாங் காணே. 50

விசுவதை சதபி ராக்ஞனை நன்றாய் விசாரிக்கி லன்னியமா யிருக்கை யாலே, விசுவதை சதபி ராக்ஞனை நன்றாய் விசாரிக் கில் ராசதத்திற் செனித்த தாகும், விசவதை சதபி ராக்ஞனை நன்றாய் விசாரிக்கில் நீயறிவா யதுநீ யல்ல, விசுவதை சதபி ராக் ஞனை நன்றாய் விசாரிக்கு முயர்சாக்ஷி நீயாங் காணே. 51

இவ்வுடல்க ளவத்தையபி மானி யாதியிவையன்றேற் புண் ணியபா வாதி யில்லை, இவ்வுடல்க ளவத்தையபி மானி யாதி யிவையன்றேற் சுவர்க்கநர காதி யில்லை, இவ்வுடல்க ளவத்தை யபி மானியாதி யிவையன்றேற் பந்தமோ க்ஷங்க ளில்லை, இவ்வு டல்க ளவத்தை யபி மானியாதி யிவைகளினுக் குயர்சாக்ஷி நீயா ங் காணே. 52

விராட்டாதி சரீரங்கண் மூன்று மூன்றி விசாரிக்கி லன்னி யமா யிருக்கை யாலே, விராட்டாதி சரீரங்கண் மூன்று மூன்றி விசாரிக்கின் முக்குணத்தின் செனித்த தாகும், விராட்டாதி சரீ ரங்கண் மூன்று மூன்றி விசாரிக்கில் நீயறிவா யதுநீ யல்ல, விரா ட்டாதி சரீரங்கண் மூன்று மூன்றி விசாரிக்கி லுயர்சாக்ஷி நீயா ங் காணே. 53

சிருஷ்டிதிதி சங்கார வவத்தை மூன்றுந் தேர்ந்தறியி லன் னியமா யிருக்கை யாலே, சிருஷ்டிதிதி சங்கார வவத்தை மூன் றுந் தேர்ந்தறியிற் பிரமாதி தொழில தாகுஞ், சிருஷ்டிதிதி சங் கார வவத்தை மூன்றுந் தேர்ந்தறியில் நீயறிவா யதுநீ யல்ல, சிருஷ்டிதிதி சங்கார வவத்தை மூன்றுந் தேர்ந்தறியு முயர் சாக்ஷி நீயாங் காணே. 54

பிரமனொடு விஷ்டுணுருத் திரனை யூன்றிப் பிரித்தறியி லன்னியமா யிருக்கை யாலே, பிரமனொடு விஷ்ணுருத் திரனை யூன்றி பிரித்தறியிற் சத்துவமே யீன்ற தாகும், பிரமனொடு விஷ்ணுணுருத் திரனை யூன்றிப் பிரித்தறியில் நீயறிவா யதுநீ யல்ல, பிரமனொடு விஷ்ணுருத் திரனை யூன்றிப் பிரித்தறியு முயர்சாக்ஷி நீயாங் காணே. 55

விராட்டாதி யவத்தையபி மானி யீருய் வேறதனுன் முக்கியசட் குணங்க ளில்லை, விராட்டாதி யவத்தையபி மானி யீருய் வேறதனுற் பிரபுத்துவ வலியே யில்லை, விராட்டாதி யவத்தையபி மானி யீருய் வேறதனு லட்டகுணங் களுமே யில்லை, விராட்டாதி யவத்தையபி மானி யீருய் வேறதனு னுயர்சாக்ஷி நீயாங் காணே. 56

சீவனீ சுரன்சகத் திம்மூன் றுந்தான் றேர்ந்தறியி லன்னியமா யிருக்கை யாலே, சீவனீ சுரன்சகத் திம்மூன் றுந்தான் றேர்ந்தறியின் முக்குணத்திற் செனித்த தாகும், சீவனீ சுரன்சகத் திம்மூன் றுந்தான் றேர்ந்தறியில் நீயறிவா யதுநீ யல்ல, சீவனீ சுரன்சகத் திம்மூன் றுந்தான் றேர்ந்தறியு முயாசாக்ஷி நீயாங்காணே. 57

சத்துவமொடு ரசதமோ குணங்கண் மூன்றுஞ் சார்ந்தறியி லன்னியமா யிருக்கை யாலே, சத்துவமொடு ரசதமோ குணங்கண் மூன்றுஞ் சார்ந்தறியிற் பிரகிருதி யீன்ற தாகுஞ், சத்துவமொடு ரசதமோ குணங்கண் மூன்றுஞ் சார்ந்தறியில் நீயறிவா யதுநீ யல்ல, சத்துவமொடு ரசதமோ குணங்கண் மூன்றுஞ் சார்ந்தறியு முயர்சாக்ஷி நீயாங் காணே. 58

ஆதியாம் மூலப்பிர கிருதி யைத்தா னுயுங்கா லுன்னிடமா யிருக்கை யாலே, ஆதியாம் மூலப்பிர கிருதி யைத்தானுயுங்கா லுன்னிடத்தே விவர்த்த மாகும், ஆதியாம் மூலப்பிர கிருதி யைத்தா னுயுங்கால் நீயறிவா யதுநீ யல்ல, ஆதியாம் மூலப்பிர கிருதியைத்தா னுய்ந்தறியு முயர்சாக்ஷி நீயாங் காணே.

ஆதியாம் மூலப்பிர கிருதி யோடே யானதிரி குணமகத்துவமாங் காரம், ஆதியாம் மாத்திரையும் பஞ்ச பூத மானசராசரமுதலாய் மற்று மெல்லாம், ஆதியாம் மப்பதனைத் தவிர

வேறு யானதிரை நுரைதிவலை குமிழி யில்லை, ஆதியாம் பிரமமா முன்னின் வேறு யானவைக ளணுவுமிலை யெல்லா நீயே. 60

பழுதையா டகமதிலே செனித்த தான பணிமகுட கேயூர குண்ட லாதி, பழுதையா டகமதனைத் தவிரவேறே பார்தனிலே யீதுபோற் செனியா நின்ற, பழுதிலறி வுண்மையா னந்த நித்த பரிபூர ணப்பிரம சொரூபந் தன்னிற், பழுதுளவாஞ் சீவே சுர சகத்தும் பரிபூர ணப்பிரம மாகுந் தானே. 61

நித்தியமே சம்பூர்ணம் பரமா னந்த நிமலகே வலபரதத் துவசத் தார்த்தஞ், சுத்தபரப் பிரமம விச் சின்ன சீவ சுயந்துரிய கூடத்த சாக்ஷி போதஞ், சத்தியசஞ் சலரகித நிட்பிர பஞ்சஞ் சருவசமஞ் சாந்தரூக் குமம்மே முத்தம், புத்தநிதா னந்தத்வ விபுவான் மாநீ புத்திரனே நீயதுவா யாகு வாயே. 62

நிர்க்குண னந்தபரப் பிரம நானே நிருலேப சகசீவ பரமு நானே, நிர்த்தோட வப்பிரமே யனுமே நானே நிருபத்திர வச ரீர தாணு நானே, நிர்ச்சம்பந் தனசலன னணுவு நானே நிரிக் கிரிய வப் பிராண சிவனு நானே, நிர்ச்சீவ நிருவிகா ரமும்நானே நிர்விடய வகண்டமெலாம் நானே நானே. 63

ஆவியுடல் பொருள்மூன்றுந் தத்த மென்றே யருட்குரு வின் சன்னிதியிற் சித்த மாக, மேவியளித் தறிவுண்மைப் பொ ருளைப் பற்றி மெய்த்தவத்தின் மிக்கோராய் நிற்கு நல்லோர், பாவையரோ டில்லறத்தில் வாழ்ந்திட் டாலும் பரிவினொடு துற வறத்தோ டிருந்திட் டாலும், பூவுலகி லொட்டியுமொட் டாமல் வேறாய்ப் புளியோடு பழம்போலொத் திருப்பர் தாமே. 64

இச்சையற்றோர்க் கின்பமில்லைத் துன்ப மில்லை யிருவினை யோ டிரவுமில்லை பகலு மில்லைக், குட்சிதனக் கிரைதேடித் திரிவ தில்லைக் குறைவுமில்லை நிறைவுமில்லைக் குலமோ வில்லை, சட் சமய வாதமில்லைப் பேத மில்லைச் சங்கற்ப விகற்பமில்லைத் தா னே தானு, யச்சமறச் சுகித்திருக்குஞ் சிசுவைப் போல வானந்த விளையாட்டோ டிருப்பர் தாமே. 65

நாடறிந்த பார்ப்பார்க்குப் பூண நூல்கள் நடுமார்பி லிருந் தாலென் னிருக்காட் டாலென், வீடறிந்த பார்ப்பார்க்குத் திரு வே டங்கள் மேனிதனி லிருந்தாலென் னிருக்காட் டாலென்,

பாடறிந்து பாடுபட்டாப் பலனுண் டாகும் பாடறியார் தங்கு ளுக்கே கெடென் றுப்போல், கூடறிந்து குடியிருந்தே சுகிக்கா ர்க் கெல்லாங் கூற்றன்வந்து பிடித்தடித்துக் கொல்வா னன்றே.

பத்துலக்ஷங் கோடிநன்னூ லாய்ந்தா லென்னப் பாரடங்க வலம்புரியாய்ச் சூழ்ந்தா லென்ன, வத்தைவிட்டே யித்தைகொ ள்நீயென்றுப் போல வாரணத்துட் பொருளையன்றோ வறிய வே ண்டுந், தத்துவத்தை நித்தநித்தம் பற்றிப் பார்த்துத் தன்னையி ன்னு னென்றறிந்தே பந்த நீங்கி, யத்துவிதந் தானாகி நிற்பா யாகி லழியாத வீட்டின்பம் பெருகுந் தானே. 67

மந்திரங் காற்பங்கு மதிமுக் காற்பங்கு வந்தடுத்தால் மா தவத்தோர் தங்கட் கெல்லாம், சந்திரனுஞ் சூரியனும் நேரிட் டாப்போற் றற்சொருபப் பிரகாசம் வெளியாய்த் தோன்று, மெந்திரங்க ளெழுதிவைத்துப் பூசித் தென்ன வெண்ணிறந்த நூல்கள்முற்றும் வாசித் தென்ன, தந்திரத்தாற் றன்னைநன்று யறிய வேண்டுந் தனையறிந்தாற் றலைவனையு மறிய லாமே. 68

இல்லாத மாயைதனை யுண்டென் றெண்ணி யிருவினையைப் புரிந்தவலநெறியே நின்று, செல்லாத காசதுபோல் நானு பேதச் செனனவா ரிதியிலுழன் றலைவ தெல்லாம், பொல்லாத மனத் தினுடைச் செயலென் றெண்ணிப் பொருந்தறியார்க் கிப்புவியி ற் பலனே தென்றுற், கல்லான நெஞ்சுடைய நமன்கைப் பட்டுக் கலங்குவதே கைகண்ட பலனு மன்றே. 69

இச்சைகட்கு வித்தான மனத்தைப் பற்றி யிழுத்துவந்து மூலத்தில் நிறுத்திக் கொண்டு, வெச்சரிக்கை யாகநித்தம் லயிக் கப் பாரு வெண்ணரிய கன்மமெல்லாம் வெண்ணீ றாகு, நிச்சயி த்துப் பாரரம வுண்டித் தீயா னீணிலத்திற் பாஷாண்டர் வேட ம் பூண்டே, பிச்சையெடுத் துண்டாலும் பிறப்புப் போமோ பெ ந்தம் விட்டோர்க் கருள்வீடு பெருகுந் தானே. 70



## விவேகசூடாமணி.

சீவருக் கிங்கு மாந்தர் சென்மமே யரிதா மத்தின்
மேவுதற் கரிதா மாண்மை மேவினு மறையோன் றன்மை
யாவதற் கரிதா மத்தை யடைகினும் வேதந் தானே
யோவலற் றோது மார்க்க மொன்றுவ தரிய தாகும். 1

அத்தினும் வித்து வானு யமைவதிங் கரிதா மத்தின்
வித்தர வான்மா னுன்ம விவேகமெத் தரிதே யத்தின்
சுத்தமா ஞான மற்றே சொரூபமாய் நிற்கு முத்தி
புத்திசே ரனந்த சன்மப் புண்ணிய மன்றி யெய்தா. 2

பேசிய வடைவா யாவும் பெற்றிட வொண்ணா தேனு
மீசனல் லருளி னுலே யிசைவதா யருமை யான
மாசிலா மநுடத் தன்மை மன்னிய முமுட்சுத் தன்மை
தேசிக ராசன் சேவைத் திறமையிம் மூன்றும் போதும். 3

எத்திற வேது வாலோ வெய்தியு மநுடத் தேக
மத்திலு மார ணார்த்த மறிவதற் கேது வாக
வொத்தவாண் மையை யடைந்து முண்மையா முத்தி சேர
வெத்தனஞ் செய்யா மூட னென்றுமான் மாவைக் கொன்றோன்.

அருமையா மநுடத் தேக மடைந்ததி லாண்மை தன்னை
மருவியும் யாவன் றன்சேர் மாசிலாப் பயனை வேண்டித்
தரணியின் முயன்றி டாமற் றவிருவ னவனை யன்றி
யொருவனு மூட னுண்டோ வுள்ளவா றோருங் காலை. 5

ஓதிய பலவா நூலை யொழுங்குறப் படித்து மென்ன
தீதிலாத் தேவர் தம்மைத் தினமுமர்ச் சித்து மென்ன
நீதியாங் கன்ம மியாவு நித்தமுஞ் செய்து மென்ன
கோதிலாத் தேவர் தம்மைக் குறித்துபா சித்து மென்ன. 6

ஈதலா லின்ன மிங்ங னெத்தனை யியற்றி யென்ன
வாதியாம் பரசி வைக்கிய மறிந்திடு மறிவா லன்றி
யோதொணுக் கற்ப கோடி யுற்றகா லத்தி னுலுங்
கோதிலா முத்தி சித்தி கூடுவ தென்று மில்லை. 7

ஆகையால் வித்து வான்ற னமலமா முத்தி சேர
வாகிய சுகவி ருப்பம் வரையற விடுத்து மேலோ

னாகின நல்லா சானை யடைந்தவ னுபதேச சித்த
வேகமாம் பொருளிற் சித்த மிருத்தியே முயல வேண்டும். 8

அனிசமிப் பவமாம் பவ்வ மழிந்திடுந் தன்னைத் தானே
இனியயோ கத்தி னாலே யெய்திய சொரூப ஞான
மெனுமகா நாவாய் கொண்டே யிப்பவ வாரி நின்றுங்
கனபரப் பிரம மாகுங் கரையின்மே லேற்ற வேண்டும். 9

தீதிலா வதிகா ரிக்குத் திரவிசா ரத்தி னாலே
கோதிலா ஞான சித்தி கூடிடுஞ் செவ்வி தாக
வேதமி றேசங் கால மீசனல் லருளே யாதி
யோதிய ஞானஞ் சேர வுறுதுணைக் காரணந் தான். 10

ஆதலா லான்ம ரூப மறியவிச் சித்த நிரன்
காதலீர் பிரம வித்தாய்க் கருணைவா ரிதியா மாசான்
பாதமே யனுச ரித்துப் பரமமா மான்மாத் தன்னின்
கோதிலா நல்வி சாரங் குறைவறச் செய்ய வேண்டும். 11

மேதையின் மிக்கோ னாகி யிருந்துள சார சாரம்
யாதுமே கூட்டத் தள்ளி வியல்புறுஞ் சதுர னாகி
யேதமி லாறு மைத்த விலக்கண மியாவும் பெற்றோ
னாதியா மான்ம வித்தைக் கதிகாரி யாவ னன்றே. 12

உத்தம விவேகி யாகி யுள்ளுற விரத்த னாகி
நித்தமுஞ் சாந்தி யாதி நின்மலக் குணநி றைந்த
வுத்தம முமுட்ச வுக்கே யுண்மையாம் வத்துத் தன்னின்
யுத்தம விசாரஞ் செய்ய யோக்கியத் தன்மை யுண்டால் 13

சுத்தவே தாந்த நூலுஞ் சுக்குமக் குரவன் சொல்லுஞ்
சத்திய மென்ப தாகச் சார்ந்திடு நிச்ச யத்தை
வத்துவின் சாட்சாத் கார மருவுதற் கேது வான [தோர்.
வுத்தமச் சிரத்தை யென்றே யுரைப்ப ருண்மையை யுணர்ந்

முத்தியி னேது வாக மொழியுபா யங்க ளுக்குட்
பத்தியே மிகவு மேலாய்ப் பகரலா மஃதே தென்னி
னித்தமுஞ் சொச்சொ ரூப நிகழ்த்திய வநுசந் தானம்
பத்திதா னாகு மென்றே பகருவர் பரமு ணர்ந்தோர். 15

ஓதுசா தனசம் பத்தி யுள்ளவா றற்ற தீரன்
தீதிலா வான்ம ரூபந் திகழவே யுணர வேண்டி
யாதுமே யுணர்ந்து தன்னை யெய்தினோர் பவபந் தத்தைக்
கோதறத் தீர்ப்போ ஞன குருவிடைச் செல்ல வேண்டும். 16

சுருதியே முதன்மா னத்தாற் சொல்லிய தனுட்டா னித்துப்
பரவிய பாவ மற்றுப் பற்றெலா மற்றோ ஞகிப்
பிரமவித் தாகி யந்தப் பிரமமே சார்ந்து காட்டம்
மருவிடா வன்னி போல மாசறச் சாந்த ஞகி. 17

காரண மியாது மின்றிக் கருணைவா ரிதியே யாகிப்
பாரினிற் றன்னைப் பற்றிப் பணிந்தசா துக்க ளுக்குப்
பூரணப் பந்து வாகிப் பொருந்திய வாசான் றன்னைச்
சேரலுற் றன்பி னோடே சீடன்சே விக்க வேண்டும். 18

பத்தியால் வணங்கிச் செய்த பலவிதச் சேவை யாலே
மெத்தவுந் தன்னி டத்தின் மெய்யருண் மேவா நின்ற
யுத்தமக் குருவை நோக்கி யுணரவேண் டியதை யெல்லாம்
புத்திமா ஞன சீடன் போற்றியே வினவ வேண்டும். 19

படர்ந்ததீ வினையே யாகும் பவனறு லுலர்த்தப் பட்டுக்
கடந்திடாப் பவமே யாகுங் கானவன் னியினல் வெம்பித்
தொடர்ந்தபீ தியினு னீயே துணையென நம்பு மென்னை
முடிந்திடா மரண மாதி முடிவுறச் செய்து காப்பாய். 20

பிரமவின் பாது பூதி பெற்றதாற் சீத மாகி
நிருமல மாகித் தூய்தாய் நின்முகக் கலச நின்று
வருவதாய்ச் சுகமே செய்யும் வாக்கியச் சுதையி ஞலே
விரிபவக் கானத் தீயால் வெதும்பிய வென்ன நனைப்பாய். 21

இப்பவச் சிந்து தன்னை யெவ்வித மியான் கடப்பே
னெப்படி யிங்கு பாய மேதுதான் கதியெ னக்கா
மிப்படி யென்றி வற்றை யெவளவு முணர்கி லேனியா
னப்பனே யருளா லிந்த வரந்தைதீர்த் தென்னை யாள்வாய். 22

வித்துவா ஞன மைந்தா வெருளுறே லினியு னக்குச்
சுத்தமாய்க் கேடே யில்லைச் சுழல்பவக் கடல் கடக்க
வுத்தம வுபாய முண்டிங் கூனமி லெதிகள் முன்ன
மெத்தினு லிவைக டந்தா ரின்றுனக் கதை யிசைப்பாம். 23

வித்தரப் பவப யத்தை விரைவிலே நாசஞ் செய்யச்
சத்திசே ரோரு பாயஞ் சகத்தினின் மேலா யுண்டு
புத்திர வதனு னீயும் புகல்பவக் கடல் கடந்து
நித்தமும் பரமா னந்த நிலைமையை நண்ணி நிற்பாய். 24

சுத்தவே தாந்த நூலிற் சொல்லிய பொருள் கடம்மி
னுத்தம விசாரத் தாலே யுதித்திடு முண்மை ஞானம்
புத்திர வவற்றி னாலே பொருந்திய பவதுன் பங்க
ளித்தனை யேனு மின்றி யிறந்திடு மிங்குத் தானே. 25

மன்னிய சிரத்தை பக்தி மாசிலாத் தியானம் யோகம்
பன்னிய முமூட்சு வுக்குப் பரமமா முத்தி சேரத்
துன்னிய வேது வென்றே துகளிலா வேதந் தானே
பன்னுவ தாலி வற்றைப் பற்றினோர் பந்தம் பற்றார். 26

உன்னிய சிரத்தை யாதி யுத்தம சாத னத்தை
மன்னியே நிலைமை யாக மாசறச் சாதிப் போர்க்கே
வின்னவென் றுரைா வொண்ணு வியல்புறு மவித்தை செய்த
பின்னமாந் தேக பந்தம் பெயர்ந்திடும் பின்னுங் கேளாய். 27

ஊனமில் பரமான் மாவா முன்றனைக் கஞ்ஞா னத்தா
லீனமா யனுன்ம பந்த மிசைந்ததா லிச்சம் சார
மானதிவ் வான்மா னுன்ம வருவினை கத்து தித்த
ஞானமாங் கனவி மூலாஞ் ஞானகா ரியமெ ரிக்கும். 28

ஏதுதான் பந்த மாகு மெய்வித மீது வந்த
தேதுதா னிருப்பி தற்கா மெய்வித மீது வந்த
மேதுதா னுன்மா வாகு மேதனுன் மாவு மாகு
மேதுதா னுன்மா னுன்ம வியல்புணர் விவைகஞ் சொல்வாய். 29

ஈதுகேட் டாசான் சொல்வா னிவ்வவித் தையினால் வந்த
வேதமாம் பந்தம் விட்டிங் கேகிற் பிரம மாகச்
சாதுவே யிருப்ப விச்சை சாலவாற் றன்னி யன்னி
நீதொழி லியாவுஞ் செய்தா னின்குலத் தாய்தே நின்னுல். 30

தந்தைகொள் குறைத்தைத் தீர்த்துத் தளர்வறச் செய்வ தற்கு
வந்ததன் மைந்த ராதி வையகந் தன்னி லுண்டு
சிந்தைசேர் பந்தந் தன்னைச் சிக்கொந் திதைப்ப தற்குப்
பந்துவாய்த் தன்னை யன்றிப் பாரினி லாரு மில்லை. 31

சென்னிசேர் பார மாதி செய்ததுன் பம்விடுக்க
வன்னிய ருலகி னுண்டிங் கடைந்ததன் பசியே யாதி
தன்னினால் வந்த துன்பந் தவிர்த்திடத் தன்னை யல்லா
லன்னிய ரில்லைப் பந்த மகற்றலு மிந்த வாறே. 32

பரவிய மருந்தை யுண்டு பத்தியஞ் செய்வோ னுக்கே
யரியனே பிணிக ணீங்கு மன்றிமற் றுருஞ் செய்த
கருமம்யா தொன்றி னாலுங் கருதிய பிணிக ணீங்கா
வுரவிய பந்த நீக்க முரைத்தவிந் நீதி போலாம். 33

ஞானநல் விழியாற் றன்னை னற்பொரு ளுணர வேண்டு
மேனையோர் ஞானி யைக்கொண் டிப்பொரு ளுணர வொண்ணா
தீனமிற் றனது கண்ணா லிந்துவை யுணர்வ தன்றி
யேனையா தொன்றி னாலு மிந்துவை யுணர லாமோ. 34

ஓங்கிய பரசி வைக்கிய முணர்ந்திடு முணர்வா லன்றிச்
சாங்கிய மதத்தி னாலுஞ் சார்ந்திடு மியோகத் தாலும்
வீங்கிய கன்மத் தாலும் வேறுபா சனையி னாலு
மோங்கிய முத்திப் பேற்றை யொன்றுவ தென்று மில்லை. 35

ஆதலால் மன மயக்க மடைவதற் கேது வான
காதலசெய் சப்த சாலக் கானகந் தன்னை விட்டுத்
தீதிலாப் பிரம வித்தான் தேசிகன் றன்பால் சென்றிங்
கேதமில் பிரமந் தன்னை யிலங்கவே யுணர வேண்டும். 36

பரவுமஞ் ஞான மாகும் பாம்பினாற் கடிக்கப் பட்டோர்க்
கருமையாம் பிரம ஞான மாகிய மருந்தை யன்றி
மருவிய மறைக ளாலென் மற்றுள நூல்க ளாலென்
பரவிய மருந்தி னாலென் பகருமந் திரங்க ளாலென். 37

திருசிய நாசந் தன்னைத் திறமுறச் செய்தி டாமற்
பிரமமா மான்ம ரூபம் பிறங்கவே யுணர்ந்தி டாமற்
பரமமே நானென் றோதும் பகரன்மாத் திரமே யான
வுரையினாற் பிரம மாக வொன்றிடு முத்தி யுண்டோ. 38

ஆதலால் விவேகி யானோ ரனைத்துபா யத்தி னாலுந்
தீதிலாத் தற்சொ ரூபந் தெரிந்துபந் தம்வி டுக்க
நீதியாய்த் தாங்க டாமே நித்தமு முயல வேண்டும்
மோதுரோ காதி நீக்க முயன்றிடு நீதியே போல். 39

புரிந்தவிவ் வினவ லுக்குப் பொருந்திய வுத்த ரத்தைப்
பரிந்துநா மின்றுனக்குப் பகருவம் பவபந் தத்தால்
வருந்திய நீயி வற்றை மனத்தினை சாக்கிரத் தோடு
டிருந்துகே ளிவற்றாற் பந்த மீறுதா னுடனே நீங்கும். 40

புத்திமா னான மைந்தா பூரண முத்தி சேர
நித்தமில் லாத தான நிகிலமாம் பொருள்க ணின்று
மெத்தவும் விரதி தன்னை மேவுதன் முன்ன ரேது
சித்தமார் சாந்தி தாந்தி திதிட்சையும் பின்ன ரேது. 41

பின்புதன் கன்ம மியாவும் பேணியே துறப்ப தேது
பின்பு வேதாந்த வர்த்தம் பிறங்கவே கேட்ட லேது
பின்புதான் கேட்ட வர்த்தம் பிரித்துணர் மனன மேது
பின்பிடை விடாம லென்றும் பேணிய தியான மேது. 42

சத்தியநிர் விகற்ப மச்ச மாதியா லமைவ தான
வத்துவின் சாட்சாத் கார மவியிறுற் பரமா னந்த
முத்தியை யிவ்வி டத்தே முமுட்சுதான் பெற்று நிற்ப
னுத்தம முத்தி சேரு மொழுங்கிதே யுண்மை யீதே. 43

விரிவுறு மான்மா னான்ம விவேகமியா துறுதி யாக
வரியனே யின்று நின்னு லறிந்திடத் தக்க தத்தை
யுரைசெயக் கேட்டு நன்றா யுளத்தினுட் டரிய வற்றிற்
புரையறுன் மாவை முன்னம் புகலுவாம் பொருந்திக் கேளாய்.

மச்சைமே தசை யெலும்பு மாமிச முதிரஞ் சர்ம
மிச்சைசெய் சுக்கி லம்மிவ் வேழுதா துக்க ளுற்றிவ்
வுச்சமாஞ் சிரசு பாத முருகை முதுகு மார்பென்
றிச்சட லங்கோ பாங்க மியாவையு மிசைந்த தாகி. 45

இயானென தென்ன வெங்கு மியாவரு மறிவ தாகி
யீனமா மோக மெல்லா மிருப்பதற் கிடமே யான
வூனமா மிவ்வு டம்பே யொன்றிய தூல மீதை
மானமென் றுரைப்பர் மைந்தா வஞ்ஞரு மறிந்த மேலோர். 46

அத்திய வான மாதிச் சூக்குமப் பஞ்ச பூதம்
புத்திர வொன்றி லொன்று புகுந்து பஞ்சீ கரித்து
மெத்தவுந் தூல மாகி மேவிய தூல யாக்கைக்
கொத்தகா ரணம தாக வொன்றிடு மற்றுங் கேளாய். 47

மருவிய பஞ்ச பூத மாத்திரை யைந்து மெங்கும்
புரிவுசெய் சுத்த மாதிப் புலன்களாய்ச் சீவ ருக்குக்
கருதிய சுகம ளிக்கக் காரணம் போலே தோன்றும்
பரவிய வவைக டம்மைப் பற்றினோர் கெடுவ தைக்கேள். 48

பேசிய புலன்க டம்மிற் பேதையா மெந்த மூர்க்க
ராசையாம் பாசத் தாலே யழுந்தவே கட்டுண் டாரோ
தூசறு தங்கள் கன்மத் தூதனு மிழுக்கப் பட்டு
வீசவே கீழு மேலும் வெறிதவ ரலைந்து சோர்வார். 49

உலவுபாம் பானை விட்டி லூருமீன் வண்டிவ் வைந்து
மொலிமுதற் புலனென் றென்றி லுவந்ததா லிறக்கு மாகிற்
புலனிவை யைந்தி னும்மால் பொருந்திய புருடன் சேரும்
பலவிதத் துன்பந் தன்னைப் பகர்ந்திட முடியு மோசொல். 50

தவ்விய புலனை யெத்துந் தன்னுடைத் துகளி னாலே
வெவ்விய கருநா கத்தின் விடத்தினுங் கொடிதே யாகுங்
கவ்விய வவ்வி டந்தான் கடித்தனுற் றவனைக் கொல்லும்
தவ்விய புலனி னைந்தோன் தன்னையுங் கொல்லு மன்றே. 51

பரவிய புலன்க டம்மை பற்றிய வாசை யாகு
முரவிய மாபா சத்தை யுள்ளவா றறுத்த வன்று
னருமையா முத்திப் பேற்றை யடைந்திடச் சதுரன் மற்றோன்
கருதிய வாறு நூல்கள் கற்கினுஞ் சதுர னன்றால். 52

திடமிலா விரதி யோடே தீர்க்கமாம் பவமா கின்ற
கடலுடைக் கரையி லேறக் காதல்செய் முமூட்சுத் தன்னை
யடருமா னக்க ரந்தா னவனுடைக் கண்டத் தீழ்த்திக்
கடலுடை மத்தி யத்திற் கடிதியின் மூழ்க வைக்கும். 53

ஆதலால் விடய வாசை யாகிய நக்க ரத்தை
யாதொரு முமூட்சு வானே னிலங்கிய விவேக மாகுங்
கோதிலா வசியி னாலே கொய்வனன் னவனே யாதும்
வாதக மிலாம விந்த வாரிதி கடக்க வல்லோன். 54

சுத்தமாம் புத்தி யின்றிச் சூழ்புல னெறியிற் சென்றோன்
மெத்தவுந் துன்பந் துஞ்சன் மேவுவன் மேலு மேலு
முத்தம புத்தி யோடே யுயர்ந்தவ னெசான் சொல்லி
வைத்தநன் னெறிந டந்தோன் வாமான பயனை சார்வன். 55

நிச்சய மீதே மைந்தா நினக்கு நன் முத்தி சேர
விச்சையே யிருக்கு மாகி லிப்புல னனைத்தை யுநீ
துச்சமாம் விடத்தைப் போலத் தூரவே போகத் தள்ளி
யுச்சமா நற்குணத்தை யொழிவற வுவந்து சார்வாய். 56

நித்தமு மருட்க ளிப்பு நேர்நடை பொறுமை மற்றுஞ்
சுத்தமாம் சாந்தி தாந்தி சூக்கநூ லுரைத்த மற்ற
வுத்தம குணம னைத்து மோங்கிய சுதையைப் போலப்
புத்திர வன்பி னோடே புந்தியிற் பொருந்து வாயே. 57

சாதுவே சுந்த தம்நீ சகலகா ரியமும் விட்டே
யாதியில் லாவ வித்தை யாக்கிய பந்தந் தன்னை
கோதிலா முத்தி தன்னைக் குறைவறத் தேடு வாயிவ்
வேதமாந் தேகந் தன்னை யெவளவு நம்பி டாதே. 58

தேகமே யாதி யான திரளிலே தியங்கா னின்ற
மோகமே பெரிய காலன் முழுமட்டுவாம் புருட னுக்குச்
சோகமா ரம்மோ கத்தைச் சுத்தமாய் வென்ற வன்று
னேகமா முத்திப் பேற்றை யெய்திடச் சதுர னானோன். 59

மோகமியா தினைமுன் னுள்ள முனிவர்கள் வென்று நன்று
யேகபூ ரணவான் மாவி னேத்திய பதம டைந்தார்
தேகதா ரஞ்சு சாதித் திரளிலே யிசைந்த வந்த
மோகமாங் காலன் றன்னை முழுதும்வென் றப்ப தஞ்சேர். 60

மெத்திய தொக்கு மேதை மேதசு மச்சை யத்தி
சுத்திய நரம்பி ரத்தஞ் சுழல்மல முத்தி ரங்க
ளித்தனை வகை நிரப்பி யிருக்குமித் தூல தேக
மித்தினும் வைய கத்தி லிகழ்ந்திடும் பொருள்வே றுண்டோ. 61

வண்ணமாச் சிரம மாதி வகுப்பிதன் னியம மாகும்
முன்னுமா னுவ மான முதலிதன் விசேட மாகு
மின்னல்செய் பிணிக ளெல்லா மிருப்பிட மித்தூ லத்
துன்னிய சூக்க தேகத் [illegible] வைப்பாம். 62

சிரவணந் தொக்குச் சட்சுச் சிங்குவை நாசி யைந்தும்
பொருள்களை யறிவ தாலே போதவிந் திரிய மாகும்
பரவிய வாக்குப் பாணி பாதபா யுருவு பத்தம்
கருமமே செய்வ தாலே கருமவிந் திரிய மாகும். 63

துன்னுமுட் கரண மொன்றே தோன்றிய விருத்தி யாலே
மன்னிய மனது புத்தி மற்றகங் கார சித்த
மென்னவே நான்க தாக விசைந்ததா மெவ்வி டத்தும்
பன்னிய விதன் விருத்திப் பகுப்பினைப் பகரக் கேளாய். 64

விரிவுறு சங்கற் பாதி விருத்தியான் மனமி தாகும்
பொருளுணர் நிச்ச யத்தாற் புகன்றபுத் தியுமி தாகும்
பரவிய வபிமா னத்தாற் பகரகங் கார மீதாம்
பொருளனு சந்தா னத்தாற் புகன்றசித் தமுமி தாமே. 65

விரிவுறும் பிராண னென்றே விருத்தியின் பேதத் தாலே
பரவிய பிராணு பானன் பகர்வியா னன்னு தானன்
னுரவிய சமான னைந்தா முதகசொன் னுதிதானே
பரவிய விருத்தி யாலே பலவித மாவதே போல். 66

சிரவண மாதி யைந்துஞ் செறிந்தவாக் காதி யைந்தும்
மருபிரா ணுதி யைந்து மருவும்வா னுதி யைந்து
மிருதய மாதி னன்கு மெய்திய வவித்தை காமம்
பரவுகன் மம்மிவ் வெட்டும் பகர்புரி யட்ட கங்காண். 67

ஓதிய கரணந் தானே யுள்ளகன் மங்க ளெல்லா
நீதியா யான்மா முன்பாய் நித்தமுஞ் செய்வ தாலே
சாதுவே சகலத் துக்குஞ் சாட்சியா மான்மா வெந்தப்
போதுமே யசங்க மாகும் பொருந்திடா தொருவி காரம். 68

ஆதலா லின்ப துன்ப மகங்கரத் தர்ம மேயாஞ்
சாதுவே யகண்டா னந்த சாகர வான்மா வுக்கி
யேதுமே யில்லை யென்று மெய்திய விடய மெல்லா
மோதுமான் மாப்பொ ருட்டா லொன்றிடும் பிரிய மாக. 69

ஓதிய விடயந் தானே யுள்ளவா பிரிய மாகா
தேதமி லான்மாத் தானே யெவர்க்குநற் பிரிய மாகு
மாதலா லான்மா வென்று மகண்டவா னந்த மேயாந்
தூயதா மான்மா வுக்குத் துன்பமோர் காலு மில்லை. 70

புரிவுசெய் சுழுத்தி யின்கண் புலனிலா வான்மா னந்தந்
திரமதா யாவ ராலுந் தினமனு பவிக்க லாகுஞ்
சுருதிதான் பிரத்யட் சந்தான் சொல்லிய வைதி கந்தான்
பரவிய வனுமா னந்தான் பகர்ந்ததிற் பிரமா ணங்கள். 71

அரியனே கார ணுக்கை யடைவினி லறையக் கேளா
யிருளவ்வி யத்த மாயை யேதமா மவித்தைப் பேராய்த்
திரிகுண வடிவ மாகித் திருசியங் கட்கு மேலாய்ப்
பரவியே யனுதி யாமோர் பரசிவ சத்தி யுண்டால். 72

தரணியி லந்தச் சத்தி தன்னுடைக் காரியங் கொண்
டருமையாம் புத்தி மான்க ளாகினே ரனுமா னிக்கு
முருவமாய்ச் சகம னைத்து மொழுங்குறப் படைப்ப தாகி
யொருவித மீதா மென்ன வுரைத்திட வொண்ணாத தாகும். 73

ஈதுசத் தான தல்ல வீதுதா னசத்து மல்ல
வீதுமற் றுபய மல்ல வீதுதான் பின்ன மல்ல
வீதுமற் றபின்ன மல்ல வீதுதா னுபய மல்ல
வீதுசா வயவ மல்ல விதுநிர வயவ மல்ல. 74

ஈதுமற் றுபய மல்ல வீதுவிசித் திரமே யாகி
யாதிதென் றுணர வொண்ணு வநிர்வச நீய மாகுந்
தீதிலாப் பரசி வைக்யத் தெரிவுதா னிதைய ழிக்குஞ்
சாதுவே பழுதை ஞானஞ் சர்ப்பமா லழிப்பதே போல். 75

சகலரு மறிவ தான தன்னுடைக் காரி யத்தால்
மிகவுமெங் கும்பிர சித்த மேவிய முக்கு ணந்தான்
புகல்பரன் சத்திக் குண்டு புகன்றவிம் முக்கு ணத்தி
லகலிரா சதகு ணத்தா லாகும்விட் சேப சத்தி. 76

கிரியையே வடிவ மாகிக் கிட்டும்பிர விருத்தி யெல்லாந்
தருவதற் கேது வாகத் தங்கும்விட் சேப சத்தி
பரவிய காம மாதிப் பலதுய ராதி யான
விருதய விகார மெல்லா மீதிறு லிசையு மென்றும். 77

உரவிய காமங் கோப முலோபடம் பம்ம கந்தை
மருளுரு மசூயை யீர்ஷை மச்சர முதல்வி காரந்
தரணியி லிராச தத்தின் றர்மமா மிக்கு ணந்தான்
புருடரிற் பிரவிர்த்தி செய்யும் புரையினுற் பந்த வேது. 78

இருளுறு தமகு ணத்தா லீன்றதா வரண சத்தி
பரமமாம் வத்து வித்தாற் பார்க்கலாம் வேறே பாகப்
பிரிவுறு விட்சே பத்தைப் பெற்றவே துவினு லீதே
புருடரின் பவத்தி னுக்குப் பூருவ காரணங் காண். 79

பெரிதுபண் டிதனு னுலும் பிரக்ஞையுள் ளவனு னுலு
மருமையாஞ் சூக்கு மார்த்த மறவறிந் தவனு னுலுஞ்
சருவவல் லவனு னுலுஞ் சாற்றுமா வரண சத்தி
யிருளினுன் மூடப் பட்டோ னியல்பினை யியம்பக் கேளாய். 80

அருமையாங் குரவன் மேலோ ரான்மரூ பத்தை யன்பா
லுரமதாய் வெகு விதத்தா லுணர்த்தினு முணரா னன்றேன்
பிரமையா லரோ பித்த பேதமாம் பொருளைத் தானே
திரமெனு நன்றி தென்னுந் தியங்கியே யவலம் பிப்பன். 81

ஆதலாற் பொல்லாங் காக வமைந்ததா மதகு ணத்திற்
சாதமா யுரமே யாகச் சார்ந்துவா வரண சத்தி
சாதுவே யற்ப ராலே சாலவுங் கடக்க வொண்ணு
தீதுடை வல்ல பத்தை யென்னவென் றுரைப்ப மந்தோ. 82

ஈதினு டிசைந்தோன் றன்னை யேதுமே யறியாத் தன்மை
யோதினு முணராத் தன்மை யுணரினு மையஞ் சேர்கை
பேதமா யறியுந் தன்மை பேசிய விவைக டோரா
வேதவிட் சேப முந்தா னென்றுமே யிழுத்த லைக்கும். 83

நித்திரை சோம்பல் வெண்மை நிகிலமுந் தவிர்தன் மோகம்
புத்தியின் சாட்டி யாதிப் புகல்தமோ குணவி கார
மித்தினு டிசைந்தோ னியாது மெவளவு முணரா வண்ணம்
நித்தமுந் துயில்வோன் போலு நீண்டதூண் போலு நிற்பன். 84

சத்துவ குணஞ் சலம்போற் சாலவுஞ் சுத்த மேனுஞ்
தொத்திய விருகு ணத்தைத் தொடர்ந்ததாற் பவத்துக் கேது
நித்தமு மான்மா வித்தி னிகழ்வுறப் பதிவிம் பித்துச்
சுத்திய சடமனைத்துஞ் சூரியன் போல்வி ளங்கும். 85

புருடனன் முயற்சி யாலே பூருவம் போல மெத்த
விருகுண மிருந்தி டாம விலங்கிய சத்து வத்தின்
மருவிய தருமங் கேளாய் மானமில் லாமை யாதி
வரியம நியம மாதி வரன்மிகு சிரத்தை பக்தி. 86

திரமுறு முமூட்சுத் தன்மை தெய்வசம் பத்தி மற்றுஞ்
சரையுறு செய்கை யின்கண் பொருத்திடா மீட்சி யாதி
புருவமு மிசிரமான சத்துவ குணத்தின் றர்மஞ்
சருவமுஞ் சுத்த மான சத்துவ மகிமை கேளாய். 87

சுத்தசத் துவகு ணத்தின் சூக்குமத் தெளிவி னாலே
நித்தியான் மானு பூதி நிகழ்ந்திடும்பரம சாந்தி
சித்தியாந் திருப்தி மேவுஞ் சேர்ந்திடு மிகக் களிப்பு
நித்தமு மானந்தஞ் செய் நின்மல நிட்டை கூடும். 88

இவ்வித முக்கு ணத்தோ டிசைந்தவவ் வியத்த சத்தி
செவ்விய வான்மா வுக்குச் சேர்ந்தகா ரணவு டம்பாம்
விவ்விதப் பொறிமனங்கள் விருத்தியில் லாச்சு ழுத்தி
யெவ்வமா றிவ்வு டம்பி னிசைந்துள வவத்தை யாகும். 89

அகிலமாம் விதமு மான வறிவிலாச் சுழுத்தி யின்க
ணிகன்மனம் வித்தாய நிற்கு மேதுமே யுணர்கி லோமியாஞ்
சுகமதாய்த் துயில்கின் றேமென் சொல்லிடும் பிரசித்தி யாலே
மிகுசுக வான்மாத் தானே மிஞ்சியே யிதில் விளங்கும். 90

உடலுயிர் பொறி புலன்க ளுலைமன மகங்கா ராதி
யிடர்தரு விகார மியாவு மின்பதுன் பாதியும்மற்
றடர்க்கரு திபூதி யாதி யாகிய சகம னைத்து
மிடரவ்வி யத்த மீறு மிவையெலா மனான்மா வாகும். 91

மாயைகா ரியமே யான மகதத்து வாதி யாயிக்
காயமீ றான யாவுங் கலங்கிய பொய்யே யாகுந்
தூயனே சொன்ன தெல்லாந் தொகுத்தனான் மாவு மாகும்
நீயிசைக் கான னீதி னிகரென நினைதி யென்றும். 92

எத்தைநன் றுணர்ந்தோன் பந்த மிகழ்ந்துகே வலனா மென்றும்
பத்தனே யினி யுனக்கப் பரமான்ம வுருவஞ் சொல்வாம்
நித்தமு நானா னென்று நிகழ்ந்திடு மனுபூ திக்கிம்
மெத்திய பொருளே யாகி மெய்ம்மையாய் நிற்கு மான்மா. 93

திரிவித வவத்தை கட்குந் திருந்திய சாட்சி யாகி
விரிவுறு பஞ்ச கோச விலட்சண மாகி யாது
மருவிய மனவி ருத்தி மற்றதின் பாவ மியாவுங்
கருதிய வவத்தை மூன்றிற் கண்டிடு மஃதே யான்மா. 94

யாதனைத் தினையுங் காணு மியாதினை யனைத்துங் காணா
யாதுதான் புத்தி யாதி யாவுமே சித்தாய்ச் செய்யும்
யாதினைப் புத்தி யாதி யாவுமே சித்தாய்ச் செய்யா
தோதிய வதுதா னேயுன் னுடையவான் மாவா மைந்தா. 95

யாதினாற் சகம னைத்து மெங்குமே பரவ லாகும்
யாதினைச் சகம னைத்து மெவளவும் பரவ மாட்டா
யாதொரு போத ரூப மிசைந்துவிச் சடம னைத்து
நீதியாய் நிகழு மீதே நின்னுடை யான்மா வென்றும். 96

தீதுட லிந்தி யங்க டியங்கிய மனது புந்தி
யீதுதன் செய்கை யின்கண் ணேவிடப் பட்ட தேபோற்
சாதுவா மைந்த யாதின் சன்னிதி மாத்தி ரத்தா
னீதியாய்ச் செல்லு மீதே நின்னுடை யான்ம ரூபம். 97

தொத்திய வகங்கா ராதித் தூலமீ றான யாவுஞ்
சுத்திய புலன னைத்துஞ் சுகாதியுங் கடமே போல
நித்திய போத மாகி நிலைமையாய் நிகழா நின்ற
வெத்தினா லறிய லாகு மீதுநின் னான்மா வாகும். 98

யாதினா லுயிரும் வாக்கு மியாவுமே யியங்கு மந்தப்
போதமா மந்த ரான்மாப் பூரணன் புராண னென்றும்
பேதமி லகண்டா னந்தன் பெருகிய வேக ரூபன்
சாதமார் விருத்தி தோறும் சாட்சியாய்ச் சார்ந்து நிற்பன். 99

சாதுவே யித்தே கத்திற் சார்மனக் குகையின் கண்ணே
யோதுமவ் வியத்த விண்ணி லொளிர்ந்திடு மிந்த வான்மா
பேதமாம் பொருளை யெல்லாம் பெருகிய தன்றே சாலே
நீதியாய் விளக்கும் விண்ணி னிகழ்ந்திடு மிரவி யேபோல். 100

அடர்மன வகங்கா ரங்க ளாக்கிய விகார மியாவு
முடல்பொறி யுயிர்கள் செய்யு மூலைத்தனு முணரு மான்மா
சுடுகன லயப்பிண் டம்போற் சொல்லிய வனைத்தி னோடுந்
தொடரினும் விகார மேவான் சொற்பமுஞ் செய்தோ னகான்.

சாதுவே யிந்த வான்மா சனனமா கான்ம ரிக்கா
னேதுமே வளர்வு றான்மற் றிளைத்திடான் விகாரி யாகா
னேதமா மிந்தத் தேக மிறக்கினு மிறவா னித்தன்
பேதமாங் கடமி றக்கிற் பெருகுவா னிறப்ப துண்டோ. 102

பத்தனே பகுதி யாதிப் பகுப்பினுக் கெல்லாம் வேறாய்ச்
சுத்தசிற் சொரூப மாகிச் சுழல்வுறுஞ் சதசத் தெல்லா
நித்தமும் விளக்கி வைத்து நிருவிசே டம்பொ ருந்துஞ்
சத்தியப் பரமான் மாவே சாக்கிரா தியிலி லங்கும். 103

நித்தமு நானு னென்றே நிலைமையாய் நிகழா நின்று
புத்தியின் சாட்சி யாகப் பொருந்திய பரமான் மாவைச்
சித்தவே காக்கி ரத்தைச் செறித்துநான் பிரம மென்றே
புத்தியின் றெளிவி னாலே புலனுற வுணர்தி மைந்தா. 104

நித்தமு நின்னான் மாவை நின்னிடை நீயு ணர்ந்து
தத்திய சனன மாதித் தரங்கமாய்ப் பார மற்ற
கத்துசம் சார மாகுங் கடலினைக் கடந்து நன்றாய்ச்
சத்தியப் பிரம மாகிச் சார்பயன் சார்ந்து நிற்பாய். 105

காணமார் தெளிவி னாலே கறையறத் தீட்டப் பட்ட
வருமையா ஞான மென்னு மசியினாற் சிதையும் பந்தம்
பரவிய வத்தி ராதிப் படைகண்மற் றனிலம் வன்னி
யுரவிய கன்ம கோடி யொன்றினுஞ் சிதைய மாட்டா. 106

சுருதியை நம்பி னோர்க்குச் சொன்னதங் கன்ம நிட்டை
மருவிடு மவற்றி னாலே மன்னிடுஞ் சித்த சுத்தி
பரவுமச் சுத்தி யாலே பரமுணர் ஞான முண்டாம்
விரிவுறும் பவம வற்றால் வேருட னசிக்கு மன்றே. 107

ஓதிய பாசிக் கொத்தை யுதகநின் றொதுக்குங் காலை
சாதுவே புருட னுக்குச் சலிலமே தூய்தாய்த் தோன்றித்
தீதுறு தாகந் தாபந் தீர்ப்பதாய்ச் சுகம ளிக்கு
மேதுவா யுதவு கின்ற வியல்பினை யிங்கு கண்டோம். 108

இந்தவா பஞ்ச கோச மிவற்றினை யபவா தித்தாற்
சந்ததா னந்த மாகிச் சாலவு மிலங்கா நின்ற
பெந்தமில் பரமான் மாவும் பிரத்தியக் கான்மா வாக
மைந்தனே தூய்தாய்த் தோன்றி மாசுக மளிக்கு மன்றே. 109

ஆகையால் விவேகி யானோ னடைந்ததன் பந்த நீக்க
வேகமா யான்மா னான்ம விவேகமே செய்ய வேண்டு
மூகமாம் விவேகத் தாலே யுண்மையா னந்த சித்தா
மேகமாம் பரமான் மாவை யிங்கறிந் தின்பஞ் சார்வன். 110

மருவிய முஞ்சிப் புல்லின் மத்தியு ளாணி யைப்போற்
றிருசியத் திரளி னின்றுந் திகழ்ந்திடுந் தன்னான் மாவை
யருமையாம் புத்தி யாலே யசங்கமா யசல மாக
மருவிய தென்று கண்டு மாசற வுறுக்க வேண்டும். 111

இவ்விதம் வகுத்த பின்ன ரிங்குள திருசி யங்க
ளவ்வித வான்மா வென்றே யனிசமும் பிரவிலா பித்துத்
தவ்வற வான்மா வாகத் தரணியி லிருப்ப வன்றான்
செவ்விய முத்திப் பேற்றைச் சேர்ந்தவ னனக மைந்தா. 112

மேதைதொக் கத்தி யாதி மேவிய கூட்ட மான
வேதமாந் தேக நானென் றெண்ணுவன் மூடனானோன்
கோதிலா விசார சீவன் குரம்பையின் வேறே யான
வாதியா மான்ம ரூப மகமென வறிவன் மைந்தா. 113

உடலிது நானே யென்றிங் குன்னுவன் மூட னானோ
னுடலுயி ரிரண்டு நானென் றுன்னுவன் கரும ஞானி
திடமுறு விவேக ஞானத் திறமுடைத் தான மேலோ
னிடரிலாச் சொரூப நானென் றெண்ணுவன் றன்னை யென்றும்.

மேதைதொக் கென்பே யாதி மேவிய வாக்கை யின்கண்
சாதுவே யான்ம புந்தி சற்றுநீ சார்ந்தி டாதே
போதவா னந்த வுண்மைப் பூரண சொரூப நானென்
றீதினைச் சார்ந்தே யென்று மெய்திடு பரம சாந்தி. 115

மொழியும்வே தாந்த நீதி முழுவதுந் தெரிந்தோ னேனு
மழியுட லாதி யின்க ணத்தியா சத்தி னாலே
யெழுமகம் புந்தி தன்னை யெவன்விடா னெம்மட் டம்மட்
டொழிவிலா முத்தி யென்றிங் குரைத்தலு மவனுக் கில்லை. 116

உன்னுடைச் சாயா தேக முன்பதி பிம்ப வாக்கை
யுன்னுடைக் கனவு தேக முன்மனோ ராச்சி யாக்கை
யின்னதி லான்ம புந்தி யேதுநீ யியற்றா தேபோ
லின்னதூ லாக்கை மீது மீதைநீ யியற்றி டாதே. 117

ஓதுதே கான்ம புந்தி யுணர்விலா மூடர்க் கெல்லா
மேதமாஞ் சனன மாதி யின்னல்செய் வித்தே யாகு
மாதலான் முயற்சி யாலே யதனைவிட் டொத்தி னாசந்
தீதறச் செய்யி னற்றாற் றிரும்பவிப் பவமே சாராய். 118

மனதினை யன்றி வேறாய் மற்றொரு வவித்தை யில்லை
மனதுதா னவித்தை யாகு மற்றிதே பந்த மேவுறு
மனதுதான் வளரும் போது மற்றதும் வளர்ந்த தாகு
மனதுதா னசிக்கும் போது மற்றது நசித்த தாமே. 119

சாதுவே சுழுத்தியின்கண் சலமன மொடுங்கும் போது
யாதுமே யணுவு மில்லை யாவரு மறிவ ரித்தை
யாதலாற் புருட னுக்கிவ் வசத்தியப் பவசம் பந்த
மோதிய மனத்தா லுண்டா முண்மையிற் பவமே யில்லை. 120

வீசிய காற்றே முன்னர் விண்மிசை முகிலைச் சேர்த்துப்
பேசிய தனுதான் பின்னும் பெருமுகி றீர்ப்ப தேபோற்
றாசுறு மனமே முன்னர் துன்பமார் பந்தஞ் செய்யும்
மாசுறு மனமே மற்று மாசுக வீட ளிக்கும். 121

பெருகிய கயிற்று லாவைப் பிணிப்பதும் விடுவ தும்போற்
றிரிவிதக் குணங்க டம்மின் றிறமையாற் சீவ னுக்கிங்
குறைதரு மனது தானே யுபயமுஞ் செய்வ தாலே
பரவிய பந்த மோட்சம் படைப்பதற் கேது வீதே. 122

இதுதமோ ரசகு ணங்க ளிசைந்துதான் மலின மாகித்
திதமுறு பந்த வேது திகழ்ந்திடுஞ் சத்து வத்தை
நிதமுமீ தனுச ரித்து நிருமல வடிவ மாகி
யதிசய முத்தி யேது வாயிடு மனக மைந்தா. 123

கோதிலா விவேகத் தானுங் குறைவிலா விரதி யானு
மீதுதான் சுத்த மாகி யின்பவீட் டின்பொ ருட்டா
மாதலாற் புத்தி மானு யமைந்துள முமுட்சு வானோ
னேதுமிவ் விரண்டை யும்முன் னுரமதா யடைய வேண்டும். 124

மனமெனும் பெயரு டைத்தாய் மகத்தான புலியொன் றிந்தக்
கனமுறு விடய மென்னுங் கானகத் தேசத் தின்க
ணனுதினஞ் சஞ்ச ரிக்கு மாதலா லத்தே சத்தி
லனிசமு நன்மு முட்சு வற்பமு மணுக வேண்டா. 125

ஆதலா லான்ம ரூப மறிந்தபண் டிதர்க ளொல்லா
மோதிய மனமீ தென்று மோங்கிய வவித்தை யென்பர்
மோதிய காற்றி னாலே முகிற்றிரள் சுழல்வ தேபோ
லீதினா லிந்த ஞால மியாவுமே சுழலு மன்றே. 126

ஆதலான் முமுட்சு வானோ னலைவுறாத் தன்ம னத்தைச்
சூதிலா முயற்சி யாலே சோதிக்க வேண்டு மீது
சோதனை செய்யப்பட்டுச் சுத்தமா நிற்குங் காலை
யோதிய முத்தி சித்தி யுளங்கையிற் கனியே யாமே. 127

வீடுறும் விருப்பத் தாலே விவிதமாம் விடயத் தின்க
ணேடணே விட்டுக் கன்ம மியாவையுந் துறந்தன் போடே
நீடுறுஞ் சிரவ ணாதி நிட்டையி னிற்ப வன்றான்
மூடிய மனோ விகார முழுவதும் விடுத்தோ னவன். 128

ஊனமாம் புத்தி யென்னு முபாதியின் சம்பந் தத்தா
லீனமாம் சீவ பாவ மேகமா மான்மா வின்கண்
கானனீர் நிகரே யாகக் கற்பித மாத லாலே
யானவீ துண்மை யாகா தநிர்வச நீய மாமே. 129

புத்தியோ டேபு ணர்ச்சி பூரண வான்மா விற்கு
மித்தியா ஞானத் தாலே மேவிய தாத லாலே
சத்திய ஞான மொன்றாற் சாற்றிய புணர்ச்சி நீங்கும்
புத்திர மற்றொன் றாலப் புணர்ச்சிதா னீங்கா தென்றும். 130

நித்தமாம் பரசீ வைக்கிய நிகழ்த்திய ஞானந் தானே
சத்திய ஞான மென்று சம்மதஞ் சுருதிக் கெல்லாஞ்
சுத்தமா மான்மா ஞன்ம சொரூபநல் விவேகத் தாலே
யத்திற ஞான முண்டா மாதலால் விவேகஞ் செய்க. 131

மலமுள சலத்தி னின்று மலத்தினை நீக்குங் காலை
சலமது நிமல மாகிச் சகத்தினிற் றோன்று மாறே
நிலையுறு தன்னுன் மாவி னின்றகங் கார மாதிப்
பலவித வசத்தை நீக்கிற் பரமமா யான்மாத் தோன்றும். 132

ஆதலா லகங்கா ராதி யகிலமா மகத்தை யும்நன்
னீதியா யான்மா நின்று நித்தமு நீக்க வேண்டு
மோதுவிஞ் ஞான கோச முண்மையா யான்மா வாகா
தேதெனி லனக மைந்தா வேதுவை யியம்பக் கேளாய். 133

சாதுவே விகாரி யாதுஞ் சடமதாந் தன்மை யாதுந்
தீதள வுடைய தாதுந் திருசிய மாவ தாது
மேதுமே நியம மன்றி யிதுவிப சாரி யாது
மாதியா மான்மா வாகா தநித்திய நித்த மாமோ. 134

பரமமா மானந் தத்தின் பதிபிம்ப மதனைச் சார்ந்த
வுருவுமா மவித்தை விர்த்தி யோதுமா னந்த கோசம்
பிரியமோ தப்பிர மோதப் பிரிவுடைத் தாகி யிட்ட
மருவிடும் போது திக்கு மற்றகா லத்தொ டுங்கும். 135

யாதொரு கோசந் தன்னி லியாவரு முயற்சி யின்றி
யோதுமா னந்த மெய்யா யொன்றிநித் தஞ்சு கிப்பர்
போதனே யக்கோ சத்தின் பூரண வநுப வந்தான்
சாதுவா மறிஞ ருக்கே சந்ததஞ் சார லாகும். 136

பரவுசோ பாதி யாலும் பகுதியின் விகாரத் தாலுங்
கருதிய புண்ணி யத்தின் காரிய மாத லாலுந்
தரமுறு விகாரக் கூட்டந் தன்னிலுட் பட்ட தாலு
மருவுமா னந்த கோச மாசிலா வான்மா வாகா. 137

திருசியக் கடமு ணர்ந்து திகழ்ந்திடுந் தேவ தத்தன்
மருவுமக் கடமு மாகான் மற்றதின் றர்ம மேவான்
பரிசுபோற் பஞ்ச கோசப் பகுப்பினை யுணரு மான்மா
மருவுமக் கோச மாகா மற்றதின் றர்ம மேவா. 138

பரவிய பஞ்ச கோசப் பகுப்பினை யூகத் தாலே
புரையற வபவா தித்தாற் புரிந்தவவ் வபவா தத்தின்
மருவிய வவதி யாகி மாசிலா வகண்ட போத
வுருவமாய்ச் சாட்சி தானே யொருமையாய் மிஞ்சித் தோன்றும்.

விரிவுறு பஞ்ச கோச விலட்சண வுருவ மாகிக்
கருதிய வவத்தை மூன்றின் கரியதாய் நிரு விகார
நிருமல போதா னந்த நிலைமையா மிவ்வான் மாவை
யரியனே விவேகி யானோ னகமென வறிய வேண்டும். 140

விரிவகங் கார மாதி விகாரமற் றதன் பாவங்க
ளிருமையா மிவற்றை யெல்லா மிங்கியா துணரு மியாதை
யொருபொரு ளுணரா தந்த வுணர்வுறு வான சாட்சிப்
பொருளினை மிகவு துண்மைப் புத்தியா லுணர்தி மைந்தா 141

சூனியத் தப்பா லாகச் சொல்லிய வான்மா விற்கு
மேனிலை யாக வொன்று மேவிய தில்லை யென்று
மானதா லறிபொ ருட்கு மறிபடாப் பொருளி னுக்கு
மேனிலை யறிவே மெய்யாய் மேவிய வான்மா நீயே. 142

சாதுவே யெந்த வான்மா சாக்கிர மாதி யின்க
ணோதிய பிரத்திய கான்ம வுருவமாய் நானு னென்று
சோதியா யுளத்தி லென்றுஞ் சொலித்திடு மேக மாக
வாதியா மவ்வான் மாவை யகமென வறிநீ யென்றும். 143

வித்தர விகார முற்று விவிதமாய்த் தோன்று நின்ற
வத்திர வகங்கா ராதி யகிலமு நேரே கண்டு
நித்தியா னந்த சித்தாய் நிகழ்ந்திடு நின்னுன் மாவைப்
புத்திர சூக்க மான புந்தியா லுணர்தி நன்றாய். 144

போதமார் விவேகி தேகம் புந்திசிற் பதிபிம் பங்கள்
யாதும்விட் டிதய விண்ணி லேகமா யாவுங் காணுஞ்
சோதியா யகண்ட போத சொரூபமாய்ச் சதசத் துக்குப்
மேதமாந் தன்னுன் மாவைப் பிரித்துநன் கறிய வேண்டும். 145

நித்தமாய் விபுவு மாகி நிகிலபூ ரணமு மாகி
மெத்தவு நுண்மை யாகி மேவுமுள் வெளிக ளின்றிப்
பித்தியக் கான்மா வாகப் பிறங்கிய பரமான் மாவை
புத்திர விவேகி யானோன் புலமுற வறிய வேண்டும். 146

பிரமமே யான ஞானி பின்னரிச் சம்சா ரத்தை
மருவிடா துதலாலே மாசற முமுட்சு வானோன்
பிரமநான் பிரம மேநான் பிரமமே நானென் றிங்ஙன்
றிரமதாய்ப் பிரமந் தன்னைத் தினமுமே யறிய வேண்டும். 147

சாற்றிய நீதி யேபோற் சத்தியப் பிரமத் தின்கண்
டோற்று காரியமனைத்துந் துகளிலாப் பிரம மேயா
மேற்றிய பிரம மல்லா லெவளவும் வேறே யில்லை
தேற்றமா யுசாவி லெங்குந் திகழ்வது பிரமந் தானே. 148

இதுவெனுஞ் சகம னைத்து மேகமாம் பிரம மேயென்
றதர்வண வுபநிடத்தி னதிசய மான வாக்குந்
திதமதாய்ச் சொல்வ தாலே திருசியச் சகம னைத்தும்
முதயமத் தமன மின்றி யொளிர்ந்திடும் பிரம மேயாம். 149

வேதமாம் மானத் தாலும் விளங்கிய போதத் தாலு
மோதிய சொப்ப னுதி யுத்தம வுத்தி யாலு
மீதில்லை யீதி லைமற் றீதில்லையென்ப தாகப்
பேதமா முபாதி யெல்லாம் பெயர்ந்திடத் தள்ள வேண்டும். 150

இவ்விதந் திருசி யத்தை யேகமாய்த் தள்ளிப் பின்ன
ரவ்விதப் பரசி வைக்கிய மறிந்திடத் தக்க தாலே
செவ்விலக் கணையி னுலே செப்பிய வவர்க டம்மை
யெவ்வமற் றுணர வேண்டு மேகமாய் நிற்ப தற்கே. 151

விட்டலக் கணையும் வேண்டாம் விடாதலக் கணையும் வேண்டா
மிட்டனே யுபய மான விலக்கணை வேண்டு மீது
திட்டமாஞ் சோயந் தேவ தத்தனென் கின்ற வாக்கிற்
றட்டிடா வதுபோ லீதாந் தத்துவ மசியாம் வாக்கில். 152

திருத்தமாஞ் சோயந் தேவ தத்தனென் கின்ற வாக்கு
விருத்தமாந் தரும மெல்லாம் விட்டவ னைக்கி யத்தை
தரித்திடச் சொல்வ தேபோற் றத்துவ மசியாம் வாக்கும்
விருத்தமாந் தரும மெல்லாம் விடுத்தயிக் கியமே சொல்லும்.

இத்திரம் விரோதந் தள்ளி யிலக்கியச் சித்தே யான
சுத்தமாம் பரசி வர்க்குச் சொல்லிய வைக்கி யத்தை
நித்தமு மறிஞ ரெல்லா நிலைமையாய்ப் பரிச யிப்பர்
புத்திர நீயு மவ்வா புகன்றதைப் பரிச யிப்பாய். 154

இத்திறம் வேதந் தோறு மிசைமகா வாக்க னேக
மத்திர நூலெ மாதி யசத்தினை யபவா தித்துச்
சுத்தமாய் வானம் போலச் சூக்கமாய்த் தானே நின்ற
வத்தமி லித்தச் சீவர்க் ககண்டவைக் கியமே சொல்லும். 155

ஆதலாற் பொய்யே யாகி யகமென வறியப் பட்டிங்
கேதெது தோன்று நிற்கு மிவையெலா நன்றாய் விட்டுப்
போதவா னந்த வுண்மைப் பூரணப் பிரம நானென்
றேதமில் புத்தி யாலே யின்றனை யுணர்தி மைந்தா. 156

யாதினாற் பிரம மன்றி யாதுமே வேறிங் கில்லை
யாதலா லதுவே யுண்மை யாதுதா னெவர்க்கு மான்மா
யாதுவத் துவிதஞ் சாந்த மமலமாம் பரமா மென்றுஞ்
சாதுவே யதுநீ யாவாய் சத்திய மைய மில்லை. 157

மருவிய சரீர மின்றி மாசில்லா ரியர் மனத்தாற்
கருதிடப் பட்டு மற்றோர் காணமுங் கருதொ ணாத
வுருவமாய் மனதிற் கெட்டா வுண்மையாய் நிறைந்து நின்ற
பிரமமே ததுநீ யாவாய் பிரிவறச் சிந்தை செய்வாய். 158

ஓதிய விவ்வர்த் தத்தை யுத்தம வுத்தி யோடே
மோதிலாப் புத்தி யாலே குறித்துளக் கண்ணிற் சிந்தி
யீதினை யைய மாதி யின்றியே யுளங்கை நீர்போற்
சாதுவே யுண்மைஞானஞ் சனித்திடுஞ் சங்கை யில்லை. 159

அடர்வுறு சயினி யத்து ளரசனைக் காண்ப தேபோ
லுடன்முதற் றிரளி னுக்கு ளுணர்வுமாத் திரமே யாகித்
திடபரி சுத்த மாகத் திகழ்ந்திடு நின்னைக் கண்டவ்
விடரிலாப் பிரம நானென் றெண்ணியவ் வடிவாய் நிற்பாய். 160

நிருமலப் பிரம மாக நின்னினீ யென்று நின்று
பிரமமா னந்த வுன்னிற் பிரிவுபோற் றேன்று நின்ற
திருசியத் திரளை யெல்லாந் தீரவே பிரவிலா பித்துப்
பரமவா னந்தம் பெற்றுப் பகுப்பிலாச் சாந்தி சார்வாய். 161

சத்தசத் திற்கு வேறுஞ் சத்திய வேக வத்துப்
புத்தியாங் குகையின் கண்ணே பொருந்துமவ் வத்து வாக
நித்தமிக் குகையின் கண்ணே நிலைமையா யாவ னிற்பன்
புத்திர வன்னோன் மீண்டிப் புறையுடற் குகையிற் சேரான். 162

மைந்தனே யான்ம நோக்கான் மாசிலா நின்னுன் மாவிற்
சந்தத நீயிருந்து சலித்திடா முயற்சி யாலே
வந்தவா தனைய டக்கு வாதனை யடக்கத் தைத்தான்
முந்திய வசிட்ட ராதி முனிவரர் முத்தி யென்பார். 163

ஒருவித மிலாத தான வுலகுடைச் சார்பை விட்டுப்
பொருள்களை நானு வாகப் புகலுநூற் சார்பும் விட்டுப்
பரவிய வனர்த்த மெல்லாம் பற்றுடற் சார்பும் விட்டிங்
கரியனே யான்ம நோக்கா லத்தியா சந்த விர்ப்பாய். 164

சந்தத மான்ம நிட்டை சார்ந்ததா லியோகி யர்க்குத்
தொந்தமா மனமி றக்குந் துட்டவா தனைய டங்கு
மைந்தனே யதனி னாலே மயங்கிய வத்தி யாசப்
பந்தனை யாவுந் தீர்த்துப் பரமமாம் பதமாய் நிற்பாய். 165

நானொரு சீவ னன்று நற்பரப் பிரம மேநான்
றானெனு நிச்சய யத்தாற் றள்ளியே யசத்தை யெல்லா
மூனவா தனைவே கத்தா லுன்னிடை யுதியா நின்ற
வீனமா மத்தி யாச மியாவையு நீயொ ழிப்பாய். 166

சாதுவே பிச்சை வாங்கல் சலமலம் விடுத லன்றி
யாதுமே தியானி யார்க்கிங் கியற்றிடுஞ் செய்கை யில்லை
யாதலா லான்ம நிட்டை யனிசமு மடைந்த தாலே
மோதிய வத்தி யாச முழுவது நீயொ ழிப்பாய். 167

தத்துவ மசியே யாதி தருமகா வாக்கி யத்தா
னித்தமும் பரசீ வைக்கிய நிகழ்த்திய போதங் கொண்டு
வத்துவி லான்ம புந்தி வலியுறக் கிடைப்ப தற்கே
யத்தியா சத்தை யெல்லா மனகனே யறவொ ழிப்பாய். 168

மூடமா மித்தே கத்தின் முளைத்திடு மகங்கா ரந்தான்
சேடமில் லாது நன்றாய்ச் சிதைவுறுங் கால மட்டுஞ்
சீடனே சாவ தானஞ் சேர்ந்துநற் றியானி யாகித்
தோடமா மத்தி யாசத் தொடர்பினைப் பரிக ரிப்பாய். 169

நித்திரை யுலக வார்த்தை நீண்டசத் தாதி கட்கு
நித்தமா மான்ம ரூப நினைந்திடா மறதிக் கும்நீ
யித்தனை யேனு மெங்கு மிடைவெளி கொடாம லென்றும்
புத்திர நின்னான் மாவைப் புந்தியிற் சிந்தை செய்வாய். 170

குறுகிய கடாகா சத்தைக் கூர்மகா காசத் திற்போற்
சிறுகிய சீவான் மாவைச் சிற்கனப் பரமான் மாவி
லறிவினாற் பிரவிலா பித்தவ் வகண்டமாம் வத்து வாகி
வெறிதிருந் திடுவா யென்றும் விமலமாம் யோகத் தோனாய். 171

அருவவக் கிரிய மாகி யறிவுமெய் யின்ப மாகி
யொருமையா முன்ரூ பத்தை யொன்றியிப் பொய்யு டம்பை
யரியனே விடுதி கூத்த னடைந்துதன் னிசரூ பத்தை
விரிவுறு வேட ரூபம் விடுத்திடு நீதியே போல், 172

தொந்தமாம் பவத்தைச் செய்யுந் துட்டமாம் பிரதி பந்த
மைந்தனே யனேக மேனு மருவிய வவற்றிற் கெல்லா
முந்திய விகார மாக முளைத்திடு மகங்கா ரந்தான்
சந்தத மூல மத்தைச் சருவதா வொழிக்க வேண்டும். 173

பிந்தியும் பரமார்த் தத்தைப் பெற்றதாற் காத னீக்கி
நிந்தைசே ரகங்கா ராதி நின்றவிர்த் தியினை மீட்டிங்
கந்தவுன் சொரூபா னந்த மநுபவித் தகண்ட மாகிப்
பந்தமி னிருவி கற்ப பதந்தனில் வெறிதி ருப்பாய். 174

பெருகிய வகந்தை மெத்தப் பெயர்த்திடப் பட்ட போது
வொருகண மேனு மற்று முளத்தினு னினைக்கப் பட்டால்
விரிவுறப் பின்னு முண்டாய் விட்சேபம் வெகுவாய்ச் செய்யும்
மருவுகாற் றால லைந்த மழைக்கால மேக மேபோல், 175

பலபலச் சிந்தை யாலிப் பகையகங் காரத் திற்கிங்
கலேவுற வவகா சத்தை யற்பமு மளிக்க வொண்ணு
துலரெனு மிச்சை யுய்ய வூற்றிய நீரே போலிச்
சலவகங் கார முய்யச் சலசிந்தை யேது வன்றே. 176

தேகாதி சிந்தை யுற்றோன் றிருசியப் பாசம் பெற்றோன்
றேகாதி சிந்தை யற்றோன் றிருசியப் பாசம் விட்டோ
ஞகாத சிந்தை தானே யாதலாற் பேதங் கொண்டிவ்
வேகாத பவபந் தத்திற் கேதுவா யிசையு மைந்தா. 177

காரியம் வளரு மாகிற் காரண மான வித்தும்
பாரினில் வளர்ந்த தாகப் பார்க்கலா மதுதான் நீங்கிற்
காரண மான வித்துங் கடிதியி னீங்க லாலே
தீரனே காரியத்தைத் தீர்த்திட வேண்டு முன்னம். 178

காரிய மான சிந்தை கருத்தினில் வளரும் போது
காரண வாத னேக்கோள் கருத்தினில் வளரா நிற்கும்
காரண வாத னேக்கோள் கருத்தினில் வளரும் போது
காரிய சிந்தை யுந்தன் கருத்தினில் வளரு மைந்தா. 179

வந்தவச் சிந்தை யாலே வாகியச் செய்கை யுண்டாந்
தொந்தமாஞ் சிந்தை செய்கைத் தொடர்பினுன் முன்னு ரைத்த
வந்தவா தனைவ ளர்ந்திங் ககிலமாஞ் சீவ ருக்கும்
பந்தமாஞ் சம்சா ரத்தைப் பலவிதம் படைக்கு மன்றே. 180

ஓதிய வேது வாலே யொழிவிலா துதித்த விந்தப்
பேதமாந் பவபந் தத்தைப் பெயர்த்திட வேண்டி முன்ன
ரோதிய மூன்றை யுந்தா னொழித்திட வேண்டு மத்தி
லேதுநல் லுபாய மென்னி லிதனை நீ யியம்பக் கேளாய், 181

எவ்வவத் தையினு மெந்த விடத்திலும் மெக்கா லத்தும்
மிவ்விதத் தோற்றம் பெற்று வேறெனக் காண்ப தெல்லாஞ்
செவ்விய பிரம மேயாஞ் சிறிதும்வே றில்லை யென்னு
மிவ்விதப் பார்வை தானிங் கியம்பிய நல்லு பாயம். 182

ஓதிய பார்வை யாகு முண்மைவா தனையு ரத்தாற்
கோதுறு செய்கை முன்னர்க் குவிந்திடும் பின்பு சிந்தை
யாதுமே யிறக்கும் பின்ன ரேதுவா தனைய டங்கும்
வாதனை யடக்கந் தானே வழுவிலாச் சீவன் முத்தி. 183

சர்வமும் பிரம மென்னுஞ் சத்துவா தனைவ ளர்ந்தால்
மருளகங் கார மாதி மலினவா தனைய டங்கும்
கருமையா மெவ்வி டத்துங் கலந்துள வந்த கார
மருணனின் காந்தி தோன்று மளவிலே யழியு மாபோல். 184

இருளிருட் செய்கை யாக விசைந்துள வனர்த்த மெல்லா
மிரவிநின் றுதிக்கும் போதிங் கிறந்திடு நீதி யேபோ
லருவவத் துவிதா னந்த வநுபவ முதிக்கும் போது
பெருகிய பந்த மத்தாற் பெற்றதுன் பமுமி லாதாம். 185

திரிசியத் தோற்றந் தன்னைத் திருக்குமாத் திரமே யாகப்
பிரவிலா பித்து நின்னைப் பிரமமாத் திரமாய்ப் பார்த்திங்
கரியனே வெளியி னுள்ளி லாவது சமாதி பெற்றுக்
கருமபந் தம்வ ரைக்குங் காலநீ தள்ளு வாயே. 186

சொரூபநிட் டையையோர் காலுஞ் சொற்பமுந் தவிர வொண்ணு
தரணியி லந்த நிட்டை தவிர்தலே கால னென்று
பிரியனே பகவா னான பிரமபுத் திரவ சிட்டன்
பரமவா சிட்ட நூலிற் பலவிதம் பகர்ந்தா னன்றே. 187

ஆதலாற் சொரூப நிட்டை யன்றியுந் தவிர்தன் ஞானிக்
கேதமா மனர்த்த மாகு மேதெனிற் றவிர்த லாலே
சாதமா மோக மத்தாற் சனித்திடு மகந்தை யத்தாற்
கோததாம் பந்த முண்டாங் கூடிடு மவற்றாற் றுன்பம். 188

பொருவிலா ஞானி யேனும் புலத்தினோர் சென்றோன் றன்னைத்
தரணியிற் சொரூப நிட்டை தவிர்தலா மறதி புந்திப்
புரைகளா லலைக்குஞ் சோர புருடனைச் சோர மாதிங்
கரியனே விவித மாக வலைத்திடு நீதி யேபோல். 189

தீரனு ஞானி யேனுந் திருசியஞ் சென்றோன் றன்னைக்
கோரவா வரண சத்தி குறைவுற மறைக்கு மன்றே
நீரினுட் பாசிக் கொத்தை நீக்கினுங் கணத்தி லந்த
வாரியை யதுதான் மற்றும் வழுவுற மறைப்ப தேபோல். 190

சலித்தடிக் கின்ற பந்து சற்றுமே தவறி மாடித்
தலத்துள படியில் வீழ்ந்த தன்மைபோற் சொரூப மென்னு
மிலக்கிய நின்று சித்த மெவளவுந் தவிரு மாகிற்
புலத்தினோர் முகமே யாகிப் போய்விழு மங்கங் கேகாண். 191

புலனிடைச் சென்ற சித்தம் புலத்தையே நன்றி தென்று
பலவிதஞ் சங்கற் பிக்கும் படர்ந்தவச் சங்கற் பத்தாற்
றொலைவிலாக் காம முண்டாந் தொடர்ந்தவக் காமந் தன்னாற்
சலமுறு பிரவிர்த்தி யுண்டாஞ் சார்ந்தவப் பிரவிர்த்தி யாலே.

அருமையா மான்ம நிட்டை யகன்றுபோ மற்ற வற்றார்
புருடனுந் தீங்கில் வீழ்ந்து போகுவ தன்றி மற்றுஞ்
சொரூபமே சாரா னிங்ஙன் சொன்னவிவ் வனர்த்த மெல்லாந்
தருவதாஞ் சங்கற் பத்தைத் தள்ளுவான் விவேகி யானோன். 193

ஆதலா லான்ம நிட்டை யன்றியுந் தவிர்த ருனே
சாதுவே விவேகி யர்க்குச் சாற்றிய கால னாகுஞ்
கோதிலா வான்ம நிட்டை கூடினோன் பேற்றைச் சார்வ
னாதலாற் சாவ தான மாகவந் நிட்டை சார்வாய். 194

கேதமா ருடலி ருந்துங் கேவல னான வன்றான்
பேதமா ருடலி லாத பேற்றினுங் கேவ லன்காண்
சாதுவே பேதந் தன்னைச் சற்றுமே காண்ப வர்க்கு
மேதக யசுரு வேத மிகவுமே பயத்தைச் சாற்றும். 195

போதவா னெப்போ தேனும் பூரணப் பிரமத் தின்க
ணேதமாம் பேதந் தன்னை யெவளவுங் காண்ப னேலப்
பேதமே யன்னோ னுக்குப் பீதியா மாத லாலே
சாதுவே மறந்தும் பேதஞ் சற்றுமே காண வொண்ணா. 196

சுருதிகண் மிருதி நீதி சுத்தமாய் நிடேதஞ் செய்த
திருசியத் தான்ம புந்தி செய்பவன் விவேகி யேனும்
விரிவுற மேலு மேலும் விவிதமாந் துன்பஞ் சார்வ
னரியனே நிடேத கர்த்தா வாகிய பாவியே போல். 197

சத்திய வனுசந் தானஞ் சார்ந்தவன் முத்த னாகி
மெத்தவு மகத்து வத்தை மேவுவ னித்த மாக
மித்தையி னனுசந் தான மேவினோன் மிகந சிப்பன்
பத்தனே யசோர சோரர் பாவிதைப் பார்க்க லானோம். 198

ஆதலாற் சன்னி யாசி யசத்தனு சந்தா னந்தா
னேதமாம் பந்த வேது வென்றிதை யிகழ்ந்து நன்றாய்ச்
சோதி யானந்த சத்தாய்ச் சொல்லிய பிரம நானென்
றோதிய பிரம நிட்டை யொழிவற வொன்ற வேண்டும். 199

நீதிலான் மானு பூதித் திகழ்வினாற் றிடமாய்ப் பெற்ற
பேதமில் பிரம நிட்டை பெருகிய சுகஞ்செய் விக்கு
மேதமா மஞ்ஞா னத்தா லெய்திய துயரை யெல்லாஞ்
சாதுவே யந்த நிட்டை சற்றுமில் லாது செய்யும். 200

வாகிய வனுசந் தான மலினவா தனையைத் தானே
பாகனே மேலு மேலும் பயனதாய் வளரப் பண்ணு
மாகையால் விவேகி யத்தை யறிந்துடன் பாகி யம்விட்
டேகமா மான்ம ரூப மென்றமே யனுசந் திப்பான். 201

வாகியம் விட்ட போதே மனது நின்மலமா மைந்தா
வாகிய வம்ம னத்தா லடையலா மான்ம ஞான
மேகமா மந்த ஞான மிசைந்ததாற் பவபந் தம்போ
மாகையால் பாகி யத்தை யடக்கலே முத்தி மார்க்கம். 202

சாதுவே முமுட்சு வாகிச் சதுரனைச் சதசத் தோர்ந்து
வேதமே நம்பி யான்ம விபுத்துவ மறிந்தோ னார்தான்
கேதமா ரசத்துத் தன்னைக் கெடுத்திடு மென்ற றிந்தும்
பேதமா மவ்வ சத்தைப் பேணுவன் பால னேபோல். 203

உடன்முத லபிமா னத்தை யுடையவன் முத்தி சாரான்
றிடமுற முத்தி சார்ந்தோன் றேகாதி யபிமா னிக்கான்
சடமுறு துயிலு டைத்தோன் சாக்கிரஞ் சாரா னத்தை
யுடையவன் றுயிலைச் சாரா னுபயமும் வெவ்வே றன்றோ. 204

தன்னையே சராச ரங்கள் சகலத்தி னுட்பு றத்துந்
துன்னிய சாட்சி யாயுந் தொடாதிட் டான மாயு
முன்னியிவ் வுபாதி யெல்லா மொழித்தெவ னகண்ட மாகி
மன்னுபூ ரணமாய் நிற்பன் மாசிலா தவனே முத்தன். 205

சகலமாம் விதத்தி னானுஞ் சம்சாரம் விடுதற் கேது
வகமிலா வகண்ட பாவ மன்றிமற் றேது மில்லைத்
துகளிலா வான்ம நிட்டைத் தொடர்பினாற் றிருசி யத்தை
யிகழலவ் வகண்ட பாவ மிசைத்திடு மதிகா ரிக்கே. 206

மருவுதே கான்ம புத்தி மன்னிப்பா கியமே யான
பொருளுடை யநுப வத்திற் போகிய மனத்த னாகி
யொருவித மிலாத செய்கை யொழிவிலா தற்றோ னுக்குத்
திருசியந் தன்னை நீக்குந் திறமையெவ் விதத்தி னுண்டாம். 207

அகிலமாந் தர்மங் கர்ம மசத்தியப் புலனை னைத்து
மிகவுமே துறந்து நித்தம் மெய்யான நிட்டை சார்ந்
சுககன சொரூப மோர்ந்தச் சுகத்தையே யிச்சிப்
திகழ்வுறு முயற்சி யாலே திருசிய நீக்க முண்டாம்

திருசிய மியாவு நீக்கித் திடமுற லகண்ட பாவஞ்
சருவதா வடைவ தற்கே சாதுவா மெதிக ளுக்குச்
சிரவண மாதி கன்மஞ் செய்தபின் சுருதி தானே
சருவதா நிருவி கற்ப சமாதியை விதிக்கு மன்றே.

இருளுமா வரண சத்தி யாவுமே நசியா தாகின்
மருளும்விட் சேப சத்தி மாசற நசிக்க மாட்டா
பரவுமா வரண நாசம் பாலினீர் பகுப்ப தைப்போ
திருசியந் திருக்கி ரண்டைத் திகழ்வுறப் பகுத்தா

நல்லபோ தத்து தித்த நல்லதாம் விவேகந்தானே
சொல்லிய வான்மா ஞன்ம சொரூபநன் றுய்ப்ப கு
தொல்லையா மஞ்ஞா னத்தாற் றொடர்ந்தபந் தஞ்சி
மல்லல்செய் பந்த மற்றோர்க் கற்பமும் பவமீண் டில்

செவ்விதா யான்ம ரூப தெரிசனஞ் செய்வ தாலே
யெவ்வவா வரண நீங்கு மிறந்திடு மித்தை ஞானம்
விவ்வித விட்சே பத்தால் விளைந்துள துன்ப நீங்கு
மிவ்விதஞ் சொன்ன மூன்று மிசைந்தவோர் திருட்ட

தீதற விரச்சு ரூப தரிதனஞ் செய்வ தாலே
மோதுமா வரண மாதி மூன்றுமே முடிந்த வன்றே
வாதலாற் பந்த நீக்க மடைந்திட விவேகி யானோ
ஞதியா மான்ம ரூப மவசிய மறிய வேண்டும்.

இத்திற நித்தா நித்த வியல்பினிற் பகுத்த வற்றி
னித்தமாந் தன்னான் மாவை நிச்சயித் தறிவாங் கண்
லத்திற மான நானே யகண்டசிற் பிரம மென்று
தத்துவ மறிந்தோ னியாவுந் தவிர்ந்துதான் சாந்த

நிருவிகற் பகமே யாக நிகழ்ந்திடுஞ் சமாதி யாலே
யொருமையாந் தன்னான் மாவி னுண்மையை யெந்
புருடனிங் கறிவ னந்தப் போதுதா னஞ்ஞா னத்த
மருவிய சகல மான மனமுடிச் சிறந்து போகும்.

பத்தனே நிருவி கற்பப் பரமவத் துவிதான் மாவிற்
புத்தியின் றோடத் தாலே பொருந்திநீ நானி தென்று
நித்தமு விகற்ப முண்டா நிமலமாஞ் சமாதி தோன்றிற்
றத்துவ வனுப வத்தாற் றவிருமவ் விகற்ப மெல்லாம். 216

சமதமா தியைய டைந்த சதுரனுஞ் சந்நி யாசி
யமலமாஞ் சமாதி யாற்றன் னகண்டபா வம்பொ ருந்தித்
தமசினால் வருவி கற்பந் தள்ளிநிர் விகற்ப னேயா
யகலமாம் பிரமா கார மாகவே சுகித்து நிற்பன். 217

எவர்கடஞ் சுரோத்தி ராதி யிந்திய மிதய மியாவுஞ்
சுவமதா ஞானன் மாவிற் சுத்தமாய்ப் பிரவிலா பித்தங்
கவமிலாச் சமாதி பெற்றோ ரவர்களே முத்த ரானோர்
விவிதமாம் பரோட்ச வார்த்தை விளம்புவோர் முத்த ரன்றால்.

பேதமா முபாதி யாலே பின்னனா மொருவன் றானே
யேதமா முபாதி தீர்த்தா லேகனா மவனே மற்று
மாதலா லுபாதி தீர்க்க வனிசமும் விவேகி யானோன்
சாதக நிருவி கற்ப சமாதியே செய்ய வேண்டும். 219

ஏகமா நிட்டை யாலே யென்றுமே பிரமத் தின்க
ணாகுமா சக்தி யுள்ளோ னகண்டகற் பிரம மாவன்
சோகமே யுற்ற கீடஞ் சுற்றிய பிரம ரத்தை
யேகமாய்ப் பாவித் துத்தா னென்றுமே யஃதா யிற்றே. 220

கிரியைக ளியாவும் விட்டுக் கீடகம் பிரம ரத்தை
மருவியே தியானஞ் செய்து மற்றதே யாகு மாபோ
லொருமையா நிட்டை யாலே யுண்மையாம் பிரமந் தன்னைச்
சருவதாத் தியானிப் போனுஞ் சத்தியம் பிரம மாவன். 221

மிகவுமே நுண்மை யான மெய்ப்பரப் பிரமந் தன்னைத்
தகவிலாத் தூல திட்டி தன்னினா லெவருங் காணார்
நிகழ்மதி நுண்மை யுள்ள நிமலரே சமாதி யாலே
மிகவுமே சூக்க மான விருத்தியாங் கண்ணாற் காண்பர். 222

மெத்தவும் புடபா கத்தான் மேவிய மலத்தை விட்டுச்
சுத்தமாந் தன்கு ணத்தைச் சொன்னமே வுவதே போலச்
சித்தமுந் தியானத் தாலே சேர்ந்தமுக் குணம லத்தைச்
சுத்தமாய் விட்டுத் தன்னின் சுபாவமாஞ் சொரூப மேவும். 223

இடைவிடாத் தியானத் தாலே யிருதயஞ் சுத்த மாகித்
திடமுறப் பிரமத் தின்கண் டியங்கிடா தடங்கு மெய்போ
தடர்மிகு மகண்டா னந்த வனுபவ மேது வான
சுடமிலா நிருவி கற்ப சமாதியப் பொழுதே யுண்டாம். 224

ஆனவச் சமாதி யாலே யகிலவா சனை முடிச்சும்
போனதாம் விவித மாகப் பொருந்திய கன்மம் பொன்று
மேனையுள் வெளியி லெங்கு மென்றுமோர் முயற்சி யின்றி
யுனமில் சொரூபத் தோற்ற மொருமையா யொளிரா நிற்கும்.

பலிப்பினுற் பார்க்கும் போது பாங்கான சிரவ ணத்தின்
சலிப்பிலா மனனந் தானே சதகுண மேலா மத்தி
னிலைப்பிலா நிதித்தி யாச மிலக்கமாங் குணமே லாகு
மலுப்பிலா நிருவி கற்ப மளவிலாப் பலனு டைத்தாம். 226

பிரிவிலாச் சமாதி யாலே பிரதிபந் தங்க ளின்றி
யொருமையாய்ப் பிரம ரூப முணரலா மஃதி லாதேற்
சருவதா மனவி ருத்தி சஞ்சல மாத லாலே
விரிவுற விரோத மான விருத்தியோ டேக லக்கும். 227

ஆதலாற் பொறிகள் புந்தி யடக்கிநீ நின்னுன் மாவிற்
சாதுவே சமாதி பெற்றுச் சந்ததம் பிரம ஞானச்
சோதிகொண் டவிசா ரத்தாற் சுழல்வுறு மிருளை யெல்லா
மீதியில் லாது நீக்கி மிஞ்சிய வடிவாய் நிற்பாய். 228

ஏதுமே பேசாத் தன்மை யெவளவும் வாங்காத் தன்மை
கோதுறு மாசை யின்மை குறைவுசெய் கிரியை யின்மை
சாதுவே யேகாந் தத்திற் சந்ததம் வாசஞ் செய்கை
யீதெலாஞ் சமாதி தன்னை யிசைந்திட மூந்து மார்க்கம். 229

ஏகாந்த தேச வாச மிந்திய மடங்க வேது
போகாத வவ்வு டக்கம் புரைமன மடங்க வேது
வேகாத வவ்வ டக்க மிவ்வுட லாதி நானென்
றூகாத வாத னைக்கோ ளடங்குதற் கேது வாமே. 230

வாதனை யடக்கத் தாலே வரையிலாப் பிரமா னந்தத்
தேதமி லநுப வந்தா னென்றுமே தியானிக் கெய்து
மாதலால் விவேகி யானோ னலைமன வடக்கந் தன்னைச்
சாதுவே முயற்சி யாலே சாதிக்க வேண்டு மென்றும். 231

அரியனே மனதில் வாக்கை யடக்கதைப் பத்தி யின்கண்
பிரிவற வடக்க வற்றைப் பிறங்குசாட் சியில டக்கு
புரையிலாச் சாட்சி தன்னைப் பூரண நிருவி கற்பப்
பிரமமாய்த் தானே பார்த்துப் பெருகிய சாந்தி சார்வாய். 232

ஏதமாந் தேகம் பிராண னிந்திய மனது புந்தி
யாதியா முபாதி கட்கு ளலைமென மெந்த வெந்தக்
கோததா முபாதி யோடே கூடுமம் மயமே யாக
வோதிய தியானி யாவ னொழிவிலா னந்த மொன்றான். 233

ஆதலா லந்த வந்த வனர்த்தமா முபாதி சேர்ந்த
வேதமாந் தன்ம னத்தை யேகாது மீட்க வேண்டிச்
சாதுவே தியானி யானோன் சகலமு நன்றாய்த் தள்ளி
யோதிய பிரமத் தின்க ணொய்வதே யொழியா வின்பம். 234

பாகனே விரக்தன் றானே பரமோட்ச விச்சை யாலே
வாகியாந் தரத்தி னாலே வருவதாம் பற்றி ரண்டு
மேகமாய் விடுவ தாலே யியம்பிய விரக்த னுக்கே
வாகியாந் தரயி ரண்டாய் வகுத்தநற் றுறவு கூடும். 235

பரவிய புலன்க ளோடே பற்றுதல் வெளிப்பற் றாகு
முரவகங் கார மாதி யோடுபற் றுட்பற் றாகும்
பெருகிய விரதி பெற்றோன் பிரமநிட் டையைய டைந்திவ்
விருவிதப் பற்றை யுந்தா னேகமாய் விடுக்க வல்லோன். 236

பரவிடு மோர்பட் சிக்குப் பறந்திட விருபட் சம்போன்
மருவிடு மோட்ச மாகு மாடிமேற் சிவ னேற
விரதிநல் விவேக மென்ன வேண்டிய திரண்டு பட்ச
மிருமையி லொன்றி லாதே வீதின்மீ தேற வொண்ணா. 237

மிகவுமே விரக்த னானோன் மேவுவன் சமாதி தன்னைப்
புகழ்சமா தியை யடைந்தோன் பொருந்துவன் றிடபோ தத்தை
யிகழ்விலாப் போத முற்றோ னெய்துவன் முத்தி தன்னைத்
தகைமைசேர் முத்த னென்றுந் தடையிலா னந்த முண்பன். 238

விரதியை விடவே றொன்றும் விமலமாஞ் சுகம ளிக்கக்
கருதிய வேது வாகக் காண்கிலேன் றியானிக் கெங்கு
மரியனே யவ்வி ரக்தி யமலமா ஞானத் தோடே
மருவுமேற் பேரா னந்த மாறும லளிக்கு மென்றும். 239

யாதினுன் முத்தி யென்னு மிலங்கிய மாதைச் சேர
வோதிய விரக்தி தானே யுத்தம மார்க்க மாகு
மாதலா லகில மான வாசையு மறவே விட்டுச்
சாதுவே நின்னுன் மாவிற் சந்ததங் கருத்தை வைப்பாய். 240

விடசம விடயத் தின்கண் விடுதிநீ யாசை யெல்லா
மடமைசெய் யாசை தானே மரணுதி மார்க்க மன்றோ
படர்குலஞ் சாதி யாதி பற்றிய வபிமா னத்தோ
டிடர்தருங் கன்ம மெல்லா மெவளவு மிலாது தீர்வாய். 241

மித்தையாந் தேக மாதி மிசையக மதியைத் தள்ளிச்
சத்திய வான்மா வின்கண் சாலவம் மதியைச் செய்வாம்
நித்தமும் சாட்சி நீயே நிமலநிர்ப் பயமாய் நின்ற
வுத்தமப் பிரம நீயே யுள்ளவா றேருங் காலை. 242

இலக்கியப் பிரமத் தின்க ணிதயத்தை யூன்ற வைத்துச்
சலித்திடு மிந்தி யத்தைத் தனதுகோ ளகத்தி ருத்தி
யலைத்திடா வாக்கை யோனு யதனிலே யுபேட்சை செய்து
நிலைத்துள பரசீ வைக்கிய நித்தநீ யடைதி மைந்தா. 243

அந்தவைக் கியம டைந்த வகண்டமாம் விருத்தி யாலே
சுந்தரப் பிரமா னந்தச் சுதையினை மகிழ்ச்சி யோடே
சந்ததம் பானஞ் செய்வாய் சாரமில் சகத்தைப் பற்றிச்
சிந்தைசெய் மயல்க ளாலே சேர்பய னுண்டோ சொல்வாய்.

கருதொணுத் துயருக் கெல்லாங் காரண மாகா நின்ற
மருளுறு மனுன்ம சிந்தை மாசற விடுத்து நித்த
மரியனே யின்ப முத்தி யடைவதற் கேது வான
பிரியமா மான்ம சிந்தை பிரிவறச் செய்தி யென்றும். 245

நிகழ்சுயஞ் சோதி யாகி நிகிலசாட் சியுமா மான்மா
புகலும்விஞ் ஞான கோசம் பொருந்தியே விளங்கு மென்று
மிகழ்விலா விவ்வான் மாவை யிலக்கிய மாகப் பற்றி
யகமென வநுபவிப்பா யகண்டமாம் விருத்தி யாலே. 246

இகழ்விசா திகவி ருத்தி யானுமே யில்லா தென்றுந்
தகமையாய்ப் பழகா நின்ற சந்தத விருத்தி யாலே
சுககன மான வான்ம சோதியைச் செவ்வி தாக
வகமெனக் கோச ரித்திங் கனிசமு மறிய வேண்டும். 247

பகருமிப் பரமான் மாவிற் பாங்குற வான்ம புந்தி
மிகவுமே திடமாய்ச் செய்து மித்தையா மகங்கா ராதிப்
பகையிலாப் புந்தி விட்டுப் பலவுமா மவற்றி லென்றும்
புகல்கட படாதி யிற்போற் புத்திர வுபேட்சை செய்வாய். 248

போதமாத் திரமே யாகப் பொருந்திய சாட்சி யின்க
ணேதமின் மனத்தை நன்று யிருத்திநற் பழக்கத் தாலே
சாதுவே மெள்ள மெள்ளச் சலனமில் லாது செய்து
தீதிலாப் பூர ணத்தைத் திகழவே நோக்க வேண்டும். 249

ஏதமாந் தேகம் பிராண னிந்திய மனத கந்தை
யாதியஞ் ஞானத் தாலே யாக்கிய வுபாதிக் கூட்ட
மேதுவி லகண்ட போத வின்பமாந் தன்னுன் மாவை
யோதிய மகாகா சம்போ லொன்றென வுணர வேண்டும். 250

ஓதிய கடங்கு தூல மூசியே முதலாய் வந்த
பேதமா முபாதி போனுற் பெரியவா காச மொன்றே
யீதுபோ லகங்கா ராதி யீனமா முபாதி போனுற்
போதவா னந்த சுத்த பூரண வான்மா வொன்றே. 251

யாதினு லயனே யாதி யீனமாந் தம்ப மீறு
யோதிய வுபாதி யெல்லா முண்மையில் லாத தாகு
மாதலா லேக ரூப மாகிய தன்னுன் மாவைப்
பேதமில் புரண மாகப் பேணியே பார்க்க வேண்டும். 252

எதிலெது மயக்கத் தாலே யீங்குக் கற்பிதமா யிற்றே
வதுவது வாகு மன்றி யறிந்திடி லதில்வே றுகா
திதமுறு ஞானத் தாலே திகழ்மய னசிக்கும் போதிங்
கெதிரவே கண்ட சர்ப்ப மிரச்சுவே யன்றி வேறே. 553

ஈதுபோ லான்மா வின்க ணிலங்கிய யாவு மான்மா
வாதலா லான்மாத் தானே யயனரி யரனு மாகு
மோதுமிந் திரனு மாகு முயர்சுரர் நரரு மாகு
மேதுமே யான்மா வன்றி யெவளவு மதில்வே றில்லை. 254

அலைநுரை குமிழி மற்று மாகிய சுழலே யாதி
பலபல வுருவ மெல்லாம் பார்க்கிலோர் சலமே போல
வலைவுறு தேக மாதி யகங்கர மீறு யாவு
நிலையுறு சித்தே யாகு நிமலமாஞ் சித்த தொன்றே. 255

வானிகர் மலமி லாதாய் வருவிகற் பமுமி லாதா
யூனமா மளவி யங்க லோர்விகா ரமுமி லாதா
யானவுள் வெளியி லாதா யபினவத் துவித மான
வீனமில் பிரம மேநா மினியெதை யுணர வேண்டும். 256

விரிவதா யிங்கு ரைக்க வேண்டிய தொன்று மில்லை
பிரமமே சீவ ரியாவும் பிரமமே பரவு மீசன்
பிரமமே யணுவி ரூகப் பிறங்கிய சகம னைத்தும்
பிரமமே யேக மென்று பேசலாற் சுருதி யெல்லாம். 257

பிரமமே நாமென் றிந்தப் பெரிதான ஞானம் பெற்றோர்
பரவிய பாகி யத்தைப் பற்றுது நன்றாய் விட்டே
யொருமை யானந்த சித்தா யுண்மையா யுள்ள வந்தப்
பிரமமே யாகி யென்றும் பிறங்குவ ருறுதி யீதே. 258

மலமய தூல மீது மற்றுமே வாயு வைப்போ
லலைவுறு சூக்க மீது மகமபி மானம் விட்டுப்
பலமறை புகழா னந்தப் படிவமாம் பரநா னென்றே
சலனமில் பழக்கத் தாலே தற்பர வடிவாய் நிற்பாய். 259

தன்னுடை மனவி ருத்தி தன்னுடைச் சொரூப மாகப்
பன்னிய நிருவி கற்பப் பரமமாம் பூர ணத்தின்
மன்னியே சமாதி பெற்றான் மற்றொரு விகற்ப முந்தான்
றன்னெதிர் காணு தத்தாற் றத்வமாய் விகற்ப மில்லை. 260

சித்தமே மூல மாகச் செறிந்தன விகற்ப மெல்லாஞ்
சித்தமில் லாத போது சிறிதுமே விகற்ப மில்லைப்
புத்திர வாத லாலே புகன்றசித் தமுந சிக்க
நித்தமும் பூர ணத்தி னிலைமையாய்ச் சமாதி செவ்வாய். 261

பகுதியின் விகார மின்றிப் பாவனு தீத மாகித்
திகழுமோ ருவமை யின்றித் திரசம ரசமே யாகிப்
புகழ்பரி புரண மான பொருளினை வித்து வான்று
னிகழ்வுறு சமாதி யாலே நித்தமு மனுப விப்பன். 262

வளமுறு சமாதி பெற்று வழுவிலா மனத்த னுகி
யளவிலா மகிமை யுள்ள வகண்டமே யநுப வித்துத்
தளர்விலா முயற்சி யாலே சம்சார பந்தந் தள்ளி
யெளிதிலா வாண்மை தன்னை யின்றுநீ சபலஞ் செய்வாய். 263

சருவமா முபாதி யின்றிச் சச்சிதா னந்த மாகி
யொருமையா யுள்ளந் தன்னி லுன்வடி வாக நின்ற
பொருவிலாப் பிரமந் தன்னைப் பொருந்திநீ பாவிப் பாயேன்
மருவிய சம்சா ரத்தின் மார்க்கமே மற்றுஞ் செல்வாய். 264

சச்சிதா னந்த மான சாந்தமாம் பிரமத் தீயி
லிச்சட வுபாதிப் பஞ்சு யாவையு மெரித்துப் பின்பிவ்
வுச்சமாய்ப் போதா னந்த வுண்மையாய்த் தூய்தாய் நின்ற
துச்சமில் பிரம மாகத் துலங்குவன் ஞானி யென்றும். 265

மிகுந்துள விராகத் திற்கு மேவிய பயனும் போதம்
பகர்ந்தவப் போதத் திற்குப் பயனுப ரதியே யாகுஞ்
சுகந்தனி னனுப வத்தாற் றொடர்வுறு சாந்தி தானே
பகர்ந்தவவ் வுபர திக்குப் பரமான பயனு மைந்தா. 266

வகுத்துள போக்கி யத்தின் வாதனை யுண்டா காமை
மிகுத்துள விராகத் திற்கு மேவிய வவதி யாகும்
பகுத்துள தேக மாதி பற்றிய வகந்தை பின்பு
மகத்தினு ளுண்டா காமை யவதியாம் போகத் திற்கே. 267

சந்தத முயற்சி யாலே சச்சிதா னந்த மான
சுந்தரப் பிரமத் தின்கண் சூக்கமாய் லீன மான
சிந்தையின் விருத்தி மற்றுஞ் சிறிதுமே யுண்டா காமை
மைந்தனே யவதி யாகு மாசிலா வுபர திக்கே. 268

நித்தமும் பிரமா கார நிலைமையாய் நிற்ப தாலே
யத்திர வாகி யங்க ளறிந்திடா மனத்த னாகி
நித்திரை யுற்றோன் போலு நினைவிலாப் பாலன் போலு
மத்திர விடய போக மனியரா லறிந்தோ னாகி. 269

சொப்பனந் தன்னிற் கண்ட சொரூபமில் சகத்தைப் போலிக்
கற்பித சகத்தை யோரோர் காலமே காண்போ னாகி
யிப்படி யுள்ள ஞானி யாவனோ வவனே தன்னிய
னற்பமில் புண்ணி யப்பே றடைந்தவ னவனே பூச்சியன். 270

யாதொரு சந்நி யாசி யேகமாம் பிரமத் தின்கண்
டிதா லீன மான சித்தனுய்ச் செய்கை யின்றி
யேதுமே விகார மின்றி யென்றுமே யின்பஞ் சார்வ
னேதிய வன்ன வன்று னெளிர்திடப் பிரக்ஞ னானேன். 271

சுத்தநற் பிரம சீவர் சொரூபமா மைக்கி யத்தை
நித்தமுங் கோச ரித்து நிருவிகற் பகமே யான
சித்துமாத் திரவி ருத்தி சீர்பெறும் பிரக்ஞை யித்தை
நித்தமும்பற்றி நின்றோ னிமிலமாஞ்சீவன் முத்தன். 272

தேகவிந் திரிய மாதித் திரளிலே யகந்தை யும்பற்
றாகிய பொருள்க டம்மி லமைவுறு மமதை யுந்தா
னேகமா யாவ னுக்கிங் கெங்குமே யிலாத தாகு
மோகமி லவனே சீவன் முத்தனென் றுரைக்க லாவன் 273

நிலைபெறு ஞான முற்று நிரந்தர வின்பம் பெற்று
வலைவுறு சகம றந்திங் கமர்ந்தவன் சீவன் முத்தன்
சலமென விருத்தி கெட்டுஞ் சாக்கிர முற்றோ னாகி
யிலகுசாக் கிரமு மின்றி யிருப்பவன் சீவன் முத்தன். 274

எவனிகழ் வாத னைக்கோ ளிலாத நல் ஞானமுற்றோ
னெவன்வெகு விகற்ப மான விப்பவ மியாவும் விட்டோ
னெவன்கலை யுற்றோ னாயு மேதுமே கலையற் றோனு
மவனிடர் பந்த மற்ற வமலனாஞ் சீவன் முத்தன். 275

பூதகா லத்தி றந்த பொருளினைச் சிந்தி யாமை
யோதிய வருகா லத்தி லுறுபொரு ளோர்ந்தி டாமை
யேதுமே நிகழ் காலத்தி லெய்தினு மதினு பேட்டை
யீதெலாஞ் சீவன் முத்த னிலக்கண மாகு மைந்தா. 276

ஏதமுங் குணமுஞ் சேர்ந்த வியல்பினால் வெவ்வே றான
யாதினுஞ் சமமாம் பார்வை யெய்தினோன் சீவன் முத்த
னோதிய பார்வை யாலே யொன்றிய விட்டா நிட்ட
மேதினும் விகார மற்றோ னிலங்கிய சீவன் முத்தன். 277

பிரத்திய கபின்ன மான பிரமவா னந்தந் தன்னைக்
கருத்திலே யநுப விக்கக் காதலுண் டான சித்த
விருத்தியைப் பற்ற லாலே வெளியினு முளினும் வேறு
கருத்துறு ஞான மற்றோன் களங்கமில் சீவன் முத்தன். 278

விரித்துள சகத்தி னுக்கும் விமலமாம் பிரமத் திற்கும்
பிரத்திய கான்மா விற்கும் பேசிய பிரமத் திற்கும்
விருத்தமாம் பேதந் தன்னை விருத்தியி லோர்கா லேனுந்
தரித்திடு ஞான மற்றோன் றகைமையுள் சீவன் முத்தன். 279

சடமான விக்தே கத்தைச் சாதுக்க ளர்சித் தாலுந்
தொடர்வான விதனை மற்றோர் துட்டர்கள் பிடித் தாலுந்
திடமான ஞான நிட்டை சேர்ந்துள திறமை யாலே
யிடராத சமபா வத்தை யெய்தினோன் சீவன் முத்தன். 280

சுருதியின் பலத்தி னாலே சூக்கும வான்மா விற்குப்
பிரமபா வத்தை நன்றாய்ப் பேணியிங் கறிந்த வன்றான்
மருவிய பவபந் தத்தை மாசற விடுத்தோ னாகி
யருமையாங் கைவல் யத்தை யடைகுவ னைய மில்லை. 281

பேதமாய் நதியில் வந்த பிரவாகம் வாரியிற் போல்
யாதொரு வெதியி டத்தி லெய்திய விடய மெல்லாங்
கோதிலாச் சொரூப மாகக் கூடியே யைிக்கு மற்று
மேதுமே கலக்கஞ் செய்யா தின்னவன் சீவன் முத்தன். 282

மெத்தவும் பெண் மயக்க மேவிய மூடன் றன்னின்
சித்தமுந் தாயிடத்திற் செல்லாது நிற்குமா போற்
சுத்தவா னந்த மான சொரூபமே யுணர்ந்தோ னுக்குஞ்
சித்தமிவ் விடயா நந்தஞ் செல்லாது நிற்கு மன்றே. 283

பிரமமே நாமென் றிங்ஙன் பெற்றுள ஞானத் தாலே
சருவதாக் கற்ப கோடி சஞ்சித வினை நசிக்கு
மருளறு சாக்கி ரத்தான் மயக்கமாஞ் சொப்ப னத்திற்
கருதிய கன்ம மெல்லாங் காணாது நசிக்கு மாபோல். 284

சங்கமில் லாம லென்றுஞ் சாந்தமாம் தத்து வத்தைப்
பங்கமில் லாது தானாய்ப் பார்த்து நன்று யறிந்த
துங்கமாஞ் சன்னி யாசி தூரவா காமி யத்தை
யெங்குமே யெவள வேனு மென்றுமே யிசையான் விண்போல்.

சித்தமு வாக்கு யாவுஞ் சென்றுகோ சரிக்க வொண்ணாச்
சத்ததாய்ச் சுத்த சித்தாய்ச் சாருமோ ருவமை யின்றி
நித்தமா னந்த மாகி நிகழ்சொத சித்த மான
வத்வயப் பிரமத் தின்க ணணுவுமே பேத மில்லை. 286

நிருவிகற் பகமே யான நிருமலச் சமாதி கொண்டே
யொருமையா முன்சொ ரூப முணர்வதாந் திட்டி யாலே
மருடரு மைய மின்று மாசற நோக்கு வாயேற்
பிரியநீ கேட்ட வத்து மின்னரும் பேதி யாதால். 287

சுருதிகள் பொதுவே யாகச் சொல்லிடு மெப்ப டித்தாய்க்
குரவரு மப்ப டித்தே கூறுவர் சீட னேநம்
பரசிவ னருளாற் றந்த பரமுண ரநுப வத்தால்
வரையிலாப் பவமா கின்ற வாரிதி கடக்க வேண்டும். 288

சகலவே தாந்த நூலிற் சாரமாய்த் திட்டி மூன்று
திகழுமத் திட்டி யாலே திருசிய மியாவு நீக்கி
நிகழுமத் துவிதா கண்ட நிரு மலப் பிரமந் தன்னை
யகமென வறிந்த வன்று னகண்டனாய் முத்த னுவன். 289

பரவிய திட்டி மூன்றின் பகுப்பினைப் பகரக் கேளாய்
விரிவுறு வாத திட்டி மித்தியா திட்டி மற்றும்
பிரிவெலா நீக்கா நின்ற பிரவிலா பதிட்டி மூன்று
மிருமைதீ ரிவைக டம்மி னிலக்கண மியம்பு வாமே. 290

மருவிய சுழுத்தி போலு மகத்தான தாணு போலும்
பிரமமா மென்னி டத்திற் பிறிதுபோற் காண்ப தெல்லா
மொருவனு வேனு மில்லை யுள்ளவ னானே யென்று
நிருமலப் பார்வை தானே நிகழ்த்திய வாதிட்டி. 291

இருமைசேர் கனவு போலு மிந்திரசாலம் போலும்
பிரமமா மென்னி டத்திற் பிறிதுபோற் காணப் பட்ட
சருவமும் மித்தை யாகுஞ் சத்திய நானே யென்று
விரிவுறும் பார்வை தானே மித்தியா திட்டி யாகும். 292

பரவிய வாழி போலும் பார்த்திடுங் கனவு போலு
மொருசிதா காச மான முருவமா மென்னி டத்திற்
பிரிவுபோற் காண்ப தெல்லாம் பிரமமா நானே யென்று
பிரிவிலாப் பார்வை தானே பிரவிலாப திட்டி யாகும் 293

ஓதிய திட்டி மூன்றி லுளத்தினு ளிசைந்த தான
வேதொரு திட்டி யாலு மிருமையாந் திருசி யத்தைத்
தீதற நீக்கி நித்தந் திருக்குமாத் திரமாய் நின்ற
பேதமில் பரமு ணர்ந்து பேற்றினை யடைய வேண்டும். 294

பரமமாம் வேதாந் தத்தின் பரம சித்தாந்த மீதே
பிரமமே சீவர் யாவும் பிரமமே சகம னைத்தும்
பிரியனே பிரம மாகப் பிரிவற விருத்தன் மோட்சஞ்
சுருதியின் முடிவ னைத்துஞ் சொன்னதிற் பிரமா ணங்காண். 295

பிரமசீ வைக்கி யத்தைப் பேணினா னறிந்த தாலே
பிரிவுசெய் புந்தி யும்போய்ப் பிரவிர்த்தி யாவு நீங்கி
யுருவிது வுருவிதன்றென் றொன்றையு முணர்கி லேனியா
னொருமையா மிச்சு கத்திற் குற்றவோர் கரையுங் காணேன்.

தெரிந்திடும் பொருளு னன்று தெரிந்திடாப் பொருளு னன்று
விரிந்துள விவைக ளெல்லாம் விளக்கிநற் சுத்த மாகி
நிரந்தரமாக வெங்கு நிரம்பியுள் வெளிக ளின்றிப்
பொருந்திய வகண்டா னந்த போதமாம் பிரம மேதான். 297

அகண்டமாம் பிரமத் தோற்ற மகிலமு மாத லாலே
சகமிது வென்னுந் தோற்றஞ் சத்தியப் பிரம மேயென்
றகத்துறு மான்ம நோக்கா லறிய சித்த னாய்நீ
யிகபர மெவ்வி டத்து மேகமா யென்றும் பார்ப்பாய் 298

ஏதமாம் பதிபந் தங்க ளின்றிய விருத்தி யாகிப்
பேதமில் பிரம ஞானம் பெற்றுள பெரியோ ருக்கு
யாதொரு தேசங் கால மிலக்கிய நிட்டி யாதி
யோதுமா சனமே யாதி யொன்றுமே தேவை யில்லை. 299

தன்னினை யறிவ தற்குத் தானொரு நியமம் வேண்டா
மன்னிய கடமி தென்று மறைவற வறிவ தற்குத்
துன்னிய பொருள் விளக்கந் தோடமில் சட்சு வன்றிப்
பின்னொரு நியமந் தன்னைப் பேணுவ தெங்கு முண்டோ. 300

அந்தவா நித்த சித்த மாகிய விவ்வா ன்மாவுஞ்
சொந்தமா மனவி ருத்தி சுத்தமா யிருக்கும் போது
சந்ததந் தானே தோன்றுஞ் சாருமோர் தேசங் காலம்
பிந்தியோர் சுத்தி யாதி பேணுவ தொன்று மில்லை. 301

பிரிவிலா னந்த திருப்தி பெற்றுள பரம வித்து
மருவிய விடயத் தாலே மகிழ்வு சோர் வடையா னத்தி
லுரவிய காம மாதி யுற்றிடான் றன்னி டத்தே
சருவதா ரமிப்போ னாகிச் சந்தத மகிழ்ச்சி சார்வன். 302

சிந்தை தனிய மிளமற் செறிபசி யன்ன முண்டு
வந்துறு குளமே யாதி வாரியைப் பானஞ் செய்து
பந்தமா நியம மற்றுப் பயமற வனமே யான
வெந்தவோ ரிடத்து ஞானி யேகனாய்த் துயில்செய் வானால்.

சுத்தமாய்த் தோய்த்து லர்த்தாத் துகிறரித் தலது திக்கை
வத்திர மாயு டுத்தி வந்தபூ மியி னடந்து
வித்தர வேதாந் தத்தின் வீதியிற் சஞ் சரித்து
வித்துவான் பிரமத் தின்கண் விமலமாய் ரமிப்ப னென்றும். 304

இன்ன வென்றுணர வொண்ணு விலக்கண முடையோ னுகிப்
பன்னிய பாகிய த்தைப் பற்றிடா வான்ம ஞானி
யன்னிய ரிச்சை யாலே யமைவதைப் பால னேபோற்
றுன்னுதே காபி மானத் துகளிறந் தவனுய்த் துய்ப்பன். 305

அகண்டமாஞ் சிதம்ப ரத்தி லமர்ந்துள பிரம ஞானி
திகம்பர மலது மற்றோர் திவ்விய வம்ப ரந்தான்
வகுத்தவோர் வற்க லாதி வத்திரந் தானு டுத்திப்
பகுப்பிலாப் பாலன் பித்தன் பசாசெனச் சஞ்ச ரிப்பன். 306

தத்துவ மறிந்த யோகி தன்னிலே தான்ம கிழ்ந்து
நித்தமுஞ் சருவான் மாவாய் நிகழ்ந்துதன் னிச்சை வாறே
யெத்தனை யுருவோ வாகி யேதுமே தான்பு சித்தங்
கித்திற மேக னுகி யெங்குமே சஞ்ச ரிப்பான். 307

ஒருமையாம் பரமா னந்த முற்றுள பிரம ஞானி
யொருவிட மூட னேபோ லொருவிடம் வித்து வான்போ
லொருவிட மன்ன னேபோ லொருவிடம் பித்த னேபோ
லொருவிடம் சாந்த னேபோ லுலகினிற் சஞ்ச ரிப்பன். 308

ஒருவிடஞ் சாக ரத்தோ டொத்தவா சார னுகி
யொருவிட நேய னுகி யொருவிட நேய னன்றி
யொருவிட மறையோ னுகி யொருவிடந் தெரிவோ னுகி
யுரைதரு மிவ்வா றெல்லா மொருவனே சஞ்ச ரிப்பன். 309

அருத்தமில் லாதி ருந்து மனிசமு மகிழ்ச்சி சார்வ
னொருத்தரின் சகாய மற்று முரவிய பலமே சேர்வன்
திருப்திசெய் புசித்த லற்றுந் திருப்தியே நித்தஞ் சேர்வன் [ன்.
பொருத்தலில் விடம மெல்லாம் பொருந்திய சமமாய்ப் பார்ப்ப

சத்ததாஞ் சீவன் முத்தன் சக்கர மூலமே போற்
கர்த்துரு கரண மாதி கற்பனை யாவு மற்றுச்
சுத்திய விந்தியத் தைச் சுழல் புலன் றன்னிற் சேரா
னத்தினின் றுந்தி ருப்பா னவனுதா சீன னுவன். 311

ஒருநட னொரு வேடத்தை யொன்றினு மொன்ருப் போதும்
புருடனே யாகுமா போற் பூரணப் பிரம வித்து
மொருமையி லுபாதி தன்னை யொன்றினு மொன்ருப் போதும்
பிரமமே யாவ னன்றிப் பிறிதெது மாக மாட்டான். 312

ஏதெனி லிந்தத் தேக மிறந்திடன் மோட்ச மன்றே
யோதிய கடதண் டாதி யொழித்தலு மோட்ச மன்றே
யேதமா மவித்தை யாலே யெய்திய மனமு டிச்சு
யாதுமே யொழிவ தன்றோ வெதிகளுக் கிசைந்த மோட்சம்.

ஆதலா லெவணின் ஞானி யாக்கைதான் வீழ்ந்த தாலே
ஞேதிய தருவின் பன்ன மொருநதி வாய்க்கால் வீதி
மேதகு சிவா லயாதி மீதுதான் வீழ்ந்த தாலே
யேதுமே சுபா சுபந்தா னிசைவது தருவுக் குண்டோ. 314

சகலவா சையுமே யற்றுச் சாரமாம் புத்தி பெற்றுப்
புகல்கலி தோட மொன்றும் பொருந்திடா முமுட்சுத் தன்னைச்
சகமிதி னீசோ தித்துச் சாற்றுமிப் பொருளை யெல்லாம்
மகனே யவ் வதிகா ரிக்கே மயலற வுபதேசிப்பாய். 315

மெத்தவுங் கிட்டி நின்ற மெய்யுணர் வனந்தா னந்த
வத்வயப் பிரம மாகு மமிர்தவா ரிதியைக் காட்ட
வுத்தமச் சங்க ராசா னுரைத்திடு மிந்த நன்னூல்
நித்தமு முத்தி யின்ப நிலைமையாய் நிகழா நிற்கும். 316

மகிழ் தரு விவேக சூடா மணியெனு மிந்த நூலை
யகமுற வாசான் முன்பா யமலமாய்ப் படித்த றிந்தோன்
சுககன வடிவாய் நித்த சுத்தமாம் பரமான் மாவே
யகமென வறிந்து நன்று யகண்டமா யிலங்கா நிற்பன். 317

## பஞ்ச தசப் பிரகரணம்.

தன்னிடத்திற் கற்பனையாஞ் சீவனுற்ற சமுசார மவனை யுந் தன் சுபாவ மாக, வுன்னுகின்ற மயக்க மதே யஞ்ஞானந் தா னொருபோதுஞ் சமுசார மடைய வில்லை, யன்ன சமுசாரி சமுசாரம் பொய்யென் றறிகின்ற விவேகமதே யஞ்ஞா னத் தைப், பின்னமுறத் தள்ளுகின்ற வுபாய மோர்வாய் பிறங்கு மந்த விவேகமெது செய்தாற் கூடும். 1

மேலுரைத்த வபரோட்ச ஞானம் வந்தால் விசார முடிவா மறியிவ்விரு ஞானத்துக், கோலமிடு மிலக்கணமே தென்னிற் பிர மமொன்றே யுண்டென வறிதல் பரோட்ச ஞானந், தூல மிலப் பிரமேநா மென்கின்ற துணிவபரோட் சஞ்ஞான மறிவா யிந்தக், கோலமுள வபரோட்ச ஞானந் தன்னைக் கொடுக்கின்ற விசார மேதென் னிற்சொல்வாம் 2

வேதாந்த ஞானிகடான் பகுத்தறிந்து விமல முத்த ராவ ரெனல் சித்தாந்தங் காண், வேதாந்த மல்லாத சாத்தி ரத்தால் வேறாகா முத்தியது விலையோ வென்னிற், பேதானமற்ற சாத்தி ரங்க ளெல்லாம் பிராந் தர்களைக் குறித்துமே செய்த தாலே, கோதான கலக்கமேற் கலக்கமாகக் குழம்புமலாற் பிராந்தி யதைப் போக்கா தோர்வாய். 3

பின்னமுற வெவ்வளவும் விரோத மிலையென வறிதிபிரம மொன்றுண்மை மற்றுச்,சொன்ன பொருள் சகலமு மாயை மய மென்பதிற் றேன்றுமள வென்ன வென்னி, லுன்ன லுறு மிவ் விதத்தோ துமுப்பத்து ரெண்டு பநிடத மளவையோர் வாய், பன்னுமிது வரை சொனது சித்திலக்க ணமதாம் பகரும் வேதா ந்த மதிலே. 4

செகசீவ பரமெலா முண்மையாய் வருவதைத் திகழ் மாயை யென்ப தெங்ஙன, னிகரிலா மாயை கற்பித மெலாம் லௌகீகர் நினைவதனி லுண்மை யெனவு, முகமான யுத்தியினி லநிர் வாச் சிய மெனவு மோதும் வேதாந்த ஞானிக், கிகலான மூன்று கா லத் தினு மிலாதா யிருக்கு மென்ற றிகுவாயே. 5

செகத்து மாயா மயமென் பதனை யாவருந் தெரியாத வித மே னெனிற், றெருக்குத்த விந்திர சாலமுடை யவனை யறியும்வரை

தோன்று மவை யுளதுபோல, வெகுத்த மாயையின திட்டான ம
தை யறியும்வரை மாயை யுளதாக வெய்தும், பகுத்ததி னதிட்
டான மோர்ந் திடிற் பொய்யெனப் பயிலுமென வறிகுவாயே. 6

உரையான மேகம்போ லிருக்கு மாயை யோதுமதன் றிவ
லைபோ லிருக்கும் புத்தி, பிரியாத வாசனை கடிவலை தன்னிற் பிரு
திவிம் பாகாச மதுபோ லிருக்கு, மிரியாத சிதாபாசன் மேக வா
ன்போ லிருப்ப யீசா னெனவேயறி வாயானூற், பரிவான மாயை
புத்தி யதனில்வந்த பாசிவர் தலைவெய்யன் பகுத்துக் காண்டல்

படமதனி னூலுபாதா னமாகப் பரவுதல்போற் சகமதனி
லிவனை நாளு, மடருபாதான மதாற் செகங்க ளியாவு மவனுக்
குச்சரீர மது சகலசீவ, ரிடமதிலு மிருக் குமிமானக் கயிற்றை யி
சைத்துமே தேகாதிப் பாவை தன்னைப், படரும் விதிநிமித்த வழி
யாட்டி விப்பன் பாசிவ னெனுங்கீதா வசனந் தானும். 8

பிரமான்ம விசாரமதா லன்றி மோட்சம் பின்னொன்றா லிலை
யறிவாய் பிரம ஞான, மாமன்றி மற்றொன்றாற் சமுசாரந் தா
னொழியாதோவென்னிற் றான் விழித்த லன்றித், திரமுள தன்
சொற்பனம்போ காதும்போலச் சித்தி னிடத் தஞ்ஞான முதவு
ஞ் சீவேசராகி, சகத் தென்னுங் களவுதானுஞ் சொலுமான்ம
ஞானமதாற் போகு மோர்வாய். 9

அறிவதெலா மித்தையெனக் கண்டுசெய்வா னவனினை
வின்படி பலனும் வருமென் றோர்வா, யறியுமத் துவிதம் பிரத்தி
யட்ச மாமோ வறையெனி லியறிவுறவோ லலவோ சொல்வா,
யறிவுள்ளபடி தோற்றமில்லை யென்னி லது துவிதந் தனிலுமே
சரியா மந்த, வறிபொருள்கள் சித்திக்கு மதுபோலத் துவிதந்
தானுஞ் சித்திக்கு மறிதி யன்றே. 10

கடமறி யத்தீபமு நேத்திரமும் வேண்டுங் கருதுகின்ற விள
க்கறியக் கண் போதும்போல், விடமான விடயத்தை யறியும்
போது விடையாக் ஞானம் போக்க விருத்தி வேண்டும், தொடர்
பாகி வதையறியச் சீவன் வேண்டுஞ் சுயம்பிரகாசப் பிரம மறி
யும் போதி, லடருமஞ் ஞானம் போக்க விருத்தி போது மாபா
சன் றேவையிலை யிருந்தபோதும். 11

பகுத்தறிந்து தான் சச்சிதானந்த மென்று பரமாக நிச்ச யிப்போன் முத்தனென வேதம், வகுத்துரைக் குதறிதானே சச் சி தானந்தமா யிருப்பதற் கடையாளந் தானே தென்னிற், செ குத்திடு மாயா விருத்தி மனோ விருத்திதோன்ற றிகழ்த லழி தற்குமே சாட்சியாயிருக்கு, மிகுத்திடு மான்மாவுமே சத்தெ ன்ப தொக்கு மேவுமெலா மறிகையினாற் சித்தென்ப தொக்கும்.

கற்ற போதம் பின்னையெதனாற் போமென்னிற் கழறும் வே தாந்தத்தின் மேற் பிரமாணமதா, யுற்றிடு மொன் றுண்டானா ல தனாற் போமல்லா லுறுசுழுத்தி மூர்ச்சையிலே போவ தலவத னான், மற்று மத்துவித ஞானந் தன்க் கொன்றினாலும் வாதை யிலையறி பஞ்சபூத விவேகத்தை, யற்றமற வராய்ந்து சகஞ்சின் மாத்திரமா யறிந்தத்து விதமான நிலைபெற்றோன் முத்தன். 13

செனன மரணாதிக்கு மூலமென வறிந்து தினமுமனோ ராச் சியத்தை முந்தி விடவேண்டு, மனவரத மிப்படியே யிரும்பைக் கொண்டிரும்பை யராவுகல்போற் சாத்திரிகப் பிரபஞ்ச மத னாற், பினமான வசாத்திரிக மிரண்டையுமே தள்ளிப்பின்பு பிண ஞ்சுடு தடிபோற் சாத்திரிக மதையும், வனமாக விட்டொழிந்து தானே தானாக வதிந்து திடப்பட்டதுவே சீவன் முத்தியாமால்.

இவ்வாறுத் ததுவசித் தாந்த மரியாதை யெல்லாமு மிந்த விந்த விதங்கூடா தென்று, கவ்வலறத் தள்ளுகின்ற சீவன் முத் தியுடைய கருதுமிலக்கண மெல்லாஞ் சாத்திரிக மதனை, யெவ் வமறத் தள்ளுகின்ற வழியென்றே யுணர்வா யிவ்வாறு சாத்திரி காசாத் திரிகமான, வவ்விரண் டையுந் தவிர்ந்து தானேதானாக வலைச்சலற நின்றவிடஞ் சீவன் முத்தியாமால். 15

பிரம வானந்தமதை யறிந்தாலோர் காலும் பிறங்கு மொ ரு நிமித்தமாயும் பயமேயில்லை, வரஞானி தனைக் கருமவக்கி னி கிட்டாது வருபிரம மறிந்தவுடன் பாசமெலா நசிக்குந், தர மில்பர மதையறிந்தா விருதயத்தின் முடிச்சுஞ் சகல சந்தேகங் களுமே வெந்து போஞானிக், கொருபொழுதுஞ் செனன மர ணாதியிலைப் பிரம முறவறிவோன் பிரமமே யாவனென விங்ஙன்.

---

## வைராக்கிய சதகம்.



நவிலி னிம்மனை மக்களுக் கொருதுணை
 நாமல திலையென்றே
கவலை யுற்றரன் றூண்மறந் தனையுனைக்
 காலனுர் கொடுபோயிற்
குவல யத்தடைந் திவரைாநா டொறும்புரந்
 திடுவையோ குறிக்குங்காற்
சவலை நெஞ்சமே சிவனலா துயிர்க்குயிர்
 தானுமோர் துணையாமே.

கெடுவ தாம்பொருள் செல்வமே பல்வகைக்
 கிலேசமற் றதுதன்னை
விடுவ தேசுக மெனவுமோர்ந் திலமுனம்
 விடுத்துளோர்க் குனைப்போலு
நெடிய யூகம தில்லையோ சொல்லுதி
 நெஞ்சமே யினிப்பற்றற்
றடைது மேலர னருளேயே பொருளென
 வருஞ்செல்வ மதுதானே.

தானை சூழமன் னுலகையாண் டழிபவர்
 தங்கள்வாழ் வினிதென்றே
நீ நினைத்தியோ நெஞ்சமே யெஞ்சுறு
 நிமலஞா னமதுற்றால்
வானும் வையமும் வந்துதாள் வணங்குமெய்
 வாழ்வுகாண் டலும்வீண்முற்
போன நாட்கிரங் கவும்வரு மெனநலோர்
 புகன்றதோர்ந் திலைகாணே.

ஆமு னிச்சையே மேலுமே லும்பிறப்
 பளிக்கும்வித் தெனநெஞ்சே
நீம றித்திடா சைக்கடல் சுவறமே
 நினைவெனுந் திரைமாயும்

போமி றந்தெலா நினைவுமெப் பொழுதிலப்
 பொழுது பூரணமாய
சோம சேகரத் தெந்தைபொற் கழலையுந்
 தொழலைய மிலைநாமே.

நீமெஞ் ஞானநன் னிட்டைசா ருதலரி
 தெனவுநெஞ் சகமேசற்
றேய்வி லாதுசெய் தியானமா திகளெளி
 தெனவுமுன் னுநின்றாய்
சேய்க டம்மினத் தாய்கொல்சும் மாவிருக்
 குதல்செயற் கரிதாகிப்
போயு ழைப்புனக் கெளியதா யிருந்தவிப்
 புதுமையென் புகனின்றே.

நின்று ருதலை குதல்விருப் புனக்கதை
 நீத்திருக் குதனெஞ்சே
யென்ற னக்குநல் விருப்புவா ளாவிவ
 ணிருத்தநீ துயர்வீடு
சென்று காண்குவ லெனநினைந் தலைதியோ
 சிவன்றிரி சயமன்று
லொன்று நீயுணு திருப்பதே யதைத்தொட
 ருபாயமென் றறிகண்டாய்.

கண்ட வைம்புலக் காட்சிபோய்க் காட்சியாற்
 கலந்தவா தனையாவும்
விண்டு மூடமற் றலையிலாக் கடலென
 விளங்கினை யெனினெஞ்சே
யுண்டு கொன்னமக் கொருதுய ராங்குவீ
 டுளங்கையிற் கனியேயாம்
பண்டை மேவிய பயமெலா மறுங்குரு
 பதத்திலும் புகலாமே.

புகல ரும்பரப் பிரமமாங் கடறனிற்
 புணர்பரைத் திரையீசன்
சகமொ டாருயி ரெனுநுரை யாதிக
 டந்துமாற் றிடுமென்றே

பகரு நான்மறை யெனினதி லெதையெதைப்
    பற்றுவாம் விடுகிற்பாஞ்
சுகசொ ரூபமே யனைத்துமென் றகற்றுதி
    துவிதபா வனைநெஞ்சே.

நெஞ்சமே யினிப் பாவனு தீதமாய்
    நின்றிடின் றெனினிற்பா
யெஞ்சு றாதகல் புரணபா வனையையோர்ந்
    திலையெனி னுலகெல்லா
மஞ்ச னக்களன் மேனியென் றோர்ந்திலை
    யெனினருள் சுரந்தெம்பால்
வஞ்ச மற்றிடும் படிக்கிவ ணடைந்ததோர்
    வடிவையோர்ந் துய்வாயே.

தேரி னிவ்வுடல் சமாதியி லசைவறச்
    சித்திர தீபம்போற்
சார வைத்திடஃ தில்லையேற் குருபரன்
    றனதரும் பணிமேற்கொண்
ணோரு மூழ்வழி தொழில்பிறி தடையினு
    நெஞ்சமே யுயிர்க்கெல்லாம்
பேரி தஞ்செய்வித் திடுமுடை கெழுமலப்
    பிணக்கிதஞ் செய்யேலே.

தெளிவு யிர்க்கரன் விளக்குதன் மயக்கவன்
    றிரோபவிக் குதறேகம்
விளிவை யுற்றல்சங் காரமிங் கிதாகித
    மேவுத றிதிதோற்ற
முளசி ருட்டியே லம்பைநோ தலினுன்னை
    யும்பிற ரையுநாடித்
தளர்வ தும்மகிழ் வதுமடைந் துள்ளமே
    சம்புவை மறந்தாயே.

மறைத்த னுங்கினைத் தனுஞ்செயு மாணவ
    மாயைநின் றவைதம்மை
துறத்த லேயிராப் பகலகல் வீடெனச்
    சொல்வரத் துறவெய்தக்

குறித்தி டிற்பர பத்திஞா னத்திறற்
கூடுமற் றவைநெஞ்சே
நிறத்த பத்திநஞ் செயலறி ஞமறி
னின்றமற் றென்றுமே.

ஒன்று நஞ்செய லில்லைநெஞ் சேயிவ
ணோர்மய லதனாலே
சென்று சென்றுவெம் பவக்கடன் மூழ்கினஞ்
செறிமய லேதென்ன
நன்று நீவினை வினையிரு வினையையு
நான்செய்தே னெனுமான
மென்ற றிந்திட தொன்றையு மாற்றினை
யெனினுனக் கிணையாரே.

இணையின் ஞானபூ ரணன்முழு துணர்ந்தமைத்
திட்டவா றலதிங்கே
யணைவு ருதொரு தீதெமக் கவன்றரி
னார்தடுப் பவர்நெஞ்சே
பணைகொ டாவர மானமின் மையினுருப்
பற்றிநின் றிலகொல்லோ
வுணைவு ருதுடற் காவல்கை விடுதியூ
ழுள்ளவா விடாதென்றே.

வீடு கூட்டுவான் குறித்ததி னிமித்தமா
விமலனீ தலினம்பாற்
கூடு மாயையை யெனதியா னெனவெணிக்
கொள்வதென் பயமாசை
நாடு போழ்திவை சுழுத்தியிற் புரந்தவ
னெவனவ னனவாதி
யூடு மூழ்வழி புரப்பனென் றுள்ளமே
யுடல்கைவிட் டிருப்பாயே.

ஆமை யாருறுப் பைந்தையு மோர்மெயு
ளடக்கலிற் புலனைந்துந்
தீமைசேர்விட யங்களிற் செலாதமைத்
துள்ளமே சிவைபாக

சோம சேகரன் சரணமே சரணெனத்
தொழுதுநின் றழுதன்றே
ஞம நாவினாற் செபித்திலை யவத்திலே
நாளெலாங் கழித்தாயே.

என்னை கண்டுநீ மாதரார் வடிவமீ
திச்சைவைத் துழல்கின்றாய்
பொன்னை யுந்துகி லையும்பிரித் திடின்வெறும்
புழுமலக் கூடல்லாற்
பின்னை யுண்டுகொல் கண்டுநீ மயங்குதல்
பிராந்திசங் கரன்பாதந்
தன்னை நாடுதி நெஞ்சமே பரசுகோ
ததியுறப் பெறலாமே.

போற்றி நீறணிந் துருத்திர சாதனம்
பூண்டிடைந் தெழுத்துள்ளே
சாற்று நீகுரு வாதிமூ வுருவையுந்
தாழ்ந்திறைஞ் சிவைசெய்தான்
மாற்ற லாம்பிறப் பிறப்பினை நெஞ்சமே
மன்றுளா டியதாளுந்
தோற்று முள்ளொளிக் குள்ளொளி யாயதைத்
தொழுதுவாழ் தனுமாமே.

---

## வைராக்கிய தீபம்.

அரிதுபெற் றிடினும் பெற்றதின் விருப்ப
மறப்பெறு தனவிரும் புயிர்க
டெரியகிற் கிலைநீ தெனைமுனை மடையாச்
செல்வமாய்ச் சொல்பவித் திரமா
யுரியசிற் சுகமாய் நித்தமா யொருவி
னதெனக் கேட்டுமற் றதனிற்
பிரியமற் றினமு முனமுறும் பொல்லாப்
பிறவியே பெறவிரும் புதலே.

துன்பவெம் பிறப்பி னிழிவையு மழியாச்
சுகபர வீட்டுயர் வினையும்
பின்பவை தொலைத்தெய் தருங்கரு வியதாப்
பெற்றவிப் பிறப்பையு மிதனின்
மின்புரை நிலையா மையையுமோர்ந் தனனோர்
விவேகியு மெனிற்பினும் விடயத்
தன்புறு வீடு புகமிக விரையா
தரைக்கணந் தரைக்கணுற் றிடுமே.

வினைப்பிறப் பொருவன் றுயரமென் றுணரின்
விடயபோ கங்கணச் சுதனுந்
தனக்குட லனிய முணர்தரின் மரணஞ்
சார்குறிக் குளநடுங் குதனு
நினைத்திடி னிதன்பேற் றருமைமா தவங்க
ணீங்கிநாள் கழித்தனுந் துணிவி
லனித்தமோர்ந் திடினோர் கணமெதிர் காலத்
தவதிகூறிடுதனு மிலையே.

கருமமொன் றியற்றப் பிறர்கையிற் கருவி
கவர்ந்துளோன் பினுமவர் கொளுமுன்
விரைவினெண் ணியசெய் யாதுமற் றதையே
மிகச்சிறப் பித்துநோக் குதல்போற்
புரையில்வீட் டின்ப மடைகுவா னதற்குப்
பொருந்திய வருந்தவம் புரியா
தொருகண மேனு நிலையிலிவ் வுடல்வைத்
தொப்பனை செய்துநோக் குதலே.

பிறப்பெனு*மூவரிச் சுழியதா மெழிலார்
பெண்டிரா தியவுயிர்ச் சார்வுஞ்
சிறப்புறு புவியா தியபொருட் சார்வுந்
தீரநீக் குதறுற வவற்றா
டுறப்படு மெவைநீப் பினுமறி வுடையோ
ரொருதம தனைபிதா வினையுந்
துறப்பரேற் றுறப்போர்க் கருநா தெனநீ
சொற்றசொற் சத்திய மாமால்.

விடையதா ரிறையே தாதைமற் றவன்பான்
மின்னெம தன்னையன் னவரைக்
கடையரே மறந்து துறந்துதா னன்றோ
கடும்பவ விடும்பையுற் றனமிவ்
வடைவுணர்ந் திலைபோன் றடலிதற் கேது
வாய்வரத் தாய்பிதா வெனநெஞ்
சுடைவுறு நின்றாய் பவந்தொறிவ் வணமுற்
றுளவுயிர்க் களவியா துரையே.

தனதகத் தகலா திருந்தபே ரின்பந்
தருதலான் மனைவியுந் தன்பா
லினிதுதித் தொருதன் வினையொழித் தசையா
திருத்திவீட் டமுதருத் துதலா
லனலருஞ் சுதனு மொருவனுக் கவனு
டுதயமா யெழுந்தமெய் யுணர்வே
பிணையிஃ தன்றி மனைசுத னெனயாம்
பேணிநாட் கழிப்பதும் பிழையே.

ஞானியஞ் ஞானங் கெடுத்தலாற் றுறவோ
னெனப்படு நவிற்றினஞ் ஞானந்
தானுட லினைநா னெனுமக விருளென்
றனையிஃ தெமக்குமொத் ததுவா
லூனமின் மறைதேர்ந் தொருசி வநானென்
றுளத்துணிச் சயித்தவக் கணமே
யானென றவிர்ந்தவ் விருளுமாய்ந் திடுமென்
றிசைத்தனை யிதுபழு தன்றே.

திரிவித வுலகத் தரிதொரு ஞானி
தேர்விடத் தென்றமோ ரொன்றை
யுரைசெயிற் பிரம வித்தையொத் தரிதோ
வென்றுமிவ் வுலகுளைப் பதனா
லரிசொல்கீ தையிலும் பிரம சாதகரி
ஞர்க்குள வருத்தமென் பதனாற்
பெரியதோர் வருத்த மெனமறை துணிந்தப்
பிரமநா னெனவிருத் தலினே.

யோகசா தனையால் வாதனை கரணக்
கொழியுமவ் வியோகமு மிருமைத்
தாகுமே கிரியை ஞானமென் பேதத்
தாதனு தியதொழில் யோக
மேகமாம் பொருடேர்ந் ததுவிது வெனுஞ்சுட்
டிறத்தன்மற் றையதிரு வகைக்கும்
போகவேண் டிடுமைம் புலன்களு மிறந்தப்
புலனவா வொழித்தலாற் போமே.

ஐம்புல னடல்வேண் டும்விடல் வேண்டு
மொருங்குவேண் டியவனைத் தையுமென்
றும்பரும் பரவு மொருதமிழ் வேத
முரைத்தலா னோரிரு வகையா
நம்புறச் சார்பை வெறுத்தவா வறுத்தைம்
புலனெழித் தொழுங்கினு டருமச்
செம்பொருள் காண்ப தறிவறி யர்மை
சிதைத்தல்வீ டெனத்திகழ் தருமால்.

படையெடுத் தமர்க்கட் சாருமோர் வீரன்
பகைஞரைச் சயங்கொளா விடினும்
விடையெனப் பொருதாங் கிறத்தலே யன்றி
வெந்நிட வுன்னிடா னதுபோற்
கடையென விடய மிகழ்ந்துபே ரின்பங்
கருதினோன் பெறுகலா விடினு
மிடையறு ததைநா டுவதலான் மறந்து
மெண்ணுமோ மண்ணின்வாழ்க் கையையே.

இந்திர சாலத் தொருநகர் காண்போ
ரெனத்தனு முதற்பிர பஞ்ச
நந்தினுங் கெடினும் பூரியா வாடா
நன்மனச் சனக ளுதியரு
மந்திரி முதலோர் மீதுபூ பாரம்
வைத்தொரே காந்தத்துள் வதியாத்
தந்தொழி லொருக்கிச் சமாதியுற் றன்றே
தவிர்ந்தனர் கரணவா தனையே.

தத்துவ முணர வேண்டினேன் மனைமுதற்
சகலமும் விடுத்து மெய்ஞ்ஞான
முத்திரை திகழச் சமாதியுற் றல்லான்
முடியுமோ வெனவுமை முதலா
வைத்ததற் குழாத்தை யொருவினீள் கல்லான்
மரத்தினீ ழலிற்சமா தியையுற்
றத்தனே யுணர்த்தி னனெனிற் பினும்வே
றறைதனம் மிகுமட மன்றே.

தனித்திருந் தொருதம் மனத்தையைம் பொறிவாய்த்
தடுத்தகப் படுத்தியிஃ தெத்தை
நினைத்தெழா நின்ற தென்றுநோக் குநரே
நீக்குவர் வாக்கொடு தொழிலைப்
பிணைத்தடை யாம்போக் குவரில்வாழ்க் கையையும்
பேச்சைநா டொறும்பழ குநரீ
தனைத்தினென் றேனும் விடார்பிறர் காண்ப
தன்மையா னகப்பற்றே விடுப்பார்.

பிறிதுநோய் தன்னைப் போன்றுபோற் றுனேற்
பெரிதுநா லறிஞோர்ந் துணர்ந்த
வறிவினு ளுண்டோ வாவதென் றமையா
னறைதரு சராசர மெவைக்குஞ்
சிறிதுமோர் துயர மறவியுற் றேனுஞ்
செய்யுமே மெய்யுணர் வுடையான்
மறுவறு துறவைப் பொன்செய்வா ணிகர்போல்
வருந்திநா டொறும்வளர்ப் பவனே.

சற்குரு வருளா லையமுந் திரிவுந்
தானற மறைமுடி வுணர்ந்த
பிற்குரு பான்முன் முற்சரண் புகுந்த
பெரியவ ரினமரீஇ யிருந்தொண்
சொற்களி னரிய பொருள்கேட்டோர்க் தவனாத்
தொலைத்தொரு சிறிதுநாட் பின்னர்க்
கற்குத லாதி யனைத்துநீத் தென்று
ஞானசா தகத்தினுள் கழிப்பான்.

பகர்தரு தொழில்க ளனைத்துமோர் சிறிது
　பண்ணவேண் டுவபணி விடுத்துப்
புகலுரை யடக்கித் தனியிடத் திருந்து
　போற்றிசெய் தருட்குரு பதம்பின்
மிகமுயன் றிதய வருத்தமெய் தாமன்
　மெலிந்து கைவிடுதல் செய்யாம
லகமுக மாக்கி மனத்தைநா டொறுமோ
　ரைம்புல னெழித்தசை வறுப்பான்.

உச்சியம் போதின் மீதரும் பசிக்கவ்
　வூர்வல மாயிலந் தோறும்
பிச்சைகை யிடையிற் காடிகூ ழேனும்
　பெற்றது பற்றியுள் வெறுப்போ
டிச்சையற் றருந்திப் பொருந்தவே காந்தத்
　திடையினுந் தாகம்வந் தடையி
னச்சிநீ ரூரிற் புகுந்துறு தேரி
　யாதியி னருந்துத லன்றே.

பெண்ணைவிட் டகலா வொருவிடன் றன்னைப்
　பிறர்வழக் கினிற்கொடு போகக்
கண்ணைவிட் டகலா தவள்வரல் போலுங்
　கண்டுகொண் டேகியாங் கஃதெவ்
வண்ணமா யினுஞ்சீக் கிரத்தினின் முடித்தவ்
　வனிதைபான் மறிதரன் மானப்
பண்ணிய சமாதி விடுத்தறி ஞருந்தம்
　பசிதணித் ததையுறும் பரிசே.

அறவுநித் திரையைத் துறந்திடி னுடற்க
　ணடைதரும் பிணிகண்மற் றதனுற்
குறைதலு மிகலு மின்றியோர் சமமாக்
　கொண்டுகண் டுயின்றுபின் விழிக்கி
லுறுசுகா தனத்தி லெழுதுசித் திரமொத்
　துறைகுவ ரிறைதலை கழுத்தான்
செறியுடல் வாங்கா தோங்கநே ரவர்பாற்
　சேருமோ காமநோய் சிறிதும்.

இத்தரை யிடைப்பா ழாயவா லயமற்
றிருண்மிகு முடுக்கரா திகளிற்
சுத்தமெய்த் தவரெப் பொழுதடைந் துறினுந்
தோற்றுறு தச்சமங் கவர்பா
லத்தனிவ் வுடலைப் புரக்குஞான் றழிப்பா
ரிலையவு னேபினு மழிக்கின்
வைத்திவண் புரப்பா ரிலையெனுந் துணிவு
மனத்தினு ளிருத்தலி னன்றே.

அருந்தவ விலக்கிவ் வுடற்பரிப் பதுதா
னச்சமா திகடரு மூலர்
திருந்துநஞ் சிந்தை சிவன்கணே யாவர்
வரினுமென் றமையிற் பேதிப்பான்
பொருந்தினும் வாளே றெதிர்முதிர் கொலைவெம்
பூதமாந் தியவளைந் திடினு
மிருந்ததஞ் சமாதி நிலைகுலை யாதோ
ரெண்ணிய வெண்ணியாங் கடைவர்.

ஒருவனுக் கிருளற் றுரியசிற் சொரூப
முள்ளவா விளங்கினன் றறுமிப்
பருவர லுருவப் பற்றுமற் றதுநேர்
படுமள விறைபிரி தருமைங்
கருமமெவ் விடத்துங் கண்டுதற் செயலைக்
கைவிடுத் தச்சமா தியவுண்
மருவுறு தகற்றித் தவஞ்செயல் வழுக்கால்
வாழியெங் குரவ னீடூழி.

---

## வுந்தியார்.

அறம்பொரு ளின்பம்வீ டாயவோர் நான்கிற்
சிறந்த பயன்வீடென் றுந்தீ பற
தேரின்வீ டேயெலா முந்தீ பற. 1

தாங்குபற் றற்று சகலத் தியாகத்தி
னோங்கு தருமமே துந்தீ பற
உள்ளது வீட்டிற்கஃ துந்தீ பற. 2

வீடுனா னத்தன்றி மேவொணு தாகையாற்
கூடுவோ னந்தவாழ் வுந்தீ பற
கோதின்மெய்ஞ் ஞானியென் றுந்தீ பற. 3

புறப்பற் றெலாந்தூரப் போக்கி மீட்டெண்ணு
துறப்பற்றின் மெய்யுணர் வுந்தீ பற
ஓடு மகப்பற்றென் றுந்தீ பற. 4

குடும்பபா ரந்தலைக் கொண்டவர்க் கல்லல்
விடும்பரி சின்மையா லுந்தீ பற
மெய்யுணர் வெங்ஙனு முந்தீ பற. 5

எல்லோர்க்குங் காலன் றுறவீவ னீயாமு
னல்லோர்க டுறப்பர்தா முந்தீ பற
நன்றறி வார்களென் றுந்தீ பற. 6

ஆதலான் மேலா நெறியடைந் தோர்க்கொரு
சாதி சமயமே துந்தீ பற
சங்கற்ப நாசரென் றுந்தீ பற. 7

நீங்கா தெவற்றொடு நின்றுனு நெஞ்சிடைத்
தாங்கான்மெஞ் ஞானியென் றுந்தீ பற
சலமரை யாதியொத் துந்தீ பற. 8

ஆறு நெறிக்கு மவிரோத போதமே
தேறுமெய்ஞ் ஞானியென் றுந்தீ பற
சித்தாந்த மாகும துந்தீ பற. 9

ஆதலாற் பந்த மறுப்பான் மனோலய
சாதகஞ் செய்வனு லுந்தீ பற
தற்பரந் தோன்றுமா றுந்தீ பற. 10

ஒட்டற முத்தித் தடையா யுளவெலாம்
விட்டனை யேலினி யுந்தீ பற
மேவொண் சுகாதனத் துந்தீ பற. 11

வாங்கிப் பொறியைந்து ணின்ற மனந்தனை
நீங்காத கத்திருத் துந்தீ பற
நினைவு மெழாமலென் றுந்தீ பற. 12

பதைத்தெழா துள்ளம் பதைப்பாய் பதைக்கில்
வதைப்பாயங் கங்கேயென் றுந்தீ பற
மாயுமனப் பேயென் றுந்தீ பற. 13

அசைவறச் சித்த மடங்குமேற் பின்ன
ரசையாமற் காத்திடென் றுந்தீ பற
அறிவால் வருந்தியு முந்தீ பற. 14

ஆங்கறி யாமையுஞ் சாரா தறிவொடுந்
தூங்குவாய் நாளுமென் றுந்தீ பற
தோன்றும் பரம்பொரு ளுந்தீ பற. 15

அந்தப் பரத்தோ டாண்டற் றயிக்கமா
மந்தநன் னிட்டையே யுந்தீ பற
அத்துவித வீடென் றுந்தீ பற. 16

எம்மதத் தோரெவ் வகைநிட்டை சொல்லினுஞ்
சம்மத மேயெமக் குந்தீ பற
தற்போத மாய்க்குமே லுந்தீ பற. 17

நானற்ற போதத்தே நானென முத்தியை
நானெங்ங னஞ்சொல்வ துந்தீ பற
நான்மறைக் கெட்டாதென் றுந்தீ பற. 18

பெத்தர்க் கொருசிவ மின்மையிற் பேருண்
முத்தர்க் குலகுமின் றுந்தீ பற
முழுதுஞ் சிவமாத லுந்தீ பற. 19

எல்லாஞ் சிவமேயென் றெண்ணினு நின்போத
மல்லாலஃ துண்மையன் றுந்தீ பற
ஆங்கது நீங்கிடென் றுந்தீ பற. 20

பாவனா தீதம் பதியா விடத்தேக
பாவனை பற்றினின் றுந்தீ பற
பழுத்தா லொழித்திடென் றுந்தீ பற. 21

பாராதி யெட்டு மப்பாலு மெப்பாலுமா
யோர்சோதி யேநின்ற துந்தீ பற
உன்னுவே றில்லையென் றுந்தீ பற. 22

உதித்தச் சிவத்தோ டேய்ந்துள்ள தேன்மாயை
யதற்கன்னிய மென்னு ருந்தீ பற
அதினன்கு தீதியா துந்தீ பற. 23

படைப்பாதிக் கீச னதிகாரி பற்று
துடற்காவ னீவிடுத் துந்தீ பற
ஓவாத வனைநோக் குந்தீ பற. 24

ஏகாந்த மானதல மிலம் பூவணை
யாகுந் தரையவர்க் குந்தீ பற
ஆனந்த நித்திரைக் குந்தீ பற. 25

---

## சிவதருமோத்தரம்.

ஆதரவே பரமான வறமதாகு
மாதிநடு வந்தமிவற் றனைத்து மாகு
மாதரவற் றவரீகை யறமேயாகா
தாதலினு லாதரவே மூல மாகு
மாதரவே பிரகிருதி யான்மாவீச
னெனும் பொருளு மறிவிக்கு மமலன்றுளு
மாதரவே யடைவிக்கு மாதலாலே
யனைத்தினுக்கு மாதரவே மூல மாமே. 1

ஆதிதனி லோமென்னும் பதமதாக
வந்தமதிற் சிவாயவொலி யணைந்து நிற்க
வோதியவா றெழுத்தினையு முடைத்தேயிந்த
வோமென்னும் பதப்பொருடா னுயிர்கட் கெல்லாம்
போதகனுய்ப் பொருவிலியாய் நிற்குமீசன்
புனிதனவன் சத்திவித மைந்து மற்றை
யேதமிலா வஞ்செழுத்தின் பொருளோ யெண்ணி
யிருபயனு முயிரடையு மியற்று மென்றும். 2

இருளுலகி லறவுலவு மிரவியின்றே
விசையாது பொருளொடுகண் ணொளியுண் டேனும்
பொருவரிய வோங்காரப் பொருளொன் றின்றேற்
பொறியிலங்கா தனைத்துயிர்க்கும் பொறியுண் டேனு
மருளதனை யனுக்களுக்கு மாற்றியென்று
மதியருளும் பரமசிவன் வாக்கைக் கூறுங்
குருபரனு மோங்காரப் பொருளே யென்று
கொண்டாரே மும்மலமும் விண்டார் தாமே. 3

வேறு.

எய்தற் கரிய பரம்பரனை யிசைந்தார் கருமத் திசையார்கள், செய்யிற்கருமஞ் சிறந்தபொருள் செறிந்தாரல்லர் செழுங் கனிதய், கையிற் புகலுங் களைந்தவலக் காயைக் கவரக் கருதினரார், வையத் தொளிகொண் மணியகற்றி வழுவாரு சிலையார் மகிழ்வாரே. 4

ஆசை முதலா மாசனைத்து மறுத்தே யுடலும் வெறுத்தரிய
தேசன் சிவன்பொற் பாதமலர் செறிந்தார் பிறப்பை மறந்தார்
பேசற் கரிய பெருமையினைப் பெற்று ரல்லர் கற்றுனு [கள்
மாசு மலிந்த வாசையினன் மயங்கித் தியங்கு மாணிடரே. 5

அருவருப்பை யாகத்தைச் சுத்திபண வார்வல்லார்
கரிசறுத்து மனமதனிற் கருதரியன் கழலடியி
லொருமையுற னுயிர்ச்சுத்தி யுமைமனிலாப் பதமுதவுங்
குரவனரு ளியபாம வாக்கியத்தைக் குறிக்கொண்டே. 6

வேறு.

மண்ணினுந் தனத்தினு மணைக்கு வாய்த்தநற்
பெண்ணினு மகவினும் பெரிய பேரினுந்
துண்ணென விழைவினைத் துறந்த தூயவே
விண்ணினு மின்புடன் விளங்கி மேவுவார். 7

ஆக்கையிற் றுயர்பெரி தற்ப மின்பமென்
றாக்கையை யறவெறுத் தார்வங் கூர்வரே
வாக்கையி னாதியே மூத்த னுக்கவ
னாக்கையுந் துயரமு மறுப்ப னணையால். 8

வே று.

ஆசைதானிரு பேதமேயவை யேயநாதியி லாதவன்
பேசுநூல்விதி பேணியேசெயும் பெற்றிதான்முதன் மற்றதுந்
தேசுசேர்வினை தீரவேவரு சேதனுவிப ரீதமே
பாசிலாவர ணையாலவை யாள்வரேயுட லாளரே. 9

ஆசைமாசற வாகவேரற வாணவாதியு மாயவே
பாசநாசக வீசனுசிலி பாததாமரை நாண்மலர்
வாசநேசனு பூதியாவது வாதையேதுமி லாததே
தேசுதேசமொ ரேகமோசிவ னேசர்பூரண தேசரே. 10

ஏகதேசவுட லுற்றவர்க்கறிவு மேகதேசமல தில்லையே
யேகதேசவுட லற்றபோதுமறி வேகதேசமென யென்சிவ
னேகதேசவுட லற்றவன்னறிவு மேகதேசமல வாதலா
லேகதேசவுட லற்றமுத்தனறி வேகதேசமல வென்பரே. 11

வேரறப்பணையு மற்றுமற்றொழியும் வேறவற்றுமுதன் மேவுமே
யாரணத்தினையு மாகமத்தினையு மாயுமற்புத னலாரியன்
பேரருட்பெற வநாதிமுத்தனொடு பேதமற்றநிலை பேறுதான்
கூரிருட்குழுவ றுத்தறுக்குமுடல் கூடமுத்தனனு கூலமே. 12

முத்திபெற்றவ னழுக்கனைத்தினையு முற்றவிட்டுமுளை யற்றவ
னித்தனுத்தம னிருத்தசுத்தசுக சிற்கனத்துநிலை யுற்றவன்
புத்தனத்துவித முற்றுமிக்கபிர புத்தனைக்கெழுவு பூரணன்
றத்துவத்தொகைம லத்தொடற்றுமுட லைப்பெறப்பிறர்ச மைப்
பனே. 13

வே று.

வேதநிந் தகனே புன்மை விடக்குணும் புலைய னுவான்
வேதநல் லந்த நிந்தன் வெவ்வினை வேட னுவான்
வேதக ஞானி நிந்தை விளம்பினன் பித்த னுவான்
வேதியர் பொருளைக் கொண்டான் விளக்குறு விட்டி லாமே. 14

அலர்பிறப் பவல மாவிக் கறவுற வறிவா னந்தஞ்
சொலத் தொடங் குவங்கேண் ஞான யோகமுந் துகடீர்சத்தி
[illegible]வு மநாதி முத்தன் மயமுணர்ந் துணர்த்தல் ஞான
[illegible]ர வவனுள் வேறற் றுறைதலை யுணர்தல் யோகம். 15

தன்னது சத்தி காட்டுந் தத்துவத் தொடர்ச்சி நீங்க
வன்னிய னலனைத் தன்னோ டநாதிய வமலன் றன்னைக்
கன்மமு மலனைத் தாமுன் கண்டுகண் டிடாது காட்டப்
பின்னத னுலவ் வுண்மை பெற்றவன் ஞான யோகி. 16

உலகுளார் பெருதுஞ்சு மொரு பொருள் விழித்தயோகி
யுலகுளார் விழித்த பண்டத் துறங்குவ னுருவ மாக
உலகெலா மொன்றி வேறற் றொளிரு மொப் பிலிதனெண்டா
ளலர்தலைக் கணிந்த யோகிக் கவனலான் ஞேயம் யாதே. 17

காட்சியிற் பொருளு மந்தக் காட்சியான் முன்னங் கண்டே
யாட்சியா மதுமா னத்தி னருத்தமு மனுகொ ளாத
சேட்சியிற் பொருளு மையந் திரிவறச் செப்பிச் சீவ
னாட்சிய வறிவு மாக்கு மவன்மலைத் தநாதி முத்தன். 18

ஒப்பிலி யநாதி முத்த னுரைக்கய னாலொவ் வொன்று
தப்பறுஞ் சிருட்டி யாதித் தலைமை யொவ் வொருவர் தம்மை
யப்பர மென்னு மற்றை யனைவரும் பரமே யென்னுந்
தப்பறத் துணியும் புத்தி தன்னையும் பரமே யென்னும். 19

மனநிலை யொடுங்க வீசன் வடிவினை யகத்துள் வைத்துப்
பினைவடி வறுதி பேசுந் தேசிக னருளாற் பெற்று
மனநிலை யொடுங்க வாய்த்த வாய்மையி னறிவை வைக்கக்
கனிவொடு காண்பான் காட்சி காட்சியிற் படனுங் கைத்தே. 20

நீங்கின ரிந்த வுண்மை நிலையினை நெஞ்சந் தன்னில்
தாங்குக சகளந் தன்னைச் சங்கரன் றன்னை யுன்னி
நீங்குக சகளந் தன்னை முன்னையி னிலையி னீடித்
தாங்குக திரியிற் பின்னுஞ் சகளமா கரிக்கச் சூழ்ந்தே. 21

இந்திய விருத்தி யெல்லாம் பிராணனே யியக்க வேயு
மிந்தியஞ் செயிக்க வெண்ணிற் பிராணனைச் செயிக்கப் பஞ்ச
விந்தியஞ் செயித்தார் தாமே யெய்துவர் சமாதி தன்னை
யிந்தியஞ் செயிக்க மாட்டா ரெய்துவ தேது மின்றே. 22

மனத்தையும் விடயந் தன்னின் மறித்துளே யடக்கி வைத்துப்
பினைச்சலி யாமை செய்கை பிரத்தியா காரம் வேதத்
தெனைத்துள யாக பேத மனைத்தையு மியற்றி னோர்கள்
மனத்தையு மறித்த மைந்த ரவர்சிவ புரத்துள் வாழ்வார்.

நசையுட னிதயப் போதி னுட்டிய பொருளிற் சித்த
மசைவற நிறுத்தரானே தாரண மதனைச் செய்தார்
கசிவுறு மூவேழ் சுற்றங் கடுநர கதனின் மட்டு
மிசையுறு சிவலோ கத்து ளிருப்பரே விருப்ப மிக்க. 24

ஆற்றிடைப் புனரு னெற்றே யவிச்சின மாக வோடன்
மாற்றற வற்றே யீசன் மலர்ப்பதத் தறிவை வைத்துத்
தேற்றுற நிற்கை தானே தியானமித் தியானஞ் செய்தார்
மாற்றியே நரகிற் சுற்ற மவர்களைப் போல வாழ்வார். 25

பரமனை யொருமை கூரப் பாவனை பண்ணி யுள்ளே
யுரைதனி லதிக ஞான மொழியவே விதியி னேக்கிப்
பரவிடும் பத்தர் முன்னைப் பாவமும் பறிப்பன் வேண்டும்
வரமெலாங் கொடுப்பன் வள்ளன் முத்தியு மவர்க்கே வாய்க்கும்.

அதிகமா யாமந் தன்னி லறுவரை யடக்கு மாற்றால்
அதிகமே யதனி னுக்கை மனத்தினை யனகன் பாதத்
ததிகமே யதனிற் சித்தத் தவிச்சினத் தியான மம்ம
வதிகமே யதனி னுள்ளத் தரனை வைத் தறையும் வாக்கே. 27

வாக்கினு மதிக மூல வாக்கினு மனத்தி னுனு
நோக்கரும் பொருளைத் தன்னு னோக்கற நோக்கு நிட்டை
நோக்கிடிற் பலங்க டாமு நுவன்றவிம் முறையா னேன்மை
யாக்குவ னவற்றை யெல்லா மன்பருக் கநாதி முத்தன். 28

---

## மாயாப் பிரலாபம்.

சாராத சிற்பாவை தன்வாழ்வே மெய்யென்று
வாராது வந்தவனோர் வார்த்தைசொலப்—பாராது
போவதே யென்வாழ்வு தானடங்கப் பொய்வாழ்வே
யாவதே சாந்தம் பரம். 1

எட்டனையுந் தன்னெதிர்நா னில்லாவென் கற்பொழித்து
வெட்டவெளிக் கேதள்ளி விட்டானே—கெட்டே
னிறவாவென் கற்பை யிழித்தொருவன் வாக்காற்
பிறவாத சொற்பிறந்த பின். 2

சொல்லாத சொல்லொருவன் சொல்லுதலு மக்கணமே
செல்லா விடத்திலிவன் சென்றானே—யெல்லாமு
நானென்று னப்பொழுதே நான்கெட்டே னன்கெட்ட
னானென்றான் கெட்டான் றனே. 3

இன்பமே யாமவள்பா லெய்திலெமை யெய்துங்காற்
றுன்பமே யாமென்னத் தான்சொல்லி—யன்பாள
னுண்ணெகிழ்ந்து போதையுட னொத்திரண்டுங் கெட்டவனே
யெண்ணநமக் கென்காரி யம். 4

போனான் பரதேசம் போதையுட னென்போத
னானத வின்பவுரு வாகித்தான்—றான
யொழிந்தோ யொழிவறநின் றொன்றாகி யுற்றாற்
றழிந்தோ வுறாப்பறையா னான். 5

ஆணுமலை பெண்ணுமலை யென்றிவனை யன்றொருவன்
காணவெளி யேவந்து கட்டுரைத்தான்—வாணுதல்கே
ளப்பொழுதே யென்னோடு வாழ்வொழிந்தா னந்தவுரை
தப்பா திருப்பதே தான். 6

நானெங்கே நீயெங்கே ஞானமே நம்போதன்
றானென்கே மேல்கீ ழறத்ததும்பி—யானந்தம்
போராதே பேதமாம் பெத்தக்கரை யிடித்திட்
டோராறே யொத்தா னுரை. 7

மெய்யே மனிதரைப்போன் மேதினியில் வந்தொருவன்
செய்யாது செய்தானென் செப்புகேன்—வையக்
கருவழிய நானழியக் கற்பழியப் போத
னுருவழியப் பார்த்தானே யுற்று. 8

---

## சிவானந்தபோதம்.

ஆன நெஞ்சமே யிமைப்பொழு தாகினு மலைவறுத் திருந்தாயோ
போன நாளிலே நடந்தது மிருந்ததும் புதுமைக ளறியாயோ
ஈன மாகிய கவலையை நீக்கியைம் பொறியினி லணங்காமல்
தான மொத்துநான் சொன்மொழி கேட்டுநீ சரியென்று மகிழ்
[வாயே.

வே று.

நாலுவகை யோனியிலு மெழுவகையின் றோற்றத்து ஙளின
மாக, மேலுகந்த மானிடந்தா னெடுப்பதுவே யருமையாய்
மெய்யதாகி, பாலுபோன் மனமுடைத்தாய் புண்ணியமே மிகுந்
துபவங் கீழாய்த்தள்ளி, நூலுணர்வ தருமை நெஞ்சே யிருவி
னையிலொருவினையை நொறுக்கித்தானே. 2

மனிதரிலும் பறவையுண்டு விலங்குண்டு கல்லுண்டு மரமுமுண்டு
மனிதரிலு நீர்வாழுஞ் சாதியுண்டு அநேககுல மனிதருண்டு
மனிதரிலு மனிதருண்டு வானவரு மனிதராய் வருவதுண்டு
மனிதரிலே பிறப்பறுக்க வந்ததே யருமையென வகுத்தார்முன்
[னோர். 3

விருத்தம்.

அறிவுக்கே சாட்சி கொண்டு நூலைப்பேசி
அங்கத்தைத் தானழித்து அகத்தை நோக்கு
குறிவைத் தபடியிருந்து மெய்யைப் பொய்யாய்க்
குற்றமென்றே பொய்யைத்தான் பொய்யாய்க்கண்டு
நெறியுற்றே யிருவினையும் நீக்கிப் போட்டு
நேசமுட னீசனுடன் பாசம் வைத்து
பிறிவற்று வொன்றாகி வாழலாகும்
பேதித்துப் போகாதே பேணிக்கூடே. 4

வே று.

தெளிந்த துறவி யிகந்தனிலே தேகப் பிராரத் துவப்படிக்கு
பொழிந்தேகரணத் தனுபோகப் புவனத்திருந்து மெச்செயலும்
ஒழிந்து சிந்தை தெளிவுற்றே ஒன்றே சிவமென் றிருப்பார்க
ளிழிந்த பேரும வரைக் கொண் டேறுவார்க ளிகத்தோரே. 5

கருவி யகன்றிவ் வுலகத்தைக் கனவென் றிருக்கக் கருத்ததனுள்
ளுருவைக் கண்டொப் புவமையற் றுள்ளும் புறம்புமொன்றாகிக்
குருவைப் பணிந்து பூரணத்தில் குலாவு மடியார் சகந்தனிலே
மருவப் பொருந்தி வாழ்ந்தாலும் மாசற் றிருப்பார் வல்லவரே.

பறந்த விருந்த வஞ்ஞான மூட மான சத்தியையும், பந்த
துணிந்து பராபரனைத் தினமுங் கைக்கொண்டு, சிந்தை

தெளிந்தே குருபரனைச் சிவமென் றெண்ணுந் துணிவதனால்,
தொந்த மறுத்துச் சிவானந்தச் சோதி யதுவாய்ச் சுகிப்பாரே.

சாதி பேதந் தனைக்குறித்துத் தயங்கி மயங்கித் தளராதே
சாதி யாவ தெவரறிவர் சருவ வுடலு மொன்றுச்சே
சாதி யாவ ரெவரென்னில் தன்னை யறிந்து சிவமான
சாதி பெரிய சாதியென்று சாற்று மறைகள் சத்தியமே. 8

வேறு.

பெரியோரைப் பித்தரென வுலகத் தோர்கள்
பேயரென்ன விகழ்வதென்ன பிரித்துக்கேளு
திரிவார்க ளிச்சை படிசகத்தோர் பார்த்து
தீவினையும் நல்வினையும் திரட்டிக்கொள்வார்
சரியாச்சென் றிருவினையு மொழித்துப் போட்டு
சச்சிதா னந்தமென்ற பதத்திற்சார்ந்து
துரியாதீ தப்பொருளைப் பெற்று மந்தச்
சுயஞ்சோதி யாகியே சுகமுற்றாரே. 9

வேறு.

குற்ற மேதுங் குறியாமல் குணமும் பலவாய் விரியாமல்
ஒத்து பொறிகள் புலனைந்து முறவாய் நீயுமு கந்திதனை
பத்தும் பதன மாகத்தான் பட்சமிகவும் வைத்து ரத்தாற்
சித்த மதனைச் சிவமாக்குஞ் சிவானந்த போத மிதே. 10

வேறு.

மறப்பான மூன்றுடலு மிழந்த முத்தர்
மனவெளியாம் பெருவெளியில் மருவலாலே
துறப்பான வாகாச மொன்றாந் தன்னிற்
சூரியன்றன் பிரகாசத் தோற்றம்போல
சிறப்பாகத் தேகத்தி லிருந்த முத்தர்
திருஷ்டியினாற் கலக்தொன்றாய்த் தியானிப்பார்கள்
மறைப்பான தில்லையெஞ்சே கண்மணிக்குள்
வன்னியொளி மருவுமந்த வண்மைபாரே. 11

வேறு.

பொன்னி னெஞ்சமே சொற்படி கேட்கவும் பொருந்தியே
யென்றாக, இன்ன மின்னமும் பேதமை கொள்ளவேயோ வில்லை

தனைவிட்டு, தன்னைத் தானறி யாமலுஞ் சிவனடிசார்வது மிழந் தாக்கால், பின்னம பின்னமா யிரண்டுங் கெட்டா னென்றேபே தைமை கொள்வாயோ. 12

சுத்த நெஞ்சமே சற்குரு மலரடி தொழுவகை கேட்பாயேல்
பத்த னாகியே மானபி மானமும் பற்றற விட்டேநீ
குற்ற மேதுமற் றெவ்விடங் காண்கினுங் கூறுடற் களிப்புற்று
பற்று மாகியே திருவடி கெதியெனப் பண்புடன் பணிவாயே.

வே று.

இச்சையுட னெத்தனைநா ளிவ்வுலகில் வாழ்ந்தாலு மிடரே சொல்வார், நச்சைவரு மிதனாலே தெளிவுற்ற மனதென்று நல் லோர் சொல்லார், சச்சடியை விட்டுவிடு முப்பொருளை யோர் பொருளாய்த் தனித்துப்பாரு, பிச்சையென்ன விசாரமென்ன தலைமேலே சுமந்துவரப் பெருமா னுண்டே. 14

வே று.

சீவனே நீயாகு மறிவு நீயாஞ்
சிவன்றானே நீயாகும் பரமுநீயாம்
தாவுகின்ற செயலுடனே மனதென் றுன்னை
சாற்றியதோர் நாமமாஞ் சர்வசங்கை
மேவவே மொழிகிறது முனதால் நெஞ்சே
மெல்லமெல்லச் சொற்படியே மேவினக்கால்
நாவுதனிற் பிரிக்கின்ற பேத மற்று
நாம்சிவமாய் வாழலாம் நாடிப்பாரே. 15

வே று.

ஞான மேதெனக் கேட்டிடின் தத்துவ நானென வுணர்ந்திந்த ஊனைநானெனவுரைத்ததையகன்றுபின்னெறிவுறத்தனைக்கண்டு மானம் வெட்கமுந் துக்கமுங் கவலையும் வஞ்சனை தான் போக்கி யீன மற்று நான்சிவமெனத் துணிந்தது மிழந்தது முடிவாமே.

ஞான மேபெற வெடுத்திடு மவ்வுடல் நழுகிடா துரைத்திட்டா லீன மாகிய செனனமும் போக்கிடு மீசனே தானாகி
வான முற்றதோர் சச்சிதா னந்தமாய் வாக்குரைக் கெட்டாத
?ான முற்றுதா னெங்குமாய் நிறைந்தது முத்தியென் றுணர் [வாயே.

## சிவபோகசாரம்.



அரத்தி யுனையாசை தொடாரம லென்றும்
விரத்தியினு லாங்கவற்றை விட்டுப்—பரத்திலன்பு
செய்யடா செய்யடா சேரப்ர பஞ்சமெலாம்
பொய்யடா பொய்யடா பொய். 1

பரவிமனம் போகாப் பரத்தடைய நாளு
மிரவுபக லற்ற விடத்தே—திரமாக
நில்லென்றான் கண்டதெல்லா நேதிபண்ணி மும்மலமுந்
தொல்லென்றான் ஞானக் குரு. 2

ஒருமையுட னீசனரு ளோங்கியென் றுந்தாங்க
ளருமை யருமை யருமை—பெருமையிடு
மாங்காரங் கோப மபிமான மாசையிவை
நீங்காத போது தானே. 3

உரையிறந்தா னுன்னு முணர்விறந்தான் மாயைத்
திரையிறந்தாற் காண்கின்ற தேவை—வரைபெருக
வாசிப்பதும் வாயால் வாழ்த்துவது நாடகமாய்ப்
பூசிப்பதுஞ் சுத்தப் பொய். 4

உருவை யருவை யொளியை வெளியை
யிருளைச் சிவமென் றிராதே—மருளைப்
பிறிந்தறிவிற் கண்டதனைப் பின்னமற வெங்குஞ்
செறிந்தபொரு டானே சிவம் 5

உன்றதே பற்று துரையாதே யொன்றியதி
னின்றமை யில்லை நிகழாதே—பன்றைட்
பரையிறந்து நிற்கும் பயனைநெந்தார் நெஞ்சிற்
றிரையிறந்து நிற்குஞ் சிவம். 6

அநித்தியத்தை நித்தியமென் றுதரிக்கும் பொல்லா
மனித்தருடன் கூடி மருவாதே—தனித்திருந்து
மோனந்த மாஞ்சிவத்துண் மூழ்கி,மலத்தையறுத்
தானந்த மாயமூழ்ந்து வாய். 7

என்னை யறிவென்று னென்னறிவி லானந்தந்
தன்னைச் சிவமென்றான் சந்ததமு—மென்னையுன்னைப்
பாராம றைத்ததுவே பாசமென்று னிம்மூன்று
மாராய்ந் தவர்முத்த ராம். 8

தத்துவத்தை விட்டறிவிற் றன்கலந்து தன்னிழப்பின்
மெய்த்துஞ் சுகத்தின் மிகவழுந்திச்—சுத்தமா
யொன்றாகி நின்ற வுணர்வு மொழிந்தக்கா
லன்றே சிவபோக மாம். 9

தன்னை யிழந்திடத்தே தானே சுகவடிவா
யின்னபடி யென்றுணரா வெங்கோனுட்—பின்னமற
நின்றநிலை தானுந் தெரியாதே நின்றவர்கட்
கன்றே பிறப்பறுக்க லாம். 10

தன்பெருமை யெண்ணுமை தற்போத மேயிழத்தன்
மின்பெருமை யாஞ்சகத்தை வேண்டாமை—தன்பா
லுடலைத் தினம்பழித்த லோங்குசிவத் தொன்ற
னடலைப் பிறப்பொழியு நாள். 11

ஆர்பெரிய ரார்சிறிய ரார்பகைஞ ராருறவர்
சீர்பெரிய ரானந்த சிற்சொருபர்—பேர்பெரிய
ரெங்கெங்குந் தாமா யிருந்துசட சித்தனைத்து
மங்கங் கியற்றுவத ணல். 12

நெருப்பென்றுல் வாய்சுடுமோ நெய்பாறேன் கட்டிக்
கருப்பென்றுற் றித்தியா காணீ—விருப்பமுட
னீபிரம மென்றக்கா னீபிரம மாயினையோ
நீபிரம சற்குருவாய் நில். 13

நாம்பெரிய ரென்னுமதை நாடாத டக்குமவர்
தாம்பெரிய ரென்றுமறை சாற்றியிடு—நாம்பெரிய
ரென்பார் சிறியரிவ ரல்லாதிவ் வுலகிற்
றுன்பார் சுமப்பார்கள் சொல். 14

---

## சிவப்பிரகாச வெண்பா.

---

வாக்குமனங் காணாத வாசாம கோசரத்தை
ஆக்கமழி வில்லா வறிவுருவைப்— பாக்கியத்தோ
ரொன்றும் பரம்பொருளை யுள்ளாமல் விள்ளாமல்
என்றுந் துதிப்பே னியான். 1

உடம்புநீ யல்லை யுறக்கத்தி லெல்லாம்
அடங்கப் பிணமாகை யாலே—திடம்படவும்
வேறுதா னுண்டோ விடாதே யருந்துகின்ற
சோறுகாண் காயச் சுமை. 2

மெய்வாய்கண் மூக்குச் செவிவாய் விடயமாய்க்
கைபாத மந்தக் கரணமாய்—ஐயா
பொறிபுலன்க ளென்றுபல பேரிட்டுப் போத
மறிகின்றார் பின்னை யொழிந் தார். 3

அந்த விருளை யறிந்த வறிவுதனைப்
புந்திதனிற் பார்த்துப் புகன்றுகா—ணிந்தநான்
கண்டே னடியேன் கதிர்விட்டுக் காயமெலா
மூண்டா யிருந்த துணர்வு. 4

உண்டா யிலங்கு முணர்வுதனைக் கொண்டுநீ
திண்டாடும் பேரிருளைத் தேடிக்கா—ணண்டாபோ
யங்கேநான் றேட வற்றொழியக் கண்டிலேன்
எங்கே யொளித்த திருள். 5

உள்ள கதிரனைத்து மொன்றா யுதயமுற
கள்ளிருடா னெவ்விடத்து நாடுமோ—தெள்ள
அருளை யறியே னற்புதமுஞ் செய்ய
இருள்போய் மறைந்த விடம். 6

இருந்த படியேயிங் கெல்லாங் கழன்று
சரிந்துபெரும் பாழாய்த் தனியாய்த்—தெரிந்ததனைச்
சொல்லாட லின்றி யொருகாற் றொலையாதே
யல்லா யிருந்த தது. 7

பரவுட லென்றுமறை யெல்லாம் பகரும்
துரிய வதீதமெனச் சொல்லுங்—கருவி
திரண்டடங்கும் பாழ்போலச் சீவனொழிக் கின்ற
இரண்டாம்பாழ் கண்டா யிது. 8

விட்ட வதீத விரிவைத் தெரிந்துமிகச்
சுட்ட விருந்தபடி தான்சொல்லின்—முட்ட
இரவுபக லில்லா வெறிக்குஞ் சுடராம்
பரவறிவை மைந்தாநீ பார். 9

ஆரு மறியா வகண்டபரி பூரணமாம்
பேரறிவு கண்டேன் பெருமானே—நேராகப்
போக்குவர வுண்டோ பொறிபுலன்க ளாமுண்டோ
ஆக்கமழி வுண்டோ வதற்கு. 10

நின்றும் பறந்து நடந்தூர்ந்து நீணிலம்விண்
* ணென்ற பலகோடி யித்தனையும்—என்றும்
அறிவொழியக் கண்டிலே னண்டாண்ட மெல்லாம்
பொறிபுலன் பூதம்வெறும் பொய். 11

உள்ளாய்ப் புறம்போ யுருவா யருவாகி
வெள்ளவெளி தானாய் வெறும்பாழாய்—நள்ளிருளாய்
அல்லாய்ப் பகலா யனைத்துமா யப்பாலாய்
எல்லாமாய் நின்றேனு மியான். 12

ஓதற் கரிதாகி யொன்றான பேருணர்வும்
0 கோதற் றமுதாகிக் கூடாதே—பேதம்
அறிநதிருக்கு நாடாத வெல்லாநா மென்றங்
கறிந்திருக்கை யுண்டாகை யால். 13

அடைய நமதுருவ மாயினோ மெறேன்
விடய மதுக்கதுநீ விட்டிங்—கிடையிலொரு
போதமில தென்னும் புந்தியும்விட் டந்திபக
லேதுந் தெரியா திரு. 14

---

* என்ற என்றது குறுகிநின்றது.

0 அற்றவென்னும் பெயரெச்சத்தகரவீறு தொகுக்கப்பட்டது.

வைத்த நிலமிறந்து வானிறந்து மண்ணிறந்திங்
கித்தனையுந் தீர விருந்துபோ—யத்தா
தெரிந்துந் தெரியாமை யொன்றுந் தெரியா
திருந்தபடி தானிங் கெனக்கு. 15

---

## தத்துவாமிர்தம்.

---

### கலிவிருத்தம்.

எய்கணை பிறகிடு மிளமை மூப்பது
தைவரு வளியினுஞ் சால வேகுமான்
மையறு தந்தைதாய் மக்கள் சுற்றமுஞ்
செய்பொருள் களுங்கன வொப்பத் தீருமால். 1

பிணிகளுங் கவலையும் பேசி னேழ்கடல்
அணிதரு மணலினு மனந்த கோடியா
மிணைதரும் பிறவியா னிடரா லாதொரு
கணமது மிலதெனக் கண்டு நொந்தனன். 2

### கலிநிலைத்துறை.

சாந்தி தாந்திநல் லுபாதி தகுதிதிக்ஷையுடன்
வாய்ந்த மைத்திரி யாதிக டமக்கவ யவமா
யாய்ந்து விட்டுநல் யயாதியு மழிவில்வீட் டின்ப
மேய்ந்து காட்டுநல் விறைகரு ணுறப்பெரு விடாயாய். 3

வன்ன காலைதாய் வன்பாத மூன்றதற் குடைத்தாய்
தன்ன தாம்வடி வதுமிகத் தானுமுன் னியதா
முன்ன மாமறை முழுதும்மெ யோதுறி யாச்சிர்
மன்னு மாப்பொரு ளுடைமைமா வாக்கியப் பேராய். 4

வடிவு துண்மையு மாப்பொரு ளுடைமையு மலர்வு
முடிவு மாயிரு மையுமற மொழிதரு விரகும்
படியி லாதெழு பழமையு மப்படி புதுமை
யுடைய தாகிய வுயர்குறி யாறவை யுடைத்தாய். 5

இறந்த கேள்வியா யிறந்தநற் றரிசன மலைந்தா
யிறந்த வீரமா யெலையிலா னந்தனூ னமதாய்ச்
சிறந்த காலதே சந்திசை யிறந்திடத் திகழ்ந்து
நிறைந்த வெட்டியல் புடைத்துநீள் வாக்கிய மினங்கேள். 6

**கலிச்சந்தவிருத்தம்.**

நித்தமொடு முத்தவிம லந்திகழ்ப ரத்தை
யுய்த்தகர முத்தமணி யத்தி * னிக ரொப்ப
மெய்த்திடவெ வர்க்குமுண ரத்திகழு விக்குந்
தத்வமசி தத்வமசி தத்வமசி சத்யம். 7

சத்தமுறு பித்தினலை தட்டற வுளத்தே
முத்தியெனு மப்பதமு மூத்திட நினைக்கிற்
கைத்தலநெ லிக்கனியெ னப்பொருள் விளக்கும்
தத்வமசி தத்வமசி தத்வமசி சத்யம். 8

பத்தியதின் மெய்க்குரவ னற்பதம துற்றே
சித்தமொரு மித்துறவி னிற்றுறவி யற்றின்
மெய்த்துமுய றத்துவப ரர்க்கதுவி ளக்கும்
தத்வமசி தத்வமசி தத்வமசி சத்யம். 9

கத்ததுறு பித்தசம யக்கவலை விட்டு
நித்தபர மத்தையுணர் தற்றக நினைக்கின்
மெய்த்தொருக ணத்தினில்வெ ளிப்படநி கழ்த்தும்
தத்வமசி தத்வமசி தத்வமசி சத்யம். 10

மத்தமுறு பொய்ப்பவம யக்கறவு ளத்தே
மெய்த்தபர தத்துவம் வெளிப்பட வெவர்க்கும்
சுத்தமணி நற்சுடர் விளக்கது வெறிக்கும்
தத்வமசி தத்வமசி தத்வமசி சத்யம். 11

முத்தமொடு நித்தமுறு சுத்தமது புத்த
வத்துவித மப்பரம மத்திலை யுளத்தே
யித்திறனெ னத்திகழு வித்திட விளக்கும்
தத்வமசி தத்வமசி தத்வமசி சத்யம். 12

* மலர்வு-நிறைவு. நிகரொப்ப ஒருபொருட் பன்மொழி.

அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்.

ஆதலால் வாக்ய ஜன்ய ஞானமே ஞான மன்றி
ஓதிய ஞான மெல்லா முணரினுஞ் ஞானமேயாம்
ஏதம தறவே தாந்த மிசைத்திடும் பரிசை மைந்தா
ஓதுவ னுவகை யோடு முளத்தினை யொருக்கி நீகேள். 13

அன்றியுஞ் சூக்க மாய சவணமா திகளை யோரின்
துன்றிய வுபநி டத்தின் சுடருமா வாக்கி யத்தின்
முன்றிகழ் பதப தார்த்த முக்கிய விலக்கி யங்கள்
தன்றிக ழசுத்த சுத்தங் கேட்டிடல் சவண மாமே. 14

உரைத்தநற் சவணந் தந்த வுறுதியாம் பதப தார்த்தம்
நிரைத்தவை முடியா யுள்ள நிமலமாம் பரமன் சிவன்
தெரிப்பரு முபாதி நீக்கிச் சிற்பரம் பொருளொன் றேயாய்
இருந்திடு மதியின் றிட்ப மிசைத்திடின் மனன மன்றே. 15

அசைவற மனனந் தன்னா லற்றவப் பொருளை நேரே
இசைவுறக் குரவ னூதியா மிடங்க டோறும்
திசையறத் தெரித்து மீட்டுங் காட்டியே திகழு மாய
நிசியறத் தருளு பாய நிலைநிதித் யாச மாமே. 16

அதுவெனும் பதத்த ருத்த மரியநற் பரமன் சிவன்
பொதுவற நீயே யென்னும் பதத்தினின் பொருள தாகும்
பதியுற வானு யென்னும் பதப்பொருள் பரமன் சிவன்
கதியுற வேக மாதல் காட்டிடு மதுவா மன்றே. 17

முக்கிய விலக்கி யங்கள் மொழியின்மு னிருப தத்தில்
தக்கிடு முபாதி பாவஞ் சாற்றின்முக் கியம தாகு
மிக்கவை தன்னின் வேறாய் மேவிடின் றுனைருஞ் சித்தே
தக்கலட் சியம தென்று சாற்றவும் படுவ தன்றே. 18

எழித்திடு மிருப தத்தி னிசைத்தநற் சபளஞ் செப்பின்
குறித்திடு பரோட்ச மொன்றுங் கூறப ரோட்ச மொன்றும்
முறைப்படு சபள மாய விருபத முக்கி யத்தை
நெறிப்பட வடைவிற் கூற நிகழ்தர வறிக வையா. 19

கலிவிருத்தம்.

அந்தவப ரோட்சசப ளத்தகம தென்னும்
பெந்தமது முந்துறுதல் பேணிவர லாலப்
பந்தசப ளப்பமு தறுத்தருள வீசன்
தொந்ததசி யென்றமுறை சோதனைய ளிப்பாம். 20

அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்.

முந்துறக் கேட்ட நீயாம் பதத்தினின் முக்கி யந்தான்
நந்திடு முடல மாதி நானெனத் தோன்றி மெய்போல்
வந்திடு மயக்க மாய வுடலொடிந் தியம னந்தான்
புந்திநற் பிராணுங் காரம் புகலுசங் காத மையா. 21

ஏற்பட வேழு நானென் றிடுதெரும் பதத்த சுத்தம்
கூப்பிடு மஞ்சங் கோடிங் கங்கையிற் றிகழு மென்ற
வேற்பதத் தருத்த மெவ்வா றப்பரி சேழின் வேறும்
சீர்ப்பதக் கரியாஞ்சித்தே திகழுந்தொம் பதார்த்த சுத்தம். 22

சொல்லிய தொம்ப தத்தைச் சோதனை பண்ணி வைத்து
தல்லெனும் பதத்தைத் தேரில் சகலக்ஞா சகலேசாதி
மல்கிய சகல வியாபி மதித்திடு கார ணாதி
தல்லினி லசுத்த மாகுஞ் சபளமுக் யார்த்த மன்றே. 23

சுட்டிய சிவலே * நின்ற சுவேதமோ டியதென் றெண்ணப்
பட்டிடும் பதத்த ருத்தப் பரிசுபோற் றற்ப தத்தின்
விட்டிடாச் சபளபாவ முக்கியத் தினில்வே றுகும்
தட்டறு கரியாஞ் சித்தே சாற்றுதற் பதார்த்த சுத்தம். 24

தோற்றிய விருப தத்தைச் சோதனை பண்ணி வைத்தங்
காற்றவே யானுயென்னும் பதத்தினுக் கருத்தந் தேரின்
ஏற்றிய விருப தத்தி னுபாதிநீ ரிலக்கி யார்த்தம்
ஆற்றவே யேக மாகி யகண்டபூ ரணம தாகை. 25

ஓதுவ மொள்ளி யோய்கே ளோங்கிரு பதத்தால் வந்த
மேதகு பொருளொன் றுறு மயிக்கிய விருப்பி னேடும்
மோதுசம் சர்க்கத் தோடும் விசிட்டவாக் கியத்தின் முக்ய
மேதமா மகண்ட வாக்யத் தேகமே யாகு மன்றே. 26

* நின்றது ஈறுதொகுத்தல் பெற்றது.

சொன்னவாக் கியத்த ருத்தஞ் சோயநற் றேவ தத்தன்
என்னும்வாக் கியபதங்கட் கருத்தமெய்ப் பரிசி னவ்வா
றன்னிய விருப தம்விட் டகண்டமாம் பதத்தி னாலே
உன்னரு மகண்ட பூர்ண மாகியே யொளிரு மன்றே. 27

வாதிலா மதுரவாரி மன்னுமா வாக்கி யத்தின்
ஏதமில் பதப தார்த்த விலங்குசோ தனையி னாலே
ஆதனே யயர்வற் றுண்மை யகண்டபூ ரணம தாகும்
போதமே புரையற் றோங்கும் பொருளெனத் தெளிந்தே னெந்தாய்.

இல்லதோ வுள்ள தோமற் றேகமோ வநேகந் தானோ
அல்லதோ வாமோ வன்றி யருவமோ வுருவந் தானோ
எல்லையில் பரமார்த் தந்தா னெவணமென் சங்கை நீங்கி
அல்லுறீர் பொருளிவ் வண்ண மென்பதை யறிந்துகொண்டேன்.

மொழிந்தவப் பதங்கள் மூன்றின் முன்னிய தொம்ப தத்தில்
பொழிந்தமுக் கியபா வத்தைப் பொறியற மனனஞ் செய்நீ
ஒழிந்தமற் றடல மாதி யுரைத்தவே றினையுந் தேரின்
விழைந்தமுப் பரிசாய் மேவு மவத்தைமூன் றென்ன வாங்கே.

நவின்றிடு மவைமூன் றாவ நனவொடு கனவு மற்றுந்
துயின்றிடு சுழுத்தி யென்னச் சொன்னவா றடைவே செப்பின்
பயின்றிடு விசுவ னோடு தைசதன் பிராக்ஞ னென்ன
நவின்றிடு முயிரின் முக்ய நலம்பெற வறிந்து கொண்ணீ. 31

என்றவச் சீவன் றன்பா லியைந்துள வுபாதி பாவ
ஊன்றிய மனோவிருத்தி யிரண்டதொன் றுபர மந்தான்
மூன்றையு முணர்ந்து மூன்றுங் கழன்றவை யின்றி நின்று
தோன்றிய வுணர்வதாகை சுத்ததொம் பதார்த்த மென்றே. 32

உன்னிய தொம்ப தத்தி னுற்றவப் பொருளா யுள்ள
மன்னிய சீவ னுண்மை மனனஞ்செய் தற்ற பின்றை
பன்னிய தற்ப தத்தின் பொருளதாம் பரம னுண்மை
தன்னியு மனன முன்போற் றகுதரச் செய்தி யையா. 33

கூறிய பரமன் றன்பாற் கோதற முபாதி பாவம்
ஊறிய சகலஞ் ஞத்து வாதிக ளுயர்து லாதி

தேறிய கார ணத்வா திகளெனுந் திரளு முன்போல்
மாறிய வவத்தை மூன்று மவத்தையு மனனஞ் செய்நீ. 34

ஓதிய சகல ருத்துவா திகளெலா மொளிருந் தேய
மேதது பரமன் றன்சாக் கிரமதா மழுங்கிற் றெங்கே
யாதது பரமன் றன்பாற் கனவதா மாண்ட தெங்கே
ஓதிய பரமன் றன்ப னுபாதியாஞ் சுழுத்தி யையா. 35

நாட்டிய வடைவே மூன்றி னுமமு மனனஞ் செய்யின்
கூட்டிய விராட்டன் மற்றுங் குலவிய விரண்ய கர்ப்பன்
நாட்டுறு மறிய வவ்யாக் ருதனென நவின்ற மூன்றும்
மூட்டிய தற்ப தத்தின் முக்கிய மாகு மன்றே. 36

ஆதலாற் சீவ பாவத் தாயமூன் றவத்தை போல
ஓதிய பரமன் றன்பா னுபாதியா மவத்தை மூன்றும்
ஏதம தறவு ணர்ந்து கழிந்தவை மூன்று மில்லாப்
போதமே ததுவாஞ் சுத்தப் பொருவிறற் பதார்த்த மையா. 37

பரமன்றன் சுழுத்தி தன்னைப் பழமறை பரநல் வியோமம்
பிரிவறத் திகழா காச சரீரநற் பிரம மென்றும்
உரவிய பரமான் மாவி னுபாதிசொல் லுதலா லத்தைத்
துரிசறக் கழன்ற சித்தே சுத்ததற் பதார்த்த மையா. 38

இருபதப் பொருளு மிங்ங னிலக்கியப் பரிசை யைய
மருவறத் திகழும் வண்ண மனனஞ்செய் தகன்ற பின்றை
தெரிவுற வானு யென்னுந் தேசுடைப் பதார்த்தந் தன்னைப்
புரிவுற மனனஞ் செய்நற் பூரண மாக வையா. 39

இதமுறு தூல பாவத் திடர்ப்படு பெத்த நீங்கி
விதமுறு முயிராஞ் சித்தின் விட்டவா தனையங் குண்டு
பொதுவுறு சூக்க பாவத் தகமுறு புணர்ப்பு நீங்கி
விதமறு பரமன் பாலும் விட்டவா தனையங் குண்டே. 40

சொல்லிய தொம்ப தத்தின் துரிசதா மூன்றும் விட்டுத்
தல்லினிற் றுரிச தென்று சாற்றுமூன் றனையும் விட்டே
மெல்லிய திருக்கு திர்சிய விதிரித்தந் தீர்க்கை சுட்டி
யெல்லையி விதம தெல்லாம் பிரமமென் றறுவே தக்தான். 41

தூலமா மிதத்தைச் சீவ னகமெனுந் துரிசி னான்முன்
ஏலவே யிதத்தி னீவே றென்றக முகம தாக்கி
மேலுமோ ருபாதிமேவப் படுமறி விதுதா னோரின்
ஞாலமுண் டிடுதன் மாட்டா தெனமறை நவிலு மன்றே. 42

உன்னிய முறைமை யாலே யுற்றதற் பதார்த்த மாகி
மன்னியே காரணத்தை வாய்ந்திடக் கழன்று மேலாய்
உன்னருஞ் சித்தின் ஞால முண்டிடப் படுத லாலே
மன்னிய விசுவக் கிராச மறையெலா மறையு மன்றே. 43

ஆதலா விருப தத்தி னவத்தைக ளனைத்து நீங்கி
காதலா லகத்தின் மீதுங் கண்ணெனுங் கருத்தும் வாடி
நீதியா விதமுந் தானாய் நிகிலமும் விழுங்கி யோங்கும்
ஓதரு க்ரியாபோ தந்தா னெங்குதற் பதார்த்தத் துண்டே. 44

ஆதலா லாய ணங்க ளறைந்தசம் சர்க்க வாக்யம்
ஓதிய விசிட்ட வாக்ய முறைத்தவி விரண்டி னாலும்
போதரும் பொரு ளிரண்டிற் பொருந்துவா சனையுந் தீரக்
காதலா லசிப தத்தாற் காட்டிட வுற்ற தன்றே. 45

சோயதற் றேவ தத்த னெனச்சொல் வாக் கியத்தினாலே
காயமற் றிருப தத்தாங் காரிய கார ணங்கள்
போயமற் றிதமகம் போய்ப் போயவா சனையுந் தீர
ஆயமற் றகண்ட பூர்ண மாகிய தசி பதந்தான். 46

சீவனும் பரனு மற்றச் செகமெனு முபாதி யாய
மேவரு கோள்கள் மற்றும் விரிவுட னொழிக்கம் யாவும்
தூவிமற் றொன்று மின்றி யொழிவிலா நிறைவை யிங்ஙன்
ஆவமற் றுறு வென்றங் கறைந்தது சமைக்கத் தையா. 47

பொருகடல் சூழ்ந்த வித்தப் புவியக மெங்கும் புக்கேன்
தெரிதர வேதாந் தத்தின் றிறந்தரு பொருளை யிங்ஙன்
மருவுறு மயக்கந் தீர வாய்த்திடக் காட்ட வல்லார்
ஒருவரு மில்லை யில்லை யும்பனை யுன்னை யல்லால். 48

மறைகள்போ வாரு முண்டு மருவுமா கம புராணம்
கறைகடீர் மிருதி மற்றுங் கலைகள்போ வாரு முண்டிங்
கிறைவனை வேதாந் தத்தி னெறியின்மிகு பொருளின் ஞானத்
தறிவுற வருள வல்லா ராணையே யில்லை யில்லை. 49

தம்பிரா னருளிச் செய்த சவணமாத் திரத்தின் மட்டே
இம்பரா ருலகந் தன்னின் யாவரு மறிவ தன்றி
அம்பொனே மனனந் தானு மறிபவ ரில்லை யானற்
செம்பொனே சுவாநு பூதி செப்பவேண் டுவது மூண்டே. 50

கலிநிலைத்துறை.

தொம்ப தத்தினிற் காரிய சோதனைத் துணிவும்
நம்ப தத்பதக் காரண சோதனை நலனும்
அம்ப தத்தசி வாசனைச் சோதனை யஃதும்
கம்ப மற்றிடக் கண்டுண்மை காண்பது முடிவால். 51

தொம்ப தந்தனிற் சொல்லுமுக் கியத்தினின் மொழிந்த
நம்பு முப்பரி சாகிய வவத்தையு நனவிற்
கம்ப மற்றிடக் கண்டவை கழிந்துள கரியை
நம்ப விப்பரி சேகண்டு கண்டவா * நவினீ. 52

பொறிபு லன்புணர் மனனுறு விடயமா நனவு
மிறைவ கண்டருள் வகையினிற் கழிந்ததுங் கண்டேன்
கறைசெய் வாதனைப் பந்தமாங் கனவதுங் கண்டேன்
செறியு நின்னரு ளின்னது தீர்ந்ததுங் கண்டேன். 53

நனவு வாதனைக் கனவதா நாற்றமு மற்று
வினவ லாவதும் வேறுமொன் றறும்வெறும் பாவம்
புனைவ தாகுமவ் வியத்தமாம் பொற்புடைச் சுழுத்திக்
கனைசெய் பேரிருண் மூலநற் பகுதியுங் கண்டேன் 54

அனைய மூலநற் பகுதியை விடயமா வறியு
மெனையு நீயருள் வகையினி னறிவெனக் கண்டேன்
இனைய நீதியி னறிவதா மெனைக்கண்ட பின்றை
புனைசெய் மூலநற் பகுதியோ யிறந்ததுங் கண்டேன். 55

அறிவு தானழி வின்றியே யனைத்தையு மறந்து
முறிவ தாகிய முன்புபின் பக்கமேல் கீழ்சூழ்
செறிவ தாயிடந் தனக்கின்றி யெங்குமாய்த் திகழ்ந்து
பிறிவி லாதனைத் தினுக்குமுள் ளாகியே பிறழும். 56

* காண்டவா என்புழி றுவ்வீறு தொகுக்கப்பட்டது. இதனைத் திருக்கோவையாருள் கற்றவா என்புழிப்பேராசிரியர் விரித்தலானுமுணர்க.

எழுமெ லாமிதி னிகழுமிங் கழிதரு மிதுதான்
கழிவி லாதனைத் தினுக்குநற் காரண மதுவாய்
ஒழிவு தாமுடல் பொறிபுலன் கரணமற் றனைத்தின்
கழிவி லாதநற் கரியது வாகியே கமழும். 57

கண்ட னன்விராட் டெனும்பரன் கருதரு நனவைக்
கண்ட னன்கார ணுதியத் தூலாதி யதனிற்
கண்ட னன்போத விகற்பமாங் கனவதிற் கழிய
அண்ட ரேயழ குறவரு ளியல்பதா மதனுல். 58

எழுவ தாகிய விரணிய கர்ப்பனு யிசைந்த
கழிவி லாதநற் பரமுறு கனவதுங் கண்டேன்
அழிவி லாதவவ் யாகிர்த னெனும்பரன் சுழுத்தி
ஒழிவி லாதநின் னருளினி லொதுங்குறக் கண்டேன். 59

பழுதி லாதநற் பழமறை பரமநல் வியோமம்
அழிவி லாதநல் லாகாச சரீரநற் பிரம
மொழியி னுகிய பயனது தெரிவுறப் பரமன்
கழிவி லாதநற் சுழுத்தியிற் கரிசறக் கண்டேன். 60

விழைந்த வவ்வியா கிருதனெனும் பரமநல் வியோமங்
கழிந்து மேலுறுங் கண்ணதாய் வியோமமே முதலா
மொழிந்த மூன்றையு மொக்கவே விழுங்கிநின் றொளிரும்
கழிந்தி டாதசிற் பரமுநின் னருளினிற் கண்டேன். 61

ஒருங்கு மீள்வுறு மியல்பினி னுபாதிகள் கழித்துத்
தரங்க மோயநிர் தப்பெரும் பித்ததுந் தடித்து
நெருங்கு பேரித மெனும்விச்வ நிகழ்வதும் விழுங்கியப்
பெருங்க ணுய்நிகழ் பிறவுநின் னருளினுற் கண்டேன். 62

அரேய மாநன்மா வுளம்புற முழுதுமென் றறையும்
பராவு மாரண மறைதருந் திருமொழிப் பரிசே
தராத லாதல வுலகமுண் டகம்புற மருவுஞ்
சராச ராதிகள் முழுதுந்தன் னுருவமாய்த் திகழும். 63

ஊனி றந்துயி ரிறந்துள மிறந்துணர் வதாம்
தானி றந்துதகு பாவமு முழுதும்ப ரமொடே
வானி றந்துமிக லொன்றிவைய முண்ட புரணந்
தானி றந்தபர மப்பத மிருந்த படியே. 64

புறங்க ணன்றுளம தன்று யுகலங்க ளமதா
யறுங்க ணன்றுணர்வு மன்றுணர்வி றந்த விடமா
நிறங்க ணன்றுநிகழ் வேதிதமும வேத்ய முமெலாம்
இறந்தி ருந்தபர மப்பத மிருந்த படியே. 65

வே று.

அருளு நாயக னுருயிர் டுவளிப்படு மொருபாழ்
பொருள தாம்பரன் பொருவற வெளிப்படு மொருபாழ்
தெருள தாகிய குருபரன் றிகழுமிச் சமைவாம்
இருளி லாதசூழ் கீழ்மே லு மெல்லையிலிப் பெரும்பாழ். 66

நீல கந்தமா முற்பல மெனநிகழ்ந் திடல்போல்
சாலுஞ் சத்திய ஞானமோ டனந்தவா னந்த
நாலு மொக்கவே நிகழ்தரு நலமுடைக் குரவன்
சால மிக்கநல் லொளி வெளிப் படுவதிச் சமைவே. 67

மைந்த முன்புக விருவகைப் பாழியல் பெனலாய்
வந்த வெல்லைகண் முடிந்தவிம் மதிப்பரும் பாழைச்
சொந்த மொன்றற விழுங்கிய சுயம்பிர காச
மிந்து கண்டிடென் றிறைமௌன மொழியினி னளித்தான் 68

சொல்லு மெல்லைகண் முடிந்துதுரி சொன்று மிலதாய்
எல்லை யின்றிய வகண்டபர வின்ப மிதென
வல்ல வன்புதல்வன் வாழவொரு மோன மொழியால்
ஒல்லை கண்டதில்லை யாவென வுவந்த ருளினன். 69

வே று.

நனவு றங்கன வொடுங்குத லிறந்து ளாவது
நாடி மேலுறு பராங்கம திறந்த றிவிறந்
துனவ ருஞ்சகமு முண்டது மிறந்து சமையுண்
டொப்பி லாதொளி ருலப்பில்பிர காச மதளித்
தினம றும்பரம வின்பவொளி நல்கி யினிமேல்
வினவ றப்படி முடிந்தநிலை ளிங்கி துவெனு
அனைய வங்கண னியம்புத லறிந்த புதல்வன்
ஆர கண்குணர வங்கனி திருந்த ருளினன். 70

காரணத்தினை விழுங்கியவைய முண்ட பூரணக்
கண்ணு மற்றிவனை யென்றுகருதற்க ரியவச்
சீரணச்சமைவி றந்துதிகழ் நற்சுயமதாய்ச்
சிவமதாயபிர காசவொளி யுண்மை யதனித்
தேரணத்திக ழுலைப்பில்சுக சாகரமதா
மியல்பளித்தினி யியப்புத லிறந்த முடிவைக்
காரணத்தர்வெளி காட்டின ரிருந்த டியனுங்
கண்டுகொண்டுற விருந்தன னிருந்த படியே. 71

வேறு.

அதுநி யாயினை யென்றெழு மமலவாக் கியமும்
அதுநி யேயது வாயினை யென்றவாக் கியமும்
முதியன் வாயினின் மோனமா மொழியினின் முடிந்து
பதிய தாகிய பரம்பர னிருந்த படியே. 72

அகமதேதிகழ் பிரமமா யினனென வறைந்த
பகவிலாதவப் பிரதிபத்தி வாக்யத்தி னருத்த
மகமதார் மெய்கண் டனுபவப் பிரதிபத்தி வாக்ய
மிகவுநான் மொழிந் திடவிறையெனச் செய்வித் தகமே. 73

மோன முத்திரையி னிருந்திறை காட்டத்தன் முடிவை
ஆன நற்குவி வாயமை யாக்குட நிறைநீர்
தானெனப்பரி பூரணநற் பிரகாசவா னந்தத்
தேன்மு ழுந்துள நிறைந்தெதிர்த் துக்கடை விடுமால். 74

சொல்லி றந்தப ரோட்ச முத்திரை தனிலிருந்து
நல்லதன் முடி வினைநடித் தேயிறை காட்டச்
சொல்லி றந்தநற் சுயம்பிர காசவா னந்த
மல்கி யேயுள நிறைந்தெதிர்த் துக்கடை விடுமால். 75

வேறு.

முடிந்த தின்றுமுழு துந்திமு மோன மதிலே
படிந்த தும்பொரு ளிருந்தத திருந்த படியே
விடிந்த தெங்கும்வெளி யாகியது மாய விரவு
முடிந்த திங்கினைய வென்பல மொழிந்தி டுகுவேன். 76

## அறிவானந்த சித்தியார்.

---

நிரவய னின்மல னிர்க்குண னித்த னிரஞ்சனன்மெய்
பரவிய நிர்த்தொந்தன் பற்றிலி சுத்தன் பரமனந்தன்
விரவிய பூரண னேகன் பேரின்பன் வியாபகனென்
கரவுளங் கோயில்கொண் டானெழில்போற்றுவன் காதலித்தே.

ஈறும் முதலொன் றிருவடி வாகியிம் மூவுருவாய்
மாறாத நால்வகைத் தோற்றமைம் பூதங்கண் மற்றுஞ்சுவை
யாறாகி யேழிசை யாகித் திசையெட்டு மாகியன்றி
வேறாகி நின்ற வகோசரம் போற்றுவன் மேவிநின்றே. 2

கூர்ந்தவிருளிற் பழுதையைப் பாம்பெனக் கொண்டவர்தா
மார்ந்த விளக்குற் றறிய மயக்கறு மாங்கதுபோற்
சார்ந்த வுடம்பு சகம்பொரு ளென்னுமிச் சார்வையெல்லாந்
தேர்ந்த வருத்தங்க ணீங்கின தேதென்று செப்புவதே. 3

கனவின் மலடி குழவியைப் பெற்றுக் களித்தவடா
னனவிற் கருதப் பொய்யா னதுபோல நளினமுற்ற
தனமிக்க மக்களும் பெண்டிருஞ் சுற்றமுந் தன்னுடனு
னெனவுற்ற தென்னை யறியப்பொய் யாகி யிருந்ததுவே. 4

பரிவுடன் வெள்ளியென் றென்றிக் கிளிஞ்சிலைப் பற்றிநின்று
தெரிவுறப் பார்த்துத் தெளிந்து பொய்யென்ற திறமதுபோன்
மருவு முடல்சகம் வாழ்வுபெண் பிள்ளை மனைவகுத்த
வுருவ மடையப்பொய் யென்றே யுரைப்ப ருணர்ந்தவரே. 5

கானலை நீரென்று கண்டு பருகிடக் காதலித்தே
போனவர் தாமய லென்றது கொண்டு பொருந்துவபோ
லான செகத்தி லடைந்த பொருளிவை யானவெல்லா
மூனம தென்றிங் குணர்ந்தோர்க்கு நீங்கு மொழிவறவே. 6

நின்றநற் கட்டையைக் கள்ளனென் றெண்ணி நெறிகலங்கிச்
சென்றபின் பொய்யென்று செப்புவ போலச் செறிந்துலக
மென்றமெய் யென்றிங் கிருந்ததைத் தீர விசைந்தறிய
வன்றுபொய் யென்ன வறிந்தே னுலக மடையவின்றே. 7

பித்தனைச் சேதிக்க வென்று மொழியவிப் பேருலக
மித்தனை யும்மிறு மென்றனக் கில்லை யெனுமதுபோ
லத்தன் சொல்லொன்றி லெனைமாயச் சேதித்த வன்றெனக்குச்
சித்த மயலுல கெல்லா மிறந்ததென் செப்புவதே. 8

அரியதிம் மானிட மாகி யருஞ்சுனை நீரருந்தித்
திரியுமன் னாட்டியை தப்பி நன்னாட்டிடை சேர்வரிதிங்
குரியப் பிரபஞ்ச நூலினைப் பொய்யென்றிங் குண்மை நன்னூ
றெரித லரிது பயன்கேட் டதனிலை சேர்வரிதே. 9

தலைசிகை பூண்பிச்சை சார்கலை யோத றரைசயனம்
நிலைபெற வேபுலன் வென்றமுப் போதுமன் னிட்டையிலே
மலைவறவே பிர்மசாரிக் கிரவுணன் மாற்றி யெண்ணெய்
யலைவறத் தள்ளிநில் லாதொன்று தப்பிலருநரகே. 10

தீயகொலை பொய்கட் காமமற் றில்லறஞ் சேர்ந்த வர்தாம்
தூய துறவ ருடன்மூவர் தேவர்க டொல்பிதிரர்
தாயர்சற் பாலர் மனைவிய ரந்தகர் தந்தைதம
ராயும் விருத்த ரதிதியைக் காக்கிலர்க் காழ்நரகே. 11

இனியோ தனம்விட்டுச் சாகாதி யுண்டிங் கிருந்துநிட்டை
பனிவெயிறம்மிற் பொருந்திப்பஞ் சாக்கினிப் பற்றுடைத்தாய்க்
கனிமிகு கானத் துறைந்தைம் புலனைக் கடிந்துநின்று
தனியுறை வானப் பிரத்தோர் நிலைவிடிற் றாழ்நரகே. 12

சேர்ந்த சிகைநூ லொழித்தின்று செந்துகிற் றெண்டெடுதுப்
போந்த கலைகளை யோதிமுப் போதும் புனன்முழுகி
யார்ந்தநன் னிட்டைகள் செய்துபிர்ம்மார்ப்பணை மாக்கிப்பிச்சை
சார்ந்தசந் யாசத் திவையொன் றொழியிற் றருநரகே. 13

சாற்றுமிப் பூதப் பவுதிக மாய்ப்பொலி சார்வையெல்லாந்
தோற்ற மறவனு பூதியி லான சுகசொருப
மாற்றெங்கு நின்ற பொருளென் றறிந்தது வாகி யுற்றோ
ரேற்ற மிவரதி வர்ணாச் சிரம ரெனுமறையே. 14

பிறிவற்ற மூர்த்தி நமையன்றி வேறொரு பேறிலையென்
றறிவுற் றவரதி வர்ணாச் சிரம ரவரெவர்க்கும்
நெறியுற்ற நிட்டை நியமமதனை நினைவ ரென்று
செறிவுற்ற நாற்பெரு மாமறை யானது செப்பிடுமே. 15

ஊன மெனும்பிர பஞ்ச மொழித்திங் குணகுருவாய்த்
தானும் பரனு மிரண்டற வேசச்சி தானந்தத்தை
மோனந் தனிலிங் குணர்ந்தோர் பெருமை முழுதுமறை
யான துரைக்க வறியாது காணு மவர்களையே. 16

தீதுள தான மெனினுமெய்ஞ் ஞானி செறிந்தவிடங்
கோதறு கோடி விரற்கிடை தூரமுங் கூறரிய
தாதலி னற்சிவ பூமிநற் றீர்த்த மதிசுத்தமாம்
பாதம் பொருந்து மிடம்பிர காசம் பயின்றிடுமே. 17

நலமுடை ஞானியிங் கார்மனை யாயினு நண்ணிலவர்
குலபிதி ரானவர் கூத்தா டுவருற்றுக் கோதறுநற்
றலமதில் வைத்துப சாரங்கள் செய்திடிற் சாருநர
கிலைநமக் கென்று பரகதி சேர்வ ரெனுமறையே. 18

மதித்து மிரார்மனை வாழ்வுக டம்மையு மன்னரையுந்
துதித்துமிரார்பொன் கலொத்திடுங்காட்சியர் துக்கஞ்செய்தார்க்
கெதிர்த்துமிரார் நன்மைசெய் தார்களென் றுமினிமையுறார்
விதித்த படியுடற் கென்றுறுஞ் சீலத்தை மேவுவரே. 19

என்று மிளமை கழியா தெனினுமிப் போதுடலம்
பொன்றினுஞ்செல்வம் பொருந்தினும் போகினும் பூதலத்தோர்
நன்றிவர் தீதிவ ரென்கினுங் கிஞ்சித்து நாட்டங்கொடா
ரொன்று மிலாதமெய்ஞ் ஞானிகள் சீலத் தொழுக்கமிதே. 20

விரிந்தநல் வேத புராணங்க ளாகம மிக்ககலை
தெரிந்து படித்துப் பொருள்செப்பித் தானிலை சேர்ந்து நில்லா
திருந்தசண் டாளரி லேற்றங் கழுதை யெனிற் குங்குமம்
பரிந்து சுமந்தும்பின் வஞ்சம்பண் ணுந பயனெழிலே. 21

தனக்குத்தன் னெஞ்சது சான்று யிருக்கவுந் தானிங்குண்மை
யனைத்துமுற் றேமென் றதிபஞ்ச பாதக ராய்ந்தவுரை
யெனத்துற்றுக் கேட்டுப் பரிசித் திருந்த விருவருந்தாம்
மனத்துக்க முற்றிங் கெரிவாய் நிரயத்து மன்னுவரே. 22

பரிந்தொரு கோடி மறையோர்க்குப் பூமிபொன் பண்புடனே
வருந்தி மிடிகெட வைப்பது தன்னின் மறைமுடிவு
தெரிந்த மெய்ஞ்ஞானிக் கொருபிடி பிச்சை சிறப்புடனே
பொருந்த வளிப்பதற் கொவ்வா தெனமறை போற்றிடுமே. 23

துன்னுமெய்ஞ் ஞானி தனக்கேவல் செய்தவர் துஞ்சிடில்வான்
மன்னு விமானஞ் சிவலோக மேறிமகிழ்ந் தங்கது
தன்னி லொருகற்ப கோடிப்பின் வைகுந்தந் தன்னில்வந்தே
யுன்னு மொருகற்ப கால முறைந்துய ரூர்புகுமே. 24

உறைந்துய ரூரி னெடுங்காலம் வாழ்ந்திந் திரனுலகிற்
செறிந்தது கால மியக்கர்கந் தர்வர்தந் தேசமுற்றே
யறந்தரு மானிட மாகிக் குருபரற் கன்புடனே
சிறந்துமுன் னேவற் குறைமுடித் தேமுத்தி சேர்வர்களே. 25

நற்றவ மேவிய ஞானி யுடலமெய்ஞ் ஞானவங்கி
செற்றுமுன் வெந்ததை யங்கி யனற்சுடிற் றேசங்கெடு
முற்றறிந் தாடி யருளிவித் தர்ச்சித் துடந்துசுண்ணம்
பற்றி யிடித்தடி பாடிநின் றூர்க்குப் பாகதியே. 26

உற்றிடு முத்தி கருத்தறி லென்ப ருடலிருக்கச்
செற்றுங் கருத்திங் கறுத கருத்ததிற் சேருமிரு
டுற்ற வினையற வேமுத்தி யென்னிற் றொழிலில்வினை
முற்றுந் தொழிலொழிப் பேனெனி லுன்மல முத்தியன்றே. 27

உடல்தேர்ந் திடப்பித்தன் றானே மருந்திங் குணர்ந்துதின்பான்
விடந்தீண்டி மூர்ச்சித் தவனே கருடனை மெய்யுணர்வான்
சடந்தோயுமாயையைத்தானே வொழித்தொளிதன்னினிற்பான்
றிடந்தேர் குரவன லாதொன் றி னுனுந் தெளிவரிதே. 28

அடர்ந்தெழு கானகச் செத்தையை யங்கி யரிப்பதுபோற்
சடங்கொண்டு சூழ வரும்பாசக் கூளச் சழக்கை யெல்லாந்
திடங்கொண்டு ஞானக் கினியா லெரித்தின்று சிவன்முத்தி
யிடங்கொண்டு வாழ வருள்பவ னேயிங் கெழிற்குருவே. 29

மெய்யதிங் கென்ன வுணர்ந்துற் றிருக்கும் வியனுலகைப்
பொய்யதிங் கென்ன வுணர்த்தி யுணர்ந்த பொருவிற்கரி
யைய மறப்பாற் றன்னோடிங் கொன்ற வனுபவத்திற்
கையின் மணியெனக் காட்டிடு கின்றவன் காண்குருவே. 30

மொன்றுதல் கோபங் கொடுமை யிடும்பை மொழிமறுத்தல்
கன்றுதல் பொய்யுட் கரவபி மானங் கலுழ்ச்சியுள
நின்றெதிர் கூறல் பொருளறி வுஞ்சொல்ல னிந்தித்தற்
னின்றிறை வன்னடி சேரு மடியர்க் கியற்கையன்றே. 31

பொருந்திய வாகனஞ் சந்தனம் பூமுடி பூடணமோ
டருந்துதல் பாக்குக் குளியா சனமெண்ணெய் யாயுதந்தான்
பரிந்த சயனங் கவிகை மிதியடி பல்லுரிஞ்சல்
திருந்துங் குருமுன் னடியா ரொழியுந் திறமிதுவே. 32

இப்போ துலகிற்பொய் வாழ்வுற்ற வேந்தர்க் கிதம்வழிபா
டொப்போடுசெய்துற்ற வுண்மையைப் போலொழி யாதசெல்வ
மெப்போதும் பெற்றிட நல்குங் குரவ னெழிலடியைத்
தப்பாது சீடன்வழிபா டுறின்முத்தி சத்தியமே. 33

செறியும் வினைக ளிரண்டுஞ் சமனுறிற் றேகம்பொய்யென்
றறியும்பின் வன்னமும் வாழ்வு முதறி யலறித்தன்னை
நெறியுறக் காட்டுங் குரவனைத் தேடி நினைந்து நைந்து
குறிகுரு மானிலே கண்டுகைக் கொள்ளுங் குருபரனே. 34

நித்தியா நித்திய வத்து விவேக நிலையறிந்து
வித்தா மிகமுத்தி ரார்த்தபோ கத்தில் விராகமுற
வொத்தாஞ் சமதம மாதிசம் பத்தியிங் குற்றடக்கிச்
சத்தா முமுட்சுத் துவமெய்தல் பக்குவர் சாதனமே. 35

தோற்றிய நாண்முதற் றெட்டு விடாத துயரந்தனைச்
சாற்றும் வகைமுடி யாதெனக் கேட்டுச் சலித்துமிக
வேற்றம் பெறத்துணிந் தோர்தம் பெருமையை யாம்பெறவே
மாற்ற மறத்துறந் தேபவ நீங்கிட மன்னுவனே. 36

அன்ன மயங்கொண் டெடுத்த வுடல்களு மாயிழையும்
பின்னு முடன்வந்த பிள்ளையுஞ் சுற்றமும் பேருலகின்
மன்னு நரைதிரை மூப்பினு நோயினு மாளக்கண்டுந்
துன்னு மறிவில ரான்மா விதுவென்று சொல்லுவரே. 37

ஊசு முடலி னுழல்கின்ற காற்றை யுணர்வென்பரே
யேசு முறக்கத் தியங்கியு மிங்கறி வேதுமற்று
வீசும் பிராணனை யான்மா வலவென்று வேதஞ்சொல்லும்
பேசு மனிதர் பொருளறி யாமற் பிதற்றுவரே. 38

தனக்கு மனது சலித்ததென் றேசொல்லித் தானிருந்து
முனக்கு விசாரமுண் டாகிற்சொல் லென்றிங் குவந்துநின்று
மெனக்கிங் கறியவொண் ணுதென்று சொல்கின்ற வேழைகடா
நினைக்கத் தனக்கறி வில்லா மனத்தை நிலையென்பரே. 39

இணங்கு நவகுண மெய்துமிப் புத்தியை யின்றுபுத்தர்
வணங்கும்விஞ் ஞான மயம்பொரு ளென்ற மதியின்மைபோற்
பிணங்கு நிலைவிட்டுக் கேளாய் மறையின்று பின்னமறக்
குணங்குறி யின்றி யிருக்குமான் மாவெனக் கூறிடுமே. 40

சேருஞ் சுகம்பொரு ளென்றனை துக்கஞ் செறியும்பொழு
தாருஞ் சுகதுக்கி யாகி யிடுநிலை யன்றிமறை
தேரு நிரதி சயானந்த மேசிதை வற்றபொருள்
கூரு நிலையை யறியா ரழிசுகங் கொள்ளுவரே. 41

திருக்கோ யிலுக்கல கிட்டு மெழுகிட்டுத் தீபமிட்டுப்
பருக்கோடு நந்த வனம்வைத்துப் பூக்கொய்து பாடியத்தால்
விருப்போடு சுற்றிய வேடம் பணிந்து வியன்சரியைக்
கிருப்பார்க்கு நற்சிவ லோகமென் றாகம மெண்ணிடுமே. 42

மிகநீறிட் டுப்பஞ்ச சுத்தி துவாரம் விசேடார்க்கிய
மகபூசை யாசன மஞ்சன மாவா கனமர்ச்சனை
தகவோமஞ் சோடசம் பஞ்சா வரணஞ்சண் டாதியுடன்
சுகபூசை செய்கிரி யைக்குச்சா மீபமுந் துன்னிடுமே. 43

குணம்புலன் மூன்றைந் தடக்கி யிருவளி கூடடைத்து
வணங்குஞ் சுழினை வழியேற்றி மன்னிய தாண்டவத்தி
லிணங்குஞ் சிலம்பொலி கேட்டுற் றவரெழில் வேட்டுவன்போ
லணைந்து சிவனுரு வாகுவர் யோக மடைந்தவரே. 44

சன்மார்க்க முற்றநல் வேதாக மங்களுஞ் சார்ந்துமயல்
பன்மார்க்க முற்ற சமயம்விட் டப்பதி பாசம் பசுத்
தன்மார்க்க முத்தியிற் றத்துவ நீங்கித் தனையறிந்த
நன்மார்க்கந் தான்சிவ னோடங் கழுந்துதன் ஞானமெண்ணே.

எண்ணிய வாத்ம தரிசன சுத்தி யிலாபமுங்கேள்
திண்ணிய பாச மொழித்துயிர் ஞானந் தெரிசித்திடு-
நண்ணிய விச்சா ஞானங் கிரியை நழுவல்சத்தி
புண்ணியன் றன்னுரு ஞேயத் தழுந்தல் புரோசனமே. 46

ஆத்மா வறிவொன் றறியா தெனினு மானருளா
லாத்மாப் பகுத்த கருந்தியுந் தன்னறி வாமென்றுறு
மாத்மா வறிவத னாலவ் வருளை யறிந்திடவே
யாத்மாவுந் தன்னை யறிந்திடுந் தானது வாகிநின்றே. 47

உன்னுநற் றத்துவ மான துணர்ந்தங் குணர்ந்தவற்றிற்
றன்னைச் செலுத்தித் தனையறி யிற்றன் மயமதனை
மன்னுமித் தத்துவ நீக்கிட ஞான மயமதுவாய்த்
துன்னு மதுசுத்த ஞானத்து ஞேயமுந் தோன்றிடுமே. 48

பெத்தரைப் பேய்மன்னப் பேய்வச மாவர்பெம் மானருளு
முத்தரை மேவச் சிவன்வச மாவ ரெனின் முதலா
மத்த னறிவெழுந் தைந்தொழி லாற்றி யவர்நடத்த
வொத்தெழ வேண்டுமென் றுயிது நன்றென் றுகந்தறியே. 49

செறிந்து சிவமாய் விடுவதன் றிச்சில தோன்றுமென்றிங்
கறைந்த தெனேவுட லாதி யொழித்துனை யாய்கைக்கினுஞ்
சிறந்து தொடரவிஞ் ஞானத்தி னுற்சிவந் தேறலலா
துறைந்தரன் பாத முறஞானந் தோற்றிய தொன்றறிதே. 50

ஆறாறு தத்துவந் தான்புண ராம லறிவழிக்க
வீரா மதீத மதின்மயங் காமல் விளங்குமருட்
பேறு லுனதிச்சை ஞானங் கிரியைதன் பின்னமதற்
றீருஞ் சிவமது வாய்நிற்றல் சாக்கிரா தீதமிதே. 51

தத்துவ மாறு றுடனே பொசிப்புக டானருந்த
லொத்துப் பகுத்த வறிவி லருணின் றுணர்த்துமென்றோர்
தத்துவ மிந்தப் பகல்விளக் காமருட் டாஞென்றவே
துய்த்திடு நற்சிவந் தன்னுடன் மேவத் துவக்கறுமே. 52

முன்செய்தவத்தினி லாசான்சொற் கேட்டம் மொழிகள்சிந்தித்
தஞ்சலி செய்தங் கருத்தமுற் றோர்ந்துண ரும்முயிருந்
தஞ்சமுற் றுவி யரனோ டுறநிட்டை சாருமுத
மின்செய லாலடைந் தோர்க டமக்கிங் கிதுமுத்தியே. 53

பன்னுமிப் பாச வறிவாற் பசுவறி வாலுமரன்
றன்னை யறியவொண் ணுதாகு ஞானத்தின் சார்வொளியின்
முன்னை யுறுஞ்சிற் றறிவொழித் தேமுனை ஞானமதாய்
மன்னுமன் பானுயர் கின்ற சிவத்தொன்றன் மாநிட்டையே. 54

இருந்த சடத்தைத் தகித்தே மனங்கொண் டுசாவியிட்டுத்
தெரிந்த மனத்தைத் தெளிவுறச் செய்து சிவபரமத்
திருந்திரங் காதெங்குந் தானாய் நிறைந்தங் கிமைப்பில்வந்த
மருந்தமு தந்தனை யுண்போர் மவுன மாபிதுவே. 55

தியானித் திடமனம் வேண்டும் பயனிலை சேர்மனம்போய்த்
தியானிப்ப னென்னின் மறைக்கு மிருளித் தியானத்திறற்
றியானிக்கொ ணாது தியானிக்க வென்னிற் செயனினதாக்
தியானிக்க வேண்டுவ தில்லைச் சிவனருட் சேர்ந்தவர்க்கே. 56

பெந்த மறுத்துப் பௌதிக முற்றுழல் பேதமிங்ஙன்
கந்த முறுங்கடம் போல்வினை சார்ந்திடுங் காணிங்கடி
யந்தமி லாவஞ் செழுத்தத னாலுற் றடவுச்சரி
யிந்தப் பிராரத்த வாதையின் றாகா மியமில்லையே. 57

அஞ்செழுத் தாலித் திரோத மலமு மருள்சிவஷ்குழ்
தஞ்ச முறுமு னடுநின் றுதோன் றிடுந் தன்மைத் தொன்மை
விஞ்ச வருமனத் தாலந்த வாசியின் மேவலுறத்
துஞ்சிப் பிறக்குந் துகண்மாற நீயுச் சரிதுணிந்தே. 58

தீதிற் றிரோத மலமிவை நீங்கச் சிவன்முன்னுற
வோதத் திரோத மலத்தை யறுத்தரு ளோங்கிடும்பின்
கோதற்ற வாசி யருளு மயக்கறக் கூடும்பற்றற்
றேதப் படாம லிறையொடொன் றாக்கு மெழுத்தஞ்சுமே. 59

சடமே லெடார்சஞ்சி தாதிகண் மூவிதத் தாலொழித்தே
யடரா மலாத்ம தரிசனத் தாலந்த ஞேயத்தருட்
டொடராலொடுங்குயிர்க் கின்பமொடுங்கிடத் தூங்குஞ்செவ்வே
தடையறத் தாங்குந் திரோதம தற்ற தபோதனரே. 60

குறிகுணங் காலந்திக் காசனங் கொள்கை குலநெறிசீர்
செறிவிர தந்தவஞ் சீலந் தியானஞ் செபமுமறுத்
தறவுமொ ழித்தற்செய் கைபொருந் தார்களடை யுஞ்செய்தி
யுறுதுயில் வோர்கைப் பொருள்போ லொழிந்தொழி யாதுற்ற
[தே. 61

குலங்குணங் காலந்திக் காசனங் கொள்கை குறிநெறிசீர்
நலந்தருஞ் சீலந் தவஞ்செபந் த்யானநன் ஞானமண்ணித்
தலந்தனில் வாழ்பவர் போலே துயில்பவர் தங்கள்கையிற்
புலன்கொள் பதார்த்த மெனவாய்மை யின்றிடப் போமற்றதே.

மண்முதல ஞன்குமவ் வானுற வானக வண்மை யைப்போ
லெண்ணு மெவற்றுளு ஞான நிரம்பி யிருக்குமிந்தக்
கண்ணினிற் கண்ட விடயத்தை யக்கண்ணிற் காணவருள்
புண்ணிய நாதன் றிருமேனி யாலயம் போய்ப்புகுமே 63

செறியும் பிருதிவி முன்முப்பத் தாறுஞ் செடமதென்றே
குறிதத் துவசுத்தி யேபூத சுத்தி குறித்திடக்கே
ளறிவலை யாத விடமாத்ம சுத்திமுன் ஞம்விடயந்
தொறுநய னத்தி லொருத்த திரவிய சுத்தியதே. 64

நகாரந் திரோத மகார மலமிவை நாட்டமறச்
சிகார மெனுஞ்சிவன் றன்னுடன் சேர்க்கச் செறிந்தருளாம்
வகாரம் யகார முயிர்சிவ மெய்த வரவழைத்து
விகாரங் கெடுக்குமிம் மந்திர சுத்திபண் மிக்கவனே. 65

பெற்றநற் பஞ்சாக் கரவழி யாற்சென்று பேதமற
வுற்ற வகண்ட பரிபூ ரணசிவ முள்ளடக்கிச்
செற்று விகார மறவுட் புறம்பற வேசிவத்திற்
றுற்றெழுந் தானந்தந் தானே சிவலிங்க சுத்தியதே. 66

திருவேடத் தோரையும் வானோர் தொழுஞ்சிவ லிங்கத்தையு
மரியோ டயனுக் கரிதாஞ் சிவமென் றடிவணங்கி
வரிவேல் விழிதர ளங்கள் சொரிந்திட வாய் குழறப்
பரிவோடு கண்டவர் ஞான முதத்தைப் பருகுவரே. 67

மயக்க முறுமெச் சமயிக டாமு மயங்குகின்ற
தியக்க மறத்தந்த மாவாக் கியமிங்ஙன் றீர்ந்தறிந்தா
லுயிர்க்கும் பரசிவன் றங்கட் கயிக்கிய முற்றிடவே
பயக்குநற் றத்தொ மசியெனும் வாக்கியம் பற்றினர்க்கே. 68

நிறைந்தே யிருந்த பரனை யதுவென நேர்ந்தபொருள்
செறிந்தே யிருக்கின்ற சீவனை நீயென்று தேரும்பொரு
ளறிந்தே யிரண்டி னயிக்கிய மான வரும்பொருடான்
பிறிந்தே யிராம லதுநீயிங் கானநற் பெற்றியதே. 69

அறியாத காரியோ பாதியைச் சீவ னடைந்துநின்று
செறிவான வாதனை நீக்க முதல்வனுஞ் சிற்சொருபம்
பிறியாமற் காட்டிய தத்தொ மசியைப் பிறித்திங்ஙனே
நெறியான தொந்தத் தசிவாக் கியத்தை நிறுத்தினனே. 70

ஆய்ந்த சவணுதி தன்னி லிருவகை யாகுமதிற்
றேய்ந்தநற் றாலநற் சூக்கும மென்றுந் தூலமிதில்
வாய்ந்த பலகலை யோதல் சவண மதித்தபொருள்
வேய்ந்த மனனநி தித்யா சனநிற்றன் மேவிடுமே. 71

நேர்ந்த சவணமா வாக்கியங் கேட்ட னிலைமைமன்ன
லார்ந்த வுயிர்பரற் கானவு பாதி யறச்சிறப்பான்
றோர்ந்துறு வார்நிதித் யாசனஞ் சற்குரு தீரவருள்
சார்ந்தனு பூதியி லுற்றே நிசியறச் சார்வரன்றே. 72

உன்னை மறைத்திடுங் காரிய மென்னு முபாதியதிங்
கென்னெனிற் றேயம்பி ராணம தொத்திடு மிந்திரிய
மன்னு மனம்புத்தி யாங்காரஞ் சித்தம் வளம்பெறவே
துன்னுமிவ் வேழென மாமறை சொல்லுந் தொகையறியே. 73

சேர்ந்த கருவி கரணமொ டேநின்ற சீர்நனவிற்
போந்திடும் வாதனை கொண்டு காணம் புரிதல்கனு
தேர்ந்திடும் வாதனை மாளல் சுழுத்தி திறமதொடே
சார்ந்தநல் விஸ்வன்மெய் தைசதன் ப்ராஞ்ஞன்றன் சார்பறியே

பன்னிய காரிய மேழி னுடலம் பகுத்துநின்று
துன்னி யிருந்ததை யானென்று சொல்லுதற் றொம்பதத்தின்
றன்னியல் பானவ சுத்த முடன்முதற் றுனலவென்
றுன்னி யிருந்த தனையறிந் தாற்சுத்த முற்றறியே. 75

பிறிவறி யாமலித் தேகத்தை நானென்ற பின்னமொடே
செறிவுறு கின்றது தொம்பத முக்கியந் தேர்சபள
நெறியுற நீக்கித் தனைக்காட் டிடக்கண்டு நின்றதுதா
னறியு மிலக்கிய மென்னு மருமறை யாய்ந்துகொள்ளே. 76

உற்றசர் வஞ்ஞத்வஞ் சர்வே சுரமு முகந்துநின்று
கற்றசர் வாந்தரி யாமியுஞ் சர்வகார ணத்வமும்
பற்றருஞ் சர்வ சிருட்டித் துவஞ்சர்வ பாலியத்தோ
டுற்றிடு சர்வசங் காரமிக் காரணோ பாதியதே. 77

மன்னுநற் சான்றது சாக்கிரந் தோன்றன் மழுங்குதருன்
றுன்னிய சொப்பனந் தோன்ற லைசவற றேல்சுழுத்தி
யுன்னும் விராட்டிங் கிரணிய கர்ப்ப னுகந்துமறை
பன்னுநல் லவ்யா கிருதந் தனையும் பரிந்தறியே. 78

செப்பிய காரண மேழையு நானென்று சேர்ந்ததனே
டொப்பற நின்றது தற்பறந் தன்னி லுறுமசுத்தங்
கப்பற வேழுங் கடந்தீசன் றன்னையுங் கண்டதுதான்
றப்பற வேபர சுத்தமென் றேமறை சாற்றியதே. 79

பிறிந்திடுங் காரணே பாதியை நானென்று பேதமுற்றே
நிறைந்திடுந் தற்பதந் தன்னிலிம் முக்கிய நேர்சபள
மறிந்திடு மொன்றிதை நீக்கிப் பரனை யலைவறவே
செறிந்திடக் காட்டக்கண் டுற்ற திலக்கியஞ் சேர்ந்தறியே. 80

நிறைந்த பரனென நின்றது சாக்கிர நீள்விசுவ
முறைந்தது நற்கன வுற்ற விரண்டி னுவலையற
விறந்த சுழுத்தி யிவற்றபி மானியு மிங்கியம்பிற்
சிறந்த சொலிதைப்ர சாபதி சாந்தனைச் சேர்ந்தறியே. 81

புரிந்த சகர்லக் கணைவிட்ட தேயென்று போற்றுமறை
பரிந்த சகர்லக் கணையே விடாத பரிசதொன்ற
விரிந்த சகர்லக் கணையது விட்டு விடாததுநீ
திருந்தும் படியினந் தீர வுரைப்பன் சிறந்திடவே. 82

நாடிலிம் மஞ்சது கூப்பிடு மென்ற நலமுங்கங்கை
யூடிய கோஷ மதுபோ லுடம்புற் றுரைக்கு மென்றுய்
கூடிய லக்கணை விட்டது மஞ்சாக் குரோசந்தியுற்
றோடிய கங்காயாங் கோஷப் பிரதி வசதியன்றே. 83

உன்னி நிறத்தை விடாத வசிப்புமுற் றோடியது
தன்னை விடாதுறு வெள்ளையும் போலத் தகுசிவப்பாற்
சென்னிவி டாத விலக்கணை யேசோணந் திட்டதிசேர்
மன்னுமச் சுவேதோ தாவதி தானதின் வாக்கியமே. 84

அத்தேசந் தன்னிலக் காலத்திற் கண்ட வனிவன்று
னித்தார மென்றுற்ற நேர்போலச் சீவன் பரனிலையை
யெத்தாலும் வேறற விட்டுவி டாத விலக்கணைதேர்ந்
தொத்தேசோ யந்தேவ தத்தனென் றேமறை யோதிடுமே. 85

பிறிதொன்று மின்றியிப் பின்னுமின் னம்மெனும் பேதமின்றிச்
சிறிது பெரிதின்றிச் சேதன சேதனஞ் செப்பலின்றி
யறிவயர் வின்றி யாதி நடுவின்றி யந்தமின்றிக்
'வறநின்ற பரமென மாமறை கூப்பிடுமே. 86

அடிமுடி யின்றி யழிவாக்க மின்றி யருவுருவாம்
வடிவொன்று மின்றி மனம்வாக்குக் காயம் வருத்தலின்றி
விடியிரு ளின்றி விளங்கி யிருக்கின்ற மெய்ப்பரத்தைக்
கடிய பிறப்பொழிப் பார்க்கன்றி யப்பொருள் காண்பரிதே. 86

காரண மற்ற பரிபூ ரணமுற்ற கண்ணனவாந்
தாரணி யேழிரண் டுண்டிங் கிருந்த தலங்கனவாம்
பூரணக் ராச மவிழ்ந்துப சாந்தம் பொருந்துமிட
மாரண மோதுஞ் சொருபஞ் சுழுத்திய தாகுமன்றே. 87

போக்கும் வரவு மிலாதநற் பூரண போதமது
வாக்கு மனதுக்கு மெட்டாத வின்ப வடிவறுதி
யாக்கும்ப்ர பஞ்சம தாகி யலாதவ கோசரத்தைக்
தேக்கும் படிசெலச் சேர விழுங்கிற்றென் செய்வதுவே. 88

ஊனில்லை யுற்ற கரணமு மில்லை யுகந்துநின்ற
நானில்லை நானிங் கிருந்தது மில்லை நலம்புரிந்த
தானில்லை தானுல குண்டது மில்லைநற் சாந்த மில்லைக்
கோனிங் கிருந்த படியே யிருந்த குறிப்பினர்க்கே. 89

ஊனுண்டிங் குற்ற கரணமு முண்டிங் குகந்துநின்ற
நானுண்டு நானிங் கிருந்தது முண்டு நலம்புரிந்த
தானுண்டு தானுல குண்டது முண்டுநற் சாந்தமுண்டு
கோனிங் கிருந்த படியே யிராத குறிப்பினர்க்கே. 90

## பிரமகீதை.

சின்மாத் திரமா யுள்ளவெறுஞ் சிவனே திகழ்வா னியாதுக்
குன்மாத் திரமும் வேறில்லை முற்று மவனே மொழிவுற்ற
நன்மாத்திரமா யான்மாவென் றுரைக்குநாமத் தினையுடையான்
றன்மாத் திரமே யாகியவத் தன்மை யான சங்கரன்றான். 1

வேறு.

துட்டமா மார்க்கநூலிற் றுவக்கிலாப் பெரியராகிச்
சிட்டாய்த் தீராகிச் சிவனரு ளுடையாரானோர்
கட்டமாம் பிறவிதீரக் காதலால் வேதஞ்சொல்லப்
பட்டதே செய்யாநிற்பார் பரமமாம் பதத்தையுன்னி. 2

வே று.

மையலொன் றறவிவ் வறிவினை யறியின் மானுடன் மூத் தனு மன்றித், துய்யகன் மத்தான் மைந்தரான் மற்றோர் பொரு ளினு னுற்பவந் துடையான், வையகம் பிரம வேதனந் தன்னின் மாத்திரத் தாற்பிர மந்தா, னையமொன் றறவே யானெ மூக்கா லாணையிட்ட றைந்தன னலரோன். 3

வே று.

யாதொன் றின்பா லெங்குங் கோசரமா மிந்த மனஞ்செல் லா, தியாதொன் றின்பாற் செவிமுத லிந்தியங்கள் விடயங்க ளுஞ்செல்லா, தோதுஞ் சச்சி தானந்த வொன்றும் பிரம மது தன்னைப், பேத மறத்தன் வடிவாகப் பெற்று னச்ச மற்றானல்.

வே று.

தனக்குமெய்ப் பிரமம் விடயமா யிராமற் றானதன் சாட் சியா யிராமற், றனிற்பிறி தறத்தா னாகவப் பரத்தை யறிந்தவன் றானறிந் தவனாந், தனிற்பிரிந் தறியா தவனறிந் தவனு மறிந்த வன் றானறிந் திலனு, முனற்கரும் பிரம முணார்ந்தவர்க் குணர் வன் றுணர்வுறார் தமக்குணர்ந் ததுவாம். 5

வே று.

தர்க்கமானந் தானொழியத் தானுயுள்ள பேரொளியை
மிக்ககருத்தா வாகுதலும் விடயமாகு தலுமொழியப்
பொக்கமறவே றறக்கண்ட பொழுதுபுரைதீர் பொருளான
தக்கபிரம தத்துவத்தைக் கண்டானுகுந் தானுக. 6

வே று.

வேறிலத் துவித மென்பது மொளியில் வேறிலா மையினுள தொளியே, கூறலற் றிடலா லிப்பொருள் கூடுங் கூடுவ தளவை யி னுனு, மூறிறர்க் கத்தான் மறைகளாற் குரவ னுபதேசத் தா லிறை யருளா, லீறின்மா தவத்தாற் காலபா கத்தா லப்பொ ருள் புருடனுக் கெய்தும். 7

வே று.

இந்த வாக்கையி லியம்பிய பரம்பொரு ளறியி
லந்த மானுடன் மெய்யதா யபேதமா யறிந்த

தொந்த மாம்பர மடைந்திடுந் தோன்றிடா தாகிற்
பந்த மாம்பவக் கடற்படும் பரகதி யுடையான். 8

வேறு.

தங்களாக் கையிற் சகலயாக் கையினிலுந் தத்துவ மது தானே, யெங்கு மொன்றெனக் காண்பவர் யாவ ரிங்கிறந் திடார் பிறவாராற், பங்குபட் டறிந்தவ னறியாதவன் பந்தன் முத்தர்க ளொன்றே, யிங் கொருத்தனே நிகழ்பவன் சேதன னிவை கன வியல்பொக்கும். 9

தன்னில் வேறிலா மையிற்பர முத்தியிற் றனதுபுத் தியினு லே,யன்னி யங்களாய்த் தோன்றுமா பாசர்க்கும் பரம்பத மறி கின்றான், முன்ன மெப்படி மூடமாந் திசையிற் றன்மோகத்தா லெலாம் பெத்த, மென்ன வுற்றனன் முத்தியி லப்பரி சிருக்கும தியல்பேயாம். 10

தத்துவ ஞானி காணினுஞ் சகத்தைக் கண்டிலன் றத்வமே கண்டான், வத்துவே யாக வல்லவே யாக மற்றொரு பொருளிலை யானு, லித்தில்வே றொன்றை யெங்ஙனங் காண்பா னியாதொரு படிசகத் தாகத், தொத்தர வில்லாத் தோற்றமெப் படியோ வப் படி நிகழ்வது பரந்தான். 11

எப்படித் தோற்ற மப்படி யாகி யிலங்குவ துண்மையே யோகிக், கப்படி யுண்மை யாகவே தெளிவுற் றறிவதே யான்ம வே தனந்தான், செப்புநா மத்தா லுண்மையா லெல்லாத் திகழ் வுமா தேவனே யாகி, யிப்படி யறிந்த ஞானிகைக் கொள்வா னெத்தையன் றெனவெத்தை விடுவான். 12

அன்னிய மாக விடுதல்பற் றுதலுண் டாகுமேற் பூரணனு கப், பன்னிய பெருமைக் கானியா மந்தப் பரமனா தியல் பழுது றுதே, தன்னில்வே றின்மை யான்மகத் துவமுந் தன்மயமா தன் மதன் மிகளாம், பின்னவா சகமு மிப்பரம் பொருளிற் பேதமுண் டாகிலே பிறக்கும். 13

வேறு.

பேதமும் பேதந்தானும் பேதாபே தமும்வே றல்ல
வோதிலப் பாத்துக்கென் றுமுள்ள து பிரமந் தானே
தீதாக நன்றேயாகச் சிவனலா தில்லைஞானி
யேதாகு மென்றுகொள்வா னேதாகா தென் றுநீப்பான். 14

வே று.

எப்பொருளு மாயையினு லெனச்சிலவ ரியம்புவர்கள்
மெய்ப்பரமன் றனையொழிய வேறொருமா யையுமில்லை
யொப்பரிய பரனொழிய வொருமாயை யுண்டாகி
லப்பரமன் றன்பெருமைக் கதுநேரே யழிவன்றோ. 15

பெருமையினிற் சங்கோசம் பிறவாது பிறக்குமெனி
லருமறைவாக் கியம்பொய்யா மப்பிரமா ணமுமாகும்
பொருவில்பரா னந்தபரி பூரணமெய்ச் சுடராகுந்
தெரிவருமா தேவனலாற் றிகழ்வதொரு சிறிதுமில்லை. 16

வே று.

சம்புவி னருளா லன்றிமா லியானுஞ் சகலதே வதைகளு மந்த, வும்பனை யுணரோ மருள்பெறும் பொருட்டே யோதிய யாவையு முளதாஞ், செம்பொரு டன்னை யருளினு லொழியத் தெரிவினுற் றெளிகுவராக, நம்புமா னிடவர் கையினு ஞற்ற மறிவரோ நாசியாலொழிய. 17

வே று.

செப்பிய விந்த வருள்சிவ ஞானுஞ் சிவையினு லுஞ்செயப் படுவ, தப்பெருந் தன்மை யரியினு லென்னு லொருவரா லளிக்க லாகாதே, யிப்பவந் தனிலே முத்தியிச் சிப்பா னியம்புமெத் தேவையும் விட்டுச், சிற்பர ஞகுஞ் சிவனொரு வனையே சரணெனச் சென்றுசேர் வுறுவான். 18

வே று.

சாக்கியா மெல்லாப் பொருட்குமீ சனையெப் பொருள்களுஞ் சாக்கிமாத் திரமா, நோக்கினு னியாவ னேக்கதனலே நோக்கலா மிதுமறை யந்த, நீக்கிலாப் பரமாத் துவிதநிட் டையா மிந்நில மொன்றேமுடி விதிற்பேத, மாக்கினு னறிவா லறிவிலா தமையா லவனலா தார்பசு வாவார். 19

வே று.

தொல்லைநல் வினையாற் சுருதிநன் மிருதி சொன்னவா றுணிந்தவத் தூயோ, ரொல்லையிற் பரமாத் துவிதமே தனத்தை யுள்ளவா றுணரவே யுணர்வர், நல்லவிப் பரமாத் துவிதஞா னி

யைநா ராயண னுருத் திரனு, மெல்லையி லெல்லாத் தேவரும் பூசித்தேத்தவும் படிமிவ ணென்றும். 20

சதுமறை யொழிந்த வாதனை பொல்லாத் தர்க்கவா தனை யுல கத்தின், மதமுறு சமய வாதனை தார மக்கள்சுற் றத்தின் வாதனையு, மிதமுறும் பொருளின் வாதனை தேகேந் தியமனம் புத்திநற் பிராணன், முதலவா தனையும் வித்தைவா தனையு முடி வில்போ கத்தின்வா தனையும். 21

ஏறுடைச் சிவனைத் திருநெடு மாலை யிகழும்வா தனையும் வேதத்திற், கூறிடு ஞான சாதன மாகக் கொளுமுத் தூளனபுண் டரத்தை, மாறுட னிகழும் வாதனை பாவ வாதனை யாவுமா னி டர்க்கு, வேறடும் பரமாத் துவிதஞா னத்தை விலக்கிடும் விரோ தி விண்ணவரே. 22

வே று.

ஆதலால் வீடதனி லாசையுள்ளோ னதின்மிகவுந் தாழ் பரிய ஞகிமுன்ன, மோதுவா தனைகளெல்லா மிகந்தெப் போது முற்றபர மாத்துவித ஞானியாவன், வேதமே தாந்தங்க ளுரைக் கப்பட்ட மேலான வத்துவித ஞானமாகு, நாதனும் பிரமத்தை நவிலலாமோ நாமெனத் திருப்பதல்லா ஞகத்தீரே. 23

வே று.

ஊனு திகளா யதிரட் சியிலே யொளியா வணநா னெனதென்று கொடே, நானே நுகர்வே னவையென் றுணரு நானு வறிவா னவைவிட் டிவையிற், றானே முதல்கண் டிவையித் தனையிற் சலி யா வறிவா கியதன் மையிலே, நானே யதுவென் றிடுநல் லறி வோர் நாடார் பிறிதென் பதுநா டொறுமே. 24

வே று.

ஆதலா லறிவுள்ளோர்க ளழிந்திடு முடலேயாதி
சேர்தரு புத்திதன்னைச் செலவிட்டுத் தெளியும்வண்ணந்
தீதிலா தெவையுங்காணுந் திகழ்தரு சித்தின்கண்ணே
யேதிலா மதியைநானென் றிடுமின்க ளிசைந்தெப்போதும். 25

பாராத படியினுலே பரத்தினில் வேறுதாக
நேராயொன் றுதித்தோன்று நெறிசொலில் வார்த்தையேயோ
மேராயோர் பயனுமில்லஞ் ஞானமு மெக்காலத்தும்
போரா து விளங்குகின்ற பிரமமே பிறிதொன் றில்லை. 26

வே று.

சாதனமாகுஞ் சதுட்டையங்கள் சமைந்தவந்தத் தன்மையர்க்கு
நீதியாக வருமறைதா னின்றேயிவர்க ளறியும்வணம்
பூதமாயும் புவனங்கள் பிறவுமாகி யிருந்ததுவு
மேதமில்லா தொன்றாய பரமேயென்றே யியம்பினதால் 27

எப்படிப் புத்திநானு வுருவமா யிலங்குந்தன்னு
ளப்படி யறிவேயாக வனுபவித் திடுதலேயாஞ்
செப்பிட வரிதாயுள்ள திகழொளி யாகுந்தன்னை
மெய்ப்பட வேறொன்றின்றி விளைத்திடும் பூசைதானே. 28

போதம தாகித்தோன்றும் பொருளெலாஞ் சிவனேயாக
வேதமி லறிவாற்காண்பா னெவனவ னுண்மைகண்டான்
தீதிலாச் சிவனன்றென்று சிறிதொன்றைச் சிந்தைசெய்வோன்
பேதமா மருளின்மேய பித்தனென் றறியலாவான். 29

வே று.

எல்லாமுஞ் சிவரூப மாகத்தோன்று மியாவனுக்குத் தன்னியல்பா லவனேமிக்க, சொல்லானு மளப்பரியா னவன்றனிச்சை சுருதியினுற் றுணிந்துரைத்த சரிதைதானும், பல்லோரு மவனையருச் சனைசெய்தேத்தப் பரரூபந் தனக்கேநற் பூசையாகு, நில்லாத வவிச்சையினை நீங்கியுள்ள நிற்குணனு மிவனுகு நினையுங்காலே. 30

வே று.

எப்பொருள் களுந்தானுகி யிலங்கிடு மறிவாமீச
னப்படி விளங்குகின்ற தறிதலே யவன்றனக்கு
மெய்ப்படு பூசைவேறோர் செயலினு லன்றிமெய்யே
யிப்படி ஞானந்தன்னு லிறைஞ்சிடப் படுவானீசன். 31

வே று.

ஆன தாகாத் தெய்வமதே யடையும் விடய மிந்தியமாய்த்
தானுமாகித் தனைத் தன்னுற் றானே நுகருந் தன்மையது
ஊன மாகு ஞாதாதி யொழிந்தே யுள்ள வறிவதனுற்
றானே யாகக் கண்டிடுதல் சுத்தா யுள்ள பூசையதே. 32

வே று.

ஈசன்ற னருளினுலு மிசைந்தவா தரத்தினுலு
மாசது தீர்தலாலு மருள்பவன் பார்வையாலும்
பேசிடும் பாவகன்ம புண்ணிய மிரண்டுமொத்தாற்
பாசமாம் படலம்போக்கும் பரம்பொரு டிகழுமன்றே. 33

வே று.

சிவனே யுள்ளான் பிறிதில்லை யென்று திரமா யறிவதுவே
பவமே யொழிக்கும் பரமார்த்தம் பகரு நெறிதா னதுவாகும்
அவமே யிதனை யொழிந்துளதா மவைதா னிதனை யடைதற்குத்
தவமே முதலாஞ் சரிதைகளைச் சாற்றுகின்ற தன்மையவே. 34

உலக மியாவு முயிர்பலவு நானே சிறிதும் வேறில்லை
யலகி லறிவா லாய்ந்திடினு மாயா விடத்து மருத்தமிதே
திலக மாய மறைதுணிந்து திகழ்த்தும் பொருளு மிதுவென்ற
னிலகுந் தன்மை யனுபவமு மிதிலோ ரைய முளதன்றால். 35

அப்பா லாகி யெவர்கட்கு மதுவே யெனநிற் கின்றேனு
னிப்பா லாகிக் காண்பொருள்க ளெல்லாமாகி யுள்ளேனுன்
மெய்ப்பா லுயிர்க ளியாவையுமாய் விளங்கி மிகவு நின்றேனு
னெப்பே யிலையா முபாதிபல வாகி யெங்கு முள்ளேனுன். 36

பூதமாகிப் பொருள் பலவாய்ப் புணர்ந்து நின்றுங் காப்பவனுன்
பேதமாகிப் பேதித்தும் பேதமில்லாப் பெற்றிய னுன்
சோதியாகு மிரவி மதி யாகித் தோன்று கின்றேனுன்
வேத மாகி யுள்ளேனுன் விளங்கும் புராண மாவேனுன். 37

கூறு மோசை பலவவைநா னவற்றிற் குலவும் பொருளவைநா
னுறு சமய மாயவற்றி னருத்தமாகி நிற்பே னுன்
வேறென் றறியும் பொருள்களுமாய் வேருய் விளங்கு கின்றேனு
னுறஞ் சிந்தை யழிந்தொன்ரு மறிவா லறியு மறிவுநான். 38

தோன்று கின்ற வொளியவைநான் றொடர்ந்தே செறியு மிருளதுநா, னுன்றங் கமைந்தோ ருளமேவி யறிவாய் நின்றே யறிபவனு, னுன்றும் பொருள்கண் மேலோடு முணர்வா வதுநா னுணர்பவனுன், சான்றங் காகி யெப்பொருட்குஞ் சலியா தென்று நிற்பவனுன். 39

பாடு மிசையா யவ்விசையின் பயனு யறிந்து நிற்பவனுன்
கூடுங் கந்தம் பலவாயுங் கொள்வானுயு முள்ளேனுன்
காடுங் கல்லு மலைபலவுங் கடமும் படமு மாவேனு
னீடும் பொருளா யெவ்விடத்து நிறைந்த வொளியாய் நிகழ்பவ
னுன். 40

அளவை யோடங் கறிவானு மறியும் பொருளு மாவேனு
னுளவஞ் ஞான ஞானமென வுரைக்கு முண்மைப் பொருளவை
விளையுங் கன்ம சுகதுக்க மேவுங் கால மாவேனு [நான்
னுளம தார வுணர்கின்ற சுவையா ருகி யுள்ளேனுன். 41

தேவ ரெல்லா மாவேனுன் றிகழு நரரா யுள்ளேனுன்
யாவ ரேனுங் கருவாகி யிடுதற் கிசைந்தே யிருப்பவனுன்
பாவ பேத புண்ணியங்கள் பலன்கள் சுவர்க்க மாவேனுன்
மேவி யடையும் புத்தியுநான் வீழு நிரய மாவேனுன். 42

கரணம் பன்னுன் காவேனுன் கரணி யாய காரணனுன்
சரணந் தருதே சிகனுகித் தன்னு ளடங்குந் தன்மையனுன்
புரணந் திகழ்பே ரொளியோவாப் போத மாய பூரணனுன்
கரணங் கடந்தவெனையென் றுங் காண்பார் காணப் படுவேனுன்.

நாத மாகி மந்திரங்க ளுரு வாகி யுள்ளேனுன்
பேத மாகி நினைந்திருந்து பேணுந் தியான மாவேனு
னேத லாகு மவத்தைபல வொன்று யறிவா யுள்ளேனு
னேத மில்லா வெப்பொருட்கு முள்ளே யிலங்கி யிடுபவனுன். 44

வேறு.

யாதொன் றருத்த முண்டில்லை யென்னு முறைக ளிரண்டி
னுக்கும், யாதொன் றருத்தந் தோன்றுமென் றுந் தோன்று தெ
ன்றுஞ் சொல்லுதற்குந், தீதொன் றின்றி யிவையனைத்துந் திக
ழு மென்ற னுருவென்றே, யோது மைய மோரிடத்து முள தன்
றுண்மை யுரைக்குங்கால். 45

வேறு.

அகமென வறியப்பட்டு நிற்கின்ற பொருளுமாகித்
தகைமையி விதமென் றுன்னத் தக்கவிப் பொருளுமாகிச்
சுகமுடைச் சற்சித்தாமென் னுருவமே தோன்றுமென்று
மிகவுரை செய்யலுற்றுன் வேறுரு விலாதவண்ணம். 46

வே று.

நானே முழுது மெனைமொழிய நாடிற் சிறிதும் வேறில்லை
யான பொருளை யருமறைதா னறையும் படியா னதனாலும்
யானு மிசைத்த படியானு மிதுவே திடமா யுளபொருடா
னான மின்றி நான்முகனு முரைத்த துங்கட் குண்மையதே. **47**

வே று.

இப்பொருளையப் பட்டோ ரிறப்பர்கள் கணத்தின் மெய்யே
மெய்ப்படு பொருளை யென்றாம் விதிதனிச் சயம தாகும்
இப்பொருளைய மின்றி யறிந்தவன் பவபா சத்தை
மெய்ப்பட வொழிந்து மேலா மொளியினை யடையு மன்றே. **48**

தன்னிலே யாக்கப் பட்ட கனவினி லுலக மெல்லாந்
தன்னுணர் நனவ தாகத் தனிலவை யடங்கு மாபோற்
றன்னிலே தோன்று மெல்லாப் பொருள்களுந் தானே யானாற்
றன்னிலே தன்னிற் றானே யாமதே தனில்லை றின்றே. 49

வே று.

புகல நின்றிடு பிரம புரமெனும் பதியதனில்
தகர புண்டரிக மெனுமக மிலங்கிய தகர
ககன முண்டது மறைகள் கருதநின் றுளபிரம
மிகவி ரும்புவர் பிறவி விடவிரைந் துளவிமலர். 50

வே று.

சுழுத்தியத னிற்றுயர் துவக்குமுட றன்னின்
றெழுப்பியுள தன்வடிவி னுவிறைமை யெய்துற்
றழுத்தமுற யாவனது வாகுமவ னெங்கு
முழுத்தியுள தற்பரம மாகிமுடி வுற்றான். 51

வே று.

செப்பிய பொருள்க ளியாவையுஞ் சென்று சேர்வுறு வகை நின்ற சேது, வப்படி பட்டா லத்தனு மனந்த னருந்துய ருற்று முற் றிலனு, மிப்படி யிதயா காசமென் றியம்பு மீசனில் வுடம் பில் வேறாகிக், கப்புறு நனவு கனவுறக் கத்தைக் கண்டவை கடந்துநிற் கின்றான். 52

உடம்புட னிருந்தே யுடம்பிலா வுண்மை யுணர்ந்தவ னுள த்தொருக் காலும், விடம்படு காம வெகுளிமே வாது விளம்பி டும் பொருளெலாம் விளக்கு, மிடம்படு மிதயா காசமற் றிதுவே யிறப்பொடு பிறப்பில தென்றுந், திடம்படும் பிரம மாவது மான்மா வாவதுந் தேகிகட் கெல்லாம். 53

வே று.

சிவனே யகமென வேதிகழ் வுறுவா னிதமெனவின்
றவனே யுடலது மாய்நிகழ் பவன்வே றிலையானுற்
பவமே ததுவிட லேதொரு படியா யுளபரனே
யிவனே சுமுமென வோர்பொழு திறவா ரவர்பிறவார். 54

வே று.

திண்ணி தாகவித யத்தை மீளும்வகை செய்து சிந்தனை யெலாமறப், பண்ணினு லறிவி லாமை யென்றுவரு பாவ கத்தை யு மொழித்திடக், கண்ணதாய் நிகழு மக்க ணன்றி யெதிர் கா ணுைது பிறி தென்னவே, நுண்ணி தானபொருள் சொல்லி னுனதுமெய் நோக்கினு லடைய வாக்கினுன். 55

வே று.

எப்பொருள் களுக்குந் தோற்றமு நிலையு மிறுதியுந் தன்க ணே யாகி, யொப்பிட வொன்று மின்றியே யென்று முள்ளதா யுரையுணர் விறந்த, வப்பொரு ளோரே யறிந்தபோ தெல்லாப் பொருள்களு மறிந்ததா மந்த, மெய்ப்பொரு டானே யெப்பொருள் களுமாய் விளங்கலால் வேறிலா மையினுல். 56

காணவோ ருருவு மின்றியே தனக்கோர் கண்செவி மூக்கு வா யின்றிப், பாணிபா தங்க ளின்றிநுண் ணியதாய்ப் பற்றிய பொருளெலாங் கடந்து, தானுவா யெல்லாந் தோன்றுதற் கிட மாந் தத்துவந் தன்னைத் தன்னுலே, யாணியா யறியு மறிவது விச்சை யாவது பிறிதெலா மவிச்சை. 57

அக்கர மாகி மெய்ம்மையா யுள்ள வப்பொரு ளறிந்தபோ தல் லா, லெக்கரு மங்க ளாலும்வீ டில்லை யாகமா திகளியற் றுங் காற், றக்கர மாகி யனித்த மாய்ப் பேறுஞ் சுருக்கமா யிருக்க மற் றிவற்றைத், திக்கறி யாதே முயல்பவர் முத்தி செறிந்திடா ரமே செறிவார். 58

வேறு.

சுருதியு மிருதியுஞ் சொன்ன வாறுமின்
றிருமையு மனித்தமென் றேதும் விட்டுநற்
குருவினை வழிபடிற் கோதி லாவவ
னருளிடு மழிவற நின்ற வப்பொருள். 59

வேறு.

அங்கிதலை வாய்விவித மானமறை பானு
திங்கள்விழி யெண்டிசைக ளுஞ்செவிகள் வாயு
தங்குமுயிர் தன்னிதய மேசகல முங்கா
லிங்கவனி சங்கரனி ருக்கும்படி வீதால். 60

அர்க்கன்மதி யங்கிமழை யாதிமறை நாலு
மிக்குமிகு யாகவிவி தங்களிய மானர்
தக்கணை சுராசுரர்ம னித்தர்பசு சாதி
யெக்கிருமி கீடமு மெழுஞ்சிவ னிடத்தே. 61

வேறு.

அக்க ரந்தனை யிக்கு ரம்பையி லறியு மாகில விச்சையா
மிக்கி ரந்தி நசிக்கு மீசனை யெய்தலா மமு தென்பதும்
புக்கி ருந்தபி ராணனும் மன மாவதும் பர போதமே
மிக்கி ருந்த வுளத்தி னோர்விர காலி துள்புக மேவுவார். 62

வேறு.

அரணியோ டுத்த ராரணி யுயிரு மமலவோங் காரமு மாக்கிக், கரணிய தியான மாமத னத்தாற் காணுறு மொளியினைக் காண்பர், புரணநல் லொளியிற் பூதபௌ திகங்கள் பொருந்துயிர் புலன்கண் மற்றெல்லா, மரணுறக் கோவை யாகியே கிடக்கு மதனையே யறிகுவ னறிஞன். 63

பரம்பொரு ளினையே பாடுவான் வேறு பகருவா னலன்பருகமிர்த, வரம்பது வாகு மண்ணின்மற் றிந்த மகிமையே யுள்ளதிப் பிரம, புரந்தனி லிதயா காசமா நிகழ்ந்தெப் பொருள்களு மறிந்தெலாம் வல்ல, வரன்றனை வெறுநல் லானந்த வடிவா யறிந்தவர் மறுபிறப் பறுவார். 64

இதயமா மிந்த விமலகோ சத்தே விரசமாய் விளங்குநற் பிரமந், துதையமே விடுமச் சோதியே யெல்லாச் சோதிக்குஞ் சோதியா வதுவு, மிதயமேகிகழு மிதனைமெய் கண்ட விடத்தின் மற் றிதயநோ யெல்லாஞ், சிதையுமை யுறவுந் தீருமெவ் வினை யுஞ் செய்யினுஞ் செய்தில னுமால். 65

வே று.

இலங்கிரவி யிந்துவன லாகைமி னெல்லா
நலம்பெற விளங்குவது ஞானவொளி கொண்டே
புலம்படும னைத்தையும் விளக்குபர போதந்
துலங்குவது தன்னுடைய சோதியத னாலே. 66

ஓரொளி விளங்குகில தூதை யுலவாத
சீரொளியில் வேறுசில தேவர்திகழ் வாரோ
பார்வெளியு மெப்பொருள்க ளுந்திசைகள் பத்தும்
பேரொளி பெறத்திகழ்ப ரப்பிரம மேயாம். 67

வே று.

தற்பர னுருவஞ் சித்தே தற்பர னிடையேயக்
கற்பித சீவன் முனும தானக் காலந்தச்
சிற்பொரு ளொன்றே வேறெனின் மற்றது சித்தாமோ
வற்பமும் வேறு காதுசி தாகா ரத்தாலே. 68

வே று.

மறையாலு மிருதிசொலும் வழியாலும் வருவதவி
ரிறையார்த மருளில்வரு வதுவேக மெனுமுணர்வு
பிறிவான தறுமுணர்வு பெறுமாகி லொருபொழுது
மிறவாத சிவமடையு மிடர்மோக மெவையுமிலன். 69

வே று.

பாவபுண் ணியங்க ளிரண்டையு முதறிப் பற்றுத லொன் றுமே யின்றி, யாவையுந் தானுய் வேறிலா தவனைப் பெய்துமற் றிப்பொரு ளறிந்தான், சீவனும் பரனுஞ் சின்மயமாகு மாதலா லொப்பெனச் செப்பன், மேவியொன் றாகி விடுதலே யன்றி வே றுவே றுகுமோ வீடு. 70

எப்படி யாலும் பண்டுமிப் போது மெப்பொழு துஞ்சிவ சீவர்க், கொப்புள தாகு முருவமொன் றுன வுண்மையால் வேறுரு தொன்றே, யப்படி யுள்ள சிவன் பிறர்போல வவிச்சையா னிக ழுமவ் வவிச்சை, மெய்ப்பா விச்சை யானசித் தொன்றாய் விடுத லொப் படைதல்வே றன்றே. 71

வே று.

சிவன் றன்னுரு வான சிவத்தைத் தெளியிற்றான்
மேவும் பலதொழி றன்னிடை யாக விளையாடும்
யாவுந் தன்னுரு வாகி நிகழ்ந்தா லிவன்முத்த
னுவன் பண்டவ னுகா மையின்முத் தனுமாகான். 72

வே று.

திரமன் னியநற் சத்தியத்தின் செய்கையா லு மனமென்று
மொருமைப் படுமன மாதவத்தி னுயர்விறு னூனமிலாப்
பிரமசாரிய முதலாகப் பேசுங் கருமந் தன்னுலும்
பரமாம்வேத நெறியாலு மடையப் படுமிப் பரவித்தை. 73

வே று.

வாக்கினு லுரைக்கு மாறிலாப் பொருளை மற்றுள புலன்க ளொன் றுமேல, நோக்குமா றென்னுங் கருமமொன் றாலு நுவற வத் தாலுநன் னுறே, தாக்கிலா வந்தக் கரணமெ துடையார் தத்துவ ஞானநல விழியாற், போக்கிலா தெங்கு மாகிய பொருளைப் புரையறக் காண்பரெப் பொழுதும். 74

வே று.

எத்தைப் பெறமுயல் கின்று ன துபெறு கின்று னுதலி னெப் போது, நித்தத துவமனு மொன்றைப் பெறுநினை கின்று னருட னி னேர்பாடா, மத்தத் துவமுனி தன்னைப் பொருளத னுலுந் தனதுட லாலுந்தான், பத்திப் படுமன னுலச் சனைநனி பண் ணக் கடவர்க டிருவேண்டின். 75

வே று.

எண்ணிலாக் கல்வியா லு மிலங்கிய கேள்வியா லுந்
திண்ணிதா மதியினுலுந் தெளியவா ராதுநீர
நண்ணிய ஞானிதானே நயந்தன்பு செய்யில் ஞானக்
கண்ணினுற் காணலாகுங் கரத்திலா மலகம்போல. 76

அயர்ச்சிசேர் தவத்தினாலு மன்னிய லிங்கத்தாலு
மூயற்சிசேர் பிரமாதத்தான் மொய்ம்பிலாத் தன்மையானுஞ்
செயப்படா வுண்மைஞானந் தெள்ளுமா மதியாற்கால
வயத்தினாற் சத்துவத்தின் வலியினா லன்றிவாரா. 77

முத்தியின் விருப்பத்தாலு முதலவ னற்பாதத்திற்
பத்தியி னாலுமற்றப் பரனையே பாவிக்கின்ற
நித்தமாந் தியானத்தாலு நிரந்தர யோகத்தாலுஞ்
சித்தியா மிதுசித்திக்கும் வினையினாற் சித்தியாதால். 78

வேறு.

திரமாம ருத்தத்தி னுண்மைந்த ராலுஞ் சேராத வற்றின்றி யாகத்தி னாலே, யுரமான வேதாந்த மாவாக்கி யத்தா லுற்ப ன்ன மாம்விச்சை யாநிச் சயத்தாற், பரமான வஞ்ஞான வந்த த்தி லேயப் படிஞான வுபதேச மொன்றுமே மேயிப், புரமாமு டம்புக்கு ளேயந்த முத்திப் பொருள்கண்டு வீடெய்து வாரிப்பு விக்கே. 79

வேறு.

தக்கஞா னத்தைத் தான்பெறற் பொருட்டுத் தனியிடந் தனையடைந் திதய, துக்கம்ம வாமற் சுகாசனத் திருந்து தோட லை கழுத்துடம் பினைவநே, ரொக்குமா றிருத்திப் பூதிகொண் டிந்த வுடம்பையுத் தூளனம் பண்ணி, மிக்கவாய் வருமிந் திரியங் களை யெல்லாம் விடயமே லெழாவகை விலக்கி. 80

பத்தியாற் குரவன் பதம்பணிந் திதய பங்கயந் தனைநினைந் ததிலே, நித்தமா யொருவ ரானினைப் பரிதாய் நிமலமா யெங்க ணு நிறைந்து, சுத்தமாய்ச் சாந்த மாயனைத் துலகுந் தோற்று தற் கியோனியாய்ச் சுபாவ, சித்தமா யமுதா யருவமா யொன் றாய்ச் சிற்சதா னந்தமாய்ச் சிவமாய். 81

உரியநால் வேதத் தோமெனும் பொருளா யுள்ளதா யுள்ள வெப் பொருட்குங், கரியதாய் நின்ற வொன்றினைக் கால கண்ட மூங் கண்ணொரு மூன்றும், பிரிவிலா மங்கை பாகமு மாகப் பே ணுநற் பாவனை பெறுவா, னரியதா யருளி னால்வரும் விச்சை யதனினா லதனையே யடையும். 82

வேறு.

ஒழிந்ததொரு பொருளில்லை யுள்ளதெலா மவனேமுன்
கழிந்தபொருண் மேலும்வரக் கடவபொரு டானுமவன்
மொழிந்ததனிப் பரவிச்சை யவிச்சையெனு முற்றுமவ
னிழிந்தபிறப் பறவேறோர் வழியில்லை யிவனொழிய. 83

வேறு.

இன்னதெனுமற் றன்னிடைக் கண்டு தன்னையெப் பொருளினுங் காணு, மந்நிலை யடைந்தா லவன்பிர மத்தை யடையும் வேறொன்றினு லடையான், றன்னையு மோங்கா ரத்தையு மரணியாக்கியே தத்துவ ஞான, வன்னியைத் தியான மதனஞ்செய் தெழுப்பு மதியினுர் வன்பவஞ் சேரார். 84

வேதிய ரரசர் விண்ணவர் மிகவும் விரும்பிய வுலகுகள் சகல, பூதமும் போக போக்கிய மாகும் பொருள்களும் பொருள்களின் பொருட்டுக், காதல்செய் கின்ற னல்லனெப் படியுங் காதல்செய் வதுதனைக் காமித், தாதலால் விருப்பந் தன்னொடா தலிற்ற னிரதிச யானந்த மாகும். 85

யார்க்கு மின்பம்போல் விரும்பிடப் படலா வின்பமே யிறைவடி வின்பந், தூக்கிமெய் யின்பம் பெறநினைப் பவராற் றுயர்மிகுந் தொழிலெலாம் விட்டுப், பார்க்கவுங் கேட்க நினைக்கவுந் தியானம் பண்ணவும் படுவனிப் பரம, னூக்கியங் கவனை யறியவேயெல்லா மறிந்ததா மொழியவின் மையினுல். 86

வேறு.

மறையோ ரரசர் முதலான வன்னுச் சிரம மற்றுள்ள
பிறிவாய் நிகழ்கின் றவெலாம் பிரம மொன்று மேபிறிதா
வறியா நிற்கு மறிவென்று மல்லற் பிறப்பை யடைவிக்கு
மிறைதா னென நிலையெய்து மிரண்டுங் காணு திருந்தக்கால். 87

வேறு.

அத்துவி தந்தா னும விகற்பம தடைந்த போதே
புத்தியி லிளைப்பும் போகும் போதுமிப் பிறப்பு நேரா
வெத்திகழ் வானும் பேத மின்மையா லிறையே யென்னுந்
தத்துவ வித்தே யென்றன் றலையினுல் வணங்கத் தக்கான். 88

வேதமா கமம்பு ராண மிருதிகள் வேறு மார்க்க
ரோதுமா கமங்க டர்க்க மொன்றேடொன் றெவ்வா தாகு
மீமதலா மொசுகப் பண்ணா லாவதன் றிதய துக்க
மாதலா லனைத்தும் விட்டிங் கனைத்துமாஞ் சிவனைப் பார்ப்பான்.

வேறு.

உள்ளபே ரெல்லா ரினுமுணர் வுடையீ ரும்பர்கா ணீங்களு ங் களினுன், றெள்ளியே னவேன் மதியினு லென்னிற் செனார்த் தனன் சேதன னகும், வெள்ளமேற் றுயிலு மாலினு மரன்றன் மேதையாம் விளம்பிய வெவர்க்கு, முள்ளமே மருவி யுணர் வளிக் கின்ற சிவனியா ரினுமுணர் வுடையான். 90

ஆதலா லறியு மறிவெலாங் கைவிட் டறிவினுக் கறிவதாய் நின்ற, பேதமில் பிரம மொன்றமே யறிவான் பேறுபே ரின்ப மாம் பிறத்தல், சாதலற் றிருக்கு மிதனையோர் வருத்த மின் றியே சார்தலு மாகு, மாதரித் தறியா ரற்பமே விரும்பி யனந்த துக் கத்திலே யமைவார். 91

தேசிக னளித்த விழியினு லேயந் தீர்ந்துசிற் சடத்திகழ் வெல்லா, மீசனுய்ப் பார்ப்பா னிப்படிப் பார்க்கு மிதனையு மிறை யெனப் பார்ப்பா, னேசமோ டிங்ஙன் பார்ப்பவன் பார்வை தன் னையு நீக்கியே யிந்தத், தேசிகன் றிகழுஞ் சின்மயமாக சின்மய மென்கையு மிலையே. 92

ஒழிவிலாப் பரம யோகியா னுபவ முள்ளவா றுரைத்திட யானோர், வழிபெறே னெடுமான் மகேசன்மா முனிவர் வானவ ருரைத்திட மாட்டார், விழிமிகுஞ் சிவனுல் விஞ்சையாஞ் சிவை யால் விளம்பவும் படாதது விளம்பு, மொழியெலாம் வந்து மோ னபா வத்தே முடியுமன் னிலமதே முடிவு. 93

வேறு.

உடம்போ தானன் றுடம்பிதென் றுணாப் படுத லாலுட ம்பிற், றிடஞ்சேர் பிராணு தியுமன்று செடமாய்க் காணுஞ் செய்தியினுற், கடம்போ லியாவை யினையனைத்துங் காண்பா னவனே கத்தாவாய், நடஞ்செ ருடம்பி னுண்ணின்று நடத்து கின்ற நானுவான். 94

வேறு.

வினவுற்ற கேள்விக்குக் கேட்பானுகி மேவியகா ஞதியில்விழி த்துக் காண்பானுகி, மனனத்தின் மந்தாவாய் ஞானந்தன்னின் மதித்திடு ஞாதாவாகி மன்னுகின்ருன், சொனவத்தற் பாஞகு மவனில்வேருந் தோற்றமெலா மெய்யாகுந் தோற்றமன்று, நினையிற்றற் பானேயிங் கெல்லாமென்று நினைவதுவே நினைவான நினைவுநேரே. 95

வேறு.

பின்னமான தன்றியே பிரமமா யறிந்தவன்
றன்னுபேத மேவினுஞ் சொருபமே நிகழ்ந்ததா
முன்னின்ஞான நாசமில்லை ஞேயநாச மாகுமா
றன்னின்ஞான ஞேயமாக வேறுருத தன்மையால். 96

வேறு.

தற்பரம மாகியுள தத்துவம தேயொழிய
வற்பமயல் காணுமவ ரத்துருவ மேயடைவர்
கற்பிதவ ஞானமதி னுற்பவம தாமுலக
நற்பிரம மாயறிவர் நற்சிவம தாநயனர். 97

வேறு.

சத்தியத் தான்மிகு சாந்தி தாந்தியா
லெத்தொழி லும்மிசை வற்றி ருத்தலாற்
பத்தியா லிறைவனைப் பண்ணும் பூசையாற்
சுத்தவே தாந்தமெய்த் துணிவு தோன்றுமால். 98

வேருடல் பொடிபட விழித்த விண்ணவற்
காளெனு மன்பிஞெ லணியு நீற்றையுத்
தூளனம் பண்ணலாற் ருெழுது போற்றலான்
மாஞதல் பிறத்தலாம் வழியை மாற்றலாம். 99

மெய்யுறு மன்பினுன் மேவு சாதன
மையமில் ஞானமுண் டாக்கு மாக்கிஞல்
வையக மியாவையு மன்னு போதமாய்க்
கையுறு கூவிளங் கனியிற் காணலாம். 100

வேறு.

மேவு பாவம்வெல்லாது மெய்ஞ்ஞா னியைவென் றிடுமிவ னெல்லாப், பாவ மானது மாதலால் வேதனம் பண்ண வல்லவ னுன, தேவ தேவனுந் தேசிகன் றனக்குமுன் செய்பொரு ளுடலாவி, யீவ தேகட னிறைவவெம் பிரானென வேத்திமெய் யிதயத்தால். 101

மாய வன்புலத் தெழாவகை தீர்ந்ததன் வாய்மையா விடரின்றிப், பாய வின்னமு திருசெவித் துணைவழி பாய்ச்சினன் பதுமத்தா, டாயுந் தந்தையுஞ் சுற்றமு மற்றுநற் றனமுமென் றடைவான்றன், காய முள்ளள வும்புகழ்ந் தேத்துவான் கற்றதோர் கலையாலே. 102

வேறு.

தேசிகன்றன் றிருமேனி சிந்தைசெய்யச் சிவனைச்சிந் தித்தானுஞ் செம்பொற்றுளிற், பூசனைசெய் திடவெங்கு மாகிநின்ற பூரணனை யினித்தாகப் பூசித்தானு, நாசமிலாச் சிவனுமந வின்றானுண்ட நாயகன்றன் றிருநாம நவின்றானுகி, வீசனையே யிகழ்ந்தானுங் கண்ணுற்காண வெழுந்தருளுந் திருக்கோல மிகழ்ந்தானுகில். 103

ஆதலினுல் வேதவே தாந்தத் துண்மை யறிவானுய் முழுதுமறிந் தடங்கினுன்றன், பாதமடை வான்முத்தி வேண்டி னல்லற் பரப்பையெலாங் கைவிடுவான் பரிவோடுங்கட், கோதுவதிற் கிடப்பதிலை யருளாலெல்லா மோதினே னிப்பொருண்மெய் யுணர்ந்தோன்செய்யு, நீதியிழை நினைந்திடவு மில்லை யெங்கு நிறைந்தபரம் பொருளாகி நிகழாநின்றான். 104

வேறு.

குகையி லிருப்ப தாய்மிகவுங் கூட மாகி யெவ்விடத்துந்
திகழ்வ தாகி யொருவர்க்குந் தெரியா தாகுஞ் சிவனுருவ
மிகவு நன்றாய் மேலாமவ் வுருவமெய்ம்மை விளங்கு மவன்
சுகதுக் கங்க டீர்ந்துவெறுஞ் சுக சொரூப னுகின்றான். 105

வேறு.

அந்தப் பரமே யெப்பொருட்கு மாலம் பனமா வதுவதனைச்
சிந்தைக் கேறத் தெளிவுற்றான் செனியான் மரியா னுருதிசை
வந்துற் றிலனோர் வடிவுமில னதனுல் வரவு போக்காகு [யில்
மிந்தத் தொழில்க ளொன்றுமில னெங்குந் தானுயிருக்கின்றான்.

வே று.

பொன்றவுட லைத்துணிசெய் போதுமிறை பொன்றான்
கொன்றிடுத லுங்கொலையெ னுந்தொழிலு மில்லா
னின்றுபெரு மைச்சிறுமை யிற்பெருகி நுட்பாய்
யென்றுமித யக்குகையி லேயிலகு கின்றான். 107

தேசினிகழ் தேருடல் செலுத்துமதி பாகன்
பாசமற மாமனுபி ணித்துவரு பாய்மா
வீசபுல னும்விடய வீதிமிசை தானு
மீசனிவை யாதும்வினை யாடியிடு கின்றான். 108

யோகமன மொன்றியறி வாமுணர்வி லானுக்
காகமுறு மைம்புலவை யங்கள்வய மாகா
பாகனைய றிந்தபரி போலமன னத்தே
யாகுமதி யாளனை யறிந்துவய மாமால். 109

வருத்தமில தாமனன மற்றமதி கேடன்
பரத்தையடை யான்மிகு பவத்தை யடைகின்றா
னொருக்குமன னுணர்வு கூடினவன் வீடா
யிருக்குமிட மேவியதி னின்றுமிலை யானல். 110

வே று.

பொருந்து ஞானமாம் பாகனுன் மனத்தனை பூட்டியையம் புலப்பாய்மா, பரந்தெ முரவதை தன்வச மாக்கினான்; பரம்பத மடைகின்றான், றிருந்து மாலுடைப் பதமது வதுபரஞ் சிவனெனுந் திருநாமத், திருந்த வாறுதா னிருந்தவா றன்றுவே றிணையிலா விறையாவன். 111

வே று

பரப்பி னனிந் தியங்களைப் பார்க்குறப் பரம்பர னுள்ளாகி
யிருத்த லாலறி வொண்கிலன் புறம்புள விதாமே காண்கின்றான்
றிருப்பி ஞானநாட் டத்தினை லப்பொரு டெரியவே பெறுந் தீர
னொருத்த னேயவி நாசியாம் பரவொளி யாயவ னொளிர்கின்றான்.

வே று.

எல்லாம் வசிக ரிப்பானு யெதுக்கு மூள்ளா மொருவடிவைப்
பல்லா யிரங்கோ டிகளாகப் பண்ணு நிற்கும் பரம்பரனை
யல்லா தொன்று மில்லையென வனுப வத்தா லகத்துணர
வல்லார் தமக்கூப் பேரின்பம் வடிவாய் மொழியு மாமறைதான்.

யாவ னறியப் படாமையினு லிவ்வே றுண்டா மிவ்வேறெத்
தேவ னாலே நிலைபெற்றுச் சேதனங்க ளாய்த் திகழு
மோவ லறவே யப்பரனை யுள்ளத் துணர்ந்தோ ருள்ளத்தே
தாவில் சாந்தி குடிகொள்ளு மல்லா தவரைச் சாராதால். 114

வே று.

உண்ணுடி யாகத்தி னுணராத வன்று னுடம்பா முடம்புக்கு ளேகாண லாகுங், கண்ணுடி போலப் பிராணாதி கத்தைக் கடம்போற் கழித்துக் கழித்தற்ற பின்னைக், கண்ணுன பரனன்றி வேறின்மை யாலக் கண்ணுன வனுபூதி யாகின்ற கண்ணு, லெண்ணுரும் வேறின்மை கண்டார்க ணேரே யிறவாது பிறவாதெலாமா யிருப்பார். 115

வே று.

பெரியதா யெவர்க்கு முள்ளதா யுயிராய் நிறைந்துள பிரமசக் கரத்தே, திரிதரா நிற்குஞ் சீவனிப் பரிசே திரிதரு மிவனையுந் திரிக்கும், பரமனு யுள்ள வவனையு மனனம் பண்ணியிப் படியிலே பார்ப்பா, னொருவனே செனன மரணமற் றென்று முள்ளதால் நிகழ்ந்திட வுரியான். 116

வே று.

ஈசனை யறிந்த வந்த விடத்திலே யெண்ணு மெல்லாப்
பாசமு நசித்த றனும் பணியறப் பவத்தின் நீர்வுங்
காசுறு மகில மாயக் கஞ்சுலின் கழிவுந் தானே
யாசற மகண்ட ரூபி யாகையு மனைத்து மெய்தும். 117

மேவிய தன்பா லுள்ள மெய்ப்பொரு ளொன்று மன்றி
யாவுமிங் கறிய வேண்டா வருந்துமிப் பொருளு மாகிச்
சீவனு யுண்பா னுகிச் சிவனென வூட்டு வானுய்
மூவித மாகி நிற்கு மூலமாம் பிரமந் தானே. 118

வே று.

நீம ரந்தொறு மடைந்தழி வுறுது தெரிவா
காமை நின்றரணி யால்வடிவு காணு மதுபோ
லாமு டம்பி லழிவின்றி மறை கின்ற வமல
னேமெ னும்பொரு ளுணர்ந்திட வுடம்பில் வெளியாம். 119

உலத்த லின்றி யொழிவற்ற பொருளுண்மை யதுதான்
சலித்த லின்றிய தவத்தி னவர்தங்க ணெதிரே
திலத்தி லெண்ணெய ரணிக்கன றதித்தி கழுநெய்
நிலத்தி னீரென நிகழ்ந்து வெளியாகி நிலையாம். 120

வே று.

மிக்க சாந்தராய் நீற்றினுத் தூளனம் புண்டரம் விளங்கச்
செய், பக்கு வர்க்கிது பகரலா மல்லது பகர்ந்திடப் படாதென்
றுந், தக்கநற் குரவன் றனைச்சிவ னெனத்தா னினைந்திடு வாருட்,
புக்க லாகுமிங் குரைத்தமெய்ப் பரம்பொருள் புரணமாய் வெளி
யாக. 121

வே று.

மாச தில்லாப் பரனுகி யிருக்கத் தனது மாயையினு
லீச னென்ப தறியாம லிறந்தான் பிறந்தான் போலிருக்கும்
பாசம் விடுமா நினைவுறுவான் பாரம் பரியத் தாற்பண்ணு
மாசின் மறையா லாசையெலா மறலாற் சாந்தி யாதியினுல். 122

வே று.

பத்தியாற் குரவன் பாதம் பணிந்துவே தாந்தம் பன்னுஞ்
சுத்தமா வாக்கி யத்தாற் றுணிந்தவப் பொருளைத் தூய
புத்தியாற் றுணிந்து கொண்டப் பொருளனு போக மாகச்
சித்தியா நிற்கு மைக்கஞ் சிவபதந் தனையே சேரும். 123

வே று.

ஊனிலொரு பற்றுமுள னன்றியுட னிற்கு
நானென விளம்புதனை நற்சிவம தாகத்
தானறியு மாகிலொரு வன்றனுரு வாரு
ஞானபரி பூரண நலந்தனை யடைந்தான். 124

வே று.

செறிவா யெங்குந் திகழ்ந்துள்ள சிவனு னென்னுந் திகழ்வுற்று
னெறியா னிகழு நிகழ்வெல்லா நிமலமாயே நிகழ்ச்சிதரு
மறிவா யறியா மையுமாகி யறிவிப் பவனு யறிவானுய்ப்
பிறிவா யுளதா யிலதாயும் பிரம மொன்று மேபிறழும். 125

வே று.

ஞான மாகிய விழியினுற் குருபர னயந்துநோக் கிடவுண்டா, மானு பூதியா தொன்றது வேசிவ ஞவதப் படியுள்ள, மேனி தான்வினை யொத்தவப் பொழுதிலே வெளிப்படும் வெளிகாண, லான தேசிகன் றன்னையப் பரம்பொரு ளென்னவா தரஞ் செய்வான். 126

தேசிகன் றிருவுள்ள முண்டாக வச்சிவன் றிகழ்ந்திடு கினமுன்
ஈசனிங் கருள்செய்ய வந்திருக் கின்ற விடமிவன் றிருமேனி
மாசதொன்றி வனளவிலே செயிலெரி வாய்ந்ர கிற்பூத
நாசமெவ் வளவவ் வளவுஞ் செலநண்ணு நன்னெறி நண்ணுன்.

வே று.

அருவெனு மமலன்று னருளில னெனினுஞ்சார்
குருபர னருளுண்டே யெனிலொரு குறையுண்டோ
திருவடி தரவந்தார் திருவுள மலரென்று
லொருவரு மிலர்கண்டீ ருறுதுயர் களைகின்றார். 128

உறுவது தனில்வேறு யுளதல வதுநேரே
பெறவருள் பெரியோனே பெருகிய குருவாவா
னெறியுட னுளநாவா னிலைபெற வழிபாடே
செறிபவ னருளாலே சிவகதி யடைவானுல். 129

வே று.

இந்த விடும்பை யுடம்புறு மேனுத்
தந்தை யெனப்புகழ் கின்றிலர் தக்கோ
ரந்தமி லாதவ கண்டமு நம்முட்
டந்தவர் தந்தையெ னச்சமை வுற்றார். 130

வே று,

உண்டுபோற் றேன்று முலகெலா முண்மை யன்றென வுணர்த்தியெப் பொருளுங், கண்டசான் றதனைக் காகூறியதறவே கண்டிடக் கரியெனக் காட்டும், பண்டைவே தாந்த வாக்கியஞ் சொன்ன படியிலே பரமனே டொன்றாய், விண்டிடா வண்ண முணர்த்துவான் றன்னை வியன்குரு வென்றிடும் வேதம். 131

காட்சியை யெல்லாங் கண்ணதாய்க் கரைத்துக் கண்ணொழிந் தொருபொரு ளில்லா, மாட்சியை யளிக்கவல்லவன் குருவாமாரிபோன் மாறவேண் டாதே மீட்சியில் பதத்தைக் கருணையாலளிக்கும் வித்தகக் குரவனே யெவருந், தாழ்ச்சிசெய் தேத்தற் குரியதத் துவமாஞ் சங்கர னென்றிடத் தகுவான். 132

---

## பகவற்கீதை.

---

எல்லாப் பொருட்கும் பழையதனை யெங்குந் தானா யிருப்பதனை, நில்லாத் தன்மை யில்லதனை நித்யத் துவத்தை நிலைப்பேற்றை, யல்லாப் புலன்கள் பதினாறு மறியா வறிவை யறியாதே, யில்லாப் பொருள்போ லழியுமென விரங்குகின்ற தென் கொண்டோ. 1

வேறு.

ஆமைதன் னுறுப்போ ரைந்து மதனுளே யடக்கு மாபோற்
றீமைசெய் புலன்க ளைந்துந் தன்னுளே செறியச் சேர்த்தி
வாய்மையு ளிகழு மின்னே வழுத்தவும் படுகின் றானாற்
றாய்மைசெய் தவையே நாளுஞ் சொல்லுவ தவன்றன் சொல்
லால். 2

வேண்டல்வேண் டாமை யின்றி மிசைசெலாப் புலன்க ளாலே
மாண்டபோ கங்க டுய்ப்பான் மனங்கலக் குறான்மற் றத்தா
லீண்டிய தெளிவுண் டாமாற் றெளியவே யெல்லை யின்றிப்
பூண்டநோய் நீங்கு நீங்கப் புலனலாப் பொருளுந் தோன்றும். 3

யாதொரு பொருளை யெல்லா வுயிர்களு மிருள்போற் காணா
ரோதரு ஞானி யத்தை யுளங்கையிற் கனிபோற் காணு
மியாதொரு பொருளை யெல்லா வுயிர்களு மென்றுங் காண்பார்
காதலின் ஞானி யத்தைக் கனவினுற் றெரியக் காணான். 4

யானென தென்ப தின்றி யெவ்வகைப் பொருளும் விட்டான்
றனெனச் சரிக்கின் றான்யா ரவனே யடையுஞ் சாந்தி
யீனம தடையா நித்தை யடைந்தவ நிறக்கும் போது
ஞானமே யுடையா ரென்னை நண்ணுவார் பிறவி நண்ணார். 5

வே று.

புலனவை பொறிவழி போக்கு மாற்றியே
பலனற வினைகளென் பொருட்டுப் பண்ணுவாய்
நலனுறு மவ்வினை நாச மின்றியே
சலமுறு பிறவியுந் தவிர்க்குந் தன்மைகேள். 6

வே று.

என்பாற் பொருமை யினைத்தவிர்ந்தென் கருத்தா யுள்ள வினையிதனை, யன்பாற் பயில்வா ரியாவர்சில ரவர்கள் வினைக ளறவிட்டா, ரென்பாற் பொருமை யானுரைத்த விதனை யிகழ் கிற் பார்களவர், வன்பார்த் தரையி லெழுமரம்போன் மாய்ந்தா ரறிவு மாய்ந்தாரே. 7

வே று.

காத லாற்றவிக் காமம் புலன்களே
வாயி லாய்ப்பு குந்துள்ள மயக்குவ
தாத லாற்புல னைந்து மடக்கியே
யேதி லாக்கடுங் காம மிறுக்குவாய். 8

ஆற்று மிவ்வுடம் பிற்பர மைம்புலன்
மாற்று மைம்புல னிற்பர மாமனம்
போற்றும் புத்திய திற்பரம் புத்தியிற்
றேற்று கின்றது காண்பது தொல்பரம். 9

ஆவ தென்பது மாசையு மற்றன
மேவ ஞானவெந் தீயிடை வெந்தன
யாவர் தந்தொழி லவ்வகை யோர்களே
சாவ தும்பிறப் புந்தவிர்ந் தார்கடாம். 10

பிரம மானோர் பிரம நெருப்பிடைப்
பிரம மாகிய மந்திரந் தன்னினாற்
பிரம மாய சருவுடன் பெய்தபின்
பிரம மேயடை வாருளர் பின்னுங்கேள். 11

அறிவ தாகிய வங்கியி லேகொள
வறிவை யேசில ராகுதி பண்ணுவார்

செறிவ தாஞ்சமத் தீயிடை யேசில
ரெறிவ தாயபு லன்களை யீவர்கள். 12

உந்தி யப்பொறி யைந்தையு மொக்கவே
யிந்தி யத்தழல் வாயிடு வார்சிலர்
நந்தி யத்தொழில் யாவையு ஞானநெய்
சிந்தி யோகவெந் தீயிடு வார்சிலர். 13

வே று.

அறியா மையிலே பிறந்துன்ற னகத்தே வளர்ந்த வையுறவை
நெறியா லுன்றன் ஞானமெனும் வாளால் வெட்டி யறநீக்கிக்
குறியா லுன்றன் வினைவிளைத்துக் கொள்வா யென்று கூறினு
னுறியார் வெண்ணெ தொட்டுண்டிவ் வுலக முண்ட திருவாயான்.

* யாரும் வினைக ளென்பொருட்டா லியற்றிப் பயனை யிகழ் வார்கள், சேரும் வினைக ளவற்றேடுஞ் சேரா ரெய்துந் திறமு ரைக்கிற், † சாரு முடனே பிறந்தெனினுந் தண்டா மரையின் றகையிலையு, நீரு மெனலா யிருப்பதி னின்றோர்க் கொன்று நிகழாதால். 15

வே று.

அன்பவினை யாகுபயன் விட்டமைதி யாலே
யொன்பதுபொய் வாசலமை யூரதனி லுள்ளே
யின்பவுரு வாயினிதி ருப்பனியல் பாலே
முன்பயில்வ தாம்வினைசெ யான்முயல்வி யானுல். 16

வே று.

உடம்புட னேயுள னாகி யிருந்தே
விடம்புரை காம வெகுளியின் வேகாச்
சடம்பொறை யாமைத விர்த்தவ னேநல்
லிடம்புகு ஞானியு மின்புறு வானும். 17

காவல்செய் தைந்து புலன்கணி ரண்டு
மேவலி ரும்புரு வத்திடை விட்டிட்
டாவகை நின்ற வபான பிராண
னேவலி னின்றி யியக்க மறுத்தே. 18

* யாரெவ்வினையும்-என்றும் பாட பேதமுண்டு.
† சாரவுடனே. " "

வே று.

சாதி புரியுந் தொழில்களுக்குந் தக்கோர் செய்யுந் தவங்களுக்
நீதி னுலகமேழினுக்குஞ் சேரு மிடமா யுள்ளவனை [குந்
யோதி முடியும் பரிசேமெய் யுணர்ந்தார் பிறவா ரெனவுரைத்தா
ஞதி முடிவொன் றின்றியே யடையத் தானே யாய்நின்றான்.

இறவா வகைதன் னுள்ளத்தை யடக்கு மவனே தனக்கெ ன்று, முறவா யுள்ளா னல்லாதார் தமக்கே பகையா யொழுகு வார், துறவா தொழுகுந் துவந்துவங்க டுறந்தொன் றினையே தொடர்ந்தவர்பான், மறவா தெழுந்த மெய்யறிவிம் மாயை மறைக்க மறையாதால். 20

பாடும் பனுவல் பலவோதி யவற்று லறியும் பயனுணர்ந்து, நீடும் புலன்க ளவைவென்று நிலையிற் கலக்கற் கரியானு, யோடும் பொன்னு மொருபொருள்போ லொக்கப் பார்க்கு மவனேயிங், காடும் பெரிய மாயக்கூத் தாடா ததுகண் டமர்ந்திருப்பான். 21

ஒக்கும் வகையாற் குசைபரப்பி யதன்மே னுழையின் றோல் படுத்துத், தக்கது சிலைய தன்மேலே விரித்துத் தானங் கதிலிரு ந்து, மிக்க மனனை யறவொருக்கி வேறு செய்யும் வினைகளுடன், றொக்க புலன்க ளவையடக்கி யுணர்வு தூய்தா வதன்பொருட் டால். 22

தலையுங் கழுத்து முடம்புமிவை செவ்வே தளரா தேயிருக்கு
நிலையி லிருந்து கண்களைத்தன் மூக்கி னுதிமே லேநிறுத்தி
யலையுங் கடல்போற் காமமுமெய்ப் பயமுந் தன்னை விட்டகல
வுலையு மனமுள் ளடங்கவெனை யுணர்ந்தே யிருக்கு மதுயோகம்.

வே று.

எண்டிகழு மியோகத்தை யிப்பரிசே யெப்பொழுதுங்
கொண்டுபயில் வார்கடைக்கா லென்னையே கூடுவரா
லுண்டியினின் மிகுவாரூண் டுறப்பார்மிக் குறங்கிடுவார்
கண்டுயிலே யறத்துறப்பா ரவர்க்கிதுகை வாராதால். 24

வே று.

காயினு முணவுஞ் செய்தொழினு மிகாமே குறைந்து தோ
பயினு மவனே யோகத்தைத் தன்பாற் படுக்கும் பான்

மையா, னயினும் பொறிவிட் டவ்வறிவு தன்பா லடங்கு மப்பொழுது, குயினு மியோகந் தலைநின்ரு னென்ருங் கவனைக் கூறலாம். 25

வேறு.

இப்பரிசு பயில்கின்ற யோகிகா லிலாவிடத்து
மெய்ப்பரிசு நடுங்காத விளக்குப்போல் விளங்குமா
லெப்பொழுதங் கவனுணர்வில் வுண்மையிலே சென்றிசையு
மப்பொழுது பரமானந் தத்தினையு மடையுமால். 26

வேறு.

யாதொன் றிந்தப் புலனறியா வளவி லின்ப மாயிருக்கு, மியாதொன் றினைச்சென் றடைந்தோர்கள் பின்னை யதனி லிரண்டாகா, ரியாதொன் றினைப்பெற் றவரிதனி மிக்க தொப்ப துண்டென்னு, ரியாதொன் றிந்த வறிவுக்கே யறிவாய் நிற்கு மதினின்ருேர். 27

வேறு.

வஞ்சர் வேல்கொடு மார்பி னெறியினு
மெஞ்ச வேதழுன் மூடி யெரியினு
நஞ்சி னூழ னுக நலியினு
மஞ்சி டாரது வானந்த மாவதே. 28

போக மாய்த்துப் புலன்களைப் போக்கறுத்
தாகமா மெய் யறிவிடை யேயந்த
வேக மாய மனத்தினை மெல்லவே
யேக மாக விருத்திக லாதுநீ. 29

வாங்கி யைம்பொறி நின்ற மனத்தினை
நீங்கி டாவகை நின்னு ளிருத்தியே
தீங்கி யாவையுஞ் சிந்தைசெ யாமையாம்
பாங்கி யாதது வேபயில் வாயரோ. 30

தேறு நெஞ்சின னுய்த்தன் செயலலால்
வேறு கண்டறி யாமெய் யறிவினு
லூறி லிந்த வுடம்புடன் வேறுபெற்
றேறி நின்றவ னேயின்ப மெய்துவான். 31

வே று.

யாவனொருவ னென்னையெல்லா வுயிர்களிடையு மென்னிடையே
மேவவெல்லா வுயிர்களையும் வேறாகாதே மெய்காண்பான்
றேவர்பகைமுன் செகுத்தோனே யவனியாதெனினுஞ் செய்திடி
மாவவவனு கின்றேன்யா னதுநீயேது மையுறேல். [னு

எல்லாவுயிரு மொன்றாகப் பார்ப்பதியோக மெனவுரைத்தாய்
மல்லார்தோளா யிதற்குநிலை காணேன்மனமா கின்றவிது
நில்லாவியற்கைத் தாய்ப்புலனைக் கலக்குமதனை நிலைநிறுத்த
லொல்லாதெனவுங் காற்றடக்கற் கொக்குமெனவு முணர்கின்
றேன். 33

வே று.

பொய்மை யடையாப் புலனுடை மாந்தர்க
ளிம்மை யிடையு மறுமை யுலகத்தும்
வெம்மை யடைகிலர் மெய்மைவி டாரென்றுஞ்
செம்மை தெளியின் னஞ்செப்பு துங்கேளாய். 34

எல்லாத் தவமு மியற்றிநின் றோனினு
மெல்லாக் கலைகளுங் கற்றுணர்ந் தோனினுஞ்
செல்லாக் கருமமெல் லாஞ்செய் தவனினு
நல்லான் வலியோகி நீயிது நண்ணுவாய். 35

வே று.

மண்ணு நீருமெரி தீயும் வாயுவுமவ் வானினோடு மனபுந்தியு,
மெண்ணு நீர்மைகளி லியானெனும் பதமு மெண்ணுமெட்டு
மிவையன்றியே, பண்ணு நீர்மைகளின் மேல தாயுலகி லியாவை
யுங்கொடு பரித்துடற், கண்ணு நீடுயிரு மாகியென் னுடைய
மாயை நிற்பது கைவேலினோய். 36

வே று.

தேடும்பழைய வதிபூத மதிதெய்வத்தோ டதியெச்சங்
கூடும்பரிசு நின்றவெனை யறிவாரிந்தப் புழுக்கூடு
வீடும்பொழுது மெனைமெய்யே யறிவாரென்று னியாம்வெவ்
றுடும்பழைய மாயக்கூத் தாட்டுவிக்கு மம்மாயன். 37 [வே

எஞ்சுதலையி லதியெச்ச மாகின்றேனு னிறக்குங்கா
னெஞ்சுகவரு நெறிகளெலா மடைத்துநினையப் படுவதுநா

னஞ்சுபுலனும் பொறியைந்து மடக்கியறிவென் பாலதாய்த்
துஞ்சுமவர்க ளெனையடைவ ரெவ்வாறென்னிற் சொல்லக்கேள்.

வே று.

இந்த வுடலம் விடும்பொழுது யாவ னியாதொன் றினைநினை ந்தா, னந்த வளவே யந்தப்பா வனையா லதனை யடையுமா, லெ ன்ற னியல்பே யெப்பொழுது மிதயத் திடைகொண் டென்பா லாஞ், சிந்தை யொடும் * வா மளர்தொடங்கி லதனு லெனையே சேருதியால். 39

நல்ல கரும யோகத்தும் ஞான யோக மதுதனினுஞ், செல் லு மனனை மிகச்செலுத்திப் பிறிதொன் றினையுஞ் சேராதார், சொல்ல வரிய கதிரவன்மண் டலம்போற் றேன்றுந் தொல் லோனை, யல்ல தடையா ரவனியற்கை யடையும் பரிசை யறை யக்கேள். 40

எல்லாப் பொருளு மறிவானை யெல்லாப் பொருட்கும் பழை யானை, யெல்லா ரையுந்தன் னிலைநிறுத்து வானை † யிரம்பச் சிறி யானை, யெல்லாப் பயனு மீவானை யார்க்கு நினைதற் கரியானை, யெல்லா விடத்து மிருடீர்த்த விளவெங் கதிர்போ லெழுவானை.

மருவற் குரிய வன்புடையார் மயங்கா யோக மனத்தாலே
புருவத் திடையே தன்னுடைய புரைதீ ருயிரைப் புகநிறுத்தி
யுருவத் தினைவிட் டிடிலிந்த யோகத் தாலே யவனேடும்
பொருவப் படுவ ரப்பொருண்மே லின்னம் புகல்வன் பொருவே
[லோய். 42

வே று.

யாதொன்றை மறைதெரிந்தோ ரழியாதென் றெடுத்துரைப்பர்
யாதொன்றை யவாவறுத்த யோகிகடா மெய்திடுவர்
யாதொன்றை யுறநினைந்தோர் காமமுத லியவிழப்ப
ரியாதொன்றைப் பரம்பொருளா மதனைச்சுருங்க வியம்புவன்
[கேள். 43

வே று.

அஞ்சுபுலன் வழியவை யடைத்தய லுறுதே
நெஞ்சுதனை யிதயகம லத்திடை நிறுத்தி

---

* வாமளர்-அஸ்திரசஸ்திரங்களுடன் செய்யும் யுத்தம்.
† இரம்பச்சிறியானை-அத்யந்த சூட்சுமசொரூபனை.

யெஞ்சுத லினுயிர்வளியை யுச்சியினி லேற்றி
யுஞ்சுபுகு நெறியிதென யோகுட னிருந்தே. 44

ஓதலினி யற்கையினெ டோமெனு மெழுத்தை
வாய்தனி லுரைக்கமன மானது தனித்தே
மேதருமெ னத்தெளிய வாவிதனை விட்டோர்
வீதலினி யற்கையெனை யேயடைவர் மிக்கோய். 45

இப்பரிசி னுண்டொரா று திங்களள வென்று
தெப்பொழுது மென்றனியல் பேநினைய லுற்றார்
கைப்படுவ னியானெனியல் கைப்பட விருந்தோர்
பொய்ப்பிறவி யானது மறித்தடைதல் பூணார். 46

வேறு.

ஏதமான தின்றியிவ் விரண்டுமாயு மியோகிதான்
வேதமோதி வேள்விதான மெய்த்தவங்கள் செய்துளா
ரேதுவாய நற்பதங்க ளெய்திவீடு மெய்துவா
னுதலாலவ் வியோகமேசெய் யென்றுமாய னோதினன். 47

வேறு

விலங்கலனையர்ப் பலங்களுடன் வேண்டல்வேண்டா மையைவி
[ட்டுச்
சலங்கொள்வினைக ளவைசெய்வ னதனுலென்னை யவை சாரா
வுலண்டுவாயா னுற்றந்த நூலாற்கட்டுண் பதுபோலப்
பலங்க ணினைவா ரதனுலே கட்டுண் டாங்கே பட்டுழப்பார். 48

வேறு.

அறிவினு லென்னை யாக வறிந்து கொண் டமைதியாலே
பொறிவழி யடைத் தெப்போது மென்னையே போற்றி செய்து
நெறியினுல் வழுத்தி வாயா லென்னையே நினைந்து நெஞ்சாற்
செறிதரு மிவர்கள் கண்டாய் தேவரிற் றெரியப் பட்டார். 49

வேறு

காலத் தாலும் பொருளிடத்துங் கணித்தற் கரிதா கியவென்னை
ஞாலத் தார்கள் புகழ்வரிய ஞான யாகங் களினுலே
கோலத் தால்வே ருகவுமெய்க் குறியா லொன்ரு கவுங்கொண்டு
சாலத் தாழ்வா ரவருடைய தன்மையினை நான் சாற்றக்கேள். 50

வேறு

தாங்கிய நீரை யெல்லா மிரவியாய்த் தலத்து நின்று
வாங்குகின் றேனு மீள மழைகளாய்க் கொடுக்கின் றேனு
மீங்குமெய் யுணரி லியானே யாதலா லியாதொன் றேனு
மாங்கருச் சனைசெய் கின்று ரென்னையே யருச்சிக் கின்றூர். 51

ஞானமா யொன்ருய் நின்ற வென்னையே நானு வாகப்
போனதீ வினையின் மாந்தர் வேள்வியாற் பூசித் தத்தால்
வானமா முலக மேறி வாழ்ந்துமண் ணிடையே வீழ்ந்திட்
டீனமா மாசை யாலே யிறப்பது பிறப்ப தாவார். 52

எப்பொரு டனக்கு மியானுத் திருத்தலா லெனக்கி யாரு
மொப்பர்க ளினிய ரின்ரு தாரென வொருவ ரில்லை
யிப்படி யறியு மன்பர் பக்கலே யானு நிற்ப •
னப்படி யவரு மென்பா லங்ஙனே யமர்ந்து நிற்பார். 53

உனையே முதலா யென்பா லொருக்கியென் னுணர்வார் நானு
நானையே விட்டுத் தீமை புரியினு மவர்க ணல்லா
ரேனையேய் புயத்தா யென்றுங் கேடிலா வின்ப மல்லா
தானையே யொருகே டில்லை யெங்கனு மவருக் கையா. 54

வேறு.

புத்திபொறை தவஞானம் புகழ்பழிதீக் கொலையொழிவு
சத்தியனற் சமைதமைநற் செபந்தானஞ் சாவுபிறப்
பத்திகொடு நிறைவின்ப மிடரஞ்ச லஞ்சாமை
யித்தனையுந் தோன்றுவதென் னிடைநின்றே யெனத்தெளிவாய்.

வேறு.

இரும்புவன மனைத்தினுக்கும் வித்தூநா னெனைப்போக்கி யாதுமில்லை, வருந்தினுமென் பெருமைக்கு வரம்புரைக்க முடியாது வகுத்துச்சொன்னேம், பெருந்திருவை யுடையனமெய்ப் பெருமுயற்சி யனவென்று பேசுமிந்த, வரும்பொருள்க ளனைத்துமென தொளியினல் வருவனவென் றறிதிநீயும். 56

வேறு.

பலவினி யுரைத்தெ னிந்தப் பல்லுயி ரனைத்து மெல்லா
வுலகமு மொடுங்கி நிற்ப தென்னிலோ ரிடத்தி னுள்ளே

கலவல னவற்றோ டென்றுன் கஞ்சனு ருயிர்போய்த் துஞ்ச
வலைகடல் வளரா தேபேர்ந் தாயர்பால் வளர்ந்த பெம்மான். 57

உரைசெயற் கரிதாய் நெஞ்சி னுணர்விடப் படாதா யெங்கும்
புரையறக் கலந்து போக்கு வரவின்றிப் பொலிந்த தொன்றைக்
கரைசெயற் கரிய வாய புலன்களைக் கடந்து காண்பா
னரசமற் றியானே யென்னி லன்னிய மென்ன லாமோ. 58

காரண மிறந்தொன் றிற்குங் காட்சியிற் படாத தொன்றைச்
சேர்பவர் வருத்தம் வேறு செப்பிட லாவ தன்று
லோர்வரி திதுதான் வாழு முயிர்களா லாவ தொன்றோ
வாரவர் பெருமை தன்னை யளவறுப் பவர்க ளாயா. 59

வேறு.

மெய்யுறவுன்னை யென்னிலேவைத்தா லென்னில்வே றின்றி யொன்றுதற், கையுறவில்லை யதுசெய முடியாதாயினப்யாசமே பயில்வாய், பொய்யறவதுவும் புரிகிலாயெனினுன் வினைகளென் பொருட்டினுற் புரிவாய், செய்யுமவ்வினைக ளப்படிச்செயாயேல் வினைப்பயன் றவிரவேசெய்வாய். 60

வேறு.

அத்தி ஞானம் வினையி னதனினு
மெத்தி யான மிகுமதின் மேலதாம்
வித்தி லுய வினைப்பயன் வீடுதல்
சித்த சாந்தி யதன்பின் செறியுமால். 61

வேறு.

இருவகை யுயிர்க்கு மினியனுயின்ப துன்பமியா னின்ன தென் றறியா, தொருபொரு ளாலுங் குறைவுபா டின்றி யுள்ளமு மொருவழிப் படரப், பொருவருந் துணிவுங் கருணையும் புரிந்து புலன்றெரி யுணர்வை யென்பாலே, மருவிநின் றொழுகு மியோகியென் பவன்காண் மன்னமற் றெனக்குவே றினியான்.

உலகமுந் தானும் வேறிலா மையினுற் ருெரு பொருட்கு மஞ்சாதே, யலகிலா வுயிர்கட் கினியனு தலினு லவைகளுந் தன்னை யஞ்சாதே, புலவரா னவர்கள் புகழுவே நிகழ்வான் பொரு மையு மயக்கமுங் களிப்பு, மிலகிடா நெஞ்சத் தியோகியென் பவன்கா ணியாரினு மெனக்குவே றினியான். 63

ஒன்றினு மாசை யின்றியிந் தியங்க டம்வழி யொழுகிடா தொருக்கி, நன்றியி னேடு தீங்கினி தொத்து நல்வினை தீவினை துறந்து, பொன்றினு நோவுற் றழிதல் செய்யாதே பூரித்தல் வாடுத லின்றி, யென்றுமுன் பிழந்த பொருட்கிரங் காதே வரும் பொருட் கிச்சைசெய்யாதே. 64

வே று.

இகழ்பவர் நட்டாரென்ப தின்றியே யின்பதுன்பந்
திகழுவமான மானஞ் சீதமோ டழலின்றீமை
புகழ்பழி யிவற்றுளொத்து பொருந்திவா ழிடமொன்றின்றி
நிகழ்தரும் யோகிகண்டாய் மற்றெனக் குரியநீரான். 65

வே று.

இற்றிவை யனைத்துமிட ரின்பமுத லியாவுந்
துற்றமை விகாரமதை தொடர்ந்ததொகை கண்டாய்
நற்றவ வுடம்பென வியம்புவது நல்லோ
ருற்றவுட லுக்குரிய ஞானமு முரைப்பாம். 66

வே று.

மானமும் பிறர்தனை மதிக்கப் பண்ணலு
மூனமும் பிறவுயிர்க் குறுகண் செய்கையும்
யானெனுஞ் செருக்குமிவ் விகபரங்களி
லானபே ராசையோ டறுக்கு மாற்றலும். 67

பெற்றநன் மனையொடு பெண்டிர் பாலர்பா
லுற்றெழு மவாவிட லுடம்பின் றூய்மையு
மற்றவைம் பொறிகளின் வாயில் வாழ்க்கையுஞ்
செற்றமுஞ் சிறியவர் குழுவுந் தீர்தரும். 68

ஒருபெரும் பொருளையே யுளத்துள் வைத்தலு
மிருவினை கடப்பவ ரிடங்க ளெய்தலுங்
குருவினை வழிபடு குணமுங் குற்றமி
லருவினை யுள்ளவா றுணரு முண்மையும். 69

முன்றிகழ் பிறப்பொடு மூப்பி றப்பினுற்
சென்றடை யிடும்பையைச் சிந்தை செய்கையு
மென்றிவை யனைத்துமற் றிவற்றி னுவினிச்
சென்றடை பொருளினைத் தெரிந்து கேளெனு. 70

வே று.

ஆதி யந்தமில தழி யாதுநின்ற பெருமைய
ஜோதி லுண்டதிலே யெனு மூனமின்றி யொளிர்வது
நீதி யின்க ணகிலமு மாகியெங்கு நிறைதலி
ஞேத ருங்கை செவிதலை கால்களெங்கு முடையது. 71

வே று.

காணும் புலன்க ளனைத்தி னுக்குங் கண்ணாய்நின்று காட்டுவது, பேணும் புலன்க டனக்கொன்று மில்லா தியன்ற பெற்றியது, பூணும் பற்றுத் தனக்கின்றி யெல்லாந் தானே பொறுப்பதது, மாணுங் குணங்க ளின்றியவை மன்னியனுப விப்பதது.

வே று.

பூதமைந்தி னகத்திஞேடு புறத்தினும் பொலிகின்றதிங்
கேதமின்றி நடப்பநிற்பன வாயிருப்பததின்னதென்
றோதரும்படி நுண்ணிதாகிய தொன்றதாகி யிருந்துமெய்ப்
பேதம்வந்தது போலநின்று பிறங்கவும்படு கின்றதே. 73

அருவமாயதி தூரமாயத ணித்துமா யதனைத்துமா
யுருவமியாவும ளித்துமீள வொழிக்குநாளி லொழிப்பது
பொருவிலாவொளி கட்குமுள்ளொளி யாகியேபொலி கின்றதி
கிருமைவீடிய ஞானமோடதன் ஞேயமாகி யிசைந்தது. [ங்

ஆனவிப்பொருண் முன்புரைத்தவ வற்றிஞலறி யும்பொரு
ளூனமற்ற மனத்திஞய்நல் லுடம்புமற்ற வுடம்புசேர்
ஞானமுற்று மவற்றிஞலறி யப்படும்பொரு ணன்மையு
மீனமற்ற திறத்திஞேடு சுருக்கமாக வியம்பினேன். 75

வே று.

உணர்வவி காரியென்றும் விளையெலா முடம்பிஞேடே
புணர்வன வென்றுங்கண்டான் பொய்யிலா மெய்யைக்கண்டா
னிணர்மலர் முடியாயெல்லா வினைகளுஞ் செயினுமான்மாக்
குணமிலி யாதலாலே யவற்ருெடுங் கூடிநில்லான். 76

உன்னிய வானமெங்கு மொழிவற நிறைந்ததேனுந்
தன்னுடை நுண்மையாலே பிறவொடுஞ் சார்தலுண்டோ
ன்னிய விதுபோலெங்கும் பரந்துள னெனினுமங்கு
ன்னிய வீசனந்த வுடம்பொடு மருவமாட்டான். 77

இரவிதா னொருவனேயாய் நின்றிந்த வுலகத்தெங்கும்
விரவிய விருளைநீக்கி விளக்குறு மாறுபோலத்
தரவியா வருமுன்னில்லாச் சராசர வுடம்புதோறும்
பரவியா னுரைத்தமாயோ னொருவனே பரந்துநிற்பான். 78

ஓரின்மே லாகிநின்ற வுயிரினோ டுடம்புக்குள்ள
பேரினோ டிறப்புமூப்புப் பிறப்பெனு மிவற்றைவேறாய்ப்
பாரின்மே லறிவார்வீடு பற்றினா ரென்றான்பார்த்தன்
றேரின்மே னின்றேவேதச் சிரத்தின்மே லிருக்குஞ்சீரோன். 79

வேறு.

பற்று மாசின்மை யாற்பளிங் கொப்பது
வுற்ற நல்லறி வானதுண் டாக்குவ
தெற்று மின்பமல் லாற்றுன்ப மென்பது
சற்று மில்லது சத்துவ மாவதே. 80

* ஓது மாசை யிதிற்பிறந் துள்ளது
தாது கற்புரை யுண்ணிறஞ் சார்ந்தது
பேது செய்வினை யோடறி வைப்பின்னற்
கேது வாய திராசத மென்பதே. 81

குறியு நீல மயக்கமுங் கோதிலா
† நெறிக ளான திகத்தலு நித்திரை
செறித லானது மற்றிவற் றூற்றிணென்
றறிவை மாய்க்கு மதுதம மாவதே. 82

வேறு.

உரைசெய் சத்துவ மின்பத் துய்த்திடு
மிரசதம் வினைகளோ டறிவை யார்த்திடும்
புரைசெய் திவ்வழுக்கையே பொருந்திப் போர்த்திடுந்
தரைசெறி புகழினாய் தமமென் கின்றதே. 83

வேறு.

வாழுஞ் சத்துவ மற்றையவ் விரண்டையு மறைத்துத்
தாழு மற்றையவ் விரண்டுமத் தமோகுணந் தழைப்பின்

* ஓது ராக வுருவ முடையது-என்றும் பாடமுண்டு.
† நெறிக டம்மை யிகழ்தலு நித்திரை ,,

வீழுஞ் சத்துமந் தமங்களவ் விரசதம் விளைவி
னூழின் மற்றிவை யிரண்டுந்தாழ்ந் தொன்றுமிக் குளவாம். 84

வேறு.

ஒத்துநல் லறிவுமிக்க யாதொரு போதப்போது
சத்துவந் தழைத்ததாகுந் தாங்கரும் வினைகளேகொண்
டுய்த்துவந் தாசைகூர லோபம்வந் துற்றபோது
மத்திம குணமேசால வளர்ந்ததென் றறிநீமன்னு. 85

வேறு.

தக்கது தகாதென்றொன்றைத் தானறி யாதபோது
மெக்கரு மங்கள்மாட்டு மிகழ்ச்சியோ டிருக்கும்போது
மொக்கமெய் மயக்கத்தோடு முறக்கம்வந் துற்றபோது
மிக்கது தமமேயென்று விசயநீ யறியவேண்டும். 86

வேறு.

தக்கசத் துவமே நிகழ்ந்தபோ திறந்தோர் தெய்வயோ னிக ளிலே சார்வார், மக்களிற் பிறப்பா ரிராசத குணமே வளர்ந்த போ துடம்பினைத் துறந்தோர், மிக்கெழுந் தமமே விளைந்தபோ திறந்தோர் விலங்குச்சா திகளிலே வீழ்வா, ரொக்கமற் றிவற் றின் பலன்களுந் தெரிய வுரைக்கின்றே னிவற்றையு முணர்வாய்.

அருங்குண மாய சத்துவ பலமா மழுக்கற விராசத பலமாம், பெருந்துய ருழைத்த றமோபல மாகும் பேதைமை பேசிய முறையே, பொருந்திய விந்தக் குணங்கண்மூன் றூலும் பூதசா லங் களுக் கெல்லாம், வருந்திரு வாய ஞானமோ டுலோப மயக்க மென் றின்னன வருமால். 88

சத்துவ மாந்தர் பரகதி யடைவர் தமத்துளோ ரதோகதி சார்வார், மத்திம குணத்தோ ராயினோர் நடுவின் மானுடப் பிற வியாய் வாழ்வா, ரித்திற மாய வுருவமே விகாரி யானவி காரி யென் றிவற்றை, மெய்த்திற னுக வறிந்தவ னறிந்தப் பொழு திலே வீட்டின்ப மடைந்தான். 89

உடம்புட னிருந்தே யுரைத்தவிக் குணங்கண் மூன்றையு முள்ளவா றறிந்து, கடந்தவன் பிறப்பு மூப்பிறப் பாதி யாகவே கட்டுரைக் கின்ற, விடம்புரை யிடும்பை யாவையுங் கடந்து வீட்

டின்பம் விளைபவ னென்றான், றடங்கட லிடையே வளர்ந்தவ
னவற்கு வேறிது தனஞ்சய னுரைப்பான். 90

வே று.

வேர்மே லதுதலை கீழது வீவில் லதுவேதத்
தேர்மே வியவிலை மேவிய தியாவும் புகறலினு
லார்மே வியவசு வத்தம தெனவே யரசதனின்
பேர்மே யதுபெரு மாயைசெய் பிறவிப் பெருமரமே. 91

கனவுந் திகழ்கழு தாழியு மிருகந் தர்வநகரு
மெனவுந் தழிதலி னுலுரு வதுவின் றியதியாது
முனம்வந் திடுமுத லுளொடு முடிவின் மையினாலே
தனதந் தமுமுத லுந்தெரி தரவில் லதுதானே. 92

வே று.

மந்திர மாயவிந்த மரத்தினைத் துறவென்கின்ற
தந்திரவாளால்வெட்டித் தற்பர மாகிநின்றே
யிந்திர சாலமென்ன * யாவுமென் னிடையேகாட்டு
மந்தமி லாதவென்னை யடைகையே யடுப்பதையா. 93

துன்னிய வாசைகோபங் கடந்தவர் காணத்தோன்று
மென்னுரு வியற்கைகேட்கி லியாவையுங் காட்டுகின்ற
மன்னிய வொளிகள்காணு வகையதாய் வந்துசேர்ந்தார்
பின்னியல் வேறென்றுகாப் பெற்றிய னென்றுபேசும். 94

குடந்தொறுந் தோன்றுகின்ற † காயமுங் குலைதற்கேற்பத்
தடம்புன றோறுந்தோன்றுஞ் சந்திரன் றானுமென்ன
வுடம்புக டோறும்வேறு யுயிரென நின்றேயந்த
விடம்படு § புலன்களாறு மியல்பினி லியற்றுவேனன். 95

வே று.

அஞ்சுத லின்மையு மறிவை யாக்கலு
நெஞ்சினை யடக்கலு நிலைகெ டாமையு
வெஞ்சின மின்மையு மெய்ம்மை கூறலுந்
தஞ்சென வேள்வியுந் தவமு மாக்கலும். 96

* யாவையுங் காட்டுகிற்கும்-என்றும் பாடமுண்டு.

† காயம்-ஆகாயம்.

§ புலன்கள் ஆறு-சுரோத்திரம், சட்சு-சிம்ஞவை-இராணம்-துவக்கு-மனம்.

மறைபயி றனுந்தனை மதித்தி ராமையுங்
குறளைக டவிர்தலுங் கொல்கை மாற்றலும்
பிறர்பிழை பொறுத்தலும் பேரொ ழுக்கமு
மறன்வலி தானமோ டருளை யாக்கலும். 97

இருவகைத் தூய்மையு மிந்தி யங்களை
யொருவழிப் படுத்தலு முள்ளிட் டன்னவை
செருவருஞ் சிலையினய் தெய்வத் தன்மையோர்
மருவிய தொழிலென மதிக்க வேண்டுமே. 98

வே று.

தீமைசெய் யசுர ராஞேர் செய்கையைத் தெரிக்கி லொன்றை
யாம்வகை யெனமற் றுகா தனவென வறித லில்லார்
தூய்மையுந் தூய வாய வொழுக்கமுந் தொடக்கு விட்டார்
வாய்மையொன் றுனு மில்லார் மயக்கமே மருவா நின்றுர். 99

மற்றவர் தம்மை யிந்த மாநுட ராஞே ரியார்க்குங்
கொற்றவ கீழா ஞேரைக் கொடுமையா லரவொப் பாரை
யற்றமி லிடும்மை சேரு மாசுர யோனி யாய
புற்றவை தோறு மியானே புகப்புக விழுத்து கின்றேன். 100

வே று.

சாத்துவிகர் தேவரையே சரண்புகுவர் தாமதர்கள்
காத்தல்புரி வனபேயும் பூதமுமாய்க் கடைப்பிடிப்ப
ரேத்தரிய குணமிவற்றி லிராசதமாங் குணமுடையோ
ராத்தரென வியக்கரையு மரக்கரையு மடைகுவரால். 101

வே று.

சத்துவ குணத்தோ ருண்டி யுரைத்திடி லழுகு சார்ந்து
தித்தித்த சுவைய வாகி நெய்த்துச்சிக் கெனவு சேர்ந்து
வத்தித்து வலிநோ யின்மை யறிவுநல் லாயு வின்பம்
வத்திக்கச் செய்யு மிந்த வுணவுகண் மடங்க லன்ருய். 102

இப்படி யன்றி வேறு யிராசத ருணவு கேட்கிற்
கைப்பன புளிப்பு வர்ப்புக் கூர்ப்பன கடிய வெய்து
நெய்ப்பயி னெருப்புப் போலச் சுடுவன விவற்றி ஞலே
மெய்ப்படு நோயு நெஞ்சத் திடும்பையும் விளைவ வேலோய். 103

ஆசினை யடைந்த நெஞ்சிற் ருமத ருணவு கேட்கில்
லூசின பழஞ்சோ றெச்சி லும்பர்பூ சனைக்கா காமை
யேசின வெந்தி லாத வினையன விவற்றி ளூலே
காய்சின முதலா யுள்ள துயரெலாம் விளைவ கண்டாய். 104

வே று.

தீர்த்த யார்க்குஞ் செவிக்கினி தாயின
வார்த்தை மாமருந் தேயென லாவதா
வோர்த்து மெய்மொழி கூறுத லோதுதல்
வார்த்தை யாற்பண்ணு மாதவ மாவதே. 105

தெளிவி னெஞ்சைத் தெளியப் பிடித்தலுங்
களிசெ யும்முளத் தைக்களி மாற்றலுங்
குளிர்வி லாமையு ளத்திற்கொ டாமையு
மெளிதின் மானத மாதவ மென்பதே. 106

தலைமை யந்தணர் தேவர் குரவர்பான்
மலைத லின்றி வழிபடு வாழ்க்கையுங்
கொலை துறத்தலுங் காமங் குறைத்தலுங்
தலைவ காயத் தவமெனப் பட்டதே. 107

வே று.

தீத்தவழும் வடிவேலோய் செப்பியவிம் மூன்றுனுஞ்
சாத்துலக மகிழ்வெய்தச் செய்கின்ற வருந்தவத்தி
னூர்த்துவரும் பயன்வேண்டா தாகின்ற வருந்தவந்தான்
சாத்துவித தவமென்று சாற்றுவது தக்கோரே. 108

வே று.

வசையிறவ முடையரென மாநுடர்கொண் டாடுகைக்கு
நசையினொடு பொருள்பெறவுஞ் செய்கின்ற நற்றவத்தை
விசயவுனக் குரைசெய்தேன் மிகப்பெரியோர் செய்திடினு
மிசையவறி மற்றிதனை யிராசதமாந் தவமென்றே. 109

பேதைமையை மிகவுடைத்தாய்த் தன்னுயிர்க்கும் பிறவுயிர்க்கு
மேதமுறு பெருந்துயருங் கேடுமே யியற்றுவதா
யாதவனும் பணியுமுழன் றூற்றுகின்ற வருந்தவந்தான்
றுதலரு நெடுமுடியாய் தாமதமாந் தவமாமே. 110

முன்செய்கா ரியப்பொருட்டு மின்றியே முடிதிதனற்
பின்பொருநற் பொருள்விளையு மென்பதுவும் பேணுத
நன்குடைய காலத்தே நல்லிடத்தே நல்லவர்க்குத்
தன்பொருளைக் கொடுக்குமது சாத்துவித தானமே. 111

கொண்டுசெயத் தகுங்கரும மெனுங்குறிப் பொன்றின்றியே
பண்டுசிலர் செய்ததற்காப் பரிவோடு பண்ணினவு
முண்டிதனுன் மேல்விளைவென் றுணர்வோடிச் செய்வனவு
மெண்டிசையு நிறைபுகழா யிராசதமாந் தானமே. 112

வாயாத தொருபொருளை வழங்காத காலத்தே
போயாத நிலத்திடையே யிழிந்தகுலத் தவர்களுக்கே
யாயாத வறிவினெடு மப்பிரியத் தொடுங்கொடுத்தல்
சாயாத பெருந்திறலோய் தாமதமாந் தானமே. 113

வே று.

நித்த மாய வினையி னெறியினை
மத்தர் போல வொருவன் மயக்கினுற்
பித்த னய்விடு கின்றவப் பெற்றியைச்
சித்த தாமதத் தியாகமென் கின்றதே. 114

மெய்வ ருத்தமுண் டென்று விடுவதிங்
கைய மின்றியி ராசதத் தியாகமாங்
கைவ ரும்பல மாசைகை மாறவே
செய்வ செய்வது சத்துவத் தியாகமே. 115

வே று.

யாவ னொருவன் றன்னுடம்பை யானென் றிருக்கு மியல்
பாழித்தா, னியாவ னொருவன் றன்கரண மியாதொன் றோடும்
மழதலிலா, னுவ னவனிவ் வுலகத்தை யடையக் கொன்று
பினுமோர், பாவ மில்லை யவன்கொன்ற பழியு மில்லை பார்
ண. 116

ஞானத் திரளாகி நானு விதமாய் விரிந்தெங்கும்
நின்ற பூதங்க டோறும் பொன்றுப் பொருளாகி
யொன்றாய் நிற்ப தொன்றினையப் படியே யுணரு முணர்வதனை
யன்று மென்னர் சாத்துவித ஞான மெனவே யமைப்பரால். 117

ஊனப் படுமிவ் வுடலொன்று முள்ள பொருளை யுணராதே
யீனப் படக்காண் கின்றதிரா சதமா ஞான மதுவன்றி
ஞானத் திரளாய் நின்றதையோ ருடம்பி னிடையு நாட்டிடை
தானத் திடையு மடங்கக்காண் பதுதா மதமா ஞானமே.[யோர்

வேறு.

வீதலும் பற்று மேலோர் வினைப்பயன் வேண்டல் வேண்டாக்
காய்தலொன் றின்றிச் செய்யுங் கருமஞ்சாத் துவித கன்ம
மாய்தரும் பலத்தி னோடு மகங்கர மத்தி னோடு
மேய்தருங் கருமமெல்லா மிராசத கரும மாமே. 119

குலைபெரும் பற்று மேலோர் கூறிய நீதி யோடுங்
கலைதெரிந் துணர்ந்து மெய்மை கடைப்பிடி யாமை யார்க்கு
மலைவருங் கேடு நாச வலியிவை யவிவேகத்தால்
தலைதவச் செய்வ தெல்லாந் தாமத கரும மாமே. 120

பற்றுமாங் காரந் தானும் பழுதறத் துறந்தி யாவு
முற்றெழு முயற்சி யோடு நிலைமையி னோடு மொன்றி
யெற்றுமோ ரிழவு பேற்றிற் றுன்பமி தின்ப மென்று
சற்றுமோர் சலிப்பி லாத தலைவன்சாத் துவித னென்பான். 121

வேறு.

வினைப்ப யன்றனை வேண்டலும் வேட்கையு
மெனைத்தி டாமையுந் தூய்மையி லாமையும்
நினைப்பின் வாட்டமு நீடு மகிழ்தலு
மினைத்தின் வாழ்வரி ராசத மாந்தரே. 122

மனமொ ருக்கலும் வான்கலை நூல்களைத்
தனமெ னக்கொடு கற்கலுந் தக்கவ
* ரினம கிழ்த்தலு மின்றியுண் டாகிய
சினம்வி டுக்கலார் தாமதஞ் சேர்ந்துளார். 123

ஈன மற்ற துறவற மில்லறம்
ஞானம் பற்றொடு நல்வினை தீவினை
யான வஞ்சுவ வஞ்சத்த காதெனத்
தான றிந்தது சத்துவ புத்தியே. 124

* இன மகிழ்த்தலு மின்றி முடிப்பதோர்-தின முடித்திடார் தாமதஞ் சேர்ந்துளார்-என்றும் பாடம்.

தருமம் பாவந் தனக்குச் செயத்தகுங்
கருமஞ் செய்யத் தகாத கருமங்க
ளருமை யாலறி யாத வறிவதே
யிருமை யாய விராசத புத்தியே. 125

பாவ மாகத் தருமத்தைப் பார்த்தலு
மாவ தாமென் றடாதது நோக்கலுந்
தீமை செய்கின்ற சிந்தனை தீங்கிலே
போவ தாவதுந் தாமத புத்தியே. 126

வேறு.

மனஞ்செ யுந்தொழின் மன்னுயி ரின்றொழி
லினஞ்செ யிந்தியஞ் செய்தொழி லென்றிவை
கனஞ்செய் தேறிலுங் கண்டுபொ றுத்தலுஞ்
சினஞ்செ யாமையுஞ் சாத்திக திருதியே. 127

துன்ப மாய்விடம் போன்று தொடக்கத்தி
லின்ப மாகிவி ளைவிடம் யாவர்க்கு
மன்ப வாரமு தேயென லாவதா
மென்ப சாத்துவி கந்தரு மின்பமே. 128

பொருத்த மாய்ப்புல னோடு பொறியிலே
யருத்தமா யெழுந் தாரமு தென்னலாய்
விருத்த மாய்முடி வில்விட மாகியே
யிருத்த லாகுமி ராசத வின்பமே. 129

தொடரு ரக்க மயக்கொடு சோம்பினாற்
படவு தித்ததாய் பண்ணும் பொழுதினுங்
கடன் விரைந்து முடிந்த காலத்தினு
மிடர் விளைப்பது தாமத வின்பமே. 130

வேறு.

கறைசெயைம் புலன்களைக் காண நான்குடன்
றுறைதுறை யடக்கலுந் தவமுந் தூய்மையும்
பொறையொடு கல்வியும் பொருந்து ஞானமு
மறையவர் தொழிலென வகுக்கப் பட்டதே. 131

தலைமையுங் கொடையொடு தறுக ணாண்மையு
நிலைமையுங் கீழ்ப்படா நெஞ்சி னீட்டமுங்

கொலைபயில் போர்களிற் புறங்கொ டாமையுஞ்
சிலைமலி தோளினு யரசர் செய்கையே. 132

உழுதொழில் பசுக்களை யோம்பல் வாணிகம்
வழுவறச் செய்கையே வணிகர் வாழ்க்கையாம்
பழுதற விவர்களைப் பாது காத்தலே
விழுமிய தொழில்கள்வே ளாளர்க் கென்பவே. 133

வே று.

என்னைப் பற்றிக் கொடுநின்றே யெல்லா வினையு மியற்றி
னாற், பின்னைப் பிறவாப் பெரும்பதமென் னருளி னாலே பெறுங்
கண்டாய், நின்னைத் தொடரும் வினையெல்லா மென்னை நினைந்
தே செயில்வினைக, டன்னைக் கடத்தற் கருந்துன்ப மெல்லாங்
கடக்கத் தகுதியால். 134

வே று.

என்னையே நினைந்தெழவுன் மனத்தினையென் னிடையேவை
யென்னையே நினைந்திருநீ மற்றெனக்கே பூசனைசெ
யென்னையே குருவாக்கொள் ளெப்போது மிதுசெய்யி
லென்னையே வந்தடைதி யிதுமெய்யே யிதுமெய்யே. 135

இருவேறு வகையாய வெவ்வேறு வினைகளையு
மருவேனென் றறவிட்டு மாயையினான் மறைப்பரிய
வொருவனையே பற்றுதியப் பற்றினு லுனைப்பிறவிக்
கருவேலை கடந்தேறக் கைதருவேன் கதிர்வேலோய். 136

வே று.

வேதநூல்களின் முடிவினை வியாதனிற் பின்னு
ளோதமாக்கட லுலகினுண் டாக்கிய வுரவோன்
கோதிலாநெறி யுணர்ந்த கோவிந்த மாமுனிவன்
பாததாமரை பற்றிவீட் டின்பமே படைத்தான். 137

வே று.

ஆற்றியல் வழுவிய புலன்க ளைந்தையும்
பாற்றிய சங்கர பகவற் பாதனென்
றேற்றிய பெயரினு னருளினு லியான்
சாற்றின னிப்பெருந் தருமநூலையே. 138

## ஈசுரகீதை.

பூதமைந்தோ டிரவிமதி புருடனாகிப் புணர்ந்தென்றும்
பேதமில்லா வறிவுருவாய்ப் பிறங்குகின்ற பேரொளியோ
னாதிமூவர்க் கறிவரியோ னரிவைபாக னமமலன்
பாதபங்க யங்கடலை வைத்தேபணியும் பரிசினனால். 1

அறிவென வுரைக்கப்பட்ட தவனுடை யுருவுதன்னே
குறைவிலா நிமலன்சாந்த னுண்ணிய னென்றுமுள்ளோன்
செறியுமெப் பொருட்குமுள்ளாய்ச் சின்மயமாயே சான்றாய்ப்
பிறிதரு மவித்தைக்கெட்டாப் பெற்றிய னென்றானீசன். 2

யாதொரு பொருட்குமுள்ளா யிருந்துள வறிவுதன்னை
மேதகு புருடனென்று முயிரென்று மீசனென்றும்
பேதமில் காலமென்று மனமொடவ் வியத்தமென்று
மோதிடு மறைகளென்றே யுரைத்தன னெறிவிலீசன். 3

பந்தமதி லொருக்காலும் பற்றுறா னப்பந்தஞ்
சிந்தைசெய் துந்தான்செய்யான் செய்வானு மேயிற்கு
முந்தியவான் காற்றனனீர் மண்ணல்லன் முழுதுமா
யந்தமிலா வானந்த வறிவுருவே யவன்வடிவம். 4

அறிவினை யுடையராகி யருமறை முடிவுகண்டோர்
செறியுமெப் பொருட்குஞ்சான்றாய்ச் சின்மய மாயேதன்னிற்
பிறிதரு மவித்தைக்கெட்டாப் பெற்றியோ டெங்குநிற்கு
மறிவென வுரைப்பரல்ல தயலொன்று மின்மைகண்டே. 5

### வேறு.

அழியா தெங்கு முளதாகி யனைத்துட் புறம்புந் தானிரம்பி
யொழியா வறிவா யொருகுற்ற முறைத்தற் கரிய தொருபொரு
கழியா மாயை யதனாலே காணப் பலவாய்த் தோன்றியிடு [ளே
மழிவா யினதென் றென்றுமிலா திருக்கு மதுவே யியல்பென்றான்

பூதங்க ளனைத்துந் தன்பாற் புணர்ந்திட நிற்றல் கண்டே
பூதங்க ளவற்றி னுள்ளும் புறம்புந்தா னிற்றல் கண்டோன்
பேதங்க ளனைத்து மில்லாப் பிரமமே யடைந்து வேறு
மேதங்க ளனைத்தும் விட்டோ னென்றிட லாகு மன்றே. 7

வேறு.

யாவனி யாதொரு போதித யத்தே
மேவிய வாசையெ லாமற விட்டா
னேவரு மின்னமிர் தாயவ னப்போ
தோவலி லாதொளிர் வீடடை வுற்றான். 8

வேறு.

ஆறுபல கூடியுல கத்தலை கடற்கே
வேறறவுண் மேவியுட னாகும்வினை வேபோ
லீறில்பர மாயருவ தாயபிர மத்தோ
டாறுமறி வானவை யடங்கியிடு மன்றே. 9

வேறு.

படைப்பவனா னெப்பொழுதும் பரம்பரயோ கிக்கிருந்து
நடத்துவனா னனவொடுக்க மிலாஞான யோகத்தாற்
கிடைத்திடுமென் றனையாகக் கெழுமியயோ கானந்தத்
திடைப்படலா னடஞ்செய்வே னெல்லையில்பே ரின்பத்தால். 10

வேறு.

சித்திரையு ளுதவதில் வாயுவை நிறுத்திப்
பத்தியொடு சாந்தியைய டைந்தபர யோகத்
துத்தமர்க ளாதனுத யாத்தமன மில்லாச்
சுத்தவொளி யோடவ்வொளி கண்டனர்க ளேயோர். 11

வேறு.

அறவின ரறிவிடைத் தோன்றுஞ் சோதியை
யுறவினி லறிபவர்க் கெளிய வுண்மையைப்
பிறிவினி லறிவரி தாய பெற்றியை
யறிவினி லறிபவர்க் கருளு மண்ணலை. 12

வேறு.

சூரம்பையினுள் ளேயிதயக் குகையின்மறைந் திருக்கின்ற
பரம்பொருளைக் கண்ணாலே பார்த்துப்பல் காற்பணிந்து
கரந்தலையிற் குவித்துத்தங் காதல்கரை யழிவுறநின்
றீர்ந்தரவோங் காரத்தை யுச்சரித்தங் குபரிடத்தால், 13

கரணமெல்லா மொடுங்கினவர் காயத்துள்ளே கதியாகிப்
பிரமயோனியா யுள்ளபெரும வென்றும் பிறவாதாய்
மரணமில்லா நின்செம்பொன் வடிவேபரமாய் மற்றெதிலும்
பரமமா யுயிர்க்குயிராய் நிற்கும்பரமாய்ப் பார்க்கின்றோம். 14

ஒருமறை யனந்தசாகை கொண்டுள துருவமொன்றி
னருமையை யறிவிக்கின்ற வப்படி யறியவுன்றன்
பெருமையை யறிவார்சாந்தி பெறுபவர் பெறுதாரெல்லாங்
கருமய லுறுவார்சாந்தி கனவிலுங் காணமாட்டார். 15

யோகியாகி யுயிராகி யுணர்வானுகி யிணையில்லா
வேகனுகி யிருந்தானு மரியுமயனு மீசனுமாஞ்
சேகிதாவுந் தாதாவுந் தீயுமதியுந் தினகரனு
மாகிவெவ்வே றனைத்துருவு மானுயெனவே யறைகுவரால். 16

வேறு.

கரண மியாவையுங் கடந்திருள் கடந்துனேக் கண்டவ ராதித்த, வருண மானசின் மாத்திர நேத்திர முதற்புலன் மனஞ் செல்லாப், பிரம மேகமாம் புருடனேர் பிறிதிலாப் பெருமை யாற்பேச் சற்ற, பரம மான்முதற் பகுதிநிர்க் குணம் வெறும் பாழென நிகழ்கின்றார். 17

வேறு.

ஓது மொலியூ றுருச்சுவை நாற்றந் தனக்கற்
றூதி முடிவில் பரமா யசிந் திதமாய்ப்
பூத மனைத்தி னுக்குமுள் ளாய்ப்பு றம்புமாஞ்
சோதி நினை யறிந்தார் துஞ்சார் பிறவாரால். 18

பல்வுரை செய்குவ தென்பல பரசத் தியினு
லுலகமெ லாமெனி லேயொழு கவெ னுள்ளொழியத்
துலகுப ரப்பி ரமமா கியசோ தியதா
யிலகுவ னனெனில் வேறில் லையோ ரன்னியமே. 19

வேறு.

பின்னிய பகுதியாம் பிரதான மாயையு
மன்னிய புருடனு மானு மாதியாய்த்
துன்னிய விகாரமுந் தொல்லை யீசனி
லன்னிய மின்மையா லவனே யாகுமால். 20

வேறு.

அவனேபாச மவனேகட்டுண் டவனேகட்டு மதிபதியு
மவனேயவனை யொருவர்களு மறிவாரில்லை யனைத்திற்கு
மவனேபசுக்க ளாகின்று னனைத்துமாகி யுள்ளானு
மவனேயனாதி புருடனென வவனையறிவா ரறைகுவரால். 21

என்னையுற நினைப்பவரி லெங்கேனு மொருவனவன்
றன்மதியைக் கடந்தருவாற் றன்னிதயக் குகைதன்னிற்
பொன்மயனாய் புராணமாம் புருடனைப் பொருந்துமெனி
லன்னியம தறவறிவா னவன்பரமத் திடையடைவான். 22

வேறு.

என்னெறிய வில்லைசக தியானவ் வுருவல்லே
னுன்னிலொரு மாயையுல குக்குமுத லாகு
நின்னுருவ மானவெனை யன்றியது நாளுந்
தன்னியல்பி னனிகழ்வு றத்தகுவ தன்றால். 23

வேறு.

ஈனஞ்செய்யு மஞ்ஞான விருளைக்கடந்து மேலான
பானந்தனக்கே யுளதான பரமவொளியாம் பரம்பரனை
ஞானந்தன்னால் வேறறவே நானென்றறிந்த நல்லோனவ்
வானந்தமதாம் பிரமமய மாகிவீடே யடைகின்றான். 24

ஒப்பதுமிக் கதுகுறைந்த வொன்றுதனை யொழித்தில்லா
தெப்பொருளெவ் வொளிகட்கு மெவ்வொளிதா னொளியாகுஞ்
சிற்பரமா காயத்தே திகழ்கின்ற வதுதெளிந்த
வப்பெரியோ னனந்த மாய்ப்பிரம மாகின்றான். 25

வேறு.

புன்மய கோசமுள் புக்கொ ளிக்குமோ
நன்மைய தாகிய ஞானக் கண்ணினாற்
சின்மய மாய்த்திகழ் தேசை நோக்கிய
தன்மையால் வியோமகற் றமங் காண்பரால். 26

வேறு.

எங்குமுளா னயிறையா யேகனா யெல்லாப்பூ
தங்கடொறு மறைந்திருக்குந் தன்மையனாய்ச் சராசரங்கட்

இங்குயிரா யுள்ளாகு மிறைவனொரு வனையுமறிந்
தங்கடைவார் சாந்தியினை யடைவரல்லா தவரடையார். 27

வேறு.

யோகினி னுளமென்பா ரொருபடி யுறவைத்தே
யேகவெ னிலைகண்டா ரவரின தியல்கண்டார்
பாகம தறுமொன்றும் பலவுரு வமுநானே
யாகவு மெனையன்பா லறினொரு மயலன்றால். 28

வேறு.

உதியாம லென்று மொழியாமை நின்ற வொளியாகி யென்று முளதாய்த், திதியாய் நிறைந்து தெளிவாகி யங்கொர் செயலான தின்றி யருளான், மதியாளர் தங்க ளகமே யகண்ட வடிவாய் நிகழ்ந்த வடிவே, பதியாகி யென்று மழியாமை நின்ற படியாகி நின்ற பரனும். 29

வேறு.

சுத்தமா யென்னைக் கண்டெத் தோற்றமுந் தோன்றுதான
வுத்தம யோகமெல்லா யோகிலும் பரமயோக
மத்திற மின்றி யென்னை யாயிரங் கோடி காலஞ்
சித்தம தொருக்கி நாளுஞ் சிந்தையிற் றிகழக் காணார். 30

வேறு.

மறைவினி லாகினும் வலியினி லாகினும்
பிறர்பொருள் வவ்வுதல் பெரிய கள்ளமாங்
கறையுறு மரிவையர் திறங்க ளுவினும்
பிறழ்வற மறப்பது பிரம சாரமாம். 31

ஓதுமா லம்பன மொன்று மின்றியே
போதமும் போதகப் பொருளு மென்றுணர்
பேதம தன்றியே யிருந்த பெற்றிநற்
சாதன மாகிய சமாதி யென்பரால். 32

வேறு.

தாரணை யாயா மத்திற் றகுதிபன் னிரு மடங்காந்
தாரணை தன்னிற் றியானந் தானுமப் படியே நன்றாந்
தாரணி தன்னின் ஞான சாதன மாஞ்ச மாதி
யேரணி தியானந் தன்னி லேற்றமிப் பரிசே யென்பர். 33

வேறு.

* நீரினுற் செழும்ப தானவவ் விடங்க ணெருப்பினுல் வெந்த வவ் விடங்க, ளூருசெந் துக்க டுற்சனர் தூரால ருதிர்ந்திடு சருகுபுற் றிடங்கள், கோரமாம் பயிங்க ளுள்ளிட மிடிந்த கோயிஞற் சந்திகண் மயான, மாரவா ரங்க ளுள்ளிட மசுத்த மலக்கணு மனத்தினுக் கதனுல். 34

† வருத்தமா யுடல வாதையைப் பற்று மனமது நடுநடுங்கிட்டுப், பொருப்பினிற் குகைகள் புண்ணிய தேசங் கோயில்கணதிகளின் கரைக, ளிருப்பறு மனைதா னூர்வது கடிப்ப தின்றியே காந்தமா யுள்ள, வொருத்தரு மறியா விடத்திலே யென்னையுன்னுவான் மனனெருப் படுவான். 35

வேறு.

தனியி லிருந்து பயமின்றிச் சாந்தனுகித் தனக் கிசையு
முனிவர் மொழியு மாதனங்கண் மூன்றி னென்றி லேமூக்கி
னுனியைச் சிறிதே கண்விழித்து நோக்கியாது நோக்காதே
யினிய தன்பா லேயிருந்த வென்னைப் பாவிப் பதியோகம். 36

சகலசத் தியுமு டைத்தாய்த் தமனிய மயமாய்த் தாரம்
புகலுமெய் பொருளா யென்றும் பொன்றுரு தாகி யெங்குந்
திகழொளித் திரளா யுள்ள தெய்வமாய்த் தெரிக்கொ ணுதாய்
நிகழுதற் பரத்தி னேரே நித்தனு நெஞ்சை வைப்பான். 37

வேறு.

மிக்கபரஞ் சுடரான விமலனையும் விளம்புற்ற
வக்கமலத் தேதனையு மயலாகா வகைநினைவா
னக்கரமாம் பரமாகா சத்துவனைத் தானெங்கு
மொக்கநினைந் தேபின்னை யொன்றுநினை யாதொழிவான். 38

வேறு.

அன்னிய மறவன லோனைக் காட்டிய
பன்னிய புருடனும் பஞ்ச விஞ்சகன்
றன்னையே சகலகத் தாவாத் தன்னுரு
வன்னியின் சிகையதா மதித்து நோக்குவான். 39

---

* விலக்கைக் குறிப்பது. † விதியைக் குறிப்பது.

வேறு.

சொன்னதத் துவங்க ளெல்லாஞ் சோதனை பண்ணிப் பின்னைப்
பின்னதத் துவமொன் றில்லாப் பிரமநா னென நினைந்து
பன்னரு மோங்கா ரத்தாற் பரமமாம் பரமா யுள்ள
வென்னிலே தன்னை வைத்திங் கென்மய மாகி யுள்ளான். 40

வேறு.

ஏசி லிந்தவி யோகா லெலையடைந்
தாசை கோபம் பயமற்ற வான்மராய்ப்
பாச மற்றெனைப் பாவித்த பாவத்தா
லாசி லென்மய மானா ரனேகரால். 41

வேறு.

பொய்யில் பத்தியாற் றுறவாற் போதம் பொருந்தும் புந்தி யினாற், செய்யும் பூசை யேபூசை செய்யுந் தொழில்க ளெல்லாம் விட், டய்யம் பண்ணி யுண்டொன்று மாசைப் படாதா ரெனை யடையு, முய்யும் பரிசு மறைந்த பொரு ளுங்கட் கிரங்கி யுரை த்தனனால். 42

வேறு.

பத்தியையென் பாலுடையா னெவ்வுயிர்க்கும் பரிவுடையா
னொத்தநலந் தீங்கடையா னொடுங்கியவுள் ளமதுடையான்
புத்திமன மென்பாலே பொருந்தியபா வனையுடையா
னெத்தனையும் பொறையுடையா னியாவரினு மெனக்கினியான்.

பன்னியயோ கொழிவில்லான் பற்றிலான் பாவகத்தோ
ரின்னவிலா னாரம்பித் திடுவதொழி வதிலான்
றன்னைவெரு வுதலொன்றாற் றான்வெருவ றானில்லா
னென்னதியா னெனவில்லா னென்றுமெனக் கினியான். 44

வேறு.

துயரு றாதசந் தோட மேவியே
செயலெ லாமுதா சீன னாகியே
யயல ராயினா ரன்ப ரின்றிவா
ழியல்பி னானெனக் கினிய னாயினான். 45

துதியி னிந்தையிற் றுல்லிய னாயெனிற்
றிதிய டைந்துசி னஞ்செருக் கின்றியே
மதியி னொன்றினும் வாஞ்சையு றாதுள
வதிக வானெனக் கென்றுமெய் யன்பினான். 46

வாடலின் முகமது மலர்ச்சியு மவுனநற்
பீடுறு வித்தகம் பெற்ற தோடலங்
கூடுத லினியவை கூற லியாவரு
நாடரு நிலையுடை யவர்க்கு நல்லனான். 47

வேறு.

எத்தொழில்க ளுஞ்செயினு மென்னருளி னாலென்
பத்தர்பர மப்பதம டைந்திடுவ ராலே
தத்துவமும் வைத்தெனி லெனைச்சரண மாக
நித்தமு நிராசையை யடைந்துநினை கிற்பார். 48

வேறு.

அடங்கு மனனாய்ப் பயனொன்றி லாசைப் படாதா னளவற்ற
விடங்கொள் வினைகள் செய்தாலும் வீடே யெய்து மாதலினா
லுடம்பு காணு நல்யோகி யுண்டாம் வினையா லொருகாலு
மிடும்பை யடையா னாசைப்பா டில்லானெனையே யடைந்திடு
மால். 49

வேறு.

துற்றுவரு தொந்துவ மயக்கவை துடைத்துப்
பெற்றதொ டமைந்தெனருள் பேறுற நினைந்தே
யுற்றகரு மங்கள்வினை யென்னவுரை செய்யார்
கற்றவர்கள் வீடதென வேகருது கின்றார். 50

வேறு.

என்னையே நினைந்தெனைப் பணிந்தெனை யருச்சித்தென்
றன்னையே யறிந்தவ னெனையன்றி யேசாரான்
பின்னியா துமப்பெருந் தகையிருந் திடந்தனிலென்
சென்னி யாற்சுமந் தவற்குவேண்டுவது செய்குவனால். 51

வேறு.

கருத்திலா மூடர் காட்டமா திகளிற் காண்பர்கற் றவர்களா
காயத், தருக்கனிற் புனலிற் காண்பரா குதியி லருச்சனை செய்

யுமந் தணரவ், வெரிக்கணே காண்ப ரெங்குமாய் நின்ற வெனது
லிங் கத்தினை நேரே, யொருக்கிய பரம யோகிக ளென்று மொழி
வறக் காண்பர்தம் முளத்தே. 52

வே று,

நீங்காத காதலினு னின்மலபோ தம்பயக்கு
மோங்கார மாத லுருத்திரியந் தானுதல்
பாங்காக வத்தியன வானுகிப் பரித்தவுடல்
போங்காலத் தளவுநிரந் தரயோகம் புரிந்திடுவான். 53

வே று.

இந்த நாரண னீச னுகிய வென்னில் வேறல னென்றுதஞ்
சிந்தை யானினை வார்க ளுக்குரை செய்த யோகிது செப்பலா
மெந்த வாருயிர் கட்கு மின்னுயி ராகு நாரண னென்பதோ
ரந்த மாதியி லாவெ னக்கரு ளான தோர்வடி வாகுமால். 54

வே று.

ஏதமுற நாரணனை யென்னி லயல்காணும்
பேதவிழி யாளர்பிற விப்பிணி யறுரே
மாதவனை யானென மனத்தினினை கிற்கும்
போதவிழி யாளர்பரி பூரண மடைந்தார். 55

---

## ரிபுகீதை.

---

ஆனைமுக னறுமுக னருளாந்தேவி
யநந்தகண மளவற்ற முனிவர்தேவ
ரேனையுள நல்லன்ப ரியாவரானு
மெப்பயனும் பெறவேண்டி யிதயத்தின்க
ணூனமற வுபாசிக்கப் பட்டன்னோர்க்கிங்
குவந்தபய னருள்கருணு மூர்த்தியாகி
வானமென வகண்டசிதா காயமான
வத்துவதாம் பரசிவனை வணங்கல்செய்வாம். 1

அயன்சுதனும் ரிபுமுனிவா வேதாந்தத்தி
னருத்தமெலா மழுக்கறவே தெரிவிக்கின்ற
வியல்புளதாஞ் சூத்திரமோர் நான்கத்தியாய
மியாமருளிச் செய்ததிதன் விசாரத்தாலே
பயமருவா வகண்டபர ஞானமுண்டாம்
பவநீங்கும் பரப்பிரமா நந்தமெய்து
மயலறநீ கேளெனவே யதனைமுற்று
மகிழ்வுடனே ரிபுவிக்கு மகேசன்சொன்னான். 2

சொன்னவுடன் ரிபுமுனிவன் சூத்திரத்தின்
சூட்சுமமாம் பொருளையெலாங் கேட்டவண்ணம்
பின்னமற மனதினிடை மனனஞ்செய்து
பின்னுமதைத் தியானித்துப் பூன்றஞான
மன்னியதாற் பவத்துன்ப மனைத்துநீங்கி
மகத்தான வாநந்த மருவினோனா
யன்னசிவன் றிருவுருவை யிறைஞ்சியேத்தி
யதிசயமா மன்புடனே போற்றலானான். 3

அருள்வடிவா யெனையாண்ட சிவமேபோற்றி
யாநந்த கனமான சிவமேபோற்றி
சருவவிலட் சணமான சிவமேபோற்றி
சகலர்க்கு மிதமான சிவமேபோற்றி
நிருமலமாய் நின்றபர சிவமேபோற்றி
நீக்கமற நிறைந்தபர சிவமேபோற்றி
யிருமையிலா வேகபர சிவமேபோற்றி
யெங்குமுள வகண்டபர சிவமேபோற்றி. 4

அகிலசகக் காரணமாஞ் சிவமேபோற்றி
யம்பிகையி னுயகமாஞ் சிவமேபோற்றி
நிகிலபரி பூரணமாஞ் சிவமேபோற்றி
நிரவயவ நிட்களமாஞ் சிவமேபோற்றி
விகிலமிலா விபுவான சிவமேபோற்றி
வேதாந்த வேத்தியமாஞ் சிவமேபோற்றி
சகலைசகன் னுயகமாஞ் சிவமேபோற்றி
சத்தியசிற் சுககனமாஞ் சிவமேபோற்றி. 5

இன்னவிதம் பரசிவனைத் துதித்துப்பின்னு
　　மிறைஞ்சியவ னநுஞ்ஞையினு லவிடம்விட்டுப்
பின்னமிலா வாநந்த வநுபவத்தின்
　　பெலமுடனே யங்கங்கே சஞ்சரித்து
மன்னுசில வதிகாரிக் கிஞ்ஞானத்தை
　　மகிழ்வுடனே யங்கங்கே யுபதேசித்த
பின்னர்சில வேதுவினுற் புவியின்கண்ணே
　　பிறங்கியதாங் கேதாரத் தலத்தில்வந்தான். 6

பாரின்மிசை யிமகிரியின் சிகரத்தின்கட்
　　பற்றியதாங் கேதாரத் தலத்திருந்து
பூரணமாய்ப் பொருந்தியவக் கேதாரேசன்
　　பூசனையே புரிந்துமிக விரத்திகூர்ந்து
தீரமுறு சிவபத்தி சிவஞானங்க
　　டிடமாகி விபூதியுட னுருத்திராக்க
வாரமுதற் சிவசின்ன மனைத்தும்பூண்ட
　　வயன்சுதனும் ரிபுமுனியை முனிவர்கண்டார். 7

கண்டவுட னிதாகசுக ராதியான
　　களங்கமிலா முனிவரெலா மன்புகூர்ந்து
தண்டெனவே நன்முக வணக்கியேத்தித்
　　தகைமைமிகும் ரிபுமுனியை நோக்கிச்சொல்வார்
பண்டொருகாற் பரசிவனைக் கைலாயத்திற்
　　பத்தியுடன் பாங்காக வாராதித்தவ்
வண்டர்பிரான் கருணையினு லகண்டஞான
　　மகிலர்க்கு மிதமாக வடைந்தாயன்றே. 8

சலனமிலா வகண்டபர ஞானம்பெற்ற
　　சற்குருவே பரமசிவன் கருணையாலே
கலனமிலாச் சுருதிமுடிச் சூத்திரத்தின்
　　கருத்தான வகண்டபர சிவஞானத்தை
யலைவறவே நீமுன்ன மடைந்தவண்ண
　　மத்யந்த கருணையினு லெங்கட்கெல்லா
[illegible]கரு பவபந்த மனைத்துநீங்கி
　　[illegible]மா முத்திபெற வருள்செய்வாயே. 9

பரமசிவன் பூசனையே முதலாம்பத்தி
பண்ணியதா லவனருளுக் குரியரான
நிருமலமா முனிவரரே யுங்கட்கெல்லா
நிகழ்த்தவொணு ரகசியமாம் பொருளேயில்லை
யரியசிவ னடியார்க்கு மறைக்கத்தக்க
தானபொரு ளெங்கேனு மெவையுமுண்டோ
வுரியவரே யாதலினு லுங்கட்கின்றே
யுத்தமமா ஞானத்தை யுபதேசிப்பாம். 10

ஏகபரி பூரணமா மறிவேயான்மா
விவ்வறிவே விவகார தெசையின்மைந்தா
வாகமுத லநந்தவித வுபாதிகட்கு
மதிட்டான வடிவாக வமர்ந்துநிற்குந்
தேகமுத லனைத்துக்குஞ் சாட்சியாகுந்
திரிசியமாம் பொருட்கெல்லா மதீதமாகும்
பாகமற விசாரிக்கி லிவ்வான்மாவே
பகுப்பற்ற பரப்பிரம சொரூபமாமே. 11

அறிவுருவா யமைவுற்ற வான்மாதானே
யழியாம லிருப்பதனுற் சத்துமாகு
மறிவுருவா யமைவுற்ற வான்மாதானே
யனைத்தையுமே விளக்குவதாற் சித்துமாகு
மறிவுருவா யமைவுற்ற வான்மாதானே
யகிலர்க்கும் பிரியமதாற் சுகமுமாகு
மறிவுருவா யமைவுற்ற வான்மாதானே
யந்தமிலா திருப்பதனு லநந்தமாமே. 12

ஒருவெளியா யிருக்கின்ற வானந்தானே
யுற்றகட மடமென்னு முபாதியாலே
யிருவெளிபோற் கடவான மடவானென்றே
யிவ்வுலகி லிலங்கியிடு நீதியேபோ
லொருவடிவா மறிவான வத்துதானே
யுண்மையிலா வவித்தைமுத லுபாதியாலே
யிருவடிவ மானதுபோ லான்மாவென்று
மெங்குமுள பிரமமென்று மிலங்குமன்றே. 13

கடமடமா முபாதிகளை நேதிசெய்யிற்
கடவானு மடவானு மொன்றேபோல
மடமைமுத லுபாதிகளை நேதிசெய்யின்
மாசற்ற வான்மாவும் பரமுமொன்றே
யிடமருவும் வேதாந்த விசாரத்தாலே
யிருமைதரு முபாதியெலா நேதிபண்ணித்
தடமருவு மான்மபர வைக்கியத்தைத்
தடையறவே முமுட்சுவெலா முணரவேண்டு

ஏதமுறு மவித்தைமுத லான்மோபாதி
யிலங்கியிடு மாயைமுதற் பிரமோபாதி
பேதமெலா மான்மாவுக் கபின்னமான
பிரமத்திற் கற்பிதமாய்த் தோற்றலாலே
யீதெவையு மதிட்டானந் தனக்குவேறா
யெள்ளளவு மிலையெனவே நேதிபண்ணி
யாதிமுடி வொன்றுமிலா வகண்டமான
வான்மபர வைக்கியமே யறியவேண்டும்.

சுத்திகையிற் கற்பிதமாம் ரசதமந்தச்
சுத்தியலா தன்னியமா யிலாததேபோற்
சத்தியசிற் சுககனமா மான்மாவின்கண்
சலனமுதற் கற்பிதமாய்த் தோன்றுகின்ற
வித்துவிதம் யாவையுமிவ் வான்மாவன்றி
யிதரமதா யிலையெனவே நேதிபண்ணி
யத்துவித பூரணமா யமர்ந்துநின்ற
வான்மபர வைக்கியமே யறியவேண்டும்

ஆன்மாவிற் கற்பிதமாய்க் காண்பதெல்லா
மான்மாவுக் கயலாக வென்றுமில்லை
யான்மாவுக் கயலாகப் பிரமமில்லை
யப்பிரமந் தனக்கயலா யான்மாவில்லை
யான்மாவே பிரமமதாம் பிரமந்தானே
யான்மாவா மணுவுமிதி லையமில்லை
யான்மாவா மகம்பிரம மென்றெப்போது
மான்மபர வைக்கியமே யறியவேண்டும்.

அறிவுருவா மான்மாவே யிருப்பதாலே
யறையுமனுன் மாவெனுமோர் வாக்குமில்லை
யறிவுருவா மான்மாவே யிருப்பதாலே
யறியுமனுன் மாவெனுமோர் மதியுமில்லை
யறிவுருவா மான்மாவே யிருப்பதாலே
யமருமனுன் மாவெனுமோர் சகத்துமில்லை
யறிவுருவா மான்மாவே யென்றுமெங்கு
மசஞ்சலமா யமர்ந்ததென நிச்சயிப்பாய். 18

நிகிலமெனத் தோற்றுவதும் பிரமந்தானும்
நீயெனவே தோற்றுவதும் பிரமந்தானு
மகமெனவே தோற்றுவதும் பிரமந்தானு
மன்னியராய்த் தோற்றுவதும் பிரமந்தானு
மிகழ்சகமாய்த் தோற்றுவதும் பிரமந்தானு
மீசனெனத் தோற்றுவதும் பிரமந்தானு
மகிலவிதத் தோற்றமுமே பிரமந்தானு
மகண்டபரப் பிரமமதே யான்மாவாகும். 19

ஆதலினு லகண்டேக ரசமேயான
வான்மாவுக் கன்னியமா யணுவுமில்லை
போதகன மாகியவவ் வான்மாவேநீ
புகன்றதிலோ ரணுவேனு மையமில்லை
மாதவவிவ் வான்மாவா நானெப்போது
மகத்தான பரப்பிரம சொரூபமென்றே
பேதமிலா வகண்டான்ம நிச்சயத்தை
பெற்றதனுற் பவபாச முத்தனுவாய். 20

வாரிதியி லலைகுமிழி நுரைகடோன்றும்
வகையெனவே வரையற்ற பரசிவத்திற்
சாரமிலாச் சகலசரா சரமுந்தோன்றுஞ்
சனைமுறு விசாரணையா லவையனைத்தும்
பூரணமாம் பரமசிவ சொரூபமென்றே
புரையற்ற போதவுரம் பொருந்தினோரே
கோரமதாம் பவபாச மனைத்துநீங்கிக்
குறைவற்ற பரமசிவ சொரூபமாவர். 21

பரிவுடனே யுபநிடத பாடத்தாலும்
பரமசிவ பத்தர்க்கே தானத்தாலும்
புரையறவே திவ்வியமா மிலிங்கத்தின்கண்
பூரணமாம் பரமசிவ பூசையாலும்
பரவுசிவ தலங்களிலே வாசத்தாலும்
பலவிதமா மற்றுமுறு நியமத்தாலும்
பிரமமதாம் பரமசிவ னருளுண்டாகிப்
பின்னமிலா வகண்டான்ம போதமுண்டாம். 22

நித்தசிவார்ச் சனைமுதலாம் பத்திசெய்து
நிகழுமனோ சுத்தியினைப் பெற்றதீர
ரத்துவிதப் பரசிவமே மறையிருதி
யனைத்துக்குந் தாற்பரியப் பொருளாமென்றுஞ்
சத்தியமா மச்சிவமே நாமேயென்றுஞ்
சலனமிலா வகண்டசிவ ஞானம்பெற்று
மித்தையதாம் பவபந்த மனைத்துநீக்கி
மெய்யுணர்வா நந்தபர சிவமேயாவர். 23

அற்பமுமோர் பேதமிலா தகண்டமான
வத்துவிதப் பரசிவமே வேதாந்தங்க
ணிர்ப்பயமாய் நிகழ்த்தியநற் பொருளாய்நின்று
நிகழுமனோ சுத்தியிலா மூடரெல்லாம்
பற்பலவா நூற்களினுற் பேதபுந்தி
பற்றியதா லகண்டேக பரசிவத்தைத்
தற்பரமாஞ் சுருதிமுடி முதலாநூலின்
றற்பரியப் பொருளாக வறியாரென்றும். 24

அருந்தவனே யநந்தவித மறைந்திங்கென்ன
வகம்பிரமம் பிரமமக மகமெல்லாமென்
றுரந்தருமிவ் வகண்டபர நிச்சயந்தா
னுத்தமனுஞ் சிவனருளா லியாமடைந்த
நிரந்தரமா மநுபூதி யையமில்லை
நிமலபர சிவனுணை யுண்மைசொன்னேம்
பொருந்தியவிவ் வர்த்தத்தை யொருக்காலேனும்
புந்தியுறக் கேட்டுணர்வோர் பரமேயாவர். 25

கற்பிதமாஞ் சீவபர வுபாதியெல்லாங்
களங்கமுறு விசாரத்தா னேதிபண்ணி
யற்பமிலா வகண்டபரப் பிரமந்தன்னை
யனகவகம் பிரமாஸ்மி யென்பதாக
நிற்பயமா யறிவதுவே பிரமாகார
நிலைமைபெற வுரித்தான ஞானமாகு
மிப்பிரம ஞானத்தை யிசைந்ததீர
ரீனமுறு பவபாச மெய்தாரென்றும். 26

மாயைமுதற் கற்பிதமாம் பொருளேயில்லை
மாய்வற்ற பரசிவனு நானேசேட
மாயுளனென் றெண்ணுவதே யாவாகித்த
லசைவறவே தன்னிடையே தானாய்நின்ற
தூயவனும் பரசிவனே நானென்றெண்ண
றுகளற்ற வாசனமா மனத்தின்சங்க
மேயமதாந் தீவினைநல் வினைகளொன்று
மெனக்கிலையென் றெண்ணுவதே பாத்தியங்காண். 27

வெகுகால மாகியுள வவித்தையென்னும்
விரிவான சலாஞ்சலியை விடுதருனே
தருமான்ம லிங்கத்துக் கருக்கியங்காண்
தடையற்ற பரமசிவா நந்தமென்னு
நிகழ்வான வாரிதியின் லேசாம்லேச
நிகிலருமே பருகுவரென் றெண்ணுறுனே
வகையான வாசமன மாகுமைந்தா
வரமருவு மபிடேக விதியுங்கேளாய். 28

பூரணமாஞ் சுகவாரி யானவென்னுற்
புவனமெலா நனைப்புற்ற தென்றுநானே
காரியமா முதகத்தா னனைக்கவொண்ணுக்
களங்கமிலாப் பிரமமெனுந் தியானந்தானே
சாரமதா மபிடேக மற்றொன்றுனுஞ்
சற்றேனும் புனையவொணுப் பூன்றநானென்
றோருவதே பரமான்ம லிங்கத்துக்கிங்
குரித்தான வத்திரமென் றுணர்திமைந்தா. 29

திரிகுணமா மூலகமெனுஞ் சூத்திரத்தைத்
 திரட்டிரளாய்த் தரிக்குமதிட் டானமான
பரசிவனே நானென்னுந் தியானந்தானே
 பரமான்ம லிங்கத்துக் குபவீதங்கா
ணருவமதா யகிலவிசே டமுமேயற்ற
 வான்மாவே யகமென்னல் பணிகளாகும்
விரிபலவாம் வாதனைசேர் சகந்தரிக்கும்
 விபுநானென் றெண்ணுவதே கந்தமாகும். 30

முக்குணமாம் விருத்திகளை விடுதருனே
 மூலவிலிங் கத்துக்கட் சதைகளாகு
மிக்குருநா னீசனெனும் பேதமூன்றை
 யிகழ்ந்திடலே வில்லுவபத் திரங்களாகுந்
துர்க்குணமாம் வாசனையைத் தவிர்தருனே
 தூபமதாஞ் சுயஞ்சோதி யாயிலங்கு
நிர்க்குணமாம் பரசிவனே நானென்றெண்ணு
 நிரந்தரமாம் பாவனையே தீபமாகும். 31

பலகோடி பிரமாண்ட நானேயென்னல்
 பரமசிவ லிங்கத்தி னைவேத்தியங்கா
ணலையாத பிரமசுக மனுபவிக்கு
 மகண்டமதாம் விருத்தியதே வியஞ்சனங்காண்
சலியாத ஞானமெனு முதகத்தாலே
 சஞ்சலமூ லாஞ்ஞான மென்னப்பட்ட
தொலையாத வுச்சிட்ட சேடந்தன்னைத்
 துடைத்திடலே யத்தங்க டலக்கலாகும் 32

வெகுவிதமா யிராகமுறும் விடயந்தன்னை
 விடுத்திடலே தாம்பூல மளிப்பதாகும்
நிகழ்வுபெறு வஞ்ஞான விருளைப்போக்கு
 நிருமலமாம் பிரமான்ம ஞானந்தானே
திகழ்வுறுநீ ராஞ்சனமாம் விவிதமாகத்
 தெரிவதெலாம் பிரமமெனுந் திட்டிதானே
சுககனமாம் பரமசிவ லிங்கத்துக்குச்
 சுத்தமுறு மலர்மாலை யாகுந்தூயோய். 33

பூரணவா நந்தான்மா வகமென்றெண்ணல்
புகழ்புட்பாஞ் சலியாகு மநந்தகோடி
காரியமாம் பிரமாண்ட மென்னிடத்தே
கற்பிதமாய்ச் சுழலுமெனுந் தியானந்தானே
நேரதுவாய் வலம்வரலா மென்றுமென்னை
நிகிலருமே வந்திப்பார் நானெப்போது
மாரையுமே வந்திக்கே னென்னுந்தியான
மான்மமகா லிங்கத்தின் வணங்கலாமே. 34

அகண்டமதா மென்னிடையி லுமரூப
மணுவுமிலை யென்றுசெயுஞ் சிந்தைதானே
புகன்றபர பூசனையி லுரியதாகப்
புகல்கின்ற வரநாம கீர்த்தனங்காண்
சகந்தனிலே கர்த்தவ்ய மானதொன்றுஞ்
சற்றுமெனக் கில்லையெனச் செய்யுந்தியானந்
தகுந்தமனே பாவனையாற் செய்யும்பூசை
தனின்மற்று முள்ளவுப சாரமாமே. 35

சகலமனே மயக்கங்கள் விட்சேபங்கள்
சற்றுமிலா வசைவற்ற சமாதிதானே
விகலமிலாப் பரமசிவ லிங்கத்துக்கு
விசர்சனமா மிவ்வண்ணம் வேதாந்தத்திற்
புகலமல பூசனையை யொருக்காலேனும்
புரிந்திடுவோன் வாதனைக ளவையுந்தள்ளி
யகிலமதா மஞ்ஞான மரந்தையாவு
மகற்றிமகா மோட்சசுக மடைவனன்றே 36

திகழுமுமா நாயகனுய்த் திடபோதத்தைத்
தெரிவிக்கும் பரசிவனை யாராதித்தப்
பகவனருட் கருணையினாற் பாவமியாவு
பற்றறவே தீர்ந்துமனச் சுத்திபெற்றோ
ரகிலசக தான்மாவா யரூபமாகி
யகண்டசிதா காயமதாய் நிறைந்துநின்ற
சுககனமாம் பரசிவமே நாமென்றெண்ணிச்
சோகமெலாந் தீர்ந்துபர சிவமேயாவர். 37

நினைவின்றி நிற்பதுவே யகண்டமாகும்
நினைவின்றி நிற்பதுவே நிட்டையாகும்
நினைவின்றி நிற்பதுவே ஞானமாகும்
நினைவின்றி நிற்பதுவே மோட்சமாகும்
நினைவின்றி நிற்பதுவே சகசமாகும்
நினைவின்றி நிற்பதுவே பிரமமாகும்
நினைவின்றி நிற்பதுவே சிவமுமாகும்
நினைவணுவு மில்லையெலாம் பிரமந்தானே. 38

சுத்தமுறும் வேதாந்த விசாரத்தாலுஞ்
சுகநல்கும் பரமசிவ பத்தியாலுஞ்
வித்தமுத லேடணையை விடுதலாலும்
விமலமதாம் பரமசிவத் தியானத்தாலும்
முத்திதரும் பரப்பிரம ஞானமுண்டாய்
மொழிந்தமன முபசாந்தி மேவுமன்றி
சத்தமிகுங் குதர்க்கமுத லெவைகளாலுஞ்
சாந்திதனை மேவாது மனதெப்போதும். 39

திரிசியமே தொன்றுமிலாத் திருக்கேயாகித்
தியங்குமன்றே விகற்பமிலா நிலைநின்றோர்க்கு
மருவியிடு நனவுகளுஞ் சுழுத்தியில்லை
மரணமிலை யுய்வதிலை மற்றொன்றில்லை
பிரிவறவே மனதுவெறி திருக்குநிட்டைப்
பெருமையினை யென்சொல்வோ மென்றிவ்வண்ணம்
பரிவுடனே ரிபுமுனிவ னிதாகனுக்குப்
பரமார்த்த வுறுதியினைப் பகர்ந்தானன்றே. 40

நிகரிலகம் பிரமாஸ்மி மந்திரத்தை
நித்தமுமே யாதரவா யிடைவிடாமல்
வெகுகால பரியந்தஞ் செபித்துக்கொண்டே
விமலபர ஞானத்தைப் பழகல்வேண்டும்
மகிழுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
மகத்தான பாவமெலா நாசஞ்செய்யுந்
துகளிலகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
றுவிதத்தால் வருந்துயரை நாசஞ்செய்யும். 41

புகழுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
பொய்யான பேதமெலா நாசஞ்செய்யுந்
திகழுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
றிடசிந்தா ரோகமெலா நாசஞ்செய்யும்
மகிழுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
மனதிலுள வியாதியெலா நாசஞ்செய்யும்
பகருமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
பலவாதி வியாதிகளை நாசஞ்செய்யும். 42

நிகழுமகம் பிரமாஸ்மி மந்திரந்தா
னினைவுற்ற சோகமெலா நாசஞ்செய்யு
மகலுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
னகத்திலுள காமமெலா நாசஞ்செய்யும்
திகழுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
றிரளுற்ற கோபமெலா நாசஞ்செய்யும்
மிகவுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
மேவியசங் கற்பமெலா நாசஞ்செய்யும். 43

பகருமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
பலவிதமாஞ் சிந்தைகளை நாசஞ்செய்யு
மகலுமகம் பிரமாஸ்மி மந்திரந்தா
னகமென்னுந் துயரையெலா நாசஞ்செய்யு
மிகழ்விலகம் பிரமாஸ்மி மந்திரந்தா
னிதுவென்னுந் துயரையெலா நாசஞ்செய்யுந்
திகழுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
றிரிசியமாம் யாவையுமே நாசஞ்செய்யும். 44

அமலவகம் பிரமாஸ்மி மந்திரந்தா
னஞ்ஞான மனத்தையுமே நாசஞ்செய்யு
மமலவகம் பிரமாஸ்மி மந்திரந்தா
னவிவேக மனத்தையுமே நாசஞ்செய்யு
மமலவகம் பிரமாஸ்மி மந்திரந்தா
னபிமான மனத்தையுமே நாசஞ்செய்யு
மமலவகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
னாந்தைமிகும் பவத்தையெலா நாசஞ்செய்யும். 45

திகழுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
　தேகத்தின் றோடமெலா நாசஞ்செய்யு
மிகழ்விலகம் பிரமாஸ்மி மந்திரந்தா
　னிந்திரிய தோடமெலா நாசஞ்செய்யும்
மகிழுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
　மனமுதலின் றோடமெலா நாசஞ்செய்யும்
பகருமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
　பலகோடி தோடமுமே நாசஞ்செய்யும். 46

ஏற்றுமகம் பிரமாஸ்மி மந்திரந்தா
　னெந்திரதந் திரமெல்லா நாசஞ்செய்யுந்
தேற்றுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
　றிட்டமதிட் டங்களெலா நாசஞ்செய்யு
மாற்றுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
　னசத்தான மயக்கமெலா நாசஞ்செய்யுந்
தோற்றுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
　றோன்றியவெத் துவிதமுமே நாசஞ்செய்யும். 47

போற்றுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
　பூதங்க ளனைத்தையுமே நாசஞ்செய்யுந்
தோற்றுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
　றொடர்புவன மியாவையுமே நாசஞ்செய்யு
மாற்றுமகம் பிரமாஸ்மி மந்திரந்தா
　னஞன்மவுணர் வனைத்தையுமே நாசஞ்செய்யுஞ்
சாற்றுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
　சகசீவ பரமெவையு நாசஞ்செய்யும். 48

சாற்றுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
　சந்ததமாம் தியானத்தைச் சாரப்பண்ணுஞ்
சாற்றுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
　சவிகற்ப சமாதியினைச் சாரப்பண்ணுஞ்
சாற்றுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
　சகலவிகற் பமுமற்ற சமாதிநல்குஞ்
[illegible]ம் பிரமாஸ்மி மந்திரந்தான்
　[illegible]பபரோட்ச ஞானநல்கும். 49

நிகரிலகம் பிரமாஸ்மி மந்திரந்தா
　　னிகழ்சத்வா பத்தியெனும் பூமிநல்கு
மிகழ்விலகம் பிரமாஸ்மி மந்திரந்தா
　　னிசைத்தவசஞ் சத்தியெனும் பூமிநல்கும்
பகருமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
　　பதார்த்தாபா வனையென்னும் பூமிநல்குந்
துகளிலகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
　　றுரியகையென் றேதியநற் பூமிநல்கும். 50

அனிசமகம் பிரமாஸ்மி மந்திரந்தா
　　னமலான்ம ஞானத்தை விளக்குவிக்கு
மனிசமகம் பிரமாஸ்மி மந்திரந்தா
　　னமலான்ம லோகத்தின் செயத்தைநல்கு
மனிசமகம் பிரமாஸ்மி மந்திரந்தா
　　னதிசயமா மான்மசுகந் தனையேநல்கு
மனிசமகம் பிரமாஸ்மி மந்திரந்தா
　　னகண்டமதா மோட்சசுக மளிக்குமன்றே. 51

அரியவகம் பிரமாஸ்மி மந்திரத்துக்
　　கதிசயமா மந்திரமே யொன்றுமில்லை
பரவுமெழு கோடிமகா மந்திரந்தான்
　　பலகோடி சன்மங்க டருவதன்றி
மருவியிடுஞ் சன்மங்கண் மாற்றுதென்றும்
　　மற்றதனு லனைத்துக்கு மேலாகின்ற
துரிசிலகம் பிரமாஸ்மி மந்திரத்தைத்
　　தொடர்ந்தகில மந்திரமுந் தொலைக்கவேண்டும். 52

பலவிதமா மந்திரமுந் தூரத்தள்ளிப்
　　பயிலுமகம் பிரமாஸ்மி மந்திரத்தை
நிலையுறவே யாதரவா யிடைவிடாம
　　னித்தமுமே முமூட்சுவெலாம் பழகல்வேண்டுஞ்
சலனமிலாப் பழக்கத்தான் ஞானமோட்சஞ்
　　சகலமுமே சடிதியினிற் சித்தியாகுந்
தலைமையுறும் பரமசிவன் சரணந்தொட்டுத்
　　தத்துவமாய் நவில்கின்றேன் சங்கையில்லை. 53

கற்பிதமாய்க் காண்பதெலா மென்றும்பொய்யே
களங்கமிலாப் பரமசிவ மொன்றேமெய்யாந்
துற்பலமா மனவாக்குப் பொறிகளொன்றுற்
றொடரவொணுப் பேரறிவா நந்தமான
தற்பரமே யகமென்னும் புந்திதானே
தருமோட்ச காரணமீ துறுதியென்றே
நிர்ப்பயமாய் ரிபுமுனிவ னிதாகனுக்கு
நீராடன் மந்திரமு னிகழ்த்தினுல். 54

அதுவிதுநீ நான்முதலாய்க் காண்பதெல்லா
மணுவுமிலே யணுவுமிலே யணுவுமில்லே
மெதுவெதுதான் றிரிசியமா யெங்கேயெங்கே
யெவ்விதமாய்த் தோற்றினுமத் தோற்றமெல்லாந்
திதமருவுந் திருக்கான பிரமமேயாந்
திலமளவு மையமிலேச் சத்தியந்தா
னிதமனைய பரப்பிரம நானேயென்று
நிகழ்பிரம நிச்சயமே தருப்பணங்காண். 55

அகம்பிரம் நிச்சயமே தானமற்று
மகம்பிரம நிச்சயமே மந்திரங்கா
ணகம்பிரம நிச்சயமே தருப்பணம்மற்
றகம்பிரம நிச்சயமே யோமமைந்தா
வகம்பிரம நிச்சயமே மற்றுமுள்ள
வறங்களெலா மாதலினுன் முமூட்சுவானே
ரகம்பிரம நிச்சயமே யிடைவிடாம
லநவரத மாதரவாய்ப் பழகல்வேண்டும். 56

உலகமெலா மெதனிடையி லுதித்தொடுங்கு
மொளிர்பானு விந்துவன லுடுக்கண்மின்னற்
பலவொளியு மெதனுலே விளக்கலாகும்
பகருமவை யெதனைநிதம் விளக்கமாட்டா
விலகுசுரா சுரரெவரு மெதன்பயத்தா
லெக்காலுந் தஞ்செயலே யியற்றுநிற்ப
ரலேயுமறி பொருளேயெலா மகற்றியந்த
வறிவுருவாஞ் சிவத்தையுபா சிக்கவேண்டும். 57

அகண்டவறி வானபர சிவமேநானென்
றநவரத மிடையறவே செய்யுநதியானம்
புகன்றவுபா சனையாகு மதனாலுண்மைப்
பொருந்தியநற் புந்தியினாற் பரசிவத்தை
நிகழ்ந்திடவே யறிந்திடலா மற்றொன்றாலு
நிருமலமா யறியவொண்ணு தாதலாலே
பகர்ந்தகுரு வசனத்தாற் பரசிவத்தைப்
பத்தியுட னென்றுமுபா சிக்கவேண்டும். 58

சகலசக வதிட்டான மாகாநின்ற
சத்தியஞா னாநந்த சிவமேயென்று
மகமெனவே யனியமற வறியாதோர்க்கிங்
கநந்தவித துன்பத்துக் கேதுவான
விகல்பவமாம் வாரிதியி னின்றெழுந்தவ்
வேகபர சிவமென்னுந் தீரஞ்சார்ந்து
சுகமுறுவ திலையதனாற் பரசிவத்தைச்
சொன்னவண மெவ்விதமு மறியவேண்டும். 59

தேகமுத லபிமான மணுவுமின்றித்
திடமாகப் பரப்பிரம நானேயென்னு
மேகமதாந் துணிவுற்றுப் பரமாநந்த
மெப்போது மிசைந்திடுவோன் சீவன்முத்தன்
சோகமுறு மகங்கார மிறையுமின்றிச்
சுத்தபர சின்மாத்ர சொரூபமாக
மோகமற நின்றுமகா நந்தமபெற்று
மோனமடைந் திடுவோனே சீவன்முத்தன். 60

தூயமனந் தனிலென்றுஞ் சின்மாத்ரத்தைத்
தொடர்பவனாய்ச் சின்மாத்ர சொரூபனாகி
மாயைமுதற் கற்பிதமாம் பொருளையெல்லா
மதியாத மனதுடையோன் சீவன்முத்தன்
காயமுத லெவ்விடத்து நிறைந்துநின்றுங்
கற்பிதமா மொன்றேனும் பற்றேயின்றி
நேயமதா நித்தசுக திருத்தனாகி
நிச்சலமாய் நின்றவனே சீவன்முத்தன். 61

அன்னியமாஞ் சிந்தையெலா மறவுந்தள்ளி
யகண்டேக ரூபமதாய்ச் சாந்தனாகிப்
பின்னமுறும் பொய்யான பொருளேயின்றிப்
பேதமற நிற்பவனே சீவன்முத்த
னுன்னவொணு மாயைமனம் புந்திசித்த
மோங்குமகங் காரமுயிர் பொறிகடேக
மென்னுமிவை யெனக்கில்லை பிரமமேநா
னென்றுதிட நிச்சயவான் சீவன்முத்தன். 62

சத்தமுத லைம்புலனு மெனக்கிங்கில்லை
சத்துருவாங் காமமிலை கோபமில்லை
புத்தியுறுந் தோடமிலை குணமுமில்லை
பொய்யான மற்றவொரு பொருளுமில்லை
சித்தமுத லெவையுமிலாத் தன்மையாலே
சிறுமைதரும் பந்தமிலை முத்தியில்லை
யித்தனையு மில்லாத பிரமமேநா
னென்றுதிட நிச்சயவான் சீவன்முத்தன். 63

தன்னிடையே தானுக விலங்காநின்ற
தற்பதமாம் பரப்பிரமந் தானேயென்று
பின்னமிலா வறிவுற்றுப் பிரமாகாரம்
பெற்றவனே பிணிப்பற்ற சீவன்முத்த
னன்னியமே யில்லாத வான்மாவின்கண்
ணமர்ந்தாங்கே ரமிப்போனு யகண்டமான
தன்னிடையே தானுகத் தனித்துநின்று
தன்னின்பம் புசிப்பவனே சீவன்முத்தன். 64

அகம்பிரமம் பிரமமக மகமெல்லாமென்
றதிதிடமா நிச்சயமே யடைந்தவற்றூற்
றகும்பிரம சொரூபத்தி னிட்டைகூடித்
தங்குமனே விகற்பமெலாந் தவிர்ந்தோனுகிச்
சகம்பரநா னீதெனவே தோற்றுந்தோற்றஞ்
சகலமுமே மறந்துமகா நந்தம்பெற்று
மிகும்பிரம ஞானத்தி னுரம்பெற்றோனே
மிகமேலாய் விளம்பியிடுஞ் சீவன்முத்தன். 65

பிரமமக மகம்பிரம மென்றிவ்வண்ணம்
பெறுகின்ற தியானமுநிச் சயமுமின்றி
நிருமலமாஞ் சின்மாத்ர சொரூபமாக
நிற்பவனே நிலைபெற்ற விதேகமுத்த
னரியபர மகமென்று மல்லவென்று
மகிலமுமே யுளதென்று மில்லையென்று
மொருவிதமாம் விகற்பமுமே யின்றியென்று
மோர்வடிவா யிருப்பவனே விதேகமுத்தன். 66

பூதமுதற் பலவிதமாங் காலபேதம்
பொய்யான வெகுவிதமாந் தேசபேத
மோதியிடும் பலவான வத்துபேத
மொன்றுமிலா திருப்பவனே விதேகமுத்த
னீததுநீ யிவனவனு னிவளேயாதி
யெவ்விதமாம் பேதமுமோ ரணுவுமின்றிப்
போதகனப் பரப்பிம வடிவேயாகப்
பொருந்தியிருந் திடுவோனே விதேகமுத்தன். 67

சின்மயமாஞ் சிவத்தினிடை சித்தம்வைத்துச்
சிவமதுவே நாமென்றிங் கறியாதோர்க்குச்
சன்மயமாம் பரப்பிரமந் தானேயாகிச்
சலியாம லிருப்பதுவாம் விதேகமுத்தத்
தன்மையொரு காலத்துஞ் சித்தியாது
தத்துவமாய் நவில்கின்றே னிதாகவென்றே
நின்மலமாய் ரிபுமுனிவன் விதேகமுத்த
னிலைபெற்ற விலக்கணமே நிகழ்த்தினுல். 68

நிதாகநின தான்மாவுக் கயலில்லாத
நேர்மையினு னீயென்று நின்முன்மாவை
யுதாரமுறப் பாவித்து மநுபவித்து
முன்னிடையே யுன்னுன்மா நந்தந்தன்னைச்
சதாமருவிப் புசித்துமிகச் சாந்தனுகிச்
சந்தோட வாரிதியின் மிகவுமூழ்கி
யெதாகினுமோர் துயருமிலா தெக்காலத்து
மின்பகன வடிவாக விருப்பாய்மைந்தா. 69

அகண்டசுக வான்மாவை யறியவேண்டி
யடைவாகச் சிரவணமுன் செய்யவேண்டு
மகண்டசுக வான்மாவை யறியவேண்டி
யநுதினமுந் திடமனனஞ் செய்யவேண்டு
மகண்டசுக வான்மாவை யறியவேண்டி
யநவரதந் திடத்தியானஞ் செய்யவேண்டு
மகண்டசுக வான்மாவை யறியவேண்டி
யகம்பிரம மென்றனிசம் பழகவேண்டும். 70

அகண்டசுக வான்மாவே யாவருக்கு
மநவரதம் பிரியமதா யிருப்பதாலவ்
வகண்டசுக வான்மாவை ஞானப்யாச
வர்ச்சனையா லர்ச்சிக்க வேண்டுமென்று
மகண்டசுக வான்மாவை யெவ்விதத்து
மகமெனவே யபரோட்ச மாயறிந்தவ்
வகண்டசுக வான்மாவா யிருப்பதான
வமலசுக மோட்சத்தை யடையவேண்டும். 71

தங்காத பூரணசற் கனமாமான்மா
தளர்வற்ற வாநந்த கனமாமான்மா
மங்காத பிரஞ்ஞான கனமாமான்மா
மாறுபடா வகண்டேக ரசமாமான்மா
விங்கான்மா வங்கான்மா வெங்குமான்மா
வேகபரி பூரணமா யிருக்குமான்மா
துங்கான்மா வலதயலோ ரணுவுமில்லைத்
துவிதமெனக் காண்பதெலாம் பூரணான்மா. 72

துகளணுவுந் தொடராத நிதாககேளாய்
துவிதமெனுஞ் சொலவுமொருக் காலுமில்லை
சகலமுமே சந்ததமும் பிரமரூபஞ்
சத்தியமே சத்தியமே சங்கையில்லை
யகிலபரி பூரணமாஞ் சிவன்றன்னணை
யறைகின்றே னையமிலை யையமில்லை
சுககனமாம் பரமசிவ னருளிச்செய்த
சுருதிமுடிப் பொருளினது சுருக்கமீதே 73

அகண்டபரப் பிரமமலா தணுவுமில்லை
  யணுவுமிலை யணுவுமிலை யணுவுமில்லை
யகண்டபரப் பிரமமதே யனைத்துமாகு
  மதுவேநீ யதுவேநா னதுவேயாரு
மகண்டபரப் பிரமமதாஞ் சிவன்றன்னை
  யறைந்ததிலோ ரையமிலை யையமில்லை
யகண்டபரப் பிரமமது நானேயென்றிங்
  கநவரத மயலறவே யறிவாய்மைந்தா. 74

என்னிடையே கற்பிதமாய்த் தோன்றுநின்ற
  வீசசக சீவரெலா மென்னையன்றிப்
பின்னமதா யொருக்காலு மிலவேயில்லைப்
  பிறங்கியவச் சீவேச சகத்தனைத்தும்
மன்னுபரப் பிரமமதா நானேயென்று
  மயக்கமற வறிந்ததனன் முத்தனவாய்
சொன்னதிலோ ரையமிலை சத்தியந்தான்
  சுதந்தரமாஞ் சிவனனை யுண்மைசொன்னேன். 75

அப்பினிடைக் காண்கின்ற வலையேயாதி
  யகிலமுமவ் வப்பாகு நீதியேபோற்
சிற்பரமா நின்னிடையிற் காணுநின்ற
  செகசீவ பரங்களெலாஞ் சித்தாநீயே
செப்பியவிவ் வுகத்தான் மறைமானத்தாற்
  சிவாஞ்ஞையினு லெல்லாமு நானேயென்று
மற்பமிலா நான்றனே பிரமமென்று
  மறிந்ததனற் பவபாச முத்தனவாய். 76

சித்தினிடைக் காண்கின்ற செகசீவாதி
  சித்துருவாம் பிரமத்துக் கயலேயாகா
தத்திறமாம் பிரமத்துக் கயனுகே
  னவ்விதமா மெனக்கயலும் பிரமமாகா
தெத்திறமாந் தோற்றமுமே பிரமமென்று
  மிருமையுறு வப்பிரம நானேயென்று
மத்துவிதா கண்டபர போதந்தன்னை
  யடைந்ததனற் பவபாச முத்தனவாய். 77

சத்தியசிற் சுகபூன்ற பரசிவத்தைச்
சலியாது நிரந்தரமா யாராதிப்போ
னித்தியநிட் களமான வச்சிவத்தை
நிச்சலமா யறிந்துமனக் கிரந்திதீர்ந்து
சுத்தபர சிவத்தினிடைக் கலந்துமோட்ச
சுகமுற்றிங் கச்சிவமே யாவனன்றிப்
பத்தியிலா வெறுமூட ரொருகாலத்தும்
பரமான மோட்சசுகம் பற்றாரன்றே. 78

ஆதலினுன் முமூட்சுவெலாம் பரசிவத்தை
யநவரத மடைவாக வாராதித்தவ்
வேதமிலாப் பரமசிவன் கருணையாலே
யெல்லாமும் பரப்பிரம மதுவேநாமென்
றோதியவிஞ் ஞானத்தான் முத்திதன்னை
யுறவேண்டு மென்றுரிபு நிதாகனுக்கங்
காதியிலாப் பவபாச மனைத்துந்தீர
வகண்டபர போதத்தை யருளிச்செய்தான். 79

பிரமமதே பேசியிடுந் தற்பதார்த்தம்
பிரமமதே பேசியிடுந் துவம்பதார்த்தம்
பிரமமதே பேசியிடு மசிபதார்த்தம்
பிரமமதே யகண்டேக ரசபதார்த்தம்
பிரமமதே யகமென்னும் பதத்தினர்த்தம்
பிரமமதே பிரமமெனும் பதத்தினர்த்தம்
பிரமமதே யஸ்மியெனும் பதத்தினர்த்தம்
பிரமமதே யகண்டேக ரசபதார்த்தம். 80

பிரமமதே யழிவற்ற சற்பதார்த்தம்
பிரமமதே மகிழ்வுற்ற சிற்பதார்த்தம்
பிரமமதே பிரியமெனுஞ் சுகபதார்த்தம்
பிரமமதே யகண்டேக ரசபதார்த்தம்
பிரமமதே சகமென்னும் பதத்தினர்த்தம்
பிரமமதே சீவனெனும் பதத்தினர்த்தம்
பிரமமதே யீசனெனும் பதத்தினர்த்தம்
பிரமமதே யகண்டேக ரசபதார்த்தம். 81

எங்கெங்கே யெவ்விதமாய்க் கண்டபோது<br>
  மிதரமெனக் கண்டிடுமக் காட்சியெல்லா<br>
மங்கங்கே யுள்ளவதிட் டானமான<br>
  வறிவுருவாம் பிரமமலா தனியமாகா<br>
தெங்கெங்கே யலைமுதலாய்க் கண்டபோது<br>
  மிவையெல்லா மாழியலா தனியமாமோ<br>
வங்கங்கே காண்கின்ற காட்சியெல்லா<br>
  மப்படியே பிரமமலா தயலேயாகா. 82

அப்புருவாம் வாரிதியிற் றோன்றியாங்கே<br>
  யடங்கியிடு மனேகவித வலையுமந்த<br>
வப்புருவே யாவதலான் மத்தியத்தி<br>
  லன்னியமா யாரேனுங் கண்டதுண்டோ<br>
சிற்பிரம வாரிதியிற் றோன்றியாங்கே<br>
  சிதைகின்ற செகமுதலா மலையுமந்தச்<br>
சிற்பிரம மாவதலான் மத்தியத்திற்<br>
  சிறிதுமய லாகாது சத்தியந்தான். 83

மண்ணினிடைக் காண்கின்ற விகாரமெல்லா<br>
  மருவியவம் மண்ணேயா நீதிபோலுந்<br>
* தண்ணினிடைக் காண்கின்ற விகாரமெல்லாந்<br>
  தங்கியவத் தண்ணேயா நீதிபோலும்<br>
விண்ணினிடைக் காண்கின்ற விகாரமெல்லாம்<br>
  விரவியவவ் விண்ணேயா நீதிபோலுந்<br>
திண்ணியசிற் பிரமத்திற் காணுகின்ற<br>
  செகசீவ பரங்களெலாம் பிரமமேயாம். 84

வெருளுடனே தருவினிடைக் கண்டகள்ளன்<br>
  வெறிதான தருவேயா நீதிபோலும்<br>
மருளுடனே சுத்திகையிற் கண்டவெள்ளி<br>
  மற்றந்தச் சுத்திகையா நீதிபோலு<br>
மிருளுடனே யிரச்சுவினிற் கண்டசர்ப்ப<br>
  மெப்போது மிரச்சுவதா நீதிபோலும்<br>
பிரமமதிற் காண்கின்ற சகசீவாதி<br>
  பேதமெலா மெப்போதும் பிரமமேயாம். 85

* தண்ணென்பது - நீர்.

அன்னியமா மாரோப மனைத்துமெங்கு
மந்தந்த வதிட்டான மாவதேபோற்
றுன்னுமதிட் டானபரப் பிரமத்தின்கட்
டோன்றியவா ரோபமதாஞ் சகசிவாதி
மன்னுமதிட் டானபரப் பிரமந்தானும்
மறைமுடியின் சித்தாந்த மனைத்துமீதே
யன்னசிவ னருளியசித் தாந்தமீதே
யறிஞருடை யநுபவசித் தாந்தமீதே. 86

நித்தியமாய்ச் சித்தித்த பிரமமல்லா
னிலையாக வென்றுமொரு பொருளுமில்லை
யெத்திறமா யெவையெவைதா னெங்கேயெங்கே
யிலங்கினுமத் திறமான வவையனைத்து
மத்துவித பூரணமா யழியாச்சத்தா
யான்மாவா யமர்ந்தபரப் பிரமமேயாஞ்
சத்தியசிற் சுகவடிவாஞ் சிவன்றன்னாணை
சாற்றியது சத்தியமே சங்கையில்லை. 87

எள்ளளவு மயலன்றி யெல்லாமென்று
மேகபரப் பிரமமதா யிருந்தபோதுங்
கள்ளமுறு மனதுடையோர் பரசிவத்தின்
கருணையிலாக் குற்றத்தால் வேறுவேறு
யுள்ளமதி லுணர்ந்துமகா பவதுக்கத்தை
யுறுவதனுன் முமூட்சுவெலா மெவ்விதத்துந்
தள்ளவொணுப் பரமசிவன் கருணைபெற்றே
தமதுபவ துக்கத்தைத் தவிர்க்கவேண்டும். 88

பரமசிவன் கருணையினு லகண்டஞானம்
பற்றியதாற் பவதுக்கம் விடுப்பதற்கிங்
கரியமறை யாதியினு லந்தவந்த
வதிகாரிக் கனுகுணமா யறையப்பட்ட
கிரியைமுத லநேகவித வேதுவுண்டு
கிளத்தியவவ் வேதுக்குள் சிரவணுதி
யுரமதுவா மதனுக்குள் பிரமத்தியான
முத்தமமா மதனுலவ் வருள்சித்திக்கும். 89

ஆதலினு லறிவுற்றுக் காண்பதெல்லா
மகண்டவறி வானபரப் பிரமமென்று
மோதியவப் பரப்பிரம நானேயென்று
மொழிவறவே செய்கின்ற பிரமத்யான
சாதனையாற் பரமசிவ னருளைச்சார்ந்து
சலனமிலா வகண்டான்ம ஞானம்பெற்றுப்
போதகன பரப்பிரமந் தானேயாகிப்
பொல்லாத பவத்துயரைப் போக்கவேண்டும் 90

சதாநந்த மயமான பிரமமெல்லாஞ்
சதாநந்த மயமான பிரமம்யாருஞ்
சிதாநந்த மயமான பிரமமேநான்
சிதாநந்த மயமான பிரமமேநீ
நிதாகவதா லென்றுமெலாம் பிரமமென்றும்
நிரந்தரமாம் பிரமமது நானேயென்று
மெதாகினுமோ ரணுவேனு மையமின்றி
யெப்போது மிடையறவே நிச்சயிப்பாய். 91

எத்திறமா மதிட்டானத் தெவைதான்றோன்று
மிலங்கியவவ் வாரோப மஃதேயாகுஞ்
சுத்திகையிற் கற்பிதமாய்த் தோற்றும்வெள்ளி
சுத்திகையே யாகுவதைக் கண்டோமன்றோ
வித்திறமே சித்தினிடைத் தோன்றுநின்ற
வீசசக சீவரெலாஞ் சித்தேயாகுஞ்
சித்தையலா லணுவுமிலை யெல்லாஞ்சித்தே
சின்மயமாஞ் சிவனாணை யுண்மைசொன்னேன். 92

ஆதலினு னீசித்து நானுஞ்சித்தே
யநந்தசக சீவீச ரனைத்துஞ்சித்தே
யோதியவா றதிதிடமா யிடைவிடாம
லொழிவறவே யுள்ளத்தி னிச்சயிப்பாய்
பேதமறப் பெறுகின்ற நிச்சயத்தாற்
பின்னமிலாப் பரப்பிரம ஞானம்பெற்று
மாதவவிப் பவத்துயரை விரைவின்மாற்றி
மகத்தான மோட்சசுக மருவிநிற்பாய். 93

சனனசரா மரணமுறுஞ் சீவரெல்லாஞ்
சன்மமுத லெவையுமிலாச் சிவத்தையோர்ந்து
மனனமுடன் றியானித்தே மாயாமோக
மாற்றிமனக் கிரந்தியறுத் தபயராகி
யனியமிலா வகண்டபர ஞானங்கொண்டே
யத்துவித பரப்பிரம மாவரென்றே
யனையரிபு மாமுனிவ னிதாகனுக்கங்
கரிதான பரம்பொருளை யருள்செய்தானல். 94

சகலமுமாஞ் சித்தாந்த ரகசியத்தைச்
சங்கரக மாகவிதிற் சாற்றக்கேளாய்
பகரலுறுந் துவிதமொடத் துவிதமில்லை
பரமவுப சாந்தமதாம் பிரமமொன்றே
யிகழ்வறவே யெப்போது முளதாமெங்கு
மேகமதாம் பிரமமதே நீயுநானு
மகிலமுமப் பரப்பிரம சொரூபமேயா
மாதலினு லவ்வண்ண .மநுசந்திப்பாய். 95

அகமென்றுஞ் சன்மாத்ர சொரூபமானே
னகமென்றுஞ் சின்மாத்ர சொரூபமானே
னகமென்று நன்மாத்ர சொரூபமானே
னகமென்று நடுவான சொரூபமானே
னகமென்று மத்துவித சொரூபமானே
னகமார்க்கு மான்மாவாஞ் சொரூபமானே
னகமென்றும் பரப்பிரம சொரூபனென்றே
யநவரத மதிதிடமா யநுசந்திப்பாய். 96

அகமனிசஞ் சட்பாவ விகாரமின்றி
யகண்டவடி வானபர சொரூபமானே
னகமனிசம் பந்தமிலா நித்தமுத்த
மாகியுள வகண்டபர சொரூபமானே
னகமனிச மசஞ்சலமா யமர்ந்துநின்ற
வாநந்த பூரணமாஞ் சொரூபமானே
னகமமல பரப்பிரம சொரூபனென்றே
யநவரத மதிதிடமா யநுசந்திப்பாய் 97

நீயுமக நானுமக மற்றுமுள்ள
நிகிலமக மதிலணுவு மையமில்லை
தூயவகம் பரப்பிரம மானேனென்றே
தொடர்பாகத் துவிதமற வநுசந்திப்பாய்
மாயையிலை மாயைசெயுஞ் செயலுமில்லை
மற்றுமொரு பேதமுமே யிலவேயில்லை
நேயமதாம் பரப்பிரம நானேயென்று
நிரந்தரமாய் நித்தமுநீ யநுசந்திப்பாய். 98

அகம்பிரம மகம்பிரம மகமேயெல்லா
மகம்பிரம மகமெல்லா மென்றிவ்வண்ண
மகம்பிரம விருத்திதிட மாகுமட்டு
மநவரத மிடையறவே யநுசந்திப்பாய்
யகம்பிரம விருத்திதிட மானபின்ன
ரகம்பிரம பாவனையுந் தூரத்தள்ளி
யகம்பிரமப் பொருளாகி யகண்டாநந்த
வநுபவமுற் றசைவறவே யமர்ந்துநிற்பாய். 99

நித்தியமாய் நிட்களமாய் நிருவிகற்ப
நிரஞ்சனமாய் நிராமயமாய் நிமலமாகிச்
சத்தியமாய்ச் சுககனமாய்ச் சலனமின்றிச்
சனாதனமாய்ச் சாலவுப சாந்தமான
சித்துருவாம் பரப்பிரம நானேயென்று
சிரத்தையுட னப்யாசஞ் செய்வோரிங்கே
யத்துவித வநுபூதி யடைந்தவற்று
லகண்டபர மாகுவதி லையமில்லை. 100

ஆதலினு லகிலமுமே பிரமமென்று
மகமந்தப் பரப்பிரமந் தானேயென்றும்
பேதமுறுந் தோற்றமெலாம் போகுமட்டும்
பிரியமுடன் பிரிவறவே நித்தமாகச்
சாதகமாம் பாவனையே செய்தவற்றுற்
சஞ்சலவிட் சேபமெலாந் தொலைந்தபின்ன
ரேதையுமே நினையாமற் சுகமேயாக
வெப்போதுஞ் சும்மாவே யிருக்கவேண்டும். 101

புத்திரனே பூதியுட னுருத்திராக்க
பூடணமே பூண்டுசிவ பத்திகூர்ந்திங்
கத்துவித பரமசிவத் தியானந்தன்னை
யாதரவா யநவரத மனுட்டிப்போரே
யித்துணிசெய் சம்சார பாசந்தீர்ந்தவ்
வேகபர சிவவடிவா யிருப்பரென்றே
யுத்தமனும் ரிபுமுனிவ னிதாகனுக்கங்
கொருமைதரும் பாவனையே யுரைசெய்தானல். 102

பரமமதா மோட்சத்தை யுடனேநல்கும்
பரம்பொருளை மற்றுமுனக் குரைப்பக்கேளாய்
சருவமுமே சந்ததமும் பிரமாகாரஞ்
சகலமுமே சாந்தமதாம் பிரமாகார
மரியவனே யகிலமெனக் காண்பதெல்லா
மகண்டபரி பூரணமாம் பிரமாகாரம்
பிரிவுறவே யொருபொருளு மென்றுமில்லை
பின்னமெனக் காண்பதெலாம் பிரமாகாரம். 103

பிரமமலா தன்னியமாய்க் காண்பதெல்லாம்
பீதிதருந் துயர்நல்கு மாதலாலே
திரிசியமாய்க் காண்பதெலாந் திருக்கேயாகத்
திகழ்கின்ற பிரமமென ப்ரவிலாபித்துச்
சருவமுமே பிரமமெனு நினைவுந்தள்ளிச்
சலியாமல் வெறிதாக விருக்குநிட்டை
நிரதிசய சுகநல்கும் பயத்தைத்தீர்க்கும்
நிச்சயமே யதனலந் நிட்டைசார்வாய். 104

சகலமுமே தள்ளிவெறி தாகநிற்றல்
சகலத்தின் றியாகமெனச் சாற்றலாகுஞ்
சகலமெனச் சாற்றியது மனதேயாகுஞ்
சலமனதைத் தள்ளுவதே சகலத்தியாக
மிகழ்மனதின் றியாகமதே யகங்காராதி
யாவற்றின் றியாகமுமா மஃதேமற்று
நிகிலசக சீவபரத் தியாகமாகும்
நிதாகவதே நிரதிசயா நந்தநல்கும். 105

மனதுடைய தியாகமதே மகத்தாம்வெற்றி
　மனதுடைய தியாகமதே மகத்தாஞ்சித்தி
மனதுடைய தியாகமதே மகத்தாமின்பம்
　மனதுடைய தியாகமதே மகத்தாம்யோகம்
மனதுடைய தியாகமதே மகத்தாஞானம்
　மனதுடைய தியாகமதே மகத்தாமோட்சம்
மனதுடைய தியாகமதே சகலத்தியாகம்
　மனதுடைய தியாகமதே சித்தத்தியாகம். 106

சித்தமிலாக் காலத்திற் சகசீவாதி
　சிறிதுமிலை யஃதுளதே லவையுமுண்டு
புத்திரனே யாதலினுற் சித்தந்தானே
　புகல்சீவ பரஞால மனைத்துமாகுஞ்
சித்தமதை யெவ்விதமுஞ் செயிக்கவேண்டுஞ்
　சித்தசெய மாத்திரமே நிகரில்வெற்றி
யித்துனிசெய் சித்தத்தின் செயவுபாய
　மேதென்னி லினியிதனை யியம்பக்கேளாய். 107

சித்தமென வொருக்காலு மிலவேயில்லை
　சின்மயமாம் பரப்பிரம மொன்றேயென்றும்
நித்தபரி பூரணமாய் நிலைத்ததென்னும்
　நிரந்தரமா நிச்சயமே சித்தந்தன்னைப்
புத்திரனே யெளிதாகச் செயிப்பதற்குப்
　புரையற்ற வுபாயமிதாற் சித்தநாசஞ்
சத்தியமாய்ச் சித்திக்குஞ் சித்தியானுற்
　சகலமுமே சின்மயமாய்ப் பிரகாசிக்கும். 108

சித்தமென வொருபொருளிங் குள்ளதென்று
　சிறிதேனுஞ் சிந்தித்தா லுடனேசித்தே
சித்தமாய்த் தோற்றியிடு மிதுவேசீவ
　செகபரமாய்த் தோற்றுமதாற் றுன்பமுண்டாம்
புத்திரனே யாதலினுற் சித்தமென்றோர்
　பொருளொன்று மில்லையெலாஞ் சித்தேயென்னு
மித்திறமா முறுதியினுற் சித்தந்தன்னை
　யெளிதாகச் செயித்தென்று மின்பஞ்சார்வாய். 109

கற்போல வசைவற்றுக் களங்கமற்றுக்
　கறையற்றுக் கலந்தெங்கு நிறைந்ததான
சற்போத சுககனமாம் பிரமந்தானே
　சகசீவ பரங்களெனக் காண்பதாலே
யெப்போது மெல்லாமும் பிரமமென்று
　மேகபரி பூரணமா மதுநானென்று
மிப்போதந் தனையுரமா யிசைந்திவற்று
　வெளிதாகச் சித்தசெய மிசைவாய்மைந்தா. 110

பிரமமெலா மதுவேநா னென்றிவ்வண்ணம்
　பேதமிலா வுணர்வுதிட மாகுமட்டும்
பிரமமெலாம் பிரமமெலாம் பிரமநானே
　பிரமமெலாம் பிரமமெலாம் பிரமநானென்
றொருமைதிரும் பாவனையே செய்யவேண்டு
　மோதியவிப் பாவனைதா னுரக்கும்போது
சருவமுமே பிரமமெனு மதுநானென்னுஞ்
　சலனமிலாப் பரஞானஞ் சகசமாகும். 111

நரர்சுரராய்த் திரியக்காய் நகவனாதி
　நாநாவாய் நாடியிடு நாட்டமெல்லாந்
தெரிவுருவாய்த் திகழ்கின்ற தேவதேவன்
　றிருவுருவே யென்றுதிடத் தியானஞ்செய்தே
யிருகுணமு மிகந்தமல சத்வமேலா
　யிருக்கின்ற சூக்கமனோ விருத்திகொண்டே
பரமசிவன் பரிபூன்ற சொரூபந்தன்னைப்
　பார்த்திடலா மற்றொன்றாற் பார்க்கவொண்ணா. 112

ஆதலினா லறிவுற்றுக் காண்பதெல்லா
　மறிவுருவாம் பரசிவமே யதுவேநாமென்
றேதமிலாத் தியானத்தாற் சூக்கமான
　விதயத்தின் விருத்தியினாற் சிவங்கண்டோரே
பீதிசெயுஞ் சித்தத்தைச் செயித்தெப்போதும்
　பெரிதான பிரமசுகம் பெருவரென்றே
சீதளமா ரிபுமுனிவ னிதாகனுக்குச்
　சித்தசெய வுபாயத்தைச் செப்பினானல். 113

சித்தமதே யவிசார தசையின்மைந்தா
செகசீவ பரங்களெனத் தெரிந்தபோதுஞ்
சித்தமதே விசாரிக்கிற் செகசீவாதி
சிறிதுமிலாச் சித்தான பிரமமேயாஞ்
சித்தசெய மெளிதாகச் சேரவேண்டிச்
சித்தமய மானசெக முதலாம்யாவுஞ்
சித்ததுவாம் பரமென்று மதுநானென்றுஞ்
சிரத்தையுடன் சிந்தித்துச் சாந்தனுவாய். 114

மனததுதா னவிசார தசையின்மைந்தா
மயக்கமுறு சகமுதலாய்த் தோற்றினாலும்
மனதுருவை மாறாது விசாரஞ்செய்தான்
மற்றதுதான் மகத்தான சித்தேயாகும்
மனததனை யெளிதாகச் செயித்தெப்போது
மகத்தான சித்துருவே யாகவேண்டி
மனதுமுத லெல்லாஞ்சித் ததுநானென்றே
மாறாது சிந்தித்துச் சாந்தனுவாய். 115

மனோசயமே திடமாக மன்னுமட்டும்
மற்றுள்ள வியாபார மனைத்தும்விட்டு
வினோதமதா யாவுஞ்சித் ததுநானென்றே
விருப்பமுடன் விடாதுமிகச் சிந்தைசெய்தான்
மனோசயமாய் மகத்தான வறிவுதிக்கு
மற்றதனாற் சகமுதலா மிருளிறக்கு
மினோதயமே யாகியிடி லிருளெங்கேனு
மிருப்பதனை யாரேனுங் கண்டதுண்டோ. 116

அனகவறி வானபரப் பிரமந்தானே
யவித்தையினா லசைவுறுமென் மனதாய்த்தோற்றும்
வினவுமறி வானபரப் பிரமந்தானே
வித்தையினா லசைவறுமேற் பரமேயாகும்
மனததுவுஞ் சலனமுட னிருக்குமாகின்
மகத்தான சீவபா சகமாய்த்தோற்றும்
மனததுவே சலனமிலா திருக்குமாகின்
மாசற்ற வறிவான பரமேயாமால். 117

ஆதலினு லறிவுற்ற மனதேயாதி
யகிலமுமே யறிவான பிரமமென்றும்
பேதமிலா வப்பிரம நானேயென்றும்
பிரிவறவே யெப்போதுஞ் சிந்தைசெய்து
சாதகமாஞ் சிந்தனையான் மனதைவென்று
சலமனதின் சலனமெலாந் தவிர்ந்தபின்ன
ரோதியவச் சிந்தனையு மொழிந்தெப்போது
முணர்வுருவாம் பரமாகிச் சாந்தனுவாய். 118

அகிலமுமே பரப்பிரம மையமில்லை
யகமந்தப் பரப்பிரம மையமில்லை
நிகிலமுமாம் பரப்பிரம மதுநானென்றே
நிரந்தரமாய்ப் பாவித்து மனதைவென்று
சுககனமாம் பரப்பிரமந் தானேயாகிச்
சும்மாவே யிருக்கின்ற சாந்திதானே
தகைமைமிகும் பூசனையாந் தானமாகுந்
தவமாகுஞ் செபமாகுஞ் சமாதியாமே. 119

ஆதலினு லமலமதா மனதினுலே
யநவரதம் பரப்பிரம விசாரஞ்செய்தே
போதகன பரப்பிரமந் தானேயெல்லாம்
பூரணமாம் பரப்பிரம மதுநானென்று
சாதகமாம் பாவனையே திடமாய்ச்செய்து
சஞ்சலமா யுளமனதை நன்றாய்வென்று
சோதிமிகும் பரப்பிரமந் தானேயாகிச்
சும்மாவே யிருக்கின்ற சாந்திசார்வாய். 120

அறைந்தபொரு ளனைத்தையுமே வாக்குமாத்ர
மாக்காம லாதரவாய் மனதிற்கொண்டு
செறிந்தமன தொருமையுட னெல்லாமென்றுஞ்
சின்மயமாம் பரப்பிரம மதுநானென்றே
நிறைந்தபர பாவனையான் மனதைவென்று
நிச்சலனு யெப்போதுஞ் சாந்தனுவா
யறைந்ததெலாஞ் சத்தியமே யையமில்லை
யகண்டபர சிவனுணை யையமில்லை. 121

மனந்தனிறுற் செய்வதுவே செய்ததாகு
மற்றென்றுற் செய்வதெலாஞ் செய்ததாகா
தினந்தினமுந் திடமான மனதினுலே
திரிசியமாய்க் காண்பதெலாந் திருக்கேயான
வனந்தபரப் பிரமமெனு மதுநானென்னு
மகண்டபர பாவனையே செய்வாயாகிற்
கனந்தருமப பாவனையான் மனதைவென்று
கலங்காம லெப்போதுஞ் சாந்தனுவாய். 122

மனதென்றும் வாக்கென்று மற்றதென்றும்
மருவியவிப் பேதமுமே யெனக்கிங்கில்லை
கனவிலுறும் பொருள்களிலெப் பொருளையேனுங்
காண்கின்ற தனக்கயலாக் கண்டதுண்டோ
நனவிலுறும் பொருள்களுமவ் விதமேயாக
நாடியிடு ஞானவடி வானநானே
யெனுமுரமாம் பாவனையான் மனதைவென்றவ்
வேகபர வடிவாகிச் சாந்தனுவாய். 123

சுருதிமுடி வாக்கியமே சொன்னதோர்ந்து
சூக்குமநூல் வழிசென்று பரசிவத்தை
யருமையுடன் பாவித்தவ் வருள்பெற்றோரே
யலைமனதின் விகற்பமதாஞ் சகசீவாதி
சருவமுமே பிரமமெனுஞ் சாட்சாத்காரஞ்
சார்ந்ததனுன் மோட்சசுகஞ் சார்வரென்றே
பெருமைமிகும் ரிபுமுனிவ னிதாகனுக்குப்
பிரிவின்மனச் சாந்தியினைப் பேசினுனல். 124

அனந்தவித சென்மத்தி லநுட்டிப்புற்ற
வறங்களெலாம் பரிபாக மானவர்க்கே
கனந்தருமிப் பரப்பிரம ஞானஞ்சற்றுங்
கலங்காத மனதினிடை யெளிதாத்தோன்றுந்
தினந்தினமுந் தவிராம லிச்சென்மத்திற்
றிடமாகப் பரப்பிரம வப்யாசத்தை
மனந்தனிறுற் செய்வோர்க்கு மனதின்சுத்தி
மருவியபின் பரஞான மனதிற்றேன்றும். 125

பிரமமக மகம்பிரமம் பிரமமெல்லாம்
பிரமமலா தயலணுவு மில்லையென்றே
யுரமருவு முணர்வுதனை யுறுவோரெல்லா
முணர்வுருவாம் பிரமமதே யாவரன்றி
யொருபொழுது மயலாகா ருண்மைசொன்னே
னுரைத்ததிலோ ரையமிலை சத்தியந்தான்
சருவபரி பூரணமாஞ் சம்புவாணை
சத்தியமே சத்தியமே சங்கையில்லை. 126

கனவினிடைத் திரிசியமாய்க் காணப்பட்ட
கடபடமே முதலியவு மித்தையேபோ
னனவினிடைத் திரிசியமாய் நாடப்பட்ட
நாநாவாஞ் சகசீவ பரமுமித்தை
யனையதெலா மறிகின்ற திருக்கேயான
வான்மாவுக் கபின்னமதாம் பிரமமொன்றே
யநவரத மழியாத வுண்மைவத்து
வறைந்ததிலோ ரணுவேனு மையமில்லை. 127

இன்னவித மதிட்டான வாரோபங்க
ளிரண்டையுமே நன்றாகச் சோதித்திங்கு
முன்னியவா ரோபமதாஞ் சகசீவாதி
மூலவதிட் டானமதாம் பிரமமென்றும்
பின்னமிலா வப்பிரம நானேயென்றும்
பேதமிலாப் பரப்பிரம ஞானந்தன்னைத்
தன்னுடைய துகளற்ற மனதாற்பெற்றுத்
தளர்வுதரும் பவபீதி தவிர்க்கவேண்டும். 128

புத்திரனே தனதுமன முயற்சியொன்றாற்
பூரணமாம் பரப்பிரம ஞானம்பேறு
மித்தகமை ஞானத்தாற் பரமாமுத்தி
யாவர்க்கு மிவ்விடத்தே யெளிதாமெய்து
மத்துவித ஞானத்தி னப்யாசத்தி
லணுவேனு மொருக்காலும் பயமுமில்லை
யித்திரமே யிருக்கையினு மிதனப்யாச
மியற்றுவதி லேதேனும் வருத்தமுண்டோ. 129

வருத்தமிலா திருக்கையினு வருத்தம்போல
வழுவுற்ற மகாபாவி மனதிற்றோன்றும்
விருத்தமதாம் பாவமெலாம் வீந்துமெத்த
விமலமதா மனதுடையோர்க் கிவ்வப்யாசங்
கருத்திலுற மிகவெளிதா மாதலாலே
கலங்காம லெப்போது ஞானப்யாசந்
திருத்தமுறச் செய்வோர்க்குத் தேவதேவன்
றிருவருளாற் றிடஞானந் திகழுமன்றே. 130

அகம்பிரமம் பிரமமக மகமெல்லாமென்
றகண்டபர ஞானத்தி னப்யாசத்தைத்
தரும்பிரம ஞானத்தாற் றிடமாமட்டுந்
தவிராது சந்ததமும் பழகுவோர்க்கே
யகம்பிரம மெனுஞான மகண்டமான
வவ்வீசன் றிருவருளாற் சகசமாகுந்
தரும்பிரம ஞானத்தாற் சகசமானாற்
றளர்வுதரும் பவபீதி தானேநீங்கும். 131

பாவனமாம் பரஞானஞ் சகசமானாற்
பார்ப்பதெலா மத்யந்தா பாவமேயாம்
யாவையுமே யத்யந்தா பாவமேயாம்
யானீயு மத்யந்தா பாவமேயாஞ்
சீவரெலா மத்யந்தா பாவமேயாஞ்
செகபரமு மத்யந்தா பாவமேயாஞ்
கேவலமாம் பரப்பிரம மானதானே
கெம்பீர பூரணமா யுள்ளதாமே. 132

அகிலமுமே யத்யந்தா பாவமாகி
யகண்டபர வடிவாகித் தானேநிற்கி
லிகழ்வுறுமிப் பவபீதி மீண்டுந்தோன்ற
விடமில்லை யாதலினன் முமுட்சுவெல்லாஞ்
சகலமுமே பிரமமென்னு மதுநானென்னுஞ்
சந்ததமுஞ் சலியாம லப்யாசித்தே
துகளில்பர ஞானமடைந் ததனலிந்தத்
துயர்மயமாம் பவபீதி தொலைக்கவேண்டும். 133

நீக்கமிலா தெங்குமொரு நிறைவாய்நின்ற
  நிகழ்வுருவாம் பரப்பிரம மெல்லாமென்றும்
வாக்குமன மொன்றுக்கு மெட்டாதான
  வரையற்ற பரப்பிரம மதுநானென்றுஞ்
சூக்கமதா மனதுடனே யப்யாசித்துச்
  சுத்தமதாம் பரப்பிரம ஞானம்பெற்றுப்
போக்கவொணாப் பவபீதி யனைத்தும்போக்கிப்
  பூரணமா யுள்ளபரம் பொருளேயாவாய். 134

கல்லாத கல்வியெலாங் கற்றபோதுங்
  கலக்கமிலாப் பரப்பிரம ஞானமொன்றை
யல்லாது பவபீதி விடுக்கவொண்ணா
  தாதலினா லாதரவாய் நீயெப்போது
மெல்லாமும் பிரமமென்று மதுநானென்று
  மேகமதாம் பரப்பிரம ஞானம்பெற்றே
பொல்லாத பவபீதி யனைத்தும்போக்கிப்
  பூரணமா யுள்ளபர பொருளேயாவாய். 135

சமதமமே முதலியதாஞ் சாதனங்கள்
  சார்ந்தனிசம் வேதாந்த விசாரஞ்செய்திங்
கமலமதாம் பரசிவமே யெல்லாமென்று
  மச்சிவமே நாமென்று மறிவுற்றோரே
மமர்பயமாம் பவபீதி விடுத்தெப்போதும்
  மாசற்ற பரசுகமாய்ச் சுகிப்பரென்றே
நிமலமதாய் ரிபுமுனிவ னிதாகனுக்கு
  நிகரற்ற பரம்பொருளை நிகழ்த்தினனால். 136

திரிசியமா யெனக்கயலோ ரணுவுமில்லை
  திருக்கான வென்னிடையிற் றோன்றாநின்ற
சருவமுமே பரமான நானேயென்று
  சற்குருவா மென்வாக்காற் றியானஞ்செய்வா
யிருமையற விவ்வண்ண முபதேசித்தே
  னென்றணுவு மபிமான மெனக்கிங்கில்லை
குருவரனும் பரமசிவ னெனக்குரைத்த
  குற்றமிலா வுபதேச வசனமீதே. 137

சற்குருவுஞ் சின்மயமாம் பிரமரூபஞ்
  சகலமுமே சின்மயமாம் பிரமரூபம்
நிர்க்குணமா மப்பிரம நானேயென்று
  நிச்சலமாய் நீயென்றுந் தியானஞ்செய்வாய்
சற்குருவாம் பரமசிவ னெனக்குமுன்னஞ்
  சத்தியமாய்ச் சாற்றியசித் தாந்தமீதே
துர்க்குணமோ ரணுவுமுறு வேதாந்தங்க
  டுணிவாகச் சொல்லியசித் தாந்தமீதே. 138

திரிசியமா யொருபொருளும் வேறிங்கில்லை
  தெரிவதெலாந் திருக்கான பிரமமென்று
மிருமையிலா வப்பிரம நானேயென்றும்
  யானந்தப் பரப்பிரமந் தானேயென்றுஞ்
சருவமுமே யவ்விதமா நானேயென்றுஞ்
  சந்ததமுஞ் சலியாமற் றியானிப்பாயேற்
பிரிவெனவே நின்மனதிற் பிறங்காநின்ற
  பெயர்க்கவொணாப் பேதமலம் யாவுந்தீரும். 139

சகமுதலா யெண்ணுவதைத் தூரத்தள்ளிச்
  சகலமுமே பிரமமெனத் தியானஞ்செய்வா
யகமுடலென் றெண்ணுவதைத் தூரத்தள்ளி
  யகம்பிரம மென்றனிசந் தியானஞ்செய்வாய்
சகலமுமே பிரமமென்று மதுநானென்றுஞ்
  சந்ததமுஞ் சலியாமற் றியானஞ்செய்தா
லகமனியஞ் சகமுதலீ தனியமென்னு
  மயமெல்லா மனுதினமு மடைவாய்த்தீரும். 140

தேகமக மெனுநினைவைத் தூரத்தள்ளித்
  தெரிவான பிரமமக மெனத்தியானிப்பா
யாகமக மெனுநினைவைத் தூரத்தள்ளி
  யறிவான பிரமமக மெனத்தியானிப்பாய்
பாகமுறும் பலநினைவுந் தூரத்தள்ளிப்
  பார்ப்பதெலாம் பரப்பிரம மெனத்தியானிப்பா
யேகமகம் யானெவையு மெனத்தியானித்தே
  யிப்பேத மியாவையுநீ விடுவாய்மைந்தா. 141

அலைமனதி னொருமையிலாத் தன்மையாலே
யகம்பிரம பாவனையே செய்யச்சத்தி
யிலதெனினு மெப்போதுஞ் சிரத்தையோடே
யான்பிரமம் யான்பிரமம் யானேயெல்லாஞ்
சலனமிலாப் பரமேநான் பரநானென்னுஞ்
சத்தமிதை யுரைத்தாலு மிவ்வறத்தா
னிலைமருவா தலைமனது மெள்ளமெள்ள
நிச்சலமாய் நிகழ்த்தியபா வனையினிற்கும். 142

நிரந்தரமாய்ப் பாவனையின் மனதுநின்று
னிச்சலமா மகண்டபர ஞானமுண்டாய்த்
திரிந்தலையு மனதினுடை விகற்பமாகத்
தெரிகின்ற பேதமெலா முடனேதீருந்
தெரிந்திடுமிப் பேதமெலாந் தீருமட்டுந்
திரிசியமாய்த் தெரிவதெலாம் பரமேயென்றும்
பொருந்தியவப் பரப்பிரம நானேயென்றும்
பூரணமா யெப்போதுந் தியானஞ்செய்வாய். 143

அறிவுருவாம் பிரமத்திற் றோன்றுநின்ற
வகிலமுமே யறிவுருவா யிருப்பதாலே
யறிவுருவா மகண்டபரப் பிரமத்துக்கிங்
கன்னியமா யணுவேனு மிலவேயில்லை
யறிவுருவாம் பரப்பிரம மெல்லாமென்று
மவ்விதமாம் பரப்பிரம நானேயென்று
மறிவுருவாம் பரநீயாய்ப் பேதமியாவு
மழியுமள வதிதிடமாய்த் தியானஞ்செய்வாய். 144

சருவமெனு முருவத்தைத் தூரத்தள்ளிச்
சருவமுமே பிரமமென நிச்சயித்துப்
பிரமமதே நானென்று நானேயந்தப்
பிரமமெனும் பாவனையான் மயலேயாக
மருவியவிப் பேதமதி யனைத்துமாய்த்து
மற்றந்தப் பாவனையுந் தூரத்தள்ளி
நிருமலமா நின்னுடைய நிசரூபத்தி
னிச்சலமாய் நீயென்று நிலைத்துநிற்பாய் 145

நிச்சலமாய் நிற்பதெனு நினைவுந்தள்ளி
  நிசரூப மாத்திரமாய்த் தள்ளலென்று
மிச்செயலு மிகழ்ந்துமனோ வாக்குகட்கிங்
  கெட்டாத கேவலமாஞ் சொரூபமாகி
யுச்சம்தாஞ் சகசநிலை யுறுவாய்மைந்தா
  வோதுவதற் கினியொன்று மிடமிங்கில்லை
நிச்சயமாய்ப் பரமசிவ னெனக்குமுன்ன
  நிகழ்த்தியதா நிசரூப நிட்டையீதே. 146

பேதமெலா மணுவுமிலா தறவுந்தள்ளிப்
  பின்னமிலாப் பரமான வான்மாவின்க
ணேதையுமே நினையாம லின்பமேலா
  யியங்காம லிருப்பதுவே சகசநிட்டை
சாதகமா மிந்நிட்டை நிருவிகற்ப
  சமாதியென வங்கங்கே சாற்றலாகு
மோதியதே யகண்டபர சாட்சாத்கார
  வுணர்வெனவு மங்கங்கே யுரைக்கலாமால். 147

திடமான நிட்டையிதே சீவன்முத்தித்
  திறமையென வங்கங்கே செப்பலாகுந்
தடமான நிட்டையிதே யுபசாந்திக்குத்
  தகுந்தபடி பூமிகையோர் நான்குமாகு
மிடமான விந்நிட்டை யிசைந்தோருக்கே
  யித்துயர்செய் பவபீதி யிறக்குமன்றி
மடமான மற்றெதனை யிசைந்தபோதும்
  மகத்தான பவபீதி மாயாதென்றும். 148

நிறைவுறுமிந் நிட்டையுளோர் நீசரேனு
  நிருமலமாம் பரமாகி முத்தராவ
ரறைவதிலோ ரணுவேனு மையமில்லை
  யறுதியிதே யாதலினுன் முமூட்சுவெல்லாங்
குறைவறவே யிந்நிட்டை கூடுமட்டுங்
  கூறுபடும் பேதமெலாம் பிரமமென்று
மறிவுருவா மப்பிரம மகமேயென்று
  மகண்டபர பாவனையே பழகவேண்டும். 149

அருமையுட னகண்டபர சிவரூபத்தை
யநவரதந் தியானித்தவ் வருள்பெற்றோர்க்கே
நிருமலமாம் பரஞான மனதிற்றோன்றி
நீக்கவொண்ணு வஞ்ஞான மனைத்துநீங்கிப்
பரமதுவா யிருக்கின்ற முத்தியன்றிப்
பகர்முத்தி மற்றோருக் கில்லையென்றே
பிரியமுடன் ரிபுமுனிவ னிதாகனுக்குப்
பேதமிலாப் பரம்பொருளைப் பேசினானல். 150

அகம்பிரம ஞானந்தா னிருவிகற்ப
மாகுமள வகிலமுமே பிரமமாகுந்
தகும்பிரம நானுகு நானேயந்தத்
தற்பரமாம் பிரமமெனு மப்பியாசத்தாற்
செகம்பரமுஞ் சீவர்களுஞ் சிறிதுந்தோன்றாச்
சின்மயமா யிருக்கின்ற வகண்டாகார
வகம்பிரம ஞானத்தை யடைந்தேபத்தா
லனுதிபவ பாசத்தை யறுப்பாய்மைந்தா. 151

அன்னியமே தோன்றாத வகண்டாகார
வறிவுதனை யடைந்தவனே முத்தனானோ
னின்னவித மகண்டபர ஞானமுற்றோ
னிவ்வுலகி லெவ்விடத்து மரிதேயாவ
னுன்னவொணுப் பலகோடி சீவருக்கு
ளுரமான ஞானமுளோ னொருவன்றானே
யன்னவனைத் தரிசித்த மாத்திரத்தா
லறமேலா யகமெல்லா மழியுமன்றே. 152

திடஞானி தெரிசனமே தீர்த்தமாடல்
திடஞானி தெரிசனமே தேவபூசை
திடஞானி தெரிசனமே செபதபங்கள்
திடஞானி தெரிசனமே செயுமறங்கள்
திடஞானி தெரிசனமே சிவத்தைக்காணல்
திடஞானி தெரிசனமே சிவத்தின்சேவை
திடஞானி தெரிசனமே மேவுதற்குத்
திரிவிதமா முலகத்து மரிதாமியார்க்கும். 153

வரமான ஞானிக்கு மகிழ்வினோடே
வளமான போசனமே யளிப்பதாலுந்
திரமான ஞானிக்குத் தேவையான
திரவியமே சிரத்தையொடு கொடுப்பதாலும்
பரமான ஞானிக்குப் பத்தியோடே
பலவிதமாம் பணிவிடையே செய்வதாலு
மரிதான மோட்சசுக மெளிதேயாக
வடைந்திடலா மனுவுமிதி லையமில்லை. 154

ஞானியுடை யருச்சனையே செய்வதாலே
ஞானபல மடைந்ததனுற் சீவன்முத்தி
யானபர மாநந்த மடையலாகு
மதன்பின்பு பரமான விதேகமுத்தி
தானுமதா லடைந்திடலா மாதலாலே
தளர்வுதரும் பவபீதி யனைத்துந்தள்ளி
யானியிலா முத்திநிலை யடையவேண்டி
லறிஞனுடை யருச்சனையே செய்யவேண்டும். 155

சலனமிலாச் சிலைபோதுங் காட்டம்போலுஞ்
சங்கற்ப விகற்பங்க ளொன்றுமின்றிக்
கலனமுறுப் பிரமத்திற் பாலுநீருங்
கலப்பதுபோல் வேறறவே கலந்துசற்று
மலைவறவே வெறிதாகச் சுகித்திருக்கு
மறிஞனுடை யன்னிட்டை மகிமைதன்னை
நிலைமருவா மனதாலும் வசனத்தாலும்
நினைந்திடவும் பகர்ந்திடவு மார்தான்வல்லோர். 156

திரமான வகம்பிரம மென்னுஞானந்
திரிவிதமா முலகத்து மரிதேயாகு
முரமாக வகம்பிரம ஞானமேவி
யுணர்வுருவாம் பரப்பிரம சொரூபநிட்டை
பிரியாத பரஞானி தன்னைக்கண்டு
பேசுவதே மிகவரிதா மொருக்காலந்தப்
பரஞானி பணிவிடையே கிட்டுமாகிற்
பரமான மோட்சநிலை தானுங்கிட்டும். 157

ஞானிபத தீர்த்தத்தாற் றானஞ்செய்வோன்
 ஞானகன வடிவான பரமேயாவ
னனவெகு சென்மத்தி லநுட்டிப்புற்ற
 வறங்களெலாம் பரிபாக மானவர்க்கே
யீனமிலா ஞானியுடை தெரிசனுதி
 யெளிதாக விச்சென்மந் தன்னிலெய்து
மூனமிலா ஞானியுடை தெரிசனுதி
 யுறவோர்க்குப் பவபீதி மீண்டுமுண்டோ. 158

ஓதியவிவ் வகண்டபர நிச்சயத்தா
 னுன்னுடைய மனதினிடை யுதியாநின்ற
பேதமெலா மணுவுமிலா தொழிப்பாய்மைந்தா
 பேதமதே மகத்தான பீதியாகு
மேதுமிலாச் சுழுத்தியினிற் பேதமில்லா
 திருப்பதனு லெள்ளளவும் பீதியில்லை
பேதமுறு நனவுகனு விவ்விரண்டிற்
 பேதமிகுக் கின்றதனுற் பீதிகண்டோம். 159

ஆதலினுன் மகத்தான பீதிக்கெல்லா
 மாலயமா யிருக்கின்ற பேதந்தன்னைப்
பேதமிலா வகண்டபர நிச்சயத்தின்
 பிரியாத பழக்கத்தா லொழிப்பாய்மைந்தா
வோதியவிவ் வகண்டபர நிச்சயத்தை
 யுற்றவனே பவபாச முத்தனுனோன்
சாதகமா விதையென்றும் பழகுவோனுஞ்
 சம்சார பாசத்தான் முத்தனுவன். 160

அநவரத மகம்பிரம நிச்சயத்தை
 யடைந்தவனே யகண்டபர ஞானியாவோ
னநவரத மகம்பிரம நிச்சயத்தை
 யடைந்தவனே யிவ்வுலகிற் புருடனுவோ
னநவரத மகம்பிரம நிச்சயத்தை
 யடைந்தவனே யான்மசுக மநுபவிப்போ
னநவரத மகம்பிரம நிச்சயத்தை
 யடைந்தவனே யரந்தையிலாச் சீவன்முத்தன். 161

அநவரத மகம்பிரம நிச்சயத்தை
யடைந்தவனே யகிலற்கு மேலாய்நின்றோ
னநவரத மகம்பிரம நிச்சயத்தை
யடைந்தவனே பவதுக்க மனைத்துந்தீர்ந்தோ
னநவரத மகம்பிரம நிச்சயத்தை
யடைந்தவனே நிரதிசயா நந்தஞ்சார்ந்தோ
னநவரத மகம்பிரம நிச்சயத்தை
யடைந்தவனே யகண்டபரப் பிரமமானோன். 162

அநவரத மகம்பிரம நிச்சயத்தை
யடைந்தவனே பேதமெலா மறவிடுத்தோ
னநவரத மகம்பிரம நிச்சயத்தை
யடைந்தவனே பீதியெலா மறவொழித்தோ
னநவரத மகம்பிரம நிச்சயத்தை
யடைந்தவனே யபயபதத் தமர்ந்துநின்றோ
னநவரத மகம்பிரம நிச்சயத்தை
யடைந்தவனே யாநந்த வடிவாநின்றோன். 163

பிரமமக மகம்பிரம மென்றிவ்வண்ணம்
பேதமிலா வகம்பிரம நிச்சயத்தைச்
சரிவரவே சந்ததமும் பழகாநின்றோன்
சத்தியசிற் சுககனமாம் பரமேயாவ
னரியவனே யாதலினா னீயெப்போது
மன்புடனே யகம்பிரம நிச்சயத்தைப்
பிரிவறவே பழகியதாற் பேதந்தீர்ந்து
பின்னமிலா வகண்டபரப் பிரமமாவாய். 164

ஆசரிய னடைவாகச் சீவனுக்கிங்
கத்துவித வுபதேசஞ் செய்காலத்தும்
பாசமுறுந் துவிதத்தை யுண்மையாகப்
பகரவிலை யவன்மனதை யநுசரித்தே
பேசியுடன் பரமார்த்த மாகானின்ற
பின்னமிலா வத்துவித முபதேசிப்ப
னேசமுடன் யானுரமாய் நினக்குச்சொல்லு
நீதியிதி னிகழ்த்தியவோர் திட்டாந்தங்கேள். 165

தந்தைமுதன் மரணத்திற் பந்துவன்றித்
தளர்தனயன் றிரவியமே தந்தழைத்து
வந்தசன மழுகின்ற நீதியன்றோன்
வழங்குதனப் பொருட்டன்றி யுண்மையன்றே
யந்தவித மாசிரியன் சீடனுக்கிங்
கத்துவிதம் புகலுங்காற் றுவிதமோதல்
மைந்தவிதி லையமிலை யதனுற்றெய்த
மறந்தென்று மத்துவித வடிவேயாவாய். 166

அகம்பிரமம் பிரமமக மகமெல்லாமென்
றநவரத மதிதிடமாய் நிச்சயித்து
மிகும்பிரம பாவனையே தொடர்பாய்ச்செய்து
மேவியவித் துவிதமெலா மிகமறந்தே
யகம்பிரம ஞானமது நிருவிகற்ப
மானவுடன் சஞ்சலமாய்ச் சிலையேபோலத்
தரும்பிரம வடிவாகித் தளர்வுதீர்ந்து
தடையற்ற வாநந்த மநுபவிப்பாய். 167

வேதமுத லோதலினல் யாகந்தன்னல்
விரதத்தா லியமமுதல் யோகாங்கத்தால்
சாதகமாந் தானத்தான் மற்றுமுள்ள
சகலவித கருமத்தாற் பரசிவத்தைப்
பேதமற வறிவமெனு மிச்சையுண்டாம்
பின்னமிலாச் சிவவடிவா மகாலிங்கத்தைத்
தீதறவே யநவரதம் பூசிப்போர்க்கே
திடஞான முண்டாகி மோகந்தீரும். 168

அகிலபரிபூரணமா யனைத்துமுண்டா
யடங்குவதற் காலயமாஞ் சிவரூபந்தான்
னிகரின்மகா லிங்கமித னநுசந்தானம்
நிரந்தரமாய்ச் செய்வதுவே யிவற்றின்பூசை
யகமதனி லிப்பூசை செய்வோருக்கே
யகண்டபர சிவனருளா லறிவுண்டாமென்
றிகழ்வறவே ரிபுமுனிவ னிதாகனுக்கங்
கீனமுறாப் பரம்பொருளை யிசைத்தானன்றே. 169

பேதமெனத் தோற்றியவித் துவிதமெல்லாம்
பின்னமிலா வத்துவிதப் பிரமமென்றே
யோதியவிந் நிச்சயமிங் குரமாயுற்றோ
னுடனிந்தப் பவபாச முத்தனவன்
பேதமுறு மாமூட ரொருகாலத்தும்
பின்னமிலா வகண்டபர முத்திமேவா
ரேதுமிதி லையமிலை யெவையுமோர்ந்த
வெமதீச னியம்பியதி லையமுண்டோ. 170

அற்பமுமே யறியாத சிலமாமூட
ரத்துவித மாதரியார் வெறும்பொய்யான
கற்பிதமாந் துவிதமிதே யுண்மையென்று
கதறுவராம் மாமூட ருடனேயென்று
மற்பமுமே பேசவொண்ணு தன்னோருக்கோ
ரணுவேனு மளிக்கவொண்ணு தவரைக்கண்டாற்
சொற்பமுமே வணங்கவொண்ணு தவரெப்போதுஞ்
சுத்தமகா மூடரென வுணரவேண்டும். 171

கற்பிதமாந் துவிதமிதே யுண்மையென்று
கதறியிடுங் கயவர்களைக் கண்டபோது
மற்பமிலா வத்துவித மறிந்ததீர
ரக்கயவ ரொருக்காலு மில்லையென்றும்
பற்பலவாய்ப் பார்க்கின்ற துவிதமெல்லாம்
பரமசிதா காயபரப் பிரமமென்றுந்
தற்பிரமந் தாமென்று முறுதிகொண்டே
தமதுநிலை தவிராம லிருக்கவேண்டும். 172

சருவமுமே சின்மாத்ர மாதலாலுஞ்
சருவமுமே சுகமாத்ர மாதலாலு
மிருமையெனுந் துவிதமொருக் காலுமில்லை
யித்துவித வாதிகளு மென்றுமிலை
யொருவடிவா நமக்கயலே யிலாமையாலே
யொருக்காலு மொருபயமு மில்லையென்றே
தாளமிலா வத்துவித வுறுதிகொண்டே
தமதுநிலை தவிராம லிருக்கவேண்டும். 173

பலகால வாதனையாற் றுவிதந்தானே
பரமார்த்த மென்றுநினை வுதித்தபோதுந்
தொலையாத துவிதவடி வாகத்தானே
துவிதத்தை நினையாம லவற்றையெல்லா
மலையாத வதிட்டான வறிவாய்நின்ற
வத்துவித மானபர வடிவேயாகச்
சலியாம லெப்போது நினைத்தேயத்தாற்
சத்தியசிற் சுகவடிவாய் முத்தனுவாய். 174

அலைமனது முதலியதற் கதீதமாகி
யகங்கார முதலியதற் கதீதமாகி
நிலைமருவாக் காலத்துக் கதீதமாகி
நிகிலசக சீவர்க்கு மதீதமாகி
யிலகுமறை யீற்றிற்கு மதீதமாகி
யித்துவிதம் யாவுக்கு மதீதமான
சலனமிலாப் பரவடிவே யனைத்துமென்று
சந்ததமு நினைத்ததனுன் முத்தனுவாய். 175

அத்துவித வடிவான வெனக்குவேறு
யணுவுமிலை யகண்டபர நானேயென்னு
மித்திறமா நிச்சயமே செய்தெப்போது
மிணையற்ற பிரமசுக மிசைவாயிங்கே
புத்திரனே திடமான நிச்சயந்தான்
பூரணமா ஞானத்துக் கிலக்கணங்கா
ணத்திறமா நிச்சயமே யகண்டமுத்தி
யடைந்தபய மாகுவதற் கேதுவாமால். 176

நிச்சயமே திடமாகச் செய்யச்செய்ய
நின்மனதின் சங்கையெலா மடைவாய்நீங்கும்
நிச்சயமே திடமாகச் செய்யச்செய்ய
நின்மனது நின்னிடையே சாந்திமேவும்
நிச்சயமே திடமாகச் செய்யச்செய்ய
நின்மனது நிர்மலமாய் நிறைந்துநிற்கும்
நிச்சயமே திடமாகச் செய்யச்செய்ய
நின்மனது நிரதிசயா நந்தஞ்சாரும். 177

மனதுசதா நின்சகச சொரூபமானன்
　　மற்றதுதான் மீளாது மாய்ந்துபோகும்
மனதுடைய மீளாத மாய்வுதானே
　　மகத்தான மோட்சநிலை யதனான்மைந்தா
மனததனை மீளாது மாய்க்கவேண்டி
　　மகத்தான பரப்பிரம நிச்சயத்தை
மனதொருமை யுடன்செய்து மனதைமாய்த்து
　　மகத்தான முத்திநிலை மருவிநிற்பாய். 178

அகண்டபரப் பிரமத்துக் கயலேயில்லை
　　யகிலமுமவ் வகண்டபரப் பிரமமென்று
மகண்டபரப் பிரமமது வகமேயென்று
　　மகமந்த வகண்டபரப் பிரமமென்று
மகண்டபர பாவனையே திடமாய்ச்செய்திவ்
　　வயலனுவுந் தோன்றும லழிந்தபின்பவ்
வகண்டபர பாவனையுஞ் செயாதுதள்ளி
　　யாநந்த வடிவாக வமர்ந்துநிற்பாய். 179

உன்னியவவ் வாநந்த வடிவுந்தள்ளி
　　யுரமாக வொருவடிவே யாகிநிற்பா
யன்னியமி லொருவடிவென் பதையுந்தள்ளி
　　யதன்பின்பு நிர்க்குணமே யாகிநிற்பாய்
மன்னியவந் நிர்க்குணமென் பதையுந்தள்ளி
　　மனவாக்குக் கெட்டாத வடிவாய்நிற்பா
யன்னதையுந் தள்ளியபின் னறிவுமாத்ர
　　மாயதையு மிழந்தான்ம மாத்ரமாவாய். 180

அன்னதையுந் தள்ளியபின் பிரமமாத்ர
　　மாயிடுவாய் மற்றதையுந் தள்ளியிங்கு
சொன்னவெலா மிழந்துவெளி தாகநிற்பாய்
　　சொன்னதையுந் தள்ளிமிக வெளிதாய்நிற்பாய்
பின்னுளமே முதலியவோ ருபாதியின்றிப்
　　பேசவொணச் சூனியமா நிலையினிற்பா
யின்னவித சூனியமு மிழந்தபின்ன
　　ரெவ்வடிவோ வவ்வடிவே யாகிநிற்பாய். 181

நிற்பதெனுந் தன்மையுமே யிழந்தபின்னர்
நீநீயா யிருக்கின்ற சுபாவந்தன்னைச்
சொற்பமுமே வாக்காலு மனதினாலுஞ்
சொல்லவொணு தெண்ணவொணு தாதலாலே
தற்பரமாஞ் சகசநிலை சார்ந்தபின்னர்
தான்ருனே தானாகத் தனித்திருப்பா
யற்பமுமே விகற்பமிலா வவ்விருப்பை
யறைந்திடவு நினைந்திடவு மார்தான்வல்லோர். 182

சொல்லியவிவ் விதமாக வனைத்துந்தள்ளிச்
சுத்தபர வடிவாகிச் சுயமாய்நிற்பா
யல்லதெலாந் தள்ளலுமே யகண்டமான
வகமெனவே யநவரத மநுசந்திப்பா
யெல்லையிலா வகண்டபர னானேயென் றிங்
கெப்போதும் பழகியவிவ் வநுசந்தானங்
கல்லெனவே திடமான நிருவிகற்பங்
கைவசமே யாகுவதிற் காரணங்காண். 183

ஆதலினு லனைத்துக்கு மதீதமான
வகண்டபரப் பிரமமக மென்றெப்போதுஞ்
சாதகமாம் பாவனையே செய்தத்தாலே
சஞ்சலமாம் விகற்பமெலாந் தவிர்ந்தெப்போதும்
பேதமிலாப் பரப்பிரம ஞானியாகிப்
பின்னமிலாப் பரப்பிரம வடிவேயாவா
யீதையலா லெளிதாக முத்திசார
வேதொன்று முபாயமிலை யிதுவேயுண்மை. 184

எப்போது மகண்டபரப் பிரமந்தன்னை
யெளிதாகப் பாவித்தே யிருமைதீர்வா
யெப்போது மகண்டபரப் பிரமந்தன்னை
யெளிதாகப் பாவித்தே யொருமைசார்வா
யெப்போது மகண்டபரப் பிரமந்தன்னை
யெளிதாகப் பாவித்தே துன்பந்தீர்வா
யெப்போது மகண்டபரப் பிரமந்தன்னை
யெளிதாகப் பாவித்தே யின்பஞ்சார்வாய். 185

எப்போது மியம்பாமன் மௌனமாகி
யெவருடனுங் கூடாம லேகாந்தத்திற்
கற்போல வசையாம லிருந்துசற்றுங்
கலங்காத மனதுடனே யொருமையாகிச்
சற்போத சுககனமாம் பரநானென்றே
சந்ததமும் பாவித்துச் சாந்தனாகித்
தற்போத சூனியனாய் விகற்பந்தீர்ந்து
தற்பதமே தானாகி முத்தனாவாய். 186

சத்தியசிற் சுககனமாம் பிரமந்தானே
சகலமென்று மப்பிரம நானேயென்று
மித்திறமாந் திடமான வநுசந்தான
மெப்போது மிடையறவே செய்தேயித்தாற்
சத்தியசிற் சுககனவப் பரமேயாகிச்
சங்கற்ப விகற்பங்க ளனைத்துந்தள்ளி
யத்துவித பூரணமா யிருப்பதான
வகண்டபர முத்திதனை யடைவாய்மைந்தா. 187

பரமசிவன் கருணையினா லெனக்குரைத்த
பரம்பொருளை நினக்கருளாற் பகரலுற்றே
னரியதினு மரிதான விவ்வர்த்தத்தை
யத்யந்த மூடரிடை விவேகியானோ
ரொருபொழுது முரைக்கவொணா தன்னோரின்பா
லோதியவிப் பொருண்மிகவும் புனிதமேனும்
புரைமருவு மம்மூடர் புணர்ச்சியாலே
புனிதமிலாப் பொருளெனவே வியர்த்தமாகும். 188

விமலபர விவேகவலி யுள்ளதீரர்
விடயாசை மிகுந்தவெறு மூடரோமட
மமதையுட னொருக்காலும் பேசவொண்ணா
மற்றவரை மனத்தாலும் மதிக்கவொண்ணா
வமலபர வுணர்வுரமாய் முத்திசேர
வகிலவிட யாசைவிட லன்றோவேது
நிமலமிலா மூடருடன் சகவாசத்தா
னீத்தவிட யாசையுமே மீளுமன்றோ. 189

நற்பிரம விவேகவலி யுள்ளதீரர்
நாரிமுதற் சுகத்திச்சை நண்ணும்போதும்
பற்பலவாய்த் தோற்றியவச் சுகத்தையெல்லாம்
பரப்பிரம சொரூபசுக மெனவேயோர்ந்து
கற்பிதமாம் விடயசுக மநுபவிக்கக்
கனவிலுமே நினையாது தைரியத்தோ
டற்பமிலா வகண்டபர சுகமேசேர
வகண்டபர ஞானபெல மடையவேண்டும். 190

வேதமுத னூற்களெலா மிகவுங்கற்ற
வேதியரே யாகினுமிவ் வகண்டஞானம்
பேதமறப் பொருந்தாதோ ரொருகாலத்தும்
பிராமணரே யாகியிடா ருபவீதந்தான்
சாதியடை யாளமலாற் பிராமணத்வஞ்
சாருவதிற் சாதகமன் றதனுலென்றும்
பேதமிலாப் பரப்பிரம வுபவீதத்தைப்
பெற்றவரே பிராமணராய் முத்தராவர். 191

அகிலமுமே யகண்டபர சிவமேயென்று
மச்சிவமே யகமென்றும் பழகாநின்ற
மகிமைமிகுந் தியானமெனும் பூசையாலே
மனதலைவற் றறிவுருவாய் முத்திமேவும்
வெகுவிதமா மறையாலுங் கருமத்தாலும்
விசித்திரமாய்ப் பழகியிடும் யோகத்தாலும்
வகைவகையாய் மற்றுமுள வுபாயத்தாலும்
வரமான முத்திதனை மனதுமேவா. 192

சிரவணமு மனனமுமே செய்தபின்னர்
சின்மயமாம் பரமசிவ நானேயென்று
புரையறவே பழகியிடுந் தியானமாகும்
பூசனையாற் பூரணமாஞ் சிவஞானத்தை
யிருளறவே வெளிதாக வடைந்துமோட்ச
மிசைந்திடலா மிதிலைய மில்லையென்றே
பிரியமுடன் ரிபுமுனிவ னிதாகனுக்குப்
பின்னமிலாப் பரம்பொருளைப் பேசினனால். 193

மகிமைபெறு மகண்டபர நிர்ணயத்தை
மங்களபூ ருவமாகப் படிக்கவேண்டும்
விகலமிலா விதியுடனே படிப்போருக்கே
விக்கினமே யில்லாம லகண்டஞான
மகமதனி லெளிதாக வுதிக்குமிங்கே
யாதலினு லகண்டபர நிர்ணயத்தைப்
புகல்பொழுது மங்களபூ ருவமேயாகப்
பூரணமாம் விதியுடனே புகலவேண்டும். 194

எப்போதுந் தைரியமா யிடைவிடாம
லேகபர சிந்தனையே செய்வாயாகிற்
சற்போத சுககனமாம் பரமேயாச்
சங்கற்ப விகற்பங்க ளனைத்துந்தீர்ந்து
தற்போத சூனியனாய்த் தானேதானாய்த்
தனித்திந்தப் பவபாச முத்தனாவா
யிப்போதிங் கியம்பியவிவ் வர்த்தந்தன்னி
லெள்ளளவு மையமிலை யுறுதியீதே. 195

அநவரத மாதரவா யிடைவிடாம
லத்துவித சிந்தனையே செய்வாயாகின்
மனதினுள சங்கையெலா முடனேதீர்ந்து
மகத்தான சொரூபசுக மருவியிற்பாய்
சொனவிதமாய்ச் சொரூபசுகஞ் சார்வதற்கே
சோர்வுதருஞ் சங்கமெலாந் தூரத்தள்ளி
யனகநின தான்மாவுக் கபின்னமான
வகண்டபரப் பிரமத்திற் சங்கஞ்செய்வாய். 196

அகமென்றுந் தேகமல பொறிகளல்ல
வகமென்று முயிர்களல வுள்ளமல்ல
வகமென்றும் புத்தியல சித்தமல்ல
வகமென்றும் புன்மையகங் காரமல்ல
வகமென்று மிதன்மூலாஞ் ஞானமல்ல
வகமென்று மித்துவித மெவையுமல்ல
வகமென்று மத்துவிதம் பிரமமென்னு
மகம்பிரம நிச்சயமே யகண்டசங்கம். 197

அகமென்று மூன்றுவித தேகமல்ல
அகமென்று மூன்றுவித வவித்தையல்ல
வகமென்று மைந்துவித கோசமல்ல
வகமென்று மவையினபி மானியல்ல
வகமென்றுஞ் சமட்டியல வியட்டியல்ல
வகமென்றுஞ் சகசீவ பரங்களல்ல
வகமென்று மகண்டபரப் பிரமமென்னு
மகம்பிரம நிச்சயமே யகண்டசங்கம். 198

அகண்டபரப் பிரமமதே சத்துக்கெல்லா
மத்யந்த சத்தாக விருப்பதாலவ்
வகண்டபரப் பிரமத்தின் சங்கந்தானே
யறிஞரினாற் சற்சங்க மென்னலாகு
மகண்டபரப் பிரமமதே மகத்துக்கெல்லா
மத்யந்தஞ் சத்தாக விருப்பதாலவ்
வகண்டபரப் பிரமத்தின் சங்கந்தானே
யறிஞரினன் மகத்சங்க மென்னலாமே. 199

ஆதலின லனவரத மிடைவிடாம
லதிதிடமா யகம்பிரம நிச்சயத்தைச்
சாதகமாய்ப் பழகியதான் மனதிலுள்ள
சங்கற்ப விகற்பங்க ளனைத்துந்தீர்ந்து
பேதமிலா வகண்டபரப் பிரமஞானம்
பெற்றதன லகண்டசுக மநுபவிப்பா
யோதியவா றகண்டசுக மநுபவித்தோர்க்
கொருக்காலும் பவத்துன்ப மீண்டுமில்லை. 200

அகம்பிரம நிச்சயமே சத்தின்சங்க
மகம்பிரம நிச்சயமே மகத்தின்சங்க
மகம்பிரம நிச்சயமே யான்மசங்க
மகம்பிரம நிச்சயமே யகண்டசங்க
மகம்பிரம நிச்சயமே யகண்டத்தியான
மகம்பிரம நிச்சயமே யகண்டஞான
மகம்பிரம நிச்சயமே யகண்டமோட்ச
மகம்பிரம நிச்சயமே யனைத்துமாகும். 201

சருவமுமே சந்ததமு மான்மாகாரஞ்
சலனமிலா வான்மாவே பிரமாகாரம்
பிரமமதே பிறங்கியவிவ் வான்மாகாரம்
பேசியவா பேதமொருக் காலுமில்லை
சருவமுமே யான்மாவுக் கபின்னமான
சத்தியசிற் சுககனமாம் பிரமமென்றே
யொருமையுணர் நிச்சயமே திடமாய்ப்பெற்றோ
னுடனேயிப் பவபாச முத்தனுவான். 202

பேதமுறுஞ் சகசீவ பரங்களெல்லாம்
பிரமமென்று மப்பிரம நானேயென்று
மோதியவிச் சிந்தனையைப் பிரமாப்யாசி
யொழியாம லெப்போதும் பழகவேண்டுஞ்
சாதகமாஞ் சிந்தனையின் பெலத்தினாலே
சலமனத்தின் விகற்பமெலாந் தவிர்ந்தபின்னர்
ரீதையுமே பழகாமற் பரமேயாகி
யென்னினைவு நினையாம லிருக்கவேண்டும். 203

புத்திரனே யாதலினா னீயெப்போதும்
பூரணமாம் பாவனையே செய்திங்கத்தாற்
சித்தமதன் விகற்பமெலாந் தீர்ந்தபின்னர்
சின்மயமாம் பரப்பிரம வடிவேயாகி
யித்தனையு மிதரத்தை நினையாவண்ண
மெப்போது மியங்காது வெறிதிருப்பாய்
நித்தமுமே வெறிதாவிங் குளனானென்னு
நினைவையுமே நீக்கிநிச வடிவாய்நிற்பாய். 204

நினைவையெலா நீக்கிமனோ வாக்குக்கெட்டா
நிசவடிவாய் நிற்பதுவே நிறைந்தமுத்தி
நினைவணுவும் வேறாக நிகழுமாகி
னினைவதுமே மகத்தான பந்தமாகும்
நினைவறவே நிற்கின்ற நிட்டைதானே
நிசமான வத்துவித நிலைமையாகும்
நினைவறவே நிற்கின்ற நிட்டைதானே
நிரதிசய வானந்த நிலைமையாமால். 205

ஆதலினா லநேகவித நினைவையெல்லா
மகண்டபர பாவனையா னினைவாற்றள்ளிச்
சாதகமாம் பாவனையா னினைவெல்லாமுஞ்
சற்றேனு முதியாது மறந்தபின்ன
ரோதியவப் பாவனையு மொழிந்தெப்போது
முரைமனதுக் கெட்டாத வுண்மையாகிப்
பேதமற விருப்பவனே பந்தந்தீர்ந்து
பின்னமிலா வகண்டபர முத்திபெற்றோன். 206

அகம்பிரமம் பிரமமக மகமெல்லாமென்
றகண்டபர பாவனையே செய்வோர்க்கல்லாற்
சகம்பரமே முதலியதாய்க் காண்போர்க்கென்றுஞ்
சஞ்சலமா நினைவெவையுந் தொலையாதென்றே
திகம்பரனும் பரமசிவ னெமக்குரைத்த
திடமான வகண்டபர நிர்ணயத்தைத்
தகும்பிரமாப் யாசிகளுக் கிதமேயாகத்
தத்துவமாய் நிதாகநினக் குரைத்தேனே. 207

புத்தியுட னகண்டபர சிவத்தின்றியானம்
பழகியதா னிரதிசய திருத்திமேவி
யித்தனையுஞ் சங்கற்ப விகற்பமின்றி
யெப்போது மேகபர சிவமேயாகி
மெத்தவுமே சாந்தமதா மனதுதானே
மெய்யான முத்திநிலை மேவுமன்றி
மத்தமதாய்ச் சங்கற்ப விகற்பமுற்ற
மனதந்த முத்திநிலை மருவாதென்றும். 208

நித்தமுமே யகண்டபர சிவனென்றே
நினைப்பதுவாஞ் சிவபத்தி மிகுந்தோன்றானே
சித்தமுறும் விகற்பமெலா முடனேதீர்ந்து
சின்மயமாம் பரமசிவந் தானேயாகி
யித்துனிசெய் பவக்கடலை யெளிதாய்த்தாண்டி
யேகமதா முத்திநிலை யிசைவனென்றே
சுத்தமதாய் ரிபுமுனிவ னிதாகனுக்குச்
சூட்சுமமாம் பரம்பொருளைச் சொன்னானன்றே. 209

சத்தியசிற் சுககனமாய்ச் சாந்தமாகிச்
சலனமிலாச் சாசுவத சொரூபமாகி
நித்தியநிட் களமாகி நிருவிகற்ப
நிரஞ்சனமாய் நிராகார சொரூபமாகி
யத்துவித மானபரப் பிரமநானே
யணுவுமிதி லையமிலை யென்றெப்போதும்
புத்திரநீ திடமாக நிச்சயித்துப
பூரணமாம் பிரமசுக மநுபவிப்பாய். 210

எப்போதும் பரப்பிரமஞ் சத்தேயன்றி
யிப்பிரம மொருக்காலு மசத்தேயாகா
தெப்போதுஞ் சத்தான பரநானென்று
மித்திறமா முறுதியுளோன் சத்தேயாவ
னெப்போதுஞ் சத்தான பரநானென்னு
மித்திறமா முறுதியிலோ னசத்தேயாவ
னெப்போதுஞ் சத்தான பரநானென்னு
மித்திறமா நிச்சயமே யிசைவாய்மைந்தா. 211

அறிவுருவா மதிட்டான பிரமத்தின்க
ணாரோப வடிவாக வவிவேகத்தா
லறிவறுமச் சகலமுமே யறிவாமன்றி
யன்னியமா யணுவேனு மிலவேயில்லை
மறைமுடியின் சித்தாந்த மனைத்துமீதே
மகத்துக்க ளநுபூதி நிலையுமீதே
நிறைவுறவே பரமசிவ னெனக்குரைத்த
நிசமான நிர்ணயமு நிதாகவீதே. 212

சருவமுமே பிரமமென்று மதுநானென்றுஞ்
சலனமிலா நிச்சயமே செய்யச்செய்யச்
சருவமெனும் பிரமமெனு நானீதென்னுஞ்
சங்கற்ப விகற்பமெலா மடைவாய்த்தீர்ந்து
சருவபரி பூரணமாம் பரமேயாகிச்
சலனமிலா திருப்பதுவா முத்தி...
சருவசகன் ஞயகனுஞ் சிவன்
சாற்றியதிற் சற்றேனுஞ்

ஆதலினு லநேகவித நினைவையெல்லா
  மகண்டபர பாவனையா னினைவாற்றள்ளிச்
சாதகமாம் பாவனையா னினைவெல்லாமுஞ்
  சற்றேனு முதியாது மறந்தபின்ன
ரோதியவப் பாவனையு மொழிந்தெப்போது
  முரைமனதுக் கெட்டாத வுண்மையாகிப்
பேதமற விருப்பவனே பந்தந்தீர்ந்து
  பின்னமிலா வகண்டபர முத்திபெற்றோன். 206

அகம்பிரமம் பிரமமக மகமெல்லாமென்
  றகண்டபர பாவனையே செய்வோர்க்கல்லாற்
சகம்பரமே முதலியதாய்க் காண்போர்க்கென்றுஞ்
  சஞ்சலமா நினைவெவையுந் தொலையாதென்மெ
திகம்பரனும் பரமசிவ னெமக்குரைத்த
  திடமான வகண்டபர நிர்ணயத்தைத்
தரும்பிரமாப் யாசிகளுக் கிதமேயாகத்
  தத்துவமாய் நிதாகனினக் குரைத்தேனனே. 207

புத்தியுட னகண்டபர சிவத்தின்றியானம்
  பழகியதா னிரதிசய திருத்திமேவி
யித்தனையுஞ் சங்கற்ப விகற்பமின்றி
  யெப்போது மேகபர சிவமேயாகி
மெத்தவுமே சாந்தமதா மனதுதானே
  மெய்யான முத்திநிலை மேவுமன்றி
மத்தமதாய்ச் சங்கற்ப விகற்பமுற்ற
  மனதந்த முத்திநிலை மருவாதென்றும். 208

நித்தமுமே யகண்டபர சிவனனென்றே
  நினைப்பதுவாஞ் சிவபத்தி மிகுந்தோன்றானே
சித்தமுறும் விகற்பமெலா முடனேதீர்ந்து
  சின்மயமாம் பரமசிவந் தானேயாகி
யித்துனிசெய் பவக்கடலை யெளிதாய்த்தாண்டி
  யேகமதா முத்திநிலை யிசைவனென்றே
சுத்தமதாய் ரிபுமுனிவ னிதாகனுக்குச்
  சூட்சுமமாம் பரம்பொருளைச் சொன்னனன்றே. 209

சத்தியசிற் சுககனமாய்ச் சாந்தமாகிச்
சலனமிலாச் சாசுவத சொரூபமாகி
நித்தியநிட் களமாகி நிருவிகற்ப
நிரஞ்சனமாய் நிராகார சொரூபமாகி
யத்துவித மானபரப் பிரமநானே
யணுவுமிதி லையமிலை யென்றெப்போதும்
புத்திரநீ திடமாக நிச்சயித்துப
பூரணமாம் பிரமசுக மநுபவிப்பாய். 210

எப்போதும் பரப்பிரமஞ் சத்தேயன்றி
யிப்பிரம மொருக்காலு மசத்தேயாகா
தெப்போதுஞ் சத்தான பரநானென்று
மித்திறமா முறுதியுளோன் சத்தேயாவ
னெப்போதுஞ் சத்தான பரநானென்னு
மித்திறமா முறுதியிலோ னசத்தேயாவ
னெப்போதுஞ் சத்தான பரநானென்னு
மித்திறமா நிச்சயமே யிசைவாய்மைந்தா. 211

அறிவுருவா மதிட்டான பிரமத்தின்க
ணாரோப வடிவாக வவிவேகத்தா
லறிவறுமச் சகலமுமே யறிவாமன்றி
யன்னியமா யணுவேனு மிலைவேயில்லை
மறைமுடியின் சித்தாந்த மனைத்துமீதே
மகத்துக்க ளநுபூதி நிலையுமீதே
நிறைவுறவே பரமசிவ னெனக்குரைத்த
நிசமான நிர்ணயமு நிதாகவீதே. 212

சருவமுமே பிரமமென்று மதுநானென்றுஞ்
சலனமிலா நிச்சயமே செய்யச்செய்யச்
சருவமெனும் பிரமமெனு நானீதென்னுஞ்
சங்கற்ப விகற்பமெலா மடைவாய்த்தீர்ந்து
சருவபரி பூரணமாம் பரமேயாகிச்
சலனமிலா திருப்பதுவா முத்திபேருஞ்
சருவசகன் றுயகனுஞ் சிவன்றன்றுணை
சாற்றியதிற் சற்றேனுஞ் சங்கையில்லை. 213

அகிலமுமே பிரமமென்று மதுநானென்று
மதிதிடமா நிச்சயமே யப்யாசித்தல்
பகர்பரம மோட்சமுற முந்தியேது
பழகியவந் நிச்சயமும் பின்புதானே
சகசமதாய் நழுவியிடு மதனுன்மைந்தா
சகலமுமே பிரமமென்று மதுநானென்றும்
மிகவுரமா நிச்சயமே யப்யாசித்து
மெய்யான மோட்சநிலை மேவுவாயே. 214

சகலவதிட் டானபரப் பிரமத்தின்கண்
சகலவிதப் பிராந்தியுமே தோன்றலாலே
யகிலமுமவ் வதிட்டானப் பிரமமன்றி
யன்னியமா யணுவுமிலை யாதலாலே
நிகிலமுமே யகண்டபரப் பிரமமென்று
நிரந்தரமா மப்பிரம நானேயென்று
மகிலமெனப் பிரமமெனத் தோன்றும்பேத
மழியுமள வழுத்தமுற நிச்சயிப்பாய். 215

அநவரத மகம்பிரம நிச்சயத்தை
யாதரவோ டதிதிடமா யப்யாசிக்கின்
மனதிலுள விகற்பமெலா முன்புதீர்த்து
மற்றதுதான் விறகற்ற வன்னியேபோற்
றனதுநிச வதிட்டான பிரமத்தின்கண்
டான்றானே சாந்தியுறு மாதலாலே
சொனவிதமா யகம்பிரம நிச்சயத்தைச்
சுகமுறவே முமூட்சுவெலாம் பழகவேண்டும். 216

அத்துவித பூரணமாம் பரசிவத்துக்
கன்னியமாய்த் தோற்றியவித் துவிதமெல்லாஞ்
சித்தமதன் விகாரமலா துண்மையன்று
சித்தந்தா னகண்டபர நிச்சயத்தாற்
சத்தியசிற் சுககனமாம் பரசிவத்திற்
சாந்தியுறிற் சித்தத்தின் விகாரமான
வித்துவித தோற்றமெலா முடனேதீரு
மேதுவலாற் காரியமற் றிருப்பதுண்டோ. 217

ஓதியவிவ் வகண்டபரப் பிரமஞான
முறுதவனே மகத்தான பாவியானேன்
பேதமிலா வகண்டபரப் பிரமஞானம்
பெறுதவனே மகத்தான ரோகியானேன்
சாதகமா மகண்டபரப் பிரமஞானஞ்
சார்ந்தவனே சம்சார முத்தனானே
னாதலினான் முமூட்சுவெலா மெவ்விதத்து
மகண்டபர ஞானத்தை யடையவேண்டும். 218

அகிலமுமே யகண்டபரப் பிரமமென்னு
மப்பிரம நானென்னுந் துணிவுகொண்டே
யகமுறவே திடமான வநுபவத்தை
யடைந்தவனவ் வகண்டபர வடிவேயாகி
யிகல்மனதின் சங்கற்ப விகற்பமெல்லா
மிழந்துடனே பவபாச முத்தனவன்
பகர்பொருளி லணுவேனு மையமில்லை
பரமசிவன் றன்னணை பரமார்த்தந்தான். 219

எல்லாமாம் பிரமமது நானேயென்னு
மேகபர ஞானத்தை யிசையாமூடன்
கல்லாத கல்வியெலாங் கற்றபோதுங்
கரையில்லாப் பவக்கடலைக் கடவானென்றுஞ்
சொல்லானுஞ் சொல்லவொணு மகிமைகூர்ந்த
சுத்தபர ஞானத்தைப் பெற்றவன்றான்
பொல்லாத பவக்கடலை யெளிதாய்த்தாண்டிப்
பூரணமாம் பரப்பிரம தீரஞ்சார்வன். 220

இருக்குமுதல் வேதாந்த வசனத்தானு
மிவையருளு மாசிரிய வசனத்தானுந்
தருக்கமெனுந் திடமான மனனத்தானுந்
தடையறவே செய்கின்ற தியானத்தானு
மருக்கன்முதற் சோதிக்குஞ் சோதியான
வறிவுருவாம் பரமசிவ மறிந்தவன்றான்
றிருக்குருவா மகண்டபர சிவமேயாகித்
திரிசியமாம் பவபந்த மனைத்துந்தீர்வன். 221

இந்தவிதம் பாவனையே செய்யச்சத்தி
யிலதேனு மகண்டபர விடயமான
சுந்தரமாஞ் சத்தத்தை வாக்கினாலே
சோர்வறவே படித்தானு மதனான்மெள்ளச்
சிந்தையுமே யடைவாக வொருமைப்பட்டுச்
சின்மயமாம் பாவனையுஞ் சேருமத்தா
லந்தமிலா வகண்டபர ஞானமுண்டா
யகண்டமதா மோட்சநிலை யடையலாமே. 222

பாவனையாற் சீக்கிரமாய் முத்திபேறும்
படிபபதனா லடைவாக முத்திபேறு
மாவதனான் முமூட்சுவெலாஞ் சீக்கிரத்தி
லகண்டபர மோட்சத்தை யடையவேண்டிற்
பாவனமாம் பாவனையே யிடைவிடாமற்
பலகாலு மாதரவாய்ப் பழகல்வேண்டும்
கேவலமாம் பாவனையா லசத்தரெல்லாங்
கிளத்தியவா சத்தத்தைப் படிக்கவேண்டும். 223

ஆதலினா னீயென்று மிடைவிடாம
லகண்டபர பாவனையே செய்திமைந்தா
வீதிலதே கைம்பிரம மகமெல்லாமென்
றிதுமுதலா வியம்பியநற் சத்தந்தன்னைப்
பேதமறப் படித்திடுமற் றதனான்ஞானம்
பெற்றவனாய்ப் பவபாச முத்தனாவா
யீதுறுதி யிதிலணுவுஞ் சங்கியாதே
யெமதீச னியம்பியதிற் சங்கையுண்டோ. 224

காலமுதற் சிலசிலவாங் காரணத்திற்
காரியமாஞ் சகமெவையு முதிக்குமென்றே
சீலமிலாச் சிலமூடர் சொல்வரன்னோர்
செப்பியிடும் வாதமெலாஞ் சுத்தப்பொய்யே
யாலயமாம் பரமசிவ சத்தியாலே
யகிலமுமவ் வதிட்டான பரசிவத்திற்
கோலமுறக் கற்பிதமா மஃதுமந்தக்
கூறுபடாப் பரசிவமே யுண்மையோரில். 225

அன்னியமோ ரணுவேனு மில்லையென்று
மகிலமுமே யகண்டபரப் பிரமமென்றும்
பின்னமிலா வப்பிரம நானேயென்றும்
பேதமிலாப் பாவனையே திடமாய்ச்செய்வாய்
சொன்னவிதஞ் செய்வாயே நீயெப்போதுஞ்
சுகித்திடுவாய் சுகித்திடுவாய் சுகித்தேநிற்பாய்
பன்னியதி லணுவேனு மையமில்லை
பரமசிவன் றன்னாணை பரமார்த்தந்தான். 226

ஆதலினா லிருப்பதென நிகழ்வதென்ன
வாமவைதான் பிரியமெனக் காண்பதெல்லாம்
பேதமிலாச் சத்தியசிற் சுகமேயான
பிரமமெனும் பாவனையே பெலமாய்ச்செய்வா
யேதமுறுந் தேகாதி யானேயென்று
மில்வுலகை மெனக்கயலா யுள்ளதென்றும்
பீதிசெயும் பாவனையை யொருகாலேனும்
பிரமித்து மனதினிடைப் பெற்றிடாதே. 227

ஏதமுறுந் தேகமுதல் யானேயென்று
மிவ்வுலகை மெனக்கயலா யுள்ளதென்றும்
பேதமுறு நிச்சயமே பொருந்துமுடன்
பெருமைமிகும் பிராமணனா யிருந்தபோதும்
சாதியினான் மெத்தவுமே தாழ்மையுற்ற
சண்டாளன் றனிதனி லையமில்லை
யாதலினா லவ்விதமா நிச்சயத்தை
யயர்ந்துமொரு காலத்து மடைந்திடாதே. 228

எப்போது மொருபொருளு மிலவேயில்லை
யிருப்பதெனக் கற்பிதமாய்க் காண்பதெல்லாஞ்
சற்போத சுககனமாம் பரமேயென்றுஞ்
சந்ததமு மப்பரம நானேயென்றுங்
கற்போல வசைவற்ற நிச்சயத்தைக்
கலங்காம லெப்போது மப்யாசித்தே
தற்போத சூனியனாய்ப் பரமேயாகித்
தளர்வுதரும் பவபந்தந் தவிர்த்துநிற்பாய். 229

ஆன்மாவிற் கற்பிதமாஞ் சகசீவாதி
யகிலமுமவ் வான்மாவுக் கயலேயல்ல
வான்மாவுக் கயலெனவே கண்டபோது
மாய்ந்திடினவ் வகண்டபர மான்மாவேயா
மான்மாநா ஞன்மாநா ஞன்மாவெல்லா
மான்மாவுக் கபின்னபரப் பிரமநானென்
ருன்மாவா மகண்டபரப் பிரமந்தன்னை
யநவரதம் பாவித்தவ் வடிவேயாவாய். 230

இந்தவிதந் திடமான நிச்சயத்தோ
டேகபர பாவனையே செய்தேயத்தாற்
சிந்தையுறு விகற்பமெலாந் தீர்ந்துஞானஞ்
செறிந்ததனுற் சின்மாத்ர மாகிநிற்பாய்
சந்ததமா நிச்சயமே சொரூபநிட்டை
சார்வதனின் முந்தியதா மேதுவாகு
மந்தவுர நிச்சயமும் லயித்தபின்ன
ரயலறவே தான்ருனுய்ச் சுகிக்கலாமே. 231

ஏகபரி பூரணமாய்ச் சராசரங்க
ளெவைக்குமதிட் டானமதாம் பரசிவத்தை
சாகைபல பேதத்தாற் பலவாம்வேதஞ்
சம்புவென்றும் விண்டுவென்றும் விரிஞ்சனென்று
மாகுபுரந் தரனென்று மனலனென்று
மழிக்கின்ற காலனென்று மனிலனென்றும்
பாகமுற மற்றுமுள வமரரென்றும்
பலவிதமா யங்கங்கே பகரலாகும். 232

பலவிதமாய்ப் பகர்கின்ற வேதவாக்கின்
பரமான தாற்பரியப் பொருளையெல்லா
மலைவறவே நன்ருக வாயுங்காலை
யநந்தவித வேதமுமே யகண்டமான
தகமைமிகு மேகபர சிவத்தைத்தானே
தாற்பரியப் பொருளாகச் சாற்றுமென்றே
யிகழ்வறவே ரிபுமுனிவ னிதாகனுக்கங்
கேகபர பாவனையே யிசைத்தானன்றே. 233

சத்தியசிற் சுககனமாய்ச் சலனமின்றிச்
சகலர்க்கு மான்மாவாய்ச் சாந்தமாகி
யத்துவித பூரணமாம் பிரமத்தின்க
ணலேமனதின் விகற்பங்க ளனைத்துந்தீர்ந்து
சித்தமது வேறறவே கலந்தொன்றாகிச்
* சீரசெல நியாயம்போற் சேர்ந்திருக்கை
புத்திரனே தன்மயமா நிட்டையென்று
பூரணமா மறிஞரினாற் புகலலாகும். 234

சத்தியசிற் சுககனமாம் பரமேயெல்லாஞ்
சந்ததமு மதுநானென் றப்யாசிக்குஞ்
சுத்தபர வாதனையான் மலினமாகச்
சொல்லியிடும் வாதனைக ளனைத்துந்தள்ளிப்
புத்திரனே பின்பதையு மிழந்தெப்போதும்
பூரணமா யிருப்பதுவா நிட்டைமேவி
யத்துவித பரப்பிரம மயமேயாகி
யகண்டமதா யிருப்பதுவா முத்திசார்வாய். 235

சொலுமலின வாதனையு மனதின்றன்மஞ்
சுத்தபர வாதனையு மனதின்றன்ம
மலையுமொரு வாதனையும் பரத்துக்கில்லை
யாதலினா லம்மயமா நிட்டைசார்ந்து
மலினமென்ச் சுத்தமென மதிக்கப்பட்ட
மனதுடைய வாதனைக ளொன்றுமின்றிச்
சலனமிலாச் சிலைபோலுங் காட்டம்போலும்
சற்றேனும் சலியாமற் சுகித்திருப்பாய். 236

அகண்டபர பாவனையே செய்தவற்றா
லன்னியமா நினைவெவையு மறந்தபின்னர்
புகன்றபர பாவனையு மறந்தெப்போதும்
பூரணமாம் பரப்பிரம மயமேயாவாய்
செகந்தனிலே யெந்தமகா பாவியேனுஞ்
செப்பியிடு மிப்பொருளைக் கேட்டுணர்ந்தா
லகந்தனிலே யுள்ளமகா பாவமெல்லா
மழிந்தன்றே யகண்டபர வடிவேயாவன். 237

* சீரம்-பால்.

எல்லையிலா வேதமெலாஞ் சித்தசுத்திக்
கேதுவதா முபாசனையை முன்பங்கங்கே
சொல்லியதாற் சித்தத்தின் சுத்தியுற்றோர்
சுகமாக மோட்சநிலை சார்வதற்கே
யல்லலிலா வாநந்த கனமேயான
வகண்டபரி பூரணமாம் பரசிவத்திற்
கல்லெனவே யசையாமற் கலந்திருக்குங்
களங்கமிலா நிட்டையினைக் கூட்டிற்றன்றே. 238

ஆதலினு லறிவதெலாஞ் சிவமேயென்று
மச்சிவமே நானென்றும் பழகப்பட்ட
சாதகமா முபாசனையாற் சித்தசுத்தி
சார்ந்ததனுற் றன்மயமா நிட்டைகூடிப்
பேதமிலா மோட்சநிலை பெறலாமிங்கே
பேசியது சத்தியமே யென்பதாகப்
போதமுற றிபுமுனிவ னிதாகனுககுப்
பூரணமா நிட்டையினைப் புகன்றான்மன்னே. 239

சருவமுமே யகண்டபரப் பிரமமென்றுஞ்
சந்ததமு மப்பிரம நானேயென்று
மிருமையிலாப் பாவனையே யிடைவிடாம
லெப்போது முயற்சியுடன் செய்தவற்றான்
மருவியவிவ் வுலகமெலாமுண்மையென்று
மற்றிந்தத் தேகாதி நானேயென்று
மொருமையிலா விபரீத மொழித்தெப்போது
முணர்வுருவாம் பரப்பிரம மாத்ரமாவாய். 240

சருவமுமே பரப்பிரமஞ் சத்தியந்தான்
சந்ததமு மதுவேநீ சத்தியந்தான்
பரவியவிவ் வர்த்தத்திற் சங்கையில்லை
பரமசிவன் றன்னுணை பரமார்த்தந்தா
னரியவனே யாதலினு னீயெப்போது
மகிலமுமே பிரமமென்று மதுநானென்று
மொருமைதரும் பாவனையே செய்தவற்று
லுணர்வுருவாம் பரப்பிரம மாத்ரமாவாய். 241

அகண்டபர மோட்சத்தை யடைவதற்கிங்
கதிதிடமா மகம்பிரம நிச்சயந்தான்
செகந்தனிலே முக்கியகா ரணமாமைந்தா
செப்பியது சத்தியமே சங்கையில்லை
புகன்றருளுஞ் சற்குருவின் வசனத்தாலும்
பூரணமாய்ப் பழகியதன் பழக்கத்தாலு
மகந்தனிலே யகம்பிரம நிச்சயந்தா
னதிதிடமா மற்றதனுன் மோட்சம்பேறும். 242

ஆதலினு லகம்பிரம நிச்சயந்தா
னதிதிடமாய் மோட்சநிலை யடையுமட்டு
மேதமிலா வென்னுடைய வாக்கியத்தா
லெப்போது மெவ்வளவு மிடைவிடாமற்
பேதமிலா வகம்பிரம நிச்சயத்தைப்
பிரியமுடன் றிடமாக வப்யாசித்து
வீதலுறும் விகற்பமெலா மிகந்தெப்போதும்
வேறுபடா மோட்சநிலை மேவுவாயே. 243

ஒருபொருளு மொருகாலுஞ் செனிக்கவில்லை
யொருகாலுஞ் செனியாதிங் கிருப்பதெங்கே
விரிவுறவே செனியாது மற்றிராதும்
வீதலடைந் திடுமென்ன விளம்பலெங்கே
யரியவனே யாதலினு லகண்டமான
வத்துவித பிரமத்துக் கயலேயில்லை
சருவமுமே பிரமமென்று மதுநானென்றுஞ்
சலியாத பாவனையாற் சாந்தனுவாய். 244

எப்பொருளு மெங்கேனு மிருக்குமாகி
யிவ்விதமா யிஃதுளதென் றியம்பல்வேண்டுஞ்
சிற்பொருளோ யன்றியொரு பொருளுமென்றுஞ்
சிறிதுமிலாத் தன்மையினு லியம்புதற்கிங்
கற்பமுமே யிடமில்லை யாதலாலே
யகண்டபரப் பிரமவடி வானவென்னிற்
சொற்பொருளோ ரணுவுமிலை யென்றெப்போதுஞ்
சும்மாவே யிருந்துமிகச் சாந்தனுவாய். 245

சகலமுமே பிரமமெனு நிச்சயத்தாற்
சகமுதலி துண்மையெனும் பிராந்திநீங்குந்
திகழ்பிரம நானென்னு நிச்சயத்தாற்
றேகமுத ஞனென்னும் பிராந்திநீங்குந்
தருமகனே யாதலினு லெல்லாமென்றுந்
தற்பிரமந் தானென்று மதுநானென்றும்
வெகுதிடமா மநுபூதி யடைந்தெப்போதும்
வேறறவே மிகவுமுப சாந்தனுவாய். 246

இல்லையென வியம்பியிடும் பொருளுமின்றி
யிங்குளதென் றியம்பியிடும் பொருளுமின்றிச்
சொல்லியிடுஞ் சொற்பொருளோ ரனுவுமின்றிச்
சும்மாவே யிருந்துமகா மௌனியாகி
யல்லலிலா வகண்டபரா நந்தமேவி
யநாதிபவ துக்கங்க ளனைத்துந்தீர்த்துக்
கல்லெனவே திடமான பரஞானத்தாற்
கற்பனையோ ரணுவுமிலா முத்திசார்வாய். 247

அறிவுற்ற தனைத்துக்கு மதீதமாகி
யறுபத்து நான்குகலைக் கதீதமாகிச்
செறிவுற்ற கலைக்கெல்லாஞ் சாரமாகிச்
சின்மாத்ர வடிவாகிச் செயலொன்றின்றிக்
கறையற்றுக் குணமற்றுக் குற்றமற்றுக்
காண்கின்ற கற்பனைக ளனைத்துமற்று
நிறைவுற்ற நிச்சலமாம் பரஞானத்தா
னிர்ப்பயமாய் நிற்கின்ற முத்திசார்வாய். 248

சுருக்கமுறச் சொல்லியிடும் பொருளைக்கேளாய்
சொன்னதெலாம் பரப்பிரம சொரூபமேயாம்
நெருக்கமுறுஞ் சொரூபமதே நீயுநானு
நிகலருமா நிதாகவிதி லையமில்லை
யிருக்குமுதன் மறைமுடியின் பொருளுமீதே
யெமதீச னெமக்கருளும் பொருளுமீதே
தருக்கமுட னுறுதியிடும் பொருளுமீதே
தத்துவஞா னிகளுணரும் பொருளுமீதே. 249

தோற்றியிடுந் தோற்றமெலாம் பரமேயென்றுந்
துவிதமிலா வப்பிரம நானேயென்றுஞ்
சாற்றியவிவ் வர்த்தத்திற் சங்கையில்லை
சம்புபதந் தன்னுணை சத்தியந்தான்
போற்றியவிவ் வர்த்தத்தைச் சிரத்தையோடே
புரையறவே நித்தியமுங் கேளாநின்றோர்
வேற்றுமையில் சின்மாத்ர சொரூபமான
விமலபர வடிவாகி முத்தராவர். 250

சாதனமோர் நான்குமுள வதிகாரிக்குச்
சாற்றியவிவ் வர்த்தத்தைக் கருணையாலே
மாதவநீ புகல்வாயேன் மற்றன்னோனு
மகத்தான பரப்பிரம ஞானமேவி
யேதமுறும் பவதுக்க மனைத்துந்தீர்ந்திங்
கிணையற்ற பரப்பிரமா நந்தமுற்றுப்
பேதமிலாப் பரப்பிரம வடிவேயாவன்
பேசியதிற் சந்தேக மணுவுமில்லை. 251

இரவிமுதற் சோதியினல் விலக்கவொண்ணு
விதயவிருண் மிகுந்தவெறு மூடனேனு
நிருமலமா மிப்பொருளை நித்தமாக
நியமமுடன் கேட்டபடி படிப்பானுகிற்
பரமசிவ கருணையினுன் மற்றன்னோனும்
பரஞான சோதியினை யடைந்தேயத்தா
லிருதயமா ரஞ்ஞான விருளைநீக்கி
யேகபர சிவவடிவாய் முத்தனுவன். 252

புத்திரனே வெகுவிதமாய் விளம்பியென்ன
பூரணமாஞ் சிவகருணை பொருந்தினேர்க்கே
யுத்தமமா மிப்பொருளைக் கேட்பதற்கு
மூனமறத் தினந்தோறும் படிப்பதற்கும்
பத்திவரு மற்றவரே சீவன்முத்திப்
பதமேவித் தேகமிலா முத்திசார்வர்
சத்தியமே யென்றுரிபு நிதாகனுக்குச்
சலனமிலாப் பரம்பொருளைச் சாற்றினனே. 253

சருவவித வுலகத்துஞ் சார்வதற்குச்
சாலவுமே யரிதாகிக் குய்யமாகிச்
சுருதிமுடி யனைத்திலுஞற் சாரமாகிச்
சுத்தமதாம் பரப்பிரம சொரூபந்தன்னை
யிருளறவே நேராக வறிவிக்கின்ற
வியல்புள்ள நான்குமகா வாக்கியத்தின்
பொருளினையிங் கெல்லோர்க்கு மிதமேயாகப்
பூன்றசிவன் புகன்றபடி புகலுவாமே. 254

பெருமைமிகு மிருக்குமறை முடியிலுள்ள
பிரஞ்ஞானம் பிரமமெனும் வாக்யமொன்று
மிருண்மருவா லெசுர்வேத முடியிலுள்ள
விலகுமகம் பிரமாஸ்மி வாக்யமொன்று
மருண்மருவாச் சாமமறை முடியிலுள்ள
மகத்தான தத்வமசி வாக்யமொன்று
மரியவதர் வணவேத முடியிலுள்ள
வயமான்மா பிரமமெனும் வாக்யமொன்றும். 255

இந்தவித நான்குமறை முடியின்கண்ணே
யிருக்கின்ற நான்குமகா வாக்கியத்துண்
முந்தியதாம் பிரஞ்ஞானம் பிரமமென்றே
மொழிந்தமகா வாக்கினுடைப் பொருளைச்சொல்வா
மைந்தவிதிற் பிரஞ்ஞானம் பிரமமென்று
மருவுபத மிரண்டாகு மற்றிவற்றின்
முந்தியதாம் பிரஞ்ஞான பதத்தினுக்கு
முக்கியமா மர்த்தத்தை மொழியக்கேளாய். 256

ஞானமதே பிரஞ்ஞான மென்னலாகும்
ஞானத்தாற் சகலமுமே தெரிவதாகும்
ஞானமதிற் றெரிகின்ற சகத்தனைத்தும்
ஞானத்திற் கற்பிதமாய்த் தெரிவதாலே
ஞானமல தன்னியமா யொன்றுமில்லை
ஞாலமுத லெப்பொருளு ஞானமாத்ரம்
ஞானமதே நமதுநிச வடிவமாகும்
ஞானமதே பரப்பிரம வடிவுமாமே. 257

சருவசக ததிட்டான சொரூபமான
சத்தியஞா னநந்த வத்துதானே
பிரமமெனும் பதத்தினுடை யர்த்தமாகும்
பிரமமதிற் கற்பிதமாய்த் தோன்றுநின்ற
ஒருபொருளும் பிரமத்திற் கயலேயாகா
துணர்வுற்ற பொருளெல்லாம் பிரமமாத்ரம்
பிரமமதே நமதுநிச சொரூபமாகும்
பிரமமதே பிரஞ்ஞான சொரூபமாமே 258

பிரஞ்ஞானப் பொருடானே பிரமமாகும்
பிரமமெனும் பொருடானே பிரஞ்ஞானங்கா
ணஞ்ஞான முதலியதா முபாதியலே
யகண்டபரம் பொருடானே யிரண்டுபோலாம்
பிரஞ்ஞானம் பிரமமெனும் வாக்கியார்த்தம்
பிறங்கியதா னுபாதியெலா நீங்கும்போது
விஞ்ஞான கனமான வத்துவொன்றே
வேறற்ற வகண்டார்த்த மாகிநிற்கும். 259

பிறிவுற்ற வுபாதியுறுஞ் சீவன்றானே
பிரஞ்ஞான பதத்தினுடை வாச்சியார்த்தம்
விரிவுற்ற வுபாதியுறு மீசன்றானே
விளம்பியிடும் பிரமபத வாச்சியார்த்த
மொருமித்த நிருபாதி வத்துதானே
யுபயவித பதத்திற்கு மிலட்சியார்த்தந்
தெரிவித்த வுபயபத லட்சியைக்யந்
திகழுமகா வாக்கினுடை யகண்டார்த்தங்காண். 260

அறைந்தபடி மகாவாக்கி னகண்டார்த்தத்தை
யறிந்துமன தம்மயமா யிதரமெல்லா
மறந்துதன தாவரணை மனைத்துநீங்கி
மயக்கமற நிற்பதுவே யகண்டாகாரஞ்
செறிந்தமனோ விருத்தியெனச் செப்பலாகுஞ்
செப்புமகண் டாகார விருத்திதானே
யறிந்தவரா லதிசுகமாஞ் சீவன்முத்தி
யாகுமென வங்கங்கே யறையலாமால். 261

சொன்னவகண் டாகார விருத்திதானே
சுகமேலா யிருக்கின்ற சீவன்முத்தி
பின்னையகண் டாகார விருத்திநீங்கிப்
பிராரத்தம் யாவையுமே நீங்குங்காலை
யன்னியமா முபாதிகளோ ரணுவுமின்றி
யகண்டேக ரசமான வத்துவாக
மன்னியிருக் கின்றநிலை விதேகமுத்தி
மற்றுமகண் டேகரச நிலைமைகேளாய். 262

ஓதியிடும் பிரஞ்ஞான பதமுந்தள்ளி
வுரைசெய்த பிரமமெனும் பதமுந்தள்ளிப்
பேதமிலாப் பரப்பிரம நானேயென்று
பிரியமுடன் பழகிய பாவனையுந்தள்ளி
யேதையுமே நினையாமல் வெறிதிருந்திங்
கிவ்விதமா யிருப்பதெனு நினைவுந்தள்ளி
யீதெனவே யுணரவொண்ணு விருப்புத்தானே
யென்றுமகண் டேகரச நிலைமையாமே. 263

மனதுடைய விகற்பங்க ளனைத்துமின்றி
மாயைமுத லுபாதிகளோ ரணுவுமின்றி
யனியமிலா வகண்டேக ரசசொரூப
மாகியிருக் கின்றநிலை விதேகமுத்தி
சொனநிலைதான் சுபாவமதாய்க் கிட்டுமட்டுஞ்
சுழல்கின்ற விவகார மனைத்துந்தள்ளி
யனகவகண் டாகார விருத்திதன்னை
யலப்பறவே யநவரத மப்யாசிப்பாய். 264

புகலுமகண் டாகார விருத்திதன்னைப்
புரையறவே பழகியிடு மியல்பைக்கேளா
யகிலமுமே யகண்டபரப் பிரமமென்று
மதுதானே நானென்று நானதென்று
மிகழ்மறவே யெப்போது மிடைவிடாம
லேகபர பாவனையே யிதயத்தின்கண்
விகலமறச் செய்வதுவே யகண்டாகார
விருத்திதனைப் பழகியிடு மியல்பாமைந்தா. 265

தேகமுத னானென்ன றவிதவிர்த்தி
திகழ்சாட்சி நானென்னல் சாட்சிவிர்த்தி
யேகபர நானென்ன லகண்டவிர்த்தி
யிம்மூன்று விருத்திகளி லிரண்டைத்தள்ளி
யாகுமகண் டாகார விருத்திதன்னை
யநவரத மாதரவார யப்யாசித்துச்
சோகமுறுஞ் சித்தவிகற் பங்கடீர்த்துச்
சொன்னவகண் டேகரச சொரூபமாவாய். 266

இன்னவிதம் பிரஞ்ஞானம் பிரமமென்னு
மிலகுமகா வாக்கினுடை யருத்தஞ்சொன்னே
முன்னியதா யிங்குரைசெய் நீதியெல்லா
மூன்றுமகா வாக்கினுமே தெரிந்துகொள்வாய்
பின்னையகம் பிரமாஸ்மி யென்பதாகப்
பேசுமகா வாக்கினுடைப் பொருளைக்கேளா
யன்னவகம் பிரமாஸ்மி வாக்கியத்தி
லகம்பிரம மஸ்மியெனப் பதமூன்றாமே. 267

முந்துமகம் பதத்துக்குச் சீவனர்த்தம்
மொழிபிரம பதத்துக்கவ் வீசனர்த்த
மந்தமிலாச் சீவபர வயிக்யந்தானே
யஸ்மியெனும் பதத்தினுடை யருத்தமாகு
மிந்தவித மிந்தமகா வாக்கியத்தி
னேகரச மாகியுள வகண்டார்த்தத்தைப்
புந்தியினு லாய்ந்திதனை யநுபவித்துப்
புகன்றவகண் டேகரச சொரூபமாவாய். 268

பேதமுறு முபாதியினாற் கிஞ்சிஞ்ஞத்வம்
பிறங்கியசர் வஞ்ஞத்வ மாதியாவு
மோதியசீ வேசருடைத் தன்மம்போலா
முபாதியெலாம் விசாரித்துத் தள்ளுங்காலை
யாதியிலாச் சீவபர வைக்யமிஞ்சு
மதுதானே யகண்டார்த்த மாமவற்றை
யோதுமகம் பிரமாஸ்மி வாக்கியத்தா
லுணர்ந்தந்த வகண்டார்த்த வடிவேயாவாய். 269

அனகவகம் பிரமாஸ்மி வாக்கியார்த்த
மாசிரிய னருளியவா றறிந்தபோதும்
பின்னுமதை யுத்தியுடன் மனனஞ்செய்து
பிராந்திதரின் சங்கையெலாம் பெயர்க்கவேண்டுஞ்
சொனவிதமாய்ச் சங்கையெலாம் பெயர்ந்தபின்னர்ச்
சுழல்கின்ற விபரீத மனைத்துந்தீர
வனிசமகம் பிரமாஸ்மி யென்பதாக
வாதரவோ டப்பியாசஞ் செய்யவேண்டும். 270

இந்தவிதம் விசாரித்த விவேகியெல்லா
மேகபர பாவனையே யிடைவிடாமற்
சந்ததமுஞ் செய்ததனால் விபரீதத்தைச்
சற்றேனு மிஞ்சாது நாசஞ்செய்தே
யந்தவகம் பிரமாஸ்மி வாக்கியார்த்த
மானவகண் டார்த்தத்தி னநுபவத்தைப்
புந்திதனிற் பிரதிபந்த மொன்றுமின்றிப்
பூரணமா யெப்போதும் பொருந்தவேண்டும். 271

பலவிதமாம் வாதனையுந் தூரத்தள்ளிப்
பகர்ந்தபடி யகண்டார்த்த மநுபவிப்பா
யிலகுமகம் பிரமாஸ்மி வாக்கியார்த்த
மிவ்விதமா யிசைப்புற்றே யினியுனக்குத்
திலகமதாந் தத்வமசி வாக்கியார்த்தந்
திடமாகச் சித்தமிசைத் தெரியச்சொல்வாந்
தலைமையதாய்த் தயங்கியவிவ் வாக்கியத்திற்
றத்வமசி யெனமூன்று பதங்களாமே. 272

மாயையெனு முபாதியுறு மீசன்றானே
மருவியதற் பதமுரைசெய் வாச்சியார்த்த
மாயதன தவித்தையுறுஞ் சீவன்றானே
யறைகின்ற துவம்பதமோர் வாச்சியார்த்த
மேயமதா முபாதியெலா மிழந்தபின்ன
ரேகவிலக் கணமான வத்துத்தானே
தூயபத மிரண்டுக்கு மிலட்சியார்த்தந்
தொடர்புற்ற வைக்கியமே யசிபதார்த்தம். 273

சொல்லியவிவ் வைக்கியமா மகண்டார்த்தத்தைச்
சுத்தமதாந் தத்வமசி வாக்கியத்தாற்
கல்லெனவே திடமாக வறிந்தெப்போதுங்
கலங்காம லகண்டேக ரசமேயாவா
யெல்லையிலா வகண்டவடி வாகுமட்டு
மிதரமுணர் விருத்தியெலாந் தூரத்தள்ளிப்
புல்லுமகண் டாகார விருத்திதன்னைப்
புறையறவே பழகியதாற் பூன்றனுவாய். 274

தற்பதலட் சியமான பிரமரூபந்
துவம்பதலட் சியமான நீயேயாவா
யற்பமுமே யிதிலைய மமைவதில்லை
யகண்டசிவன் றன்னுணே யறைந்ததுண்மை
சொற்பமிலா வகண்டபரி பூன்றமான
சுத்தமதாம் பாப்பிரம நீயேயென்று
செப்பியிடுங் குருபரனே குருவாகின்றேன்
செப்பியவா றறிந்தவனே சீடனானேன். 275

உச்சமதாங் குருவருளு மகண்டார்த்தத்தை
யுவகையுட னுள்ளபடி கேட்டபின்னர்
நிச்சலமாம் புத்தியினு னிச்சயித்து
நிருமலமா யகம்பிரம மானேனென்றே
துச்சமிலா வநுபூதி யடைந்தவன்றான்
றுகளற்ற சற்சீடன் மற்றோரெல்லா
மெச்செயலைச் செப்பினுமே சீடராகா
ரேகபர மறிந்தவனே சீடனவன். 276

சருவமகா மந்திரமு முபதேசிப்போர்
சாமான்ய குரவரெனச் சாற்றலாகு
மிருமையிலாப் பரப்பிரம நீயேயென்றிங்
கிணையற்ற வுபதேசஞ் செய்கின்றோனே
பெருமைமிகுஞ் சற்குருவென் றுரைக்கலாகும்
பின்வெகுவாய்ப் பேசுவதாற் பெறும்பேறென்ன
வரியபர நீயென்போ னுசானுனே
னகம்பிரம மெனவறிவோன் மாணுனேன். 277

ஆதலினாற் பரப்பிரம நீயேயென்றிங்
 கருள்பவனே யாசிரிய னெனவேயோர்ந்து
சாதகமாஞ் சற்குருவி னுபதேசத்தைச்
 சத்தியமா நம்பியதைச் சாதிப்போனே
பேதமிலா வகண்டபரப் பிரமஞானம்
 பெற்றதனாற் பவபந்த மனைத்துந்தீர்ந்து
போதகன மானபர வடிவேயாவன்
 புகன்றதிலோ ரணுவேனு மையமில்லை. 278

அகிலமறை முடிவுக்கு மகண்டமான
 வத்துவித பரப்பிரம சொரூபந்தானே
தகைமைமிகுந் தாற்பரியப் பொருளாமென்றுந்
 தற்பிரம நீயென்று முபதேசித்த
மகிமைமிகுஞ் சற்குருவின் வாக்கியத்தான்
 மகத்தான பரம்பொருளைக் கேட்டுள்ளத்தில்
விகலமற வறிவிதுவ்வே சிரவணங்காண்
 வேறொன்றுஞ் சிரவணமே யன்றுமைந்தா. 279

அருள்வடிவா மாசிரிய னருளிச்செய்த
 வகிலமகா வாக்கினுடை யகண்டார்த்தத்தை
மருளறவே கேட்டுணர்தல் சிரவணங்காண்
 மற்றதெலாஞ் சிரவணமே யாகாதென்றுஞ்
சிரவணமே செயலுற்ற பொருளைமீண்டுஞ்
 சிரத்தையுடன் யுத்தியினாற் சிந்தைசெய்தல்
பிரமையெலாந் தீர்க்கின்ற மனனமாகும்
 பேசியவிம் மனனத்தின் யுத்திசொல்வாம். 280

திரிசியமாய்ச் சிதைகின்ற வுடலனல்ல
 தியங்கியிடும் பௌதிகமாம் பொறிநானல்ல
பிரிவுபெறு நாநாவா முயிர்நானல்ல
 பிறந்துநசிக் கின்றமன முதலனல்ல
விருள்வடிவா மஞ்ஞான வுருநானல்ல
 விவையாவு மொருமித்த திரளனல்ல
நிருமலமா யாவையுமே நிகழ்த்தாநின்ற
 நீக்கமிலாச் சின்மாத்ர சொரூபமேநான். 281

தூலவுடல் சூக்குமதே கத்திலில்லை
தூலவுடல் சூக்கவுட லிவ்விரண்டு
மாலயமாங் காரணதே கத்திலில்லை
யவைமூன்றுந் துரியத்தி லிலவேயில்லை
கோலமுறுந் தேகமெலா மிலாததாலுங்
கூறுபடாச் சின்மாத்ர சொரூபமொன்றே
காலமொரு மூன்றிலுமே யிருப்பதாலுங்
களங்கமிலாச் சின்மாத்திர சொரூபமேநான். 282

கனவினிடை நனவில்லை யிவ்விரண்டுங்
காரணமாஞ் சுழுத்திதனி லில்லையந்த
நனவுகனுச் சுழுத்திகளுந் துரியத்தில்லை
நாலுவித வவத்தைகளுஞ் சுத்தத்தில்லை
சொனவிதமா யவித்தையெலா மிலாததாலுஞ்
சுத்தமதாஞ் சின்மாத்ர சொரூபமொன்றே
யநவரத மழியாம லிருப்பதாலு
மத்துவித சின்மாத்ர சொரூபமேநான். 283

தேகமுதற் சடமான விவையனைத்துந்
திரிசியமாய்க் கடமெனவே நசிப்பதாலு
மேகபர சின்மாத்ர வடிவாமான்மா
வெப்போதுந் திருக்குருவா யிருப்பதாலும்
பாகமுறுந் தேகாதி மித்தையாகும்
பகுப்பற்ற வான்மாவே யுண்மையாகு
மாகையினாற் றேகாதித் திரளனல்ல
வநுகூத வறிவான வான்மாவேநான். 284

சத்தியஞா னாநந்த சுபாவமான
சகலவதிட் டானபரப் பிரமத்தின்கட்
சித்திரவ நிருதசட துக்கமான
செகத்தெல்லாங் கற்பிதமாய்த் தோற்றலாலே
யித்துவித செகத்தெல்லா மாயுங்காலை
யிலகுமதிட் டானபரப் பிரமமேயாஞ்
சுத்திகையிற் கற்பிதமாய்த் தோற்றும்வெள்ளி
சோதிக்கி லதிட்டான சுத்திதானே. 285

இருமையெனத் தோற்றியவிச் சகத்தனைத்து
மிருக்கின்ற திலங்குகின்ற தின்பமென்ன
மருவியவிவ் வநுபூதி யாயுங்காலை
மன்னுமதிட் டானத்தின் சுபாவமேயாஞ்
சருவவதிட் டானபரப் பிரமத்துக்கே
சத்தியஞா னாநந்தத் தன்மையன்றி
யொருபொழுது மில்லாத வெறும்பொய்யான
வுலகத்துக் கோதியவித் தன்மையுண்டோ. 286

காலமொரு மூன்றினுமே யிருக்கையாலுங்
கற்பிதமாம் யாவையுமே விளக்கலாலுஞ்
சாலவுமே யாவையினு மினிமையாலுஞ்
சத்தியஞா னாநந்த சொரூபநானே
யாலயமா மென்னிடையிற் கனவேபோல
வகிலமுமே கற்பிதமாய்த் தோற்றலாலே
கோலமுறத் தோற்றியிடுந் தோற்றமெல்லாங்
குறைவற்ற வதிட்டான வடிவாநானே. 287

என்னிடையிற் கற்பிதமாய்க் கனவின்கண்ணே
யிலங்கியதாம் யாவையுமே யாயுங்காலை
மன்னுமதிட் டானமதா நானேயன்றி
மற்றெவையு மெனக்கயலா யிலாததேபோற்
பின்னமிலா வென்னிடையி னனவின்கண்ணே
பிறங்கியதாம் யாவையுமே யாயுங்காலை
யன்னவதிட் டானமதா நானேயன்றி
யற்பமுமே யெனக்கயலா யிலவேயில்லை. 288

ஓதியவா றுண்மையினை யோருங்காலை
யுபாதியிலா வெனதுநிச சொரூபத்துக்கும்
பேதமிலாப் பரப்பிரம சொரூபத்துக்கும்
பேசுமிலக் கணமொன்றா யிருப்பதாலே
யாதியிலா வகண்டபர வடிவேநானென்
றநவரத மாய்வதுவே மனனயுத்தி
மாதவனே யிவ்விதமா மயக்கந்தீர
மனனத்தின் சாதகமாம் யுத்திசொன்னோம். 289

சந்தனமென் றோதியிடும் விருட்சமீதே
சங்கையறக் காணென்னு மாத்தன்சொல்லைச்
சுந்தரமாக் கேட்கினுமே யதனைநன்றாச்
சோதித்தே சங்கையெலாந் தீர்ப்பதேபோ
லந்தமிலாப் பரப்பிரம நீயேயென் றிங்
காசிரிய னருளினுமே யதனைநன்றாய்ப்
புந்தியுறும் யுத்தியினால் விசாரஞ்செய்தே
பொருந்தியதன் சங்கையெலாம் போக்கவேண்டும். 290

சிரவணமு மனனமுமே செய்தபின்னர்
செறிவுற்ற விபரீத மனைத்துந்தீர
விரவுபக லெப்போது மிடைவிடாம
லினிமையொடு நிதித்தியாசஞ் செய்யவேண்டும்
பரவியிடும் விசாதீய விருத்தியின்றிப்
பரம்பரையான் சசாதீய விருத்திதானே
யிருமையிலா நிதித்தியாச மாகுமித்தா
லெய்தியதன் விபரீதம் யாவுந்தீரும். 291

செகம்பரனு னீதெனவே வேறுவேறாய்ச்
செறிகின்ற விசாதீய விருத்தியின்றி
யகம்பிரமம் பிரமமக மகமெல்லாமென்
றநவரத மிடையறவே தொடராநின்ற
தகும்பிரம பாவனையாம் விருத்திதானே
தடையற்ற சசாதீய விருத்தியாகு
மிகும்பிரிய முற்றிதனை யப்யாசிக்கின்
மேவுவிப ரீதமெலா மடைவாய்த்தீரும். 292

பொருந்திநிதஞ் செய்கின்ற சிரவணத்தாற்
புகலுமசம் பாவனைதான் முன்புநீங்கி
வருந்திநிதஞ் செய்கின்ற மனனந்தன்னால்
வாளாவாஞ் சம்சயபா வனையுநீங்கி
விரிந்துநிதஞ் செய்கின்ற நிதித்தியாசத்தால்
விபரீத பாவனையு நீங்கும்போது
நிரந்தரமாம் பரப்பிரம சாட்சாத்கார
நிச்சலமாந் தன்மனதி னிகழுமன்றே. 293

சத்துருவாம் பிரதிபந்த மொன்றுமின்றிச்
சலனமிலாப் பரப்பிரம சுகத்தைமேவி
யித்துவித நினைவணுவு மிலாதுநீங்கி
யிருளான வாவரண மனைத்துநீங்கிச்
சித்துருவாம் பரப்பிரம சொரூபத்தின்கண்
சீரசல நியாயம்போற் சேர்ந்துநிற்கும்
புத்தியுடை விருத்தியினிற் ப்ரதிவிம்பிக்கும்
பூரணசை தன்னியமே சாட்சாத்காரம். 294

பேசியவிப் புத்தியுடை விருத்திதானே
பிறங்குமகண் டாகார விருத்தியாகு
மாசறவிவ் விருத்தியினிற் ப்ரதிவிம்பிக்கு
மறிவுருவே யகண்டபர சாட்சாத்கார
நேசமொடிவ் வகண்டபர சாட்சாத்கார
நிட்டையினைப் பெற்றவரே முத்தராவ
ரீசனுடை யுபயதிருப் பதந்தன்னுண்
யியம்பியதி லெள்ளளவு மையமில்லை. 295

இன்னவித மூன்றுமகா வாக்கியத்தி
னேகரச மாகுமகண் டார்த்தஞ்சொன்னோம்
பின்னையுனக் கயமான்மா பிரமமென்னும்
பேசுமகா வாக்கினுடைப் பொருளைச்சொல்வா
மன்னியமி லந்தமகா வாக்கியத்தி
லயமான்மா பிரமமெனப பதமூன்றாகும்
பண்ணுபத மூன்றுக்கு மடைவேயாகப்
பகர்கின்ற வருத்தத்தைப் பரிந்துகேளாய். 296

சித்திரமா முபாதியுறுஞ் சீவன்றானே
செப்புமயம் பதத்துக்கு வாச்சியார்த்தம்
வித்தரமா முபாதியறு மீசன்றானே
விளம்பியிடு மான்மபத வாச்சியார்த்தஞ்
சுத்தமதாஞ் சீவபர சொரூபந்தானே
சொல்லியவிவ் வுபயபத லட்சியார்த்த
மத்திரமா முபயபத லட்சியத்தி
னைக்கியமே பிரமமெனும் பதத்தினர்த்தம். 297

அறைந்தவண மிந்தமகா வாக்கியத்தா
லக்கியமா மகண்டார்த்த மறிந்துகொண்டு
செறிந்தபர சீவருடை யுபாதியெல்லாஞ்
செவ்வியதாம் விசாரத்தா னேதிசெய்திங்
கறிந்தபடி யகண்டபர வடிவோநானென்
றநவரத மாதரவா யப்யாசித்து
மறந்தநின துருவான வகண்டார்த்தத்தை
மறவாம லெப்போது மநுபவிப்பாய். 298

மற்றுமொரு விதமாயிவ் வாக்கியத்தின்
மதிக்கின்ற பொருளினையு முரைப்பக்கேளாய்
சற்றுமிருண் மருவாத சுவப்பிரகாச
சைதன்ய வடிவான பிரத்யக்கான்மா
வுற்றவய மான்மாவென் றுரைக்கப்பட்ட
வுபயவித பதத்துக்கு மருத்தமாகும்
முற்றுமிலா விவ்வுலகின் மூலவத்து
மொழிவுற்ற பிரமபதத் தருத்தமாமே. 299

பாவனமாம் பதங்களுடை லட்சியத்தின்
பகுப்பற்ற வைக்கியமே|வாக்கியார்த்தஞ்
சீவபர பேதத்துக் கேதுவாகச்
செறிகின்ற வபரோட்ச பரோட்சத்துவாதி
யாவையுமே யுபாதியினாற் செறிந்ததென்றே
யிதனையெலாம் விசாரித்து நேதிசெய்திங்
கோவலற மிஞ்சுவதா மகண்டார்த்தத்தை
யுரைத்தபடி யெப்போது மநுபவிப்பாய். 300

இன்னவித மிருக்குமுதல் வேதாந்தத்தி
லிலங்கியவிந் நான்குமகா வாக்கியத்தின்
பின்னமிலா வைக்கியமா மகண்டார்த்தத்தைப்
பேதமெனும் பிராந்தியெலாந் தீரும்வண்ணம்
மன்னசிவ னருளியவா றடைவாய்ச்சொன்னோ
மறைந்தபடி யழுத்தமுற வப்யாசித்தே
நின்னுருவாய் நிலைபெற்ற வகண்டார்த்தத்தை
நிருமலமாய் நீயென்று மநுபவிப்பாய். 301

சயமதுவாந் தத்வமசி யென்னும்வாக்கியம்
சொல்லுமுப தேசமகா வாக்யமாகு
மியனுமகம் பிரமாஸ்மி யென்னும்வாக்கியம்
மிலகுமநு பூதிமகா வாக்யமாகு
மயன்மருவாப் பிரஞ்ஞானம் பிரமவாக்யம்
மனனத்தி னப்பியாச வாக்யமாகு
மயமான்மா பிரமமென வறையும்வாக்கிய
மதற்கெல்லாஞ் சம்மதமாம் வாக்யமாமே. 302

ஆதலினுற் றத்வமசி வாக்கியத்தா
லருளியவா றகண்டார்த்த மறிந்துகொண்டு
பேதமறப் பிரஞ்ஞானம் பிரமமென்று
பேசுமகா வாக்கதனுன் மனனஞ்செய்து
வாதகமி லயமான்மா பிரமமென்றும்
வாக்கதனுற் சரியெனவே சம்மதித்திங்
கோதுமகம் பிரமாஸ்மி வாக்கியத்தா
லுரைத்தவகண் டார்த்தத்தை யநுபவிப்பாய். 303

அனிசமகம் பிரமாஸ்மி வாக்கியத்தா
லகண்டபர பாவனையே யப்யாசித்து
நனிமருவும் பாவனையா நாமரூப
நாட்டமெலா நன்ருக நாசஞ்செய்து
துனிமருவுந் துவிதத்தின் ஹொடர்பேயின்றித்
துகளற்ற வகண்டார்த்த மநுபவித்தவ்
வனியமிலா வகண்டார்த்த வடிவேயாவா
யவ்வண்ண மாகுவதே யகண்டமோட்சம். 304

தனதுநிச வடிவான வகண்டார்த்தத்தைத்
தவிரவொரு பொருளுமொரு காலுமில்லை
பிணையுளதாய்க் காண்பவெலாஞ் சுத்தப்பொய்யே
பேசியவப் பொய்வடிவு மாயுங்காலை
யனியமிலா வகண்டபரப் பிரமந்தானு
மறைந்ததிலோ ரணுவேனு மையமில்லை
சொனவகையே யகண்டார்த்த ஞானம்பெற்றுச்
சுத்தபர வடிவாகி முத்தனுவாய். 305

சகலமறை முடிவினுமே சாரமாகிச்
சாலவுமே சாருவதற் கரியதான
மிகவுமகா ரகசியமா மிவ்வர்த்தத்தை
மெய்யுணர்வா நந்தவடி வானவீச
னிகழ்வறவே புகன்றவிதம் புகன்றேமியாமு
மிப்பொருளை யிசைத்தபடி கேட்டுணர்ந்தோர்
பகைமருவும் பவபந்த மனைத்துந்தீர்ந்து
பருப்பற்ற பரப்பிரம வடிவேயாவர். 306

அகிலசகந் நாயகனும் பரேசன்றன்னை
யநவரத மாதரவா யாராதித்து
மிகவுமருட் பெற்றவரே மனதின்சுத்தி
மேவினராய் விளம்புமகா வாக்கியத்தின்
றருபொருளைத் தடையறவே யநுபவித்துத்
தன்மயமே யாவரென நிதாகனுக்கு
நிகழ்வுறவே ரிபுமுனிவன் கருணையாலே
நிகிலமகா வாக்குகளின் பொருளுஞ்சொன்னன். 307

முத்தியுற வேண்டுமென விச்சைசெய்தன்
மோட்சத்தின் பொருட்டேதன் னுயிர்தரித்தல்
பத்தியுட னன்றாக விசாரஞ்செய்தல்
பாங்காகப் பரப்பிரம ஞானமெய்த
வித்துவித சகத்தையெலா மறமறத்த
லித்தனையும் பரமார்த்த தசையிற்பொய்யே
யத்துவித பரப்பிரம மொன்றேயுண்மை
யதுவேநீ யனுவுமிதி லையமில்லை. 308

வீதலுறுச் சாதனமோர் நான்குமுற்றோன்
விசாரத்தி லதிகாரி யாமேனென்னல்
பேதமுறுச் சீவபர வைக்யந்தானே
பேசியிடு நூலுக்கு விடயமென்னல்
போதமறை முடிவிற்கும் பிரமத்திற்கும்
போதகபோத் தியபாவ பந்தமென்ன
லேதமுறு மஞ்ஞான மனைத்துநீங்கி
யெப்போதுஞ் சுகிப்பதுவே பலமாமென்னல். 309

ஈதுமுதற் பலவிதமாய்ப் பகுத்தங்கங்கே
யியம்பியதா மெய்பொருளுஞ் சுத்தப்பொய்யே
பேதமுறு மிவற்றையெலாம் பகுத்தங்கங்கே
பேசியிடுஞ் சொலவுகளுஞ் சுத்தப்பொய்யே
மாதவனே யப்பொய்யு மாயுங்காலை
மன்னுமதிட் டானபரப் பிரமந்தானு
மாதலினு லகண்டபரப் பிரமந்தானே
யநவரத மகமென்று நிதித்யாசிப்பாய். 310

மிகமிகவுஞ் சத்தத்தை விரும்பிச்சொல்லன்
மிகவாக்கின் றுக்கத்துக் கேதுவாகும்
புகல்பலவாஞ் சத்தத்தைப் பரிந்துகேட்டல்
பொருந்துமனே மயக்கத்துக் கேதுவாகும்
வெகுவிதமா மர்த்தத்தை விசாரஞ்செய்தல்
விவிதமனே துக்கத்துக் கேதுவாகுந்
தகுமகனே யாதலினு லனைத்துந்தள்ளித்
தற்பிரமந் தானெனவே நிதித்யாசிப்பாய். 311

வுத்தமமாம் புத்தியுறும் புருடர்முன்பிங்
குற்றுணரத் தகுபொருளை யோர்ந்துணர்ந்து
சத்தியமா மப்பொருளின் சாட்சாத்காரஞ்
சாரநிதித் யாசத்தைச் செய்யவேண்டும்
மெத்தவுமே நிதித்யாச விரோதமாக
மேவியநூல் விசாரணையாற் காலந்தள்ள
லித்தனையும் புத்தியுளோர்க் குரியதன்றென்
றிவ்விதமாய்ச் சுருதிமுடி வியம்புதன்றே. 312

புரையறவே யுணர்பொருளை யுணர்ந்தபின்னர்
பூரணமா மப்பொருளின் சாட்சாத்கார
மருவியிட நிதித்யாசஞ் செய்வதல்லான்
மற்றிறையு நூல்வழியே செல்லவொண்ணு
தெரிபொருளை நூல்வழியா லறிந்தபின்னர்
தெரிவித்த நூன்மொழியே மீண்டுஞ்சொல்ல
லுரைதருதன் வாக்குக்குத் துக்கமென்றே
யுபநிடத வசனமெலா முரைத்தவன்றே. 313

ஆதலினாற் சூனியத்தை யடைந்தபின்ன
ரங்குற்ற பலாபலத்தை யெறிதலேபோ
லேதமற வுணர்பொருளை யுணர்ந்தபின்ன
ரிங்குற்ற நூலையெலா மெறிதல்வேண்டும்
வாதகமா நூலையெலா மெறிந்தபின்னர்
வருந்தியுமே யநவரத மிடைவிடாமற்
போதமுறச் சாதகமா நிதித்யாசத்தைப்
புரியுடனே பூரணமாய்ப் பழகல்வேண்டும். 314

மெய்யுணர்வா நந்தபரப் பிரமத்தின்கண்
மேவியதன் கனவெனவே சகத்தனைத்தும்
பொய்யுருவாய்த் தோற்றுமென்று மவையுமாயிற்
பூரணமாம் பிரமமென்றுந் தனதுமாணா
னுய்யவெகு விதமான நூலின்சொல்லை
யுபதேச காலத்தி லுரைப்பதல்லான்
மையணுவு மின்றியதன் னநுபவத்தின்
மருவியவிந் நூல்வசன மிறையுமில்லை. 315

புத்திரனே யாதலினா லுபதேசத்திற்
புகழ்கின்ற நான்மொழிக ளனைத்துந்தள்ளிச்
சத்தியசிற் சுககனமாம் பரமேயாகச்
சலியாம லிருப்பதுவே யறவுநன்று
மத்திரமே யநவரத மிருப்பதற்கிங்
கசைவுற்ற தன்மனது வசமுறாதே
னித்தியமாம் பரப்பிரம நானேயென்று
நிரந்தரமாய் நிதித்யாசஞ் செய்யவேண்டும். 316

நிரந்தரமாய் நிதித்யாசஞ் செய்வதற்கு
நிலையற்ற தன்மனது வசமுறாதேற்
றிரிந்தலையு மனதுவச மாகுமட்டுந்
திடமாக விசாரணையே செய்யவேண்டும்
பொருந்தியநூல் விசாரணையாற் சித்தமெள்ளப்
புரையற்றுப் பூரணமாம் பரத்திலோயு
முரந்தருநூல் விசாரணையே யொழியவேறோ
ருபாயமுமே சித்தசெயந் தருவதில்லை. 317

சித்தசெய மாத்திரமே சீவன்முத்தி
சித்தசெய மாத்திரமே விதேகமுத்தி
நித்தியமாய் நிதித்யாசஞ் செய்வோருக்கே
நிகழ்த்தியவச் சித்தசெய நேரேபேறுஞ்
சித்தசெய மல்லாம லநந்தோபாயஞ்
செய்யினுமே முத்தியிலை யாதலாலே
புத்திரவச் சித்தசெயம் பொருந்தவேண்டிப்
பூரணமா யெப்போது நிதித்யாசிப்பாய். 318

நினக்கயல்போற் றோற்றியவிந் நாமரூப
நிகிலமுமே நீயலது வேறேயன்று
தனக்கயல்போற் கனவிலுணர் நாமரூபந்
தானலது சோதிக்கில் வேறேயுண்டோ
வெனக்கயல்போற் காண்பதெலாம் யானேயென்று
யான்றானே யேகபரப் பிரமமென்றும்
மனக்கவலை யாவையுமே தீருமட்டும்
மறவாம லெப்போது நிதித்யாசிப்பாய். 319

அகம்பிரமம் பிரமமக மகமெல்லாமென்
றநவரத மாதரவாய்ப் பழகப்பட்ட
தகும்பிரம பாவனையா நிதித்யாசத்தாற்
றங்குமனோ விகற்பமெலாந் தவிர்ந்தபின்ன
ரகம்பிரம வாக்கியத்தி னிலட்சியார்த்த
வநுபூதி யடைந்தந்த மயமேயாகிச்
சகம்பரநா னென்றணுவு நினையாவண்ணஞ்
சந்ததமுஞ் சலியாமற் சாந்தனுவாய். 320

சந்ததமுஞ் சலியாமற் சாந்தமாகிச்
சன்மயமாய் நிற்பதுவே சாட்சாத்கா ர
மைந்தவதே மாசற்ற சீவன்முத்தி
மற்றதுவே மகத்தான விதேகமுத்தி
யிந்தநிலை யெமதீச னருளுள்ளோர்க்கே
யிசைத்தவண மிருமையற வெளிதாயெய்துஞ்
சுந்தரமாஞ் சுருதிமுடி வனைத்திනுஞ்
சொல்லிமுடி வுற்றபொருட் சுருக்கமீதே. 321

துகளிலதிட் டானபர சிவத்தின்கண்ணே
  தோன்றியிருந் தடங்கியவிச் சகத்தனைத்தும்
புகலுமதிட் டானபர சிவமேயென்றும்
  பூரணமா மச்சிவமே நாமேயென்றும்
பகறலுறு மறைமுடியா லகண்டைக்யத்தைப்
  பாவித்துப் பரோட்சமிலா தநுபவித்தோர்க்
கிகழ்வுதருஞ் சோகமிலை மோகமில்லை
  யிப்பேத தரிசனமோ ரிறையுமில்லை. 322

நாசமிலா திருப்பதனா லேசத்து
  நாடியெலா மறிவதனா லேசித்து
நேசமதாய் நிற்பதனா லேயின்பம்
  நிகழ்த்தியவா சத்தியசிற் சுகமாநானே
பேசியவிவ் விலக்கணமாம் பிரமமென்றே
  பேதமிலா வகண்டபர நிச்சயத்தை
யாசறவே யதிதிடமா யடைந்தவற்றா
  லகண்டபர மாநந்த மநுபவிப்பாய். 323

இருக்கின்ற திலங்குகின்ற தின்பமென்று
  மியம்பியிடு நாமமொடு ரூபமென்றுந்
தருக்கமிடு மிவ்வமுச பஞ்சகத்திற்
  றயங்கியமுன் மூன்றமுசம் பரத்தின்ரூபஞ்
சுருக்கமுறு மிரண்டமுசஞ் சகத்தின்ரூபஞ்
  சொற்பொருளா மிவ்வமுச மிரண்டுந்தள்ளி
நெருக்கமுறுஞ் சத்தியசிற் சுகமாய்மீந்து
  நின்றபர நானெனவே நிச்சயிப்பாய். 324

அதிட்டான சத்தியசிற் சுகமாமம்ச
  மகிலபரி பூரணமா யொன்றாய்நிற்கு
மிதிற்றானே கற்பிதமா நாமரூப
  மிரண்டெனவே பரிச்சின்ன மாகிநிற்கு
மதித்தாயும் விவேகத்தாற் கற்பிதத்தை
  மன்னுமதிட் டானமென வுணர்ந்தெப்போது
நிதித்யாசஞ் செய்துமனோ விகற்பந்தீர்ந்து
  நிரதிசய வாநந்த மநுபவிப்பாய். 325

சிதாகாய மானபரப் பிரமத்தின்கட்
செகசீவ பரங்களெலாம் பொய்யாய்த்தோன்று
நிதாகவிதை விவேகத்தா னேதிசெய்து
நிருமலமாய் நின்றபரப் பிரமந்தானே
சதாவுமக மகமெனவே நிதித்யாசித்து
சலமனதின் விகற்பமெலாந் தவிர்த்தெப்போது
மதாகியிருக் கின்றநிலை யடைந்தவற்று
லகண்டபர மாநந்த மநுபவிப்பாய். 326

துவிதமென்றுந் துவிதமொடத் துவிதமென்றுந்
தூயபர மாத்துவித மதமீதென்று
மிவிதமென்று மவிதமென்று மிலதுண்டென்று
மிவைமுதலா யங்கங்கே வியம்பலுற்ற
விவிதமத மிவையுரைசெய் வாதியாவும்
விசாரிக்கில் விமலபரப் பிரமந்தானுங்
குவிதனுருப் பரப்பிரம மதுநானென்று
கோதறவே பாவித்துக் குறைவுதீர்வாய். 327

நிதாகவெகு விதமாக நிகழ்த்தியென்ன
நிகலமுமே நிமலசிதா காயந்தானுஞ்
சிதாகாய மதுபிரம வடிவமாகுஞ்
சிதாகாய மதுவேநின் வடிவமாகு
மூதாரமுறு புத்தியினு லுரைத்தவண்ண
முணர்வதெலாஞ் சிதாகாய சொரூபமென்றுஞ்
சதாவுமதே யகமென்று நிதித்யாசித்துச்
சற்றேனுஞ் சலியாது சாந்தனுவாய். 328

நிகிலவதிட் டானபர சித்துத்தானே
நிருமலமாய் நிறைவுற்ற வாகாயம்போ
லகிலபரி பூரணமா யமலமாகி
யத்யந்த சூட்சுமமா யசங்கமாகுந்
தகமைசெறிந் திருக்கின்ற தன்மையாலே
தயங்குசிதா காயமெனச் சாற்றலாகு
மகிமைமிகுஞ் சிதாகாய மதுநானென்றே
மறவாமற் பாவித்து மயக்கந்தீர்வாய். 329

சின்மாத்ர மானபரப் பிரமந்தானே
செகசீவ பரங்களெனத் தெரிவதாலே
யென்மாத்ர மாகினுமிச் சகசீவாதி
யிதரமல விவையாவுஞ் சின்மாத்ரந்தான்
பொன்மாத்ர வடிவான கடகமாதி
பொன்னையலாற் சற்றுமய லாவதுண்டோ
மண்மாத்ர மானகட சரவமாதி
மண்ணையலான் மற்றணுவு மனியமாமோ. 330

அகண்டபரி பூரணமாம் பிரமந்தானே
யறிவற்றோர்க் குலகெனவே தோற்றினாலும்
புகன்றபல விதமான வுலகந்தானே
பூரணமா மறிஞருக்குப் பரமாய்த்தோற்றுந்
திகழ்ந்தெதிரே யிருக்கின்ற விரச்சுதானே
தெரிவற்றோர்க் கரவெனவே தோற்றினாலு
நிகழ்ந்தரவே தெரிவுற்றோர்க் கிரச்சுவாக
நிகழ்கின்ற நீதியினை கண்டோமன்றே. 331

படருற்ற நாலுனே படம்போலாகப்
பரவியதிற் குறுக்குநெடுக் காவதேபோற்
தொடர்புற்ற பரந்தானே சகம்போலாகத்
தோன்றியதிற் குறுக்குநெடுக் காகநிற்கு
மடருற்ற விவேகத்தா லுறைந்தவண்ண
மாய்ந்தெவையு மகண்டபரப் பிரமமென்றுந்
தடமுற்ற பரப்பிரம மதுநானென்றுந்
தடையறவே பாவித்துத் தளர்வுதீர்வாய். 332

நிற்சலமா முணர்வுற்று நிறைந்துநிற்கு
நிலையதுவே நிகரற்ற மோட்சமாகுந்
துச்சமிலா வந்தநிலை தொடர்ந்தோர்மீண்டுந்
துன்பமுறார் சுகண்மருவார் சுகமேசார்வ
ரெச்செயலுஞ் செய்துமுடிந் தவரேயாவ
ரெப்போது மேகபர வடிவாய்நிற்ப
ருச்சபர வடிவான வன்னோருக்கிவ்
வுனபவ விவகார மென்றுமில்லை. 333

சங்கற்ப காரியமாஞ் சகத்தின்றோற்றஞ்
சற்றேனுஞ் சார்ந்திடுமே னுடனேயித்தைப்
பங்கற்ற பரப்பிரம மெல்லாமென்றும்
பரமதுவே நானென்னும் பாவித்துத்தீர்
மங்குற்ற மனதென்னு மகத்தாம்வியாதி
மாறாது தொடர்ந்திடுமே னுடனேயித்தை
யங்குற்ற வகண்டபரத் தியானமென்னு
மதிசயமா மவுடதமுண் டதஞ்செய்மைந்தா. 334

மாயையினற் கற்பிதமாம் பேதமேது
மனதினிடைத் தோன்றியிடி னுடனேயத்தை
தூயபரப் பிரமத்தின் றியானத்தாலே
துகளறவே துடைத்துநிச சொரூபமாவா
யாயதன தவித்தையினற் றேகமாதி
யகமெனவே தோன்றியிடி னுடனேயத்தை
நேயபர சின்மயமா மான்மத்தியான
நிட்டையின னீக்கிநிச சொரூபமாவாய். 335

கொடியவகங் காரமெனுஞ் சத்துருத்தான்
குறைவுதரக் கூடியிடி னுடனேயத்தைச்
சடிதியகம் பிரமமெனுந் தியானவாளாற்
சங்காரஞ் செய்துநிச சுபாவமாவாய்
கடியமனக் கிரந்திதொடர்ந் திடுமேயாகிற்
கலங்காது தையிரியமா யுடனேயித்தை
நெடியபர பாவனையாஞ் சக்கரத்தா
னிமிடத்தி லறுத்துநிச நிலையினிற்பாய். 336

தேகமுத ஞனென்னு மத்யாசந்தான்
றீராது தொடர்ந்திடுமே னுடனேயித்தை
யேகபரி பூரணமாம் பரநானென்னு
மிவ்விதமா முறுதியின லிறக்கச்செய்வா
யாகுமனன் மாவென்னும் பிசாசந்தோன்றி
லமலான்மத் தியானமெனு மந்திரத்தால்
வேகமுடன் பிசாசமதை யணுகாதோட்டி
விமலான்ம வடிவாக விளங்கிநிற்பாய். 337

பலவிதமாஞ் சந்தேக மெனும்பிசாசு
 பயமுறவே தோன்றினுநீ பயப் படாம
லலேவில்பர பாவனையா மந்திரத்தா
 லேயமெனும் பிசாசதனை யதஞ்செய்வாயா
னிலேமருவாத் துவிதமெனும் பிசாசுமீண்டு
 நிகழினுமே நீயணுவும் வெருளாவண்ணம்
விலேயிலா வத்துவிதத் தியானமாகும்
 விபூதியினல் வென்றதனை விபுவாய்நிற்பாய். 338

சருவமெனக் காண்பதெலாம் விசாரிக்குங்காற்
 சத்தியஞா னநந்தப் பிரமமல்லா
லொருசிறிதும் வேறில்லே யுளதெப்போது
 மோங்குசிதா காயபரப் பிரமமொன்றே
யிருமையிலாப் பிரமமதே நின்சொரூப
 மிதிலிறையு மையமிலே யாதலாலே
சருவமுமே பிரமமென்று மதுநானென்றுஞ்
 சங்கையறப் பாவித்துச் சாந்தனுவாய். 339

நிரந்தரமாய்ப் பாவனையே செய்யாவிட்டா
 னிலேயற்ற மனத்தினுடை விகற்பந்திரா
திரிந்தலேயு மனநினுடை விகற்பந்தானே
 தீராத பவமெனவே தோன்றுதன்றே
பரிந்துநிதம் பாவித்து மனேவிகற்பம்
 பற்றறவே தீராதோர்க் கெவ்விதத்தாற்
பொருந்தியதன் சொரூபநிலே புரையொன்றின்றிப்
 பூரணமாய்ப் புந்தியினிற் பொருந்துஞ்சொல்லாய். 340

தன்சொரூப நிலேமருவா தலேமோருக்குத்
 தளர்வுதரும் பவபந்தந் தவிர்வதெங்ஙு
னென்செயினுஞ் சொரூபநிலே யிசையாதோருக்
 கினமுறு பவபந்த மிறவாதென்றுஞ்
சஞ்சலமில் பாவனையே செய்வோருக்குச்
 சலமனதின் விகற்பமெலாந் தவிர்வதாலே
யஞ்சனமா மாவரண விட்சேபங்க
 ளனைத்துமிலாச் சொரூபநிலே யணுகுமன்றே. 341

ஆதலினு லநவரத மப்யாசிக்கு
மகண்டபர பாவனையான் மனேவிகற்ப
பேதமெலா மடைவாகப் பெயர்த்தெப்போதும்
பிரிவற்ற சொரூபநிலை பொருந்தவேண்டு
மோதியவிப் பாவனையும் விசாரமற்றோர்க்
கொருகாலு முள்ளத்தி லுதிக்கமாட்டா
பாதகமா மவிசாரப் பகையாலன்றே
பவக்கடலில் வீழ்ந்தெவரும் பதைக்கின்றூரால். 342

அறிவற்ற வவிசார மஞ்ஞானத்துக்
காலயமா யநந்தவித வரந்தைநல்குங்
கறையற்ற ஞானத்தைக் கண்ணிற்காட்டா
கடக்கவொணுக் கற்பனையே காட்டுவிக்கு
நிறைவுற்ற சொரூபத்தி னிலைக்கவொட்டா
நிகிலமகா பீதிக்கு நிகரில்வித்தாஞ்
செறிவுற்ற சங்கற்ப விகற்பமாதி
சித்தவிகா ரங்களெலாங் கணத்திற்சேர்க்கும். 343

பலவிதமாய்ப் பகர்ந்தென்ன வவிசாரந்தான்
பவக்கடலில் யாவரையு மூழ்குவிக்கும்
புலமருவா வவிசார நிகராயெங்கும்
பொருந்தியிடும் பகையில்லை யாதலாலே
நிலைமருவு மகண்டபர விசாரங்கொண்டே
நிகழ்த்தியவிவ் வவிசார பகையைவென்று
சலனமிலா பாவனையா லகண்டபோதஞ்
சார்ந்தவனுய்ச் சன்மாத்ர சொரூபமாவாய். 344

அகண்டபர விசாரந்தா னேதாமென்னி
லைமாரிவ் வுலகாரிங் குள்ளதேது
புகன்றபர மார்த்தமெதா மென்றிவ்வண்ணம்
பூரணமாஞ் சற்குருவைக் குறித்துசாவி
யகம்பிரமஞ் சகம்பிரம மெங்குமுள்ள
தகண்டபரப் பிரமமதே யுண்மையென்று
தரும்பிரம நிர்ணயமே வேதாந்தத்தாற்
றவிராது செய்வதுதான் விசாரமாமே. 345

சற்குருவின் சன்னிதியி லோர்ந்தவண்ணஞ்
சாதுக்கள் சகவாசஞ் செய்தங்கங்கே
நிர்குணமாம் பரப்பிரம சொரூபந்தானே
நிகிலமுமா மதுவேநா மதுவேயுண்மை
யக்கரமாம் பிரமமதே வேதாந்தங்க
ளனைத்துக்கும் பொருளாகு மென்றிவ்வண்ணந்
தக்கபர நிர்ணயமே இடமாய்ச்செய்த
றளர்வையெலாந் தவிர்க்கின்ற விசாரமாமே. 346

பன்னியவா றோர்ந்தபரம் பொருளைத்தானே
பரவியதன் சங்கையெலாந் தீரும்வண்ண
மன்னியர்க ளாருமிலா வேகாந்தத்தி
லசையாம லிருந்துமன தொருமையோடே
மன்னுபரப் பிரமமிதா நாமிதாகு
மயக்கமுறு முலகிதுவா முண்மையீதென்
றுன்னுபல யூகத்தாற் சிந்தைபண்ணி
யுரமாக வுறுதிசெயல் விசாரமாமே. 347

அறிவுற்ற விசாரந்தா னஞ்ஞானத்தை
யதஞ்செய்யு மரங்கையெலா மடைவாய்த்தீர்க்கு
மறுவற்ற ஞானத்தை மதியிற்சேர்க்கு
மயக்கமுறு கற்பனைக ளனைத்துமாய்க்கு
நிறைவுற்ற சொரூபத்தி னிலைக்கவைக்கு
நீக்கவொணுப் பவபீதி யனைத்துநீக்குஞ்
செறிவுற்ற வாபத்தைச் சம்பத்தாக்குஞ்
சித்தவிகா ரங்களெலாஞ் சிதைக்குமன்றே. 348

சோதித்த பரப்பிரம மெல்லாமென்றுஞ்
சுத்தமதாம் பரப்பிரம மதுநாமென்றுஞ்
சாதித்த விசாரமிகுஞ் சாதுக்கட்கே
சாற்றுபர பாவனைதான் சார்வதல்லாற்
றீதுற்ற தேகாதி நாமேயென்றுந்
திரிசியமாஞ் சகமுதலீ துண்மையென்றுங்
கோதுற்ற வவிசார மேலிட்டோர்க்குக்
குறைவற்ற பாவனையெவ் விதமாய்க்கூடும். 349

ஆதலினால் விசாரித்த தீரருக்கே
யலைமனது பாவனையில் வசமாய்நிற்குந்
தீதணுகாப் பாவனையான் மனோவிகற்பந்
தினத்துக்குத் தினமடைவாய்த் தீருந்தீர்ந்த
போதுபரப் பிரமத்தின் சாட்சாத்காரம்
பூரணமாய்ப் பொருந்தியிடும் பின்னவற்றாற்
கோதுமிகும் பவபந்த மனைத்துநீங்கிக்
குறைவற்ற மோட்சசுகங் கூடுமென்றே. 350

கந்தமுதற் பலவிதமாம் புலன்களென்றுங்
ககனமுதற் பஞ்சமகா பூதமென்றுந்
தொந்தமுறுங் காரியகா ரணங்களென்றுந்
தொடர்புற்ற போகமென்று மோட்சமென்று
மிந்தவிதஞ் சித்தத்தின் விகற்பமாக
விலங்கியவிவ் வநந்தவித பேதமெல்லாம்
பந்தமுறாப் பரமேயா மதுநானென்றே
பாவித்துப் பாவித்துப் பரமேயாவாய். 351

சித்தமலாற் பிரபஞ்ச மென்றுமில்லை
சித்தந்தான் பிரபஞ்ச மெனவேதோன்றுஞ்
சித்தமலாற் சமுசார மென்றுமில்லை
சித்தந்தான் சமுசார மெனவேதோன்றுஞ்
சித்தமதைச் சோதிக்கிற் சித்தேயாகுஞ்
சித்தான சித்தமதே சிவமாய்நிற்குஞ்
சித்தமிலச் சின்மயமாஞ் சிவநானென்றே
சிந்தித்துச் சிந்தித்துச் சிவமேயாவாய். 352

மனதையலாற் சகமுதலோ ரணுவுமில்லை
மனததுவே சகமுதலாய்த் தோன்றுநிற்குஞ்
சொனமனது சங்கற்ப வடிவேயாகுஞ்
சோதிக்கிற் சங்கற்பஞ் சித்தாய்த்தீரு
மனதினுடை சங்கற்பஞ் சித்தாய்த்தீரின்
மனததுதான் சின்மயமாஞ் சிவமேயாகுஞ்
செனனமிலச் சின்மயமாஞ் சிவநானென்றே
சிந்தித்துச் சிந்தித்துச் சிவமேயாவாய். 353

அகமெனுமிப் பதத்தினுடை யிலட்சியார்த்த
மாகுநம தருவான வான்மாத்தானே
புகலனுறும் பிரமபத விலட்சியார்த்தப்
பொருளான பரப்பிரம சொரூபமாகும்
விகலமுறு வான்மபர வைக்கியந்தானே
விளம்புமகம் பிரமாஸ்மி யாதியான
வகிலமகா வாக்குந்தாற் பரியத்தோடே
யறிவிக்கு மகண்டார்த்த மாகுமைந்தா. 354

ஆதலினு லகிதிடமா வையமின்றி
யகம்பிரமம் பிரமமக மென்றிவ்வண்ணம்
பேதமுறு வுறுதியினைப் பெறுதரு(ன)னே
பின்னமிலா வகண்டான்ம ஞானமாகு
மேதமிலிவ் வகண்டான்ம ஞானத்துக்கிங்
கிணையான ஞானந்தா னெங்குமில்லை
மாதவவிவ் வகண்டான்ம ஞானம்பெற்றோர்
மறித்தென்றும் பிறவியுறார் மகேசனாணை. 355

அகம்பிரம மென்றுரமா மான்மஞான
மகங்களெலாந் தவிர்ந்தோர்க்கே யெளிதாயெய்து
மகம்பிரம மென்றுரமா மான்மஞான
மறங்களெலாங் குவிந்தோர்க்கே யினிதாய்த்தோன்று
மகம்பிரம மென்றுரமா மான்மஞான
மதிசயமாம் பொருளையெலா மதிசயிக்கு
மகம்பிரம மென்றுரமா மான்மஞான
மகண்டசிவ னுதியநு பூதியாமே. 356

அகம்பிரம மென்றுரமாய் விசுவாசத்தோ
டறிவுற்ற வகண்டான்ம ஞானத்துக்குச்
சகந்தனிலே சனித்ததினு மொப்பொன்றில்லை
சனித்தினிமேல் வருவதினு மொப்பொன்றில்லை
யகம்பிரம மென்றுரமாய் நிச்சயித்தோர்க்
கவ்வுரமா நிச்சயமே யநந்தகோடி
மகந்தவநற் றீர்த்தமொடு தானஞ்சேவை
மற்றெவையு மிதிலணுவு மயக்கமில்லை. 357

அகம்பிரம நிச்சயமே தேவபூசை
யகம்பிரம நிச்சயமே தெய்வத்தியான
மகம்பிரம நிச்சயமே செபதபங்க
ளகம்பிரம நிச்சயமே யறங்கள்யாவு
மகம்பிரம நிச்சயமே யகண்டத்தியான
மகம்பிரம நிச்சயமே யகண்டயோக
மகம்பிரம நிச்சயமே யகண்டஞான
மகம்பிரம நிச்சயமே யகண்டமோட்சம். 358

அலைமனதின் சலனத்தாற் சாட்சாத்தாக
வகண்டான்ம வநுபூதி யணுகாதாகின்
சலமனதின் விகற்பமெலாந் தீருமட்டுஞ்
சருவான்ம பாவனையே செய்வதற்கு
முலைமனது பாவனையே செய்வதற்கு
முதவாமற் பலவிதமாய்ச் சலிக்குமாகிற்
சலனமுறு வகண்டான்ம விடயமான
சத்தத்தை வசனத்தா லுரைக்கலாமே. 359

வசனத்தாற் சத்தத்தை யுரைப்பதற்கோர்
வருத்தமிலை யாதலினா லசத்தரெல்லா
நிசவடிவின் பாவனையின் மனதுநின்று
நிச்சலமா யநுபூதி நிலைக்குமட்டும்
பிசகறவே சருவமுமே பிரமமென்றும்
பிரமமதே நானென்று நானதென்று
மசலமதா மகண்டான்ம சொரூபந்தன்னை
யறிவிக்குஞ் சத்தத்தை யுரைக்கவேண்டும். 360

சருவமுமே பிரமமென்று மதுநானென்றுஞ்
சந்ததநா னதுவென்னு நிச்சயத்தோ
டேரமருவி யிருப்பவருக் கோடியாடு
முத்தமமாந் தீர்த்தமிலை தானமில்லை
தருமமிலை கருமமிலை பத்தியில்லை
தனக்கயலாய்ச் செயுஞ்செயலோ ரணுவுமில்லை
பிரமமெலா மென்றுரமா மதித்திருக்கும்
பெருமையினும் பின்னெவையு மதிகமுண்டோ. 361

ஆதலினாற் கனவிலுமே பிரமத்துக்கிங்
கன்னியமா யணுவேனு முள்ளதென்னும்
பேதமுறும் புந்தியினைத் தூரத்தள்ளிப்
பிரமமெலா மதுவேநா னனதென்றே
சாதகமா முறுதியினைத் திடப்படுத்திச்
சந்ததமும் பாவித்துச் சலனமின்றி
யாதிமுடி வொன்றுமிலா வகண்டாகார
வநுபூதி யடைந்தந்த மயமேயாவாய். 362

அகிலபரி பூரணமா மென்னிடத்தி
லயலெனவே கற்பிதமா முபாதியெல்லாந்
திகழ்வுறவே விசாரிக்கி லெனக்குவேறாய்த்
திலமளவு மிலையெனவே நேதிபண்ணி
யிகழ்வறவே மிஞ்சியநான் பிரமமென்றே
யிருமையிலா வகண்டான்ம போதம்பெற்றோர்
சுககனமாம் பரப்பிரம வடிவேயாவர்
சொல்லியது சத்தியமே சங்கையில்லை. 363

இந்தவிதம் யாவருமே யுய்யும்வண்ண
மிணையற்ற வகண்டான்ம ஞானந்தன்னி
னந்தமிலா மகிமைதனை யகண்டவீச
னருளியவா நிதாகனுக் கருளிச்செய்தோந்
தொந்தமெலாந் தொலைப்பதுவா மிவ்வர்த்தத்தைத்
துகளற்ற மனதுடனே தொடர்ந்துகேட்போர்
பந்தமற வகண்டான்ம போதம்பெற்றுப்
பங்கமிலாப் பரப்பிரம வடிவாய்நிற்பர். 364

துரகமதன் கோடெனவே வெறும்பொய்யான
துறக்கமுதற் றுச்சசுகத் திச்சைமேவிக்
கருமமுதற் செய்வதனால் வீணாய்க்காலங்
கழியாமன் மறைமுடியின் கருத்தையோர்ந்து
சிரவணமே முதலியதா லகண்டமான
சிவவடிவை யுணர்பவரே முத்தரென்று
நிருமலமாய் ரிபுமுனிவ னிதாகனுக்கு
நிமலான்ம ஞானத்தை நிகழ்த்தினால். 365

அஞ்ஞான திசையிலொரு பிரமந்தானே
யநந்தவித சீவேச சகத்தாய்த்தோன்றும்
விஞ்ஞான திசைமருவிற் சகசீவாதி
விரிவதுவே விமலபர வடிவாய்த்தோன்று
மஞ்ஞான திசையிலொரு ரச்சுத்தானே
யரவுமுதற் பலவடிவாய்த் தோன்றினும்
விஞ்ஞான திசைமருவி லவையனைத்தும்
விரவுமொரு ரச்சுவலால் வேறேயுண்டோ. 366

ஆதலினல் விசாரமிலா வெறுமூடற்கிங்
ககண்டபரி பூரணமாம் பிரமந்தானே
பூதமுதற் பலபொருளாய்த் தோற்றினும்
பூரணமாய் விசாரித்த தீரருக்குப்
பேதமெனத் தோற்றியவித் தோற்றமெல்லாம்
பிரிவற்ற வகண்டபரப் பிரமந்தானு
மாதவனே யிதிலிறையு மையமில்லை
மகேசனெமக் குரைத்ததிலு மையமுண்டோ. 367

எப்போது மொருபொருளுஞ் சனிக்கவில்லை
யெப்போது மொருபொருளு மிருக்கவில்லை
யெப்போது மொருபொருளு மிறக்கவில்லை
யெப்போது மொருபொருளு மிலவேயில்லை
யெப்போது மெள்ளளவு மிருமையின்றி
யேகபரி பூரணமாம் பிரமந்தானே
யெப்போது மெவ்விடத்து மிருக்கும்வத்து
வியம்பியது சத்தியமே யீசனுணை. 368

பற்பலவாய்ப் பகர்ந்தென்ன சுருங்கச்சொல்லும்
பரமார்த்த வசனத்தை பரிந்துகேளாய்
கற்பிதமாய்த் தோற்றியிடுந் தோற்றமெல்லாங்
களங்கமுறு வதிட்டானப் பிரமமன்றிச்
சொற்பமுமே யயலாக வில்லையென்றே
சுருதியுட னாகத்தா னேதிபண்ணி
நிர்ப்பயமாய் நிலைத்தபரப் பிரமந்தானே
நிதமுமக மகமதுவென் றறியவேண்டும். 369

ஆதலினுன் முமூட்சுவெலா மெளிதேயாக
வகண்டபர நிச்சயமே யடைந்தவற்று
லோதவொணு வநந்தவித பயதுக்கங்கட்
குற்பத்தித் தானமதாம் பேதபுத்தி
யீதினையெவ் விதத்திலுமே நீக்கவேண்டு
மியம்பியவிப் பேதமதி நீக்கந்தானே
பீதியிலா வபயபத நிட்டையாகும்
பெந்தமறப் பெறுகின்ற வீடுமாமே. 370

அகம்பிரம நிச்சயமே யகத்திலுள்ள
வநேகமகா பாவமெலா மடைவாய்த்தீர்க்கு
மகம்பிரம நிச்சயமே யகத்திலுள்ள
வலகில்விகற் பங்களையு மடைவாய்ப்போக்கு
மகம்பிரம நிச்சயமே யகத்திலுள்ள
வநந்தவித வாதனையு மடைவாய்நீக்கு
மகம்பிரம நிச்சயமே யகத்திலுள்ள
வத்யாச மனைத்தையுமே யடைவாய்த்தீர்க்கும். 371

அகம்பிரம நிச்சயமே யகத்திலுள்ள
வஞ்ஞான சந்தேக மனைத்தும்போக்கு
மகம்பிரம நிச்சயமே யகத்திலுள்ள
வநேகவித விபரீத தோடநீக்கு
மகம்பிரம நிச்சயமே யான்மாவின்க
ணசஞ்சலமா யமர்கின்ற சமாதிநல்கு
மகம்பிரம நிச்சயமே பதிபந்தங்க
ளனுவுமிலா வபரோட்ச ஞானநல்கும். 372

ஆதலினு லகம்பிரம நிச்சயத்துக்
கன்னியமா முபாயமெலாந் தூரத்தள்ளிப்
பேதமனோ விகற்பமெலாந் தீருமட்டும்
பிரியமுட னநவரத மிடைவிடாமற்
சாதகமா மகம்பிரம நிச்சயத்தைச்
சலியாது முமூட்சுவெலாம் பழகவேண்டும்
மீதையலான் மோட்சநிலை பெறுவதற்கிங்
கெளிதான வுபாயந்தா னெவையுமில்லை. 373

அறிவுற்ற வநந்தவித நாமரூப
மனைத்துக்கு மதிட்டான வடிவேயாக
நிறைவுற்ற வகண்டபர சிவரூபத்தை
நிகழ்வுறவே விசாரித்துத் தியானிப்போரே
கறையற்ற வகண்டான்ம நிட்டைபெற்றுக்
கடக்கவொணுப் பவக்கடலைக் கடப்பரன்றி
மறுவுற்ற மற்றவொரு செய்கையானு
மற்றவரு மிக்கடலைக் கடவாரென்றும். 374

ஆதலினு லான்மாவுக் கபின்னமான
வகண்டேக ரசவடிவாம் பரசிவத்தைப்
பேதமற நன்ருக விசாரஞ்செய்து
பின்னமிலாப் பரமசிவ நாமேயென்று
சாதகமாம் பாவனையைச் செய்தேயத்தாற்
சலனமிலா வகண்டான்ம நிட்டைபெற்றே
யேதமிகு பவக்கடலை முமூட்சுவெல்லா
மெமதீசன் றிருவருளாற் கடக்கவேண்டும். 375

எல்லாமு மேகபரப் பிரமமென்று
மிருமையிலா வப்பிரம நானேயென்று
நில்லாத மனதுநிலை நிற்கும்வண்ண
நிமலபர பாவனையே மீண்டுஞ்சொல்வாங்
கல்லாத கல்வியெலாங் கற்றபோதுங்
கலக்கமற மனதுநிலை நில்லாதாகிற்
பொல்லாத பவதுக்க மொருகாலத்தும்
போகாது புகன்றதிலோ ரையமில்லை. 376

சுத்தசிதா காயமதா நிட்ப்ரபஞ்ச
சொரூபத்திற் பிரபஞ்ச மென்றுமில்லை
யித்துவிதப் பிரபஞ்சம் பரமார்த்தத்தி
லிறையளவு மிலதேனும் விவகாரத்திற்
சித்தினுடை விவர்த்தமதாஞ் சித்தந்தானே
செறிகின்ற பிரபஞ்ச மெனவேதோன்றும்
புத்திரவச் சித்தத்தைப் புகன்றவண்ணம்
பூரணமாம் பாவனையா ஞசஞ்செய்வாய். 377

அரவுமுதற் பலவிதமாய்த் தோற்றினு
மதிட்டான விரச்சுவினை யாய்ந்தறிந்தான்
மருள்வடிவா மரவுமுத லனைத்துமந்த
மாசற்ற விரச்சுவடி வாவதேபோல்
விரவுசக முதலியவாய்த் தோற்றினும்
விமலவதிட் டானபரப் பிரமந்தன்னை
யருமையுட னன்றாக வாய்ந்தறிந்தா
லவையாவு மகண்டபரப் பிரமமாமே. 378

அநவரத மடைவாக வாய்ந்தபோது
மனுதிபவ வாதனையா லகண்டபோத
மனதினிடைப் பேதமற மருவாதாகின்
மயக்கமுறும் பேதமதி மாயுமட்டு
மனிசமெலாம் பிரமமதா மதுவேநானு
மகமந்தப் பிரமமெனு மகண்டாகாரந்
தனையறியும் பாவனையைச் செய்தேயத்தாற்
றடையான பேதமதி தவிர்க்கவேண்டும். 379

பேதமதி பொருந்தியிடுஞ் சித்தந்தானே
பிறவிமுதற் றுயர்செய்யும் பந்தநல்கு
மேதமுறும் பேதமதி யிறந்தசித்த
மின்னலெலாந் தீர்த்துடனே மோட்சநல்கு
மாதலினு லகம்பிரம மகமெல்லாமென்
றகம்பிரம பாவனையைச் செய்தேயத்தால்
வாதகமாம் பேதமதி யனைத்துநீக்கி
வழுவற்ற சித்தத்தான் முத்திசார்வாய். 380

அகம்பிரமம் பிரமமக மகமெல்லாமென்
றகம்பிரம பாவனையே யனிசஞ்செய்யிற்
செகப்பரனு னீதெனவே வேறுவேறாய்ச்
செறிகின்ற பேதமதி யனைத்துந்தீரும்
புகன்றவிதம் பேதமதி யனைத்துந்தீரிற்
பூரணமாம் பரப்பிரம போதந்தோன்றி
யகண்டபர வடிவாக வமர்வதான
வத்துவித மோட்சநிலை யடையுலாமே. 381

ஆதலினு லநவரத மிடைவிடாம
லகம்பிரம பாவனையைச் செய்தேயத்தாற்
பேதமதி யனைத்தையுமே யிழந்தெப்போதும்
பிரிவற்ற பரப்பிரம சொரூபமாவா
யோதியதி லணுவேனு மையமில்லை
யுத்தமமாஞ் சிவனுணை யுண்மைசொன்னே
மீதகில சாத்திரமு மிசைக்குமர்த்த
மெமதீச னியம்பியது மிவ்வர்த்தந்தான். 382

ஆன்மாவுக் கயலான வனுன்மாவென்று
மணுவுமிலை யணுவுமிலை யணுவுமில்லை
யான்மாவுக் கயலாகப் பிரமமில்லை
யப்பிரமந் தனக்கயலா யான்மாவில்லை
யான்மாவே யகண்டபரப் பிரமமாகு
மகண்டபரப் பிரமமதே யான்மாவாகு
மான்மாவா மகம்பிரம மென்னுஞான
மடைந்ததனு லகண்டபரப் பிரமமாவாய். 383

சகலபரி பூரணமாம் பிரமமல்லாற்
சகமுதலோ ரணுவேனு மிலையென்று
மகிலமுமே யகண்டபரப் பிரமமென்று
மதுதானே யகமென்று மகமதென்று
நிகழ்வுறவே நித்தியமாய்ப் பழகப்பட்ட
நிமலபர பாவனையான் மனதைவென்று
மிகவுரமா மகண்டபர போதம்பெற்று
மெய்யுணர்வா நந்தபரப் பிரமமாவாய். 384

சருவமுமே பிரமமெனப் போதித்தாலுஞ்
சந்ததமுஞ் சுருதிமுடிப் படிப்புற்றாலும்
பரமசிவன் கருணையிலா வெறுமூடர்க்குப்
பலகால வாதனையான் மீண்டுமீண்டு
மிருமையென விதயத்திற் றெரிவதன்றி
யாவையுமே பிரமமெனத் தெரிவதில்லை
யரியவனே யாதலினுன் முமூட்சுவெல்லா
மகண்டபர சிவகருணை யடையவேண்டும். 385

அமலமதாம் பூதியுட னுருத்திராக்க
வாரமுதற் சிவசின்ன மணிதலானு
நிமலமகா லிங்கத்தி னியமமோடு
நிறைவேற்று நித்தசிவார்ச் சனையினானும்
விமலமதாய் வேறறவே பழகப்பட்ட
வியாபகமாம் பரமசிவத் தியானத்தானுஞ்
சமமதுவாம் பரமசிவ கருணையுண்டாய்ச்
சருவமுமே பிரமமெனத் தெரிவதாமே. 386

அகம்பிரம மென்றுரமா நிச்சயித்தே
யாக்கைமுத லகமென்னு நினைவைத்தள்ளு
சகம்பிரம மென்றுரமா நிச்சயித்தே
சகத்தெல்லா முண்மையெனு நினைவைத்தள்ளு
வகம்பிரமஞ் சகம்பிரம மென்றிவ்வண்ண
மநவரதந் தொடர்பாக நிச்சயிக்கிற்
செகம்பரநா னென்னுமய றயில்வோன்கையிற்
செறிகின்ற மலரெனவே சுயமாய்நீங்கும். 387

அகிலவதிட் டானபரப் பிரமத்தின்க
ணயலெனவே கற்பிதமாய்க் காண்பதெல்லாந்
திகழுமதிட் டானபரப் பிரமமன்றித்
தினையளவு மன்னியமா யில்லையென்றே
தகைமைமிகும் விசாரணையா னேதிபண்ணித்
தற்பிரம நிச்சயமிங் கடைந்தேயத்தா
விகழுமனே விகற்பங்க ளனைத்துநீக்கி
யெப்போதும் பரப்பிரம மாத்ரமாவாய். 388

விட்டவிலக் கணையானு மைக்கியந்தோன்று
விடாதவிலக் கணையானு மைக்கியந்தோன்று
திட்டமதா முபயவிலக் கணையொன்றாலே
யிலங்குபர சீவைக்ய மிலங்குமென்றே
திட்டமுறத் தோற்றியவித் தோற்றமெல்லாந்
திகழ்வுருவாம் பரப்பிரம சொரூபமென்றே
சிட்டமுறு மகண்டபர நிச்சயத்தாற்
சின்மயமாம் பரப்பிரம மாத்ரமாவாய். 389

சருவமுமே பரப்பிரம சொரூபமென்றே
சகலமறை முடிகளுமே சாற்றலானும்
பிரிவறவே பரப்பிரம ஞானம்பெற்ற
பெரியோரு மிவ்விதமே பேசலானு
மிருளறவே பரசிவனு மெமக்குமுன்ன
மிவ்விதமே யருள்செய்த வியல்பினானு
முறைதருவிவ் வகண்டபர நிச்சயத்தி
லோரணுவு மையமில்லை யுறுதியீதே. 390

அதிட்டான மானபரப் பிரமத்தின்க
ணாரோப வடிவெனவே காண்பதெல்லாம்
மதித்தாயின் மன்னுமதிட் டானமின்றி
மற்றணுவு மாரோப வடிவேயில்லை
நிதித்யாச நிரந்தரமாய்ச் செய்வோருக்கே
நிகழ்த்தியவிவ் வநுபூதி நிகழுமன்றிக்
குதித்தாடு மனதின்வச மானோருக்குக்
கூறியவிவ் வநுபூதி கூடாதென்றும். 391

ஓதியவா றகண்டபர போதந்தன்னை
யுற்றதனாற் பரப்பிரம மானோருக்கே
மாதவவிவ் வனுதிபவ மாய்வதன்றி
மற்றவருக் கிவையென்று மாய்வதில்லை
யாதலினா லறைந்தவண மகண்டபோத
மடைந்ததனா லகண்டபரப் பிரமமாகிப்
பீதிதரும் பவதுக்க மனைத்துநீக்கிப்
பிரிவற்ற மோட்சசுகம் பெற்றுவாழ்வாய். 392

நிருமலமாய் நிகழுமகா லிங்கத்தின்க
ணிறைவேற்று நித்தசிவார்ச் சனையேயாதி
பரமசிவ பத்திசெயு மன்பருக்கே
பகுப்பற்ற பரப்பிரம ஞானந்தோன்றுந்
திரமுறவே பரப்பிரம ஞானம்பெற்ற
தீரர்களே பவபாச முத்தராவ
ரரியவனே யணுவுமிதி லையமில்லை
யகண்டபர சிவனையே யறைந்ததுண்மை. 393

சருவமுமே யான்மாவுக் கபின்னமான
சன்மாத்ர பரப்பிரம சொரூபமேயாம்
பிரமமதே யான்மாவா மான்மாத்தானே
பேதமிலாப் பரப்பிரம சொரூபமாகு
நிருமலமாய் நிறைவுற்ற வான்மாவுக்கும்
நிகிலபரி பூரணமாம் பிரமத்துக்கு
மொருசிறிதும் பேதமிலை யிரண்டுமொன்றே
யுணர்வுருவாஞ் சிவனுணை யுரைத்ததுண்மை. 394

நாமமுரு யாவையுமே பிரமமென்று
நாமந்தப் பரப்பிரமந் தாமேயென்றுஞ்
சேமமுறச் செப்பியவிவ் வருத்தந்தன்னிற்
சிறிதேனுஞ் சங்கையிலை சத்தியந்தான்
ருமமெலாங் கடந்தெங்கு நிறைந்துநின்ற
தத்துவமாஞ் சிவனுணை யுண்மைசொன்னே
மாமலவென் றணுவுமிதிற் சங்கியாம
லறைந்தவண மதிதிடமாய் நிச்சயிப்பாய். 395

நின்னிடையே நிச்சலமாய் நிலைத்துநிற்கு
நிலைமையிதே நிமலபர மோட்சமாகுந்
தன்னிடையே தானாகத் தனித்திடாமற்
றரங்கமெனச் சலிப்பதுவே பந்தமாகு
முன்னியிடி லோருருவா முன்னையன்றி
யுலைவுதருங் காரணமோ ரணுவுமில்லை
தன்னியனே யாதலினு னீயெப்போதுந்
தன்னிடையே தானாகத் தனித்துநிற்பாய். 396

தன்னிடையே தானாகத் தனிப்பதற்குத்
தனக்கயல்போற் றோற்றியிடுந் தோற்றமெல்லா
மன்னியமா யொருகாலு மில்லையென்னு
மகிலமுமே யான்மாவா மகமேயென்றும்
பின்னமிலா வகண்டபர நிச்சயத்தைப்
பெறுவதுவே காரணமா மாதலாலே
பன்னியவா றகண்டபர நிச்சயத்தைப்
பற்றியதாற் பகுப்பற்ற பரமேயாவாய். 397

நின்னுருவா மான்மாவுக் கயலேயில்லை
நிகிலமுநின் னான்மாவே நிச்சயந்தான்
பன்னுபல சாத்திரமு மாலோசித்துப்
பகர்கின்றோம் பரமார்த்த வுறுதியீதே
யன்னசிவ னுபயதிருப் பதங்கடொட்டே
யறைகின்றே மையமிலா வுறுதியீதே
சொன்னகுரு வுபயதிருப் பாதந்தொட்டே
சொல்கின்றேஞ் சுருதிமுடி யுறுதியீதே. 398

பலசெனனத் தநுட்டித்த வறங்களெல்லாம்
பக்குவமாய்ப் பாவங்க ளனைத்துநீங்கி
யிலகியதன் சொரூபநிலை யிசையத்தக்க
வினிப்பிறவா முடிவான சென்மத்திற்றான்
சலனமெலா மறநீக்கி யகண்டமாக்குஞ்
சத்தியுள விந்நூலைச் சாரலாகு
மலினமுறா விந்நூலைச் சார்ந்தோருக்கு
மறுபிறவி யென்றுமிலை மகேசனாணை. 399

வேகமுறத் தோற்றியிடு மகம்விருத்தி
வெகிர்முகமாய்த் தோற்றியிடு மிதம்விருத்தி
தேகமுத லகமென்னுந் துவிதவிர்த்தி
திகழ்சாட்சி யகமென்னுஞ் சாட்சிவிர்த்தி
யேகபர மகமென்னு மகண்டவிர்த்தி
யிவ்விதமாம் விருத்திகளே தொன்றாமின்றிச்
சோகமுறாச் சுத்தபர சொரூபமொன்றே
சுயஞ்சோதி வடிவாகச் சொலிக்குதந்தோ. 400

அரியசிவன் கருணையுமவ் வடிவேயான
வாசிரியன் கருணையுமிங் கடைந்தோருக்கே
திரிசியமாஞ் சீவபர சகத்தின்றோற்றந்
தினையளவுந் திகழாம லுடனேநீங்கிப்
பிரிவுபெறா வகண்டபர நிட்டைகூடும்
பேசியது சத்தியமே யென்றாகந்த
னுரியபர மார்த்தத்தைச் சைகீஷவ்யற்
கோதியவா றகிலர்க்கு முரைத்தான்சூதன். 401

இன்னவித மகண்டபரப் பிரமத்தின்க
ணிருமையறத் தான்பெற்ற வநுபவத்தை
யன்னரிபு மாமுனிவன் றனக்குமுன்பா
யத்யந்த வினயமுட னிதாகவோதிப்
பின்னனுவும் விகற்பமிலா வகண்டமாகப்
பிறங்கியதன் வடிவான பிரமத்தின்கட்
டன்னுடைய விருத்தியினை நிலைக்கவைத்துத்
தடையற்ற வாநந்த மநுபவித்தான். 402

பொருவில்சிவ பூசனையே முதலாம்பத்தி
புரிந்ததனுற் சிவகருணை பொருந்தினோர்க்கே
சருவமுமே பிரமமென்று மதுநானென்றுஞ்
சாற்றியவிவ் வகண்டபர ஞானந்தோன்றி
மருவமிக வரிதான முத்திபேறு
மற்றவருக் கிலையெனவே முன்புகந்த
னரியசிவ பத்திமிகுஞ் சைகீஷவ்யற்
கருளியவா றகிலர்க்கு மறைந்தான்சூதன். 403

இருமையெனப் பிரமமலா தெவையுங்காணே
னிருப்பதெலாம் பரப்பிரம வடிவாக்கண்டே
னொருபொருளும் பிரமமலா தயலாக்காணே
னுள்ளதெலாம் பரப்பிரம வடிவாக்கண்டேன்
சருவமெனப் பிறிதாகச் சிறிதுங்காணேன்
சகலமுமே பரப்பிரம வடிவாக்கண்டேன்
குருவரவப் பரப்பிரம நானேயானேன்
குறைவற்ற நினதருளின் மகிமையென்னே. 404

எப்போது மெல்லாமு மேகசித்தா
யிருப்பதனு லத்யந்த மௌனியாகிக்
கற்போல வசைவற்றுக் களங்கமற்றுக்
கற்பிதமாஞ் சங்கற்ப விகற்பமற்றுத்
தற்போத சூனியனுய்த் தானேதானுய்த்
தனித்தூரமாய் நிற்பதுவே யற்நன்றன்றி
யெப்பேத மதியினையு முன்போன்மற்று
மெய்தியிட லெனக்கிதமாய்த் தோற்றவில்லை. 405

குறைவின்றி நிறைவின்றிக் குற்றமின்றிக்
குணங்குறிகண் முதலியவை யெவையுமின்றி
மறைவின்றித் தெரிவின்றி மனதுமின்றி
மனோமயமா மயக்கங்க ளனைத்துமின்றிப்
பிறிதின்றித் தனதின்றிப் பிறிவொன்றின்றிப்
பேதமுறு மெப்பொருளு மென்றுமின்றி
யறிவொன்றே வடிவான பிரமமாக
வமைவுற்ற வென்மகிமை யென்சொல்வேன்யான். 406

கற்பிதமாந் தோற்றமெலாம் பிரமமென்றே
காண்பதலான் மற்றனுவு மயலாக்காணேன்
செப்பியவிவ் வதிதிடமா நிச்சயத்தாற்
சின்மயமாம் பரப்பிரம மாகிநின்றே
னிப்படியென் மனதிலுள நிர்ணயத்தை
யிசைப்புற்றே னிதிலிறையு மையமில்லை
நிர்ப்பயமா வெனைமுழுது மாளுந்தன்மை
நிகரற்ற சற்குருவே நினதுபாரம். 407

தேசிகனற் கருணையினு லுபதேசித்த
திகழுமகா வாக்குகளின் பொருளைக்கேட்டு
மாசறவே மற்றுமதை மனனஞ்செய்து
மயக்கமறச் சந்ததமு நிதித்யாசித்திங்
காசனுகா வகண்டபர சிவமேநாமென்
றறிந்தவரே பவமுத்த ராவரென்றே
யேசனுகா வறுமுகவன் சைகீஷவ்யற்
கியம்பியவா றகிலர்க்கு மிசைத்தான்சூதன். 408

தந்தைமுதற் பந்துவெலா மநந்ததேகந்
தருவதலா லனுதிபவ பந்தந்தீர்க்கார்
சிந்தையினு லாய்ந்திடிலப் பந்துவெல்லாஞ்
சிறுமைதருஞ் சத்துருவே யாகாநிற்ப
ரந்தமிலா வருள்வடிவாங் குருவோவென்று
லகண்டபர ஞானத்தை யருளானல்கித்
தொந்தமதா மனுதிபவ பந்தமெல்லாந்
துப்பறவே நன்றாகத் துடைத்துக்காப்பன். 409

குருபரனே பரமசிவன் பரேசன்றானே
குருபரனு மாகினுமே யொருகாலத்தி
னிருமலமாம் பரமசிவன் முனிவுற்றாலு
நிகரில்தயா நிதியான குரவன்காப்ப
னருள்வடிவே திருவுருவா யெழுந்துநின்ற
வாசரிய னென்றேனு முனிவுற்றானேற்
றிரிவிதமா முலகத்து மம்மானானைத்
தியக்கமெலாந் தீர்த்தெவருங் காப்பதில்லை. 410

ஆதலினாற் குருவின்பா லிந்நூலின்பா
லகிலசகன் னாயகனும் பரேசன்றன்பா
லேதமிலாச் சிரத்தைமிகுந் திருப்போர்தாமே
யிந்நூலைப் பழகுவதற் குரியராவ
ரோதியவா சிரத்தையுறா மூர்க்கரெல்லா
மொருகாலு மிந்நூலிற் கவியொன்றேனுஞ்
சாதகமாய்ச் சாருவதற் குரியராகார்
சத்தியமே யிதிலணுவுஞ் சங்கையில்லை. 411

சீவபர வைக்யமுணர் ஞானஞ்சேரச்
சிரத்தையலான் மற்றெவையு மேதுவாகா
தாவலுடன் பெறுகின்ற சிரத்தையொன்றா
லனைத்துமிலை யகண்டபரப் பிரமமொன்றே
கேவலமா யுளதென்று மதுநாமென்றுங்
கிலேசமிலாப் பரஞானங் கிடைப்பதன்றி
மேவியமற் றொன்றாலு மகண்டஞான
மேவவொணா தென்றுமறை விளம்பிற்றன்றே. 412

பரமசிவன் கருணையினைப் பற்றினோரே
பரவியவிந் நூற்பொருளை யறிவரன்றி
யரியசிவன் கருணையுறா மூர்க்கரென்று
மரிதான விதன்பொருளை யறியமாட்டார்
சருவமுமே யிழந்துபர சிவனைத்தானே
சந்ததமுஞ் சிரத்தையுடன் றியானித்தன்னோன்
கருணையினைப் பெற்றவரே யகண்டஞானங்
கலப்பரெனச் சுருதிமுடி விதித்ததன்றே. 413

ஆதலினாற் சிரத்தையுட னனைத்துந்தள்ளி
யகண்டபர வடிவான சிவத்தைத்தானே
தீதறவே யிந்நூலி லுரைத்தவண்ணந்
தியானித்துச் சிவகருணை பற்றினோரே
யேதமுறு மிந்நூலின் பொருளாகின்ற
விருமையிலா வகண்டபர ஞானஞ்சார்வ
ரோதியவிந் நூற்பொருளா ஞானத்துக்கிங்
கொப்பான ஞானமொரு விடத்துமில்லை. 414

சுத்தமதா யிந்நூலிற் சொல்லப்பட்ட
சூட்சுமமா மகண்டபர சிவஞானந்தான்
பத்தியுடன் பழுதறவே பழகப்பட்ட
பாவனையீ தொன்றாலிங் கெளிதாயெய்துஞ்
சித்தினிடைத் தோற்றியிடுந் தோற்றமெல்லாஞ்
சின்மயமாஞ் சிவமென்று மதுநாமென்று
மத்துவித பாவனையும் வருத்தமல்ல
வாதலினா லிஞ்ஞான மெளிதுதானே. 415

கனந்தவிராப் பரமசிவ பத்தியேபோற்
களங்கமறச் சற்குருவின் பத்திதன்னைத்
தினந்தவிரா தெவன்செய்வ னன்னோனுக்கே
திகழ்த்தியவா றிந்நூலின் ஞானந்தோன்று
மனந்தனிலே மருவியவிந் நூலின்ஞான
மகத்தான துன்பமெலா முடனேதீர்க்கு
மனந்தவிதம் பகர்ந்தென்ன விஞ்ஞானந்தா
னகண்டபர மோட்சநிலை யளிப்பதாமே. 416

நிருமலமா மிந்நூலைக் குருவின்முன்பாய்
நேசமுடன் கேட்கின்ற மாணனந்தக்
குருவரனைத் தனக்குள்ள சத்திகொண்டு
கோதறவே பூசைசெயா திருப்பானாகிற்
புரைமருவு மம்மாண னூறுசன்மம்
புன்மைமிகுஞ் சுனகத்தின் யோனிசார்வன்
சருவவித சாதிக்கு மிகக்கீழான
சண்டாள சன்மமுமோர் கோடிசார்வன். 417

மொழிவுற்ற விந்நூலைக் குருவின்முன்பாய்
　மோதமுடன் கேட்கின்ற மாணுனந்தப்
பழுதற்ற குருவரனைப் பழிப்பாணுகிற்
　பலசென்மம் வேசரியாய் நரகஞ்சார்வ
னழிவற்ற விந்நூலைக் கேட்டபின்ன
　ராசானைப் பரசிவமாய்ப் பாவியாதோ
னிழிவுற்ற பாவத்தா லநேகசன்ம
　மீனமுறுஞ் சூகரமாய் நரகஞ்சார்வன். 418

அரிதான விந்நூலை யருளிச்செய்யு
　மற்புதமா மாசானை மகிழ்ந்திடாமல்
விருதாவாய் மச்சரமே செய்வன்யாவன்
　வெகுகற்ப மவன்மலத்திற் கிருமியாவ
னரிதான விந்நூலை யுபதேசிக்கு
　மாசரிய னகண்டபரப் பிரமந்தானே
விருதாவா யன்னேன்பான் மச்சரிப்போன்
　விசித்திரமாம் பாவத்தை யென்சொல்வேன்யான். 419

அநந்தவித மறைந்தென்ன வாசான்பானு
　மகிலசகன் னுயகனும் பரேசன்பானுந்
தினந்தவிராப் பத்தியுட னிருப்போருக்கே
　திகழ்த்தியவிந் நூன்ஞானந் திடமாய்த்தோன்று
மனந்தனிலே தோன்றியவிஞ் ஞானங்கொண்டே
　மகத்தான மோட்சசுக மருவலாகுங்
கனந்தவிராச் சிரத்தையுட னிதைக்கேட்போருங்
　களங்கமெலாந் தவிர்ந்துபரப் பிரமமாவர். 420

எவையுமுணர் பரசிவனு லியம்பனுற்ற
　விந்நூலை யொருமையுட னிருந்துகேட்போ
ரவனியின்மற் றெந்நூலும் விரும்பவேண்டா
　மநேகவித நூற்களினுற் பெறும்பேறென்ன
புவியினுள பதரையெலாங் குத்தினுலும்
　புசிக்கவொரு தண்டுலமுங் கிடைப்பதுண்டோ
வவிதமெலா நூற்களையுங் கேட்டபோது
　மகண்டபர சிவஞான மனுமவதில்லை. 421

ஆதலினு லெந்நாளுந் தூரத்தள்ளி
யதிசயமா மிந்நூலைப் பழகுவோர்க்கே
பேதமிலா வகண்டபர போதமுண்டாய்ப்
பிறவற்ற மோட்சநிலை விரைவிற்பேறு
மீதிலிறை யளவுமிலை யையநேரே
யான்பெற்ற வநுபூதி யிவிதமன்றோ
வேதமிலா விந்நூலின் பெருமையென்னே
யிவையருளுந் தேசிகநின் பெருமையென்னே. 422

வெகுவிதமாய் விளம்பியென்ன சுருங்கச்சொல்வேன்
வேறறவே தேசிகநீ யுபதேசித்த
தகமைமிகுந் தத்வமசி யாதிவாக்யத்
தாற்பரியப் பொருளையெலா நன்றாயாய்ந்திங்
ககமறவே யகம்பிரம மென்னுஞான
மடைந்ததனு லகண்டபர மாநந்தத்தை
மிகமிகவும் புசித்தவனாய்த் திருத்தனாகி
மெய்யுணர்வா நந்தபரம் பொருளாய்நின்றேன். 423

சற்குருவின் முன்பாக விந்தநூலின்
சாரமதாம் பரம்பொருளைக் கேட்டபின்னர்
துர்க்குணமா முலோபமெலாந் தூரத்தள்ளித்
தொடர்புற்ற திரவியமே முதலாலந்தச்
சற்குருவைத் தன்றேக முள்ளமட்டுஞ்
சலியாத பத்தியுடன் பூசிப்போர்க்கே
விக்கினமே யின்றியகம் பிரமமென்னும்
வேறுபடா வகண்டபர ஞானந்தோன்றும். 424

அன்றியுமே விதியுடனே நியமமாக
வமலமதாம் விபூதியினு லங்கமெல்லா
நன்றுறவே யணிந்துதிரி புண்டரத்தை
நலமாகச் சந்ததமுந் தரிப்போருக்கே
துன்றியநற் பரமசிவ கருணையுண்டாந்
தோன்றியவக் கருணையினுற் சித்தந்தூய்தா
யென்றுமொரு விக்கினமு மின்றிநன்று
யிருமையிலா வகம்பிரம ஞானந்தோன்றும். 425

பத்தியுடன் விபூதியுடைத் தாரணந்தான்
பாசுபத விரதமெனப் பகரலாகுஞ்
சத்தியமாய் விபூதியுடைத் தாரணத்தாற்
சடிதியினி லகண்டபர ஞானமுண்டா
முத்தமவிப் பாசுபத விரதந்தன்னை
யொருவருட மநுட்டித்துன் பாதம்பெற்றே
னத்தனின தருளாலின் றகண்டஞான
மடைந்தவனு யான்மாவி லமர்ந்துநின்றேன். 426

சுத்தமதாய் நீயருளு முபதேசத்தைச்
சூட்சுமமாம் புத்தியினுன் மனனஞ்செய்து
நித்தமுமே யாதரவா யிடைவிடாம
னிச்சலமா யெப்போது நிதித்யாசித்துச்
சத்துருவா மாவரண விட்சேபங்கள்
சற்றுமிலா வகண்டபர ஞானம்பெற்றிங்
கத்துவித பரப்பிரம சொரூபமாகி
யதிவன்ன வாச்சிரமி யானேனையா. 427

குறைவறவே செய்கின்ற நிதித்யாசத்தாற்
கோரமூ டங்களெனும் விருத்திநீங்கி
மறைவறவே சத்துவமாம் விருத்தியொன்றுன்
மாசற்ற வகண்டபர போதம்பெற்று
நிறைவுறவே யாநந்த மநுபவித்து
நித்தியஞா நாநந்த வடிவேயாகி
யறிவுறுமோ ராச்சிரம வன்னமின்றி
யதிவன்ன வாச்சிரமி யானேனையா. 428

சற்குருவே நீயருளிச் செய்தவண்ணஞ்
சந்ததமுஞ் சலியாமற் சிரத்தையோடே
நிர்க்குணமாம் பரப்பிரம நானேயென்று
நேசமுட னிரந்தரமாய் நிதித்யாசித்து
முக்குணமுங் கடந்தபர போதம்பெற்று
மூதுணர்வாம் பரப்பிரம நானேயாகித்
துர்க்குணமா மெக்குணமுந் தூரத்தள்ளித்
துகளற்ற குணதீத னானேனையா. 429

ஆசரிய நீயருளிச் செய்தவண்ண
மனிசமகம் பிரமாஸ்மி யென்பதாக
நேசமுட னிரந்தரமாய்த் தியானஞ்செய்து
நிகிலமனோ விகற்பமுமே நீங்கினோனாய்ச்
சாசுவத சொரூபத்தி னிருவிகற்ப
சமாதிநிலை பெற்றவனாய்ச் சாந்தனாகிப்
பேசவொணாப் பரப்பிரம போதம்பெற்றுப்
பெருமைமிகும் பிராமணனா னேனையா. 430

* கலனமுறாப் பாவனையால் லயவிட்சேப
கஷாயரசாஸ் வாதமெனும் பதிபந்தங்கள்
பலவகையு மிழந்துபரப் பிரமத்தின்கட்
பாலினுறு நீரெனவே கலந்தொன்றாகி
நிலைமருவு நிச்சலமா நிருவிகற்ப
நிட்டையினைப் பெற்றுநிசா நந்தங்கூர்ந்து
நிலமளவும் பேதமிலா வகண்டஞானத்
திறமையுடன் றிடப்பிரக்ஞ னானேனையா. 431

அங்கமுத லணுவுமிலா தகண்டாகார
மாகியுள வத்துவித பரசிவத்தைச்
சங்கமறச் சந்ததமுஞ் சிவோகமென்னுஞ்
சலியாத பாவனையாற் பூசைசெய்து
துங்கபர சிவகருணை திடமாய்ப்பெற்றுத்
தொடருமனோ விகற்பமெலா முடனேதீர்ந்து
பங்கமிலாப் பரமசிவ போதங்கூர்ந்து
பரமசிவ பத்தனுநா னானேனையா. 432

எங்குமுள வெப்பொருளுஞ் சிவமேயென்று
மேகபரி பூரணவச் சிவநானென்றுந்
துங்கமுறும் பாவனையா லச்சிவத்தைத்
துகளறவே யெப்போதும் பூசைசெய்து
தங்கியிடும் பதிபந்த மனைத்துந்தீர்ந்து
தடையற்ற வாநந்த மநுபவித்துப்
பங்கமிலாப் பரமசிவ போதங்கூர்ந்து
பரமசிவ பத்தனுநா னானேனையா. 433

* கலனம் - தோஷம்.

பின்னமறக் கருணையினு னீயுரைத்த
 பிரஞ்ஞானம் பிரமமுதல் வாக்கியார்த்த
மன்னுவண நன்ருக மனதிற்கொண்டு
 மாசறவே மற்றதனை மனனம்பண்ணி
யன்னதனைப் பின்னையுமே யநுசந்தானித்
 தஞ்ஞான சந்தேக விபரீதங்கண்
மன்னியிடா வகண்டார்த்த போதமேவி
 மகிழ்சீவன் முத்தனுநா ஞனேனையா. 434

சிரவணமே முதலியதி னப்யாசத்தாற்
 சிறுமைதருந் தேகான்ம புத்திநீக்கிப்
பெருமைமிகும் பிரமான்ம புத்திமேவிப்
 பின்பந்தப் புத்தியுமே யிழந்தோனுகிக்
கருதவொணு வகண்டான்ம போதம்பெற்றுக்
 கத்ருத்வ முதலான புந்தந்தீர்த்து
நிரதிசய வாநந்த மநுபவித்து
 நிகழ்சீவன் முத்தனுநா ஞனேனையா. 435

ஈனமிலாச் சமாதியினி லிருமையின்றி
 யேகபரி பூரணமா யிருப்போனுகி
யூனமிலாச் சமாதிபிரிந் திருக்குங்காலை
 யுலகத்தி லுதாசீன விருத்திமேவி
மானமவ மானமுத லெவையுமின்றி
 மைத்திரியே முதலான குணநிறைந்து
தீனமுருக் கெம்பீர சுபாவமாகித்
 திகழ்சீவன் முத்தனுநா ஞனேனையா. 436

சந்ததமுஞ் சமாதியினைச் சார்ந்தோனுகிச்
 சகலமஞே விகற்பமுமே தீர்ந்தோனுகித்
தொந்தமுறும் பந்தமெலாந் தவிர்ந்தோனுகித்
 தூயபிர மாநந்தந் தொடர்ந்தோனுகிச்
சிந்தைமுதற் கோசரமாஞ் சுபாவனுகிச்
 செகசீவ பரங்களெலா மிழந்தோனுகி
யந்தமிலா மங்கைமிகுஞ் சீவன்முத்தி
 யடைந்தவனு யான்மாவி லமர்ந்தேனையா. 437

அனிசமகம் பிரமமென்று மதுநானென்று
மதிதிடமா நிலைபெற்ற வுறுதிதானே
துனிமருவாச் சமாதியெனச் செப்பலாகுந்
துவிதத்தின் றோற்றமெலா மறவுநீங்கி
நினைவெவையு மில்லாத நிருவிகற்ப
நிட்டையுமே சமாதியென நிகழ்த்தலாகுஞ்
சொனவுபய சமாதியினாற் சீவன்முத்திச்
சுகமேவிச் சுத்தபர மானேனையா. 438

அகிலவித வுபாதியுமில் விதேகமுத்தி
யடையுமள வஞ்ஞான லேசத்தாலே
வெகுவிதமாம் பிராரத்தந் தொலையுமட்டும்
விதம்விதமாந் துவிதத்தி னுபாசங்க
ணிகழினுமே நிச்சலமாஞ் சீவன்முத்தி
நிலையினுள நானென்றுஞ் சலித்திடாம
லிகழ்வறவே நேரிட்ட போகந்துய்த்திங்
கென்னிடைநா னின்பமுற விசைந்துநிற்பேன். 439

புகல்சீவன் முத்தர்க்கும் பிராரத்தத்தாற்
பூடணமுந் தூடணமு மெங்குமுண்டே
யகமேவு மகம்பிரம நிச்சயத்தா
லவர்சீவன் முத்தரலான் மற்றோர்செய்யும்
வெகுவான பூடணதூ டணங்களாலே
விமலமதா நிலைபெற்ற வன்னோர்க்கென்று
மிகழ்வான தெவையுமிலை யெனுமுரத்தோ
டென்னிடைநா னின்பமுற விசைந்துநிற்பேன். 440

அகமனிச நித்தபரப் பிரமரூப
மகமனிசஞ் சுத்தபரப் பிரமரூப
மகமனிசம் புத்தபரப் பிரமரூப
மகமனிச முத்தபரப் பிரமரூப
மகமனிச மசலபரப் பிரமரூப
மகமனிச மசங்கபரப் பிரமரூப
மகமனிச மகண்டபரப் பிரமமென்னு
மகம்பிரம நிச்சயவான் சீவன்முத்தன். 441

மனமுதலாம் வியட்டியுபா திகளுமின்றி
மாயைமுதற் சமட்டியுபா திகளுமின்றி
நனவுமுத ஞநாவா மவத்தையின்றி
நாடியிடு நாமமுரு வெவையுமின்றி
யனவரத மன்னியமோ ரிறையுமின்றி
யகம்பிரம நிச்சயமு மறவுமின்றிக்
கனவறிவாம் பரப்பிரம மாத்ரமாகிக்
களங்கமற நிற்பவனே விதேகமுத்தன். 442

மாதவநின் கருணையினு ஞனிப்போது
மகிழ்சீவன் முத்திநிலை மருவாநின்றேன்
பேதமுறும் பிராரத்த முள்ளமட்டும்
பிரிவறவே யகம்பிரம நிச்சயத்தைச்
சாதகமாய்ச் சந்ததமுஞ் சாதிப்போனுய்ச்
சங்கற்ப விகற்பங்கட் கிடங்கொடாம
லாதிமுடி வொன்றுமிலா தகண்டமான
வான்மாவி லநவரத மமர்ந்துநிற்பேன். 443

பேதமுறும் பிராரத்தந் தொலைந்தபின்னர்
பிரிவற்ற பரப்பிரம மாத்ரமாகி
யேதுமொரு விகற்பமுமே யின்றியென்று
மேகபரி பூரணமா யிருப்போனுவேன்
சீதளமாஞ் சற்குருவே நானிப்போது
செய்வதெலாஞ் செய்துமுடிந் தவனேயானே
னேதெனினின் கருணையினு லெளிதேயாக
வேகபர ஞானத்தை யிசைந்தேனன்றே. 444

வெகுவிதமாய் விளம்பியென்ன வேதாந்தத்தில்
விதித்தமகா வாக்குகளின் பொருளையோர்ந்திங்
ககமனிச மகண்டபரப் பிரமமென்று
மகண்டபரப் பிரமமதே யகமதென்றும்
விகலமற வெகுகாலம் பிரியமோடு
வேறறவே நிதித்யாசஞ் செய்வோருக்கே
மிகவரிதாம் பரமசிவ கருணையுண்டாய்
மெய்யுணர்வா நந்தபர ஞானந்தோன்றும். 445

ஆதலினு லுலகிலுள முமூட்சுவெல்லா
மத்யந்த வாதரவோ டாசான்முன்பாய்
வேதமுடி விதித்தமகா வாக்கியத்தின்
வேறற்ற வகண்டார்த்த நிர்ணயத்தை
நீதியுடன் கேட்டதனை மனனஞ்செய்து
நிரந்தரமாய் மற்றதனை நிதித்யாசித்தே
சாதகமாஞ் சிவனருளா லகண்டஞானஞ்
சார்ந்ததனுன் மோட்சசுகஞ் சாரவேண்டும். 446

ஆசரியன் முன்பாக வகண்டார்த்தத்தை
யடைவாக வறிவுற்ற மாணுனந்தத்
தேசிகனைத் திரவியமே முதலிருந்துந்
திடமான லோபத்தாற் பூசியானேன்
மோசனமே யிலாதவனுய்க் கும்பிபாக
முதலியதில் வீழ்ந்திடுவ னுதலாலே
தேசிகனை யாவிபொரு ளாக்கையாலே
தினந்தினமும் பூசிக்க வேண்டுமாணுன். 447

இன்னவித மருளியிடு மாசான்வாக்கை
யீனமிலா நிதாகமுனி கேட்டலோடு
மன்னியநல் லன்புடனே யெழுந்திறைஞ்சி
மனைமக்கள் யாவையுமே குருவுக்கீந்து
தன்னையுமே சுதனுக வுதகத்தோடு
தன்குருவுக் கீந்தவனுய்த் தனதான்யாதி
பின்னுமுள வெப்பொருளு மன்னேனுக்கே
பிரியமுட னர்ப்பித்துப் போற்றலுற்றுன். 448

விமலமதாய் வேறற்ற வகண்டாகார
விருத்தியினில் விளங்கியசற் குருவேபோற்றி
யமலமதா யகண்டபர வித்தையாகி
யவித்தையெலா நீக்கியசற் குருவேபோற்றி
நிமலமதாம் வித்தைக்கு மப்பாலாகி
நிச்சலமாய் நின்றபர குருவேபோற்றி
சமமதுவாய்ச் சற்றுமொரு சங்கமின்றிச்
மாத்ர மானபர குருவேபோற்றி. 449

சகலமுமே தட்சணையாக் குருவுக்கீந்து
   சலனமிலாப் பத்தியுட னிறைஞ்சியேத்தி
நிகரிலதாம் பணிவிடைகள் செய்யுமந்த
   நிதாகமுனி தனைநோக்கிக் குரவன்சொல்வான்
மகிழ்வுடனீ பணிவிடைகள் செய்ததாலியான்
   மகத்தான சந்தோட மருவலானேன்
றருமகனே யினியெவையு முன்னாற்செய்யத்
   தக்கதிலை தன்யகிரு தார்த்தனீயே. 450

புத்திரனே யத்யந்த திடமேயாகப்
   பூரணமாம் பரப்பிரம போதம்பெற்றாய்
மித்தையதாஞ் சம்சார மனைத்துநீங்கி
   மெய்யுணர்வா நந்தபரப் பிரமமானாய்
சத்தியமே யாகினுநீ விதேகமுத்தி
   சாருமள வகம்பிரம நிச்சயத்தை
நித்தமுமே யாதரவா யிடைவிடாம
   னிரந்தரமாய் பழகிநிச நிலையினிற்பாய். 451

அதிதிடமா மகம்பிரம நிச்சயத்துக்
   கயலெவையு மோட்சத்துக் கேதுவல்ல
வதிதிடமா மகம்பிரம நிச்சயந்தா
   னகண்டபர மோட்சத்துக் கேதுவாகு
மதிதிடமா மகம்பிரம நிச்சயத்தை
   யநவரத மாதரவாய்ப் பழகுவோர்க்கே
யதிதிடமா மகம்பிரம நிச்சயத்தா
   லரிதான மோட்சநிலை யெளிதாயெய்தும். 452

பேதமுறா வகம்பிரம நிச்சயந்தான்
   பின்னமிலா வகண்டபர மோட்சநல்கு
மேதுமிதி லையமிலை சத்தியந்தா
   னீசனிரு பதத்தாணை சத்தியந்தா
னாதலினான் முமூட்சுவெலா மறைந்தவண்ண
   மநவரத மகம்பிரம நிச்சயத்தைச்
சாதகமாய்ச் சாதித்தே யகண்டபோதஞ்
   சார்ந்ததனான் மோட்சநிலை சாரவேண்டும். 453

கலனமிலா வகண்டபர மோட்சத்துக்குக்
காரணமா மகம்பிரம நிச்சயத்தைச்
சலனமறத் திடமாகத் தருவதற்குச்
சாற்றியவிந் நூலெனமற் றெவையுமில்லை
நிலைமருவும் பரமசிவ னெனக்குநேரே
நிகழ்த்தியவிந் நூலுக்கு நிகரொன் றுண்டோ
பலவிதமா முலகத்து மிந்த நூலே
பரவியவெந் நூலுக்குஞ் சாரமாகும். 454

ஆதலினுற் றந்தையுநீ தாயுநீயே
யதிசயமா மற்றுமுள பந்துநீயே
சாதகமாஞ் சற்குருநீ சகாவுநீயே
சகலமுமே நீயென்று வணங்கியேத்திச்
சீதளமா மனதுடனே பவதாபங்கள்
சிறிதுமிலாச் சின்மாத்ர நிட்டைகூடி
யாதிமுடி வொன்றுமிலா வகண்டாநந்த
வாழியினி லசஞ்சலமா யமர்தாரன்னோர். 455

உலகினிடை யந்தணரே யாதியாக
வுற்பத்தி பொருந்தியிடுஞ் சீவரெல்லா
மிலகுமறை விதித்தபடி முன்புகன்ம
மிகழாது செயவேண்டுஞ் செய்யுங்காலைத்
திலகமதா மறைமுடியில் விதிக்கப்பட்ட
திவ்வியமாம் விபூதியினை நியமமோடு
சலனமறச் சந்ததமுந் தரிக்கவேண்டுஞ்
சற்றுமிதி லனாதரவே செய்யவொண்ணு. 456

பூதியினா லங்கமெலா நன்றாய்ப்பூசிப்
பொருவிறிரி புண்டரமு மணிந்துகொண்டு
மாதவனே நியமமுட னுருத்திராக்க
மாலைகளுஞ் சிரமுதலிற் றரித்துகொண்டிங்
கோதியிடு முருத்திரபஞ் சாட்சராதி
யுத்தமமா மந்திரமுஞ் செபித்துக்கொண்டு
நீதியுட னிகழுமகா லிங்கத்தின்க
ணித்தியமா யர்ச்சனையுஞ் செய்யவேண்டும். 457

அத்தனுடைப் பூசனைபோ லன்பர்பூசை
யநுதினமு மாதரவா யியற்றவேண்டு
முத்தமமா யோதியவோர் சிவதலத்தி
லுடலுள்ள பரியந்தம் வசிக்கவேண்டுஞ்
சுத்தமதாஞ் சிவநாம கீர்த்தனத்தைச்
சோர்வறவே சந்ததமுஞ் செய்யவேண்டு
மெத்தவுமே யுத்தமமாஞ் சாம்பமூர்த்தி
மேனியுடைப் பாவனையும் பண்ணவேண்டும். 458

வேதவதி காரமுளோர் விதித்தவண்ணம்
விகலமற யாவையுமே செய்யவேண்டு
மீதிலதி காரமிலாச் சூத்திராதி
யாவருமே சிசுரூடை யாதிகன்ம
நீதியொடு நழுவாது செய்துகொண்டே
நிருமலமாம் விபூதியுடைத் தாரணாதி
சாதனமோ டேதுமொரு சிவதலத்திற்
சந்ததமுஞ் சலியாது வசிக்கவேண்டும். 459

தகைமைமிகும் விபூதியுடைத் தாரணத்துந்
தவிராம லுருத்ராக்க தாரணத்து
மகிமைமிகுஞ் சிவநாம கீர்த்தனத்து
மகேசனுடைத் தியானத்துஞ் சிவதலத்தி
லிகழ்வறவே வாசத்து முலகிலுள்ளோ
ரியாவர்க்கு மதிகார மிருப்பதாலே
சகமதனின் முமூட்சுவெலா முறையாயிங்கு
சாற்றியவிச் செய்கையினைச் செய்யவேண்டும். 460

மாதவனே யோதியவிச் செய்கையெல்லா
மகத்தான ஞானங்க மென்னலாகு
மோதியவிவ் வங்கமுடன் சிரவணாதி
யுற்றவரே பரமசிவ னருளினாலே
யாதிமுடி வொன்றுமிலா வகண்டஞான
மடைந்ததனா லஞ்ஞான மனைத்துநீங்கிப்
பீதிசெயு மநாதிபவ பந்தந்தீர்ந்து
பின்னமிலாப் பரப்பிரம சொரூபமாவர். 461

பூதியினு லணிந்ததிரி புண்டராதி
பொருந்தினரே வேதாந்த விசாரந்தன்னி
லேதமிலா வதிகார மிசைந்தோராவ
ரிதரரெலா மதிகாரி யாகமாட்டார்
வேதமுடி விவ்விதமே விதிப்பதாலே
வேதவிதிக் கயலான விதியொன்றுண்டோ
வாதலினு லறைந்தவதி காரம்பெற்றே
யகண்டபர விசாரணையைச் செய்யவேண்டும். 462

அருந்தவனே விபூதியுடைத் தாரணுதி
யங்கமெலா மில்லாமற் சமதமாதி
விரிந்ததிட சன்யாசி யானபோதும்
விசாரணையி லதிகாரி யாகானன்னேன்
பொருந்தியவன் விசாரணையே செய்தபோதும்
பூரணமாம் பரமசிவ னருளிலாதா
னிரந்தரமாம் பரப்பிரம ஞானஞ்சாரா
னிகழ்த்தியது நிச்சயமே யையமில்லை. 463

பலவிதமா யுரைத்தென்ன பகர்ந்தவண்ணம்
பழுதற்ற ஞானங்கம் பற்றினோராய்ச்
சலனமற வின்னூலை விசாரிப்போரே
சம்புவினுற் சாற்றியவின் னூலின்ஞான
மலைவறவே யடைந்ததனு லகண்டானந்த
மமைவுற்றவ் வகண்டபர மாவரென்றே
யிலகியிடுஞ் சண்முகவன் சைகீஷவ்யற்
கிணையற்ற வின்னூலை யுபதேசித்தான். 464

சத்தியஞா னுநந்த சொரூபம்போற்றி
சகலபரி பூரணமாஞ் சொரூபம்போற்றி
நித்தியஞா னுநந்த சொரூபம்போற்றி
நிரஞ்சனநிர்க் குணமான சொரூபம்போற்றி
யித்துவித லேசமிலாச் சொரூபம்போற்றி
யேகசிதா காயபர சொரூபம்போற்றி
யத்துவித மானபர சொரூபம்போற்றி
யகண்டமதாம் பரசொரூபம் போற்றிபோற்றி. 465

## சுகர் கைவல்லியம்.

பொன்னுலகிற் பாதலத்திற் புவியதனிற் புறம்புள்வெளி
யொளியதனிற் பொலிந்து நின்ற
மன்னுயிர்கள் பேதங்க டமில்மறையா கமங்கடமில்
மகத்தான புராணந் தன்னில்
பன்னியநற் பொருள்கடமிற் சிவயோகத் துச்சியதிற்
பகர்வரிய ஞானந் தன்னில்
துன்னியதோர் பரமார்த்த பிரமந் தன்னைத்
துதித்துநிதந் தொழுதல் செய்வாம். 1

வேறு.

பராபரையாய்ச் சத்தியைந்தாய்ப் பூதந் தானாய்ப்
பலவுலகாய்ப் புவனவண்டப் பரப்பாய் மேலுஞ்
சராசரமா யனைத்துயிராய்ப் படைத்தெல் லாந்தான்
ஜகமென்னுஞ் சிறுவீட்டிற் சரித்து வாழப்
புராதனமாய்க் காத்துவிளை யாடிப் பின்னர்
புனல்வடிவா யெழுந்தருளிக் கற்பாந் தத்தில்
நிராதரமா யனைத்துமழித் தெல்லாந் தானாய்
நிறைந்துநின்ற பராபரையை நினைந்துய் வோமே. 2

சுருதியொரு நான்குரைசெய் வியாதன் றக்க
சுகமுனிவன் சுவானுபவ சுகசொ ரூபங்
கருதியத னிலையுரைத்த பொருளி னுண்மை
கைவல்ய வுபனிடதங் கழறக் கண்டாஞ்
சரிதமல வொருநாளு மிதுவே தாந்தத்
தனிமுதலாத் தனையுணர்த்துந் தரங்கமீதி
லொருதிவலை மாத்திரமென் னறிவுட் கொண்ட
வுண்மையதை யொருவழிகொண் டுரைக்கின் றேனால். 3

வேறு.

அசையா நிலையாய்ச் சாந்தமதா யகன்று நிறைந்தாழ்ந் தமலமதாய், வசையா தின்றிப் பேரறிவாய் வயங்கு மனத்திற் பூரணமாய், நசையா வியல்பாய்ச் சுத்தமுமாய் நாடுங் குணங்க

ணிரந்தரமா, யிசையா நின்ற பலவுயிர்க ளெல்லாந் தானென் றுளத்தெண்ணி. 4

மேவுஞ் செககாட் சியினிடத்தில் விருப்பு வெறுப்பொன் றிலதாகித், தாவும் விகற்ப சங்கற்பந் தான்சற் றிலதா முரணை து, மோவு நிலையுற் றொன்றாகி யுரையற் றுணர்வற் றுடல்மயக் கும், மேவு நீநா னெனுமயக்கு மிறந்த சொரூப மாநின்றும். 5

பிரம ஞான நிறைவுளதாய்ப் பேத மிலதாய்ச் சுகசிந்தை
இரவும் பகலு மிரண்டுமிலா திலகு சீத வெப்பின்றி
விரவிச் சுகமாங் கற்பனையில் மேவுஞ் செயலொன் றிலதாகிப்
பரவும் விடயச் சுகமதனாற் பகரும் பலனொன் றிலதென்றே. 6

நீண்ட தருவு நிழலும்போல் நிறைவு குறைவொன் றிலதா கிப், பூண்ட மரமும் வயிரமும்போற் புதிது பழமை யிலாவடி வாய்க், காண்ட லுறுமெய் யுயிரும்போற் கறந்த பாலு நெய்யும் போ, லாண்ட பிரமத் துடன்சுகனு மகலா தொன்றாத் தோன் றினனால். 7

இனிய வமுதாய்ச் சுடரொளியா யிளகிச் சுகமா யோவிய ம்போற், புனிதமான சுகனுக்குப் புந்தி மயக்கொன் றுற்றதுவே, கனிவாச் சுகனுந் தந்தையுடன் கழற வேண்டுங் கருத்தினனா ய்த், தனியந் திரமால் வரையுறையுந் தந்தை மருங்கிற் சார்ந்த னனால். 8

சார்ந்தங் கினிய தந்தையிரு தாளை வணங்கிச் சாற்றிடு வான், சோர்ந்த மாயை யுதிப்பதெங்ஙன் றோன்றி யழிவ தெங் ஙனமென், றோர்ந்திங் கெனக்குச் சுவானுபவ முரைசெய் யென் ன வுளமகிழ்வு, கூர்ந்தங் கறிவு பெறத்தெளிவு கொண்டு வியாத முனிகூறும். 9

வந்து மாயை யுதிப்பதுவும் வளர்ந்தங் கழிவும் வரன்மு றையே, முந்து பிரமத் தனுபவமு மொழிந்தா னதுவுஞ் சுகமு னிகேட், டந்த ஞானஞ் சந்தேக மகலா திருப்ப வதுகண்டு, சந் த மறைதேர் வியாதமுனி சபிக்க முனிவு கொண்டன்றே. 10

மாயா வசத்த னுகவென மறைதேர் வியாதன் சொலச்சீ றிச், சேயாஞ் சுகனு மச்சாபச் செயலாற் சென்றங் கவணின்று,

தேயா மனுய் வைகுந்தத் தென்பால் மருங்கோர் வடகிழக்கிழ்,
நேயா வசத்தோ டினிதாகி நின்ருன் தபசு நிலையுற்றே. 11

நீண்ட சாபம் புரிந்திட்ட நெடிய வியாதன் மகற்கிரங்கிக், காண்டல் செய்வான் மிகத்தேடிக் கருதிச் சுகாவென் றிடவொ ருக்கால், வேண்ட வுலகத் துயிர்யாவு மேனென் றிடனும் வியா தனுந்தா, னீண்டிப் புதல்வ ரித்தனைதா னெமக்கே தென்ன வையுற்றே. 12

சென்ருன் திருமால் வைகுந்தத் தென்பால் மருவும் வடகி ழக்கிழ்க், கன்ரு னென்னச் சுகமுனியைக் கருதிப் பிறப்போ டிறப்பிரண்டும், வென்ரு னிவனே யெனக்கருதி வியப்புற் றுட னே வந்தருகில், நின்ரு னழைத்தான் செவிகேளா நிலையுங் கரு த்து மசைந்திலனுல். 13

செயல்செய் முனிவன் கடசலத்தைத் தெளிக்கச் சுகன்ற னுடனேயத், துயில்கொண் டெழுந்தாற் போனினைவு தோன் றிப் பொறியிற் புலன்றேன்றி, யியல்கொண் டெழுந்த சுகன்ரு தை யிருதா டொழுதங் கிறைஞ்சியபின், மயல்க டவிர்ந்து தந் தையுடன் மகிழ்ந்தோர் மாற்ற முரைசெய்தான். 14

பகரும் பதினு யிரங்கிரந்தம் பத்தி மார்க்கத் துரைந்தெ னெனச், சுகனும் வியாத முனிவனுடன் சொல்ல வதுகேட் டம் மொழியின், சகல பயனின் சாரமெலாஞ் சரிய தாமென் றேற் றிவற்குப், புகனு ரதனு னுன்முகனுற் புகழ்தட் சணமூர்த் தியி னுலும். 15

வேறு.

செப்பியவிம் மூவர்களா லனுக்கிரகந் தன்னைச் செய்விக் கத் தெளிவாக வியாதன் ருனுந், தப்புதலில் யாழ்முனிவன் சொற்பயனே தென்னிற் சர்வமுமே பிரமமய மென்ருன் மே லும், அப்பிரமன் சாட்சியே பிரமமய மென்ரு னங்குள தட் சணமூர்த்தி பாவாதீத, மொப்பரிய பிரமமென்ரு ரிப்படியே மூவ ருகந்துரைத்த வுண்மைதனை யுரைக்கின் ருரே. 16

செவ்வியதா வியாதமுனி சுகனைப் பார்த்துச் சிவானுபவ சிற்சொருபந் தெளிந்த தோவென், றிவ்வகைதான் வினவலுமெ

ய்ச் சுகன்றா னென்று மெனக்கதுதான் தெரியவிலை யென்ன
லோடு, மவ்வகைகேட் டவனுடைய நிலைமை யெல்லா மடைவுட
னே கேட்டறிந்து பின்னுஞ் சொல்வான், எவ்விதத்துந் தந்தை
குரு வாத லாலே யிவன் மயக்கங் கெடாதிருக்கு மெனவுங்
கண்டு. 17

தனையனைமா யாவயத்த னாகவென முன்னஞ் சபித்ததற்கு
மாறாகச் சற்குருவி னாலே, யனையமல மாயைமுழு தகன்றொழி
யக் கடவ னாகவிப்போ தெனச்சாப பலத்தை நீக்கி, யினையசு
கன் முடிமீதிற் கரம்பா லித்திங் கினிமேனீ சிற்சொரூப மென்
றா நாமம், புனைவித்திங் கிச்சையிற்சஞ் சரித்து வேண்டும் பொ
ருளறிவா யெனச்சுகற்குப் போதித் தாங்கே. 18

உள்ளுறையு மலமாயை கவலை நீக்கி யொளிதிகழுஞ் சுவா
னுபவ முணர வேண்டி, னெள்ளரிய மிதிலையெனும் பதியின்
மேவி யிருநிலங்கண் முழுதுபுரந் தளிக்க வல்ல, வள்ளலெனுஞ்
சனகபிரான் றன்பால் மேவி மன்னவனை யிதுகேளென் றுரைத்
துப் போகத், தெள்ளியநற் சுகமுனிவன் சனகன் வாழுந் திரு
மனைக்கோ புரவாயிற் சேர்ந்தான் மன்னோ. 19

அன்றவன்றா துவருரைக்கச் சனகன் கேட்டே யவனிலை
யைச் சோதிப்பான் கருதி யாங்கே, நின்றநிலை தனிற்சுகனை நா
ளேழ் வைக்க நினைவுசற் றும் விகற்பமின்றி நிற்க வேறாத், துன்
றுமிடந் தனிலேழ்நாள் வைக்கச் சித்தந் துலங்கவந்த புரத்தேழ்
நாள் வைக்க மேலும், அன்றிருந்த படியிருக்க வப்பா லேழ்நா
ளருநிதிக்க ணமர்த்தவது மறியா னாக. 20

மின்னிலகு சிறுமருங்குன் மகளி ரின்ப மிகச்சிறந்த வுணவ
ளிக்க வறியானாக, மன்னவன்றந் திடுபோக மகிழ்ச்சி யாவும் மன
தினிற்சற் றின்பமுறான் மதிப்பி லாம, லன்னவன்செய் யவமதி
ப்பை யறியா னாகி யகமமதை யற்றிருத்த லறிந்து மன்னன்,
இன்னவன்ற னுளமேரு வொப்பா நின்ற திதனையிழுத் தெவரா
சைப்ப தென்றே யுன்னி. 21

உவமையிலா விவன்கருத்தை யிருபத் தோர்நா ளுறுதியு
ஞ் சோதனையாற் சோதித் தேதா, னவமதிப்போ டின்பதுன்ப
ற் றின்றி யனந்தகலி யாணசுப குணங்க ளாகித், தவ

மகிமை சுத்தநிரு விகாரி யாகிச் சச்சிதா நந்தமயந் தானாய் நின்று, சிவமொளிருஞ் சுபாவவறி விஃதா மென்று சிறந்தசிம்மா தனத்திலெழுந் தருளச் செய்து. 22

ஈங்கவன்ற னிலையையெலா மறிந்தன் போடே யிணையடிகள் பணிந்தரச னிதனைக் கேட்பான், தாங்குலகத் தினிற்செயல்க ளாசை கோபந் தவிர்ந்தொன்றாய்ச் சிவானுபவ சுபாவ மாகி, யீங்குறுநீ யாரெனலுஞ் சொரூப மியானென் றியம்புசுக முனிமொழியை யரசன் கேட்டுப், பாங்குடனச் சொரூபமெவனீயென் றேதான் பணித்தனுமே சுகமுனிவன் பகர்வ தானான்.

சாற்றரிய சொரூபநிலை ஜனக னேகேள் சர்வபரி பூரணமாய்த் தானே தானாய்த், தோற்றிநிறைந் தொன்றினிலுந் தாக்காதாகிச் சொல்லரிய மனவாக்குக் கெட்டா தாகி, யேற்றமனவாக்கதனுக் கணிய தாக விலகியுல கத்தினுக்கா தார மாகிப், போற்றரிய வணுவுக்கோ ரணுவு மாகிப் புகலரிய மகத்துக்கோர் மகத்தாய் மேலும். 24

இயம்பரிதா யிணையதென்னத் தேவ ரானு மிணங்குதற்கு மெவரானு மெட்டா தாகி, நயம்பெறுமிந் திரியமனத் தொடர்புக் கெட்டா நல்லதுக்கெல் லாநல்ல நயமாஞ் சோதி, வயம்பெறவே போக்குவர வின்றிஞான மயமாகி யொளிர்கின்ற பொருள தாகிச், சுயம்பறுபல் திரிசியமா யதிர்ச மாகித் துணைக்கெலாந் துணையான சொரூப மாகி. 25

ஏகமுமா யனேகமுமா யிரண்டு மற்றிங் கெளிதறியப் பட்டதுமாய்ப் படாதாய் நின்று, போகமுறப் பெரியோர்க்குச் சத்தே சித்தாய்ப் பொருந்துமத னலின்ப மாகி யெங்கும், பாகமுற நித்தசுத்த புத்த மாகிப் பகர்வரிய முத்தமுமாய்ச் சிறந்ததாகி, யாகமென லின்றியா னந்த மாகி யதுவிதுவென் றுறுஞ்சுட்டு மற்ற தாகி. 26

அத்துவிதந் தானாகி யதுவு மின்றி யகண்டமுமாய் ரேசகபூ ரகமு மின்றிச், சித்தமிசை யானந்த மாகி யெந்தச் செயலுமின்றிச் சிதாகாச சொரூப மாகிச், சுத்தவிண்ணு யுயர்ந்தவுபனிடதந் தன்னிற் சொலும்பொருளா யப்பாலுக் கப்பா லாகி,

யுத்தமமாந் துரியாதீ தப்பொருளா நின்றம் குறையிறந்த வவச ரத்து முறுவ தாகி. 27

உணர்வுருவந் தரியாமி யாகி யெந்த வுருவமின்றி யதுவிது நான் முனென் றேதப், புணர்வதுவா யறிஞரா லிதுவா மென்னப் புகலுவதே யதன்சொருபம் பிறிதன் றென்னக், குணமிகுந்த சுகமுனிவ னுரைப்பக் கேட்டுக் கோதிலாச் சனகனுடல் குளிர்ந்துள் ளாறி, மணமுமலர் போனிறைந்த பரமா னந்த மாதவனை முகநோக்கி மன்னன் கேட்பான். 28

வேறு.

நற்றவனே சத்தாவ தேதுவென்ன நான்பிரம மென்று நண்ணி, மெத்தவிசா ரித்தறிந்து நிச்சயித்து விட்டுவிடா ததுசத் தென்றே, உற்றநிலை யிதுவாகு மெனமுனிவ னுரைசெய்ய வுகந்து மன்னன், மற்றசுயஞ் சித்தாவ தெதுவென்ன வம்முனி வன் கூற லுற்றான். 29

மிக்கபல நூலறிவா ரூன்ஞான சொருபனென விசாரஞ் செய்து, தக்கநிலை யிதுவென்று நிச்சயித்த நிச்சயமுஞ் சத்தத் தோடே, ஒக்கவொரு வாசனையு மறவொழித்து நின்றதுவே யுயர்சித் தென்று, சிக்கெனவே முனியுரைக்க மன்னவன்கேட் டானந்த நிலையே தென்றான். 30

தேசிகன்சொல் வாக்கியத்தா னுலுணர்வாற் றனதுசித் தத் தெளிவி னுற்றன், மாசகலு மான்மாவே யானந்த மென்றறிந்து மாயை நீங்கி, ஆசறவே யனுபவித்துச் சுகமயம தாகின்ற வறிவும் போக்கி, நீசர்வ மயமானா னந்திரமா நின்றதுவா னந்த மென்றான். 31

என்றுசுக முனியுரைக்க மன்னவனு மிகல்தொந்த மதுவே தென்றான், நன்றெனவே சிற்சொருப செயல்மறந்து தான்றானே பழமை போலச், சென்றயலே கதியென்று பிறவிதொறுஞ் சுழல்வதுவே தொந்த மாகும், நின்றுணர்க வெனமுனி வன் ஜனகபிரா னுளமகிழ நவிற்றல் செய்தான். 32

மோக்கமென்ற தேதுரைசெய் யெனவினவ மன்னவனும் முனிவன் சொல்வான், தாக்குதலொன் றறநின்ற நானேமெய்ப்

பிரமமெனச் சகமிம் மூன்றும், நீக்கமற வொருங்குணர்ந்து நிச்சயித்த நிச்சயமுங் கழல விட்டிங், காக்கமுத லறநின்ற தேத துவே வீடென்ன வறைந்தா னன்றே. 33

அஞ்ஞான மாவதெதிங் குரையென்ன வருந்தவனை யரசன் கேட்ப, மெய்ஞ்ஞான மாஞ்சொருபந் தனைமறந்து மடமையினல் விகாரி யாகி, எஞ்ஞான்றும் விடயசுக வாசனையி னின்பது ன்பத் திடரின் மூழ்கிச், சுஞ்ஞான சுபாவமதை யறியாவஞ் ஞானமெனச் சுகனுஞ் சொன்னன். 34

சொன்னமொழி கேட்டரச னுவரண மேதென்னச் சுகனு மோர்ந்து, தன்னுடலே தானெனவும் விடையாதி சுகமெனவுந் தான்மிக் கெண்ணி, மன்னியதன் சொருபமதைத் தெரியாமல் மழைமுகில்போல் மறைத்து மூடும், அன்னதுவே யாவரண மெனலாகு மிதுலைநகர்க் கரசே யென்றான். 35

மெய்த்தவநீ விட்சேப மாவதெதிங் குரையென்ன வேந்தன் கேட்பத், தத்துவங்க டெரிந்தவன்போல் மேலாகத் தனக்குமொரு தலைவ னுண்டென், நித்தகைமை சுகவிருத்தி தனைத்தானென் றிருப்பதெதோ வதுவிட் சேபங், கொற்றவநீ யறிதியெனக் கோதிலாச் சுகமுனிவன் கூறி னுல். 36

மெய்த்தவனே பரோட்சமென லெதுவுரைசெய் யெனவரசன் வினவ லோடும், உற்றகுரு முகத்தானுஞ் சுருதிமொழி யானுந்தன் னுணர்வி னுலும், தத்துவசோ தனையானுஞ் சொருபத்தை யறிவதுவே பரோட்ச மென்ன, வித்தகைமை யெனச் சனக னுளமகிழ வியாதன்மக னியம்பல் செய்தான். 37

அபரோட்ச மாவதுதா னுரையென்ன வருந்தவனை யரசன் கேட்ப, விபரீத மேகமுமற் றெங்குளதாய் வெளியொளியாய் மேல்கீ ழின்றிச், சுபசொருப மாத்திரமாய்ச் சுவானுபவ ரசமாகிச் சுத்த மாகி, யுபனிடத மாய்விளங்க லபரோட்ச மெனச்சனகற் குரைத்தா னன்றே. 38

அநித்தமெது நித்தமெது பிரியாது பிரித்துரைசெய் யென்னக் கேட்பச், சனித்தவுட லசத்துயிர்தான் சத்தெனவே நிகழ்

தலினுற் றடுத்தற் கேதென், தனித்தசத்தே யசத்தன்றிப் பிறி தன்று விசாரணையாற் றெளிதல் வேண்டும், தொனித்தசத்தே நித்தியமா மசத்தனித்த மெனற்பாற்று துணிதி யென்ருன். 39

ஜனகபிரான் சுகமுனியைத் தனிநோக்கி யானந்தந் தானே தென்ன, அன்கமுறச் சகலவிப ரீதமறத் துரியநிலை தேர்ந்து சடா சடம தின்றிக், கனவுலகாத் தோற்றமய லறவிட்டுத் திரி சியங்க ளறிவாக் காண, நனவுசத்தா மாத்திரமா விளங்குவதா னந்தமென நவிற்றல் செய்தான். 40

ஞானமதற் கதிகாரி யாரெனவே நராதிபனற் றவனைக் கே ட்ப, வானமதிற் கறுப்புறல்போ ளுன்சிவ னெனச்சொல்லும் வார்த்தை யின்றி, ஈனமற விசாரித்துச் சிற்சகனந் தானுக விசைந்து நின்றேன், ஞானவனே யதிகாரி யெனமுனிவன் சனக னுக்குச் சாற்றி ஞனல். 41

மன்னவனு மாமுனியைப் பார்த்திதயக் கிரந்தியெது வகுக்க வென்னத், தன்னிலைமை யுணராமற் பலநூலாற் றற் சொருபந் தன்னைத் தேடல், மன்னுகழுத் தணியரையில் மருவு குழ வியைமறந்து மாழ்கித் தேடல், அன்னதுபோ லிதயமு றுங் கிரந்தியென வருந்தவன்மன் னவற்குச் சொன்னுன். 42

மன்னவனுஞ் சுகமுனியைச் சம்சார மெதுவெனலு மன்ன கேளாய், தன்னுடைய வனுபவத்தால் மறைநூலாற் சற்குரு வால் தன்சொ ரூப, மென்னலெது வென்றுற்று விசாரியா திரு ப்பதுசம் சார மாகும், அன்னதனை யறிதியெனச் சுகன்சொல்ல வரிதெனவே யரச னோர்ந்து. 43

மலடிமைந்தன் கானனீ ரிரந்திரசா லம்போல வந்து வந்து, உலந்தோய்ந்து விருத்தியதா யிருந்துதன்னுள் விளங்குவதே சுகம தென்றே, நலமுணருஞ் சுகமுனிவ னவிலநரா திபனு மெது துக்க மென்ன, நிலமுழுதும் புரந்தளிப்போ யதன்விபர மெல்லாம்யா நிகழ்த்தக் கேண்மோ. 44

வேறு.

சுத்தமென்றும் பிரமமென்றுஞ் சொருபமென்றும் துலங் கியசின் மயமென்றுந் துகளி லாத, நித்தமென்றும் புத்தமென்

றும் நிகரி லாது நிறைந்தசுயஞ் சோதியென்றும் நொய்ய தாகி, முத்தபர மார்த்தமென்று மொழிவதுகே ளாதே முழுதுலகை நம்பியதில் மோகந் தன்னால், சித்தமுறல் துக்கமெனச் சனகனுக்கு மாமுனிவன் செவிகுளிரத் தெரிந்தவண்ணஞ் செப்பினானால். 45

மிகவுணருஞ் சிற்சொருப நிட்டர்க் கெல்லாம் விடயமே துரையுமென வேந்தன் கேட்ப, இகலறநித் தியசொருப மாகி யென்று மெங்குமா யிருப்பதுநா னென்றுந் தானே, புகலருசற் குருவருளால் விசாரந் தன்னால் போதாந்த நித்தியத்தைப் பொருந்தி னார், தகவுணரு மேலவர்க்கு விடய மென்னச் சனகனுக்குச் சுகமுனிவன் சாற்றி னானால். 46

வேறு.

சாற்றரிய வவ்விடய மேதுரைசெய் யெனமுனியைச் சனகன் கேட்ப, ஏற்றியெந்த மிநப்பிறந்து காலமிறந் தறிவிறந்துண் டில்லை யென்னு, மாற்றரிய சங்கற்ப வாதனைவிட் டேசொருப மயமாய்த் தானே, தோற்றரவு மாத்திரமாய் நிற்பதுதா னவ்விடய மென்றா னீத்தோன். 47

மாமுனியைச் சொருபநிட்டர் வருத்தநிலை யேதென்ன மன்னன் கேட்ப, யாமுரைப்ப ததுகேண்மோ சொருபமே தானாயுஞ் சற்சீ டர்க்கு, நாமுரைப்போ மெனத்தரவர் நவின்றநிலை யாதென்னில் நானே ப்ரம்ம, மாமெனநின் றகங்குளிர்ந்து சொல்வதே வருத்தநிலை யாகு மென்றார். 48

இத்தகைமை யுடையவர்க்குத் தேசிகனா ரெனச்சுகனை யிறைவன் கேட்பச், சித்தமுறு சங்கற்ப விகற்பந்தீர்ந் தலையில் கட லென்ன ரூப, மற்றகண்ட சச்சிதா னந்தபரி பூரணமா யமல மாகிச், சுத்தமதாய் நின்றதுவே குருவாமென் றரசற்குச் சுகன்சொன் னானால். 49

வேறு.

அரியசற் குருவை யடைந்திடுஞ் சீட னாரென முனிவனை வினவ, உரியநா னாரிவ் வுடலெதிவ் வுலகமேதென விசாரமா நின்று, விரியுமவ் விருத்தி யுருமனன் னிட்டை மேவியே

*யாவியிற் புனல்போற், சரியதாய் வகுத்து நிற்பதே சீடன்
னச் சனகனுக் குரைத்தான். 50

வேறு.

இயலுறுசற் குருவிடத்தில் சீடன் கேட்ப தேதுரைசெய்
யெனமுனியை யிறைவன் கேட்ப, நயமுறத்தன் சொருபமதை
நானு பேத நாமரூ பங்களினுற் குருவாற் றன்னுற், செயலறவே
கேட்டறிவுற் றகங்கா ரத்தைத் தீர்த்தினிமே லிறையேனுஞ்
சனித்தி டாமல், மயலறவே தன்னிலையைக் கேட்ப தென்று
மாமுனிவன் மன்னனுக்கு வகுத்தல் செய்தான். 51

குருமொழியி னுற்சீடன் கண்ட தேது கூறுகென முனிவ
னைக்கொற் றவனுங் கேட்ப, அருமறைக ளாகமங்கள் புராணந்
தன்னு ளளந்தறியப் படா விபுவா யறிவுக் கெட்டாப், பெருமை
யதாய்ச் சர்வமுந்தான் கண்டு பின்னும் பேதமற விருப்பதெதா
வதுசொ ரூபம், ஒருமையதா யதைச்சீடன் கண்ட தென்றே
யுயர்முனிவன் சனகமன்னற் குரைசெய் தானுல். 52

காவலனு முனிவன்முகங் கருதி நோக்கிக் காணுத தேத
னைக் கழறு கென்ன, மேவியநீ நானதுவென் றிதுவே யென்றும்
விருத்தியினுல் தானுன்மா வெனவா ராய்ந்திங், காவலுற விசார
ணைசெய் யாத்தோ டத்தி னுலேகாண் கின்றதது வேயஞ் ஞா
னப், பாவனையா வதுகாணப் படாத தென்று பார்வேந்தற் கரு
ந்தவனும் பகர்தல் செய்தான். 53

அருந்தவனை முகநோக்கிச் சனக மன்ன னறிந்ததே துரை
செயென வவனுஞ் சொல்வான், பொருந்துசத்தங் களினுலும்
வேதத் தாலும் பொருந்துமனு பவத்தாலும் போதத் தாலுந்,
திருந்துமகக் கருத்தாலு மனுட்டிப் பாலுந் தீர்க்கவறிந் திடமி
குந்த தெளிவி னுலும், வருந்தியறிந் திடுதலிது வாகு மென்றே
மாதவத்தோ னரசனுக்கு வகுத்தல் செய்தான். 54

அறியாத தேதுரைசெய் யென்ன வேந்த னருந்தவனை
வணங்கிமகிழ்ந் தன்பிற் கேட்க, நெறியான்மா விதுவென்று மக
ண்ட மென்று மிரேசகமா மிதுவென்று நிசவா னந்தம், பிறி
யாத திதுவென்று மகப்பிரம மென்றும் பேசரிய நீபிரம மென்
றுஞ் சொல்லால், அறிந்திடுத லேயறியா தாகு மென்றிங் கருந்
தவன்மன் னவற்குரைத்தா னருமையானே. 55

---

* உப்பொடு எனவும் பாடமுண்டு.

இவ்விதமாஞ் சொரூபநிட்டர் தாமும் விட்ட தேதுரை செய் யெனமுனியை யிறைவன் கேட்பத், திவ்வியசற் குருவிடத்தி லனுசந் தானச் செயலாலு மனுக்கிரகத் திறததி னாலுஞ், செவ்வியநா னென்மாவென் றறிதிற் றன்னுள் திரிபின்றித மதளாந் துவிப ரீதந் தீர்ந்திவ், கெவ்வமற விருப்பதுவே விட்டதென்றிங் கேதமற வரசனுக்கு முனிவன் சொன்னான். 56

இச்சையிலாச் சொருபநிட்டர் விடாத தேதென் றிறைவினவச் சுகமுனியை யினிது நோக்கி, யச்செயலோ நான்பிரம மென்னு நல்ல வனுபவமோ டுரைமொழியு மாசான் வாக்கும், நிச்சயமாய்த் தன்னுணர்வுங் கலந்தொன்றாய் நிர்மலமாஞ் சிற்சொருப நேரே யொத்த, எச்செயலுந் தானுதல் விடாத தென்றே யியம்பினு னரசனுக்கு முனிவன் றானே. 57

போனதுதான் சொருபநிட்டற் கெதுதானென்னப் புரவலனுஞ் சுகமுனியைப் புகழ்ந்து கேட்ப, ஆனசக சங்கற்ப விகற்ப மற்று யான்பிரம மெனத்திடமா யறிந்தா ராய்ந்து, தானதனை யுண்மையிலே கரைத்தொன் றாக்கிலை தனிததுழ்யிழ றாயின் றவன்கைத் தனம்போனீங்கும், ஈனமற வகன்றமதே தா வது தான்போன தெனச்சுகனும் ஜனகமன்னற் கியம்பல செய்தான்.

இத்தகைய சொருபநிட்டர் தமக்ககலாத் திண்ண மேதுரைசெய் யெனமுனியை யிறைவன் கேட்ப, உற்றகுரு வாக்கியத்தாற் சுருதி தன்னா லுணர்ந்ததுமன் றிதுவென்றுங் கொள்வதன்று, சுத்தவிசா ரணையானிச் சயித்த தன்று தோற்றமழி விலாதிருந்த சொருபந்தானே, நித்தபரி பூரணமா நிலைதான் போகா நிச்சயமென் றிறைக்குமுனி நிகழ்த்தல் செய்தான். 59

பகர்வரிய சொருபநிட்டர் புசிப்பதனை யோர்ந்து பகர்தியெனச் சுகனையிறை பரிந்து கேட்பப், புகலரிய திறையுமிலை செல்லச் செல்லப் போந்ததுக்கஞ் சற்றுமல நிலையு மல்ல, நிகழ்கரண தனுபுவன போகத் தாலும் நின்றுபுசி யாததெதோ வது தா னாகுஞ், சுகசொருபப் புசிப்பயலன் றென்றே யோர்ந்து சுக முனிவன் சனகனுக்குச் சொல்லி னானல். 60

பதமுடைய சொருபநிட்டர் புசியா தேது பகர்தியென முனிவனைப்பார்த் திறைவன்கேட்ப, இதமகித மிலதெனவுங்

துக்கசுக மிஃதெனவு மிறையுணரத் தக்கவித மியம்பி மேலும், விதமுடைய பரிபாக னகமமதை யற்றுநின்ற மெய்யுணர்வ னென்றும் விதங்கள் ஞான, மதமுடனே நின்றதது புசியாத தெனவறிதி மன்னவனே யெனச்சுகனும் வகுத்தல் செய்தான்.

தோற்றமுறுஞ் சீவருக்குச் சனன மேது சொல்லுகவென் றெனச்சனகன சுகனைக் கேட்ப, ஏற்றமுறச் சனித்தோமென் றிகல்சங் கற்ப மெனும்விருத்தி மறந்துசனிப் பில்லை யென்று, மாற்றமுற நிச்சயித்தா ராய்ந்து பார்த்த மனோவிருத்தி தனிற் றுன்வந் துதைய மாகி, ஊற்றமுற நின்றதுவே ஜனன மென்றிங் குற்றமுனி ஜனகமன்னற் குரைசெய் தானால். 62

நித்தபரி பூரணற்கு மரண மேது நிகழ்த்துகெனச் சுகமுனியை நிருபன் கேட்ப, உற்றபரா பரமதுவே பிரம மென்றே யுணர்ந்தறந்தா ராய்ந்துவிசா ரணைகள் செய்து, சுத்தமென நிச்சயித்த சொருபந் தன்னிற் றுவிதமெனும் விருத்தியின்னுந் துடர்ந்திடாமல், சித்தமய னீக்குவதே மரண மென்று திகழ் சனகற் கருந்தவனுஞ் செப்பினானால். 63

வேறு.

சனகபிரான் சுகமுனியைத் தானோக்கி நல்லதெது சாற்று கென்ன, அனகமுற நான்சொரூப மெனவறிந்தா ராய்ந்துணர்ந்த வதனைத் தன்னுள், சனிக்குமயல் திரிசியங்க ளொருங்கே நாவுச் சர்க்கரைபோற் கரைத்தொன் றாக்கித், தினகரன்போ னிற்பதுவே நல்லதெனச் சுகமுனிவன் செப்பி னானால். 64

பொல்லாமை தனையுரைசெய் யெனமுனியைப் புரவலனும் புகழ்ந்து கேட்பச், சொல்லாத சிற்சொருப நிலையறிய விசாரித் துத் தெளிந்த பின்னர், வெல்லாத வாசனைவந் துடன்கூட வதிற்பொருந்தி விசாரந் தன்னில், செல்லாம னிற்பதுவே பொல்லாங்கா மெனமுனிவன் புகன்றிட் டானால். 65

வேறு.

அரியபரா நிட்டருக்குப் பந்துவெதிங் கறைதியெனச் சுகமுனியை யரசன் கேட்ப, உரியபர மாவதுதான் கல்யாண குணமா நிலையதனிற் கலந்தொன் றாகிப், பெரியசுக வாசனைவந் தூலுங் கலங்காமல் பிரமநிட்டை தன்னின் மூழ்கித், துரிய

பர சுகமதுவே தானாய நிலையதெனல் பந்துவெனச் சுகன் சொன்னானல். 66

ஆனாலுஞ் சுகமுனியே சொரூப நிட்டர்க் கபந்துவென்ப தறைதியென வரசன் கேட்பத், தானான சுகம்வேறு தான்வே றாச் சங்கற்ப விருத்தியினாற் றானன் றென்று, நானான வென் பூனே தானென்ன மீக்கொண்ட விபரீத விகற்பந் தானே, கூனான வபந்துவென விதுவாகும் வேல்வேந்தே யெனச்சுகனுங் குறித்திட்டானல். 67

செப்பரிய சுகமுனியே சடமாவ தேததனைத் தெளிவியெனச் சனகனுந்தா னிரந்து கேட்க, ஒப்பரிய விசாரணையாற் றனைத்தானென் றுணராம லொழிந்துவிட யப்பயனா னுறவே மிக்கிங், கப்புறமோர் விருத்தியினா லிதமகி தத்தாலே யகமகமென் றணுவணுவா வளர்ந்தே பாசத், துப்புறவே ஜனிக்குமது சடமா மென்று சுகன்ஜனக மன்னனுக்குச் சொல்லினனே.

மானமறுஞ் சுகமுனியே சொரூப ருக்கு வருமசட மேதென்ன மன்னன் கேட்பத், தானெனலு மற்றுசுகந் தானு மற்றுத் தானலா ததுவுமற்றுச் சகத்தா சார, மானதுவுந் தானற்றிங் கறிவு மற்றே யறிவுக்கு ளறிவற்றங் ககண்ட மற்றிங், கினமற வுயர்வற்றுத் தாழ்வு மற்றிங் கிருப்பதுவே யசடமென வியம்பினனே. 69

என்றதுகேட் டிகல்வேந்த னெழில் முனியைப் பார்த்திவ னுக் கெதுமேநா யென்ன, நன்றுணராவாற் றனச்சொருப நயந்தறியா திருந்துபர நாமே யென்று, துன்றுபரம் வேறுதான் வேறென்னு மனுபவமே வியாதி யாகும், என்றமுனி யரசனுக்குத் துலங்கவிதை யினையதெனச் சொலலினனல். 70

ஆரணஞ்சொல் சுகமுனியே யிந்தவியா திக்கவிழ்த மேதறைதி யெனவரச னுகந்து கேட்பக், காரணமாஞ் சிற்சொருப மெனுஞ்சொல் லற்றுக் கருதியனு பவிப்பதுமற றுணர்வு மற்றுச், சீரணமா மின்பதுன்பச் செயலு மற்றுச் சிந்தையுமற் றாமன்கண்ட கனப்போ லின்று, பூரணமா யிருப்பதுவே யவிழ்த மாகும் புரவலனே யெனச்சுகனும் புகறல் செய்தான். 71

இவ்விதமாஞ் சொருபருக்குக் காரணமாந் தேக மேதுரை செய் யெனமுனியை யிறைவன் கேட்ப, எவ்வமற விசாரத்தா லெதுதானென் றுண்மை யிணையதென வறியாமற் கலங்கிநின்று, வெவ்வியதோர் சுகவிருத்தி தன்னில்மேவி விளங்குசெயல் கார ணதே கந்தா னதுஞ், செவ்வியநற் புவியளிக்குஞ் சனக வேந் தே தெளிதியெனச் சுகமுனிவன் செப்பி னுனல். 72

வே று.

சுகமுனியைச் சனகபிரான் சூக்கவுட லாவதெது சொல்லு கென்ன, அகமகமென் றெனவிருந்த வகவிருத்தி குன்றும லற வே நொந்து, சகவிடய வாசனையோ டனுசூத மாயிருந்த சங் கற் பந்தான், பகர்வரிய சூக்கவுட லிதுவெனமே யரசனுக்குப் பகர்ந்திட் டானல். 73

புகலரிய சுகமுனியைப் புரவலனுந் தூலமெது புகல்வா யென்ன, அகமகமென் றெனவிருந்த வகவிருத்தி மிகவரிதே யற்ப மான, சகவிடய வாசனையே திடமென்னும் வாசனையிற் சார்சங் கற்ப, மிகுதூல சரீரமிது வெனச்சுகனுஞ் சனகமன்னற் கியம்பி னுனல். 74

இன்னமுத மாரியெனச் சுகமுனிவன் மெய்ஞ்ஞான மியம் பக் கேட்டு, மன்னனெழுந் தருந்தவனை மலர்த்தாளில் வீழ்ந்தி றைஞ்சி வணங்கி யேத்தித், தன்னிதயத் துவகையுற மெய்ப் புளகத் திருந்தவனைத் தழுவிக் கொண்டே, இன்னுமெனக் கரு ள்செயெனச் சுகமுனியை யெதிர்நோக்கிக் கேட்டல் செய் தான். 75

முன்னெமக்கு மெய்ஞ்ஞான முழுவதும்வியாக் கியான வகை மொழிகின் றூற்போற், பின்னெமக்கு யான்கேட்ட சங் கையெலாம் ஞானமதாய்ப் பிணக்கி லாது, சொன்னமொழி யப் படியே யிருந்ததெனச் சனகபிரான் சொல்லிப் பின்னும், அன் னவனைச் சொல்மலரா னன்மலராற் பூசைசெய்தங் கருச்சித் தேத்தி. 76

வே று.

சிற்சொருப மாத்திரமே சரீர மாகிச் சுகப்பிரம முனிவ னெனத் தொல்பேர் பெற்றுத், தற்சொருப மாகின்ற நின்போ லென்னைத் தானுக்க வேண்டுமெனுந் தகைமை யாலே, சிற்சொ

ருப ரகசியத்தை யெனக்கு நன்ருய்ச் செப்புகவென் றிரந்திட வத் திகழ்மெய்ஞ் ஞான, நற்சொருப மாகிவந்த புதுமை தானும் நன்குலகத் தோர்செய் தவநலமீ தன்றே. 77

என்றுபல துதிசெய்து சனக வேந்த னெழுந்துசுக முனி யடியை யிறைஞ்சி யேத்தி, இன்றுதனி யிச்சைவெறுப் புயர்வு தாழ்வொன் றுளத்துணரா துத்தமநீ யுவந்து நிற்றி, இன்று வரும் வரவெனக்கிங் கியம்பு கென்ன வியைந்தசுக முனியதற் கிங் கிறைவ கேணீ, நன்றுரைசெய் தாயென்றே யுவகை பொங்கி நகைபுரிந்திங் குளமகிழ நவிற்றல் செய்தான். 78

உற்றுவரு மாமாயை யுதிப்ப தெங்ஙனுதித்தெழுந்து விளை யாடி யொழிவ தெங்ஙன், உற்றுணர வுரையென்ன முனிவன் கேட்ப வுத்தமநீ யறியாத வேறென் றுண்டோ, பற்றுடைய மனமசைவால் மாயை தோன்றும் பரிவான மாயையினுற் சக முண் டாகும், மற்றுமனச் சங்கற்ப விகற்பத் தாலே மாருத பலவுலகும் வளருமன்றே. 79

உலேவறவே மனமடங்கி விண்போ லாகு துற்றெழுந்த மாமாயை யொழிந்து மாயுந், தலேயான மாமாயை யொழிந்தால் மோக சங்கற்ப விகற்பமறுஞ் சகம்பொய் யாகும், அலேவான மூடமறு மகில மென்னும் வாசனேபோம் பிறவியறு மாகிலாத, நிலேயான பரந்தானே யெங்குந் தானுய் நிறைந்திருக்கு மெனச் சனக னிகழ்த்தல் செய்தான். 80

அன்னவுரை கேட்டசுக முனிவ னுள்ளத் தக்கணத்தில் மெய்ஞ்ஞான வருக்கன் ரேன்ற, முன்னமல திமிரமறப் பாச பந்த மும்மாயை யிருட்டகன்று மோக நீங்கி, மன்னுசரற் கால விண்போல் மாசி லாமல் மனந்தெளிய விதையமுறு வனசம் பூப் பத், துன்னுபரஞ் சோதியெங்குந் தானுய்த் தோன்றத் தூய்ம லர்கண் முகிழ்த்திமையாத் தோற்ற மானுன். 81

அன்னநிலே யாயிரமாந் தெய்வ வாண்டங் ககலாமல் சன கனரி யணேயின் மீதே, தன்னிலேயோ டிருந்துமன மசைவு ருமற் சகலகே வலங்களற்றுத் தறிபோ லாகி, இந்நிலேயா நிர்வி கற்ப சமாதி தன்னி லிருந்துதா னெடுங்கால மேகாந் தத்தின், நன்னிலேயாஞ் சுகாதனத்திற் றற்சொருப நண்ணியிருந் திமை யாத நாட்ட மானுன். 82

அரிதான பரமார்த்தப் பொருள்வே தாந்த வகண்டபரி பூரணச் சிதானந் தத்தின், பெரிதான வாத்துமதத் துவமாய் நின்று பிரியாத துரியபதப் பேத நீங்கிப், புரிதான மாய்விளங் குஞ் சிற்சொ ரூப பூரணா னந்தமுதப் போதந் தன்னைப், பரிதா ன மாகவுண்டு சுகாநந் தத்திற் பரஞ்சோதி வடிவமுந்தன் சுபா வ மானான். 83

அத்தகையா யிரமருவுந் தெய்வ வாண்டங் ககன்றதற்பின் மெய்ஞ்ஞான வருக்க னீங்கி, வித்தகமாஞ் சமாதிவிட்டு யோக நீங்கி விழிதிறந்தான் சுகமுனிவன் வேந்தன் கண்டு, சித்தமகி ழ்ந் தடியிணையி லிறைஞ்சி யேத்தத் திகழ்முனிவன் முகநோக் கிச் சிந்தை கூரப், புத்தமுத வாரியென வினிய நன்சொல் பொ ழிந்திடுவான் சுகமுனிவன் புகல்கின்றானே. 84

மன்னவனே நீயுரைத்த வாய்மை யாலே மாமாயை யொழி ந்துமன மயக்க நீங்கி, மின்னுசக சாலமும்போய்ப் பந்த பாசம் விட்டகன்றங் காசையற்று நிராசை மேவி, அன்னமனச் சாந்தி யினால் திபான போக மடைந்துளத்தி லிளைப்பாறி யளவி லாத, வின்னமுத தாரணைபா லெல்லாம் பிர்ம்ம மெனக்கண்டே னெ னதுளத்தி லிணையில் வேந்தே. 85

வானமுதல் வாய்வனனீர் மண்பூ தங்கள் மற்றுமுள சகம் புவனம் வரைகள் மேரு; தானதிசை யருக்கன்மதி யுடுக்கள் வேலை சகலவுயிர் தாபரங்கள் சரா சரங்கள், ஊனுயிர்க ளரா ருக்க ரும்பர் தேவருள நிலதிக் குட்புறம்பு மேல்கீ ழெல்லாம், நானீபென் பதுவெல்லாம பிரம மல்லா னவிலுதற்கு வேறுள வோ நவினீ வேந்தே. 86

என்று சுக முனிவரனுஞ் சனகவேந்து மிருவருமுற் றொரு மையதா யிதைய நண்ணி, நன்றுணர்வால் மெய்ஞ்ஞானப் போ தந் தன்னை நயந்திருவ ரொத்துமொழி நயந்துபேசி, என்றுமு ணர் போதனையுஞ் சிற்சொரூப விஞ்ஞான சாதனையும் பரிவா னுன்னி, நின்றுணர்வி லிருவோரும் பேரா னந்த நிறைந்துதிரு விளையாடல் நிருத்தஞ் செய்தார். 87



## அஷ்டாவர்க்கிராகீதை.

அஷ்டாவர்க்கிர ரிஷியானவர் பதரிகாவனத்தி லிருக்கின்றகாலத்தில், பாற்கவனென்கிற முனீந்திரன் அவருக்கு நமஸ்காரஞ்செய்து, சுவாமின்! யெனக்குத் தத்துவசொரூப மறியச் சொல்லுமையா வென்று கேட்கத், தயவுண்டானவராய்ச் சமுசயமில்லாத வண்ணம் தெரியச்சொல்லுகின்றார்.

முத்தியி லிச்சையுண்டானதே யுண்மையானால், விஷயங்களிலே இச்சையை நிவிர்த்திசெய்து சமதமருசி மார்கம், தயை, சத்தியம், அமிர்தம்போல பஜனை பண்ணவேண்டும்.

நீ பிருதிவியுமல்ல, அப்பு, அக்கினி, வாய்வு, ஆகாசமுமல்ல, இவைகட்குச் சாட்சியாய் சொல்லக் காட்டப்படாத சித்துருபமாக வுன்னையறி.

சரீரத்தை வேறாக அறிந்து சிற்களையிலேயே பொருந்தியிருந்து பின்னையொன்றும் நினையாமலிருந்தால், அப்போதே பந்தம் விடுபட்டுச் சுகத்தையுஞ் சாந்தியையு மடையும்.

நீ பஞ்சபூதமுமல்ல, இந்திரியங்களா லறியப்படுகிறவனுமல்ல, நீ அசங்கன், நிராகாரன், இந்தப்பிரபஞ்சத்திற்குச்சாட்சி நீ, இனி யென்ன சொல்லவேண்டும்?

அதர்மம், தருமம், சுகம், துக்கம், மனதிலே அடக்கி, நீ கர்த்தாவுமல்லாமல், போக்தாவுமல்லாமல், எப்போதும் முக்கியமாகவேயிரு.

சகலத்திற்கும் வெதிர்த்தமாக யிருக்கிறவனொருத்தனே நீ, எப்போதும் முத்தனே; இப்படியிருந்தும், மோகத்தினால் வேறே திருக்குண்டென்று நினைத்ததே யுனக்குப பந்தமுண்டாயிற்று.

நான் கருத்தாவென்கிற அகங்கார சர்ப்பத்திற்கு ஏன் பயப்படவேண்டும்? நான் எதுக்குங் கருத்தாவல்ல வென்கிற அமிர்தத்தைப் பானம்பண்ணிச் சும்மாவிரு.

நானொருத்தனே நிச்சயமாக விமலபோத சொரூபமென்கிற அக்கினியினாலே, தொய்தமென்கின்ற காட்டைத் தகித்துச் சோகபயத்தைவிட்டுச் சுகத்தை அடைவாய், ஞானபுத்திரா!

எந்த வஸ்துவிலே ரச்சுசற்பம்போல, இந்த பிரபஞ்சங் காணப்படுகிறதோ, அந்தப் பரமானந்தமாய் பிரகாசிக்கின்ற நிசசொரூபமே நீ, அதுவே நாமென்று சுகமாயிரு.

எப்போது மாங்காரமில்லாத நீ, பெத்தனென்கிற அபிமானத்தினாலே முத்தனுமாய், மனதெந்தப்படி நினைத்ததோ அந்தப்படியாம்.

ஆத்மா வொருத்தனே, பூரணன், சாக்ஷி, சித்து, விபு, அக்கிரியன், அசங்கன், சாந்தன், இச்சையில்லாதவன், அத்தொய்தன், ஆனந்தன்; இப்படிப்பட்ட நீ, இல்லாத பிராந்தியினாலே சமுசாரியைப்போலானாய்.

இல்லாத பிராந்தியினாலே நீ பெத்தனானாய்; அந்தவாக்கிய பாவத்தைவிட்டு வுன்னைக் கூடஸ்தனென்றும் அத்தொய்தனென்று மறி.

வாரும் ஞானபுத்திரா! நீ தேக அபிமான மென்கின்ற பாசத்தினாலே கட்டுப்பட்டாய்; இனி நான் பிரஹ்மமென்கின்ற வாளினாலே, அந்த பாசத்தை யறுத்து சுகத்தை அடை.

நீ, நிர் அசங்கன், எப்போது மிச்சையில்லாதவன், சாந்தன், சொப்பிரகாசன், ஞானசொரூபன், இப்படிப்பட்ட வுனக்கு சமாதியிலே யிருப்பனென்கிறதே பந்தமல்லவோ?

இந்த விசுவமெல்லா முன்னாலே யுண்டாயிற்று, வுன்னிடத்திலே தரித்திருக்கின்றது, நீ எப்போதுஞ் சுத்த புத்த சொரூபம்; நீ இதரசிந்தை நினையாதே.

ஒரு அபேக்ஷையுமில்லாமல் விவகாரமு மில்லாமல், நிற்பயனாய் நிர்மலனாய்ச் சலனமில்லாமல், அளவில்லாத புத்தியுடனே சின்மாத்திர வாசனையைச்செய்.

* சாகரம் அசத்தியமென்றறி; நிராகாரஞ் சத்தியமென்று நிச்சயஞ்செய்; இத்தத்துவ வுபதேசத்தினால் மறுபடி சென்மத்துக் கருகனாகாய்.

கண்ணாடியில் நிழல்காண்பித்தாற்போலவும், அந்த நிழலுக்குக்கண்ணாடியே ஆதாரமானாற் போலவும், இந்த சரீரத்திலலங்கும் பரமேஸ்வர னிருந்தும் அதிலகப்படான்.

ஏகமாய், சர்வகெதமாய், இருக்கின்ற ஆகாசம் கடத்துக்குள்ளும், புறம்பும், இடையும், என்று முள்ளதுபோல, நித்தியமாயுள்ள பிரஹ்மம் சகல பூதங்களினு மிருக்கின்றது.

களங்கமில்லாமல் போதசொரூபமாய், பிரகிருதிக்கு வேறாய், சாந்தமாய், நிர்லேபனா யிருக்கின்ற நான், அய்காவய்கா! இத்தனைநாளும் மோகத்தினாலே அகப்பட்டாற்போலானேன்.

நானொருத்தனே இந்தச் சரீரத்தையுஞ் ஜகத்தையும் பிரகாசிக்கச்செய்கிறவன்; ஆகையினால், ஜகத்தெல்லாம் மென்னுடைய பிரகாசவடிவந்தானே, அப்படி யல்லவென்றாலும் நல்லதுதானே.

சரீரத்துடனே இந்தப் பிரபஞ்சம்விட்டு, நிர்ச்சலனாய்ப்பரமாத்மாவை யறிந்துகொண்டு, அதிசயமான ஆனந்தத்திலே மக்கினனாகவே யிருக்கின்றேன்.

ஜலத்திலே அலை நுரை குமிழி அபின்னமாக வுண்டாகுந் தன்மைபோல், பரமாத்மாவிலே இந்தப் பிரபஞ்சம அபின்னமாகவே வுண்டாகிறது.

நூலைவிட்டு ஆடையில்லாதது போலவே, விசாரிக்குமளவிற் சின்மாத்திர சொரூபத்தைவிடப் பிரபஞ்சமிலலவையில்லை.

கரும்பு ரசத்தினாலே யுண்டான சர்க்கரை, கரும்பு ரசமேயானாற்போல, பூரணபோத சொரூபமா யிருக்கப்பட்ட என்னாலே பிரபஞ்ச முண்டாகப்படுகிறது.

---

* சாகரம்=சம்சாரம்,

தன்னுடைய அஞ்ஞானத்தினலே ஜகத்துக்காண்பிக்கும்; தன்னுடைய ஞானத்தினலே ஜகத்துக்காண்பியாது; தன்னுடையபிரமையினலே பழுதை பாம்பாய்த் தோன்றிற்று, பழுதையென்றறிந்தால் பாம்பில்லாதது போல.

என்னுடைய சொரூபம் சொப்பிரகாசம்; இதைக் காட்டிலும் மதிகம் வேறில்லை; நான் ஆனந்தன்; ஆனபடியினலே, எவ்வாறு ஜகத்து விளங்கினலும் நானே விளங்குகின்றேன்.

மண்ணிலே கடம்போலவும், பொன்னிலே பூஷணம் போலவும், ஜலத்திலே அலைபோலவும், என்னிடத்திலே யுண்டான ஜகத்து மென்னிடத்திலே அடங்கும்.

அகோவகோ! கற்பிதமான இந்தச் ஜகத்து அஞ்ஞானத்தினலே என்னித்திலுண்டாயிற்று; சுத்தியில் ரசிதம் போலவும், சூரியப்பிரகாசத்திற் கண்ட கானற்ஜலம் போலவும், பழுதையிற்பாம்புபோலவும்.

உதயாஸ்தமனமில்லாமற் சகல ஜகத்தும் நாசமானலும், பிரமாதிஸ்தம்ப பரியந்தம் நானயிருக்கின்ற யெனக்கு நானே நமஸ்காரஞ் செய்வேன்.

அகோ வகோ! தேக காரியாயிருந்தும் போக்கு வருத்தில்லாமல் இந்த ஜகத்தை நானெருத்தனே வியாபித்திருக்கின்ற வெனக்கு நானே நமஸ்காரஞ் செய்வேன்.

எனக்கு சமமில்லாமல், அச்ச மற்றவனய், சரீரத்துடக்கு இல்லாமலிந்தப் பிரபஞ்சமெல்லா மொருத்தனகவே தரிக்கின்ற யெனக்கு நமஸ்காரம்.

அகோ வகோ! யெனக்கு இச்சிக்க வேண்டிய தொன்றுமில்லை; உண்டாயிருந்தாலும், சகலமும் யென்னுடையதாகவே பிரத்தியக்ஷமா யறிகிறேன்; இப்படிப்பட்ட யெனக்கு நானே நமஸ்காரம்.

அறிகிறதும், அறியப்பட்டதும், அறிகின்றவனும், இந்த மூன்றும் சகதிருஷ்டியினலே பார்க்கின்ற காலத்திலில்லை; அஞ்ஞானத்தினலே உண்டென்கின்ற தெல்லாம், நிரஞ்சனனனபடியினலே நானகவே யிருந்தேன்.

அஹோ வஹோ! தொய்த மூலாஞ்ஞானம் துக்கம்; அதற்கொரு மருந்துண்டு; அஃதியாதெனின், திரிசிய மெல்லாம் பொய், நான் சித்ரூபமான அமலனென் றறிகின்றதுவே.

நான் ஞானமாத்திரம்; இந்த உபாதி யெனக்கு அஞ்ஞானத்தினு லுண்டாயிற்றென்று சிந்திக்கின்ற விசாரமே யெனக்கு நிருவிகற்பத்திலே யிருக்கின்றதாயிற்று.

அஹோ வஹோ! இந்த விசுவமெல்லாம், என்னிடத்திலே தானே இருக்கின்றது? எதார்த்தமாக இல்லை; எனக்குப் பந்தமுமில்லை, மோட்சமுமில்லை, நான் நிருமலனுனபடியினுல் ஒன்றினும் பற்றுதலுமில்லை, பிரமையுமில்லை.

இந்தச் சரீரமுஞ் ஜகத்து மெனக்குச் சற்றுகிலும் நிச்சயமாகவில்லை; சுத்த சின்மாத்திரமான ஆத்மா நான் தானே, ஆகையினு லொருகற்பனையு மெனக்கில்லை.

சரீரம் சொற்க நரகம்,பந்த மோட்சம், சிந்தை, பயஞ்சுகம், இது வெல்லாங் கற்பனுமாத்திரம்; இதனுடைய காரியம், சச்சிதாநந்தமான எனக்கு எம்மாத்திரம்?

அஹோ வஹோ! தொய்த மில்லாத எனக்கு ஜனமத்தியிலேயுஞ் ஜனங்களில்லாத காடுபோல வேறே நான் என்ன இச்சிக்கப் போகிறேன்?

நான் சரீரமுமல்ல, எனக்குச் சரீரமுமில்லை, நான் ஜீவனுமல்ல, நான் சின்மயன்; இதுவே தெளிவு, ஆகையினுலே, நாசமடைகிற ஜீவன் இச்சை யேன் செய்யவேண்டும்?

ஆனந்தசமுத்திரமா யிருக்கின்ற யென்னிடத்திலே சித்தமென்கின்ற வாயுவினுலே நானு புலன்களென்கின்ற அலைகள் விசித்திரமாகக் கற்பிக்கப்பட்டது.

ஆனந்த சமுத்திரமா யிருக்கின்ற யென்னிடத்திலே மனதென்கின்ற வாயுவடங்கினுல், ஆனியுண்டான சீவவியாபாரி ஜகத்தென்கின்ற ஓடத்துடனே கூடி அமிழ்ந்திப்போனுன்.

ஆனந்த சமுத்திரமாயிருக்கின்ற வென்னிடத்திலே, சீவ னென்கின்ற அலேயுண்டா யிருந்தும், அடங்கிப்போகிறது அதி னுடைய சுபாவமென நினைக்கவேண்டும்.

ஆத்மாவொன்றே நாசமில்லாத தென்றறிந்து, பிரஹ்ம ஞானதீரனுயிருக்கின்ற வுனக்கு விருதா விருதா அபேக்ஷையே னுண்டாம்?

அகோ வகோ! தன்னுடைய அஞ்ஞானமகிமையினலே விஷ யங்களிலே பிரமை தோன்றிற்று; கிளிஞ்சலானது ஞானமில்லா தவனுக்கு வெள்ளியென்று ஆசை தோன்றினற்போல.

சமுத்திரத்திலே அலே தோற்றப்படுகிறதுபோல், எந்தவஸ் துவிலே இத்தவிசுவந் தோன்றப்படுகிறதோ, அந்தவஸ்து நீயா யிருந்தும் அதின் விருத்தியினலே ஏன்தாபப்படுகின்றுய்?

தன்னே மனேகரமான சுத்தசைதன்னியமென்று கேட்டும், பிறக்கிறது மிறக்கிறதுமான பந்தத்தினலே பாவத்தையடை கிற மநுடன் தன்னுடைய அஞ்ஞானம் தெரியமாட்டாமல் விருதாவிலே கெட்டுப்போகிறுன்.

சகல பூதங்களிலேயுந்தானே இருக்கின்றுன்; பூதகணங்க ளெல்லாந் தன்னிடத்திலே இருக்கின்றது; இவ்வாறிருந்தும், முனீஸ்வரரே! அறிவிலலாத பேயன்தான் வேறென்று நினேப் பான்.

பரமார்த்த அத்தொய்தத்தை மனதிலே விசாரித்து, மநு டன் கருமவசனுய், அந்தோ! ஏன் சலனப்படப்போகிறுன்?

விபரீத ஞானமென்கின்ற சிநேகத்துடனே கூடி மந்தப் புத்தியையுடையான் சத்துவங்கெட்டு யென்னேரமுங் காமமே இச்சிப்பன்; நல்ல புத்தியுண்டாவன் அதைத் திரணமாக மன திலே நினேப்பன்.

இகலோக பரலோக பலத்தியாகமும், நிர்மலசித்தமும், நித் தியாநித்தியவஸ்து விவேகமும், உண்டானவனுக்கு மோக்ஷசிந் தையே அதிகமாம்.

தயிரியமுண்டானவன் போகத்தையடைந்தாலும், அனேக துக்கத்தை யடைந்தாலும், தன்னை நன்ருக வேறென்றறிந்து சந்தோஷமுங் கோபமு மில்லாமலே யிருப்பன்.

ஆத்ம ஞானியானவன் தன்னுடைய தேகத்தை யன்னியமாய்ப்பார்த்துத் துதிநிந்தைகளிலே சந்தோஷமுங் கலக்கமுமில்லாதிருப்பன்.

உற்பத்தியுண்டான இந்தத் திரிசியத்தைச் சகசமாகப் பாரான்; இது ஆகுமென்றும் இது அல்லவென்று மொன்றையும் நினையான்.

மனதிலே இச்சையில்லாமல் ஞாநாமிர்தத்திலே திருப்தி யடைந்த மகாத்மாவுக்குச் சரியாக வொருத்தருமில்லை.

நினைப்பெல்லாம்விட்டு நிர்த்தொந்தனாய், ஞானசீலனாய் இருக்கின்றவனுக்குத் தனக்குத்தானே வந்தபோகத்திலே சுகதுக்கங்களில்லை.

ஆத்மஞானியாயிருக்கின்ற தீரன் அதிபோகங்களை அநுபவித்துக்கொண்டிருந்து, மூடஜனங்களுடனேகூடிக் கோரசமுசாரமென்கின்ற நதியிலே அமிழ்ந்திப்போகான்.

எந்தப்பதத்தை யடையமாட்டாமல், பிரம இந்திராதிதேவதைகள் அத்தியந்த தயினியர்களா யிருப்பார்களோ அப்படிப்பட்ட பதத்தை யடைந்தும் யோகீஸ்வரனானவன் அதில் சந்தோஷமடையான்.

பிரஹ்ம ஞானியைப் புண்ணியபாவ பலன்கள் தொடரமாட்டாது, நிர்மலாகாசத்தைப் புகைதொடராததுபோல.

இந்த விசுவமெல்லாம் ஆத்மாவாகவே யறிந்த மகாத்மா எப்படி நடந்தாலும் அவருக்கு விதிநிஷேதஞ் சற்றுமில்லை.

பிரமாதிஸ்தம்ப பரியந்தமான சதுர்வித தோற்றங்களிலேயுஞ் சற்றும் பிரியாப்பிரிய மில்லாமல், ஞானி சுகமாகவே சஞ்சரிப்பன்.

ஞானத்தொய்தன், ஜகத்துக்கெல்லாம் நானே ஈஸ்வரனென்றறிந்து திடநிச்சயனாய், அதைவிடாம லிருக்கின்றவனுக்கு நானாபவ பந்தபயம் வராது.

நீ விமலன்; உனக்கொரு சங்கமுமில்லை; இந்தப் பிரபஞ்ச மெல்லாம் விடவேண்டுமென்று நினைத்தால், பிரஹ்மத்தினிடத்தில் லயமாகவேண்டும்.

உன்னாலுண்டான ஜகத்து சமுத்திரத்திற் குமிழிபோலென்றறிந்து, உன்னை வொருத்தனாகவே பாவித்துப் பரதத்துவத்திலே லயமடையவும்

பிரத்தியக்ஷமாக இருந்தும், பார்க்க அசத்தியமாய்ப்போகிறதாகையால், ஜகத்தே உன்னிடத்தில் இல்லை; அதெப்படியென்றால், ரச்சு சர்ப்பம்போல; ஆகையால், அதைவிட்டு லயத்தை யடையவும்.

சுகதுக்கம் வந்ததிலும் ஆசைநிராசையிலும், நெருங்கிவந்த, மிருத்துவினிடத்திலுஞ் சமனாய் லயத்தையடையவும்.

நான் ஆனந்தன்; ஆகாசத்தை மேகம்மூடினாற்போல், இந்தச் ஜகத்து என்னைமூடிற் றென்கின்ற விஞ்ஞான யுத்தனான வுனக்கு, விடுகிறது கிரகிக்கின்றது லயம் இது மூன்றுமில்லை.

நான் மகாசமுத்திரம்போலே யிருக்கின்றவன், இந்தப் பிரபஞ்சம் அலைகள்போலே காணப்படுகிற தென்கின்ற விஞ்ஞான யுத்தனான வுனக்குத், தியாகமுமில்லை, கிரகிக்கின்றது மில்லை, லயமுமில்லை.

நான் சுத்திபோலே யிருக்கின்றேன், என்னிடத்தில் இந்தச் சகத்து ரசிதம்போற் றோன்றுகிறதென்கிற விஞ்ஞானயுத்தனான வுனக்கு, விடுகிறது கிரகிக்கின்றது லயம் இந்த மூன்று மில்லை.

நான் சகல பூதங்களிலேயும் இருக்கின்றேன்; என்னிடத்திற் சகல பூதங்களு மிருக்கின்றன என்கின்ற விஞ்ஞான யுத்தனான வுனக்கு, விடுகிறது கிரகிக்கின்றது லயம் இந்த மூன்று மில்லை.

ஆனந்தமாய் மகாசமுத்திர மென்னப்பட்ட என்னிடத்திலே விசுவமென்கின்ற ஓடம் மனதென்கின்ற வாயுவினாலே யெப்பொதுந் திரிகின்றது; பார்க்குமிடத்து பேர்மாத்திரமே பலவாமல் சற்றுமில்லை.

ஆனந்தமாய், மகாசமுத்திர மென்னப்பட்ட என்னிடத்தில், பிரபஞ்சமென்கின்ற அலைகள் உற்பத்தி லயத்தை யடைந்தா லடையப்படும்; எனக்குற்பத்திநாசமில்லை.

ஆனந்தமாய், மகாசமுத்திரமென்னப்பட்ட என்னிடத்தில், பிரபஞ்ச மென்கின்றது கற்பனையென்றறிந்து, சாந்தனு யெப்போதும் நிராகாரனுகவே யிருப்பேன்.

பிரஹ்ம சத்தை யல்லாமல் பாவமேயில்லை; அந்தபிரஹ்மம் நிரஞ்சனமாய் ஆனந்தமா யிருக்கிறதென்று இச்சையிலே ஆசக்தியில்லாமல் நான் உபசாந்தியடைந் திருக்கின்றேன்.

அகோ வகோ! நான் சின்மாத்திர சொரூபன்; நானே யிந்தஜகத்து; இந்திரசாலம்போலே யிருக்கின்றது; இப்படி நிர்லேபனுன எனக்குக் கிரகிக்கிறது விடுகிறதென்கிற கற்பனையே யில்லை.

திரிசியத்திறு் சித்தமுண்டானுல், அப்போது பந்தமுண்டாம்; திரிசியத்தில் மனமில்லாவிட்டால், அப்போது முத்தி யுண்டாம்.

எப்போதானுலென்ன? சிந்திக்கிறதும், இச்சிக்கிறதும், அங்கலாய்க்கிறதும், கிரகிக்கிறதும், விடுகிறதும், சந்தோஷிக்கிறதும், துக்கிக்கிறதும், தயிரியமில்லாமற் போகிறதும், உண்டாகிறதோ, அப்போது பந்தப் பிராந்தியாம்.

எப்போதானுலென்ன? மனதிலிச்சிக்காமல், தயிரியப்படாமல், சந்தோஷ துக்கமில்லாமல், ஜீவசலன மில்லாமல், கோபமில்லாமலிருக்கிறதோ, அப்போது முத்திப் பிராப்தமாம்.

எப்போதானுலென்ன? நானென்கின்ற தில்லாமற் போகின்றதோ, அப்போதே மோக்ஷம்; நானென்கின்றதே பந்தம்; விவேகியானவானிதையறிந்து வொன்றைக் கிரகிக்கிறதுமில்லை, விடுகிறதுமில்லை, இச்சையில்லாதவனுனபடியினுலே.

செய்தாலும், செய்யாம லிருந்தாலும் தொந்தங்களிலே சாந்தமெவன் அடைகின்றுனோ, அந்தப்படி நீயும் எப்போதுந் தியாகபரனுயிருக்கின்ற விரதமாயிரு.

இந்தச் சகத்து, அத்தியந்தஞ் சஞ்சலம், நிஸ்சாரம், அநித்தியம், தாபத்திரயங்களினால் தூஷிக்கப்பட்டது, துக்க ரூபமென்று நிச்சயித்து சாந்த மடையவும்.

காலமும், வயதும், தொந்தமும், தனக்கெப்படி யுண்டாமென்று சித்தியடைந்த தத்துவஞானி, சுயேச்சையாக சஞ்சரிப்பன்.

என்தகப்பனே கேள்! எவனுக்கானாலென்ன? இந்த லோக பிரவர்த்தனை, பார்க்கின்றபோது சீவனத்தின்மேலே சிந்தையும், போகத்தின்மேலே இச்சையும், இல்லாமலிருக்கின்றதே மகா ஆச்சரியம்.

எதீஸ்சுராளுக்கும் யோகீஸ்சுராளுக்கும் மதங்கள் நானாவிதமாகவிருக்கும்; அதுவெல்லாம் பார்த்து மநுடனானவன் வேதனையில்லாமற் சாந்தியடையாம லிருப்பானோ?

தேகதத்துவ மெல்லாமறிந்த சேதனத்துக்குக் குரு யாதுக்கென்றறிந்த மனுடன், தன்னைச் சேர்ந்தவனை தரிக்கவே பண்ணுவான்.

பஞ்ச பூதத்திலே கற்பிக்கப்பட்ட விகாரங்க ளெல்லாம், புத்தியினாலே நன்றாக அறிந்து, தொந்தங்களை நீ விட்டதேயுண்டானால், சோதி சொரூபஞானம் உனக்கு இப்போதே யுண்டாம்.

வாசனையே சமுசாரம்; வாசனை யடங்கினதே முத்தி; ஆகையினால், வாசனையை யடக்கி யதார்த்தமாக இருக்கின்றவனே மகாத்மா.

அர்த்தமானது, அனர்த்த மூலம், மாயா சொரூபம், அதினுஞ்சத்துரு, காமம், இது இரண்டும் விருதா வென்று முற்றும் விட்டு, எப்போதும் இதை அனுதரவுசெய்யவேண்டும்.

க்ஷேத்திரம், கிரகம், சிநேகிதாள், பாரி, தன சம்பத்து இதுமுதலானதெல்லாஞ் சொற்பன மாத்திரம்; இந்திர ஜாலம் போலே இன்றைக்கோ நாளைக்கோ தெரியக்கூடாது.

எதின் எதின் பேரிலாசை யுண்டாகிறதோ, அது அது சமுசாரம்; அதற்குத்திட வைராக்கியம் அடைந்து, ஆசையை விட்டுச்சுகத்தை யடையவும்.

ஆசையே பந்தம், ஆசைவிடுகின்றதே மோக்ஷம்; ஆகையால் ஆத்ம ஞானிக்கு ஆசைவிட்டதே சந்தோஷம்.

நீ நித்திய சேதனன்; ஜகத்து அசத்துச்சடம்; உனக்கவித்தையு மில்லை, ஆசையு மில்லை, நிர்மலன்.

இராச்சியம், புத்திர களத்திரம், சுகங்கள் முதலானது சரீரம் விடுகின்றபோது சங்க மாயிருந்தவனுக்குச் சென்மத்திற்கு துக்கமே கொடுக்கும்.

அர்த்தம், காமம், சுகிர்தங்கள் முதலானதும் போதும் போதும்; இதனாலே சமுசாரதாபம் விடாமல் மனது சாந்தியு மடைய மாட்டாது.

மனவாக்குக் காயங்களினாலே நான் இச்சைசெய்து, ஆயாசமும், துக்கமுங் கொடுக்கின்ற கன்மம் நான் ஒருக்காலுஞ் செய்கின்றதில்லையென்று நிச்சயித்து நித்திய சுகத்தை யடையவும்.

பாவா பாவமில்லாமல், பரமாத்மாவான வஸ்த்து சுபாவமாகவே பிரகாசிக்கிற தென்றறிந்த மகாத்துமா, ஒருவிகாரமும் ஒரு விசாரத்தையும் அடையாமற் சுகிப்பன்.

ஈஸ்வரனே சகலத்தையும்நிர்மிக்கின்றவன்; அவரைத்தவிர சற்றாகிலும் இல்லை, இது நிச்சய மென்று, சகல ஆசையையும் முற்றும் விட்ட பரம சாந்தன் பந்தத்தை யடையான்.

ஆபத்து வந்தாலும், சம்பத்து வந்தாலும், தெய்வ யெத்தனமென்று திருப்தனாய் ஜிதேந்திரியனாயிருக்கின்றவன், சுகதுக்கங்களிலே யகப்படான்.

சுகதுக்கம், சென்மம், மிருத்து தோன்றினாலுந் தெய்வயெத்தன மென்று மெய்யாக அறிந்து யத்தனமும் ஆயாசமும் மில்லாமற் கருமஞ் செய்தாலுங் கருமபலத்தை யடையான்.

சிந்தையினாலே துக்கம் வருமே யல்லாமல் துக்கத்துக்கு வேறே வர ஏது வில்லை; ஆகையினால், சிந்தையை விட்டு இச்சையிலே அகப்படாமற் சாந்தனானவன் திடசுகத்தையடைவன்.

நான் தேகமுமல்ல, எனக்குத்தேகமுமில்லை, என்றறிந்தவன் ஒரு காரியஞ் செய்ததும், செய்யாததும், இரண்டும் நினையாமற் கேவலம் சுகத்தை யடைவான்.

பிரஹ்மாதிஸ்தம்ப பரியந்தம் நானே என்னும் திடநிச்சயாத்மக விர்த்தியையுடையவன் பிரார்த்தி யபிரார்த்தி பலத்திலே அகப்படான்.

வெகுவிதமாய் ஆச்சரியமா யிருக்கின்ற இந்தப்பிரபஞ்சமெல்லா மொன்று மில்லை யென்று பயம் விட்டுப் போயிருக்கின்றவன், வாசனையிலே அகப்படாமற் சுத்தஞான சொரூபனாகவே இருப்பன்.

* தேகமானது சிறிது காலங்கிரியா ரூபமாயிருக்கும்; அதின் பிறகு வார்த்தை சொல்லிக்கொண்டிருக்கும்; அதின் பிறகு சிந்தனை செய்யும்; அது யெப்படி யிருந்தாலும் நான் அப்படியிருந்தேன்.

பிரீதியில்லா திருந்தால் ஆத்மாவுக்குச் சத்தாவிருத்தியில்லை; அதிசயமானபடியினாலே அதை அறிந்து யேகாக்கிர சித்தனாய் நானென்றும் அறியாம லிப்படியே யிருக்கின்றேன்.

ஆச்சிரமம், அனாச்சிரமம் இல்லாத தியான நிஷ்டையிலே சித்தத்தில்ல தாரணையும் முற்றும் விட்டு, ஒரு விகற்பமுமில்லாமல் ஒருத்தனாய்ச் சுகமாய் நானிப்படியே யிருக்கின்றேன்.

சிந்திக்கப்படாத வஸ்துவைச் சிந்திக்கின்றே னென்கின்றவனே சிந்தையுடனே கூடினவன்; அந்த ஆயாச பாவனையை விட்டு நானிப்படியே யிருக்கின்றேன்.

இப்படி எவனாலே அநுபவிக்கப் பட்டதோ, அவனே கிருதார்த்தன்; இப்படிப்பட்ட சுபாவமுண்டானவனே மகாபுத்தி யுண்டானவன்.

---

* தேகம்=ஈண்டு அவித்தியா சகித அந்தக்கரண விர்த்தி.

தன் ஐஸ்வரியங் கௌபீன முதலாய், இல்லாததாகையால், தியாகந்தான மிரண்டும் விட்டு நான் யிதரசுகத்தை அடைந்திருக்கின்றேன்.

பார்க்கிறது யெதையாகிலும் பார்க்கட்டும், சிங்நுவை யெதையாகிலு மிச்சிக்கட்டும், சித்தம் யெதையாகிலுஞ் சிந்திக்கட்டும், இதற்கெல்லாம் வேறாய், தத்துவத்திலே நான் சுகித்துக் கொண்டு இதரசுகமாயிருக்கின்றேன்.

நான் செய்ய வேண்டிய தொன்றுங் காணே னென்கின்ற நிச்சயத்தினாலே, ஒன்றிலு மிச்சையில்லாமல், தனக்குத்தானே வந்ததாகையினாலே, நானென்கின்ற அபிமான மில்லாமல் புசித்துச்சுகமாக விருக்கின்றேன்.

தேகாபிமானமுண்டான யோகி, கருமபந்தத்தினாலே கட்டுப்படுவன்; அப்படி வியோகம் அபியோக மிரண்டு மில்லாமல் நான் சுகமாயிருக்கின்றேன்.

எப்போதும் பந்தமில்லாமலிருக்கின்ற எனக்கு, அருத்தமுமில்லை, அனர்த்தமுமில்லை; நடக்கும்போதும், இருக்கும்போதும் நித்திரை செய்யும் போதும், நான் இதரசுகமா யிருக்கின்றேன்.

போகும்போதும் எனக்கு ஆனியுமில்லை, எத்தனம்பண்ணுகின்றதிலே எனக்குச் சித்தியுமில்லை, ஆகையால் நஷ்டமும் லாபமுமில்லாமலே யிதரசுகமா யிருக்கின்றேன்.

சுகமுதலான ரூபாதிகளுடைய பாவம், விசாரித்துப் பார்த்து அதிலே சுபா சுபங்கள்விட்டு நான் இதர சுகத்தை அடைந்திருக்கின்றேன்.

பாவமெல்லாம் அஞ்ஞான பாவ மென்றறிந்து நித்திரையிலேவிழித்திருக்கின்றாப்போல், சமுசார மில்லாமலே இருக்கின்றேன்.

தானமேது, சினேகிதாளேது, விஷயமேது, சாஸ்திரமேது, விஞ்ஞானமேது, இதுகளுடைய மகத்துவ மெல்லாமறிந்து வாஞ்சைவிட்ட யெனக்கு.

சாக்ஷி புருஷனைப் பரமாத்மாவான ஈஸ்வரனை யறியும் போது, பந்தமோக்ஷமிரண்டு மில்லாதே போயிற்று; முக்திக்காகச் சிந்தனை ஏதுக்கு?

உள்ளே ஒருவிகற்பமுமில்லாமல், வெளியிலே இதர இச்சையாகச் சஞ்சரித்துக் கொண்டிருக்கின்றவனுடைய சுபாவத்தை, அப்படிப்பட்டவன் அறிவானே யல்லாமல் பின்னையொருத்தன் அறியமாட்டான்.

உள்ளபடி மகாத்மாவினுடைய தத்துவ உபதேசத்தினாலே தத்துவ புத்தியுண்டானவனைக் கிருதார்த்தனவன்; தானாக ஜீவ பரியந்தம் விசாரித்தாலும் அறியமாட்டான்.

விஷயத்தை விட்டதே மோக்ஷம்; விஷயத்திற்கூடுகின்றதே பந்தம்; இதுவே விசேஷ ஞானம், இதிலே உனக்கு யெப்படித் தோன்றிற்றோ, அப்படியே செய்.

நன்றாகப் பேசுகின்றவன், பிரக்ஞை யுண்டானவன், நன்றாக உத்தியோகம் செய்கின்றவன், இப்படிக்கொத்தவனை ஊமைபோலவும், பேயன் போலவும், இப்படிச் செய்யும் தத்துவ ஞானம், அவனைப் பிராகிருதாள் தங்களிலே கூட்டார்கள்.

நீ சரீரமுமல்ல; உனக்குச்சரீரமுமில்லை; நீ கருத்தாவுமல்ல, போக்தாவுமல்ல ; நீ விசுவசாக்ஷி ; நீ சித்துரூபன் ; ஆசையில்லாமற் சுகமாயிரு.

இராகத்துவேஷம், மனோதர்மம்; உனக்கு மனதுமில்லை; விகற்பமுமில்லை; நீ போதசொரூபன்; ஆகையால் விகாரமில்லாத சுகத்தை அடை.

பூதங்களிலே தானிருக்கின்றே னென்றும், தன்னிடத்திற் பூதங்களிருக்கிறதென்று மறிந்து, அகங்காரமும் மமதையும் விட்டு சுகத்தை யடையவும்.

சமுத்திரத்திற் தோன்றும் றிவலைகள்போல் எந்தவஸ்துவிலே இந்த ஜகத்துத்தோன்றிற்றோ அந்த வஸ்துவே நீ; நீயே ஞானசொரூபன்; இதுவே சத்தியம்; உன்மனதிலே தாபத்தை விட்டு விடு.

தகப்பனே! நன்றாகத்திரிவித கரணத்திலும் விசுவாசம் வை; இதிற் சமுசயமில்லை; நீ சின்மாத்திர சொரூபன்; பகவந்தனன்; நீ மாயைக்கு அப்பாற்பட்ட ஆத்மா.

சரீரங் குணங்களோடு கூடினது; வருகிறதும் போகிறது மாயிருக்கும்; ஆத்மா போக்குவருத்தற்றது; இதிலே ஏன்விசா ரப்படவேண்டும்? தேகங் கற்பாந்திரமா இருக்கட்டும், அல்லது இப்போதே போகட்டும், சின்மாத்திர சொரூபமாயிருக்கின்ற உனக்கு ஆனிலாபமில்லை.

ஆனந்த சமுத்திரமாயிருக்கப்பட்ட உன்னிடத்திலே, ஜகத் தென்கின்ற அலையுண்டானாலும் லயமுண்டானாலும், உனக்கு ஆனிலாப மில்லாமலே இருப்பாய்.

தகப்பனே! சின்மாத்திர சொரூபமா யிருக்கின்ற உனக்கு, ஜகத்துச்சின்மாத்திர சொரூபமே யல்லாமல் வேறல்ல; இப்ப டிப்பட்ட உனக்கு, வற்சிதம் அவற்சிதம் யெப்படி வரப்போகி றது?

ஒருத்தனாய், அவ்வியனாய், சாந்தனாய், சிதாகாசமாயிருக் கின்ற உனக்குச் சென்மமுமில்லை, கருமமுமில்லை, அகங்காரமு மில்லை.

நீயெதைக் கண்டாலு மதிலே நீ யொருத்தனே தோன்று கின்றாயல்லாமல், உன்னைத்தவிர எதுவும் இல்லை. சொர்னத்தை த்தவிரப் பூஷணம் வேறல்லாததுபோல.

இவனவனானது இதுவென்கின்ற விகாரமெல்லாம் விட்டுச் சகலமும் ஆத்மாவே யென்கின்ற நிச்சயத்தினாலே சங்கற்ப தே சில்லாமற் சுகமாயிரு.

உன்னுடைய அஞ்ஞானத்தினாலே ஜகத்துண்டாயிற்று; பர மார்த்தனாக நீயொருத்தனே சஞ்சரி; ஆகையால், சமுசாரியும் அசமுசாரியும் நீ யொருத்தனே.

இந்தப் பிரபஞ்சம் பிரமை மாத்திரமே யல்லாமல் வேறொ ன்றுங் காணேன்; ஆகையால், நீ யொருவாசனை யோடுங் கூடா மற் சின்மாத்திரமாய்ச் சுகமாயிரு.

தம்பி! நீ யொருத்தனே சமுசார மென்கின்ற சமுத்திரத் திலே முன்னு மிருக்கின்றாய் இப்போது மிருக்கின்றாய் இனி மேலுமிருக்கப் போகின்றாயாகையால் உனக்கு பந்தமோக்ஷங் களே யில்லை; நீ கிருத கிருத்தியனே|சரி.

சின்மயமா யிருக்கின்ற சித்தம் சங்கற்பங்களினாலே அலைப்பிக்காமல், அகங்காரம் விட்டு ஆனந்த சொரூபமாய்ச் சுகமாக யிரு.

நீ யெச்சரிக்கையாயிரு ஒன்றும் மனதிலே நினையாதே; சத்தியமாய்ச் சொல்லுகின்றேன், நீயே ஆத்ம சொரூபம்; நீயே முக்தன்; இனி அறிகின்ற தென்ன ?

தகப்பனே! தினந்தோறும் நானாசாஸ்திரம் பார்த்தாலும், கேட்டாலும், சொன்னாலும், உனக்குச் சாந்தி வரப்போகிறதில்லை; ஆனபடியால், மனதிலே நினைக்கின்றது மறந்தாலொழிய, சித்தத்திலே இச்சையானது விட்டு நிர்மல ஞானியாக யிருந்துக் கொண்டு கர்மஞ்செய்தாலும், யோகத்திலே யிருந்தாலும், சமாதியிலே யிருந்தாலும் நல்லது.

ஆயாசத்தினா லுண்டாகும் துக்கம் சகலமும் இராகவசமாயிருக்கும்; இதை மூடன் அறியான்; விவேகியானவன் ஆயாசமில்லாமல் நாசமில்லாத பதத்தை யடைவான்.

நிமிஷா நிமிஷமானாலும் வியாபாரம் விட்டு துக்கமில்லாமலெவனிருக்கின்றானோ அவனுக்குச் சுகமுண்டு; வியாபாரத்துடனேகூடினவனுக்கு ஒருக்காலுஞ் சுகமில்லை.

இது செய்தேன் செய்ய வில்லை யென்கின்றதே தொந்தம் இது எப்போது மனதிலே இல்லாமற் போயிற்றோ, அப்போது அந்தமனதுக்குத் தருமாதரும கருமமோக்ஷங்களுமில்லை.

விரக்தன் விஷயங்களுடனே கூடான்; ராகியானவன் விஷயங்களைப் போகிப்பான்; பந்த மோக்ஷமிரண்டு மில்லாதவன் ராகியுமல்ல விரக்தனு மல்ல.

தள்ளுகிறதிலும் கிரகிக்கிறத்திலும், நினைவு எம்மட்டும் இருக்குமோ, அம்மட்டும் ஞானத்திற்கு ஆனியுண்டு; அதுவே சமுசார விருக்ஷத்திற்கு முளை.

பிரவிர்த்திகளிலே ராகாதிகளுண்டாம் அதையறிந்து சிசுபோலே தொந்தங்களில்லாமற் சுகமாயிரு.

ராகமுண்டானவன் துக்கநிவர்த்திக்காக சமுசாரம் விடவேண்டுமென்று நினைப்பான்; ராகமில்லாதவன் துக்கமில்லாமலே யிருந்து சமுசாரம் விடவேண்டுமென்கின்ற நினைவேயடைவான்

தேகத்திலேயும், மோக்ஷத்திலேயும் யாவனொருவனதென்கிற ்துவ மிருக்கின்றவன் யோகியுமல்ல, ஞானியுமல்ல, அவன் ணும் துக்கமும் பந்தமு முண்டானவன்.

அரி யர பிரமாதிகளுனக்கு உபதேசங் கொடுத்தாலும், மனதிலே சகலமும் மறவாதேபோனு லுனக்கு லாபமில்லை.

திருப்தியடைந்தவன், இந்திரிய செயமுண்டானவன், ஆசை ாத தத்துவசமனன், ஏகாங்கியாய் யாதொருத்த னிருக் றனோ, அந்த ஞானி ஒருத்தருக்கு மெட்டப்படாத யோக ா பலத்தை யடைவான்.

இந்த ஜகத்திலே தத்துவ ஞானியானவன், விஞ்ஞானங் ிலே சற்றுகிலுந் துக்கத்தை யடையான்; அப்படிப்பட்ட ்தனுலே, இந்தப் பிரமாண்ட மண்டலம் பூரணமாக விருக் ுது.

ஆத்மராமனு யிருக்கின்றவனை விஷய சுகஞ் சந்தோஷிப் மாட்டாது; அது எப்படி யென்றால், நல்ல கொழுந்துகள் ின்ற யானையை, வேப்பங் கொழுந்துகள் சந்தோஷிக்கப் ணமாட்டாதது போல.

அடையப்பட்ட போகங்களிலேயும், அடையப் படாத ங்களிலேயும், எவன் ஆசத்தியில்லாம லிருக்கின்றானோ, ன இந்த ஜகத்திலே கிடையாதவன்.

சமுசாரியானவன் எப்படி போகம் எப்போ வருமென்று த்திருப்பானோ, அப்படியே முமூட்சு மோக்ஷ மெப்போ மன்று இச்சிப்பன்.

போக மோக்ஷ மிரண்டிலு மிச்சையில்லாதவனே சாக்ஷாத் ான பிரஹ்மம்; அவனே மகாத்மா.

தருமார்த்த காமமோக்ஷங்களிலும், ஜீவத்துவத்திலும் மிரு த்துவத்திலும், கிரகிக்கிறதிலும், விடுகிறதிலும் இச்சை ாமல் எந்தத் தயிரியபுருஷனிருக்கின்றானோ, அவன் இந்த த்திலே கிடையாதவன்.

இந்த விசுவமெல்லாம் லயமானாலும், சந்தோஷமில்லாமல், ்திருந்தாற் றுக்கமு மில்லாமல், இப்படி மகாசுகத்தை

அடைந்த தீரன், ஒருத்தனாகவே சஞ்சரிப்பன்; அப்படிப்பட்ட ஞானத்திலே கிருதார்த்தன் ஆசையில்லாத புருஷன்; புத்திவிகற்பமெல்லாம் விட்டுப் பார்க்கும்போதும், கேட்கும்போதும், கிராணமறியும்போதும், ரசனையறியும் போதும், ஊறுகின்றதறியும்போதும், எதார்த்த சுகத்தை அடைந்தே யிருப்பன்.

சமுசார சாகரத்தைக் கடந்திருக்கின்ற யோகிக்கு, விரக்தியுமில்லை, சந்தோஷமு மில்லை, இந்திரியப் பிரவிர்த்தியுமில்லை, திருஷ்டியுமில்லை.

நித்திரையுமில்லை, சாக்கிரமுமில்லை, கண் மூடுகின்றது மில்லை, திறக்கின்றது மில்லை; ஒகோ! இப்படிப்பட்ட வவஸ்தை முத்தி சேதனனுக்கே சொல்லும்

ஒருத்தனை நிந்திக்கிறதுமில்லை, புகழ்கிறது மில்லை, சந்தோஷமுமில்லை, கோபமுமில்லை, கொடுக்கிறது மில்லை, வாங்குகிறது மில்லை, இப்படி யொன்றிலும் ஆசையில்லாதவன் ஜீவன் முக்தன்.

ஜீவன் முக்தனான மகாத்துமா, பிரியவஸ்துவிலே சந்தோஷியான்; மிருத்து கிட்ட வந்தாலுங் கலக்கப்படான்; எப்போதும் யெதார்த்தமாகவே யிருப்பன்.

சர்வத்திர சமதிருஷ்டியுண்டான தீரனுக்கு, புருஷனிடத்திலும் ஸ்திரீயினிடத்திலும், சுகதுக்கம், ஆபத்துச் சம்பத்துகளினும், ஏற்றத்தாழ்ச்சி யில்லாமற் சுகமாக இருப்பன்.

சமுசார ஜீரணமான புருஷனுக்கு இமிசையுமில்லை, தயையுமில்லை, கிருபையு மில்லை, ஈனத்துவமுமில்லை, சந்தோஷமுமில்லை, துக்கமுமில்லை.

சித்தமெதிலுங்கூடாத சிற்சொரூபன் விஷயமுண்டானவனுமல்ல, இல்லாதவனுமல்ல, பெத்தனுமல்ல, முத்தனுமல்ல, பிராப்தியானதிற் சந்தோஷமுமில்லை துக்கமுமில்லை.

சமாதான மில்லாமற் சூனியசித்தனான புருஷன் மோக்ஷம் வந்து முன்னே நின்றாலு மறியான்.

மோகம், அகங்கார மில்லாமற் சகலத்தையும் விட்டு விட்ட ·· -ஷீஸ்வரன், ஏது செய்தாலு மதின் பலத்தை யடையான்.

மனதில்லாதவனாய், மோகஞ் சொற்பன செடத்துவமில்லா தவனா யொவ்வொரு மகா புருஷன் மஹாத்மத்தை யறிந்து லோகத்திலே சஞ்சரிப்பன்.

எவனுக்கு எந்தமட்டில் ஞான முதயமாகிறதோ, அவ்வள வுக்குப் பிரமை சொற்பனம்போலே பிரமிக்கச்செய்யும்; அப்ப டிப்பட்ட கேவல சுக சொரூபமாய்ச் சாந்தமா யிருக்கின்றதே இதற்கு நமஸ்காரம்.

சகல பதார்த்தங்களையு மாற்சிதனுத் தனக்கு வேண்டிய போகங்களையெல்லா மநுபவித்தும், புத்திவந்தனானவன் சீக்கிர மாக அவைகளைவிட்டு நீங்கினாலன்றி சுகங்காண மாட்டான்.

சமுசார மென்கின்ற கோடைகாலத்து வெய்யலிலே தெத்த மானவனுக்கு, எந்தவிதத்திலேயுஞ் சமமென்கின்ற அமிர்தவருஷத்தினாலே நனைத்தாலொழியக் குளிராமை பொருந் திச்சுகத்தை யடையமாட்டான்.

ஜகத்து, பாவனை மாத்திரமே யல்லாமல் பரமார்த்தமாக மற் றொன்றையுங் காணேன்; பாவாபாவ மெப்போதும் விவேகித் தறிகிறவன் சுபாவமடைவன்; ஆத்மபதத்தை அடைந்தவனுக்கு அது தூரமுமல்ல, சமீபமுமல்ல; நிர்விகற்பம், நிராயாசம், நிரா காரம், நிரஞ்சனமாக இருக்கும்.

மோகத்தை மாத்திரம் விட்டுச் சொரூப வாசனையடைந்த புத்திவந்தன், சமுசயந்தீர்ந்த தெளிவிலே சற்றாகிலுந் துக்க மடையான்.

இந்த ஜகத்துகற்பனா மாத்திரம்; ஆத்மா நித்தியமுக்த னென்றறிந்த தீரன், சமுசயமில்லாதவனாகையால், குழந்தை போலும் ஒன்றாலும் பற்றுதலில்லை.

தானேபிரஹ்ம மென்றறிந்து, உண்டானதும் இல்லாததூ மாகிய இரண்டுங் கற்பிதமென்று நிச்சயித்து, நிஷ்காமனாயிருக் கின்றவனுக்கு, அறிகிறது மில்லை, சொல்லுகிறது மில்லை, கிரி யையுமில்லை.

இது நான், இதுநானல்ல வென்கின்ற விகற்ப மில்லாமல் சகலமும் பிரஹ்மமே யென்னும் நிச்சயத்தினாலே உத்தமமான யோகி சும்மாயிருப்பன்.

உபசாந்த முண்டான யோகீசுரனுக்கு, விக்ஷேபமுமில்லை, விரக்தியுமில்லை, தெளிவுமில்லை, மூடமுமில்லை, சுகமுமில்லை, துக்கமுமில்லை.

தன்னுடைய ராச்சியத்திலும், பிக்ஷாவிர்த்தியிலும், செல்வத்திலும், வறுமையிலும், புகழ்ச்சியிலும், இகழ்ச்சியிலும், சனங்களிலும், வனத்திலும், நிர்விகற்பமான யோகீசுரன் அசங்கமாகவேயிருப்பன்.

தொந்தங்களில்லாத யோகிக்கு தருமமேது? அதர்மமேது? காமமேது? விகற்ப மேது? இது லபித்தது இது லபிக்கவில்லை யென்கிறதேது?

செய்ய வேண்டிய காரியமுமில்லை; மனதுக்கு இஷ்டமான காரியமு மில்லை; சுயேற்சையாக, சொப்பிரயோசனத்தோடும் ஜீவனஞ் செய்துக்கொண்டு ஜீவன் முக்தனானயோகி சிற்சொருபமாகவிருப்பன்.

சாந்தமாய் சகல சங்கற்பங்களும் துரிசறவிடுத்த யோகிசுரனுக்குப் பிரபஞ்சமேது? மோகப்பிராந்தியேது? தியானமேது? முக்தியேது?

பிரஹ்மத்தைப் பார்க்கின்ற மனதுண்டானவனுக்கு, நானே பிரஹ்மமென்று சிந்திக்கலாம். இவ்வண்ணமே வஸ்துவைக் காணாத நிர்மல மனதுண்டானவன் எதை சிந்திக்கப்போகிறான்?

ஆத்மவிட்க்ஷேபமுண்டானவன் சரீரமும் மனதும் நிரோதனஞ் செய்ய வேண்டும்; * தயிரியமுண்டான புருஷனுக்குச் சாதிக்கவேண்டிய தொன்றுமில்லை, விட்க்ஷேபமுமில்லை.

தயிரிய புருஷன் லோக விருத்தமாய் லோகத்தார் போல் சஞ்சரிப்பன், அதற்குள்ளானவனல்ல; அவனுக்குச் சமாதியுமில்லை, விட்க்ஷேபமுமில்லை.

பாவா பாவ மறியாமல் ஒரு வாசனையோடுங் கூடாமலிருக்கின்ற யோகி, லோக திருஷ்டிக்கு கருமஞ்செய்தாலுஞ் செய்தவனல்ல

* தயிரியம்=அபரோட்சாநுபவம்.

தயிரிய புருஷனுக்குப் பிரவிர்த்தி நிவிர்த்திகளிலே * ஆக்கிரகமில்லை; வேண்டியதை செய்துக்கொண்டு ஒன்றிலும் பற்றில்லாமற் சுகமாயிருப்பன்.

விவேகியானவன் சகலவாசனைகளி னின்றும் விடுபட்டு, பாவமில்லாமல், முத்தியிற் பந்தமுடையவனாய், சுகமாகயிருந்துகொண்டு காற்றிலகப்பட்ட உலர்ந்த சருகுபோல் சமுசாரமென்கின்ற வாயுவினாலே சஞ்சரிப்பன்.

சமுசாரதுக்கங்களாயிரம் வந்தாலும், சம்பந்தங்கள் வந்தாலும், சுக துக்கங்கள் தோன்றும லெப்போதுஞ் சாந்த சித்தமுண்டானவன், விதேகி போலே பிரகாசிப்பன்.

மனது சாந்தமடைந்து ஆத்மாராமனாய்த் தயிரிய புருஷனைமகாத்மா சாகிறதும் பிழைக்கிறது மிரண்டு மில்லாமலிருப்பன்.

எதார்த்தமாக சூனிய சித்தனாய், இச்சையில்லாத தயிரிய புருஷன் எதைச் செய்தாலும், அஞ்ஞானி போலே மானவமானத்திலே கட்டுப்படான்.

சகல கருமங்களையுஞ் சரீரம் செய்கின்றது; சுத்த சொரூபனாயிருக்கின்ற நான், ஒருகருமமுஞ் செய்யவில்லை யென்கின்ற ஞானி, சகல கருமங்களும் செய்துஞ் செய்யாதவனே.

மூடன், எந்த விதி கருமங்களை செய்தாலும் பெத்தனேயல்லாமற் கிருத கிருத்தியனாகமாட்டான்; ஜீவன் முக்தன் எந்தக்கருமஞ் செய்தாலுஞ் சுகானுபவியாய் கிருத கிருத்தியனாகவேயிருப்பன்.

புத்திவந்தனானவன், நானாவிகாரம் விட்டுக் கலக்க மில்லாமல் ஒன்று நினையாமல், தன்மயமாய் வேறே யொன்றறியாமற் சும்மாயிருப்பன்.

சமாதியுமில்லை, விட்சேபமுமில்லை, தான் முமூக்ஷுவுமல்ல, அன்னியனுமல்ல; கற்பனை, விருத்தி, நாசங்களுண்டானாலும், அகர்த்தாவானவன் எப்போதும் மகாத்மாவாகவே இருப்பன்.

* ஆக்கிரகம்=அகங்காரம்.

உள்ளே அகங்காரத்துடனே இருக்கின்றவன், கருமஞ் செய்யாதிருந்தாலுஞ் செய்தவனே; அகங்கார மில்லாத தீரன், செய்துஞ் செய்யாதவனே.

முக்தனான புருஷனுடைய சித்தங்கலங்காது, அசையாது, சந்தோஷப்படாது, சமுசயமிராது, ஒரு கருமமுஞ் செய்யாது.

தியானியாது, சேஷ்டை செய்யாது, சிற்சொரூபமான சித்தம் எதற்காகச் சேஷ்டை செய்கின்றது? எது நிமித்தியந்தியானஞ் செய்கின்றது?

மூடனானவன் தத்துவத்தைக் கேட்டு மூடபாவத்தையே யடைவன்; விவேகியானவன் சமுசய முண்டானாலும், எதார்த்தமாகவே யிருப்பானே யல்லாமல், மூடன்போல் போகான்.

மூடரானபேர், யேகாக்கிர சித்தமும், வாயுநிரோதமும், அப்பியாசமென்று செய்வார்கள்; தீர புரஷனானவன் ஒரு கருமமும் செய்யான்; நித்திரையிலே சொற்பன சேஷ்டைபோல் இருப்பன்.

மூடனானவன், எத்தனைஞ் செய்தாலும், செய்யாதிருந்தாலும், முக்தியடைய மாட்டான்; பிரக்ஞையுண்டானவன் தத்துவநிச்சயத்தினாலே மோக்ஷத்தை யடைவான்.

நிர்மலமாய், பரிபூரண மாத்திர நிட்பிரபஞ்சனாய், பிரிய சொரூபனாய், ஆனந்தனாய், நிராமயனாய்ப் பிரகாசித்துக் கொண்டிருக்கின்ற பரமாத்மாவை, மூடாளான பேர் அப்பியாசஞ்செய்தும் அறியமாட்டார்கள்.

அப்பியாசரூபமான கருமத்தினாலே மூடனானவன் மோக்ஷமடைய மாட்டான்; விவேகியானவன் ஞானமாத்திரத்தினாலே கிரியை யில்லாமல் முக்தியை யடைவான்.

பிரஹ்மத்தை யடைகின்றேனென்று மூடனானவன் நினைத்து அடைய மாட்டான்; தீரனான புருஷனானவன், நினையாமலே பிரஹ்மசொரூபத்தை யடைவான்.

அகங்கார யுக்தமான ஜெனங்களாச்சரிய மில்லாமலே சமுஸாருக்ஷத்தை விர்த்தி செய்வார்கள்; புத்திவந்தனானவன்

ாசாரம் முற்றுந் துக்கமானபடியினாலே, அதினுடைய மூல
த விவேகமென்கின்ற கோடாலியாலே வெட்டிப்போடுவான்.

மூடனானவன் எத்தனை நியமஞ்செய்தாலும், சாந்தியடைய
ட்டான்; தீரபுருஷனானவன் தத்துவ நிச்சயஞ்செய்து சகலத்
யு மறிந்து எப்போதுஞ் சாந்தனாகவே யிருப்பன்.

பாகிய திருஷ்டியினாலே பிரமத்தைப் பார்ப்போ மென்கிற
வடைய எத்தனம், விருதா எத்தனம்; அதை விஞ்ஞானியா
க்கின்ற பேர்கள் கைப்பிடியார்கள்; தன்னை அவ்விஷய
வே யெப்போதும் பார்ப்பன்.

மூடனானவன் சரீரத்தைப் பிடித்துக் கொண்டிருந்ததினா
தத்துவயோகத்தை யடையமாட்டான்; தீரனுக்குக் கிரியை
டு விட்டதே மனோநிரோதம்.

ஒருத்தன் மனதிலே என்நேரமும் பாவனைசெய்வன்,
ொருத்தன் பாவனை செய்யாதிருப்பன், இந்த விரண்டும்
டவனே முக்தி சுகத்தையடைவன்.

கேவலம் அசுத்தமான தொய்தத்தைப் புத்தியீனர் பாவ
செய்வார்கள்; அப்படி சிவன் பரியந்தம் பாவனை செய்தாலும்
த்தி அடையமாட்டார்கள்.

மோக்ஷ இச்சை யுண்டானவனுக்கு, புத்திசாலம்பமாக
க்கும்; நித்திய முக்தனான நிஷ்காமனுக்குப் புத்தி நிராலம்
ாகவிருக்கும்; விஷய மென்கின்ற காட்டைப்பார்த்துச்சனங்
பயந்து, விஷயநிரோத மாகிறதற்கு ஞானத்தைச் சரண
டந்தார்கள்.

நிர்வாசனை என்கின்ற சிங்கத்தைப்பார்த்து, விஷயமென்கி
யானை நிர்வகிக்க மாட்டாமற் பயந்தோடிப்போம்.

சமுசயந்தீர்ந்து யுக்த சித்தனானவன் முக்தித் திசையைய
ந்து சந்தோஷிப்பன்; பார்க்கும்போதும், கேட்கும்போதும்,
சமறியும்போதும், ஆக்கிராணமறியும்போதும், ரசனையறியும்
ாதும் பிராப்தியானதைக்கொண்டு சுகமாயிருப்பன்.

புத்திவந்தனானவன் வஸ்துவைச்சிரவணஞ்செய்த மாத்தி ரத்தினாலே அவ்வஸ்துவே தானென்னும் நிச்சயத்துடன் இருப்பான்; இது ஆசாரம் அனாசார மென்றும் பாரான்.

எப்போது யென்னசெய்யவேண்டுமோ, அப்போதே சுப பலம் லபித்தாலுஞ் செய்துவிடுவன்; சிசுக்களைப்போல்.

தனக்கெப்போதுங் கருத்தத்வ, போக்தத்துவங்களில்லை யென்றறிந்த புத்திவந்தனானவனுக்கு, சகலசித்த விருத்திகளும் அந்தக்ஷணமே நாசமடையும்.

ஆசையில்லாமல் விஞ்ஞானநிதியா யிருக்கின்றவனுடைய புத்தி * சவுமியமாக விருக்கும்; ஆசையுண்டான மூடனுடைய புத்தி யெப்போதுங் குரூரமாயிருக்கும்.

அத்தியந்தபோக மநுபவித்தாலும், குகையிலே சஞ்சரித்தாலும், கற்பனையில்லாத யெதீசுரனுக்குப் பந்தமுக்தி இல்லை.

தயிரியவந்தனான புருஷன், தெய்வத்தை, சோஸ்திரியாளை, தீர்த்தத்தை, இராஜாவை, ஸ்திரீகளைப்பார்த்துத் தோத்திரஞ் செய்தும், ஒன்றோடுங் கூடாமலிருப்பன்.

யோகீசுரனானவன் புத்திர களத்திராள், தன்னுடையகோத்திரவர்க்கம், தன்னை சேவித்தபேரெல்லாரும், அவன் பேய னென்று துரத்திவிட்டாலும் விசாரத்தையடையான்.

திருத்தியடைந்ததினாலே சந்தோஷமுமில்லை, துக்கம்வந்த போது துக்கமில்லாமலும் இப்படிப்பட்ட ஆச்சரிய திருஷ்டியுண்டான புருஷனை, தம்பி! அப்படிப்பட்டபேரே அறிவார்கள்.

தயிரியனான புருஷன், சகசமாக நிராகாரியாய், சூனியாகாரியாய், அவிகாரியாய், நிராமயனாக விருக்கின்றான்; ஆகையால், சமுசார கிருத்திய மொன்றுஞ் செய்யப்போகான்; மூடபாவ முண்டானவன், கருமங்களைச் செய்யாதிருந்தாலுஞ் செய்தவனே.

சிற்சொரூபமாக விருக்கின்றவன், செய்யாமலிருந்தும் லோக்தார்போல வியாகூலமில்லை.

* சௌமியம் - சாந்தம்.

சாந்த புருஷனானவன், சகலவியவகாரத்திலுமிருந்தாலும், சுகமே அநுபவிப்பன்; சுகமாகவே வருவன்; சுகமாகவே போவன்; சுகமாகவே படுத்துக்கொள்வன்; சுகமாகவே பேசுவன்; சுகமாகவே அநுபவிப்பன்.

விவேக புருஷனானவன், லோகத்தார்போலத் துக்கத்தை யடையான்; மனதிலே சலனமில்லாமல் நிறைந்த சமுத்திரம் போல விருப்பன்.

மூடனுக்கு நிவிர்த்திவந்தாலும், அவன் பிரவிர்த்தி மார்க்கமே போவன்; நிர்மலசித்தமுண்டானவனுக்குப் பிரவிர்த்தியுண்டானாலும் அவன் நிவிர்த்திமார்க்கமே போவன்.

மூடனானவன் வைராக்கியம் கொண்டிருப்பன்; சரீரமில்லாமற் போகிறவிடத்தில் ராகமெங்கே? மூடனுக்குப் பாவனை பாவிக்கின்றவிடத்தில் அந்தத் திருஷ்டி தெளிவுக்கு வாராது; ஞான புருஷனுக்குப் பாவிக்கத்தக்க பாவனை, நிர்மலமாகச் சூனிய திருஷ்டியாம்.

குழந்தைபோலச் சகலத்திலும் நிஷ்காமனாயிருக்கின்ற முனீசுரன் சகல கருமங்களையுஞ்செய்தாலும் ஒருகருமத்தையு மடையான்; சகலபாவங்களிலும் சமத்துவமாயிருக்கின்ற மகாத்துமா, ஆத்மஞானத்தினால், பார்க்கும்போதும், கேட்கும்போதும், ஆக்கிராணிக்கும்போதும், பரிசமறியும்போதும், சூனியசித்தனாய்ச் சுகமே யநுபவிப்பன்.

ஆகாசம்போல எப்போதும் நிர்விகற்பமாயிருக்கின்ற தீர புருஷனுக்கு மறப்பெங்கே? சாதிக்கப்பட்டதெங்கே? சாதனையெங்கே?

பரமமாய், ஆநந்த ரூபத்திலேயிருந்தும், பிரவிருத்தியில்லாத விவேகிக்கு, பந்த மோக்ஷங்களில்லை; அநுஷ விஷாதமுமில்லை?

இடைவிடாமல், குறுராமாகாமலை யாதொருத்தனுக்குச் சமாதி அப்பியாசமிருக்கிறதோ அவனை சலனமில்லாத நிச்சல சொரூபன்; அவனே பூரணன், அவனே ஆப்தசன்னியாசி.

93

ஐயா! வெகு பாவவிசேஷ முடையானுக்கு, எதற்குச் சொல்ல வேண்டும்? ஆத்மதத்துவத்தை யறிந்த மாகாத்மா, போகமோக்ஷங்களிலே * காங்கிஷையான்; எல்லாவற்றிலும் நிரஞ்சனனுகவே யிருப்பன்.

துவைதமாயிருக்கின்ற மகதாதி ஜகத்து, சின்மாத்திர சொரூபமாக விசிரிம்பித்திருக்கிறது; அதை விட்டுச் சுகபோத சொரூபமாயிருக்கின்ற மகாத்மாவுக்குச் செய்யவேண்டிய காரியம் ஒன்று மில்லை.

இந்தப்பிரபஞ்சம் பிராந்தி மாத்திரம்; பிராந்தியை விட்டு விட்டால் ஒன்று மில்லை யென்றறிந்த சிற்சொரூபன், சுபாவமாகச் சாந்தியை யடைவான்.

ஆபாசமாக விருக்கின்ற திருசியத்தைப் பாராமல் விமல போத சொரூபமா யிருக்கின்றவனுக்கு விதிநிஷேதமுமில்லை, சாந்தியு மில்லை, ராக விகாரங்களுமில்லை.

புத்தி வந்தனை மகாத்துமா, புத்திகற்பிதமான சம்சாரம் மாயாமய மாத்திரமென்றறிந்து மோகம், அகங்காரம், ஆசை முதலானவற்றை விடுத்துச் சுகமாயிருப்பன்.

நாசமில்லாத ஆத்மஞானி விசுவமாயறிதல் மாயை அகங்காரத்துவ முதலானவையில்லாமலிருப்பன்.

மகாத்துமாவா யிருக்கின்ற புருஷன், க்ஷணமாத்திரமானுலும் ஆத்ம விரோதமான கருமங்கள்செய்யான்; விருதாக்கதைகள் நிஸ்சாரமென்றறிந்து வாசிக்கான்.

மூடனுனவன், தத்துவத்தைச் சிரவணம் பண்ணினுலும், அதன் விசேஷத்தை யறியமாட்டாமல், விஷயங்களுடனேகூடி, மூடத்துவமே அடைவன்; ஞானத்தினுலே விடுபட்ட கன்மமுண்டானவன், லோகத்தார் போலத் தானுங்கருமஞ் செய்வான்; பலனிச்சியான்; ஒன்றுஞ் சொல்லப்போகான்.

சற்றும் மனதிலே கலக்கமில்லாமல் நிர்விகற்பமா யிருக்கின்ற மகாத்துமாவுக்கு, இருட்டு மில்லை, வெளிச்சமுமில்லை, லயமுமில்லை, பின்னையொன்று மில்லை

* காங்கிஷையான் = இச்சியான்.

அநிர்வாச்சியமா யிருக்கின்ற சுபாவமான யோகிக்குத் தயிரியமுமில்லை, விவேகமுமில்லை, பயமுமில்லை.

யோகதிருஷ்டியினுலே கருமபலத்தை அடையாதவனுக்குச் சுவர்க்கமுமில்லை, நரகமுமில்லை, ஜீவன் முக்தியுமில்லை.

சாந்தி யென்கின்ற அமிர்தத்தினல் திருப்தியடைந்த தயிரிய புருஷனுக்கு, லாபாலாபங்களிலே அனுஷவிஷாதங்களில்லை.

நிஷ்காமனுய்ச் சந்தோஷத்தை யடைந்த முனீசுரன், சாந்தனைப்பார்த்து பூஜிக்கின்றது மில்லை, குரூரனைப்பார்த்து நிந்திக்கின்றது மில்லை, சுகதுக்கங்களில் சமனுய் ஒருகிரியையும் பண்ணுதிருப்பன்.

தயிரிய புருஷனுனவன், சம்சாரம் விட்டால், தன்னைப் பார்க்கிறதுமில்லை, சந்தோஷ துக்க தோஷங்களிலே விடுபட்டுப் பிழைத்தவனுமல்ல, செத்தவனு மல்ல.

ஆசையில்லாமற் பிரகாசித்துக் கொண்டிருக்கின்ற மகாத்மாவுக்குப் புத்திராதிகளிலே சினேகமுமில்லை, விஷயங்களிலே இச்சையுமில்லை.

தயிரிய புருஷனுனவன் எங்குஞ் சுகமாயிருப்பன்; பதிதனைப்போலேயு மிருப்பன்; யதேச்சையாகச் சஞ்சரிப்பன்; சயனுதி சுகனுதி சுகங்களிலே ஆசக்தி செய்யான்.

சோபமான இடத்திற் சேர்ந்து ஒரு விஷயமும் அறியாமலிருக்கையில் சரீரமுண்டானுலும், லயமானுலும், அந்த மகாத்மாவுக்கு அந்தச் சிந்தையில்லை.

சாந்தனுய், அன்னிய மில்லாமல், இதர விச்சை சஞ்சாரியாய், தொந்த ரகிதனுய்ச் சகல பூதங்களிலும் ஆசக்தியில்லாமல் மகாத்மாவான யோகியானவன் ரமிப்பான்.

சிதானந்த சொரூபமா யிருக்கின்ற மகாத்மா, பொன்னும் ஓடுஞ் சமமாக வெண்ணி மமத்துவமில்லாமல் இருதயக்கிரந்தி யறுத்துப்போட்டு, இராசத தாமதங்களில்லாமற் சுகமாயிருப்பன்.

எப்போது முக்தாத்மாவாகித் திருப்தியடைந்த மகாத்மாவுக்கு, ஒன்றிலே அவதானமுமில்லை, வாசனையுமில்லை, அவனுக்கு இணை லோகத்திலே யொருத்தருமே யில்லை.

அறிந்து மறியாதிருப்பன்; பார்த்தும் பாராதிருப்பன், சொல்லியுஞ் சொல்லாதிருப்பன்; இப்படிப்பட்ட நிர்வாசனை யுண்டானவனுக்கு இணை யொருத்தரு மில்லை.

பிச்சைக்காரனானாலும், இராஜாவானாலும், நிஷ்காமனாயிருக்கின்றவன் பிரகாசிப்பன்; பாவங்களிலே கூடாத புத்தி யாதொருத்தனுக்குண்டாகிறதோ அது சுகவேதுவாம்.

சகசமாகக் கிருதார்த்தனான யோகீசுரனுக்குத் தத்துவ நிச்சயார்த்தம் விஸ்தாரமு மல்ல, கொஞ்சமு மல்ல.

துக்கத்தை யடையாமல் நிராசையுடைத்தானவனாய், ஆத்மசொரூபத்திலே திருப்தியடைந்தவனது, அந்த யோகரூபமான சுவாநுபவத்துக்குச் சமம் ஒன்று மில்லை.

சுழுத்தியிலிருந்துஞ் சுழுத்தியடையான்; சொப்பனத்திலிருந்துஞ் சொப்பனமடையான்; சாக்கிரத்திலிருந்துஞ் சாக்கிரமடையான்; இப்படித் திருப்தியடைந்த தயிரிய புருஷன் மகிமை யொருத்தராலுஞ் சொல்லக்கூடாது.

ஞானபுருஷன் சிந்தித்துஞ் சிந்தித்தவனல்ல; இந்திரியங்களுடனே கூடியுங் கூடினவனல்ல; அகங்காரத்துடனே கூடியுங் கூடினவனல்ல.

விரக்தியுமல்ல, ராகியுமல்ல, சுகியுமல்ல, துக்கியுமல்ல, முமுட்சுவுமல்ல, முக்தனுமல்ல, பின்னை யொன்றுமல்ல.

சித்த விட்சேபத்தை யடைந்து மடைந்தவனல்ல, சமாதியிருந்துஞ் சமாதியுத்தனல்ல, மூடனாக விருந்தும் மூடனல்ல; பண்டிதனாக விருந்தும் பண்டிதனல்ல.

முக்தனானவன், எப்போதும்போலத் தீரமாக விருப்பன்; ராலும் பெத்தனாகான்; எப்போதுஞ் சந்தோஷமடைந்து சர்வசமனாய்த் தன்னுடைய கிருத்தியா கிருத்தியம் நினையாதிருப்பன்.

தயிரிய புருஷனானவனுக்குத், துதிசெய்தவன்மீது சந்தோஷ முமில்லை, நிந்தனை செய்தவன்மீது கோபமுமில்லை, சாகின்றதி லும் பிழைக்கின்றதிலும் பய மோகங்களில்லை.

சாந்தியடைந்த புருஷனானவன், வனத்திலிருந்தாலும், சன ங்களிடத்திலிருந்தாலுஞ் சரியாகப்பார்ப்பன்; யதேச்சையாக வேண்டியபடி சஞ்சரிப்பன்.

தத்துவஞான மென்கின்ற கரணத்தினாலே சித்தத்திலே நாட்டியிருக்கின்ற அநுற்பூத வாசனையாகிற வெலும்புகளைப் பிடுங்கிப் போட்டு நான் நிர்ப்பயமாக விருந்தேன்.

என்னுடைய மகிமையினாலே யென்னிடத்தி லிருக்கின்ற வெனக்குத் தர்மார்த்த காமங்களுமில்லை, துவைதாத் துவைதங் களுமில்லை.

என்னுடைய மகிமையினாலே யிருக்கின்ற வெனக்கு, பூத பௌஷியவர்த்தமானமுமில்லை, இருக்கின்ற விடமுமில்லை, இல் லாதவிடமுமில்லை.

என்னுடைய மகிமையினாலே யிருக்கின்ற வெனக்கு, ஆத்மா வுமில்லை, அனாத்மாவுமில்லை, சுபா சுபங்களுமில்லை, சிந்தனா சிந் தனையுமில்லை.

என்னுடைய மகிமையினாலே யிருக்கின்ற வெனக்கு, சாக் கிரசொப்பன சுழுத்தியு மில்லை, துரியமுமில்லை, பயமுமில்லை.

என்னுடைய மகிமையினாலே யிருக்கின்ற எனக்கு, தூரமு மில்லை, சமீபமுமில்லை, உள்ளுமில்லை, புறம்புமில்லை, தூலமு மில்லை, சூக்குமமுமில்லை.

என்னுடைய மகிமையினாலே யிருக்கின்ற வெனக்கு, மரண முமில்லை, பிழைக்கின்றதுமில்லை, லோகமுமில்லை, லோக காரிய முமில்லை, லயமுமில்லை, சமாதியுமில்லை.

பரமாத்மாவினிடத்தி லிருக்கின்ற வெனக்கு, இந்திரியங்க ளுடைய கதையும் போதும், யோகத்தினுடைய கதையும் போதும், ஞானகதையும போதும்.

நிரஞ்சனமாயிருக்கின்ற எனக்கு, பூதங்களுமில்லை, தேகமு மில்லை, சித்தமுமில்லை, இந்திரியங்களுமில்லை, மனதுமில்லை, சூனி யமுமில்லை, விரக்தியுமில்லை.

தொந்த முக்தனாயிருக்கின்ற வெனக்கு, சாந்தி யெங்கே? விஞ்ஞானமெங்கே? நிர்விஷய சித்த மெங்கே? நியமமெங்கே? திருப்தியெங்கே? ஆசையெங்கே?

சொச்சொரூபமா யிருக்கின்ற வெனக்கு ஞானஞ்ஞானங் களெங்கே? நானென்கின்ற தெங்கே? பந்த மோக்ஷமெங்கே?

எப்போதுஞ் சுபாவமாயிருக்கின்ற வெனக்கு, கர்த்திருத் துவ மெங்கே? போக்திருத்துவமெங்கே? கிரியையில்லாத ஸ்மர ணையெங்கே? பரோக்ஷபலமெங்கே?

நிர்விஷயமா யிருக்கின்ற வெனக்குப் பிராரத்துவமெங்கே? ஜீவன் முக்தியெங்கே? விதேகமுக்தி யெங்கே?

அத்வைதமா யிருக்கின்ற சொச்சொரூபத்திலே லோக மெங்கே? முமுட்சுத்துவமெங்கே? ஞானபோகங்களெங்கே? மோக்ஷங்களெங்கே?

அத்வைதமா யிருக்கின்ற சொச்சொரூபத்திலே, சிருட்டி சங்காரமெங்கே? சாத்திய சாதன மெங்கே? சாதகங்களெங்கே? சித்தி யெங்கே?

எப்போதும் சுயமாக நிஷ்கிரியனாக விருக்கின்ற வென் னிடத்திலே விக்ஷேப வைராக்கிய மெங்கே? போத சடத் துவமெங்கே? பிறப்பெங்கே? அனுஷ விஷாத மெங்கே?

நிரஞ்சனமாயிருக்கின்ற வென்னிடத்திலே, பிரமாதாவெங் கே? பிரமாண பிரமேயமெங்கே? பிரமை யெங்கே? சமமெ ங்கே? அதிகமெங்கே? அற்பமெங்கே?

ஆரோபிதமான இந்த வியவகாரமும், பரமார்த்தமும், சுக துக்கங்களும், இதுவரிலே விசாரமில்லாத வெனக்கு, எங்கே ண்டாம்?

எப்போதும் நிர்மலமாயிருக்கின்ற வெனக்கு, மாயை யெங் மறப்பெங்கே? பிரீதி யெங்கே? விரக்தியெங்கே? ஜீவனெ ? பிரஹ்ம மெங்கே?

கூடஸ்தனுய், அகண்ட மாத்திரமாயிருக்கின்ற வெனக்கு, பிரவிருத்தி யெங்கே? நிவிருத்தி யெங்கே? பந்த மெங்கே? மோக்ஷமெங்கே?

நிருபாதிக ஜீவனுயிருக்கின்ற வெனக்கு, குருவெங்கே? சிஷிய னெங்கே? உபதேசமெங்கே? சாஸ்திர மெங்கே? புருஷார்த்த மெங்கே?

அமல ஆத்மாவா யிருக்கின்ற வெனக்கு, உண்டென்கின்றதெங்கே? இல்லையென்கின்றதெங்கே? ஒன்றென்கின்றதெங்கே? இரண்டென்கின்றதெங்கே? இந்த வெகு பேச்சு என்னத்துக்குச் சொல்லவேண்டும்?

---

## அபரோக்ஷானுபூதி.

இயமம், நியமம், தியாகம், மௌனம், தேசம், காலம், ஆசனம் மூலபந்தம், தேகசமத்துவம், பார்வைநிலை, பிராணுயாமம், பிரத்தியாகாரம், தாரணை, ஆத்மத்தியானம், சமாதி என அங்கங்கள் கிரமமாகச் சொல்லப்பட்டன.

சர்வம் பிரஹ்ம மென்னும் விஞ்ஞானத்தால், இந்திரிய சமூகத்தையடக்குதல் இயம மெனப்படும்; இஃது, அடிக்கடி அப்பியசிக்கத் தக்கதாம்.

* சஜாதீயப் பிரவாகமும், விஜாதீய திரஸ்காரமும், நியமமாம்; நியமத்தினுல், விவேகிகளாற் பரமானந்தம் செய்யப்படுகின்றது.

சிதாத்மாநு சந்தானத்தால்; பிரபஞ்ச ரூபத்தை விடுதல் எதுவோ, அதுதியாகமாம். அஃது அநுசந்தான காலத்திலேயே மோக்ஷமய மாதலால், மகத்துக்களால் பூஜிக்கப்படுவதாம்.

எதனின்றும் வாக்கானது மனதோடு அடையாது திரும்புகின்றதோ, எம்மௌனம் யோகிகளா லடையத்தக்கதோ, * அஃதாக வேண்டு மென்றும் அறிஞன் என்பதாதல்; வாக்கு எத

* ஓரினமாகிய ஆத்மாகார விருத்தியின் தொடர்பும், வேறினமாகிய அநாத்மாகார விருத்தியின் நீக்கமும் நியமமாம்.

* பிரசித்தமான மௌனமாக வேண்டும்.

னின்றும் நிவிர்த்தி யாகின்றதோ, அதனைச்சொல்ல எவனால் முடியும் ? * பிரபஞ்சஞ் சொல்லப் படுமாயின், அதுவும் சத்த மின்றியதாம் என்பதாதல்; சத்துக்களிடத்துப் பிரசித்தமாகிய மௌனமாம்? வாக்கு மௌனம் சிறுவர்களுக்காமென்று பிரஹ்ம வாதிகளால் சொல்லப்படுகின்றது.

ஆதியிலும், அந்தத்திலும், மத்தியிலும் எதில் ஜனங்க ளிருப்பதில்லையோ, எதனால் இஃது (உலகம்) எப்போதும் வியா பிக்கப்பட் டிருக்கின்றதோ, அத்தேசம் நிர்ஜனப் பிரதேச மெனப்படும்.

பிரமா முதலியோரின் நிமிஷ முதல் சகல பூதங்களின் சிருஷ்டி திதிலயங்களுக்கு ஆதாரமாயிருத்தலால், அகண்டா நந்த அத்வயம் (பிரஹ்மம்) கால சப்தத்தினாற் சொல்லப்படு கின்றது.

எதன்கண் இடைவிடாப் பிரஹ்ம சிந்தனம் சுகமாகவே யுண்டாகுமோ, அஃது ஆசனமென்றறியத் தக்கதாம்; மற்றவை சுகாசனமன்று.

எது சகல பூதாதி ஜகத்திற்கும் அதிஷ்டானமான அவ்வி யயமோ, அது சித்தமாம்; அல்லது எதன்கண் சித்தர்கள் செவ் வையா யிருக்கின்றார்களோ, அது சித்தாசனமா மென்றறிக.

எது சகலபூதங்களுக்குங் காரணமோ, சித்தத்தின் பந்த னம் எதற்குக் காரணமோ, அஃது என்றும் சேவிக்கத் தக்க மூலபந்தமாம்; இஃது, இராஜயோகிகளுக் குரியதாம்.

அங்கங்களின் சமத்தன்மையை யறியின், அங்கங்களின் விஷமத்தன்மை சமமாகிய பிரஹ்மத்தில் ஒடுங்கும்; ஒடுங்க வில்லையாயின் (சமமாகிய பிரஹ்மரூபமாக நிற்கவில்லை யாயின்) உலர்ந்த விருக்ஷம்போல் சரளத்தன்மையும் சமானத்தன்மையு மில்லை.

---

* சப்தப் பிரவிருத்தி நிமித்தமில்லாமையால் வாக்கிற்கு விஷயமாகா ததுபோல நாம ரூப சாதியாதி பிரபஞ்சமும் சத்து அல்லது அசத்து என் றல் முதலியனவாகச்சொல்லக் கூடாமையின், வாக்கிறகதீதமாம். முற் கூறிய மௌனம் பதினான்காவதங்கமாகிய தியானமாகத் தோன்று கின்ற தெனச் சங்கையுண்டா மெனக்கருதி யிவ்விரண்டா மௌனஞ் சொல்லப் பட்டது.

ஞானமாகிய திருஷ்டியை (அகண்ட பிரஹ்மாகார விருத்தியைச்) செய்து ஜகத்தைப் பிரஹ்ம மயமாகக்காண்க; அதுவே பரம உதாரமான திருஷ்டியாம்; நாசிநுனியைப் பார்த்தல் திருஷ்டியன்று.

அல்லது, காண்பான், காட்சி, காணப்படு பொருள் என்பவற்றின் இலயம்யாண்டுண்டாகின்றதோ, ஆண்டேதிருஷ்டி (அந்தக்கரண விருத்தி) வைக்கத் தக்கதாம்; நாசி நுனியைப் பார்த்தல் திருஷ்டியன்று.

சித்த முதலிய சர்வபாவங் (இருப்பு) களினும் பிரஹ்மத் தன்மையாகப் பாவித்தலாற் சகல விருத்திகளையும் நிரோதித்தல் எதுவோ, அது பிராணாயாம மெனப்படும்.

பிரபஞ்சத்தை நிஷேதித்தல் இரேசக மென்னும் வாயுவாம்; பிரஹ்மமே யானென்னும் விருத்தியாதோ, அது பூரக வாயுவெனப்படும்.

அதன்பின், அவ்விருத்தியின் நிச்சலத்தன்மை கும்பகப் பிராணாயாமமாம்; இது விவேகிகளுக்காம்; மூக்கைப் பிடித்தல் அஞ்ஞர்களுக்குத் தகுதியாம்.

விஷயங்களில், ஆத்மத்தன்மையை யறிந்து மனம் சித்தில் அழுந்துதல் பிரத்தியாகாரமென்று அறியத் தக்கது. அது முமுட்சுக்களால் அப்பியசிக்கத்தக்கதாம்.

யாண்டு யாண்டு மனஞ் செல்லுகின்றதோ, ஆண்டு ஆண்டு பிரஹ்மத்தைக் காண்டலால் மனதை நிறுத்துதல் எதுவோ, அது மேலாகிய தாரணை யென்று மதிக்கப்படுகின்றது.

பிரஹ்மமே யான் என்னும் * சத்விருத்தியினால் நிராலம்பத்தன்மையாக நிற்றல் எதுவோ, அது பரமாநந்தத்தைத் தருவதாய்த் தியான சத்தத்தால் சொல்லப்படுகின்றது.

நிர்விகாரத் தன்மையினால் மீண்டும் விருத்தியின் பிரஹ்மாகாரத் தன்மையாக † செவ்வனே தியேயாகார விருத்தி சூனிய

* வேறு பிரமாணங்களால் பாதிக்கப்படாத விருத்தியினால்.
† செவ்வனே = பிரபஞ்ச சமஸ்கார மின்றி.

மாயிருத்தல் (துவைதாநுசந்தான மின்மை) எதுவோ அது ஞானமௌனப் பெயரிய சமாதியாம்.

இது சுவசொரூபானந்தத்தை விளக்கும் நிதித்தியாசனமாம்; எந்த க்ஷணம் வரையில் புருடன் பொருத்தப்பட்டவனுய்த் தானே வசியனுகின்றனே, அது வரையிற் செவ்வையாக அப்பியசிக்கவேண்டும்.

அதன்பின் சாதன மின்றியவனுய் யோகீசுவரன் சித்தனுகின்ருன்; இந்த யோகிக்கு அதுவே (வேதாந்த பிரசித்தபிரஹ்மமே) சொரூபமாம்; இவனுடைய மனதிற்கும் வாக்கிற்கும் விஷயமாதலில்லை.

சமாதி செய்யுங்கால் விக்கினங்கள் வலியவரும்; அநுசந்தானமின்மை, ஆலசியம், போகவிச்சை, இலயம், தமசு, விக்ஷேபம், ரசாஸ்வாதம், சூனியத்துவம் என்று இவ்வாறு வரும் விக்கின மிகுதியைப் பிரஹ்மவித்துக்கள் மெல்ல விடவேண்டும்.

* பாவவிருத்தியினுல் பாவத்துவமும், சூனிய விருத்தியினுல் சூனியத்துவமும் உண்டாவது, உலோகப் பிரசித்தம்; அதுபோல, பிரஹ்ம விருத்தியினுல் பூரணத்துவம் உண்டாவது ஞானிகளிடத்துப் பிரசித்தம், ஆதலால்; பூரணத்தன்மையை அப்பியசிக்கவேண்டும்.

எவர்கள் இந்த மேலான பரிசுத்தமாகிய பிரஹ்மமென்னும் விருத்தியை விடுகின்றுர்களோ, அப்பசுக்களுக்குச் சமமான நரர்கள் வீணுகவே ஜீவிக்கின்றுர்கள்.

எவர்கள் இவ்விருத்தியை யறிகின்றுர்களோ, அறிந்து எவர்கள் விருத்தி (யதிகரிக்கச்) செய்கின்றுர்களோ, அவர்களே சத்புருஷர்கள்; தன்னியர்கள்; மூவுலகத்தினும் பூஜிக்கப்படுபவர்கள்.

---

* பாவ விருத்தியினுல்=கடாதியாகார விருத்தியினுல். பாவத்துவமும்=தன்மயத்துவமும்.

எவர்களுடைய விருத்தி சமமாயும், விருத்தி யடைந்த (அதிகரித்த) தாயும்; பரிபக்குவமானதாயு மிருக்கின்றதோ, அவர்களே சத்தாகிய பிரஹ்மத்தை யடைந்தோர்; சப்தவாதிகளாகிய மற்றையோ ரடைந்தவ ரல்லர்.

பிரஹ்மத்தைப்பற்றிப் பேசுவதில் சமர்த்தர்களாயும், நல்லராக முள்ளவர்களாயு முள்ளவர்கள் எவர்களோ, அவர்கள்மீண்டும் நிச்சயமாக அஞ்ஞானிகளாக வருகின்றார்கள்; போகின்றார்கள்.

பிரமாதியரும், சனகாதியரும், சுகர்முதலியோரும் இருப்பது போலப் பிரஹ்மமயமாகிய விருத்தியின்றி அரை நிமிஷமும் நிற்பதில்லை; எப்போதும் பிரஹ்மமயமான விருத்தியோடு இருக்கின்றாரென்பது பொருள்.

காரியத்தில் காரணத்தன்மை வருகின்றது; காரணத்தில் காரியத்தன்மை வருவதில்லை; ஆதலால் விசாரத்தினால் காரியத்தன்மை இல்லாததாகவே, காரணத்தன்மை பொய்யாகின்றது.

பின்னர் (காரிய காரணத்தன்மையின் நீக்கத்தில்) வாக்கிற் கெட்டாத வஸ்து எதுவோ, அதுவாகின்றான்; மண்குட திருஷ்டாந்தத்தினால் (வேற்றுமை தோன்றாவண்ணம்) அடிக்கடி காணவேண்டும்.

இவ்விதத்தினாலே சுத்த சித்த முள்ளார்க்கு விருத்தி ஞானம் உதிக்கின்றது; அதன் பின் பிரஹ்மாகார விருத்தி உண்டாகின்றது.

புருடன் ஆதியில் காரணத்தை வியதிரேகமாக (காரிய மின்றியதாக) விசாரிக்கக் கடவன்; மீண்டும், அக்காரணத்தை அந்வயத்தால் காரியத்தினும் நித்தியமாகக் காண்கின்றான்.

அல்லது, ஆதியில் காரியத்தில் காரணத்தைப் பார்க்க; பின்னர்க் காரியத்தை நீக்கிவிடுக; அதனால் (காரியத்தை விடுவதால்) காரணத்தன்மை தானே போய்விடுகின்றது; போகவே, மிஞ்சியதாகின்றான் முனி (மனன சீலன்.)

நிச்சய புத்தியுடையவனால் எந்தவஸ்து தீவிர வேகமாய் (இரவும் பகலும) பாவிக்கப்படுகின்றதோ, அந்த * ஞேயவஸ்து வாகின்றான்; † பிரமர கீடம்போல.

அதிருசியமும் (பரோட்சமும்) பாவ ரூபமு (பிரத்தியக்ஷமு) மாகிய யாவும் சிற்சொரூபமாம், அறிஞன் சாவதானமாக நித்தியம் தனது ஆத்மாவையே பாவிக்கக் கடவன்.

திருசியத்தையும் அதிருசியத் தன்மையையும் விட்டுப்பிரஹ்மாகாரமாகச் சிந்திக்கவேண்டும்; அதனால், வித்துவான் ஞானரச பூரணமான புத்தியோடு நித்திய சுகத்தில் நிற்கக்கடவன்.

இவ்வங்கங்களோடு கூடியது இராஜயோக மெனப்படும்; சொற்ப ‡ பக்குவ கஷாய முடையார்க்கு ஹடயோகத்தோடு கூடிய இது, வேதாந்தத்திற் சொல்லப்பட்ட யோகமாம்.

பரிபக்குவ மனமுடையவர்க்கு இது (ராஜயோகம்) மாத்திரமே மோக்ஷ சித்தியைத் தருவதாம் § குருவினிடத்தும் தெய்வத்தினிடத்தும் அன்புள்ளார் யாவர்க்கும் செவ்வனே சீக்கிரத்தில் சாதிக்கத் தக்கதாம்.

---

* ஞேயவஸ்து — அபரோக்ஷமா யறியத்தக்கவஸ்து.

† பிரமர கீடம்போல — பிரமரமாகிய வண்டினால் ஓரிடத்திருந்து கொண்டு வந்து உயிரோடு அதன் கூட்டில் வைக்கப்பட்ட புழுவானது, பயத்தினால் வண்டைத் தியானித்து, அதன் வடிவேயாய் விடுகின்றது; அது போல், என்பதாம்

‡ பக்குவகஷாயம் — தஹிக்கப்பட்ட இராகாதிகள்; அவற்றை யுடையோர் பக்குவ கஷாய முடையோர்.

§ யஸ்யதேவே பராபக்திர் யதாதேவே ததாகுரௌ-தஸ்யைதே கதிதாஹ்யாதாஹ: ப்ரகாஸந்தே மஹாத்மனஹ--எவனுக்குத் தெய்வத்தினிடத் [illegible] மேலான பக்தியும், தெய்வத்தினிடத்திற் போலக் குருவினிடத்து மிருக்கின்றதோ, அம்மகாத்மாவிற்கே சொல்லிய விவ் ஷயங்கள் பிரகாசிக்கு மென்னும் சுவேதாசுவதர சுருதி பிரமாணமாம்.

## பட்டிணத்துப் பிள்ளையார் பாடல்.

### ( திருக்கழுமல மும்மணிக்கோவை. )

செருக்குட னிகலித் தருக்கமே தேற்றி
யெம்ம னோரி னிறந்து பிறந்துழலு
மம்மரிற் பெரிய வானவர் குழுவை
மெய்ப்பொரு ளென்று கைப்பொரு ளுதவியும்
வழுத்தியு நெஞ்சத் தழுத்தியும் வறிதே
புறவார் பசும்புற் கறவாக கற்பசு
வாயிடைச் செருகித் தூயநீ ருதவி
யருஞ்சுவைப் பால்கொளப் பெருஞ்சுரை வருடும்
பேதையர் போலவு மோதுநஞ் சமரு
மெட்டியை விரும்பி மட்டுநீர்த் தேக்கி
யீதுழை கல்லா மேனியிர் வேலி
யுறும்படி யமைத்து நறுங்கனி கொள்ளக்
கறுதி முயலுந் திருவிலி போலவு
மிலகுவா லரிசி யுலைபெய வெண்ணி
வெற்று மிகுற்றும் பற்றிலர் போலவு
மருநில முழுததி னெருமிகப் பெய்து
வித்திட் டாங்கே விளைபயன் கொள்ளச்
சித்தத் துன்னு மத்தர் போலவும்
வாழ்நா ளனைத்தும் வீழ்நா ளாக்கி
யிம்மையு மறுமையுஞ் செம்மையிற் பொருந்தா
திடருறு மாந்தர் புடவியிற் பலரால்
அன்னவா றெளியனு முன்னிமதி மயங்கா
தெய்ப்பினி லுதவு மெய்ப்பொரு ளாகி
என்றுமோ ரியல்பொடு நின்றகா ரணனின்
சேவடித் தாமரைப் பூவினைப் புனைந்து
நாத்தழும் பேற வேத்தியுள் ளுருகிப்
பெருகிய வன்பென வருநீர் நிறைந்த
விதய வாவிப் பதுமமா மலரின்
குணனெனப் பொருந்து மணமா நன்னைக்
கண்டிறு மாந்து பண்டைவா தனைதீர்ந்

தறைகட லெழுந்து நிறைகுட மதுபோன்
றசைவற் றிருக்க விசையத் தருதி
நிலைமிகப் பொருந்திப் பலமுறை சாரலா
லுந்திய வன்ன வுருமரு வுதலான்
மந்திரத் துறுசுடர் மகத்துயர் தலினு
லிதம்பயி லிசைகொள் பதங்கலந் துறலால்
வேதமே யொப்பென வோதுகோ புரமும்
ஒழுக்கு நெறி சிறிதும் வழுக்கில வதனல்
நாற்பதப் பிரிவினின் மேற்பத மதனாற்
பலகலை யொளிர்மதி நிலவிய வதனன்
முத்தரை வியக்கும் பத்திமை யதனாற்
சிவாகம மெனவொளிர் தவாமணி மேடையும்
வெள்ளை வாரணமேற் கொள்ளுமாங் கதனாற்
கட்டா மரைபல மட்டார் தலினு
லஞ்சுமந் தாரம் விஞ்சியோங் குதலா
லிந்திர னெனப்பொலி யந்திர வாவியும்
மெங்கணு நிறைந்த வெங்குரு நாதா
கருவலி தொலைக்கும் பெருமலை மருந்தே
கருணைசூற் கொண்ட பெரியவான் முகிலே
சிற்றிடைக் கருங்கட் பொற்றொடிக் கரத்தா
ளாகமார் வனமுலை யணையும்
போகமா ரிதழிப் பூங்கண் ணியனே.

( திருவிடை மருதூர் மும்மணிக் கோவை. )

மருதமுஞ் சூழ்ந்த மருத வாண
சுருதியுந் தொடராச் சுருதி நாயக
பத்தருக் கெய்ப்பினில் வைப்பென வுதவு
முத்தித் தாள மூவா முதல்வநின்
திருவடி பிடித்து வெருவரல் விட்டு
மக்களு மனைவியு மொக்கலுந் திருவும்
பொருளென நினையா துன்னரு ளினைநினைந்
திந்திரச் செல்வமு மெட்டுச் சித்தியும்
வந்துழி வந்துழி மறுத்தன ரொதுங்கிச்
சின்னச் சீரை துன்னற் கோவண

மறுதற் கிளொடு பெறுவது புனைந்து
சிதவலோ டொன்று தவழீ யெடுத்தாங்
கிடுவோ ருளரெனி னிலையினின் றயின்று
படுதரைப் பாயலிற் பள்ளிமேவி
யோவாத் தகவெனு மரிவையைத் தழீஇ
மகவெனப் பல்லுயி ரனைத்தையு மொக்கப்பார்க்குநின்
செல்வக் கடவுட் டொண்டர் வாழ்வும்
பற்றிப் பார்க்கி னுற்றநா யேற்குக்
குளப்படி நீரு மளப்பருந் தன்மைப்
பிரளயச் சலதியு மிருவகைப் பொருளு
மொப்பினு மொவ்வாத் துப்பிற் றுதலி
னின்சீ ரடியார் தஞ்சீ ரடியார்க்
கடிமை பூண்டு நெடுநாட் பழகி
முடலை யாக்கை யொடு புடைபட் டொழுகியவர்
காற்றலை யேவலென் னுத்தலை யேற்றுக்
கண்டது காணி னல்ல தொன்
றுண்டோ மற்றெனக் குள்ளது பிறிதே.



உழப்பின் வாரா வுறுதிக ளுளவோ
கழப்பின் வாராக் கையற வுளவோ
அதனால்,
நெஞ்சப் புனத்து வஞ்சக் கட்டையை
வேரற வகழ்ந்து போக்கித் தூர்வைசெய்
தன்பென் பாத்தி கோலி முன்புற
மெய்யெனு மெருவை விரித்தாங் கையமில்
பத்தித் தனி வித்திட்டு நித்தலு
மார்வத் தெண்ணீர் பாய்ச்சி நேர்நின்று
தடுக்குநர்க் கடங்கா திடுக்கண் செய்யும்
பட்டி யஞ்சினுக் கஞ்சி யுட்சென்று
சாந்த வேலி கோலி வாய்ந்தபின்
ஞானப் பெருமுளை நந்தாது முளைத்துக்
கருணை யிளந்தளிர் காட்ட வருகாக்
காமக் குரோதக் களையறக் களைந்து

சேமப் படுத்துழிச் செம்மையி னோங்கி
மெய்ம்மயிர் புளக முகிழ்த்திட் டம்மெனக்
கண்ணீ ரரும்பிக் கடிமலர் மலர்ந்து
புண்ணிய
வஞ்செழுத் தருங்காய் தோன்றி நஞ்சுபொதி
காள கண்டமுங் கண்ணொரு மூன்றுந்
தோளிரு நான்குஞ் சுடர்முக மைந்தும்
பவளநிறம் பெற்றுத் தவளநீ றுபூசு
யறுசுவை யதனினு முறுசுவை யுடைத்தாய்க்
காணினுங் கேட்பினுங் கருதினுங் களிதருஞ்
சேணுயர் மருத மாணிக்கத் தீங்கனி
பையப் பையப் பழுத்துக் கைவர
வெம்ம னோர்க ளினிதினி தருந்திச்
செம்மாந் திருப்பச் சிலரிதின் வாராது
மனமெனும் புனத்தை வறும் பாழாக்கிக்
காமக் காடு மூடித் தீமைசெய்
யைம்புல வேட ரலைத் தொழுக
வின்பப் பேய்த்தே ரெட்டா தோடக்
கல்லா வுணர்வெனும் புல்வா யலமர
விச்சைவித் துதிர்த்துழி யானெனப் பெயரிய
நச்சு மாமர நனிமிக முளைத்துங்
பொய்யென் கவடுகள் போக்கிச் செய்யும்
பாவப் பன்றழை பரப்பிப் பூவெனக்
கொடுமை யரும்பிக் கடுமை மலர்ந்து
துன்பப் பல்காய் தூக்கிப் பின்பு
மரணம் பழுத்து நரகிடை வீழ்ந்து
தமக்கும் பிறர்க்கு முதவா
திமைப்பிற் கழியு மியற்கையோ ருடைத்தே ;
மேவிய புன்மயிர்த் தொகையோ வம்மயிர்
பாவிய தோலின் பரப்போ தோலிடைப்
புகவிட்டுப் பொதிந்த புண்ணோ புண்ணிடை
யூறு முதிரப் புனலோ கூறுசெய்
திடையிடை நிற்கு மெலும்போ வெலும்பிடை
முடைகெழு மூளை விழுதோ வழுவழுத்

துள்ளிடை யொழுகும் வழும்போ மெள்ளநின்
றூரும் புழுவி னெழுங்கோ நீரிடை
வைத்த மலத்தின் குவையோ வைத்துக்
கட்டிய நரம்பின் கயிறோ வுடம்பிற்குட்
பிரியா தொருக்கும் பிணியோ தெரியா
தின்ன தியானென் றறியே னென்னை
யேதினுந் தேடினன் யாதினுங் காணேன்
முன்னம்
வரைத்தனி வில்லாற் புரத்தை யழலூட்டிக்
கண்படை யாகக் காமனை யொருநா
ளுண்பொடி யாக நோக்கி யண்டத்து
வீயா வமரர் வீயவந் தெழுந்த
தீவாய் நஞ்சைத் திருவமு தாக்கி
யிருவர் தேடி வெருவர நிமிர்ந்து
பாலனுக் காகக் காலனைக் காய்ந்து
சந்தன சரள சண்பக வகுள
நந்தன வனத்திடை ஞாயிறு வழங்காது
நவமணி முகிழ்த்த புதுவெயி லெறிப்ப
வெண்ணருங் கோடி யிருடி கணங்கட்குப்
புண்ணியம் புரக்கும் பொன்னி சூழ்ந்த
திருவிடை மருத! பொருவிடைப் பாக!
மங்கை பங்க! கங்கைநா யக! நின்
றெய்வத் திருவருள் கைவந்து கிடைத்தலின்
மாயப் படலங் கீறித் தூய
ஞான நாட்டம் பெற்றனன் பெற்றபின்
னின்பெருந் தன்மையுங் கண்டேன் காண்டலு
மென்னையுங் கண்டேன் பிறரையுங் கண்டே
னின்னிலை யனைத்தினுங் கண்டே னென்னை
நின்னைக் காணு மாந்தர்
தன்னையுங் காணுத் தன்மை யோரே. 2

சூதுற்ற கொங்கையும் மானர் கலவியுஞ் சூழ்பொருளும்
போதுற்ற பூசலுக் கென்செயலாஞ் செய்த புண்ணியத்தால்
தீதற்ற மன்னவன் சிந்தையி னின்று தெளிவதற்கோ
காதற்ற வூசியைத் தந்துவிட் டானென்றன் கைதனிலே. 3

வாதுற்ற திண்புய ரண்ணாமலையர் மலர்ப் பதத்தைப்
போதுற்றெப் போதும் புகலுநெஞ்சே யிந்தப் பூதலத்திற்
றீதுற்ற செல்வமென் றேடிப் புதைத்த திரவியமென்
காதற்ற வூசியும் வாராது காணுங் கடைவழிக்கே. 4

வேதத்தினுட்பொருண் மண்ணாசை மங்கையை விட்டுவிடப்
போதித்த வன்மொழி கேட்டிலையோ செய்த புண்ணியத்தா
லாதித்தன் சந்திரன் போலே வெளிச்சம தாம்பொழுது
காதற்ற வூசியும் வாராது காணுங் கடைவழிக்கே. 5

மாடுண்டு கன்றுண்டு மக்களுண் டென்று மகிழ்வதெல்லாங்
கேடுண் டெனும்படி கேட்டுவிட்டோ மினிக் கேண்மனமே
யோடுண்டு கந்தையுண் டுள்ளே யெழுத்தைந்து மோதவுண்டு
தோடுண்ட கண்ட னடியார் நமக்குத் துணையுமுண்டே. 6

ஆறுண்டு தோப்புண் டணிவீதி யம்பலந் தானுமுண்டு
நீறுண்டு கந்தை நெடுங்கோ வணமுண்டு நித்தநித்த
மாறுண் டிலாவி மயங்கு நெஞ்சே மனைதோருஞ் சென்று
சோறுண்டு தூங்கிப்பின் சும்மா விருக்கச் சுகமுமுண்டே 7

உடுக்கக் கவிக்கக் குளிர்காற்று வெய்யி லுடங்கிவந்தாற்
றடுக்கப் பழைய வொரு வேட்டியுண்டு சகமுழுதும்
படுக்கப் புறந்திண்ணை யெங்கெங்கு முண்டு பசித்துவந்தாற்
கொடுக்கச் சிவனுண்டு நெஞ்சே நமக்குக் குறைவில்லையே. 8

நாட்ட மென்றேயிரு சற்குரு பாதத்தை நம்புபொம்ம
லாட்ட மென்றேயிரு பொல்லாவுடலை யடர்ந்த சந்தைக்
கூட்ட மென்றேயிரு சுற்றத்தை வாழ்வைக் குடங்கவிழ்நீ
ரோட்ட மென்றேயிரு நெஞ்சே யுனக்குப தேசமிதே. 9

ஒன்றென்றிரு தெய்வ முண்டென் றிருவுயர் செல்வமெல்லா
மன்றென்றிரு பசித்தோர் முகம்பார் நல்லறமு நட்பு
நன்றென்றிரு நடு நீங்காமலே நமக் கிட்டபடி
யென்றென் றிருமன மேயுனக் கேயுப தேசமிதே. 10

கண்ணுண்டு காணக் கருத்துண்டு நோக்கக் கசிந்துருகிப்
பண்ணுண்டு பாடச் செவியுண்டு கேட்கப் பல்பச்சிலையா

லெண்ணுண்டு சாத்த வெதிர்நிற்க வீசனிருக் கையிலே
மண்ணுண்டு போகுதை யோகெடுவீ ரிந்த மானிடமே. 11

## கோயில் நான்மணி மாலை.

நினையார் மெலியார் நிறையழியார் வாளாப்
புனைவார்க்குக் கொன்றை பொதுவோ-வனைவீரு
மெச்சியே காண வியன்றில்லை யானருளென்
பிச்சியே நாளைப் பெறும். 12

## திருக்கழுமல மும்மணிக் கோவை.

பொருளாசை பெண்ணாசை பூவாசை யென்னு
மருளாசை யாமாசை மாற்றித்-தெருண்ஞான
வேந்தராய் வாழலா மெய்யன்பா னன்னெஞ்சே
பூந்தராய் நாதரைநீ போற்று. 13

கண்டேன் புகலிக் கருத்தனைத்தன் மெய்ஞ்ஞான
வண்டேனுண் டேமகிழும் வண்டானேன்-பண்டே
யளியனுமா னேன்மனமெய் யார்பதம்வே றின்றிக்
குளிர்சிவா னந்தமிலங் கும். 14

விடையம் பொருளென் றுணராத மார்க்கம் விரும்புமழுப்
படையம் புயக்கரத் தெந்தாதை ஞான பரமவென்றெண்
சடையம் புனலணி வேணு புரேசனந் தான்மலர்தூ
விடையம் பொருளென் றிருநீ யென்றுண்மை விளம்பினனே. 15

## திருவிடைமருதூர் மும்மணிக் கோவை.

வருந்தே னிறந்தும் பிறந்து மயக்கும் புலன்வழிபோய்ப்
பொருந்தே னரகிற் புகுகின்றி லேன்புகழ் மாமருதிற்
பெருந்தேன் முகந்து கொண்டுண்டு பிறிதொன்றி லாசையின்றி
யிருந்தே னினிச்சென் றிரவே னொருவரை யாமதொன்றுமே. 16

இருக்கு மருதினுக் குள்ளிமை யோர்களு நான்மறையு
நெருக்கு நெருக்கத்து நீளகத் துச் சென்று மீளவொட்டாத்
திருக்கு மறுத்தைவர் தீமையுந் தீர்த்துச் செவ்வே மனத்தை
யொருக்கு மொருக்கத்தி னுள்ளே முளைக்கின்ற வொண்சுடரே.

## திருவேகம்ப மாலை.

அறந்தா னியற்று மவனிலுங் கோடி யதிகமில்லந்
துறந்தா னவனிற் சதகோடி யுள்ளத் துறவுடையோன்
மறந்தா னறக்கற் றறிவோ டிருந்திரு வாதனையற் [னே.
றிறந்தான் பெருமையை யென்சொல்லு வேன்கச்சி யேகம்ப

நல்லா ரிணக்கமு நின்பூசை நேசமு ஞானமுமே
யல்லாது வேறு நிலையுள தோ வகமும் பொருளு
மில்லாளுஞ் சுற்றமு மைந்தரும் வாழ்வு மெழிலுடம்பு
மெல்லாம் வெளிமயக்கே யிறைவா கச்சி யேகம்பனே. 19

மாயநட் போரையு மாயா மலமெனு மாதரையும்
வீயவிட் டோட்டி வெளியே புறப்பட்டு மெய்யருளாந்
தாயுடன் சென்றுபின் றாதையைக் கூடிப்பின் றாயைமறந்
தேயுமதே நிட்டை யென்றா னெழிற்கச்சி யேகம்பனே. 20

பொருளுடை யோரைச் செயலினும் வீரரைப் போர்க்களத்துந்
தெருளுடை யோரை முகத்தினுந் தேர்ந்து தெளிவதுபோ
லருளுடை யோரைத் தவத்திற் குணத்தி லருளி லன்பி
லிருளறு சொல்லினுங் காணத்த குங்கச்சி யேகம்பனே. 21

அப்பென்றும் வெண்மைய தாயினு மாங்கந் நிலத்தியல்பாய்
தப்பின்றி யேகுண வேற்றுமை தான்பல சார்தலினாற்
செப்பி லபக்குவம் பக்குவமா யுள்ள சீவரினு
மிப்படி யேநிற்ப னெந்தை பிரான்கச்சி யேகம்பனே. 22

பூதங்க ளற்றுப் பொறியற்றுச் சாரைம் புலன்களற்றுப்
பேதங் குணமற்றுப் பேராசை தானற்றுப் பின்முனற்றுக்
காதங் கரணங் களுமற்ற வானந்தக் காட்சியிலே
யேதங் களைந்திருப் பேனிறைவா கச்சி யேகம்பனே. 23

## திருத்தில்லை.

ஓடாமற் பாழுக் குழையாம லோர முரைப்பவர்பாற்
கூடாம னல்லவர் கூட்டம் விடாமல்வெங் கோபநெஞ்சி
னூடாம னன்மை வழுவாம லின்றைக்கு நாளைக்கென்று
தேடாமற் செல்வந் தருவாய் சிதம்பர தேசிகனே. 24

பிறவா திருக்க வரம்பெறல் வேண்டும் பிறந்துவிட்டா
லிறவா திருக்க மருந்துண்டு காணிது வெப்படியோ
வறமார் புகழ்த்தில்லை யம்பல வாண ரடிக்கமல
மறவா திருமன மேயது காணன் மருந்துனக்கே 25

திருவெண்காட்டுத் திருவிசைப்பா.

பூதமுங் கரணம் பொறிகளோம் புலனும் பொருந்திய குணங்களோர் மூன்றும், நாதமுங் கடந்த வெளியிலே நீயுநானுமாய் நிற்குநா ளுளதோ, வாதமுஞ் சமய பேதமுங் கடந்த மனோலய வின்பசா கரனே, ஏதுமொன் றறியேன் யாதுநின் செயலே யிறைவனே யேகநாயகனே. 26

திருவிடைமருதூர்

சுடப்படு வாரறி யார்புர மூன்றையுஞ் சுட்டபிரான்
றிடப்படு மாமதிற் றென்னொற்றி யூரன் றெருப்பரப்பி
னடப்பவர் பொற்பத நந்தலை மேற்பட நன்குருண்டு
கிடப்பது காண்மன மேவிதி யேட்டைக் கிழிப்பதுவே. 27

கைலாயம்.

இல்லந் துறந்து பசிவந்த போதங் கிரந்துதின்று
பல்லுங் கறையற்று வெள்வாயு மாயொன்றிற் பற்றுமின்றிச்
சொல்லும் பொருளு மிழந்து சுகானந்தத் தூக்கத்திலே
யல்லும் பகலு மிருப்பதென் றோகயி லாயத்தனே. 28

சினந்தனை யற்றுப் பிரியமுந் தானற்றுச் செய்கையற்று
நினைந்தது மற்று நினையா மையுமற்று நிர்ச்சிந்தனாய்த்
தனந்தனி யேயிருந் தானந்த நித்திரை தங்குகின்ற
வனந்தனி லென்றிருப் பேனத்த னேகயி லாயத்தனே 29

நீறூர்த்த மேனியு ரோமஞ் சிலிர்த்துள நெக்கு நெக்குச்
சேறாய்க் கசிந்து கசிந்தே யுருகிநின் சீரடிக்கே
மாறாத் தியானமுற் றானந்த மேறகொண்டு மார்பிற்கண்ணீ
ராறாய்ப் பெருகக் கிடப்பதென் றோகயி லாயத்தனே. 30

பொது.

வினைப்போக மேயொரு தேகங்கண் டாய்வினை தானொழிந்தாற்
றினைப்போ தளவுநில் லாதுகண்டாய் சிவன் பாதநினை

நினைப்போரை மேவு நினையாரை நீங்கிந் நெறியினின்று
னுனைப்போ லொருவருண் டோமனமே யெனக் குற்றவரே. 31

ஒன்றென் றிருதெய்வ முண்டென் றிருவுயர் செல்வமெல்லா
மன்றென் றிருபசித் தோர்முகம் பார்நல் லறமுநட்பு
நன்றென் றிருநடு நீங்காமலே நமக் கிட்டபடி
யென்றென் றிருமன மேயுனக் கேயுப தேசமிதே. 32

நாட்டமென் றேயிரு சற்குரு பாதத்தை நம்புபொம்ம
லாட்டமென் றேயிரு பொல்லாவுடலை யடர்ந்த சந்தைக்
கூட்டமென் றேயிரு சற்றத்தை வாழ்வைக் குடங்கவிழ்நீ
ரோட்டமென் றேயிரு நெஞ்சே யுனக்குப தேசமிதே 33

விட்டே னுலகம் விரும்பே னிருவினை வீணருடன்
கிட்டே னவருரை கேட்டுமி ரேன்மெய் கெடாதநிலை
தொட்டேன் சுகதுக்க மற்றுவிட் டேன்றொல்லை நான்மறைக்கு
மெட்டே னெனும்பர மென்னிடத்தே வந்திங் கெய்தியதே. 34

அட்டாங்க யோகமு மாதார மாறு மவத்தையைந்தும்
விட்டேறிப் போன வெளிதனி லேவியப் பொன்றுகண்டேன்
வட்டாகிச் செம்மதிப் பாலூற லுண்டு மகிழ்ந்திருக்க
வெட்டாத பேரின்ப மென்னை விழுங்கி யிருக்கின்றதே. 35

சுரப்பற்று வல்வினை சுற்றமு மற்றுத் தொழில்களற்றுக்
கரப்பற்று மங்கையர் கையிணைக் கற்றுக் கவலையற்று
வரப்பற்று நாதனை வாயார வாழ்த்தி மனமடங்கப்
பரப்பற் றிருப்ப தன்றோ பரமாபர மானந்தமே. 36

செல்வரைப் பின்சென் றுபசாரம் பேசித் தினந்தினமும்
பல்லினைக் காட்டிப் பரிதவி யாமற் பரானந்தத்தி
னெல்லையிற் புக்குநல் லேகாந்த மாயெனக் காமிடத்தே
யல்லலற் றென்றிருப் பேனுல நீழ லரும்பொருளே. 37

ஓங்கார மாய்நின்ற வத்துவி லேயொரு வித்துவந்து
பாங்காய் முளைத்த பயனறிந் தாற்பதி னாலுலகு
நீங்கா மனீங்கி நிறையா நிறைந்து நிறையுருவா
யாங்கார மானவர்க் கெட்டாக் கனிவந் தமர்ந்திடுமே. 38

விதியார் படைப்பு மரியா ரளிப்பும் வியன்கயிலைப்
பதியார் துடைப்பு நம்பாலணு காதுப ரானந்தமே
கதியாகக் கொண்டுமற் றெல்லாந் துயிலிற் கனவெனநீ
மதியா திருமன மேயிது காணென் மருந்துனக்கே. 39

அஞ்சக் கரமெனுங் கோடாலி கொண்டிந்த வைம்புலனும்
வஞ்சப் புலக்கட்டை வேரற வெட்டி வளங்கள்செய்து
விஞ்சத் திருத்திச் சதாசிவ மென்கின்ற வித்தையிட்டுப்
புஞ்சக் களைபறித் தேன்வளர்த் தேன்சிவ போகத்தையே. 40

வெட்டாத சக்கரம் பேசாத மந்திரம் வேறொருவர்க்
கெட்டாத புட்ப மிறையாத தீர்த்த மினிமுடிந்து
கட்டாத லிங்கங் கருதாத நெஞ்சங் கருத்தினுள்ளே
முட்டாத பூசையன் றோகுரு நாதன் மொழிந்ததுவே. 41

உளியிட்ட கல்லையு மொப்பிட்ட சாந்தையு மூத்தையறப்
புளியிட்ட செம்பையும் போற்றுகி லேனுயர் பொன்னெனவே
யொளியிட்ட தாளிரண் டுள்ளே யிருததுவ துண்மையென்று
வெளியிட்டடைத்து வைத்தேனினிமேலொன் றும்வேண்டிலனே.

திருவாரூர்.

ஆரூ ரிங்கிருக்க வவ்வூர்த் திருநாளென்
றாரூர்க டோறு முழலுவீர்—நேரே
யுளக்குறிப்பை நாடாத வூமர்கா ணீவிர்
விளக்கிருக்கத் தீத்தேடு வீர். 43

எத்தனைநாள் கூடி யெடுத்த சரீரமிவை
யத்தனையு மண்டின்ப தல்லவோ—வித்தகனார்
காலைப் பிடித்துமெள்ளக் கங்குல்பக லற்றிடத்தே
மேலைக் குடியிருப் போமே. 44

எச்சிலென்று சொல்லி யிதமகிதம் பேசாதீர்
யெச்சி லிருக்கு மிடமறியீ—ரெச்சிறனை
யுய்த்திருந்து பார்த்தா லொருமை வெளிப்படும்பின்
சித்த நிராமய மாமே. 45

## நெஞ்சோடு புலம்பல்.

அஞ்சருளைப் போற்றி யைந்துபுல னைத்துறக்க
நெஞ்சே யுனக்கு நினைவுநான் சொல்லுகிறேன்
வஞ்சகத்தை நீக்கி மறுநினைவு வாராமல்
செஞ்சரணத் தாளைச் சிந்தைசெய்வாய் நெஞ்சமே. 46

ஓட்டைத் துருத்தியை யுடையும் புழுக்கூட்டை
ஆட்டுஞ் சிவசித்த ரருளைமிகப் போற்றியே
வீட்டைத் திறந்து வெளியையொளி யாலழைத்துக்
காட்டும் பொருளிதென்று கருதிலையே நெஞ்சமே. 47

ஊன முடனே யுடையும் புழுக்கூட்டை
மானமுடனேசுமந்து மண்ணுலகின் மாளாமல்
ஆனதொரு பஞ்சவர்க ளாண்டிருந்த தேசம்விட்டுப்
போனது போலேநாம் போய்ப்பிழைத்தோ மில்லையே. 48

## பூரணமாலை.

ஊனுக்கு ணீநின்று லாவினதைக் காணுமல்
நானெ ன்றிருந்து நலனழிந்தேன் பூரணமே. 1

தனிமுதலைப் பார்த்துத் தனித்திருந்து வாழாமல்
அநியாய மாய்ப்பிறந்திங் கலைந்துநின்றேன் பூரணமே. 2

உடலுக்கு ணீநின் றுலாவினதைக் காணுமல்
கடமலைதோ றுந்திரிந்து காலனுத்தேன் பூரணமே. 3

என்னை யறியாம லெனக்குள்ளே நீயிருக்க
உன்னை யறியாம லுடலிழந்தேன் பூரணமே. 4

எனக்குள்ளே நீயிருக்க வுனக்குள்ளே நானிருக்க
மனக்கவலை தீர வரமருள்வாய் பூரணமே. 5

எழுவகைத் தோற்றத் திருந்துவிளை யாடினதைப்
பழுதறவே பாராமற் பயனிழந்தேன் பூரணமே. 6

அண்டபிண்ட மெல்லா மணுவுக் கணுவாகநீ
கொண்ட வடிவின் குறிப்பறியேன் பூரணமே. 7

ஐந்து பொறியை யடக்கியுனைப் போற்றுமல்
நைந்துருகி நெஞ்ச நடுங்கினேன் பூரணமே. 8

ஒன்று யுயிரா யுடல்தோறு நீயிருந்தும்
என்று மறியார்க ளேழைகள்தாம் பூரணமே. 9

நானேநீ நீயேநா னுமிரண்டு மொன்றானல்
தேனின் ருசியதுபோற் றெவிட்டாய்நீ பூரணமே. 10

முடிவிலொரு சூனியத்தை முடித்துநின்று பாராமல்
அடியிலொரு சூனியத்தி லலைந்தேனே பூரணமே. 11

## நெஞ்சோடுமேகிழ்தல்.

பாராமற் பதையாமற் பருகாமல் யாதென்றும்
ஓரா துணர்வுடனே யொன்றினையே நெஞ்சமே. 1

களவிறந்து கொலையிறந்து காண்பனவுங் காட்சியும்போ
யளவிறந்து நின்றதிலே யன்புற்றாய் நெஞ்சமே. 2

பேச்சிறந்து சுட்டிறந்து பின்னிறந்து முன்னிறந்து
நீச்சிறந்து நின்றதிலே நேசமுற்றாய் நெஞ்சமே. 3

விண்ணிறந்து மண்ணிறந்து வெளியிறந்து வொளியிறந்து
எண்ணிறந்து நின்றதிலே யேகரித்தாய் நெஞ்சமே. 4

பார்த்தவிட மெங்கும் பரமெனவே யுட்புறம்புங்
கோத்தபடி யுண்மையெனக் கொண்டனையே நெஞ்சமே. 5

ஊரிறந்து பேரிறந்து வொளியிறந்து வெளியிறந்து
சீரிறந்து நின்றதிலே சேர்ந்தனையே நெஞ்சமே. 6

விருப்புவெறுப் பில்லாத வெட்ட வெளியதனில்
இருப்பே சுகமென் றிருந்தனையே நெஞ்சமே. 7

நீரொடுதண் ணொலிவிண்டு நீரான வாறேபோல்
ஊரொடு பேரில்லானோ டொன்றினையே நெஞ்சமே. 8

மேலாம் பதங்களெல்லாம் விட்டுவிட் டாராய்ந்து
நாலாம் பதத்தி னடந்தனையே நெஞ்சமே. 9

உள்ளும் புறம்பு மூவட்டாத வானந்தக்
கள்ளருந்தி நின்றதிலே கண்ணுற்றாய் நெஞ்சமே. 10

## கோயிற்றிருவகவல்.

நினைமின் மனனே நினைமின் மனனே
சிவபெரு மானைச் செம்பொனம் பலவனை
நினைமின் மனனே நினைமின் மனனே
அலகைத் தேரி னலமரு காலின்
உலகப் பொய்வாழ்க்கையை யுடலை யோம்பற்க
பிறந்தன விறக்கு மிறந்தன பிறக்கும்
தோன்றின மறையு மறைந்தன தோன்றும்
பெருத்தன சிறுக்குஞ் சிறுத்தன பெருக்கும்
உணர்ந்தன மறக்கு மறந்தன வுணரும்
புணர்ந்தன பிரியும் பிரிந்தன புணரும்
அருந்தின மலமாம் புனைந்தன வழுக்காம்
உவப்பன வெறுப்பாம் வெறுப்பன வுவப்பாம்
என்றிவை யனைத்து முணர்ந்தனை யன்றியும்
பிறந்தன பிறந்தன பிறவிக டோறும்
கொன்றனை யனைத்து மனைத்து நினைக்கொன்றன
தின்றனை யனைத்து மனைத்து நினைத்தின்றன
பெற்றனை யனைத்து மனைத்து நினைப்பெற்றன
ஓம்பினை யனைத்து மனைத்து நினையோம்பின
செல்வத்துட் களித்தனை தரித்திரத் தழுங்கினை
சுவர்க்கத் திருந்தனை நரகிற் கிடந்தனை
இன்பமுந் துன்பமு மிருநிலத் தருந்தினை
ஒன்றொன் றொழியா துற்றனை யன்றியும்
புற்புதக் குரம்பைத் துச்சி லொதுக்கிட
மென்னநின் றியங்கு மிருவினைக் கூட்டைக்
கல்லினும் வலிதாக் கருதினை யிதனுள்
பீளையு நீரும் புறப்படு மொருபொறி
மீளுங் குறும்பி வெளிப்படு மொருபொறி
சளியு நீருந் தவழு மொருபொறி
உமிழ்நீர் கோழை யொழுகு மொருபொறி
வளியு மலமும் வழங்கு மொருவழி
சலமுஞ் சீயுஞ் சரியு மொருவழி
உள்ளூறத் தொடங்கி வெளிப்பட நாறுஞ்

சட்டக முடிவிற் சுட்டெனும் பாகும்
உடலுறு வாழ்க்கையை யுள்ளுறத் தேர்ந்து
கடிமலர்க் கொன்றைச் சடைமுடிக் கடவுளை
ஒழிவருஞ் சிவபெரும் போக வின்பத்தை
நிழலெனக் கடவா நீர்மையொடு பொருந்தி
எனதற நினைவற விருவினை மலமற
வரவொடு செலவற மருளற விருளற
இரவொடு பகலற விகபர மறவொரு
முதல்வனைத் தில்லையுண் முளைத்தெழுஞ் சோதியை
அம்பலத் தரசனை யானந்தக் கூத்தனை
நெருப்பினி லரக்கென நெக்குநெக் குருகித்
திருச்சிற் றம்பலத் தொளிருஞ் சிவனை
நினைமின் மனனே நினைமின் மனனே
சிவபெரு மானைச் செம்பொனம் பலவனை
நினைமின் மனனே நினைமின் மனனே.

---

## பத்திரகிரியார் அருளிச்செய்த

### மெய்ஞ்ஞானப் புலம்பல்.

ஆங்கார மும்மடக்கி ஐம்புலனைச் சுட்டறுத்துத்
தூங்காமற் றூங்கிச் சுகம்பெறுவ தெக்காலம். 1

நீங்காச் சிவயோக நித்திரைகொண் டேயிருந்து
தேங்காக் கருணைவெள்ளந் தேக்குவது மெக்காலம். 2

சேயாய்ச் சமைந்து செவிடூமை போற்றிரிந்து
பேய்போ லிருந்துன் பிரமைகொள்வ தெக்காலம். 3

பேய்போற் றிரிந்து பிணம்போற் கிடந்துபெண்ணைத்
தாய்போல் நினைத்துத் தவமுடிப்ப தெக்காலம். 4

ஆமை வருமாட்கண் டைந்தடக்குஞ் செய்தாற்போல்
ஊமை யுருக்கொண் டொடுங்குவது மெக்காலம். 5

அத்த னிருப்பிடத்தை ஆராய்ந்து பார்த்துநிதஞ்
செத்த சவம்போற் றிரிவதினி யெக்காலம். 6

வேதாந்த வேதமெல்லாம் விட்டொழிந்தே நிட்டையிலே
ஏகாந்த மாக விருப்பதினி யெக்காலம். 7

மற்றிடத்தைத் தேடியென்றன் வாழ்நாளைப் போக்காமல்
உற்றிடத்தைத் தேடி யுறங்குவது மெக்காலம். 8

கூறியநால் வேதங் கூப்பிட்டுங் காணாத
பாரார கசியத்தைப் பார்த்திருப்ப தெக்காலம். 9

தெளியத் தெளியத் தெளிந்தசிவா னந்தத்தேன்
பொழியப் பொழியமனம் பூண்டிருப்ப தெக்காலம். 10

கட்டறுக்க வொண்ணாக் கருவிகர ணாதியெல்லாம்
சுட்டறுத்து நிட்டையிலே தூங்குவது மெக்காலம். 11

கள்ளக் கருத்தையெல்லாங் கட்டோடு வேறறுத்திங்
குள்ளக் கருத்தை யுணர்ந்திருப்ப தெக்காலம் 12

தோன்றாசை மூன்றுந் தொடர்ந்துவந்து சுற்றாமல்
ஊன்றாசை வேரையடி யூடறுப்ப தெக்காலம். 13

ஐந்து பொறிவழிபோ யலைந்துமிந்தப் பாழ்மனதை
வெந்து விழப்பார்த்து விழிப்பதினி யெக்காலம். 14

இனமாண்டு சேர்ந்திருந்தோ ரெல்லாருந் தான்வரண்டு
சினமாண்டு போகவருள் சேர்ந்திருப்ப தெக்காலம். 15

அமையா மனதமையு மானந்த வீடுகண்டால்
இமையாம நோக்கி யிருப்பதினி யெக்காலம். 16

கூண்டுவிடுஞ் சீவன்மெள்ளக் கொட்டாவி கொண்டாற்போல்
மாண்டுவிடு முன்னானன் மாண்டிருப்ப தெக்காலம். 17

ஆக வெளிக்குள்ளே யடங்காப் புரவிசெலல
ஏக வெளியி லிருப்பதினி யெக்காலம். 18

ஓடாம லோடி யுலகவலம் வந்துசுற்றித்
தேடாம லென்னிடமாய்த் தெரிசிப்ப தெக்காலம். 19

மலமுஞ் சலமுமற்று மாயையற்று மானமற்று
நலமுங் குலமுமற்று நானிருப்ப தெக்காலம். 20

வெல்லுமட்டும் பார்த்து வெகுளியெலாம் விட்டகன்று
செல்லுமட்டுஞ் சிந்தை செலுத்துவது மெக்காலம். 21

கனவுகண்டார் போலெனக்குக் காட்டிமணந் தேயிருந்த
நினைவைப் பரவெளிமேல் நிறுத்துவது மெக்காலம். 22

மும்பாழும் பாழாய் முதற்பாழுஞ் சூனியமா
யப்பாழும் பாழா யன்புசெய்வ தெக்காலம். 23

என்மயமாய்க்கண்டதெல்லாமெண்ணியெண்ணிபார்த்ததற்பின்
தன்மயமாய்க் கொண்டதிலே சார்ந்துநிற்ப தெக்காலம். 24

ஒளியிட்ட மெய்ப்பொருளை யுள்வழியி லேயடைந்து
வெளியிட்டு சாத்திவைத்து வீடுறுவ தெக்காலம். 25

பித்தாயங் கொண்டு பிரணவத்தை யூடறுத்துச்
செத்தாரைப் போல திரிவதினி யெக்காலம். 26

சாவாமற் செத்திருந்து சற்குருவின் பொன்னடிக்கீழ்
வேவாமல் வெந்திருக்க வேண்டுவது மெக்காலம். 27

வாசித்துங் காணாமல் வாய்விட்டும் பேசாமல்
பூசித்துத் தோன்றாப் பொருள்காண்ப தெக்காலம் 28

வேதாந்த வேதமெல்லாம் விட்டேறி யேகடந்து
நாதாந்த மூல நடுவிருப்ப தெக்காலம். 29

அல்லும் பகலுமென்ற னறிவையறி வாலறிந்து
சொல்லு முரையிறந்து தூங்குவது மெக்காலம். 30

என்னைவிட்டு நீங்காம லென்னிடத்தி னீயிருக்க
வுன்னைவிட்டு நீங்கா தொருப்படுவ தெக்காலம். 31

மனதையொரு வில்லாக்கி வான்பொறியை நாணாக்கி
யெனதறிவை யம்பாக்கி யெய்வதினி யெக்காலம். 32

என்னையிறக்க வெய்தே யென்பதியை யீடழித்த
உன்னை வெளியில்வைத்தே யொளித்துநிற்ப தெக்காலம். 33

கடலி லொளித்திருந்த கனலெழுந்து வந்தாற்போ
லுடலி லொளித்தசிவ மொளிசெய்வ தெக்காலம். 34

பொன்னிற் பலவிதமாய் பூஷணமுண் டானதுபோல்
உன்னிற் பிறந்ததுன்னி லொடுங்குவது மெக்காலம். 35

இருளை வெளிவிழுங்கி யேகவுருக் கொண்டாற்போல்
அருளை விழுங்குமிரு ளகன்றுநிற்ப தெக்காலம். 36

ஊமைக் கனுக்கண் டுரைக்கறியா வின்பமதை
நாமறிந்து கொள்வதற்கு நாள்வருவ தெக்காலம். 37

எங்கும் பரவடிவா யென்வடிவு நின்வடிவாய்க்
கங்குல்பக லின்றியுனைக் கண்டிருப்ப தெக்காலம். 38

சத்தம் பிறந்தவிடந் தன்மயமாய் நின்றவிடஞ்
சித்தம் பிறந்தவிடந் தேர்ந்தறிவ தெக்காலம். 39

போக்கும் வரவும் புறம்புமுள்ளு மாகிநின்றும்
தாக்கு மொருபொருளைச் சந்திப்ப தெக்காலம். 40

நானெனவு நீயெனவு நாமிரண்டு மற்றொன்றும்
நீயெனவே சிந்தைதனி னேர்படுவ தெக்காலம். 41

பிறப்பு மிறப்புமற்றுப் பேச்சுமற்று மூச்சுமற்று
மறப்பு நினைப்புமற்று மாண்டிருப்ப தெக்காலம். 42

மன்னும் பரவெளியை மனவெளியி லடைத்தறிவை
யென்னு மொருநினைவை யெழுப்பிநிற்ப தெக்காலம். 43

என்னையென்னி லேமறந்தே யிருந்தபதி யும்மறந்து
தன்னையுந்தா னேமறந்து தனித்திருப்ப தெக்காலம். 44

கள்ளுண் டவர்போற் களிதருமா னந்தமதாற்
றள்ளுண்டு நின்றுடித் தடைவிடுவ தெக்காலம். 45

ஐயாறு மாறு மகன்று வெறுவெளியில்
மையிருளில் நின்றமன மாள்வதினி யெக்காலம். 46

எவரெவர்க ளெப்படிகண் டெந்தப் படிநினைத்தார்
அவரவருக் கப்படிநின் றுமென்ப தெக்காலம். 47

ஆயுங் கலைகளெல்லா மாராய்ந்து பார்த்ததற்பின்
நீயென்று மில்லா நிசங்காண்ப தெக்காலம். 48



## தாயுமான சுவாமிகள் பாடல்.



### திருவருள் விலாசப் பரசிவ வணக்கம்.

அங்கிங் கெனாதபடி யெங்கும்ப்ர காசமா
யானந்த பூர்த்தியாகி
யருளொடு நிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே
யகிலாண்ட கோடியெல்லாந்
தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்ததெது மனவாக்கினில்
தட்டாம னின்றதெது சமயகோ டிகளெலாந்
தந்தெய்வ மெந்தெய்வமென்
றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவு நின்றதெது
வெங்கணும் பெருவழக்காய்
யாதினும் வல்லவொரு சித்தாகி யின்பமா
யென்றைக்கு முள்ளதெதுமேல்
கங்குல்பக லறநின்ற வெல்லையுள தெதுவது
கருத்திற் கிசைந்ததுவே
கண்டன வெலாமோன வுருவெளிய தாகவுங்
கருதி யஞ்சலிசெய்குவாம். 1

ஆரனந்தம் பெற்ற பேரனந்தஞ் சுற்று
முறவனந் தம்வினையினால்
உடலனந் தஞ்செயும் வினையனந் தங்கருத்
தோவனந் தம்பெற்றபேர்
சீரனந் தஞ்சொர்க்க நரகமு மனந்தநற்
றெய்வமு மனந்தபேதம்
திகழ்கின்ற சமயமு மனந்தமத னுன்ஞான
சிற்சத்தி யாலுணர்ந்து
காரனந் தங்கோடி வருஷித்த தெனவன்பர்
கண்ணும்விண் ணுந்தேக்கவே
கருதரிய வானந்த மழைபொழியு முகிலைநங்
கடவுளைத் துரியவடிவைப்

பேரனந் தம்பேசி மறையனந் தஞ்சொலும்
பெரியமௌ னத்தின்வைப்பைப்
பேசரும னந்தபத ஞானவா னந்தமாம்
பெரியபொரு ளைப்பணிகுவாம். 2

அத்துவித வத்துவைச் சொப்ரகா சத்தனியை
யருமறைகண் முரசறையவே
யறிவினுக் கறிவாகி யானந்த மயமான
வாதியை யநாதியேக
தத்துவ சொரூபத்தை மதசம்ம தம்பெறுச்
சாலம்ப ரகிதமான
சாசுவத புட்கல நிராலம்ப வாலம்ப
சாந்தபத வ்யோமநிலையை
நித்தநிர் மலசகித நிஷ்ப்ரபஞ் சப்பொருளை
நிர்விஷய சுத்தமான
நிர்விகா ரத்தைத் தடத்தமாய் நின்றொளிர்
நிரஞ்சன நிராமயத்தைச்
சித்தமறி யாதபடி சித்தத்தி னின்றிலகு
திவ்யதே சோமயத்தைச்
சிற்பர வெளிக்குள்வளர் தற்பரம தானபர
தேவதையை யஞ்சலிசெய்குவாம். 3

பரிபூரணானந்தம்.

வாரா தெலாமொழிய வருவன வெலாமெய்த
மனதுசாட் சியதாகவே
மருவநிலை தந்ததும் வேதாந்த சித்தாந்த
மரபுசம ரசமாகவே
பூராய மாயுணர வூகமது தந்ததும்
பொய்யுடலை நிலையன்றெனப்
போதநெறி தந்ததுஞ் சாசுவத வானந்த
போகமே வீடென்னவே
நீராள மாயுருக வுள்ளன்பு தந்தது
நின்னதரு ளின்னுமின்னு
நின்னையே துணையென்ற வென்னையேகாக்கவொரு
நினைவுசற் றுண்டாகிலோ

பாராதி யறியாத மோனமே யிடைவிடாப்
பற்றாக நிற்கவருள்வாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந்தமே. 4

ஆழாழி கரையின்றி நிற்கவிலையோ கொடிய
வாலமமு தாகவிலையோ
அக்கடலின் மீதுவட வனநிற்க வில்லையோ
வந்தரத் தகிலகோடி
தாழாம நிலைநிற்க வில்லையோ மேருவுந்
தனுவாக வளையவிலையோ
சப்தமே கங்களும் வச்ரதா ரணையிற்
சஞ்சரித்திட வில்லையோ
வாழாது வாழவே யிராமனடி யாற்சிலையு
மடமங்கை யாகவிலையோ
மணிமந்த்ர மாதியால் வேண்டுசித் திகளுலக
மார்க்கத்தில் வைக்கவிலையோ
பாழான வென்மனங் குவியவொரு தந்திரம்
பண்ணுவ துனக்கருமையோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந்தமே. 5

## பொருள் வணக்கம்.

நித்தியமாய் நிர்மலமாய் நிட்களமாய் நிராமயமாய்
நிறைவாய் நீங்காச்
சுத்தமுமாய்த் தூரமுமாய்ச் சமீபமுமாய்த் துரியநிறை
சுடரா யெல்லாம்
வைத்திருந்த தாரகமா யானந்த மயமாகி
மனவாக் கெட்டாச்
சித்துருவாய் நின்றவொன்றைச் சுகாரம்பப் பெருவெளியைச்
சிந்தை செய்வாம். 6

யாதுமன நினையுமந்த நினைவுக்கு நினைவாகி
யாதின் பாலும்

பேதமற நின்றுயிருக் குயிராகி யன்பருக்கே
பேரா னந்தக்
கோதிலமு தூற்றரும்பிக் குணங்குறியொன் றறத்தன்னைக்
கொடுத்துக் காட்டுந்
தீதில்பரா பரமான சித்தாந்தப் பேரொளியைச்
சிந்தை செய்வாம். 7

பெருவெளியா யைம்பூதம் பிறப்பிடமாய்ப் பேசாத
பெரிய மோனம்
வருமிடமாய் மனமாதிக் கெட்டாத பேரின்ப
மயமாய் ஞானக்
குருவருளாற் காட்டிடவு மன்பரைக்கோத் தறவிழுங்கிக்
கொண்டப் பாலுந்
தெரிவரிதாய்க் கலந்ததெந்தப் பொருளந்தப் பொருளினையாஞ்
சிந்தை செய்வாம். 8

இகபரமு முயிர்க்குயிரை யானெனதற் றவருறவை
யெந்த நாளுஞ்
சுகபரிபூ ரணமான நிராலம்ப கோசரத்தைத்
துரிய வாழ்வை
யகமகிழ வருந்தேனை முக்கனியைக் கற்கண்டை
யமிர்தை நாடி
மொகுமொகென விருவிழிநீர் முத்திரைப்பக் கரமலர்கண்
முகிழ்த்து நிற்பாம். 9

சாதிகுலம் பிறப்பிறப்புப் பந்தமுத்தி யருவுருவத்
தன்மை நாம
மேதுமின்றி யெப்பொருட்கு மெவ்விடத்தும் பிரிவறநின்
றியக்கஞ் செய்யுஞ்
சோதியைமாத் தூவெளியை மனதவிழ நிறைவான
துரிய வாழ்வைத்
தீதில்பர மாம்பொருளைத் திருவருளே நினைவாகச்
சிந்தை செய்வாம். 10

இந்திரசா லங்கனவு கானலினீ ரெனவுலக
மெமக்குத் தோன்றச்

சந்ததமுஞ் சிற்பரத்தா லழியாத தற்பரத்தைச்
சார்ந்து வாழ்க
புந்திமகி ழுறநாளுந் தடையறவா னந்தவெள்ளம்
பொலிக வென்றே
வந்தருளுங் குருமௌனி மலர்த்தாளே யநுதினமும்
வழுத்தல் செய்வாம். 11

பொருளாகக் கண்டபொரு ளெவைக்குமுதற் பொருளாகிப்
போத மாகித்
தெருளாகிக் கருதுமன்பர் மிடிதீரப் பருகவந்த
செழுந்தே னாகி
யருளானோர்க் ககம்புறமென் றுன்னாத பூரணவா
னந்த மாகி
யிருடீர விளங்குபொரு ளியாதந்தப் பொருளினையா
மிறைஞ்சி நிற்பாம். 12

அருமறையின் சிரப்பொருளாய் விண்ணவர்மா முனிவர்சித்த
ராதி யானோர்
தெரிவரிய பூரணமாய்க் காரணங்கற் பனைகடந்த
செல்வ மாகிக்
கருதரிய மலரின்மண மெள்ளிலெண்ணெ யுடலுயிர்போற்
கலந்தெந் நாளும்
துரியநடு வூடிருந்த பெரியபொரு ளியாததனைத்
தொழுதல் செய்வாம். 13

விண்ணாதி பூதமெல்லாந் தன்னகத்தி லடக்கிவெறு
வெளியாய் ஞானக்
கண்ணாரக் கண்டவன்பர் கண்ணூடே யானந்தக்
கடலாய் வேறென்
றெண்ணாத படிக்கிரங்கித் தானாகச் செய்தருளு
மிறையே யுன்றன்
றண்ணாருஞ் சாந்தவரு டனைநினைந்து கரமலர்க
டலைமேற் கொள்வாம். 14

விண்ணிறைந்த வெளியாயென் மனவெளியிற் கலந்தறிவாம்
வெளியி னூடும்

தண்ணிறைந்த பேரமுதாய்ச் சதானந்த மானபெருந்
　　தகையே நின்பா
லுண்ணிறைந்த பேரன்பா லுள்ளுருகி மொழிகுழறி
　　யுவகை யாகிக்
கண்ணிறைந்த புனலுகுப்பக் கரமுகிழ்ப்ப நின்னருளைக்
　　கருத்தில் வைப்பாம். 15

வேறு.

ஆதியந்தங் காட்டாத முதலா யெம்மை
　யடிமைக்கா வளர்த்தெடுத்த வன்னை போல
நீதிபெறுங் குருவாகி மனவாக் கெட்டா
　நிச்சயமாய்ச் சொச்சமதாய் நிமல மாகி
வாதமிடுஞ் சமயநெறிக் கரிய தாகி
　மௌனத்தோர் பால்வெளியாய் வயங்கா நின்ற
சோதியையென் னுயிர்த்துணையை நாடிக் கண்ணீர்
　சொரியவிரு கரங்குவித்துத் தொழுதல் செய்வாம். 16

அகரவுயி ரெழுத்தனைத்து மாகி வேறு
　யமர்ந்ததென வகிலாண்ட மனைத்து மாகிப்
பகர்வனவெல் லாமாகி யல்ல தாகிப்
　பரமாகிச் சொல்லரிய பான்மை யாகித்
துகளறுசங் கற்பவிகற் பங்க ளெல்லாந்
　தோயாத வறிவாகிச் சுத்த மாகி
நிகரில்பசு பதியான பொருளை நாடி
　நெட்டுயிர்த்துப் பேரன்பா னினைதல் செய்வாம். 17

கூடுத லுடன்பிரித லற்றுநிர்த் தொந்தமாய்க்
　குவிதலுடன் விரிதலற்றுக்
குணமற்று வரவினொடு போக்கற்று நிலையான
　குறியற்று மலமுமற்று
நாடுதலு மற்றுமேல் கீழ்நடுப் பக்கமென
　நண்ணுதலு மற்றுவிந்து
நாதமற் றைவகைப் பூதபே தமுமற்று
　ஞாதுருவின் ஞானமற்று

வாடுதலு மற்றுமே லொன்றற் றிரண்டற்று
வாக்கற்று மனமுமற்று
மன்னுபரி பூரணச் சுகவாரி தன்னிலே
வாய்மடுத் துண்டவசமாய்த்
தேடுதலு மற்றவிட நிலையென்ற மௌனியே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே. 18

ஐந்துவகை யாகின்ற பூதமுத லுதமு
மடங்கவெளி யாகவெளிசெய்
தறியாமை யறிவாதி பிறிவாக வறிவார்க
ளறிவாக நின்றநிலையிற்
சிந்தையற நில்லென்று சும்மா விருத்திமேற்
சின்மயா னந்தவெள்ளந்
தேக்கித் திளைத்துநா னதுவா யிருக்கநீ
செய்சித்ர மிகநன்றுகா
ணெந்தைவட வாற்பரம குருவாழ்க வாழவரு
ளியநந்தி மரபுவாழ்க
வென்றடியர் மனமகிழ வேதாக மத்துணி
பிரண்டில்லை யொன்றென்னவே
வந்தகுரு வேவீறு சிவஞான சித்திநெறி
மௌனோப தேசகுருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுருவே மூலன்
மரபில்வரு மௌனகுருவே. 19

நிர்க்குண நிராமய நிரஞ்சன நிராலம்ப
நிர்விஷய கைவல்யமா
நிஷ்கள வசங்கசஞ் சலரகித நிர்வசன
நிர்த்தொந்த நித்தமுத்த
தற்பரவிஸ் வாதீத வ்யோமபரி பூரண
சதானந்த ஞானபகவ
சம்புசிவ சங்கர சர்வேச வென்றுனன்
சர்வகாலமு நினைவனோ

வற்புத வகோசர நிவர்த்திபெறு மன்பருக்
கானந்த பூர்த்தியான
வத்துவித நிச்சய சொரூபசா க்ஷாத்கார
வனுபூதி யனுகூதமுங்
கற்பனை யறக்காண முக்கணுடன் வடநிழற்
கண்ணூ டிருந்தகுருவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே. 20

பட்டப் பகற்பொழுதை யிருளென்ற மருளர்தம்
பக்ஷமோ வெனதுபக்ஷம்
பார்த்தவிட மெங்கணும் கோத்தநிலை குலையாது
பரமவெளி யாகவொருசொற்
றிட்டமுடன் மௌனியா யருள்செய் திருக்கவுஞ்
சேராம லாருகநான்
சிறுவீடு கட்டியதி னடுசோற்றை யுண்டுண்டு
தேக்குசிறி யார்கள்போல
நட்டணைய தாக்கற்ற கல்வியும் விவேகமு
நன்னிலய மாகவுன்னி
நானென்று நீயென் றிரண்டில்லை யென்னவே
நடுவே முளைத்தமனதைக்
கட்டவறி யாமலே வாடினே னெப்போது
கருணைக் குரித்தாவனோ
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே. 21

எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவிதா
னியாதினு மரிதரிதுகா
ணிப்பிறவி தப்பினு லெப்பிறவி வாய்க்குமோ
வேதுவருமோ வறிகிலேன்
கண்ணக னிலத்துநா னுள்ளபொழு தேயருட்
ககனவட் டத்தினின்று
--ஊன்றி நின்றுபொழி யானந்த முகிலொடு
கலந்துமதி யவசமுறவே

பண்ணுவது நன்மையின் நிலைபதியு மட்டுமே
பதியா யிருந்ததேகப்
பவுரிகுலை யாமலே கௌரிகுண் டலியாயி
பண்ணவித னருளினுலே
விண்ணிலவு மதியமுத மொழியாது பொழியவே
வேண்டுவே னுமதடிமைநான்
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே. 22

பொற்பினெடு கைகாலில் வள்ளுகிர் படைத்தலாற்
போந்திடை யொடுக்கமுறலாற்
பொலிவான வெண்ணீறு பூசியே யருள்கொண்டு
பூரித்த வெண்ணீர்மையா
லெற்பட விளங்குகக னத்துளிமை யாவிழி
யிசைந்துமே னோக்கமுறலா
லிரவுபக லிருளான கனதந்தி படநூறி
யிதயங் களித்திடுதலாற்
பற்பல விதங்கொண்ட புலிகலையி னுரியது
படைத்துப் ப்ரதாப முறலாற்
பனிவெயில்கள் புகுதாம னெடியவான் றொடர்நெடிய
பருமர வனங்களாகும்
வெற்பினிடை யுறைதலாற் றவராஜ சிங்கமென
மிக்கோ ருமைப்புகழ்வர்காண்
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே. 23

காராரு மாணவக் காட்டைக் களைந்தறக்
கண்டகங் காரமென்னுங்
கல்லைப் பிளந்துநெஞ் சகமான பூமிவெளி
காணத் திருத்திமேன்மேற்
பாராதி யறியாத மோனமாம் வித்தைப்
பதித்தன்பு நீராகவே
பாய்ச்சியது பயிராகு மட்டுமா மாயைவன்
பறவையணு காதவண்ண

நேராக நின்றுவினை போகம் புசித்துய்ந்த
நின்னன்பர் கூட்டமெய்த
நினைவின் படிக்குநீ முன்னின்று காப்பதே
நின்னருட் பாரமென்று
மாராரு மறியாத சூதான வெளியில்வெளி
யாகின்ற துரியமயமே
யண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே. 24

பற்றுவன வற்றிடு நிராசையென் ஹெருபூமி
பற்றிப் பிடிக்குமியோகப்
பாங்கிற் பிராணலய மென்னுமொரு பூமியிவை
பற்றின்மன மறுமென்னவே
கற்றையஞ் சடைமௌனி தானே கனிந்தகனி
கனிவிக்க வந்தகனிபோற்
கண்டதிந் நெறியெனத் திருவுளக் கனிவினொடு
கனிவாய் திறந்துமொன்றைப்
பெற்றவனு மல்லேன் பெறுதவனு மல்லேன்
பெருக்கத் தவித்துளறியே
பெண்ணீர்மை யென்னவிரு கண்ணீ ரிறைத்துநான்
பேய்போ லிருக்கவுலகஞ்
சுற்றிநகை செய்யவே யலையவிட் டாயெனிற்
சொல்லவினி வாயுமுண்டோ
சுத்தநிர்க் குணமான பரதெய்வமே பரஞ்
சோதியே சுகவாரியே. 25

பாராதி யண்டங்க ளத்தனையும் வைக்கின்ற
பரவெளியி னுண்மைகாட்டி
பற்றுமன வெளிகாட்டி மனவெளியி னிற்றோய்ந்த
பாவியேன் பரிசுகாட்டித்
தாராள மாய்நிற்க நிற்சிந்தை காட்டிச்
சதாகால நிட்டையெனவே
சகசநிலை காட்டினை சுகாதீத நிலையந்
தனைக்காட்ட நாள்செல்லுமோ

காரார வெண்ணரு மனந்தகோ டிகணின்று
காலூன்றி மழைபொழிதல்போற்
கால்வீசி மின்னிப் படர்ந்துபர வெளியெலாங்
கம்மியா நந்தவெள்ளஞ்
சோராது பொழியவே கருணையின் முழங்கியே
தொண்டரைக் கூவுமுகிலே
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே. 26

அண்டமுடி தன்னிலோ பகிரண்ட மதனிலோ
வலரிமண்டல நடுவிலோ
வனனடுவிலோ வமிர்த மதிநடுவிலோ வன்ப
ரகமுருகி மலர்கடுவித்
தெண்டமிட வருமூர்த்தி நிலையிலோ திக்குந்
திகந்தத்தி லோவெளியிலோ
திகழ்விந்து நாதநிலை தன்னிலோ வேதாந்த
சித்தாந்த நிலைதன்னிலோ
கண்டபல பொருளிலோ காணாத நிலையெனக்
கண்டசூ னியமதனிலோ
காலமொரு மூன்றிலோ பிறவிநிலை தன்னிலோ
கருவிகர ணங்களோய்ந்த
தொண்டர்க ளிடத்திலோ நீவீற் றிருப்பது
தொழும்பனேற் குளவுபுகலாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே. 27

எந்நாளு முடலிலே யுயிரா முனைப்போ
லிருக்கவிலை யோமனதெனும்
யானுமென் னட்பாம் பிராணனு மெமைச்சடம
தென்றுனைச் சித்தென்றுமே
யந்நாளி லெவனோ பிரித்தா னதைக்கேட்ட
வன்றுமுத லின்றுவரையு
மநியாய மாயெமை யடக்கிக் குறுக்கே
யடர்ந்தரசு பண்ணியெங்கண்

முன்னுக நீயென்ன கோட்டைகொண் டாயென்று
 மூடமன மிகவுமேச
மூண்டெரியு மனலிட்ட மெழுகா யுளங்கருகன்
 முறைமையோ பதினுயிரஞ்
சொன்னலு நின்னரு ளிரங்கவிலை யேயினிச்
 சுகம்வருவ தெப்படிசொலாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
 சோதியே சுகவாரியே. 28

அவனன்றி யோரணுவு மசையா தெனும்பெரிய
 வாப்தர்மொழி யொன்றுகண்டால்
அறிவாவ தேதுசில வறியாமை யேதிவை
 யறிந்தார்க ளறியார்களார்
மவுனமொ டிருந்ததா ரென்போ லுடம்பெலாம்
 வாயாய்ப் பிதற்றுமவரார்
மனதெனவு மொருமாயை யெங்கே யிருந்துவரும்
 வனமையொ டிரக்கமெங்கே
புவனம் படைப்பதென் கர்த்தவ்ய மெவ்விடம்
 பூதபேதங்க ளெவிடம்
பொய்மெயித மகிதமேல் வருநன்மை தீமையொடு
 பொறைபொரு மையுமெவ்விடம்
எவர்சிறிய ரெவர்பெரிய ரெவருறவ ரெவர்பகைஞர்
 யாதுமுனை யன்றியுண்டோ
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
 யெங்குநிறை கின்றபொருளே. 29

உன்னிலையு மென்னிலையு மொருநிலை யெனக்கிடந்
 துளறிடு மவத்தையாகி
உருவுதான் காட்டாத வானவமு மொளிகண்
 டொளிக்கின்ற விருளென்னவே
தன்னிலைமை காட்டா தொருங்கவிரு வினையினுற்
 றுவசுக துக்கவேலை
தட்டழிய முற்றுமில் லாமாயை யதனுற்
 றடித்தகில பேதமான

முன்னிலை யொழிந்திட வகண்டிதா காரமாய்
மூதறிவு மேலுதிப்ப
முன்பின்னொடு கீழ்மே னடுப்பக்க மென்னுமன்
முற்றுமா னந்தநிறைவே
என்னிலைமை யாய்நிற்க வியல்புகூ ரருள்வடிவ
மெந்நாளும் வாழிவாழி
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே. 30

தந்தைதாய் தமர்தார மகவென்னு மிவையெலாஞ்
சந்தையிற் கூட்டமிதிலோ
சந்தேக மில்லைமணி மாடமா ளிகைமேடை
சதுரங்க சேனையுடனே
வந்ததோர் வாழ்வுமோ ரிந்த்ரஜா லக்கோலம்
வஞ்சனை பொறாமைலோபம்
வைத்தமன மாங்கிருமி சேர்ந்தமல பாண்டமோ
வாஞ்சனை யிலாதகனவே
யெந்தநா ளுஞ்சரி யெனத்தேர்ந்து தேர்ந்துமே
யிரவுபக லில்லாவிடத்
தேகமாய் நின்றநின் னருள்வெள்ள மீதிலே
யானென்ப தறவுமூழ்கிச்
சிந்தைதான் றெளியாது சுழலும்வகை யென்கொலோ
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே. 31

கந்துக மதக்கரியை வசமா நடத்தலாங்
கரடிவெம் புலிவாயையுங்
கட்டலா மொருசிங்க முதுகின்மேற் கொள்ளலாங்
கட்செவி யெடுத்தாட்டலாம்
வெந்தழலி னிரதம்வைத் தைந்துலோ கத்தையும்
வேதித்து விற்றுண்ணலாம்
வேறொருவர் காணும லுலகத் துலாவலாம்
விண்ணவரை யேவல்கொளலாஞ்

சந்ததமு மிளமையொ டிருக்கலா மற்றொரு
சரீரத்தினும் புகுதலாம்
சலமே னடக்கலாங் கனன்மே லிருக்கலாந்
தன்னிகரில் சித்திபெறலாம்
சிந்தையை யடக்கியே சும்மா விருக்கின்ற
திறமரிது சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே. 32

வே று.

காக மோடுகழு கலகை நாய்நரிகள்
சுற்றுசோ றிடுதூ ருத்தியைக்
காலி ரண்டுநவ வாசல் பெற்றுவளர்
காம வேணடன சாலையை
மோக வாசைமுறி யிட்ட பெட்டியைமு
மலமி குந்தொழுகு கேணியை
மொய்த்து வெங்கிருமி தத்து கும்பியை
முடங்க லார்கிடை சரக்கினை
மாக விந்த்ரதனு மின்னை யொத்திலக
வேத மோதிய குலாலனார்
வனைய வெய்யதடி கார னையமன்
வந்த டிக்குமொரு மட்கலத்
தேக மானபொயை மெய்யெ னக்கருதி
யைய வையமிசை வாடவோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே. 33

ஐந்து பூதமொரு கான னீரென
வடங்க வந்தபெரு வானமே
ஆதியந்த நடு வேது மின்றியரு
ளாய் நிறைந்திலகு சோதியே
தொந்த ரூபமுட னருப மாகிகுறி
குணமிறந்து வளர் வஸ்துவே
துரியமே துரிய வுயிரினுக் குணர்வு
தோன்ற நின்றருள் சுபாவமே

எந்தநாளு நடு வாகிநின் றெளிரு
மாதியே கருணை நீதியே
எந்தையே யென விடைந்திடைந் துருகு
மெளிய னேன்கவலை தீரவும்
சிந்தை யானதை யறிந்து நீயுனருள்
செய்ய நானுமினி யுய்வனோ
தெரிவ தற்கரிய பிரமமே யமல
சிற்சுகோ தயவி லாசமே. 34

மத்தர் பேயரொடு பாலர் தன்மையது
மருவி யேதுரிய வடிவமாய்
மன்னு தேசமொடு கால மாதியை
மறந்து நின்னடிய ரடியிலே
பத்தி யாய்நெடிது நம்பு மென்னையொரு
மைய றந்தகில மாயையைப்
பாரு பாரென நடத்த வந்ததென
பார தத்தினுமி துள்ளதோ
சுத்த நித்தவியல் பாகு மோவுனது
விசுவ மாயைநடு வாகவே
சொல்ல வேணும்வகை நல்ல காதிகதை
சொல்லு மாயையினு மில்லையென்
சித்த மிப்படி மயங்கு மோவருளை
நம்பி னோர்கள்பெறு பேறிதோ
தெரிவ தற்கரிய பிரமமே யமல
சிற்சு கோதய விலாசமே. 35

வே று.

அனந்தபத வுயிர்கடொறு முயிரா யென்று
மானந்த நிலையாகி யளவைக் கெட்டாத்
தனந்தனிச்சின் மாத்திரமாய்க் கீழ்மேல் காட்டாச்
சதசத்தா யருட்கோயிற் றழைத்ததேவே
இனம்பிரிந்த மான்போனு னிடையாவண்ண
மின்பமுற வன்பர்பக்க விருத்தி வைத்துக்
கனந்தருமா கனமேதண் ணருளிற் றூனே
கனிபலித்த வானந்தக் கட்டிப் பேறே. 36

பேறனைத்து மணுவெனவே யுதறித் தள்ளப்
 பேரின்ப மாகவந்த பெருக்கே பேசா
வீறனைத்து மிந்நெறிக்கே யென்ன வென்னை
 மேவென்ற வரத்தேபாழ் வெய்ய மாயைக்
கூறனைத்துங் கடந்தவெல்லைச் சேட மாகிக்
 குறைவறநின் றிடுநிறைவே குலவா நின்ற
ஆறனைத்தும் புகுங்கடல்போற் சமய கோடி
 யத்தனையுந் தொடர்ந்துபுகு மாதி நட்பே.

ஆதியந்த மெனுமெழுவா யீறற் றோங்கி
 யருமறையின் னமுங்காணு தரற்ற நாளு
பேதமதங் களுமலைய மலைபோல் வாதப்
 பெற்றியரும் வாய்வாதப் பேய ராகச்
சாதகமோ னத்திலென்ன வடவா னீழற்
 றண்ணருட்சந் திரமௌலி தடக்கைக் கேற்க
வேதகசின் மாத்திரமா யெம்ம னோர்க்கும்
 வெளியாக வந்தவொன்றே விமலவாழ்வே.

ஒன்றாகிப் பலவாகிப் பலவாக் கண்ட
 வொளியாகி வெளியாகி யுருவு மாகி
நன்றாகித் தீதாகி மற்று மாகி
 நாசமுட னுற்பத்தி நண்ணு தாகி
இன்றாகி நாளையுமாய் மேலு மான
 வெந்தையே யெம்மானே யென்றென் றேங்கிக்
கன்றாகிக் கதறினார்க்குச் சேதா வாகிக்
 கடிதினில்வந் தருள்கூருங் கருணை விண்ணே.

செப்பரிய சமயநெறி யெல்லாந் தந்தம்
 தெய்வமே தெய்வமெனுஞ் செயற்கையான
அப்பரிசா ளருமலைந்தே பிடித்தா லிப்பா
 லடுத்தவர்நூல் களும்விரித்தே யநுமா னாதி
ஒப்பவிரித் துரைப்பரிங்ஙன் பொய்மெய் யென்ன
 வொன்றிலையொன் றெனப்பார்ப்ப தொவ்வா த
இப்பரிசாஞ் சமயமுமா யல்ல வாகி
 யாதுசம யமும்வணங்கு மியல்ப தாகி.

சன்மார்க்க ஞானமதின் பொருளும் வீறுஞ்
சமயசங்கே தப்பொருளுந் தானொன் றாகப்
பன்மார்க்க நெறியினிலுங் கண்ட தில்லை
பகர்வரிய தில்லைமன்றுட் பார்த்த போதங்
கென்மார்க்க மிருக்குதெல்லாம் வெளியே யென்ன
யெச்சமயத் தவர்களும்வந் திறைஞ்சா நிற்பர்
கன்மார்க்க நெஞ்சமுள வெனக்குந் தானே
கண்டவுட னனந்தங் காண்ட லாகும். 41

காண்டல்பெறப் புறத்தினுள்ள படியே யுள்ளும்
காட்சிமெய்ந்நூல் சொலும்பதியாங் கடவு ளேநீ
நீண்டநெடு மையுமகலக் குறுக்குங் காட்டா
நிறைபரிபூ ரணவறிவாய் நித்த மாகி
வேண்டுவிருப் பொடுவெறுப்புச் சமீபந் தூரம்
விலகலனு குதன்முதலாம் விவகா ரங்கள்
பூண்டவள வைகண்மனவாக் காதி யெல்லாம்
பொருந்தாம லகம்புறமும் புணர்க்கை யாகி. 42

வந்தெனுடல் பொருளாவி மூன்றுந் தன்கை
வசமெனவே யத்துவா மார்க்க நோக்கி
ஐந்துபுல னைம்பூதங் கரண மாதி
யடுத்தகுண மத்தனையு மல்லை யல்லை
இந்தவுட லறிவறியா மையுநீ யல்லை
யாதொன்று பற்றினத னியல்பாய் நின்று
பந்தமறும் பளிங்கனைய சித்து நீயுன்
பக்குவங்கண் டறிவிக்கும் பான்மை யேம்யாம். 43

அறிவாகி யானந்த மயமா யென்று
மழியாத நிலையாகி யாதின் பாலும்
பிறியாமற் றண்ணருளே கோயி லான
பெரியபரம் பதியதனைப் பெறவே வேண்டின்
நெறியாகக் கூறுவன்கே ளெந்த நாளு
நிர்க்குணநிற் குளம்வாய்த்து நீடு வாழ்க
செறிவான வறியாமை யெல்லா நீங்கச்
சிற்சுகம்பெற் றிடுகபந்தந் தீர்க வென்றே. 44

பந்தமறு மெஞ்ஞான மான மோனப்
பண்பொன்றை யருளியந்தப் பண்புக் கேத
சிந்தையில்லை நானென்னும் பான்மை யில்லை
தேசமில்லை காலமில்லை திக்கு மில்லை
தொந்தமில்லை நீக்கமில்லை பிரிவு மில்லை
சொல்லுமில்லை யிராப்பகலாந் தோற்ற மில்
அந்தமில்லை யாதியில்லை நடுவு மில்லை
யகமுமில்லை புறமுமில்லை யனைத்து மில்லை.

இல்லையில்லை யென்னினொன் றுமில்லா தல்ல
வியல்பாகி யென்றுமுள்ள வியற்கை யாகிச்
சொல்லரிய தன்மையதா யான்று னென்னத்
தோன்றுதெல் லாம்விழுங்குஞ் சொரூபமா
அல்லையுண்ட பகல்போல வவித்தை யெல்லா
மடையவுண்டு தடையறவுன் னறிவைத் தா
வெல்லவுண்டிங் குன்னையுந்தா னாகக் கொண்டு
வேதகமாய்ப் பேசாமை விளக்குந் தானே.

தானான தன்மயமே யல்லா லொன்றைத்
தலையெடுக்க வொட்டாது தலைப்பட் டாங்கே
போனாலுங் கர்ப்பூர தீபம் போலப்
போயொளிப்ப தல்லாது புலம் வேறின்றாம்
ஞானகா ரத்தினொடு ஞேய மற்ற
ஞாதுருவு நழுவாம னழுவி நிற்கு
மானாலு மிதன்பெருமை யெவர்க்கார் சொல்வ
ரதுவானா லதுவாவ ரதுவே சொல்லும்.

அதுவென்று லெதுவெனவொன் றடுக்குஞ் சங்
யாதலினா லதுவெனலு மறவே விட்டு
மதுவுண்ட வண்டெனவுஞ் சனக னாதி
மன்னவர்கள் சுகர்முதலோர் வாழ்ந்தா ரெ
பதியிந்த நிலையெனவு மென்னை யாண்ட
படிக்குநிரு விகற்பத்தாற் பரமா னந்தக்
கதிகண்டு கொள்ளவுநின் னருள்கூ ரிந்தக்
கதியன்றி யுறங்கேன்மேற் கருமம் பாரேன்.

வேறு.

தேன்முகம் பிலிற்றும் பைந்தாட் செய்யபங் கயத்தின் மேவு
நான்முகத் தேவே நின்னு ணட்டிய வகிலமாயை
கான்முயற் கொம்பே யொன்கோ கானலம் புனலே யென்கோ
வான்முக முளரி யென்கோ மற்றென்கோ விளம்பல் வேண்டும்.

கண்டன வல்ல வென்றே கழித்திடு மிறுதிக் கண்ணே
கொண்டது பரமா னந்தக் கோதிலா முத்தி யத்தாற்
பண்டையிற் படைப்புங் காப்பும் பறந்தன மாயை யோடே
வெண்டலை விழிகை காலில் விளங்கிட நின்றுன் யாவன். 50

வேறு.

திரையில்லாக் கடல்போலச் சலனந் தீர்ந்து
தெளிந்துருகும் பொன்போலச் செகத்தை யெல்லாங்
கரையவே கனிந்துருக்கு முகத்திலே நீ
கனிந்தபர மானந்தக் கட்டி யிந்நாள்
வரையிலே வரக்காணே னென்னுற் கட்டி
வார்த்தை சொன்னுற் சுகம்வருமோ வஞ்சனேனை
யிரையிலே யிருத்திநிரு விகற்ப மான
வின்பநிட்டை கொடுப்ப தையா வெந்தநாளோ. 51

வேறு.

நினைவொன்று நினையாம னிற்கினக மென்பார்
நிற்குமிட மேயருளா நிட்டையரு ளொட்டுந்
தனையென்று மறந்திருப்ப தருள்வடிவா னதுமேற்
றட்டியெழுந் திருக்குமின்பந் தன்மயமே யதுவாம்
பினையொன்று மிலையந்த வின்பமெனு நிலயம்
பெற்றுரே பிறவாமை பெற்றுர் மற்றுந்தான்
மனையென்று மகவென்றுஞ் சுற்றமென்று மசுத்த
வாதனையா மாசையொழி மன்னுெருசொற் கொண்டே.

ஒருமொழியே பலமொழிக்கு மிடங்கொடுக்கு மந்த
வொருமொழியே மலமொழிக்கு மொழிக்குமென மொழிந்த
குருமொழியே மலையிலக்கு மற்றைமொழி யெல்லாங்
கோடின்றி வட்டாடல் கொள்வதொக்குங் கண்டாய்

கருமொழியின் குனக்கில்லை மொழிக்கு மொழி ருசிக்கக்
கரும்பனைய சொற்கொடுனைக் காட்டவுங்கண் டனைமேற்
றருமொழியின் குனக்கில்லை யுன்னைவிட்டு நீங்காத்
தற்பரமா யானந்தப் பொற்பொதுவாய் நில்லே. 53

நில்லாத வாக்கைநிலை யன்றெனவே கண்டாய்
நேயவருண் மெய்யன்றோ நிலையமதா நிற்கக்
கல்லாதே யேன்படித்தாய் கற்றதெல்லா மூடங்
கற்றதெல்லா மூடமென்றே கண்டனையு மன்று
சொல்லாலே பயனில்லை சொன்முடிவைத் தானே
தொடர்ந்துபிடி மர்க்கடம்போற் றொட்டது பற்றுநில்
லெல்லாரு மறிந்திடவே வாய்ப்பறைகொண் டடினீ
யிராப்பகலில் லாவிடமே யெமக்கிடமென் றறிந்தே. 54

இடம்பொருளே வலைக்குறித்து மடம்புகுநா யெனவே
யெங்கேநீ யகப்பட்டா யிங்கே நீவாடா
மடம்பெறுபாழ் நெஞ்சாலே யஞ்சாதே நிராசை
மன்னிடமே யிடமிந்த மாநிலத்தே பொருளுந்
திடம்பெறவே நிற்கினெல்லா வுலகமும்வந் தேவல்
செய்யுமிந்த நிலைநின்றோர் சனகன்முதன் முனிவர்
கடம்பெறுமா மதயானை யென்னவுநீ பாசக்
கட்டான நிகளபந்தக் கட்டவிழப் பாரே. 55

பாராதி யண்டமெலாம் படர்கானற் சலம்போற்
பார்த்தனையே முடிவினின்று பாரெதுதா னின்ற
தாராலு மறியாத சத்தன்றோ வதுவா
யங்கிருநீ யெங்கிருந்து மதுவாவை கண்டாய்
பூராய மாகவுநீ மற்றொன்றை விரித்துப்
புலம்பாதே சஞ்சலமாய் புத்தியை நாட்டாதே
யோராதே யொன்றையுநீ முன்னிலை வையாதே
யுள்ளபடி முடியுமெலா முள்ளபடி காணே. 56

உள்ளபடி யென்னவுநீ மற்றொன்றை தொடர்ந்திட்
டுளங்கருத வேண்டாநிட் களங்கமதி யாகிக்
கள்ளமனத் துறவைவிட்டெல் லாந்துறந்த துறவோர்
ஈற்பித்த மொழிப்படியே கங்குல் பகலற்ற

வெள்ளவெளிக் கடன்மூழ்கி யின்பமயப் பொருளாய்
விரவியெடுத் தெடுத்தெடுத்து விள்ளவும் வாயின்றிக்
கொள்ளைகொண்ட கண்ணீருங் கம்பலையு மாகிக்
கும்பிட்டுச் சகம்பொயெனத் தம்பட்ட மடியே. 57

வேறு.

ஆவி யேயுனை யானறி வாய்நின்று
சேவி யேன்களச் சிந்தை திறைகொடேன்
பாவி யேனுள பான்மையைக் கண்டுநீ
கூவி யாளெனை யாட்கொண்ட கோலமே. 58

என்று முன்னை யிதய வெளிக்குளே
துன்ற வைத்தன னேயருட் சோதிநீ
நின்ற தன்மை நிலைக்கென்னை நேர்மையா
நன்று தீதற வைத்த நடுவதே. 59

அண்ண லேயுன் னடியவர் போலருட்
கண்ணி னாலுனைக் காணவும் வாவெனப்
பண்ணி னாலென் பசுத்துவம் போயுயும்
வண்ண மாக மனோலயம் வாய்க்குமே. 60

கண்ணு ணின்ற வொளியைக் கருத்தினை
விண்ணு ணின்று விளங்கிய மெய்யினை
யெண்ணி யெண்ணி யிரவும் பகலுமே
நண்ணு கின்றவர் நான்றொழுந் தெய்வமே. 61

வேறு.

அறிவிற் கறிவுதாரகமென் றறிந்தே யறிவோ டறியாமை
நெறியிற் புகுதா தோர்படித்தாய் நின்ற நிலையுந்தெரியாது
குறியற் றகண்டா நீதமயக் கோதிலமுதே யெனைக்குறுகிப்
பிறிவற் றிருக்க வேண்டாவோ பேயேற்கினிநீ பேசாயே. 62

இன்பக் கடலிற் புகுந்திடுவா னிரவும் பகலுந்தோற்றுமல்,
அன்பிற் கரைந்து கரைந்துருகி யண்ணு வரசே யெனக்கூவிப்,
பின்புற் றழுஞ்சே யெனவிழிநீர் பெருக்கிப் பெருக்கிப் பித்தா
கித், துன்பக் கடல்விட் டகல்வேனோ சொரூபா னந்தச் சுடர்க்
கொழுந்தே. 63

சூட்டி பெனதென் றிடுஞ்சுமையைச் சுமத்தி யெனையுஞ் சுமையாளாக், கூட்டிப் பிடித்து வினைவழியே கூத்தாட் டினையே நினதருளால், வீட்டைக் கருது மப்போது வெளியா முலக விய ப்பனைத்து, மேட்டுக் கடங்காச் சொப்பனம்போ லெந்தா யிரு ந்த தென்சொல்வேன். 64

உனக்குநா னடித்தொண் டாகி யுன்னடிக் கன்பு செய்ய
எனக்குநீ தோற்றி யஞ்சே லென்னுநா ளெந்த நாளோ
மனக்கிலே சங்க டீர்ந்த மாதவர்க் கிரண்டற் றோங்குந்
தனக்குநே ரில்லா வொன்றே சச்சிதா னந்த வாழ்வே. 65

வேறு.

ஆதியாய் நடுவா யந்தமாய்ப் பந்தம் யாவுமற் றகம்புற நிறைந்த, சோதியாய்ச் சுகமா யிருந்தவெம் பெருமான் றொண் டனேன் சுகத்திலே யிருக்கப், போதியா வண்ணங் கைவிடன் முறையோ புன்மையே னென்செய்கேன் மனமோ, வாதியா நின்ற தன்றியும் புலன்சேர் வாயிலோ தீயினுங் கொடிதே. 66

ஞானமே வடிவாய்த் தேடுவார் தேடுநாட்டமே நாட்டத்து ணிறைந்த, வானமே யெனக்கு வந்துவந் தோங்கு மார்க்கமே மருளர்தா மறியா, மோனமே முதலே முத்திநல் வித்தே முடி விலா வின்பமே செய்யுந், தானமே தவமே நின்னைநா னினைந் தேன் றமியனேன் றனைமறப் பதற்கே. 67

மறமலி யுலக வாழ்க்கையே வேண்டும் வந்துநின் னன்பர் தம்பணியா, மறமது கிடைக்கி னன்றியானந்த வற்புத நிட்டை யினிமித்தந், துறவது வேண்டு மௌனியா யெனக்குத் தூயநல் லருடரி னின்னம், பிறவியும் வேண்டும் யானென திறக்கப் பெற் றவர் பெற்றிடும் பேறே. 68

வேறு.

வரும்போ மென்னு மிருநிலைமை மன்னு தொருதன் மைத் தாகி, கரும்போ தேனோ முக்கனியோ வென்ன வென்னுட் கல ந்துநலந், தரும்பே ரின்பப் பொருளேநின் றன்னை நினைந்து நெக் குருகே, னிரும்போ கல்லோ மரமோவென் னிதய மியாதென் றறியேனே. 69

உய்யும் படிக்குன் றிருக்கருணை யொன்றைக் கொடுத்தா லுடையாய் பாழும், பொய்யு மவாவு மழுக்காறும் புடைபட் டோடு நன் னெறியா, மெய்யு மறிவு பெறும் பேறும் விளங்கு மெனக்குன் னடியார்பாற், செய்யும் பணியுங் கைகூடுஞ் சிந் தைத் துயருந் தீர்ந்திடுமே. 70

பொருளைப் பூவைப் பூவையரைப் பொருளென் றெண்ணு மொருபாவி யிருளைத் துரந்திட் டொளிநெறியை யென்னுட் பதிப்ப தென்று கொலோ தெருளத் தெருள வன்பர் நெஞ்சந் தித்தித் துருகத் தெவிட்டாத, வருளைப் பொழியுங் குணமு கிலே யறிவா னந்தத் தாரமுதே. 71

வேறு.

ஆசையெனும் பெருங்காற்றா டிலவம்பஞ் செனவுமன தலையுங் கால, மோசம்வரு மிதனாலே கற்றதுங்கேட் டதுந்தூர் ந்து முத்திக் கான, நேசமுநல் வாசமும் போய்ப் புலனாயிற் கொடுமைபற்றி நிற்பரந்தோ, தேசுபழுத் தருள்பழுத்த பரா பரமே நிராசையின்றேற் றெய்வ முண்டோ. 72

முன்னிலைச்சுட் டொழுதியெனப் பலகாலு நெஞ்சே நான் மொழிந்தே னேநின், றன்னிலையைக் காட்டாதே யென்னையொ ன்றாச் சூட்டாதே சரணுன் போந்த, வந்நிலையே நிலையந்த நிலை யிலே சித்திமுத்தி யனைத்துந் தோன்று, நன்னிலையீ தன்றியிலை சுகமென்றே சுகர்முதலோர் நாடினரே. 73

பொறியிற் செறியைம் புலக்கனியைப் புந்திக் கவராற் புகு ந்திழுத்து, மறுகிச் சுழலு மனக்குரங்கு மாள வாளா விருப் பேனோ, வறிவுக் கறிவாய்ப் பூரணமாய கண்டானந்த மயமாகிப், பிறிவற் றிருக்கும் பெருங்கருணைப் பெம்மானேயெம் பெரு மானே. 74

வேறு.

உரையுணர் விறந்து தம்மை யுணர்பவ ருணர்வி னூடே
கரையிலா வின்ப வெள்ளங் காட்டிடு முகிலே மாறாப்
பரையெனுங் கிரணஞ் சூழ்ந்த பானுவே நின்னைப் பற்றித்
திரையிலா நீர்போற் சித்தந் தெளிவனோ சிறிய னேனே. 75

கேவல சகல மின்றிக் கீழொடு மேலா யெங்கு
மேவிய வருளின் கண்ணாய் மேவிட மேலா யின்பந்
தாவிட வின்பா தீதத் தனியிடை யிருத்தி வைத்த
தேவெனு மௌனி செம்பொற் சேவடி சிந்தை செய்வாம். 76

வேறு.

போதமென்பதே விளக்கொவ்வு மவித்தைபொய் யிருளாந்
தீதிலாவிளக் கெடுத்திரு ட்டவுஞ் சிக்கா
தாதலாலறி வாய்நின்ற விடத்தறி யாமை
யேதுமில்லையென் றெம்பிரான் சுருதியே யியம்பும். 77

வேறு.

காந்தமதை யெதிர்காணிற் கருந்தாது செல்லுமந்தக் காந் தத் தொன்று, தேய்ந்தவிட மெங்கேதா னங்கேதான் சலிப்ப றவு மிருக்கு மாபோற், சாந்தபத பரம்பொருளே பற்றுபொரு ளிருக்கு மத்தாற் சலிக்குஞ் சித்தம், வாய்ந்த பொரு ளில்லையெ னிற் பேசாமை நின்றநிலை வாய்க்குமன்றே. 78

வேறு.

சொல்லாலும் பொருளாலு மளவை யாலுந்
தொடரவொண்ணு வருணெறியைத் தொடர்ந்து நாடி
நல்லார்க ளவையகத்தே யிருக்க வைத்தாய்
நன்னர் நெஞ்சந் தன்னலமு நணுகுவேனோ
இல்லாளி யாயுலகோ டுயிரை யீன்றிட்
டெண்ணரிய யோகினுக்கு மிவனே யென்னக்
கல்லாலின் கீழிருந்த செக்கர் மேனிக்
கற்பகமே பராபரமே கயிலை வாழ்வே. 79

வேறு.

குலமிலான் குணங் குறியிலான் குறைவிலான் கொடிதாம்
புலமிலான் றனக்கென்னவோர் பற்றிலான் பொருந்து
மிலமிலான் மைந்தர் மனைவியில்லா னெவனவன் சஞ்
சலமிலான் முத்திதரும் பரசிவ னெனத் தகுமே. 80

நானெனவு நீயெனவு மிருதன்மை நாடாம லுடுவே சும்மா, தானமரு நிலையிதுவே சத்தியஞ்சத் தியமெனநீ தமியனேற்கு,

மோனகுரு வாகியுங்கை காட்டினையே திரும்பவுநான் முளைத்துத் தோன்றி, மானதமார்க் கம்புரிந்திங் கலைந்தேனே பரந்தேனே வஞ்சனேனே. 81

வே று.

தன்மயஞ் சபாவஞ் சுத்தந் தண்ணருள் வடிவஞ் சாந்த
மின்மய மான வண்ட வெளியுரு வான பூர்த்தி
யென்மய மெனக்குக் காட்டா தெனையப கரிக்க வந்த
சின்மய மகண்டா காரந் தக்ஷிணா திக்க மூர்த்தம். 82

வே று.

வான்பொரு ளாகி யெங்குநீ யிருப்ப வந்தெனைக் கொடுத்து நீயாகா, தேன்பொருள் போலக் கிடக்கின்றேன் முன்னை யிருவினை வாதனை யென்றோ, தீன்பொரு ளான வமிர்தமே நின்னைச் சிந்தையிற் பாவனை செய்ய, நான்பொரு ளானே னல்லனல் லரசே நானிறந் திருப்பது நாட்டம். 83

வே று.

உளவ றிந்தெலா நின்செய லாமென வுணர்ந்தோர்க்
களவி லானந்த மளித்தனை யறிவிலாப் புன்மைக்
களவு நாயினேற் கிவ்வண மமைத்தனை கருத்துத்
தளருந் தன்மையிங் காரொடு புகலுவேன் றக்கோய். 84

வே று.

பரவரிய பரசிவமா யதுவெனலாய் நானெனலாய்ப் பாசசாலம், விரவிநின்ற விசித்திரத்தை யைக்யபதத் தினிதிருந்த விவேகந் தன்னை, விரவுபக னினைப்புமறப் பெனுந்தொந்த மறியார்க ளிதயம் வேதச், சிரமெனவாழ் பராபரத்தை யானந்த நீங்காத சிதாகா சத்தை. 85

அத்துவித வனுபவத்தை யனந்தமறை யின்னமின்ன மறியே மென்னு, நித்தியத்தை நிராமயத்தை நிர்க்குணத்தை தன்னருளா னினைவுக் குள்ளே, வைத்துவைத்து பார்ப்பவரைத் தானாக வெந்நாளும் வளர்த்துக் காக்குஞ், சித்தினைமா தூவெளியைத் தன்மயமா மானந்தத் தெய்வந் தன்னை. 86

தன்னிலே தானாக நினைந்துகனிந் தவிழ்ந்துசுக சமாதி யாகப், பொன்னிலே பணிபோனு மாயைதரு மனமேயுன் புரைகடர்ந்தா, யென்னிநோ யான்பிழைப்பே னெனக்கினியா ருன்போல்வா ரில்லையில்லை, யுன்னிலோ திருவருளுக் கொப்பாவா யென்னுயிர்க்கோ ருறவு மாவாய். 87

உறவுடலை யெடுத்தவரிற் பிரமாதி யேனுமுனை யொழிந்துதள்ளற், கறவுமரி தரிதன்றே விகபரமு முன்னையன்றி யாவதுண்டோ, வறிதினுனை யசத்தென்னல் வழக்கன்று சத்தெனவும் வாழ்த்து வேனென், சிறுமைகெடப் பெருமையினின் சென்மமதே யத்தினினீ செல்லல் வேண்டும். 88

வேறு.

நடக்கினு மோடினு நிற்கினும் வேறொரு நாட்டமின்றி
கிடக்கினுஞ் செவ்வி திருக்கினு நல்லருட் கேள்வியிலே
தொடக்குமென் னெஞ்ச மனமற்ற பூரணத் தொட்டிக்குளே
முடக்குவன் யான்பர மானந்த நித்திரை மூடிடுமே. 89

எண்ணாத தெண்ணிய நெஞ்சே துயரொழி யென்னிரண்டு
கண்ணே யுறங்குக வென்னுனை மூக்கட் கருணைப்பிரான்
தண்ணார்கருணை மௌனத்தி னுன்முத்தி சாதிக்கலாம்
நண்ணாத தொன்றில்லை யெல்லா நலமு நமக்குளவே. 90

நாற்றச் சடலத்தை யொன்பது வாச னடைமனையைச்
சோற்றுப் பசையினை மும்மல பாண்டத் தொடக்கறையை
யாற்றுப் பெறுக்கன்ன கன்மப் பெருக்கை யடர்கிருமிச்
சேற்றைத் துணையென்ற நாய்க்குமுண் டோகதி சேர்வதுவே.

சித்த மவுனி வடபான் மவுனிநந் தீபருண்ட
சுத்த மவுனி யெனுமூவ ருக்குந் தொழும்புசெய்து
சத்த மவுனமு தன்மூன்று மௌனமுந் தான்படைத்தே
னித்த மவுனமல் லாலறி யேன்மற்றை நிட்டைகளே. 92

சொல்லாற் றொடர்பொரு ளாற்றொட ராப்பரஞ் சோதிநின்னை
வல்லாளர் கண்ட வழிகண்டி லேன்சக மார்க்கத்தினுஞ்
செல்லாதென் சிந்தை நடுவே கிடந்து திகைத்துவிம்மி
யல்லா னதுபக லானதும் வாய்விட் டரற்றுவனே. 93

சும்மா விருக்கச் சுகஞ்சுக மென்று சுருதியெல்லா
மம்மா நிரந்தரஞ் சொல்லவுங் கேட்டு மறிவின்றியே
யெம்மான் மௌனி மொழியையுந் தப்பியென் பேதமையால்
வெம்மாயக் காட்டி லலைந்தே னந்தோவென் விதிவசமே. 94

எல்லாஞ் சிவன்செய லென்றறிந் தாலவ னின்னருளே
யல்லாற் புகலிடம் வேறுமுண் டோவது வேநிலையா
நில்லா யுன்னூற்றமி யேற்குக் கதியுண்டிந் நீணிலத்திற்
பொல்லா மயக்கத்தி லாழ்ந்தாவ தென்ன புகனெஞ்சமே. 95

மறக்கின்ற தன்மை யிறத்தலொப்பாகு மனம தொன்றிற்
பிறக்கின்ற தன்மை பிறத்தலொப் பாகுமிப் பேய்ப்பிறவி
இறக்கின்ற வெல்லைக் களவில்லை யேயிந்தச் சன்மவல்லல்
துறக்கின்ற நாளெந்த நாள்பர மேநின் றொழும்பனுக்கே. 96

கற்றும் பலபல கேள்விகள் கேட்டுங் கறங்கெனவே
சுற்றுந் தொழில்கற்றுச் சிற்றின்பத் தூடு சுழலினென்னுங்
குற்றங் குறைந்து குணமே விடுமன்பர் கூட்டத்தையே
முற்றுந் துணையென நம்புகண் டாய்சுத்த மூடநெஞ்சே. 97

வேறு.

உடல்பொய் யுறவாயி னுண்மை யுறவாகக்
கடவாரார் தண்ணருளே கண்டாய்-திடமுடனே
யுற்றுப்பார் மோன னொருசொல்லே யுண்மைநன்றாப்
பற்றிப்பார் மற்றவெல்லாம் பாழ். 98

பாராதி பூதமெல்லாம் பார்க்குங்கா லப்பரத்தின்
சீராக நிற்குந் திறங்கண்டாய்-நேராக
நிற்குந் திருவருளி னெஞ்சேயா நிற்பதல்லாற்
கற்குநெறி யாதினிமேற் காண். 99

கேட்டலுடன் சிந்தித்தல் கேடிலா மெய்த்தெளிவால்
வாட்டமறா வுற்பவநோய் மாறுமோ-நாட்டமுற்று
மெய்யான நிட்டையினை மேவினர்கட் கன்றோதான்
பொய்யாம் பிறப்பிறப்பும் போம். 100

அற்ப மனமே யகிலவாழ் வத்தனையுஞ் [ன்
சொற்பனங்கண் டாயுண்மை சொன்னேனன்-கற்பனையொ

றில்லா விடத்தே யெனைச்சும்மா வைத்திருக்கக்
கல்லாய்நீ தானோர் கவி. 101

அப்பொருளு மான்மாவு மாரணநூல் சொன்னபடி
தப்பிலாச் சித்தொன்றுஞ் சாதியினு-லெப்படியுந்
தேரிற் றுவிதஞ் சிவாகமமே சொல்லுமிட்டை
யாருமிடத் தத்துவித மாம். 102

அறிவி லறியாமை யற்றறிவாய் நின்று
பிறிவறவா னந்தமயம் பெற்றுக்-குறியவிழ்ந்தா
லன்றைக் குடல்வேண்டே னையாவிவ் வாக்கையையே
யென்றைக்கும் வேண்டுவனே யான். 103

அறிந்த வறிவெல்லா மறிவன்றி யில்லை
மறிந்த மனமற்ற மவுனஞ்-செறிந்திடவே
நாட்டினு னநந்த நாட்டிற் குடிவாழ்க்கை
கூட்டினுன் மோன குரு. 104

வேறு.

இருப்பா யிருந்திடப்பே ரின்பவெளிக் கேகமக்குக்
குருப்பார்வை யல்லாமற் கூடக் கிடைத்திடுமோ
அருட்பாய் நமக்காக வாளவந்தார் பொன்னடிக்கீழ்
மருட்பேயர் போலிருக்க வாகண்டாய் வஞ்சநெஞ்சே. 105

வந்தவரவை மறந்துலகாய் வாழ்ந்து கன்ம
பந்த முறவுன்னைப் படிப்பிக்கக் கற்றவர்யா
ரிந்தமதி யேனுனக்கிங் கென்மதிகே ளென்னுலே
சந்ததநெஞ் சேபரத்தின் சாரினின்ப முண்டாமே. 106

வேறு.

காடுங் கரையு மனக்குரங்கு கால்விட் டோட வதன்பிறகே, யோடுந் தொழிலாற் பயனுளதோ வொன்றாய்ப் பலவா யுயிர்க் குயிரா, யாடுங் கருணைப் பரஞ்சோதி யருளைப் பெறுதற் கன்பு நிலை, தேடும் பருவ மிதுகண்டீர் சேர வாருஞ் சகத்தீரே. 107

காக முறவு கலந்துண்ணக் கண்டீ ரகண்டா காரசிவ, போக மெனும்பேரின்ப வெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமா, யேக

வுருவாய்க் கிடக்கு தையோ வின்புற் றிடநா மினியெடுத்த, தே
கம் விழுமுன் புசிப்பதற்குச் சேர வாருஞ் சகத்தீரே. 108

வேறு.

வாவிக் கமல மலர்வண் டாய்த் துவண்டு துவண்
டாவிக்கு ணின்றவுனக் கன்புவைத்தார்க் கஞ்சலென்பாய்
பூவிற்கும் வான்கடையிற் புல்விற்போர் போலவொன்றைப்
பாவிக்க மாட்டேன் பதியே பராபரமே. 109

ஆக்குவை மாயை யாவு நொடியினி லவற்றை மாள
நீக்குவை நீக்க மில்லா நினைப்பொடு மறப்பு மாற்றிப்
போக்கொடு வரவு மின்றிப் புனிதநல் லருளா னந்தந்
தாக்கவுஞ் செய்வா யன்றோ சச்சிதா னந்த வாழ்வே. 110

வேறு.

நெறிபார்க்கி னின்னையன்றி யகிலம் வேறோ
நிலநீர் தீக்கால் வானு நீயலாத
குறியாது மில்லை யென்றால் யாங்கள்வேறோ
கோதையொரு கூறுடையாய் கூறாய் கூறாய். 111

பொருளே நின்பூரண மேலிட்ட காலம்
போக்குவர வுண்டோதற் போத முண்டோ
விருடானுண் டோவல்லால் வெளிதா னுண்டோ
வின்பமுண்டோ துன்பமுண்டோ யாமங் குண்டோ. 112

பார்த்தனவெல் லாமழியு மதனுற் சுட்டிப்
பாராதே பார்த்திருக்கப் பரமே மோன
மூர்த்திவடி வாயுணர்த்துங் கைகாட் டுண்மை
முற்றியென தல்லல்வினை முடிவ தென்றோ. 113

வேறு.

உரையிறந்த வன்பருளத் தோங்கொளியா யோங்கிக்
கரையிறந்த வின்பக் கடலே பராபரமே. 1

திக்கொடுகீழ் மேலுந் திருவருளாம் பொற்பறிந்தோர்
கைக்குள்வளர் நெல்லிக் கனியே பராபரமே. 2

வாக்காய் மனதாய் மனவாக் கிறந்தவர்பாற்
றுக்காதே தாக்குந் தனியே பராபரமே. 3

வானந்த மண்ணினந்தம் வைத்துவைத்துப் பார்க்கவெனக்
கானந்தந் தந்த வரசே பராபரமே. 4

வானமெல்லாங் கொண்ட மௌனமணிப் பெட்டகத்துக்
கானபணி யான வணியே பராபரமே. 5

ஓடு மிருநிதியு மொன்றாகக் கண்டவர்க
ளூடும் பொருளான நட்பே பராபரமே. 6

சொல்லும் பொருளுமற்றுச் சும்மா விருப்பதற்கே
யல்லும் பகலுமெனக் காசை பராபரமே. 7

நேச நிருவிகற்ப நிட்டையல்லா லுன்னடிமைக்
காசையுண்டோ நீயறியா தன்றே பராபரமே. 8

இரவுபக லற்றவிடத் தேகாந்த யோகம்
வரவுந் திருக்கருணை வையாய் பராபரமே. 9

முன்னொடுபின் பக்க முடியடிநாப் பண்ணறநின்
றன்னொடுநா னிற்பதென்றோ சாற்றாய் பராபரமே. 10

ஆங்கார மற்றுன் னறிவான வன்பருக்கே
தூங்காத தூக்கமது தூக்கும் பராபரமே. 11

கெட்டியென் றுன் னன்பர்மலங் கெட்டயர்ந்தோர் பூரணமாந்
தொட்டிலுக்குட் சேய்போற் றுயின்றார் பராபரமே. 12

ஒன்றைநினைந் தொன்றைமறந் தோடுமன மெல்லாநீ
யென்றறிந்தா லெங்கே யியங்கும் பராபரமே. 13

கொழுந்தில் வயிரமெனக் கோதறவுள் ளன்பி
லழுந்துமவர்க்கே சுகமுண் டாகும் பராபரமே. 14

அல்லும் பகலு மறிவாகி நின்றவர்க்கே
சொல்லும் பொருளுஞ் சுமைகாண் பராபரமே. 15

அந்தக் கரண மடங்கத் துறப்பதுவே
யெந்தத் துறவினுநன் றெந்தாய் பராபரமே. 16

தன்னை யறிந்தாற் றலைவன்மேற் பற்றலது
பின்னையொரு பற்றுமுண்டோ பேசாய் பராபரமே. 17

தன்னை யறிந்தருளே தாரக மாநிற்பதுவே
யுன்னை யறிதற் குபாயம் பராபரமே. 18

கற்றகலை யானிலைதான் காணுமோ காண்பதெல்லா
மற்றவிடத்தே வெளியா மன்றோ பராபரமே. 19

வான்காண வேண்டின் மலையேற லொக்குமுன்னை
நான்காணப் பாவனைசெய் நாட்டம் பராபரமே. 20

மாயா சகமிலையேன் மற்றெனக்கோர் பற்றுமிலை
நீயேநா னென்றுவந்து நிற்பேன் பராபரமே. 21

வண்டாய்த் துவண்டு மௌன மலரணைமேற்
கொண்டார்க் கோவின்பங் கொடுப்பாய் பராபரமே. 22

பார்க்கினண்ட பிண்டப் பரப்பனைத்து நின்செயலே
யார்க்குஞ் செயலிலையே யையா பராபரமே. 23

விரிந்த மனமொடுங்கும் வேளையினு ளாகப்
பரந்தவருள் வாழி பதியே பராபரமே. 24

பாலரொடு பேயர்பித்தர் பான்மையென நிற்பதுவே
சீலமிகு ஞானியர்தஞ் செய்கை பராபரமே. 25

கங்குல்பக லற்றதிருக் காட்சியர்கள் கண்டவழி
யெங்குமொரு வழியே யெந்தாய் பராபரமே. 26

காயநிலை யல்லவென்று காண்பா ருறங்குவரோ
தூயவருட் பற்றுத் தொடர்வார் பராபரமே. 27

பஞ்சசுத்தி செய்துநின்னைப் பாவித்துப் பூசைசெய்தால்
விஞ்சிய ஞானம் விளங்கும் பராபரமே. 28

அன்பர்பணி செய்யவெனை யாளாக்கி விட்டுவிட்டா
லின்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே. 29

மூர்த்தி தலந்தீர்த்த முறையாற் றொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே. 30

விரும்புஞ் சரியைமுதன் மெய்ஞ்ஞான நான்கு
மரும்புமலர் காய்கனிபோ லன்றோ பராபரமே. 31

வந்ததையும் போனதையும் வைத்துவைத்துப் பார்த்திருந்தாற்
சிந்தை யிதமகிதஞ் சேரும் பராபரமே. 32

ஏறுமயிர்ப் பாலமுணர் விந்தவிட யங்கணொருப்
பாறெனவு நன்று வறிந்தேன்பராபரமே. 33

மாய மயக்கொழிந்தார் மற்றொன்றை நாடுவரோ
நேயவரு ணிலையி னிற்பார் பராபரமே. 34

நித்திரையிற் செத்தபிணை நேருமுடற் கிச்சைவையாச்
சுத்தர்களே நல்ல துறவோர் பராபரமே. 35

நீர்ப்புற் புதமாய் நினைவருட்கே நின்றழியப்
பார்ப்பதல்லால் வேறொன்றைப் பாரேன் பராபரமே. 36

நீர்க்குமிழி போலென் னினைவுவெளி யாய்க்கரையப்
பார்க்குமிட மெல்லா மென்பார்வை பராபரமே. 37

எல்லாரு மின்புற் றிருக்க நினைப்பதுவே
யல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே. 38

தேடாத தேட்டினரே செங்கை துலாக்கோல்போல்
வாடாச் சமனிலையில் வாழ்வார் பராபரமே. 39

படிப்பற்றுக் கேள்வியற்றுப் பற்றற்றுச் சிந்தைத்
துடிப்பற்றார்க் கன்றோ சுகங்காண் பராபரமே. 40

சித்திநெறி கேட்டல் செகமயக்கஞ் சன்மமற
முத்திநெறி கேட்டன் முறைகாண் பராபரமே. 41

கண்டவடி வெல்லாங் கரைக்கின்ற வஞ்சனம்போ
லண்டமெல்லா நின்னருளே யன்றோ பராபரமே. 42

கொலைகளவு கட்காமங் கோபம்விட் டாலன்றோ
மலையிலக்கா நின்னருடான் வாய்க்கும் பராபரமே. 43

சொல்லிப் பதர்களைந்து சொன்முடிவு காணுதார்
நெல்லிற் பதர்போல நிற்பார் பராபரமே. 44

அழுக்காற்று னெஞ்ச மழுங்கிய புன்மாக்க
ளிழுக்காற்று லின்பநல மெய்தார் பராபரமே. 45

குற்றங் குறைய குணமே விடவருளே
யுற்றவரே யாவிக் குறவாம் பராபரமே. 46

சென்றவிட மெல்லாந் திருவருளே தாரகமா
நின்றவர்க்கே யானந்த நிட்டை பராபரமே. 47

காட்டத் திலங்கி கடையவந்தா லென்னவுன்னும்
நாட்டத்தி னூடேவந்த நட்பே பராபரமே. 48

இன்பநிட்டை யெய்தாமல் யாதெனினுஞ் சென்றுமனம்
துன்புறுதல் வன்பிறவித் துக்கம் பராபரமே. 49

தன்மயமாய் நின்றநிலை தானேதா னாகிநின்று
னின்மயமா யெல்லா நிகழும் பராபரமே. 50

சிந்தையுமென் போலச் செயலற் றடங்கிவிட்டால்
வந்ததெலா நின்செயலா வாழ்வேன் பராபரமே. 51

காச்சச் சுடர்விடும்பொற் கட்டிபோ னின்மலமாய்ப்
பேச்சற் றவரே பிறவார் பராபரமே. 52

பற்றொழிந்து சிந்தைப் பதைப்பொழிந்து தானேதா
னற்றிருப்ப தென்றைக் கமைப்பாய் பராபரமே. 53

பட்டப் பகல்போலப் பாழ்த்தசிந்தை மாளினெல்லாம்
வெட்ட வெளியாக விளங்கும் பராபரமே. 54

நீயே நானென்று நினைப்பு மறப்புமறத்
தாயே யணையவரு டந்தாய் பராபரமே 55

நித்திரையும் பாழ்த்த நினைப்புமற்று நிற்பதுவோ
சுத்த வருணிலைநீ சொல்லாய் பராபரமே. 56

வேறு.

அந்த முடனாதி யளவாம லென்னறிவிற்
சுந்தரவான் சோதி துலங்குமோ பைங்கிளியே. 57

தூங்கிவிழித் தென்னபலன் றூங்காமற் றூங்கிநிற்கும்
பாங்குகண்டா லன்றோ பலன்காண்பேன் பைங்கிளியே. 58

வேறு.

நீர்க்குமிழி பூணமைத்து நின்றாலு நில்லாமெய்
பார்க்கு மிடத்திதன்மேற் பற்றறுவ தெந்நாளோ. 59

வேட்டைப் புலப்புலையர் மேவாத வண்ணமனக்
காட்டைத் திருத்தி கரைகாண்ப தெந்நாளோ. 60

எல்லா மிறந்தவிடத் தெந்தைநிறை வாம்வடிவைப்
புல்லாமற் புல்லிப் புணருநா ளெந்நாளோ. 61

குற்றச் சமயக் குறும்படர்ந்து தற்போத
மற்றவர்கட் கற்றபொருட் கன்புவைப்ப தெந்நாளோ. 62

கண்டவிட மெல்லாங் கடவுண்மய மென்றறிந்து [ளோ.
கொண்டநெஞ்சர் நேயநெஞ்சிற் கொண்டிருப்ப தெந்நா

பாக்கியங்க ளெல்லாம் பழுத்து மனம்பழுத்தோர்
நோக்குந் திருக்கூத்தை நோக்குநா ளெந்நாளோ. 64

எவ்வுயிருந் தன்னுயிர்போ லெண்ணுந் தபோதனர்கள்
செவ்வறிவை நாடிமிகச் சிந்தைவைப்ப தெந்நாளோ. 65

இருநிலனுய்த் தீயாகி யென்ற திருப்பாட்டின்
பெருநிலையைக் கண்டணைந்து பேச்சறுவ தெந்நாளோ. 66

உன்னினுன்னு மென்ற வுறுமொழியா லென்னிதயந்
தன்னினுன்னி நன்னெறியைச் சாருநா ளெந்நாளோ. 67

நினைப்பறவே தானினைந்தே னென்ற நிலைநாடி
யனைத்துமா மப்பொருளி லாழுநா ளெந்நாளோ. 68

திரையற்ற நீர்போற் றெளியவெனத் தேர்ந்த
வுரைபற்றி யுற்றங் கொடுங்குநா ளெந்நாளோ. 69

அறிவோ டறியாமை யற்றறிவி னூடே
குறியி லறிவுவந்து கூடுநா ளெந்நாளோ. 70

போக்குவர வற்றவெளி போனிறைந்த போதநிலை
நீக்கமறக் கூடி நினைப்பறுவ தெந்நாளோ. 71

ஓராமன் மந்திரமு முன்னும னம்பரனைப்
பாராமற் பார்த்துப் பழகுநா ளெந்நாளோ. 72

என்னதியா னென்பதற வெவ்விடமு மென்னுசான்
சன்னிதியாக் கண்டுநிட்டை சாதிப்ப தெந்நாளோ. 73

முச்சகமே யாதி முழுதுமகண் டாகார
சச்சிதா னந்தசிவந் தானென்ப தெந்நாளோ. 74

வெவ்வடியும் பூரணமா மெந்தையுரு வென்றிசைந்த
வவ்வடிவுக் குள்ளே யடங்குநா ளெந்நாளோ. 75

தூங்காமற் றூங்கி சுகப்பெருமா னின்னிறைவி
னிங்காம னிற்கு நிலைபெறவுங் காண்பேனோ. 76

கண்ணாடி போலவெல்லாங் காட்டுந் திருவருளை
உண்ணாடி யையா வுருகவைத்தா லாகாதோ. 77

கற்பதெல்லாங் கற்றேமுக் கண்ணுடையாய் நின்பணியாய்
நிற்பது கற்றன்றோ நிருவிகற்ப மாவதுவே. 78

சங்கர சங்கர சம்பு-சிவ
சங்கர சங்கர சங்கர சம்பு. சங்கர.

ஆதி யனாதியு மாகி-எனக்-கானந்த மாயறி வாய்நின்றி லங்குஞ், சோதி மௌனியாய்த் தோன்றி-அவன்-சொல்லாத வார்த்தையைச் சொன்னாண்டி தோழி. சங்கர

சொன்னசொல் லேதென்று சொல்வேன்-என்னைச்-சூதாய்த் தனிக்கவே சும்மா விருத்தி, முன்னிலை யேதுமில் லாதே - சுக-முற்றச்செய் தேயெனைப் பற்றிக் கொண்டாண்டி. சங்கர

பற்றிய பற்றற வுள்ளே-தன்னைப்-பற்றச்சொன் னான்பற்றிப் பார்த்த விடத்தே, பெற்றதை யேதென்று சொல்வேன்-சற்றும்-பேசாத காரியம் பேசினான் தோழி. சங்கர

பேசா விடும்பைகள் பேசிச்-சுத்தப்-பேயங்க மாகிப் பிதற்றித் திரிந்தேன், ஆசா பிசாசைத் துரத்தி - ஐய - னடியிணைக் கீழே யடக்கிக் கொண்டாண்டி. சங்கர

அடக்கிப் புலனைப் பிரித்தே-அவ - னாகிய மேனியி லன்பை வளர்த்தேன், மடக்கிக்கொண் டானென்னைத் தன்னுட் - சற்றும்-வாய்பேசா வண்ண மரபுஞ் செய்தாண்டி. சங்கர

மரபைக் கெடுத்தனன் கெட்டேன் - இத்தை வாய்விட்டுச் சொல்லிடின் வாழ்வெனக் கில்லை, கரவு புருஷ னுமல்லன் - என்னைக்-காக்குந் தலைமைக் கடவுள்காண் மின்னே. சங்கர

கடலின் மடைவிண்ட தென்ன-இரு - கண்களு மானந்தக் கண்ணீர் சொரிய, உடலும் புளகித மாக-என - துள்ள முருக வுபாயஞ் செய்தாண்டி. சங்கர

உள்ளது மில்லது மாய்முன் - னு-ணர்வது வாயுன் னுளங் கண்ட தெல்லாம், தள்ளெனச் சொல்லியென் னையன்-என்னைத்-தானாக்கிக் கொண்ட சமர்த்தைப்பார் தோழி. சங்கர

பாராதி பூதநீ யல்லை-உன்னிப்-பாரிந் திரியங் கரணநீ யல்லை, யாரா யுணர்வுநீ யென்றான்-ஐய-னன்பா யுரைத்தசொல் லானந் தந்தோழி. சங்கர

அன்பருக் கன்பான மெய்யன்-ஐய-ஞனந்த மோன னருட் குரு நாதன், தன்பாதஞ் சென்னியில் வைத்தான்-என்னைத்- தா னறிந் தேன்மனந் தானிறந் தேனே. சங்கர

இறப்பும் பிறப்பும் பொருந்த-எனக் - கெவ்வண்ணம் வந்த தென் றெண்ணியான் பார்க்கின், மறப்பு நினைப்பு மாய்நி ன்ற-வஞ்ச- மாயா மனத்தால் வளர்ந்தது தோழி. சங்கர

மனதேகல் லாலெனக் கன்றே-தெய்வ-மௌன குருவாகி வந்துகை காட்டி, எனதாம் பணியற மாற்றி-அவ - னின்னருள் வெள்ளத் திருத்திவைத் தாண்டி. சங்கர

அருளா லெவையும் பாரென்றான் - அத்தை - யறியாதே சுட்டியென் னறிவாலே பார்த்தேன், இருளான பொருள்கண்ட தல்லால்-கண்ட-வென்னையுங் கண்டில னென்னடி தோழி. சங்க

என்னையுந் தன்னையும் வேறு-உள்ளத்- தெண்ணுத வண்ண மிரண்டற நிற்கச், சொன்னது மோவொரு சொல்லே - அந்தச்- சொல்லால் விளைந்த சுகத்தையென் சொல்வேன். சங்கர

விளையுஞ் சிவானந்த பூமி-அந்த - வெட்டவெளி நண்ணித் துட்டவிருளாங், களையைக் களைந்துபின் பார்த்தேன் - ஐயன்- களையன்றி வேறொன் றுங் கண்டிலன் தோழி. சங்கர

கண்டார் நகைப்புயிர் வாழ்க்கை-இரு- கண்காண நீங்கவுங் கண்டோன் துயிரான், கொண்டார்போற் போனாலும் போகும்- இதிற்-குணமேது நலமேது கூறாய்நீதோழி. சங்கர

நலமேது மறியாத வென்னைச்-சுத்த-நாதாந்த மோனமா நாட்டந் தந்தேசனு, சலமேது மில்லாம லெல்லாம் - வல்லான்- றுளாலென் றலைமீது தாக்கினன்தோழி. சங்கர

தாக்குநல் லானந்த சோதி-அணு- தன்னிற்சிறிய வெனைத் தன்னருளாற், போக்கு வரவற் றிருக்குஞ்-சுத்த - பூரண மாக்கி னன் புதுமைகாண் மின்னே. சங்கர

ஆக்கி யளித்துத் துடைக்குந் - தொழி - லத்தனை வைத்து மெள்ளத்தனையேனுந், தாக்கற நிற்குஞ் சமர்த்தன்-உள்ள-சாட் சியைச் சிந்திக்கத் தக்கது தோழி. சங்கர

சிந்தை பிறந்தது மாங்கே-அந்தச்- சிந்தை யிறந்து தெளிந் ததுமாங்கே, எந்த நிலைகளு மாங்கே-கண்ட- யான்ரு னிரண்டற் றிருந்தது மாங்கே. சங்கர

ஆங்கென்று மீங்கென்று முண்டோ-சச்சி, தானந்த சோதி யகண்ட வடிவாய், ஓங்கி நிறைந்தது கண்டாற்-பின்ன-ரான் றென்றிரண்டென் றுரைத்திடலாமோ. சங்கர

என்று மழியுமிக் காயம்-இத்தை- யேதுக்கு மெய்யென் றிரு ந்தீ ருலகீர், ஒன்று மறியாத நீரோ-யம- ஞேலைவந் தாற்சொல்ல வுத்தரமுண்டோ. சங்கர

உண்டோ நமைப்போல வஞ்சர்-மல-மூறித் ததும்பு முடலை மெய்யென்று, கொண்டோ பிழைப்பதிங் கையோ - அருட்- கோலத்தை மெய்யென்று கொள்ள வேண்டாவோ. சங்கர

வேண்டா விருப்பும் வெறுப்பும்-அந்த- வில்லங் கத்தாலே விளையுஞ் சனனம், ஆண்டா னுரைத்த படியே-சற்று - மசையா திருந்துகொள் ளறிவாகி நெஞ்சே. சங்கர

அறிவாரு மில்லையோ வையோ-என்னை - யாரென் றறியாத வங்க தேசத்தில், வறிதேகா மத்தீயிற் சிக்கி-உள்ள, வான்பொரு டோற்கவோ வந்தேனுன் டீறுழி. சங்கர

வந்த வரவை மறந்து-மிக்க-மாதர் பொன்பூமி மயக்கத்தி லாழும், இந்த மயக்கை யறுக்க-எனக், கெந்தை மெய்ஞ்ஞான வெழில்வாள் கொடுத்தான். சங்கர

வாளாருங் கண்ணியர் மோகம்-யம-வாதைக் கனலை வளர் க்குமெய் யென்றே, வேளா னவனுமெய் விட்டான் - என்னின்- மிக்கோர் துறக்கை விதியன்றோ தோழி. சங்கர

விதிக்கும் பிரபஞ்ச மெல்லாம்-சுத்த-வெயின்மஞ்ச ளென் னவே வேதாக மங்கள், மதிக்கு மதனை மதியார்-அவர்- மார்ககந் துன்மார்க்கஞ் சன்மார்க்கமோ மானே. சங்கர

துன்மார்க்க மாதர் மயக்கம்-மனத்- தூயர்க்குப் பற்று து சொன்னேன் சனகன், தன்மார்க்க நீதிதிட் டாந்தம்-அவன்- ஞனந்த மான சதானந்த னன்றோ. சங்கர

அன்றென்று மாமென்று முண்டோ-உனக்-கானந்தம் வேண்டி னறிவாகிச் சற்றே, நின்றாற் றெரியு மெனவே-மறை - நீதியெம் மாதி நிகழ்த்தினன் றோழி. சங்கர சங்கர சம்பு.

## தேவிகாலோத்திரம்.

ஆசைபய மையமாங் காரமுயிர்க் கச்சமின்றிப்
பாசம்விடல் கருணையுட னொருமைபத்தி ஞானமுத்திக்
காசைமிக வுடையார் யோகதற் பராருமாய்ப்
பேசியகா லோத்தரத்தின் வழிநிற்பர் பெரியோரே. 1

வாயுவென மறுவுகின்ற மனமடங்கும் வகைதடுப்பா
ளுயவவ னரிபிரம னிந்திரன்சண் முகன்குருவு
மேயபல தேவதைகள் யோகிதபோ தனனறிஞ
ருயினெல்லா முடையானு மவனணங்கு நுணங்கிடையாய். 2

அறிவுநிலை தவமடக்கம் புண்ணியந்தியா னங்குணங்கள்
நெறியுடைய பத்தி நெறிவுபா யங்நினைக்கின்
மறுகும்வளி யனையமன மடங்குவதன் றியாததுவே
யறிவுடையோர் யிவையனைத்து மாமென்றே யறைகுவரால். 3

கருத்தடங்கின் முத்தியது கையகலிற் கட்டாகும்
விரித்தபொரு ளிதுவென்ன வறிவுடைய மேதக்கோர்
திருத்தகுநல் லறிவாலே சித்தத்தைத் திரம்பாம
லருத்தியுட னிலைநிறுத்து மதுவறிவின் பயனுமால். 4

வேறு.

ஒருபொரு ளெக்காலத்து முளதாகிச் சிறப்பு டைத்தா
யிருவினை யின்றி மேலா மின்பத்தை யளிப்ப தாகும்
பொருவிலா விதன்மே லன்பு பொருந்திடா தாரு முண்டே
திருவுலா வகன்ற கல்விச் சிறந்தசான் றோர்க டாமே. 5

யானெனு மதனை நீக்கி யேகமாய் நின்ற ஞான
மானவவ் வொளியாய்த் தோன்று மதுமுத்தி வித்து மாகித்

தேனமர் கரிய கூந்தற் செய்யவாய்ப் பரந்து நீண்ட
மானமர் விழியாய் மேலாம் யோகவத் தகமு மாமால். 6

மந்திரஞ் செபந் தியானம் பூசனை வணக்கம் வேண்டா
வந்தமி லாத முத்திக் குபாயமே யறிய வேண்டும்
சிந்தனை புறமே செல்லிற் றுயரமே திரிய மீட்கின்
பந்தமாந் துன்ப நீங்கிப் பரமான வின்பஞ் சேர்வார். 7

புறனகங் கீழ்மேல் பக்கம் புணர்வதோர் பொருளு மில்லைத்
திறனுடை யுருவ மெல்லாந் தானுகித் தேக மின்று
யறன்முறை யடங்கு ஞான யோகினு லறியப் பட்ட
விறன்மலி ஞானு நந்த மேன்மையாய் விளங்கா நிற்கும். 8

வே று.

எந்த வாருயிர் யாதொர் பொருளினைச்
சிந்தை யாற்பற்றிக் காரியஞ் செய்திடி
னந்த யோனிய தாமென் றறிவினுல்
பந்தமில் பொருள் பற்றுத றக்கதே. 9

வே று.

கன்மபல மேதுமில்லைச் சுபாவமே காணுங்கால்
தொன்மையுல குயிரில்லைத் தோன்றுவதெல் லாமசத்து
நன்மையினைத் தோற்றுவித்துப் பற்றிலதாய் நணுகரிய
தென்னவறிந் தானுலகு மிலதாகிச் சுத்தனுமாம். 10

வே று.

வானம் போல வடிவில தாயெங்கும்
ஆன தாகத் தியானம்பண் ணுதவன்
கானந் தன்னி லுலண்டெனக் கட்டுப்பட்
டீன மான பிறப்பிறப் பெய்துமே. 11

யாவ ராயினு மெப்பிறப் பெய்தினும்
ஆவ தாவ தருந்துய ராதலால்
தீய துன்பஞ் செறுத்தற் பொருட்டந்தத்
தூய ஞானச் சுடரைத் தொடர்வரே. 12

வே று.

மருவிய பொருண்மே லன்பாய் வானரம் போற் சரித்துத்
திரியுமச் சித்தந் தன்னைத் திருத்திச் சூனியத்தே நின்றால்
மருவினோர் பிரித லின்றி வானவ ரறிவுக் கெட்டாப்
பொருவிலா நித்த சுத்தப் பொருளினை யடைவ ரன்றே. 13

மேலாய வின்ப மாகி விண்போலுட் புறம்ப தாகிக்
காலாதி தத்து வங்கள் கலவாது காய மின்றி
மாலாய கரண மின்றி யறிவாகி யெங்குங் காணும்
சீலாய ஞானஞ் சேர்ந்தோர் திரியா வாநந்தி யாவார். 14

வே று.

மூண்டு பற்றி முழங்கி யெழுங்கன
லீண்டு காட்ட மிலதே விலதாகுந்
தீண்டு மப்பொரு ளின்றெனிற் சித்தமும்
மாண்டு தோற்ற மிலதாய் மடிந்திறும். 15

மோக மூர்ச்சிகை மாயை முதற்கன
வாய சாக்கிர மல்லாச் சுழுத்தியு
மேய வெண்ணு மவத்தைக ளியாவையும்
வீய நோற்பவர் வீடு விடாதவர். 16

உடம்பி ரண்டு முயிர்ப்புட னுள்ளமும்
மடம்ப டும்மகங் காரமும் புந்தியும்
திடம்ப டத்தன்னில் வேறெனச் சிந்திப்பா
னுடம்பி லாஞான வுள்ளொளி யுள்ளுறும் 17

வே று.

திருத்தகு சமாதியைச் செய்யுங் காலத்துக்
கருத்தெழுந் தடங்காது கலங்கும் மாயினும்
வருத்தமா நித்திரை மருவு மாயினும்
திரித்தறி வுறுத்துத்தன்னி லையிற் சேர்க்கவே. 18

வே று.

ஆராத சித்தம் யாதோர் காலத்தி லடங்கு மானால்
பேராமல் வருந்திக் காத்துப் பின்னைச்சிந் தனைகள் சென்று

சாராமல் வல்ல வாறு தடுத்துச்சார் வான வெல்லாஞ்
சேராமன் மயக்க நீக்கித் திடமாகச் செய்து கொள்வான். 19

பற்றினுற் சலிக்கு முள்ளம் பற்றுதே பண்ணிக் கொள்க
நிற்றலின் றெனினுந் தத்த நிலையினி னிறுத்திக் கொண்டால்
பெற்றன மென்று பேணிப் பின்னைப்பே ராமற் காக்கும்
நற்றவ ரன்றி யிந்த வுலகினி னல்லோ ரியாரே. 20

வேறு.

பிறந்து பெற்ற வறிவாற் பெறும்பயன்
நிறைந்த நீர்முகி னீங்கிய வானென
வறிந்து தன்னை யமல வியாபகம்
செறிந்து நல்ல தியானத் திருத்தலே. 21

வேறு.

வளியென மறுகுஞ் சித்த நெஞ்சிலே மருவி நிற்கும்
தெளிவுற நடுவு கீழ்மேற் செலாவகை நிறுத்திக் கொண்டா
லொளியுறு முள்ள மொன்றும் பாவியா துறவே நோக்கி
யெளியவப் பொருண்மேல் பற்றற் றிருப்பவன் யோகி யாவான்.

வேறு.

நித்திரையும் பராக்கினையு நீக்கிச் சித்த
மொருநிலையு நீங்காமல் நிறுத்திக் கொண்டாற்
சித்தமொரு பொருளினையுஞ் சேரா தாகிச்
சேரும்வகை சேராமற் செல்ல நின்று
மத்தமன முதலான வவத்தை யொன்று
மருவாத வகைநிற்கு மதுவே யாகும்
முத்திநெறி யென்றுமறை யிடை விடாது
முறையிடவு மாகமங்கண் மொழியுங் காணே. 23

பொருண்முழுது மடையாமன் மனத்தை வாங்கி
நெஞ்சகத்தே பொருந்துவித்த பொழுது தோன்றும்
இருளறுநன் ஞானவொளி யது விளங்க
வெப்பொழுதும் வாதனையே யியற்றிக் கொள்க
பரமதுவா யிலதாகி யங்க மின்றிப்
பற்றின்றி யவத்தையின்றி நின்ற வொன்றை

யுரனுடைய தியானிகளா யுறைகின் றூரே
பிறப்பிலா வந்நிலத்தை யுறுகின்றூரே. 24

துக்கசுக மாசைவெறுப் பென்று கூடுந்
துவந்துவங்க ளிரண்டவைபோற் சொல்லப் பட்ட
மிக்கதெய்வ மடவார்க டன்மா தன்ம
மெய்ப்பலன்கள் பெறுவபே றுளவா மென்று
தொக்கவுள மதுவாகும் பிற்பை யாக்குந்
தொடர்பெனவே துணிந்தந்தத் தொடர்பை யாக்கும்
தக்கபொருள் சார்வுயிர்ச்சார் வடைய நீக்குந்
தவத்தோர்பாற் சிவம்வந்து சாருங் காணே. 25

வே று.

ஆகத்தே யாங்கார வடிவதாகி யருவினைசெய் தகங்கார மாகுமாய, மோகத்தைத் துறக்கின்மொழி யிற்படாத முத்தி தல மினிதளிக்க மொழிந்த தன்றிச், சோகத்தைத் தருமுடலை யெல்லாம் விட்டுச் சேராத வறிவாகிச் சுத்தரூப, மாகத்தான் பாவித்தாற் சத்தியெல்லா மறவிடுகை பரமார்த்த மறிவார் தாமே. 26

வே று.

வைய மாச்சிர மம்மென வைத்தவுஞ்
செய்ய சாதி குலமெனச் சேர்த்தவு
மைய மின்றி யறவிட் டறிந்தவர்
செய்ய ஞானத் திரளைச் சிந்திக்கவே. 27

வே று.

கடைபடு முலகிய றன்னைக் காண்குறி
னுடையவ ரெனையிலை யானுடை யாரிலை
யடையவு மெனக்கிலை யானு மன்னதே
நடையிது நிலையெனிற் றமிய ஞனரோ. 28

வே று.

நித்தனும் பரமேசன் யானென்று நிச்சயிக்கின்
முத்தனல னெனினுமவன் முத்தனு முயிருடம்பின்
பெத்தமற ஞானத்தாற் காட்சிபெறிற் சாந்தியுடைச்
சித்தனுப் பொருட்பற்றுத் தீர்ந்து வீடடையுமால். 29

அறிவாகிச் சுத்தனு யறிவானாய் வேறாகிக்
குறியாது கொளல்வீடு கூடாது கூறுங்கா
லறிவார்தா மிலராகிச் சோகாதி யடையானாய்ப்
பிறியாத பரப்பிரம மெனநிற்பன் பெண்ணணங்கே. 30

நீடிய தலைகாலெங்கு நிறைமயிர்த் தோலினாலே
மூடிய வுடலுங்காணுங் கனவெனு முளத்தனாகிக்
கூடிய விதனின்ஞானக் குறியுடைத் துயிரேயென்றுங்
கேடிலா தென்றுநோக்கிற் கேடிலா ஞானமாகும். 31

நிற்பனவு நடப்பனவு மாயிங்கு நீடுயிர்கட்
கொப்புடைய தாய்தந்தை யீசனுமா யுள்ளேனான்
கைப்படவு முத்தியினிற் காமராய்த் துரியத்தே
நிற்பவர்க ளருச்சனையா யென்னையே நினைவரால். 32

ஆனநிலை யாவுடைய பூதங்க ளனைத்துநா
னேனையவை யாவையுள யெவையுநான் றாலநுண்மை
யானவியா வையுமல்லே னெனையறிபி னறிவோர்க்கு
ஞானமொன்று மென்னுருவ நானேயெவ் வுயிர்க்குறவும்.

வே று.

ஒன்றுடனுந் தோய்வில்லா னுத்தார்மிக் காரில்லா னுலக மில்லான், நின்றநினை வுக்கெட்டா நித்தன் காணப் படானெஞ்சி னிற்பான், பொன்றுபிறப் பிலிமுதலா மறிவினனிட் களன்பழைமை யோன் பொருள்க ளில்லோன், யென்றுநினைந் தடிக்கடியும் பிறமமென நோக்குதலே யியல்ப தாகும். 34

வே று.

சமயா சாரசங் கற்ப விகற்பமு
மமையா தாங்குல வாசார மானதும்
மமையா தாரும் விடாதவில் வாழ்க்கையு
மமையார் தோளாய் விடுதலா சாரமே. 35

பல்வகை சித்திகளும் பாதளத்திற் செலவும்
சொல்லறிய பொருண்முழுதுஞ் சோராமற் பெற்றிடினு
மெல்லையில வின்பமா முத்திபெற வெண்ணுமவன்
அல்லறருஞ் சிற்றின்ப மடையவவா வொழிப்பான். 36

வே று.

யாதொரு விடயந்தன்னு லவத்தையை யெய்தினுலுங்
காதலால் யோகந்தன்னைக் கருதுவான் பிறிதோர்தேசந்
தீதிலாப் பீடந்தன்னிற் சிறப்புடைத் தெனினுஞ்சித்தத்
தாதரவடையுமாசை யடையாம லாக்கிக்கொள்வான். 37

அளியமர் குழலாய்வீட்டை யடையவே கருதுநல்லோர்
தெளிவன பறப்பவூர்வ நிற்பன முதலவாகிக்
களியுடை யுயிர்க்குத்துன்பங் காண்கிலா வாழ்க்கையானு
லளியினு லருளையென்று மாக்குவ தழகிதாமால். 38

வே று.

யோகி யாகி யொழுகு மியல்பினோன்
போக மாற்றி பொருண்மேற் புலன்களை
வேக மாய பயமும் வியப்பும்போய்
மாகர் காணு சுகத்தை மருவுவான். 39

வே று.

வாதுரை பயனில்சொல்லும் பிறருடன் மகிழ்ந்திருத்தல்
பேதுரு பிணக்கநீங்கிப் பெரியவ னருளினாலே
ஓதுறா லோதலோவி யுலகினி னன்றுதீதென்
றோதியி னுரைத்ததெல்லா மறவிட்டே யமர்ந்திருப்பான். 40

ஐவகை பூத காரியமென்னு மவ்வுடம்பில்
மெய்வகையாஞ் சிவனிற்குஞ் சிவமுதலா மேதினியீ
றிவ்வகையா வுலகங்க ளனைத்தினையு மிறையுருவென்
றிவ்வகையா யுணர்ந்தானே யெமையுணர்ந்தா னுமைகேணீ. 41

வே று.

ஆசை கோபம் பயஞ்சோக ராகமாம்
மாசு மாட்சியுள் ளோராக்க மாற்றுமை
பேசு தீமை பிறர்க்குத் தமக்கில்லாத்
தேசி மூக்குடன் றீர்வார் சிறந்தவர். 42

## நிஷ்டானுபூதி.

---

நித்தனை யுமையா ளடிபணிந் தெனக்கு நிட்டைசா தனைநி கழ்த் தெனவே, யத்தனு மகிழ்ந்தே நீவினு விடுத லாருயிர்த் தொகைகண்மெய் யுணர்வான், முத்தியை யடையுங் காரண மாமான் மொய்குழற் செய்யவாய்ப் பசுந்தோள், வித்தகி சாவ தானமாய்க் கேட்டி யென்றிறை விளம்பிடு மன்றே. 1

ஒருமொழி யாலே சுருதியா கமநூ லுயர்புரா ணமுமெலா மொழியு, மொருமொழி யாலே சரியைநற் கிரியா யோகபா வனையெலா மொழியு, மொருமொழி யாலே யண்டபூதங்க ளொடுங்கிடுந் தன்னிலே தோன்று, மொருமொழி சும்மா விருத் தலா மதனு லொப்பிலாச் சிவபத மடைவார். 2

சரியையின் ஞெழிலி னுலுஞ் சற்கிரி யையினும் யோகம், புரிதரு முயற்சி யானும் பொருந்தொணு தென்பர் மோலோ ,ருரி யதே சிகனுரைக்கு மொருமொழி யுண்மை யாலே, யரியமெய் ஞ்ஞான வீடிங் கடைவது திண்ண மாமே. 3

கட்டறத் துறந்தே யுயிர்பொருட் சார்பைக் கருதிடும் வாசனை யனைத்து, மொட்டற விடுத்து ஞானநூ லனைத்து மோர்ந்திடி லென்பய னுதவு, மெட்டுதற் கரிய சற்குரு வருளா லியம்புமோர் மொழியினைப் பெற்றே, நிட்டைசா தித்தே சகலகே வலங்க ணீங்கிடிற் பிறப்பிறப் பறுமே. 4

வித்தக மாகப் பலகலை பயின்று மேவுநற் பயன்களை யறிந்துந், தத்துவ முழுதுங் கசடற வுணர்ந்துந் தன்னிலை யறிவதற் கரிதாஞ், சுத்தமெய்ஞ் ஞான தேசிகன் மகிழ்ந்தே சொல்லாமற் சொல்லுமோர் மொழியா, முத்திரை மோன நிலையினு லன்றி முத்தியி னிலைகிடை யாதே. 5

வேறு.

முத்தி ரைகளோர் மூன்று மொழிந்திடிற்<br>
சுத்த சாம்பவி சொல்லும் பைரவி<br>
மெத்து கேசரி யென்று விளங்கிடு<br>
மித்தை யார்க்கு மியம்பவொண் ணுதரோ. 6

வேறு.

இந்தநன் னிலையி லிருந்துசா தித்தோ ரெவரென வுமைய வள் வினவச், சுந்தர வாம தேவமா முனிவர் சுகர்முதன் முனிவ ரென் றறிதி, கந்தடு கரியின் கையினைப் புறங்காண் கவானுடை மலைதரு மயிலே, நிந்தையி னிட்டைக் குரியவா தனமு நிகழ்த் துவ னன்புட னீகேள். 7

உத்தர திசைபார்த் திருப்பதாங் கலையி னுரிவையோ டுழு வையி னதளுஞ், சித்திரா தனம்வெண் டுகில்குசை யைந்துந் திண் புவி மிசைவிரிப் பனவாம், பத்திரம் வீரங் குக்குட மரிய பங்க யங் கோமுக மைந்தும், வித்தக மான வங்கவா தனமாம் விம லைநீ யறிகென விளம்பும். 8

இயம்புமா தனங்க டம்மிலொன் றுறவே யிடைகளுஞ் சிர ங்கணு னேராய், வயம்பெறத் தம்ப மெனநிறீஇ யிருந்தே மன மது வடிவினை யுருமை, னயம்பெற வுன்னு துன்னியெப் போது நடுநிலை தன்னைநீங் காமற், றயங்கிய சுத்த மசுத்தமல் லாத தனி நிலை பொருந்துதல் சமாதி. 9

விண்ணை மூடக் கவுசனையை விரிக்கு மொருவன் விரகதெ னப், பண்ணும் யோகத் துறநினைவோன் பவனற் றடுக்கு மது விடுத்தே, யெண்ணுங் கருத்தை முன்னடக்க வியங்கும் வளியும் பின்னடங்கும், கண்ணை மறைக்க வான்மறையுங் கணக்காம் படிநீ கண்டு கொள்ளே. 10

அலையு மனத்தை யகத்தடக்கு மவனே சரியை கடந்தோனு, மலையு மனத்தை யகத்தடக்கு மவனே கிரியை முடிந்தோனு,மலை யுமனத்தை யகத்தடக்கு மவனே யோக தற்பரனு, மலையு மன த்தை யகத்தடக்கு மவனே ஞானி யதிசூரன். 11

அடக்கிக் கருத்தி னலைவறுப்போ னவனே சகல தியாகியா, மடக்கிக் கருத்தி னலைவறுப்போ னவனே பொன்றுப் பொதினு டையோ, னடக்கிக் கருத்தி னலைவறுப்போ னவன் பேரின்பவ னுபவியா, மடக்கிக் கருத்தி னலைவறுப்போ னவன் வீட்டின்ப முடையவனே. 12

வெறிகொள் குரங்கு மயக்குஞ்சொல் விளம்பி யருந்தி னுல துவு, நெறிதான் மயங்கிச் சுழல்வதுபோ னிமிடந் தானு நிலாம னத்தைக், குறியில் சமாதி யெனுங்கயிற்றுற் குறுகப் பிணிப்போ ரெவரவர்தா, மறிவோ டறியா மைகளிறந்த வரிய முத்தி தனை யடைவார். 13

பங்கயா தனத்திற் படியவே யிருந்து பரமசற் குருவினைத் தொழுதே, யிங்கிரு விழியும் விசும்புற நிறுவி யெழுங்கருத் தினையக மாக்கி, யங்குறு நிலையா லடங்கிடா மனத்தி னலைவறு த்தறிவறி யாமை, துங்கமா யொழியச் சாதனை புரிந்தே தூங்கா மற் றூங்குக மாதோ. 14

ஆதனத் திருந்தே சாதனை புரிந்தா லடங்கிடாப் பொறிபுல னடங்கு, மாதனத் திருந்தே சாதனை புரிந்தா லடங்கிடு மனோ விட யங்க, ளாதனத் திருந்தே சாதனை புரிந்தா லறிவறி யாமை களொழியு, மாதனத் திருந்தே சாதனை புரிந்தா லகண்டவீ டடைவது நிசமே. 15

உலையாப் பொறியைம் புலனடக்கி யொன்று மனத்தி னுன் றுதே, தலையா கியபே ரானந்தந் தலைப்பட் டதனிற் றுன்மூழ்கி, யலையா யோக மம்புவிடு நேர மரைமாத் திரையேனு, நிலையா நிற் போர் வீடடைவர் நிலத்திற் பிறவா ரிறவாரே. 16

நிட்டை நிலையீ தென்றுரைப்பர் நிகழும் வாயு தாரணையை, நிட்டை யதுதா னலதென்றே நிலவு மேலோர் புகலுவார், னிட் டையாதல் கருத்தடங்க நிறுத்தலதுவே சிவயோக, நிட்டை விடாது சாதிப்போர் நித்த மெய்வீ டுறுவாரே. 17

நிட்டை சாதித்தா னீங்குமைம் பொறியொடு புலனு, நிட் டை சாதித்தா னெஞ்சமு முளத்திடை யொடுங்கு, நிட்டை சாதித்தா னினைப்பொடு கேவல மொழியு, நிட்டை சாதித்தா னிமல வீடடைவது நிசமே. 18

நீங்காக் கருத்தை யகத்திருத்தி நிகழ்சாம் பவியாற் ககன முற, நீங்கா நிட்டை சாதித்தா னீங்கும் பொறியைம் புலன் கரண, நீங்கா நிட்டை சாதித்தா னினைப்பு மறப்பு மறநீங்கு, நீங்கா நிட்டை சாதித்தா னித்த முத்திப் பேறடைவார். 19

உத்தர முகமா யாதனத் திருந்தே யுயர்குரு பதமலர் தொழுதே, முத்திரை யெனுஞ்சாம் பவியினைப் பொருந்தி மோனமா மங்கிலை வழாமற், சித்திர தீபம் போலசை வறவே சிந்தையினசை வறப் பவனே, யத்தன தடியை யடைவனென் றுரைக்கு மண்ணலா கமமெலா மெடுத்தே. 20

இருந்தான் சமாதி போலென்றே யிந்த வுலகோ ரியம்பவுங் கேட், டிருந்துஞ்சமாதி தனினுழையா தென்னோ வென்போ லிருந்தானே, யிருந்தான் சமாதி தன்னிலையி லிருந்தே யிலாமை தனைநீக்கி, யிருந்தா னவனே யிருந்தானே யின்ப மளவி லின் பத்தே. 21

அருந்துபோ னகமும் பாதியா நீரு மதனினும் பாதிய தாகப், பொருந்துநா ளொன்றுக் கொருபொழு தருந்தல் புரிகமற் றெவ்விடத் தெனுந்தா, னிருந்திடி னும்பி னெழுகினும் புவிமீ தேகினு மாதர்க டம்மைப், பரிந்து கூடினுமெய்ஞ் ஞானமுத்திரையிற் படிவது யோகிதன் பரிசே. 22

இத்திற மான யோகசா தனையி லிருந்துசா திப்பவர் தமக்குச், சுத்தமா நாதத் தொனிகளும் பலவாத் தோன்றிடு மணிகடன் மேக, மத்தளம் பேரி யாமொலி சிலம்பு வளையளி தாளமென் றுமையாட், கத்தனு மொழிந்தா னன்றியு முரவோ ராய்ந்தெடுத் துரைத்தன ரன்றே. 23

ஒத்தவந் நாதந் தோன்றிய பொழுதே யொலியினு ணியர்ந் தெழு படம்போற், றத்துவஞ் சகல கேவல நீங்கித் தனையறிபவர்க்கிலை மூட, மித்திற மலாது சகலத்து மெய்தா திரும்பர கேவலத் தடையா, மத்தியத் தந்த மூடமே யுற்றால் வகையதற் குரைக்குது மன்றே. 24

துன்னிய வந்த மூடநீங் கிடமெய்த் தூயசற் குருவினைத் தொழுதே, மன்னுகா ரணமா மனுவினைப் பெற்றே மனம்விடயத்துறா திருந்தே, யங்கிலைப் பதினா யிரந்தரஞ் செபிக்க வகன்றிடு மகன்றிடா துறமேற், பின்னுமச் செபத்தை யொருபதாண் டளவும் பெட்புடன் செபிக்கநீங் கிடுமே. 25

இந்தமெய்ச் செபமுங் குருபதத் தன்பு மிடைவிடா தேயுஞற் றுவரேல், வந்திடுஞ் சனனந் தன்னிலே யுறுவர் மன்னுமெ

ய்ஞ் ஞானநிட் டையினை, யுந்துமம் மூட மிலாதவர் தம்மை யுத் தம பக்குவ ரெனலா, முந்துசற் குரவ னல்குமுத் திரையான் மோனவீ டுறுவர்க ளன்றே. 26

இயம்புநன் னிலையி னிட்டைசா திப்போர்க் கினவொளிகோ டிக ளொன்றாய், வயங்குவ போல வகக்கணிற் றோன்று மற்ற தும் பொருளல வென்றே, தயங்குற வெந்தை யுமைக்குரைத்திட வே தலைவிகேட் டதனை தெளிய, நயம்பெறப் புகறி யென்னவே வினவ நாதனுந் தெளிவுற நவிலும். 27

இலங்கிய மோன முத்திரை யதனி லிருந்திடும் பொழுதி லைம் புலனி, னலந்திகழ் மூன்று புலனொடுங் கிடுமா னவிலவை யெவை யெவை யென்னிற், றுலங்கிய ரூப மிரதநற் கந்த மென் றசொற் றிடுவர்மற் றிரண்டு, புலன்களிற் பரிசந் தரிசனந் தோ ன்றிற் போயிடு மென்பர்புண் ணியரே. 28

பேசரிய வனுபோக மாகுங் காலைப் பிறங்குசத்தத் தக்கர ங்க டோன்றுமாயி, னீசமாம் பொறிபுலன்க ளவையுந்தோன்று நிலவுபொழு தகமுகம தாக வுய்த்தே, பாசமிறே சிகன்முன்னம் பகர்ந்த வாறே பதுமவா தனமும்பார் வையுநீங் காம, லாசிலந் நிலையினுற வஞ்செழுத்து மில்லென் றறையக்கேட் டவைபோமா றியம்பு கென்றாள். 29

நகரமொடு மகரமது சடந்தருங்கா ரணமா நாடுமவை நீங்கி யிடும் வகையை நவிலுதுங்கேள், வகரத்தி னகரமுதல் யகரத்திற் றானே மகரமுநீங் கிடுமரிய சிகரமனுத் தன்னால், யகரலயம் வகர முந்தான் சிகரத்தி லொடுக்க மாகுமிறை நீங்கவுயிர் முத்தியெய்து மென்றே, தகரநறுங் கரியகுழ னகமாதுக் கிறைவன் றனதுதிரு வுளமகிழ்ந்து சாற்றினனன் குணர்ந்தே. 30

ஆதனத் திருந்தே சாதனை செயும்போ தலைதரு மனமடங் காமற், போதுமே யெனினுங் கேவல மயக்கம் புரியுமே யெனினு மங் கெழுந்து, நீதியி னெயீ ரடியுலா வந்தே நிலவுமா தனத்தினிற் பொருந்தி, யோதுசா தனையி னுறுதியோ டிருப்ப தியோகியர்க் கியல்பதா மன்றே. 31

இந்நிலையா கியபரம கேவலத்தி னுளுமெழு நிதித்தி யாச
னத்தி லிராமலிருந் திடுவோ, னந்நிலையே யுடலினொடு சீவன்முத்தி
யடைவ னதுவுமெவ் விதமென்னி லறைகுதுங் கேளாய், துன்னி
யதோ யத்தினொடு தோயமுறல் போலுஞ் சுவைதருகீ ரத்தினொ
டுகீரமும்போற் கலந்தே, யெந்நிலையுந் தோன்றும லிருந்திடவிவ்
வுலகி லிறப்பினொடு பிறப்புமறுத் தினையிலின்பத் தொளிர்வான்.

அஞ்செழுத் தின்விதி யெவ்வித மென்னி லரிய தூலமொடு
சூக்கும மேவும், பிஞ்செ ழுத்தினைத் தள்ளிமே னின்ற பெரியெ
ழுத்தினைப் பினுமுனு நிறுவி, யெஞ்ச லில்லுயிர் நடுவினி னிலவ
விசைத்தல் காரண மாகுமென் றறிதி, விஞ்சு நல்லருளிறையதா
மிதனை விளங்கு பக்குவர்க் கருள்வது விதியே. 33

இந்தவஞ் செழுத்தி லிரண்டெழுத்தொழிப்ப தென்னை
யென்றுமையவள் வினவ, வந்தமி லின்ப துன்பமே தனையி லழு
த்துவ திரண்டெழுத் தாமால், சிந்தனைக் கரிய சிவமிரு பாலுஞ்
சேர்ந்துயிர் நடுவணைந் திலங்கு, மைந்தெழுத் தினையே காரண
மெனலா மதுமுத்திக் குறுதுணை யாமால். 34

விதிசேர் பஞ்சாக் கரந்தன்னை விளங்க வுரைத்தோ மேலிய
ம்பல், பதியின் மனுவாமதையுளத்திற் பதித்தோர் பரமபதமடை
வர், கதிசேர் செபமு நீங்காதோர் கருதும் பலனே யடைவரென,
மதிசேர் சடையெம் மண்ணலுமை மகிழ வுரைத்தான் வாய்மல
ர்ந்தே. 35

சினத்தி னிடத்து மூவகையினுஞ் சிநேக னிடத்து மனையி
டத்து, மனத்தான் மொழியாற் கரத்திடையு மருளுஞமலி யிட
த்தினுந்தா, னனைத்து நழுவ விடாதகத்தி னிடையே யுய்ப்பா
னிறையெழுத்தை, மனதுக் கரிய னுமைவனை யென்றான் பரமன்
மலைமகட்கே. 36

பதியெழுத்தை விடுத்தவர்கள் பண்ணும்பூசை யவமாகும்,
பதியெழுத்தை விடுத்தவர்கள் பண்ணுஞ்செபமு மவமாகும், பதி
யெழுத்தை விடுத்தவர்கள் பண்ணுந்தவமு மவமாகும், பதியெழு
த்தை விடுத்தவர்கள் பண்ணுமறங்க ளவமாமே. 37

இங்நிலையா மிறையெழுத்தை யுளத்தடக்கு மவனே யிவ்வு டம்பி னுடனிருந்து மிலங்குபர கதியை, யங்நிலையே யடைவனென னவண்ணன்மலை மாதுக் கறைந்தனனு லஃதுமோ ராண்டுளத்து ளடக்குங், தங்நிலைமை யுடையவர்க்குப் பரகுரவன் மகிழ்ந்தே சாற்றுகமா காரணத்தைத் தமதுளத்து ளடக்கா, நன்னிலையாம் பக்குவரல் லாதவர்க்குத் தானே, நவின்றிட வொண்ணுதெனவே நவிலுவர் நல்லவரே. 38

இப்படி யாய வுபயநன் மனுவை யெழிற்குரு வருளிடப்பெ ற்றுச், செப்பருஞ் செபமுஞ் செபியாது செபிக்கச் சிந்தையு மோயும தோய்ந்தா, லப்படி தானே யாதனங் கட்டி யசைவற விருப்பதே நிட்டை, துப்புறு கரண மசையுமே யாறுற் றுரிசுள வநிட்டை யென் றுணரே. 39

உற்றமெய் நிட்டை விடாதுசா தித்தோ ருறுவர்நன் முத் தியை யென்றும், மற்றவம் மூட நீங்கிலார் முத்தி மறுபவத் துறு வரென் றுரைத்தீர், குற்றமி னிட்டை யடையுங்கா ரணத்தைக் குழகனே யுரையென வினவப், பற்றறு பரம னுமையவண் மகி ழப் பண்பொடு பகர்தன்மே யினனுல். 40

ஞான நிட்ட னிருக்குமங் நாட்டினின், மோன வார்த்தை மொழியவே கேட்டவன்; ரூனு முப்பதா மாகங் தவத்தினு, லான முத்திப் பதத்தை யடைவனுல். 41

செப்பு நிட்டா பரர்க்குச் சிந்தையா, லொப்பின் மாட மொ டுக்கமுஞ் செய்பவ, னிப்பு விக்க ணிருபத்தெட் டாம்பவங், தப் பிலாதமெய் முத்தியைச் சாருமால். 42

ஞான நிட்டா பரர்க்கு நாடொறும், போன மாதி பொருந்த வுதவுவோ, னீன மில்லா விருபத்தைந் தாம்பவ, மான முத்தியை மன்னுத றிண்ணமே. 43

நிட்டை மேவு நிருமல யோகியர், கட்ட வேநற் கலைக ளுத வுவோ, னிட்ட மாயிரு பத்திரண் டாம்பவத், தெட்ட ரும்பத மெய்துவ துண்மையே. 44

சாத லைக்குண் முயலுங் தகைமையோர், பாத முச்சிப் படி யப் பணிபவ, ரோது மங்க மொருப திரட்டியிற், றீதில் வீடு பெ றுவது திண்ணமே. 45

சாற்று நிட்டையைச் சார்ந்தமெய்ஞ் ஞானிபா, லாற்று நற்பணி யன்பொடு செய்பவ, னேற்று மீரா றியன்ற தனுவினிற், போற்றும் வீடு பொருந்துவ துண்மையே. 46

ஓது சாதனை யுற்றவர் சேவடிச், சீத நீரொடு சேடமு மார்பவன், றீதி லெட்டாந் தனுவிற் றிகழ்தரு, மேதின் மெய்வீ டெய்து மினிதரோ. 47

ஒப்பி லாதுய ருண்மைநிட் டார்தமக், கப்பொ டன்னமு மர்ச்சித் துதவியே, தப்பி லேவலுந் தாஞ்செயும் புண்ணியர்க், கெய்ப்பின் முத்தி யெடுக்கும் பவத்தினே. 48

இந்நி லைத்திருப் பணியெலாஞ் செய்பவர்க் கிசைய, வந்நி லைப்பர குருவருள் சுரந்தினி தாக, வுன்னு தற்கரு மொருமொழியருளினு ளுதவித், தன்னி லைப்பர நிட்டையி லிருத்துவன் றயையால். 49

இப்படி நிட்டை தன்னிலே யிருந்து மியல்பொடுந் தன்னநு பவத்தை, யொப்பிலா வரசற் கமைச்சுரைப் பதுபோ லுயர்குரு பரற்குரைத் தளவின், மெய்ப்படி குரவன் பின்னிகழ் வதனை விளம் பிடக்கேட் டறிகுநரே, ஒப்பின் மாயோக ரலாதவர் கிரியா காண்டியென் றுரைத்திடப் படுமால். 50

உன்னரு ஞான நிட்டையை யடிக ளுரைத்திடக் கேட்டுள மகிழ்ந்தேன், பன்னருங் கிரியா யோகமென் றுரைக்கப் படுவதை யெனக்குநீ விரித்தே, நன்னய மாக வுரைத்திட வேண்டு மென்றுமை நாதனை வணங்க, விண்ணமு தொழுகும் மதியணி சடையோ னிறைவியைப் பார்த்தினி துரைப்பான். 51

பங்கமுற மனங்கொண்டு சுவாசந் தன்னைப் பந்தனஞ்செய் தருங்கற்பம் பலவ யின்றே, யங்கமதைத் தான்சுழற்றி யபானவழிதன்னு லயம்வாங்கி யவ்வழியா னதைமீள விடுத்து, மிங்கிவை பலவியற்ற லட்டமா யோக மென்பரிவை சிவயோக மியற்றுவோர்க் கிலையாற், றங்குசிவ யோகத்தா லாக்கமுட னழிவுந் தானிலாப் பரமசா யுச்சியந்தா மடைவார். 52

புத்திகொள் கிரியா யோகசா தனையைப் புரிந்திடு பவர்களிவ்வுலகி, லெத்தனை கால மிருப்பினு மீண்டு மிறப்பொடு பிறப்பி

ஊயடைவார், சத்திய மாக வறிதிநீ யிந்தத் தனிச்சிவ யோகசா தனையை, இத்தனை வயதிற் போதிப்ப தென்றே யிறையவ னுமை தனக் கிசைத்தான். 53

இந்தநன் னிட்டை யேழுநான் காண்டி லியம்புத லுத்தம மாகு, முந்திய வையா றுண்டினி லாசான் மொழிகுதல் மத்திம மாகு, மந்தமி லாறு றுண்டினிற் புகற லறைதரு கனிட்டம தாமா, லுந்துமிப் பருவங் கடந்தவர்க் கதனை யுரைத்திடத் தகா தென வுணரே. 54

ஞான நிட்டையை நல்குநற் றேசிகன், மான முற்றிடு மானி ட னல்லனுல், வான முற்று வளர்கயி லைப்பரன், றுனெ னத்தின ஞ்சாற்றிட லாகுமால். 55

---

## வள்ளலார் சாத்திரம்.

---

### சத்தியஞானபோதம் - பதியியல்.

நீரிடை யுப்பும் பாரிடை யப்புந், தாயிடைச் சூலுந் தனி ரிடைத் துவளுந், தீயிடை வெம்மையுஞ் செறிந்தாங் கன்ன, வ றிவிடை யீச னமர்ந்தாங் குறலே. 1

அத்துவி தம்பெற வாங்காங் கிருப்பினு, மாருயி ரறிவா லறிதரப் படாஅ, வூனக் கண்ணுக் கொளியா தொளித்து, ஞான க்கண்ணின் வெளிப்படு நாதன். 2

ஐயெரி நாப்ப ணைந்தவித் திருப்பினு, மிருகா லடக்கியொ ருகா னிற்பினுஞ், சேயிழை மாதரைத் தீரத் தணப்பினு, முடை யைத் துறக்கினு முணவை மறப்பினு,மம்மர் செய்மாயை மழுங் கா தம்ம, குருபர னேக்கிற் குழையு மன்றே. 3

மாரியை நோக்கும் வனப்புட் போலும், பாரியை நோக்கும் பாவலர் போலும், கொழுநனை நோக்குங் குலமகள் போலுந், தேசியை நோக்குஞ் சீடன் றெரிவே. 4

### பசுவியல்.

விந்து மோகினி மானென விரிந்த, தத்துவக் காட்டிற் றனி த்திடு முயிரை, யாணவ வேங்கை யொருபா லடர்ப்ப, மாயைக்

குடாவடி யொருபான் மயக்கக், காமியக் கடமா வொருபாற் கறுவ, விருவினை மலைப்பாம் பொருபா லிழுக்க, வாசையா மண்ணை யொருபா லறையக், குலமெனு ஞமலி யொருசார் குரைப்பக், கல்விக் கானியா றொருசார் கவரச்,சமயச்சூறையொருசார் தாக்க, வவாவெனும் படுதீ யறிவைக் கொளுவ, மாயாவாத வனசரர் வெருட்ட, வின்னணா மாவி யிடருருங் காலை,யுயிரிடை யொளிபுக் கிருந்த வொருவரத், தாயினுஞ் சாலத்தயாநிதி யிரங்கிக், கட்கடை வாளாற் காடற மாற்றனு, முட்கின யாவு முயிர் பிழைதன்றே. 5

பாசவியல்.

கதிரிடைக்கலந்த கண்ணொளி யொப்ப, வைவகை யவத்தையான்மா நீங்கிச், சிவத்தொடுங் கலந்த தேற்ற மென்ப, நோக்கா நோக்க நோக்கு மன்றே. 6

சடத்திர ணீப்பத் தனித்திடு மான்மாச், சோகம் பாவனை தொக்கிய பின்றைக், கருடனை நினைப்பான் கடுக்கழன் றன்ன, வுபாதி நீங்கி யுணர்வா யினவே. 7

அறிவறி யாமை யகலா தகன்ற, வறிவே சிவமெனு மாகம முடிவே. 8

உபதேசவியல்.

ஐம்புல னறிதலி னவத்தைப் படுதலி, னுணராக் கால முடற்சவ மாதலி, னருத்தா பத்தியி னுளுள னான்மா. 9

பிறத்தலு மிறத்தலு பெருகலுஞ் சுருங்கலும், போதலும் வருதலும் புணர்வு நீக்கமு, மன்ன மயத்துக் கடுத்தன வாதலி, னன்னமய கோச மான்மா வன்றே. 10

சிவனீ யானு யென்னுந் திகழ்வுஞ்,சிவனு னேனென்னுந் திறமுஞ், சிவனே யாவினு முளனெனுந் திருவுஞ், சிவனே காட்டித் தெளித்தன னெனக்கே. 11

அறிவா காரனு னெனவறிந் துணர்தல், செறிபரப் பிரமம் யானெனத் தேற, லறைசிவ னருளி லடங்கா தடங்க, லுருவ தெரிசனஞ் சத்தியு முயிர்க்கே. 12

அஞ்செழுத் துண்மை யறையுங் காலே, சிவாய நமவெனுந் திருவாக் கியத்திற், சிவமரு ளான்மா திரோதை மலமிவை, பாங்

தளை நலியாப் பருவிடம் போன்றச், சிவன்றனை மறையாச் சீவனை மறைக்கு, மதோமுக மாகி லறிவை மயக்கு, மூர்த்த முகத்தி லுருவழிந் தனவே. 13

அணைந்தோரியல் - முதற்காண்டம்.

பூரண போதப் பொருடா னாகலி, னாரண மாகம மவர்க் கென் செயவே. 14

நினைப்பு மறப்பு நீத்தமை யாலே, யனைத்துங் கண்டுங் கண் டில ரன்றே. 15

சிதம்பர மாதலிற் சேர்விட மில்லை, யவனிவ னாதலி னணு கனு மில்லை, யறிவுரு வாதலி னைக்கையு மின்றே. 16

ஒன்றே யாதலி னுணர்பவ னின்று, நானது வாதலின் ஞா னமு மின்றே. 17

சத்தஞ் சோதிடந் தருக்கங் காவியங், கொக்குவம் பரதங் கோதெனத் தள்ளாப், பித்தர்க் கிந்நூல் பேசிற் பிழையே. 18

நுனுதிக மின்றி நுண்ணுணர் வாகி, யனுதி முத்த னருளிய வாகமந், தந்திர கலையெனச் சாற்றனு மாமே. 19

மனுதிக ளொடுக்கி மறைமுடி வுணர்ந்து, வழிபடன் மந்திர கலையென மதியே. 20

அறியா வறிவ னருளிற் கலந்தாங், காதவ னொளிபுக் கழுந் திய கண்ணுப், மும்மைப் பாழு முறைமுறை கடவா, வபரவப் பாழி னடங்கா தடங்க, வுபதே சக்கலை யிஃதென வுணரே. 21

கேவல ஞானக் கிழவ னுளுடைப், பிள்ளைநா வரசு பேரா ரூர, னரதன வாக்கிய னருந்தமிழ் மூலன், சீவன் முத்தர் திரு வாய் மலர்ந்த, நூல்பவ நோய்க்கு நுண்ணிய மருந்தே. 22

இரண்டாங் காண்டம்.

உடலெனும் பெண்ணை யுயிரெனு நாயக, னெந்நாள் விடுவ னெவ்வழி யானே, விடுவ தில்லை விதியுள் ளளவும், விதிவச மின் றேல் வெறுப் புற்றிடுமே, வெறுப்பும் விதியின் மேம்பா டாமே, யறிநூ லிடத்து மற்றவ ரிடத்து, மாக்கை வெறுப்பு மகங்கர வானியு, முறுமெனக் கண்டாங் கொழிந்திடு மாறு. 23

நீரிடை யிருப்ப னிலத்திடை யிருப்பன், காற்றிடை யிருப்பன் கனலிடை யிருப்பன், விண்ணிடை யிருப்பன் வெயிலிடை யிருப்பன், மதியிடை யிருப்பன் மனத்திடை யிருப்பன், றதியிடை நெய்போற் சங்கரன் றானே. 24

உருவோ வருவோ வுபயப் பெருக்கோ, காணும் பொருளோ காணாப் பொருளோ, கரியோ செய்யோ கைகா லுண்டோ, வுண்பது முறக்கமு முடையு முண்டோ, கண்டவ ருண்டோ கழறுமி னீரே. 25

அதிதிதன் மைந்த ரலமரு காலைப், பிரமகீ தையைப் பேசின னெவனோ, சிதாகா யத்திற் றிருவுருத் தாங்கி, மறலியை முனிந்த வரத னெவனோ, வரன்முறை யுலகம் வயின்வயி னுதிக்க, நான்முகத் திருந்து நான்மறை யுரைத்தன், றுபனி டத்தி லொளித்தவ னெவனோ, வவனே பிரம மென்றறி மன்னே. 26

மூலமென் றழைத்த முனைக்கொம் பியானை, வருத்தந் தீர்ப்பான் வந்தவனெவனோ, தூணிலு மிருப்பன் றுரும்பிலு மிருப்பன், எனுமழ சொல்லுக்கெதிர்ந்தவ னெவனோ, துகிலுரி காலைத் துருவதன் மகட்கு, மாளாத் துகிலை வருத்தின னெவனோ, வருச்சுனற் காக வமரிடை யிருந்தாங், குணர்மெய்ஞ் ஞான முரைத்தவ னெவனோ, வவனே பிரம மென்றறி மன்னே. 27

கல்லா லின்கீழ்க் கடவு ளாகிப், பொல்லா ஞானம் புரிந்தவ னெவனோ, மால்வரை வில்லாய் வலியவர் புரங்க, ணீரெழ வொருக்கி நின்ற மூவரைச், சேவடி நிழலிற் சேர்த்தவ னெவனோ, காலனை மாட்டிக் கவின்சிறு பாலன், மரணந் தவிர்ப்பான் வந்தவ னெவனோ, வவனே பிரம மென்றறி மன்னே. 28

ஊனோ பிரம முயிரோ பிரமம், வானோ பிரம மறையோ பிரம, நானோ பிரம நாடுங் காலே. 29

வடிவோ பிரம மதியோ பிரம, மொலியோ பிரம முணர்வோ பிரம, மறிவோ பிரம மாயுங் காலே. 30

ஒருமல வழக்கு மிருவினைத் தொடரு, மும்மலச் செருக்கு நால்வகை வாக்கு, மைவகைப் பொறியு மறுவகைக் குற்றமு, மற்று லன்றி யறிவா காயே. 31

வானோ வளியோ மறுகனல் புனலோ, மண்ணோ மதியோ வளரென் றாமோ, யானோ பரம்பொரு ளெட்டும் பிரிவே, தானே யதுவே யதுதா னென்ப, மானு ததுவும் வழக்கச் சொல்லே, நானே யதுவென நாடலு மாமே. 32

## பதிபசுபாச விளக்கம்.

அறுவித சமயத் தோர்க்கு மறுமுக சாமி யாகிச்
செறிபரப் பிரமம யானே யென்றுசின் மயிலி லேறிக்
குறுமுனிக் கருளிச் சீவக் குகைதொறும் வீற்றி ருந்த
மறுவிலாக் குகனைப் போற்றி மாய்த்தனென் பிறவி யெல்லாம்.

பாசமைந்தையுந் தனித்தனிப் பரிந்திட நீக்கி
நேசமாகிய வறிவுரு நீயெனக் காட்டிப்
பேசுமேழ்வகைப் பிறப்புனக் கிலையெனப் பேசித்
தூசுநீக்கிய சுயம்பிர காசனைத் தொழுவாம். 34

உலக நெருப்பைக் கடந்தொழியா ஞான வுததி மடுப்பேனோ
விலகு குடும்பத் துயர்நீங்கி யெந்நாட் டுறவி யாவேனோ [னோ
திலக மறையின் பொருளிதெனத் தேற்றுங் குரவன் காண்பே
கலக வுடலப் பிணிதணந்து கடவு ளனையர்ன் காண்பேனோ.

மருவிய வுடல் வெறுப்பும் வையக வெறுப்பும் வந்தா
லிருவினை யொப்பு மங்க ணெய்திடு மெய்துங் காலைக்
கருமல பாக முண்டாம் பாகத்தாற் கடிதிற் சேருந்
திருவருட் சத்தி பாதஞ் செறிந்திடுங் குருவு மன்றே. 36

முத்தரை: பகைவ ரென்று மூர்க்கரை யுறவ ரென்றும்
பெத்தனு யனேக காலம் பிறந்திறந் தெய்த்திட் டேற்குப்
பத்தியான் ஞானங் காட்டி ஞானத்தாற் பரனைக் காட்டும்
சத்திய ஞானு னந்த சற்குரு நாதா போற்றி. 37

பொச்சையா முடலங் காட்டிப் பொறிபுலன் கரணங் காட்டி
யிச்சையா ருயிருங் காட்டி யெழிற்றிரு வருளுங் காட்டி
யச்சமி னிலையங் காட்டி யகம்புறந் தானுய்க் காட்டி
சச்சிதா னந்தங் காட்டு சற்குரு நாதா போற்றி. 38

## குருபதேசம்.

அஞ்செ ழுத்தினி லொருபுடை யரும்பதி யமரும்
வஞ்ச முற்றுள வொருபுடை பாசமாய் வதியுந்

துஞ்ச லின்றிய வொருபுடை பசிவெனத் துலங்கு
மஞ்செ ழுத்தினின் மும்முத லறிந்தவர் பிறவார். 39

பானுவா மிறை யெழுத்து வதனொளி பரை யெழுத்து
வூனமில் கண்ணே யாகு முயிரெனுந் தனி யெழுத்துத்
தீனமில் விளக்கே யாகுஞ் செப்பிய திரை யெழுத்து
நானெனு மிருளே யாகு நவையுறு மல வெழுத்தே. 40

நகரமாகிய சேரியை நஞ்சென வெறுத்து
மகரமாகிய மயலெலாம் வேரொடுங் களைந்து
வகரமாகிய வனத்தினி லிருந்திளைப் பாறிச்
சிகரமாகிய நகரியை யடைந்தனன் சீவன். 41

பாச மாகிய விரண்டையும் படிறெனத் தள்ளி
நேச மாகிய விரண்டையு நெஞ்சிடை யழுத்திக்
காச நீங்கிய கண்ணென முத்தியைக் காண்பா
யாசை நீங்கிய நிலையிது விதற்கிலை யையம். 42

தசகாரியம்.

தத்துவா தீதந் தன்னிற் சகசவா ணவமலந்தா
னுற்றிடு மிதற்குச்சாக்கி நானென வுயிர்க்குருபஞ்
சித்துரு நானேயென்று தேறலே தெரிசனந்தான்
முற்றுண ரீசன்முன்னர் முகிழ்த்திடா தடங்கல்சுத்தி. 43

நின்மலசொப்பனம்.

ஐம்பொறியா லைம்புலன்க ளாரத்தான் புசித்தானு மறிவான் மிக்கோ, ரும்பர்பிரான் றிருவடிக்கீ ழுள்ளத்தை வைத்தங்கே யுறங்கா நிற்பர், நம்பனைநீத் தொருசோர நாயகனை விருப்புற்ற நாரிவேண்டு, மன்பவன்றன் பாற்கிடக்கு மாக்கையிவன் பாற்கிடக்கு மதுபோலன்றே. 44

காண்பதுங் கேட்பதுங் கருத்துஞ் சொப்பனம்
பூண்பதும் புனைவதும் புசிப்புஞ் சொப்பனஞ்
சேண்படு நாகமுஞ் செகமுஞ் சொப்பனம்
வீண்படு மிவைக்கெலாம் விசுத்த ஞானரோ, 45

நின்மல சுழுத்தி.

குடும்ப பாரமு ஞானமுங் கொண்டவ னின்பு
மடங்க நீத்துய ரறிவினை யடைந்தவ னின்பு
நடந்து றங்குவோ னின்பமு நாண்மலர்ப் பாயல்
கிடந்து றங்குவோ னின்பமு மானுமே கிளக்கில். 46

நின்மல துரியம்.

மண்ணொடு மண்ணார் போனார் வளியொடு வளியார் போனார்
தண்ணொடு தண்ணார் போனார் தழலொடு தழலார் போனார்
விண்ணொடு விண்ணார் போனார் விளங்கறி வுருவாய் நின்ற
நுண்ணிய நானே யெங்கு நுழைந்திடா திருக்கின் றேனே. 47

நின்மல துரியாதீதம்.

போக்கிலை வரவிலை புணரக் கையிலை
தாக்கிலை யேக்கிலை சரிக்கக் காலிலை
மோக்குற மூக்கிலை முகிழ்க்கக் கண்ணிலை
வாக்கிலை மனமிலை யதீத வாழ்விலே. 48

இத்துரி யாதீ தத்தி லிமைக்கொட்டு மளவா னாலும்
முற்றகண் ணடி தன்னி லுளுந்துருள் பொழுதா னாலுங்
கைத்தலத் தாலா வின்பால் கறக்குறுங் காலமேனு
சித்துரு வாகி நிற்போர் சின்மய வீடு காண்பார். 49

பதி விளக்கம்.

நிராமயமாய் நிட்களமாய் நித்தியமாய் நின்மலமாய்
புராதனமா யசஞ்சலமாய்ப் பூரணமாய்ப் புனிதமாய்ச்
சராசரமாய்ச் சாக்கியாய் சத்தியமாய்ச் சித்துருவாய்
பராபரமாய் வெறுவெளியா யிருக்குமந்தப் பரமசிவம். 50

சொல்லாலு மனனாலுந் தொடராத சூக்குமமாய்ப்
பல்லான்ற கேள்வியரு மீதென்று பகர்வரிதா
யொல்லாத பரஞ்சுடரா யுயிர்க்குயிரா யுண்மையா
யெல்லாமா யல்லவுமா யிருக்குமந்தப் பரமசிவம். 51

ஒன்றாயும் பலவாயு முருவாயு மருவாயுங்
குன்றாயு மணுவாயுங் குணமாயுங் குணியாயு

நன்றாயுந் தீதாயு நானாயுந் தானாயு
மின்றாயு முளதாயு மிருக்குமந்தப் பரமசிவம். 52

சிவனறிந் தருளுவன் சீவ ராசியைச்
சிவன்றனை யறிந்திடாச் சீவ ராசிகள்
சிவனிலா விடமிலை செடசித் தெங்கணுஞ்
சிவனிலா விடிலுயிர் செகமற் றில்லையே. 53

அவனவ ளதுவெனு மகில பாசமே
யவனவ ளதுவென வறைப வன்பசு
வவனவ ளதுவினை யாக்கு வான்பதி
யவனவ ளதுவறி லறிவைக் காணலாம். 54

அவனசைந் திடிலொரு வணு வசைந்திடு
மவனசை யாவிடி லணு வசைந்திடா
சிவன்சத்தி யோடுறிற் செகம் விரிந்திடுஞ்
சிவன்றனித் திடில்விரி செக மொடுங்குமால். 55

சாக்கிர சொப்ப னங்க ளிரண்டையுந் தாண்டிப் போனாற்
சூக்கமாஞ் சுழுத்தி வந்து தொல்லிரு ளாகி மூடு
மாக்கமு மழிவு மில்லா வறிவினு லதுவும் போனாற்
போக்கொடு வரவு மில்லாப் பூரணப் பொருள்வந் தெய்தும். 56

காணுறு புலன்கள் போகிற் கரிசுறு மனம்போம் போனு
லாணவம் போகும் போனு லாருயிர்ப் போதம் போகுஞ்
சேணுறு மொளிக்கு மேலாஞ் சிவப்பிர காசந் தோன்றும்
மாணனே யிதுவே முத்தி நிலையென மதித்தி டாயே. 57

மாசறப் படித்தா னேனு மயலறத் தெளிந்தா னேனு
மாசறத் துறந்தா னேனு மஞ்செழுத் துணர்ந்தா னேனு
மீசன்வே றியான்வே றென்னு மிருமையுங் கழலா னாகிற்
பாசமுங் கழல்வ தின்றாம் பதித்துவந் தானு மின்றே. 58

பசு விளக்கம்.

பாசத்தாற் பசுவெனப் பகரப் பட்டன
பாசந்தா னிரிதரப் பதியெனப் படுங்
காசத்தாற் குருடெனக் கழறப் பட்டன
காசந்தா னிரிதரக் கண்ணெ னப்படும். 59

எஞ்ஞான்று குடும்ப பார மேகுமென் றிரங்க வேண்டா
மஞ்ஞான மெம்மட் டுண்டோ வம்மட்டுங் குடும்ப பாரம்
மெய்ஞ்ஞான முண்டேன் முத்தி மேவுதற் கைய மில்லை
சுஞ்ஞானத் தாலஞ் ஞானஞ் சுருங்குமங் நிலையே முத்தி. 60

சீவனு மிந்த வான்மா வியற்கையைத் தெரிக்குங் காலைக்
கேவலன் சுத்தன் சாந்தன் சூக்குமன் கிளர் சனதன்
பாவமில் சர்வா னந்தன் பகருஞ் சர்வ சாக்கி
மேவுசின் மாத்தி ரத்தன் மிகுசுக சொரூப னுமால். 61

ஆகையா லனு முயற்சியி னுலு மவிழ்ந்தபே ராதரவா லுங், கோகன கத்தா டருகுர வன்பாற் குறைவறு பத்தியினு லும், மோகமே விளைக்கும் பிரகிருதி யின்றன் பாவனை முழுதை யுந் தணந்திட், டேகமாஞ் சிவனே நானெனச் சிந்தித் திடரொ ழிந் திருந்திடத் தகுமால். 62

யாவ னொருவன் றன்னிடத்தி லிருக்குஞ் சிவனை விட்டயலே
மேவி யிருக்குஞ் சிவனைநனி பூசிப் பவன்றன் வியன்கையிற்
பாவி யிருக்கும் பாயசத்தை விட்டுக் கூன்கை பரந்தோடித்
தூவுந் துளியை நாநுனியாற் றுய்க்கு மவனே சொல்லுங்கால்.

சகலபூ தங்க டோறுஞ் சாக்கியாய் விசுத்த தேசாய்த்
தகுஞான தேகி யாகித் தங்கிய பரமான் மாவை
யகமுக மாக வுள்ளும் புறம்பு மொன்று யறிந்து
பகவற யாவன் பார்ப்பா னுங்கவன் முழுதும் பார்த்தான். 64

ஆணவ விலக்கணம்.

சரிதையி லாணவங் கால் சரிந்திடுங்
கிரியையி லவைமலங் கெடுதி யுற்றிடு
மருவுயோ கத்தின்முக் கான்ம டிந்திடும்
விரிசிவ ஞானத்தின் முற்றும் வீயுமே. 65

காமத்தா லிந்திரன் கலக்க மெய்தினன்
காமத்தா லிராவணன் கருத்த ழிந்தனன்
காமத்தாற் கீசகன் கவலை யுற்றனன்
காமத்தா லிறந்தவர் கணக்கி லார்களே. 66

கோபத்தாற் கௌசிகன் றவத்தைக் கொட்டினுன்
கோபத்தா னகுடனுங் கோல மாற்றினுன்
கோபத்தா லிந்திரன் குலிசம் போக்கினுன்
கோபத்தா லிரந்தவர் கோடி கோடியே. 67

கோபமே பிறவியைக் கொடுக்குங் கொள்கையாங்
கோபமே யறிவினைக் குறைக்குங் குட்டநோய்
கோபமே தாயையுங் கொல்லுந் திண்படை
கோபமே தவத்தினைக் குலைக்கும் பேயரோ. 68

ஆசையாற் சந்திர னங்கந் தேய்ந்தனன்
ஆசையாற் சவுபரி யறிவை நீங்கினுன்
ஆசையா னராசுர னுவி போக்கினுன்
ஆசையால் வாலியு மழிந்து போயினுன். 69

ஆசையா லிந்த மாயை யறிவினை முழுது மூடித்
தேகமே யான்மா வென்றுஞ் சேயிழை மடவார் தங்கள்
போகமே மோக்க மென்றும் புந்தியைத் திரிவு பண்ணுஞ்
சோகம்பா வனையா லித்தை தொலைப்பர்கள் சீவன் முத்தர். 70

கன்ம விலக்கணம்.

வினையினுல் விகார முண்டாம் விகாரத்தால் விருப்புண் டாகு
முனலுறும் விருப்ப நாலு விதவுல கங்க ளுண்டா
நனியுல கத்தான் மெல்ல நானெனு மகமுண் டாகும்
துனியுடை யகங்கா ரத்தா றுஞ்சலும் பிறப்பு முண்டாம். 71

ஊழ்வினை யாலு டம்பு முடம்பினு லூழு மாகித்
தாழ்வினை யிரண்டாய் மூன்றுய் சதுர்வித மாகி யோங்கி
வாழ்வொடு வறுமை யாகி மன்னுயிர் தொறும் வதிந்து
காழ்மரம் விதையும் போலாங் கன்மமீ கண்டு கொள்ளே. 72

சஞ்சிதந் திருநோக் காற்போம் பிராரத்தந் தனுவோ டேகும்
விஞ்சுமா காமி யந்தான் விளங்கு ஞானத்தி னுற்போஞ்
செஞ்சயான் செய்த தெல்லாஞ் சிவன்செய்த தென்றுணர்ந்தால்
மஞ்சனே வினைத் திறங்கள் வந்துனைச் சந்தி யாவே. 73

ஞானதீக்கை யிலக்கணம்

பூசையால் விரதந் தன்னுற் புண்ணிய தீர்த்தந் தன்னு
லாசறு தருமந் தன்னு லளவறு வேள்வி தன்னுற்

பாசபந் தங்கள் பொன்று பாரிடை நம்போல் வந்த
தேசிக னருளு ஞான தீக்கையாற் பொன்று மன்றே. 74

ஆசாரிய னிலக்கணம்.

மண்ணலை நீரலை வளி நெருப்பலை
விண்ணலை மதியலை விரிந்த பானலை
பெண்ணலை யாணலை பேடு மல்லையா
லண்ணலே நீயென வறைபவன் குரு. 75

யானென தெனுஞ் செருக்கை யிரித்தொளி யாயெறிக்கு
ஞானதே சிகற்குத் தன்னை நதிர்கொடுத் திறைஞ்சாநின்ற
வானமா ணுக்கற் கிந்த வனுபவ மறையலாகு
மேனையோர்க் குரைப்பினன்னோ னிருள்புரை நிரையத்தெய்தும்.

சீட னிலக்கணம்.

பூதகா ரியங்க ளெல்லாம் பொய்ம்மை மெய்ப் பூதநாத
ஞதலால் புவனத் தாசை யந்தரத் தாசை யற்ப
மோதறு வகைச் சம்பத்து முயர்முத்தி விருப்பு மிந்தச்
சாதன நான்குந் தானே சீடற்குச் சடல மென்ப. 77

கடப்பருங் கடல் கடத்துங் கருணையா ரியன் முனிந்தே
யடித்துதைத் தருவ ருத்திட் டக்கிர மஞ்செய் தாலு
முடற்பிணி யகற்ற வல்ல வுத்தம னிவனே யென்று
திடப்படு சிரத்தை யுள்ளோன் சீடனென் றுரைக்கும் வேதம்.

மன்னர்முன் காலன் முன்னு மகிழ்ச்சியைப் பிரிக்க வந்த
தன்னிகர் நோயின் முன்னுந் தானடங் கிடுவார் போல
மின்னமர் கயிலை நீத்து மெய்யுடை யார்போல் வந்த
கொன்னமர் குரவன் முன்ன ரடங்குவான் குலமா ணுக்கன். 79

நானூர் கொல்லோ வென்றனக்கு நாதனூர் கொல்லோ வெனக்கிங்
கானுப் பிறப்பு மிறப்புமிவ ணடைந்த தென்கொ லோவென்று
தானே தனக்கிவ் விசாரங்க டலைப்பட் டிடலுந் தேசிகனைத்
தேனு ரளிபோற் றேயமெலாந் தேடு மவனே சற்சீடன். 80

ஞானகுரு மான்மியம்.

எங்நா ளிருப்பினு மிறப்பது நிச்சயம்
பொன்னாட்டி லிந்திர னாயினும் பொன்றுவ

னன்னாட் கழியுமுன் ஞானத்தி னாலே
தன்னை லறிவது சற்குரு பாதமே. 81

சித்தஞ் சிவத்தோ டொருக்கிச் சிவமான
முத்தன் சிவமென மொழிந்திடு மாகமஞ்
சத்தியஞ் சீவன் சங்கர னென்றெ
குற்றமி லுன்மறை கூறும் வகுத்தே. 82

கோல்லா விரதம்.

ஆருயிர்க் கொலாத மேலோ ரறிவினை யறிந்த நல்லோர்
தீமன மொடுக்க வல்லோ ரிவர்களே தேவ ராவர்
காமராய்க் கற்ப ழித்தோர் களவுசெய் துடல் வளர்த்தோர்
மாமிசந் தின்போ ரெல்லா மானிடப் புலைய ராவார். 83

அரியவாக் கையின் மானிட வாக்கையே யாக்கை
விரியு நோன்பினி லுயிர்க்கொலா விரதமே விரதங்
கருதிற் றெய்வதங் கண்ணுதற் றெய்வமே தெய்வந்
தெரியிற் றேவிகா லோத்தர தேற்றமே தேற்றம். 84

அம்மா வெனவலற வாருயிரைக் கொன்றருந்தி
யிம்மா னிடரெல்லா மின்புற் றிருக்கின்றா
ரம்மா வெனுஞ்சத்தங் கேட்டகன்ற மாதவர்க்கும்
பொய்ம்மா நிரையமென்றாற் புசித்தவர்க்கென் சொல்லுவதே.

கங்கையிற் படிந்திட் டாலுங் கடவுளைப் பூசித் தாலு
மங்குல்போற் கோடி தன்மம் வள்ளலாய் வழங்கி னாலுஞ்
சங்கையில் லாத ஞான தத்துவ முணர்ந்திட் டாலும்
பொங்குறு புலால் புசிப்போன் போய்நர கடைவ னன்றே. 8[illegible]

கொலையிலா னுதவு மன்னங் கூறிற்பே ரமுத மாகுங்
கொலையுளா னுதவு மன்னங் கூறிற்பேர் விடம தாகும்
புலையர்தம் மனையி லுண்போன் புலையனா மாறு போலக்
கொலைஞர்தம் மனையி லுண்போன் கொலைஞனே யாவ னன்றே

கலையெலா முணர்ந்தா னேனுங் கரிசறத் தெளிந்தா னேனு
மலையென வுயர்ந்தா னேனு மனமய லகன்றா னேனு
முலகெலாம் புகழப் பல்லோர்க் குதவிய கைய னேனு
மிலகிய விரக்க மின்றே லெழுநர கடைவ னன்றே. 8[illegible]

இத்திற னருள்கைப் பற்றி யுயிர்க்கெலா மிதத்தைச் செய்க
சத்திய விரக்க மின்றேன் முத்தியைச் சாரா ரூரும்
பத்தியால் யோகஞ் சாரும் யோகத்தாற் பரம ஞானஞ்
சித்தியா மிதற்கா தாரஞ் சீவகா ருணிய மன்றே. 89

ஆக்கை யருமை.

மக்க ளாக்கையிற் பிறத்தலே யரிதுமற் றதிலுந்
துக்க கூன்குரு டூமையைத் துறத்தலு மரிது
நற்கு லத்திடை வருதலு மரிதுஞா னத்தான்
மூக்க ணீசனுக் காட்படல் முற்றிலு மறிதே. 90

உடம்பெலா நீங்கிநல் லுடம்பு பெற்றவ
ருடம்பினு லுறுபய னென்று மோர்கிலா
ருடம்பினு லுறுபய னுவதே தெனி
லுடம்புயி ருணர்வையு மோர லாகுமே. 91

அரிது மானிட யாக்கையிற் பிறத்தன் மற்றதினு
மரிது வேதநூல் சைவநூ லாலகந் தெளித
லரிதவ் விசனே நாமென வறிவு மேலிடுத
லரிது வாய்ப்பறை யறைந்திடா ததினடங் கிடலே. 92

சரிதை கிரியாயோக விலக்கணம்.

எங்கணு நிறைந்து நின்ற வீசனே டொன்ற லாலே
சங்கர னுமே யென்னச் சமாதி யோகம் புரிந்து
துங்கவெண் மதிபோ லுள்ளந் துலங்கிடச் சுவானு பூதி
யங்குதித் திடவா னந்த மடைவதே யமல யோகம். 93

ஒருகண மிருப்பன் றெய்வ வுருவினி லீசன் றுன்மற்
றிருகணஞ் செங்கோ லோச்சு மிறையவர் பாலிருப்ப
னருமறை யவர்கு ழாத்து ளம்புவீ ழளவி ருப்பன்
துரிய யோகிக ளுளத்திற் றாங்குவ னிருந்தெப் போதும். 94

ஞானநிட்டை யிலக்கணம்.

சராசரப் பொருள்க டோறுந் தங்கிநின் றவற்றின் றன்மை
விராவுத லின்றி யொன்றாய் விமலமாய் விண்ணி னெய்தாய்ப்
பராபர வெளியாய் நீங்காப் பாச சாலங் கடந்த
நிராமய சிவந்தா னுகி நிற்பது ஞான நிட்டை. 95

மத்திம வுடரு ளுகா வளர்கர ணந்தா ளுகா
மொய்த்தவிந் தியந்தா ளுகா மூலவா யுவந்தா ளுகா
சித்திர தீபம் போலச் சீவ பாவங் கழன்று
நித்திய சிவந்தா ளுகி நிற்பது ஞான நிட்டை. 96

மக்களு மனையு நீத்து மாதரா ராசை நீத்துச்
சொர்க்கமே லாசை நீத்துச் சுத்தனைப் பற்ளுென் றின்றிக்
கற்கவேண் டியது நீத்துக் கருதிரு வினையு நீத்து
நிர்க்குண சிவந் தானுகி நிற்பது ஞான நிட்டை. 97

சிந்தனை புறஞ்செலாச் சிவோகம் பாவனை
சந்தத முளுற்றிடிற் சாமதி வந்துறு
மந்தநற் சமாதியா லறிவு மேவிடு
மிந்தநன் னிலையிலே யிருக்கற் பாலையே. 98

பாவனு தீதந் தன்னி ளுடொறும் பதிந்து நிற்பாய்
பாவனு தீதந் தன்னி னெஞ்சகம் பதியா தாயின்
பாவனை தனிலே நெஞ்சைப் பழக்கிடு பழுத்த காலை
பாவனு தீதம் வந்து பதிந்திடும் பான்மை யோடே. 99

ஐம்புலனுல்வரு மிலக்கணம்.

சத்தத்தா லசுண மாயும் பரிசத்தாற் றந்தி மாயும்
வெற்றிசே ருருவத் தாலே விட்டிலம் பறவை மாயும்
பற்றியா ரிரதத் தாலே பாணிமீ னங்கண் மாயும்
மொய்த்தகந் தத்தி ளுலே மூசுவண் டினங்கண் மாயும்.

ஓதியவசுண மாதி யொன்றென்று லழியா நிற்குங்
காதினுற் றெக்கான் மூக்காற் கண்ணினு ளுவா லிந்தச்
சாதிமா னிடர்க ளெல்லா மஞ்சினுற் சாகா நிற்பர்
போதமே விட்ட காலம் புலன்வழிப் போகா ரன்றே. 101

ஐம்புலன் வென்ற வறிஞரிலக்கணம்.

ஐம்புல னடக்கலானு மறிவினை யறிதலானு
மின்பதுன் பங்களெல்லா மியல்பென வொறுத்தலானுஞ்
செம்பொரு ளறைதலானுஞ் சிவோகம்பா வித்தலானும்
நம்பனை யகத்துணர்ந்த ஞானியென் றறியலாமே. 102

வேதநூ லுணர்தலாலும் விதிவழி யொழுகலாலுஞ்
சூதகந் துறத்தலாலுஞ் சுகமய மாதலாலும்
பேதமற் றிருக்கையாலும் பெரியவர் கூட்டத்தாலும்
நாதனை யகத்துணர்ந்த ஞானியென் றறியலாமே. 103

சந்நியாசி யிலக்கணம்.

ஆக்கைக்குஞ் சாக்கிமேனே யனைத்திற்குஞ் சாக்கிமேனே
போக்கொடு வரவுமில்லை புண்ணிய பாவமில்லை
வாக்கொடு மனமுமில்லை மந்திரந் தியானமில்லை
சாக்கிமாத் திரமேயென்று தெளிந்தவன் சந்நியாசி. 104

அறிவி லறிவா யகண் டிதமா யனந்தா னந்த மயமாகிச், செறியும் பரம சிவந் தன்னைத் தன்னுட் கண்டு தியானித்துக், கறவை யருந்தப் பால் சுரக்கும் கால மேனும் கடைப்பிடிப் போர், பிறவிக் கடலைக் கடந் தோர்க ளவரே யுலகிற் பெரி யோரே. 105

மண்போற் பொறுமை யுடையோரு மதிபோற் சாந்த முடையோரும், புண்போ லுடலைப் புனைந்தோரும் புனல்போ லொழுக்கம் பூண்டோருங், கண்போ லிரக்க முற்றோருங் கனல் போற் புசிக்குங் கதியோரும், விண்போ லறிவை யறிந்தோரும் பிறவா ரிந்த மேதினிக்கே. 106

அதிவன்னாச்சிரமி யிலக்கணம்.

ஊன்றுமூன் றவத்தைக் கப்பா லுயர்முத்த னாகி யந்த மூன்றவத் தைக்குஞ் சான்றாய் முதலொளி யாய்ப் பிறங்கித், தோன்றுமா தேவ தேவை யெவன்சும்மா வனுப விப்போ, னன் றவ னவனே மேலா மதிவன்னாச் சிரமி யாவான். 107

நிறைந்தமா கடற்போ லுயர்நெடு மறைமுடியிற்
சிறந்த போதமா வாக்கிய சிரவணத் தாலே
யிறந்த சிந்தையி னாற்றனை யீச்சுர னாக
வறிந்த வன்சொலு மதிவன்னாச் சிரமி யாவான். 108

வருணமாச் சிரம மாகி மலினதே கத்தின் கண்ணே
கருமலி மாயை தன்னாற் கற்பிக்கப் பட்ட தெல்லாம்
பொருவரு போத னாமெற் கெப்போது மில்லை யென்றே
யருமறை யானு ணர்ந்தோ னதிவன்னாச் சிரமி யாவான். 109

சொன்னத்திற் கடக மாதி சூழணி தோன்று மாபோ
லென்னிடத் தகில மெல்லாங் கற்பிக்கப் பட்ட தென்றே
பன்னுமா மறையந் தத்தாற் பகுத்தறிந் தனுப வித்திங்
கன்னிய மிலாமை கண்டோ னதிவன்னுச் சிரமி யாவான். 110

ஆதித்தன் சன்னி தானத் தகிலஞ்சேட் டிக்கு மாபோற்
போதத்தென் சனிதா னத்திற் புவனஞ்சேட் டிக்கு மென்றே
வேதத்தி னந்தத் தாலே மெய்ப்பட வறிந்து ணர்ந்தோ
னுதித்த னிவனே யென்ன வதிவன்னுச்சிரமி யாவான். 111

இப்பியிற் பிராந்தி யாலே யிரசிதந் தோன்று மாபோன்
மெய்ப்படு மென்னி லிந்த வியன்சக முதித்த தென்றே
யிப்படி யாவ னேனு மெழின்மறை முடிவி னாலே
யற்புத வறிவு ணர்ந்தோ னதிவன்னுச் சிரமி யாவான். 112

பறையர்தம் முடம்பின் கண்ணும் பசுவாதி யுடம்பின் கண்ணு
மறையவ ருடம்பின் கண்ணும் வானவ ருடம்பின் கண்ணு
நிறையுமா காயம் போல நிற்குமா தேவன் றானென்
றறிவினா லறிந் துணர்ந்தோ னதிவன்னுச் சிரமி யாவான். 113

பாம்பிதென் றுணர்ந்த போது பழுதையே யில்லை வெய்ய
பாம்பிதன் றெனவு ணர்ந்தாற் பழுதையே யானாற் போலச்
சோம்புறு குடும்பி யென்னிற் றகளூறு சீவ னாகுஞ்
சோம்புறாக் குடும்பி யென்னிற் றகளறு பிரம மாவான். 114

மகாவாக்கிய விலக்கணம்.

ஆதி திருநான் மறைமுடியி லறையுந் தத்துவ மசியென்றே
யோதி லதுநீ யானுயென் றுரைக்கு மும்மைப் பதமாகப் [பேன
போத முடையோ யிதன்பொருளை யெவ்வா றெடுத்துப் போதிப்
பேத மகன்ற வுள்ளத்தாற் காணும் பெரிய வாக்கியமே. 115

கன்னனுன் புளினு னென்றே கவலையுற் றழுங்குங் காலைக்
கன்னநீ கிராத னன்று கௌந்திபுத் திரனென் றுற்போ
லன்னிய வுடனு னென்றே யயர்ந்துள மழியேன் மைந்த
வன்னிய மென்று கண்ட வறிவுநீ யுணர்ந்து கொள்ளே. 116

ஒருவ னொருதே யத்திற் பிரம சரியா யுற்றான்
மருவி மற்றோர் நாட்டகத்தின் மகிழ் கிரகி யாயினன்

பரவி பின்னோர் மண்டலத்திற் பகர்துறவி யாய் நடித்தான்
விரவிய கோலம் போக்கின் வேறில்லை யவ னிவனே. 117

ஓடுமா நதிக டந்தோ ரொன்பது பேரை யெண்ணித்
தேடும்பத் தானைக் காணான் றிகைத்துநின் றலறு நிற்ப
நீடிய வொருவ னுலே நீபத்தா னென்ன லோடும்
வீடிய துயர மெல்லாம் வியப்பினை யடைந்தா னன்றே. 118

அன்னிய கருவி யெல்லா நாமல வென்ற றிந்தோன்
பின்னரக் கருவி யெல்லாம் பிரித்தவன் றனை மறப்ப
மன்னிய சேட நீயே யென்றுமா தவத்தின் வந்த
செந்நிலைக் குரவன் சொல்லாற் றெளிவது ஞான மாமே. 119

மச்சுக்கூப் பிட்டு தென்றே மதிப்பவ ருண்டோ வந்த
மச்சுளே யொருவ னன்றி மச்சுக்கூப் பிடுமோ பேதாய்
நச்சிய தேக சேட்டை யாவையு நாடிப் பார்க்கி
லச்சுளே நின்ற வான்மா வாலென வாய்ந்து கொள்ளே. 120

பொன்னை யன்றி பூணில்லை பூணை யன்றிப் பொன்னில்லை
யென்னை யன்றி சிவனில்லை சிவனை யன்றி யானில்லை
யின்ன வண்ண மறிந்தோனே யீசன் றனையு மறிந்தோனு
மின்ன வண்ண மறியாதா னீசன் றனையு மறியானே. 121

நிறையறி வாயி ருந்து நின்மலன் றன்னைத் தேடி
மறைமுத னூலா ராய்ந்தும் பின்னரு மயங்குந் தன்மை
யிறைவனே யெனக்கு நாக்குண் டில்லையோ வென்று கேட்க
வறைவது நாக்கே யென்ன வகந்தெளி யானைப் போலும். 122

ஆதவன் றன்னைப் பார்த்திட் டகிலத்தைப் பார்த்த போது
வாதவ னொளிமே விட்டே யகிலந்தான் றுத வாபோற்
சேதனச் சிவத்தை நோக்கிச் செகத்தினை நோக்குங் காலைச்
சேதனச் சிவமே விட்டுச் செகமெலா மறைந்து போமே. 123

என்று மிருந்த படியிருக்கு மியல்பே யென்னு மொருவேத
மொன்றே யொழிய விரண்டாம்வத் தில்லை யென்னு மொருவே
வென்றிப் பரமு நீயும்வே றில்லை யென்னு மொருவேகம் [...]
துன்று மதுவே நீயானு யென்றே [...]

அனுபவ விலக்கணம்.

ஊசலா டௌழு மின்றி யுருவரு வுபய மின்றிக்
கோசர வகோச ரங்கள் குறிகுண பேத மின்றிப்
பாச சாலங் கடந்து பராபரைக் கப்பா னின்ற
வீசனை யறிந்த ஞானிக் கினிப்பிறப் பில்லை யன்றே. 125

சிறையறக் கட லொடுங்குஞ் செறிநதிக் குலங்கள் போலு
மறுகுறு வேடு நீக்க மன்னனைக் கூடல் போலு
மறிவறி யாமை நீங்க வறிவினு ளறிவாய் நின்ற
விறைவனைக் கூடு ஞானிக் கினிப்பிறப் பில்லை யன்றே. 126

அரியணையி லிருந்துலக வரசாட்சி புரிந்தாலு மங்கை யே
ற்றுத், தெருவுதொறுந் திரிந்திரந்து தின்றாலு மிளம்பருவத்
தெரிவை மாரைப், பிரியாம லிருந்தாலும் பிரிந்து தவம் புரிந்
தாலும் பேசிற்றெல்லாம், விரிசீவன் முத்தனுக்கிங் குடம்பாடே
யன்றி யொன்றும் விரோத மின்றே. 127

ஆயிர மடந்தைய ராகந் தோய்ந்துநான்
றாயவ னென்றுமால் சூளுஞ் சாற்றினன்
காயமுங் கரணமுங் கடந்த தன்மையா
னீயுமந் நிலையிலே நிற்கப் பாலையே. 128

அறுசுவை யடிசிலை யார வுண்டவன்
வெறுமுப வாசிநா னென விளக்கினன்
சிறுநுதற் பேதையைத் தினமுஞ் சேர்ந்தவன்
றுறவிநா னெனவுளந் துலங்கக் காட்டினன். 129

சிவயோக விலக்கணம்.

காமமா திகளை நீத்துக் காணவா தனை கடந்து
நாமது வெனுஞ்சம் பந்த ஞானமே ஞான மாகி
யோமொழிப் பொருளைத் தேறி புணர்வுணா ராமை போக்கி
யாமைபோ லைங் தடக்கி நிற்பதே யமல யோகம். 130

அறுவகைச் சமயத் தோர்க்கு மதீதமா யகள மாகி
மறுவறு பொருளா யொன்றாய் மன்பதை தொறு நிறைந்து
குறைவறு பிரம நாமே யென்றகோ சங்க ணீங்கி
யறிவுரு வாகி நிற்ற லழகிய யோக மாமே. 131

உடலுரு முயிரு மாகி யுயிர்தொறு முணர்வு மாகிச்
சடமச டங்க டோறுஞ் சாக்கியு மாகி நின்ற
வடல்புனை சிவனார் நம்மை யன்றிவே றில்லை யென்றே
யுடைகுட விசும்பு போலொன் றுதலே யோக மாமே. 133

ஆகையாற் கருத் தடங்கி யசைவற வியோக மாகு
நாகமார் முழைஞ்சு பூங்கா நதிபாழுங் கோயி லாதி
யோகதா னங்கள் புக்கி யுயர்சிவோ கம்பா வித்துத்
தேகமா திகளு னல்ல வென்றுசித் திரம்போ னிற்பாய். 134

இம்முறை சிவயோ கத்தி லிருப்பவர் சீவன் முத்தர்
நன்மையி னுதங் தோன்று நவவிதங் கடந்து போனாற்
செம்மைய சுவானு பூதி செனித்திடு மனந்தா னந்த
விம்மிதந் தோய்ந்துந் தோயா திருப்பர்கள் விதேக முத்தர்.

காசியி லிறக்க முத்தி கமலையிற் பிறக்க முத்தி
தேசுறு தில்லை மன்றுட் டெரிசிக்க முத்தி யென்ப
ராசையை யிறக்க முத்தி யாருயிர் பிறக்க முத்தி
யீசனைக் காண முத்தி யெதுவரி தான முத்தி. 135

சுவானுபவ விலக்கணம்.

பிண்டமா முடலு னல்லேன் பிராணவா யுவுநா னல்லே
கண்டவைம் பொறியு மல்லேன் கரணமோர் நான்கு மல்லேன்
பண்டைய வறிவ னுனென் றுன்னருள் கொண்டு பார்க்கி
லெண்டிசை கீழ்மே லெங்கு மேகனு யிருக்கின் றேனே. 136

கானலை நீரென் றுன்னிக் காதலித் திடுவார் போல
வூனுட னுனென் றுன்னி யுணர்வினைப் பிரிந்தி ருந்தேன்
கானலை நீரன் றென்று கைவிடு வார்கள் போல
வூனுட னனன் றென்றே யுணர்வொடு முறங்கி னேனே. 137

ஊனுடல் பொறி பிராண னுறுகர ணங்க ளென்னுங்
கானகங் கடந்தஞ் ஞானக் காரிருட் பரப்பு நீங்கித்
தானெனுஞ் சீறார் நீத்துத் தற்பரைப் பொழிலி னின்று
மோனியாய் ஞான னந்த முத்திமா நகரங் கண்டேன். 138

குரு தோத்திரம்.

ஒன்றென்றும் பலவென்று முபயமென்று முருவென்று மருவென்று முறைவதென்று, நன்றென்றுந் தீதென்று நானே யென்று ஞானமென்று ஞேயமென்று ஞாதாவென்று, மன்றென்று மாமென்றுஞ் சமயப்பேய்களறைகின்ற பிணக்குவழி யனைத்து நீத்துக், குன்றலிலா வானந்தக் குரவ னின்னைக் கும்பிட்டே னென்பிறவி பின்பிட் டேனே. 139

செறிவாகு மலமற்று மாயையற்றுத் திரிவிதமாங் கன்ம மலத் திரளுமற்றுப், பிறிவாகுங் குணமற்றுக் குறியுமற்றுப் பேதாபே தங்களற்றுப் பேச்சுமற்று, வறியாமை யறிவற்று வனந்தகோடி யாதவர்போ லெழுகின்ற பரையுமற்றுக், குறியாத வானந்தக் குரவநின்னைக் கும்பிட்டே னென்பிறவி பின்பிட் டேனே. 140

பொய்யாத புனன்மூழ்கிச் சாந்த மென்னும் பொடிபூசிக் கருணைமணி புனைந்தெஞ் ஞான்று, நையாத வுளமெல்லா நைய நாவா னவிலாத மாமனுவை நவின்று மேலீ, ரையாறு மாறுறுங் கடந்து நின்ற வாநந்தத் தேசிகநின் னடிப்போதுக்கே, கொய்யாத மலர்கொண்டங் கருச்சித் தேத்திக் கும்பிட்டே னென் பிறவி பின்பிட் டேனே. 141

ஆசிலன்ன மயகோசந் தாண்டி யப்பா லழியாத பிராணமய கோசந் தாண்டி, மாசின்மனோ மயகோசந் தாண்டி யென்று மாறுவிஞ் ஞானமய கோசந் தாண்டி, நாசமுறு மானந்த கோசந் தாண்டி ஞானவடி வாய்நின்ற குரவ நின்னைக், கோசமெலா மற்றசிவ கோசியாகிக் கும்பிட்டே னென்பிறவி பின்பிட்டேனே.

தத்துவங்க ளாறாறும் பின்னிட் டப்பாற் றத்துவா தீதமாந் தன்னைக் கண்டு, பற்றொன்று மில்லாத பரையைக் கண்டு பரிந்து பரிந் துள்ளுருகி யதிலொடுங்கி, வெற்றவெறு மானந்த வுருவங் கண்டு விழையாமல் விழைந்தப்பால் வெளியைக் கண்டு, குற்ற மெலா மறநீத்தங் கறிவாய் நின்று கும்பிட்டே னென்பிறவி பின் பிட்டேனே. 143

பாசத்தாற் பாசி யாகிப் பலபல பிறப்பிற் சென்று
பாசத்தாற் பிறந் திறந்து பலபல போகந் துய்த்த

பாசத்தைத் தாளாற் போக்கிப் பதித்துவம் பதித்த நாதன்
பாசத்தை நினையுந் தோறும் பசுத்துவங் கழலு மன்றே. 144

ஒன்றென்பா ரொன்றே யென்க வோரிரண் டென்பா ரென்க
நன்றென்பார் நன்றே யென்க நவையென்பார் நவையே யென்க
வின்றென்பா ரென்க வன்றி யுண்டென்பா ருண்டே யென்க
வன்றிதா மென்னு முத்தி யடியனேற் களித்தா னீசான். 145

தன்னு ளுலகு முலகதனிற் றானு மாகிச் சகசமாய்ப்
பின்னை யபின்ன யெனுஞ்சத்தி பிரியா திருக்கும் பிரமமா
யுன்னு முணர்வுக் குணர்வாகி யுருவா யருவா யுபயமுமா
யென்னு ளிருந்த பரசிவத்தை நின்றுற் கண்டே னிறையோனே.

மண்ணை விழுங்கிப் புனல்கனலை விழுங்கி வாயு தனைவிழுங்கி, விண்ணை விழுங்கி வெண்மதியை விழுங்கி வெய்யோன் றனைவிழுங்கி, மொண்ணை யியமானையும் விழுங்கி முற்றும் விழுங்கிப் பற்பலவா, மெண்ணை விழுங்கி யிருந்ததனை நின்றுற்கண்டே னிறை யோனே. 147

விம்மித விலக்கணம்.

அனாதி கேவலத்தினி லழுந்து மேற்குநீ
மனாதிய கருவியான் மலத்தை நீக்கியே
சனாதவின் பந்தனைத் தந்த தேசக
கனாவினு முன்னையே கருதற் பாலனே. 148

சித்தாந்த தரிசனம்-பதியியல்.

அற்றார்கட் கண்ணிதா யல்லார்க்குச் சேய்மையாய்ப்
பற்றற் றிருக்கும் பதி. 1

எங்கு மிருப்பானை யேகமிரண் டென்னும
லெங்குமாய் நீகண் டிரு. 2

மோகமுறு பெத்தத்துண் மூடர்க் கிரண்டாகு
மேகமே முத்தருக் கீசன். 3

குருவுருவங் கொண்டிக் குவலயத்துட் டோன்றிப்
பருவரலை நீக்கும் பரன். 4

சிதம்பரமா யெங்குஞ் செறியினுமென் னாவி
மதமடங்கிக் காணு வகை. 5

பசுவியல்.

சனகாதிக் கீசன் றனித்திருத்தல் கண்டு
மனைவாழ்க்கை யைத்துறவா மல். 6

புண்ணியத்தான் மேலேறும் பாவத்தாற் கீழிறங்கும்
புண்ணியபா வத்தாற் புவி 7

பாசவியல்.

அன்னியத்தைக் காட்டி யனன்னியத்தைத் தான்மறைக்கு
மென்னே மலத்தி னியல். 8

பற்றற்றார் கண்ணும் பருவரலைச் செய்வித்தல்
குற்றமிகு மாயா குணம். 9

நூலில்லை கேள்வியில்லை நுண்ணறிவு மில்லையால்
மாலகலா மாயா மகற்கு. 10

ஞானமிலைப் பத்தியிலை நல்லார்கண் ணட்புமிலை
மானமிலை மாயா மகற்கு. 11

சாக்கிரமுஞ் சொப்பனமுந் தணவாச் சுழுத்தியையும்
போக்கிற் றுரியம் பொருள். 12

ஆன்மீகம் பௌதீக மறையுந்தெய் வீகமிவை
யான்மாவுக் கில்லை யறி. 13

முன்னைவினைப் பின்னைவினை மூவா நிகழும்வினை
யுன்னை யணுகாமை யோர். 14

மன்னவராற் கள்வரான் மாவா லுறுபிணியா
லின்னலுற லான்மீக மெண். 15

தாயகட்டிற் றங்க றாணிதனில் வந்தழித
லாயிற்றெய் வீகமென லாம். 16

வானி லிடியான் மழையான்மற் றச்சடத்தா
லூனமுறல் பௌதிகமா யோர். 17

சஞ்சிதமுன் கட்டுவினை சற்குருநோக் காற்சரியும்
பஞ்சுமலை பட்டநெருப் பாம். 18

உள்ளப் பொசிப்பெல்லா முண்டொழிப்ப தன்றியிதைத்
தள்ளப் படாதெவர்க்குந் தான். 19

வறுத்தவிதை யுண்பதன்றி மாநிலத்தைக் கீன்று
செறித்து விதைப்பாரோ தெளி. 20

கூத்தியைப்போற் பாவங் குலக்கொடிபோற் புண்ணியங்க
ணீத்தார்க் கிரண்டு நெருப்பு. 21

நாடுவினை யொப்புவந்த நாதாந்த யோகருக்கிங்
கோடுந் திரவியமு மொன்று. 22

மாமாயை யீசனருள் மாறு தெதிர்ந்தன்றிப்
போமாறு முண்டோ புகல். 23

கோடிசிவ புண்ணியத்தாற் குவியு மனம்பின்னர்
நாடுஞ் சிவனை நனி. 24

பாசமோசன வியல்.

ஆமைபோற் சிந்தித் தருளுவ மாக்குமாற்
காமாதி நீத்தவரைக் காண். 25

கோழிபோற் றீண்டியுயிர்க் குற்ற மறுத்தாளு
மாழிவிட முண்ட வரன். 26

திருமொழியாற் கன்மமலஞ் சிந்துந் தியானத்தாற்
பெருமாயை போயொழியும் பின். 27

சைதன்னிய வுருநா னென்றுதம நீங்கல்
சைதன் னியனுருவந் தான். 28

எனைவிடவே றில்லை யியானே பரப்பிரம
மெனவுணர்த றற்றெரிச னம். 29

சீவனுக்குச் சாக்கி சிவமென் றுணர்தலே
சீவனுக்குச் சுத்தியெனத் தேர். 30

எவ்வுயிர்க்கும் போத மிறையென் றறிதலே
செவ்வே சிவதரிச னம். 31

அந்தச் சிவநம்மை யன்றியிலை யென்றோர்த
லுந்துஞ் சிவயோக மோர். 32

உள்ள மொடுங்கி யுரையொடுங்கி யானந்த
வெள்ளத் தழுந்திநிற்கு மேல். 33

விமரிச ஞானத்தால் வெறுப்புவிருப் பற்றுச்
சமரசத்தை யெய்துந் தனி. 34

அறிவி லறிவை யறியா தறிந்து
குறியிறந்து நிற்குங் குலம். 35

ஐந்தவத்தை சென்றுனு மாவரண மற்றதவர்
சிந்தை சிவன்பாலே தெளி. 36

ஆமயத்தை நீங்கி நிராமயத்தை யாதரிக்கி
னுமயம்போ நீயே யவன். 37

சீவனத்தாற் சீவனெனல் சீவமிறந் தாலிந்தச்
சீவனே யந்தச் சிவம். 38

தன்னைக் கண்டாங்குத் தலைவனையு முன்னாது
முன்னைப் பிரமமெனு மோர். 39

ஊனை யொதுக்கி யுணர்வாக்கி விட்டபினர்
நானே பிரமமெனை நாடு. 40

சொப்பனமுஞ் சாக்கிரமுந் தொலையொத்த காலத்துச்
சுப்பிரம மென்றுநீ சொல். 41

ஆதிமுத்தன் சீவ னனுதிமுத்த னீசனென
வேதமுறை செய்யும் விரித்து. 42

சித்திரத்தை யொத்துச் சிவோகமெனச் சிந்தித்தா
லத்தனுரு நீயாவை யால். 43

இந்நிலையி னிற்பரிதே லெல்லாஞ் சிவமென்னு
மந்நிலையி னிற்பா யற. 44

சிவயோக வியல்.

அவயோகத் தன்மை யகற்றியலை வில்லாச்
சிவயோகத் தன்மை தெரிப்பாம். 45

நதிபாங்கர்ப் பன்னகத்தி னண்ணிப் பத்மாசனத்தில்
வதியாக் குருவை வணங்கி. 46

நீர்க்குமிழி மின்னற்கு முண்டுநிலை யில்லை
யாக்கைக் கென்றெண்ணி யறிந்து. 47

முன்னோ னுரைத்தமொழி நிறுவிப் பற்பலவாம்
பின்னமொழி யெல்லாம் பிரித்து. 48

சிவத்தோ மசியுண்ணி னைந்துசிவ யோகநிட்டை
சவுக்கியதா னத்தேறித் தான். 49

பதைத்தெழு முள்ளப் பதைப்பைப் பறித்து
மதத்தை யொடுக்கி மறித்து. 50

தத்துவத்தைப் பின்னிட்டுச் சகசமல கேவலத்தை
யத்தனருள் கொண்டாங் ககன்று. 51

அமுசோகம் பாவனையை யண்ணி யறிவாகிச்
சமுசயத்தீப் பாவனையைத் தள்ளி 52

சீவன்வே றுண்ட சிவன்வேறென் றெண்ணுமயற்
பாவனைக்கண் ணுள்ளில் படா. 53

நதியோடிப் புக்கழுந்து நாட்டம்போ னின்ற
பதியிற் கலந்து பழகி. 54

அதுவிதுவென் றெண்ணு தறிவோ டறிவாய்ப்
பதிதல் சிவயோகம் பார். 55

மூன்றென் றிரண்டென்று முன்னு துறங்கியே
யொன்றுத லேசிவயோ கம். 56

சாத்திரத்தை யுன்னிற் சமாதி குலையுமெனி
னேத்திரத்தும் பாரே னிலத்து. 57

குறியாக் குறியைக் குறித்துணரப் போகுங்
குறியே பிறவிக் குறி. 58

அம்புவிழு மந்நேர மாக்கறக்குஞ் சில்காலஞ்
சம்புவின் யோகத்திற் றரி. 59

பழிமுனையைக் காட்டுகின்ற பல்லுலகை நோக்காச்
சுழிமுனையை நோக்கித் தொடும். 60

அலையற்ற சாகரமோ வவிழ்ந்தகயிற் றாசலோ
வலைவற்ற யோகி யகம். 61

பொன்னுக்கை கிட்டியுமென் யோகப் புணர்ப்பிலையே
லென்னுப் பிறந்து மிவண். 62

வேடப் பொலிவிருந்தென் வேசியர்போ ளுடோறு
நீடுசிவ யோகமி னீசர். 63

துறந்துஞ் சிவயோகந் துன்னாத மூடர்
பிறந்தும் பிறவா தவர். 64

தண்டிகையுங் கொம்புந் தவசிக் கிவையடா
வம்பர்க்கு வைத்த வழி. 65

உண்டி புசிக்கவோ யோக முளுற்றவோ
வண்டர்பிரான் றந்தனுக் கை. 66

ஊழைத் துறந்தா லுலகைத் துறப்பையன்றி
யூழிருக்க நீதுறவி யோ. 67

அணுவுக் கணுவா யகண்டமாய் நின்ற
பணிசெய்ய நீயே பணி. 68

உபதேசமாலை.

சனகர் சனற்குமர சனந்தரர் சனாதரர்
முனிவரர்க்கு ஞான மொழிந்த-முனிவனே
யென்போல வந்திங்கே யென்னை யெனக்குமறை
பொன்போலத் தந்தார் பொருள். 1

மூல வுபதேசம்.

அப்பாவுன் பக்குவத்துக் கிடா யனேகவித
வொப்பா லுனக்குரைத்தே னுண்மையினை-யெப்பாலுஞ்
சங்கையற்ற சத்தியத்தை சாற்றிலுனை யன்றியில்லை
சங்கையறப் பார்நீ தனித்து. 2

தீக்கையினா லுன்னைச் சிவமாக்கி னேமதன்றி
யாக்கைச் சிவவடிவ மாக்கினோ-நோக்கியே
நானேநீ யென்று நவின்றுமுப தேசித்தோ
மேனோ மயக்க மெழும். 3

தசகாரிய வுபதேசம்.

பூதமுத னாதமீ ருகப் பொலிகின்ற
வீதெல்லா நாமல்ல வென்றறியும்-போதமே
தத்துவரு பம்மிதனைச் சங்கையற்ற மாணவக
புத்தியிடை நன்றாய்ப் புதை. 4

ஆத்ம தரிசனம்.

என்று பிறந்தேனு னென்று வளர்ந்தேனு
னென்று துயருற் றிறந்தேனு-னென்று
மழியாத சித்துருநா னென்றே மகிழ்தல்
நழுவாத நின்றரிச னம். 5

சிவ ரூபம்.

எங்குஞ் சிவமயமா யெங்குஞ் சுகவடிவா
யெங்குஞ் சிவலோகத் தெல்லையா-யெங்குஞ்
சிவனையே கண்டு தெரிசித்தன் மாணு
சிவரூப மென்றே தெளி. 6

சிவ தரிசனம்.

ஆக்க லளித்த லழித்தன் மறைத்தலரு
ளாக்கலிவை யெவ்விடத்து நோக்கியே-நீக்கமறப்
புல்லியுய ரானந்தப் பொற்பின் மிசையேற
னல்லசிவ தரிச னம். 7

சிவ போகம்.

நானே சிவன்சிவனே நானென்று நாடிவெறுந்
தானுகி நின்றநிலை தானன்றே-வானுப்
பவசலதி நீந்திவரும் பண்புடைய மாணு
சிவலோக மென்றே தெளி. 8

இரகசிய வுபதேசம்.

மாணவகா மெய்ஞ்ஞான வாழ்வையுனக் கிக்கணமே
பூண வுரைப்பனிது பொய்யல்ல-காணொழியாக்
கண்ணேநீ பாயிருளுங் காய்கதிரு நீயல்ல
வுண்ணினைந்து பாரிதனை யுற்று. 9

கண்ணே யிருளுண்டே கங்குல் பகலுண்டே
விண்ணவருங் காணுத வேதியனே - மண்ணுத
வுச்சிக் கதிருமொளி யொழியாக் கண்ணும்போ
னிச்சயித்துப் பாரிதனை நீ. 10

விளக்கில்லை பல்பொருளு மில்லை விழியில்லை
துளக்கிருளு மில்லையெனச் சொல்ல-வுளக்கண்ணு

னுள்ளபடி யறிந்தா னூன்பிறவி யில்லையுனக்
குள்ளபடி யீதென் றுணர். 11

உன்னை யொருவ னுயர்சாமி யென்றுரைத்தா
லென்ன மகிழ்ச்சியங்கே யெய்தினுய்-பின்னொருவன்
பாவி பசுவென்றுற் பதைபதைப்பா யாகையினுற்
சீவனல்ல நீயே சிவம். 12

நேய வுபதேசம்.

ஆறுகடல் கண்டுவர வாதரித்த தும்மொருவன்
வீறுபுலி கண்டுவந்த வீறுங்-கூறுயிடி
லுப்புக் கடலாடி யோடிவந்த தும்மொக்குஞ்
செப்புசிவங் கண்டுதிரும் பல். 13

தன்னைச் சிவத்திற் பறிகொடுத்த தற்கேடர்
பின்னைத் தமைத்தேடிப் பேதுற்ற-தென்ன
பிழைபளித மால்வரையிற் பேரழலை யிட்டே
யழிவரைபின் றேடியடுக் கல். 14

பஞ்சாக்கர வுபதேசம்.

அஞ்செழுத்தின் றன்மை யறையக்கேண் மாணவக
பிஞ்செழுத்தா மீரிரண்டும் பின்றள்ளித்-துஞ்சாத
வோரெழுத்தே நின்னுருவ மொண்பொருளே நீயாமென்
ரோரிடத்தி னில்லையுனக் கூழ். 15

நகாரக் கருவியெலா நாமலவென் றெண்ணி
மகார மலங்கடந்து மாழ்கி-யகாரமே
தானென் றுணர்ந்தப்பாற் றண்ணருளைக் கண்டுசிவ
மோனமதி லேயொடுங்கன் முத்தி. 16

சடாந்த வுபதேசம்

சித்தாந்தம் வேதாந்தஞ் செப்புதத்து வாந்தமிசை
புத்த கலாந்தமொடு போதாந்தஞ்-சுத்தமா
நாதாந்த மென்றிவைக ளாறுநவை யென்றே.
மீதானந் தேடி விடு. 17

அதீத வுபதேசம்.

நித்திரையைக் காண நினைத்துட் கலைமனுந்
தத்துவசா லங்களெல்லாந் தாண்டியே-சுத்த

வருள்வழியாற் சென்றங் கனுபவத்தைக் கண்டு
தரையவர்க்குச் சாற்றநினை தல். 18

பூரண வுபதேசம்.

அடுத்துவரும் பாசத் தணுத்தன்மை யாகிக்
குடத்தில்வருந் தீபமெனக் கொண்டாய்-விடுத்துநீ
பொன்றரிய மெய்ஞ்ஞான பூரணமா யேநின்னைக்
குன்றிலிட்ட தீபமெனக் கொள். 19

பழமொழி வுபதேசம்.

அத்தைத்தின் றங்கே கிடப்பார்க்கு மாணவக
வெத்தைத்தின் றெங்கே கிடைந்தாலென்-சுத்த
வெறுவெளியிற் சென்று விளையாடு கின்றூர்க்
கறுதியிட லாகா தறி. 20

முப்பாழும் பாழென் றறைந்தார் திருமூல
ரப்பாலும் பாழென் றறைந்தார்-சடகோப
ரறிவி லறிவி லறிவி லறிவி
லறிவி லறிவென் றறி. 21

சங்கார வுபதேசம்.

ஈசனுனக் கெஞ்ஞான்று மிதசத் துருவென்னும்
வாசகத்தைச் சொல்லக்கேண் மாணவக-வீசன்றான்
தத்துவத்தி லாக்கித் தவத்தில் வளர்த்துன்னை
முத்தியினிற் சங்கரிப்பான் முன். 22

மகாவாக்கிய வுபதேசம்.

சீவனுய் நின்னைநீ சிந்திக்கின் மாணவக
வோவில் பிறப்பிறப்பு மோவாது-வீவிற்
றுருபதைக்கு மாளாத் துகில்போலுன் போத
மிரிவதிலை யெக்காலு மெண். 23

சிவமல்ல நாமென்றுஞ் சீவனு மென்றும்
விவகாரம் வந்தவிட மெல்லாந்-துவமகலச்
சாம மறைபுகலுஞ் சத்தியமா வாக்கியத்தைத்
தோமறவுட் கொண்டு துணி. 24

உண்மை யுபதேசம்.

ஆதிமறை யாகமங்க ளெல்லா மளவிட்டே
யோதியுணர்ந் தெல்லா முரைத்தாலும்-வேதை
யெழுநான்கு கோடி யிழிநிரைய மெல்லாம்
விழுவர்சிவ ஞகா விடின். 25

கோல்லா விரதம்.

கொல்லா விரத குலமே குலமென்று
நல்லார்க ளெல்லா நவின்றிருக்க-கொல்வாற்
றெரிசித்தா லும்பாவந் தீயன்முக நோக்கிப்
பரிசித்தா லும்பாவம் பார். 26

ஆடுபன்றி கோழி யருந்துவோர் கட்கெல்லாம்
வீடில்லை யென்றுரைக்கும் வேதங்க-ளுடுமவர்க்
கிம்மையிலுந் துன்ப மறுமையிலு மேழ்நிரைய
நன்மையிலை யோரிடத்து நாடு. 27

அநித்திய தரிசனம்.

இன்றைக்கோ நாளைக்கோ வின்னமரை நாழிகைக்கோ
வென்றைக்கோ வாவியிழப் பென்று-சென்றிறைஞ்சி
யாசா ரியனுக் கனுகூல சித்தனுய்ப்
பாசாதி யைக்கழற்றப் பார். 28

கோடைதனி லாற்றிற் குடியேறி வாழுநர்கள்
வாடைமழைக் கேங்கியழும் வாறெக்கும்-நீடுபக
லுள்ளபோ தெல்லா முறுதிநெறி காணது
கள்ளமற் கண்டுகலங் கல். 29

மாதாபி தாநாத்தி மற்றெருக் கலுநாத்தி
யாதார வைப்பு மரண்மனை யுக்-தீதான
நாத்தியிவை மெய்யென்று நம்பாதே யென்றறைந்த
மாத்திரத்தே வீடுற்றுன் மன். 30

அடங்கத் துறத்தல்.

தாயரையுந் தந்தையையுந் தற்சார்ந்த கேளிரையு
மாயுமயல் காட்டு மனைவியையுஞ்-சீயென்று
சொற்பனம்போற் கண்டெட்டாத் தூரப்போ யோகநிலை
நிற்பவனை ஞானியென நேர். 31

ஆனை முதலெறும்பீ ருயபிறப் பெல்லாமு
மீன முறக்கடந்திட் டேறியே-யூனமிலா
மக்களா வந்துந் துறவா மனிதர்தமைத்
தெக்கணு மூர்த்திசிரிக் கும். 32

மலைமகளை விட்டுடைய மைந்தர்தமை யும்விட்
டிலகுவெள்ளி மால்வரையும் விட்டே-யுலகறியக்
கல்லாலின் கீழிருத்தல் கண்டுந் துறவாரைக்
கொல்வ னியமன் குறித்து. 33

அவா வறுத்தல்.

மண்ணாசை பொன்னாசை மாதரா ராசையுயர்
விண்ணாசை யாவும் வெறுத்தப்பா-லெண்ணும
துள்ளபடி யானந்த யோகத்தின் முத்தியுடல்
விள்ளளவு நின்று விடு. 34

அடக்க முடைமை.

அடக்கிப் புலனைந்து மாமையைப் போலு
மொடுக்கி யுறவோரைக் கண்டா-னடுக்குற்றுக்
கண்ணப்பர் போலக் கரையிறந்த பேரன்பால்
விண்ணப்பஞ் செய்ய விரை. 35

கல்வி யடக்கம்.

கழுதைக்குங் கற்றவர்க்குங் கட்டுரையொப் பொன்றே
கழுதை பிறர்க்குதவுங் கற்பூர-முழுநூலாய்ந்
தோதுவார் தாம்பிறருக் கோதியுணர்ந் துள்ளபடி
சாதியா ராதலினாற் றான். 36

இத்தன்மை யுடையோ ரிவர்களெனல்.

சாந்த முடையோன் றவசி யவாவறுத்தோன்
வாய்ந்த துறவி மனமாண்டோ-னாய்ந்துணர்ந்த
யோகிபரி பூரணத்தை யுற்றுணர்ந்தோ னல்லசிவ
போகியெனச் சொல்லும் பொது. 37

யோகைப் பழித்தல்.

தத்துவக்கற் றற்றுவெறுந் தானேதா னாய்நின்ற
முத்தருக்கி யோகமேன் மோனமேன்-வெற்றியேன்

சுத்தசுக நித்தியமாய்ச் சும்மா விருப்பதுவே
பற்றற்ற முத்தியெனப் பார். 38

பால்விரதி பூசையாய்ப் பழவிரதி பைங்கிளியாய்க்
கால்விரதி பாம்பாதல் கட்டுரையே-நோல்விரத
மாண்டவிட முத்தியென்றான் மாறு விரதமெலாங்
கூண்டோடே வெட்டிக் குமை. 39

சாந்தமுடைமை.

வைதிடினுங் கொய்திடினும் வாழ்த்திடினு மாயமெலாஞ்
செய்திடினு மன்னர் செறுத்திடினுந்-தெய்வநிலைப்
பூத மயக்கிடினும் புரந்தரன்போர் செய்திடினு
மேதுமயங் கான்ஞானி யெண். 40

சிவயோக மான்மியம்.

எண்ணுஞ் சிவயோக மான்மியத்தை யென்சொல்கேன்
மண்ணுலகும் விண்ணுலகும் வந்திறைஞ்சி-யண்ணுவென்
றோலமிடு நீசிவமா யோரிமைப்பு நிற்பையெனிற்
காலனுங்கை கூப்பிநிற்பன் காண். 41

இதோபதேசம்.

சத்தியமு நோன்புந் தவமு மினஞ்சொல்லு
முத்தமருக் குள்ளகுண மொன்றின்றி-மத்திமராய்
மைதுனமுஞ் சோறுமாய் மாயுமள வும்புசிக்குங்
கைதவர்க்கு முண்டோ கதி. 42

கல்லா லமர்ந்தாரைக் கண்மூன் றுடையாரைச்
சொல்லாமற் சொல்லவந்த தூயாரைப்-பல்காலுஞ்
சிந்தி சிவோகஞ் சிவோகஞ் சிவோகமென
வந்தி பிறப்பறு மாறு. 43

பூரண நிட்டை

அண்டங்கா லங்கி யறலவனி யைந்திணையும்
பண்டையவா காயம்போற் பாவித்துக்-கொண்டன்
மறையாக் கதிர்போலுன் வானொளியை நோக்கி
நிறைவாய்க் குறையாதே நில் 44

எல்லாஞ் சிவமென்னு மெண்ண முனக்குண்டே
லெல்லா நலனுமுனக் கெய்துமே-யெல்லாஞ்
சிவமன் றெனுமுணர்வு சிந்தையிடை யுண்டேற்
பவம்வந் துனைவிழுங்கும் பார். 45

அதீத நிட்டை.

எல்லா மிறந்தவிட மேகாந்த நிட்டையென
வெல்லா மறையு மியம்புமா-லெல்லா
மிறந்த விடத்திருந்த வென்னையா னேகண்
டிறைஞ்சினே னேத்தினே னே. 46

மலின வாதனை.

அறிவே திருமேனி யறிவே கரணங்க
ளறிவே யிடம்போக மாமன்-றறிவாளன்
முட்டா மறைகண்ட தத்துவத்தோர்க் கென்றுமறை
நாட்டு முப்நிடத நாடு. 47

## சிவஞானப்பிரகாச வெண்பா.

அடியார் வணக்கம்.

உன்னைப்போ லேயென்னைப் பாவிக்க வேண்டுமென்று
சொன்னதிருப் பாட்டாற் றுணியாதார்-மென்மே
லிடம்பட்ட வேழுலகி லுள்ளநூற் கற்றுங்
கடன்பட்டும் பட்டினிபோற் காண். 48

பரிபாகி யிலக்கணம்.

தாமடங்கக் கல்லாச் சவலர் தனித்தொருவர்
தாமடங்கா ரென்பதற்கோர் சாக்கிகே-ளுமடங்கா
தந்தோ தகர்தின்னி யாத்தினியை நோக்கியிகழ்ந்
தந்தோ நீ பாவியென லாம். 49

துவிதசைவவினைமறுத்தல்.

ஓசை யொலியெல்லா மானாய்நீ யென்றபினர்ப்
பேச விரண்டுண்டோ பேய்ச்சைவா-வாசையெல்லா
மற்றவிட முத்தி நிலையோ வஃதெல்லா
முற்றவிட முத்திநிலை யோ. 50

மங்கல உண்மை.

மூத்திரத்தி னனையல் ...ற் கனலாவ தன்றிமுனங்
காத்திரத்தை விட்டார் ...வ கன்மமா-நாட்ட
வானைக்கா றீரை மண்ணை ...ங்கிரண்டென் றுன்னிற்
ஞானக்கா லாசை யறும். ...வி. 65

ஞான பூஜை.

...லே சுற்றுமதிள்
...ரங்-தெள்ளித்

ஆலயமே காய மறிவே சிவலிங்க ...னி தீப
மாலயனுங் காணாத வள்ளலுக்குச் ... 66
மன்பே யபிடேக மன்பேநல் லர்ச்ச ...ற்போ
மன்பேநை வேத்தியமு மாம்.

...காயத்

பெண்ணுடை யாபரணம் பெய்தயிலங் ...ின்ற
முண்ணாலணை சந்தனத்தோ டோரெட்டுப் 67
யாகாத நஞ்சுண்ட வண்ணலடி யார்தமக்கி...
காகாது சொன்னே மறி. ...டை

தீர்த்தம் பிரசாதம் திருநீறஞ் சக்கரமுஞ் ...ய
சாற்றுமிறை கட்பிறந்த தாழ்வடமும்-போற்றுங் 68
குருலிங்க சங்கமமுங் கொள்குறிக ளெட்டாங்
கருவகலக் கட்டுரைத்தேங் காண்.

...ிற்
...ற

பாடப் படிக்க வெழுதப் பயன்சொல்லக்
கோடாமல் வந்துங் குணமில்லை-சீடாகேள் 69
சித்திரதீ பம்போலச் சிந்தை தனைநிறுத்திச்
செத்தசவம் போலே திரி. 55

சதா நிட்டை.

பாலோடு சேர்ந்தநீர் பாலாகு மாங்கதுபோல்
வாலறிவ னைச்சேர்ந்த மன்னுயிர்கள்-வாலறிவன்
ருனாகி நிற்பதல்லாற் றண்டாத வைம்பாச
வூனாகி நில்லா ருவந்து. 56

அரசன் மகனரச னாகிநின்றாற் போலப்
பரமசிவ னிற்றேன் றும் பல்லுயிரும்-பரம
சிவனாகி நிற்பதலாற் சீவனாய் நில்லா
சிவனணை யுள்ளே தெளி. 57

எல்லாஞ் சிவமென்னு மெண்ண
லெல்லா நலனுமுனக் கெய்து புரைத்தல்.
சிவமன் றெனுமுணர்வு சின்ன தலைவைத்தான்
பவம்வந் துனைவிழுங்கும் த-யாசானை

அதீத சை செய்வதல்லாற்

எல்லா மிறந்தவிட பே கைம்மாறு. 58

வெல்லா மறையு மி த தேசிகனைத்
மிறந்த விடத்திரு ா தார்-பேய்வாழுங்
டிறைஞ்சினே னே கருங்குரங்காய்ச் சென்னுயாய்
ப்பார் மேல். 59

அறிவே திரு யாண்பொருளைக் காட்டிவைத்த
ளறிவே யி ான்றும் வாழ்த்தாதார்-கற்ற
ருட்டா ண்டாகி ஞானியாய்ப் பொல்லா
நாட்டு சென்மிப்பார் மாண்டு. 60

வைக்காட்டும் வெற்றவெறுந் தேசிகனைப்
ர் கொண்டடியைப் போற்றுதார்-பாதமின்றி
விரலின்றி யாறுத நோயராய்ப்
தரு டாவார் பரிந்து. 61

ஆகந் திருக்கோயி லாசா னதிற்றெய்வஞ்
சோகம் புகைக்களியே சூழ்சுடராம்-போகங்க
ளெல்லாநை வேத்தியங்க ளிவ்வண்ண நாடோறுங்
கல்லாருஞ் செய்யக் கடன். 62

குருவே திருமாலாங் கோகனகத் தானுங்
குருவே யுரையிறந்த கோவாங்-குருவேயிங்
கெல்லாமா யல்லவுமா யெங்கு நிறைவானும்
வல்லாள னுகு மதி. 63

கறுத்த விரும்பைக் கனகமய மாக்குதல்போற்
சிறுத்தநமைப் பேருருவாய்ச் செய்தாரை-வறுத்த
விதைபோல் வரும்பிறப்பை வேரறுத்த வேதியரைப்
புதைமனத்து ளெப்போதும் போல். 64

உ ண் மை ம.

காட்டமனல் சேர்ந்தாற் கனலாவ தன்றிமுனங்
காட்டபுத்தி சேர்வதுவே கன்மமா-நாட்ட
மதுவாவே நிற்பதல்லா லங்கிரண்டென் றுன்னிற்
பொதுவாவை போகாப் புவி. 65

உள்ளந் திருக்கோயி லூனுடலே சுற்றுமதிள்
வள்ளலுக்கு வாயே மணிச்சிகரந்-தெள்ளித்
தெளிந்தவர்க்குச் சீவன் றிருமேனி தீப
மளந்தறியு மைம்புலனே யாம். 66

ஆகாய மெங்கு மகண்டமாய் நின்றாற்போ
னீகாய மின்றியெங்கு நிற்பாயேல்-மாகாயத்
துள்ளொளியா மீச னுனைப்பிரியா தேநின்ற
கள்ளந் தெரியுமங்கே காண். 67

பதிமார்க்க நிட்டையன்றிப் பசுமார்க்க நிட்டை
விதிகால நீசெயினும் வீணும்-பதிமார்க்கந்
தானுமெதி ருங்கழன்ற சமாதியிலே தாக்கற்று
நீநின்றாற் போது நிமிடம். 68

குடும்பத்தை யென்னுட் குலைப்பேனோ பொல்லா
விடும்பையினை யென்ஞான்றீர் வேனோ-குடம்பையினிற்
புட்பறந்தாற் போலேயான் பொய்யுடல்விட் டேகுவனோ
நுட்பசிவ னுனவே னோ. 69

எல்லாங் கழன்றிடமே யேகாந்த மானவிடஞ்
சொல்லா ரிறந்திடமே சுகவுதய-நில்லா
விசுவ மிறந்திடமே மென்சுவர்க்க மென்றான்
சிசுக்குமுடி சாய்த்த சிவன். 70

தத்தைபோ நாடோறுஞ் சாத்திரங்கற் றோதுகின்ற
பத்தருக்கு ஞானப் பிரகாச-நத்தலிலா
வேம்பூமத் தங்காயும் வெங்காஞ்சி ரங்காயு
மாம்பாகு போன்முத்தர்க் காம். 71

கையிலுறு புண்ணுக்குக் கண்ணாடி வேண்டுவமோ
மெய்யுணர்வி லுண்டோ விபரீத-மையறிவு

மோரறிவாய்ப் போனவிடத் தோகோகோ மும்முதலுஞ்:
சோராம னிற்குமோ சொல். 72

சைவஞ் சிவத்தோடு சம்பந்த மானமையாற்
சைவமே யத்துவிதஞ் சாதிக்குஞ்-சைவத்தை
வேறென்று கொள்ளற்க வேறற்ற வேதாந்தக்
கூறென்று கொள்ளுதலே கொள். 73

இருவினை யொப்புற்று லெய்துமல பாகந்
திரிகரண சுத்தியுனைச் சேரு-மருள்பதியு
மாசா னெழுந்தருளு மமல னருளுதவு
நாசமடை யும்பிறவி நாடு. 74

பொன்மலையைச் சேர்ந்துசிறு புன்காக்கைப் புள்ளினங்க
டன்னிறமும் பொன்னிறமாய்ச் சாருமால்-முன்னவனைச்
சேர்ந்தாரு மன்ன சிவோகம்பா வித்தலா
லாய்ந்தவனே யாமா றறி. 75

ஞான விளக்கம்.

ஒருபொருளை நீத்தங் கொருபொருளைப் பற்றி
யிருபொருளும் போக்கி யிடையே-யொருபொருளு
மற்றநிலை யேதோ வஃதுன் னிலையென்றான்
குற்றமற்ற ஞானக் குரு. 76

காயந் துவளாமற் கரண மசையாமல்
வாயும் பதையாமன் மாற்றியே-நேயத்
தறிவாநந் தத்தி லரைக்கண நின்றாலும்
பிறவார் சிவனாணை பின். 77

மேலவத்தை கீழவத்தை வீட்டி நிராலம்ப
சாலவறி வாகத் தரியென்று-வாலறிவன்
கால்வைத்தான் சென்னியிலே கைவைத்தா னென்னுளத்தின்
பால்வைத்தான் றன்னுருவைப் பார். 78

உத்தமங்க ளெல்லா முணர்வையே தாம்பேணு
மத்திமங்க ளேபதுமை யைவாழ்த்துஞ்-சுத்த
வதமங்க ளெல்லாந்தன் னாகத்தைப் போற்று
நதியோடை கூபமென நாடு. 79

கன்னிக்கு மின்பமிலை கற்றோர்க்கு மின்பமிலை
கன்னிவொழிந் தாலின்பங் கன்னிக்குப்-பன்னுதமிழ்
கற்றவருக் கின்புதயங் கற்றுங்கற் றஃதொழிந்தா
லற்றநிலை யீதென் றறி. 80

ஞானமிலான் செய்யுங் குருத்துவத்தை நாடுங்கால்
யோனியிலாப் பெண்டா னுருவத்தான்-மேனி
யலங்கரிக்கும் பின்ன ரநுபவகா லத்திற்
கலங்கி மனமுடையுங் காண். 81

நிதம்பமிலாப் பெண்ணு நிகழலியுங் கூடி
யிதம்பெற்ற வின்பசுக மேய்க்குஞ்-சிதம்பற்ற
நற்குண மிலாசானு ஞானமிலாச் சீடனுமாய்த்
தொக்கிவரு மின்ப சுகம். 82

அங்கோட் டகலல்கு லாயிழையு மாடவருந்
தங்கிவரு மின்பந் தழைத்தாற்போற்-சங்கையற்ற
வாசானுஞ் சீடனுமா யாங்காங் களாவியே
பேசவரு மின்பப் பெருக்கு. 83

பிறவி வருத்தம்.

எண்டிசையும் போற்ற வெழிலார் முடிசூடி
யண்டமொரு குடைக்கீ ழாண்டாலு-மண்டும்
பிறவியிலே யின்பமிலை பேரிடும்பை யல்லாற்
றுறவிலே யின்பச் சுகம். 84

ஈசுர பத்தி.

ஈசன் றிருமேனி யெட்டுமெனக் கண்டறிந்தாற்
பாசநமை விட்டகலப் பார்க்குமே-யீசன்
றிருமேனி யென்றுனது சிந்தையிடைக் காணிற்
கருமேனி யில்லையெனக் காண். 85

ஈசன்வே றியான்வேறென் றெண்ணுங் கடையினங்க
ளீசனடி யென்னு மிடையினங்க-ளீசனே
யானேமென் றேமாக்கு மாயிற் றலையினங்க
ளானதை மாணு வறி. 86

### பிரமக்கியானம்.

எல்லா மறிவாகக் காண்ட லெழிற்பூசை
யொல்கா வவனுத னுட்பூசை-நில்லா
வுலகத்தை மாயா வுடலைத்து டித்த
விலகுமரன் ஶ்ரோத்திரமா யெண். 87

உயிர்க்குயிரா யீச னுழியாம னிற்க
வுயிர்க்குயிராக் கண்டிங் குணரா-துயிர்க்குயிரை
வேறாக்கிப் பூசிக்கும் விரகிலிக்கு முண்டாங்கொல்
வேறாகா மெய்ஞ்ஞான வீடு. 88

### பாச வைராக்கியம்.

நினைப்பு மறப்புமிந்த நீடொரு மித்தை
யனைத்தும்போ னீச னுவேன்-உனற்கரிய
கன்னனுக்கு வேடு கழித்தகதை போனுனக்கு
மன்னியமே வேடென் றறி. 89

### ஞான நிலை.

நல்லகுலத் திற்பிறந்து நல்லாரைச் சேர்ந்தொழுகி
நல்லறிவு பெற்றுடைய நன்மாணு-நல்ல
சிவம்வேறே யென்றெண்ணிச் சிந்தை கலங்காதே
சிவமென்ற நீயே சிவம். 90

காயுங் கிழங்குங் கனியருந்தி நோற்றாலு
மாயும் பிறப்பகல மாட்டுமோ-காயத்திற்
றங்குஞ் சதாசிவனைத் தானாகக் கண்டுதனை
யெங்குமாய்க் கண்டா லிறும். 91

### சற்குரு தரிசனம்.

தத்துவத்துக் கப்பாலாந் தத்துவமன் றந்தனிலே
முத்தியெனும் பெண்ணை முயங்குவோர்க்-கெத்தனையோ
கோடி விடயக் குழாங்க ளெதிர்ந்தாலும்
பாடழிய மாட்டாரப் பா. 92

அஞ்சின் வழிசெல்லா ராறின் படிநில்லார்
வஞ்சரொடுங் கூடி மருவார்க-டுஞ்சுநிலை

தபனனெதிர் நின்றபல்காற் சாற்றினுங் கொள்ளார்க
ளுபநிடத மன்றி யுணரார். 93

உற்ற சரிதையனுக் கோராயிரம் பிறப்பு
மற்றையர்க்கு நூறுகும் வன்பிறப்பு-முற்றுகின்ற
யோகிக் கொருபிறப்பு வுண்மைச் சிவஞான
மோகிக்கு விப்பிறப்பின் முத்தி. 94

சரிதையிலே யீசன் சடவடிவாய் நின்றான்
கிரியையிலே மந்திரத்திற் கிட்டி-யருகிருந்தா
னூனமிலா யோகத்தி லுள்ளொளியா யேநின்றான்
ஞானமதி னானயி னான். 95

சுத்தப் படிகமுச்சிச் சூரியனைச் சந்தித்தா
லெத்தன்மைத் தத்தன்மை யீசநிலை-யுற்றுற்றுப்
பாரா தவர்க்குப் பவமும் பலபிணியும்
போராடு மெஞ்ஞான்று போம். 96

எல்லா மிறந்து துறவாத ஞானிகட்குச்
சொல்வார்க டிட்டாந்தஞ் சோம்பரையே-யெல்லாமுந்
தீரத் துறந்த துறவிக்குத் திட்டாந்தம்
போர்முகத்து வீரர்மனம் போல். 97

உள்ளமெனு மாநந்த வோங்கன் மிசையேறி
வெள்ள வெளிக்குள்ளே விளையாடும்-பிள்ளை
யுலகமெனுஞ் சேரிக் கொருக்காலும் வாரான்
கலகம் விளையுமெனக் கண்டு. 98

கூறைக் கலையார்கள் குப்பைதரு மென்றெண்ணிச்
சோறுக் கலையார் துயருற்றுத்-தூறுக்குட்
கல்லை யுவந்துண்ணுங் கபோதம்போ லேதேனு
நல்லோ ருருந்திடுவர் நாடு. 99

நானே பரமசிவ னானே பரப்பிரமம்
நானே யுலகுயிர்த்த நாதன்-நானேயோ
கண்டதுவுங் காணாது மென்றிவணங் கண்ணாக்
கண்டவனே சீவன்முத்தன் காண். 100

சத்து மசத்துஞ் சதசத்து முன்காட்டிச்
சத்து மசத்துஞ் சமமாக்கிச்-சத்தசத்து

மில்லா விடத்தி லெனதொழிவைக் காட்டிற்று
கல்லாலின் கீழிருந்த கை. 101

என்னை யெடுத்து விழுங்கியிரும் பூரணமாய்
யுன்னுமன மாதிகளை யோட்டிவித்துத்-தன்னிகரி
லெல்லா மிறந்த விடத்தி லெழுந்ததாற்
கல்லாலின் கீழிருந்த கால். 102

சஞ்சிதத்தை நீருக்கிப் பிராரத்தத் தைப்புசித்து
விஞ்சுமா காமியத்தை வீறடக்கித்-துஞ்சிருளா
யொல்லா மலமகற்றி யொன்ருக்கி வைத்ததாற்
கல்லாலின் கீழிருந்த கண். 103

---

## அத்துவிதக் கலிவெண்பா.

பராபரமாய் நித்தமாய்ப் பரிபூ ரணமாய்
நிராமயமாய் நிட்களமாய் நீங்காப்-புராதனமாய்ச் 1

சத்தியமாய்ச் சித்தாய்ச் சதானந்த தேசாய்ச்
சுத்தவெறு வெளியாய்ச் சூனியமாய்ப்-புத்தமாய் 2

தற்பரமாய்ச் சிற்கனமாய்த் தத்துவா தீதமாய்ச்
சிற்பரமாய் ஞானச் செழுஞ்சுடரா-யற்புதமா 3

யறிவுக் கறிவா யகண்டிதமா யெங்குஞ்
செறியும் பரம சிவமாய்ப்-பிறியாத 4

வேதச் சினகரத்துள் வீற்றிருந்த தெய்வமே
போத குருவாய்ப் புவிமீது-நாதனென 5

வந்தான் றிருவடியை மத்தகத்திற் சேர்த்தினன்
றந்தானென் சென்னித் தடக்கையைச்-சிந்தா 6

குலமொழியத் தன்னுளத்திற் சிந்தித்தான் கோணை
மலமொழியப் பார்வையினை வைத்தான்-சலமொழியா 7

வாங்காரம் பொன்ற வமுததிரு வாக்களித்தான்
சாங்கார யோகந் தலைப்பட்டா-னீங்காத 8

மெய்ஞ்ஞான நூலை விரித்துரைத்தான் மாணவக
வஞ்ஞான வாக்கைநீ யன்றென்று-னெஞ்ஞான்று 9

நாற்றவுட ஞனன்றே ஞுவ தியாரிதனைச்
சாற்றிடிங்கென் போல்வந்த தற்பரனே-யூற்றமிகு 10

மாக்கைக்குச் சாக்கியா மான்மாவே நீயதனைப்
போக்கு வரவு புரிகின்ற-யூக்கமொடு 11

தேகஞ் சடமென்றுந் தேசியறி சித்தென்று
மாகமங்க ளெல்லா மறையுங்கா-ணேகையொடுந் 12

திரிசியமே காயமதிற் சித்தே திருக்கென்
றருமறைக ளெல்லா மறையுங்கா-ணிரிகின்ற 13

வன்னமய கோசத்தை யான்மா வலவென்று
பன்னுமறை யந்தமெலாம் பாரென்றிங்-குன்னியுனிக் 14

காண்பார்க்குக் காணப் படுபொருள் வேறானதுபோற்
பூண்பார்க்கிவ் வாக்கை பொதுவன்றோ-மாண்பகன்ற 15

வனித்தமொடு துக்க மசுத்தமிவை மூன்றுந்
தனித்தவுடற் கன்றியுனைச் சாராச்-சனிப்பொழியா 16

மாயா தனுவை நீயென்று மயங்கற்கத்
தோயாத நீயே துரையென்றான்-மாயாத 17

வாணவத்தான் மூடனென வன்றமுத லின்றளவும்
வீணவத்தைக் குள்ளே விரவினை-யாணவத்தை 18

யறுவகையாற் போக்கினை மானமையா னீயே
பிறிவில் பிரமமெனப் பேணி-மறுபிறப்பை 19

மாற்றென்றா னீதொழிய மாயச் சமயத்தார்
பேய்த்தேரை மித்தையெனப் பேணென்றா-னுத்தமொடு 20

சோகமெனப் பாவித்தாற் சோகமுனக் கில்லையென்றான்
மோக மொழியெல்லா முனியென்றான்-றாகமொடு 21

மீசன்வே றியான்வேறெ னென்றெண்ணுகின்ற பாதகரை
நீசரெனக் கண்டுநினை யென்றா-னாசையொடும் 22

வேதமுடி வறிந்த வேதியரைக் கூடென்றான்
பேதநிலை யெல்லாம் பிரியென்றான்-சாதல்பிறப்

பொன்றுமிலை யென்றே யுணர்வோ டுறங்கென்றா
னின்றநிலை தானே நிலையென்றா-னென்றுமுற 24

மும்மாயைக் கப்பாலா முப்பாழுங் கண்டுநீ
சும்மா விருவென்று சொல்லினை-னம்மானை 25

வேறுபொரு ளில்லையென்றான் வெற்றவெறு மானந்தப்
பேறிதனைப் போக்கென்று பேசினு-னுறுகடற் 26

சென்றெடுங்கு மாபோற் சிவத்தி லொடுங்கென்று
னென்றுமற வொன்று யுருகென்று-னன்றாய் 27

சாத்திரத்தை யோதிமதந் தர்க்கியா தென்றனக்கோர்
வார்த்தையினைச் சொல்லி வழக்கறுத்தான்-காத்திரமுங்28

காஞ்சனமு மாருயிருங் கைம்மாற தாயெனக்கு
வாஞ்சையுடன் றவென்று வாங்கினன்-பூஞ்சரணஞ் 29

சென்னியிலு மென்னுடைய சித்தத்தும் வைத்தாண்ட
மன்னவற்குக் காணேன்கைம்-மாறு 30

---

## அதிரகசியம்.

### கணபதிதுதி.

மோகமெனுங் கடல்கடந்து முத்தியெனுங் கரைகாண்பான் முதிர்ந்தநாலாம், பாகமெனு மலர்கொண்டு பத்தியெனும் புனலாட்டிப் பரிந்துசாத்திச், சோகமெனப் பாவித்துத் துரியமெனும் விளக்கேற்றிச் சோகநீங்கி, யாகமெனுங் கோயிலின்கண்ணறிவென்னுங் கணபதிக்கே யன்புசெய்வாம். 1

### பரமரகசியப் பொருள் துதி.

சாத்திரத்தா லளவுபடாத் தனிமுதலைப் பராபரத்தைத் தானேதானு, மாத்திரமாய் நிற்பதனை வாய்விட்டுப் பேசாத மௌனவைப்பைக், காத்திரவா தனைகடந்த வறிஞருக்குப் பலமீயுங் கற்பகத்தைப், பார்த்தவிடந் தொறுநிகழும் பரமரகசியப் பொருளைப் பணிதல் செய்வாம். 2

### ஞான குரு துதி.

வானே முதலாம் பூதங்க ளல்லே கரண வகுப்பல்லே
யானுப் பொறியு மைம்புலனு மல்லே யறியு மறிவல்லே
பூனுருடம்பின் வயத்தாலே யுள்ளந் தளரே லொன்றாய
நானே நீயென் றருள்செய்த ஞான குருவை வணங்குவாம். 3

பிரபஞ்ச வைராக்கிய முணர்த்துதல்.

வையத் தாசையும் வானகத் தாசையுங்
குய்யத் தாசையுங் கூறையி னாசையு
மெய்யி னாசையும் வேரற வீட்டினோ
ரைய னாசைக் ககப்படு சிந்தையார். 4

குலகோத்திர வபிமான மாகாதென் றுணர்த்துதல்.

பறைய ரென்பதும் பண்டித ரென்பது
மறையு மிந்த மலினவு டலையே
பறையர் தம்முளும் பண்டிதர் தம்முளு
மறிவ னேகமென் றுரறிந் தோர்களே. 5

சமயபர மீதென் றுணர்த்துதல்.

சமய மேபர மென்னுஞ் சமத்தராய்ச்
சமய சாத்திரங் காட்டுஞ் சழக்கர்காள்
சமய மென்னுஞ் சத்தார்த்த முணர்கிலீர்
சமய மென்பது தன்னை யறிதலே. 6

தீர்த்த மீதென் றுணர்த்துதல்.

தீர்த்தந் தேடித் திகைத்துப் திரிவிர்கா
டீர்த்த மாவது தேசிகன் வாசகந்
தீர்த்த மீதெனத் தேர்ந்து கொளாதவர்
தீர்த்த மாடியுந் தேரையொப் பார்களே. 7

க்ஷேத்திர மீதென் றுணர்த்துதல்.

அள்ளிக் கோவிலை யென்னுவா சானையே
நள்ளிக் கோவிலை நத்திப்பெற் றுங்கொளி
யுள்ளக் கோவிலை யூன்றிப்பா ராதவர்
கள்ளக் கோவிலைக் காமுறு வார்களே. 8

வாதசங்கற்ப மாகாதென் றுணர்த்துதல்.

ஏதங் கூறி யிடுக்கண் களைந்தவர்
பாதங் கூறிப் பவித்திர ராய்ப்பர
போதங் கூறிப் பொழுதைச் சுருக்கிலார்
வாதங் கூறித்தம் வாணுள்க ழிப்பரே. 9

துறவு இலக்கண முணர்த்துதல்.

புண்ணிய நதியினும் பொருப்பி டத்தினுந்
தண்ணறுங் காவினுந் தருப்பைச் சூழலு
மண்ணறன் கோயிலு மடவி தன்னிலும்
நண்ணிய யோகிகள் வதியு நல்லிடம். 10

தந்தைதாய் முதலிய தமரைக் காண்குறில்
வெந்துயர் விளைதலால் விருப்பு மேவலா
லந்தநன் னிலமகன் றைம்பதி யோசனை
மைந்தனே நீபர தேயம் வைகுவாய். 11

ஊன் பிறந்த வுடலைச் சுமப்பதற்
கேன் பிறந்தமென் றெண்ணி யறிஞர்க
டான் பிறந்த விடத்தைத் தணந்துபோய்
வான் பிறந்த வனத்திற் சரிப்பரே. 12

வே று.

வரிக்கய லனைய கண்ணார் மாநலந் துய்த்த பின்னர்
விருத்தனுங் கால மேனும் விரத்தனு யாவு நீத்தே
யிருக்குமந் நிலம கன்றோர் யோசனை யெய்தப் பெற்றாற்
றிருக்கண்மூன் றுடைய பெம்மான் சேவடி சேர்த்த றிண்ணம்.

சூத்திர ராதி யாகத் தொழுகுதைத் தவரீ ருக
மூத்திரக் குழியி லாழ்ந்து மூழ்கிய பின்ன ரேனுங்
காத்திரத் தானே ரின்பங் கடையென விகந்து மூன்று
நேத்திரத் தானை நோக்கி நெடுவனம் புகுதல் வேண்டும். 14

வே று.

காயசம்பந்த மனைவி தாய்தந்தை கான்முளை யென்னு மிங்கிவரை, மாயசம்பந்த மெனத்துறந் தொழிந்தோன் மாநிலம் பரவுமெய்ஞ் ஞானி, தேயசம்பந்தத் தவரொடுமருவிச் செனித்தவந் நகரிடை மருவான், றாயசம்பந்தத் தவரொடு மருவித் துறவியா யவாவெலாந் துறப்பான். 15

வே று.

கரும்பினு மின்பங் காண்பான் கட்டறத் துறந்த மேலோர்
ரரும்பொனால் வெள்ளியாற்செய் யணிகலன் பூணல் செய்யார்

விரும்பிய கொழுநர்த் தீர்ந்த மெல்லியல் போலநாளு
மிருந்தவஞ் செய்தி யாக்கை யிளைப்பதே கரும மன்றே. 16

கற்புடை மகளி ரெல்லாங் கணவனே தெய்வ மென்பர்
சிற்பொலி சமய வேடர் சிலையையே தெய்வ மென்பர்
தற்கொலி மாந்த ரெல்லாந் தாருவே தெய்வ மென்ப
ரற்புறு பெரியோ ரெல்லா மறிவையே தெய்வ மென்பார். 17

ஐவகைப் பிராந்தியை யுணர்த்துதல்.

நித்தனன் றுரைத்த வாக்கியப் படியே நிகழ்த்துவன் பிராந்தியைந் தினையுஞ், சத்திய மிந்த வுலகெனல் கருவி தணந்திடா துடலைநா னென்னல், கத்தபோத் தாவு நானென் றுனுங் கடவுளும் வேறெனக் கருதல், சித்துரு வாகி யிருந்துநா னேகேன் சிவனெனல் சிதடர்பா லறிவே. 18

வேறு.

ஆன்றநற் சனகனாதி நால்வரு மரன்முகத்தை
மூன்றரைக் கோடிகற்பம் பார்த்தபின் முத்தரானார்
தோன்றிநின் றழியுமிந்தத் தொடுகடற் புவியினுள்ளோ
ரூன்றியோர் கணமதேனும் பார்த்திடி னுறுவர்முத்தி. 19

பழுதையிற் பாம்பே யில்லை பாம்பினிற் பழுதை யில்லை
பழுதையிற் பாம்பென் றெண்ணிப் பாம்பினைப் பழுதை யாக்கு
முழுதறி வில்லா மூர்க்க மூடரோ டுறவு வேண்டேன்
முழுதறி வாகி நின்ற முத்தரிற் றொழிலே வேண்டும். 20

மெய்யினிற் பொய்யே யில்லை பொய்யினின் மெய்யே யில்லை, மெய்யினைப் பொய்யென் றெண்ணிப் பொய்யினை மெய்யென் றுன்னும், மையரோ டுறவு வேண்டே னறிவுரு வாகி வந்த, வையனை யுனைப் பூசித்தே யறிவுரு வாதல் வேண்டும். 21

வேறு

காசிவாஞ்சியங் காளத்தி கழுக்குன்றங் காஞ்சி
மாசிலாருறைப் பருப்பதங் கோகன்ன மறைக்கா
டேசிலாதுறை மூர்த்திதந் தெரிசன மெல்லாந்
தேசிகன்றிருச் சேவையை நிகர்க்குமோ செப்பில். 22

வேறு.

மன்னுமா மறையின் சென்னி வாக்கிய முடிவுங் கண்டே
னன்னிய பாசமான வாணவா தியையுங் கண்டே

னென்னையுங் கண்டே னென்ற னிதயதா மரையின் மேய
நின்னையுங் கண்டே னெந்தாய் நீதந்த ஞானக் கண்ணால். 23

ஆகையா னேனே யெல்லாப் பொருள்கட்கு மறிவாய் நின்றே
தேகமா திகளுக் கப்பாற் சிதம்பர வடிவ மாகி
யேகனா யனாதி முத்த னாயெனில் வேறொன் றின்றிப்
போகமோ கங்க ளின்றிப் பூரண வறிவா னேனே. 24

அறிவென்னு முதல்வேத மகமென்னு மிரண்டாமோத்
தறிவதுநீ யானாயென் றறையுமூன் றாம்வேதஞ்
செறியிந்த வான்மாவே சிவமென்னு மதர்வணஞ்
செறியுநால் வாக்கியத்தின் சித்தாந்த மறிந்தேனே. 25

நானேநீ நீநானே யானமையா ன் ஞானகுரு
வானவனே கைம்மாறும் வழிபாடுந் தோத்திரமு
மீனமிலாப் பூசனையு மியற்றுவான் றனைக்காணே
னானுமிலை யுயிருமிலை யுனையன்றி யொன்றுமிலை. 26

எல்லாநா னென்றுணராக் காலத்தி லிடர்ப்பட்டே
னெல்லாநா னென்றுணர்ந்த காலத்தி லின்புற்றே
னெல்லாநா னேயென்றிங் கெனையெடுத்து விழுங்கினா
யெல்லாநீ யென்றுணரு மெண்ணமும்போய் மாண்டதே. 27

பிண்டமா முடலா னல்லேன் பிராணவா யுவுநா னல்லேன்
கண்டவிந் தியநா னல்லேன் கரணமோர் நான்கு மல்லேன்
பண்டைய வறிவே நானென் றுணர்தரு பருவம் வாய்ப்பின்
வண்டறை கொன்றைத் தாரான் மலரடி காணலாமே. 28

## சிவாகமக் கச்சிமாலை.

தம்மா லறிந்தன யாவையுந் தாமல வென்றறிந்து
மும்மாயை மும்மல முக்குண நீங்கி முழுதறிவாய்ச்
சும்மா விருக்கத் துரியங் கடந்த சுகமுதிக்குஞ்
சன்மார்க்க முத்தியி தென்றான் றடங்கச்சி யேகம்பனே. 29

சாந்தமு நோன்புந் தவமு மடக்கமுந் தண்ணளியும்
வாய்ந்த குருச் சொலும் வாக்கியங்கேட்டு மனமவன்பால்
காந்தமு மூசியுங் கண்ணுங் கதிருங் கலப்பதுபோ
லேய்ந்தது வேமுத்தி யென்றா னெழிற்கச்சி யேகம்பனே. 30

கூவிள மாலையுங் கொன்றையுந் தும்பையுங் கூரறுகு
மாவ லொடுமெடுத் தர்ச்சனை செய்தங் கங்குழைந்து
நாவினிற் ருேத்திரஞ் சொல்லி நலந்தெரி ஞானிகளுக்
கேவல்செய் தாலன்றி முத்திகொ டான்கச்சி யேகம்பனே. 31

அன்னிய மேசெயு மாணவ நீக்கத்தி லாருயிர்க
ளன்னிய மேயிலை யென்றுநின் வேத மறைதலினு
லென்னுட னுன்னுட லென்பொறி யுன்பொறி தென்னதுன்ன
தென்னினை வுன்னினை வென்றுரைப் பேன்கச்சி யேகம்பனே.

எல்லாஞ் சிவமெனு நான்மறை யாகம மெக்கலையு
மெல்லாஞ் சிவமென் றெழிற்குரு வாய்வந் தெடுத்தி சைத்து
மெல்லாஞ் சிவமென லெவ்வெவர் கோட்கு மிசைந்திருந்து
மெல்லாஞ் சிவமென் றுணரகில் லேன்கச்சி யேகம்பனே. 32

ஆட்டைச் சுமந்தநின் பாதார விந்தத்தி லன்புசெய்யாக்
கூட்டைச் சுமந்து குடும்பத்தை யோம்பிக் குருக்கிடையாப்
பாட்டைச் சுமந்து பயன்றெரி யாமலப் பாட்டெழுது
மேட்டைச் சுமந்தவர்க் கின்பமுண் டோகச்சி யேகம்பனே. 33

அறிவே சிவமெனு மாகமம் வேதங்க ளவ்வறிவாய்ச் [லாம்
செறியு முனைப்பொரு ளென்றுகொள் ளாதுநற் றெய்வமெல்
வறிதே திரிந்தலந் தெய்த்தொழிந் தேன்றம் மனையகத்தி
லெறிசுடர் விட்டனற் றேடுவர் போற்கச்சி யேகம்பனே. 34

சொல்லா ரிறந்திட முத்தியென் பார்சிலர் தோதகஞ்செய்
பொல்லா மனேலய முத்தியென் பார்சிலர் பொய்யொழிவே
யொல்லாத மாமுத்தி யென்றுரைப் பார்சில ரோதியவை
யெல்லா மிறந்திட முத்தியென் றுன்கச்சி யேகம்பனே. 35

அங்கையி னெல்லிப் பழம்போ லகந்தொறு நீயிருப்பச்
சங்கை யறவுனை நோக்கஞ்செய் யாச்சமை யச்சழக்கர்
செங்கண னிந்திர னுன்முகன் றன்னையுந் தெய்வமென்பர்
கங்கை மகத்துவ மீனறியா கச்சி யேகம்பனே. 36

மண்ணுதி நாத வரையுரு நாமன் றெனமதியா
நண்ணு வறிவுரு நாமெனக் கண்டுமெய்ஞ் ஞானத்தினு
லுண்ணுடி யொன்றிரண் டென்னு துறங்குவ தன்றியுன்னைக்
கண்ணு லறியப் படுமோ கலிக்கச்சி யேகம்பனே. 37

பற்றறத் தீரத் துறந்தாக மத்தின் பரப்பறிந்து
குற்ற மறுசிவ ஞானக் குரவன் குறிப்பி னின்று
வெற்ற வெறுவெளி கண்டவர்க் கேயின்ப மேவுமன்றிக்
கற்றடங் காதவர்க் கின்பமுண் டோகச்சி யேகம்பனே. 38

கோட்டகங் காரமென் கொல்களிற் றினையின் கோளடக்கி
வாட்டமி லாக்கும் பப்புலி வாயினின் மண்ணையட்டி
யீட்டு மிருவினைப் பேயுடல் கீறி யிணையில்பவக்
காட்டைக் கடந்துனைக் கண்டுகொண் டேன்கச்சி யேகம்பனே.

மாயாப் படலத்தி னுன்மறைப் புண்டு வழிதிறம்பிக்
காயா புரியடைத் தந்தோ கவலைப்பெண் கையகப்பட்
டோயாப் பிணிமகப் பெற்றே துயர்த்தடி யூன்றுமெனக்
கேயாப் படல மிரிப்பதென் றோகச்சி யேகம்பனே. 40

புல்லாதி தாபர நீங்கிநற் சங்கமம் புக்கினவர்
கொல்லா விரதங் குறிக்கொண்டுன் பாதக்குற் றேவல்செய்து
பொல்லாப் பிறப்பை யொழிக்கறி யாரவர் புந்தியந்தோ
கல்லோ மரமோ விரும்போ கலிக்கச்சி யேகம்பனே. 41

சித்தந் தெளிந்தவ ருள்ளச் சினகரத் தேதிகழுஞ்
சுத்த நிராமயச் சோதிய னேயென்று தோத்திரத்தாற்
பத்திசெய் யாவெறும் பாவிகள் சிந்தையிற் பாறிநின்று
யெத்திறத் தானுனைக் காணவல் லார்கச்சி யேகம்பனே. 42

ஆசை யொழிவெந் தக்கானுமுறு வந்த வாசையெல்லாம்
வீசிநி ராசைசெய் வித்தகரே யுனைக் கண்டுகொள்வா
ராசை வழிச்செலுந் துன்மார்க்க ருன்னை யறிவர்கொல்லோ
காசி யினுஞ்சிறந் தோங்குங் கலிக்கச்சி யேகம்பனே. 43

ஓமாதி வாக்கிய மொன்றைப் பிடித்தவ ருத்தமர்கள்
சாமாறு மந்நிலை நிற்பர் சத்தியர் சற்குருவா
லாமாற றிந்தவ ரந்தண ரியோகிக ளஞ்சடக்கிக்
காமாதி குற்றங்க ளைந்தவர் காண்கச்சி யேகம்பனே. 44

வீணாய்ச் சுழனு மெனக்கொரு ஞான விழியளித்துக்
கோணகத் துள்ளொரு கூத்தப் பிரானுண்டக் கூத்தப்பிரா
ணுண வதுமன்று பெண்ணு வதுமன் றலியுமன்று
காணுக்கண் கொண்டினிக் காணியென் றுன்கச்சி யேகம்பனே.

அறிவா யிருந்தறி யாமையை நோக்கி னஃதொழியுஞ்
செறியும் பரிபூ ரணவுருத் தானெனிற் றேகமறு
மறிகரு மங்கட்குச் சாக்கி யுயிரெனின் மாளுமது
பிறியா நிலையிது வென்றான் பெருங்கச்சி யேகம்பனே. 45

படிகக் கடச்சுட ருள்ளும் புறம்பும் பரப்பதுபோ
லுடறொறு நீயுணர் வாகி யகம்புற முற்றிருந்து
மடைமல வல்லிரு ளாருயிர் ஞானத்தை யாவரித்துத்
தொடர்வதென் சொல்லுதி பைம்பொழிற் சூழ்கச்சி யேகம்பனே

அஞ்சக் கரமன்றி வேறொரு மந்திர மாயினில்லை
யஞ்சி லிறையரு ளாவி திரோதைசில் லாணவமற்
றஞ்சி லிரண்டை யருளா லகற்றிடி லாவியந்த
வஞ்சி லிரண்டை யணையுமென் றான்கச்சி யேகம்பனே. 47

மந்திர மாவது மஞ்செழுத் தேயந்த மந்திரத்தி
னைந்து பொருளையுங் காட்டி யிரண்டின் வழியடைத்து
முந்து மிரண்டின் வழியைத் திறந்துயர் முத்திதந்தான்
கந்தன் கணபதிக் கப்பன் கலிக்கச்சி யேகம்பனே. 48

ஒருதலை மாணிக்க முன்ன ரெனக்குப தேசஞ்செய்தா
னிருதலை மாணிக்கம் பின்னரும் பேசி யிருளறுத்தா
னரிதலை மற்றை யயன்றலை சூடிய கங்கையின்மூ
வெரிதலைச் சூலத் தொடெடிப் பான்கச்சி யேகம்பனே. 49

யானென தென்னுஞ் செருக்கொழி யாமையி னெவ்வுயிர்க்கு
மீன வகக்கர ணங்குவி யாதுபின் னிச்சைவழி
வானகம் மண்ணகம் பாதல மூன்றினும் மாறிவரும்
யானென தென்செருக் கற்றோர் தொழுங்கச்சி யேகம்பனே.

விருப்பு வெருப்பற் றுன்வேத மொழிப்படி மெய்யுணர்ந்து
மரிப்பைச் சனிப்பையு மற்றொளி யாகிய மாதவர்பாற்
கருப்புச் சிலையனுங் காலனும் வந்தென் செயக்கடவர்
நெருப்பைப் புழுப்பற் றுங்கொல்லோ நெடுங்கச்சி யேகம்பனே.

ஓசை பரிச முருவஞ் சுவைமண மோரைந்தையும்
வீசி யகமுக மாகி வெறுப்பு விருப்புமற்று
மாசறு திங்களைப் போன்று சதானந்த வாழ்வையுன்னி
யேசறு முத்தியி லென்றிருப் பேன்கச்சி யேகம்பனே. 51

ஆணவ மேலிட வாருயிர் கீழிட் டடங்கிநிற்கு
மாணவங் கீழிட வாருயிர் மேலிட் டருளுருவா
மாணவ நீங்கிய வாருயிர் வேறல வென்றறைந்தா
னாணவ நீங்கிய வன்பர்க் கருள்கச்சி யேகம்பனே. 51

அண்ட மொருகுடைக் கீழாள வேண்டில னம்புயத்தோன்
விண்டு புரந்தரன் றன்வாழ்வும் வேண்டிலன் மெய்யன்பினாற்
றொண்டுசெய் தாங்குன் றிருவடி நீழலிற் றாங்கியுன்னைக்
கண்டு கொளும்வரம் வேண்டுவன் யான்கச்சி யேகம்பனே. 53

வன்புறு கல்லைநீ பொன்னாகச் செய்யற்க மற்றெனக்குச்,
செம்பொன்னைக் கல்லுரு வாகத் திருவுளஞ் செய்திவெறு, மெ
ன்மைப்பெண் ணாக்குதல் வேண்டா மெனக்கெழிற் பெண்ணை
யிழி, யென்புரு வாகச்செய் கண்டா யெழிற்கச்சி யேகம்பனே.

மூர்த்தியுந் தீர்த்தமு மூவாத் தலங்களு மூன்றுருவாய்ச்
சேர்த்தது மெய்மொழி சித்தந் தெளிதரச் செப்புமறை
மூர்த்தி மனச்சுத்தி தீர்த்த மொழிசுத்தி மூடவுட
லார்த்த தலசுத்தி யென்றா னணிக்கச்சி யேகம்பனே. 55

மனமொன்றும் வாயொன்று மின்றி யொருப்பட்ட மாதவர்பா
னனவினிற் றோன்றுவ னான்முக னுட்கி நடுக்கமுற
மனமொன்று வைத்துப்பின் வாயொன்று பேசிய வஞ்சகர்பாற்
கனவிலுந் தோற்றப் படுவதுண் டோகச்சி யேகம்பனே. 56

நாற்றக் குரம்பையை நாயாதிக் குண்டியை ஞானமிலார்
போற்றுஞ் சடத்தைப் புனன்மேற் குமிழியைப் பொய்யுருவைத்
தூற்று நவையைத் தொலையா விடக்கினைத் தோகையர்கள்
ளேற்று முடம்பினை யென்றொழிப் பேன்கச்சி யேகம்பனே. 57

காயத்தைக் கல்லினுந் திண்ணிதென் றெண்ணிப்பொற் காரிகை
மாயத்திற் பட்டுத் தருமஞ் சிறிதின்றி மட்கிரையாய்ப் [யார்
பேயொத் தருநிர யந்தொறும் புக்குப் பிறந்துழலு
நேயத்தை யென்றைக்கு நீக்குவை யோகச்சி யேகம்பனே. 58

பங்கயப் பாசடை நீரிடை நிற்பினும் பற்றையுறா
சங்கை யெரியிற் சுடினுந் தவள நிறங்குறையா
துங்க மணிப்பாம் பிருட்குகை துன்னினு மல்லையுறா
விங்கிவை போனின் னடியா ரெழிற்கச்சி யேகம்பனே. 59

அஞ்ஞான நீக்கத்தி லாருயி ரேசிவ மானமையான் [ன்னிப்
மெய்ஞ்ஞானி யென்ப தெவர்க்குஞ் சரியொக்கும் வேறென்று
பொய்ஞ்ஞானம் பேசும் புருடர்க் குன்பாதப் புணைகிடையா
வெஞ்ஞான் றவர்கருள் செய்குவை யோகச்சி யேகம்பனே. 60

வேறென்று பேசுவ தெல்லாம் விவேக மிலாமையன்றே
கூறொன்றி லாமறை கூறுஞ் சிவனுருச் சீவனென்றுந்
தேறு முமையுறுத் தேகமென் றும்மிதைத் தேறுவரோ
வீறின் மலவயப் பட்டோ ரெழிற்கச்சி யேகம்பனே. 61

சிருட்டிக்கு முன்னுயி ரெல்லாஞ் சிவமெனச் செப்புமறை
சிருட்டிக்குப் பின்னுயிர் வேறுபட் டான்சிறு சீவனென்றே
சிருட்டியை நீக்கிச் சிவோகமென் பாவனை சேர்தலுஞ்
சிருட்டிக்கு முன்சிவ மானான் றிகழ்கச்சி யேகம்பனே. 62

கரணப் பதைப்பறச் சித்திர தீபமுங் கல்லுமொத்துக்
கிரணமும் பானுவும் வேறற் றொளிருமக் கேண்மையைப்போற்
சரணத் திருநிழற் கீழ்நிற்கு ஞானத் தபோதனர்தம்
மரணப் பிறப்பையு மாற்றிவிப் பான்கச்சி யேகம்பனே. 63

முன்னை வினைத்தொட ரெலலாஞ் சின்முத்திரை கொண் டெரித்தேன், பின்னை வருவினை யெல்லா மருளிற் பிரித்துவிட் டேன், நின்னும் வினையினை யெல்லாஞ் சிவார்ப்பணம் செய்தொ ழித்தே, னின்ன மெனக்குப் பிறப்புமுண் டோகச்சி யேகம் பனே. 64

வைதாரை வாழ்த்துவர் பின்னு மிரங்குவர் வாழ்த்திநலஞ்
செய்தாரைப் போற்றுவர் பின்னுஞ் சிரிப்பர்பற் றீவினையை
யெய்தாரை நோக்குவ ரேவினைநோக்கி யிகழ்தல் செய்யார்
மைதா விடுமல மற்றோர் மதிகச்சி யேகம்பனே. 65

துயருற்றபோது மதிற்றளே யார்நற் சுகமடுப்பி
னயமுற் றதிலழுந் தாரிந்த ஞாலத்து ளுட்டமுறார்
பயமுற்ற நீரென நின்னொடொன் றாகிப் பதிந்திருப்பார்
செயலற்று நின்னைத் தெரிசித்த பேர்கச்சி யேகம்பனே. 66

நாமார் நமக்குப் பதியா ரெனவரு ஞானங்களை
மாமாயை கன்ம மலத்திரள் மாற்றிடு மாற்றிடனுங்

தாமாய் முழுவதுஞ் சத்திய ஞானத்தைச் சார்வனென்றுன்
காமாட்சி யம்மைக் கினியபி ரான்கச்சி யேகம்பனே. 67

சும்மா விருக்குஞ் சுகோதயங் காட்டித் துரிசகலா
மும்மாயைக் கப்புறத் தொன்றுய்க் கிடந்த முழுதறிவாஞ்
சிம்மா தனமெனக் கீந்தா யுனக்கென் செயக்கடவேன்
கைம்மாறு மாரிக்கு முண்டோ கலிக்கச்சி யேகம்பனே. 68

கர்நாமிர்தம்.

ஒன்றுகி யுணர் வொருங்கி யோமொழிப் பொருடா ளுகி
மன்றுடு நின்னை யன்பின் வழிபடு மறிவொன் றின்றி
பொன்றுலி பூட்டு மாதர் புணர்ச்சியே பொருளென் றெண்ணிச்
சென்றுடி யுணங்கிப் போனேன் றிருப்புலி வனத்து ளானே.

காதினு லறியா நின்னைக் கண்ணினுற் காணு வென்னை
மேதைசேர் விவேகத் தாலும் வேதத்தார் விஞ்சை யாலும்
பாதத்துக் கேற்ற தொண்டு பற்பல குயிற்றி யன்பாற்
சேதனங் கண்டு கொண்டேன் றிருப்புலி வனத்து ளானே. 70

பாவமு மறமு மொத்துப் பக்குவம் பருவ முற்றிங்
காவியைம் புலனைப் பற்று தகமுக மாகி யென்று
மோவியம் போன்றிட் டங்க ளுண ருண ராமைபோக்கிற்
சீவனுஞ் சிவனும் வேறே திருப்புலி வனத்து ளானே 71

ஆகநா மல்ல விந்த வைம்பொறி நாமே யல்ல
வேகமே நாமென் றுன்னு மிருடிக ளிதயத் துள்ளாய்ப்
பாகமா முமை மணுள பசுபதி பிறவி வேண்டேன்
சேகறு மனத்தோர் போற்றுந் திருப்புலி வனத்துளானே. 72

அறிவினி லகமுண் டாகி யகத்தினின் மனமுண் டாகிப்
பிறிவரு மனத்தின் மாயை மாயையிற் பிண்டாண் டங்கள்
மறியுல கத்தி னுக்கை வந்தவிம் மாய மெல்லாஞ்
செறிதரா தருளிச் செய்வாய் திருப்புலி வனத்து ளானே. 73

பவத்துய ரான் மெலிந்த பக்குவ வுயிர்கட் கெல்லாஞ்
சிவத்தைமுன் விளக்கிப் பின்னர்ச் சீவனை விளக்கி மூன்று
மவத்தையை விளக்கி நீக்கி யறிவுரு வானு யென்றுஞ்
சிவத்துவ மசிநீ யன்றே திருப்புலி வனத்து ளானே. 74

அறிவொடு கடலாயாவி யலையதாய்த் தத்துவங்கள்
பிரினுரை குமிழி யுப்புப் பிணமலம் வாயு கன்மங்
குறிபல மீன மாயை யிவற்றிறுற் குறைவொன் றில்லைச்
செறிதிரு வருளான் மாற்றுய்த் திருப்புலி வனத்து ளானே. 75

புழுவின நிறையு மாக்கை யொன்பது பொள்ள லாலு
மிழிபடு மலங்கள் வீசு மிதனினு நரக னன்றே
வழுவையி னுரிபோர்த் தாடும் வள்ளலே பிறவி வேண்டேன்
செழுமணி மாட மோங்குந் திருப்புலி வனத்து ளானே. 76

பிறந்தவ ரிறக்கை யாலு மிறந்தவர் பிறக்கை யாலு
மறிந்துயர் பெரியோ ரெல்லா மாக்கையை வெறுத்த லாலு
மறந்துநான் பிறவி வேண்டேன் மறுபிறப் பிலாத வண்ணஞ்
செறிந்தருள் செய்ய வேண்டுந் திருப்புலி வனத்து ளானே. 77

சிவனையே தெய்வ மென்று சிந்தையிற் சிந்தை செய்மி
னவனலாற் றெய்வ மில்லை யவனுக்கே யடிமை செய்மின்
றவமிலா மனித ரெல்லா மவனடி சார மாட்டார்
புனையவா தனை கடத்திப் பொன்னடிக் கமல மீவன். 78

நூலிடைக் கருத்தை விட்டு நுண்ணிய ஞான மின்றி
மாலுறு சமய வாத வசனத்தை வசனி யாதே
சீலவா சிரியன் சொன்ன செந்நெறிச் சித்தம் வைத்திட்
டாலமார் கண்டத் தானை யகமுக மாக நோக்கே. 79

பண்டைய வினைவாய்ப் பட்டுப் பத்தியும் பரிவு மின்றி
வண்டறை கொன்றை யானை மனத்திடை யிருத்த மாட்டீ
ரண்டரு முனிவர் தாமு மரகர வெனுஞ்சத் தத்தைத்
கண்டுகொண் டிருப்பீ ரல்லீ ரென்செய்வீர் கால னுக்கே. 80

ஐயமு மிட்டே னில்லை யடியர்க்கொன் றீந்தே னில்லை
துய்யமெய்ஞ் ஞான நூலின் சொற்பொரு ளறிந்தே னில்லை
மையணி கண்டத் தானை மலர்கொடு பணிந்தே னில்லை
வையகத் துவர்நீ ரொத்தே னென்செய்கேன் மதிவல் லீரே. 81

நீரிலாக் குளமு ஞான நிலையிலா நெஞ்சு நீண்ட
தேரிலா வூரும் பன்னூற் றெரிந்தவ ரில்லா நாடு
[illegible]ரிலாச் சீரும் போல வீசனுக் கடிமை யென்னும்
[illegible]லா வாக்கை பெற்றேன் பேதையேன் பேதை யேனே. 82

ஞானத்தான் ஞானி யல்லேன் னன்மையாற் குடும்பி யல்லேன்
மோனத்தாற் றுறவி யல்லேன் மூடத்தான் மூட னல்லேன்
வானத்தார் வணங்குந் தூய வயப்புலி வனத்து ளார்க்குத்
தானற்ற வடிமை செய்யேன் சழக்குடைச் சழக்க னேனே. 83

ஆமைபோ லைந்தொ டுக்கி யறிவினு ளறிவாய் நின்ற
வோமொழிப் பொருளை நாடி யொன்றுபட் டிருக்கும் வண்ணங்
காமனைக் காய்ந்த கண்ணுங் கடையரிற் கடைய னேற்குச்
சேமநல் லறிவு காட்டாய் திருப்புலி வனத்து ளானே. 84

பற்றறத் துறந்த ஞானப் பட்டினத் தடிகள் போலப்
பற்றறத் துறந்தே னில்லை பராபர நிலையைக் கண்டாங்
கற்றசீ வாக்க ரல்லே னன்பிற்கண் ணப்ப னல்லேன்
குற்றஞ்செய் மூர்க்க னல்லேன் பத்தியிற் கோழை யேனே. 85

கடலிலே கலந்த வாறு கதியிடைப் பின்வந் தாலும்
கடலினுட் டன்மை குன்றாக் கதையென நினைக்கண் டோரு
முடலிடை யிருந்து முண்டு முறங்கியு முலாவி நின்றுந்
திடனுடை ஞானி யன்றோ திருப்புலி வனத்து ளானே. 86

ஒன்றிரண் டல்ல வென்றுங் கொன்றினை யொன்றாற் பற்றி
நன்றுநீ தென்று நிற்கு ஞானிக ளுள்ளக் கோயி
லென்றுநிற் கினிய தென்றே விடைவிடா திருந்த தெம்மான்
சென்றிடை யாதசெல்வத் திருப்புலி வனத்து ளானே. 87

நகாரத்தின் மயலை ஞான வாளினு னறுக்கிப் பின்னர்
மகாரத்தின் மறப்பை நாமே மணியெனு மதியால் வாட்டி
வகாரத்தின் வழியே சென்று மாலய னறியா தேங்குஞ்
சிகாரத்தைக் கண்டே னின்னுற் றிருப்புலி வனத்து ளானே. 88

நோயிலா வாக்கை பெற்று நுண்ணறி வுடைய ராகித்
தாயினு மினிய நின்னைச் சமாதியிற் காண மாட்டார்
மாயையால் வகுக்கப் பட்ட வடிவிடை நின்னைக் காணச்
சேயரா யரற்று கின்றார் திருப்புலி வனத்து ளானே. 89

தனுவொடு கலவா ராயின் சார்தரா வினை யிரண்டுந்
தனுவொடு கலத்த லாலே சார்தரும் வினை யிரண்டுந்
மனமொழி காயமூன்று மவுனமுத் திரையி னிற்பச்
சினமய லகன்றோர் போற்றுந் திருப்புலி வனத்து ளானே. 90

சைவ சித்தாந்த மெல்லாந் தானவ ஞகி நிற்றல்
மையறு வேத சித்த மற்றது நானே யென்ன
துய்வகைக் கிரண்டு மொன்றென் ருேதியென் னுயிர்க்கிலாபஞ்
செய்தசற் குரவ னீயே திருப்புலி வனத்து ளானே. 91

## சுருதிசாரவிளக்கம்.

### முதல் வாக்கியம்.

உலகமே பரப்பிரம முரைக்குமந்தப் பிரமநா
மலகில்கலை யுணர்ந்தாலு மருத்தமிதே யறிகண்டாய்
பலமயலைத் துறந்தரிய பரமபதந் தனைத்தாவி
யுலவுசுக முனிவரனே யென்றுரைத்தா னுயர்முனிவன். 92

ஆகிலிந்தப் பரப்பிரம மகிலமயமாயிற் றென்ருற்
சோகமொடு பிறந்திறக்குந் தொழிலுளவோ வென்பாயே
லீகைபல பணியாயு மிறந்தனவோ வதுபோல
வேகபர மகிலமுமா யிருக்கும்வியா பகத்தாலே. 93

தந்தைவயி னுண்டாய சந்ததியு மவனென்றே
முந்துமறை யுரைதருமான் முழுவதுந்தா னன்றியொரு
சிந்துமிலை யெனவீசன் சேயிழைக்கோ தியபரிசாற்
பந்தமறுஞ் சுகமுனிவ பார்பிரமஞ் செகமென்றே. 94

எல்லாவண் டமுமியானே யாவருமென் சொரூபமே
நல்லார்பொல் லார்நானே நன்மையொடு தீமையுநா
னுல்லாச பரமுத்தி யொன்றொழிய விரண்டில்லை
கல்லார்க்கிப் பொருடெரியா கண்ணிலர்க்குக் கதிருண்டோ.

ஒலியாகிப் பரிசமா யுருவாகி யிரதமாய்ச்
சலியாத கந்தமாய்த் தாரணியாய்ப் புனலனலாய்
மலிவாயு வானமாய் மதியிரவி யியமானு
யலியாகி யாணுகிப் பெண்ணுகி யமர்கின்றேன். 96

சாவதுவும் பிறப்பதுவுந் தனுவன்ருே வஃதறிதி
சாவதுவும் பிறப்பதுவுந் தாமென்றே யுரைதருவார்
போவதுவும் வருவதுவும் புரியட்ட சரீரமே
போவதிலை வருவதிலை போதமயப் பொருளுமே. 97

இரண்டாம் வாக்கியம்.

ஏகமே வாத்துவிதம் பிரமோக மென்றிசைப்பத்
தாகமொடுஞ் சுகமுனிவன் சந்தேகத் தடைநீங்கி
யாகமெனுஞ் சிறையுலவா தாநந்தற் சிறையாகி
யேகமே யத்துவிதம் பிரமநா மெனத்தெளிந்தான். 98

அத்துவிதந் துவிதமல்லா தெனவரிய மறையேக
மத்துவித மிதற்கைய மிலையென்றே யறைந்தாலும்
பொய்த்துவித மயக்கொழியார் பூருவா தனையாலே
யத்துவித மொழிபொருடா னன்னியமாய்த் தெளிவரால். 99

ஒன்றாகிப் பரவெளியா யுருவருவ மிலதாகிக்
குன்றாத பரப்பிரமங் குகையிருக்கு மதைவிளக்கி
னன்றாரு மிதயகுகை நாமதுவே யையமிலை
கன்றாத நின்மொழியான் மெய்ஞ்ஞானங் கடைப்பிடித்தேன்.

ஊனாடி யுயிர்நாடி யுண்ணாடிப் புறநாடி
வானாடி வளிநாடி மண்ணாடி நீர்நாடித்
தீநாடி நாதவிந்து செங்கதிரோன் றனைநாடி
நானாடிப் பார்ப்பளவி ஞானேயப் பரப்பிரமம். 101

பல்கலையா லாகமத்தாற் பகர்கீதை பதினெட்டா
னல்வினையாற் கருமத்தா னன்மறையான் ஞானத்தாற்
சொல்லூகத் தான்மறையாத் துணிவாலிற் றுறந்தோரா
னல்லோரா னன்பார்க்கி ஞானேயப் பரப்பிரமம். 102

ஒருகாலந் தோன்றினே னொருகாலம் வளர்கின்றே
னொருகாலஞ் சாம்பினே னென்றுரைக்கு முணர்விலிக
ளொருகாலம் பிறந்ததிலை யொருகாலம் வளர்ந்ததிலை
யொருகால மறிந்ததிலை நானேயவ் வுயர்பிரமம். 103

நான்மனித னன்றுநா னவிலுறுதே வனுமன்று
நானிராக் கதனன்று நவியசுர னனன்று
நான்முனிவ னன்றுரக னன்முகனு நானன்று
நான்றிருமா லன்றரனு மன்றரிய பிரமநான். 104

முன்னவரு நானல்ல முடிமன்னர் நானல்ல
துன்னுவசி யருமல்ல சூத்திரரு நானல்ல

வன்னியரு நானல்ல வன்னியரு நானல்ல
பின்னமொடு பிறப்பிறப்பு மில்லாத பிரமநான். 105

நான்பிரம மெனுஞான ஞானிகள்பா லுளவாகு
மூன்பிரமை யொழியாதார்க் கொருக்காலுந் தோன்றுவா
மான்வயிற்றி னரிதார மருவுமன்றி வராகவயிற்
றான்பிறக்கக் கண்டாரு முண்டோபொய்க் கலியுகத்தும். 106

ஆதலா லகம்பிரம மெனுஞ்சுருதி யகந்தெளிந்து
போதினன் முகப்பிரமன் புண்டரிகத் தாள்வணங்கி
யோதொணு மகிழ்ச்சியொடு மூலாவினு னுலகமெல்லாஞ்
சோதியிவன் றனென்னத் துறந்தசுக முனியம்மா. 107

மூன்றும் வாக்கியம்.

பக்குவர்க்காய்க் கல்லாலின் பாங்கெழுந்த தெய்வமே!
தக்கவிராட் டிருவுருவாய் தமியேன்றன் விண்ணப்ப
முக்குறும்புங் கடந்தவிட முழுத்துரிய நிலையென்று
லக்குறும்பைக் கடப்பவன்யா ரவனேயப் பரப்பிரமம். 108

பாவாபா வாதீதம் பிரமோக மெனப்பகரு
மூவாத வாக்கியத்தின் முடிவறியின் முன்மாயை
நீவாத பின்மாயை யிரண்டிற்கு நீண்டிருக்கு
மோவாத பரப்பிரம நீயாமென் றுணர்கண்டாய். 109

கேவல சகலமென்னக் கிளைத்தெழு மாயைதன்னைக்
கேவல ஞானத்தாலே கிழித்தறி வாகிநிற்பாய்
பூவலம் புரிந்தமாந்தர் புண்ணிய தீர்த்தமாதி
யாவலாய்த் தானமாதி யாகமா தியவிதாமால். 110

நினைவழிப்பி னதன்பின்னே நினையாமை யெழுமத்தை
நினைவறியா வறிவுருநா மென்றவற்றி னயனிற்பாய்
மனிதரறி யாவிந்த மாறுத சுகோதயத்தைத்
தனியிருந்து காண்டியாற் சகங்கடந்த தவத்தோயே. 111

காரணகா ரியங்கடந்த கரிப்பிரம நாமென்றே
யாரணநூற் புகன்றபடி யனுபவிப்பா யருந்தவனே
காரியமேழ் காரணமேழ் கழறினுபா திகளாகுங்
ரியமுன் பாலுடைத்துக் காரணமக் கடவுடன்பால். 1

இன்னணமா யுயிரரனைக் கடந்தேறி யிறையரனைப்
பன்னுமறை யின்படியே கடந்திடிற்பைங் கிளிப்பெயரோய்
சொன்னபரப் பிரமமய நீயாயே தோன்றுமா
லன்னியமா யொருபொருளுந் தோன்றாவே யனுபவத்தே. 113

தேகமலேன் பொறியல்லேன் செறிகரண நானல்லேன்
மூகபிரா ணனுமல்லேன் முழுப்பிரம நானென்னச்
சோகமெனப் பாவிக்கிற் சுகமுனிவ வுயிர்த்தடைபோம்
மாகமுறு மதிபோல விளங்குமுன்றன் மதிதானே. 114

பாவனையெ லாமிறந்தாற் பாழன்றோ பரமேட்டி
பாவனையெ லாமிருந்தாற் பசுகமன் றோவிரண்டு
மோவியதே நின்னிலைய முபாதியறு சூனியமா
யோவியம்போ னிருவிகற்ப வுணர்வாய்நில் சுகமுனிவ. 115

வே று.

அறிவை யன்றி யறியப் படும்பொருள்
சிறிது மில்லை யெனத்தெளி யாவிடின்
மறியு மைம்புல வாதைத் திரைகளில்
பிறவி மைக்கடல் வீழ்வை பெருந்தவ. 116

நான்காம் வாக்கியம்.

எத்தனை தாயைக் கண்டோ மெத்தனை தமரைக் கண்டோ
மெத்தனை மனையைக் கண்டோ மெத்தனை மகவைக் கண்டோ
மெத்தனை யூரைக் கண்டோ மெத்தனை பேரைக் கண்டோஞ்
சித்தமே திரும்பா யீசன் றிருவடி காணு மாறே. 117

வே று.

வாமனமே யென்கண்டாய் வையகத்திற் போயருந்திச்
சாமளவு மென்னையேன் றடுமாற்றஞ் செய்கின்றாய்த்
தூய்மனமே யென்னோடுந் துணைப்பட்டா யாகிலன்றே
தேய்மதியூர் சடையானை யின்றேசென் றடைவேனே. 118

விரியமனங் கடவதென வியாதனிட்ட சாபமோ
பெரியபிரா ரத்தமோ பிரமன்விதித் தனவிதியோ
கரியமனக் கள்ளாநீ கவலைவனம் புகுகின்றா
யொருமொழியா லுனைக்கட்டி யுருட்டிவிடக் காண்பேனோ.

பெரியவர்தந் தரிசனத்தாற் பெறுதபொரு ளொன்றுண்டோ
வரியவவர் மொழித்தடியா லடிக்கின்றேன் வாமனமே
மொருபொழுதோர் நொடியளவு நிற்பாயே லுயர்முத்திக்
கரைகாண்பேன் மெய்ஞ்ஞானக் கடவுளையுங் காண்பேனே. 120

அறிகின்றே னறிவில்லே னெனுநிலையங் கடந்தநிலம்
பிறிவறிய சுவானுபவா தீதம்பிர மோகமென
மறுவின்மறை கூறுமா வாக்கியத்தைக் கடைப்பிடிக்கி
னறிகின்ற வனுபவமு மனுபவமன் றுமன்றே. 121

உன்றந்தை யுரைத்ததுவு முயர்முனிவ னுரைத்ததுவு
மன்றல்கமழ் கமலனுரை வாக்கியமு மகதேவ
ரன்றுரைத்த வாக்கியமும் யானுரைத்த வரும்பொருளு
மொன்றேயா மையமலே யுனையன்றி வேறில்லே. 122

பூசனையார் பூசகன்யார் புகலென்றான் சுகமுனிவ
னாசையெலா நிராசையா யாநந்த முங்கடந்த
வீசனு னீச னிரண்டற்ற வெல்லையிலே
பூசனைமார் பூசகன்யார் புகலென்றான் புகழ்ச்சனகன். 123

வாழ்த்திடவும் வாயில்லே வணங்கிடவுஞ் சிரமில்லே
சூழ்த்திடவு மலரில்லே தொழுதிடவுங் கையில்லே
யேத்திடவும் பாவில்லே யெதிர்ந்திடவோ ரிறையில்லேப்
பார்த்தவிடந் தொறுமியானே யெனையானே பணிகின்றேன்.

---

## சிந்தனை வெண்பா.

### தக்ஷிணு மூர்த்தி துதி.

ஏணியைப்போ லியாவரையு மேறவிட்டு மியானேறேன்
றோணியொப்புப் பல்லியொப்புச் சொல்லலா-நாணமற
வெல்லார்க்கும் போதித்தும் யானில்லே னென்செய்கேன்
கல்லாலா முற்றுமெனக் கா. 125

பொன்னைப் பொருளைப் புகழைக் குறியாது
தன்னை யளித்தவனே சற்குருவா-மின்னமின்னம்
பொன்னீ பொருளீ யென்றோதுங் குருவெல்லா
மன்னியனே சற்குருவன் றாம். 126

ஐயந் திரிவகற்றி யான்மாவைக் காட்டியதற்
கைய னருளை யறிவித்து-மெய்யன்
திருவடியைக் காட்டிச் சிவோகம் பாவிக்க
வருள்செய்வோன் ஞானகுரு வாம். 127

கண்போல வான்மா கதிர்விளக்குப் போலாக்கை
விண்போற் சிவமதிபோல் விஞ்ஞானம்-விண்போந்த
சூரியன்போல் மெய்ஞ்ஞானஞ் சூழிருள்போ லஞ்ஞானந்
தாரகைபோற் றத்துவங்க டான். 128

சிவன்வேறு சீவன்வே றென்னுதே சீவன்
சிவன்கூறு சிவைகூறு தேகஞ்-சிவனிதயத்
தான்மா பிறந்தானன் றைம்முகத்து மைம்பூதந்
தான்பிறக்கக் காண்கிலைநீ தான். 129

தேறினர் சித்தத் திருந்தார் சிவனென்றால்
வேறுபடுத் துவதேன் வீணுநீ-மாறுபட்டுப்
பேசாதை யெல்லாம் பிரமமென்னும் வேதாந்த
மாசையிற்று னீயே யது. 130

சிவன்வேறு சீவன்வே றென்றிரண்டாய்ச் செப்பு
மவன்சிவனை யென்று மறியாதான்-றவமில்லா
வுள்ளத்தார்க் கெய்துமோ வூர்க்குருவி யாகாச
மெள்ளப் பறந் தறியுமே. 131

அதுவேநீ யாமென் றருமறைகள் சொல்லு
மெதிர்சிவனே நீயாகு யென்னு-முதுசைவம்
வேறேவே றன்றேசொல் வேதியனே விண்விசும்பும்
வேறேவே றன்றே விளம்பு. 132

ஐம்பொறியு மைம்புலனு மைம்பூத முமகற்றி
யின்பசிவ நீயென்று லேலாதோ-வன்பனே
முத்திமுடி வீதென்றன் முன்னூலும் பின்னூலு
மற்றநூ லெல்லா மற. 133

தானே பரமாணுற் றத்துவசா லத்திலே
யேனோ பிறந்திறந்தே னித்தனைநாள்-மாணுகேள்
நீபிறந்த தில்லையுண்மை நெஞ்சுபுல னும்பொறியு
நீபிறந் தாற்போ னிச்சயம். 134

அமுசோகம் பாவனையா லாருயிரின் போதச்
சமுசயத்தை யென்மொழியாற் றள்ளி-யிமையளவுங்
கட்டவுட லாகாமற் காமிகத்திற் சொன்னவண்ண
நிட்டையிலே நின்றுவிடு நீ. 135

மெய்கண்டான் வெண்காட னெங்குருச்சிற் றம்பலவன்
பொய்கண்ட கண்டசுகர் பூரணர்க-ளேவரையு
முள்ளடக்கி யொன்று யுணர்வா யுறங்கினர்போ
லுள்ளடங்கி நீயு முணர். 136

தானே சிவமல்லாற் றனிச்சிவம்வே றில்லையென்ற
மோனமொழி யொன்றின் முடிபறியா-யோனிதருஞ்
சென்றுபிறந் தெய்ந்தேன் சிவாயசிவ வென்செய்கே
னென்றுகடைத் தேறுவே னியான். 137

எல்லா வுயிர்கட்கு மின்பங் கொடுத்தலால்
எல்லாஞ் சிவனையே யெண்ணலால்-எல்லாஞ்
சிவனுருவே யாமாற் றெவிட்டாப்பே ரின்பஞ்
சிவனுருவ மென்றுணர்விற் றேர். 138

ஆகாயந் தன்னை யளக்கமரக் காலெடென
வாகாயம் மரக்காற் குள்ளிருக்க-வாகாயங்
கண்டாயே லந்தக் கருத்தே கருத்தாகிக்
கண்டா வதுவே கதி. 139

நிராமய வந்தாதி.

மெய்யைப் பொய்யென்றுன் வெளியைநல்ல வீடென்றுன்
சைவத் துரைகாழிச் சம்பந்தன்-ஐயமற
நின்போதம் போமிடத்தே நீயே சிவமென்று
னென்போதத் துள்ளே யிருந்து. 140

இருந்த படியிருந்தா லிறையுருவந் தோன்றும்
பொருந்துமல மிம்மையிலே பொன்று-மிருந்தபடி
யேதென்றங் குன்னி யிரண்டாட்டு வார்கருண்டோ
போதமுண்ட பிள்ளை புகல். 142

தானே சிவமான சத்தியஞா னாநந்த
மோனநிலை சொல்காழி முன்னேனே-ஞானிகடம்
முள்ளமா கயமா வொன்றுய வாநந்த
வெள்ளமாய் நிற்குமவர் மெய். 143

## திருஞான சம்பந்த சுவாமிகள் அருளிச்செய்த
# தேவாரப் பதிகங்கள்.

### திருப்பிரமபுரம்-பண்-நட்டபாடை.

தோடுடைய செவியன் விடை யேறியோர் தூவெண் மதிசூடிக், காடுடைய சுடலைப் பொடிப்பூசி யென்னுள்ளங் கவர் கள்வ, னேடுடைய மலரான் முனைநாள் பணிந் தேத்த வருள் செய்த, பீடுடைய பிர மாபுர மேவிய பெம்மா னிவனன்றே. 1

### திருப்புகலூர் பண்-நட்டபாடை.

பண்ணிலா வும்மறை பாடலி ளனிறை சேரும் வளையங் கைப், பெண்ணிலாவ வுடையான் பெரியார்கழ லென்றுந் தொழுதேத்த, வுண்ணிலாவி யவர்சிந்தையு ணீங்கா வொருவற் கிடமென்பர், மண்ணிலாவும் மடியார்குடி மைத்தொழில் மல்கும் புகலூரே. 2

வெள்ள மார்ந்து மிளிர் செஞ்சடை தன்மேல் விளங்கும் மதிசூடி, யுள்ள மார்ந்தவடி யார்தொழுதேத்த வுகக்கும் மருள் தந்தெங், கள்ள மார்ந்துகழியப் பழிதீர்த்த கடவுட் கிடமென்பர், புள்ளை யார்ந்தவய லின்விளை வால்வள மல்கும் புகலூரே. 3

### ஸ்ரீ புகலியும் திருவீழி மிழலையும் பண் நட்டபாடை.

இலங்கையர் வெந்தொழில் வாய்த்ததிண் டோளிற் றலைபத் விர லொற்றியைந்து, புலங்களைக் கட்டவர் போற்றவந்தண் புகலிநிலாவிய புண்ணியனே, இலங்கெரி யேந்திநின் றெல்லியாடு மெம்மிறை யேயிதுவென் கொல்சொல்லாய், விலங்கலொண் மாளிகை சூழ்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. 4

### திருநள்ளாறுந் திரு ஆலவாயும் பண்-நட்டபாடை.

இலங்கை யிராவணன் வெற்பெடுக்க வெழில்விரலூன்றி யிசைவிரும்பி, நலங்கொளச் சேர்ந்த நள்ளாறுடைய நமபெருமானிது வென்கொல் சொல்லாய், புலன்களைச் செற்றுப் பொறியைநீக்கிப் புந்தியிலு நினைச் சந்திசெய்யு, மலங்கனல் லார்கள் அமருங்கூட லாலவாயின்க ணமர்ந்தவாறே. 5

### திருவீழிமிழலை-பண்-நட்டபாடை.

ஈறாய்முத லொன்றாயிரு பெண்ணாண்குண மூன்றாய், மாறா
மறை நான்காய்வரு பூதம் மவையைந்தா, யாறார்சுவை யேழோ
சையோ டெட்டுத் திசைதானாய், வேறாயுட னானானிடம் வீழிம்
மிழலையே. 6

பண்ணும்பத மேழும்பல வோசைத்தமி ழவையு, முண்ணி
ன்றதோர் சுவையும்முறு தாளத்தொலி பலவு, மண்ணும்புன
லுயிரும்வரு காற்றுஞ் சுடர்மூன்றும், விண்ணும்முழு தானானி
டம் வீழிம் மிழலையே. 7

### திருப்புள்ளமங்கை, திரு ஆலந்துறை-பண்-நட்டபாடை.

மலையான்மகள் கணவன்மலி கடல்சூழ்தரு தன்மைப், புலை
யாயின களைவானிடம் பொழில்சூழ்புள மங்கைக், கலையால்மலி
மறையோரவர் கருதித்தொழு தேத்த, அலையார்புனல் வருகா
விரி யாலந்துறை யதுவே. 8

### திருச்சிவபுரம்-திருவிராகம்-பண்-நட்டபாடை.

சினமலி யறு பகை மிகுபொறி சிதைதரு வகைவளி நிறு
விய, மனனுணர் வொடுமலர் மிசையெழு தருபொரு ணியதமு
முணர்பவர், தனதெழி லுறுவது கொடுவடை தருபர னுறைவது
நகர் மதிள், கனமரு வியசிவ புரநினை பவர்கலை மகடர நிகழ்
வரே. 9

### திருச்சோற்றுத் துறை-பண்-தக்கராகம்.

செப்பநெஞ் சேநெறி கொள்சிற் றின்பந், துப்பனென்னா
தரு ளேதுணை யாக, வொப்ப ரொப்பர் பெருமானொளி வெண்
ணீற், றப்பர்சோற் றுத்துறை சென்றடை வோமே. 10

கோது சாற்றித் திரிவா ரமண்குண்ட, ரோது மோத்தை
யுணரா தெழுநெஞ்சே, நீதிநின்று நினைவார் வேடமா, மாதிசோ
ற்றுத் துறைசென் றடைவோமே. 11

### திருமயிலாடு துறை-பண்-தக்கராகம்.

கரவின்றிநன் மாமலர்கொண்டே, யிரவும்பகலுந் தொழு
வார்கள், சிரமொன்றியசெஞ் சடையார்வாழ், வரமாமயிலாடு
துறையே. 12

ஊனத்திருணீங் கிடவேண்டில், ஞானப்பொருள்கொண் டடிபேணுந், தேனொத்தினியா னமருஞ்சேர், வானம்மயிலாடு துறையே. 13

அஞ்சொண்புலனு மவைசெற்ற, மஞ்சன்மயிலாடுதுறை யை, நெஞ்சொன்றிநினைந் தெழுவார்மேற், றுஞ்சும் பிணியாயி னதானே. 14

திருப்பேணுபெருந்துறை-பண்-தக்கராகம்.

நிலனொடு வானு நீரொடு தீயும் வாயுவு மாகி யோரைந்து, புலனொடு வென்று பொய்மைக டீர்த்தபுண்ணியர் வெண் பொடிப்பூசி, நலனொடு தீங்குந் தானலதின்றி நன்கெழு சிந்தையராகி, மலனொடு மாசுமில்லவர் வாழுமல்கு பெருந்துறை யாரே. 15

திருவலிவலம்-பண்-பழந்தக்கராகம்.

ஒல்லை யாறி யுள்ள மொன்றிக் கள்ள மொழிந்து வெய்ய, சொல்லை யாறித் தூய்மை செய்து காமவினை யகற்றி, நல்ல வாறே யுன்ற னுமநாவி னவின் றேத்த, வல்ல வாறே வந்து நல்காய்வலிவல மேயவனே. 16

மெய்ய ராகிப் பொய்மை நீக்கிவேதனையைத் துறந்து, செய்ய ரானார் சிந்தை யானே தேவர்குலக் கொழுந்தே, நைவனு யேனுன்ற னுமம் நாளுநவிற் றுகின்றேன், வைய முன்னேவந்து நல்காய் வலிவல மேயவனே. 17

திருமுதுகுன்றம்-பண்-பழந்தக்கராகம்.

தேவராயு மசுரராயுஞ் சித்தர்செழு மறைசேர், நாவராயு நண்ணுபாரும் விண்ணெரி கால்நீரு, மேவராய விரைமலரோன் செங்கண்மா லீசனென்னு, மூவராய முதலொருவன் மேயது முதுகுன்றே. 18

பற்றுமாகி வானுளோர்க்குப் பல்கதிரோன் மதிபா, ரெற்று நீர்தீக் காலுமேலை விண்ணிய மானனொடு, மற்றுமாதோர் பல்லு யிராய் மாலய னும்மறைகள், முற்றுமாகி வேறுமானன் மேயது முதுகுன்றே. 19

திருத்தூங்கானைமாடம்-பண்-பழந்தக்கராகம்.

மயறீர்மை யில்லாத தோற்றம்மிவை மரணத் தொடொத் தழியு மாறுதலால், வியறீர மேனுலக மெய்தலுறின் மிக்கொன் றும் வேண்டா விமலனிட, முயர்தீர வோங்கிய நாமங்களா லோ வாதுநாளு மடிபரவல்செய், துயர்தீர் கடந்தைத் தடங்கோயில் சேர் தூங்கானைமாடந் தொழுமின்களே. 20

திருக் கோளிலி-பண்-பழந்தக்கராகம்.

தாவியவ னுடனிருந்துங் காணாத தற்பரனை, யாவிதனி லஞ்சொடுக்கி யங்கணனென் றாதரிக்கு, நாவியல்சீர் நமிநந்தி யடி களுக்கு நல்குமவன், கோவியலும் பூவெழுகோற் கோளிலியெம் பெருமானே. 21

கோயில்-பண்-குறிஞ்சி.

நிறைவெண் கொடிமாட நெற்றிநேர் தீண்டப், பிறைவந் திரைதாக்கும் பேரம் பலந்தில்லைச், சிறைவண் டறையோவாச் சிற்றம்பல மேய, விறைவன் கழலேத்து மின்ப மின்பமே. 22

செல்வ நெடுமாடஞ் சென்று சேணோங்கிச், செல்வ மதி தோயச் செல்வ முயர்கின்ற, செல்வர்வாழ் தில்லைச் சிற்றம்பல மேய, செல்வன் கழலேத்துஞ் செல்வஞ் செல்வமே. 23

திருக்கடவூர்க் காரோணம்-பண்-குறிஞ்சி.

நல்லா ரறஞ் சொல்லப் பொல்லார் புறங்கூற, வல்லா ரவர் தூற்ற வடியார்க் கருள்செய்வான், பல்லார் தலைமாலை யணி வான் பணிந்தேத்தக், கல்லார் கடவூர்க் காரோணத் தானே.

திருப்பிரமபுரம்-திருவிருக்குக்குறள்-பண்-குறிஞ்சி.

நறவமார் பொழிற், புறவ நற்பதி, யிறைவ னாமமே, மறவ னெஞ்சமே. 25

திரு-ஆரூர் திருவிருக்குக்குறள்-பண்-குறிஞ்சி.

சித்தந் தெளிவீர்கா, ளத்த னாரூரைப், பத்தி மலர்தூவ, முத்தி யாகுமே. 26

பிறவி யறுப்பீர்கா, ளரவ னாரூரை, மறவா தேத்துமின், வி யாகுமே. 27

துள்ளு மிருவர்க்கும், வள்ள லாரூரை, யுள்ளுமவர் தம் மேல், விள்ளும் வினை தானே. 28

கடுக்கொள் சீவரை, யடக்கி ஞுரூ, ரெடுத்து வாழ்த்து வார், விடுப்பர் வேட்கையே. 29

திருமுதுகுன்றம் திருவிருக்குக்குறள்-பண்-குறிஞ்சி.

ஈசன் முதுகுன்றை, நேச மாகிநீர், வாச மலர்தூவப், பாச வினைபோமே. 30

இருவரறியாத, வொருவன் முதுகுன்றை, யுருகி நினைவார் கள், பெருகி நிகழ்வோரே. 31

திரு அன்னியூர் திருவிருக்குக்குறள்-பண்-குறிஞ்சி.

நிறைவு வேண்டுவீ, ரறவ னன்னியூர், மறையு ளான் கழற், குறவு செய்மினே. 32

திருஆரூர்-பண்வியாழக்குறஞ்சி.

உள்ளமோ ரிச்சையினு லுகந்தேத்தித் தொழுமின் ருெண் டீர்மெய்யே, கள்ள மொழிந்திடுமின் கரவாதிரு பொழுதும், வெள்ளமோர் வார்சடைமேற் கரந்திட்ட வெள்ளேற்ருன்மேய, வள்ள லகன் கழனியாரூ ரடைவோமே, 33

வீடுபிறப் பெளிதா மதனை வினவுதிரேல் வெய்ய, காடிட மாக நின்று கனலேந்திக் கைவீசி, யாடுமவிர் சடையா னவன் மேய வாரூரைச் சென்று, பாடுதல் கைதொழுதல் பணிதல் கரு மமே. 34

திருப்பருப்பதம் பண்-வியாழக்குறிஞ்சி.

நினைப்பெனு நெடுங்கி ணற்றை நின்றுநின் றயராதே, மன த்தினை வலித்தொழிந்தே னவலம்வந் தடையாமைக், கனைத் தெழு திரள்கங்கை கமழ்சடைக் கரந்தான்றன், பனைத்திரள் பாயருவிப் பருப்பதம் பரவுதுமே. 35

திருக்கழுமலம், திருத்தாளச்சத்தி-பண்-வியாழக்குறிஞ்சி.

பத்திப்போர் வித்திட்டே பரந்த வைம் புலன்கள்வாய்ப், பாலே போகா மேகாவாப் பகையறு வகைநினையா, முத்திக்கே விக்கத்தே முடிக்குமுக் குணங்கள்வாய், மூடாவூடா நாலந்தக்

கரணமு மொருநெறியாய்ச், சித்திக்கே யுய்த்திட்டுத் திகழ்ந்த மெய்ப் பரம்பொருள், சேர்வார்தாமே தானுகச் செயுமவ னுறையுமிடங், கத்திட்டோர் சட்டங்க லந்திலங்கு நற்பொ ருள் காலே யோவா தார்மேவுங் கழுமல வளநகரே. 36

திருக்கழுமலம்-பண்-மேகராகக்குறிஞ்சி.

புவிமுதலைம் பூதமாய்ப் புலனைந்தாய் நிலனைந்தாய்க் கரண நான்கா, யவையவைசேர் பயனுருவா யல்லவுரு வாய்நின்ற னம ருங்கோயி, றவமுயல்வோர் மலர்பறிப்பத் தாழவிடு கொம்பு தைப்பக் கொக்கின்காய்கள், கவணெறிகற் போற்சுனையிற் கரை சேரப் புள்ளிரியுங் கழுமலமே. 37

திருமுதுகுன்றம்-பண்-மேகராகக்குறிஞ்சி.

மேனியிற்சீ வரத்தாரும் விரிதருதட் டுடையாரும் விரவ லாகா, வூனிகளா யுள்ளார்சொற் கொள்ளாது முள்ளுணர்ந்தங் குய்மின்றொண்டீர், ஞானிகளா யுள்ளார்க ணான்மறையை முழு துணர்ந்தைம் புலன்கள்செற்று, மோனிகளாய் முனிசெல்வர் தனித்திருந்து தவம்புரியு முதுகுன்றமே. 38

திருவீழிமிழலை-பண்-மேகராகக்குறிஞ்சி.

அகனமர்ந்தவன்பினரா யறுபகைசெற் றைம்புலனு மடக்கி ஞானப், புகலுடையோர் தம்முள்ளப் புண்டரிகத் துள்ளிருக் கும் புராணர்கோயி, றகவுடைநீர் மணித்தலத்துச் சங்குளவர்க் கந்தி கழச் சலசத்தீயுண், மிகவுடைய புன்குமலர்ப் பொரி யட்ட மணஞ்செய்யு மிழலையாமே. 39

திருப்பிரமபுரம்-பண்-சீகாமரம்

நன்னெஞ்சே யுனையிரந்தே னம்பெருமான் றிருவடியே, யுன்னஞ்செய் திருகண்டா யுய்வதனை வேண்டுதியே, லன்னஞ் சேர் பிரமபுரத் தாரமுதை யெப்போதும், பன்னுஞ்சீர் வாயது வே பார்க்கண்ணே பரிந்திடவே. 40

சாநாளின் றிம்மனமே சங்கைதனை தவிர்ப்பிக்குங், கோ ளுளுந் திருவடிக்கே கொழுமலர்தூ வெத்தனையுந், தேனுளும் பொழிற்பிரம புரத்துறையுந் தீவணனை, நாநாளு நன்னியமஞ் செய்தவன்சீர் நவின்றேத்தே 41

திருச்சாய்க்காடு-பண்-சீகாமரம்.

மண்புகார் வான்புகுவர் மனமிளையார் பசியாலுங், கண்புகார் பிணியறியார் கற்றாருங் கேட்டாரும், விண்புகா ரெனவேண்டா வெண்மாட நெடுவீதித், தண்புகார்ச் சாய்க்காட்டெந் தலைவன்றாள் சார்ந்தாரே. 42

நீநாளு நன்னெஞ்சே நினைகண்டா யாரறிவார், சாநாளும் வாழ்நாளுஞ் சாய்க்காட்டெம்பெருமாற்கே, பூநாளும் தலைசுமப்ப புகழ்நாமஞ் செவிகேட்ப நாநாளு நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே. 43

திரு ஆக்கூர்-பண்-சீகாமரம்.

அக்கிருந்த வாரமு மாடரவு மாமையுந், தொக்கிருந்த மார்பினன் றோலுடையான் வெண்ணீற்றான், புக்கிருந்த தொல்கோயில் பொய்யிலா மெய்ந்நெறிக்கே, தக்கிருந்த ராக்கூரிற் றான்றோன்றி மாடமே. 44

பண்ணொளிசேர் நான்மறையான் பாடலினோ டாடலினன், கண்ணொளிசேர் நெற்றியினன் காதலித்த தொல்கோயில், விண்ணொளிசேர் மாமதியந் தீண்டியக்கால் வெண்மாடந், தண்ணொளிசே ராக்கூரிற் றான்றோன்றி மாடமே. 45

திருப்புள்ளிருக்குவேளூர் பண்-சீகாமரம்.

கீதத்தை மிகப்பாடு மடியார்கள் குடியாகப், பாதத்தைத் தொழநின்ற பரஞ்சோதி பயிலுமிடம், வேதத்தின் மந்திரத்தால் வெண்மணலே சிவமாகப், போதத்தால் வழிபட்டான் புள்ளிருக்கு வேளூரே. 46

கடுத்துவருங் கங்கைதனைக் கமழ்சடையொன் றாடாமே, தடுத்தவரெம் பெருமானார் தாமினிதா யுறையுமிடம், விடைத்துவரு மிலங்கைக்கோன் மலங்கச்சென் றிராமற்காப், புடைத்தவனைப் பொருதழித்தான் புள்ளிருக்கு வேளூரே. 47

ஸ்ரீபுகலி பண் காந்தாரம்.

சலந்தாங்கு தாமரைமே லயனுந்தரணி யளந்தானுங், கலந்தோங்கி வந்திழிந்துங் காணவண்ணங் கனலானீர், புலந்தாங்கி யைம்புலனுஞ் செற்றார் வாழும் பூம்புகலி, நலந்தாங்கு கோயிலே கோயிலாக நயந்தீரே. 48

திருத்தலைச்சங்காடு-பண்-காந்தாரம்.

நிலநீரோடாகாச மனல்கா லாகிநின்றைந்து, புலனீர்மை புறங் கண்டார் பொக்கஞ்செய் யார்போற் றுவார், சலநீத ரல்லாதார் தக்கோர் வாழுந் தலைச்சங்கை, நலநீர கோயிலேகோயிலாக நயந்தீரே. 49

திருவெண்காடு-பண்-காந்தாரம்.

நரையார் வந்து நாளுங் குறுகிநணுகாமுன், னுரையால் வேறுவுள்குவார்க ளுள்ளத்தே, கரையாவண்ணங் கண்டான்மேவுமூர் போலும், விரையார் கமலத்தன்ன மருவும் வெண்காடே.

திருவாலவாய் திருநீற்றுப் பதிகம்.

வேதத்தி லுள்ளதுநீறு வெந்துயர் தீர்ப்பதுநீறு, போதந் தருவது நீறுபுன்மை தவிர்ப்பதுநீறு, வோதத் தகுவதுநீறு வுண்மையி லுள்ளது நீறு, சீதப்புனல் வயல் சூழ்ந்த திருவாலவாயான் றிருநீறே. 51

முத்தி தருவதுநீறு முனிவ ரணிவதுநீறு, சத்தியமாவது நீறு தக்கோர் புகழ்வதுநீறு, பத்தி தருவதுநீறு பரவவினியது நீறு, சித்திதருவதுநீறு திருவாலவாயான் றிருநீறே. 52

அருத்தமதாவதுநீறு வவல மறுப்பதுநீறு, வருத்தந் தணிப்பதுநீறு வானமளிப்பதுநீறு, பொருத்த மதாவதுநீறு புண்ணியர் பூசும் வெண்ணீறு, திருத்தகு மாளிகைசூழ்ந்த திருவாலவாயான் றிருநீறே. 53

எயிலது வட்டதுநீறு விருமைக்கு முள்ளதுநீறு, பயிலப்படுவதுநீறு பாக்கிய மாவதுநீறு, துயிலைத் தடுப்பதுநீறு சுத்தமதாவதுநீறு, வயிலைப்பொலிதருசூலத் தாலவாயான் றிருநீறே.

மாலொடய னறியாத வண்ணமு முள்ளதுநீறு, மேலுறை தேவர்க டங்கண் மெய்யது வெண்பொடிநீறு, வேலவுடம்பிடர் தீர்க்கு மின்பந் தருவதுநீறு, வாலமு துண்டமிடற்றெம் மாலவாயான் றிருநீறே. 55

திருப்பெறும்புலியூர்-பண்-காந்தாரம்.

உறவியு மின்புறுசீறு மோங்குதல் வீடெளிதாகித், துறவியுங் கூட்டமுங் காட்டித் துன்பமு மின்பமுந்தோற்றி, மறவி

யென் சிந்தனைமாற்றி வாழவல்லார்தமக் கென்றும், பிறவியறுக் கும் பிரானூர் பெரும்புலியூர் பிரியாரே. 56

திருவாரூர்-பண்-காந்தாரம்.

தந்தையார் போயினர் தாயரும் போயினர் தாமும்போ வார், கொந்தவேல் கொண்டொரு கூற்றத்தார் பார்க்கின்றார் கொண்டு போவா, ரெந்தநாள் வாழ்வதற் கேமனம் வைத்தியா லேழை நெஞ்சே, யந்தணா ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்சனெஞ்சே. 57

நிணங்குடர் தோனரம் பென்புசே ராக்கைதா னிலாயதன் றாற், குணங்களார்க் கல்லது குற்றநீங் காதெனக் குலுங்கினாயே, வணங்குவார் வானவர் தானவர் வைகலு மணங்கொடேத்து, மணங்கணா ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்சனெஞ்சே.

பிறவியால் வருவன கேடுள வாதலாற் பெரிய வின்பத், துற வியார்க் கல்லது துன்பநீங் காதெனத் தூங்கினாயே, மறவனீ மார்க்கமே னண்ணினாய் தீர்த்தநீர் மல்குசென்னி, யறவனா ரூர் தொழு துய்யலா மையல்கொண் டஞ்சனெஞ்சே. 59

ஏறுமா வியானையே சிவிகையந் தளகமீச் சேர்ப்பி வட்டில், மாறிவா ழுடம்பினார் படுவதோர் நடலைக்கு மயங்கினாயே, மாறி லா வனமுலை மங்கையோர் பங்கினர் மதியம்வைத்த, வாறனா ரூர் தொழு துய்யலா மையல்கொண் டஞ்சனெஞ்சே. 60

என்பினார் கழிநிறைத் திறைச்சிமண் சுவரெறிந் திதுநம்மி ல்லம், புன்புலா னாறுதோல் போர்த்துப்பொல் லாமையான் முகடுகொண்டு, முன்பெலா மொன்பது வாசலார் குரம்பையின் மூழ் கிடாதே, யன்பனா ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்ச னெஞ்சே. 61

தந்தைதாய் தன்னுடன் தோன்றினார் புத்திரர் தாரமென் னும், பந்தநீங் காதவர்க் குய்ந்துபோக் கில்லெனப் பற்றினாயே, வெந்தநீ றுடியா ராதியார் சோதியார் வேதகீத, ரெந்தையா ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்சநெஞ்சே. 62

திருத்தேவூர்-பண்-காந்தாரம்.

பாடு வாரிசை பலபொருட் பயனுகந் தன்பாற், கூடு வார் நுணைக்கொண்டதம் பற்றறப்பற்றித், தேடுவார்பொரு ளாவன செறிபொழிற் றேவூ, ராடு வானடி யடைந்தன மல்லலொன் றிலமே. 63

திருமுல்லைவாயில்-பண்-பியந்தைக் காந்தாரம்.

ஒன்றொன்றொ டொன்று மொருநான்கொ டைந்து மிரு மூன்றொ டேழு மடனு, யன்றின்றொ டொன்று மறிவானவர்க்கு மறியாமை நின்றவரனூர், குன்றொன்றொ டொன்று குலையொன் றொ டொன்று கொடியொன்றொ டொன்றுகுழுமிச், சென்றொ ன்றொ டொன்று செறிவாய் நிறைந்த திருமுல்லைவாயி லிதுவே.

திருக்கோடிகா-திருவிராகம்-பண்-நட்டராகம்.

இன்றுநன்று நாளைநன் றென்றுநின்ற விச்சையாற், பொ ன்றுகின்ற வாழ்க்கையைப் போகவிட்டுப் போதுமின், மின்ற யங்கு சோதியான் வெண்மதி விரிபுனற், கொன்றைதுன்று செ ன்னியான் கோடிகாவு சேர்மினே. 65

திருவாரூர்-திருவிராகம் பண்-நட்டராகம்.

கள்ளநெஞ்ச வஞ்சகக் கருத்தைவிட் டருத்தியோ, டுள்ள மொன்றி யுள்குவா ருளத்துளா னுகந்தவூர், துள்ளிவாளை பாய் வயற் சுரும்புலாவு நெய்தல்வா, யள்ளனுரை யாரல்வாரு மந்த ணாரூ ரென்பதே. 66

திருப்பஞ்சாக்கரப் பதிகம்-பண்-காந்தார பஞ்சமம்.

துஞ்சலுந் துஞ்சலி லாத போழ்தினு, நெஞ்சக நைந்து நினைமி னாடொறும், வஞ்சக மற்றடி வாழ்த்த வந்தகூற், றஞ் சவு தைத்தன வஞ்செ ழுத்துமே. 67

ஊனி லுயிர்ப்பை யொடுக்கி யொண்சுடர், ஞான விளக் கினை யேற்றி நன்புலத், தேனை வழிதிறந் தேத்து வார்க்கிட, ரான கெடுப்பன வைந்தெ ழுத்துமே. 68

நல்லவர் தீய ரெனாது நச்சினர், செல்லல் கெடச்சிவ முத்தி காட்டுவ, கொல்ல நமன்றமர் கொண்டு போமிடத், தல்லல் கெடுப்பன வஞ்செ ழுத்துமே. 69

தும்ம விரும ருடர்ந்த போழ்தினும், வெம்மை நரகம் விளைந்த போழ்தினு, மிம்மை வினையடர்த் தெய்தும் போழ்தினு, மம்மையினுந் துணை யஞ்செ ழுத்துமே. 70

திருத்தேன்குடித்திட்டை-பண்-கோல்லி.

ஊறினு ரோசையுள் ளொன்றினு ரொன்றிமால், கூறினு ரமர்தருங் குமரவே டாதையூ, ராறினர் பொய்யகத் தையுணர் வெய்திமெய், தேறினர் வழிபடுந் தென்குடித் திட்டையே. 71

திருவாலவாய் திருவிராகம்-பண்-கௌசிகம்.

பட்டிசைந்த வல்குலாள் பாவையா ளோர் பாகமா, வொட்டிசைந்த தன்றியும் முச்சியா ளொருத்தியாக், கொட்டிசைந்த வாடலாய் கூடலால வாயிலா, யெட்டிசைந்த மூர்த்தியா யிருந்தவாறி தென்னையே. 72

குற்றநீ குணங்கணீ கூடலால வாயிலாய், சுற்றநீ பிரானுநீ தொடர்ந்தி லங்குசோதிநீ கற்றநூற் கருத்துநீ யருத்தமின்ப மென்றிவை, முற்றுநீபுகழ்ந்துமுன் னுரைப்ப தென் முகம்மனே.

ஆதியந்த மாயினு யாலவாயி லண்ணலே, சோதியந்த மாயினுய் சோதியுள்ளார் சோதியாய், கீதம்வந்த வாய்மையாற் கிளர்தருக்கி னுர்க்கலா, லோதிவந்த வாய்மையா லுணர்ந்துரைக்க லாகுமே. 74

திருக்கானப்பேர்-பண்-கோல்லி.

பள்ளமே படர்சடைப் பாற்படப் பாய்ந்தநீர், வெள்ளமே தாங்கினுன் வெண்மதி சூடினுன், கள்ளமே செய்கிலார்க் கருதிய கானப்பே, ருள்ளமே கோயிலா வுள்குமென் னுள்ளமே. 75

திருப்பாசுரம்-பண்-கௌசிகம்.

ஆட்பால வர்க்கருளும் வண்ணமு மாதிமாண்புங், கேட்பான் புகிலளவில்லை கிளக்க வேண்டா, கோட்பா லனவும் வினையுங் குறுகாமை யெந்தை, தாட்பால் வணங்கித் தலைநின் றிவை கேட்கத் தக்கார். 76

ஏதுக்க ளாலு மெடுத்த மொழியாலு மிக்குச், சோதிக்க வேண்டா சுடர்விட்டுள னெங்கள் சோதி, மாதுக்க நீங்கலுறு வீர் மனம் பற்றி வாழ்மின், சாதுக்கள் மிக்கீ ரிறையே வந்து சார்மின்களே. 77

பாராழி வட்டம் பகையான லிந்தாட்ட வாடிப், பேராழி யான திடர்கண் டருள் செய்தல் பேணி, நீராழி விட்டேறி நெஞ் சிடங் கொண்ட வர்க்குப், போராழி யீந்த புகழும் புகழுற்ற தன்றே. 78

திருப்பிரமபுரம்-பண்-பஞ்சமம்.

சடையினன் சாமவேதன் சரிகோவண வன்மழுவாட், படை யினன் பாய்புலித்தோ லுடையான் மறைபல்கலை நூ, லுடையவ னூனமில்லி யுடனுயுமை நங்கை யென்னும், பெடையொடும்பே ணுமிடம் பிரமாபுரம் பேணுமினே. 79

திருவொற்றியூர்-பண்-பஞ்சமம்.

விடையவன் விண்ணுமண்ணுந் தொழநின்றவன் வெண்ம ழுவாட், படையவன் பாய்புலித்தோ லுடைகோவணம் பல்கரந் தைச், சடையவன் சாமவேதன் சசிதங்கிய சங்கவெண்டோ, டுடையவன் னூனமில்லி யுறையும்மிட மொற்றியூரே. 80

திருப்பெருவேளூர்-பண்-பஞ்சமம்.

மறப்பிலா வடிமைக்கண் மனம்வைப்பார் தமக்கெல்லாஞ், சிறப்பிலார் மதிலெய்த சிலைவல்லா ரொருகணையா, லிறப்பிலார் பிணியில்லார் தமக்கென்றுங் கேடிலார், பிறப்பிலாப் பெருமா னார்பெருவேளூர் பிரியாரே. 81

திருவைகா, திருவிராகம்-பண்-சாதாரி.

ஊனமில ராகியுயர் நற்றவமெய் கற்றவை யுணர்ந்த வடி யார், ஞானமிக நின்றுதொழ நாளுமருள் செய்யவல நாத னிட மா, மானவயல் சூழ்தருமல் சூழியரு கேபொழில்க டோறு மழ கார், வானமதி யோடுமழை நீண்முகில்கள் வந்தணவும் வைகா விலே. 82

இன்னவுரு வின்னநிற மென்றறிவ தேலரிது நீதிபலவுந், தன் னதுரு வாமென மிகுத்ததவ நீதியொடு தான மர்விட, முன் னைவினை போம்வகையி னுன்முழுது ணர்ந்துமுயல் கின்ற முனி வர், மன்னவிரு போதுமரு வித்தொழுது சேரும்வயல் வைகா விலே. 83

திருமாணிக்குழி, திருவிராகம்-பண்-சாதாரி.

நித்த நிய மத்தொழில னாகிநெடு மால்குறள னாகி மிகவுஞ், சித்தம தொருக்கி வழி பாடுசெய நின்றசிவ லோக னிடமாம், கொத்தலர் மலர்ப்பொழிலி னீடுகுல மஞ்ஞைநட மாடலதுகண், பொத்தவரி வண்டுக ளுலாவி யிசை பாடுதவி மாணி குழியே.

திருநாறையூர்-பண்-பழம்பஞ்சுரம்.

வானமர் தீவளி நீர்நிலனாய் வழங்கும்பழியாகு, மூனமரின் னுயிர் தீங்கு குற்ற முறைவாற் பிறிதின்றி, நாமனாரும் பொரு ளாகி நின்றான் றிருநாரை யூரெந்தை, கோனவனைக் குருகக் குறுகா கோடுவல் வினைதானே. 85

ஊழியு மின்பமுங் கால மாகியு யருந்தவ மாகி, யேழிசை யின் பொருள் வாழும் வாழ்க்கை வினையின் புணர்ப்பாகி, நாழி கையும் பலனாயி னாகிநளிர் நாரையூர் தன்னில், வாழியர் மேதகு மைந்தர் செய்யும் வகையின் விளைவாமே. 86

திருவாலவாய்-பண்-புறநீர்மை.

வெற்றவே யடியா ரடிமிசை வீழும் விருப்பினன் வெள்ளை நீறணியுங், கொற்றவன் றனக்கு மந்திரியாய குலச்சிறை குலாவி நின் றேத்து, மொற்றைவெள் விடைய னும்பரார் தலைவ னுல கினி லியற்கையை யொழிந்திட், டற்றவர்க் கற்ற சிவனுறை கின்ற வாலவா யாவது மிதுவே. 87

---

திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச்செய்த

## தேவாரப் பதிகங்கள்.

---

திருவதிகை வீரட்டானம் - பண் - கொல்லி.

கூற்றாயின வாறு விலக்ககிலீர் கொடுமை பலசெய்தன நா னறியே, னேற்றா யடிக்கே யிரவும்பகலும் பிரியாது வணங்குவ னெப்பொழுதுந், தோற்றா தென்வயிற் றினகம்படியே குடரோடு தொடக்கி முடக்கியிட, வாற்றே னடியே னதிகைக்கெடில வீரட்டானத் துறையம் மானே. 1

திருவாரூர்ப் பழமொழி-பண்-காந்தாரம்

என்பிருத்தி நரம்புதோல் புகழ்பெய்திட் டென்னையோ ருருவமாக்கி, யின்பிருத்தி முன்பிருந்த வினைதீர்த்திட் டென் னுள்ளங் கோயிலாக்கி, யன்பிருத்தி யடியேனைக் கூழாட்கொண் டருள்செய்த வாரூரர்த, முன்பிருக்கும் விதியின்றி முயல்விட் டுக் காக்கைப்பின் போனவாறே. 2

பெருகுவித்தென் பாவத்தைப் பண்டெலாங் குண்டர்கள் தஞ் சொல்லே கேட்டு, உருகுவித்தென் னுள்ளத்தி னுள் ளிருந்த கள்ளத்தைத் தள்ளிப்போக்கி, யருகுவித்துப் பிணிகாட்டி யாட் கொண்டு பிணிதீர்த்த வாரூரர்தம், மருகிருக்கும் விதியன்றி யற மிருக்க மறம்விலைக்குக் கொண்டவாறே. 3

கதியொன்று மறியாதே கண்ணழலத் தலைபறித்துக் கையி லுண்டு, பதியொன்று நெடுவீதிப் பலர்காண நகைநாணு துழி தர்வேற்கு, மதிதந்த வாரூரில் வார்தேனை வாய்மடுத்துப் பருகி யுய்யும், விதியின்றி மதியிலியேன் விளக்கிருக்க மின்மினித்தீக் காய்ந்தவாறே. 4

திரு ஏகம்பம்-பண்-காந்தாரம்.

கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானை கரவார்பால், விரவாடும் பெருமானை விடையேறும் வித்தகனை, யரவாடச் சடைதாழ வங்கையினி லனலேந்தி, யிரவாடும் பெருமானை யென்னுளத்தே வைத்தேனே. 5

கைப்போது மலர்தூவிக் காதலித்து வானோர்கள், முப் போது முடிசாய்த்துத் தொழநின்ற முதல்வனை, யப்போது மலர்தூவு மைம்புலனு மகத்தடக்கி, யெப்போது மினியானை யென்மனத்தே வைத்தேனே. 6

நல்லானை நல்லான நான்மறையோ டாறங்கம், வல்லானை வல்லார்கள் மனத்துறையு மைந்தனைச், சொல்லானைச் சொல்லா ர்ந்த பொருளானைத் துகளேது, மில்லானை யெம்மானை யென்ம னத்தே வைத்தேனே. 7

திரு அங்கமாலை-பண்-சாதாரி.

தலையே நீவணங்காய், தலை-மாலை தலைக்கணிந்து, தலையா லேபலி தேருந் தலைவனைத்-தலையே நீவணங்காய். 8

கண்காள் காண்மின்களோ, கட-நஞ்சுண்ட கண்டன்றன்னை, யெண்டோள் வீசி நின் றாடும் பிரான் றன்னைக், கண்காள் காண் மின்களோ. 9

செவிகாள் கேண்மின்களோ, சிவ-னெம்மிறை செம்பவள, மெரிபோன் மேனிப் பிரான் றிற மெப்போதுஞ், செவிகாள் கேண் மின்களோ. 10

மூக்கே நீமுரலாய், முது-காடுறை முக்கணனை, வாக்கே நோக்கிய மங்கை மணாளனை, மூக்கே நீமுரலாய். 11

வாயே வாழ்த்து கண்டாய், மத-யானை யுரி போர்த்துப், பேய்வாழ் காட்டகத் தாடும் பிரான் றன்னை, வாயே வாழ்த்து கண்டாய். 12

நெஞ்சே நீநினையாய், நிமிர்-புன்சடை நின்மலனை, மஞ்சாடு மலை மங்கை மணாளனை, நெஞ்சே நீநினையாய். 13

கைகாள் கூப்பித்தொழீர், கடி-மாமலர் தூவிநின்று, பைவா ய்ப் பாம்பரை யார்த்த பரமனைக், கைகாள் கூப்பித் தொழீர். 14

ஆக்கையாற் பயனென், அரன்-கோயில் வலம்வந்து, பூக்கை யா லட்டிப் போற்றியென் னாத விவ், வாக்கையாற் பயனென். 15

கால்களாற் பயனென், கறைக்-கண்ட னுறைகோயில், கோல க்கோபுரக் கோகரணஞ் சூழாக், கால்களாற் பயனென். 16

உற்றா ராருளரோ, வுயிர்-கொண்டு போம்பொழுது குற்றா லத்துறை கூத்த னல்லா னமக், குற்றா ராருளரோ. 17

இறுமாந் திருப்பன் கொலோ, ஈசன் - பல்கணத் தெண் ணப்பட்டு, சிறுமா னேந்தி தன் சேவடிக் கீழ் சென்றங், கிறு மாந் திருப்பன்கொலோ. 18

தேடிக் கண்டு கொண்டேன், திரு-மாலொடு நான்முகனுந், தேடித் தேடொணாத் தேவனை யென்னுளே, தேடிக்கண்டு கொ ண்டேன். 19

நமச்சிவாயப் பதிகம்.

இல்லக விளக்கது இருள் கெடுப்பது, சொல்லக விளக்கது சோதி யுள்ளது, பல்லக விளக்கது பலருங் காண்பது, நல்லக விளக்கது நமச்சி வாயவே. 20

திருவையாறு-பண்-பழந்தக்கராகம்.

நணியானே சேயானே நம்பானே செம்பொன்னின், துணி யானே, தோலானே சுண்ணவெண் ணீற்றானே, மணியானே வானவர்க்கு மருந்தாகிப் பிணிதீர்க்கும், அணியானேயையாறற் காளாய்நா னுய்ந்தேனே. 21

கண்ணுனாய் மணியானாய் கருத்தானா யறுத்தானா, யெண் ணனா யெழுத்தானா யெழுத்தினுக்கோ ரியல்பானாய், விண்ணா னாய் விண்ணிடையே புரமெரித்த வேதியனே, பண்ணுன வையா றற் காளாய்நா னுய்ந்தேனே. 22

தானலா துலகமில்லைச் சகமிலா தடிமையில்லைக், கானலா தாடலில்லைக் கருதுவார் தங்களுக்கு, வானலா தருளுமில்லைவார் குழன்மங்கையோடு, மானலா தூர்வதில்லையையனை யாறனார்க்கே.

திருவாரூர்-பண்-சீகாமரம்.

பிறத்தலும் பிறந்தாற் பிணிப்படவாய்ந் தசைந்துடலம் புகு ந்துநின், றிறக்குமா றுளதே யிழித்தேன் பிறப்பினைநா, னறத் தையே புரிந்த மனத்தனா யார்வச் செற்றக் குரோத நீக்கியுன், றிறத்தனா யொழிந்தேன் றிருவாரூ ரம்மானே. 24

திருச்சேம்போன்பள்ளி-திருநேரிசை.

ஊனினுள் ளுயிரைவாட்டி யுணர்வினார்க் கெளியராகி, வா னினுள் வானவர்க்கு மறியலா காதவஞ்சர், நானெனிற் றானே யென்னு ஞானத்தார் பத்தர்நெஞ்சுட், டேனுமின் னமுதுமா னார் திருச்செம்பொன் பள்ளியாரே. 25

திருக்கடவூர்-திருநேரிசை.

பொள்ளத்த காயமாய பொருளினைப் போகமாகா, வெள் ளத்தைக் கழிக்கவேண்டில் விரும்புமின் விளக்குத்தூப, முள் ளத்த திரியொன்றேற்றி யுணருமா றுணரவல்லார், கள்ளத்தைக் கழிப்பர்போலுங் கடவூர்வீ ரட்டனாரே. 26

திருப்பயற்றூர்-திருநேரிசை.

தந்தையாய்த் தாயு மாகி தரணியாய்த் தரணி யுள்ளார்க், கெந்தையு மென்ன நின்ற வேழுல குடனு மாகி, யெந்தையெம் பிரானே யென்றென் றுள்குவா ருள்ளத் தென்றுஞ், சிந்தை யுஞ் சிவமு மாவார் திருப்பயற் றூர னாரே. 27

புலன்களைப் போகநீக்கிப் புந்தியை யொருங்க வைத்து, இனங்களைப் போகநின்றி ரிரண்டையு நீக்கி யொன்றாய், மலங் களை மாற்ற வல்லார் மனத்தினுட் போகமாகிச், சினங்களைக் களைவர் போலுந் திருப்பயற் றூர ஞரே. 29

திருமறைக்காடு-திருநேரிசை.

கனத்தினர் வலியுடைய கடிமதி லரண் மூன்றுஞ், சினத்தி னுட் சினமாய் நின்று தீயெழச் செற்றாற் போலுந், தனத்தினைத் தவிர்ந்து நின்று தம்மடி பரவு வார்க்கு, மனத்தினுண் மாசு தீர்ப் பார் மாமறைக் காட ஞரே. 30

திருவிடைமருதூர்-திருநேரிசை.

முந்தையார் முந்தி யுள்ளார் மூவர்க்கு முதல்வ ரானர், சந் தியார் சந்தி யுள்ளார் தவநெறி தரித்து நின்றார், சிந்தையார் சிந்தை யுள்ளார் சிவனெறி யனைத்து மாஞ; ரெந்தையா ரெம்பி ராஞ ரிடைமரு திடங்கொண் டாரே. 31

திருப்பழனம்-திருநேரிசை.

நீரவன் றீயினேடு நிழலவ னெழிலதாய, பாரவன் விண் ணின்மிக்க பரமவன்பரமயோகி, யாரவ னண்டமிக்கதிசையினே டொளிகளாகி, பாரகத் தமுதமானர் பழனத்தெம் பரமஞரே.

திருஐயாறு-பண்-திருநேரிசை.

குருந்தம தொசித்த மாலும் குலமலர் மேவி னனுந், திரு ந்துநற் றிருவடியுந் திருமுடி காண மாட்டா, ரருந்தவ முனிவ ரேத்துந் திருவையா றமர்ந்த தேனைப், பொருந்திநின் றன்னு நெஞ்சே பொய்வினை மாயு மன்றே. 33

திருச்சோற்றுத் துறை-திருநேரிசை.

கல்வினுற் புரமூன் றெய்த கடவுளைக் காத லாலே, மெல் லிலும் பகலு முள்ளே யேகாந்த மாக வேத்தும், பல்லில்வெண் டலைகை யேந்திப் பல்லிலந் திரியுஞ் செல்வர், சொல்லுநன் பொ ருளு மாவார் திருச்சோற்றுத் துறைய ஞரே. 34

பொந்தையைப் பொருளாவெண்ணிப் பொருக்கெனக் கால ம்போனே, னெந்தையே யேகமூர்த்தி யென்றுநின் றேத்தமாட்

டேன், பந்தமாய் வீடுமாகிப் பரம்பர மாகிநின்று, சிந்தையுட் டேறல்போலுந் திருச்சோற்றுத் துறைய னாரே. 35

திருத்துருத்தி-திருநேரிசை.

அள்ளலை கடக்க வேண்டி தரணையே நினைமி னீர்கள், பொள்ளலிக் காயந் தன்னுட் புண்டரீ கத்திருந்த, வள்ளலை வானவர்க்குங் காண்பரி தாகிநின்ற, துள்ளலைத் துருத்தி யானைத் தொண்டனேன் கண்ட வாறே. 36

திருவொற்றியூர்-திருநேரிசை.

வெள்ளத்தைச் சடையுள் வைத்த வேதகீ தன்றன் பாதம், மெள்ளத்தா னடைய வேண்டின் மெய்தரு ஞானத் தீயாற், கள்ளத்தைக் கழிய நின்றூர்க் காயத்துக் கலந்து நின்று, உள்ளத்து ளொளியு மாகு மொற்றியூ ருடைய கோவே. 37

தானத்தைச் செய்து வாழ்வான் சலத்துளே யழுந்து கின்றீர், வானத்தை வணங்க வேண்டில் வம்மின்கள் வல்லீராகின், ஞானத்தை விளக்க யேற்றி நாடியுள் விரவ வல்லார்க், கூனத்தையொழிப்பர் போலு மொற்றியூ ருடைய கோவே. 38

பின்னுவார் சடையான் றன்னைப் பிதற்றிலாப் பேதைமார்க, டுன்னுவார் நரகந் தன்னுட் டொல்வினை தீர வேண்டின், மன்னுவார் மறைக ளோதி மனத்தினுள் விளக்கொன் றேற்றி, யுன்னுவா ருள்ளத் துள்ளா ரொற்றியூருடைய கோவே.

திருவொற்றியூர்-திருநேரிசை.

மனமெனுந் தோணி பற்றி மதியெனுங் கோலை யூன்றிச், சினமெனுஞ் சரக்கை யேற்றிச் செறிகட லோடும் போது, மதனெனும் பாறை தாக்கி மறியும்போ தறியவொண்ணா, துணையுனு முணர்வை நல்கா யொற்றியூ ருடைய கோவே. 40

திரு ஆப்பாடி-திருநேரிசை.

ஆதியு மறிவு மாகி யறிவினுட் செறிவு மாகிச், சோதியுட் சுடரு மாகித் தூநெறிக் கொருவ னாகிப், பாதியிற் பெண்ணு மாகிப் பரவுவார் பாங்க னாகி, வேதியர் வாழுஞ் சேனல் விரும்புமாப் பாடி யாரே. 41

திரு ஆரூர்-திருநேரிசை.

புழுப்பெய்த பண்டிதன்னைப் புறமொரு தோலான் மூடி, யொழுக்கறு வொன்பதுவா யொற்றுமை யொன்றுமில்லைச், சழக்குடை யிதனுள்ளைவர் சங்கடம் பலவுஞ்செய்ய,வழிப்பனுய் வாழமாட்டே னாரூர்மூ லட்டனீரே. 42

உயிர்நிலை யுடம்பேகாலா யுள்ளமே தகளியாகத், துயரமே யேற்றமாகத் துன்பக்கோ லதனைப்பற்றிப், பயிர்தனைச் சுழியவிட்டுப் பாழ்க்குநீ ரிறைத்துமிக்க, வயர்வினு லைவர்க்காற்றே னாரூர்மூ லட்டனீரே. 43

திருக்கொண்டீச்சரம்-திருநேரிசை.

வரையிலேன் புலன்க ளைந்தும் வரைகிலாப் பிறவி மாயப், புரையிலே யடங்கி நின்று புறப்படும் வழியுங் காணேன், அரையிலே மிளிரு நாகத் தண்ணலே யஞ்ச லென்னுய், திரையுலாம் பழன வேலித் திருக்கொண்டீச் சரத்து ளானே. 44

திருநனிபள்ளி-திருநேரிசை.

முற்றுணை யாயினானை மூவர்க்கு முதல்வன்றன்னைச், சொற்றுணை யாயினானைச் சோதியை யாதரித்தே, யுற்றுணர்ந் துருகியூறி யுள்கசி வுடையவர்க்கு, நற்றுணை யாவர்போலு நனிபள்ளியடிகளாரே. 45

திருக்கடனாகைக்காரோணம்-திருநேரிசை.

மனைவிதாய் தந்தைமக்கள் மற்றுள சுற்றமென்னும், வினையுளே விழுந்தழுந்தி வேதனைக் கிடமாகாதே, கனையுமா கடல்சூழ்நாகை மன்னுகா ரோணத்தானை, நினையுமா வல்லீராகி லுய்யலா நெஞ்சினீரே. 46

திருச்சேறை-திருநேரிசை.

அஞ்சையு மடக்கியாற்ற லுடையனு யனேககாலம், வஞ்சமி றவத்துணின்று மன்னிய பகீரதற்கு, வெஞ்சின முகங்களாகி விசையொடு பாயுங்கங்கை,செஞ்சடை யேற்றார் சேறைச் செந்நெறிச் செல்வனாரே. 47

தனி-திருநேரிசை.

பின்னிலேன் முன்னிலேனான் பிறப்பறுத் தருள்செய்வானே, என்னிலே னுயினேனு னிளங்கதிர்ப் பயலைத்திங்கட், சின்

னிலா வெறிக்குஞ் சென்னிச் சிவபுரத் தமரரேறே, நின்னலாற் களைகணுரே நீறுசே ரகலத்தானே. 48

உடம்பெனு மனையகத்து ளுள்ளமே தகளியாக, மடம்படு முணர்நெய்யட்டி யுயிரெனுந் திரிமயக்கி, இடம்படு ஞானத்தீ யா லெரிகொள விருந்து நோக்கிற், கடம்பமர் காளைதாதை கழ லடி காணலாமே. 49

உள்குவா ருள்ளத்தானை யுணர்வெனும் பெருமையானை, யுள்கின னுனுங்காண்பா னுருகினே னூறி யூறி, எள்கினே னெந்தைபெம்மா னிருதலை யினும்வெகின்ற, கொள்ளிமே லெறும் பென்னுள்ள மெங்கனங் கூடுமாறே. 50

மெய்ம்மையா முழவைச் செய்து விருப்பெனும் வித்தைவித் திப், பொய்ம்மையாங் களையை வாங்கிப் பொறையெனு நீரைப் பாய்ச்சித், தம்மையு நோக்கிக்கண்டு தகவெனும் வேலியிட்டுச், செம்மையு ணிற்ப ராகிற் சிவகதி விளையு மன்றே. 51

காயமே கோயிலாகக் கடிமன மடிமையாக, வாய்மையே தூய்மையாக மனமணி யிலிங்கமாக, நேயமே நெய்யும் பாலா நிறையநீ ரமைய வாட்டிப், பூசனை யீசனுர்க்குப் போற்றவிக் காட்டினேமே. 52

குறைந்த-திருநேரிசை.

வென்றிலேன் புலன்க ளைந்தும் வென்றவர் வளாகந் தன்னுட், சென்றிலே னுதலாலே செந்நெறி யதற்குஞ் சேயேன், நின்றுளே துளும்பு கின்றே னீசனே னீசனேயோ, வின்றுளே னுளை யில்லே னென்செய்வான் றோன்றி னேனே. 53

திருவையாறு-திருவிருத்தம்.

திருத்திக் கருத்தினைச் செவ்வே நிறுத்திச் செறுத் துடலை, வருத்திக் கடிமலர் வாளெடுத் தோச்சி மருங்கு சென்று, விருத் திக் குழக்க வல்லோர் கட்கு விண்பட்டி கையிடுமா, லருத்தித் தருந்தவ ரேத்துமை யாறனடித் தலமே. 54

வானைக்கடந் தண்டத் தப்பான் மதிப்பன மந்திரிப்பா, ருனைக் கழித்துய்யக் கொண்டருள் செய்வன வுத்தமர்க்கு, ஞா னச் சுடராய் நடுவே யுதிப்பன நங்கையஞ்ச, வானை யுரித்தன தாண்தவை யாற னடித்தலமே. 55

திருப்பாதிரிப்புலியூர்-திருவிருத்தம்.

வைத்த பொரு ணமக்கா மென்று சொல்லி மனத்தடைத் துச், சித்த மொருக்கிச் சிவாய நமவென் றிருக்கி னல்லான், மொய்த்த கதிர் மதிபோல் வாரவர்பா திரிப்புலியூர், அத்தன ருள் பெறலாமோ வறிவிலாப் பேதை நெஞ்சே. 56

புழுவாய் பிறக்கினும் புண்ணியா வுன்னடி யென்மனத் தே, வழுவா திருக்க வரந்தர வேண்டுமிவ் வையகத்தே, தொழு வார்க் கிரங்கி யிருந்தருள் செய்பாதிரிப் புலியூர்ச், செழுநீர் புனற்கங்கை செஞ்சடை மேல்வைத்த தீவண்ணனே. 57

திருச்சத்திமுற்றம்-திருவிருத்தம்.

பொத்தார் குரம்பை புகுந் தைவர் நாளும் புகலழிப்ப, மத் தார் தயிர்போன் மறுகுமென் சிந்தை மறுக்கொழிவி, யத்தா வடியே னடைக்கலங் கண்டா யமரர்கடஞ், சித்தா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 58

திருவேகம்பம்-திருவிருத்தம்.

கருவுற்ற நாண்முத லாகவுன் பாதமே காண்பதற்கு, உரு கிற்றெ னுள்ளமு நானுங்கிடந்தலந் தெய்த்தொழிந்தேன், திரு வொற்றி யூராய் திருவால வாயாய்திரு வாரூராய், ஒருபற்றி லா மையுங் கண்டிரங் காய்கச்சி யேகம்பனே. 59

திருவாரூர்-திருவிருத்தம்.

ஆராய்ந் தடித்தொண்ட ராணிப்பொ னாரூ ரகத்தடக்கிப், பாரூர் பருப்பதம் பங்குனி யுத்திரம் பாற்படுத்தா, னாரூர் நறு மலர் நாத னடித்தொண்ட னம்பிநந்தி, நீராற் றிருவிளக் கிட் டமை நீணா டறியுமன்றே. 60

திருப்புகலூர்-திருவிருத்தம்.

தன்னைச் சரணென்று தாளடைந்தேன்றன் னடியடையப், புன்னைப் பொழில்புக லூரண்ணல் செய்வன கேண்மின்களோ, என்னைப் பிறப்பறுத் தென்வினை கட்டறுத் தேழ்நரகத், தென் னைக் கிடக்கலொட் டான்சிவ லோகத் திருத்திடுமே. 61

பசுபதி-திருவிருத்தம்.

உடம்பைத் தொலைவித் துன்பாதந் தலைவைத்த வுத்தமர்கள், இடும்பைப் படாம லிரங்குகண் டாயிரு ளோடச்செந்தீ, யடும்பொத் தனைய வழன்மழு வாவழ லேயுமிழும், படம்பொத் தரவரை யாயெம்மை யாளும் பசுபதியே. 62

துறவித் தொழிலே புரிந்துன் சுரும்படி யேதொழுவார், பிறவித் தொழிலது மாற்றுகண் டாய்மதின் மூன்றுடைய, வறவைத் தொழில்புரிந் தந்தரத் தேசெல்லு மந்திரத்தேர்ப், பறவைப் புரமெரித் தாயெம்மை யாளும் பசுபதியே. 63

சித்தத் துருகிச் சிவனெம் பிரானென்று சிந்தையுள்ளே, பித்துப் பெருகப் பிதற்றுகின்றார் பிணி தீர்த்தருளாய், மத்தத் தாக்க னிருபதுதோளு முடியு மெல்லாம், பத்துற் றுறநெரித் தாயெம்மை யாளும் பசுபதியே. 64

தனி-திருவிருத்தம்.

உடலைத் துறந்துல கேழுங் கடந்துலவாததுன்பக், கடலைக் கடந்துய்யப் போயிட லாகுங் கனகவண்ணப், படலைச் சடைப் பரவைத்திரைக் கங்கைப் பணிப்பிறைவெண், சுடலைப் பொடிக் கட வுட்கடி மைகட் டுணிநெஞ்சமே. 65

நின்னையெப் போது நினையலொட் டாய்நீ நிலையப்புகிற், பின்னையப் போதே மறப்பித்துப் பேர்த்தொன்று நாடுவித்தி, யுன்னை யெப்போது மறந்திட் டுனக்கினி தாயிருக்கு, மென்னை யொப் பாருள ரோசொல்லு வாழி யிறையவனே. 66

வானந் துளங்கிலென் மண்கம்ப மாகிலென் மால்வரையுந், தானந் துளங்கித் தலைதடு மாறிலென் றண்கடலு, மீனம் படிலென் விரிசுடர் வீழிலென் வேலைநஞ்சுண், டொருமொரு னில்லா வொருவனுக் காட்பட்ட வுத்தமர்க்கே. 67

முருகார் நறுமல ரிண்டை தழுவிவண் டேமுரலும், பெருகா ரடைசடைக் கற்றையி னுய்பிணி மேய்ந்திருந்த, விருகாற் குரம்பை யிதுநா னுடைய திதுபிரிந்தாற், றருவா யெனக்குன் றிருவடிக் கீழோர் தலைமறைவே. 68

கோயில்-திருக்குறுந்தொகை.

அல்ல லென்செயு மருவினை யென்செயுந், தொல்லைவல்வி னைத் தொண்டர்தா னென்செயுந், தில்லை மாநகர்ச் சிற்றம் பல வனார்க், கெல்லை யில்லதோ ரடிமை பூண்டனுக்கே. 69

பனைக்கை மும்மத வேழ முரித்தவ, னினைப்ப வர்மனங் கோயிலாக் கொண்டவ, னனைத்தும் வேடமா மம்பலக் கூத்த னைத், தினைத்த னைப்பொழு தும்மறந் துய்வனே. 70

திருஅண்ணாமலை-திருக்குறுந்தொகை.

பட்டி யேறுகந் தேறிப் பலவில, மிட்ட மாக விரந்துண் டுழிதரு, மட்ட மூர்த்தியண் ணாமலை கைதொழக், கெட்டுப் போம்வினை கேடில்லை காண்மினே. 71

திருவாரூர் திருக்குறுந்தொகை.

எந்த மாதவஞ் செய்தனை நெஞ்சமே, பந்தம் வீடவை யா ய பராபர, னந்த மில்புக ழாரூ ரரனெறி, சிந்தை யுள்ளுஞ் சிரத் துள்ளுந் தங்கவே. 72

வண்டு லாமலர் கொண்டு வளர்சடைக், கிண்டை மாலை புனைந்து மிராப்பகல், தொண்ட ராகித் தொடர்ந்து விடாத வர்க், கண்ட மாளவும் வைப்பரா ரூரரே. 73

துன்பெ லாமற நீங்கிச் சுவத்தரா, யென்ப லாநெக் கிராப் பக லேத்திநின், றின்ப ராய்நினைந் தென்று மிடையறா, வன்ப ராமவர்க் கன்பரா ரூரரே. 74

திருமறைக்காடு-திருக்குறுந்தொகை.

ஓத மாக்கடல் பரவி யுலகெலா, மாத ரார்வலங் கொண் மறைக் காடரைக், காதல் செய்து கருதப் படுமவர், பாதமேத் தப் பறையுநம் பாவமே 75

பூக்குந் தாழை புறணி யருகெலாம், மாக்குந் தண்பொழில் சூழ்மறைக் காடரோ, ஆர்க்குங் காண்பரி யீரடி கேளுமை, நோ க்கிக் காணக் கதவைத் திறவுமே. 76

திருவீழிமிழலை-திருக்குறுந்தொகை.

எடுத்த வெல்கொடி யேறுடை யான்றம, ருடுப்பர் கோவ ண முண்பது பிச்சையே, கெடுப்ப தாவது கீணின்ற வல்வினை, விடுத்துப் போவது வீழி மிழலையே. 77

ஞால மேவிசும் பேநலந் தீமையே, கால மேகருத்தே கருத்தாற் றெழுஞ், சீல மேதிரு வீழி மிழலையுட், கோல மேயடியேனைக் குறிக்கொளே. 78

இம்மை வானவர் செல்வம் விளைத்திடு, மம்மை யேற்பிறவித்துயர் நீத்திடு, மெம்மை யாளு மிடைமரு தன்கழல், செம்மை யேதொழு வார்வினை சிந்துமே. 79

வெந்த வெண்பொடி பூசும் விகிர்தனார், கந்த மாலைகள் சூடுங் கருத்தனா, ரெந்தை யென்னிடை மருதினி லீசனைச், சிந்தை யால்நினை வார்வினை தேயுமே. 80

## திருவிடைமருது-திருக்குறுந்தொகை.

பறையி னோசையும் பாடலி னோசையு, மறையி னோசையும் வைகும் வயலெலா, மிறைவ னெங்கள் பிரானிடை மருதினி, லுறையு மீசனை யுள்கு மெனுள்ளமே. 81

மனத்துண் மாயனை மாசறு சோதியைப், புனிற்றுப் பிள்ளைவெள் ளைம்மதி சூடியை, யெனக்குத் தாயையெம் மானிடை மருதினை, நினைத்திட் டூறி நிறைந்ததென் னுள்ளமே. 82

காற்றி னைக்கன லைக்கதிர் மாமணி, நீற்றினைநினைப் பார்வினை நீக்கிடுங், கூற்றி னையுதைத் திட்ட குணமுடை, வீற்றினை நெரு நற்கண்ட வெண்ணியே. 83

## திருக்கடம்பந்துறை-திருக்குறுந்தொகை.

மறைகொண் டமனத் தானை மனத்துளே, நிறைகொண் டநெஞ்சி னுள்ளூற வைம்மினோ, கறைகண் டனுறை யுங்கடம் பந்துறை, சிறைகொண் டவினை தீரத் தொழுமினே. 84

அரிய நான்மறை யாறங்க மாயைந்து, புரியன் றேவர்க ளேத்தநஞ் சுண்டவன், கரிய கண்டத்தி னான்கடம் பந்துறை, யுரிய வாறு நினைமட நெஞ்சமே. 85

பூமென் கோதை யுமையொரு பாகனை, யோமஞ் செய்து முணர்மின்க ளுள்ளத்தாற், காமற் காய்ந்த பிரான்கடம் பந்துறை, நாமமேத்தநந் தீவினை நாசமே. 86

### திருக்கடம்பூர்-திருக்குறுந்தொகை.

*நன்க டம்பனைப் பெற்றவள் பங்கினன், றென்க டம்பைத் திருக்கரக் கோயிலான், றன்க டன்னடி யேனையுந் தாங்குத, லென்க டன்பணி செய்து கிடப்பதே.* 69

### திருக்கடம்பூர்க்கரக்கோயில்-திருக்குறுந்தொகை.

*ஒருவ ராயிரு மூவரு மாயவன், குருவ தாய குழக னுறை விடம், பருவ ரால்குதி கொள்ளும் பழனஞ்சூழ், கருவ தாங்க டம் பூர்க்கரக் கோயிலே.* 70

*வேறு சிந்தையி லாதவர் தீவினை, கூறு செய்த குழக னு றைவிட, மேறு செல்வத் திமையவர் தாந்தொழு, மாறு சேர்க டம் பூர்க்கரக் கோயிலே.* 71

### திரு இன்னம்பர்-திருக்குறுந்தொகை.

*என்னி லாரு மெனக்கினி யாரில்லை, யென்னி லுமினி யா னொரு வன்னுள, னென்னு ளேயுயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக், கென்னு ளேநிற்கு மின்னம்ப ரீசனே.* 72

*தொழுது தூமலர் தூவித் துதித்துநின், றழுது காமுற் ற ரற்றுகின் றாரையும், பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையு, மெழுதுங் கீழ்க்கணக் கின்னம்ப ரீசனே.* 73

### திருக்குடமூக்கு-திருக்குறுந்தொகை.

*துறவி நெஞ்சின ராகிய தொண்டர்காள், பிறவி நீங்கப் பிதற்றுமின் பித்தராய், மறவ னாய்ப்பார்த்தன் மேற்கணை தொ ட்டவெங், குறவ னாருறை யுங்குட மூக்கிலே.* 74

### திருவோற்றியூர்-திருக்குறுந்தொகை.

*ஓற்றி யூரு மொளிமதி பாம்பினை, யொற்றி யூருமப் பாம்பு மதனையே, யொற்றி யூர வொருசடை வைத்தவ, னொற்றி யூர் தொழ நம்வினை யோயுமே.* 75

### திருவன்னியூர்-திருக்குறுந்தொகை.

*ஞானங் காட்டுவர் நன்னெறி காட்டுவர், தானங் காட்டுவர் தம்மடைந் தார்க்கெலாந், தானங் காட்டித்தன் றாளடைந் தார் கட்கு, வானங் காட்டுவர் போல்வன்னி யூரரே.* 76

## திருவையாறு-திருக்குறுந்தொகை.

நெஞ்ச மென்பதோர் நீள்கயந் தன்னுளே, வஞ்ச மென்ப
தோர் வான்சுழிப் பட்டுநான், துஞ்சும் போழ்துநின் னாமத் திரு
வெழுத், தஞ்சுந் தோன்ற வருளுமை யாறரே. 77

பரியர் நுண்ணியர் பார்த்தற் கரியவர், அரிய பாடல ராட
ல ரன்றியுங், கரிய கண்டத்தர் காட்சி பிறர்க்கெலாம், அரியர்
தொண்டர்க் கெளியரை யாறரே. 78

## திருப்பராய்த்துறை-திருக்குறுந்தொகை.

பட்ட நெற்றியர் பான்மதிக் கீற்றினர், நட்ட மாடுவர் நள்
ளிருளேமமுஞ், சிட்ட னார்தென் பராய்த்துறைச் செல்வனார்,
இட்ட மாயிருப் பாரை யறிவரே. 79

முன்பெ லாஞ்சில மோழைமை பேசுவர், என்பெ லாம்பல
பூண்டங் குழிதர்வர், தென்ப ராய்த்துறை மேவிய செல்வனார்,
அன்ப ராயிருப் பாரை யறிவரே. 80

## திருவானைக்கா-திருக்குறுந்தொகை.

திருகு சிந்தையைத் தீர்த்துச்செம் மைசெய்து, பருகி யூற
லைப் பற்றிப் பதமறிந், துருகி நைபவர்க் கூனமொன் றின்றியே,
யருகு நின்றிடு மானைக்கா வண்ணலே. 81

துன்ப மின்றித் துயரின்றி யென்றுநீர், இன்பம் வேண்டி
லிராப்பக லேத்துமின், என்பொ னீச னிறைவனென் றுள்குவா
ர்க், கன்ப னாயிடு மானைக்கா வண்ணலே. 82

நாவா னன்று நறுமலர்ச் சேவடி, யோவா தேத்தி யுளத்த
டைத் தார்வினை, காவா யென்றுதங் கைதொழு வார்க்கெலாம்,
ஆவா வென்றிடு மானைக்கா வண்ணலே. 83

வஞ்ச மின்றி வணங்குமின் வைகலும், வெஞ்சொ லின்றி வி
லகுமின் வீடுற, நைஞ்சு நைஞ்சுநின் றுள்குளிர் வார்க்கெலா,
மஞ்ச லென்றிடு மானைக்கா வண்ணலே. 84

நடையை மெய்யென்று நாத்திகம் பேசாதே, படைகள்
போல்வரும் பஞ்சமா பூதங்கள், தடையொன் றின்றியே தன்
னடைந் தார்க்கெலாம், அடைய நின்றிடு மானைக்கா வண்ணலே.

ஒழுகு மாடத்து ளொன்பது வாய்தலுங், கழுக ரிப்பதன் முன்னங் கழலடி, தொழுது கைகளாற் றாமலர் தூவிநின், றழு மவர்க் கன்ப னானைக்கா வண்ணலே. 86

உருளும் போதறி வொண்ணா வுலகத்தீர், தெருளுஞ் சிக்கெனத் தீவினைச் சேராதே, யிருள றுத்துநின் றீசனென் பார்க்கெலாம், அருள் கொடுத்திடு மானைக்கா வண்ணலே. 87

நேச மாகிநினைமட நெஞ்சமே, நாசமாய குலநலஞ் சுற்றங்கள், பாச மற்றுப் பராபர வானந்த, வாசை யுற்றிடு மானைக்கா வண்ணலே. 88

### திருப்பூந்துருத்தி-திருக்குறுந்தொகை.

மூவனாய் முத லாயிவ் வுலகெலாங், காவ னாய்க்கடுங் காலனைக் காய்ந்தவன், பூவி னாயகன் பூந்துருத் திந்நகர்த், தேவன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 89

### திருநெய்த்தானம்-திருக்குறுந்தொகை.

கொள்ளித் தீயெரி வீசிக் கொடியதோர், கள்ளிக் காட்டிடை யாடுவர் காண்மினோ, தெள்ளித் தேறித் தெளிந்துநெய்த் தானனை, யுள்ளத் தாற்றொழு வாரும்பர் வாணரே. 90

### திருமயிலாடுதுறை-திருக்குறுந்தொகை.

வெஞ்சி னக்கடுங் காலன் விரைகிலான், அஞ்சி றப்பும் பிறப்பு மறுக்கலா, மஞ்சன் மாமயி லாடு துறையுறை, யஞ்சொ லாளுமை பங்க னருளிலே. 91

### திருவேட்களம்-திருக்குறுந்தொகை.

நன்று நாடொறு நம்வினை போயறும், என்று மின்பந் தழைக்க விருக்கலாஞ், சென்று நீர்திரு வேட்களத் துள்ளுறை, துன்று பொற்சடை யானைத் தொழுமினே. 92

கட்டப் பட்டுக் கவலையில் வீழாதே, பொட்ட வல்லுயிர் போவதன் முன்னநீர், சிட்ட னார்திரு வேட்களங் கைதொழப், பட்ட வல்வினை யாயின பாறுமே. 93

வட்ட மென்முலை யாளுமை பங்கனார், எட்டு மொன்று மிரண்டுமூன் றாயினார், சிட்டன் சேர்திரு வேட்களங் கைதொழு, திட்ட மாகி யிருமட நெஞ்சமே. 94

### திருநல்லம்-திருக்குறுந்தோகை.

கொல்லத் தானம னார்தமர் வந்தக்கால், இல்லத் தார்செய லாவதெ னேழைகாள், நல்லத் தானமை யாளுடை யான்கழல், சொல்லத் தான்வல்லி ரேற்றுயர் தீருமே. 95

பொக்கம் பேசிப் பொழுது கழியாதே, துக்கந் தீர்வகை சொல்லுவன் கேண்மினோ, தக்கன் வேள்வி தகர்த்த தழல்வண் ணன், நக்கன் சேர்நல்லம் நண்ணுதல் நன்மையே, 96

பிணிகொள் வார்குழற் பேதையர் காதலாற், பணிகண்மே விப் பயனில்லாப் பாவிகாள், அணுக வேண்டி லரநெறி யாவது, நணுகு நாத னகர்திரு நல்லமே. 97

தமக்கு நல்லது தம்முயிர் போயினால், இமைக்கும் போது மிராதிக் குரம்பைதான், உமைக்கு நல்லவன் றானுறை யும்பதி, நமக்கு நல்லது நல்ல மடைவதே. 98

உரை தளர்ந்துட லார்நடுங் காமுனம், நரை விடையுடை யானிட நல்லமே, பரவு மின்பணி மின்பணி வாரொடே, விரவு மின்விர வாரை விடுமினே. 99

மாத ராரொடு மக்களுஞ் சுற்றமும், பேத மாகிப் பிரிவதன் முன்னமே, நாதன் மேவிய நல்ல நகர்தொழப், போது மின்னெழு மின்புக லாகுமே. 100

### திருஆமாத்தூர்-திருக்குறுந்தோகை.

சந்தி யானைச் சமாதிசெய் வார்தங்கள், புந்தி யானைபுத் தேளிர் தொழப்படும், அந்தி யானையா மாத்தூ ரழகனைச், சிந்தி யாதவர் தீவினை யாளரே. 101

பஞ்ச பூத வலையிற் படுவதற், கஞ்சி நானு மாமாத்தூ ரழகனை, நெஞ்சி னுனினைந் தேனினை வெய்தலும், வஞ்ச வாறுகள் வற்றின காண்மினே. 102

பித்த னைப்பெருந் தேவர் தொழப்படும், அத்த னையணி யாமாத்தூர் மேவிய, முத்தி னையடி யேனுண் முயறலும், பத்தி வெள்ளம் பரந்தது காண்மினே. 103

பண்ணிற் பாடல்கள் பத்திசெய் வித்தகர்க், கண்ணித் தாகு மமுதினை யாமாத்தூர், சண்ணிப் பானைத் தமர்க்கணித் தாயதோர், கண்ணிற் பாவையன் ஞனவன் காண்மினே. 104

## திருப்புகலூர்-திருக்குறுந்தொகை.

மின்னி னேரிடை யாளுமை பங்கனைத், தன்னை நேரொப் பிலாத தலைவனைப், புன்னைக் கானற் பொழிற்புக லூரனை, யென் னு ளாகவைத் தின்புற் றிருப்பனே. 105

அண்ட வாண ரமுதுண நஞ்சுண்டு, பண்டு நான்மறை யோதிய பாடலன், றொண்ட ராகித் தொழுது மதிப்பவர், புண் ட ரீகத்து ளார்புக லூரரே. 106

தத்து வந்தலை கண்டறி வாரிலைத், தத்து வந்தலை கண்ட வர் கண்டிலர், தத்து வந்தலை நின்றவர்க் கல்லது, தத்து வன லன் றண்புக லூரனே. 107

## திருஏகம்பம்-திருக்குறுந்தொகை.

இமையா முக்கண்ண ரென்னெஞ்சத் துள்ளவர், தமையா ரும்மறி வொண்ணுத் தகைமையர், இமையோ ரேத்த விருந்தவ னேகம்பன், நமையா ளும்மவ னைத்தொழு மின்களே. 108

மூக்கு வாய்செவி கண்ணுட லாகிவந், தாக்கு மைவர்த மாப்பை யவிழ்த்தருள், நோக்கு வானமை நோய்வினை வாராமே, காக்கு நாயகன் கச்சியே கம்பனே. 109

பண்ணி லோசை பழத்தினி லின்சுவை, பெண்ணொ டா ணென்று பேசற் கரியவன், வண்ண மில்லி வடிவு வேறாயவன், கண்ணி லுண்மணி கச்சியே கம்பனே. 110

பொறிப்பு லன்களைப் போக்கறுத் துள்ளத்தை, நெறிப் படுத்து நினைந்தவர் சிந்தையுள், அறிப்பு றுமமு தாயவ னேகம் பங், குறிப்பி னுற்சென்று கூடித் தொழுதுமே. 111

சிந்தை யுட்சிவ மாய்நின்ற செம்மையோ, டந்தி யாயன லாய்ப்புனல் வானமாய்ப், புந்தி யாய்ப்புகுந் துள்ள நிறைந்த வெம், எந்தை யேகம்ப மேத்தித் தொழுமினே. 112

பொய்ய னைத்தையும் விட்டவர் புந்தியுண், மெய்ய னைச்சுடர் வெண்மழு வேந்திய, கைய னைக்கச்சி யேகம்ப மேவிய, ஐயனைத்தொழு வார்க்கில்லை யல்லலே. 113

திருவாய்மூர்-திருக்குறுந்தொகை.

மன்னு மாமறை காட்டு மணாளனர், உன்னி யுன்னி யுறங்குகின் றேனுக்குத், தன்னை வாய்மூர்த் தலைவனு மாசொல்லி, யென்னை வாவென்று போனா ரதென்கொலோ. 114

ஒள்ளி யாரிவ ரன்றிமற் றில்லையென், றுள்கி யுள்கி யுகந்திருந் தேனுக்குத், தெள்ளி யாரிவர் போலத் திருவாய்மூர்க், கள்ளி யாரவர் போலக் கரந்ததே. 115

திரு அதிகை வீரட்டம்-திருக்குறுந்தொகை.

கள்ளி னுண்மல ரோரிரு நான்குகொண், டுள்கு வாரவர் வல்வினை யோட்டுவார், தெள்ளு நீர்வயல் பாய்கெடி லக்கரை, வெள்ளை நீறணி மேனிவீ ரட்டரே. 116

திருக்கோளிலி-திருக்குறுந்தொகை.

கேடு மூடிக் கிடந்துண்ணு நாடது, தேடி நீர்திரி யாதே சிவகதி, கூட லாந்திருக் கோளிலி யீசனைப், பாடு மின்னிர வோடு பகலுமே. 117

திருமாற்பேறு-திருக்குறுந்தொகை.

ஏது மொன்று மறிவில ராயினும், ஓதி யஞ்செழுத் தும்முணர் வார்கட்குப், பேதமின்றி யவரவ ருள்ளத்தே, மாதுந் தாமு மகிழ்வர் மாற் பேறரே. 118

சாத்தி ரம்பல பேசுஞ் சழக்கர்காள், கோத்தி ரமுங்குல மூங்கொண் டென்செய்வீர், பாத்தி ரஞ்சிவ மென்று பணிதிரேல், மாத்தி ரைக்கு ளருளுமாற்பேறரே. 119

சாற்றிச் சொல்லுவன் கேண்மின் றரணியீர், ஏற்றின் மேல்வரு வான்கழ லேத்தினுற், கூற்றை நீக்கிக் குறைவறுத் தாள்வதோர், மாற்றி லாச்செம்பொ னவர்மாற் பேறரே. 120

திருவரிசிற்கரைப்புத்தூர்-திருக்குறுந்தொகை.

முத்தூ ரும்புனல் மொய்யரி சிற்கரைப், புத்தூ ரன்னடி போற்றியென் பாரெலாம், பொய்த்தூ ரும்புல னைந்தொடு புல்கிய, மைத்தூ ரும்வினை மாற்றவும் வல்லரே. 121

அருப்புப் போன்முலை யாரல்லல் வாழ்க்கைமேல், விருப்புச்சேர்நிலை விட்டுநல் லிட்டமாய்த், திருப்புத் தூரனைச் சிந்தை செயச்செயக், கருப்புச் சாற்றிலு மண்ணிக்குங் காண்மினே.

கடவோய்க்கரை திருப்புத்தூர்-திருக்குறுந்தோகை.

ஒருத்த னைமூ வுலகொடு தேவர்க்கு, மருத்த னையடி யேன்மனத் துள்ளமர், கருத்த னைக்கடு வாய்ப்புன லாடிய, திருத்த னைப்புத்தூர் சென்றுகண் டுய்ந்தெனே. 123

மாசார் பாச மயக்கறு வித்தெனுள், நேச மாகிய நித்தன் மணாளனைப், பூசு நீர்க்கடு வாய்க்கரைத் தென்புத்தூர், ஈசனேயென வின்பம தாயிற்றே. 124

திருக்குரங்காடுதுறை-திருக்குறுந்தோகை.

நாடி நநதம ராயின தொண்டர்காள், ஆடு மின்னழு மின்றொழு மின்னடி, பாடு மின்பர மன்பயி லும்மிடங், கூடு மின்குரங் காடு துறையையே. 125

திருப்பூவனூர்-திருக்குறுந்தோகை.

குற்றங் கூடிக் குணம்பல கூடாதீர், மற்றுந் தீவினை செய்தன மாய்க்கலாம், புற்ற ராவினன் பூவனூ ரீசன்பேர் கற்று வாழ்த்துங் கழிவதன் முன்னமே. 126

அனுச யப்பட் டதுவிது வென்னாதே, கனிம னத்தொடு கண்களு நீர்மல்கிப், புனித னைப்பூவ னூரனைப் போற்றுவார், மனித ரிற்றலை யான மனிதரே. 127

திருவலஞ்சுழி-திருக்குறுந்தோகை.

ஓத மார்கட லின்விட முண்டவர், பூத நாயகர் பொற்கயிலைக்கிறை, மாதொர் பாகன் வலஞ்சுழி யீசனை, பாத மேத்தப் பறையுநம் பாவமே. 128

திருவாஞ்சியம் திருக்குறுந்தோகை.

அற்றுப் பற்றின்றி யாரையு மில்லவர்க், குற்ற நற்றுணை யாவ னுறைபதி, தெற்று மாடங்கள் சூழ்திரு வாஞ்சியங், கற்றுச் சேர்பவர்க் குக்கருத் தாவதே. 129

திருக்கோண்டீச்சுரம்-திருக்குறுந்தொகை.

சுற்ற முந்துணை நன்மட வாளொடு, பெற்ற மக்களும் பேண லொழிந்தனர், குற்ற மில்புகழ்க் கொண்டீச் சுரவனார், பற்ற லாலொரு பற்றுமற் றில்லையே. 130

வெம்பு நோயு மிடரும் வெறுமையுந், துன்ப முந்துய ரும்மெனுஞ் சூழ்வினை, கொம்ப னார்பயில் கொண்டீச் சுரவனை, யெம்பி ரானென வல்லவர்க் கில்லையே. 131

திருநீலக்குடி-திருக்குறுந்தொகை.

வைத்த மாடு மனைவியு மக்களீர், செத்த போது செறியார் பிறிவதே, நித்த நீலக் குடியர னைநினை, சித்த மாகிற் சிவகதி சேர்திரே. 132

அழகி யோமிளை யோமெனு மாசையால், ஒழுகி யாவி யுடல்விடு முன்னமே, நிழல தார்பொழி னீலக் குடியரன், கழல்கொள் சேவடி கைதொழு துய்ம்மினே. 133

திருமங்கலக்குடி-திருக்குறுந்தொகை.

மன்னு சீர்மங் கலக்குடி மன்னிய, பின்னு வார்சடைப் பிஞ்ஞகன் றன்பெயர், உன்னு வாரு முரைக்கவல் லார்களுந், துன்னு வார்நன் னெறிதொடர் வெய்தவே. 134

திருஎறும்பியூர்-திருக்குறுந்தொகை.

கறும்பி யூர்வன வைந்துள காயத்தில், திறம்பி யூர்வன மற்றும் பலவுள, குறும்பி யூர்வதோர் கூட்டகத் திட்டெனை, யெறும்பி யூரான் செய்த வியற்கையே. 135

கண்ணி றைந்த கனபவ ளத்திரள், விண்ணி றைந்த விரிசுடர்ச் சோதியான், உண்ணி றைந்துரு வாயுயி ராயவன், எண்ணி றைந்த வெறும்பியூ ரீசனே. 136

திருக்கானூர்-திருக்குறுந்தொகை

தாயத் தார்தமர் நன்னிதி யென்னுமிம், மாயத் தேகிடந் திட்டு மயங்கிடேற், காயத் தேயுளன் கானூர் முளையினை, வாயத் தால்வணங் கீர்வினை மாயவே. 137

குறியி னின்றுண்டு கூறையி லாச்சமண், நெறியை விட்டு நிறைகழல் பற்றினேன், அறிய வுற்றிரேற் கானூர் முளையவன், செறிவு செய்திட் டிருப்பதென் சிந்தையே. 137

பொத்தல் மண்சுவர்ப் பொல்லாக் குரம்பையை, மெய்த்த னென்று வியந்திட லேழைகாள், சித்தர் பத்தர்கள் சேர்திருக் கானூரில், அத்தன் பாத மடைதல் கருமமே. 138

கல்வி ஞானக் கலைப்பொரு ளாயவன், செல்வ மல்கு திருக் கானூ ரீசனை, யெல்லி யும்பக லும்மிசை வானவா, சொல்லி டீர் நுந் துயரங்க டீரவே. 139

திருச்சேறை-திருக்குறுந்தொகை.

பூரி யாவரும் புண்ணியம் பொய்கெடுங், கூரி தாய வறி வுகை கூடிடுஞ், சீரி யார்பயில் சேறையுட் செந்நெறி, நாரி பாக ன்ற ஞம நவிலவே. 140

என்ன மாதவஞ் செய்தனை நெஞ்சமே, மின்னு வார்சடை வேத விழுப்பொருள், செந்நெ லார்வயற் சேறையுட் செந்நெறி, மன்னு சோதிநம் பால்வந்து வைகவே. 141

பிறப்பு மூப்புப் பெரும்பசி வான்பிணி, இறப்பு நீங்கியிங் கின்பம்வந் தெய்திடுஞ், சிறப்பர் சேறையுட் செந்நெறி யான் கழல், மறப்ப தின்றி மனத்தினுள் வைக்கவே. 142

மாடு தேடி மயக்கினில் வீழ்ந்துநீர், ஓடி யெய்த்தும் பய னிலை யூமர்காள், சேடர் வாழ்சேறைச் செந்நெறி மேவிய, ஆட லான்றன் னடியடைந் துய்ம்மினே. 143

தப்பி வானந் தரணிகம் பிக்கிலென், ஒப்பில் வேந்தரொ ருங்குடன் சீறிலென், செப்ப மாஞ்சேறைச் செந்நெறி மேவிய, அப்ப னருள ரஞ்சுவ தென்னுக்கே. 144

குலங்க ளென்செய்வ குற்றங்க ளென்செய்வ, துலங்கி நீ நின்று சோர்ந்திட நெஞ்சமே, யிலங்கு சேறையிற் செந்நெறி மேவிய, அலங்க னருள ரஞ்சுவ தென்னுக்கே. 145

பழகி னல்வரும் பண்டுள சுற்றமும், விழவி டாவிடில் வே ண்டிய தெய்தொணு, திகழ்கொள் சேறையிற் செந்நெறி மேவிய, அழக னருள ரஞ்சுவ தென்னுக்கே. 146

## திருப்புள்ளிருக்கும்வேளூர்-திருக்குறுந்தோகை.

வெள்ளெ ருக்கர வம்விர வுஞ்சடைப், புள்ளி ருக்குவே ளூரரன் பொற்கழல், உள்ளி ருக்கு முணர்ச்சியி லாதவர், நள்ளி ருப்பர் நரகக் குழியிலே. 147

மாற்ற மொன்றறி யீர்மனை வாழ்க்கைபோய்க், கூற்றம் வந் துமைக் கொள்வதன் முன்னமே, போற்ற வல்லிரேற் புள்ளிருக் கும்வேளூர், சீற்ற மாயின தேய்ந்தறுங் காண்மினே. 148

உள்ள முள்கி யுகந்து சிவனென்று, மெள்ள வுள்க வினை கெடு மெய்மையே, புள்ளி னூர்பணி புள்ளிருக் கும்வேளூர், வள் ளல் பாதம் வணங்கித் தொழுமினே. 149

## திருவான்மியூர்-திருக்குறுந்தோகை.

விண்ட மாமலர் கொண்டுவி ரைந்துநீர், அண்டர் நாயகன் றன்னடி சூழ்மின்கள், பண்டு நீர்செய்த பாவம்பறைந்திடும், வண்டு சேர்பொழில் வான்மியூ ரீசனே. 150

பொருளுஞ் சுற்றமும் பொய்மையும் விட்டுநீர், மருளு மா ந்தரை மாற்றி மயக்கறுத், தருளு மாவல்ல வாதியா யென்றனு, மருள றுத்திடும் வான்மியூ ரீசனே. 151

மந்த மாகிய சிந்தை மயக்கறுத், தந்த மில்குணத் தானை யடைந்துநின், றெந்தை யீசனென் றேத்திட வல்லிரேல், வந்து நின்றிடும் வான்மியூ ரீசனே. 152

உள்ள முள்கலந் தேத்தவல் லார்க்கலாற், கள்ள முள்ளவ சிக்கழி வானலன், வெள்ள முமரா வும்விர வுஞ்சடை, வள்ள லா கிய வான்மியூ ரீசனே. 153

ஒட்டை மாடத்தி லொன்பது வாசலுங், காட்டில் வேவ தன் முன்னங் கழலடி, நாட்டி நாண்மலர் தூவிவ லஞ்செயில், வாட்டந் தீர்த்திடும் வான்மியூ ரீசனே. 154

## திருக்காட்டுப்பள்ளி-திருக்குறுந்தோகை.

மாட்டுப் பள்ளி மகிழ்ந்துறை வீர்க்கெலாங், கேட்டுப் பள் ளிகண் டீர்கெடு வீரிது, ஓட்டுப் பள்ளிவிட் டோடலு முமுனங், காட்டுப் பள்ளியு ளான்கழல் சேர்மினே. 155

மாட்டைத் தேடி மகிழ்ந்துநீர் நும்முளே, நாட்டுப் பொய் யெலாம் பேசிடு நாணிலீர், கூட்டை விட்டுயிர் போவதன் முன் னமே, காட்டுப் பள்ளியு ளான்கழல் சேர்மினே. 156

தேனை வென்றசொல் லாளொடு செல்வமும், ஊனை விட் டுயிர் போவதன் முன்னமே, கான வேடர் கருதுங்காட் டுப் பள்ளி, ஞான நாயக னைச்சென்று நண்ணுமே. 157

அருத்த முமனை யாளொடு மக்களும், பொருத்த மில்லை பொல் லாதது போக்கிடுங், கருத்தன் கண்ணுத லண்ணல் காட் டுப்பள்ளி, திருத்தன் சேவடி யைச்சென்று சேர்மினே.

திருச்சிராப்பள்ளி-திருக்குறுந்தொகை.

அரிச்சி ராப்பக லைவரா லாட்டுண்டு, சுரிச்சி ராதுநெஞ் சே யொன்று சொல்லக்கேள், திருச்சி ராப்பள்ளி யென்றலுந் தீ வினை, நரிச்சி ராது நடக்கு நடக்குமே. 159

திருவாட்போக்கி-திருக்குறுந்தொகை.

கூற்றம் வந்து குமைத்திடும் போதினாற், றேற்றம் வந்து தெளிவுற லாகுமே, யாற்ற வும்மருள் செய்யும்வாட் போக்கி பால், ஏற்று மின்விளக் கையிரு ணீங்கவே. 160

கான மோடிக் கடிதெழு தூதுவர், தான மோடு தலைபிடி யாமுன்னம், ஆனஞ் சாடியு கந்தவாட் போக்கியார், ஊன மில் லவர்க் குண்மையி னிற்பரே. 161

நாடிவந்து நமன் றமர் நல்லிருட், கூடி வந்து குமைபபதன் முன்னமே, யாடல் பாடலு கீந்தவாட் போக்கியை, வாடி யேத் தநம் வாட்டந் தவிருமே. 162

திருமருகல்-திருக்குறுந்தொகை.

பெருக லாந்தவம் பேதைமை தீரலாம், திருக லாகிய சிந் தை திருத்தலாம், பருக லாம்பர மாயதோ ரானந்தம், மருக லா னடி வாழ்த்தி வணங்கவே. 163

சினத்தி னால்வரு செய்தொழி லாமவை, யினைத்து நீங்கநி ன் றுதர வாய்மிக, மனத்தி னுன்மரு கற்பெரு மான்றிறம், நினை ப்பி னார்க்கில்லை நீணில வாழ்க்கையே. 161

தனி-திருக்குறுந்தொகை.

எட்டு மூர்த்தியாய் நின்றிய லுந்தொழில், எட்டு வான்குணத் தீசனெம் மான்றன்னை, யெட்டு மூர்த்தியு மெம்மிறை யெம்முளே, யெட்டு மூர்த்தியு மெம்மு ளொடுங்குமே. 165

நடலை வாழ்வுகொண் டென்செய்தீர் நாணிலீர், சுடலை சேர்வது சொற்பிர மாணமே, கடலி னஞ்சமு துண்டவர் கைவிட்டால், உடலி னுர்கிடந் தூர்முனி பண்டமே. 166

நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே, புக்கு நிற்கும்பொன் னார்சடைப் புண்ணியன், பொக்க மிக்கவர் பூவுநீ ருங்கொண்டு, நக்கு நிற்ப ரவர்தமை நாணியே. 167

விறகிற் றீயினன் பாலிற்படு நெய்போன், மறைய நின்றுளன் மாமணிச் சோதியான், உறவு கோனட் டுணர்வு கயிற்றினன், முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே. 168

ஞானத் தாற்றொழு வார்சில ஞானிகள், ஞானத் தாற்றொழு வேனுனை நானலேன், ஞானத் தாற்றொழு வார்க டொழக்கண்டு, ஞானத் தானுனை நானுந் தொழுவனே. 169

முன்னை ஞான முதற்றனி வித்தினைப், பின்னை ஞானம் பிறங்குஞ் சடையனை, யென்னை ஞானத் திருளறுத் தாண்டவன், றன்னை ஞானத் தளையிட்டு வைப்பனே. 170

என்னை யேது மறிந்தில னெம்பிரான், றன்னை நானுமுன் னேது மறிந்திலே, னென்னைத் தன்னடி யானென் றறிதலுந், தன்னை நானும்பி ரானென் றறிந்தெனே. 171

காலபாராயணம்-திருக்குறுந்தொகை.

மற்றுங் கேண்மின் மனப்பரிப் பொன்றின்றிச், சுற்றும் பூசிய நீற்றொடு கோவணம், ஒற்றை யேறுடை யானடி யேயலலாற், பற்றொன் றில்லிகண் மேற்படை போகலே. 172

மறக்கிற்பனே யென்னுந்-திருக்குறுந்தொகை.

புந்திக் குவிளக் காய புராணனைச், சந்திக் கண்ணட மாடுஞ் சதுரனை, யந்தி வண்ணனை யாரழன் மூர்த்தியை, வந்தென் னாங்கொண் டானை மறப்பனே. 173

தோழற்பாலதே யென்னுந்-திருக்குறுந்தோகை.

பருதி யானைப் பலவேறு சமயங்கள், கருதி யானைக்கண் டார்மன மேவிய, பிருதி யானைப் பிறரறி யாததோர், சுருதி யானைக்கண் டீர்தொழற் பாலதே. 174

ஆதிப்பா லட்ட மூர்த்தியை யானஞ்சும், வேதிப் பானைநம் மேல்வினை வெந்தறச், சாதிப் பானைத் தவத்திடை மாற்றங்கள், சோதிப் பானைக்கண் டீர்தொழற் பாலதே. 175

மனத்தோகை-திருக்குறுந்தோகை.

பொன்னுள் ளத்திரள் புன்சடை யின்புற, மின்னுள் ளத்திரள் வெண்பிறை யாயிறை, நின்னுள் ளத்தருள் கொண்டிரு ணீங்குதல், என்னுள் ளத்துள தெந்தைபி ரானிரே. 176

வெப்பத் தின்மன மாசு விளக்கிய, செப்பத் தாற்சிவ னென்பவர் தீவினை, ஒப்பத் தீர்த்திடு மொண்கழ லாற்கல்ல, தெப் பற் றும்மிலே னெந்தைபி ரானீரே. 177

சித்தத்-திருக்குறுந்தோகை.

ஒருவ னாகிநின் றானிவ் வுலகெலாம், இருவ ராகிநின் றார்கட் கறிகிலான், அருவ ராவரை யார்த்தவ னார்கழல், பரவு வாரவர் பாவம் பறையுமே. 178

பற்பல் காலம் பயிற்றிப் பரமனைச், சொற்பல் காலநின் றேத்துமின் றொல்வினை, வெற்பிற் றோன்றிய வெங்கதிர் கண்டவப், புற்ப னிக்கெடு மாறது போலுமே. 179

மணிசெய் கண்டத்து மான்மறிக் கையினன், கணிசெய் வேடத்த ராயவர் காப்பினும், பணிக டாஞ்செய வல்லவர் யாவர்தம், பிணிசெ யாக்கையை நீக்குவர் பேயரே. 180

தன்னிற் றன்னை யறியுந் தலைமகன், றன்னிற் றன்னை யறியிற் றலைப்படுந், தன்னிற் றன்னை யறிவில னாயிடிற், றன்னிற் றன்னையுஞ் சார்தற் கரியனே. 181

உள்ளத்-திருக்குறுந்தோகை.

நீற லைத்ததோர் மேனி நிமிர்சடை, யாற லைக்கநின் றாடும மூதினைத், தேற லைத்தெளி வைத்தெளி வாய்த்ததோர், ஊற லைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. 182

பொந்தை யைப்புக்கு நீக்கப் புகுந்திடுந், தந்தை யைத்த
ழல் போல்வதோர் மேனியை, சிந்தை யைத்தெளி வைத்தெளி
வாய்த்ததோ, ரெந்தை யைக்கண்டு கொண்டதெ னுள்ளமே.183

வெள்ளத் தார்விஞ்சை யார்கள்வி ரும்பவே, வெள்ளத்
தைச்சடை வைத்த விகிர்தனார், கள்ளத் தைக்கழி யம்மன மொ
ன் றிநின், றுள்ளத் தில்லொளி யைக்கண்ட துள்ளமே. 184

முன்னெஞ் சமின்றி மூர்க்கராய்ச் சாகின்றார், தன்னெஞ்
சந்தமக் குத்தாமி லாதவர், வன்னெஞ் சமது நீங்குதல் வல்லீ
ரேல், யென்னெஞ் சிலீச னைக்கண்ட துள்ளமே. 185

வென்றா னைப்புல னைந்துமென் றீவினை, கொன்றா னைக்குணத்
தாலே வணங்கிட, நன்றா னம்மனம் வைத்திடு ஞானமாம், ஒன்றா
னைக்கண்டு கொண்டதென் னுள்ளமே. 186

மருவி னைமட நெஞ்சம னம்புகும், குருவி னைக்குணத் தா
லே வணங்கிடுந், திருவி னைச்சிந்தை யுட்சிவ னாய்நின்ற, வுருவி
னைக்கண்டு கொண்டதென் னுள்ளமே. 187

பவநாசத்-திருக்குறுந்தொகை

பாவ மும்பழிப் பற்றற வேண்டுவீர், ஆவி லைஞ்சுகந் தாடும
வன்கழல், மேவ ராய்மிக வும்மகிழ்ந் துள்குமின், காவ லாள
ன்க லந்தருள் செய்யுமே. 188

கங்கை யாடிலென் காவிரி யாடிலென், கொங்கு தண்கும
ரித்துறை யாடிலென், ஓங்கு மாகட லோதநீ ராடிலென், எங்கு
மீசனெ னாதவர்க் கில்லையே. 189

பட்ட ராகிலென் சாத்திரங் கேட்கிலென், இட்டு மட்டியு
மீதொழில் பூணிலென், எட்டு மொன்றுமி ரண்டும றியிலென்,
இட்ட மீசனெ னாதவர்க் கில்லையே. 190

வேத மோதிலென் சாத்திரங் கேட்கிலென், நீதி நூல்பல நித்
தல்ப யிற்றிலென், ஓதி யங்கமோ ராறுமு ணரிலென், ஈச னையு
ள்கு வார்க்கன்றி யில்லையே. 191

காலை சென்று கலந்துநீர் மூழ்கிலென், வேலை தோறும் வி
திவழி நிற்கிலென், ஆலை வேள்வி யடைந்தது வேட்கிலென், ஏ
ல வீசனென் பார்க்கன்றி யில்லையே. 192

கான நாடு கலந்து திரியிலென், ஈன மின்றியி ருந்தவஞ் செய்யிலென், ஊனே யுண்ட லொழிந்துவா னேக்கிலென், ஞான மென்பவர்க் கன்றிநன் றில்லையே. 193

நன்று நோக்கிலென் பட்டினி யாகிலென், குன்ற மேறியி ருந்தவஞ் செய்யிலென், சென்று நீரிற் குளித்துத் திரியிலென், என்று மீசனென் பார்க்கன்றி யில்லையே. 194

கோடி தீர்த்தங் கலந்து குளித்தவை, ஆடி னுலுமரனுக்க ன் பில்லையேல், ஓடு நீரினை யோட்டைக்குடத்தட்டி, மூடி வைத்திட்ட மூர்க்கனே டொக்குமே. 195

மற்று நற்றவஞ் செய்துவ ருந்திலென், பொற்றை யுற்றெடுத் தானுடல் புக்கிறக், குற்ற நற்குரை யார்கழற் சேவடி, பற்றி லாதவர்க் குப்பய னில்லையே. 196

கோயில்-பெரிய திருத்தாண்டகம்.

அரியானை யந்தணர்தஞ் சிந்தையானை யருமறையி னகத்தானை யணுவையார்க்குந், தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத் திகழொளியைத் தேவர்கடங் கோனைமற்றைக், கரியானை நான்முகனைக் கனலைக்காற்றைக் கனைகடலைக் குலவரையைக் கலந்துநின்ற, பெரியானைப் பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 197

அருந்தவர்க டொழுதேத்து மப்பன்றன்னை யமரர்கடம் பெருமானை யரனைமூவா, மருந்தமரர்க் கருள்புரிந்த மைந்தன்றன்னை மறிகடலுங் குலவரையும் மண்ணும்விண்ணுந், திருந்தொளிய தாரகையுந் திசைகளெட்டுந் திரிசுடர்க ளோரிரண்டும் பிறவுமாய, பெருந்தகையைப் பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாளெல்லாம் பிறவாநாளே. 198

அருந்துணையை யடியார்தம் மல்லறீர்க்கு மருமருந்தை யகன்ஞாலத் தகத்துட்டோன்றி, வருந்துணையுஞ் சுற்றமும் பற்றும்விட்டு வான்புலன்களகத்தடக்கி மடவாரோடும், பொருந்தணைமேல் வரும்பயனைப் போகமாற்றிப் பொதுநீக்கித் தனைநினைய வல்லோர்க்கென்றும், பெருந்துணையைப் பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாளெல்லாம் பிறவாநாளே. 199

### திருவதிகை வீரட்டானம்-அடையாளத்திருத்தாண்டகம்

ஒழித்திடுமே யுள்குவா ருள்ளத்துள்ள வுறுபிணியுஞ் செறு
பகையு மொற்றைக்கண்ணால், விழித்திடுமே காமனையும் பொடி
யாய்வீழ வெள்ளப் புனற்கங்கை செஞ்சடைமே, விழித்திடுமே
யேழுலகுந் தானாகும்மே யியங்குந் திரிபுரங்க ளோரம்பினால், லழி
த்திடுமே யாதிமா தவத்துளானே யவனாகி லதிகைவீ ரட்ட
னாமே. 200

### திருப்புன்கூர்-திருநீடூர்-திருத்தாண்டகம்.

பின்றானு முன்றானு மானான்றன்னைப் பித்தர்க்குப் பித்த
னாய் நின்றான்றன்னை, நன்றாங் கறிந்தவர்க்குந் தானேயாகி நல்
வினையுந் தீவினையு மானான்றன்னைச், சென்றோங்கி விண்ணள
வுந் தீயானானைத் திருப்புன்கூர் மேவிய சிவலோகனை, நின்றாய
நீடூர் நிலாவினானை நீதனே னென்னேநா னினையாவாறே. 201

இல்லானை யெவ்விடத்து முள்ளான்றன்னை யினியநினை யா
தார்க் கின்னாதானை, வல்லானை வல்லடைந்தார்க் கருளும்வண்
ண மாட்டாதார்க் கெத்திறத்து மாட்டாதானைச், செல்லாத
சென்னெறிக்கே செல்விப்பானைத் திருப்புன்கூர் மேவிய சிவ
லோகனை, நெல்லால் விளைகழனி நீடூரானை நீதனே னென்னே
நா னினையாவாறே. 202

நோக்காதே யெவ்வளவு நோக்கினானை நுணுகாதே யாதொ
ன்று நுணுகினானை, யாக்காதே யாதொன்று மாக்கினானை யணு
காதா ரவர்தம்மை யணுகா தானைத், தேக்காதே தென்கடனஞ்
சுண்டான்றன்னை திருப்புன்கூர் மேவிய சிவலோகனை, நீக்காத
பேரொளிசேர் நீடூரானை நீதனே னென்னேநா னினையாவாறே.

### திருக்கழிப்பாலை-திருத்தாண்டகம்.

விண்ணானாய் விண்ணவர்கள் விரும்பிவந்து வேதத்தாய் கீத
த்தாய் விரவியெங்கு, மெண்ணானா யெழுத்தானாய் கடலேழானா
யிறையானா யெம்மிறையே யென்றுநிற்குங், கண்ணானாய் காரா
னாய் பாருமானாய் கழிப்பாலை யுள்ளுறையுங் கபாலப்பனார், மண்
ணானாய் மாயக்கு ரம்பைநீங்க வழிவைத்தார்க் கவ்வழியே போது
நாமே. 204

செற்றதோர் மனமொழிந்து சிந்தைசெய்து சிவமூர்த்தி
யென்றெழுவார் சிந்தையுள்ளா, லுற்றதோர் நோய்களைந்திவ்

வுலகமெல்லாங் காட்டுவா னுத்தமன்ற ஞேதாதெல்லாங், கற் றதோர் நூலினன் களிறுசெற்றுன் கழிப்பாலை மேயகபா லப்ப ஞர், மற்றிதோர் மாயக்கு ரம்பைநீங்க வழிவைத்தார்க் கவ் வழியே போதுநாமே. 225

திருப்பூவணம்-திருத்தாண்டகம்.

ஆரொருவ ருள்குவா ருள்ளத்துள்ளே யவ்வுருவாய் நிற்கி ன்ற வருளுந்தோன்றும், வாருருவப் பூண்முலைநன் மங்கைதன் னை மகிழ்ந்தொருபால் வைத்துகந்த வடிவுதோன்றும், நீருருவக் கடலிலங்கை யரக்கர்கோனை நெறுநெறென வடர்த்திட்ட நிலையுந் தோன்றும், போருருவக் கூற்றுதைத்த பொற்புத்தோன்றும் பொழிறிகழும் பூவணத்தெம் புனிதனர்க்கே. 226

திருவாலவாய்-திருத்தாண்டகம்.

மூவனை மூர்த்தியை மூவாமேனி யுடையானை மூவுலகுந் தானேயெங்கும், பாவனைப் பாவ மறுப்பான்றன்னைப் படியெ ழுத லாகாத மங்கையோடு, மேவனை விண்ணோர் நடுங்கக்கண்டு விரிகடலி னஞ்சுண் டமுதமீந்த, தேவனைத் தென்கூடற் றிருவா லவாய் சிவனடியே சிந்திக்கப் பெற்றேனனே. 227

துறந்தார்க்குத் தூநெறியாய் நின்றுன்றன்னைத் துன்பந்து டைத்தாள வல்லான்றன்னை, யிறந்தார்க ளென்பே யணிந்தான் றன்னை யெல்லின் நடமாட வல்லான்றன்னை, மறந்தார் மதின்மூ ன்று மாய்த்தான்றன்னை மற்றொரு பற்றில்லா வடியார்க்கென் றுஞ், சிறந்தானைத் தென்கூடற் றிருவாலவாய்ச் சிவனடியே சிந் திக்கப் பெற்றேனனே. 228

திருநள்ளாறு-திருத்தாண்டகம்.

குலங்கெடுத்துக் கோணீக்க வல்லான்றன்னைக் குலவரை யன் மடப்பாவை யிடப்பாலானை, மலங்கெடுத்து மாதீர்த்த மாட் டிக்கொண்ட மறையவனைப் பிறைதவழ்செஞ் சடையினனைச், சலங்கெடுத்துத் தயாமூல தன்மமென்னுந் தத்துவத்தின் வழி நின்று தாழ்ந்தோர்க்கெல்லா, நலங்கொடுக்கு நம்பியை நள்ளாற் றனை நானடியே னினைக்கப்பெற் றுய்ந்தவாறே. 229

## திருநாகைக்காரோணம்-திருத்தாண்டகம்.

மனைதுறந்த வல்லமணர் தங்கள்பொய்யு மாண்புரைக்கு மனக்குண்டர் தங்கள்பொய்யுஞ், சினைபொதிந்த சீவரத்தர் தங் கள்பொய்யு மெய்யென்று கருதாதே போதுநெஞ்சே, பனையு ரியைத் தன்னுடலிற் போர்த்தவெந்தை யவன்பற்றே பற்றாகக் காணினல்லாற், கனைகடலின் றென்கழிசூழ்ந்தணுகைக் காரோ ணத் தெஞ்ஞான்றுங் காணலாமே. 230

## திருவாரூர்-திருத்தாண்டகம்.

உயிரா வணமிருந் துற்றுநோக்கி யுள்ளக் கிழியி னுருவெழு தி, யுயிரா வணஞ்செய்திட் டுன்கைத்தந்தா லுணரப்படுவாரோ டொட்டிவாழ்தி, யயிரா வணமேறாதானேறேறி யமரர்நா டாளா தே யாரூராண்ட, வயிரா வணமேயென் னம்மானே நின்னருட்க ண்ணானோக்காதா ரல்லாதாரே. 231

முன்ன மவனுடைய நாமங்கேட்டாண் மூர்த்தி யவனிருக்கு ம் வண்ணங்கேட்டாள், பின்னையவனுடைய வாரூர்கேட்டாள் பெயர்த்துமவனுக்கே பிச்சியானா, ளன்னையையு மத்தனையு மன் றேநீத்தா ளகன்றா ளகலிடத்தா ராசாரத்தைத், தன்னை மறந் தா டன்னுமங்கெட்டா டலைப்பட்டா ணங்கை தலைவன்றாளே.

உன்னுருவிற் சுவையொளியூ றோசைநாற்றத் துறுப்பினது குறிப்பாகு மைவீர்நுங்கண், மன்னுருவத் தியற்கைகளாய் வைப் பீர்க்கையோ வையகமே போதாதே யானேல்வானோர், பொன் னுருவைத் தென்னாரூர் மன்னுகுன்றைப் புவிக்கெழிலாஞ் சிவக் கொழுந்தைப் புகுந்தென்சிந்தை, தன்னுருவைத் தந்தவனை யெ ந்தைதன்னைத் தலைப்படுவேன் றுலைப்படுப்பான் றருக்கேன் மின்னே. 233

நிலைபெறுமா றெண்ணுதியே னெஞ்சேநீவா நித்தலுமெம் பிரானுடைய கோயில்புக்குப், புலர்வதன்முன் னலகிட்டு மெழு க்குமிட்டுப் பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்துபாடித், தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடிச்சங்கரா சயபோற்றி போற்றியென்றும், அலைபுனல்சேர் செஞ்சடையெம் மாதியென்று மாரூரா வென் றென்றே யலறாநில்லே. 234

பற்றிநின்ற பாவங்கள் பாற்றவேண்டிற் பரகதிக்குச் செல்வதொரு பரிசுவேண்டிற், சுற்றிநின்ற சூழ்வினைகள் வீழ்க்கவேண்டிற் சொல்லுகேன் கேணெஞ்சே துஞ்சாவண்ணம், உற்றவரு முறுதுணையு நீயேயென்று முன்னையலா லொருதெய்வ முள்கேனென்றும், புற்றரவக் கச்சார்த்த புனிதாவென்றும் பொழிலாரூ ராவென்றே போற்றுநில்லே. 235

ஒருவனு யுலகேத்த நின்றநாளோ வோருருவே மூவுருவமானநாளோ, கருவனுய்க் காலனைமுன் காய்ந்தநாளோ காமனையுங் கண்ணழலால் விழித்தநாளோ, மருவனுய் மண்ணும்விண்ணுந் தெரிந்தநாளோ மான்மறிக்கை யேந்தியோர் மாதோர்பாகந், திருவினுள் சேர்வதற்கு முன்னோபின்னோ திருவாரூர் கோயிலாக் கொண்டநாளே. 236

திருநெய்த்தானம்-திருத்தாண்டகம்.

மெய்த்தானத் தகம்படியு ளைவர்நின்று வேண்டிற்றுக் குறைமுடித்து வினைக்குக்கூடாம், இத்தானத் திருந்திங்ஙனுய்வானெண்ணு மிதனையொழி யியம்பக்கே ளேழைநெஞ்சே, மைத்தான நீணயனி பங்கன்வங்கம் வருதிரைநீர் நஞ்சுண்ட கண்டன்மேய, நெய்த்தான நன்னகரென் றேத்திநின்று நினையுமா நினைந்தக்கா லுய்யலாமே. 237

அலையார் வினைத்திறஞ்சே ராக்கையுள்ளே யகப்பட்டுளாசையெனும் பாசந்தன்னுட், டலையாய்க் கடையாகும் வாழ்விலாழ்ந்து தளராது நெஞ்சமே யஞ்சவேண்டா, விலையார் புனற்கொன்றை யெறிநீர்த்திங்க ளிருஞ்சடைமேல் வைத்துகந்தா னிமையோரேத்து, நிலையா னுறைநிலைநெய்த் தானமென்று நினையுமா நினைந்தக்கா லுய்யலாமே. 238

தினைத்தனையோர் பொறையிலா வுயிர்போங்கூட்டைப் பொருளென்று மிகவுன்னு மதியாலிந்த, வனைத்துலகு மாளலாமென்றுபேசு மாங்காரந் தவிர்நெஞ்சே யமரர்க்காக, முனைத்துவரு மதில்மூன்று பொன்றவன்று முடுகியவெஞ் சிலைவளைத்துச் செந்தீமூழ்க, நினைத்தபெருங் கருணையனெய்த் தானமென்று நினையுமா நினைந்தக்கா லுய்யலாமே. 239

## திருக்கன்றாப்பூர்-திருத்தாண்டகம்.

எவரேனுந் தாமாக விலாடத்திட்ட திருநீறுஞ் சாதனமுங் கண்டாலுள்கி, யுவராதே யவரவரைக் கண்டபோது உகந்தடிமைத் திறநினைந்தங் குவந்துநோக்கி, யிவர்தேவ ரவர்தேவ ரென்றுசொல்லி யிரண்டாட்டா தொழிந்தீசன் றிறமேபேணிக், கவராதே தொழுமடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே. 240

இலங்காலஞ் சொல்லாநா னென்றுநெஞ்சத் திடையாதே யாவர்க்கும் பிச்சையிட்டு, விலங்காதே நெறிநின்றங் கறிவேமிக்கு மெய்யன்பு புகப்பெய்து பொய்யைநீக்கித், துலங்காமெய் வானவரைக் காத்துநஞ்ச முண்டபிரா னடியினைக்கே சித்தம்வைத்துக், கலங்காதே தொழுமடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே. 241

விருத்தனே வேலைவிட முண்டகண்டா விரிசடைமேல் வெண்டிங்கள் விளங்கச்சூடு, மொருத்தனே யுமைகணவா வுலகமூர்த்தி நுந்தாத வொண்சுடரே யடியார்தங்கள், பொருத்தனே யென்றென்று புலம்பிநாளும் புலனைந்து மகத்தடக்கிப் புலம்பிநோக்கிக், கருத்தினாற் றொழுமடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே. 242

ஐயினான் மிடறடைப்புண் டாக்கைவிட்டு ஆவியார் போவதுமே யகத்தார்கூடி, மையினாற் கண்ணெழுதி மாலைசூட்டி மயானத்தி லிடுவதன்முன் மதியஞ்சூடு, மையனார்க் காளாகி யன்புமிக்கு யகங்குழைந்து மெய்யரும்பி யடிகள்பாதங், கையினாற் றொழுமடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே. 243

## திருவானைக்கா-திருத்தாண்டகம்.

எத்தாய ரெத்தந்தை யெச்சுற்றத்தா ரெம்மாடு சும்மாடா போவர் நல்லார், செத்தால்வந் துதவுவா ரொருவரில்லை சிறுவிரகாற் றீமூட்டிச் செல்லாநிற்பர், சித்தாய வேடத்தாய் நீடுபொன்னித் திருவானைக் காவுடைய செல்வாவென்ற, னத்தாவுன் பொற்பாத மடையப்பெற்றா லல்லகண்டங் கொண்டடியே னென்செய்கேனே. 244

ஊனாகி யுயிராகி யதனுணின்ற வுணர்வாகிப் பிறவனைத்து நீயாய்நின்றாய், நானேது மறியாமே யென்னுள்வந்து நல்லன வுந் தீயனவுங் காட்டாநின்றாய், தேனாருங் கொன்றையனே நின் றியூராய் திருவானைக் காவிலுறை சிவனேஞான, மானாயுன் பொ ற்பாத மடையப்பெற்றா லல்லகண்டங் கொண்டடியே னென் செய்கேனே. 245

திருக்கீழ்வேளூர்-திருத்தாண்டகம்.

உளரொளியை யுள்ளத்தி னுள்ளேநின்ற வோங்காரத் துறு பொருள தாயினானை, விளரொளியை விடுசுடர்க ளிரண்டுமொன் றாம் விண்ணொடுமண் ணாகாச மாயினானை, வளரொளியை மரக தத்தி னுருவினானை வானவர்க ளெப்பொழுதும் வாழ்த்தியேத் துங், கிளரொளியைக் கீழ்வேளூ ராளுங்கோவைக் கேடிலியை நாடுமவர் கேடிலாரே. 246

திருமுதுகுன்றம்-திருத்தாண்டகம்.

துறவாதே யாக்கை துறந்தான்றன்னைச் சோதி முழுமுத லாய் நின்றான்றன்னை, பிறவாதே யெவ்வுயிர்க்குந் தானேயாகிப் பெண்ணினோ டாணுருவாய் நின்றான்றன்னை, மறவாதே தன்றி றமே வாழ்த்துந்தொண்டர் மனத்தகத்தே யனவரத மன்னி நின்ற, திறலானைத் திருமுதுகுன் றுடையான்றன்னைத் தீவினை யே னறியாதே திகைத்தவாறே. 247

திருநாரையூர்-திருத்தாண்டகம்

பிறவாது மிறவாதும் பெருகினானைப் பேய்பாட நடமாடும் பித்தன்றன்னை, மறவாத மனத்தகத்து மன்னினானை மலையானைக் கடலானை வனத்துளானை, யுறவானைப் பகையானை யுயிரானானை யுள்ளானைப் புறத்தானை யோசையானை, நறவாரும் பூங்கொன் றை சூடினானை நாரையூர் நன்னகரிற் கண்டேனானே. 248

திருவாலங்காடு-திருத்தாண்டகம்.

அல்லும் பகலுமாய் நின்றார்தாமே யந்தியுஞ் சந்தியு மானா ர்தாமே, சொல்லும் பொருளெலா மானார்தாமே தோத்திரமுஞ் சாத்திரமு மானார்தாமே, பல்லுரைக்கும் பாவெலா மானார்தா மே பழனை பதியா வுடையார்தாமே, செல்லு நெறிகாட்ட வல் லார்தாமே திருவாலங் காடுறையுஞ் செல்வர்தாமே. 249

### திருத்தலையாலங்காடு-திருத்தாண்டகம்.

சிவனாகித் திசைமுகனாய்த் திருமாலாகிச் செழுஞ்சுடராய்த் தீயாகி நீருமாகிப், புவனாகி புவனங்க ளனைத்துமாகி பொன்னாகி மணியாகி முத்துமாகிப், பவனாகிப் பவனங்க ளனைத்துமாகிப் பசுவேறித் திரிவானோர் பவனாய்நின்ற, தவனாய தலையாலங் காடன்றன்னைச் சாராதே சாலநாள் போக்கினேனே. 250

### திருப்பாசூர்-திருத்தாண்டகம்.

விண்ணாகி நிலனாகி விசும்புமாகி வேலைசூழ் ஞாலத்தார் விரும்புகின்ற, எண்ணாகி யெழுத்தாகி யியல்புமாகி யேழுலகுந் தொழுதேத்திக் காணநின்ற, கண்ணாகி மணியாகிக் காட்சியாகிக் காதலித்தங் கடியார்கள் பரவநின்ற, பண்ணாகி யின்னமுதாம் பாசூர்மேய பரஞ்சுடரைக் கண்டடியே னுய்ந்தவாறே. 251

### பலவகைத்-திருத்தாண்டகம்.

நேர்ந்தொருத்தி யொருபாகத் தடங்கக்கண்டு நிலைதளர வாயிரமா முகத்தினோடு, பாய்ந்தொருத்தி படர்சடைமேற் பயிலக்கண்டு படவரவும் பனிமதியும் வைத்தசெல்வர், தாந்திருத்தித் தம்மனத்தை யொருக்காத்தொண்டர் தனித்தொருதண் டேன்றிமெய் தளராமுன்னம், பூந்துருத்தி பூந்துருத்தி யென்பீராகிற் பொல்லாப் புலாற்றுருத்தி போக்கலாமே. 252

தந்தையார் தாயா ருடன்பிறந்தார் தாரமார் புத்திரரார் தாந்தாமாரே, வந்தவா றெங்ஙனே போமாறேதோ மாயமா மிதற்கேது மகிழவேண்டா, சிந்தையீ ருமக்கொன்று சொல்லக்கேண்மின் றிகழ்மதியும் வாளரவுந் திளைக்குஞ்சென்னி, யெந்தையார் திருநாம நமச்சிவாய வென்றெழுவார்க் கிருவிசும்பி லிருக்கலாமே. 253

### நின்ற-திருத்தாண்டகம்.

இருநிலனாய்த் தீயாகி நீருமாகி யியமான னாயெறியுங் காற்றுமாகி, யருநிலைய திங்களாய் ஞாயிறாகி யாகாசமா யட்ட மூர்த்தியாகிப், பெருநலமுங் குற்றமும் பெண்ணுமாணும் பிறருருவுந் தம்முருவுந் தாமேயாகி, நெருநலையா யின்றாகி நாளையாகி நிமிர்புன் சடையடிக ணின்றவாறே. 254

தனித்-திருத்தாண்டகம்.

நற்பதத்தார் நற்பதமே ஞானமூர்த்தி நலஞ்சுடரே நால்வேதத் தப்பானின்ற, சொற்பதத்தார் சொற்பதமுங் கடந்துநின்ற சொலற்கரிய சூழலா யிதுவுன்றன்மை, நிற்பதொத்துநிலையிலா நெஞ்சந் தன்னு ணிலவாத புலாலுடம்பே புகுந்துநின்ற, கற்பகமே யானுன்னை விடுவேனல்லேன் கனகமா மணிநிறத்தெங் கடவுளானே. 255

நின்னுவார் பிறரன்றி நீயேயானாய் நினைப்பார்கண் மனத்துக்கோர் வித்துமானாய், மன்னானாய் மன்னவர்க்கோ ரமுதமானாய் மறைநான்கு மானாயா றங்கமானாய், பொன்னானாய் மணியானாய் போகமானாய் பூமிமேற் புகழ்தக்க பொருளேயுன்னை, யென்னானா யென்னானா யென்னினல்லா லேழையே னென்சொல்லி யேத்துகேனே. 256

திருவினாத்-திருத்தாண்டகம்.

மைப்படிந்த கண்ணாளுந் தானுங்கச்சி மயானத்தான் வார்சடையான் * மாசொன்றில்லா, னொப்புடையனல்ல னொருவனல்லனோரூர னல்லனோ ருவமனில்லி, யப்படியு மந்நிறமு மவ்வண்ணமு மவனருளே கண்ணாகக் காணினல்லா, லிப்படிய னின்னிறத்த னிவ்வண்ணத்த னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொணாதே. 257

திருமறுமாற்றத்-திருத்தாண்டகம்.

நாமார்க்குங் குடியல்லோ நமனையஞ்சோ நரகத்தி லிடர்ப்படோ நடலையில்லோ, மேமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோ மின்பமே யெந்நாளுந் துன்பமில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான சங்கரனற் சங்கவெண் குழையோர்காதிற், கோமாற்கே நாமென்று மீளாவாளாய்க் கொய்ம்மலர்ச்சேவடியிணையே குறுகினோமே. 258

அகலிடமே யிடமாக வூர்கடோறு மட்டுண்பா ரிட்டுண்பார் விளக்காரையம், புகலிடமா மம்பலங்கள் பூமிதேவி யுடன்கிடந் தாற் புரட்டாள்பொய் யன்றுமெய்யே, யிகலுடைய விடையுடையா னென்றுகொண்டா னினியேதுங் குறைவிலோ மிடர்கடீர்ந்

* என்னினல்லான்-என்றும் பாடம்.

தோந், துகிலுடுத்துப் பொன்பூண்டு திரிவார்சொல்லுஞ் சொற் கேட்கக் கடவோமோ துரிசற்றோமே. 259

---

சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த

## தேவாரப் பதிகங்கள்.

திருவெண்ணெய்நல்லூர்-பண்-இந்தளம்.

பித்தா பிறைசூடி பெருமானே யருளாளா, வெத்தான் மறவாதே நினைக் கின்றேன் மனத்துன்னை, வைத்தாய் பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூ ரருட்டுறையு, ளத்தாவுனக் காளாயினி யல்லே னெனலாமே. 1

ஊனாயுயி ராயுட லாயுலகானாய், வானாய் நிலனாய் கடலானாய் மலையானாய், தேனார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூ ரருட்டுறையு, ளானாயுனக் காளாயினி யல்லே னெனலாமே. 2

திருஎதிர்கோள்பாடி-பண்-இந்தளம்.

கூசநீக்கிக் குற்றநீக்கிச் செற்றமன நீக்கி, வாசமல்கு குழலினார்கள் வஞ்சமனை வாழ்க்கை, யாசைநீக்கி யன்புசேர்த்தி யென்பணிந்தே றேறு, மீசர்கோயி லெதிர்கொள்பாடி யென்பதடை வோமே. 3

திருவாரூர்-பண்-இந்தளம்.

ஊன்மிசை யுதிரக்குப்பை யொருபொரு ளிலாதமாய, மான்மறித் தனையநோக்க மடந்தைமார் மதிக்குமிந்த, மானிடப் பிறவிவாழ்வு வாழ்வதோர் வாழ்வுவேண்டேன், ஞனல்வெள்ளேற்றவாரூ ரப்பனே யஞ்சினேனே. 4

உதிரநீ ரிறைச்சிக்குப்பை யெடுத்தது மலக்குக்கைம்மேல், வருவதோர் மாயக்கூரை வாழ்வதோர் வாழ்வுவேண்டேன், கரியமா லயனுந்தேடிக் கழலிணை காணமாட்டா, வரியனாய் நின்றவாரூ ரப்பனே யஞ்சினேனே. 5

மூப்பதுமில்லை-பண்-நட்டராகம்.

மூப்பதுமில்லை பிறப்பதுமில்லை யிறப்ப தில்லைச், சேர்ப்பது காட்டகத் தூரினுமாகச்சிந் திக்கிலல்லாற், காப்பது

வேள்விக் குடிதண் டுருத்தியெங்கோ னரைமேல், ஆர்ப்பது நாக மறிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே. 6

உம்பரா னூழியா னூழியா னோங்கி மலருறைவான், றம்பர மல்லவர் சிந்திப்பவர் தடுமாற்ற றுப்பான், எம்பர மல்லவ ரென்னஞ்சத் துள்ளு மிருப்பதாகில், அம்பர மாவ தறிந்தோ மேல் நாமிவர்க் காட்படோமே. 7

திருக்கற்குடி பண்-நட்டராகம்

நிலனே நீர்வளி தீநெடு வானக மாகிநின்ற, புலனே புண்டரி கத் தயன்மாலவன் போற்றி செய்யுங், கனலே கற்பகமே திருக் கற்குடி மன்னிநின்ற, வனல்சேர் கையினனே யடியேனையு மஞ்ச லென்னே. 8

திருக்கடவூர் பண்-நட்டராகம்

மண்ணீர்தீ வெளிகால் வருபூதங்க ளாகிமற்றும், பெண் ணோடா ணலியாய்ப் பிறவாவுரு வானவனே, கண்ணு ருண்ம ணியே கடவூர்தனுள் வீரட்டத்தெம், அண்ணு வென்னமுதே யெனக்கார்துணை நீயலதே. 9

திருக்கருப்பறியலூர் பண்-நட்டராகம்.

சிம்மாந்து சிம்புளித்துச் சிந்தையினில் வைத்துகந்து திற ம்பா வண்ணங், கைம்மாவி னுரிவைபோர்த் துமைவெருவக் கண் டானைக் கருப்ப றியலூர்க், கொய்ம்மாவின் மலர்ச்சோலைக் குயி ல்பாட மயிலாடுங் கொகுடிக்கோயி, லெம்மானை மனத்தினால் நினைந்தபோ தவர்நமக் கினியவாறே. 10

பொய்யாத வாய்மையாற் பொடிப்பூசிப் போற்றிசைத்துப் பூசை செய்து, கையினா லெரியோம்பி மறைவளர்க்கு மந்தணர் தங் கருப்ப றியலூர்க், கொய்யுலா மலர்ச்சோலைக் குயில்கூவமயி லாடுங் கொகுடிக்கோயி லையனையென் மனத்தினால் நினைந்தபோ தவர்நமக் கினிய வாறே. 11

திருப்புறம்பியம்-பண்-கொல்லி.

பதியுஞ் சுற்றமும் பெற்ற மக்களும் பண்டையா ரலர் பெ ண்டிருந், நெதியி லிம்மனை வாழும் வாழ்க்கையு நினைப்பொழி ம டநெஞ்சமே, மதியஞ் சேர்சடைக் கங்கை யானிட மகிழும்மல்

லிகை செண்பகம், புதிய பூமலர்ந் தெல்லி நாறும் புறம்ப யந் தொழப் போதுமே. 12

திருவாரூர் பண்-கோல்லி.

பறக்குமெங் கிள்ளைகாள் பாடுமெம் பூவைகா, ளறக்கணெ ன்னத்தகு மடிகளா ரூரரை, மறக்ககில் லாமையும் வளைகணில் லாமையு, முறக்கமில் லாமையு முணர்த்தவல் லீர்களே. 13

திருவதிகைத் திருவீரட்டானம்-பண்-கோல்லிக்கௌவாணம்.

நாற்றானத் தொருவனை நானாய பரனை நள்ளாற்று நம்பியை வெள்ளாற்று விதியைக், காற்றானைத் தீயானைக் கடலானை மலை யின் றலையானைக் கடுங்கலுழிக் கங்கைநீர் வெள்ள, வாற்றானைப் பிறையானை யம்மானை யெம்மான் றம்மானை யாவர்க்கு மறிவரிய செங்கண், ணேற்றானை யெறிகெடில வடவீ ரட்டானத் துறை வானை யிறைபோது மிகழ்வன்போ லியானே. 14

திருத்தோண்டத்தோகை-பண்-கோல்லிக்கௌவாணம்.

பத்தராய்ப் பணிவார்க ளெல்லார்க்கு மடியேன் பரமனையே பாடுவா ரடியார்க்கு மடியேன், சித்தத்தைச் சிவன்பாலே வைத் தார்க்கு மடியேன், திருவாரூர்ப் பிறந்தார்க ளெல்லார்க்கு மடி யேன், முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன் முழுநீறு பூசிய முனிவர்க்கு மடியேன், அப்பாலு மடிச்சார்ந்தா ரடியார் க்கு மடியே னாரூ ரனாரூரி லம்மானுக் காளே. 15

திருக்கானாட்டுமுள்ளூர்-பண்-கோல்லிக்கௌவாணம்

ஒருமேக முகிலாகி யொத்துலகந் தானா யூர்வனவு நிற்பனவு மூழிகளுந் தானாய்ப், பொருமேவு கடலாகிப் பூதங்க ளைந்தாய்ப் புனைந்தவனைப் புண்ணியனைப்புரிசடையி னானைத், திருமேவுசெல் வத்தார் தீமூன்றும் வளர்த்த திருத்தக்க வந்தணர்க ளோதுநக ரெங்கும், கருமேதி செந்தா மரைமேயுங் கழனிக்கானாட்டு முள் ளூரிற் கண்டுதொழு தேனே. 16

இரும்புயர்ந்த மூவிலைய சூலத்தினானை யிறையவனை மறைய வனை யெண்குணத்தி னானைத், சுரும்புயர்ந்த கொன்றையொடு தூமதியஞ்சூடுஞ் சடையானை விடையானைச் சோதியெனுஞ் சுட ரை,யரும்புயர்ந்த வரவிந்தத் தனிமலர்களேறியன் னங்கள்விளை

யாடுமகன் றுறையி னருகே, கரும்புயர்ந்து பெருஞ்செந்நெ னெருங்கிவிளை கழனிக்கா னாட்டுமுள்ளூரிற் கண்டுதொழு தேனே.

பூளைபுனை கொன்றையொடு புரிசடையினானைப் புனலாகி யனலாகிப் பூதங்களைந்தாய், நாளையின்று நெருநலா யாகாயமாகி நாயிறாய் மதியமாய் நின்றவெம் பரனைப், பாளைபடு பைங்கமுகின் குழலிளந் தெங்கின் படுமதஞ்செங் கொழுந்தேறல் வாய்மடுத்துப் பருகிக், காளைவண்டு பாடமயி லாடும்வளர் சோலைக் கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. 18

## திருஆமாத்தூர்-பண்-கொல்லிக்கௌவாணம்.

பாடுவன் பாடுவன் பார்ப்பதிதன்னடி பற்றிநான், தேடுவன் றேடுவன் றிண்ணெனப்பற்றிச் செறிதர, ஆடுவ னாடுவ னாமாத்தூரெம் மடிகளைக், கூடுவன் கூடுவன் குற்றமதற்றென் குறிப்பொடே. 19

பொன்னவன் பொன்னவன் பொன்னைத்தந் தென்னைப் போகவிடா, மின்னவன் மின்னவன் வேதத்தி னுட்பொரு ளாகிய, வன்னவ னன்னவ னாமாத்தூ ரையனையார்வத்தா, லென்னவ லென்னவ னென்மனத் தின்புற் றிருப்பனே. 20

உற்றன னுற்றவர் தம்மை யொழிந்துள்ளத் துள்பொருள், பற்றினன் பற்றினன் பங்கயச் சேவடிக் கேசெல்ல, வற்றன னற்றன னாமாத்தூர் மேயா னடியார்கட்காட், பெற்றனன் பெற்றனன் பெயர்த்தும் பெயர்த்தும் பிறவாமைக்கே. 21

## ஊளர்த்தோகை-பண்-பழம்பஞ்சுரம்.

துருச்சிச் சுடரே நெய்த்தா னத்தாய் சொல்லாய் கல்லாலாய், பருத்தி நியமத் துறைவாய் வெயிலாய்ப் பலவாய்க் காற்றாய், திருத்தித் திருத்தி வந்தென் சிந்தை யிடங்கொள் கயிலாயா, வருத்தித் துன்னை யடைந்தார் வினைக ளகல வருளாயே.

## திருப்பாண்டிக்கொடிமுடி-பண்-பழம்பஞ்சுரம்.

மற்றுப் பற்றெனக் கின்றி நின்றிருப் பாதமே மனம் பாவித்தேன், பெற்றலும் பிறந் தேனினிப் பிற வாத தன்மைவந் தெய்தினேன், கற்றவர் தொழு தேத்துஞ் சீர்க்கறை யூரிற் பாண்டிக் கொடுமுடி, நற்றவா வுனை நான்மறக் கினுஞ் சொல்லுநா நமச்சிவாயவே. 23

திருவாலங்காடு-பண்-பழம்பஞ்சுரம்.

பொய்யே செய்து புறம்புறமே திரிவேன் றன்னைப் போகாமே, மெய்யே வந்திங் கெனையாண்ட மெய்யா மெய்யர் மெய்ப்பொருளே பையா டரவ மரைக்கசைத்த பரமா பழைய னூர்மேய, வையாவாலங் காடாவுன் னடியார்க் கடியே னுவேனே. 24

தூண்டா விளக்கி னற்சோதி தொழுவார் தங்க டுயர்தீர்ப்பாய், பூண்டா யெலும்பைப் புரமூன்றும் பொடியாச் செற்ற புண்ணியனே, பாண்டாழ் வினைக ளவைதீர்க்கும் பரமா பழைய னூர்மேய, வாண்டா யாலங் காடாவுன் னடியார்க் கடியே னுவேனே. 25

திருவொற்றியூர்-பண்-தக்கேசி.

அழுக்கு மெய்கொடுன் றிருவடி யடைந்தே னதுவுநான் படப்பால தொன்றுனுற், பிழுக்கை வாரியும் பால்கொள் வாரடிகேள்பிழைப் பனுகிலுந் திருவடிப் பிழையேன், வழுக்கி வீழினுந் திருப்பெய ரல்லால்மற் றுநா னறியேன் மறுமாற்ற, மொழுக்க வென்கணுக் கொருமருந் துரையா யொற்றியூரெனு மூருறைவானே. 26

திருநீடூர் பண்-தக்கேசி.

குற்றமொன்றடி யாரிலராகுற் கூடுமாறதனைக் கொடுப்பானைக், கற்றகல்வியிலும் மினியானைக் காணப்பேணு மவர்க்கெளியானை, முற்றவஞ்சுந் துறந்திருப்பானை மூவரின்முதலா யவன்றன்னைச், சுற்றுநீள்வயல் சூழ்திருநீடூர்த் தோன்றலைப்பணி யாவிடலாமே. 27

மாயமாய மனங்கெடுப்பானை மனத்துளேமதி யாயிருப்பானைக், காயமாயமு மாக்குவிப்பானைக் காற்றுமாய்க்கன லாய்க்கழிப்பானை, யோயுமாருறு நோய்புணர்ப்பானை யொல்லைவல்வினைகள்கெடுப்பானை, வேய்கொடோளுமை பாகனைநீடூர் வேந்தனைப் பணியா விடலாமே. 28

திருவாழ்கொளிபுத்தூர்-பண்-தக்கேசி.

மெய்யினைமெய்யி னின்றுணர்வானை மெய்யிலாதவர் தங்களுக்கெல்லாம், பொய்யனைபுர மூன்றெரித்தானைப் புனிதனைப்புலித் தோலுடையானைச், செய்யனை வெளியதிருநீற்றிற் றிகழு

மேனியன் மான்மறியேந்து, மைகொள்கண்டனை வாழ்கொளிபு த்தூர் மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. 29

திருக்கழுமலம்-பண்-தக்கேசி.

குண்டலங் குழைதிகழ் காதனே யென்றுங் கொடுமழுவா ட்படைக் குழகனே யென்றும், வண்டலம் பும்மலர்க் கொன்றை யனென்றும் வாய்வெரு வித்தொழு தேன்விதியாலே, பண்டை நம்பல மனமுங் களைந்தொன்றாய்ப் பசுபதி பதிவின விப்பலநா ளுங், கண்டலங் கழிக்கரை யோதம்வந் துலவுங் கழுமலவளநக ர்க் கண்டுகொண் டேனே. 30

வரும்பெரும் வல்வினை யென்றிருந் தெண்ணி வருந்தலுற் றேன்மற வாமனம் பெற்றேன், விரும்பியென் மனத்திடை மெ ய்குளிர்ப்பெய்தி வேண்டிநின் றேதொழு தேன்விதி யாலே, யரு ம்பினை யலரினை யமுதினைத்தேனை யையனைமறவே னென்பிறவி வேரறுக்குங், கரும்பினைப் பெருஞ்செந் நெல்நெருங்கிய கழனி க்கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. 31

திருவாரூர் பண்-தக்கேசி,

கட்டமும் பிணியுங் களைவானைக் காலற் சீறிய காலுடை யானை, விட்ட வேட்கைவெந் நோய்களைவானை விரவி னால்விடுத் தற்கரி யானைப், பட்ட வார்த்தை படநின்ற வார்த்தை வாராமே தவிரப் பணிப்பானை, யட்ட மூர்த்தியை மட்டவிழ் சோலை யாரூ ரானை மறக்கலு மாமே. 32

கார்க்குன்ற மழையாய்ப் பொழிவானைக் கலைக்கெலாம்பொ ருளாயுடன் கூடிப், பார்க்கின்ற வுயிர்க்குப் பரிந்தானைப் பகலு மங்குலுமாகி நின்றானை, யோர்க்கின்ற செவியைச் சுவைதன் னை யுணருநாவினைக் காண்கின்ற கண்ணை, யார்க்கின்ற கடலை மலைதன்னை யாரூரானை மறக்கலு மாமே. 33

திருவிடைமருதூர் பண்-தக்கேசி.

குற்றந்தன் னொடுகுணம் பலபெருகிக் கோலநுண்ணிடை யாரொடு மயங்கிக், கற்றிலேன் கலைகள்பல ஞானங் கடியவாயி னகொடுமைகள் செய்தேன், பற்றலாவதோர் பற்றுமற் றில்லே ன்பாவியேன்பல பாவங்கள் செய்தே, னெற்றுளேனெனக் குய் வகை யருளா யிடைமரு துறையெந்தை பிரானே. 34

திருத்தினைநகர் பண்-தக்கேசி.

பிணிகொளாக்கை பிறப்பிறப்பென்னு மிதனைநீக்கி யீசன் றிருவடி யிணைக்காட், டணியவேண்டிடிற் சொல்லுவன்கேணீ யஞ்சனெஞ்சமே வஞ்சர்வாழ் மதின்மூன், றணிகொள்வெஞ்சி லையாலுகச்சீறு மையன்வையகம் பரவிநின்றேத்துந், திணியும் வார்பொழிற் றிருத்தினைநகருட் சிவக்கொழுந்தினைச்சென்றடை மனனே. 35

திருநின்றியூர்-பண்-தக்கேசி.

வந்தோ ரிந்திரன் வழிபட மகிழ்ந்து வான நாடுநீயாள்கெ னவருளிச், சந்தி மூன்றிலுந் தாபர நிறுத்திச் சகளி செய்திறை ஞ் சக்த்தியர் தமக்குச், சிந்து மாமணி யணிதிருப் பொதியிற் சேர்வு நல்கிய செல்வங்கண் டடைந்தேன், செந்தண் மாமலர்த் திருமகண் மருவுஞ் செல்வத் தென்றிரு நின்றியூ ரானே. 36

திருவலிவலம்-பண்-தக்கேசி.

ஊனங்கத்துயிர்ப்பாயு யிர்க்கெல்லா மோங்காரத் துருவா கிநின்றானை, வானங்கத் தவர்க்குமளப்பரிய வள்ளலையடி யார் கடம்முள்ளத், தேனங்கத்தமு தாகியுள்ளூறுந் தேசனைத்தினை த்தற்கினியானை, மானங்கைத்தலத் தேந்தவல்லானை வலிவலந்த னில் வந்துகண் டேனே. 37

பல்லடியார் பணிக்குப் பரிவானைப் பாடியாடும் பத்தர்க்கன் புடையானைச், செல்லடியே நெருக்கித் திறம்பாது சேர்ந்தவர்க் கேசித்திமுத்தி செய்வானை, நல்லடியார் மனத்தெய்ப் பினில் வைப்பை நானுரு குறையறிந் தருள்புரிவானை, வல்லடி யார்மன த்திச்சையுளானை வலிவலந்தனில் வந்துகண் டேனே. 38

பந்தித்த வல்வினைப் பற்றறப்பரவிப் படுகடற்பரப்புத் தவி ர்ப்பானைச், சந்தித்த திறலார் பணிபூட்டித் தவத்தையீட்டிய தம்மடியார்க்குச், சிந்தித்தற்கெளிதாய்த் திருப்பாதஞ் சிவலோ கந்திறந் தேற்றவல்லானை, வந்திப்பார் தம்மனத்தி னுள்ளானை வலிவலந்தனில் வந்துகண்டேனே. 39

எவ்வவர்தேவ ரிருடிகண்மன்ன ரெண்ணிறந்தார்கண்மற் றெங்குநின்றேத்த, வவ்வவர் வேண்டிய தேயருள்செய்து வடை ந்தவர்க்கேயிடமாகி நின்றானை, யிவ்வவர்கருணை யெங்கற்பகக்க

டலை யெம்பெருமானரு ளாயென்றபின்னை, வவ்வியென்னுவி
மனங்கலந்தானை வலிவலந்தனில் வந்துகண்டேனே. 40

திருவானைக்கா பண்-காந்தாரம்.

தந்தைதா யுலகுக்கோர் தத்துவன்மெய்த் தவத்தோர்க்
குப், பந்தமா யினபெருமான் பரிசுடை யவர்திருவடிக, ளந்தண்
பூம் புனலானைக் காவுடையா தியைநாளு, மெந்தையென்றடி
சேர்வா ரெம்மையுமா ளுடையாரே. 41

திருக்கேதாரம் பண்-நட்டபாடை.

பறியேசுமந் துழல்வீர்பறி நறிகெ றுவதறியீர், குறிகூவிய
கூற்றங்கொளு நாளா லறமுளவே, யறிவானிலு மறிவானல நறு
நீரொடு சோறு, கிறிபேசிநின் றிடுவார்தொழு கேதாரமெ னீரே.

கொம்பைப்பிடித் தொருக்கா லர்க ளிருக்கான் மலர்தூவி,
நம்பன் னமை யாள்வா னென்று நடுநாளையும்பகலுங், கம்பக்க
ளிற் றினமாய்நின்று சுனைநீர்களைத் தூவிச், செம்பொற் பொடிச்
சிந்துந்திருக் கேதாரமெ னீரே. 43

திருக்கழுக்குன்றம் பண்-நட்டபாடை.

ஊனமில்லா வடியார்தம் மனத்தே யுற, ஞானமூர்த்தி நட்
டமாடி நவிலும் மிடந், தேனும்வண்டு மதுவுண் டின்னிசைபா
டியே, கானமஞ்சை யுறையுந் தண்கழுக் குன்றமே. 44

திருச்சுழியில் பண்-நட்டராகம்.

உற்றா னமக் குயரும் மதிச் சடையான் புலனைந்துஞ், செற்
றார் திரு மேனிப் பெருமானூர் திருச் சுழியில், பெற்றானினிது
றையத் திறம்பாமைத் திரு நாமங், கற்றா ரவர்கதியுட் செல்வரே
த்தும் மது கடனே. 45

திருவாரூர் பண்-புறநீர்மை.

சூழொளி நீர்நிலந் தீத்தாழ் வளியா காசம், வானுயர் வெங்
கதி ரோன்வண் டமிழ்வல் லவர்க, ளேழிசை யேழ்நரம் பினோ
சையையா ரூர்புக், கேழுல காளியை நா னென்றுகொ லெய்து
வதே. 46

திருவோற்றியூர்-பண்-குறிஞ்சி.

என்ன தெழிலு நிறையுங் கவர்வான், புன்னை மலரும் புற விற் றிகழுந், தன்னை முன்ன நினைக்கத் தருவா, னுன்னப் படுவா னொற்றி யூரே. 47

திருப்புக்களியூரவிநாசி-பண்-குறிஞ்சி.

உரைப்பா ருரையுகந் துள்கவல் லார்தங்க ளுச்சியா, யரைக்கா டரவா வாதியு மந்தமு மாயினுய், புரைக்காடு சோலைப் புக்கொளி யூர விநாசியே, கரைக்கான் முதலையைப் பிள்ளை தரச் சொல்லு காலனையே. 48

திருநறையூர்ச்சித்தீச்சரம்-பண்-குறிஞ்சி.

குறியில் வாழுவர்க் கொடுங்கூற் றுதைத்த, வெறியும் மழு வாட் படையா னிளமா, நெறியில் வழுவா நியமத் தவர்கள், செறியுந் நறையூர்ச் சித்தீச் சரமே. 49

திருவாரூர்-பண்-செந்துருத்தி.

மீளா வடிமை யுமக்கே யாளாய்ப் பிறரை வேண்டாதே, மூளாத் தீப்போ லுள்ளே கனன்று முகத்தான் மிகவாடி, யாளா யிருக்கு மடியார்தங்க ளல்லல் சொன்னக்கால், வாளாங் கிருப்பீர் திருவா ரூரீர் வாழ்ந்து போதீரே. 50

ஆயம் பேடை யடையுஞ் சோலை யாரூரகத்தீரே, யேயெம் பெருமானிதுவே யாமா றுமக்காட் பட்டோர்க்கு, மாயங் காட்டிப் பிறவிகாட்டி மறவா மனங் காட்டிக், காயங் காட்டிக் கண்ணீர் கொண்டால் வாழ்ந்து போதீரே. 51

திருநனிபள்ளி பண்-பஞ்சமம்.

உறவிலி யூனமிலி யுணரார் புரமூன் றெறியச், செறுவிலி தன்னினை வார்வினை யாயின தேய்ந்தறிய, வறவில கும்மரு ளான்மரு ளார்மொழி வண்டறையு, நறவிரி கொன்றையினு னண்ணு மூர்நனி பள்ளியதே. 52

திருநொடித்தான்மலை பண்-பஞ்சமம்.

தானெனை முன்படைத் தானத றிந்துதன் பொன்னடிக்கே, நானென பாடலந் தோநாயினேனைப் பொருட்படுத்து, வானெ

ணே வந்தெதிர் கொண் மத்தயானை யருள்புரிந்து, வூனுயிர் வேறுசெய் தானொடித் தான்மலை யுத்தமனே. 53

ஆனை யுரித்தபகை யடியேனொடு மீளக்கொலோ, வூனையுயிர் வெருட்டி யொள்ளியானை நினைந்திருந்தேன், வானை மதித்தமரர் வலஞ்செய்தெனை யேறவைக்க, வானையருள் புரிந்தா னொடித்தான்மலை யுத்தமனே. 54

திருச்சிற்றம்பலம்.

# திருவாசகம்.

## சிவபுராணம்.

சிவனதநாதி முறைமையான பழமை.

தொல்லை யிரும்பிறவிச் சூழுந் தளைநீக்கி
யல்லலறுத் தானந்த மாக்கியதே-யெல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
றிருவா சகமென்னுந் தேன்.

அகவற்பா.

நமச்சிவாய வாஅழ்க நாதன்றாள் வாழ்க
விமைப்பொழுது மென்னெஞ்சி னீங்காதான் றாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் றாள்வாழ்க
வாகம மாகிநின் றண்ணிப்பான் றாள்வாழ்க
வேக னநேக னிறைவ னடிவாழ்க
வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவா ருண்மகிழுங் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவா ரோங்குவிக்குஞ் சீரோன் கழல்வெல்க
வீச னடிபோற்றி யெந்தை யடிபோற்றி
தேச னடிபோற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி

மாயப் பிறப்பறுக்கு மன்ன னடிபோற்றி
சீரார் பெருந்துறைநந் தேவ னடிபோற்றி
யாராத வின்ப மருளுமலை போற்றி
சிவனவனென் சிந்தையு ணின்ற வதனு
லவனரு ளாலே யவன்றாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுது மோய வுரைப்பனியான்
கண்ணுதலான் றன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
யெண்ணுதற் கெட்டா வெழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியா
யெண்ணிறந்த வெல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்து
ளெல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றே
னுய்யவென் னுள்ளத்து ளோங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்க
ளையா வெனவோங்கி யாழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியா யியமான னும்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
யெஞ்ஞான மில்லாதே னின்பப் பெருமானே
யஞ்ஞானந் தன்னை யகல்விக்கு நல்லறிவே
யாக்க மளவிறுதி யில்லா வனைத்துலகு
மாக்குவாய் காப்பா யழிப்பா யருடருவாய்
போக்குவா யென்னைப் புகுவிப்பாய் நின்றொழும்பி
னூற்றத்தி னேரியாய் சேயாய் நணியானே
மாற்ற மனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுட் டேனூறி நின்று

பிறந்த பிறப்பறுக்கு மெங்கள் பெருமா
னிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்க ளேத்த
மறைந்திருந்தா யெம்பெருமான் வல்வினையேன் றன்னை
மறைந்திட மூடிய மாய விருளை
யறம்பாவ மென்னு மருங்கயிற்ருற் கட்டிப்
புறந்தோல் போர்த் தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரு மொன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா வுனக்குக்
கலந்தவன் பாகிக் கசிந்துள் ளுருகு
நலந்தா னிலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த வடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனா ரமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கு மாரியனே
நேச வருள்புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
யாரா வமுதே யளவிலாப் பெம்மானே
யோராதா ருள்ளத் தொளிக்கு மொளியானே
நீரா யுருக்கியென் னாருயிராய் நின்றானே
யின்பமுந் துன்பமு மில்லானே யுள்ளானே
யன்பருக் கன்பனே யாவையுமா யல்லையுமாஞ்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
யாதியனே யந்த நடுவாகி யல்லானே
யீர்த்தென்னை யாட்கொண்ட வெந்தை பெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தி
னோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே
யாற்றின்ப வெள்ளமே யத்தாமிக் காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாந்

தேற்றனே தேற்றத் தெளிவேயென் சிந்தனையு
ளூற்ருன வுண்ணு ரமுதே யுடையானே
வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப
வாற்றேனெம் மையா வரனேயோ வென்றென்றும்
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானுர்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே
நள்ளிருளி னட்டம் பயின்ருடு நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
யல்லற் பிறவி யறுப்பானே யோவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரு மேத்தப் பணிந்து.

## திருவண்டப்பகுதி.

சிவனது தூலசூக்குமத்தை வியந்தது.

அண்டப் பகுதியி னுண்டைப் பிறக்க
மளப்பருந் தன்மை வளப்பெறுங் காட்சி
யொன்றனுக் கொன்று நின்றெழில் பகரி
னூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன
வின்னுழை கதிரின் றுன்னணுப் புரையச்
சிறிய வாகப் பெரியோன் றெறியின்
வேதியன் றொகையொடு மாலவன் மிகுதியுந்
தோற்றமுஞ் சிறப்பு மீற்றொடு புணரிய
மாப்பே ரூழியு நீக்கமு நிலையுஞ்
சூக்கமொடு தூலத்துச் சூறை மாருதத்
தெறியது வளியின்
கொட்கப் பெயர்க்குங் குழகன் முழுவதும்
படைப்போற் படைக்கும் பழையோன் படைத்தவை
காப்போற் காக்குங் கடவுள் காப்பவை
கரப்போன் கரப்பவை கருதாக்
கருத்துடைக் கடவு டிருத்தகு

மறுவகைச் சமயத் தறுவகை யோர்க்கும்
வீடுபே றாய்நின்ற விண்ணோர் பகுதி
கீடம் புரையுங் கிழவோ னாடொறு
மருக்கனிற் சோதி யமைத்தோன் றிருத்தகு
மதியிற் றண்மை வைத்தோன் றிண்டிறற்
றீயின் வெம்மை செய்தோன் பொய்தீர்
வானிற் கலப்பு வைத்தோன் மேதகு
காலி னூக்கங் கண்டோ னிழறிகழ்
நீரி லின்சுவை நிகழ்ந்தோன் வெளிப்பட
மண்ணிற் றிண்மை வைத்தோ னென்றென்
றெனைப்பல கோடி யெனைப்பல பிறவு
மனைத்தனைத் தவ்வயி னடைத்தோ னஃதான்று
முன்னோன் காண்க முழுதோன் காண்க
தன்னே ரில்லோன் றானே காண்க
வேனத் தொல்லெயி றணிந்தோன் காண்க
கானப் புலியுரி யரையோன் காண்க
நீற்றோன் காண்க நினைதொறு நினைதொறு
மாற்றேன் காண்க வந்தோ கெடுவே
னின்னிசை வீணையி லிசைந்தோன் காண்க
வன்னதொன் றவ்வயி னறிந்தோன் காண்க
பரமன் காண்க பழையோன் காண்க
பிரமன்மால் காணாப் பெரியோன் காண்க
வற்புதன் காண்க வநேகன் காண்க
சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க
சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் காண்க
பத்தி வலையிற் படுவோன் காண்க
வொருவ னென்னு மொருவன் காண்க
விரிபொழின் முழுதாய் விரிந்தோன் காண்க
வணுத்தருந் தன்மை யிலையோன் காண்க
வினைப்பரும் பெருமையி லீசன் காண்க
வரியதி லரிய வரியோன் காண்க
மருவியெப் பொருளும் வளர்ப்போன் காண்க
நூலுணர் வுணரா நுண்ணியோன் காண்க
மேலொடு கீழாய் விரிந்தோன் காண்க

வந்தமு மாதியு மகன்றோன் காண்க
பந்தமும் வீடும் படைப்போன் காண்க
நிற்பதுஞ் செல்வது மானோன் காண்க
கற்பமு மிறுதியுங் கண்டோன் காண்க
யாவரும் பெறவுறு மீசன் காண்க
தேவரு மறியாச் சிவனே காண்க
பெண்ணா ணலியெனும் பெற்றியன் காண்க
கண்ணா லியானுங் கண்டேன் காண்க
வருணனி சுரக்கு மமுதே காண்க
கருணையின் பெருமை கண்டேன் காண்க
புவனியிற் சேவடி தீண்டினன் காண்க
சிவனென யானுந் தேறினன் காண்க
வவனெனை யாட்கொண் டருளினன் காண்க
குவளைக் கண்ணி கூறன் காண்க
வவளுந் தானு முடனே காண்க
பரமா னந்தப் பழங்கட லதுவே
கருமா முகிலிற் றோன்றித்
திருவார் பெருந்துறை வரையி லேறித்
திருத்தகு மின்னொளி திசைதிசை விரிய
வைம்புலப் பந்தனை வாளர விரிய
வெந்துயர்க் கோடை மாத்தலை கரப்ப
நீடெழிற் றோன்றி வாளொளி மிளிர
வெந்தம் பிறவியிற் கோப மிகுத்து
முரசெறிந்து மாப்பெருங் கருணையின் முழங்கிப்
பூப்புரை யஞ்சலி காந்தள் காட்ட
வெஞ்சா வின்னரு ளுண்டுளி கொள்ளச்
செஞ்சுடர் வெள்ளந் திசைதிசை தெவிட்ட-வரையுறக்
கேதக் குட்டங் கையற வோங்கி
யிருமுச் சமயத் தொருபேய்த் தேரினை
நீர்நசை தரவரு நெடுங்கண் மான்கணந்
தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடு
மவப்பெருந் தாப நீங்கா தசைந்தன
வாயிடை வானப் பேரியாற் றகவயிற்
பாய்ந்தெழுந் தின்பப் பெருஞ்சுழி கொழித்துச்

சுழித்தெம் பந்தமாக் கரைபொரு தலைத்திடித்
தாழே ழோங்கிய நங்க
ளிருவினை மாமரம் வேர்பறித் தெழுந்
துருவ வருணீ ரோட்டர வருவரைச்
சந்தின் வான் சிறை கட்டி மட்டவிழ்
வெறிமலர்க் குளவாய் கோலி நிறையகின்
மாப்புகைக் கரைசேர் வண்டுடைக் குளத்தின்
மீக்கொள மேன்மேன் மகிழ்தலி னோக்கி
யருச்சனை வயலு ளன்பு வித்திட்டுத்
தொண்ட வுழவ ராரத் தந்த
வண்டத் தரும்பெறன் மேகன் வாழ்க
கரும்பணக் கச்சைக் கடவுள் வாழ்க
வருந்தவர்க் கருளு மாதி வாழ்க
வச்சந் தவிர்த்த சேவகன் வாழ்க
நிச்சலு மீர்த்தாட் கொள்வோன் வாழ்க
சூழிருந் துன்பந் துடைப்போன் வாழ்க
வெய்தினர்க் காரமு தளிப்போன் வாழ்க
கூரிருட் கூத்தொடு குனிப்போன் வாழ்க
பேரமைத் தோளி காதலன் வாழ்க
வேதிலர்க் கேதிலெம் மிறைவன் வாழ்க
காதலர்க் கெய்ப்பினில் வைப்பு வாழ்க
நச்சர வாட்டிய நம்பன் போற்றி
பிச்செமை யேற்றிய பெரியோன் போற்றி
நீற்றொடு தோற்ற வல்லோன் போற்றி-நாற்றிசை
நடப்பன நடாஅய்க் கிடப்பன கிடாஅய்
நிற்பன நிறீஇச்
சொற்பதங் கடந்த தொல்லோ
னுள்ளத் துணர்ச்சியிற் கொள்ளவும் படாஅன்
கண்முதற் புலனாற் காட்சியு மில்லோன்
விண்முதற் பூதம் வெளிப்பட வகுத்தோன்
பூவினாற் றம்போன் றுயர்ந் தெங்கு
மொழிவற நிறைந்து மேவிய பெருமை
யின்றெனக் கெளிவந் தருளி
யழிதரு மாக்கை யொழியச் செய்த-வொண்பொரு

ளின்றெனக் கெளிவந் திருந்தனன் போற்றி
யளிதரு மாக்கை செய்தோன் போற்றி
யூற்றிருந் துள்ளங் களிப்போன் போற்றி
யாற்றா வின்ப மலர்ந்தலை செய்யப்
போற்றா வாக்கையைப் பொறுத்தல் புகலேன்
மரகதக் குவாஅன் மாமணிப் பிறக்க
மின்னொளி கொண்ட பொன்னொளி திகழத்
திசைமுகன் சென்று தேடினர்க் கொளித்து
முறையுளி யொற்றி முயன்றவர்க் கொளித்து
மொற்றுமை கொண்டு நோக்கு முள்ளத்
துற்றவர் வருந்த வுறைப்பவர்க் கொளித்து
மறைத்திற நோக்கி வருந்தினர்க் கொளித்து
மித்தந் திரத்திற் காண்டுமென் றிருந்தோர்க்
கத்தந் திரத்தி னவ்வயி னொளித்து
முனிவற நோக்கி நனிவரக் கௌவி
யாணெனத் தோன்றி யலியெனப் பெயர்ந்து
வாணுதற் பெண்ணென வொளித்துஞ் சேண்வயி
னைம்புலன் செலவிடுத் தருவரை தொறும்போய்த்
துற்றவை துறந்த வெற்றுயி ராக்கை
யருந்தவர் காட்சியுட் டிருந்த வொளித்து
மொன்றுண் டில்லை யென்றறி வொளித்தும்
பண்டே பயிறொறு மின்றே பயிறொறு
மொளிக்குஞ் சோரனைக் கண்டனம்
மார்மி னார்மி னாண்மலர்ப் பிணையலிற்
றாடளை யிடுமின்
சுற்றுமின் சூழ்மின் றொடர்மின் விடேன்மின்
பற்றுமி னென்றவர் பற்றுமுற் றொளித்துந்
தன்னே ரில்லோன் றானே யான-தன்மை
யென்னே ரனையோர் கேட்கவந் தியம்பி
யறைகூவி யாட்கொண் டருளி
மறையோர் கோலங் காட்டி யருளலு
முலையா வன்பென் புருக வோலமிட்
டலைகடற் றிரையி னார்த்தார்த் தோங்கித்
தலைதடு மாறா வீழ்ந்துபுரண் டலறிப்

பித்தரின் மயங்கி மத்தரின் மதித்து
நாட்டவர் மருளவுங் கேட்டவர் வியப்பவுங்
கடக்களி றேற்றாத் தடப்பெரு மதத்தி
ஞற்றே ஞக வவயவஞ் சுவைதரு
கோற்றேன் கொண்டு செய்தன
னேற்றார் மூதா ரெழினகை யெரியின்
வீழ்வித் தாங்கன்
றருட்பெருந் தீயி னடியோ மடிக்குடி
லொருத்தரும் வழாமை யொடுக்கினன்
றடக்கையி னெல்லிக் கனியெனக் காயினன்
சொல்லுவ தறியேன் வாழி முறையோ
தரியே ஞயேன் ருனெனைச் செய்தது
தெரியே ஞவா செத்தே னடியேற்
கருளிய தறியேன் பருகியு மாரேன்
விழுங்கியு மொல்ல கில்லேன்
செழுந்தண் பாற்கடற் றிரை புரைவித்
துவாக்கட னள்ளுநீ ருள்ளகந் ததும்ப
வாக்கிறந் தமுத மயிர்க்கா றோறுந்
தேக்கிடச் செய்தனன் கொடியே னூன்றழை
குரம்பை தோறு நாயுட லகத்தே
குரம்பை கொண்டின்றேன் பாய்த்தி னிரம்பிய
வற்புதன மான வமுத தாரைக
ளெற்புத் தொளைதொறு மேற்றின னுருகுவ
துள்ளங் கொண்டோ ருருச்செய் தாங்கெனக்
கள்ளூ றாக்கை யமைத்தன னொள்ளிய
கன்னற் கனிதேர் களிறெனக் கடைமுறை
யென்னையு மிருப்ப தாக்கின னென்னிற்
கருணை வான்றேன் கலக்க
வருளொடு பராவமு தாக்கினன்
பிரமன்மா லறியாப் பெற்றி யோனே.

## திருச்சதகம்

### மெய்யுணர்தல்.

மெய்தா னரும்பி விதிர்விதிர்த்துன் விரையார் கழற்கென்
கைதான் றலைவைத்துக் கண்ணீர்த் ததும்பி வெதும்பியுள்ளம்
பொய்தான் றவிர்ந்துன்னைப் போற்றி சயசய போற்றியென்னுங்
கைதா னெகிழவிடே னுடையா யென்னைக் கண்டுகொள்ளே. 1

உத்தம னத்த னுடையா னடியே நினைந்துருகி
மத்த மனத்தொடு மாலிவ னென்ன மனநினைவி
லொத்தன வொத்தன சொல்லிட வூரூர் திரிந்தெவருந்
தத்த மனத்தன பேசவெஞ் ஞான்றுகொல் சாவதுவே. 2

### அறிவுறுத்தல்.

நாடகத்தா லுன்னடியார் போனடித்து நானடுவே
வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றே
னாடகச்சீர் மணிக்குன்றே யிடையறா வன்புனக்கென்
னூடகத்தே நின்றுருகத் தந்தருளெம் முடையானே. 3

யானேதும் பிறப்பஞ்சே னிறப்பதனுக் கென்கடவேன்
வானேயும் பெறில்வேண்டேன் மண்ணாள்வான் மதித்துமிரேன்
றேனேயு மலர்க்கொன்றைச் சிவனேயெம் பெருமானெம்
மானேயுன் னருள்பெறுநா ளென்றென்றே வருந்துவனே. 4

வருந்துவனின் மலர்ப்பாத மவைகாண்பா னுயடியே
னிருந்துநல மலர்புனையே னேத்தேனுத் தழும்பேறப்
பொருந்தியபொற் சிலைகுனித்தா யருளமுதம் புரியாயேல்
வருந்துவனற் றமியேன்மற் றென்னேநா னுமாறே. 5

ஆமாறுன் றிருவடிக்கே யகங்குழையே னன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமானின் றிருக்கோயி றூகேன்மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன் சதுராலே சார்வானே. 6

வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி
யூனாகி யுயிராகி யுண்மையுமா யின்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை யென்சொல்லி வாழ்த்துவனே. 7

வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே வல்வினைப்பட்
டாழ்கின்றா யாழாமற் காப்பானை யேத்தா்தே
சூழ்கின்றாய் கேடுனக்குச் சொல்கின்றேன் பல்காலும்
வீழ்கின்றாய் நீயவலக் கடலாய வெள்ளத்தே. 8

சுட்டறுத்தல்.

சிந்தனைநின் றனக்காக்கி நாயி னேன்றன் கண்ணிணைநின் றிருப்பாதப் போதுக் காக்கி, வந்தனையு மம்மலர்க்கே யாக்கி வாக்குன் மணிவார்த்தைக் காக்கியைம் புலன்க ளார, வந்தனை யாட் கொண்டுள்ளே புகுந்த விச்சை மாலமுதப் பெருங்கடலே மலையே யுன்னைத், தந்தனைசெந் தாமரைக்கா டனைய மேனித் தனிச்சுடரே யிரண்டுமிலித் தனிய னேற்கே. 9

தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத் தடந்திரையா லெற்றுண்டு பற்றொன் றின்றிக், கனியைநேர் துவர்வாயா ரென்னுங் காலாற் கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட், டினியென்னே யுய்யுமா றென்றென் றெண்ணி யஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை, முனைவனே முதலந்த மில்லா மல்லற் கரைகாட்டி யாட்கொண்டாய் மூர்க்க னேற்கே.

தேவர்கோ வறியாத தேவ தேவன் செழும் பொழில்கள் பயந்துகாத் தழிக்கு மற்றை, மூவர்கோ னாய்நின்ற முதல்வன் மூர்த்தி மூதாதை மாதாளும் பாகத் தெந்தை, யாவர்கோ னென்னையும்வந் தாண்டு கொண்டான் யாமார்க்குங் குடியல்லோம் யாது மஞ்சோ, மேவினோ மவனடியா ரடியாரோடு மென்மேலுங் குடைந்தாடி யாடு வோமே. 11

ஆத்துமசுத்தி.

ஆடு கின்றிலை கூத்துடை யான்கழற் கன்பிலை யென்புருகிப்
பாடு கின்றிலை பதைப்பதுஞ் செய்கிலை பணிகிலை பாதமலர்
சூடு கின்றிலை சூட்டுகின் றதுமிலை துணையிலி பிணநெஞ்சே
தேடு கின்றிலை தெருவுதோ றலறிலை செய்வதொன் றறியேனே.

வேனில் வேள்கணை கிழித்திட மதிசுடு மதுதனை நினையாதே, மானிலாவிய நோக்கியர் படிறிடை மத்திடு தயிராகித், தேனிலாவிய திருவருள் புரிந்தவென் சிவனகர் புகப்போகே, ஞானிலாவியை யோம்புதற் பொருட்டினு முண்டுடுத் திருந்தேனே. 13

கைம்மாறுகோடுத்தல்.

கொள்ளுங் கில்லெனை யன்பரிற் கூய்ப்பணி, கள்ளும் வண்டு மறுமலர்க் கொன்றையா, னள்ளுங் கீழுளு மேலுளும் யாவுளு, மெள்ளு மெண்ணெயும் போனின்ற வெந்தையே. 14

எந்தை யாயெம்பி ரான்மற்று மியாவர்க்குந், தந்தை தாய் தம்பி ரான்றனக் கஃதிலான், முந்தி யென்னுள் புகுந்தனன் யாவருஞ், சிந்தை யாலு மறிவருஞ் செல்வனே. 15

கட்ட றுத்தெனை யாண்டுகண் ணாரநீ, றிட்ட வன்பரொ டியாவருங் காணவே, பட்டி மண்டப மேற்றினை யேற்றினை, யெட்டி னோடிரண் டும்மறி யேனையே. 16

அனுபோகசுத்தி.

செய்வ தறியாச் சிறுநாயேன் செம்பொற் பாத மலர்காணப்
பொய்யர் பெறும்பே றத்தனையும் பெறுதற் குரியேன் பொய்யிலா
மெய்யர் வெறியார் மலர்ப்பாத மேவக் கண்டுங் கேட்டிருந்தும்
பொய்ய னேனு னுண்டுடுத்திங் கிருப்ப தானேன் போரேறே. 17

காருண்யத்திரங்கல்.

போற்றியிப் புவன நீர்தீக் காலொடு வான மானாய்
போற்றியெவ் வுயிர்க்குந் தோற்ற மாகிநீ தோற்ற மில்லாய்
போற்றி யெல்லா வுயிர்க்கு மீறாயீ றின்மை யானாய்
போற்றியைம் புலன்க ணின்னைப் புணர்கிலாப் புணர்க்கையானே.

ஆநந்தபரவசம்.

யானே பொய்யென் னெஞ்சம் பொய்யென் னன்பும்பொய்
யானால் வினையே னழுதா லுன்னைப் பெறலாமே
தேனே யமுதே கரும்பின் றெளிவே தித்திக்கு
மானே யருளா யடியே னுனைவந் துறுமாறே. 19

ஆனந்தாதீதம்.

மாறி லாதமாக் கருணை வெள்ளமே வந்து முந்திநின் மலர்கொ டாளிணை, வேறி லாப்பதப் பரிசு பெற்றநின் மெய்மை யன்பருண் மெய்ம்மை மேவினார், ரீறி லாதநீ யெளிமை யாகிவந் தொளிசெய் மானுட மாக நோக்கியுங், கீறி லாதநெஞ் சுடைய நாயினேன் கடைய னாயினேன் பட்ட கீழ்மையே. 20

ஆய ளுகி யாயர் மங்கை வேய தோள்வி ரும்பினுய்
ஆய நின்னை யாவர் வல்ல ரம்ப ரத்தொ டிம்பராய்
மாய மாய மாயை கொல்அ தன்றி நீவ குத்தலும்
மாய மாய மாக்கி னையுன் மாய முற்று மாயமே. 12

புன்பு லவ ழிய டைத்த ரக்கி லச்சி னைசெய்து
நன் புலவ ழிதி றந்து ஞான நற்சு டர்கொளீஇ
என்பி லெள்கி நெஞ்சு ருகி-உள்க னிந்தெ ழுந்ததோர்
அன்பி லன்றி யாழி யானை யாவர் காண வல்லரே. 13

மட்டு லாவு தண்டு ழாய லங்க லாய்-புலன்கழல்
விட்டு வீள்வி லாத போகம் விண்ணில் நண்ணி யேறினும்
எட்டி னோடி ரண்டெ னும்க யிற்றி னால்ம னந்தனைக்
கட்டி-வீடி லாது வைத்த காத லின்ப மாகுமே. 14

ஊனில் மேய வாவி நீஉ றக்க மோடு ணர்ச்சிநீ
ஆனில் மேய வைந்தும் நீஅ வற்றுள் நின்ற தூய்மைநீ
வானி னோடு மண்ணும் நீவ ளங்க டற்ப யனும்நீ
யானும் நீஅ தன்றி யெம்பி ரானும் நீயி ராமனே. 15

ஈன மாய வெட்டு நீக்கி யேத மின்றி மீதுபோய்
வான மாள வல்லை யேல்வ ணங்கி வாழ்த்தென் நெஞ்சமே
ஞான மாகி ஞாயி றாகி ஞால முற்றும்-ஓரெயிற்று
ஏன மாயி டந்த மூர்த்தி யெந்தை பாத மெண்ணியே. 16

## தொண்டரடிப்பொடியாழ்வார்-திருமாலை.

வேதநூற் பிராயம் நூறு மனிசர்தாம் புகுவ ரேனும்
பாதியு முறங்கிப் போகும் நின்றதிற் பதினை யாண்டு
பேதைபா லகன தாகும் பிணிபசி மூப்புத் துன்பம்
ஆதலாற் பிறவி வேண்டே னரங்கமா நகரு ளானே. 17

## திருமங்கையாழ்வார்-பெரியதிருமொழி.

வாடினேன் - வாடி வருந்தினேன் மனத்தால் பெருந்துய ரிடும்பையிற் பிறந்து, கூடினேன்-கூடி யிளையவர் தம்மோ டவர் தரும் கலவியே கருதி, ஓடினேன்-ஓடி உய்வதோர் பொருளா லுணர்வெனும் பெரும்பதம் தெரிந்து, நாடினேன்-நாடி நான் கண்டு கொண்டேன் நாராய ணாவென்னு நாமம். 18

முற்ற மூத்து.

முதுகு பற்றிக் கைத்த லத்தால் முன்னொரு கோலூன்றி
விதிர்வி திர்த்துக் கண்சு ழன்று மேற்கிளைக் கொண்டிருமி
இதுவென் னப்பா மூத்தவா றென் றிளையவ ரேசாமுன்
மதுவுண் வண்டு பண்கள் பாடும் வதரி வணங்குதுமே. 19

பீளை சோரக் கண்ணி டுங்கிப் பித்தெழ மூத்திருமி
தாள்கள் நோவத் தம்மில் முட்டித் தள்ளி நடவாமுன்
காளை யாகிக் கன்று மேய்த்துக் குன்றெடுத் தன்று நின்றான்
வாளை பாயுந் தண்ட டஞ்சூழ் வதரி வணங்குதுமே. 20

பண்டு காம ரான வாறும் பாவையர் வாயமுதம்
உண்ட வாறும்-வாழ்ந்த வாறு மொக்க வுரைத்திருமி
தண்டு காலா வூன்றி யூன்றித் தள்ளி நடவாமுன்
வண்டு பாடுந் தண்டு ழாயான் வதரி வணங்குதுமே. 21

எய்த்த சொல்லோ டீளை யேங்கி யிருமி யிளைத்துடலம்
பித்தர் போலச் சித்தம் வேறாய்ப் பேசி யயராமுன்
அத்த னெந்தை யாதிமூர்த்தி யாழ்கட லைக்கடைந்த
மைத்த சோதி யெம்பெ ருமான் வதரி வணங்குதுமே. 22

கண்ணார் கடல்.

மன்னா இம்மனிசப் பிறவியை நீக்கி
தன்னாக்கித் தன்னின் னருள்செய்யும் தலைவன்
மின்னார் முகில்சேர் திருவேங் கடமேய
என்னானை யென்னப்ப னென்னெஞ்சி லுளானே. 23

தூம்புடை.

பாவமும் மறமும் வீடு மின்பமும் துன்பந் தானும்
கோவமு மருளு மல்லாக் குணங்களு மாய வெந்தை
மூவரி லெங்கள் மூர்த்தி யிவனென முனிவ ரோடு
தேவர்வந் திறைஞ்சு நாங்கூர்த் திருமணிக் கூடத் தானே. 24

திருமங்கையாழ்வார்-திருநெடுந்தாண்டகம்.

மின்னுருவாய் முன்னுருவில் வேதநான்காய் விளக்கொளி யாய் முளைத்தெழுந்த திங்கள் தானாய், பின்னுருவாய் முன்னு ருவில் பிணிமூப்பில்லாப் பிறப்பிலியா யிறப்பதற்கே யெண்

ஞு து-எண்ணும், பொன்னுருவாய் மணியுருவில் பூதமைந்தாய்ப் புனலுருவா யனலுருவில் திகழுஞ் சோதி, தன்னுருவா யென் னுருவில் நின்றவெந்தை தளிர்புரையும் திருவடியென் தலைமே லவே. 25

பொன்னனாய் பொழிலேழுங் காவல்பூண்ட புகழானாயிகழ் வாய தொண்டனேன் நான், னென்னனா யென்னனா யென்ன லல்லால் என்னறிவ னேழையேன்-உலக மேத்தும், தென்னனாய் வடவானாய் குடபாலனாய் குணபால மதயானா யிமையோர்க் கென்றும், முன்னனாய்-பின்னனாய் வணங்கும் சோதி திருமூழிக் களத்தானாய் முதலானாயே. 26

போய்கையாழ்வார்-முதல் திருவந்தாதி.

நெறிவாசல் தானேயாய் நின்றானை-ஐந்து
பொறிவாசல் போர்க்கதவம் சாத்தி-அறிவானும்
ஆலமர நீழ லறம்நால்வர்க் கன்றுரைத்த
ஆலமமர் கண்டத் தரன். 27

தெளிதாக வுள்ளத்தைச் செந்நிறீஇ-ஞானத்
தெளிதாக நன்குணர்வார் சிந்தை-எளிதாகத்
தாய்நாடு கன்றேபோல் தண்டுழா யானடிக்கே
போய்நாடிக் கொள்ளும் புரிந்து. 28

இமையாத கண்ணா லிருளகல நோக்கி
அமையாப் பொறிபுலன்க ளைந்தும்-நமையாமல்
ஆகத் தணைப்பா ரணைவரே-ஆயிரவாய்
நாகத் தணையான் நகர். 29

தமருகந்த தெவ்வுருவ மவ்வுருவம் தானே
தமருகந்த தெப்பேர்மற் றப்பேர்-தமருகந்து
எவ்வண்ணம் சிந்தித் திமையா திருப்பரே
அவ்வண்ண மாழியா னாம். 30

வாரி சுருக்கி மதக்களி றைந்தினையும்
சேரி திரியாமல் செந்நிறீஇ-கூறிய
மெய்ஞ்ஞானத் தாலுணர்வார் காண்பரே-மேலொருநாள்
கைந்நாகம் காத்தான் கழல். 31

அரியபுல னைந்தடக்கி யாய்மலர்கொண்டு-ஆர்வம்
புரிய பரிசினால் புல்கில்-பெரியனாய்
மாற்றாது வீற்றிருந்த மாவலிபால்-வண்கைநீர்
ஏற்றானைக் காண்ப தெளிது. 32

ஊனக் குரம்பையி னுள்புக் கிருள்நீக்கி
ஞானச் சுடர்கொளீஇ நாடோறும்-ஏனத்
துருவா யுலகிடந்த வூழியான் பாதம்
மருவாதார்க் குண்டாமோ வான். 33

உளன்கண்டாய் நன்னெஞ்சே உத்தம னென்றும்
உளன்கண்டாய்-உள்ளுவா ருள்ளத்-துளன்கண்டாய்
வெள்ளத்தி னுள்ளானும் வேங்கடத்து மேயானும்
உள்ளத்தி னுள்ளானென் றோர். 34

## பூதத்தாழ்வார் திருவந்தாதி.

அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை யிடுதிரியா-நன்புருகி
ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான். 35

அறிந்தைந்து முள்ளடக்கி யாய்மலர்கொண்டு-ஆர்வம்
செறிந்த மனத்தராய்ச் செவ்வே-அறிந்தவன்றன்
பேரோதி யேத்தும் பெருந்தவத்தோர் காண்பரே
காரோத வண்ணன் கழல். 36

தாமுளரே தம்முள்ள முள்ளுளதே-தாமரையின்
பூவுளதே யேத்தும் பொழுதுண்டே-வாமன்
திருமருவு தாள்மருவு சென்னியரோ-செவ்வே
அருநரகம் சேர்வ தரிது. 37

வந்தித் தவனை வழிநின்ற வைம்பூதம்
ஐந்து மகத்தடக்கி யார்வமாய்-உந்திப்
படியமரர் வேலையான் பண்டமரர்க் கீந்த
படியமரர் வாழும் பதி. 38

பதியமைந்து நாடிப் பருத்தெழுந்த சிந்தை
மதியுரிஞ்சி வான்முகடு நோக்கி-கதிமிகுத்தங்

கோல்தேடி யோடும் கொழுந்ததே போன்றதே
மால்தேடி யோடும் மனம். 39

அருள்புரிந்த சிந்தை யடியார்மேல் வைத்து
பொருள்தெரிந்து காண்குற்ற வப்போது-இருளிரிந்து
நோக்கினேன் நோக்கி நினைந்தேன தொண்கமலம்
ஓக்கினே னென்னையுமங் கோர்ந்து. 40

ஓருருவ னல்லை யொளியுருவம் நின்னுருவம்
ஈருருவ னென்ப ரிருநிலத்தோர்-ஓருருவம்
ஆதியாம் வண்ண மறிந்தா ரவர்கண்டீர்
நீதியால் மண்காப்பார் நின்று. 41

மண்ணுலக மாளேனே வானவர்க்கும் வானவனாய்
விண்ணுலகந் தன்னகத்து மேவேனே-நண்ணித்
திருமாலை செங்க ணெடியானை-எங்கள்
பெருமானைக் கைதொழுத பின். 42

பேயாழ்வார்-திருவந்தாதி.

அறிவென்னும் தாள்கொளுவி ஐம்புலனும் தம்மில்
செறிவென்னும் திண்கதவம் செம்மி-மறையென்னும்
நன்கோதி நன்குணர்வார் காண்பரே-நாடோறும்
பைங்கோத வண்ணன் படி. 43

வருங்கா லிருநிலனும் மால்விசும்பும் காற்றும்
நெருங்குதீ நீருருவு மானான்-பொருந்தும்
சுடராழி யொன்றுடையான் சூழ்கழலே-நாளும்
தொடராழி நெஞ்சே தொழுது. 44

தானே தனக்குவமன் தன்னுருவே யெவ்வுருவும்
தானே தவவுருவும் தாரகையும்-தானே
எரிசுடரும் மால்வரையு மெண்டிசையும்-அண்டத்
திருசுடரு மாய விறை. 45

இறையாய் நிலனாகி யெண்டிசையும் தானாய்
மறையாய் மறைப்பொருளாய் வானாய்-பிறைவாய்ந்த
வெள்ளத் தருவி விளங்கொலிநீர் வேங்கடத்தான்
உள்ளத்தி னுள்ளே யுளன். 46

உளன்கண்டாய் நன்னெஞ்சே உத்தம னென்றும்
உளன்கண்டாய் உள்ளுவா ருள்ளத்து-உளன்கண்டாய்
விண்ணொடுங்கக் கோடுயரும் வீங்கருவி வேங்கடத்தான்
மண்ணொடுங்கத் தானளந்த மன். 47

தாழ்சடையும் நீண்முடியு மொண்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்னாணும் தோன்றுமால்-சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமே லெந்தைக்கு
இரண்டுருவ மொன்றா யிசைந்து. 48

ஓர்த்த மனத்தரா யைந்தடக்கி யாராய்ந்து
பேர்த்தாய் பிறப்பேழும் பேர்க்கலாம்-கார்த்த
விரையார் நறுந்துழாய் வீங்கோத மேனி
நிரையார மார்வனையே நின்று. 49

அதுநன் றிதுதீதென் றையப்ப டாதே
மதுநின்ற தண்டுழாய் மார்வன்-பொதுநின்ற
பொன்னங் கழலே தொழுமின்-முழுவினைகள்
முன்னங் கழலும் முடிந்து. 50

உய்த்துணர் வென்னு மொளிகொள் விளக்கேற்றி
வைத்து-அவனை நாடி வலைப்படுத்தேன்-மெத்தெனவே
நின்றா னிருந்தான் கிடந்தானென் னெஞ்சத்து
பொன்றாமை மாயன் புகுந்து. 51

திருமழிசையாழ்வார்-திருவந்தாதி.

தேருங்கால் தேவ னொருவனே யென்றுரைப்பர்
ஆரு மறியா ரவன்பெருமை-ஓரும்
பொருள்முடிவு மித்தனையே-எத்தவம்செய் தார்க்கும்
அருள்முடிவ தாழியான் பால். 52

இன்றாக நாளையே யாக இனிச்சிறிது
நின்றாக நின்னருளென் பாலதே-நன்றாக
நானுன்னை யன்றியிலேன் கண்டாய்-நாரணனே
நீயென்னை யன்றி யிலை. 53

நீயே யுலகெல்லாம் நின்னருளே நிற்பனவும்
நீயே தவத்தேவ தேவனும்-நீயே

எரிசுடரும் மால்வரையு மெண்டிசையும்-அண்டத்
திருசுடரு மாய விவை. 54

நம்மாழ்வார்-பெரியதிருவந்தாதி.

மனமாளு மோரைவர் வன்குறும்பர் தம்மை
சினமாள்வித் தோரிடத்தே சேர்த்து-புனமேய
தண்டுழா யானடியைத் தான்காணு மஃதன்றே
வண்டுழாம் சீரார்க்கு மாண்பு. 55

திருவாய்மொழி-உயர்வு.

உயர்வற வுயர்நல முடையவன் யவனவன்
மயர்வற மதிநல மருளினன் யவனவன்
அயர்வறு மமரர்க ளதிபதி யவனவன்
துயரறு சுடரடி தொழுதெழென் மனனே. 6

மனனக மலமற மலர்மிசை யெழுதரும்
மனனுணர் வளவிலன் பொறியுணர் வவையிலன்
இனனுணர் முழுநல மெதிர்நிகழ் கழிவினும்
இனனில னெனனுயிர் மிகுநரை யிலனே. 57

இலனது வுடையனி தெனநினை வரியவன்
நிலனிடை விசும்பிடை யுருவின னருவினன்
புலனொடு புலனல னொழிவிலன் பரந்த-அந்
நலனுடை யொருவனை நணுகினம் நாமே. 58

நாமவ னிவனுவ னவளிவ ளுவளெவள்
தாமவ ரிவருவ ரதுவிது வுதுவெது
வீமவை யிவையுவை யவைநலந் தீங்கவை
ஆமவை யாயவை யாய்நின்ற வவரே. 59

அவரவர் தமதம தறிவறி வகைவகை
அவரவ ரிறையவ ரெனவடி யடைவர்கள்
அவரவ ரிறையவர் குறைவில ரிறையவர்
அவரவர் விதிவழி யடையநின் றனரே. 60

திடவிசும் பெரிவளி நீர்நில மிவைமிசை
படர்பொருள் முழுவது மாயவை யவைதொறும்
உடன்மிசை யுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியு ளிவையுண்ட சுரனே. 61

சுரரறி வருநிலை விண்முதல் முழுவதும்
வரன்முத லாயவை முழுதுண்ட பரபரன்
புரமொரு மூன்றெரித் தமரர்க்கு மறிவியந்து
அரனய னெனவுல கழித்தமைத் துளனே. 62

உளனெனி லுளனவ னுருவமிவ் வுருவுகள்
உளனல னெனிலவ னருவமிவ் வருவுகள்
உளனென விலனென விவைகுண முடைமையில்
உளனிரு தகைமையொ டொழிவிலன் பரந்தே. 63

## திருவாய்மொழி-வீடு.

மின்னின் நிலையில-மன்னுயி ராக்கைகள்
என்னுமிடத்து-இறை யுன்னுமின் நீரே. 64

நீர்நும தென்றிவை-வேர்முதல் மாய்த்து-இறை
சேர்மின்-உயிர்க்கத-னேர்நிறை யில்லே. 65

இல்லது முள்ளதும்-அல்ல தவனுரு
எல்லையி லந்நலம்-புல்குபற் றற்றே. 66

அற்றது பற்றெனில்-உற்றது வீடுயிர்
செற்றது மன்னுறில்-அற்றிறை பற்றே. 67

பற்றில னீசனும்-முற்றவும் நின்றனன்
பற்றிலை யாய்-அவன்-முற்றி லடங்கே. 68

அடங்கெழில் சம்பத்து-அடங்கக் கண்டு-ஈச
னடங்கெழி லஃதென்று-அடங்குக வுள்ளே. 69

உள்ள முரைசெயல்-உள்ளவிம் மூன்றையும்
உள்ளிக் கெடுத்து-இறை-யுள்ளி லொடுங்கே. 70

## திருவாய்மொழி-பத்துடை.

உணர்ந்துணர்ந் திழிந்தகன் றுயர்ந்துரு வியந்தவிந் நிலைமை
உணர்ந்துணர்ந் துணரினு மிறைநிலை யுணர்வரிது-உயிர்காள்
உணர்ந்துணர்ந் துரைத்துரைத் தரியய னரனென்னு மிவரை
உணர்ந்துணர்ந் துரைத்துரைத் திறைஞ்சுமின் மனப்பட்டதொ
[ன்றே. 71

ஒன்றெனப் பலவென வறிவரும் வடிவினுள் நின்ற
நன்றெழில் நாரணன் நான்முக னரனென்னு மிவரை
ஒன்றநும் மனத்துவைத் துள்ளிநும் மிருபசை யறுத்து
நன்றென நலஞ்செய்வ தவனிடை நம்முடை நாளே. 72

திருவாய்மொழி-வளவேழ்.

தானோ ருருவே தனிவித்தாய் தன்னில் மூவர் முதலாய
வானோர் பலரும் முனிவரும் மற்றும் மற்றும் முற்றுமாய்
தானோர் பெருநீர் தன்னுள்ளே தோற்றி-அதனுள் கண்வளரும்
வானோர் பெருமான் மாமாயன் வைகுந் தநெம் பெருமானே. 73

சார்ந்த விருவல் வினைகளும் சரித்து மாயப் பற்றறுத்துத்
தீர்ந்து-தன்பால் மனம்வைக்கத் திருத்தி வீடு திருத்துவான்
ஆர்ந்த ஞானச் சுடராகி யகலம் கீழ்மே லளவிறந்து
நேர்ந்த வுருவா யருவாகு மிவற்றி னுயிராம் நெடுமாலே. 74

திருவாய்மொழி-பிறவி.

பிறவித் துயரற ஞானத் துள்நின்று, துறவிச் சுடர்விளக் கம்தலைப் பெய்வார், அறவனை யாழிப் படையந் தணனை, மறவி யை யின்று மனத்துவைப் பாரே. 75

ஆயர் கொழுந்தா யவரால் புடை யுண்ணும், மாயப் பிரா னை-என் மாணிக்கச் சோதியை, தூய வமுதைப் பருகிப் பருகி-என், மாயப் பிறவி மயர்வறுத் தேனே. 76

விடுவே னோவென் விளக்கையென் னாவியை, நடுவே வந்துய் யக் கொள்கின்ற நாதனை, தொடுவே செய்திள வாய்ச்சியர் கண் ணினுள், விடவே செய்து விழிக்கும் பிரானையே. 77

அகலி லகலு மணுகி லணுகும், புகலு மரியன் பொருவல்ல னெம்மான், நிகரி லவன்புகழ் பாடி யிளைப்பிலம், பகலு மிரவும் படிந்து குடைந்தே. 78

திருவாய்மொழி இவையும்.

இவையு மவையு முவையு மிவரு மவரு முவரும், யவையும் யவரும் தன்னுள்ளே யாகியு மாக்கியும் காக்கும், அவையுள் தனி முத லெம்மான் கண்ணபி ரானென் னமுதம், சுவையன் திரு வின்மணாள னென்னுடைச் சூழ லுளானே. 79

திருவாய்மொழி-பொருமா.

நீயும் நானுமிந் நேர்நிற்கில்-மேல் மற்றோர், நோயும் சார் கொடான் நெஞ்சமே சொன்னேன், தாயும் தந்தையு மாயிவ் வுலகினில், வாயு மீசன் மணிவண்ண னெந்தையே. 80

மறப்பும் ஞானமும் நானொன் றுணர்ந்திலன், மறக்கு மென்றுசெந் தாமரைக் கண்ணொடு, மறப்பற வென்னுள்ளே மன்னினான் றன்னை, மறப்ப னோவினி யானென் மணியையே. 81

திருவாய்மொழி-வாயுந்திரை.

நொந்தாராக் காதல்நோய் மெல்லாவி யுள்ளுலர்த்த, நந்தா விளக்கமே! நீயு மளியத்தாய், செந்தா மரைத்தடங்கண் செங்கனிவா யெம்பெருமான், அந்தாமத் தண்டுழா யாசையால் வேவாயே. 82

வேவாரா வேட்கைநோய் மெல்லாவி யுள்ளுலர்த்த, ஓவா திராப்பக லுன்பாலே வீழ்த்தொழிந்தாய், மாவாய் பிளந்து மருதிடைபோய் மண்ணளந்த, மூவா! முதல்வா! இனியெம்மைச் சோரேலே. 83

சோராத வெப்பொருட்கு மாதியாம் சோதிக்கே, ஆராத காதல் குருகூர்ச் சடகோபன், ஓரா யிரம்சொன்ன வவற்றுளிவை பத்து, சோரார்வி டார்கண்டீர் வைகுந்தம் திண்ணனவே.

திருவாய்மொழி-திண்ணன்வீடு.

பள்ளி யாலிலை யேழுலகும் கொள்ளும், வள்ளல் வல்வயிற் றுப்பெருமான், உள்ளு ளாரறி வார்-அவன்றன், கள்ள மாய மனக்க ருத்தே. 85

திருவாய்மொழி-ஊனில்வாழ்.

ஊனில்வா ழுயிரே! நல்லைபோ உன்னைப்பெற்று, வானுளார் பெருமான் மதுசூத னென்னம்மான், தானும் யானுமெல்லாம் தன்னுள்ளே கலந்தொழிந்தோம், தேனும் பாலும்நெய்யும் கன்னலு மமுதுமொத்தே. 86

களிப்பும் கவர்வுமற்றுப் பிறப்புப்பிணி மூப்பிறப்பற்று, ஒளிக்கொண்ட சோதியுமா யுடன்கூடுவ தென்றுகொலோ, துளிக்கின்ற-வானிந்நிலம் சுடராழிசங் கேந்தி, அளிக்கின்ற மாயப்பிரா னடியார்கள் குழாங்களையே. 87

திருவாய்மொழி-அந்தாமத்தன்பு.

ஆணல்லன் பெண்ணல்ல னல்லா அலியுமல்லன்
காணலு மாகா னுளனல்ல னில்லையல்லன்
பேணுங்கால் பேணு முருவாகு மல்லனுமாம்
கோனை பெரிதுடைத்தெம் பெம்மானைக் கூறுதலே. 88

திருவாய்மொழி-அணைவது.

புலனைந்து மேயும் பொறியைந்து நீங்கி, நலமந்த மில்லதோர் நாடு புகுவீர், அலமந்து வீய வசுரரைச் செற்றான், பலமுந்து சீரில் படிமி னோவாதே. 89

திருவாய்மொழி-எம்மாவீடு.

யானே யென்னை யறியகி லாதே
யானே யென்றன தேயென் றிருந்தேன்
யானே நீயென் னுடைமையும் நீயே
வானே யேத்துமெம் வானவ ரேறே. 90

திருவாய்மொழி-புகழும்.

யாவையும் யவருந் தானாய் யவரவர் சமயந் தோறும்
தோய்விலன்-புலனைந் துக்கும் சொலப்படா னுணர்வின் மூர்த்தி
ஆவிசே ருயிரி னுள்ளா லாதுமோர் பற்றி லாத
பாவனை யதனைக் கூடி லவனையும் கூட லாமே. 91

திருவாய்மொழி-மொய்ம்மாம்.

மனிசரும் மற்றும் முற்றுமாய் மாயப் பிறவி-பிறந்த, தனியன் பிறப்பிலி தன்னைத் தடங்கடல் சேர்ந்தபிரானை, கனியைக் கரும்பினின் சாற்றைக் கட்டியைத் தேனை யமுதை, முனிவின்றி யேத்திக் குனிப்பார் முழுதுணர் நீர் மையினாரே. 92

திருவாய்மொழி சன்மம்.

முட்டில்பல் போகத்தொருதனி நாயகன் மூவுலகுக்குரிய, கட்டியைத் தேனையமுதை நன்பாலைக் கனியைக் கரும்புதன்னை, மட்டவிழ் தண்ணந்துழாய் முடி யானை வணங்கி யவன்திறத்துப், பட்டபின்னை-இறையாகிலும் யானென் மனத்துப் பரிவிலனே. 93

துயரில் சுடரொளி தன்னுடைச் சோதிநின்ற வண்ணம் நிற்கவே, துயரில் மலியும் மனிசர்பிறவியில் தோன்றி-கண் காண வந்து, துயரங்கள் செய்து தன்தெய்வ நிலையுல கில்புக வுய்க்கு மம்மான், துயரமில்சீர்க்கண்ணன் மாயன் புகழ்த்துற்ற யானோர் துன்ப மிலனே. 94

துன்பமு மின்பமுமாகிய செய்வினை யாயுல கங்களுமாய், இன்பமில் வென்னர காகி இனியநல் வான் சுவர்க்கங் களு மாய், மன்பல் லுயிர்களு மாகிப் பலபல மாய மயக்குக்களால், இன்புறு மிவ்விளை யாட்டுடை யானைப் பெற்றெது மல்ல லிலனே. 95

துக்கமில் ஞானச் சுடரொளி மூர்த்தி துழாயலங் கல்பெரு மான், மிக்கபன் மாயங்க ளால்விகிர் தம்செய்து வேண்டு முருவு கொண்டு, நக்கபி ரானோ டயன்முத லாகஎல் லாரு மெவையும்-தன்னுள், ஒக்க வொடுங்க விழுங்க வல் லானைப்பெற் றேன்றும் தளர்விலனே. 96

தளர்வின் றி யேயென்று மெங்கும் பரந்த தனிமுதல் ஞான மொன்றாய், அளவுடை யைம்புலன்க ளறியா வகையா லருவாகி நிற்கும், வளரொளி யீசனை மூர்த்தியைப் பூதங்க ளைந்தை யிரு சுடரை, கிளரொளி மாயனைக் கண்ணனைத் தாள்பற்றி யானென் றும் கேடிலனே. 97

திருவாய்மொழி-கோவை.

ஏக மூர்த்தி யிருமூர்த்தி மூன்று மூர்த்தி-பலமூர்த்தி
யாகி ஐந்து பூதமா யிரண்டு சுடரா யருவாகி
நாக மேறி நடுக்கடலுள் துயின்ற நாராயணனே-உன்
ஆக முற்று மகத் தடக்கி யாவி யல்லல் மாய்த்ததே. 98

என்ன தாவி மேலையா யோர்கோ ளேழு லகமும்
துன்னி-முற்று மாகி நின்ற சோதி ஞான மூர்த்தியாய்
உன்ன தென்ன தாயு மென்ன துன்ன தாவியும்
இன்ன வண்ண மேநின்றா யென்று ரைக்க வல்லேனே. 99

திருவாய்மொழி-மண்ணை.

திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே யென்னும், வுருவுடை வண்ணங்கள் காணி லுலகளந் தானென்

றா துள்ளும், கருவுடைத் தேவில்க ளெல்லாம் கடல்வண்ணன் கோயிலே யென்னும், வெருவிலும் வீழ்விலு மோவாக் கண்ணன் கழல்கள் விரும்புமே. 100

விரும்பிப் பகவரைக் காணில் வியலிட முண்டானே யென்னும், கரும்பெரு மேகங்கள் காணில் கண்ணனென் றேறப் பறக்கும், பெரும்புல வாநிரை காணில் பிரானுள னென்றுபின் செல்லும், அரும்பெறல் பெண்ணினை மாயோ னலற்றி யயர்ப் பிக்கின் றானே. 101

திருவாய்மொழி-வீற்றிருந்து.

வானத்தும் வானத்துள் ளும்பரும் மண்ணுள்ளும் மண்ணின் கீழ்த், தானத்தும்-எண்டிசை யும்தவி ராதுநின் றான் றன்னை, கூனற்சங் கத்தடக் கையவ னைக்குட மாடியை வானக், கோனை-கவிசொல்ல வல்லேற் கினிமா றுண்டே. 102

உண்டுமு மிழ்ந்துங்க டந்துமி டந்துங்கி டந்து நின்றும், கொண்டகோ லத்தொடு வீற்றிருந் தும்மணங் கூடியும், கண்டவாற் றால்தன தேயுல கெனநின் றான்றன்னை, வண்டமிழ் நூற்கநோற் றேனடி யார்க்கின்ப மாரியே. 103

திருவாய்மொழி-சீலமில்லா.

கொள்ள மாளா வின்ப வெள்ளம் கோதில தந்திடும்-என், வள்ள லேயோ வையங் கொண்ட வாம னாவோ வென்றென்று, நள்ளி ராவும் நன்ப கலும் நானிருந் தோலமிட்டால், கள்ள மாயா வுன்னை யென்கண் காண வந்தீயாயே. 104

நோக்கி நோக்கி யுன்னைக் காண்பான் யானென தாவியுள்ளே, நாக்கு நீள்வன், ஞானமில்லை-நாடொறு மென்னுடைய, ஆக்கை யுள்ளு மாவியுள்ளும் மல்லபு றத்தி னுள்ளும், நீக்கமின்றி யெங்கும் நின்றாய் நின்னை யறிந்தறிந்தே. 105

அறிந்த றிந்து தேறித் தேறி யானென தாவி யுள்ளே, நிறைந்த ஞான மூர்த்தி யாயை நின்மல மாகவைத்து, பிறந்தும் செத்தும் நின்றி டறும் பேதமை தீர்ந் தொழிந்தேன், நறுந்து ழாயின் கண்ணி யம்மா நானுன்னைக் கண்டு கொண்டே. 106

திருவாய்மொழி-பொலிக.

கொன்றுயி ருண்ணும் விசாதி பகைபசி தீயகன வெல்லாம், நின்றிவ் வுலகில் கடிவான் நேமிப் பிரான்தமர் போந்தார், நன்றிசை பாடியும் துள்ளி யாடியும் ஞாலம் பரந்தார், சென்று தொழுதுய்ம்மின் தொண்டீர் சிந்தையைச் செந்நி றுத்தியே. 107

நிறுத்திநும் முள்ளத்துக் கொள்ளும் தெய்வங்க ளும்மையுய் யக்கொள், மறுத்து மவனோடே கண்டீர் மார்க்கண் டேயனும் கரியே, கறுத்த மனமொன்றும் வேண்டா கண்ணனல் லால்தெய்வ மில்லை, இறுப்பதெல் லாமவன் மூர்த்தி யாயவர்க் கேயி றுமினே, 108

திருவாய்மொழி-ஊரெல்லாம்.

தெய்வங்கா ளென்செய்கே னோரிரவே ழூழியாய், மெய்வந்து நின்றென தாவி மெலிவிக்கும், கைவந்த சக்கரத்தென் கண்ணனும் வாரானால், தைவந்த தண்டென்றல் வெஞ்சுடரில் தானடுமே. 109

வெஞ்சுடரில் தானடுமால் வீங்கிருளின் நுண்டுளியாய், அஞ்சுடர வெய்யோ னணிநெடுந்தேர் தோன்றுதால், செஞ்சுடர்த்தா மரைக்கண் செல்வனும் வாரானால், நெஞ்சிடர்தீர்ப் பாலினியார் நின்றுருகு கின்றேனே. 110

நின்றுருகு கின்றேனே போல-நெடுவானம், சென்றுருகி நுண்டுளியாய்ச் செல்கின்ற கங்குல்வாய், அன்றொருகால் வையமளந்தபிரான் வாரா னென்று, ஓன்றொருகால் சொல்லா துலகோ உறங்குமே. 111

திருவாய்மொழி-குரவை.

கேயத் தீங்குழ லூதிற் றும்நிரை மேய்த்ததும்-கொண்டை யொண்கண், வாசப் பூங்குழல் பின்னை தோள்கள் மணந்ததும்-மற்றும்பல, மாயக் கோலப்பி ரான்றன் செய்வகைநி னைந்து மனம்குழைந்து, நேயத் தோடுக ழிந்த போதெனக் கெவ்வுல கம்நிகரே. 112

திருவாய்மொழி-நீராய்.

நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய், சீரார் சுடர்க ளிரண்டாய்ச் சிவனா யயனாய், கூரா ராழி வெண்சங் கேந்

திக் கொடியேன்பால், வாராய்-ஒருநாள் மண்ணும் விண்ணும் மகிழவே. 113

திருவாய்மொழி-உண்ணி.

சூது நானறி யாவ கைசுழற் றியோ ரைவரைக் காட்டி-உன் னடிப், போதுநா ணுகா வகைசெய்து போதி கண்டாய், யாதும் யாவரு மின்றி நின்னகம் பாலொ டுக்கி-ஒ ராலி னீனிலை, மீதுசேர் குழவி வினையேன் வினை தீர் மருந்தே. 114

திருவாய்மொழி-பாமரு.

எங்குத் தலைப் பெய்வன்நா னெழில்மூ வுலகும் நீயே, அங் குயர் முக்கட் பிரான் பிரம பெருமா னவன்நீ, வெங்கதிர் வச்சி ரக்கை யிந்திரன் முதலாத் தெய்வம் நீ, கொங்கலர் தண்ணந்து ழாய் முடியென் னுடைக்கோ வலனே. 115

திருவாய்மொழி-மாயா.

மாயா வாமனனே மதுசூ தாநீ யருளாய், தீயாய் நீராய் நில னாய் விசும்பாய்க் காலாய், தாயாய்த் தந்தையாய் மக்களாய்-மற் றுமாய் முற்றுமாய், நீயாய் நீநின்ற வாறிவை யென்னநி யாயங் களே. 116

என்னவி யற்கைகளால் எங்ஙனே நின்றிட்டா யென்க ண்ணா துன்னு கரசரணம் முதலா கவெல்லா வுறுப்பும், உன்னு சுவையொளியூ றொலிநாற்ற முற்றும் நீயே, உன்னை யுணரவுறி லுலப்பில் லைநுணுக் கங்களே. 117

திருவாய்மொழி-இன்பம்.

ஒன்றுமில்லாகெடும் முற்றவும் தீவினையுள் ளித்தொழுமின் தொண்டர், அன்றங் கமர்வென் றுருப்பிணி நங்கை யணிநெடுந் தோள்புணர்ந்தான், என்றுமெப் போதுமென் னெஞ்சம் துதி ப்பவுள் ளேயிருக்கின்றபிரான், நின்ற வணிதிரு வாறன் விளை யென்னும் நீணக ரமதுவே. 118

திருவாய்மொழி தேவிமார்.

எங்குவந் துறுகோ வென்னையாள் வானே யேழுல கங்களு நீயே, அங்கவர்க் கமைத்த தெய்வமும் நீயே யவற்றவை கருமமு மும் நீயே, பொங்கிய புறம்பால் பொருளுள வேலு மவையுமோ

நீயின்னே யானால், மங்கிய அருவாம் நேர்ப்பமும் நீயே வான்பு லனிறந்ததும் நீயே. 119

யானுநீ தானே யாவதோ மெய்யே யருநர கவையும்நீ-ஆனால், வானுய ரின்ப மெய்திலென் மற்றை நரகமே யெய்திலனெனிலும், யானுநீ தானாய்த் தெளிதொறும் நன்று மஞ்சுவன் நரகம்நா னடைதல், வானுய ரின்பம் மன்னிவீற் றிருந்தா யருளுநின் தாள்களே எனக்கே. 120

## திருவாய்மொழி-அங்கும்.

சரண மாகிய நான்மறை நூல்களும் சாராதே
மரணம் தோற்றம் வான்பிணி மூப்பென் றிவைமாய்த்தோம்
கரணப் பல்படை பற்றற வோடும் கனலாழி
அரணத் திண்படை யேந்திய வீசற் காளாயே. 121

## திருவாய்மொழி-எல்லியும்.

ஒருவ ரிருவரோர் மூவ ரெனநின்று
உருவு கரந்துள்ளுந் தோறும்தித் திப்பான்
திருவமர் மார்வன் திருக்கடித் தானத்தை
மருவி யுறைகின்ற மாயப் பிரானே. 122

## திருவாய்மொழி-கண்கள்.

அடியே னுள்ளா னுடலுள்ளா னண்டத் தகத்தான் புறத்துள்ளான், படியே யிதுவென் றுரைக்கலாம் படிய னல்லன் பரம்பரன், கடிசேர் நாற்றத் துள்ளாலை யின்பத் துன்பக் கழிநேர்மை, ஒடியா வின்பப் பெருமையோ னுணர்வி லும்ப ரொருவனே. 123

உணர்வி லும்ப ரொருவனை யவன தருளா லுறல்பொருட்டு-என், உணர்வி னுள்ளே யிருத்தினே னதுவு மவன தின்னருளே, உணர்வு முயிரு முடம்பும்மற் றுலப்பி லனவும் பழுதேயாம், உணர்வைப் பெறவூர்ந் திறவேறி யானுந்தானா யொழிந்தானே. 124

யானும் தானா யொழிந்தானை யாதும் யவர்க்கும் முன்னோனை
தானும் சிவனும் பிரமனு மாகிப் பணைத்த தனிமுதலை
தேனும் பாலும் கன்னலு மமுது மாகித் தித்தித்து-என்
ஊனி லுயிரி லுணர்வினில் நின்ற வொன்றை யுணர்ந்தேனே.

நின்ற வொன்றை யுணர்ந்தேனுக் கதனுள் நேர்மை யது விதுவென்று, ஒன்று மொருவர்க் குணரலாகாது உணர்ந்து மேலும் காண்பரிது, சென்று சென்று பரம்பரமாய் யாது மின்றித் தேய்ந்தற்று, நன்று தீதென் றறிவரிதாய் நன்றாய் ஞானங் கடந்ததே. 126

நன்றாய் ஞானங் கடந்துபோய் நல்லிந் திரியமெல் லாமீர்த்து, ஒன்றாய்க் கிடந்த வரும்பெரும்பா ழுலப்பி லதனை யுணர்ந்துணர்ந்து, சென்றாங் கின்ப துன்பங்கள் செற்றுக் களைந்து பசையற்றால், அன்றே யப்போ தேவீ டதுவே வீடு வீடாமே. 127

உளரு மில்லை யல்லரா யுளரா யில்லை யாகியே, உளரெம் மொருவ ரவர்வந்தென் னுள்ளத் துள்ளே யுறைகின்றார், வளரும் பிறையும் தேய்பிறையும் போல அசைவு மாக்கவும், வளரும் சுடரு மிருளும்போல் தெருளும் மருளு மாய்த்தோமே. 128

தெருளும் மருளும் மாய்த்துத்தன் திருந்து செம்பொற் கழலடிக்கீழ், அருளி யிருத்து மம்மானு மயனும் சிவனும்-திருமாலால், அருளப் பட்ட சடகோபன் னோரா யிரத்து ளிப்பத்தால், அருளி யடிக்கீ ழிருத்துமந மண்ணல் கருமா ணிக்கமே. 129

திருவாய்மொழி-கொண்டபெண்டீர்.

கொண்ட பெண்டிர் மக்க ளுற்றார் சுற்றத் தவர்பிறரும்
கண்ட தோடு பட்ட தல்லால் காதல்மற் றியாதுமில்லை
எண்டி சையும் கீழும் மேலும் முற்றவு முண்டபிரான்
தொண்ட ரோமா யுய்யி லல்லா லில்லைகண் டீர்துணையே 130

திருவாய்மொழி-ஓராயிரம்

அவனே யகல்ஞா லம்படைத் திடந்தான்
அவனே யஃதுண் டுமிழ்ந்தா னளந்தான்
அவனே யவனு மவனு மவனும்
அவனே மற்றெல்லா முமறிக் தனமே. 131

ஆகம் சேர்நர சிங்கம தாகி-ஓர்
ஆகம் வள்ளுகி ரால்பிளந் தானுறை
மாக வைகுந்தம் காண்பதற்கு-என்மனம்
ஏக மெண்ணு மிராப்பக லின்றியே. 132

திருவாய்மொழி-மையார்.

உருவா கிய ஆறு சமயங்கட் கெல்லாம்
பொருவாகி நின்ற னவன்-அல்லாப் பொருட்கும்
அருவா கியவாதி யை தேவர்-கட்கெல்லாம்
கருவா கியகண் ணனைக்கண்டு கொண்டேனே. 133

திருவாய்மொழி-இன்னுயிர்.

கூக்குரல் கேட்டும்நங் கண்ணன் மாயன் வெளிப்படான்
மேற்கிளைக் கொள்ளேல்மின் நீரும் சேவலும் கோழிகாள்
வாக்கும் மனமும் கரும மும்நமக் காங்கதே
ஆக்கையு மாவியு மந்த ரம்நின் றுழலுமே. 134

எழுநண்ணி நாமும்நம் வான நாடனோ டொன்றினோம்
பழனநன் னாரைக் குழாங்கள் காள்பயின் றென்னினி
இழைநல்ல வாக்கையும் பைய வேபுயக் கற்றது
தழைநல்ல வின்பம் தலைப்பெய் தெங்கும் தழைக்கவே. 135

திருவாய்மொழி-உருகுமால்.

அறிகிலேன் தன்னு ளனைத்துல கும்நிற்க
நெறிமையால் தானு மவற்றுள்நிற் கும்பிரான்
வெறிகமழ் சோலைத்தென் காட்கரை யென்னப்பன்
சிறியவென் னாருயி ருண்ட திருவருளே. 136

என்கண்ணன் கள்வ மெனக்குச்செம் மாய்நிற்கும்
அங்கண்ண னுண்டவென் னாருயிர்க் கோதிது
புன்கண்மை யெய்திப் புலம்பி யிராப்பகல்
என்கண்ண னென்றவன் காட்கரை யேத்துமே. 137

கோளுண்டா னன்றிவந் தென்னுயிர் தானுண்டான்
நாளுநாள் வந்தென்னை முற்றவும் தானுண்டான்
காளநீர் மேகத்தென் காட்கரை யென்னப்பற்கு
ஆளன்றே பட்டதென் னாருயிர் பட்டதே. 138

வாரிக்கொண் டுன்னை விழுங்குவன் காணிலென்று
ஆர்வுற்ற வென்னை யொழியஎன் னில்முன்னம்
பாரித்து-தானென்னை முற்றப் பருகினான்
காரொக்கும் காட்கரை யப்பன் கடியனே. 139

திருவாய்மொழி-எங்கானல்.

திருமேனி யடிகளுக்குத் தீவினையேன் விடுதூதாய்
திருமூழிக் களமென்னும் செழுநகர்வா யணிமுகில்காள்
திருமேனி யவட்கருளீ ரென்றக்கால்-இம்மைத்தன்
திருமேனி யொளியகற்றித் தெளிவிசும்பு கடியுமே. 140

திருவாய்மொழி-அறுக்கும்வினை.

அறுக்கும் வினையா யின-ஆ கத்தவனை
நிறுத்தும் மனத்தொன் றியசிந் தையினார்க்கு
வெறித்தண் மலர்ச்சோ லைகள்சூழ் திருநாவாய்
குறுக்கும் வகையுண் டுகொலோ கொடியேற்கே. 141

திருவாய்மொழி-மாலைநண்ணி.

மெய்யனு கும்விரும் பித்தொழு வார்க்கெல்லாம்
பொய்யனு கும்புற மேதொழு வார்க்கெல்லாம்
செய்யில்வா ளையுக ளும்திருக் கணபுரத்
தையன்-ஆ கத்தணைப் பார்கட் கணியனே. 142

திருவாய்மொழி-சார்வே.

தலைமேல் புனைந்தேன் சரணங்கள்-ஆலின்
இலைமேல் துயின்றா னிமையோர் வணங்க
மலைமேல் தான்நின்றென் மனத்து ளிருந்தானை
நிலைபேர்க்க லாகாமை நிச்சித் திருந்தேனே. 143

கண்டேன் கமல மலர்ப்பாதம்-காண்ட லுமே
விண்டே யொழிந்த வினையா யினவெல்லாம்
தொண்டேசெய் தென்றும் தொழுது-வழியொழுகப்
பண்டே பரமன் பணித்த பணிவகையே. 144

வகையால் மனமொன் றி மாதவனை-நாளும்
புகையால் விளக்கால் புதுமலரால் நீரால்
திசைதோ றமரர்கள் சென்றிறைஞ்ச நின்ற
தகையான் சரணம் தமர்கட் கோர்பற்றே. 145

திருவாய்மொழி-அருள்பெறுவாரு.

வாட்டாற்றா னடிவணங்கி மாஞாலப் பிறப்பறுப்பான்
கேட்டாயே மடநெஞ்சே கேசவனெம் பெருமானை

பாட்டாய பலபாடிப் பழவினைகள் பற்றறுத்து
நாட்டாரோ டியல்வொழிந்து நாரணனை நண்ணினமே. 146

திருவாய்மொழி-செஞ்சொல்.

செஞ்சொற் கவிகா ளுயிர்காத்தாட் செய்ம்மின்திருமா லிருஞ்சோலை, வஞ்சக்கள்வன் மாமாயன் மாயக் கவியாய் வந்து -என், நெஞ்சுமுயிரு முள்கலந்து நின்று ரறியா வண்ணம்-என், நெஞ்சு முயிரு மவையுண்டு தானே யாகி நிறைந்தானே. 147

தானே யாகி நிறைந்தெல்லா வுலகு முயிரும் தானேயாய்
தானே யானென் பானாகித் தன்னைத் தானே துதித்து-எனக்குத்
தேனே பாலே கன்னலே யமுதே திருமா லிருஞ்சோலை
கோனே யாகி நின்றொழிந்தா னென்னை முற்று முயிருண்டே.

என்னை முற்று முயிருண்டென் மாய வாக்கை யிதனுள்புகுந்து
என்னை முற்றும் தானேயாய் நின்ற மாய வம்மான்சேர் [ன்
தென்னன் திருமா லிருஞ்சோலைத் திசைகை கூப்பிச் சேர்ந்தயா
இன்னம் போவே னேகொலோ என்கொ லம்மான் திருவருளே.

மாறுங் கார மனங்கெட ஐவர் வன்கை யர்மங்க, தானுங் கார மாய்ப்புக்குத் தானே தானே யானானை, தேனுங் காரப் பொழில்குருகூர்ச் சடகோ பன்சொல் லாயிரத்துள், மானுங் காரத் திவைபத்தும் திருமா லிருஞ்சோ லைமலைக்கே. 150

திருவாய்மொழி-திருமாலிருஞ்சோலை.

பேரே யுறைகின்ற பிரான்-இன்றுவந்து
பேரே னென்றென் னெஞ்சுநிறையப் புகுந்தான்
காரேழ் கடலேழ் மலையே ழுலகுண்டும்
ஆரா வயிற்றானை யடங்கப் பிடித்தேனே. 151

திருவாய்மொழி-முனியே.

முனியே நான் முகனேமுக் கண் ணப்பா-என் பொல்லாக்
கனிவாய்த் தாமரைக் கண்கரு மாணிக்க மேயென் கள்வா
தனியே னாருயி ரேயென் தலைமிசை யாய் வந்திட்டு [யே.
இனிநான் போகலொட்டே னென்றும்மா யம்செய்யே லென்னை

மாயம்செய் யேலென்னை உன்திரு மார்வத்து மாலைநங்கை, வாசம்செய் பூங்குழ லாள்திரு வாணைநின் னாணை கண்டாய், நேசம்செய் துன்னோ டென்னை யுயிர்வே றின்றியென்றாகவே, கூசம்செய் யாதுகொண் டாய்-என்னைக் கூவிக்கொள் ளாய்வந் தந்தோ. 153

உம்ப ரந்தண் பாழேயோ அதனுள் மிசைநீ யேயோ
அம்ப ரநற் சோதி யதனுள் பிரம னரன்நீ
உம்பரும் யாத வரும் படைத்த முனிவ னவன்நீ
எம்பரம் சாதிக் கலுற் றென்னைப் போர விட்டிட்டாயே. 154

போர விட்டிட் டென்னைநீ புறம்போக்க லுற்றால்-பின்னையான்
ஆரைக்கொண் டெத்தை யந்தோ எனதென் பதென் யானென்
தீர இரும்புண்ட நீ ரது போல வென்னா ருயிரை [பதென்
ஆரப் பருக-எனக்கா ராவ முதா னாயே. 155

சூழ்ந்த கன்றாழ்ந் துயர்ந்த முடிவில் பெரும் பாழேயோ
சூழ்ந்த தனில் பெரிய பரநன் மலர்ச் சோதீயோ
சூழ்ந்த தனில் பெரியசுடர்ஞா னவின்ப மேயோ
சூழ்ந்த தனில்பெ ரியஎன் னவாவ றச்சூழ்ந் தாயே. 156

அவாவ றச்சூ ழரியை யயனை யரனை யலற்றி
அவா வற்று வீடு பெற்ற குருகூர் சடகோபன் சொன்ன
அவாவி லந்தா திகளா யிரமும்-முடிந்த
அவாவி லந்தா தியிப்பத் தறிந்தார் பிறந்தா ருயர்ந்தே. 157

ஆழ்வார்கள் திருவடிகளே சரணம்.

---

## சிற்றம்பலநாடிகள்

### செல்காலத்திரங்கல்.

ஊனொழித் திட்டென்று மொழியாத வீடுதரு
ஞானகுரு வேணுமென்று நாடா திருந்தனமே. 1

அருவாகி நின்ற வரனா ருலகிற்
குருவா யிருத்தல் குறியா திருந்தனமே. 2

தேசுற்ற தேசிகரைச் சிந்தை மகிழ்ந்துருகிப்
பூசித்துப் போற்றாமற் போதவமே போக்கினமே. 3

அங்கமலத் தாளிரண்டு மன்றே தலைக்கொண்டு
பொங்குமலம் போக்காமற் புலன்வழியே போக்கினமே.

பூதவுடம்பு பொருளல்ல வென்றுணர்ந்த
போதந் தனைமுன்னே பொருந்தியிடப் பெற்றிலமே. 5

ஆணவத்தை நீக்கி யறிவில் விழித்ததனைக்
காணவைத்த வன்றுமுதல் காணு தலைந்தனமே. 6

எல்லா வறிவு மிழந்தவிடத் துள்ளவின்ப
மல்லாத பாவியே னன்றே யறிந்திலமே. 7

உள்ளும் புறம்பு மொழியாத வானந்த
வெள்ளத் தழுந்தாமல் வீணெடுநாள் விட்டனமே. 8

ஒன்றே யெனவுரைத்த வொப்பிலருள் மெய்கண்டா
னன்றே யருளுருவா யாண்டருளப் பெற்றிலமே. 9

நல்ல குருநாத னல்குதிரு மேனிதனைப்
புல்லறிவு தீரவன்றே பூசிக்கப் பெற்றிலமே. 10

இதமகித மாற்று மெழிற்குரவர் தந்த
பதமிரண்டு மன்றே பரிசிக்கப் பெற்றிலமே. 11

களித்த திருஞானக் கண்ணு லருந்தி
யளித்ததனை யன்றே யருந்துதற்குப் பெற்றிலமே. 12

நிகழ்காலத்திரங்கல்.

இப்படியே யிப்படியி லென்போ லிருப்பதுவே
யப்படியே யந்த வகண்டபரி பூரணமே. 13

சீரார் மறையுஞ் சிவாகமமுஞ் செய்நூலு
மோரா வுணர்வு மொருமொழியாய்த் தந்தவா. 14

தோன்றும் பொழுதெல்லாஞ் சுகவடிவே தோன்றுதற்குத்
தோன்றும் பெருமாள்தஞ் சொல்லாலே சொன்னவா. 15

அண்டங் கடந்த வறிவுருவைப் பாருங்கோள்
தொண்டர் புடைசூழ்ந்த சோதிதனைப் பாருங்கோள். 16

எண்ணாத வின்ப விறையுருவைப் பாருங்கோள்
கண்ணால் வினைதீர்த்த காரணரைப் பாருங்கோள். 17

வாக்கிறந்த வின்ப வடிவதனைப் பாருங்கோள்
நோக்கரிய நோக்குடைய நுண்ணியரைப் பாருங்கோள்.

வே று.

மாயைகழன் றமைபாரீர் வல்வினைவிட் டமைபாரீர்
தூயவறி வரைப்பாரீர் தோன்றாத் துணைவரைப்பாரீர். 19

என்னையளித் தமைபாரீ ரென்னுளிருந் தமைபாரீர்
தன்னையளித் தமைபாரீர் தகைவறநின் றமைபாரீர். 20

பூதங்களைந் தமைபாரீர் பொய்யுரைமாண் டமைபாரீர்
நாதமொழிந் தமைபாரீர் நாமறநின் றமைபாரீர். 21

ஆசையகன் றமைபாரீ ராணவம்விட் டமைபாரீர்
தேசுநிறைந் தமைபாரீர் தேசிகர்தே சரைப்பாரீர். 22

வாதனைபோ னமைபாரீர் வாழ்வுபொய்யா னமைபாரீர்
பேதைமை பேர்ந்தமைபாரீர் பேதைமை போனதுபாரீர். 23

உருவமிறந் தமைபாரீ ருணர்வுருவா னமைபாரீர்
அருவமிறந் தமைபாரீ ரானந்தமா னமைபாரீர். 24

போதமிறந் தமைபாரீர் பூரணமா னமைபாரீர்
வேதமுடி வரைப்பாரீர் மெய்கண்ட நாதரைப்பாரீர். 25

அறிவுக்கறி வனைப்பாரீ ரறிவுக்கதி தனைப்பாரீர்
செறிகைக்கினி யனைப்பாரீர் தேசிகதே வனைப்பாரீர். 26

உள்ளும்புறம் பனைப்பாரீ ரொருதன்மையா ளனைப்பாரீர்
தெள்ளத்தெளி வனைப்பாரீர் தேறலிற்றே றனைப்பாரீர். 27

சுட்டவிருந் தமைபாரீர் சுட்டறநின் றமைபாரீர்
கிட்டவெளி யனைப்பாரீர் கேளிரிற்கே ளனைப்பாரீர். 28

எல்லாம்பொய்யா னமைபாரீ ரின்பமெய்யா னமைபாரீர்
சொல்லாதசொல் லனைப்பாரீர் சொல்லற்ற சோதியைப்பாரீர்.

சிவமொளிந்தற் றமைபாரீர் சேர்ந்துகலந் தமைபாரீர்
நவமொழிந்துற் றமைபாரீர் நாமவரா னமைபாரீர். 30

வருகாலத்திரங்கல்.

தோன்றி மறையுமிந்தத் தொல்லுலகு தோன்றாம
லான்ற'வறிவுநா மாய்விடுவ தெக்காலம். 31

கனவுநன வென்று காணுமல் மெய்யி
லினவு கனவற் றிருப்பதினி யெக்காலம். 32

காண்கின்ற தெல்லாங் கலந்த சுகமாகப்
பூண்கின்ற போதப் புரையறுவ தெக்காலம். 33

ஒன்றுபட நின்ற வுணர்வே யுணர்வாகி
நின்றபடி நின்று நினைவழிவ தெக்காலம். 34

காண்பானுங் காட்டுவதுங் காண்பதுவு மாய்நிற்கும்
வீண்பாவந் தீர விளைவதினி யெக்காலம். 35

ஆண்டகுரு பதத்துக் காட்செய்வ தல்லாது
பூண்ட புலன்வழியைப் போக்குநா ளில்லையோ. 36

கண்டவுடம் பெல்லாங் காணும லாருயிர்கள்
கண்டறிவைக் கண்டதனிற் கைகலக்கு நாளேதோ. 37

பொல்லாத பூதப் புலாலுடம்பிற் கூடாமை
கல்லாத வன்பிற் கலந்திருக்கு நாளேதோ. 38

பொய்த்தத்து வத்தின் றுவக்கறுத்துப் போற்றரிய
மெய்த்தத்து வத்தில் விழித்துவிடு நாளேதோ. 39

ஐயோ விதியே யைவருந் தாங்தொலைய
மெய்யே விழித்து விரவியிடு நாளேதோ. 40

பரிபூ ரணந்தன்னிற் பாலமுத முண்டே
இரவுபகல் தேசிகரை யேத்தியிடு நாளேதோ. 41

குன்றாத ஞானக் குருபரனுர் சொற்கேட்டுப்
பொன்றாத வாதனையைப் போக்கிவிடு நாளேதோ. 42

என்றுங் குருநாத னிட்டபணி செய்துமிக
நின்றபடி நில்லாத நெஞ்சுவிடு நாளேதோ. 43

ஆசையெலா மற்ற வறிவே யறிவாகி
யீசனெல்லா மாகி யிருந்துவிடு நாளேதோ. 44

அவனே யவனே யதுவைக் கருதிச்
சிவனே மறந்திருக்குஞ் சிந்தைவிடு நாளேதோ. 45

அநுபூதிவிளக்கம்.

மண்ணீ ரனல்கால்வான் வண்சுடர்கள் மன்னுயிர்க
டெண்ணீர்மை யான சிவனுருவ மல்லவோ. 46

எட்டுருவு மென்று மிறையுருவ மென்னுமது
சிட்டர் மறையுஞ் சிவாகமமுஞ் செப்பியதே. 47

எல்லா மிறையுருவென் றிப்படியே காண்பதன்றி
நில்லா விடமிதென்று நீக்கநிலை கூடுமோ. 48

சுருக்கம் விரித்தலறச் சோதி நிறைவிற்
பெருக்கவிழித் தாலலது பேரின்பங் கூடுமோ. 49

ஆகை யறிவியற்ற லானவிட மெல்லாநம்
மீசனிட மல்லா தெமக்கோ ரிடமிலையே. 50

நினைப்பு மறப்புமிந்த நின்மலனே யல்லாமற்
றினைத்துணையு மில்லையென்று தெய்வமறை கூறியதே. 51

வெறுப்பு விருப்பென்று வேறுரைத்தா லெந்தை
யுறுப்பிற் குறையாதோ வுணர்வுடையோர் சொல்லுவரோ.

வேண்டலும்வேண் டாமலுமாம் வினையும் வினைப்பயனு
மாண்டகை யோடுற்ற வநுபூதி யானதே. 53

எரிசுத்தங் கொண்ட விரும்புபோ லெங்கும்
பரிசுத்த மான பராபரமே யானதே. 54

பார்த்தே னுலகப் பரப்பெல்லாம் பார்ப்பளவிற்
பேய்த்தேர்போ லில்லையாய்ப் பேரறிவே கண்டனமே. 55

பத்துத் திசையும் பதினு லுலகமெங்குத்
தத்திக் கரைபுரளுஞ் சாகரமே யல்லவோ. 56

இந்திர சால மிடுமளவு மெய்யாகி
யந்தரப்பூ வானதுபோ லவனிநமக் கானதுவே. 57

கொண்டவடி வெல்லாங் குருவடிவே யென்றென்று
தொண்டர்பலர் பூசித்தார் சொல்ல முடியாதே. 58

எவ்வடிவு மிந்த விறைவடிவே யாதலினு
லிவ்வடிவு பூசிக்க யாமுரைக்க வேணுமே. 59

வந்த குருவடிவை வந்தித்துப் பூசித்துத்
தந்த சிவானுபவந் தானருந்தப் பெற்றனமே. 60

## தாலாட்டு.

வாயே மனமே வரையற்ற வோருரையா
னீயே நானென்று நிலைமை யளித்தானே. 61

தெய்வ நீராடிச் சிவாலயங்கள் கைதொழுது
மெய்வருந்தா தப்பாநீ நானென்ற வேதியனே. 62

தர்க்கம் படித்துத் தலைவெடித்துக் கொள்ளுவதைக்
கற்கவினை யாதருளைக் காட்டுங் கருணையனே. 63

கைம்மாறு போதமறக் காசினியோர் நூலைவிட்டு
நம்மாணை சும்மா விருவென்ற நாயகமோ. 64

போனவழி யெல்லாம் போகா தொடியெறிந்து
தானவனுக் கும்பெருமை தந்தத் தவப்பயனே. 65

பார்க்கின் சுகமதுவாய்ப் பாரா விடினுலகா
யார்க்கு மளப்பரிய வானந்த வாரிதியோ. 66

பேதப் படுத்தல் பிராந்திதுவே மும்மலமும்
வேதப் பொருள்முடிவே நீயென்ற வேதியனே. 67

மானங் குலைந்து மதியழிந்து நான்கெட்டால்
நானென்று நீயென்றி ரண்டில்லை யென்றாரோ. 68

சாதி மதத்தாலுஞ் சமய மதத்தாலுங்
கோதிலா ஞானத்தைக் கூடவரி தென்றாரோ. 69

எல்லா வுயிரு மெனதுருவே யென்றுரைத்து
நல்லா ரினத்தில் நடித்தானைச் சொன்னாரார். 70

முத்துயரு மூவுயிரு முப்பாழுங் காட்டியெனை
யத்துவித மாக்கு மருளுருவைச் சொன்னாரார். 71

வன்னம் புவனம்வருந் தத்துவித மாங்கலையென்
றுன்னுமிட மென்னிடமென் றற்றுரைச் சொன்னாரார். 72

இன்னவடி வின்னநிற மின்னபடி யென்றறியா
துன்னு மிடத்தி லுதித்தானைச் சொன்னாரார். 73

ர்த்து நினைத்தும் பரிசித்தும் பாவமறுத்
த்துநினை வைக்கொடுத்த வெங்கோனைச் சொன்னார்.

காதி பேதமாய்ப் பேரறிவா மோருரையே
கார மாகுமென்ற வற்புதனைச் சொன்னார். 75

ணுலுங் காணக் கருத்துக்கு மெட்டாதா
ணடி லுண்டு முத்தமரே கண்வளரீர். 76

நாரத் துள்ளொளியி னுள்ளே தனைக்காட்டி
நாமற் றாங்கவைத்த நிட்களனார் வாழியரோ. 77

றிரண்டு மூன்றற் றொருநாலொ ரைந்தொன்பா
ற்றதெல்லாந் தானாகி நின்றாரே கண்வளரீர். 78

வெண்பா.

ரயிறந்த பேரறிவு கண்டது நீங்கி
ரயிறந்த வானந்த முண்டு-திரையிறந்த
ரிதிபோ னில்லென்று வைத்தான்சிற் றம்பலவ
நதவு வாரிவன்போ லாங்கு. 79

லார் பொழிற்காழி யம்பலவன் றன்வார்த்தை
ல்லாஞ் சிவமா யிருந்ததே-தொல்லாழி
ள்ளம் பரந்தக்கால் வேறுபுனல் தோன்றுபோ
ளஞ் சிவத்தே யொளித்து. 80

நவா மாயை மரித்தாள் மரித்திடத்தே
நமிலாப் போதன் பிறந்தானே-யாதலா
நசங் தானிரண்டு மானேனன் பூசிக்கத்
சாசிற் றம்பலவா செப்பு. 81

க்கரையென் றுலிரதந் தானுமோ நெஞ்சமே
பரன்சிற் றம்பலவன் தேசிகர்கோன்-நற்பதத்து
லாயே யாகில் நெடுநாளே நீகற்ற
ல்லாலே யாமோ சுகம். 82

ல்கொண் டுணர்வனவும் நுண்ணுணர்வாற் சொல்வனவு
ல்கொண்டு விற்பான் பயன்போலுங்-கால்கொண் [ம்
யாமை மாற்றுசிற் றம்பலவன் வைத்த
நியே நிலையாக நில். 83

தன்னைநான் காணிற் றனித்தமுத லல்லவே
யென்னையான் காணி லிரண்டாவேன்-பின்னமறச்
சும்மா விருக்கச் சுகமாவேன் ரேணிபுரத்
தெம்மான்சிற் றம்பலவ னென்று. 84

தன்னை யுணர்வென்னிற் ருனுய் நின்றிடுவே
னென்னை யுணர்வென்னி லியாறுவேன்-மன்னுபுகழ்
சைவாசிற் றம்பலவா சண்பை நகரதிபா
வெவ்வாறு காண்பே னியான். 85

கட்டளைக்கலித்துறை.

அறிவாவ தென்று மவன்வார்த்தை கேட்ட லதனின்மிக்க
வறிவாவ தென்று மவன்மேனி காண்ட லதனின்மிக்க
வறிவாவ தென்று மவனுமஞ் செப்ப லதனின்மிக்க
வறிவாவ தென்று மவனுயி ராக வறிகுவதே. 86

வாக்கி லிருப்ப தவன்றிரு நாம மனந்தனிலே
தாக்கி யிருப்ப தவன்றிரு மேனி தரணிதனிற்
போக்கி யிருப்ப தவனேவ லென்றும் புகழ்ந்துமறை
காக்குங் கருணைச்சிற் றம்பல நாடியைக் கண்டபின்னே. 87

பற்றறப் பற்றற வென்பதெல் லாம்பசு பாசம்விடல்
மற்றொரு பற்றற வில்லையென் ருன்மன்னும் வெங்கலியைச்
செற்றருள் சிற்றம் பலநாடி வண்மைச் சிரபுரத்தோ
னுற்ற தபோதன ரேயொழிந் தேயிரு மும்மையுமே. 88

நில்லா வுடம்பும் பொருளு நிலையென நின்றுணரும்
பொல்லாத புன்மையர் புன்மையை நீத்துப் புலன்வழியே
செல்லா தொழித்தசிற் றம்பல நாடி சிரபுரத்தோன்
எல்லாம் பொய்யென் றிருபாதம்வைத் தானின்ப மேலிட்டதே.

தத்துவக் கத்துஞ் சமய விரோதமுஞ் சாத்திரஞ்சேர்
புத்தகப் பித்தையும் புந்தி மதத்தையும் போட்டிடென்று
வித்தகன் சிற்றம் பலநாடி வேணு புரத்திறைவ
னுத்தம மான சிவானந்த போகத்தை யூட்டினனே. 90

சுற்று நடுவொடு கீழ்மேலு மெங்குஞ் சுகவடிவாய்ச்
சற்றுஞ் சலிப்பற்ற தன்மையுன் ஞர்சில சாத்திரங்கள்

கற்றும் பிறருடன் கேட்டும் பலருடன் கத்தியும்போய்
மற்றும் புவனத்திலாசை விடாமல் மயங்கினரே. 91

ஒன்றென்று சொல்பவர் சொன்னாலுஞ் சொல்லுக வொன்
றிரண்டா, மென்றென்று சொல்பவர் சொன்னாலுஞ் சொல்லுக
வேத்தியன்பர், சென்றங்கு நல்கு சிற்றம் பலநாடி சிரபுரத்தோர்,
னன்றென் றிதாமென்று சொல்லாத முத்தி யளித்தனனே. 92

---

## துகளறுபோதம்.

எல்லாம்பொய் யென்றிங் கிருந்தேனு நானன்றோ
நல்லா யெனையறிந்தே னானன்றோ-சொல்லாடு
நான்பிரம மன்றி நடுவே யுணர்த்துதற்கு
வான்பிரம முள்ளதோ மற்று. 1

உன்னறிவு நீயே யுணர்வையே யாமாகி
லின்னெடுநாட் பாசத் தியையாயே-யுன்னறிவை
நீங்கா வறிவாகி நீரு மிரதமும்போ
லாங்கா ணரனு ரருள். 2

உன்னறிவுக் குள்ளே யுணர்வா யொழியாத
தன்னறிவு தானுனக்குத் தாரகமாய்ப்-பின்னமற
வொன்று யொழியாம லுள்ளடங்கி யுள்ளபடி
நின்று லதுவாவை நீ. 3

நின்ற வறிவறிகை நீங்காமை சாக்கிரமா
மன்றி யவிழ்த லதீதமாஞ்-சென்றறிவி
னீங்காம னின்று நெடிய துயில்கொள்ள
வாங்கா தறிவாய் வர. 4

இவ்வறிவு கண்டா லிருமருஞ் சாக்கிரமா
மவ்வறிவு காணு ததீதமா-மிவ்விரண்டும்
பாராம னிற்றல் பரையி லதீதமா
மாரா வறிவகன்ற தால். 5

ஈசனறி வாகியெலா மின்று கழன்றகன்றாய்
பாசமிக வைத்ததனிற் பற்றதே-கூசாமல்
நேராக நீங்கியதி னின்ற சுவடறவே
வாராய் சிவமேல் வர. 6

அறிவடையச் சென்றங் கதீதமாய் நின்ற
குறியிறந்திட் டென்றுங் குறியா-நெறியேது
சுத்தவத்தை மைந்தா வுன்றெல்லைமல மில்லையில்லை
யத்துடனே செல்வத்து வாம். 7

பைய விருந்து பதைப்பற்ற பின்னுனக்குத்
துய்ய சுகப்பிரபை தோன்றுமே-யையனே
கண்டாய் சிவபூமி காட்சி யறக்கலந்து
கொண்டாள்வான் கண்டாய் குறித்து. 8

விழுந்த வவதரத்தில் விஞ்சு சுகந்தா
னெழுந்ததிது வெங்கே யிறைவா-மொழிந்தருளாய்
மாமணியிற் சோதி மலர்ந்த பிரபைபோ
லாமான்றன் பாலே யது. 9

இந்தச் சுகத்தி லினிநீ விழியாம
லந்த வறிவி னயர்ந்ததுபோற்-றெருந்தமறப்
போதா யிதுவே சுகாதீதம் பொய்யற்றோர்க்
காதார மான வருள். 10

ஒன்றுஞ் சுகவடிவுக் குள்ளான தம்பிரா
னன்றி யொருபொருளு மாகாதே-நின்றழுந்திச்
சொல்லரிய விந்தச் சுகத்துக் கதீதமாய்
நில்லவன்று ளுமே நிலை. 11

எல்லாங் கழன்ற விடமே சிவமென்று
சொல்லா டுவர்கழன்ற தூயோர்க-ணல்லாய்கே
ணின்றபடி தானே நிலையா நிலையதனி
னின்றுவிடு நேராக நீ. 12

நீயுஞ் சிவமாகி நின்றுயோ நின்றிலையோ
வாய வடியேனே வதிகார-நாயனே
யொன்றன் றிரண்டன் றிரண்டொன்று தானன்று
நின்றதொரு தன்மை நிலை. 13

அன்றே தொடங்கி யனைத்துயிருந் தானுகி
யொன்றுகி நின்றவருக் கின்பூட்டிக்-குன்றுமற்
கொண்டுவிட லன்றோநங் கோமாற் கிதமென்று
பண்டைமறை சொல்லும் பரிந்து. 14

ஆனபர மானந்த மாகின்ற வெல்லையே
யூனமிலா வுண்மைதனி லொன்றுபட-லீனமறத்
தானான போது தணவா தெழுந்தசுக
மானே யதுவா மதி. 15

நின்றபர மானந்த நேரே யனுபவித்தங்
கொன்றுபட வுள்ளுருகி யோவாம-லென்று
மதுவுண்ட வண்டுபோன் மாளாச் சுகத்தைப்
புதிதுண் டிருந்துவிடிப் போது. 16

சர்க்கரைதா ஞர்க்குந் தருமிரத மவ்விரதஞ்
சர்க்கரைதான் கொள்ளுமோ சாற்றுங்காற்-சர்க்கரைக்கி
றின்புருவ மன்றி யெழி லுருவம் வேறுண்டோ [ன்
வின்புருவமே யிறைக்கு மென். 17

அண்ணலுமா னந்த மருளுமா னந்தமுயி
ரெண்ணிலா வானந்த மெவ்வுலகும்-பண்ணி
யளித்தழிப்பா ராகு மவர்களுமா னந்தங்
களித்ததுவே யெப்போதுங் காண். 18

ஒன்றிரண்டு மூன்றுமல முள்ளவுயிர் மூவருக்குஞ்
சென்றிவன்போ னேரே சிவமாகி-நின்றதிலை
யிவ்வகையே யாரு மெழிற்குருவா மீசனே
யவ்வகையை நீயிங் கறி. 19

ஆக முயிர்பொருள்கொண் டன்றே யருளளித்துச்
சோகமெனப் பாவிக்கச் சொன்னுரைத்-தாகத்தோர்
வேண்டுபொழு தெல்லாம் வேண்டுபொருள் வந்ததுபோற்
பூண்டுதொழ லன்றோ பொருள். 20

---

## முத்தி முடிவு.

ஓதுமிஞ் ஞேய ஞானஞா துருவு மொழிந்திடிற் பிறப்பும் விட் டொழியும், பேதுறு மிந்தத் திரிபுடி தனை நீ பிடித்திடிற் பிறப்புனைப் பிடிக்கு, மாதலா லோதுந் திரிபுடி தனை நீ யகன்று யர் சொரூபஞா னத்தைக், கோதற வடையச் சூட்சியுங் குறுக் கிக் கூறுதுங் கேளெனக் கூறும். 1

முன்னர்க்காண் பணத்தைவிட்ட விடத்துக்கு மொழிமற்
றொன்றை, யுன்னிப்பின் காணப்போற விடத்துக்கு மிடையிலே
யுன், றன்மன னொடுகண்ணொன்று சாற்றுமிந் தியமுமில்லைத்
துன்னெதிர் விடயமாகத் தோற்றுமப் பணமுமில்லை. 2

ஆதலால் விருப்பினோடு வெறுப்புமங் கணையவில்லை
யோதுமுப் புடியும்போய துரையுணர் விறந்துநின்ற
சோதிசேர் சொரூபந்தானே துகளற விளங்காநிற்கு
மேதமி னிலையதாமவ் விடமுத்தி முடிவாமென்றும். 3

ஒருபொரு ணினைவு போய்ப்பின் னொருபொரு ணினையு
முன்னாய், மருவிடை வெளியி லேயுன் மனமிலை யாகை யாலே,
சொருபநீ தானாய்த் தோன்றுந் துலைமனங் கொண்டங் குன்னி,
லொருதிரி புடியு முண்டா யொழியுமச் சொரூப மென்றும். 4

மன்னிரு பொருளி னைப்பண் மனமிற வோங்கி மேலாய்த்,
துன்னுமச் சொரூபந் தன்னைத் தொலைந்தொழி மனந் தழீஇப்
பின், னுன்னியங் கெதிரிட் டுப்பார்த் துறுதுயர் கடல்வீழ்ந்
தேங்கா, தந்நடு நிலையைச் சுட்டா தழுந்தலே சொரூப மென்றும்.

உருவநா மம்பொய் யென்றே யொருவிடிற் புலம்போம் போனான்
மருவுறு பொறிபோம் போனால் வளர்கர ணம்போம் போனால்
விரிகலா திகள்போம் போனால் விளங்குசுற் றமும்போ முற்று
மொருவிடஞ் சொரூப மென்றே யுறைதரு மிடம தென்றும். 6

திரையறு நீர்போற் சிந்தை தெளிதன்மும் மலங்க ணீங்கல்
கரைவுறத் தேய்ந்து தேய்ந்தொன் றுதன்முப் பாழ் கடத்தல்
புரையறு சாக்கி ராதீ தந்திரி புடியும் போக்கல்
வரைவுறு முத்தி யென்ன வழங்கிடங் களுமதென்றும். 7

சகலகே வலங்க ணீங்கற் குமனோ லயமா யோங்கல்
பகர் சுகா தீதமாதல் பயிலுமுக் குற்றந் தீர்த
லிகலுற வெனது யானென னிருஞ்செருக் கறுத்த லின்ன
தகவுறு முத்தி யென்றே சாற்றிடங் களுமதென்றும். 8

சஞ்சல மில்லாச் சித்தந் தான்சுத்த சிவமா யோங்கல்
விஞ்சுயிர்க் கரணங் கெட்டு வெறுஞ்சிவ கரண மாத
லஞ்சுறு பாவ னாதீ தஞ்சும்மா விருத்த லின்ன
'ஞ்சுறு முத்தி யென்றே யியம்பிடங் களுமதென்றும். 9

## அத்துவிதானுபவம்.

பத்தியுட னிப்பிறப்பில் முற்பிறப்பி லாகினுமே பலன்வேண் டாமல், நித்தியநை மித்தியமே முதலான கருமங்க ணிறையச் செய்தா, லொத்திருந்த சித்தசுத்தி யுண்டாம்பின் னுபாசனையா லொருமை யுண்டாம், முத்திதரும் விசாரணையான் பின்சீவன் பிரமமாய் முடியுந் தானே. 1

கருமமெனுங் கோபமுறு மனமதயா னையைச்சுருதிக் கயி ற்றோ டீர்த்துத், தருமனன தியானமெனும் நிகளத்தாற் கிரமி தைய தலத்திற் கட்டி, வருமறிவா மாவலவன் பழகியபின் பிர பஞ்ச வனஞ்சேர்ந் தாலு, மொருநிலையில் நின்றாலுந் தனையறிந்த பின்புமத முண்டா காதே. 2

வேதவச னமுமாசான் வசனமும்பிர மாணமென்று விசுவா சித்தே, யாதரவா யதினுத்தி செய்துநான் மெய்ப்பொருளென் றனுபவித்தாற், பேதமுட னுன்சீவ னெனுமவித்தை நசிக்கு மதின் பின்புள் ளத்திற், சீதளமாய்த் தாபம்போய்ச் சிவீசர்க் கையிக்க நன்றாய்த் தெரியுந் தானே. 3

நித்தியா நித்தியவி வேகத்தா லநித்தியத்தி னிராசை சா ந்தி, பத்தியால் வருமொழிவு பொறுமைவிசு வாசமுத்தி பல த்தி னிச்சை, புத்தியால் விசாரணையின் மனனநிதித் தியாசனம் பின் பூர்ண ஞான, சித்தியா லஞ்ஞானம் நசித்த தன்பின் பிரம மாய்ச் சிறக்க லாமே. 4

சுத்தமாங் கண்ணாடி யின்முகம்நன் றாய்த்தோற் றுந் தொ ன்மை போலே, சித்தசுத்தி யுண்டானாற் சீவனே பிரமமெனுந் தெளிவுண் டாமுன்,வைத்தமனக் களங்கத்தால் மலப்பிரதி பிம் பமென மயங்குஞ் சீவன், வித்தையுபா சனைகருமத் தான்மன த்தை யாதலால் விளக்கு வீரே. 5

விபரீத பாவனைபோ மென்றுதியா னிக்குமனம் விடையந் தோறுஞ், செபமாலை போற்சுழலுஞ் சகசகுண மிதைவிடுத்தல் செய்யப் போமோ, உபதேச பொருள்மனனஞ் செய்தாற் ப்ர பஞ்சம்பொய் யாயொடுங்கு மப்பா,1லபரோட்ச பிரமமாத் திர த்திலொன்றாய் மனதுசுத்த மாகுந் தானே. 6

மருணீங்கும் வேதாந்தப் பேரொளியில் மனோவிருத்தி மனனஞ் செய்தே, பெருகியகண் டானந்த மாய்ப்பரிண மித்த தன்பின் பிரதிபந்தந் தீர்ந், தருள்விருத்தி நான்பிரம மலவென்று வரித்திருக்கு மஞ்ஞா னத்தி, னிருளகற்றி யதுநானென் றோ ரறிவா யறியவொன்று யிருக்குந் தானே. 7

முன்புவரு நானென்னும் பிரமையும்பின் செகத்தென்னு மோகந் தானும், அன்புடன்செய் மனனத்தால் நசித்ததன்பின் பிரமமிச்ச மாயிருக்கும், பொன்புடம்போட் டாலனலில் மலந்த ள்ளி மாற்றுயரும் புதுமைபோல, துன்பமெலாந் தீர்ந்துசித்த மெய்யறிவா லானந்த சொரூப மாமே, 8

போதவடி வேசீவ னிந்திரியம் பிராணன்மனம் போற்பிர பஞ்சம், பேதமெனற் றோற்றமன்றோ கடசலத்தி லாகாசம் பிரதி பிம் பம்போல், சாதகமா மிதுகள்முழுப் பொய்யென்றே மன னஞ்செய்து தள்ளி நன்றாய், வேதமுடி வறிவிலனு பவித்ததன் பின் சின்மாத்திர மிச்ச மாமே. 9

கப்பொழிந்தே யெந்தப்பா வனைசெய்தால் மறுபிறவி கலக் கும் பேதத், தப்பொழியு மவ்வுருவாய் பரிணமிப்பன் புழுவண் டாந் தன்மை போல, வெப்பொழுதும் பிரமமா கியசீவன் பாவ னைவே றிலாமலேநா, னப்பொருளென் றேபாவித் தாலஃதா வதிலருமை யன்று தானே. 10

அறைந்தபுழுக் குளவியாங் குளவியும்பின் புழுகாகா தது போற் றன்ப, மறந்தமனம் பிரமவடி வானபின்சஞ் சலியாதம் மனதப் போதே, இறந்ததா மங்நேரந் தான்பிரபஞ்ச வாசனையு மித்தை தாம்பின், னுறைந்த சென்மம் தருமவித்தை தானுமங் கே நசித்திடுமீ துண்மை தானே. 11

தேகதர்மம் சராமரணம் பிராணதர்மம் பசிதாகம் சித்த தர்மம், சோகமுடன் சாஞ்சல்யம் சகசமா யிருக்குமதைத் துடைக்கப் போமோ, மோகமற்ற சுபுத்திரன்போ லதில்ஞான முண்டானூற் மோக்ஷ முண்டா, மாகையினுல் ஞானிக்கு மன ஞ்சலித்தா லாணிவரா தறிவி னுலே. 12

அறியப்பட்ட தெல்லாந்தள்ளி யறிவுருவா யதிட்டான மதுநா னென்று, வெறியற்ற வறிவுவந்தா லதுதிரிசி யானுவித்த விகற்ப மென்பார், நெறியிற்சத்துச் சித்தகண்டா நந்தவுரு நானென்றோர் நினைவு செய்து,குறியிற்கண்டார் சத்தானு வித்த மெனு சமாதியென்பர் குறிப்ப றிந்தே. 13

சுகம்பெறுசின் மயநானென் றென்னுட் பிரபஞ்சம் பொய்யாய்த் தோன்றுதென்று, மகண்டசுக ஞானரச மனுபவித்தல் சவ்விகற்ப மாகு மன்றோ, இகழ்ந்தவிட யமுமறிவே நானெனனு மனதுடனீ தெல்லாந் தள்ளி, உகந்துதா னெனவிளங்கு மறிவுருவே நிருவிகற்ப யோக மாமே. 14

இடைந்தநா னெனுநினைவு தள்ளியா னந்தம்நா னென்றுணர்ந்தா, லடைந்தசத்தின் சித்தினம்சத் துடனென்றாய் தோன்றுமூல கானந் தம்போ, லுடைந்த மனத்தினிற் பிரபஞ்ச நினைவொழியு மப்போதே யொழியுஞ் சித்தம், கடைந்த விந்திரியம் பத்துமப் போதே லயித்திடுமெய் கலந்த தாலே. 15

திருஞான வுருநானென் றனுபவித்தா லறிவினம்சந் தெரியும் நன்றாய், வெருவி மனம் விட்சேபத் துடனிருந்தா லறிவினம்சம் வெளிதோற்றாது, உருவுமனம் விடச்சேபத் துடனிறந்தா லப்போதே வொழியுந் துக்க, மருளுமா னந்தானு பவமுமந்த நேர்மைவெளி யாகுந் தானே. 16

காற்றினால் வேணுவிற்றீப் பிறந்ததையு மெறித்தணையுங் கதைபோ லாசான், சாற்றிய ஞானமும்ஜெனனந் தருமவித்தை தன்னையெரித்துத் தானணைந்தா, லேற்றியகண் ணாடியில்லா பிரதிபிம்பம் போலவிருப் பிடமில்லாமல், தோற்றியசிற் பிரதிபிம்ப மெனுஞ்சீவனகண்டசித்தாய் துலங்குந் தானே. 17

வெளியுடனே சேராத பொருளொன்று மில்லையநத மேன்மை போலே, யொளிர் தருமெய் யறிவுடனே சம்பந்த மில்லாத பொரு ளொன்றுமிலே, தெளிவுதரு மெய்யறிவு பெருவெளிபோலகண்ட மெங்கும் சிறந்த தென்றே, யெளியவர்க்கு நூல்தவிர வறிவிலனு பவிக்கப்பட் டிருந்த தாமே. 18

சிறிதறியப் பட்டதாய்ச் சிறிதறியப் படாததாய்ச் செகத்தி லென்னுல், அறியப்பட்ட தெல்லாமென் றிருவகையி னனுபவத்தி னறிவதாலே, முறிவிலா முன்னறிவிப் போதுமினி மேலுமென்று முக்காலத்து, நெறியறியு மறிவுருநா னேசகல சாட்சியென நிகழ்த்த லாமே. 19

செனித்தவெகு சென்மத்தி னற்றவத்தாற் பரமேசன் றிருவுளத்தால், அனித்தியத்தை யகற்றியசற் குருவருளும் வேதாந்தத் தறிவினுலும், இனிக்கருமஞ் செயத்தக்க திலையறியத் தக்கதொன்று மில்லை நானே, தனித்தசச்சி தானந்த பூரணமென் றனுபவித்த தன்மை யாலே. 20

தனத்திலுமே மகன்பிரிய மதனிலுந்தன் னுடலதிலுந் தன்பிராணன், அனைத்துமதி லுஞ்சகல மனுபவிக்கு மாத்மாவா மதிலுஞ்சாட்சி, நினைத்தவதி லும்பிரியம் வேறென்றில் லாததினுனித்தியா னந்தம், எனச்சிறக்குஞ் சாட்சியே தினமும்வெகு பிரியமா யிருக்குந் தானே. 21

சகலமறிந் தாசையிலா மெய்ஞ்ஞானி யெத்தொழில்கள் தான் செய்தாலும், மிகசாம்பி ராச்சியமுதற் பரமபதத் துள்ளசுகமெல்லாஞ் சேர்வன், அகல்கரும மொன்றுண்டோ பிறவியுண்டோ விரண்டுண்டோ வவித்தை யுண்டோ, சுகமயமோ மெய்யறிவோ சற்குருவோ வகோமகிமை சொல்லொ ணுதே. 22

பெரும்பிரமத் தம்சமூன் றழியாமற் றோற்றும்பிர பஞ்சம்போல, அருங்ககன முதலுலகில் நாமவுரு விரண்டினம்ச மழிந்துதோற்றும், இருந்துவிளங் கியபிரிய மாமிதென்று சற்சிற் சுகமெனு மூன்றம்சம், ஒருங்கிமெய்யாய்க் கடத்தில்மண்போல் நிறைந்திருக்கு நாமமுமவ் வுருவும் பொய்யே. 23

தெருள் மாயை யவித்தையிதாற் பேரறிவுஞ் சிற்றறிவுஞ் சீவீ சற்கே, வருமதனைத் தள்ளியே நானகண்ட சிதானந்த வடிவென் றெண்ணும், ஒருநினைவிற் பிரேரகத்தால் மறுநினைவும் வாசனையு மொழியு மப்பால், அருளறிவே காற்றில்லா விளக்குப்போனிருவிகற்பத் தசையா தன்றே. 24

சுருதியினுற் சகலந்தள்ள மிச்சமொன்று மில்லையென்று சொல்லவேண்டாம், கருதியொன்று மில்லையெனு மறிவுமிச்ச

மாயிருக்கக் கண்டோம்நன்ருய்த், தருகடத்தைத் தள்ளினல் கடவெளிபோ லவ்வறிவைத் தள்ளவொண்ணு, திருள்கோசத த பிமானித் திடுமறிவே சீவனல்லா லீசனுமே. 25

பிரமாதி யுயிரெல்லா மறிவொன்றே சீவனென்றும் பிரம மென்றும், விரவுமதாற் பார்வைமுத லானவறி வென்றிருக்கு வேதஞ் சொல்லும், திரமதிக்குஞ் சாட்சியாய்நானென்றுந் தான்விளங்குஞ் சீவான் மாவே, வரமுதவு பூரணமாம் பிரமமென்றே யசுர்வேதம் வழுத்துந் தானே. 26

சிருட்டிக்கு முன்பினிரண் டிலாமலொன்ரு யிருந்தசத்தே தினந்தேகாதி, விருத்திக்குஞ் சாட்சியா கியநீயென் றேசாமவேதஞ்சொல்லும், அருப்பில்லா வபரோட்சப் பொருளி தென்றுஞ் செகசாட்சி யாத்மா வென்றும், பொருத்தகில விளக்கமதே பிரமமென்று மதருவணம் புகலுந் தானே. 27

---

## அத்துவித வெண்பா.

புறப்பத்தி யென்று மகப்பத்தி யென்றுஞ்
சிறப்புடைய வாகமங்கள் செப்பும்-புறப்பத்தி
பேதமதா யர்ச்சிக்கை பேதமிலா வர்ச்சனையே
யோதுமகப் பத்தியென வோர். 1

பூசிப்பித் தேகல் சரியை கிரியையது
பூசித்துப் போகைமிகு மன்பினுற்-பூசித்
தகலாமை யோகமென வன்றமல ஞானதுஞ்
சகலா கமமுரைக்குந் தான். 2

தற்பதமே சற்குருவாந் தொம்பதமே லிங்கமதா
மற்புதமா நல்ல வசிபதமே-பொற்புடைய
சங்கமந்தா னென்றே தகுஞ்சுருதி வாக்கியத்திற்
றங்கும் பொருளறியத் தான். 3

மனைவாழ்க்கை தன்மமுற்று மாயா தொருவ
னினியசந்நி யாசத்தை யெய்தின்-வினவியிடுங்
காய விரதமெனுங் கட்டிருக்க வான்மாவுக்
கேயுஞ் சிவஞான மே. 4

ஆனகன்ம சந்நியாச தன்மவன்மக் கட்டடனே
தானப் பரமாம்ச சந்நியாச-ஞானமது
வந்தொருவர் போதிக்க வந்தக்காற் சீவனுக்குப்
பெந்தமறு ஞானம் பெறும். 5

ஆச்சிரம தன்மமுற்று மாயிருந்த காயமதே
யாச்சிரம தன்மமெல்லா மற்றுநின்ற-தேசுபெறுங்
கன்ம விரதமெனுங் கட்டுவிடா லிங்கமதாம்
வன்மமுற ஞானம் வரும். 6

ஆனவன்ன வாச்சிரமக் கட்டுவிட்டான் மேலான
தான சிவாச்சிரமத் தாஞ்சில-மானவெல்லாங்
கைவிட்டா லிங்கமந்த லிங்க விரதமதா
மெய்யாஞ் சடுத்தலமே மெய். 7

## வாசுதேவர் மனனம்.

உரையறு சின்மாத்திர மதின்வேறு யொருவஸ்து விலை யென வறிந்து, கரையறு சின்மாத்திர மதுதானுய்க் கருதியே சற்குரு முகமாய், புரையுறு பிரதானுதி தோற்றமுமேற் புகலஞ் ஞானத்தையுங் கேட்டு, வரையுறு மாரோபத் தையுநீங்கி மருவிய பதார்த்த மொன்றிலதாய். 1

அபவாதம் பண்ணித் தானே யாவுமென் றறிவோர் தம்மை
யுவமையில் சாட்சாத் கார முற்றிடுஞானி யென்றுந்
தவமுள சீவன் முத்த னிவனென்றுஞ் சாஸ்தி ராதி
பவமறு முனிவோர் தாமும் பகருவர் சித்தந் தானே. 2

சச்சிதா னந்த மன்றிச் சாற்றிட வேறில் லென்று
மெச்சுகா ரணம தன்றி வேறுகா ரியமில் லென்று
மச்சமற் றனுப வத்தோ டையம தறவான் மாவை
நிச்சயித் தறிவோன் முத்த னென்றுமே நிகழ்த்தும் வேதம். 3

அறிவுடையோர் துன்பமெலா மந்தக்கரண மதற்கென்றும், பொறியாஞ்சாட்சி தனக்கில்லை யென்றும்பார்ப்பார் போதமிலோர், வெறியாற்றுன்ப மெலாந்தனதாய் மேவிமனைவி புதல்வர்களாற்,செறியுந்துக்க மதுந்தனதாய்ச் சேர்வரிவர்கள் பேதமிதாம். 4

நிராகார னிருவிகாரி நானென நிச்சயித்திங்
கிராகஞ்செய் வடிவாய்வந்த ஸ்ரீகுரு வருளினாலே
பராமரி சித்தகர்த்தா பயில்கார யிதான்மாவென்
றிராவுசந் தேகமின்றி யறிவதே பலமதாகும். 5

சொன்ன மூர்த்திகளை யுபாசிக்கச் சொன்ன சுருதியின் கருத்தெதா மென்னி, லன்னிய மில்லா தந்தந்தவழியா லரன் றனை யறிவதே கருத்தா, முன்னிடுமிவ்வா றுயிர்க்குமே சமட்டி யுபாதியா லீசுரத் துவமு, மன்னிய வியட்டி மூன்றுதே கத்தால் வந்திடுஞ் சீவத்வந் தானும். 6

சருவக்ஞ கிஞ்சிக்ஞோ பாதியைநீக்கிற் சைதன்னிய மேக மா மிவையைச், சுருதிகண் மாவாக் கியமதனுக்குச் சொல்லிடு மருத்தமா மென்று, வருவதாம்விட்டு விடாதலட் சணையால் வருமிதைக் குருவினால் விசாரித், தொரு பொருளான பிரமநா னென்று முணர்வுளோன் முத்தனா மன்றே. 7

இந்தியதேக சகங்களுக் கென்று மியல்பதாய் விலட்சண மென்றே, யந்தமா யறிதல் விசாரத்தின் பலமா மாரிவ்வா றறி வரோ வவரே, பந்தமில்சீவன் முத்தரா மேலும் பரமுத்த ரவ ரெனச் சுருதி, சந்தமா மிருதி புராணங்க ளியாவுஞ் சமுசய மின்றியே சாற்றும். 8

என்பசு கன்று பிள்ளை யென்பெணென் மனைவி யென்று
தன்னதாய்த் தோன்று மியாவுந் தானகா வண்ணம் போல
வென்னுடன் மனம்பி ராண னென்புத்தி யவத்தை யென்று
தன்னதாய்த் தோன்றும் பஞ்ச கோசங்க டானு காதே. 9

சுசியுறும் பசுவா திக்குச் சுபாவமாம் விகார மியாவும்
பசுவுடை யோனைப் பற்றுப் பான்மைபோற் பஞ்ச கோசத்
தசைவிகா ரங்க ளியாவுஞ் சாட்சியா யனிய மாகி
மிசையுறு தனக்கில் லென்று வேறாக வறிய லாமே. 10

சத்துச் சித்தா னந்தவுருத் தனக்கே சித்தித் திருப்பதனாற்
சித்துச் சத்தா னந்தமதாய்த் திகழு மான்மா நாமென்னு
மெத்து திடநிச் சயஞான மேவ லிவற்றின் பலனென்றே
யத்து விதன்சொல் லுபநிடங்க ளைய மறச்சொல் வினதறிவாய்.

தன்னைத் தானே புசிக்கவிலைத் தனக்கு வேறாய்ப் போக வஸ்திங், குன்ன வொன்று மிலாமையினு லுரைக்கும் போக்தத் துவமில்லை, யன்னதாலே யத்துவித னவான்மா வபோக்தாவாம், பன்னு மவரே நானென்று பண்பா யறிவோன் பரமுத்தன். 12

ஞானியா மென்னப் பேரே ஞானலட் சணமே தென்று
லூனிலா தொன்றுஞ் சொல்லா ரொருசுலோ கத்துக் கர்த்தந்
தானியம் பிடமாட் டார்கள் சாபகோ பங்க டானே
மேனியா மூட ரத்ன மேவியே யனேகம் பேர்கள். 13

கெடுதலை யடைந்தார் நீயுங் கேடுரு வணமுன் பேரில்
வடுவிலா வன்பி னூலே வழுத்தினே மிந்த மட்டு
நடுவுற விசாரி யன்னோர் நாட்டமே யுனக்கு வேண்டாம்
படும்படி நன்மை நாமும் பகருவோ மந்தி ரங்கள். 14

அதுதனைச் செபித்து வந்தா லடையலா மிக பரங்க
ளதுசொனே மதுவை நம்பிங் கிலாவிடிற் கெட்டுப் போவாய்
சதுரனே யென்று சங்கக் காரர்போற் ருற்கீ காதி
பொதுவுறு முமூட்சு வானோர் புத்தியை மயக்கு வார்கள். 15

ஆதலான் முமூட்சு வானே ரறிந்துதுற் சங்கம் விட்டுத்
தீதிலாச் சற்சங் கத்தைச் சேர்ந்துவே தாந்தந் தன்னை
யோதியே குருவை நம்பி யுருற்றிய படியே செய்து
பேதமின் ஞானம் பெற்றோர் பெறுவர்கள் சீவன் முத்தி. 16

பேதமில் லாது போலப் பிரமத்தின் வேறு காதிங்
கோதிடுஞ் சகத்தென் றெண்ணி யொழிக்கலாம் பிரமை யைத்
தீதிலாக் குருமுன் பாகத் தேர்ந்தவை நீக்கிக் கொண்டு [துந்
சோதியா ஞானம் பெற்றோன் றாயதாஞ் சீவன் முத்தன். 17

ஞானியைப் பூசித் தோர்க்கே நன்மையுந் தூஷித் தோர்க்கே
யானிசெய் பாவந் தானு மடுத்திடும் பிராரத் தங்கள்
ஞானியே யனுப விப்ப னுசம்வே றென்று மில்லை
யானிவே றென்றுற் சொல்லி னனேகதோ டங்க ளுண்டாம். 18

இவ்வணஞ் சஞ்சி தாதி யாவையும் விசாரஞ் செய்திங்
கவ்வண மகங்கா ராதிக் கல்லது சாட்சி யான
தவ்வலி றனக்கில்லென்று சற்குருவருளாற் பார்ப்போன்
செவ்விய சீவன்முத்த னெனவேதந் திகழ்த்துமன்றே. 19

திருமூலநாயனுர் திருவாய்மலர்ந்தருளிய

## திருமந்திரம்.

### துதி.

ஒக்கநின் ருனை யுலப்பிலி தேவர்க, ணக்குமின் றேத்திடு நாதனை நாடொறும், பக்கநின் ருரறி யாத பரமனைப், புக்குநின் றுன்னியான் போற்றிசெய் வேனே.

### உபதேசம்.

விண்ணின் றிழிந்து வினைக்கிடாய் மெய்கொண்டு, தண்ணின்ற தாளைத் தலைக்காவல் முன்வைத்து, வுண்ணின் றுருக்கியோ ரொப்பிலா வானந்தக், கண்ணின்று காட்டிக் களிம்பறுத் தானே.

வித்தைக் கெடுத்து வியாக்கிரத் தேமிகச், சுத்தத் துரியம் பிறந்து துடக்கற்று, வொத்துப் புலனுயி ரொன்ரு யுடம்பொடு, செத்திட் டிருப்பர் சிவயோகி யர்களே. 2

சோம்ப ரிருப்பது சுத்த வெளியிலே, சோம்பர் கிடப்பது சுத்த வொளியிலே, சோம்ப ருணர்வு சுருதி முடிந்திடஞ், சோம்பர் கண்டாரச் சுருதிக்கட் டூக்கமே 3

தூங்கிக்கண் டார்சிவ லோகமுந் தம்முள்ளே, தூங்கிக் கண்டார்சிவ யோகமுந் தம்முள்ளே, தூங்கிக்கண் டார்சிவ போகமுந் தம்முள்ளே, தூங்கிக்கண் டார்நிலை சொல்வதெவ் வாறே. 4

பெருமை சிறுமை யறிந்தெம் பிரான்போ, லருமை யெளிமை யறிந்தறி வாரா, ரொருமையுள் ளாமைபோ லுள்ளைந் தடக்கி, யிருமையுங் கேட்டிருந் தார்புரை யற்றே. 5

புரையற்ற பாலினுள் நெய்கலந் தாற்போல், திரையற்ற சிந்தையு ளாரிய னென்செப்பு, முரையற் றுணர்வோ ருடம்பிங் கொழிந்தாற், கரையற்ற சோதி கலந்தசத் தாமே. 6

### யாக்கை நிலையாமை.

அத்திப் பழமு மரைக்கீரை நல்வித்துங், கொத்தி யுலைப் பெய்து கூழிட்டு வைத்தன, ரத்திப் பழத்தை யரைக்கீரை வித்துண்ணக், கத்தி யெடுத்தவர் காடுபுக் காரே. 7

உயிர்நிலையாமை.

மத்தளி யொன்றுள தாள மிரண்டுள, வத்துள்ளே வாழு மரசரு மஞ்சுள, வத்துள்ளே வாழு மரசன் புறப்பட்டான், மத்தளி மண்ணாய் மயங்கிய வாறே. 8

அந்தணரொழுக்கம்.

பெருநெறி யான பிரணவ மோர்ந்து, குருநெறி யாலுரை கூடினால் வேதத், திருநெறி யான திருகை யிருத்திச், சொரூபம தானோர் துகளில்பார்ப் பாரே. 9

சத்திய முந்தவந் தானவ னாதலு, மெய்த்தகு மிந்திய மீட்டியே வாட்டலு, மொத்த வுயிருட லுண்டா யுணர்வுற்றுப், பெத்த மறுத்தலு மாகும் பிரமமே. 10

வேதாந்தங் கேட்க விரும்பிய வேதியர், வேதாந்தங் கேட்டுந்தம் வேட்கை யொழிந்திலர், வேதாந்த மாவது வேட்கை யொழிந்திடம், வேதாந்தங் கேட்டவர் வேட்கைவிட் டாரே.

ஒன்று மிரண்டு மொடுங்கிய காலத்து, நன்று மிருந்து நலம்பல பேசினும், வென்று விளங்கும் விகிர்தனை நாடுவர், சென்று வணங்குந் திருவுடை யோரே. 12

இராஜதோடம்.

வேட நெறிநில்லார் வேடம்பூண் டென்பயன், வேட நெறிநிற்போர் வேடமே மெய்வேடம், வேட நெறிநில்லார் தம்மை யிறைவன்றான், வேடநெறி செய்தால் வீடது வாகுமே. 13

அன்புடைமை.

அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலா, ரன்பே சிவமாவ தாரு மறிகிலா, ரன்பே சிவமாவ தாரு மறிந்தபி, னன்பே சிவமா யமர்ந்திருந் தாரே. 14

என்பே விறகா யிறைச்சி யறுத்திட்டுப், பொன்போற் கனலிற் பொறிய வறுப்பினு, மன்போ டுருகி யகங்குழை வார்க்கன்றி, யென்பொன் மணியினை யெய்தவொண் ணாதே. 15

என்னன் புருக்கி யிறைவனை யேத்துமின், முன்னன் புருக்கி முதல்வனை நாடுமின், பின்னன் புருக்கிப் பெருந்தகை நந்தியுந், தன்னன் பெனக்கே தலைநின்ற வாறே. 16

அன்பினுள் ளான்புறந் தானுட லாயுளான், முன்பின் னுள் ளான் முனிவர்க்கும் பிரானவ, னன்பினுள் ளாகி யமரு மரும் பொரு, ளன்பினுள் ளார்க்கே யணைதுணை யாமே. 17

அன்பு செய்வாரை அறிவன் சிவன்.

ஈச னறியு மிராப்பக லுந்தன்னை, பாசத்துள் வைத்துப் பரிவு செய் வார்களை, தேசுற் றறிந்து செயலற் றிருந்திடில், யீசன்வந் தெம்மிடை யீட்டிநின் றானே. 18

கல்வி.

நிற்கின்ற போதே நிலையுடை யான்கழற், கற்கின்ற செய் மின் கழிந்தறும் பாவங்கள், சொற்குன்ற லின்றித் தொழுமின் றொழுதபின், மற்றொன் றிலாத மணிவிளக் காமே.

கல்லாமை.

வல்லார்க ளென்றும் வழியொன்றி வாழ்கின்றா, ரல்லா தவர்க ளறிவு பலவென்பா, ரெல்லா விடத்து முளனெங்க டம் றை, கல்லா தவர்கள் கலப்பறி யாரே. 20

கற்றுஞ் சிவஞான மில்லாக் கலதிகள், சுற்ற மும்விடார் துரிசறார் மூடர்கண், மற்றும் பலதிசை காணார் மதியிலோர், கற் றன்பி னிற்போர் கணக்கறிந் தார்களே. 21

நடுவுநிலைமை.

நடுவுநின் றார்க்கன்றி ஞானமு மில்லை, நடுவுநின் றார்க்கு நர கமு மில்லை, நடுவுநின் றார்நல்ல தேவரு மாவர், நடுவுநின் றார்வழி நானுநின் றேனே. 22

கள்ளுண்ணாமை.

சித்த முருக்கிச் சிவமாஞ் சமாதியி, லொத்துச் சிவானந்த மோவாத தேறலைச், சுத்த மதுவுண்ணச் சிவானந்தம் விட்டிடா, நித்த லிருத்தல் கிடத்தல் கிழ்க்காலே. 23

இராப்பக லற்ற விடத்தே யிருந்து, பராக்கற வானந்தத் தேறல் பருகா, ரிராப்பக லற்ற விறையடி யின்பத், திராப்பகன் மாயை யிரண்டிடத் தேனே. 24

பதிவலியில் வீரட்டமெட்டு.

மூலத்து வாரத்து மூளு மொருவனை, மேலைத்து வாரத்தின் மேலுற நோக்கிமுற், காலுற்றுக் காலனைக் காய்ந்தங்கி யோக மாய், ஞாலக் கடவூர் நலமா யிருந்ததே. 25

### தீர்த்தம்.

உள்ளத்தி னுள்ளே யுளபல தீர்த்தங்கள், மெள்ளக் குடைந்துநின் றாடார் வினைகெடப், பள்ளமு மேடும் பறந்து திரிவரேற்; கள்ள மனமுடைக் காசினி யோரே. 26

உள்ளத்தி னுள்ளே யுணரு மொருவனைக், கள்ளத்தி னாருங் கலந்தறி வாரில்லை, வெள்ளத்தை நாடி விடுமவர் தீவினைப், பள்ளத்தி லிட்டதோர் பத்தனுள் ளாமே. 27

### பிராணாயாமம்.

ஆரிய னல்லன் குதிரை யிரண்டுள, வீசிப் பிடிக்கும் விரகறி வாரில்லை, கூரிய நாதன் குருவி னருள்பெற்றால், வாரிப் பிடிக்க வசப்படுந் தானே. 28

புள்ளினு மிக்க புரவியை மேற்கண்டாற், கள்ளுண்ண வேண்டாந் தானே களிதருந், துள்ளி நடப்பிக்குஞ் சோம்பு தவிர்ப்பிக்கு, முள்ளது சொன்னோ முணர்வுடை யோருக்கே. 29

பிராணன் மனத்தொடும் பேரா தடங்கி, பிராண னிருக்கிற் பிறப்பிறப் பில்லை, பிராணன் மடைமாறிப் பேச்சறி வித்து, பிராண னடைபேறு பெற்றுண் டீரே. 30

### பிரத்தியாகாரம்.

கண்டுகண் டுள்ளே கருத்துரு வோங்கிடிற், கொண்டுகொண் டுள்ளே குணம்பல காணலாம், பண்டுகந் தெங்கும் பழமறை தேடியை, யின்றுகண் டிங்கே யிருக்கலு மாமே. 31

நாபிக்குங் கீழே பன்னிரண் டங்குலந், தாபிக்கு மந்திரந் தன்னை யறிகிலர், தாபிக்கு மந்திரந் தன்னை யறிந்தபின், கூவிக் கொண் டீசன் குடிபுகுந் தானே. 32

நாசிக் கதோமுகம் பனிரெண் டங்குலம், நீசித்தம் வைத்து நினையவும் வல்லையேல், மாசித்த மாயோகம் வந்து தலைப்பெய்தும், தேசத்துக் கென்றும் சிதைவில்லை யாகுமே. 33

மூலத் துவாரத்தே முக்கார மிட்டிரு, மேலைத் துவாரத்தின் மேன்மனம் வைத்திரு, வேல்வைத்த கண்ணை வெளியில் விழித்திரு, காலத்தை வெல்லுங் கருத்திது தானே. 34

ஒருக்கா லுபாதியை யொண்சோதி தன்னைப், பிரித்துணர வந்த வுபாதிப் பிரிவைக், கரைத்துணர் வுன்னல் கரைதலுண் ணோக்கல், பிரத்தியா காரப் பெருமைய தாமே. 35

### தியானம்.

மனத்து விளக்கினை மாண்பட வேற்றிச், சினத்து விளக் கினைச் செல்ல நெருக்கி, யனைத்து விளக்குந் திரியொக்கத் தூண்ட, மனத்து விளக்கது மாயா விளக்கே. 36

எண்ணா யிரத்தாண்டு யோக மிருக்கினும், கண்ணா ரமுதனைக் கண்டறி வாரில்லை, யுண்ணாடி யுள்ளே யொளிபெற நோக்கிற், கண்ணாடி போலே கலந்திருந் தானே. 37

நாத முடிவிலே நல்லா ளிருப்பது, நாத முடிவிலே நல் யோக மிருப்பது, நாத முடிவிலே நாட்ட மிருப்பது, நாத முடிவிலே நஞ்சுண்ட கண்டனே. 38

நடலித்த நாபிக்கு நால்விரன் மேலே, மடலித்த வாணிக் கிருவிர லுள்ளே, கடலித் திருந்து கருதவல் லார்கள், சடலத் தலைவனைத் தாமறிந் தாரே. 39

### சமாதி.

விந்துவு நாதமு மேருவி லோங்கிடிற், சந்தியி லான சமாதி யிற் கூடிடு, மந்தமி லாத வறிவி னரும்பொருள், சுந்தரச் சோதி யுந் தோன்றிடுந் தானே. 40

மன்மன மெங்குண்டு வாயுவு மங்குண்டு, மன்மன மெங்கி ல்லை வாயுவு மங்கில்லை, மன்மனத் துள்ளே மகிழ்ந்திருப் பார்க்கு, மன்மனத் துள்ளே மனோலய மாமே. 41

பூட்டொத்து மெய்யிற் பொறிப்பட்ட வாயுவை, தேட்ட ற்ற வங்கிலஞ் சேரும் படிவைத்து, நாட்டத்தை மீட்டு நயனத் திருப்பார்க்குத், தோட்டத்து மாம்பழந் தூங்கலு மாமே. 42

### சந்திரயோகம்.

உந்திக் கமலத் துதித்தெழுஞ் சோதியை, யந்திக்கு மந்திர மாரு மறிகிலா, ரந்திக்கு மந்திர மாரு மறிந்தபின், றந்தைக்கு முன்னே மகன்பிறந் தானே. 43

காலசக்கரம்.

அண்ண லிருப்பிட மாரு மறிகில, ரண்ண லிருப்பிட மாய்ந்துகொள் வார்களுக், கண்ண லழிவன்றி யுள்ளே யமர்ந்திடு, மண்ணலைக் காணி லவனிவ னருமே. 44

திருவம்பலச் சக்கரம்.

தானே யெழுகுணந் தன்சுட ராய்நிற்குந், தானே யெழுகுணம் வேதமு மாய்நிற்குந், தானே யெழுகுண மாவது வோதிடில், தானே யெழுந்த மறையவ னாமே. 45

அருச்சனை.

அறிவரு ஞானத் தெவரு மறியார், பொறிவழி தேடிப் புலம்புகின் றார்க, ணெறிமனை யுள்ளே நிலைபெற நோக்கி, லெறிமணி யுள்ளே யிருக்கலு மாமே. 46

தானுவ னாக வவனேதா னாயிட, வானவ விரண்டி லறிவன் சிவமாகப், போனவ னன்பிது நாலா மரபுறத், தானவ னாகு மொ ராதித்த தேவர். 47

சுத்தசைவம்.

கற்பன கற்று கலைமன்னு மெய்யோக, முற்பத ஞான முறைமுறை நண்ணியே, தொற்பத மேவித் துரிசற்று மேலான, தற்பரங் கண்டுளோர் சைவசித் தாந்தரே. 48

கடுஞ்சுத்தசைவம்.

நானென்றுந் தானென்று நாடினன் சாரவே, தானென்று நானென்றிரண்டிலாத் தற்பதம், தானென்று நானென்ற தத்துவ நல்கலால், தானென்று நானென்றுஞ் சாற்றகி லேனே. 49

சரிதை.

நாடு நகரமு நற்றிருக் கோயிலுந், தேடித் திரிந்து சிவபெரு மானென்று, பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின், கூடிய நெஞ்சத்துக் கோயிலாக் கொள்வனே. 50

கிரியை.

பத்தன் கிரியை சரிதையை பயிலுற்று, சுத்த வருளாற் றுரிசற்ற யோகத்தில், லுய்த்த நெறியுற் றுணர்கின்ற ஞானத்தாற், சித்தங் குருவரு ளாற்சிவ மாகுமே. 51

## யோகம்.

நெறிவழி யேசென்று நேர்மையு ளொன்றித், தறியிருந் தாப்போலத் தம்மை யிருத்திச், சொறியினுந் தாக்கினுந் துண் ணென் றுணராக், குறியறி வாளர்க்குக் கூடலு மாமே. 52

## ஞானம்.

ஞானத்தின் மிக்க வறநெறி நாட்டில்லை, ஞானத்தின் மிக்க சமயமு நன்றது, ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவா, ஞானத்தின் மிக்கார் நரரின் மிக்காரே. 53

## சன்மார்க்கம்.

சாற்றுஞ் சன்மார்க்க மாந்தர் சிவதத்துவத், தோற்றங்க ளான சுருதி சுடர்க்கண்டு, சீற்ற மொழிந்து சிவயோக சித்தரா ய்க், கூற்றத்தை வென்றார் குறிப்பறிந் தார்களே. 54

தெரிசிக்கப் பூசிக்கச் சிந்தனை செய்யப், பரிசிக்கக் கீர்த்தி க்கப் பாதுகஞ் சூடக், குருபத்தி செய்யுங் குவலயத் தோர்க் குத், தருமுத்தி சார்பூட்டுஞ் சன்மார்க்கந் தானே. 55

தெளிவறி யாதார் சிவனை யறியார், தெளிவறி யாதார் சிவ னு மாகார், தெளிவறி யாதார் சிவமாக மாட்டார், தெளிவறி யா தவர் தீரார் பிறப்பே. 56

தானவ னாகித்தா னைந்தா மலஞ்செற்று, மோனம தாமொ ழிப் பான்முத்த ராவது, மீனமில் ஞானானு பூதியி லின்பமுந், தானவ னுயற்ற லானசன் மார்க்கமே. 57

சன்மார்க்க மெய்த வருமருஞ் சீடர்க்குப், பின்மார்க்க மூன்றும் பெறவியல் பாமென்று, னன்மார்க்கந் தானே சிவனொ டு நாடலே, சொன்மார்க்க மென்னச் சுருதிகைக் கொள்ளுமே.

பசுபாச நீக்கிப் பதியுடன் கூட்டிக், கசியாத நெஞ்சங் கசி யக் கசிவித், தொசியாத வுண்மைச் சொரூபோ தயத்துற்,றசை வான தில்லாமை யானசன் மார்க்கமே. 59

## சகமார்க்கம்.

வளங்கனி யொக்கும் வளமிறத் தார்க்கும், வளங்கனியொ ப்பதோர் வாய்மைய னுகு, முளங்கனிந் துள்ள முகந்திருப் பார் க்குப், பழங்கனிந் துள்ளே பகுந்துநின் றானே. 60

### சற்புத்திரமார்க்கம்.

*உயர்ந்தும் பணிந்தும் முகந்துந் தழுவி, வியர்ந்து மானடிக் கேமுறை செய்ம்மின், பயந்தும் பிறவிப் பயனது வாகும், பயந்து பரிக்கிலப் பான்மைய னாமே.* 61

### தாசமார்க்கம்.

*வாசித்துப் பூசித்து மாமலர்க் கொய்திட்டும், பாசிக் குளத்தில்வீழ் கல்லா மனம்பார்க்கின், மாசற்ற சோதி மணிமிடற் றண்ணலை, நேசித் திருந்த நினைவறி வாரே.* 62

### சாலோகம்.

*சமயங் கிரிகையிற் றன்மனங் கோயில், சமய மனுமுறை தானே விசேடஞ், சமயத்து மூலன் தனைத்தேறல் மூன்றுஞ், சமயாபி டேகமே தானுஞ் சமாதியே.* 63

### சாமீபம்.

*பாசம் பசுவான தாகுமிச் சாலோகம், பாச மருளான தாகுமிச்சாமீபம், பாசஞ் சிவமான தாகுமிச் சாரூபம், பாசங் கரைபதி சாயுச்சிய மாமே.* 64

### சாரூபம்.

*சயிலலோ கத்தினைச் சார்ந்த பொழுதே, சயிலம தாகுஞ் சராசரம் போலப், பயிலுங் குருவின் பதிபுக்க போதே, கயிலை யிறைவன் கதிர்வடி வாமே.* 65

### சாயுஜ்ஜியம்.

*சாயுஜ்ஜியஞ் சாக்கிரா தீதஞ் சாருதல், சாயுஜ் ஜியமுபசாந்தத்துத் தங்குதல், சாயுஜ் ஜியஞ்சிவ மாதல் முடிவிலா, சாயுஜ் ஜியமனத் தானந்த சத்தியே.* 66

### சத்திநிபாதம்.

*இருட்டறை மூலை யிருந்த குமரி, குருட்டுக் கிழவனைக் கூடற் குறித்துக், குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி, மருட்டி யவனை மணம்புரிந் தாளே.* 67

### தீ வி ர த ர ம்.

இருவினை நேரொப்பி யின்னருட் சத்தி, குருவென வந்து குணம்பல நீக்கித், தருமெனு ஞானத்தாற் றன்செய லற்ருற், றிரிமலந் தீர்ந்து சிவனவ னுமே 68

இரவும் பகலு மிலாத விடத்தே, குரவஞ் செய்கின்ற குழலியை யுன்னி, யரவஞ் செய்யாம லவளுடன் சேரப், பரிவொன் றிலாளும் பராபரை தானே. 69

### நி ரா கா ர ம்.

ஓங்காரத் துள்ளொளி யுள்ளே யுதயமுற், ருங்கார மற்ற வநுபவங் கைகூடார், சாங்கால முன்ஞர் பிறவாமை சார்வுருர், நீங்காச் சமயத்து ணின்ருெழிந் தார்களே. 70

### உ ட் ச ம ய ம்.

ஈரு மனத்தை யிரண்டற வீசுமி, னூருஞ் சகாரத்தை யோதுமின் ஞேதியே, வாரு மரனெறி மன்னியே முன்னியத், தூருஞ் சுடரொளி தோன்றலு மாமே. 71

### சி வ கு ரு தெ ரி ச ன ம்.

குருவே சிவமெனக் கூறின னந்தி, குருவே சிவமென் பது குறித் தோரார், குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும், குருவே யுரையுணர் வற்றதோர் கோவே. 72

சித்தமி யாவையுஞ் சிந்தித் திருந்திடு, மத்தனு ணர்த்துவ தாகுமரு ளாலே, சித்தமி யாவையுந் திண்சிவ மானக்கா, லத்தனு மவ்விடத் தேயமர்ந் தானே. 73

பத்தியு ஞானவை ராக்கிய மும்பர, சித்திக்கு வித்தாஞ் சிவோகமே சேர்தலான், முத்தியின் ஞான முளைத்தலா லம் முளை, சத்திய ருடாிற் றுனெளி தாமே. 74

### தி ரு வ டி ப் பே று.

உரையற் றுணர்வற் றுயிர்பர மற்று, திரையற்ற நீர்போற் சிவமாதற் றீர்த்து, கரையற்ற சத்தியாதி நான்குங் கடந்த, சொரூபத் திருத்தினன் சொல்லிறந் தோமே. 75

## சிவ வேடம்.

மயலற் றிருளற்று மாமன மற்றுக், கயலுற்ற கண்ணியர் கையிணக் கற்றுத், தயலற் றவரோடும் தாமே தாமாகிச், செய லற் றிருந்தார் சிவவேடத் தா[illegible] 92

## அபக்குவன்.

குருட்டினை நீக்குங் குருவினைக் கொள்ளார், குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வர், குருடுங் குருடுங் குருட்டாட்ட மாடிக், குருடுங் குருடுங் குழிவிழு மாறே. 93

## பக்குவன்.

பதைக் கின்ற போதே பரமென்னும் வித்தை, விதைக்கின் ற வித்தினை மேனின்று நோக்கிச், சிதைக்கின்ற சிந்தையைச் செ வ்வே நிறுத்தி, யிசைக்கின்ற வன்பருக் கீயலு மாமே. 94

சத்து மசத்துமெவ் வாறெனத் தானுன்னிச், சித்தை யுருக் கிச் சிவனருட் கைகாட்டப், பத்தியின் ஞானம் பெறப்பணிந் தா னந்தச், சத்தியி லிச்சைத் தகுவோன்சற் சீடனே. 95

வேட்கை விடுநெறி வேதாந்த மாதலால், வாழ்க்கைப் புல ன்வழி மாற்றிச்சித் தாந்தத்து, வேட்கை விடுமிக்க வேதாந்தி பாதமே, தாழ்க்குந் தலையினோன் சற்சீட னாமே. 96

## ஞான லிங்கம்.

உருவு மருவு முருவோ டருவு, மருவு பரசிவன் மன்பல் லுயிர்க்குங், குருவு மெனநிற்குங் கொள்கைய னாகுந், தருவென நல்குஞ் சதாசிவன் றானே. 97

## சிவ லிங்கம்.

ஒன்றெனக் கண்டே யெம்மீச னொருவனை, நன்றென் றடி யிணை நானவ னைத்தொழ, வென்றைம் புலனு மிகக்கிடந் தின்புற, வன்றென் றருள்செய்யு மாதிப்பி ரானே. 98

மேவி யெழுகின்ற செஞ்சுட ரூடுசென், றாவி யெழுமள வன்றே யுடலுற, மேவப் படுவதும் விட்டு நிகழ்வதும், பாவித் தடக்கிற் பரகதி தானே. 99

## சம்பிரதாயம்.

உடல் பொருளாவி யுதகத் தாற்கொண்டு, படர்வினை பற்றறப் பார்த்துகை வைத்து, நொடியி னடிவைத்து நுண்ணுணர் வாக்கிக் கடியப் பிறப்பறக் காட்டின னந்தியே. 100

அவனு மவனு மவனை யறியா, ரவனை யறியி லறிவானு மில்லை, யவனு மவனு மவனை யறியி, லவனு மவனு மவனிவ னாமே.

## திருவருள் வைப்பு.

இருபத மாவ திரவும் பகலு, முருவது வாவ துயிரு முடலு, மருளது வாவ தறமுந் தவமும், பொருளது வுண்ணின்ற போகம தாமே. 102

காண்டற் கரியன் கருத்தில னந்தியுந், தீண்டற்குஞ் சார்தறஞ் சேயனுந் தோன்றிடும், வேண்டிக் கிடந்து விளக்கொளி யானெஞ்ச, மீண்டிக் கிடந்தங் கிருளறு மாமே. 103

குறிப்பி னுள்ளே குவலயந் தோன்றும், வெறுப்பிரு ணீங்கில் விகிர்தனு நிற்குஞ், செறிப்புறு சிந்தையைச் சிக்கென நாடி, லறிப்புறு காட்சி யமரரு மாமே. 104

அருளிற் பிறந்திட் டருளில் வளர்ந்திட், டருளி லழிந்திளைப் பாறி மறைந்திட், டருளான வானந்தத் தாரமு தூட்டி, அருளா லென்னந்தி யகம்புகுந் தானே. 105

தானே படைத்திடுந் தானே யளித்திடுந், தானே துடைத்திடுந் தானே மறைத்திடுந், தானே யிவைசெய்து தான்முத்தி தந்திடும், தானே வியாபித் தலைவனு மாமே. 106

## அருளொளி.

விளக்கினை யேற்றி வெளியை யறிமின், விளக்கினின் முன்னே வேதனை மாறும், விளக்கை விளக்கும் விளக்குடை யார்கள், விளக்கில் விளங்கும் விளக்கவர் தாமே. 107

ஒளியு மிருளு மொருக்கா லுந்தீரா, வொளியுளோர்க் கன்றோ வொழியா தொளியு, மொளியிருள் கண்டகண் போலவே றுயுள், ளொளியிரு ணீங்க வுயிர்சிவ மாமே. 108

## சிவபூசை.

உள்ளம் பெருங்கோயி லூனுடம் பாலயம், வள்ளற் பிரானு ர்க்கு வாய்கோ புரவாசற், றெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் சிவ லிங்கங், கள்ளப் புலனைந்துங் காளாமணி விளக்கே. 109

உழைக்க வல்லோர்நடு நீர்மல ரேந்திப், பிழைப்பின்றி யீச ன் பெருந்தவம் பேணி, யிழைக்கொண்ட பாதத் தினமலர் தூவி, மழைக்கொண்டல் போலவே மன்னிநில் லீரே. 110

ஆவிக் கமலத்தி னப்புறத் தின்புற, மேவித் திரியும் விரிச டை நந்தியைக், கூவிக் கருதிக் கொடுபோய் சிவத்திடை, தாவி க்கு மந்திரந் தாமறி யாரே. 111

சாணுகத் துள்ளே யழுந்திய மாணிக்கங், காணு மளவுங் கருத்தறி வாரில்லை, பேணிப் பெருக்கிப் பெருக்கி நினைவோர்க்கு, மாணிக்க மாலை மனம்புகுந் தானே. 112

## குருபூசை.

இராப்பக லற்ற விடத்தே யிருந்து, பராக்கற வானந்தத் தேறல் பருகி, யிராப்பக லற்ற விறையடி யின்பத், திராப்பகன் மாயை யிரண்டிடத் தேனே. 113

## அடியார்பெருமை.

சிவயோக ஞானி செறிந்தவத் தேச, மவயோக மின்றி யறி வோருண்டாகு, நவயோகங் கைகூடு நல்லியல் காணும், பவயோக மின்றிப் பரலோக மாமே. 114

## பிட்சாவிதி.

பரந்துல கேழும் படைத்த பிரானை, யிரந்துணி யெனபார்க ளெற்றுக் கிரக்கு, நிரந்தர மாக நினையு மடியா, ரிரந்துண்டு தன் கழ லெட்டச் செய்தானே. 115

## சமாதிக்கிரியை.

அந்தமில் ஞானிதன் னுகந் தீயினில், வெந்திடில் நாளெலா ம் வெப்புத் தீயினில், னொந்தது நாய்நரி நுகரி னுண்செரு, வந் தது நாய்நரிக் குறைவராகும் வையமே. 116

அந்தமில் ஞானி யருளை யடைந்தக்கா, லந்த வுடறூன் குறைசெய் திருத்திடிற், சுந்தர மன்னருந் தொல்புவி யுள்ளோரு, மந்தமி லின்ப வருள்பெறு வாரே. 117

ஆதித்தநிலை-அண்டாதித்தன்.

தானே யுலகுக்குத் தத்துவ னாய்நிற்குந், தானே யுலகுக்குத் தையலு மாய்நிற்குந், தானே யுலகுக்குச் சம்புவு மாய்நிற்குந் தானே யுலகுக்குத் தண்சுட ராகுமே. 118

பிண்டாதித்தன்.

ஆதித்த னோடி யடங்கு மிடங்கண்டு, சாதிக்க வல்லவர் தம்மை யுணர்ந்தவர், பேதித் துலகம் பிதற்றும் பிதற்றெலா, மாதித்த னோடே யடங்குகின் றாரே. 119

உருவிப் புறப்பட் டுலகை வலம்வந்து, சொருகிக்கிடக்குந் துறையறி வாரில்லை, சொருகிக் கிடக்குந் துறையறி வாளர்க்குச், சொருகிக் கிடக்குமென் னுள்ளன்பு தானே. 120

பசுவிலக்கணம்.

உன்னு மளவி லுணரு மொருவனைப், பன்னு மறைகள் பயிலும் பரமனை, யென்னு ளிருக்கு மிளையா விளக்கினை, யன்ன மயமென் றறிந்துகொண் டேனே. 121

அன்ன மிரண்டுள வாற்றங் கரையினிற், றுன்னி யிரண்டுந் துணைப்பிரி யாதன்னந், தன்னிலை யன்னந் தனியொன்ற தென்றக்கால், பின்னமட வன்னம் பேறணு காதே. 122

சீவன்.

மேவிய சீவன் வடிவது சொல்லிடில், கோவின் மயிரொன் றுநூறுடன் கூறிட்டு, மேவிய கூறது வாயிர மாயினு, லாவியின் கூறுநூ றாயிரத் தொன்றே. 123

பசு.

கற்ற பசுக்கள் கதறித் திரியினுங், கொற்ற பசுக்கள் குறிகட்டி மேயினு, முற்ற பசுக்க ளொருகுடம் பால்போது, மற்றை பசுக்கள் வறள்பசு தானே. 124

### போதன்.

சீவ னெனச்சிவ னென்ன வேறில்லை, சீவ னார்சிவ னாரை யறிகிலர், சீவ னார்சிவ னாரை யறிந்தபின், சீவ னார்சிவ னாயிட் டிருப்பரே. 125

ஆறாறின் றன்மை யறியா திருந்தேனுக், காறாறின் றன்மை யறிவித்தான் பேர்நந்தி, யாறாறின் றன்மை யருளா லறிந்த பின், னாறாறுக் கப்புற மாகிநின் றேனே. 126

### ஐந்திந்திரிய மடக்கு முறைமை.

அஞ்சு மடக்கடக் கென்ப ரறிவிலா, ரஞ்சு மடக்கு மமரரு மங்கில்லை, யஞ்சுமடக்கி லசேதனமா மென்றிட், டஞ்சு மடக்கா வறிவறிந் தேனே. 127

பெருக்கப் பிதற்றிலென் பேய்த்தேர் நினைந்தென், விரித்த பொருட்கெல்லாம் வித்தாவ துள்ளம், பெருக்கிற் பெருக்குஞ் சுருக்கிற் சுருக்கு, மருத்தமு மத்தனை யாய்ந்துகொள் வார்க்கே.

நடக்கின்ற நந்தியை நாடோறு முன்னில், படர்கின்ற சிந்தையைப் பைய வொடுக்கிக், குடிக்கொண்ட சிந்தைக் குறிவழி நோக்கில் வடக்கொடு தெற்கு மனக்கோயி லாமே. 129

### சற்குரு நெறி.

கறுத்த விரும்பே கனகம தானான், மறித்திரும் பாகா வகையது போலக், குறித்த வப்போதே குருவருள் பெற்றான், மறித்துப் பிறவியில் வந்தணு காரே. 130

குருவென் பவனே வேதாகமங் கூறும், பரவின்ப னாகிச் சிவோகம் பாவித், தொருசிந்தை யின்றி வுயர்பாச நீக்கி, வருநற் குரவற்பால் வைக்கலு மாமே. 131

### கூடாவொழுக்கம்.

பத்திவிற் றுண்டு பகலைக் கழிவிடு, மத்தகர்க் கன்றோ மறுபிறப் புள்ளது, வித்துக்குற் றுண்டு விளைபுலம் பாழ்செய்யும், பித்தர்கட் கென்றும் பிறப்பில்லை தானே. 132

காயக் குழப்பனைக் காயநன் னாடனைக், காயத்தி னுள்ளே கமழ்கின்ற நந்தியைத், தேயத்து ளேயெங்குந் தேடித் திரிவார்கள், காயத்து னின்ற கருத்தறி யாரே. 133

### கேடுகெண் டிரங்கல்.

நெஞ்சு நிறைந்தங் கிருந்த நெடுஞ்சுடர், நஞ்செம் பிரா
னென்று நாதனை நாடொறுந், துஞ்சு மளவுந் தொழுமின் றொழா
விடி, னஞ்சற்று விட்டதோ ராணையு மாமே. 135

### இதோபதேசம்.

செல்லு மளவுஞ் செலுத்துமின் சிந்தையை, வல்ல பரிசா
லுரைமின்கள் வாய்மையை, யில்லை யெனினும் பெரிதுள னெம்
மிறை, நல்லவ ரெனறி நாடுமி னீரே. 136

ஒன்றே குலமு மொருவனே தேவனு, நன்றே நினைமி னம
னில்லை நாணாமே, சென்றே புகுங்கதி யில்லைநுஞ் சித்தத்து, நின்
றே நிலைபெற நீர்நினைந் துய்ம்மினே. 137

### உடலிற்பஞ்சபேதம்.

காயப் பையொன்று சரக்குப் பலவுள, மாயப் பைதன்
னில் மற்றுமோர் பையுண்டு, காயப்பைக் குண்ணின்ற கள்வன்
புறப்பட்டான், மாயப்பை மண்ணா மயங்கிய வாறே. 138

அத்த னமைத்த வுடலிரு கூறினிற், சத்தம தாகிய சூக்கு
மஞ் சொல்லுங்காற், சத்த பரிச ரூபரச கந்தம், புத்திமா னாங்
காரம் புரியட்ட காயமே. 139

### அவத்தை பேதம்-கீழாலவத்தை.

உடம்பு முடம்பு முடம்பைத் தழுவி, யுடம்பிடை நின்ற
வுயிரை யறியா, ருடம்பொ டுயிரிடை நட்பறி யாதார், மடம்
புகு நாய்போல் மயங்குகின் றாரே. 140

ஊமை யெழுத்தொடு பேசு மெழுத்துறி, லாமை யகத்தினி
லஞ்சு மடங்கிடு, மோமய முற்றது வுள்ளொளி பெற்றது, நாமய
மற்றது நாமறி யோமே. 141

துரிய மிருப்பதுஞ் சாக்கிரத் துள்ளே, நரிகள் பதினாலு நஞ்
சுண்டு செத்தது, பரிய புரவியும் பாரிற் பரந்தது, துரிய மிறந்
திடஞ் சொல்ல வொண்ணாதே. 142

### மத்திய சாக்கிராவத்தை.

தத்துவ மானது தன்வழி நின்றிடில், வித்தக ளுகி விளங்கி யிருக்கலாம், பொய்த்தத மாயவை போயிடு மவ்வழி, தத்துவ மாவ தகார வெழுத்தே. 143

அறிவறி கின்ற வறிவு நனவா, மறிவறி யாமை யடையக் கனவா, மறிவறி யவ்வறி யாமை சுழுத்தி, அறிவறி வாகு மான துரியமே. 144

### சுத்தநனவாதி பருவம்.

கதறு பதினெட்டு கண்களும் போகச், சிதறி யெழுந்திடுஞ் சிந்தையை நீரும், விதறு படாமுன்ன மெய்வழி நின்று, லதிர வருவதோ ரானை யு மாமே. 145

நனவகத் தேயொரு நாலைந் தும்விடக், கனவகத் தேயுட் கரணங்க ளோடு, முனவகத் தேநின் றுதறியுள் புக்கு, நினைவகத் தின்றிச் சுழுத்திநின் ளுனே. 146

### கேவல சகல சுத்தம்.

தானே தனக்கு பகைவனும் நட்பனும், தானே தனக்கு மறுமையு மிம்மையுந், தானே தான்செய்த வினைப்பயன் றுய்ப் பானுந், தானே தனக்குத் தலைவனு மாமே. 147

ஆமாறிற் சிவ ளுரருள் பெற்றுளோர், போமலந் தன்னுற் புகழ்விந்து நாதம்விட், டோமய மாக்கி யொருங்கலி னின்மலந், தோமறு சுத்தா வவத்தைத் தொழிலே. 148

பெத்தமு முத்தியும் பேணுந் துரியமுஞ், சுத்த வதீதமுந் தோன்ருமற் ருனுணு, மத்த னருளென் றருளா லறிந்தபின், சித்தமு மில்லை செயலில்லை தானே. 149

### பராவத்தை.

துரியம் பரியி லிருந்தவச் சிவனைப், பெரிய வியாக்கிரத் துள்ளே புகவிட்டு, நரிகளை யோடத் துறத்திய நாதர்க், குரிய வினைகளின் றேலமிட் டன்றே. 150

பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம், பொன்னின் மறைந்தது பொன்னணி பூடணந், தன்னை மறைத்தது தன்கர ணங்களாந், தன்னின் மறைத்தது தன்கர ணங்களே. 151

மரத்தை மறைத்தது மாமத யானை, மரத்தின் மறைந்தது மாமத யானை, பரத்தை மறைத்தது பார்முதற் பூதம், பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே. 152

கலவுசெலவு.

வெல்லு மளவில் விடுமின் வெகுளியைச், செல்லு மளவுஞ் செலுத்துமின் சிந்தையை, யல்லும் பகலு மருளுடன் றூங்கி னுற், கல்லும் பிளந்து கடுவெளி யாமே. 153

நின்மலாவத்தை.

ஆனைக ளைந்து மடக்கி யறிவென்னு, ஞானத் திரியைக் கொளுவி யதனுள்புக், கூனை யிருளற நோக்கு மொருவற்கு, வானக மேற வழியெளி தாமே. 154

முன்னை யறிவினிற் செய்த முதுதவம், பின்னை யறிவினைப் பெற்று லறியலாந், தன்னை யறிவ தறிவா மஃதன்றி, பின்னை யறிவது பேயறி வாகுமே. 155

செயலற் றிருக்கச் சிவானந்த மாகுஞ், செயலற் றிருப்பார் சிவயோகந் தேடார், செயலற் றிருப்பார் செகத்தொடுங் கூடார், செயலற் றிருப்பார்க்கே செய்தியுண் டாகுமே. 156

இல்லது முள்ளது மியாவையுந் தானுகி, யில்லது முள்ளது மாயன்று மண்ணலே, சொல்லது சொல்லிடிற் றூராதி தூரமென், றெல்லை யுணர்ந்தா லுயிர்க்குயி ராகுமே. 157

உயிரிச்சை யூட்ட யுழிதருஞ் சத்தி, யுயிரிச்சை வாட்டி யொழித்திடு ஞான, முயிரிச்சை யூட்டி யுடனுற லாலே, யுயிரிச்சை வாட்டி யுயர்பதஞ் சேருமே. 158

திருந்தனர் விட்டார் திருவி னரகந், திருந்தனர் விட்டார் திருவார் சுவர்க்கந், திருந்தனர் விட்டார் செறிமலக் கூட்டந், திருந்தனர் விட்டார் சிவமா யவமே. 159

தீண்டற் கரிய திருவடி நேயத்தை, மீண்டுற் றருளால் விதி வழி யேசென்று, தூண்டிச் சிவஞான மாவினைத் தானேறித், தாண்டிச் சிவனுடன் சாரலு மாமே. 160

அறிய கிலேனென் றரற்று தேநீயு, நெறிவழி யேசென்று நேர்பட்ட பின்னே, யிருசுட ராகி யியற்றவல் லானு, மொருசுட ராவந்தென் னுள்ளத்துள் ளாமே. 161

அறிவுதயம்.

தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை, தன்னை யறியாமற் றானே கெடுகின்றான், றன்னை யறியு மறிவை யறிந்தபின், றன் னையே யர்ச்சிக்கத் தானிருந் தானே, 162

அறிவு வடிவென் றறியாத வென்னை, யறிவு வடிவென் றரு ள்செய்தா நந்தி, யறிவு வடிவென் றருளா லறிந்தே, யறிவு வடி வென் றறிந்திருந் தேனே. 163

அறிவுக் கழிவில்லை யாக்கமு மில்லை, யறிவுக் கறிவல்ல தா தார மில்லை, யறிவே யறிவை யறிகின்ற தென்றிட், டறைகின் றனமறை யீறுக டானே. 164

ஆயு மலரி னனுமலர் தன்மேலே, பாய விதழ்கள் பதினாறு மங்குள, தூய வறிவு சிவானந்த மாகியே, போய வறிவாய்ப் புணர்ந்திருந் தானே. 165

அறிவறி வென்றங் கரற்று முலக, மறிவறி யாமை யாரு மறியா, ரறிவறி யாமை கடந்தறி வாளு, லறிவறி யாமை யழகிய வாறே. 166

என்னை யறிந்திலே னித்தனை காலமு, மென்னை யறிந்தபி னேது மறிந்திலே, னென்னை யறிந்திட் டிருத்தலுங் கைவிடா, தென்னையிட் டென்னை யுசாவுகின் றானே. 167

ஆறந்தம்.

வேதத்தி னந்தமு மிக்கசித் தாந்தமு, நாதத்தி னந்தமு நற்போத வந்தமு, மோதத் தகுமெட்டி யோகாந்த வந்தமு, மாதிக் காலந்தமு மாறந்த மாமே. 168

நித்தம் பரனோ டுயிருற்று நீண்மனஞ், சத்த முதலைந்துந் தத்துவத் தானீங்கிச், சுத்த மசுத்தந் துடரா வகைநினைந், தத் தன் பரன்பா லடைதல்சித் தாந்தமே. 169

சித்தாந்தத் தேசிவன் முத்திசித் தித்தலாற், சித்தாந்தத் தேஙிற்போர் முத்திசித் தித்தவர், சித்தாந்த வேதாந்தஞ் செம் பொரு ளாதலாற், சித்தாந்த வேதாந்தங் காட்டுஞ் சிவனையே.

வேதமோ டாகம மெய்யா மிறைவனூ, லோதுஞ் சிறப்பும் பொதுவுமென் றுள்ளன, நாத னுரையவை ஞடி லிரண்டந்தம், பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே. 171

மன்னிய சோகமா மாமறை யாளர்தஞ்; சென்னிய தானே சிவோகமா மீதென்ன, வன்னது சித்தாந்த மாமறை யாய்பொரு, டின்னிய வாகம நாலெனத் தோன்றுமே. 172

அடித்தலையறியுந் திறங்கூறல்.

பன்னுத பாரொளிக் கப்புறத் தப்பா, லென்னு யகனு ரிசை ந்தங் கிருந்திட, முன்னு வொளியு முரைசெய்யா மந்திரஞ், சொ ன்னுன் கழலிணை சூடிநின் றேனே. 173

ஒன்றுண்டு தாமரை யொண்மலர் மூன்றுள, தன்றுதை தாளு மிரண்டுள காயத்து, னன்றுக் காச்சிப் பதஞ்செய வல் லார்கட், கின்றேசென் றீசனை யெய்தலு மாமே. 174

முப்பதம்.

அறுவும் பரமு மசிபதத் தேய்ந்து, கறுவொன் றிலாத சிவமுங் கலந்தா, லிணையறு பால்தே னமுதென வின்பத், துணை யறு வாயுரை யற்றிடத் தோன்றுமே. 175

முப்பரம்.

ஆறுறு தத்துவத் தப்புறத் தப்பாற், கூறு வுபதேசங் கூறிற் சிவபரம், வேறாய் வெளிப்பட்ட வேதப் பகவனுர், பேருக வான ந்தம் பேறும் பெருகவே. 176

பற்றறப் பற்றிற் பரம்பதி யாவது, பற்றறப் பற்றிற் பரனறி வேபரம், பற்றறப் பற்றினிற் பற்றவல் லோர்கட்கே, பற்றறப் பற்றிற் பரம்பர மாமே. 177

உபசாந்தம்.

முத்திக்கு வித்து முதல்வன்றன் ஞானமே, பத்திக்கு வித் துப் பணிந்துற்றப் பற்றலே, சித்திக்கு வித்துச் சிவபாரங் தானு தல், சத்திக்கு வித்துத் தனதுப சாந்தமே. 178

புறங்கூறுமை.

பிணங்கவும் வேண்டாம் பெருநில முற்று, மிணங்கி யெம் மீசனே யீசனென் றுன்னிற், கணம்பதி னெட்டுங் கழலடிகாண வணங்கெழு நாடியங் கன்புற லாமே, 179

ஆன புகழு மமைந்ததோர் ஞானமுந், தேனு மிருக்குஞ் சிறுவரை யொன்றுகண், டேனமொன் றின்றி யுணர்வுசெய் வார் கட்டு, வானகஞ் செய்யு மறவனு மாமே. 180

பதமுத்தி மூன்றும் பழுதென்று கைவிட், டிதமுற்ற பாச விருளைத் துரந்து, மதமற் றெனதியான் மாற்றிவிட் டாங்கே, திதமுற் றவர்கள் சிவசித்தர் தாமே. 181

அஷ்டதள கமல முக்குண வவத்தை.

ஒருங்கிய பூவு மோரெட் டிதழாகு, மருங்கிய மாயா புரி யத னுள்ளே, சுருங்கிய தண்டின் சுழினையி னூடே, யொருங் கிய சோதியை யோர்ந்தெழு முய்ந்தே. 182

சுத்தாசுத்தம்.

மோழை யடைந்து முழைதிறந் துள்புக்குக், கோழையடைகின்ற தண்ணற் குறிப்பினி, லாழ வடைத்தங் கனலிற் புறஞ் செய்து, தாழ வடைப்பது தன்வலி யாமே. 183

காயக் குழப்பனைக் காயநன் னாடனைக், காயத்தி னுள்ளே கமழ்கின்ற நந்தியைத், தேயத்துளே யென்றுந் தேடித் திரிபவர், காயத்து ணின்ற கருத்தறி யாரே. 184

இலக்கணாத் திரயம்.

விட்ட விலக்கணை தான்போம் வியமத்துத், தொட்டு விடாத துபசாந்தத் தேதொக்கும், விட்டு விடாதது மேவுஞ்சத் தாதியிற், சுட்டு மிலக்கணு தீதஞ் சொரூபமே. 185

தத்துவமசி வாக்கியம்.

நனவாதி யைந்தையு நாதாதி யில்வைத்துப், பினமா மலத்தைப் பின்வைத்துப் பின்சுத்தத், தனதாஞ் சிவகதி சத்தாதி சாந்தி, மனவா சகங்கெட்ட மன்னனை நாடே, 186

மகா வாக்கியம்.

அறிவறி யாமை யிரண்டு மகற்றிச், செறிவறி வாயெங்கு நின்ற சிவனைப், பிறிவறி யாது பிரானென்று பேணுங், குறியறி யாதவர் கொள்ளறி யாரே. 187

துறந்துபுக் கொள்ளொளி சோதியைக் கண்டு, பறந்ததென் னுள்ளம் பணிந்து கிடந்தே, மறந்தறி யாவென்னை வானவர் கோனு, மிறந்து பிறவாம லீங்குவைத் தானே. 188

வாய்மை.

எல்லா மறியு மறிவுதனை விட்டு, வெல்லா மறிந்து மிலாப மங் கில்லை, யெல்லா மறிந்த வறிவினை நானென்னி, லெல்லா மறிந்த விறையென லாமே. 189

எய்திய காலத் திருபொழு துஞ்சிவன், மெய்செயின் மேலை விதியது வாய்நிற்கும், பொய்யும் புலனும் புகலொன்று நீந்திடி, லையனு மவ்வழி யாகிநின் றானே. 190

உய்யும் வகையா லுணர்வினு லேத்துமின், மெய்ய னரனெறி மேலுண்டு திண்ணெனப், பொய்யொன்று மின்றிப் புறம் பொலி வார்நடு, வையனு மங்கே யமர்ந்துநின் றானே. 191

வம்பு பழுத்த மலர்ப்பழ மொன்றுண்டு, தம்பாற் பறவை புகுந்துணத் தானொட்டா, தம்புகொண் டெய்திட் டகலத் துரந்திடிற், செம்பொற் சிவகதி சென்றெய்த லாமே. 192

மயக்கிய வைம்புலப் பாச மறுத்துத், துயக்கறுத் தானைத் தொடர்மின் றொடர்ந்தாற், றியக்கஞ் செய்யாதே சிவனெம் பெருமா, னுயப்போ வெனமன மொன்றுவித் தானே. 193

ஞானி செயல்

தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகண், முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பர்கள், பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள், சென்னியில் வைத்த சிவனரு ளாலே. 194

அவாவறுத்தல்.

வாசியு மூசியும் பேசி வகையினாற், பேசி யிருந்து பிதற்றிப் பயனில்லை, யாசையு மன்பு மறுமி னறுத்தபி, னீசனிருந்த விடமெளி தாமே. 195

மாடத்து ளானலன் மண்டபத் தானலன், கூடத்து ளான லன் கோயிலுள் ளானலன், வேடத்து ளானலன் வேட்கைவிட் டார்நெஞ்சின், மூடத்து ளேநின்று முத்திதந் தானே. 196

ஆசை யறுமின்க ளாசையறு மின்க, ளீசனோ டாயினு மா சையறு மின்க, ளாசை படப்பட வாய்வருந் துன்பங்க, ளாசை விடவிட வானந்த மாமே. 197

சோதனை.

பெம்மான் பெருநந்தி பேச்சற்ற பேரின்பத், தம்மா னடிதந் தருட்கட லாடினோ, மெம்மாய மும்விடுத் தெம்மைக் காந்திட் டுச், சும்மா திருந்திடஞ் சோதனை யாகுமே. 198

அறிவுடை யானரு மாமறை யுள்ளே, செறிவுடை யான் மிகு தேவர்க்குந் தேவன், பொறிவுடை யான்புல னைந்துங் கட ந்த, குறியுடை யானொடுங் கூடுவ னானே. 199

குறியாக் குறியினிற் கூடாத கூட்டத், தறியா வறிவி லவிழ்ந் தேக சித்தமாய், நெறியாம் பராநந்தி நீடரு ளொன்றுஞ், செறி யாச் செறிவே சிவமென லாமே. 200

நந்தி பெருமா னடுவுள் வியோமத்து, வந்தென கம்படி கோயிற்கொண் டான்கொள்ள, வெந்தைவந் தானென் றெழுந் தே னெழுதலுஞ், சிந்தையி னுள்ளே சிவனிருந் தானே. 201

குருமட தெரிசனம்.

நாடும் பெருந்துறை நான்கண்டு கொண்டபின், கூடுஞ் சிவ னது கொய்ம்மலர்ச் சேவடி, தேட வரியன் சிறப்பிலி யெம்மிறை, யோடு முலகு முயிராகி நின்றானே. 202

அகமுக மாம்பீட மாதார மாகுஞ், சகமுக மாஞ்சத்தி யா தன மாகுஞ், செகமுக மாந்தெய்வ மேசிவ மாகு, மகமுக மாய் ந்த வறிவுடை யோர்க்கே. 203

ஞானகுரு தெரிசனம்.

ஆறெடு முப்பது மங்கே யடங்கிடிற், கூறக் குருபரன் கும் பிடு தந்திடும், வேறே சிவபத மேலா யளித்திடும், பேறுக வான ந்தம் பேணும் பெருகவே. 204

னுருவங் கருது மளவிற், பருவிடந் தீர்ந்து பயங்
ரால், குருவி னுருவங் குறித்தவப் போதே, திரிமலந்
னவ னாமே. 207

ணை விருப்பிட மாரு மறிகில, ரண்ணை விருப்பிட மாய்
வார்களுக், கண்ணை லழிவின்றி யுள்ளே யமர்ந்திடு,
காணி லவனிவ னாமே. 208

பட லாமெங்க டத்துவன் றன்னைப் பலப்படுபாச
த் திட்டு, நிலைப்பெற நாடி நினைப்பற வுள்கிற், றலைப்
ந் தருமமுந் தானே. 209

ந்கி னினைக்கு நினைப்பவர் தம்மைச், சுனைக்குள் விளை
ா தியி னானைத், தினைப்பிளந் தன்ன சிறுமைய ரேனுங்,
னத்தடைந் தாருயர்ந் தாரே. 210

பிரணவசமாதி.

னு மோங்காரத் துள்ளே யொருமொழி, யோமெனு
த் துள்ளே யுருவரு, வோமெனு மோங்காரத்துள்ளே
மோமெனு மோங்கார மொண்முத்தி சித்தியே. 211

ாரத் துள்ளே யுதித்தவைம் பூதங்க, ளோங்காரத்
இத்த சராசர, மோங்காரா தீதத் துயிர்மூன்று முற்
ங்காரஞ் சிவ பரசிவ ரூபமே. 212

தூலபஞ்சாக்கரம்.

வழி யாய குணங்களி னின்று, கருவழி யாய கணக்
க, வரும்வழி மான மறுக்கவல் லார்கட், கருள்வழி
கஞ்செழுத் தாமே. 213

சூக்குமபஞ்சாக்கரம்.

வை வென்கிலர் தீவினை யாளர், சிவசிவ வென்றிடத் தீ
நும், சிவசிவ வென்றிடத் தேவரு மாவர், சிவசிவ வென்
கி தானே. 214

### அதிசூக்கும பஞ்சாக்கரம்.

*சிவாய நமவெனச் சித்த மொருக்கி, யவாய மறவே யடி மைய தாக்கிச், சிவாய சிவசிவ வென்றென்றே சிந்தை, யவா யங் கெடநிற்க வானந்த மாமே.* 215

### திருக்கூத்துத் தெரிசனம்.

*எங்குந் திருமேனி யெங்குஞ் சிவசத்தி, யெங்குஞ் சிதம்பர மெங்குந் திருநட்ட, மெங்குஞ் சிவமா யிருத்தலா லெங்கெங் குந், தங்குஞ் சிவனருட் டன்விளை யாட்டதே.* 216

### அற்புதக்கூத்து.

*நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி, யுற்றுற்றுப் பார்க்க வொளிவிடு மந்திரம், பற்றுக்குப் பற்றாய்ப் பரம னிருந்திடஞ், சிற்றம் பலமென்று தேர்ந்துகொண் டேனே.* 217

*அண்டங் கடத்துவ மாகிச் சதாசிவந், தண்டினிற் சாத்த வி சாம்பவி யாதனந், தெண்டினி லேழுஞ் சிவாசன மாகவே, கொண்டு பரஞ்சோதி கூத்துகந் தானே.* 218

*நாதத்தி னந்தமு நற்போத வந்தமும், வேதத்தி னந்தமு மெய்ச்சிவா னந்தமுந், தாதற்ற நல்ல சதாசிவா னந்தத்து, நா தப் பிரமஞ் சிவநட மாகுமே.* 219

### ஆகாசப்பேறு.

*உள்ளத்து ளோமென வீச னொருவனை, யுள்ளத்து ளேயங் கியாய வொருவனை, யுள்ளத்து ளேநீதி யாய வொருவனை, யுள் ளத்து ளேயுட லாகாய மாமே.* 220

*அறிவுக் கறிவா மகண்ட வொளியும், பிறியா வலத்தினிற் பேரொளி மூன்று, மறியா தடங்கிட லத்த னடிக்குட், பிறியா திருக்கிற் பெருங்கல மாமே.* 221

*உயிர்க்கின்ற வாறு முலகமு மொக்க, வுயிர்க்கின்ற வுள் ளொளி சேர்கின்ற போது, குயிற்கொண்ட பேதை குலாவி யுலா வி, வெயிற்கொண்டென் னுள்ளம் வெளியது வாமே.* 222

புறத்துளா காசம் புவன முலக, மகத்துளா காசமெம் மா தியறிவு, சிவத்துளா காசஞ் செழுஞ்சுடர்ச் சோதி, சகத்துளா காசந் தானஞ்ச மாதியே. 223

ஞாஞேதயம்.

கரியட்ட கையன் கபாலங்கை யேந்தி, யெரியு மிளம்பிறை சூடுமெம் மானை, யரியன் பெரியனென் றுட்பட்ட தல்லாற், கரி யன்கொல் சேயன்கொல் காண்கின்றி லேனே. 224

விளக்கைப் பிளந்து விளக்கினை யேற்றி, விளக்கினுக் குள்ளே விளக்கினைத் தூண்டி, விளக்கில் விளக்கை விளக்கவல் லார்க்கு, விளக்குடை யான்கழல் மேவலு மாமே. 225

தத்துவ மெங்குண்டு தத்துவ னங்குண்டு, தத்துவ மெங்கி ல்லை தத்துவ னங்கில்லை, தத்துவ ஞானத்தின் தன்மை யறிந்த பின், றத்துவ னங்கே தலைப்படுந் தானே. 226

நானென்றுந் தானென்று நாடினே னாடலு, நானென்றுந் தானென் றிரண்டில்லை யென்பது, நானென்ற ஞான முதல்வனே நல்கின, னானென்று நானு நினைப்பொழிந் தேனே. 227

ஞானத்தி னன்னெறி நாதாந்த நன்னெறி, ஞானத்தி னன் னெறி நானென் றறிவோர்தன், ஞானத்தி னல்லியோக நன்னி லையே நித்தன், ஞானத்தி னன்மோன நாதாந்த வேதமே. 228

உய்யவல் லார்கட் குயிர்சிவ ஞானமே, யுய்யவல் லார்கட் குயிர்சிவந் தெய்வமே, யுய்யவல் லார்கட் கொடுக்கப் பிரணவ, முய்யவல் லாரறி வுள்ளறி வாமே. 229

சொரூபவுதயம்.

உருவன்றி யேநின் றுருவம் புணர்க்குங், கருவன்றி யேனி ன்றி தான்கரு வாகு, மருவன்றி யேனின்றி மாயப் பிரானை,குரு வன்றி யாவர்க்குங் கூடவொண் ணாதே. 230

உருவ நினைப்பவர்க் குள்ளூறுஞ் சோதி, யுருவ நினைப்பவ ரூழியுங் காண்ப, ருருவ நினைப்பவ ரும்பரு மாவ, ருருவ நினைப் பவ ருலகத்தில் யாரே. 231

ஊழ்.

செற்றிலென் சீவிலென் செஞ்சாந் தணியிலென், வத்தகத் தேயுளி நாட்டி மறிக்கிலென், வித்தக னந்தி விதிவழி யல்லது, தத்துவ ஞானிக டன்மைகுன் றாரே. 232

வானின் றிடிக்கிலென் மாகடற் பொங்கிலென், கானி ன்ற செந்தீக் கலந்துடன் வேகிலென், றானென் றி மாருதஞ் சண் ட மடிக்கிலெ, ஞானென் றி நாதனை நாடுவ னானே. 233

ஆனை துரக்கிலெ னம்பூ டறுக்கிலென், கானத் துழுவை கலந்து வளைக்கிலென், ஏனைப் பதியினி லெம்பெரு மான்வை த்த, ஞானத் துழவினை நானுழு வேனே. 234

சிவ தேரிசனம்.

சிந்தைய தென்னச் சிவனென்ன வேறில்லை, சிந்தையி னுள் ளே சிவனும் வெளிப்படுஞ், சிந்தை தெளியத் தெளியவல் லார்க ட்குச், சிந்தையி னுள்ளே சிவனிருந் தானே. 235

வாக்கு மனமு மறைந்த மறைப்பொரு, ணோக்குமின் னோக் கப் படும்பொரு ளுண்ணிது, போக்கொன் றுமில்லை வரவில்லை கேடில்லை, யாக்கமு மத்தனை யாய்ந்துகொள் வார்க்கே. 236

முத்திபேதம் கருமநிருவாணம்.

பற்றற் றவர்பற்றி நின்ற பரம்பொருள், கற்றற் றவர்கற் றுக் கருதிய கண்ணுதல், சுற்றற் றவர்சுற்றி நின்றவெஞ் சோதி யைப், பெற்றுற் றவர்கள் பிதற்றொழிந் தாரே. 237

சூனிய சம்பாஷணை.

காயம் பலகைக் கவறைந்து கண்மூன்று, யாயம் பொருவ தோ ரைம்பத்தோ ரக்கர,மேய பெருமா னிருந்து பொருகின்ற, மாயக் கவற்றின் மறைப்பறி யேனே. 238

தூறு படர்ந்து கிடந்தது தூநெறி, மாறிக் கிடக்கும் வகை யறி வாரில்லை, மாறிக் கிடக்கும் வகையறி வாளர்க்கு, ஆறிக் கிடந்ததென் னுள்ளன்பு தானே. 239

ஆறு தெருவி லகப்பட்ட சந்தியிற், சாறு படுவன நான்கு பனையுள, வேறற் கரியதோ ரேணியிட் டப்பனை, யேறலுற்றேன் கட லேழுங்கண் டேனே. 240

வழுதலை வித்திடப் பாகன் முளைத்தது, புழுதியைத் தோண்டினேன் பூசணி பூத்தது, தொழுதுகொண் டோடினார் தோட்டக் குடிகண், முழுதும் பழுத்தது வாழைக் கனியே. 241

ஐயென்னும் வித்தினி லானை விளைப்பதோர், செய்யுண்டு செய்யினிற் றெளிவறி வாரில்லை, மையணி கண்டன் மனம்பெறி னந்நிலம், பொய்யொன்று மின்றிப் புகவெளி தாமே. 242

பள்ளச்செய் யொன்றுண்டு பாழ்ச்செய் யிரண்டுள, கள்ளச்செய் யங்கே கலந்து கிடந்தது, வுள்ளச்செய் யங்கே யுழவு செய் வார்கட்கு, வெள்ளச்செய் யாகி விளைந்தது தானே. 243

பார்ப்பா னகத்திலே பாற்பசு வைந்துண்டு, மேய்ப்பாரு மின்றி வெறித்துத் திரிவன, மேய்ப்பாரு முண்டாய் வெறியு மடங்கிற், பார்ப்பான் பசுவைந்தும் பாலாச் சொரியுமே. 244

ஆமாக்க ளைந்து மரியேறு முப்பதுந், தேமா விரண்டொடு திப்பிலி யொன்பதுந், தாமாக் குரங்கொளிற் றம்மனத் துள்ளன, மூவாக் கடாவிடின் மூட்டுகின் றானே. 245

எழுதாத பொத்தகத் தேட்டின் பொருளைத், தெருளாத கன்னி தெளிந்திருந் தோத, மலராத மாட்டின் மணத்தின் மதுவைப், பிறவாத வண்டு மணமுண்ட வாறே. 246

மூங்கி லெழுந்ததோர் வேம்புண்டு வேம்பினிற், சார்ந்து கிடந்த பனையிலோர் பாம்புண்டு, பாம்பைத் துரந்திட்டு வேம்பைத்தின் பாரின்றி, வேம்பு கிடந்து வெடிக்கின்ற வாறே. 247

பத்துப் பரும்புலி யானைபதி னைஞ்சு, வித்தக ரைவர் வினைதக ரீரெண்ம, ரத்தரு மூவராறுவர் மருத்துவ, ரத்தலை யைவ ரமர்ந்துநின் றாரே. 248

இரண்டு கடாவுண்டு வில்வூரி னுள்ளே, யிரண்டு கடாவுக்கு மொன்றே தழும்ப, னிரண்டு கடாவு மிருத்திப் பிடிக்கி, லிரண்டு கடாவு மொருகடா வாமே. 249

ஒத்தமனக் கொல்லை யுள்ளே சமன் கட்டிப், பத்தி வலையிற் பருத்தி நிறுத்தலான், முத்தக் கயிறுக மூவர்க ணூரினுள், ணித்தம் பொருது நிரம்பநின் றாரே. 250

கூகையும் பாம்புங் கிளியொடு பூனையு, நாகையும் பூழு நடுவி லுறைவன, நாகையைக் கூகை நணுக நிறுத்தலுங், கூகையைக் கண்டெலி கூப்பிடு மாறே. 251

கொல்லையின் மேயும் பசுக்களைச் செய்தவ, னெல்லை கடப்பித் திறையடி கூட்டியே, வல்ல செய்தாற்றன் மதித்தபி னல்லது, கொல்லைசெய் நெஞ்சங் குறியறி யாதே. 252

ஆறு பறவைக ளைந்தகத் துள்ளன, நூறு பறவை நுனி கொம்பின் மேலன, வேறும் பெரும்பதி யேழுங் கடந்தபின், மாருத லின்றி மனைபுக லாமே. 253

கயலொன்று கண்டவர் கண்டே யிருப்பர், முயலொன்று கண்டவர் மூவரு முய்வர், பறையொன்று பூசல் பிடிப்பா ளொருருவன், மறையொன்று கண்ட துருவம்பொன் னுமே. 254

கொல்லை முக்காதமுங் காடரைக் காதமு, மெல்லை மயங்கிக் கிடந்த விருநெறி, யெல்லை மயங்கா தியங்கவல் லார்கட்கு, வொல்லை கடந்துசென் றார்புக லாமே. 255

முக்காத மாற்றிலே மூன்றுள வாழைகள், செக்குப் பழுத்த திரிமலங் காய்த்தன, பக்கனூர் மிக்கார் படங்கினூர் கன்னியர், நமக்கு மலருண்டு நடுவுநின் றாரே. 256

மொட்டித் தெழுந்ததோர் மொட்டுண்டு மொட்டினைக், கட்டுவிட் டோடி மலர்தலுங் காணலாம், பற்றுவிட் டம்மனை பாழ்பட நோக்கினூற், கட்டுவிட் டார்க்கன்றிக் காணவொண் ணுதே.

நீரன்றிப் பாயு நிலத்தினிற் பச்சையாம், யாவருமென்று மறியவல் லாரில்லை, கூரு மழைபொழி யாது பொழிபுனல், தேரினிந் நீர்மை திடரினில் லாதே. 258

தளிர்க்கு மொருபிள்ளை தட்டா னகத்தில், விளிப்பதோர் சங்குண்டு வேந்தனை நாடிக், களிக்குங் குசவர்க்குங் காவிதியார்க்கு, மளிக்கும் பதத்தொன் றுய்ந்துகொள் வார்க்கே. 259

கும்ப மலேமே லெழுந்ததோர் கொம்புண்டு, கொம்புக்கு மப்பா லடிப்பதோர் காற்றுண்டு, வம்பாய் மலர்ந்ததோர் பூவுண்டப் பூவுக்கு, வண்டாய் கிடந்து மணங்கொள்வ னீசனே. 260

தோணி யொன்றுண்டு துறையில் விடுவன, வாணி மிதித்து நின் றைவர்கோ லூன்றலும், வாணிபஞ் செய்வார் வழியிடை யாற்றிடை, யாணி கலங்கி லதுவிது வாமே. 261

மோன சமாதி.

முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்கா, ளகத்திற் கண்கொண்டு காண்பதே யானந்த, மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய, சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமா றெங்ஙனே. 262

நந்தி யிருந்தா னடுவுட் டெருவிலே, சந்தி சமாதிக டானே யொழிந்தது, வுந்தியி னுள்ளே யுதித்தெழுஞ் சோதியைப், புந்தியி னாலே புணர்ந்துகொண் டேனே. 263

விதறு படாவண்ணம் வேறிருந் தாய்ந்து, பதறு படாதே பழமறை பார்த்துக், கதறிய பாழைக் கடந்தந்தக் கற்பனை, யுதறிய பாழி லொடுங்குகின் றேனே. 264

வரையுரைமாட்சி.

தான்வரை வற்றபி னுரை வரைவது, தானவ னனபி னுரை நினைவது, காமனை வென்றகண் ணுரை யுகப்பது, தூமொழி வாசகஞ் சொல்லுமி னீரே. 265

உரையற்ற தொன்றை யுரைசெய்யு மூமர்கா, ளுரையற்ற தொன்றைக் கரைகாண லாகுமோ, திரையற்ற நீர்போற் சிந்தை தெளிவார்க்குப், புரையற் றிருந்தான் புரிசடை யோனே. 266

மனமாயை மாயை யிம்மாயை மயக்க, மனமாயை தான் மாயு மற்றொன்று மில்லை, பினமாய்வ தில்லை பிதற்றவும் வேண்டாந், தனையாய்ந் திருப்பது தத்துவந் தானே. 267

அணைந்தோர் தன்மை.

மலமில்லை மாசில்லை மானுபி மானக், குலமில்லை கொள்ளுங் குணங்களு மில்லை, நலமில்லை நந்தியை ஞானத்தி னாலே, பலமன்னி யன்பிற் பதித்துவைப் போர்க்கே. 268

நமன்வரின் ஞானவாள் கொண்டே யெறிவன், சிவன்வரி னுடன் போவது திண்ணம், பவம்வரும் வல்வினைப் பண்டே யறுத்தேன், றவம்வருஞ் சிந்தைக்குத் தானெதி ராமே, 269

சித்தஞ் சிவமாய் மலமூன் றுஞ் செற்றவர், சுத்தச் சிவமாவர் தோயார் மலபந்தங், கத்துஞ் சிறுகுங் கலகமுங் கைகாணார், சத்தம் பரவிந்து தானுமென் றெண்ணியே. 270

கரும்புந் தேனுங் கலந்ததோர் காயத்தி, லரும்புங் கந்தமு மாகிய வானந்தம், விரும்பியே யுள்ளம் வெளியுறக் கண்டபின், கரும்புங் கைத்தது தேனும் புளித்ததே. 271

மீண்டார் கமலத்து ளங்கி மிகச்சென்று, தூண்டா விளக்கின் றகளிநெய் சோர்தலும், பூண்டா னொருத்தி புவனகுடா மணி, மாண்டா னொருவன் கைவந்தது தானே. 272

---

மெய்கண்டசாத்திரம்.

## சிவஞான போதம்.

சூத்-1. அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
றோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதா
மந்த மாதி யென்மனார் புலவர்.

சூத்-2. அவையே தானே யாயிரு வினையிற்
போக்கு வரவு புரிய வாணையி
னீக்க மின்றி நிற்கு மன்றே.

சூத்-3. உளதில தென்றலி னெனதுட லென்றலி
னைம்புல னொடுக்க மறிதலிற் கண்படி
லுண்டிவினை யின்மையி னுணர்த்த வுணர்தலின்
மாயா வியந்திர தனுவினு ளான்மா.

சூத்-4. அந்தக் கரண மவற்றினொன் றன்றவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா
தமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே.

சூத்-5. விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்
களந்தறிந் தறியா வாங்கவை போலத்
தாந்த முணர்வின் றமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே.

சூத்-6. உணருரு வசத்தெனி னுணரா தின்மையி
னிருதிற னல்லது சிவசத் தாமென
விரண்டு வகையி னிசைக்குமன் னுலகே.

சூத்-7. யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலிற்
சத்தே யறியா தசத்தில தறியா
திருதிற னறிவுள திரண்டலா வான்மா.

சூத்-8. ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
டன்னிய மின்மையி னரன்கழல் செலுமே.

சூத்-9. ஊனக்கண் பாச முணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
யுராத்துனைத் தேர்ந்தெனப் பாச மொருவத்
தண்ணிழ லாம்பதிவிதி யெண்ணுமஞ் செழுத்தே.

சூத்-10. அவனே தானே யாகிய வந்நெறி
யேக னாகி யிறைபணி நிற்க
மலமாயை|தன்னொடு வல்வினை யின்றே.

சூத்-11. காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற்
காணவுள் ளத்தைக் கண்டு காட்டலி
னயரா வன்பி னரன்கழல் செலுமே.

சூத்-12. செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
வம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமு
மாலயந் தானு மரனெனத் தொழுமே.

---

## திருவுந்தியார்.

அகளமா யாருமறி வரிதப் பொருள்
சகளமாய் வந்ததென் றுந்தீபற
தானாகத் தந்ததென் றுந்தீபற. 1

நஞ்செய லற்றிந்த நாமற்ற பின்னாதன்
றன்செய றானேயென் றுந்தீபற
தன்னையே தந்தானென்| றுந்தீபற. 2

உள்ள முருகி லுடனுவ ரல்லது
தெள்ள வரியரென் றுந்தீபற
சிற்பரச் செல்வரென் றுந்தீபற. 3

ஆதாரத் தாலே நிராதாரத் தேசென்று
மீதானத் தேசெல்க வுந்தீபற
விமலற் கிடமதென் றுந்தீபற. 4

ஓட்டற்று நின்ற வுணர்வு பதிமுட்டித்
தேட்டற் றிடஞ்சிவ மூந்தீபற
தேடு மிடமதென் றுந்தீபற. 5

பற்றை யறுப்பதோர் பற்றினைப் பற்றிலப்
பற்றை யறுப்பரென் றுந்தீபற
பாவிக்க வாராரென் றுந்தீபற. 6

இரவு பகலில்லா வின்பவெளி யூடே
விரவி விரவிநின் றுந்தீபற
விரைய விரையநின் றுந்தீபற. 7

சொல்லும் பொருள்களுஞ் சொல்லா தனவுமங்
கல்லனு யானுனென் றுந்தீபற
வம்பிகை பாகனென் றுந்தீபற 8

உள்ளும் புறம்பு நினைப்பறி னின்னுள்ளே
மொள்ளவா வமுதாமென் றுந்தீபற
முளையாது பந்தமென் றுந்தீபற. 9

அவிழ விருக்கு மறிவுட னின்றவர்க்
கவிழுமிவ் வல்லலென் றுந்தீபற
வன்றி யவிழாதென் றுந்தீபற. 10

வித்தினைத் தேடி முளையைக்கை விட்டவர்
பித்தேறி னார்களென் றுந்தீபற
பெறுவதங் கென்பெணே யுந்தீபற. 11

சொல்லு மிடமன்று சொல்லப் புகுமிட
மெல்லை சிவனுக்கென் றுந்தீபற
வென்றனு மென்செய்கே முந்தீபற. 12

துரியங் கடந்தவித் தொண்டர்க்குச் சாக்கிரந்
துரியமாய் நின்றதென் றுந்தீபற
துறந்தா ரவர்களென் றுந்தீபற. 13

நாலாய பூதமு நாதமு மொன்றிடி
ஞலா நிலையாமென் றுந்தீபற
நாதற் கிடமதென் றுந்தீபற. 14

சென்ற நெறியெல்லாஞ் செந்நெறி யாம்படி
நின்ற பரிசறிந் துந்தீபற
நீசெயல் செய்யாதே யுந்தீபற. 15

காயத்துண் மெய்ஞ்ஞானக் கள்ளுண்ண மாட்டாதே
மாயக்கள் ளுண்டாரென் றுந்தீபற
வரட்டுப் பசுக்களென் றுந்தீபற. 16

---

## திருக்களிற்றுப்படியார்.

ஒன்றுங் குறியே குறியாத லாலதனுக்
கொன்றுங் குறியொன்றி லாமையினா-லொன்றோ
ருவமிக்க லாவதுவுந் தானில்லை யொவ்வாத்
தவமிக்கா ரேயிதற்குச் சான்று. 1

தூங்கினரைத் தூய சயனத்தே விட்டதற்பின்
றூங்களே சட்ட வுறங்குவர்க-ளாங்கதுபோ
லையனருட் கடைக்க ணண்டதற்பி னப்பொருளாய்ப்
பைய விளையுமெனப் பார். 2

ஆக்கி யொரு பொருளை யாதாரத் தப்பொருளை
நோக்கி யணுவிலணு நெகிழப்-பார்க்கி
லிவனுகை தானெழிந்திட் டேகமா மேகத்
தவனுகை யாதார மாம். 3

கொண்ட தொருபொருளைக் கோடிபடக் கூறுசெயிற்
கொண்டவனு மப்பரிசே கூறுபடுங்-கொண்ட
விருபொருளு மன்றியே யின்னதிது வென்ன
வொருபொருளே யாயிருக்கு முற்று. 4

ஆக்கப் படாத பொருளா யனைத்தினிலுந்
தாக்கித்தா னென்றோடுந் தாக்காதே-நீக்கியுட

னிற்கும் பொருளுடனே நிற்கும் பொருளுடனாய்
நிற்கை நிராதார மாம். 5

ஒட்டற்று நின்ற வுணர்வுபதி மூட்டித்
தேட்டன்று நின்ற விடஞ்சிவமா-நாட்டூற்று
நாடும் பொருளனைத்து நானு விதமாகத்
தேடு மிடமன்று சிவம். 6

பற்றினுட் பற்றைத் துடைப்பதொரு பற்றறிந்து
பற்றிப் பரிந்திருந்து பார்க்கின்ற-பற்றதனைப்
பற்றுவிடி லந்நிலையே தானே பரமாகு
மற்றுமிது சொன்னேன் மதி. 7

உணராதே யாது முறங்காதே யுன்னிப்
புணராதே நீபொதுவே நிற்கி-லுணர்வரிய
காலங்கள் செல்லாத காலத் துடனிருத்தி
காலங்கண் மூன்றினையுங் கண்டு. 8

சார்புணர்ந்து சார்பு கெடவொழுகி னென்றமையாற்
சார்புணர்த ருனே தியானமுமாஞ்-சார்பு
கெடவொழுகி னல்ல சமாதியுமாங் கேதப்
படவருவ தில்லைவினைப் பற்று. 9

அன்றிவரு மைம்புலனு நீயு மசையாதே
நின்றபடி யேநிற்க முன்னிற்குஞ்-சென்று
கருதுவதன் முன்னங் கருத்தழியப் பாயு
மொருமகடன் கேள்வ னுனக்கு. 10

தன்னைப் பெறுவதின்மேற் பேறில்லை தானென்றுந்
தன்னைத்தான் பெற்றவன்று ளூரென்னிற்-றன்னாலே
யெல்லாந் தனுட்கொண்டு கொண்டதனைக் கொள்ளாதே
யெல்லாமாய் நிற்கு மிவன். 11

உள்ளும் புறம்பு நினைப்பொழியி லுன்னிடையே
வள்ள லெழுந்தருளு மாதினுெடுந்-தெள்ளி
யறிந்தொழிவா யன்றியே யன்புடைமை யாயிற்
செறிந்தொழிவா யேதேனுஞ் செய். 12

அன்பே யென்னன்பே யென்றன்பா லழுதறற்றி
யன்பே யன்பாக வறிவழியு-மன்பன்றித்
தீர்த்தந் தியானஞ் சிவார்ச்சனைகள் செய்யுமவை
சாற்றும் பழமன்றே தான். 13

ஒன்றன் றிரண்டன் றுளதன் றிலதன்று
நன்றன்று தீதன்று நானன்று-நின்ற
நிலையன்று நீயன்று நின்னறிவு மன்று
தலையன் றடியன்று தான். 14

செய்தற் கரிய செயல்பலவுஞ் செய்துசில
ரெய்தற் கரியதனை யெய்தினர்க-ளையோநாஞ்
செய்யாமை செய்து செயலறுக்க லாயிருக்கச்
செய்யாமை செய்யாத வாறு. 15

நின்றபடி நின்றவர்கட் கன்றி நிறந்தெரியா
மன்றினுணின் றுடன் மகிழ்ந்தானுஞ்-சென்றுடனே
யெண்ணுறுமைம் பூதமுத லெட்டுருவாய் நின்றானும்
பெண்ணுறநின் றுடும் பிரான். 16

ஈறாகி யங்கே முதலொன்றா யீங்கிரண்டாய்
மாறாத வெண்வகையாய் மற்றிவற்றின்-வேறா
யுடனா யிருக்கு முருவுடைமை யென்றுங்
கடனா யிருக்கின்றான் காண். 17

அவனே யவனி முதலாயி னானு
மவனே யறிவாய்நின் றானு-மவனேகா
ணாகிப் பெண்ணா யலியாகி நின்றானுங்
காணாமை நின்றானுங் கண்டு. 18

---

## சிவஞான சித்தியார்-சுபக்கம்.

### சிவபெருமான்.

அறுவகைச் சமயத் தோர்க்கு மவ்வவர் பொருளாய் வேறாங்
குறியது வுடைத்தாய் வேதா கமங்களின் குறியி றந்தங்
கறிவினி லருளான் மன்னி யம்மையோ டப்ப னாகிச்
செறிவொழி யாது நின்ற சிவனடி சென்னி வைப்பாம். 1

பிரமாணவியல்-சூத்-1.

ஒருவனோ டொருத்தி யொன்றென் றுரைத்திடு முலக மெல்லாம்
வருமுறை வந்து நின்று போவது மாத லாலே
தருபவ னொருவன் வேண்டுந் தான்முத லீறு மாகி
மருவிடு மநாதி முத்த சித்துரு மன்னி நின்றே. 2

கற்றநூற் பொருளுஞ் சொல்லுங் கருத்தினி லடங்கித் தோன்றும், பெற்றியுஞ் சாக்கிராதி யுயிரினிற் பிறந் தொடுக்க, முற்றதும் போல வெல்லா வுலகமு முதித்தொ டுங்கப், பற் றொடு பற்ற தின்றி நின்றனன் பரனு மன்றே. 3

பந்தமும் வீடு மாய பதபதார்த் தங்க ளெல்லா
னந்தமு மாதி யில்லா னளப்பில னாத லாலே
யெந்தைதா னின்ன னென்று மின்னதா மின்ன தாகி
வந்திடா னென்றுஞ் சொல்ல வழக்கொடு மாற்ற மின்றே. 4

உலகினை யிறந்து நின்ற தரனுரு வென்ப தோரா
ருலகவ னுருவிற் றோன்றி யொடுங்கிடு மென்று மோரா
ருலகினுக் குயிரு மாகி யுலகுமாய் நின்ற தோரா
ருலகினி லொருவ னென்ப ருருவினை யுணரா ரெல்லாம், 5

தேவரி னொருவ னென்பர் திருவுருச் சிவனைத் தேவர்
மூவராய் நின்ற தோரார் முதலுருப் பாதி மாத
ராவது முணரா ராதி யரியயற் கறிய வொண்ணா
மேவுரு நிலையு மோரா ரவனுரு விளைவு மோரார். 6

போகியா யிருந் துயிர்க்குப் போகத்தைப் புரித லோரார்
யோகியா யோக முத்தி யுதவுத லதுவு மோரார்
வேகியா னற்போற் செய்த வினையினை வீட்ட லோரா
ருகியா மூட ரெல்லா மும்பரி னொருவ னென்பார். 7

ஒன்றொ டொன் றொவ்வா வேட மொருவனே தரித்துக் கொண்டு, நின்றலா னுலக நீங்கி நின்றன னென்று மோரா, ரன் றியவ் வேட மெல்லா மருள்புரி தொழிலென் றோரார், கொன் றது வினையைக் கொன்று நின்றவக் குணமென் றோரார். 8

சத்தியுஞ் சிவமு மாய தன்மையிவ் வுலக மெல்லா
மொத்தொவ்வா வாணும் பெண்ணு முணர்குண குணியு மாகி

வைத்தன னவளால் வந்த வாக்கமிவ் வாழ்க்கை யெல்லா
மித்தையு மறியார் பீட லிங்கத்தி னியல்பு மோரார். 9

சிவனரு வுருவு மல்லன் சித்தினோ டசித்து மல்லன்
பவமுதற் றொழில்க ளொன்றும் பண்ணிடு வானு மல்லன்
றவமுத லியோக போகந் தரிப்பவ னல்லன் றானே.
யிவைபெற வியைந்து மொன்று மியைந்திடா வியல்பி னானே.

சூத் - 2.

உலகெலா மாகி வேறா யுடனுமா யொளியா யோங்கி
யலகிலா வுயிர்கள் கன்மத் தாணையி னமர்ந்து செல்லத்
தலைவனு யிவற்றின் றன்மை தனக்கெய்த லின்றித் தானே
நிலவுசீ ரமல னாகி நின்றன னீங்கா தெங்கும். 11

ஒன்றென மறைக ளெல்லா முரைத்திட வுயிர்க ளொன்றி
நின்றன னென்று பன்மை நிகழ்த்துவ தென்னை யென்னி
னன்றவை பதிதா னென்றென் றறையுமக் கரங்க ளோடுறுஞ்
சென்றிடு மகரம் போல நின்றனன் சிவனுஞ் சேர்ந்தே. 12

ஒழுக்கமன் பருளா சார முபசார முறவு சீலம்
வழுக்கிலாத் தவந்தா னங்கள் வந்தித்தல் வணங்கல் வாய்மை
யழுக்கிலாத் துறவடக்க மறிவொடர்ச் சித்த லாதி
யிழுக்கிலா வறங்க ளானு லிரங்குவான் பணிய றங்கள். 13

மனமது நினைய வாக்கு வழுத்தமந் திரங்கள் சொல்ல
வினமலர் கையிற் கொண்டங் கிச்சித்த தெய்வம் போற்றிச்
சினமுத லகற்றி வாழுஞ் செயலற மானல் யார்க்கு
முனமொரு தெய்வ மெங்குஞ் செயற்குமுன் னிலையா மன்றே.

கருவினு ளழிவ தாயுங் கழிந்திடா தழிவ தாயும்
பரிணமித் தழிவ தாயும் பாலனா யழிவ தாயும்
தருணனா யழிவ தாயுந் தானரைத் தழிவ தாயு
முருவமே யழிவே யானா லுள்ளபோ தேபா ருய்ய. 15

சூத் - 4

பொன்னணி யாடை மாலை போதுமே லான போதிங்
கென்னணி யானென் றுன்னி யிருந்தனை பிரிந்த போது

நின்னணி நீயுமல்ல வாயினை காய நின்னி
னன்னிய மாகு முன்னை யறிந்துநீ பிரிந்து பாரே. 16

அறிவிலனமூர்த்த னித்த னராகாதி குணங்க ளோடுஞ்
செறிவிலன் கலாதி யோடுஞ் சேர்விலன் செயல்க ளில்லான்
குறியிலன் கருத்தா வல்லன் போகத்திற் கொள்கை யில்லான்
பிறிவிலன் மலத்தி னோடும் வியாபிகே வலத்தி லான்மா. 17

சூத் - 5.

உலகமே யுருவ மாக யோகிக ளுறுப்ப தாக
விலகுபே ரிச்சா ஞானக் கிரியையுட் கரண மாக
வலகிலா வுயிர்ப் புலன்கட் கறிவினை யாக்கி யைந்து
நலமிகு தொழில்க ளோடு நாடக நடிப்ப னுதன். 18

சூத் - 6.

மண்டனில் வாழ்வும் வானத் தரசயன் மாலார் வாழ்வு
மெண்டரு பூத பேத யோனிக ளியாவு மெல்லாங்
கண்டவிந் திரமா சாலங் கனுக்கமு திரதங் காட்டி
யுண்டுபோ லின்றும் பண்பி னுலகினை யசத்து மென்பர். 19

அன்னிய மிலாமை யானு மறிவினு ணிற்ற லானு
முன்னிய வெல்லா முண்ணின் றுணர்த்துவ னுத லானு
மென்னதி யானென் றோது மிருஞ்செறுக் கறுத்த லானுந்
தன்னறி வதனுற் காணுந் தகைமைய னல்ல னீசன். 20

சாதனவியல்-சூத்-8.

மன்னவன்றன் மகன்வேட ரிடத்தே தங்கி வளர்ந்தவனை யறியாது மயங்கி நிற்பப், பின்னவனு மென்மகனீ யென்றவரிற் பிரித்துப் பெருமையொடுந் தானுக்கிப் பேணுமா போற், றுன்னிய வைம் புலவேடர் சுழலிற் பட்டுத் துணைவனையு மறியாது துயருறுந்தொல் லுயிரை, மன்னுமருட் குருவாகி வந்தவரி னீக்கி மலமகற்றித் தானுக்கி மலரடிக்கீழ் வைப்பன். 21

சன்மார்க்கஞ் சகமார்க்கஞ் சற்புத்திர மார்க்கந், தாதமார்க் கம்மென்றுஞ் சங்கரனை யடையு, நன்மார்க்க நாலவைதா ஞான யோக, நற்கிரியா சரியையென நவிற்றுவதுஞ் செய்வர், சன்மார்க்க முத்திகள்சா லோக்கியசா மீப்பிய சாரூப்பிய சாயுச்சிய மென்றுசதுர் விதமா, முன்மார்க்க ஞானத்தா லெய்து முத்தி முடிவென்பர் மூன்றினுக்கு முத்திபத மென்பர். 22

தாதமார்க் கஞ்சாற்றிற் சங்கரன்றன் கோயிற் றலமலகிட்
டிலகுதிரு மெழுக்குஞ் சாத்திப், போதுகளுங் கொய்துபூந் தார்
மாலை கண்ணி புனிதற்குப் பலசமைத்துப் புகழ்ந்து பாடித், தீதி
றிரு விளக்கிட்டுத் திருநந்த வனமுஞ் செய்துதிரு வேடங்கண்
டாலடியேன் செய்வ, தியாதுபணி யீரென்று பணிந்தவர்தம்
பணியு மியற்றுவதிச் சரியைசெய்வோ ரீசனுல கிருப்பர். 23

புத்திரமார்க் கம்புகலிற் புதியவிரைப் போது புகையொளி
மஞ் சனமமுது முதல்கொண் டைந்து, சுத்திசெய்தா சனமூர்
த்தி மூர்த்தி மானுஞ் சோதியையும் பாவித்தா வாகித்துச் சுத்த,
பத்தியினு லருச்சித்துப் பரவிப் போற்றிப் பரிவினொடு மெரியில்
வரு காரியமும் பண்ணி, நித்தலுமிக் கிரியையினை யியற்று வோ
ர்க ணின்மலன்ற னருகிருப்பர் நினையுங் காலே. 24

சகமார்க்கம் புலனொடுக்கித் தடுத்துவளி யிரண்டுஞ் சலிப்ப
ற்று முச்சதுர முதலாதா ரங்க, ளகமார்க்க மறிந்தவற்றி னரு
ம்பொருள்க ளுணர்ந்தங் கணைந்துபோய் மேலேறி யலர்மதிமண்
டலத்தின், முகமார்க்க வமுதுடலை முட்டத் தேக்கி முழுச்
சோதி நினைந்திருத்தன் முதலாக வினைக, ளுகமார்க்க வட்டாங்
க யோக முற்று முழுத்தலுழந் தவர்சிவன்ற னுருவத்தைப்
பெறுவர். 25

சன்மார்க்கஞ் சகலகலை புராண வேத சாத்திரங்கள் சமய
ங்க டாம்பலவு முணர்ந்து, பன்மார்க்கப் பொருள்பலவுங் கீழாக
மேலாம் பதிபசுபா சந்தெரிந்துப் பரசிவனைக் காட்டு, நன்மார
க்க ஞானத்தை நாடி ஞான ஞேயமொடு ஞாதிருவு நாடா வண்
ணம், பின்மார்க்கச் சிவனுடனாம் பெற்றி ஞானப் பெருமையுடை
யோர்சிவனைப் பெறுவர் காணே 26

ஞானநூ றனையோத லோது வித்த னற்பொருளைக் கேட்
பித்த றான்கேட்ட னன்று, வீனமிலாப் பொருளதனைச் சிந்தித்த
லைந்து மிறைவனடி யடைவிக்கு மெழின்ஞான பூசை, யூனமி
லாக் கன்மங்க டபஞ்செபங்க டியான மொன்றுக்கொன் றுயரு
மிவை யூட்டுவதுபோக, மானவையான் மேலான ஞானத்தா
லரனை யருச்சிப்பர் வீடெய்த வறிந்தோ ரெல்லாம். 27

சிவஞானச் செயலுடையோர் கையிற் றானந் திலமளவே செய்திடினு நிலமலைபோற் றிகழ்ந்து, பவமாயக் கடலினழுந் தாதவகை யெடுத்துப் பரபோகந் துய்ப்பித்துப் பாசத்தை யறுக்கத், தவமாரும் பிறப்பொன்றிற் சாரப் பண்ணிச் சரியைகிரியாயோகந் தன்னிலுஞ்சா ராமே, நவமாகுந் தத்துவஞா னத்தை நல்கி நாதனடிக் கமலங்க ணணுகுவிக்குந் தானே. 28

ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராண நல்லவாக கமஞ்சொல்ல வல்லவா மென்னா, மூனத்தா ரென்கடவ ரஞ்ஞானத்தா லுறுவதுதான் பந்தமுயர் மெய்ஞ்ஞா னந்தா, ஞானத்தா லதுபோவ தலர்கதிர்முன் னிருள்போ லஞ்ஞானம் விடப் பந்த மறமுத்தி யாகு, மீனத்தார் ஞானங்க ளல்லா ஞான மிறைவனடி ஞானமே ஞானமென்பர். 29

சூரியகாந் தக்கல்லி னிடத்தே செய்ய சுடர்தோன்றி யிடச்சோதி தோன்று மாபோ, லாரியனா மாசான்வந் தருளாற் றோன்ற வடிஞான மான்மாவிற் றோன்றுந் தோன்றத், தூரியனாஞ் சிவன்றோன்றுந் தானுந் தோன்றுந் தொல்லுலக மெல்லாந்தன் னுள்ளே தோன்று, நேரியனாய்ப் பரியனுமா யுயிர்க்குயிரா யெங்கு நின்றநிலை யெல்லாமுன் னிகழ்ந்து தோன்றும். 30

மிக்கதொரு பக்குவத்தின் மிகுசத்தி நிபாத மேவுதலு ஞானம்விளைந் தோர்குருவி னருளாற், புக்கதுட்டித் தேநிட்டை புரிந்து ளோர்கள் பூதலத்திற் புகழ்சிவன் முத்த ராகித், தக்கபிரியாப்பிரிய மின்றி யோட்டிற் றபநியத்திற் சமபுத்தி பண்ணிச் சங் கரனோ, டொக்கவுறைந் திவரவனை யவனிவரை விடாதே யுடந்தையாய்ச் சிவன்றோற்ற மொன்றுமே காண்பர். 31

அறியாமை யறிவகற்றி யறிவி னுள்ளே யறிவுதனை யருளினா னறியாதே யறிந்து, குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடுங் கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாயிற், பிறியாத சிவன் றானே பிரிந்து தோன்றிப் பிரபஞ்ச பேதமெல்லாந் தானாய்த் தோன்றி, நெறியாலே யிவையெல்லா மல்லவாகி நின்றென்றுந் தோன்றிடுவ னிராதார னாயே. 32

புண்ணியமே னோக்கு விக்கும் பாவங் கீழ்நூக்கும் புண்ணியனைப் பூசித்த புண்ணியத்தி னாலே, நண்ணிய ஞானத்தினா லிர

ண்டினையு மறுத்து ஞாலமொடு கீழ்மேலு நண்ணா னாகி, யெண்
ணுமிக லோகத்தே முத்திபெறு மிவன்றா னெங்கெழிலென் ஞா
யிறெமக் கென்றுகுறை வின்றிக், கண்ணுதற னிறைவதனிற்
கலந்து காயங் கழிந்தக்கா லெங்குமாய்க் கருதரன்போ னிற்பன்.

ஞாலமதின் ஞான நிட்டை யுடையோருக்கு நன்மையொடு
தீமையிலை நாடுவதொன் றில்லை, சீலமிலை தவமில்லை விரத
மொடாச் சிரமச் செயலில்லை தியானமிலை சித்தமல மில்லை,
கோலமிலை புலனில்லை கரணமில்லை குணமில்லை குறியில்லை குலமு
மில்லை, பாலருட னுன்மத்தர் பிசாசர் குணமருவிப் பாடலினோ
டாடலிவை பயின்றிடினும் பயில்வர். 34

இந்நிலைதா னில்லையே யெல்லா மீச னிடத்தினினு மீசனெ
ல்லா விடத்தினினு நின்ற, வந்நிலையை யறிந்தந்தக் கரணங்க
ளடக்கி யறிவதொரு குறிகுருவி னருளினா லறிந்து, மன்னு
சிவன்றனையடைந்து நின்றவன்ற னாலே மருவுபசு கரணங்கள்
சிவகரண மாகத், துன்னியசாக் கிரமதனிற் றுரியா தீதந் தோ
ன்றமுயல் சிவானுபவஞ் சுவானுபூ திகமாம். 35

பன்னிறங்க ளவைகாட்டும் படிகம்போ லுள்ளம் பலபுல
ன்க ணிறங் காட்டும் பரிசு பார்த்திட், டிந்நிறங்க ளெந்நிறமன்
றென்றுதன்ற னெழினிறங்கண் டருளினா லிந்நிறத்தின் வேறா
ய்ப், பொய்ந்நிறமைம் புலனிறங்கள் பொய்யெனமெய் கண்
டான் பொருந் திடுவன் சிவத்தினொடும் போதான் பின்னை, முன்
னிறைநீர் சிறைமுறிய முடுகியோடி முந்நீர்சேர்ந் தந்நீராய்ப்
பின்னீங்கா முறைபோல். 36

பாசஞா னத்தாலும் பசுஞானத் தாலும் பார்ப்பரிய பர
ம்பரனைப் பதிஞானத் தாலே, நேசமொடு முள்ளத்தே நாடிப்
பாத நீழற்கீழ் நில்லாதே நீங்கிப் போதி, னாசைதரு முலகமெலா
மலகைத்தே ராமென் றறிந்தகல வந்நிலையே யாகும் பின்னு,
மோசைதரு மஞ்செழுத்தை விதிப்படியுச் சரிக்க வுள்ளத்தே
புகுந்தளிப்ப னூனமெலா மோட. 37

குறித்தடியி னின்றட்ட குணமெட்டுச் சித்தி கோகநதன்
முதல்வாழ்வு குலவுபத மெல்லாம், வெறுத்துநெறி யறுவகையு

மேலொடு கீழுடங்க வெறும்பொயென நினைந்திருக்க மேலொடுகீ ழில்லா, னிறத்துவதோர் குணமில்லான் றன்னை யொருவர்க்கு நினைப்பரியா ஞென்றுமிலா னேர்படவந் துள்ளே, பொறுப்பரிய பேரன்பை யருளியதன் வழியே புகுந்திடுவ னெங்குமிலாப் போகத்தைப் புரிந்தே. 38

கண்டவிவை யல்லேஞ னென்றகன்று காணுக் கழிபரமு நானல்லே னெனக்கருதிக் கசிந்த, தொண்டிஞெடு முளத்தவன்ரு னின்றகலப் பாலே சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன் வேறின்றி, விண்டகனு மலங்களெல்லாங் கருடதியா னததால் விடமொழியு மதுபோல விமலதையு மடையும், பண்டை மறைகளுமதுநா ஞனேனென்று பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே. 39

நாட்டுமித யந்தானு நாபியினி லடியாய் ஞாலமுத றத்துவத்தா லெண்விரஞ ளத்தாய், மூட்டுமோ கினிசுத்த வித்தைமல ரெட்டாய் முழுவிதழெட் டக்கரங்கண் முறைமையினி னுடைத்தாய்க், காட்டுகம லாசனமே லீசர்சதா சிவமுங் கலாமூர்த்த மாமிவற்றின் கண்ணுகுஞ் சத்தி, வீட்டையருள் சிவன் மூர்த்தி மாஞகிச்சத்தி மேலாகி நிற்பனிந்த விளைவறிந்து போற்றே. 40

புறம்பேயு மரன்கழல்கள் பூசிக்க வேண்டிற் பூமரத்தின் கீழுதிர்ந்த போதுகளுங் கொண்டு, சிறந்தாருஞ் சீர்ச்சிவனை ஞானத்தா லங்குச் சிந்திக்கும் படியிங்குச் சிந்சித்துப் போற்றி, யறம்பாவங் கட்குநா மென்கடவே மென்று மாண்டவனைக் கண்டக்கா லகம்புறமென் ஞதே, திறம்பாதே பணிசெய்து நிற்கையன்றே சீரடியார் தம்முடைய செய்தி தானே. 41

இந்தனத்தி னெரிபாலி னெய்பழத்தி னிரத மெள்ளின்கணெண்ணை யும்போ லெங்குமுள னிறைவன், வந்தனைசெய் தெவ்விடத்தும் வழிபடவே யருளு மலமறப்போ ரான்மாவின் மலரடிஞானத்தாற், சிந்தனைசெய் தர்ச்சிக்க சிவனுளத்தே தோன்றித் தீயிரும்பைச் செய்வதுபோற் சிவன் றன்னைப், பந்தனையை யறுத்துத்தா ஞக்கித்தன் னுருவப் பரப்பெல்லாங் கொடுபோந்து பதிப்புனிவன் பாலே. 42

பயனியல்.

இவனுலகி லிதமகிதஞ் செய்த வெல்லா மிகமகித மிவனுக்
குச் செய்தார்பா லிசையு, மவனிவனாய் நின்றமுறை யேக னாகி
யரன்பணியி னின்றிடவு மகனுங் குற்றஞ், சிவனுமிவன் செய்தி
யெல்லா மென்செய்தி யென்றுஞ் செய்ததெனக் கிவனுக்குச்
செய்ததென்றும், பவமகல வுடனாகி நின்று கொள்வன் பரிவாற்
பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடுமே. 43

யான்செய்தேன் பிறர்செய்தா ரென்னதியா னென்னு மிக்
கோணை ஞானவெறி யால்வெதும்பி நிமிர்த்துத், தான்செவ்வே
நின்றிடவத் தத்துவன்றா னேரே தனையளித்து முன்னிற்கும்
வினையொளித் திட்டோடு, நான்செய்தே னெனுமவர்க்குத்தான
ங் கின்றி நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்குங் கன்ம,
மூன்செய்யா ஞானந்தா னுதிப்பினல்லா லொருவருக்கும் யா
னெனதிங் கொழியா தன்றே. 44

இந்திரிய மெனைப்பற்றி நின்றேயென் வசத்தி னிசையாதே
தன்வசத்தே யெனையீர்ப்ப திவற்றைத், தந்தவன்ற னாணைவழி
நின்றிடலா லென்றுந் தானறிந்திட் டிவற்றினொடுந் தனையுடை
யான் றாள்கள், வந்தனைசெய் திவற்றின்வலி யருளினால் வாட்டி
வாட்டமின்றி யிருந்திடவும் வருஞ்செயல்க ளுண்டேன், முந்த
னுடைச் செயலென்று முடித்தொழுக வினைகண் மூளாவங் கா
ளாகி மீளா னன்றே. 45

சலமிலனாய் ஞானத்தாற் றனையடைந்தார் தம்மைத் தானா
க்கித் தலைவனவர் தாஞ்செய்வினை தன்னா, னலமுடனே பிறர்
செய்வினை யூட்டியொழிப் பானாய் நணுகாமல் வினையவரை நாடி
க் காப்ப, னுலகினிலென் செயலெல்லா முன்விதியே நீயே யுண்
ணின்றுஞ் செய்வித்துஞ் செய்கின்றா யென்று, நிலவுவதோர்
செயலெனக்கின் றுன்செயலே யென்று நினைவார்க்கு வினைக
ளெல்லா நீங்குந் தானே. 46

நாடுகளிற் புக்குழன்றுங் காடுகளிற் சரித்து நாகமுழை
புக்கிருந்துந் தாகமுதற் றவிர்ந்தும், நீடுபல காலங்க ளித்தரா யிரு
ந்து நின்மலஞா னத்தையில்லார் நிகழ்ந்திடுவர் பிறப்பி, லேடு
தரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே யிடைக்கே யெரிவிழியின்

படுகடைக்கே கிடந்துமிறை ஞானங், கூடுமவர் கூடரிய வீடுங் கூடிக் குஞ்சித்த சேவடியுங் கும்பிட்டே யிருப்பர். 47

அங்கித்தம் பணிவல்லார்க் கனல்சுடா தாகு மௌட்டதமந் திரமுடையார்க் கருவிடங்க ளேரு, வெங்கித்தைக் கன்மமெ லாஞ் செய்தாலு ஞானிக் கிருவினைகள் சென்றணையா முற்செய் வினை யிங்குத், தங்கிப்போம் பாத்திரமுக் குலாலன்வினை தவிர்ந்த சக்கரமுங் கந்தித்துச் சுழலு மாபோன், மங்கிப்போய் வாதனையா லுழல்விக்கு மெல்லா மலங்களும்பின் காயமொடு மாயுமன்றே. 48

பரஞானத் தாற்பரத்தைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார் பார்க்க, வருஞானம் பலஞான மஞ்ஞான விகற்பம் வாச்சியவா சகஞானம் வயிந்தவத்தின் கலக்கந், தருஞானம் போகஞா திருஞான ஞேயந் தங்கியஞா னஞ்சங்கற் பனைஞான மாகுந், திருஞான மிவையெல்லாங் கடந்தசிவ ஞானமாதலாற் சீவன்முத்தர் சிவமேகண் டிருப்பர். 49

ஆணவந்தா னநாதியந்த மடையா தாகு மடையினந்த வான்மாவு மழியுமெனிற் செம்பிற், காணலுறுங் களிம்பிரத குளிகைபரி சிக்கக் கழியுஞ்செம் புருநிற்கக் கண்டோ மன்றே, தாணுவின்புன் கழலணையத் தவிருமலந் தவிர்ந்தாற் றான்சுத்த ஞேயிருக்கை முத்தியரன் றாளாப், பூணவேண் டுவதொன்று மில்லையெனி னருக்கன் புகுதவிருள் போமடியிற் பொருந்தமலம் போமே. 50

செங்கமலத் தாளிணைகள் சேர லொட்டாத் திரிமலங்க ளறுத்தீச னேசரொடுஞ் செறிந்திட், டங்கவர்தந் திருவேட மாலயங்க ளெல்லா மரனெனவே தொழுதிறைஞ்சி யாடிப் பாடி, யெங்குமியா மொருவர்க்கு மெளியோ மல்லோம் யாவர்க்கு மேலாஞே மென்றிறுமாப் பெய்தித், திங்கண்முடி யாரடியா ரடியோ மென்று திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடை யோரே.51

ஈசனுக்கன் பில்லா ரடியவர்க்கன் பில்லா ரெவ்வுயிர்க்கு மன்பில்லார் தமக்குமன் பில்லார், பேசுவதென் னறிவில்லாப் பிணங்களைநா மிணங்கிற் பிறப்பினிலு மிறப்பினிலும் பிணங்கிடுவர் விடுநீ, யாசையொடு மரனடியா ரடியாரை யடைந்திட் டவர்க

ரும முன்கரும மாகச் செய்து, கூசிமொழிந் தருண்ஞானக் குறி
யி னின்று கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே. 52

அறிவரியான் றனையறிய வாக்கையாக்கி யங்கங்கே யுயிர்க்
குயிரா யறிவுகொடுத் தருளாற், செறிதலினாற் றிருவேடஞ் சிவ
னுருவே யாகுஞ் சிவோகம் பாவிக்கு மத்தாற் சிவனுமாவர், குறி
யதனு லிதயத்தே யரனைக்கூடுங் கொள்கையினு லரனுவர் குறி
யொடுதா மழியு, நெறியதனாற் சிவமேயாய் நின்றிடுவ ரென்
று னேசத்தாற் றெழுதிடுநீ பாசத்தார் விடவே. 53

திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனி தன்னைச் சிவனென
வே கண்டவர்க்குச் சிவனுறைவ னங்கே, யுருக்கோலி மந்திரத்
தா லெனநினையு மவர்க்கு முளனெங்கு மிலனிங்கு முளனென்
பார்க்கும், விருப்பாய வடிவாகி யிந்தனத்தி னெரிபோன் மந்தி
ரத்தில் வந்துதித்து மிகுஞ்சுரபிக் கெங்கு, முருக்காண வொண்
ணுத பான்முலைப்பால் விம்மி யொழுகுவது போல்வெளிப்பட்
டருளுவனன் பர்க்கே. 54

மந்திரத்தான் மருந்துகளால் வாய்த்தவியோ கத்தான் மணி
யிரத குளிகையினுன் மற்றுமற்றுந், தந்திரத்தே சொன்னமுறை
செய்ய வேத சகலகலை ஞானங்க டிரிகால ஞான, மந்தமிலா வணி
மாதி ஞானங்க ளெல்லா மடைந்திடுமோ சானருளா லடிசேர் ஞா
னம், வந்திடுமற் றென்றூனும் வாரா தாகு மற்றவையு மவனரு
ளான் மருவு மன்றே. 55

பரம்பிரம மிவனென்றும் பரசிவன்று னென்றும் பரஞான
மிவனென்றும் பராபரன்று னென்று, மரன்றருஞ்சீர் நிலையெல்
லா மிவனே யென்று மருட்குருவை வழிபடவே யவனிவன்று
னுயே, யிரங்கியவா ரணம்யாமை மீனண்டஞ் சினையை யியல்பி
னுடும் பரிசித்து நினைந்தும் பார்த்தும், பரிந்திவைதா மாக்குமா
போற் சிவமே யாக்கும் பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துந்
தானே. 56



## இருபாவிருபது.

உற்றவர் பெற்றவர் மற்றவை முற்று
மற்றவர்க் கற்றவ னல்லவர்க் கல்லவ
னந்த மாதி யில்லவன் வந்து
குரக்கு மனத்துக் கொடியேன் பாக்கும்
பரப்பைக் குவித்து நிறுத்திப் பிடித்திட்
டிருள்வெளி யாகு மருளினை யறுத்து
வந்து புகுதலுஞ் சென்று நீங்கலு
மின்றி யொன்றாய் நின்றவர் நிலையி
லொன்றா காம லிரண்டா காம
லொன்று மிரண்டு மின்றா காமற்
றன்னது பெருமை தாக்கா னாயினு
மென்னது பெருமை யெல்லா மெய்தித்
தன்னை யெனக்குத் தருவதை யன்றியு
மென்னையு மெனக்கே தந்து தன்னது
பேரா நந்தப் பெருங்கட லதனு
ளாரா வின்ப மளித்துத் தீரா
வுள்ளும் புறம்பு மொழிவின்றி நின்ற
வள்ளன்மை காட்டி மலரடி யருளிய
மன்ன னெங்கோன் வார்புனற் பெண்ணை
வெண்ணை காவலன் மெய்கண்ட தேவ
னண்ண லருளா லயத்த னண்ணிய
மலமுத லாயின மாய்க்கு
முலக வுயிர்க்கெல் லாமொரு கண்ணே.

---

## உண்மை விளக்கம்.

நன்றா வுரைக்கக்கேள் நல்லசித்தின் முன்னசித்திங்
கொன்றாது சித்தசித்தை யோராது-நின்றிவற்றை
யன்றே பகுத்தறிவ தான்மாவே யென்றுமறை
குன்றாம லோதுங் குறித்து. 1

ஆறு சுவையு மருந்தி யவைதம்மை
வேறொருவன் கூறியிடு மேன்மைபோ-லாறாறு

மொன்றென்று நாடியுணர்ந் தோதிலதி னுற்றறிவாய்
நின்றபொரு டானேகா ணீ. 2

அக்கரங்கட் கெல்லா மகரவுயிர் நின்றாற்போன்
மிக்கவுயிர்க் குயிராய் மேவினே-மெக்கண்ணு
நில்லா விடத்துயிர்க்கு நில்லா தறிவென்று
நல்லா கமமோது நாடு. 3

ஓங்கார மேநற் றிருவாசி யுற்றதனி
னீங்கா வெழுத்தே நிறைசுடரா-மாங்கார
மற்றா ரறிவரணி யம்பலத்தா ளுடலிது
பெற்றார் பிறப்பற்றார் பின். 4

தத்துவங்க ளெல்லாஞ் சகசமா வான்மாவிற்
பெத்தத்தி னிற்கின்ற பெற்றிபோன்-முத்திதனிற்
சித்தமல மற்றார் செறிந்திடுவ ரென்றுமறை
சத்தியமா வோதியிடுந் தான். 5

---

சிவப்பிரகாசம்.

புறச்சமயத் தவர்க்கிருளா யகச்சமயத் தொளியாய்ப் புக லளவைக் களவாகிப் பொற்பணிபோ லபேதப், பிறப்பிலதா யிருள்வெளிபோற் பேதமுஞ்சொற் பொருள்போற் பேதாபே தமுமின்றிப் பெருநூல் சொன்ன, வறத்திறனல் விளைவதா யுட லுயிர்கண் ணருக்க னறிவொளிபோற் பிரிவருமத் துவிதமாகுஞ், சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாஞ் சைவ சித்தாந்தத் திற னிங்குத் தெரிக்க லுற்றாம் 1

பலகலையா கமவேதம் யாவையினுங் கருத்துப் பதிபசுபா சந் தெரித்தல் பதிபரமே யதுதா, னிலவுமரு வுருவன்றிக் குணங்கு றிக ளின்றி நின்மலமா யேகமாய் நித்த மாகி, யலகிலுயிர்க் குணர்வாகி யசல மாகி யகண்டிதமா யானந்த வுருவா யன்றிச், செலவரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த் திகழ்வது தற் சிவமென்பர் தெளிந்து ளோரே. 2

ஈங்கிதுவென் றதுகடந்த வியல்பி னானு மீறுமுத னடுவொன் று மிலாமை யானு, மோங்கிவளர் ஞானமய னுத லானு மூண்

மைபிறர்க் கறிவரிய வொருமை யானுந், தாங்கரிய வெறுப்பி ஞெடு விருப்பு மெல்லாஞ் சார்வரிய தனிமுதல்வ ஞத லானு, நீங்கலரு முயிர்க்குயிராய் நிற்ற லானு நிறுத்திடுவ னினைந்தவுரு நிமலன் ருனே. 3

அந்நியமா னவையுணர்த்தி யந்நியமாய் நிறைந்த வறிவறி யா மையினுனு மருணிலவுங் காலந், தன்னிலவ னேயாவு மாய் நின்ற தொன்மை தாமுணர்த லானுமுயிர் தானெனவொன் றில தாய், மன்னியிடு மலமாயை கன்மங்கண் மாறி வந்திடுமிங் கிது வழுவா தாதலினுன் மனத்தா, லுன்னரிய திருவருளை யொழிய மல முளதென் றுணர்வரிதா மதனுண்மை தெரிவரிதா முன க்கே. 4

அரிவையரின் புறுமுத்தி கந்த மைந்து மறுமுத்தி திரிகு ணமு மடங்குமுத்தி, விரவுவினை கெடுமுத்தி மலம்போ முத்தி விக்கிரக நித்தமுத்தி விவேகமுத்தி, பரவுமுயிர் கெடுமுத்தி சித் திமுத்தி பாடாண முத்தியிவை பழிசேர்முத்தி, திரிமலமு மக லவுயி ரருள்சேர்முத்தி திகழ்முத்தி யிதுமுத்தித் திறத்ததாமே.

தனக்கென வறிவி லாதான் ருனிவை யறிந்து சாரான்
றனக்கென வறிவி லாத வாயிரு னறியா சார
தனக்கென வறிவி லாதான் றத்துவ வன்ன ரூபன்
றனக்கென வறிவா னுலிச் சகலமு நுகருந் தானே. 6

தன்னறி வதனு லேதுந் தனக்கறி வில்லை யேனுந்
தன்னறி வாக வெல்லாந் தனித்தனி பய னருந்துந்
தன்னறி வறியுந் தன்மை தன்னுலே தனைய றிந்தாற்
றன்னையுந் தானே காணுந் தானது வாகி நின்றே. 7

அடைபவர் சிவமே யாகு மதுவன்றித் தோன்று மென்ற
கடனதே தென்னின் முன்னங் கண்டிடார் தன்மை பின்னுந்
தொடர்வரு மருளி னுலுந் தோன்றுமா காண ராயி
னுடையவ னடிசேர் ஞான முணர்தலின் றணை தலின்றே. 8

பொற்புறு கருவி யாவும் புணராமே யறிவி லாமைச்
சொற்பெறு மதீதம் வந்து தோன்ருமே தோன்றி நின்ற

சிற்பர மதனு ளுள்ள செயலறத் திடவு திக்குந்
தற்பர மாகி நிற்றல் சாக்கிரா தீதந் தானே. 9

பாசமா ஞானத் தாலும் படர்பசு ஞானத் தாலு
மீசனை யறிய வொண்ணு திறையருண் ஞான நண்ணித்
தேசுறு மதனுன் முன்னைச் சிற்றறி வொழிந்து சேர்ந்து
நேசமோ டியர் பரத்து நிற்பது ஞான நிட்டை. 10

பாவிக்கின் மனுதி வேண்டும் பயனில்லை கரண நீத்துப்
பாவிப்ப னென்னி லென்ன பழுதுள பாவ கத்தாற்
பாவிக்க வொண்ணு தென்று பாவிப்ப னென்னி னீயென்
பாவிக்க வேண்டா வாண்ட பரனருள் பற்றி னோர்க்கே. 11

தீங்குறு மாய சோரா வகைவினை திரிவி தத்தா
னீங்கிட நீங்கா மூல நிறையிரு ளிரிய நேயத்
தோங்குணர் வகத் தடங்கி யுளத்துளின் பொடுங்க நேரே
தூங்குவர் தாங்கி யேகத் தொன்மையிற் றுகளி லோரே. 12

அகம்புற மொன்றிரண் டா லருச்சனை புரியு மிந்தச்
சகந்தனி லிரண்டு மின்றித் தமோமய மாகி யெல்லா
நிகழ்ந்திட மகிழ்ந்து வாழு நீர்மையார் போல ஞானந்
திகழ்ந்தகம் புறமெ னுத செம்மையார் தன்மை யாரே. 13

மண்முதற் கரண மெல்லா மறுவசத் தாக்கி ஞானக்
கண்ணினி லூன்றி யந்தக் கருத்தினு லெவையு நோக்கி
யெண்ணியஞ் செழுத்து மாறி யிறைநிறை யுணர்ந்து போற்றல்
புண்ணியன் றனக்கு ஞான பூசையாய்ப் புகலு மன்றே. 14

---

## திருவருட் பயன்.

அகர வுயிர்போ லறிவாகி யெங்கு
நிகரிலிறை நிற்கு நிறைந்து. 1

அருவு முருவு மறிஞர்க் கறிவா
முருவு முடையா னுளன். 2

நலமில னண்ணார்க்கு நண்ணினர்க்கு நல்லன்
சலமிலன் பேர்சங் கரன். 3

இருளான தன்றி யிலதெவையு மேகிப்
பொருளாகி நிற்கும் பொருள். 4

பெருக்க நுகர்வினை பேரொளியா யெங்கு
மருக்கனென நிற்கு மருள். 5

ஊனறியா தொன்று முயிரறியா தொன்றுமிவை
தானறியா தாரறிவார் தான். 6

ஓராதே யொன்றையுமுற் றுன்னுதே நீழுந்திப்
பாராதே பார்த்ததனைப் பார். 7

இன்புறுவார் துன்பா ரிருளினெழுஞ் சுடரின்
பின்புகுவார் முன்புகுவார் பின். 8

ஓங்குணர்வி னுள்ளொடுங்கி யுள்ளத்து ளின்பொடுங்கத்
தூங்குவர்மற் றேதுண்டு சொல். 9

புலனடக்கித் தம்முதற்கட் புக்குறுவர் போதார்
தலநடக்கு மாமை தக. 10

அவனையகன் றெங்கின்று மாங்கவனு மெங்கு
மிவனையொழிந் துண்டாத வில். 11

உள்ளும் புறம்பு மொருதன்மைக் காட்சியருக்
கெள்ளுந் திறமேது மில். 12

## விநவெண்பா.

காண்பானுங் காட்டுவதுங் காண்பதுவு நீத்துண்மை
காண்பார்க ணன்முத்தி காணார்கள்-காண்பானுங்
காட்டுவதுங் காண்பதுவுந் தண்கடந்தைச் சம்பந்தன்
வாட்டுநெறி வாரா தவர். 1

## கோடிக்கவி.

ஒளிக்கு மிருளுக்கு மொன்றே யிடமொன்று மேலிடிலொன்
றொளிக்கு மெனினு மிருளட ராதுள் ளுயிர்க்குயிராய்த்
தெளிக்கு மறிவு திகழ்ந்துள தேனுந் திரிமலத்தே
குளிக்கு முயிரருள் கூடும்படிக் கொடி கட்டினனே. 1

வாக்காலு மிக்க மனத்தாலு மெக்காலுந்
தாக்கா வுணர்வரிய தன்மையனை-நோக்கிப்
பிரித்தறிவு தம்மிற் பிரியாமை தானே
குறிக்குமரு ணல்கக் கொடி. 2

அஞ்செழுத்து மெட்டெழுத்து மாறெழுத்து நாலெழுத்தும்
பிஞ்செழுத்து மேலைப் பெருவெழுத்து-நெஞ்சழுத்திப்
பேசு மெழுத்துடனே பேசாவெழுத் தினையுங்
கூசாமற் காட்டக் கொடி. 3

---

### உண்மைநெறி விளக்கம்.

பாயிரு ணீங்கி ஞானந் தனைக்காண்ட லான்மரூப
நீயுநின் செயலொன் றின்றி நிற்றலே தரிச னந்தான்
போயிவன் றன்மை கெட்டுப் பொருளிற்போ யங்குத் தோன்று
தாயிடி லான்ம சுத்தி யருணூலின் விதித்த வாறே. 1

எவ்வடி வுகளுந் தானு யெழிற்பரை வடிவ தாகிக்
கவ்விய மலத்தான் மாவைக் கருதியே யொடுக்கி யாக்கிப்
பவ்வம்விண் டகலப் பண்ணிப் பாரிப்பா னொருவ னென்று
செவ்வையே யுயிரிற் காண்டல் சிவரூப மாகு மன்றே. 2

வேறு.

பரையுயிரில் யானெனதென் றறநின்ற தடியாம் பார்ப்பிட மெங் குஞ்சிவமாய்த் தோன்றலது முகமா, முரையிறந்த சுகமது வே முடியாகு மென்றிவ் வுண்மையினை மிகத்தெளிந்து பொரு ள்வேறொன் றின்றித், தரைமுதலிற் போகாது நிலையினி னில் லாது தற்பரையி னின்றழுந்தா தற்புதமே யாகித், தெரிவரிய பரமாநந் தத்திற் சேர்தல் சிவனுண்மைத் தரிசனமாய்ச் செப்பு நூலே. 3

எப்பொருள்வந் துற்றிடினு மப்பொருளைப் பார்த்தங் கெய் துமுயிர் தனைக்கண்டிங் கவ்வுயிர்க்கு மேலா, மொப்பிலருள் கண் டுசிவத் துண்மை கண்டிங் குற்றதெல்லா மதனாலே பற்றி நோக் கித், தப்பினைசெய் வதுமதுவே நினைப்புமது தானே தருமுண ர்வு புசிப்புமது தானேயாகி, யெப்பொருளு மசைவில்லை யென வந்தப் பொருளோ டிசைவதுவே சிவபோக மெனுமிறைவன் மொழியே. 4

பாதகங்கள் செய்திடினுங் கொலைகளவு கள்ளுப் பயின்றி டினு நெறியல்லா நெறிபயிற்றி வரினுஞ், சாதிநெறி தப்பிடினுந் தவறுகள் வந்திடினுந் தனக்கெனவோர் செயலற்றுத் தானது வாய் நிற்கி, லுதனவ னுடலுயிரா யுண்டுறங்கி நடந்து நாளுபோ கங்களையுந் தானுகச் செய்து, பேதமற நின்றிவனைத் தானுக்கி விடுவன் பெருகுசிவ போகமெனப் பேசுநெறி யிதுவே. 5

---

## திருப்புகழ்.

### திருச்செந்தூர்.

அறிவழிய மயல்பெருக வுரையுமற விழிசுழல
அனலவிய மலமொழுக அகலாதே
அணையுமனை யருகிலுற வெருவியழ வுறவுமழ
அழலினிகர் மறலியெனை யழையாதே
செறியுமிரு வினைகரண மருவுபுல னொழியவுயர்
திருவடியி லணுகவர மருள்வாயே. 1

### பழநி.

சுருதிமுடி மோனஞ்சொல் சிற்பரம ஞானசிவ
சமயவடி வாய்வந்த அத்துவித மானபர
சுடரொளிய தாய்நின்ற நிட்கள சொரூபமுத லொருவாழ்
துரியநிலை யேகண்ட முத்தரித யாகமல [வே
மதனில் விளை யாநின்ற அற்புதசு போதசுக
சுயபடிக மாவின்ப பத்மபத மேஅடைய உணராதே
கருவிலுரு வேதங்கு சுக்கிலநி தானவளி
பொருமஅதிலே கொண்ட முக்குணவி பாகநிலை
கருதவறி யாவஞ்ச கக்கபட மூடியுடல் வினைதானே
கலகமிட வேபொங்கு குப்பைமல வாழ்வுநிஜ
மெனவுழலு மாயஞ்செ னித்தகுகை யேவுறுதி
கருதசுத மாமிந்த மட்டைதனை யாளஉன தருள்தாராய்
ஒருநியம மேவிண்ட சட்சமய வேதஅடி
முடிநடுவு மாயண்ட முட்டைவெளி யாகியுயி
ருடலுணர்வ தாயெங்கு முற்பனம தாகஅம ருளவோனே

உத்தரிச மாமின்ப புத்தமிர்த போகசுக
முதவுமம லாநந்த சத்திகர மேவுணர
வுருபிரண வாமந்த்ர கர்த்தவிய மாகவரு குருநாதா

பருதிகதி ரேகொஞ்சு நற்சரண நூபுரம
தசைய நிறை பேரண்ட மொக்கநட மாடுகன
பதகெருவி தாதுங்க வெற்றிமயி லேறு மொருதிறலோனே

பணியுமடி யார்சிந்தை மெய்ப்பொருள தாகநவில்
சரவணப வாவென்று வற்கரமு மாகிவளர்
பழநிமலை மேனின்ற சுப்ரமணி யாவமரர் பெருமாளே. 2

---

ஞானங்கொள் பொறிகள் கூடி வானிந்து கதிரி லாத
நாடண்டி நமசி வாய வரையேறி

நாவின்ப ரசம தான ஆநந்த அருவி பாய
நாதங்க ளொடு குலாவி விளையாடி

ஊனங்க ளுயிர்கள் மோக நானென்ப தறிவி லாம
லோமங்கி யுருவ மாகி யிருவோரும்

ஓரந்த மருவி ஞான மாவிஞ்சை முதுகி னேறி
லோகங்கள் வலம தாட அருள்தாராய்

தேனங்கொ ளிதழி தாகி தாரிந்து சலில வேணி
சீரங்க னெனது தாதை ஒருமாது

சேர்பஞ்ச வடிவி மோகி யோகங்கொள் மவுன ஜோதி
சேர்பங்கி னமல நாத னருள்பாலா

கானங்கள் வரைகள் தீவு ஓதங்க பொடிய நீல
காடந்த மயிலி லேறு முருகோனே

காமன்கை மலர்கள் நாண வேடம்பெ ணமளி சேர்வை
கானங்கள் பழநி மேவு பெருமாளே. 3

குன்றுதோருடல்.

தரையின் மானுட ராசையி னுல்மட
லெழுது மாலருள் மாதர்கள் தோதக
சரசர் மாமல ரோதியி னுலிரு கொங்கையானுங்

தரையி னேரிடை யானுடை யால்நடை
யழகி னுல்மொழி யால்விழி யால்மருள் யங்கலாமோ
சவலை நாயடி யேன்மிக வாடிம

பரவை யானமெய்ஞ் ஞானிகள் மோனிகள்
அணுகொ ணுவகை நீடுமி ராசிய விந்துநாதம்
பவன பூரக ரேசக மாகிய

பகரொ ணுதது சேரவொ ணுதது
நினையொ ணுதது வானத யாபர வந்துதாராய். 4
பதிய தானச மாதிம னேலயம்

வள்ளிமலை.

ககனமு மனிலமு மனல்புனல் நிலமமை ருமிவீடு
கள்ளப் புலாற்கி

கனலெழ மொழிதரு சினமென மதமிகு சுமவாதே
கள்வைத்த தோற்பை

யுகஇறு திகளிறு மறுதியு லொருபொருள் மறிவூறி
உள்ளக்க ணேக்கு

ஒளிதிக முருவுரு வெனுமறை யிறுதியி அருள்வாயே. 5
னுள்ளத்தை நோக்க

திரிசிராப்பள்ளி.

புவனத் தொருபொற் றொடிசிற் றுதரக்
கருவிற் பவமுற் றுவிதிப் படியிற் திடிலாவி
புணர்துக் கசுகப் பயில்வுற் றுமரித்

புரியட் டகமிட் டதுகட் டியிறுக்
கடிகுத் தெனஅச் சம்விளைத் தலறப் தனலூடே
புரள்வித் துவருத் திமணற் சொரிவித்

தவனப் படவிட் டுயிர்செக் கிலரைத்
தணிபற் களுதிர்த் தெரிசெப் புருவைத்
தழுவப் பணிமுட் களில்கட் டியிசித் திடவாய்கண்

சலனப் படஎற் றியிறைச் சியறுத்
தயில்வித் துமுரித் துநெரித் துளையத்
தளையிட் டுவருத் தும்யமப் ரகரத் — துயர்தீராய்

பவனத் தையொடுக் குமனக் கவலைப்
ப்ரமையற் றெவகைப் புலனிற் கடிதிற்
படரிச் சையொழித் தத ..ச் சரியைக் — க்ரியையோகர்

பரிபக் குவர்கிட் டைநிவர்த் தியினிற்
பரிசுத் தர்விரத்தர் கருத்ததனிற்
பாவப் படுசெய்ப் பதியிற் பரவக் — குருநாதா

சிவனுத் தமனித் தவுருத் திரன்முக்
கணனக் கன்மழுக் கரனுக் ரரணத்
த்ரிபுரத் தையெரித் தருள்சிற் குணநிற் — குணாநிதி

செகவித் தனிசப் பொருள்சிற் பரனற்
புதனைப் பிலியுற் பவபத் மதடத்
த்ரிசிரப் புரவெற் புறைசற் குமரப் — பெருமாளே. 6



வாசித்துக் காணொ ணாதது-பூசித்துக் கூடொ ணாதது
வாய்விட்டுப் பேசொ ணாதது — நெஞ்சினாலே

மாசர்க்குத் தோணொ ணாதது-நேசர்க்குப் பேரொ ணாதது
மாயைக்குச் சூழொ ணாதது — விந்துநாத

ஓசைக்குத் தூர மானது-மாகத்துக் கீற தானது
லோகத்துக் காதி யானது — கண்டுநாயேன்

யோகத்தைச் சேரு மாறுமெய்-ஞானத்தைப் போதி யாயினி
யூனத்தை போடி டாதும — யங்கலாமோ

ஆசைப்பட் டேனல் காவல்செய்-வேடிச்சிக் காக மாமய
லாகிப்பொற் பாத மேபணி — கந்தவேளே 7

விராலிமலை.

ஐந்து பூதமு மாறு சமயமு-மந்த்ர வேதபு ராண கலைகளும்
ஐம்ப தோர்வித மான லிபிகளும் — வெகுரூப

அண்ட ராதிச ராச ரமுமுயிர்-புண்ட ரீகனு மேக நிறவனும்
அந்தி போலுரு வானும் நிலவொடு — வெயில்காலும்

சந்த்ர சூரியர் தாமு மசபையும்-விந்து நாதமு மேக வடிவம
தன்சொ ரூபம தாக வுறைவது சிவயோகம்

தங்க ளாணவ மாயை கருமமம-லங்கள் போயுப தேசகுருபர
சம்ப்ர தாயமொ டேயுநெறியது பெறுவேனோ 8

---

காவி யுடுத்துந் தாழ்சடை வைத்துங்
காடுகள் புக்குந் தடுமாறிக்

காய்கனி துய்த்துங் காயமொ றுத்துங்
காசினி முற்றுந் திரியாதே

சீவ னொடுக்கம் பூத வொடுக்கம்
தேற வுதிக்கும் பரஞான

தீப விளக்கங் காண எனக்குன்
சீதள பத்மந் தருவாயே 9

திருச்செந்தூர்.

பூரண வாரகும்ப சீதப டீரகொங்கை
மாதர் விகாரவஞ்ச லீலையிலே யுழன்று
போதவ மேயிழந்து போனது மானமென்ப தறியாத

பூரிய னாகிநெஞ்சு காவல் படாதபஞ்ச
பாதக னயறஞ்செ யாதடி யோடிறந்து
போனவர் வாழ்வுகண்டு மாசையி லேயழுந்து மயல்தீரக்

காரண காரியங்க ளானதெ லாமொழிந்து
யானெனு மேதைவிண்டு பாவக மாயிருந்து
காலுட லூடியங்கி நாசியின் மீதிரண்டு விழிபாய

காயமு நாவுநெஞ்சு மோர்வழி யாகஅன்பு
காயம் விடாமனுன்றன் நீடிய தாள்நினைந்து
காணுதல் கூர்தவஞ்செய் யோகிக ளாய்விளங்க
அருள்வாயே. 10

சுவாமிமலை.

ஆனதபிருதிவிப் பாசநிகளமும்
மாமாயவிருளுமற் றேகிபவமென
வாகாசபரமசிற் சோதிபரையைய டைந்துளாமே

ஆருறினதிகமக் கிராயமனுதினம்
யோகீசரெவருமெட் டாவபரதுரி
யாதீதமகளமெப் போதுமுதையம னந்தமோகம்

வானுதிசகலவிஸ்த் தாரவிபவரம்
லோகாதிமுடிவுமெய்ப் போதமலரயன்
மாலீசரெனுமவற் கேதுவிபுலம சங்கையால்நீள்

மாளாததனிசமுற் றுயதரியாநி
ராதாரமூலவில்சற் சோதிநிருபமு
மாறுதசுகவெளத் தானுவுடனினி தென்றுசேர்வேன் 11

## மாடம்பாக்கம்.

நாடருஞ்சுடர் தானுவோதுசி-வாகமங்களி னுனுபேதவ
நாததந்த்ரக லாமாபோதக வடிவாகி

நால்விதந்தரு வேதாவேதமும்-நாடிநின்றதொர் மாயாதீதம
னேலயந்தரு நாதாஆறிரு புயவேளே

வாடயங்கிய வேலாலேபொரு-சூர்தடிந்தருள் வீராமாமயி
லேறுகந்தவி னேதாகூறென அரனார்முன்

வாசகம்பிற வாதோர்ஞானசு-கோதயம்புகல் வாசாதேசிக
மாடையம்பதி வாழ்வேதேவர்கள் பெருமாளே. 12

## உத்தரமேரூர்.

சுருதிமறைக ளிருநாலு திசையிலதிபர் முனிமேவார்கள்
துகளிலிருடி யெழுபேர்கள் சுடர்மூவர்

சொலவின்முடிவில் முடியாத பகுதிபுருட நவநாதர்
தொலேவிலுடுவி னுலகோர்கள் மறையோர்கள்

அரியசமய மொருகோடி அமரர்சரணர் சதகோடி
அரியுமயனு மொருகோடி யிவர்கூடி

அறியஅறியஅறியாத அடிகளறிய அடியேனும்
அறிவுளறியு மறிவூற. அருள்வாயே. 13

## திருவேட்களம்.

மாத்திரை யாகிலு நாத்தவ றுருடன்
வாழ்க்கையை நீடென மதிய

மாக்களை யாரையு மேற்றிடுசிவிகள்
மாப்பரி வேயெய்தி அநுபோக

பாத்திர மீதென மூட்டிடு மாசைகள்
பாற்படு ஆடக மதுதேடப்

பார்க்கள மீதினில் மூர்க்கரை யேகவி
பார்க்கட லானென வுழல்வேனை

சாத்திர மாறையு நீத்தம னோலய
சாத்தியர் மேவிய பதவேளே. 14

சீகாழி.

இரதமான தேனூற லதரமன மாமாத
ரெதிரிலாத பூணார முலைமீதே

இனிதுபோடு மேகாச உடையினூடு மாலால
விழியினூடு மாலாகி யனுராக

விரகமாகி யேபாய லிடைவிடாமல் நாடோறு
ம்ருகமதாதி சேரோதி நிழல்மூழ்கி

விளையுமோக மாமாயை கழலுமாறு நாயேனும்
விழலனுய்வி டாதேநி னருள்தாராய்

அரகரான நூமூடர் திருவெணிறி டாமூடர்
அடிகள்பூசி யாமூடர் கரையேற

அறிவுநூல்க லாமூடர் நெறியிலேநி லாமூடர்
அறம்விசாரி யாமூடர் நரகேழில்

புரள வீழ்வ ரீராறு கரவிநோ தசேய்ஜோதி
புரணபூர ணாகார முருகோனே

புயலுலாவு சேணூடு பரவிநாளு மீடேறு
புகலி மேவி வாழ்தேவர் பெருமாளே 15

திருவாரூர்.

கரமு முளரியின் மலர்முக மதிகுழல்
கனமதெனுமொழி கனிகதிர் முலைநகை
குலக மிடிவிழி கடலென விடமென மனதூடே

கருதி யனநடை கொடியிடை யியல்மயில்
கமழு மகிலுட னிளகிய ம்ருகமத
களப புளகித கிரியினு மயல்கொடு திரிவேனும்

இரவு பகலற இகலற மலமற
இயலு மயலற விழியினி ரிழிவர
இதய முருகியெ யொருகுள பதமுற மடலூடே

யெழுத அரியவன் குறமக ளிருதன
கிரியில் முழுகின இளையவ னெனுமுனை
யினிமை பெறுவது மிருபத மடைவது மொருநாளே

சுரபி மகவினை யெழுபொருள் வினவிட
மனுவி னெறிமணி யசைவுற விசைமிகு
துயரில் செவியினி லடிபட வினவுமி னதிதீது

துணிவி லிதுபிழை பெரிதென வருமனு
வுருகி யரகர சிவசிவ பெறுவதொர்
சுரபி யலமர விழிபுனல் பெருகிட நடுவாக

பரவி யதனது துயர்கொடு நடவிய
பழுதின் மதலையை யுடலிரு பிளவொடு
படிய ரதமவை நடவிட மொழிபவ னருளாரூர்

படியி லறுமுக சிவசுத கணபதி
யிளைய குமரநி ருபபதி சரவண
பரவை முறையிட அயில்கொடு நடவிய பெருமாளே 16

சோமநாதன் மடம்.

ஒருவழிப டாதுமாயை யிருவினைவி டாதுநாளு
முழலுமனு ராகமோக அனுபோகம்

உடலுமுயிர் தானுமாயு னுயர்விலொரு காலிராத
வுளமுநெகிழ் வாகுமாறு அடியேனுக்

கிரவுபகல் போனஞான பரமசிவ யோகதீர
மெனமொழியும் வீசுபாச கனகோப

எமபடரை மோதுமோன வுரையினுபதேசவாளை
எனதுபகை தீரநீயு மருள்வாயே

அரிவையொரு பாகமான அருணகிரி நாதர்பூசை
அடைவுதவ றுதுபேணும் அறிவாளன்
அமணர்குல காலனாகும் அரியதவ ராஜராஜன்
அவனிபுகழ் சோமநாதன் மடமேவும்
முருகபொரு சூரர்சேனை முறியவட மேருவீழ
முகரசல ராசிவேக முனிவோனே
மொழியுமடி யார்கள்கோடி குறைகருதி னும்வேறு
முனியஅறி யாததேவர் பெருமாளே. 17

## திருக்குடவாயில்.

சுருதி யாயிய லாயியல் நீடிய
தொகுதி யாய்வெகு வாய்வெகு பாஷைகொள்
தொடர்பு மாயடி யாய்நடு வாய்மிகு துணையாய்மேல்
துறவு மாயற மாய்நெறி யாய்மிகு
விரிவு மாய்விளை வாயருள் ஞானிகள்
சுகமு மாய்முகி லாய்மழை யாவெழு சுடர்வீசும்
பருதி யாய்மதி யாய்நிறை தாரகை
பலவு மாய்வெளி யாயொளி யாயெழு
பகலி ராவிலை யாய்நிலை யாய்மிகு பரமாகும்
பரம மாயையி னோர்மையை யாவரு
மறியொ ணாதநை நீகுரு வாயிது
பகரு மாறுசெய் தாய்முதல்நாளுறு பயனேதான் 18

## திருவிடைமருதூர்.

அறுகுநுனி பனியனைய சிறியதுளி பெரியதொரு
ஆக மாகியோர் பால ரூபமாய்ப்
அருமதலை குதலைமொழி தனிலுருகி யவருடைய
ஆயி தாதையார் மாய மோகமாய்
அருமையினி லருமையிட மொருமொளன வுடல்வளர
ஆளு மேளமாய் வால ரூபமாய்
அவரொரு பெரியோராய்.

அழகுபெறு நடையடைய கிறுதுபடு மொழிபழகி
ஆவி யாயவோர் தேவி மாருமாய்
விழுசுவரை யரிவையர்கள் படுகுழியை நிலைமையென
வீடு வாசலாய் மாட கூடமாய்
அணுவளவு தவிடுமிக பிதிரவிட மனமிறுகி
ஆசை யாளராய் ஊசி வாசியாய்
அவியுறு சுடர்போல.

வெறுமிடிய ஞெருதவசி யமுதுபடை யெனுமளவில்
மேலே வீடுகேள் கிழை வீடுகேள்
திடுதிடென நுழைவதன்முன் எதிர்முடுகி யவர்களொடு
சீறி ஞாளிபோல் ஏறி வீழ்வதாய்
விரகினொடு வருபொருள்கள் சுவறியிட மொழியுமொரு
வீணி யார்சொலே மேல தாயிட
விதிதனை நினையாதே.

மினுகுமினு கெனுமுடல மறமுறுகி நெகிழ்வுறவும்
வீணர் சேவையே பூணு பாவியாய்
மறுமையுள தெனுமவரை விடும்விழலை யதனின்வரு
வார்கள் போகுவார் காணு மோஎன
விடுதுறவு பெரியவரை மறையவரை வெடுவெடென
மேள மேசொலாய் ஆளி வாயராய்
மிடையுற வருநாளில்.

வருமைகளு முடுகிவர வுறுபொருளு நழுவசில
வாத மூதகா மாலை சோகைநோய்
பெருவயிறு வயிறுவலி படுவன்வர இருவிழிகள்
பீளை சாறிட ஈளை மேலிட
வழவழென உமிழுமது தொழுதொழென ஒழுகிவிழ
வாடி யூனெலாம் நாடி பேதமாய்
மனையவள் மனம்வேறாய்.

மறுகமனை யுறுமவர்கள் நணுகுநணு கெனுமளவில்
மாதர் சீயென வாலர் சீயென
கனவுதனி லிரதமொடு குதிரைவர நெடியசுடு
காடு வாவென வீடு போவென

வலதழிய விரகழிய வுரைகுழறி விழிசொருகி
வாயு மேலிட ஆவி போகுநாள்
மனிதர்கள் பலபேச.

இறுதியதொ டறுதியென உறவின்முறை கதறியழ
ஏழை மாதராள் மோதி மேல்விழ
எனதுடைமை யெனதடிமை யெனுமறிவு சிறிதுமற
ஈமொ லேவென வாயை ஆவென
இடுகுபறை சிறுபறைகள் திமிலையொடு தவிலறைய
ஈம தேசமே பேய்கள் சூழ்வதாய்
எரிதனி லிடும்வாழ்வே.

இணையடிகள் பரவுமுன தடியவர்கள் பெறுவதுவும்
ஏசி டார்களோ பாச நாசனே
இருவினைமு மலமுமற இறவியொடு பிறவியற
ஏக போகமாய் நீயு நானுமாய்
இறுகும்வகை பரமசுக மதனையரு ளிடைமருதில்
ஏக நாயகா லோக நாயகா
இமையவர் பெருமாளே. 19

திருநாகீச்சுரம்.

ஆசா ரவீனக் குதர்க்க துட்டர்கள்
மாதா பிதாவைப் பழித்த துட்டர்கள்
ஆமா வினுனைச் செகுத்த துட்டர்கள் பரதாரம்

ஆகா தெனுமற் பொசித்த துட்டர்கள்
நாளு வுபாயச் சரித்ர துட்டர்கள்
ளாவேச நீரைக் குடித்த துட்டர்கள் தமியோர்செங்

கூசா துசேரப் பறித்த துட்டர்கள்
ஊரார் களாசைப் பிதற்று துட்டர்கள்
கோலால வாள்விற் செருக்கு துட்டர்கள் குருசேவை

கூடா தபாவத் தவத்த துட்டர்கள்
ஈயா துதேடிப் புதைத்த துட்டர்கள்
கோமாள நாயிற் கடைப்பி றப்பினி லுழல்வாரே.

வீசா விசாலப் பொருப்பெ டுத்தெறி
போரா வாரச் சமுத்தி ரத்தினில்
மீளாம லோடித் துரத்தியுட்குளு மொருமாவை

வேரோ டுவீழத் தறித்த டக்கிய
போரா டுசாமர்த் தியத்தி ருக்கையில்
வேலா யுதாமெய்த் திருப்பு கழ்ப்பெறு வயலூரா

நாசாதி ப்ராரத் ததுக்க மிக்கவர்
மாயா விகாரத் தியக்க றுத்தருள்
ஞானோ பதேசப் ப்ரசித்த சற்குரு வடிவான

நாதா வெனுமுற் றுதித்தி டப்புவி
யாதா ரமாய்கைக் குமுட்ட முற்றருள்
நாகீ சநாமத் தகப்பன் மெச்சிய பெருமாளே. 20

வயலூர்.

கமையிற்ற சிர்கேடர் வெகுதர்க்க கோலாலர்
களையுற்று மாயாது மந்த்ரவாதக்

கடைகெட்ட ஆபாச முறுசித்ர கோமாளர்
மருமத்தின் மாயாது கொண்டுபூணுஞ்

சமயத்த ராசார நியமத்தின் மாயாது
சகளத்து ளேநாளு நண்புளோர்செய்

சரியைக்ரி யாயோக நியமத்தின் மாயாது
சலனப்ப டாஞானம் வந்துதாராய். 21



குருதி கிருமிகள் சலமல மயிர்தசை
மருவு முருவமு மலமல மழகொடு
குலவு பலபணி பரிமள மறுசுவை மடைபாயல்

குளிரி லரையக மிவைகளு மலமல
மனைவி மகவினை யநுசர்கள் முறைமுறை
குனகு கிளைஞர்க ளிவர்களு மலமல மொருநாளு

சுருதி வழிமொழி சிவகலை யலதினி
யுலக கலைகளு மலமல மிலகிய
நொலைவி லுனைநினை பவருற வலதினி யயலார்பால்

சுழல்வ தினிதென வசமுடன் வழிபடு
முறவு மலமல மருளலை கடல்கழி
துறைசெ லறிவினை யெனதுள மகிழ்வுற அருள்வாயே. 22

---

புணரு மிதுசிறு சுகமென இகபரம்
உணரு மறிவிலி ப்ரமைதரு திரிமலம்
அற்றுக்க ருத்தொருமை யுற்றுப்பு லத்தலையில்
மறுகு பொறிகழல் நிறுவியெ சிறிதுமெய்
உணர்வு முணர்வுற வழுவற வொருஜக
வித்தைக்கு ணத்ரயமும் நிர்த்தத்து வைத்துமறை
புகலு மனுபவ வடிவினை யளவறு
அகில வெளியையு மொளியையு மறிவ
தத்வப்ர சித்திதனை முத்திச்சி வக்கடலை
யென்றுசேர்வேன். 23

கோடும்பாளூர்.

கலைஞரெனுங் கற்புக் கலியுகபந் தத்துக்
கடனபையம் பட்டுக் கசடாகும்
கருமசடங் கச்சட் சமயிகள்பங் கிட்டுக்
கலகலெனுங் கொட்புற் றுடன்மோதும்
அலகில்பெருந் தர்க்கப் பலகலையின் பற்றற்
றரவியிடந் தப்பிக் குறியாத
அறிவையறிந் தப்பற் றதனிஞெடுஞ் சற்றுற்
றருள்வசனங் கிட்டப் பெறலாமோ. 24

நிம்பபுரம்.

அஞ்சுவித பூத முங்கரண நாலு
மந்திபகல் யாது மறியாத
அந்த நடு வாதி யொன்றுமில தான
அந்தவொரு வீடு பெருமாறு
மஞ்சுதவழ் சார லஞ்சயிலவேடர்
மங்கைதனை நாடி வனமீது
வந்தசர ணார விந்தமது பாட
வண்டமிழ்வினோத மருள்வாயே. 25

வேப்பூர்.

குரைகட லுலகினில் உயிர்கொடு போந்து
கூத்தாடு கின்ற குடில்பேணிக்
குகையிட மருவிய கருவிழி மாந்தர்
கோட்டாலை யின்றி யவிரோதம்
வரஇரு வினையற உணர்வொடு தூங்கு
வார்க்கே விளங்கு மநுபூதி
வடிவினை யுனதழ கியதிரு வார்த்த
வாக்கால் மொழிந்த ருளவேணும். 26

தேவனார்.

காணொ ணாதது உருவோ டருவது
பேசொ ணாதது உரையே தருவது
காணு நான்மறை முடிவாய் நிறைவது பஞ்சபூதக்
காய பாசம தனிலே யுறைவது
மாய மாயுட லறியா வகையது
காய மானவ ரெதிரே யவரென வந்துபேசிப்
பேணொ ணாதது வெளிபோய் ஒளியது
மாய னாரய னறியா வகையது
பேதா பேதமொ டுலகாய் வளர்வது விந்துநாதப்
பேருமாய்கலை யறிவாய் துரியவ
தீதமானது, வினையேன் முடிதவ
பேறுமாயருள் நிறைவாய் விளைவது ஒன்றுமேயே. 27

போது.

தசையு முதிரமு நிணமொடு செருமிய
கரும கிருமிக ளொழுகிய பழகிய
சடல வுடல்கடை சடலையி லிடுகிறு குடில்பேணுஞ்
சகல கருமிகள் சருவிய சமயிகள்
சரியை கிரியைகள் தவமெனு மவர்சிலர்
சவலை யறிவினர் நெறியினை விடஇனி யடியேனுக்
கிசைய இதுபொரு ளெனஅறி வுறவொரு
வசன முறஇரு வினையற மலமற
இரவு பகலற எனதற நினதற அ

இனிமை தருமொரு தனிமையை மறைகளி
　　னிறுதி யறுதியி டவரிய பெறுதியை
　　இருமை யொருமையிப் பெருமையை வெளிபட
　　　　　　　　　　　　　　　　மொழிவாயே. 28

---

　　சரியு மலை யாக்கையு ளெரியு முரிய தீப்பசி
　　　　தணிகை பொருடி ராப்பகல் 　　　　　　　தடுமாறுஞ்
　　சகல சமய தார்க்கிகர் கலக மொழிய நாக்கொடு
　　　　சரண கமல மேத்திய 　　　　　　　வழிபாடுற்
　　றரிய துரிய மேற்படு கருவி கரண நீத்ததோ
　　　　ரறிவின் வடிவ மாய்ப்புள 　　　　　　　கிதமாகி
　　அவச கவச மூச்சற அமரு மமலர் மேற்சில
　　　　ரதிப திவிடு பூக்கணை 　　　　　　　படுமோதான். 29

---

அகல நீளம் யாதானு மொருவ ரானு மாராய
　　அரிய மோன மேகோயி 　　　　　　　லெனமேவி
அசைய வேக்ரி யாபீட மிசைபு காம காஞான
　　அறிவி ருத ராமோத 　　　　　　　மலர்தாவிச்
சகல வேத ஞதீத சகல வாச காதீத
　　சகல மாக்ரி யாதீத 　　　　　　　சிவரூப
சகல சாத காதீத சகல வாசனதீத
　　தனுவை நாடி மாபூசை 　　　　　　　புரிவேனோ. 30

---

அடைபடாது நாடோறும் இடைவிடாது போம்வாயு
　　அடையமீளில் வீடாகு 　　　　　　　மெனநாடி
அருள்பெருவ ஞசார கருமயோகி யாகாமல்
　　அவனிமீதி லோயாது 　　　　　　　தடுமாறும்
உடலம்வேறு யான்வேறு கரணம்வேறு வேருக
　　உதறிவாச காதீத 　　　　　　　அடியூடே
உருகிஆரி யாசார பரமயோகி யாமாறுன்
　　உபயபாத ராசீக 　　　　　　　மருள்வாயே. 31

அமலவாயு வோடாத கமலநாபி மேல்மூல
அமுதபான மேமூல — அனல்மூள
அசைவுறாது பேராத விதமுமேவி யோவாது
அரியதான சோபான — மதனுமேல
எமனைமோதி யாகாச ககனமாம ணோபாவ
மெளிதுசால மேலாக — வுரையாடும்
எனதியானும் வேறாகி எவரும்யாதும் யானாகும்
இதயபாவ னாதீத — மருள்வாயே. 32

பருதி யாய்ப்பனி மதிய மாய்ப்படர்
பாரராய் வானாய் நீர்தீ காலா — யுடுசாலம்
பலவு மாய்ப்பல கிழமை யாய்ப்பதி
னாலா றேழா மேனா ளாயே — மூலகாகிச்
சுருதி யாய்ச்சுரு திகளின் மேற்சுட
ராய்வே தாவாய் மாலாய் மேலே — சிவமான
தொலைவி லாப்பொரு ளிருள்பு காக்கழல்
சூடா நாடா ஈடே றாதே — கழல்வேனோ. 33

ஊனே தானா யோயா நோயா
லூசா டேசற் — குடில்பேணா
ஞாதா மோதா வாதா காதே
லோகா சாரத் — துளம்வேறாய்
நானே நீயாய் நீயே நானாய்
நானா வேதப் — பொருளாலும்
நாடா வீடா யீடே றாதே
நாயேன் மாயக் — கடவேனோ
வானே காலே தீயே நீரே
பாரே பாருக் — குரியோனே
மாயா மானே கோனே மானார்
வாழ்வே கோழிக் — கொடியோனே
தேனே தேனீள் கானா றாய்வீழ்
தேசார் சாரற் — கிரியோனே
சேயே வேளே பூவே கோவே
தேவே தேவப் — பெருமாளே. 34

அகரமுத லெனவுரைசெய் ஐம்பத்தொ ரக்ஷரமும்
அகிலகலை களும்வெகுவி தங்கொண்ட தத்துவமும்
அபரிமித சுருதியு மடங்குந்த னிப்பொருளை
எப்பொருளுமாய

அறிவையறி பவரறியும் இன்பந்த னைத்துரிய
முடிவைஅடி நடுமுடிவில் துங்கந்த னைச்சிறிய
அணுவையணு வினின் மலமு நெஞ்சுங்கு ணத்ரயமு
மற்றதொருகாலம்

நிகழும்வடி வினைமுடிவி லொன்றென்றி ருப்பதனை
நிறைவுகுறை வொழிவறநி றைந்தெங்கு நிற்பதனை
நிகர்பகர அரியதைவி சும்பின்பு ரத்ரயமெ
ரித்தபெருமானும்

நிருபகுரு பரகுமர என்றென்று பத்திகொடு
பரவஅரு ளியமவுன மந்த்ரந்த னைப்பழய
நினதுவழி யடிமையும்வி ளங்கும்ப டிக்கினிது
ணர்த்தியருள்வாயே. 35

---

ஓதுவித்தவர் கூலி கெடாதவர்
மாதவர்க்கதி பாதக மானவர்
ஊசலிற்கன லாயெரி காளையர்
மறையோர்கள்

ஊர்தகக்கிட ரேசெயு மேழைகள்
ஆல்தனக்குமு தாசின தாரிகள்
ஓடியுத்தம ரூதிய நாடின
ரிரவோருக்

கேதுமித்தனை தானமி டாதவர்
பூதலத்தினி லோரம தானவர்
ஈசர்விஷ்ணுவை சேவைசெய் வோர்தமை
யிகழ்வோர்கள்

ஏகசித்ததி யானமி லாதவர்
மோகமுற்றிடு போகித மூறினர்
ஈனரித்தனை பேர்களு மேழ்நர
குழல்வாரே. 36

---

மாண்டாரெ லும்பணி யுஞ்சடை
யாண்டாரி றைஞ்ச மொழிந்ததை
வான்பூத லம்பவ னங்கனல்
புனலான

வான்பூத மூங்கர ணங்களு
நான்போயொ டுங்கஅ டங்கலு
மாய்ந்தால்வி ளங்கும தொன்றினை
யருளாயேல்

வேண்டாமை யொன்றைய டைந்துள
மீண்டாறி நின்சர ணங்களில்
வீழ்ந்தாவல் கொண்டொரு கன்பினை யுடையேனாய்
வேந்தாக டம்புபு[illegible]தருள்
சேந்தாச ரண்சர ணென்பது
வீண்போம தொன்றல என்பதை யுணராதோ. 37

---

ஊனென றெலும்பு சீசீ மலங்க
ளோடே நரம்பு கசுமாலம்
உளழ்நோ யடைந்து மாசான மண்டு
மூனோ டிழன்ற கடைநாயேன்
நானொ ரொடுங்க நானோர் வணங்க
நானோர் மகிழ்ந்து வுனேயோத
நானொ ரிரங்க நானொ ருணங்க
நானோர் நடந்து விழநானோர்
தானே புணர்ந்து தானே யறிந்து
தானே மகிழ்ந்து அருளேறிக்
தாய்போல் பரிந்த தேனொ டுகந்து
தானே தழைந்து சிவமாகித்
தானே வளர்ந்து தானே யிருந்த
தார்வேணி யெந்தை யருள்பாலா
சாலோக தொண்டர் சாமீபதொண்டர்
சாரூப தொண்டர் பெருமாளே. 38

---

பிறவியலை யாற்றினிற் புகுதாதே
பிரகிருதி மார்க்கமுற் றலையாதே
உறுதிகுரு வாக்கியம் பொருளாலே
உனதுபத காக்ஷியைத் தருவாயே
அறுசமய சாத்திரப் பொருளோனே
அறிவுளறி வார்க்குணைக் கடலோனே
குறுமுனிவ னேத்துமுத் தமிழோனே
குமரகுரு கார்த்திகைப் பெருமாளே. 39

---

## அருணகிரியந்தாதி.

வரம்பலிக்கு மெய்ஞ்ஞான வாழ்வே பலிக்குந்
திரம்பலிக்குஞ் செல்வம் பலிக்கு-முரம்பலிக்குஞ்
சோணா சலனைச் சுவாமிதனை யுள்ளத்தே
காணார் கருத்தென் கருத்து. 1

ஆமென்று நம்பி யனுதினமும் போற்றினா
னாமென்று பற்றி நலமாகக்-காமித்துச்
சிட்டாகுஞ் சோணகிரி சிந்தித்தா னெஞ்சமே
விட்டேகும் வெய்ய வினை. 2

செப்பரிய ஞானச் செழுஞ்சுடரே சோணகிரி
யப்பனே நன்னூ லறிந்தாலு-மிப்புவியிற்
கொண்டகுரு வைப்பொருளாக் கொள்ளார் பயனேது
கண்டவெல்லாம் வீணிலே கற்று. 3

கற்றதனாற் றொல்லைவினை கட்டறுமோ நல்லகுலம்
பெற்றதனாற் போமோ பிறவிநோ-யுற்றகட
னஞ்சுகந்து கொண்டருணை நாதரடித் தாமரையை
நெஞ்சுகந்து கொள்ளா நெறி 4

நெறியுண்டா நல்ல நிலையுண்டா ஞானக்
குறியுண்டா மெண்ணமெலாங் கூடுஞ்-செறிவுண்டா
மாதி யருணகிரி யண்ணலா ரைந்தெழுத்தை
யோதிமட நெஞ்சமே யுன். 5

சும்மா கிடைக்குமோ சோணா சலன்பாத
மம்மால் விரிஞ்ச னறிகிலார்-நம்மா
லிருந்துகதை சொன்னக்கா லென்னாகு நெஞ்சே
பொருந்த நினையாதபோது. 6

பேரா யிரமுடைய பெம்மானைச் சோணகிரி
யாரா வமுதை யறியாமல்-வாராது
தீது நலமுந் தெரியுங்கா னெஞ்சமே
யேதுமவ னென்றே யிரு. 7



## கந்தரனுபூதி.

வானோ புனல்பார் கனன்மா ருதமோ, ஞானோ தயமோ நவினான் மறையோ, யானோ மனமோ வெனையாண் டவிடந், தானோ பொருளா வதுசண் முகனே. 1

கெடுவாய் மனனே கதிகேள் கரவா, திடுவாய் வடிவே லிறைதா ணினைவாய், சுடுவாய் நெடுவே தனைதூள் படவே, விடுவாய் விடுவாய் வினையா வையுமே. 2

கூகா வெனவென் கிளைகூ டியழப், போகா வகைமெய்ப் பொருள்பே சியவா, நாகா சலவே லவநா லுகவித், தியாகா சுரலோக சிகா மணியே. 3

செம்மான் மகளைத் திருடுந் திருடன், பெம்மான் முருகன் பிறவா னிறவான், சும்மா விருசொல் லறவென் றலுமே, யம்மா பொருளொன் றுமறிந் திலனே. 4

முருகன் றனிவேன் முனிநங் குருவென், றருள்கொண் டறியா ரறியுந் தரமோ, வுருவன் றருவன் றுளதன் றிலதன், றிருளன் றொளியன் றெனநின் றதுவே. 5

கைவாய் கதிர்வேன் முருகன் கழல்பெற், றுய்வாய் மனனே யொழிவா யொழிவாய், மெய்வாய் விழிநா சியொடுஞ் செவியா, மைவாய் வழிசெல் லுமவா வினையே. 6

உதியா மரியா வுணரா மறவா, விதிமா லறியா விமலன் புதல்வா, வதிகா வனகா வபயா வமரா, வதிகா வலசூர பயங் கரனே. 7

வடிவுந் தனமும் மனமுங் குணமுங், குடியுங் குலமுங் குடிபோ கியவா, வடியந் தமிலா வயில்வே லரசே, மிடியென் றொருபாவி வெளிப் படினே. 8

கருதா மறவா நெறிகா ணவெனக், கருதாள் வனசந் தரவென் றிசைவாய், வரதா முருகா மயில்வா கனனே, விரதா சுரசூர விபா டணனே. 9

ஆனா வமுதே யயில்வே லரசே, ஞானா கரனே நவிலத் தகுமோ, யானா கியவென் னைவிழுங் கிவெறுந், தானாய் நிலைநின் றதுதற் பரமே. 10

கிரிவாய் விடுவிக் ரமவே லிறையோன், பரிவா ரமெனும் பதமே வலேயே, புரிவாய் மனனே பொறையா மறிவா, லரிவா யடியோடு மகந் தையையே. 11

குறியைக் குறியாது குறித் தறியு, நெறியைத் தனிவேலே நிகழ்த் திடலுஞ், செறிவற் றுலகோ டுரைசிந் தையுமற், றறிவற் றறியா மையுமற் றதுவே. 12

தூசா வணியுந் துகிலும் புனேவா, ணேசா முருகா நினதன் பருளா, லாசா நிகளந் துகளா யினபின், பேசா வநுபூதி பிறந்த துவே. 13

ஆறு றையுநீத் ததன்மே நிலையைப், பேறு வடியேன் பெறு மா றுளதோ, சீறு வருசூர் சிதைவித் திமையோர், கூறு வுலகங் குளிர்வித் தவனே. 14

அறிவொன் றறநின் றறிவா ரறிவிற், பிறிவொன் றறநின் ற பிரா னிலேயோ, செறிவொன் றறவந் திருளே சிதைய, வெறிவெ ன் றவரோ டுறும் வேலவனே. 15

தன்னந் தனிநின் றதுதா னறிய, வின்னம் மொருவர்க் கிசைவிப் பதுவோ, மின்னுங் கதிர்வேல் விகிர்தா நினேவார், சின் னங் களேயுங் கிர்பைசூழ் சுடரே. 16

பொறியும் புலனும் புகுதூன் மனமுங், குறியுங் குணமுங் குடியு நெறியும், பிறிதொன் றுமிலா நிலையா னனிநின், றறியுந் தரமோ வயில்வே லவனே. 17

இரவும் பகலுந் துதிசெய் திருதாள், பரவும் பரிசே பரிசா யருள்வாய், கரவுண் டெழுசூர் களேயக் கதிர்போல், விரவுஞ் சு டர்வேல் விடுசே வகனே. 18

விண்ணுள் பதமும் விரிநீர் புடைசூழ், மண்ணுள் பதமும் ம கிழேன் மகிழேன், றண்ணு ரமுநீதே யயிலப் பகையே, கண்ணு ருனருட் கனியைப் பெறினே. 19

தாயே யெனேயா டனிவே லரசே, காயே பொருளாக் கனி கை விடுமோர், பேயே னிடையின் பெழவந் தெளிதாய், நீயே பி றவா நெறிதந் ததுவே. 20

என்னே ரமுநின் னிருதாண் மலரைப், பொன்னே யென
யான் புனையப் பெறினே, யன்னே யமிர்த்தே யயில்வே லரசே,
கொன்னே பிறவிக் குறைபெற் றிலனே. 21

அருளைத் தருநின் னடியில் பணிவாய், மருளைச் சிதையா
துமயங் குறுவேன், குருளைத் தசையிற் குறியோன் வினவும்,
பொருளைத் தெளியப் புகறே சிகனே. 22

பெறியோ ரெனினும் புலையோ ரெனினுஞ், சிறியோ ரெனி
னுந் தெளிவோ ரவரே, குறியோ ரெனினுங் குருவா னவர்பா,
னெறியோ டொழுகு நிலைபெற் றிடினே. 23

என்னே ரமதோ தெரியா திறுநா, ளன்னே ரமதொன் றுகா
தெனமுன், சொன்னேன் மனமே துவலோ துவலோ, தன்
னேர் குகனைச் சரணென் றடையே. 24

முறுகுந் தழல்போன் முடுகுஞ் சமனுன், மறுகும் பொழு
தும் மறவேன் மறவேன், குறுகுங் குலிசன் குலவா ரணமால்
பெறுகுஞ் சரிதோய் பெருமா னடியே. 25

உருவா யருவா யுளதா யிலதாய், மருவாய் மலராய் மணி
யா யொளியாய்க், கருவா யுயிராய்க் கதியாய் விதியாய்க், குரு
வாய் வருவா யருள்வாய் குகனே. 26

---

## கந்தரலங்காரம்.

ஒளியில் விளைந்த வுயர்ஞான பூதரத் துச்சியின்மே, லளி
யில் விளைந்ததொ ரானந்தத் தேனை யநாதியிலே, வெளியில்
விளைந்த வெறும்பாழைப் பெற்ற வெறுந்தனியைத், தெளிய
விளம்பிய வாமுக மாறுடைத் தேசிகனே. 1

தேனென்று பாகென்று வமிக்கொ ணாமொழித் தெய்வ
வள்ளி, கோனன்றெ னக்குப தேசித்த தொன்றுண்டு கூறவற்
றோ, வானன்று காலன்று தீயன்று நீரன்று மண்ணுமன்று, தா
னன்று நானன் றசரீரி யன்று சரீரியன்றே. 2

சொல்லுகைக் கில்லையென் றெல்லா மிழந்து சும்மாவிரு
க்கு, மெல்லையுட் செல்ல வெனைவிட்ட வாவிகல் வேலனல்ல,

கொல்லியைச் சேர்க்கின்ற சொல்லியைக் கல்வரை கொவ்வைச் செய்வாய், வல்லியை புல்கின்ற மால்வரைத் தோளண்ணல் வல் லபமே. 3

தடுங்கோண் மனத்தை விடுங்கோள் வெகுளியைத் தான மென்று, மிடுங்கோ ளிருந்த படியிருங் கோளெழு பாருமுய்யக், கொடுங்கோ பச்சூருடன்குன்றந் திறக்கத் தொளைக்கவைவேல், விடுங்கோ னருள்வந்து தானே யுமக்கு வெளிப்படுமே. 4

வேதாகம சித்ர வேலாயுதன் வெட்சி பூத்ததண்டைப், பா தார விந்த மரணாக வல்லும் பகலுமில்லாச், சூதான தற்ற வெ ளிக்கே யொளித்துச்சும் மாவிருக்கப், போதா யினிமன மே தெரி யாதொரு பூதர்க்குமே. 5

சொன்னக் ரௌஞ்ச கிரியூ டுருவத் தொளைத்தவைவேன், மன்ன கடம்பின் மலர்மாலை மார்பமௌ னத்தையுற்று, நின்னை யுணர்ந்துணர்ந் தெல்லா மொருங்கிய நிர்க்குணம்பூண், டென்னை மறந்திருந் தேனிறந் தேவிட்ட திவ்வுடம்பே. 6

நீலச் சிகண்டியி லேறும்பி ரானெந்த நேரத்திலுங், கோ லக் குறத்தி யுடன்வரு வான்குரு நாதன்சொன்ன, சீலத்தை மெள்ளத் தெளிந்தறி வார்சிவ யோகிகளே, காலத்தை வென்றி ருப் பார்மரிப் பார்வெறுங் கர்மிகளே. 7

நாளென் செயும்வினை தானென் செயுமெனை நாடிவந்த, கோளென் செயுங்கொடுங் கூற்றென் செயுங்கும ரேசரிரு, தா ளுஞ் சிலம்புஞ் சதங்கையுந் தண்டையுஞ் சண்முகமுந், தோளுங் கடம்பு மெனக்குமுன் னேவந்து தோன்றிடினே. 8

நீயான ஞான விநோதந் தனையென்று நீயருள்வாய், சேயா ன வேற்கந்த னேசெந்தி லாய்சித்ர மாதரல்குற், றோயா வரு கிப் பருகிப் பெருகித் துவளுமிந்த, மாயா விநோத மனோதுக்க மானது மாய்வதற்கே. 9

ஆங்கா ரமுமடங் காரொடுங் கார்பர மானந்தத்தே, தேங் கார் நினைப்பு மறப்புமறார் தினைப் போதளவு, மோங்காரத் துள் ளொளிக் குள்ளே முருக னுருவங்கண்டு, தூங்கார் தொழும்பு செய்யாரென் செய்வார் யமதூதருக்கே. 10

வரையற்ற வுணர்சிர மற்று வாரிதி வற்றச்செற்ற, புரைய
வேலவன் போதித்த வாபஞ்ச பூதமுமற், றுரையற் றுணர்
றுடலற் றுயிரற் றுபாயமற்றுக், கரையற் றிருளற் றெனதற்
க்குமக் காட்சியதே. 11

சாடுஞ் சமரத் தனிவேன் முருகன் சரணத்திலே, யோடுங்
த்தை யிருத்தவல் லார்க்குகம் போய்ச் சகம்போய்ப், பாடுங்
ிபவுரிகொண் டாடப் பசுபதிநின், றாடும் பொழுது பரமா
க்கும தீதத்திலே. 12

திருத்தி யெனும்படி கும்பித்து வாயுவைச் சுற்றிமுறித்,
த்தி யுடம்பை யொறுக்கிலென் ஞஞ்சிவயோகமெனுங், குரு
க யறிந்து முகமா றுடைக்குரு நாதன் சொன்ன, கருத்தை
த்தி லிருத்துங்கண் டீர்முத்தி கைகண்டதே. 13

போக்கும் வரவு மிரவும் பகலும் புறம்புமுள்ளும், வாக்கும்
வு முடிவு மில்லாதொன்று வந்துவந்து, தாக்கு மனோலயந்
னதரு மெனைத் தன்வசத்தே, யாக்கு மறுமுக வாசொல்
ஞுதிந்த வானந்தமே. 14

அராப்புனை வேணியன் சேயருள் வேண்டு மவிழ்ந்தவன்பாற்,
ப்புனை தண்டையந் தாடொழல் வேண்டுங் கொடியவைவர்,
க்கறல் வேண்டு மனமும் பதைப்பறல் வேண்டுமென்று,
ப் பகலற்ற விடத்தே யிருக்கை யெளிதல்லவே. 15

கூர்கொண்ட வேலனைப் போற்றும லேற்றங் கொண்டாடு
ாள், போர்கொண்ட கால னுமைக்கொண்டு போமன்று பூண்
புந், தார்கொண்ட மாதரு மாளிகை யும்பணச் சாளிகையு,
ொண்டு போவரையோ கெடுவீர் நும் மறிவின்மையே. 16

யான்று னெனுஞ்சொ லிரண்டுங் கெட்டா லன்றி யாவருக்
தோன்றுது சத்தியந் தொல்லைப் பெருநிலஞ் சூகரமாய்க்,
ன் மருமகன் முருகன் க்ருபாகரன் கேள்வியினுற், சான்
மற்ற தனிவெளிக் கேவந்து சந்திப்பதே. 17

இராப்பக லற்ற விடங்காட்டி யானிருந் தேதுதிக்கக், குரா
ா தண்டையந் தாளருளாய் கரிகூப் பிட்டநாள், கராப்ப
ொன்றக் கரிபோற்ற நின்ற கடவுண் மெச்சும், பராக்ரம
ிருத் சங்கார பயங்கரனே. 18

## திருக்கருவைக் கலித்துறையந்தாதி.

அளியு மளிதரு மானந்தமாகி யளவிறந்த
களியு மிரண்டற்ற காட்சியுங் காட்டிக் கருணைசெய்தார்
வெளியும் பவனமுந் தீயுந் தண்ணீரும் வியனிலமு
மொளியொன் றியவுரு வக்கள வீச ருளத்திருந்தே. 1

உள்ளக் கமலத்தி னிற்கள வீசரென் னைப்பனையோ
டெள்ளத் தனையு மகலாக் குடிகொண் டிருளறுத்துக்
கள்ளக் கலரொடுங் கூடா தெளியனைக் காத்தளித்த
வள்ளற் குணத்தின் றகுதியை யேதென்று வாழ்த்துவனே. 2

உணங்குந் தவத்தர் கருத்திலும் வேதத்தி னுச்சியினு
மணங்கொண்ட சோலைக் கயிலாய வெற்பினு மாமறையோர்
கணங்கொண்டு போற்றிசெய் பொன்னம் பலத்துங் கருவையினு
மிணங்கும் பொருளொன் றிதயார விந்தத் திருக்கின்றதே. 3

விடத் தக்கதிந்த விடக்குட ஞானெனல் வேர்களைந்து
சுடத் தக்கதென்று மொழியா வெகுளி துரிசகற்றி
யடத் தக்கது மனச் சங்கற்ப நெஞ்சத் தகவயலி
னடத் தக்கதுகள வீசர்பொற் றாளென்னு நாற்றினையே. 4

அடைக்கில ரைந்து புலனையு நெஞ்சத் தழுக்ககலத்
துடைக்கிலர் தொண்டு புரியத் துணிகிலர் தூயபத்தி
படைக்கிலர் நின்புகழ் பாடிலர் கால படர்பிடித்துப்
புடைக்கி லென் செய்திடு வார்களவீச பொறியிலரே. 5

பாடுவ துன்றிரு நாமங்க ளைடொறும் பத்திசெய்து
சூடுவ துன்பொற் றிருவடித் தாமரை தொண்டுசெய்து
கூடுவ துன்னடி யார்திருக் கூட்டமக் கூட்டத்துட
னாடுவ துன்னிலை காண்கரு வாபுரி நாயகனே. 6

மன்றிடத் தேநின்று தாண்டவ மாடுவன் வான்கயிலைக்
குன்றிடத் தேயண்டர் போற்றிட நிற்பன் குறித்துமன
மொன்றிடத் தேதன்னைத் தானாகப் பாவிப்ப னுள்ளடியார்
கன்றிடத் தேயுத வுங்கருவேசன் கனல் வண்ணனே. 7

கொற்றக் கவிகை நிழற்றப் பொதுவறக் கோனடத்தி
முற்றப் புவனம் புறப்பவ ரோனு முகலிங் கர்தாஞ்

சற்றுத் திருவருள் கோடின ரேலத் தகுதி கெட்டுப்
பற்றற்ற கூழுங் கிடையா திரப்பரிப் பாரிடத்தே. 8

பொருள்காட்டி மாசற்ற போதமுங் காட்டியப் போதநல்கு, மருள்காட்டுச் சந்தத மானந்தங் காட்டி யடர்ந்தகங்கு, லிருள் காட்டும் பூங்குழ லொப்பனைபாக விருள றுத்துத், தெருள்கா ட்டிப் பாத மலர்சூட்ட வென்றலை சீர்பெற்றதே. 9

---

## திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி.

ஆறாக்காமக் கொடியகன லைவர் மூட்ட வவலமன
நீறாய்வெந்து கிடப்பேனை நின்றாள்வழுத்த நினைவுதந்து
மாறாநேயத் திரவுபகன் மறவா திருக்க வரமளித்தாய்
சீறாடரவ முடித்தசடைக் கருவை வாழுஞ் செழுஞ்சுடரே. 1

ஆண்டகுரவ னாவானை யல்லற் பிறவி யறுப்பானை
வேண்டும்பதவி தருவானை வெளிவீட் டின்ப மளிப்பானைத்
தூண்டல்செய்யா மணிவிளக்கைத் தொழின்மூன் றியற்றுந்
[தொல்லோனைக்
காண்டற்கரிய பேரொளியைக் களாவி னிழற்கீழ்க் கண்டேனே.

வேறு.

வானெரி யறல்கான் மண்ணெனப் பகுக்க வரும்பெரும் பூதமோரைந்து, மானமுக் குணமுங் கரணமோர் நான்கு மனைத்துமா யாகியீறின்றி, யூனுறை யுடலுக் குயிருமா யுயிருக் குணர்வுமா யொன்றினுந் தோயா, ஞானநா யகனே கருவையம் பரனே நானறிந் துரைக்குமா றெவனோ. 3

ஆதவன் மதிபா ரனல்வெளி புனல்கா லருமறை யெச்சனென் றெட்டுப், பேதமா முருவா யருவமாய் நிறைந்த பெற்றியா னுற்றநா னுன்னை, யேதினு முணர்வே னுணருமா றருளா யிளநிலாப் பசுங்கொழுந் தணிந்த, சோதியே கருவை யொப்பனை களபத் துணைமுலை தழுவுகாதலனே. 4

உடையமென் றுதம்மக்களை மனைவியை யொக்கலைப் பெரு வாழ்வை, யடையநல்குசீர் செழும்பொருண் முதலிய வனைத் தையு நினைப்பாரோ, விடையின் மேல்வரு திருக்களா நாயகன்

விரைமலர்ச் செழுங் கொன்றைத், தொடையல் வேணியா னடி யவர்க் கன்பொடு தொண்டுசெய் மனத்தாரே. 5

வேறு.

எவ்வ முற்ற திரிமல மிற்றது, செவ்வி ஞானத் திருக்கண் டிறந்தது, கொவ்வை வாயுமை கொண்கன் கருவையான், பௌவ நஞ்சமுண் டான்கழல் பாடவே. 6

பாடி னேன்புகழ்ப் பங்கயச் சேவடி, சூடி னேன்கரு வா புரிச் சோதியை, நாடி னேனவ னுனெனும் வேறறக், கூடி னே னடி யார்திருக் கூட்டமே. 7

என்னை யாள்பவ னென்னு ளிருப்பவன், றன்னை யான்றெ ழத் தண்ணளி தந்தவன்; பொன்னை யாளும் புயன்றொழ நின்ற வன், கன்னி பாகன் கருவைக் கிறைவனே. 8

வேறு.

கிடைத்தபொருள் காத்திருக்கக் கிடைத்திலவென் றயர் வார்போற், படைத்தநின தருள்பெற்றும் பெற்றிலர்போற் பரி வுற்றேன், முடைத்தலையிற் பலிகொள்ளு முகலிங்கா முகிழ்த்த நிலாச், சடைத்தலையாய் நின்மாயம் யானுணருந் தரத்ததோ. 9

உணராத நின்னிலையை நீயுணர்த்த வுணர்ந்ததற்பின், புணா ராத தாடலையிற் புணர்ந்துதெனப் புகழோங்கத், தணவாம லெ னையுனக்குத் தந்துருகி யிரண்டற்றேன், மணராசச் சிலம்பணி ந்த பழமறையெம் பெருமானே. 10

உறைவாய்நன் மனத்துன்ப ருடன்றூறு முயிராகி, நிறைவா யெவ் வுலகனைத்து நீக்கமிலா துணர்ந்தோர்க்கு, மறைவாயுய்த் துணரார்க்கு மறைபயிலுங் கருவையில்வா, ழிறைவாநின் றிரு விளையாட் டியான்வழுத்த வடங்காதே. 11

முத்திக்கு வித்து னடியார்கள் சிந்தை முளரிக் கருக்கன் மொழியெண், சித்திக்கு மூலந் தவயோகி கட்குத் தெளிகன்ன லூறுமிரதம், பத்திக்கு நித்த மருள்வீசு கொண்டல் களவீச னெங்கள்பரம, னத்திக்கு முன்னம் வரமேயளித்த கருவேச னம்பொ னடியே. 12

இருக்கினு நிற்கும்போது மிரவுகண் டுயிலும்போதும், பொருக்கென நடக்கும்போதும் பொருந்தியூண் டுய்க்கும்போது. முருக்கிதழ்க் கனிவாயாரை முயங்கிநெஞ் சழியும்போதுந், திருக்களா வுடையநம்பா சிந்தையுன் பாலதாமே. 13

சிந்தனை யுனக்குத் தந்தேன் றிருவரு ளெனக்குத் தந்தாய், வந்தனை யுனக்குத் தந்தேன் மலரடி யெனக்குத் தந்தாய், பைந்துண ருனக்குத் தந்தேன் பரகதி யெனக்குத் தந்தாய், கந்தனைப் பயந்த நாதா கருவையி லிருக்குந் தேவே. 14

தேவனே நின்னை யல்லாற் பிறிதொரு தேவை யெண்ணேன், பாவனை நின்னி னல்லாற் பிறிதொரு பற்று மில்லேன், யாவையுங் காட்டக் கண்டே னென்னுளே நின்னைக் கண்டேன், காவலா கருவை யானே யினிமற்றோர் காட்சி யுண்டோ. 15

சிறக்கத் தக்கது கருவையான் றிருவடி நேய, மறக்கத் தக்கது மற்றுள சமயத்தின் மயக்கந், துறக்கத் தக்கதிவ் வுடம்பையா னென்றுறு தொடர்பு, பிறக்கத் தக்கது சிவானந்த வாரியின் பெருக்கே. 16



## சுருதிசாரம்.

தேசிகன்றன் னடிவணங்கிச் சுருதிசாரத் திறனுரைப்பாஞ் சுகர்க்குபதே சித்திடுநால்வாக் கியங்கள், ஆசில்பிர பஞ்சமதே பிரம்மோஹ மேகமேவாத் வைதம்பிரம் மோஹமதற் கப்பாலாய்ப், பேசியபாவா பாவாதீதம் பிரம்மோஹம் பேசரிய சுவா நுபவாதீதம் பிரம்மோஹம், நாசமிலா திவைநான்கு வாக்கியங்கட்மை நாரதா தியர்நால்வர் நவின்றிட்டா ரன்றே. 1

வெறும்பழுதை யேபாம்பாம் விவர்த்தத்தாலு மேவுசுக துக்கமொன்ருய் விடலாற்பாலன், பெறும்பிதா வேயெனுமாரம்பத்தானும் பெய்தயிரும் பால்தானே யென்றுபேசல், உறும்பரிணா மத்தானு மொக்கத்தோன்றி லொன்றுறிலொன் றொழிக்குநித்தங் கூடாதத்தால், தெறும்புனலே யலையாமுற் பத்தியாலுஞ் செகம்பிரம்மோ ஹம்மென்று செப்பலாமே. 2

சொரூபமொன்றே பிரமமென்ப தெவ்வாறென்னிற் சுசாதிக விசாதிக சுகதபேதம், வருவதிலை யானுமபா வங்களுன்கும் வந்தனவா னுந்தோற்ற மனத்தாலன்றித், தவருதியானு மண்ணைத்தவிரப் பாண்டந்தானிலையானு மத்தோற்றந்தானுங்கானல், உருவலது வேறுபொரு ளில்லையானு மொன்றலது ஜகமிலையென் றுணர்த்துநூலே. 3

பாவாபாவா தீதம்ப்ரம் மோஹமேதாற் பழுதையின்றிப் பாம்புவராப் பண்பினானும், தாவாத வனுபவத்தி லிரண்டதானுந் தன்னறிவி லுரைப்பிலிரண் டாதலாலும், மூவாது தானவனு னுமாகா முன்னமிரண் டுளவானு மூன்றுய்நின்ற, தேவாகி லசத்துசடந் துக்கநீங்காத் திறத்தானு மிரண்டறுதல் சிவமேயான்மா. 4

தனித்தசுவா னுபவாதீதம் ப்ரம்மோஹமே தாற்றுனவனு யிருப்பதுவுஞ் சங்கற்பத் தானும், அனித்தமென விடிற்சூன்யமாதலானு மதுமறவா விடினினைவா யழிதலானும், இனித்தநிட்டை சாதனமா யிருத்தலானு மேதுமற்றுன் மூடமென்றே யியம்ப லானும், தொனித்த சுபா வமுங்கடந்த வதீதந்தானே சுயம்பிரகா சமதென்றே சொல்வர்தாமே. 5

---

## திருப்போரூர் சந்நிதிமுறை.

### செங்கீரைப் பருவம்.

ஐந்தொழிலு மெனதிவைக ளாகுஞ்சிருட்டிமுத லானமுத் தொழில்சடத்து, மறிவிடத் தோரிரண் டும்வினைக் கீடா யவற்றையுயி ரறியாமையான்,முந்திவரு தன்னையும் பிறரையுங் கருதிநனி முதிர்விழைவு வெகுளிமருவி, முன்னுசுக துன்பங்கண் மன்னியிரு வினைமேவி மூடப்பி றப்பிலாழும், பந்தமுறு முயிர்சுதந் தரமிலி சடம்பாச மானகரு விகண்முழுதுமே, பகருமற் றவைநடத் திடுமொருவ னினைவை பகுத்துன் சுதந்தரமறச், சிந்தனைசெய் பந்தமறு மென்றெனக் கருள்சுரவ செங்கீரை யாடியருளே, திமிரமல மகலவரு குமரசர வணமுருக செங்கீரை யாடியருளே. 1

வே று.

களவறு ஞானிக ளுளமலர் மீதி லெழுந்து றுங்தேனே, கடையனே மேவிய மலமற வோர்குரு வென்றே வந்தோனே, யளவறு சூரியரெனமயி லேறி யுவந்து ருங்கோவே, யகமுக மாயொரு சுழுமுனே சேர்பவ ரங்கே யுந்தேவே, யிளநில வாண கை யுறுகுற மாதை யியைந்தா ளுந்தோளா, வெழிலடியார்முத லனைவரு மேநசை கொண்டா ருந்தாளா, தெளிவுற வேயென தகநிறை பேரொளி செங்கோ செங்கீரை, திகழ்சம ராபுரி முருகச டானன செங்கோ செங்கீரை. 2

தாற்பருவம்

மூலநிலத்தில தோமுக மாய் முகிழ்த்து விழியின் பொடு துயிலு, மூரிப் பாம்பைக் காலனலே மூட்டி யெழுப்பி நிலமாறுஞ் சீலமொ டும்போய்த் தரிசித்துச் செழுமா மதியி னமுதகட, றே க்கி யகத்தங் கசைவறுமோர் தெய்வத் தவத்தோ ருளவிழியிற், காலுந் தீபமி னல்பந்தங் கடிகூர் விறிசு கதிர்மதிபோற், காட்டு மொளியா யிவையாவுங் கடந்தாங் கழிவில் பேரொளியாய்ச், சால விளங்கும் விந்துவெனுந் தடமா மயிலோய் தாலேலோ, தமரக் கடலைக் கடைந்தமுதந் தருவோன் மருகா தாலேலோ.

வே று.

அமரர் தமக்கன் றொருநாளிரணிய வணிவட வரைமீதே, யறைதரு மும்மா யையினு டுருவி யகண்டா காரமதாய்த், திமி ரமகற்றிய முச்சுட ருக்கொளி செய்கா ரணவொளி யாய்த், திக ழ்தரு புவன சராசர முழுதுஞ் செறிபூரண வெளியாய்க், கமை யுரு மனவா சகமொடு காயங் கண்டள விடவருநின், காட் சியை மாட்சிமை பெறமுன் காட்டிய கண்ணே யாவர்க்குந், தம ரென நிலவிய சமரபு ராதிப தாலோ தாலேலோ, சண்முக முக் கட் பண்ணவர் குருபர தாலோ தாலேலோ. 4

சப்பாணிப் பருவம்.

நனவில்வரு கனவிற் சுழுத்தியிற் பொறிகரண நற்புருட னிற்பகுதியு, நவில்கால பரமதில சுத்தமா யையும்விண்ணி னண் ணுபூ ரணமாயதோ, ருனலருவி யோமத் திருஞ்சுத் தவித்தை முத லொருமூ வகைக்கருவியு, மொருபரம துரியத்து விந்துவு

மிளிர்விசுவ முண்டதிசை யுயர்நாதமும், வினவனுறு முபசாந்த
மதனின்மா மாயையு மிகுசொருப மதனிலிருளும், விள்ளுமென
வுரைசெய்தெ னுள்ளமல மகலவருள் விழிவழிப் பொழியுமு
கிலே, தனபதியை யெனுவனென வுளமகிழு மரன்மதலை சப்
பாணி கொட்டியருளே, தடமலையை நிகர்கரிக டிரிசமா புரிமு
ருக சப்பாணி கொட்டி யருளே. 5

## வருகைப் பருவம்.

வட்டாட் டாகு மெங்கள்பவ மாற்ற வருக பொறிவேழும்,
வணக்க வருக மனமாவை மாய்க்க வருக மலச் சிறையை, விட்
டாட் கொண்டு மெய்ஞ்ஞானம் விளக்கவருக வியனருளே, மேவி
டாக்கி யெங்குநிறை மிளிர்பே ரின்பந் தரவருக, தட்டா திருந்த
சிவ மென்றுந் தானென் றிளைக்கு மயலகற்றித், தானேய துவா
யதுதானுய்த் தயங்கு மோனந் தரவருக, மட்டார் சோலைச் சமர
புரி வாழ்வே வருக வருகவே, மறையின் சிரமெய்ப் பொருளான
வள்ளல் வருக வருகவே. 6

## அம்புலிப் பருவம்.

புலன்மறுகு பொறியையுறு கமடமென வுட்கொண்டு பொ
ருமுக் குணங்கள் வென்று, பூரகமி ரேசகந் தாரகமெ னுந்தொ
ழில் புகன்ற காலிற் பயின்று, கலகமறு நடுநாடி சென்றுமுச்
சுடர்களின் கதிர்மண் டலங் கடந்து, கணபணு டவியுரகன்முடி
யிற் றுளக்கமறு கம்பத்தி னசைவற் றுளோர், மலவிரவு விடிய
மிடி துறவுணர்வு நசையறுதன் மலிகுணக் குன்றின் முடிமேன்,
மன்னுஞா னக்கதி ரெழுந்தொளி பரப்ப மாறுறு தசநாத முழு
து; மலகில்பவ துயிலறக் கூவுசே வலனுட னம்புலீ யாடவாவே,
யருமறையி னொலிநிலவு சமரபுரி முருகனுட னம்புலீ யாட
வாவே. 7

## சிற்றிற் பருவம்.

தேமாங் கனியி னடுப்ப மைத்துத் திகழுன் கழிந்த வலம்
புரியிற், செந்தே னுலைப்பெய் தரவின்ற செழுமா மணிவெங் க
னன்மூட்டிப் பூமா தளையின் விதையரிசி, புகட்டிச் சமைத்துக்
கதலிமடற், பொங்கப் பிழியு மதன்கனியும் பொருந்த வளவிக்
கறியட்டுச், காமா தவிப்பூம் பந்தரிடைக் கயற்கண் ணுய மிழைத்
தவண்டல், கருதும்புவன கோடியெல்லாங் கரந்தும் படைத்துங்

காக்குமொரு, சீமா னுனக்கோ ரிலக்கோசொல் சிறியேஞ் சிற்றில் சிதையேலே, தேரூர் விதிப் போரூரா சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 8

விதையா யிருக்கு மைந்தெழுத்தும் வேதா கமமு முத்தமிழும், விளங்குஞ் சரியா திகணான்கும் வீறு கியமெய்ச் சிவமதமுஞ், சுதையா தரிக்குந் திருநீறுஞ் சோதி நயனத் திருமணியுந் துகடீர் பத்தி விதிநெறியின் றொடர்புஞ் செடிதீர் மெய்யடியா, ரிதயா லயத்தைப் பிரியாதாங் கிருடீர் ஞான மணிவிளக்கு, மிலங்கு மவுனந் துளும்பாத வின்ப வளனுஞ் சந்ததமுஞ், சிதையா தளிக்கு மோரிறையே சிறியேஞ் சிற்றில் சிதையேலே, தேரூர் வீதிப் போரூரா சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 9

அடியார் நிமலத் திருவகத்து ளன்பு பொறுமை யவாவறுத்த, லடுப்பாங் கமைத்து மலக்காட்டத் ததிக ஞானக் கனன்மூட்டி, மடியா திருந்த வுயிர்க்கலசம் வழிய வருட்பே ருலைவார்த்து, மாறாப் பெருமைச் சிவானந்த மதுரச் சோறு தினம்பொங்கி, விடியாச் சிவ போதவிருள் வீய மவுனச் சுடர்விளக்கு, விளக்கி யிருந்த படியிருந்து மேலாஞ் சிற்றில் விளையாடுஞ், செடிதீ ரகத்தோர் புகழ்வாலை சிறுவா சிற்றில் சிதையேலே, தேரூர் வீதிப் போரூரா சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 10

## சிறுதேர்ப் பருவம்.

உலகினொடு சராசர மெவையுமா யொன்றினொடு மொருபற்றிலாத பொருளா, யுறுமறிவை யறிவிடத் தெழுகின்ற சிற்றசைவி னுயி ருலகு மயலில்பாமு, மிலகுமவை யெங்ஙன மெனிற்கருது மறிவொன்ற தெழுநினைவு சுட்டு பொருளென், றிவையோரிரண்டையு மிணைத்தும் பிரித்து மியக்கிவரு பொரு ளொன்றுமாங், கலகமுறு மந்தமினை யின்றுங்ன் முப்பொருளு மின்றுபரகதியு மிதுவே, காணென்று கடையேனை வாவென்று முடிமீது கஞ்சமல ரடிதரித் தென், சிலைமனங் கனிசெய்த குமரசற் குரவனே சிறுதே ருருட்டி யருளே, சிமயமொய்த் திமிமய மயில்வயிற் றுதயமணி சிறுதே ருருட்டி யருளே. 11

ஒருபொரு ளிடத்தினிற் சச்சிதா நந்தமுட னுருவநா மமுமுள்ளதென் றுரைதந்து முன்னர், பினருண்டாய் விளங்கியுறு

பிரியமாயுள மூன்றுமே, மருளிரிய வருமெய்ம்மை யுருவநா மம் பொய்ம்மை வன்பழுதை யுரகவுருவின், மாறு தறிந்திடுதி பின் பழுதை நன்று மதித்தவர்க் கரவின் மையி, னிருளறும் பிரமமே நிகழுமற் றொருபொருளு மெதிரிட் டிலங்கா தென, வேழ்பிறவி வாரிதியி லாழுமெனை வாவென் றெடுத்தரு ளளித்த குரவா, தெறுளுறுங் கலைமுனிவர் பரவுபோ ரூர்முருக சிறுதே ருருட்டி யருளே, சிமயமொய்த் திடுமிமய மயில்வயிற் றுதயமணி சிறுதே ருருட்டி யருளே. 12

அலங்காரம்.

சிற்றறி வொன்று நினைப்பொடு நித்திரை சேர்ந்தியங்கு
மற்றிவை நீங்கி லதுதா னெவைகளு மாகிநின்ற
வற்றமில் பேரறி வூடே கலந்திடு மாயவிதே
பற்றறு முத்தியென் றுன்சம ராபுரிப் பண்ணவனே. 13

உள்ளக் கவலை யெலாமொழிந் தேனெழி யாதுசெய்யுங்
கள்ளக் கருமங்கள் யாவும்விண் டேன்கலை வாணியுடன்
வள்ளக் கமல மலர்மாது தந்தருள் வாழ்வடைந்தேன்
றெள்ளத் தெளிந்தனன் போரூர் முருகனைச் சேவைசெய்தே.

வட்டாடல் போலப் பிழைப்பதுஞ் சாவது மாக்கியென்று
மொட்டாரஞ் செய்கின்ற மாயை யுணர்ந்து முணரவொட்டா
தட்டாவ தானஞ் செயுஞ்சீவ ரைப்பொய்மை யாயிருந்துங்
கட்டாணி யானமுத் தேசம ராபுரிக் காங்கெயனே. 15

ஆள்வேட்ட மாடு மயில்விழி மாத ரமைகடந்த
தோள்வேட்ட புன்னெஞ்ச மேயது சீவரைச் சூழ்ந்துகொண்டே
வேள்வேட்ட மாடுவ தாங்கே கல்போரி விசாகனிரு
தாள்வேட்டு நாடுதி மேல்வீட்டி லின்பந் தழைத்துறுமே. 16

மெய்வேடம் பூண்டவர்க் குள்ளும் புறனும் விளங்குபிரான்
பொய்வேடம் பூண்டன னென்றுலுங் காத்தனை பூங்கணையா
லெய்வேட னல்வருந் தாதெனை யாளினி யேய்ந்ததினை [லே.
கொய்வேட மானை மணந்தோய் தென்போரிக் குணக்கொண்ட

உள்ளுறு புன்னினை வெல்லா மொழிந்திங் குணர்வரிய
நள்ளிரு ளன்ன வஞ்ஞானமுந் தீர்ந்து நலனுதவுந்

தெள்ளிய பேரரு ளூடே கலந்தின்பு சேர்ந்திருப்பக்
கள்ளநெஞ் சேற்கும் வருமோ தென்போரியங் காங்கெயனே.

எல்லாப் பொருள்களுந் தானாகித் தானன்றி லேய்வதின்றாய்ச்
சொல்லாற் கருத்தாற் றற்சென்று கூடருஞ் சோதியதா
மல்லா ரணப்பொரு ளாயேற்கு மீயமதித்திகொல்லோ
நல்லார்க் கினிய குகனே தென்போரியென் னாயகனே. 19

மாலை.

இல்லறத்தா னல்லே னியற்கைத் துறவியல்லே
னல்லறத்து ஞானியல்லே னாயினேன்-சொல்லறத்தி
னென்றேனு மில்லே னுயர்ந்ததிருப் போரூரா
வென்றேநா னீடேறு வேன். 20

இன்போ ரனுவா யிடரதற்கு மாமலையாம்
புன்போகம் வேண்டிப் புலம்பாதே-யென்போடே
யுள்ள முருகவரு மொண்போரூ ரையனருள்
வெள்ளமுற நெஞ்சே விரும்பு. 21

மலைமுழையி லுற்றாலென் மாமருந்துண் டாலென்
கலைமுழுதுங் கற்றாலென் கானூ-ரிலையிலவு
வேல்பிடித்த கையான் வியன்போரூ ரையனிரு
கால்பிடித்தாற் காண்பார் கதி. 22

மறப்பு நினைப்பாகி வருதிரையெந் நாளும்
புறப்படா வின்பப் புணரி-யுறப்புகுந்தே
யாடிக் களிக்கு மருட்போரூ ரையனடி
கூடிக் களிக்குங் குழாம். 23

என்போத மின்பாலே யீதலே நல்லறனா
முன்போதங் கைக்கொள்வ தொண்பொருளா-முன்பாதத்
தானந்த மின்பமா மாரமுதே போரூரா
மோனந்தான் வீடாகு மொய்த்து. 24

சூக்குமையாம் வாக்குந் துனியா னவவுடனு
நீக்கரிய வென்போத நெஞ்சமே-போக்கி
யிருந்த படியிருக்க வென்றுபோ ரூரா
திருந் தவரம் பாலிப்பாய் செப்பு. 25

பாம்பாகத் தோன்றிற் பழுதைசற்றுந் தோன்றாதாம்
பாம்பின்றாத் தோன்றிற் பழுதையே-மேம்பாடாய்ப்
பொய்தோன்றின் மெய்தோன்றா போரூரா நின்னருளான்
மெய்தோன்றிற் பொய்தோன்றா வீடு. 26

கானலைநீ ரன்றென்று காட்டக்கண் டானொருவன்
மாநலநீ ரென்று மயங்கல்போ-னீநலமாய்ப்
பொய்யுலகம் பொய்யாகக் காட்டியும்போ ரூரானே
மெய்யெனவுண் ணேந்தேன் மிக. 27

பேரியகட்டியம்.

பவளமலை யுபயதிசை யருவிசொரி முறைகரட பரமவிப மகிழிளைய கோவே, தவளநிற முளகவள கரியின்மிசை சுரருலகு தழையவலம் வருமதிக தேவே, துவிதமய லறுமுனிவ ரெனுமளிகள் படியமிகு சுகநறவு பொழியுமொரு பூவே, குவடிலகு குறவர்தரு கொடியினொடு சமரபுரி குலவியருள் வாமுதவு காவே.

மறைகள்பல கலைகள்பல லிபிகண்முத லியவுதவு வளர்சொருப நிசப்ரணவ வொளியே, முறைமைதரு சரவசர வுயிர்கள்செயி ரறுபுவன முழுதுநிறை பரமசுக வெளியே, கறைகண்முழுவதுமுடுகி மிகவுநினை பவரிதய கமலமலா குடிபுகுது மளியே, பிறையறுகு நதியரவு சடிலமுடி யணிபரமர் பிரியமுற வொருசொன் மொழிகிளியே. 29

மலயநில வியமுனிவ னிடருந்தி யகலவவன் மனநினைவு கொடுதழுவு கலனே, கலைகடெரி பலகையுறை புலவனுறு சிறையைவிடு கதிர்கொளயி லுடையதெய் வகுலனே, நிலைமைநெறி யுளதெரிவை முருகவென வுரைதருமு னிலவியவள் கரமுதவ வலனே, தலைமைசெறி பிரமசுக மநுதினமும் விளையுமொரு சமரபுரி மருவுகதி நிலனே. 30

அரியமறை முடியினுறை பரமசிவை யகமகிழ வருகில்வரு தருணவள வுருவே, யிரவுபக லனுதினமு முயர்தயவி னினையுமவ ரிதயமலர் தனிலுறு மருவே, யுருவெனவு மருவெனவு மொளியெனவும் வெளியெனவு முனலரிய பொருளுதவு குருவே தரணியென விருளகல வறிவுதரு சமரபுரி தனிலுறையு மமரர்பணி தருவே. 31

திடகாட மலைபிளிற நொடியிலடு கரகமல திரிநயன வரியு தவு முருவே, வடகலைகண் முழுதுமள விடுமதிக பிரமனறி வரி யபிர ணவமுரைசெய் குருவே, யிடருதவு பவவுததி சுவறநினை தருமடிய ரிதயமெழு மினியசுக மருவே, படிககன ருரகர்முனி வரர்பரவு சமரபுரி பணியுமவ ரெணியதரு தருவே. 34

அகமுநடு முடிவுமுறு திசையுமெழு புவியுநிறை யறிவிலெ மூபரமசுக நறையே, தகுதிகுகு தகுதிகுகு தகுதிதரி கிடதிமி திதகுதியென நடனமயி லிறையே, பகர்கலைகண் முழுதுமள விடவரிய மிகநுணிய படிறுளமு நுழைவரிய மறையே, துகள கனு மறைமுனிவ ரனுதினமு நெறியொழுகு துதிசமர நகரறிவி ன்முறையே. 35

சுருதிகுரு வநுபவமெய் யொருமையினி லெணமருவு துக ளரிய வருளொளிசெய் கண்ணே, கருவிமுழு தையுநியதி களையு மவர் பரவியடை கனபுரண வறிவுதிகழ் விண்ணே, யிரவிசசி யன னயன விறைவர்செவி குளிரவரு மிசைதனினு மிகுமொழிசெய் பண்ணே, தருணவள முருகசர வணகுமர வெனும்மொழிக டழை சமர புரியிலுறை தண்ணே. 36

வண்ணத்தாழிசை.

ஓதுங்கலை யாவும்மன மோடாது நிறுத்தி யுன்பாத நிழற்கீ ழுற னுயர்நன் கெனவோத, வாதஞ்சொலி யேதஞ்சொலி மன மோடு சுழன்ற மதியின்றிய சிறியேனுனை வந்தண் டுவதென் றோ, தீதின்றிய குறநாயகி சேருந்திரு மார்பா சிவனார்தரு குமரா வுமை சிறுவாவரி மருகா, தாதொன்றிய வனசத்தட மீமதான் றிய வெகினந் தண்மாலையில் வண்காவடை சமரா புரியானே. 37

ஏனும்மன மோடிப்பொருள் யாதொன் றினைநாடி யிசை யிசையும்பொழு தேனும்மதை யெண்ணுது விடுத்துன், வேலுஞ் சிறை மயிலுங்கன தோளுஞ் சிறுதாளும் வீறுறருண் முகமும் முன வேண்டுஞ் சிறியேனே, கோலும்மறை நாலின்முடி மேலொ ன் றியதேவே குணகுஞ்சரி கோவேசுரர் கொண்டாடிய வாழ்வே தாலம்புக ழுணியேயென துயிர்நின் றொளிர்மணியே தவமானு றை கணியேநல சமரா புரியானே. 38

அத்தம்மன முதயஞ்சிறி தறியாரவி போலுன் னருளாகிய
ரவியென் னுள மகலாது நிறைந்தே, சித்தம்மல விருளும்பல தத்
தம்மெனு முடிவுஞ் சிறுபோத வெண் மதியும்மகல் சீரென் றினி
வருமே, நித்தன்மகிழ் தரவோர்மொழி யத்தம்புகல் குரவா
நீலக்கள பத்தோகைகண் மாலைப்புயல்கண்டு, தத்தாதிமி தித்தா
திகு தெய்த்தெய் யெனவாடத் தண்காவளி பண்பாடிய சமராபு
ரியானே. 39

மறையாதிய கலையோதிய வனசப் பெருமானு மண்ணுண்டு
வடத்தே துயில் பண்ணும்பெருமானு, நறையாரித ழித்தார்
புனை சடையெம் பெருமானு நாடிக்களி கூரத்தக ரேறித்திகழ்
வோனே, யிறையாகிய வளவாயினு மறவா துனைநாடி யின்பத்து
யில் கொள்ளும்படி யென்புத்தியி னிறைவாய், தறையாதியி
லுறைவோர்பணி சரணுபரி புரணு தண்ணுரளி யண்ணும்மகிழ்
சமராபுரியானே. 40

அவனோடவ ளதுயானெனு மலர்கா னலைநாடி யான்செய்
தனன் பிறர்செய்தன ரென்றின்பொடுதுன்பு, நவமாய்வரு தோ
றும் மிகு விழைவும் வெகுளியுமே நணிநீயுயி ருண்ணின்று நட
த்துஞ்செய னுடேன், பவவேலை கடத்தும்முன பாதத்துணை வ
ங்கம்பற்றத்திரு வுளம்வைத்தருள் பாலித்திடு கண்டாய், தவரா
சர்கள் கவிராசர்கள் புவிராசர்கண் ஞானோ தயராசர்கள் புடை
சூழ்தரு சமராபுரி யானே. 41

## மட்டுவிருத்தம்.

உவமையறு பவசலதி கடத்தியிம் மானிடப் பிறப்பினு திக்
கச்செய்து, நவமருவு முனதுபத நாடவைத்தா யதை மறந்தே
னுயினேனே, கவலையெலா மற்றுனது திருவடிக்கீ ழிருக்கவினிக்
கருணைசெய்வாய், புவனை கரதல மணியே போரூர்வா ழாறு
முகப் புனிதவேளே. 42

மயக்கமிடர் காணுநின் மலர்பாதப் பேரொளியில் வயங்கா
நின்ற, வியக்கமறு மானந்தக் கடல்படிவ தெந்நாளோ வேழை
யேனே, நயக்குமணப் பைம்பூவே நாகர்பர வியகோவே நறவே
காவே, புயற்கருணை பொழிதேவே போரூர்வா ழாறுமுகப் புனி
தவேளே. 43

ஊமர்கண்ட கனவினைப்போ லுரைப்பரிய சிவாநுபவ மு ணரா நின்ற, காமருளு னிகள்பரவு முனதுசே வடிநாயேன் கா ண்பதென்றோ, தேமருவு மலர்க்கூந்தற் றெய்வவிளம் பிடிநோ க்கஞ் சேருந்தோளாய், பூமகளுக் கணிகாட்டும் போரூர்வா ழா றுமுகப் புனிதவேளே. 44

கலிவிருத்தம்.

அயனுரறி வருமோர்மொழி யரனுக் கருளிபவா
மயறீர்பரி புரணத்திடை வைத்தின் றெனையாளா
யுயர்மாமறை முடிமீதினி லுறுகா ரணசுகமே
செயவேலவ போரூருறை தேவா குகவேளே. 45

பெருங்கழிநெடில் விருத்தம்.

மறையாகமத்தி னெறிப்படியே வணங்குமவரி னொருவன ல்லேன், மனுபோன்பு தழைத்துநினை வந்திப்பாரி னொருவனல் லே, னிறைவானினது புரணசுக நேசித்தவரி னொருவனல்லே, னீசனேனின் றிருப்பாத நிழற்குமுரித்தே னுவேனோ, சிறையார் தோகை மிசைதோன்றுந் தேவேயமரர் பணிகோவே, சிவனார்பு யத்தி லணைத்தேந்துந் தெய்வக்குதலை மொழிக்குருந்தே, பொ றையாலுயர்ந்த பெரியோர்கள் புந்திச்சுவையாரு செந்தேனே, புனிதநிறைந்த செவ்வேளே போரூர்முருகப் பெருமாளே. 46

எண்ணிலாத நெடுங்கால மெண்ணிலாத பலபிறவி யெடுத் தேயிளைத்திங் கவைநீங்கி யிம்மானிடத்தில் வந்துதித்து, மண் ணின்வாழ்க்கை மெய்யாக மயங்கியுழன்று லடியேனுன் மாறுப் பெருமை தரும்பாத வனசத் துணையென் றடைவேனே, கண் ணின்மணியே யுயிர்க்களியே கருணைப்புயலே சுகக்கடலே, கச் சித்தா யுச்சியைமோந்து கண்ணு டணைக்குந் திருத்தாளா, பு ண்ணியோ ரெண்ணிய கரும்பே பொழி மும்மத வாரணமுகத் தோன் பொற்பார்துணையே யற்புதனே போரூர் முருகப் பெரு மாளே. 47

சீலமிகுந்த பத்திநெறி தினமுமாறு நடையினராய்ச், செனு த்தாநெறியிற் பொறிவழியிற் செல்லாதிருந்த வுளத்தினராய்க், கோலஞ்சிறந்த படியேநற் குணமுஞ்சிறந்தோ ராகியுனைக், கூடு

மடியார் போலெனையுங் குறித்தாட் கொண்டாய் நீயன்றே, நா
லுவேதந் தொழுதேத்து நாதமுடியிற் பேரொளியே, நம்புமடி
யார்க் கின்பமெல்லா நல்குந்தேவே கயவர்தமைப், போனுந் திரி
ந்தே னுளம்புகுந்த போதானந்தப் பெருங்கடலே, புவியீடேற
மயிலேறும் போரூர்முருகப் பெருமாளே. 48

தனுவோடிலகு கரணமுடன் சாரும்போக புவனமிவை,
தமையானெனதென் றுணர்ந்துமய றழைத்துத் தருக்கோடுழல்
கின்றே, னுனதாமவைகண் மாயையிடை யுதிக்கச் செய்தாய்
நீயதனு, னுள்ளவாறிம் முறைமைதனை யுணராச்சிறியே னுய்
வேனோ, பனகாபரணர்க் குபதேசம் பாலித்தருளும் பரகுரவா,
பைந்தார்க்கூந்தற் றெய்வானை பரிந்துமகிழ வருகணவா, புனை
பாமாலை தரித்தேத்தும் பொருவிலருண கிரிநாதன், புகழ்வீட்
டின்பம் பெறவுதவும் போரூர்முருகப் பெருமாளே. 49

மன்னராவா ருறுசுகமும் வானோர்மகிழ்ந்து பெறுசுகமு
மணிப்பைந்நாகத் தவர்சுகமு மற்றையோர்க ளடைசுகமும், பன்
னுமிடத்திற் சிவத்தெழுந்த பரமானந்த லேசமெனப், பகர்ந்தா
ய்குருவா யெழுந்தருளிப் படிறேன்மறந்திங் குழல்கின்றேன்,
கன்னலெழுந்த தெளிசாறே கட்டிமாவின் றீங்கனியே, கதலிக்
கனியே நற்பலவின் கனகச்சுளையே கதிமுளையே, பொன்னம்
பொருப்பே யென்விருப்பே போதச்சுகமே கிஞ்சுகமே, புரண
வெளியே யுள்ளொளியே போரூர்முருகப் பெருமாளே. 50

அலையிலாத சாகரம்போ லனிலஞ்சேரா விளக்கதுபோ, ல
ருங்கலிரும்பொன் சமமாகி யானதராகி னுனியதுபோ, னிலை
யொன்றியநற் சமாதியுற்று நின்றுட்கமலத் தெழும்பிரச, நிறை
வாரிதியிற் புகுந்ததனி னேசித்தடியே னிருப்பேனோ, விலையின்
மகுடத்திருமுடியாய் மிளிர்குண்டலங்கள் செறிகாதா, வியன்
கேயூரத் திருத்தோளா விஞ்சுஞ்சதங்கை சூழ்தாளா, புலையுங்
கொலையுங் களவுமில்லாப் புனிதத்தவத்தோர் தொழுதேத்தும்,
புராரிகுமரா வுமைசிறுவா போரூர்முருகப் பெருமாளே. 51

குயிற்பத்து.

அரிவைபாரனவரு காகத்திரள்களை யணுகேன் மயலெனு
மலகானலியு, மிருமிதி சுதரெனு மேகமெழுந்திக் கெய்தேல் கவ

லைத் திவலைகள்வீசும், பொருவரு சமயக் காடணுகேறற் போத முரத்தெழு வாதமலைக்குங், குருபரனுநம் போரூரிறையைக் கூவாய் வரநீ! கூவாய்குயிலே. 52

கயவர்க ளெனும்வல் லூறுகளிக்குங் காடணுகேறீ துகிருடறைக்கு, மயன்மிகு முலகவர் வாழ்வெனு மொட்டினைமதியே லதுமதி வன்சிறைபற்று, முயுநெறி யினராங் கிள்ளைக ளுடனே யுயர்நூற் கற்பக தருவிலிருந்து, குயின்மணி மாடப் போரூரிறையைக் கூவாய் வரநீ கூவாய்குயிலே. 53

பற்பல் விதப்பூச் சோலைபுகாதே பரிபூரணமா மேகச் சோலையிலெற்பெற நீயெந் நாளும் மகிழ்ந்தங் கிதுவதுவென் றெனுறையுநாடாமே, செப்பமதாய் நின்னையுநா டாமே சீரருளே வடிவாகியிருந்து, குப்புகழ்போரூ ரப்பனைநாடிக் கூவாய் வரநீ கூவாய்குயிலே. 54

விடையக் கண்ணியி னிற்புகுதாதே மிகுபொறியென்பது பொறியதைமேவே, உடலப்பஞ்சர மியானென மகிழே லோதுந் திசைமே விப்பறவாதே, மிடையிற் சித்திர நற்புள் ளதுபோன் மிளிர்பூ ரணமா மீதிலிருந்து, கொடைமிக் குதவிய போரூரிறையைக் கூவாய் வரநீ கூவாய் குயிலே. 55

இன்றைக் கெனவுந் நாளைக்கெனவும் மெண்ணேன் மயிலிறை யின்னமு தூட்டும், பொன்றப் படுசுக துன்புகளுன்னிப் பூரிப்பொடுவாட் டங்களுறாதே, யொன்றைக் கருதியி தென்னதெனுதே யுயர்கதி யின்பைக் கருதிக்கருதிக் ,குன்றைப் பொருதடு போரூ ரிறையைக் கூவாய் வரநீ கூவாய் குயிலே. 56

நிராசை யுடனரு ளேவடிவாயக் நின்மலனிருசே வடிநிழறங்கிப், புராதன மாய்நிக ழூறுமானந்தப் பொங்கு ரசச்செங் கனி நனிதுய்ப்பப், பராபரனேகுக னேமயிலோனே பண்ணவனே விண்ணவனே யென்று, குராவணி வேலனைப்போரூ ரிறையைக் கூவாய்வரநீ கூவாய் குயிலே. 57

கிளிப்பத்து.

கன்னிய ரிருவோர் நாயகனைக் கமலக் கண்ணன் மருமகனை மின்னிய வடிவே லுடையவனை வீரனை யாரினுந் தூயவனை

யன்னிய மில்லா தெங்குநிறை யாரண ணேப்பரி பூரணனேப்
பொன்னியன் மாடப் போரூர்வாழ் புண்ணிய னேக்கிளி பன்னு
தியே. 58

கட்டளைக்கலிப்பா.

கனவிலேகண்ட காட்சிகள் யாவுமக் கனவிற் பொய்யெனக் கண்டுதனைக் கண்டோன், பினையு மந்தக் கனவினை மெய்யெனப் பேணு மாறு மயங்கினேன் பேதையே, னனையுந் தாதையு மாரி யனும்மெனை யாண்ட தெய்வமு நீயெனநம்பினேன், றனைவி டே னுன்றன் சித்தமென் பாக்கியஞ் சமர மாபுரி சண்முக வேலனே.

பழுதை பாம்பல வென்றொளி யாற்கண்டும் பாம்பு வாதனை தீராத வனென, வெழுமுன் சிற்சுக நின்னரு ளாற்கண்டு மிந் நிலப் பொய்ம்மை வாதனை நீங்கிலேன், முழுது ணர்தன் முத லாய வெண்குண மொய்த்த பஞ்சர மேமறை யுச்சியே, தழுவு வெண்சுதை மாளிகை நீடிய சமர மாபுரிச் சண்முக வேலனே.

பிரண வத்தை விடவக ராதிய பிறங்கு றுத பரிசெனப் பே தமா, முரண வித்த சொரூபம்விட் டிவ்வுயிர் முதல வின்றென வென்றனக் கோதினை; யரணெ ரித்தவன் மைந்தநின் றுட்டுணை யண்டி னேற்கு மவித்தையுண் டாகுமோ, தரணி யைக்கண்ட பேர்க்குமிரு ளுண்டோ சமர மாபுரிச் சண்முக வேலனே. 61

இந்த்ர ஜாலம் பொய் யென்றதன் மூலத்தை யியம்பிக் கா ட்டக்கண் டோன்மயக் கெய்தல்போற், பந்தனு லம்பொய் யெ ன்றிதன் மூலநீ பகரக் கண்டும் படிறேன் மயங்கினேன், கொந்து லாவிய கொன்றைச் சடாடவிக் குகழ னுக்கழ கானகு மாரனே, சந்த னுடவிச் சாரல் விரைதருஞ் சமர மாபுரிச் சண்முக வேல னே. 62

பளிக்கு மண்டபத் தேயுறு நாயதன் பன்னி றற்குளு மெய் யென நாடல்போ, லொளிக்கு மாயையி னின்றெனை யெண்ணி லா வுருவ மாக்கண் டுழன்றன னையனே, வெளிக்கு ளேவிளை யுஞ்சுக வாரியே வித்தி லாதெழு சுத்தசொ ரூபமே, தளிர்க்கை யார்கண டிக்கின்ற மாடமார் சமர மாபுரிச் சண்முக வேலனே.

விண்ணிலே யெழு மிந்திர சாபத்தை மேக மின்னலை யொ ன்றெழு காயங்க, ளெண்ணி லாத வெடுத்திளைத் தேனையென்

றின்ப வ ாரியில் வைத்திளேப் பாற்றுவாய், கண்ணி லேகண்ட சித்தொளிக் காட்சியே கருத்தி லேகண்ட வின்பசந் தோடமே தண்ணி லாமுடி வேணியர் செல்வமே சமர மாபுரிச் சண்முக வேலனே, 64

கோச்சகக்கலிப்பா.

பேராத சுத்தவெளிப் பேரின்ப சாகரத்தே
யோராத நாயே னிருப்பதினி யெந்நாளோ
வாராருங் கொங்கையுமை மடிமேலுந் தோண்மேலுஞ்
சாரா வளருஞ் சமரபுரி நாயகமே. 65

காட்டுவதுங் காண்பதுவுங் காட்சியும்போய் நின்றவின்ப
வீட்டினிடைத் துயின்றே வேசறிக்கை தீர்வேனே
மாட்டின் மிசையேறு மகதேவர் சேயேநின்
றாட்டிணையே தஞ்சஞ் சமரபுரி நாயகமே. 66

காமர்குறப் பெண்மானுங் காமுறுதெய் வப்பிடியுங்
கோமளவீ ராறுபுயக் குன்றிலுறச் சேர்ப்போனே
யோமெனும் வித்துள்ளே யுதித்ததரு வேயெனையுன்
தாமரைத்தாட் சேராய் சமரபுரி நாயகமே. 67

விருத்தக்கலித்துறை.

உனலரு மன்பினர் நினையும படிவமதுடையோனே
நினைவு கடந்தவ ரறிவெழு சுகமாய் நிறைவோனே
யெனையு மொரன்பின னெனவுந் திருவுள மெண்ணுதியோ
தனபதி யளகையி னிலவிய சமரப் பதியானே. 68

உலகுயர் பரமுயர் சிவமிவை யாவையு மொன்றாக
நிலவிய சொரூபம தலதிலை யென்று நிகழ்த்தியவா
விலகிய வதனிடை யசைவற வுறைகுவ தென்றடியேன்
றலமகிழ் தருபுகழ் பெருகிய சமரப் பதியானே. 69

அட்டகம்.

திருவும் வெளேமுள ரியினி லுறைதரு தேனு மாதவ ஞானமு
மருவ விழிவழி கருணை பொழிதரு மாகர் சேவித மேகமே
யுருவுமருவமு மொளியுமிருளுமி லொன்றதாம்பொருளென்றுநீ
தருதி யெனதுள நிறைய வளமுள சமர மாநகர் வேலனே. 70

அறிவொட றிபவ னறிய வருபொரு ளடைய வொருபொருளாகி
பிறிவு சிறிதுமின் மவுன மாகிய பேசருஞ்சுக மானவா [யே
நெறிகொ ளுனதரு ளுததி பெறவெனை நினைதிதிருவுள மதனிலே
தறுக ணரவணி பரம னுதவிய சமரமா நகர் வேலனே. 71

குருங்கழில்நெடில்விருத்தம்.

பகலுட னிரவு மிடையினு முனது பாதப்பே ரொளியிடைப்
புகுந்து, சகலகே வலத்தின் முக்கற வடியேன் றகுசுகத் திருக்
குநா ளுளதோ, ககனர்த மரசே கதிதரு தருவே காரணக் கரு
ணைவா ரிதியே, மிகுகுணக் குன்றே யதிவளப் போரூர் வீறிவா
மூா றுமா முகனே. 72

ஓதியு முணர்ந்தும் பிறர்தமக் குரைத்து முளமுதற் முன
டங்காத, பேதையிற் பேதையா ரிலரென்ற பெரியவர் சொற்கிலக்
கானேன், கோதறுமாறு கொடுமுடிப் பவளக் குன்றமொத் தி
லகுகட் டழகா, வேதகோ டங்கண் முழங்கிய போரூர் வீறிவா
மூா றுமா முகனே. 73

அரணியைக் கடைவோன் கனலெழு சமயத் தங்கையே
மாறிவிட் டாங்குப், புரணபே ரின்ப மெழுதரு வாயிற் பொருந்
துநின் பதமறந் திளைத்தேன், மரணவுற் பவத்தின் மறுகுறு தெ
னைநின் மலர்ப்பதஞ் சேர்த்திட நினையாய், விரிகதி ரொறிக்கும்
வேலனே போரூர் வீறிவா மூா றுமா முகனே. 74

எங்குமென் சொரூப சச்சிதா னந்த விலகொளி யிருந்திடு
மதனுட், டங்குபல் பொருள்கள் கானலிற் சலம்போற் றமுறும்
வேறிலை யென்றே, பொங்கருட் குருவாய் வந்துநீ யளித்தும்
புலையனேன் மயங்குறு கின்றேன், வெங்கதிர் விலக்குந் தண்ட
லைப் போரூர் வீறிவா மூா றுமா முகனே. 75

காமவேள் கணையா லுளங்கலங் காதுன் கனைகழற் கமலத்
தா ளிருந்த, சேமவா னந்த வாரிதி படிந்து சிறியனேன் வாழு
நா ளுளதோ, பூமணம் வீசுங் கூந்தலங் கவுரி பொருப்பன தன
த்தமு துண்டோ, யோமெனும் பதத்தி னருத்தமே போரூ ருத்
தமா சத்திவே லவனே. 76

இராவொடு பகலு மெழிலுறு சமாதி யியல்பொடு கூடிவீ
ட்டிருந்து, விராவுபே ரின்ப வமுதயின் றடியேன் வினைந்துயர்
மறக்குநா ளுளதோ, வராவணி வேணித் துகிர்க்கொடி படரு ம
ருட்கடற் பிறந்தவா ரமுதே, தராதல முழுதும் புகழ்திருப்
போரூர்ச் சரவண பிரணவப் பொருளே. 77

ஒருபொரு ளிடத்தும் விழைவொடு வெருளி யுருதெலாஞ்
சமமதாக் கண்டுன், றிருவடி நிழற்கீ ழசைவற விருந்து சிறிய
னே னென்றிளைப் பறுவே, னருணணி சுரக்கும் பனிமலைப் பிற
ந்த வங்கொடி தந்தசெங் கனியே, தருண மாருத முருகனே
போரூர்ச் சரவண பிரணவப் பொருளே. 78

கலைபுகழ்ந் தோதுங் கற்பெலா நிறைந்த கன்னிய ரிருவர்
பான் மகிழ, நிலைபெறு மயூரப் பரிமிசைத் தோன்று நிறைபரி
பூரண சுகமே, யிலையுள தென்னுமிரண்டுமத் தியத்தி னெழு
சொரூ பத்தெனை யிருத்தாய், தலைமைகொ டவத்தோர் நிலவிய
போரூர்ச் சரவண பிரணவப் பொருளே. 79

மனவழுக் கனைத்து மாறிநின் மலமா மனத்தனாய் நசை
சின மறந்து, கனபரி புரண சுகக்கடல் படியுங் காலமுஞ் சிறிய
னேற் குளதோ, வுனலரும் பொதியத் துறுகுறு முனிவ னுள
மகிழ்ந் திறைஞ்சுபொற் சரண, தனபதி யளகை வளனுறு போ
ரூர்ச் சரவண பிரணவப் பொருளே. 80

யாவரு மறியா வறிவெலா மறிவுக் கறிவதா யிருந்தறி வித்து,
மேவருட் குருவாய் வந்தறி வளித்தும் வினையனேன் றெளிந்தில
னந்தோ, சேவலங் துவசம் பிடித்தசெங் கரனே திகழ்தரு சடா
நநக் களிறே, தாவிய தகரப் பரியனே போரூர்ச் சரவண பிரண
வப் பொருளே. 81

நெஞ்சகத் துள்ளும் புறனுமாய் நிறைந்த நின்பரி பூரண
நினைந்து, வஞ்சகச் சகப்பொய் யனைத்தையு மறந்து வாழுநா
ளெந்நா ளடியேன், செஞ்சடைக் குழக னஞ்செவிக் கமுதாத்
திகழ்மறை முடிவினைப் புகன்றோய், தஞ்செனப் பணிவோர்க்
கருடரும் போரூர்ச் சாவண பிரணவப் பொருளே. 82

கணப்பொழு தெனினு மறக்கிலா தென்றுங் கனபரி பூரண வறிவிற், பிணக்குறு மனமு மவித்தையுங் கடந்து பேதையேன் கலக்குநா ளுளதோ, மணத்தசெங் கழுநீர் மாலைதாழ் புயத்து வள்ளலே யுள்ளுவோர்க் கமுதே, தணப்பருங் கருணை தருந்திரு ப்போரூர்ச் சரவண பிரணவப் பொருளே. 83

இரவொடு பகலு மிரவொடு பகல்க ளின்றிய வீட்டினி திருந்துன், குரவணி பாத கமலமீ தெழுந்த குளிர்நறு வெள்ள மென் றடைவேன், மரகத வொளியேய் பருமயி லேறு மன்ன வா வென்னுயிர்த் துணைவா, கரவறு முளத்தோர் நிலவிய போ ரூர்க் காங்கெயா தேங்கொளி மணியே. 84

மனநினை வனைத்து மொழிந்துமூ டமும்போய் மன்னுநின் னருளொளி புகுந்தாங், கினனிற வயிரக் கிரியென வசைவற் றிருக்குநா ளெந்தநா ளடியே, னனைமலர்க் கூந்தற் கவுரிகண் டுவப்ப நகைமுக மலர்ந்தெதிர் வருவோய், கனவினஞ் சுரந்து பொழிதிருப் போரூர்க் காங்கெயா தேங்கொளி மணியே. 85

கன்றெரு குணிலா விளவெறிந் தவற்குக் காதன்மீக் கொள வருமருக, வென்று நன்மாரி தந்துநீ யெம்மை யெழிலுடன் கா ப்பதுன் கடனே, நன்றுதீ தென்ற பொருளெலாங் கடந்த ஞான வீ டுதவுசற் குரவா, குன்றுதோ றுட லுவந்தவா போரூர்க் கும ரனே யமரர்நா யகனே. 86

அறிவுதன் னினைவிற் கலந்துறு போதி லரும்பர முயிர்சக முளவாம், பிறிவிலவ் வறிவந் நினைவினை யகன்றாற் பேதாபே தங் களொன் றின்றி, நெறியுறத் தானே தன்னிடத் திருக்கு நிச்சய மென்றெனக் கிசைத்தான், பொறிமறு மார்பன் மருகவே ளொ னையாள் போரிவா ழாறுமா முகனே. 87

நினைவறி வெனவிவ் விரண்டினை விரித்து நிகழ்த்துறுஞ் சுரு தியீண் டிவற்றி, னினைவிரண் டாகும் பரனினை வெனவும் நில வுறு முயிர்நினை வெனவும், புனைபர நினைவு சகமுயிர் நினைவு புரி ந்ததைப் பிடிக்குமென் றிசைத்தான், புனையரும் பாரஞ் சொரி தரு நெய்தற் போரிவா ழாறுமா முகனே. 88

பரனது முகத்திற் குலகுபொய் சீவன் படிற்றுளக் கினுக் கது மெய்ம்மை, திரமுறு சாட்சி தானெனச் சீவன் றெரிந்தி டிற் பரன்மன மிவற்காம், விரவிய சகமப் போதுபொய் யாகி விளங்குறு மென்றெனக் கிசைத்தான், புரமெரி செய்தோ னுவ ந்துபெற் றெடுத்த போரிவா ழாறுமா முகனே. 89

அறிவினை நோக்கி லுயிர்வய மாகு மகமனஞ் சகத்தையவ் வுயிர்தான், பிறிபட நோக்கின் மனத்தினின் வயமாம் பிறப்புமீ திதன்வயப் படாது, நெறியுறு மறிவின் மிகப்பரி சிக்கி னினைப் பருங் கதியுமீ தென்றான் பொறிமயி லேறுஞ் சேவக னெனையா ள் போரிவா ழாறுமா முகனே. 90

ஏதொரு நினைவிங் கெழுமது மனமீ தெனதென வருமிதன் மூலந், தீதறு மூல வகங்கர மீதியா னென்றெழுஞ் செப்புமிங் கிவைக்கு, மூதிரு ளவித்தை மூலமீ தகன்றான் மொய்யறி வென வெனக் கிசைத்தான், போதக மார்க்கும் புகன்றமெய்க் குரவன் போரிவா ழாறுமா முகனே. 91

சச்சிதா னந்த மெனும்பெயர் மூன்றிற் றழுவுமா வரணமூ ன்றிவைதா, நிச்சய வறிவாற் சமாதிஞா னத்தா னிகழ்வுறு சக சஞானத்தா, லச்சமின் றகலு மிவற்றினை யறியென் றருட்கட னிறைத்தெனை யளித்தான், பொய்சழக் ககன்ற மனத்தினர் நினைக்கும் போரிவா ழாறுமா முகனே. 92

சுருதியின் றுணிவா னினைவுகொண் டுலகந் துச்சமென் றுணர்த னிச்சயமாங், கருதுறு நினைவை யடக்கியிவ் வுலகங் கானலென் றுணர்ந்திடல் சமாதி, யிருவகை யாய்முன் னுரைத் தவை யின்றி யிலங்கறி வுருவமா யிருத்தல், பொருவறு சகச ஞானமென் றிசைத்தான் போரிவா ழாறுமா முகனே. 93

நிச்சய ஞானஞ் சமாதிஞா னங்க ணிராசையார் மனத்தி னிற் கலங்கா, தெச்சமென் றிருக்கு மாசையார் மனத்தி லிரண் டுஞா னங்களுங் கலங்கு, நச்சுதல் வெகுளி யின்றிய சகச ஞானி க ணசையுளர் போலப், பொய்ச்சகத் துறினுங் கலங்குறு ரென் றான் போரிவா ழாறுமா முகனே. 94

சித்தொரு நான்கிற் பிரமங் கூடத்தன் செப்பு மாயா ரகி தங்கண், மத்தமி லீச னுயிர்கடா மாயா சகிதங்கள் வழுத்துமிவ் வீசன், சத்தெனுந் தன்னை மறப்பிலா மையினுற் றருகதி தேடிலன் சீவன், பொய்த்தலில் வீடு தேடுமென் றிசைத்தான் போரிவா ழாறுமா முகனே. 95

ஓதுரு நாம மியானென தசுத்த முயர்ந்துள சுத்தவா தனைக, ளாதிய திரோத மனுக்கிர கித்தா லாக்கைவாக் கியக்க வாதனைக, ளேதமில் காட்சி காண்பவ னென்ற விவற்றுளோர் வகுப்பினுன் மனத்தின், போதமி னினைவைப் பகுத்தடக் கென்றான் போரிவா ழாறுமா முகனே. 96

பொறிவழி விடய மறிகன வதனிற் பொருந்திய வாதனை மிகவுஞ், செறிதரு கரண நான்குறுங் கனவிற் றியங்கிமற் றிவை யெலா மிறந்த, நெறியறு மவித்தை யிருளுறுஞ் சுழுத்தி நிலையினி லறிவறத் துயின்று, மறுகுறு கின்றே னென்றனை யடைவேன் மலிசம ராபுரிக் குகனே. 97

நேரிசை வெண்பா.

வேதாந்தச் சென்னிமிசை யிருக்குந் தெய்வமே
போதானந் தச்சுடரே புண்ணியனே-நாதாந்த
வின்பத்தைக் காட்டி யெனையளிப்பாய் போரூரா
துன்பத்தை யெல்லாந் துடைத்து. 98

சும்மா விருவெனநீ சொல்லப் பொருளொன்று
மம்மா வறிந்திலமென் றன்றுரைத்த-வெம்மா
னருணகிரி நாத னநுபவநா யேற்குக்
கருணைபொழி போரூரா காட்டு. 99

மன்னுயிர மத்தில் வாழுபினு சத்தியிடத்
துன்னும் பிஞசத்தி யுண்டதனிற்-றுன்னு
முலகுண் டதனை யுளம்பிடிக்கு மென்று
னிலகும் போரூர்வா ழிறை. 100

அறிவைவிடத் தோன்றிடா தம்புவியு நெஞ்சுஞ்
செறியறிவால் நில்லென்று செப்பிப்-பிறிவறவென்

னெஞ்சைத் திருத்தி நிறையவைத்த போரூரன்
கஞ்சத் திருத்தண்டைக் கால். 101

தீனமனம் போக்கிச் சிறியேனுக் குன்றூருக்
கானமனந் தந்தென்னை யாளுவாய்-ஞானபர
முத்தா நம்போரூர் முருகாவென் னுருயிருக்
கத்தா கருணு லயா. 102

ஆனந்தத் தேனிருக்கு மாறுமுகக் கற்பகமே
யீனந்தீர் போத விரவியே-தேனுந்து
நீபத் தொடையாய் நிகழ்போரூ ரையாவென்
ரூபத் திரயந் தவிர். 103

மாதர்யம னுமவர்த மைவிழியே வன்பாசம்
பீதிதரு மல்குல் பெருநரக-மோதிலதில்
வீழ்ந்தோர்க்கு மேற விரகில்லை போரூரைத்
தாழ்ந்தோர்க்கு மில்லை தவறு. 104

ஈரிரண்டு தோண்முக்க ணீசனரு ளாறுமுக
னோரிரண்டு தாளை யுறமேவி-னோரிரண்டு
வாழைக் கிடையிருந்த வாளரவின் வாய்ப்படார்
பீழைக் கிடைவருந்தார் பின். 105

## விருத்தக்கலித்துறை.

ஊனை யிகழ்ந்து மூனை மறந்து முழல்வீர்காண்
மோன சுகஞ்சும் மாவரு மின்றென் மொழிநாடிக்
கானில் விளங்கு மாமயி லன்பன் கதிர்வேல
னவர் துன்றும் போரியை வந்திங் கடைவீரே. 106

வேக துரங்கஞ் சேனை கலிங்க மிளிர்பூண்மா
நாக படங்கொண் மாநில நெஞ்சி னசையீர்கா
லோக மெனுஞ்சொல் லோர்பொரு டந்தங் கெனையாள்வோ
னாகமம் விஞ்சும் போரியை வந்திங் கடைவீரே. 107



## மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழ்.

### செங்கீரைப் பருவம்

சுற்றுநெடு நேமிச் சுவர்க்கிசைய வெட்டுச் சுவர்க்கா னிறுத்தி மேருத் தூணொன்று நடுநட்டு வெளிமுகடு மூடியிரு சுடர் விளக் கிட்டு முற்ற, வெற்றுபுன லிற்கழுவு புவனப் பழங்கல மெடுத் தடுக்கிப் புதுக்கூ ழின்னமுத முஞ்சமைத் தன்னைநீ பன்முறை யிழைத்திட வழித்த ழித்தோர், முற்றவெளி யிற்றிரியு மத்தப் பெரும்பித்தன் முன்னின்று தொந்த மிடவு முனியாது வைகலு மெடுத்தடுக் கிப்பெரிய மூதண்ட கூடமூடுஞ், சிற்றில்விளை யாடுமொரு பச்சிளம் பெண்பிள்ளை செங்கீரை யாடியருளே தென்னற்கு மம்பொன்மலை மன்னற்கு மொருசெல்வி செங்கீரை யாடியருளே. 1

### முத்தப் பருவம்.

காலத் தொடுகற் பனைகடந்த கருகூ லத்துப் பழம் பாடற், கலைமாச் செல்வர் தேடிவைத்த கடவுண் மணியே யுயிராலவா லத் துணர்வு நீர்பாய்ச்சி வளர்ப்பார்க் கொளிபூத் தருள் பழுத்த, மலர்க்கற் பகமே யெழுதாச் சொன் மழலை ததும்பு பசுங் குதலைச், சோலைக் கிளியே யுயிர்த் துணையாந் தோன்றாத் துணைக்கோர் துணை யாகித், துவாத சாந்தப் பெருவெளியிற் றுரியங் கடந்த பரநாத, மூலத் தலத்து முளைத்தமுழு முதலே முத்தந் தருகவே, முக்கட் சுடர்க்கு விருந்திடு மும்முலையாய் முத்தந் தருகவே. 2

உருகி யுருகி நெக்குநெக் குளுடைந்து கசிந்திட் டசும்பூறு, முழுவ லன்பிற் பழவடியா ருள்ளத் தடத்தி லூற்றெடுத்துப், பெருகுபர மானந்த வெள்ளப் பெருக்கே சிறியேம் பெற்ற பெரும், பேறே யூறு நறைக் கூந்தற் பிடியே கொடிநுண் ணுசுப்பொசிய, வருகுங் குமக்குன் றிரண் டேந்து மலர்ப்பூங் கொம்பே தீங் குழலின், மதுரங் கனிந்த பசுங் குதலை மழலை யரும்பச் சேதாம்பன், முருகு விரியுஞ் செங்கனிவாய் முத்தந் தருக முத்தமே, முக்கட் சுடர்க்கு விருந்திடு மும்முலையாய் முத்தந் தருகவே. 3

### வருகைப் பருவம்.

தொடுக்குங் கடவுட் பழம்பாடற் றொடையின் பயனே நறைபழுத்த, துறைத்தீந் தமிழி னொழுகு நறுஞ் சுவையே யகந்தைக் கிழங்கை யகழ்ந், தெடுக்குந் தொழும்ப ருளக்கோயிற்

கேற்றும் விளக்கே வளர்சிமய, வமயப் பொருப்பில் விளையாடு மிளமென் பிடியே யெறிதரங்க, முடுக்கும் புவனங் கடந்து நின்ற வொருவன் றிருவுள் ளத்திலழ, கொழுக வெழுதிப் பார்த்திருக்கு முயிரோ வியமே மதுக ரம்வாய், மடுக்குங் குழற்கா டேந்துமிள வஞ்சிக்கொடியே வருகவே, மலயத் துவசன் பெற்றபெரு வாழ்வே வருக வருகவே. 4

பெருந்தே னிறைக்கு நறைக்கூந்தற் பிடியே வருக முழு ஞானப், பெருக்கே வருக பிறைமௌலிப் பெம்மான் முக்கட் சுடர்க் கிடுநல், விருந்தே வருக மும்முதற்கும் வித்தே வருக வித்தின்றி, விளைக்கும் பரமானந் தத்தின் விளைவே வருக பழமறையின், குருந்தே வருக வருள்பழுத்த கொம்பே வருக திருக் கடைக்கண், கொழித்த கருணைப் பெருவெள்ளங் குடைவார் பிறவிப் பெரும்பிணிக்கோர், மருந்தே வருகபசுங் குதலை மழலைக் கிளியே வருகவே, மலயத் துவசன் பெற்றபெரு வாழ்வே வருக வருகவே. 5

## அம்புலிப் பருவம்.

முன்பும்ப ரரசுசெய் பெரும்பாவ முங்கோப மூரிமாத் தொடர் சாபமு, மும்மைத் தமிழ்ச் செழியன் வெப்பொடு கொடுங்கூனு மோசித்த வித்தலத்தின், றன்பெருந் தன்மையை யுணர்ந்திலை கொல் சிவராச தானியாய்ச் சீவன் முத்தித், தலமுமாய்த் துவாத சாந்தத்தலமு மானதித்தல மித்தலத் தடைதியேன், மன்பெருங் குரவற் பிழைத்தபா வமுமற்றை மாவடிக ளிடுசாபமும், வளரிளமை பருவத்து நரைதிரையு முதிர் கூனுமாற்றிடப் பெறுதி கண்டா, யன்பரென் புருகக் கசிந்திடு பசுந்தேனொ டம்புலி யாடவாவே, யாணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடனம்புலி யாடவாவே. 6

## அம்மானைப் பருவம்.

கள்ளூறு கஞ்சக் கரத்தூறு சேயொளி கலப்பச் சிவப் பூறியுங், கருணைப் பெருக்கூற வமுதூறு பார்வைக் கடைக்கட் கறுப் பூறியும், நள்ளூறு மறுவூ றகற்று முக மதியில்வெண் ணகை யூறு நிலவூறியு, நற்றரள வம்மனையொர் சிற்குணத் திணைமூன்று நற்குணங் கதுவல் காட்ட, வுள்ளூறு களிதுளும் பக்குரவ ரிருவிரு முற்றிடு துவாத சாந்தத், தொருபெரு வெளிக்கே விழித்துறங் குந்தொண்ட ருழுவலன் பென்புருக நெக், கள்ளூற வுள்ளேக சிந்தூறு பைந்தேற லம்மானை யாடியருளே, யாகங் கலந்தொருவர் பாகம் பகிர்ந்தபெண் ணம்மானை யாடியருளே. 7



## மதுரைக்கலம்பகம்.

அவனவ ளதுவெனு மவைகளி லொருபொரு
ளிவனென வுணர்வுகொ டெழுதரு முருவினே. 1
இருமையு முதவுவ தெவனெவ னெனவினை
தருமையை யுணர்வுறி னமிழ்தினு மினிமையை. 2

வே று.

மதும லர்க்குழ லாய்பிச்சை யென்றுநம் மனைதொ றுந்திரி வார்பிச்சை யிட்டபோ, ததிலொர் பிச்சையுங் கொள்ளார் கொள்கின்றதிங் கறிவு காணுநம் மாவியு மேகொலாம், பதும நாறும் பலிக்கலத் தூற்றிய பச்சி ரத்தம் பழஞ்சோ றெனிற்பினைப், புதிய துங்கம் முயிர்ப்பலி யேயன்றோ பூவை பால்கொள் புழுகு நெய்ச் சொக்கர்க்கே. 3

## நீதிநெறி விளக்கம்.

நீரிற் குமிழி யிளமை நிறைசெல்வ
நீரிற் சுருட்டு நெடுந்திரைக-ணீரி
லெழுத்தாகும் யாக்கை நமரங்கா ளென்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று. 1

பிறராற் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டு
மறவாமே நோற்ப தொன்றுண்டு-பிறர்பிறர்
சீரெல்லாந் தூக்கிச் சிறுமை புறங்காத்தி
யார்யார்க்குந் தாழ்ச்சி சொலல். 2

பிறர்க்குப் பயன்படத் தாங்கற்ற விற்பார்
தமக்குப் பயன்வே ருடையார்-திறப்படூஉந்
தீவினை யஞ்சா விறல்கொண்டு தென்புலத்தார்
கோவினை வேலை கொளல். 3

நட்புப் பிரித்தல் பகைநட்ட லொற்றிகழ்தல்
பக்கத்தார் யாரையு மையுறுத-றக்கார்
நெடுமொழி கோறல் குணம்பிறி தாதல்
கெடுவது காட்டுங் குறி. 4

கால மறிந்தாங் கிடமறிந்து செய்வினையின்
மூல மறிந்து விளைவறிந்து-மேலுந்தாஞ்
சூழ்வன சூழ்ந்து துணைமை வலிதெரிந்
தாள்வினை யாளப் படும். 5

மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சா
ரெவ்வெவர் தீமையு மேற்கொள்ளார்-செவ்வி
யருமையும் பாரா ரவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார். 6

புறப்பகை கோடியின் மிக்குறினு மஞ்சா
ரகப்பகை யொன்றஞ்சிக் காப்ப-வனைத்துலகுஞ்
சொல்லொன்றின் யாப்பார் பரிந்தோம்பிக் காப்பவே
பல்காலுங் காமப் பகை. 7

பொய்குறளை வன்சொல் பயனிலவென் றிந்நான்கு
மெய்தாமை சொல்லின் வழுக்காது-மெய்யிற்
புலமைந்துங் காத்து மனமா சகற்று
நலமன்றே நல்லா றெனல். 8

நல்லா றொழுக்கின் றலைநின்றார் நல்கூர்ந்து
மல்லன செய்தற் கொருப்படார்-பல்பொறிய
செங்கட் புலியே றறப்பசித்துந் தின்னுவாம்
பைங்கட் புனத்தபைங் கூழ். 9

அன்பொ டருளுடைய ரேனு முயிர்நிலைமற்
றென்பியக்கங் கண்டும் புறந்தரார்-புன்புலாற்
பொய்க்குடி லோம்புவரோ போதத்தாற் றம்வேய்ந்த
புக்கில் குடிபுகுது வார். 10

சிற்றின்பஞ் சின்னீர தாயினு மஃதுற்றார்
மற்றின்பம் யாவையுங் கைவிடப-முற்றுந்தாம்
பேரின்ப மாக்கட லாடுவார் வீழ்பவோ
பாரின்பப் பாழ்ங்கும்பி யில். 11

நெஞ்சு புறம்பாத் துறந்தார் தவப்போர்வை
கஞ்சுக மன்று பிறிதொன்றே-கஞ்சுக
மெப்புலமுங் காவாமே மெய்ப்புலங் காக்குமற்
றிப்புலமுங் காவா திது. 12

வஞ்சித் தொழுகு மதியிலிகாள் யாவரையும்
வஞ்சித்தோ மென்று மகிழன்மின்-வஞ்சித்த
வெங்கு முளனொருவன் காணுங்கொ லென்றஞ்சி
யங்கங் குலைவ தறிவு. 13

மெய்யுணர்ந்தார் பொய்மேற் புலம்போக்கார் மெய்யுணர்ச்
கைவருதல் கண்ணுப் புலங்காப்பார்-மெய்யுணர்ந்தார் [சி
காப்பே நிலையாப் பழிநாண நீள்கதவாச்
சேர்ப்பார் நிறைத்தாழ் செறித்து. 14

கற்றுத் துறைபோய காதலற்குக் கற்பினுள்
பெற்றுக் கொடுத்த தலைமகன்போன்-முற்றத்
துறந்தார்க்கு மெய்யுணர்விற் றோன்றுவதே யின்ப
மிறந்தவெலாந் துன்பமலா தில். 15

கற்றுங் கறிந்தடங்கித் தீதொரீஇ நன்றாற்றிப்
பெற்றது கொண்டு மனந்திருத்திப்-பற்றுவதே
பற்றுவதே பற்றிப் பணியறநின் றொன்றுணர்ந்து
நிற்பாரே நீணெறிச்சென் றார். 16

ஐயந் திரிபின் றளந்துத்தி யிற்றெளிந்து
மெய்யுணர்ச்சிக் கண்விழிப்பத் தூங்குவார்-தம்முள்ளே
காண்பதே காட்சி கனவு நனவாகப்
பூண்பதே தீர்ந்த பொருள். 17

## சிதம்பர செய்யுட்கோவை.

வானே நிலனே கனலே மறிபுனலே, யூனே யவ்வூனி லுயிரே யுயிர்த்துணையே, யானே றுமேறே யரசே யருட்கடலே, தேனே யமுதே யளியோங்கள் செல்வமே, யானே புலனு நலனு மிலனன்றே, யானு மென்போன்மற் றார்பெற்றா ரம்பலத்துண் மாநடங்காணும் வாழ்வு. 1

வேறு.

போற்றுமின் போற்றுமின் போற்றுமின் போற்றுமின்
கூற்றங் குமைக்க வருமுன் னமரங்கா
ளேற்று வந்தான் பொற்றா ளிணை. 2

அம்பேருண் கண்ணார்க் கழிந்த மடநெஞ்சே
கொம்பே றுடையான் கழலிறைஞ்சா தென்கொலியாம்
வம்பே யிறந்து விடல். 3

வாணேருண் கண்ணார்க் கழிந்த மடநெஞ்சே
நீணாகம் பூண்டான் கழிலிறைஞ்சா தென்கொலியாம்
வீணே யிறந்து விடல். 4

கோளாறுண் கண்ணார்க் கழிந்த மடநெஞ்சே
யாளாக வாண்டான் கழலிறைஞ்சா தென்கொலியாம்
வாளா விறந்து விடல். 5

வே று.

தீர்த்த மென்பது சிவகங் கையே, யேத்த ருந்தல மெழிற் புலி யூரே, மூர்த்தி யம்பலக் கூத்தன துருவே. 6

வே று.

அருவமு முருவமு மாகி நின்றுமவ்
வருவமு முருவமு மகன்று நின்றனை. 7

சொல்லொடு பொருளுமாய்த் தோன்றி நின்றுமச்
சொல்லையும் பொருளையுந் துறந்து நின்றனை. 8

அந்நலம் விழைந்தவர்க் கறமு மாயினை
பொன்னலம் விழைந்தவர் பொருளு மாயினை 9

இன்னலம் விழைந்தவர்க் கின்பு மாயினை
மெய்ந்நலம் விழைந்தவர் வீடு மாயினை 10

வே று.

முத்தொழிலின் வினைமுதனீ மூவர்க்கு முழுமுதனீ
எத்தொழிலு மிறந்தாய்நீ இறவாத தொழிலினைநீ 11

இருவிசும்பின் மேயோய்நீ எழின்மலரின் மிசையோய்நீ
அரவணையிற் றுயின்றோய்நீ ஆலின்கீ ழமர்ந்தோய்நீ 12

பெரியைநீ சிறியைநீ பெண்ணுநீ ஆணுநீ
அரியைநீ எளியைநீ அறமுநீ மறமுநீ 13

விண்ணுநீ மண்ணுநீ வித்துநீ விளைவுநீ
பண்ணுநீ பயனுநீ பகையுநீ உறவுநீ. 14

வே று.

கற்பனை கழன்றநின் பொற்கழ லிறைஞ்சுதும்
வெண்மதிக் கடவுண் மீமிசைத் தவழ்தரத்
தண்முகிற் குலங்க டாழ்வுறப் படிதலிற்
செங்கா லன்னமும் வெண்மருப் பேனமுங்
கீழ்மே லுருவ வாரழற் பிழம்பாய்
நின்றநின் றன்மையை யுணர்த்தும்
பொன்றிகழ் புலியூர் மன்றுகிழ வோனே. 15

வே று.

அறிவினி லறிபவ ரறிவதை யலதொரு
குறியினி லறிவுறு குறியினை யலே. 16

உளவையி னுளவள வுணர்வதை யலதுரை
யளவையி னளவிடு மளவினை யலே. 17

அருவெனி லுருவமு முளேயுரு வெனிலரு
வுருவமு முளேயவை யுபயமு மலே. 18

இலதெனி னுளதுள தெனிலில திலதுள
தலதெனி னிநதுரு வறிபவ ரெவரவர், 19

வே று.

எவ்வுருவு நின்னுருவு மவளுருவு மென்றன்றே
யவ்வுருவம் பெண்ணுருவு மாணுருவு மாயவே. 20

நின்னலா தவளில்லை யவளலா னீயில்லை
யென்னினீ யேயவனு மவளுமா யிருத்தியால் 21

வே று.

தந்தைநீ தாயுநீ தமருநீ பிறருநீ
சிந்தைநீ யுணர்வுநீ சீவனீ யாவுநீ. 22

வே று.

நெஞ்சகங் குழைந்து நெக்குநெக் குருகநின்
குஞ்சித சரண மஞ்சலித் திறைஞ்சுது
மும்மலம் பொதிந்த முழுமலக் குரம்பையிற்
செம்மாந் திருப்பது தீர்ந்து
மெய்ம்மையிற் பொலிந்த வீடுபெறற் பொருட்டே. 23

## பண்டாரமும்மணிக்கோவை

தானின் றெனைத்தனக் குள்ளே யொளிக்குமென் றன்மைநிற்க
யானின்ற போதெனக் குள்ளே யொளித்திடு மிப்பரிசே
வானின்ற சின்மய மாமாசி லாமணி மன்னுந்தன்மை
நானின்று கண்டனன் காணே னிதற்கொத்த நன்மணியே. 1

தானவ னாகிய தன்மைபெற் றானடி வாழப்பெற்றோர்
தானவ னாகிய தன்மைபெற் றுய்வனத் தன்மையின்றி
தானவ னாகிய தன்மைபெற் றேற்கரு டாழ்சடிலத்
தானவ னாகம் பெறுமாசி லாமணிச் சம்பந்தனே. 2

---

## காசிக்கலம்பகம்.

உளதென விலதென வொருவரோ ரளவையி
னளவினி லளவிட லரியதொ ருருவினை
இதுவென லருமையி னெழுதரு மொழிகளு
மதுவல வெனுமெனி லெவருனை யறிபவர். 1

அவனவ ளதுவெனு மவைகளி னுளனல
னெவனவ னிவனென வெதிர்தரு தகைமையை
அறிபவ ரறிவினு ளறிவுகொ டறிவுறு
நெறியல தொருவரு மறிவரு நிலைமையை. 2

வேறு.

திருகுசினக் கூற்றினெயிற் றிடைகிடந்துக் கடைநாளிற் றிரையே ழொன்றாய்ப், பெருகுமுழு நீத்தத்தின் றிளைத்தாடப் புணைதேடும் பேதை நெஞ்சே, யுருகிலைநெக் குடைந்திலைமொண் டானந்த வனத்தேனை யோடியோடிப், பருகிலைகண் ணாரும்பிலை மெய் பொடித்திலைமற் றுனக்கென்ன பாவந் தானே. 3

வேறு.

தானென் றவர்மு னொளித்தோடித் தன்னை யிழந்தவர்முன்
யானென்று சென்றிடுங் காசிப்பி ரானுடம் பென்பதென்போ
டேனென்று விட்டொழிந் தார்களிப் பாருவட் டாத வின்பத்
தேனென் றடைந்தவர்க் குண்ணக் கிடைப்பது தீவிடமே. 4

சிவப்பிரகாசசுவாமிகளருளிச்செய்த

## பெரியநாயகியம்மை விருத்தம்.

உள்ளமென் மனையில் விருப்பொடு வெறுப்பா மூறுகுழி மேடுக ணிரவி, ஒழிவிலா வாய்மை மெழுக்கினுற் பூசி யுயர்தரு மனமெனப் படுமோர், பள்ளிமென் றவிசி விருத்திநின் பதியைப் பழுதில்யா னெனப்படு நெல்லைப், பழமல மாயைத் தவிடுமி போக்கிப் பாகஞ்செய் தென்றருத் திடுவாய், துள்ளுமொண் மறிமான் முல்லையு ளாயர் சூழல்வெண் ணெய்க்குட முருட்டித் துணைமுலைக் குவட்டின் மஞ்சண்மேற் படப்போய்த் தோய்ந்துநின் ருடிளங் கயிற்கண், கிள்ளைமென் மொழியார் துகிலெடுத் தொளித்துக் கேடில்சீர்க் கண்ணனு டுதல்போற் கிளர்மணி முத்த நதியுடை விருத்த கிரியமர் பெரியநா யகியே. 1

---

## சோணசைலமாலை.

துவக்கற வறிந்து பிறக்குமா ருருந் துயர்ந்திடா தடைந்துகாண் மன்று, முவப்புட னிலைத்து மரிக்குமோர் பதியு மொக்குமோ நினைக்குநின் னகரைப், பவக்கடல் கடந்து முத்தியங் கரையிற் படர்பவர் திகைப்பற நோக்கித், தவக்கல நடத்த வுயர்ந்தெழுஞ் சோண சைலனே கைலைநா யகனே. 1

தொடையுடைத் திரடோ ணமன்புறத் துடலந் தொலைக்குமு னகத்துட ெருலைத்துத், தடையறத் திகழ்பே ரறிவுரு வாகத் தமியனேற் கருளுநா ளுளதோ, புடையினிற் கரிக்கோ டிளம்பிறை புரையப் பொங்குசோ தியங்கொடி விரித்த, சடையெனப் படர்ந்து கிடந்தொளிர் சோண சைலனே கைலைநா யகனே.

மயலினு லழுந்தும் பிறவியா மளற்றை வளர்தரு நின்பெருங் கருணை, வெயிலினு லுலர்த்தி யெனதுளக் கமலம் விரிக்குமொண் பரிதிநீ யலையோ, பயினுமா லயமோர் சைலமோர் சைலம் பகைப்புல முருக்குகார் முகமோர், சைல மாதுலனு மெனக்கொளுஞ் சோண சைலனே கைலைநா யகனே. 3

பாரெலா மிகழு மிகழ்ச்சியும் புகழ்ச்சிப் பயனென வுணர்ந்துநா டொறுமா, ஞரனு ரவையி னிகழ்ந்தசொற் றுதியி னுனு

வக் குநின்பதந் தொழவருளா, யேருலா மண்டச் சுவர்மதின் மிசைப்பா லிலங்குறு மண்டகோ ளகையாச், சாருமா லயத்தி லிலிங்கமாஞ் சோண சைலனே கைலைநா யகனே. 4

இந்தியங் கரண முடலம் வேறுக்கி யிருண்மலப் படலமுங் கீறிக், கந்தமு மலரு மெனநினை யென்னிற் காண்பறக் காணுநா ளுளதோ, வந்தொரு களிறு முழுவையுங் கொன்ற மலிபகை தவிர்ப்பவெண் ணிறந்த, தந்தியும் புலியும் வளர்த்திடுஞ் சோண சைலனே கைலைநா யகனே. 5

மெய்த்தவ ரடிக்குற் றேவலின் றிறத்தும் விளங்குமா கம வுணர்ச் சியினும்; புத்தலர் கொடுநிற் பரவுபூ சையினும் பொழு துபோக் கெனக்கருள் புரிவாய், முத்தமு மரவ மணிகளு மெறி ந்து முதிர்தினைப் புனத்தெயின் மடவார், தத்தைகள் கடியுஞ் சாரலஞ் சோண சைலனே கைலைநா யகனே. 6

விருப்பொடு வெறுப்பு மகன்றுபே ரின்ப வெள்ளத்து ளழு ந்துநின் னடியார், திருப்பத மிறைஞ்சி யவர்க்குவே ளாண்மை செய்பெருஞ் செல்வமே யருளாய், பொருப்புக டொறும்வீழ் பொங்குவெள் ளருவி போன்றறி விலர்க்கிடை யறுமற், றரிப் பருங் கருணை பொழிதருஞ் சோண சைலனே கைலைநா யகனே.

ஈரமு மருளு மொழுக்கமுஞ் சால்பு மின்சொலு மிந்தியப் பகைவெல், வீரமு மருளி யெனதுவெம் பிறவி விலக்கியாட் கொள்ளுநா ளுளதோ, வாரமு மகிலுந் தடிந்துசெம் மணிக ளரி த்தெறிந் தெறும்ழவலிக் குறவர், சாரலி னிறுங்கு விதைக்குறுஞ் சோண சைலனே கைலைநா யகனே. 8

குலத்தினிற் பிறந்து மலகிறால் கற்றுங் குணத்தினிற் சிற ந்துநல் விரத, பலத்தினிற் கவர்ந்து நின்னடி யவர்க்குப் பரிவி லிலார் கதியிலா தவரே, கலத்தினிற் பொலிந்த விமயமீன் றெடு த்த கன்னிநுண் ணிடைமிசைக் களபா, சலத்தினிற் குறுதி கொ டுத்திடுஞ் சோண சைலனே கைலைநா யகனே. 9

சிந்தனை கலங்கி யிணைவிழி யிருண்டு செவிகளுஞ் செவிடு பட் டைம்மே, லுந்திட வுயிர்போம் பொழுதுநின் வடிவ முளங்

கொளும் பரிசெனக் கருளாய், மந்தர சைலந் தருவிடங் களத்து வைத்திடத் தினிவிம சைலந், தந்திடு மமுதை வைத்திடுஞ் சோண சைலனே கைலைநா யகனே. 10

நீக்குறு மயனு நிலைத்தபேரறிவு நின்றிரு வடிமலர்க் கன்பு, காக்குறு மநமு முடையமெய்த் தொண்டர் கணத்தினு ளெனை விடுத் தருளாய், தேக்குறு மிருவிற் கன்னல்காட் டுவபோற் றென்றல்வந் தசைதொறு மெல்லத், தாக்குறு காந்த டுடுப்பலர் சோண சைலனே கைலைநா யகனே. 11

பொறியெனப் புலன்க ளெனக்கர ணங்கள் பூதங்க ளென விலா தடங்க, வறிவெனத் தமியேற் கொருமொழி யுதவி யிரு வினைக் குறும்பற வெறியாய், செறிமுலைக் கரியுஞ் சிற்றிடை யரியுஞ் சேரமா துமைதினங் கட்டுந், தறியெனக் கவின்பெற் றிலங்குறுஞ் சோண சைலனே கைலைநா யகனே. 12

நின்னையே நோக்கி விடாதகட் புலனு நின்னையே நினைக்கு நெஞ் சகமு, நின்னையே துதிக்கு நாவுமென் றருளி நின்றிரு வடியின்வைத் தருள்வாய், தன்னையே றினர்க்குச் சகமெலாங் காட்டுந் தரணியோ டிகலிமே வினர்க்குத், தன்னையே காட்டு மலையெனுஞ் சோண சைலனே கைலைநா யகனே. 13

---

## நால்வர் நான்மணிமாலை.

வாங்குசிலை புரையுமுட லெனுங்குளத்தின் மூல மலமெனு மோர் வெங்கரவின் பகுவாயி னின்றுந், தீங்கிலுயி ரெனும் பனவக் குலமகனை யாதி திரோதாயி யென்னுமொரு வெந்திறற்கூற் றுவனு, லோங்குறுநா தாந்தமெனப் பெயரியவக் கரையி னுமிழ் வித்துச் சிவமெனுமோர் தந்தையொடுங் கூட்டாய், கோங்கை முகை கவற்றுமிள முலைப்பரவை மகிழக் குண்டையூர் நென்மலை முற் கொண்டவருட் கடலே. 1

## அபிஷேக மாலை.

நவிற்றலரு மிதயமிளிர் கண்டநா வடிபுருவ நடுவுபிர மப் புழையெனு நல்லிடத் தகராதி கிரியாதி மனமுதல் நண்ணியு மைம்மூவகை, யிவற்றிலொவ் வொன்றகல நின்றவிட யங்களெ திர் வின்றிச்சி வாகாரமா யெதிருநன வுஞ்சோக மென்றுபா வித்தலுறு மென்கனவு ஞாதுருவொடே, யுவப்பறிவு ஞேயமெ ன வுற்றனுப வித்திடு மொண்சுழுத் தியுஞானமே யொளிர்துரி ய முந்திலைத் துயர்சிவா னந்தநுகர் வுறுமதி தமுமாகுநல், லவ த்தைகள் கடந்தவற் றப்புறப் படுமமல னபிடேக மாடியருளே யறிவுற்றெ னங்கைமலர் செறிவுற்ற மாந்தவிறை யபிடேக மாடியருளே. 1

## நெடுங்கழி நெடில்.

திருக்குறு மழுக்கா றவாவொடு வெகுளி செற்றமாகிய மன வழுக்கைத் தியானமென் புனலாற் பொய்ப்புறங் கூறறீச்சொ லெ ன்கின்ற வாயழுக்கை, யருட்கிளர் நினது துதியெனும் புனலா லைத்தொழி லென்னுமெய் யழுக்கை, யருச்சனை யென்னும் புன லினாற் கழுவா வசுத்தனே னுய்யுநா ளுளதோ, விருப்பொடு வெ றுப்பிங் கிலாதவ னென்ன வேண்பதி யோடுவெண்டலையும் விரை வழி புகுந்து வண்டினம் பசுந்தேன் விருந்துணுங் கொன்றைமெ ன்மலரோ, டெருக்கையு மணிந்து மின்னெறிகடந்த வீர்ஞ்சடைப் பார்ந்தணு னுடையா யிட்டநன் குதவி யென்கரத் திருக்கு மீச னே மாசிலா மணியே. 2

## குறுங்கழி நெடில்.

சரிப்பினு மொருபா லிருப்பினு முறக்கச் சார்வினும் விழி ப்பினு மொருசால் லுரைப்பினுந் நுகர்வினு மாவி யொழிவினு நின்னையான் மறவேன், விருப்புறு மலரும் விரையுமே போல வி ம்மியங் கணுமுறு பொருளா யிருப்பினு மரியோ யென்கரத் தி ருக்கு மீசனே மாசிலா மணியே. 3

## நிரஞ்சன மாலை.

பிரமமுந் தானு மயலென் றருச்சிக்கும் பேதநிலை
தருமம் மயலற நாளுகி நின்றனை தான்சிவமென்
றருமை வினையி லபேதம் புகாம லருச்சிக்குமா
திருமை வடிவுகொண் டிற்றுயெ னங்கை யிறையவனே. 1

துயிலினும் போகினு நிற்கினும் வீழினுஞ் சொல்லினுமொன்
றயிலினுங் காணினுங் கேட்பினும் வாழினு மல்லலொடு
பயிலினுஞ் சோரினுந் தேறினு நீக்கினும் பற்றினும்பொய்
குயிலினுஞ் சோம்பினுநிற்கடவே னென்கைக் கொற்றவனே. 2

## கைத்தலமாலை.

ஓடுந் தனமும் புகழும் பழியு முயர்விழிவுங்
கேடுந் திருவு மமுதமும் புற்கையுங் கேள்பகையும்
வீடுங் குடினு மகளிரு மன்னையும் வேறறவே
நாடுங் கருத்து வருமோ வெனக்கென்கை நாயகமே. 3

---

## சிவஞானமகிமை.

இழிவுறுபுன் கருமநெறியின்னெனினுங் கொலைவேட னெனினும் பொல்லாப், பழிமருவு பதகனெனி னும்பதித னெனினு மிகப் பகராநின்ற, மொழிகளுண்முற் றவசனுச் சிவசிவவென் றொருமுறைதான் மொழியி லன்னோன், செழியநறு மலரடியின் றுகளன்றோ வெங்கள்குல தெய்வமென்ப. 1

## தாலாட்டு.

ஆணவத்தான் மூடனு மாருயிர்க்கு முன்வினையான்
மாண வளிக்குமிறை மாயைவடி வென்றானே. 1

மேலைவினை யானுழனு மெய்யுயிர்க்குப் பாகமலக்
காலமுறச் சுத்தக் கரணமா மென்றானே. 2

கூறுமனச் சுத்தமுறக் கொண்டுபிண்ட நாமத்தை
நூறு தலநெறியு நோக்குமெனச் சொன்னானே. 3

கிரியைமன பாவங் கிடைப்பரிய ஞான
மருவிவிடா தங்கம் வயங்குமெனச் சொன்னானே. 4

ஞாதிரு நின்றறியு ஞானனே யங்களுமற்
றேதமற வென்று மிருந்தபடி வைப்பானே. 5

வானேத்த வென்று மருவற் கரியபத
நானேத்த நல்குசிவ ஞானகுரு தேசிகனே. 6

மிடியற் கெளிது விழியுற்ற பொன்போ
லடியற்கு வந்திங் ககப்பட்ட வாரமுதோ. 7

கயிலைமலை மேவுங் கடைப் பிடியாற் சீர்சான்
மயிலைமலை மீதிங்கு வந்தயர்ந்த மாமணியோ. 8

எல்லாக் கலையுணர்ந்து மெய்தாப் பொருளையொரு
சொல்லாற் றிகழ்த்துதற்குத் தோன்றும் பெருமானே. 9

சீலந் திகழ்த்துமங்கிச் சின்னமின்றி யும்படியோர்
கோலஞ் சிவமெனவுட் கொள்ளுமருட் குன்றமோ. 10

மண்களிக்க நாயேன் மனங்களிக்கக் கண்டுகொண்டு
கண்களிக்க வந்த கருணைப் பெருங்கடலோ. 11

அருவாகி நின்றசச்சி தானந்த வீசன்
குருவாகித் தன்னைக் கொடுக்குமெனச் சொன்னானே. 12

மெய்த்த வறிவாம் விளங்குகதை யொன்றெடுத்துத்
தத்துவமா மட்கலத்தைத் தாக்கும் பெருமானே. 13

---

## திருப்பள்ளியெழுச்சி.

நிறைந்தவொரு சச்சிதா னந்தபரசிவத்தி னிகழுமுயி ரிப்பியிடை வெள்ளிபோற் றோன்றி, யறிந்துமய லகன்றிடிலொன் றன்றிவே றிலையென் றறைவர் சிலர் பதியினைப்போ லாருயிர்நித் தியமே, யிறந்துமல சத்திவிடிற் சிவசிமா னதையா யிருக்குமென வறைவர்சில ரெதுவழக்கென் றடியேஞ், செறிந்தநின் றனைவினவ வெங்கள்சிவ ஞான தேசிகனே யருண்மலையே பள்ளியெழுந் தருளே. 1

சகலரெனும் பசுக்களைமூ லாதார மென்னுந் தக்கதொரு விடைமலமாந் தாம்பினு லார்த்துப், புகலுமொரு நுகர்வுமிலா துரைநிறுத்திப் பின்னர் பொருந்துகலை யாங்கரத்தாற் கட்டவிழ்த்து விட்டே, யகனுநன வெனும்புரத்தி லோட்டியே விடயமாகியபுன் மேய்த்தெமக்கிங் கமுதமருள் பவனே, திகழுமலை மகணகரின் மருவுசிவ ஞான தேசிகனே யருண்மலையே பள்ளியெழுந் தருளே. 2

## பிள்ளைத்தமிழ்.

### செங்கீரைப் பருவம்.

ஒருவாறு மின்றியது வென்றுணர வரியபர மொன்றிரண் டாகியவைமூ, வுருவாகி மூவிரண் டாறுறு வகையிரட் டுற்றநூற் றெட்டுவிரிவா, யிருவானு நின்றிலகி யிருநூறு தலையிட்ட வீரெட்டு மாறுறினவ், வெண்பெற்ற வாறினவ் வாறுமூன் றினிலவை யிரண்டினி லிரண்டு மொன்றின், மருவா வடங்கிநீ நானென்னு மயலின்றி மனவா சகங்கடந்து வந்துகூ டுதலகற லின்றிநின் றிடுநிலையை மலரடி முடிக்களித்துத், திருவாய் மலர்ந்தெனக் கொருமொழியி லருள்பவா செங்கீரை யாடியருளே திமிரமல மகல வரு சிவஞான மாமுனிவ செங்கீரை யாடியருளே. 1

### தாலப்பருவம்.

முதையா மெமது மனப்புலத்தை மூடுங் காம வெகுளிவன முற்றுங் கருணைத் தீக்கொளுவி முருக்கித் திருத்திச் செருக்கெனுமா, மதயா னையைவந் தழியாது மறிப்பப் பொறைவே லியுமமைத்து வலிய சிவமந் திரப்படையால் வாய்ப்பவுழுது சிவவிதையை, விதையா முளைப்பப் பிறதெய்வ விரவுகளைகட் டறவளர்த்து வீடாங் கனிகொள் பருவத்து விடயக் கரவர் புகுந்தனைச், சிதையா வண்ணங் காத்தளிக்குந் திறத்தாய் தாலோ தாலேலோ தேடற்கரிய சிவஞான தேவே தாலோ தாலேலோ. 2

### சப்பாணிப் பருவம்.

உருக்கிளரும் வடிவென்று நிலையாத விடயத்தி லுழலும் புலன்களென்று மொழிகின்ற புத்தியது தானென்றும் விரிவாகி யொன்றாய் குணமதென்றும், பரக்குமிவை யன்றென்று புருடனே யென்றுமுயர் பகுதியே யென்று மதன்மேற் பரவிந்து வென்றுமவை யன்றியே மனமொழி படாதவொரு பிரமமென்றும், விரிக்கிலிது நிறைவென்று மணுவென்று மொன்றென்றும் வேறுபற் பலவென்றுமெய் விளைவென்று மிலதென்று முயிரியல்பு பலசமயர் வேறுவே றுகவைத்துத், தருக்கமிடு கலகமற வந்த கருணாகரா சப்பாணி கொட்டியருளே தனையறியு மறிவையறி வென்றசிவ ஞானியே சப்பாணி கொட்டியருளே. 3

## முத்தப் பருவம்.

அருந்து மமுதி னினியாத யன்போ டளைந்து படிறிலதா யறைந்த மொழிதத் துவமசியி னன்றி மாறு வியல்பினதாய்ப், பொருந்து மறையா முடம்பிற்குப் புக்க வுயிராய்ப் பவக்கடற் குப் புணையாய்க் கயிலை வழித்துணையாய்ப் பொலிந்த திருவஞ் செழுத்தென்னும், பரந்த புகழ்மந் திரவேந்து பவனிபோதுந் தி ருமறுகாய்ப் பனிவெண் டிங்கட் சடைமுடியோன் படிவ முண ர்த்தும் விளக்காகித், திருந்து பவளத் திருவாயாற் செல்வா மு த்தந் தருகவே திளைக்குங் கருணைச் சிவஞான தேவா முத்தந் தருகவே. 4

### வே று.

கருவி யுடல் பொறி பூத முதலன முற்றுமே கழல்பு தனி யறி வாகி யொருபிர மத்துநாம், விரவி யதுவடி வாயி னமெனு மொர் சுட்டுமே விளிய வரவொடு சேற லருகயல் கொட்புறு, வ ருவ முருவமி லாத நிலையொர்க ணத்துளே யருளு மொருமொ ழி யாள திருவளர் கச்சியூர், மருவு பெருகருள் வாரி பணிமணி முத்தமே மயிலை வருசிவ ஞானி பணிமணி முத்தமே. 5

இயலு மொருகுட வானை யதனுளி ருக்கவா னெனவ றிவு றவுபாதி யறிவறி வித்தல்போ, லுயலி லுடலினுண் மேவுமுயிர் பிர மத்தின்வே றொழிய வொருபொரு ளாகுமெனவறி வித்தவா, செயலொ டுரைமனம் யாவுமதியம ருட்டுமோர்திலக நுதலுமை பாகர்பணிசெய வுய்த்துவாழ், மயலி லடியவர் நேச பணிமணி முத்தமே மயிலை வருசிவ ஞானி பணிமணி முத்தமே. 6

## வாரானைப் பருவம்.

சுருளுங் குடரும் புழுமலமுஞ் சொரியு நீருங் கலந்துபுறந் தோன்று வயிறும் வேறொருபாற் றோன்றி நரலை யெனுந்தசை தான், றிரளும்புன்மார் புறமுலையுந் திமிருந றுநாற் றப்பொரு ளாற்; றீர்க்குமுடலைப் புலாலுடம்புஞ் செத்தாற் கிடந்து புறங் காட்டிற், புரளுந் தலையுங் கொடுநின்ற புன்மாதனை வானமுதமே பொன்னங் கொடியே பசுங்கிளியே பூவாய்மயிலே யென்றென் று, மருளும் பெரும்பித் தொழியவரு மருந்தே வருக வருகவே மயிலை வரையிற் சிவஞான மணியே வருக வருகவே. 7

### சிற்றிற் பருவம்.

*அழிக்க வுளத்துக் கொண்டனையே லடங்கா தெழும்வெங் கொடுஞ்சினத்தை, யழிக்க கடலிற் பெருகியெழு மவாவை யழிக்க செருக்குளத்தை யழிக்க விருளி னுய்த்திடுமோ ரழுக்கா றதனை மூலமற வழிக்க காமப் பெரும்பிணியை யழிக்க கொலையை யஞ்சாமை, யழிக்க வினைகண் மூன்றனையு மழிக்கவழியு முடம்பதனை யழியா தென்னுங் கருத்ததனை யழிக்கமூல மலவிருளை, யழிக்கபுழுதி கொடுசமைத்த வடியேஞ்சிற்றி லழிமியலே யழியாக் கருணைச் சிவஞான வையாசிற்றி லழியேலே.* 8

*போக்கு வரவு குறிகுணங்கள் புணர்தல் பிரித லிரவு பகல் புறமுள் ளகன்ற நிரஞ்சனமாய்ப் புகரற்கரிய வவாச்சியமாய், நீக்கு முருவக் கலையாகி நிறைந்த வநாதி யாதியாய் நிகரிலகர முதலன வாய் நின்று பலமந் திரமுநால், வாக்குமறையு மாகமுமற் றுங்கலைகள் பற்பலவு மண்ணும் புனலுங் கதழெரியும் வளியும் விசும்பும் பேருலகு, மாக்கும் விளையாட்டுடைக் குரிசி லடியேஞ் சிற்றி லழிமியலே யழியாக் கருணைச் சிவஞான வையா சிற்றிலழியேலே.* 9

### சிறுபறைப் பருவம்.

*வந்துபிற கடவுளர்க டமையுரைத் துமைகாண மணிமன்று ணடமாமா மணியையிகழ் பரமசய நிலைகுலைய வென்றறையும் வன்றிறற் பறையதென்னச், சிந்தைகவ ருந்துயர் விளைத்துவரு காமமொடு சினமென்னும் வெம்புலிக்குந் தீராத வாணவப் பேரிருட்குந்தனி தெழிக்குநெய் தற்பறையென, நந்தலரு மறிவென்னு மோரிளங் கன்னியை ஞானவடி வான பிரம நன்மணம் புணர்கின்ற மங்கலப் பறையென்ன நற்றவக் குன்றமேநீ, செந்தளிரி னெழில் வென்ற நின்றிருக் கையினுற் சிறுபறை முழக்கியருளே சிவநெறி தழைக்கவரு சிவஞான தேவனே சிறுபறை முழக்கியருளே.* 10

---

## கலம்பகம்.

*நானே சசிவன் னனிற்பெரி யேனவன் ஞானிதனைத்*
*தானே யடைந்தில ஞன்றிருக் காஞ்சியிற் றண்மலர்ப்பூந்*
*தேனே யனைய சிவஞான தேவனைச் சேர்ந்திமைப்பி*
*லூனே யுயிரே யெனுமிவை வேறுபட் டுய்ந்தனனே.* 1

எனக்குப் பிறப்பில்லை யென்றே கனன்மழு வேந்துவன்யா
னினக்குக் கருணையென் மேற்று தலினின் னிலைமை கண்டே
யெனக்குப் பிறப்புண்டென் பார்சிவ ஞானி யிருநிலத்தி
னினக்குப் பிறப்புண்டென் பாரல ரோவவர் நிந்தைசெய்தே.

## நன்னெறி.

மாசற்ற நெஞ்சுடையார் வன்சொலினி தேனையவர்
பேசுற்ற வின்சொற் பிறிதென்க-வீசற்கு
நல்லோ னெறிசிலையோ நன்னுதா லொண்கருப்பு
வில்லோன் மலரோ விருப்பு. 1

உள்ளங் கவர்ந்தெழுந் தோங்கு சினங்காத்துக்
கொள்ளுங் குணமே குணமென்க-வெள்ளந்
தடுத்த லரிதோ தடங்கரைதான் பேர்த்து
விடுத்த லரிதோ விளம்பு. 2

வருந்து முயிரொன்பான் வாயி லுடம்பிற்
பொருந்துத லுனே புதுமை-திருந்திழாய்
சீதநீர் பொள்ளற் சிறுகுடத்து நில்லாது
வீதலோ நிற்றல் வியப்பு. 3

இன்சொலா லன்றி யிருநீர் வியனுலகம்
வன்சொலா லென்று மகிழாதே-பொன்செ
யதிர்வளையாய் பொங்கா தழற்கதிராற் றண்ணன்
கதிர்வரவாற் பொங்குங் கடல். 4

## சிவவாக்கியர்பாடல்.

ஓடியோடி யோடியோடி யுட்கலந்த சோதியை, நாடிநாடி நாடிநாடி நாட்களுங் கழிந்துபோய், வாடிவாடி வாடிவாடி மாண்டுபோன மாந்தர்கள், கோடிகோடி கோடிகோடி யெண்ணிறந்த கோடியே. 1

மண்ணும்நீ விண்ணும்நீ மறிகடல்க ளேழும்நீ
எண்ணும்நீ உழுத்தும்நீ யிசைந்தபண் ணெழுத்தும்நீ
கண்ணும்நீ மணியும்நீ கண்ணுளாடும் பாவைநீ
நண்ணுநீர்மை நின்றபாதம் நண்ணுமா றருளிடாய். 2

அரியுமல்ல வயனுமல்ல வப்புறத்தி லப்புறம்
கருமைசெம்மை வெண்மையைக் கடந்துநின்ற காரணம்
பெரியதல்ல சிறியதல்ல பற்றுமின்கள் பற்றுமின்கள்
துரியமுங் கடந்துநின்ற தூரதூர தூரமே. 3

மூலநாடி தன்னிலே முளைத்தெழுந்த சோதியை
நாலுநாழி யும்முளே நாடியே யிருந்தபின்
பாலனாகி வாழலாம் பரப்பிரம மாகலாம்
ஆலமுண்ட கண்டராணை யம்மையாணை யுண்மையே. 4

பாரடங்க வுள்ளதும் பரந்தவான முள்ளதும்
ஓரிடமு மின்றியே யொன்றிநின்ற வொண்சுடர்
ஆரிடமு மின்றியே யகத்துளும் புறத்துளும்
சீரிடங்கள் கண்டவன் சிவன்தெரிந்த ஞானியே. 5

காலைமாலை தம்மிலே கலந்துநின்ற காலனார்
மாலைகாலை யாச்சிவந்த மாயமேது செப்பிடீர்
காலைமாலை யற்றுநீர் கருத்திலே யொடுங்கினால்
காலைமாலை யாகிநின்ற காலனில்லை யில்லையே. 6

மூலமாங் குளத்திலே முளைத்தெழுந்த கோரையை
காலமேயெழுந்திருந்து நாலுகட் டறுப்பிரேல்
பாலனாகி வாழலாம் பரப்பிரம மாகலாம்
ஆலமுண்ட கண்டர்பாத மம்மைபாத முண்மையே. 7

நாடிநாடி யும்முளே நயந்துகாண வல்லிரேல்
ஓடியோடி மீளுவா ரும்முளே யடங்கிடும்
தேடிவந்த காலனும் திகைத்திருந்து போய்விடும்
கோடிகால மும்முகந் திருந்தவாற தெங்ஙனே. 8

மனத்தகத் தழுக்கறாத மவுனஞான யோகிகள்
வனத்தகத் திருக்கினு மனத்தகத் தழுக்கறார்
மனத்தகத் தழுக்கறுத்த மவுனஞான யோகிகள்
முலைத்தடத் திருக்கினும் பிறப்பறுத் திருப்பரே. 9

உருக்கலந்த பின்னலோ வுன்னைநா னறிந்தது
இருக்கிலென் மறக்கிலென் னினைந்திருந்த போதெலாம்
உருக்கலந்து நின்றபோது நீயுநானு மொன்றலோ
திருக்கலந்த போதலோ தெளிந்ததே சிவாயமே. 10

ஆதியாகி யண்டரண்ட மப்புறத்து மப்புறம்
சோதியாகி நின்றிலங்கு சுருதிநாத சோமனை
பேதியாமல் தம்முளே பெற்றுணர்ந்த ஞானிகள்
சாதிபேத மென்பதொன்று சற்றுமில்லை யில்லையே. 11

அரியுமாகி யயனுமாகி யண்டமெங்கு மொன்றதாய்
பெரியதாகி யுலகுதன்னில் நின்றபாத மொன்றலோ
விரிவிதென்று வேறுசெய்து வேடமிட்ட மூடரே
அறிவினோடு பாருமிங்கும் மங்குமெங்கு மொன்றதே. 12

கருக்கலந்த காலமே கண்டுநின்ற காரணம்
உருக்கலந்த போதலோ வுன்னைநா னுணர்ந்தது
விரிக்கிலென் மறைக்கிலென் வினைக்கிசைந்த போதலோ
முருக்கலந்து நின்றபோது நீயும்நானு மொன்றலோ. 13

வல்லவாச லொன்பது மறுத்தடைத்த வாசலுஞ்
சொல்லும்வாச லோரைந்துஞ் சொல்லவிம்மி நின்றதும்
நல்லவாச லைத்திறந்து ஞானவாச லூடுபோ
யெல்லைவாசல் கண்டபினி னிப்பிறப்ப தில்லையே. 14

கட்டையாற்செய் தேவருங் கல்லினாற்செய் தேவரும்
மட்டையாற்செய் தேவரும் மஞ்சளாற்செய் தேவரும்
சட்டையாற்செய் தேவருஞ் சாணியாற்செய் தேவரும்
வெட்டவெளிய தன்றிமற்ற வேறுதெய்வ மில்லையே. 15

நானுமல்ல நீயுமல்ல நாதனல்ல வோதுவேன்
வானிலுள்ள சோதியல்ல சோதிநம்மு ளுள்ளதே
நானுநீயு மொத்தபோது நாடிகாண லாகுமே
தானதான தத்ததான நாதனான தானனே. 16

---

## பாம்பாட்டிச்சித்தர்பாடல்,

சோதிமய மானபரி சுத்த வஸ்துவைத், தொழுதழு தாவலறித் தொங்தோ மெனவே, நீதிதவ றுவழியி னின்று நிலையாய் நினைந்து நினைந்துருகி யாடு பாம்பே. 1

சுட்டிக்காட்ட வொண்ணுதபாழ் சூனியந் தன்னைச், சூட்சமதி யாலறிந்து தோஷ மறவே, எட்டிப் பிடித்தேமென் றுனந்தப் பாம்பை, யெடுத்து விரித்துநின் றாடு பாம்பே. 2

உள்ளங்கையிற் கனிபோல உள்ள பொருளை, உண்மையு
டன் காட்டவல்ல வுண்மைக் குருவைக், கள்ளமனந் தன்னைத்த
ள்ளி கண்டுகொண் டன்பாய்க், களித்துக் களித்துநின் றாடாய்
பாம்பே. 3

செப்பரிய மூன்றுலகுஞ் செம்பொன் னாக்குவோம், செங்க
திரைத் தண்கதிராய்ச் செய்துவிடுவோம், இப்பெரிய வுலகத்தை
இல்லாமற் செய்வோம், எங்கள் வல்லபங் கண்டுதெளிந் தாடு
பாம்பே. 4

மனமென்னுங் குதிரையை வாகன மாக்கி, மதியென்னுங்
கடிவாளம் வாயிற் பூட்டிச், சினமென்னுஞ் சேணிமேற் சீரா யே
றித், தெளிவிடஞ் சாரிவிட் டாடாய் பாம்பே. 5

ஆலடிப் பொந்திலே வாழ்ந்த பாம்பே, அரசடி பொந்திலே
புகுந்து கொண்டாய், வாலடி தன்னிலே பார்த்து பார்த்து, வா
ங்கியே தூங்கிநின் றாடாய் பாம்பே. 6

ஆழிபெயர்ந் தாலுமேரு மட்ட மலையும், அடியோடே பெ
யர்ந்தாலு மன்றிக் கால, ஊழிபெயர்ந் தாலுமாதி யுண்மை ய
டிக்கே, வுறுதிபெய ராதுநின் றாடாய் பாம்பே. 7

எள்ளளவு மன்பகத்தி லில்லாதார் முத்தி, எய்துவது தொ
ல்லுலகி லில்லை யெனவே, கள்ளப்புலன் கட்டறுத்துக் கால கா
லனைக் கண்டுதொழு தேகளித் தாடாய் பாம்பே. 8

காந்தம்வலி யிரும்புபோல் மாசின் மனத்தைக், காட்சியான
வஸ்துவுடன் கலக்கச் சேர்த்து, சாந்தமுடன் றூண்டியுந் தா
ம்பும் போலச், சலியாமற் றொடர்ந்துநின் றாடாய் பாம்பே. 9

தன்னையறிந் தொழுகுவோர் தன்னை மறைப்பார், தன்னை
யறி யாதவரே தன்னைக் காட்டுவார், பின்னையொரு கடவுளைப்
பேணாநினையார், பேரொளியைப் பேணுவாரென் றாடாய் பாம்பே.

நான்கடிச்சேய்யுள்.

அகார முதலிலே பாம்ப தாக ஆகந்த வயலிலே படம் வி
ரித்தே, வகார முதலிலே யொத் தொடுங்கி, ஓடி வகாரத்தி னுக்
கை நீட்டி, சிகாரங் கிடந்ததோர் மந்தி ரத்தைச் சித்தப் பிடார
னூற் போதஞ் செய்ய, மகாரப் பிறப்பையும் வேர றுத்து மாப
யங் கடந்தோமென் றாடாய் பாம்பே. 11

களிமண்ணி னுலொரு கப்பல் சேர்த்தே கனமான பாய்ம ரங் காண நாட்டி, ஐம்புலந் தன்னையே சுக்கா னுக்கி அறிவென்னு மாதாரச் சீனி தூக்கி, வெளியென்னும் வட்டத்தே யுள் ளட க்கி வேதாந்தக் கடலினை வெல்ல வோட்டித், தெளிவுறு ஞானி யாரோட்டுங் கப்பல் சீர்பாதஞ் சேர்ந்ததென் றூடாய் பாம்பே.

விரகக் குடத்திலே பாம் படைப்போம் வேதாந்த வெளி யிலே விட் டாட்டுவோம், கரணங் களைப்பிடுங்கி யிரை கொடுப் போம் காலக் கடுவெளியின் றூட்டு விப்போம், துரகந் தனிலேறி த் தொல்லுல கெங்கும் சுற்றிவலம் வந்துநித்ய ருக்ஷங் கண்டும், உரையற்ற மந்திரஞ் சொல்லி மீட்போம் ஒருநான்கும் பெற்றே மென் றூடாய் பாம்பே. 13

காயக் குடத்திலே நிறை பாம்பைக் கருணைக் கடலிலே திய ங்க விட்டு, நேயச் சுழிமுனை நீடு பாய்ச்சி நித்தியமா வஸ்துவை நிலைக்க நாடி, மாயப் பெருவெளி தன்னி லேறி மாசற்ற பொரு ளிலே வாய்க்கத் தேடி, ஆயத் துரைகடந் தப்பாற் பாழின் ஆந ந்தஞ் சேர்ந்தோமென் றூடாய் பாம்பே. 14

புலனைந்து வீதியில் வையாளி யாயும் புரவியென்னு மனதை யொன்று படுத்தி, மலமைந்த வுலகங் கடந்த தாலே மன்னுகுரு பாதத்தின் னிலை நாடித், தலமைந்து பூலோகங் கடந்த தாலே சந்திர மண்டலங் கடந்த தாகும், அலம்வந்து பூலோகக் கடலை நீக்கி ஆனந்த மாகினின் றூடாய் பாம்பே. 15

கன்னுன் றுகையிலே கான் மறிப்போம் கருமா னுலையிலே தீமூட்டு வோம், சொன்னுர் தலையிலே பொன் னுக்குவோம் சுருதி குருகல்வி யொப்பஞ் செய்வோம், மின்னுர்கள் பாசத்தை விட் டெரிப்போம் மெய்ப்பொருட் கறிகண்டு விருப் படைவோம், பன் னுதே பன்னுதே சும்மா விரு பராபரஞ் சேர்ந்தோமென் றூடாய் பாம்பே. 16

சாதிப் பிரிவிலே தீமூட்டு வோம் சந்த வெளியினிற் கோல் நாட்டுவோம், வீதிப் பிரிவினில் விளையாடு வோம் வேண்டாத மனையி லுறவு செய்வோம், சோதித் தலாவியே தூங்கி விடு வோம் சுகமான பெண்ணையே சுகித் திருப்போம், ஆதி பிர்ம்மா க்க ளைந்துபேரும் அறியார்க ளிதையென் றூடாய் பாம்பே. 17

ஊசிதொளைக் குடத்தினிற் பாம்படைப் போம் உலகெலாஞ் சுற்றி யுலாவி வருவோம், மாசுள்ள பிறவியை மறந் திருப்போம் மனமொத்த வெளியிலே விட்டாட்டு வோம், மாசுப் புலன்களை யிரை கொடுப்போ மனதுற்ற வுச்சியி லேறியாடு வோம், பேசு மெழுத்தையும் விழுங்கி விடுவோம் பிறப்பிறப் பற்றோமென் றூடாய் பாம்பே. 18

ஆணிக் குடத்திலே பாம்படைப் போம் அக்கினிக் கோட்டைமே லேறிப் பார்ப்போம், மாணிக்கத் தூணின்மேல் விட்டாட்டு வோம் மனம்வாக்குக் காயத்தை யிறை கொடுப்போம், நாணிக் கயிரையு மறுத்திடு வோம் நமனற்று நாதன்பத நாடியே நிற்போம், ஏணிப்படி வழிகண் டேறிவிடு வோம் யாருமிதை யறியாரென் றூடாய் பாம்பே. 19

---

## இடைக்காட்டுச்சித்தர் பாடல்.

சொல்லருஞ் சகள நிட்கள மானதைச் சொல்லாற் சொல்லாமல் கோனாரே, அல்லும் பகலு மகத்தி லிருத்திடி லந்தகன் கிட்டுமோ கோனாரே. 1

பஞ்ச விதமாயைச் சஞ்சலம் பறக்கப் பற்றற நின்றதைப் பற்றியன்பாய், நெஞ்சத் திருத்தி யிரவும் பகலுமே நேசித்துக் கொள்ளுவீர் கோனாரே. 2

மனமென்னு மாடடங்கிற் றாண்டவக் கோனே-முத்தி
வாய்த்ததென் றெண்ணேடா தாண்டவக் கோனே 3

சினமென்னும் பாம்பிறந்தாற் றாண்டவக் கோனே-யாவுஞ்
சித்தியென்றே நினையேடா தாண்டவக் கோனே. 4

ஆசையெனும் பசுமாளிற் றாண்டவக் கோனே-இந்த
அண்டமெல்லாங் கண்டறிவாய் தாண்டவக் கோனே. 5

வேறு.

போகம்போம் போக்கியம்போம் போசனம்போம் புன்மைபோம்
மோகம்போம் மூர்க்கம்போம் மோசம்போம்-தாகம்போம்
வேதமுத லாகமங்கண் மேலான தென்றுபல்கால்
ஓதுபிரமத் துற்றக் கால். 6

வே று.

அந்தக் கரணமெனச் சொன்ன லாட்டையும்
அஞ்ஞான மென்னு மடர்ந்தவன் காட்டையும். 7

சந்தத்தவ மென்னும் வாளினல் வெட்டினேன்
சாவா திருந்திடக் கோட்டையுங் கட்டினேன். 8

மெய்வாய் கண்மூக்குச் செவியெனு மைந்தாட்டை
வீறுஞ் சுவையொளி யூரோசை யாங்காட்டை. 9

எய்யாம லோட்டினேன் வாட்டினே னூட்டினேன்
ஏகவெளிக் குள்ளே யோகவெளிக்குள் குள்ளே. 10

பற்றிரண்டு மறப் பண்புற்றே னண்புற்றேன்
பாலையு முட்கொண்டேன் மேலையாய் கட்கொண்டேன். 11

சிற்றின்ப நீக்கினேன் மற்றின்ப நோக்கினேன்
சிற்பரஞ் சேர்ந்திட்டேன் தற்பரஞ் சார்ந்திட்டேன். 12

வே று.

ஒன்றைப் பிடித்தோர்க்கே-பசுவே-உண்மை வசப்படுமே
நின்றநிலைதனிலே-பசுவே-நேர்மை யறிவாயே. 13

வே று.

மேயும் பொறிகடமை மேலிட வொட்டார்க்கு வினை
தேயுமென்றே நல்வழியிற் செல்லுநீ கன்மனமே. 14

கட்புலனுக் கெவ்வளவுங் காணுநிருந் தெங்கும்
உட்புலனும்நின்ற வொன்றை யுய்த்தறிநீ புல்லறிவே: 15

வே று.

இல்லறமே யல்லலென் றூடு மயிலே-பத்தி
இல்லவர்க்கு முத்திசித்தி யில்லை மயிலே
நல்லறமே துறவறங் காணு மயிலே-சுத்த
நாதாந்த வெட்டவெளி நாடு மயிலே. 16

கற்றூணைப் போன்மனதைக் காட்டு மயிலே-வருங்
காலனையுந் தூரத்தி லோட்டு மயிலே
பற்றா ருருவவே பாயு மயிலே
பற்றுச்சற் றில்லாமற் பண்ணு மயிலே. 17

வே று.

பெட்டியிற் பாம்பெனப் பேய்மன தடங்க
ஒட்டியே யூதுகுழல்-கோனே
ஒட்டியே யூதுகுழல். 18

இந்திரியத் திரையங்களை யிறுக்கிவிடு கோனே-என்றும்
இல்லையென்றே மரணங் குழலெடுத் தூதுகோனே. 19

## குதம்பைசித்தர்பாடல்.

நாட்டத்தைப் பற்றி நடுவணை சேர்வோர்க்கு
வாட்டங்க ளேதுக்கடி குதம்பாய்
வாட்டங்க ளேதுக்கடி. 1

வேகாமல் வெந்து வெளியொளி கண்டோர்க்கு
மோகாந்த மேதுக்கடி குதம்பாய்
மோகாந்த மேதுக்கடி. 2

பின்னை யறிந்து தலைவனைச் சேர்ந்தோர்க்கு
பின்னுசை யேதுக்கடி குதம்பாய்
பின்னுசை யேதுக்கடி. 3

## கடுவெளிசித்தர்பாடல்.

பாபஞ் செய்யாதிரு மனமே-நாளைக்
கோபஞ் செய்தே யமன்
கொண் டோடிப் போவான்
பாபஞ்செய் யாதிரு மனமே.

நல்ல வழிதனை நாடு-எந்த-நாளும் பரமனை நத்தியேதேடு, வல்லவர் கூட்டத்திற் கூடு-அந்த-வள்ளலை நெஞ்சினில் வாழ்த்திக் கொண்டாடு. (பாப) 1

வேத விதிப்படி நில்லு-நல்லோர்-மேவும் வழியினை வேண்டியே சொல்லு, சாதக நிலைமையே சொல்லு-பொல்லாச்-சண்டாளக் கோபத்தை சாதித்துக் கொல்லு. (பாப) 2

மெய்ஞ்ஞானப் பாதையி லேறு-சுத்த-வேதாந்த வெட்ட வெளியினைத் தேறு, அஞ்ஞான மார்க்கத்தைத் தூறு-உன்னை அண்டி னோர்க் கானந்த மாம்வழி கூறு. (பாப) 3

எட்டு மிரண்டையு மோர்ந்து-மறை-யெல்லா முனக்குள் ளே யேகமாய்த் தேர்ந்து, வெட்ட வெளியினைச் சார்ந்து-ஆனந்த-வெள்ளத்தின் மூழ்கி மிகுகளி கூர்ந்து. (பாப) 4

வைதோரைக் கூட வையாதே-இந்த-வையக முற்றும்பொய்த்தாலும் பொய்யாதே, வெய்ய வினைகள் செய்யாதே-கல்லை-வீணிற் பறவைகண் மீதி லெய்யாதே. (பாப) 5

சிவமன்றி வேறே வேண்டாதே-யார்க்குந்-தீங்கான சண்டையைச் சிறக்கத் தூண்டாதே; தவநிலை விட்டுத் தாண்டாதே-நல்ல-சன்மார்க்க மில்லாத நூலை வேண்டாதே. (பாப) 6

பத்தியெனு மேணி நாட்டித்-தொந்த-பந்தமற்ற விடம் பார்த்ததை நீட்டி, சத்திய மென்றதை யீட்டி-நாளுந்-தன்வச மாக்கிக்கொள் சும்பங்க ளோட்டி. (பாப) 7

எங்குஞ் சுயம்பிர காசன்-அன்பர்-இன்ப விருதயத் திருந் திடும் வாசன், துங்க வடியவர் தாசன்-தன்னைத்-துதிக்கிற் பதவி யருகுவ னீசன். (பாப) 8

---

## அழுகணிசித்தர்பாடல்.

முத்து முகப்படியோ முச்சந்தி வீதியிலே
பத்துவிதம் பரப்பிப் பஞ்சணையின் மேலிருத்தி
அத்தை யடக்கிநிலை யாருமில்லா வேளையிலே
குத்து விளக்கேற்றி-என் கண்ணம்மா-கோலமிட்டு பாரேனோ. 1

பற்றற்ற நீரதிலே பாசிபடர்ந் ததுபோல்
உற்றுற்று பார்த்தாலும் உன்மயக்கந் தீரவில்லை
உற்றுற்று பார்த்தலவோ உன்மயக்கந் தீர்ந்தாக்கால்
பற்றற்ற நீராகும்-என் கண்ணம்மா-பாசியது வேறாமே. 2

காயப் பதிதனிலே கந்தமூலம் வாங்கி
மாயப் பணிபூண்டு வாழுஞ் சரக்கெடுத்து
ஆயத் துறைதனிலே ஆராய்ந்து பார்க்குமுன்னே
மாயச் சுருளோலை-என் கண்ணம்மா-மடிமேல் விழுந்ததென்ன.

---

## நெஞ்சறிவிளக்கம்.

எட்டுட னிரண்டு மாகி யிருந்ததோ ரெழுத்தைக் காணார்
விட்டதோர் குறையுங் காணார் விதியின்றன் விவரங் காணார்
தொட்டதோர் குறியுங் காணார் சோதிமெய்ப் பொருளுங் காணார்
கிட்டுமோ நாகை நாதர் கிருபைதா னுரைப்பாய் நெஞ்சே. 1

ஐவகைப் பூதந் தொண்ணூற் றாறுதத் துவங்க ளாட்டும்
தெய்வமுன் னிடத் திருக்க தேசத்தி லலைந்தாய் நீதான்
பொய்வசத் தேக பந்தம் போக்கிமெய்ப் பொருளை நோக்கி
ஐவரோ ரிடத்திற் கூடு மானந்த மறிவாய் நெஞ்சே 2

ஊனமா முடலம் பொய்யென் றுணர்ந்துமெய் யறிவைக் கண்டு
தானவ னைபோதே சற்குரு பதத்தைச் சேர்ந்தாய்
வானதி விரவி திங்கள் வந்துபோ வதுவுங் கண்டால்
ஞானவா னைகை னுதர் நடனமுங் காண்பாய் நெஞ்சே. 3

ஒருபாதந் தன்னை தூக்கி யொருபாதந் தன்னை மாற்றி
இருபாத மாடு கின்ற வியல்பைநீ யறிந்தா யானல்
குருபாத மென்று கூறுங் குறிப்புனக் குள்ளே யாச்சு
வருபாத னைகை நாதர் மலரடி காண்பாய் நெஞ்சே. 4

ஏட்டிலே யெழுது நூல்க ளத்தனை படித்து நீதான்
காட்டிலே யெரித்த திங்கள் கானலிற் சலம்போ லானாய்
நாட்டிலே தெய்வ மென்று நடந்தலை யாம லுன்றன்
கூட்டினி னைகை நாதர் குறிப்பறிந் துணர்வாய் நெஞ்சே 5

கண்ணாடி தன்னிற் றோற்றுங் காரண வுருவம் போல
உண்ணாடி மூலா தாரத் துதித்தசற் குருவைக் கண்டு
விண்ணாடி வெளியைப் பார்த்து விளக்கொளி மகிமைச் சேர்ந்தா
மண்ணாகு னைகை நாதர் வந்துனை யாள்வார் நெஞ்சே. [ல்

மின்மினிப் பூச்சி தன்னுண் மெய்யொளி கண்டாற் போல
உன்மன தொடுங்கி யேயுன் னுள்ளொளி கண்டாற் பின்னைச்
சென்மமு மில்லை பந்தச் சிவத்துளே சேர்வாய் நாளும்
பொன்மகள் புகழு நாகை நாதரைப் போற்று நெஞ்சே. 7

நீக்கமில் லாம லெங்கு நிறைந்ததோர் வெளியை யுன்னுள்
தாக்கியே யறிவி னாலே தன்னை மறந் திருந்து பார்வை
நோக்கியே நிஷ்டை கூடி நொடியரை நிமிஷம் வாங்கி
தூக்கியே பாத நாகை நாதரைத் தொழுவாய் நெஞ்சே. 8

பொறிவழி யலைந்து மீளும் புலன்களை யடக்கி ஞான
அறிவெனும் விழியி னாலே யம்பர வெளியைப் பார்த்து
உரிதனி லிருக்குங் கள்ளை யுண்டுதற் போகமிட்டு
நெறிதரு நாகை நாதர் நிலமைகண் டறிவாய் நெஞ்சே. 9

பார்த்திடுந் திசைக ளெங்கும் பராபர வெளிதான் கூடிக்
கோர்த்திடும் வடிவை ஞானக் குருவினா லறிந்து கொண்டு
பேர்த்திடு மிமையா நாட்டத் திருந்து பேரின்ப வெள்ளம்
வார்த்திட மூழ்கி நாகை லிங்கரை வணங்கு நெஞ்சே. 10

கன்றதைத் தேடுங் காணுங் காலியைப் போலே யுன்னுள்
நின்றபே ரொளியைக் கண்டு நினைவெனு மறிவாற் றெய்வம்
ஒன்றெனக் கண்டா யானா லுமையவ ளுடனே தில்லை
மன்றினு ளாடு நாகை நாதர்முன் வருவார் நெஞ்சே. 11

கடமதி நிறைந்து நின்ற கனவெளி போலே வுன்றன்
செடமதி னிறைந்து நின்ற சிவனை யறிவாற் கண்டு
திடமிகு சீவ சாட்சி தரிசிக்க சிவன் முத்தி
இடமரு நாகை நாத ரிணையடி யுணர்வாய் நெஞ்சே. 12

முந்தின பிறப்பு வந்த முதன்மையு மறியா யிப்பால்
பிந்தின பிறப்பு வந்த பெருமையு மறியாய் நீதான்
அந்தரப் பட்சி போலே வலைகின்று யகத்து ளேமுச்
சந்தியை யறிந்து நாகை நாதரைச் சார்வாய் நெஞ்சே. 13

பொருடனைத் தேடிப் பாரிற் புதைக்கின்ற புத்தி போன்மை
யருடனை நிதமுந் தேடி யரனடி யதனில் வைத்தால்
இருடனை யகற்றுஞ் சோதி யெம்பிரான் முன்னே வந்துன்
மருடனை மாற்றி நாகை நாதரை வணங்கு நெஞ்சே. 14

---

## உடலறிவிளக்கம்.

எறும்புகடை யானைமுதற் பேதா பேத மெண்பத்து நான்குநூ றாயி ரத்துள், உறும்பொருளாய் நின்றசிவ னொருவன் றன்னை யுள்ளுணர்ந்து காண்பதுவே காட்சி நன்றாய், பெறுமவனைப் புறம்பென்று பேசு மாந்தர் புறம்புணர்ந்து காண்பதரி தாகு மென்றே, விறுமன்மறை நாலுமுரைத் திடு மலர்க்குள் மிருந்த மனம் போற்பரத்தை மெய்யிற் காணே. 1

அடியில்விழுந் தெழுந்துகரங் குவித்து நின்ற யன்புடையாய் பரத்தினடி யறுகோ ணத்துட், குடியிருக்கு மடையாள முக்கோணம்போற் குமிழியெழுந் தலமவிட முப்பா மென்பார், நெடியவெழுத் திருந்தவிட மதற்கு மேலாய் நிற்குமொரு பாத வடை யாளங் கேளாய், படியிலிளங் கதலிகுலை சாய்கின் றாப் போற் பவளநிறம் போன்றிருக்கும் பருவங் காணே. 2

காணுமறு சுவையொளித்த தலமு மங்கே கவிக்கிசைக ளெழுந்தவிடந் தானுமங்கே, யூணிலெழுந் துரைத்தவிடந் தானு மங்கே யும்மென்று சொன்னவிடந் தானுமங்கே, தோனுமயிர்ப் பாலநெருப் பாறுமங்கே சுடரொளியின் றரிசனங்கள் காண்பதங்கே, வேணுமென்ற பாக்கியங்கள் பெறுவதங்கே மெய்ஞ்ஞான வறிவிருந்த விடமுமங்கே. 3

நந்திகொலு விருந்தவிடந் தானுமங்கே நக்கமல மாயிரத் தெட் டிதழுமங்கே, அந்திசந்தி பூசையனுட் டானமங்கே யறுத்தடைத்த வாசல்சிவ யோகமங்கே, மந்திரமுஞ் சாத்திரமும் பிறந்ததங்கே மனுநீதி குலவரவு தானுமங்கே, செந்தியொளி சிவன்சிங்கா தனமுமங்கே சிறந்தவிரு பாதமடை யாளமுரைத் தோமே. 4

செத்தசவம் போற்கிடக்கும் வலகழிந்து சினங்கள்பகை செய்தொழில்கள் தானிழந்து, கற்றகல்வி சாத்திரமந் திரமிழந்து கருதுசிவ பூசையுற முறையிழந்து, உற்றபெண்டீர் பிள்ளைபணங் காசிழந்து வுடுத்ததுகி லாடைநல் லறிவிழந்து, நித்திரைகொண் டிடுமாய சூக்ஷியான நித்திரையுற் பனமறியார்நின் மூடாமே. 5

## ஔவை குறள்.

### பிறப்பினிலைமை.

ஓசை பரிச முருவஞ் சுவைநாற்றம்
ஆசை படுத்து மளறு. 1

மண்ணொடு நீரங்கி மதியொடு காற்றிரவி
விண்ணெச்ச மூர்த்தியோ டெட்டு. 2

### உடம்பின்பயன்.

உடம்பினைப் பெற்ற பயனாவ தெல்லாம்
உடம்பினி லுத்தமனைக் காண். 3

பிறப்பினாற் பெற்ற பயனாவ தெல்லாந்
துறப்பதாந் தூநெறிக்கட் சென்று. 4

மாசற்ற கொள்கை மனத்தி லடைந்தக்கால்
ஈசனைக் காட்டு முடம்பு. 5

உயிர்க்குறுதி யெல்லா முடம்பின் பயனே
அயிர்ப்பின்றி யாதியை நாடு. 6

உடம்பினாற் பெற்ற பயனாவ தெல்லாம்
திடம்பட வீசனைத் தேடு. 7

### உள்ளுடம்பின்னிலைமை.

ஒன்பது வாசலு மொக்க வடைத்தால்
அன்பதி லொன்று மரன். 8

### நாடிதாரணை.

நாடி வழக்க மறிந்து செறிந்தடங்கி
நீடொளி காண்ப தறிவு. 9

அறிந்தடங்கி நிற்குமந் நாடிக ளோறுஞ்
செறிந்தடங்கி நிற்குஞ் சிவம். 10

### வாயுதாரணை.

இடைபிங் கலைக ளிரேசக மாற்றில்
அடையு மரணு ரருள். 11

### அங்கிதாரணை.

அந்தத்தி லங்கிய மூல்போலத் தானோக்கில்
பந்தப் பிறப்பறுக்க லாம். 12

உள்ளும் புறம்பு மொழுங்கக் கொழுவுறில்
கள்ள மலமறுக்க லாம். 13

எரியுந் தழல்போல வுள்ளுற நோக்கில்
கரியுங் கனலுருவ மாம். 14

உள்ளங்கி தன்னை யொருங்கக் கொழுவூறில்
வெள்ளங்கி தானும் விரைந்து. 15

ஐயைந்து மாய வகத்து ளெரிநோக்கில்
பொய்யைந்தும் போகும் புறம். 16

ஐம்பது மொன்று மழல்போலத் தானோக்கில்
உம்ப ரொளியாய் விடும். 17

தூண்டுஞ் சுடரைத் துளங்காமற் றானோக்கில்
வேண்டுங் குறைமுடிக்க லாம். 18

உள்ளத்தா லங்கி யொருங்கக் கொழுவூறில்
மெள்ளத்தான் வீடாம் விரைந்து. 19

அமுததாரணை.

ஞான வொளிவிளக்கா னல்ல வமிர்துண்ணில்
ஆன சிவயோகி யாம். 20

அர்ச்சனை.

ஆசனத்தைக் கட்டி யரன்றன்னை யர்ச்சித்து
பூசனைசெய் துள்ளே புணர். 21

உள்ளமே பீட முணர்வே சிவலிங்கந்
தெள்ளிய ரர்ச்சிக்கு மாறு. 22

ஆதாரத் துள்ளே யறிந்து சிவனுருவைப்
பேதமற வர்ச்சிக்கு மாறு. 23

விளக்குறு சிந்தையான் மெய்ப்பொருளைக் கண்டு
துளக்கற வர்ச்சிக்கு மாறு. 24

பிண்டத்தி னுள்ளே பேரா திறைவனைக்
கண்டுதா னர்ச்சிக்கு மாறு. 25

பேராக் கருத்தினாற் பிண்டத்தி னுண்ணினைந்
தாரா தனைசெய்யு மாறு. 26

உள்ளத்தி னுள்ளே யுறப்பார்த்தங் கொண்சுடரை
மெள்ளத்தா னர்ச்சிக்கு மாறு. 27

உள்ளுணர்தல்.

பல்லூழி காலம் பயின்றானை யர்ச்சித்து
நல்லுணர்வு பெற்ற நலம். 28

## பத்தியுடைமை.

பத்தியா லுள்ளே பரிந்தரனைத் தானோக்கில்
முத்திக்கு மூல மது. 29

கண்ணா லுறப்பார்த்துக் காதலாற் றானோக்கில்
உண்ணுமே யீச னொளி. 30

## திருவருட்பால்.

அருளினா லன்றி யகத்தறி வில்லை
அருளின் மலமறுக்க லாம். 31

இருளைக் கடிந்தின் றிறைவ னருளால்
தெருளுஞ் சிவசிந்தை யாம். 32

வாய்மையாற் பொய்யா மனத்தினால் மாசற்ற
தூய்மையா மீச னருள். 33

ஒவ்வகத்து ணின்ற சிவனருள் பெற்றக்கால்
அவ்வகத்து ளானந்த மாம். 34

உன்னுங் கரும முடிக்கலா மொள்ளிதாய்
மன்னு மருள்பெற்றக் கால். 35

எல்லாப் பொருளு முடிக்கலா மீசன்றன்
தொல்லை யருள்பெற்றக் கால். 36

சிந்தையு ணின்ற சிவனருள் பெற்றக்கால்
பந்தமாம் பாச மறும். 37

மாசற்ற கொள்கை மதிபோலத் தான்றோன்றும்
ஈச னருள்பெற்றக் கால். 38

ஓவாச் சிவனருள் பெற்றா லுரையின்றித்
தாவாத வின்பந் தரும். 39

## நினைப்புறுதல்.

கருத்துறப் பார்த்துக் கலங்காம லுள்ளத்
திருத்திச் சிவனை நினை. 40

சிக்கெனத் தேர்ந்துகொள் சிந்தையி லீசனை
மிக்க மலத்தை விடு. 41

ஓசை யுணர்ந்தங்கே யுணர்வைப் பெறும் பரிசால்
ஈசன் கருத்தா யிரு. 42

இராப்பக லன்றி யிருசுடர்ச் சிந்திக்கில்
பராபரத்தோ டொன்றலு மாம். 43

மிக்க மனத்தால் மிகநினைந்து சிந்திக்கில்
ஒக்கச் சிவனுருவ மாம். 44

உருவொன்றிநிற்றல்.

பழத்தி னிரதம்போற் பரந்தெங்கு நிற்கும்
வழுத்தினு மீச னிலை. 45

அச்ச மாங்கார மகத்தடக்கி னாற்பின்னை
நிச்சயமா மீச னிலை. 46

ஓசையி னுள்ளே யுதிக்கின்ற தொன்றுண்டு
வாசமலர் நாற்றம்போல் வந்து 47

முத்திகாண்டல்.

தனக்கோ ருருவில்லை தானெங்கு மாகி
மனத்தக மாய்நிற்கு மது. 48

மயிர்முனையிற் பாதி மனத்தறி வுண்டேல்
அயிர்ப்புண்டங் காதி நிலை. 49

தற்பர மான சதாசிவத்தோ டொன்றில்
உற்றறி வில்லை யுயிர்க்கு. 50

உறக்க முணர்வு பசிகெடப் பட்டால்
பிறக்கவும் வேண்டா பிறப்பு. 51

தூயவொளிகாண்டல்

தோன்றிய தெல்லாந் தொடக்கறுத்துத் தூய்வெளியாய்த்
தோன்றியக்காற் றூய வொளி. 52

தெளிவாய தேச விளக்கொளியைக் காணில்
வெளியாய வீடதுவே யாம். 53

மின்போ லுருவ விளக்கொளிபோல் மேற்காணில்
முன்போல மூலம் புகும். 54

பளிங்கு வலம்புரி பானிறத் தாகில்
துளங்கொளியாந் தூய நெறி. 55

சங்கு நிறம்போற் றவள வொளிகாணில்
அங்கையி னெல்லியே யாம். 56

துளங்கிய தூண்டா விளக்கொளி காணில்
விளங்கிய வீடாம் விரைந்து. 57

உள்ளொளி தோன்றி லுணரி லருளொளி
அவ்வொளி யாதி வொளி. 58

பரந்த விசும்பிற் பரந்த வொளிகாணில்
பரம்பரமே யாய வொளி, 59

ஆதி யொளியாகி யாள்வானுந் தானுகி
ஆதி யவனுருவ மாம். 60

சதாசிவம்.

விண்ணிறைந்து நின்று விளங்குஞ் சுடரொளி
உண்ணிறைந்து நிற்குஞ் சிவம். 61

மண்ணிற் பிறந்த வுயிர்க்கெல்லாந் தானுகு
விண்ணகமே யாகுஞ் சிவம். 62

நிற்கும் பொருளும் நடப்பனவுந் தானுகி
யுற்றெங்கும் நிற்குஞ் சிவம். 63

தன்பால்.

சிந்தை சிவமாகக் காண்பவர் சிந்தையில்
சிந்தித் திருக்குஞ் சிவம். 64

தலைப்பட்ட சற்குருவின் சன்னிதியி லல்ல
வலைப்பட்ட மானது வேயாம். 65

நெறிப்பட்ட சற்குரு நேர்வழி காட்டில்
பிறிவற் றிருக்குஞ் சிவம். 66

நல்லன நூல்பல கற்பினுங் காண்பதரிதே
எல்லையில் லாத சிவம். 67

நினைப்பு மறப்பு மில்லா தவர்நெஞ்சந்
தனைப்பிரி யாது சிவம். 68

ஒன்றி லொன்றுத மனமுடை யாருடல்
என்று மொன்றுது சிவம். 69

நாட்டமில் லாவிடம் நாட்ட மறிந்தபின்
மீட்டு விடாது சிவம். 70

அங்கியிற் பஞ்சு.

அங்கியிற் பஞ்சுபோ லாகாயத் தேகினையில்
சங்கிக்க வேண்டா சிவம். 71

பற்றிலா தொன்றினைப் பற்றினு லல்லது
கற்றதனு லென்ன பயன். 72

தம்மை யறிவாரைத் தாமறிந்து கொண்டபின்
தம்மை யறிவரோ தான் 73

அசவை யறிந்துள்ளே யழலெழ நோக்கில்
இசையாது மண்ணிற் பிறப்பு. 74

இமையாத நாட்டத் திருந்துணர் வாருக்
கமையாத வானந்த மாம். 75

துரியங் கடந்த சுடரொளியைக் கண்டால்
மரணம் பிறப்பில்லை வீடு. 76

மதிபோ லுடம்பினை மாசற நோக்கில்
விதிபோ யகல விடும். 77

## மெய்யகம்.

மெய்யகத்தி னுள்ளே விளங்குஞ் சுடர்நோக்கில்
கையகத்தி னெல்லிக் கனி. 78

கறையற்ற செல்வத்தைக் காணுங்கா லத்தில்
உரையற் றிருப்ப துணர்வு. 79

தோன்றாத தூயவெளி தோன்றியக்கா லுன்னைத்
தோன்றாமற் காப்ப தறிவு. 80

விண்ணிறைந்து நின்ற பொருளே யுடம்பதன்
உண்ணிறைந்து நின்ற வொளி. 81

## கண்ணாடி.

கண்ணாடி தன்னி லொளிபோ லுடம்பதனுள்
உண்ணாடி நின்ற வொளி. 82

நாபி யகத்தே நலனுற நோக்கிடில்
சாவது மில்லை யுடம்பு. 83

சந்திர னுள்ளே தழலுற நோக்கினால்
அந்தர மாகு முடம்பு. 84

மாதூ வெளியின் மனமொன்ற வைத்தபின்
போதக மாகு முடம்பு. 85

சுத்தமோ டொன்றி மனமு மிறந்தக்கால்
முற்று மழியா துடம்பு. 86

## சூனியகால மறிதல்.

அஞ்சு மடக்கி யறிவோ டிருந்தபின்
துஞ்சுவ தில்லை யுடம்பு. 87

தானந்த மின்றித் தழலுற நோக்கிடில்
ஆனந்த மாகு முடம்பு. 88

### ஞான நிலை.

பொன்னொடு வெள்ளி யிரண்டும் பொருந்திடில்
அன்னவன் றாளதுவே யாம். 89

நின்ற வெழுத்துட னில்லா வெழுத்தினை
யொன்றுவிக்கி லொன்றே யுள. 90

பேசா வெழுத்துடன் பேசு மெழுத்துறில்
ஆசான் பரானந்தி யாம். 91

### ஞானம்பிரியாமை.

பிறந்திட மாலிடம் பேரா திருப்பின்
இறந்திடம் வன்னி யிடம். 92

சாகா திருந்த தலமே மவுனமது
ஏகாந்த மாக விரு. 93

வெளியில் விளைந்த விளவின் கனிதான்
ஒளியி லொளியா யுறும். 94

மறவா நினையா மவுனத் திருக்கில்
பிறவா ரிறவார் பினை. 95

குருவாம் பரானந்தி கூடல் குளிர்ந்தாங்
கிருபோது நீங்கா திரு. 96

### மெய்ந்நெறி.

அடைத்திட்ட வாசலின் மேன்மனம் வைத்துப்
படைத்தவன் தன்னையே பார். 97

---

## திருவள்ளுவர் குறள்.

### முதல் அதிகாரம்-கடவுள் வாழ்த்து.

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு. 1

கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின். 2

மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார். 3

வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில. 4

இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு. 5

பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார். 6

தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்ற லரிது. 7

அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற்
பிறவாழி நீந்த லரிது. 8

கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலை. 9

பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார். 10

2-ம். அதி. வான்சிறப்பு.

வானின் றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென்றுணரற் பாற்று. 1

துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉ மழை. 2

விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசி. 3

கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
யெடுப்பதூஉ மெல்லா மழை. 4

நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி
தானல்கா தாகி விடின். 5

நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு. 6

3-ம். அதி. நீத்தார்பெருமை.

ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிபு. 1

இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு. 2

உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து. 3

செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார். 4

சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு. 5

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும். 6

அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான். 7

4-ம். அதி. அறன்வலியுறுத்தல்.

சிறப்பீனுஞ் செல்வமும் மீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ உயிர்க்கு. 1

அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூஉங் கில்லை கேடு. 2

ஒல்லும் வகையா லறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல். 3

மனத்துக்கண் மாசில னாத லனைத்தற
னாகுல நீர பிற. 4

அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொன் னான்கு
மிழுக்கா வியன்ற தறம். 5

அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை. 6

வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல். 7

செயற்பால தோரு மறனே யொருவர்க்
குயற்பால தோரும் பழி. 8

---

## இல்லற வியல்.

### 5-ம். அதி. இல்வாழ்க்கை.

இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு
நல்லாற்றி னின்ற துணை. 1

துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கு
மில்வாழ்வா னென்பான் றுணை. 2

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க றுனென்றாங்
கைம்புலத்தா றோம்ப றலே. 3

பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை
வழியஞ்ச லெஞ்ஞான்று மில். 4

அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை
பண்பும் பயனு மது. 5

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும். 6

## 6-ம். அதி. வாழ்க்கைத்துணைநலம்.

மனைத்தக்க மாண்புடைய ளாகிற்றற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை. 1

மனைமாட்சி யில்லாள்கண் ணில்லாயின் வாழ்க்கை
யெனைமாட்சித் தாயினு மில். 2

இல்லதெ னில்லவண் மாண்பானு லுள்ளதென்
னில்லவண் மாணுக் கடை. 3

பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மை யுண்டாகப் பெறின். 4

தெய்வந் தொழாஅள் கொழுனற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை. 5

சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை. 6

மங்கல மென்ப மனைமாட்சி மற்றத
னன்கல னன்மக்கட் பேறு. 7

## 7-ம். அதி. புதல்வரைப்பெறுதல்.

பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற. 1

தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல். 2

தம்மிற்றம் மக்க ளறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது. 3

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய் 4

8-ம் அதி. அன்புடைமை.

அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா
ரென்பு முரியர் பிறர்க்கு. 1

அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு. 2

அறத்திற்கே யன்பு சார்பென்ப வறியார்
மறத்திற்கு மஃதே துணை. 3

என்பி லதனை வெயிற்போலக் காயுமே
யன்பி லதனை யறம். 4

அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றன் மரந்தளிர்த் தற்று. 5

புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை
யகத்துறுப் பன்பி லவர்க்கு. 6

அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த வுடம்பு. 7

9-ம். அதி விருந்தோம்பல்.

இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு. 1

விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று. 2

வருவிருந்து வைகலு மோம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுத லின்று. 3

வித்து மிடல் வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சின் மிசைவான் புலம். 4

செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு. 5

மோப்பக் குழையு மனிச்ச முகந்திரும்பி
நோக்கக் குழையும் விருந்து. 6

10-ம். அதி. இனியவைகூறல்.

இன்சொலா லீர மளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல். 1

முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானா
மின்சொ லினதே யறம். 2

துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டு
மின்புறூஉ மின்சொ லவர்க்கு. 3

பணிவுடைய னின்சொல னாத லொருவற்
கணியல்ல மற்றுப் பிற. 4

அல்லவை தேய வறம்பெருகு நல்லவை
நாடி யினிய சொலின். 5

நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று
பண்பிற் றலைப்பிரியாச் சொல். 6

சிறுமையு ணீங்கிய வின்சொன் மறுமையு
மிம்மையு மின்பந் தரும். 7

இன்சொ லினிதீன்றல் காண்பா னெவன்கொலோ
வன்சொல் வழங்கு வது. 8

இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. 9

11-ம் அதி. செய்ந்நன்றியறிதல்.

காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினு
ஞாலத்தின் மாணப் பெரிது. 1

பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கி
னன்மை கடலிற் பெரிது. 2

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார். 3

மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துட் டுப்பாயார் நட்பு. 4

எழுமை யெழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு. 5

நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று. 6

கொன்றன்ன வின்னா செயினு மவர்செய்த
வொன்றுநன் றுள்ளக் கெடும். 7

எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. 8

12-ம். அதி. நடுவுநிலைமை.

தகுதி யெனவொன்று நன்றே பகுதியாற்
பாற்பட் டொழுகப் பெறின். 1

நன்றே தரினு நடுவிகந்தா மாக்கத்தை
யன்றே யொழிய விடல். 2

கேடும் பெருக்கமு மில்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி. 3

கெடுவல்யா னென்ப வறிகதன் னெஞ்ச
நடுவொரீஇ யல்ல செயின். 4

கெடுவாக வையா துலக நடுவாக
நன்றிக்கட் டங்கியான் றாழ்வு. 5

சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல மைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி. 6

சொற்கோட்ட மில்லது செப்ப மொருதலையா
வுட்கோட்ட மின்மை பெறின். 7

13-ம். அதி. அடக்கமுடைமை.

அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை
யாரிரு ளுய்த்து விடும். 1

காக்க பொருளா வடக்கத்தை யாக்க
மதனினூஉங் கில்லை யுயிர்க்கு. 2

செறிவறிந்து சீர்மை பயக்கு மறிவறிந்
தாற்றி னடங்கப் பெறின். 3

நிலையிற் றிரியா தடங்கியான் றோற்ற
மலையினு மாணப் பெரிது. 4

எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து. 5

ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து. 6

யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. 7

கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி
யறம்பார்க்கு மாற்றி னுழைந்து. 8

### 14-ம். அதி. ஒழுக்கமுடைமை.

ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்க
முயிரினு மோம்பப் படும். 1

பரிந்தோம்பிக் காக்க வொழுக்கந் தெரிந்தோம்பித்
தேரினு மஃதே துணை. 2

நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்க
மென்று மிடும்பை தரும். 3

உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார். 4

### 15-ம். அதி. பிறனில்விழையாமை.

பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ வான்ற வொழுக்கு. 1

நலக்குரியா ரியாரெனி னாமநீர் வைப்பிற்
பிறற்குரியா டோடோயா தார். 2

அறன்வரையா னல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று. 3

### 16-ம். அதி. பொறையுடைமை.

அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
யிகழ்வார்ப் பொறுத்த றலை. 1

பொறுத்த லிறப்பினை யென்று மதனை
மறத்த லதனினு நன்று. 2

நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை
போற்றி யொழுகப் படும். 3

ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து. 4

ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ். 5

மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந்
தகுதியான் வென்று விடல். 6

துறந்தாரிற் றூய்மை யுடைய ரிறந்தார்வா
யின்னாச்சொ னோற்கிற் பவர். 7

17-ம். அதி. அழுக்காறாமை.

அழுக்காற்றி னல்லவை செய்யா ரிழுக்காற்றி
னேதம் படுபாக் கறிந்து. 1

கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉ
முண்பதூஉ மின்றிக்கெடும். 2

ஓளவித் தழுக்கா றுடையானை செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும். 3

அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்று
தீயுழி யுய்த்து விடும். 4

18 ம். அதி. வெஃகாமை.

நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றி
குற்றமு மாங்கே தரும். 1

படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர். 2

சிற்றின்பம் வெஃகி யறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர். 3

இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர். 4

அஃகி யகன்ற வறிவென்னும் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின். 5

அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறர்கைப் பொருள். 6

அறனறிந்து வெஃகா வறிவுடையார் சேருந்
திறனறிந் தாங்கே திரு. 7

19-ம். அதி. புறங்கூறாமை.

அறங்கூறா னல்ல செயினு மொருவன்
புறங்கூறா னென்ற லினிது. 1

அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே
புறனழீஇப் பொய்த்து நகை. 2

கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல். 3

பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளுந
திறன்றெரிந்து கூறப் படும். 4

ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பிற்
றீதுண்டோ மன்னு முயிர்க்கு. 5

## 20-ம். அதி. பயனில்சொல்லாமை.

பல்லார் முனியப் பயனில சொல்லுவா
னெல்லாரு மெள்ளப் படும். 1

பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல். 2

நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று. 3

அரும்பய னாயு மறிவினார் சொல்லார்
பெரும்பய னில்லாத சொல். 4

பொருடீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருடீர்ந்த
மாசறு காட்சி யவர். 5

சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல். 6

## 21-ம். அதி. தீவினையச்சம்.

தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும். 1

அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல். 2

மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழி
னறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு. 3

இலனென்று தீயவை செய்யற்க செய்யி
னிலனாகு மற்றும் பெயர்த்து. 4

தீப்பால தான்பிறர்கட் செய்யற்க நோய்ப்பால
தன்னை யடல்வேண்டா தான். 5

தன்னைத்தான் காதல னாயி னெனைத்தொன்றுந்
துன்னற்க தீவினைப் பால். 6

## 22-ம். அதி. ஒப்புரவறிதல்.

கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு. 1

தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு. 2

ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும். 3

ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் றிரு. 4

மருந்தாகித் தப்பா மரத்தற்றாற் செல்வம்
பெருந்தகை யான்கட் படின். 5

இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர். 6

நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயுநீர
செய்யா தமைகலா வாறு. 7

## 23-ம். அதி. ஈகை.

வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாங்
குறியெதிர்ப்பை நீர துடைத்து. 1

நல்லா றெனினுங் கொளறீது மேலுலக
மில்லெனினு மீதலே நன்று. 2

இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள. 3

இன்னா திரக்கப் படுத லிரந்தவ
ரின்முகங் காணு மளவு. 4

ஆற்றுவா ராற்றல் பசியாற்ற லப்பசியை
மாற்றுவா ராற்றலிற் பின். 5

அற்றா ரழிபசி தீர்த்த லஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி. 6

ஈத்துவக்கு மின்ப மறியார்கொ றாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர். 7

## 24-ம். அதி. புகழ்.

ஈத லிசைபட வாழ்த லதுவல்ல
தூதிய மில்லை யுயிர்க்கு. 1

புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
யிகழ்வாரை நோவ தெவன். 2

வசையொழிய வாழ்வாரே வாழ்வா ரிசையொழிய
வாழ்வாரே வாழா தவர். 3

---

## துறவற வியல்.

### 25-ம். அதி. அருளுடைமை.

அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள. 1

நல்லாற்ற னாடி யருளாள்க பல்லாற்றாற்
றேரினும் மஃதே துணை. 2

அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த
வின்னா வுலகம் புகல். 3

மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை. 4

பொருணீங்கி பொச்சாந்தா ரென்ப ரருணீங்கி
யல்லவை செய்தொழுகு வார். 5

அருளிலார்க் கவ்வுலக மில்லை பொருளிலார்க்
கிவ்வுலக மில்லா தியாங்கு. 6

தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றாற் றேரி
னருளாதான் செய்யு மறம், 7

வலியார்முற் றன்னை நினைக்கதான் றன்னின்
மெலியார்மேற் செல்லு மிடத்து. 8

### 26-ம். அதி. புலால்மறுத்தல்.

தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிதூ னுண்பா
னெங்ஙன மாளு மருள். 1

பொருளாட்சி போற்றாதார்க் கில்லை யருளாட்சி
யாங்கில்லை யூன்றின் பவர்க்கு. 2

படைகொண்டார் நெஞ்சம்போ னன்றூக்கா தொன்ற
னுடல்சுவை யுண்டார் மனம். 3

அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல். 4

உண்ணுமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
வண்ணுத்தல் செய்யா தளறு. 5

தினற்பொருட்டாற் கொள்ளா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில். 6

உண்ணுமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றை
புண்ண துணர்வார்ப் பெறின். 7

செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணு
ருயிரிற் றலைப்பிரிந்த வூன். 8

அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
னுயிர்செகுத் துண்ணுமை நன்று. 9

கொல்லான் புலாலை மறுத்தானை கைகூப்பி
யெல்லா வுயிருந் தொழும். 10

27-ம். அதி. தவம்.

உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
யற்றே தவத்திற் குரு. 1

தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
யஃதிலார் மேற்கொள் வது. 2

துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொன்
மற்றை யவர்க டவம். 3

வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும். 4

தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார் மற்றல்லா
ரவஞ்செய்வா ராசையுட் பட்டு. 5

சுடச்சுடப் பொன்போ லொளிவிடுந் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு. 6

தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய
மன்னுயி ரெல்லாந் தொழும். 7

கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலி
னாற்ற றலைப்பட் டவர்க்கு. 8

## 28-ம். அதி. கூடாவொழுக்கம்.

வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்க
ளைந்து மகத்தே நகும். 1

வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ்சந்
தானறி குற்றப் படின். 2

வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று. 3

தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று. 4

பற்றற்றே மென்பார் படிற்றொழுக்க மெற்றெற்றென்
றேதம் பலவுந் தரும். 5

நெஞ்சிற் றுறவார் துறந்தார் போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணா ரில். 6

புறங்குன்றி கண்டனைய ரேனு மகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து. 7

மனத்தது மாசாக மாண்டார் நீராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர். 8

கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன
வினைபடு பாலாற் கொளல். 9

மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின். 10

## 29-ம். அதி. கள்ளாமை.

எள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்தொன்றுங்
கள்ளாமை காக்கதன் னெஞ்சு. 1

உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல். 2

களவினாலாகிய வாக்க மளவிறந்
தாவது போலக் கெடும். 3

களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும். 4

அருள்கருதி யன்புடைய ராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்க ணில். 5

அளவின்க ணின்றொழுக லாற்றார் களவின்கட்
கன்றிய காத லவர். 6

களவென்னுங் காரறி வாண்மை யளவென்னு
மாற்றல் புரிந்தார்க ணில். 7

அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்குங்
களவறிந்தார் நெஞ்சிற் கரவு. 8

கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு. 9

30-ம். அதி. வாய்மை.

வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
தீமை யிலாத சொலல். 1

பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின். 2

தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
றன்னெஞ்சே தன்னைச் சுடும். 3

உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா
ருள்ளத்து ளெல்லா முளன். 4

மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை. 5

பொய்யாமை யன்ன புகழில்லை யெய்யாமை
யெல்லா வறமுந் தரும். 6

பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று. 7

புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும். 8

எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு. 9

யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன்றும்
வாய்மையி னல்ல பிற. 10

31-ம். அதி. வெகுளாமை.

செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பா னல்லிடத்துக்
காக்கினென் காவாக்கா லென். 1

செல்லா விடத்துச் சினந்தீது செல்லிடத்து
மில்லதனிற் றீய பிற. 2

மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய
பிறத்த லதனான் வரும். 3

நகையு முவகையுங் கொல்லுஞ் சினத்திற்
பகையு முளவோ பிற. 4

தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்காற்
றன்னையே கொல்லுஞ் சினம். 5

சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னு
மேமப் புணையைச் சுடும். 6

சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று. 7

இணரெரி தோய்வன்ன வின்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று. 8

உள்ளிய வெல்லா முடனெய்து முள்ளத்தா
லுள்ளான் வெகுளி யெனின். 9

இறந்தா ரிறந்தா ரனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை. 10

## 32-ம். அதி. இன்னாசெய்யாமை.

சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள். 1

கறுத்தின்னா செய்தவக் கண்ணு மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள். 2

செய்யாமற் செற்றார்க்கு மின்னாத செய்தபி
னுய்யா விழுமந் தரும். 3

இன்னாசெய் தாரை யொறுத்த லவர்நாண
நன்னயஞ் செய்து விடல். 4

அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய்போற் போற்றாக் கடை. 5

இன்னா வெனத்தா னுணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கட் செயல். 6

எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கு மனத்தானா
மாணா செய்யாமை தலை. 7

தன்னுயிர்க் கின்னாமை தானறிவா னென்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல். 8

ந்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
கற் றாமே வரும். 9

)யல்லா நோய்செய்தார் மேலவா நோய்செய்யார்
ீன்மை வேண்டு பவர். 10

33-ம் அதி. கோல்லாமை.

வினை யாதெனிற் கொல்லாமை கோறல்
வினை யெல்லாந் தரும். 1

ந்துண்டு பல்லுயி ரோம்புத னூலோர்
தொத்தவற்று ளெல்லாந் தலை. 2

றாக நல்லது கொல்லாமை மற்றதன்
சாரப் பொய்யாமை நன்று. 3

ா ரெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
ல்லாமை சூழு நெறி. 4

பஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்
ல்லாமை சூழ்வான் றலை. 5

ல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண்மேற்
லா வுயிருண்ணுங் கூற்று. 6

னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
னுயிர் நீக்கும் வினை. 7

றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்
ன்றாகு மாக்கங் கடை. 8

லைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
மை தெரிவா ரகத்து. 9

ருடம்பி னீக்கியா ரென்பர் செயிருடம்பிற்
ல்லாத்தீ வாழ்க்கை யவர். 10

34-ம். அதி. நிலையாமை.

லா தவற்றை நிலையின வென்றுணரும்
லறி வாண்மை கடை. 1

த்தாட் டவைக்கு ழாத்தற்றே பெருஞ்செல்வம்
ாக்கு மதுவிளிந் தற்று. 2

ளன வொன்றுபோற் காட்டி யுயிரீரும்
ள துணர்வார்ப் பெறின். 3

நாச்செற்று விக்குண்மேல் வாராமு னல்வினை
மேற்சென்று செய்யப் படும். 4

நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு. 5

ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல. 6

குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
யுடம்போ டுயிரிடை நட்பு. 7

உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு. 8

புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட்
டுச்சி லிருந்த வுயிர்க்கு. 9

## 35-ம். அதி. துறவு.

யாதனின் யாதனி னீங்கியா னோத
லதனி னதனி னிலன். 1

வேண்டி னுண்டாகத் துறக்க துறந்தபி
னீண்டியற் பால பல. 2

அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லா மொருங்கு 3

இயல்பாகு நோன்பிற் கொன்றின்மை யுடைமை
மயலாகு மற்றும் பெயர்த்து. 4

மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை, 5

யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும். 6

பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு. 7

தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர். 8

பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும். 9

பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு. 10

36 ம். அதி. மெய்யுணர்தல்.

பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு
மருளானு மாணாப் பிறப்பு. 1

இருணீங்கி யின்பம் பயக்கும் மருணீங்கி
மாசறு காட்சி யவர். 2

ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து. 3

ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு. 4

எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. 5

கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி. 6

ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாய்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு. 7

பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு. 8

சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய். 6

காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற
னாமங் கெடக்கெடு நோய். 10

37-ம். அதி. அவாவறுத்தல்.

அவாவென்ப வெல்லா வுயிர்க்கு மெஞ்ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து. 1

வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும். 2

வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை
யாண்டு மஃதொப்ப தில். 3

தூஉய்மை யென்ப தவாவின்மை மற்ற
வாஅய்மை வேண்டா வரும். 4

அற்றவ ரென்பா ரவாவற்றார் மற்றையா
ரற்றாக வற்ற திலர். 5

அஞ்சுவ தோரு மறனே யொருவனை
வஞ்சிப்ப தோரு மவா. 6

அவாவினை யாற்ற வறுப்பிற் றவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும். 7

அவாவில்லார்க் கில்லாகுந் துன்ப மஃதுண்டேற்
றவாஅது மேன்மேல் வரும். 8

இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின். 9

ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும். 10

38-ம். அதி. ஊழ்.

ஆகூழாற் றோன்று மசைவின்மை கைப்பொருள்
போகூழாற் றோன்று மடி. 1

பேதைப் படுக்கு மிழவூ ழறிவகற்று
மாகலூ ழுற்றக் கடை. 2

நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்தன்
னுண்மை யறிவே மிகும். 3

இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு. 4

நல்லவை யெல்லாஅந் தீயவாந் தீயவு
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு. 5

பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்
சொரியினும் போகா தம. 6

வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது. 7

நன்றாங்கா னல்லவாக் காண்ப ரன்றாங்கா
லல்லற் படுவ தெவன். 8

ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும். 9

## பொருட்பால் - அரசியல்.

### 39-ம். அதி. இறைமாட்சி.

படைகுடி கூழமைச்சு நட்பர ணாறு
முடையா னரசரு ளேறு. 1

அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கு
மெஞ்சாமை வேந்தற் கியல்பு. 2

தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்று
நீங்கா நிலனாள் பவற்கு. 3

அறனிழுக்கா தல்லவை னீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு. 4

இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு. 5

காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேன்
மீக்கூறு மன்ன னிலம். 6

### 40 ம். அதி. கல்வி.

கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக. 1

எண்ணென்ப வேனை யெழுத்தென்ப வெவ்வுயிர்க்குங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு. 2

கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர். 3

உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரித
லனைத்தே புலவர் தொழில். 4

தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு. 5

யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு. 6

ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து. 7

தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார். 8

கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை. 9

41-ம். அதி. கல்லாமை.

அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல். 1

கல்லா தவரு நனிநல்லர் கற்றார்முற்
சொல்லா திருக்கப் பெறின். 2

கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும். 3

நுண்மா ணுழைபுல மில்லா னெழிநல
மண்மாண் புனைபாவை யற்று. 4

விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர். 5

42-ம். அதி. கேள்வி.

செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வஞ்
செல்வத்து ளெல்லாந் தலை. 1

செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும். 2

செவியுணவிற் கேள்வி யுடையா ரவியுணவி
னான்றாரோ டொப்பர் நிலத்து. 3

கற்றில னாயினுங் கேட்க வஃதொருவற்
கொற்கத்தி னூற்றாந் துணை. 4

இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
யொழுக்க முடையார்வாய்ச் சொல். 5

எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும். 6

பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லா ரிழைத்துணர்ந்
தீண்டிய கேள்வி யவர். 7

கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற்
றோட்கப் படாத செவி. 8

நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
வாயின ராத லரிது. 9

செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்க
ளவியினும் வாழினு மென். 10

## 43-ம். அதி. அறிவுடைமை.

சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு. 1

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. 2

உலகந் தழீஇய தொட்ப மலர்தலுங்
கூம்பலு மில்ல தறிவு. 3

எவ்வ துறைவ துலக முலகத்தோ
டவ்வ துறைவ தறிவு. 4

அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில். 5

எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை
யதிர வருவதோர் நோய். 6

அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர். 7

## 44-ம். அதி. குற்றங்கடிதல்.

செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார்
பெருக்கம் பெறுமித நீர்த்து. 1

தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழி நாணுவர். 2

குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
யற்றந் தரூஉம் பகை. 3

வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை யெரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும். 4

தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பி
னென்குற்ற மாகு மிறைக்கு. 5

## 45-ம். அதி. பெரியாரைத்துணைக்கோள்.

உற்றநோய் நீக்கி யுறாஅமை முற்காக்கும்
பெற்றியார் பேணிக் கொளல். 1

அறியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல். 2

தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை. 3

தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில். 4

இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர். 5

இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும். 6

முதலிலார்க் கூதிய மில்லை மதலையாஞ்
சார்பிலார்க் கில்லை நிலை. 7

பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல். 8

### 46-ம். அதி. சிற்றினஞ்சேராமை.

நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க்
கினத்தியல்ப தாகு மறிவு. 1

மனத்தானா மாந்தர்க் குணர்ச்சி யினத்தானா
மின்னா னெனப்படுஞ் சொல். 2

மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டு
மினந்தூய்மை தூவா வரும். 3

மனநல மன்னுயிர்க் காக்க மினநல
மெல்லாப் புகழுந் தரும். 4

மனநல நன்குடைய ராயினுஞ் சான்றோர்க்
கினநல மேமாப் புடைத்து. 5

### 47-ம். அதி. தெரிந்துசெயல்வகை.

தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்
கரும்பொருள் யாதொன்று மில். 1

ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
யூக்கா ரறிவுடை யார். 2

செய்தக்க வல்ல செயக்கெடுஞ் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும். 3

எண்ணித் துணிக கருமந் துணிந்தபி
னெண்ணுவ மென்ப திழுக்கு. 4

நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை. 5

48-ம். அதி. வலியறிதல்.

வினைவலியுந் தன்வலியு மாற்றான் வலியுந்
துணைவலியுந் தூக்கிச் செயல். 1

49-ம். அதி. காலமறிதல்.

பகல்வெல்லுங் கூகையைக் காக்கை யிகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது. 1

பருவத்தோ டொட்ட வொழுக றிருவினைத்
தீராமை யார்க்குங் கயிறு. 2

ஞாலங் கருதினுங் கைகூடுங் காலங்
கருதி யிடத்தாற் செயின். 3

காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர். 4

எய்தற் கரிய தியைந்தக்கா லந்நிலையே
செய்தற் கரிய செயல். 5

கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து. 6

50-ம். அதி. இடனறிதல்.

தொடங்கற்க வெவ்வினையு மெள்ளற்க முற்று
மிடங்கண்ட பின்னல் லது. 1

ஆற்றாரு மாற்றி யடுப விடனறிந்து
போற்றார்கட் போற்றிச் செயின். 2

எண்ணியா ரெண்ண மிழப்ப ரிடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின். 3

நெடும்புன லுள் வெல்லு முதலை யடும்புனலி
னீங்கி னதனைப் பிற. 4

அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா வெஞ்சாமை
யெண்ணி யிடத்தாற் செயின். 5

51-ம் அதி. தெரிந்துதெளிதல்.

அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கா
லின்மை யரிதே வெளிறு. 1

குணனாடிக் குற்றமு நாடி யவற்றுண்
மிகைநாடி மிக்க கொளல். 2

பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக் கல். 3

தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா விடும்மை தரும். 4

தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபிற்
றேறுக தேறும் பொருள். 5

தேரான் தெளிவுந் தெளிந்தான்க ணையுறவுந்
தீரா விடும்பை தரும். 6

52-ம். அதி. தெரிந்துவினையாடல்.

நன்மையுந் தீமையு நாடி நலம்புரிந்த
தன்மையா னாளப் படும். 1

வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை
யாராய்வான் செய்க வினை. 2

அன்பறிவு தேற்ற மவாவின்மை யிந்நான்கு
நன்குடையான் கட்டே தெளிவு. 3

செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோ
டெய்த வுணர்ந்து செயல். 4

நாடோறு நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு. 5

53-ம். அதி. சுற்றந்தழால்.

பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள. 1

காக்கை கரவா கரைந்துண்ணு மாக்கமு
மன்னநீ ரார்க்கே யுள. 2

பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கி
னதுநோக்கி வாழ்வார் பலர். 3

54-ம். அதி. பொச்சாவாமை.

அச்ச முடையார்க் கரணில்லை யாங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு. 1

முன்னுறக் காவா திழுக்கியான் றன்பிழை
பின்னூ றிரங்கி விடும். 2

இழுக்காமை யார்மாட்டு மென்றும் வழுக்காமை
வாயி னதுவொப்ப தில். 3

### 55-ம். அதி. செங்கோன்மை.

ஓர்ந்து கண்ணோடா திறைபுரிந் தியார்மாட்டுந்
தேர்ந்துசெய் வஃதே முறை. 1

வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி. 2

குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்ன
னடிதழீஇ நிற்கு முலகு. 3

### 56-ம். அதி. கொடுங்கோன்மை.

நாடொறு நாடி முறைசெய்யா மன்னவ
னாடொறு நாடு கெடும். 1

ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவா னெனின். 2

### 57-ம். அதி. வெருவந்தசெய்யாமை.

கடிதோச்சி மெல்ல வெறிக நெடிதாக்க
நீங்காமை வேண்டு பவர். 1

இனத்தாற்றி யெண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
சீறிற் சிறுகுந் திரு. 2

செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும். 3

### 58-ம். அதி. கண்ணோட்டம்.

கண்ணோட்ட மென்னுங் கழிபெருங் காரிகை
யுண்மையா னுண்டிவ் வுலகு. 1

கண்ணிற் கணிகலங் கண்ணோட்ட மஃதின்றேற்
புண்ணென் றுணரப் படும். 2

கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்
குரிமை யுடைத்திவ் வுலகு. 3

பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர். 4

### 59-ம். அதி. ஒற்றாடல்.

ஒற்று முறைசான்ற நூலு மிவையிரண்டுந்
தெற்றென்க மன்னவன் கண். 1

60-ம். அதி. ஊக்கமுடைமை.

உடைய ரெனப்படுவ தூக்க மஃதில்லா
ருடைய துடையரோ மற்று. 1

உரமொருவற் குள்ள வெறுக்கை யஃதில்லார்
மரமக்க ளாதலே வேறு. 2

61-ம். அதி. மடியின்மை.

குடியென்னுங் குன்றா விளக்க மடியென்னு
மாசூர மாய்ந்து கெடும். 1

மடியை மடியா வொழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர். 2

மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியுந் தன்னினு முந்து. 3

குடிமடிந்து குற்றம் பெருகு மடிமடிந்து
மாண்ட வுஞற்றி லவர்க்கு. 4

நெடுநீர் மறவி மடிதுயி னான்குங்
கெடுநீரார் காமக் கலன். 5

62-ம். அதி. ஆள்வினையுடைமை.

அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும். 1

தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும். 2

இன்பம் விழையான் வினைவிழைவான் றன்கேளிர்
துன்பந் துடைத்தூன்றுந் தூண். 3

முயற்சி திருவினை யாக்கும் முயற்றின்மை
யின்மை புகுத்தி விடும். 4

தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்
மெய்வருந்தக் கூலி தரும். 5

ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர். 6

63-ம். அதி. இடுக்கணழியாமை.

இடுக்கண் வருங்கா னகுக வதனை
யடுத்தூர்வ தஃதொப்ப தில். 1

வெள்ளத் தனைய விடும்பை யறிவுடையா
னுள்ளத்தி னுள்ளக் கெடும். 2

இடும்பைக் கிடும்பை படுப்ப ரிடும்பைக்
கிடும்பை படாஅ தவர். 3

மிடுத்தவா யெல்லாம் பகடன்ன னுற்ற
விடுக்க ணிடர்ப்பா டுடைத்து. 4

அடுக்கி வரினு மழிவிலா னுற்ற
விடுக்க ணிடுக்கட் படும். 5

அற்றேமென் றல்லற் படுபவோ பெற்றேமென்
றோம்புத றேற்றா தவர். 6

இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தை
கையாறாக் கொள்ளாதா மேல். 7

இன்பம் விழையா னிடும்பை யியல்பென்பான்
றுன்ப முறுத லிலன். 8

இன்பத்து ளின்பம் விழையாதான் றுன்பத்துட்
டுன்ப முறுத லிலன். 9

---

## அங்கவியல்.

### 64-ம். அதி. அமைச்சு.

கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யு
மருவினையு மாண்ட தமைச்சு. 1

வன்கண் குடிகாத்தல் கற்றறித லாள்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு. 2

பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு. 3

மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்னிற் பவை. 4

செயற்கை யறிந்தக் கடைத்து முலகத்
தியற்கை யறிந்து செயல். 5

### 65-ம். அதி. சொல்வன்மை.

ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு. 1

திறனறிந்து சொல்லுக சொல்லை யறனும்
பொருளு மதனினூஉங் கில். 2

சொல்லுக சொல்லைப் பிறிதோர் சொலச்சொல்லை
வெல்லுஞ்சொ லின்மை யறிந்து. 3

சொல்வல்லன் சோர்வில னஞ்சா னவனை
யிகல்வெல்லல் யார்க்கு மரிது. 4

விரைந்து தொழில்கேட்கு ஞால நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின். 5

இணரூழ்த்து நாறு மலரனையர் கற்ற
துணர விரித்துரையா தார். 6

66-ம். அதி. வினைத்தூய்மை.

துணைநல மாக்கந் தரூஉம் வினைநலம்
வேண்டிய வெல்லாந் தரும். 1

என்று மொருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை. 2

இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர். 3

ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை. 4

67-ம். அதி. வினைத்திட்பம்.

வினைத்திட்ப மென்ப தொருவன் மனத்திட்ப
மற்றைய வெல்லாம் பிற. 1

ஊறொரா லுற்றபி னொல்காமை யிவ்விரண்டி
னாறென்ப ராய்ந்தவர் கோள். 2

சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல். 3

எண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார்
திண்ணிய ராகப் பெறின். 4

உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னா ருடைத்து. 5

கலங்காது கண்ட வினைக்கட் டுளங்காது
தூக்கங் கடிந்து செயல். 6

துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
யின்பம் பயக்கும் வினை. 7

68-ம். அதி. வினைசெயல்வகை.

தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை. 1

ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே யொல்லாக்காற்
செல்லும்வாய் நோக்கிச் செயல். 2

பொருள் கருவி காலம் வினையிடனோ டைந்து
மிருடீர வெண்ணிச் செயல். 3

முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல். 4

69-ம். அதி. தூது.

தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாந் தூது. 1

கற்றுக்கண் ணஞ்சான் செலச்சொல்லிக் காலத்தாற்
றக்க தறிவதாந் தூது. 2

கடனறிந்து காலங் கருதி யிடனறிந்
தெண்ணி யுரைப்பான் றலை. 3

70-ம். அதி. மன்னரைச்சேர்ந்தொழுகல்.

அகலா தணுகாது தீக்காய்வார் போல்க
விகல் வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார். 1

குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல். 2

கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத செய்யார்
துளக்கற்ற காட்சி யவர். 3

71-ம். அதி. குறிப்பறிதல்.

கூறாமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்று
மாறாநீர் வையக் கணி. 1

ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல். 2

குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல். 3

குறிப்பிற் குறிப்புணரா வாயினு றுப்பினு
ளென்ன பயத்தவோ கண். 4

அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்
கடுத்தது காட்டு முகம். 5

முகநோக்கி நிற்க வமையு மகநோக்கி
யுற்ற துணர்வார்ப் பெறின். 6

72-ம். அதி. அவையறிதல்.

கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து. 1

உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வதன்
பாத்தியு ணீர்சொரிந் தற்று. 2

புல்லவையுட் பொய்ச்சாந்துஞ் சொல்லற்க நல்லவையு
ணன்கு செலச்சொல்லு வார். 3

அங்கணத்து ளுக்க வமிழ்தற்றாற் றங்கணத்த
ரல்லார்முற் கோட்டி கொளல். 4

73-ம். அதி. அவையஞ்சாமை.

கற்றார்முற் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற
மிக்காருண் மிக்க கொளல். 1

ஆற்றி னளவறிந்து கற்க வவையஞ்சா
மாற்றங் கொடுத்தற் பொருட்டு. 2

பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையு
ணன்கு செலச் சொல்லா தார். 3

74-ம். அதி. நாடு.

தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு. 1

பெரும்பொருளாற் பெட்டக்க தாகி யருங்கேட்டா
லாற்ற விளைவது நாடு. 2

உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு. 3

பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்தலைக்குங்
கொல்குறும்பு மில்லது நாடு. 4

கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டிற் றலை. 5

இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணு நாட்டிற் குறுப்பு. 6

நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு. 7

## 75-ம். அதி. அரண்.

சிறுகாப்பிற் பேரிடத்த தாகி யுறுபகை
யூக்க மழிப்ப தரண். 1

கொளற் கரிதாய்க் கொண்டகூழ்த் தாகியகத்தார்
நிலைக்கெளிதா நீர தரண். 2

எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
யில்லார்க ணில்ல தரண். 3

## 76-ம். அதி. பொருள்செயல்வகை.

பொருளென்னும் பொய்யா விளக்க மிருளறுக்கு
மெண்ணிய தேயத்துச் சென்று. 1

அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள். 2

அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ்
செல்வச் செவிலியா லுண்டு. 3

செய்க பொருளைச் செறுநர் செறுக்கறுக்கு
மெஃகதனிற் கூரிய தில். 4

## 77-ம். அதி. படைமாட்சி.

உலைவிடத்தூ ரஞ்சா வன்கண் டொலைவிடத்து
தொல்படைக் கல்லா லரிது. 1

ஒலித்தக்கா லென்னா முவரி யெலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும். 2

## 78-ம். அதி. படைச்செருக்கு.

கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும். 1

விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந் தன்னாளை யெடுத்து. ૨

சுழலு மிசைவேண்டி வேண்டா வுயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து. 3

79-ம் அதி. நட்பு.

செயற்கரிய யாவுள நட்பி னதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு. 1

நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு. 2

நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு. 3

முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு. 4

அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்க
ணல்ல லுழப்பதா நட்பு. 5

உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதா நட்பு. 6

நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி
யொல்லும்வா யூன்று நிலை. 7

80-ம். அதி. நட்பாராய்தல்.

ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரம் தரும். 1

குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா
வினனு மறிந்தியாக்க நட்பு. 2

குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு. 3

அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல். 4

ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல். 5

உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ கொள்ளற்க
வல்லற்க ணாற்றறுப்பார் நட்பு. 6

மருவுக மாசற்றார் கேண்மை யொன்றீத்து
மொருவுக வொப்பிலார் நட்பு. 7

### 81-ம். அதி. பழமை.

பேதமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க
நோதக்க நட்டார் செயின். 1

அழிவந்த செய்யினு மன்பறா ரன்பின்
வழிவந்த கேண்மை யவர். 2

### 82-ம். அதி. தீநட்பு.

பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையா
ரேதின்மை கோடி யுறும். 1

### 83-ம். அதி. கூடாநட்பு.

முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா
வஞ்சரை யஞ்சப் படும். 1

சொல்வணக்க மொன்னார்கட் கொள்ளற்க வில்வணக்கந்
தீங்கு குறித்தமை யான். 2

தொழுதகை யுள்ளும் படையொடுங்கு மொன்னா
ரழுத கண்ணீரு மனைத்து. 3

பகைநட்பாங் காலம் வருங்கான் முகநட்
டகநட் பொரீஇ விடல். 4

### 84-ம். அதி. பேதைமை.

பேதைமை யென்பதொன் றியாதெனி னேதங்கொண்
டூதியம் போக விடல். 1

நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில். 2

ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில். 3

### 85-ம். அதி. புல்லறிவாண்மை.

அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை
யின்மையா வையா துலகு. 1

அறிவில்லார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க் குஞ்செய்த லரிது. 2

அருமறை சோரு மறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு. 3

உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும். 4

### 86-ம் அதி. இகல்.

பகல்கருதிப் பற்றா செயினு மிகல்கருதி
யின்னாசெய் யாமை தலை. 1

இகலென்னு மெவ்வநோய் நீக்கிற் றவலில்லாத்
தாவில் விளக்கந் தரும். 2

இன்பத்து ளின்பம் பயக்கு மிகலென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின். 3

இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே
மிகலூக்குந் தன்மை யவர். 4

இகலானா மின்னாத வெல்லா நகலானா
நன்னய மென்னுஞ் செருக்கு. 5

### 87-ம். அதி. பகைமாட்சி.

நீங்கான் வெகுளி நிறையில னெஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கு மெளிது. 1

வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க் கினிது. 2

காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
பேணாமை பேணப் படும். 3

கொடுத்துங் கொளல்வேண்டு மன்ற வடுத்திருந்து
மாணாத செய்வான் பகை. 4

### 88-ம். அதி. பகைத்திறந்தெரிதல்.

பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
றகைமைக்கட் டங்கிற் றுலகு. 1

தேறினுந் தேறா விடினு மழிவின்கட்
டேறான் பகாஅன் விடல். 2

நோவற்க நொந்த தறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து. 3

வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கட் பட்ட செருக்கு. 4

இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து 5

### 89-ம். அதி. உட்பகை.

உடம்பாடி லாதவர் வாழ்க்கை குடங்கருட்
பாம்போ டுடனுறைந் தற்று. 1

### 90-ம். அதி. பெரியாரைப்பிழையாமை.

ஆற்றுவா ராற்ற லிகழாமை போற்றுவார்
போற்றலு ளெல்லாந் தலை. 1

பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாராற்
பேரா விடும்பை தரும். 2

எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார். 3

வகைமாண்ட வாழ்க்கையும் வான் பொருளு மென்னுந்
தகைமாண்ட தக்கார் செறின். 4

### 91-ம். அதி. பெண்வழிச்சேரல்.

இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்றும்
நல்லார்க்கு நல்ல செயல். 1

அறவினையு மான்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வார்க ணில். 2

எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதமை யில். 3

### 92-ம். அதி. வரைவின்மகளிர்.

பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையி
லேதில் பிணந்தழீஇ யற்று. 1

பொருட்பொருளார் புன்னலந் தோயா ரருட்பொரு
ளாயு மறிவி னவர். 2

### 93-ம். அதி. கள்ளுண்ணாமை.

உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரா
னெண்ணப் படவேண்டா தார். 1

### 94-ம். அதி. சூது.

உடைசெல்வ மூணொளி கல்வியென் றைந்து
மடையாவா மாயங் கொளின். 1

இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோற் றுன்ப
முழத்தொறூஉங் காதற் றுயிர். 2

### 95-ம். அதி. மருந்து.

மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர்
வளிமுதலா வெண்ணிய மூன்று. 1

மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி யுணின். 2

அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு. 3

அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து. 4

மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணி
னூறுபா டில்லை யுயிர்க்கு. 5

இழிவறிந் துண்பான்க ணின்பம்போ நிற்குங்
கழிபே ரிரையான்க ணோய். 6

நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல். 7

உற்றா னளவும் பிணியளவுங் காலமுங்
கற்றான் கருதிச் செயல். 8

---

## ஒழிபியல்.

### 96-ம். அதி. குடிமை.

நகையீகை யின்சொ லிகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு. 1

அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்த லிலர். 2

நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங் குலம்வேண்டின்
வேண்டுக யார்க்கும் பணிவு. 3

### 97-ம் அதி. மானம்.

பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டு முயர்வு. 1

தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை. 2

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்ன
ருயிர்நீப்பர் மானம் வரின். 3

98-ம். அதி. பெருமை.

மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
கீழல்லார் கீழல் லவர். 1

பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி
னருமை யுடைய செயல். 2

பணியுமா மென்றும் பெருமை சிறுமை
யணியுமாந் தன்னை வியந்து. 3

பெருமை பெருமித மின்மை சிறுமை
பெருமித மூர்ந்து விடல். 4

அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும். 5

99-ம். அதி. சான்றாண்மை.

குணநலஞ் சான்றோர் நலனே பிறநல
மெந்நலத் துள்ளதூஉ மன்று. 1

ஆற்றுவா ராற்றல் பணித லதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை. 2

இன்னா செய்தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு. 3

ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி யெனப்படு வார். 4

100-ம். அதி. பண்புடைமை.

எண்பதத்தா லெய்த லெளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு. 1

நகையுள்ளு மின்னா திகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு. 2

நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள். 3

101-ம். அதி. நன்றியில்செல்வம்.

நச்சப் படாதவன் செல்வ நடுவூரு
ணச்சு மரம்பழுத் தற்று. 1

சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து. 2

102-ம். அதி. நாணுடைமை.

ஊனுடைமை யெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு. 1

அணியன்றோ நாணுடைமை சான்றோர்க் கஃதின்றேற்
பிணியன்றோ பீடு நடை. 2

நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டா
னாண்டுறவார் நாணாள் பவர். 3

103-ம். அதி. குடிசெயல்வகை.

ஆள்வினையு மான்ற வறிவு மெனவிரண்டி
னீள்வினையா னீளுங் குடி. 1

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வ
மடிதற்றுத் தான்முந் துறும். 2

குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானை
சுற்றமாச் சுற்று முலகு. 3

அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்து
மாற்றுவார் மேற்றே பொறை. 4

குடிசெய்வார்க் கில்லைப் பருவ மடிசெய்து
மானங் கருதக் கெடும். 5

இடுக்கண்கால் கொன்றிட வீழு மடுத்தூன்று
நல்லா ளிலாத குடி. 6

104-ம். அதி. உழவு.

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர். 1

தொடிப்புழுதி கஃசா வுணக்கிற் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும். 2

ஏரினு நன்றா லெருவிடுதல் கட்டபி
னீரினு நன்றதன் காப்பு. 3

இலமென் றசைஇ இருப்பாரைக் காணி
னிலமென்னு நல்லா ணகும். 4

105-ம். அதி. நல்குரவு.

துப்புர வில்லார் துவரத் துறவாமை
யுப்பிற்குங் காடிக்குங் கூற்று. 1

106-ம். அதி. இரவு.

இரப்பான் வெகுளாமை வேண்டு மிரப்பிடும்பை
தானேயுஞ் சாலுங் கரி. 1

107-ம். அதி. இரவச்சம்.

இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்ட தில், 1

இரப்பா னிரப்பாரை யெல்லா மிரப்பிற்
கரப்பா ரிரவன்மி னென்று. 2

கரப்பவர்க் கியாங்கொளிக்குங் கொல்லோ விரப்பவர்
சொல்லாடப் போஒ முயிர். 3

108-ம். அதி. கயமை.

நன்றறி வாரிற் கயவர் திருவுடையார்
நெஞ்சத் தவல மிலர். 1

சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ். 2

---

## காமத்துப்பால்.

### களவியல்.

109-ம். அதி. தகையணங்குறுத்தல்.

அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொன் மாலுமென் னெஞ்சு. 1

நோக்கினா ணோக்கெதிர் நோக்குத ணங்கணங்கு
தானைக்கொண் டன்ன துடைத்து. 2

பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்
பெண்டகையாற் பேரமர்க் கட்டு. 3

110-ம். அதி. குறிப்பறிதல்.

இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து. 1

யானோக்குங் காலை நிலநோக்கு நோக்காக்காற் 2
றானோக்கி மெல்ல நகும்.

ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல் 3
காதலார் கண்ணே யுள.

111-ம். அதி. புணர்ச்சிமகிழ்தல்.

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு 1
மொண்டொடி கண்ணே யுள.

பிணிக்கு மருந்து பிரம னணியிழை 2
தன்னோய்க்குத் தானே மருந்து.

நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந் 3
தீயாண்டுப் பெற்றா ளிவள்.

112-ம். அதி. நலம்புனைந்துரைத்தல்.

மதியு மடந்தை முகனு மறியா 1
பதியிற் கலங்கிய மீன்.

113-ம். அதி. காதற்சிறப்பு.

உடம்போ டுயிரிடை யென்னமற் றன்ன 1
மடந்தையோ டெம்மிடை நட்பு.

உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியே 2
னொள்ளமர்க் கண்ணாள் குணம்.

கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணு 3
மெழுதேங் கரப்பாக் கறிந்து.

நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்ட 4
லஞ்சுதும் வேபாக் கறிந்து.

114-ம். அதி. நாணுத்துறவுரைத்தல்.

காம முழந்து வருந்தினார்க் கேம 1
மடலல்ல தில்லை வலி.

மடலூர்தல் யாமத்து முள்ளுவேன் மன்ற 2
படலொல்லா பேதைக்கென் கண்.

115-ம். அதி. அலரறிவுறுத்தல்.

அலரெழ வாருயிர் நிற்கு மதனைப் 1
பலரறியார் பாக்கியத் தால்.

உறுஅதோ வூரறிந்த் கெளவை யதனைப்
பெறுஅது பெற்றன்ன நீர்த்து. 2

---

## கற்பியல்:

### 116-ம். அதி. பிரிவாற்றுமை.

தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற்சுட லாற்றுமோ தீ. 1

### 117-ம். அதி. படர்மெலிந்திரங்கல்.

காமமு நாணு முயிர்காவாத் தூங்குமென்
னோனு வுடம்பி னகத்து. 1

காமக் கடும்புன னீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே யுளேன். 2

### 118-ம். அதி. கண்விதுப்பழிதல்.

வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை
யாரஞ ருற்றன கண். 1

### 119-ம். அதி. பசப்புறுபருவரல்.

உள்ளுவன் மன்யா னுரைப்ப தவர்திறமாற்
கள்ளம் பிறவோ பசப்பு. 1

விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு. 2

### 120-ம். அதி. தனிப்படர்மிகுதி.

வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வா ரளிக்கு மளி. 1

### 121-ம். அதி. நினைந்தவர்புலம்பல்.

உள்ளினுந் தீராப் பெருமகிழ் செய்தலாற்
கள்ளினுங் காம மினிது. 1

யாம முளேங்கொ லவர்நெஞ்சத் தெந்நெஞ்சத்
தோவ வுளரே யவர். 2

மறப்பி னெவனுவன் மற்கொன் மறப்பறியே
னுள்ளினு முள்ளஞ் சுடும். 3

### 122-ம். அதி. கனவுநிலையுரைத்தல்.

கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க் | 1
குயலுண்மை சாற்றுவேன் மன்.

நனவினா னல்கா தவரைக் கனவினாற் | 2
காண்டலி னுண்டென் னுயிர்.

நனவினாற் கண்டதூஉ மாங்கே கனவுந்தான் | 3
கண்ட பொழுதே யினிது.

### 123-ம். அதி. பொழுதுகண்டிரங்கல்.

பனியரும்பிப் பைதல்கொண் மாலை துனியரும்பித் | 1
துன்பம் வளர வரும்.

காதல ரில்வழி மாலை கொலைக்களத் | 2
தேதிலர் போல வரும்.

மாலைநோய் செய்தன் மணந்தா ரகலாத | 3
காலை யறிந்த திலேன்.

### 124-ம் அதி. உறுப்புநலனழிதல்.

சிறுமை நமக்கொழியச் சேட்சென்றா ருள்ளி | 1
நறுமலர் நாணின கண்.

முயங்கிய கைகளை யூக்கப் பசந்தது | 2
பைந்தொடிப் பேதை நுதல்.

### 125-ம். அதி. நெஞ்சொடுகிளத்தல்.

காத லவரில ராகநீ நோவது | 1
பேதைமை வாழியென் னெஞ்சு.

இருந்துள்ளி யென்பரித னெஞ்சே பரிந்துள்ளல் | 2
பைதனோய் செய்தார்க ணில்.

### 126-ம். அதி. நிறையழிதல்

காம மெனவொன்றோ கண்ணின்றென் னெஞ்சத்தை | 1
யாமத்து மாளுந் தொழில்.

### 127-ம். அதி. அவர்வயின்விதும்பல்.

வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற | 1
நாளொற்றித் தேய்ந்த விரல்.

இலங்கிழா யின்று மறப்பினென் றோண்மேற்
கலங்கழியுங் காரிகை நீத்து. 2

உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார்
வரனசைஇ யின்னு முளேன். 3

கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்
கோடுகொ டேறுமென் னெஞ்சு. 4

காண்கமற் கொண்கனைக் கண்ணாரக் கண்டபி
னீங்குமென் மென்றோட் பசப்பு. 5

வருகமற் கொண்க னொருநாட் பருகுவன்
பைதனோ யெல்லாங் கெட. 6

புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல்
கண்ணன்ன கேளிர் வரின். 7

ஒருநா ளெழுநாள்போற் செல்லுஞ் சேட்சென்றார்
வருநாள் வைத்தேங்கு பவர்க்கு. 8

128-ம். அதி. குறிப்பறிவுறுத்தல்.

கரப்பினுங் கையிகந் தொல்லாநின் றுண்க
ணுரைக்க லுறுவதொன் றுண்டு. 1

தொடிநோக்கி மென்றோளு நோக்கி யடிநோக்கி
யஃதாண் டவள்செய் தது. 2

129 ம். அதி. புணர்ச்சிவிதும்பல்.

உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு. 1

காணுங்காற் காணேன் றவறாய காணக்காற்
காணேன் றவறல் லவை. 2

130 ம். அதி. நெஞ்சோடுகிளத்தல்.

கெட்டார்க்கு நாட்டாரில் லென்பதோ நெஞ்சேநீ
பெட்டாங் கவர்பின் செலல். 1

பெறாஅமை யஞ்சும் பெறிற்பிரி வஞ்சு
மறாஅ விடும்பைத்தென் னெஞ்சு. 2

131-ம். அதி. புலவி.

அலந்தாரை யல்லனோய் செய்தற்றாற் றம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல். 1

ஊடி யவரை யுணர்ந்தாமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று. 2

132-ம் அதி. புலவிநுணுக்கம்.

உள்ளினே னென்றேன்மற் றென்மறந்தீ ரென்றென்னைப்
புல்லாள் புலத்தக் கனள். 1

தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீர்
நின்னீர ராகுதி ரென்று. 2

நினைத்திருந்து நோக்கினுங் காயு மனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீ ரென்று. 3

133-ம். அதி. ஊடலுவகை.

புலத்தலிற் புத்தேணா டுண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்னா ரகத்து. 1

தவறில ராயினுந் தாம்வீழ்வார் மென்றோ
ளகறலி னாங்கொன் றுடைத்து. 2

உணலினு முண்ட தறலினிது காமம்
புணர்தலி னூட லினிது. 3

ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னுங்
கூடலிற் காணப் படும். 4

ஊடுக மன்னோ வொளியிழை யாமிரப்ப
நீடுக மன்னோ விரா. 5

ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின். 6



# நாலடியார்.

---

## அறத்துப்பால்.

### 1-ம். அதி. செல்வநிலையாமை.

யானை யெருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச்
சேனைத் தலைவாராய்ச் சென்றோரு-மேனை
வினையுலப்ப வேறாகி வீழ்வர்தாங் கொண்ட
மனையாளை மாற்றார் கொள. 1

### 2-ம். அதி. இளமைநிலையாமை.

நரைவரு மென்றெண்ணி நல்லறி வாளர்
குழவி யிடத்தே துறந்தார்-புரைதீரா
மன்னா விளமை மகிழ்ந்தாரே கோலூன்றி
யின்னாங் கெழுந்திருப் பார். 1

எனக்குத்தா யாகியா ளென்னையீங் கிட்டுத்
தனக்குத்தாய் நாடியே சென்றா-டனக்குத்தா
யாகி யவளு மதுவானாற் றாய்தாய்க்கொண்
டேகு மளித்திவ் வுலகு. 2

### 3-ம். அதி. யாக்கைநிலையாமை.

மலைமிசைத் தோன்று மதியம்போல் யானைத்
தலைமிசைக் கொண்ட குடையார்-நிலமிசைத்
துஞ்சினா ரென்றெடுத் தூற்றப்பட் டாரல்லா
லெஞ்சினா ரிவ்வுலகத் தில். 1

கணங்கொண்டு சுற்றத்தார் கல்லென் றலறப்
பிணங்கொண்டு காட்டுய்ப்பார்க் கண்டும்-மணங்கொண்டீ
டுண்டுண்டுண் டென்னு முணர்வினாற் சாற்றுமே [ண்
தொண்டொண்டொ டென்னும் பறை. 2

படுமழை மொக்குளிற் பல்காலுந் தோன்றிக்
கெடுமிதோ யாக்கையென் றெண்ணித்-தடுமாற்றந்
தீர்ப்பேம்யா மென்றுணருந் திண்ணறி வாளரை
நேர்ப்பார்யார் நீணிலத்தின் மேல். 3

புன்னுனிமே னீர்போ னிலையாமை யென்றெண்ணி
யின்னினியே செய்க வறவினை-யின்னினியே
நின்று னிருந்தான் கிடந்தான்றன் கேளலறச்
சென்று னெனப்படுத லான். 4

4-ம். அதி. அறன்வலியுறுத்தல்.

வினைப்பயன் வந்தக்கால் வெய்ய வுயிரா
மனத்தி னழியுமாம் பேதை-நினைத்ததனைத்
தொல்லைய தென்னுணர் வாரே தடுமாற்றத்
தெல்லை யிகந்தொருவு வார். 1

அரும்பெறல் யாக்கையைப் பெற்ற பயத்தால்
பெரும்பயனு மாற்றவே கொள்க-கரும்பூர்ந்த
சாறுபோற் சாலவும் பின்னுதவி மற்றதன்
கோதுபோற் போகு முடம்பு. 2

கரும்பாட்டி கட்டி சிறுகாலைக் கொண்டார்
துரும்பெழுந்து வேங்காற் றுயராண்-டுழவார்
வருந்தி யுடம்பின் பயன்கொண்டார் கூற்றம்
வருங்காற் பரிவ திலர். 3

இன்றுகொ லன்றுகொ லென்றுகொ லென்னாது
பின்றையே நின்றது கூற்றமென் றெண்ணி
யொருவுமின் றீயவை யொல்லும் வகையான்
மருவுமின் மாண்டா ரறம். 4

மக்களா லாய பெரும்பயனு மாயுங்கா
லெத்துணையு மாற்றப் பலவானுற்-றொக்க
வுடம்பிற்கே யொப்புரவு செய்தொழுகா தும்பர்க்
கிடந்துண்ணப் பண்ணப் படும். 5

உறக்குந் துணையதோ ராலம்வித் தீண்டி
யிறப்ப நிழற்பயந் தாஅங்-கறப்பயனுந்
தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால்
வான்சிறிதாப் போர்த்து விடும். 6

5-ம். அதி. தூய்தன்மை.

தோற்போர்வை மேலுந் தொளைபலவாய் பொய்ம்மறைக்கு
மீப்போர்வை மாட்சித் துடம்பானுன்-மீப்போர்வை
பொய்ம்மறையாக் காமம் புகலாது மற்றதனைப்
பைம்மறியாப் பார்க்கப் படும். 1

கூடருங் கொழுவுங் குருதியு மென்புந்
தொடரு நரம்பொடு தோலு-மிடையிடையே
வைத்த தடியும் வழும்புமா மற்றிவற்று
ளெத்திறத்தா ளீர்ங்கோதை யாள். 2

6-ம். அதி துறவு.

விளக்குப் புகவிருண் மாய்ந்தாங் கொருவன்
றவத்தின்முன் னில்லா தாம்பாவம்-விளக்குநெய்
தேய்விடத்துச் சென்றிருள் பாய்ந்தாங்கு நல்வினை
தீர்விடத்து நிற்குமாந் தீது. 1

நிலையாமை நோய்மூப்பு சாக்காடென் றெண்ணித்
தலையாயார் தங்கருமஞ் செய்வார்-தொலைவில்லாச்
சத்தமுஞ் சோதிடமு மென்றாங் கிவைபிதற்றும்
பித்தரிற் பேதையா ரில். 2

இல்ல மிளமை யெழில்வனப்பு மீக்கூற்றஞ்
செல்வம் வலியென் றிவையெல்லா-மெல்ல
நிலையாமை கண்டு நெடியார் துறப்பர்
தலையாயார் தாமுய்யக் கொண்டு. 3

துன்பம் பலநா ளுழந்து மொருநாளை
யின்பமே காமுறுவ ரேழையா-ரின்ப
மிடைதெரிந் தின்னாமை நோக்கி மனையா
றடைவொழிந்தா ரான்றமைந் தார். 4

கொன்னே கழிந்தன் றிளமையு மின்னே
பிணியொடு மூப்பும் வருமாற்-றுணிவொன்றி
யென்னொடு சூழா தெழுநெஞ்சே போதியோ
நன்னெறி சேர நமக்கு. 5

ஊக்கித்தாங் கொண்ட விரதங்க ளுள்ளுடையத்
தாக்கருந் துன்பங்க டாந்தலை-வந்தக்கா
னீக்கு நிறாஉ முரவோரே நல்லொழுக்கங்
காக்குந் திருவத் தவர். 6

தம்மை யிகழ்ந்தமை| தாம்பொறுப்ப தன்றிமற்
றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தா-லும்மை
யெரிவாய் நிரயத்து வீழ்வர்கொ லென்று
பரிவதூஉஞ் சான்றோர் கடன். 7

மெய்வாய் கண்மூக்குச் செவியெனப் பேர்பெற்ற
வைவாய வேட்கை யவாவினைக்- கைவாய்
கலங்காமற் காத்து மாற்ற லுடையான்
வியங்காது வீடு பெறும். 8

துன்பமே மீதூரக் கண்டுந் துறவுள்ளா
ரின்பமே காமுறுவ ரேழையா-ரின்ப
மிசைதொறு மற்றத னின்னுமை நோக்கிப்
பசைதல் பரியாதா மேல். 9

7-ம். அதி. சினமின்மை.

மதித்திறப் பாரு மிறக்க மதியா
மிதித்திறப் பாரு மிறக்க- மிதித்தேறி
யீயுந் தலைமே லிருத்தலா லஃ்தறிவார்
காயுங் கதமின்மை நன்று. 1

தண்டாச் சிறப்பிற்றம் மின்னுயிரைத் தாங்காது
கண்டுழி யெல்லாந் துறப்பவோ-மண்டி
யடிபெயரா தாற்ற விளிவந்த போழ்தின்
முடிகிற்கு முள்ளத் தவர். 2

காவா தொருவன்றன் வாய்திறந்து சொல்லுஞ்சொ
லோவாதே தன்னைச் சுடுதலா-லோவாதே
யாய்ந்தமைந்த கேள்வி யறிவுடையா ரெஞ்ஞான்றுங்
காய்ந்தமைந்த சொல்லார் கறுத்து. 3

நேர்த்து நிகரல்லார் நீரல்ல சொல்லியக்கால்
வேர்த்து வெகுளார் விழுமியோ-ரோர்த்ததனை

உள்ளத்தா னுள்ளி யுரைத்துரா யூர்கேட்பத்
துள்ளித்தூண் முட்டுமாங் கீழ். 4

இளையா னடக்க மடக்கங் கிளைபொரு
ளில்லான் கொடையே கொடைப்பய-னெல்லா
மொறுக்கு மதுகை யுரனுடை யாளன்
பொறுக்கும் பொறையே பொறை. 5

மாற்றாய் நின்றுதம் மாறேற்பார்க் கேலாமை
யாற்றாமை யென்னு ரறிவுடையா-ராற்றாமை
நேர்த்தின்னு மற்றவர் செய்தக்காற் றாமவரைப்
பேர்த்தின்னு செய்யாமை நன்று. 6

நெடுங்கால மோடினு நீசர் வெகுளி
கெடுங்கால மின்றிப் பரக்கு-மடுங்காலை
நீர்கொண்ட வெப்பம்போற் றானே தணியுமே
சீர்கொண்ட சான்றோர் சினம். 7

உபகாரஞ் செய்ததனை யோராதே தங்க
ணபகார மாற்றஞ் செயினு-முபகாரம்
தாஞ்செய்வ தல்லாற் றவற்றினாற் றீங்கூக்கல்
வான்றோய் குடிப்பிறந்தார்க் கில். 8

கூர்த்துநாய் கௌவிக் கொளக்கண்டுந் தம்வாயால்
பேர்த்துநாய் கௌவினா ரீங்கில்லை-நீர்த்தன்றிக்
கீழ்மக்கள் கீழாய் சொல்லியக்காற் சொல்பவோ
மேன்மக்க டம்வாயான் மீட்டு. 9

8-ம். அதி. பொறையுடைமை.

கோதை யருவிக் குளிர்வரை நன்னாட
பேதையோ டியாது முரையற்க- பேதை
யுரைப்பிற் சிதைந்துரைக்கு மொல்லும் வகையான்
வழுக்கிக் கழிதலே நன்று. 1

நேரல்லார் நீரல்ல சொல்லியக்கான் மற்றது
தாரித் திருத்த றகுதிமற்-றோரும்
புகழ்மையாய்க் கொள்ளாது பொங்குநீர் ஞாலஞ்
சமழ்மையாக் கொண்டு விடும். 2

அறிவ தறிந்தடங்கி யஞ்சுவ தஞ்சி
யுறுவ துலகுவப்பச் செய்து-பெறுவதனு
லின்புற்று வாழு மியல்புடையா ரெஞ்ஞான்றுந்
துன்புற்று வாழ்த லரிது. 3

வேற்றுமை யின்றிக் கலந்திருவர் நட்டக்காற்
றேற்ரு வொழுக்க மொருவன்க-ணுண்டாயி
ஞற்றுந் துணையும் பொறுக்க பொருனுயிற்
றாற்ருதே தூர விடல். 4

இன்ஞு செயினு மினிய வொழிகென்று
தன்னையே தானேவி னல்லது-துன்னிக்
கலந்தாரைக் கைவிடுதல் கானக நாட
விலங்கிற்கும் விள்ள லரிது. 5

இன்பம் பயந்தாங் கிழிவு தலைவரினு
மின்பத்தின் பக்க மிருந்தைக்க-வின்ப
மொழியாமை கண்டாலு மோங்கருவி நாட
பழியாகா வாறே தலை. 6

தான்கெடினுந் தக்கார்கே டெண்ணற்க தன்னுடம்பி
னூன்கெடினு முண்ணார்கைத் துண்ணற்க-வான்கவிந்த
வையக மெல்லாம் பெறினு முரையற்க
பொய்யோ டிடைமிடைந்த சொல். 7

9-ம். அதி. பிறர்மனைநயவாமை.

அறம்புகழ் கேண்மை பெருமையிந் நான்கும்
பிறன்ருர நச்சுவார்ச் சேரா-பிறன்ருர
நச்சுவார்ச் சேரும் பகைபழி பாவமென்
றச்சத்தோ டிந்நாற் பொருள். 1

12-ம். அதி. மெய்ம்மை.

இடம்பட மெய்ஞ்ஞானங் கற்பினு மென்று
மடங்காதா ரென்று மடங்கார்-தடங்கண்ணு
யுப்பொடு நெய்பா றயிர்காயம் பெய்தடினுங்
கைப்பறு பேய்ச்சுரையின் காய். 1

### 13-ம். அதி. தீவினையச்சம்.

பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும்-வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலுந் தேயுமே
தானே சிறியார் தொடர்பு. 1

மனைப்பாசங் கைவிடாய் மக்கட்கென் றேங்கி
யெனைத்தூழி வாழ்தியோ நெஞ்சே-யெனைத்துஞ்
சிறுவரையே யாயினுஞ் செய்தநன் றல்லா
லுறுபயனோ வில்லை யுயிர்க்கு. 2

---

## பொட்பால்.

### 14-ம் அதி. கல்வி.

இம்மை பயக்குமா லீயக் குறைவின்றாற்
றம்மை விளக்குமாற் றாமுணராக்-கேடின்றா
லெம்மை யுலகத்தும் யாங்காணேங் கல்விபோன்
மம்ம ரறுக்கு மருந்து. 1

கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கிற் பிணிபல-தெள்ளிதி
னாராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகிற் றெரிந்து. 2

கனைகடற் றண்சேர்ப்ப கற்றறிந்தார் கேண்மை
நுனியிற் கரும்புதின் றற்றே-நுனிநீக்கித்
தூரிற்றின் றன்ன தகைத்தரோ பண்பிலா
வீரமி லாளர் தொடர்பு. 3

கல்லாரே யாயினுங் கற்றாரைச் சேர்ந்தொழுகி
னல்லறிவு நாளுந் தலைப்படுவர்-தொல்சிறப்பி
னொண்ணிறப் பாதிரிப்பூச் சேர்தலாற் புத்தோடு
தண்ணீர்க்குத் தான்பயந் தாங்கு. 4

அலகுசொல் கற்பி னறிவுநூல் கல்லா
துலகநூ லோதுவ தெல்லாங்-கலகல
கூஉந் துணையல்லாற் கொண்டு தடுமாற்றம்
போஒந் துணையறிவா ரில். 5

15-ம். அதி. குடிப்பிறப்பு.

ஒருபுடை பாம்பு கொளினு மொருபுடை
யங்கண்மா ஞாலம் விளக்குறூஉந்-திங்கள்போல்
செல்லாமை செவ்வனேர் நிற்பினு மொப்புரவிற்
கொல்கார் குடிப்பிறந் தார். 1

16-ம். அதி. மேன்மக்கள்.

நரம்பெழுந்த நல்கூர்ந்தா ராயினுஞ் சான்றோர்
குரம்பெழுந்து குற்றங்கொண் டேறா-ருரங்கவறா
வுள்ள மெனுநாரி னாற்கட்டி யுளவரையாற்
செய்வர் செயற்பா லவை. 1

கடித்துக் கரும்பினைக் கண்டகர நூறி
யிடித்துநீர்க் கொன்றினு மின்சுவைத்தே-யாகும்
வடுப்படவை திறந்தக் கண்ணுங் குடிப்பிறந்தார்
கூறார்தம் வாயிற் சிதைந்து. 2

17-ம். அதி. பெரியாரைப்பிழையாமை.

பொறுப்பரென் றெண்ணிப் புரைதீர்ந்தார் மாட்டும்
வெறுப்பன செய்யாமை வேண்டும்-வெறுத்தபி
னார்க்கு மருவி யணிமலை நன்னாட
பேர்க்குதல் யார்க்கு மரிது. 1

18-ம். அதி. நல்லினஞ்சேர்தல்.

அறிமி னறநெறி யஞ்சுமின் கூற்றம்
பொறுமின் பிறர்கடுஞ்சொற் போற்றுமின் வஞ்சம்
வெறுமின் வினைதீயார் கேண்மை யெஞ்ஞான்றும்
பெறுமின் பெரியார்வாய்ச் சொல். 1

ஊரங் கணநீ ருரவுநீர் சேர்ந்தக்கால்
பேரும் பிறிதாகித் தீர்த்தமா-மோருங்
குலமாட்சி யில்லாருங் குன்றுபோ னிற்பர்
நலமாட்சி நல்லாரைச் சார்ந்து. 2

பாலோ டளாயநீர் பாலாகு மல்லது
நீராய் நிறந்தெரிந்து தோன்றாதாந்-தேரிற்

சிறியார் சிறுமையுந் தோன்றாதா நல்ல
பெரியார் பெருமையைச் சார்ந்து. 3

19-ம் அதி. பெருமை.

ஈத லிசையா திளமைசே ணீங்குதலால்
காத லவருங் கருத்தல்லர்-காதலித்
தாதுநா மென்னு மவாவினைக் கைவிட்டுப்
போவதே போலும் பொருள். 1

கடுக்கி யொருவன் கடுங்குறளை பேசி
மயக்கி விடினு மனப்பிரிப்பொன்-றின்றித்
துளக்க மிலாதவர் தூய மனத்தார்
விளக்கினு ளொண்சுடரே போன்று. 2

25-ம் அதி. அறிவுடைமை.

உணர வுணரு முணர்வுடை யாரைப்
புணரிற் புணருமா மின்பம்-புணரிற்
றெரியத் தெரியுந் தெரிவிலா தாரைப்
பிரியப் பிரியுமா நோய். 1

32-ம். அதி. அவையறிதல்.

புத்தகமே சாலத் தொகுத்தும் பொருடெரியா
ருய்த்தக மெல்லா நிறைப்பினு-மற்றவற்றைப்
போற்றும் புலவரும் வேறே பொருடெரிந்து
தேற்றும் புலவரும் வேறு. 1

## ஆத்திசூடி வெண்பா.

அருளார் கபிலை யறமே செயமென்
றிருளகல வேங்கைக் கியம்பும்-பெருமையினன்
மாவளரும் புன்னை வனநாத மெய்த்துணையா
மேவியறஞ் செய்ய விரும்பு. (அறஞ்செயவிரும்பு.) 1

ஆதி நிமிசிவிகைக் காளாய்ச் சடபரதர்
தீது பொறுத்துச் சிறப்புற்றார்-சோதிப்
புயமா வளர்கின்ற புன்னை வனநாதா
செயமா றுவது சினம். (ஆறுவதுசினம்.) 2

இந்துமதி விற்றுமலேந் தீனனுக்கா ளாயுமரிச்
சந்திரனே தன்னிலைமை தப்பவில்லே-நந்தம்
மனுநெறிதேர் புன்னை வனநாதா பூமி
யினியல் வதுகர வேல். (இயல்வதுகரவேல்.) 3

மாவலியை மாலுக்கு மண்ணுதவா மற்றடுத்த
காவலினுற் சுக்கிரனுங் கண்ணிழந்தான்-நாவதனுல்
நன்னீதிப் புன்னைவன நாதமகி பாவுலகத்
தின்னீ வதுவிலக் கேல். (ஈவதுவிலக்கேல்.) 4

உள்ளபடி தன்சிறகி லுண்டபல மொன்றுருசொல்
விள்ளுஞ் சடாயுமுன் வீழ்ந்ததுபார்-வள்ளற்
றனபதியே புன்னைவனத் தாளாளா வொன்னார்க்
குனதுடைய துவ்விளம் பேல். (உடையதுவிளம்பேல்.) 5

ஊறி னரபலிக்கா வூர்சகட மேல்வீமன்
தீரன் பகசூரன் றீதடக்கும்-காரணம்பார்
தேக்குபுகழ் புன்னைவன தீரனே யாவுறினும்
ஊக்க மதுகை விடேல். (ஊக்கமதுகைவிடேல்.) 6

எண்ணரிய கோளுடுக்க ளெல்லா மொருமையதாற்
றிண்ணாந் துருவர்கையிற் சேர்தலினுன்-மண்ணுலகிற்
போற்றுந் தமிழ்பாகைப் புன்னைவன பூபாகேள்
ஏற்றெண் ணெழுத்திக ழேல். (எண்ணெழுத்திகழேல்.) 7

மச்சகந்தி தன்வயிற்றில் வந்துதித்து மோதலினுல்
விச்சைபெற்ற வேத வியாசனைப்பார்-நிச்சயமே
பன்னுதமிழ்ப் புன்னைவனப் பார்த்திவனே யுண்மைநூ
லின்னே துவதொழி யேல். (ஓதுவதொழியேல்.) 8

மாதர்முன்னே யுத்தரனு மாபெலவான் போலுரைத்துக்
காதமரி லர்ச்சுனனுற் கட்டுண்டான்-ஆதலினுல்
வண்மைபெறு புன்னை வனநாதா சீருடைய
திண்மையுன்னி யௌவியம்பே சேல். (ஔவியம்பேசேல்.) 9

மைக்கடல்கொண் முட்டைதனை வாங்குவோமென் றுசிட்டு
புக்கதனை வென்றதன் புத்தியினு-லக்கதைபோல்
வேளாளா புன்னைவன மேகமே யுண்மையெனக்
காயஃ கஞ்சுருக் கேல். (அஃகஞ்சுருக்கேல்.) 10

தீதி லரிட்டங்கள் செய்யவுண வைக்கொள்ள
மேதியினிற் றம்மினத்தை மேவுதலால்-நீதிநெறி
போற்றுபுகழ் புன்னைவன பூபாலா வுற்றுரை
மாற்றிருமெய் நப்போல் வனே. (நப்போல்வனே.) 11

தொட்டடித்தோ னன்றிசெய்த தூயோ னிருவருக்கும்
பட்டணத்துப் பிள்ளை பகர்ந்ததுபார்-மட்டிலவுந்
தென்பாகைப் புன்னைவன தீரனே யாரிடத்து
மன்பாய் ஞயம்பட வுரை. (ஞயம்படவுரை.) 12

செய்யபுகழ் விக்கிரமா தித்தனொரு தட்டாரப்
பைய னுறவுபற்றிப் பட்டதனுல்-வையம்
மணக்குஞ்சீர்ப் புன்னை வனநாதா நீயு
மிணக்க மறிந்திணங் கு, (இணக்கமறிந்திணங்கு.) 13

அனையிடர்தீர்த் தான்கருட னந்தணன்செங் கந்தை
தனையெடுத்துச் சாவு தவிர்த்தான்-இனையவர்போற்
சீராரும் புன்னைவன தீரனே நாடோறும்
பேராருந் தந்தைதாய்ப் பேண். (தந்தைதாய்ப்பேண்.) 14

இருடிமேற் செத்தபாம் பேற்றிப் பரீக்கித்
தரவினுற் பட்ட தறிந்தே-திரைகடல்சூழ்
மண்ணுலகிற் புன்னைவன மன்னவா பாவமிதென்
றெண்ணி யரவமாட் டேல். (அரவமாட்டேல்.) 15

மாயனுர் தம்மகக்கண் மாமுனியைக் கேட்டகர்ப்ப
வேயவரைக் கொல்லு மிருப்புலக்கை-ஆயதனுன்
மாரனெனும் புன்னை வனநாதா வையகத்திற்
சீருறு வஞ்சகம்பே சேல். (வஞ்சகம்பேசேல்.) 16

வாணன் சிவனை வணங்கிவசஞ் செய்துலகோர்
காணநின்று தன்வாயில் காக்கவைத்தும்-பாணியெலாம்
போனதனுற் புன்னைவன பூபாலா யாரிடத்துந்
தானழக லாதனசெ யேல். (அழகலாதனசெயேல்.) 17

கல்வியிள மைக்குளிலாக் காளிதா சன்மனையாள்
வல்வசையாற் பொல்லா மரணமுற்றுச்-செல்வதனுன்
நற்றுமா புன்னைவன நாதா விதையறிந்து
கற்று விளமையிற் கல். (இளமையிற்கல்.) 18

பத்ரகிரி ராசன் பகர்சனகன் மெய்விதுரன்
சித்தபரி சுத்தஞ் செலுத்துதலால்-இத்தரையில்
மன்னனெனும் புன்னை வனநாதா யாவுறினு
மென்ன வறனைமற வேல். (அறனைமறவேல்.) 19

இரணியனு மாங்காரத் தெண்ணா துரைத்து
நரகரியா லிற்றான்முன் னாளிற்-சுரதருரைப்
போலே கொடுக்கின்ற புன்னை வனநாதா
மாலே கடிவது மற. (கடிவதுமற.) 20

துய்ய சிலாதன்சேய் துங்கவிர தங்களெலாஞ்
செய்யந்தி யாகஞ் சிறப்புற்றான்-பொய்யலவே
தேன்காண்சொற் புன்னைவன தீரனே யைம்பொறியைத்
தான்காப் பதுவிர தம். (காப்பதுவிரதம்.) 21

தண்டமிழ்க்காக் கம்பருக்குத் தாமடிமை யென்றுதொண்ட
மண்டலத்தா ரேட்டில் வரைந்ததுபோல்-எண்டிசைக்கும்
பொன்னான புன்னைவன பூபாலா தென்பாகை
மன்னா கிழமைபட வாழ். (கிழமைப்படவாழ்.) 22

அர்ச்சுனன்பால் சார்பிழந்த வன்றே குருதலர்முன்
கைச்சிலைவெற் பாக்கனத்துக் கைதளர்ந்தான்-நிச்சயமே
மன்றவர்சூழ் புன்னை வனநாதா தக்கோரை
யென்றுங்கூ டிப்பிரி யேல். (கூடிப்பிரியேல்.) 23

வாலிகெட ராமனொரு வாளிதொட்ட வெம்பழியை
மேலொருசென் மத்திலன்னோன் மீண்டுகொன்றான்-ஞாலமதில்
வல்லவனே புன்னை வனநாதா யாரெனினு
மொல்லை கெடுப்ப தொழி. (கெடுப்பதொழி.) 24

இந்திரன்வாள் வைக்க வெடுத்துமுன முற்கலனார்
தந்தருமம் விட்டுத் தவமிழந்தார்-சந்தமும்
பாகையில்வாழ் புன்னைவன பார்த்திவா வாகையினா
லேகை வினைகர வேல். (கைவினைகரவேல்.) 25

கொட்டமிட்டே யுத்தரத்திற் கோக்கொள்ளை யாடவந்த
துட்டனர வக்கொடியோன் றோற்றிடுக்கண்-பட்டதனால்
நீதிபரா புன்னைவன நேயனே யேதெனினும்
பேதமையாக் கொள்ளைவிரும் பேல். (கொள்ளைவிரும்பேல்.) 26

நம்பனுக்காஞ் செவ்வந்தி நன்மலர்வே சிக்களித்த
செம்பியனு மண்மழையாற் சீரழிந்தான் அம்புவியி
லெவ்வாறும் புன்னைவன மென்னுமுகி லேநீதிக்
கெவ்வாத கோதாட் டொழி. (கோதாட்டொழி.) 27

மண்டலத்திற் செங்கோல் வழியிற் செலுத்தாமற்
றண்டகனென் னும்மொருவன் றன்மடியக்-கண்டதனால்
வேள்புரையும் புன்னைவன வித்தகா வெந்நாளும்
நீழ்சக் கரநெறி நில். (சக்கரநெறிநில்.) 28

ஈச னுமைமணத்தி லேவடதிக் காழ்ந்ததெனக்
காசினிசீ ராக்கக் கலசமுனி-வாசமுற்றுச்
செய்ததுபார் புன்னைவன தீரனே யப்படிச்சீ
ரெய்துஞ்சான் றோரினத்தி ரு. (சான்றோரினத்திரு.) 29

சீதைபண்பி ராவணற்குச் செப்பிக் குலங்கெடுத்த
பாதகிமூக் கன்றிழந்த பங்கம்பார்-ஆதலினால்
தாரணிக்குட் புன்னைவனத் தாளாளா தன்னையெண்ணுச்
சேரலர்க்குச் சித்திரம்பே சேல். (சித்திரம்பேசேல்.) 30

சகுனிதுரி யோதனற்குச் சர்ப்பனையாக் கேடு
மிகவுரைத்துத் தன்னுயிரும் வீந்த-நகைபார்
மனுநெறிதேர் புன்னை வனநாதா யாவ
ரெனினுஞ் சுளிக்கச்சொல் லேல். (சுளிக்கச்சொல்லேல்.) 31

தோராத நூற்றுவருந் தோற்றபஞ்ச பாண்டவரும்
பாரே யகன்றுபட்ட பாரதம்பார்-பேராண்மை
வற்றாத புன்னைவன மாகடலே மிக்கசெல்வம்
பெற்றாலுஞ் சூதுவிரும் பேல். (சூதுவிரும்பேல்.) 32

இருமைக்கு மெய்த்துணையா மென்றுமார்க் கண்டன்
அரனடியைச் சேர்ந்தா னவன்போல-அருள்பெருகும்
பூசாப லாபாகைப் புன்னைவன மேமனமொத்
தேசேர் விடமறிந்து சேர். (சேர்விடமறிந்துசேர்.) 33

தூயரகு ராமன்பாற் சோரமுன்னி மாரீசன்
மாயமா னாய்த்திரிந்து மாய்ந்ததுபார்-ஞாயமன்றோ
வீசுபுகழ்ப் புன்னைவன மேகமே யித்தலத்தி
லேசை யெனத்திரி யேல். (சையெனத்திரியேல்.) 34

நித்தியத்தைக் கேட்கப்போய் நித்திரையென் றேகுளறிப்
புத்தியற்ற கும்பகன்னன் பொன்றினன்பார்-மத்தமத
குன்றநிகர் புன்னைவனக் கொற்றவா பாகைமன்ன
வென்றுஞ்சொற் சோர்வுப டேல். (சொற்சோர்வுபடேல்.) 35

நளனிருது பன்னன்றேர் நாண்மூன்றில் வீமன்
வளநகரி சேர்த்து மனையா-ளுளமகிழ
நின்றதுபார் புன்னைவன நேயனே தன்முயற்சி
யென்றுஞ்சோம் பித்திரி யேல். (சோம்பித்திரியேல்.) 36

சைவ சமயத்தைத் தலையாகச் சம்பந்தர்
செய்துலகில் யாண்டுஞ் சிறப்புற்றார்-வையமிசைப்
பொங்குபுகழ்ப் புன்னைவன பூபாலா பாகைமன்னா
வெங்குந்தக் கோனெனத் திரி. (தக்கோனெனத்திரி.) 37

முன்செ யறத்தை முகுந்தற் களித்தகன்னன்
பின்செயலு மீவனென்றே பேர்பெற்றான்-தன்செயல்போல்
தாதாவே புன்னைவனத் தாளாளா பூமியின்மேல்
லேதா னமதுவிரும் பு. (தானமதுவிரும்பு.) 38

எதிரிபலம் பாதிகொள்வ னென்றறிந்து வாலி
வதைபுரிய ராமன் மறைந்து-துதிபெறல்பார்
பாரளந்த புன்னைவனப் பார்த்திவா வப்படியே
சீரறிந்து தூக்கிவினை செய். (தூக்கிவினைசெய்.) 39

மாதுசித்தி ராங்கிசொல்லான் மைந்தனைக்கை கால்களைந்
தேதுபெற்றா னோர்மன்ன னிப்புவியில்-நீதிநெறி
மாதவனே புன்னை வனநாதா பாகைமன்னா
வேதெனினுந் தையல்சொற்கே ளேல். (தையல்சொற்கேளேல்.)

பண்டு துரோணன் பழமையெண்ணாப் பாஞ்சாலன்
மிண்டமரி லர்ச்சுனனால் வீறழிந்தான்-கண்டதன்றோ
பொன்னாளும் புன்னைவன பூபாலா தன்னையறிந்
தெந்நாளுந் தொன்மைமற வேல். (தொன்மைமறவேல்.) 41

சண்டனொடு மிண்டன் றனைவென்ற சங்கரிபால்
மிண்டிமகு டன்பொருது வெட்டுண்டான்-புண்டரிக
மாதாரும் புன்னை வனநாதா நீணிலத்தி
லேதோற் பனதொட ரேல். (தோற்பனதொடரேல்.) 42

சஞ்சரித்து நின்ற சைலங் களையெல்லாம்
வெஞ்சினத்தா லிந்திரன்முன் வெட்டுதலாற்-செஞ்சரணால்
மண்ணளந்த புன்னை வனநாதா வென்றுநன்மை
யெண்ணிநிலை யிற்பிரி யேல். (நிலையிற்பிரியேல்.) 43

வாசுகிமுன் னூட்பழகும் வானோர்க் கமுதெழுமுன்
மோசமுற நஞ்சுமிழ்ந்த மூர்க்கம்பார்-காசியினில்
நன்றறியும் புன்னைவன நாதா விஃதறிந்தே
யென்றுபாம் பொடுபழ கேல். (பாம்பொடுபழகேல்.) 44

நீலிபழி யைக்களைந்து நின்மரபில் வேளாளர்
சூலிமுது கிற்சூடச் சோறிட்டு-மேலான
ஞாயம்பார் புன்னைவன நாதனே யப்படியே
நீயுமிகப் பீடுபெற நில். (பீடுபெறநில்.) 45

விழுமிந் திரத்துய்மன் மிக்கபுகழ் சொல்லிக்
கழறமுன்போ னடைந்த காதை-பழமையன்றோ
செய்யபுகழ்ப் புன்னைவன தீரனே நீயுமிந்த
வையகம் புகழ்பட வாழ். (புகழ்படவாழ்.) 46

கோவதைசெய் யப்பிடித்த கோளரிக்குத் தன்னுடலை
யீவனென்றே னேதிலீப னென்னுமன்ன-னவதனால்
நட்பாளும் புன்னைவன நாதமன்னா வெப்போது
மூட்பேதை மையகற் று. (பேதமையகற்று.) 47

செய்தவமும் பாராமற் சீராமன் சம்புகனை
நைதலின்றிச் சென்னிகொண்ட ஞாயம்பார்-உய்தரும
வானான புன்னை வனநாதா துட்டர்பங்கி
லேனை வினைநணு கேல். (னைவினைநணுகேல்.) 48

பசியூண் விலக்கினர்முன் பார்த்திவன் சியாக்காய்
பிசைபுனலுண் டப்பசியைப் பேர்த்தான்-இசைபெறவே
பொன்னாளும் புன்னைவன பூபாலா வப்படியே
யெந்நாளு நோய்க்கிடங்கொ டேல். (நோய்க்கிடங்கொடேல்.)

சூடுமுடி ராகவனூர் சூடாமற் கைகேயி
கேடுசொன்ன வார்த்தை கிடைப்பதனால்-நீடுபுகழ்க்
காராளா புன்னைவனக் கற்பகமே யாரிடத்து
மோரா பழிப்பனபக ரேல். (பழிப்பனபகரேல்.) 50

சச்சந் தனைமுன் சதிகட்டி யங்காரன்
நிச்சயமாய்ச் செய்த நிறைபிழைபார்-பொற்சிகர
தீபமெனும் புன்னைவன தீரனே யானதுகண்
டேபைய லோடிணங் கேல். (பையலோடிணங்கேல்.) 51

கஞ்சனு ராழ்வார் கனன்முக்கா லிக்குளிருந்
தஞ்சாமற் சைவநிலை யாக்கினர்பார்-தஞ்சமென்பார்
புண்ணியமே மெய்த்துணையாம் புன்னைவன பூபதியே
யெண்ணி மனந்தடுமா றேல். (மனந்தடுமாறேல்.) 52

காகம் பசித்துவரக் காரிருளி னன்மைசெய்த
கூகை பாற்பட்ட கொடுமையினல்-வாகு
புனைதாமா புன்னைவன பூபாலா மோச
மெனமாற்று னுக்கிடங்கொ டேல்.(மாற்றுனுக்கிடங்கொடேல்.)

சங்கரா சாரியனுற் தாயை யிகழ்குலத்தார்
தங்கண்மனை யேசுடலை தாணுகிப்-பங்கமுற்று
ராதலினுற் புன்னைவன வையனே யாரிடத்து
மேது மிகைபடச்சொல லேல். (மிகைபடச்சொல்லேல்.) 54

ஆட்டுக் கடாப்போரி லன்றுதசை நாகுநரி
மாட்டிக்கொண் டேயுயிரு மாய்ந்ததுபார்-தேட்டுமலர்
மாமருவும் புன்னை வனநாதா வீணுக
வேமுனைமு கத்துநில் லேல். (முனைமுகத்துநில்லேல்.) 55

ஆசிரியன் சொற்கேட்ட வன்றே தசரதனுற்
கோசின்பா லிராகவனைக் கூட்டிமிக்க-தேசுபெற்றுர்
நாட்கமலப் புன்னைவன நாதமகி பாதருமங்
கேட்கின்மேன் மக்கள்சொற் கேள். (மேன்மக்கள்சொற்கேள்.)

வீமருட விற்பாதி மெய்வழக்கிற் றேர்ந்தபுரு
டாமிருகத் தின்பங்கென் றூர்தருமா-ராமவர்போல்
பூமியெலாங் கொண்டாடும் பொய்யாத புன்னைவன
மேமொழிவ தறமொ ழி. (மொழிவதறமொழி) 57

குழந்தையென்று மாயனைப்போய் கொல்லமுலைப் பாலீந்
திழந்ததுயி ரென்பதுல கெங்கும்-முழுங்குதலால்
வீறுளா புன்னைவன மேகமே யாரிடத்தும்
மாறுன வல்லமைபே சேல். (வல்லமைபேசேல்.) 58

இந்திரன்முன் கோசிகன்வ சிட்ட னுடன் வாதிலரிச்
சந்திரனைப் பொய்யனென்ற தப்பதனுல்-வந்ததுபார்
மாதவனே புன்னை வனநாதா வாயிடும்பா
லேதெனினும் வாதுமுற்கூ ரேல். (வாதுமுற்கூரேல்.) 59

வள்ளுவரைக் கல்வியன்ரே வண்டமிழ்ச்சங் கஞ்சயிக்கத்
தெள்ளுமிழ் நூனுதவி செய்ததெல்லா-முள்ளதன்ரே
சந்திரனே புன்னைவனத் தாளாளா பேரறிவாம்
புத்தியினில் வித்தைவிரும் பு. (வித்தைவிரும்பு.) 60

தருமருயர் வேள்வி தனிற்சிசுபா லன்பார்த்
தரியநிந்தை சொல்லி யழிந்தான்-தெரிவதன்ரே
பார்புகழும் புன்னைவன பார்த்திபா மேலோரைச்
சீர்மைதப்பி வெட்டெனப்பே சேல். (வெட்டெனப்பேசேல்.) 61

---

## கொன்றைவேந்தன்.

அன்னையும் பிதாவு முன்னறி தெய்வம்
ஆலயந் தொழுவது சாலவு நன்று
இல்லற மல்லது நல்லற மன்று
உண்டி சுருங்குதல் பெண்டிர்க் கழகு
எண்ணு மெழுத்துங் கண்ணெனத் தகும்
ஐயம் புகினுஞ் செய்வன செய்
ஒதலி நன்றே வேதியர்க் கொழுக்கம்
கற்பெனப் படுவது சொற்றிறம் பாமை
காவ ருனே பாவையர்க் கழகு
கிழோ ராயினுந் தாழ வுரை
குற்றம் பார்க்கிற் சுற்ற மில்லை
கூரம் பாயினும் வீரியம் பேசேல்
கெடுவது செய்யின் விடுவது கருமம்
கைப்பொரு டன்னின் மெய்ப்பொருள் கல்வி
கொற்றவ னறித லுற்றிடத் துதவி
கௌவைச் சொல்லி னெவ்வருக் கும்பகை
சிவத்தைப் பேணிற் றவத்திற் கழகு
சூதும் வாதும் வேதனை செய்யும்

செய்தவ மறந்தாற் கைதவ மாளும்
சேமம் புகினுஞ் சாமத் துறங்கு
சையொத் திருந்தா லைய மிட்டுண்
சொக்க ரென்பவ ரத்தம் பெறுவர்
சோம்ப ரென்பவர் தேம்பித் திரிவர்
தந்தைசொன் மிக்க மந்திர மில்லை
தாய்சொற் றுறந்தால் வாசக மில்லை
திரைகட லோடியுந் திரவியந் தேடு
தீராக் கோபம் போராய் முடியும்
துடியாப் பெண்டிர் மடியி னெருப்பு
தூற்றும் பெண்டிர் கூற்றெனத் தகும்
தெய்வஞ் சீறிற் கைதவ மாளும்
தேடா தழிக்கிற் பாடாய் முடியும்
தையு மாசியும் வையகத் துறங்கு
தொழுதூண் சுவையி னுழுதூ ணினிது
தோழ னோடு மேழைமைப் பேசேல்
நல்லிணக்க மல்ல தல்லற் படுத்தும்
நாடெங்கும் வாழக் கேடொன்று மில்லை
நிற்கக் கற்றல் சொற்றிறம் பாமை
நீரகம் பொருந்திய வூரகத் திரு
நுண்ணிய கருமமு மெண்ணித் துணி
நூன்முறை தெரிந்து சீலத் தொழுகு
நேரா நோன்பு சீரா காது
நைபவ ரெனினு நொய்ய வுரையேல்
நொய்யவ ரென்பவர் வெய்யவ ராவர்
நோன் பென்பது கொன்றுதின் னாமை
பண்ணிய பயிரிற் புண்ணியந் தெரியும்
பாலோ டாயினுங் காலமறிந் துண்
பிறன்மனை புகாமை யறமெனத் தகும்
பீரம் பேணிற் பாரந் தாங்கும்
புலையுங் கொலையுங் களவுந் தவிர்
பேதமை யென்பது மாதர்க் கணிகலம்
பையச் சென்றால் வையந் தாங்கும்
பொல்லாங் கென்பவை யெல்லாந் தவிர்

மருந்தே யாயினும் விருந்தோ டுண்.
மாரி யல்லது காரிய மில்லை.
மீகாம னில்லா மரக்கல மோடாது.
முற்பகல் செய்யிற் பிற்பகல் விளையும்.
மூத்தோர் சொல் வார்த்தை யமிர்தம்.
மெத்தெனப் படுத்தல் நித்திரைக் கழகு.
மேழிச் செல்வங் கோழை படாது.
மைவிழி யாடனைக் கையகன் றொழுகு.
மோன மென்பது ஞான வரம்பு.
வளவ னாயினு மளவறிந் தழித்துண்.
வீரன் கேண்மை கூரம் பாகும்.
உறவோ ரென்கை யிரவா திருத்தல்.
ஊக்க முடைமை யாக்கத்திற் கழகு.
வெள்ளைக் கில்லை கள்ளச் சிந்தை.
வேந்தன் சீறி னாந்துணை யில்லை.
வையந் தோறுந் தெய்வந் தொழு.
ஒத்த விடத்து நித்தி ரைக்கொள்.
ஓதாதார்க் கில்லை யுணர்வொடு வொழுக்கம்.



ஔவையார் அருளிச்செய்த நீதிநூற்றிரட்டு.

## வாக்குண்டாம்.

வாக்குண்டா நல்ல மனமுண்டா மாமலராள்
னோக்குண்டா மேனி நுடங்காது-பூக்கொண்டு
துப்பார் திருமேனி தும்பிக்கை யான்பாதந்
தப்பாமற் சார்வார் தமக்கு. 1

நன்றி யொருவருக்குச் செய்தக்கா லன்னன்றி
யென்று தருங்கொ லெனவேண்டா-நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரை
தலையாலே தான்றருத லால். 2

அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவல்ல
நட்டாலு நண்பல்லார் நண்பல்லர்
கெட்டாலு மேன்மக்கண் மேன்மக்க ளேசங்கு
சுட்டாலும் வெண்மை தரும். 3

அடுத்து முயன்றாலு மாகுநா ளன்றி
யெடுத்த கருமங்க ளாகா-தொடுத்த
வுருவத்தா னீண்ட வுயர்மரங்க ளெல்லாம்
பருவத்தா லன்றிப் பழா. 4

நீரளவே யாகுமா நீராம்ப லுங்கற்ற
நூலளவே யாகுமா நுண்ணறிவு-மேலைத்
தவத்தளவே யாகுமாந் தான்பெற்ற செல்வங்
குலத்தளவே யாகுங் குணம். 5

நல்லாரைக் காண்பதுவு நன்றே நலமிக்க
நல்லார்சொற் கேட்பதுவு நன்றே-நல்லார்
குணங்க ளுரைப்பதுவு நன்றே யவரோ
டிணங்கி யிருப்பதுவு நன்று. 6

நெல்லுக் கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கு மாங்கே புசியுமாம்-தொல்லுலகில்
நல்லா ரொருவ ருளரே லவர்பொருட்
டெல்லார்க்கும் பெய்யு மழை. 7

பண்டு முளைப்ப தரிசியே யானாலும்
விண்டுமி போனால் விளையாதாங்-கொண்டபே
ராற்ற லுடையார்க்கு மாகா தளவின்றி
யேற்ற கருமஞ் செயல். 8

கால மறிந்தாங் கிடமறிந்து செய்வினையின்
மூல மறிந்து முடிவறிந்து-மேலுந்தாம்
சூழ்வன சூழ்ந்து துணைமை வலிதெரிந்
தாள்வினை யாளப் படும். 9

அடக்க முடையா ரறிவில ரென்றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா-மடைத்தலையி
லோடிமீ னோட வுறுமீன் வருமளவும்
வாடி யிருக்குமாங் கொக்கு. 10

ஆழ வமுக்கி முகக்கினு மாழ்கடனீர்
நாழி முகவாது நானாழி-தோழி
நிதியுங் கணவனு நேர்படினுந் தந்தம்
விதியின் பயனே பயன். 11

உடன்பிறந்தார் சுற்றத்தா ரென்றிருக்க வேண்டா
முடன்பிறந்தே கொல்லும் வியாதி-யுடன்பிறவா
மாமலையி லுள்ள மருந்தே பிணிதீர்க்கு
மம்மருந்து போல்வாரு முண்டு. 12

கற்பிளவோ டொப்பர் கயவர் கடுஞ்சினத்துப்
பொற்பிளவோ டொப்பாரும் போல்வரே-விற்பிடித்து
நீர்கிழிய வெய்த வடுப்போல மாறுமே
சீரொழுகு சான்றோர் சினம். 13

நற்றா மரைக்கயத்தி னல்லன்னஞ் சேர்ந்தாற்போல்
கற்றாரைக் கற்றாரே காமுறுவர்-கற்பில்லா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டிற்
காக்கை யுகக்கும் பிணம். 14

மன்னனு மாசறக் கற்றோனுஞ் சீர்தூக்கின்
மன்னனிற் கற்றோன் சிறப்புடையன்-மன்னனுக்குத்
தன்தேச மல்லாற் சிறப்பில்லை கற்றோர்க்குச்
சென்றவிட மெல்லாஞ் சிறப்பு. 15

சந்தன மென்குறடு தான்றேய்ந்த காலத்தும்
கந்தங் குறைபடா தாதலால்-தந்தந்
தனஞ்சிறிய ராயினுந் தார்வேந்தர் கெட்டால்
மனஞ்சிறிய ராவரோ மற்று. 16

## நல்வழி.

புண்ணியமாம் பாவம்போம் போனநாட் செய்தவவை
மண்ணிற் பிறந்தார்க்கு வைத்தபொருள்-எண்ணுங்கா
லீதொழிய வேறில்லை யெச்சமயத் தோர்சொல்லுந்
தீதொழிய நன்மை செயல். 1

இடும்பைக் கிடும்பை யியலுடம்பி தென்றே
இடும்பொய்யை மெய்யென் றிராதே-யிடுங்கடுக
வுண்டாயி னுண்டாகு மூழிற் பெருவலிநோய்
விண்டாரைக் கொண்டாடும் வீடு. 2

வருந்தி யழைத்தாலும் வாராது வாரா
பொருந்துவன போவென்றாற் போகா-விருந்தேங்கி
நெஞ்சம் புண்ணாக நெடுந்தூரந் தானினைந்து
துஞ்சுவதே மாந்தர் தொழில். 3

எல்லாப் படியாலு மெண்ணினா லிவ்வுடம்பு
பொல்லாப் புழுமலிநோய் புன்குரம்பை-நல்லா
ரறிந்திருப்பா ராதலினா லாங்கமல நீர்போற்
பிறிந்திருப்பார் பேசார் பிறர்க்கு. 4

ஆண்டாண்டு தோறு மழுது புரண்டாலும்
மாண்டார் வருவரோ மாநிலத்தீர்-வேண்டாம்
நமக்கு மதுவழியே நாம்போ மளவு
மெமக்கென்னென் றிட்டுண் டிரும். 5

வேதாளஞ் சேருமே வெள்ளெருக்குப் பூக்குமே
பாதாள மூலி படருமே-மூதேவி
சென்றிருந்து வாழ்வளே சேடன் குடிபுகுமே
மன்னோரஞ் சொன்னார் மனை. 6

நீறில்லா நெற்றிபாழ் நெய்யில்லா வுண்டிபாழ்
யாறில்லா வூருக் கழகுபாழ்-மாறி
வுடன்பிறப் பில்லா வுடம்புபாழ் பாழே
மடக்கொடி யில்லா மனை. 7

ஆன முதலி லதிகஞ் செலவானால்
மான மழிந்து மதிகெட்டுப்-போனதிசை
யெல்லார்க்குங் கள்ளனாய் யேழ்பிறப்புந் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லனாய் நாடு. 8

உண்பது நாழி யுடுப்பது நான்குமுழ
மெண்பது கோடிநினைந் தெண்ணுவன-கண்புதைந்த
மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்
சாந்துணையுஞ் சஞ்சலமே தான். 9

மரம்பழுத்தால் வௌவாலை வாவென்று கூவி
யிரந்தழைப்பார் யாவருமங் கில்லை-சுரந்தமுதம்
கற்றா தரல்போற் கரவா தளிப்பரே
லுற்றா ருலகத் தவர். 10

கல்லானே யானுலுங் கைப்பொருளொன் றுண்டாயி
னெல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வ-ரில்லானை
யில்லாளும் வேண்டாள்மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள்
செல்லா தவன்வாயிற் சொல். 11

நண்டுசிப்பி வேய்கதலி நாசமுறுங் காலத்திற்
கொண்ட கருவழிக்குங் கொள்கைபோ-லொண்டொடி
போதந் தனங்கல்வி பொன்றவருங் காலமயல்
மாதர்மேல் வைப்பார் மனம். 12

முப்பதா மாண்டளவின் மூன்றற் றெருபொருளைத்
தப்பாமற் றன்னுட் பெறுனுயின்-செப்பும்
கலையளவே யாகுமாங் காரிகையார் தங்கள்
முலையளவே யாகுமா மூப்பு. 13

சிவாய நமவென்று சிந்தித் திருப்போர்க்
கபாய மொருநாளு மில்லை-யுபாய
மிதுவே மதியாகு மில்லாத வெல்லாம்
விதியே மதியாய் விடும். 14

மானங் குலங்கல்வி வண்மை யறிவுடைமை
தானந் தவமுயர்ச்சி தாளாண்மை-தேனின்
கசிவந்த சொல்லியர்மேற் காமுறுதல் பத்தும்
பசிவந் திடப்பறந்து போம். 15

வினைப்பயனை வெல்வதற்கு வேத முதலா
மனைத்தாய நூலகத்து மில்லை-நினைப்பதென்
கண்ணுறுவ தல்லாற் கவலைபடே னெஞ்சமே
விண்ணுறுவார்க் கில்லை விதி. 16

தேவர் குறளுந் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழு முனிமொழியுங்-கோவை
திருவா சகமுந் திருமூலர் சொல்லு
மொருவா சகமென் றுணர். 17

நன்றென்றுந் தீதென்றும் நானென்றுந் தானென்று
மன்றென்று மாமென்று மாகாதே-நின்றநிலை
தானதாந் தத்துவமாஞ் சம்பறுத்தார் யாக்கைக்குப்
போனவா தேடும் பொருள். 18

## இனிதுநாற்பது.

பிச்சைபுக் காயினுங் கற்றன் மிகவினிதே
கற்றவை கைகொடுத்தல் சாலவு முன்னினிதே
முத்தேர் முறுவலார் சொல்லினி தாங்கினிதே
தெற்றவு மேலாயார்ச் சேர்வு. 1

கொல்லாமை முன்னினிது கோல்கோடி மாராயஞ்
செய்யாமை முன்னினிது செங்கோல னுகுத
லெய்துந் திறத்தா லினிதென்ப யார்மாட்டும்
பொல்லாங் குரையாமை நன்கு. 2

மான மழிந்தபின் வாழாமை முன்னினிதே
தான மழியாமை தானடங்கி வாழ்வினிதே
யூன மொன்றின்றி யுயர்ந்த பொருளுடைமை
மானிடவர்க் கெல்லா மினிது. 3

மன்றின் முதுமக்கள் வாழும் பதியினிதே
தந்திரத்தின் வாழுந் தவசிகண் மாண்பினிதே
யெஞ்சா விழுச்சி றிருமுது மக்களைக்
கண்டொழுதல் காலை யினிது. 4

ஐவாய வேட்கை யவாவடக்கன் முன்னினிதே
கைவாய்ப் பொருள் பெறினுங் கல்லார்கட் டீர்வினிதே
நில்லாத காட்சி நிறையின் மனிதரைப்
புல்லா விடுத லினிது. 5

கற்றறிந்தார் கூறுங் கருமப் பொருளினிதே
பற்றமையா வேந்தன்கீழ் வாழாமை முன்னினிதே
தெற்றென வின்றித் தெளிந்தாரைத் தீங்கூக்காப்
பற்றிமையிற் பாங்கினிய தில். 6

எல்லியம் போது வழங்காமை முன்னினிதே
சொல்லுங்காற் சோர்வின்றிச் சொல்லுதன் மாண்பினிதே
புல்லிக் கொளினும் பொருளல்லார் தங்கேண்மை
கொள்ளா விடுத லினிது. 7

---

## இன்னாநாற்பது.

எருதி லுழவர்க்குப் போகிர மின்னா
கருவிகண் மாறிப் புறங்கொடுத்த லின்னா
திருவுடை யாரைச் செறலின்னா வின்னா
பெருவலியார்க் கின்னா செயல். 1

பெரியாரோ டியாத்த தொடர்விடுத லின்னா
வரியவை செய்து மெனவுரைத்த லின்னா
பரியார்க்குத் தாமுற்ற கூற்றின்னா வின்னா
பெரியார்க்குத் தீய செயல். 2

அடக்க முடையவன் மீளிமை யின்னா
துடக்க மிலாதவன் றற்செருக் கின்னா
வடைக்கலம் வவ்வுத லின்னாவாங் கின்னா
வடக்க வடங்காதார் சொல். 3

---

## சிறுபஞ்சமூலம்.

பொருளுடையான் கண்ணதே போக மறனு
மருளுடையான் கண்ணதே யாகு-மருளுடையான்
செய்யான் பழிபாவஞ் சேரான் புறமொழியு
முய்யான் பிறர்செவியிற் குய்த்து. 1

உடம்பொழிய வேண்டி னுயர்தவ மாற்றீண்
டிடம்பொழிய வேண்டுமே லீகை-மடம்பொழிய
வேண்டி னறிமடம் வேண்டேல் பிறர்மனை
யீண்டி னியையுந் திரு. 2

பெருங்குணத்தார்ச் சேர்மின் பிறன்பொருள் வௌவன்மின்
கருங்குணத்தார் கேண்மை கழிமி-னொருங்குணர்ந்து
தீச்சொல்லே காமின் வருங்காலந் திண்ணிதே
வாய்ச்சொல்லே யன்று வழக்கு. 3

உயிர்நோய் செய்யாமை யுறுநோய் மறத்தல்
செயிர்நோய் பிறர்கட் செய்யாமை
விழைவு வெகுளி யவைவிடுவா னுயி
னிழிவன் றினிது தவம். 4

வைததனு ளுகும் வசைவணக்க நன்ருகச்
செய்ததனு ளுகுஞ் செழுங்குலமுற்-செய்த
பொருளினு ளுகுமாம் போக நெகிழ்ந்த
வருளினு ளுகு மறம். 5

இல்லியலார் நல்லறமு மேனைத் துறவறமு
நல்லியலி னுடி யுரைக்குங்கா-லல்லியற்
ருனத்தாற் போகந் தவத்தாற் சுவர்க்கமா
ஞானத்தால் வீடாக நாட்டு. 6

பொய்யாமை நன்று பொருணன் றுயிர்நோவக்
கொல்லாமை நன்று கொழிக்குங்காற்-பல்லார்முற்
பேணுமை பேணுந் தகைய சிறிதெனினு
மாணுமை மாண்டார் மணம். 7

வருவாய்க்குத் தக்க வழக்கறிந்து சுற்றம்
வெருவாமை வீழ்ந்து விருந்தோம்பித்-திருவாக்குந்
தெய்வதையு மெஞ்ஞான்றுந் தேற்ற வழிபாடு
செய்வதே பெண்டீர் சிறப்பு. 8

அழியாமை யெத்தவமுஞ் சார்ந்தாரை யாக்கல்
பழியாமை பார்த்தல் யார்மாட்டும்-மொழியாமை
கன்றுசா வப்பால் கறவாமை செய்யாமை
மன்றுசார் வாக மனை. 9

நன்புலத்து வையடக்கு நாளுமா டோபோற்றி
புன்புலத்தை செய்தெருப் போற்றியபி-னின்புலத்தின்
பண்கலப்பை யென்றிவை பார்ப்படுப்பா னுழவோன்
நுண்கலப்பை நூலோது வார். 10

தான்பிறந்த வின்னினைந்து தன்னைக் கடைப்பிடித்துத்
தான்பிறராற் கருதற் பாடுணர்ந்து-தான்பிறராற்
சாவ வென்வாழான் சான்றோராற் பல்யாண்டும்
வாழ்க வெனவாழ்த னன்று. 11

வரைவில்லாப் பெண்வையார் மன்னைப்புற் றோரார்
புரையில்லார் கள்ளார்போர் வேந்தன் வரைபோற்
கருங்களிறு விட்டுழிச் சொல்லார் வழங்கார்
கொடும்புலி கொட்டும் வழி. 12

இன்சொலா னாகுங் கிளைமை யியல்பில்லா
வன்சொல்லி னாகும் பகைமைமன்-மென்சொல்லி
னாய்வில்லா வாரருளா மவ்வரு ணன்மனத்தான்
வீவில்லா வீடாய் விடும். 13

வழிப்படரல் வாயல் வருந்தாமை வாய்மை
குழிப்படரல் தீச்சொற்க ளோடு-மொழிப்பட்ட
காய்ந்து விடுதல் களைந்துயக் கற்றவ
ராய்ந்து விடுத லறம். 14

சத்தமெய்ஞ் ஞானந் தருக்கஞ் சமயமே
வித்தகர் கண்டவீ டுள்ளிட்டாங்-கத்தகத்
தந்தவிவ் வைந்து மறிவான் றலையாய
சிந்திப்பிற் சிட்டன் சிறந்து. 15

---

## நான்மணிக்கடிகை.

கள்வமென் பார்க்குந் துயிலில்லை காதலிமாட்
டுள்ளம்வைப் பார்க்குந் துயிலில்லை-யொண்பொருள்
செய்வமென் பார்க்குந் துயிலில்லை யப்பொருள்
காப்பார்க்கு மில்லை துயில். 1

கற்றாற்முற் றோன்றாக் கழிவிரக்கங் காதலித்தொன்
றுற்றார்முற் றோன்றா வுறுமுதல்-செற்றென
வல்ல புரிந்தாங் கறந்தோன்றா வெல்லாம்
வெகுண்டார்முற் றோன்றாக் கெடும். 2

கன்றாமை வேண்டுங் கடிய பிறர்செய்த
நன்றியை கொல்லாக் கொளல்வேண்டு-மென்றும்
விடல்வேண்டுந் தங்கள் வெகுளி யடல்வேண்டு
மாக்கஞ் சிதைக்கும் வினை. 3

இன்னாமை வேண்டி னிரவெழுக விந்நிலத்து
மன்னுதல் வேண்டி னிசைநடுக-தன்னோடு
செல்வது வேண்டி னறஞ்செய்க வெல்லது
வேண்டின் வெகுளி விடல். 4

மனைக்குப்பாழ் வாணுத லின்மைதான் செல்லுந்
திசைக்குப்பாழ் நட்டோரை யின்மை-யிருந்த
வவைக்குப்பாழ் மூத்தோரை யின்மை தனக்குப்பாழ்
கற்றறி வில்லா வுடம்பு. 5

கற்பக் கழிமட மஃகு மடமஃகப்
புற்கந்தீர்ந் திவ்வுலகிக் கோளுணரும்-கோளுணர்ந்தாற்
றத்துவ மான நெறிபடரு மந்நெறி
யிப்பா லுலகத் திசைநீஇ யுப்பா
லுயர்ந்த வுலகம் புகும். 6

எள்ளற் பொருள திகழ்த லொருவனை
யுள்ளற் பொருள துறதிச்சொ-லுள்ளறிந்து
சேர்தற் பொருள தறநெறி பன்னாலுந்
தேர்தற் பொருள பொருள். 7

மாண்டவர் மாண்ட வினைபெறுப வேண்டாதார்
வேண்டா வினையும் பெறுபவே-யாண்டும்
பிறப்பார் பிறப்பா ரறனின் புறவர்
துறப்பார் துறக்கத் தவர். 8

கொடுப்பி னசனங் கொடுக்க விடுப்பி
னுயிரிடை யிட்ட விடுக்க-வெடுப்பின்
கிளையுட் கழிந்தா ரெடுக்க கெடுப்பின்
வெகுளி கெடுத்து விடல். 9

## நரிவிருத்தம்.

இளமையும் வனப்பு நில்லா வின்பமு நின்ற வல்ல
வளமையும் வலிது நில்லா வாழ்வுநா ணின்ற வல்ல
களமக ணேச நில்லா கைப்பொருள் கள்வர் கொள்வா
ரளவிலா வறத்தின் மிக்க தியாதுமற் றில்லை யன்றே. 1

நின்றன வல்ல வாணு ணிதியமு நின்ற வல்ல
சென்றுசென் றறுகி நாளுஞ் சினவரன் சொன்ன நன்னூ
லொன்றிய மனத்த ராகி யூதியங் கொள்வர் நல்லோ
ரன்றெனி லதனைக் காணு வாதனே போலு மன்றே. 2

ஓங்கிய தவத்தின் மிக்க வுறுதவர்க் குறுதிநாடி
னீங்கிரண் டல்ல தில்லை யிசைசொடா நிற்ப மண்மேற்
பாங்கமை செல்வ ராகிப் பகுத்துண்டு வாழுத லொன்றே
தாங்கிய தவத்தின் மிக்க தவநிலை நிற்ற லொன்றே. 2

பற்றுள மகல நீக்கிப் பாசிழைப் பாவை யல்குற்
பொற்றொடி மகளிர் தங்கள் புணர்முலைக் குவட்டின் வைகிச்
சுற்றத்தார் சுற்ற வாழ்த லன்றெனிற் றுறந்து போகி
நற்றவம் புரிவில் லாதார் நடலைநோய்க் கடலு ளாழ்ந்தார். 4

உத்தம தானமீதே யொண்பொரு ளுவந்து நல்ல
வுத்தமர்க் குவந்து முன்னே யுத்தம தான மீந்தே
வுத்தமநெறிநின் றார்க்கு முவமையொன் றில்லை யாகு
முத்தம குருவும் புத்தே ளுலகமு முடைய ரன்றே. 5

நடரிடைப் பட்ட நாளும் நாற்கதி நவையை நீக்கி
யிடரிடை யுய்த்த லின்றி நீண்மனத் தொகுப்பி னார்க்குஞ்
சுடர்கொள்பூம் பிண்டி நாதன் றொல்லறந் துணிந்து முன்னே
படர்கள்பூஞ் சிந்தை வைத்தார் பவக்கட லெல்லை காண்பார். 6

உள்ளறப் பற்று நீக்கி யுத்தம தான மீந்தே
கள்ளவிழ் கோதை மாதர் கதிர்முலைக் கரத்தா லொன்றோ
புள்ளுறைந் தினிது நீண்ட தவவனம் புரிந்து போகி
யெள்ளற நோற்றல் செய்யா ரிடும்பை நோய்க் கிரைக ளாவார்.

வேறு.

ஆக்குவ தேதெனி லறத்தை யாக்குவ
போக்குவ தேதெனில் வெகுளி போக்குவ
நோக்குவ தேதெனில் ஞான நோக்குவ
காக்குவ தேதெனில் விரதங் காப்பவே. 8

---

## ஏலாதி.

கொலைபுரியான் கொல்லான் புலால்மயங்கான் கூர்த்த
வலைபுரியான் வஞ்சியான் யாது-நிலைதிரியான்
மன்னவர்க்கு மன்றி மதுமலிபூங் கோதாய்
விண்ணவர்க்கு மேலாய் விடும். 1

விளையாமை யுண்ணாமை யாடாமை யாற்ற
வுளையாமை யுட்குடைத்தா வென்று-களையாமை
நூற்பட்டார் பூங்கோய்தாம் நோக்கி னிவையாறும்
பாற்பட்டார் கொண்டொழுகும் பண்பு. 2

பொய்யான் புலாலோடு கட்போக்கித் தீயன
செய்யான் சிறியா ரினஞ்சேரான்-வையான்
கயவியலுங் கண்ணாய் கருதுங்கா லென்று
மயல வயலவா நூல். 3

துறந்தார்கட் டுன்னி துறவார்க் கிடுத
லிறந்தார்க் கினிய விசைத்த-லிறந்தார்
மறுதலைச் சுற்ற மதித்தோம்பு வானே
லிறுத்தலில் வாழ்வே யினிது. 4

கொல்லான் கொலைபுரியான் பொய்யான் பிறர்மனைமேற்
செல்லான் சிரியா ரினஞ்சேரான்-சொல்லு
மறையிற் செவியி லன்றிச்சொற் கணமூங்கை
யிறையிற் பெரியார்க் கிவை. 5

மின்னே ரிடையாற் சொற்றேரான் விழைவோரான்
கொன்னே வெகுளான் கொலைபுரியான்-பொன்னே
யுறுப்பறுத்த நன்கொடையே யுவப்பான் றன்னின்
வெறுப்பறுத்தான் விண்ணகத்து மில். 6

பிணிபிறப்பு மூப்பொடு சாக்காடு துன்பந்
தணிவி னிரப் பிவைதழா-வணியி
னரங்கின்மே லாடுனர்போ லாகாம லென்று
நிரம்புமேல் வீட்டு நெறி. 7

அஃகுநீ செய்ய வெனவறிந்தா ராய்ந்து
வெஃகல் வெகுளலே தீக்காட்சி-வெஃகிமான்
கள்ளத்த வல்ல கருதி னிவைமூன்று
முள்ளத்த வாக வுரை. 8

மையேர் தடங்கண் மயிலன்ன சாயலாய்
மெய்யே யுணர்ந்தார் மிகவுரைப்பார்-பொய்யே
குறளை கடுஞ்சொற் பயனில சொன்னான்கு
மறலையின் வாயினவா மாறு. 9

உரையாண் டிலங்குடிமை யூமை பிறரை
யுரையான் பொருளோடு வாழ்வியா-யுரையானைப்
பூவாதி வண்டுபோந் துண்டுழலா யீத்துண்பான்
தேவாதி தேவனைத் தேறு. 10

பொய்யுரையான் வையான் புறங்கூறான் யாவரையும்
மெய்யுரையா னுள்ளளவும் விட்டுரையா-னெய்யுரையான்
கூந்தன் மயிலன்னாய் குழீஇவான் விண்ணோர்க்கு
வேந்தனா மிவ்வுலகம் விட்டு. 11

அழப்போகா னஞ்சா னலறினாற் கேளா
னெழப்போகா னீடற்றா ரென்றுந்-தொழப்போகா
னென்னே யிக்கால னீடோரார் தவமுயலார்
கொன்னே யிருத்தல் குறை. 12

சாவதெளி தரிது சான்றாண்மை நல்லது
மேவலெளி தரிது மெய்போர்த்த-லாவதன்தட்
சேற லெளிது நிலையரிது தெள்ளியராய்
வேற லெளிதரிது சொல். 13

உல்வாமை யுற்றதற் கோடி யுயிரை
யலையாமை யையப் படாமை-நிலையாமைத்
தீர்க்கும்வாய் தேர்ந்து பசியுண்டி நீக்குவா
னேக்கும்வாய் விண்ணி னுணர்வு. 14

பொய்யான் பொய்மேவான் புலாலுண்ணான் யாவரையும்
வையான் வழிசெய்த்து வாலடிசி-லையாதே
யீத்துண்பா னாகு மிருங்கடல்சூழ் மண்ணரசாய்
பார்த்துண்பா னேத்துண்பான் பாட்டு. 15

களியான் கள்ளுண்ணான் களிப்பாரைக் காணா
னொளியான் விருந்திற் குலையா-னொளியாரை
யெள்ளானீத் துண்பானே லேதமின்மண் ணாண்டு
கொள்வான் குடிவாழ்வான் கூர்ந்து. 16

பெரியார்சொற் பேணி பிரழாது நின்று
பரியா ரடியாராப் பரியான்-கரியார்சொற்
றேறா னியையான் றெளிந்தடிசி லீத்துண்பான்
மாறான்மண் ணாளுமா மற்று. 17

எடுத்தல் முடக்கனி மிர்த்த னிலையே
படுத்தலோ டாடல் பகரி-னடுத்துயி
ராறு தொழிலென் றறைந்தா ரறிந்தவர்
வேறு தொழிலாய் விரித்து. 18

ஐயமே பிச்சை யருந்தவர்க் கூணுடை
யையமே யின்றி யறிந்தீந்தான்-வையகமும்
வானும் வரிசையாற் றுளுரு நாளுமே
யீனமே யின்றி யினிது. 19

நடப்பார்க்கூ ணல்ல பொறைதாங்கி னார்க்கூண்
கிடப்பார்க்கூண் கேளீர்க் கூண்கேடின்-றுடற்சார்
வானகத்தார்க் கூணே மறுதலையார்க் கூணமைத்தான்
றுனகத்தே வாழ்வான் றக. 20

மனைவாழ்க்கை மாதவ மென்றிரண்டு மாண்ட
வினைவாழ்க்கை யாக விழைப-மனைவாழ்க்கை
பற்றுத லின்றி விடுதல்முற் சொல்லுமே
பற்றுதல் பாத்திற வம். 21

இடைவனப்புந் தோள்வனப்பு மீடின் வனப்பு
நடைவனப்பு நாணின் வனப்பும்-புடைசால்
கழுத்தின் வனப்பும் வனப்பல்ல வெண்ணோ
டெழுத்தின் வனப்பே வனப்பு. 22

---

## திரிகடுகம்.

வாளைமீ னுள்ள றலைப்படலு மாளல்லான்
செல்வக் குடியிற் பிறத்தலும்-பல்லவையு
ளஞ்சுவான் கற்ற வருநூலு மிம்மூன்றுந்
துஞ்சுமன் கண்ட கனு. 1

வருவாயுட் கால்வழங்கி வாழ்தல் செருவாய்ப்பச்
செய்தவை நாடாச் சிறப்புடைமை-யெய்தப்
பலநாடி நல்லவை கற்ற லிம்மூன்றும்
நலமாட்சி நல்லவர் கோள். 2

ளி நுணுக்கும் விறலும் மகளீர்கட்
த்த வொழுக்க முடைமையும்-பாத்துண்ணும்
றி வாண்மை தலைப்படலு மிம்மூன்றும்
ல்லறி வாளர் தொழில். 3

தனை யின்சொல்லாக் கொள்வானு நெய்பெய்த
றென்று கூழை மதிப்பானு-மூறிய
பதனைக் கட்டியென் றுண்பானு மிம்மூவர்
ப்பொருள் கண்டுவாழ் வார். 4

டி யளந்தமை யாப்படலுந் தட்டித்துப்
சபுக் குண்பான் பிளிற்றலுந்-துச்சிருந்தா
ங் கலங்கா முறுதலு மிம்மூன்றுங்
வியு ளின்னா தன. 5

வுந் தம்மை யடைய வொழுகுத
துவ; தெய்தாமை முற்காத்தல்-வைகலும்
ற்கு மன்னர் நிலையறித லிம்மூன்றும்
ற்ற பேரமைச்சர் கோள். 6

நெஞ் சுடையானை நல்குர வஞ்சு
ா நினைப்பானை யல்பொரு ளஞ்சும்
னை யெவ்வுயிரு மஞ்சுமிம் மூன்றும்
பதிற் றீர்ந்த பொருள். 7

லைநின்று தின்றெழுகு வானும் பெரியவர்
லுங்காற் றுன்புல்லும் பேதையு-மில்லெனக்கொன்
ன் பவனை நகுவானு மிம்மூவர்
ங் கடைப்பிடியா தார். 8

மை யுடைமை துணிவாந் தொழில்கற்றும்
மை யுடைமை வனப்பாகுந்-தீமை
த்தினும் வாயினுஞ் சொல்லாமை மூன்றும்
ந்திற் றருக்கினர் கோள். 9

ருருட் சான்றா னெனப்படுத லெஞ்ஞான்றும்
ய்ந்தாருட் டோய்ந்தா னெனப்படுதல்-பாய்ந்தெழுந்து
ள்ளாருட் கொள்ளாத கூறாமை யிம்மூன்றும்
ாள் வழங்கு நெறி 10

எள்ளப் படுமறபிற் றூகனு முள்பொருளைக்
கேட்டு மறவாதகூர்மையும்-முட்டின்றி
யுள்பொருள் சொல்லு முணர்ச்சியு மிம்மூன்று
மொள்ளிய வொற்றூட் குணம். 11

அறிவழுங்கத் தின்னும் பசிநோயு மாந்தர்
செறிவழுங்கத் தோன்றும் விழைவுஞ்-செறுநரின்
வெவ்வுரை நோனு வெகுள்வு மிவைமூன்றும்
நல்வினை நீக்கும் படை. 12

கற்றாரைக் கைவிட்டு வாழ்தலுங் காமுற்ற
பெட்டாங்கு செய்தொழுகும் பேதையும்-முட்டின்றி
யல்லவை செய்யு மலவலையு மிம்மூவர்
நல்லுலகஞ் சேரா தவர். 13

---

## பழமொழி.

### அறன்வலியுறுத்தல்.

மாய்வதன் முன்னே வகைப்பட்ட நல்வினையை
யாய்வின்றிச் செய்யாதார் பின்னை வழிநினைந்து
நோய்காண் பொழுதி னறஞ்செய்வார்க் காணாமை
நாய்காணிற் கற்காணா வாறு. 1

புன்சொல்லு நன்சொல்லும் பொய்யின் றுணர்கிற்பார்
வன்சொல் வழியாராய் வாழ்தலு-முண்டாமோ
புன்சொல் லிடர்ப்படுப்ப தல்லா லொருவனை
யின்சொ லிடர்ப்படுப்ப தில். 2

முடிந்ததற் கில்லை முயற்சி முடியா
தொடிந்ததற் கில்லை பெருக்கம்-வடிந்தற
வல்லதற் கில்லை வருத்த முலகினு
ளில்லதற் கில்லை பெயர். 3

### அடக்கமுடைமை.

உற்றதற் கெல்லா முரஞ்செய்ய வேண்டுமோ
கற்றறிந்தார் தம்மை வெகுளாமைக்-காப்பதே
நெற்செய்யப் புற்றேய்க்காற் போல கெடும்பகை
தற்செய்யத் தானே கெடும். 4

பொல்லாத சொல்லி மறைந்தொழுகும் பேதைதன்
சொல்லாலே தன்னைத் துயர்ப்படுக்கும்-நல்லாய்
மணலுண்டு மூழுகி மறைந்து கிடக்கும்
நுணலுந்தன் வாயாற் கெடும். 5

அடுத்தொன் றிரந்தார்க்கொன் றீய்ந்தாரைக் கொண்டார்
படுத்தேழை யாமென்று போகினும் போக
வடுத்தலைம் பாலா யாவர்க்கே யானுங்
கொடுத்தேழை யாயினா ரில். 6

மெய்மை.

இரப்பவர்க் கீயக் குறைபடுமென் றெண்ணிக்
கரப்பவர் கண்டறியார் கொல்லோ-பரப்பிற்
றுறைத்தோணி நின்றுலாந் தூங்குநீர்ச் சேர்ப்ப
விறைத்தோறு மூறுங் கிணறு. 7

பொறையுடைமை.

உரிஞ்சி நடப்பாரை யுள்ளடி நோவ
நெரிஞ்சியுஞ் செய்வ தொன்றில்லை-செருந்தி
யிருங்கழி தாழு மெறிகடற்றண் சேர்ப்ப
பெரும்பகையும் பேணாதார்க் கில். 8

தவம்.

அடங்கி யகப்பட்ட வைந்தினைக் காத்துத்
தொடங்கிய மூன்றினான் மாண்டீண்-டுடம்பொழியச்
சொல்லும்வாய்க் கேமஞ் சிறுகாலை செய்தாரே
கொல்லிமேற் கோட்டுவைத் தார். 9

அறஞ்செய் பவர்க்கு மறமுழி நோக்கித்
திறந்தெரிந்து செய்தக்காற் செல்வுழி-நன்றும்
புறஞ்செய்யச் செல்வம் பெருகு மறஞ்செய்ய
வல்லவை நீங்கி விடும். 10

திரியு மிடிஞ்சிலு நெய்யுஞ் சார்வாக
வெரியுஞ் சுடரேபோல் காயத்-தெரியுங்கால்
சார்வறவோ டிப்பிறப் பறுக்கும் மஃதேபோல்
நீரற நீர்சார் வறும். 11

ஊழ்.

சுட்டிச் சொலப்படும் பேரறிவி னார்க்கண்ணும்
பட்ட விருத்தம் பலவானுல்-பட்ட
பொறியின் வகைய கரும மதனு
லறிவினை யூழே யடும். 12

கல்வி.

உணற்கினிய வின்னீர் பிறிதுழியில் லென்னுங்
கிணற்றகத்துத் தேரைபோ லாகார்-கணக்கினை
முற்றப் பகலு முனியா தினிதோதிக்
கற்றலிற் கேட்டலே நன்று. 13

எமக்குத் துணையாவார் வேண்டுமென் றெண்ணித்
தமக்குத் துணையாவார் தாந்தெரிதல்-வேண்டா
பிறர்க்குப் பிறர்செய்வ துண்டோ மற்றில்லை
தமக்கு மருத்துவர் தாம். 14

பொருந்தாப் பழியென்னும் பொல்லாப் பிணிக்கு
மருந்தாகி நிற்பதா மாட்சி-மருந்திற்
றணியாது விட்டக்காற் றண்கடற் சேர்ப்ப
பிணியீ டழித்து விடும். 15

பெரியாரைத்துணைக்கோடல்.

செயல்வேண்டா நல்லின செய்விக்குந் தீய
செயல்வேண்டி நிற்பின் விலக்கு-மிகல்வேந்தன்
தன்னை நலிந்து தனக்குறுதி கூறலால்
முன்னின்னு மூத்தார்வாய்ச் சொல். 16

சிற்றினஞ்சேராமை.

கல்லா தவரிடைக் கட்டுரையின் மிக்கதோர்
பொல்லாத தில்லை யொருவற்கு-நல்லா
ரிழுக்கத்தின் மிக்க விழிவில்லை யில்லை
யொழுக்கத்தின் மிக்க வுயர்வு. 17

நல்லினஞ்சேர்தல்.

கல்வியா னாய கழிநுட்பங் கல்லார்முற்
சொல்லிய நல்லவுந் தீயவா-மெல்லா
மிவர்வரை நாட தமரையில் லார்க்கு
நகாமுங் காடுபோன் றங்கு. 18

### சான்றாண்மை.

கற்றறிந்தார் கண்ட தடக்க மறியாதார்
பொச்சாந்துந் தம்மைப் புகழ்ந்துரைப்பர்-தெற்ற
வறைக லருவி யணிமா லைநாட
நிறைகுட நீர்துளும்ப வில். 19

பெருமலை நாட பிறரறிய லாகா
வருமறையை யான்றோரே காப்ப-ரருமறையை
நெஞ்சிற் சிறியார்க் குரைத்தல் பனையின்மேற்
பஞ்சிவைத் தெஃகிவிட் டற்று. 20

---

## அறநெறிச்சாரம்.

### அறவுரை கேட்டல்.

மறவுரையுங் காமத் துரையு மயங்கிப்
பிறவுரையு மல்கிய ஞாலத்-தறவுரை
கேட்குந் திருவுடை யாரே பிறவியை
நீக்குந் திருவுடை யார். 1

### கேட்பான்.

தன்சொல்லே மேற்படுப்பான் தண்டி தடிபிணக்கன்
புன்சொல்லே போதரவு பார்த்திருப்பா-னின்சொல்லை
யேன்றிருந்துங் கேளாத வேழை யெனவிவர்கட்
கான்றவர்கள் கூறா ரறம். 2

### அறத்தினியல்பு.

மெய்மை பொறையுடைமை மேன்மை தவமடக்கம்
செம்மையொன் றின்மை துறவுடைமை-நன்மை
திறம்பா விரதந் தரித்தலோ டின்ன
வறம்பத்து மான்ற குணம். 3

### இளமையிலறஞ்செய்தல்.

இன்சொல் விளைநிலமா வீதலே வித்தாகி
வன்சொற் களைகட்டு வாய்மை யெருவட்டி
யன்புநீர் பாய்ச்சி யறக்கதி ரீன்றதோர்
பைங்கூழ் சிறுகாலைச் செய். 4

### நற்காட்சி.

அவ்விநய மாறு மும்மூட மெண்மயமும்
செவ்விதி னீக்கிச் சினங்கடிந்து-கவ்விய
வெட்டுறுப்பி னாய வியல்பினற் காட்சியார்
சுட்டறுப்பர் நாற்கதியிற் றுன்பு. 5

### தலைமகன்.

ஒன்றேயொன் றெவ்வாத பாசண்டத் துள்ளெல்லா
மொன்றேயொன் றெவ்வாப் பொருடெரிந்-தொன்றேயொன்
றவ்வா வுயிரோம்பி யுட்டேய்மை பெற்றதே
யவ்வாய தாகு மறம். 6

### நூல்.

காய்த லுவத்த லகற்றி யொருபொருட்க
ணாய்த லறிவுடையார் கண்ணதே-காய்வதன்க
ணுற்ற குணந்தோன்றா தாகு முவப்பதன்கண்
குற்றமுந் தோன்றாக் கெடும். 7

### மண்ணீடு-மூடுசாந்திட்டவீடு.

அருள்வட்ட மாக வறிவு கதிராய்ப்
பொருள்வட்ட மெல்லாம் விளக்கி-யிருள்வட்ட
மாற்று மறிவான ஞான வளரொளியான்
வேற்றுலிங்கந் தோன்றும் வெளிறு. 8

தன்னையுந் தன்னிற் பொருளையும் பட்டாங்கிற்
பன்னி யறமுரைக்க வல்லாரை-மன்னிய
சிட்ட ரெனச்சிட்டன் றேற்றுவ தல்லாரைச்
சிட்டரென் றேத்தல் சிதைவு. 9

எத்துணை கற்பினு மேகாந்த வாதிகள்
புத்தியுஞ் சொல்லும் பொலிவிலவாய்-மிக்க
வறிவுநூல் கற்றா ரலவென வேயிற்கு
மெறிகதிர்முன் னீள்சுடரே போன்று. 10

### நல்லொழுக்கம்.

மக்க ளுடம்பு பெறற்கரிது பெற்றபின்
மக்க ளறிவு மறிவரிது-மக்க

ளறிவ தறிந்தா ரறத்தின் வழுவார்
நெறித்தலை நின்றொழுகு வார். 11

பிறந்த விடநினைப்பிற் பேர்த்துள்ள லாகா
மறந்தேயு மாண்பொழியு நெஞ்சே-சிறந்த
வொழுக்கத்தோ டொன்றி யுயப்போதி யன்றே
புழுக்கூட்டுப் பொச்சாப் புடைத்து. 12

கற்றவழியில் நிற்றல்.

தேசுந் திறனறிந்த திட்பமுந் தேர்ந்துணர்ந்து
மாசு மனத்தகத் தில்லாமை-யாசின்றிக்
கற்றல் கடனறிதல் கற்றா ரினத்தராய்
நிற்றல் வரைத்தே நெறி. 13

எப்பிறப் பாயினு மேமாப் பொருவற்கு
மக்கட் பிறப்பிற் பிறிதில்லை-யப்பிறப்பில்
கற்றலுங் கற்றவை கேட்டலுங் கேட்டதன்க
ணிற்றலுங் கூடப் பெறின். 14

பற்றொடு செற்றம் பயமின்றிப் பல்பொருளும்
முற்ற வுணர்ந்தான் மொழிந்தன-கற்றுங்
கடையாய செய்தொழுகுங் காரறிவி னாரை
யடையா ரறிவுடை யார். 15

தன்னிற் பிறிதில்லை தெய்வ நெறிநிற்பி
லொன்றுந் தானெறிநில் லானேற்-றன்னை
யிறைவனுய்ச் செய்வானுந் தானேதான் றன்னைச்
சிறைவனுய்ச் செய்வானுந் தான். 16

அடக்கம்.

பலகற்றோம் யாமென்று தற்புகழ வேண்டா
வலர்கதிர் ஞாயிற்றைக் கைகுடையுங் காக்கும்
சிலகற்றார் கண்ணு முளவாம் பலகற்றார்க்
கச்சாணி யன்னதோர் சொல். 17

வெகுளாமை.

உயிரு முடம்பும் பிறவுண்மை யுள்ளிச்
செயிருஞ் சினமுங் கடிந்து-பயிரிடைப்

புற்களைந்து நெற்பயன் கொள்ளு மொருவன்போல்
நற்பயன் கொண்டிருக்கற் பாற்று. 18

தன்னை யொருவ னிகழ்ந்துரைப்பிற் றானவனைப்
பின்னை யுரையாப் பெருமையான்-முன்னை
வினைப்பயனு மாயிற்றா மென்றதன்கண் மெய்மை
நினைத்தொழிய நெஞ்சினோ யில். 19

எள்ளிப் பிறருரைக்கு மின்னாச்சொற் றன்னெஞ்சில்
கொள்ளிவைத் தாற்போல் கொடிதெனினு-மெள்ள
வறிவென்னு நீரா லவித்தொழுக லாற்றின்
பிறிதெனினும் வேண்டாந் தவம். 20

### இன்னாசெய்யாமை.

பிறர்க்கின்னா செய்தலிற் பேதைமை யில்லை
பிறர்க்கின்னா தென்று பேரிட்டுத்-தனக்கின்னா
வித்தி விளைத்து வினைவிளைப்பக் காண்டலிற்
பித்து முளவோ பிற. 21

### புறங்கூறாமை.

முன்னின் றொருவன் முகத்தினும் வாயினும்
கன்னின் றுருகக் கலந்துரைத்துப்-பின்னின்
றிழித்துரைக்குஞ் சான்றோரை யஞ்சியே தேவர்
விழித்தமையா நின்ற நிலை. 22

### மதுபானம்.

ஒளியு மொளிசான்ற செய்கையுஞ் சான்றோர்
தெளிவுடைய ரென்றுரைக்குந் தேசுங்-களியென்னுங்
கட்டுரையாற் கோதப் படுமே லிவையெல்லாம்
விட்டொழியும் வேறாய் விரைந்து. 23

### சூது.

ஓதலு மோதி யுணர்தலுஞ் சான்றோரால்
மேதை யெனப்படு மேன்மையும்-சூது
பொருமென்னுஞ் சொல்லினாற் புல்லப் படுமே
லிருளா மொருங்கே யிவை. 24

மானம்.

தனக்குத் தகவல்ல செய்தாங்கோ ராற்ற
லுணற்கு விரும்புங் குடரை-வனப்புற
வாம்பற்றுள் வாடலே போல வகத்தடக்கித்
தேம்பத்தாங் கொள்வ தறிவு. 25

காமம்.

பழியொடு பாவத்தைப் பாராய்நீ கன்றிக்
கழிபெருங் காமநோய் வாங்கி-வழிபடா
தோடுமன னேவிடுத் தென்னை விரைந்துநீ
நாடிக்கொள் மற்றோ ரிடம். 26

நட்பு.

குற்றத்தை நன்றென்று கொண்டு குணமின்றிச்
செற்ற முதலா வுடையவரைத்-தெற்ற
வறிந்தாரென் றேத்து மவர்களைக் கண்டாற்
றுறந்தெழுவார் தூய்க்காட்சி யார். 27

தம்புண் கழுவி மருந்திடுவர் தாம்பிறிதின்
செம்புண் வறுத்த வறைதின்ப-ரந்தோ
நடுநின் றுலக நயனிலா மாந்தர்
வடுவன்றோ செய்யும் வழக்கு. 28

போது.

பெண்விழைவார்க் கில்லை பெருந்தூய்மை பேணுதூ
னுண்விழைவார்க் கில்லை யுயிரோம்ப-லெப்பொழுதும்
மண்விழைவார்க் கில்லை மறமின்மை மாணுது
தன்விழைவார்க் கில்லை தவம். 29

தானத்தின் மிக்க தருமம் தக்கார்க்கு
ஞானத்தின் மிக்க வுசாத்துணையும்-மான
மழியா வொழுக்கத்தின் மிக்கதூஉ மில்லை
பழியாமல் வாழுந் திறம். 30

நன்ஞானம்-நிலையாமை.

ஆசையும் பாசமு மன்பு மகத்தடக்கிப்
பூசிப் பொதிந்த புலானுடம்பு-வூசல்
கயிறற்றாற் போலக் கிடக்குமே கூற்றத்
தெயிறுற் றிடைமுரிந்தக் கால். 31

தோற்றமுஞ் சம்பிரதம் துப்புரவுஞ் சம்பிரதம்
கூற்றமுங் கொள்ளுங்காற் சம்பிரதந்-தோற்றங்
கடைப்பட்ட வாறறிந்து கற்றறிந்தார் துஞ்சார்
படைப்பட்ட நாயகனை போன்று. 32

நீக்கருநோய் மூப்புத் தலைபிரிவு நல்குரவு
சாக்காடென் றைந்து களிறுழக்கப்-போக்கரிய
துன்பத்துட் டுன்ப முழப்பர் துறந்தெய்து
மின்பத் தியல்பரியா தார். 33

எக்காலுஞ் சாத லொருதலையே யானுனக்குப்
புக்கி நிறையத் தருகிலேன்-மிக்க
வறிவினை வாழ்த்தி யடலி றுணையாத்
துறத்தன்மேற் சார்த றலை. 34

நெடுந்தூ ணிருகாலா நீண்முதுகு தண்டாக்
கொடுங்கால் விலாவென்பு கோலி யுடங்கியநற்
புன்றோலால் வேய்ந்த புலால்வாய்க் குரம்பையை
யின்புறுவ ரேழை யவர். 35

என்புகா லாக விருதோளும் வேயுளா
வொன்பது வாயிலு மூர்ருத்-துன்பக்
குரம்பை யுடையார் குடிபோக்கு நோக்கிக்
கவர்ந்துண்ணப் போந்த கழுகு. 36

உடம்புங் கிளையும் பொருளும் பிறவுந்
தொடர்ந்துபின் சொல்லாமை கண்டு-மடங்கித்
தவத்தொடு தானம் புரியாது வாழ்வா
ரவத்தங் கழிகின்ற நாள். 37

தூய்தன்மை.

புழுப்போ லுவர்ப்பூறிப் பொல்லாங்கு நாறும்
மழுக்குடம்பு தன்னுள் ளொர்ந்தாய்-விழுத்துமிழ்ந்
தின்னு நடையா யிழக்கும் வகையினை
நன்னெஞ்சே நாடாய்கா ணற்கு. 38

முடையுடை யங்கணம் நாடோறு முண்ட
கடைமுறைவாய் போதரக் கண்டுந்-தடுமாற்றிற்

சாவாப் பிறவாவிச் சம்பிரத வாழ்க்கைக்கு
மேவாதா மெய்கண்டார் நெஞ்சு. 39

வயிறு நிறைக்குமேல வாவின்மிக் கூறிச்
செயிரிடைப்பா டெய்துமாஞ் சீவன்-வயிறுமோர்
பெற்றியா லார்த்திப் பெரும்பயன் கொள்வதே
கற்றறிந்த மாந்தர் கடன். 40

புலனடக்கல்.

புலன்கள் பொருட்டாகப் பொச்சாந்து நெஞ்சே
சலங்களைச் சார வொழுகல்-புலன்க
ளொறுக்கும் பருவத் துசாத்துணையு மாகா
வெறுத்துநீ யுண்டல் கடன். 41

உள்ளப் பெருங்குதிரை யூர்ந்து வயப்படுத்திக்
கள்ளப் புலனைந்துங் காப்பமைத்து-வெள்ளப்
பிறவிகக ணீத்தார் பெருங்குணத் தாரைத்
துறவித் துணைப்பெற்றக் கால். 42

பரிந்தெனக்கோர் நன்மை பயப்பாய்போ னெஞ்சே
யரிந்தென்னை யாற்றறவுந் தின்னல்-புரிந்துநீ
வேண்டுவ வேண்டுவே னல்லேன் விழுக்குணம்
பூண்டேன் பொறியிலி போ. 43

தன்னைத்தன் னெஞ்சங் கரியாகத் தானடக்கின்
பின்னைத்தா னெய்தா நலனில்லை-தன்னைக்
குடிகெடுக்குந் தீநெஞ்சிற் குற்றேவல் செய்தல்
பிடிபடுக்கப் பட்ட களிறு. 44

உள்ளு நிருந்துந்தம் முள்ளமறப் பெற்றாரேல்
கள்ளவிழ் சோலையாங் காட்டுளார்-காட்டுள்ளும்
உள்ள மறப்பெறு கல்லாரேல் நாட்டுள்ளும்
நண்ணி நடுவூ ருளார். 45

தன்னெஞ்சுக் குந் தெய்வம் பிறிதில்லை தான்றன்னைப்
பின்னை மனமறப் பெற்றானே-லென்னை
எழுத்தெண்ணே நோக்கி யிருமையுங் கண்டாங்
கருட்கண்ணே நிற்ப தறிவு. 46

தடுமாற்ற மஞ்சிய தம்மை யுடையார்
விடுமாற்றந் தேர்ந்தஞ்சித் துஞ்சார்-தடுமாற்றம்
யாது மறியாருந் துஞ்சார்த மைம்புலனு
மாரும்வகை யாதாங்கொ லென்று. 47

ஊழ்.

பேறழிவு சாவு பிறப்பின்பந் துன்பமென்
றாறுள வந்நா ளமைந்தன-தேறி
அவையவை வந்தா லழுங்காது விம்மா
திவையிவை யென்றுணரற் பாற்று. 48

தானே தனக்குப் பகைவனு நட்டானுந்
தானே தனக்கு மறுமையு மிம்மையுந்
தானே தான்செய்த வினைப்பயன் றுய்த்தலாற்
றானே தனக்குக் கரி. 49

செய்வினை யல்லாற் சிறந்தார் பிறிதில்லை
பொய்வினை மற்றைப் பொருளெல்லா-மெய்வினவில்
தாயார் மனைவியார் தந்தையார் மக்களார்
நீயார் நினைவாழி நெஞ்சு. 50

உயிர்திகிரி யாக வுடம்புமண் ணாகச்
செயிர்கொள் வினைகுயவ னாகச்-செயிர்தீரா
வெண்ணருநல் யாக்கைக் கலம்வனையு மற்றதனு
ளெண்ணருநோய் துன்ப மவர்க்கு. 51

முற்பிறப்பிற் றாஞ்செய்த புண்ணியத்தி னல்லதோ
ரிற்புறத் தின்புறு நின்றவ-ரிப்பிறப்பே
யின்னுங் கருதுமே லேதங் கடிந்தறத்தை
முன்னி முயன்றெழுகற் பாற்று. 52

அம்மைத் தாஞ்செய்த வறத்தின் வருபயனை
யிம்மைத்துய்த் தின்புறு நின்றவ-ரும்மைக்
கறஞ்செய்யா தைம்புலனு மாற்றாத னல்லாக்
கறந்துண்டல் தோம்பாமை யாம். 53

இறந்த பிறப்பிற்றாஞ் செய்த வினையைப்
பிறந்த பிறப்பா லறிக-பிறந்திருந்து

செய்யும் வினையா லறிக வினிப்பிறந்
தெய்தும் வினையின் பயன். 54

தாய்தந்தை மக்க ளுடன்பிறந்தார் சுற்றத்தா
ராய்வந்து தோன்றி யருவினையால்-மாய்வதன்கண்
மேலைப் பிறப்பு மிதுவானுன் மற்றென்னைக்
கூவிக் கழுத குறை. 55

நற்பேண்டிர்.

கொண்டான் குறிப்பொழுகல் கூறிய நாணுடைமை
கண்டது கண்டு விழையாமை-விண்டு
வெறுப்பன செய்யாமை வெஃகாமை நீக்கி
யுறுப்போ டுணர்வுடையாள் பெண். 56

தீப்பேண்டிர்.

தலைமகனிற் றீர்ந்துறைதல் றன்பிறரிற் சேர்தல்
நிலைமையி றீப்பெண்டிர்ச் சேர்தல்-கலனணிந்து
வேற்றூர்ப் புகுதல் விழாக்காண்ட னோன்பிடுதல்
கோற்றொடியாள் கோளழியு மாறு. 57

இல்வாழ்க்கை.

மருவிய காதன் மனையாளுந் தானு
மிருவரும் பூண்டுய்ப்பி னல்லா-லொருவரா
லில்வாழ்க்கை யென்னு மியல்புடை வான்சகடம்
செல்லாது தெற்றிற்று நின்று. 58

பிச்சையு மையமு மிட்டுப் பிறன்றார
நச்சனு நோக்காது பொய்யொரீஇ-நிச்சலுங்
கொல்லாமை காத்துண்டு கொடுத்துண்டு வாழ்வதே
யில்வாழ்க்கை யென்னு மியல்பு. 59

ஈகை.

தண்டாமம் பொய்வெகுளி பொச்சாப் பழுக்காறென்
றைந்தே கெடுவார்க் கியல்பென்ப-பண்பாளா
யீத லறித லியற்றுத லின்சொற்கற்
றாய்த லறிவார் தொழில். 60

அடங்கி யடங்கினர்க் கீதறலை யேயடங்கா
தடங்கினர்க் கீத லிடையே-நுடங்கிடையா
யேற்பானுந் தானு மடங்காக்கா லஃதென்ப
தோற்பாவைக் கூத்தினுட் போர். 61

செல்வத்தைப் பெற்றார் சினங்கடிந்து செவ்வியராய்ப்
பல்கிளையும் வாடாமற் பாத்துண்டு-நல்ல
தான மறவாத தன்மையரே வஃதென்பார்
வானகத்து வைப்பதோர் வைப்பு. 62

கொடுப்பான் வினையல்லன் கொள்வானு மல்லன்
கொடுக்கப் படும்பொருளு மன்று-லடுத்தடுத்து
நல்லவை யாதாங்கொல் நாடி யுரையாய்நீ
நல்லவர் நாப்பண் ணயந்து. 63

வீட்டேலகமெய்தல்.

அறிவு மிகப்பெருக்கி யாங்கார நீக்கிப்
பொறியைந்தும் வெல்லும்வாய்ப் போற்றிச்-செறிவினன்
மன்னுயி ரோம்புந் தகைத்தேகா ணன்ஞானந்
தன்னை யுயக்கொள் வது. 64

சோறியாரு முண்ணாரோ சொல்லியாருஞ் சொல்லாரோ
வேறியாரும் வையத்து வேறாரோ-தேறி
யுரியதோர் ஞானங்கற் றுள்ளந் திருத்தி
யரிய துணிவதா மாண்பு. 65

கெடுக்கப் படுவது தீக்கரும நாளும்
கொடுக்கப் படுவ தருளே-யடுத்தடுத்
துண்ணப் படுவது நன்ஞான மெப்பொழுது
மெண்ணப் படுவது வீடு. 66

இந்தியக் குஞ்சரத்தை ஞானப் பெருங்கயிற்றால்
சிந்தனை தூண்பூட்டிச் சேர்த்தியே-பந்திப்ப
ரிம்மைப் புகழு மினிச்செல் கதிப்பயனுந்
தம்மைத் தலைப்படுத்து வார். 67

உணர்ச்சி யச்சாக வுசாவண்டி யாகப்
புணர்ச்சிப் புலனைந்தும் பூட்டி-யுணர்ந்ததனை

யூர்கின்ற பாக னுணர்வுடைய னுகுமேல்
பேர்கின்ற தாகும் பிறப்பு. 68

தருகட் டறுகட்பந் தன்னைத்தா னேவ
துறுதிக் குறுதி யுயிரோம்பி வாழ்த
லறிவிற் கறிவாவ தெண்ணின் மறுபிறப்பு
மற்றீண்டு வாரா நெறி. 69

உயிர்வித்தி யூண்விளைத்துக் கூற்றுண்ணும் வாழ்க்கைச்
செயிர்வித்திச் சீலந்தின் றென்னைச்-செயிரினை
மாற்றி மறுமை புரிகிற்பிற் காணலாங்
கூற்றங் குறுகா விடம். 70

இருளே யுலகத் தியற்கை யிருளகற்றுங்
கைவிளக்கே கற்ற வறிவுடைமை-கைவிளக்கி
னெய்யேதன் னெஞ்சத் தருளுடைமை நெய்பயந்த
பால்போ லொழுக்கத் தவரே பரிவில்லா
மேலுலக மெய்து பவர். 71

ஆர்வமுஞ் செற்றமு நீக்கி யடங்குதல்
சீர்பெறு வீட்டு நெறியென்ப-சீர்புகப்
பட்டிமை புக்கா னடங்கின னென்பது
கெட்டார் வழியியக்கு மாறு. 72

அருளா லறம்வளரு மாள்வினையா னுக்கம்
பொருளாற் பொருள்வளரும் நாளும்-தெருளா
விழைவின்பத் தால்வளருங் காம மக்காமம்
விழைவின்மை யால்வளரும் வீடு. 73

பண்ணமை யாழ்குழல் கீதமென் றின்னவை
நண்ணி நயப்ப செவியல்ல-திண்ணிதின்
வெட்டெனச் சொன்னீக்கி விண்ணின்பம் வீட்டொடு
கட்டுரை கேட்ப செவி. 74

புண்ணுகப் போஉந்து புலால்பழிப்பத் தாம்வளர்ந்த
வண்ணப்பூண் பெய்வ செவியல்ல-நுண்ணூ
லறவுரை கேட்டுணர்ந் தஞ்ஞான நீக்கி
மறவுரை விட்ட செவி. 75

கண்டவர் காமுறூஉங் காமருசீர் காதிற்
குண்டலம் பெய்வ செவியல்ல-கொண்டுலகில்
மூன்று முணர்ந்தவற்றின் முன்னது முட்டின்றிச்
சூன்று சுவைப்ப செவி. 76

பொருளெனப் போழ்ந்தகன்று பொன்மணிபோன் றெங்கு
மிருளறக் காண்பன கண்ணல்ல-மருளறப்
பொய்க்காட்சி நீக்கிப் பொருவறு முக்குடையான்
நற்காட்சி காண்பன கண். 77

சாந்தும் புகையுந் துருக்கமுங் குங்குமமு
மோந்தின் புறுவன மூக்கல்ல-வேந்தி
னலங்குசிங் காதனத் தண்ண லடிக்கீ
ழிலங்கிதழ் மோப்பதா மூக்கு. 78

கைப்பன கார்ப்புத் துவர்ப்புப் புளிமதுர
முப்பிரதங் கொள்வன நாவல்ல-தப்பாமல்
வென்றவன் சேவடியை வேட்டுவந் தெப்பொழுது
நின்று துதிப்பதா நா. 79

கொல்வதூஉங் கள்வதூஉ மின்றிப் பிறர்மனையிற்
செல்வதூஉஞ் செய்வன காலல்ல-தொல்லைப்
பிறவி தணிக்கும் பெருந்தவர் பாற்சென்
றறவுரை கேட்பிப்ப கால். 80

குற்றங் குறைத்துக் குறைவின்றி மூவுலகில்
நற்ற மறைத்தாங் கருள்பரப்பி-முற்ற
வுணர்ந்தானைப் பாடாத நாவல்ல வல்ல
சிறந்தான்றாள் சேராத் தலை. 81

உடன்பிறந்த மூவ ரொருவனைச் சேவித்
திடங்கொண்டு சின்னா ளிருப்ப-விடங்கொண்ட
வில்லத் திருவ ரொழிய வொருவனே
சொல்லு மவன்பின் சிறந்து. 82

கட்டெனச் சொல்லியக்காற் கற்பிளப்பிற் றீயேபோல்
பொட்டப் பொடிக்குங் குரோதத்தை-வெட்டெனக்
காய்த்துவரக் கண்டக்காற் காக்குந் திறலாரே
மோக்க முடிவெய்து வார். 83

நல்வினை நாற்கால் விலங்கு நவைசெய்யுங்
கொல்வினை யஞ்சிக் குயக்கலம்-நல்ல
வுறுதியு மல்லவும் நாட்பேர் மரப்பே
ரிறுதியி லின்ப நெறி. 84

## போது.

அருவினையு மாற்றும் வருபயனு மாக்கு
மிருவினையு நின்று விளையும்-திரிவின்றிக்
கண்டுணர்ந்தார்க் கல்லது காட்டதரும் நாட்டதரும்
கொண்டுரைப்பார் நிற்றல் குதர். 85

---

## ஆசாரக்கோவை.

நன்றி யறிதல் பொறையுடைமை யின்சொல்லோ
டின்னாத வெவ்வுயிர்க்குஞ் செய்யாமை கல்வியோ
டொப்புர வாற்ற வறித லறிவுடைமை
நல்லினத் தாரோடு நட்ட லிவையெட்டுஞ்
சொல்லிய வாசார வித்து. 1

பிறப்பு நெடுவாழ்க்கை செல்வம் வனப்பு
நிலக்கிழமை மீக்கூற்றங் கல்விநோ யின்மை
யிலக்கணத்தா லிவ்வெட்டு மெய்துப வென்று
மொழுக்கம் பிழையா தவர். 2

வைகறை யாமந் துயிலெழுந்துத் தான்செய்யு
நல்லறமு மொண்பொருளுஞ் சிந்தித்து வாய்வதிற்
றந்தையுந் தாயுந் தொழுதெழுக வென்பதே
முந்தையோர் கண்ட முறை. 3

உடுத்தலா னீராடா ரொன்றுடுத் துண்ணா
ருடுத்தாடை நீருட் பிழியார் விழுத்தக்கா
ரொன்றுடுத் தென்று மவைபுகா ரென்பதே
முந்தையோர் கண்ட முறை. 4

அரச னுவாத்தியான் றாய்தந்தை தம்மு
னிகரில் குரவ ரிவரிவரைத்

தேவரைப் போலத் தொழுதெழுக வென்பதே
யாவருங் கண்ட நெறி. 5

குரவ ருரையிகந்து செய்யார் விரதங்
குறையுடையார் தீர மறவார்-நிறையுவா
மேற்கோளுந் தின்னார் மரங்குறையா ரென்பதே
நல்லறி வாளர் துணிவு. 6

நீராடிக் கால்கழுவி வாய்பூசி மண்டலஞ்செய்
துண்டாரே யுண்டா ரெனப்படுவா-ரல்லாதா
ருண்டார்போல் வாய்பூசிச் செல்வ ரதுவெடுத்துக்
கொண்டா ரரக்கர் குறித்து. 7

விருந்தினர் மூத்தோர் பசுசிறை பிள்ளை
யிவர்க்கூண் கொடுத்தல்லா லுண்ணாரே யென்று
மொழுக்கம் பிழையா தவர். 8

பிறர்மனை கட்களவு சூது கொலையோ
டறனறிந்தா ரிவ்வைந்து நோக்கார்-திறனிலரென்
றெள்ளப் படுவதூஉ மன்றி நிரயத்துச்
செல்வழி யுய்த்திடுத லால். 9

பொய்குறளை வெளவ லழுக்கா றிவைநான்கு
மையந்தீர் காட்சியார் சிந்தியார் சிந்திப்பி
னையம் புகுவித் தருநிரயத் துய்த்திடுந்
தெய்வமுஞ் செற்று விடும். 10

கண்ணெச்சில் கண்ணூட்டார் காலொடு காறேயார்
புண்ணிய மாய தலையோ டுறுப்புறுத்த
நுண்ணிய நூலறிவி னார். 11

துறந்தாரைப் பேணலு நாணலுந் தாங்கற்ற
மறந்துங் குரவர்முச் சொல்லாமை மூன்றுந்
திறங்கண்டார் கண்ட நெறி. 12

தமக்குற்ற கட்டுரையுந் தம்மிற் பெரியா
ருரைத்ததற் குற்ற வுரையு மஃதன்றிப்
பிறர்க்குற்ற கட்டுரையுஞ் சொல்லற்க சொல்லின்
வடுக்குற்ற மாகி விடும். 13

நகையொடு கொட்டாவி காறிப்புத் தும்ம
லிவையும் பெரியார்முற் செய்யாரே-செய்யி
னசையாது நிற்கும் பழி. 14

நின்றக்கா னிற்க வடக்கத்தா லென்று
மிருந்தக்கா லேவாமை யேகார்-பெருந்தக்கார்
சொல்லிற் செவிகொடுத்துக் கேட்டீக மீட்டும்
வினுவற்க சொல்லொழிந்தக் கால். 15

விரைந்துரையார் மேன்மே லுரையார் பொய்யாய
பரந்துரையார் பாரித் துரையா-ரொருங்கெனைத்துஞ்
சில்லெழுத்தி னாலே பொருளடங்கக் காலத்தாற்
சொல்லுக செவ்வி யறிந்து. 16

எய்தாத வேண்டா ரிரங்கா ரிழந்ததற்குக்
கைவாரா வந்த விடுக்கண் மனமழுங்கார்
மெய்யாய காட்சி யவர். 17

நந்தெறும்பு தூக்கணம் புட்காக்கை யென்றிவைபோற்
றங்கரும நல்ல கடைப்பிடித்துத்-தங்கரும
மப்பெற்றி யாக முயல்பவர்க் காசார
மெப்பெற்றி யானும் படும். 18

---

## சீவக சிந்தாமணி.

### கடவுள் வாழ்த்து.

மூவா முதலா வுலகம் மொரு மூன்று மேத்தத்
தாவாத வின்பந் தலையா யது தன்னி னெய்தி
யோவாது நின்ற குணத் தொண்ணிதிச் செல்வ னென்ப
தேவாதி தேவ னவன் சேவடி சேர்து மன்றே. 1

### நாமகளிலம்பகம்.

சாதலும் பிறத்த றானுந் தம்வினைப் பயத்தி னாகு
மாதலு மழிவு மெல்லா மவைபொருட் கியல்பு கண்டாய்
நோதலும் பரிவு மெல்லா நுண்ணுணர் வின்மை யன்றே
பேதைநீ பெரிதும் பொல்லாய் பெய்வளைத் தோளி யென்றான். 2

தொல்லைநம் பிறவி யெண்ணிற் றெடுகடன் மணலு மாற்ரு
வெல்லைய வவற்று ளெல்லா மேதிலம் பிறந்து நீங்கிச்
செல்லுமக் கதிக டம்முட் சேரலஞ் சேர்ந்து நின்ற
வில்லினு ளிரண்டு நாளைச் சுற்றமே யிரங்கல் வேண்டா. 3

கனகமாலையாரிலம்பகம்.

என்மன நின்மன மென்றிரண் டில்லையாற்
றன்மனத் துளபொரு டான்றனக் குரைப்பதொத்
தன்மன மென்மன மென்பதொத் திழைத்ததா
னன்மனக் குஞ்சர நம்பியோ டெண்மரும். 4

முத்தியிலம்பகம்.

மொய்யமர் ஞாட்பினுண் முரண்கொண் மன்னவர்
மெய்புகு பொன்னணி கவச மொப்பன
மையலைம் பொறிமதம் வாட்டி வைகலுஞ்
செய்வினை நுணுக்குவ சீல மென்பவே. 5

வேறு.

ஒழுக்கமே யன்றித் தங்க ளுள்ளுணர் வழிக்கு மட்டும்
புழுப்பயி றேனு மன்றிப் பிறவற்றின் புண்ணு மாந்தி
விழுப்பய னிழக்கு மாந்தர் வெறுவிலங் கென்று மிக்கார்
பழித்தன வொழித்தல் சீலம் பார்மிசை யவர்கட் கென்றான். 6

ஐவகைப் பொறியும் வாட்டி யாமையி னடங்கி யைந்தின்
மெய்வகை தெரியுஞ் சிந்தை விளக்குநின் றெரிய விட்டுப்
பொய்கொலை களவு காம மவாவிருள் புகாது போற்றிச்
செய்தவ நுனித்த சீலக் கனைகதிர்த் திங்க ளொப்பார். 7

வேறு.

உள்பொரு ளிதுவென வுணர்தன் ஞானமாந்
தெள்ளிதி னப்பொரு டெளிதல் காட்சியாம்
விள்வற விருமையும் விளங்கத் தன்னுளே
யொள்ளிதிற் றரித்தலை யொழுக்க மென்பவே. 8

கூடிய மும்மையுஞ் சுடர்ந்த கொந்தழ
னீடிய வினைமர நிரைத்துச் சுட்டிட
வீடெனப் படும்வினை விடுதல் பெற்றதங்
காடெழிற் றேளினு யநந்த நான்மையே. 9

கடையிலா வறிவொடு காட்சி வீரியங்
கிடையிலா வின்ப மூங் கிளந்த வல்லவு
முடையதங் குணங்களோ டோங்கி விண்டொழ
வடைதலான் மேனுல கறியப் பட்டதே. 10

வேறு.

தெருளிற் பொருள் வானுலக மேறு தற்குச் செம்பொ
னிருளில் படிக்கால் புகழ்வித்தில் லையெனி னெல்லா
வருளு நகவை யநக வைம் பொறி யுகையப்
பொருளு நக வீட்டும் பொருள் யாதும் பொருளன்றே. 11

வேறு.

பொய்யொடு மிடைந்தபொரு ளாசை யுருளாய
மைபடும் வினைத்துகள் வழக்குநெறி மாயஞ்
செய்தபொருள் பெய்தகலன் செம்மைசுடு செந்தீக்
கைதவ நுனித்தகவ ருடலொழி கென்றான். 12

காமமுடை யார்கறுவொ டார்வமுடை யாருந்
தாமமொடு சாந்துபுனை வார்பசியி னுண்பா
ரேமமுடை யார்களி வரல் லரிவை யில்லா
வாமனடி யல்லபிற வந்தியன்மி னென்றான். 13

வேறு.

தணக்கிறப் பறித்த போதுந் தானனை விடுத்தல் செல்லா
நிணப்புடை யுடும்ப ஞரை யாதினு னீக்க லாகு
மணப்புடை மாலை மார்ப னொருசொலே யேது வாகக்
கணக்கவி னழிந்த கண்ணார்த் துறந்துபோய்க் கடவு ளானான்.

ஒளிறுதேர் ஞானம் பாய்மா வின்னுயி ரோம்ப லோடைக்
களிறுநற் சிந்தை காலாள் கருணையாங் கவசஞ் சீலம்
வெளிறில்வாள் விளங்கு செம்பொன் வட்டமெய்ப் பொருள்க
பிளிறுசெய் கருமத் தெவ்வர் பெருமதின் முற்றி னானே.[ளாகப்

உறக்கெனு மோடை யானை யூணெனு முருவத் திண்டேர்
மறப்பெனும் புரவி வெள்ளம் வந்தடை பிணிசெய் காலாட்
டிறப்படப் பண்ணிப் பொல்லாச் சிந்தனை வாயில் போந்து
சுறக்கட லனைய தானை துளங்கப்போர் செய்த தன்றே. 16

தெளிவறுத் தெழுவர் பட்டா ரீரெண்மர் திளைத்து வீழ்ந்தார்
களிறுகா லுதைப்ப வெண்மர் கவிழ்ந்தனர் களத்தி னுள்ளே
பிளிறிவீழ் பேடி பெண்ணே யறுவகைத் துவர்ப்பும் பேசி
னளிபடு சிந்தை யென்னு மாழிவாய் வீழ்ந்த வன்றே. 17

மயக்கப்போர் மன்னன் மக்கண் மந்திரி யவரும் வீழ
வியப்புறு வேத வில்வாய் வேட்கையம் பெடுத்திட் டெய்யக்
கலக்கமி லசுப மென்னுங் குந்தத்தாற் கணைபெய்ம் மாரி
விலக்குத்திண் வெறுப்பு வாளால் விரைந்துயி ரவனை யுண்டான்.

கரும்பெறி கடிகை போன்றுங் கதலிகைப் போழ்கள் போன்று
மரும்பொறிப் பகைவர் தம்மை யுறுப்பறத் துணித்து மீர்ந்து
மருந்தெறி பிணியைக் கொல்லு மருந்துவன் போன்று மாதோ
விருந்தெரிந் தெறியு மூவர் மேற்படை யியற்றி னானே. 19

செழுமல ராவி நீங்கு மெல்லையிற் செறிந்து காயங்
கழுமிய வுதிரம் போல விமைப்பினுட் காந்து நீங்கக்
கொழுமலர்க் குவளைக் கண்ணிக் கூற்றுயி ருண்ப தேபோல்
விழுமிய தெவ்வர் வாணாள் வீழ்ந்துக வெம்பி னானே. 20

குரோதனே மானன் மாயன் கூர்ப்புடை யுலோப னென்பார்
விரோதித்து விரலிற் சுட்டி வெருவரத் தாக்க வீர
னிரோதனை யம்பிற் கொன்றா னித்தைநீள் பசலைப் பேரோர்
விராகெனும் வேலின் வீழ வெகுண்டன னவரும் வீழ்ந்தார். 21

இன்பமற் றென்னும் போரா னெழுந்தபுற் கற்றை தீற்றித்
துன்பத்தைச் சுரக்கு நான்கு கதியெனுந் தொழுவிற் சேர்ந்து
நின்றபற் றூர்வநீக்கி நிருமலன் பாதஞ் சேரி
னன்புவிற் றூண்டு போகிச் சிவகதி யடைய லாமே. 22

வேறு.

பாவனை மரீஇப் பட்டி னியொடுந்
தீவனை கழூஉந் தீர்த்தன் வந்தியாப்
பூவுண் வண்டனை கொட்டிற் புண்ணியர்
நாவின் வேட்கையு நஞ்சி னஞ்சினார். 23

---

## அறப்பளீசுர சதகம்.

### உயர் பிறப்பு.

கடலுலகில் வாழுமுயி ரெழுபிறப் பினுண்மிக்க காட்சிபெறு நர சென்மமாய்க், கருதப் பிறத்தலரி ததினுமுயர் சாதியிற் கற்பு வழி வருத லரிது, வடிவமுட னவயவங் குறையாது பிழையாது வருதலது தனினு மரிது, வந்தாலு மிதுபுண்ய மிதுபாவ மென் றெண்ணி மாசில்வழி நிற்ற லரிது; நெடியதன வானுத லரிததி னிரக்கமுள நெஞ்சினோ னாத லரிது, நேசமுட னுன்பதத் தன் பனாய் வருதலிந் நீணிலத் ததினு மரிதாம், அடியவர்க் கமுதமே மோழைபூ பதிபெற்ற வதிபனெம தருமை மதவே, ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள ரறப்பளீ சுர தேவனே. 1

### சற்குரு வியல்பு.

வேதாந்த சித்தாந்த வழிதெரிந் தாசார விவரவிஞ் ஞான பூர்ண, வித்யா விசேஷசற் குணசத்ய சம்பன்ன வீரவை ராக்ய முக்ய சாதா ரணப்பிரிய யோகமார்க் காதிக்ய சமாதிநிஷ் டானு பவராய்ச், சட்சமய நிலைமையும் பரமந்தர பரதந்த்ர தருமமும் பரசமயமும், நீதியி னுணர்ந்துதத் துவமார்க்க ராய்ப்பிரம நிலை கண்டு பாச மிலராய் நித்தியா னந்தசை தன்யரா யாசையறு நெறியுளோர் சற் குரவராம், ஆதார மாயுயிர்க் குயிராகி யெவை யுமா மமலவெம தருமை மதவே, ளனுதினமு மனதினினை தரு சதுரகிரிவள ரறப்பளீ சுர தேவனே. 2

### நன்மாணுக்க ரியல்பு.

வைதாலு மோர்கொடுமை செய்தாலு மோசீறி மாறு திகழ்ந் தாலுமே, மனதுசற் றுகிலுங் கோணாது நாணாது மாதா பிதா வெனக்குப், பொய்யாம னியென்று கனிவொடும் பணிவிடை புரிந்து பொருளுட லாவியும், புனிதவுன் றனதெனத் தத்தஞ் செய் திரவுபகல்போற்றிமல ரடியில் வீழ்ந்து, மெய்யாக வேப ரவி யுபதேச மதுபெற விரும்புவோர் சற் சீடராம், வினைவே ரறும்படி யவர்க் கருள்செய் திடுவதே மிக்க தேசிக ரதுகடன், ஐயா புரம்பொடி படச்செய்த செம்மலே யண்ணலெம தருமை மதவே, ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள ரறப்பளீ சுர தேவனே. 3

## பிறவிக்குண மாறுமை.

கலங்காத சிந்தமுஞ் செல்வமுஞ் ஞானமுங் கல்வியுங் கருணை விளைவுங், கருதரிய வடிவமும்போகமுந் த்யாகமுங் கனரூபமுள மங்கையும், அலங்காத வீரமும் பொறுமையுந் தந்திரமுமாண்மையும் மழுத மொழியு, மானவிச் செயலெலாஞ் சனனவா சனையினு லாகிவரு மன்றி யிலமேல், நலஞ்சேரு மொருவரைப் பார்த்தது பெறக்கருதி னெண்ணுமோ ரஸ் தானிதன், நற்சுவை தனக்குவர வேம்புதவ மேநெடிது நாள்செயினும் வாராதுகாண், அலங்கார மாகமலர் கொன்றைமா லிகைசூடு மண்ணாலை யருமை மதவே, எனுதினமு மனதினினை தருசதுர கிரிவள ரறப்பளீ சுர தேவனே. 4

## மேலான பொருள்.

சுழிசுத்த மாயிருந் ததிலும் படைக்கான துரகமோர் மாணிக் கமாஞ், சூழ்புவிக் கரசனு யதிலே விவேகமுள துரையுமோர் மாணிக் கமாம், பழுதற்ற வதிரூப வதியுமாய் கற்புடைய பாவையோர் மாணிக் கமாம், பலகலைகள் கற்றறி யடக்கமுள பாவலன் பார்க்கிலோர் மாணிக் கமாம், ஒழிவற்ற செல்வனு யதிலே தியாகியா முசிதனோர் மாணிக்கமா, முத்தம குலத்துதித் ததினுமோ மெய்ஞ்ஞான முடையனோர் மாணிக் கமாம், அழிவற்ற வேதாக மத்தின்வடி வாய்விளங் கமலனை யருமை மதவே, எனுதினமு மனதினினை தருசதுர கிரிவள ரறப்பளீ சுர தேவனே. 5

## நற்சார்பு.

காணரிய பெரியோர்க டெரிசனம் லபிப்பதே கண்ணிணைகள்செய் புண்ணியங், கருணையா யவர்சொன் மொழி கேட்டிட லபிப்பதிரு காதுசெய் திடு புண்ணியம், பேணியவர் புகழையே துதிசெய லபித்திடுதல் பேசில்வாய் செய் புண்ணியம், பிழையாமலவர்தமைத் தொழுதிட லபிப்பதுகை பெரிதுசெய் திடு புண்ணியம், வீணெறி செலாமலவர் பணிவிடை லபிப்பதுதன் மேனிசெய் திடு புண்ணியம், விழைவொடவர் சொற்படி நடந்திட லபிப்பதே மிக்கபூ ருவ புண்ணியம், ஆணவ மெனுங்களைகளைந்தறிவி னைத்தந்த வண்ணாலை யருமைமதவே, எனுதினமு மனதினினை தருசதுர கிரிவள ரறப்பளீ சுர தேவனே. 6

### தத்துவத் திரயம்.

பூதமோ ரைந்துடன் புலனைந்து ஞானம் பொருந்துமிந் திரிய மைந்து, பொருவில்கன் மேந்திரிய மைந்துமன மாதியாம் புகலரிய கரண நான்கே, ஓதினோ ரிவையான்ம தத்துவ மெனச் சொல்வ ருயர்கால நியதி கலையோ, டோங்கிவரு வித்தைரா கம் புருடன் மாயையென் றுரைசெய்யு மோரேழுமே, தீதில்வித்தி யாதத்துவ மென்றிடுவ ரிவையலாற் றிகழ்சுத்த வித்தை யீசன், சீர்கொள்சா தாக்கியஞ் சத்திசிவ மைந்துமே சிவதத்வ மென் றறைகுவார் ஆதிவட நீழலிற் சனகாதி யர்க்கருள்செ யண்ணலே யருமை மதவே, ளனுதினமு மனதினிலை தருசதுர கிரிவள ரற பபளீ சுரதேவனே. 7

---

## குமரேச சதகம்.

### இவர்க்கிவர் தேய்வமேனல்.

ஆதுலர்க் கன்னங் கொடுத்தவர்க ளேதெய்வ மன்பான மாணுக்க கருக், கரியகுரு வேதெய்வ மஞ்சினோர்க் காபத் தகற்றினோனே தெய்வமாம், காதலுறு கற்புடைய மங்கையர் தமக் கெலாங் கணவனே மிக்க தெய்வங், காசினியின் மன்னுயிர் தமக் கெலாங் குடிமரபு காக்குமன் னவர் தெய்வமாம், ஓதரிய பிள் ளைகட் கன்னைதந் தையர் தெய்வ முயர்சாதி மாந்தர் யார்க்கு, முறவின்முறை யார்தெய்வம் விசுவாச முள்ளபேர்க் குற்றசிவ பத்தர் தெய்வம், மாயையி னுற்சூத்தி ரர்க்குமுறை யோர்தெய்வம் வானவர்க் குத்தெய்வநீ, மயலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே. 8

### இதனைவிளக்குவ திதுவேனல்.

பகல்விளக் குவதிரவி நிசிவிளக் குவதுமதி பார்விளக் குவது மேகம், பாதிவிளக் குவதுபெண் குடிவிளக் குவதரசு பரிவிளக் குவது வேகம், இகல்விளக் குவதுவலி நிறைவிளக் குவதுநலம் திசைவிளக் குவது சுதியூ, ரிடம்விளக் குவதுகுடி யுடல்விளக் குவதுண்டி யினியசொல் விளக் குவதருள், புகல்விளக் குவது கொடை தவம்விளக் குவதறிவு பூவிளக் குவது வாசம், பொருள் விளக் குவதுதிரு முகம்விளக் குவதுநகை புத்தியை விளக்கு வது நூல், மகம்விளக் குவதுமறை சொல்விளக் குவதுநிசம் வாவியை விளக்கு வதுநீர், மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே. 9

## குறிப்பறிதல்.

மனதிற் கடும்பகை முகத்தினு லறியலா மாமிலப் பூடுகளெ
லாம் மழையினு லறியலா நல்லார் பொல் லார்தமை மக்களா லறி
யலாகும், கனமருவு சூரரைச் சமரினு லறியலாங் கற்றவொரு
வித்துவானைக், கல்விப்ர சங்கத்தி னுலறிய லாங்குலங் களைநடை
யி னுலறிய லாம், தனதக மடுத்தது பளிங்கினு லறியலாஞ் சாதி
சொல்லா லறியலாந், தருநீதி கேள்வியா லறியலாம் பிணிகளைத்
தாதுக்க ளா லறியலாம், வனசவிக சிதவதன பரிபூர ஞானந்த
வாலவடி வான வேலா, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. 10

## விபூதிதரிக்கு முறைமை.

பத்தியொடு சிவசிவா வென்றுதிரு நீற்றைப் பரிந்துகை யா
லெடுத்துப், பாரினில் விழாதபடி யண்ணாந்து செவியொடு பரு
த்தபுய மீதி லொழுக, நித்தமு விரல்களா னெற்றியி னழுந்த
துற நினைவாய்த் தரிப் பவர்க்கு, நீடுவினை யணுகாது தேகபரி
சுத்தமா நீங்காம னிமல னங்கே, சத்தியொடு நித்தம்விளை யாடு
வன் முகத்திலே தாண்டவஞ் செய்யுந் திரு, சஞ்சலம் வராது
பர கதியுதவு மிவரையே சத்தியஞ் சிவனென்ன லாம், மத்தினிய
மேருவென வைத்தமு தினைக்கடையு மான்மருக னான முருகா,
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே.

## இவ்வுறுப்பாற் பயனில்லெனல்.

தேவால யஞ்சுற்றி டாதகா லென்னகா றெரிசியாக் கண்
ணென்னகண், தினமுமே நின்கமல பாதத்தை நினையாத சிந்
தைதா னென்ன சிந்தை, மேவாக மஞ்சிவ புராணமவை கேளா
மல் விட்டசெவி யென்ன செவிகள், விமலனை வணங்காத சென்
னியென் சென்னிபணி விடைசெயாக் கை யென்னகை, நாவார
நினையேத்தி டாதவா யென்னவாய் நற்றீர்த்த மூழ்காவுட, னி
லத் தென்னவுடல் பாவியா கியசனன நண்ணினுற் பலனேது
காண், மாவாகி வேலைதனில் வருசூரன் மார்புருவ வடிவேலை
விட்ட முருகா, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலை
மேவு குமரேசனே. 12

---

## திருவேங்கடசதகம்.

புருஷராய்ச் சநநம தெடுத்தபேர் மெஞ்ஞான போதத்தை யறிவ தொன்று, பூமியொடு மிக்கதன வாளுவ தொன்றலது பூவலஞ் செய்வ தொன்று, தருமவா னென்றுக் கீர்த்திமா னென்றுநற் சற்குண விவேகி யொன்று, சகலரும் புகழ்கின்ற வித்துவா னென்றுரண சங்க்ராம வீரனென்று, கருணைசே ரிந்தவகையில்லாத மனிதரைக் காசினியி லேன் படைத்தாய், கருதுதாயுதரமும் பார்க்கின்ற பேர்களிரு கண்களுஞ் செய்த வினையோ, மருவுலா வியதுளப மாலையணி மார்பனே மணவாள நாராயணன், மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே வரத வேங்கட ராயனே. 1

சரீர நிலையாமை.

ஆகாய மீதினி லெறிந்தசிலை காற்றினை யடைத்து வைத்திடு துருத்தி, யனலிட்ட மெழுகுவெயி லிடையிட்ட வெண்ணெய்ச் சுழி யாற்றிடை யெழுந்த குமிழி, மோகா விகாரமொடு வருகின்ற மின்னல்விழி மூடுதுயில் கண்ட கனவு, மோதிவரு காற்றினிற் றீவிழுந் திடுபஞ்சு மூச்சோடு கின்ற பதுமை, மீகாம னில்லாத கப்பல்கண் ணிமைபோல் விளங்கவரு தேகமிதனை, மெய்யென்று மெய்யெல்லாம் பொய்யென்று திரிகின்ற விழலனெனை யாளநினைவாய், மாகாள முகிலனைய மெய்யனே துய்யனே மணவாள நாராயணன், மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே வரத வேங்கட ராயனே. 2

---

## மூவரம்மானை.

புந்திவனஞ் சூழும் பொருவலில்லாப் பிள்ளையார்
தந்திமுகன் குடவயிற்றன் சப்பாணி யம்மானே
தந்திமுகன் குடவயிற்றன் சப்பாணி யாமாகி
லிந்த வயிற்றுக் கிரையெங்கே யம்மானே
யின்றென்றே யீச னிரக்கலுற்று ரம்மானே. 1

தெள்ளு தமிழ்ப்பெருகுந் திருமுட்டத் தெம்பெருமா
னுள்ளநில மெல்லா முழுதுண்டா ரம்மானே
யுள்ளநில மெல்லா முழுதுண்டா ராமாகில்
கள்ளனிவ னென்று கட்டுவதென் னம்மானே
கட்டாரோ போரிற் கதிரொளித்தா லம்மானே. 2

விரிந்தபுகழ்ப் புள்ளிருக்கும் வேளூர் வயத்தியனார்
பரிந்திவினை தீர்க்குந்தெய்வப் பண்டிதர்கா ணம்மானை
பரிந்திவினை தீர்க்குந்தெய்வப் பண்டிதரே யாமாகில்
மருந்துவிலை கைக்கூலி வாங்குவரோ வம்மானை
வாயிலே மண்போட்டு வாங்குவர்கா ணம்மானை. 3

புள்ளிருக்கும் வேளூர்ப் புண்ணியனார் பெற்றமுத்துப்
பிள்ளைதனக் கிந்திரனார் பெண்கொடுத்தா ரம்மானை
பிள்ளைதனக் கிந்திரனார் பெண்கொடுத்தா ராமாகில்
வள்ளிதனைக் கொள்ள வழக்குண்டோ வம்மானை
வள்ளியம்மை யம்மான் மகளல்லோ வம்மானை. 4

ஈசன் பசுவாகி யேமனிளங் கன்றாகி
வீசுபுக ழாரூரின் வீதிவந்தா ரம்மானை
வீசுபுக ழாரூரின் வீதிவந்தா ராமாகில்
காசளவு பாற்றான் கறக்குமோ வம்மானை
கன்றை யுதைகாலி கறவாதே யம்மானை. 5

ஆரூர் வயல்சூ ழருணையண்ணா மலைநாதர்
பேரரிய வண்ணாரப் பெண்கொண்டா ரம்மானை
பேரரிய வண்ணாரப் பெண்கொண்டா ராமாகில்
தாரணியில் யாவருக்குந் தப்புவரோ வம்மானை
தப்புந் துறையறிந்து தப்புவர்கா ணம்மானை. 6

பூங்கா வனஞ்சூழப் புள்ளிருக்கும் வேளூரார்
பாங்கான தென்மதுரைப் பாணன்கா ணம்மானை
பாங்கான தென்மதுரைப் பாணனே யாமாகில்
தாங்கா திழையெடுத்துத் தைப்பாரோ வம்மானை
தையலுக்கு நல்ல சமர்த்தன்கா ணம்மானை. 7

கள்ளிருக்கும் பூஞ்சோலைக் காளத்தி யீச்சுரனார்
வெள்ளரியுங் கைக்கரியும் விரைந்துநட்டா ரம்மானை
வெள்ளரியுங் கைக்கரியும் விரைந்துநட்டா ராமாகில்
புள்ளரியு மங்கே புடலிட்டா ரம்மானை
புடலிட்ட பூசணியும் பூத்ததுகா ணம்மானை. 8

சூட்டுபுகழ்த் தென்மதுரைத் தொல்லுலகிற் சொக்கேசர்
காட்டுக்குள் வீற்றிருந்த காரணர்கா ணம்மானை

காட்டுக்குள் வீற்றிருந்த காரணரே யாமாகி
லிருட்டுப் பயங்கள்சற்று மில்லையோ வம்மானே
யெட்டானை சூழ்ந்திருந்தா லென்னபய மம்மானே. 9

கள்ளவிழுஞ் செஞ்சடையார் காளத்தி யீச்சுரனார்
வள்ளலார் செஞ்சடைமேல் வாளரவுண் டம்மானே
வள்ளலார் செஞ்சடைமேல் வாளரவுண் டாமாகில்
துள்ளிவரு மம்புலியைத் தொடருமோ வம்மானே
தொடருமோ மயிலாடுந் துறைகண்டா லம்மானே. 10

சோற்றுன் மடையடைக்குஞ் சொக்கர்திருக் கூடலிலே
வேற்றாளாய் மண்சுமக்க வேண்டினர்கா ணம்மானே
வேற்றாளாய் மண்சுமக்க வேண்டினரே யாமாகில்
மாற்று னடிக்க வழக்குண்டோ வம்மானே
வைகையிலே தானடிக்க வழக்குண்டே யம்மானே. 11

மாலறியாக் கள்ளனிவன் வந்துமன்றி லேபுகுந்து
கோலமுட னெடுத்துக் கொண்டொளித்தா ரம்மானே
கோலமுட னெடுத்துக் கொண்டொளித்தா ராமாகில்
காறலைக டோலெலும்பு கண்டதுண்டோ வம்மானே
கண்டலவோ விருகமுகு காத்திட்ட தம்மானே. 12

மங்கை யுமைபாகர் வழுவூர் விடைநாதர்
திங்களுடன் கங்கை தினஞ்சுமந்தா ரம்மானே
திங்களுடன் கங்கை தினஞ்சுமந்தா ராமாகி
லங்கமெல்லாங் குளிர்ச்சி யாகாதோ வம்மானே
யாமென்றே யானையுரித் தணிந்தனர்கா ணம்மானே. 13

தெற்குமுக மாயிருக்குந் தில்லைச்சிற் றம்பலவர்
நற்புவியே மூக்குகந்த நாயகர்கா ணம்மானே
நற்புவியே மூக்குகந்த நாயகரே யாமாகில்
லற்பவிடைப் பெண்ணை யணைவதென் னம்மானே
யணைந்தல்லோ வுருவ மானதுகா ணம்மானே. 14

பாட்டைப் படித்துப் பயனறிய மாட்டாதா
ரேட்டைப் படித்தோதி யெய்தினர்கா ணம்மானே
யேட்டைப் படித்தோதி யெய்தினரே யாமாகில்

பாட்டின் விதியின் பயனறியா ரம்மானே
பயனறியா வாசியன்றோ பட்டனர்கா ணம்மானே. 15

பெற்றபிள்ளை பேரறிந்து பேரிட் டழையாமன்
மற்றுமொரு பேரை வகுத்தழைத்தா ரம்மானே
மற்றுமொரு பேரை வகுத்தழைத்தா ராமாகில்
பெற்ற தகப்பனது பேரறியா ரம்மானே
பேரறியா வாசியன்றோ போய்மாண்டா ரம்மானே. 16

மாட்டிற் பவனிவரு மதுரைக்கு நாயகனார்
காட்டில் விறகொடித்த காரணர்கா ணம்மானே
காட்டில் விறகொடித்த காரணர்கா ணுமாகில்
கூட்டியதைக் கட்டக் கொடியுண்டோ வம்மானே
கூடாதோ பாகங் குடியிருந்தா லம்மானே. 17

வேத மெடுத்து விளங்குகின்ற மெய்ப்பொருளின்
பாத மிருக்கும் பரிசறியா ரம்மானே
பாத மிருக்கும் பரிசறிவா ராமாகில்
காதவழி யோடிக் கலங்குவதென் னம்மானே
கலங்காம லெவ்வுயிருங் கண்டதுண்டோ வம்மானே. 18

சித்தசன் றன்னைத் திருவாய்மெய்த் தேசிகனை
யுற்றபொரு டன்னை யுண்டறியா ரம்மானே
யுற்றபொரு டன்னை யுண்டறியா ராமாகி
லத்த னிவனிடமா யாடுவனோ வம்மானே
யாடானோ தன்றெழிலி லாடுவன்கா ணம்மானே. 19

எட்டெழுத்து மைந்தெழுத்து மேகமெனு மோரெழுத்துந்
தொட்டெழுத்தைக் காட்டுந் துறையறியா ரம்மானே
தொட்டெழுத்தைக் காட்டுந் துறையறிவா ராமாகில்
சுட்டசுடு காடிதென்று சொல்லுவரோ வம்மானே
சொல்லுவார் குருவினரு டொந்திப்பா லம்மானே. 20

சாதிகுலம் வேறாகத் தர்க்கமிடும் பேதையர்கள்
சாதிகுல மின்னதென்று தாமறியா ரம்மானே
சாதிகுல மின்னதென்று தாமறிவா ராமாகி
லாதியந்த நாத மறிவரோ வம்மானே
யறியாத வாசியதே யாணவங்கா ணம்மானே. 2

சாத்திரங்கள் கற்றுந் தனையறிய மாட்டாதார்
வேர்த்துறக்கம் வந்த விதமறியா ரம்மானே
வேர்த்துறக்கம் வந்த விதமறிவா ராமாகில்
சூத்திரத்திற் சூட்சமுனை சொல்லுவரோ வம்மானே
சொல்லுவார் குருவினரு டொந்திப்பா லம்மானே. 22

வீடுகட்டி வீடெடுத்து வீடிழந்து போவார்கள்
பாடுபட்டுப் பெற்ற பதியறியா ரம்மானே
பாடுபட்டுப் பெற்ற பதியறிவா ராமாகில்
கூடுவிட்டுப் பாயுங் குறிப்பறியா ரம்மானே
குறிப்பறியா மானிடர்கள் குருடர்கா ணம்மானே. 23

பின்னுசை கொண்டு பிதற்றுகின்ற பேதையர்கள்
தன்னுசை நின்ற தலமறியா ரம்மானே
தன்னுசை நின்ற தலமறிவா ராமாகில்
பன்னும் பொருளறிந்து பற்றுவரோ வம்மானே
பற்றுவா ரந்தப் பதியறிந்தா ரம்மானே. 24

நாம மிடுவார் நடுவே நடுவிடுவார்
நாம மிருக்கு நடுவறியா ரம்மானே
நாம மிருக்கு நடுவறிவா ராமாகில்
காமனையுங் காலனையுங் கட்டுவரோ வம்மானே
கட்டாரோ மேலிருத்திக் கண்டாக்கா லம்மானே. 25

மந்திரத்தைக் கற்று மதிமயங்கும் பேதையர்கள்
மந்திரத்தின் வித்து வகையறிவா ரம்மானே
மந்திரத்தின் வித்து வகையறிவா ராமாகி
லந்தரத்தி னுட்பொருளை யறிகுவரோ வம்மானே
யறியாரோ தங்க ளறிவினு லம்மானே. 26

பெண்ணறிந்து மாணறிந்தும் பேசும் பொருளறிந்தும்
கண்ணறிந்தும் வாழக் கணக்கறியா ரம்மானே
கண்ணறிந்தும் வாழக் கணக்கறிவா ராமாகில்
பெண்ணிதென்று மாணிதென்றும் பேசுவதென் னம்மானே
பேசும் பொருளறிந்தாற் பேசார்கா ணம்மானே. 27

எட்டெழுத்தே வீடா யிசைந்த நடுவணையைப்
பட்டுருவிப் பார்க்கப் பரிசறியா ரம்மானே

பட்டுருவிப் பார்க்கப் பரிசறிவா ராமாகி
லெட்டெழுத்தை யீன்ற வியலறியா ரம்மானே
யியலறியா வாசியன்றோ வெய்துவது மம்மானே. 28

சித்தாந்தந் தன்னைத் தெளிய வறியாதார்
பெற்ற திருநாமம் பேசுவரோ வம்மானே
பெற்ற திருநாமம் பேசுவரே யாமாகில்
வித்தான வித்தை விளம்புவரோ வம்மானே
விளம்புவார் மெய்ப்பொருளை மேவினு லம்மானே. 29

ஐம்பத்தோ ரக்கரத்தை யாராய்ந் தறியாதார்
கம்பத் தொழிறன்னைக் கண்டறியா ரம்மானே
கம்பத் தொழிறன்னைக் கண்டறியா ராமாகில்
செம்பொற் பதத்தையிவர் சேருவரோ வம்மானே
சேருந் திருநாமஞ் செப்புவரே யம்மானே. 30

ஆடும் பதியை யறிந்துரைக்க மாட்டாதார்
கூடும் பொருளறிந்து கூடுவரோ வம்மானே
கூடும் பொருளறிந்து கூடுவரே யாமாகில்
வீடறிந்து கொண்டு விளம்புவரோ வம்மானே
விளம்பாத பேதையர்க்கு மெய்வருமோ வம்மானே. 31

அருளறிந்து சேர்க்க வறியாத பேதையர்கள்
பொருளறிந்து சேர்க்கப் பொருதுவரோ வம்மானே
பொருளறிந்து சேர்க்கப் பொருதுவரே யாமாகி
லிருடனையே நீக்கி யிருப்பரோ வம்மானே
யிருப்பா ரனுதினமு மெங்கெங்கு மம்மானே. 32

தாயை யறியார் தகப்பனையுந் தாமறியார்
தாயிருக்கு மத்தலமுந் தாமறியா ரம்மானே
தாயிருக்கு மத்தலமுந் தாமறிவா ராமாகில்
காயமுரு வானத்தைக் கண்டறியா ரம்மானே
காமனையுங் காலனையுங் கணக்கறியா ரம்மானே. 33

ஒடுக்க மறியா ருணர்வு நினைவறியார்
படுக்கையிலே நித்திரைப் பார்த்துரங்கா ரம்மானே
படுக்கையிலே நித்திரைப் பார்த்துரங்கா ராமாகி
லெடுத்துரைத்த சாத்திரங்க ளிறந்தனகா ணம்மானே
யிறந்து பிறப்பனவு மிருவினைகா ணம்மானே 34

தன்வீடுந் தன்முதலுந் தாமறிந்து வாழாமல்
பின்வீடும் பின்முதலும் பேணுவர்கா ணம்மானே
பின்வீடும் பின்முதலும் பேணுவரே யாமாகில்
தன்வீடுந் தன்முதலுந் தாமறியா ரம்மானே
தாமறிந்தால் வீடுகட்டத் தலமறிவா ரம்மானே. 35

தன்ம மறியார் தவத்தி னிலையறியா
ரிம்மையிலே மோட்சகதி யெய்துவரோ வம்மானே
யிம்மையிலே மோட்சகதி யெய்துவரே யாமாகில்
தன்ம மறியாமற் றவிப்ப தென்ன வம்மானே
தவிப்பதுவு மெழுபிறவித் தாகங்கா ணம்மானே. 36

உள்ளத்தி னுள்ளே யொளிந்திருக்கு முத்தமனைக்
கள்ளத் திருக்கறுத்துக் காண்பாரோ வம்மானே
கள்ளத் திருக்கறுத்துக் காண்பாரே யாமாகில்
தள்ளப்படா தென்றவினை தள்ளுவரோ வம்மானே
தள்ளுவார் தாமிருக்குந் தலமறியா ரம்மானே. 37

கடையறிந்து விற்கக் கணக்கறியா மூடர்கடா
மெடையறிந்து வாணிபத்தை யெய்துவரோ வம்மானே
யெடையறிந்து வாணிபத்தை யெய்துவரே யாமாகில்
கடையறிந்து தாஞ்சரக்கைக் கட்டுவரே யம்மானே
கட்டறியா வாசியன்றோ கலங்குவது மம்மானே. 38

தில்லை யறியார் சிவபதத்தை தாமறியா
ரெல்லையில்லாப் பேரொளியி னெய்துவரோ வம்மானே
யெல்லையில்லாப் பேரொளியி னெய்தாத தன்மையன்றோ
நல்லையுரு வாக்குவித்துக் கைதொழுதா ரம்மானே
கைதொழுது நிற்பதுவுங் கற்பனைகா ணம்மானே. 39

தன்னை யறியார் தலைவனையுந் தானறியார்
பின்னைக்குரு பீடமென்று பேசுவரே யம்மானே
பின்னைக்குரு பீடமென்று பேசுவரே யாமாகில்
தன்னையறி யாதகுரு சாதிகுரு வம்மானே
சாதிகுரு தர்க்கமிட்டுத் தாமலைவா ரம்மானே. 40

உள்ளும் புறம்பு மொருசமய மாயிருக்கக்
கள்ளாறு சமயங் கண்டதுண்டோ வம்மானே

கள்ளரறு சமயங் கண்டதுண்டே யாமாகில்
கொள்ளுந் தொழிலைக் குலம்பிரித்தா ரம்மானே
பிறந்த குலம்பிரித்துப் பேசுவரோ வம்மானே. 41

வீட்டு விளக்கை விளக்கி யறியாமல்
காட்டு விளக்கையென்றுங் கைதொழுதா ரம்மானே
காட்டு விளக்கையென்றுங் கைதொழுதா ராமாகில்
கூட்டு விளக்கைக் குறிப்பறியா ரம்மானே
குறிப்பறியா மானிடர்கள் குருடர்கா ணம்மானே. 42

இருளை யிருள்விழுங்கி யீரறிவு மோரறிவாய்ப்
பொருளை விழுங்கும் பொருளறியா ரம்மானே
பொருளை விழுங்கும் பொருளறிவா ராமாகி
லிருடனக் குள்ளே யிருப்பதுவென் னம்மானே
யிருளுமதை நீந்தி யிருந்தனர்கா ணம்மானே. 43

வெண்ணீ றிடுவார் விழுவார் விதம்விதமாய்
வெண்ணீறு பூத்த விதமறியா ரம்மானே
வெண்ணீறு பூத்த விதமறிவா ராமாகில்
மண்ணீ றிருக்கும் வகையறியா ரம்மானே
வகையறியா வாசியல்லோ மயங்குவது மம்மானே. 44

தந்தைக்கு முன்பிறந்து தகப்பனுக்குப் போதகத்தை
யந்தமுத ரூன்கடந்தே யறிவித்தா ரம்மானே
யந்தமுத ரூன்கடந்தே யறிவித்தா ராமாகில்
தந்தையிட மாகவல்லோ தாமிருந்தா ரம்மானே
தாமிருந்து மப்பொருளைத் தாமறியா ரம்மானே. 45

குற்றமில்லாச் சங்கரனார் கோயிலுக்குள் ளேயிருவர்
புற்றுமண்ணை யீந்து பொருள்பறித்தா ரம்மானே
புற்றுமண்ணை யீந்து பொருள்பறித்தா ராமாகில்
சத்தமண் மீதிற் றுனிலையோ வம்மானே
யில்லையென்ற பேர்க்கீச னில்லைகா ணம்மானே. 46

இடமறிந்து கொண்டே யிருக்கறியாப் பேதையர்கள்
சடமறிந்து வாழத் தடமறியா ரம்மானே
சடமறிந்து வாழத் தடமறியா ராமாகில்
சடந்தனிலே சற்குருவைத் தாமறியா ரம்மானே
தாமறியாத் தலைவனையுந் தானறிந்தா ரம்மானே. 47

முத்துராமலிங்க சுவாமிகளருளிய

## சுவாநுபவத் திருவாக்கு.

சத்தே யென்சித்தத் தொளியாய் விளங்குஞ் சதாசுகமே
பத்தே பிறந்து பிறந்தே யிந்நாள்வரைப் பட்டதுன்பக்
கொத்தே யகற்றுங் குருவே பிறக்குங் குணகுணிக்கும்
வித்தே கழனிச் சிதம்பர மென்னும் விநாயகனே. 1

சுவருறையு மோவியங்கள் சுவரேயென்றல் சுபாவமதுபோ
ற்பரத்திற் றோன்றுகின்ற, பவமுதலாஞ் சங்கற்ப விகற்ப மெல்
லாம் பரவடிவாய்க் கண்டுபர வடிவமான, தவருறையுங் கழனி
நகர்க் கொற்ற நாதன் றனதருளாற் பேதமதி நாயினேனுக், கிவ
னவனு னதுவென்னும் பேதமின்றி யெவ்வுருவுஞ் சின்மயமா
யிருந்த வாறே. 2

வேண்டுவ தொழிந்தும் வினையிருள் கடிந்தும் விழுப்பொரு
ளிதுவெனக் கண்டு, மீண்டுறு நாமவுரு வெல்லாஞ் சிவமா
யிதயத்தி னுணர்ந்திவை மறந்துங், காண்டகு நினது திருவடி
கதியாக் கலந்தன ரடியர் யானின்ன, மீண்டிருந் தந்தோ விட
ருற லழகோ வென்னையா டிருநெல்லை யம்மே. 3

சகலமெனுந் தொந்த மெலாஞ் சிவத்தி னுண்டாய்த் தனக்
கென்ன வடிவின்றித் தானுண் டான, சுகவடிவே வடிவாக விரு
ந்தத் தொந்தஞ் சுகரூப மாதலறு பவமாக் கண்டு, மகமுட
லென் றனுதினமு நாடி நாடி யகமிதமென் றனவரத நைந்து
நைந்து, மிகவிருந்தே மனதுமிக வாடல் கண்டு மின்னமிரங் கா
திருத்த லென்னே யம்மே. 4

வானுடர் மணம் பொருந்தும் வாழ்வுநினை யாதே மண்ணு
டர் பதியடையும் வாழ்க்கைநினை யாதே, நானுவென் றில்வாழ்வி
னண்ணி யுழலாதே நாலிரண்டு சமயநெறி நாடியலை யாதே, யானு
னு மத்துவித நிலையைமற வாதே யகப்புறமு மோருருவை யன்
றியுணா ராதே, தேனுடுங் காவின்மலர்த் தேனூறு பாயுந் தென்
கழனித் திருநெல்லை யின்பாத நாடே. 5

தோடிப் படிந்திடவு மசைவற்ற கட்டை யாகு, மாங்கார மென்றமுனி வாங்கா திருந்திடவு மாலயம தாகு மிந்த, நீசத் தொழிலுடைய பாவக் குடிலிதுவை நினைவத தகற்ற நினைவாய், நிச்சுதந் தரமாகு மெச்சுதந் தரமாகு நீண்மாயை யுடை மாயனே.

வே று.

எண்ணற் கரிய சித்திரமோ ரேகபடத்தி லிருப்பது போற்
பண்ணற் கரிய சீவேச வுலக மிருக்கும் பரவிசும்பே
மண்ணைப் புனலை யனல்காலை வானைத் தருசங் கற்பசத்தி
நண்ணிப் பொருந்து மூன்றவத்தை நாளும் விளக்குஞ் சின்மயமே.

சித்தத் திருக்குஞ் சிதாகாச தேவே தேவ தேவதையே
பத்துத் திசையும் பதினாலு லோக மெங்கும் படரொளியே
முத்திக் கரசே யாறுறின் மூலப் பொருளே மோனசுகம்
புத்திக்கேதந் தவிர்த் தடிமைபொருந்த வருள்வாய்புண்ணியனே.

ஏகப் பொருண்முப் பதமாக்கி யிருமூன் றாக்கி யொருமூன்றை, யேகத் தள்ளி யொருமூன்றை யேக மாக்கு மென்மயமே, மோகத் தழுத்து மேழ்பூமி முற்றுங் கடந்து மோகமறு மியோக நிலமே மேறியதி னுறுவாழ் வளிக்குங் கற்பகமே. 14

தன்னைக் காணு வறிவாலே சகத்தைப் பேத மாக்கண்டே, யென்ன திதியா னிவனென்னு மிடருற் றுழன்றே னெங்கோவே, யன்ன மயக்க முன்னருளா லகன்றே சகமென் கற்பிதமா, மென்னை யன்றி வேறன்றி யானுக் கண்டே னென்கண்ணே. 15

இந்த வுடலோ டாவிபொரு ளெல்லா மித்தை யிவை வாங்கி, யந்த மில்லா வுன்வடிவை யடியேற் கருளுந் தாதாவே, கந்த விடய மாதியைந்துங் கைக்கொண் டருந்தி நீயிருக்க, வெந்த மதியா லியான் புசித்தே னென்ன லாகு மிறையோனே. 16

ஆகா சாதி தேகாந்த மான சகத்துன் கற்பிதமே, லேக வறிவா முன்வடிவே யிவைக்கும் வடிவ மென்குருவே, மோக மறமுன் சொன்னவைகண் முழுது நீயாத் தோன்றிவிடி, னேகு நீநா னீதெனலு மெங்கே போத தேவதையே. 17

தன்னை யுணரு முணர்வின்றித் தானும் பொய்யாங் கோசமைந்தும், பின்ன மின்றி யிருந்தபடி பின்னுமளிக்கும் பொருளே,

பொன்னங் கிரியு மணுவுருவும் பொதுக்காட் சியிலெ னக்களித்தா, யென்னை யென்றுலெனக்களித்தா யெந்தா யென்றனுயிர்க் குயிரே. 18

வே று.

நித்திரையுஞ் சாக்கிரமு நீண்மறப்பெண் ணத்தாலா
மத்தனையுந் தோன்று தகத்தடக்கிச்-சித்திரம்போ
லென்றிருப்ப தன்றுமுத்தி யெய்துமிது வேசுகமா
நன்றிதுவே யர்த்தமென நாடு. 19

சுட்டுமிடத் துண்டெனவாய்ச் சுட்டற்று மில்லாத
துட்டமனச் சஞ்சலத்திற் றோயாம-லெட்டரிதா
யெவ்வுருவு மெங்கு மிரும்பொருளாய் நின்றதெதோ
வவ்வறிவே தெய்வமென லாம். 20

காண்பனவா யுண்டெனலாய்க் காண்பதற்று மில்லாத
வீண்பயிலு மாயைவிதி ரித்தமதாய்-மாண்புடைய
முப்பாழ் கடந்த முதற்பாழா மூலமெதோ
வப்பொருளே தெய்வமென லாம். 21

வே று.

விண்ணாதி பூதமெலாஞ் சிவமே யாகு மெய்யுருவும் பொய்யுருவுஞ் சிவமே யாகுங், கண்ணனை வேதமெலாஞ் சிவமே யாகுங் கருதுகின்ற நினைவெல்லாஞ் சிவமே யாகுங், மெண்ணிறந்த பேதமெலாஞ் சிவமே யாகு மிப்படியே தினக்தோறுங் காண்பா னாகிற், பெண்ணுணு மலியாகும் பேத மின்றிப் பிரமமய மாதறிண்ணம் பேத மின்றே. 22

அகவிருத்தி தனிலுண்டாஞ் சீவனுக்கே யதிட்டான ஞானவடி வல்லவென்று, லகவிருத்தி தானிதமா வாகும் போதே யவனெனதென் றியாதொன்றை யறிய வொண்ணு, வகவிருத்தி செனித்தவிட மகண்ட மாகு மல்லவெனி லவைசெனித்த வடிவ வ மாகா, வகவிருத்தி செனித்தவடி வாதலாலே யதிட்டானந் தனிலடங்கு மைய மின்றே. 23

வே று.

தீதுநலம் பாவமறஞ் சேதனமாஞ் சின்மயமே
சேதமற நின்ற தினம்புரியு-மாதலினு
லிவ்வுருவ மென்மயமே யென்றுணரி லிங்கான்கு
மவ்வுருவ மாஞ்சிவமே யாம். 24

கும்பிடவோ மேலில்லை கும்பிடவோ கீழில்லை
கும்பிட்டு நீங்கக் குறையில்லை-கும்பிடும்பே
ரரரோ யறியேன்யா னுகாகா வோகோகோ
சீரேது மில்லை சிவம். 25

செய்யுந் தவமும் திரயோக நிஷ்டைகளுஞ்
செய்யு முபதேசந் திரபூசை-யையமறச்
சொல்வேன் சுதந்தரனை யன்றியுல கென்ப
தில்லென் றுணருறு மிதே. 26

தெய்வ வடிவறிந்தத் தேவதையைப் பூசைபண்ணித்
தெய்வ வடிவாந் திறங்கேளீ-ரையமினால்
சற்குருவாற் றானுணர்தல் சந்ததமுஞ் சிந்தித்த
னிற்குமது வான நிலை. 27

ஈயக் கதிரா மிலக்கணமு மின்குறளு
மாயப் பொருளா வறைந்தாலு-நோயகலா
துன்னை மறந்த வொருதுரிய பூமியிலே
மன்னி யிருக்க மதி. 28

வே று.

ஈசன் வடிவாமோ யெட்டுருவு மென்றுணர்ந்து
பாசந் தவிர்ந்தொழிப் பாராத தென்னமதி. 29

காரியரூ பங்களெல்லாங் காரணமாக் காணும
னுரிமனை யென்னதென நாடவந்த தென்னமதி. 30

சும்மா தனியிருக்குந் தூயதாந் துரியமதி
லம்மா தினமிருப்ப தாகாத தென்னமதி. 31

நானெனவு நீயெனவு நாடாமலைக் குறித்தே
ஞானமய மொன்றெனவே நாடாத தென்னமதி. 32

எப்பொழுதுந் தன்னையன்றி யாதுவந்த தியாதொழிந்த
தப்படியே யெண்ணி யமையாத தென்னமதி. 33

சுட்டற்ற வெட்டவெளி தோயாம னுமவுருச்
சுட்டி யனுதினமுந் துன்பமுற லென்னமதி. 34

நிற்க நிறுத்த நிலையாத நீசமனத்
துற்சங்க நீங்கிச் சுகமாகா தென்னமதி. 35

நிர்க்குணனே முக்கணனாய் நின்றுசகங் காட்டியட்டு
நிர்க்குணனாய் நிற்பதெனை நில்லாத தென்னமதி. 36

சந்ததமுஞ் சின்மயமாய்த் தானிருந்தாற் றொந்தவினை
வந்துறுமோ வென்ன மதியாத தென்னமதி. 37

கண்டவெல்லாம் பொய்யாகக் கண்டிருந்துங் காண்பனவை
யுண்டெனவே பற்றி யுழலுமதி யென்னமதி. 38

வேறு.

சீரார் கழனித் திருநெல்லை யம்மைபதஞ்
சாராம லென்னோ சனித்திறந்தாய் நெஞ்சகமே. 39

இதுவே சிவமென்று மீதுமன மென்று
மதனால் விளங்கினுனக் குறிவெங்கே நெஞ்சகமே. 40

பன்னாளுங் காண்பவற்றைப் பற்றிநொந்து கைந்திருப்ப
தென்னா டொலைந்தறிவா யென்றிருப்பாய் நெஞ்சகமே. 41

எந்நாளு மின்பமிலை யீதென் றறிந்திருந்தும்
பன்னாளுந் துன்பப் படலாமோ நெஞ்சகமே. 42

அச்சந் தவிர்ந்தபிலே யாமதனைச் சேராமற்
றுச்ச வினைபுரியத் துணிந்தனையே நெஞ்சகமே. 43

தன்மயமீதென் றுணர்ந்துந் தானதுவாய் நில்லாம
லின்ன மிடரடைவ தென்னமதி நெஞ்சகமே. 44

ஈதனெறி யானிவனென் றெண்ணியெண்ணி யேழையர்போற்
றீதடைந்தாற் சீதளமுஞ் சேருமோதா நெஞ்சகமே. 45

பாச வடவிதனைப் பற்றிப் பயமடைந்தா
மாசு தவிர்ந்தவெளி மன்னலுண்டோ நெஞ்சகமே. 46

வாசனைக ளியாதுமிலா மன்னுதுரி யந்தனிலே
தேசுபெற நிற்கத் திகைப்பேனோ நெஞ்சகமே. 47

சங்கற்ப சாலந் தவிர்ந்தசம பாவனையிற்
றங்கிப் பரமசுகஞ் சார்வதென்றோ நெஞ்சகமே. 48

பாராமற் பார்க்கும் பரமவிழி பெற்றிருந்தா
லூரேது பேரே துலகேது நெஞ்சகமே. 49

இந்தப் பெரும்பிரமா காரமிலே யெய்தாமற்
றொந்தப் பிராந்திநிதந் தோய்ந்தனையே நெஞ்சகமே. 50

மோகாதி காரியங்கண் முற்று மிறந்தபதத்
தோகோகோ சேரா துழல்கின்றாய் நெஞ்சகமே. 51

ஐம்பொறியு மைப்புலனு மாறி யடங்குமிட
நம்பிநம்பி நீயடையு நாளென்றோ நெஞ்சகமே. 52

பற்றுமற் பற்றும் பரமசுக நிஷ்டைதனைப்
பெற்றிருந்தா லென்னகுறை பேசாய்நீ நெஞ்சகமே. 53

ஆன்ம வுருவகண்ட மந்தவுரு வாகாமற்
றானொருவன் போலாய்ச் சலித்தனையே நெஞ்சகமே. 54

சச்சிதா னந்தத் தனிவீட்டின் வாழாம
னச்சுருவாங் காட்சிதனை நாடினைந்தாய் நெஞ்சகமே. 55

சான்றாந் துரியமதைச் சாராம லூடோறுந்
தோன்று விடயமதைச் சுட்டினையே நெஞ்சகமே. 56

பாவனைக ளியாதுமிலாப் பானநிலை யெய்தாமற்
றீவினையைச் சேர்வதென்ன சிந்தனையே நெஞ்சகமே. 57

தூங்காமற் றூங்குஞ் சுகநிலையிற் செல்லாது
நீங்காமற் றுச்சவினை நீபுரிந்தாய் நெஞ்சகமே. 58

காண்பவற்றுப் பொழுதுங் காட்டியறத் தோற்றுவிக்கு
மாண்புடைய சித்தின் மடிவதென்றோ நெஞ்சகமே. 59

நித்தரங்க முந்நீர்போ னின்றுவிளக் கறிவின்
வைத்த படிரமித்து வாழ்வதென்றோ நெஞ்சகமே. 60

திரிபுடிக்குஞ் சாட்சியெனுஞ் சின்மயமாய் நில்லாமற்
குறிபிடித்து நாடோறுங் குலைகுலைந்தாய் நெஞ்சகமே. 61

அவத்தாத் திரய வதிட்டான மாயிருந்து
பவத்தை யழிக்காமற் பாழ்பட்டாய் நெஞ்சகமே. 62

முக்குணமுங் கெட்ட முதற்பாழைச் சாராம
லக்குணத்தோ டொன்றி யலைந்தனையே நெஞ்சகமே. 63

கோசமைந்துந் தோன்றாக் குருதுரியஞ் சேராமற்
பாச மெனும்வலைக்குட் பட்டுழன்றாய் நெஞ்சகமே. 64

ஆறாறின் மேலா மறிவுமய மாகாம
லோராறி னூடே யுழல்வதென்னோ நெஞ்சகமே. 65

ஈசுர செகத்தைச் சித்தொன்றாத் தோற்றுவிக்கப்
பாவனையாற் போதித்துப் பற்றுகின்றாய் நெஞ்சகமே. 66

ஆமை யுறுப்பை யடக்குதல்போற் காண்பவையாந்
தீமைதனிற் புலனைச் சேர்க்காதே நெஞ்சகமே. 67

எட்டுருவு மீசன்மய மென்றறிந்து மந்தமதி
விட்டவனைப் பற்றி விடுதலுற்றாய் நெஞ்சகமே. 68

நிவாத தலதீப நிற்பதினில் லாமற்
குவாலப் பிணிக்குரம்பை கூடினைந்தாய் நெஞ்சகமே. 69

சித்திரத்தி லேவரைந்த தீபம்போ னில்லாமற்
கத்தித் தலைவெடிக்கக் கற்றனையே நெஞ்சகமே. 70

அரவின் களமறுக்கி லந்தலையின் கேட்டிற்
பரமவுரு நீயடையிற் பாறுமைந்து நெஞ்சகமே. 71

தத்தாய பிண்டமதிற் சார்ந்தசலம் போற்றரிய
வத்தி லடங்கியதாய் வாழ்வதென்றோ நெஞ்சகமே. 72

எண்ணை யிருப்பதுற வெரிற்றீபம் போலவுநீ
யெண்ணரிய விச்சைதவிர்ந் தென்றுறிவாய் நெஞ்சகமே. 73

---

வேதசிரேணி சிதம்பர சுவாமிகளருளிய

## வுபதேச வுண்மை.

சாதன முதிர்ந்தோ னாகித் தன்னடித் துணைவி டாது
நீதமாம் பணிக ளாங்கு நிகழ்வுறச் செயுஞ்சி டற்குப்
போதமுண் டாகு மாறு பொருந்துகண் ணுதி யாலே
வேதனை விடப்போ திப்போன் மெய்குரு வாவ னாமே. 1

வேறு.

மெய்க்குருவை யடுத்திடுங்கா லைர்கடையை விசாரித்து மேவவேண்டு, மெக்குருவுஞ் சற்குருவாய்க் காணுவதா லிழுக்கு நடை யில்லோ னாகி, மிக்கபா வுணர்வினா யகமமதை யிலனாகி மேன்மை கூறு, மக்குருவே சற்குருவா மவனிடஞ்சேர்ந் தரிய பணி யாற்ற னன்றே. 2

முத்திவேட் கையினோர் சீடன் மோனசற் குருவைப் போற்றி
மெய்த்தசா தனங்க ளாங்கும் விளம்புவா யெனவவ் வாசான்
நித்தியா நித்திய வஸ்து விவேகநின் னெஞ்ச கத்தை
சத்திய மாகக் கொண்டு தடையெலாங் கழிப்பா யென்றான். 3

படர்தரு மிகவுத் தார்த்த பரபோக விராக மாதல்
நடலையா முலக போக நற்றேவ போக மாகு
மடருமவ் விரண்டும் வாந்தி யசனம்போ லற விடுத்துத்
திடமுறு சமாதி யாறுந் தெளிவுறத் தேர்வா யென்றான். 4

எந்தா யிரண்டு சாதனமு மியற்கை யாகத் தெளிவுற்றே
னிந்தச் சமாதி யறுவகையி னியல்பு மெளியேற் கருளெனவே
யந்தக் கரண வாதனைக ளறிந்தங் ககற்றி யமலமதாய்ச்
சிந்தை மயக்க மில்லாமற் றிகழ்வ ததுவே சமாகும். 5

உடைபடு முலகிற் காணு முருவநா மங்க டம்மே
லிடையிடை வருமோ கத்தா லிந்திய வழியே நெஞ்சம்
கடையுறச் சென்று போகங் கைக்கொளு மதனை யென்றும்
தடையற வொருவி நிற்கை தமமென வுரைப்பர் தாமே. 6

மட்டிலாப் பெண்டி ராதி மகிழ்புக மூவ தெல்லாம்
கட்டற நீக்க வேண்டுங் கழலாது நிற்கு மாகில்
தட்டுறு பிறவி நீங்காற் றன்மையென் றுன்னி யுன்னி
யொட்டற விட்டு நிற்ற லுபரதி யாகுங் காணே. 7

எண்ணருங் காற்று மின்ன லிடிமழை யாதி யாக
வண்ணமா முஷ்ண சீதம் வந்திடு சுகத்துக் கங்கள்
கண்ணினுற் கண்ட வெல்லாங் கருத்தினிற் சமமாய்க் கொள்ளுந்
திண்ணமா முணர்வு தானே திதிக்ஷையென் றறிவாய் நீயே. 8

சிந்தையி லைய நீங்கித் தேசிக னருளாற் பெற்ற
வந்தநற் பொருளை யெல்லா மடைவுடன் மனனஞ் செய்து
முந்துறு சாத னங்கண் முதிர்தரு வழியீ தென்று
சந்தத மகிழ்ந் திருத்தல் சமாதான மென்ன லாமே. 9

நற்றவக் குருவா மீச னன்னூலின் விருப்ப மாகி
பெற்றது நழுவா வண்ணம் பெரியவை ராக்கி யத்தால்
சத்திய ஞான னந்தத் தனிப்பரம் பொருளை நாடிச்
சுத்தமாய் நிற்ற லென்றுஞ் சுகமுறு சிரத்தை யாமே. 10

மூதறி வாகு மந்த முமுக்ஷுத்வ முறையே தென்னில்
கோதுறத் தலைமேல் வெய்ய கொடுந்தழல் பறக்கக் கண்டோன்
வாதனை சகித்தி டாமல் மடுசலந் தேடு மாபோல்
நீதமெய்க் குருவைத் தேடி நிற்றலென் றறிவாய் நீயே. 11

அரிய தாபத் திரயவகை யறையக்கே ளத்தியான் மீகம்
பெரிய சரீர நோயுறாத லல்லாற் பிறனுரா னேந்திரிய
முரிய கன்மேந் த்ரியங்கரண முரைத்த விவ்வி ரேழுமிக
வெருவுந் துன்புக் கிடமாகு மிவற்றைப் பகுத்து விடுவாயே. 12

மான வாதி பௌதிக வகையுங் கேட்டி யெக்காளு
மான மிருகாதி களிறு லடருந் துன்பு மஃதன்றி
ஞான கன்ம விஷயத்தா லன்றுந் துன்ப காலைகான்
றின முறச்செய் தின்பமுமே யீரே ழெனவி யறிவாயே. 13

இந்த விதமவ் விரண்டொழிய விதன்மே லாதி தெய்விக
சிந்தை கலங்கும் வெயிற்காற்று சீத மழையின் னிடிகுமுறல்
முந்த வருதல் மண்டபங்கோ புரங்கள் வெடித்து விழுதலெனும்
தொந்தத் துயர்க ளல்லாமே லின்னமுண்டு சொலக் கேட்பாய்.

ஐயோ விந்தத் தாபத்தி லழுந்திச் சங்க டொண்ணுமல், மெய்யா வென்ற னிணையடிக்கீழ் வீழ்ந்த வென்னைத் தடுத்தாண்டு, பொய்யாந் தேக போகமெலாம் போமா வாக்கி யப்பொருளை, யையா வடியேற் குபதேசித் தருள வேண்டு மெனத் துதித்தான். 15

அருள வேண்டு மென்றமா ணாக்கன் றன்னை யருகிருத்தி
யுரிய ப்ரக்ஞா னம்பிரம முற்ற வகம்ப்ரம் மாஸ்மி யன்றி
விரியுந் தத்வ மசியுடனே விளங்கு மயமாத் மாப் பிரமந்
தெரியும் படியிந் நால்வகையுந் தெளிய வுரைப்பர் பெரியோரே.

இந்நால் வாக்கி யத்தி னியல்பும்யா மறைந்தி டக்கேள்
முந்துநால் வேதந் தன்னின் முடிந்தமந்தார் பொருள தாகுஞ்
சிந்தனைக் கெட்டா ஞானந் திகழ்வதே பிரம மென்ன
வந்தமா மிருக்கு வேத மனுதினம் மறையு மன்றே. 17

அந்த நாமே பிரமமா னேமென் றறையு மெசுர் வேத, மிந்த வதுவே நீயாகு மென்னப் புகலுஞ் சாமமறை, யிந்த மயமான் மாப்பிரம மென்றே யுரைக்கு மதர்வணந்தான், முந்த வுரைத்த விருக்குமறை மொழியி னருத்த மொழிந்திடக்கேள். 18

எந்த வறிவாற் சத்தாகி யிலகு மன்றித் தேவர்நா
ரிந்த மிருக தாவரங்க ளெல்லா மெதிரு லியங்குமா

லந்த வுணர்வே சைதன்ய மதுவே பிரமம் வேறில்லை
முந்த வுரைத்த வாக்கியத்தின் முடிவு மிஃதென் றறிவாயே. 19

எந்த விடத்து நிறைந்தபர மிசையுந் தனுவிற் புந்திக்குச்
சொந்த சாட்சி யாய்த்தானுய்ச் சுயமா யிலகும் பிரமமே
யந்த வகமென் றெசுர்வேத மறையு மஃதைத் தெரிந்தும்
பந்த முழுது மறவிடுத்துப் பரம ஞானம் பெறுவாயே. 20

இந்தச் சீவ தேகேந்திரி யாதிக் கப்பா லிலங்குவதா
மந்தப் பிரம நீயேயென் றறைந்த தல்லா லதன்பின்னு
மிந்த நீயே செகமதனுக் கிசைந்த தொருகா ரணமென்ன
வந்தச் சாம வேதமறை யறையு மதனை யறிவாயே. 21

இந்தப் படியே சுயஞ்சோதி யாக வெழிலா யிலங்குவது
வந்த வயமான் மாப்பிரமமென்றே யறையு மதர்வணந்தான்
சிந்தை கலக்க மில்லாமற் றேர்வா யிவற்றை யெனக்கேட்ட
மைந்தன் வணங்கிக் குருவேயிவ் வழிக்குத் தடையே துரையெ
[ன்றான். 22

வேறு.

பருதியின் முன்ன ரிருளிருந் தாற்போற் பரமசித் துருவனு நின்பால், சுருதியாற் குருவாற் விசாரிக்கு மிடத்துச் சூழிருடுக்க மே யின்று, லரியவித் துக்க மடியனே னெஞ்சத் தணைந்தகா ரணமெனை யென்னின், பெரியவோர் தறியைக் கள்ளனென் றெண்ணும் பெற்றிபோ லென்றறி வாயே. 23

இந்தவா தனைக ளேதினு லென்னி லிராகாதி குணங்களி னுலே
யந்தவி ராக மேதினு லென்னி லபிமான வாசனை யாலே
முந்தபி மான மேதினு லென்னில் மூடமா மவிவேகத் தாலே
நந்தவி வேக மேதினு லெனிலஞ் ஞானத்தா லென்றறி நீயே. 24

அந்தப் பெரிய வஞ்ஞான மதுவு மெங்கே யென்றுயேல்
சிந்தைக் கெட்டா தறிவுருவாய்த் திகழ்ந்த வுன்னை மறந்திடமே
யிந்தப் பெரிய வஞ்ஞான மிரியும் படியிங் கருளென்னில்
முந்த வுரைத்த ஞானமுறில் முழுதும் போமென் றறிவாயே.

இந்த ஞானம் பொருளடியேற் கியம்ப வெழுந்த குருமணியே
யந்த ஞான மணியென்பா லமைந்த தற்கோ ரையமிலை

வே று.

அறியநூற் பொருளை யைத்து மங்கையிற் கனிபோ லெற்குத்
தெரிதர வுணர்த்த வந்த தேசிக வரசே போற்றி
சுருதிசம் மதம தாக தொம்பத வுபாதி யேழும்
திரிபுடை யைய நீங்கித் தெளிந்திட வுரைப்பா யென்றான். 32

வே று.

தொம்பதத்திற் சீவனுக்கங் குபாதிகளா மேழுந் தொலையாத சாக்கிரசொப் பனஞ்சுழுத்தி யாவும், நம்பினோன் சார்போத னிருவகையா மதனை நட்டாற்றில் விட்டகதை யாகநமன் வந்தால், தும்பினோன் போனான்தான் தான்தானே யென்று துக்கமின்றி மார்படித்துத் தூக்கியழுங் கூத்தை, யம்பலவ னறிவான்மற் றாரறி வரையோ வதனையறிந் தானடியை யாரடைவா ரம்மா. 33

வே று.

சீவற் குபாதி சரீரமொன்று திகழிந் திரியங்க ளோரொன்று
தாவுங் கரண மீரிரண்டு தயங்கும் பிராண வாய்வொன்று
மேவு மிவ்வே ழென்றுரைப்பர் வேதமுணர்ந்தோ ரிவை கழித்துப்
பாவ மபாவ மறவுன்னை பரமாய்க் கண்டு மகிழ்வாயே. 34

வே று.

அந்தமிலாச் சீவனுக்கங் கவஸ்தைகளோர் மூன்று மபிமானி நாமமொரு மூன்றுமெங்ங னென்னில், சந்ததமுஞ் சாக்கிரத்தி னம்சஞ்சொப் பனமாந் தக்கவதி னமிசமே சுழுத்தியிஃதல்லால், பந்தமுறப் புரிந்தி விச்சுவனொடு தைசதனும் பகர்பெரிய பிராஞ்ஞனுமா மெனப்புகல்வர் நல்லோர், இந்தவித மவஸ்தையபி மானிகடம் மாலே யெப்போதும் பிறப்புக் கிடமாகுங் காணே. 35

வே று.

அரிய தேகேந் திரியங்களை நீ யறிவா யுன்னை யவையறியா
அரியதேகேந் திரியங்க ளதுவும் பிருதிவி யின்கூறும்
அரிய மனத்தை நீயுமெதிர்த் தறிவா யுன்னை யஃதறியா
அரிய மனமும் வாயுவின்கூ றாக விளங்கு மென்றறியே. 36

ஓதும் புத்தி தனைநீயே யுணர்வா யஃதுன் றனையுணரா
பேத புத்தி யதினமிசம் பிறங்கு மழலின் கூறாகும்

தேகம் புரியு மகங்காரக் கேண்மை முழுது நீயறிவாய்
யேதி லுன்னை யஃதறிதி யிதுவும் பிருதுவி யின்கூறே. 37

அந்தச் சித்த மதுதனைநீ யறிவா யுன்னை யஃதறியா
அந்தச் சித்த மதுதானே வப்பு வின்கூ றாகுமால்
அந்த நான்குஞ் சம்சயசஞ் சலநிச் சயமா மூன்றுமன்றி
அந்த வபிமா னமுமாகு மவைநீ யலவென் றறிவாயே. 38

அரிய பிராண வாய்வுன்னை யறியா ததைநீ யறிகுவாய்
அரிய பிராண வாய்வமிச மதுவின் பிருதுவி யின்கூறாம்
அரிய பிராண னதைப்பிறித்திங் கறியு மிடத்து வேறாகும்
அரிய பிராண னதுவுமே யசத்தென் றுணர்ந்து விடுவாயே. 39

உன்னா லறியப் படும்பொருள்க ளுன்னை யறிய மாட்டாதால்
உன்னா லறியும் பொருளெல்லா முனக்கு விடய மாங்கண்டாய்
உன்னா லறியும் பொருளறியு மொருக்கா லுமுநீ யறிவதில்லை
உன்னா லறியும் பொருளைவிடுத் துன்னை விசாரித் தறிவாயே. 40

வேறு.

இத்தனையு நானென்றே யிருந்தவெல்லா மிழிவாக்கி நீயல்
ல வென்று சொன்னீ, ரத்தனையு மாமோதா நானாமோதா னாரிய
னே நானறியச் சொல்லு மென்னச், சத்தியமே சொன்னவெலா
ஞ் சடமதாகுஞ் சந்ததமும் சுகசொருப னாகுமுன்னைப், பத்து
பே ரெனச்சொல்லுந் திட்டாந் தத்தைப் பார்த்துநீ பிரிந்துணர்
வாய் பரமஞானம். 41

வேறு.

உன்னைநீ யறிவ தற்கிங் குறுதியாந் திட்டாந் தங்கேள்
மன்னிய தசமனேபோல் மருவிய கரண நான்கு
சொன்னவிந் த்ரியங்க ளைந்து தொகையுறு மொன்ப தோடு
உன்னு பத்தென் றெண்ணி யுன்னைநீ யறிகு வாயே. 42

அந்த வறிவே சைதன்ய மதுவே யுனது வடிவாகும்
அந்த வறிவே யுபாதிவசத் தாகும் போது முக்கியமாம்
அந்த வறிவே லக்ஷியமா மழுந்து முபாதி தனைப்பிரியில்
அந்த வறிவே நீயாகு மரிய வேத முடிவிதுவே. 43

அசுத்த வுபாதி நானென்னு மந்த வறிவே யசுத்தமதாம்
அசுத்த வுபாதி தனைக்கழித்த வந்த வறிவே சுத்தமதாம்

அசுத்த மெல்லாங் கழித்தவிடத் தறிவே யன்றி வேறில்லை
அசுத்தந் துக்கஞ் சடமாகு மதுவே தேக மறிவலவே. 44

அறிஞனே முன்னோர் சொன்ன வரியநூற் பயனெ லாமும்
பொறிவழி சென்று போகம் பொசித்திடா திருக்கத் தானே
மறமொடு கோப மாதி வஞ்சனை யொழித்து ஞான
நெறிவழு வாம லிந்த நிலமிசை வாழ்கு வாயே. 45

கொல்லா விரதங் கைக்கொண்டு குணமேற் கொண்ட பெரியோர்கள், பல்லோ ருரைத்த ஞானநூற் பலவின் கருத்து மென்னென்னில், நல்லோ ரிணக்கஞ் சாதுசங்க நண்ணிச் சிவத்தைப் பூசிப்ப, தல்லாற் குரவன் பணிவிடைக ளன்பிற் றினமும் புரிவதுவே. 46

நல்லா ரிணக்கஞ் செய்வதுவு ஞான நாட்டங் கொள்வதுவும்
கல்லா வனைத்துங் கற்பதுவுங் கனத்த விசாரம் புரிவதுவுஞ்
சொல்லாச் சொல்லை யறிவதுவுஞ் சுகமாய் வாழ்க நினைப்பதுவும்
யெல்லா மாயல் லவுமாகி யிருந்த சாக்ஷி யாவதற்கே. 47

பெரிதா முபாதி யத்தையெலாம் பேணி யவற்றி னீமறைந்தாய்
தெரிய வுன்னு ளறியுமெலாந் தெளியப் பிரித்து நோக்குவையே
துரிய மகனே சாட்சிநீ யுற்ற வெல்லாங் கழித்ததினு
லரிதின் விட்ட லக்கணையென் றறைவர் பெரியோ ரறிவாயே.

வேறு.

தத்பதத்தி லீசனுக்கு மேழுபா திகளாந் தானெவைக்குங் காரணமாய் சகலபிரா ணிகட்கு, மற்பவுடல் கொடுத்தறிவுக் கறிவாகி யூட்டு மவ்வினையாட் டறியாத வசடர்செயுந் தவங்கள், சொற்பனத்திற் கண்டபொருள் கைக்கெட்டா ததுபோற் சேர் வதுவுங் கண்டவற்றின் றுகளறுக்க மாட்டா, ரெப்பிறவி தொறு முயிருக் குயிராகு மீச னெங்குமா மவனையொழிந் தொன்றிலை யென் றறியே. 49

செப்பரிய சீவர்தமைக் கட்டுதல்கா ரணமாய்ச் சிறந்துநின்ற வீசனுக்கே முபாதிகளென் னென்னில், தப்பிலாச் சர்வக்ஞ சர்வகா ரணனே சர்வேந்த்ரி யாமியொடு தருசர்வேஸ் வரனே, யொப்பிலாச் சர்வசிருஷ்டி சர்வஸ்திதி யல்லா துயர்ந்திலகுஞ் சர்வசங்கார னென்றவ ரிவைதேர்ந், தப்பனே யுபதேச வுண்மை மறவாம லனுதினமுஞ் சிந்தைசெயி லகமமதை விடுமே. 50

வேறு.

சொன்னதோ ருபாதி யேழுந் தொகையதா வறிந்து கொண்டே
னின்னுநன் கறிவ தாக விஃதிஃ தெனப் பிரித்தே
யன்னவ னுபாதி தம்மி லழுந்துவ தழுந்தா தெங்ஙன்
தன்மய மாவ தெங்ஙன் சாமிநீ யுரைக்க வென்றான். 51

இந்தி யங்கண் முழுவதுமே யிசைந்ததொன் றறிந்ததொன் றறி
வந்த முழுதுந் தானறிந்தங் கவற்றைச் சிவர் வினைக்கீடாய் [யா
பந்தித் தசைவித் தூட்டுவித்துப் பரம சிவமா யிலங்குமதால்
முந்த வருசர் வக்ஞனென்று மொழிய லாகு மெனத்தேர்வாய்.

அறியேன் வினவுஞ் சங்கையெலா மகற்ற வெழுந்த குருநா
தா, முறையா யின்ன முளவனைத்து மொழிய வேண்டு மெனக்
கேட்கில், குறையா விந்தி யங்களெல்லாங் குணமுற் றறிந்துந்
தானறியா, துறலாற் சர்வ காரணனென் றுரைப்பர் பெரியோ
ரெனவறியே, 53

வேறு.

தோற்றுமிந் தியங்க டன்னுட் டோன்றுவ தாகையாலே
தேற்றமிவ் வீசன் சர்வ சிருஷ்டியு மாகு மென்ப
ராற்றுமிந் தியங்க டம்மை யவனோரட் சிக்கை யாலே
போற்றுமவ் வீசன் சர்வ ஸ்திதியெனப் புகல லாமே. 54

இன்னவா றுரைத்த தல்லா லெலருமிந் தியங்க ளெல்லாந்
தன்னுக்கு ளடங்கி நிற்குந் தன்மையான் மறையு ளார்ந்தோ
ரன்னவன் றன்னைச் சர்வ சங்கார னென்ப ரந்தோ
சொன்னவிவ் வேழு மீசன் சொருபமன் றெனக்காண் பாயே. 55

வேறு.

இந்தவகை யீசனுக்குக் காரணமா மவஸ்தை யியலான துரிய
மொடு காலபரமதீத, மற்றமூன் றவஸ்தைதமக் கபிமானி யாவா
ரழகிய விராட்புருட னிரண்ய கர்ப்பன், றொத்த வவ்வியா
கிருதனென் றுரைப்பர் நல்லோர் துகளிலா நான்மறையின் றுணி
வுமிதாங் கண்டாய், சிந்தையினி லிந்தவழி கண்டுதெளி வாருற்
சித்தியு முத்தியு மெளிதிற் சேருமிது திண்ணம். 56

வே று.

காரண வுபாதி யேழாங் காரிய நடத்து மீசன்
காரண வுபாதி தம்மிற் கலந்துறு கின்றபோது
காரண மாகு முக்கியங் கைவிட லிலட்சி யந்தான்
காரண மாக வெல்லாங் கண்டுகொண் டிருத்தல் காணே. 57

அரிய காரண வுபாதி யாகுமோ ரவஸ்தை மூன்றும்
திரமுற யானென் றெண்ணுந் திசையீசற் கசுத்த மாகும்
பரவிய ஞான னந்தப் பான்மையிற் றனி ருந்து
பெருகுமவ் வவஸ்தை நீங்கும் பெற்றியே சுத்த மாமே. 58

மகத்துவ மிகும் விசிஷ்ட வாக்கிய மதனாற் கண்டு
நிகழ்த்து காரிய வுபாதி நீங்கிக் காரணமோ ரேழு
மகற்றியங் கவைக்குச் சாட்சி யாகிவிண் போலி ருப்பன்
தொகுத்திடு மிதைவி டாத லக்கணை யெனச்சொல் வாரே. 59

இந்தவே ழுபாதிக் கெல்லாஞ் சாட்சியா மீசன் றனே
பந்தவான் மாக்க ளுக்கும் பரகதிக் குதவி யாக
விந்தையாய்த் தேக மாதி வினைவழி யளித்தே யென்றுந்
தொந்தமாய் நின்று மூன்று தொழில்புரிந் திடுவ னென்றுன்.60

குருமொழி மலையி லக்காய்க் கொண்டமா ணாக்கன் றனு
மரியவோ ரேழு பாதி யபிமானி யவஸ்தை யெல்லாம்
திரிவுடனை யந்தீரச் சிந்தித்துக் கழித்த பின்னர்
துரியம தாகிச் சுத்த தொம்பத சாக்ஷி யானன். 61

இந்நிலை பெற்ற சீட னீசனு ருபாதி யேழுந்
துன்னிய வவஸ்தை மூன்றுந் தொடரபி மானி மூன்றும்
பின்னம தறப்பிரித்துப் பிரித்துணர்ந் தெல்லாந் தானய்த்
தன்னிகர் பிரம மாகித் தத்பத சாக்ஷி யானன். 62

இருவகை யாகு மிந்தச் சீவனு மீச னுந்தான்
ஒருமையிற் கொண்டி ருந்த வுபாதியோ டவஸ்தை யெல்லாம்
குருவரு ணெறியே நின்று கோதறத் தெரிந்த கற்றிப்
பிரிவற விருந்து சுத்தப் பிரமமாய் மேவி னனல். 63

அரியவப் பிரமந் தன்னை யகண்டவாக் கியத்தி னலே
பிரிவறக் கண்ட தல்லாற் பேசிய சீவ சாட்சி

பெருகுமீஸ் வரன்றன் சாட்சி யெனும்பிரி வற்றங் கொன்றுய்த்
தரமிலத் துவிதா னந்த சமரச சுபாவ மானான். 64

உரைக்கரு மின்பம் பெற்ற வுவகையான் மகிழ்ந்துள் ளாறி
தரைக்குளெற் கருள வந்த தயாளுவே யசிப தார்த்தப்
பெருக்கமு மறிந்து நாயேன் பிறவிநோய் தீரும் வண்ணம்
தெரிக்கவென் றடியில் வீழ்ந்தான் றேசிக னுரைப்ப தானான் 65

அசிப தார்த்தங் கூறுமிடத் தபிமா னிகளாஞ் சிற்சொலிதை
விசுவக் கிராச மாம்பிரசா பத்திய மின்னம் விளம்புங்கா[illegible]ழிந்து
விசையும்பொற்புவி சாந்தனென வியம்பு மிவற்றை பகுத்தொ
நசியு முபசாந் தமுந்தீர்ந்து ஞானம் பரத்திற் களிப்பாயே. 66

நிதமுஞ் சீவ வுபாதியெலா நோயப் பிரித்துக் கழித்து விட்டுப்
பதியா மீச னுபாதியெலாம் பயிற்றுந் தொழிலால் விடாமையினு
மிதுவே விட்டு விடாதலக் கணையென் றுரைப்பர் மறைவல்லோ
ரதிநுட் பமதா மிதனையுமுன் னனுபூ தியிற்கண் டுணர்வாயே.

இந்தவா றுரைத்த யாவு மிடைவிடா தசாவி நிற்கு
மந்தமாம் விசாரந் தாலே யதுவிது வெனு மயக்கஞ்
சிந்தையி லொன்று மின்றிச் சிதம்பர மாவா யாகில்
முந்தவே யெல்லாஞ் செய்து முடிந்தவ னகு மென்றான். 68

வேறு.

திடமுறத்தே சிகன்மொழிந்த தனுபவத்திற் றெளிந்தே சிற்பரத்துக் காறுகுறி யென்றதெவ்வா றென்னில், வடிவுநு ண்மை மாப்பொரு ளுடைமை நிறைவுடனே மன்னுமிரண் டற விளங்கு முடிவென்று பழமை, கெடுதியடை யாதென்றும் புது மையென்றே பகர்வால் கேதமிலா நான்மறையின் பொருளு ணர்ந்த பெரியோர், தடைபடுசந் தேகவிப ரீதமற நீயுஞ் சதாநி ஷ்ட னுயிருந்து சாதித்துக் காணே. 69

செப்பியதோர் குறியாறுந் தேர்ந்தே னின்னுந் திடமாக வெட்டியல்பு மருள்க வென்றான், அப்பனே யொருகேள்வி யிற ந்ததாத லரிதான தரிசனமி றந்த தாத, லெய்ப்பிலா மிகுவீர மிறந்த தாத லெல்லையிலா வானந்த முடைய தாத, லொப்பி லெல்லை யிலாஞான முடைய தாத லுயர்காலந் தேசந்திக் கிறந்த தாதல். 70

வே று.

எடுத்துரை செய்த வெல்லா மிறைவநின் னருளா னன்று
யடுத்ததை யெதிரிட் டுன்னி யறிந்தன னவற்றை யெல்லாம்
விடுத்தவென் னினைவை நோக்கில் வெறுஞ்சிரிப் பாகு மத்தைத்
திடத்துரை செய்வேன் சுவாமி திருவுளஞ் செய்கு வாயே. 71

பஞ்ச கோச மாவதுவே பகரு மொருமூன் றவத்தையாம்
பஞ்ச கோச மாவதுவே பரவுஞ் சரீரக் கோட்டையாம்
விஞ்சுஞ் சரீரக் கோட்டையினில் விளையுங் கரண நான்குளதாம்
மிஞ்சு மந்தக் கரணவழி மேவுஞ் சீவ னென்றறிவாய். 72

நானீ யென்னு நினைவதனு ளுமை ரூபத் தோற்றரவாம்
நானீ யென்னு நினைவதனு னல்ல வறிவு மறைப்பாகும்
நானீ யென்னு நினைவொழிய ஞான விசாரஞ் செய்வாயேல்
நானீ யென்னு நினைவொழிந்து ஞான நிலையைப் பெறுவாயே. 73

புற்றாந் தேகக் குகையதனிற் பொருந்தி யாழு மோரரவம்
புற்றாந் தேகேந் தியவழிபோய்ப் புலனை மறித்துப் பிடித்திழுத்
புற்றாங் குகையிற் கட்டுபட்டும் போக்கும் வரவும் விடுவதிலை [து
புற்றாங் குகையிற் கட்டுண்ட புலனைக் கழித்து விடுவாயே. 74

தேக மென்றுந் தேகி யென்றுந் தெரியா நினைவினரே
தேக மான மொழியாதார் தேகி நிலையு மறியாதார்
தேக மான மொழியாது தேகி நிலையுங் காண்பதிலை
தேக மான மொழித்துன்னைச் சிவமாய்க் கண்டு தெளிவாயே. 75

அவத்தை மூன்றுஞ் சீவர்கட்கு மரிய வீசனுர் தமக்கும்
அவத்தை மூன்று மெய்ப்பொருட்கு மறையு மிந்த மூவகையில்
அவத்தை யசுத்தஞ் சீவர்கட்கே யாகு மவர்கட் கிலதாகும்
அவத்தை யசுத்த மறிந்துவாழ் வதுவே முத்திப் பயனுமே. 76

தேக மதுவே யுலகமாய்த் திகழு மதுவே யுருநாமம்
தேக மறிந்தும் பரமறியா தெதுவோ வதுவே மாயையாம்
தேக வுதவிச் சாதனங்கள் திடம தாகு மவ்வளவும்
தேக மதனைக் கைவிடலே தீர்ந்த நிலையென் றறிவாயே. 77

இல்லா மாயை யுண்டெனவே யிருப்ப தெதினு லென்றுணர்வாய்
இல்லா மாயைக் கதிட்டான மெங்கே நிகழ்வ தென்றுணர்வாய்

இல்லா மாயை யதனாலே யிடரே யில்லை யென்றுணர்வாய்
இல்லா மாயை வினையுளங்கொண் டிடிலங் கதுவே யிடரென்
[றான். 78

எந்தா யந்தோ வனாதிதொடுத் திந்நாள் வரையி லிந்நினைவே தொந்த வியாதி யதுபோலத் தொடர்ந்து தொடர்ந்து பற்பல வாம், விந்தை புரிந்தென் குடிமுழுதும் வீணே நாசஞ் செய்த தால், முந்து மதனை யொழித்திடென மொழிந்தான் குருநா தனு மொழிவான். 79

இல்லா வுலக முண்டென்ன விருக்கு நினைவே மலமாகும்
இல்லா மாயை யுண்டென்ன விருக்கு நினைவே மறைப்பாகும்
இல்லா விந்த விருவகையு மிழிவாய்க் காணி லிடரில்லை
இல்லா விவற்றை யின்றென்றே யிருப்பா யென்று மியல்பாயே. 80

நினைவி னிடத்திற் பசுபாச நிகழு மதுவே யுலகமாம்
நினைவி னுதிப்பு மொடுக்கமுமே நேரே நோக்கில் வெளியாகும்
நினைவு நீங்கிற் பாசமது நில்லா தென்ப தனுபவமே
நினைவு நீங்கிச் சாதனத்தி னிற்பா யென்று நிலையாயே. 81

வேறு.

சாதனத்தா னினைவிறக்கு மென்றுரைத்த சற்குருவே நின் மொழியென் றலைமேற் கொண்டேன், பேதமறச் சாதனத்தி லிருக்கும்போழ்திற் பிரிந்துபல வழியில்லை யஃதென் னென்னில், மாதவனே மனைநினைவங் குலக தேக வாசனையாற் பிரிந்தலைந்து மாறி நிற்கு, மாதலினாற் குருபணியில் விடனைப் போலு மதிவிரக மாகிலந்த வலைவு போகும். 82

வேறு.

நினைவு நிலைக்கச் சமாதிநிலை நிகழ்த்துங் குருவே நின்னருளால்
நினைவு நிலைக்கச் சமாதியினி னிற்க நிலையா தென்னையெனில்
நினைவை யிரண்டு கூறாக்கி னில்லா நினைவும் வெளிப்படுமந்
நினைவைத் தள்ளி நிற்பதுவே நிலைத்த சமாதி யென்றுணர்வாய்.

சுருதியெல்லா மிருநினைவாய்ச் சொல்லு மந்தப் பொருள்போ ன்றாய்ச், சுருதிசீவ னினைவுபர னினைவென் றிரண்டாய்ச் சொல் லுமால், சுருதி யுரைக்கும் பொருளுணர்த்தச் சுத்த குருவும் வேண்டுமால், சுருதி யருத்தங் குருவினாற் றெரிந்து சுகத்தைப் பெறுவாயே. 84

சுருதிக் கருத்தம் பொருளென்னு மதுவுஞ் சொல்லாய் முடிந்திடுமால், சுருதிக் கருத்தம் பொருளானாற் றூய குருவும் வேண்டுவதில், சுருதிக் கருத்தம் பொருளல்ல வென்றே துணிந்து மாணுநீ, சுருதி சொல்லும் பொருளதனைச் சுட்டிக் காட்ட வறிவாயே. 85

இந்த வுலகஞ் சத்தானு லிந்த நினைவுஞ் சத்தாகும்
இந்த வுலக மசத்தானு லிந்த நினைவு மசத்தாகும்
இந்த வுலகுக் கதிட்டான மிந்த நினைவை யன்றியில்லை
இந்த நினைவிங் குள்ளளவு மியற்றுந் தவங்கள் முடியாதே. 86

இந்த நினைவே மாயையா மிலங்கு மிதுவே யுலகாகும்
இந்த நினைவை யல்லாதோ ரிடரு மில்லைச் சாதனங்கட்
கிந்த நினைவை யகற்றும லியற்றுந் தவத்தாற் பயனில்லை
இந்த நினைவிங் கிருக்குமட்டு மேக நோக்குக் கிடமில்லையே. 87

இந்த நினைவை யறிஞரெலா மிழுத்து வதைக்குந் திரமறிந்தார்
இந்த நினைவின் வலிவதனை யென்றுற் சொல்ல வளவுபடா
இந்த நினைவு நீங்காதே லெல்லாஞ் சிவமாய்க் கண்டாலும்
இந்த நினைவிற் சிவமறைந்தே யிருளாயெங்கு மருளாமே. 88

இல்லா நினைவென் றறிவதுவு மியற்றுந் தவத்தின் முயற்சியதே
இல்லா நினைவு மில்லாமற் றூனே யெண்ண வேண்டுமால்.
இல்லா நினைவு மில்லாம லெப்போ தொழியு மெனக்கேட்கில்
இல்லா நினைவு நீங்குதற்கே யிந்த வுணர்விங் குற்றதுவே. 89

ஒருதன் னினைவே யசுத்தமா மொருதன் னினைவே சுத்தமாம்
ஒருதன் னினைவே புத்தியா மொருதன் னினைவே சித்தமாம்
ஒருதன் னினைவே யகங்கார மொருதன் னினைவே யுலகமாம்
ஒருதன் னினைவே சங்கற்ப விகற்ப மாமென் றுணர்வாயே. 90

பந்த நினைவு நீங்காதேற் பரம ஞான நிலைப்பதில்லை
பந்த நினைவு நீக்கத்திற் பரம ஞான நிலைக்குமால்
பந்த நினைவுக் கிடமிங்கே பகரு மிச்சை யதுவாகும்
பந்த விச்சை யொழியாதேற் பாழ்த்த நினைவு மொழியாதே. 91

இந்த நினைவை யெல்லோரு மெளிதா யெண்ணி யிடருற்றூர்
தொந்த நினைவை மூதறிஞர் தொடர்ந்து வதைக்க முயல்வுற்றூர்

முந்து நினைவவ் வறிஞர்தமக் கேவ லாளாய் முடிந்ததா
லந்த வறிஞ ரதுகண்டுள் ளாறி மகிழ்ச்சி மீறினரே. 92

இந்த நினைவை யிவ்வளவென் றெடுத்துக் கூற முடியாதால்
இந்த நினைவின் றீமையையே யெல்லா நூல்கள் மொழிவதுவும்
இந்த நினைவு யுரைக்காத நூல்க ளொன்று மிலதாலம்
இந்த நினைவு மாய்ந்த விடத் தில்லா விருளு மாய்ந்திடுமே. 93

நினைவிற் கெங்கே யிடமென்று நினைக்கு மதுவே பரநினைவு
நினைவி னுடனே பரநினைவு நீங்கா திருக்குந் தன்மையினுல்
நினைவே மெழுகு பரநினைவு நிமல மான பொற்பொடியாம்
நினைவி னுள்ளே மறைந்ததனு னிகழு மிச்சைக் கிடமாமே. 94

இச்சை னினைவைக் கண்டறியா ரெல்லாந் துறந்த மெய்த்தவத்தோர், இச்சை னினைவை யிச்சையுளா ரென்று மறியமாட்டார்கள், இச்சை னினைவாம் பொய்ப்போக மிரிய மாட்டாதொருக்காலும்-இச்சை னினைவு நீங்குமிட வெங்கென் றுணர்து ணர்வாகும். 95

இந்த னினைவை பிறிப்பவரா ரிந்த னினைவை மறிப்பவரார், இந்த னினைவைப் பிடிப்பவரா ரிந்த னினைவைக் கெடுப்பவரார், இந்த னினைவைத் தொலைப்பவரா ரிந்த னினைவைக் கெலிப்பவரார், இந்த னினைவி னுறப்பெல்லா மெதிர்க்கு மிடத்திற் றேன்றிடுமே. 96

இந்த னினைவின் கூறெல்லா மெடுத்து மொழிந்தோருஞ் சுருக்கமதா, யந்த னினைவின் பொருள்விளங்கா தாசா னன்றிற் சுருதியினுல், பந்த னினைவின் பொருள்வேறு பசுரு முயிரின் பொருள்வேறு, மூந்து மறிவின் பொருள்வேறு முதல்வன் பொருளும் வேருமே. 97

மூலமா னினைவிற் பதிபசு பாச மூன்றுமுண் டாகியே யொடுங்கும், சாலவன் னினைவு நீங்கிய விடத்திற் சகலகே வலங்களு நீங்கு, மேலவிங் குறைத்த னிலைபிச காம லிருந்துநிஷ் டாபராகிப், பாலனே யுலகின் மேவுவா யதுவே பரகதி யாகுமென் றறியே. 98

அசைவர நிற்கிற் பறனிலை யாகு மஃதினிற் பிரிவது சிவ, னிசையவிங் குரைக்கு மிவற்றினிற் பாச மிலங்கும தறிகுவ தறிவே,

பசையறு மனத்த னாகியங் கவற்றிற் பழகினின் றுண்மையை யறிந்து, திசைதிசை யோடுந் திரமுமலத்தின் றியக்கமு மறுத் திடு வாயே. 99

முன்னரே மொழிந்த பதிபசு பாச மூன்றுமே யனாதியாய் நிற்கு, முன்னினை வெற்றிப் பின்னினை வாலம் மூன்றையு மறிகு வ தறிவே, யன்னினை யிரண்டு மெங்ஙனம் பிரிப்ப தவற்றினை யரு ளெனக் கேட்கில், சொன்னமுன் னினைவில் வுலகிடை யுழலுஞ் சோர்விலாப் பின்னினை வறிவே. 100

அறிவென வறைந்த வதுநன்க தாகு மதுசெயுங் கிரியை யென் னென்னி, லறிவந்த னினைவிற் கலந்துறு போழ்தி னரு ம்பர முயிர்ச்சக முளவமா, மறிவந்த னினைவைப் பிரித்துறு போழ்தி லபேதமும் பேதமு மிலவா, மறிவதி னிடத்தி லன் னினை யிருந்து மப்பனே குற்றமொன் றிலையே. 101

அந்த வழிதா னேதென்னி லறிவாய் நீயே யமலமதாய்
முந்த வுரைத்த காமாதி பகைகண் முழுது மறவிடுத்துச்
சிந்தை யதனைச் சாதுசங்கச் சேர்க்கை யுறவே செய்வாயேல்
சந்தச் சாது சங்கத்தாற் றத்வ விசார முண்டாமே. 102

அரிதாந் தத்வ விசாரமதுண் டாமென் றுரைத்த குருமூர்த்தி
விரிவா மனமவ் விசாரத்தி லொடுங்கு முபாயம் விளம்புமெனில்
சரியா விஷய மோகனைப்போற் றக்க விசாரத் துன்னன்பும்
வருமே யாகில் விரியுமனம் வாட்ட முறுமென் றறிவாயே. 103

ஆதியந்தஞ் சூனியமாய் நடுவு மின்றா யசங்கமாய் நித்தி யமா யமலமாகும், போதமே திருமேனி யாகவந்த புண்ணியனே நின்னடியார்க் கேவல் செய்யும், நீதமா நினைவுளதே லனேகஜெ ன்மம் நேராக வந்தாலு மெத்தநன்றே, சாதகவிவ் வுடலினுறு மளவு நாயேன் றற்செயலற் றிருக்கும்வகை சாற்று மென்றான்.

நீதன்ற மாணுநீ கேட்ட தெல்லாந் தெளிவாக வின்னுநன் றாய்ச் செப்பக் கேட்பாய், சாதனத்தின் முதிர்ந்த நல்லோர் தமையடுத்துத் தக்கவவ ருரைகேட்டு மனனஞ் செய்து, நீதமா யவர்க்குரிய பணிகள்யாவு நின்போத மறப்புரிந்து நிலைதப்பா மல், மேதினியி லருளுநுவா யிருக்கி லின்ப வீட்டினையு முடிவி ல்நீ மேவு வாயே. 105

ஆன வருளே யிகபரத்துக் கப்பாற் பட்ட தென்றறைவாய்
ஆன வருளே யிகபரங்க ளாகி யொடுங்கு மதுவன்றி
ஆன வருளே யதிஷ்டான மாகி நிகழு மதுதெரிவாய்
ஆன வருளே பாமுயி ரதுவே நமது வடிவாகும். 106

பெரிதான பிரமந் தன்னைப் பேதையர் சிலர்கா ணென்றே
யரிதாக வுரைப்ப ரந்த வகந்தையு நீங்கா தாகில்
சிறியரோ பெரிய ராமோ சிரிக்குமங் கவரை நிறித்
தெரியாம லிகழும் புல்லர் தீரா குறுவ ரன்றே. 107

விரிவான வுலக மெல்லாம் விரித்துடற் காப்பு செய்து
கரியான்மா நானே யென்று கருதுமிம் மனமாங் காட்டைப்
பெரியோர்க ளெதிரிட் டிக்குப் பிழையொலா மாகா தென்றே
யரியமெஞ் ஞான வாளா லறுத்ததைச் சாதித் தாரே. 108

ஆன்மாவை யறிவ தற்கே யனேகமாக் திட்டாந் தங்கள்
ஆன்மாவை யறிவ தற்கே யளவிலா வார்த்தி யங்கள்
ஆன்மாவை யறிவ தற்கே யகண்டமாம் லக்ஷி யங்கள்
ஆன்மாவை யறிவ தற்கே யருமறை யுரைத்த தம்மா. 109

ஆன்மாவுக் கதிட் டான மரியபர மென்று ரைப்பார்
ஆன்மாவும் பர வெழுத்து மவ்வு முவ்வு மாமென்பர்
ஆன்மாவின் பொரு ளும்வே றரிய பரம் பொரு ளும்வே
றான்மாவின் பொரு ளறிவா ரரியபரம் பொரு ளறிவார். 110

வாசனு க்ஷயமே மானச பூஜா மார்க்கமென் றுணர்ந்திட வேண்டும், வாசனு க்ஷயமே சாதன மாக்கு மனமுதற் பொறி களு மொழிக்கும், வாசனு க்ஷயமே யிருவினை போக்கும் வருமுட னுசமே யாக்கும், வாசனு க்ஷயமே பிராரத்த நீக்கு மலவிரு ளொளிக்குமென் றறியே. 111

ஈசன் சிருட்டி சராசரங்க ளித்தச் சீவன் சிருட்டியோ
மோச வகந்தை யபிமான மூடவாசை கோப மெனப்
பேச லாமிந் நான்குநெருப் பாருய் பெருகி மூர்த்துமால்
பாச விவைநீக் கறிவுமயிர்ப் பால மாமென் றுரைப்பாரே. 112

நெறுப்பாறு விடயமென்று மறிவுதன்னை ,நீமெயிர்ப் பால மென்றுஞ் சொன்னீர் மெய்யே, கருப்பாச வலையதனிற் புக்கிப்

புக்கிப் கலக்கமுறு மெனைத்தடுத்துக் கருணையாலே, விருப்பாக ஞானவழி யெளிதிற்காட்டி வீடுபெறச் செய்தருள்சற் குருவே யிந்தச், சுருக்கமதைத் தெரியாம லிந்நாள்மட்டுஞ் சுமந்தபொதி யுடலளவு சொல்லொ ணுதால். 113

ஐயனே விடயவியல் பின்னுநன்று யருளென்னி லுன்னுட லும் விடயமாகும், வையமிசை மாடமக்கள் வீடுசுற்ற மனைவிமுத லிவையனைத்தும் விடயமாகும், மையனுறு மெவ்வுருவும் விடய மாகு மல்குசரா சரமுழுதும் விடயமாகும், கையுருமிவ் விடைய நெருப் பாற்றைநீந்திக் கரைகாணு மறிவுமயிர்ப் பால மாமே.

எண்ணரிய வறிவுமயிர்ப் பாலமாமென் றெனக்குரைத்த தேசிகனே யெவ்வாறென்னில், புண்ணியமாஞ் சிவவேடந் தன்னைப்பூண்டு புல்லர்சிலர் நான்பரம ஞானவானென், கண்ணிலே பந்தமிலை யெனப்புலம்பிக் கருத்தில்பந்த மிலைகபந்தங் கட்டிக் கொண்டு, மண்ணிலே திரிந்துமண்ணாய் மடிகின்றாம் மதியீன ரொடுகூடி வாழொ ணாதே. 115

முன்னமெடுத் துறைத்தன்றி யின்னங்கேட்பாய் மூடவறி வினருறவு மாளவேண்டும், தன்னுடைய மறைப்பல்லால் மகனே வேறு தடையுளதா லவைக்கெல்லாந் தலைமையாகும், பின்னலிடு மபிமானம் போகவேண்டும் பேதைமையா மிறுமாப்புஞ் சாகவே ண்டு, மின்னமறி யாமையக மமதையாவு மிடாரகு மவையுமற விடவே வேண்டும். 116

கன்னல்மொழி மங்கையர்மே லாசையாகாக் கனமான பொன்பூமி யாசையாகா, சின்னமுறும் பொய்வேடத் தாசையாகாச் சிறந்தபெரும் புகழதனி லாசையாகா, யின்னமுதா மறுசுவையி லாசையாகா வில்வாழ்விற் றிரும்பவுமே யாசையாகா, வன்னி யரோ டுறவுசெயு மாசையாகா வபினிகஞ்சா மதுவுண்ணு மாசை யாகா. 117

அகத்தொன்றும் புறத்தொன்றுங் கருதலாகா வதிசயமாய்க் கண்டொன்றைச் சிரித்தலாகா, மிகுத்தவரம் புரிவோரைத் தடுக்கலாகா வேதியரைப் பெரியோரைப் பழிக்கலாகா, செகத் திலபி மானமதை மேவலாகாச் சிவாகமத்தைத் தெய்வத்தை யிகழலாகா, தொகுத்தவிவற் றினிற்றேய்ந்துந் தோயாதோங்கு ஞ் சுயவறிவே மயிர்ப்பால மென்றுதேரே. 118

தேவரீ ருரைத்த வெல்லாஞ் செப்பமாய்த் தேர்ந் தறிந்தேன்
மேவுநின் றிருவாய் தன்னில் விளையமு தினைப் பொசிக்கு
மாவலே யிருத்த நின்றேற் கறையினுட் பொருளுங் காட்டி
யோவரும் பிறப் பொழிப்ப துன்கட னெனப் பணிந்தான். 119

அறையி லிருக்கும் பொருளெதென்ற வறிந்த தொருவனுட்பு குந்தே, அறையி லொன்றுந் தெரியவில்லை யென்றே வெளியில் வந்துரைத்தான், அறையிற் பொருளுண் டெனச்சொன்னே னில்லை யென்ற வதனைநீ, அறையிற் கண்ட துண்டோசொல் லென்று னிதற்கண் டறிவாயே. 120

அறையிற் பொருளை யறிவதற்கே யப்பா நுழைந்து பார்க்கு மிடத், தறையி லென்ன கண்டாய்சொல் லந்தோ விருளை விடவேறே, அறையிற் பொருளுங் கண்டிலனே யையா வுனது திருவருளால், அறையிற் பொருளீ தெனக்காட்டி யருள வேண் டுமெனக் கரைந்தான். 121

அறையி லிருக்கும் பொருளொன்றே யப்பா பரமப் பொருளாகும், அறையி லிருக்கும் பொருட்டெரியு மதுவு முன்றன் கண்ணாகும், அறையி லிருக்கும் பொருளில்லை யென்ற வதுவே யிருண்மலமாம், அறையு மந்த விருளகற்றி யறையிற் பொருளை யறியென்றான். 122

மறைமுடி வனைத்து நாயேன் மகிழ்ந்திட வுரைக்க வந்த
இறைவநின் கிருபை தன்னை யிழிவுயர் வொப்பற் றோங்கும்
அறையினுட் பொருளை யங்கைக் கனிபோற்கண் டிசைவித்தேன்
உறைதரு மென்னைக் காணே னுரைத்தருள் செய்யு மென்றான். 123

என்னைநான் காணே னென்றிங் கெடுத்துரை செய்த மாணு
உன்னைநீ காண்ப தற்கே யுபாதியோ டவத்தை மூன்றும்
பின்னம தாக்கி ஞானப் பெருந்தகைப் பொருளா முன்னை
அன்னிய மின்றி யெங்கு மகண்டமாய்க் காண்பாய் நீயே. 124

அசுத்த மாகிய திரிபுடி யதனைவிட் டப்
பசித்த போதுறே ரிமைதைப் பாரிலேற் றுண்டு
விசித்தி ரங்களா மொன்றையும் விழைந்திடா தோர்பால்
வசித்து நின்றுட லசைவற நிறுத்திவாழ் குவையே. 125

காதலித்த மனையவளோர் பந்த மாகுங் கருமஞ்செய் பிள்ளையுமோர் பந்த மாகு, மேதமுறுந் திரவியமோர் பந்தமாகும் மிம்மூன்றும் வெளிப்பந்த மாகுங் கண்டாய், ஆதரவா யொன்றினுக்கொன் றதிக மாகி யகிலமெலா மாகிவிரிந் தழிவ தாகித், தீதுறுவ தாமிவற்றின் செய்கை வாளா தியக்கமொடு மயிக்கமே செய்யுங் காணே. 126

ஆதலினு லிந்தமலப் பந்தமூன்று மகன்றிடுமேன் முத்திநிலை யயல்வே றில்லை, யேதமாம் பவக்கடலில் வீழ்வ தில்லை யிறைவனடிக் காளாய்மெய்ஞ் ஞானி யாகிப், போதமே பெறுமடியார் நேசம் பெற்றுப் புன்மையெலாம்போக்கியா னந்த மோன, சாதகத்தி லழுந்திசம ரசசுபாவ சாக்ஷாத்கா ரம்பெறுத லுண்மையாமே. 127

இந்தவகை தத்துவத்திற் சீவருறு போழ்தி லேதமுறு மிச்சையினு லிறுமாப்புண் டாகிப், பந்தமுறுந் தீமைபுரிந் திறைவனருள் பெறுது பாழான வுலகமதிற் பலபிறப்பி லாழ்வார், வந்தவழி போனவழி கண்டறிய மாட்டார் வல்லிருளி லிடியுண்டு வாதனையாற் சாவார், சந்ததமு நம்மானை திருவருளைப் பெற்றுற் சாரலா மின்பநிலை சத்தியஞ் சத்தியமே. 128

தோன்று முருவ ஞேயமதைத் தோன்று தொழிந்த பின்னருமே, ஆன்ற வகமா ஞாதுருவை யறவே யொழிக்கு முன்னருமே, சான்ற நீயே சாக்ஷியாய்ச் சாருங் கண்ணும் விடயமுமற், றான்று விருப்பும் வெறுப்புமிலா தோங்கு மதுவே சுகநிலையாம். 129

சுகநிலையின் கருத்தெடுத்துச் சொல்லவுநீ கேட்பாய் சுத்தமொடு சூனியமு முப்பாழுந் தாண்ட, லகநிலைபெற் றனுபவமாய் மோக்ஷமதா யிருதத லறிவாகி யசைவறவே யாகாயம் போலத், திகழ்நிலையாய்ச் சத்தாகிப் பூரணமாய் நிற்றல் சித்தசலனந்தவிர்ந்து சித்திரம்போ லொளிரும், மிகுநிலையா யறுதலெனப் புகன்றிடுவார் நல்லோர் விளம்புமந்த நன்னிலையே சிவநிலையென்றறியே. 130

ஒருமொழியே பலமொழிக்கு மிடங்கொடுக்கு மென்ற வுண்மையதே பெரிதாகு முறைசெயநீ கேட்பாய், யொருமொழியே

யுயிரெழுத்தாம் அகரமுட னிகரம், ஒருமொழியே உகரமு
டன் எகரம்ஒக ரந்தான், ஒருமொழியே அஞ்செழுத்தும் ஒரெ
ழுத்து மாகும் ஓரெழுத்தே தானுரு முலகமதற் கிடமாய், ஒரு
மொழியை யினிதறிந்து பொருளுரைப்ப தெங்கே யுத்தமற்குப்
பணிபுரிந்தவ் வுட்பொருளை யறியே. 131

குருவினை யன்றி யொருமொழி யில்லை கூறிய பஞ்சாக்வக்
கரத்தை, மருவிய பேர்க ளொருமொழி நன்றாய் மறப்பற வறி
ந்தனர் பொல்லாத், திரிவுறு மனத்த ரப்பொரு டம்முட் டியக்
கறக் காணுரு தழிந்தார், பரகுரு பணியே யப்பொரு ளென்
னுட் பதிந்திட வருளெனப் பகர்வான். 132

சொல்லாலே பயனில்லைசொன் முடிவறியென் றுரைத்த
சூதையுண ரார்களது சும்மாவென் றுரைப்பார், செல்லார்கண்
ணிலுமிருக்கும் யாருமறி யார்க ளெடுத்துரைக்குங் குருவருளி
லாதறிய மாட்டார், பல்லோரு மறிவதற்குப் பாடுமெத்த வுண்டு
பகலல்ல விரவல்ல பாழிடமு மல்ல, வல்லார்க ளட்பொருளை
யிராப்பகலற் றோங்கு மகத்தென்று மொழிவாரதை மதித்துன்னு
ளறியே. 133

ஒருபொரு ளதுவே பஞ்சவக் கரமா யுண்மைய தாகவே நிற்கும்
ஒருபொரு ளதுவே பதிபசு பாச மாகியொன் றாகியே நிற்கும்
ஒருபொரு ளதுவே சச்சிதா னந்த வொருபா மாகியே நிற்கும்
ஒருபொரு ளதனை யுன்னனு பவத்தி லுற்றுணர்ந் தின்புறு
[வாயே. 134

நலமாக நாலுபிள்ளை யுண்டோன் தானே நாதனு வானெ
ன்ற முறைகாணாமல், உலகமதிற் சிலமூடர் சிசுக்க டம்மை யுர
லதனிற் போட்டிடித்துக் கற்ப மென்று, இளமைபெற மனமுவ
ந்து தின்றுத் தின்று நீணிலத்திற் சாகின்றா ரையோ வையோ,
சலனமன மடக்கவல்ல மகனே யிந்தச் சண்டாள குறவைநீ தவி
ர்த்தி டாயே. 135

கருநெல்லி வெண்சாரை யென்றுரைத்த கற்பமதை யின்ன
தென்று கண்டு நெஞ்ச, மொருமைபெறத் தெளிந்தறியா தனேக
மூட ருற்றமல மூத்திரமே யஃதென் றெண்ணி, விரகறுரா

ளியைப்போலத் தினமுந் தின்று மேதினியிற் சாகோமென் றிறு
மாப் பாகிப், பரமஞா னிகளேவற் புரிகி லாது பாழாஞ றிவரை
யுநீ பதராய்க் காணே. 136

வே று.

காம மாதி பதின்மூன்று பகையுங் கடிந்து சரிதைவழி
நேம மாகச் செய்தறியார் நேச மகற்றிப் பந்தமற்று
பூமி யதனிற் பலதருமம் புரிந்து நின்று துகளறுத்த
லேம முறுஞ்சற் சீடனே யியம வகையென் றறிவாயே. 137

பரியு மந்தக் காமாதி பகையை யொழிந்த பினுமதன்மேல்
பிரிய மாகு நினைவைநன்றாய்ப் பிரித்துப் பிரித்து விசாரித்து
விரியுந் துர்வா சனைவிடுத்து விரதம் புரிந்து மறைபுகல்சற்
கரும மியற்றி நிற்பதுவே கருது நியம மெனத்தேர்வாய். 138

தீரா வுபாதி யெழுவகையுந் தீரப் போக்கி ஞானநெறி
நேரே யுசாவி நிலைநின்று நிகழ்த்துங் கரண சுத்திசெய்து [செய்
பேரா விடயந் தனிற்போகும் பொறியைப் பிடித்துத் தன்வசஞ்
சேரா தனத்தி லிருப்பதுவே யுயரா தனமென் றுணர்வாயே.

புலஞ நாம ரூபமதைப் பொசிக்க நினைக்கு மொருமனத்தை
யிலக வெளியி லெழாதகத்தே யிரிய வடக்கி யிழுத்திழுத்துப்
பலம தறச்செய் துயர்ஞானப் பார்வை மேலீ டாகியென்னும்
நலமா யிருக்கு மதுதானே பிராண யாம மெனநவில்வார். 140

புறமுறு விடய போகம் பொசித்திடு நெஞ்சந் தன்னை
யறநெறி விடுத்து மெல்ல மெல்லவன் பினைப் பெருக்கித்
துறவின ரேவல் பூண்டு தொடரபி மானம் போக்கும்
நெறியதே பிரத்தியா கார நிலையென வறைவர் தாமே. 141

சீரிய வீசன் பாலுந் தெரிவிக்குங் குருவின் பாலும்
பாரிய சிரத்தை யோடு பத்திவிஸ் வாசஞ் செய்து
நேரதாய் விடய போக வாதனை யனைத்து நீங்கித்
தீரஞ யிருத்த றானே திகழுந்தா ரணைய தாமே. 142

விதியினி லன்பர் பூசை மெய்க்குரு பூசை யாற்றி
சதிசெயுங் கரண நீக்கித் தற்சொரு பத்தை நாடி
யிதமுறக் கண்டே 'னென்னு மெண்ணமு நழுவ விட்டு
மதுவுண்ட வண்டு போல மன்னுதல் தியான மாமே. 143

அகவிடயம் புறவிடய மறநோக்கு மறிவதுவே யங்க மாகி யிகபரத்துக் கெட்டாத வெறுவெளியாய்ச் சித்துருவா யிலகு மோனச், சுகமதனைக் கைக்கொண்டு துரிசொன்று மில்லாத துரிய மாகித், திகழ்வதுவே சமாதியென செப்புவர்நான் மறை யுணர்ந்த சீரி யோரே. 144

வேறு.

அறிவி டத்துறை சீவர்க ளவதியி லழுந்தார்
வெறிம யக்குறும் விரதியர் தங்கடம் பொருளைப்
பறிகொ டுத்தெம ளுற்பவி வார்துய ரிந்தப்
பிறிவ றிந்துநின் னுள்கழித் திடுவதே பெருமை. 145

உலகில் யாவரு முண்மையை மறந்ததி னாலே
யலங் லாவுட லெடுத்தெடுத் தழுங்கினு ரையோ
நிலைமை யாகவிந் நிலமிசை நீயிருப் பனவும்
புலையொ ழிந்தமே லவரொடு பொருந்திடே வாழ்வாய். 146

அண்டர் நாயக னடிதொழு மடியவர் தம்மைப்
பண்டை யாஞ்சிவ மெனவெளிப் பணிசெயத் துணியா
மிண்டர் நிரக கடைவரென் றுரைக்குமெய்ம் மொழியைக்
கண்டு நீயவர் நண்பொழித் திடுவதே காட்சி. 147

ஆடு பாதனை யனுதின மிடைவிடா தவர்கள்
பாடி யின்புறுஞ் சிவபத மடைவது திண்ணங்
தேடு மன்பிலார் நிரய கடைகுவ ரிதனை
நாடி நீயுல காசையை விடுவதே நன்காம். 148

அப்ப ணிந்தசெஞ் சடையனே யருட்குரு வுருவாய்
யிப்பி றப்பிறப் பிடையுழல் மண்பதைக் கிரங்கிச்
செப்ப மாகவந் தருளின னெனத்தெளி யாதார்
யெய்ப்பு றுநிர கெய்துவ ரெனப்பறை யறைவாய். 149

அக்கு மாமணி யணிபவ னடியிணை பணிவோ
ரெக்கு லத்தவ ராயினு மவர்களைச் சிவமாய்த்
திக்கு நோக்கிநின் றேத்திடாத் தீமைய ரெல்லாம்
நக்கு நாயினுங் கடையெனப் புகலுநான் மறையே. 150

கட்டுக் காடையி னிடம்வலம் பார்த்தது கருதிக்
குட்டி மண்சுவர் கோடிபொன் னுமெனக் குறிப்பார்
பட்டி மாடுபோற் றிரியுமிப் பாழுடல் கண்டோர்
திட்டமா மொரு கருமமுஞ் செயக்குறி யாரே. 151

எந்நாட்கண்ணி.

அந்திபக லில்லா வகண்டபூ ரணவொளியைச்
சிந்தித்து நெஞ்சேநீ சேருநா ளெந்நாளோ. 1

அங்கையினெல் லிக்கனிபோ லண்ண லருளுணர்ந்து
மங்கைநல்லார் மோக மயக்கொழிவ தெந்நாளோ. 2

ஆதியந்த மின்றி யமர்ந்த பெருவெளியில்
ஆதாரவாய் நீபோ யமருநா ளெந்நாளோ. 3

எங்கு மவனு யிருக்கு மியல்பறிந்து
தூங்க முறுநெஞ்சே துதித்திடுவ தெந்நாளோ. 4

இருளை யருத்தருளு மீசனுர் தாளில்
மருளை யருத்துநெஞ்சே மன்னுநா ளெந்நாளோ. 5

அந்தக் கரண மறநோக்கு வானடியே
சொந்தமா வெண்ணிச் சுகிக்குநா ளெந்நாளோ. 6

கொடுத்த வுடலதனைக் கொள்ளுவான் றானில்
விடுத்தகதை நெஞ்சே விளம்புநா ளெந்நாளோ. 7

அகவிருளை நீக்கி யருளத்தன் வரவுதனைச்
சுகநிலையாய்க் கண்டு துயரொழிப்ப தெந்நாளோ. 8

எல்லாமுந் தானு யிருப்பா னியல்பறிந்தென்
பொல்லாத நெஞ்சே புகழுநா ளெந்நாளோ. 9

விட்டுத் துறந்தனைத்தும் வேதாந்த மார்க்கமதைக்
கிட்டாத நெஞ்சேநின் கேடொழிவ தெந்நாளோ. 10

இரவுபக லில்லா விடமதனைக் கண்டு
பரிவுபெறு நெஞ்சேநீ பரவுநா ளெந்நாளோ. 11

அண்டர் தொழுந்தேவ னரியசுடு காட்டரசன்
சண்டனுக்குச் சண்டனிடஞ் சாருநா ளெந்நாளோ. 12

அச்சனவன் பிச்சனவ னையனவ னப்பனவன்
இச்சைதரு மடியை யெய்துநா ளெந்நாளோ. 13

ஆருமறி யாமலெனை யங்கையாற் சைகைசெய்த
சோரனவ னிடம்போய்த் தூங்குநா ளெந்நாளோ. 14

கூடாமற் கூடியென்றன் கூட்ட மறுப்பானை
நாடாம நாடி நலம்பெறுவ தெந்நாளோ. 30

சுழுமுனையென் றேயறிஞர் சொற்ற பொருட்டெளிந்து
பழுதுறவா யுவைவிடுத்துப் பரமாவ தெந்நாளோ. 31

தூண்டி யிருளறுத்துத் தூண்டா விளக்கேற்றி
நீண்ட மயக்கொழிந்து நின்றிடுவ தெந்நாளோ. 32

என்னைப் பொருளாக்கி யின்பப் பொருளறிந்தேன்
சொன்ன வகையே சுகங்காண்ப தெந்நாளோ. 33

சச்சிதா னந்தமது தானென்று ஞானறிவால்
அச்சிதா காச மறிந்தணைவ தெந்நாளோ. 34

மாயைக் குலமாய்க்க வந்தென் னகத்திருக்கும்
தாயை யறிந்து தரிசிப்ப தெந்நாளோ. 35

மாயைக் களைகளைந்து மாமணிபோ லாவதற்குக்
காயப் பழக்கங் கடிந்தொழிப்ப தெந்நாளோ. 36

அறிவுக் கறிவா யகண்ட வொளியாகி
நெறியொத் திருக்கு நிலையறிவ தெந்நாளோ. 37

பஞ்சாங்கஞ் சொல்லிப் படித்துமய லுற்றேனை
அஞ்சாதே யென்றறையி லாரவைப்ப தெந்நாளோ. 38

வாக்கியத்தை நான்கு வகையாய்ப் பிரித்துரைத்துத்
தாக்குமய லறுத்தோன் றாளணைவ தெந்நாளோ. 39

தத்துவத்தின் பூட்டறுத்துத் தானேதா னாகியிருந்
தத்துவிதா னந்த மடையுநா ளெந்நாளோ. 40

வீட்டிருளைப் போக்கி வெளியிலொளி யாகுமுனை
நாட்டி லறிந்தருளை நண்ணுநா ளெந்நாளோ. 41

வண்ணாத்தி யம்மாள் மலரடிக்கே யாசைகொண்
டெண்ணுடிப் பார்த்தென் னுரையழிவ தெந்நாளோ. 42

சிவசங் காநாதச் செல்வன் றிருப்பணியை
அவல மறப்புரிந்திங் காட்படுவ தெந்நாளோ. 43

அந்தமாந் தன்னடிக்கே யாளாக்குந் தேசிகனைச்
சொந்தமாய்ப் பாடித் துரிசறுப்ப தெந்நாளோ. 44

---

## பூங்குயிற்கண்ணி.

அன்ப ருளத்திருக்கு மானந்த நாயகனை
என்புருகி நாயடியே னென்றணைவேன் பூங்குயிலே. 1

கொட்டாவி கொண்டு குறுகுறுத்துப் பாழுடலை
விட்டேகு முன்பரனை மேவுவனோ பூங்குயிலே. 2

புல்லறிவி னாலே பொருண்மறந்த பாவியேன்
நல்லறிவு பெற்றருளை நாடுவனோ பூங்குயிலே. 3

சுட்டறுத்தா னந்தவெள்ளந் தோய்ந்து துளைந்தாவிநிற்க
விட்டகுறை வந்தெனக்கு மேவுமோ பூங்குயிலே. 4

சாதகத்தைக் கையகன்று சாட்சியாய் நானிருந்து
போதகனார் பொன்னடியைப் புல்லுவனோ பூங்குயிலே. 5

உலகஞ் சிரிக்க வுவந்து கவிகூர்க்
திலகு மறிவா யிருப்பேனோ பூங்குயிலே. 6

காட்டுக் கதிகாரி கண்ணமுகன் றன்பணிந்தும்
நாட்டார் நகைப்பதற்கு நாணுவனோ பூங்குயிலே. 7

கங்கைச் சடையான் கரிசிலான் பொற்பதத்தை
அங்கபங்க மாகுமுன் னணுகுவனோ பூங்குயிலே. 8

அஞ்சி லிரண்டையொழித் தஞ்சுருவு மோருருவாய்த்
துஞ்சியவன் சேவடியிற் றாங்குவனோ பூங்குயிலே. 9

---

## ஆனந்தக்களிப்பு.

ஆனந்தம் ஆனந்தம் தானே-பரம்
ஆனந்தம் ஆனந்தம் ஆனந்தம் தானே.

வானோர்க் கரிதாம் பொருளே-என்னை-மலரடிக் காட்செயு மாறுளத் தெண்ணி-தானே குருவுருக் கொண்டு-இந்த-தரணி யில்வந்து சமைந்தது தோழி-ஆனந்தம். 1

அந்தக் குருமூர்த்தி தன்னை-நாளும்-அன்பாற் பணிந்தஞ் சலியாகி நின்றேன்-சொந்தமா யென்புன் றலைமேல்-பதம்-சூட்டி பொருமொழி யூட்டினான் தோழி-ஆனந்தம். 2

ஊட்டுங் குருசந்நி தியில்-என்றன் உடல்பொரு ளாவி யொருமூன்று மீந்தேன்-காட்டு முனையறி யென்றான்-அவன்-காருண்ய னென்று கருதினேன் தோழி-ஆனந்தம். 3

ஒல்லையி லவன்பாதந் தன்னை-பணிந்-தொடுங்கி நடுங்கினா ஞென்று கேட்டேன்-எல்லாநீயேயென் றுரைத்தான்-நான்-எப் படி யெல்லாமென் றேத்தினேன் தோழி-ஆனந்தம். 4

உனக்கென்னே யெதிர்நிற்ப தென்றான்-அந்த-உளவறி யாம லுலகம தென்றேன்-கனமா முலகம தெங்கே-அது-கண் டுரை செய்யென்று சொன்னாண்டி தோழி-ஆனந்தம். 5

எந்த நினைவினி லென்றேன்-நன்றாய்-எண்ணியுலக வுரு வத்தை நீக்கி-அந்த நினைவைப்பா ரென்றான்-அதை-அறிகிலே னென் றுரை செய்தேண்டி தோழி-ஆனந்தம். 6

அந்த நினைவையல் லாமல்-உல-காதி யுருவம தெங்குள தென்றான்-இந்த வுருவமில் லென்றேன்-ஆகில்-இந்த வுருவமு மெங்குள தென்றான்-ஆனந்தம். 7

எந்த நினைவினி லாகும்-என்றே-ஏத்திச் சொன்னேனஃ தெங்குள தென்றான்-எந்த னிடத்தினிற் றானே-அன்றி-எங்கு நான் கண்டில னென்னேண்டி தோழி-ஆனந்தம். 8

ஆதியா முன்றன் னினைவை-நன்றாய்-அகற்றிப்பின் னுன்னை ப்பா ரென்று மொழிந்தான் சோதியே நானென் றுரைத்தேன் அப்பா - சொன்னசொல் லேயுண்மை யென்றுரைத் தாண்டி- ஆனந்தம். 9

கண்ட விடத்தினிற் காக்ஷி-அது-கண்டுரை செய்யென்று பின்னு முரைத்தான்-எண்டிசை யெல்லாந் துதிக்கும்-உன்றன் இணையடி யலதொன்று மின்றென்றேன் தோழி-ஆனந்தம். 10

உற்றது கூறென்று சொன்னான்-சுவாமி-ஒத்த-விடத்தினி னித்திரை செய்தேன்-சத்திய மாயென் னுருவம்-சித்து-தானே யென் றுறுதியாய்ச் சாற்றினேன் தோழி-ஆனந்தம். 11

சித்தென்று சொன்னசொற் கொண்டே-இன்னும் - சிந்த னைக் கெட்டாச் சிவத்தை யறிந்து-முற்று முணர்ந்தரு ளென்று ன்-நானும்-மூதறி வாயுன்னிப் பார்த்தேண்டி தோழி-ஆனந்தம்.

பார்த்த விடத்தினி லெங்கும்-நல்ல-பரவெளி யாகிப் பரசு கந்தானே-கோத்துப் பிடித்திழுத் தென்னை-அது-கூட்டி முடித் ததைக் கூறிலேன் தோழி-ஆனந்தம். 13

எல்லா மறிந்தது மில்லை-நான்-எல்லையி லாவொளி பெற்றது மில்லை-பொல்லா மணிவிளக் காகி-எங்கும்-பூரண மானநான பொ ய்யேடி தோழி-ஆனந்தம். 14

சத்துச்சித் தானந்த மெய்யே - அந்தத்-தன்மை யறிந்து நான் சார்ந்ததும் பொய்யே-சித்து விலாசமு மெய்யே-அந்தச் சித்தை யறிந்தநான் பொய்யேடி தோழி-ஆனந்தம். 15

இல்லி லிருந்தது நானே-என்னை-இழுத்து வெளியின் விட்டது நானே-வல்லவ னனது நானே வல்ல-வண்ணன் கருணையால் வந்தளித் தாண்டி-ஆனந்தம். 16

நீயு மறிவாயே மானே-ஞான-நீதியைக் கைவிட்டு நிலையாத வாழ்வில்-மாயு மனத்தைப் பிரித்தே-ஐயன்-மலரடி சேர்த்தது மானந்தந் தோழி-ஆனந்தம். 17

வாழை மடலுகுத் தப்பால் நல்ல வளமான தண்டையுங் கண்டது போலப் பாழு முடலைப் பிரித்தே அதைப்-பார்க்கச் சொன்னான்பற்றிப் பார்த்தேண்டி தோழி-ஆனந்தம். 18

பார்த்த விடமெல்லாம் பாழே அதிற்-பரசுக மொன்றுமே மேலாகு மந்தக் கூத்தைநான் பார்த்தது மில்லை-அந்தக்-குறிசொல்ல வெவராலுங் கூடுமோ தோழி-ஆனந்தம். 19

நானென்று நீயென்று முண்டோ-இங்கே-நடுவே யிருந்த மறைப்பை யகற்றில்-நீநானென் றெண்ணும் விகற்பம்-நீங்கி-நிஜானந்த மாக நிகழ்ந்தது தோழி-ஆனந்தம். 20

உடலென்று முயிரென்று முண்டோ-இந்த-உடலைப் பிரித்துநா னுண்ணுடிப் பார்க்கில் மடலவிழ் பாதமே யல்லால்-அத்கே மற்றென்றுங் கண்டு மதித்திலேன் தோழி-ஆனந்தம். 21

ஜென்ம சாபல்லிய மானேன் - யார்க்கும்-சிந்தனைக் கெட்டாச் சிவரூப மானேன்-தன்மயமாகத் திகழ்ந்தேன்-எங்கும்-தடையற்ற வானந்தந் தானுமானேன் தோழி-ஆனந்தம். 22

காடுஞ் செடியு மலையும் சுடு-காடு மருமலர்ச் சோலையுங் குன்றும் நாடு நகரமும் வீடும்-எங்கும்-நாடி லெனையன்றி வேறில்லை தோழி-ஆனந்தம். 23

பட்டப் பகலிலிக் கோட்டை-தன்னைப் பார்த்தே கொடுத்துப் பரவெளி யானேன்-விட்ட விடத்தை யடுத்தே-நான்-மேவி யிருந்தபோ தானந்தந் தோழி-ஆனந்தம். 24

குருவைப் பணியா திருந்து-ஞானக்-கொடிபோட் டிருந்தேனிக் குவலயந் தன்னில்-அருவுரு வாகுமென் னையன்-அதை-அறுத்துக் கைகாட்ட வருளினன் தோழி-ஆனந்தம். 25

சச்சிதாநந்தசுவாமிக ளருளிய

## திருக்குதிரிசிய விவேகம்.

ஏட்டைப் படித்திங் கிறுமாப்பா லென்னபயன்
நாட்டம் படித்தன்றோ நாமறுப்பம்-வாட்டமெலாம்
எச்சனனத் தேனு மிரும்பொருளை நாடாத
எச்சத்தா லன்றோ விவை. 1

நினைப்புமறப் போர்நான்கு மில்லாத தொன்றில்
தனக்கென் றுருவில் சகமுண்-டனைத்தொருபால்
அத்தியாச தேசத் தபாவமெனும் பட்டணத்தில்
மித்தையனென் றுண்டுயர்வின் மிக்கு. 2

பொருளல் லவற்றைப் பொருளாகக் காணேல்
பொருளைப் பொருளாகப் புத்தி-மருணீக்கிக்
காணிற் றுயரகலுங் கண்டாரைத் தூஷிக்கேல்
ஆணவத்தார் போல வறி. 3

ஞாயத்தை முன்னிட்டு நாட்டுவது மேற்பதுவும்
ஞாயத்துக் கொவ்வாதேல் நம்பாதே-ஞாயந்தான்
பொய்யைப் பொய்யாக்கிப் பொருளைப் பொருளாக்கி
மெய்யாக்கு நம்பினரை மேல். 4

ப்ரக்ஞானம் ப்ரம்மமெனல் பேரறிவே பேரின்பம்
ப்ரக்ஞான மன்றியிலை ப்ரம்மந்தான்-ப்ரக்ஞான
மன்றிச் சகமாதி யற்பமும்வே றில்லையெனில்
என்றதையே செப்புவன்யா னிங்கு. 5

தெரிவன்றி யில்லை செகத்தோற்ற முண்டேற்
றெரிவன்றிக் காட்டுதியேற் றீர்வாந்-தெரிவன்றால்
என்னபொரு ளெவ்விடந்தா னெக்காலத் தென்னகுணம்
என்னபடி செய்யு மிசை. 6

இந்திரிய முண்டே யிருக்குஞ் செகத்தோற்றம்
இந்திரிய மின்றே யிலதாகும்-இந்திரியம்
உண்டா மனதுண்டே யுண்டா மதுசீவன்
உண்டேலெங் காதார மோது. 7

கண்ணாடி போலறிவு காண்பார்க்கெங் கேயுலகங்
கண்ணாடி மெய்யன்றிக காணோமே-யுண்ணாடிற்
பிம்ப மிடமறிவே பேர்த்துப் பிறிதென்னோ
வம்புமதப் பித்தரைப்போல் வாய். 8

சச்சிதா நந்தநித்தந் தானகண்ட மாமறிவு
சச்சிதா நந்தமுதற் சாற்றக்கே-யச்சிதமாம்
பந்தமுத்தி முன்பினிடை பார்த்திருப்ப தாற்சத்தே
அந்தமற்ற வவ்வறிவுக் காம். 9

எவ்வெவ் வுபாதிகடா மெங்கெங்கே தோற்றுகினும்
அவ்வவ் வுபாதிகளை யாங்காங்கே-யவ்வவற்றாய்
ஆயுமா காதுணரு மத்திறத்த தாற்சித்தே
நீயறிவுக் கென்றுணர்ந்து நில். 10

சத்துசித் தொத்தவிடந் தானறிவா நந்தமெனல்
உத்தி யனுபவத்தா லுண்மையே-யத்தனையும்
உண்டே லறிவன்றி யுண்டாம் பிறிதின்பங்
கண்டார்க் கெஃதுண்மை காண். 11

அறிவின்ப மாயி னயலின்பம் வேண்டா
தறிவே வடிவாயி னாகா-தறிவென்னிற்
சோதிமய மாம்வெளியே சொர்ணப் பணிபோலாம்
ஏதறிவுக் கன்னியமென் றெண். 12

தூங்குவார்க் கின்றாகித் தூங்கா தார்க் குண்டுலகம்
ஈங்கதுவாய் நின்றறிவுக் கென்றுரைப்பம் ஆங்கதனுக்
காதார மாமறிவுக் காதேய மெங்குண்டாம்
ஆதாரம் பூரணமே யாம். 13

ஞாபகம்வே றாகிலெதிர் நண்ணும் பொருள்காணு
ஞாபகந்தா னாகிலெதிர் நண்ணுமோ-ஞாபகந்தான்
இல்லா விடமில்லை யில்லாப் பொருளில்லை
எல்லா மதுநிறைவென் றெண். 14

பொருளல் லவற்றைப் பொருளென் றுணரும
மருளே பிறப்பா மன்னுக்-தெருளில்லாச்
சொப்பனமே சாக்கிரமாத் தோற்றுமறி வைக்காணின்
எப்பிரமை யெங்குண் டிசை. 15

சுட்டற்ற தன்னைத்தான் சுட்டுவதே யஞ்ஞானம்
சுட்டை யுணர்வதுவுந் தொல்லறிவே-சுட்டற்ற
காலத்துந் தானுணரிற் காணே மறியாமை
சாலப் படித்தென்ன தான். 16

காரணத்தை யன்றியிலை காரியந்தா னென்பதூஉங்
காரணங்கண் டாலன்றிக் காணுமோ-பூரணமாஞ்
சித்தையன்றி யில்லை செகத்தோற்ற மென்பதூஉஞ்
சித்துதயத் தாலே தெளி. 17

அறிவோநா மென்றற் கடையாள மென்னை
அறிதல் மயமோநா மன்றோ-பிறிதென்கொல்
செய்கை முதலாமோ செய்வானை யன்றியுண்டோ
எய்தாறோ காட்சிதனக் கில். 18

விழித்துப்பா றென்றளவில் வீணுலகங் காண
விழித்துப்பா ரெங்ஙனெண வீரன்-விழித்தறிவில்
என்றுனங் கேகண்ட திவ்வறிவோ பாரென்ன
ஒன்றேயென் றுனுன்னி யுள். 19

இப்போதெங் கேயுலக மிப்போதுங் கண்டிலனுன்
எப்போதுங் காணுமே யிவ்வுலகம்-இப்படிநீ
ஆதாரங் கண்டிருக்கி லாதேய மில்லென்றான்
ஆதாரங் கண்ணுயி னுன். 20

பகுக்கப் படாத்தரையைப் பாத்தெனதென் பார்போற்
பகுக்கப் படாவறிவைப் பாத்திங்-ககத்தாலே
நானெனதென் றெண்ணியதா னண்ணுமல் தெச்சொருபம்
ஆனதறி வென்றே யறி. 21

பழுதைமுன் னிட்டன்றி பாம்பென்ப துண்டோ
பழுதைக்கும் பாம்புக்கும் பாராய்-வழுவன்று
திட்டாந்தத் தொன்றீது செப்பு விவர்த்தமெனுங்
கட்டைவிட் டோதாது காண். 22

தேகநா னென்பவெலாஞ் சித்தினது பாவனையேல்
தேகாதி காணுலகஞ் செப்பவோ-தேகம்
நினைவு கனவுகளி னீநானென் றேதிங்
கனையதே சித்தென் றறி. 23

முதற்கருவி சங்கற்ப முற்றுலகுக் கன்றி
யிதைத்தவிர வேறொன் றியம்பம்-முதற்கருவி
யல்லவெனிற் காணிவிதை யப்போ தெரியுமன்றிச்
சொல்லினு லென்னபயன் சொல். 24

காரணங்கண் டாலொழியக் காரியமீ தென்றறியோங்
காரியமே காரணமாக் காணுமே-யோரில்
அறிவை விளக்கிக்கொண் டப்பாலே காணில்
வெறும்பொய் யுலகாய் விடும். 25

தான்றெரிவன் றாகுமிடந் தானிர்வி கற்பமெனல்
தான்சுகியென் றாகுமிடஞ் சவிகற்பந்-தான்காணும்
ஞாதுருவென் றாகுமிட நன்னு மனவிகற்பம்
ஈதுணர்ந்து கொண்டிங் கிரு. 26

தூல வுலகுக்குச் சொல்லுஞ்சித் திந்திரியம்
போலி யுலகுக்குப் பொன்றுமனஞ்-சோலி
யறும்பாழ்க் குயிர்சித் தறிவெய் துங்காண்டற்
குறுஞ்சித்துத் தானென் றுணர். 27

அணுக்கூட்ட மன்றி யருவுருவ மாமம்
அணுகாதே யிங்க வணுவும்-நணுகாது
மண்ணன்றி யீதும் மருவா வெளியன்றிக்
கண்ணன்றி வேறெங்கு காண். 28

தெரிவு மயமாகித் தேசிற் சிறக்க
பெருவெளியொன் றுண்டாயிற் பின்னாய்-மருவகையால்
ஓத்திருக்கு மென்றபொரு ளுற்றவிடந் தானேதான்
எத்தடையு மில்லாமை யின். 29

தன்னிலைத் தூங்காமல் தன்னையனைத் திற்காணல்
தன்னைவே றாக்காமல் தானனைத்தாய்த் துன்னி
விளங்கிச்சும் மாவிருத்தல் வேதாதிக் கொத்தல்
துளக்கமிலா மைத்தன் றொழில். 30

உடம்பெல்லாங் கண்ணே யுணர்வானைக் காணில்
உடம்பாவ தன்றே யுபாதி யிடங்கொள்ளா
தெங்கெங்குந் தானாயிலகு மறிவாகும்
அங்கங் கதுவா யறி. 31

தானுயி ரார்க்கதுவுந் தானுக வேவிளங்குந்
தானுகா தார்க்கயலாத் தான்விளங்குந்-தானே
அறிவானந் தப்பொருளா மன்னியமுந் தானே
அறிவாரோ வேறுயி ரார். 32

தானறிவா னந்தமெனல் சத்தியமே யன்னியமுந்
தானெங்ங னவதெனச் சற்குருவுந்-தானும்
அறிவன்றி யில்லா வருவுருவம் போல
அறிவுந்தா னன்றியிலை யால். 33

அந்தர்முக நாட்டத்தா லாயிலறி வாய்முடியும்
இந்திரிய மாதி யெதிர்நோக்காற்-சிந்திக்கிற்
பூதாதி யாவும் புகுமே யறிவாக
ஏதிரண்டா யீங்கிருப்ப தெண். 34

தெரிதலையே யுற்றுன்னிற் றேர்வாய் முதலை
விரிதலைவிட் டெக்கணமும் வீயா-தொருதலையே
யானந்தங் கம்மித் ததுவாகி யேயெங்குந்
தானந்த மில்லாமற் றன். 35

நினைவாவ தெங்கு நிகரில்சிற் சோதி
யனையதேல் வேறுக்கி லாமோ-அனையதாக்
கண்டு படிப்பதே கல்விமற் றெப்படிப்புந்
தெண்டப் படிப்பாத் தெளி. 36

எங்ஙனே யாதோ வெதிலைலோ வெவ்வொளியால்
அங்ஙனங்ஙன் றேற்று மகிலாண்டம்-அங்ஙனங்ஙன்
காண்பானுட் டத்தாலே காணுந் திரிபின்றிக்
காண்பானை யன்றியுண்டோ காண். 37

தான்மாத் திரப்பொருளே தானுவ தன்னியந்தான்
தான்கலந்த தெப்பொருளுந் தான்கலவா-வான்கால்
முதலிலையா லெங்ஙனெனின் மூதறிவைத் தள்ளி
யெதுவுளதென் றெங்கே யிசை. 38

துவிதமுதன் மூன்றதனுட் சொல்லுமிது யாதத்
துவிதமெனி னிங்ஙனெனச் சொல்ல-தவிர்வதுவாம்
இப்படியா நின்றதனை யெப்படியாக் காண்பதெனின்
அப்படியே யப்படி யாம். 39

அணுமகத்தைக் காட்டோ மகவிசும்பைத் தள்ளி
நணுகுபந்த மேதென்று நாடோம்-பிணவாயால்
பேச்சிற் சிறந்தோம் பெருவெளியாய் நில்லோமே
சீச்சியிங் கென்னசெய்தோந் தின்று. 40

நம்மைச் சகத்தாக்கி நம்மைநாம் பார்க்கின்றோம்
நம்மைச் சுயமாக்கி நம்மையே-செம்மையாய்
பார்ப்பதுபோ லாதலினுற் பார்ப்பானும் பார்வையுடன்
பார்ப்பனவு மன்னியமோ பார். 41

அகம்புறமாக் காணு மறிவுதனைக் காணில்
அகம்புறமொன் றின்றி யறிவாய்த்-திகழுமால்
ஒன்றன்றி யில்லை யுளவெல்லாங் கானனீர்
என்றே திடங்கொண் டிரு. 42

மூன்றவத்தை யன்றியிலை மூன்றவத்தாக் காட்சிகளும்
மூன்றவத்தைக் காண்பதுவு மூதறிவில்-சான்றவ்
வறிவின்றி மூன்றுமிலை யவ்வாறெங் கில்லை
அறிவுங்கண் டிங்கே யறை. 43

அறிவுருவ நாமிருக்க வன்னியம தாக்கல்
பிறர்செயலோ நஞ்செயலோ பேசில்-பிறர்செயலன்
றில்லா வுலகை யிலதென்று பார்த்திருக்கில்
அல்லாநான் வாராத தால். 44

ப்ரக்ஞான நீயாகிற் பிர்மமெனல் வேறில்லை
ப்ரக்ஞான மாகாயேற் ப்ரம்மமல-ப்ரக்ஞானம்
நானுனென் றேபழக நாடுவவென் றுன்குரவன்
ஆனுலெவ் வண்ண மறை. 45

உபாதிகுண நாட்ட மொழிந்தறிவே நானென்
றுபாதிநா னென்பவெலா மோங்கா-தபாவமதாப்
பல்காற் பழகப் பழக வதுவாகை
ஒல்காது வன்னிலையி லுற்று. 46

நானுவ தேதென்று நாடுங்காற் சிற்சோதி
யானு வமிர்தா லதுநானும்-ஆனுற்போல்
நானதுவா மென்னுநிலை நண்ணிற் பிரமமதாம்
ஆனதுவே முத்தியென்ப தாம். 47

முறையாவ தென்னவெனில் மூதறிவைக் காண
அறியாமை போல வறிவும்-வறிதேகத்
தானேதா னாகத் தனைத்தான்கண் டேயிருத்தல்
ஆனு நிலையிதுவே யாம். 48

எல்லாஞ் சிவமெனற்கு மெல்லாநா னென்றற்கும்
எல்லா மலவெனற்கு மீங்கெவரின்-வல்லான்கேள்
வேதாந்தம் போலியல வேதாந்தி யேகண்டாய்
போதாந்த முங்கழலப் புக்கு. 49

சங்கற்ப மேபந்தஞ் சங்கற்ப மேவீடு
தங்கட் புடைபெயர்ச்சி தானாகும்-சங்கற்பம்
விண்ணசையிற் றனசையும் வீனாகுந் தோற்றமதால்
கண்ணாகிற் பூரணமாக் காண். 50

நீயே சராசரமு நீயே சகபரமும்
நீயே சதசத்து நீயாகும்-மாயாத
சச்சிதா நந்தமெலாந் தானென் பதுநீயே
மிச்சமதி னீயே மிசை. 51

நினைவு கனவுகளி னீயாகக் காண்டல்
அனையதெது பாரென்க வஞ்சில்-நினையாது
சும்மா விருவென்க தூக்கப் படாபாரம்
அம்மா வெனிலொன் றறை. 52

ஞானமுறை யீதாகு ஞானம்போற் சொல்லுமுறை
தானுநான் காகுமதைச் சாற்றக்கேள்-ஊனுதி
தத்துவமெல் லாமகற்றிச் சச்சிதா நந்தசிவம்
இத்தகைய தாமென்க விங்கு. 53

மானதபூ சைக்குரிமை மாறாது செய்யென்க
ஆனதுவுஞ் செய்தற் கரிதாகில்-ஈனமிலா
மூர்த்தி தலந்தீர்த்த முறையாகச் செய்யென்க
பேர்த்திடிலென் செய்வோம்யாம் பின். 54

உருவாக வேனு மொழிந்தருவா யேனும்
பெருகுமன்பாற் பூசனையைப் பேணித்-திருகறநின்
றர்ச்சிக்கச் செய்க வஃதுஞ்செய் யொண்ணாதேல்
விர்த்திக்கச் செய்விரத மிக்கு. 55

அதுவு மியற்றற் கரிதாகி லன்பர்
புதுமைசரி தஞ்செவி யிற்போக-இதுசெய்க
ஆகாதேற் கெட்டொழிவ ராகமெல்லக் கூட்டிப்போய்ச்
சாகா நிலையதனைத் தா. 56

மனமடங்கச் செய்யும் வழியாதென் றோதில்
கனயோக மோரிரண்டாற் காண்க-தினமுநான்
எவ்வா றிருப்பதெனி னென்னைநினை யொன்றாக்கும்
ஒவ்வா நிலைநின் றொளிர். 57

ஞானமிரண் டென்பானே ஞானறியச் சொல்லுமெனத்
தானன் னியஞானந் தானாகும்-ஞானம்
இதிலுண்மை பின்னையதா மீங்கிரண்ட தின்றால்
மதிநுட்பத் தாலே மதி. 58

மூன்றவத்தை தானு முறைகாணுங் காட்சிகளும்
மூன்றிடமு நின்னைநிலையு முன்கண்ட-ஆன்றநிலை
தன்னை யுணர்ந்திடுக சற்புத்தி ராவென்றான்
தன்னை யெங்குங் கண்டிடுவோன் றான். 59

தானறிவா னந்தமதாற் றான்விடையா னந்தமதாம்
தானவத்தை யாதியெனல் சாற்றவோ-யானிதனை
ஒவ்வோர் விடயத்து மொவ்வொன்றாக் காட்டிடுவன்
செவ்விதாக் காண்பவர்க்குச் சென்று. 60

நானே பகைநண்பன் ஞானுஞ்ஞா னப்பகுப்பால்
நானே யதுவதுவாய் நண்ணுவதும்-நானே
இருவகையல் லாததுவு மின்னபடி காணத்
தருமுன் னருளென்ன தான். 61

எவ்வெவ் விகாரமதா யெங்கெங்கே தோற்றிடினும்
அவ்வவ் விகாரமதை யாங்காங்கே-ஒவ்வொன்றாய்ச்
சிற்சொருப மாக்கிச் சிதாகாய மாநிற்பன்
கற்பனைக ளென்செய்யுங் கண்டு. 62

சங்கற்ப வேட்கையொடு சாற்றாமனு சந்தானம்
இங்கற்ப மூங்கோடற் கில்லையால்-எங்கெங்கும்
தானன்றி வேறென்று சாரப் பொருள்காணேன்
ஆனந்த மேயறிவ தாய். 63

கடவுளே யுண்மையெனக் கட்டுரைப்ப தன்றிக்
கடபடமெய் யாமயக்கைக் காணார்-உடலைவே
நானென்னார் வைதுணரார் நாட்டமவா யென்னிருந்தும்
மானிடரா யிவ்வுலகில் வந்து. 64

தானல்ல வற்றைத் தனதுருவென் றெண்ணுமுயிர்
தானின்ன தென்றுணர்ந்து தானாதற்-கானவகை
செப்புவதா லிந்நூற் றிறந்தெரிந்தார் துக்கமுறார்
இப்புதுமை போலெங் கிலை. 65

அறிவே திருக்கிங் கறிபொருளே மாயை
அறிவுக் கயலன் றறிவன்-றறிபொருடான்
என்றுணர்த்தி யாண்ட விறைவன் கழல்வாழ்க
என்றனைப்போல் வார்க்கருள லிங்கு. 66

---

## உத்தமவாதம்.

அறிவின் ஸ்புரிப்பே யளவில் மதங்கள்
அறிவே நமது மதமாயின்-வெறியுண்டோ
அங்கே யதைவணங்கி யங்கே யதுவாவோம்
எங்குந் துணைவே றிலை. 1

ஞாயமய ஞேயமய நாடுங்கா லோரிரண்டாம்
ஞாயமயம் வேதாந்த நற்றெளிவே-ஞேயமயம்
மூடமத முன்பின் முறையோனுங் காக்குமதம்
நாடுவரா ரிங்கின் னலம். 2

அரைத்த ரைப்பானே னறிந்தார்க்கி தன்று
ஒருப்படல் சாந்த மொளிர்தல்-அருத்தமெலாந்
தானாத லில்லார்க்கே சாற்றினதாற் றப்பில்லேன்
தானேதா னாதற்குத் தான். 3

உலகில் மதமிறுத்து முத்தமரே கேண்மின்
உலகமும் யாமு மொருங்கே-நிலையின்றி
எங்கே வெளிப்படுத லெங்கே மறைதனிதம்
அங்கிருந்தங் காணதென் றாய்ந்து. 4

தன்னைத்தான் காணிற் றலைவன் றலைவல்ல
தன்னுருவ மல்லவெலாந் தானன்று-தன்னை
யறியாத் தகையதனு லாய்து முன் வல்லீர்
எறியன்மி னென்சொல்லை யிங்கு. 5

எம்மதமு மேத்துபொரு ளெப்பொருளோ வப்பொருளெஞ்
சம்மதமே கற்பிதத்திற் சம்மதியோம்-எம்மதமுங்
கற்பிதத்தாற் பேதித்தல் கண்டீர் வழக்குளதாய்க்
கற்பிதமன் றென்பதெங்ஙன் காண். 6

எதிலே யெதுபிறந்திங் கெத்தையுண் டேத்தால்
எதிலே யெதுவா யிறக்கும்-அதுகாணீர்
தேர்த்தீர் தடிபாவஞ் செப்பி லிஃதேலா
தோர்ந்துய்த லார்கடமை யோ. 7

மதமெங்கே ஸ்தாபிக்கும் வல்லநீ ரெங்கே
பதியெங்கே பாசமெங்கே பாரீர்-மதிதான்
உதித்தொடுங்கும் ஸ்தானத்தை யுற்றுநீர் காணில்
எதுக்குத்தான் வீண்வாத மிங்கு. 8

எந்தநான் சொந்நா னெந்தவுடல் சொந்தவுடல்
எந்தசுகஞ் சொந்தசுக மீங்கயனுக்-கந்தவிடை
சச்சிதா னந்தமதாச் சாற்றவலா ரெங்குமிலை
நச்சுமறை யாதியொத்து நன்கு. 9

அசத்து சடதுக்க மனித்தமொடு கண்டம்
வசப்படுங் கல்விதனில் வல்லீர்-நிசப்படிப்போ
நாமா ருலகேது நன்காய்ந்தொன் றுய்விளங்கல்
ஆமோ விதற்குநிக ராய். 10

வெற்ற வெளியதனை மெய்யுலகாக் காண்பதெவன்
வெற்றவெளி தள்ளியெங்கே மெய்யுலகங்-கற்றுணர்ந்தீர்
சுத்த மசுத்தஞ் சுகாசுகங்க ளுள்ளதில
தத்தனையுஞ் சத்தாத லால். 11

நினைப்பு மறப்பின்றி நிலையின்மை காட்டீர்
அனைத்துலக மென்னென் றறியீர்-கனப்புலவீர்
அன்னியமாக் கொண்டளக்கி லானபட்டிம் வல்லமையால்
தன்னையெங்ஙன் காண்பதென்றே தான். 12

அறிவளக்கக் கல்வி ரயலளக்குக் கற்றீர்
அறிவுநா னென்றிங் கறியீர்-வெறிகொண்டாற்
போலுழலுந் தீர்ந்தில்லை போக்கி யடைந்துய்ம்மின்
நாலுவே தத்தி நடு. 13

அகம்பிரம மென்பதனை யாவைத்தால் வைவீர்
அகமென்ப தெந்தவக மாயீர்-மிகப்படித்தீர்
எந்தவத்தை நாளுண்மை யீதெல்லா மாறுவதால்
அந்தமெய் நானே யகம். 14

தெரிந்து மறிதுமெனத் தேளின் கொடுக்கிற்
கரந்தொடுதல் போலுமே கற்றீர்-பரந்துலகம்
இதென்று கண்டுஞ் சிறிதுணர்மைத் தேயமுங்கல்
பாதகமென் சொல்வேன் பரிந்து. 15

தன்வலையுந் தன்னியிர்வுந் தாந்தேரா மாப்புலவீர்
அன்னியத்தை யோம்பிர்ப்பீ ராஆஆ-என்னைமதி
உள்ளும் புறம்பு மொழியாத் திரிசியத்தைத்
தள்ளியொன்றிற் றூக்கறுதல் சால்பு. 16

எல்லாம் படித்துணர்ந்தா ரிங்குமில்லை யெங்குமில்லை
எல்லாம் படித்தோமென் றேமாப்பேன் வல்லீர்
படித்தளவு கொண்டறிவைப் பாங்காகக் காண்மின்
எடுத்தவுடல் வீழ்முன் னியைந்து. 17

அன்னியந்தா னென்றிருந்திங் காராயிற் றூனலவாம்
தன்னிலக்கா லாராயிற் றன்விளங்கும்-இன்ன
இலாவிடத்திற் றூனியமா மீதில்லை யென்பீர்
எலாமுணர்ந்தி ரிம்மயக்க மேன். 18

உடனமக்கிங் கன்னியமென் றோர்ந்திதனி லொட்டா
திடைவிடா திற்குமில்லை யீதென்-றடைந்தொளிரக்
கல்லாது கற்றுக் கழறுவதென் வாயாலே
எல்லா முணர்ந்தவர்போ லிங்கு. 19

எட்டிற் றனையுணர்ந்தி ரில்லை தனதிடத்தே
யோட்டுமோ யானெனதென் றுள்ளபடி-யோட்டுமெனி
றுனென் றிருந்துசுக கன்றுய்ச் சுகிப்பதெவன்
ஆனதிதிங் குண்மையில்லை யன்று, 20

நானு யிருப்பதெது நானன்றுப் போவதெது
ஆனு மதிநுட்பத் தாயாதென்-நானாக
வந்தவுடல் போதுமென்பீர் மாளிலிதிங் கென்செய்வீர்
அந்தோ புலவீர்கா ளன்று. 21

எல்லாரு மென்றிருப்பீ ரெல்லாரு மெல்லாரோ
எல்லா முடலன்றி யில்லையே-எல்லாரும்
நானென்று ரில்லைபதா னுனென்ப தொன்றேயாம்
ஆனு வழுதே யது. 22

பட்டும் பயனில்லை பாவியுடற் கென்றுரைப்பீர்
நட்டிங் குபசரிப்பீர் ஞாயமோ-விட்டிதனை
நன்குணர்ந்து தேகிதனை நாடி யுபசரிக்கில்
அன்றே யதுவீட தாம். 23

இலக்கணமுந் தர்க்கமுங்கற் றென்னுதவி யாந்தன்
னிலக்கணங்கல் லார்க்கெம்மட் டெங்கே-கலக்கமுறச்
செய்யுந் துணையல்லாற் றீர்க்குமோ முக்குற்றம்
ஐயோ புலவீர்கா ளங்கு. 24

தன்னை யடக்கற்கோ தர்க்கநூ றோர்ந்துணர்தல்
அன்னியர்வாய்ச் சொல்லை யடக்கற்கோ-தன்னிலைமை
ஐயமய மாதலினு லாங்கறுத்தற் கேததுவே
உய்யும்வகை கண்டுய்ம்மி னுற்று. 25

மேவுமலை நீர்போலு மெய்யறிவிற் காண்பவெலாம்
மேவுமே காண்பவெலா மெய்யறிவா-நீவிரதை
உற்றகலாக் கண்டிருக்கி லொன்று விளங்குவீர்
கற்றறிந்தீர் நின்மினிதைக் கண்டு. 26

சிறைப்பட்டான் போலச் சிறையுடலிற் பட்டோம்
சிறையுடலோ தூலாதி தீர்வின்-றிறைமையனும்
மூன்றவத்தை தன்னினுமே மூன்றுடலிற் பட்டுழல்வம்
சான்றுநமை யன்றியுண்டோ தான். 27

சிறையுடலிற் பட்டநாந் தீர்க்கும் வகையெண்ணில்
நிறைஞானத் தாலவித்தை நீங்கும்-குறையிரண்டு
தீரினும் யாதொன்றுற் றீர்ந்தபுல மைத்திறத்தீர்
தீரும்வகை கண்டுய்ம்மின் றேர்ந்து. 28

அறிவதுவோ வுண்மைநிலை யன்னியமே தேறில்
அறிவதுவே யுண்மைநிலை யாகும்-பிறிதன்று
தன்னையறி யாத்தகையாற் றக்கபுல மைத்திறமின்
றென்னகொலோ வைவதிதை யிங்கு. 29

அறிவென்று லெண்ணுவதென் னற்பத்தா லிங்கு
அறிவினிலை நீரறியீ ரந்தோ-அறிவிதுதான்
உள்ளதல வில்லதல வொன்றல்ல பலவல்ல
தள்ளலல கொள்ளலல தான். 30

உடலோ டுணர்விரண்டி லுண்மை யுணர்வே
உடலசத்தென் றோர்ந்து முணர்வை-யுடலதுபோல்
நானென் றனுபவிக்க நாடறியாக் கற்றுணர்ந்தம்
ஏனழிவம் வீணகத்தா லிங்கு. 31

அறிவயலென் றோரிறண்டி லன்னியத்தை யோர்தற்
கறிவே பிறிதன் றறிவை-யறிதற்குத்
தன்னையன்றி யின்றதனுற் றன்னைத்தான் காணுதென்
இன்னதற்கோ வாசிரிய ரீர். 32

அணுவினு நுட்ப வணுவே பரமென்
றணுவைக் குறியா வறிவம்-அணுகாது
பூரணமாப் பாவிப்பீர் புண்ணியத்தை யென்சொல்வன்
ஆரணத்துக் கொக்க வறிந்து. 33

அறிவே தனையுலகா வாக்கித் தனையே
பிறிதாகச் தான்காண் பெருமை-அறிகுதிரேல்
அக்கணத்தி லொன்று யசையாது நின்றொளிர்வீர்
மிக்க துவிதமதை விட்டு. 34

அறிபொருளை லக்காக வாய்ந்துணர்ந்தார் போல
அறிவுதனை லக்காக வாயின்-அறிவாக
மேல்கீழொப் பின்றி விளங்குவீர் மாப்புலவீர்
சால்பிதுவே வேறின்று தான். 35

உருவன்று தோன்றி யொழிவதனு லெங்கும்
அருவன்று பாழதனு லப்பால்-உருவருவம்
என்னிற் கனவொக்கு மீதுமன்று மாப்புலவீர்
என்னுே பயமிலதா மிங்கு. 36

ஆசைகொளலு மறுத்தலு மிவ்வறிவே
ஆசையற லேமுத்தி யாமன்றே-ஆசை
தவிராமையேநரகஞ் சார்த லுணர்வே
தவிருநுஞ் சித்தாந்தந் தான். 45

தன்னைவே றுக்காணுந் தன்மயக்கம் போக்கியக்கண்
தன்னிறையி னுண்மைநிலை தான்விளங்கும்-இன்னதே
வள்ளுவனார் தங்கருத்தும் மாறில்லை மாப்புலவீர்
தள்ளியிதைத் தேர்ந்துய்ம்மின் சார்ந்து. 46

நினைவெழுச்சி யெங்கே நினைவொடுக்க மெங்கே
அனைய விடங்காண வறியீர்-இனையநீர்
செல்லுங் கடவுணிலை தோற்ற நினைவளவே
வல்லீர் நிலையெதுவோ வஸ்து. 47

வியாபகமே சித்து வியாப்பியம தேனை
வியாபகத்தை யன்றியெது மேவும்-வியாபகத்தில்
இல்லா விடமில்லை யில்லாப் பொருளில்லை
எல்லா மதுவன்றி யில். 48

சர்வம் பிரமமெனச் சாற்ற லசத்தியமே
சர்வமுநீ ஞெப்தியன்றிச் சாற்றுதியேல்-சர்வமுந்தான்
ஞெப்திவடி வாமென்னில் ஞெப்தி வடிவிதுவோ
ஞெப்தியென நீகண்டு நில். 49

நம்மிலுல கோவுலகி னுமோ விதையாய்தி
நம்மிலுல கேலுடலா நாமிருப்பேன்-நம்ம
திருப்புலகி லென்னி லாதுல கேன்றாக்கத்
திருப்பிரண்டுங் காண்பதரி திங்கு. 50

மூன்றவத்தாக் காட்சிகளு மூன்றவத்தை யன்றியெங்கே
மூன்றவத்தை தானுமெங்கே மூடமன்றி-ஊன்றியதூஉம்
எங்கே யறிவன்றி யீதுநமை யன்றியெங்கே
எங்கும் நமதுருவ மே. 51

வெளிநாட்டஞ் சிந்தனையு மீக்கொள்ளக் கொள்ள
வெளியுருவாஞ் சிந்தனையு மீளா-தொளிமயமாய்
நின்றுசிதா நந்தமதாய் நீங்காச் சுபாவமதாம்
என்றுஞ் சிவோக மிது. 52

அறிவே யனைத்துமா மல்லவுமா மென்றல்
அறிமினுறக் கத்துவிழிப் பாங்கே-அறிவதுவே
கண்கண்ட தெய்வங் கடையரே யல்லவென்பார்
கண்கண்டால் வேறுமுண்டோ காட்சி. 53

அறிவுநா மென்றதற்கிங் காட்சேப மில்லை
அறியுமோ மூன்றவத்தை யாங்கே-அறிவன்றி
நாமன்றே கண்டிருப்பம் நன்று யவத்தைதொறும்
நாமறிவென் றுற்பிழையென் னடு. 54

தன்னைத் தடியாகத் தான்கண் டெசரிப்பீர்
என்னவென்று கண்டிறையை யேத்துவீர்-நுங்கடிப்பு
மூக்கறையன் போல முழுதும் புரளியதே
போக்குவதென் றேபுலவீர் புக்கு. 55

அறிவுருவா நின்றுளிர வங்கங்குங் கண்டு
பொறிகரண பேதமிவை போக்கி-நிறைவாக
நிற்கச் சிவோகமதாம் நீநானென் றெங்குலகம்
அற்புதமீ தொப்பதில தாம். 56

தத்தமதத் தேவதையைத் தாம்வரையாப் பூசித்துத்
தத்துவத்தை யூகத்தாற் றுன்றேர்ந்து-சித்தவிளக்
கேத்தி யனுபவத்தா லீங்கறிவாந் தேவதையை
யேத்தியது வாநிற்பீ ரிங்கு. 57

அதுமறத்தல் பந்த மதுகாண்டல் முத்தி
இதுவிரண்டுந் தோற்றமதே யில்லை-எதுவுந்தான்
வந்ததிலை போனதிலை வஸ்துவொன்றே யுண்மையெனும்
இந்துவே தம்போலு மில். 58

சரியைகிரி யாயோகந் தந்திரமே யன்றிச்
சரியல்ல ஞானம்போற் சற்றுந்-தெரிந்தவர்போல்
ஞானமல்ல வற்றையெலா ஞானமென்பீ ரென்மடைமை
ஞானியெனப் பேரிட்டு நன்கு. 59

சிவசிவவென் றென்றுஞ் செபித்தாலு மென்ன
சிவமெனுஞ் சொற்காமு மதைத்தேரா-தவமாகக்
கோரணையே நுங்கோலங் கும்பிடைக் கேட்டறியீர்
ஒருமினெம் மொழியை யுற்று. 60

ஆதார நானே யனைத்தினுக்கு மல்லநான்
ஆதார வாதேய மாமிரண்டுஞ்-சேதார
மாந்தகைய தாலிங் கறையவிட மின்றியுப
சாந்தமதா நின்றேன் றனித்து. 61

நினைக்கிற் செகத்தாம் நினைப்பொழிக்கிற் பாழாம்
நினைப்புமறப் பிவ்விரண்டு நீக்கித்-தனித்திருந்து
கண்டேன் மனநிலையைக் காணுமறி வின்ஸ்புரிப்பாக்
கண்டறியார் வேறென்பர் கற்று. 62

அறிவே செகமா மறிவே பதியாம்
அறிவே பசுவாகு மாயின்-அறிவாக
ஆவதினாற் பின்னு மணுவளவு மையமிலை
யாவர்தான் வெல்வா ரெனை. 63

சுட்டில் விடயமதாஞ் சுட்டொழிக்கிற் சூனியமாம்
விட்டிரண்டும் நிற்கநிற்க மெய்யாகப்-பட்டவருத்
தத்தளவாக் காணுஞ் சதோதயமாய் நின்றவரி
இத்திறத்த தென்றுணர்தி யிங்கு. 64

ஆரையார் கண்டிடுத லாரையார் போகித்தல்
ஆரையார் சுற்றமென லையையோ-ஆருமிலை
மண்ணையன்றி யெண்ணமொடு மாறாக நானானேன்
எண்ணமெலாஞ் சிற்சோதி யிங்கு. 65

அகம்பிரம்ம மென்பதனை யைய்மறக் கேட்டிங்
ககவிளக்க மேயெங்கு மாகி-மிகத்தெளிந்து
நிர்விகற்ப மாநின்றா னீங்கா ததுவதுவாய்ச்
சர்வம் பிரமமெனத் தான். 66

இவ்வுலக மீங்கிருக்க வீதா லவருண்டாம்
இவ்வுலகு ஞெப்தியன்றி யீங்குரைக்கிற்-செவ்விதா
ஏற்பமென வன்றோது மீதாகா தென்றுரைக்க
ஏற்பதெவர் மூடரன்றோ விங்கு. 67

போக்குவர வில்லாத போதமெனல் சூனியமே
தாக்கற்ற பூரணமுந் தானாகுஞ்-சூக்கத்திற்
சூக்கமிதே வேறென்று சொல்வா ரறிவில்லார்
நீக்கியறி யார்பொய்மை நின்று. 68

சும்மா விருத்துங்லை சூனியமே யானவரை
எம்மாலும் யாராலு மெட்டரிது-சும்மா
அயலென்ப தெல்லா மறிவீனர் கொள்கை
மயலகல்வ தென்னோ மகிழ்ந்து. 69

சூனியமென் றுலில்லை சொற்கருத்த மென்றனைமெய்
சூனியமோ வோர்தலுந்தான் வேறன்றோதென்-சூனியத்தை
விட்டுறைத லன்குற்றம் விட்டா லுலகமேதல்
விட்டிரண்டி லில்லென்னை மேல். 70

அன்னியமாய் நின்றயலை யாசித்தல் ஜீவதர்மம்
அன்னியந்தா னீங்கிலிச்சை யன்றறுமோ-என்னமதி
இச்சை யொழியளவு மெய்வா றயணிங்கும்
இச்சையன்றி யெப்பிறப்பு மில். 71

அறியும் பொருளென்னி லாகு முலகம்
அறியாப் படுபொருளே லாகும்-வெறுமையதா
எந்நிலைய னென்றுரைப்ப மீங்கவனு மாகுமட்டும்
அன்னநிலை யெட்டவரி தாம். 72

சுரக்குமிடங் கண்டதனைச் சொல்லென்ன வையா
சுரக்குமிடம் பாழாமென் சொல்வன்-இருட்டிடத்தை
உற்றுநீ பாரென்ன வோயாப் பெருவெளியாய்
நிற்றலெனி னுற்றதனி னில். 73

புறம்பில் வெளிநாட்டம் போக்கா தகத்தில்
நிறைஞான விண்ணாட்ட நீங்கா-திறையேனும்
நிற்பார்க்கெப் பற்றுண்டு நின்மலராஞ் சிவன்முத்தர்
அற்பமுமேன் பாவ மவர்க்கு. 74

நானென்னு ரிவ்லையதா னெனென்ன பின்னதெனத்
தானுணர்த்த ஞானமுதல் சாற்றிற்றே-ஆனதினாற்
பின்னரகம் ப்ரம்மாஸ்மி பேசுமிரண் டாமொழியில்
பன்னுமறி வேயகமாம் பார். 75

அறிவல்ல நானெனலிங் காகுமவ லென்பார்
வெறியெல்லாம் வேதாந்தம் வென்றிங்-கறிவாக்கும்
ஆதலினா னறிவென் றுய்ந்தவிடத் தேபிரமம்
ஓதயிக்க மேயஸ்மி யோர். 76

அடுத்தமா ணாக்கனைநீ யாரென்று சொல்லி
தடுத்தாள வேண்டுமதாற் றக்கோய்-அடுத்தமொழி
மூன்றதனிற் றத்தொமசி முன்பின் பிரகடிதம்
ஆன்றவதிற் றொம்பதநீ யாம். 77

அறிவே சிவமவ் வறிவேநா னுமவ்
வறிவேநீ யாமவ் வறிவே-யிறையான்மா
என்றுணர்த்த லிந்நான்கு மேகவறி வாக்காண
அன்றுமறை யின்கருத்தே யாம். 78

நானெனவு நீயெனவு நாடுங்கா லான்மாவாம்
ஆனதினாற் பின்னீ தறைந்ததாம்-ஏனிதனால்
எல்லா மொருபொருளென் றிங்கதனைக் கண்டுய்ய
நல்லாய் வகைதேடு நன்கு. 79

சைதன்ய மேதாலே தான்விளங்கு மென்னாதே
சைதன்ய மேதன்னைத் தான்விளக்கும்-சைதன்யம்
உன்னு ளொளிர்வதுவே யொன்றால் விளங்குவதோ
உன்னுளே காண்டி யுவந்து. 80

எத்தனையோ சிந்தையில்வத் தேகுவதாற் சொந்தமல
எத்தனைக்கு வாடுவதிங் கெதறிவன்-றத்தனைக்குஞ்
சிந்தையிட மாவதன்றிச் சிந்தை யவையல்ல
சிந்தைசுயஞ் சோதியென்றுன் தேர்ந்து. 81

தானே யறிவாகுந் தானே சுகமாகும்
தானன்றி யிவ்விரண்டுந் தானிலையால்-தானறிவா
னந்தமென்றோர் மூதுணர்ந்தோர் நன்னுமுடி வாமொழியென்
றெந்தை யடிதொழுதா னிங்கு. 82

தன்னினும் போதையிலை தான்கண்டு மூழ்காது
அன்னிபகஞ் சாவதி யாசித்துத்-தன்னறிவை
யப்போதை மேலிட்டி லாழ்த்துகின்ற ஞானிகளே
எப்போது விட்டிருப்பீ ரிங்கு. 83

உலகமயல் போதைதனை யொன்றுனும் போக்கற்
கிலதனாற் றுக்கமின்றி யென்றும்-மலினமுறும்
அன்னியபோ தைக்கே யலைந்துழலு ஞானிகளே
என்னபடி யுய்வீ ரினி. 84

அறிவு மறிவனவு மாமிரண்டு கூறில்
அறிபவற்றி லாராய்ச்சி யன்றி-யறிவுதனில்
இல்லா தயல்போதைக் கென்றுமுழல் ஞானிகளே
பொல்லா மயலெங்ஙன் போம். 85

அறிவுநாட் டங்கல்லா தனந்தநூல் கற்றும்
அறியாமை போக்கற்கிங் காமோ-வெறிவிலைக்கு
வாங்குகின்ற ஞானிகளே மாளாச் சுயவெறியை
நீங்கிநிற்ப தென்றோ நிறைந்து. 86

தற்போதை மேலாக்கித் தானதனில் மூழ்காதிங்
கற்போதைக் கலைவீ ரையையோ-கற்பில்லா
ஞானிகளே யேன்கற்றீர் ஞானநூ லேத்தற்கோ
ஆனதித னல்மடமை யாம். 87

ஆண்பெண் ணலியன் றருவுருவு மேதுமன்று
காண்மினிதைக் கேவலத்திற் கற்றுணர்ந்தீர்-மாண்புடையோர்
சொல்வதையுங் கேளீர் சுயபுத்தி யுங்காணீர்
கல்வியெல்லாம் யாதுக்கோ கற்று. 88

நாமே யறிவாகி ஞஞ்சச்சி தானந்தம்
நாமே யசத்தாதி நாமயங்கில்-நாமாறென்
றுன்னும் விசார மொழியாது நிற்றியேல்
தன்னந் தனியாவை தான். 89

சிதாகாச மன்றியிலை சிந்தையெனில் யாதும்
சிதாகாச மன்றியுண்டாய்ச் செப்போம்-சிதாகாசத்
துண்மைநிலை நாட்டத் தொழியாது நிற்றியேல்
உண்மையதா யாது முறு. 90

வெளியுலகாக் காணின் வெளியிருளாத் தோன்றும்
வெளியை வெளியாக மெய்யாத்-தெளிந்துணர்ந்து
காணிற் சதாகாலங் காணு திருளெங்குங்
காணுஞ் சுயஞ்சோதி காண். 91

உடலிலக்காற் றுன்ப முணர்விலக்கா லின்பம்
உடல்கற் பனையதனு லுண்மை-திடம்பெறவே
மூன்றுடலைக் காணுது மூன்றுடலா நிற்பதறி
வூன்றியதைக் கண்டிங் கொளிர். 92

உடலிலக்கு மூன்று மொருங்கே யொழிக்கத்
திடவுணர்வு தானே திகழும்-இடமில்லை
ஐயமுறற் காதலினா லாய்ந்துணர்ந்து நிற்றியேல்
பைய வகலும் பயம். 93

தேகநோய் மானதநோய் செப்புங்கால் மும்மூன்றாந்
தேகநோய் வாதமுதல் நீராநோய்-சோகமனம்
நோய்மயலோ டையம் நுவலுந் திரிபிவையேன்
மாய்வுறு மில்லை வலிந்து. 94

சிதம்பரமே சிவன் சிதம்பரமே யீசன்
சிதம்பரமே யெவ்வுலகுந் தேரில்-சிதம்பரமோ
சிற்சோதி வெற்றவெளி நீர்மையிதி லையமில்லை
கற்பிதமே மாறுக்கில் காண். 95

சிந்திக்குஞ் சிந்தை சிதம்பரமே யெவ்வுயிர்க்கும்
சிந்தித்துப் பார்க்கிற் றெரியுமே-யிந்தநிலை
கண்டிருக்கி லெம்மையுங் கட்டறுவை தையமில்லை
உண்டுகொலோ விந்நெறிபோ லோது. 96

சிதம்பரமே நானெனற்குச் செம்பொருளாத் தேரில்
சிதம்பரந்தா னாமளவுஞ் சிந்திக்-இதாகிதம்
உள்ளபோ தெல்லா முணர்வுருவாத் தற்காணில்
எள்ளளவுங் காணா திவை. 97

தானேமெய் பொய்யதாத் தானலவாக் காணறிவு
தானேதென் றாய்ந்ததுவாத் தானுமில்-வானாதி
கற்பனைசின் மாத்திரமாக் கண்டோன் றிரண்டற்று
நிற்பனுவே நீக்க நிலை. 98

ஆலவுரு காணாகைத் தோற்றுதெனின் மாறாது
சாலவதைக் கண்டிருந்து சாதனையே-ஆலவுரு
மெல்லக் கரைவதெனின் மேலெவ்வா றாகுதென
மெல்லவெளி யென்றான் விழைந்து. 99

எதைப்பொருளாக் கண்ட லதையாஞ் சுகித்தல்
எதுவும் பொருளலவே யெங்கும்-அதனும்
ஆராய்ச்சிக் கண்ணே யபாவமாப் போவதினால்
ஆராய்ச்சி யேதக்க தாம். 100

அறிவிலே தோன்றி யறிவில் விளங்கி
அறிவில் மறையு மனைத்தும்-அறிவன்றி
யில்லையெனக் காண்போர்க்கே யில்லை விழிப்புறக்கம்
இல்லையோ வேனையருக் கிங்கு. 101

எப்பொருளு மெங்கெங்கே யெத்தன்மைத் தாயிடினும்
அப்பொருளைச் சோதனைசெய் தாங்காங்கே-மெய்ப்பொருளாக்
காண்ப தறிவெனலைக் கற்றுமுண ராதெவன்கொல்
மாண்புடையோ யென்ன மகன். 102

தோல்மூடி யாவுயிர்க டோற்றுதற்கென் செய்வனெனில்
தோல்மூடி பூதமதாஞ் சோதனையில்-சால்புணர்ந்தோய்
அல்லவல்ல வென்றே யறிவாகு மட்டெவையு
மெல்லமெல்ல வாய்ந்துநிற்றல் வீடு. 103

ஏதேது கண்டாலு மேதேது வந்தாலும்
ஏதேது பந்தத் திருந்தாலும்-ஏதேதுந்
தானாகா வண்ணந் தனித்திருக்கக் கண்டுணர்க
ஞானாகா ரத்தத்தா னன்கு. 104

எதிலுங் கலிக்கா திருந்தறிவா நின்று
பதியாதி சோதித்துப் பார்த்திங்-கதுவதுவாய்
ஆகாது நிற்றி யதுவேகாண் முத்திநிலை
மோகாதி போக்கு முடிவு. 105

நானென்னு ரெங்குமிலை நானென்ப தேதுமல
நானறிவ தாத்தீர நானுணர்ந்தேன்-நானறியுந்
தத்துவம்போ லன்றதனாற் சங்கற்ப மற்றவரு
சத்துசித் தானந்தந் தான். 106

அறிவுதனு வாவளவு மன்னியமே யின்பம்
அறிவேநா னாயிடலங் கப்பால்-அறிவின்பம்
என்னுந் துவித மிறந்தொளிரு நானெனலை
யுன்னுமுறை கண்டின் றுணர். 107

அண்டபிண்டம் யாவு மறிவாக் கரைதலினால்
அண்டபிண்டம் யாவு மறிவுருவே-அண்டபிண்டம்
ஆவதுவே பந்த மழிவதுவே முத்திநெறி
ஆவதழி வல்ல வறிவு. 108

பிரதிபிம்ப நானென்னிற் பேதமையே துன்பம்
திரவறிவு நானாகி றிண்ணம்-பெருவெள்ள
மானந்த மாத லணுவளவு மையமிலை
தானறிவா னந்தமென் ருன். 109

சகமாதி யுண்டென்று சாற்றலு நாமே
யிகழ்தலு நாமே யிலையென்-றகமலவே
மூடந் தெளிவளவே முன்பின் னிலையிரண்டும்
நாடறிவை நானென்ன னன்கு. 110

அல்லவற்றை நானெனலு மன்றெனலு வவ்வறிவே
அல்லவே யுண்மையிவை யாரோபம்-மெல்ல
அறிவுருவைக் கண்டிங் கதுவாகி லின்பம்
பிறிதாகா யென்றும் பிறழ்ந்து. 111

நானெனற்கு மெய்வடிவம் ஞானமே வேறில்லை
ஏனையவை பொய்வடிவ மீங்கழியும்-ஞானமதைக்
கண்டதுவா நின்றக்காற் காணுமோ சாவச்சம்
பண்டுருத்தா னாகியதாற் பண்பு. 112

உருவமன்றிச் சாயை யுளதே துளவாம்
தெரிவன்றி யெப்பொருளுந் தேரில்-தெரிவன்றி
ஆதார மாதேய மற்றபொரு ளில்லென்பம்
யாதேனு மைய மிலை. 113

அன்றல்ல வாமல்ல வப்பாலிப் பாலல்ல
நன்றல்ல தீதல்ல நானுமல-வொன்றுபல
அல்லவென நின்ற ததுவாதல் முத்திநெறி
யில்லையே யெம்மதத்து மே. 114

பூதமன்றித் தேகமிலை பூதமிலை வானன்றி
யீதுமிலை சிந்தையன்றி யிம்மனமும்-போதமன்றி
இல்லையா நந்தமன்றி யிப்போ தமுமில்லை
இல்லையிதுந் தானன்றி யே. 115

அறிவே சுகசொருப மன்னியமொன் றுண்டேல்
அறிவன்றி யுண்டென்ன லாகும்-நெறிமுறையில்
ஆயுங்கா லில்லையதா லாநந்த|மேயறிவாந்
தூயநிலை யீதே துணிவு. 116

குறிபாவாம் போக்கலெங்ஙன் குன்று மயலேல்
குறியைக் குறியாக் குறித்து-நெறிமுறையே
சற்குருவை யண்டிற் றனியே விளங்குமெனும்
சிற்சோதி யெங்குஞ் செறிந்து. 117

அகண்டமும் பாவனையே யல்லவோ யுண்மை
அகண்டமெனல் கற்பிதமே யன்றேல்-அகண்டமாப்
பாவிப்பைத் தள்ளியெங்கே பாவனைநின் சூக்கவுடல்
பாவித்த துன்னையே பார். 118

---

## எதார்த்தவாதம்.

தேகாதி தோற்றத்தாற் சீவே சுரரென்பாய்
தேகாதி தோற்றமன்றிச் செப்புவையோ-தேகாதி
தோன்று மிடமெங்கே தோன்று விடமெங்கே
யூன்றிப்பார்த் தங்கேநீ யோது. 1

எல்லா மறிவமிச மேனுமறி வன்றென்ன
வெல்லாருங் காணு திருப்பானே- னெல்லா
நினைப்பு மறப்பாகா நிலையுருவம் பெற்றால்
அனைத்துருவு நாமென் றறி. 2

ஒருபோது தோன்றி யொருபோது தோன்றாப்
பெரிதா முலகப் பிரமை-யிருபோதும்
நாமிருக்க நம்மையே நாங்கண் டிடினிலையேற்
காமமயக் கெங்கேநீ காண். 3

தூலாதி நீயாயிற் றூலாதி யாய்த்தோன்றுந்
தூலாதி யாகாயேற் றோன்றாவே-சீலமாஞ்
சிற்சொருப நீயாயிற் சிற்சொருப மாவிளங்குந்
தற்சொருப மேதான தால். 4

என்னுணை யென்னுணை யேகபரி பூரணமா
யென்னைச் சுயஞ்சோதி யென்றறிந்தேன்-இந்நா
ணிலத்திரிபா னீர்போ னிலையறிந்தேன் வேறுகச்
சொலத்தகுங்கா ணன்னியமுஞ் சொல். 5

தன்மையு முன்னிலையு தானே படர்க்கையுமா
யன்மையுமாய் நின்றதெங்கு மவ்வெளியே-தொன்மையதாய்
ஆண்பெண் ணலியென் றனேக விதமாகக்
காண்பனவு மவ்வெளியே காண். 6

எதுதானே கூடத்த னேதோ பிரமம்
எதுதா னயிக்கமெனி னெங்கும்-புதிதாகப்
பார்க்குந் தெரிவுதனைப் பார்ப்பதுதான் கூடத்தன்
யார்க்குந் தெரியா திது. 7

அத்தெரிவு தானே யகண்டபரி பூரணமாய்
எத்திசையுங் காணு திலகுமே-அத்தருண
மாகும் பிரமந்தா னவ்வெளியே தானுத
லாகு மயிக்க மது. 8

அவ்வெளியே கூடத்த னவ்வெளிதா னேபிரம
மவ்வெளியே தானேக மாகுமே-யிவ்வெளியி
லித்தனையுங் காணுதா ரெவ்விதத்தா லும்வழுக்கித்
தத்தித் தவழ்வாரே தான். 9

ஏதுக் குறக்கந்தா னேதுக்குச் சாதனங்க
ளேதுக்குச் சும்மா விருக்கையெனி-னேதுஞ்
சுகமடைவா னவ்வெளியிற் சொல்லினது வொக்கும்
அகமமதை யங்கே யறும். 10

ஆனந்தமே பிரம மாமறிவு கூடத்தன்
ஆனந்தப் பேறறியா ராங்குரைப்பர்-ஆனந்தம்
அவ்வறிவுக் கன்னியமே லத்துவிதத் துக்கானி
எவ்விதத்தா லுய்வா ரிவர். 11

தானறிவா னந்தமொழி யாகுந்தற் காணர்
தானறிவென் பார்சொல்லார் தற்கண்டார்-தானுகுஞ்
சங்கற்ப சாலச் சகத்தோற் றரவறிவென்
றிங்கற்பங் காணு ரிவர். 12

சிற்சோதி தானுகுஞ் சிற்சோதி யாமறிவு
சிற்சோதி யானந்தஞ் சிந்திக்கின்-அற்புதமாம்
இந்திரியஞ் சிற்சோதி யேகவெளி யாமளவும்
எந்தவிதத் தாற்போ மிவை. 13

தன்னுருப்போ லெவ்வுருவுந் தானாகுஞ் சந்ததமுந்
தன்னுருப்போற் பாவிக்கிற் சத்தியமே-தன்னுருவுஞ்
சின்னாள் பழக்கம்போற் சீவன் செகத்தாகும்
பன்னாள் பழக்கத்தாற் பார். 14

கற்பனைக ளற்றவொளி காரணமு மற்றவொளி
யற்புதமாய் நின்றவொளி யாயுங்காற்-சிற்சொரூப
நானா விளங்குமொளி நாதங் கடந்தவொளி
தானேதா னாகுமொளி தான். 15

எப்போதுங் காணாதா ரிவ்வொளியைக் கண்டளவில்
எப்போதுங் காணாத வின்பத்திற்-றப்பாது
மூழ்கிக் கிடப்பரெனின் மூழ்கினா ரேன்விடயத்
தாழ்குவா ரந்தோ வறை. 16

குறியிழக்கிற் காணா குறிகடந்த தன்னைத்
தறிபோ லிருத்துஞ் சமாதி-பிறிதாகும்
இந்நிலைவிட் டாலென்னி னெவ்வாறு தற்சுகமா
முன்னிலைக்கு மேலா மொழி. 17

தன்னைவிட வேறுண்டேற் றானின்ப மாகாது
தன்னைப் புறங்காணிற் றான்வேறாம்-தன்னைத்தா
னெவ்விடத்துங் கண்டக்கா லின்பந்தான் வேறில்லை
யிவ்விதத்தான் மெய்யா மிது. 18

வித்தியா னந்தமோ விஞ்ஞானத் தாமதுவுந்
தத்தொமசி வாக்கியத்தாற் றான்விளங்கும்-இத்திறத்தான்
ஆக்கையா லன்றியுயி ரார்தா னறிகிற்பார்
வாக்கியத்தா லன்றி வரா. 19

வாக்கியத்தா லன்றியிது வாரா தெனன்மெய்யே
வாக்கியமுஞ் சிந்தனையும் வந்தவிடம்-நோக்கி
னுணர்வெளியின் வேறன் றுணர்வெளியே யாமென்
றுணரினது கற்பிதமன் றோது. 20

என்னையே பல்லுருவா யென்னிடத்தில் யான்பண்ணி
யென்னையான் மோகித்து மின்புற்று-மென்னை
விருப்புவெறுப் பாய்க்கண்டும் வீணெண்ணங் கொண்டும்
இருப்பதுதான் பொய்யோ விசை. 21

ஐந்தறிவுக் கேதிடமோ வையோ மனமென்னின்
இந்தமனத் துக்கிடந்தா னெங்ஙனே-இந்தமனம்
ஆன்மாவி லென்றுணர்த்தி னான்மாவுக் கேதிடமோ
ஆன்மவடி வாஞ்சிவத்தி லாம். 30

காண்பானைக் காண்பார்க்குக் காணுலகங் காணாதே
காண்பானைக் காணார்க்குக் காணுமே-காணுலகம்
நம்மிடத்தி லேதோன்றி நம்மிடத்தி லேமறையி
னம்மையல்லா துண்டோ நவில். 31

நம்மையறி வேவடிவாய் நாங்காணி னெப்போதுஞ்
செம்மை யுலகத் திரள்காணோம்-நம்மை
யறியாத நாளெல்லா மாணவத்தாற் கெட்டோம்
அறிவே யுலகென் றறி. 32

அப்யாசி நல்ல வனுபவியா ரூடரெனல்
அப்யாசி நிட்டைவிடா தச்சோதி-கைப்பில்
இதுநா னிதுநா னென்றபோ துங்காண்பன்
அதிசயா னந்தமல தால். 33

அனுபவியோ வென்னி லகலா தொளியின்
முனங்கண்ட தூலாதி முற்றுங்-தினங்காணிற்
சிற்சோதி யாயொளிருஞ் செல்வவிளை யாட்டுடையன்
அற்புதா னந்தாழி யான். 34

ஆருட னேவென்னி லற்பமுங்கா ணதலகைப்
பேரொளியா நின்றொளிர்வன் பேதமுறான்-தேரின்
அகம்புறமொன் றில்லா னறியாற்போற் காண்பான்
இகம்பரமொன் றில்லானென் றெண். 35

ஆரூடர்க் கில்லை யனுபவிக்கொன் றப்யாசிக்
கோரிரண்டு சென்மமென வுய்த்துணர்க-தேருங்கால்
இந்நிலையி னின்றொழுகி னிக்கணிதந் தப்பாரே
இந்நிலைபோல் வேறொன் றிலை. 36

அசேதனந்தா னம்மை யறிவாகக் காணின்
அசேதனமா மாயையுந்தா னங்கே-நிசாதிகடாம்
இல்லாத சுத்த மிருப்பதுதான் சுத்தமென
வெல்லா மிருந்து மிலை. 37

இம்மாயை போதற் கெதுதந் திரமென்னிற்
சும்மா விருக்கிற் சுகஞ்சுகந்தான்-இம்மாயை
கேள்விமன னத்தெளிவுங் கேடில் சமாதியுடன்
ஆள்வெளிப்பட் டாலிங் கறும். 38

கேள்வி யுபக்கிரமங் கேடிலுப சங்காரம்
நாள்கடக் கும்படியா நற்பலமுங்-கோளில்
அபூர்வதையுற் பத்தி யருத்தவா தங்கள்
அபூர்வஞா னக்கேள்வி யாம். 39

உபக்கிரமஞ் சித்தே யுலகாதிக் காதி
உபசங்கா ரந்தா னுலகை-யபாவாத
மாக்க மனத்தி லறிவாக்கி யம்மனத்தைத்
தாக்கற்ற தாவிளங்க லூன். 40

இவ்விரண்டு மொன்றே யினித்தவப்பி யாசந்தான்
திவ்வியசிற் சோதியே தேற்றமே-யெவ்விடத்துங்
கண்டிதுதா னென்றே கணத்தோறு மாறாது
கண்கள்கண் டேபழகல் காண். 41

பலமாவ தெங்கும் பரிபூ ரணமா
யலகிலாச் சிற்சோதி யாகி-யுலகனைத்துந்
தன்னையன்றிக் காணாமை சாற்றுகின்ற பூர்வதையோ
உள்ளளவுக் கும்மடங்கா தோர். 42

காட்சியள வுக்கன்றி காணா தறிவளவுக்
காட்சியுற் பத்தியெனி லாயுங்கால்-மாட்சி
யறிவே யுலகாதிக் காதியெனக் காண்டல்
அறிவாளர் சொல்வா ரறி. 43

அருத்தவா தந்தா னறிவே வடிவமா
யிருக்கும் பிரமத் தியற்கை-சிருட்டிமுதல்
ஐந்துக்குங் கர்த்தா வதுதானே யன்றியில்லை
யய்ந்துமோ மாறென்றே யோர். 44

சிரவணந்தா னிவ்வாறு செப்பு மனனந்
திரிவிதத்த தாமவற்றைச் செப்பில்-ஒருவாத
உத்தியனு மானமே வோயாத தர்க்கமிவை
யுத்தியது கேடொ னுற்று. 45

நிதித்யாச னந்தா னிலையோக மைந்தாம்
மதிக்கிலவை மந்திரமு மாயை-சிதைக்கும்
பரிசமுடன் பாவம் பழுதிலபா வத்தோ
டரியர்மா யோகமென லாம். 46

மந்திரந்தான் யாதென்னின் மாவாக் கியமாதி
மந்திரத்தை யுச்சரிப்பான் மானதமும்-அந்தமுதல்
எல்லாம் பிரமத்தி லென்று முறைந்திருக்கை
நல்லோ ரறைவார் நயந்து. 47

பிறப்பிறப்புப் பிணிமூப்புப் பேராச்சாக் காடு
மறக்கார்க் கனுபூதி மன்னும்-மறக்கில்
ஒருபோது மின்பமிலை யோராதார்க் கின்பங்
கருதிலிது நாமே கரி. 48

பரிசந்தான் யாதென்னிற் பன்னுசிர நாப்ப
ணரிதாரு மானம்வெளி யாங்கே-பிரியாமற்
கண்டுணர்ந்து நிற்கையெனக் கற்றுணர்ந்தோர் செப்பமிகக்
கண்டுணர்ந்து நிற்பாய் கனிந்து. 49

பாவயோ கந்தானே பன்னுதற் கஞ்சிரமா
மேவு திசைச்செவியா மேலாகத்-தாவுகதிர்ச்
சந்திரனுஞ் சூரியனுஞ் சாற்று மிருவிழியா
நந்துமறை நன்முகமா நாடு. 50

வானுந்தி பூமியடி மன்னு விராட்சொரூபந்
தானுன்னி யொவ்வொன்றுத் தள்ளியே-தானவ்
வவயவியைக் கண்டுறங்க லாமென்பர் மேலோர்
பவவலிமைக் கஞ்சியே பார். 51

அபாவயோ கந்தா னணுகாப் பிரமத்
துபாதி யனைத்து மொருவிச்-சுபாவநிலை
கண்டிரங்க லென்றுணர்ந்தோர் கண்டுரைப்ப ரிந்நிலையைக்
கண்டுகளிப் பார்க்கே கதி. 52

உன்ன லொழித லுணராமை யுற்றுணர்தல்
என்னு மிவற்றிலரு மேகவெளி-தன்னை
யெவற்றி னிடையு மெவையுந்தன் னுட்கண்
டவத்தை யிறத்த லறி. 53

இதுதான்மா யோகமென லிவ்வாறு காணின்
அதுவிதுநா னென்னுமை லாவார்-இதுபோலு
முத்திநெறி யில்லையான் மூதுணர்ந்தோ ராயுங்கால்
இத்திறங்கண் டுய்வா ரிலை. 54

அறிவாகத் தன்னை யறிந்தாலும் போகாச்
செறிவாம் விடயச் செருக்கை-யறிந்தோர்
பிரதிபந்த மூன்றுப் பிரித்துரைப்பார் நல்லோய்
திரவறிவாற் கேட்டுத் தெளி. 55

பூத பவுதிகமும் போன்றுவர்த்த மானமெனல்
பூதப் ரதிபந்தம் போனசுகக்-காதல்
இழுத்துழற லென்ப ரிவர்பௌதி கந்தான்
அழுத்தல்வரு போகத் தறி. 56

வர்த்தமா னந்தான் வனிதாதி கண்டலைதல்
அர்த்தமிது வென்றே யறுதியாற்-சற்கருமத்
திவ்வனர்த் தந்தீங் கியம்புஞ் சமாதியிரண்
டவ்விரண்டுஞ் சொல்வே னறி. 57

சவ்விகற்ப நிர்விகற்பஞ் சாற்றினிவை மும்மூன்றும்
எவ்விகற்ப மாற்றுமவை யென்னையெனிற்-றிவ்வியநற்
சத்தானு வித்தமொடு சாற்றுந் திரிசியமும்
ஓத்ததுவே நிர்விகற்ப மோர். 58

சத்தானு வித்தந்தான் றன்னைத்தா னுக்காணல்
மித்தைத் திரிசியந்தான் மெய்யுணர்வில்-எத்தனையும்
காண லதுவாகுங் கண்டவற்றை மெய்யுணர்வாக்
காண னிருவிகற்பங் காண். 59

நம்மைவிகற் பித்துணரி னுமவ்வா றுத்தடிப்போம்
நம்மைநே ராக்காணி னுமாகேம்-நம்மை
பசுபதி பாசம் பகுப்பாகிக் கெட்டோம்
நிசவிழிப்பா லுண்டோநீ நேர். 60

அகம்புறமென் றில்லாம லாயுங்கான் மாயும்
அகமமதை யென்றிரண்டு மாயிற்-சகமாதி
தோற்றுது நில்லாது தோற்றினு லுஞ்சித்தே
மாற்றினர்க் குண்டோ மயல். 61

சீவன் விதேகம் தெரியிரண் டாமென்பர்
சீவன்முத்தி யாதென்னிற் செப்புவன்யான்-சீவன்
அறிவே வடிவா யனுதினமுந் தன்னைப்
பிறிதாகக் காணாமை பின். 62

எப்பொருளு மெவ்விடமு மெவ்வாறுந் தோற்றிடினு
மெய்ப்பொருளாக் கண்டொளிர்தன் மெய்யறிவு-தப்பி
விடினுஞ் சுகமிழுத்து மெய்யறிவ தாக்குந்
தொடுமோ விடயசுகஞ் சொல். 63

அடிப்பானை தட்ட வடுக்கென்ன வீழும்
அடிப்பானை காணத் தனையும்-தடிப்பின்றி
யெல்லாஞ் சுயஞ்சோதி யேகவடிவாய்க் காணல்
இல்லாத நேர மிலை. 64

உறக்கம் விழிப்புண் டெல்வடிவ மாயின்
உறக்கம் விழிப்பெங்க ளுண்டாம்-மறப்பற்றுச்
சித்து வடிவாயிற் சிதையா தவத்தைதொறும்
ஒத்தே யிருந்தறிவ தோர். 65

அறிவன்றி நானுண் டகம்புறத்தை யேற்கில்
அறிவில்லாச் சீவருள ராயின்-அறிவன்றி
நானென்ப தில்லையா னனென் றறிவுரைக்கும்
நானறிவென் றின்றுணர்ந்தே னன். 66

நானே யனைத்தாவ னனைத்து மாகாவே
நானென்ப தென்னபொரு ளடுங்கால்-நானே
விசுவாதி யானே விவகாரி காதி
நசியெ னவைபோல நான். 67

நின்றாலுஞ் சென்றாலு நீங்காச் சுகித்தாலுந்
தின்றாலுஞ் செய்கைபல செய்தாலும்-ஒன்றே
யலவெனினு மாமெனினு மையந் திரிபிந்
நிலையெட்டி ராமையென நேர். 68

என்னையான் பல்லுருவா யேமாந் தியற்றியெனை
யன்னியமாக் கண்டலைந்தே னாயுங்கால்-இன்றனென்
றிப்போ தெனைக்கண்டே னேகவெளி யாயறிவாய்
எப்போது மாறாமை யென். 69

எல்லாமா யல்லவுமா யிப்போ தெனைக்கண்டேன்
எல்லாமா யாயினன்றே வல்லவெனல்-இல்லையே
என்னையா னுற்றுணரி னென்றே திடங்கொண்டே
னன்னியமொன் றில்லாமை யால். 70

செயலனைத்துஞ் செய்துஞ் செயலில்லா தேது
நயந்துநய வாததெது நானென்-றயவின்றித்
தன்மயமாய் நிற்பதெது தானே யதுவாதல்
நன்குணர்ந்தோம் நால்வகையா நாடு. 71

பிரமவித் தேவரனும் பேசுவரி யானும்
அரிதாம் வரிட்டனுந்தா னுவர்-தெரியின்முத்
தாவான் குடும்பத் தழுந்திப் பலசெயினும்
மேவான் விருப்பமதின் மேல். 72

விருப்பமிலா னெம்முயற்சி வேண்டிச்செய் வானேன்
விருப்பம் வினோதமன்றி வேண்டான்-விருப்புற்றுப்
பாரம்பல்ல வென்றுகண்டான் பாவித் தழுதாலும்
பாரம்பழுகை மெய்யோரீ பார். 73

தோற்ற முருவேடம் தொலையா விடஞ்செய்கை
சாற்றுமிவை பந்தமெனத் தான்றவிர்ந்து-காற்றிற்
றிரிவான் வரனென்பர் தீர்ந்தவிடங் கண்டார்
திரிவானே னென்றறையிற் றேர். 74

வரியானே வென்னில் வரும்போகந் தன்னாற்
றெரியான் பிறராத் தெரிவான்-றெரிவன்றிக்
காணான் பிறிதொன்றுங் காணின்வே றுயவற்றைப்
பேணான் றனையன்றிப் பின். 75

வரிட்டனே வென்னில் வரும்போகந் தன்னைத்
தெரிவித்தா லுக்தெரியான் செப்பான்-இருக்குநிலை
என்று மயர்வொப் பிழிவிலை யன்னேனுக்
கின்றே பிறப்பிங் கினி. 76

சீவன்முத்தி நால்வர்நிலை செப்பினது போலுணர்த்தாய்
தாவில்விதே கத்திநிலை தான்கேட்கின்-மூவருக்கும்
எட்டாத வல்லமனே யிங்கிதற்கு மேற்கோளாம்
தட்டா நிலையதனற் றுன். 77

மாறாம விந்நிலையின் மன்னிச் சுகிப்பார்கள்
மாறாப் பதவிநிலை வந்தாலுஞ்-சீறார்
சரியைகிரி யாயோக சாதனத்தான் ஞானந்
தருமிந் நிலையிங்கு தான். 78

வேடங் குணஞ்செய்கை வேறோநா னன்றென்னின்
நாடுங்கா லாமல்ல நானன்றே-தேடி
எனையெங்குங் காணளவு மிம்முயற்சி வேண்டும்
பினைவேறிங் குண்டாயிற் பேசு. 79

---

## ஜீவகாருண்ய விளக்கம்.

ஆமாமென் றென்பனவு மல்லவல்ல வென்பனவு
காமே நமதிடத்தி னம்மையே-யேமாந்
திருப்பதா லீதறியோ மென்றோ வுயிர்கா
ளுருப்பலமாக் கோட லொழிவு. 1

எப்பிறவி சித்திரங்க ளெவ்வறிவுக் கென்றுமுள
விப்பிறவி சித்திரமா வேனுனீ-ரொப்புயிர்கா
ளாடிபோ னின்மி னறிவைத் துலக்கியே
நாடுமோ துக்க நமை. 2

தெரிவன்றி யெங்கே செகம்பா ழிரண்டுந்
தெரிவாக நில்லாதென் சித்தந்-திரியாம
லையோ வுயிர்கா ளறுதியது வேறில்லை
னையா திருக்க நமக்கு. 3

நான்றேக மென்றாற்போ னறிவாக் காணாதே
னான்றேக மாமோ வுறவுயிர்காள்-போன்றிருந்தோங்
கண்முன் னுடனழுவக் கண்டுமுற வென்கொ
லெண்ணாமுறா தென்னோ விதை. 4

சிந்தையி லன்றோ செகமாதி கண்டொடுங்கல்
சிந்தை படமுலகஞ் சித்திரங்கள்-சிந்தைதனைக்
கண்டிருக்கிற் சித்திரங்கள் காணுமோ நம்மவர்கா
ளுண்டுகொல்லா துன்ப முமக்கு. 5

ஐயறிவு போக்கி யமைந்திருக்கி லென்னபயன்
மெய்யறிவு சற்றேனு மேவாதே-யையையோ
வெப்பிறப்பு நாமாவோ மீதுநா மாவிருக்க
வெப்படிதான் ஞானிகா ளிங்கு. 14

அறிவுநா மாக வயலெங்ங னுண்டிங்
கறிவகலங் காணுதென் ஞய்ந்து-வறிவு
முதற்கருவி யன்றோ முடிபெங்கே சுற்றீ
ரிதற்குவிடை ஞானிகா ளென். 15

பகர்வருசிற் சோதி படுகுழி வெட்டி
யகமமதை யுற்றெழா தாழ்த்தி-நிகரின்றித்
தொல்லை யுருவானேன் சுகப்பே றெலாங்கடந்து
எல்லையில்பே ரின்பமே யிங்கு. 16

ஆனந்தந் தேடி யதிதூர மென்றநுத்தேன்
ஆனந்த மிப்போ தணிமைத்தே-ஏனென்ருற்
சிற்சோதி நானுத் தெரிசித்தே ஞகவிதில்
அற்பமும் தூரமிலை யாம். 17

ஆழ மறிவார்தன் ஞழ மறிந்தவரே
ஆழம் பிறிதளந்தென் ஞவதெவன்-ஊழை
அகற்று நெறியில்லை யதுவதுவ தானுல்
அகப்பிரமை யெங்கே யறும். 18

தானுகு மேட்டிற் சகலார்த்த முங்கிடக்க
வேஞே வயலேட்டி லேநுவது-தானேதா
ஞதற் கிதுநெறியோ வையையோ ஞானியென
லேதுக்கோ காணே னிவண். 19

அறிவென்னல் சோதி யறியாமை பாழே
பிறிதென்னல் யாவும் பிழையென்-றறிவொளியை
மாருது கண்டிருக்கின் மாயா மயமங்கே
யாருத் துயரே தவண். 20

உடலைநா னென்றளவு மோயாப் பிறப்பே
திடவறிவை நானென்னிற் றீர்வா-மடையீ
ரிளைப்பாறற் கேற்ற விடமறிவே யின்றே
விளைப்பூட்டற் கேனை யிடம். 21

## சுவானுபூதி விளக்கம்.

அறிவே சலமாகு மாகாய மாழி
செறிபூத நான்குந் திரையா-நிறையண்ட
கோடிப் பகுதி குமிழியுடற் பேதநுரை
கூடியறி வாதல் குணி. 1

நினைவே யுலக நினைவொடுக்கத் தெங்கே
நினைவே நீநாகுக நிற்க-நினைவோ
சுயஞ்சோதி லேசந் துணிந்தார் பிழைத்தார்
மயங்கினர் கெட்டார் வலிந்து. 2

நானல்லா தில்லையதா னுனென்ப தொன்றேயா
நானல்லவை யெல்லா நானுமோ-நானென்ப
தெல்லா மறிவன்றோ வேகநீர் பல்லசுவை
யல்லவோ பேதமெவ னங்கு. 3

ஐயந் திரிபே யளவின் மதபேத
மையந் திரிபகல்வே யத்துவிதம்-பொய்மெய்யை
நானெனலிற் காணலா நம்பிக்கை சோதனையி
லேனுமக்கிங் கைய மிதில். 4

அறிவைப் படியீ ரயலைப் படிப்பீ
ரறிவை யறீயீ ரயலை-யறிவீ
ரறிவைச் சுகியீ ரயலைச் சுகிப்பீர்
பிறவி யறுப்பதெவன் பின். 5

பார்ப்பானைப் பார்க்கிற் பரஞ்சோதி யாயொளிரும்
பார்க்கத் தெரியாதேற் பாழுலகாந்-தீர்க்கத்
தெரிசனமுஞ் சித்திகளுந் தீர்க்குமோ மாயைத்
திரிபுதனை யாயாத் திசை. 6

எவ்வுயிருஞ் சிற்சோதி யேகவெளி யாயிருக்க
வெவ்விதத்தா லன்னியத்தை யானெனதென்-றெவ்விடத்துங்
கண்டு களிப்பதெவன் கற்றோரு மற்றோரு
முண்டுகொலோ வாய்தலின்க ணுற்று. 7

தன்னை யயலாகத் தான்காணின் மானதமாந்
தன்னைத்தான் கண்டிருக்கிற் சால்புணர்வாம்-பின்னமிலை
தானே யிருமையதாற் சார்த நடுநிலையே
யேனோ விதிலைய மிங்கு. 8

சர்வமித்தை யென்பதூஉஞ் சர்வம்பர மெனலூஉஞ்
சர்வ முணர்ந்தக்காற் சத்தியமே-சர்வமெனல்
சித்துசட பேதமெலாஞ் சிர்தூக்கி யாயுங்கா
லுத்தியுடன் சோதனையு மொத்து. 9

சித்தப் பிராந்தி செகப்பிராந்தி யென்பவற்றுட்
சித்தப் பிராந்தி செனியாதேல்-மற்றைச்
செகப்பிராந்தி யென்செய்யுந் தீரா நிழலா
யகத்தொளியா நிற்கு மமைந்து. 10

பார்ப்பானைப் பாராத பார்வை பிறவிதருந்
தீர்ப்பிதுபோற் சத்தியமாந் தீர்ப்பில்லை-பார்க்குங்கா
லெங்கிருந்து வந்தோ மினிப்போ மிடமெங்கே
தங்கு முடலலவே தான். 11

நானேநா னென்போனு நானேநான் மாறாக
நானலனு நின்றோனு நானேநா-னானெனலைக்
காணார் புதைப்பர் கரியாக நீறுசெய்வர்
மாணு மனிதர் மறந்து. 12

எத்தனைதான் கற்றாலு மேதுவித்தை தேர்ந்தாலும்
பித்து மனமடங்கற் பெற்றதோ-சத்தலாத்
தேக வுறவைச் சிறிதும் விடாக்கண்ணே
யேகமாய் நிற்பதெவ னிங்கு. 13

அறிவிலக்க ணந்தன்னை யன்னிய வேட்டி
லறிந்தாற் பிறவி யறுமோ-வறுதே
யறிநதபடி தன்னேட்டி லன்னதைக் கண்டாற்
பிறந்திறுவ தெங்ஙன் பிழை. 14

அறிவன்றி யானந்த மன்றி யறிவே
தறிவுதனைக் காணார்க் கயலாம்-பிறிதன்றே
தன்றெளிவுந் தன்மருளுந் தள்ளியுரைப் பாருண்டோ
வென்றெனவு மன்றெனவு மோது. 15

ஒருபோது தூல மொருபோது சாயை
ஒருபோது பாழிவ் வுணர்வைத்-திரிபோதும்
ஆய்ந்திருக்கிற் சோதி யயலன்மை தானுதல்
போயிருமை நிற்றல் புதை. 16

## பிரத்தியட்சானுபூதி விளக்கம்.

சிதம்பர மன்றி யரியா னென்னல் சிறிதுமிலை
சிதம்பர மென்னுந் தலத்தி லறிகுறி செய்வதெவன்
சிதம்பர நம்முள மென்னத் தெரிக்கத் தெரிகிலிர்கொல்
சிதம்பர மேபர தெய்வம் பிறிதிலை தேர்ந்துய்ம்மினே. 1

சுயம்பாகக் கண்டிலன் சோதிக்கி லொன்றுந் துடக்கறுத்துச்
சுயம்பறி யாரெதைச் சொல்லினுந் தோடந் தொடருமன்றே
சுயம்பைச் சுயம்பென்று காட்டினு மல்லார் சுயம்பறியார்
சுயம்பன் னியமன்று சோதித்த தானென்று சொல்லிடுமே. 2

சுயம்புல கன்று சுயம்பென்று சொல்லுஞ் சொரூபமன்று
சுயம்பெனுஞ் சொல்லுஞ் சுயம்பன்று வேதஞ் சுயம்புமன்று
சுயம்பெனக் கொள்ளுஞ் சுகமுஞ் சுயம்பன்று சோதியன்று
சுயம்பது வேறிலை தானே சுயம்பென்று சொல்லிடுமே. 3

கடினப் பொருளுங் ககனமி லாதெங்குங் காட்டுகிலம்
கடினப் பொருளுஞ் சுயம்பன் றுருவங் கலைவதினால்
கடினப் புவியண்ட கோடிக ளில்லை ககனமின்றிக்
கடினப் பொருளெது தானே பிறிதில்லை காணுமினே. 4

உள்ளும் புறம்பு மொழியா வெளியன்றி யொன்றுமிலை
உள்ளும் புறம்பெனச் சொல்லாத தெப்பொரு ளொன்றுமில்லை
உள்ளும் புறம்பெனச் சொல்லல் வெளிபற்றி யோர்ந்திலமோ
உள்ளும் புறம்பும் வெளிநாட்டங் கொண்டுய்ம்மி னுத்தமரே. 5

சிவசிவ வென்று செபிக்கிற் கவலை சிறிதுமில்லா
சிவமெனுஞ் சொற்பொரு ளாழந் தெரியார் செபித்துமென்ன
சிவமென லெப்பொரு ளப்பொருள் காணச் சிறிதுமில்லார்
சிவவேட மென்செயும் டம்பத் திழுத்துச் சிதைத்திடுமே. 6

மனமுல காநிற்க மாற்றல் ககன மனனமதின்
மனனம் பலக்கப் பலகற் பிதமின்றி மாகமதாம்
மனமது வாகப் பலக்கப் பலக்க மறைந்தறிவாம்
மனனம் பலக்க மலமின்றி யெங்கும் வயங்கிடுமே. 7

இவ்வாறு மேன்மே லிருக்குந் துறைசென் றிருந்திருந்து
இவ்வாறு நின்றங் ககம்பாவ மின்றி பெலவையுமின்றி
இவ்வாறு மாறு நிலைபிற ழாதிங் கிருக்கின்முத்தி
இவ்வா றகன்றிடி லேகம தாயிட லில்லையதே. 8

விருப்பக லார்க்கு வெறுப்பைத் தரினும் விருப்புலகாம்
விருப்பகன் றோர்க்கு விருப்பைத் தரினும் வெறுப்புலகாம்
விருப்பு வெறுப்பக லார்க்கங்ஙன் காணு மிசிரிமித்து
விருப்பு வெறுப்பகன் றோர்க்கே னுலகம் விடுவிக்குமே. 9

அறிஞர்க் குலகென ஞெரு மணுவணு வாவகன்று
அறிஞர்க் குலகறி வாக விளங்கு மனுபவத்தால்
அறிஞர்க் கிலையுரு வாதி விகற்ப மணுவளவும்
அறிஞருக் கேயுல கானந்த மென்ப தறிந்தனமே. 10

உருவள வாத்தனைக் காணு மளவு முலகுருவாம்
உருவள வாத்தனைக் காணு மளவு முலகுண்மையாம்
உருவள வாத்தனைக் காணு மளவு முறவுளவாம்
உருவள வல்லவென் றன்ன வெவையு மொழிந்திடுமே. 11

அவித்தை யெனலிங் கறைகுவன் கேண்மி னதனியல்பை
அவித்தை யெனற்கிச்சை ஞானங் கிரியை யவயவமாம்
அவித்தை விகாரம் நனவாதி மூன்று மழிவிலதாம்
அவித்தை கெடிலிவை யெல்லாங் கெடுமெனு மாகமமே. 12

உலகந் தனையுற்றுச் சோதித்து தேர்ந்திட வோடுமயல்
உலகஞ் சுகநிலை யன்றெனக் கண்டு முலைவை தெவன்
உலகந் தனையறி யுஞ்சித்தை யாயி லொருமுடிவாம்
உலகறி வாயிடி லுண்டோ பிறப்பிங் கொழியுமதே. 13

உலகையுந் தன்னையு முற்றுநின் றூய வொருமுடிபாம்
உலகமுந் தானு மறிவு விளங்கிட வொன்றுபடும்
உலகொன்று மேமுற் றுணர்ந்தென் னெவரு முபயமதாம்
உலக மயம்விட் டுணர்வாக நின்றிடு முத்தமரே. 14

பற்றுக்க ளெல்லாம் பறக்க விறைவிற் பராபரத்தைப்
பற்றுக வென்றது நிற்கத் தனிக்கப் பராபரமும்
பற்று மெதினி னுமேலான தேனும் பரநினைவும்
பற்று தலின்விடுத் தொன்றாக நில்லுமின் பத்தர்களே. 15

ஐயோ விறந்த வுயிர்களெங் கேயென் றறிபவரார்
ஐயோ விருக்கு முயிர்க ளுடலென் றழிவதெவன்
ஐயோ வினிப்பிறக் கின்றன யாரென் றறிவதுண்டோ
ஐயோ படித்து மவலம தாக வழிகின்றமே. 16

உருவந் தனையன்றிக் காணோ முலகத் துயிரதனை
உருவந் தனையன்றி நானி யவன்முத லொன்றறியோம்
உருவந் தனையன்றித் தோற்ற மெழுவகை யுன்னறியோம்
உருவந் தனையன்றி யெங்கே யுறவய லோருமினே. 17

உருவஞ் சடமசத் தென்றுரை ராதென் றுணர்விருந்தும்
உருவல நாமெனச் சாவாரைக் கண்டு முணர்விலதென்
உருவம் புழுமல நோயென்று கண்டு முடல்சகிப்பேன்
உருவெங் கனுமில்லை பூதக் கலப்பன்றி யுத்தமரே. 18

உருவந் தனையுயி ராக்கா ளைவு முறுங்கலகம்
உருவந் தனிலெழுங் காமாதி மோக முவப்புவெறுப்
புருவஞ் சலன மொழியாக் கவலை யுதவுமுதல்
உருவந் தனிற்சிந்தை நீங்கிற் றுயர மொழிகுதுமே. 19

இம்மை நழுவி லெதும்வா வறிவில மெய்வுயிர்க்கும்
இம்மை யுருவா லறிந்தோ மனைத்த மிதையகற்ற
இம்மையிற் றுன்னை விசாரித்துக் காணி லெமதுருவை
இம்மையி லேசுக வாரிதி யாகுது மென்சொல்வமே. 20

சுயசுக மீதெனி லல்லா தவற்றைச் சுசாதியுறும்
சுயசுக மல்ல படிப்பாற் கனிப்பது சொற்சுகமே
சுயசுக மல்ல பாங்கை காண்பதுந் தொந்தசுகம்
சுயசுகங் கண்டவ மான்ம சுகமென்று சோதித்துமே. 21

ஆன்மா வுலவெளி ஞருஞ் சுயசுக மவ்வுலகம்
ஆன்மா வலவெளி றுகா சுயசுக மவ்வுலகம்
ஆன்மா பரவெளி ஞருஞ் சுயசுக மப்பரமும்
ஆன்மா வலவெளி றுகா சுயசுக மப்பரமே. 22

அவத்தாத் திரியத்தும் காவொலா லாக் கறிக்கைறதும்
அவத்தை யுபாதித் திரியமு மாமன் றகல்வதனுல்
அவத்தை சடத்திலம் யாமென்று மன்றென் றறிந்துரைப்போம்
அவத்தை தொடங்கி யாமா தவிரறி வாகுதுமே. 23

எல்லாம் விடய மயமன்றிக் கண்டில மெய்யுணர்தா
எல்லா மரிய மெல்லாஞ் சிவமய மென்பவிதங்கே
எல்லா மதத்தரு மெய்வனத் தாள்வழக் கெய்தலெவன்
எல்லாத் தயரும் விடயத் தொழிவி லெரியுமத்தே. 24

மயமென் பதற்கு முதற்கா ரணம்பொருண் மாறிடினும்
மயநீர் கடற்குச் சுவர்னம் பணிக்கு மலைக்குசிலை
மயசத்த மீதென் றறியார் பிதற்று மயலகற்றி
மயமெனல் ஞெப்திப் பிரியம தாகு மனிதர்களே. 25

ஞெப்திப் பிரியந் தனைநீக்கி யொன்றும் நிகழ்த்தறியோம்
ஞெப்திப் பிரியந் தவிர்ந்த வுயிரிலை நேடுகினும்
ஞெப்திப் பிரிய நிலைபறி வானந்த நின்மலத்தில்
ஞெப்திப் பிரிய மயமே பிறிதல நின்றுய்ம்மினே. 26

கண்ட படிசொலி யூனக பாவங் கழற்றறியோம்
கண்ட படிசொலி யுண்மை நமதுரு கண்டறியோம்
கண்ட படிசொலி மூன்றவத் தைக்கிடங் கற்றறியோம்
கண்ட படிசொலிப் போகா தறிவைக் கருதுமினே. 27

எங்கெங் கறிவுள தங்கங் குலக மிருப்பதெவன்
எங்கெங் கறிவில தங்கங் குலக மிலாததெவன்
எங்கெங் குலக மிருந்தென் னறிவே யிலாவிடத்து
எங்கெங்கும் போத மறிவே மயமெனற் கென்சொல்வமே. 28

அறிவே மகத்தா யணுவா யுலக மறிந்தனம்யாம்
அறிவைத் தனியணு காட்டறி யாரெங்கு மாமெனினும்
அறிவின் விகற்ப மனைத்தென் றறிந்தனை யையமின்றி
அறிவணு வாக்கொண் டசத்தாக் கியதென் னறிகிலமே. 29

ஞானந் தனையன்றி வேறொன்றுங் கண்டில நாடிலெங்கும்
ஞானமு மன்றவை மாறுகத் தோற்றிடு நாட்டத்திலே
ஞானமொன் றேதகுங் காரண காரிய நண்ணுபொருள்
ஞானமொன் றேதகுஞ் சத்தெனல் வேறிலை நாடுமினே. 30

அறிவைப் படித்தறி யார்பதர் போலு மளப்பதெவன்
அறிவல் லவற்றை யறிவென்று கொண்டனை யாதலினால்
அறிவை மதிக்கா தயலை யெடுத்தனை யாச்சரியம்
அறிவை யளப்பதில் வல்லை யதுநிற்க வாய்குதுமே. 31

அறிவெங்ங ஞமெனி லன்னிய மூண்டே லறிவையன்றி
அறிவன்றி யின்பமு மன்னிய மாகு மறிவன்றெனில்
அறிவைத் தனியணு காட்டி லயலென்ப மன்னதின்றேல்
அறிவே சுகமெனற் கைய மெவன்கொ லகன்றனமே. 32

ற்சோதி யன்றிச் செகமாதி மூன்றுஞ் சிறிதுமிலை
ற்சோதி யன்றி யகம்பாவ மெங்குஞ் சிறிதுமிலை
ற்சோதி யன்றி மதமாதி யாவுஞ் சிறிதுமிலை
ற்சோதி நாட்டந் தவிரா விடத்தென்று செப்புவரே. 33

ருக்கின் றிரிபு திரிசயம் வேறன்று சின்மயமே
ருக்கை யுணர்ந்தவர்க் கையந் திரிபு சிறிதுமிலை
ருக்கைப் படிக்கினு மென்னுந் துயாஞ் சிறிதகலா
ருக்கே யுளது திரிசயம் பொய்யெனச் செப்பிடுமே. 34

றந்தது மில்லை யிறந்தது மில்லை பெரியகண்ணில்
றந்தது யாது விறந்தது யாது பிரமையறில்
றந்திற வாதது தானெனி லெங்ஙன் பிறந்திறக்கும்
றந்திறக் கும்வினை யுண்டென லெங்கே பிழைபிழையே. 35

னமடங் கற்குஞ் சிதானந்த மாதற்கு மாமறைகள்
னநிலை கூறிப்பின் மாற்ற வகைசொலு மாற்றியதன்
னந்தன் னுருவெனக் காட்டி விளக்கு மவுனநிலை
னமவு னத்தின்பின் சும்மா விருத்து மறைமுடிவே. 36

வருஞ் சும்மா விருப்ப ரறியா ரெவரெனினும்
வர் தனதுண்மை கண்டார் கலங்கா ரெதுசெயினும்
வர் புகுவா ரவரையெஞ் ஞான்று மிகழ்ந்துரைப்பார்
வருஞ் சும்மா விருக்கு நிலையை யியம்புதுமே. 37

மமா விருத்தல் சுகஞ்சுக மென்றூர் துணிபுணர்ந்தார்
மமா விருத்தல் கரணுதி யன்று சுகமுடிவாம்
மமா விருவென்று சொல்லா தவரில்லை சூனியமேல்
மமா விருத்தலின் மேலா நிலையிலை சோதிக்கினே. 38

மமா விருவெனச் சொல்லிடு மோவினை சொன்னமறை
மமா விருத்தல் வருதற்கு நல்வினை சொற்றதெனிற்
மமா விருத்தன் முடிவதன் ருேவினை தொன்மையெவன்
மமா விருக்கு நிலைகண்டு நின்றிடு சொல்லிறந்தே. 39

நிலை மேலிடல் சும்மா விருத்தற்கு நண்ணுமிடம்
நிலை யாவது ஞானமஞ் ஞானத்தி னுட்டநடு
நிலை துக்க சுகமதிற் ருக்கா நயமதுறல்
நிலை யல்ல பிறவென்று கண்டு நணுகுமினே. 40

அறிவே பரமு மறிவே யுயிரு மலவெனினும்
அறிவே சகமு மறிவே மனமு மயலெனினும்
அறிவே பொருளிடங் கால மெனினு மறிந்தவர்க்கு
அறிவே முழுதுமென் றையத்தி னீங்கி யறியுமினே. 41

உபாதித் திரிய மகத்தாகிற் காணு முணர்வனுவா
உபாதித் திரிய மணுவாகக் காணு முணர்வகண்டம்
துபாதித் திரிய நிலையெவர் கண்டா ரொழிந்தறிவா
யுபாதித் திரிய நினைவின்றி யோங்குவ ருத்தமரே. 42

உணர்வின் சுவையே சுவையொன்று மில்லை யுறுதியதா
உணர்வின் சுவைமிகை சத்துசித் தானந்த முற்றுணரின்
உணர்வாந் தனையறி யாவிடத் தன்னிய மோதுசுகம்
உணர்வது வாவிடிற் றுறப் விடுமின்ப முத்தமரே. 43

அணுக்குழு வல்லா வுருக்க ளனையுண் டறியினெங்கும்
அணுக்குழு வாக வறியின் மயக்கிலை யவ்வுருக்கள்
அணுக்குழு ஞான மகம்பாவ நீக்கி யயலகற்றும
அணுக்குழு ஞானமெஞ் ஞானத்தைத் தந்திங் ககன்றிடுமே. 44

உடலக மென்ப துணர்வன்றி யெங்ங னுடலிசைக்கும்
உடலை யுடலறி யாதுணர் வன்றியென் றோர்ந்திலிர்கொல்
உடலுயி ரொன்றன் றபேதம தாயினு முற்றுணரில்
உடலசத் துண்மை யுயிரென்று கொள்ளுமி னுத்தமரே. 45

இருக்கு துலகெனி னெங்கே நினைவன்றி யென்னுமறை
இருக்கு துயிரெனி னெங்கே நினைவன்றி யென்னுமறை
இருக்குது கர்த்தா வெனினினை வன்றியெங் கென்னுமறை
இருத்த னினைவொன்று மில்லாமை மூன்று மெனுமறையே. 46

உலகத்தை யாயில் வெறுஞ்சூ னியமா யுறுவதெவன்
உலகத் திரிபெனின் முன்போ லுலக முறுவதெவன்
உலகத் தியல்பெனி னுத்திக்கு வொத்திங் குறுவதெவன்
உலகாத் திரிந்தது பாழெனி னுண்மை யுணர்குதுமே. 47

பாழின் றிரிபேற் றனுபோக மாகப் படுவதெவன்
பாழன் றெனிலேன் பயநிலை யென்பர் பயனுகர்ந்தும்
பாழுல கென்றே னெவரு முடிவிற் பகர்வதெங்கும்
பாழுல கன்றேற் றிருத்தி யடைந்தவர் பார்த்திலமே. 48

பொருளல் லவற்றைப் பொருளென்று கோடலும் புத்தியன்றோ
பொருளைப் பொருளாத் திரிபின்றிக் கோடலும் புத்தியன்றோ
பொருளெவ் வகையு மயிக்கந் தெளிவிற் புகாததுண்டோ
பொருளா வதுபுத்தி சோதித்துக் கண்டுய்ம்மின் போதகரே. 49

புத்தி விகற்பே பொருளெவ் வகையும் புறம்பெனிலோ
புத்தி விகற்பழி வன்றி வெறுமை புகலறியோம்
புத்தி மயக்கஞ் சகத்தென னீக்கம் புகல்வெறுமை
புத்தி யலதிலை யாதுந் தெரிந்துய்ம்மின் போதகரே. 50

மயக்க மெதுவெனி லொன்றைபொன் றாக்கொளன் மாயையெ
மயக்க மயலல புத்தி விகற்பே மகத்தறிவர் [ன்பர்
மயக்க மணுவணு வாக்கி யுலக மடிவதுகாண்
மயக்கந் தனதெனக் கண்டறி வாய்நின்மின் மானிடரே. 51

தனது மயக்கால் விளைந்த சகத்தைத் தவிர்ப்பதெங்ஙன்
தனது மறப்பே மயக்கென்று சோதிக்கத் தானகலும்
தனதுழைப் பேபந்த முத்திக்கு வித்து தனித்துணுங்கால்
தனதாகக் காணு மதுகண்டு பந்தந் தவிருமினே. 52

கல்வியுஞ் செல்வமுங் கர்வத் தழுத்திடக் காரணமாம்
கல்வியுஞ் செல்வமு நன்கே புரிதற்குக் காரணமாம்
கல்வியுஞ் செல்வமுந் தன்னைத் தெளிதற்குக் காரணமாம்
கல்வியுஞ் செல்வமு மென்செயு நஞ்செயல் காரணமே. 53

அறிவின் ஸ்புரிப்பே யகில சராசர மன்னியமன்
றறிவின் ஸ்புரிப்பே யவத்தாத் திரிய மறிவதெங்ஙன்
அறிவி லுதித்திங் கடங்குவ தாலென் றறிந்தனம்யாம்
அறிவி னகண்டத் தகண்ட மிலையெனு மாகமமே. 54

அன்னியஞ் சீவன் பரனெவ் வுலகு மறிவதன்று
அன்னிய முண்டெனுஞ் சித்த மிறக்கி னறுங்கவலை
அன்னிய மென்று மியற்கை யெனிலோ வருக்கவலை
அன்னியங் கற்றீ ரறிவையுங் கற்றிங் கறையுமினே. 55

உடலிது தானு யறனுணர் வன்றோ வினிவருமெவ்
வுடலது தானு யுறுமெனற் கைய முறற்கிடமென்
னுடலன் றுணர்வின் சுயம்பெனக் கண்டங் குறுவதென்றோ
உடன்மயம் விட்டிங் குணர்வாகி நில்லுமி னுத்தமரே. 56

சிந்தை செகத்துரு வாகா ரிலெயெங்குந் தேடுகினுஞ்
சிந்தை செகத்தாய் பலக்கப் படிப்பது தீரவல
சிந்தை செகத்துரு கேவலத் தெங்கே திரமதன்று
சிந்தை சுயம்பெது தானோ வதைக்கண்டு தேர்ந்துய்ம்மினே. 57

எல்லாப் பிறப்பும் பிறந்திளைத் தேனென் றிசைப்பதெவன்
எல்லாப் பிறப்புக்கு நாமிட மன்றோ வெமதுநிலை
எல்லாப் பிறப்புந் தொடர்ந்துந் தொடரா திருப்பதன்றோ
எல்லாப் பிறப்பு மிலாநமைக் கண்டிடி லீதுண்மையே. 58

உணர்வுக்குப் பாவ முலருக் கபாவ முறுவதெவன்
உணர்வுக்குப் பாவம தெங்ஙன மென்னி னொருபொருளும்
உணர்வன்றி யின்றென வாராய்ச்சி தன்னி லுறுவதினால்
உணர்வே யெதன்கணும் பாவம தாவதென் றோதுமினே. 59

வியாபக மான விளக்க மறிவெனல் மெய்வடிவம்
வியாபக மான விளக்கங் குறிபற்றி மேவலன்று
வியாபக மான விளக்கங் குருவால் விளங்குவது
வியாபக மான விளக்கத்தை யொப்பது வேறில்லையே. 60

விடயப் பசையகன் றார்க்கெளி தாகும் வியாபகந்தான்
விடயப் பசையக லார்க்கரி தாகும் வியாபகந்தான்
விடயப் பசைக்குக் கசப்பாக நிற்கும் வியாபகந்தான்
விடயப் பசையறி லின்பம தாகும் வியாபகமே. 61

நாட்ட மிரண்டினு முண்டவை மாறினு நாட்டமல
நாட்ட மிரண்டினு மாறுது நிற்பது நாட்டமன்றோ
நாட்ட நடுநிலை யீதே சுருதிக ளுட்டுவதும்
நாட்டம் புருவ நடுவெனல் சாதன நாடுமினே. 62

வியாபக மேயுல கென்பதை யாயில் வெளியுருவாம்
வியாபக மாயுற வெல்லாக் கவலையும் விட்டிருக்கும்
வியாபக மீண்டுங் கணத்தி லுலகா விரிவதுகாண்
வியாபக மேயுல காதியு மந்தமும் வேறில்லையே. 63

வியாபக மாகா தறிவெங்குங் காணு விசேடத்தினால்
வியாபக மாகா விடினுல காகா விவர்த்தசத்தம்
வியாபக லட்சண மின்றறி வுக்கெனின் மேலொன்றுகேள்
வியாபக மோரிரண் டாமறி வுக்கெனும் வேதமதே. 64

முத்தி யெவரறி வுந்தன தாக முயலுவது
முத்தி யெவையுந் தகனம தாக்குதல் மூதறிவில்
முத்தி தனக்கய லில்லாச் சுகந்தனில் மூழ்குவது
முத்தி தனையன்றிக் காணு தயலெங்கு முந்துமினே. 65

அறிவின் றடிப்பே யனைத்துல கென்றே மதனிடத்தில்
அறிவீர் தினமு மவத்தாத் திரிய மதிற்சுழறல்
அறிவே யறிவது மங்கங் கதுவா யதனியல்பை
அறிவே யனைத்தினுக் காதார மாத லறியுமினே. 66

அறிவது நாட்டமுற் றுய்வா ருலகினி லாருமிலை
அறிவினைக் கண்டு சுகிக்கப் படிப்பவ ராருமிலை
அறிவே தனதுரு வாகப் பயில்பவ ராருமிலை
அறிவாயு மெட்டரி தார்க்கு மதுவே யருந்தெய்வமே. 67

எதுவுந் தனதுரு வன்றென நிற்பது மிவ்வறிவே
எதுவுந் தனதுரு வாகியு நிற்பது மிவ்வறிவே
எதிலுங் கலந்துங் கலவாது நிற்பது மிவ்வறிவே
எதுவென்று சொல்லப் படுவது மென்பது மிவ்வறிவே. 68

அயலென்று போகஞ் சுகித்தல் தனையே யறிவதுதான்
அயலென்று கர்த்தா தொழுதல் தனையே யறிவதுதான்
அயலென்று ஞானஞ் சுகித்தல் தனையே யறிவதுதான்
அயலென்று காண்டல் தனையே பிறிதன் றறியுமினே. 69

அறிவே பரமு மபரமு மாகு மயலதன்று
அறிவே யபர மெனறன்னை வேறு யறிவதுகாண்
அறிவே பரமென றன்னுண்மை தான்கண் டறிவதுகாண்
அறிவே பராபரம் வேறன்று தானே யறியுமினே. 70

சங்கற்ப மன்றிச் சகத்துருக் காட்டிலை தானுவையோ
சங்கற்ப மன்றிநீ காட்டுவை போதுந் தவிர்கவிதைச்
சங்கற்ப மென்னல் நினைவினைப் பாவமுஞ் சங்கற்பமே
சங்கற்பமேயிவ் விரண்டும் பிறிதல சாற்றுமினே. 71

அறிவி னினைவும் நினைவி னுலகு மடங்குமிங்ஙன்
அறிவே யெவைக்கும் வியாபக மாகு மறியினெங்கும்
அறிவினின் மிக்க நிலையிலை யாது மதின்விகற்பம்
அறிவே பரதெய்வ மர்ச்சிக்கத் தக்க தறியுமினே. 72

எதைநா னெனினுஞ் சிதாகாய மாயிடு மெக்கருத்தும்
எதுதோன் றிடினுஞ் சிதாகாய மாயிடு மெக்கருத்தும்
எதையுன் னிடினுஞ் சிதாகாய மாயிடு மெக்கருத்தும்
எதுவுஞ் சிதம்பரஞ் சோதிக்கிற் காணிடு மெங்கணுமே. 73

சிதம்பர மென்று ரகசியத் தானத்தைச் செய்ததுவுஞ்
சிதம்பரத் தின்மே னிலையின் றெனமறை செப்பியதும்
சிதம்பரந் தன்னைக் குருவருள் செய்வது சிந்திக்குங்காற்
சிதம்பர மேபர தெய்வம தாமெனத் தேர்ந்தனமே. 74

சின்னஞ் சிதம்பரக் கற்பனை யென்பது செப்பெனிலோ
சின்னத் தடிப்பிலை சிற்சக னத்துறச் சிந்தையெங்குஞ்
சின்னத்தி ளுட்டக் தவிர்ந்திதை நாடிற் றெரியுமன்று
சின்னஞ் சிதம்பர மன்றி யிலையெனத் தேர்ந்தனமே. 75

ஆன்மா சுயம்பிர காச மெனலை யறிவிரப்போ
தான்மாவை யன்றிப் பிரிய மிலையென லன்றறிவீர்
ஆன்மப் பிரியம தேயய லின்பமென் றன்றறிவீர்
ஆன்மா விளங்கிட லெல்லா மயக்கமு மற்றிடுமே. 76

வியாபக மான விளக்கத்தை யன்றி விடயமிலை
வியாபக நாட்ட நிலைக்கி னிலைக்கும் விளக்கமுந்தான்
வியாபக மான விளக்கம தாயிடின் மெய்யறிவாம்
வியாபக மான விளக்க நமதுரு வேறில்லையே. 77

அன்னிய மாகா தறிவா விளங்கிடற் கானதிது
அன்னியஞ் சீவ சகபர மென்ன லறிவிகற்பம்
அன்னிய மெல்லா மறிவா விளங்கிடற் கானநெறி
அன்னிய மல்ல வறிவுமன் றுய்விடு மந்தத்திலே. 78

இதுவே முடிந்த நிலைமனந் தாக்கற் றிருப்பதற்கு
இதுவே சுகாசுகங் காணு திருப்பதற் கேற்றநிலை
இதுவே பிறவியிற் றுக்கற் றிருப்பதற் கேற்றநிலை
இதுவே சுயசுக மையத்தி னீங்கி யிருந்துய்ம்மினே. 79

அறிவின் ஸ்புரிப்பே சகமாதி மூன்று மறிஞருக்கு
அறிவுக் கயலே யனைத்தும் விசாரத் தகன்றவர்க்கு
அறிவல்ல யென்பா ரறிவுக் கயலே லவர்மொழிமெய்
யறிவா யனைத்தையுங் கண்டாற் பிறப்பிங் ககன்றிடுமே. 80

இதுவது வென்னல் விசாரத்தின் பின்ன ரிலாதவெவன்
எதுவும் விசாரத் தளவா வெவர்க்கு மிருக்குமன்றே
எதுவு மிருந்த படிகொளல் மூடத் தியற்கைகுணம்
அதுவது வாகா தறிவா விளங்கிடி லானந்தமே. 81

செப்பிடி லிங்ஙனந் தேகத்தை நானெனத் தீர்ந்தனமோ
அப்பாதி பூதக் கலப்பென நாட்ட மடிக்கடிக்குத்
தப்பாது நின்றிடி லுள்ளத்திற் றாலத் தடிப்பருகும்
இப்பெரும் பூத மணுநாட்டம் வந்திடி லீதற்பமே. 82

சோதனை யில்லார் பிதற்ற லயலெனத் தூயவர்பால்
போதத்தி னுண்மை விசாரித்துக் காணிடிற் பொய்யகலும்
பேதமு நீங்கிடுந் தானு விளங்கிடும் பின்னமெலாம்
யாதிதி லைய முளதே லகற்றுது மிங்ஙனமே. 83

அறுமோ நினைப்பு மறப்பயன் மூன்று மறுதியெனில்
உறுதியென் னிப்போ துணர்த்துதி மெய்யே லொருமொழியால்
அறிவுக் கறிவெனின் மேன்மேலு மிங்ஙன மாகுமன்றே
அறிவற்ற மூடர்க் குரித்தா மிதனை யகன்றுய்ம்மினே. 84

மின்னொத்த வாழ்வை நிசமென்று நம்பி விடயசுகம்
பன்னெடுங் காலஞ் சுகித்தார் துயரே பயனதென்றார்
என்னது யானெனற் கெங்கே சுயவடி வேற்றிடினும்
இன்னதை யுன்னிட லென்றே வறிகில னென்செய்வனே. 85

விரையா தியைந்து சுகந்தனை வேண்டி விழுவதெல்லாந்
திரிபுடி பேத மறிவா விளங்கிடத் தேருமட்டுந்
தெரிகிலி ரோதவம் பூசை விதிமுறை செய்துமென்ன
அரிய முயற்சி பிறிதன் றதுவே யறிந்துய்ம்மினே. 86

அறிந்தில நம்மைச் சுயம்பா வுலகை யறிந்தனமோ
அறிதலி லுள்ள வனர்த்த நமதே யகன்றனமோ
இறையுள னென்று மிலனென்றுஞ் செப்புத லென்னமதி
பிறவியில் மானிடர் புத்தியிற் பேயொப்பம் பேசுமினே. 87

அறைது மனமிலை யாலுட லின்றே வனைவருக்கும்
அறியப் படாதெவ னங்கங் கெவர்க்கு மனுதினமும்
அறியு மனமிலை யென்னி லுடலய லாகுமன்றே
அறிமின் மனமுள் ளளவுண் டுலக மனுபவமே. 88

அனுபவ மாயினு மெங்ஙன மிவ்வுல காகுமனந்
தனுவாதி கட்குள தத்தங் கருவி தனித்திருக்கத்
தினைத்துணை யேனுஞ் சரியெனற் கில்லெனிற் செப்புதும்யாம்
மனமோ வறிவின் ஸ்புரணம தாகு மதியுமினே. 89

குறியறி விற்செலப் பேத மகன்று குறையதின்றி
நெறியே வெளியொளி போதம தாகி நிகழ்ந்திடுங்காண்
அறிவென லீதே பிறிதெனல் கற்பித மையமிலை
சிறிதும் விகற்ப மிலாதிதைச் செய்மின் சிவோகமிதே. 90

சிவோகமென் றிங்ஙனஞ் செய்யாது சொல்வர் சிவமதத்தர்
அவமே பயனிலை வேடமும் பூசையு மல்லலெங்ஙன்
தவறு மிதுவே பிறமதத் தர்க்குஞ் சகமயக்கம்
எவர்க்கு மகல்வ தரிதரி தாகு மிதுதிண்ணமே. 91

இறந்தது யாது பிறந்தது யாதிங் கெனுமயக்கம்
அறுந்து தனித்திடச் செய்தல் விசாரணை யாதலினால்
திறந்தெரிந் தாயிடிற் சித்தப் பிராந்தி சிறிதுமின்றி
யறம்பொரு ளின்பமும் வீடுமொன் றாயிடு மக்கணமே. 92

அறிவே நமதுரு வன்னியனா சென்ம மலவெனிலோ
பிறிதென் னமதுரு பேணுவ துண்டோ பிதற்றலென்பம்
நெறியே விசாரித் திடிலறி வாகுது நின்றதனாற்
பிறிதே பிறவி யெனிலெது சொந்தம் பிழைபிழையே. 93

குறிப்பா னனலன்றித் தூம மிலையெனுங் கொள்கையொக்கும்
அறிவைத் தவிர வனைத்து மிலையெனற் கன்னகுறி
பிறிதன் றிதுநிற்கக் கல்வி யெதனாற் பிணக்ககன்று
அறிவா யெவையும் விளங்கத் தனித்திடற் காய்குதுமே. 94

வேண்டுதல் ஞானமொன் றெல்லா மொடுங்கி விரிவதினாற்
காண்டிலி ரோநிதந் தூக்க விழிப்பினிற் கற்றுணர்ந்தும்
தோண்டி லுணர்வா லெவையு மறிவாச் சொலிப்பதெவன்
யாண்டுமுண் டிங்கிலை காண்பா ரிலையிலை யென்சொல்வனே. 95

ஏற்றிடத் தக்கது ஞானமொன் றேபிற வெவ்வகையும்
மாற்றித் தனதுரு வாக்கிச் சுயமாய் வயங்குவது
தேற்றிடு நானெனல் ஞானம தாகத் திரிபகற்றித்
தோற்றிடு ஞானவிண் ணேமய மாயெங்குஞ் சோதிக்கினே. 96

உண்மை யறிவே யுயர்ஞானந் தன்னை யுணர்வதினால்
எண்ணிலி பேத மறிவா விளங்கிடற் கேற்றதிது
எண்ண மெலாமறி வானந்த மாக விருத்துமிது
கண்ணறி வாகுதன் மெய்ப்பொருள் கல்வி களியுமினே. 97

அறிந்தேன் மனதை யெவற்றிற்கு மூலமென் றுய்ந்தவிடத்
துறந்தார் மனமிலை கண்டார் பரத்தி லொருவியப்புண்
டறிந்தால் மனநிலை சொப்பன காச மஃதிழுக்கில்
வெறும்விட யப்பொருக் காக மனது விளங்குமதே. 98

நுவலுமெய்ஞ் ஞானப் பொருளன்றி யின்றென நுண்பொருளும்
உவமையின் ஞானக் கருதி யளவையி னேர்ந்ததன்றி
அவல வனுபவப் பேற்றி லடியே னநுக்கிரகம்
உவந்தரு ளொன்றடி வீழ்ந்து துதித்தன னுத்தமனே. 99

ஒளிர்வது விண்ணை நினைப்பு மறப்பை யொழித்து நிற்கில்
எளிதி லனுபவ மெய்து மெனவே யிருந்திருந்து
வெளியொளி யாக வறிவு விளங்க விழித்துமிகக்
களிகொண் டனிதை யென்சொல்ல வென்று கரைந்தனனே.

இதயம் பரமா விலங்கிடக் கண்டங் கிருவதுவென்
றெதுங்கிடக் கண்டில னுனய லென்ப துறுவதுண்டோ
மதியாதி சிற்சட பேதப் பகுதிகள் வாழ்வதுண்டோ
எதுவுந் தனையன்றிக் காணமற் போக விருந்தனனே. 101

---

## வேதாந்த இலக்கணம்.

### சூத்திரங்கள்.

உண்டிலை யாமென் றெனப்படா து முதலை
அங்ஙன மாத லதுவழுத் தலைபிற. 1

அறிவறி யாமை யாகியு மாகா
விறையுள வாறென் னவிருக் கிடின். 2

இலக்கிய மென்ன லெப்பாடை யேனு
மெய்ஙனம் பரமே யங்ஙன மாகுக
நிலையை யிலக்கிய மென்ப நிங்கே. 3

தானென லொன்றே தனித்த பரநிலை
ஏனைய வெல்லா மிழுக்குறு மென்ப. 4

இலக்கிய விலக்கண மென்பதென்னை
யிலக்கியத் தமைதி யிலக்கண மென்ப. 5

இலக்கிய மில்லா விலக்கண மின்றே
இலக்கண மில்லா விலக்கிய மென்சிறப்
புண்டெனிற் சித்திர மாடை யணிகள்
இல்லாமாடி மங்கையர் போலும். 6

இலக்கிய மென்ன லிதையொழிந் தறிந்திலன்
தானறி வானந் தமதா மதனால்
சுருதி யுத்தி யனுபவ மிதுவே. 7

தானெனு நிலையைத் தெளிந்து தானானோர்
அன்றி யறியா ரிலக்கிய மிதனை
யெத்திறத் தவரு மென்மனார் புலவர். 8

சத்தென வேற்கத் தகுங்குறிவெளியா
யொளியா யொருபடித் தாகித் தெரிவாய்த்
தெளிவா யென்று மகம்புற மின்றிச்
சொச்சமாய் நீக்க மெங்கணு மிலதாய்
ஒப்புயர் வீழற் றிலக லென்ப. 9

உபாதியோ உயிரோ யாமெனப் படுவ
துயிர்சித் தாதலி னேற்கு மென்ப. 10

அறிவென லொன்றே யவசரம் பற்றிச்
சீவ ஞன்மா வென்ப தன்றி
வாஸ்தவ மன்றிவ் விருமைப் பெயரும். 11

அவத்தை யுபாதி காட்சித் திரைய
மாகிய வவசரஞ் சீவ னுகா
வவசர மான்மா வெனப்படு மென்ப. 12

உபாதி நாட்டத் துயிரலா நாட்டத்
தான்மா வெனப்படு மறிவு தானே. 13

நாட்ட முகத்தாற் கற்பித முண்மை
யன்றி சற்று மேலா தறிவே. 14

அகம தாகா திடைப்புற மொருவா
தறிவ தாகாக் கண்ணக மகலா
தானே தாஞ காவயி னறிவு
மகலா திதனை யனுபவங் காட்டும். 15

சித்தென றனைத்தா னறிவ தன்றியுந்
தானே தாஞ விளங்கலு முரித்தே. 16

சிதம்பர மொன்றே பலவென வெல்லாம்
ஆடு தழையினை மேய்வ தொக்கும்
அன்றேற் றன்னைக் கண்டவ ரல்லர்
எத்திறத் தானு மென்மனர் புலவர். 17

சத்தெனல் வியாபகஞ் சித்தெனல் விளக்கம். 18

வியாபக வடுக்குக ளனேக மிதுவோ
வியாப்பிய மென்னற் குடன்படா தெவர்க்கும். 19

விளக்க வடுக்குக ளனேக மிதுவோ
உபாதி ரகித குறிகடந் ததுவே. 20

இங்ஙன மாய வியாபக மன்றி
விளக்க மிவ்விளக்க மன்றி வியாபக
மில்லை யதனல் சத்தே சித்து
சித்தே சத்தெனப் பட்ட தென்ப. 21

இன்னிலை யதனை யறிவென லன்றி
வேறுநிலையென தன்றென மொழிப. 22

இங்ஙனம் விளங்கி லறிவதாகும்
அன்றே லின்ப மயல தாகும். 23

நிதானமே யின்ப மன்றேற் பிறிதெனல்
என்னுயர் வாயினு மிலேசம தாகும். 24

தானெனல் சங்க மசங்க மன்று
அசங்க மென்னல் சங்கம் பற்றி. 25

இங்ஙன மாகத் தானெனல் தெளியி
னிரதிசயானந் தமதெனல் காணும்
அன்றேற் பிறவிது வெனினுமா காதே. 26

கற்றுரைப் பதினு மனுபவ நன்று
பாவா பாவ மின்மை யானே. 27

அறிவைச் சுகிக்கி லதுவே நித்தியம்
பிறமா றுவதா லனித்திய மென்ப. 28

சத்துசித் தின்ப மொத்த வறிவே
நித்திய மெனலா லதனியல் புரைத்தாம். 29

வியாபக விளக்க மல்லா வறிவிலை
யறிவலா தெங்கு நானென லில்லை
நானென லன்றித் திணைபா லிடமிலி
கால வெல்லை கடத்தலி னித்தியம். 30

சிற்சோதி மயமே நித்திய னுண்மையி
னுண்மை சிதம்பர மாத னித்தியஞ்
சத்தெனற் கியைவ ததுவே நித்தியம்
ஆனி விர்த்தியே லாமை நித்தியம்
கற்பனை யேலாச் சுயம்பே நித்தியம்
என்று மொருபடித் திலக னித்தியம்
தானய லற்ற ததுவே னித்தியம்
ஆதி யந்த மற்றது நித்தியம்
சுத்த மசுத்த மிறந்தது நித்தியம்
திணைபா லிடமதி லாமை நித்தியம்
வாரமில் கால மதுவே நித்தியம்
நினைப்பு மறப்பற் றிலக னித்தியம்
இவையெலா நித்திய மேற்றற் கியைந்த
குறியெனக் காட்டக் கூறிய தென்ப. 31

தானில தோதனை மறக்கி னெங்கனுந்
தானுள தோதனை நினைக்கி னெங்கனு
மிருமையு மின்மையிற் றானெனல் பூரணம். 32

எதிரி லாதலின் வாசனை யெனப்படும்
தனைத்தான் காண்டல் தவிரா திருக்கில்
காட்சி வாசனை யெங்ஙன நிற்கும்
பூரணம் வேறே தானே விளங்கும். 33

எவ்வுயிர்க் கெந்தப் பிறவிசு தந்திரம்
அவ்வவ் வுடலள வாகா திருக்கின்
பூரண நாமா விளங்கக் காண்பம். 34

என்னையான் வென்றே னெனுஞ்செருக் கதுவே
பரிபூ ரணநிலை காட்டுங் குறியே. 35

அல்லல் தன்னா லறுத்தலுந் தன்னா
லிருமையு மின்றி யிருப்பதுந் தன்னால்
என்னில் தானெனல் பூரண மென்ப. 36

அயலென வுளவா லதுவது வாகும்
அறிவதை யன்றி யிருக்கக் கண்டிலம்
ஆதலி னறிவே பூரண மெனப்படும். 37

தனையறி யாததே யபர மென்றார்
அறிவதே பரமென் றார்தெளிந் தோரே. 38

அபர வுணர்வை யசத்தென லாகும்
பரவுணர் வதனைச் சத்தெனத் தகுமே. 39

அன்னிய தேக மன்னிய வுலகஞ்
சுகமு மன்னிய முறவு மன்னியங்
இருப்பது மிறவ லெண்ணமு மிறவல்
சுதந்தர மிறவல் பிறவியு மிறவல்
என்ன பாத்திய மிருப்பதாக் களிப்பம்
எண்வகை யின்பமுந் துயரே மாறலின். 40

என்று முளதாத் தோற்றினு முலகஞ்
சுயம்பின் மையினா லநித்திய மென்ப. 41

எவ்வெப் பொருள்கள் யாதாத் தோற்றினுங்
கற்பனை கழற்றிக் காண்பதே காட்சி
அல்லாக் காட்சிய றைவத னர்த்தம். 42

அநித்திய மெல்லா முண்மைபோற் றோன்றினும்
விசாரத் தகலார் மறந்தும் மயங்கார். 43

கண்டார் சிதம்பரக் காட்சி பகலார்
உண்டோ வநுர்த சடமுத லாதி
யொருதன் மையரா யொளிர்வதி னென்ப. 44

பரநிலை யதற்கியை குறியெனல் யாதெனில்
வெளியா யொளியாய் வெறுந்தெரி வேமய
மாயகம் புறமொன் றிலதாய்த் தெளிவாய்ச்
சொச்சமாய் நீக்க மெங்ஙனு மிலதாய்
என்று மொருபடித் தாய மலமதா
யதிசய மிதுபோ லறிந்திடப் படாதா
யன்னிய மிலதாய்த் தானே தானா
யுடன்பா டெதிர்மறை யிலதா யுளதா
யிலகல தன்குறி யென்மனார் புலவர். 45

சண்முகி யாதிகுறி யிதுபோல்வதன்
றக்குறி யெல்லா முடலவ யவக்குறி
காரண மாகக் காட்டதி சயக்குறி
இக்குறி யெனலோ சாதன நான்கார்
கேள்வி மனனந் தெளிவு தன்னாற்
பக்குவ னேக்காற் பகராப் பகர்குறி
உபாதி திரைய மவத்தாத் திரைய
மபிமா னத்திர யங்க ளாதி
யுதித்தொடுங் கற்கிட மாகுங் குறியே
இக்குறி தானாய் வருகுறி யேனைய
தொடுகுறி யால்வர லெண்பனார் புலவர். 46

இக்குறி யகண்டத் தெழுகுறி யேனைய
கண்டத் தெழுகுறி காணு மென்ப. 47
சொலாதுறு குறியிது சொல்லுறு குறியது. 48
சுயம்பித குறியது கற்பிதக் குறியெனல். 49
இக்குறி வுதைய ஞான மெய்ஞ்ஞானந்
மக்குறி ஞானங் கற்பித ஞானங்
சிந்திப் பானுறு மென்றுமிஞ் ஞானந்
தொடுகுறி யென்றும் வேண்டாது தோன்று
தந்த ஞான மென்றார் கண்டோர்
இன்ன பேத மறியா ரதுவே
யிதுவெனக் கூறி யென்சிறப் புற்றார். 50

அந்தந் தவத்தையி லவ்வவ் வுபாதி
நானெனப் படினு முபாதி மாறின்

நானென வின்றே நானிவை யாமோ
ஆல்ல விவற்றிற் கதிட்டான மாய்நின்
றறிவது சான்று யதுநா னெனப்படல். 51
எனின்முத லறிவு காணி னிவற்றை
யிவ்வெல் லையிலே யென்று நிலையான்
முதலறி வுக்குள வியப்பிதென் றுணர்க. 52
ஆகண்டசின் மாத்திர மயமாம் வெளியே
முதலறி வின்குறி முற்றுமுற் றுயி
னிங்கிலை நம்முரு விதனை மறக்கினு
மிஆமறை யாதில கும்மொரு படித்தா
யெப்பொழு தேனு முண்ணுட் டங்கொண்
டெட்டிநின் றுற்றுப் பார்க்க முதலில்
இவ்வெளி யுலக மயமா யிலகும்
இங்குல கேதென் றுற்று நோக்கிற்
பாழ்மய மாகக் காணு மப்பா
லிப்பா ழேதென் றுற்று நோக்கி
னொன்றுந் தோன்று துறுமே லக்கணஞ்
சகத்தோற் றத்தி லிப்பா ழிலையிப்
பாழி னுலகிலை யிருப்ப தென்னென்
றுற்றக லாதுள திலகு மட்டும்
வெளிமுக மாகா திருக்க வேண்டுங்
காணு தாயின் முச்சுட ரேதிங்
கெவ்விளக் கத்தா லிவ்விரு தோற்றமுங்
காணப்படு மெனல் காத்தல் வேண்டும். 53
இங்கே பாவனை யெதுவுங் கூடா
கூடி னுண்மை விளங்கா தென்ப. 54
விளங்கு மாயிற் கதபுண் ணியமா
மின்றே லிலையெனு முபநிட தங்க
ளிதனை யறிந்தங் ககலா திருக்க. 55
விளங்கு மாயின் விளக்க மயமாம்
விளக்கமய மன்றித் தெரிவுவே றின்றாய்த்
தெளியுந் தெளிவே முன்னற் புதங்கள்
அன்றிவே றிலையென லாங்கே நமக்குக்
காணு மதனு லயலெனல் சொல்லே 56

தானு மறிவைத் தக்கவா றுணர்ந்தோர்
அன்னிய மின்றி யானந்த மாவர்
என்பது பொய்யோ மெய்யோ காண்மின்
இக்கண மிருந்திங் கென்பனுர் புலவர். 57

இதனைப் பிரம மென்ப தென்னெனிற்
சிற்சோதி யன்றிச் செகமுயிர் பரமிலே
யாதலி னெப்பா லறையினுங் கூடும். 58

என்னை-உலகெனல் யாது யாமா ரென்பதூஉம்
உலக நமைப்போ லறியா ததற்குச்
சடநிலை வாய்த்ததற் கேதென் னென்பதூஉம்
எழுவகைத் தோற்ற மாதற் கேதென்
னென்பதூஉ முயிர்கட் கிறப்பொடு பிறப்பு
சுகதுக்க மாதி யுறுவதென் னென்பதூஉம்
இங்ஙன முருத வழியே தென்பதூஉம்
யாது பற்றி வந்ததென் பதூஉம்
முதலிய நிலைமை விசாரித் திடலே. 59

அனைத்து நிதமு மெங்கே தோன்றி
மறையுநா னெனனு முலக மெனனும்
மிசிரிம் பிக்கா திவற்றி னெல்லை
கணித்தற் கெங்ஙன மென்னு மாதிக்
கெதிர்மறை யனைத்தும் பந்த விசாரம்
இதனை விடுதி விசார மென்னின்
ஞாயஞ் சோதனைக் கியையி னேற்பம். 60

பந்த விசாரத் தெளிவு முக்குற்றம்
ஊன்றவால் விழுதை யொக்கு மென்ப. 61

நேதி நேதி வாக்கியத் துறைப்பால்
களைவ தனைத்துங் கழற்றித் தனதுரு
வாக்கியத் தானே தானு யிலகின்
றுக்க நிவர்த்தி யிடையறு வின்பம்
எய்தற் பாற்று விடுதி விசாரத்
தெம்மதத் தவர்க்குஞ் சம்மத மையந்
திரிபறுக் குறையா னென்பது திண்ணம். 62

யந்தமுத்தி யாவது மறிவே
மாறினு மாறு திருப்பது மறிவே
எல்லாந் தானு யிருப்பது மறிவே
யிலட்சண மாக விருப்பது மறிவே. 63

எங்ஙனம்-நானென வெல்லாஞ் சுகிக்கு முணர்வே
யுடலன் முதலி னென்றே யென்பம்
பிறவி மாறினு மாறு மையினல்
திணைபா லிடமா யிருப்பினு மன்றே. 64

தன்னை யன்றித் திணைபா லிடங்கள்
இல்லை தானு மல்ல வென்றே
விளங்கலி னங்ஙனங் கண்டோ ரதனை
யிலக்கிய மென்ன வதற்கியை யிலக்கணம்
உரைத்தன ரனுபவத் தசிபதத் தானே. 65

அசிபத மென்ற தென்னை யென்ன
அறைது மதனைச் சாயாது கேட்டி. 66

தத்துவ மசியெனச் சாமவே தத்தின்
அந்தத் தொளிரும் வாக்கிய மாகும். 67

தத்தெனல் பரமாந் துவமெனல் சீவன்
அசியென லேக மென்ப தருத்தம். 68

சமட்டி வியட்டி யுபாதி சடமே
யாதலி னறிவென் றற்பமகத் தெங்கே. 69

இன்று தலினு லறிவென லொன்றே
என்று விளக்க லசிபத மென்ப. 70

அறிவொன் றேயெனத் தேர்ந்தனன் வாச்சியத்
தென்பயன் லட்சிய மிலாவிடத் தென்ன. 71

ஐயறி வன்றி யுலகெங் கேயென
காணேன் போய தெங்கு னேவென
முன்னுள தெங்கே யிப்போ தென்ன
நோக்கப் பிறழ்வாற் றேற்றிலை யென்ன
நோக்கும் வினைக்கு முதலா ரென்ன
கண்டு சொல்லுது மென்றொரு முகூர்த்தங்

கண்ணுங் கருத்துங் கலங்காது நிற்கச்
சிற்சோதி யொன்று கண்டன னென்ன. 72

இதுவே மெய்யுணர் விதுவே நானெனுஞ்
சொல்லுக் கருத்தம் விடாது பற்றென்ன
அங்ஙன மாக வானந்த மோங்க
இரண்டற் றொன்று யிருந்தன னப்பால். 73

சிந்தையு ளெழுங்கற் பிதங்க ளனைத்தையும்
அங்கங் கேநின் றகலாது விளக்கல்
கதிர்மதி விளக்கன் றவிர்சிற் சோதி
யெங்கணு மென்று மொருபடித் தாதலின்
அதுவே நமதுரு வேனைய வகனும்
கற்பித நாட்டம் விடுவதை விட்ட
விலக்கணை யென்னு மறையந்த மாதி. 74

சிற்சோதி மயமே யெங்கு மாதலின்
அதனை விடாத நாட்ட மதனை
விடாத விலக்கணை யெனுமறை யந்தம். 75

இங்ஙன மென்றும் பழகப் பழகக்
கற்பித மனைத்துஞ் சின்மாத் திரமாக்
கரைந்தய லின்றித் தான்மாத் திரமா
யிலகி யதுவு நழுவி நனவிற்
சுழுத்தியா வதுவே விட்டு விடாத
விலக்கணை யென்னு மறையி னந்தம்
இதன்வழி நிற்றன் முத்தியென்ப. 76

ஆதலின்-சிற்சோதி நாட்டஞ் சிதையாது நிற்றி
தடைக ளுளதேற் றவிர்க்குதுஞ் செப்பில்
என்ன வவனுந் தடைக ணீங்கிக்
கற்பித மகன்ற சோதி யானன். 77

எக்கெங் கெவ்வா றெழுந்த தெனுவோ
அங்கங் கவ்வா றதுவா மதனால்
அன்னதை யாங்காங் கறிந்து சிற்சோதி
யாக்கலே கடமை யென்றிருந் தனனே. 78

சிற்சோதி யன்றித் தினைத்துணை யேனும்
இன்றெனக் கண்டா னிவனுழைப் பதனால்
இதனைத் திதியெனச் செப்பத் தகுமே. 79

அபரம் பரந்திர மெனத்திரி விதமா
நிகழு ஞான மென்மனூர் புலவர். 80

அபர ஞான நிச்சய ஞானம். 81

பரஞான நேரே கண்ட ஞானம். 82

திரஞான மிவ்விரு ஞான மாகியும்
அல்ல தாகியு மிலகு ஞானம்
இதுவாப் பயிற நிதியென மொழிப. 83

சங்கார மெனலிங் கறிவினுக் கயலாக்
காண்பன வனைத்து நீறு யழிய
ஞானுக் கினியே மயமா யெங்கணு
மிலகப் பயிறல் சங்கார மென்ப. 84

வனத்தினும் வரையினு மணுத்துணை யாவெழு
கனற்பொறி யொன்றே யனைத்து மெரித்தழன்
மெழுகாக் கரைத லென்ன விருத்தி
ஞான மகண்டத் தணுத்துணை யாவெழுந்
தண்ட கோடி நிரைநிரை யனைத்து
மெரித்து நீறுக் குதல்சங் காரம். 85

பஞ்சுபொதி கிடங்கிற் படர்தீப் பொறியொன்
றுற்று லென்ன வுன்னல் சிற்சோதி
மின்மினித் துணையா வெழுந்தய லனைத்தையுந்
தினைத்துணை மிச்சமு மின்றி யெரித்தல்
சங்கார மென்னச் சாற்றப் படுமே. 86

தினைத்துணை யேனுஞ் சிற்சோதி காணில்
அதன்வழி நிற்ற லுண்மை ஞானம். 87

எங்கெங் கெவ்வா றிருப்பினு மெதுவும்
அங்கங் கவ்வா றிருந்தா லுருவி
யதனுக் குரிய கற்பனை யனைத்தும்
ஒவ்வொன் றுகச் சோதனை முகத்தால்

ஒருக்கிச் சேட மாகிற் பதனை
வேறுபடாது காண்ட லுண்மை. 88

எங்ஙனஞ் சொல்லினு மெங்ஙனங் காணினும்
எங்ஙனந் துணியினு மெங்ஙன நுகரினும்
எங்ஙனம் பிறக்கினு மெங்ஙன மிறக்கினும்
அறிவை யன்றி யின்று மதனால்
இதனை விளக்கி லனைத்து மறையும்
தின்ன மதனாற் றிரோபவ மென்ப. 89

நீயென லுந்தா னுடனென் றுணர்வே
யறிதருந் தகைமையின் மறுத்தற் கிடமே
தெனலனுக் கிரக மென்றனர் கண்டோர். 90

என்னவா திப்பினு மறிவைத் தள்ளிப்
பூர்வ பட்சமே யாகு மதனாற்
கொள்ளோங் கொள்ளோம் பிறிது காட்சி
அறிவென லொன்றே யெனலனுக் கிரகம். 91

தானன் னியமா விளங்குங் காறும்
அயல்சுக மன்றித் தற்சுகம் விளையா
தேது செயினு மென்மனர் புலவர். 92

தனக்கய லின்றிச் செயலனுக் கிரகம்.
தானே தானு விளங்கலு மதுவே. 93

எங்ஙன மொன்று யிசைப்ப தென்னிற்
பொறிசோ தனையி லுலகு மானத
சோதனை யதனிற் பொறியுஞ் சீவ
சோதனை யதனிற் கரணமுஞ் சீவ
சாட்சிசோ தனையிற் சீவனு மின்றி
யேகசின் மயமா யிலகிற் றுவித
பாவமுந் தோற்றமுங் காணு தென்னை. 94

உலக சோதனையி லணுத்திர ளன்றி
உலகமு மணுச்சோ தனைதனிற் றிரளும்
பரமா ணுத்திர ளன்றி யணுவும்
பரமாணு சோதனை தன்னிற் றிரளும்
ஞாபக மன்றிப் பரமாணு தானும்

வியாபக விளக்க மதின்ஞா பகமும்
இன்றித் தானா யிலக லென்னே. 95

செகத்திர ளெங்ஙனே வறியாமை யன்றி
அறியாமை யெங்ஙனே யறிவை யன்றி
அறிவுதா னெங்ஙனே தன்னையன்றித்
தானு மெங்ஙனே குணாதீத மன்றிக்
குணாதீத மெங்ஙனே யியல்பா நிலையில்
இயல்பு மெங்ஙனே தானே தானாய்
இலகு நிலையி லிதுவு மெங்ஙனே
மோனா தீதத் திஃது மெங்ஙனே
சும்மா விருக்குஞ் சோம்ப னிலையி
லிதனினு மேலா நிலையின் றாதலின்
இதுவே யுண்மை யனுக்கிர கம்மே. 96

---

## அத்துவிதரச மஞ்சரி.

சீராரு மத்துவித மெய்யுண்மை யென்றுமிகத் தெருட்டு தற்குப், பாராருங் கயவுருவ நரவுருவம் புனைவடிவம் பரித்துசாத்தி, யேராரும் வரமொருங்கு நல்கும்விக்கி னேசனென திகயத்தி ன்பா, னேராரு மத்துவிதந் தனையறியும் விசேடமெலா நிகழ்த்து வானே. 1

எத்திசையும் பத்திபாய்த் திலங்குறுமுள் வாயில்புனை ரெழிற்கண் ணுடிப், பித்திமனை தன்மருவு பாலனுக்கு வெளிவருதல் பெருவன் பாம்போற், குத்திரக்கற் பனைமயமாய் மிகப்பொலியல் வகையுருவங் கொண்டு வேறு, மத்திரவஞ் ஞானமதை மருவுபுருடனுக்குமுத்தி யடைதல் வண்மே. 2

சோரர்களாற் கொடியவா ரணியவழி யிழையன்மித் துயர்கூர் பூமா, னிரகஞ்சேர் தன்னூரை நன்குதெரிந் தோன்மொழியா னேருமாறு, சீரடர்கற் சாத்திமுதற் சாதனங்க ளிறையுந்துமிகச் சிறந்த பூமா, னேரறிசற் குருநாதன் மொழியாற்றற் பதநிலையை மேரு வானே. 3

நிருபனுடைக் குமரனுக்குத் தனதான தத்துவத்தை நிகழ்த்த லாமல, வருகயவ னிர்மைமக மு லக்கமுன்று நிருபனியல் வாய்

க்கு மயபோற், சொருபசுக வொருபொருணீ யெனச்சொல்குரு
வுபதேசச் சொற்களாலே, மருவுகருத் தருத்துவமாய்ந் தொரு
சுகமெய்ப் பொருணோரே வாய்க்கு மன்றே. 4

நிரமலடி மைந்தனுக்குத் தேகமுத லாங்குணங்கள் செறித
ருளும்; புரையறுமக் குணங்களெல்லாம் பொன்றுதலும் வெட்ட
வெறும் பொய்யா மென்னப், பிரமமயக் கூடத்த நித்தசுக போத
தனுப்பிரத்தியக்குக்; குரமருவு பந்தமுத்தி யென்பதும்புன் மய
க்கத்தா லொளிரா நிற்கும் 5

தெரிகின்ற துறைதிமிரம் பேயாக வச்சமிகச் செறிந்தோ
னுக்கே; பெரிகின்ற விளக்கொளியாற் கண்ணுற்றா லாங்கதுதா
னியக்குங் கொல்லோ, திரிகின்ற வவிசார திட்டியினா லுண்டெ
னச்சொல் செகங்க ளெல்லாம், புரிகின்ற வுண்மைவிசா ரத்தி
னர்க்குக் கிஞ்சிதுமே பூறா தன்றே. 6

போற்றுமொரு சிற்சோதி தானேயிவ் வுலகுருவாய்ப் பொ
லியா நிற்குந்; தேற்றமுற வாராயின் வேறுபொரு ளொன்றே
னுஞ் செறிவ தில்லைத், தோற்றுமயற் கதிகரண மாம்பழுதை
யல்லாது தன்று சர்ப்பஞ்; சாற்றுறுவே றொருபொருடா னாகு
தற்கெவ் வாற்றானுந் தக்க தாமே 7

திறப்படவீ தெனத்தோன்று ஞால மெலாம் பிராந்திமாத்
திரமே யென்று, முறப்பொலிந்தன் னியமின்றிச் சுகமயமா
மான்மாவே யுண்மை யாகுஞ்; சிறப்புறநின் றொளிருதலான் ஞா
லமது முண்மையெனத் தெரிகேனென்றா, லறப்புதுமை சுத்தி
யிரசிதத்தாற்றன் னியனெவன்று ஞகா ஞேகோ. 8

சொல்லுமினை வுறுபோது மற்றதெழு முன்னுமது தொலை
ந்த போது, மில்லதுதா னென்றாலு மிவ்வுலக மிலங்குகின்ற திறு
ம்று தாமே, யல்லததி சயமென்னை போலுமகேந் திரசால மான
திக்குப்; புல்லுறுமா யாவியினாற் கற்பிதமென்றாலுமிகப் பொலியு
மன்றே. 9

இத்துதினத் துவிதமகன் றிரிந்திடினும் புருடனுக்கிங் கிசை
தற் கண்ணில்; வந்துறையுந் தீமையினாற் பலவடிவந் தானாகி வய
ங்க லெய்ப்ப; நந்தலில்சன் மயப்பூமா வெனுஞ்சொருப மொன்
றேனு நாநாவாகிச், சந்ததந்தற் கற்பிதமாந் தமப்படலக் கூட்
டேவாற் றயங்கு மன்றே. 10

நனிநீங் காதா, லூனமுறு பற்பலச ராசரவி சித்திரத்தோ டொ
ன்றி னுலுந், தானமரும் படவியல்பைச் சித்திரவத் திரமென்றுந்
தணந்தி டாதே. 17

சத்தியசிற் சுககனமா யகண்டிதமாய்த் தெளிபொருளாய்த்
தானு மான்ம, தத்துவவத் துவையொருவ னென்றே மிகத்தெ
ளிவன் றடையொன் றின்றிப், பொத்துடலிந் தியமுதலி யவற்
றைமயல் வாதனைகள் பூண்டு நிற்கு, மத்தமதி யினனென்ன தி
யானென்றே சங்கையற மதித்தன் மானும். 18

செங்கதிரோன் வெங்கதிரா லெதிர் நிகழும் பேய்த்தேரைத்
தீரத் திர்ந்து, கங்கையினற் குளிர்புனலைப் புனிதமுறு மதிமான்
கள் கைக்கொண் டாங்கு, மங்குலகை வெறும்பொய்பசை யில
தெனக்து ரத்தகற்றி மாதீ ரத்தார், பொங்கினிய வொரு சுவை
யை முனிவரர்க ளநுபவிப்பர் பொலியுள் ளத்தே. 19

ஒன்றுகு மண்ணியதா மிகவெளிதா மிணைத்தாகு மொப்பி
லாத, நன்றான வம்பரத்தி னனிதோன்று ஞாலமெலா நகுவித்
தெங்குந், தன்றேசாற் பரவுமெழி .லாத்துமதத் துவவிரவி தன்
னை யையோ, வன்றீய மூடவுல குலூகதிரை யாதரிந்து மதியா
வன்றே. 20

மன்னியவா னத்தவொளி வடிவமதாய் நிகழினுமிம் மாஞா
லத்தை, யன்னியமா மெனப்பாவித் தறிவில்லான் பெருந்தாப
மடைவன் சீசீ, மின்னியதீ பாதிகளிற் றிருசியமாய் மிளிர்தருந்
தன் மேனிச் சாயை, தன்னினைவே றென்றெண்ணி மாமோகத்
தினின்மூழ்குந் தனிச்சே யொத்தே. 21

மடமான மாயைதன தூருவமிலா வான்முதலாம் வகைக
ளாலே, தடமான வசங்க வொரு சின்மயனைப் பேதிக்கத் தக்க
தன்றுந், திடமான மழைத்தாரை தன்னுடைய துளிகளின்மென்
றிரள்க ளாலே, யிடமான பசும்பதும பத்திரத்தை நனைப்பவு
ரித் தென்கொ லாமே. 22

தோற்றரவு மாத்திரமிங் குருவான சகவிகற்பத் தொகுதி
யெல்லா, மூற்றமுறு சங்கமெலா மொருவியசின் மயவென்னை
யொட்டா தன்றே, மாற்றருமா ரோபிதமா மவிஞ்ஞ விசித்திர
தன்மங்க ளெல்லாந், தேற்றமிகு நிருமலமாய் வெளியுருவாம்
வியோமத்தைத் தீண்டுங் கொல்லோ. 23

பெற்றி போலப், பருத்தவிழி யதனுலிவ் வுலகெனுமிந் திரசாலம் பார்த்திட்டானும், திருத்தமுறு மகத்தோருள் ளொளியாலே யாதொன்றுந் தெரிகி லேனே. 30

திருசியந்தான் புடமாகத் திகழுமெனிற் பூமவுருத் திகழா தாகு; மிருமையறு பூமவுரு விலங்குமெனிற் றிருசியமற் றிலங் கா தாமே; மருவனுறு மறுதிவு தெரியுமெனி னிப்பூமி மறைந்து போகுந், தெரிவுறுமே யிப்பூமி மறைந்துபோ மவ்வாறத் தீவு தானே, 31

சந்திரன்றன் கலையென்ப தனுதினமும் பெருகுதலைச் சார்ந்த தாகின், பைந்துறுபே ரிருளான தடைவாக நாசமுறு மரபு போலச், சுந்தரநற் பிரபோதம் பயப்பய்ய மிகவளர்ந்து துன்னு மென்றால், வெந்துயர்செய் யிப்பிரமை துகடீர விருதயத்தில் வீய்ந்து போமே. 32

பிரமவது பூதிதரு மொருசுவையா னிறைவுபெறு பெரியோர் தம்பாற், கருமவது பந்தத்தால் வருவிதிக ளெல்லாமுங் கழன்று போமே, வரமருள்சித் தர்கடெரிவித் திபிரசா யனமருந்தி மகி ழ்வார்ந் தோர்பாற், றாமுறுபா கத்தால்வந் துறுமருந்தின் விதி களெலாந் தங்குங் கொல்லோ. 33

சகலவடி வமுந்தானுய்த் திகழுமுனி வரனுமொரு சமாதி தன்னை, யகிலமதி ளுட்கழிப்பான் முன்போலன் புற்றுமிக வாதரிப்பா, னிகிலவளப் மமுநிறைந்தபூபால னொருவன்று னேரம் போக்க, வகைவகையாஞ் சதுரங்கந் தனைநேயம் வைத்துமிக வளர்ப்ப னன்றே. 34

விதிகளெலாஞ் செய்யாமல் விடுத்தோனை யான்மாவை மிகத்தேர்ந் தோனுய்ப், பொதுவெனுமா மறைபுகனு நிடேதமெலா மாநந்தம் பொருந்து விக்குந், திரமருவு கருமமாத் திரநோக்கச் சோம்பனுக்குச் செய்கை யாதுங், கதுவுறவேண் டாவென்று புகல்வோன்றன் மொழிகண்மனே கரங்க ளாமே. 35

தத்துவத்தை யனவரத மனுசந்தித் திடுமுனியாஞ் சார்வ பௌம, னுைத்தபடி நிற்பினுமெல் லாஞ்செயினுந் தானவனே வொண்ணு னுமா, விேத்தரையெல் லாங்கைக்கொண் டரசாண்டு வேண்டியவா றிருக்கும்வேந்த, னந்துறுமன் னுயிர்களா லேவல் கொளற் கெக்கானு மரியனுமே. 36

பரமார்த்த நோக்கமுடை யவனுக்கு முன்னெடுபின் பண்ணப் பட்ட, தருமாதன் மத்தொழில்க ளாற்சம்பத் தேவிபத்தே சற்று மின்றும், பெருமேகம் பொழிதருநீர் முழுக்காலும் வெப்ப மிகப் பெறாத லாலு, மெரிமேவு பாலைவனத் தின்பயிருக் கேற்ற முடை னிழிவு மின்றே. 37

ஒல்லைவினை யாலுண்டாஞ் சம்பத்தே யாதல்ல தொழிந்த தாதல், வல்லையது பவித்தோனைப் புருடன்மிகு திருத்தியினை மருவு வானு, லல்லல்செயும் பாம்பாட்டி தன்வயத்தி லகப்பட்ட வரும்பு யங்கம், புல்லியவ னியற்றுதண்ட விதிகளோரீங் குறச்ச மர்த்துப் பொருந்துங் கொல்லோ. 38

ஆன்மவறி வுடையவன்முற் கருமபரி பாகவச மடைந்தோ னேனுந், தான்மருவு தன்பரம வவதியிதா மெனத்தேறித் தளர்வு நண்ணான், கான்மருவு வழிச்செல்வோன் கால்வருத்த மெய்துகினுங் கிராமாந் தத்தின், மேன்மருவு வழியளவைத் தெளிந் துவகுந் திடைவிசன மேவா னன்றே. 39

அகம்புறமும் பரமான்மா வொருவனே யாமெனநன் கறிந்த ஞானி, மிகுந்தவிச னமதுறினு மோர்சிறிதுங் கிலேசமே மேவா னன்றே, செகங்கலங்கு போர்முகத்தே விசையமுற வொரு நோக்காந் தீர னேனு, னுகம்பரவு மொட்டலரால் வருந்துறினுங் கிலேசமற்ப முறுவ துண்டோ. 40

ஞாலமதி னுறுவிபவ நனிபரம வற்புதமாய் நண்ணு மேனுஞ், சாலவத னதுவாய்மை தனையறிந்த மாதீரன் றனைம யக்கா, கோலமட வரல்வேடங் குரம்பையின்மே லலங்கரித்துக் கொள்ளா நின்றேன், கேலவினத் தாற்றனைத்தேர் விடலையையா யினுமயக்கக் கிட்டா னீடே. 41

அகத்திரந் தரமேலா யிலங்குகின்ற வான்மவடி வாய்சிற் போனே, யிகப்பொருள் கடமினுளு முன்போல விசனமே யிவையவதில்லை, யிகழ்ச்சிபறத் தெய்வகதி யானிதிபோ ரிடத்துற்று விலம்பா டுள்ளோ, னுகத்தினின்முன் போலெளிய னெனக்க ருதிப் புகன்றுலேவ துண்டாங் கொல்லோ. 42

பெரியவிழி மருவுறுதன் மகிமைசெறி பெரியோனைப் பெரு
ஞானத்துக், குறியுசுப குணக்களலங் கரிப்பனபோ லுஞ்சுயம்
புந் தோன்று நிற்கு, மரையனவன் றன்வயனைச் சுகிர்தனை யிரு
க்கினவர்க் காளா னேரும், புரையறுமவ் வரையனையே தானேவந்
தொன்றிமிகப் பொலிவ ரன்றே. 43

அஞ்ஞான மேயில்லை யிவ்வுலக முளதாமென் றறைவ
தெங்கே, விஞ்ஞானவடி வாஞ்சீ வேசதே சிகரெனச்சொல் வி
கற்பஞ் சேய்த்தா, மெய்ஞ்ஞான வொருசுவையாய்த் தனித்து
நிரு மலமாகி விளங்குந் தானு, யெஞ்ஞான்றும் பரிபூரண கேவல
மாம் பிரமமே யானு கின்றேன். 44

சமாதியவத் தையிலுதித்தொற் றைக்கொம்ப னுபதேசஞ்
சாற்ற லாலு, மமான மயப் பரமசிவேந் திரனெனுந்தே சிகவரி
யா னனுஞ்ஞை யாலுஞ், சுமாவிருக்கச் சதாசிவமா தவனேதிவ்
வத்துவிதச் சுவைப்பூங் கொத்தே, யெமாலுடைக்கு மகமுகமா
மறிவுடையோ ராதரத்தா லெய்தற் பாற்றும். 45

சுத்தசதா சிவயோகி வரியானே தியவிந்தத் தூய நன்னூல்,
புத்திநல முடையோர்க்குற் பவநோய்க்கோ ரவுடதமாய்ப் புகல
லாகுங், கொத்துறுபா தகங்களுக்குக் கடுவாகு முபநிடதக் குறி
ப்பா மேலா, முத்தமமா மாநந்த வமுதநிறை குடமாமென்
றுரைப்பர் மேலோர். 46

துய்யசதா சிவப்பிரம மெனுமுனிவன் வடமொழியாற்
சொல்லப் பட்ட, செய்யவத்து விதரசமஞ் சரிநூலைச் செந்த
மிழ்ப்பாச் செய்து தந்தான், வையமிசைப் பொலிகழனி மாந
கர்வாழ் சோதிலிங்க வடிவ மான, வையன் முத்தி ராமலிங்க
குருபரனென் னகம்வாக்கு மமைந்து நின்றே. 47

---

## சொரூபானு சந்தானம்.

காட்சி மெய்ம்மை மோகத்தாற் கலங்கி யுயிர்க ளிச்சைவ
ழித், தாட்சியான சீவனெனத் தன்னை மதித்துத் தளையுணருஞ்,
சூட்சி யின்றி மிகமெலிந்து துயர்கூர் பிறப்பி லுழல்கின்றார்,
மாட்சியான தனதுண்மை மதித்திங் குணர்ந்தார் பிறவாரே. 1

பிறப்போ டிறப்பென் றுரைக்கின்ற பேதமெல்லா மனத்
தளவாம், சிறக்கும்பரம நிலைமாறித் திரிந்து பலவாய்ப் பிரித்துணை
ரும், மறப்பில் விளைந்த சுகமோக மாற்றுஞ் சுருதி குருவருளால்,
திறக்கு ஞானக் கண்கொண்டு செகத்தை நோக்கிச் சுகிப்
போமே. 2

சங்கற் பந்தான் பிறந்திறந்து சரிக்கு முடலா யுயிராகி,
யிங்ஙன் புலனும் பொறி கரண மெல்லா மாகித் தொழில்புரியுந்,
தங்கும்பரம சிவன் முதலாத் தானே யெல்லா மசைப்பிக்கும்,
எங்கு நிறைந்த பரம்பொருட்டா னென்று மறையில் சாட்சியதே. 3

தன்னூர் விட்டு வழிதப்பித் தடுமாற் றங்கொண் டுழல்ப
திக, னென்னூர் காட்டி வாழ்விப்பார் யாரே யென்னத் தளர்
போதின், முன்னூ ரதனீ முளைத்தலூர் மோக மகலக் காண்கெ
ன்று, மன்னூர் காட்டி யருள்குரவன் வழியே சென்று வாழ்
வானே. 4

அனைய பிரமம் பூரணமா யசைவற் றகண்ட சாட்சியதா,
மினைய பிரம சங்கற்ப மியைந்த பெயரே சிவனுகும், புனையுஞ்
சங்கற் பத்தியங்கும் புவன மெல்லாஞ் சிவமயமாம், நினையத்
தகுமெய் யுணர்வுடையோர் நிறைந்து குளிர்ந்த மதியாலே. 5

முத்த ருள்ளஞ் சிவமயமா மோகஞ் சற்று மிலதாகும்,
பற்றும் பாச விலட்சணமாப் பரமா னந்த வடிவாகும், சுற்று
முலக சாலமெலாஞ் சொரூப மென்னக் கண்டுணர்ந்து, சித்த
சலனஞ் சற்றுமுறார் செழித்து சர்வ மாத்திகழ்வார். 6

அதுவே நானே நானதுவே வதுநானுனை லதற்குள்ள,
இதமாஞ் சச்சி தானந்தச் சீர்மை யெனக்கிங் குளதாமோ, சத
மா யெங்கு நிறைந்தது சத்தாக் தன்மை யுண்டேனுக்கால், வித
மாம் புறச்சங் கற்பமெல்லாம் விடுத்தா லதுநீ யாவாயே. 7

நிறைவா நினது சிற்சொரூப நிலையை மறந்து வெளிநோக்காற், சிறிதாய்த் தோன்றி மறைகின்ற தேகந்தானு மயல் கொண்டிங், கறியா மையினுற் படுந்துயர மகலப்புரள மேனேக்கால், புறனும் விடயத் தோற்றமெலாம் போக்கி லதுநீ யாவாயே. 8

சத்தி னுண்மை நன்ருகச் சங்கை தீர வுணர்ந்திடினே, முற்றுந் தானுய் முளைக்கின்ற மோகத் தோற்றச் சகமாய, பற்ருென் றின்றிக் காண்பானும் பரவு காட்சிப் பொருளிடையில், சித்த மாக நடுநின்று திகழ்ஞா னமதாந் தெரிவாமே. 9

சித்தின் விலாச நன்ருகத் தெளிய வேண்டிற் றிரணமுதல், வித்தி னுள்ளும் பிரமன்முதல் விரிந்த சிவ கோடிகளுக், தத்த நிலையில் வளர்ந்தோங்கிச் சராசரங்க ளாய்நிறைந்த, வத்த னுண்மை கண்டெனத் தனந்தா னந்த மடைவாமே. 10

சற்சின் மயமாந் தனதுண்மை சங்கை தீரச் சார்வதற்குத், துச்ச வுலகா யுயிராகித் தொடர்கா ரணமாத் தோன்றி நின்ற, விச்சை வடிவாந் தனதறிவின் விரிந்த விலாச மெனக்கருதி, நிச்ச யித்துப் பேரின்ப நிறைவா முண்மை காண்போமே. 11

தானே தானுத் திகழறிவே சர்வார்த் தத்தின் ருரகமாம், வானே யசைய மனமாகி வளர்சிற் றறிவாய்ப் பலவடிவாய், வானே முதல வைம்பூத வயமாத் தார தம்மியமாய்த், தானே தோன்றி விளையாடித் தானே கண்டு மகிழ்தருமே. 12

காணு மறிவே நீயென்றுங் காட்டு மறிவே யாமென்றும், பூணுமாறிங் கெடுத் துணர்ந்தும் பொருவில் விசிட்டாத் வைதர்தரும், நாணி வேருய் நோக்காத நலங்கூர் ஞானக் கண்கொண்டு, சேணின் ருளிருங் கதிர்போலத் திகழ்ந்தொன் ருகச் சுகிப்போமே. 13

ஒன்ருஞ் சத்தின் சித்திடைத் துண்டாஞ் சித்தஞ் சகமாகி, நன்றே பலவாய் விரிகின்ற நாநா நாம ரூபமொடு, துன்ரு ரோபப் பதிபலனந் தோன்ற வதனைச் சத்தியமாய்ச், சென்ரு தரித்துத் தாழாமே திகழ்மே னேக்கிச் சுகிப்போமே. 14

சித்த மிதயாம் பரத்திடையே திகழ நேய நிட்டைபெறு, மத்தன் னிலையி லானந்த வகண்டா கார வடிவாவாம், சுத்த மாய சிதாகாயத் தொடர்பாய் நின்ற சாதகத்தால், நித்த மான நிலைமேவி நிறைநீ ருலகிற் சுகிப்போமே. 15

பூதா காய மனுகாயம் பொருவில் சிதாகா யமதாக,வோதா
காய மூன்றினிடத் துணர்வா கியஞா னுகாயம், வேதா திகளால்
விளக்கியவா விரிந்தெல் லாமாய் நிறைந் தானும், போதா னின்ற
திரிபுடியி னடுவாக் கண்டு புணர்வோமே. 16

அகம் விருத்தி யாற்றோன்று மறிவான் விடய மெனவிரண்
டின், புகலை வொண்ணுச் சிவானந்தம் புரண மாயொன் றாய்நிற்
கும், சுகமா நாநா பேதமதாச் சார்ந்து மாயும் விடய சுகம்,
நிகரில் பிரமச் சாயையதா நிகழ்தல் கண்டு சுகிப்போமே. 17

காண்பா னுயுங் காண்பனவு மாகிக் கலங்கா மெஞ்ஞான,
மேண்பா வனைகட் கெட்டாதா யிருந்து நிறைந்த பொருளா
கும், மாண்பாய்க் காணும் பொருள்விட்டு மற்றோர் பொருளை
நாடுமுனம், வீண்பா வனைதீர் மெய்யறிவா மென்ன வாறிச்
சுகிப்போமே. 18

காண்பா னென்னை மற்றென்றுங் கருதி மறந்து நினைக்கி
ன்ற, வீண்பா வனையா மைத்தைகளை மேவிச் சுழலுஞ் சிதாபா
சன், பூண்பா வனையிற் றேன்று பொருள் பொருந்து காட்சி
மித்தையதா, மேண்பா வனைதீர் முதலொளியை யிதயத் தூன்
றிச் சுகிப்போமே. 19

அறிவா னறியும் பொருளினிடை யனுவரு மறிவா னந்தமதே,
பிறியா தொன்று மெய்ப்பிறை பிரமா னந்த லேசமதாஞ், சிறி
தா முயிர்க ளடாறமெனறியா னென்னச் செறிந்த பேரொ
ளியை, நெறியே நாடிச் சிந்தித்து நிறைபே ரின்ப மடை
வோமே. 20

இதாயம்பரத்தி லுதித்தொளிரு மிணையி லாத்ம தேவதையைத்
திதமா நோக்கிச் சிந்தித்துத் தெளிந்தே காக்ஷ சித்தமொடும்
விதமார் நாநாத் தோற்றமெலாம் விரிந்த தனது லீலையதாச்
சதமாக் கண்டு கலங்காதே தனிவாழ் வதனிற் சுகிப்போமே. 21

அறிவிற் சமபா வனைமேவி யானந்த சித்தியதாம்,குறி
தீர் தனதுண் மையைநாடிக் கொண்டு சகத்தை நோக்குங்கால்,
பிறிதோர் பொருளும் வேறாகப் பிறங்கா வனுபூ திபினுலே, வறி
தே தோன்று மவித்தைகெட வளர்பே ரின்ப மடைவோமே. 22

சகல வுயிரினிடத்திருந்து தானே சரிக்கு மியன்மறந்தே, அகலித் தேகத் தளவாக வறியா மையினுற் றளர்மயக்கில், புக லுற் றனந்த பேதமதாப் பொருந்து ஜால சங்கற்பம், மிகலுற் றிடரின் மூழ்காமே மெய்யா ருணர்விற் சுகிப்போமே. 23

பொன்னைப் பலவா முருவாகப் புணர்த்தி விருப்பு வெறு ப்புறல்போல், தன்னைத் தானே வெவ்வேருச் சமைத்துக் கண்டு விளையாடும், என்னைத் தேகத் தளவாக வெண்ணு மோக மொழி வதனுல், முன்னைப் பரிபூ ரணநிலையின் முத்தி யடைந்து சுகிப் போமே. 24

இடையொன் றின்றி யெங்குநிறை யெனதா ரொளியின் மிளிர்கின்ற, விடய மான தேகாதி விரிந்த வண்டப் பரப்பெல் லாம், திடமா ரெனது சங்கற்பச் சித்திரத்திற் ருேன்றிமறை, சடமார் லீலா பிம்பமெனச் சாட்சி யாகச் சுகிப்போமே. 25

எங்கும் யாமே நின்ருெளிரு மியல்பை நன்கு விரித்துரைக் கில், தங்குந் தூல விடயமதைச் சரிக்குங் கன்மேந் தியத்தா லும், இங்குத் தூரத் துளபொருளை யிலகு ஞானேந் தியத்தா லும், மங்குன் மறைந்த பொருளெல்லா மனனத் தாலுந் தீண் டுதலால். 26

இயாமே விபுவாம் வியாபியுமாம் மெம்மை யளக்குங் கரு வியிலை, இயாமே யெம்மை மதித்துணரு மேக சற்சிற் சொரூபம தாம், இயாமே யெம்முள் விளையாடு மிந்த வனந்தா னந்தக்கூத், தியாமே கண்டு நிரந்தரமா யகண்ட வாழ்விற் சுகிப்போமே. 27

அணுவுக் கணுவா யெங்குநிறை யாமே யட்ட மூர்த்தமதாம், கணித மிறந்த வெல்லைநிறை கருத்தாவாகி யாங்காங்கும், நணுகு காம ரூபமதாம் நாநா பொருளி னுட்புறனும், மணியி னெளிபோ லெமைக்கண்டு மாரு வாழ்விற் சுகிப்போமே. 28

இவ்வா றமர்ந்த வெனதொளியை யிரவி முதலா வெப்பொ ருட்குந், தவ்வா மூலப் பேரொளியாத் தழைந்தெல் லாமாய் நிறைந் தமையால், அவ்வா னெடுந்தூ ரத்ததனை யளாவிநோக் குங் கட்புலனுல், செவ்வே நின்றிங் குணர்ந்தெங்குந் திகழுமெம் முட் சுகிப்போமே. 29

விடய நோக்கா லெனதுண்மை வெளி யாகாது நெடுங்கா லம், மடமை யாலே பிறந்திறந்து மகிமா யையிலே சுழன்றிளைத் துத், திடமார் ஞானக் குருவருளாற் சித்தந் தெளிந்து மேனோக் கிப், புடமா யெனையான் பெற்றதனாற் புரணவாழ்விற் சுகிப் போமே. 30

இங்கித் தேகத் திடையன்றி யெங்கெங் கிருந்து மெனை நோக்கி, லங்கங் கியானே முதலாக வனைத்தி னுள்ளும் புற த்து நிகழ், துங்கச் சற்சின் மயமாகத் தொடர் பேரின்ப நிறை தலினால்;சங்கை யின்றிச் சர்வார்த்த சாட்சி யாகச் சுகிப்போமே.

சாத்தி ரங்கள் யாவற்றின் சாரமான வெமைப் பெற்றோம், தோற்று முலக சாலத்திற் சூழ்ந்த விநோதா டம்பரத்தின், சூத்தி ரம்யா மெனவறிந்து தொடருந் தியான சமாதியதாப், போற்று மெம்மை யெம்முள்ளே பூசித் தினிது சுகிப்போமே. 32

அறிவானந்தப் பெருவெளியா வமர்ந்த வெனையான் பூசிக்கச் சிறிதா மளர்நீர் முதலாய திரவி யம்போ தாமையினால், நெறியா ரிதய மறிவுசம சந்தோ டமதா நிறை மலரால், குறிவே றறநின் றெனைநோக்கிக் குளிர்பூச னையாற் சுகிப்போமே. 33

தேகத் தள்வா வெனைக்கண்டு திகைத்த காலத் தெனது நிலை, மோகத் தாலே மறைந்தருள்கூர் முதல்வன் குருவாய் முன் னின்று, சோகந் தீர வெனைத்தானுந் துரிய நிலையிற் கூட்டியதால் தாகந் தீரக் குளிர்ந்துள்ளே சமபா வனையாற் சுகிப்போமே. 34

தனதா ரொளியின் விலாசத்தைச் சங்கை தீரக் கண்டசுகர், கனதா கமதா மாயைமயல் கடந்து சனகன் மொழிவழியே, மனதால் விளைந்த விடயசுக மதிப்பி லாதெல் லாமொழித்துப், பினதா கமிலாப் பெருவெளியிற் பிறங்கல் போலச் சுகிப் போமே. 35

சகச நிலையைச் சார்ந்துண்மை சாதித் தற்கிங் கமையுமதோ தகுமுத் தியினாற் சாற்றுமெனிற் சற்சின் மயமாஞ் சர்வரர்த்த, மிகுமா மகத்தா மரசாட்சி மிளிர்மா போகப் பேரின்பம், சுகமாய் நின்று சாட்சியதாய்த் தொடர்பொன் றின்றிச் சுகிப்போமே.36

தொடர்பொன் றின்றி யெனப்புகன்ற சொல்லின் பொருளை விரித்துரைக்கில், இடர்தீர் யாமே யொருமுதலா யிரண்டாம் பாகத் தனுமிலனும், அடர்பே ருருவ மொடுதிகழு மனந்த

கோடி சித்திரங்கள், திடமா யென்னுட் டோன்றிடினுஞ் சிதை வில் படம்போற் சுகிப்போமே. 37

ஈசன் முதலா யெப்பொருளி னிடத்துஞ் சத்சின் மயமாக, வாச் மாகு மென்னிடத்தே வயங்கா ருயிர்யான் யானென்னப், பேசு மல்லால் வேறாகப் பிரித்துக் கூறற் கிடமுண்டோ, தேச மாகு மென்சார்பால் நிகழுஞ் சர்வ மாச்சுகிப்போம். 38

ஒன்றே பலவாய்ப் பிரிந்தனந்த வுருவ நாம மொடுவிளங்கி, நின்றே மறைந்து தோன்றிவளர் நிலைமா றாது பாரம்பரையில், நன்றே புணர்ந்த சங்கற்ப நயந்து நிருக்கூத் தாடல்தனை, இன் றேயென்னுட் கண்டுமகிழ்ந் திணையில் வாழ்விற் சுகிப்போமே.

தன்னைத் தானே வேறாகத் தனைந்து தேடும் பாவனையால் பின்னமில்லா வருள் வெளியைப் பிரிந்தே னென்று பலபிதற்றும் முன்னை வினையி னொழிவதனால் முன்னரின் றருளுங் குருவாக்கால் மன்னு நிலையிற் பவமொழிந்து மயலற் றொன்றாச் சுகிப்போமே.

கால தேச வத்துவெனக் கருதும் பாவா தீதமதாய், மூல மாகி யாதியந்த முளைத்தல் வளர்தல் நாசமுறல், ஆல ருக்க கா ரணமாத் தொடர்பே ருருவ மிலதுளதாம், நாலுவேதப் பொரு ளான நமைநாங் கண்டு சுகிப்போமே. 41

சத்துச் சித்தா னந்தமதாந் தனியா ரகண்டப் பெருவெளி யில், வித்தின் மரம்போன் மணியொளிபோல் விரிந்த புவனப் பர ப்பெல்லாம், சித்தத் தண்டாய் விரிந்தொடுங்குஞ் செயலை நோ க்கிச் சலனமிலா, முத்திபெறுமித் தேகமொடு முழுதுங் கண்டு சுகிப்போமே. 42

என்றுஞ் சலன மறுசாட்சி யெனவே நிறையென் சன்னிதி யில், துன்று பலசங் கற்பமதாந் தொடரும் சித்தத் துண்டாகி நின்று விளங்கி மேன்மேலு நிகழுஞ் சகசித் திரங்களெலாம், நன்று நோக்கி யருள்வெளியே நாட்ட மாகச் சுகிப்போமே. 43

இல்லை யிருந்தாற் காணேமோ வென்பார் மயலை நீக்குத ற்கே, நல்லோர் மொழியுஞ் சுருதி யுத்தி யாலே நணுகு மநுப வத்தால், எல்லோ ருள்ளத் தினுநிறைந்த வெனது சாட்சி சாட் சியதாச், சொல்லால் விளங்கி னுமல்லாற் சும்மா யிருந்தே சுகி ப்போமே. 44

காணோ மில்லை யென்பாரைக் கண்டே யெமது புராணநிலை யேனோர் கருவி யுடன்கூடி யிங்ங னெவருந் தெளிந்துய்ய, மானோர் விருத்தி கொடுபலவும் வகுத்துக் கூறி னோமல்லால், வீணே யுழைக்கு மறிவிலர்போல் வினைய மின்றிச் சுகிப்போமே. 45

சங்கற் பத்தால் வேறாகச் சார்ந்த பொருளைக் கண்டிருந் தும், இங்குத் தம்மைக் காணோமென் றிசைப்பார் காட்டுந் தனைக் காணார், தங்கம் பணியா யிருந்திடவுந் தளர்ந்தே யிழந்தே மென் பார்போ, லெங்கு மிருந்து விளங்குமெமை யெம்முட் கண்டு சுகிப்போமே. 46

கனவு போல நனவிடத்துங் கருது சங்கற் பத்துளவாய், மனவா னகத்தே விரிந்தொளிரும் மகத்துஞ் சகசா லங்க ளெல்லாம், சனன மரண மிலாவெம்மிற் சார்ந்து மறையுங் கற் பிதமாய், அனக வறிவு சாட்சியதா யமர்ந்து கண்டு சுகிப் போமே. 47

அத்தன் சித்த விச்சைவழி யடைந்த வித்தே கம்பெறு முன், சுத்த மாய சிதாகாயத் தொடர்பா யென்று மழிவிலனும், நித்தமாகு மென்னிடத்தே நிலவு சகத்தோற் றங்களெ லாம், பத்திபாய்ந்து மறைந் திடினும் பவமற் றென்றிச் சுகிப் போமே. 48

பிறத்த லிறத்த லெனும்பான்மை பேத மான சிதாபாசன், மறப்பில் விளைந்த போகமலான் மாறாச் சுத்த நித்தநிறை, நிறத்த ஞான காயமதாத் திகழ்வேம் வேறாந் திரிபுடியில், நிறைத்த கா ட்சி மாத்திரமா நிகழ்ந்து குளிர்ந்து சுகிப்போமே. 49

சந்தத மெம்மு ணீங்காத் தனியர சாட்சி பெற்றோம், சிந்த னை யொன்று மின்றிச் சிதம்பர மாகி நின்றோம், பந்தயா ரங்க ளெல்லாம் பரிசாலர் சுமந்த விக்கத், தொந்தமொன் றின்றி நித் ய துரியவாழ் வதிற் சுகிப்போம். 50

என்னிற் றோன்றி யெனதேவ லாளா வெனது சந்நிதியில், மன்னிச் சமட்டி வியட்டியதா மருவு மையேழ் றத்துவங்கள், தன்னிற் சகல கேவலத்திற் சகச விநோத நடம்புரிந்து மின் னின் மறைதல் சாட்சியதா யெம்முட் கண்டு சுகிப்போமே. 51

தன்மய மாக வெங்குஞ் சகஜநோக் கமையப் பெற்றால், பன்மையா நாம ரூபம் பயப்பைய நீங்கிப் போகும், புன்மையா மனோசங் கற்பம் பொருந்துறாச் சலனந் தீர்ந்த, மின்மய மாஞ்சிற் சோதி வேறற விளங்கு மன்றே. 52

மன்னுந் தனது லீலையதா மருவு மனந்த விநோதமதாத், துன்னுஞ் சிவேஸ் வர சகமாத் தொடருஞ் சித்தி நடந்திடவும், பின்னு முணர்வின் மையினாலே பேத சித்தி பெறவெண்ணும், பன்னு மசுத்த வாதனைதீர் பரம நிலையிற் சுகிப்போமே. 53

பரவியா பகத்தி லண்டமெலாம் பயிலும் பலபந் துகளாகத், திரமார் பஞ்ச மூர்த்திகளுஞ் சேர்ந்து விளையா டரங்கத்தில், தரமார் தேவர் நரருரகர் சார்ந்த நானா வுயிர்க்குலங்கள், விரவும் லீலா பிம்பமதாம் விநோதங் கண்டு சுகிப்போமே. 54

கால தேச வத்துவெனக் கருதா நின்ற பாவனையில் ஞால மதனி லித்தேகம் நணுகு நிலையை நோக்குங்கால், தூலஞ் சடமா மிந்தியங்கள் சூக்ம வவத்தை களின்மாறும், சால துணிந்தா மூயர்சரித்துச் சமித்தல் கண்டு சுகிப்போமே. 55

தூலம்வியட்டி சமட்டியதாச் சூழ்ந்தே யெமதா டரங்கத்தில். சால வெழுந்து பலவேடந் தரித்து விநோத வாடல்செய், மூல மான விந்தியங்கண் முதலா யூழி யூழிதொட்டு, ஞால மதனின் மாறாது நடித்தல் கண்டு சுகிப்போமே 56

தலையாம் புரண சிற்சபையிற் சமைந்து நடிக்கும் பலபிம்பம்,நிலையி லிவையொவ் வோர்முதலா நிகழ்தல் விநோத மாத்திரமே, அலைதீர் சகசா னந்தமதா மமல நடன முன்னோக்கிக், கலையார் பொருள்யா மாய்நின்று கலங்கா நிலையிற் சுகிப்போமே.

இந்தப் பரமா னந்தசுதோ தயமா யிலங்கு பரஞ்சுடரில், தொந்தித் திலகுஞ் சகத்தோற்றஞ் சூழ்ந்த கடலி லலையாகி, வந்து தோன்றி மறைந்திடல்போன் மாயா மனோமாத் திரமாகும், சிந்தித் திடுங்கால் விவர்த்தமதாந் திகழ்மா மறைவாக் கியமிதுவே. 58

அருட்போ தமதா நிறைந்திருந்தே யமல வநுபூ திபினுண்மை, திருத்த மாக விளங்குதற்கே சித்த மொருப்பட் டுரைத்

ததலால்;மருட்கே வலமுஞ் சகலமும்போன் மாயா மோக மலா மையினல், திருக்கோ டேணுந் திருசியமுந் திகழ்த லெம்முட் காண்போமே. 59

சீவ போதம் போயருளார் சிவபோ தமதாத் திகழ்ந் திடலே, யாவ றீரு முத்தியலா லணுகுஞ் சகல கேவலங்க, ளோவற் காமோ வுடலுளமட் டுதிக்குந் தத்வ சாட்சியதா, யேவற் கரசா யிருந்தென்று மிறவா தெம்மைக் காண்போமே. 60

சத்தா சாமா னியக்கோடி தானு மெனது சந்நிதியில், வித் தாய்த் தோன்றுஞ் சிற்சத்தி விவித நாநா சத்திகளின், சித்தாம் பல்லா யிரக்கோடி திகாந்தத் துள்ள வண்டமெல்லாம், முத்தா கார மாய்நின்று மோக மின்றிக் காண்போமே. 61

சத்துச் சித்தா னந்தமதாஞ் சமமா விளங்கு பரஞ்சுடரில், சத்து சித்தா னந்தமதாச் சமைந்த சீவேஸ் வரசகங்கள்,சத்துச் சித்தா னந்தமதாஞ் சகல விநோத நடம்புரிந்து,சத்துச் சித்தா னந்தமதாத் தழைத்த லென்றுங் காண்போமே. 62

சத்தே சித்தா யானந்தந் தானுச் சிவமாப் பரமாகி, நித்தா நித்த பூரணமா நிகழ்சர் வார்த்த தாரகமாய், வித்தா ரமதாஞ் சகசீவ விவகா ரமதாச் சலனந்தீர்,முத்தா கார மாய்நின்று முழுது நிகழ்தல் காண்போமே. 63

ஞானு கார மாய்நின்று நடிக்கு நமது லீலையினில், ஞானு கார மாத்தோன்றி நடிக்குஞ் சீவேஸ் வரசகங்கள், ஞானு கார மாய்நின்று நயக்கும் விநோத நடம்புரிந்து, ஞானு கார மாமெம்மு ணணுக லென்றுங் காண்போமே. 64

அறிவா னந்த விலாசமதா மறிவில் பதத்தில் யாமிருந்தே, அறிவா னந்த விலாசமதி லணுகுஞ் சீவேஸ் வரசகங்கள், அறிவா னந்த சத்தியினு லனந்த விநோத நடம்புரிந்தே, அறிவா னந்த சத்தினிடத் தமர்த லென்றுங் காண்போமே. 65

திரண முதலாக் கற்பகமீ ருகத் திகழுந் தாவரமும், தரமா றெறும்பு முதல்யானை யீருச் செறிந்த சங்கமமும்,சிரமா தியபா தாந்தத்துந் திகழுஞ் சிருட்டி சமத்காரம், வரமா நமது சிற்சத்தி மகாத்மியங் கண்டு மகிழ்வோமே. 66

ஆக மாகி யாருயிரா யஞ்ஞா னமுஞா னமுமாகி, போக மாகிப் போகியுமாய்ப் பொருந்து சுகமுந் துக்கமுமாய்ப், ஏக மாகி யெல்லாமா யிருந்த நமது சிற்சொரூபம், சோக மடைதற் கஞ்ஞானந் துணையா வருதல் பேதைமையே. 67

தானே பலவாப் பதிபலித்துத் தமைந்தாம் வெவ்வே றுக்க ருதி, தானே மறப்பா மாயைவழி சனன மரண சுகதுக்கம், தானே கற்பித் துவந்தூழி சங்கே தமதா விளையாடல், தானே கண்டு சலியாது சமமா நிகழ்த லற்புதமே. 68

சர்வம் பிரமமயமென்னச் சாற்று மகாவாக் கியப்படியே, சர்வம் நமது பாக்கியமாச் சமமாய்க் கண்டு சுகியாமே, சர்வ மனித்தஞ் சடந்துக்கஞ் சற்றும் பயனின் றெனவிகழ்ந்து, சர்வம் பிறவிக் கேதுவெனச் சங்கிப் பதுறுப் பவமறுமோ. 69

அகப்பற் றகலப் புறப்பற் றனைத்தும் விடுத்த வன்பர் பலர், சகத்திற் சகலத் தியாகிகளாச் சரித்தே முத்தி யடைந்தா லும், இகத்திற் பொறியின் வயமாக வியலுஞ் சிவேஸ்வ ராதியதி, யுகப்போ முலகை விநோதமதா யுணர்வ தல்லா லொழியுமதோ.

ஏது விதியே வரவேண்டு மதுவே வருக விவ்வுடற்கு, ஏது நீங்க வேண்டுமதோ வதுவே நீங்க விவ்விரண்டின், ஏது வாகு நியதியினு லியைந்த பகுதி நன்குணர, ஏது வாகும் புராணிலை யிருந்தே காலங் கழிப்போமே. 71

ஏதே தினிதா வந்துறினு மேதே திதயம் விரும்புறினும், ஏதே திடராய் நேர்ந்திடினு மேதே துள்ளந் தளர்வுறினும், ஏதே தும்நஞ் சன்னிதியி லியன்ற விநோத மாமெனக்கி, ஏதே துக் குஞ் சலனமின்றி யிரவி போலக் காண்போமே. 72

தேகத் தோடும் பெற்றிருக்க சீவன் முத்தி நிலைமைதனை, ஊகத் தோடுந் தெரிந்துரைக்கி லுளதாஞ் சித்தஞ் சத்துவமாம், ஆகத் திதய புண்டரிக வமல வாணி வடித்தமர்ந்து, சோகந் தீரச் சமாதியதாந் அரிய வாழ்விற் சுகிப்பதுவே. 73

எங்கு நிறைந்த தனதருளி லிலங்கு சிவோஸ்வ வாசகத்தைச், சங்கை யின்றிச் சதாநோக்கிச் சலனமில்லா திருக்குநிலை, தங் கிப் பரிபூ ரணச்செல்வஞ் சார்வ தல்லா லுடலொழிந்து, பங்க முறுதல் முத்தியதோ பற்றற் றென்றும் பிறவோமே. 74

பிறப்பு மிறப்பு மென்றுமிலோம் பிறந்தா லன்றே யிறப்பு ளாதாம், மறப்பாம் பந்த முண்டானுன் மயறிர்முத்தி பெறவேண்டும், சிறப்பி றேக மெத்தனையோ திகழு மெமதா டரங்கத்தில், அறப்பொய்வேடங் கொண்டாட லதலாதென் றுங்காண்போமே.

சங்கற்ப விகற்ப நீங்கிச் சகமெது யாமா ரென்னச், சங்கற்ப விகற்பத் துண்டாஞ் சகந்தனில் வேறன் றென்று, சங்கற்ப விகற்ப மில்லாத் தனைப்பர மாக நோக்கிச், சங்கற்ப விகற்ப மில்சாட் சாத்கார மடைவர் முத்தர். 76

மேலுங் கீழு மிடைநடுவும் வியாபித் திருக்குஞ் சித்தினிடை ஞால முதற்பல் லாயிரமா கோடி யண்டம் நனிதோன்றி, தூல சூக்க காரணமாத் தொடர்பல் பொருளி னுட்புறனும், சால நிறைந்த பேரறிவாச் யாட்சி யாதல் சத்தியமே. 77

யானா ரிந்த வுலகமே தினைக்கு மூலப் பொருளேது, தானே தோன்றிற் றெனினிதனை யியக்குஞ் சத்தி யாரதென, வானு விசாரம் பிறந்தளவே யண்ணல் குருவா யெதிர்தோன்றி, யூனு ருடலி னீதானு மென்னு முண்மை விளக்குவரே. 78

நற்சங் கத்தா லிம்மையினு.நணுகு மம்மைப் பயன்பெறலாம், நற்சங் கத்தாற் றுர்ச்சங்க நண்ணு தசுத்த வாசனையும், நற்சங் கத்தாற் பலபிறவி நணுகும் வினைக டீர்ந்தகலும், நற்சங் கத்தா லிம்மையினு நண்ணற் கரிய பொருளிலையே. 79

சிற்றம் பலமே யெங்குநிறைந் திருக்கு நிலையூ கித்துணரின் சிற்றம் பலமே யெவ்வுயிர்க்குஞ் சித்த மாகிப் பாவனைபோல், சிற்றம் பலத்தி லெவ்வெவையுந் திகழ விளங்கு மநுபவத்தால், சிற்றம் பலமே யானியாச் சிறந்த சிவாகா ரமதாமே. 80

சித்த சாந்தஞ் சிதம்பரமாத் தானே திகழு மநுபவத்தைச், சித்த சாந்த முளமேலோர் சிவோகம் பாவித் தடைகின்றார், சித்த சாந்தம்பெறவேண்டிற் செறியும் பலபா வனைநீங்கிச், சித்த சாந்தஞ் சாதனந்தத் திகழ்மா நடஞ்சே வித்திடலே. 81

ஏதுந் தாமா யமைந்திருக்க வெதையா சிப்பா ரெதைக் கருதி, ஏதுக் காக வகங்கரிப்பா ரெதைக்கண் டிகழ்வார் விரோதிப்பார், ஏதுக் குந்தா மாதார மெனவே வியந்து மகிழ்வதலா, லேதுக் குந்தஞ் சலனமின்றி யிருந்திங் கெல்லாங் காண்பாரே,

மனமே யுலகாய் விரிந்திருக்கு மாயாத் தோற்ற மிகவளர்ந்து, கனவு போல நனவில்வருங் காட்சி மோகச் சித்ரமிவால், பினமி லுலகைப் பிரித்துணரும் பேத நீங்கு போறிவாம், நினைவி லேக பாவனையா னிலைபெற் றிருப்பார் மேலோரே. 83

அறிவிற் சமபா வனைசாந்தி சந்தோ டமதா மயலகிலே, நெறியே மனத்தை நிறுத்தியிவ ணெடிது விரிந்த சகத்தோற்றம், சிறிதாப் பெரிதா மேனோக்கிற் றிகழ்வித் துள்ள முகமலர்ந்து, செறியே நின்ப மயமாகத் திகழ்ந்து சரிப்பார் மேலோரே. 84

சித்த சாந்த மேசிவமாத் திகழ்பே ரறிவாம் பரமநிலை, சுத்த மான வந்நிலையிற் சுவாறு பவமாச் சுகித்திருந்து, மெய்த்த வின் சொ லன்பினொடு மேலா மருளு மெவ்வுயிர்க்கும், வைத்துச் சோக மோகமெல்லாம் மாற்றி நிற்பார் மேலோரே. 85

தோற்றுஞ் சகமோ கத்தின்வழித் தொடரு மிச்சா சங்கற்பம், சாற்று மனமா யுயிர்களினுட் டங்கி நெடுங்கால் வாசனையால், பேர்த்தற் கரிதா யிருந்தாலும் பெரிது முயன்றிந் நான் முறையே, தேற்று முண்மை நிலையுணர்ந்து தீர்க்க வேண்டுஞ் சாதகரே. 86

---

## ஒழிவிலோடுக்கம்.

தன்னிழப்பை யென்னகற்றுச் சாதிப்பான் சற்குருவா
மன்னுபெருஞ் சீய மதயானை-தன்னடைமேற்
சொற்பனத்தே தோன்றித் தடிப்பற்றுக் கேவலமாய்
நிற்பதுபோற் பாரா னெனின். 1

தேனுண் டிமிழுந் திறம்போற் சிவாநந்த
மோனந் துளும்பி மொழிகாலத்-தேநின்று
தோன்றிருது போலுமொன்றைச் சுட்டாது கேட்பவர்கட்
கான்றதவம் வேத மது. 2

ஆனைக்கை போலபின வத்துவிதா னந்தமா
மோனத்தை வாக்குமன முட்டுமோ-ஞானத்தாற்
காக்கை யிருந்தமனை கைமேற் பிறையென்ற
லாற்கருதி நீசிவமா வை. 3

மண்ணாதி சத்தாதி வாக்கு மனமாதி
கண்ணாதி நாதாந்தங் கண்டகன்ற-வுண்மை
தனையணுவென் றேயுணர்த்துஞ் சார்பினையுங் கண்ட
வுனையறிவென் றுள்ளே யுணர். 4

கன்னிக் கதலிதனை நார்கழிப்பான் கண்போலத்
தன்னையறி யாவறிவே தான்மீளச்-சொன்னு
நாவென்ற நாவேபோ னுனென்ற சொல்லளவே
யாமன்றித் தானெதிரா கா. 5

தம்மா லறிந்ததெல்லாந் தாமல்ல வென்றுரைத்தாற்
சும்மா திருப்பதுவாய்த் தோன்றுதோ-விம்மி
யரிந்ததலை வாயடங்கு மவ்வளவே யல்லாற்
றெரிந்திடுமோ நீயே தெளி. 6

ஊன்றி னிலமசையி னுத மொழிந்தசிவந்
தோன்றுத் துணையுனக்குத் தோன்றுமோ-தோன்றில்
விரனுதியைத் தீண்டுவபோல் வாய்முகத்தை மென்று
சிரிப்பதுபோற் பார்த்துத் தெளி. 7

அருளாலே தம்மை யறிந்தருளா யந்தப்
பரிபூ ரணமே பரையாய்ப்-பரையொழிவி
லானந்தா தீதமா மத்துவித சித்தாந்த
மோனம் வேதாந்த முடிவு. 8

தன்மையு முன்னிலையுந் தானுய்ப் படர்க்கையுமா
யென்னெழிவி லின்புமா யின்புமிது-வென்னுத
வேதாந்த சித்தாந்த மேபிறவா வீடென்று
ஞேதாமல் வேதமுணர்ந் தோன். 9

மலமாயை கன்ம மயக்க விகற்ப
நிலைபோகப் போயொழிந்த நிட்டை-பலவோ
வறிவுக் கெதிரில்லை யாகாய நீழ
லறநிற்கு மாபோனிற் பாய். 10

போதம் பதைப்பறவே பூரணமாம் பூரணமும்
போதம் பதைத்தளவே பொய்யாகு-மீது
விழித்திமைப்பர் நின்றுல் வெளியசைந்தாற் காற்றும்
பழக்கமதைச் சாட்சியைப்போற் பார். 11

வேதாந்தம போலிருக்கும் வேதாந்த சித்தாந்த
நாதாந்த போத நழுவினர்க்கு-நேதி
தனைக்கழன்று தற்போதஞ் சார்பழியுஞ் சந்தி
லுனைக்கறிவா னந்தமுதிக் கும். 12

சும்மாதே பார்த்திருக்கச் சுத்தியா முத்தமர்க்குத்
தம்மாய்வார்க் கோருரையே சஞ்சீவ-மென்மேலு
மாற்றஞ் சகுனப்புள் வாக்கு மதுவுண்ட
போற்றும்பி யின்பாட்டுப் போன். 13

மயலற்றார் கேட்க மகிழ்ந்துரைத்த வார்த்தை
யயலுக் குபதேச மாகுங்-குயிலாத்
தொறுவனைப்போ னின்றுகே சேழுக்கு நோயு
மறுமுரைத்தோ னாமுரைப்ப தை. 14

காலமறை தேசமறை கன்மறைபோற் காண்பாரும்
பானுனும்புள் ளிப்பிமீன் பக்கிதிக்-கானு
மிரும்பினீர் மின்னலிலே யேற்றமணம் பார்ப்பார்
தரும்பொருளைக் கொள்ளுவார் தாம். 15

பதியிறக்கக் கேட்டிறந்த பத்தினிபோற் பால்போ
லதியோகி தீப்புகல்போ லன்பாம்-விதவையர்போற்
கன்னன் கடையிற் கொடைபோலக் காணலாந்
தன்னையிழ வாதிழத்த றன். 16

கல்லையுரு வாக்குங் கழற்றியிலே யில்வாழ்க்கைச்
சில்லநீர் போலத் தெளிந்துவருந்-தொல்லுலகங்
கான்றசோ றாகுங் கதலித்தண் டைக்கனலி
லூன்றல்போன் ஞான முதிக்கும். 17

தன்னையிழப் பார்க்கென்ன சார்வூழி சங்கார
மென்னிலொளித் தெங்கே யிருக்கலா-முன்னே
புலிபார்க்கப் போனகதை போலிமையா நாட்டஞ்
சலியாமன் மூடுந் தனை. 18

கவிப்பயனு மாதனமுங் கண்சிமிட்டா நோக்குந்
தவப்பகடி யாட்டங்காண் சார்வைத்-தவிர்க்கின்
மறந்தறிய லாகா மட்டறிவாய் வான்போ
னிறைந்து துளும்பாம னில். 19

அறிவா யிரீர்மயக்க மாகா தசையில்
விறிசாய் விடாதோ விகற்பம்-பிறியாத
தாராசி னுனிபோற் சமாதிவரின் ஞான
விராச னுமக்கொப்பா ரெவர். 20

நீர்க்குப் பதமு நெருப்புச் சுடுந்தொழிலுங்
காற்றைச் சலிக்கவுமா கற்பித்தா-ரார்க்குமிது
போகா மனுதி புகைக்குநிழற் போலாநீ
யாகாயம் போற்பா ரறும். 21

உதித்தொடுங்கும் பொய்க்கா ருபாதான மென்று
துதிப்பையுதிப்பா லொடுக்கிற்-பதைத்தெழுந்த
பந்தன்றே சாட்சியைப்போற் பார்வை பதித்தமரங்
கொந்தலர்ந்து காயா தொக்கும். 22

சுட்டுப்போ தங்குழன்ற சுத்தமை மாத்திரையின்
மட்டித்தா னற்றவிட்டை யைக்குமாற் கெட்டேன்
றலைச்செய்யு மானந்தஞ் சற்றேபால் வாரி
முலைக்கண்ணிற் றோன்று முறை. 23

உட்புறம்பாம் பூசனையு மியோக சமாதிகளுஞ்
சுட்டறிவு கெட்டவர்போற் றாங்கு மதும்-விட்டும்
பகல்விளக்கு முச்சிப் படிகமும்போற் பாச
மகலநிற்பார்க் கார்சரியொப் பார். 24

இருட்கே வலத்தின் றெழுப்பியெதி ரிட்ட
மருட்கே வலசகல மாற்றித்-திரிச்சுடர்போற்
றன்னறிவு தின்னிக்குத் தானுணர்வாய்ப் போவதல்லா
லுன்னுதலே யொட்டுதல் காணும். 25

அறிந்ததெல்லாம் பொய்யென்ற வத்துவிதி யார்க்கும்
வெறும்பாழி லூன்றல் விடாது-பிறந்திறப்ப
யானு னுனதொழிவு மானந்த மாமுதிப்பும்
போனுல்கா லுன்பிறப்பும் போம். 26

தொழிலிறுதி தானே சகவுண்டிய மென்றுன்
றெழிலுதயந் துக்கமெனச் சொல்லோக்-தொழில்செயினும்
வந்திப்போ கம்போல வுண்டுடுத்தன் மாத்திரமாய்ச்
சிந்திப்பா னைப்பேணிச் செய். 27

சும்மா திருக்கவைத்த சூத்திரமாஞ் சாத்திரத்தை
விம்மாக் கதறுவதும் வேலைகளுந்-தம்மறிவா
னீட்டிப் பிடித்திருக்கு நிட்டைகளு ஞானிகண்முன்
காட்டும் பரியா சகம். 28

மருந்து பிணியோடே மாண்டு புகைதீ
யெரிந்த விறகோ டிறக்கில்-விரிந்த
தொழின்மனத்தின் மட்டேநீ தோயுவதென் ஞடி
நிழல்புதைத்தார் போலெதிர்போய் நில். 29

வதுவைச் சடங்கதனை மைதுனமாக் கொண்ட
புதுமைச் சிவானந்தம் போதும்-பதையா
விளக்கொளியி லெண்ணெய் வியாபியா ணற்போற்
கொளக்கொடுத்தல் சத்தியமாக் கொள். 30

என்னுணை யென்னுணை யென்னுணை யேகமிரண்
டென்னுமற் சும்மா திருவென்று-சொன்னுன்
றிருஞான சம்பந்தன் சீகாழி நாட
னருளாளன் ஞானவிஞே தன். 31

பாசங் கழன்ருர் பசுவுக் கிடம்பதியா
மூசல் வடங்கழன்ற தொவ்வாதோ-நேசித்த
பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் பாட்டுமக்கோ
மற்றச் சமையமெங்கு மாம். 32

அறிந்துபற்றி நின்றழுந்து மற்ப வறிவை
யறிந்துசுத்தி யேபே ரறிவாய்-நிறைந்துசிவந்
தோயாம னின்றதுபோற் றேற்றமுத லைந்துடனுந்
தோயாமற் சுத்தத் துறவு. 33

கூரிருளின் மின்மினியின் கூட்டம்போல் வாழ்சகத்தை
யாரறிவா ரந்த வறிவுதயஞ் சூரியன்கா
ணுன்னி மூலைக்கெடுத்த வுச்சியிலே யூனமறச்
சொன்னு ரவத்தைகளைந் தும். 34

பொய்யென்ற வார்த்தை புரையற்று மெய்யானுன்
மெய்யென் பதுதேட வேண்டுமோ-மையிருளைத்
தீர்த்த வெயிலைத் திரும்பி யசைத்திமைத்துப்
பார்த்ததிலென் சந்தையம்வைப் பாய். 35

வேண்டாம் பிறப்பென்ற வார்த்தையினின் மெய்விடயந்
தீண்டா ததிலே தெரியாதோ-காண்பி
ருடம்புமிகை யொன்றி லாமையே நோன்பென்
றடங்க வடங்கினா ரை. 36

தேடப் படும்பொருளைச் சிக்கெனவா கப்புதைத்துக்
கோடிக் கொருமிடங் கொள்ளுகினுங்-கூடாத
வாணாளை வீண்கழிக்கு மானிடரைப் போன்மயக்கம்
பூணார்பொய் கண்டுதுறப் போர். 37

நாடுநகர் வீடுடையா டாய்தந்தை நட்புமக்கள்
மாடுகுலம் பொன்னுடம்பின் வாதனைகள் கூடத்
தொடுத்தவலைக் கண்ணித் துடக்கிதனை யிப்போ
விடப்பெறுவா ரேன்பிறப்பார் மேல். 38

தின்னிற் றிமிரில் விடம்பிடித்துத் தீர்த்துவிடும்
பொன்னை நினைக்கப் பொருதுகாண்-பின்னை
மருந்தாலு மந்திரத்தி னாலுந் தவிராப்
பெரும்பாவம் பெண்ணிற் பெரிது. 39

துக்கஞ் சுகமான சுட்டறிவு கெட்டவர்க்குத்
திக்குண்டோ வெங்குஞ் சிவாலயமா-மக்கினிக்குப்
பிச்சை பொதுமிழுனீர் பேரிதுவே பேசார்தம்
மிச்சையிருப் பேகாந்தத் தே. 40

உரையொடுங்கிற் போத முதிக்கு மொழிவே
யருளா மதன்போக் கசையாப்-பரையோகம்
போனாற் சுகாதீதம் புண்ணியர்க்குப் பொய்யுதியா
தேனோர்க்குப் பல்விதமா கும். 41

செகஞ்சிரிக்கத் தாஞ்சிரித்துச் சிபேயென் றெருட்டி
லகம்புறங்காட் டேச்சுக்குற் றற்றுத்-திகம்பரியாய்த்
தானந்தம் பாடிவிண்ணிற் றட்டத் துணங்கையடித்
தானந்தக் கூத்தாடிப் பார். 42

மாலயனு மிந்திரனும் வாழுவதாய் மாளுவதாஞ்
சாலமபல் பார்த்துத் தலையசைப்பர்-ஞாலமயங்
குன்மத்தக் கோரணிபார்த் தோகோ வெனச்சிரிப்பர்
றன்னைப்பார்த் தாவொர்தாக் தாம். 43

கேடுஞ் சுகமு முதலெல்லாங் கீழ்ப்படுத்திக்
கூடுஞ் சுகம்போலக் கொள்ளாதே-நாடுநெகும்
பூணைக்கண் ணேரி பொருப்பேறி போனுச்சிப்
பானுப்போ னீயவரைப் பார். 44

அடைப்புள்ளா யாளடர்ந்த வாமையாய்த் திக்கே
யுடுப்பதா யோர்ந்துழல்வாக் கூறுர்-நடைப்பிணமே
யூமைப்பே யதனெனினு மோலமிடுந் தேவர்குழாஞ்
சேமக்கோ லாளிந் திரர். 45

செத்தவரைப் போலத் திரும்பாமற் போகனுமா
மெத்திசையு மொன்றென் றிருக்கனுமா-முத்தர்தமக்
கண்ட மணுச்சிற்றி லாடரங்கந் தேகமலாற்
கண்டிடுகைக் கேதுமிலை காண். 46

உடற்போகம் போக வுயிர்ப்பகைபோய்ப் பேறுங்
கெடத்தானுந் தன்னறிவுங் கெட்டோர்-நடக்கும்போ
தாகாயஞ் சாணிடல்போ லாவதல்லாற் பூரணர்க்குப்
போகாவூ ருண்டோ புகல். 47

தருவனமென் றண்டுகுடை சாய்மரையாம் வாழும்
நரவனமென் மேல்கீழ் நடுவென்-பரமசிவன்
ருக்கற் றதுபோ லருள்சிவனைச் சாராபோற்
றுக்கற்றூர்க் கெங்குஞ் சமன். 48

காமாதி விட்டுக் கரமே கலமாகிப்
பூமீதே கைகாலைப் போர்த்துறங்கி-நாமகுணஞ்
சாதி கருமமெனும் வாதனையிற் றுக்கற்றூர்க்
கேது சமையமென லாம். 49

அஞ்சனக்கண் ணுளர்க் கருநிதியந் தோன்றுவபோ
னஞ்சலகை மாற்றியதி ஞானுவர்போல்-வெஞ்சாப
வீடுபோற் றோன்றுமருண் மேலிட்டால் விப்பிரட்டா
மோடையின் மண்டேக மொப்போர்க்கு. 50

அவரவரைப் போலிருப்பர் தமவரா கார்போ
லிவரவர்க்கொப் பில்லை யெனினு-முவமைசொலின்
வேசிபணம் வெய்யோன் வீணை வெளிவிசிறி
யாசியர்போ லென்கினுமா வார். 5

சாவே பெருநோன்பாய்ச் சந்தற்ற சத்தியர்க்குத்
தேவாரங் காலந்தி யானமறம்-பாவம்
விதிவிருத்தம் பேசுகைக்கு வேதாக மங்க
ளதிசயிக்கு மேலுரைப்பா ரார். 52

உருகு பரமசுக வுல்லாச நோக்குந்
திருமுகமும் புன்முறுவற் றேசுந்-திருநீறுந்
தற்பாவ மாண்ட சரீரத்தி லோர்சாத்து
மற்றே வெறுமனமு காம். 53

வாடன் மணம்போல் வருந்தா வயிராக்யத்
தோடு மெலிந்த வுடம்புடனே-கூடார்
நிருவிடயா னந்தசுக நீங்காத நோக்குந்
திருமுகமு மென்னை விடாதே. 54

தத்துவத்தின் போர்வை சரிந்த திகம்பரிப்பே
ரத்துவிதி யேகாந்தி யானந்தி-சுத்தன்
றுரிய னவதூதன் றுறவி சிவயோகி
நிருவாணி யென்விரத்த னென். 55

கரையடுக்க வந்தாற் றிரையலைக்குங் கப்பல்
பொருளடுத்தாற் றொன்றும்பொய்ப் போதம்-விருதினவன்
வெற்றிக் குதிகுதித்தோன் போல்வேண்டும் விட்டதுபின்
பற்றுமதிற் சிக்கெனிற் பாய். 56

சகலமுங் கேவலமுந் தாக்கறுப்பான் றூமை
பகல்விளக்கோ டொச்சிப் படிகந்-தகவைத்தா
மூட்டி யுறக்குவது நாமேகம் முடல்கலப்பு
நாட்டமொழி யென்றருளி னான். 57

தத்துவம்போய்க் கேவலம்போய்த் தான்போ யருள்கழன்று
சுத்தபரை யாய்த்தன் சுதந்திரம்போய்ச்-சத்தி
யொழிவிலை போதம்போ யொன்றாகா வொன்றி
னழிவில்லை யின்பவதீ தம். 58

போதப் புறவி புருட னதிலேந்து
வீதிப பவனி விழிசாகும்-போதப்
புரவி யருமோ றிறைப்போக்கு வாவற்ற
பரமசுக மாங்காணப் [illegible]. 59

நடந்ததெல்லா நீயே நடப்பழிய நின்ற
விடஞ்சிவநீ யென்றிருக்க வெண்ணி-லடங்கின்
மயக்கி மலமழுத்து மாயையிது வாரா
வயர்ப்பருளா லாஞ்சிவயோ கம். 60

அருளும் பரையு மருக்கன் மதிபோன்ற
விரவு பகலற்ற விடத்தே-பரமநிலை
சத்தி கழற்றியிலே சச்சிதா னந்தமயச்
சுத்தநிலை நீயற் றது. 61

தாமருந்தல் போலத் தமைச்சிவனுக் கூணாக்கித்
தாமருளா லுண்டுவரை தாமாகித்-தாமழிய
வஞ்செழுத்தா லர்ச்சித் தடியார்க் கடிமைசெயிற்
பஞ்சமலக் கொத்தறுமப் பா. 62

கருவியுதிப் பிற்சகல கேவலத்தைக் காட்டி
யருளுதிப்பு மங்கதுபோ லாக்கி-யிரவுபக
ருக்காத சுத்தத் தலத்துணைநாம் வைக்கநீ
யாக்கா தெமக்குப் பரம். 63

கண்மணியி னூகாய நிழல்கலந் தாற்போல்
உண்மையைநீ யுண்டென் றெணையுணர்த்தித்-துண்ணென
பார்த்திருந்த சித்திரம்போற் பார்த்தானை நாம்பாவித் [வே
தோத்திரஞ்செய் யாப்பிறவாச் சொல். 64

---

## வேதாந்த சூடாமணி.

ஆகமுத லனநேதி யதுசெய்து நின்ற வாருயிரை யறிவித்த லதத்துவா விருத்தி, சாகைநுனி மதியுளதென் றுணர்த்தலிற்பூ தாதி சகமாய காரணங்கொண் டறிவுணர்த்தல் தடத்த, மாகனலி விளங்குசுதிர்ச் சொரூபனெனல் போலான் மாவினிச சொருபமிது வெனவுணர்தல் சொருப, நீகடவுள் சொருபநி சஞ் சச்சிதா னந்த நித்தியம்பூ ரணமாக நீநினைந்து கொள்ளே. 1

மாதுமுதல் விடயவூ தியங்கடமிற் றோன்றி வரல்விடய வானந்தங் கண்படைபிற் றோன்ற, லோதுபிர மானந்தந் துயிற்றெளிவிற் றோற்ற முடையதுதான் வாசனு னந்தங்கே ளவா

மாதலுமி னைதுமன்றதி தோன்றுதல்முக் கியமா மானந்த
மனேலயமோ கத்தினில்வந் துதித்த, லேகமறு நிசானந்தம்பிரி
யவிட யத்து ளியான்பிரிய னெனத்தோன் றுதலான்மா னந்
தம். 2

விரியுமுல கனைத்தும்பொய் மெய்ம்மைதா னென்னும்
விவேகத்திற் றேன்றுவதே யத்துவிதா னந்த, மரியமறை முடி
வாகும் வாக்கியஞா னத்தா லாதலைது வித்தையா னந்தமென
வறிக, வரியனமுன் னின்மையொடு பின்னின்மை யன்றி யொ
ன்றினிலொன் றின்மையென்று மின்மையென நான்காம், திரியு
மபா வங்களிவை நித்தியத்துட் புகாத நிறத்தனவாம் பூரணத்து
முருதனமூன் றுரும். 3

காய்ந்துள விரும்பு போலுடம் பாதி கலந்துறு குடும்பமெ
ன் வழக்கிற், சார்ந்துளன் சீவான் மாவெனப் படுவான் றமரை
யிலையினீர் போலத், தோய்ந்துள குடும்பப் பெருவிவ காரந் தோ
ய்வில னந்தான் மாவாம், போந்துலை கிற்குப் பரிதிபோற் சான்
றாய்ப் பொருந்தினேன் றன்பா மான்மா 4

சித்திரப் படமோர் பொருளொடுங் கூடாத் திகழ்வினிற் றவு
தமே யெனவு, மெய்த்தகஞ்ழ் வருடக் கடிதமே யெனவு நீனிற
த் திரைஞ்சனை யெனவும், பத்தியோ வியஞ்சேர்ந் திரஞ்சித
மெனவும், படுதல் போற் பிரமமு மாயை, வைத்தகா ரியங்கள்
கடந்துறு நிலையில் வயங்குருஞ்சித் தெனும் பெயர் புனைந்தே. 5

நீங்கிய விகாரப் பிரமமா மீச னிகழ்த்துமோ தொழில் பல
வென்னிற், பூங்கதி ரிச்சை யின்றியே வாரி பொழி மழைக் கதி
ரினுற் பொழிய, வாங்கதி நிழலைப் பொருந்தியந் நிழலை யலர்
முகி லான்மறைத் தளித்தே, தூங்கிமே காத்தால் வெங்கதி
ரானீர் தொலைத்ததைத் தன்றடைக் குதல்போல். 6

சுருதிசித்த மாதலேறு வினையுடம்பா டாகுந் தூயபரப்
பிரமமாம் விகாரமிலா விறையாற், றருதலெங்ஙன் காரியங்கள்
சடப்பகுதி யென்னிற் றனிலாத் ததிர்ச்சிலையி லிச்சையிலா
தெழுந்த, பருதியினு லழல்வால்போற் பரசிவனுன் மூலப் பகு
தியிடை மகதாதி காரியங்கள் வரற்குக், கருதின்மூா னிலையாகு

மெனப்புகல்வ ரறிஞர் காரியங்க டோற்றுதனால் வகையவை யீண் டுரைப்பாம். 7

வெயிலினிடைக் காட்டுபடி மக்கலமுண் மனையை விளக்கு தல்போ லுந்துரியன் றனதிருஞ்சந் நிதியு, மியலுறுதற் சைதன் யப் பதிவிம்பந் தன்பா லெய்தலும்பெற் றிடுதலினு லச்சுடவாங் காரம், பயில்விடய வுணர்வினொடு நனவுகன வுமூன்று பகர்சுழு த்தி தனிலடங்கு மவ்வழக்க முரைப்பிற், செயிர்தருமாங் காரம டங் குறுசுழுத்தி தன்னிற் செறியவித்தை யுட்சுவருந் துயிற்க தவு மன்றி. 8

நடுக்கமறு தீபமாந் தனைத்தானே விளக்க னவில்பிரத்தி கான்மாவின் சோதியாம் பின்னர்த், தொடக்கிவரு காலகரு மாதிசமீ ரணனாற் றுயிற்கதவந் திறந்திடவவ் வவித்தையது தன்னி, னடுக்குமுத லவத்தைமக தத்துவமாந் தெற்றி யடுத்தி ருந்தாங் காரமெனும் வெண்பளிங்கு மணிதான், படைத்தலருந் துரியசுடர்ப் பதிவிம்பம் பதியப் பட்டுமுனம் போற்சீவ னென் னவே நின்று. 9

சொற்பனமா நடுமனையை விளக்கியே பொறியாஞ் சுருங் கையினிற் போந்துநன வெனுமுன்றில் விளக்கு, முற்பகருங் காலகரு மாதிசமீ ரணனன் மூடலுமத் துயிற்கதவங் காரியவாங் கார, நற்படிக மணியவித்தை தனிலடங்கச் சென்று நனவுகன வெனுமுன்றி னடுமனைக ளிருளாந், தற்படிகமணிக்கதுவு மறிவொ ளிதன் முதலாந் தனித்துரிய விளக்கையடைந் தேகமா மன்றே.

ஓங்காரா திகளநுசந் தானத்தாற் பரத்தி லுள்ளமடங் குதலேமந் திரயோக மதனே, டீங்காகு மனபவன மொன்றுய மூ லத்தி னிருஞ்சுழினை வழிசென்று சென்னிநடு விருந்த, தேங்கா ன்ம வொளியின்மனோ லயமாதல் பரிசஞ் சிறந்துறக்கஞ் செவி திசைக ளிருசுடர்கள் விழிதீ, பாங்காய முகமுந்தி விசும்புநிலம் பதமாம் பரமனுரு வாயவிராட் புருடவடி வெனினும். 11

அன்றியள வுறுபெருந்தோட் படைபணியோ டுற்ற வண் ணல்வடி வெனினுநினைந் தவயவங்க டம்மி, லொன்றொன்றை விடுத்துநின்ற வவயவிமாத் திரமா முண்மையாம் பிரமத்தின் மனமடங்கல் பாவஞ், சென்றளவு காணமுறு வொருபிரமங்

மறுவலுறு சுபேச்சைவிசா ரணைவலியால் விடய வலியறுத றான்றனுமா னசியவற்றின் பயில்வால், விரவுநன வாயவுல கினைக்கனவென் றெண்ணி மெய்த்தவான் மாவுண்மை கருதல்சத்வா பத்தி, பரவலுறு மூலகுதோன் றாதுசுழுத் தியன்போற் பகரறிவு மாத்திரையாய் நிற்றலசம் சத்தி, பொருவிவா சனையனைத்து மிகு துயிலோன் போல வுயிரானந் தத்தொடுங்கல் பதார்த்தாபா வனையாம். 18

உண்டிலையென் ஞமலகங் கிருதிரங் கிருதி யுருமலறி வுருவாய வத்துவித பதத்துட், கண்டதொரு வ்றுங்குடம்போ லுட்புறஞ்சூ னியமாங் கதிதுரிய காமியா முபரதியை யடைந்து, கொண்டிலக லுறுதிரிசி யானுவே தம்பின் கூறலுறு சத்தானு வேதநிரு விகற்ப, மெண்டருசட் சமாதிகளாம் புறமொடக மென்னு மிருபேத மடைந்தவற்றை முறையினிவண் மொழிவாம். 19

கடாதிவிட யத்தினிலொன் றினைக்குறித்து நாம கற்பனையோ டுருவமெனு மாயையதன் றிறத்தைத், தடாதுவிடுத் தத்திபா திப்பிரிய மென்னுஞ் சச்சிதா னந்தமாம் பிரமத்தின் றிறத்தை, விடாதனுசந் தானஞ்செய் திடுதலே புறத்து மெய்த் திரிசி யானுவே தப்பெயர்கொள் கின்ற, கெடாததொரு சவ்விகற்ப சமாதியென லாகுங் கிளர்ந்தபுறச் சத்தானு வேதமது கிளப்பில். 20

சச்சிதா னந்தவுரு வாவதே பிரமந் தானெனவே தியானித்த லதுவாகு மென்க, விச்சமா திகள்பயின்ற வலியினாற் றோன்று மிரும்பிரமா னந்தநிலை தனின்மனஞ்சென் றொடுங்கி, நிச்சலமா யலையிற்கடல் போலிருத்தல் புறத்து நிருவிகற்ப சமாதியா மனோகதகா மாதிக், கச்சமறு கரிதானென் றெண்ணுதலுட் டிரிசி யானுவே தப்பெயர்கொள் சவ்விகற்ப சமாதி. 21

சங்கமறு சச்சிதா னந்தவொளி யுருவந் தானெனச்சிந் தித்திடலுட் சத்தானு வேதம், பொங்குறுதன் னனுபூதி ரசந்தோன் றுமதனாற் புகன்றதிரி சியஞ்சத்த மெனுமிரண்டு மகன்றே, யிங்கசைவி றீபமெனப் பந்தமற விருத்த லிலங்குமக னிருவிகற்ப சமாதியிவ்வா றாறுந், தங்கலுற வெழுகுமியோ கிக்குமன மெங்குச் சரிக்குமாண் டாண்டெலாஞ் சமாதியென லாமே. 22

சீவன்முத்தற் குரியனவா மயித்திரியே கருணை திகழ்முதிதை யுபேட்சையெனுஞ் சற்குணங்க ளவற்றுண், மேவுருசற் புருடரொடு நட்புமைத்திரியா மெலிதருதுக் கிகளிடத்தி னிரக்கமே கருணை, யோவறுநற் புண்ணியர்பால் விருப்பமே முதிதை யுவப்புவெறுப் பிரண்டுமிலா துலகிலவ மியற்றும், பாவிகளை

விடுதலே யுபேட்சையென வறிக பயனைந்து சீவன்முத்தற் குள வகையீண் டுரைப்பாம். 23

ஞானரக்கை தவஞ்சகல சம்வாத முடனே நவிறுக்க வொடுக்கமொடு சுகாவிற்பா வத்தா, னவற்றுண் மருவும்வா சனைய ழிவு மனத்தி னடக்கங்க ளாற்புத்தி நிருமலமா யிருக்கன், ஞா னரக்கை மனம்பொறிகட் கொருமையே தவமா ஞானியென வுலகமெலாம் வழிபடல்சம் வாத, மானமலக் கிலேசமற லேது க்க வொடுக்க மவற்றினாற் பந்தமறல் சுகாவிற்பா வந்தான். 24

குறிகளோர் பத்துளவாம் ஞானமயற் கவைதாங் குரோத மின்மை வயிராக மைம்பொறிக ளடக்க, மறமுதவு சமைத மையே சனப்பிரியத் துவமே யலோபமொடு கொடையபய நிருமதமென் றறிக, நெறிமருவு சீடரொடு பந்தருதா சினர் நிலை யில்பா விகளென்னு நால்வகையோ ரிடத்து, முறையினனுக் கிர கம்வந் தாறுமருள்கொள் சீவன் முத்தனு லென்பாவை முறையி னெடுத் துரைப்பாம். 25

தெரிவரிய சீவன்முத்தன் றனைநம்பு மதனாற் சீடர்க்கு முத் தியுமன் பொடுவழிபா டதனைப், புரியுமுயர் பத்தர்க்கு நல்வினையு மவன்றன் புனிதமுறு சரிதமது கண்டவுதா சினர்க், குரியபுண் ணியமுமு மவன்றன்வடி வினைக்கண் ணுறுதன்முத லானவற் றூர் பாவிகட்குப் பாவ விரிவுமுறு மென்பாகர்த் தாகருக்காதியி னு லெங்ஙனெனின் முத்தனாற் பிரமோப தேசம் 26

முத்திவிருப் பதனாலே புறக்கருமவொடுக்க மொழிந்தத னால் யோகநிலை முயற்சியது தன்னாற், பொய்த்தலறு தூரியநிலை வத்தூரிய விழைவாற் புகலறுமா வாக்கியவா ராச்சியத னாலே, யத்துவித ஞானமத னலவிச்சை நாச மதனாற்பொய்த் துவிதமய கழிதலதனாலே, மெத்துசுக துக்கநிலை யொழிவதனால் விரு ப்பு வெறுப்பறுத லதனாலொண் விதிவிலக்கோய் வதனால். 27

வினையிரண்டு மகறலதனாற் பிறகு பாவ விச்சித்தி யதனாலே பாசமெலா மொழிதல், பினையறைந்த வதனாலே பராபரமாய் முடிவாய்ப் பெயர்சாதி குறிபெறு தொன்றுமில வாக்கு, மனமிற ந்து நித்தியா னந்தமய மாகி மறிவிலா விபேதகனை வல்லியமவந் தெய்து, மௌனவறிந்து துணிந்திடுக சுருதிகுரு பரனு மென்பவி டையுநெறி விரும்புறுமுத் தமரே. 28

## பிரபுலிங்க லீலை.

பரசிவம் பிரம மென்னப் பட்டொரு திரிவு மின்றி
யுரைமன மிறந்து நின்ற வொருசிவ லிங்கந் தன்னின்
வருமுயர் சதாசி வன்றான் மற்றவன் றனைப் பொருந்து
மருமைகொண் ஞான சத்தி யவர்களாற் சிவனு திப்பன். 1

வேறு.

தாழ்ந்தோ ருயர்வ ரென்றுமிக வுயர்ந்தோர் தாழ்வ ரென்றுமறைஞ், சூழ்ந்தோ ருரைக்கு முறைகண்டா மதில்சூழ் கிடந்த தொல்லகழி, தாழ்ந்தோ ரனந்தன் மணிமுடிமே னின்றன் றுயர்ந்து தடவரையைச் சூழ்ந்தோர் வரையி னுதிப்பவன்றாட் கீழ்நின் றதுபோய்ச் சூழெயிலே. 2

வேறு.

இங்கொரு மாயை யென்னு மெழின்முளை தோன்ற லோடும்
பொங்குறு முவகை நெஞ்சம் பொருக்கல ளாகி யெய்யும்
வெங்கணை மழையுந் தூவு மென்மலர் மழையு மொன்றா
வெங்கணு மதன வேளின் றிடையறச் சொரிந்தா னம்மா. 3

கண்ணக னிலத்த கங்கைக் கரையினு முறைமுயி டத்தும்
புண்ணிய வனத்து மெய்திப் புற்றுமாய் மரமா யுற்றுந்
தண்ணிய புனலிற் றீயிற் சார்ந்துமுண் டெயிறு றந்து
பண்ணிய தவத்தோர் னெஞ்சும் பதைத்தன மயலின் மூழ்கி. 4

என்றுமெம் முள்ள மெல்லா மெழுதிய விளக்குப் போல
நின்றிடு மின்றென் கொல்லோ நிலைகுடி மாறு நின்ற
தென்றன்மு னிருந்த செய்ய சிறுசுடர் போல வைய
நன்றிவை யுணரு மாறு நவின்றருள் செய்தி யென்றாள். 5

சங்கரி யொருசூ ளாற்றன் றமோகுண வடிவ மாயை
மங்கையை விடுப்ப வன்னாள் வனவசை நகரிற் பிள்ளைத்
திங்களி னுதித்தா ளின்று செய்தவக் கிழமை பூண்ட
நுங்கணெஞ் சதனு லாற்ற லுடைந்ததென் றவனு ரைத்தான். 6

பிணிதப வேண்டில் வாழ்நாள் பெரிதுற வேண்டிற்செல்வ
மணிதர வேண்டிற் கல்வி யறிதர வேண்டில் வானம்
பணிதர வேண்டின் முத்திப் பயன்பெற வேண்டி லென்று
மிணையறு மல்ல மப்பே ரெந்தையை நினைப்ப ரென்றும். 7

நெஞ்செனு மகலி லன்பா னெய்நிறைத் துள்ள மென்னும்
பஞ்சுறு திரியி னுச்சி பற்றிட வல்ல மப்பே
ரஞ்சுட ரிலக வேற்றி யருந்தவர் மாயை யென்னுந்
துஞ்சிரு ளகன்றி ருந்தார் தொல்லைமா தவங்கள் செய்து. 8

செல்லுறழ் குழலீர் தேய மோபர தேயஞ் சூளால்
வல்லவ ரென்ன வந்தோர் வலிநிலை யல்ல வென்னு
மல்லம னென்பே ரென்று மன்புசெய் பவரி டத்திற்
புல்லுவன் றொடர்பி லாம லென்றனன் பொய்ம்மை யில்லான். 9

வேறு.

பொழிந்திழி மழையால் வளிநனைந் திடுமேற் புகைந்தெழு மெரியில்வான் வேமேல், முழங்குவெண் டிரைப்பே ராழியக் கலய முனிவனை யழுந்துமே லஞ்ச, மெழுந்தான் றன்னை வருத்து மேன் மயக்க மெய்துவ னல்லமதேவ னொழிந்தவர் தம்மை யொழிவற மயக்கு மொருத்தியு மவன்றனை மயக்கும். 10

மாயையை யகன்று நடக்கக்கா லெழுமோ வாயிடை மாற்றமொன் றுண்டோ, போமொரு விடய முணமனம் வருமோ பொருந்துறும் பகலிர வுளவோ, காயமு முயிருங் கலந்துவாழ் வுறுமோ கண்டனை யெனவெனை யொருவர், நீயறி வுறவிங் குரைப்பவ ருளரோ நேரிழா யென்றன னன்னாய். 11

வேறு.

நின்னையு மறிந்திலை நீயென் றவிவ
ளுன்னுரு மனமொழி யுறாத வல்லமன்
றன்னைநீ யறிவுறுந் தன்மை யுண்டுகொல்
கன்னிமா துமைதம கலையை யல்லையோ. 12

மூலகா ரணமெனச் சொல்மொ ழிந்திடு
மாலுமோர் மானிடப் பிறப்பில் வந்துதன்
சீலமோர்ந் திலனென்னிற் சிறிய பேதைநான்
ஞாலமேன் மயங்குத லிறால் வேண்டுமோ. 13

வேறு.

மெய்ம்மை சிவமே யல்லாது விரியு முலகம் பொய்யென்பா
ரிம்மை மறுமை நிலையல்ல வென்ன நிகழ்ந்த கருத்தினோர்

செம்மை நெறியிற் புறமொடகந் திரியுங் கரணங் காமாதி
பொய்மை வினையி லவர்குருநூல் பொருளாய்த் துணிந்து வீடு
[வப்பார். 14

இந்த வுலகிற் குதவியா யியன்ற தொழில்கள் பலசெய்யு மைந்தன் வேண்டு மெனநிற்போன் மக்கட் பதடி யாகுவா, னந்த வுலகிற் காநினைப்போ னறங்கூர் மகனு மத்துவிதா, னந்த முதவு மகவிருப்போன் ஞானி யாகு மென்றெண்ணி. 15

உடம்பைப் பொறியைக் கரணத்தை யுயிரைத் தானென் றுழலாம, லடங்கத் துறந்து தனையறிந்து பேதாபேத மென்னு மயல், கடந்திட் டிருக்கும் பரமுத்தி காட்டும் புதல்வன் வேண் டுமென, விடும்பைப் பிறவி நோய்தணிப்ப வெண்ணு மனத்தா னெண்ணினன். 16

தறிபோ லுடல நேரிருந்து தயங்கு மருங்கி னிருநாடி, நெறிபோய் மீளும் வளியதனை நிறுவி நடுநா டியிற் செலுத்தி, யறிவோர் சிறிதுஞ் சலியாம லன்னப் பெயர்மந் திரமாறிக், குறிபோ யிருந்த வொருகுறியைக் குறித்துக் கொண்டங் கிருந் தனரால். 17

வாயு நிற்ப மனநின்று மனந்தா னிற்பப் பொறிநின்று
பாய பொறிக ணிற்பவிடர் படுபுன் புலன்க ணின்றனவா
லாய புலன்க ணின்றமையா லகிலந் தோன்று துள்ளத்தே
தூய பரமா னந்தபரஞ் சோதி தோன்றக் கண்டிருந்தார். 18

ஒருங்கு மனமோ டினையசிவ யோக சமாதி நவதிங்க
ணிரம்ப விருந்த காலத்து நெற்றி மிசையிற் பரஞ்சோதி
திரண்டு குழவி யுருவாகிச் சென்று புறமுற் றிடவதனை
விரும்பு மிருவர் தாமுமுடன் விழிக டிறந்து கண்டனரால். 19

அலைந்து பிறப்பி லாங்கார வஞ்ஞா னிகளா மாணிடரு
மலிந்த சுரரு முனிவரரு மற்றை யோரும் பெறுவரோ
தொலைந்த மாயை நிராங்கார சுஞ்ஞா னிகள்போன்
மலவிருளை நலிந்து வளர் சச்சிதா நந்த விளக்கா மதலையே. 20

ஆன்ற மயல்செய் சையோகந் தன்றித் தவயோ கத்தினு, லீன்ற பொழுதிற் றன்மகனை யிருந்து சான்றோ னெக்கேட்டுத்

தோன்று முவகைக் கடற்படிந்தாள் சுஞ்ஞா னித்தாய் பசும்
பொன்மலை, போன்று வளர்ந்து மருங்குன் மிடிபோக்க வறியா
விளமுலையாய். 21

வேறு.

பீடுறு மானிடப் பிறப்பு வாய்த்துநல்
லேடவிழ் மலரினு லிறையைப் பூசியார்
பாடமை நாளெலாம் பாழ்க்கி றைப்பவர்
மூடரை யெண்ணுங்கான் முந்தி நிற்பரே. 22

காம்படு தோளிமுக் கண்ணன் றண்மலர்
தேம்படு மலர்கொடு பூசை செய்பவர்
பாம்பொடு பழகிலாப் பரம னென்றவர்
பூம்பத மணமகிழ்ந் துலகம் போற்றுமே. 23

நோய்ப்பிறப் பிலாதகண் ணுதலைப் பூசியா
வாய்ப்புறத் தலைக்கொரு மதிபெ றாகா
ணாய்ப்பிறப் புற்றதி னறிஞ ரென்னுரு
நாய்ப்பிறப் பாற்றவு நன்று நன்றரோ. 24

பூசைசெய் தன்னையும் பூசிக் கப்படு
மீசனை தியல்பையு மிறைவன் பூசைசெய்
யாசறு பொருளையு மறிவ றிந்துயர்
தேசிக னருளினுற் றெளிய வேண்டுமால். 25

வேறு.

ஒன்றையு முணர்கி லேனு னெங்குரு வுரைத்த வாற்று
லின்றளை லிலிங்க பூசை யியற்றியும் பயனென் றில்லை
யென்றனன் பருவ முற்றோர்க் கிருமறை யுபதே சிப்ப
தன்றிவன் மனிதர்க் கோதி னதுபயன் படுவ துண்டோ. 26

ஆணவ வெருவி மாயை யப்பதைத் தாடா நின்ற
தானுவு முளம்மி ருப்புக் தன்னுமைத் தொழிலான் கண்கட்
கூடினு மழுகின் மிக்கா ளொருவன்வந் தனனன் றானைக்
காணுமு மெனாநான் காணே னென்றனன் கற்றார் போல. 27

கண்ணினுற் கேட்டுஞ் சிர்சால் கங்கணத் திறைவன் முன்னர்
கண்ணினுற் குமார் நெஞ்சக் கட்டவிழ்த் தாடு வாட்குக்

கண்ணினுற் கூறவந்த கைலைமா தறிந்தா ளன்னுள்
கண்ணினுற் கண்டு ஞானக் கண்ணினுற் காண்பான் றன்னை. 28

வேறு.

நாலு வாக்குநீ பார்ப்பினு ஞனவற் றினுக்கு
மூல காரண மாகுவன் மொழிந்தவிம் மாற்ற
நூலெ லாமுரைத் திடுமெனச் செருக்கொடு நுவன்றுண்
மாலெ லாம்பிறப் பதற்கிட மாகிய மாயை. 29

ஆட்டு கிற்பனிவ் வகிலமு மென்றனை நின்னை
யாட்டு கிற்பவ ரானென வறிந்திலை பேதாய்
கேட்டு நின்னையோர் பொருளென மூடரே நினைப்பார்
நாட்டு மென்னைநன் கறிந்துயர் ஞானிக ளவில்வார். 30

வேறு.

நந்தியென் றனையு ணர்ந்தா ஞனவன் றனையு ணர்ந்தேன்
சிந்தைசெய் தெம்மை நீவிர் தெளிவுற வறிகி லீரென்
றெந்தையெம் பெருமான் கூற விகழ்ந்துமை செய்தோ ரெல்லாம்
வெந்துயர் கொண்டு நின்றார் மீளவும் விமலன் சொல்வான். 31

வேறு.

அறிவரு ளாதர வடக்கம் வாய்மைமெய்த்
துறவுநல் லொழுக்கமே தூய்மை யென்றிவை
யுறவொடு குழவியா யுடன்வ ளர்ந்திட
மறுவறு சுமதிதன் மகன்வ ளர்ந்தனன். 32

வேறு.

கொலைகள வழுக்கா றவாவொடு வெகுளி கொடுஞ்சொல்
பொய் பயனிலகூற, லிலையுறீஇ யொருவன் செய்நன்றி மறந்த
னிந்தனை வஞ்சனை பிறர்தஞ், சிலைநுதன் மடவார் கருதலென்
றினைய தீமைகளியாவும்போ யினவா, னமைமலி தருமமூர்த்தியா
கியநன் னந்திவா னவன்புவி வருநாள். 33

வேறு.

வந்தநல் விருந்தி ருப்ப மனையினுற் றருந்து வானும்
பந்தியி லுணவுவேறு பண்ணுபா தகனுந் தாயுந்
தந்தையு முணவுண் ணுத சழக்கனு முச்சிப் போதி
னெந்தவர் தமைநோக் காம னுகர்ந்திடு கொடியன் றானும். 34

நிந்தைசெய் யுணவி னானு நிருமலன் பூசை யின்றி
வந்துண வருந்து வானு மறுத்தவூ னுகர்விப் பானுந்
தந்தநல் வினையாற் செல்வஞ் சார்ந்தவர் தம்மைக் கண்டு
சிந்தனை பொறாத ழுங்கித் தீர்வினுண் மகிழ்வான் றானும். 34

கன்றுணை விடாம லான்பால் கறந்துகொள் பவனுஞ் செய்த
நன்றிகொல் பவனுங் கோடி நடுநிலை தவறு வானுங்
கொன்றுயிர் பதைப்ப நோக்குங் கொடியனும் போர்க் களத்திற்
றன்றலை வனைவி டுத்துச் சாய்ந்துபோ மடமை யானும். 35

குரவர்தம் முரைக டக்குங் கொடியனுந் துறந்து ளார்தம்
வரவெதிர் கண்டெ ழாத மறவனு மறிந்தான் போன்று
கரவினி லருநூல் கற்குங் கயவனும் புதிய ராகி
யிரவினில் வந்த நல்லோர்க் கிடங்கொடா தகற்று வானும். 36

முன்புகழ்ந் துரைத்துப் பின்னர் முறுவல்செய் திகழ்வான் றானுந், தன்பெருங் கிளைநல் கூர்ந்து தளர்வுற வாழ்கின் றானு, மன்புகொண் டொருவன் வைத்த வரும்பொருள் கவர்கின் றானுந் துன்புறுந் தொழில்செய் வித்துச் சொல்பொரு ளிலையென் பானும். 37

கற்பழி மனைவி யோடு கலந்திருப் பவனு மற்றோர்
பொற்புடை மனைவி தன்னைப் புணர்வதற் கெண்ணு வானுஞ்
சொற்பொரு ளுணர்த்தி னானைத் தொழுவுள நாணு வானும்
விற்பன வலாத விற்று மெய்வளர்த் தழிகு வானும். 38

நலமிலி வயலி லாற்றி னந்தனத் தால யத்திற்
சலமல மொழிப்போன் றானுந் தனிவழி விலக்கு வானும்
விலைமொழி பொய்த்து விற்கும் வெய்யவா ணிகனுந் தாழ்ந்த
குலமிலி தன்குற் றேவல் கூலிகொண் டியற்று வானும். 39

உறவுசெய் தறிந்த சொல்லை யுவர்த்தழிக் கூறு வானும்
பிறர்பிழை தனையே நாடிப் பிறரொடு பேசு வானும்
முறைவழு வுறுகொ டுஞ்சொன் முனிவிடை மொழிகு வானு
மறிவழி மனைவி சொல்லின் வழிநிற்கு மறிவி லானும். 40

கலந்தவர் தமைப்பி ரித்துக் கலகங்கண் டிடல்வல் லானும்
புலந்தரு நூலி னில்லாப் பொருளினைக் கூறுவானு

நலந்தனை யழுக்கா றெய்தி நகைத்திகழ் கிற்போன் றானு
மெலிந்தவ ரிடத்து மிக்க வெகுளியைப் பெருக்கு வானும். 41

புண்ணியம் பிறர்பொ ருட்குப் புரிபவன் றானு மிந்த
மண்ணிடை யின்பத் திற்கா மறுமைசெய் தொழில்விடுக்குந்
தண்ணிய வறிவி லானுந் தவத்தனை யிகழ்கிற் பானும்
பண்ணிய வினையி லென்றும் பாவமே பயில்கின் றானும். 42

ஆவனா னுண்மை நீயா தறைந்தனை யிதுசெய் தன்றி
மேவுமே னாயி னென்று வேள்விரும் பழகன் கூறக்
காவிநேர் விழிமா தேவி கருத்தினைக் கற்றே யாயிற்
போவம்வா வென்று சொன்னாள் புரவல னுவகை பூத்தான். 43

எய்தற்கரிய யாக்கை தனக் கெய்திற் றென்றா லதுகொண்டு, செய்தற் கரிய வறங்கள்பல செய்து துயர்கூர் பிறவியினின், றுய்தற் கொருமை பெறவொண்ணா துழல்வோ னுடம்பு பொற்கலத்திற், பெய்தற் குரிய பால்கமரிற் பெய்த தொக்கு மென்பரால்.

புறத்துக் கருமம் பலசெய்து பொருப்பை யகழ்ந்திட் டெலி பிடித்தாங், கிறப்பச் சிறிய வின்னின்ப மெய்து மவனோ நோவா மன், மறத்துச் செயல்க ளனைத்தினையும் வாளா விருந்து பேரி ன்பம், பெறத்தக் கவனோ மருளன்யார் பேசு கென்றா னெம் பெருமான். 45

பொறியிற் புறத்து மனஞ்செல்லிற் புலனே தோன்றி யிடும கத்திற், செறியக் கரணம் பராகந்த சிவமே தோன்றுஞ் சிவக் தோன்ற, வறிவிற் பார்க்க விடயமய மாகுமுலகந் தோன்றாமற் பிறவித் துயரக் கடல்கடந்து பேரின் பஞ்சார் குவரென்று. 46

கண்ணாற் காணக் காட்டியிவன் கருத்தைத் திருத்து வே மென்ன தெண்ணாக் கருணைக் கடலனையா னிவனி யகழ்தி யெ ன்றுரைப்ப, நண்ணாப் பெரும நன்றென்று நவின்ற நிலத்தை யகழ்கின்றான், பண்ணாற் சிறந்த பொறிவண்டு பாடு மலர்ப்பூம் பொழிலுடையான். 47

தொடலுஞ் செம்பொற் சிகரமொன்று தோன்றச் செய்யுட் பொருள்போலக், கடிதி னகழ்ந்து புகுந்த தனுட் கண்டா னில த்தை யகழ்ந்திட்டு, மிடியன் கண்ட பொருள்போல விடையம்

புறத்துக் காணாமல், வடிவஞ் சிறிது மசையாமல் வசமற் றிருக்கும் யோகியையே. 48

கையிற் சிவலிங் கத்தின்மேற் கண்கள் வைத்திட் டெனும் பெலான், மெய்யிற் றசையொன் றின்றியே மேவும் புனிதன் றனை நோக்கிச், செய்ய செயலி லாதசெயற் சிவயோகி யைக்கண் டனையோவென், றையத் தடைந்த வனறிய வறிவித் தயரல் லமதேவன். 49

காந்தங் கண்ட விரும்புபோற் கண்ட பொழுதே யகிபிடன்ற, னேந்துஞ் செங்கைச் சிவலிங்க மெங்கள் பெருமா னங்கைமலர், போந்தங் கிருந்த தப்பொழுதிற் புனிதன் சிவ கலைதானுஞ், சார்ந்தங் கிருந்த சிவலிங்கத் தன்னொ டவன்பாற் சார்ந்ததால். 50

வேறு.

என்றவ ரறைத லுமிராமன் சிந்தையிற்
புன்றொழி லகன்றுமெய்ப் போதம் பெற்றிட
வன்றரு ளல்லம னடிகள் காட்டிறு
மொன்றொரு சிற்றமலத் ததித்தெ ழுந்ததே. 51

வேறு.

தீயனே னறிவி லாமற் செய்பிழை பொறுத்தாட் கொடு
பேயனு னொருவன் செய்த பிழையினை யவனை யின்ற
தாயலாற் பொறுப்பார் யாவர் தானுமே யென்றி ராமன்
போயனு ரமுதின் செந்தாட் போதினைப் பற்றி வீழ்ந்தான். 52

செய்யதாண் மலரின் வீழ்ந்த சித்தனை யருளா லெடுக்கி
ஐயநீ யெழுக நெஞ்சி லஞ்சலை யென்று கூறிக்
கையினு லெடுத்த னைத்துக் கல்வியுந் தவமு மாக்கும்
வெய்யதாம் வெகுளி தன்னை விட்டிடென் றிங்கு சொல்வான்.

வலியவ னிடத்து மொத்தான் மட்டிலும் வெகுளி காக்கல்
பொலிவுசெ யறமு மென்னப் பொருந்துறு தன்மை யம்மா
னலிவுறு வெகுளி செல்லா தாதலா னலிய னாற்று
மெலியவ னிடத்திற் காக்கும் வெகுளியே யறமென் பர். 54

வைதவன் றன்னை நன்று வாழ்த்தின னெனவுந் தீய
செய்தவன் றன்னை நல்ல செய்தன னெனவுங் கொள்வோன்
கைதவ மகன்ற முத்தி கண்டவ னவனா மன்னோன்
பொய்தவ னென்ப தென்று புகன்றனர் புலவ ரன்றே. 55

பெரியவர் தம்மைக் காய்ந்தான் பிறங்கல்கல் லியகோ லொப்பான்
புரிவன புரியப் பட்டுப் புலம்புவ னுத்தார் காய்ந்தார்
எரிநர கதனில் வீழ்வ னிழிந்தவர் காய்ந்தா னென்று
லொருவர்தம் மிடத்துஞ் சீற்ற முறாமையே நன்று மாதோ. 56

யாவர்க்கு மொப்ப நன்று மென்னினுஞ் சினமி லாமை
மூவர்க்கு மரிய செய்யு முனிவர்க்குஞ் சிறந்த தென்று
தேவர்க்கு மரிய வின்பஞ் சித்தரா மப்பே ரண்ணான்
மேவற்கு வடிவங் கொண்டு மேவிய விமலன் சொன்னான். 57

பருவமுற் றிலர்க்கு முக்கட் பகவனு கமத்தி னுண்மைப்
பெருமையைப் பொருளை யெண்ணிப் பெருமிதத் துரைப்பி லன்
குரவரிற் பதடி யென்ப குறித்துநற் பருவ நோக்கி [னுன்
யருள்செயிற் குரவ சிங்க மவனென வறைவ னையன். 58

உரைசெயிற் பரம ஞான மொன்றுமே முத்திக் கேது
சரிதைநற் கிரியை யோகந் தாமொரு மூன்று ஞான
மருவுதற் கேது வென்று மறைபுகன் றுரைக்கு மிந்தக்
கருவியைப் பொருளென் றெண்ணிக் களிப்பவர் கயவ ரன்றே.

கருமமும் யோகந் தானுங் கரணத்தைப் புனித மாக்கிப்
பொருமிடர் வாயி ரூறும் புக்குழல் கறங்கு போலத்
தெருமரா தூண்ணி றத்துந் தெளிந்தவக் காணந் தன்னு
னிருமல னுகு மீச னித்தனென் றுணர்வு திக்கும். 60

நித்திய னிமல னென்னு நினைவுறி னனித்த மாகிப்
பொய்த்தழி யுடம்பு டம்பைப் பொருந்திய பொருள் வெறுத்து
மெய்த்தருள் குரவன் றன்னை விரும்பினன் சென்று சார்ந்து
தத்துவ முதறி நின்ற தனியறி வினையே காணும். 61

புலன்களை யொழித்த போதே பொறிகளும் பூத மைந்துங்
கலங்குறு கரண நான்குங் கலாதியுஞ் சுத்த மைந்தும்
விலங்குறு மடியில் வைத்த வெறுங்குடந் தன்னின் மேன்மேற்
மலங்குற வொருங்க டுக்கு மட்கலம் விழுத லேபோல். 62

இந்திய மோரொன் றாய்விட் டிடின்மற் றை யொன்று சாரு
முந்திய மனம ழிப்ப முற்றும்போ மணிய பாம்பி
னைந்தலை களினு ளொன்றை யரிந்திடி ன் மற்றொன் றுலஞ்
சிந்திடு மிடற ரிந்தாற் றீர்ந்திடு மொருங்கு மாதோ. 63

துறவற மனைய றஞ்சீர் தூய்மைநற் கல்வி நல்லோ
ருறவொடு மகங்க டான மொண்டவம் விரதம் பூசை
யறிவிவை யனைத்து மில்லை யாதர வில்லை யாயிற்
பெறுவன மெய்வ ருத்தம் பெரும்பொரு ளழிவு மாதோ. 64

ஆதர வுடையான் செய்யு மல்லவு நல்ல வாகு
மாதர விலாதான் செய்யு நல்லவு மல்ல வாகு
மாதர வதனு ளவிக் கருந்துணை யின்ப முத்தி
யாதர வலாது வேறென் றளித்திடக் கண்ட துண்டோ. 65

வேறு.

வலமுறு மோர்சிவ ஞானி யில்லில்வாழ்
நலையற மாகினு நீந்து நிற்குமோர்
தலையற மாகினுந் தரித்து ஞாலமே
லிலைமறை காயென விருக்கு மென்பமே. 66

வல்லனென் றிருப்பினு மிருக்கும் வன்மையொன்
றில்லனென் றிருப்பினு மிருக்கு மெள்ளுறப்
புல்லனென் றிருப்பினு மிருக்கும் புண்ணிய
நல்லனென் றிருப்பினு மிருக்கு ஞானியே. 67

வேறு.

அறிவறி ஞானியா லன்றி வன்பவ
மறிவுறு கருமியான் மாய்வு றாதகா
னெறிகதி ரிரவிவந் தெழுந்தி டாவிடிற்
செறியிரு ளகலுமோ சித்த ராமனே. 68

வேறு.

தொழிலான் முயன்று நுகர்வமெனிற் றுயரொன் றுயிர்க்கு விளையுமென, வொழியா வமல சாமூர்த்தி யுண்ட மிச்சி னுகர்வ மெனிற், பழியா தமிலை யகன் றுபோம் பவமு மென்னப் பிரசாதக், குழியா னதனை யகலாமற் கொண்டிங் கிருந்தான் குணமிக்கான். 69

பந்த மகன்ற சிவபத்தர் பாதம் விளக்கும் புனற்குழியில்
வந்து பிறந்து மூழ்கியதில் வைகும் புழுவின் பெரும்பேறு
முந்து கங்கை முதலவா முற்றும் படிந்து தீவினைகள்
சிந்து மந்த ணுளருமே சேயா ரென்று மறைசாற்றும். 70

தாய்க்கு வழுவின் மகளிர்க்குத் தந்தை தனக்குப் பசுவிற்குச்
சேய்க்கு மறையோர் தமக்கிடர்செய் தீர்வல்கொடிய பாதகமும்
போக்கு மிமைப்பிற் கரணத்தைப் புனித மாக்கிச் சிவமாக
ஆக்கு மரன்றன் பிரசாத மாயி னதற்கு நிகருண்டோ. 71

நின்னை யறிவன் சங்கரனே நீயே யவனை யறிகுவாய்
பின்னை யுலகில் யாரறிவார் பேசிற் பாம்பே பாம்பின்காற்
றன்னை யறிவு மெனவமலன் ருட்டா மரையின் கீழ்ப்பணிந்தா
னென்னை யடிமை யாவுடைய விராம னென்னு மிணையில்லான்.

பத்திக் கடலே குணக்குன்றே பாசப் பகையே யெம்முறவே
முத்திக் கரசே சிவாநந்த முதலே ஞான மணிவிளக்கே
சித்திப் பொருளே யருணந்தித் தேவே நின்னைத் தொழுமடியார்
புத்திக் கமுதே யாவர்நினைப் போல்வா ரவரை யறியேமால். 73

வேறு.

அடிய னேன்சிவ பத்தி யறிந்தமை
படியி லூமன் கனவெனப் பட்டது
முடியு மாறு மொழிந்தரு ளென்றுபொற்
றொடியு லாங்கை தொழுது விளம்பினான். 74

கேட்ட வாரியன் கேடில் சிவநெறிக்
கூட்ட மேவுறு கொள்கையி னையநினைக்
காட்டு வாருள ரோசெங் கதிர்க்கிருள்
ஓட்டு சோதியு முண்டுகொ லோவென்றான். 75

வள்ள லின்றெனை வந்து புகழ்ந்தனன்
தெள்ளு தண்புனற் றேக்கு முளைத்தலை
கிள்ளி நின்றெறி கின்றவர் போலென
உள்ளு டைந்திட் டுரைக்கும் வசவனே. 76

இகழ்ந்தென துளச்செருக் கினைய கற்றிலாய்
புகழ்ந்தனை விழைபுளிங் கறியிட் டாறுநோய்
மிகுந்தெழ வளர்த்தல்போ லெனவி ளம்புபு
தகுங்கழ லிறைஞ்சினன் றண்ட நாயகன். 77

புன்மர நெளிபுழுப் புள்வி லங்கெனும்
பன்மைய துயர்செயும் பவங்க டப்பியே
வன்மைகொ ணிலமிசை மக்க ளாகுதல்
நன்மைகொ ளுயிர்க்கலா லரிது நந்தியே. 78

நரர்வடி வாயினு நன்மை யாற்றரு
மரபினி னுலகினில் வருத றப்புதல்
அரிதுநல் லறம்புரி வழிய டெப்பினு
மருவுத லரிதறம் வளர்க்கு மங்கமே. 79

அறுந்துறப் பெய்தினு மன்பி னுறைம்
சிறப்புறச் செய்தலிங் கரிது செய்யினும்
புறச்சம யங்களைப் போக்கி யாகம
நெறிச்சம யங்களை யரிது நேர்தலே. 80

ஆறுறு பிணிகெட வாவின் பாக்கறத்
தாவினை யூட்டல்போ லைவை வங்கெட
ஆவியு மாமலினை யங்கை தந்துபின்
ஆவியு மமைவுற வாக்கு மாரியன். 81

பொருளில்சற் பத்தியாக் காரம் பூண்டொரு
வாவயி ராகமாம் வத்தி யம்புனைக்
தொருவலி னுமைப்பெ றுந்த செய்கை யொன்றறப்
பரமனை யிருத்துவோன் பத்த னாகுவான். 82

ஒன்றினொன் றன்றுற வுடம்பு மூன்றையு
மன்றுதல் வத்திர மதுவ தாக்கிய
என்றுமங் கமைவுற விட்டம் வைப்பனேல்
அன்றவன் சிவமய மாகு மென்பவே. 83

அருளொனும் புனலினை யாட்டிச் சாத்துமாம்
வளைநறுஞ் சக்கொடு மருவ விக்கிய
விளமலர் புனைக்குறி வினைய றுக்குறிற்
பரமனை யமர்சிவ பத்த னாகுவான். 84

ஆசறு மனத்தெழு மன்பை யன்றியே
பூசனை புரிக்கிலென் புராரி சென்னிமேல்
வீசறு திரையினு மிக்க நேசமாய்
வாசல்செய் மனமுடை பொருள ளூட்டுவீர். 85

பூப்புனை கையுமெம் புனிதன் றன்புகழ்
பாப்புனை நாவுமே படைத்து வான்றனைச்
சேப்புனை கொடியுடைத் தேவ னேயென
நாப்புனை புகழொடு நாக மேத்துவார். 86

பூசனை செயாதகை புராந்த கன்புகழ்
பேசுத லிலாதவாய் பெற்று ழூன்றிடு
நீசரா னவர்தமி னெடுவ னத்திடைக்
கூசுத லிலாதபுன் குரங்கு நன்றரோ. 87

குடிப்பன விழுங்குவ கூரெ யிற்றினாற்
கடிப்பன நக்குவ வனைத்துங் கைம்மலர்
அடுத்துள சிவன்றனக் கர்ப்பித் துண்பவன்
விடுத்தவன் மேல்வரும் வினைகள் யாவுமே. 88

தானுறு முடன்மனந் தனமென் றுள்ளவை
ஈனமில் குருசிவ சரங்கட் கீந்துதான்
யானென லென்குத லின்றி வைகுவோன்
மேனிகழ் சிவமொடு வேறலா னரோ. 89

விடுவன காமம்வெவ் வெகுளி மாலிவை
தொடுவன குருசிவ சரங்க டொல்பவம்
கடுவென வெருவிய கருத்து ளார்க்கிவண்
அடுவன வெனப்புல னட்ட வாற்றலாய். 90

விள்ளரு நற்சிவ வேடத் தோர்பொருள்
கொள்ளைகொள் கிற்பினுங் குறைகள் கூறினும்
பிள்ளையை யறுப்பினும் பிழைகள் செய்யினும்
எள்ளுத லிலனெனி லீசற் கன்பனாம். 91

சங்கமந் தனக்கொரு சாதி யுன்னினான்
அங்கையி னமர்தரு மரற்கு முன்னினான்
சங்கர னொடுசரந் தம்மில் வேறெனும்
அங்கவ னறிவரு மளற்ற ழுங்குவான். 92

தலைமைகொள் குருசிவ சரங்கட் காகவே
உலையிடு மரிசியன் றோங்கன் மற்றெறி
அலையமு தாந்தமக் காக வாக்குறில்
கொலைசெயு நஞ்சினுங் கொடிய தாகுமால். 93

தனுவுள வளவுமோர் தகுநற் செய்கையும்
மனமுள வளவும்பா வனையு ஞானமுண்
டெனவுள வளவுநே யமுமி யைந்தவன்
பிணையுள வளவுநோய் பிறக்க கற்றுமே. 94

ஈசனை யிருத்துறு மிதயத் தோர்பொருள்
ஆசையை யிருத்துத லந்த ணர்தாம்
வாசமுற் றிடுமொரு மனையிற் புண்செயல்
நீசரை யிருத்துத லிகர்க்கு மென்பரால். 95

சினமுத லியபய தீர மாற்றுபு
வினைதபு வாய்மையா மெழுக்கை யன்பெனும்
புனலொடு விரவியே பூசி னல்லது
மனமெனு மனையிடை வராதி லிங்கமே. 96

காலமுங் கருமமுங் கடந்த காரணன்
பாலுறும் பரிசறப் பார்ம டந்தையர்
கோலமும் பொருளையுங் குறித்து நச்சுநர்
சீலமும் விரதமுந் தீய வென்பரால். 97

வெங்கொலை களவுபொய் வெகுளி யாசையென்
றிங்கிவை யொடுமரீஇ யிருக்கின் றோர்தமக்
கங்கையி னெல்லிபோ லவிர்ச டைப்பிரான்
செங்கையி லிருப்பினுஞ் சேயன் சேயனே. 98

பத்தரைப் புகழ்வுறப் பணிய வுண்டவர்
வைத்தன கொளவுடன் மருவப் பெற்றவர்
சித்தியுங் கடவுளர் சிறப்பும் வேறொரு
முத்தியும் பொருளென முன்னு றார்களால். 99

வேறு.

பூத நீயலை பொறிகளு மலையலை புத்தி
யேது நீயலை யிவற்றினை மயங்குயா னென்னும்
போத நீயலை யென்றிவை யனைத்தையும் போக்கிச்
சோதி யாகிய பிரமமே நீயெனச் சொல்லி. 100

ஞேய ஞானஞா துருவெனு மிவைபல நிற்கு
மாயின் வேறுறு முத்தியென் றதுசக மாமென்
றேயு மாறிது வதுவெனுஞ் சுட்டிலா வியல்பை
மாயை மாறிய தேன்பா லருளினன் வள்ளல். 101

வேறு.

பரம முத்தி பதம்பெறு மேதுவட்
காண சுத்தி யதனது காரணம்

அரணெ ரித்த வமலற் குறித்தநற்
கிரியை யித்திறம் வேதங் கிளக்குமால். 102

மனமி லிங்க மருவிலே யேனுட
றனிலி லிங்கந் தரித்து மிலையிலை
யெனவி யம்பு மிணையிலி யாகம
நினைவ ரன்கழ னிற்க நிறுத்தினுய். 103

தாவி லாத மனமொடு சார்தரா
தோவு மாயி னுலகிற் புனலுமொண்
பூவு நாடொறும் போக்குறு பூசனை
ஆவி போகிய வாக நிகர்க்குமால். 104

புறம்பு காண்குவன் புல்லிய னீசனை
அறிந்த ஞானி யகமுறக் காண்பனல்
எறும்பி காணுறி லின்கரும் பேகொளும்
செறிந்த வாடிலை தின்பன வென்பவே. 105

கரங்க ணல்ல கருமஞ் செயாநிற்பத்
திரிந்து செல்லுஞ் செலாதவி டத்துநெஞ்
சொருங்கு ருத வொருமனந் தன்னினும்
பரந்த வல்லற் படுக்கும் பகையிலை. 106

துயிலை யின்பெனச் சொல்லுத லிந்தியத்
தியலு நெஞ்ச மிலாமையி னலன்றே
பயிலு நெஞ்சம் பரந்து திரிதருஞ்
செயலி லில்லைச் சிறிதுஞ் சுகமரோ. 107

மனமொ ருத்தன் வசப்படு மேலவன்
பினைவ ருத்தும் பிறப்பை யடைந்திடான்
மனமொ ருத்தன் வசப்படா தோடுமேல்
நனிபி றப்பிடை நாளுஞ் சுழலுமே. 108

அறவி னைக்கு மரும்பொரு ளின்பொடு
பெறுவ தற்கும் பெருங்கல்வி கற்றுயர்
விறலி னுக்குநல் வீரந் தனக்குமொண்
டுறவி னுக்குந் துணைமன மென்பவே. 109

நல்ல செய்து நரரை யுயர்த்தவும்
அல்ல செய்தங் களற்றிடை யாழ்ப்பவும்
வல்ல திந்த மனமல தையனே
யில்லை யென்ன வியம்பு மறையெலாம். 110

நெஞ்ச மாதுமை நேசனை நண்ணுமேல்
விஞ்சு பாதகங் கோடி விளைப்பினும்
அஞ்சு முனவ னவ்வினை யாவையும்
பஞ்சு தீயிடைப் பட்டென மாயுமே. 111

மக்கண் மானிட ரென்று மனத்தினன்
மிக்க மேன்மை விளங்கின ரில்லெனில்
பொக்க மேவும் பொறிகளோ டைந்தினல்
ஒக்கு மாவினை யொத்துயர் வுற்றிடார். 112

கெடுக்க வல்லதுங் கெட்டவர் தங்களை
எடுக்க வல்லது மிம்மன மென்றதை
அடக்க வல்லவ ணைய பவக்கடல்
கடக்க வல்லவ னுவன் கடிதரோ. 113

ஆயின் மிக்கோ ரரிய செயலெலா
நேய மிக்க மனத்தை நிறுத்தல்காண்
வாயு நிற்க மனமு முடனிற்கும்
தோய நிற்குறி நிற்குந் துரும்புமே. 114

ஓடு மாவை நிறுத்துறி னுள்ளுறக்
கோடும் வாய்க்க வினத்தினைக் கொள்ளுவார்
நீடு மாமன நிற்க நிறுத்துறில்
ஓடும் வாயுவை யுள்ளுற வீர்ப்பரால், 115

அடுத்த நாடிக ளாங்கொரு மூன்றினும்
விடுத்து வாங்கியு மேவ நிறுத்தியும்
தடுத்தும் வாயுவைத் தன்வச மாக்கில்வாய்
மடுத்தி டாது மனமும் வசப்படும். 116

ஓடும் பொன்னு முறவும் பகையுமோர்
கேடுஞ் செல்வமுங் கீர்த்தியு நிந்தையும்
வீடுங் கானமும் வேறற நோக்கு நல்
கூடுந் தன்மை கொளுமன நஞ்பனம். 117

மன்னு காம வெகுளி மயக்கமென்
றின்ன கூடி யெறிவளி முற்சுடர்
என்ன வாடு மியன்மனந் தீமனம்
தன்னை யாருந் தடுக்கத் தகாதரோ. 118

மறிந்தி டாது மனபவ னங்கடாம்
செறிந்த வாயிற் சிவமய மாகுமால்
அறிந்து வாயுவை யங்ஙன மெய்தினேன்
இறந்தி டாத விலிங்கப் பிராணியாம். 119

வேறு.

தன்னைச் சச்சிதா நந்தமென் றருமறை சாற்ற
மின்னிற் கெட்டிடுந் தசைநிண மென்புதோன் மேய்ந்த
வின்னற் பொய்க்குடி லாகிய வுடம்பினை யானென்
றுன்னிக் கெட்டனை யென்கொணீ யென்றினு மியம்பும். 120

வெருவு றப்படும் பிறவியை யொழித்துமெய் வீடு
மருவு தற்குளம் வைத்தவ னிம்மல வடிவைத்
தெருவி னிற்புனி தம்படா தொன்றனைத் தீண்டி
யருவ ருப்பவன் போலரு வருத்ததை யகற்றும். 121

மருந்து கொண்டுநோய் தீர்ப்பவர் போற்சிவ மருவி
யிருந்த விவ்வுடம் பிணைப்பெரி யவர்விட வெண்ண
மருந்து கொண்டுநோ யோடுற மதிப்பவன் போல
விருந்த விவ்வுடம் போடுற வெண்ணினை யென்னே. 122

அணுமயங்குமின் னுலைழகதி ரெறிந்தவா ளாக
விணைமயங்குமெய்ப் படாதுவாள் வறிதுபோ யிற்று
பணைமயங்குதோன் மாயைதன் படாமுலை படாத
மணமயங்குதண் சோதிமேல் வாள்பட வற்றே. 123

வேறு.

செய்தபிழை போகவினிப் பிழைசெய்யா துடம்புநசை தீர்ந்து நின்றன், மெய்தெரியி னெனக்குநீ யினிய னெனப் பெருங் கருணை வெள்ளங் கூற, வுய்தலிலென் பிழைபொ றுத்திட் டடித்தரிய வானமுத மூட்டு கின்றாய், கைதருசெம் மணியனையா யான்செய்வ தேதுளது கைம்மா றென்று. 124

இருந்தபடி குகேசனைநீ யறிவையெனி னின்பிறவி யெனு
நோய் தீர்ந்து, பொருந்துறவை பேரின்ப மென்றமலன் கூறவ
வன் போற்றி யெந்தாய், பரிந்தருள்செய் குகேசனெனு மொழி
ப்பொருளே தநுகூறப் படுவான் யாவன், றெரிந்துணர வருள்
செய்வா யென்றுதொழ வெம்பெருமான் செப்புகின்றான். 125

குகையிதய மதன்கணம ரிறையீச னென்றுபொருள் குறி
த்துக் கொண்மோ, நிகழுனைய குகேசமொழி யுடையன்யான்
றனையே நிமலன் கூற, வகமகிழ முகமலர்ந்து சித்தனறைகு
வனீமெய யாகி னுன்றன், முகையவிழ்மென் மலர்க்கரத்திற் சிவலி
ங்கங் கொண்டதென்கொன் மொழிதி யென்றான். 126

பிறந்தபயன் பெறவுலகோ ரெனைக்கண்டு கொண்டுமனம் பிற
ழ்த லின்றிச், சிறந்தசிவ லிங்கமலர்க் கரங்கொண்டு பூசனை
யாஞ் செய்ய வேண்டி, நிறைந்தவென துருவாகு மிக்குறிகைக்
கொண்டனன்யா னீங்கா தென்று, மறிந்துதெளி குதிமனமென்
றருள்செய்தெங் குருதேவ னறைய லுற்றான். 197

என்றுதன தியலுணர்த்தி யுடம்புநா னென்றிருந்த வியல்பு
போல, நின்றவெனை யுணர்ந்துநீ சோகம்பா வனைகொண்டு நிற்
பையாயிற், பொன்றலுறு விடங்கனுமுன் றனைநினைப்பப் போதல்
போற் போமவிச்சை, நன்றறிதி யெனவறிவித் தனனெங்கோன்
கோரக்க நாதன் றன்னை. 128

வேறு.

அறிவெனும் வேலினா லைம்பு லன்களா
மறியின மருளெனும் வலையைத் தப்புறு
தெறிகுவை யெனினுனக் கில்லை துன்பென
நெறியினை வழுவற நிமலன் கூறினான். 129

அறிவொடு மனஞ்சிலை யம்ப தாகநான்
குறியென வெய்வையேற் குமர நின்றனைப்
பொறிமதி லிலங்கைமுன் புரந்த வான்றலை
பறிபட வெய்தவன் பணியு மென்றுமே. 130

வேறு.

போத மாகும் புனிதத் தழலினுட்
பேத பாவனைப் பேரவி பெய்வனே

லாதி சோவுடை மாசி யவனென
வேதம் யாவும் விளங்க விளம்புமே. 131

மறையி னுள்ள கரும மனவினை
வறியர் கொள்ளுதல் போல மதியறுஞ்
சிறியர் கொள்வர் தெளிதத் துவமசி
யறிஞர் கொள்வ ரணிகொளுஞ் செல்வர்போல். 132

வேறு.

ஒடுக்குமனம் வீட்டுநெறிக் கொருதுணையா கும்புறத்து
நடக்குமன நிரயவழி நடப்பதற்குத் துணையாமென்
றிடக்கர்மன மடக்கும்வகை யெம்பிரா னியம்பியவா
றடக்கமன முறுநெறியி னருணந்தி தலைப்பட்டான். 133

நில்லாது போமனத்தைக் கால்பிடித்து நிறுத்தியே
வில்லாரு மதியமுதம் விருந்திட்டு நட்புறீஇப்
பொல்லாத புலனுகரப் புறத்துநிலை தடுமாறிச்
செல்லாம லுடன்கொண்டு சித்திரமொத் திருந்தனனால். 134

நின்றமனங் கொண்டுதா னித்தமாந் தனையுணர்த்த
வென்றுவரு ஞானகுரு வெனவெழுந்து வளர்காத
லொன்றுமொழி வறநிற்ப வுவப்பதுல கிற்பொருள்வே
றின்றியரு ணந்திபிரா னெந்தைவர வினைநோக்கி. 135

வேறு.

காரண வுபாதி யேழ்மேற் கண்டிடு ஞானி போலச்
சீரணி நுதலின் மீது சென்றுகாண் யோகி போலப்
பூரண ஞான நந்தப் போதக னிருப்பு காண்பா
னேரணி நிலைக ளேழ்மே னிகழ்வெளித் தவிச மைந்தான். 136

நினைவினு லொருவன் செய்த நெஞ்சுளா லயமே யன்றி
வினையினு லுலகர் செய்து விளங்கிய பணிக டம்மு
ளினையதோ டுவமை யாத வில்லையென் றும்ப ரெல்லாந்
தனையலா னிகரி லாத தவிசினை வியந்து நின்றார். 137

கரையிது கல்விக் கென்னக் கற்றவர் பலரு மேத்தத்
தரைமிசை யமைத்தி ருந்த சாரதா பீட மேபோ
லுரைமன மிறந்த தாமிவ் வொருதனி ஞான பீட
மருடரு குருகு கேச னன்றியே றிடுதற் காமோ. 138

கரைபொரு கங்கை யாற்றிற் கண்ணிவைத் தரச வன்னம்
வருதலை நோக்கி நிற்கும் வாறுபோ லிருள் விழுங்கி
பெருகொளி விரிக்கு ஞான பீடமொன் றமைய வாக்கிக்
குருபரன் வரவு நோக்கிக் கொண்டிருந் தனனெங் கோமான்.

எட்டினைப் புதுமீ ராற்றி லெதிர்கிழித் தேற விட்டோன்
பாட்டுடைத் தலைவ னன்பர் பதைருகம் வசுவன் றன்னை
நாட்டமுற் றடையு மாசா னமக்குமா மென்றி ருந்தார்
வீட்டினுக் கேற்றுஞ் சோதி விருந்திற்கு முதவு முந்தோ.

உடம்பெனும் வனத்தி னின்ற வுயிரெனுங் கன்னி தன்னைத், தொடர்ந்திசை மணத்தாற் சேர்ந்த துணைவனால் லமைனின்றெய்து, மடைந்தருள் கல்யா ணத்தை யணிமினென் றெந்தை கூற, நடந்தனர் நன்றென் றன்னார் நகரியோர்க் குரைத்தி னரால்.

வேறு.

பதியுமப் பதியாற் காணும் பசுவுமப் பசுவின் ஞானம்
பொதியுமைம் பாசந் தானும் பொருளென வழக்கிற் கூறும்
விதியுமப் பாசம் பொய்யாய் வேறறும் வீடு மோதி
மதிமயக் கறுத்த சென்ன வசுவனு மருங்கு சென்றார். 142

வேறு.

மருவிதின் றவரிவன் மருள னேயென
விரைவி லிங்கக லைலென விலக்கினு
ரொருவருங் கண்டிறை யுருவு ணர்ந்தில
ருருவுகண் டெள்ளுந ருணர வல்லரோ. 143

வேறு.

முதனிலை முதலா மூவிரு நிலையின் மூலமா முதலவா தார, விதழவிழ் கமலப் பொகுட்டினு ளின்ற விலிங்கமோ ராறென நின்று, நுதன்மிசை யிலகு நிட்களம் போல நுவன்றவே பூரநிலையாகு, மதின்மிசை யமல னல்லம தேவ னமர்ந்தன னமாரும் வியப்ப. 144

வேறு.

பெரியவர் சிறியவ ரென்னும் பெற்றிமை
யரவணி கடவுட னடியர் தம்முளே
தெரிபவ னெவனவன் சிறிய னேயென
விரிவுறு மறையெலாம் விளம்பு மென்பவே. 145

ஆவுரித் திடினுநீ றணியு மன்பனம்
மாவுரித் தவனென வணங்கத் தக்கவன்
பூவுரித் தவன்பதம் புனையப் போற்றற
நாவுரித் தெனமறை நான்கு மோதுமால். 146

இழிப்பினும் வெறுப்பினு மில்லி னுள்ளன
வழிப்பினு முடம்பினை யரிந்து கொல்லினும்
பழிப்பறு சங்கம பத்தி செய்பவன்
ஒழிப்பது பிறவியென் றுலகை மோதுமே. 147

வேறு.

உலகி லொருவன் சிவயோகி யுல்ட தம்ம சராசரமா
மலகி லுயிர்க ளெலாமுண்ட தாகு மென்ன மறைகூறு
மிலகு முறையைக் காட்சியா னின்றிங் குணர வுணர்த்தினுன்
கலகை வினைக டீர்க்குமருட் கண்ணன் றிகழல் லமதேவன்.

வேறு.

யானென தென்ப திருந்திடு காறு
ஞான முறுவது நண்ணில தாகிற்
றானிலை யாத சகந்திகழ் கிற்குந்
தீனமி லாதசி வந்திக ழாதே. 149

கறங்கெனு மாறுழல் கின்ற கருத்துப்
பிறந்திற வாத பெரும்பிர மத்தி
லிறந்திடில் யானென தென்னு மகந்தை
மறைந்திடு மன்றி மறைந்திடு மோதான். 150

இருவினை தாம்வரும் யானென லாலவ்
விருவினை யால்வரு மின்பொடு துன்ப
மிருவினை யானென வின்றெனி லில்லை
யிருவினை யில்லெனி லில்லை பிறப்பே. 151

மனத்தை யடக்க மனந்துணை யாகும்
பினைத்துணை யின்றது பெற்றன னுயிற்
றனிச்சிவ மேயொரு தானென வாழ்வ
னினைத்து மறந்து நிலத்துழ லானே. 152

வாரணை மாகு மனத்தை யடக்கிற்
காரணை மாயை களைந்தொழி யாத
பூரணை மாகிய போத மடைந்திட்
டாரண மோது மரும்பொரு ளாவான். 153

வேறு.

விரிந்த நெஞ்சங் கருவியாம் விடய முணர விரியாமலொரு ங்கு நெஞ்சங் கருவியாந் தன்னை யுணர வொருங்காமல், விரிந்த நெஞ்ச முடையவனை விடாது பிறவி யென்றுணர்க, வொருங்கு நெஞ்ச முடையானை யுறாது பிறப்பென் றுணர்கவே. 154

அந்தக் கரண சுத்தியே யறிவை யறிதற் சாதனமவ்
வந்தக் கரண சுத்திதனைக் கறையுங் கரும மாரணங்க
ளந்தக் கரண சுத்திதா னவை தவாவற் றிடுதலே
யந்தக் கரண சுத்தியினு ளடைவன் பிண்டப் பெயரன்றே. 155

ஆசை யறுதல் வீட்டின்ப மேவ யடையக் காரணமா
மாசை யறுத லைதில்லை யதுநா லனைத்து மாய்ந்திடினு
மாசை யறுவோன் சிவனாத லின்மை மெனநன் றறிந்திருந்து
மாசை யுறுத லென்கொண்டோ வத்தோ மனிதா றியேமே. 156

ஆசு தீர்ந்த மனத்தினிடை யன்றி யுணர்வு தோன்றாது
மாசு தீர்ந்த வாடியிடை யன்றி வதனந் தோன்றாமோ
பாச நீங்கு பரஞ்சுடரை நினைக்கு நினைவாற் பற்றானங்
காச நீங்கு கண்போலத் தன்னைக் காண விளங்குமால். 157

வான மல்லேன் வளியல்லே னழனீ ரல்லேன் மண்ணல்லேன்
ஞான மல்லேன் வினையல்லே னுலை சிவனென் றெவ்வளியினை
யூனை யல்லா வொருசிவமே யாவ ளிவ்வா றன்றோதா
னின னெல்லா முடையவுடம் பெடுத்துச் சுழனு மெஞ்ஞான
[றும். 158

தன்னைச் சிவமென் றறிந்தவனே யறிந்தான் றன்னை யுண்மை யாத், தன்னைச் சிவமென் றறியாதா னறியா னென்றுந் தன்னு ண்மை, தன்னைச் சிவமென் றென்றறிவனன்றே பாசந் தனை நீப் பன், றன்னைச் சிவமென் றறியாதான் றனக்குப் பிறப்பே யுனை யாகும். 159

தன்னைப் பேத மாக்காண்கை சகத்திற் காணப் பட்டதாந், தன்னைப் பேத மறச்சிவமென் றறிவோன் ஞானி தானொருவ, னென்னக் கருதி மறையதுநீ யானு யென்ன வத்துவிதந், தன்னைப் புகலுங் கண்டதனைச் சாற்றன் மறையின் கருத்தன்றே. 160

தூய்தா கியநெஞ் சுடையார்க்குத் தாமே சிவமாத் தோன் றுமாற், றீதா கியநெஞ் சுடையார்க்குத் தெளிய வபேத மிகலி ன்றி, வேதா கமங்கள் விளம்பிடினும் விளங்கா தென்றாம் வேறெ ன்னும், வாதா லழிவ ரவர்மாயை மயக்க மயங்கு மதியினர். 161

நெஞ்சஞ் சோகம் பாவனையி னிற்க நிறுத்தி விடயங்க, ளஞ் சுந் துறவாத் துறந்தசிவ யோகி யொருவ னடியிணையிற் றாஞ் சுந் திருமான் முதலமா ருள்ள மவனைத் துதித் திறைஞ்சா, தெஞ்சுந் தவமா முனிவரிலே யெனநான் மறையு மியம்புமால்.

உரைக்குமெச் சமயத் திற்கு முத்தர பாகஞ் சைவந்
தரிக்குமச் சைவத் திற்குத் தரமென வீர சைவந்
தெரிக்குநந் காமி காதி சிரத்தினிற் றிகழுங் கண்டா
யரிக்குரற் சிலம்ப ரற்று மடிமலர்த் தடங்க ணல்லாய். 163

புறந்தரு சமயம் புக்குப் புறமலாச் சமயத் தெய்தி
யறந்திகழ் சைவ முற்றுங் கதிற்சரி தாதி யாற்றிச்
சிறந்துள வீர சைவஞ் சேர்ந்தபின் வீடு நண்ணு
நறுந்தளிர் கவற்று மேனி நனைமலர் வல்லி யன்னாய். 164

அருமறை முடியுஞ் சீர்சா லாகம முடியு மொத்துப்
பொருமற மிலாமன் முற்றும் பொருளினை விளங்கக் காட்டித்
தருமுறை யதனால் வீர சைவமே தலைமைத் தாமிவ்
விருமறு வறுநன் னூலு மிதிற்பிர மாண மாகும். 165

---

## வீராகமம்.

அரியசஞ்சித மகவைம்
புரியுடம்பிட ரொழியவும்
விரியுநம்பவ மிரியவுங்
கரிமுகன்கழல் கருதுவாம். 1

வேறு.

அங்கலிங் கத்தோ ரெல்லா மரன்றிரு வுருவ மாவா
ரங்கலிங் கத்தோ ரென்று மாக்கமு மழிவு மில்லா
ரங்கலிங் கத்தை நீங்குந் தானவ ரழலின் மாய்ந்தா
ரங்கலிங் கத்தை நீங்கா முனிவரு மருள்பெற் றாரே. 2

குலகுண விசிட்ட ரேனுங் குணங்குல மில்லா ரேனுஞ்
சலமதி முடியார் வேடந் தரித்தவர் தமைக்கண் டோர்க
ளலமுட னெதிர்சென் றேத்தி யாசன நல்கா ராகி
லலமுறு துயர நீங்கா ரவுரவ நரகி லாழ்வார். 3

அராவணி வேணி யண்ண லடியவர் தமைமதித் திடாதோர்
வராகமா யனேக சென்ம மலமது பொசித்த பின்னர்
தராதல மிசையே பொல்லாச் சண்டாளர்க் கடிமை யாகிப்
பராவுறும் பசியா னோயாற் பயத்தினால் வருந்து வாரே. 4

இணக்குறு தோற்ற நான்கி லெழுவகைப் பேத மான
கணக்கறு மீரா றேழு கருநெறி யோனி தோறும்
வணக்குழும் மலமும் போத மருளுறும் பிறவித் துன்பப்
பிணக்கறு மவரே லிங்க சங்கமம் பேணு வோரே. 5

குரவரை மனித ராகக் குறிப்பவர் குருத்து ரோகர்
மருவுலிங் கத்து ரோகர் மற்றொன்றை வணங்கு வோர்கள்
பொருவில்சங் கமவே டத்தைப் புனைந்ததி னெறியி லாம
லருமவத் தொழில்கள் செய்யு மவர்கள்சங் கமத்து ரோகர். 6

அடுத்ததின் றன்மை யான்மா வாகுமென் றறிந்த நல்லோர்
நடித்திடுஞ் சமய வாத நற்றவஞ் செபாதி யானம்
படிற்றுல கியற்கை யாவும் பாசத்தி லடக்கா மென்றே
விடுத்தருட் குரவன் பாத மேவிமெய்ப் பணிசெய் வாரே. 7

இருவினைப் பயனுஞ் செய்தி யாமறிந் தருந்த மாட்டோ
மிருவினை யறிந்து கூடா திறையறிந் தருத்து மென்றே
திருகுதம் போத மான சிற்றறி வகன்று ஞானக்
குருபர னருள்பெற் றோர்கள் கருமநெறி குறுகா ரே. 8

பருவரை யனேக மென்னக் குவித்துமன் பரவை யேழுந்
தருபுன லனைத்துங் கொண்டு சவுசமுற் றிடினு மேனைக்
கருமலை மகலா தென்றுங் கருணையா னம்போல் வந்த
குருவருட் பார்வை யாலே மலமெலாங் குலைந்து போமே. 9

சலமெனும் ஸ்நானந் தானே தகமலி மலாதி நீக்கு
நிலவுமந் திரஸ்நா னந்தா னிகழ்சதா சுத்தி யுண்டாம்
பலமுறு பற்ப ஸ்நானம் பாவங்க ளனைத்தும் போக்கு
மூலவுமெய்ஞ் ஞான ஸ்நான முயர்சிவ முத்தி நல்கும். 10

வேறு.

காலம் விரும்பார் தொழில் விரும்பார் கன்மம் விரும்பா ருடல்விரும்பார், சீலம் விரும்பார் தவம் விரும்பார் சித்த விகா ரத் திருக்கறியார், கோலம் விரும்பார் விதிமார்க்கர் கொள்கை விரும்பார் குருபக்தி, பாலின் புறுசங் கமலிங்க பத்தி மார்க்கத் தவர்தாமே. 11

விள்ளுங் குருபத் தியின்மார்க்கம் விரும்பார் விதிநூ னெறி பிதற்றி, யெள்ளும் பதக வாதியர்வந் தெய்தி யிடினு மூதறிவோ, ருள்ள மவையுட் கொள்ளாம லுவப்பு வெருப்பா திகளெல் லாந், தள்ளி யொருநெற் பதர்புகினுந் தரியா தகற்றப் படுமாறே.

குருலிங்க வேட மேமெய்ப் பொருளெனக் கொண்டுய் யாமற்
றிருவுந்து விதிநூன் மார்க்கஞ் செப்புதல் கதியென் றோதி
அருவுந்து மிருநோ யாள ருறுமருந் துட்கொள் ளாமற்
பெருகுவா கடநூ லோதிற் பிணியகன் றிடுவ தின்றே. 13

வேறு.

கதிர்முனிற் குமுதம் போன்றுங் கணிகைமுன் பணத்தி போன்று, மதிமுனிற் கமலம் போன்று மன்னைகண் டருண்டார் போன்றும், விதிமத வாத நூல்கள் விதித்துமைப் பேரைக் காணிற், கதிதரும் பத்தி மார்க்க ரெதிர்மொழி கழறி டாரே. 14

தேடுதல் திகைத்தல் தேறல் சிந்தித்தல் சென்று கூடல்
வாடுத லுரைத்தல் மோன மலிவுறப் பற்று முற்றும்
வீடுதல் கரண நீத்தல் விழிமழை பொழித லெல்லாந்
தாடலை புரையு மேகத் தன்மையர்க் கின்மை யாமே. 15

பரசிவ நிலையோர் நிட்டை தவறிடிற் பரையைச் சார்வார்
திரமிகு பரையோர் நிட்டை சிதைந்திடிற் குடிலை சேர்வார்
வரமிகுங் குடிலை நிட்டை வழுவினோர் கலாதி தேகம்
விரவுவார் துயர ருத வினை யுட லொழியும் போதில். 16

தனமனை யடிமை காணி தந்தைதாய் மைந்தர் சுற்றம்
மனைவிதன் னுடல மெல்லா மதித்தா னுடைமை யென்று
தனதெனு முனைவு நீத்துத் தவிர்ந்தவ ரருளைச் சேர்வ
ரெனதென நினைவோ ரென்று மெழுபவ முழுகு வாரே. 17

வேதமா கமமுந் தீக்கை விதிகளுஞ் சரியை யாதி
மேதகு பாத நான்கு மிகுபத முத்தி நான்குந்
தீதிலா மாலை மற்றுஞ் செப்பிய வனைத்து முன்றன்
போதநீ ருக நாதன் புத்திசெய் தமைத்த தாமே. 18

தத்துவ மசிப தத்திற் றகையது நீயா னென்
றொத்தரு மறைக ளைந்து முரைத்திடு மதனை யெங்கு
நித்தனவ் வுயிரோ போல ங்கிடா நிறைவி னுமே
பத்தியி னெறிய சோகம் பாவிக்கப் படுவ தாமே. 19

சமையபா தங்க ளீக்கித் தத்துவ மித்தை யாக்கி
நமையறு விருளை யோட்டி நானெனு மையை நீக்கித்
தமைதா னென்னுமன் மனனுந் தன்னருட் சோதி காட்டி
யமைவுறு மின்ப வெள்ளத் தழுத்தின னென்னை யாசான். 20

---

## சித்தாந்த சிகாமணி.

### பரசிவ வணக்கம்.

உலகமெனு மோவியங்க ளெழுதுமொரு படமாகி யொளிக ளெல்லா, மிலகுபர வொளியாகிச் சச்சிதா னந்தமா யேக மாகிப், பலகலைகள் பரப்பிரமம் பரசிவமா மிலிங்க மெனப் பக ராநின்ற, இலங்குதக னுமை கணவன் றிருவடித்தா மரைவணக் கஞ்செய்து வாழ்வாம். 1

### பராசத்தி வணக்கம்.

மாயையெனு மணல்கொடுல கெனுஞ்சிற்றி லிழைத்தாடும் வளமை யாளை, மும்மல விருளிரிக்குஞ் செழுஞ்சுடரை யுயிர்க ளெல்லா முன்னை யீன்ற, தாயையொரு பரசிவனைப் பெயராக்குஞ் சமவாய சத்தி தன்னைத், தூயவறி வானந்த வடிவாளை மலைம களைத் தொழுதல் செய்வாம். 2

பிண்டத்தலம்.

அறிவ தேவடி வாம்பர தத்துவ மதனி
னிறைவ தாகிய பிரேரகத் துவமொடு நிலேத்த
மறிவில் போத்துருத் துவமிகு போக்கியம் வருமாற்
குறைவி லாதெழு முக்குண பேதமே கொண்டு. 3

பிண்டஞானத்தலம்.

உயிரின்வே றுகிநின் றுணரப் பட்டிடுஞ்
செயிருறு முடலொடிந் திரிய புந்தியி
னயலழி வரியவான் மாவுண் டாமென
நயமுட னுணர்பவன் பிண்ட ஞானியே. 4

வினைவழி திரிதரு மெய்யும் வேறதாய்
நினைவரு நித்தவான் மாவு நித்தமா
யனையவான் மாவின்வே றுரய வீசனும்
பினமுற வறியவன் பிண்ட ஞானியே. 5

இலிங்கதாரணத்தலம்.

சரமுட னசரமென்னச் சாற்றிய வுலகு திக்குங்
கருமமோ டிலய மெய்துங் காரண மதனு லென்று
முரைமன மிறந்து ஞான வொளியுரு வாகி நின்ற
பிரமம திலிங்க நாமம் பெறுமென விசைப்பர் தக்கோர். 6

உள்ளத்தி லிலிங்கந் தன்னை யொழிவற விடாது பற்ற
றெள்ளுற்ற வான்ம வித்தை சேர்ந்தமை வுறுத லம்ம
வள்ளற்றன் னணிநல் லாசான் மகிழ்செய்குற் றேவ லென்னத்
தள்ளற்ற விவைக டாமே காரணந் தனிமுத் திக்கே. 7

சச்சிதா நந்த மாகுந் தற்பர லிங்கந் தன்னை
யிச்சையா லறிஞு னுனே னெத்திறத் தானு மென்று
மச்சமார் துயர றொல்லா மருக்கன்முன் னிருளே போல
வெச்சமாய் நிலாது பொன்ற விதயத்திற் றியானஞ் செய்க.

விபூதிதாரணத்தலம்

பூதிதனை யணிந்ததனிற் பட்டகலாக் கருத்தொடுநற் புனித னுகிச், சோதிமய மாயசிவ மெனும்பொருளை விளக்குதலாற் றூய்தாம் வெண்ணீ, றோதனுறு பசிதமொடு பசுமமெனப் பட்டிடுமென் றுளத்திற் கொண்டு, போதுமவ னியாவனவ னுயர்ந்தவனிங் குபாதியறும் பூதி யுள்ளோன். 9

சிரமதிலீ சாநத்தாற் புருடத்தான் முகமதனிற் றீர்கோ ரத்தா, லரமதனில் வாமதே வத்தினாற் குய்யத்தி னெண்ப தத் தில், வாமருவு சத்தியோ சாதத்தாற் பிரணவமா மந்தி ரத்தாற், புரமுழுதும் புனைந்திடுக வநாதிமல விருடிமிக்கும் பூதி தன்னை.

விதிமுறையின் விபூதிதனின் மூழ்குறுதல் கங்கைமுதல் விரிநீ ராட்டி, னதிகமென வறிகபுற மாசொழிப்ப தாகிச்சிற் றூவி மாயு, நதியறலின் மூழ்குதலின் விருப்பென்கொ லுண்மலி ன நசித்து மிக்க, முதிருமறி வுதவியிடர்ப் பகுதிநீக் குறுநீற்றின் மூழ்கு வோர்க்கே. 11

எழுமுறையைந் தெழுத்தோதி யுடன்முழுதுந் தூளநஞ் செய் திட்டுப் பின்னர், வழுவகல வுயிர்திரிபுண் டரமிடுக வன்றி முனம் வருமுத் தூளம், விழுமியவொண் புண்டரத்தோ டொவ் வாமை யாலதனை விடுத்தே யேனுஞ், செழுமைதரு புண்டரமே யிடுகவென வறைந்திடுவர் தீத கன்றோர். 12

தன்னுடைய வலக்கரத்தி னடுவிரல்கண் மூன்றுகொடு தய ங்கு நீற்றான், மன்னுதலி னீளமறு விரலளவா யினுங்கடைக்கண் மட்டா யேனு, முன்னளக வளவேனும் வயங்குதிரி புண்டரஞ் சொன் முறையிற் சாத்திற், பன்னலுறு மழற்பொறிபோற் பவ மனைத்துந் தொலைக்குமெனப் பகர்வர் நல்லோர். 13

மத்திமையோ டநாமிகையங் குட்டமெனு மிவ்விரலின் மறை களெல்லாம், வைத்த திரி புண்டரத்தை யநுலோம விலோமத் தால் வயங்க மல்கு, பத்திகொடு திருநுதலி லிடுபவனே யுருத்தி ரனும் பகரி னிந்த, மெய்த்தவுரை தனினையமிலமலயத் திருந்து தவம் விளைக்கு மேலோய். 14

முப்பொழுதி னொருபொழுதா யினுந்திருவெண் ணீற்றி னுன் முறை வழாம, லப்புனித வருந்திரிபுண் டரமிடுவோ னுருத் திரனே யைய மில்லை, யிப்பரிசு நற்றிரிபுண் டரமிடுவோ னிறை தருமத் திசைவுற் றன்றே, யொப்பரிய மும்மூர்த்தி மயனுவ னெனச்சுருதி யுரைக்கு மன்றே. 15

உருத்திராக்கதாரணத்தலம்.

நீற்றின் மூழ்கிநன் னெற்றியிற் புண்டரந்
தோற்ற வீசனைத் தொண்டினர்ச் சிப்பவன்

போற்றி யக்க மணியும் புனைகவென்
றூற்றன் மிக்குய ராகம மோதுமால். 16

வே று.

பூதி யானுடன் முழுதுமுத் தூளநம் புரிக்து
சாத மேவரு மக்கமா மணியினைத் தரிக்கு
மேதை யானவ னுருத்திர னேயென விளம்பு
மாதி மாமறை யனைத்துமிவ் வுரைக்கிலை யையம். 17

பஞ்சாக்கரசேபத்தலம்.

அக்க மாமணி நீறணி யிலிங்கதா ரணன்றான்
மிக்க தாஞ்சிவ தத்துவம் விளங்குற விளக்கு
நக்க னுமமா மைந்தெழுத் தாகவே நவினுக்
தக்க வித்தையை முறையினிற் செபித்திடத் தகுமால். 18

மெய்த்த வொண்சிவ தத்துவ மதனினு மேலாக்
தத்து வாந்தர மின்மைபோன் மறைகளின் றலையாய்
வைத்த வைந்தெழுத் தாகிய மந்திர மதனி
னுத்த ரம்பெறு மந்திர மிலையென வுணர்வாய். 19

வேத னுதியாம் விண்ணவர் குழாத்தினுள் விளங்கும்
பாதி வாண்மதி முடியுடைப் பரமனே போலப்
பேத மாமெழு கோடிமந் திரங்களிற் பெரிதாம்
போத வைந்தெழுத் தாகிய புனிதமந் திரமே. 20

அஞ்செ ழுத்தெனு மந்திர மப்பர மனுக்கு
விஞ்சு மற்புத நாமமவ் விமலனே நாமி
யெஞ்ச லற்றிடு நாமமு நாமியு மெனலா
னெஞ்ச ழுத்துமம் மந்திரத் தாலிறை நிகழும். 21

முன்ன ரோதுக நமவென விளம்புறு மொழியைப்
பின்ன ரோதுக சிவாயவென் றிங்ஙனம் பிறங்கு
மன்ன தஞ்செழுத் தாகிய மந்திர வரசைப்
பன்ன ருஞ்செழு மறைகளின் முடியெலாம் பரிக்கும். 22

சிவமெ னுந்திக ழீரெழுத் தொருமொழி சிறப்பாய்ப்
பவம கன்றுள பரப்பிர மந்தனைப் பயக்கு
நவைய கன்றுயர் சிவமெனும் பெயரலா நாம
மெவையு நீக்குறு கவுணமாய் விரியுமென் றிசைப்பர். 23

ஆத லாற்சிவ மெனுமிரண் டெழுத்துமே யளவில்
சோதி யாயுறு சச்சிதா நந்தமாய்த் தோன்று
மாதி நாயகன் றனக்கு முக்கியப் பெயராமென்
றோது மாமறை முதலிய கலையெலா முவந்தே. 24

இனைய நாமமுற் றஞ்செழுத் தென்னுமந் திரமா
மனைய மந்திர முத்தியின் விருப்புள ளாகிப்
புனித நெஞ்சின னயினோ னாதரம் பொங்கத்
தனியி ருந்தது தினமுமுச் சரித்திடத் தகுமால். 25

ஐந்து பூதமைம் பொறிகளோ டைம்புல னமர்ந்த
வைந்தெ னுங்கரு மேந்திய மைவர்கா ரணரா
மைந்தெ னுந்தொழி லைம்பெரும் பிரமங்க ளனைத்து
மைந்தெ ழுத்தினா லுணர்த்துவ ரறிவறிந் தவரே. 26

ஓது மக்கர மைந்துரு வாமுயர் மநுத்தா
னாதி யிற்பிர ணவந்தனைக் கொண்டிடு மநுவால்
வேத முற்றினு மாகம மனைத்தினும் விளங்க
வேத மற்றுயர் சடக்கர மென்றிடப் படுமால். 27

இந்த வஞ்செழுத் தாகிய மந்திர விறைக்கு
முந்து றும்பிர ணவம்பர சிவன்றனை மொழியு
மந்த வக்கர மொன்றினா லகிலகா ரணமாய்
வந்த வச்சிதா நந்தமெய்ப் பரம்பொருள் வயங்கும். 28

சோக மென்றுள சொரூபமே தூயமந் திரந்தா
னாக நன்குற வறிகுவா ரஞ்சமென் பனதாம்
போக வந்தமி லோமெனப் புகலுமோ ரெழுத்தா
மேக மந்திர முதிக்குமென் றியம்புவர் பெரியோர். 29

காட்டு மோமெனு மெழுத்தாகிட் களாசிவன் றன்னை
யீட்டு மைம்பெரும் பிரமமாந் தநுவுடை யிறையைக்
கூட்டு மஞ்செழுத் துபயமா மொருபொருள் கொடுக்கு
மோட்டு றும்பவப் பிரணவ வஞ்செழுத் தொன்றி 30

உத்த ரங்குண திசையினு ளொன்றினை நோக்கி
நித்தி யம்பிரா ணயாம மும்முறை நிகழ்த்தி
யத்த னம்பிகை பாகனை யணியுட னகத்தில்
வைத்தொ ருங்கிய மனத்தொடும் மந்திரஞ் செபிக்க. 31

### பத்தித்தலம்.

நலங்கொள் பூதி நயநத் திருமணி
யலங்கன் மேனிய ணிந்துபு னிதனுய்ப்
புலங்கொ ளஞ்செழுத் தோண்மநுப் போற்றுறு
மிலிங்க தாரணன் பத்த னெனப்படும். 32

உயிரி லீச னுயிரரு ளீசனிற்
பயில வொன்றுபட் டொன்றையும் பற்றுறு
வியல்ப கத்ததி பத்தி யிசைந்துளோன்
செயல்வெ றுப்பு விதையெனச் செப்புவார். 33

### வேறு.

சிவமுறு படிவ மாதி சிந்தனை தியாந மாகு
மவமுறு மான்ம சிந்தை யாதிய தியாந மாகா
நவிறரு சிவாக மத்தி னற்பொரு டெரிதன் ஞானம்
பவமுறு மொழிந்த நூலின் பயனுணர் வன்று ஞானம். 34

பந்தனை யகன்று நின்ற பரசிவ பத்தன் றன்னை
வந்தனை புரியு நல்லோன் புண்ணிய வழியை நண்ணு
நிந்தனை செய்யுந் தீயோ னனைப்பினு முளாந டுங்கும்
வைந்தழ னிரய மெய்தி மெலிகுவ னைய மின்றே. 35

ஏயுமா சார நிந்தை யாண்டுள தவ்வி டத்திற்
போயுற லொழிக வென்றும் புகல்சிவ நிந்தை செய்வோன்
றீயக முருது நிற்க சிவநிந்தை யவர்க்கு நூருண்
டாயினும் பரிகா ரஞ்செய் தகற்றிடற் கரிது மாதோ. 36

### உபயத்தலம்.

போற்றுறு குருபரன் பூசை யேயிள
வேற்றுயர் கொடியினோன் பூசை யென்பரால்
சாற்றுறு மிவரொரு தத்து வப்பொருள்
வேற்றுமை யில்லையோ ரிடத்து மெய்மையே. 37

### திரிவித சம்பத்தித்தலம்.

செவ்விய குருவிடைச் சிவலிங் கத்திடை
யெவ்வகை யன்புட னினிய செய்துறு
மவ்வகை சங்கமந் தனினு மன்பினை
வெவ்விய வினைதபு விவேகி செய்யுமால். 38

உகந்துள பரசிவ யோகி வந்துறி
னிகழ்ந்தன னிருந்தவ னெய்துந் தீநெறி
புகழ்ந்தவன் றனைச்சிவன் போலவே யுனி
மகிழ்ந்துயிர் பூசனை மதிஞர் செய்வரே. 39

### சகசதாநத்தலம்.

சாந்த மாய தனிச்சிவ யோகிகை
யேய்ந்த வோர்பிடி பிச்சை யிடும்பலன்
கூர்ந்த வோர்சத கோடி மகஞ்செயு
மாந்த ரானு மருவுத லன்றரோ. 40

### மாகேச்சுரத்தலம்.

பிறர்மனை பிறர்பொருள் பெறல வாச்சின
மறுபகை முதனவை யனைத்து நீக்கியே
பொறையொடு பரனது புகழ்வி ரும்பிநன்
னெறிதரு சிவாகம நேய முள்ளனாய். 41

அரற்குயர் வளித்திடு மளவை கொண்டுதான்
பரற்கிதஞ் செய்துநம் பரம்பொ ருட்டவாய்த்
திரத் தொழில் புரிந்துமெய்ச் சிவநிந் தைக்கணே
மரித்திடு நிலையினும் வலிய னாகியே. 42

நிந்தனை யுடையரை நீக்கி யோர்சிவ
வந்தனை யுடையரை மருவி யென்றுமே
புந்தியின் மகிழ்பெறீஇப் புனித னாயுறு
மைந்துடை யவனரு மகேச னாகுவான். 43

### குருமான்மியத்தலம்.

பரசிவ னுயர்குரு பரம சற்குரு
வரமுறு பரசிவ னென்ன வைப்பரிவ்
விருவரும் வேறென வெண்ணு றூன்பவம்
வெருவுற வருசிவ ஞானம்வேட்டுளான். 44

நற்குரு பத்தியில் லார்க்கு நாடுநிற்
றற்சிவ பத்தியுஞ் சனித்தி டாதொரு
சிற்கன சிவனிடை செய்யும் பத்திபோற்
சற்குரு பத்தியுஞ் செய்யத் தக்கதால். 45

சங்கம மான்மியத்தலம்.

உலகுரு வாகிய வொருத னிச்சிவ
மிலகுரு தன்வடி வாக வென்றுமே
மலவற வுணர்பவ னியாவன் மற்றவ
னலைவறு சங்கம மாகு மென்பவே. 46

சிவமய மெனச்சக மியாவுந் தேர்பவ
னெவனவன் மலவிரு ளிரிக்குஞ் சோதியா
யவிருணர் வுடையவ னெவன வன்றுட
ருவமையி லொருசிவ யோகி யென்பவே. 47

முற்றுறு காமமுஞ் சினமு மோகமு
மற்றவ னுறவொடு பகையு மற்றவ
னுற்றிடு பசும்பொனோ டோடு மொன்றெனப்
பெற்றவ னுயர்சிவ யோகிப் பேரினேன். 48

நந்துறு மரியமெய்ஞ் ஞான மெய்ச்சிவ
சிந்தனை யுடையனாய்த் தீர்ந்த வெண்பவப்
பந்தனை யொருவிய பரம யோகியே
வந்துறு பரசிவ மயனெ னப்படும். 49

பத்தமான்மியத்தலம்.

சந்திர சேகரன் றன்னை நல்லர
விந்தமென் மனமொழி மெய்யி னாற்றினம்
வந்தனை புரிபவன் யாவன் மற்றவன்
பந்தம தறுசிவ பத்த னாகுவான். 0

பாவமா யுறுசிவ பத்தி யென்பதி
யாவரா யினும்பெறற் கரிய திங்கது
மேவினா னியாவன்மற் றவன் விளம்புறிற்
றாவிலா துயர்சிவ பத்தன் றானரோ. 51

பிராணலிங்கத்தலம்.

அறிவுரு வாகி யெங்கு மமர்பரப் பிரம மாகுங்
குறியுய ரிலிங்க ஞான யோகுடைக் குணத்தா னெஞ்சி
லெரிசுட ராகி நின்றே யிலங்குறு மறிவி லாராற்
செறிவுறு பொருளன் றாகு மென்றுரை செய்வர் மேலோர். 52

மாயையின் விகற்பந் தன்னால் வந்துள சகந்தோன் றுமற்
போயொழிந் திடுமா றென்றும் பொருந்துபு சிந்தை செய்து
பாயொளி யறிவா னந்த பராபர லிங்கந் தன்னிற்
றூயநெஞ் சடங்க வல்லோன் றகளறு பிராண லிங்கி. 53

சத்தையாஞ் சத்தி தானே தக்கதோர் பிராண னாகுஞ்
சத்தமாம் பிராண லிங்கந் தற்சம ரசஞா னத்தால்
வைத்ததாம் பிராண லிங்கி யெனும்பெய ரெனவ குப்பார்
தத்துவா தீத மாய தனிநிலை யுணர்ந்த நல்லோர். 54

பிராணலிங்கார்ச்சனத்தலம்.

நன்றுறு மிதயந் தன்னின் ஞானலிங் கத்தை யெய்தி
நின்றெழு மன்பி னுட... நினைவெனு மலர்கள் கொண்டு
புன்றொழி லிலாது செய்யும் பூசனை யதுவே கண்டா
யொன்றொரு பிராணலிங்க பூசையென் றுரைப்ப தன்றே. 55

அகத்துறு பவநந் தன்னை யடைத்துநுண் விசும்பு பூத்து
மிகத்தலை மதியு குப்ப வீழமு தினிற்கு ளிர்ந்து
தகைக்குமொன் பதுவா யுற்றுத் தனியறி வெனும் விளக்கிட்
டுகப்புறு மிதயத் தீசற் குளுற்றுக பாவ பூசை. 56

ஆடறல் பொறைவி வேக மாடைபூண் வாய்மை மாலை
தாடரு துறவு கந்தஞ் சமாதியக் கதையாங் கார
வீடெழு தூபந் தூய்மை விளக்கறி வுலக மெல்லாம்
பீடுறு நிவேத நந்தம் பிராற்கொலி மணிநன் மோனம். 57

பொறிவிட யார்ப்பி தந்தாம் பூலமவ் விடயத் தோய்த
லறுமது வலம திக்கிங் கதன்வடி வாகுஞ் சத்தி
பெறுமது வணக்க மாமிப் பெற்றியின் மனலிங் கத்தை
மறுவறு மனத்தர்ச் சிக்க வாலிய பொருள்கள் கொண்டே. 58

சிவயோக சமாதித்தலம்.

புகன்றுள பிராண லிங்க பூசனைத் தொழிலின் கண்ணே
யுகந்துள விவர்க்கு மிக்க வொருசிவ ரூப மாகத்
திகழ்ந்துள தியாநந் தன்னைச் செப்புறுஞ் சமாதி யென்ன
வகன்றறி பரந்த வொண்க ணரிவைபங் கினனா லன்றே 59

உரைமன மிறந்த சச்சி தாநந்த வொளியாய் மேலாய்ப்
பரவுதத் துவங்கட் கெல்லாம் பரமசிற் சத்தி தன்னு
னுரமுற வொளிரு மஞ்ச வுருவமாம் பரமான் மாவைத்
திரமொடு பாவ கஞ்செய் திகழ்சோக பாவங் கொண்டு. 60

பிறங்கொளி மாலிங் கந்தான் பிரமமென் றுரைப்ப நிற்குஞ்
சிறந்துள பிராணன் றன்னைச் செப்புவர் சிவ னென்ன
வறைந்துள வவற்றி னேக பாவமா மனத்தி னூனே
யுறுஞ்சிவ சமாதி யோக முற்றவ னென்பர் மேலோர். 61

அகமுறு சக்க ரங்க ளாறினு முற்ற கஞ்சஞ்
சகமருள் பிரம னாதி தானமென் றன்னி யப்பால்
வகையிதழ் பத்து நூறு மருவுபங் கயம தன்கண்
மிகநிறை விமல விந்து விம்பமொன் றுளது மாதோ. 62

அத்தட மதியி னுட்ப மாம்புழை யொன்று காண்க
வித்தொளை கயிலை யாக வறிந்தவண் வீற்றி ருந்த
சத்திய ஞானா நந்த சங்கரன் றனைப்பா விக்க
வெய்த்தகா ரணங்கட் கெல்லாங் காரண னென்ன வன்றே. 63

புறந்திரி வதனுற் றேன்றும் புகல்சக விகற்ப முள்ளிற்
செறிந்திடு மனத்தி னோர்க்குத் திகழ்ந்திடு மான்மா நந்த
முறுங்கடை யுவகை தன்னு னுயிரெனு மரணி தன்னிற்
பிறந்துள ஞானத் தீயாற் பெரும்பவஞ் சுடுவ னன்றே. 64

கருமவேர் செறிந்து துன்பப் பாசிலை காட்டி நிற்கு
மொருபெரும் பவம ரத்திற் குற்றவெம் பாசு தானும்
பெருமல விருளி னுக்கும் பிறங்கொளி யிரவி யாகுந்
தெருமரு மனம டக்குஞ் சிவனுருத் தியான மன்றே. 65

இலிங்கநிசத்தலம்.

பொருந்துறு மிதய மென்னும் புனிதநன் முளரி சேர்ந்த
வருஞ்சிவ லிங்க மெய்ம்மை யநுபவ சித்தி தானே
பரஞ்சுட ராமி லிங்க நிசமெனப் பகரா நிற்பர்
திருந்திய கலைகள் யாவுந் தெரிபெரும் புலவ ரன்றே. 66

வேதனு தியாந்தேவர் வேதமா தியவா நூல்க
ளியாதினி லடங்கித் தோற்ற மெய்துறு மவ்வி லிங்க

மோதரும் பிரம மேயா மூலகுதிக் குறமி லிங்கந்
தீதறு ஞான நந்த சிவமேமற் றெழிந்த வல்ல. 67

உரைப்பதென் பலமாற் றங்க ளுலகுதித் தொடுங்கும் வண்
தரித்திடு மிடம தாகுஞ் சச்சிதா நந்த மேனிப் [ணாங்
பரப்பிர மந்தா னேகாண் பரசிவ னுமங் கொண்டே
தெரிப்பறு மிலிங்க மென்று செப்புறப் பட்ட தன்றே. 68

உலகெலாந் தோன்றி நின்றங் கொடுங்குதற் கிடந்தா னுகி
யிலகுமா விலிங்கந் தன்னி னிலைபர மதனுன் ஞான
நிலையில்வாழ் பிரம மேயந் நிசலிங்க மென்று கொள்ளிற்
றொலைவிலா விலிங்க வுண்மை தோன்றிடு மைய மின்றி. 69

அங்கலிங்கத்தலம்.

யாவனற் பிராண லிங்க பூசனை யெழுவாய் மேவிப்
பாவுறு சிவமாய்த் தன்னைப் பாவிக்கு மறிஞ னன்னோன்
மேவுறு ஞான பாக விளைவினுற் சரண னுமந்
தாவறு மூலக மெல்லாஞ் சாற்றிடப் படுவ னன்றே.

சரணத்தலம்.

பவமெ னுங்கடும் பாம்பினை மீட்பவ
னெவையு நன்குண ரீசன லாலிலை
சிவமு ணர்ந்துதெ ளிபெறும் யோகிதா
னவைத ரும்பிறி தொன்றினை நண்ணுறன். 70

தாமச நிரசநத்தலம்.

மெய்ம்மை சாந்தித மைவிவே கம்பொறை
செம்மை நல்லொழுக் கஞ்சிவ பத்திதா
னம்ம பூரண பாவ மருடுற
விம்மை யுள்ளவன் சத்துவ மெய்தினோன். 72

வெய்ய காம வெகுளி மயக்கமா
மையு லாமத யானை வளர்ந்தெழு
செய்ய மாசிவ ஞான மடங்கல்முன்
னுய்யு மோநின் றொருகண மேனுமே. 73

மாசி ராசத மன்னிய நெஞ்சினோ
னீச னுரிடத் தெங்கும் வெறுப்பினோன்

பேசி லன்னவற் காணிற் பெரியவர்
கூசி நிற்பர் குலைகுலைந் துள்ளமே. 74

யாவ ரோடு மிகல்புரி கிற்பவன்
பாவ மாகும் படிற்றுரை கூறுவோன்
காவி லாதவாங் கார மருவினோன்
யாவ னன்னவன் றாமசி யென்பவே. 75

நிர்த்தேசத்தலம்.

மூட மாசின் முழுகு மனமெனு
மாடி தன்னை யறிவெனும் பூதியா
னீட நின்று நிகழ விளக்குவோன்
பீடு றுங்குரு வென்பர் பெருமையோர். 76

சீலசம்பாதநத்தலம்.

நட்டு றுஞ்சிவ ஞானிக டம்மிடை
நிட்டை கொள்ளு நிலையது சீலமவ்
வொட்டு றுந்தனிச் சீல முடையனே
சிட்ட ரெண்ணுநற் சீல முளானரோ. 77

தளைந்துள தளைவலி தணந்து மாசறத்
தெளிந்துள நெஞ்சினுற் சிவோகம் பாவனை
யுளங்கொளு நிலையுடை யொருவ னேகலை
யளந்தறி முனிவர வயிக்கிய ருருவான். 78

சாருறு பேதவன் மிகந் தங்கிய
கோரசம் சாரமாங் கொடிய பாம்பினுக்
காருறு பாமவத் துவித பாவனை
நேருறு மருந்ததாய் நிற்கு மென்பவே. 79

நந்துறு பேதபுத் தியினி னண்ணியே
வந்துறு பவக்கட றன்னை மன்னிய
சிந்தனை யறுசிவாத் துவித புத்தியாஞ்
சுந்தர வம்பியாற் கடக்குந் தோமிலான். 80

மிக்குறு பவத்துயர் விட்டு நீங்குறத்
தக்குறும் யோகிக டங்கட் கிவ்விடை
பக்கொழி வருசிவாத் துவித பாவனை
யொக்குறு முபாயமிங் கொன்று மில்லையே. 81

மிக்குறு பவத்துயர் விட்டு நீங்குறத்
தக்குறும் யோகிக டங்கட் கிவ்விடை
பக்கொழி வருசிவாத் துவித பாவனை
யொக்குறு முபாயமிங் கொன்று மில்லையே. 82

ஒருகண முயர்சிவாத் துவித பாவனை
தருசுக மியாதது தக்க போகமங்
கரிதுறு பவர்களாற் கோடி யாண்டினும்
மருகுற வருமொரு பான்மைத் தன்றரோ. 83

சென்றுறு சகமடங் கியநற் சித்தமோ
டொன்றிய பரசிவ யோகிக் கோய்வற
நின்றுயர் சிவந்த நிறைவு [illegible]தபர
மென்றுரை தருந்தனி முத்தி யென்பதே. 84

சமதரி சநனெனுந் தகுதி பெற்றுளோ
னமைவுறு சிவனுட னயிக்க பாவமோ
டிமைபெற மாவினை யியற்று மாயினுஞ்
சமையுமவ் வினைப்பய னவனைச் சாருமோ. 85

அந்தண னாயினும் புலைய னாயினும்
பந்தனை வினையுடைப் பாவி யாயினு
முந்துறு புண்ணிய னெனினு மொக்குமா
னந்துறு மயிக்கிய நண்ணி னற்கரோ. 86

புனலுறு மரையிலை போல ஞானிதான்
வினையொடு புணர்கிலன் வேறி லாவவன்
கனவினு நனவினுங் கதியி ருப்பினுந்
தனைநிகர் சங்கரன் பூசை சார்ந்துளான். 87

காண்பன பரசிவ காட்சி யுன்னுவ
மாண்படு தியாநம்வாய் வார்த்தை நற்றுதி
யேண்படு தொழில்சிவ பூசை யேவினை
நாண்பரி யயிக்கிய ஞானி கட்கரோ. 88

அகிலமுஞ் சிவமென வறிந்த பாவனை
நிகழ்வறு நிலையினேற் கென்று நீள்சிவ
மகிழொரு பாசந வடிவ மாதலா
லிகலற வியம்புவ ரேக பாசநம். 89

இச்சகஞ் சிவத்திடை யெய்தி நின்றிடு
மச்சிவஞ் சகத்திடை யமர்ந்தி லங்குறு
முச்செய லாலிவை யொன்றிற் கொன்றுதான்
வைச்சவா தாரவா தேய மன்னுமால். 90

அறிவொரு சிவமய மாகும் பாசந
மறியுல கெலாமுமா மறிவை யன்றியே
யறிவுறு பொருளிலை யாத லான்மிகு
மறிவினை யுடையவர்க் ககில மில்லையே. 91

தன்னுள விருத்திபோய்த் தனிச்சி வத்தினுண்
மன்னுற வாகுல மழிந்து பெற்றுள
செந்நெறி யோகியே சீவன் முத்தனென்
றுன்னரு மறிவுடை யுலக மோதுமே. 92

## சகபோசனத்தலம்.

மன்னிய சிவன்றனைக் குருவை மைந்தனைத்
தன்னொரு வடிவென வுணருந் தன்மைதா
னுன்னரு முலகெலா முண்ட லாதலாற்
பன்னுற வருசெக போச னத்தலம். 93

அறிவுரு வாந்தனி லகிலந் தன்னையுஞ்
செறிவுரு குருவையுஞ் சிவபி ரானையும்
பிறிவற வேகமாய்க் காணும் பெற்றியே
குறிசக போசன மென்னக் கூறுவார். 94

குருவிவன் சிவனிவன் கூறப் பட்டிடுஞ்
சரமுட னசரமாஞ் சகம திங்கிது
திரமுறு மினையனு னென்னுஞ் சிந்தனை
யொருவினேன் யாரவ னுலகை முண்பவன். 95

குருவுநா னுலகுநான் கூறு தற்கரும்
பரமுநா னெனவொரு பரி சறிந்திட
விருளறு பூரண வகந்தை யென்னவே
திரிவறு மறிவினோர் தெரிந்து கூறுவார். 96

அறிவுரு வாம்பரா காசத் தாசற
நிறைதரு பராநந்த மென்ன நின்றுள

செறிகதி ரிடைவிரி சித்த மொன்றினோர்க்
குறுசக நிலைமைகண் ணுறுவ தின்றரோ. 97

ஆசறு சிதம்பர மணிதற் றன்னையே
பூசமில் சமரச பாவத் தொன்றிய
தேசுள னாகவே சிந்தை செய்திடின்
மாசறு வித்தையென் றுரைப்பர் மாதவர். 98

சிதம்பர வொளிநிகழ் சிவனோ டொன்றுற
விதந்தரு மயிக்கிய பாவத்தை யெய்தினோன்
மதஞ்செய்பத் தாதிநன் மார்க்க நண்ணலாற்
பதந்தனி முத்தியே யாகப் பற்றுவான். 99

தீக்ஷாகுருத்தலம்.

கூற ருங்குணா தீதமே குகாரமாம் ருகாரம்
வேறி லங்குரு பாதீத மென்குவர் மேலோர்
தேறி டுங்குணா தீதமா மருவருள் செய்யு
மாற டைந்தவ னியாரவன் குருவென மதிப்பாய். 100

அத்து வாமுடி யோகமுற் றருஞ்சிவ மாகு
மெய்த்த தேசிக னேபவக் கடற்கரை விடும்வா
னெய்த்தி டாவறி வாயுல கிலங்குறு மெவனு
லத்த யாகுரு வுலகெலாம் விளக்குறு பவனும். 101

ஞானகுருத்தலம்.

ஐய நீக்குப தேசஞ்செய் திவன்றிக ழறிவைச்
செய்யு முண்மையாற் பெயர்ஞான குருவெனச் செறியு
மைய மின்றியே வளரொளி மலிசிதம் பரத்தை
யுய்ய நல்குவோன் ஞானதே சிகனென வுரைப்பார். 102

கடைக்க ணோக்கினுற் றியாநாதி கற்பனை யின்றி
யடுக்கு மோர்சிவ வேதக மாக்குறு மறிவை
விடுக்கு மானுடை யுயர்சிவன் முத்தனாய் மேவக்
கொடுக்கு மாரியன் ஞானசா கரனெனக் குறிப்பாய். 103

கிரியாலிங்கத்தலம்.

அறிவு மேனியா யுண்மையா யாநந்த வடிவாய்ப்
பொறியு ருவொரு பிரமமே கிரியையின் பொருட்டுக்

குறியு ருவரு மிலிங்கமென் றுதலாற் கொண்ட
மறிவி லாவிலிங் கார்ச்சனை பலமெலாம் வழங்கும். 104

பாவலிங்கத்தலம்.

மருவு மாதியா தாரநன் மனமலர் வரிவிற்
புருவ நாப்பணென் றுரைத்திடப் பொருந்திவற் றென்றிற்
றிரிவி னல்விளக் குருவமாஞ் சிவன்றனைப் பாவ
வுருவ நற்பொருள் கொண்டருச் சிவப்பவன் யோகி. 105

ஞானலிங்கத்தலம்.

அன்ன பாவஞா பகஞான மெவ்விடத் தடங்கி
மன்னி நின்றிடு மதுஞான லிங்கமா மதிக்கி
னென்ன லிங்குரை யாடுவர் நன்னுற விலங்க
வுன்ன ருஞ்சிவ தத்துவ முணர்ந்திடு முரவோர். 106

சிறந்த சச்சிதா நந்தமெய்ச் சோதியாஞ் சிவனை
யறிந்து ளானெவ னவன்ஞான லிங்கியென் றறிவாய்
புறந்த ருஞ்செயற் கிரியையும் பாவமும் போக்கி
நிறைந்தி டுஞ்சிவ மடைபவ னேமுத்த னிகழ்த்தின். 107

சுயத்தலம்.

பாவ ஞாபக ஞானமெய்ஞ் ஞானத்தின் பாற்போய்
மேவி யேயொடுங் குறுமந்த ஞானவான் விளம்பிற்
பூவின் மேவுறுஞ் சுயனும மென்னமே புகல்வர்
காவி மாணெடுங் கண்ணுமை பங்கனூல் கற்றோர். 108

சோதி லிங்கதற் பரனுமாய்த் தோன்றுறு முலக
மியாது மோர்சிவ மயமெனக் கண்டுதன் னிச்சை
நீதி செய்துறு மொருமுனி புங்கவ னிகழ்த்தி
னாதி யாயுயர் சயனும முடையவ னாகும். 109

பிச்சை யூணடைந் தொழிந்தவாங் காரமும் பெற்று
நிச்ச மிந்திய மவித்துறு கிலேசங்க ணீக்கி
நச்சு பூதிப னாகியே நடுநிலை நண்ணி
யிச்சை யோடுவர்ப் பிலான்பர முத்தனென் றிசைப்பர்.

### சரத்தலம்.

ஒழிந்து போகுமாங் காரமு மமதையு முளனாய்
மொழிந்தி டாததன் சொரூபஞா னத்தினின் முதிர்ந்தோ
றழங்கு வேலைசூ ழுலகினிற் றானேதா னாகி [ன்
வழங்க வேசரித் திடுதலாற் சரம்பெயர் மருவும். 111

தீர்ந்த காமமே முதலன செறிந்துயர் சாந்தி
தாந்தி யோடெலாஞ் சிவமய மாகவே சார்ந்து
போந்து வீதுயர் வீதிழி வென்பது போக்கிச்
சார்ந்தி டுஞ்சம புத்தியாற் சரித்திடும் யோகி. 112

அரிய கூடத்த னாயதன் னிலையினை யடைந்த
துரிய யோகிதான் [illegible]னத்தொழு வாரிடைத் தோன்றும்
பரிவு றானிகழ்ந் தவரிடை வெறுத்துளம் பகைக்குந்
திரிவி லாதொரு பரிசினாற் சரித்திடல் செய்யும். 113

மாயை பெற்றிடாக் குணமொடு மருவியே யென்று
மாயை வத்துவி தாநத்தப் பெருங்களிப் படைந்த
தூய மெய்ச்சிவ யோகிதான் றொல்சக நகைத்துச்
சாயு மற்றுள வுடம்பிபோற் சரித்திடு மன்றே. 114

### பரத்தலம்.

உருவ ஞானமா யுலகிறந் தொருசிவ மென்னப்
பரவு றும்பரப் பிரமமே நானெனப் பார்க்கு
முரவ னேயுயர்ந் தோனால குறுமய லொழித்துக்
கரவி லாததன் சொரூபமே காண்பவன் முத்தன். 115

மயலி லாதசச் சிதாநந்த வடிவமாஞ் சிவத்தி
லயலி லாதவோர் சமாநதை யடைந்துள யோகி
செயலெ லாந்தன திச்சையாச் செய்துதே சிகன்போற்
சயமு றுவுயிர் முத்தனாய் வியப்பொடு சரிக்கும். 116

### கிரியாகமத்தலம்.

யாவர்க்கு மாசா ரந்தா னெறிலணி யாகி நிற்கு
மோவுற்றோ னதனை நிந்தை யுறுகுவ னாசா ரத்தை
மேவுற்ற ஞானந் தன்னால் விளங்குறு மீச னென்றாற்
சாவுற்று மெய்வீழ் காறுஞ் சார்வதா சார மன்றே. 117

## பாவாகமத்தலம்.

சீரணி சிவோக மென்னும் பாவனை சிவம தற்குக்
காரணம் வேறு ஞான கருமங்கா ரணமே யாகா
பூரண வத்து வாகும் பொலிதரு ஞான மத்தின்
காரணந் தியாந மந்தத் தியாநமே கருத்திற் கொள்க. 118

நிரந்தர முட்பு றம்பு நிறைந்துள மகேசன் றன்னைப்
பரந்தரு பரமா நந்தப் பயன்பெறும் பொருட்டு மேவி
விரிந்துள கலைக ளெல்லாம் விளங்கிய வறிவி னாலே
தெரிந்துள புலவ ரென்றுத் தியாநமே செய்க மாதோ. 119

கண்ணிலான் வடிவ மொன்றுங் காண்கிலா வாறு போல
வெண்ணுபா வனையி லாதா னிறைவனைக் காணான் முக்கட்
பண்ணவன் றனையர்ச் சிக்கப் பாவனை மனத்தி னோடு
நண்ணுறான் சிவனை யந்தப் பாவனை நழுவி னோனே. 120

கீடசிந் தனையி னாலே கிருமியுங் கீட மாகும்
பீடுறுஞ் சிவனை யென்றும் பிரிவறத் தியாநஞ் செய்வோ
னீடுறு சிவமே யாவ னிட்கள சிவத்தி யாநங்
கூடருந் தகைய தேனுங் குறிக்கொளீ யவன்றன் வாழ்வே. 121

## ஞானாகமத்தலம்.

நவின்றிடும் பரம யோகி ஞானசின் னங்க டாமே
பவந்தொடர் மனிதர்க் கெல்லாம் பவமற வின்ப வீடிங்
குவந்தருள் செய்யு ஞானா கமமென வுரைப்பர் மேலோர்
தவந்தனி யுருவு கொண்ட தனையசந் தநவெற் புள்ளோய். 122

கிரியைபா வங்க டம்மாற் கிடைத்திடும் பயனொன் றில்லை
கிரியைபா வங்கண் மேவு ஞானத்தாற் கிடைக்கு முத்தி
பிரிவிலா நூறு கோடி பிறப்பினி லெனினுங் கன்ம
முரியவீ டுதவா தம்ம வுதவுவ தயர்ஞா னங்காண். 123

ஞானமற் றொழிந்த கன்ம நவைதரு பிறப்பிற் கேது
வானவக் கருமந் தானே யறிவொடு கூடு மாயி
னீனவப் பிறவி மாற்று மீவது கருமம் பொன்றும்
வானிலைப் பதமே ஞானம் வழங்குவ தழியா வீடு. 124

தெரிந்திடு மூலக மெல்லாஞ் சிவமயஞ் சிவனில் வேறு
யிருந்துள பொருளொன் றில்லை யாதலாற் சிவனு னென்றே
யுரந்தரு முணர்வு தானே யுத்தம ஞான மென்ப
ரருந்தவ முனிவ ரேறே யாகம நெறியு ணர்ந்தோர். 125

கண்ணிலா னெதிர்ந்த தொன்றைக் காண்கிலா னதுபோ னீங்கா
துண்ணிலா மிறையை ஞான மொழிந்தவன் காணு னென்று
நண்ணுறு தொழிக்கும் பாச நற்சிவ காட்சி ஞானக்
கண்ணுளார் தங்கட் கந்தக் காட்சிதா னெளிது மாதோ. 126

எறிசுட ரன்றி யில்லி லிருளறு ததுவே போல
வறிவினை யொழிய நீங்கா தகத்துறு மோகந் தானு
மறிவறு ஞான மாகும் வலிகெழு கதவங் கொண்டு
பொறிவழி யடைத்து மிக்க பொதியில்வீற் றிருக்க வல்லோய்.

அகாயத்தலம்.

சாற்றிய பரம யோகி சகஞ்சிவ மயம தாகத்
தோற்றுறு நிலையி னுற்பொய் மாயையின் றொடக்கி லாத
வாற்றலா னுதவி யாகு மாக்கைய னுத லாலே
போற்றுறு மகாய னென்றே புகன்றிடப் படுவ னன்றே. 128

சங்கர னெனமெய் யோடு சாரினும் பரம யோகிக்
கிங்குறு முடல்வி கார மிலாமையா லகாய னாகும்
பொங்கொளி யம்ப ரத்திற் புக்குறு மியோகிக் காக
மெங்குள துடம்பி போல விருப்பது பிராந்தி யன்றே. 129

ஆக்கையின் மான மில்லா தருஞ்சிவ மாகி நிற்கு
நோக்குறு மியோகிக் காக்கை நுவன்றிடு மூலக மென்றாற்
போக்கறு முடல மொன்றாற் பொருந்துறும் பாதை யாதோ
வீர்க்குமிந் தியவாங் கார விடரதற் கில்லை யன்றே. 130

மயக்குறு மனித னல்லேன் வானவன் றானு மல்லே
னியக்கனு மல்லேன் மிக்க விராக்கத னல்லே னென்று
முயர்த்துறு சிவமே நானென் றுணர்ந்தவன் றனக்கு வந்து
பயக்குறு முடம்பு செய்யுங் கருமமென் பயனைச் செய்யும். 131

பரகாயத்தலம்.

பகுதியை வசிக ரிக்கும் பான்மையான் மாயா மார்க்கத்
தொகுதியை நீங்கி நிற்குந் தூய்மையா லறிவா நந்தத்

தகுதிகொள் பிரமந் தானய்த் தகும்பர காய னவன்
மிகுதிகொ டவத்தர் கோவே விளம்புறு மகாய னென்றே. 132

பேரறி வுருவாய் நின்ற பிரமமே வடிவ மானேற்
கோருறு மாயை யாக்கை யாற்பய மென்னே ஞான
வாரழ லாற்பி றப்பிற் காதியா ருடலஞ் சுட்டு
நேரறு சிவம டைந்தோ னிகழ்பர காய னென்பான். 133

வினைதரு மநோவி ருத்தி விடயவிந் தியங்க ளெல்லா
மெனையதி லடங்கு மந்த விருஞ்சிவ மேயி வற்குத்
தனியுரு வாகு நானே சிவமெனச் சகங்க ளெல்லா
நனியறி வாகிக் கண்டோற் குடல்சொல வன்மா லாகும். 134

சோதியாம் பிரமமே தன் சொரூபமாய்ச் சிந்தை செய்வோன்
மேதையா முடம்போ டுற்று மெய்யிலி சீவன் முத்தன்
போதமா மியோகி யாக்கை யிருப்பினும் போகி னுந்தான்
றிதிலா முத்தி யாகு மென்பர்நூ றிருந்தக் கற்றோர். 135

பெரும்பவ நோய்வ ருத்தல் பிறங்குதன் சொரூப ஞானம்
பொருந்துறு மளவே யன்றோ பொங்கொளி யிரவி தோன்றப்
பரந்திடு மிருளு முண்டோ பகர்ந்திடிற் காலா தீத
வரும்பத மடைந்து ளோனுக் காக்கையுட் படுத லின்றே. 136

தருமாசாரத்தலம்.

உலகெலா மொருதா னுக வுன்னலால் வடிவ மாதி
விலகலா னுயிர்க ளெல்லாம் வேறறத் தானய்க் காண்பா
னுலகெலாஞ் சிவமொன் றாக வுணர்ந்தவற் கெனதென் றெண்ண
விலகுமோர் பொருளு முண்டோ விலையென விளம்பு நூலே. 137

அறநெறி முத்தி யேது வாதலா லவ்வ றத்தைத்
துறவின னெனினுஞ் செய்க தொல்லறி வமுதந் தன்னு
னிறைபினு மறத்தை நீங்கா னின்றதன் னொழுக்க நோக்கிப்
பிறரிது நெறியென் றெய்தப் பெறுதலாற் பரம யோகி. 138

பாவாசாரத்தலம்.

அறமுறு மிவன்றன் பாவ மனைவர்க்கும் பாவா சாரந்
திறமுறு பாவந் தன்னைச் செப்புறின் மனவ ழுக்காய்
நிறைதரு சிவனைப் பற்றி நிற்பதென் றறிந்து கொண்ணீ
மறிதிரை சுருட்டு மாழி வாய்மடுத் துண்ண வல்லோய். 139

பாவனை யாற்செய் கன்மம் பாவநங் களினு மேலாம்
பாவனை யால றத்தைப் பண்ணுக வதனு லென்றும்
பாவனை யாற்செய் கன்மம் பலித்திடு மனமுந் தூய்தாம்
பாவனை யாலென் றெண்ணிப் பாவனை விடாமற் செய்க. 140

பரசிவ வங்கி தன்னிற் படர்புல விந்த நத்தைத்
துரிசறு பாவத் தாலே சுடுதலே யாக மாகும்
பரிசுறு கரும மெல்லாம் பரமனுக் காவ வாகக்
கரிசுறு பவந்தொ லைப்பான் கருத்தினிற் கொள்க மாதோ. 141

ஞானசாரத்தலம்.

முத்தியை யுதவு ஞானங் குருவ நண் முறையிற் பெற்றோ
னெய்த்திடும் பவம் பெருக்குங் கருமத்தி லிச்சை செய்யான்
றத்தலை யொழுகு நீர்போற் சார்ந்துள கரும பந்தஞ்
சுத்தமெய்ஞ் ஞானத் தீயாற் சுடுதலான் மறித்துந் தோன்று.

ஞானமி லாதான் கன்ம நாணினுற் கட்டுப் பட்டான்
ஞானமு ளானக் கன்ம பந்தனை நழுவி னேனும்
ஞானவா சார நண்ணிப் பரசிவ நாட்டம் பெற்ற
ஞானிதான் சீவன் முத்த னுகியே நடிக்கு மன்றே. 143

காயானுக்கிரகத்தலம்.

ஈசன் மேனியோ டொன்றினும் பற்றில னென்ப
மாசில் யோகியு முடம்பின னெனினுமவ் வாறும்
பாச மாய்வுறு மருஞ்சிவ பாவனை யதனுற்
றேசு லாவுறு பரசிவ னுமவன் றிண்ணம். 144

இன்ப வெள்ளமாஞ் சிவத்தினின் மனவழுக் கிறந்த
துன்பில் யோகிமா யைப்பொரு டோன்றுறக் காணுன்
முன்பு வெள்ளியன் றிதுவென விப்பிகாண் முறைபோற்
பின்பி லங்குறு மிதுசக மன்றெனப் பிரமம். 145

பிராணுனுக்கிரகத்தலம்.

யோகி னுற்சிவத் தொடுங்கிய வுயிருள னெனினு
மாக மேவுறுந் தன்சத்தி வாசனை யதனு
லேக மாஞ்சிவத் தடங்கிய பிராணனே டிருப்போன்
போக மார்புல னெடுமன மெங்ஙனம் பொருந்தும், 146

சாந்தி யாமெனி னிங்குயிர் விருத்திதான் றழைந்து
போந்த வன்மன விருத்தியோ டமைந்திடும் புகலி
னேய்ந்த வம்மனச் சாந்தியா லிலங்குறும் யோகி
யார்ந்தி டுஞ்சிவ மன்றிவே றொருபொரு ளறியான். 147

நீங்கு வாசனை யுடையனுய் நிகழுயிர் விருத்தி
யீங்கு மாறபு சிவத்தினி லேகமா யிருப்போ
னோங்கு தானுவொத் தசைந்திடா னென்றுமென் றுணர்க
வாங்கு வார்திரைக் கடல்குடித் துயர்ந்திட வல்லோய். 148

காயார்ப்பிதத்தலம்.

என்று தன்னுடம் பீசனுக் கர்ப்பிதஞ் செய்வ
னன்று தன்வடி வொருசிவ வடிவமே யாகு
மொன்று மிந்திய விடயவின் பங்களை யோகி
நின்ற சின்மய சிவத்தினுக் காக்குவ னோர்ந்து. 149

கண்டு கேட்டுமற் றுண்டுயிர்த் துற்றிடு காலைக்
கொண்ட வின்பங்க ளியாவையுஞ் சிவத்தினிற் கொடுத்து
மண்டி யிவ்வுடல் வழிவரு மற்றுள சுகமும்
விண்ட வெந்தனைப் பரமனுக் காக்குவோன் விமலன். 150

கரணார்ப்பிதத்தலம்.

இந்தி யங்களை மறித்தருஞ் சிவத்தினி லிசைத்தோர்
கந்த வெம்பவ முழுகுத லியாண்டுள தறையி
னிந்தி யங்கடன் வழிபடுத் திடல்பவ மென்னும்
பந்த வல்வன மெறிந்திடற் கொருபெரும் பரிசாம். 151

பாவார்ப்பிதத்தலம்.

மான சந்தனைப் பாவமென் றறைகுவர் மனத்தி
லான வப்பொரு ணினைவொரு சிவத்திலர்ப் பிதமா
மீன வெம்பவ மடைகிலன் பாவசுத் தியினோன்
றூன திங்கிலன் பவத்தினிற் சுழலுவன் றளர்ந்தே. 152

கருமம் யாவுமோர் பரசிவ பூசனை கழறு
முரைகள் யாவுமொண் டுதியென வுன்னுவோர்க் கில்லை
கரும பந்தனை யின்பதுன் பங்களைக் கருதா
தொருப ரன்றனைக் காக்குவோ னுயர்சிவன் முத்தன். 153

## சீடத்தலம்.

சாந்திதாந்திநற் றவஞ்சம தரிசனம் வாய்மை
வாய்ந்து மாண்குரு சிவனிடை யொத்தநன் மனத்தா
லேய்ந்து ளான்றனைச் சீடசூ டாமணி யென்பர்
தீர்ந்த மாலுடை யொருபர சிவமுணர் திறத்தோர். 154

குருவை மெய்ச்சிவ மாகவச் சிவன்றனைக் குருவா
யொருமை பெற்றிடக் காண்கவக் குருபர னுரைத்த
கிரிவ றச்சிவ நெறிசிவத் தியாநமெய்ந் ஞான
மருவ லுற்றவை நிட்டையி னோங்குக மாதோ. 155

தேசி கன்றன தாணையைக் கடந்திடல் செய்யா
னேச கன்றுள ஞானமுற் றடைகுவ னவனுற்
பேசு றுஞ்சக மித்தையே யறிவது பிரம
மேச லின்றது நீயென விசைந்தவன் முத்தன். 156

## சிசுருடைத்தலம்

ஆரி யன்றனை துரையிலா தயர்வுறு திதயஞ்
சூரி யன்றனை யலான் மறையலர் வுறுசொல்லி
னாரி யன்றிகழ் வால்வினங் குவனருஞ் சீடன்
சூரி யன்றிகழ் வாற்கதிர்க் காந்தமுஞ் சுடரும். 157

இன்ன வாறருஞ் சீடனோர் வினவுற விறைவ
னின்ன லம்பவ மொழிகுவான் றத்துவ மிசைப்ப
னுன்ன ருஞ்சிவ னேபர முண்மையு மவனே
யன்னி யங்களா மிச்சக மித்தமென் றறிவாய். 158

மித்தை யாஞ்சகஞ் சிவனிடை மேவுறும் வெள்ளி
சுத்தி மேவல்போற் சிவோகமென் பாவனை தோன்றி
னத்த னாகிய சிவநிலை யுண்மையை யடைய
முத்த னாகுவன் பவநெறி மூலமா மோகம். 159

மைந்த நீயுனைச் சிவமய மென்னவே மதித்திங்
கிந்த வேறெனு மூலங்கை யென்னலை யங்ஙன்
வந்து றுஞ்சிவாத் துவிதவின் பத்தினன் மருவிப்
பந்த மின்றிய வுயிர்முத்த னாயினை பகரின். 160

மேவு நற்குணக் குன்றமாங் குரவனால் விளங்கப்
பாவ மற்றுயர் போதனை யருள்செயப் பட்டோ
னியாவு மிச்சகஞ் சிவமய மேயெனக் கண்டு
சீவன் முத்தனா குவனென வாகமந் தெருட்டும். 161

சேவியத்தலம்.

போத மாபலன குருமொழி யமுதினாற் பொருந்து
மேதை யாமிவ னேயுல கடங்கவும் விரும்பித்
தீதி லாதுசே வித்திடப் படுவனாற் றெரியி
னாத லாலிவன் சேவிய னெனும்பெய ரடைவான். 162

குரவ னல்குமெய்ஞ் ஞானநெஞ் சகத்தினிற் கூடி
விரவு றுஞ்சிவ வடிவமாஞ் சீடனும் விளம்பிற்
பரவு றுங்குரு பரனெனப் பூசிக்கப் படுவன்
வரமு றுஞ்சிவ ஞானவாழ் வினனென மதித்து. 163

என்று மெய்ச்சிவ நானெனும் பாவனை யெய்தி
நின்ற வற்கிடை யீடிலா திறைநிலைத் திடலா
னன்று றச்சிவன் போலவே யிந்தவ னாளுங்
குன்ற லற்றிவர் பூசனை கொள்வனென் றறிவாய். 164

ஒழிவ றுஞ்சிவ பாவனை யுடையநல் யோகி
யிழிவு றுஞ்செயல் விடயநெஞ் சுடையவ னெனினு
மொழியு மவ்விட யங்களின் முத்தனாய் மருவும்
வழிப டுஞ்செயல் பரவுமா சிவனென மன்னோ. 165

பந்த நாசநஞ் செயுஞ்சிவ ஞானமே பற்றுஞ்
சிந்தை யாலுல கோர்பவந் தொலைத்திடல் செயுமா
லந்த ஞானமெய்ச் சிவபத மடைந்தநல் யோகி
யிந்த மாநிலத் தனைவரும் போற்றிட விருப்பன். 166

ஜங்கமலிங்கத்தலம்.

பொற்புறு மான்மா மூன்றும் புகழுமா கமங்கண் மூன்றுந்
தற்பிர சாத மூன்று மாகவே தலங்க ளொன்பான்
சொற்பெறு பிராண லிங்கி தொடர்ந்துள தலமி வற்றை
வெற்பமர் முனிவர் வேந்தே விளம்புது முறையிற் கேண்மோ.

### ஜீவான்மத்தலம்.

ஆரிய னருளு ஞான போதனை யடைந்த விநதச்
சீரியன் சீவ பாவந் தீர்ந்துநற் றத்து வத்தை
யோரியல் பொடுபா விக்குங் காலையி லுணர்ந்து ளோர்நற்
பேரிய லான்மா வென்னப் பெற்றிடு முலகி லன்றே. 168

பகர்ந்திடி னுண்மை வாலாக் கிரசத பாக மொத்து
நுகர்ந்துழி வினையின் பேறு நுண்ணிய னுகு மான்மா
வகந்தனி லிருளி ரிக்கு மருஞ்சுடர் போலி ருந்து
திகழ்ந்திடு மென்று சொல்வர் சிவாகம நெறியு ணர்ந்தோர். 169

நிரஞ்சந மாய வான்மா நிறைந்தவ னெங்கு மேனும்
வருஞ் செய லுடலி லாத னுயினு மாயை தந்த
விரஞ்செறி பவனுய் நின்று புகலரும் பவங்க டோறுந்
திரிந்திடு மென்று கூறுஞ் சிவனரு ளாக மங்கள். 170

மெய்யுட னிந்தி யங்கள் வேறுசெய் வழியி னுலே
பொய்யறு மகண்டா நந்த பூரண பிரம ரூப
விலயம தறவே யான்ம சொரூபநன் கறிதல் செய்யச்
செய்யுமெந் நாளந் நாளான் மாவினைச் சேர்த லென்பார். 171

அருந்துயர்க் கிடம தாயஞ் ஞானகற் பிதமே யாகிப்
பொருந்திநின் றுள்ள சீவத் துவமுடன் போகு மாசான்
றிருந்தருண் மொழியான் ஞான சத்தியுந் திகழு மென்பர்
பரந்துள கலைகண் முற்றும் பழுதறக் கற்ற மேலோர் 172

### அந்தரான்மத்தலம்.

தேசிக னருளி னுலே சீவபா வந்தா னென்று
நாசம தடையு மன்று நசித்திடப் பட்ட வற்குப்
பாசமி லந்த ரான்ம பாவம்வந் துறுமென் றோர்வாய்
மாசறு தவத்தின் மிக்க மலயவெற் பமர்ந்த மேலோய். 173

அறைந்தவச் சீவன் மெய்யோ டடுக்கினு முடல பந்தந்
துறந்தொழு பரமான் மாவை யுள்கலாற் றுளங்கு சீவ
னிறைந்துள பரம னுப்ப னிற்றலா லுபயத் தன்மை
பெறுந்திற மதனு லெய்தும் பிறங்குமந் தரான்ம நாமம். 171

முற்றுறு மனிதத் தன்மை முதலவாங் காரச் சார்வான்
மற்றவை யியல்பன் றென்று மதிப்பவ னந்த ரான்மாச்
சொற்றிடு மவன்பு னற்கட் டோன்றுபா சிலையுந் துன்னத்
தெற்றுறு குடம்பைப் புள்ளும் போலவே மெய்யிற் றீர்ந்தான்.

மதிதனை யடையா மேக மறைந்திடப் படல்போ லான்மாப்
பொதியுட லகல நின்று புணர்த்திடப் படுவன் மெய்யா
மிதனிடை யுறினு மாழ்கி யானென தென்ப தில்லோன்
பதியெனுஞ் சிவனை யோகப் பயிற்சியாற் காண்ப னென்றும்.

போத்துரு வாம வற்கும் போக்கிய மாம வற்றைப்
பேர்த்திடு தலினுன் மிக்க பிரேரக னருளி னாலே
போத்துருப் பாவ நீங்கிப் பொலிகுவ னெங்கு நின்று
காத்தருள் பரமற் கண்டு களிக்குவ னந்த ரான்மா. 177

பரமான்மத்தலம்.

தன்னொளி யானிறைந்து தான்மிளிர் சிவனே யிங்ங
னுன்னுமான் மாக்கட் கெல்லா முயர்தலாற் பரமான் மாவா
மன்னுமா மாயை யென்னும் வாரியு ளண்ட மொக்குள்
சின்னமா யெழுந்த டங்கச் செய்பவன் பரமான் மாவாம். 178

யாதினி லொளிக ளெல்லா மெரியினிற் பொறிபோற் றோன்றி
மாய்தரும் பரம னுக்கவ் வடிவமாந் தத்து வங்கள்
யாதனிற் கடற்ற ரங்க மென்னவந் தெழுந்தொ டுங்கு
மோதுமவ் மடிவ மாகு மொருபர மான்மா விற்கே. 179

உலகினுக் குயிரு மாகி யொழிந்திடு மலத்த னாகி
யிலகுமப் பரமன் றன்னை யிசைப்பர்தத் துவத்தின் மேலா
யலரிதன் கதிரா யெங்கு மவிர்தல்போற் பரமன் றானும்
விலகிலச் சத்தி தன்னால் வியாபித்து விளங்கு மன்றே. 180

எங்கணு மொளிர்வோ னேனு மகிலமு மிறந்து நின்ற
பொங்கறி வுருவ மாகப் புகன்றிடு பரமன் சீவர்
தங்களுக் கொருதன் சோதி வடிவமாய்ச் சாரு மென்பர்
மங்கலப் பொருளை யீன்ற மலயவெற் பமர்ந்த மேலோய். 181

நிர்த்தேகாகமத்தலம்.

இருப்பவ மூல மாகு மியானென தென்ப தின்றி
யருப்பர நானென் றன்மை யடைந்தவற் குடல முண்டோ

வருஞ்சகங் கடந்து ஞான வாரிதி தன்னின் மூழ்கு
மூரம்பெறு யோகி யெவ்வா றுடம்பினைச் சிந்தை செய்வான்.

தன்னையோ ரெல்லை யில்லாத் தனிச்சிதம் பரமாய்க் கொள்வோன்
மன்னுமா யினுமு டம்பில் வடிவுறு விகார மொன்றுந்
றன்னைவே றிளமற் சச்சி தாநந்த பரமா காச
மென்னவே யுணர்ந்த யோகி யாண்டுமோ கத்திற் சேரான். 183

ஒருபொரு ளிடத்திற் பேத முபாதியாற் றோன்று மென்னத்
தெருளுற வுணர்வோர்க் குண்டோ தேகத்தி னளவா யுற்றல்
விரிவுறு பேத புத்தி வினைப்பரிச் சேத வேது
வரிதெனு மபேத புத்தி யதுதனக் கேது வாமோ. 184

நிரம்பிய சிவோக மென்னு நினைவுவந் தியார்க ளுண்டாம்
வரம்பெறு மவனுக் கெங்கு மருவுறு துடல பந்த
மிருங்கடன் முகட்டெ ழுந்த வமுதினு மினிமை பெற்ற
வருந்தமிழ் பயந்த செவ்வா யகத்தியப் பெயரி னானே. 185

நிர்ப்பாவாகமத்தலம்.

பிரமநா னெனுமி ரண்டு பெரும்பொருள் பாவத் தெய்தும்
பரமதி லொன்று தற்கப் பாவமின் றென்ப துண்மை
புரையறு சிதம்ப ரத்தி லேகமாய்ப் பொருந்தி னோற்கு
வரையறு சாதி மேனி யலமரன் மருவு றுவால். 186

உரைமன மிறந்து நின்ற வொருபெருஞ் சிதாகா சத்தி
லிருமையின் றிலயித் தொன்று னேதினு லெதைப்பா விப்பன்
றிரையறு ஞான வாரி சேர்ந்தடங் கினற்குச் சிந்தை
மருவறு பாவஞ் சங்கற் பனையிவை மருவு மோதான். 187

ஆதிப்பிரசாதித்தலம்.

புனிதனுய்ப் பலபி றப்பிற் பொருசக வகந்தை யுள்ளோற்
கினிதுறு மாதி தேவ னிருபிர சாத மென்ப
வனைசிவப் பிரசா தத்தான் மலிசிவ மாயி னற்குக்
கனைசகங் காண்ப தாயுங் காணுறப் படாது கண்டாய் 188

பிறப்பெறி மூல மாகும் பிரான்பிர சாதந் தன்னு
லறப்பெறு மோக முத்தி யடைகுவன் பிறவி வெந்நோய்
சிறப்பரன் பிரசா தத்தா லன்றியே தீர்ந்தி டாதால்
வெறுப்பிரு ளிரவி யன்றி வீயுமோ வுலகந் தன்னில். 189

### அந்தியப்பிரசாதித்தலம்.

சுரர்நரர் மிருக மாதி தோற்றுறு மாயை மாயிற்
பரனிடை யதுபயந்த பதார்த்தமு மாயு மென்ப
ருரமுறு சத்தாநந்த வொருபொரு ளுண்மை பெற்று
னிறைதரு பதார்த்த ஞானம் யாதுயர் ஞேயம் யாதோ. 190

கனவிடைக் கண்ட தெல்லாங் கழிந்திடும் விழிப்ப மாயை
தனில்வரு வனமெய்ஞ் ஞானஞ் சார்ந்திட மாய்ந்து போகு
முனலருஞ் சுழுத்தி யோனுக் கொன்றுமங் கெதிரா வாபோ
லினலறு சீவன் முத்தற் கெதிர்ந்திடா தொன்று மன்றே. 191

அந்தரம் விகார மின்றி யகண்டித மாகு மாபோல்
வந்துறு சீவன் முத்த னுருவமும் விளங்கு மென்பர்
சிந்தனை செய்து காண்கை செய்கையம் முத்தற் கில்லை
நிந்தையில் சுகனி றைந்து நிச்சல னாகி மேவும். 192

### சேவியப்பிரசாதித்தலம்.

தேசிகன் சிவனே யந்தத் தேசிகன் சேவி யன்று
ளாசிலிங் கவன்ற னோதா ரநுபவ மெவற்று மேலாய்ப்
பேசுறும் பிரசா தப்பேர் பெற்றுள் ததனைப் பெற்றோன்
வீசுறும் பவமு றுஞ்சே வியப்பிர சாதி யாகும். 193

குரவனே பரம னந்தப் பரமனே குரவ னென்ப
விரவுமிவ் வேகமாகு மநுபவ மெய்ம்மை யென்று
முரைமன மிறந்த தன்பே ருருவமின் பங்கண் டுற்றோன்
மருவுறு மயலொன் றின்கண் மனம்விழைந் திடுமோ சொல்லாய்.

ஞானவா ரமுதந் தன்னை னன்றுற நிரம்பி னோனுக்
கேனையூண் பொருளா லென்கொ லெய்துதல் சத்தா மீசன்
ஞானமே கொண்டு பேரா நந்தநின் றிலங்கு மென்னும்
பானல்வா ளரிநெ டுங்கட் பாவைபங் குடையோ னாலே. 195

சத்துட னறிவா நந்தத் தகுமிலக் கணத்த தாகு
முத்தியே யுயர்தி ருத்தி யென்குவர் முதனூல் கண்டோர்
நித்திய நிரம்பல் பெற்ற நிகரிலம் முத்த னுக்குத்
துய்த்திடு பொருள்க டம்மாற் றோன்றுறு பயனென் சொல்வாய்.

சிவம்பெறு மேக ஞானஞ் சேர்ந்துடன் மயக்கி லார்க்குப்
பவம்பெறு கரும மில்லைப் பகர்தரிற் புறவ கத்துந்
தவஞ்செபந் தியானம் யோகஞ் சார்ந்திடா வவற்றின் மேலா
யுவந்துள ஞானந் தன்னி லுற்றிடு மவனுக் குள்ளம். 197

சிக்ஷாபாதோதகத்தலம்.

யாதொரு சிட்சை யிங்குக் குருசீட மயமா ஞானந்
தீதறு மியோகிக் காகச் செய்திடு மவையி ரண்டும்
பேதம தறக்க லந்த பெருமையை யுரைப்பர் நல்லோர்
மாதவ முனிவ சிட்சா பதோதக மென்ன மாதோ. 198

அலையில்பே ரின்ப வாரி யமிழ்ந்தவன் பரம யோகி
யெலையிலவ் வாரி திக்கோ ரெல்லையு முண்டோ சொல்வாய்
கலைமலி குரவன் மிக்க கருணைவா னிலவு திப்ப
மலர்தரு நெஞ்ச நீல மருவினேன் மயங்கு றுனல். 199

ஞானபாதோதகத்தலம்.

அறிவெனு மதிவர வவித்தை யாகிய
செறியிரு ளொழிதரச் சிதாகந் தங்களே
குறியெனு மொருபெருங் கோலந் தோன்றுமா
லுறவொடு பகைதவிர் யோகி கட்கரோ. 200

மாயைவல் லிரவற வந்து ஞானமாஞ்
சேயொளி யிரவிதான் றிகழுங் காலையிற்
போயுற வுலகியல் வழக்கம் போற்றுறுன்
றாயநல் யோகிதான் றுயிலு மென்பவே. 201

அகன்றிட வநாதியா மவித்தை நித்திய
சுகந்திகழ் பரமமாஞ் சூரி யன்றனிற்
புகுந்துறு மனமுடைப் புனித யோகிதான
சகந்தரு கற்பனை தன்னிற் றேய்வுறுன். 202

மெய்ப்பர சுகமொடு விளங்கு சோதியர்க்
கொப்பில ரயனரி யுருத்தி ரன்கதி
ரப்படி தமையுணர்ந் தவர்க்கத் தேவர்தாந்
துய்ப்புறு சுகஞ்சிறு துளியொன் றுருமால். 203

மானுடர் சிறுசுக மருவு மிந்திய
ஞானம தடைகுவர் நச்சி யிந்திய
மானம தறுபரா நந்த வாழ்வினைத்
தானெவர் விரும்புவார் சார்தற் கெண்ணியே. 204

கிரியாநிட்பத்தித்தலம்.

விடுத்துள வுபாதியான் வினைகள் யாவுமிங்
கடுத்துள வளவதா யவன்கண் மாயுமா
னடப்பினு மிருப்பினு நனியு றங்கினுந்
தொடக்குறு முயிர்வினை ஞானி தோய்ந்திடான். 205

பாவநிட்பத்தித்தலம்.

பரமஞா னிக்கொரு பாவ பந்தன
மருவுறு தெனினுமே வருத்து வெம்பவ
மொருவவா ரருள்புரி யொருசி வத்தினில்
விரவுபா வனையது மேவ வேண்டுமால். 206

பாவமு ஞானமும் பரனி லேகமாய்
மேவிடி னொருசிவ மாய்வி ளங்குவான்
பாவமு ஞானமும் வேறு பட்டுமின்
றுவன வின்மையா லவைவி டேலரோ. 207

ஞானநிட்பத்தித்தலம்.

உலகினி லுணர்பொரு ளுணர்விற் கின்மையா
லிலகுறு மிவன்கன வென்ன ஞாலமேற்
பலர்புகழ் ஞானநிட் பத்தி மேவலா
னலமலி ஞானநிட் பன்ன னென்பரால். 208

சொற்பனந் தனில்வரு முணர்வு தோன்றுமப்
பற்பல பொருளொடு போகும் பான்மைபோற்
றற்பர மிலகுறத் தன்னு யர்ச்சியான்
முற்பெறு ஞேயமு முடிந்து போகுமால். 209

சச்சிதா நந்தமாந் தன்மை யோன்சிவ
னிச்சக மியாவுமோ மித்தை யென்பதிங்
கச்சுறு ஞானமென் றறிவி லக்கணம்
வச்சநூ லுணர்பவர் வகுத்துக் கூறுவார். 210

உற்றிடு பானில்வே றுங்க டாதியிற்
பற்றிநின் றிடுவன பார்த்து மித்தையென்
றற்றிட விடுதலை யறிவென் றோதுவார்
தெற்றன வறிவறி திறத்தின் மேலையோர். 211

வேறு.

காரண காரி யங்கள் கடந்துபா திகளை நீத்து
மாரண மடைய நின்ற வத்துவே பிரம மந்த
வோரணி பிரம நானென் றிருந்திடு நிட்டை தானே
சீரணி ஞான மென்பர் செழுமறை கற்று ணர்ந்தோர். 212

விரிந்துள பொருளை நீத்தும் விடுத்தொரு முதலாய் நின்ற
பரந்தனி லைபத மெய்தப் படுமெனி னறிகு வேனுன்
றெரிந்தறி ஞேய மீதென் றுணர்தருந் திறத்து ஞானம்
பொறுந்துவ தெவ்வி டத்து மில்லையெனப் புகல்வர் கற்றோர். 213

பிண்டாகாசத்தலம்.

நெடியவான் பிண்டத் தற்றுநிறைவெனப் படுதல் போலப்
படியறு மான்மா வந்த னிறைவெனப் படுமென் றோர்வாய்
விடலரு மினைய திந்தப் பொருடெரி விவேக மேதான்
றடையறு பிண்டா காசத் தலமென வறைவர் மேலோர். 214

குடத்தினி லுறுவி சும்பு குறிக்கிற்பூ ரணமா மாபோ
லடுத்துறு பிண்டத் தான்மா வதனது சொரூபத் தானே
தடுப்பரு நிறைவ தாகித் தயங்குமென் றுறைவர் மேலோர்
கடத்தினி லுதித்த மிக்க கடல்குடித் துயர்ந்த மேலோய். 215

அகத்தினிற் பாவி சும்பா யத்துவி தத்த தாகி
மிகுத்துறு சிவத்தை யென்றும் விமலமா மனத்திற் பாவ
மிகப்பற வியற்று வோனே யியம்பிற்பிண் டாகா சத்தன்
றகக்கலை முழுது மோர்ந்து தயங்கிய முனிவ ரேறே. 216

தத்துவ முப்பத் தாறுஞ் சமைத்திடப் பட்டு மாசில்
சுத்தநன் மனமாம் பீடந் துலக்குற வமைத்து ஞானப்
புத்தொளி மணியி லக்குப் பொருந்துற மிக்க யாக்கை
யத்தனஞ் சிவனி ருக்கு மாலய மென்பர் மேலோர். 217

மிக்குறு பரமா காச மேனியாய் விளங்கு மீசன்
மெய்க்கணி னவரு ளத்தின் மேவுவோ னகக் காண்க
விக்குறி யுடல மாகுஞ் சிவபுரத் திதயக் கோயில்
புக்குறு மமல நீரிற் பொருந்திய விசும்பு போல. 218

அந்தரா காச விம்பத் தடுத்துபா திகளனைத்தும்
வந்துறு தொழிந்து நிற்கு மணிக்குட வானம் போல
முந்தையோர் சின்ன மாகி மூதறி வுருவாய் நின்ற
வெந்தையாஞ் சிவத்தை யென்று மியல்பிற்பா விக்க மாதோ.

விந்தாகாசத்தலம்.

யாவர்த மிடத்து மோர்காற் றிருப்பினு நிறைவா மாபோல்
யாவர்த மிடத்துந் தானே யிருப்பினும் விபுவா மான்மா
மேவுறு வன்னி யொன்றே யெங்கணும் விளங்கல் போலத்
தேவர்க டேவன் றானுங் கண்டிதந் தீர்ந்தோ னவான். 220

செங்கதி ரொன்று தானே தேசுறு கிரணந் தன்னா
லெங்கணு நிறைதலுற்றே யிலங்குறு மதனைப்போல
மங்கல வடிவா மான்மா மல்குதன் சத்தி தன்னா
லெங்கணு மிடைந்தோ னாகி யிலங்குவ னென்பர் மேலோர். 221

மகதாகாசத்தலம்.

அண்டபிண் டத்தி னுற்ற வம்பரம் வேறா காமைக்
கண்டன மதனைப் போலக் கருதரு மிவனன் மாவி
னுண்டெனும் பரமான் மாவே றுறுவதின் றிதையு ணர்ந்து
கொண்டிடன் மகதா காசத் தலமெனக் குறிப்ப ரன்றே. 222

கடத்தினு மடத்தின் கண்ணுங் கலந்தவா காசம் வேறா
யடுத்திட லிலாத வாபோ லண்டபிண் டத்தின் கண்ணே
யெடுத்துரை செயுமான் மாவும் பின்னமன் றினைய மாற்றந்
தடுத்திட லரிய வேதந் தலையினுற் சுமக்கு மன்றே. 223

ஓங்கொளி யாகிக் கால மொப்புரை மனங்க டந்து
தீங்கறு சுவாநு பூதிப் பிரமாணஞ் செறிவுற் றியாவுந்
தாங்குறு நிலைமை சச்சி தாநந்தம் பரமா காச
மாங்கது சிவமி லிங்கம் பிரமமென் றறையா நிற்கும். 224

யோகிகண் மனம டங்கு மொருபாஞ் சோதி யாய்மால்
போகிய வறிவா நந்த பூரண வுண்மை யாகி
மோகமின் முனிவர் கூறு முதன்மையாம் பரமா காச
மாகன லிங்க மென்று வகுத்துரை செய்வர் மேலோர். 225

திரைநுரை கடல்வே றாகாச் செழுமல ரிலைகா யெல்லா
மரனில்வே றாகா வாபோல் வகுக்குமிவ் வுலகந் தானும்
பரனில்வே றுவ தின்று பற்பல வுடுக்கள் வானில்
விரவல்போற் பரமா காச மேவியிவ் வுலகி லங்கும். 226

கிரியாப்பிரகாசத்தலம்.

நிறைவுறு மதுவாய் ஞா னாகாசமாய் நிகழ்சி வத்தி
னறைவுறு சொருபந் தனைக்கு டறுசந்தா நந்தி ஞாலே
யுறுவினை யறுமி வன்றான் கிரியைமா வொளிய னென்ன
மறுமறு கலையு ணர்ந்தோர் வகுத்துரை செய்வ ரன்றே. 227

மாசறு ஞான காய மயமதாய் நிறைவ தாகு
மீசன துருவி றந்த வொளியினின் மனம டங்குந்
தேசுடை யவன்ற னது திறல்வல்க் கிரியை யந்தப்
பாசமி லொளியே யாகப் பகர்ந்திடப் பட்டு நிற்கும். 228

முழுமையு முணர்ந்தோ னாகி முழுவிறை யாகி யெங்கு
மொழிவற நிறைந்தோ னுவ தொருசிவ னவன்பாற் சென்றுற்
றழிதரு சிந்தை யானே யவன்றனி வடிவு மாகப்
பழுதற வொளிர்வ னென்று பகர்ந்தன ரறிஞ ரெல்லாம். 229

இந்திய வழக்க மெல்லா மெய்தியு மேனைக் குற்ற
சிந்தையா லசல மாகுஞ் சிவத்தினைக் கண்டு வப்ப
துந்துறு மறிஞ ஞான வுயர்ந்தகூ டத்தன் றன்னைப்
பந்தமில் சிவமாய்க் கண்ட படிவத்தா னுவப்பன் யோகி. 230

பாவப்பிரகாசத்தலம்.

தரங்கமா திகடாம் வேலை தன்னில்வே றாகா வாபோற்
பரந்துள புத்தி யாதி பாவங்க ளாண்மா வில்லை
யிருந்தன வலவென் றேனு மிதுபாவ வொளியா மென்பர்
புரங்கடந் தவன்றன் னூலின் பொருடெரிந் துணர்ந்துளோரே

சகமெலாஞ் சிவமே தானுந் தற்சிவ மேயென் றுன்னும்
பகவிலா யோகி தான்வெம் பவத்தினல் வருத்த மெய்தா
னிகரிலாச் சிவபா வந்தா னிலைத்திடு மேல வற்குத்
திகழ்வுறு பாவமெல்லாஞ் சிவமய மாகு மன்றே. 232

வேறறு சிவபா வத்தால் விலக்குறு வினைக ளுள்ளோன்
மாறறு சிவமே யன்றி மற்றொரு பொருளுங் காணன்
பாறிய மலமு டைத்தன் சொரூபானு பவிபு லன்க
ளேறிய விடங்க ளெல்லா மிருஞ்சிவ மயமே யாகும். 233

விருப்பொடு வெறுப்பு மேவும் பாவனை விளையா நிற்கு
முருப்பவ மவையொ டுங்கும் பாவனை சிவமே நாட்டு
மிருட்படா மிரவி தன்னை யெய்திடா ததுபோற் பாவந்
தரிப்புட னிலகு மான்மாத் தனையுறு தவித்தை யன்றே. 234

ஞானப்பிரகாசத்தலம்.

முத்தனுக் கந்த ஞான சம்பந்த முறைமை கூறின்
வைத்திடு மியல்பான் ஞேய மிலாமையாம் வகுத்து நின்ற
மெத்துறு முபாதி யோடு மேவிநிற் கின்ற ஞான
மித்தலை யென்னும் பேத மிறந்திடா தென்பர் நல்லோர். 235

பொருளுறு பரிச்சே தந்தான் புகன்றிடு ஞான மாகு
மருளறும் பரிச்சே தம்பின் வரும்பர மான்மா வின்க
ணுரைசெயு ஞான மில்லை யுணர்விற்கு விடய மல்லாப்
பரசிவ னிடத்த யிக்கம் பண்ணலே ஞான மாகும். 236

உலகொரு மயமா யின்ப வுண்மையா யபரிச் சேத
நலமலி பிரம மென்னு ஞானமே பிரம ஞான
மலிசக வுபாதி நீங்கி மலர்வுறு பிரம ஞான
மிலகுறி னறிவா மெங்குங் காண்பதொன் றில்லை வேறு. 237

முதலிகா ரணமா மத்து விதஞான முற்றி னுக்
கெய்த்திடும் பவமே யில்லை யெங்கணு நிறைந்து நின்ற
நித்தியா நந்த ஞான நிட்கள சிவத்தொ டுங்குஞ்
சித்தனு மியோகி பேதந் தீர்ந்தொரு தானே யாகும். 238

மஹாலிங்கத்தலம்.

இலங்க வோதினை யிச்சா னந்தல மெய்துந்
தலங்க ளியாவையு மினியயிக் கத்தலஞ் சார்ந்த

நலங்கு லாந்தல பேதமு மெனக்குரீ நவில்வாய்
கலங்கி லாவுளத் தருளினுற் கணங்கணு யகனே. 239

சாத மேவருஞ் சுவிகிரு தப்பிர சாத
மாதி ஞானகு னியமுடி வாகிய வொன்பான்
பேத மாகிய தலங்களை யயிக்கியன் பெறுதற்
கோது வாமுறை யினிலவை யகத்திய வுணர்வாய். 240

சுவிகிருதப்பிரசாதத்தலம்.

முக்கி யார்த்தமு மிலக்க ணார்த்தமு மிலைமொழியிற்
றக்க பேரறி வுருவமா மவற்கவன் றனக்கு
வைக்கு மோர்தடை யிலாமையான் மகிழ்பிர சாதந்
துய்க்கு மாறுகொண் டிடப்படு மெனமறை சொல்லும். 241

மாது ருப்பிர மேயமொண் பிரமாண வழக்கிற்
பேத மற்றுயர் சின்மய மாக்குறப் பெற்றே
யேத மற்றிடு யோகிதன் சொருபமுற் றிருப்பன்
போத மற்றவத் துவிதனைப் பொருந்துமோ பந்தம். 242

சோதி லிங்கநின் றகத்தினிற் சுடர்வுற யோகி
பூத மாதிய தத்துவங் கண்டவை பொருந்தான்
போத வாரமு விடைப்புல னியாவையும் போக்கித்
தீதி லாமனத் துவகைபெற் றிடுஞ்சிவ யோகி. 243

சிட்டோதநத்தலம்.

மாயை தந்துள சகம்வடி வாயதன் சொருபந்
தூய ஞானத்தின் மூடுறப் படுதலாற் றேன்று
மாயை யொன்றுமே யெஞ்சிய தொருசிவ மயமே
யாய முத்தனுக் கேவல்செய் தொழிலியம் மாயை. 244

எண்ணில் சத்தியா லுலகெலா மயக்குமிம் மாயை
நண்ணு மெய்ச்சிவத் தயிக்கனை நண்ணுற வற்றே
கண்ணி னிற்றிகழ் சோதியாஞ் சிவத்தினிற் கலந்தோ
னுண்ண லுற்றிடு விடயங்க ளொழிந்திடுந் தாமே. 245

பொறிக ளாலுணும் புலன்கடல் புகுந்திடு நதிபோ
லறிஞ னுகியோ னிடத்திற்புக் கடங்குறு மென்பர்
மறிவில் யோகியிப் பொருளொழி வறவடி வடக்கிச்
செறியு மார்க்கதி ரெலாங்கொடு வீழ்தின கரன்போல். 246

சராசரலயத்தலம்.

பாகு பாடுறு சராசரத் துறபரத் தொன்றும்
யோகி தானுடம் புறகில னுகியே யொழிவி
லேக மாகிய சராசர நாசக னென்ன
மோக மாயையை முனிந்தவர் மொழிந்திடப் படுவான். 247

வானின் மாமுகி லெழுந்தடங் குதலென மயங்கா
ஞானிபா லெழுந் தடங்குறும் விடயங்க ணவிலி
னுன தோர்கன விற்பொரு ணனவிலற் றிடல்போ
லூன மாஞ்சகத் தோற்றமெய் யுணர்வினி லொழியும். 248

துரியா தீதமாம் பதத்திடைத் துளக்கற விருந்த
பெரியா னிவ்வுல கத்துருக் காண்கிலன் பின்னர்க்
கரியாய் நின்றமெய்ச் சிவத்தினைக் கண்டவன் காணுன்
றிரியா மற்றெரு பொருளினைச் செவிக்கொளா னறியான். 249

மித்தை யாகுமிவ் வுலகமுன் னுண்மைபோல் விளங்குஞ்
சத்த தாகிய பரசிவம் வெளிப்படிற் றனது
மெய்த்து நின்றமெய்ச் சொரூபமே யெங்கணும் விளங்குஞ்
சித்த மாமய லொழிந்துமுன் னூல்பல தெரிந்தோய். 250

பாசநத்தலம்.

ஆதி யிற்பெறு மகரமே யுயிர்சிவ மந்தா
ஞேது தற்கருஞ் சத்தியிச் சிவசத்தி யுருவா
மேத மற்றிடு பிரமமொன் றேயக மென்னு
மேதை நற்பதம் பொருந்துமென் றறைகுவர் மேலோர். 251

திகழு றும்பர மாகியே சிவசத்தி மயமா
மகமெ னும்பத மடைந்துய ரருஞ்சிவ யோகி
சகம டங்கலுந் தன்னுரு வாகவே சார்ந்து
நிகழு மென்றுரை செய்திடு நிமலனு கமங்கள். 252

அங்கலேபத்தலம்.

வேறு பட்டிடு கடாதியால் விசும்புவே றுறினும்
வேறு பட்டிடா வாறென விமலமெய்ப் பிரமம்
வேறு பட்டிடு முபாதியால் வேறுவே றுறினும்
வேறு பட்டிடா தெனமறை விளங்குற விளம்பும். 253

வான மேயென வளவற வயங்குறும் பிரம
மான வங்கதிற் சிற்கலை விசேடமென் றறிவாய்
மானி டங்கட வுளர்விலங் கெனுந்தகை மருவான்
ஞானி யாவையுந் தன்வடி வாகவே நண்ணும். 254

சுபராஞ்ஞத்தலம்.

ஞான சீலமோ வினற்குநீ நானெனு மயலோ
டான வின்பதுன் பம்புணர் வகறறே வாதி
மான ஞாதுரு ஞேயம்வா லறிவறி யாமை
யீன மேலொடு பந்தம்வீ டிவைமுத லில்லை. 255

பாவாபாவலயத்தலம்.

ஈங்கு நானெனும் பாவத்திற் கிலாமைவந் துறலாற்
றீங்கி லாதவான் மாவின தபாவமுஞ் செப்புற்
றூங்கி லாமையை யடைதலா லச்சீவன் முத்த
னோங்கு பாவமோ டபாவமு மிலனென வுணர்வாய். 256

பந்த மோவிய பெருமையோ னின்பதுன் பத்தில்
வந்த பாவமு மபாவமு மிலனென மதிப்பா
யுந்து ஞானியாய்ப் பாவமு மபாவமு மொழித்தோ
னந்தி லுள்ளதா யினுமில்ல தாயினு மறியான். 257

தோன்று பாவமு மபாவமு மெங்கணுந் தோயான்
சான்ற தாஞ்சிவத் தேகமாந் தகையினோ னதனு
லான்று நின்றபா வாபாவ லயத்தல மதனை
ஞான்ற வார்சடைக் கடவுளா கமமெலா நவிலும். 258

ஞானசூனியத்தலம்.

நீரி னீரும்வெந் நெருப்பினி னெருப்புமே போல
வாரு மோர்பிர மத்தினி லயிக்கமுற் றடைந்த
பேரி னோன்விபா கத்தினுற் காண்கிறு னென்று
சாரு மாகம நெறியுணர்ந் தவருரை தருவார். 259

ஞேய மாகவொன் றெதிருற நின்றிடா மையினுற்
பாய ஞானசூ னியமென்றும் பாவிக்கப் படுமாற்
றாய தானசத் தாநந்த வடிவமாஞ் சோதி
மேய வோர்பரா காசமொத் தெங்கணும் விளங்கும். 260

சூனி யம்பெறு ஞானுதி கற்பனைச் சோதி
யான வொண்சிவ லிங்கமாந் தன்னுரு வதனிற்
றானி ரண்டற வடைந்துள தகுதியோன் றனக்கு
ஞான மென்பதொன் றிறுயென வறைகுவர் நல்லோர். 261

## தசகாரிய மகாவாக்கியம்.

முந்தியவே தோற்பத்தி பிரக்ஞானம் பிரமமென மொழியும் வாக்கியஞ், சிந்தைசெயு மிரண்டிலகம் பிரமாஸ்மி யெனும் வாக்கியஞ் செப்பு மூன்றில், தந்தொமசி யெனும்வாக்கிய நாலாவ தயமான்மாப் பிரம மென்ன, வந்தவிந்த வாக்கியந்தா னதர்வணத்தி னுற்பத்தி வகுத்த வாறே. 1

பேதமென்ப தாசானுஞ் சீடனுமுத் தரஞானம் பிரம மென்று, ரியாததுவே தென்றுரைத்தா னகமென்று ரெந்தவகமென்றுன் சீடன், மாதவனின் றேகமகஞ் சொரூபமக மிரண்டுமல மற்று மென்று, ரேதுவிலே யிரண்டுபட்ட தென்றுனெல் லாம்பிரம மென்று னெங்கோன். 2

முக்கியமா மகிமைசொலின் முதன்மொழிக்கா காமியம்போ முடிவு காணத், தக்கவிரண் டாமொழியாற் சீவாத்மாப் பிரமதாய்த் தானுய் நிற்கு, மிக்கருமப் படிமூன்றும் வாக்கியத்தா லென்னதியா னென்ற னீங்கும், நெக்குருகி நாலாம்வாக்கியத்தாற்சஞ் சிதவினையு நீங்குந் தானே. 3

தூயபிர காசந்தான் முந்தியவாக் கியமதனுற் றுலங்குஞ் சத்தே, யாயவிரண் டாமொழியாற் சித்துத்தான் பிரகாச மாகு மூன்றி, லேயதொரு வானந்தம் பிரகாச நாலாம்வாக் கியத்தா லெண்ணி, னேயபரி பூரணந்தான் பிரகாச மெனமறைக ணிகழ்த்து மாறே. 4

மலமாகு மஞ்ஞான நிவர்த்திசொனு மிடத்துமுதல் வாக்கியத்தாற், கிலமாகு மாவரண மிரண்டாம்வாக் கியத்தால்விட்சேபம் போகு, நலமாகா வவித்தையொடு மாயையும்போ மூன்றிலப்பா னுலாஞ் சொல்லா, னுலகான நாமரூ பங்கள்போ மெனப்பெரியோ ருரைப்பர் தாமே. 5

அவதிமுதல் வாக்கியத்துக் கவத்தையொரு மூன்றுமறிந் தப்பா னிற்றல், புவனவா தனைவரினு மிரண்டாற்போக் கிக்கூத்தர்போற்று னுதல், கவலையின்றி மூன்றும்வாக் கியத்தாலா னந்த மெலாங் கரைகண் டோங்கல், தவநெறியா னுன்கிலெல்லாம் பிரமமென்றே யுற்றிருக்குந் தன்மைத் தாமே. 6

வாக்கியத்தி னிண்ணயங்கள் வகுக்கின்முதற் றரமாம்வாக்
கிய நாலாம் வாக்கியவல் லமையே தென்றூற், றூக்குமொழி யத்து
வித மாதலினு லிரண்டாந் தரமூன்றும் வாக்கியமாந் தத்வமசி
யெனலா, லாக்கியமூன் றுந்தரமா மிரண்டாம்வாக் கியந்தா ன
கமென்றே சீடனுரைக் கப்படிகாட் டுதலா, லைக்கியறி யாவறி
வே பிரமமென்ற வதனுனுண் ணியநாலாந் தரமா நுவனு முதல்
மொழியே. 7

கோதில்கதை முதன்மொழியாற் குச்சரிய நாட்டிற்கோ
வதைசெய் சக்கிலியன் குறைகடவிர்ந் தடைந்தா, னீதியிரண் டா
மொழியாற் கெர்ப்பணியே குருவாய் நிசிசறன்றன் பவமகற்றி
நேர்மையில்வீ டடைந்தான், சோதிசெய்மூன் றுமொழியா
லஞ்ஞானச் சுதராற்றன் புறவேடு வச்சிபர சுகமடைந்தா னிவை
யே, யோதியநா லாமொழியா லந்தணன்செய் வினையா லுதவி
யிலாப் புசிப்புதவி யுயர்ந் தடையுங் கதையே. 8

இந்தவகைப் படியேதியான முதன்மொழிக்கா மெந்தை
பரகுருத்தி யானமிரண் டாம்வாக்கியத்துக், கந்தமிலா வறிவது
வே தானுகி யிருந்தங்க கண்டமெலாம் பிறித்தறித லனுபூதி யத
னுற், றந்தொமசி யெனுமொழிக்கே தக்கதியா னந்தான்றன்
னறிவிற்கண்ட முந்தான கண்டமு மாயிருத்தல், கந்தமற நா
லாம்வாக் கியத்தியான மகண்டாகார மாயிருத்த லிவைகைவல்
யத்தியானம். 9

ஞானமே பிரமமென்ற முதன்மொழியின் பயன்கேளுச்
செவிகண் மெய்மூக்கு நயந்தமபாறி யதனு, லானசுவை யோசை
யொளி பரிசம்வா சனையா லறிவதுவே ஞானமதின் பிரகாச மு
ரைக்கில், வானிரவி திங்களங்கி பிரகாச மதினுமலர் விழிகள்
பிரகாச மனமதிற் பிரகாசந், தானமுறு சீவனதிற் பிரகாச மதி
லுந் தன்னறிவே பிரகாசத் தானமென வறியே. 10

அவ்வறிவை யறிவிக்கும் வகையுரைக்கி லுடலே யறிவாகு
மெனிற்பொறிக ளெந்துமிலா தறியாக் கவ்வியவிந் திரியந்தா னறி
வென்று லந்தக் கரணமிலா தறியாது கரணமறி வென்று, லெவ்
விடயந் தானறிந்துந் தனையறியா ததனை யெழிற்சீவ னுட்டிவிக்
குஞ் சீவனறி வென்றூல், வவ்வியந்தா னல்லாத வெல்லாந்தா னெ
ன்ற மயங்குமதைப் பகுத்தறிய வந்தவறி வறிவே. 11

இந்நிலையே ஞானமென்ற பதத்தினுண்மை யுரைத்தோமி னிப்பிரம மென்ற பதத்திலக்க ணங்கேண் மாணு, மன்னுபிர மாதிபல வுயிர்களுக்கு முயிராய் மற்றதனைப் படைத்தளித்து மாற்று தற்கே துவுமாய்த், துன்னுபரி பூரணமா யிருப்ப தெதுவ துவாந் தூயபத மிரண்டினுக்குஞ் சோதி யொன்று கையினுல், நன்னிலையே நமதிடத்தி லறிவுமது வெனலால் ஞானமே பிரம மென நவின்றது வாக்கியமே. 12

வேறு.

அகம்பிர மாஸ்மி யென்றே யறைந்திடும் வாக்கி யந்தான், பகும்பத மூன்ற தாகும் பன்னிய வகமே தென்னிற், சகம்பரி பூர ணத்தாற் முன்பரமார்த்த மாகி, யுகந்தொறு மழியா தாகி யொன்றெடுந் தாக்கா தாகி. 13

அனைத்தையுங் கடந்த தாகி யனுபவித் தறிவ தாகி, நினைத் ததே கத்தி னுள்ளே நிச்சயப் படுவ தாகி, வினைத்தரூக் குமதே கத்தை விளக்குவ தாகித் தானே, தனக்கிணை யென்ன லாகுஞ் சைதன்னிய மகங்கா ணென்பார். 14

இன்னவை யறியு மாறு வியம்புது மஞ்ஞா னத்தான், முன் னக மென்ற வுன்னை முடித்ததே யகமாங் கண்டா, யென்னனை மனையென் பாய்போ லென்னுட லென்றுகாணி, லன்னதேகத் தை வேறு யறிந்ததிந் திரியந் தானும். 15

இந்திரிய மகமென் றுனு மென்கணென் காலென் கையென், றுந்துமுட் கரண நீயா யுன்மன மென்கை யாலே, யந்தவுட் கரணந் தானு மகற்றிய சீவ னீயாய்ச், சந்தத மென்சீ வன்று னென் கையாற் சாட்சி யாவாய். 16

அப்படி யெல்லா நீக்கி யறிவதே யகமாங் கண்டாய், செப் பிய பிரம மென்னச் செறிபதந்தானே தானு, யொப்புயர் வற்று வேறே ருபாதியற் றகண்ட ரூபந், தப்பிலாப் பூர ணத்தாற் சச் சிதா னந்த மாமே. 17

இவையது வஸ்மி யென்னு மீறுள பதார்த்தஞ் சொல்லிற், சுவைதரு மயிக்கிய மாகித் துவிதத்தி னுபாதி யற்றுப், பவமகற் றறிவா னந்தப் பரங்கட லாகு மென்றே, தவவடி வான ஞானத் தலைவர்க ளுரைப்பர் தாமே. 18

வேறு.

தத்வமசி வாக்கியந்தான் பதமூன்று மதிலே தத்பதத்தின் பொருளுரைப்பாஞ் சமைத்தவொரு கடந்தா, னித்தகைமை பெறுமுன்னங் கொருவடிவங் கதுபோ லிருப்பனவும் வேற்று மையா யிருப்பனவு மன்றிச் சத்தாகித் தமதாகிப் பெயர்தானு மின்றித் தானேதா னுயிருந்த சைதன்யம் போல, வத்தகைமை யெப்பொழுதும் பெற்றிருக்குஞ் சத்தா யனிர்வசன மாய்விளங் கு மதுபிரம மாமே. 19

இன்னமுந்தத் பதம்விளங்கு மேதுவெலா முரைப்பே மிப் பதத்தின் பொருளதுதொம் மென்றியம்பல் சீவ, னன்னபத மிர ண்டினுக்கு மயிக்கியமசி யென்ப ரவைகளுபா தியினிற்பிறிந் தயி க்கமும்பெற் றதுகேள், துன்னுசக தீசனுக்குச் சகலபிரா ணிக டன் றாலமே தூலமவர் சூக்குமமே சூக்க, மின்னிமறைந் திடு மாயை காரணமா மிதனை வேறுக்கித் தானாக விளங்கியது பிரமம்.

சீவவுபா தியையுரைக்கிற் றன்னளவே தூலஞ் சிலகருவி சூக்குமமாங் காரணமஞ் ஞானந், தாவுமித னபிமானி சீவனிவை யணுகாச் சாட்சியது தொம்மென்றே சாற்றிய கூடத்தர், காவ லவன் சீவனெனு முபாதியெலா நீங்கிக்கலப்பதுவே யசிபதமாய்க் காட்டுமது நீங்கும், பாவனையு மயிக்கியமாம் பண்பும்விதி வழியே பகுத்துரைப்பர் பெரியோர்கள் பக்குவரா னவர்க்கே. 21

நீயென்னு முபாதிக்குத் தூலமுஞ்சூக் குமமு நிருவகிப்ப தீசனென்று நிச்சயிக்கும் பொழுதே, போயதுவஞ் ஞானமென் றும் பொருளதுநீ யென்றும் புகல்வரந்த வீசனுக்குப் பொரு ந்துமுபா திகளு, மாயையெனுங் காரணத்தை மித்தையென் றே யறிந்தான் மற்றவிரண் டெனும்போய் வகுத்ததொழி லிலனா ய்த், தூயபிர மம்மென்றே சொல்லிறந் ததுவாஞ் சுத்தமிதிற் சீவபரஞ் சோதியுஞ் சோதியுமே. 22

இவையுணரு மிடத்தயிக்கிய மூன்றுவித முரைப்ப ரேதெ ன்று லவ்வறிவே பூரணமா யிருத்தல், அவயவமாங் கடமடவு பாதிகளை நீக்கி யாகாய மெனவறித லப்பொருளைத் தானே, சு வைபடவே தியானித்த லவைமூன்று விதமாந் துவந்துவங்கள் பலவுமற்றுச் சுயம்பிரகா சமதாய், நவையிறந்து சொல்லிறந்து நானுமிறந் திறவா ஞானமிறந் திராசியமாய் நவின்றதத்து விதமே.

வே று.

அயமான்மாப் பிரமமென வுரைத்தமொழிப் பதமூன்றி லயமே தென்னிற், சுயமாக விளங்குகையா லபரோக்ஷ மாயிருத் தல் சுபாவ மாகும், பயனான தேகதிலே யெவ்வுலகு முதித்தொ டுங்கும் பரமே தந்த, வியனான வான்மாவே பிரமமென்ற ததன் பயன்றான் விளைந்த வாறே. 24

இனியாத்மா வெனும் பதத்தி னியல்பகங்கா ராதியுடலீறு யுள்ள, துனியான காரணகா ரியத்தொடர்பா யதைவிளக்குஞ் சோதி யாகித், தனியாகி யறிவறியா மையிலறியா வறிவாகித் தானே தானுங், கனிவாய பிரம மெங்கு மதிட்டான பூரணமாங் கருதுங் காலே. 25

ஆகையினா லயமாத்மா வெனும்பதத்தால் விளங்கியசீ வாத் மா வுக்கு, மேகிகப் பிரமமென மொழிபதத் தாம்பரமாத் மாவி னுக்க யிக்கிய, மோகவிப ரீதமற நானுவாக் கியத்தாலு மொழிக் தா ரேனும், போகபூ ரணசொருப ஞானமன்றித் தோன்றுதப் பொலிவுஞ் சொல்வாம். 26

பேசுசொரூ பத்தியல்கேள் |சத்தியஞ்ஞா னானந்தப் பிரம மென்றா, மாசகலு மானந்தோப் பிரம மென்று மிரண்டுமொழி யதின்முன் னேது, நாசமிலாச் சத்தியாதி பதங்களினாற் பிரமம தை நாம ரூப, லேசமறச் சத்தியஞ்ஞா னானந்தப் பிரமமென்றே யியம்ப லாமே. 27

ஆனந்தோப் பிரமமெனு மிரண்டாம்வாக் கியத்தி னுலகண் டா கார, வானந்தம் பிரமமாந் துன்பறியா வின்பமா மாத லாலே, யானந்தமானந்தி யெனும்வடிவ மிரண்டுமற வளவில் லாத, வானந்தஞ் சீவனிடத் தாதலால் வாக்கியத்தி னயிக்கியங் கூடும். 28

அத்துவித மிப்படியே கூடுதற்கு வாக்கியத்தி னடைவே யாசான், பத்திகொடு வீடுபெறுஞ் சீடனுக்குச் சொல்பிரதி பத் தி வாக்கிய, நித்தசுத்த புத்தமுத்த சத்தியபர மானந்தாத் துவி தநீங்கா, வொத்தபிர மம்மகமஸ்மி :யென்ப ரதன்பொருளு முரைத்தும் யாமே. 29

எந்தைமொழிந் ததுமஞ்ஞா னமுமஞ்ஞா னத்தினுள வியல்பு தானு, முந்தைபர மார்த்தமா யில்லைமக் கதினுமேல முடிவா

ய் நின்றே, மிந்தவகை யவயவங்க ணமதன்று நமதுருவிங் கேதெ ன் றேதி, லந்தவிந்த வாக்கியத்தி னுற்றகுண முடையதே ததுவே தாமால். 30

இக்குணங்க ளுடையபரப் பிரமமே நாமானே மெவ்வா றென்று, னெக்கக னதியெனச் சனிப்பமரிப் பின்மையினு னித்தியமானேர், தொக்குடலம் போன்மலத்தின் றுவக்கற்று நின்றமையாற் சுத்த மானே, மக்கரணம் போனசிக்கு மறிவுபெறு மையிற் புத்த மானே நாமே. 31

அகங்கார விருத்தி யெனப் பந்தமிலா மையின்முத்த மானே மிந்தச், சுகம்போல விளக்குமிந்திர சாலமிலா திருக்கையினுற் சத்திய மானேஞ், சுகங்காணிற் றன்னையல்லாற் சுகமிலையென் றேபரமா னந்த மாகு, மிருங்கால தேசவஸ்து வெனப்பிரியா வானந்த மேவட மானேம். 32

தோற்றியவான் பொருள்க ளெல்லாந் தானைகத் தோற்றலினத் துவித மானே, மாற்றலுடை யார்களிவ்வா றகண்டமுந்தா மல்லாவா னந்த மாதல், போற்றுபிர மச்சொருப சமாதியென்ப ரதைச்சுருதி புகலும் வாக்கிய, மேற்றிலகம் பிரமமேவா வஸ்மியெனு மிதனையினி யியம்பக் கேண்மோ. 33

இந்தமொழி வழிகேட்டல் சிந்தித்த றெளிதனிட்டை யின்பங் கூடல், சந்ததந்தா னுயிருத்த லைந்தின்முதற் கேள்வியென்ப தாசான் வார்த்தை, யந்தவச னுர்த்தமனத் தாராய்வே சிந்தித்தலருத்த மியாவுந், தொந்தமறப் பகுத் துணர்ந்து தெளிவதுவே தெளிவெனவுஞ் சொல்வர் தாமே. 34

நேராகத் தோற்றுகின்ற துவிதமறத் தொழியாத நிட்டைகூட, லாராலு மறியவொண்ணு வத்துவித முங்கடந்தங் கப்பாலே துஞ், சாராத சொச்சொருப மாத்திரமா யிருத்தலது சாட்சாத் காரந், தூராதி தூரமென நான்மறையின் முடிவுரைக்குந் தொன்மை யாமே. 35

சங்கற்பம் விகற்பமிர் விகற்பமே சாற்றுங் காலை, சங்கற்பந் தன்னின் மூன்று தகுவிகற் பத்தின் மூன்று, சங்கற்ப மாதி நிர் விகற்பத்தின் மூன்றுத் தேரிற், சங்கற்பம் விகற்ப நிர்வி கற்பமாஞ் சாட்சாத் காரம். 36

சங்கற்பந் தனிற்சங் கற்பந் தான்கிரியாதி நாடல், சங்கற்பந்தனில்விகற்பந் தான்றுற வதனில் மூழ்கல், சங்கற்ப நிருவிகற்பந் தானேதா னென்று பேசல், சங்கற்ப மாதி மூன்றுந் தவிர்தலே விகற்பந் தானும். 37

விகற்பத்திற் சங்கற் பந்தான் மிகுந்துற வாகி நிற்றல், விகற்பத்தில் விகற்ப மந்த விரத்தியிற் பற்றி லாமை, விகற்பத்தில் நிருவி கற்ப மெய்யுணர் வெங்கு மாதல், விகற்பத்தின் மூன்றுந் தேர்ந்து விடுதலே நிருவி கற்பம். 38

நிருவிகற் பத்திற் சங்கற்ப நித்தியா னந்த மாதல், நிருவிகற் பத்தில் விகற்பம் நிரானந்த மாகி நிற்றல், நிருவிகற் பத்தில் நிருவி கற்பமே நிற்கு நேர்மை, நிருவிகற் பத்தின் மூன்று நீங்கலே நிராம யந்தான். 39

இப்படியே பெரியோர்க ளிருக்குமிடத் தஞ்ஞானிக் கின்பமான, மெய்ப்பரிசை மறந்து மொன்றை விரும்புதல்போ லிவணிதயம் விரிகின் றுலுந், தப்பறவே சைதன்யத் துவக்கான பொருளனுசந் தானத் தோடுஞ், செப்புமதன் வழித்தான காரி யத்தும் விரிதன்மிகத் தெளிவென் பாரால். 40

தேகாதி காரியங்க ளெல்லாந்தா னல்லாத சிற்சொரூப, மாகாய மிருக்கையிலே கூடுமோ விடயமெலா மாளிற் றேக, மாகாய மாய்விடுமே யென்பாயே லஞ்ஞானிக் கமல வாய்மை, யேகானு பூதிசொன்னு லேறுதே தன்விடயத் திச்சை போலும். 41

பெரியோருந் தாமிருக்குந் தன்மையிலே காக்கிரமாய்ப் பேதா பேதத், துரியோரைக் கலவாம லொருவிடயந் தனிலுமன துறவா காமற், பரிவோடு கொடுத்தாலு மருந்துபோ லருந்துவரப் பான்மை யாலே, யெரியோடு கலந்தபஞ்சாம் விடயமெலா மவர்மலமற் றிருப்பர் தாமே. 42

அப்படியா கினுமனல்போ லேதேனு மருந்துவரென் றறைதல் வேண்டாந், தப்பறவே யஞ்ஞானி போற்புசிப்ப னெனவுரைத்த தகைமையாலே, யொப்புரைத்த தல்லாதிங் குலகிகழப் புசியான்மற் றுண்டா னேனு, மெய்ப்பரிசை யுணர்ந்தாரை யிகழ்ந்தார்க்கு நரகமென்று விளம்பு வாரே. 43

---

சிதம்பரம்-இராமலிங்க சுவாமிகளருளிய

# திருஅருட்பா.

## மஹாதேவமாலை.

்ருணைநிறைந் தகம்புறமுந் துளும்பிவழிந் துயிர்க்கெல்
ளாக ளுகித், தெருணிறைந்த வின்பநிலை வளர்க்கின்ற
டையோய் சிதையா ஞானப், பொருணிறைந்த மறையமு
பாடுகின்ற மலர்வாயோய் பொய்ய னேன்றன், மருணிறை
க்கருங்கற் பாறையுமுட் கசிந்துருக்கும் வடிவத் தோயே.

லகநிலை முழுதாகி யாக்காங் குள்ள வுயிராகி யுயிர்க்கு
மாளிதா ளுகிக், கலகநிலை யறியாத காட்சி யாகிக் கதி
மெய்ஞ்ஞானக் கண்ண தாகி, யிலகுசிதா காசமதாய் பரமா
யெல்பாகி யிணையொன்று மில்லா தாகி, யலகிலறி வானந்த
சச்சி தானந்த மயமாகி யமர்ந்த தேவே. 2

லகமெலாந் தனிநிறைந்த வுண்மை யாகி யோகியர்தம்
த்தி னுவப்பா யென்றுங், கலகமுறு வுபசாந்த நிலையதா
ங்கமற்ற வருண்ஞானக் காட்சி யாகி, விலகனுறு நிபிடவா
மாகி மீதானத் தொளிர்கின்ற விளக்க மாகி, யிலகுபரா
ய்ச் சிற்பரமா யன்ப ரிதயமலர் மீதிருந்த வின்பத்தேவே.

த்தாகி மூலையாகி விளைவ தாகி விளைவிக்கும் பொருளாகி
மாகிக், கொத்தாகிப் பயனுகிப் கொள்வோ ளுகிக் குறை
றைவாகிக் குறைவி லாத, சத்தாகிச் சித்தாகி யின்ப
சதாநிலையா யெவ்வுயிர்க்குஞ் சாக்ஷி யாகி,முத்தாகி மாணி
கத் தெய்வ முழுவயிரத் தனிமணியாய் மூளைத்த தேவே.

வதாந்த நிலையாகிச் சித்தாந் தத்தின் மெய்யாகிச் சமரச
விவேக மாகி, நாதாந்த வெளியாகி முத்தாந் தத்தி னடு
வாநிலைக்கு நண்ணு தாகி, மூதாண்ட கோடியெல்லாந்
நின்ற முதலாகி மனுதீத முத்தி யாகி, வாதாண்ட சமய
கமையா தென்று மௌனவியோ மத்தினிடை வயங்குந்
5

தான்றுதுவி தாத்துவித மாய்விசிட்டாத் துவிதமாய்
த் துவித மாகிச், சான்றசுத்தாத் துவிதமாய்ச் சுத்தந்

தோய்ந்த சமரசாத் துவிதமுமாய்த் தன்னை யன்றி, யூன்றுநிலை வேறொன்று மிலதா யென்று முள்ளதாய் நிரதிசய வுணர்வா யெல்லா, மீன்றருளுந் தாயாகித் தந்தை யாகி யெழிற்குருவா ய்த் தெய்வதமா யிலங்குந் தேவே. 6.

பரமாகிச் சூக்குமமாய் தூல மாகிப் பரமார்த்த நிலையாகிப் பதத்தின் மேலாஞ், சிரமாகித் திருவருளாம் வெளியா யான்ம சிற்சத்தி யாப்பரையின் செம்மை யாகித், திரமாகித் தற்போத நிவர்த்தி யாகிச் சிவமாகிச் சிவாநுபவச் செல்வ மாகி, யரமாகி யானந்த போத மாகி யானந்தா தீதமதா யமர்ந்த தேவே. 7

இந்தியமாய்க் கரணாதி யனைத்து மாகி யியல்புருட னாய்க் கால பரமு மாகிப், பந்தமற்ற வியோமமாய்ப் பரமா யப்பாற் பரம்பரமாய் விசுவமுண்ட பான்மை யாகி, வந்தவுப சாந்தம தாய் மௌன மாகி மகாமௌன நிலையாகி வயங்கா நின்ற, வங் தமிறும் பதமாய்த்தற் பதமா யொன்று மசிபதமா யதீதமா யமர்ந்த தேவே. 8

நின்மயமா யென்மயமா யொன்றுங் காட்டா நிராமயமாய் நிருவிகற்ப நிலையாய் மேலாந், தன்மயமாய்த் தற்பரமாய் விமல மாகித் தடத்தமாய்ச் சொரூபமாய்ச் சகச மாகிச், சின்மயமா ய்ச் சிற்பரமா யசல மாகிச் சிற்சொலித மாயகண்ட சிவமா யெங்கு, மன்மயமாய் வாசகா தீத மாகி மனாதீத மாயமர்ந்த மௌனத் தேவே. 9

அளவிறந்த நெடுங்காலஞ் சித்தர் யோக ரறிஞர்மல ரயன் முதலோ ரனந்த வேதங், களவிறந்துங் கரணாதி யிறந்துஞ் செய் யுங் கடுந்தவத்துங் காண்பரிதாங் கடவு ளாகி, யுளவிறந்த வெம் போல்வா ருள்ளத் துள்ளே யூறுகின்ற தெள்ளமுத வூறலாகிப், பிளவிறந்து பிண்டாண்ட முழுதுந் தானாய்ப் பிறங்குகின்ற பெருங்கருணைப் பெரிய தேவே. 10

வாயாகி வாயிறந்த மௌன மாகி மதமாகி மதங்கடந்த வாய்மை யாகிக், காயாகிப் பழமாகித் தருவாய் மற்றைக் கருவி கர ணாதிகளின் கலப்பாய்ப் பெற்ற, தாயாகித் தந்தையாய்ப் பிள்ளை யாகித் தானாகி நானாகிச் சகல மாகி, யோயாத சத்தியெ லா முடைய தாகி யொன்றாகிப் பலவாகி யோங்குந் தேவே. 11

அண்டங்கள் பலவாகி யவற்றின் மேலு மளவாகி யளவாத வதீத மாகிப், பிண்டங்க ளனந்தவகை யாகிப் பிண்டம் பிறங்குகின்ற பொருளாகிப் பேதந் தோற்றும், பண்டங்கள் பலவாகி யிவற்றைக் காக்கும் பதியாகி யானந்தம் பழுத்துச் சாந்தங், கொண்டெங்கு நிழல் பரப்பித் தழைந்த ஞானக் கொழுங் கடவுட் டருவாகிக் குலவுந் தேவே. 12

பொன்னாகி மணியாகிப் போக மாகிப் புறமாகி யகமாகிப் புனித மாகி, மின்னாகி மலையாகிக் கடலு மாகி மதியாகி ரவியாகி மற்று மாகி, முன்னாகிப் பின்னாகி நடுவு மாகி முழுதாகி நாதமுற முழங்கி யெங்கு, மின்னாகிப் பரவியின்ப வெள்ளந் தேக்க வியன் கருணைப் பொழிமுகிலாய் விளங்குந் தேவே. 13

அரிதாகி யரியதினு மரிய தாகி யநாதியா யாதியா யருளதாகிப், பெரிதாகிப் பெரியதினும் பெரிய தாகிப் பேதமா யபேதமாய்ப் பிறங்கா நின்ற, கரிதாகி வெளிதாகிக் கலைக ளாகிக் கலைகடந்த பொருளாகிக் கரணா தீதத், தெரிதான வெளிநடுவி லருளாம் வண்மைச் செழுங்கிரணச் சுடராகித் திகழுந் தேவே. 14

உருவாகி யுருவினுள் ளுருவ மாகி யுருவத்தி லுருவாகி யுருவுள் ளொன்று, யருவாகி யருவினுள் ளருவ மாகி யருவத்தி லருவாகி யருவுள் ளொன்றாய்க், குருவாகிச் சத்துவசிற் குணத்த தாகிக் குணரகிதப் பொருளாகிக் குலவா நின்ற, மருவாகி மலராகி வல்லி யாகி மகத்துவமா யணுத்துவமாய் வயங்குந் தேவே. 15

சகலமாய்க் கேவலமாய்ச் சுத்த மாகிச் சராசரமா யல்லவாய்த் தானே தானு, யகலமாய்க் குறுக்கமாய் நெடுமையாகி யவையனைத்து மணுகாத வசலமாகி, யிகலுறாத் துணையாகித் தனியதாகி யெண்குணமா யெண்குணத்தெம் மிறையா யென்று முகலிலாத் தண்ணருள்கொண் டுயிரை யெல்லா மூட்டிவளர்த் திடுங்கருணை யோவாத் தேவே. 16

வாசகமாய் வாச்சியமாய் நடுவா யந்த வாசகவாச் சியங்கடந்த மௌன மாகித், தேசகமா யிருளகமா யிரண்டுங் காட்டாச் சித்தகமாய் வித்தகமாய்ச் சிறிதும் பந்த, பாசமுறாப் பதி

யாகிப் பசுவுமாகிப் பாசநிலை யாகியொன்றும் பகரா தாகி, நாச மிலா வெளியாகி யொளிதானாகி நாதாந்த முடிவினட நவிற்றுந் தேவே. 17

சகமாகிச் சீவனா யீச னாகிச் சதுமுகனாய்த் திருமாலா யர ன்றனாகி, மகமாயை முதலாய்க்கூ டத்த னாகி வான்பிரம மாகி யல்லா வழக்கு மாகி, யிகமாகிப் பரமாகிச் சமய கோடி யத்த னையு மாகி யவை யெட்டா வான்சுற், பகமாகிப் பரமாகிப் பர ம மாகிப் பராபரமாய்ப் பரம்பரமாய்ப் பதியுந் தேவே. 18

விதியாகி யரியாகிக் கிரீச னாகி விளங்குமகேச் சுரனாகி விம லமான, நிதியாகுஞ் சதாசிவனாய் விந்து வாகி நிகழ்நாத மாய்ப் பரையாய் நிமலா னந்தப், பதியாகும் பரசிவமாய்ப் பரமாய் மேலாய்ப் பக்கமிரண் டாயிரண்டும் பகரா தாகிக், கதியாகி யள விறந்த கதிக ளெல்லாங் கடந்துநின்று நிறைந்தபெருங் கருணைத் தேவே. 19

மானாகி மோகினியாய் விந்து வாகி மற்றவையாற் காணாத வானமாகி, நானாகி நானல்ல னாகி நானே நானாகும் பதமாகி நான் றான் கண்ட, தானாகித் தானல்லனாகித் தானே தானாகும் பதமா கிச் சகச ஞான, வானாகி வானடுவில் வயங்கு கின்ற மௌனநிலை யாகியெங்கும் வளருந் தேவே. 20

மந்திரமாய்ப் பதமாகி வன்ன மாகி வளர்கலையாய்த் தத்து வமாய்ப் புவன மாகிச், சந்திரனா யிந்திரனா யிரவி யாகித் தான வராய் வானவராய்த் தயங்கா நின்ற, தந்திரமா யிவையொன்று மல்ல வாகித் தானாகித் தனதாகித் தானன் காட்டா, வந்தரமா யப்பாலா யதற்கப் பாலா யப்பாலுக் கப்பாலா யமர்ந்த தேவே.

மலைமேலுங் கடன்மேலு மலரின் மேலும் வாழ்கின்ற மூவு ருவின் வயங்குங் கோவே, நிலைமேலு நெறிமேலு நிறுத்துகின்ற நெடுந்தவத்தோர் நிறைமேலு நிகழ்த்தும் வேதக், கலைமேலு மெம் போல்வா ருளத்தின் மேலுங் கண்மேலுந் தோண்மேலுங் கருத் தின் மேலுந், தலைமேலு முயிர்மேலு முணர்வின் மேலுந் தகுமன்பின் மேலும்வளர் தாண்மெய்த் தேவே. 22

பொற்குன்றே யகம்புறமும் பொலிந்து நின்ற பூரணமே யாரணத்து பொருளே யென்றுங், கற்கின்றோர்க் கினியசுவைக்

கரும்பே தான கற்பகமே கற்பகத்தின் கனியே வாய்மைச், சொற்குன்ரு நாவகத்துண் மாருவின்பந் தோற்றுகின்ற திருவருட்சீர் சோதியே விண், ணிற்கின்ற சுடரேயச் சுடருள் ளோங்கு நீளொளியே யவ்வொளிக்கு ணிறைந்த தேவே. 23

தேசுவிரித் திருளகற்றி யென்று மோங்கித் திகழ்கின்றசெழுங்கதிரே செறிந்த வாழ்க்கை, மாசுவிரித் திடுமனத்திற் பயிலாத் தெய்வ மணிவிளக்கே யானந்த வாழ்வே யெங்குங், காசுவிரித் திடுமொளிபோற் கலந்து நின்ற காரணமே சாந்தமெனக் கருதா நின்ற, தூசுவிரித் தடுக்கின்ருேர் தம்மைநீங்காச் சுகமயமே யருட் கருணை துலங்குந தேவே. 24

கோவேயெண் குணக்குன்றே குன்ரு ஞானக் கொழுந்தேனே செழும்பாகே குளிர்ந்த மோனக், காவேமெய் யறிவின்பமயமே யென்றன் கண்ணேமுக் கண்கொண்ட கரும்பே வானத் தேவேயத் தேவுக்குந் தெளிய வொண்ணுத் தெய்வமே வாடா மற் றிகழ்சிற் போதப், பூவேயப் பூவினுறு மணமே யெங்கும் பூரணமாய் நிறைந்தருளும் புனிதத் தேவே. 25

வானேயவ் வானுலவுங் காற்றே காற்றின் வருநெருப்பே நெருப்புறுநீர் வடிவே நீரிற், ருனேயும் புவியேயப் புவியிற் றங்குந் தாபரமே சங்கமமே சாற்று கின்ற, வூனேநல் லுயிரேயுள் ளொளியே யுள்ளத் துணர்வேயவ் வுணர்வுகலந் தூறு கின்ற, தேனேமுக் கனியேசெங் கரும்பே பாகின் றீஞ்சுவையே சுவையனைத்துந் திரண்ட தேவே. 26

விண்ணே விண்ணுருவே விண்முதலே விண்ணுள் வெளியேயவ் வெளிவிளங்கு வெளியே யென்றன், கண்ணே கண்மணியே கண்ணொளியே கண்ணுட் கலந்துநின்ற கதிரேயக் கதிரின் வித்தே, தண்ணே தண்மதியேயம் மதியிற்பூத்த தண்ணமுதே தண்ணமுத சாரமே சொற், பண்ணேபண் ணிசையேபண் மயமே பண்ணின் பயனேமெய்த் தவர்வாழ்த்திப் பரவுந் தேவே. 27

மாணேயத் தவருளத்தே மலர்ந்த செந்தா மரைமலரின் வயங்குகின்ற மணியே ஞானப், பூணேமெய்ப் பொருளே யற்புதமே மோனப் புத்தமுதே யானந்தம் பொலிந்த பொற்பே, யாணே பெண்ணுருவமே யலியே யொன்று மல்லாத பேரொ

ளியே யனைத்துந் தாங்குந், தூணே சிற்சுகமே யச்சுகமேற் பொங்
சுஞ் சொரூபானந் தக்கடலே சோதித் தேவே. 28

பூதமே யவைதோன்றிப் புகுந்தொடுங்கும் புகலிடமே யிட
ம்புரிந்த பொருளே போற்றும், வேதமே வேதத்தின் விளைவே
வேத வியன்முடிவே யம்முடிவின் விளங்குங் கோவே, நாதமே
நாதாந்த நடமே யந்த நடத்தினையுண் ணடத்துகின்ற நலமே
ஞான, போதமே போதமெலாங் கடந்து நின்ற பூரணமே யோகி
யருட் பொலிந்த தேவே. 29

ஞாலமே ஞாலமெலாம் விளங்க வைத்த நாயகமே கற்ப
முத னவிலா நின்ற, காலமே காலமெலாங் கடந்த ஞானக் கதி
யேமெய்க் கதியளிக்குங் கடவுளே சிற், கோலமே குணமேயுட்
குறியே கோலங் குணங்குறிகள் கடந்துநின்ற குருவே யன்பர்,
சீலமே மாலறியா மனத்திற் கண்ட செம்பொருளே யும்பர்பதஞ்
செழிக்குந் தேவே. 30

தத்துவமே தத்துவா தீத மேசிற் சுயம்புவே யெங்குநிறை
சாக்ஷியே மெய்ச், சத்துவமே சத்துவத்தின் பயனே மின்பந் தந்
தருளும் பெருவாழ்வாஞ் சாமி யேயெஞ், சித்தநிலை தெளிவிக்கு
மொளியே சற்றுந் தெவிட்டாத தெள்ளமுதே தேனே யென்
றுஞ், சுத்தநெறி திறம்பாதா ரறிவிற் றோய்ந்த சுகப்பொருளே
மெய்ஞ்ஞானந் துலங்குந் தேவே. 31

யோகமே யோகத்தின் பயனே யோகத் தொருமுதலே
யோகத்தி னோங்குந் தூய, போகமே போகத்தின் பொலிவே
போகம் புரிந்தருளும் புண்ணியமே புனித ஞான, யாகமே யாக
த்தின் விளைவே யாகத் திறையேயவ் விறைபுரியு மின்பே யன்பர்,
மோகமே மோகமெலா மழித்து வீறு மோனமே மோனத்தின்
முளைத்த தேவே. 32

காட்சியே காண்பதுவே ஞேய மேயுட் கண்ணுடையார்
கண்ணிறைந்த களிப்பே யோங்கு, மாட்சியே யுண்மையறிவின்ப
மென்ன வயங்குகின்ற வாழ்வேமா மௌனக் காணி, யாட்சியே
யாட்சிசெயு மரசே சுத்த வறிவேமெய் யன்பேதெள் ளமுதே
நல்ல, சூட்சியே சூட்சியெலாங் கடந்து நின்ற துரியமே துரிய
முடிச் சோதித் தேவே. 33

மறைமுடிக்குப் பொருத்தமுறு மணியே ஞான வாரிதியே யன்பர்கட மனத்தே நின்ற, குறைமுடிக்குங் குணக்குன்றே குன்று மோனக் கோமளமே தூயசிவக் கொழுந்தே வெள்ளைப், பிறைமுடிக்கும் பெருமானே துளவமாலைப் பெம்மானே செங்கமலப் பிரானே யிந்த, விறைமுடிக்கு மூவர்கட்கு மேலாய் நின்ற விறையேயிவ் வுருவுமின்றி யிருந்த தேவே. 34

கோதகன்ற யோகர்மனக் குகையில் வாழுங் குருவேசண் முகங்கொண்ட கோவே வஞ்ச, வாதகன்ற ஞானியர்தம் மதியி னூறும் வானமுதே யானந்த மழையே மாயை, வேதகன்ற முத்தர்களை விழுங்குஞான வேழமே மெய்யின்ப விருந்தே நெஞ்சிற், றீதகன்ற மெய்யடியார் தமக்குவாய்த்த செல்வமே யெல்லையிலாச் சீர்மைத் தேவே. 35

அருளருவி வழிந்துவழிந் தொழுக வோங்கு மானந்தத் தனிமலையே யமல வேதப், பொருளளவு நிறைந்தவற்றின் மேலு மோங்கிப் பொலிகின்ற பரம்பொருளே புரண மாகி, யிருளறு சிற் பிரகாச மயமாஞ் சுத்த வேதாந்தப் பெருவெளிக்கு ளிருந்த வாழ்வே, தெருளளவு முளமுழுதுங் கலந்து கொண்டு தித்திக்குஞ் செழுந்தேனே தேவ தேவே 36

அளவையெலாங் கடந்துமனங் கடந்து மற்றை யறிவை யெலாங் கடந்துகடந் தமல யோக, ருளவையெலாங் கடந்துபதங் கடந்து மேலையொன்றுகடந் திரண்டுகடந் துணரச் சூழ்ந்த, களவையெலாங் கடந்தண்ட பிண்ட மெல்லாங் கடந்து நிறை வானசுகக் கடலே யன்பர், வளவையெலா மிருளகற்று மொளியே மோன வாழ்வேயென் னுயிர்க்குயிராய் வதியுந் தேவே. 37

வன்புகலந் தறியாத மனத்தோர் தங்கண் மனங்கலந்து மதி கலந்து வயங்கா நின்ற, வென்புகலந் தூன்கலந்து புலன்க ளோடு மிந்திரிய மவைகலந்துள் ளியங்குகின்ற, வன்புகலந் தறிவுகலந் துயிரைம் பூத மான்மாவுங் கலந்துகலந் தண்ணித் தூறி, யின்பு கலந் தருள்கலந்து துளும்பிப் பொங்கி யெழுங்கருணைப் பெருக்காறே யின்பத் தேவே. 38

தண்ணமுத மதிகுளிர்ந்த கிரணம் வீசத் தடம்பொழிற்பூ மணம் வீசத் தென்றல் வீச, வெண்ணமுதப் பனிக்குநிலா முற்றத் தேயின் னிசைவீசத் தண்பனிநீ ரெடுத்து வீசப், பெண்ண

முத மனையவர்விண் ணமுத மூட்டப் பெறுகின்ற சுகமனைத்தும் பிற்பட் டோடக், கண்ணமுதத் துடம்புயிர்மற் றனைத்து மின் பங் கலந்துகொளத் தருங்கருணைக் கடவுட் டேவே. 39

சுழியாத வருட்கருணைப் பெருக்கே யென்றுந் தூண்டாத மணிவிளக்கின் சோதி யேவா, ஞெழியாது கதிர்பரப்புஞ் சுடரே யன்பர்க் கோவாத வின்பருளு மொன்றே விண்ணோர், விழியா லு மொழியாலு மனத்தி னாலும் விழைதருமெய்த் தவத்தா லும் விளம்பு மெந்த, வழியாலுங் கண்டுகொளற் கரிதாச் சுத்த மௌனவெளி யூடிருந்து வயங்குந் தேவே. 40

சொல்லொழியப் பொருளொழியக் கரண மெல்லாஞ் சோ ர்ந்தொழிய வுணர்வொழியத் துளங்கா நின்ற, வல்லொழியப் பகலொழிய நடுவே நின்ற வானந்த வநுபவமே யதீத வாழ்வே, நெல்லொழியப் பதர்கொள்வார் போல வின்ப நிறைவொழியக் குறைகொண்மத நெறியோர் நெஞ்சக், கல்லொழிய மெய்யடிய ரிதய மெல்லாங் கலந்துகலந் தினிக்கின்ற கருணைத் தேவே. 41

அலைகடலும் புவிவரையு மனல்கா லீரு மந்தரமு மற்றை யகி லாண்டம் யாவு, நிலைகுலையா வண்ணமருள் வெளியி னூடு நிரைநிரையா நிறுத்தியுயிர் நிகழும் வண்ணந், தலைகுலையாத் தத் துவஞ்செய் திரோதை யென்னுந் தனியாணை நடத்தியருட் டல த்தி லென்று, மலைவறவீற் றிருந்தருளு மரசே முத்தி வழித்து ணையே விழித்துணை யுண் மணியாந் தேவே. 42

வரம்பழுத்த நெறியேமெய்ந் நெறியி லின்ப வளம்பழுத்த பெருவாழ்வே வானோர் தங்கள், சிரம்பழுத்த பதப்பொருளே யறிவா னந்த சிவம்பழுத்த வநுபவமே சிதாகா சத்திற், பரம் பழுத்த நடத்தரசே கருணை யென்னும் பழம்பழுத்த வான்றரு வே பரம ஞானத், திரம்பழுத்த யோகியர்தம் யோகத் துள்ளே தினம்பழுத்துக் கனிந்தவருட் செல்வத் தேவே. 43

அண்டமெலாங் கண்ணாகக் கொளினுங் காண்டற் கணுத் துணையுங் கூடாவென் றனந்த வேதம், விண்டலறி யோலமிட்டுப் புலம்ப மோன வெளிக்குள்வெளி யாய்நிறைந்து விளங்கு மொன் றே, கண்டவடி வாயகண்ட மயமா யெங்குங் கலந்துநின்ற பெரு ங்கருணைக் கடவு ளேயெஞ், சண்டவினைத் தொடக்கறச்சின் மய த்தைக் காட்டுஞ் சற்குருவே சிவகுருவே சாந்தத் தேவே. 44

பேதமுறு மெய்ப்போத வடிவ மாகிப் பெருங்கருணை நிறம் பழுத்துச் சாந்தம் பொங்கிச், சீதமிகுந் தருள்கனிந்து கனிந்து மாறுச் சின்மயமாய் நின்மலமே மணந்து நீங்கா, வாதரவோ டிய ன்மௌனச் சுவைமேன் மேற்கொண் டானந்த ரசமொழுக்கி யன் பாலென் றுஞ், சேதமுறு வறிஞருளந் தித்தித் தோங்குஞ் செழும் புனிதக் கொழுங்கனியே தேவ தேவே. 44

உடல்குளிர வுயிர்தழைக்க வுணர்ச்சி யோங்க வுளங்கனிய மெய்யன்ப ருள்ளத் தூடே, கடலனைய பேரின்பந் துளும்ப நா ளுங் கருணைமலர்த் தேன்பொழியுங் கடவுட் காவே, விடலரிய வெம்போல்வா ரிதயந் தோறும் வேதாந்த மருந்தளிக்கும் விருந் தே வேதந், தொடலரிய வெளிமுழுதும் பாவி ஞானச் சோதிவி ரித் தொளிர்கின்ற சோதித் தேவே. 45

கிரியைநெறி யகற்றிமறை முடிவி னின்று கேளாமற் கேட் கின்ற கேள்வி யேசொற், கரியவறை விடுத்துநவ நிலைக்கு மேலே காணாமற் காண்கின்ற காட்சி யேயுள், ளரியநிலை யொன்றிரண்டி னடமேவ சற்று மரியாம லறிகின்ற வறிவே யென்று, முரியசதா நிலைநின்ற வுணர்ச்சி மேலோ ருன்னாம லுன்னுகின்ற வொளியாந் தேவே. 46

சொற்போதங் கரும்பெரிய மறைக ளடித் தொடர்ந்துதொ டர்ந் தயர்ந் திளைத்து துளங்கி யேங்கிப், பிற்போத விரைந்தன் பருளத்தே சென்ற பெருங்கருணைப் பெருவாழ்வே பெயரா தெ ன்றுந், தற்போத வொழிவினிடை நிறைந்து பொங்கித் ததும்பி வழிந் தோங்கியெல்லாந் தானே யாகிச், சிற்போதத் தகம்புற மூங் கோத்து நின்ற சிவானந்தப் பெருக்கேமெய்ச் செல்வத் தேவே. 47

பொங்குபல சமயமெனு நதிக ளெல்லாம் புகுந்துகலந் திட நிறைவாய்ப் பொங்கி யோங்குங், கங்குகரை காணாத கடலே யெ ங்குங் கண்ணாகக் காண்கின்ற கதியே யன்பர், தங்கநிழல் பரப்பி மயற் சோடை யெல்லாந் தணிக்கின்ற தருவேயூந் தடமே ஞா னச், செங்குமுத மலரவரு மதியே யெல்லாஞ் செய்யவல்ல கட வுளே தேவ தேவே. 48

வான்காணு மறைகாணு மலரோன் காணன் மால்காணு னுருத்திர னுமதித்துக் காணு, ஞான்காணு விடத்ததனைக் காண்

பே மென்று நல்லோர்க ணவில்கின்ற நலமே வேட்கை, மான்கா
ணு வுளக்கமல மலர்த்தா நின்ற வான்சுடரே யானந்த மயமே யீ
ன்ற, வான்காணு விளங்கன்ரு யலமந் தேங்கு மன்பர்தமைக்
கலந்துகொளு மமலத் தேவே. 49

மெஞ்ஞான விருப்பத்தி லேறிக் கேள்வி மீதேறித் தெளிந்
திச்சை விடுத லேறி, யஞ்ஞான மற்றபடி யேறி யுண்மை யறிந்த
படி நிலையேறி யதுநா னென்னும், கைஞ்ஞானங் கழன்றேறி மற்ற
வெல்லாங் கடந்தேறி மௌனவியற் கதியி லேறி, மெஞ்ஞான
மறத்தெளிந்தோர் கண்டுங் காணா மென்கின்ற வநுபவமே
யின்பத் தேவே. 50

பற்றறியா முத்தர்தமை யெல்லாம் வாழைப் பழம்போல
விழுங்குகின்ற பரமே மாசு, பெற்றறியாப் பெரும்பதமே பதத்
தைக் காட்டும் பெருமானே யானந்தப் பேற்றின் வாழ்வே, யுற்
றறியா தின்னுமின்னு மறைக ளெல்லா மோலமிட்டுத் தேடநி
ன்ற வொன்றே யொன்றுங், கற்றறியாப் பேதையேன் றனக்கு
மின்பங் கனிந்தளித்த வருட்கடலே கருணைத் தேவே. 51

மெய்யுணர்ந்த வாதவூர் மலையைச் சுத்த வெளியாக்கிக் கல
ந்துகொண்ட வெளியே முற்றும், பொய்யுணர்ந்த வெமைப்போ
ல்வார் தமக்கு மின்பம் புரிந்தருளுங் கருணைவெள்ளப் பொற்பே
யன்பர், கையுறைந்து வளர்நெல்லிக் கனியே யுள்ளங் கரைந்து
கரைந் துருகவவர் கருத்தி னூடே, யுய்யுநெறி யொளிகாட்டி
வெளியு முள்ளு மோங்குகின்ற சுயஞ்சுடரே யுண்மைத் தேவே.

ஓலிவடிவு நிறஞ்சுவைக ளூற்ற மூற்ற முறுதொழில்கள்
பயன்பலவே றுளவா யெங்கு, மலிவகையா யெவ்வகையு மொ
ன்று யொன்று மாட்டாதா யெல்லாமும் வல்ல தாகிச், சலிவ
கையில் லாதமுதற் பொருளே யெல்லாந் தன்மயமாய் விளங்கு
கின்ற தனியே யாண்பெண், ணலிவகையல் லாதவகை கடந்துநி
ன்ற வருட்சிவமே சிவபோகத் தமைந்த தேவே. 53

பேராய வண்டங்கள் பலவும் பிண்ட பேதங்கள் பற்பல
வும் பிண்டாண் டத்தின், வாராய பலபொருளுங் கடலு மண்ணு
மலையுளவுங் கடலுளவு மணலும் வானு, மூராத வான்மீனு மனு

வுமற்றை யுள்ளனவு மளந்திடலா மோகோ வுன்னை, யாராலு மளப்பரிதென் றனந்த வேத மறைந்திளைக்க வதிதூர மாகுந் தேவே. 54

கற்பங்கள் பலகோடி செல்லத் தீய கனலினடு வூசியின் மேற்காலை யூன்றிப், பொற்பறமெய் யுணர்வின்றி யுறக்கமின்றிப் புலர்ந்தெலும்பு புலப்படவைம் பொறியை யோம்பி, நிற்பவருக் கொளித்துமறைக் கொளித்தி யோக நீண்முனிவர்க் கொளித்த மரர்க் கொளித்து மேலாஞ், சிற்பதத்திற் சின்மயமாய் நிறைந்த ஞானத் திருவாள ருட்கலந்த தேவ தேவே. 55

மட்டகன்ற நெடுங்கால மனத்தால் வாக்கான் மதித்திடி னும் புலம்பிடினும் வாரா தென்றே, கட்டகன்ற மெய்யறிவோர் கரணை நீக்கிக் கலையகற்றிக் கருவியெலாங் கழற்றி மாயை, விட் டகன்று கருமமல போதம் யாவும் விடுத்தொழித்துச் சகசமல வீக்க நீக்கிச், சுட்டகன்று நிற்கவவர் தம்மை முற்றுஞ் சூழ்ந்து கலந் திடுஞ்சிவமே துரியத் தேவே. 56

உருநான்கு மருநான்கு நடுவே நின்ற வுருவருவ மொன்று மிவை யுடன்மே வுற்ற, வொருநான்கு மிவைகடந்த வொன்று மாயவ் வொன்றினடு வாய்நடுவுள் ளொன்றாய் நின்றே, யிருநா ன்கு மமைந்தவரை நான்கி னோடு மெண்ணான்கின் மேலிருந்து மிறையே மாயைக், கருநான்கும் பொருளைன்குங் காட்டு முக்கட் கடவுளே கடவுளர்கள் கருதுந் தேவே. 57

பாங்குளநாந் தெரிதுமெனத் துணிந்து கோடிப் பழமறைக டனித்தனியே பாடிப் பாடி, யீங்குளதென் றாங்குளதென் றோடி யோடி யிளைத்திளைத்துத் தொடர்த்துதொடர்ந் தெட்டுந் தோ றும், வாங்குபர வெளிமுழுது நீண்டு நீண்டு மறைந்துமறைந் தொளிக்கின்ற மணியே யெங்குந், தேங்குபர மானந்த வெள் ளமே சச்சிதானந்த வருட்சிவமே தேவ தேவே. 58

எழுத்தறிந்து தமையுணர்ந்த யோகருள்ளத் தியலறிவாந் தருவினிலன் பெனுமோ ருச்சு, பழுத்தனிந்து மௌனநறுஞ் சு வைமேற் பொங்கிப் பதமபொருந்த வனுபவிக்கும் பழமே மா யைக், கழுத்தரிந்து கருமமலத் தலையை வீசுங் கடுந்தொழிலோர் தமக்கேகற் கருணை காட்டி, விழுத்துணையா யமர்ந்தருளும் பொ ருளே மோன வெளியினிறை யானந்த விளைவாந் தேவே. 59

உருத்திரர்நா ரணர்பிரமர் விண்ணோர் வேந்த ருறுகருடர் காந்தருவ ரியக்கர் பூதர், மருத்துவர்யோ கியர்சித்தர் முனிவர் மற்றை வானவர்கண் முதலோர்தம் மனத்தாற் றேடிக், கருத்தழிந்து தனித்தனியே சென்று வேதங் களைவினவ மற்றவை யுங் காணே மென்று வருத்தமுற்றுங் கவரோடு புலம்ப நின்ற வஞ்சவெளி யேயின்ப மயமாந் தேவே. 60

பாயிரமா மறையனந்த மனந்த மின்னும் பார்த்தளந்து காண்டுமெனப் பல்கான் மேவி, யாயிரமா யிரமுகங்க ளாலும் பன்னு ளளந்தளந்தோ ரணுத்துணையு மளவு காணு, தேயிரங்கி யழுதுசிவ சிவவென் றேங்கித் திரும்பவருட் பரவெளியாய் சிவ மேயீன்ற, தாயிரங்கி வளர்ப்பதுபோல் லெம்போல் வாரைத் தண்ணருளால் வளர்த்தென்றுந் தாங்குந் தேவே. 61

அந்தரமிங் கறிவோமற் றதனி லண்ட மடுக்கடுக்கா யமைந்த வுள வறிவோ மாங்கே, யுந்துறும்பல் பிண்டநிலை யறிவோஞ் சீவ னுற்றநிலை யறிவோமற் றனைத்து நாட்டு, மெங்கைதநின் தருள் விளையாட் டந்தோ வந்தோ வெள்ளளவு மறிந்திலோ மென்னே யென்று, முந்தனந்த மறைகளெலாம் வழுத்த நின்ற முழுமுத லே யன்பர்குறை முடிக்குந் தேவே. 62

தோன்றுபர சாக்கிரமுங் கண்டோ மந்தச் சொப்பனமுங் கண்டோமேற் சுழுத்தி கண்டோ, மான்றபர துரியநிலை கண்டோ மப்பா லதுகண்டோ மப்பாலா மதுவுங் கண்டோ, மென்றவுப சாந்தநிலை கண்டோ மப்பா லிருந்தநினைக் காண்கிலோ மென் னே யென்று, சான்றவுப னிடங்களெலாம் வழுத்த நின்ற தன் மயமே சின்மயமே சகசத் தேவே. 63

பரிக்கிரக நிலைமுழுதுந் தொடர்ந்தோ மேலைப் பாவிந்து நிலையனைத்தும் பார்த்தோம் பாச, மரிக்குமியற் பரநாத நில க்கண் மெல்ல வெய்தினோ மப்பாலு மெட்டிப் போனோம், தெரி க்கரிய வெளிமூன்றுந் தெரிந்தோ மெங்குஞ் சிவமேநின் சின்மய மோர் சிறிதுந் தேறோம், தரிக்கரிதென் றாகமங்க ளெல்லாம் போற்றத் தனிநின்ற பரம்பொருளே சாந்தத் தேவே. 64

மணக்குமலர்த் தேனுண்ட வண்டே போல வளர்பரமா னந் தமுண்டு மகிழ்ந்தோ ரெல்லா, மிணக்கமுறக் கலந்துடலந் ததித

மாதற் கியற்கைநிலை யாதனுதா னெம்மாற் கூறுங், கணக்குவழக் கனைத்தினையுங் கடந்த தந்தோ காண்பரிதிங் கெவர்க்குமெனக் கலைக ளெல்லாம், பிணக்கறநின் றோலமிடத் தனித்து நின்ற பெரும்பதமே மதாதீதப் பெரிய தேவே. 65

பொதுவென்றும் பொதுவினடம் புரியா நின்ற பூரணசிற் சிவமென்றும் போதா னந்த, மதுவென்றும் பிரமமென்றும் பரம மென்றும் வகுக்கின்றோர் வகுத்திடுக வதுதா னென்று, மிது வென்றுஞ் சுட்டவொணா ததனாற் சும்மா விருப்பதுவே துணி வெனக்கொண் டிருக்கின்றோரை, விதுவென்ற தண்ணளியாற் கலந்து கொண்டு விளங்குகின்ற பெருவெளியே விமலத் தேவே.

அருமறையா கமங்க ளின்முத னடுவீ றெல்லா மமைந்தமைந் து மற்றவைக்கு மப்பா லாகிக், கருமறைந்த வுயிர்கடோறுங் கல ந்துமேவிக் கலவாமற் பன்னெறியுங் கடந்து ஞானத், திருமணி மன் றகத்தின்ப வுருவாயென்றுந் திகழ்கருணை நடம்புரியுஞ் சிவமே மோனப், பெருமலையே பரமவின்ப நிலையே முக்கட் பெ ருமானே யெத்திறத்தும் பெரிய தேவே. 67

என்னுயிர்நீ யென்னுயிர்க்கோ ருயிரு நீயென் னின்னுயிர்க் குத் துணைவநீ யென்னை யீன்ற, வன்னைநீ யென்னுடைய வப்ப னீயென் னரும்பொருணீ யென்னிதயத் தன்பு நீயென், னன் னெறிநீ யெனக்குறிய வுறவு நீயென் னற்குருநீ யெனைக்கலந்த நட்பு நீயென், றன்னுடைய வாழ்வுநீ யென்னைக் காக்குந் தலை வனீ கன்றூன்று தழைத்த தேவே. 68

தானாகித் தானல்ல தொன்று மில்லா தன்மையனா யெவ்வெ வைக்குந் தலைவ னாகி, வானாகி வளியனலாய் நீரு மாகி மலர்தலைய வுலகாகி மற்று மாகித், தேனாகித் தேனினறுஞ் சுவைய தாகித் தீஞ்சுவையின் பயனாகித் தேடுகின்ற, நானாகி யென்னிறையாய் நின்றோய் நின்னை நாயடியே னெவ்வாறு நவிற்று மாறே 69

ஆனேறும் பெருமானே யரசே யென்ற னாருயிருக் கொரு துணையே யமுதே கொன்றைத், தேனேறு மலர்ச்சடையெஞ் சிவனே தில்லைச், செழுஞ்சுடரே யானந்தத் தெய்வமே யென், னூனேறு முயிர்க்குணிறை யொளியே யெல்லா முடையானே நின்னடிச்சீ ருன்னி யன்பர், வானேறு கின்றார்நா னொருவன் பாவி மண்ணேறி மயக்கேறி வருந்துற் றேனே. 70

செஞ்சடையெம் பெருமானே சிறுமானேற்ற செழுங்கம
லக் கரத்தவனே சிவனே சூழ்ந்து, மஞ்சடையு மதிற்றில்லை மணி
யே யொற்றி வளர்மருந்தே யென்னுடைய வாழ்வே வேட்கை,
யஞ்சடைய வஞ்சியர்மா லடைய வஞ்ச மடையநெடுந் துயரடை
ய வகன்ற பாவி, நெஞ்சடைய நினைதியோ நினைதி யேன்மெய்ந்
நெறியுடையார் நெஞ்சமர்ந்த நீத னன்றே. 71

அன்னையினும் பெரிதினிய கருணை யூட்டு மாரமுதே யென்
னுறவே யரசே யிந்த, மன்னுலகி லடியேனை யென்னை துன்ப
வலையிலகப் படவியற்றி மறைந்தா யந்தோ, பொன்னைமதித் திடு
கின்றோர் மருங்கே சூழ்ந்து போனகமும் பொய்யுறவும் பொரு
ந்த லாற்றே, னென்னை யுளங் கொள்ளுதியோ கொள்கி லாயோ
வென்செய்வே னென்செய்வே னென்செய் வேனே. 72

படித்தேன்பொய் யுலகியனூ லெந்தாய் நீயே படிப்பித்தா
யன்றியுமப் படிப்பி விச்சை, யொடித்தனு னொடித்தேனே
வொடிப்பித் தாய்பின் னுன்னடியே துணையெனநா னுறுதியாக
ப், பிடித்தேன்மற் றதுவுநீ பிடிப்பித் தாயிப் பேதையே னின்ன
ருளைப் பெற்றோர் போல, நடித்தேனெம் பெருமானீ தொன்று
நானேநடித்தேனோ வல்லதுநீ நடிப்பித் தாயோ. 73

மத்தேறி யலைதயிர்போல் வஞ்ச வாழ்க்கை மயிலேறி விரு
ப்பேறி மதத்தி னூடு, பித்தேறி யுழல்கின்ற மனத்தா லந்தோ
பேயேறி நலிகின்ற பேதை யானேன், வித்தேறு வினையேறி மகி
ழ்கின் றோர்போன் மேலேறி யன்பரெலாம் விளங்கு கின்றா,
ரொத்தேறி யுயிர்க்குயிராய் நிறைந்த வெங்க ளுடையானே
யிதுதகுமோ வுணர்கி லேனே. 74

மதியணிந்த முடிக்கனியே மணியே யெல்லாம் வல்லவருட்
குருவேநின் மலர்த்தாள் வாழ்த்திக், கதியணிந்தா ரன்பரெலா
மடியே னென்றுங் கண்டறியேன் கருமத்தாற் கலங்கி யந்தோ,
பொதியணிநது திரிந்துழலு மேறு போலப் பொய்யுலகிற் பொ
ய்சுமந்து புலம்பா நின்றேன், றுதியணிந்த நின்னருளொன் றனை
க்கு முண்டோ வின்றெனிலிப் பாவியேன் சொல்வ தென்னே.

என்னரசே யென்னுயிரே யென்னை யீன்ற வென்றாயே
யென்குருவே யெளியே னிங்கே, தன்னரசே செலுத்தியெங்கு

எம்பெருமா னின்விளையாட் டென்சொல் கேளு னேது மறி யாச்சிறியே னெனைத்தா னிங்கே, செம்புனலாற் குழைத்த புலாற் சுவர்சூழ் பொத்தைச் சிறுவீட்டி லிருட்டறையிற் சிறை செய் தந்தோ, கம்பமுறப் பசித்தழலுங் கொளுத்த வந்தக் கா ணமுதற் பொறிபுலப்பேய் கவர்ந்து சூழ்ந்து, வம்பியற்றக் கா மாதி யரட்ட லெல்லா மடிபிடித்து வருத்தவென்றோ வளர்த்தா யெந்தாய். 87

அம்பரத்தே யானந்த வடிவா லென்று மாடுகின்ற மாமணி யே யரசே நாயே, னிம்பரத்த மெனுமூலக நடையி லந்தோ விட ருழந்தேன் பன்னெறியி லெனையி ழுத்தே, பம்பரத்தி னுடியலைப் படுத்து மிந்தப் பாவிமன மெனக்குவயப் படுவ தில்லை, கொம்பர ற்ற விளங்கொடிபோற் றளர்ந்தே னென்னைக் குறிக்கொள்ளக் கருதுதியோ குறித்தி டாயோ. 88

கண்ணுடைய நுதற்கரும்பே மன்றி லாடு காரணகா ரியங் கடந்த கடவு ளேநின், றண்ணுடைய மலரடிக்கோர் சிறிது மன்பு சார்ந்தேனோ செம்மரம்போற் றணித்த நெஞ்சேன், பெண்ணு டைய மயலாலே சுழல்கின் றேனென் பேதைமையை யென்புகல் வேன் பேய னேனைப், புண்ணுடைய புழுவிரும்பும் புள்ளென் கேனோ புலைவிழைந்து நிலைவெறுத்தேன் புலைய னேனே. 89

பொன்னுடையா ரிடம்புகவோ வவர்கட் கேற்கப் பொய் மொழிகள் புகன்றிடவோ பொதிபோ லிந்தக், கொன்னுடையா வுடல்பருக்கப் பசிக்குச் சோறு கொடுக்கவோ குளிர்க்காடை கொளவோ வஞ்ச, மின்னிடையார் முடைச்சிறுநீர்க் குழிக்க ணந்தோ வீழ்ந்திடவோ தாழ்ந்திளைத்து விழிக்கவோதா, னென் னுடையா யென்னுடையா யென்னை யிங்கே யெடுத்துவளர்த் தனையறியே னென்சொல் வேனே. 90

வருகணத்து வாழ்ந்திடுமோ விழுமோ விந்த மலக்கூடென் றறிஞரெலாம் வருந்தக் கேட்டு, மருகணைத்துக் கொளப்பெண் பே யெங்கே மேட்டுக் கடைத்திடவெண் சோறெங்கே யாடை யெங்கே, யிருகணுக்கு வியப்பெங்கே வசதியான விடமெங்கே யென்றுதிரிந் திளைத்தே னல்லா, லொருகணத்து முனைநினைந் துண்டோ வென்னை யுடையானே யெவ்வகைநா னுய்யு மாறே.

பொன்மலையோ சிறிதெனப்பே ராசை பொங்கிப் புவிநடை யிற் பற்பலகாற் போந்து போந்து, நென்மலையோ நிதிமலையோ வென்று தேடி நிலைகுலைந்த தன்றியுனை நினைத்து நேடி, மன்மலையோ மாமணியோ மருந்தோ வென்று வழுத்தியதே யில்லையிந்த வஞ்ச நெஞ்சங், கன்மலையோ விரும்போசெம் மரமோ பாறைக் கருங்கல்லோ பராய்முருட்டுக் கட்டையேயோ. 92

தம்மைமறந் தருளமுத முண்டு தேக்குந் தகையுடையார் திருக்கூட்டஞ் சார்ந்து நாயேன், வெம்மையெலாந் தவிர்ந்துமன ங் குளிரக் கேள்வி விருந்தருந்தி மெய்யறிவாம் வீட்டி லென்றுஞ், செம்மையெலாந் தருமௌன வணைமேற் கொண்டு செறி யிரவு பகலொன்றுந் தெரியா வண்ண, மிம்மையிலே யெம்மை யினுங் காணாச் சுத்த வின்பநிலை யடைவேனோ வேழை யேனே.

அடியனேன் பிழையனைத்தும் பொருத்தாட் கொண்ட வருட்கடலே மன்றோங்கு மரசே யிந்நாள், கொடியனேன் செய் பிழையைத் திருவுள் ளத்தே கொள்ளுதியோ கொண்டுகுலங் குறி ப்ப துண்டோ, நெடியனே முதற்கடவுட் சமுகத் தோர்தந் நெ டும்பிழைக ளாயிரமும் பொறுத்து மாயை, யொடியநேர் நின் றபெருங் கருணை வள்ள லெனமறைக ளோதுவதிங் குனைத்தா னன்றே. 94

கண்மயக்கும் பேரிருட்டுக் கங்குற் போதிற் கருத்தறியாச் சிறுவனையோர் கடுங்கா னத்தே, யுண்மயக்கங் கொளவிடுத்தே யொருவன் பின்போ மொருதாய்போன் மாயையிரு ளோங்கும் போதின், மண்மயக்கம் பெறும்விடயக் காட்டி லந்தோ மதியி லேன் மாழாந்து மயங்க நீதான் வண்மையுற்ற நியதியின்பி னென்னை விட்டே மறைந்தனையே பரமேநின்வண்மை யென்னே. 95

நற்றாயும் பிழைகுறிக்கக் கண்டோ மிந்த நானிலத்தே மற் றவர்யார் நாடார் வீணே, பற்றாயு மவர்தமைநாம் பற்றோம் பற் றிற் பற்றுத பற்றுடையார் பற்றி யுள்ளே, யுற்றாயுஞ் சிவபெரு மான் கருணை யொன்றே யுறுபிழைக ளெத்துணையும் பொறு ப்ப தென்றுன், பொற்றாளே விரும்பியது மன்று ளாடும் பொரு ளேயென் பிழையனைத்தும் பொறுக்க வன்றே. 96

எண்ணியநம் மெண்ணமெலா முடிப்பான் மன்று ளெம்பெருமா னென்றுமகிழ்ந் திருமாந் திங்கே, நண்ணியமற் றையர்தம்மை யுருமை பேசி நன்குமதி யாதிருந்த நாயி னேனைத், தண்ணியநல் லருட்கடலே மன்றி லின்பத் தாண்டவஞ்செய் கின்றபெருந் தகையே யெங்கள், புண்ணியனே பிழைகுறித்து விடுத்தி யாயிற் பொய்யனே னெங்குற்றென் புரிவே னந்தோ. 97

அன்பர்திரு வுளங்கோயி லாகக் கொண்டே யற்புதச் சிற்சபையோங்கு மரசே யிங்கு, வன்பரிடைச் சிறியேனை மயங்க வைத்து மறைந்தனையே யானந்த வடிவோய் நின்னை, துன்பவடிவுடைப்பிறரிற் பிரித்து மேலோர் துரியவடி வினனென்று சொன்ன வெல்லா. மின்பவடி வடைந்தன்றே யெந்தா யந்தோ வென்னளவென் சொல்கேனிவ் வேழை யேனே. 98

புற்றேங்கு மரவமெல்லாம் பணியாக் கொண்டு பொன்மேனி தனிலணிந்த பொருளே மாயை, யுற்றேங்கு வஞ்சமனக் கள்வனேனை யுளங்கொண்டு பணிகொள்வ துனக்கே யொக்கு, மற்றேங்கு மவரெல்லாம் பெருமை வேண்டும் வன்மனத்த ரெனை வேண்டார் வள்ள லேநான், கற்றேங்கு மறிவறியேன் பலவாச் சொல்லுங் கருத்தறியே னெனக்கருளக் கருதுவாயே. 99

அருளுடைய பரம்பொருளே மன்றி லாடு மானந்தப் பெருவாழ்வே யன்பு ளோர்தந், தெருளுடைய வுளமுழுதுங் கோயில் கொண்ட சிவமேமெய் யறிவுருவாந் தெய்வ மேயிம் மருளுடைய மனப்பேதை நாயி னேன்செய் வன்பிழையைச் சிறிதேனு மதித்தி யாயி, லிருளுடைய பவக்கடல்விட் டேறே னென்னை யேற்றுவதற் கெண்ணுகவென் னின்பத் தேவே. 100

---

இரண்டாந்திருமுறை-திருவண்ணப்பதிகம்.

பூதநெறி யாதிவரு நாதநெறி வரையுமாய்ப் புகலுமூ வுலகு நீத்துப், புரையுற்ற மூடமெனு மிருணில மகன்று மேற் போயருளொளித் துணையினால், வேதநெறி புகல்சகல கேவலமி லாதபர வெளிகண்டு கொண்டு கண்ட விளைவின்றி நானின்றி வெளியின்றி வெளியாய் விளங்குநா னென்றருளு வாய், வாதநெறி நடவாதபோதநெறி யாளர்நிறை மதிநெறி யுலாவு மதிமேய மணிமிடற்

றரசேயெம் வாழ்வின்முதலேயருமருந்தேபெ ருந்தெய்வமே,
காதநெறி மணம்வீசு கனிதரு பொழிற்குலவு கடிமதிற் றில்லை
நகர்வாழ் கனகவம் பலநாத கருணையங் கணபோத கமலகுஞ்
சிதபாதனே. 101

எழுவகைப் பிறவிகளு ளெப்பிறவி யெய்துகினு மெய்துக
பிறப்பி லினிநா னெய்தாமை யெய்துகினு மெய்திடுக விருமையி
னு மின்பமெய் தினுமெய்துக, வழுவகைத் துன்பமே வந்திடி
னும் வருகமிகு வாழ்வுவந் திடினும் வருக, வறுமைவரு கினும்வ
ருக மதிவரினும் வருகவவ மதிவரினும் வருக வுயர்வோ டிழிவ
கைத் துலகின்மற் றெதுவரினும் வருகவல தெதுபோகி னும்
போக நின், னிணையடிகண் மறவாத மனமொன்று மாத்திரமெ
னக்கடைதல் வேண்டுமரசே, கழிவகைப் பவரோக நீக்குநல்
லருளெனுங் கதிமருந் துதவு நிதியே, கனகவம் பலநாத கரு
ணையங் கணபோத கமலகுஞ் சித பாதனே. 102

பற்றுவது பந்தமப் பற்றுதல்வீ டஃது பரமவே தார்த்த
மெனவே, பண்புளோர் நண்பினொடு பகருவது கேட்டுமென்
பாவிமனம் விடய நடையே, யெற்றுவது செய்யாம லெழுவ
தொடு விழுவது றங்குவது மேறு வதும்வீ, டெண்ணுவது நண்
ணுவதும் மிப்புவன போகங்கள் யாவினுஞ் சென்று சென்றே,
சுற்றுவது மாகியோர் சற்றுமறி வில்லாது சுழல்கின்ற தென்செ
ய்கு வேன், றாயநின் றிருவருளி னன்றியிவ் வேழையைச் சுழன்
மன மடக்க வருமோ, கற்றுவழு வற்றவர் கருத்தமர் கருத்த
னே கண்ணுதற் கடவுண் மணியே, கனகவம் பலநாத கருணை
யங் கணபோத கமலகுஞ் சித பாதனே. 103

## நெஞ்செடு நெகிழ்தல்.

துட்டவஞ்சக நெஞ்சகமே யொன்று சொல்லக்கேள்; கட
ல்சூ ழுலகத்திலே, யிட்டமென்கொ லிறையள வேனுமோ ரின்
பமில்லை யிடைக்கிடை யின்னலா, னட்டமிக்குறல் கண்டுகண்
டேங்கினை நாணு கின்றிலை நாய்க்குங் கடையைநீ, பட்டவன்
மைக ளெண்ணி லெனக்குடற் பதைக்கு முள்ளம்ப கிலென
வேங்குமே. 104

பெரியபொரு ளெவைக்குமுதற் பெரும்பொருளா மரும் பொருளைப் பேசற் கொண்ணுத், துரியநிலை யநுபவத்தைச் சுக மயமா யெங்குமுள்ள தொன்மை தன்னை, யரியபரம் பரமான சிதம்பரத்தே நடம்புரியு மமுதை யந்தோ, வுரியபர கதியடை தற் குன்னினையேன் மனனேநீ யுய்யு வாயே. 105

---

போதுத்தனித்திருவெண்பா.

பகுதி தகுதி விகுதி யெனும்பாட்டி
விகலி விடையை யிரட்டித்-தகவி
னருச்சித்தான் முன்னு மதுகடையாங் கண்டீர்
திருச்சிற் சபையா[illegible]த் தேர்ந்து. 106

தாதாதா தாதாதா தாக்குறைக்கென் செய்குதும்யாந்
தாதாதா வென்றுலகிற் றுனலைந்தோம்-போதாதா
நந்தா மணியே நமச்சிவா யப்பொருளே
யெந்தா யெனப்புகழ வே. 107

---

தனித்திருவிருத்தம்.

தாய்தடை யென்றேன் பின்னர்த் தாரமே தடையென் றேனுன்
சேய்தடை யென்றே னிந்தச் சிறுதடை யெல்லாந் தீர்ந்துந்
தோய்தடைச் சிறியே னின்னுந் துறந்திலே னெனைத் தடுக்க
வேய்தடை யாதோ வெந்தா யென்செய்கே னென்செய் கேனே.

வேறு.

கள்ளுருகு மலர் மணம்போற் கலந்தெங்கு நிறைந்தோய் நின் கருணைக் கந்தோ, முள்ளுருகும் வலியபராய் முருடுருகு முருகாத முறைசேர் கல்லும், வள்ளுருகு மலையுருகு மண்ணு ருகு மரமுருகு மதியி லேன்ற, னுள்ளுருகும் வகையிலையென் செய்கேனு னேன்பிறந்தே னுதிய னேனே. 109

---

அறநிலைவிளக்கம்.

மருவானைப் பெண்ணுக்கி யொருகணத்திற் கண்விழித்து வயங்கு மப்பெண் ணுருவானை யுருவாக்கி யிறந்தவரை யெழுப்

புகின்றவுறுவ னேனுங், கருவாணை யுறவிரங்கா துயிருடம்பைக் கடிந்துண்ணுங் கருத்த னேலெங், குருவாணை யெமதுசிவக் கொழுந்தாணை ஞானியெனக் கூறொ ணுதே. 110

அம்மைதிருப்பதிகம்.

கற்பவை யெலாங்கற்று ணுணர்பவை யெலாமனக் கரிசற வுணர்ந்து கேட்டுக் காண்பவை யெலாங்கண்டு செய்பவை யெலாஞ்செய்து கருநெறி யகன்ற பெரியோர், பொற்பவை யெலாஞ் சென்று புகல்பவை யெலாங்கொண்டு புரிபவை யெலாம்பு ரிந்து புகழ்பவை யெலாம்புகழ்ந் துறுமவை யெலாமுறும் போதவை யெலா மருளுவாய், நிற்பவை யெலாநிற்ப வசைபவை யெலாம சைய நிறைவவை யெலாஞ்செய் நிலையேன் நினைபவை யெலாநெகிழ நெறியவை யெலாமோங்கு நித்தியா னந்த வடிவே, யற்புடைய வடியர்புகழ் தில்லையம் பதிமருவு மண்ணலார் மகிழுமணியே யகிலாண்ட முஞ்சரா சரமுமீன் றருள்பரசி வாநந்த வல்லி யுமையே. 111

பொய்யாத மொழியுமயல் செய்யாத செயலும்வீண் போகாத நாளும் விடயம், புரியாத மனமுமுட் பிரியாத சாந்தமும் புந்திதள ராதநிலையும், மெய்யாத வாழ்வும்வே றெண்ணாத நிறைவுனினை யென்றுமற வாத நெறியு, மிறவாத தகவுமேற் பிறவாத கதியுமிவ் வேழையேற் கருள்செய் கண்டாய், கொய்யாது குவியாது குமையாது மணம்வீசு கோமளத் தெய்வமலரே, கோவாத முத்தமே குறையாத மதியமே கோடாத மணிவி ளக்கே, யையான னங்கொண்ட தில்லையம் பதிமருவு மண்ணலார் மகிழுமணியே, யகிலாண்ட முஞ்சரா சரமுமீன் றருள்பரசி வானந்த வல்லி யுமையே. 112

வெவ்வினைக் கீடான காயமிது மாயமென வேதமுத லாகமமெலா மிகுபறை யறைந்துமிது வெயின்மஞ்ச ணிறமெனும் விவேகர்சொற் கேட்ட றிந்துங், கவ்வைபெறு கடலுலகில் வைரமலை யொத்தவர் கணத்திடை யிறத்தல் பலகாற், கண்ணுறக் கண்டுமிப் புலையுடலின் மாநமோர் கடுவளவும் விடுவ தறியே, னெவ்வமுறுசிறியனே னேழைமதி யென்னமதி யின்னமதி யெ

ன்றுணர்கிலே, னிந்தமதி கொண்டுநா னெந்தவகை யழியாத
வின்பநிலை கண்டு மகிழ்வே, னவ்விய மகற்றியரு டில்லையம் பதி
மருவு மண்ணலார் மகிழு மணியே, யகிலாண்ட முஞ்சரா சரமு
மீன் றருள்பரசி வாநந்த வல்லி யுமையே. 113

---

வெண்ணிலா.

தன்னையறிந் தின்பமுற வெண்ணிலாவே-ஒரு
தந்திரநீ சொல்லவேண்டும் வெண்ணிலாவே. 114

நாதமுடி மேலிருந்த வெண்ணிலாவே-அங்கே
நானும்வர வேண்டுகின்றேன் வெண்ணிலாவே. 115

சச்சிதா னந்தக்கடலில் வெண்ணிலாவே-நானும்
தாழ்ந்துவிழ வேண்டுகின்றேன் வெண்ணிலாவே. 116

இராப்பகலில் லாவிடத்தே வெண்ணிலாவே-நானும்
இருக்கவெண்ணி வாடுகின்றேன் வெண்ணிலாவே. 117

தேசுநிற மாய்நிறைந்த வெண்ணிலாவே-நானும்
சிவமயம தாய்விழைந்தேன் வெண்ணிலாவே. 118

போதநடு வூடிருந்த வெண்ணிலாவே-மலப்
போதமற வேண்டுகின்றேன் வெண்ணிலாவே. 119

ஆறுமறி யாமலிங்கே வெண்ணிலாவே-அரு
ளாளர்வரு வாரோ சொல்லாய் வெண்ணிலாவே. 120

அந்தரங்க சேவைசெய்ய வெண்ணிலாவே-யெங்க
ளையர்வரு வாரோசொல்லாய் வெண்ணிலாவே. 121

வேதமுடி மேலிருந்த வெண்ணிலாவே-மல
வேதையுள வேதுசொல்லாய் வெண்ணிலாவே. 122

குண்டலிப்பால் நின்றிலங்கும் வெண்ணிலாவே-அந்த
குண்டலிப்பால் வேண்டுகின்றேன் வெண்ணிலாவே. 123

ஆதியந்த மென்றுரைத்தார் வெண்ணிலாவே-அந்த
ஆதியந்த மாவதென்ன வெண்ணிலாவே. 124

வித்திலாம லேவிளைந்த வெண்ணிலாவே-நீதான்
விளைந்தவண்ண மேதுசொல்லாய் வெண்ணிலாவே. 125

முப்பொருளு மொன்றதென்பார் வெண்ணிலாவே-அந்த
மூன்றுமொன்றாய் முடிந்ததென்ன வெண்ணிலாவே. 126

நானதுவாய் நிற்கும்வண்ணம் வெண்ணிலாவே-ஒரு
ஞானநெறி சொல்லுகண்டாய் வெண்ணிலாவே. 127

ஞானமய மாய்விளங்கும் வெண்ணிலாவே-என்னை
நானறியச் சொல்லுகண்டாய் வெண்ணிலாவே. 128

வாசிவாசி யென்றுரைத்தார் வெண்ணிலாவே-அந்த
வாசியென்னப் பேசுகண்டாய் வெண்ணிலாவே. 129

ஐந்தலைப்பாம் பாட்டுகின்றார் வெண்ணிலாவே-அவர்
அம்பலத்தில் நின்றதென்ன வெண்ணிலாவே. 130

ஓரெழுத்தி லைந்துண்டென்பார் வெண்ணிலாவே-அது
ஊமையெழுத் தாவதென்ன வெண்ணிலாவே. 131

அம்பலத்தி லாடுகின்றார் வெண்ணிலாவே-அவர்
ஆடுகின்ற வண்ணமென்ன வெண்ணிலாவே. 132

அந்தரத்தி லாடுகின்றார் வெண்ணிலாவே-அவர்
ஆடும்வகை எப்படியோ வெண்ணிலாவே. 133

அணுவிலணு வாயிருந்தார் வெண்ணிலாவே-எங்கு
மாகிநின்ற வண்ணமென்ன வெண்ணிலாவே. 134

அண்டபகி ரண்டமெல்லாம் வெண்ணிலாவே-ஐயர்
ஆட்டமென்று சொல்வதென்ன வெண்ணிலாவே. 135

அம்பரத்தி லாடுகின்றார் வெண்ணிலாவே-என்னை
ஆட்டுகின்றா ரிம்பரத்தே வெண்ணிலாவே. 136

---

மூன்றாவது திருமுறை-அருட்பிரகாசமாலை.

யோகாந்த மிசையிருப்ப தொன்றாகலந்தத்தே யுவந்திருப்ப தொன்றெனமெய் யுணர்வுடையோ ருணர்வா, லேகாந்தத் திருந்துணரு மிணையடிகள் வருந்த வென்பொருட்டா யானிருக்கு மிடந்தேடி நடந்து, வாகாந்தச் சணிக்கதவந் திறப்பித்தங் கென்னை வரவழைத்தென் கைதனிலே மகிழ்ந்தொன்று கொடுத்தாய், மோகாந்த காரமறத் தவரோத்தப் பொதுவின் முயங்கிநடம் புரிகின்ற முக்கணுடை யரசே. 137

உளவறிந்தோர் தமக்கெல்லா முபநிடதப் பொருளா யுள வறியார்க் கிகபரமு முறுவிக்கும் பொருளா, யளவறிந்த வறிவாலே யறிந்திடநின் றுடு மடிமலர்கள் வருந்தியிட நடந்திரவி லடைந்து, களவறிந்தேன் றனைக்கூவிக் கதவுதிறப்பித்து கையிலொன்று கொடுத்தாய்நின் கருணையையென் னென்பேன், விளவெறிந்தோ னயன்முதலோர் பணிந்தேத்தப் பொதுவில் விளங்குநடம் புரிகின்றதுளங்கொளிமா மணியே. 138

பூதவெளி கரணவெளி பகுதிவெளி மாயா போகவெளி மாமாயா யோகவெளி புகலும், வேதவெளி யபரவிந்து வெளியபர நாத வெளியேக வெளிபரம வெளிஞான வெளிமா, நாதவெளி சுத்தவெறு வெளிவெட்ட வெளியா நவில்கின்ற வெளிகளெலா நடிக்குமடி வருந்த, வேதவெளி யேன்பொருட்டா நடந்தென்பா லடைந்தே யென்கையிலொன் றளித்தனைநின் னிரக்க மெவர்க்குளதே. 139

வானதுவாய்ப் பசுமலம்போய்த் தனித்துநிற்குந் தருணம் வயங்குபரா நந்தசுகம் விளைந்துகொள்ளுந் தருணந், தானதுவா யதுதானுய்ச் சகசமுறுந் தருணந் தடையற்ற வநுபவமாந் தன்மையடி வருந்த, மானதுவாய் நடந்தெளியே னிருக்குமிடத் தடைந்து மணிக்கதவந் திறப்பித்து மகிழ்ந்தெனையங் கழைத்து வானதொரு பொருளளித்தாய் நின்னருளென் னென்பே னம்பலத்தே நடம்புரியு மெம்பெருஞ்சோ தியனே. 140

---

## ஆளுடையபிள்ளையார் அருண்மாலை.

தத்துவ நிலைக டனித்தனி யேறித் தனிப்பர நாதமாந் தலத்தே, யொத்ததன் மயமா நின்னை நீயின்றி யுற்றிட லுயிரநுபவமென், றித்துணை வெளியி னென்னையென் னிடத்தே யிருந்தவா றளித்தனை யன்றோ, சித்தநற் காழி ஞானசம்பந்தச் செல்வமே யெனதுசற் குருவே. 141

தனிப்பர நாத வெளியின்மே னினது தன்மயந் தன்மயமாக்கிப் பனிப்பிலா தென்று முள்ளதாய் விளங்கிப் பரம்பரத் துட்புற மாகி, யினிப்புற வொன்று வியப்புறு வியல்பா யிருந்ததே யருளநு பவமென், றெனக்கருள் புரிந்தாய் ஞானசம்பந்த னென்னுமென் சற்குரு மணியே. 142

உள்ளதாய் விளங்கு மொருபெரு வெளிமே லுள்ளதாய் முற்றருள் ளதுவாய், நள்ளதா யெனதாய் நான்தாய் தனதாய் நவிற்றருந் தானதா யின்ன, விள்ளொணு வப்பா லப்படிக் கப்பால் வெறுவெளி சிவவநு பவமென், றுள்ளுற வளித்த ஞாநசம்பந்த வுத்தம சுத்தசற் குருவே. 143

பொத்திய மூல மலப்பிணி தவிர்க்கும் பொருளரு ளனுபவ மதற்குப், பத்திய முயிரி னநுபவ மிதனைப் பற்றறப் பற்றுதி யிதுவே, சத்திய மெனவென் றனக்கருள் புரிந்த தனிப்பெருங் கருணையென் புகல்வேன், முத்தியற் சிவிகை யிவர்தரு னெறியின் முதலா சியற்றிய துரையே. 144

---

### ஆளுடையஅடிகள் அருண்மாலை.

கருவெளிக்குட் புறனுகிக் கரணமெலாங் கடந்துநின்ற
பெருவெளிக்கு நெடுங்காலம் பித்தாகித் திரிகின்றோர்
குருவெளிக்கே நின்றுழலக் கோதறநீ கலந்ததனி
யுருவெளிக்கே மறைபுகழு முயர்வாத வூர்மணியே 145

மன்புருவ நடுமுதலா மனம்புதைத்து நெடுங்கால
மென்புருவாய்த் தவஞ்செய்வா ரெல்லாருமேமாக்க
வன்புருவம் பெற்றதன்பி னருளுருவ மடைந்துபின்ன
ரின்புருவ மாயினைநீ யெழில்வாத வூரிறையே, 146

---

### ஐந்தாந்திருமுறை-சித்திவிநாயகர் பதிகம்.

நாதமுங் கடந்து நிறைந்துநின் மயமே நானெ வறிந்துநான் றுனும், பேதமுங் கடந்த மௌனராச் சியத்தைப் பேதையேன் பிடிப்பதெந் நாளோ, வேதமுஞ் சமய வாதமும் விடுத்தோ ரிதையமு மேழையேன் சிரமும், வேதமுந் தாங்கும் பாதனே சித்தி விநாயக விக்கிநேச் சுரனே. 147

சச்சிதா னந்த வடிவநம் வடிவந் தகுமதிட் டானமற் றிரண்டும், பொய்ச்சிதா பாசக் கற்பனை யிவற்றைப் போக்கியாங் கவ்வடிவாகி, யச்சிதா கார போதமு மதன்மே லானந்த போதமும் விடுத்தல், மெய்ச்சிதாம் வீடென் றுரைத்தனை சித்தி விநாயக விக்கிநேச் சுரனே. 148

ஒன்றல விரண்டு மலவிரண் டொன்றோ டுருவல யருவல
வட்ட, நன்றல நன்றல் லாதல விந்து நாதமு மலவிவை யனைத்
ரம், பொன்றலென் றறிந்துட் புறத்தினு மகண்ட பூரண மாஞ்
வ மொன்றே, வென்றலென் றறிநீ யென்றனை சித்தி விநாயக
த்கிரேச் சுரனே. 149

## தெய்வமணிமாலை.

பரமேது வினைசெயும் பயனேது பதியேது பசுவேது பாச
மது, பத்தியே தடைகின்ற முத்தியே தருளேது பாவபுண் யங்
ளேது, வரமேது தவமேது விரதமே தொன்றுமிலை மனம்வி
ம் புணவுண்டு நல், வத்திரம ணிந்துமட மாதர்தமை நாடிநறு
லர்சூடி விளையாடி மேற், கரமேவ விட்டுமுலை தொட்டு வாழ்ந்
வரொடு கலந்துமகிழ் கின்ற சுகமே, கண்கண்ட சுகமிதே கை
ண்ட பலனெனுங் கயவரைக் கூடா தருள், தரமேவு சென்னை
ற் கந்தகோட் டத்துள்வளர் தலமோங்கு கந்த வேளே, தண்
கத் துய்யமணி யுண்முகச் சைவமணி சண்முகத் தெய்வ
ணியே. 150

ஒருமையுட னினதுதிரு மலரடி நினைக்கின்ற வுத்தமர்த மு
வு வேண்டும், உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவா
றவுகல வாமை வேண்டும், பெருமைபெறு நினதுபுகழ் பேச
வண் டும்பொய்மை பேசா திருக்க வேண்டும், பெருநெறி பிடி
தொழுக வேண்டுமத மானபேய் பிடியா திருக்க வேண்டும்,
ருவுபெண் ணாசையை மறக்கவே வேண்டு முனைமறவா திருக்க
வண்டும், மதிவேண்டு நின்கருணை நிதிவேண்டு நோயற்ற வாழ்
ஞன் வாழ வேண்டும், தருமமிகு சென்னையிற் கந்தகோட் டத்
ள்வளர் தலமோங்கு கந்தவேளே, தண்முகத் துய்யமணி யுண்
கச் சைவமணி சண்முகத் தெய்வ மணியே. 151

நாம்பிரம நமையன்றி யாம்பிரமம் வேறில்லை நன்மைதீ மை
று மில்லை, நவில்கின்ற வாகியாந் தரமிரண் டினுமொன்ற நடு
ன்றதென்று வீணுட், போம்பிரம நீதிகேட் போர்பிரமை யாக
வ போதிப்பர் சாதிப்பர் தாம், புன்மைநெறி கைவிடார் தம்
மம் வினையொன்று போந்திடிற் போக விடுவார், சாம்பிரம மா
வர்க டாம்பிரம மெனுமறிவு தாம்புபாம் பெனுமறிவு காண்,

சத்துவ வகண்டபரி பூரணு காரவுப சாந்தசிவ சிற்பிரம நீ, தாம் பிரிவில் சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர் தலமோங்கு கந்தவேளே, தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி சண்முகத் தெய்வ மணியே. 152

மனமான வொருசிறுவன் மதியான குருவையு மதித்திடா னின்னடிச்சீர் மகிழ்கல்வி கற்றிடான் சும்மாவி ரான்காம மடுவி னிடை வீழ்ந்து சுழல்வான், சினமான வெஞ்சுரத் துழலுவ னுலோபமாஞ் சிறுகுகையி னூடு புகுவான், செறுமோக விருளி டைச் செல்குவான் மதமெனுஞ் செய்குன்றி லேறி விழுவான், இனமான மாச்சர்ய வெங்குழியி னுள்ளே யிறங்குவான் சிறிது மந்தோ, என்சொல்கே ளானெனது கைப்படான் மற்றிதற் கேழையே னென்செய்கு வேன், தனநீடு சென்னையிற் கந்த கோட் டத்துள்வளர் தலமோங்கு கந்தவேளே, தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி சண்முகத் தெய்வ மணியே. 153

---

### ஆறுந்திருமுறை-பதிவிளக்கம்.

இடம்பெறுமிந் திரியவின்பங் கரணவின்ப முலக வின்ப முயி ரின்பமுத லெய்துமின்ப மாகித், தடம்பெருமோ ரான்ம வின்பந் தனித்தவறி வின்பஞ் சத்தியப்பே ரின்பமுத்தி யின்பமு மா யதன்மேல், நடம்பெறுமெய்ப் பொருளின்பம் பிரதிசய வின் பம் ஞானசித்திப் பெரும்போக நாட்டரசின் பமுமாய்த், திடம் பெறவோங் கியவியற்கைத் தனியின்ப மயமாந் திருச்சிற்றம் பல ந்தனிலே தெய்வமொன்றே கண்டீர். 154

இயற்கையிலே பாசங்க ளொன்றுமிலார் குணங்க ளேதுமி லார் தத்துவங்க ளேதுமிலார் மற்றோர், செயற்கையில்லார் பிற ப்பில்லா ரிறப்பில்லார் யாதுந் திரிபில்லார் களங்கமில்லார் தீமை யொன்று மில்லார், வியப்புறவேண் டுதலில்லார் வேண்டாமை யில்லார் மெய்யேமெய் யாகியெங்கும் விளங்கியின்ப மயமா, யுயத்தருமோர் சுத்தசிவா னந்தசபை தனிலே யோங்குகின்ற தனிக்கடவு ளொருவருண்டே கண்டீர். 155

ஒன்றுமலா ரிரண்டுமலா ரொன்றிரண்டு மாகு ருருவும லா ரருவுமலா ருருவருவு மானார், அன்றுமுளா ரின்றுமுளா

ரென்றுமுளார் தமக்கோ ராதியிலா ரந்தமிலா ரரும்பெருஞ்சோ தியினர், என்றுகனல் மதியகத்தும் புறத்தும்விளங் கிடுவார் யாவு மிலார் யாவுமுளார் யாவுமலார் யாவும், ஒன்றுறுதாமாகிநின்றார் திருச்சிற்றம் பலத்தே யோங்குகின்ற தனிக்கடவு ளொருவருண் டே கண்டீர். 156

---

அஷ்டகம்.

குலவுபே ரண்டப் பகுதியோ ரனந்த கோடிகோ டிகளுமா ங் காங்கே, நிலவியபிண்டப் பகுதிகள் முழுது நிகழ்ந்தபற் பல பொருட் டிரளும், விலகுறு தகத்தும் புறத்துமே விடத்தும் மெ ய்யறி வானந்தம் விளங்க, அலகுறு தொழியா ததுவதில் விளங் கு மருட்பெருஞ் சோதியென் னரசே. 157

தத்துவ மனைத்துந் தனித்தனி கடந்தேந் தத்துவா தீதமே னிலையில், சித்தியல் முழுதுந் தெரிந்தன மவைமேற் சிவநிலை தெரிந்திடச் சென்றேம், ஒத்தவந் நிலைக்கண் யாமுமெம் முணர்வு மொருங்குறக் கரைந்துபோ யினமென், றக்கதை யுணர்ந்தோர் வழுத்தநின் றோங்கு மருட்பெருஞ் சோதியென் னரசே. 158

---

முறையீடு.

மருந்தறியேன் மணியறியேன் மந்திரமொன் றறியேன், மதியறியேன் விதியறியேன் வாழ்க்கைநிலை யறியேன், திருந்த றியேன் றிருவருளின் செயலறியே னறந்தான், செய்தறியேன் மனமடங்குந் திறத்தினிலோ ரிடத்தே, யிருந்தறியே னறிந் தோரை யேத்திடவுமறியே னெந்தைபிரான் மணிமன்ற மெய் தவறி வேனோ, யிருந்ததிசை சொலவறியே னெங்ஙனநான் புகு வேன் யார்க்குரைப்பே னென்னசெய்வே னேதுமறிந் திலனே.

---

அவாவறுப்பு.

சோற்றிலே விருப்பஞ் சூழ்ந்திடி லொருவன் றன்னுநற் றவமெலாஞ் சுருங்கி, யாற்றிலே கரைத்த புளியெனப் போமெ ன் றறிஞர்க ளுரைத்திடல் சிறிதும், போற்றிலே னுன்னைப் போ ற்றிலேன் சுவையிற் பொருந்திய கார சாரஞ்சேர், சாற்றிலே க லந்த சோற்றிலே யாசை தங்கினே னென்செய்வே னெந்தாய்.

விருப்பிலேன் போலக் காட்டினே னன்றி விளைவிலா தூ ணெலா மறுத்த, கருப்பிலே யெனினுங் கஞ்சியா திகளைக் கருத் துவங் துண்ணுதற் கமையேன், நெருப்பிலே யுருக்கு நெய்யிலே சிறிதும் நீரிடாத் தயிரிலே நெகிழ்ந்த, பருப்பிலே சோற்றுப் பொருப்பிலே யாசைப் பற்றினே னென்செய்வே னெந்தாய்.

உறியிலே தயிரைத் திருடியுண் டனனென் றொருவனை யு ரைப்பதோர் வியப்போ, குறியிலே யமைத்த வுணவெலாந் திரு டிக் கொண்டுபோ யுண்டனன் பருப்புக், கறியிலே பொறித்த கறியிலே கூட்டுக் கறியிலே கலந்த பேராசை, வெறியிலே யுனை யு மறந்தனன் வயிறு வீங்கிட வுண்டன னெந்தாய். 161

கீரையே விரும்பேன் பருப்பொடு கலந்த கீரையே விரும்பி னேன் வெறுந்தண், ணீரையே விரும்பேன் தெங்கிளங்காயி னீ ரையே விரும்பினே னுணவி, லாரையே யெனக்கு நிகரெனப் புக ல்வே னய்யகோ வடிச்சிறு நாயேன், பேரையே யுரைக்கிற் றவ மெலா மோட்டம் பிடிக்குமே யென்செய்வே னெந்தாய். 162

பாலிலே கலந்த சோறெனில் விரைந்தே பத்தியா லொரு பெரு வயிற்றுச், சாலிலே யடைக்கத் தடைபடேன் வாழை தரு பலா மாமுதற் பழத்தின், தோலிலே யெனினுங் கிள்ளியோர் சி றிதுஞ் சூழ்ந்தவர்க் ஈீந்திடத் துணியேன், வாலிலே னிருக்கில் வனத்திலே யிருக்க வாய்ப்புளே னென்செய்வே னெந்தாய்.

உடம்பொரு வயிறுய்ச் சருக்கரைக் கலந்த வுண்டியே யு ண்டனன் பலகால், கடம்பெறு புளிச்சோ றுண்டுளே களித்தே ன் கட்டிநற் றயிரிலே கலந்த, தடம்பெறு சோற்றிற் றருக்கினே னெனுமிச் சம்பளச் சோற்றிலே தடித்தேன், திடம்பெறு மற்றை சித்திரச் சோற்றிற் செருக்கினே னென்செய்வே னெந்தாய்.

மிளகுமேன் மேலுஞ் சேர்த்தபல் லுணவில் விருப்பெலாம் வைத்தன னுதவாச், சுளகினுங் கடையேன் பருப்பிலே யமைத்த துவையலே சுவர்க்கமென் றுண்டே, னிளகிலா மனத்தே னினி யபச் சடிசி லெவற்றினு மிச்சைவைத் திசைத்தேன், குளகுனும் விலங்கி னிலேக்கறிக் காசை கொண்டன னென்செய்வே னெந் தாய். 165

தண்டுகாய் கிழங்கு பூமுத லொன்றுந் தவறவிட் டிடுவத
ற் கமையேன், கொண்டுபோய் வயிற்றுக் குழியெலா நிரம்பக்
கொட்டினேன் குணமிலாக் கொடியேன், வண்டுபோல் விரைந்
து வயலெலா நிரம்ப மலங்கொட்ட வோடிய புலையேன், பண்டு
போற் பசித்தூண் வருவழி பார்த்த பாவியே னென்செய்வே
னெந்தாய். 166

வறுத்தலே பொடித்து மலர்த்தலே புரட்டி வைத்தலே துவ
ட்டலிற் சுவைக, ளுறுத்தலே முதலா வுற்றபல் லுணவை யொ
ருமல வயிற்றுப்பை யுள்ளே, துறுத்தலே யெனக்குத் தொழி
லெனத் துணிந்தேன் துணிந்தரைக் கணத்தும்வன் பசியைப்,
பொறுத்தலே யறியேன் மலப்புலைக் கூட்டைப் பொறுத்தன
னென்செய்வே னெந்தாய். 167

உண்டியே விழைந்தே னெனினு மென்றன்னை யுடையவா
வடியனே னுனையே, யண்டியே யிருந்தே னிருக்கின்றே னிருப்
பே னப்பநின் னுணைநின் றனக்கே, தொண்டுறு தவர்கைச் சோ
ற்றினை விரும்பேன் றாயனே துணைநினை யல்லாற், கண்டிலே
னென்னைக் காப்பதுன் கடன்காண் கைவிடேல் கைவிடே லெந்
தாய். 168

## அத்துவிதானந்தத் தனுபவவிடையீடு.

கரணமெலாங் கரைந்ததனிக் கரைகாண்ப துளதோ கரை
கண்ட பொழுதெனையுங் கண்டுதெளி வேனோ, அரணமெலாங்
கடந்ததிரு வருள்வெளிநேர் படுமோ வவ்வெளிக்கு ளானந்த
வநுபவந்தா னுறுமோ, மரணமெலாந் தவிர்ந்துசிவ மயமாகி
நிறைதல் வாய்த்திடுமோ மூலமல வாதனையும் போமோ சரண
மெலாந் தரமன்றிற் றிருநடஞ்செய் பெருமான் றனதுதிரு வுள
மெதுவோ சற்றுமறிந் திலனே. 169

## அருள்விளக்கமாலை.

நானென்றுந் தானென்றும் நாடாத நிலையில் ஞானவடி வா
ய்விளங்கும் வானநடு நிலையே, யூனென்று முயிரென்றுங் குறியா
மே முழுது மொருவடிவாந் திருவடிவ முவந்தளித்த பதியே, தே
னென்றுங் கரும்பென்றுஞ் செப்பரிதாய் மனமுந் தேகமுமுள்
ளுயிருணர்வுந் தித்திக்குஞ் சுவையே, வானென்று மொளியென்

றும் வகுப்பரிதாம் பொதுவில் வயங்குநடத் தரசேயென் மாலை யுமேற் றருளே. 170

எட்டிரண்டு மென்னென்றால் மயங்கியவென் றனக்கே யெட்டாத நிலையெல்லா மெட்டுவித்த குருவே, சுட்டிரண்டுங் காட்டாதே துரியநிலை நடுவே சுகமயமாய் விளங்குகின்ற சுத்தபரம் பொருளே, மட்டிதுவென் றறிவதற்கு மாட்டாதே மறைகள் மவுனமுறப் பரம்பரத்தே வயங்குகின்ற வொளியே, தட்டறியாத் திருப்பொதுவி றனிநடஞ்செய் யரசே தாழ்மொழியென் றிகழாதே தரித்துமகிழ்ந் தருளே. 171

பற்றுதலும் விடுதலுமுள் ளடங்குதலு மீட்டும் படுதலொடு சுடுதலும்புண் படுத்தலுமில் லாதே, யுற்றொளிகொண் டோங்கி யெங்குந் தன்மயமாய் ஞான வுருவாகி யுயிர்க்குயிரா யோங்குகின்ற நெருப்பே, சுற்றுதலுந் தோன்றுதலு மறைதலும்வெச் சென்றே சுடுதலுமில் லாதென்றுந் துலங்குகின்ற சுடரே, முற்றுமுணர்ந் தவருளத்தே திருச்சிற்றம் பலத்தே முயங்குநடத் தரசேயென் மொழியுமணிந் தருளே. 172

மெய்ச்சுகமு முயிர்சுகமு மிகுங்கரணச் சுகமும் விளங்குபதச் சுகமுமதன் மேல்வீட்டுச் சுகமு, மெச்சுகமுந் தன்னிடத்தே யெழுந்தசுக மாக வெங்கணுமோர் நீக்கமற வெழுந்தபெருஞ் சுகமே, யச்சுகமு மடையறிவு மடைந்தவருங் காட்டா ததுதானு யதுவதுவா யப்பாலாம் பொருளே, பொய்ச்சுகத்தை விரும்பாத புனிதர்மகிழ்ந் தேத்தும் பொதுநடத்தென் னரசே யென் புகலுமணிந் தருளே. 173

பொறிகரண முதற்பலவாந் தத்துவமு மவற்றைப் புரிந்தியக்கி நடத்துகின்ற பூரணரு மவர்க்குச், செறியுமுப காரிகளாஞ் சத்திகளு மவரைச் செலுத்துகின்ற சத்தர்களுந் தன்னொளியால் விளங்க, அறிவறிவா யவ்வறிவுக் கறிவாயெவ்விடத்து மானதுவாய்த் தானதுவா யதுவதுவாய் நிறைந்தே, நெறிவழங்கப் பொதுவிலருட் டிருநடஞ்செய் யரசே நின்னடியேன் சொன்மாலை நிலைக்கவணிந் தருளே. 174

நால்வருண மாச்சிரம மாசார முதலா நவின்றகலைச் சரிதமெலாம் பிள்ளைவிளை யாட்டே, மேல்வருணந் தோல்வருணங் கண்டறிவா ரிலைநீ விழித்திதுபா ரென்றெனக்கு விளம்பியசற்

குருவே, கால்வருணங் கலையாதே வீணிலலை யாதே காண்பன வெல் லாமெனக்குக் காட்டியமெய்ப் பொருளே, மால்வருணங் கடந்தவரை மேல்வருணத் தேற்ற வயங்குநடத் தரசேயென் மாலையணிந் தருளே. 175

எவ்விடத்து மெவ்வுயிர்க்கு மிலங்குசிவ மொன்றே யென்னுணே யென்மகனே யிரண்டில்லை யாங்கே, செவ்விடத்தே யருளொடுசேர்த் திரண்டெனக்கண் டறிநீ திகைப்படையே லென்றெனக்குச் செப்பியசற் குருவே, அவ்விடத்தே யுவ்விடத்தே யமர்ந்ததுபோற் காட்டி யங்குமிங்கு மப்புறமு மெங்குநிறை பொருளே, ஒவ்விடச்சிற் சபையிடத்தும் பொற்சபையி னிடத்து மோங்குநடத் தரசேயென் னுரையுமணிந் தருளே. 176

## அனுபவநிலை.

நானுனன் றுனுனன் நானுந்தா னும்மானன்
றேனுனன் றெள்ளமுதாய்த் தித்தித்து நிற்கின்றான்
வானுனன் ஞான மணிமன்றி லாடுகின்றான்
கோனுனெ னென்னுட் குலாவுகின்ற கோமானே. 177

## திருப்பள்ளியெழுச்சி.

பொழுது விடிந்ததென் னுள்ளமென் கமலம் பூத்தது பொன்னொளி பொங்கிய தெங்கும், தொழுதுநிற் கின்றனன் செய்பணி யெல்லாஞ் சொல்லுதல் வேண்டுமென் வல்லசற் குருவே, முழுதுமா னெனன வாகம வேத முறைகளெ லாமொழி கின்றமுன் னவனே, யெழுதுத லரியசீ ரருட்பெருஞ் சோதி யென்றந்தை யேபள்ளி யெழுந்தருள் வாயே. 178

துற்குண மாயைபோய்த் தொலைந்தது ஞானந் தோன்றிடப் பொன்னொளிதோற்றிய கதிர்தான், சிற்குண வரைமிசை யுதயஞ்செய் ததுமாசித்திக ளடிப்பணிசெய்திடச் சூழ்ந்த, நற்குணச் சன்மார்க்க சங்கத்தா ரெல்லாம் நண்ணினர் தோத்திரம் பண்ணிநிற் கின்றார், எற்குண வளித்தவென் னருட்பெருஞ் சோதி யென்னம்மையேபள்ளி யெழுந்தருள் வாயே. 179

நிலந் தெளிந்தது கணமமூழ்ங்கின சுவண நீடொளி தோன்றிற்றுக் கோடொலிக் கின்ற, அலர்ந்தது தாமரை யாணவ விருள்போ யழிந்தது கழிந்தது மாயைமா லிரவு, புலர்ந்தது தொ

ண்டரோ டண்டருங் கூடிப் போற்றியோ சிவசிவ போற்றியென் கின்றார், இலங்குரு வளித்தவென் னருட்பெருஞ் சோதி யென் குரு வே பள்ளி யெழுந்தருள் வாயே. 180

கல்லாய மனங்களுங் கரையப்பொன் னொளிதான் கண்டது கங்குலும் விண்டது தொண்டர், பல்லாரு மெய்தினர் பாடிநின் றாடிப் பரவுகின்றாரன்புவிரவுகின் றாராய், நல்லார்மெய்ஞ் ஞானி கள் யோகிகள் பிறரும் நண்ணினர் சூழ்ந்தனர் புண்ணிய நிதி யே, யெல்லாஞ்செய் வல்லவென் னருட்பெருஞ் சோதி யென் றெய்வ மேபள்ளி யெழுந்தருள் வாயே. 181

திருவுந்தியார்.

தூக்கந் தொலைந்தது சூரியன் றோன்றின
னேக்கந் தவிர்ந்தேனென் றுந்தீ பற
வின்னமு துண்டேனென் றுந்தீ பற. 182

துன்பந் தவிர்ந்தது தூக்கந் தொலைந்தது
இன்பங் கிடைத்ததென் றுந்தீ பற
வெண்ணம் பலித்ததென் றுந்தீ பற. 183

ஞானமுதித்தது நாத மொலித்தது
தீனந் தவிர்ந்ததென் றுந்தீ பற
சிற்சபை கண்டேனென் றுந்தீ பற. 184

திரையற்று விட்டது செஞ்சுடர் தோன்றிற்று
பரையொளி யோங்கிற்றென் றுந்தீ பற
பலித்தது பூசையென் றுந்தீ பற. 185

உள்ளிரு ணீங்கிற்றென் னுள்ளொளி யோங்கிற்றுத்
தெள்ளமு துண்டேனென் றுந்தீ பற
தித்திக்க வுண்டேனென் றுந்தீ பற. 186

தலைவிபாங்கிக்குரைத்தல்.

வேதாந்த நிலையொடு சித்தாந்த நிலையுமேவும் பொதுநட நான் காணல் வேண்டும், நாதாந்தத் திருவீதி நடப்பாயோ தோழி நடவாம லென்மொழி கடப்பாயோ தோழி. 187

தொம்பத வுருவொடு தற்பத வெளியிற் றோன்றசி பதநட நான் காணல் வேண்டும், எம்பத மாகி யிசைவாயோ தோழி யிசையாமல் வீணிலே யசைவாயோ தோழி. 188

சின்மய வெளியிடைத் தன்மய மாகித் திகழும் பொதுநட நான் காணல் வேண்டும், என்மய மாகி யிருப்பாயோ தோழி யிச்சை மயமா யிருப்பாயோ தோழி. 189

நவநிலை மேற்பர நாதத் தலத்தே ஞானத் திருநடநான் காணல் வேண்டும், மவுனத்திருவீதி வருவாயோ தோழி வாராமல் வீண்பழி தருவாயோ தோழி. 190

ஆறுறுக் கப்புற மாகும் பொதுவி லதுவது வாநடம்நான் காணல் வேண்டும், ஏறுமவிழியாம விருப்பாயோ தோழி யேறி யிழிந்திங் கிறப்பாயோ தோழி. 191

வகார வெளியிற் சிகார வுருவாய் மகார திருநடநான் காணல் வேண்டும், விகார வுலகை வெறுப்பாயோ தோழி வேறாகி யென்சொல் மறுப்பாயோ தோழி. 192

நாதாந்த நிலையொடு போதாந்த நிலைக்கு நடுவாய் பொது நடநான் காணல் வேண்டும், சூதாந்தற் போதத்தைச் சுடுவாயோ தோழி துட்ட நெறியிற் கெடுவாயோ தோழி. 193

அறிவி லறிவை யறியும் பொதுவி லானந்தத் திருநடநான் காணல் வேண்டும், செறிவி லறிவாகிச் செல்வாயோ தோழி செல்லாமல் மெய்ந்நெறி வெல்வாயோ தோழி. 194

என்னைத்தன் னோடே யிருத்தும் பொதுவிலின் பத்திருநட நான் காணல் வேண்டும், நின்னைவிட் டென்னோடே நிலைப்பாயோ தோழி நிலையாமலென்னையு மலைப்பாயோ தோழி. 195

துரியத்திற் கப்பாலுந் தோன்றும் பொதுவில் சோதித் திருநடநான் காணல் வேண்டும், கரியைக்கண் டாங்கது காண்பாயோ தோழி காணாது பொய்ப்பணி பூண்பாயோ தோழி. 196

தத்துவத் துட்புறந் தானும் பொதுவிற் சத்தாந் திருநட நான் காணல் வேண்டும், கொத்தறு வித்தைக் குறிப்பாயோ தோழி குறியா துலகில் வெறிப்பாயோ தோழி. 197

## தலைவிவருந்தல்.

பருவமிலாக் குறையாலோ பகுதிவகை யாலோ பழக்கமிலாமையினாலோ படிற்றுவினை யாலோ, இருவகைமா யையினாலோ வாணவத்தி னாலோ என்னாலோ பிறராலோ வெதனாலோ வறி

யேன், சருவலொழிந் தென்மனமாம் பாங்கிபகை யானுள் தனி த்தபரை யெனும்வளர்த்த தாயுமுகம் பாராள், நிருபமடப் பெண்களெலாம் வலதுகொழிக் கின்றார் நிபுணரெங்க ணடராஜர் நினைவையறிந் திலனே. 198

அனுபவமாலை.

கண்ணுறங்கே னுறங்கினுமென் கணவரொடு கலக்குங் கன வேகண் டுளமகிழ்வேன் கனவொன்றோ நனவும், எண்ணடங்காப் பெருஞ்சோதி யென்னிறைவ ரெனையே யிணைந்திரவு பகல்காணு தின்புறச்செய் கின்றார், மண்ணுறங்கு மலையுறங்கு மலைகடலு முறங்கு மற்றுளவெல் லாமுறங்கும் மாநிலத்தே நமது, பெண் ணுறங்கா ளெனத்தாயர் பேசிமகிழ் கின்றார் பெண்களெலாங் கூசுகின்றார் பெருந்தவஞ்செய் கிலரே. 199

கண்கலந்த கணவரெனைக் கைகலந்த தருணங் கண்டறியே னென்னையுமென் கரணங்க டனையு, மெண்கலந்த போகமெலாஞ் சிவபோகந் தனிலோ ரிறையளவென் றுரைக்கின்ற மறையளவி ன் றறிந்தேன், விண்கலந்த திருவாள ருயிர்கலந்த தருணம் வி னைத்துயர்தீர்ந் தடைந்தசுக நினைத்திடுந்தோ றெல்லாம், உண் கலந்த வானந்தப் பெரும்போக மப்போ தூற்றதென வெனைவி ழுங்க கற்றதுகாண் டோழி. 200

மாடமிசை யோங்குநிலா மண்டபத்தே யெனது மணவா ளர் கொடுத்ததிரு வருளமுத மகிழ்ந்தே, ஏடவிழ்பூங் குழலா ய்நா னுண்டதொரு தருண மென்னையறிந் திலனுலகந் தன்னை யுநா னறியேன், தேடரிய நறும்பாலுந் தேம்பாகு நெய்யுந் தே னுமொக்கக் கலந்ததெனச் செப்பினுஞ் சாலாதே, ஈடறியாச் சுவைபுகல வென்னாலே முடியா தென்னடியோ வவ்வமுதம் பொன்னடிதா னிகரே. 201

கற்பூர மணக்கின்ற தென்னுடம்பு முழுதுங் கணவர்திரு மேனியிலே கலந்தமண மதுதான், இற்பூத மணம்போலே மறை வதன்று கண்டா யியற்கைமணந் துரியநிறை யிறைவடிவத் துள தே, பொற்பூவு நறுமணமுங் கண்டறியா ருலகர் புண்ணியனார் திருவடிவி னண்ணியவா றதுவே, நற்பூதி யணிந்ததிரு வடிவுமுற் றுந் தோழி நான்கண்டே னுன்புணர்ந்தே னுனதுவா னேனே.

கள்ளுண்டா ளெனப்புகன்றார் கனகசபை நடுவே கண்டதுண்டு சிற்சபையி லுண்டதுமுண் டடிநான், எள்ளுண்ட பலவிடயத் திறக்குங்கள் ளன்றே யென்றுமிற வாநிலையி லிருத்துங்கள் ளுலகர், உள்ளுண்ட போதுமயக் குற்றிடுங்கள் ளலவே யுள்ளமயக் கனைத்தினையு மொழித்திடுங்கள் மடவா, யள்ளுண்ட பிறருமெனை யடுத்தடுத்துக் கண்டா லறிவுதரு மவர்க்கு மிங்கே யானுண்ட கள்ளே. 203

மனையணைந்து மலரணைமே லெனையணைந்த போது மணவாளர் வடிவென்று மெனதுவடி வென்றாந், தனைநினைந்து பிறித்தறிந்த தில்லையடி யெனைத்தான் சற்றுமறி யேனெனில்யான் மற்றறிவ தென்னே, தினையளவா யினும்விகற்ப வுணர்ச்சியென்ப திலையே திருவாளர் கலந்தபடி செப்புவதெப் படியோ, உனையணைந்தா லிவ்வாறு நான்கேட்டே னப்போ துன்னறிவு மென்னறிவு மோரறிவாங் காணே. 204

என்னிருகண் மணியனையா ரென்னுயிர்நா யகனா ரென்னுயிருக்குமுதா னாரெல்லாஞ்செய் வல்லார், பொன்னணிபொற் சபையாளர் சிற்சபையா ரென்னைப் புறம்புணர்ந்தா ரகம்புணர்ந்தார் புறத்தகத்தும் புணர்ந்தார், அன்னையரல் லடியவரே யெனதுகுல தெய்வ மருந்தவத்தாற் கிடைத்தகுரு வாகுமதுமட்டோ, மன்னுறுமென் றனித்தாயுந் தந்தையுமங் கவரே மக்கள்பொருள் மிக்கதிரு வொக்கலுமங் கவரே. 205

சுற்றறியே னிருந்திருந்திங் கதிசயிப்ப தென்னீ யென்கின்றாய் நீயெனைவிட் டெங்குமொரு நான்றான், காற்றறியாத் தீபம்போ லிருந்திடுமத் தருணங் கண்டபரி சென்புகல்வே னண்டபகிரண்டந், தோற்றறியாப் பெருஞ்சோதி மலைபரநா தத்தே தோன்றியதாங் கதநமேவ தோன்றியதொன் றதுதான், மாற்றறியாப் பொன்னொளியோ வவ்வொளிக்குள் ளாடும் வள்ளலரு ளொளியோவீ ததிசயிக்கும வகையே. 206

தமையறியா ரெல்லாரும் புறத்திருக்க நான்போய்ச் சபைநடுங்கண் டுளங்களிக்குந் தருணத்தே தலைவர், இமையறியா விழியுடையா ரெல்லாருங் காண வினாநகைமங் களமுகத்தே தளதளவென் றொளிர, எமையறிந்தா யென்றெனது கைபிடித்தார் நானுமென்னை மறந்தென்னிறைவர் கால்பிடித்துக் கொண்டேன்

சுமையறியாப் பேரறிவே வடிவாகி யழியாச் சுகம்பெற்று வாழ்க வென்றார் கண்டாயென் றோழி. 207

தூங்குகநீ யென்கின்றாய் தூங்குவனோ வெனது துரைவருமோர் தருணமிதிற் றூக்கமுந்தான் வருமோ, ஈங்கினிநான் றனித்திருக்க வேண்டுவதா தலினா லென்னுடைய தூக்கமெலா நின்னுடைய தாக்கி, ஏங்கலறப் புலத்தேபோய்த் தூங்குகநீ தோழி யென்னிருகண் மணியனையா ரெனையணைந்த வுடனே, ஓங்குறவே நானவரைக் கலந்தவரும் நானு மொன்றான பின்னருனை யெழுப்புகின்றே னுவந்தே. 208

ஐயமுறேல் காலையில்யாம் வருகின்றோ மிதுநம் மாணையென்றா ரவராணை யருளாணை கண்டாய், வெய்யருளத் தேபுகுதப் போனதிரு ளிரவு விடிந்ததுநற் சுடருதய மேவுகின்ற தருணந், தையலினி நான்றனிக்க வேண்டுவதா தலினாற் சற்றேயப் புறத்திருநீ தலைவர்வந்த வுடனே, உய்யவிங்கே நானவரைக் கலந்தவரு நானு மொன்றான பின்னருனை யழைக்கின்றே னுவந்தே.

மன்றுடையா ரென்கணவ ரென்னுயிர்நா யகனார் வாய்மலர்ந்த மணிவார்த்தை மலையிலக்காந் தோழி, துன்றியபே ரிருளெல்லாந் தொலைந்ததுபன் மாயைத் துகளொளிமா மாயைமதி யொளியொடுபோ யினவால், இன்றருளாம் பெருஞ்சோதி யுதயமுற்ற ததனா லினிச்சிறிது புறத்திருநீ யிறைவர்வந்த வுடனே, ஒன்றுடையே னனவரைக் கலந்தவரு நானு மொன்றான பின்னருனை யழைக்கின்றே னுவந்தே. 210

வைகறையீ தருளுதயந் தோன்றுகின்ற தெனது வள்ளல்வரு தருணமினி வார்த்தை யொன்றானும், சைகரையே லிங்கனநான் றனித்திருத்தல் வேண்டுந் தாழ்குழல்நீ யாங்கே போய்த் தத்துவப்பெண் குழுவில், பொய்கரையா துள்ளபடி புகழ்பேசி யிருநீ புத்தமுத மளித்தவருட் சித்தர்வந்த வுடனே, உய்கரைவாய் நானவரைக் கலந்தவரு நானு மொன்றான பின்னருனை யழைக்கின்றே னுவந்தே. 211

காலையிலே வருகுவரென் கணவரென்றே நினக்குக் கழறினனென்னலது காதிலுற்ற திலையோ, வேலையிலா தவள்போலே

வம்பளக்கின் றாய்நீ விடிந்ததுநான் றனித்திருக்க வேண்டுவதாதலினால், சோலையிலே மலர்கொய்து தொடுத்துவந்தே புறத்திற் சூழ்ந்திருப்பாய் தோழியென்றன் றுணைவர்வந்த வுடனே, ஓலையுரு தியானவரைக் கலந்தவரு நானு மொன்றான பின்னருனை யழைக்கின்றே னுவந்தே. 212

விடிந்ததுபே ராணவமாங் காரிருணீங் கியது வெய்யவினைத் திரளெல்லாம் வெந்ததுகாண் மாயை, ஒடிந்ததுமா மாயையொழிந் ததுதிரைதீர்ந் ததுபே ரொளியுதயஞ் செய்ததினித் தலைவர்வரு தருணந், திடம்பெறநான் றனித்திருக்க வேண்டுவதாதலினால் தேமொழிநீ புறத்திருமா தேவர்வந்த வுடனே. உடம்புறவே நானவரைக் கலந்தவரு நானு மொன்றான பின்னருனை யழைக்கின்றே னுவந்தே. 213

மாலையிலே யுலகியலார் மகிழ்நரொடு கலத்தல் வழக்கமது கண்டனநீ மணவாள ருடனே, காலையிலே கலப்பதற்கிங் கெனைப்புறம்போ வென்றாய் கண்டிலனீ ததிசயமென் றுரையேயென் றோழி, ஓலையிலே பொறித்ததைநீ யுன்னுளத்தே கருதி யுழல்கின்றா யாதலிலிவ் வுளவறியாய் தருமச், சாலையிலே சமரசசன் மார்க்கசங்கந் தனிலே சற்றிருந்தா யெனிலிதனை யுற்றுணர்வாய் காணே. 214

என்னுடைய தனித்தோழி யிதுகேள்நீ மயங்கே லெல்லாஞ்செய் வல்லவரென் னின்னுயிர்நா யகனார், தன்னுடைய திருத்தோளை நான்றழுவுந் தருணந் தனித்தசிவ சாக்கிரமென் றினித்தநிலை கண்டாய், பன்னுமிந்த நிலைபரசாக் கிரமாக வுணரேல் பகர்பரசாக் கிரமடங்கும் பதியாகும் புணர்ந்து, மன்னுநிலை மற்றிரண்டுங் கடந்தகுரு துரிய மாநிலையென் றுணர்கவொளிர் மேனிலையி லிருந்தே. 215

நான்புகலு மொழியிதுகே ளென்னுடை யதோழி நாயகனார் தனியுருவ நான்றழுவுந் தருணம், வான்புகழுஞ் சுத்தசிவ சாக்கிரமென் றுணர்ந்தோர் வழுத்துநிலை யாகுமுறச் சுவைகலந்தே யதுவாய், தேன்கலந்த சுவையொடுநன் மணிகலந்த வொளியாய்த் திரிபின்றி யியற்கையின்பச் சிவங்கலந்த நிலையே, தான்புகல்மற் றையமூன்றுங் கடந்தப்பா லிருந்த சாக்கிரா தீதமென தனித்துணர்ந்து கொள்ளே. 216

புணர்ச்சி யவர்தாஞ் செய்ததரு ணச்சுகத்தைச் செப்புவதெப் படியோ, பிறப்புணர்ச்சி விடயமிலே சுத்தசிவா னந்தப் பெரு ம்போகப் பெருஞ்சுகந்தான் பெருகியெங்கு நிறைந்தே, மறப் புணர்ச்சி யில்லாதே நானதுவா யதுவென் மயமாய்ச்சின் மய மாய்த்தன் மயமான நிலையே. 226

சற்குருமணிமாலை.

தத்துவ மசிநிலை யிதுவிது தானே சத்தியங் காணெனத் த னித்துரைத் தெனக்கே, யெத்துவந் தனைகளு நீக்கிமெய்ந் நிலைக் கே யேற்றிநா னிறவாத வியலளித் தருளாற், சித்துவந் துலகங் களெவற்றினு மாடச் செய்வித்த பேரருட் சிவபரஞ் சுடரே, ச த்துவ நெறிதரு வடலருட் கடலே தனிநட ராஜவென் சற்குரு மணியே. 227

இதுபதி யிதுபொரு ளிதுசுக மடைவா யிதுவழி யெனவெ னக் கியல்புற வுரைத்தே, விதுவமு தொடுசிவ வமுதமு மளித் தே மேனிலைக் கேற்றிய மெய்ந்நிலைச் சுடரே, பொதுநட மிடுகின் ற புண்ணியப் பொருளே புரைபறு முளத்திடைப் பொருந்திய மருந்தே, சதுமறை முடிகளின் முடியுறு சிவமே தனிநட ராஜ வென் சற்குரு மணியே. 228

காரண மிதுபுரி காரிய மிதுமேற் காரண காரியக் கருவிது பலவா, யாரண மாகம மிவைவிரித் துரைத்தே யளந்திடு நீயவை யளந்திடன் மகனே, பூரணநிலையனு பவமுறிற் கணமாம் பொழு தினி லறிதியப் பொருணிலை களுமே, தாரணி தனிலென்ற தயவு டை யரசே தனிநட ராஜவென் சற்குரு மணியே. 229

தான்பெற்றபேறு.

திருவளர்பே ரருளுடையான் சிற்சபையா னெல்லாஞ்செய்ய வல்ல தனித்தலைமைச் சித்தனெல்லா முடையான், உருவமுமா யருவமுமா யுபயமுமாயலவா யோங்குமருட் பெருஞ்சோதியொ ருவனுண்டே யவன்றன்,பெருமையினா லெனையீன்ற னொருவ ன்றனே பிள்ளையவன் பிள்ளையெனப் பெரியரெலா மறிவார், இருமையுறு தத்துவர்கா ளென்னையறி யீரோ வீங்குமதுதுள் ளலெலா மேதுநட வாதே. 230

மனமெனுமோர் பேய்க்குரங்கு மடப்பயலே நீதான் மற்றவர்போ லெனைநினைத்து மருட்டாதே கண்டாய், இனமுறவென் சொல்வழியே யிருத்தியெனிற் சுகமா யிருந்திடுநீ யென்சொல்வழி யேற்றிலையா னாலோ, தினையளவுன் னதிகாரஞ் செல்லவொட்டே னுலகஞ் சிரிக்கவுனை யடக்கிடுவேன் றிருவருளாற் கணத்தே, நனவிலெனை யறியாயோ யாரெனவிங் கிருந்தாய் ஞானசபைத் தலைவனுக்கு நல்லபிள்ளை நானே. 231

பன்முகஞ்சேர் மனமெனுமோர் பரியாசப் பயலே பதையாதே சிதையாதே பார்க்குமிட மெல்லாங், கொன்முகங்கொண் டடிக்கடிபோய்க் குதியாதே யெனது குறிப்பின்வழி நின்றிடுநின் குதிப்புநட வாது, என்முனமோர் புன்முனையே யிருந்தபனித் துளிநீ யிம்மெனுமுன் னடக்கிடுவே னென்னையறி யாயோ, பின்முன்னென நினையேல்காண் சிற்சபையி னடிக்கும் பெரியதனித் தலைவனுக்குப் பெரியபிள்ளை நானே. 232

விரிந்தமன மெனுஞ்சிறிய விளையாட்டுப் பயலே விரிந்துவிரிந் தலையாதே மெலியாதே விடயம், புரிந்தநெறி புரிந்தவமே போகாதே பொறிவாய்ப் புரையாதே விரையாதே புகுந்துமயங் காதே, தெரிந்துதெளிந் தொருநிலையிற் சித்திரம்போ லிருநீ சிறிதசைந்தா லக்கணமே சிதைத்திடுவேன் கண்டாய், பரிந்தெனைநீ யாரென்று பார்த்தாய்சிற் சபைவாழ் பதிதனக்கே யருட்பட்டம் பலித்தபிள்ளை நானே. 233

பாய்மனமென் றுரைத்திடுமோர் பராய்முருட்டுப் பயலே பலபொறியாம் படுக்காளிப் பயல்களொடுங் கூடிச், சேய்மையினு மண்மையினுந் திரிந்தோடி யாடித் தியங்காதே யொருவார்த்தை திருவார்த்தை யெனவே, ஆய்வுறக்கொண் டடங்குகநீ யடங்கிலையே லுனைத்தா னடியொடுவே ரறுத்திடுவே னுணையருளாணை, பேய்மதியா நீயெனைத்தா னறியாயோ வெல்லாம் பெற்றவன்றன் செல்வாக்குப் பெற்றபிள்ளை நானே. 234

மயங்குபுத்தி யெனுமுலக வழக்காளிப் பயலே வருதுறையீ தென்றறியாய் வகைசிறிது மறியாய், உயங்கிவிசா ரித்திடவே யோடுகின்ற யுணரு முளவறியாய் வீணுழைப்பிங் குழைப்பதிலென் பயனே, வயங்குமன மடங்கியவா றடங்குகநீ யிலையேல் மடித்திடுவேன் கணத்திலுனை வாய்மையிது கண்டாய், இயங்க

வென்னை யறியாயோ யாரெனவெண் ணினையோ வெல்லாஞ் செய் வல்லவனுக் கினியபிள்ளை நானே. 235

கலையறியாச் சித்தமெனுங் கனமோசப் பயலே காலறியாய் தலையறியாய் காண்பனகண் டறியாய், நிலையறியா யொன்றை யொன்றா நிச்சயித்திவ் வுலகை நெறிமயங்க மயக்குகின்றாய் நீ யோவிங் குறுவாய், அலையறியாக் கடல்போலே யசைவறநின் றிடுநீ யசைவாயே லரைக்கணத்தே யடக்கிடுவே னுனைத்தான், அலைவறிவா யென்றனைநீ யறியாயோ நான்றா னண்டவன்றன் றாண்டவங்கண் டமர்ந்தபிள்ளை காணே. 236

அகங்கார மெனும்பொல்லா வடவாதிப் பயலே யடுக்கடுக்கா யெடுக்கின்றா யடுத்துமுடுக் கின்றாய், செகங்காணத் தலைகாலுந் தெரியாம லலைந்து திரிகின்றாய் நின்செபந்தான் சிறிதுநடவாது, இகங்காண வடங்குகநீ யடங்காயேற் கணத்தே யிருந்தவிடந் தெரியாதே யெரிந்திடச்செய் திடுவேன், சுகங்காண வென்றனைநீ யறியாயோ நான்றான் சுத்தசிவ சன்மார்க்கம் பெற்றபிள்ளைகாணே. 237

மானெனுமோர் சகசாலச் சிறுக்கியிது கேளாய் வஞ்சகக்கூத் தெல்லாமோர் மூட்டையெனக் கட்டி, ஈனமுற நின்றலைமே லேற்றெடுத்துக் கொண்டுன் னேவல்புரி பெண்களொடே யிவ்விடம்விட் டேகிக், கானடைந்து கருத்தடங்கப் பிழைத்திடுநீ யிலையேல் கணத்திலுனை மாய்ப்பேனுன் கணத்திலொடுங் கண்டாய், ஏனெனைநீ யறியாயோ சிற்சபையி னடஞ்செ யிறைவனருட் பெருஞ்சோதிக் கினியபிள்ளை நானே. 238

மாயையெனும் படுதிருட்டுச் சிறுக்கியிது கேளாய் மாயையெலாஞ் சுமைசுமையா வரிந்துகட்டிக் கொண்டுன், சாயையெனும் பெண்ணினத்தார் தலைமேலும் வுனது தலைமேலுஞ் சுமந்துகொண்டோர் சந்துவழி பார்த்தே, பேயெனக்காட் டிடையேயோடிப் பிழைத்திடுநீ யிலையேல் பேசுமுன்னே மாய்த்திடுவேன் பின்னுமுன்னும் பாரேன், ஆயெனைநீ யறியாயோ வெல்லாஞ் செய் வல்லா ரருளமுதுண் டருணிலைமே லமர்ந்தபிள்ளை நானே.

மாமாயை யெனும்பெரிய வஞ்சகிநீ யிதுகேள் வரைந்தவுன்றன் பரிசனப்பெண் வகைதொகைக ளுடனே, போயுன்றன் செயலனைத்தும் பூரணமாக் கொண்டுபோனவழி தெரியா தேபோய்

பிழைநீ யிலையேல், சாமாறுன் றனையின்றே சாய்த்திடுவே னிது தான் சத்தியமென் றெண்ணுதியென் றன்னையறி யாயோ, ஆ மாறு சிற்சபையி லருணடனம் புரிவா லருளமுதுண் டருணிலை மே லமர்ந்தபிள்ளை நானே. 240

கன்மமெனும் பெருஞ்சிறுகுக் கடுங்கலகப் பயலே கங்குக ரை காணுத கடல்போலே வினைகள், நன்மையொடு தீமையென ப் பலவிகற்பங் காட்டி நடத்தினைநின் னடத்தையெல்லாஞ் சிறி துநடவாது என்முனிருந் தனையெனினீ யழிந்திடுவா யதனு லி க்கணத்தே நின்னினத்தோ டேகுகநீ யிலையேல், இன்மையுற மா ய்த்திடுவே னென்னையறி யாயோ வெல்லாஞ்செய் வல்லவனுக் கினியபிள்ளை நானே. 241

எத்துணையுங் காட்டாத வாணவமென் றிடுமோ ரிருட்ட றைக்கோ ரதிகாரக் குருட்டுமுடப் பயலே, இத்தனைநாள் பிடி த்ததுனைக் கண்டுதுரத் திடவே யின்னுமரைக் கணந்தரியே னி க்கணத்தே நினது, பொத்தியசுற் றத்துடனே போய்விடுதி யி லையேல் பூரணமெய் யருளொளியாற் பொன்றுவிப்பே னினையே, சத்தியஞ்சொன் னேனெனைநீ யறியாயோ ஞான சபைத்தலைவ ன் றருதலைமைத் தனிப்பிள்ளை நானே. 242

பெருமாயை யென்னுமொரு பெண்பிள்ளை நீதான் பெற்ற வுடம் பிதுசாகாச் சுத்தவுடம் பாக்கி, யொருஞானத் திருவமு துண் டோங்குகின்றே னினிநின் னுபகரிப்போ ரணுத்துணையு மு ளத்திடைநான் விரும்பேன், அருளாய சோதியெனக் குபகரிக் கின் றதுநீ யறியாயோ வென்னளவி லமைகவய லமர்க, தெரு ளாய வுலகிடையென் சரிதமுணர்ந் திலையோ சிற்சபையென் னப்பனுக்குச் சிறந்தபிள்ளை நானே. 243

பேசுதிரோ தாயியெனும் பெண்மடவா யிதுகேள் பின்முன றி யாதெனைநீ யென்முன்மறைக் காதே, வேசறமா மலவிரவு மு ழுதும்விடிந் ததுகாண் வீசுமருட் பெருஞ்சோதி விளங்குகின் ற தறிநீ, ஏசுறுநின் செயலனைத்து மென்னளவி னடவா திதை யறிந்து விரைந்தெனைவிட் டேகுகவிக் கணத்தே, மாசறுமென் சரிதமொன்றுந் தெரிந்திலையோ வெல்லாம் வல்லவொரு சித்தரு க்கே நல்லபிள்ளை நானே. 244

வென்னை யறியாயோ யாரெனவெண் ணினையோ வெல்லாஞ் செய் வல்லவனுக் கினியபிள்ளை நானே. 235

கலையறியாச் சித்தமெனுங் கனமோசப் பயலே காலறியாய் தலையறியாய் காண்பனகண் டறியாய், நிலையறியா யொன்றை யொன்ரு நிச்சயித்திவ் வுலகை நெறிமயங்க மயக்குகின்ருய் நீ யோவிங் குறுவாய், அலையறியாக் கடல்போலே யசைவறநின் றிடுநீ யசைவாயே லரைக்கணத்தே யடக்கிடுவே னுனைத்தான், அலைவறிவா யென்றனைநீ யறியாயோ நான்ருனுண்டவன்றன் ருண்டவங்கண் டமர்ந்தபிள்ளை காணே. 236

அகங்கார மெனும்பொல்லா வடவாதிப் பயலே யடுக்கடுக்கா யெடுக்கின்ரு யடுத்துமுடுக் கின்ருய், செகங்காணத் தலைகாலுந் தெரியாம லலைந்து திரிகின்ருய் நின்செபந்தான் சிறிதுநடவாது, இகங்காண வடங்குகநீ யடங்காயேற் கணத்தே யிருந்தவிடந் தெரியாதே யெரிந்திடச்செய் திடுவேன், சுகங்காண வென்றனைநீ யறியாயோ நான்ருன் சுத்தசிவ சன்மார்க்கம் பெற்றபிள்ளைகாணே. 237

மானெனுமோர் சகசாலச் சிறுக்கியிது கேளுன் வஞ்சகக்கூத் தெல்லாமோர் மூட்டையெனக் கட்டி, ஈனமுற நின்றலைமே லேற்றெடுத்துக் கொண்டுன் னேவல்புரி பெண்களொடே யிவ்விடம்விட் டேகிக், கானடைந்து கருத்தடங்கிப் பிழைத்திடு நீ யிலையேல் கணத்திலுனை மாய்ப்பேனுன் கணத்தினொடுங் கண்டாய், ஏனெனைநீ யறியாயோ சிற்சபையி னடஞ்செ யிறைவனருட் பெருஞ்சோதிக் கினியபிள்ளை நானே. 238

மாயையெனும் படுதிருட்டுச் சிறுக்கியிது கேளுன் மாயையெலாஞ் சுமைசுமையா வரிந்துகட்டிக் கொண்டுன், சாயையெனும் பெண்ணினத்தார் தலைமேலும் வுனது தலைமேலுஞ் சுமந்துகொண்டோர் சந்துவழி பார்த்தே, பேயெனக்காட் டிடையோடிப் பிழைத்திடுநீ யிலையேல் பேசுமுன்னே மாய்த்திடுவேன் பின்னுமுன்னும் பார்ரேன், ஆயெனைநீ யறியாயோ வெல்லாஞ் செய் வல்லா ரருளமுதுண் டருணிலைமேலமர்ந்தபிள்ளை நானே.

மாமாயை யெனும்பெரிய வஞ்சகிநீ யிதுகேள் வரைந்தவுன்றன் பரிசனப்பெண் வகைதொகைக ளுடனே, போமாறுன் செயலனைத்தும் பூரணமாக் கொண்டுபோனவழி தெரியாதே போய்

பிழைநீ யில்லையேல், சாமாறுன் றனையின்றே சாய்த்திடுவே னிது
தான் சத்தியமென் றெண்ணுதியென் றன்னையறி யாயோ, ஆ
மாறு சிற்சபையி லருணடனம் புரிவா லருளமுதுண் டருணிலை
மே லமர்ந்தபிள்ளை நானே. 240

கன்மமெனும் பெருஞ்சிலுகுக் கடுங்கலகப் பயலே கங்குக
ரை காணாத கடல்போலே வினைகள், நன்மையொடு தீமையென
ப் பலவிகற்பங் காட்டி நடத்தினைநின் னடத்தையெல்லாஞ் சிறி
துநடவாது, என்முனிருந் தனையெனினீ யழிந்திடுவா யதனா லி
க்கணத்தே நின்னினத்தோ டேகுகநீ யில்லையேல், இன்மையுற மா
ய்த்திடுவே னென்னையறி யாயோ வெல்லாஞ்செய் வல்லவனுக்
கினியபிள்ளை நானே. 241

எத்துணையுங் காட்டாத வாணவமென் றிடுமோ ரிருட்ட
றைக்கோ ரதிகாரக் குருட்டுமுடப் பயலே, இத்தனைநாள் பிடி
த்ததுனைக் கண்டுதுரத் திடவே யின்னுமரைக் கணந்தரியே னி
க்கணத்தே யினது, பொத்தியசுற் றத்துடனே போய்விடுதி யி
லையேல் பூரணமெய் யருளொளியாற் பொன்றுவிப்பே னினையே,
சத்தியஞ்சொன் னேனெனைநீ யறியாயோ ஞான சபைத்தலைவ
ன் றருதலைமைத் தனிப்பிள்ளை நானே. 242

பெருமாயை யென்னுமொரு பெண்பிள்ளை நீதான் பெற்ற
வுடம் பிதுசாகாச் சுத்தவுடம் பாக்கி, யொருஞானத் திருவமு
துண் டோங்குகின்றே னினிநின் னுபகரிப்போ ரணுத்துணையு மு
ளத்திடைநான் விரும்பேன், அருளாய சோதியெனக் குபகரிக்
கின் றதுநீ யறியாயோ வென்னளவி லமைகவய லமர்க, தெரு
ளாய வுலகிடையென் சரிதமுணர்ந் திலையோ சிற்சபையென்
னப்பனுக்குச் சிறந்தபிள்ளை நானே. 243

பேசுதிரோ தாயியெனும் பெண்மடவா யிதுகேள் பின்முன
றி யாதெனைநீ யென்முன்மறைக் காதே, வேசறமா மலவிரவு மு
ழுதும்விடிந் ததுகாண் வீசுமருட் பெருஞ்சோதி விளங்குகின்
ற தறிநீ, ஏசுறாநின் செயலனைத்து மென்னளவி னடவா திதை
யறிந்து விரைந்தெனைவிட் டேகுகவிக் கணத்தே, மாசறுமென்
சரிதமொன் றுந் தெரிந்திலையோ வெல்லாம் வல்லவொரு சித்தரு
க்கே நல்லபிள்ளை நானே. 244

தூக்கமெனுங் கடைப்பயலே சோம்பேறி யிதுகேள் துணி ந்துனது சுற்றமொடு சொல்லுமவரைக் கணத்தே, தாக்குபெருங் காட்டகத்தே யேகுகநீ யிருந்தால் தப்பாதுன் றலைபோகுஞ் ச த்தியமீ தறிவாய், ஏக்கமெலாந் தவிர்த்துவிட்டே னூக்கமெலாம் பெற்றே னின்பமுறு கின்றேனீ யென்னையடை யாதே, போக்கி ல்விரைந் தோடுகநீ பொற்சபைசிற் சபைவாழ் பூரணர்க்கிங் கன் பான பொருளனென வறிந்தே. 245

பயமெனுமோர் கொடும்பாவிப் பயலேநீ யிதுகேள் பற்றறவெ ன் றனைவிடுத்துப் பனிக்கடல்வீழ்ந் தொளிப்பாய், நயவினுரை த் தேனின்னு மிருத்தியெனி லுன்றன் றலைதனக்குத் தீம்புவருந் தலைமட்டோ நினது, செயலுறமுள் ளுடம்பழியுஞ் சுற்றமெலா மிறக்குந் தீர்ந்ததினி யில்லையென்றே திருவார்த்தை பிறக்கும், அ யலிடைநேர்ந் தோடுகநீ யென்னையறி யாயோ வம்பலத்தென் ன ப்பனருணம்புபிள்ளை நானே. 246

கோபமெனும் புலைப்பயலே காமவலைப் பயலே கொடுமோ கக் கடைப்பயலே குறும்புமதப் பயலே, தாபவுலோ பப்பயலே மாற்சரியப் பயலே தயவுடனிங் கிசைக்கின்றேன் றாழ்த்திருக்கா தீர்காண், தீபமெலாங் கடந்திருள்சேர் நிலஞ்சாரப் போவீர் சி றிதுபொழு திருந்தாலுந் திண்ணமிங்கே யழிவீர், சாபமுறு மு ன்னமறிந் தோடுமினோ வென்னைத் தானறியீர் தனித்தலைவன் றலைப்பிள்ளை நானே. 247

பசியெனுமோர் பெரும்பாவிப் பயலேதுன் பெனுமோர் படு பாவிப் பயலேயா பத்தெனும்பொய்ப் பயலே, வசியவத்தைக் க டைப்பயலே தடைப்பயலே யிடராம் வன்பயலே நீவிரெலா மென்புடைநில்லாதீர், நசியவுமக் குளமுளதோ விக்கணத்தே நீவிர் நடந்துவிரைந் தோடுமினோ நாடறியா வனத்தே, கசியும னத்தென்னையறியீர் சிற்சபையில் விளங்குங் கடவுள்மகிழ்ந் தளி த்ததனிக் கதிர்ப்பிள்ளை நானே. 248

மரணமெனும் பெருந்திருட்டு மாபாவிப் பயலே வையகமு ம் வானகமு மற்றகமுங் கடந்தே, பரணமுறு பேரிருட்டுப் பெரு நிலமுந் தாண்டி பசையறநீ யொழிந்திடுக விங்கிருந்தா யெனி லோ, இரணமுற வுனைமுழுது மடித்திடுவே னிதுதா னென்னு டையா னருளாணை யென்குருமே லாணை, அாணுறுமென் றனை

விடுத்தே யோடுகநீ நான்ற னருட்பெருஞ்சோ திப்பதியை ய
டைந்தபிள்ளை காணே.
249

### உறுதிகூறல்.

வட்டிமேல் வட்டிகொள் மார்க்கத்தில் நின்றீர் வட்டியை வ
ளர்க்கின்ற மார்க்கத்தை யறியீர், பெட்டிமேல் பெட்டிவைத் தா
ள்கின்றீர் வயிற்றுப் பெட்டியை நிரப்பிக்கொண் டொட்டியுள்
ளிருந்தீர், பட்டினி கிடப்பாரைப் பார்க்கவு நேரீர் பழங்கஞ்சி
யாயினும் வழங்கவு நினையீர், எட்டிபோல் வாழ்கின்றீர் கொட்டி
போற் கிளைத்தீ ரெத்துணை கொள்கின்றீர் பித்துல கீரே. 250

### இதுவுமது.

சாதியிலே மதங்களிலே சமயநெறி களிலே சாத்திரச்சந்
தடிகளிலே கோத்திரச்சண் டையிலே, ஆதியிலே யபிமானித்
தலைகின்ற வுலகீ ரலைந்தலைந்து வீணேநீ ரழிதலழ கலவே, நீதியி
லே சன்மார்க்க நிலைதனிலே ஞான நிருத்தமிடுந் தனித்தலைவ
ரொருத்தரவர் தாமே, வீதியிலே யருட்சோதி விளையாடல் புரி
ய மேவுகின்ற தருணமிது கூவுகின்றே னுமையே. 251

ஆற்றுவெள்ளம் வருவதன்முன் னணைபோட வறியீ ரகங்கா
ரப் பேய்பிடித்தீ ராடுதற்கே யறிவீர், கூற்றுவருங் காலதனுக்
கெதுபுரிவீ ரையோ கூற்றுதைத்த சேவடியைப் போற்றவிரும்
பீரே, வேற்றுரைத்து வினைபெருக்கி மெலிகின்ற வுலகீர் வீணு
லக கொடுவழக்கை விட்டுவிட்டு வம்மின், சாற்றுவக்க வெனது
தனித் தந்தைவரு கின்ற தருணமிது சத்தியஞ்சிற் சத்தியைச்
சார்வதற்கே.
252

வையகத்தீர் வானகத்தீர் மற்றகத்தீர் நுமது வாழ்க்கையெ
லாம் வாழ்க்கையென மதித்துமயங் காதீர், மையகத்தே யுறும
ரண வாதனையைத் தவிர்த்த வாழ்க்கையதே வாழ்க்கையென
மதித்ததனைப் பெறவே, மெய்யகத்தே விரும்பியிங்கே வந்திடுமி
னெனது மெய்ப்பொருளாந் தனித்தந்தை யித்தருணந் தனிலே,
செய்யகத்தே வளர்ஞான சித்திபுரந் தனிலே சித்தாடல் புரிகி
ன்றார் திண்ணமிது தானே.
253

### பதிநிச்சயம்.

கிழக்குவெளுத் ததுகருணை யருட்சோதி யுதயங் கிடை
த்ததென துளக்கமலங் கிளர்ந்ததென தகத்தே, சழக்குவெ

ளுத் ததுசாதி யாசிரமா சாரஞ் சமயமதா சாரமெனச் சண்டை யிட்ட கலக, வழக்குவெளுத் ததுபலவாம் பொய்நூல்கற் றவர் தம் மனம்வெளுத்து வாய்வெளுத்து வாயுற வாதித்த, முழக்கு வெளுத் ததுசிவமே பொருளெனுஞ்சன் மார்க்க முழுநெறியிற் பரநாத முரசுமுழங் கியதே. 254

உழக்கறியீ ரளப்பதற்கோ ருளவறியீ ருலகீ ரூரறியீர் பேர றியீ ருண்மையொன்று மறியீர், கிழக்கறியீ மேற்கறியீ ரம்பலத் தே மாயைக் கேதமற நடிக்கின்ற பாதமறி வீரோ, வழக்கறிவீர் சண்டையிட்டே வம்பளக்க வறிவீர் வடிக்குமுன்னே சோறெடு த்து வயிற்றடைக்க வறிவீர், குழைக்கறியே பழக்கறியே கூட்டு வர்க்கக் கறியே குழம்பேசா றேயெனவுங் கூறவறி வீரே. 255

இணைக்கறியீ ரிதமறியீ ரிருந்தநிலை யறியீ ரிடமறியீர் தடம றியீ ரிவ்வுடம்பை யெடுத்த, கணக்கறியீர் வழக்கறியீ ரம்பலத் தே;மாயைக் கலக்கமற|நடிக்கின்ற துலக்கமறி வீரோ, பிணக்கறி வீர் பிரட்டறிவீர் பிழைசெயவே யறிவீர் பேருணவைப் பெருவ யிற்றுப் பிலத்திலிட வறிவீர், மணக்கறியே பிணக்கறியே வறுப் பேயோர் பொரிப்பே வடைக்குழம்பே சாறே யென்றடைக்க வறி வீரே. 256

## ஞானசம்பந்தர் ஸ்தோத்திரம்.

உலகியலி னுறுமயலி னடைவுபெறு மெனதிதய மொளி பெற விளங்கு சுடரே, உதயநிறை மதியமுத முணவுபெற நிலவு சிவ யோகநிலை யருளு மலையே, உனதுசெய லெனதுசெய லுன துடைமை யெனதுடைமை யுணரென வுணர்த்து நிறைவே, உள வெனவு மிலவெனவு முரையுபய வசநமற வொருமொழியை வுத வு நிதியே, ஒன்றுட னிரண்டென விதண்டையிடு மிண்டரொடு மொன்றலற நின்ற நிலையே, உன்னலற வுன்னுநிலை யின்னதென வென்னுடைய வுள்ளுணர வுள்ளு மதியே, உன்னிலையு மென்னி லையு மன்னிய மிலைச்சிறிது முற்றறிதி யென்ற பொருளே, உண் மைநெறி யண்மைதனி லுண்டுள மொருங்கிலென வோதுமெய்ப் போத நெறியே. 257

அலகின்மறை மொழியுமொரு பொருளின்முடி பெனவென தகந்தெளிய வருள்செய் தெருளே, ஐம்பூத மாதிநீ யல்லையத் தத்துவ வதீதவறி வென்ற வொன்றே, அத்துவா வாறையு

மகன்றநிலை யாதஃத தீதநிலை யென்ற நன்றே,ஆணையெம தாணை
யெமை யன்றியொன் றில்லைநீ யறிதியென வருளு முதலே, அன்
பென்ப தேசிவமு ணர்ந்திடுக வெனவெனக் கறிவித்த சுத்தவறி
வே, அத்துவித நிலைதுவித நிலைநின்ற பின்னல தடைந்திடா தெ
ன்ற விறையே, ஆனந்த மதுசச்சி தானந்த மேயிஃ தறிந்தடைதி
யென்ற நலமே, அட்டசித் திகளுநின தேவல்செயு நீயவைய வா
வியிட லென்ற மணியே. 258

இலகுபரி பூரணவி லாசமல நிலையண்ட மெங்கணு மெனச்
சொல் பதியே, இரவுபக லற்றவிட மதுசகல கேவலமி ரண்டி
னடு வென்ற பரமே, இச்சைமன மாயையே கண்டனவெ லாம
வை யிருந்துகா ணென்ற தவமே, யான்பிறரெ னும்பேத நடை
விடுத் தென்னோ டிருத்தியென வுரைசெ யரைசே, என்களைக
ணேயெனது கண்ணே யெனிருகண் ணிலங்குமணி யேயெ னுயி
ரே, என்னுயிர்க் குயிரேயெ னறிவேயெ னறிவூடி ருந்தசிவ மே
யெ னன்பே,என்றெய்வ மேயெனது தந்தையே யெனையீன் றெ
டுத்ததா யேயெ னுறவே, என்செல்வ மேயெனது வாழ்வேயெ
னின்பமே யென்னருட் குரு வடிவமே. 259

வேறு.

ஓங்கார வணைமீது நானிருந்த தருண முவந்தெனது மண
வாளர் சிவந்தவடி வகன்றே, ஈங்காரப் பளிங்குவடி வெடுத்தெ
திரே நின்றா ரிருந்தருள்க வெனவெழுந்தே னெழுந்திருப்ப தெ
ன்னீ, ஆங்கார மொழியென்றா ரொழிந்திருந்தே னப்போ தவர்
நானோ நானவரோ வறிந்திலன்முன் குறிப்பை, ஊங்கார விரண்
டுருவு மொன்றானோ மாங்கே வுறைந்தவநு பவந்தோழி நிறைந்த
பெரு வெளியே. 260

வேண்பா.

சத்தியஞ் செய்கின்றேன் சகத்தீ ரறிமின்கள்
சித்தியெலாம் வல்ல சிவமொன்றே-நித்தியமென்
றெண்ணுமெண்ணத் தாலேநம் மெண்ணமெலாங் கைகூடும்
நண்ணுமின்பத் தேநின்று நான். 261

## சிவஞான தீபம்.

பொருளுடலா வியுமிறைவ னுடைமை யென்றே பொருவில ருட் குரவன்பா லளித்தஞ் ஞான, மருளகனு முத்தமர்மெய்ம் முத்தி சேர்வர் மற்றொருபா லாசானுக் கெனவே நல்கிற்,றெருளு முருத் திரருலகம் புகுவ ரெல்லாந் திகழ்மனையாள் புதல்வருக் கென் றுக்கி யாசாற்,கிருளுமனத் தாலியன்ற துதவுஞ் சீட னிர விமதி யுலகடைவ னிறக்குங் காலே. 1

கொலையாதி நெறியகன்ற ஞானந் தானே கூறரிய மேலான ஞான மாகுங், கொலையாதி யகன்றொழுகுந் தவங்க டாமே குற் றமிலா நற்றவமென் றுரைக்கு நாலுங்,கொலையாதி யகற்றியநல் லறங்க டாமே குவலயத்தி லொப்பரிய வறங்க ளாகுங், கொலை யாதி யகன்றுபெறுஞ் செல்வந் தானே கூறினுயிர்க் கிதமான வாழ்வ தாமே. 2

எவ்வுயிரும் பராபரன்சந் நிதிய தாகு மிலங்குமுயி ருடலனைத்து மீசன் கோயி,லெவ்வுயிரு மெம்முயிர்போ லென்று நோக்கி யிரங்காது கொன்றருந்து மிழிவி னோரை,வவ்வியமன் றூதா ருந் தண்டஞ் செய்து வல்லிரும்பை யுருக்கியவர் வாயில் வார்த்து, வெவ்வியதீ யெழுநரகில் வீழ்த்தி மாறா வேதனைசெய் திடுவ ரென வோது நூலே. 3

நிலையுறுதி யாசார மொழுக்கஞ் சீல நிறையறிவு கருணைதவ நெறிநிலாமற், கொலைகளவு கட்காம முதலா யுள்ள கொடும்பவ மே தவமாகக் கொள்ளுந் தீயோ,ருலகிலருஞ் சிவனருணூ லோ தலாகா தோதினுமங் கவருரைகொள் ளொணாது நீலம், புலையர் மரு விடுந்தெருவிற் பொல்லாக் கும்பி பொருந்தியிடுங் குழியத னுட் பூத்த தாமே. 4

ஒருகரத்தை நீட்டிவிரன் மூன்றால் வாங்கி யொருவிரலாற் பிடித்திரங்கி யொளிர்வெண் ணீறு, பெருநிலத்தில் விழப்புனை வோ ரிரவிசோமன் பெருங்கால மருநரகிற் பேரா தாழ்வ, ரிரு கரத்தாற் றொழுதேற்றங் கிறைவ னாசா னெரிபதவை யசுத்த நிலத் தெதிர்பூ சாமற், றிருவளைத்தோள் செவிசிரவப் புனை வோ ரென்றுந் திருவருளா லிறையுலகஞ் செறிந்து ளோரே. 5

இட்டமிகு மிளமைநல மீரைந்தாண் டதனி லிருபதினில் வளர்ச்சியுமுப் பதுவருடத் தழகு, முட்டகைய மேதையுநாற் பதுவருடத் துடலி லொண்பலமு மைம்பதினி லறுபதினிற் ருது ந், திட்டியுமங் கெழுபதினி லெண்பதினிற் செவியுந் திகழ்மன முந் தொண் ணூறிற் சிவனுநூ றளவில், விட்டகலும் விரவியுதித் தொடுங்குவதென் றுணர்ந்தோர் வீணுள்பட் டொழியாமல் வி ரும்புவர்நற் றவமே. 6

இதயமதிற் பிராணநிலை யபானனுறுங் குதத்தி லிலஞ்சியி னி லுதானனுட லெவ்வளவும் வியானன், றிதமுறுகண் டத்தி டையிற் சந்ததனிற் சமானன் றிகழ்நாகன் முடக்கனுமீட் டுதலு டன்கொட் டாவி, விதமலியுங் கூர்மனிமைத் திடுதன்மயிர்ப் பு ளகம் வெம்மைசினந் தும்மல்கிரி கரன்முகத்தில் விளக்குஞ், ச துர்விதிர்ப்போ டற்றேவ தத்தன்ற னஞ்சயன்சேர் தனுவகலி லுடல்வீங்கித் தலைகிழித்திட் டேகும். 7

ஆதார நிராதார மீதான மெனமூன் றுருயிர்க ளிறைவனடி யடையுநெறி யவைதா, மாதாரந் தத்துவமீத வதைவடிவைத் தி யானித் ததுவதுவாய் நின்றவற்றின் பயன்களருந் துவதா, மோ தாரு நிராதாரங் கருவியெலா மகன்றே யுயிர்க்குயிரா யோங் கொளியோ டொழிவறநிற் பதுவா, மீதான மவ்வொளிக்கு முத லாய் நின்ற விமலனுடன் மலமறவே மேவுதலாம் விதியே. 8

விழிகளிலா தவர்கள்சிலர் வேழங் காணும் விருப்பி னுடன் செவிதுதிக்கை யெயிறு பாதம், வழுவறுவா லுடலதனைக் கரத் தாற் பற்றி வாரணமிவ் வாறெனவே மதித்துத் தம்மி, லிழிவினு டன் றனித்தனிமுன் கண்ட வாறே யானையினே ரியம்பிமலைந் திடுதல் போலும், பழிநிறுவுங் கபடநெறிச் சமயத் தோர்கள் பரனியல்பை வெவ்வேறு பகுக்கு மாறே. 9

தன்னறிவாம் புறச்சமய நிலையோர் பேறு தலையினு னட ந்துகதி யடைதல்போனு, முன்னரிதா மகச்சமய நிலையி னி ன்றே யொண்சரியை கிரியைமிகு யோக ஞான, மென்னுமிவை யொருநான்கு மியற்றி னோர்க ளிவ்வடைவே கால்வேகம் பற வை வேகம், பன்னருமா ருதவேக மனவே கம்போற் பற்றிடுவர் சிவானந்த முத்தி தானே. 10

வாதஞ்செற் பம்விதண்டை யேதுவென நான்காம் வாத மொரு வன்மதத்தாற் றருக்கமுரைப் பதுவா, மோதுமவன் றரு க்கமதற் கெதிர்விடயம் பொருந்த வுரைப்பதுவே செற்பமென வுலகறிய மொழியு, நீதியினு லவனுரைகொண் டவனுரையை மறுத்தே நிலையான பொருளுண்மை நிகழ்த்திடுதல் விதண்டை, யேதுபல நூலினுதா ரணமெடுத்துக் காட்டி யெதிரிமத மறுத் திடுத லெனுந்தருக்க நூலே. 11

தன்னிகரி லரியயன்முன் சகலத் தோர்க்குந் தனுகரணம் புசிப்புலக மசுத்த மாயை, யுன்னினுருத் திராதி மும்மை யோ ர்க்கு மொருமலமோ டிருமலமா முயிர்கட் கெல்லா, மன்னுமுல குடல்கரணம் போக மெல்லா மாயேய மிவை யுயிர்க்கு வகுத்து லோகம், பன்னியமூ வகையுயிரும் பெற்று நோக்கும் பராபரை யே சிவலோகம் பரனுக் காமே. 12

அவ்வுயிர்போ லெவ்வுயிர்க்கு மறிவாகி நிறைந்தே யான ந்த சுகாதீதத் தப்புறத்தப் புறமா, யிவ்வுருவ மிதுநிலய மிது வெனுஞ்சுட் டிலதா யேகமா யாதிநடு வீறகன்ற முதலா, யெவ் வெவரெப் படிநினைந்தா ரவ்வவர்க்கப் பொருளா யெண்ணுமன பாவகத்தா னண்ணரிய வொளியா, யொவ்வியசித் துடனசித் து மல்லதுவா யுற்ற வுருவருவ முபயமகன் றுளதாகும் பதியே.

செப்பருமா ருயிர்வருக்க மளப்பரிதா யென்றுஞ் செறித ருமா ணவவிருளா லறுதிமறைப் புளதாய்த், தப்பரிய விருவினை யின் றுய்ப்பதனுக் கிசைந்த தனுவாதி விதமாயை தரவவற்றைப் பொருந்தி, யப்பரிசே யுயர்திணைமே யா டஃறிணையாய் விரிந்தே யருநிரயஞ் சுவர்க்கநில மிசையிதமோ டகித, மெய்ப்புறநின் ற ருந்தியல மருமிறைவ னருளா லிருவினையொத் திடிலரிய பரபத முற் றிடுமே. 14

நிச்சயவஞ் ஞானமன விகற்பந் தீமை நிலையிலாப் பொருள் விரும்பல் பொய்ம்மை கூற, விச்சையுட னிகழ்வான போகந் து ய்த்த லெண்ணிக ரில்லையென வகந்தை கூற, னச்சியறிந் ததை மீள மறத்த றஞ்ச னண்ணுமுயி ரிணைப்பிரியா திருத்த லென்று மச்சமிகு மதிகாம வேட்கை யெல்லா மாணவத்தின் கூறெனவே யறிந்தி டாயே. 15

குருமொழியை வழுவல்குரு நிந்தை கூறல் குருவையெதிர் கண்டளவில் வணங்க நாணன், மருவியசெய்ந் நன்றிபிழைத் தறம்பேணுமை வஞ்சமிஞு துரைத்துடன்மா யையின்கூறு குஞ், செருமுயற்சி மனவாக்குக் காயத் தெய்தல் செருக்கிகழ்ச்சி குலாசாரத் தியற்கை மோகங், கருவினுழை வித்திடுத லின்ப துன்பங் காமியத்தின் கூறெனவே கருதி டாயே. 16

பகர்சுத்த மாயையோங் காரமுத லாய்முப் பத்தொருபேதாதிவிதப் பலபெயரா மவற்றின், வகைமிக்க பரப்பிரமம் வயிந்துவமா யேய மாமாயை குண்டலினீண் மாயைபடங் குடிலே, தகையுற்ற பிரணவம்பே ரொளிநாதம் விந்து தக்கசிவந் தனுவாதி நாலுடனுன் காகு,நிகரற்ற வாக்காதி நிவிர்த்தாதி யைந்து நிகழ் சுத்த வித்தாதி யைந்தெனநின் றிடுமே. 17

தன்மைதருங் கலைநிவிர்த்தி பிதிட்டை வித்தை சாந்தியுடன் சாந்தியா தீத மீதே, நன்மைதரு நிரோசாத நாதந் தானு நாதாந்தஞ் சத்தியியா பினிமே லாகு, மின்மருவுஞ் சமனையுமுன் மனையு மேலாம் வியோமரூ பினியனந்தை யனுதை யீறாய்த், தொன்மைமிகு மனுசிரதை யீரெட் டாகத் துலங்குபிர சாதகலை விளம்பு மாறே. 18

---

## உண்மை.

ஈராருந் தொழில்சிருட்டி திதிசங் காரந் திரோபாவ மனுக்கிரக மெனவைந் தாகு, மோராருந் தொழிலதிபர் பிரமன் மாயனெண்ணுமர னீசன்சதா சிவனைந் தாகு,மாராத வக்கரங்களைந்த தாகு மகாரவுகா ரமகாரம் விந்து நாதம், பாராரு முபதேசமூன்ற தாகும் பகர்சமய விசேடநிரு வாணந் தானே. 19

உள்ளொளியாய் நாதவொலி யாகி நிற்ற லுன்னரிய சூக்குமைபை சந்தி தானு, மௌ்ளரிய குறிப்பினின்மந் திரத்தி யானமிலங்கியமத் திமையுரையா துரைத்த னெஞ்சால், விள்ளரிய வைகரிதான் பிறருங் கேட்க விளம்புமொலி யக்கரமிவ் வடைவே மேவித், தெள்ளியவை கரிமுதலாய் வாக்கு நான்கிற் றிகழ்ந்திடுமென் றிறையருணூல் புகன்ற தாமே. 20

அத்துவா வடிவாமெம் மிறைமுடிதான் கலைகளைந் தாகுஞ் சாந்திமுத லானநான் குரமாம், வித்தைமுதன் மூன்றிரண்டாம் பிதிட்டாதி யுந்தி வியன்பாத நிவிர்த்தியதா மிளிர்துவக்கக் கரங் கள், வைத்தபுவ னங்கண்மயிர் மந்திரங்க ளெய்த்தோர் வள ந்திகழும் பதங்களருந் தசையாகு மதித்த, தத்துவங்கள் சுக்கி லமோ டத்திநிண மூளை சத்திகடா னேத்திரமூ வைந்தாமித் த கையே. 21

அருத்திமிகு மோங்காரம் பீட மாகு மகாரமே நடுக்கண்ட மதற்கு மீதே, திருத்தமிகு மேற்பீட முகார மாகுஞ் செறியுமத ற் குள்வட்ட மகார மாகும், விருத்தமுறு மிலிங்கநிலை விந்து வா கும் விளங்குசிவ லிங்கமுயர் நாத மாகுங், கருத்தமருட் கரண நிலை யிலிங்கந் தானே கன்மமிகும் புறப்பூசை யிலிங்க மாமே.

நற்பரமாங் கிரியையடிப் பீட மாகு நண்ணரிய நடுக்கண்ட ஞானமாகுஞ், சொற்பரவு மேற்பீட மிச்சா சத்தி சொல்லிலத னுள்வட்டந் திரோதை யாகும், விற்பரவு விந்துநிலை பரைய தா கும் விளங்குசிவலிங்கமுயர் நாத மாகு,மற்புதமா மகம்புறமொ ன்றாய நேயத் தருந்தவர்கள் சிவபூசை பொருந்தி னோரே. 23

அனுக்கிரகஞ் சதாசிவன்றா னாதத்தா னுளத்தி லருமறைப் புச் சிந்தையினில் விந்துவினான்ம கேசன், றனித்தமனத் துருத் திரன்றான் மகாரத்தா லழிக்குந் துழாய்முடியோன் புத்தியினின் றுகாரத்தா லளிக்கும், பனிப்பதும னகாரத்தா லாங்காரம்பொ ருந்திப் படைத்திடுவ னோங்காரப் படிவமுமா மதனா, லனைத்து லகு மிலிங்கமய மாமெவையு மிதுவே யாக்கியளித் தழித்தும றைத் தனுக்கிரகஞ் செயுமே. 24

நாதத்திற் சிகாரவெழுத் திசைந்து தோன்று நண்ணரிய விந்துவினில் வகாரந் தோன்றுந்,தீதற்ற யகாரமகா ரத்திற் றோ ன்றுந் திகழுமுகா ரத்தினிய நகாரந் தோன்றும், போதுற்ற ம காரமகா ரத்தின் பாலாம் பொருந்தியவஞ் செழுத்தையுநம் போத நீங்கிக், கோதற்ற திருவருளாற் சிவமுன் னாகக் கொண் டாரே முத்திநெறி கண்டார் தாமே. 25

இறையருளோ டுயிராதி மலமெனுமஞ் செழுத்தி லிறைகே டு மலமருட்கே டாமினிதாந் திரோதை,செறிதருபே தத்திலுயிர்

நமயநிலை பொருந்திச் செபியாமற் செபிப்பதுபோற் றிகழ்தரு
முத் தியினா, நிறையிருளி னொழிவுசிவந் திரோதையொழி வரு
ளாய் நின்றநிலை கண்டுமுதற் றன்னிலைவிட் டகன்றே, பிறிவரிய
சிவ முதலாய் நடுநிலையி லழுந்தும்பெ பற்றியரே யுற்பவநோய் பற்
றறுநற் றவரே. 26

அஞ்செழுத்தே மும்முதலு மாகுமென விறைநூ லறையும
திற் றிரோதையரு ளரியசிவம் பதியாம், விஞ்சுமுயிர்த் தொகை
பசுவாம் பாசமிருண் மலமாம் வித்தாகும் பெத்தமுத்தி யிரண்
டினுக்கு மிதுவே, வஞ்சமுற்ற பவக்கடலி லெடுத்துயிர்கட் கரு
ளான் மதிப்பரிய சிவானுபவ மளிப்பதுவு மிதுவே, யஞ்செழுத்
தே யைந்தொழிலு மெந்தைபிரா னடமு மாதலினா லிதனுண்
மை யோதரிதென் றுணரே. 27

அகரவுகர மகரமே விந்து நாத மாகியவக் கரமைந்து மிலி
ங்க மாகப், பகருமிதன் மிசைசிகரந் துடிய தாகப் பரிவினுடன்
வீசியகை வகர மாக, யகரமிரு மபயகர மாகநீடு மெரிநகர மாக
முயல கனின் பாத, மகரநிலை யாகமணி மன்றி னூடே வான்கரு
ணை வடிவாகி நடஞ்செய் வானே. 28

ஊன்றுதம ருகக்கரத்தா லுலகுயிர்கட் கின்ப முறுவிக்கு
மதுசிருட்டி யுகந்தபய கரத்தாற், றோன்றுமிரு வினைதுலையொப்
பாக்குமது திதியாஞ் சோதியழற் றிருக்கரத்தாற் சுழல்கரண ம
றுத்தே,யென்றபவ மறுப்பதுசங் காரம்வலப் பதத்தா லின்பது
ன்பத் தழுத்தறிரோ பவமெடுத்த பதத்தா, லான்றிருள்கே வல
சகலத் தெடுத்தருளான் முத்தி யளிப்பதனுக் கிரகமிவை யரன்
பொதுநா டகமே 29

பாந்தசிவா னந்தநடஞ் சிகார மாகும் பராபரையே சிதம்
பரமா மதுவ கார, மரந்தையறச் சிவபோக மருந்து மாவி யகார
மதா ஞாதுருஞா னங்கள் ஞேயந்,தெரிந்துபகுத் தறியுமறி வழி
த்தொன் றுக்குந் திரோதான முலகமறைத் திடுந காரம், விரிந்
தமல சத்தியழித் தின்பந் தன்னை மேன்மேலும் விளைக்குமது
மகார மாமே. 30

இதயமல ரெட்டிதழெண் டிக்க தாகு மினன்றிசைமுன் ப
த்திமிகுந் தாகங் கோபந், துதிதருமின் சொல்லினிய வாய்மை

நீடுந் துயில்சமன மருந்தவமைம் புலன்க டுய்க்கும்,விதிமுறையே
கறங்கெனநின் றுயிர்க ளாட விண்டமலர்ப் புண்டரிக புரத்து
ஞானப், பொதுவினிலங் குமையுடனெம் பிறவி நீங்கப் புலியர
வந் தொழப்பரதம் புரிவ னாதன். 31

விரும்புற்ற தவம்விரதஞ் சீலமெல்லா மேல்விளைவென் றறி
ந்தெவையும் விமலன் கூத்தென், றிரும்புற்ற மனமழலின் மெழு
கா யென்று மியான்செய்தேன் பிறர்செய்தா ரெனுங்கோ ணீ
க்கி, யரும்புற்றங் கென்னதியா னென்னும் பாசத் தவாமருவும்
புறப்பற்றோ டகப்பற் றான, பெரும்பற்றை யகன்றருளைப் பெறு
வோர் ஞானப்பெரும்பற்றப் புலியூரைப் பிரியார் தாமே. 32

உடலையுயி ரெனமதித்த லன்னமய மாகு முயிர்சீவ னென
மதிக்கிற் பிராணமய மாகு, நடலைமன முயிரென்றன் மனோமய
மாம் புந்தி நாடுமுயி ரெனிலதுவிஞ் ஞானமய மாகு,மடன்மருவு
மதீதமுயி ரெனமதிக்கு மதுவே யானந்த மயங்கோச மைந்தினை
யும் பொருந்தி, விடலரிதா யாப்புண்டங் ககம்புறமா யவற்றின்
வேறாய்நின் றறிவதுவே யான்மாவென் றுணரே. 33

போக்குவர வுறுமுடலி லறிவனுள னெனவே புகறல்பிர திக்
கினையா மதற்கேது பகரி, லூக்கியமெய் யறிவிலையாற் றிட்டாந்
தங் கடம்போ, லுபநயமக் கடமொருவன் கொடுப்போகிற் போ
குந், தாக்கறவல் லாதிருக்கு மதுபோலிவ் வுடலந், தான்போக்
கு வரவுசெயா தாகுநிக மனந்தா, னாக்கையினை நடத்திடுவா
னவனணுவி னியைந்து மன்னுவய வெதிரேகி யனுமான மெ
னுமே. 34

பொறிபுலன்க ளானல்லேன் மனாதிகளா னல்லேன் புகலரி
ய கலாதிகளு நானல்லேன் பொறியா, லறிகருவி நானல்லே னி
வைசடமென் றிவற்றை யறிந்ததில்வே றாய்நின்ற வறிவுயிரென்
றறிக, நெறிதருதத் துவஞ்சடமா நாமலவென் றிவற்றை நீயறி
ந்து நீங்குதற்கு நின்னுயிருக் குயிராய்ப், பிறிவறநின் றுணர்த்தி
யிடு மொளியருளா முலகிற் பிறங்குவிழிக் கொளியுதவு மிருங்
கதிரொப் பெனவே. 35

பொன்னதனை யடக்கியிடுங் குளிகை போலும் பொருவில்
விழி யொளியடக்கு மிரவி போலு, முன்னுமிரும் பினையடக்குங்

காந்தம் போலு முயிரையடக் கிடுமூல மலமே போலும், வன்னிதனை யடக்கிடுமிந் தனமே போலு மருவுதுரும் படக்கிடு முப் பளமே போலு, மன்னபழு மரமடக்கும் வித்தே போலு மரனருளி லடங்குமுயி ரறிவு தானே. 36

உகைத்தாடுங் கயிறகன்ற வூசல் போலு முலவாத திரிவொழிந்த கறங்கே போலு, மிகைத்தாடும் விசையறுபம் பரமே போலும் விளங்கொளிசேர் தாழ்ந்தமணி நாவே போலுஞ், செகத்தாய சித்திரத்தி னிலையே போலுஞ் சிவபோகத் தடங்கியுயிர் செயலொன் றின்றி, யகத்தாய நம்போதப் பற்று நீங்கி யசைவறநிற் பதுபரமா னந்த மாமே. 37

எண்டெருமெய்ஞ் ஞானிகடா நன்மை தீமை யியற்றினுமப் பலனுகரா ரிவர்தம் மேனி, கண்டுதொழு வாரிகழ்வார் தம்பாலெய்துங் கருமுகிலின் செயல்போலக் கருதா ரொன்றும், பண்டிகளும் வினையுடலிற் பலிப்பி னாலே பகர்காலந் திசைகளருந் தவங்கள் சீலம், கொண்டதியா னஞ்செபங்கள் பூசை யாவுங் குறித்திடினு மொழித்திடினு மவர்க்கமலன் பணியே. 38

சாத்திரம்புத் தகம்பூசை சமயமதந் தருக்கந் தந்திர மந்திரயோகந் தவவிரதஞ் சீல, மேத்தரிய பாவனையெண் சித்திகளே முதலா மெப்பயனு முத்திவிலக் கெனவொருசொல் லதனாற், றீர்த்தவன்மெய்த் தேசிகனு மவனருளா லகலாச் சித்தமல மறுத்துலகிற் றீமைநன்மை செயினும், வாய்த்தகதி ரவன் செயல்போ லிசைந்திசையா தொழுகும் வண்மையரே மெய்ஞ்ஞான வுண்மைநிலை யினரே. 39

கருவிகளு ளொன்பதுவும் வேற தாகக் கண்டகன்ற வதீதநிலை காசி யாகு, மருவுமுயிர் தனையறிவென் றறிந்து யாமே மன்னனென நின்றநிலை யாரூ ராகுங், கருவிசட மென்றுயிர்க டம்மைக் காணக் கண்ணிரவி யெனவுயிர்க்குக் காட்டா நின்ற, வருளையுணர்ந் தியாவுமரன் செயலாமுண்மை யத்துவித நடந்தொழலம் பலமதாமே. 40

எண்ணியமுற் புசிப்பகலா மாயா போகத் திதமகித மறுகையினுற் றிரோதாயி நட்ட, நண்ணுமிரு வினைதுலையொப் பாதலாலே நாடியமா மாயையுமைந் தொழிலு நட்டம், பண்ணு

மவனவளதுவா முன்னிலைச்சுட் டொழியிற் பற்றுகுங் கன்மமல
நட்டமாகுந், திண்ணமிகும் வடிவகல மாயைநட்டஞ் சிவபோகம்
விளைந்திடவிட் டகன்றிடு மாணவமே. 41

கூட்டரவு வொழிகையினாற் கிரியையவிழ்ந் தகலுங் குலவு
தரி சனமகல வனுபோகம் விளையி, ஞட்டரிய ஞானசத்தி வேற்
றுமையா யகலு நவையாரும் பெறுதியொழிந் திடுதலினா லெவை
யுஞ், சேட்டிதமா மிச்சையுமங் கப்பரிசே யகலுஞ் சிவம்பிரகா
சிக்கையினாற் றிரோதாயி யகலு, நீட்டியதற் போதமறச் சிவா
னுபவத் 'தழுந்தி னித்தியமாம் பராசத்தி விட்டகலுங் காணே.

உடலுயிரன் றென்றகலிற் பூதமுட னவற்றி னுடனாய காரி
யமை யைந்துடனே யுலகுந், திடமிகுபல் லுருவனைத்து நாடிக
ளு மகலுந் திருந்துபொறி யறவிடயம் பொருந்தாம லகலுங்,
கொடியகர ணங்களறக் கலாதிகள்விட் டகலுங் குணமறவே சுத்
தவித்தைமுதன்மூன்று மகலு, மடன்மருவும் வளியகல விந்தக
லு மகலா வாணவநீங் கிடநாத மகன்றிடுமென் றுணரே. 43

புவிமுதலைந் தும்பூத கஞ்சுகமா மதன்மேற் பொறியொரு
ப தொருபதுமாத் திரைமனமுன் னைந்து, கலையுறும் பிரகிருதி
கஞ்சுகமென் றோதுங் கலைமுதலைந் தும்புருட கஞ்சுகமாங் கரு
திற், சிவமுதலைந் தறிகருவி வயிந்தவகஞ் சுகமாந் திருந்துபரை
முதற்சத்தி கஞ்சுகமாந் தெரிந்தே, தவமுடனோர்ப் புறபஞ்ச
கஞ்சுகங்க ளகன்றோர் சுத்தபர சுகாதீத முத்தரெனு நூலே.

ஞானத்து ஞானமகம் புறமென் னுமல் ஞானனந் தாதீதத்
தழுந்த லாகு, ஞானத்து யோகமிறை ஞானந் தானே நாடுமிட
மெங்குநிறை வென்று காண்டல், ஞானத்துக் கிரியையுயர் பஞ்ச
சுத்தி நயந்தமல னடியகலா திறைஞ்ச லாகு, ஞானத்துச் சரியை
குருலிங்கவேட நாதனெனத் தொழுதுபணி மேவ லாமே. 45

திருந்தியசத் தினிபாத நால்வகையா மந்தந் திகழ்மந்ததர
ந்தீவி ரந்தீவி ரதரம், பரிந்திதனுக் குறமுவமை யிருங்கதலிக்
குற்றி பச்சைவிற குலர்விறகுகரியிலெரி பதிதல், புரிந்திவர்பக் கு
வம் பொருளுண் டெனவதற்குப் பொருந்தல் புளியந்தோ டும்
பழமும் போலுடற்பற் றறுகை, யரந்தையுல கினைமுழுதுந் துற

ந்துபொரு டேட லருட்குரவ னடியிணைசேர்ந் தவன்பணிசெய் திடலே. 46

பாலனுட னுன்மத்தன் பசாசன் றன்னைப் பவமகன்ற சிவ ஞானிக் குவமை கூறும், பாலகன்மே லுணவொன்றைத் தேடா தானும் பகருமய லுன்மத்த னன்மை தீமை, சீலமகன் றிடலா னும் பசாசன் செய்யுஞ் செயலலகைச் செயலாகுஞ் செய்தியா னும், பாலனையும் பித்தனையுஞ் சுடுந்தீத் தொட்டாற் பசாசன னைத் திடினுமெரி பற்றிடாவே. 47

ஒப்பிலுயிர்க் குயிராய்நிற் பதுஞான பூசை யுயிர்க்குளொ ளி நோக்குமது வேயோக பூசை, செப்பரிய வாவாக ஞதிபுறப் பூசை செயலறநின் றிடுநேயஞ் சிவபூசை யாகுந், தப்பரிய மெய் ஞ்ஞானந் திகழ்ந்தறிவை நாடல் சாலோகஞ் சாமீபந் தற்பரை தா னுதல், வைப்புறுசா ரூபமுய ரானந்த போக மருவுசுகா தீத ஞ்சா யுச்சியமாம் மதியே. 48

வாசநறும் புனல்சாந்தங் கந்த மாயு மருவலர்க ளுசமருச் சனம தாகு, நேசமரு மலர்செல்வம் பாவ நீங்கு நிறைதூப மவ மிருத்து நாசந் தீபந், சேசுலவு மமுதுலகம் புரப்ப தாகுஞ் சித் திகளெட் டுத்தமதா னந்தா னல்கு, மாசிலருட் பரமனிரு பா தம் போற்று மடியவர்த மட்டவிதார்ச் சனையி தாமே. 49

இந்தனங்கள் பலபலபே ருடைய வாகு மெரிதழலி னிடை யிடவே யெல்லாஞ் சேர,வெந்துவிற கினிலும நாச மாகி வெண் ணீறென் றொருபெயராய் விளங்கு மாபோற், பந்தமுறுங் குலா சார மயக்க மெல்லாம் பரமகுருத் திருநோக்கம் புரிந்த வாறே, வெந்தழியு மொருபுழுவேட் டுவனு மாபோல் விமலனுரு வாயெ வர்க்கு மேலா மன்றே. 50

---

## பாகவதபுராணம்.

---

### மாயவ னமிசாவதாரமுரைத்த வத்தியாயம்.

புரியும் பாதகம் போக்கிடப் புனிதநீர் படிந்தால்
உரிய மாதவ ருறவுவந் துற்றிடு முற்றால்
மருவு வெம்பவந் தீர்ந்திடு மால்கதை கேட்பப்
பெருகு மன்புபின் பிறப்பறு ஞானமெய் திடுமால். 1

நலத்தி னிற்றிகழ் நான்கெனும் வருணவாச் சிரமப்
புலத்தி னிற்றம கருமங்கள் பத்தியிற் புரியின்
வலத்தின் மிக்குயர் மாயவன் மகிழ்தர மருவும்
பலத்தை யிச்சியா தாற்றுவோர் பரஞ்சுட ராவார். 2

ஆற்று மோர்வினை யுருப்பெய ரடைந்திடா வமலன்
சாற்று தாமதத் தாலர னுருவெனச் சார்ந்தான்
போற்றி ராசதத் தாலயன் புரமெனப் பொலிந்தான்
ஏத்து சாத்துவத் தாலரி யுருவென வியைந்தான். 3

தாம தத்தனுத் தாவருந் தாவரஞ் சார்ந்த
தூம மற்றிரா சதத்தனுச் சொல்லுசத் துவத்தின்
ஆமு தற்றனு வாங்கெழு மக்கினி யதுதான்
வாம மூர்த்தியைத் தரிசின மாக்கிடும் வகையால். 4

முத்த ரானவர் பிரமமொன் றெனத்தனி மொழிவார்
வித்தை சேர்தரு முளத்தினோர் விராட்டுவை நயப்பார்
சுத்த ரானவர் பரமவான் மாவெனச் சொல்வார்
பத்தி யோர்பக வானென வேகனி பகர்வார். 5

பின்ன பின்னமாத் தருக்களிற் பிறங்கிய தழலின்
உன்னு கூத்தினிற் பற்பல வேடமுற் றவரின்
மன்னு மெவ்வுல கத்தினு மருவியேழ் பிறப்பாத்
துன்னு நல்லுரு வாகவுந் துலங்குவன் றொல்லோன். 6

திருந்து நல்லறி வாயவன் குணத்தொடு சேர்ந்து
வருந்து முத்தொழி லியற்றுமா மாயையை மணந்தே

யிருந்த னன்னெனத் தோன்றினு மிவையுளத் தறிவு
பொருந்தி நோக்கின்வெங் கானலிற் புனலெனப் போமால்.

தன்மன் முதலானவர் வீடுபெற்ற வத்தியாயம்.

உடையவன் மூக்குறுங் கயிற்றி னுய்க்குமேல்
விடையவன் கைவ்வழி மேவு மாறுபோல்
நடைபெறு முயிர்களோர் நாத னுலென்றால்
படிமிசை யொருவருக் கொருவர் பற்றெவன். 8

மாயவ னிலையுரைத்த வத்தியாயம்.

மனத்தினைக் கடந்து வாக்கினுக் கெட்டா மாட்சிய தா கிமா மறையும், இனைத்தென வின்னுந் தெரிதரற் கொல்லா தெ ங்குமா யமலமாய் நின்ற, தனிப்பெருஞ் சுடரை நினைக்குமா று னக்குச் சாற்றுவல் கேண்மதி யென்று, வினைக்குறும் பெறிந்த வியாதனீன் றெடுத்த விழுத்தவன் விரிக்கலுற் றனனால். 9

அதலமே முதல சேவடி நடுவே யந்தர நாவியேழ் பரவை
உதரநீள் குடுமித் தடவரைக் குலமென் புயர்மர மயிர்நதி நரம்பு
மதிமன முதுநல் லறமுலை கனல்வாய் மல்குநீர் நாவளி யுயிர்ப்புக்
கதிருமிழ் பரிதி கண்மலர் படைப்புக் கருணையங் கட்கடைப் பி
[றழ்வே. 10

கேழ்கிள ருடுவெண் பல்லிருங் கூற்றுக் கிளைத்தொளி தவ ழுநெட் டெயிறு வாழிமா மாயை முகிழிள முறுவன் மாதிரஞ் செவிமறை கிளவி, தாழ்தவ லோக நெற்றிமே லுலகு தலைபுயல் சுரிகுழ லாக, ஏழிரண் டுலகு முருவமாய் நின்ற விறைவனைச் சிலர்நினைந் திருப்பார். 11

ஈங்கிதன் நீங்கி தன்றென் றெவையும்விட் டொழிய நின்ற
ஆங்கத னுடைமை தானென் றறிவினு லறிந்து தன்னை
நீங்கலா வுணர்வி னுலே நினைந்துகொண் டிருப்பா னண்ணல்
ஓங்கிய பரமா நந்த வுருவினை நினைந்தா னுமால். 12

தழுவுறு கிளைஞர் தந்தை தாய்முத லெவரு நாளில்
கழிவது கண்டுங் கண்டுங் கண்டிலார் போல வாழ்வர்
ஒழிவற வுள்ளத் துள்ளே யுறைபரஞ் சுடரை யோரார்
விழைவென நின்ற துன்ப வித்தினை விளைப்ப ரம்மா. 13

கபிலர்ப்பெற்றவத்தியாயம்.

அன்னையு முத்திசென் றடைய நன்னெறி
பன்னுவன் மாதவ நீயும் பற்றுவிட்
டென்னுரு மனத்தினி லினிது நாடியே
துன்னுதி வீடெனச் சொல்லி னனரோ, 14

பனிபடு திரையெழு பரிதி கண்டுசூழ்
கனியிரு ளிரிவது கடுப்பக் கட்டமை
வினையிரு ளிரிதர விளங்கு மென்னைநீ
நினைதரின் மேவுறு நிகரின் முத்தியே. 15

ஈசனும் வேறியங் குயிரும் வேறெனு
நேசமுற் றெனைநினைப் பவற்கு மீசற்கும்
பேசுபல் லுயிர்க்குமோர் பேத மில்லெனும்
மாசிலா தவற்கும்வந் தொன்று முத்தியே. 16

எத்திறத் தாயினு மென்னை யேமனம்
வைத்திடின் வல்வினை மாயு மாறிலா
முத்திவந் தெய்துமான் முறையிற் றோன்றிய
தத்துவந் தெருளினுஞ் சாரு முத்தியே. 17

கபிலர் தத்துவமுரைத்த வத்தியாயம்.

உரைத்திடு கனவு போல வுபாதிபொய் யாகு மென்றும்
விரித்தமூன் றவத்தை யுள்ளும் விளங்குவன் புருட னென்றும்
திருத்திய வறிவிற் றேறித் தேர்ந்துகொண் டிருப்பான் முத்தி
தரித்திடு மும்மை யாய தனுவொரீஇ யடைவா னென்றான். 18

உண்ணெகிழ்ந் துருக விங்ங னுரைத்தது கேட்ட வன்னை
மண்ணினின் மணமு நீரின் மருவுறு சுவையும் போல
நண்ணிய மாயை யோடு நனிகலந் தோனைத் தேர்ந்திங்
கெண்ணுவ தெங்ஙன் மாயை யெப்பரி சொருவு மென்றாள். 19

என்றலுங் கபிலன் சொல்லும் யாதினு மியைபு நீத்து
நின்றமா தவத்தி னோர்பா னீங்கலா துறைந்தென் சீர்த்தி
நன்றவர் மொழிதல் கேட்டா னவிற்றரும் பத்தி யோகம்
ஒன்றுறு மொன்றுங் காலத் துற்றிடு ஞான மாதோ 20

அரணியி லனல்வந் துற்றவ் வரணியை யழிப்ப தேய்ப்பக்
கருதிய ஞானம் வந்து கலந்துறு முபாதி நீக்கும்
புரிதுயி னீத்தோன் றன்பாற் பொருந்திடாக் கனவு போற்பின்
உரைசெயு மாயை சேரா துண்மையை யுணர லாமால். 21

இருவினைக் குறும்பு தீர்ப்பா னெனதுறா னவிற்றல் வேண்டும்
வருவவந் துறமென் றெண்ணூஉ வைகுறல் வேண்டும் பெற்ற
ஒருவல னுவப்ப வேண்டு முயிர்க்கெலா மிரங்கல் வேண்டும்
தருமலி கானந் தன்னிற் றனித்தினி துறையல் வேண்டும். 22

இழைத்திடல் வேண்டும் யோகம் யோகநன் றிழைத்தா னாயின்
பழுத்திடத் தழலிற் சுட்ட பசுஞ்சுடர்க் கனகம் போலத்
தழைத்தெழு கின்ற வுள்ளந் தன்னுழைப் பற்றி நின்ற
அழுக்கறு மற்ற காலத் தமலனை யறிய லாகும். 23

தன்னைத்தா னறியா னாயிற் றலைத்தலைத் துன்பஞ் சாரா
மின்னெனத் தோன்றி வீயும் யாக்கைகள் பலவு மேவும்
என்னதோர் யாக்கை தன்னை யெடுப்பினு மெடுத்து நின்ற
அன்னதோர் யாக்கை நீங்க லாற்றல னசை கூரும். 24

வேறு.

காதல் விட்டுக் கருதிய பேதமாம்
ஏத நீங்கின ரெய்துவர் முத்தியின்
பேத மாகு முபாசனை பெற்றிடின்
வேத னாயினு மீளவுந் தோற்றுமால். 25

மலத்தி டைப்புழுப் போல்வளை யாழிசூழ்
நிலத்து தித்து நிரய முறுந்தொழில்
நலத்த தென்ன நயப்பவர் ஞானமாம்
உலப்பி லுண்மையை யோர்ந்துண ரார்களே. 26

சூட்டு நாகஞ் சுமப்ப நிலத்தவர்
வேட்ட வாறு நடப்ப விளங்கிழாய்
பாட்டி வண்டிமிர் பைந்துள வோன்பதம்
நாட்ட முற்றுநீ நற்றவஞ் செய்தியால். 27

மோக நீங்கி முயல்வுறின் மாதவம்
ஆக மொன்றுத லின்றிய பேதமாய்

மாக நாடர் வழுத்தவரு சித்தோ
டேக மாகி யியைகுதி நீயென்றான். 28

## பிருது மன்னன் கதையுரைத்த வத்தியாயம்.

பெண்ணெனத் தனது தொல்லைப் பெயரினால் விளங்கும்வண்ணம்
கண்ணகன் ஞாலங் காக்குங் காவலன் றன்பால் வந்து
நண்ணினர் சனக னாதி நற்றவக் கிழவர் நால்வர்
அண்ணனான் மறையே போல வரும்பெறற் காட்சி மிக்கார். 29

கௌவைநீர் வேலி மன்னன் கதுமென வெழுந்து தாழ்ந்து
தெய்வமா தவத்தோ ரம்பொற் சேயடிக் கமலம் போற்றி
எவ்வகை கடக்க லாகு மேழ்பெரும் பிறவி வேலை
அவ்வகை மொழிமி னென்ன வருந்தவ ருரைக்க லுற்றார். 30

பொறிகளை யடக்கித் தன்னைப் புலப்பட வறிந்தா னாயின்
உறுதுயிற் கனவு தன்னி னுற்றிடு படைக ளெல்லாம்
செறிதுயி னீங்கிற் பொய்யாந் திகழ்பவ னொருவன் றான்போல்
நெறியுறு முபாதி நீங்கு நிறைந்ததோ ரறிவாய் நிற்பான். 31

ஐயதா மறிவோ டிவ்வா றமர்வதற் கெளிதா மேது
மையறு மாலை வந்து மயக்குமோ ரரவு போலும்
பொய்யுமாய் மெய்யு மாகிப் பொலிதரு மாயன் றாளாம்
செய்யதா மரைக்க ணன்பு செய்வதென் றுரைசெய் வாரே. 32

உரவுநீ ருலக மெல்லா முண்டொளி கிளைக்குஞ் செஞ்சூட்
டரவணை துயிலு மண்ண லடிப்புணை பற்றி யன்றிக்
கரையழி பிறவி வேலை கடப்பரி தென்று கூறி
மருவிரி தெரியன் மன்னன் மனந்தெளித் தேகி னால். 33

உடம்பறப் பழுத்த லோடு மொருதனித் திகிரி மன்னன்
விடம்பொழி குடுமி வைவேல் வேந்தெலாம் வந்து தாழ
மடங்கலே றனைய கொற்ற மைந்தனை மௌலி சூட்டி
நடந்தனன் றேவி யோடு நறுமலர்க் கானத் தன்றே. 34

காருறழ் கவிகை மன்னன் கனியொடு கிழங்கு தின்று
நீருணச் சருக ருந்தா நிறைந்துலாங் காற்று மாந்தா
மாரியிற் புனலிற் றாழ்ந்து மாறிலா திருந்தும் வேனில்
ஆரழ லிடையே நின்று மருந்தவ மயரா தாற்றும். 35

வேறு.

பூத மைந்தொடும் பொறிகளைப் புகலகங் கரத்
தாதி நாளினிற் றேற்றிய முறையதி னடக்கி
ஏத மில்லகங் காரத்தை மகத்தினி லிருத்தி
ஓது சீர்திகழ் மகத்தினை மாயையி னொடுக்கி. 36

இருளு யிர்க்கற விருந்துலா முயிர்ப்பினை யடக்கி
உரைசெய் கின்றவா தாரமோ ராறுமுய்த் ததனால்
பிரம ரந்திரம் பிளந்துயர் பிரமமா யொன்றாய்ப்
பரம மாகிய பசுந்துழாய் முகில்பத மடைந்தான். 37

பரதன் சரித்திரமுரைத்த வத்தியாயம்.

வியப்புறு மனலினால் வெதுப்பு நீருறும்
செயிர்ப்பறு வானையத் தீச்சு டாதுபோல்
நயப்புறு மனத்தினை நண்ணு தாபத்தீ
உயிர்க்கிலை யறிந்தவ ருணருங் காலையே. 38

திரியொடு நெய்செறி வுற்ற செஞ்சுடர்
எரிதருங் கிருதுவுற் றிலங்கு மாறுபோல்
விரியுமுக் குணத்தொடு மேவின் மாமனம்
உரைதரு பிறவியை யொழிப்ப தில்லையே. 39

பன்னுமுற் பிறந்தையிற் பரத னென்னயான்
இந்நிலம் புரந்திட ரகற்றி யாவும்விட்
டுன்னிய தவத்தொடு மொழுகு நாளினோர்
கன்னிமா னுழைமனங் கலந்தி றத்தலான். 40

அவ்வுழை யுருவமு மடைந்து விட்டபின்
இவ்வுரு வெடுத்தன னின்ன மொன்றினும்
கவ்வைசெய் மனங்கது வாது நின்றனன்
செவ்வியோய் பவக்கடற் செலவு மாற்றியே. 41

சீலமுற் றுயர்ந்தவர்ச் சேரின் வீடுறும்
மாலையுற் றறிவிலார் மருங்க டைந்திடின்
வேலையுற் றலைதரும் பென்ன வெம்பவக்
கோலமுற் றிறந்திறந் துழலல் கூடுமால். 42

இடையுறு மென்பினை நரம்பி னார்த்திடர்ப்
புடையுறு மிறைச்சியாற் பொதிந்து போக்கற
மிடைதரு தோலினுன் வேயப் பட்டதோர்
உடலினை யானென வுரைக்க லொண்ணுமோ. 43

பண்ணுறு கருமத்தாற் பவக்க டற்கரை
நண்ணுவ னென்ன நயந்தி ருத்தல்வாழ்
எண்ணறு புலிமிடைந் தியல்வெங் கானகம்
கண்ணிலான் கடக்குதல் கருதல் போலுமே. 44

காட்டினிற் கலந்துறை விலங்கு கானலை
ஆட்டுதெண் டிரையரு நீர தாமென
வேட்டுறு மாறுபோல் விடய வின்பமே
நாட்டமுற் றறிவிலார் நலிவ ருள்ளமே. 45

பொன்னினை விழைந்துழைப் புகுந்து வாடுவார்
மன்னிய குளிர்நனி மாற்று வோமெனத்
துன்னுவெங் கானமு றுலங்கு வாய்நரி
தன்னைவெங் கனலெனச் சார்தல் போலுமே. 46

பறவைவெம் பசியினிற் பழுத்த காட்டகத்
துறையுமுள் ளிலவையுற் றுணங்கு மாறுபோல்
நெறிதவி ருலுத்தர்த நீள்க டைத்தலை
அறிவில ரடைந்தடைந் தழுங்கு வார்களால். 47

கருதுசே யன்னைகா தலியிப் பாருளோர்
பொருவருந் தாதைநற் புதல்வ னாயகன்
அரசனென் றறையநீ றடைதல் போலொரு
பிரமமே மாயையிற் பேர்கள் பெற்றதே. 48

ஈனுல கிடரற வினிது கொண்டநீ
யானெனுஞ் செருக்கினோ டிராக மாதியாம்
கானுறை குறும்புகள் கடிந்து தீங்கற
ஊனமின் ஞானமா முலகுங் கோடியால். 49

என்றன னுரைத்தனு மிறைஞ்சி வேந்தனும்
சென்றனன் பாற்கடற் சேர்ப்பன் பூங்கழல்
மன்றலந் தாமரை மனத்து ளூடினன்
வென்றனன் வல்வினை வீடுற் றானரோ. 50

சித்திரகேதுவின் கதையுரைத்த வத்தியாயம்.

தந்தையிவன் றநயனிவ னெனச்சாற்று முறைதிறம்பி
வந்துதிப்பார் பிறவிதொறும் வழங்குபணிப் பொருள்போன்றே
அந்தமிலா வாநந்த வறிவுருவா மச்சுதன்முள்
நந்தலில தாமெனவே நாடியறி யாதவரால். 51

சிசுபாலன் வீடுபேறுரைத்த வத்தியாயம்.

புகழுலும் பழித்த ருனும் புகலுமிவ் வுடலுக் கல்லால்
நிகழ்தரு குணங்கண் மூன்று நீங்கியொன் ருகிச் சித்தாய்த்
தகைபெறு சத்தாய் நின்று தயங்குமோர் பொருட்கு முண்டோ
இகல்செயா னெனதென் பார்தம் மிழுதயி னுண்டென் பாரால்.

இரணியனைக் கொன்ற வத்தியாயம்.

கூறுமங்கியுந் தூமமும் போற்குண குணியாய்
வேறு வேறுசேர் பொருளெலா மேவியொன் ருகி
ஈறிலா முத லாயுடற் கிசைவிகா ரங்கள்
ஆறு மெய்ப்பொருட் கில்லையென் றறிவதே யறிவால். 53

பாத வங்களின் றளிரொடு பூமுதற் பலவும்
ஓதின் வேறுவே றுருவென வொளிருமா போலக்
கோது சேரறுவி காரமாங் குணமுடற் கன்றிப்
பேத நீங்கியே பிறங்குமெய் பொருட்கிலை பேசின். 54

காட்டின் மேவிய கானலிற் புனலெனக் காதல்
பூட்டு மாயையின் முறைமுறை போந்ததத் துவத்தின்
கூட்ட மேயுட லவ்வுடற் குலவுநன் மதியால்
நாட்டு போதமே நவையிலாப் பொருளென்று நவில்வார். 55

பன்னு மாக்கைகொ ளவயவ முதலிய பலவும்
உன்னி யீங்கிதன் றீங்கிதன் றெனமுறை யொழித்துச்
சொன்ன புந்தியிற் கரியெனத் தோற்றிய வறிவை
இன்ன தேபரம் பொருளென வறிவதிங் கியல்பால். 56

புந்தி முக்குணம் பொருந்திமூன் றவத்தையும் பொருந்தும்
அந்த மின்றிய வவத்தையி லறிவென வமரும்
நந்த லின்றிய பரம்பொருட் குடைமையா நாடிப்
பந்த முற்றவெவ் வினையறப் பரத்தொடொன் றுவரால். 57

நிலவு மோர்வினை யின்றியே நித்திய மாகி
உலகெ லாநிறைந் துயிரென வொருமுத லென்ன
இலகு சித்தென வெண்ணறு சுத்தமா யிருக்கும்
அலகின் மாயனை யறிவதற் கென்னரி தம்மா. 58

கனவு துஞ்சுதல் காரண மாய்வரு மாபோல்
வினைசெய் வெவ்வுட ரேற்றும்வெம் பேதைமை விளைவால்
மனனி றைற்றிரு மாயவன் மலர்ப்பதத் துணையை
நினையின் வீடுறு நீங்குமவ் வினைப்பயன் விளைவே. 59

வரும்பெ ரும்புகழ்க் குருவொடு மருவறப் பெற்றால்
திரும்பு மாயவ னடிதொழத் தீங்குவிட் டுள்ளம்
நிரம்பு மாலடிக் கன்புநன் னேசமார் புளகம்
அரும்பு மாக்கைநெஞ் சாநந்த வெள்ளமூற் றெழுமே. 60

இல்லறத்தோர் கதியுரைத்த வத்தியாயம்.

இருவினையாஞ் சகடுபுல னெனும்புரவி பூண்டுதிகழ்
உரைமுதலைந் தெனும்வழிபோ முடற்றேரி னுறையுயிராம்
அரசன்மதிப் பாகனொடு மறிவெனும்வா ளாலெறிந்து
கருதியகா மாதிபகை கடந்திடின்வீட் டிலகுறுமே. 61

விரவுறுநட் புப்பகையை விட்டுமனை யறத்திருந்து
மருவுசெயப் படுபொருளு மன்னுதொழில் செய்பவரும்
கருமமுமோர் பிரமமெனக் கண்டுவினை புரிவோரும்
தெருளுறுசீ ரெதிசேருந் தெளிவிசும்பே சேர்குவரால். 62

அரியதொழி லாடையுரு வறியினொரு நூலுன்போல்
மருவியதாம் பிரமமென்றே மதிப்பதுபா வாத்துவிதம்
கருமமெலாம் பிரமமெனக் காணல்கரு மாத்துவிதம்
விரவியுல கவருளத்தின் மேவுபெரு ஞானமெலாம். 63

ஒன்றெனநன் குற்றறித லொழிவறுஞா னாத்துவிதம்
மன்றல்கமழ் மலர்த்தொடையோய் வகுத்தவிம்மூ வத்துவிதம்
நன்றுளத்தி னிடைதெளிந்து நவையறுதம் வினைபுரிவோர்
துன்றுவினை யொழித்தமுனி துன்னுகதி மன்னுவரால். 64

மோகினி யுருக்காட்டிய வத்தியாயம்.

மாய்வில்லை குந்த மேவி மதியணி சடையோ னெந்தாய்
தூயவ ரொன்றே யென்னத் தொழுமவ ரிரண்டே யென்ன

ஆயினை யுலக மாதி யமர்ந்தனை யணுகிப் போகம்
நீயலா திதுவென் றென்ன நினைக்கின்றேன் றில்லை யென்றான். 65

## வாமனாவதார முரைத்த வத்தியாயம்.

குருவரு ளடைந்தோர் வெற்றி கொள்ளுத லுண்மை யன்றோ
மருளுறு நும்மை யன்றி மருவிய குறவற் போற்று
திருளுறு துயர வாரி யெய்துவோ ரொருவ ருண்டோ
பொருவலி யுமக்கிங் கில்லை போய்க்கரந் துறைதல் வேண்டும்.66

## அம்பரீடன் கதையுரைத்த வத்தியாயம்.

மன்னு மன்பர்த முள்ளமென் னிடத்திடை வதியும்
என்ன துள்ளமு மன்பர்தம் பாலியைந் திருக்கும்
அன்ன தன்பர தீனமில் லாதிலை யலர்மேல்
பொன்னி னும்மெனக் கினியவ ரவர்களே புகலின். 67

சுற்ற மாதியெப் பொருள்களும் பொய்யெனத் துணிந்து
மற்றென் பாதமே மனங்கொளு மவர்க்கிடர் மருவின்
உற்று நீக்கிடா துறைதுமோ வன்பர்பா லுவந்து
பெற்ற கன்றுகாண் கறவையிற் பெட்புறு முள்ளம். 68

## திருவவதார வத்தியாயம்.

எண்ணு மெண்ணெயு மியையமற் றெப்பொரு ளகத்தும்
நண்ணு நாரண னலத்தகு மாதவம் புரிந்த
வண்ண வானக துந்துபி மனத்துவந் தடைந்தான்
தண்ணென் வெண்டிரைத் தடங்கட னிலப்பொறை தவிர்ப்பான்.

இருக்கி னிற்கின்மற் றேகின்மெல் லணைமிசைக் கிடக்கின்
உரைக்கி னுண்ணினெங் குற்றனை னெருக்குமோ வென்னும்
கருத்த னாதலாற் கண்டுழிக் கண்டுழி யெல்லாம்
அரத்த முண்டிறங் காழியா னுருவமே காணும். 70

தெளிக்குநான் மறையு மின்னந் தெளிவதற் கரிய தெய்வ
விளக்கமே ஞான நந்த வெள்ளமே நினது மாயை
வளைத்திடப் பட்டோர் நின்னை மதிப்பரோ மூவ ராக
உளத்தெளி வுற்றோர் பார்ப்ப ருன்னைமற் றொருவ னென்றே.71

ஆக்கமு மழிவு மின்றி யகண்டமா யமல மாகி
வாக்கொடு மனத்துக் கெட்டா வள்ளலே யறத்தின் வாழ்வே

தீக்கவுந் தீயோர் தம்மைச் செய்வினை நலத்தி னோரைக்
காக்கவு மன்றோ கோடி கடவுளிவ் வுருவ மம்மா. 72

முசுகுந்தற் கருள்புரி யத்தியாயம்.

இறக்கு முடலம் யானெனப்பட் டிறந்து போய வித்துணைநாள்
பிறப்பின் மக்கட் பிறப்பம்ம பெறுதற் கரிதா லினிப்பிறவாச்
சிறப்புநெறிதந் திடல்வேண்டுந் தெவிட்டா வமுதே யருட்கடலே
துறக்கு முனிவ ருளக்கமலந் துறவாத் தெய்வச் சுடரொளியே.

உருக்குமிணி யூடறீர்த்த வத்தியாயம்.

முற்றத் துறந்து பற்றின்றி முருகு பருகு மதுகரம்போல்
பெற்ற பெற்ற வழியருந்து பெரியோ ரன்றித் திருவுந்திப்
பொற்ற கமலத் துலகேழும் பூத்தோய் செல்வக் களிமயக்கம்
உற்ற மாக்க ளினையெங்ங னுணர்வு படைத்து விழைகிற்பர். 74

சிசுபாலனைக்கொன்ற வத்தியாயம்.

இனைத்தெ னத்துணிந் தெழுதிடாப் பழமறைக் குலங்கள்
அனைத்து மெட்டுதற் கரியதோ ராநந்த மயமாய்
நினைப்ப ரும்பர தத்துவ மாய்நிறைந் தோங்கு
தனிப்பெ ருஞ்சுடர் தன்னையே நினைந்தன னிருந்தான். 75

சமந்தபஞ்சகத்திற் சென்ற வத்தியாயங்கள்.

வியனில மன்ன தக்க வினைப்பயன் விழையா தாற்றின்
மயலறு மற்ற போத மாண்டமெய் யுணர்வு தோன்றும்
உயர்வற வுயர்ந்த வுண்மை யுணர்வுவந் துற்ற காலை
இயலிரு வினையி னிட்ட மிரியுமென் றியம்பி னூரே. 76

வசுதேவற்கு நாரதர் தத்துவமுரைத்த வத்தியாயம்.

கருமத் தையியற் றுகருத் தருளத்
தருண்முற் றவழுக் கறுமற் றவுடன்
உரமுற் றறிவுற் றிடுமுற் றிடினோர்
பிரமத் தொடுமொன் றுவர்பின் னமரார். 77

உத்தவர் தத்துவம்வினு வத்தியாயம்.

ஊற்றினிற் களிறு துஞ்சு மொளியினிற் பதங்க மாயும்
நாற்றத்தின் வண்டு வீயுஞ் சுவையின்மா னுசை மெய்தும்

ஏற்றதோ ரிசையி னாலே யிறக்குமா லசுணங் கல்வி
ஆற்றலில் புலன்க ளைந்து மடக்கிடல் வேண்டு மன்றே. 78

ஐயமி லறிவி னாலே யழிவின்றி யகண்ட மாகி
மெய்யெனும் பொருளா மெம்மை மேவுவான் கான னீர்போல்
வையக மாதி யாய வழங்கிய வுலக மெல்லாம்
பொய்யறு பகுதி நின்று போந்தவென் றெண்ணல் வேண்டும். 79

கண்ணுறு பவற்றி னாலுங் கருதரு மானத் தாலும்
எண்ணியுட் டெளிவு பெற்றிங் கேதமா மிவைக ளென்றும்
நண்ணுநற் குணங்க ளென்று நாடுத லொழிந்தி யாவும்
தண்ணறை துளித்த தாரோய் சமமெனக் காணல் வேண்டும்.

ஞானகன்ம முரைத்த வத்தியாயம்.

மன்னுமைம் புலனு மாய்த்து மருவிய மனத்தை யென்றும்
என்னிடத் திருத்தல் வேண்டு மிருத்தலிங் கரிதா மென்னின்
சொன்னநல் வினைசெய் தானுந் துகளுறு பவைசெய் தானும்
பன்னுறு மன்பி னந்தப் பயனெமக் களித்த னன்றே. 81

அளிசெயு மனத்த னாகி யைம்புல னடக்கி யென்றும்
ஒளியொடு புனித மேன்மை யுவப்பருஞ் சமனுற் றுள்ளம்
தெளிவுறு பெரியோர் தம்மைச் சேரினல் லன்பு கூரும்
களிதரு மன்பு கூரிற் கலக்குநல் லறிவு தானே. 82

இயம்புமெம் மிடத்தி னன்பிங் கியற்றுத லெங்ங னென்னின்
நயஞ்செயெஞ் சரிதங் கேட்ட னவிற்றுத னமம் போற்றல்
பயன்றரு மெமது கோயிற் பணிவிடை முதல செய்தல்
மயக்தரும் பொறுமை யுண்மை மரீஇயெமை வழுத்த லாமே.

குணவிகார முயிர்க்கில்லையென்ற வத்தியாயம்.

பொற்புறு மதுரைப் பதியினின் முன்யாம் போயபின் கோவியர் யாரும், பற்பல யுகமே யொருகண மாகப் பரிவொடு மெம்மையே நினைந்து, சொற்பல நதியுங் கடலினை யடைந்து சொல்லிய நாமரூ பத்தை, முற்பக லொழித்த போற்றமை மறந்து முன்னுமெந் தமையடைந் தனரால். 84

உரைப்பது முரைப்பக் கேட்பது மினிவே றென்றிலை யெனவுளத் துணர்ந்து, திரைப்பனிக் கடல்சூழ் புவிமுத லுலகாச்

சேர்ந்து நூல் படத்துரு வாகி, இருப்பது போல வெங்கணு மிரு
க்கு மெம்மையே நினைந்தனை யாகி, விரைப்பசுந் துணர்த்தா ருத்
தவ நீயும் வெவ்வினை யொழிதிமற் றின்றே. 85

வருணாச்சிரம முரைத்த வத்தியாயம்.

அதிவருணச் சிரமியென வடைந்தமுனி திறங்கூறின்
விதிசவுசா சமனமுதல் வேண்டுதல்வேண் டாமையிலான்
பதிதருறு மிடத்தணுகான் பாலனைப்போன் மகிழ்ந்துறைவான்
எதிர்மருவி யெவரேனு மெவையளிப்பா ரவைபெறுவான். 86

வற்றவின வறத்தினனென் றுரைப்பவொரு சின்னமிலான்
எற்றிடினு மெறிந்திடினு மீனனென வைதிடினும்
மற்றவரை வெகுண்டுரையான் வழங்குமுண வேற்பதற்குச்
செற்றமறும் படிமுயற்சி செய்தாலுஞ் செய்குவனால். 87

பயம்புரியான் பயமடையான் பழியான்மற் றெருவரையும்
நயம்புரிந்த தருமமிவை நவையிவையென் றுளத்தோரான்.
இயம்புபெயர் தேகியென விருந்தாலுந் தனுவிறப்பன்
வயம்புரியு மரசவவன் வழங்கியவெந் தமராவான். 88

துறந்தவருக் குரியனவாஞ் சொல்லுமுயிர்க் கிதஞ்செயலும்
மறந்தவிட யங்களினு மனஞ்செலுத்தா துறைகுவதும்
நிறைந்தபுக ழுத்தவனே நெடுங்கான மடைந்தோர்க்குப்
பிறங்குதவம் புரிவதுவும் பிரமவிசா ரமுமுரித்தே. 89

இமய நியமாதியுரைத்த வத்தியாயம்.

தகைசெய் கின்ற தவமெனச் சொல்வது
புகர்செய் காமம் விடுப்பது புந்தியின்
மகமெ னப்படு கின்றது மற்றெமக்
ககம கிழ்ந்து பயனளித் தாற்றலே. 90

பெருமை யாய தனமெனப் பேசுதல்
தரும மாகுந் தரையிற் றவறிலா
உருமை யாய தியாகமென் றோதுதல்
கரும மோடுவெங் காமம் விடுப்பதே. 91

சாற்று கின்ற சவுரிய மாவதின்
காற்ற லுற்ற மனத்தை யடக்குதல்

ஏற்ற முற்றநற் சத்திய மென்பது
சீற்ற மற்றுவே தாந்தந் தெளிவதே. 92

வித்தை யாவது வேதம் விடுத்தொரு
புத்தி யாகப் பொருந்துதல் பொற்புறும்
உத்த வாமிகு மூதிய மாவதெம்
பத்தி யாமென வேதம் பகருமே. 93

## மனத்தொருமைப் பாடுரைத்த வத்தியாயம்.

பேதமற் றிருந்த ஞானம் பிறந்திடு மளவு மெஞ்சீர்
நீதியுற் றிருந்த மாந்தர் நிகழ்த்துதல் கேட்குங் காறும்
ஓதுநைம் மித்தி கத்தோ டுற்றநித் தியகன் மங்கள்
ஏதமற் றியற்றல் வேண்டு மிறையவை யியல்பின் மாதோ. 94

## நைம்மிசமடைந்த வத்தியாயம்.

ஆக்கையும் புலனு மன்றூ லசைவுறு மனனு மன்றூல்
வீக்குறும் வினைசேர் மன்ற வெவ்வகங் கார மன்றூல்
போக்குறப் புந்தி யன்றூற் பொருளென விவ்வா றெல்லாம்
நீக்கிமற் றறிவு தானே நித்தியப் பொருளென் பாரால். 95

இப்பியே யிரசி தம்போ விலங்குறு தன்மைத் தென்ன
ஒப்பிலாப் பிரமந் தானே யுலகும்போற் றோற்றிற் றென்று [மைத்
செப்புமுள் ளுணர்வி னாலே தேர்ந்துகொண் டிருப்போர் தம்
தப்பிலா ஞான யோகத் தலைவரென் றியம்பு வாரே. 96

வேறு.

எங்கு மாய்நிறைந் திலங்கிய ஞானவா ரிதியின்
பொங்கு தெண்டிரை நுரைவரும் புற்புத மெனவே
அங்கண் மாநிலத் தொடக்கத்த வுலகங்க ளனைத்தும்
தங்கி நின்றெழும் வேறுவே றறிவிலர் சாற்ற. 97

மறிந்து தோன்றிய திரைநுரை குமிழிமற் றனைத்தும்
சிறந்து தோன்றுமந் நீராற் றெரிக்கின்வே றிலைபோல்
குறைந்து தோன்றிய வுலகங்க ளனைத்தையுங் குறிக்கின்
நிறைந்து தோன்றுமப் பரமலா னிகழ்த்தவொன் றிலையால். 98

வேறு.

ஆதியு நடுவு மற்ற வந்தமுந் தானென் றாயும்
ஓதிய நடுவிற் பல்பூ னுருவொடும் பெயர்வே றுற்றுத்

தீதற விளங்கும் பொன்னிற் செகத்துரு நடுவி னுற்றுப்
பேதமி னடுவு முன்னும் பின்னுமே பிரமம் வைகும். 99

மனமெனு மரச னாலே மருவுகற் பனைக ளாகி
புனைவுறு பெயரு லோகம் பொருந்துதல் குறித்த லாது
நினைவுறு பரமா னந்த நித்தியப் பொருளுக் காதி
வினைநடு வந்த தென்ன விளம்பலோர் தன்மைத் தன்றால். 100

## பரிட்சித்து வீடுபேற்ற வத்தியாயம்.

பிறத்தலு மிறத்தலும் பேசி னாக்கைகள்
உறத்தகு முண்மையா யுற்ற நல்லுயிர்க்
கறத்துறை யரசவக் குணங்க ளின்மையால்
இறத்தன்மற் றுனக்கிலை யென்று வைகுவாய். 101

அல்லது மைந்தர்க ளாயும் வைகினை
சொல்லுமிவ் வுலகினிற் றுலங்கு தாதையர்
நல்லெழிற் புதல்வராய் நயந்து திப்பரென்
றெல்லையில் சுருதிக ளியம்பு கின்றவால். 102

தாதையர் மைந்தர்க ளாகிச் சார்வதிங்
கோதுபீ சாங்குர முற்ற தன்மையாம்
பேதமா மரந்தொறும் பிறங்கு நீயெனப்
பூதமா முடனொறும் பொருந்துஞ் சீவனே. 103

உறங்குழிக் கனவிடை யொருவன் றன்றலை
கறங்கென்ச் சுழல்பவர் கையிற் கொய்தொழ
மறங்கிளர் வேலவ மரணங் காண்கையால்
இறந்திடு மாக்கைநீ யென்று மல்லையே. 104

கடத்துறை வானுமக் கடமு டைக்கின்வான்
இடத்தொடு மொன்றுபட் டிருக்கு மாறுபோல்
சடத்துறை யுயிருமச் சடந்த ணக்கினீங்
கடக்கரும் பரத்தினொன் றாகி வைகுமே. 105

மாயையான் மனமெழு மனத்தி னாலுடல்
நேயமோ டடைதரு நிகழ்ந்த வாக்கையால்
மேயசீ வனுக்குமோர் வினைக்கட் டுண்டெனத்
தூயநூ லுணர்பவர் சொல்லு வாரரோ. 106

சொற்றரு தயிலநூ றொலையு மட்டுமே
விற்றரு தீபமென் பெயர்வி ளங்குமால்
பெற்றிடு முக்குணம் பிறங்கு மவ்வள
வுற்றிடு மாக்கையென் றுரைவ ழக்கமே. 107

வினைத்திறம் பொருந்திய மெய்யை மெய்யென
நினைத்திட லன்றிநீ நீங்க லாதிவண்
நுனித்துணா ரறிவிடை நுவலு மொன்றென
மனத்தைவைத் துறைகுதி மன்னர் மன்னனே. 108

யாவரு மிறக்கில ரெடுத்த வாக்கையே
சாவது நினையளி தண்ணந் தாமரைப்
பூவிரி கருமுகில் போலு மாதவன்
சேவடி படர்தியாற் றெளிந்த கேள்வியோய். 109

தீக்கனல் கட்செவி திருகுஞ் சீற்றமோ
டாக்கையிற் கதுவுமற் றதுநி னைத்திடேல்
போக்கறு தனிமுதல் பூவை வண்ணனை
நீக்கமொன் றின்றிநீ நினைத்தல் செய்தியால். 110

அரவுவாய் பொழிந்தநஞ் சாக்கை சேரினென்
ஒருதனி முதல்வினை யுளத்தி னுள்ளுணர்ந்
திருவிசும் பேக்கறு மீறி லின்பமாம்
பெரியதோ ரோதநீ பெறுதி யென்றனன். 111

துறந்தநன் முனிவர் சூழச் சுகமுனி போய பின்னர்ச்
சிறந்தநன் மனத்தை யொன்றாத் திகழுமால் கழலிற் சேர்த்தி
அறந்தரு வேந்தர் வேந்த னரியதோர் காட்ட மேபோல்
நிறந்தலை யெறிநீர்க் கங்கை நீள்கரை யிருந்திட் டானால். 112

புயங்கனன் மணிபெற் றோங்கும் புனிதனாங் காசி பப்பேர்
வயங்கினன் மீண்டு போக வல்லையின் மறைநூல் வல்லோர்
தயங்கெழி லுருவங் கொண்ட தக்கக னென்னு நாகம்
நயங்கெழு மரசன் வைகு நதிக்கரை யேகிற் றன்றே. 113

நஞ்சினை மீட்ப வந்த நான்மறை யோனை மீட்டு
வெஞ்சினத் தடைந்த நாகம் வெவ்வரா வுயர்த்தோ னஞ்சச்
செஞ்சிலை குழைத்த பார்த்தன் றிருமகன் றன்னை ஞாலம்
அஞ்சிமற் றுவா வென்றுங் கதிர்தரக் கதுவிற் றன்றே. 114

தீத்தவ முயிர்ப்பு நாகஞ் சீற்றமோ டடைந்த வாறும்
நாத்தலை புரட்டி வெய்ய நஞ்சுகக் கடித்த வாறும்
பார்த்திலன் சுடிகை நெற்றிப் பஃறலை யரவி னூடும்
கூத்தனை நினைந்து நெஞ்சங் குழைந்திழைந் திருக்கின் றானே.

---

## சூதசங்கிதை.

### சிவமான்மிய காண்டம்.

ஒன்றுமாய்ப் பலவு மாகி யுருவுமா யருவு மாகித்
தொன்றுமாய்ப் புதிது மாகித் தூரமாய்ச் சமீப மாகி
யின்றுமா யென்று மாகி யிருளுமா யொளியு மாகி
நன்றுமாய்த் தீது மாகி நயந்தரும் பொருளே போற்றி. 1

வேணவா வெகுளி வேரறக் கடிந்து விரும்புமா சானடி யடைந்து, மாணமற் றவன்சொற் படிகட வாராய் மதிமுடிப் பிரானடி யாரைக், காணுறிற் சிவனே யெனப்பணிந் தேத்திக் கருதுறு பூசனை யியற்றிப், பேணுதல் வல்ல பக்குவத் தினர்க்குப் பேசலா மெய்மறை பேசும். 2

வேறு.

படியி னூலின் படியிப் படியிடை
முடிவி லன்பு முதிருபு ருற்றும்வெண்
பொடிகொண் மேனியன் பூசை யினுமவ
னடியார் பூசை யதிக மதிகமே. 3

வேட மேபொரு ளென்று மிகமதித்
தோடி மென்மலர்த் தாள்பணிந் தோகையி
னூடி யஞ்சலி யாற்றிவ லஞ்செய்து
பீட மிட்டதி னேற்றிப் பிறங்கவே. 4

கரக நீர்கொடு கால்கள் விளக்கியவ்
விரவு தீர்சிர மேற்றெளித் துக்கொடு
பரவ வுள்ளும் பருகிமெல் லாடையின்
வரமி கும்பத மாண்புற வொற்றியே. 5

அப்பிக் கந்த மலர்கொ டருச்சியா
வெப்பி னாபமொண் டீபமுங் கோட்டுபு

வைப்பு நேர்தர வந்த தருட்சிவந்
திப்பி யம்மெனத் தேமொழி கூறியே. 6

அவர்கு றிப்பறிந் தன்புற நல்குத
லெவர்க ளுக்கு மினிதுகொள் வாரெனிற்
கவரும் வாசமெய்க் காப்பிட லின்சுவை
யிவரு மன்ன மினிதுற வூட்டுதல். 7

இன்ன வாறன்பி யற்றி யடியர்பான்
மின்னு பூசை விளைக்கு மவர்கள்பான்
மன்னி வாழ்குவர் மாதொரு பாகனு
ரென்ன போகமு மீத்து மகிழ்ந்தரோ. 8

## ஞானயோக காண்டம்.

பற்ப னுடியில் கொளப்புரி யுதவிபா ரான்மால்
வெற்பி னுற்பல ரொடுங்கலக் கினனிவன் விரும்பி
யெற்ப ணிந்திட வாவனென் றிரும்பயப் புணரி
பொற்பு றத்திரண் டெர்ந்துநிற் பதுபொருஉ மதுவே. 9

அளந்திடற் கரிய பெம்மா னவிர்முடிக் குரிமை மிக்க
வளந்தவத் தெரிக்கு மாம்பான் மற்றவ னயனம் போலுந்
தளர்ந்திடாச் சூலம் போலுந் தண்டளிர் பொதுளி நிற்குங்
கிளர்ந்திடு மிச்சா ஞானக் கிரியையாய்க் கெழுமு வில்வம். 10

செஞ்சடா டவியும் வெள்ளிய நீறுந் திகழுருத் திராக்கமுந் தரித்து,வஞ்சமா மறையா கமபுரா ணங்கள் விளங்குறு மருத்தமோ ருருக்கொண், டெஞ்சலின் றிருந்தா லனையதூ யவனை யிருந்தவத் தலைவனைக் கமையே, துஞ்சிய மனத்தி னருள்சுரப் பானைச் சூதமா முனிவனைக் கண்டார். 11

வேறு.

மயல்செயஞ் ஞான நீங்க மறிந்திடு பாச மும்பின்
னியல்பெறு முத்தி யெய்து மித்தகு தொழிலின் றேரே
தயர்வளர் மேனி யானைத் தன்னாறு விதழி யானைப்
புயல்வளர் வேணி யானைப் போற்றுதற் குரிய ராவார். 12

காமங் குரோத முதற்குற்றங் கடிந்து காலை மாலையினுஞ்
சேமம் பெருகு மக்கினிகா ரியமுஞ் சிறப்ப செய்வானுத்

தோமங் கறவா னவர்முனிவர் தொக்க பிதிரர் தருப்பணரு
மாமந் திரத்திற் புரிந்திடுவா னுவான் பிரமசாரியே. 13

ஆசா ரியனை வணங்கிடுங்கா லன்னான் வலத்தா ளிடத்தாளிற்
றேசார் வலக்கை யிடக்கையுறச் சிறப்பின் மாறி வணங்கிடுக
வேசா ராவி லவுகிகநூ லியல்வை திகநூன் ஞானநூல்
பேசா ரம்பத் தினுமுன்னர்ப் பேணு குரவற் றொழல்வேண்டும்.

தன்றாய் தந்தை குருவங்கி சத்தார்க் குளம்வாய் மெய்யடக்க
நன்றா சிரியன் சந்நிதியி னயர்ந்து தொழுதஞ் சலிசெய்து
நின்றா ரருளீ தரப்பெற்று நேரலா விடத்தி ருத்தல் [யே.
பின்றா வொழுக்க மெனக்கொண்டோன் பிரம சரிய சிகாமணி

உண்மை மொழிந்து வரல்கற்ற வோத்தை மறவா தாற்றலன்பின்
வண்மை யுறுவித் தியகருமம் வளரு நைமித் தியகருமந்
திண்மை சிறக்குங் கதிநிமித்தஞ் செய்து வருதல் பிச்சையன
மண்மை மறையோ ரகத்தேற்க வகப்ப டாத பக்கத்தில். 16

வேறு வருணத் தாரகங்கண் மேவித் தருதண் டுலமேற்று
மாறு கடியா சிரியனுக்குப் வழங்கிப் புனித மொடுபதஞ்செய்
தூறு புனலீ ராசமன முயர்பிரா ணாகுதி செய்துமுன்
னேறு கிழக்கு முகநோக்கி யிருந்து புசித்தல் கடனாமால். 17

சீரார் மறையோன் பவதிபிட்சாந் தேகியென்றுஞ் சகம்புரக்கும்
பேரா ரரசர் குலத்துதித்தோன் பிட்சாம் பவதி தேகியென்று
மோரார் தருவை சியன்பிட்சாந் தேகி பவதி யென்றுமுரைத்[ல்
தாரா ரகஞ்சென் றியாசகித்த லொத்த விதியென் றுரைப்பாரா

அறையும் பெருமை மிகுவேத வத்தி யயன மல்லாம, னி
றையு மற்றை மனுச்செபித்த னீக்க வேண்டி லீர்கதிரோ, னுறை
யுந் திசைநோக் கியும்புசித்த லொக்கு மிவைமுன் விதியனைத்
தும், பொறையுந் தவமு மிகவளரப் போற்று வோனே புல மிகு
த்தோன். 19

இன்ன பிரம சரியவிதி யியற்றுங் காலை விராகமிகிற்
பன்ன வருமுத் தியினிமித்தம் பரம வஞ்ச வாச்சிரமந்
தன்ன தாகும் வணம்விரைந்து சந்நி யாசஞ் செயக்கடவன்
மன்ன வுளதேற் காமமனை வாழ்க்கை மருவன் மரபாமால். 20

பிரிய மாகிமுன் சொல்லிய விதிப்படி பிரம
சரிய நன்கனுட் டித்தபின் றக்கநா லொழுக்க
முரிய தேசிக னனுஞையா லொத்தநன் னுளிற்
றெரிய வாஞ்சமா வர்த்தனஞ் செய்துகொண் டதற்பின். 21

மனைய றத்தினுக் குதவியா நிமித்தம்வண் குலத்து
ணினைத னக்கறு கூலமாய் நிகர்த்தகோத் திரத்திற்
புனையுங் கற்பினுக் குரியபல் சின்னங்கள் பொருந்த
வனையும் பேரெழி லொடுமுறைத் திட்டவோர் மாதை. 22

தனது சூத்திர விதிப்படி மணஞ்செயத் தகுமான்
புனல்வி ராவிய குடிஞைதா ரகைதமை பொதியு
மினவி ருக்கநா மம்பெறு மாதர்க ளேலார்
தினமும் பன்னியோ டறத்தையா சரித்திடல் சிறப்பே. 23

பாரி யோடவு பாசனஞ் செயல்விடின் பதித
னுரு மற்றவள் பூத்துநீ ராடுபின் பதினு
றேரு நாளிற்சந் ததிபெறப் புணர்ச்சியே யுறுத
னுரின் வானவர் நல்லழ லதிதியர் நிமித்தம். 24

வேறு.

பாய்புகழ்ச் சந்நி யாசி பகர்தரு பிரம சாரி
யாய்தரு மில்லத் தட்ட வடிசினுக் குரியோ ராவார்
நேயமோ டவருக் கோர்நா ணோர்ந்திடா தனம்பு சிக்கிற்
றூயவப் பாவம் போகச் சாந்திரா யணமே செய்க. 25

அவரைநா டோறும் போற்ற லருளுபி ரிடத்து வைத்த
றவறிலா னுதல் வேண்டுஞ் சந்நியா சிகடங் கையி
லிவரவோ ரவிழோர் துள்ளி யின்புன லீத்திட் டாலுந்
தவநெடு மேரு வென்னச் சமுத்திர மென்ன வோங்கும். 26

உதகபாத் திரம்வெ திர்ங்கோ லொண்கரந் தரித்தல் வேண்டுஞ்
சிதமிகு தெய்வ நீறு திருமறை விதிவ ழாம
விதமுற வங்க மெல்லா மியலவுத் தூள னஞ்செய்
ததமிலா மனுவென் றியாரு மறைதிரி யம்ப கத்தால். 27

பிரணவ சகித மாகப் பிறங்குபஞ் சாக்க ரத்தான்
முரணவித் துயர்த்துஞ் சீர்முப் புண்டரந் தரித்தல் வேண்டும்

கரணமொற் றுமைமயி னிற்பக் கனிவொடு மெவனெஞ் ஞான்று
மரணமுப் புண்ட ரந்நீற் றணிநுத றரிக்க வல்லன். 28

அன்னவன் வேதத் தத்தி யயனஞ்செய் பயனு மற்றைப்
பன்னரும் விரத மெல்லா மனுட்டித்த பயனு முள்ளா
னின்னமுப் புண்ட ரத்தை யேமறை விரிக்கு நீரான்
றன்னம்விண் டோனும் பாவத் தழற்குறு நிறையம் வீழ்வான்.

கண்மணி நிறையப் பூண்டு கருதிலிங் கத்திற் காமர்
விண்மணிக் கதிர் சமழ்ப்ப விரிசடைப் பிரானை வெற்புப்
பெண்மணி யொருபா லானைப் பிறங்கவா வாக னஞ்செய்
தொண்மணிப் புனல்பூ முன்னு வுறுபொருள் யாவுங் கொண்டு.

பகர்பூசை செயல்வேண்டும் யோகிகளாற் றியானிக்கப் ப
டுத லானு, மிகவாத பெரும்பிரள யத்துறுபூ தங்களெலா மிலீ
ன மாகித், தகவாகும் வண்ணமீட் டுற்பத்தி யாகிவருந் தன்மை
யானு, மிகவார்வ மொடு மிலிங்க மென்றுரைப்பர் முழுதுணர்
ந்த மேலோ ரம்மா. 31

அவியாது முத்தழலும் வளர்த்துவரிற் பாவம்போ மாகுஞ்
சுத்தி, சலியாருங் கரணங்க ளதனுற்றத் துவஞானந் தானே யு
ண்டாம், புவியாரு மகஞ்சுவர்க்க நிமித்தமியற் றிடினதுவே
பொருந்தும் வள்ளைச், செவியார்தன் மனைவியிடைத் தென்புல
த்தார்க் குறியகடன் றீர்க்க வேண்டி. 32

புத்திரவுற் பத்திசெய்து கொளல்வேண்டு மெய்மொழியெ
ப் போதும் வேண்டு, மெத்தியபல் லுயிர்க்குமினி துறநடத்தல்
வேண்டுமிந்த விதிவ ழாது, பத்தியினில் லறநடத்தி வருகாலை வி
ரத்தியுறிற் பகரு மேன்மை, வைத்தசந்நி யாசியாய் வேதாந்தம்
பொருளுணர்தன் மரபு மாதோ. 33

விரத்திமிகக் கதிவேட்கை மேன்மேலுங் கிளைத்தெழின்
மெய்ச் சந்நி யாசம்,பரத்தியலு மஞ்சவாச் சிரமத்திற் செய்தன்
மிகப் பாங்கே யாகு, முரத்திலெளி யவன்பகூத கங்குடீசக
மிரண்டு ளொன்றி லுள்ளச், சிரத்தையொடு சந்நியாசஞ் செய்
தன் மரபென்று தெரிக்கும் வேதம். 34

அவ்வளவு விரத்தியிலா னென்னில் வானப் பிரத்த மனுகியந்தச்
செவ்வியவாச் சிரமமனுட் டிக்கலா மதற்கும்வலி சேரா னென்னி

ங்வியவாழ் நாளளவு மில்லறத்தே யிருந்திடலுத் தமமா மி
கவ்வியவவ் வறமெவர்க்கு மாதார மாதலினுற் கடைப்ப
ந. 35

வேறு.

மனைவி மைந்தன்பா லுறவைத் தாவ துடன்கூடித்
ப வரக்கொண் டாவதுநற் சிறப்பா ருத்த ராயணத்தில்
விளங்கு நிறைபக்க மேவுஞ் சுபவா ரஞ்சுபநா
சுபமு கூர்த்தத்தி லடவி புகுதல் வேண்டுமால். 36

வியமாதி சம்பத்தி யுள்ளோ ருகித் தவஞ்செய்த
-ய சாக மூலபல நிவேதித் தரற்குப் பின்னுகர்தல்
னகர்நின் றுங்கொணர்ந்த பகர்தா னியஞ்செய் பாகத்திற்
வில்லாப் பதினுறு கவளங் கொளலுங் கடனுமால். 37

ரி முடித்த லுரோமமுகிர் வீழ்த்தும் வபனஞ் செய்யாமை
r மிகுப்ப மறையாய்த லைந்து மகமோ மம்புரிதல்
வ மறநா ருடுத்தறிரி காலநானஞ் செய லுயிர்கள்
றுந் தயையுள் ளவனுதல் பிறமூான் வானப் பிரத்தனே. 38

மேற்றல் புலான்மதுக்கொ டன்மையிரண்டாந்தரம்புசித்த
மென்று கடித்தாளு யிரவிற் றியானம் புரிதலன்றி [ல்
துயில்கொண் டிடினிலம்பா யாகக் கோடல்பொறியடக்க
விதழி முடிப்பெருமான் கழல்சிந் தித்தல் கடனென்றும்.

ம் வெருளி மயக்கமறக் கடிதல் பிரசா பத்தியநன்
ம் புனைருங் கிருச்சிரமே நயக்குஞ் சாந்தி ராயணமே
ம் பயப்ப மதிந்தாறு மியற்றல் வேண்டு நியதியாத்
ன் னிடுவே னிற்காலஞ் சுடரைந் தழற்கு நடுநின்றும். 40

வ வறப்ப முகின்மேய்ந்து பயம்பெய் திடுகார் காலத்தி
வுத் தருக்க ளடிமேவா தறுவெள் ளிடையிற் போயிருந்தும்
பனிக்கா லத்தறலின் மிகவு நனைத்த வுடையுடுத்துக்
லாத தவம்புரிதல் கடனும் வானப் பிரத்தனுக்கே. 41

ர் பிதிரர் தருப்பணமுந் திரிகா லத்துஞ் செயவேண்டும்
தவஞ்செய் காலத்துப் படர்கா னுகர்ந்தோர் கானிலையே
ல் வேண்டு முன்பக்க மிசையில் பாலும் பின்பக்க
னறுங்கோ மயாசமு மாகா ரங்கொண் டிடலுமாம். 42

திருந்து சருகு பக்கணமுஞ் செய்ப லாகு மான்றோன்மெய்ப்
பொருந்து போர்வை யுபவீதம் புனித மாகக் கொண்டிருத்த
லருந்தும் மமுதி னுபநிடத வப்பி யாசஞ் செய்திடுதல்
வருந்துன் பொருவி யோகமுறல் வானப் பிரத்தற் கியல்பாமால்.

ஓமக் கருவி யுதவாவே லொளிரக் கினியை யான்மாவில்
சேமத் துறவா ரோபணமே செய்தல் வேண்டு மில்லறத்தாற்
காமற் புகமந் திரவிதிகொண் டணிநீ றுத்தூ ளனஞ்செய்த
னுமப் பவநோ யறத்துணிக்கு நன்மைத் திரிபுண் டரந்தரித்து.

கற்றோர் விரும்பு மாமணியே காமற் காய்ந்த கண்ணுதலே
முற்றா விளமென் முலைபாகா மூப்பி லாத முழுமுதலே
நற்றா ரணியி ரதமாக நயத்திக் குறுவெண் ணகைதோற்றிப்
பற்றா ரரணம் பொடிபடுத்த பரமே யுன்னைத் தொழுதேனல்.45

என்று துதித்துஞ் சிந்தித்து மிருக்க வேண்டு மிவ்வாறே
யொன்று மனுட்டிப் புற்றவன்பி னேடு விராகந் தொடுமுடனே
சென்று சந்நி யாசத்திற் செப்பும் பேதங் களிலொன்றி
னின்று வழுவா வகைநடத்த னீதியென்பார் நெறியுணர்ந்தோர்.

குலவுறு சந்நியாச வாச்சிரமங் குடீசகம் பகூதக மஞ்ச, ந லமிகு பரமவஞ்ச மேயென்ன நான்கதாங் குடீசக நிலையோ,னி லகுசந் நியாசஞ் செய்து கொண்டபின்ற னிலத்தினு வதுகடும் போ, ரலர்தரு மில்லினு வதுமிதனை யையமேற் றுண்டிடல் வி தியால். 47

சிகையுப வீதஞ் செங்கலூ யாடை திரிதண்டங் கமண்டல ந் தரித்த, றகைகெழு நீற்றுத் தூளனஞ் சருவாங் கமுந்தக செய்திடல் விதியின், வகையொளிர் திரிபுண் டரந்தரித் திடுதல் வயங்குகா யத்திரி செபித்தல், பகையற னொரித்தோ னருட்கு றிப் பூசை பக்தியிற் புரிந்திடன் மாபால். 48

மாற்றரு மேன்மைப் பகூதகன் கடும்போர் மைந்தரா தியர் தமை யொருவிப், போற்றுமே மூகத்தி லனப்பலி யேற்றுப் புசித் திடல் பொலிதிரி தண்டஞ், சாற்றிடு புனித கமண்டல முழைத் தோல் சத்திர முத்தரீ யம்மே, யாற்றல்செ யோக பட்டமே கு ளிர்தாங் காடையே தூயகோ வணமே. 49

பன்னுபா துகையே சிறுதுளைச் சூசி பட்டிழை யியற்றிய
நாண், டுன்னுகூர்ச் சிறுவாண் மண்ணொடு கருவி தொகுமி
யுடையவ னுதன், மின்னுவெண் பூதி தூளிதஞ் சருவாங்
ம்விளங் குறுமிகச் செய்த, லுன்னுநற் றிரிபுண் டரந்தரித்
ஞுபவீதஞ் சிகையுடைத் தாதல். 50

சுழல்பவத் திடுகோ மாதிக ணீத்த தூமன முடையனுய்ப் பா
கழல்படச் செயுஞ்சா வித்திரி சந்தி காலங்க டோறுஞ்செ
திடுத, லழலவிர் குடங்கை முக்கணெம் பெருமா னருட்கு
ருச்சனை யியற்ற, றழல்விழிப் பேழ்வாய்க் கூற்றுயிர் குடி
தாமரை தியானித்தல் கடனுல். 51

கொண்டசீ ரஞ்சன் கமண்டலங் கந்தை கோவணம் பலிக்க
வேணுத், தண்டமுத் தரியங் கொளறிரு நீறுத் தூளனஞ்
செய றகைமுப், புண்டரந் தரித்தல் சிரச்சிகை மழித்தல்
ம்மலெண் கவளமே புசித்தன், மண்டலம் புகழ்சா வித்திரி
வயங்குகா லந்தொறுஞ் செபித்தல். 52

திடமுற வான்ம விசாரஞ்செய் திடுத றீர்த்தயாத் திரை
திடுதல், படர்கிருச் சிரஞ்சாந் திராயண முதலாப் பலவிர
மனுட் டித்த, லிடமுறு மோரூ ரினிலொர்நா ளன்றி யேற்
ளிராமைசஞ் சரித்தல், படவர வணிந்தோ னருட்குறிப்
சபத்தியிற் புரிந்திடன் மரபால். 53

மேதகு பரம வஞ்சனொண் பூதி விளங்கிடத் தூளனஞ் செ
ல், கோதக றிரிபுண் டரந்தரித் திடுதல் கோதன வான்மயிர்
று, பூதமிக் குறுக மண்டல முழைத்தோல் பொருந்துவாண்
ரொடு கருவி, யேதமில்யோக பட்டமுத் தரீய மியைது
ச் சூசியொடு கந்தை. 54

கதிர்வெயின் மறைக்கத் தக்கசத் திரமே கழறராக் குமிழ்
ய் பாதுகையே, வெதிர்புரி தண்டம் விழைசெப மாலை வெண்
றக் கோவணங் கோடல், பிதிர்தரா தேமப் புண்டர மென்றும்
ணவை மனுவிறுற் செய்தன், மூதிரொளி யுபவீ தந்தபுத் திடு
ர மொய்சிகை யொடுதலை மழித்தல். 55

நித்திய கரும நீத்திடல் புனித நிசுழமண் பாத்திரந் தாரு,
ரத்தபாத் திரமே கஞ்சபாத் திரமே யுவந்திடும் வேணுபாத்

திரமே, யத்தபாத் திரமே யிவைகளி லொன்று லறல் கொடாச மனஞ்செய் திடுதல், பத்தின்மா று்து பரசிவ தியானம் பண்ணு தல் கடனெனப் பகர்வார். 56

பாடுநற் புகழ்சால் பகூதக னஞ்சன் பசுருமண் பாத்திர மன்றி, நீடுமற் றொருபாத் திரங்கொள றகாதா னீதிசால் பரமவஞ் சனுக்குக், கூடுமான் மிதவை யையமேற் றுண்கை குய்கமும் பலகறி யோடு, நாடுமோ தனமுங் கவர்வுறின் யோக நசித்திடு நிலைத்திட லின்றி. 57

குறைதர நுகரின் வருத்தமே மிகுத்து கொளுமுடன் சோர்ச்சி யாதலினு, னறைதரு மியோகந் தனக்கனு கூல மாகுமா புசித்திடல் வேண்டு, மறைமொழிக் குரவன் சேவைசெய் திடுதன் மதித்திடு ஞானவப் பியாச, நிறைதரச் செய்தல் சவுசமே நான நிகழ்த்தியா னந்தவ றுமை. 58

பொய்மொழி காமக் குரோதமாற் சரியம் புகர்படு முலோபமே மோக, மைமலி யகங்கா ரங்களைந் திடுதன் மண்ணுயி ரிரு வகை நடத்தல், செம்மையார் தருமன் னவர்கட ளுகுஞ் சிறந்த நாற் சந்நியா சிகடா, மெய்ம்மையே சாதுர் மாசிய விரதம் விழைந்திடல் விதியெனும் வேதம். 59

மூதறி வாண்மைக் குடீசகன் முதலா மூவரு முத்திகொள் பாக்குத், தீதகல் சாவித் திரிமனு நானஞ் செபித்திடல் வேண்டு மற் றொருவன், வேதமந் திரங்கட் காதியா மெழுத்தை விரும்புபு செபித்திடல் வேண்டுங், காதலிற் சந்தி காலங்க டோறுங் கவின்கடு புனிதனே யாகி. 60

அறுதர மறைமூ லத்தினுற் பிராணு யாமகன் னியற்றிடனூற்றெட், டுறுதர முறைத்த வெழுத்தையே யெண்ண லொருவரு மிலாவிடத் திருந்து, செறுபொறி யடக்கி யியல்வகை சமாதி செய்திட லிவ்வண மாகக், குறுமதி முடித்த தம்பிரா னருள்கைக் கொளுந்தொழி லேசெயல் வேண்டும். 61

உத்தம விருத்தி நின்று முயர்ச்சியில் லாத நீச
வத்தகு விருத்தி சார்ந்தா னுருட பதித னுவான்
சித்தமா சொருவி மேன்மை திகழுஞ்சந் நியாசி தன்னை
யொத்தவேழ் பரித்தேர் மேவு மொளியினன் காணுந் தோறும்.

ரம் மண்ட லத்தை பேதித்துக் கொண்டு மேலா
ால் லுலகஞ் செல்வா னேயிவ னென்றுள் ளஞ்சும்
ு லனையன் வைகப் படுங்கிர கத்தெங் நாளுந்
யிர் செம்பொன் முன்றுஞ் செல்வங்கள் பெருகு மாலோ.

ியவித் தொழுக்கி னின்று பொலிபவ னேயா றுலு
யவித் தடாத செய்து நிற்பவ னேயா றுலுங்
ுடு புகழ்ச்சந் நியாசி கொண்டவே டத்தி னுனே
ுரு வமல னென்றே யாவரும் வணங்கத் தக்கோன். 64

மருவு பிரம சரியனுக்கு மன்றன் மலர்மே லவன் றெய்வத்,
ப மிகுமில் லறத்தாற்குத் திகிரிக் குடங்கை யான்றெய்வ,
ருவில் வானப் பிரஸ்தனுக்கொள் ளொளியேழ் பரித்தே
ன்றெய்வம், பொருவில் சந்நி யாசிக்குப் போற்றுமகேசனே
ுவம். 65

ன் மறையந் தழுந்தொடரராப் பரம னடியா ருளத்தகலாத்
ன் றெய்வ மாதலினுற் சந்நி யாச வாச்சிரம
புஞ் சிறந்த வறத்ததால் விளங்கு பரம வஞ்சனுடல்
ன் புறச்செய் கனன மலாற் றகனம் புரிதல் கூடாதால். 66

அனையன் றனக்குத் தரகிரியை யாதி களுமின் றவன்மனை
கினையு மைந்த ராதியர்க்கு கிகழுமாசூ சமுமின்று, புனையுங்
ன மாயவிடம் போதிப் பதிட்டை செயல்வேண்டும், வனையு
ங்கப் பதிட்டையினுன் வரும்பே றளிக்கு மப்பதிட்டை. 67

னம் புரியுங் காலையவன் கரிசி னுடலந் தொட்டாலு
னைக் குருகக் கண்டாலு மறங்கள் யாவும் வலியழியுஞ்
மின் மற்றை மூவருக்குஞ் செய்யவேண்டுங் கனனமுத
கநூலின் படி பின்ன ராற்றல் வேண்டுந் தகனமே. 68

சிர்த்தநற் பிரம சாரிமங் கையர்தஞ் செழுங்கடி தடம்படி
ன்புன், கார்த்தபத் தோலை மெய்யின்மேற் போர்த்துக் கசிங்
ழுக் காலமு ழுழ்கிப், பார்த்தவர்க் கெல்லாந் தன்னிழி பு
த்தேழ், பயிலகம் பிச்சையேற் றுண்டு, தேர்த்தடப் புவி
ற் றியானித்தோர் வருடந் திரிதர வேண்டுமிவ் வாறே. 69

இயலு பிரம சாரியென் றுரைப்போ னிந்தியக் கவிதஞ்செ
பாமேன, லுயலுற மூழ்கி மாமறை மூலத் தோடுகா யத்திரி

மனுவை, மயலறப் பதினா யிரந்தரஞ் செபிக்க மாண்டசந்தி யா
சியு மிந்தச், செயலுறின் மூழ்கிப் பிரணவம் பதினா யிரந்தரஞ்
செபித்திடல் வேண்டும். 70

வளம்பெறு சந்தி யாசியென் றுரைப்போன் வரிமுலை மங்
கையர் போக, முளம்பெற நினைப்பி னாற்றிட வேண்டு முயரவ
கீரணி விரதம், விளம்புமந் நினைப்பு மறிவியிற் றோன்றில் விரைந்
தினி தாற்றிட வேண்டுங், களம்படாத் தத்த கிருச்சிர விரதங்
கண்ணுதற் பிரானடி நினைந்தே 71

மறையினந் தத்தை யெவனனுட் டிப்பான் மற்றவன் றுயர்
ச்சமு சாரத்; துறையினின் றகன்று முத்தியை யடைவான்
சோர்வற வனுட்டிக்கும் போது, குறையுறின் சுவர்க்க போகந்
துய்த் துயர்ந்த குலத்திலோர் தரம்புவித் தோன்றி, நிறைபெரு
ங் குரவ னருளினாற் பாச நீத்தர னடிநிழ லடைவான். 72

ஆதிமத் தியாந்த மில்லா வரும்பொரு ளாகி வைகுஞ்
சோதியை யிடைய றாது சோகம்பா வனைசெய் துள்க
னீதியா மின்னுந் தூய நெடுநப நடுவண் யாரு
மோதிய வோரி லக்க யோசனை விசால மாகி. 73

பாவனை பொருந்தப் பண்ணிப் பற்றுதன் னிதய நாப்பட்
பாவனைக் கெட்டி டானாய்ப் பலவுக்குஞ் சான்று மாகிப்
பாவனை மறையீற் றோங்கும் பரனாயுள் ளானைச் சோகம்
பாவனை கொடுதி யானம் பண்ணிட வேண்டு மின்னும். 74

சத்திய ஞானா னந்த தற்பர சொரூப னாகி
நித்திய நிமல னாகி நிகரறு முதல்வ னாகித்
தத்துவா தீத னாகிச் சருவவா தார னாகி
யத்துவா மூர்த்தி யாகி யப்பிர மேய னாகி. 75

திரிசிய முள்ளோ னாகித் திரிசிய மில்லோ னாகி
விரிவுறப் புறம்பு முள்ளும் வியாபித்து நிற்போ னாகி
யரியதி லரியோ னாகி யரியன வறிந்தோ னாகித்
துரியமுங் கடந்தோ னாகிச் சுயம்பிர காச னாகி. 76

மூலமீ றிகந்தோ னாகி மூப்பிலா முத்த னாகிக்
காலகற் பனைக டந்த காரணப் பொருளு மாகித்

தூலமல் லாதி ருக்குஞ் சூக்கும ளுகி வைகுஞ்
சீலமார் பரசி வத்தை யிரண்டறத் தியானஞ் செய்க. 77

எரியவிர் குடங்கை யானை யிரண்டறத் தியானஞ் செய்யும்
பெரியவன் சிவனே யென்று பேசுதற் கைய மில்லை
யரியதெ னவனுக் கெல்லாப் பாவமு மகனுமுத்திக்
குரியவ னுன் மற்றோர்க் குரியதென் பவமே யன்றி. 78

சுத்தமெய்ஞ் ஞான னந்த சுயம்பிர காச வீச
வுத்தம முக்க ணுற்றோ ளோங்கொளி யிடத்தெஞ் ஞான்று
மெத்தகை யுயிர்க ளோனு மிரண்டறக் கலந்தின் பாரு
மத்தகு கலப்பை யம்மா வறிந்தவர் சமாதி யென்பர். 79

மேவரு மறைக ளத்து விதமென விளம்பு மச்சொற்
றுவரும் பொருள்வே றன்மை தானென வுரைப்ப ரற்றுற்
றீவர்கள் பலருந் தானுய் நிற்பனந் தேவ தேவன்
பாவனை துவிதங் கொள்ளிற் பவமொழி யாது நாளும். 80

பெருகுறு பரமா னந்தப் பேரொளி யொன்றே யேனு
மொருவிறன் மாயை யாலே யுறப்பல பேத மாகிக்
கருதும்வான் மடாகா சஞ்செய் கடாகாச மாயி னுற்போற்
றிருகற விளங்கு முண்மை தெளிதரிற் பேத மின்றே. 81

சகலபூ தங்களையுந் தன்னுயிரிற் காண்பதுவுஞ்
சகலபூ தங்களிடந் தன்னுயிரைக் காண்பதுவு
மிகலறவெஞ் ஞான்றொருவ னுளனுவ னஞ்ஞான்றே [ன்.
யிகன்மிருமின் பார்தருமோன் றிரண்டறுமுத் தியையடைந்தோ

தத்துவத்துக் கெட்டாத தனிப்பரம யோகியிடைச்
சித்தமபே தம்படச்செய் திகழ்சமா தியனுகி
யெத்தலமுந் தோன்றும லென்றிருப்பா னெருவனவன்
முத்தனென முத்தலமு மொழியாநின் றிடுமன்றே. 83

மின்னுடையப் பொலிசடில விமலனூர் திருத்தாளின்
றன்னுடைய மனங்கலக்குந் தன்மையுடை யவனுகி
யென்னுடைய தியானெனுமிவ் விரண்டுமொழி தாநிற்போன்
மன்னுடைய வின்பமில மருவினே னவனன்றே. 84

மறைமுடியி னடநவிலு மாதேவ னொருவனே
யறைதருநித் தியனுலக மவனதுமா யாசொருப
முறையுமிஃ தவனிடத்தே யுதிக்குமொடுங் கிடுமெனவுட்
குறையறவெண் ணுதலுடையோன் கூடுவான் முத்தியினை. 85

துக்கமே நாடோறுந் தொலையாம லுண்டாக்கு
மிக்ககொடும் பவநோயின் வேரறுக்கு நன்மருந்து
செக்கர்முடி மதியணிந்தான் றிருவுண்மை யுணர்ஞானந்
தக்கவது பெற்றவனத் தம்பிரா னவனால். 86

அழற்சிகைதான் சிறிதெனினு மடர்இருளை யழித்திடுமவ்
வழற்பொறியொன் றெனினுமா ரணியமழித் திடுமவைபோ
லழற்கரத்தே வுண்மைசிறி தறிஞான மஞ்ஞான
மழற்கடும்பா தகமனைத்து மழித்திடுதற் கையமின்றே. 87

மந்திரவல் லமையுடையோன் வாளரவி னொடுகூடிச்
சந்ததமு மிருந்தாலுந் தாவுறா னதுபோல
வந்தமிலா னடியுணரு மருண்ஞானி புவியிடைய
பந்தமுட னிருந்தாலும் பற்றானவ் வாதனையே. 88

நடந்தாலு மிருந்தாலு நவின்றாலுந் துயில்கொண்டு
கிடந்தாலும் விழித்தாலுங் கிளர்முடிமன் னவர்முதலோர்
தொடர்ந்தாலுந் தொழுதாலுந் துதித்தாலு மவமதித்துக்
கடந்தாலு மெய்ஞ்ஞானி கமலவிலைப் புனல்போல்வான். 89

செய்ய ஞானி தரிசனமே தேவதேவன் றரிசனமா
மைய வவன்றங் கிடுபூமி யமைந்த சிவபுண் ணியபூமி
தெய்வ வவனை வணங்கிடுதல் சிவபி ரானை வணங்கிடுதல்
பொய்யி லவனுக் கியற்றுபணி பூத நாதற் கியற்றுபணி. 90

## முத்தி காண்டம்

இலக்கண விலக்கி யங்க ளியைவாச கவாச்சி யங்கள்
விலக்கொடு விதிகண் மற்றும் விரித்திடு துவக்கு வங்கள்
கலக்குத லென்று மின்றாய்க் கவினுபெற விளங்கா நிற்கு
மலக்குறும் பகன்மெய்ஞ் ஞானி மாத்திர முறுமீ தம்ம. 91

விரியுட லூழ்துய்த் தாகா மியமுறு தொழித்தெ வர்க்குந்
திரிசிய மாம்ப வஞ்சந் தேய்ந்துசொப் பனம்போற் றோன்ற

வுரியவெம் பால்வி ழித்தோ ரொருவனே சீவன் முத்தன்
றுரியமேல் விளங்கு நம்மைத் தோய்ந்தவ னவனென் றோர்தி. 92

திருமண வாள முத்தி சேர்தரத் தருமு பாயம்
வெருவின்மெய்ஞ் ஞான மன்றி வேறிலை யந்த ஞான
மருவுறு மறையி னந்த வாக்கியப் பொருட்டி றத்தாற்
பொருவறு மனோ விருத்தி பூத்தபின் பொலிந்து தோன்றும். 93

அத்தகு ஞானந் தானே யவிருநஞ் சொரூப மாகு
மொத்தவத் தகுஞா னத்தா லுயிர்களுக் குளவஞ் ஞானஞ்
செத்திடு மஃதி றக்கத் தீர்தருந் துவித பாவ
முத்தம மிகுமத் தீர்வி லொழிதரும் பிராந்தி யாவும். 94

ஏற்றவவ் வொழிவி னுண்டா மிராகாதி குணந சித்தல்
சாற்றிய குணந சிக்கத் தருமாத ருமந சிக்கும்
போற்றிய வவைதீர் காலைப் பொறிபுல னெலாந சிக்குந்
தேற்றமப் பொழுதே யுண்டாஞ் சிறந்தகே வலந்தான் மாதோ.

பழுதையென் றுரைச் சர்ப்ப பிராந்திபோம் பரிசு போல
வழுவறு வான்ம ஞானம் வாய்த்திடப் பாச மாறுந்
தழுவுறத் தக்க வான்ம தத்துவ ஞானத் தாலே
கழுவுமஞ் ஞான மூல கச்சமு சார நாசம். 96

தங்குறு போகந் துய்ப்பேந் தடையறப் பலவுஞ் செய்வே
மெங்குமாம் பரசி வம்வே றியாம்வேறென் றெணலஞ் ஞானம்
பங்கமா ரிதனுற் றீய பாசம்போ காதென் றோர்தி
சங்கசக் கரங்க ளேந்துஞ் சலசநற் கரத்து மாலே. 97

## எக்கிய வைபவ காண்டம்.

நயமிகு குடூச கன்மெய்ஞ் ஞானவிச் சைக்கூ றாகி
யியலுவ வனைத்தும் வேத வீற்றுக்கேள் வியினுற் றீரும்
வயமுறு பக்ஷ கன்றான் மற்றுமக் கேள்வி யாலே
முயலுறு சாந்தி தாந்தி முதலங்க விச்சை மேவும். 98

அஞ்சன்வே தாந்தக் கேள்வி யவாவுவன் பரம வஞ்சன்
விஞ்சுமக் கேள்வி யாலே மெய்ஞ்ஞான மடைவ னன்னோன்
வஞ்சமில் கரும சந்நி யாசியென் றுரைப்ப மன்னு
மெஞ்சிய மூவ ருங்கா மியகன்ம மிகத்த லாலே. 99

அறிந்துநிட் காமி யஞ்செ யரிவர னெவனெ னுஞ்சீர்
செறிந்தசந் நியாசி யொப்பான் றிகழ்தரு பரம வஞ்ச
னறந்திகழ் வேத சார மாம்பிர ணவமே யன்றி
மறந்தும்வே றுள்ள தாமோர் மனுச்செபித் திடல்கூ டாதால்.

அத்தகு பிரண வந்தா னனைத்தினும் விசேட மான
வுத்தம மென்ப ராலவ் வோமெனு மாக்க லத்தாற்
பித்தமார் பாச பந்தப் பெருங்கடல் கடக்க லாகு
மொத்தமற் றதற்கு ரைக்கு மருத்தமு முரைப்பக் கேண்மின்.

திருமலி சந்நி யாசி சிவஞான சித்திக்காக
மருவுறு மவிமுத் தத்தின் மயேச்சுரப் பெருமான் கண்டு
பெருகுறப் போற்ற வேண்டும் பேசிய விவ்வா றன்றி
யொருவின்ஞா ஞர்த்த மாய்வே றொருமார்க்கம் பிரவே சித்தல்.

கருவிட நுகர்ந்து மோட்டுக் காய்பசி தணிக்க வெண்ணு
மொருவன்ற னுணர்வு போனு மாதலா லுண்மை யாகச்
சுருதிசொ லதிபூ தத்துஞ் சுயசொரூ பத்துங் கண்டு
திருகில்சங் கரனைப் போற்ற றெளிந்தவர் செய்கை யாமால். 103

ஞான யாகநேர் யாகநான் மறையுளு மில்லை
யான மற்றிதற் கதிகயா கமுமெங்கு மில்லை
மான மாரிது வாய்த்தவர்க் கரியது மில்லை
யீன ராயினோர்க் கிதனிடத் திச்சையு மில்லை. 104

உண்மையாய் நிட்கள சைதன்னிய சொரூபமா யொளிரா நிற்குந், தன்மையார் பரசிவத்தி னின்று மாயா சத்தி சகிதமான. திண்மையார் சேதனமாய்த் திகழ்சோதி சொரூபமாய்ச் சிறந் தெஞ் ஞான்று, மொண்மையார் விந்துவெனும் பெயருடைத் தா யுறைபரமொன் றுதித்த தாலோ. 105

மருவுவிந்து நாதத்தின் சொரூபமாகிய வெம்மாதுருகா சொரூபமுண் டோவதுதான் சூக்குமமாய்க், கருதயன்மான் முதலியர்க்குந் தெரிவரிதாய்ப் பரமகாரண சித்துருவ பரசிவ சொரூபமாகும், வெருவறவிவ் வகைதெரிந்து கொண்டுமனுச் செபிக்க வேண்டுமா லெவ்வகை மந்திரங்களும் யாவர்களுங், குருபரனல் கிடப்பெறினற் சித்தியா மின்றேற் கூடாதா லாத் தமாய் முடிதருநன் குணர்வீர். 106

இன்னுமுளன் சிவ னச்சி வன்றேகத் திற்குமியை பிராண னுக்கு, மன்னுமிந்தி ரியங்களுக்குங் கணிக விஞ்ஞானத் தினுக் கு, மனத்தினுக்கு முன்னுபுத்தி சித்தமகங் காரமிவை கட்கும் வேறுள்ளா னென்றும், பன்னு சாக்கிரங் கனவுசுழுத் திகட்குச் சான்ருகிப் பயில்வா னென்றும். 107

சுத்தமிகு சத்திய்ஞா ஞனந்த சொரூபமாய்த் துவம கஞ்சீ ர்ச், சுத்தவிலக் கியப்பொருளாய்க் காணவிருத் திக்குலவாச் சான்ருய் நின்ற, பெத்தமில்சை தன்னியமென் றுந்தெரிந்திச் சைதன்னிய மும்பிறங்கு, முத்தமவவ் வீச்சுரசை தன்னியமு மாராயி ஞென்றே யென்றும். 108

தருக்கத்தா லளவைகளாற் சுவானுபவத் தாற்றெரியுந் தன் மை பூண்ட, பெருக்கத்தா னெவனவனன் மெய்ஞ்ஞான சகித ஞய்ப் பிறங்கு வானு, லருக்கத்தாழ் சடைப்பெருமா னருளினு னறிதருமிம் மந்த ணத்தை, வருக்கத்தா பதர்காண்மற் றுமக் குரைத்தா மையமற மனத்துக் கொண்மின். 109

தவிராதவ் வம்மூர்த்தங் களுக்குத் தக்க சத்திகளாய் விள ங்குமந்தச் சத்தி யின்றி, யுவமானங் கடந்தொளிரும் பரசிவத் துக் கொருதொழிலு மின்ருகு மாதலாலே, யவிர்தருமச் சிவம ன்றிச் சத்தியில்லை யத்தகுசத் தியையன்றிச் சிவமு மில்லை, யிவ ர்தருமன் போடிவ்வா றுணர்ப வன்மெய்ஞ் ஞானியிரண் டாகக் கருதிடுவோ னிருணிரயம் புகுமே. 110

அனைத்துயிர்க்கு மித்தகுசத் தியுஞ்சிவமுந் தாய்தந்தை யம்மா வன்பர், வினைத்துயர்தீர்த் தருளுலக மாதாவாய் விளங் கிடுமெம் மெய்ம்மைச் சத்தி, தனைத்துணையா வன்பொடேவருபா சனைசெய் வாரனைய தலைமை யாளர், இனைத்துணையுந் துயரின் றி யிட்டார்தம் பிரமவித்தை செறியப் பெற்ருேர். 111

ஆருறு மெல்லா வுலகுமெச் சிவத்தி னவிர்சத்தா சம்பந் தத் தாலே,தேருறுசத் துப்போன்று தோன்றிடுமெச் சிற்பிரகா சத்தினுலே,நாருறுவி யாபாரப் படுமெவ்வா னந்தசம்பந தத்தினு லே, சீருறு விசுவாச பாத்திரமா மச்சிவச் சுடர்சொரூபம் யா முரைத்தல் 112

மறைமுத றனக்கு நாமரூ பங்கண் மருவுத லில்லையே யெனினுங், கறையற விளங்கு மாயையினலே கற்பிக்கப் பட்டனவாகு, முறைநயச் சிவன்மா தேவன்முற் பெயர்க ளுருத்திர ஞமங்க ளாகு, மறைபரம் பிரம முதற்பெயர் பரதத் துவவவிர் வாசக மாமால். 113

வாயுசங்கிதை.

ஞானநிலைமை யுரைத்த வத்தியாயம்.

விண்டபிர கிருதியே மாயைமிகு மாயையா
னுண்டிடப்பட் டவன்புருடன் மாயையினி னுற்றமர்ந்து
மண்டிடப்பட் டிடுவதுசெய் கருமமலத் தால்வருமாற்
றண்டலிவ் வகைசெய்வோன் சிவனென்னச் சாற்றுவரால். 1

ஒன்று மறியா ரிவ்வகையே யுரைப்பர் புந்தி முதலொடுங்கவின்று துயின்றே னெழுந்துநன்காய்த் துயின்றே னென்ன விசைத்தமையா, லென்று மெவைக்கு நடுவாகி யிருக்குமான்மாவுளனவனே, மன்ற மறையந் தரியாமி யென்ன நாளும் வழங்குமால். 2

மறைக ளிவ்வா றேயறையு மான்மா வெவையு மன்னியே, யுறைவ னுறையப் பட்டிருக்கு முணர்வா னுணர்த லன்றியே, யறையிற் றியமற் றெவற்றினுக்குந் தோன்று ளுண்பெண் ணலியலனுய், நிறையு மறிவான் மிக்குயர்ந்தோர் காண வென்று நிலவுவனல். 3

உறையுந் தயிரு ணெய்போன்று மெள்ளி னுறையெண்ணெயைப்போன்று, மறைபு மரணி யனல்போன்று மமரும் பரம வான்மாவை, நிறையுந் தவத்தோ ரகத்திடையிற் காண்பார் நிலவு மப்பொருளே, முறையாற் றெழுதிலக் ளொருமூன்று மியற்று மூவர் முதல்வனே. 4

இலங்கி யுறையு மாங்கவனை யிதயத் திடையே காண்பவனே, புலன்கள் வழியே தன்னுணர்வைப் போக்கா திடர்க ளுறாறியற்றி, மலங்க ளட்டு மாயைதனை மாய நூறி மாயாது துலங்கி யொளிரும் பேரின்ப முத்தி வீட்டிற் சுடர்ந்துறைவான். 5

கால மொருமூன் றினுமழியாப் பொருளை யுளத்திற் காணும
லேல முத்தி யடைவதற்கிங் கெண்ணை லெங்கு மாய்விரிந்த
நீல நிறவா காயத்தை நின்று சுருட்டிக் கொள்வதே
சால நிகர்க்கு மெனப்பகருமுய தனிநான் மறைகள் சாற்றுமால்.

சிவானுக்கிரக வியல்புரைத்த வத்தியாயம்.

உருவமா யமர்ந்திடு சிவனை யுற்றுநாத்
தெரிதரக் காண்பதை யன்றிச் சேகற
வருவமா யமர்ந்திடு மரிய சோதியை
மருவியே கண்டிட வல்லர் யாவரே. 7

விறகினைப் பற்றியே விளங்கு தீயினைக்
குறைவறக் காண்குவ தன்றிக் கோதிலா
துறைதரு தீயினைக் காண வொண்ணுமோ
மறைதெரி பொருளினை யருக்க வல்லீர்காள். 8

கருமமு மாயையுங் கட்டப் பட்டுறப்
பரிவொடு முறையுமாற் சீவன் பார்த்திடி
லுரைசெய்த விரண்டும்வந் துருதுற் றேங்கியே
திரிவற வுறைவனுற் சிவனெந் நாளுமே. 9

தெரிதர வுளத்தினுற் றோர்ந்து நோக்கினும்
விரிவுற வெளிப்படா ஞான மென்றுமே
லரிறப வெளிப்படு ஞான மென்றுமாம்
கிருவகை யுளவுணர்ந் தெடுத்துக் கூறிலே. 10

விரிந்திடு முத்தியான் மேவு ஞானமே
திருந்திட வெளிப்படா ஞானந் தீதறப்
புரிந்திடு கருமத்தாற் பொருந்து ஞானமே
வருந்தற வெளிப்படு மாசின் ஞானமே. 11

மாசற வெளிப்படு ஞான மன்னிட
வாசிலா வுத்தம கரும மாற்றுமின்
றேசுடை முனிவிர்கா ளென்று சேகற
வீசிடும் வளிக்கிறை விளம்பி னனரோ. 12

நிட்களா சகளா சொரூப முரைத்த வத்தியாயம்.

பொருந்து மாலென் றுரைத்துப் பின்னும மன்னியுத்தான்
புகன்றிடுவான், விரிந்த யுறையா ணவமாயை மிக்க காம மெ

னுமலங்க, ளிருந்த பகுதி புத்தியகங் கார மியம்பு மனஞ் சித்த
ந், திருந்தா தமரிந் தியமிவற்றூற் பந்த மில்லைச் சிவன்றனக்கே.

அறைந்த குடிலை தனைச்செபித்திங் கண்ணா லடித்தா மறை
யுணர்ந்தாற், சிறந்த தில்லை வேறொன்றுஞ் செபிக்க வுணரச் சி
வன்றன்மை, நிறைந்த வியலா கமந்தெரிந்து நீங்கா மாயை த
னைச்சீறித், துறந்தோர் குடிலை சிவனுருவ மென்றே யுணர்ந்து
சொல்லுவார். 14

### சிவபிரா னுமாதேவிக் கருளிய வத்தியாயம்.

அறைபசு பதிபா சத்தை யறிதலே ஞான மாகு
முறையிலா வத்து வாவை முன்னுபு சுத்தி செய்தன்
மறுவறு கிரியை யாமால் வருணவாச் சிரம தன்மத்
துறைதலே சரியை நம்மை யுன்னலே யோக மாமால். 15

### பஞ்சாக்கர மான்மிய முரைத்த வத்தியாயம்.

பரிதி மதியங் கனல்குரவர் தீபம் பாய்நீர் மறையவரா [சையைத்
ணிரைகண் முன்னர்ச் செபிப்பதுவுங் குணாறு நிகழ்த்து குணாதி
திரியா திருந்து நோக்கியே செபிக்கில் யாவுந் தன்னுழைய
மருவி யடையு மாலென்ன வல்லோர் யாரும் வழங்குவரால். 16

தென்பாற் றிசையை நோக்கியே செபிக்கி லாபிசாரந்தான் [லா
முன்பாய்ப் பலிக்குமேற் றிசையை நோக்கிச் செபிக்கின் முடிவில்
வன்பால் வேட்ட பொருளெல்லா மடையும் வடபா னோக்கியே
மன்பே ரறிவி னுன்முன்னிச் செபிக்கிற் சாந்தி வரப்பெறுமால்.

### குருதீக்கைப் பொதுவிதி யுரைத்த வத்தியாயம்.

பணிசெய் திடுகுரு வேசிவன் சிவனே குருப்பரிதீர்
துணிவா கியவிஞ் ஞைச்சிவன் பூசை தொடர்ந்தாற்றி
விணையா முறுபலன் பற்றியங் கிடர்செய் திடுமாலப்
பிணிமாய்ந் திடக்குரு வாணையி னடத்தல் பெருந்தகையே. 18

### ஞானயோகமுதலிய வுரைத்த வத்தியாயம்.

உலகமெலா முன்றோது சிவனையுளத் திடைகன்கா வுன்ன
றூனே, நிலவுமா யோகமாம் விடயத்தி னெழுகாது நிற்போன்
றூனே, மலைவிலா யோகத்திற் குரியன்விட யங்கண்மா தீமைய

யென்றே, யலகில்சிவன் குணநினைந்து நினைந்துறையி லாசையெ
லா மகலு மன்றே. 19

உள்ளநிலைப் படவேண்டிற் றாலமாந் தியானத்தை யுணர்
வார் முன்னந், தள்ளிறாலத் தினிடைத்து ளங்காத வுள்ளமே
சாற்ற வொண்ணுத், தெள்ளிதின்மே லாயசுக் குமத்தியானத்
தினிற்குஞ் சிவனை நன்கா, கள்ளமறத் தியானிக்கிற் சித்தியெ
லாங் கடிதினில்வந் தெய்து மன்றே. 20

---

## கூர்ம புராணம்.

### கண்ணன் சிவதீக்ஷை பெற்று நோற்று சாம்பனைபெற்ற வத்தியாயம்.

மறிபுனல் மீனி னேக்கி யாமைபோன் மனத்தி னுன்னிப்
பறவையிற் பரிசஞ் செய்து பழிப்பறு மொழிகள் கூறி
நறையவிழ் துளவி னேனை நண்ணிய பாச நீக்கி
யிறைவனஞ் செழுந்தி னுண்மை கண்ணனுக் கியம்பி னனே. 1

### கண்ணன் சிவபூசை பண்ணின வத்தியாயம்.

ஆதியு நடுவு மற்றை யந்தமு மின்றி யொன்ருய்ச்
சோதியாம் பிரமந் தானே நூமதிக் கண்ணி யெந்தை
வேதமு மவனை யின்னும் விளங்குற வறியா தென்றாற்
பேதமை மனுடரேயோ வவனிலை பேச வல்லார். 2

### உலகநிலை யுரைத்த வத்தியாயம்.

ஐந்தவித் தடங்கு முனிவர ரிலிங்க பூசனை மகிழ்விறைற் று
னர்க, ளிந்தியத் துமுலா துளத்துறு கரண மொடுக்கிநல் யோ
னெி லிருப்போர், நந்தியை முதலா மெண்ணறு கணங்க ளுன்
முகன் முகுந்தனே டெய்தி, வந்தனை புரிந்து மழவிடை யுயர்த்
தோன் மலரடி நீழல்வீற் றிருப்பார். 3

### சாங்கியயோக முரைத்த வத்தியாயம்.

சொச்சமாய்ச் சாந்த மாகிச் சூக்கமா யொன்ருய் நாளு
நிச்சமாய் ஞான மாகி யெங்கணு நிறைந்த தாகி

யச்சமி றமத்துக் கப்பா லாயதே வலமா யென்று
மெச்சமி லான்மா வென்றொன் றினிதுள தென்பர் மேலோர். 4

அந்தரி யாமி யாக வறைவது மதுவே யாகு
நந்தலில் புருடன் கால நற்றழ லவ்வி யத்த
மைந்துடைப் பிராண னீச னனைத்துமற் றிதுவே யென்னச்
சுந்தர மறைகள் யாவுந் தொகுத்தெடுத் துரைக்கு மன்றே. 5

முத்தரா முனிவ ரான்மா முற்றிய விகார மின்றி
தத்துவங் கடந்து நின்ற தனிப் பொரு ளாகி யொன்றாய்
நித்தமா யசல மாகி யெங்கணு நிறைந்து நின்ற
மைத்தவா ணவத்தை நீக்கும் பொருளென மனக்கொள் வாரால்.

பொருவில்வே தாந்தத் துண்மை யறிந்தவர் புகன்ற வான்மா
விரிதரு வியாபி யென்று மேவுதத் துவங்கட் கெல்லாங்
கரியது வென்று மூலப் பகுதியுங் கடந்து நின்ற
துரியம தாகுஞ் சுத்த வெளியென்றுஞ் சொல்லு வாரால். 7

யாக்கையிற் சிமிழ்ப்புண் டெல்லா வுருவமாய்க் கருவி னெய்திப்
போக்கொடு வரவு செய்தல் பொருந்துமஞ் ஞானத் தாகு
மாக்குமஞ் ஞான மேதென் றறைந்திடிற் பகுதியோடு
நீக்கருந் தத்து வத்தை வேறென்றாய் நினைத லாகும். 8

தன்னைத்தா னென்று தேற வுணர்கலா தாகித் தாழ்ந்த
பின்னல்வெண் டிரைசேர் நீரிற் பிறந்தழி குமிழி போல
மன்னிய யாக்கை தன்னைத் தானென மயங்கி மாழ்கித்
துன்னியதா னிழைக்கப் பட்டப் புண்ணிய பாவ மாமால். 9

நித்திய மாகு மான்மா வேகமாய் நிகழ்ந்து மாயா
சத்தியா யளப்பில் பேத மாமுறு பேதஞ் சாற்றில்
வைத்தநீர்க் குடங்க டோறுந் தோன்றிடு மதியம் போல
வுய்த்திடு முபாதி தன்றைற் பற்பல வுருவந் தோன்றும். 10

காழ்படு தேக்கு வெந்த கரும்புகைக் கழுமப் பற்ற
வேழ்பக லூட்டி னுலு மிருவிசும் பழுக்கு றுதால்
வாழிமற் றதுபோ லான்மாக் கரணங்கள் மருவி நின்றுந்
தாழ்தரு மவற்றின் பண்பு சார்ந்திடா தொழுகு மன்றே. 11

வெளிற்றறி வெறிந்த மெய்ம்மை முதுக்குறை வுடைய மேலோர்
தளிர்த்தவிச் சகத்தை யெல்லாந் தற்பர மாகக் காண்ப
ரளிக்குலம் வீழுங் கண்ணி யரவென மருளு மாபோற்
களித்தபுல் லறிவி னோரிச் சகத்தினைச் சகமாய்க் காண்பர். 12

விகாரமுங் குணமு மின்றி வியாபியாய் சித்தா யொன்றாய்
மகானெனுந் தத்து வத்தைக் கடந்துயர் மாயை யூடு
புகாதொளிர் சோதி தன்னைப் புன்மையோர் சகமாய்க் காண்பர்
தகாததீ வினைகள் செற்றோர் தற்பர மாகக் காண்பார். 13

அடுத்தது காட்டுந் தூயப் பளிங்குபோ லான்மா முன்னர்த்
தொடுத்தது காட்டு மிந்தச் சடரினை மறையாற் கேட்டு
மெடுத்தநல் லுதகி தன்னு ளவையா லெண்ணி நெஞ்சிற்
படுத்திய வுருவந் தானாய்ப் பாவிக்கிற் பரம தாவான். 14

தன்னுளே சகத்து மந்தச் சகத்துளே தானு மாகப்
பின்னம தின்றி யென்று காண்குவன் பிரமன் றன்னின்
மன்னிய தான லாமை மற்றொன்றுங் காண்க லானென்
றன்னகா லத்தின் முத்த னாகுவன் யோகி யன்றே. 15

உளத்துறை காம மாதி யொழிவதென் றுலப்பில் பூதந் [ம்
துளக்கற வொன்றில் வைகு மெனவொன்று தொகுத்து நோக்கு
விளக்குறு மான்மா நித்தம் வெறுஞ்சக மனித்த மென்னத்
தெளிக்குமென் றன்றே முத்த னாகுவன் சிறந்த யோகி. 16

கங்கையை முதலவாய பற்பல நதியுங் கல்லென்
பொங்குதெண் டிரைய வாரி புகுதிலொன் றாகு மாபோற்
றங்கிய ஞான பாதஞ் சார்ந்திடி லான்மா யாவுஞ்
சிங்கலில் பிரமந் தன்னிற் பிறிதின்றி யொன்றாய்ச் சேரும். 17

ஆதலாற் பிரம மொன்றே நித்திய மலைகைத் தேரிற்
பேதுறத் தோன்று நீரிற் பிரபஞ்ச மருண்டு தோன்றுந்
தீதுறு மனத்தர் தீய பிரபஞ்சம் பிரமம் வேறென்
றோதுவ ரொக்க நோக்கும் யோகிய ரொன்றாய்க் காண்பர். 18

நிருமல மாகி யொன்றாய் நித்திய மாகித் தூய்தாய்
மருவிடு ஞான ஞான மொழிந்தது மம்மர் பூத்து
விரியுமஞ் ஞான மென்றுஞ் சடமென்று மெய்ம்மை பூண்டோ
ரொருவிடு மாயை யென்று மோதுவ ருணர்ந்த தக்கோர். 19

அரும்பெறல் யோக நன்கிற் கைவந்தோ ரவற்றின் போகம்
விரும்புறின் முத்தி யெய்தார் வெறுவெளி யதனிற் றோன்றும்
பரம்பொரு ளாகு மென்னைப் பாவித்தோர் முத்தி சேர்வர்
விரிந்திடு பிரமம் யானே யெனமறை விளம்பு மன்றே. 20

உலகெலாம் யானே யாகி யுள்ளுமாய்ப் புறம்பு மாகி
யலகறு முயிர்க ளல்கி யளித்தவை யடைத்தல் செய்யு
நிலையுறும் விச்சைக் கென்றுங் கரியதாய் நிற்றன் ஞானக்
கலையுணர் முனிவர் காண்ப ரேனையோர் காண்டல் செய்யார்.

பற்பல கந்த மாகி யிரசமா யுருவாய்ப் பாய
வற்புதப் பரிச மாகி யனைத்துள வொலியு மாகிச்
சிற்பர மாகி யொன்றாய்ச் சிறந்தநித் தியமாய் வேதம்
பொற்பொடு பலவாய்க் கூறு முருவமாய்ப் புருட னாகி. 22

எங்கணு நிறைந்து நின்ற வென்னையே டணைக ணீத்துப்
பொங்கிய காம மாதி யுடற்பகை யாறும் போக்கித்
தங்குமுக் குற்ற நீக்கி முக்குணங் கடிந்து நின்ற
சிங்கலில் கேள்வி மிக்க முனிவரர் தெளிந்து காண்பர். 23

மாயையிற் கடிந்த வான்மா மாயையாஞ் சகத்தை நாளு
மோய்வற நடத்தே னென்னை யின்றிமற் றதுவு மொல்லா
தாயவை யென்கொ லென்னிற் காந்தமுன் னூடு மூசி
யேயுற வென்மு னிந்த விருஞ்சக நடக்கு மன்றே. 24

தன்னைத்தான் றெளிய நோக்கித் தன்னிடைத் தணப்பி லாத
வென்னுரு வதனிற் சேர்ந்தோ ரிருவினைச் சிமிழ்ப்பி னெய்தி
மன்னிய திகிரி போலும் பவத்தினின் மயங்கா ராகி
யுன்னரு முத்தி வீட்டி னுயர்ந்தினி திருப்ப ரன்றே. 25

## சாம்பிரதாய வத்தியாயம்.

அவ்வியத்தந் தனிற்காலம் பிரதானம் புருடனிவை யனைய
யத் தோன்றுஞ், செவ்விபெறு மிவைகடமிற் சிறந்தசகந் தோன்
றியிடு மதனு லந்த, வெவ்வமறு பிரமத்தி னுருவாகுஞ் சகமித
னைச் சகமென் றெண்ண, னெவ்வமுமென் சிப்பியினை வெள்ளி
யென மருண்டெண்ணு நோன்மைத் தாமால். 26

இந்தியங்க ளன்றி நின்ற மிந்தியத்தை யறிவித்தே யியக்
கல் செய்யு, மந்திலுறு மாதாரத் தனக்கின்றிச் சகத்தினுக்கா

தாரமாகு, முந்தியொன்றிற் றோன்றியதன் றெவற்றினையு முறை முறையே தோற்றுவிக்கும், பந்தமுறு தொடர்ச்சியின்றிப் பற் றும லெவ்விடனும் பற்றி நிற்கும். 27

பின்னமின்றிப் பின்னமாய் நித்தியா னந்தமாய்ப் பிரம மா கி, மன்னியிடுங் காட்சிமுத லளவைகளி னறியாத மாண்பிற் று கித், துன்னியிடும் விகற்பமில்லாத் தற்பரத்தைக் கேள்விகளாற் றொடகப் பட்ட, நன்னிலையஞ் செவியுடைய தக்கோர்மற் றறிவ ரென நவிலும் வேதம். 28

உள்ளுமாய்ப் புறம்புமா யுலகனைத்து நிறைந்திருக்கு முண் மை யானுந், தள்ளரிய பரம்பொருள்யான் சகமனைத்தும் படை த்ததனைத் தரித்து நிற்கும், வள்ளலும்யா னுபநிடதக் கோயிறெ றும் வீற்றிருந்தம் மறைக்கு மெட்டாத், தெள்ளரிய ஞானத் தின் றெளிவும்யா னெனவெதிக டெரிப்ப ரன்றே. 29

பத்திமை யுரைத்த வத்தியாயம்.

மகமுத லுயர்கன்ம மருவிமை யறுதானந்
தகைபெறு மதியோர்பா லருளொடு தனிநல்கிப்
புகைபடு தழலெய்தித் தவநனி புரிவோரும்
பகருமென் னடியெண்ணு ரெனிலுயர் பதமெய்தார். 30

உலகெவ னுழையெய்து முலகினு ளெவனெய்து
மலகறு முயிர்தோறு முயிரென வமர்வுற்றே
நிலைபெறு கரியாகி நின்றவ னெவனன்றோன்
மலைவறும் யானுமென் றுணர்பவர் மதிவல்லோர். 31

இந்திரன் முதல்வானோ ரிருடிகண் மனுவாதி
யந்தமி லுயிர்யாவு மின்னமுற மருமாயைப்
பந்தம துறவென்னைப் பரிவுட னறியாவா
னந்தவின் மறையொன்றே யென்னிலை தனிநாடும். 32

மெல்லிலை யுயர்வில்வம் வீழ்சரு கலர்தொட்டுப்
புல்லொடு தனிநீரேனுங் கைக்நிறை புனலேனு
மல்கிய மகிழ்வாலென் மலரடி மிசைபெய்தோ
ரல்லல தடையாரென் னடியிணை யடைவாரால். 33

யோகமுற மனைபேறும் யோகியு மெனவேதஞ்
சேகற வுரைசெய்யுந் தெளிபொரு ளனுமீசன்

மாகமொள் ளெரிதண்ணீர் மண்வளி முதல்யாவு
மேகம தாய்நிற்கும் யானென வறிவீரால். 34

மன்னிய வுயிர்யாவு மருவும கத்துவமுந்
துன்னரு மிறைமேவுந் துகளில்ப ரத்துவமும்
முன்னரி தாய்நிற்கும் பிரமமு மூலவில்லா
வென்னுரு வெனநன்கி னெண்ணின ரறிவுற்றோர். 35

வருபர மானந்தக் களியுற மகிழ்வோடும்
பொருவரு நடம்யானே புரிகுவ னெனயாரே
யுருகிமென் மலர்தூய்மெய் யுணர்வொடு தன்னெஞ்சிற்
கருதின ரவர்கண்டீர் கடவுள ரெனவாழ்வார். 36

## சிவசத்தியின் செயலுரைத்த வத்தியாயம்.

செந்தழற் கடவு டேவர் தென்புலத் தவர்கட் கூட்டு
நந்தலி லவியு மற்றைப் பலிகளும் பரித்தென் றுளு
மந்தமி லுணவு நன்கி னடுதலுண் டவை யறுத்தல்
பந்தமி லெமது சத்தி பண்ணிய செயல தாமால். 37

ஆழ்கடற் கிறைவ னென்றன் சத்திய லலர்ந்து தோன்றும்
பாழிமா லுலக மெல்லாங் குளிர்விக்கும் பவன வேந்து
மூழ்முறை பிறழா துள்ளும் புறமுமா யுலாவி யாகம்
வாழிய பரிக்கு மாறு மென்செய லாகு மண்ணே. 38

நால்வகைத் தோற்றத் துள்ள சராசரம் புவன நான்கிற்
சால்வுறு பஞ்ச பூத மனமுதற் கரணத் தானி
னேல்பிர கிருதி யெய்துஞ் சகத்தின்கா ரணமா மாயை
பால்படு தொழிலி னிற்றல் பகுதியைப் புருடன் பார்த்தல். 39

ஈங்கிவை யனைத்து மென்றன் சத்திக ளியற்று கின்ற
தீங்கில்கா ரியங்க ளாகுஞ் சகத்தினைச் சேர்ந்து நின்று
நீங்கியு நீங்கா துற்ற வென்னிலை நிகழ்த்தல் செய்தேம்
பாங்குற விதனை யோர்ந்தோர் பவக்கடல் படிந்து மாயார். 40

## விபூதி யுரைத்த வத்தியாயம்.

ாக்குக் காயத்துக் கெட்டாது மாயையொ னுங்
ருட்பாழ் கடந்துநின்ற துரியம்யான் கடவுளரு

நினைவரிய பிரமமும்யா னித்தியம்யா னிட்களம்யான்
றனையுணர்ந்தோ ருளமதனி லகலாத தத்துவம்யான். 41

பிரமர்களி னன்முகன்யான் பெட்புறுமா யாவிகளிற்
பொருவரிய நாரணன்யான் போதமுறும் யோகிகளில்
மருவரிய சம்புவும்யான் மடந்தையரி லம்பிகையா
னெரிகதிரா தித்தியரி லேத்தரிய விட்டுணுயான். 42

உருத்திரரிற் சங்கரன்யா னுடுக்கடமி லுடுபதியான்
பரித்தபுகழ் வசுக்கடமிற் பாவகன்யான் பறவைகளின்
விரித்தசிறைக் கலுழன்யான் விண்ணவரி லிந்திரன்யான்
றரித்தவரி வில்லிகளிற் ருழ்தடக்கை யிராமனுநான். 43

ஆனைகளிற் றிறலயிரா வணம்யான்வா ளசுரர்தமின்
ஞானமுழு துணர்ந்தருளு நற்பிரக லாதனன்யான்
மோனமுறு மிருடிகளில் வசிட்டன்யான் முனிவரரி
லீனமறு வியாதன்யான் கணங்கடமில் விநாயகன்யான். 44

பொருவரிய வீரர்தமிற் புகல்வீர பத்திரன்யா
னொருவரிய விரதத்திற் சத்தியம்யா னெப்பரிதாம்
வெருவருநற் ரெழிலோரின் விச்சுவகன் மாவும்யான்
றெரிவருநூற் சித்தர்தமிற் சிறப்புடைய கபிலனும்யான். 45

வரைகளிற்பொன் மேருவும்யான் பொருபடையில் வச்சிரம்யான்
றெரிவரிய சாமத்திற் றிகழ்சேட்ட சாமம்யான்
சுருதியறி மனுக்கடமிற் சுவாயம்பு மனுவும்யான்
றெரிவரிய தேயத்திற் றிகழ்பிரம வர்த்தம்யான். 46

நதிகடமிற் கங்கையா னகரிகளிற் காசியான்
றுதியுறுநல் விஞ்சைகளிற் சொல்பிரம விஞ்சைநா
னதிகமுறு ஞானத்திற் சிவஞான மாவேனுன்
விதியுறுமைம் பூதத்தின் விளங்கியவா காயம்யான். 47

அக்கரங்க டமிற்சிறந்த வகரம்யான் றருக்கடமிற்
றொக்குயரைந் தருவும்யான் சுரபிகளிற் றேனுவும்யான்
றக்கவுயர் கதிகடமின் முத்தியும்யான் சாற்றரிய
மக்கடமிற் பகையொறுக்கும் வாட்டடக்கை மன்னவன்யான்.

பரம்பொருளாங் கடவுளரிற் பகர்பரமேச் சுரனும்யான்
மாங்கடமி லரசும்யான் வகுப்பவற்றிற் காலமும்யா

னரந்தைகெடு மியக்கர்தமிற் குபேரன்யா னலைபுனலி
னிரங்குகடல் யான்றேவ விருடிகளி னாரதன்யான். 49

நச்செயிற்ற சர்ப்பத்தில் வாசுகிநா னுகத்தி
னச்சணங்கா ரனந்தன்யா னரும்பெறற்றென் புலத்தோரி
னிச்சையுறு மரியமான் யானீர்வா ழிமையவரிற்
செச்சைபுனை வருணன்யான் றிகழ்மீனின் மகரம்யான். 50

திரிதருகந் தருவர்தமிற் சித்திரத்தே ரவனும்யான்
பொருவரிய விந்தியத்தின் மனமும்யான் பூதத்தின்
மருவுறுநற் சேதனம்யான் மாமறையிற் சாமம்யா
னரிதுணரும் யாகத்திற் சயயாக மாவேனுன். 51

எழிலுடையோ ரெவர்களினும் வேனில்வேள் யான்புனிதந்
தழைபவரிற் கலையூருந் தலைவன்யான் கொல்வோரின்
விழிவுறுநற் கூற்றும்யான் வெல்வார்பால் வெற்றியான்
பழுதறுநற் சந்தச்சிற் பழிப்பறுகா யத்திரியான். 52

இருதுவினி லிளவேனிற் றிங்களின்மார் கழித்திங்கள்
பொருவரிய வஞ்சகத்திற் பொருசூது புரோகிதரின்
மருவரிய வியாழமுயர் வாகவியல் வெள்ளியென
வுரைசெயிவை யனைத்தும்யா னுரையாத பொருளும்யான். 53

என்றென்னை யறிமின்க ளியம்பிடுமான் மாவெல்லாம்
பொன்றவரும் பசுவாகும் யான்பதியாம் புகல்கின்ற
மன்றவுயிர் பசுக்கடமை மாயையினுற் பிணிப்பானுந்
துன்றுபிணி விடுவானும் யானென்னத் துணிவீரால். 54

முக்குணத்தின் சமத்துவத்தை மொழிந்தபிர தானமென்றுந்
தக்கபிர கிருதியென்றுஞ் சாற்றுவர்கண் மதிவல்லோர்
மிக்கபுகழ்ச் சாத்துவித குணம்ஞான மிகுதமத்தின்
றொக்ககுணந் தனைமேலோ ரஞ்ஞான மெனச்சொல்வார். 55

சாத்துவித குணத்தோடுந் தாமதமாங் குணந்தழுவி
னேத்தரிய ரசோகுணமா மிங்கிவையும் யாவருக்குங்
காத்தலரு நல்வினையுந் தீவினையுங் கனன்றுயிரை
யார்த்திடுதாம் பாகுமென வறிவுடையோ ரிசைத்திடுவார். 56

வேறு.

மூலமாம் பிரகிருதி புருடன்மகா னாதிகண மோயவிகாரம்
யாவுங், காலமுட னிகழ்கட்டுக் கட்டுவிட்போ னுயர்பாசம் பசு
க்கள் யாவுஞ், சால்புடையோர் யானென்பர் தற்பரமாம் பிரமம்
யா னென்று தேர்ந்தோர், சீலமுடன் யாவருக்குஞ் செலவரிதா
முயர்வீட்டிற் சேர்வர் மாதோ. 57

## பிரபஞ்சத்தோற்ற முரைத்த வத்தியாயம்.

உரைத்தமல ரயனிடத்திற் சாரசரங்க ளுதிக்குமிவை யனை
த்து முன்னம், வருத்தமற வீன்ற வெனைத் தந்தையென யறி
யாமன் மறைக்கு மாயை, நிரைத்திடும்யோ னிகடோறு முதித்
திடுவோற் கியான்றந்தை நிலவு மாயை, யருத்தியுட னீன்றெடு
த்த வன்னையென வறிந்தோமே யறிவு ளோமே. 58

என்னையுயர் தந்தையென வறிந்தோர்க ளிரும்பிறவிக் கட
லின் வீழ்க்கு, முன்னைவினை தனைநீக்கு முதுக்குறைந்தோ ரென்
னையன்றி மற்றோர் தெய்வந், தன்னையளித் தவனென்ன வுரைத்தி
டுவோர் தன்றந்தை யகத்துண் மேவ, வன்னியனைத் தந்தையெ
னும் விலைமாத ரருள்புதல்வ ரனையர் மாதோ. 59

அழிவதில கெஞ்ஞான்று மழியாத பரம்பொருள்யா னென்
ன நெஞ்சின், விழைவினுட னேக்குணர்யா ரவர்கடம துயிர் கு
றையா மேலோ ரன்னோர், பழையதுவா யொன்றாகிப் பரம்பொ
ருளாந் தற்பரத்திற் சேர்வ ரென்ன, வெழுதரிய மறையனைத்
துந் துயிலாமற் கிடந்தலறி யிசைக்கு மன்றே. 60

அலகிறந்த வான்மாவை யருமாயை பிணித்தல்வினி யோ
கமாகு, முலகினுக்குக் காரணமாஞ் சத்திதனைக் கடந்து சத்தி
யோடும் வைகு, நிலவுபுகழ்க் கடவுளை மகேசனென நிகழ்த்
திடுவ ரவன்யா னென்னைப், பலவெனவு மொன்றெனவும் பதி
யெனவும் விபுவெனவும் பகரும் வேதம். 61

## மாயாவிகார முரைத்த வத்தியாயம்.

சகம்யானல னெனையின் றிய வுலகின்று தயங்கும்
புகுமாயையி மித்தத்தது புகலாயுல குளதாந்
தகுமாயையு மென்முன்றெழி தரின்மற்றது சடமாம்
பகரென்செயல் கொடுமாயையு முலகந்தனி பரிக்கும். 62

உருவத்துறு சகம்யாவையு முறுமாயையு முதலித்
தருகாரண யாஞதலி னென்னேப்புக ழக்கோர்
விரிவிச்சுவ வுருபத்தின னென்பா ருயர்வேத
மிருளற்றறு பலவென்பது மொன்றென்பது மென்னையே. 63

ஒன்ருகியும் பலவாகியு முளதா யிலதாயு
நின்றேனேயிவ் வுலகத்துட னிகழ்கா ரணமென்று
மன்றென்றுமு ரைப்பாருல கறிவுற் றிடொறும்
பொன்ருதுயர் வுறுமாயையு காதேபுரி கிற்பன். 64

## தத்துவ தரிசனமுரைத்த வத்தியாயம்.

மின்படு மேகந் தாஞ்சும் விரைகளின் மலரின் மேவி
யென்பெழ வினிதி னேற்றுந் நீர்த்தங்க ளெவையு மாடித்
தன்புலன் வித்து வெய்யத் தழலிடைத் தவஞ்செய் தாலு
மன்பிறு லன்றி யெம்மைக் காண்குத லரிய தாமால். 65

மைத்தரு மாயை யென்னு மதுநுகர்ந் தறிவி லோர்கண்
மொய்த்தரும் பிரபஞ் சத்தை வேறுவே ருகக் காண்பர்
சுத்தராய் ஞான னந்தச் செழுங்கட லதனிற் ரேய்ந்து
தத்துவ மறிந்தோ ரொன்ருய்த் தம்முளே சகத்தைக் காண்பார்.

எண்ணுறு மெண்ணெய் போல வெங்குறு கிரம்பி நிற்கு
நண்ணரும் பிரமந் தன்னி னண்ணிய சிவன் முத்தர்
விண்முத லாய பூத மெவற்றினு மேவி யென்போற்
பண்ணருந் திருட்டி யதி பண்ணினும் பண்ணு வாரால். 67

பிரமமே யன்றி வேறு பிறித்துரைத் திடவி ரண்டா
மரியநற் பொருளி லாத வாற்றினு லறிவுக் கெட்டா
வொருவனு மீசன் யானே யுனன்ன லையம் மின்றித்
தெருளுற வுணர்ந்து நாளுந் திக்கைய யிருத்து வீரால். 68

கண்மலர் திங்க ளங்கி கனைகதிர்ப் பருதி யின்றி
நண்ணிய பொருளைத் தன்ன தொளியினு லுட மாட்டா
தண்ணலம் பிரமந் தன்னைச் சுடர்களா லறிய வொண்ணு
தெண்ணரும் பிரமந் தன்னுற் காணலாஞ் சுடர்கள் யாவும். 69

நித்தியா னந்த மாகி நிமலமாம் பிரமந் தன்னை
தத்துவ வித்தா யுள்ளோர் பிரமமந் தன்னு லென்று

மூத்தம தியானஞ் செய்யா வுளமுவந் தெனது தாளிற்
பத்திசெய் தென்பால் பாலிற் பால்கலந் தென்னச் சேர்வார்.

பாருமன் றழலு மன்று பகலுமன் றிரவு மன்று
நீருமன் றகல்வா னன்று நிகழ்வளி மண்ணு மன்று
யாருமன் றாகி யொன்றும் யானென்றே பரமா காயஞ்
சேர்வரும் பிரமந் தன்னை முனிவரர் தேர்வ ரன்றே. 71

வச்சிரப் படைக டம்மால் வலியினாற் செகுத்த லொண்ணா
தச்சனாங் கெரியா லென்று மெரிக்கொணா தலைகொ ணீரா
லிச்சையி னிரக்க வொண்ணா தென்றுமோர் தகுதி யாகி
நிச்சய மாகி நிற்கு நிருமல மாகுஞ் சோதி. 72

யோக முரைத்த வத்தியாயம்.

மன்னிய யோகந் தன்னால் ஞானம்வந் தெய்து மந்த
வுன்னரு ஞானந் தன்னால் யோகம்வந் தினிதி னெய்து
மின்னவை யிரண்டுங் கைவந் திறைஞ்சினோன் றனக்கி யான்மற்
றன்னிய னல்ல னன்னோன் றன்னுட னொருவ னாவேன். 73

சூனிய மாகித் தோற்றாத் தன்மையாஞ் சொரூப மேந்த
மோனமாம் யோகந் தன்னாற் சிந்திப்பா ரதனை முற்று
மானவர் பாவ யோக மென்பரென் னோடுங் கூட்டு
மீனமில் யோகந் தன்னை மகாயோக மென்று சொல்வார். 74

எமையுளத் திருத்தும் யோகந் தனக்குமற் றேனைத் தேவர்
தமையுளத் திருத்தும் யோக நிகரெனச் சாற்ற லாமே
யமைவுற வென்னை யுள்ளத் திருத்தியஞ் செழுத்து மோர்ந்தோ
ரிமையவ ராகி வாழ்வா ரென்பதற் கைய மின்றே. 75

என்னரு டன்னா லென்னை யிதயத்துட் காண்ப தல்லா
லென்னரு ளில்லோர் கோடி யிவுளிமா மகங்க ளாற்றிக்
கன்முக டேறிப் பன்னாட் காய்கிழங் கருந்தி யெய்தா
வுன்னருந் தவஞ்செய் தாலு மென்னிலை யுணரொ ணாதால். 76

வேறு.

ஊதுகம லத்தினிடை யொள்ளொளி விரிக்குஞ்
சோதிமய மாயொளிசெய் தொம்பத மதற்கு
ளாதிநடு வீறிவைக ளின்றியரு வாகுந்
தீதொருவு தற்பதமி ருத்தல்சிவ ஞானம். 77

தத்துவ மனைத்துமருள் சார்பிரண வத்தாற்
சுத்திசெய்து தன்னுருவ மென்னுருவு மோய
வைத்துயர்மெய்ஞ் ஞானமெனும் வான்புனலி னூடி
யுத்தமவெண் ணீறணிதல் பாசுபத யோகம். 78

பிரமசரி யம்பொறை தவம்பெரு மகிழ்ச்சி
மருவரிய வுண்மைதமம் வன்கொலை செயாமை
பொருவில்சமம் வேதமொழி யுண்மையெனல் பொய்தீ
ரரியவிர தாங்கமென வாரிய ருரைப்பார். 79

இன்னவையி னென்றகுறை யாதினி தியற்றின்
மன்னியிடு மிவ்விரத மாதலின் மனத்தி
னுன்னியெனை வேரறவு ணர்ந்துமறை யுண்மை
பன்னியிடின் முற்றுமுயர் பாசுபத யோகம். 80

எவ்வுள வருத்தியுட னென்னைவழி பட்டா
ரவ்வளவி னுயபலன் யாமினி தளிப்பேம்
பவ்வமிக ராசைக ளொழிந்து பலிகொண்டு
துவ்வுறல் புரிந்தவர்கள் வீட்டிலகு மோய்வார். 81

இழவினொடு பேறுமிக ராகவுள மெண்ணி
விழைவொடு வெறுப்பிவைகள் விட்டிகழ்த றம்மைத்
தொழுதுற வழுத்தினிக ரென்றறுணி குற்ற
பழுதறு குணத்தரென தன்பர்பவ மில்லார். 82

பெற்றவைகள் கொண்டுள மகிழ்ந்து பெறலாகா
மற்றவைகண் மேன்மனம் விடுத்து மருணீங்கிப்
பற்றிகலொ டற்றொரு பதிக்கணுறை யாத
நற்றவரு மென்னடியி னண்ணுவர்க ளன்றே. 83

மக்களொடு சுற்றமனை வாழ்க்கையிவை விட்டே
தொக்கபுலன் வென்றெனை வழுத்தினர் துதிக்குந்
தக்கவர்க ளப்பிறவி தன்னிலழி வின்றி
மிக்ககதி யாகியநல் வீடடைவ ரன்றே. 84

கருமிகளை னைத்தழலி னேற்றுவர்கள் கற்றோர்
விரிபுனலி னுதவனில் விண்ணில்வழி படுவார்
தெருளொடு தெளிந்தமதி யில்லவர்கள் செம்பிற்
றருவினுயர் கல்லின்மலர் சாத்திவழி படுவார். 85

கற்றுயரு ஞானமில ராய்க்கருணை யெய்திப்
பெற்றுயர்வி ரத்திநனி பெட்பினுட னுற்றோ
ருற்றசத ருத்திரிய மோமெனு மெழுத்துத்
தெற்றென வுணர்ந்திவை செபிக்கினெனை யடைவார். 86

யோகமிடை விட்டயி ருலந்தவர் விசும்பிற்
சோகமறு மின்பநனி துய்த்தவை தொலைந்தால்
வாகைபுனை மன்னர்மறை யோர்மரபி னெய்திச்
சேகறுமவ் வியோகமுற முத்தியிடை சேர்வார். 87

புன்மொழி வியற்றிழி குலப்புலைய ரேனு
நன்றறிவு கல்விபொறை ஞானமில ரேனு
மன்றல்கம ழுந்துளவ மாலையெனை யுள்ளத்
தொன்றென நினைந்தவர்த மைக்கதியி னுய்ப்பேம். 88

வேறு.

கண்ணே வாயா யிறையழகைக் களித்து நோக்கிப் பருகு மின்கள், வண்ண மூக்கே வாயாக வையன் மேனி மணநுகர்மி, னெண்ணு மனனே வாயாக வெழுத்தோ ரைந்து முரைமின்க, ளண்ண னுமஞ் செவிவாயா யருந்தி யுய்ம்மி னமரங்காள். 89

பிரமசரிய முரைத்த வத்தியாயம்.

குரவன்முன் பாத நீட்டல் குறுநகை புரித லன்னோன்
மருவிய நாமங் கூறல் மற்றவன் போலச் செம்மாந்
துரைபக ர்ந்திடுத லன்னோ னடத்தல்போ லொதுங்கல் வெய்தின்
வெருவர முனியிற் றுனும் வெகுண்டுரை யாட லாகா. 90

அருளுடைக் குரவன் பன்னி யடிமலர் பணிய வேண்டி
னிருவிர லகல நின்றுங் கிறைஞ்சிடல் வேண்டு மன்னோன்
றிருவளர் கமல பாதஞ் சேய்மையி னின்று தாழ்ந்து
பரிவொடும் வழுத்த லாகா தெனமறை பகரு மன்றே. 91

ஏதிலார் குருவை யெள்ளிற் செவிபுதைத் தகல வன்னோன்
பாதமென் மலர்கள் மேனி பரிவுட னைவந் தென்றுங்
காதலா லேவு முன்னர்க் கருதிய வெவையுஞ் செய்க
மேதகு குரவன் றூய நிழலினை மிதிக்கொ ணாதால்.

அன்புடைக் குரவ னூர்ந்த மரவடி மிதித்த லாகா
பொன்புனை யமளி தன்னிற் பொருவிலா சனத்தி

மின்புற விருத்த லாகா பணித்தன்றி யேக லாகா
முன்புறக் கிடந்தி யாவுங் கேட்டிடன் முறைமை யனறே. 93

சந்தநீண் மாலை மாதர் தடமுலை நயத்த லாகா
மைந்துடைக் கோபஞ் சூது மையிட லெண்ணெ யாடல்
சுந்தர மகளிர் கூத்துப் பாட்டினை விழைத லூஞ்சல்
முந்திய வுப்பு நெய்யோ டயின்றிடல் முனிந்து கோறல். 94

பற்கறை யெறித லாடி நோக்குதல் பழைய துண்டல்
பொற்புற வணிதல் மேனி பொலிவுறத் திமிரி யாட
லற்புடைக் குருவை யெள்ளன் மகளிரோ டசதி யாடல்
முற்படு பிரம சாரி யொழுக்கினின் முறைய தன்றே. 95

சுடுமண்வேய்ந் துயர்ந்த மாடச் சூழலி லுறையி னுங்குங்
கொடிநெடுந் தேரில் வெற்பிற் குரவனோ டிருக்க வன்னோன்
கடிதினி னடக்கிற் பின்னை நடக்கக்கால் விசையி னோடிற்
றொடருமெய்ந் நிழலே போலத் தானும்பின் றொடர்ந்து செல்க.

## வானப்பிரத்த முறைத்த வத்தியாயம்.

ஆயுளினு லாங்கூற்றி னுதியினி னரைதிரை யடைந்துழப் பெய்திச், சேயினற் சேயு மைந்தரை யுயிர்த்தாற் சிறுவர்பான் மனைவியை யிருத்திக், காவெரி யோடும் போகினும்போக கடிமனை யோடுபோ கினும்போ, மெய்மதிப் பக்கத் துத்தராயனத் திற் கான்புகுந் திருந்தவம் புரிக. 97

ஊழ்த்தமென் சருகு காய்கிழங் கருந்தி யதிதிபூ சனையுவந் தாற்றிக், காழ்த்தநீள் சமிதை கொண்டழற் கருமம் பஞ்சவெச் சங்கடி தியற்றிச், சூழ்த்துமன் டாற்றுங் கொன்றைமே வணியனைத் தொழுதுநீள் மயிர்நக நீட்டிப், பாழ்த்தவெம் பிறவி யகற்றுவான் மூன்று காலமு நீரிடைப் படிய. 98

எட்டுமென் கவள மேற்றயின் றிட்டி யிருவா யினுகனி யியற்றி, மட்டுநுண் டேற லுணர்தலான் றின்னா லொழிந்துவெவ் வனத்திலே யல்லாற், பட்டினத் துள்ள யாவையுந் துறந்து கங்குலூ னிகழ்ந்துபார்ப் பதியை, புட்டெளி வோடு நினைந்திடல் வானப் பிரத்தர்தம் மொழுக்கமென் றுரைப்பார். 99

வேந்தருள் வானப் பிரத்தராய் மேவி னின்னவைம் புரிகுதல் வேண்டுங், காந்தவெம்பாறை பால்படு மிடத்திற் கண்படை புரி

குதல் வேண்டு, மேய்ந்திடுபருவ மொன்றினுக் கல்லா லருந்துகூ
ழீட்டுத லாகா, சாந்தணிமுலையார் தடமுலை புல்லி னரகணித்
தாமவர் தமக்கே. 100

புலவு சீவா தோல்புனைந் ததுவே போர்வையாய் மெய்யினி
லணிந்து, மலைமகள் கேள்வ னருளினை வழுத்தி யாங்கவன் மந்
திரஞ் செபித்துக், கலைகளி னுயர்ந்த வுபநிட தத்தின் பொரு
டெரிந் தழல்வினை கருதி, யுலவுதவ் வானப் பிரத்தர்தம் மொ
ழுக்க மெனமறை முழுவது முரைக்கும். 101

## சன்னியாச முரைத்த வத்தியாயம்.

ஆயுளம் பதனிற் றவம்புரி வானப் பிரத்தனு யெழுபத்
தஞ் சகன்றுற, றாயநல் லெதியாய்க் கிடமே போல வொருவயி
ற் றுஞ்சிடா துழன்று, காயமுந் தானும் வேறென வுணர்ந்து
புலன்வழிக் கருத்தினைச் செலுத்தா, தேயின பருவ நூற்றை
யுங் கழித்த லெதியொழுக் கெனமறை யியம்பும். 102

ஞானசன் னியாசம் வேதசன் னியாசங் கருமசன் னியாச
மா நலங்கொ, ளீனமி லெதிக ளொழுக்க மோர்மூன்று மிந்திய
பந்தனை நீங்கித், தானது வாக வொழுகுதல் ஞானம் வதிறன்
னற்பலன் விழையா, தூவமில் யோகம் பயின்றிடல் வேத வெதி
யொழுக் கெனவுரைத் திடுவார். 103

தழலினை யான்மா விடையினி லொடுக்கி மனத்தினுன் மக
ந்தனி யியற்றி, மழவிடை யுயர்த்தோன் றனைநினைந் திருத்தல்
கருமசன் னியாசிமா ஞெக்காம், பழுதறு மிவரில் ஞானசன் னி
யாசி யுயர்ந்தவன் பற்றிக லின்றி, விழைவொடு பேறு மிழப்பு
மொன் றாக நினைந்திடும் விமலனை யதனுல். 104

ஆற்றிடைச் செல்லிற் பல்லுயிர் தாளின் வீந்திடு மெனவு
ளத்தெண்ணி, தூற்றுமைப் புயல்சேர் திங்களோர் நான்கு மோ
ர்நக ரிடைத்தனி துன்னி, யெற்றுணு வருந்தி யல்லசெய் யாம
லிலகொளிப் பிறையெயிற் றகல்வாய்க், கூற்றுயிர் குடித்த தாம
ரைப் பொற்றுள் குறித்திட லெதியொழுக் காமால். 105

கற்றோ யாத்தத் துகில்புனைந்து கழுத்தி னளவு மயிரெறிந்து
பற்றூர் புரந்தீ யெழ நகைத்த பரமன் சரிதை பாராட்டி

மற்றோர் தெய்வ மெண்ணாது பசுநூ லுளத்தின் மதியாமல்
வெற்றோ ருரைகள் விளம்பாது நடத்த லெதிகன் வியனெறியே.

முக்கோ ருங்கிச் சிகைதரித்து முன்னூ லணித றவிராது
தக்கோ ரேத்தும் வேதாந்த முறையி னின்று தம்முளத்தி
னெக்கா லத்துஞ் சிவன்பாத மெண்ணா லொழியா திருந்தோரு
மைக்கார் மிடற்றுப் புத்தேளிர் கமலபாத மருங் கடைவார்.

முற்றத்துறந்தோர் பிராயச்சித்த முரைத்த வத்தியாயம்

இல்வாழ் வினர்செய் தொழினீங்கி யிருந்த காலத் தேழும
னையின், மெல்லப் புகுந்தே யுணவேற்றெண் பிடியாங் கருந்தல்
வியன்மூங்கின், மல்லற் சுரையின் மெல்லோடு மரப்பாத் திரம
ண் பரத்திரமே, சொல்லு மெதிகள் பாத்திரமாஞ் சுரையோ
டிவற்றிற் சிறந்ததுவே. 108

---

## இலிங்க புராணம்.

### இலிங்கா லிங்க முரைத்த வத்தியாயம்.

ஒலிமுதற் புலன்க ளின்றி யுரையிறந் துணர்வுக் கெட்டா
தலகில்பே ரொளியா யொன்று யருவமா யமல மாகி
மலைவுரு குணங்களோடு வண்ணமற் றழிவி லாது
நிலைபெறு சிவமென் றோத நிற்பதே யிலிங்க மாமால். 1

மணமுதற் புலன்க ளைந்தும் வண்ணமுங் குணமு மன்னி
யிணையிலா வுலகிற் கெல்லா மேதுவாய்ச் சைவ மாகிப்
பணிவிலவ் வியத்த மென்னப் பழமறை பகர்வ தாகித்
துணிகதி ரிலிங்கந் தன்னிற் றோன்றுவ திலிங்கந் தானே. 2

### அட்டாங்க யோகமுரைத்த வத்தியாயம்.

முற்றத் துறந்தோ ரில்லினொடு முதில்கா னத்துந் தவம்
புரிவோர், மற்றைப் பிரம சரியத்தோர் மனையா ளிறக்க வுறை
கின்றோர், முற்ற மனமெய் மொழியிவற்று ளுருவத் தடங்கண்
ாதர், பொற்ற கழைத்தோள் புணராமை புகலும் பிரம
[illegible]மே. 3

ஒல்லென் றொலிக்குந் திரைப்பரவை யுடுத்த ஞாலத் தழ லோம்பி, யில்லி னுறைவோன் பிறர்மனைகள் விரும்பா னாகி யிய ல்பாற்றன், முல்லை மனைவி நல்லெழில்சேர் முத்த முரிஞ்சு முலை முகட்டிற், சொல்லுங் காலை முயங்குவதுந் துகடீர் பிரம சரி யமே.
4

கருத்தி னுணர்வா லறிந்ததுவுங் கண்ணாற் றெரியக் கண்ட னவும், தெரித்த வொலியாற் கேட்டதுவுந் திறம்பா துரைத்தல் பொய் யாமை, விரித்த மறைநூல் விதித்தவிடத் தன்றி வீடா வுயிரனைத்து, மருத்தி கூரக் கொல்லாமை கொல்லா விரத மாகு மால்,
5

எனைத்துப் பொருளு மொருகாலு மிரவா திருத்த லிரவாமை
மனத்தி னாலும் பிறர்பொருளை வவ்வ வெனவே சிறிதேனு
நினைத்தி டாமை கள்ளாமை யாமா னிகழ்த்து மியமமே
வினைப்பற் றறுக்கு நியமத்திற் கேது வாகும் விளம்புங்கால். 6

நியமந் துளக்கற் றிருப்பதே யாமா னிகழ்த்து துளக்கறுதன்
முயலுஞ் சவுச மதனாலு மொழிதற் கரிய தவத்தாலு
மியலு மகிட்சி யதனாலு மியம்பு கின்ற செபத்தாலு
மயலற் றயர்ந்த சிவப்பிரணி தானத் தாலும் வருமாதோ. 7

மூலாதாரத் திடைக் கரிய முகில்கீண் டொளிருங் கதிர்மி ன்னுப், போலாயிதழ்நான் கமைத்து திகழ் பூந்தண் கமல மலர் மேலு, மேலாஞ் சுவாதிட் டானமிசை விளங்கு மதிய மெனநி லவு, காலா றலரு மிதழாறு கவினுங் கமல மலர்மேலும். 8

உந்தி மிசைவா ளிரவியென வொளிரு மிதழீ ரைந்தியை ந்த, வந்தண் கமல மலர்மேலு மணிசேர்ந் திலங்கு மாகத்து, வந் துதான வொளி மழுங்க வயங்கும் வெள்ளை யொளிததும்பிச், சிந்து மிதழீ ராறுடைத்தாய்த் திகழுங் கமல மலர்மேலும். 9

உருவக் கழுத்தின் மிசையிருள்கெட் டோட வெறிக்குஞ் செஞ்சிகைசே, ரெறியிற் றிகழு மிதழீரெட் டியைந்த கமல மல ர்மேலும், புருவ நடுவி லெறிபசும்பொன் போலப் பிறங்கு கதிர் க்கற்றை, சொரியு மிதழோ ரிரண்டுடைத்தாய்ச் சுடருங் கமல மலர்மேலும்.
10

பன்னற் கரிய பளிங்கொளிபோற் பவள வொளிபோற் கதி ரொளிபோற், மின்னி னொளிபோன் மதியொளிபோல் விளியுஞ் சுடர்செய் விளக்கொளிபோ, லுன்னற் கரிய பரஞ்சுடரை யுன் னியுன்னி யுளமுருகித்; தன்னை மறந்து தலையிருத்தல் சமாதி யெனலாஞ் சாற்றுங்கால். 11

## யோகவிக்கின முரைத்த வத்தியாயம்.

வெய்யநோய் சிரத்தை யின்மை விளம்பிய பிரமாதந் தன்னோ
டையுறல் விடயத் திச்சை துன்மன மப்பிர திட்டை
மையல்கூர் தருப்பி ராந்தி தெரிசன மாற்ற லாகா
தெய்துமூ வகைய துன்ப மெனுமிவை யிடையூ றாமால். 12

வளிமுதன் மூன்றி னாலும் வருதனோய் வீடு பேற்றிற்
கிளர்வுறு விருப்ப மின்மை சினத்தலைச் சிரத்தை யாகுந்
தெளிவுறு சமாதிக் கேற்ற சாதனைத் திறம்பா தாற்று
முளமுரு திகழ்ந்திருத்த லுரைத்திடும் பிரமாத மாமால். 13

இதுகொன்மற் றதுகொ லென்ன வெண்ணுத லையப் பாடாம்
புதுவது கண்டு வேட்டல் புரையறு விடயத் திச்சை
துதையுறு மகிழ்ச்சி யின்மை துன்மனந் தூற்றி யான
மதியினிற் பற்றா தாகி மாயுற லப்பிர திட்டை. 14

ஓதிய வுடம்பு தானென் றுளத்தினி னினைத்த றானே
தீதினிற் றிகழ்ப்பி ராந்தி தெரிசனத் தெரிக்குங் காலை
யாதிதெய் வீகமற் றாதி பவுதிக மயற்றி னோடு
மேதமோ டுற்ற வாத்தி யான்மிக மிடர்மூன் றாமால். 15

கூறிய வினைக ளன்றிக் குறித்தனை றுபச ருக்க
மாறுள வவற்றி னாம மாய்த்தெடுத் துரைக்குங் காலைத்
தேறரும் பிரதிபை தேவ தெரிசனஞ் சிரவணம் வார்த்தை
யீறிலா வாசு வாத மிரசனை யென்ப வாமே. 16

மறைந்தது நுண்ணி தாகி யிருப்பது மருவி யெங்கு
முறைந்ததுஞ் சேய தாகி யுள்ளது முன்ன லாக
திறந்தது நிகழ்வ தாஉமற் றெதிர்வது மிவைக ளெல்லாந்
திறம்பலி னுள்ளந் தன்னாற் றெரிவுறல் பிரதிபை யாமால். 17

சேட்டிளம் பருதி யென்னத் திகழ்வுறு தேவர்க் காண்ட
லீட்டருஞ் சிறப்பிற் றேவ தெரிசன மென்ன லாமாற்

கேட்டதோ ரொலியீ ஞாலே கிளரொளிப் பொருளு ணர்ந்து
நாட்டுதல் சிரவண மென்ன நான்மறை பகரு மாதோ. 18

உரைபெறு வார்த்தை வேத மோதுத லொலிநீர் சூழ்ந்த
விருநில வரைப்பில் வானி லெண்டிசை மருங்கின் மேய
விரையொடு சுவைக ளியாவும் விளங்குமா றறித ருனே
யரிதுண ராசு வாத மென்றெடுத் தறைவ ரன்றே. 19

மண்புனல் கனலி காற்று வான்மன மகங்கா ரத்தோ
டொண்சுடர் பிரம மென்ன வகுத்தெடுத் தோதப் பட்ட
வெண்பொருட் குணங்க ளெட்டு மிரசனை யென்ன லாகும்
பண்புட னேரொன் றெட்டாய்ப் பாற்பட விளங்கு மாதோ. 20

## மானத பூசாவிதி யுரைத்த வத்தியாயம்.

சாற்றுமிரு பத்தாறுந் தத்துவமாய் நின்றதனி முதலே கர்த்தா, தோற்றுவர்மூ வருமவன்பாற் றந்தைதா யில்லாமற் றுவர்த்த செவ்வாய், மாற்றரிய மென்மழலை மகவில்லா வாறுபோல் வயங்கு கூர்ங்கோட், டேற்றையிரு கொடியுயர்த்த விறை யின்றி நீடுலக மில்லை மாதோ. 21

## முனிவர் பாசுபத விரதம் பண்ணின வத்தியாயம்.

ஆயவெண் ணீற்றை யணிந்திடு காலை யகன்றிடும் பாவமற் றெல்லா, மேயவெம் பாவ மகற்றலா லதனை விளங்குறு பற்ப மென் றுரைப்பார், சேயதென் புலத்தோ ராரழ லதனை யருந்துவர் தேவர்க ளியாரும், பாயதண் கதிர்கா றிங்கணல் லமுத மருந்தியே பரிவுட னுரைவார். 22

ஆதலா னுலக மழலினல் வடிவே யவ்வழ லெமதுரு வா மால், கோதறு சோமன் றேவிநல் வடிவாங் கொழுஞ்சுட ரழ லிடைப் பட்ட, வேதமி னீற்றை யெமதுமெய் யணிவோ மெறிதிரைக் கருங்கட லுடுத்த, தீதிலா வுலக நீற்றினை யணிந்தே தீர்த்திடுந் தீவினைச் சிமிட்டே. 23

## திரிபுர மெரித்த வத்தியாயம்.

ஒன்ருய்ப் பலவாய்ச் சின்மயமா யுணர்தற் கரிய பரம்பொருளா
மன்ற மறையின் முடிமீதி லிருந்து மந்த மறையினு [ய்
லென்று மறியாத் தனிமுதலா யடியார்க் கெளிய ருகியுறை [மே.
துன்று கதிர்கான் மதிபுனைந்த தோன்று னின்னைத் தொழுதே

எரிபொற் குடுமி யிமயவரை யீன்ற வுமையா ளொருபாகம்
விரைவிற் றிகழுந் தனிமுதலே விமலா விரிவெண் டிரைவீசிக்
கரைகொன் றிரங்கு கடன்முகட்டி லெழுந்த கரிய விடமருந்தி
பரிவின் றாக வெண்மைப்புரந்த பரமா நின்னைத் தொழுதேமே. 25

பருதி யதனுள் விரிவெயிலாய் மதியி னிலவாய்ப் பனிவிசு
ம்பு, ளொருவா வொளியாய் வளியதனு ளூறாய்க் கனலு ளுரு
வமாய்த், திரைசேர் புனலு ளூறுசுவையாய்த் திண்மா நிலத்தி
னுறைமணமா, மருவி யுறையு மணிமிடற்று வரதா நின்னைத்
தொழுதேமே. 26

அடியா ருள்ளத் தலர்கின்ற வந்தண் கமல நறும்பொகுட்டி
னடுவே நெல்வா லளவாகி யுறைந்து நஞ்சிற் கொடியவா
மிடரே செய்யு மிருவினைக ளிடருற் றகல வருள்புரியு [தேமே.
மடல்வாய் விரிந்த கொன்றையந்தார் வரதா நின்னைத் தொழு

அறையு மான்ம தத்துவத்துக் கப்பா லாகி யென்றுளு,
முறையும் வித்தியா தத்துவமா யிலிங்க மாகி யுரைப்பரிதாங்,
குறைவின் றாய விலிங்கமாய்க் கோதொன் றில்லாப் பரம்பொரு
ளாய், விறல்சேர் மழுவாட் படையேந்தும் விமலா நின்னைத்
தொழுதேமே. 28

அகர வுகர மகரவிந்து நாதமாகி யமர்ந்துறைந்து, திக
ழுங் குடிலை வடிவாகிச் செய்ய கமலத் தாட்டுணைகள், புகழு
மடியார்க் கருட்கனியாய்ப் பொருதார் புரங்க ளொருமூன்று,
நகையா லெரித்தின் றமைப்புரந்த நம்பா நின்னைத் தொழு
தேமே. 29

காலின் றாகி நடந்துமுறு கையின் றாகிக் கவர்ந்துமலர்
போதும் விழியின் றாகியரும் பொருள்க ளனைத்துங் கண்டுமிக
வேலுஞ் செவியின் றாய்க்கேட்டும் வாயின் றாகி யியம்பியுஞ்சீர்
சால வுறையுந் தனிச்சுடரே தலைவா நின்னைத் தொழுதேமே.

சித்தா யசித்தாய் சின்மயமாய்த் தேடற் கரிய பொருளா
கி, யத்தா வருளா யெனவழுத்தி யலர்ந்த கமலத் தாட்டுணை
யிற், றொத்தாய் மலர்தூய்த் தொழில்வினையுந் துரிசற் றொழிய
வருள்புரியு, முத்தா முகிழ்ந்த முலைபாகா முதல்வா நின்னைத்
தொழுதேமே. 31

என்று தொழுது வழுத்துவோர் தம்மை நோக்கி யியைந் தவா, மன்ற வுரைப்பி ரெனலோடும் வள்ள லினது தாண்மலரி, லொன்று மன்பே யெமதுளத்தி லொருவா திருக்க வருளென் னக், குன்ற வரிவிற் குழைத்தவரன் றந்தே மென்னக் கூறினான்.

சிவன் வடிவு வுரைத்த வத்தியாயம்.

குடிலையி னுருவ மென்றுங் கோதில்ஞா னத்தின் செய்ய
வடிவென்று முரைப்ப ரோறிற் சிவானந்த மயம தாகிக்
கடவுணன் குறையு மந்தக் கடவுளுக் குருவம் வந்து
மிடைதரு கருமத் தானு மிச்சையி னானு மேவும். 33

அடந்திடு முருவ மெவ்வா றெனிற்றலை சுவர்க்க மாகுஞ், சுடர்ந்தவா காயங் கொப்பூ ழாகும்வெஞ் சுடர்கண் மூன்றுந், தடங்கொள்கண் ணாகுஞ் சாற்று திக்கெலாஞ் செவிய தாகு, மிடைந்தபூங் கமலப் பொற்றாள் விரிந்தபா தாள மாகும். 34

உடுக்கள்கொத் தணிந்த முத்த மாலையா முயர்ந்த வானத்
திடத்துறை தேவர் வீங்கு புயங்களா குவரா லேற்றி
முடக்குவெண் டிரைக ளாடை யாமொளிர் விக்கு ஞானம்
கிடைத்திடு காட்சி யாகுங் கிளரொளி ஞான மாகும். 35

ஆசாரவிதி யுரைத்த வத்தியாயம்.

நெறிசெலா நெறிசெல் பவர்களை வேந்தன் கோறலு மெ ன்றுநீங் காத, மறையின்வா சகத்தால் வேள்வியிற் பசுவைக் கோறலுங் கோறன்மற் றதன்று, னிறைதரு பிரம முணர்ந்தவர் நெஞ்சி னிகழ்ந்தவை யாவையுஞ் செய்வர், குறைவிலை யதனா லவர்க்கவர் தம்மை யிகழ்ந்தவர் கொடுநர கடைவார். 36

சிவபூசை பண்ணினவர் பேறுபெற்ற வத்தியாயம்.

இறைவனை மிச்சி லோடு பூசித்தோர் பசாசுரு வெய்துவ ரெரிநேர், நிறைதரு கோபத் தொடுபூ சித்தோர் நீணிறத் தரக்க ரா குவரா, லுறுவிழை வதனா லுண்பதற் குரிய வல்லன வுண் டுபூ சித்தோர், மறமிகு மியக்க ராகிவா னுலகின் மன்னியே வை குவ ரன்றே. 37

பாடுதல் செய்வோர் பனிவரைப் பிறந்த பாசிழை பாகனை வழிபட், டாடுதல் புரிந்தோ ரண்ணல்வா னுலகி லமர்செய்கந்

திருவரா குவரா, வீடுறு சீர்த்தி விரும்பியேத் தினர்க ணெறி மலர் கற்பக நாட்டின், மாடுறு மமரர் வணங்கிட வமர்ந்து வா சவ ஞகிவை குவரால். 38

மகளிரை வேண்டிப் பூசைசெய் தோர்கண் மதியுடல் புகுந்துவா னெய்தித், திகழ்தரு மகளி ருலகினி லென்றுஞ் சிந்தனை மகிழ்வீற் றிருப்பார்,துகளறு காயத் திரியினற் பூசை புரிந்தவர் தோடுவா யவிழ்ந்து, நறுமலர்ப் பொகுட்டி னுறையுநான் முகத்தோ னுலகினில் நண்ணிவாழ் குவரால். 39

குடிலையி னுலுங் கோதறு பஞ்சப் பிரமத்தி னுலுமுக் கண்ண, னடிமலர் பூசை செய்தவர் மாய னமர்தரு முலகின்வீற் றிருப்பா, ரொடிவற வுள்ளந் தனைமிகத் திருத்தி யோரிரு நாழிகை யேனு, முடியினுல் வணங்கிப் பூசைசெய் தோர்கள் முன்னருஞ் சிவனுல கடைவார். 40

மணிமிடற் றிறையைத் தூயநீ ராட்டி வயங்குபொற் பீடத்தின் மீதிற், பணிமொழி யுமையா டன்னெடும் வைத்துப் பச்சிளந்தேன்மலர் தூவி,யிணையிலாத் தூப தீபமு நல்கி யிணையடித் தாமரை தொழுதோர், புணையிலாப் பிறவிப் பெருங்கட னீந்திப் போகுயர் கயிலைசென் றடைவார். 41

பஞ்சாக்கரவிதி யுரைத்த வத்தியாயம்.

விரியும் வேதத்தின் சாரமாய் விரித்தெடுத் துரைத்தற்
கரிய வுட்பொரு ளுடையவா யழிவிலா முத்தி
பரிவின் முதநன் களிக்குமைந் தெழுத்தினைப் பகர்தற்
குரிய நாவினர் முத்திவீ டுறுதொழி குவரோ. 42

தியானவிதி யுரைத்த வத்தியாயம்.

கருவிடக் கொடுமை பெற்றினை யுளவில் வாட்கையாங் கடுவிடக் கொடுமைக், கரிதினிற் பெற்ற மக்கண்மேல் மண்மே லாகிய பொருளின்மேன் மறவைப், புரியவிழ் கூந்தன் மாதர்மேல் வைத்த நசையினற் போக்கற நின்ற, விருவினைத் துவக்குண டாகுமில் வாழ்க்கை யெறிந்தவன் மெய்யுணர் ஞானி. 43

கண்முத லுறுப்பு மின்றிக் கருத்தினுக் கெட்டா தாகி
வண்ணமுங் குணமு மின்றி மாசிலாப் பொருடா னல்லா

லெண்ணவொன் றில்லா தாகி யீறிலாப் பரம ஞான
நண்ணிஞே ரறிவ தாமால் நாசமில் பரம விச்சை. 44

பரமென்றும் பரம மென்றும் பன்னுவ தன்றி மாசி
லருவமாம் பரமே யல்லா வியாதுமற் றிலதே யாகு [ருய்
மொருவிடா துலகந் தன்னைப் படைத்தளித் தொழிப்ப தொன்
மருவிய பரனே யென்ன மனத்திடை யுணர வேண்டும். 45

காரிய கார ணங்க ளியாவையுங் காசொன் றில்லாத்
தாருமான் மாவின் கண்ணே யமருமென் றறிந்து கொண்டோ
ஞேர்தரு பொருள்க டன்னை யன்றிவே றுளதென் றெண்ணி
யேர்தரு வுள்ளஞ் செல்லா தின்பமுற் றிருப்ப னன்றே. 46

புகன்றிடு மனந்தான் கண்ணிற் பொருந்திடில் விழித்த னுண்டாம், திகழ்ந்தகண் டத்தின் மேவிற் கனவுறு நெஞ்சிற் சேரிற், பகர்ந்திடு சுழுத்தி மேவு முச்சியிற் படர்ந்து செல்லி, லிகழ்ந்திடாத் துரிய மேவு மெனவுணர்ந் தறிய வேண்டும். 47

கருமவிந் தியங்க ளென்னு மோரைந்துங் கழறு கின்ற
பொருவில்ஞா னேந்தி யங்க ளெனப்புக லைந்து மற்றை
மருவிடுஞ் சித்தம் புத்தி மனமகங் கார மென்ன
வுரைசெயு நான்கு மத்தி யான்மமென் றுரைப்பர் மாதோ. 48

கதிரவன் றிக்குப் பூமி காசிலா வருணன் வாயுத்
துதியமை நிருத்தன் வேதா மதியுருத் திரன்றீச் சொல்லுங்
கொதியழற் குலிசி விண்டு மித்திரன் கூறு கின்ற
விதியவற் றினுக்குத் தூய வதிதெய்வ மென்பர் மேலோர். 49

திகழொரு பதினுன் காய விந்தியந் தம்மைச் சேர்ந்து
பகர்பதி னுன்கு வாயுப் பற்றியாங் குறையு மன்றிப்
புகறரு மெழுபத் தீரா யிரநாடி பொருந்தல் செய்யுந்
தகைவுட னுரைசெய் கின்ற தாவிலா வுடம்பி னுள்ளே. 50

வேறு.

ஆசிலாத வன்னத்தின் மயமா யமரப் படுங்கோசம்
பேசுகின்ற பூதான்மா விளம்பு பிராண மயகோச
மேசிலாத விந்தியான்மா வியம்பு கின்ற மனேமயமாங்
கோசமீங்காச் சங்கற்ப வான்மா வென்னக் கூறுவார். 51

உறையா நின்ற விஞ்ஞான மயமென் றுரைக்குங் கோசமற்றை
நிறையுங் கால வான்மாவா நிகழ்ந்தா னந்த மயகோச
முறையே யுரைக்கப் படாநின்ற விலைய வான்மா முழுவதாந்தம்
மறிவா லறிந்தோ ரிவ்வகையே யாசின் றாக வுணர்வாரால். 52

உறைந்திடு நம்மைக் கோடி கருமங்க ளுஞற்றி னுளுஞ்
சிறந்திடக் காண றேற்றார் தெளிந்திடு குருவி னுள்ள
நிறைந்திடு மருளைப் பெற்றாக் கருமங்க ளனைத்து நீத்துத்
திறம்பிடா திருந்து நோக்கிற் றீதறக் காண லாமால். 53

கோதிலா ஞான முற்ற ஞானிக்குக் கோபத் தோடு
தீதுசெய் குணங்க ளியாவுஞ் சிதைந்திடு மதனுன் மற்றை
யேதமே விளக்கும் வெய்ய விருவினை யகன்று மாயு
மாதலா லுடம்பு வாரா தழிவிலா முத்தி யெய்தும். 54

அருத்தியின் ஞான மின்றி முத்திவீ டடைதல் கூடா
விரிப்பரு ஞானந் தானுந் தியானத்தா லன்றி மேவா
துரைத்திடு தியானத் தானு மோங்கிய ஞானம் வல்ல
குருத்தனி யருளி னல்லாற் கூடுத லரிய தாமால். 55

விரிந்த பூதங் களினோடு விளம்பிந் தியங்க டத்துவங்க, டி.
ருந்தா வகங்கா ரத்தினொடு செறிமுக் குணங்கள் மாத்திரைகள்,
பொருந்து மாயை யிவையனைத்தும் பொய்யாம் யாமே பொய்யின்றி,
யிருந்தெவ் விடத்து நிலைபெறுவே மதனாற் றூறு மெனவிசைப்பார். 56

பருதி முதலாங் கோளனைத்து மாயன் முதலாம் பலதேவும்
புரியுங் கரும மனைத்துமவை தலையின் மிசைப்பூண்டு
மருவி யியற்று நிற்குமென மனத்தி னுணர வோர்ந்தொரு
திரிவி லாத மெய்ஞ்ஞானந் தீதின் றுணர வல்லாரே. 57

இயற்றல் செயுநல் வினையதனை யெய்து ஞான மாங்கதனுன்
மயக்கி லவிர்த்தி வந்தெய்து மதுதான் வந்த பின்னரே
யுயக்கொள் பரம விரத்திவரு மதனல் யோக முறுமதனாற்
பயக்கு மென்று மழியாத பரம முத்தி தனிவீடே. 58

## சனகன் முதலினோர்க்கு முத்திகோடுத்த வத்தியாயம்.

தீதில் ஞானந் தியானமிகச் செறியும் பந்தந் தீர்த்திடுத
லோது கின்ற வான்மாவுக் குளது போலத் தோன்றிடுமா

லேதஞ் செய்யு மாயையினு லிதனை யறிந்தோ னியாவனவ
னுதி யாய பந்தத்தி னகப்ப டாம லமர்குவனுல். 59

உறையுந் தேவி விச்சையென்று முரைக்குஞ் சுருதி மிருதி யென்று, முறையே துதிதா னென்றுமவை யென்று மொழியு நிட்டையென்று, நிறையு ஞான சத்தியென்று நிலவுங் கிரியா சத்தியென்று, மறிவா லறியி லிவ்வாறே யமர்ந்திங் குறையப் படுவாரால். 60

உறைந்திங் கமரு மெனதுகூ றுமா லொளிரு மணிவளைக்கைக்
கறங்கி யிசைவண் டறைகூந்தற் கன்னற் குதலை மலைவல்லி
நிறைந்தே யுறையுஞ் சராசரங்க ணிலவு மிந்த வுலகெல்லா
மறைந்த மாயா விகாரமென வறிவா லறிய வேண்டுமால். 61

இறைவன் றனே யுமையாயு மிணையின் முதல்வன் றனுயு
முறைவா னுருவ மிரண்டாகி யுணரி லிறைவ னருள்பெற்றே
குறைவி லாத முத்தியினைக் கூட வேண்டு மல்லாது
முறையே கோடி கருமங்கள் செயினு முத்தி கூடாதால். 62

## ஆசாரவிதி யுரைத்த வத்தியாயம்

உறைந்திடு குருவின் பாலமர்ந் தியம நியமங்க டன்மைநன் குணுற்றிச், சிறந்தவக் குருவின் பால்விடை கொண்டு தெண்டிரை யுடுத்தபா ரெல்லாங், கறங்கெனத் திரிதல் வேண்டுமாற் றிரியுங் காலையிற் கருதுதற் கரிதாய், நிறைந்துறை பொருளை மறந்திடா தென்று நெஞ்சினி னினைந்திட லுரித்தே 63

தீதறு வழியிற் செல்லுதல் வேண்டுந் தீம்புனல் வடித்ததை யல்லா, லேதமற் றெழியக் குடித்திட லாகா படிறெழிந் தியம்பிட லாமாற், கோதறு வேள்வி தன்னினுஞ் சிரார்த்தந் தன்னினு மருந்துதல் கூடா, மாதுயர் செய்யுங் கோறலெஞ் ஞான்று மனக்கொளா தகற்றிடல் வழக்கே. 64

ஒய்யென வோரு ருண் டொழிந் ததற்பினையமேற் றுண்க மற் றன்றி, யையமேற் றுண்போன் கானக முறைவோன் பானு மேற் றுண்டிட லாமான், மெய்ம்மையே யுணர்ந்தாங் குகிரினெற் கவர்ந்து மேதக வருந்துவோன் பாலும், பொய்ம்மையே யின்றி யுறைகுவோன் பானு மையமேற் றுண்டலும் பொருந்தும்.

இவ்வகை யைய மேற்றானன் குண்போன் காடிசோ றெவற்
றினை யேனுஞ், செவ்விதி னளித்த ருந்திட வேண்டு மனைதொ
றுஞ் சென்றுசென் றற்று, வெவ்வழல் போல வெகுண்டுமற்
றொன்றை விழைந்துநீ யளித்தியென் றருந்த, லவ்விய மவித்த
மனத்தினோர்க் காகா தென்றுநான் மறையறைந் திடுமால். 66

---

## மச்ச புராணம்.

### கருமயோக வத்தியாயம்.

தயவுநற் பொறுமை யுள்ளந் தனிலழுக் காற தின்மை
யியல்சுகி கிலேச மின்மை யிளையுநற் சுபவா சாரம்
பயனுறு மீகை யோடும் பார்பொருள் பரதா ரங்க
ணயவினை வெறுத்த லெட்டு மான்மநற் குணமே யாமால். 1

### சிவசொரூப கதன முரைத்த வத்தியாயம்.

சிவனெனும் பெயரே விண்டுச் சிறந்திடு மரியே கம்பர்
புவனியிற் பேத மாகப் புகல்வது மாயை யந்தத்
துவரிதழ் பாக னென்று மரியென்றுந் துலங்கி மற்றை
யுவமைருத் திரனு மாகி யோருரு வமைந்து நிற்பன். 2

உரைத்திடு சத்துச் சித்தோ டானந்த முருவொன் றுரும்
வரைத்திடு தொழிலா லீசன் மாயனென் றிருபேர் சொல்வர்
விரைத்தொடை மாயன் றானும் விமலனைச் சேர்ந்த ஞான்று
திரைப்புனன் முடித்த வேணிச் சிவனென விளங்கு வானால். 3

### யோக சாத்திரத்தின் வண்மையுரைத்த வத்தியாயம்.

இந்திய மடக்கு வானே வியன்றிடு ஞான முத்தி
புந்திய விடயங் கட்கு மனுபவித் தொழிவோ மென்றல்
செந்தழ லிட்ட காட்ட மாகையாற் சிறந்த யோகி
நந்துறு கருமம் விட்டு நாடிட வேண்டும் யோகம். 4

பெண்களை யோகி கண்டாற் பிரேதமா யெண்ண வேண்டு
மெண்பெறும் யமத்தின் கூற்றை யியம்பினு மியமந் தன்னைப்
பண்புற வுரைப்பே மாசை யொழிதலே பகரா சாரந்
திண்பெறு சௌசந் துட்டி தவஞ் சபஞ் சீலமீதே. 5

வெளிப்படைச் சௌச மூன்றும் விளம்பினு மினிமே லுள்ள
களிப்புறு சௌசஞ் சொல்வாம் விடயத்தைக் களைதன் மந்த்ர
மளித்துறு குருவின் பத்தி வைராக்கிய மான்ம ஞான
முளத்துற வேண்டு மென்று முறுதெனிற் பலனென் றில்லை. 6

இந்திய மடக்கி யென்றுஞ் சுழுமுனை நாடி தன்னைப்
புந்தியோ டலையா வண்ணம் போற்றியே யிருந்தா லீதே
சிந்தைகூ ருத்த மத்தி னுத்தமஞ் சிவஞா னத்தோ
டந்தமில் குருவின் பக்தி யணுகுமாற் பிரத்தியா காரம். 7

ஆவதைம் புலனு முள்ளே யடக்கிநிச் சலமாய்க் கண்க
ளோவற விமையா துற்றன் மனமொருப் படுத்தி யீச
னேவலிற் பிரிந்தி டாம லிருத்தலே புத்தி யென்று
நாவுற வுரைத்த ருனே நவிலுந்தா ரணைய தாமால். 8

புத்திகூர்ந் தலையா துற்றல் புகன்றிடு தியானம் புத்தி
சித்தமோ டொன்று யுற்றல் சிறந்திடுஞ் சமாதி யாகு
மித்திறச் சமாதி தன்னி லிறைவனே யுருவாய்த் தோன்ற
வித்தக தேகந் தன்னில் வாசனை விளங்கி டாதால். 9

சிறந்திடு சமாதி பிராணா யாமத்திற் சித்தி யாகும்
பிறந்திடு சரீரத் துள்ள வாயுவின் பேர்பி ராண
னிறைந்தவிப் பிராணன் றன்னை நிறுத்தலே யமமீ தொன்றின்
மறந்தவிர் பிராணா யாம மென்னவும் வழுத்து வாரால். 10

பக்தி மான்மிய வத்தியாயம்.

சாது வாகித்தன் றன்மை யறிந்துளோ
ராதி யான விருபிறப் பாளர்நால்
வேத சாத்திர நீதி விளக்குவோர்
போத ஞான முணர்ந்தருள் போதகர். 11

சிவசொ ரூபத்தின் செவ்வி யுணர்ந்துளோர்
தவமி யற்றுநர் தாங்கும் பொறுமையோர்
நவவி ரதத்தர்கள் ஞானியர் மோனியர்
பவமில் பல்லுயி ரொன்றெனப் பார்ப்பவர். 12

தானஞ் செய்யுந் தகைமை யனந்தர்க
ளான வாக்கு மனந்தனு வாதியா

ஹீன வஞ்சகப் பொய்யை யிசைத்திடா
ஞான வாசை யுறவுளத் தோர்கிலார். 13

வேறு.

சத்து வென்றல் பிரமத்தின் சத்தமல்
வித்த கப்பிர மத்தினை மேவலா
னத்த தைத்தது வேமுடி வாய்த்தவர்
சுத்த சத்துக்க ளென்னத் துலங்குவோர். 14

விடயம் பத்தும் விலக்கி விராகையா
யடைவி னேடுமை யாதிய தாதியா
முடைய யோக முளுற்றிக் கெருவித
நடையி லாரதான் மாவென நண்ணுவார். 15

சகலவித் தையினை முற்றச் சாதிக்குந் தன்மை யானும்
புகல்குரு பூசை யன்பு பொருத்துறச் செய்த லானு
மிகலறு பிரம சாரி சாதுவா மில்வாழ் வுற்றோ
னகமுறு மகங்க ளாதி யாற்றலா லவனுஞ் சாது. 16

கானிடைத் தவங்க ளாற்றிக் கருதிய பெருமை யாலே
ஞானமார் நெறிசேர் வைகா நசனுமே சாது லாரு
மீனமாம் பொய்மை யோதா தியற்றிடும் யோக மாற்றி
யான்மமுத் தியைச்சேர் சந்நி யாசியுஞ் சாது வாவார். 17

சாத்திரந் தவறிலாமற் றனிப்பொரு ளுணர்ச்சி ஞான
நேத்திர முடைய னாகி நெறியினிற் பவனை தக்கோ
னுத்தமும் பேற வோது நான்மறை யாளர் தித்த
மேத்திய சுரௌத மற்றச் சிமார்த்தத்தை யியம்புங் காலை. 18

மறையினுண் பொருளைத் தேர்ந்தே யனுபவ மனத்துட்கொள்
நிறைவழா துரைத்த ருனே நிகழ்த்துசத் தியம தாகு [ம்
மறைபிரம சரிய மோன மயிமிசை காயக் கிலேசம்
பொறையொடு மொழிவு தானே புகன்றிடு தவமெய் யாரால். 19

சாதுவாங் குருச்சொல் லாமல் சாத்திர விருத்த மாகித்
தீதறு நகாஞ் சேர்க்குந் திறஞ்செய்த றன்ம மாகு
மாதுயர் மாயா கன்ம வழியிலான் சிவசொரூபங்
கோதறு பாசா பாச நீந்துவோன் கூறும் யோகி. 20

இகபர மிரண்டும் வேண்டா திருப்பவ னனுத்த னென்றும்
புகனுமிந் தியம டக்கல் சடம்புவி சுகதுக் கங்க
—கவுறு விருப்பி னோடு மடிமையுற் றிடாமை மாற்றார்
மிகவுமித் திறனில் லாம விருப்பவன் விரத்த னாமால். 21

ன்மைவெந் தீமை நீத்தோ னயம்பெறு சந்தி யாசி
மன் னுமவ் வியத்த மாதி வழங்கிய விசேட மீறுய்த்
துன்னரும் பேத மின்றிச் சொல்லிய சேத னத்தோ
டின்னிய வசேத னத்தை யொழிதலஞ் ஞான மாகும். 22

---

## காசிகாண்டம்.

### தேவர்கள் பிரமலோக மடைந்த வத்தியாயம்.

அருவமா யுருவ மாகி யாதியா யநாதி யாகிப்
பிரமமா யடைதற் கெட்டாப் பேரின்ப வீட தாகி
இரணிய கருப்ப னாகி யாருமா யெவையு மாகித்
தெரிவரும் பொருளாய் நின்ற நின்னடி சென்னி சேர்ப்பாம். 1

மூதரு மறைகட் கெய்தா தெங்குமாய் நின்றாய் போற்றி
மொழியுடன் மனதுக் கெட்டா முழுப்பரம் பொருளே போற்றி
தொழுதகு தவத்தோர் நெஞ்சத் தூவெளி யதனிற் றோன்றி
எழிவருஞ் சோதி யாய வருமறைக் கொழுந்தே போற்றி. 2

இச்சையா யவிச்சை யாகி விளங்குமுக் குணத்திற் றோன்றி
மச்செயல் புரியா நின்ற மூவராய்க் கால மேவா
இச்சையிற் புருட னாகி யிறைஞ்சுநர் பவத்தில் வீழு
மச்சம தகற்றி நின்ற மாமலனே போற்றி போற்றி. 3

ஐம்பெரும் பூத மாகி யவற்றுறு குணங்க ளாகி
ஐயம்பொறி யாகி யந்தக் கரணமா யறிவு மாகி
ஐயம்பெருங் கரும மாகி யனைத்தினுந் தோய்ந்துந் தோயா
தெய்வம்பெருங் கடவு ளாகு மாதிநின் னடிகள் போற்றி. 4

வெருவருங் காம மாதி வெஞ்சுற வெறிய நீங்கா
இருவினைத் திரைக ளெற்றும் பிறவியங் கடலு ளெய்தி
வருளுறு முயிர்க ளெல்லாம் வருந்துறா தேறப ஞான
மருளுரு வெடுத்த வுன்ற னடியிணைக் கன்பு செய்வாம். 5

ஒலிமுதற் புலன்க ளைந்து மொடுக்கியுட் கரணஞ் செற்றோ
ரலகிலுன் மறையுந் தெள்ளி யறநெறித் துறையு ணின்றோர்
பலன்விழை யாது நோற்போர் பத்தினிப் பெண்டி ராயின்
குலமினி தருந்தப் பைம்புற் கொடுப்பவர் தவத்தின் மிக்கோர். 6

ஏதமின் மறைக டோரா திருபிறப் பாள ரல்லா
ராதியிற் றோன்றி நின்ற வேதமு மங்க மாறு
மோதிய புராண நூலுங் கண்கணோ யென்ன மாகு
மேதகு மனையி லாதார் விழிபொடு மனமி லாதார். 7

## கற்பிலக்கணங் கூறிய வத்தியாயம்.

கொழுந னுண்டபின் றானுண் கொள்கையும்
விழித்து யின்றபின் றுஞ்சலு மென்றுயி
லெழுதன் முன்ன மெழுதலு மேயன்றோ
பழுதில் கற்புடைப் பாவையர் செய்கையே. 8

இனிய கேள்வர் முனியி னெதிர்நின்று
துனிகொ ளைஞ்சொ லெதிர்மொழி சொல்கிலா
ரனைய கேள்வ ரெறியினு மன்பொடு
கனிவர் செஞ்சகங் கற்புடை மாதரே. 9

திருந்து மாயுள் சிதையுமென் றெண்ணித்தம்
பொருந்து காதலர் நாமம் புகன்றிடா
ரிருந்த போதன்றித் தாமு மிருந்திடா
ரருந்து மிச்சி லமிழ்தி னுகர்வரால். 10

கொழுநன் சொற்கட வாதுறை கொள்கையே
வழுவி னல்லறம் வான்றவ மாற்றுத
றொழுது தெய்வம் பராய்மனை தூவுதல்
பழுதில் கற்புடைப் பத்தினிக் கெம்பமே. 11

அன்பர் துஞ்சிடிற் றுஞ்சுத லாங்கவர்
துன்ப மெய்திடிற் றுயருழந் தன்புற
வின்ப முற்றிடி லின்புற் றிருத்தலே
மன்பெ ருந்தவங் கற்புடை மாதர்க்கே. 12

கொழுநன் பாவி யெனினுங் கொழுநனோ
டழிவின் றூழ்கினன் கற்புடை யாளெனின்

விழியி லன்னவட் காணில்வெங் கூற்றுவ
னுழுவ லன்பனைக் கைவிடுத் தோடுமே. 13

நண்ணு கற்புடை நங்கையர் சீரடி
மண்ணி னெவ்விடந் தோயினு மற்றஃ
தெண்ணு கின்ற தலங்க ளெவற்றினும்
புண்ணி யத்தல மென்று புகல்வரால். 14

தீர்த்த மகிமை யுரைத்த வத்தியாயம்.

கற்றதங் கல்வியுங் கடவுட் பூசையு
நற்றவ மியற்றலு நவையி றானமும்
மற்றுள வறங்களு மனத்தின் பாலழுக்
கற்றவர்க் கேபய னளிக்கு மென்பரால். 15

பொறிவழிப் புலன்செலா தடக்கிப் புந்தியை
நிறைபரம் பொருளிடை நிறுத்து நின்மல
னுறைவிட மல்லதை யுள்ள தாங்கொலோ
வெறிபுனற் றீர்த்தமென் றியம்பப் பட்டதே. 16

உரைப்பரு மானத தீர்த்த மோதிடிற்
சுருக்கமின் ஞானநீர் தோய்தன் மற்றது
விருப்பொடு வெருப்பெனா விளம்பப் பட்டதோர்
கருப்புகுத் திடுமலங் கழுவு மென்பவே. 17

சிவசன்மா தெய்வலோகங் கண்ட வத்தியாயம்.

இறந்து ளோர்க்கு மிரவலர்க் குந்தனை
துறந்து ளோர்கட்குந் துப்புர வீதலா
லறந்த வாதுய ரில்லற மாற்றுதல்
சிறந்த தென்ன வினிதுளந் தேறினான். 18

பெற்ற வைகொண் டருந்திப் பெறுதன
மற்றி யாவு மனத்தில் விழைந்திடா
திற்றி றம்பில ராகி யிருக்குநர்
முற்று நீத்தவர் தம்முளு முந்தினோர். 19

வேறு.

கானலிடைத் தெண்ணீருங் கயிற்றினில்வா ளரவுமலை கட
லிற் பட்ட, கூன்முதுகிப் பியிற்றோன்று வெள்ளியுமம் முதலு

ண்மை குறிக்கிற் றீரு, மானவைபோ னிலையறியிற் றோன்றுசக மனைத்துமில்லா தழியு மாற்றாற், றேனவிழ்பூங் கடுக்கையணி செ ல்வநின தறைகழற்றாள் சென்னி சேர்ப்பாம். 20

நீரினிடைத் தண்மையுஞ்செந் நெருப்பினிடை வெம்மை யும்வெண் ணிலவுத்திங்கள், சேர்தருதட் பமுமிலகு செஞ்ஞா யிற் றழற்சியுந்தீம் பாலினெய்யு, மீர்ம்மலரி னறுமணமு மென் னலா யுலகமெலா மிருக்குமெந்தை, வார்கழற்சே வடிக்கமல நற வொழுகு மலர்தூவி வணங்கல் செய்வாம். 21

நோக்கின்றிக் கண்டுநனி கையின்றிக் கொடுத்துமறை நூ வல்ல தாய, நாக்கின்றி யறுசுவையு மினிதுணர்ந்துங் காலன்றி நடத்தல் செய்து, மூக்கின்றி மணங்கவர்ந்துஞ் செவியின்றிக் கேட்டுமறை முதல்வ ரியார்க்கும், வாக்கன்றி மனத்தினுக்கு மெ ட்டாநின் றுமறைத்தாள் வணங்கல் செய்வாம். 22

## சிவசன்மா அக்கினி வுலகங்கண்ட வத்தியாயம்.

தந்தைதாய் பணித்தல் செய்யுந் தவமலாற் றவம்வே றில்லை
மைந்தருக் கெதிக ளேனும் வணங்குவர் தாயைத் தந்தை
யந்தமைந் தனையே போற்றல் வேண்டுமற் றாத நன்றாற்
சிந்தையுற் றுணரிற் றூய தந்தையிற் சிறந்தான் மன்னோ. 23

## சிவசன்மா வாயுவுலகுங் குபேரனுலகுங் கண்ட வத்தியாயம்.

மாசில் சித்தமாந் தகளியி லன்புநெய் வார்த்தி
யீச னன்றிவே றில்லெனுந் திட்பநூன் றிரியிற்
றேசு டைத்தனி ஞானவொண் செழுஞ்சுடர் சேர்த்தி
யாசில் கொள்கையான் பற்பகல் யோகினி லடைந்தான். 24

## வயிரவன் தோன்றின வத்தியாயம்.

சாற்று முலக மெவற்றினுக்குந் தானே யாகி யினிதமைத் தல், போற்றி யளித்தல் துடைத்த லென்னப் புகலு மரிய முத் தொழிலு, மாற்று மொருவ னெவன் சிவனு மவனே மொழிந்த தத்துவமென், றேற்று மறைக ளொருநான்கின் முதலாம் வேத மிசைத்ததுவே. 25

ஒன்றாய்ப் பலவாய் முழுமுதலா யுணராப் பொருளா யுண ர்வதுவாய், நின்றா னவன்றா னினைத்த வுருவம் படையா வயிரவன்,

பொன்றூழ் கமலத் தாள்போற்றி யுய்ம்மி னெனலு மவர்ப்பிணி
த்துத், தொன்றுய்த் தொடர்ந்த மலமூடத் தோன்று தாகச்
செருக்குற்றூர். 26

## இல்லறங் கூறிய வத்தியாயம்.

பிறரிடை யின்னு வியற்றிடிற் றமக்குப் பிழைப்பற வெய்து
மென்பதனை, யறிகுன ரறிஞ ராதலா லுயிர்க ளனைத்தையுந் தம்
முயிர் போல,நெறியினிற் கருத லினியவா மைந்து புலனையு நெ
றியலா வழியிற், பொறியினிற் செலுத்தா தடக்கனன் குணர்
ந்த புலமையோ ரொழுக்கெனப் புகல்வார். 27

குரவனைத் தாயைத் தந்தையை மனையைக் குற்றமில் புதல்
வனை விருந்தை, யிரவுநண் பகலும் வழிபடு வோனை யதிதியை
யெரியினை யீங்குக், கருதுமொன் பதின்மர் தம்மையு நாளுங்
கருணைகூர்ந் தினிதளித் திடாது, மருவுமில் வாழ்க்கை பூண்டு
ளோன் றன்னை மக்களுட் பதடியென் றுரைப்பார். 28

விருந்தின னாகவொருவன்வந் தெதிரின் வியத்தல்நன் மொ
ழியினி துரைத்த,றிருந்துற நோக்கல் வருகென வுரைத்தலெழு
தல்முன் மகிழ்வன செப்பல், பொருந்துமற் றவன்ற னருகுற
விருத்தல் போமெனிற் பின்செல்வ தாதல், பரிந்துநன் முகமன்
வழங்கலிவ் வொன்பா னொழுக்கமும் வழிபடும் பண்பே. 29

தவிசுதாள் விளக்கப் புனறமக் கியன்ற வடிசில்பூந் தண்ம
லர்ப் பாய, லுவகையி னுறையு மிடனுகர் தெண்ணீ ரொண்சுட
ரெண்ணெய் வெள்ளிலைகா, யிவைகளோன் பதுந்தன் மனைவயி
னடைந்தோர் மகிழ்வுற வினிதினி லளித்தல், நவையறு மில்வாழ்
வடைந்துளோன் பூண்ட கடனென நான்மறை நவின்ற. 30

பிறர்மனை விழைதல் நிலைபிழைத் தொழுகல் பொய்ம்மொ
ழி பிதற்றுதல் சீற்ற, மறமிகு வயிரங் குறளையே லாத மொழி
யினை நவிலுதல் மாயை, கிறிபகர்ந் தொழுக லாயவொன் பானு
ங், கீழ்மையோ ரொழுக்கமில் வாழ்வி, னுறைகுந ரிவற்றை விடு
கவென் றினிதி னுரைத்தனர் நான்முறை யுணர்ந்தோர். 31

அலைபுனல் படிதல் சந்திவந் தனைநல் லருமறை செபித்த
றீக்கரும, மலர்தரு சாகை மறையினை நவிறல் மலர்கடூ யிறை
வனை வணங்க, லிலகொளி யழலில் வயிச்சுவதேவ மதிதிபூ சனை

மியைந்திடாப் புற்கலன் றன்னை, யுயர்வுற வுயர்ந்த பரம்பொரு
ளதனிற் கூட்டுதல் யோகமென் றுரைப்பார். 38

சிவகணங்கள் காசியை யடைந்தது.

யாவ ரேனுஞ் சிவபூசை செய்வா ராகி லவரிழைத்த
மேவ வரிய கொடுவினைக ளனைத்து நீங்கி வீடடைவா
ரோவில் விரதந் தவம்வேள்வி யாற்று:வோரி லொண்மலர்தூய்ப்
பூவை பாகன் றனைப்பணியு மவர்மே லன்பு புரிந்திடுமால். 39

விந்து மாதவன் றேன்றியது.

கடவுளா லயத்து ணறுநெய்பெய் தகளிக் கனைசுடர் விள
க்கமாட் டினரச், சுடர்புனை விளக்க மனத்திருள் கடிந்த தூம
றை வேதியர்க் களித்தோர், உடல்சினத் தறுகட் படர்மருப் பெ
ருமை யூர்ந்தவெம் மறலியூ ரடையார், விடுசுடர் பரப்பு ஞான
மெய்ச் சுடர்சேர் வெறுவெளி யதனில்வீற் றிருப்பார். 40

ஓங்கார விலிங்கத்தின் கதை யுரைத்தது.

காரண மனைத்துந் தோன்றுங் காரண மாகி யெங்கும்
பூரண மாகி யோங்கும் பிரமமாய்ப் பொலிந்து நின்ற
வேர்பெற விளங்கித் தோன்றும் விந்துவை நோக்கி யெங்கும்
சீர்கெழு பிரண வத்தைத் தெருளுற வேத்து மன்றே. 41

உலகெலா மளிக்கு மாற்று லோமெனும் பெயர தாயிற்
றலகறு கரும வாரி யகன்கரை கடத்த றன்று
லிலகுதா ரகமென் றேனும் பெயரொடு மியைந்த தென்று
மலர்தலை யுலகம் பூத்த மறையவன் பழிச்சு கின்றான். 42

ஓங்கார வுருவா யோது மெழுந்ததா யோங்கா ராதி
நீங்கரும் வன்னந் தோன்று நிலையதா யுயிர்கள் யாவுந்
தாங்கியு மதனுட் டோயாச் சதாசிவ மாகி நான்காந்
தீங்கறு மறையாய் நாத விந்துவாய்ச் சிவம தாகி. 43

அகரமா யுகர மாகி மகரமா யழிவொன் றின்றிப்
பகர்வரும் பவராய்த் தூய சர்வராய்ப் பிரம மாகிப்
புகலருங் குணக்குன் றாகிப் புவனகோ டிகளும் பூத்த
நிகரறு துரிய மாகி நிருமல மாகி நின்றாய். 44

குறுமையாய் நெடுமை யாகிக் குணங்குறி யுருவ மில்லாச்
சிறுமையாய்ப் பருமை யாகிச் சித்துரு வாகி நான்கு

மறைபுக விளைய ராகி விருத்தராய் வன்ன மைந்தா
யறிவரு முதாத்த மிக்க வனுதாத்தஞ் சொரித மாகி. 45

எடுத்தலே படுத்தல் மிக்க நலிதல்மூக் கிதழ்நாப் பல்லோ
டடுத்திடு மண்ணுஞ் சார்ந்து பிறந்தவக் கரங்க ளாகி
நடத்தலோ டிருத்த லென்னும் பாவக னன்னரி நண்ணுக்
கடுத்திகழ் மிடற்ற ராகிக் கலைகளு யருவ மாகி. 46

இதயமண் டபத்தி னீங்கா விறைவனு யகோர மாகிச்
சதியுரு வாகித் தாள முவந்துறை தலைவ னாகி
விதியினில் விருத்த கீத வாச்சிய விஞ்சை யோர்க்குங்
கதியினை யளிப்போ னாகிக் கருதுபல் கலையு மாகி. 47

மலரய னாகி யாவும் வகுத்துமால் வடிவ மாகி
யுலகெலாங் காத்து முக்க ணொருவனு யொடுக்கிப் பின்னு
மலகிலா வுருவ மாகி யேகமா யனாதி யாகி
யிலகுபே ரொளியே யெந்தா யென்றெடுத் தேத்தல் செய்தான்.

---

## சிவரகசியம்.

### விநாயகர் வணக்கம்.

பொன்னிமயப் பிடியானை தருயானை முகத்தானைப் பொருவி லானைச், சொன்னயஞ்சேர் தாரகத்தி னுருவானை யின்பருளச் சோதி யானைச், சென்னியிலா றுடையானைத் தந்தையெனப் படைத்தானைத் திகழோ ராறு, மன்னுமுகன் றனையானை வல்லையின் பத்தானை வணங்கி வாழ்வாம். 1

### பரசிவம்.

உலகனைத்து முளனாகி யிலனாகி யுண்மையா யுலப்பி லானு, யலகிலுயிர்க் குயிராகி யற்புதமா யாரமுதா யறிவுற் றோர்பா, னிலவியமர்ந் தனுபூதி நெறிவிளங்க விளங்கவவர் நேயத் துள்ளே, குலவியபே ரொளியாகுங் கோமானைக் குணக்குன்றைக் குறித்து வாழ்வாம். 2

### உமையவள்.

உருவமா யருவா யுணர்வுமா யொழியா தொளிருநல் வியோமமு மாகி, மருவுமா மாயை பரையுமா யுலகின் மதிக்கு

மெய் பொருளுமா யகண்ட, சொரூபமா யொன்று யறிவுரு தொளிருஞ் சுயம்பிர காசமா யடியார், கருவுறு தருளாற் காத் தருள் புரியுங் கவுரிதன் கருணையே பணிவாம். 3

### கணபதியுடன் கடவுளுத்தரச் சருக்கம்

பந்தனைசேர் பிரபஞ்சப் பற்றினைவிட் டோருளத்திற் பதியா னுனை, முந்தனையுந் தந்தையுமென் முதல்வனுமா மவனையருண் மூர்த்தியானை, வந்தனைசெய் வார்நினைத்த வரந்தனைத்தந் தருள் வானை வரனைச் சோமாற், கந்தனைச்சிந் தனைசெய்தாற் கதியுல கம் புகுநெறியைக் காண லாமே. 4

### சுகமுனிச் சருக்கம்.

அருமறையாய் முதலாகி நடுவாகி முடிவாகி யனைத்து மா ன, பெருமைபெறு பூதங்க ளாந்தாகி முச்சுடராய்ப் பிறக்கும் யோனி, யொருமைபெறு மெண்பத்து நான்குநூ றுயிரமா முரு வந் தோறு, மருவுமுயிர்க் குயிராகித் தாண்டவஞ்செ யாண்ட வனை வழுத்து வோமே, 5

### பாவனுலிங்கச் சருக்கம்.

நாவிற் பொய்களு நாரிய ராசையு
மேவுற் றெனெஞ்சக் கல்லின் விளங்குமோ
வாவிக் கோர்துணை யாமென் றனுதினம்
பாவிப் பார்மனம் பற்றுசெஞ் சோதியே. 6

சேணுற் றுறொளி தீர்த்த விலிங்கத்தைக்
காணக் கேட்கக் கருத்துற வேத்துறப்
பூணு மன்பொடு பூசித் திடப்பெற்றோர்
வேணு மின்பமு முத்தியு மேவுவார். 7

### கும்பமுனியுத்தரச் சருக்கம்.

எழுந்திடினு நின்றிடினு மேகிடினு மிடறு
விழுந்திடினு நோவுறினு மெல்லியலா ரின்பத்
தழுந்திடினு மேக்கமுட னுக்கமுறி னுந்தாந்
தொழுந்தகை யரன்பெயர் துதித்தலொழி யாரே. 8

### மிதுலைச்சைவ நெறிவிளக்கச் சருக்கம்.

காமியங்கள் குறியாமற் சிவபூசை புரிவோர்கள் கடவுளோ ர்த, நாமமுறைத் திடுவோர்கள் சிவபுரா ணங்கேட்கு நன்மை

யோர்கள், பூமியினி லெம்பெருமா னாலயமெல் லாம்புகுந்து
போற்று வோர்க, ளாமிவையொன் பதுகருமம் புரிவோருஞ் சிவ
பதத்தி லடைகு வோரே. 9

### பாவரூப மோசனச் சருக்கம்

பெண்ணெனும் வெய்ய பாவப் பேதுறு முடலை நீற
வண்ணலார் திருவெண் ணீற்றை யனுவனை யளித்திட் டானல்
வண்ணமா மகத நீறு வனத்திலங் கிட்டுண் டான
தெண்ணருஞ் செல்வ நீற்றற் றிருநெற்றி யிட்ட தன்றே. 10

செப்பிய முத்தி தானு மிரண்டதாஞ் சீவன் முத்தி
யொப்பிலாப் பரம முத்தி யென்னவே யுரைப்ப தாமாற்
றப்பரும் பரம முத்தி தானவ னாகித் தாயத்
துய்ப்பருஞ் சீவன் முத்தி துய்த்திடத் தேக நின்றே. 11

---

## கந்தபுராணம்.

### விநாயகர் காப்பு.

திகட சக்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயக
னகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம். 1

### கடவுள் வாழ்த்து.

திருவந்த தொல்லைப் புவனத்தொடு தேவர் போற்றிப்
பொருவந் தனைசெய் தழித்தருளும் பெற்றி யெய்தி
யருவந் தனையு முருவத்தையு மன்றி நின்ற
வொருவன் றனது பதந்தன்னை யுளத்துள் வைப்பாம். 2

பிறப்பது மிறப்பதும் பெயருஞ் செய்கையு
மறப்பது நினைப்பதும் வடிவும் யாவையுந்
துறப்பது மின்மையும் பிறவுஞ் சூழ்கலாச்
சிறப்புடை யரனடி சென்னி சேர்த்துவாம். 3

ஊனாகி யூனு ளுயிரா யுயிர்தோறு மாகி
வானாதி யான பொருளாய் மதியாகி வெய்யோன்

றாகி யாண்பெண் ணுருவாகிச் சராச ரங்க
ளானன் சிவன்மற் றவனீண்கழற் கன்பு செய்வாம். 4

காண்பவன் முதலிய திறமுங் காட்டுவான்
மாண்புடை யோனுமாய் வலிகொள் வான்றொடர்
பூண்பதின் றாய்நயம் புரைக்கும் புங்கவன்
சேண்பொலி திருநடச் செயலை யேத்துவாம். 5

காமதகனப் படலம்.

என்னபவஞ் செய்தேனோ வென்போல்வார் தமக்கென்ன விடர்செய் தேனோ, முன்னையுள விதிப்பயனை யறிவேனோ விப் படியே முடிந்த தையோ, கன்னல்வரிச் சிலைபிடித்த காவலவோ தமியேனைக் காத்தி டாயோ, வன்னிவிழி யாவுடைய பெருமானை நோவதற்கு வழக்கொன் றுண்டோ. 6

அசுரகாண்டம்-மாயைப் படலம்.

ஊரி|லான்குணங் குறியிலான் செயலிலா னுரைக்கும்
பேரி லானொரு முன்னிலான் பின்னிலான் பிறிதோர்
சாரி லான்வரல் போக்கிலான் மேலிலான் றனக்கு
நேரி லானுயிர்க் கடவுளா யென்னுளே நின்றான். 7

மார்க்கண்டேயப் படலம்.

துயக்குறு பவத்திடை தொடர்ச்சியறு தூயோர்
நயப்பொடு வெருப்பகலி னுளுமட மானூர்
முயக்குறினு மாதவ முயன்றிடினு மன்னோர்
வியத்தகு மனத்துணர்வு வேறுபடு மோதான். 8

துறந்தவர்கள் வேண்டியதொர் துப்புரவு நல்கி
யிறந்தவர்கள் காமுறு மிருங்கட னியற்றி
யறம்பலவு மாற்றிவிருந் தோம்புமுறை யல்லாற்
பிறந்தநெறி யானுளதொர் பேருதவி யாதோ. 9

நற்றவம தாகுமி லறந்தனை நடாத்திச்
சுற்றமற நீங்குதுற வேதுறவ தம்மா
மற்றது புரிந்திடி னுனக்குநவை வாரா
வற்றது மறுத்துரைய லாணைநம தென்றான். 10

### மாயை நீங்கு படலம்.

வேதமுங் கலைகளு முணர்ந்து மேலதா
மூதறி வெய்திய முனிவ னீயொரு
மாதுதன் பொருட்டினுன் மைய லெய்தியே
பேதுறு கிற்றியோ பேதை மாந்தர்போல். 11

கண்டதோர் நறவமே காம மேயென
வெண்டரு தீப்பொரு ளிருமைத் தென்பரா
லுண்டுழி யழிக்குமொன் றுணர்வை யுள்ளமேற்
கொண்டுழி யுயிரையுங் கொல்லு மொன்றரோ. 12

உள்ளினுஞ் சுட்டிடு முறைருங் கேள்வியிற்
கொள்ளினுஞ் சுட்டிடுங் குறுகி மற்றதைத்
தள்ளினுஞ் சுட்டிடுந் தன்மை யீதினாற்
கள்ளினுங் கொடியது காமத் தீயதே. 13

சுட்டுறு பிறவியும் வினைகள் யாவையுங்
காட்டிய தினையதோர் காம மாதலின்
வாட்டமில் புந்தியான் மற்றுங் கோயினை
வீட்டின ரல்லரோ வீடு சேர்ந்துளார். 14

நெஞ்சினு நினைப்பரோ நினைந்து மார்தமை
யெஞ்சிய துயரிடை யின்னு யுய்த்துமேல்
விஞ்சிய பவக்கடல் வீழ்த்து மாதலா
னஞ்சினுந் தீயது நலமில் காமமே. 15

ஆதலிற் காமமுற் றழுங்க லிபுமார்
மாதரும் வஞ்சக மாயை யாகுமாற்
றீதில னிழைத்தனை தீரத் தொன்மைபோ
னீதவம் புரிகென நிறுவி யேகினான். 19

### சுக்கிரனுபதேசப் படலம்.

பாச மென்றும் பசுவென்று மேதகு
மீச னென்று மிசைப்பர் தனையெனப்
பேசன் மித்தை பிறிதில யாவியுந்
தேசு மேவு சிவனுமொன் றுருமே. 17

சொற்ற வாதியுந் தோமுறு வான்றனை
யுற்ற வாவியு மொன்றல வொன்றெனிற்

குற்ற மாகுமக் கோமுதற் கென்பரான்
மற்ற தற்கு வரன்முறை கேட்டிநீ. 18

ஆதி யந்தமின் றாகி யமலமாஞ்
சோதி யாயமர் தொல்சிவ னுடலின்
காத லாகிக் கருதுதன் மாயையாற்
பூதம் யாவும் பிறவும் புரிவனால். 19

இடங்கொண் மாயையின் யாக்கைக ளாயின
வடங்க வுந்நல்கி யன்னவற் றாடுதான்
கடங்கொள் வானிற் கலந்துமற் றவ்வுடன்
மடங்கு மெல்லையின் மன்னுவன் றுன்மைபோல். 20

இத்தி றத்தினெஞ் ஞான்றுமவ் வெல்லைதீர்
நித்த னுட னிலைமை புரிந்திடு
மித்தை யாகும் வினைகளும் யாவையு
முத்தி தானு முயல்வது மன்னதே. 21

பொய்ய தாகும் பொறிபுல மென்றிடின்
மெய்ய தோவிவை காணும் விழுப்பொருண்
மையில் புந்தியும் வாக்கும் வடிவமுஞ்
செய்ய நின்ற செயல்களு மன்னதே. 22

அன்ன செய்கைக ளன்மைய தாகுமேற்
பின்ன ரங்கதன் பெற்றியின் வந்திடு
மின்ன லின்ப மிரண்டுமெய் யாகுமோ
சொன்ன முன்னைத் துணிபின வாகுமே. 23

மித்தை தன்னையு மெய்யெனக் கொள்ளினு
மத்த குந்துய ரானது மின்பமு
நித்த மாகு நிமலனை யெய்துமோ
பொத்தி லான பொதியுடற் காகுமே. 24

தோன்று கின்றதுந் துண்ணென மாய்வது
மேன்று செய்வினை யாவதுஞ் செய்வது
மான்ற தற்பரற் கில்லை யனையதை
யூன்றி நாடி னுடற்குறு பெற்றியே. 25

போவ தும்வரு கின்றதும் பொற்புட
னாவ தும்பி னழிவதுஞ் செய்வினை

யேவ தும்மொன் றிலாத கடத்தொறு
மேவு கின்றதொர் விண்ணினுக் காருமோ. 26

அன்ன போலெங்கு மாவியொன் றுமேய
துன்னி நின்றிடு தொல்பரன் வேறுபா
டென்ன தும்மிலை யென்றுமோர் பெற்றியான்
மன்னு மங்கது வாய்மையென் றோர்திநீ. 27

தஞ்ச மாகுங் குருமகன் றுவிலை
நெஞ்ச கத்து நினைந்து புரிவதும்
விஞ்சு கின்ற வியன்பயந் தீதென
வஞ்சு கின்றது மாமறி வின்மையே. 28

யாது யாதுவந் தெய்திய தன்னதைத்
தீது நன்றெனச் சிந்தைகொள் ளாதவை
யாதி மாயையென் றுய்ந்தவை யாற்றுத
னீதி யான நெறிமைய தாகுமே. 29

தருமஞ் செய்த தவறுள பாவமாங்
கருமஞ் செய்யற்க வென்பர் கருத்திலா
ரிருமை தன்னையும் யாவர்செய் தாலுமேல்
வருவ தொன்றிலை மாயம்வித் தாகுமே. 30

கனவி னெல்லையிற் காமுறு மீரவு
மினைய வந்தவு மேனை யியற்கையு
நனவு வந்துழி நாக்கண்ட தில்லையா
லனைய வாயவை யாற்றுஞ் செயலெலாம். 31

இம்மை யாற்று மிருவினை யின்பய
னம்மை யெய்தினன் றேவடை யப்பரிம்
பொய்ம்மை யேயது பொய்யிற் பிறப்பது
மெய்ம்மை யாகும தோகடர் வேலினாய். 32

சிறிய ரென்றுஞ் சிலரைச் சிலரைமே
னெறிய ரென்று நினைவது நீர்மையோ
விறுதி யில்லுயிர் யாவுமொன் றேயென
வறிதல் வேண்டுமஃ துண்மைய தாகுமே. 33

வேறு.

உற்றதோர் மேன்மை நாடி யுன்னைநீ பிரம மென்றே
தெற்றெனத் தெளிதி மற்றத் திசைமுகன் முதலோர் தம்மைப்
பற்றலை மேலோ ரென்று பணியலை யிமையோ ருங்கள்
செற்றல ரவரை வல்லே செறுமதி திருவுஞ் சிந்தி. 34

யுத்தகாண்டம் ஏமகூடப்படலம்.

நாரண னென்னுந் தேவு நான்முகத் தவனு முக்கட்
பூரணன் றானு மாகிப் புவிபடைத் தளித்து மாற்றி
யாரண முடிவுந் தேறா வநாதியா யுயிர்கட் கெல்லாங்
காரண னாய மேலோன் கழலிணை கருத்துள் வைப்பாம். 35

காலமாய்க் கால மின்றிக் கருமமாய்க் கரும மின்றிக்
கோலமாய்க் கோல மின்றிக் குணங்களாய்க் குணங்க ளின்றி
ஞாலமாய் ஞால மின்றி யநாதியாய் நங்கட் கெல்லா
மூலமா யிருந்த வள்ளன் மூவிரு முகங்கொண் டுற்றான். 36

சூரபன்மன் வதைப்படலம்.

திருகிய வெகுளி முற்றுந் தீர்ந்தன செருவி னூக்க
மருகிய துரோமம் புள்ளி யாயின விழியிற் றாரீர்
பெருகிய திவன்பா லன்பு பிறந்தன தமியேற் குள்ள
முருகிய தென்பு தானு முலைமெழு காகு மன்றே. 37

போயின வகந்தை போதம் புகுந்தன வலத்த தான
தூயதோர் தோளுங் கண்ணுந் துடித்தன புவன மெங்கு
மேயின பொருள்கண் முற்றும் வெளிப்படு கின்ற விண்ணோர்
நாயகன் வடிவங் கண்டே னற்றவப் பயனீ தன்றோ. 38

சூழுதல் வேண்டுந் தாள்க டொழுதிடல் வேண்டு மங்கை
தாழுதல் வேண்டுஞ் சென்னி துதித்திடல் வேண்டுந் தாலு
வாழுதல் வேண்டுந் தீமை யகன்றுநா னிவற்கா ளாகி
வாழுதல் வேண்டு நெஞ்சந் தடுத்தது மான மொன்றே. 39

அந்தநா ளொருவ னாகி யாருயிர்த் தொகையைத் தொன்னாள்
வந்தவா றடுங்கச் செய்து மன்னிய வீட்டு மன்னை
தந்தையா யுயிர்கட் கேற்ற தனுமுத லளிக்கு முக்க [ணோ.
ணெந்தைதன் செய்கை முற்று மினையதென் றிசைக்கற் பாற்

யாதொரு பொருளை யாவ ரிறைஞ்சினு மதுபோய் முக்க
ணுதியை யடையு மம்மா வங்கது போலத் தொல்லை
வேதம னுரைக்க நின்ற வியன்புக ழனைத்து மேலா
நாதனை யணுகு மெல்லா நதிகளுங் கடல்சென் றென்ன. 41

கேளினி மைந்த வேதக் கிளையெலா மியம்பு கின்ற
சூளுரை சிவனே யெல்லாந் தோற்றுவித் தளித்து மாற்றி
மீளவுந் தருகின் றானும் வியனுயிர்க் கருளை நல்கி
யாளுநா யகனு மாகி யந்தமி லோனு மென்னும். 42

மூன்றெனு முலகந் தன்னின் முளைத்திடு பொருளை யெல்லா
மீன்றருள் புரியுந் தாதை யெனுந்திரயம் பகனும் யார்க்குஞ்
சான்றென நிற்கின் றோனுந் தானுவும் பரனுந் தன்னைப்
போன்றவ ருயர்ந்தோ ரில்லாப் புங்கவன் றானு மென்னும். 43

நம்மையும் பரமென் றுன்னி நாதனிற் சிறப்புச் செய்யும்
வெம்மைகொ ணெஞ்சர் தீரா விழுமவெந் நிரயம் வீழ்வர்
தம்மையஃ தெடுத்தல் செய்யா சமமெனப் புகல்விற் போர்க
ளெம்மையுந் துயர மென்னு மிருங்கடற் படிப்ப ரன்றே. 44

அவனருள் பெறாது முத்தி யடைந்தவ ரில்லை யல்லா
லவனரு ளின்றி வாழு மமரரும் யாரு மில்லை
யவனரு ளெய்தி னெய்தா வரும்பொரு ளில்லை யானை
யவனல திறைவ னில்லை யவனைநீ யடைதி யென்றான். 45

தக்கன்மகப்பெறு படலம்

முத்தியென் றிடுவதே மொழிவதோர் நாமமா
மத்திறங் கடவுளர்க் காயினுந் தெரிவதோ
நித்தனன் புறுவதோர் நெறியரா யிருவினை
யொத்தபண் போர்களா லுணரலா மல்லதே 46

அடிமுடி தேடபடலம்.

பொன்னலா தாங்கொலோ பூணலா மிறைபுரி
மன்னலா தாங்கொலோ மாநில மாநிலக்
தன்னலா தாங்கொலோ தருவதோர் வளமதி
லென்னலா தாங்கொலோ வைச்சரா சரமுமே. 47

எண்ணுவிப் போனுநா னெண்ணுகின் றோனுநான்
கண்ணுதற் பொருளுநான் காண்டரும் புலனுநா

னண்ணுதற் கரியனு ளூரணக் கடவுளுன்
விண்ணகத் தலைவனுன் வேதமும் பொருளுநான். 48

ஆதிநா னுருவுநா னருவுநா னிருளுநான்
சோதிநா னத்தநான் றூயநான் மாயநான்
யாதுநான் பூதநான் யாருநான் சங்கரன்
யாதிநா னவனுநான் பரமெனும் பொருளுநான். 49

## கந்தவிரதப்படலம்.

ஆன்ற வைம்புல னொருவிழிப் படுத்தி யார்வம் வேரறுத் தையமொன் றின்றி, யூன்றி ரிந்திடி னுங்கிலே திரியா வுண்மையேபிடித் துலகங்கண் முழுது, மீன்ற வெம்பெரு மாட்டியை நீக்கியெம் பிரானையே வழிபடு மியற்கை, மூன்று தாளுடையொருவனுக் கல்லா லேனை யோர்களான் முடியுமோ முடியா.

---

## திருவிளையாடற் புராணம்.

சத்தி யாய்ச்சிவ மாகித் தனிப்பர
முத்தி யான முதலைத் துதிசெயச்
சுத்தி யாகிய சொற்பொரு ணல்குவ
சித்தி யானைதன் செய்யபொற் பாதமே. 1

வென்றுளே புலன் களைந்தார் மெய்யுண ருள்ளந் தோறுஞ்
சென்றுளே யமுத மூற்றுந் திருவருள் போற்றி யேற்றுக்
குன்றுளே யிருந்து காட்சி கொடுத்தருள் கோலம் போற்றி
மன்றுளே மாறி யாடு மறைச்சிலம் படிகள் போற்றி. 2

அண்டங்க ளெல்லா மணுவாக வணுக்களெல்லாம்
மண்டங்க ளாகப் பெரிதாய்ச் சிறிதாயினுனு
மண்டங்க ளுள்ளும் புறம்புங் கரியாயினுனு
மண்டங்க ளீன்ற துணையென்ப ரறிந்தநல்லோர். 3

உண்மையறி வானந்த வுருவாகி யெவ்வுயிர்க்கு முயிராய் நீரின், றண்மையனல் வெம்மையெனத் தனையகலா திருந்துசரா சரங்க ளீன்ற, பெண்மையுரு வாகியதன் னானந்தக் கொடிமகிழ்ச்சி பெருக யார்க்கு, மண்மையதா யம்பலத்து ளாடியருள் பேரொளியை யகத்துள் வைப்பாம். 4

உள்ளமெனுங் கூடத்தி லூக்கமெனுந் தறிநிறுவி யுறுதி யாகத், தள்ளரிய வன்பென்னுந் தொடர்பூட்டி யிடைபடுத்தித் தறுகட் பாசக், கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக் களித் துண்டு கருணை யென்னும், வெள்ளமதம் பொழிசித்தி வேழத் தை நினைந்துவரு வினைக டீர்ப்பாம். 5

இந்திரன் பழிதீர்த்த படலம்.

நாய்நம தெனநரி நமதெ னப்பிதா
தாய்நம தெனநமன் றனதெ னப்பிணி
பேய்நம தெனமன மதிக்கும் பெற்றிபோ
லாய்நம தெனப்படும் யாக்கை யாரதே. 6

விடம்பயி லெயிற்றர வரியும் வீறுழை
குடம்பையுந் தானெனுங் கொள்கைத் தேகொலா
நடம்பயில் கூத்தரி னடிக்கு மைவர்வா
ழுடம்பையும் யானென வுரைக்கற் பாலதோ. 7

நடுத்தயா விலார்தமை நலியத் துன்பரோ
யடுத்தயா வருந்திரு வடைய யாக்கையைக்
கொடுத்தயா வறம்புகழ் கொள்வ னேயெனி
னெடுத்தயாக் கையின்பய னிதனின் யாவதே. 8

அருவாகி யுருவாகி யருவுருவங் கடந்துண்மை யறிவான ந்த, வுருவாகி யளவிறந்த வுயிராகி யவ்வுயிர்க்கோ ருணர்வாய்ப் பூவின்,மருவாகிச் சராசரங்க ளகிலமுந்தன் னிடையுதித்து மட ங்க நின்ற, கருவாகி முளைத்தசிவக் கொழுந்தையா யிரக்கண் ணுங் களிப்பக் காண்டான். 9

யாவையும் படைப்பாய் போற்றி யாவையுந் துடைப்பாய் போற்றி, யாவையு மானாய் போற்றி யாவையு மல்லாய் போற்றி யாவையு மறிந்தாய் போற்றி யாவையு மறந்தாய் போற்றி, யா வையும் புணர்ந்தாய் போற்றி யாவையும் பிரிந்தாய் போற்றி. 10

பூசையும் பூசைக் கேற்ற பொருள்களும் பூசை செய்யு
நேசனும் பூசை கொண்டு நியதியிற் பேறு நல்கு
மீசனு மாகிப் பூசை யான்செய்தே னெனுமென் போத
வாசனை யதுவு மான மறைமுத லடிகள் போற்றி. 11

### திருநகரங்கண்ட படலம்.

ஆழி ஞாலமே லாசையு மமரர்வான் பதமேல்
வீழு மாசையும் வெறுத்தவர்க் கன்றிமண் ணுண்டு
பீழை மூழ்கிவா னரகொடு பிணிபடச் சுழலு
மேழை யேங்களுக் காவதோ வெந்தைநின் கருணை. 12

இருணி ரம்பிய வனமெலா மெறிந்துமெய் யுணர்ந்தோர்
தெருணி றைந்தசிந் தையின்வெளி செய்துபல் லுயிர்க்கு
மருணி றைந்துபற் றறுத்தர னடிநிழ லடைந்த
கருணை யென்பர்தம் பிறப்பென வேரொடு களைந்தார். 13

பொன்மய மான சடைமதிக் கலையின் புத்தமு துகுத்தன ரதுபோய்ச், சின்மய மான தம்மடி யடைந்தார்ச் சிவமய மாக்கிய செயல்போற், றன்மய மாக்கி யந்நகர் முழுதுஞ் சாந்திசெய் ததுவது மதுர, நன்மய மான தன்மைசான் மதுரா நகரென வுரைத்தனர் நாமம். 14

### வெள்ளியம்பலத்திருக்கூத்தாடிய படலம்.

திருவள ராரூர் மூலந் திருவானைக் காவே குய்ய
மருவளர் பொழில்சூ ழண்ணா மலைமணி பூரநீவி
ரிருவருங் கண்ட மன்ற மிதயமாந் திருக்கா ளத்தி
பொருவருங் கண்ட மாகும் புருவமத் தியமாங் காசி. 15

பிறைதவழ் கயிலைக் குன்றம் பிரமரந் திரமாம் வேத
மறைதரு துவாத சாந்த மதுரையீ ததிக மெந்த
முறையினு லெண்ணின் முன்னர்த் தோன்றிய முறையா லென்றக்
கறையறு தவத்த ரோடு கவுரியன் கோயில் புக்கான். 16

ஒன்றாகி யைந்தா யையைந் துருவாகி வருவாய் போற்றி
யின்றாகிச் சென்ற நாளா யெதிர்நாளா யெழுவாய் போற்றி
நன்றாகித் தீய தாகி நடுவாகி முடிவாய் மன்று
ணின்றாடும் பரமா னந்த நிருத்தனே போற்றி போற்றி. 17

அனித்த மாகிய பூத மைம்பொறி புலனுதி யாறு ளுகி, யினித்த மாயையோ டிருவினைத் தொடக்கினு மிருளினும் வேறாகித், தனித்த யோகிகள் நிறைந்தா டியதனிப் பெருந்திருக் கூத்தைக், குனித்த வண்ணமாக் கண்டவர்க் கிகபரங் கொடுத்தவ னுறைகின்றான். 18

எழுகடலடைத்தபடலம்.

கள்ளவினைப் பொறிகடந்து கரைகடந்து மறைச்சென்னி
யுள்ளபொருள் பரசிவமென் றுணர்ந்தபெருந் தகையடிகே
டள்ளரிய பவமகற்றுந் தவமருள்செய் கெனக்கருணை
வெள்ளமென முகமலர்ந்து முனிவேந்தன் விளம்புமால். 19

மலயத்துவசனையழைத்தபடலம்.

புவலோகங் கடந்துபோய்ப் புண்ணியருக் கெண்ணிறந்த போக மூட்டுஞ், சுவலோகங் கடந்துபோய் மகாலோகஞ் சன லோகந் துறந்து மேலைத், தவலோகங் கடந்துபோய்ச் சத்திய லோகங்கடந்து தண்டு பூமேயா, வவலோகங் கடந்துலக நாயக மாஞ் சிவலோக நண்ணி னுமே. 20

வேதத்துக்குப் பொருளருளிச்செய்த படலம்.

மலர்மக னாகி மூன்று வையமும் படைத்து மாலா
யலைவற நிறுத்தி முக்க ணாதியா யழித்தும மூவர்
தலைவனாய்ப் பரமா காச சரீரியாய் முதலி நின்றித்
தொலைவருஞ் சோதி யாமிச் சுந்தர லிங்கந் தன்னில். 21

ஆதியி லான்ம தத்துவ மான மலர்மகன் பாகமு மடிவி, வி தியி லிச்சா தத்துவ மான நெடியவன் பாகமு முடிவி, லோதி ய சிவதத் துவமென லான வுருத்திர பாகமு முதிக்கும், பேதி யிம் மூன்றி லெண்ணிறந் துவங்கள் பிறக்குமிம் மூன்றிலு மு றையால். 22

கருமத்தான் ஞான முண்டாங் கருமத்தைச் சித்த சுத்தி
தருமத்தா லிகந்த சித்த சுத்தியைத் தரும கல்வு
மருமைத்தாந் தருமத் தாலே சாந்தியுண் டாகு மாண்ட
பெருமைத்தாஞ் சாந்தி யாலே பிறப்பதட் டாங்க யோகம். 23

நான்மாடக்கூடலானபடலம்

பூதங்க ளல்லை பொறியல்லை வேறு புலனல்லை யுள்ள மதியின்
பேதங்க ளல்லை யிவையன்றி நின்ற பிறிதல்லை யென்று பெருநூல்
வேதங் கிடந்து தடுமாறும் வஞ்ச வெளியென்ப கூடன் மறுகிற்
பாதங்க ளோவ வளையிந்த ணூதி பகர்வாரை யாயு மவரே. 24

வேதமுதற் கலைகாட்சி முதலளவை விரிஞ்சன்முதல் விண்ணோர்செய்யுஞ், சோதனையு ளகப்படாச் சோதியுனைச் சோதிக்கத் துணிந்தே னந்தோ,பேதமையே னிடத்தென்ன குணங்கண்டேன் பிணிதீர்த்தென் பெற்று யாசை, கோதமிலாய் குற்றமே குணமாகக் கொள்வதுநின் குணமோ வையா. 25

ஆறுமதி முடியணிந்த வருட்கடலே வயிற்றுநோ யன்றிமேனன்,மாறுபடு மிருவினை யு மலவலியுங் கெடவீட்டின் வழியும்பெற்றேன், வேறினிமந் திரமென்னை மணியென்னை மருந்தென்னை மெய்ம்மை யாக, தேறுமவர்க் கிப்புனித தீர்த்தமே பிணியனைத்துந் தீர்ப்ப தன்றோ. 26

## கல்லானைக்குக் கரும்பருத்தியபடலம்

வேதியாய் வேத விளைபொருளாய் வேதத்தி
னீதியாய் நீதி நெறிகடந்த நீளொளியா
யாதியா யீறாய் நடுவா யவைகழிந்த
சோதியாய் நின்றாயென் சோதனைத்தோ நின்னியல்பே. 27

நின்னூன் மொழிந்தமறை நின்னடிகள் வந்தித்தும்
பன்னு ளருச்சித்தும் பாதந் தலைசுமந்து
மூன்னுமம் வாசித்து முன்னையறி யேனென்று
சொன்னு லடியனேன் சோதனைத்தோ நின்னியல்பே. 28

பெரியதினும் பெரியதுமாய்ச் சிறியதினுஞ் சிறியதுமா
யரியதினு மரியதுமா யெளியதினு மெளியதுமாய்க்
கரியதுமாய்க் காண்பானுங் காட்சியுமா யவைகடந்த
துரியமுமாய் நின்றாயென் சோதனைத்தோ நின்னியல்பே. 29

## விருத்தகுமார பாலரானபடலம்

உண்மாசு கழுவுவது நீறென்றே யுபநிடத முரைப்பக் கேட்டு, மண்மாசு படப்பூசும் வடிவுடையா ரகன்ற தற்பின் மனையில் வைகும், பெண்மாசு கழியவொரு சிவனடியார் தமைக்காணப் பெறுமவின்றென், கண்மாசு படுவதெனக் கனிந்தொழுகு தலையன்பாற் கவலை கூர்வாள். 30

சிவனடியார்க் கன்பிலாச் சிந்தையே யிரும்பேவல் செய்து நாளு மவனடியார் திறத்தொழுகா வாக்கையே மரஞ்செவிகண்ணாதி யைந்தும், பவனடியா ரிடைச்செலுத்தாப் படிவமே பா

வைமறை பரவுஞ் சைவ, தவநெறியில் லாநெறியே பவநெறியெ
ன் றளியளாய்த் தளர்வான் பின்னும். 31

எனைத்துயிர்க்கு முறுதி யிக பரமென்ப வவைகொடுப்பா
னெல்லாந் தானு, யனைத்துயிர்க்கு முயிராகு மானென்ப வவன
றிவார்க் கங்கம் வாக்கு, மனத்துறுமெய்ப் பத்திவழி வருமென்ப
வப்பத்தி வழியிற் பார்க்கு, வினைத்துயர்தீர்த் திடவெடுத்த வடி
வென்ப தவனடியார் வேட மன்றே. 32

பழியஞ்சினபடலம்.

மணமகனே பிணமகனாய் மணப்பறையே பிணப்பறையா
யணியிழையார் வாழ்த்தொலிபோ யழுகையொலி யாய்க்கழியக்
கணமதனிற் பிறந்திறுமிக் காயத்தின் வரும்பயனை
யுணர்வுடையார் பெறுவருணர் வொன்றுமிலார்க் கொன்றுமிலை.

மெய்க்காட்டிட்டபடலம்.

எவரேனு முருத்திரசா தனங்கண்டா லெதிர்வணங்கி
யவரேநம் பிறப்பறுக்க வடிவெடுத்த வரென்று
கவராத வன்புள்ளங் கசிந்தொழுக வருச்சித்துச்
சுவையாறி னமுதருத்தி யெஞ்சியபின் சுவைதெரிவான். 34

உலவாக்கிழியருளியபடலம்.

மறையே நமது பீடிகையா மறையே நமது பாதுகையா
மறையே நமது வாகனமா மறையே நமது நூபுரமா
மறையே நமது கோவணமா மறையே நமது விழியாகு
மறையே நமது மொழியாகு மறையே நமது வடிவாகும். 35

வேதந் தானே நமதாணைச் சத்தி வடிவாய் விதிவிலக்காய்,
போதங் கொளுத்தி நிலைநிறுத்திப் போகங் கொடுத்துப் பல்லு
யிர்க்குப், பேதஞ் செய்யும் வினையழித்தெம் பிரியாவீடு தரு
வதுதே, நாதஞ் செய்யுந் தார்வேந்தே நமது செங்கோ லதுவா
கும். 36

அட்டமாசித்தியுபதேசித்தபடலம்.

அணிமா மகிமா லகிமா வரிய கரிமாப் பிராத்திமலப், பிணி
யுடையோர்க் கடைவரிய பிராகா மியமீ சத்துவமெய், து
ா யோகர்க் கெளியவசித் துவமென் றெட்டா மிவையுளக்

கண், மணிமா சறுத்தோர் விளையாட்டின் வகையா மவற்றின் மரபுரைப்பாம். 36

அறவுஞ் சிறிய வுயிர்தொறுந்தான் பரம காட்டை யணு வாய்ச்சென், றுறையுஞ் சிறுமை யணிமாவா முவரினால முதன் மேலென், றறையுஞ் சிவார்ந்த மாருறு முள்ளும் புறனு மகலா தே, நிறையும் பெருமை தனையன்றே மகிமா வென்று நிரம்பிய நூல். 37

இலகு மேரு பாரம்போ லிருக்கும் யோகி தனையெடுத்தா
லிலகு வான தூலமென விருப்ப திலகி மாவாகு
மிலகு வான பரவணுப்போ லிருக்கும் யோகி தனையெடுத்தா
லிலகு மேரு பாரமென விருப்ப தன்றே கரிமாவாம். 38

பிலத்தி லிருந்தோ னயனுலகிற் புகுதன் மீண்டும் பிலம டைதல், பலத்தின் மிகுந்த பிராத்தியதாம் பரகாயத்தி னண் ணுதல்வான், புலத்தி னியங்க லிச்சித்த போக மனைத்துந் தா னிருக்குந், தலத்தி னினைந்த படிவருதல் பிராகா மியமாந் தவக் கொடியீர். 39

விண்ணி லிரவி தன்னுடம்பின் வெயிலா லனைத்தும் விளங் குதல்போன், மண்ணி லுளவாம் பொருள்பலவுங் கால மூன்றும் வானத்தின், கண்ணி லுளவாம் பொருளுந்தன் காயத் தொளி யா லிருந்தறித, லெண்ணி லிதுவு மறையொருசார் பிராகா மிய மென் றியம்புமால். 40

ஈச னெனமுத் தொழிலுந்தன் னிச்சை வழிசெய் தெழுபுரவித்
தேசன் முதற்கோள் பணிகேட்பத் திகழ்வ தீசத் துவமாகும்
பூச லவுணர் புள்விலங்கு பூத மனிதர் முதலுலகும்
வாச் வாதி யெண்மருந்தன் வசமாக் கொள்கை வசித்துவமாம்.

இரசவாதஞ் செய்தபடலம்.

அதிக நல்லற நிற்பதென் றறிந்தனை யறத்து
ளதிக மாஞ்சிவ புண்ணியஞ் சிவார்ச்சனை யவற்று
ளதிக மாஞ்சிவ பூசையு ளடியவர் பூசை
யதிக மென்றறிந் தன்பரை யருச்சனை செய்வாய். 42

## விறகுவிற்ற படலம்.

கடிய கானகம் புகுதவோ கட்டிய விறகை
முடியி லேற்றவோ முண்டகத் தாள்கனொந் திடவந்
தடிய னேன்பொருட் டடாதசொற் பகரவே வஞ்சக்
கொடிய னேன்குறை யிரந்தவா விளைந்ததே குற்றம். 43

நெடிய னேமுதல் வானவர் நெஞ்சமுஞ் சுருதி
முடிய னேகமுங் கடந்தநின் முண்டகப் பாதஞ்
செடிய னேன்பொருட் டாகவிச் சேணிலந் தோய்ந்த
வடிய னேற்கெளி தாயதோ வையநின் பெருமை. 44

நாத வந்தமுங் கடந்தமெய்ஞ் ஞானவா னந்த
போத மென்பரஞ் சின்றொரு புடவிமா னுடமா
யாத பந்தெறத் தறிந்தவிந் தனஞ் சுமந் தடியேன்
பேதை யின்பள வாயதோ பெருமநின் னுருவம். 45

மெய்ம்மை யாம்பொருள் விவேகமும் வேறுபா டாய
பொய்ம்மை யாம்பொருள் விவேகமும் புத்தியுட் டோன்ற
விம்மை யாசையு மறுமையி லாசையு மிகந்து
செம்மை யாகிய கருத்தராய்ப் பரகதி சேர்வார். 46

## வாதவூரடிகளுக்கு உபதேசித்த படலம்.

புத்த ராதியோர் புறவுரை நெறிகளும் பொய்யா
நித்த வேதநூ றழுவிய வகவுரை நெறியுஞ்
சித்த மாசறுத் தானருட் டெளிவியா வதனு
மித்தை யாணவத் தொடக்கறு தில்லையாம் வீடும். 47

பத்தி செய்தர னருட்பெறும் பத்தருக் கன்றி
முத்தி யெய்தரி தெனமறை மொழிவவப் பொதுநூல்
சத்தி யப்பொருட் டெளிவெலாஞ் சத்திநி பாதர்க்
குய்த்து ணர்த்திய தாகம மென்பர்மெய் யுணர்ந்தோர். 48

வேத வாகமச் சென்னியில் விளைபொரு ளபேதம்
பேத மாகிய பிணக்கறுத் திருட்பிணி யவிழ்ந்து
நாத னாகிய தன்னையு மென்னையு நல்கும்
போத னாகிய குருபரன் வருவதெப் பொழுதால். 49

கரவி லாதபே ரன்பினுக் கெழுவருங் கருணைக்
குரவ னாரரு ளன்றியிக் கொடியவெம் பாசம்

புரையில் கேள்வியாற் கழிப்பது புணையினு லன்றி
யுரவு நீர்க்கடல் கரங்கொடு நீந்துவ தொக்கும். 50

சூக்க மாகுமைந் தெழுத்தினிற் சுற்றிய பாச
வீக்க நீக்கிமெய் யானந்தம் விளைநிலத் துய்த்துப்
போக்கும் மீட்சியுட் புறம்பிலாப் பூரண வடிவ
மாக்கி ஞனொரு தீபகம் போல்வரு மண்ணல். 51

பார்த்த பார்வையா லிரும்புண்ட நீரெனப் பருகுந்
தீர்த்தன் றன்னையுங் குருமொழி செய்ததுந் தம்மைப்
போர்த்த பாசமுந் தம்மையு மறந்துமெய்ப் போத
மூர்த்தி யாயொன்று மறிந்திலர் வாதவூர் முனிவர். 52

தேனும் பாலுந்தீங் கன்னலு மமுதுமாய்த் தித்தித்
தானு முள்ளமு முருக்கவுள் ளொளியுணர்ந் தின்ப
மான வாறுதேக் கிப்புறங் கசிவதொத் தொழியா
ஞான வாணிவந் திறுத்தன என்பர்தந் நாவில். 53

கனவில்வருங் காட்சியெனக் கருணை மூர்த்தி காட்டிம றைத் தலுமன்பர் கலக்கத் தாழ்ந்து, நனவுகொல்லோ வின்று நாதன் ஞமலிக்குத் தவிசிட்ட நலம்போ லென்னை, நினைவரிய திருமேனி காட்டி யாண்டு நீத்ததையென் றையுற்று நெஞ்சந் தேரி, யினவடியா ருடன்கூட்டா தேகி ஞயோ வென்னையுமென் வினையையுமிங் கிருத்தி யெந்தாய். 54

வஞ்சவினைக் கொள்கலனு முடலைத் தீவாய் மடுக்கிலேன் வ ரையுருண்டு மாய்ப்பே னல்லே, னஞ்சொழுகு வாளாலுங் குறை ப்பே னல்லே னுதனே யதுவுநின துடைமை யென்றே, யஞ்சி னேன் றனேயு மழியா தாவி யையனே நினைப்பிரிந்து மாற்ற கில்லே, னென்செய்கோ வெந்தாயோ வெந்தா யோவென் றிரங் கினர் புரண்டழுதா ரினைய சொல்வார். 55

வறியனு மொருபிறவிக் குருடன் கையில் வந்தபெரு விலை மணிபோன் மழலை தேருச்,சிறியனு மொருமதலை கையிற் கொண் ட செம்பொன்மணி வள்ளம்போற் றேவர் யார்க்கு, மறிவரியா ய் சிறியேனை யெளிவந் தாண்ட வருமையறி யேன்றுன்பத் தழு வித் தாழப், பிறிவறியா வன்பரொடு மகன்றுய் கல்லாப் பேதை யேன் குறையலதெம் பிரானு லென்னே. 56

வேதவோ வேத முடிவின் விளைந்த தனிப்
போதவோ போத நெறிகடந்த பூரணவோ. 64

ஐயவோ வென்னுடைய வன்பவோ வன்பர்க்கு
மெய்யவோ மெய்யில் வினையேன் றலைவைத்த
கையவோ செய்யகழற் காலவோ காலனைக்காய்
செய்யவோ வேதப் பரியேறுஞ் சேவகவோ. 65

அத்தவோ கல்லாக் கடையேனை யாட்கொண்ட
பித்தவோ பொய்யுலகை மெய்யாகப் பேதிக்குஞ்
சித்தவோ சித்தந் தெளிவித் தெனைத்தந்த
முத்தவோ மோன மயமான மூர்த்தியவோ. 66

மண்சுமந்த படலம்.

சச்சிதா னந்த மாமத் தனிப்பர சிவனே தன்ன!
திச்சையா லகில மெல்லாம் படைத்தளித் தீறு செய்யும்
விச்சைவா னவரைத் தந்த மேலவன் பிறவித் துன்பத்|
தச்சமுற் றடைந்தோர்க் காறு மின்பவீ டளிக்கு மன்னோன். 67

அடையாளம் படவொருவ னடித்த கொடுஞ் சிலைத்தழும் புந், தொடையாக வொருதொண்டன் றெடுத்தெறிந்த கல்லும் போற், கடையானேன் வெகுண்டடித்த கைப்பிரம்பு முலக மெல்லா, முடையானே பொறுத்ததோ வுன்னருமைத் திரு மேனி. 68

கடியேறு மலர்மகன்மான் முதலாய கடவுளரும்
படியேழு மளவிறந்த பல்லுயிரு நீயேயோ
முடியேற மண்சுமந்தாய் முதுகுதனி லடிபட்ட
தடியேனும் பட்டேனின் றிருமேனி யானேனோ. 69

கைக்குமருந் தின்சுவையின் காட்டுமா றெனவினைக்கும்
பொய்க்குமருங் கலறுகி மண்ணுண்டு புலைநரகந்
துய்க்குமருந் துயர்களைவான் மாறுமநின் றுணையடிக்கே
யுய்க்குமருந் துவரிவரென் றறியாமை யொறுத்தேனே. 70

உறைக்கமொழிந் தறம்வோர்சென் றவர்நாம மொழிந்தழைப்ப வுணர்ந்து நாத, னறக்கருணை யிதுவோவென் றவரோடு மெழுந்துநக ரடைந்து மண்ணுந், துறக்கமுநீத் தருவருத்தார் ம

ன்றுடுந் துணைக்கமலந் தொழுது மீண்டோர், நிறக்கனக மண்
டபத்திற் புக்கிருந்தா ரறிஞர்குழா ரொருக்கிச் சூழ. 71

கூறிட்ட மூன்றுங் கிட்டா தயர்பவர் குற்றந் தீர
நீறிட்டார் நெற்றி யோடு நிருமல கோம யத்தின்
சேறிட்டார் நெற்றி யோடு நெற்றியைச் செறியத் தாக்கி
மாறிட்ட பாசந் தன்னை மறித்திட்டுப் பிறப்பை வெல்வார். 72



## பெரியபுராணம்.

### திருத்தொண்டர் புராணம்.

உலகெலா முணர்ந் தோதற் கரியவ
னிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம். 1

### திருமலைச் சிறப்பு.

பூத மியாவையி னுள்ளலர் போதென
வேத மூலம் வெளிப்படு மேதினிக்
காதன் மங்கை யிதய கமலமா
மாதொர் பாகனு ராரூர் மலர்ந்ததால். 2

### தில்லைவாழந்தணர் புராணம்.

ஆதியாய் நடுவு மாகி யளவிலா வளவு மாகிச்
சோதியா யுணர்வு மாகித் தோன்றிய பொருளு மாகிப்
பேதியா வேகமாகிப் பெண்ணுமா யாணு மாகிப்
போதியா நிற்குந் தில்லைப் பொதுநடம் போற்றி போற்றி. 3

கற்பனை கடந்த சோதி கருணையே யுருவ மாகி
அற்புதக் கோலங் நீடி யருமறைச் சிரத்தின் மேலாஞ்
சிற்பர வியோம மாகுஞ் திருச்சிற்றம் பலத்து ணின்று
பொற்புட னடஞ்செய் கின்ற பூங்கழல் போற்றி போற்றி. 4

### கண்ணப்பநாயனார் புராணம்.

அவனுடைய வடிவெல்லா நம்பக்க லன்பென்றும்
அவனுடைய வறிவெல்லா நமையறியு மறிவென்றும்

அவனுடைய செயலெல்லா நமக்கினிய வாமென்றும்
அவனுடைய நிலையிவ்வா றறிநீயென் றருள்செய்வார். 5

பொருப்பினில்வந் தவன்செய்யும் பூசனைக்கு முன்பென்மே
லருப்புருமென் மலர்முன்னை யவைநீக்கு மாதரவால்
விருப்புருமன் பெனும்வெள்ளக் கால்பெருகிற் றெனவீழ்ந்த
செருப்படியவ் விளம்பருவச் சேயடியிற் சிறப்புடைத்தால். 6

மன்பெருமா மறைமொழிகண் மாமுனிவர் மகிழ்ந்துரைக்கு
மின்பமொழித் தோத்திரங்கண் மந்திரங்க ளியாவையினு
முன்பிருந்து மற்றவன்றன் முகமலர வகநெகிழ்ந்த
வன்பினினைந் தெனையல்லா லறிவுறு மொழிநல்ல. 7

பெருமிழலைக்குறும்பநாயனார்புராணம்.

நாலு கரணங் களுமொன்றாய் நல்லறிவு மேற் கொண்டு
காலும் பிரம நாடிவழிக் கருத்துச் செலுத்தக் கபாலநடு
ஏல வேமுன் பயின்றநெறி யெடுத்த மறைமூ லந்திறப்ப
மூல முதல்வர் திருப்பாத மமைவார் கயிலை முன்னடைந்தார். 8

## கோயிலூர்ப்புராணம்.

தூலவுட லன்னமயஞ் சூக்கவுடல் பிராணன்முதற் றொக்க மூன்று, லேலவமர்காரணமெய் யாநந்த மயமென்பா ரிசைத்த மூன்றுஞ், சாலவெழு மாநந்த மயமாக யாவர்களுந் தடங்கை கூப்பக், கோலமணி மன்றாடுஞ் சிற்பரனை யற்புதனைக் குறித்து வாழ்வாம். 1

தம்மைவந் தடைந்த நல்லோர் தம்மைநன் குணர்ந்த வத்தை
மும்மையுங் கடந்து தாமே முழுதுமாந் தன்மை வாய்ப்பச்
செம்மைநன் னெறிசால் வேத சிரப்பொருட் சேவை நல்கு
மெம்மையா ளுடைய நந்தி தேவரை யிறைஞ்சல் செய்வாம். 2

பாய மேகமென் றுரைக்குமா சாரியன் படர்வெற்
பாய வாதனத் தேறிவே தாந்தத்தி னமைந்த
தூய வான்பொருட் பெருமழை பொழிதலுந் தொடர்ந்து
மேய மாயையாங் கானல்கெட் டொழிந்தது விரைந்தே. 3

சாற்றுறு மூலப்பகுதி மற்றதனிற் றமோகுணமே
போற்றுமதில் விட்சேபம் புகலதிற்றன் மாத்திரைக

டோற்றுவித மென்மதகே யதிற்பெருங்கா லதிற்சிறுகால்
காற்றுமதி னின்றுபல கைக்கால்க ளாய்ப்பிரிப்ப. 4

தெளிதரு புகழ்வே தாந்த சிரவணந் திருத்தச் செய்து
யொளிதரு மனன மதி யிரண்டுறு முறைசெய் தாகிக்
களிதரு பஞ்ச முற்றுங் கான்றிடு சோதித்துக் கண்டு
வெளிதரு பிரம மேயாய் மேவுவார் பரவினன் றுண்டால். 5

இருவினைப் பயனு முன்ன வின்பமுந் துன்பந் தானு
மருவுறி னுடம்பி னுக்கு முன்னமே யமைத்த தென்று
பருவரா ருவவார் செய்ய மகிழ்வொடு மேய்க்குங் கண்ணார்
பொருவரும் பெருமை யோகி சிறுமையும் பூணார் மாதோ. 6

உதிக்குமு னெழுந்து போந்தே யொன்னிய புனலிற் றோய்ந்து
திதிக்கும்வெண் ணீறு பூசித் திருக்கண மணிகள் பூண்டு
மதிக்குமைந் தெழுத்து மெண்ணி வாஞ்சையிற் கேட்டபாடம்
பதிக்குமுள் ளத்த ராவார் பகற்பொழு திவரு மக்கள். 7

துதிகதிர் விழுமுன் போந்து தனக்குவெண் ணீறு பூசிக்
குதிகொள்பே ரருட்பி ரானார் றொற்பத மீசர் தம்மைத்
திதிபுரி நெல்லை மாதைச் சேவித்துப் போற்றிப் பின்னர்
மதியமை குரவற் போற்றி வாஞ்சையிற் பாடங் கேட்பார். 8

முப்பதப் பொருளி னுண்மை முறைமையின் விசாரஞ் செய்தே
தப்பறு மிட்டை கூடி யாவுந்த ராகக் கண்டு
செப்பமுற் றிருப்பார் பல்லோ ருவர்பணி செய்கை மேற்கொண்
டொப்பற வொழுகா நிற்பார் குழாங்களு மொருசார் மல்கும். 9

மின்னிய செம்பொன் செய்த விமானத்து விளங்கா நிற்குந்
துன்னிய சோதி லிங்க சொரூபனை யாட்டி யூட்டி
மன்னிய நந்தீ சற்கு மகிழ்ச்சியா லவ்வா றுற்றிப்
பன்னிய துதியி னோடும் பணிபவர் பல்லோ ராங்கண். 10

நைமிசப்படலம்.

சத்திய ஞான நந்தமிட் டனமாய்த் தற்பர சொரூபமாய் வி புவாய், நித்திய நிமல நிரஞ்சன முதலாய் நிறைதரு பேரொளிப் பிழம்பாய்,மெத்திய வுபநி டதமா மென்றும விளங்கிடு மொ ருபர சிவமே, பொத்திய தானென் றுணர்தரு ஞானியோன் புக ழ்மிகு சூதமா முனிவன். 11

வேறு.

நிருமலநிட் களநிருவி காரநிரஞ் சனநிரா மயநிர்த் தொந்த
மருவருநிட் பிரபஞ்ச நிராகார நிட்கிரிய வருநிட் காம
பொருவினித்த சுத்தபுத்த முத்தசச்சி தாநந்த புரண ரூப
பருவரலி லாச்சருவ சத்தமுழு மையுமுணர்ந்த பரமான்மாவாய்.

அநந்தகலி யாணகுண நிறைந்தவனுய்ச் சிருட்டிமுத லாற்று வோனுய்க், கனந்தருகங் காதரனுய்ச் சதுர்ப்புயனுய்ச் சந்திரசேகரனு யான்றோர், மனந்தருச டாதரனுய் வியங்குதிரி நேத்திரனுய் மணிகண் டன்னுய்த், தனந்தனிய னுய்மழுமான் றரித்தவனு யுமையொருபாற் றழீஇயி னோனுய். 13

இருக்குமொரு திரிபுவனே சனைமுகுர்த்த மொன்றிதய மெண்ணிப் பாவ, முருக்குமவன் றிருவடியிற் பிரியாத மனத்துவகை முதிர்ந்து துள்ளக், கருக்கும்வினைத் துயரொழியாக் கண்ணீருற் ருநந்தக் கலப்ப னுகித், திருக்குமல மறத்துமிக்குஞ் சமிவனமான் மியமெடுத்துச் செப்ப லுற்ருன். 14

எவனரியு மயனுமடி முடிதேடி யறிவறியா னெல்லா மாவா, னெவனகிலத் தொழில்களையும் புரிந்துமொரு தொழிலுமின்றி யிருக்கு மூர்த்தி, யெவனகண்ட சச்சிதா நந்தசொரூ பப்பெருமா னெவன்மற் றம்ம, வவனெருநஞ் சமிவனமுப் புவனேச னெனிலவன்சீ ரறைவார் யாரே. 15

## தலவிசேடப் படலம்.

வீசு செந்தழல் வெய்யவ னிற்பொலி
தேசு மிக்கவர் யாவையுந் தேர்ந்தவர்
மாசு தீர்சந்நி யாசநல் வாழ்க்கையார்
மூசு கின்ற வளங்களு மொய்க்குமால். 16

வேத வித்தில ரென்ன விளங்குவார்
காத வித்தை கழன்ற மனத்தினர்
போத வித்தக ராயப்பொலி யந்தணர்
தீத வித்துச் செறிவரோர் பாலெலாம். 17

சச்சி தாநந்த பூரண சம்புவாஞ்
செச்சை மேனித் திரிபுவ னேசனை
யிச்சை யாலொரு காலெதிர்ந் தேத்துவார்
முச்ச கம்புகழ் முத்தரா வாரரோ. 18

## வீரபாண்டியன் சமிவனமடைந்த படலம்

உரைசெயுங் கரும மெல்லா மொருசிவப் பிரீதி யென்றே
தரையிடைச் செய்தா யில்லை சைமினி முனிவா வத்தாற்
புரைதபு சித்த சுத்தி யடைந்திலை புரிந்தவ் வாறு
விரைதரப் புரியா ரெந்த ஞான்றினு மேவா ருண்மை. 19

கருமமே கருத்தா வாகச் சாதிக்குங் கடன்பூண் டாய்க்கு
மருவரும் பிரம ஞானம் வருவதின் றெந்த ஞான்றுங்
கருமிகள் பிரம லோக பரியந்தங் கலந்து வாழ்ந்து
மருவுபுண் ணியந்தீர் போழ்து மண்ணின்மீட் டுதிப்பர் மாதோ.

கருமங்க ளனைத்து ஞானக் கினியிடைக் கருக லாலே
யருமந்த வகண்ட சச்சி தானந்த சிவசொ ரூபத்
திருவென்று நிட்ட ராய ஞானிகள் செனியார் கன்ம
மொருவந்த முற்றோ யிந்த வுண்மைநீ யுணர்தி யென்றான். 21

செந்தமிழ் முனிவன் மாற்றஞ் சைமினி செவியி னேற்றுப்
பந்தவெந் துயர்தீர் மோக்க பதந்தரு ஞான மாய
சிந்தையில் சிவசொ ரூப நிட்டைஞா னத்தை நாயே
னுய்ந்திட விரங்கி யின்னே யுரைத்தியென் றடியில் வீழ்ந்தான்.

## மாயப்புலி நீங்கியபடலம்.

மன்னிய தெய்வத் துறவொரு வலியே வலியவா லெப்புவனத்தும், பன்னிய சீவர் முயற்சியாற் றாவனும் பஞ்சபூ தத்தினு முடம்பு, மின்னிய தடித்து நீரெழுங் குமிழி மேதகப் புனைந்தநீர்க் கோல, மென்னினி யுரைப்ப தென்று மாய்தருமோ வின்றெனி னுளமாய் தருமோ. 23

அன்றியு மடுத்த தினத்து மாய்தருமோ வாயிர மாண்டிருந்தாலுங், கன்றிய மனத்துக் காலனு மதுவுங் கைக்கொள மீறற்றமீ துணர்தற், கொன்றிய வுணர்ச்சி யில்லைவர் யானே யிதுசெய்தேன் செய்கின்றேன் செய்வே, னென்றியம் பிடுவ ரிந்தரு மூட ரியமனாற் றண்டிக்கப் படுவோர். 24

நலமலி யறிவின் மிக்கவ ரெந்த ஞான்றுநற் கருமங்க ளனைத்தும், புலமலி தருநிட் காமிய மாகப் புரிந்துமற் றோர்பெறற் கரிய, வலமலி சித்த சுத்திமுன் னடைவர் மற்றதை யடைந்த

வர் சிறிது, முலமலி தடங்தோ ணமன்சின மருவி யுறுமென வஞ்சுருர் மாதோ. 25

மன்னுமஞ் ஞான மருவுமா வரணம் வயங்கிமே லாயவிட் சேபம், பன்னுநா னுணர்ச்சி பரசிவ வுணர்ச்சி படர்தரு துக்க மில்லாமை,யென்னுமிவ் வாறன் மேற்பட விளங்கி யிவைதடை யற்றவா நந்த, முன்னுமுத் தமர்கள் பரோபகா ரத்தை முயன் றுசெய் தடைவரெஞ் ஞான்றும். 26

## கோற்றவாளீசப் படலம்.

உண்மை யறிவா நந்தமா யொளியாய் விளங்கு மினையள வாத், தண்மை செறிந்த குணத்துமையா டனைக்கண் டன்பிற் போற்றிடுவார், வண்மை மிகுந்த பெரும்போக மருவிப் பிரம ஞானமுறீஇ, யெண்மை யவித்தை தவிர்ந்தொருநீ யேயா யமர் தல் வேண்டுமால். 27

## உபநிடதப்பொருளுரைத்த படலம்

மேயசரா சரமாகி விரிந்தசக முழுவதுமெய்ப்
பாயபொரு ளிடத்திருந்துற் பவிக்குமெத னிடத்தொடுங்கு
மாயபரம் பொருளொன்றே யகிலகா ரணப்பொருளத்
தூயசுகோ தயப்பொருளைத் துகளறநன் குணர்பொருட்டு. 28

விரும்புபரப் பிரமமென விளங்குமொரு பரசிவத்தை
யரும்புமுவ கையினறிதற் காகியபே ருபாயந்தான்
கரும்புமமு தமும்பாகுங் கற்கண்டுங் கைப்பென்னத்
தரும்புதிய சுவையமைந்து சால்பிரம வித்தையே. 29

அரும்பிரம வித்தையள வறிந்துணுமுத் தமப்புசிப்பு
விரும்பியநிட் காமவினை மேதகைய தவந்தான
மிரும்புவிகொண் மகமாதி யியற்றுசித்த சுத்தியர்க்கே
வரும்பிறருக் கியாதாகு மதுப்பிரிய மாமுனியே. 30

## வேறு.

யாதொரு வத்து வானது சிருட்டி யாரம்ப சமயத்திற் றனதா, மேதமின் மாயா சத்தியான் முன்ன மீச்சுர னுய்வெளி யாதி, பூதபௌ தீகப் பிரபஞ்ச முழுதும் பொருந்துறச் சிருட் டித்துப் பின்ன, ரோதருஞ் சீவ ரூபமா யந்தப் பௌதிக வுட றொறுங் கலந்து. 31

ஆன்றகத் துருபோத் துருமுத லுருவ மானது போலத் தோன் றிடுமோ, சான்றமர் றதுவே தகும்பரப் பிரமஞ் சதாபர சிவமெனத் தெளிதி, மான்றவைம் பொறியின் வழிச்செல லொழித்தே மனமொரு வழிச்செல லிறவிக், கான்றிடு பதத்திற் புவனங்க ளனைத்துங் கண்டமா முனிவர வின்னும். 32

வேறு.

மொழிபஞ்ச கோசவிலட் சணமதாய்த் தேக மூன்றனுக் கும் வேறாயோர் மூன்றவத் தைக் சான்றாய்த், தழிவின்ற சசாதி யவி சாதியசு வகத பேதமி றனதாய்த் தேசமொடு காலம், மிழி பொன்று வத்துபரிச் சேதரு ஹியமா யிருக்கின்ற சத்தியஞா னநந்தா கண்ட, பழிவொன்று வத்துவே பரப்பிரம மதுவே பரம சிவ சொரூபமென வறிதியா வின்னும். 33

பெருகுசச்சி தானந்த சொரூபமே யாகிப் பிரத்தியக்கான் மாவான யாதொருவத் தான, தொருவருக்கன் சக்திமாத் திரத்தாற்கண் ணுறுதி யிக்கியத்தை யுருவாகு விடையத்தைப் போது, மிருதியம மாய்விளக்கின் றதியாதோர் வத்து வக்காறு விதமான ரூபசகம் வெளிபோன், மருவியா பிக்கப்பட் டிருப்பதோ வந்த வத்துவே பரப்பிரமம் பரசிவமென் றறிதி. 34

பரமசிவ சொரூபமயா வருக்குமன் மாவாய்ப் பரவுபரி பூ ரணமா யிருக்குமெனி லந்தப், பரசிவ சொரூபத்தை யாவருமே னறிய வில்லையென வினவுதியேற் பார்க்கிலதுங் கேளாய், பரமசிவ சொரூபத்தை யேயுணர்தல் வேண்டிப் பலஜன்மங் காமாதி களை ந்துதவம் புரிந்து, பரமசிவ சொரூபத்தை யுணருபா யமதாய்ப் பயில்பிரம வித்தைவிருப் புற்றமா முனிவ. 35

அறைசுயம்பு வானவந்தப் பரமசிவஞ் சிருட்டி யாதிகளின் மனமுதலா மிந்திரிய மனைத்து, மிறைபரவெளி முகமாகச் சிருட் டித்த படியா லீடியவை யிந்திரிய வாத்தமே யாகி, யுறையும்வெ ளி முகமாகு மியாருமுணன் விட்டு முற்றவியா பகமாய பிர த்தியக பின்ன, மறைவில்பர சிவத்தைக் யாரு மறுமிய வில்லை மாண்புடைய தவத்துயர்ந்து மகத்துவஞ்சான் முனிவ. 36

ஆயிடினப் பரமசிவ சொரூபத்தை யென்று மறியார்கொ லொருவருமென் றெண்ணுதியேற் கேளாய், மாயிருஞா லத்தெப்

போதெப்புருட னநேக சன்மமரு வியபெரும்புண் ணியபரிபா
கத்தான், மீயுயருஞ் சித்தசுத்தி யுண்டாகி விடயவிரத்தனாய் மு
த்தியிச்சா தீவிரமுள்ளவனாய்ப், பாயவெளி முகமாமிந் திரியவச
னாகாப் பண்பினனாய் நதியெதிர்ந்து நீந்துவான் போன்று. 37

பரவுமகா தீரனா யுண்முகமா கின்றான் பரிவுறுமப் போதனை
யன்சருவவியா பகமாய், விரவுபிரத் தியகபின்ன சிவசொரூ பத்
தை விளங்கவகங் கையினொளிரு மாமலகக் கனிபோ, லுரவுமிகு
பிரதிபந்த மொன்றேனு மின்றி யுணருவனீ துண்மையுயர் மாத
வத்து முனிவா, கரவுதவிர் தரவிவ்வா றுணர்ந் தொளிரு மொரு
வன் காட்சியனு பவமேதோ வென்றிடிற்சொல் லுவன்கேள். 38

சிருட்டிதிதி சங்கார கருத்தரா கியுமச் சிருட்டிதிதி சங்
கார மடைந்தசகத் தாயு, மிருட்டமையு மற்றுளதெவ் விதத்
தோற்ற மாயு மிருக்கின்ற சீவேச சகத்தனைத்து மினிய, பொரு
ட்டிறஞ்சார் தருமகண்ட சச்சிதா நந்த பூரணநற் பரமாத்து
விதமாகி விளங்கும், வெருட்டிறனில் பரசிவசொ ரூபமென்றே
தோன்றல் விளங்குமனு பவம்வேறின் றுண்மையிது முனியே.

இத்தகைய பரசிவசொ ரூபத்தை முத்தி யிச்சையுடை யவ
னறிதற் குபாயமே தென்னி, னொத்தமையு மான்மாவே நாயக
னாய் புத்தி யோட்டுசா ரதியாக மனங்கலின மாக, வைத்திடுமிந்
தியங்களே பரியாக வமைந்து மருவுமுட லாந்தேரவ் விந்திரியப்
பரியான், மொய்த்தபல விடயமெனும் வனபூமி யிடத்து முன்னு
புசஞ் சரித்திடலான் முத்தியிச்சை யுடையோன். 40

ஞானசாத் திரசன்ம விவேகபுத்தி யாய நல்லசா ரதியா
லவ் விடயவன பூமி, யானதிற்செல் லாநின்ற விந்திரியப் பரியை
யான்மபூ மியிற்றிருப்பி நிரந்தரநன் கமைய, மோனமிகு மான்ம
நிட்டை யடைவதே முன்ன மொழிந்தசிவ சொரூபத்தை யுண
ருமுபா யங்காண், மானமிலப் பரசிவசொ ரூபமே தென்னின்
வகுத்துரைப்பன் கேட்டிதவ மாண்புசான் முனியே. 41

தோற்றுசுயம் பிரகாச சித்துருவே யதன்றன் சொரூபமஃ
தெவ்விடத்தெவ் விதமிருக்கு மென்னி, னேற்றமிஃ தெல்லாப்பூ
தங்களிடத் தினிலு மெல்லோர்க்கு முள்ளான்மா வாயிருக்கு
முணர்தி, போற்றஃதிப் படியிருந்தா லெல்லோர்க்கு மென்னே

தோற்றவிலை யெனிற் புகறும் பொலிந்தருக் குமமாய், மாற்ற ரிய பஞ்சகோ சங்களா லென்று மறைக்கப்பட் டிருத்தலாற் றோற்றவிலை யுணரே. 42

ஆயினது பரிச்சின்ன மேமெனனீ கருதி லாகாசம் போ லெங்கும் வியாபிகா ணதனுன், மெயபரிச் சின்னமலை யிச்சொரு பந்தான் விளங்குதிரி மூர்த்திகளு மொன்றேயென றெண்ணிற், பாயபல கருமபலங் கொடுப்பதாய்ச் சருவ ஞ்ஞவுதிட் டானமா ய்ப் பகர்சருவ சான்ரு, மெயசித்து ரூபமாயத் துவித மாயு மிரு க்கின்ற பிரமமான தாலென்று மன்றே. 43

றூன்றவதன் சொருபந்தான் பின்னையெவ்வா றென்னிற் புகலவித்தை மாயையெனு முபாதிகளொன் றின்றிச், சான்ற தத்துவ பதவிலக் கியத்தினருத் தமதாய்ச் சாற்றரிய கேவலமா ய்த் தவிரருயிர்க் குணமா, யான்றவித்த சுத்தபுத்த முத்தமா யிருக்கு மகண்டசிதா காசமெ பரசிவமெசா ரூப, மூன்றுமொளிர் சிவசொரு பத்தையினி யுணர்க்தோர்க் குற்றவிர மேயாசனமியா தெனி லுரைப்பாக் கெனிமே. 44

அகண்டபர சிவத்தினது சொருபமேதா னென்ற வதிகாரி யாமொருவன் பிரதியக்க மின்றிப், புகன்றவப ரோட்சமா யறி வானேல் வவற்குப் போத்தாபோக் கியமபோக திரிபுடியின் மையி னூற், சுகந்தகயா வையுமகண்ட பரசிவமா கியதன் சொருபமெ னத் தோற்றுதலாற் றொற்றமுடைத் தாய், கிடந்தபல சரீரதா பமுமியல்பே நீங்கி நிரதிசயா நந்த மடைவதுபேரா சனமே.

அன்றியுங்கேள் பிரத்தியக பின்னமே யான வப்பரம சிவ சொருபந் தானுக வுணர்ந்தா, லொன்றியவான் மாவுக்கு மகங் காரத்தினுக்கு மொன்றுமத்தி யாசமா கியவிதய கரந்தி, வென் றியுற நீங்குவதும் வேதார்த்தந் தான்று விதமாவத் துவிதமோ வத்துவித மெனினு, மென்றுமகம் தனுபவிக்க வரும்மாவா யா தோ வெனுமிவைமுற் சகலசந்தே கங்களீங் குவதும். 46

சஞ்சிதமே பிராரத்த மேயாகா மியமே யெனுங்கருமந் தணப்பதுவுந் தருபிரயோ சனமா, லெஞ்சவிலாப் பிரத்தியக்க மாய்ஞாந விதமா யிவையநாம ரூபமாய்த் தோற்றியிருக் கின்ற, விஞ்சுதுவி தப்பிரபஞ்ச முழுமையும கண்ட மெய்யறிவா நந்தபூ

ரணபரமாத் துவித, வஞ்சமிலாப் பரமசிவ சொரூப மாகின்ற தெவ்விதமென் றிடில்வகுப்பா மாமுனிவ கேட்டி. 47

பரவுமுபா தானகா ரணமாய மண்ணே பலவிதகும் பாதி கா ரியமாதல் போலும், விரவுமதிட் டானமா கியகயிறே தண்ட வியாளமுத லாரோப மாய்த்தோன்றல் போலு, முரவெவை க்கு முபாதான காரணமா யெவைக்கு முற்றவதிட் டானமா யொளிருமொரு சிவமே, யருடேவ திரியக்கு மனுடாதி ரூப மாநாம ரூபசகத் தாய்த்தோன்று வதனுல். 48

கரவில்விசா ரத்துறுகும் பாதிகா ரியங்கள் காரணமா கிய மண்ணே யாகின்ருற் போலு, மரவலங்க றண்டமுத லாகியவா ரோப மதிட்டான மாங்கயிறே யாகின்ருற் போலும், விரசிவே ச சகத்தாய்த் தோன்று நானு விதநாம ரூபசகத் தென்பதுவு மகண்ட, பரவுபரி பூரணசச் சிதாநந்த சுத்த பரமாத்து விதபர ம சிவசொரூப மேயாம். 49

இவ்வாறு பரமார்த்தத் திற்சகல சகத்து மிலங்கக்கண்ட சிதாகாச சிவமேயா யிருந்துஞ், செவ்வாய்மை யிஃதுணரார்க் கந்தகர்க்குப் பகலிற் செங்கதிரால்விளங்குசக மிருளாய்த்தோற் றுதல்போ, லெவ்வாத வகண்டபர மாத்துவிதமான வொருசுத் த பரசிவசொ ரூபமே யெவருந், தெவ்வாத சீவேச சகத்தான துவிதத் திறம்போலத் தோன்றுமிதற் கென்செயலா முனியே.

மேயவவி வேகதிட்டி யிற்பரமே நானு விதசரீ ராதிகளாய்த் தோன்றினபோ தினுமே, லாயசெயன் மலிதருவி வேகியா ன வன்ரு னநித்தமா கியவுடம்பு முதலியவென் றுரைக்கு, நேயநா னுவிதவு பாதிகளை நேதி நேதியெனும் வாக்கினப வாதித்தாங் கெஞ்சும், பாயபூ ரணசிவந்தா னென்றபரோட் சமதாய்ப் படர்ந் துணரிற் சோகமற்றுப் பரமாயெஞ் சுவனே. 51

அப்பரமசிவஞ்சருவ பூரணமா கையினு லஞ்ஞானத் துட னுமதன் காரியத்தி னுடனும், வெப்பகல்சம் பந்தமுறு மோவெ ளிற்சொரூபம் வெளிபோனிட் கிரியநிர வயவநிற் குணமா, யொப்பிலவி காரநிரு மலவசங்க மாய்ந்ன் குறைதலினஞ் ஞான த்தி னதன்காரி யத்திற், றிப்பியமாக் கூடியபோ தினுமவைக ளுடனே சேர்தருசம் பந்தமிலை யெஞ்ஞான்று முணரே. 52

புகலரிய சிவசொரூப மெப்படிக்காண் சருவ பூரணமென்
றிடில்விடயம் வியாபகமா மவற்றி, னகலரிய விந்திரியம் வியாப
கமா மவற்றி னுற்றமனம் வியாபகமா மதனதைய மனத்தி, ன
கலரிய புத்திவியா பகமாகும் விசேட வகங்கார மதனினும் வியா
பகம தனினு, நகலரிய தாஞ்சாமா னியவகங்கா ரந்தா னுறவி
யா பகமாகு மதனினுமா முனிவே. 53

அறிவுடையோ ரவ்வியத்த மென்றுரைக்கப் பட்ட வஞ்
ஞானம் வியாபகமா மறைந்ததது தனினும், குறிகுணமில் பரசி
வசொ ரூபம்வியா பகமாங் கூறியவப் பரசிவசொ ரூபத்தின்மே
லா நெறிதருவி யாபகமா யாதொன்று மில்லை நீயுணர்தி யாதை
யாற் சொரூபமே யென்றுஞ், செறிதருஞற் றவமுனிவா சருவபூ
ரணமாந் தேருமறை முடிவெடுத்துச் செப்புவதிப் படியே. 54

உரைசெயுமித் தகையசிவ சொரூபத்தன் வடிவா வுணராமை
ல் வேறுபடுத் துணர்பவர்க்கெஞ் ஞான்றும், புரைசெய்சமுசார
மோ காதியய நீங்கா பூரணசச் சிதானந்த சொரூபமே யெல்லா
ங், கரைசெயது வேதானென் றறிந்தவனுக் கென்றுங் கலங்கவரு
சோகமோ காதியய மில்லை, வரைசெய்மறை முடிவான பொரு
ளிதுமற் றிதுதான் மாண்டபின்போல் வாய்க்கன்றி மற்றொருவர்
க் கரிதே. 55

விரவுநாற் சாதனசம் பன்னவதி காரி விளங்கியவிப் பிரம
வித்தை யினைக்குரவன் முகமாய், பரவுசிர வணஞ்செய்து நன்று
க வுணர்ந்து பகர்சுருதிக் கனுகூல மாமயுத்தி கொண்டே, காவுத
விர் தரமனனம் பண்ணியபின் விவற்றுற் கருத்துறச் சயித்த
படி சொரூபகா னென்றே, யுரவுமிரு ததலதா னாயினிடை வி
டாதே யுறுற்றகச்சா தனமான நிதித்தியா சனத்தால். 56

மிக்கசிவ சொரூபத்தை யறியாமை யையம் விபரீதங் கட
ந்துகர தலநெல்லிக் கனிபோற், றக்கவய மோட்சமா யறியலா
மறைகள் சாற்றியவிர்க் குணசிவசொ ரூபஞா னத்திற், கெக்கலை
யுங் கற்றுணர்ந்தோய் சகுணபர சிவத்தி னிரூபலர்த்தா ரூபா
சனையே சாதனமா னதுகாண், பொக்கமிலிர்க் குணசிவஞா னம்
பொலியு மளவும் புகலரும்பே ரின்பமுத்தி வாஞ்சையுடை யவ
ன்றான். 57

பத்தியுடன் றிருநீறு பூசியுருத் திராக்கம் பண்புமிகப் பூண் டெழுத்தோ ரைந்தினையுங் கணித்துச், சித்திதரு சகுணபர சிவ னுடைய பூசை தியானந்தோத் திரமாதி யுபாசனைசெய் திடலே, முத்திநெறி யென்றுமலர்த் தவிசுறைவோன் வேத முடிவான பிரமவித்தை மதுப்பிரியற் கருளி, யெத்திசையுந் தொழுதேத் துந் திரிபுவனே சன்று ளிறைஞ்சிவிடை கொண்டுதன துலகம டைந் தனனே. 58

மறையவனீங் குதலுமதுப் பிரியமுனி யுவகை மடுத்தொ ளிர்வெண் ணீறுபுனைந் தக்கமணி பூண்டு, கறையறவைந் தெழு த்துநனி சிரத்தையுறக் கணித்துக் காட்சியுறு சகமனைத்து மக ண்டபர சிவமே, நிறைதருமவ் வகண்டபர சிவமேநா னென்று நிதித்தியா சனஞ்செய்து கொண்டிருக்கும் போது, பிறையணி சச் சிதாநந்த சருவவல பத்தப் பிரியபூ ரணவளவில் கருணை யு டைப் பெருமான். 59

கோடியரு ரியகாந்தி யுடையவனு யமரர் கொண்டலூர் பவனயன்மான் முதற்றேவர் சூழ, நீடியநால் வேதமுத நாற் சிக ரமாநடுவ ணிகழ்சிகரம் விளங்குமொரு பிரணவமாப் பொலிந்த, நாடியபஞ் சாக்கரவி மானத்துட் டோன்றி நலங்கொண்மகா கைலாய நின்றுமெழுந் தருளிப், பாடியசீர்ச் சமிவனத்தின் மது ப்பிரிய முனிமுன் பரையினெடு காட்சி கொடுத் தனனுலகுய் தரவே. 60

## மதுப்பிரியர்துதியுரைத்த படலம்.

பிரமன் மாலுருத் திரன்முதற் பெயருமவ் வுருவும்
பரவ மாவிவ காரத்திற் கற்பிதப் பட்டு
வரகி லாம்பர மார்த்தத்தி னில்லையோ மற்றப்
பொருள தாய்நின்ற பூரண நின்னடி போற்றி. 61

மருவு பேரதிட் டானமாம் யாதொரு வத்தின்
பொருவில் சத்தையா லேயசத் தாகிய புவனம்
வெருவில் சத்துப்போ லிருப்பதோ வத்தரு மெய்ம்மைப்
பொருவி லாப்பரி பூரண நின்னடி போற்றி. 62

எந்த வத்துவின் சித்தினுற் சடமென வியம்பும்
பந்த மார்சக மாகிய வனைத்துமேற் பரவ

வந்த சித்துப்போல் விளங்குமோ வத்தகு வந்தா
மந்த னாளநின் றிருவடி விரும்பிவந் தடைந்தேன். 63

கூறு மெந்தவத் தாயின்குளி ரானந்த மதனா
வீறு ருத்துக்க ரூபமா கியசகத் தெல்லா
மேறு மாநந்தம் போலத்தோன் றிடுமென்ன வியல்பி
னாறு சூடிநின் றிருவடி யடியனே னடைந்தேன். 64

சத்திய ஞானா னந்தபூ ரணனே தவாமனை மாதிகட் கெட்டா, நித்திய நிமலா நிரம்புநின் னருளா லிவையுமித் தரிசனம் பெற்றேன், பத்தியு மடைந்தேன் சித்தசுத் தியுமேற் படைத்தனன் ஞானமுற் றுணர்ந்தேன், முத்தியு முற்றே னினியெனக் கெவனோ மொழிதரு குறையுள தையா. 65

---

### சவேதராசப் படலம்.

தானமே யருந்தவந் தான மேமகந்
தானமே கொடுவினை யனைத்துஞ் சாய்ப்பது
தானமே வரமெலா நல்கத் தக்கது
தானமே யிலையெனப் புகழ்ந்து சாற்றினான். 66

### தீர்த்தமகிமைப் படலம்

வேத மேபிர மாணமெய்ப்
போத மேசிவ பூசைவே
றோத யாவுள பூதியே
சாத னம்பிறி தில்லையே. 67

---

## சீகாளத்தி புராணம்.

### பொன்முகரிச் சருக்கம்.

உலகெலாம் படைத்துக்காத் தொழித்துமறைத் தருள்செய்யு
மலகிலாத் திருவிளையாட் டாடுவான் குறிகுணமற்
றிலகுநிலை யதுநிற்ப வீறிலரு ளுருவெடுத்துக்
கொலைகெழுவே லரிகெடுங்கட் குமுதவாய்க் குவிமுலையம்
புலியனைய முகஞானப் பூங்கோதை யொடுகயிலை
மலையில்வீற் றிருந்தருளு மதிமுகிழ்நீர்ப் பெருஞ்சடையோய். 1

புண்ணிய மூர்த்தியை, புகலருஞ் சீர்த்தியை,
யெண்ணருஞ் சிறப்பினை, யில்லாப் பிறப்பினை,
யவாவிலா மனத்தினை, யடற்கரி வனத்தினை,
தவாத்திரு வருளினை, தலைமறைப் பொருளினை. 2

அரும்பெற லொருவனின் றிருந்தடி வணங்குது
மைம்புல விலங்கு வெம்பட ருறுத்து
மானுப் பிறவிக் கானங் கடந்து
கருதரு மின்ப முத்திப்
பொருவின்மா நகரம் புகுதரற் பொருட்டே. 3

கண்ணப்பச் சருக்கம்.

மதியின் மானிளங் கன்றினை வரிசிலைக் குறவர்க்
குதலை மென்மொழிப் பேதையர் பச்சிளங் கொடிப்புல்
பதும மென்கையா னீட்டிபு பரிவுட னழைக்கும்
புதுமை கொண்டவெற் புடுத்தது பொத்தப்பி நாடு. 4

தாவி லத்திரு நாட்டசீ றூர்களிற் றலைமை
மேவி நீணறுஞ் சந்தன நிரைத்துவெண் கவரி
மாவின் மென்மயிர்க் கற்றைவெய் சிற்றில்கள் வயங்கி
யோவில் சீருடைப் பூரெனக் குறிச்சியொன் றுண்டால். 5

இனைய பற்பல பெருவள மெய்துமவ் வூரிற்
குனியு நோன்சிலைக் குறவர்தங் குஞ்சிதோய் கழற்கால்
வனச ராதிப னுகனென் பானிகல் வாட்கண்
மனைவி தத்தையென் பாளொடு வாழ்ந்தினி திருந்தான். 6

இம்மை யின்பொடு மறுமையி னின்பமென் றிரண்டு
மம்மென் மைந்தரை யில்லவர்க் கில்லைமற் றதனு
லெம்மை யாளுடை முருகவே ளடிமல ரிறைஞ்சிச்
செம்மை நன்மகற் பெறுகுவ மெனச்சிந்தை செய்தான். 7

இன்ன வாறு வயாநலி வெய்திய
கன்ன லின்மொழிக் காரிகை பெற்றனள்
மன்னு தங்குல மாசு துடைத்திடும்
பொன்னி னன்ன புதல்வனை யென்பவே. 8

பூங்குழல்வே னெடுங்கண்ணாள் புனலாட்டிப் புனைந்துதர
வாங்குசிலை மறவர்கோன் மணிமகனைத் தடக்கையாற்

கலிகெழு துடிகள் பம்பை கடுங்குர லிரலை யாதி
யொலியெழு வித்து மாக்க ளுறுவலை புகத்து ரந்தார். 17

புக்கபுற் றுழும் புக்குப் புகுவழி யொடியெ றிந்து
மிக்கவல் லுழுவை கேழன் மிடைமயிர்க் கரடி முன்னாத்
தொக்கபல் விலங்கின் பார்வை சூழ்வலைப் பரப்புள் விட்டார்
மைக்கருஞ் சிலைக்கை வேடர் வயின்வயின்மறைந் துநின்றார். 18

வேறு.

கனைமாமழை யிடிபோ லதிர் கடுவாய்மரை யாமா
வினையாவலி யுடைமாகளி றெழுவாய்வனம் வாழ்மா
வனைவார்கழன் மதயானைகண் மலைவார்விடு வார்கோன்
முனைவாளிக ளுடன்மூழ்கலின் முள்வாயின மாதோ. 19

வேறு.

இவ்வகை பலவி லங்கி னீட்டமு நூழி லாட்டத்
தெவ்வடு வரிசி லைக்கைத் திண்ணன்மா வேட்ட முற்றிக்
கௌவைகொள் கான நீக்கிக் கடுந்திறன் மறவ ரோடு
மெவ்வமி றனதூர் புக்கா னீன்றவர்க் குவகை பொங்க. 20

பின்னரும் பலகால் வேட்டம் பெருவலிக் காளை யாடி
யன்னையு மத்த னுங்கண் டகமகிழ் பூப்ப வைகிக்
கொன்னுனைப் பகழி வேடர் குலத்தொடும் வாழ்த்த வோர்நாட்
டன்னுளம் வேட்ட மூக்கச் சரம்புகா வனம்பு குந்தான். 21

புகுந்தவன் கான மெங்கும் புக்குலாய் மிகவி ளைத்து
மிகுந்தழை மிடைம ரத்தின் மென்னிழ றனிது யின்றான்
முகுந்தனை வாளி யாக்கி முரணின ரரணம் வேவ
நகுந்தனி முதல்வ னன்னான் கனவிடை நண்ணி னானே. 22

பூசிய திருவெண் ணீறும் புலியத ளுடையுஞ் செக்கர்
கூசுபொன் சடையுங் கொண்ட கோலத்தோ டெதிர்நின் றான்
மேசுத லிலாத மைந்த விவ்வரை வடமூ லத்திற் [று
காசில்பொன் முகரி யாற்றங் கரையிலோ ரிலிங்க முண்டால்.

அதுதுய ரனைத்தும் வீட்டி யரும்பெற லின்ப நல்கு
மதவலி யதைநீ சென்று வணங்குதி யென்று ரைத்துக்
கதுமென மறைந்தா னுங்கே கண்விழித் திறும்பூ தெய்தி
யெதிரில்பே ராற்ற லான்றிக் கெங்கணு நோக்கி நின்றான். 24

ஆயகா லையில்வில் வேட ரார்ப்பினொ டெழுந்து கான்சூழ்
போயவல் வலைப ரிந்து பொருநடுங் காலிற் பொங்கி
மாயிருங் கேழ லொன்று மலைபுகப் போதல் கண்டான்
காயழல் வெகுளி யான்பின் கையில்வில் லொடுது ரந்தான். 25

துரந்துபின் செல்லச் செல்லத் துணைவிற்போ ரெறுழி யாற்கீ
ழிருந்தரு ளிலிங்கத் தின்பா லெய்தலு மறைந்த தன்னால்
வரம்பில்விம் மிதத்த னாகி மற்றிது மறைந்த தென்னோ
தெரிந்தில மென்று நின்றான் சிவலிங்க மிருத்தல் கண்டான். 26

காண்டலுங் கடவு ளார்தங் கருணைநோக் களித்து பெற்று
மாண்டகு மிரதந் தோய்ந்த வல்லிரும் புருவ மாறி
மீண்டொளி கெழுபொன் னாவ தென்னமுற் குணங்கண் மாறி
யாண்டகை யிறைவன் றன்பா லன்பொரு வடிவ மானான். 27

நாள்பல பிரிந்தி ருந்து நண்ணிய சிறுச தங்கைச்
தாளிள மகனைக் கண்ட தாயெனத் தாழா தோடி
நீளெழு வனைய தோள்கண் ணெழுங்குழைத் தழுவி மோந்து
வாளழ லாக்கி னன்ன மனத்தினன் முத்தங் கொண்டான். 28

செய்யகண் ணீர ரும்பச் செறிமயிர் பொடிப்ப வாதன்
கையகப் பட்ட தெய்வக் கதிர்விடு மணியி னேயத்
கையன்வந் தகப்பட் டானென் றணியெயி றிலங்க நக்கு
மெய்யெலா மெய்யன் பாய விடலைமுற் றின்ன சொல்வான். 29

யானையும் புலியு மெண்கும் யாளியு முளவுங் கூர்ங்கோட்
டேனமுந் திரியுங் காட்டி னெந்தைநீ துணையு மின்றிக்
கூனல்விற் றடக்கை வேடர் குலமென விருப்ப தென்னோ
வூனுணா வுனக்கி யாவ ருண்டெனத் தருவா ரந்தோ. 30

தேனொடு தினையின் பிண்டி இம்பழங் காய்கி ழங்கு
மானொடு முயலெய் கேழல் வல்லுடும் பழுங்கல் வற்றி
ஊனுண வென்றிவ் வெல்லா முதவுவல் யானே யல்ல
கானவர் துணையுண் டெம்மூர்க் காண்டியா லென்று நின்றான்.
சாமிநீ தனியே யீண்டுத் தங்குத றவிர்த்த லாற்றே
னேமநல் லுடுப்பூர்க் கின்னே யென்னொடு வருதல் வேண்டு
நீமன மிரங்கா யெந்தா யெனப்பல நிகழ்த்தி னானக்
கார்மழை யனையா னற்புக் கடலினுக் கெல்லை யுண்டோ. 32

மறுமொழி யிறைவ னென்றும் வழங்கல னிருப்ப மீளி
யிறைதிரு வுளத்தி னெண்ண மிவ்வயி னிருத்தல் போலுஞ்
சிறியனே னினியித் தெய்வ சிகாமணி தன்னை நீங்கி
லுறுவனோ வுயிரி னோடென் றுரைத்தன னின்று ணங்கே. 33

அண்ணறன் முடியிற் றாய்நீ ராட்டுபு முருகு விம்மூத்
தண்ணுறு மலர் மாலூரத் தளிர்சூட்டி யிருத்தல் காணுஉப்
பண்ணவன் றனக்கீ தேற்ற பணியெனத் தேறி யுள்ள
மண்ணெழு வனைய தோளான் மற்றது கடைப்பி டித்தான். 34

பின்புவேட் டுவர்தங் கோமான் பெரும்பக லாயிற் றன்னோ
வென்பெருந் துணையாய் நின்ற விறைவனார் மிகப்ப சித்தா
ரின்சுவை யூன்கொ ணர்ந்திங் கிடல்வேண்டு மென்ன நீங்கிற்
கொன்சின விலங்கி னீட்டங் குறுகியென் செயுமோ கெட்டேன்.

என்றுசா லவுமி ரங்கி யெரிபசி மிகாத முன்னஞ்
சென்றொரு கணத்துட் கொண்டு திரும்புவ மெனத்து ணிந்து
குன்றிடை யெனக்கு வாய்த்த குலமணி விளக்கே யெந்தா
யுன்றழற் பசித ணிப்ப வுறுசுவை யிறைச்சி கொண்டே. 36

உழுந்துருள் பொழுதின் மீள்வே னொருகண மேனுந் தாழ்ந்ன்
வழங்குறு கொடுவி லங்கு வருமென வஞ்சே லைய
வெழுந்துமேல் வந்த தாயி னென்னையொய் யெனக் கூவென்று
குழைந்தவிழ் றடக்கை கூப்பிக் குறவர்கோ னரிதி னீங்கி. 37

கடிக்கடி மனையு ணின்ற கன்றகல் புனிற்றுப் போல
வடிக்கடி திரும்பி நின்றே யையர்தந் தனிமைக் கேங்கி
வடிக்கடி யம்பு பட்டு மழைமுகி லெனக்கி டக்குங்
கிடிக்கடி வேட்டைக் கானங் கிளர்கடுங் காலிற் சென்றான். 38

கொழுந்தசை மோழ லொன்று குறவர்கோன் றனே யேந்தி
முழங்கலை யெறியு நன்னீர் முகரியின் றீரஞ் சார்ந்தோர்
செழுந்தரு நிழலின் வைத்துத் தீயர ணியினு லாக்கி
யெழுந்துறு மயிர்க டிந்தவ் வெறுழியை வாளி னீர்ந்தான். 39

ஈர்ந்துசெந் தசையுட் சால வின்சுவை யுடைய வெல்லாந்
தேர்ந்துவே றெடுத்தெ டுத்துத் தேக்கிலை யதனுட் பெய்து
கூர்ந்தவா யம்பிற் கோத்துக் கொந்தழல் பதத்திற் காய்ச்சி
யார்ந்தபே ரன்பன் வாய்ப்பெய் தருஞ்சுவை பார்க்க லுற்றான்.

பல்லினான் மெல்ல மெல்லப் பன்முறை யதுக்கிப் பார்த்து
நல்லன விறைச்சி யெல்லா நனையிலிற் றக்கிலையிற் றைத்த
கல்லையுள் வாங்கி வைத்துக் கழிதலை யினைத வெல்லாம்
வல்லைவெள் ளிடையு மிழ்ந்தான் வருபவக் கடலை மிழ்ந்தான். 41

பூந்தளி ரோடு கொய்த புதுமலர் தழிலைற் பெய்து
தாங்கிர விதியென் றூட்டுத் தண்புனல் வாய்முகந்து
தீந்தசை யமுது பெய்த தேக்கிலைத் தனிலை யோர்கை [ன்.
யேந்தியம் பொடுவில்லோர்கை யெடுத்துவவ் விரைவிற் போந்தா

என்னு ருயிர்க்குத் துணையானா ரொரிவெம் பசிபா லினைத்
தாரோ, வன்னே கொடிய விலங்கினைத்தா லைச்சற் றுதோ வென
ப்பதைத்துத், தன்னு தாவிற் பார்ப்பதுக்குத் தாழா தோடும்பற
வையென, முன்னு மனமும் பின்னுக முதல்வன் றன்பா லோடி
னான். 43

சென்று குறுகி யெம்பெருமான் றிரோன் வாவு தாழ்த்ததலி
னாற், கன்று பசியால் வருந்தினையோ வென்று கரைந்து திருமுடி
மேற், றுன்று தளிருந் செழும்பூவுந் தொடுதோ லடியான்
மாற்றிவா, யொன்று நீராற் பிரானுடலை யொள்ளாங் குளிர வாட்
டினான். 44

ஆட்டித் தலையி லிருந்தகம முலருத் தளிரு மெடுத்திறை
ஞ்சிச், சூட்டித் திருமுன் னிலைக்கலத்திற் றூய விறைச்சிப் போ
னகம்வைத், திட்டற் கரிய பெரும்பொருளை யெந்தா யுண்கென்
றினியசொலி, யூட்டிப் பிரியா தருகுநின்று வனைக் கடற்குக்
கரைகானான். 45

கால மங்கதில் வேடர்தக் தலைவனைக் காணார்
கால வச்சுமீஇக் காடெலாந் தேடியக் காட்கோட்
டால மூலத்தி னிருந்தரு ளன்னவ னருகு
நீல மால்வரை நின்றென நிற்பவற் கண்டார். 46

அருகு சென்றடைந் தையநீ யெங்களை யகன்றிப்
பெரிய மால்வரை யடைந்ததென் பிழைத்தனங் கொல்லோ
பரிதி வானவ னண்பகல் கடந்தனன் பசித்தாய்
முருக விவ்வழி நிற்பதென் வருகென மொழிந்தார். 47

கரைந்த சொற்கெலா மெதிர்மொழி கொடாமையிற் கவன்று
பெருந்த காயுனக் கெங்கண்மேன் முனிவென்கொல் பேசாய்
வருந்தி நீயிவண் வந்தமை யறிந்திலம் வள்ளா
லிரங்கு வார்கழ னின்னடி யறியவென் றிசைத்தார். 48

மற்ற தற்குமொன் றுரைத்தில னிற்பவம் மறவர்
கொற்ற வில்லுடைக் குரிசினீ யுளத்திலென் கொண்டாய்
சற்று மெம்மிடத் தன்பிலை யாயினை தலைவ
குற்ற மெம்வயிற் கண்டதுண் டேற்பிற கூறாய். 49

என்று பற்பல திறத்தினு முரைக்கவு மிளையோ
னென்றும் வாய்திறந் தானல னோவியம் போலக்
குன்ற வில்லியை நோக்கிநின் றனைவர் குறித்து
மன்ற வெஞ்சின மன்றிது வென்னென மருண்டார். 50

இங்கு நின்றவித் தெய்வத மிவணிடத் தேறித்
தங்கி நின்றதோ வென்கொலோ வறிகிலந் தமியே
மங்கு நம்மொடு வருபவ னலனிவ னந்தோ
நங்க டொல்குலத் தலைவனா நாகற்கென் னுரைப்போம். 51

தத்தை யாகிய தத்தையந் தேமொழித் தையன்
மத்த யானைபோ லென்மக னெங்கெனின் மறுசொ
லெத்தி றத்தினாற் சொல்லுது மெனப்பல விரங்கி
யெய்த்து நின்றனர் வசிக்கவோ ருபாயமு மில்லார். 52

குழைக்கு நோன்சிலை நாகனோ டிச்செயல் கூறி
யழைத்து வந்தன மெனிலவ னெத்திறத் தானும்
பிழைக்கு மாறியற் றுவனெனத் துணிந்தனர் பெயர்ந்தார்
தழைத்த லைப்புலா னாறும்வாய்ச் செய்யகட் சவரர். 53

அன்ன காலையி லாயிரங் கதிர்ச்சுட ரரசன்
மன்னு திண்ணானன் பப்புறத் துலகெலாம் வழங்கப்
பன்னு வேமெனப் போதல்போற் குடதிசைப் பராரைச்
சென்னி வான்றொடு மலைமறைந் தானிருள் செறிய. 54

அரவு மிழ்ந்தசெம் மணிக்கண மிமைத்தலி னலரி
யிரைதி ரைக்கடன் மூழ்கியுங் கங்குலங் கில்லை
யிருள்கெ டச்சுடர் விரிதரு விலைவரம் பில்லா
வுருவ மாமணி பலவுள விடத்திர வுண்டோ. 55

அண்ணலைக்கொடு விலங்கினங் குறுகுத லஞ்சி
வண்ணு திக்கணை தொடுத்தகூன் வில்லொடு மறந்துங்
கண்ணி மைத்தில னாகியே வைகறை காறு
மண்ணெ ழூப்புரை தோளனின் றானிறை மருங்கு. 56

அன்ப ரன்பினுக் ககப்படு பொருளாழிக்
இன்ப வூன்றிரு வமுதமாக் கியவளத் தெண்ணி
வன்பெ ருஞ்சிலைத் தடக்கையான் வைகறைப் போது
பொன்ப ரந்தொளிர் மால்வரைச் சாரலிற் போந்தான். 57

வீட்ட வாவுடை யார்க்கரு டருமொரு விமல
னாட்ட மாகிய தான்கொள்புன் னூற்றிடு கம்பி
வேட்ட மாடுதல் காணிய விரும்பிவந் தென்னக்
கோட்ட வார்திரைக் கடலெழுந் தான்சுடர்க் கோமான். 58

பொங்கு வெஞ்சினப் புலிவயம் வாளுகிர்ச்
சிங்க மன்னான் செயலிற்க மற்றினிக்
கங்கை வார்சடைக் கண்ணுதற் றன்பூத
றங்கு நெஞ்சத் தவன்செயல் சாற்றுவாம். 59

அருளு மானப் பொறையு மறிவொடு
தெருளு நோன்புஞ் சிவனிடத் தன்பினோ
டிருளிற் றீரவா வின்மையுங் கல்வியு
மருளின் மெய்ம்மையு மாருரு வாயினான். 60

வெறுப்பில் சந்தன மெய்யெலாம் பூசிமின்
றிறப்ப வின்ப மியற்றுநர் தங்களுங்
கறுத்தெ ழூந்தெதிர் காயமுற் பெய்துதன்
புறத்து வார்களு மொத்தவ ளாத்தினான். 61

நீடுங் கார்க்குழ னீளரி வாள்விழி
வாடுஞ் சிற்றிடை மாதர்கள் புல்லினு
நாடுந் தன்னுளந் தாயெனக் கண்ணுவா
னோடும் பொன்னு மொருநிகர் நோக்குவான். 62

ஈச னார்தம் மிணையடித் தாமரைப்
பூசை செய்தொழி லாப்புண்டு செய்திடு
மாசை மேல்கொண் டுறமனந் தான்சிவ
கோச னென்னுங் குணப்பெருங் குன்றனான். 63

இரவி வந்தெழு முன்ன மெழுந்துபோய்
முரிதி ரைப்புனன் மூழ்கி விதிமுறை
விரைசெய் போதொடு மென்புன லுங்கொடு
புரிச டைப்பிராற் பூசிப்ப வெய்தினன். 64

தலைமி சைத்திரு மஞ்சனந் தாங்குபு
மலர்பெய் கூடையு மேந்துபு வல்வினை
விலகு மண்ணறன் ஞமம் விளம்புபு
புலவ னையன் றிருமுன்பு போயினன். 65

தேன்கு லத்தொடு செவ்வழி வண்டுளர்
கான்க டுக்கையங் கண்ணியன் முன்பெலா
மூன்கி டத்தல்கண் டுள்ள நடுங்கியே
தான்கு தித்தய லோடினன் றாழ்விலான். 66

மேவார்வந் தடிபணியும் விண்ணோர்கண் முடிமணிக
ளோவாது கிடந்தொளிரு முடையபிரான் றிருமுன்ன
ராவாவிக் கொடும்பாவ மார்செய்தா ரீதுசெய்யத்
தேவாதி தேவனார் திருவுள்ள மிசைந்தாரோ. 67

கொல்லாமை யறியாமைக் குணமாகக் கொண்டொழுகும்
பொல்லாத சிலைவேடப் புலைஞரே யிதுசெய்வா
ரொல்லாத செயலிதையன் புடையோர்கள் கண்டக்கா
னில்லாம லிறந்திடுவர் நிற்கின்றேன் கொடுவினையேன். 68

என்றுபல பலகூறி யிணையிலா னழுதிரங்கிக்
கன்றுமிடற் றிறைபூசா காலமிகத் தாழ்க்கநா
னின்றதனாற் பயனென்னே யெனநினைந்து புலவெல்லாந்
துன்றுமல காலகலத் துடைத்தாப்பி நீர்தெளித்தான். 69

பின்னரடைந் தலைபுரட்டும் பெருந்தீர்த்தம் படிந்தாடிச்
சொன்னமறை மந்திரத்தாற் றூய்தன்மை கடிந்ததற்பின்
மன்னுமுருத் திரசமக நமகத்தால் வானவர்கோன்
சென்னிமிசைப் புனலாட்டித் திருமலர்கொண் டருச்சித்தான்.

முன்னர்நின்று கைதலைமேன் முகிழ்த்திருகண் ணீர்பாயத்
துன்னியமெய்ம் மயிர்பொடிப்பச் சுடுதழல்வாய்ப் பட்டவரக்
கென்னமன நனியுருகி யிளகமிக நாத்தழும்ப
மனனுமன னெடுசாம மறைக்கீதம் பாடினன். 71

பற்பலகால் வலஞ்செய்து பணிந்தரிது நீங்கிப்போய்ச்
சிற்பரனு ரடிமறவாச் சிந்தையன்றன் னிடத்தடைந்தான்
முற்பகல்வே டர்கணேற்ற முழுநோன்பா லவதரித்த
விற்படுகார் மழையன்ன விடலைசெயல் விளம்புவாம். 72

எழுவினங் கவற்று தோளா னேறுகாற் பன்றி செல்லும்
வழியறிந் தொளிநின் றெய்து மான்றுயி லிடன றிந்து
குழைநெடுஞ் சிலையிற் பூட்டு கோலுட லுருவ வெய்து
முழுவலன் புடையான் முன்போ லுறுசுவை யமுத மைத்தான்.

பின்புகோற் றேனி ரம்பப் பெய்துகொண் டிறைப சிக்கு
மென்பதாற் றூன்றொ டுத்த வேவென விரைவி னோடி
முன்புபோற் பூசை முற்றி முனிவிலின் னமுத ருத்தி
யன்பினுற் கடலி னன்னு னருகுநீங் காது நின்றான். 74

அந்தவே லையில்வில் லோரா லரும்பெறற் புதல்வன் செய்தி
தந்தையுந் தாயுங் கேட்டுத் தணிப்பருங் கலுழ்ச்சி கொண்டு
வந்துபற் பலதி றத்தால் வசிப்பவும் வசமா கானைச்
சிந்தைநொந் தினியென் னென்று சென்றனர் மகனிற் றீர்ந்தே.

அன்னவ ரடைந்த வாறு மகன்றது மறியா தன்னை
றன்னொடு பிணித்த நெஞ்சிற் சவரர்கோன் பகற்போ தெல்லாங்
கொன்னவில் விலங்கி னீட்டங் கொன்றிறைக் கமுத ருத்தித்
துன்னிருட் காலந் தூஞ்சான் றொண்டுசெய் தொழுகா நிற்ப. 76

வழுவறு முனியும் வந்து வைகலுந் திருமு னான்கண்
டழுதழு திரங்கி யேங்கி யகற்றுபு புனிதஞ் செய்து
மழவிடை யவற்பூ சித்து மனந்துயர்க் கடலி னாழ்ந்தி
யொழுகிட மற்ற வன்பா லுறுதுய ரொழித்தல் வேண்டி. 77

கங்குலைந் தாவ தன்கண் கனவிடைத் திருக்கா ளத்திச்
சங்கரன் வந்து சொல்லுந் தவத்துறை பயின்ற மேலோ
யிங்குநீ நம்முன் கண்ட திறைச்சியென் றினையல் வாழி
யங்கது நாம ருந்து மரும்பெற லமுதங் கண்டாய். 78

அதுநமக் கிடுவோன் செய்தி யறைகுது மம்ம தெய்வ
நதிபல படிந்து நோற்று நவையிரு ளங்கள் செய்தும்
விதிபுறங் கண்டு பெற்ற மெல்லெழின் மகன்மேற் றூய்க்குப்
புதியவன் பெனைத்த னைத்தப் புண்ணியற் கென்மே லன்பு. 79

மற்றவன் செருப்புக் காலான் மணங்கமழ் நமது சென்னி
யுற்றபூ மாற்றுங் காலத் துடம்பெலா மயிர்பொ டிப்பச்
சிற்றிள மகன்பூங் கையாற் றிருமுலை வருடப் பட்ட
பெற்றதா யென்ன நெஞ்சம் பெரிதுரு குதுமா லன்ப. 80

ஐந்தடர் முனிவ நம்மே லவனுமிழ் கின்ற தியாற்றுட்
டந்தநீ ராயி னன்றே தாழ்சடை முனிவ ராட்டு
நந்துமந் திரநன் னீரி னனியினி தெனலா முண்ணின்
றுந்திமே லெழுந்து பொங்கி யொழுகிய பேரன் பாமால். 81

வள்ளுகி ருழுவை நோன்றாண் மாதவக் கிழவன் முன்னோ
ரொள்ளிய வாழ்த்து நாம மொராயிர முரைத்துச் சாத்துங்
கள்ளவிழ் மலரி னன்னான் கழுத்துற வளைந்து சூட்டு
மெள்ளுறு மயிர்கள் சூழ்ந்த வீர்ம்மல ரெமக்கு நல்ல. 82

இந்திரன் முதலோர் செம்பொ னெரிமணிக் கலத்தி லேந்து
மந்தர வரையி னாழி மதித்தவா ரமுத மெல்லா
முந்துத்தன் வாய்ப்பெய் தாய்ந்த முழுச்சுவைச் சூட்டி றைச்சி
வெந்திற றந்த பின்னர் வேம்பொடு கடுவு மான. 83

ஏசுத லிலாவ றத்தோ ரெமக்கவ னெம்மு னின்று
மாசில்பே ரன்பி னோடு வாய்திறந் துரைக்குஞ் சொற்போ
லாசக லறிவின் மிக்க வைம்புலப் பகைவர் பாடுங்
காசறு சாம வேத கானமு மினிய தன்றே. 84

அவன்மன நமக்குக் கோயி லவனுரை பலவு மோத்தா
மவன்முய றொழில்க ளெல்லா மறத்தொழி லைய மில்லை
யவனியல் காட்டு கின்றா மன்பநீ நாளை யேவந்
தவனறி யாத வண்ண மயலொளித் திருத்தி யென்றான். 85

இன்னணம் பலவுங் கூறி யினித்துய ரொழிதி யென்று
பொன்னிறம் பழுத்த கொன்றைப் புதுநறுங் கண்ணி வேய்ந்த
சென்னியந் தணன்ம றைந்தான் சிவகோச முனியெழுந்து
முன்னவன் கருணை யாற்சொன் மொழிநினைந் ததிச யித்தே. 86

ஞாயிறு குணகு குன்ற நண்ணுதன் முன்னமே போய்ப்
பாயலை முகரி நன்னீர்ப் படிந்துநித் தியநி ரப்பி
யாயிரம் பெயரி னான்ற னருச்சனை முடித்து மற்றத்
தூயநல் லிலிங்கத் தின்பின் றோன்றிடா தொளித்தி ரு

முனிவரு முன்னம் வேட்ட முன்னுபு சென்ற வென்றிக்
குனிசிலை மறவர்த் தாங்குங் கோமகன் வேட்ட மாடிப்
புனிதனுக் கமுதங் கொண்டு பொருக்கென மீண்டா னங்கட்
பனிதரு துன்பங் காட்டும் பற்பல நிமித்தங் கண்டான். 88

வழியிடை நிமித்த மென்ன மற்றியான் கண்ட வெல்லாம்
பழிபடு நிமித்த மென்னை பாவஞ்சோர் குருதி காட்டுங்
கழிசுவை யமுத முத்தங் கண்மணி யுயிரெ னக்கா
மழகனெம் பெருமா னென்னுற் றனன்கொலோ வறிதறேற்றேன்.

எனமனங் கலங்கி வெய்யென் றெறுழ்வலிக் காளை செல்லச்
சினவிடை வலனு யர்த்த செக்கரீர்ஞ சடைநு தற்கட்
புனிதன்மற் றவனன் பெல்லாம் புண்ணிய முனிக்குக் காட்ட
நினைபுதன் வலக்கண் செம்புண் ணீருற நின்றான் கண்டான். 90

காண்டலும் வாய்நீர் சிந்தக் கையிலூன் சிதற வம்புங்
கோண்டரு சிலையும் வீழக் குஞ்சிப்பூ விறைய வாட்டு
நாண்டொட ரற்ற காலை நாடகப் பாவை போலத்
தூண்டரு தடந்தோட் காளை துண்ணென நிலத்து வீழ்ந்தான்.

நெடும்பொழு துள்ளு யிர்ப்பு நின்றுயி ருலந்தா ரென்னக்
கிடந்துபின் கையா றெய்தக் கெடுநினை வடைந்தெ ழுந்தே
யொடுங்கலி றுயரா னெஞ்ச முண்ணப்பட் டுருமே றுண்ட
மடங்கலே றென்ன நம்பி வாய்விட்டான் கண்ணீர் வார. 92

முழுவலித் தடக்கை யாற்றன் முகமெலாங் குருதிபொங்கி [த்த
யொழுகிய வடித்துக் கொண்டா னுறுகண்ணீர் வெள்ளம்போர்
வெழில்கனி மார்பு வீங்க வெற்றிஞன் றலைபி ளக்கக்
கழிதுயர்க் கடலி னாழ்ந்தான் கல்லொடு மோதி னனல். 93

ஓடுவன் மீள்வன் வீழ்வ னுருள்குவ னெழுந்து விம்ம
னீடுவ னந்தோ வென் ப னெட்டுயிர்ப் பெறிவ னெஞ்சம்
வாடுவன் பொங்கிப் பொங்கி வாய்விட்டு முகத்தைக் கையான்
மூடுவ னழுவன் கைகண் மோதுவன் கற்க ளோடே. 94

எவ்வழி லெந்தை யார்க்கிங் கிதுவந்த தெனக்கொன் றொரம்
வெவ்வலி யழற்சிற் றத்து வேட்டுவ ராலோ வன்றி
யிவ்வரை விலங்கி னாலோ யாதென வறித றேற்றே
னவ்வுறு தெவ்வைக் காணி லாவிகூட் டுண்கி லேனே 95

மலையிடை யெனக்கு வாய்த்த மரகத மணியே செம்பொ
னிலகொளிக் குன்றே யெந்தா யெம்பிரா னின்கண் புண்ணீர்
கலுழ்தரற் கென்னை கொல்லோ காரணந் திருவாய் சற்று
மலர்கிலை யென்கொ லென்று ணுவிசோர்ந் தருகு சென்றான். 96

கையினிற் றுடைத்தான் பல்காற் காலுத றவிரா தாக
வையனைத் தழுவிக் கொண்டா னலறினு னெடும்போ தெல்லாம்
பையென விடுத்துப் பின்பு பச்சிலை மருந்து தந்து
பெய்யினேய் தீரு மென்று பெயர்ந்தனன் மருந்து கொய்ய. 97

கானெலாம் புகுந்து சென்று கண்டன வெல்லாங் கொய்து
கூனுலாஞ் சிலைக்கை வேடர் கோமகன் றனைவிற் போந்து
வேனிலாற் காய்ந்த தேவின் விழியிடைப் பெய்தான் சோரி
தானிலா வண்ணங் கண்டான் றலையன்ப ணுவி சோர்ந்தான். 98

யானினி யிதற்கென் செய்வே னெனவெண்ணி நிற்ப வூனுக்
கூனிடல் வேண்டு மென்னு முரைகண்டு தன்கண் வாங்கி
வானவன் றடங்க ணிட்டான் மாறுமென் றுளம்வ லித்துக்
கானவர் பெருமான் றன்கண் கணையினு லிடந்திட் டானல். 99

இந்ததன் கண்ணை யண்ண லிறைகண்ணி லப்பச் சோரி
மடந்தையோர் பங்க ணுங்கே மாற்றினு னதனைக் கண்டா
னடங்கரு மகிழ்ச்சி யென்னு மாழ்கட லதனுட் டாழ்ந்து [ன்.
முடங்குளை மடங்க லன்னுன் முழவுத்தோள் கொட்டியார்த்தா

ஓடினுன் றிசைக ளெல்லா முடம்பெலாங் குலுங்க நக்கான்
பாடினுன் வாயில் வந்த படியெலாங் கைகள் கொட்டி
யாடினுன் றுள்ளித் துள்ளி யாரவா ரித்தா னின்று
நாடினுன் செய்த செய்கை நன்றுநன் றெனவி யந்தான். 101

இன்னண முவகை வெள்ளத் திடையவ னுலாவும் வேலை
முன்னவன் பின்னு மன்னுன் முதிர்ந்தபே ரன்பு காட்டச்
செந்நிறக் குருதி மற்றைத் திருவிழி யினுஞ்சோர் வித்தா
னன்னது மைந்த ணுர்வ வார்கலி குடித்த தன்றே. 102

எரிநிர யத்து ணின்று மேறுபு துறக்கம் புக்கா
ஞெருவன்மற் றதனுட் பின்னும் வீழ்ந்தென வுவகை மாறிக்
கரையிலாத் துன்ப வெள்ளக் கடலினு ளழுந்தி யேங்கி
வரைபுரை தோளான் பின்னு மருந்துடை மையிற்றெ ளிந்தான்.

இன்னுமோர் கண்ணெனக்குண் டாதலி னிதற்கஞ் சேனென்
றன்னது களைந்த காலை யையர்கண் ணறிதற் காகத்
தன்னொரு செருப்புக் காலைத் தம்பிரான் கண்ணி லூன்றிப்
பின்னடு கணைகண் வைத்தான் பிரானது பொறுக்க லாற்றான்.

மறைமொழி பிறந்த தம்வாய் மலர்திறந் தருட்பே ராழி [டே
யிறைவர்கண் ணப்ப நிற்க வென முக்கான் மொழிந்து கொண்
கறையணற் கங்க ணைந்த கையினாற் பிடித்தார் செங்கை
யுறுநறைப் பொலம்பூ மாரி யும்பர்மன் புதையப் பெய்தார்.

குன்றவர் பெருமான் கையிற் கூர்ங்கணை விட்டெ றிந்து
கன்றிள மடமா னேந்துங் கண்ணுத லடிப்பூங் கஞ்சந்
தன்றலை மிசைபு னைந்தான் சைவமெய் திகளி றும்பூ
தொன்றிய வுளத்த னாகி யொருதனி முதல்வற் றாழ்ந்தான். 106

மைதிகழ் மணிமி டற்று வார்சடை யெம்பி ரானக்
கைதவ மிலாரை மிக்க கருணையங் கண்ணு னோக்கி
மெய்தழ னடுவ ணின்று விரிவற மனமொ டுக்கிச்
செய்தவர் தமக்குங் கிட்டாத் திருவுருக் கலந்து கொண்டான்.

அற்றைநாண் முதலா வைய மண்மைல்கண் ணப்ப வென்று
சொற்றதே பெயராச் சொல்லுஞ் சுடர்மதிக் காந்தம் வேடர்
சிற்றிடை நலார்மு கத்தைத் திங்களென் றெழுக்குந் தெண்ணீ
ருற்றரு விகளாய்த் தாழு முயர்மலை காவ லற்கே. 108

---

# சிதம்பரபுராணம்.

## சபாநாயகர் துதி.

உருவமொரு நாலாகி யுருவருவத் திருவுருவ மொன்றே யாகி, யருவமொரு நாலாகி யப்பாலா யப்பாலு மளவி டாத, பொருவிகந்த வுயிர்களொடு மும் புணராமற் புணர்ந்தருளே பொழிந்தெல் லோர்க்கும், கருதரிய திருச்சிற்றம் பலத்திலகும் பேரொளியைக் கருத்துள் வைப்பாம். 1

## மான்மியச் சருக்கம்.

அன்றியுரைக் கருமனந்த கோடிபிறப் பிடைக்கரும மாற்றி னூலுர், துன்றரிது பாகதியைச் சயிமினிவ வேதாந்தச்

சொற்க டேர்ந்து, நன்றுதிகழ் பொருட்டெளிவாஞ் சிவஞானஞ் சிவனருளா னன்னின் முத்தி, யொன்றலெளி தாதலால் மூதுண ர்வா லிதற்கேற்ற வுறுதி யோர்வாய். 2

இங்கிலையி னுலன்றிக் கலையறிவி னுன்முத்தி யெய்த லாமோ, மன்னுமனு பவஞானமடையுநெறி வினவுதியேன் மாசொன் றில்லா, மின்னவிருஞ் சடாடவிமா தவநாத மிருஞ்சாம வேதந் தன்னிற், றன்னிகரா மொருதகர வித்தையுள ததனிலைமை சாற்றற் பாற்றே. 3

ஒருபிரம புரந்தன்னி னுண்ணியபுண் டரிகவகத் துணர்வுக் கெய்தா, வருளிடமா கியநுண்பே ராகாய முண்டஃதே யறிஞர் தம்மாற், கருதவிரும் புதுமதுவா நேடுவதும் புறப்பூத ககனந் தன்னின், மருவியவெல் லையினுமிகுந் தெஞ்ஞான்றுங் குறைவின்றி வயங்கா நிற்கும். 4

புரிகரணந் தனைக்கடந்து நிற்றலாற் சொற்றகைய புவனத் தியார்க்குந், தெரிவரிதா யுண்மையாய்ச் சித்தாயா னந்தமாய்த் திரியா தோங்கற், குரியபரி பூரணமா யிருக்கின்ற பரப்பிரம மூ ள்ளே காணும், பெரியநலத் தாலிந்த வுடல்பிரம புரமெனப்பேர் பெற்ற தம்மா. 5

சொற்றவுடற் கமலநிக ருளக்கமலம் பிரமமுறை தொன்மை தன்னு, னற்றகைய புண்டரிக வகமாயிற் றந்தவக நண்ணலாலுான், பற்றுடலம் புரமெனப்பேர் படைத்ததுபுண் டரிகவ கம்பற்றி நித்தம்,பெற்றபிர மங்ககன வுவமையாற் ககனமெனப் பேசிற் ருமால். 6

தனைநிகராம் பேரருளே மூப்பிறுதி முதற்குணங்க டயங்கு மென்னு, நினைவொடுநீ பல்காலும் பாவித்தா லனுபவத்தி னிலைவந் தெய்து, மனையதென வருந்தகர வித்தையிது காயம்போ லண்டத் துள்ளு, மினையமுறை மையினிற்கும் காயத்தின் பரிசுனக்கிங் கிசைத்தோ மிப்பால். 7

அருமறைகண் முதலினடு வினின்முடிவி னறைவதுருத் திரனை யென்று,மொருமைதிக ழுண்மையறி வானந்த மேயுருவா யொப்பி லாத,மருவருமவ் வுருத்திரனே யிதையகம லந்தன்னில் வந்தித் தேத்தும், பொருவருஞா ஞகாய மென்றுமிய வியசுர் மறை புகன்ற தன்றே. 8

### துன்மதச் சருக்கம்.

பரப்பிரமம் பரமசிவம் பரமபதம் பாமுத்தி பகரு மின்ன, வரம்பில்பெயர் புனைந்துவிராட் புருடனுளப் புண்டரிக மலரி லென்றுந், திரந்திகழ்மெய்ஞ் ஞானவரு ளிடங்கொண்ட சிதம் பரமே செந்தீ நாகங், கரம்பயில நடமருவு கடவுளென மறைக ளெலாங் கழறு மன்றே. 9

அருட்காமக் கொடிபாகன் றிருவாணை சிதம்பரங்கண் டவர்க்கு முத்தி, யொருக்காலன் றிருக்காலு முக்கா லுண்மையி துண்மை யாமென், செருக்காலி துரைத்தேனேற் கணைப்போதிற் சிரமிற்றுச் சிதைக முன்னே, யிருக்காதி மறைமொழிந்த திப்பரி சென் றுன்சுருதி யெல்லாம் வல்லான். 10

### துச்சகச் சருக்கம்.

அறிவா ரறிவா லறியா நிறையும்
மறிவா ரருளா லறிவார் பிறிதொன்
றறிவா னமையா ரறியா மையிடத்
தறிவா மெனமெய் யறிவு டைமைவார். 11

### நியமச் சருக்கம்.

என்னுட லென்னுயி ரென்னுணர் வென்செய லென்பவிகந் துடையோர், முன்னுணர் வாகிய பேருணர் வென்று முயங்கு புயங்க மணிப்,பொன்னவை முன்னர் மகிழ்ந்து புகழ்ந்துல கேழு டையா, யின்னமிர் தேபொரு ளேயரு ளேயென வின்புறு மன் புமிகா. 12

சீதர நாடரு மன்றி னடம்புரி சேவடி கண்டடனே
பூதல வானவர் சைவர் தபோதனர் புந்திக ளித்திடுமா
றோதன நல்கி மகிழ்ந்து புகழ்ந்தரு ளூற்றவ ரேவலினு
லேதமில் போனக மோனமொ டுண்டிட லேயியல் பாகுமரோ.



## காஞ்சி புராணம்.

### திருநகரப் படலம்.

காமனை முனிந்து நெடுஞ்சடை தரித்துக் கவின்றகல் லாடை மேற் புனைந்தி, யாமெலாம் வழுத்துந் துறவியென் றிருந்து மொ

ருத்தித னிளமுலைச் சுவடு, தோமுறக் கொண்டா ரெனச்சிறை யிடல்போற் சுடர்மனக் குகையுளே கம்பத், தோமொழிப் பொருளை யடக்கியா னந்த முறுநர்வா ழிடம்பல வுளவால். 1

## திருநெறிக்காரைக்காட்டுப் படலம்.

பகலிர விலதுள தெனும்ப குப்பிலா
வகலரு மிருள்பொதி யநாதி காலையி
னுகலரும் பரசிவ னொருவ னேயுளன்
மிகுமுணர் வவனிடை வெளிப்பட் டோங்குமால். 2

எங்குள யாவையு மிவன்வ யத்தவா
மெங்கணு மிவனொரு வயத்தி னெய்திடா
னெங்கணும் விழிமுக மெங்குங் கால்கர
மெங்கணுந் திருவுரு விவனுக் கென்பவே. 3

அரியய னமரர்க ளசுரர் யோகிக
ளிருளறு வேதவே தாந்தம் யாருமிப்
பெரியவ னடியிணை காணும் பெட்பினாற்
றெரிகிலர் மாறுகொண் டின்னுந் தேடுவார். 4

அவனவ ளதுவெனு மவைதொ ரூன்றுமிச்
சிவனலான் முத்தியிற் சேர்த்து வாரிலை
துவளரு மிம்முறை சுருதி கூறுமா
லிவனடி வழிபடின் முத்தி யெய்துவாய். 5

குரவனே யயனரி குரவனே சிவன்
குரவனே தந்தைதாய் குரவனே யெலாங்
குரவனே யென்றுநூல் கூறு முண்மையைக்
குரவனே யென்னிடை யின்று காட்டினாய். 6

## இரேணுகீச்சரப்படலம்.

அல்லலே பெண்ணெனப் பிறத்த லாங்கதி
னல்லலே யிளமையிற் சிறத்த லாங்கதி
னல்லலே கட்டழ குடைமை யாங்கதி
னல்லலே யிரவலர் சார்பி னுகுதல். 7

வெகுளியே யுயிர்க்கெலாம் விளைக்குந் தீவினை
வெகுளியே குணந்தவம் விரத மாய்க்குமால்

வெகுளியே யறிவினைச் சிதைக்கும் வெம்மைசால்
வெகுளியிற் கொடும்பகை வேறொன் றில்லையால். 8

### இருபத்தேண்டளிப் படலம்.

அறிவ னாகிமற் றறிந்திடப் படுவ னாகிச்
செறியு மண்டகோ டிகளெல்லாஞ் செறிபவ னாகிப்
பிறிவி லாதவைந் தொழிலையும் பேதுறு தெவர்க்கு
நெறிய னாற்றுறு நிருமல னாகுமவ் வீசன். 9

---

## இராமாயணம்.

### பால காண்டம்.

உலகம் யாவையுந் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலு நீக்கலு நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவ ரன்னவர்க் கேசர ணாங்களே. 1

சிற்கு ணத்தர் தெரிவரு நன்னிலை
எற்கு ணர்த்தரி தெண்ணிய மூன்றனுள்
முற்கு ணத்தவ ரேமுத லோரவர்
நற்கு ணக்கட லாடுத லன்றரோ. 2

ஆதி யந்த மரியென யாவையும்
ஓதி னாரல கில்லன வுள்ளன
வேத மென்பன மெய்ந்நெறி நன்மையன்
பாத மல்லது பற்றிலர் பற்றிலார். 3

### நாட்டுப் படலம்.

வண்மை யில்லையோர் வறுமை யின்மையால்
திண்மை யில்லைநேர் செறுந ரின்மையால்
உண்மை யில்லைபொய் யுரையி லாமையால்
வெண்மை யில்லைபல் கேள்வி மேவலால். 4

பண்கள்வாய் மிழற்று மின்சொற் கடைசியர் பரந்து நீண்ட
கண்களைகான் முகம்வா யொக்குங் களையலாற் களையி லாமை
உண்கள்வார் கடைவாய் மள்ளர் களைகலா துலாவி நிற்பார்
பெண்கள்பால் வைத்த நேயம் பிழைப்பரோ சிறியோர் பெற்றால்.

### நகரப் படலம்.

கல்லாது நிற்பார் பிறரின்மை யிற்கல்வி முற்ற
வல்லாரு மில்லை யவைவல்ல ரல்லாரு மில்லை
எல்லாரு மெல்லாப் பெருஞ்செல் வமுமெய்த லாலே
இல்லாரு மில்லை யுடையார்களு மில்லை மாதோ. 6

### தாடகைவதை.

பற்றவா வேரொடும் பசையறப் பிறவிபோய்
முற்றவா லுணர்வுமேன் முடுகினு ரறிவுசென்
றுற்றவா னவனிருந் தியோகுசெய் தனனெனில்
சொற்றவா மளவதோ மற்றிதன் றூய்மையே. 7

சொல்லொக்குங் கடிய வேகச் சுடுசரங் கரிய செம்மல்
அல்லொக்கு நிறத்தி னுண்மேல் விடுதலும் வயிரக் குன்றக்
கல்லொக்கு நெஞ்சிற் றங்கா தப்புறங் கழன்று கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற் றன்றே

### வேள்விப் படலம்.

கண்ட திறத்திது கைதவ மைய
கொண்ட னிறக்குற னென்பது கொள்ளேல்
அண்டமு முற்று மகண்டமு மேனுள்
உண்டவ னுமிது ணர்ந்துகொ ளென்ருன். 9

நினக்கிலை யென்கை நிமிர்ந்திட வந்து
தனக்கிய லாவகை தாழ்வது தாழ்வில்
கனக்கரி யானது கைத்தல மென்னின்
எனக்கிதன் மேனலம் யாதுகொ லென்றான். 10

துன்னினர் துன்னல ரென்பது சொல்லார்
முன்னிய நன்னெறி நூலவர் முன்வந்
துன்னிய தானமு யர்ந்தவர் கொள்க
என்னினி வன்றுணை யாவரு யர்ந்தார். 11

வெள்ளியை யாதல் விளம்பினை மேலோர்
வள்ளிய ராக வழங்குவ தல்லால்
எள்ளுவ வென்சில வின்னுயி ரேனும்
கொள்ளுதல் தீது கொடுப்பது நன்றால். 12

மாய்ந்தவர் மாய்ந்தவ ரல்லர்கண் மாயா
தேந்திய கைகொடி ரந்தவ ரெந்தாய்
வீய்ந்தவ ரென்பவர் வீய்ந்தவ ரேனும்
ஈய்ந்தவ ரல்லதி ருந்தவர் யாரே. 13

அடுப்பவ ரும்பழி செய்ஞ்ஞரு மல்லர்
கொடுப்பவர் முன்புகொ டேலென நின்று
தடுப்பவ ரேபகை தம்மையு மன்னர்
கெடுப்பவ ரன்னதொர் கேடிலை யென்றான். 14

கட்டுரை யிற்றம கைத்துள போழ்தே
இட்டிசை கொண்டற னெய்தமு யன்றோர்
உட்டெறு வெம்பகை யாவது லோபம்
விட்டிட லென்று விலக்கினர் தாமே. 15

மிதிலைக் காட்சி.

பாதி மாமதி சூடியும் பைந்துழாய்ச்
சோதி யோனுமத் தூய்மல ராளியும்
வேத பாரகர் வேறிலர் நீயலால்
மாத போதன வென்னவ ழுங்கினர். 16

வரைக்காட்சிப் படலம்.

தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினு மவர்தம்
மருண்ட தன்மையை மாற்றுவ ரெனுமிது வழக்கே
உருண்ட வாய்தொறும் பொன்னுரு ஞரைத்துரைத் தோடி
இருண்ட கல்லையுந் தன்னிற மாக்கிய விரதம். 17

அயோத்தியா காண்டம்-மந்திரப் படலம்.

ஒட்டிய பகைவர்வந் துருத்த போரிடைப்
பட்டவ ரலரேற் பரம ஞானம்போய்த்
தெட்டவ ரல்லரேற் செல்வ மீண்டென
விட்டவ ரல்லரேல் யாவர் வீடுளார். 18

இறப்பெனு மெய்ம்மையை யிம்மை யாவர்க்கு
மறப்பெனு மதனின்மேற் கேடு மற்றுண்டோ
துறப்பெனுந் தெப்பமே துணைசெ யாவிடிற்
பிறப்பெனும் பெருங்கடல் பிழைக்க லாகுமோ. 19

அருஞ்சிறப் பமைவருந் துறவு மவ்வழித்
தெரிஞ்சுற வெனமிகுந் தெளிவு மாய்வரும்
பெருஞ்சிற குளவெனிற் பிறவி யென்னுமிவ்
விருஞ்சிறை கடத்தலி னினிய தியாவதே. 20

இனியது போலுமிவ் வரசை யெண்ணுமோ
துனிவரு நலனெனத் தொடர்ந்து தோற்கலா
நனிவரும் பெரும்பகை நவையி னீங்கியத்
தனியர சாட்சியிற் றுழு முள்ளமே. 21

உம்மையா னுடைமையி னுலகம் யாவையுஞ்
செம்மையி னோம்பிநல் லறமுஞ் செய்தனன்
இம்மையி னுதலிநல் லிசைந டாயநீர்
அம்மையு முதவுதற் கமைய வேண்டுமால். 22

இழைத்ததீ வினையையுங் கடக்க வெண்ணுதல்
தழைத்தபே ரருளுடைத் தவத்தி னாகுமேற்
குழைத்ததோ ரமுதுடைக் கோர நீக்கிவே
றழைத்ததீ விடத்தினை யருந்த லாகுமோ. 23

கச்சையங் கடகரிக் கழுத்தின் கண்ணுறப்
பிச்சமுங் கவிகையும் பெய்யு மின்னிழல்
நிச்சய மன்றெனி னெடிது நாளுண்ட
வெச்சிலை நுகருவ தின்ப மாகுமோ. 24

மைந்தரை யின்மையின் வரம்பில் காலமு
நொந்தனெ னிராமனென் னோவை நீக்குவான்
வந்தன னினியவன் வருந்த யான்பிழைத்
துய்ந்தனன் போவதோ ருறுதி யெண்ணினேன். 25

இறந்திலன் செருக்களத் திராமன் றுதைதான்
அறந்தலை நிரம்பவூப் படைந்த பின்னரு
துறந்தில னென்பதோர் சொல்லுண் டானபின்
பிறந்தில னென்பதிற் பிறிதுண் டாகுமோ. 26

பெருமக னென்வயிற் பிறக்கச் சீதையாந்
திருமகண் மணவினை தெரியக் கண்டயான்
அருமக னிறைகுணத் தவனி மாதெனும்
ஒருமகன் மணமுங்கண் டுவப்ப தாயினேன். 27

## மந்தரைசூழ்ச்சிப் படலம்.

என்பு தோலுடை யார்க்குமி லார்க்குந்தம்
வன்ப கைப்புலன் மாசற மாய்ப்பதென்
முன்பு பின்பின்றி மூவுல கத்தினு
மன்பி னல்லதோ ராக்கமுண் டாகுமோ.

தூம கேது புவிக்கெனத் தோன்றிய
வாம மேகலை மங்கைய ரால்வரும்
காம மில்லை யெனிற்கடுங் கேடெனு
நாம மில்லை நரகமு மில்லையே.

பிறந்தி றந்துபோய்ப் பெறுவது மிழப்பதும் புகழே
சிறந்தி றம்பினு நியாயமே திறம்பினு நெறியின்
றிறந்தி றம்பினுஞ் செய்தவந் திறம்பினுஞ் செயிர்தீர்
மறந்தி றம்பினும் வான்முறை திறம்புதல் வழக்கோ. 3

## கலைகண்டு நீங்குபடலம்.

அறத்தலு நல்லறத் துறையு மல்லது
புறத்தொடு துணையிலைப் பொருந்து மன்னுயிர்க்
கிறத்தலும் பிறத்தலு மியற்கை யென்பதை
மறத்தியோ மறைகளின் வரம்பு கண்டநீ. 3

சீலமுந் தருமமுஞ் சிதைவில் செய்கையுஞ்
சூலமுந் திகிரியுஞ் சொல்லுந் தாங்கிய
மூலம்வந் துதவிய மூவர்க் காயினுங்
காலமென் றொருவலை கடக்க லாகுமோ. 3

கண்முதற் காட்சிய கரையி லாதன
உண்முதற் பொருட்கெலா மூற்ப மாவன
மண்முதற் பூதங்கண் மாயு மென்றபோ
தெண்முத லுயிர்க்குநீ யிரங்கல் வேண்டுமோ. 33

புண்ணிய நறுநெயிற் பொருவில் காலமாந்
திண்ணிய திரியினில் விதியென் றீயினில்
எண்ணிய விளக்கவை யிரண்டு மெஞ்சினால்
அண்ணலே யவிவதற் கைய மாவதோ. 34

பரவு கேள்வியும் பழுதின் ஞானமும்
விரவு சீலமும் வினையின் மேன்மையும்
உரவி லோய்தொழற் குரிய தேவரும்
குரவ ரேயெனப் பெரிது கோடியால். 35

அந்த நற்பெருங் குரவ ராரெனச்
சிந்தை தேர்வுறத் தெரிய நோக்கினல்
தந்தை தாயரென் றிவர்க டாமலால்
எந்தை கூறவே றெவரு மில்லையால். 36

---

## ஆ ர ணி ய கா ண் ட ம்.

பேதி யாது நிமிர் பேத உருவம் பிறழ்கிலா
ஓதி ஓதி உணரும் தொறும் உணர்ச்சி வுதவும்
வேதம் வேதியர் விரிஞ்சன் முதலோர் தெரிகிலா
ஆதி தேவர் அவர் எம் அறிவினுக் கறிவரோ. 37

### விராதன் வதை.

வேதங்கள் அறைகின்ற வுலகெங்கும் விரிந்தனவுன்
பாதங்கள் இவையென்னில் படிவங்கள் எப்படியோ
ஓதங்கொள் கடல்அன்றி வொன்றினே டொன்றெவ்வா
பூதங்கள் தொறும் உறைந்தால் அவைவுன்னைப் பொறுக்குமோ.

கடுத்தகராம் கதுவநிமிர் கய்யெடுத்து மெய்கலங்கி
வுடுத்ததிசை யனைத்தினும்சென் றொலிகொள்ள வுறுதியரால்
அடுத்தபெருந் தனிமூலத் தரும்பரமே பரமேயென்
றெடுத்தொருவா ரணம்அழைக்க நீயோஅன் றேன்என்றாய். 39

புறங்காண அகங்காணப் பொதுமுகத்தின் அருள்னேக்கம்
இறங்காத தாமரைக்கண் எம்பெருமான் இயம்புதியால்
அறங்காத்தற் குனக்கொருவர் ஆரும்ஒரு துணையின்றி
கறங்காகும் எனத்திரிய நீயேயோ கடவாய்தான். 40

துறப்பதே தொழிலாகத் தோன்றினேர் தோன்றியக்கால்
மறப்பரோ தம்மையது அன்றாகில் மற்றவர்போல்
பிறப்பரோ யெவர்க்கும்தாம் பெற்றபதம் பெறல்அரிதோ
பிறப்பதே பிறப்பதே எனும்விளையாட் டினிதுகந்தோய். 41

### மந்தரைசூழ்ச்சிப் படலம்.

என்பு தோலுடை யார்க்குமி லார்க்குந்தம்
வன்ப கைப்புலன் மாசற மாய்ப்பதென்
மூன்பு பின்பின்றி மூவுல கத்தினு
மன்பி னல்லதோ ராக்கமுண் டாகுமோ. 28

தூம கேது புவிக்கெனத் தோன்றிய
வாம மேகலை மங்கைய ரால்வருங்
காம மில்லை யெனிற்கடுங் கேடெனு
நாம மில்லை நரகமு மில்லையே. 29

பிறந்தி றந்துபோய்ப் பெறுவரு மிழப்பதும் புகழே
நிறந்தி றம்பினு நியாயமே திறம்பினு நெறியின்
றிறந்தி றம்பினுஞ் செய்தவந் திறம்பினுஞ் செயிர்தீர்
மறந்தி றம்பினும் வரன்முறை திறம்புதல் வழக்கோ. 30

### களைகண்டு நீங்குபடலம்.

அறத்தலு நல்லறத் துறையு மல்லது
புறத்தொடு துணையிலைப் பொருந்து மன்னுயிர்க்
கிறத்தலும் பிறத்தலு மியற்கை யென்பதை
மறத்தியோ மறைகளின் வரம்பு கண்டநீ. 31

சீலமுந் தருமமுஞ் சிதைவில் செய்கையுஞ்
சூலமுந் திகிரியுஞ் சொல்லுந் தாங்கிய
மூலம்வந் துதவிய மூவர்க் காயினும்
காலமென் றொருவலை கடக்க லாகுமோ. 32

கண்முதற் காட்சிய கரையி னீளத்த
உண்முதற் பொருட்கெலா மூற்ற மாவன
மண்முதற் பூதங்கண் மாயு மென்றபோ
தெண்முத லுயிர்க்குநீ யிரங்கல் வேண்டுமோ. 33

புண்ணிய நறுநெயிற் பொருவில் காலமாம்
திண்ணிய திரியினில் விதியென் றீயினில்
எண்ணிய விளக்கவை யிரண்டு மெஞ்சினால்
அண்ணலே யவிவதற் கைய மாவதோ. 34

பரவு கேள்வியும் பழுதின் ஞானமும்
விரவு சீலமும் வினையின் மேன்மையும்
உரவி லோய்தொழற் குரிய தேவரும்
குரவ ரேயெனப் பெரிது கோடியால். 35

அந்த நற்பெருங் குரவ ராரெனச்
சிந்தை தேர்வுறத் தெரிய நோக்கினல்
தந்தை தாயரென் றிவர்க டாமலால்
எந்தை கூறவே றெவரு மில்லையால். 36

---

## ஆ ர ணி ய கா ண் ட ம்.

பேதி யாது நிமிர் பேத உருவம் பிறழ்கிலா
ஓதி ஓதி உணரும் தொறும் உணர்ச்சி வுதவும்
வேதம் வேதியர் விரிஞ்சன் முதலோர் தெரிகிலா
ஆதி தேவர் அவர் எம் அறிவினுக் கறிவரோ. 37

### விராதன் வதை.

வேதங்கள் அறைகின்ற வுலகெங்கும் விரிந்தனவுன்
பாதங்கள் இவையென்னில் படிவங்கள் எப்படியோ
ஓதங்கொள் கடல்அன்றி வொன்றினே டொன்றுவ்வா
பூதங்கள் தொறும் உறைந்தால் அவைவுன்னைப் பொறுக்குமோ.

கடுத்தகராம் கதுவநிமிர் கய்யெடுத்து மெய்கலங்கி
வுடுத்ததிசை யனைத்தினும்சென் றொலிகொள்ள வுறுதியரால்
அடுத்தபெருந் தனிமூலத் தரும்பரமே பரமேயென்
றெடுத்தொருவா ரணம்அழைக்க நீயோஅன் றேன்என்றாய். 39

புறங்காண அகங்காணப் பொதுமுகத்தின் அருள்னேக்கம்
இறங்காத தாமரைக்கண் எம்பெருமான் இயம்புதியால்
அறங்காத்தற் குனக்கொருவர் ஆரும்ஒரு துணையின்றி
கறங்காகும் எனத்திரிய நீயேயோ கடவாய்தான். 40

துறப்பதே தொழிலாகத் தோன்றினோர் தோன்றியக்கால்
மறப்பரோ தம்மையது அன்றாகில் மற்றவர்போல்
பிறப்பரோ யெவர்க்கும்தாம் பெற்றபதம் பெறல்அரிதோ
மிறப்பதே பிறப்பதே எனும்விளையாட் டினிதுகந்தோய். 41

பனிநின்ற பெரும்பிறவிக் கடல்கடக்கும் படிபற்றி
நனிநின்ற சமயத்தோர் எல்லாரும் நன்றென்ன
தனிநின்ற தத்துவத்தின் தகைமூர்த்தி நீயாகில்
இனிநின்ற முதல்தேவர் என்கொண்டென் செய்வாரே. 42

நீயாதி பரம்பரமும் நின்னவே உலகங்கள்
ஆயாத சமயமும்நின் அடியவே அயல்இல்லை
தீயாரின் ஒளித்தியால் வெளிநின்றால் தீங்குண்டோ
வீயாத பெருமாயை விளையாட்டும் வேண்டுமோ. 43

தாய்தன்னை அறியாத கன்றில்லை தன்கன்றை
ஆயும்அறி யும்உலகின் தாய்ஆகில் ஐய
நீஅறிதி எப்பொருளும் அவைஉன்னை நிலைஅறியா
மாயையிது என்கொலோ வாராதே வரவல்லாய். 44

பொருவரிய சமயங்கள் புகல்கின்ற புத்தேளிர்
இருவினையும் உடையார்போல் அருந்தவம்நின் றியற்றுவார்
திருவுறையும் மணிமார்ப நினக்கென்னை செயற்பால
ஒருவினையும் இல்லார்போல் உறங்குதியால் உறங்காதாய். 45

அரவாகிச் சுமத்தியால் அயில்எயிற்றின் ஏந்துதியால்
ஒருவாயின் விழுங்குதியால் ஓர்அடியால் ஒளித்தியால்
திருவான நிலமகளை யிதுஅறிந்தால் சீறாளோ
மருவாரும் துழாய்அலங்கல் மணிமார்பில் வைகுவாள். 46

சரபங்கர் பிறப்புநீங்குதல்.

துவசம்ஆர் தொல்அமருள் துன்னுநரைச் செற்றும் சுருதிப் பெருங்கடலின் சொற்பொருள் கற்பித்தும், நிவசமா நல்அறத்தின் செந்நெறியில் உய்த்தும் திருஅளித்தும் வீடளித்தும் இங்கு காமைத் தங்கள், கவசம்ஆய் ஆர்உயிர் ஆய்த் தவம்ஆய்க் கண் ஆய் கடைஇலா ஞானமாய்க் காப்பானைக் காணு, அவசமாய்ச் சிந்தைஅழிந்தயலே நின்றான் அறியாதான் போல அறிந்தஎலாம் சொன்னான். 47

மேவா தவரில்லை மேவினரு மில்லை வெளியோ டிருளில்லை மேல்கீழு மில்லை, மூவா தமையில்லை மூத் தமையு மில்லை முதல் இடையோ டீறில்லை முன்னொடுபின் னில்லை, தேவாஇங் கிவ்வோ சன்றனில்லை யென்றால் இல்லையெந்தி வந்தெம்மைச் சேவடிகள்

நோவ,காவா தொழியில் பழிபெரிதோ அன்றேல் கருங்கடலில் கண்வளராய் கைம்மாறு முண்டோ. 48

ஒன்றாகி மூலத் துருவம் பலவாகி உணர்வும் உயிரும் பிறிதாகி ஆழி, சென்று சுறும்காலத் தந்நிலைய தாகித் திறத்துலகம் தானுகிச் செஞ்செவே னின்ற, நன்றாய ஞானத் தனிக்கொழுந்தே யெங்கள் நவைதீர்க்கும் நாயகமே நல்வினையே னோக்கி, நின்றாரைக் காத்தியயற் பேரைக் காய்தி நிலையில்லாத் தீவினையும் நீதந்த தன்றே. 49

அகத்தியப் படலம்.

தெரிஞ்சுற னோக்கினர் செய்த செய்தவம்
அருஞ்சிறப் புதவநல் லறிவு கைதர
விரிஞ்சுறப் பற்றிய பிறவி வெந்துயர்ப்
பெருஞ்சிறை வீடுபெற் றனைய பெற்றியார். 50

வேண்டின வேண்டினர்க் களிக்கும் மெய்த்தவம்
பூண்டுளா ராயினும் பொறையின் ஆற்றலால்
மூண்டெழு வெகுளியை முதலின் நீக்கினர்
ஆண்டுறை அரக்கரால் அலைப்புண் டாரரோ. 51

ஆவுக் காயினும் அந்தணர்க் காயினும்
யாவர்க் கேனு மெளியவர்க் காயினும்
சாவப் பெற்றவ ரேதகை வான்வுறை
தேவர்க் கும்தொழும் தேவர்க ளாகுவார். 52

சடாயுவதை.

அதிசயம் வொருவரால் அமைக்க லாகுமோ
துதியறு பிறவியின் யின்ப துன்பந்தான்
விதிவசம் என்பதை மேற்கொ ளாவிடில்
மதிவலி யால்விதி வெல்ல வல்லமோ. 53

தெரிவுறு துன்பம்வந் தூன்றச் சிந்தையை
இரிவுசெய் தொழியும திழுதை நீரதால்
பிரிவுசெய் துலகெலாம் பெறுவிப் பான்தலை
அறிவுசெய் விதியினார்க் கரிதுண் டாகுமோ. 54

அலக்கணும் யின்பமும் அணுகு நாள்இவை
விலக்குவம் என்பது மெய்யிற் றாகுமோ

இலக்கமுப் புரங்களை எய்த வில்லியார்
தலைக்கலத் திரந்தது தவத்தின் பாலதோ. 55

பொங்குவெங் கோளரா விசும்பு பூத்தன
வெங்கதிர்ச் செல்வனை விழுங்கி நீங்குமால்
அங்கண்மா ஞாலத்தை விளக்கு மாய்கதிர்த்
திங்களும் வொருமுறை வளரும் தேயுமால். 56

கவந்தன் படலம்.

மூலமே யில்லா முதல்வனே னீமுயலும்
கோலமே யார்க்கும் தெரிவரிய கொள்கையால்
ஆலமோ ஆலின் அடையோ அடைகிடந்த
பாலனோ ஆதிப் பரனோ பகராயே. 57

காண்பார்க்கும் காணப் படுபொருட்கும் கண்ணாகிப்
பூண்பாய்போல் னிற்றியால் யாதொன்றும் பூணாதாய்
மாண்பால் வுலகை வயிற்றொளித்து வாங்குதியால்
ஆண்பாலோ பெண்பாலோ அப்பாலோ எப்பாலோ. 58

ஆதிப் பிரமனும்னீ ஆதிப் பரமனும்னீ
வோதி உறுபொருளுக் கப்பாலுண் டாகிலும்னீ
சோதிச் சுடர்ப்பிழம்பும் னீயென்று சொல்லுகின்ற
வேதம் முறைசெய்தால் வெள்காரோ வேறுள்ளார். 59

கிட்கிந்தாகாண்டம்-வாலிவதைப்படலம்.

மும்மைசா லுலகுக் கெல்லா மூலமந் திரத்தை முற்றும்
தம்மையே தமக்கு நல்குந் தனிப்பெரும் பதத்தைத் தானே
யிம்மையே யெழுமை னோய்க்கு மருந்தினை யிராம னென்றும்
செம்மைசேர் நாமந் தன்னைக் கண்களிற் றெரியக் கண்டான்.

இல்லறந் துறந்த நம்பி எம்மனோர்க் காகத் தங்கள்
வில்லறந் துறந்த வீரன் றோன்றலால் வேத நூலிற்
சொல்லறந் துறந்தி லாத சூரியன் மரபுந் தொல்லை
நல்லறந் துறந்த தென்னா நகைவர நாணுட் கொண்டான். 61

ஈர மாவது மிற்பிறப் பாவதும்
வீர மாவதுங் கல்வியின் மெய்ந்நெறி
வார மாவது மற்றொரு வன்புணர்
தார மாவதைத் தாங்குந ருக்கரோ. 62

ஏவுகூர் வாளியா லெய்துநா யடியனேன்
ஆவிபோம் வேலைவா அறிவுதந் தருளிநுய்
மூவர்நீ முதல்வனீ முற்றுனீ மற்றுனீ
பாவனீ தருமனீ பகையுனீ யுறவுனீ. 63

புரமெலா மெரிசெய்தோன் முதலினோர் பொருவிலா
வரமெலா முருவியென் வசையிலா வலிமைசால்
வுரமெலா முருவியென் றுயிரெலா னுகருநின்
சரமலாற் பிறிதுவே றுளதரோ தருமமே. 64

### அரசியற் படலம்.

நாயக னல்ல னம்மை நனிபயந் தெடுத்து நல்கும்
தாயென வினிது பேணித் தாங்குதி தாங்கு வாரை
ஆயது தன்மை யேனு மறவரம் பிகவா வண்ணம்
தீயன வந்த போது சுடுதியாற் றீமை யோரை. 65

இறத்தலும் பிறத்த றானு மென்பன விரண்டும் யாண்டும்
திறத்துளி னோக்கிற் செய்த வினைதரத் தெரிந்த வன்றே
புறத்தினி யுரைப்ப தென்னே பூவின்மேற் புனிதற் கேனும்
மறத்தின திறுதி வாழ்நாட் கிறுகியஃ தறுதி யென்ப. 66

ஆக்கமுங் கேடுந் தாஞ்செ யறத்தொடு பாவ மாய
நோக்கிவே றுண்மை தேரார் பொருவரும் புலமை நூலோர்
தாக்கின வொன்றோ டொன்று தருக்குறுஞ் செருவிற் றக்கோய்
பாக்கிய மின்றி மற்றும் பாவத்தைப் பற்ற லாமோ. 67

### சுந்தரகாண்டம்.

அலங்கலிற் றோன்றும் பொய்ம்மை யரவெனப் பூத மைந்தும்
விலங்கிய விகாரப் பாட்டின் வேறுபா டுற்ற வீக்கம்
கலங்குவ தெவரைக் கண்டா லவரென்பர் கைவி லேந்தி
இலங்கையிற் பொருதா ரன்றே மறைகளுக் கிறுதி யாவார். 68

முன்பிற் சிறந்தா ரிடையுள்ளவர் காதன்முற்றப்
பின்பிற் சிறந்தார் குணநன்றிது பெற்றயாக்கைக்
கென்பிற் சிறந்தாய தோரூற்றமுண் டென்னலாமே
அன்பிற் சிறந்தாய தொர்பூசனை யார்கணுண்டே. 69

### பிணிவீட்டு படலம்.

திறந்தி றம்பிய காமச் செருக்கினால்
மறந்து தத்த மதியின் மயங்கினார்
இறந்தி றந்திழிந் தேறுவ தேயலால்
அறந்தி றம்பின ராருள ராயினார். 70

நாமத் தாழ்கடன் ஞாலத் தவிர்ந்தவர்
ஈமத் தான்மறைந் தாரின மாதர்பால்
காமத் தாலிறந் தார்களி வண்டுறை
தாமத் தாரின ரெண்ணினுஞ் சால்வரோ. 71

பொருளுங் காமமு மென்றிவை போக்கியே
றிருளுண் டாமென வெண்ணலை யீதலும்
அருளுங் காதலிற் றீர்தலு மல்லதோர்
தெருளுண் டாமென வெண்ணலர் சீரியோர். 72

## உயுத்தகாண்டம்.

### இரணியன் வதைப்படலம்.

மூன்றவன் குணங்கள் செய்கை மூன்றவ னுருவ மூன்று
மூன்றுகண் சுடருஞ் சோதி மூன்றுதன் னுலக மூன்று
தோன்றலு மிடையு மீறுந் தொடக்கிய பொருள்கட் கெல்லாம்
சான்றவ னிவனே வேத முடிவது சாத மென்றான். 73

சாணினு முளனோர் பெற்றி யணுத்தனைச் சதகூ றிட்ட
கோணினு முளன்மா மேருக் குன்றினு முளனிந் நின்ற
தூணினு முளன்முன் சொன்ன சொல்லினு முளனித் தன்மை
காணுதி விரைவி னென்றா னன்றெனக் கனகன் சொன்னான். 74

### வீடணனடைக்கலப் படலம்.

அறிஞரே யாயினு மரிய தெவ்வரைச்
செறிஞரே யாவரேற் கெடுத றிண்ணமாம்
நெறிதனை நோக்கினு நிருதர் நிற்பதோர்
குறிநனி யுளதென வுலகங் கொள்ளுமோ. 75

வெற்றியுந் தருகுவர் வினையம் வேண்டுவர்
முற்றுவ ருறுகுறை முடிப்பர் முன்பினால்

உற்றுறு நெடும்பகை யுடைய ரல்லதூஉம்
சிற்றினத் தவரொடுஞ் செறிதல் சீரிதோ. 76

கைப்புருந் துறுசா ணருளிக் காத்துமே
பொய்க்கொடு வஞ்சனை புணர்த்த போதினும்
மெய்க்கொள விளியினும் விடுது மென்னினும்
திக்குறு நெடும்பழி யறனுஞ் சிறுமால். 77

உள்ளத்தி னுள்ளதை யுரையின் முந்துற
மெள்ளத்தம் முகங்களே விளம்பு மாகலால்
கள்ளத்தின் வினைவெலாங் கருத்தி லாவிருட்
பள்ளத்தி னன்றியே புறத்திற் பல்குமோ. 78

மாதரைக் கோறலு மறத்து நீங்கிய
ஆதரைக் கோறலு மழிவு செய்யினும்
தூதரைக் கோறலுந் தூய்தன் றுமெனு
ஏதுவிற் சிறந்தன வெடுத்துக் காட்டினன். 79

பிறந்தநாட் டொடங்கி யாருந் துலைபுக்க பெரியோன் பெற்றி
மறந்தநா ளுண்டே யென்னைச் சரணென்று வாழ்கின் றுனைத்
துறந்தநாட் குன்று வந்து துன்னினன் சூழ்ச்சி யாலே
இறந்தநா ளன்றோ வென்று மிருந்தநா ளாவ தென்றான். 80

பேடையைப் பிடித்துத் தன்னைப் பிடிக்கவந் தடைந்த பேதை
வேடனுக் குதவி செய்வான் விறகிடை வெந்தீ மூட்டிப்
பாடுறு பசியை நோக்கித் தன்னுடல் கொடுத்த பைம்புள்
வீடுபெற் றுயர்ந்த வார்த்தை வேதத்தின் விழுமி தன்றே. 81

போதக மொன்று கன்றி டங்கர்மாப் பொருத போரில்
ஆதியம் பரமே யானுன் புகலென வழைத்த ஞான்று
வேதமு முடிவு காணு மெய்ப்பொருள் வெளிவந் தெய்தி
மாதுயர் துடைத்த வார்த்தை மறப்பரோ மறப்பி லாதார். 82

மன்னுயி ரெல்லாந் தானே வருவித்து வளர்க்கு மாயன்
தன்னன வுலக மெல்லாந் தருமமு மெவையுந் தானே
என்னினு மடைந்தோர் தம்மை யேமுற வினிதி னோம்பிப்
பின்னும்வீ டளிக்கு மென்றாற் பிறிதொரு சான்று முண்டே
நஞ்சினை மிடற்றுள் வைத்த நகைமழு வாள னுளும்
தஞ்செ‌ன முன்னுந் தானே தாதைபாற் கொடுத்துச் சாதல்

அஞ்சினே னபய மென்ற வந்தணற் காசி யந்நாள்
வெஞ்சினக் கூற்றை மாற்று மேன்மையின் மேன்மை யுண்டோ.

சரணெனக் கியார்கொ லென்று சானகி யழுது சாம்ப
அரணுனக் காவ னஞ்ச லஞ்சலென் றருளி னெய்தி
முரணுடைக் கொடியோன் கொல்ல மொய்யமர் முடிந்தவேந்தே
மரணமப் பெரியோன் பெற்ற தென்வயின் வழக்கன்றாமோ. 85

உய்யலுற் றபய மென்றா னுயிரைத்தன் னுயிரி னோம்பாக்
கையனு மொருவன் செய்த வுதவியிற் கருத்திலானும்
ஐயனு முறையி னோக்கி யருமறை வழக்கி னின்ற
மெய்யினைப் பொய்யென்றானு மீள்கிலா நரகின் வீழ்வார். 86

## கும்பகருணன் வதைப்படலம்.

தீயவை செய்வ ராகிற் சிறந்தவர் பிறந்த வுற்றார்
தாயவை தந்தை மாரென் றுணர்வரோ தருமம் பார்ப்பார்
நீயவை யறிதி யன்றே நினக்கியா னுரைப்ப தென்னோ
தூயவை துணிந்த போது பழிவந்து தொடர்வ துண்டோ. 87

மக்களைக் குரவர் தம்மை மாதரை மற்று ளோரை
ஒக்குமின் னுயிரன் னாரை யுதவிசெய் தாரோ டொன்றத்
துக்கமித் தொடர்ச்சி யென்று துறப்பரற் றுணிவு பூண்டோர்
மிக்கது நலனே யாகி வீடுபே றளிக்கு மன்றே. 88

தீவினை யொருவன் செய்ய வவனொடுந் தீங்கி லாதோர்
வீவினை யுறுத லைய மேன்மையோ கீழ்மை தானோ
ஆய்வினை யுடையை யன்றே அறத்தினை நோக்கி யீன்ற
தாய்வினை செய்ய வன்றோ கொன்றனன் றவத்தின் மிக்கோன்.

## நாகபாசப் படலம்.

தேவாதி தேவர் பலராலு ஞதி திருநாம மோது செயலால்
மூவாத நாளு முலகேழொ டேழு மாசாறு மேன்மை முதலா
மேவாத வின்ப மவைமேவி மேவி நெடுவீடு கண்டு முடிவார்
ஆவா வருந்தி யழிவாய் கொலாரிவ் வதிகோர மாயை யறிவார்.

எழுவா யெவர்க்கு முதலாகி யீறு மிடையாகி யெங்கு முளையாய், வழுவா தவர்க்கு வரமீய வல்லை அவரால் வரங்கள் பெறுவாய், தொழுவா யுணர்ச்சி தொடராத தன்மை யுருவாய்

மறந்து துயரால், அழுவா யொருத்த ருளேபோலு மாரிவ் வதிரேக மாயை யறிவார். 91

தானந் தவமில்லை பலவென்னு மொன்று தனியென்னு மொன்று தவிரா, ஞானந் தொடர்ந்த சுடரென்னு மொன்று நயனந் தொடர்ந்த வொளியால், மானந் துறந்த பதமென்னு முன்னை மறைநாலு மந்த மறியா, ஆனந்த மென்னு மயலென்னு மாரிவ் வதிரேக மாயை யறிவார். 92

வினைவர்க்க முற்று முடனே படைத்தி யவைசெய்தி யொன்றும் விழையாய், நினைவர்க்கு நெஞ்சி னுறுகாம முற்றி யறியாமை நிற்றி நிகராய், முனைவர்க்கு மொத்தி யமரர்க்கு மொத்தி முழுமூட ரென்றிம் முதலோர், அனைவர்க்கு மொத்தி தெரியாமை யாரிவ் வதிரேக மாயை யறிவார். 93

எறிந்தாரு மேறு படுவாரு மின்ன பொருள்கண் டிரங்கு பவரும், செறிந்தாய துண்மை யெனலாய தன்மை தெரிகின்ற துன்ற னிடையே, பிரிந்தார் பிறந்த பொருளோடு போதி பிறியாது நிற்றி பிறியா, தறிந்தா ரறிந்த நெறியாதி யாரிவ் வதிரேக மாயை யறிவார். 94

சொல்லென்று நிற்றி பொருளாதி தூய மறையும் பறைந்து திரிவாய், வில்லொன் றெடுத்து மிகையொன்றி நிற்றி விளிசங்கை யங்கை யுடையாய், கொல்லென்று ரைத்தி கொலையுண்டு நிற்றி கொடியாயுன் மாயை யறியேம், அல்லென்று நிற்றி பகலாதி யாரிவ் வதிரேக மாயை யறிவார். 95

பேரா யிரங்க ளுடையாய் தொடர்ந்த பொருடோறு நின்று பிரியாய், நீராய் பிறந்து திரிவாய் திறந்தொ றவைதேயு மென்று சிதையாய், கூராழி யங்கை யுடையாய் திரண்டொ ருருவாய கோட லுரிபோல், ஆராயி னேது மிலையாதி யாரிவ் வதிரேக மாயை யறிவார். 96

மறந்தாயு மொத்தி மறவாயு மொத்தி மயராகி மற்றெவ் வினையும், துறந்தாயு மொத்தி துறவாயு மொத்தி யொருதன்மை சொல்ல வுலவாய், பிறந்தாய் நினைத்தல் பிறழாத வன்பர் பிறவாமை நல்கு பெரியோய், அறந்தா னிறுத்த லரிதாக வாரிவ் வதிரேக மாயை யறிவார். 97

### பிரமாத்திரப் படலம்.

உன்னை யுள்ள படியறியே முலகை யுள்ள திறமுள்ளேம்
பின்னை யறியே முன்னறியே மிடையு மறியேம் பிறழாமல்
நின்னை வணங்கு நீவகுத்த நெறியி னிற்கு மதுவல்லால்
என்னை யடியேஞ் செயற்பால தின்ப துன்ப மில்லோனே. 98

அண்டம் பலவு மனைத்துயிரு மகத்தும் புறத்து முளவாக்கி
உண்டு முமிழ்ந்து மளந்திடந்து முள்ளும் புறத்து முளையாகிக்
கொண்டு சிலம்பி தன்வாயி னூலான் மெய்க்கூ டியற்றி யதாப்
பண்டு மின்று மமைக்கின்ற படியை யொருவாய் பரமேட்டி. 99

துன்ப விளையாட் டிதுவேயு முன்னைத் துன்பத் தொடர்பின்மை
யின்ப விளையாட் டாமெனினு மறியா தேமுக் கிடருறுமால் [த்
அன்பு விளைவு மருள்விளைவு மறிவு விளைவு மவையெல்லாம்
முன்பு பின்பு நடுவில்லாய் முடிந்தா லன்றி முடியாவால். 100

### இராவணன் வதைப்படலம்.

சிவனோ வல்ல னான்முக னல்லன் றிருமாலாம்
அவனோ வல்லன் மெய்வர மெல்லா மடுகின்றான்
தவனோ வென்னிற் செய்து முடிக்குந் தரனல்லன்
இவனோ தானவ் வேத முதற்கா ரணனென்றான். 101

இறந்ததோ ருயிருடன் றருமந் தீட்டினால்
பிறந்துள தாமெனப் பெயர்ந்து மோர்தலை
மறந்தில தெழுந்தது மடித்த வாயொடும்
சிறந்தது தவமலாற் செயலுண் டாகுமோ. 102

### மீட்சிப் படலம்.

பங்கயத் தொருவனும் விடையின் பாகனும்
சங்குகைத் தாங்கிய தரும மூர்த்தியும்
அங்கையி னெல்லிபோ லனைத்து நோக்கினும்
மங்கையர் மனநிலை யுணர வல்லரோ. 103

மன்னர் தொல்குலத் தவரினத் தனையொரு மனித்தன்
என்ன வுன்னிட னுன்னைநீ பிரமமே கனிதனைச்
சொன்ன நான்மறை துணிவினிற் றுணிந்தமெய்த் துணிவு
நின்ன லாதில்லை நின்னின் வேறுளதில்லை நெடியோய். 104

பகுதி யென்றுள தியாதினும் பழையது பயந்த
விகுதி யால்வந்த விளைவுமற் றதற்கு மேனின்ற
புகுதி யாவர்க்கு மரியவப் புருடனு நீயிம்
மிகுதி யுன்பெரு மாயையி னால்வந்த வீக்கம். 105

முன்பு பின்பிரு புடையெனுங் குணிப்பரு முறைமைத்
தன்பெ ருந்தன்மை தாந்தெரி மறைகளின் றலைகள்
மன்பெ ரும்பர மாற்பமென் றுரைக்கின்ற மாற்றம்
அன்பி னின்னையல் லான்மற்றிங் கியாரையு மறையா. 106

எனக்கு மெண்வகை யுருவற்கு மிமையவர்க் கிறைவன்
றனக்கும் பல்பெரு முனிவர்க்கு முயிருடன் றழீஇய
அனைத்தி னுக்குநீ யேபர மென்பதை யறிந்தார்
வினைத்து வக்குடை வீட்டருந் தளைநின்று மீள்வார். 107

என்னைத் தான்முத லாகிய வுருவங்க ளவையும்
முன்னைத் தாய்தந்தை யெனும்பெரு மாயையின் மூழ்கித்
தன்னைத் தானறி யாமையிற் சலிப்பவச் சலந்தீர்ந்
துன்னைத் தாதையென் றுணர்குவ முத்திவித் தொழிந்த. 108

ஐயஞ் சாகிய தத்துவந் தெரிந்தறிந் தவற்றின்
மெய்யெஞ் சாவகை மேனின்ற நினக்குமேல் யாதும்
பொய்யெஞ் சாவில தென்னுமீ தருமறை புகலும்
வையஞ் சான்றினிச் சான்றாக்குஞ் சான்றிலை வழக்கால். 109

அளவை யாலளந் தாமன்றென் றறிவுறு மமைதி
உளவை யாவையு முனக்கில்லை யுபநிடத் துனது
களவை யாய்ந்துறத் தெளித்தில தாயினுங் கண்ணால்
துளவை யாய்முடி யாயுளை நீயெனத் துணியும். 110

கரண மென்றுள வுன்னைவந் தறிவுகா ணாமே
அரண மல்லவர்க் கிவைகடந் தறிவரி தாக
மரணந் தோற்றமென் றிவற்றிடை மயங்குப வவற்றுன்
சரண மல்லதோர் சரணில்லை யன்னவை தவிர்ப்பான். 111

தோற்ற மென்பதொன் றுனக்கில்லை நின்கணே தோற்றும்
ஆற்றல் சான்முதற் பகுதிமற் றதனுளாம் பண்பால்
காற்றை முன்னுடைப் பூதங்க ளவைசென்று கடைக்கால்
வீற்று வீற்றுற்று வீவுறு நீயென்றும் விளியாய். 112

மின்னைக் காட்டுதல் போல்வந்து விளியுமெய் யுலகந்
தன்னைக் காட்டவுந் தருமத்தை நாட்டவுந் தனியே
என்னைக் காட்டுதி யீசனைக் காட்டுதி யெமக்கு
முன்னைக் காட்டிலை யொளிக்கினு மிலைமறை யுரையால். 113

என்னு ருக்கொடிவ் வுலகினை யீனுதி யிடையே
உன்னு ருக்கொடு புகுந்துநின் றோம்புதி யுமையோன்
றன்னு ருக்கொடு துடைத்திமற் றிதுதனி யருக்கன்
முன்னு ருக்கொடு பகல்செயுந் தரத்தது முதலோய். 114

திருக்கு வான்மலி செல்வத்துச் செருக்குவேங் திறத்துத்
தருக்கு மாய்வுறத் தானவ ரரக்கர்வெஞ் சமரில்
இரிக்க மாழ்கிநொந் துணைப்புகல் யாம்புக வியையாக்
கருக்கு ளாய்வந்து தோற்றுதி யீங்கிது கடனே. 115

ஓங்காரப் பொருட்டெரு வோர்தாமுன் னையுணர்வோர்
ஓங்காரப் பொருளொன்று ணர்ந்திருவி னையுருப்போர்
ஓங்காரப் பொருளாமன் றென்றூழி சென்றாலும்
ஓங்காரப் பொருளே பொருளென்க லாவுரவோர். 116

இனைய தாகவி னெம்மையீன் றுலகையு மீன்றிம்
மனையின் மாட்சியை வளர்த்தவெம் மோயினை வாளா
முனைய லென்றது முடித்தனன் முந்துநீர் முளைத்த
சினையின் பந்தமும் பகுதிக ளனைத்தையுஞ் செய்தோன். 117

என்னு மாத்திரத் தேறமர் கடவுளு மிசைத்தான்
உன்னை நீயொன்று முணர்ந்திலை போலுமா லுரவோய்
முன்னை யாதியா மூர்த்திநீ மூவகை யுலகின்
அன்னை சீதையா மாதுநின் மார்பின்வந் தமைந்தாள். 118

துறக்குந் தன்மைய வல்லளாற் றொல்லையெவ் வுலகும்
பிறக்கும் பொன்வயிற் றன்னையிப் பெய்வளை பிழைக்கின்
இறக்கும் பல்லுயி ரிறைவநீ யிவடுறத் திகழ்ச்சி
மறக்குந் தன்மைய தென்றனன் மழுவலான் வழுத்தி. 119

பின்னு நோக்கினன் பெருந்தகை முன்புதற் பிரிந்த
இன்ன லானுயிர் துறந்திருந் துறக்கத்து ளிருந்த
மன்ன னாங்குவற் சென்றுநீ கண்டனை வணங்க
முன்னை வான்றுயர் நீக்குதி மொய்ம்பினோ யென்றான் 120

## மகாபாரதம்.

### காப்பு.

முருகார் மலர்த்தாம முடியோனே யடியார் முயற்சித்திறந்
திருகாமல் விளைவிக்கு மதயானை வதனச் செழுங்குன்றினைப்
புருகூதன் முதலாய முப்பத்து முக்கோடி புத்தேளிரு
மொருகோடி பூதேவருங் கைதொழுங் கோவை யுறவுன்னுவாம்.

### ஆதி பருவம்.

கற்றவர்க்கு நலனிறைந்த கன்னியர்க்கும் வண்மைகை
யுற்றவர்க்கும் வீரரென்று யர்ந்தவர்க்கும் வாழ்வுடைக்
கொற்றவர்க்கு முண்மையான கோதின்ஞான சரிதரா
நற்றவர்க்கு மொன்றுசாதி நன்மைதீமை யில்லையால். 2

### இந்திரப்பிரத்தச் சருக்கம்.

வேதமும் வேதம் விளம்புமெய்ப் பொருளு மப்பொருள் விதங்களும் பஞ்ச, பூதமும் புலனும் புலன்களின் பயனு மப்ப யன் பொலிவுற நுகரு, ஞாதமுமுலகம் படைத்தளித் தழித் து ஞானமா யகிலமு நிறைவுற், ருதியு நடுவு முடிவுமாய் நின்ற வாதியா னடியிணை பணிவாம். 3

### சூதுபோர்ச் சருக்கம்.

ஞான மாகிய பரம்பர வமிழ்தமாய் நவிரறு மயக்காகி
வான மாயுடன் வாயுவாய்த் தேயுவாய் வனமுமாய் மண்ணுகித்
தான மாமறை முறைமையிற் பலசரா சரங்களு மாகி [டோன்.
யேன மாயிவை யனைத்தையு மருப்பினு லேந்தினு னெனையாண்

### ஆரணிய பருவம்.

விண்ணினுறை வானவரில் யாரடி படாதவர் விரிஞ்சனரி யேமு தலினோர், மண்ணினுறை மானவரில் யாரடி படாதவர் மனுக்கண்முத லோர்க ளதலக், கண்ணினுறை நாகர்களில யார டி படாதவர்கள் கட்செவி மகீபன் முதலோ,ரெண்ணில்பல யோ னியினும் யாவடி படாதன விருந்துழி யிருந்துழி யரோ. 5

வேதமடி யுண்டன விரிந்தபல வாகம விதங்களடி யுண்ட னவொரைம்,பூதமடி யுண்டன விநாழிகை முதற்புகல்செய் பொ ழுதொழு சலிப்பில் பொருளின், பேதமடி யுண்டன பிறப்பிலி

யிறப்பிலி பிறங்கலர சன்றன் மகளார், நாதனம லன்சமர வே டவடி வங்கொடுர ரன்கையடி யுண்ட பொழுதே. 6

பழம்பொருந்து சருக்கம்.

பிறர்மனை யவரைப் பெற்றதா யெனவும் பிறர்பொரு ளொட்டியே யெனவும், பிறர்வசை யுரைத்தல் பெருமையன் றெனவும் பிறர்துய ரென்றுய ரெனவு, மிறுதியே வரினு மென்மனக் கிடக்கை யெம்பிரா னிவையென வுரைத்தான், மறலியு மடியு மாறுமல் வியற்கை வலிமைகூர் வாயுவின் மைந்தன். 7

ஊனமே யான வூனிடை யிருக்கு முயிரினைத் துறந்துமொண் பூணு, மானமே புரப்ப தவனிமே லெவர்க்கும் வரிசையுந் தோற்றமு மரபு, ஞானமே யான திருவடி யுடையாய் ஞாலமுள் ளளவுமிற் றலினு, மீனமே யுயிருக் கியற்கையா தலினு லென்றனன் வீமனுக் கிளையோன். 8

குலமிக வுடைய ரெழின்மிக வுடையர் குறைவில்செல் வமுமிக வுடையர், நலமிக வுடைய ரென்னினுங் கல்வி ஞானமற் பமுமிலா தவரை, வலமிகு திகிரிச் செங்கையாய் முருக்கின் மணமலர் மலரென மதிப்பேன், சலமிகு புவியி லென்றனன் வாகைத் தார்புனை தாரைமா வல்லான். 9

ஒருமொழி யன்னை வரம்பிலா ஞான முற்பவ காரண னென்றுங், தருமமே துணைவன் கருணையே தோழன் சாந்தமே நலனுறு தார, மரியதிண் பொறையே மைந்தன்மற் றிந்த வறுவரு மல்லதா ருறவென், றிரு பரி யிளையோன் மொழிந்தனன் றன்பேரிதயமா மலர்க்கிடை யெடுத்தே. 10

விராட பருவம்.

மார சாயகத் தாலுயிர் மாளினும் வசையிலாத மரபின் வந் தோர்பிறர், தார மானவர் தம்முகம் பார்ப்பரோ தக்கவர்க் குத் தகவிய யேகொலாஞ், சோர ராகலிற்சொற்று யினித்தவிர் சுரேச னைவர்தங் காவலென் றுளினை, வீரபோவென் னருகுமி லாவிபோம் விழித்தி மைக்குமுன் னென்று விளம்பினன். 11

வெளிப்பாட்டுச் சருக்கம்.

ஒன்றுதவி செய்யினு மவ்வுதவி மறவாமற்
பின்றையவர் செய்பிழை பொறுத்திடுவர் பெரியோர்

நன்றிபல வாகவொரு நவைபுரிவ ரேனுங்
கன்றிடுவ தன்றிமுது கயவர்நினை யாரே. 12

## உத்தியோக பருவம்.

பொன்னுருந் திகிரியினுன் போனும் பொறைவேந்தன் புகன்ற வெல்லாஞ், சொன்னது மவன்கேளான் விதிவலியாற் கெடுமதிகண் டோன்று தன்றே, யெந்நாளு மூவர்நிலத்தி னென்முளேவித் திடினும்விளை வெய்தி டாது, பன்னுகந் தனக்கமிர் தங் கொடுத்தாலும் விடமொழியப் பயன்கொ டாதே. 13

துன்று பிணியோர் துறந்தோ ரடங்காதோர்
கன்று சினமனத்தோர் கல்லா தவரிளையோ
ரொன்று முறைமை யுணரா தவர்மகளி
ரென்றுமிவர் மந்தணத்தி னெய்தப் பெறுதாரே. 14

மூத்தவ ரிளையோர் வேத முனிவரர் பிணியின் மிக்கோர்
தோத்திர மொழிவோர் மாதர் தூதரென் றிவரைக் கொல்லிற்
பார்த்திவர் தமக்கு வேறு பாவமற் றிதனி னில்லை
பூத்தெரி தொடையாய் பின்னு நரகினும் புகுவ ரென்றான். 15

## வீட்டுமே பருவம்.

மேவரு ஞான னந்த வெள்ளமாய் விதித்தோ னாகி
மூவரு மாகி யந்த மூவர்க்கு முதல்வ னாகி
யாவரும் யாவு மாகி யிறைஞ்சுவா ரிறைஞ்சப் பற்ப
றேவரு மாகி நின்ற செங்கண்மா லெங்கள் கோவே. 16

மாயையென் றொருத்தி தன்பான் மனமெனு மைந்தன் றோன்றி
தூயநல் லறிவன் றன்னைத் தோற்றமின் றாக்கி வைத்தான் [த்
றாயொடு தந்தை மக்க டாரமென் றிவர்பால் வைத்த
நேயமு மவன்ற னாலே நிகழ்ந்ததோர் நினைவு கண்டாய். 17

குயின்றவைம் பொறிவாய் நின்று குறித்தவைம் பொருளுந் தானே, யயின்றுமுக் குணங்க ளோடு மறுவகைப் படைக ளோடும், பயின்றர சாளுமந்த மனமெனும் பகைவ னுங்குத், துயின்றபோ தொளித்து நின்ற தோன்றலுந் தோன்றுங் கண்டாய்.

அந்தநல் லறிவன் றன்னை யறிந்தவ ரறிஞ ராவார்
தந்தையால் வகுக்கப் பட்ட சராசரப் பொருள்க டோறும்

வந்தவான் றீம்பா னெய்போ லுயிர்க்குயி ராகி வாழும்
பந்தம துணர்ந்து நேரே பார்க்குங்காற் பகையார் நண்பார். 1

உம்பரு முனிவர் தாமும் யாவரு முணரா வொன்றை
யிம்பரின் றனக்கு நானே யிசைவுற வுணர்த்தா நின்றே
னைம்பெரும் பூதத் தானு மமைத்தன வுடலம் யார்க்கு
நம்பனு மொருவ னுள்ளே ஞானியாய் நடத்து கின்றான். 20

என்னைநீ புகலக் கேண்மோ வெங்குமா யாவு மாகி
மன்னிய பொருளும் யானே மறைக்கெலா முடிவும் யானே
யுன்னையான் பிறிவ தில்லை யொருமுறை பிறிந்து மேனா
ணன்னிலா வெறிக்கும் பூணாய் நானுநா ரணனு மானோம். 21

பின்னொரு பிறப்பின் யாமே யிராமலக் குமப்பேர் பெற்றோ
மிந்நெடும் பிறப்பி னீயும் யானுமா யீண்டு நின்றோ
நின்னிடை மயக்கு மிந்த நேயமு மொழிக வென்று
தன்னிலை யவற்குக் காட்டித் தத்துவந் தெளிவித் தானே. 22

### இரண்டாம்போர்ச் சருக்கம்

எந்த வெந்த யோனி பேத மெங்கு மெங்கு முள்ளன
வந்த வந்த யோனி தோறு மாவி யான தன்மையைச்
சிந்தை யின்க ணொருக ணத்தி னிகழு மாறு தேவர்கோன்
மைந்த னுய்ந்தி டப்பு கன்ற வள்ள லுள்ள லைக்குவாம். 23

### துரோண பருவம்.

காயமும் புலனு மந்தக் கரணமு மாகி யெல்லாத்
தேயமும் பரந்து நின்று மீளவுஞ் சித்துஞ் சுத்த
மாயமு மாகி நீங்கி வருபெரு ஞான னந்த
மாயவெம் பெருமா னென்னை யாண்டரு ளாழி யானே. 24

---

## குசேலோபாக்கியானம்.

கல்வினுட் சிறந்தோ ரைக்குங் கருப்பையண் டத்து யிர்க்கும்
புல்லுணா வளித்துக் காக்கும் புனத்துழாய்க் கண்ணி யண்ண
லொல்லுமின் மைந்தர்க் காவா தொழிவனோ வொழியா னுண்மை
மெல்லியல் கொண்ட துன்பம் விடுவிடு மறந்து மெண்ணல். 1

அலரவன் றீட்டி வைத்த வாயுளி னளவை காறும்
விலகிலா வினைக்குத் தக்க விருப்புறு வெறுப்பு ணுவு
மிலகவுண் டின்றே யின்ற மின்னுயி ருடம்பின் வாழ்தன்
மலர்தலை யுலகத் தென்று வகுப்பர்நா லுணர்ந்த வல்லோர். 2

ஆதலி னினது மைந்தர்க் காயுளுள் ளளவை காறு
மோதிரு வினைக்குத் தக்க வுணவுண்டு புந்தி மாழ்கே
லேதுவந் தானு மூழா லெனநினைந் திருத்தல் வேண்டு
மாதர்வாண் முத்த மூரன் மயின்மரு ணடைப்பூங் கொம்பே. 3

வளநிதி படைத்தோ மென்றும் வடிவவில் லுடையோ மென்று
மளவில்சே யீன்றோ மென்று மனுபவத் தமைந்தோ மென்று
மிளமையிற் சிறந்தோ மென்று மெழினல முடையோ மென்று
முளமகிழ் கூர்வர் சற்று முண்மைநா லுணர்ச்சி யில்லார். 4

ஒருசிறு தரும மேனு முளுற்றிடா ரிரப்போர் வந்து
தருநிகர் கரத்தா யென்று சாற்றினுங் கொள்ளா ராகிக்
கருணைசற் றின்றி யெல்லை கடந்திடத் துரந்து மீள்வர்
மருவுபல் கிளையு மோம்பார் வளம்படைத் தென்பெற் றாரால்.

ஒல்லொழுக் கினரைத் தீய வொழுக்கரென் றுரைக்கச் செய்யும்
புல்லொழுக் கினரைத் தூய புலத்தரென் றுரைக்கச் செய்யு
நல்லகற் புடைய மாதர் நலத்தையுஞ் சாமை செய்யும்
பல்வகைத் துயருஞ் செய்யும் பாழ்ம்பொருள் பற்று ளார்க்கே.

கோடிபொன் னளிப்ப னின்றே கோடிரோர் மாத்தி ரைக்கு
ளோடிய கிளைக்கோர் வார்த்தை யுரைத்தடை குவனென் றாலுந்
தேடிய கால தூதர் சிமிழ்த்தல்விட் டொழிவ ரேகொல்
வாடிய மருங்கு னங்காய் மாண்பொருட் பயன்கண் டாயோ. 7

பொருவரு பந்த மெல்லாம் புணர்த்திடுந் தெய்வ சிந்தை
யொருவமே விட்டு நிற்கு முறக்கமு மிறக்கச் செய்யுங்
கருவினுட் புகுத்து மின்ன கரிசுகண் டதனா லன்றோ
விருநிலத் திடை வெறுக்கை யென்மனார்புலமை சான்றோர். 8

சிறியரே மதிக்கு மிந்தச் செல்வம்வந் துற்ற ஞான்றே
வறியபுன் செருக்கு மூடி வாயுளார் மூக ராவர்
பறியணி செவியு ளாரும் பயிறரு செவிட ராவர்
குறிபெறு கண்ணு ளாருங் குருடராய் முடிவ ரன்றே. 9

மதுமடை யுடைத்துப் பாயும் வனத்துழாய்க் கண்ணி வேய்ந்
விதுமுகப் பதுமை செங்கை மெல்லென வருடச் சேந்து
கதுமெனக் கருது மன்பர் கருத்தினுட் புகுந்து வாழு
முதுமறைப் பெருமான் பாதம் பெறுதலே மூரிச் செல்வம். 1

கோதுற வமைத்த பவ்வீக் குழம்புபஃ றுவாரந் தோறு
மோதுற வழியுங் கும்ப மூத்திர பாத்தி ரங்கை
யாதுபல் கிருமிக் குப்பை யடர்ந்ததீ நாற்றக் கூடம்
மாதர்மெய் வடிவங் கண்டு மாழ்குவார் மாழ்கி நிற்க. 1

முன்னமெத் தனைபேர் மைந்தர் முறைமைபா ராட்டி னரோ
வின்னமெத் தனைபேர் மைந்தர் முறைகொள விருக்கின் றாரோ
வன்னமைந் தனைத்தம் மைந்த ரெனவறி யாமை யாகு
மென்னடைக் கரிய வாட்கண் விரைக்கருந் தாழ்கு ழாலே. 1

மதலையைப் பெறுநாட் டுன்பம் வளர்த்திடு நாளுந் துன்பம்
விதலைநோ யடையிற் றுன்பம் வியன்பரு வத்துந் துன்பங்
கதமுறு காலர் வந்து கைபற்றிற் கணக்கி றுன்ப
மிதமுற லெந்நாள் சேயா லெற்றைக்குந் துன்ப மானால். 1

சாருறு தந்தை யாருந் தாயரு மனந்தஞ் சன்ம
மூருமோ ரனந்தம் வாய்த்த வுறவுமோ ரனந்தம் பெற்ற
பேருமோ ரனந்தங் கன்மப் பெருக்கமு மனந்தங் கொண்ட
சீருமோ ரனந்த மின்னுஞ் சேர்வது மனந்த மாமால். 14

அத்தகு மைந்த ரார்நீ யாரிஃ துரைக்கு நாணு
ரித்தரை யிடைக்காப் பாற்றத் தியான்றிரு கெடுமா லல்லன்
கொத்துறு மைந்த ராகைக் கோட்பட்டு வருந்து கின்றாய்
பித்துளார் செய்கை யீது பெரியரிம் மயக்கம் பூணார். 15

நல்வினை யடைந்த காலை நனிகலந் திளைப்பர் நன்மை
யல்வினை யடைந்த காலை யல்லலிற் றுளைவ ரெல்லாந்
தொல்வினை வழிய வாகுந் தோன்றது பவங்க டந்தம்
புல்வினை யாலென் றெண்ணல் புலமையோ ரிடத்தின் றாமால்.

ஆயின்மறை முதற்கலைக ளனைத்துமுணர்ந் தறமறம்பாத்
தேயினிது நன்றிதுதீ தென்றுணர்ந்து மவர்கட்டை
வீயினுந்தான் மறப்பர்களோ மேதையோர் மறப்பரே
ஞயினுங்கீழ்ப் பட்டவர்க ளவர்காணிக் காணிலத்தே. 17

நல்லார்சொல் விரும்புவது நல்லாரைக் காண்பதுவு
நல்லார்க்கொன் றுதவுவது நல்லாரைப் புகழ்வதுவு
நல்லார்நன் றென்றுரைப்ப நவிற்றியவிவ் வெலாமடங்க
நல்லார்நட் பென்றுமுற னன்றன்றே நான்மறையோய். 18

பொன்னுள்ளான் பூமியுள்ளான் புந்தியுள்ளா னுயிடினு
மென்னுள்ளா னவனவ னிருந்தவர்நட் பில்லானேற்
பொன்னில்லான் பூமியில்லான் புந்தியில்லா னுயிடினு
மென்னில்லா னவனவ னிருந்தவர்நட் புள்ளானேல். 19

பேயோடு பழகுறினும் பிரிவதரி தரிதென்று
தூயோர்கண் மொழிவராற் றாயோரும் புகழ்தூயோ
ராயோர்கள் பெருநட்பை யருந்தவத்தாற் பெறலன்றி
யேயோவெண் மையிற்கிடைப்பி நிகழ்வரோ விகழ்வில்லார். 20

முத்திக்கு வித்தாகு முழுதுணர்ந்தோர் பெருநட்பே
தித்திக்கு நாடோறுந் தேவர்பெறற் கருந்திருவுஞ்
சித்திக்கும் படியருளுஞ் செப்பரிதா லதுநிற்க
வெத்திக்கும் புகழூகினக் கியன்மணநன் காயிற்றே. 21

---

## குறுந்திரட்டு.

புண்ணிய பாவ பலன்களுங் கருதார் பூசியார் புனலினைத் தீர்த்தம், பண்ணிய பதுமை தெய்வமென் றுணரார் பட்டினி விடார்மகம் பண்ணார், மண்ணிய மணிமந் திரவவிழ் மதியார் வடிவிலோர் குறிகொளார் மற்று, மெண்ணிய கரும மியாவையுஞ் செய்யா ரிம்மையு மறுமையு மிகழ்ந்தார். 1

முன்னை யாமிய மாதிரா லுடன்மன மொழியினுற் செயுமியோக, முன்னுஞ் சிந்தையாற் செயலிரண் டைம்புல னொடுக்கரு ரணையாகுந், தன்னி னுற்செய லிரண்டவை தியானமுஞ் சமாதியு, மிவையெட்டு நன்ன ராய்நிகழ் ஞானத்துக் கங்கமாய் நான்மறை முடிவோதும். 2

பொன்று முடல்புந்தி யுயிரென்ற புறமார்க்க
ரொன்றுபல வன்றுபய மன்றுமறை மார்க்க
ரன்றெனவு மாமெனவு மன்றிநிழல் கண்ட
குன்றுகுலை ஞானியினர் கூடுகிலர் வீடே. 3

போத வுண்டனு மற்பமே யுண்டனும் புரிந்துயோ கஞ்செ
யப் போகா, தாதலால் யோகந் தனக்கனுகூல மானவூ ணற்ப
ணாகுஞ், சீதநீர் மண்ணாற் சுத்தமாந் தேகஞ் சித்தம்வை ராக்கி
மண்ணாற், போதநீ ரதனாற் சுத்தமா மென்பர் புறமகத் தூய்மை
யைப் புலவர்.

கனைப்ப வெறிநீர் வேலைக் காசினி யதனின் மாறி
யெனைப்பெறு தவருமில்லை யான்பெறு தவரு மில்லை
நினைப்புறி லயலா ரென்று நீக்கிடப் படுவார் யார்தான்
வனப்புறு முன்றூ ரென்று வரைந்திடப் படுவார் யார்தான். 5

சிறப்பறு நோயாற் றுன்பஞ் செடிகொண்மூப் பதனாற் றுன்ப
மறப்புறத் தியக்கஞ் செய்யு மரணமே தனையாற் றுன்பம்
பிறப்பவ ரெக்கா லத்தும் பெறுவது துன்ப மானாற்
றுறப்பதே கருமந் துன்பம் பிறவியாந் துயர நீங்க. 6

துகளறு ஞானிக டுதியி னிந்தையி
னிகழ்விலர் மகிழ்வில ரெனல்வி னைப்பய
னுகர்தலின் மகிழுவர் நோவர் மேற்றமை
யிகழ்பவ ரருநர கெய்த லெண்ணியே. 7

ஆதியா யநாதி யாகி யந்தமா யனந்த மாகிச்
சோதியா யிருளு மாகித் தொந்தமாய்த் தொந்த மில்லா
நீதியாய் நினைந்த தாகி நினைவரி தென்று வேத
மோதிய பரமா னந்த வொளியினை யுளத்துள் வைப்பாம். 8

வாழ்வினான் மந்திரத்தா லியந்திரத்தான் மருந்தினால்
வேள்வியால் விண்ணவரால் வேதனத்தான் மேதையார்
கேள்வியான் மாதவத்தாற் சாதகத்தாற் கீழ்ச்செய்த
ஊழ்விடா செய்தவனை யுண்டறுத்தே விடவேண்டும். 9

பேதமா முலக மெல்லாம் பெற்றவ னொருவ னேயைம்
பூதமே யெவ்வு யிர்க்கும் பொருந்திய வுடல மானாற்
பூதத்திற் சாதி யில்லைப் போதத்திற் சாதி யில்லை
யேதுக்கோ சாதி பேத மென்கொடு பேச லாற்றாய். 10

நண்ணிய காயஞ் சுத்த ஞானியை நழுவும் போது
விண்ணியல் வடக்கே போயென் வெய்யவன் தெற்கே போயென்

புண்ணிய பூமி யாயென் புலையர்தம் மிடத்தே யாயென்
றண்ணிய வழியாற் போயென் றலையினு லுயிர்ப்பப் போயென்.

முன்னே யிறந்த முதற்றனி வித்தா
முன்னே யிறந்துள வொன்றை யுணர்ந்தோன்
றன்னே யிகழ்ந்தவர் சங்கை யறத்தா
மென்னே யிகழ்ந்தன ரென்றன னீசன். 12

நயம்பெருகு வீடுதவு ஞானியை யிகழ்ந்தே
யியம்புமதி கேடரெரி வாய்நிரய மெய்தி
வயங்குகதி ரேனுமொளிர் மாமதியும் வான்மே
லியங்குவர்க ளெவ்வளவு மவ்வளவு மேமுர். 13

சேதப் படாது தினகரனுற் றீயாற் காலாற் செந்துக்கள், சாதப் படாது வெண்ணுறையுஞ் சாரா வாறுந் தரவேண்டா, வோதப் பகுப்பூ தங்களெலா மொளித்து மொளியா தொழிவில் லாப், போதத் தீர்த்த மறிஞர்க்கா மல்லா தவர்க்காம் புனதீர்த்தம். 14

முற்றுணர் ஞானத் தோர்கண் முழுதையு மிறையாய்க் காண்ப
ருற்றுண ரியோகத் தோர்க ளுளத்திலோ ரொளியாய்க் காண்பர்
கற்றுணர் மறையோர் தாங்கள் கைதொழு மனலிற் காண்பர்
மற்றறி விலாதோர் வைத்த பதுமைமுன் வணங்கிக் காண்பார்.

மலக டாதியில் வைத்த மனத்தினே
விலகி மெய்ம்மை யுணர்ந்திடு வித்தக
ரிலகும் யாவரும் யாவையு மாதலா
லுலகெ லாமுண்ட தாமிவ ருண்டதே. 16

படித்தமறை யோர்கள்பல கோடிபல கால
மிடித்தல்கெட வைத்தவர்கள் வேதமுடி வோதி
முடித்தபர முத்தியுணர் வுற்றமுனி வன்கைப்
பிடித்தொருகை யிட்டவர்கள் பெற்றது பெருரே. 17

வைய மாமணி யாதி யாக வழங்கினுர் மக மேறினுர்
துய்ய மாநதி யாடினுர் துணி யார்தவங்க டொகுத் துளார்
மெய்ய மாதிக ளெட்டு மேவிய மெய்யு ணர்ந்தவர் கையிலே
யைய மாத்திரை யிட்ட வர்க்குள தான பேறடை யார்களே.

ஆவ தாவதில தற்ற வன்னர்தம்
பாவம் யாரு மறியப் படாதவர்க்
கேவல் செய்து திரிபவ ரெய்துவார்
மூவர் தேவர் மொழிந்தருண் முத்தியே. 1

ஞாலமுண்டவன் றலையிறைச் சுமப்பன் மெய்ஞ்ஞானி வே
ண்டிய தென்று, ஞாலமுண்டவ னவன்பின்னே திரிகுவ னவன்பத
பொடிக் கென்றான், சிலமொன்றையுந் தெரிவரு ஞானிதன் சே
வடிபணி செய்வாய்,காலிரண்டுமென் றலையவே யென்றனன் கட
லநான் முகத்தோனும். 2

ஒழிக வுடம்பு நிலையதா யுறுமலர் மங்கை யொழிகவே
பழியை விளம்ப வினியவே பகர்க வகத்தை மகிழ்வூரா
மொழியி னுளங்கண் மகிழவே மொழிவ ரிங்கிசை மொழிகளே
யழியு முடம்பி லழிவிலா வறிவை யிறந்த வறிஞரே. 2

மல்லன் ஞாலமுடி மன்னர் தம்மையும் வழுத்து மற்று ப
னத்தினை, னல்லர் தீயரென நாடிடார் பிறரை நாகமேல் விழின
ம் வேகமாய்க், கொல்ல வேலர்புடை சூழினுஞ் சிறிது கூசிடா
மெலிவு கூறிடா, ரல்லவா மென விகற்பியார் சமயவாத ரோ
மறி வாளரே. 2

மாதி யானத்தின் மந்திரத் தாவிடும்
பூதி யால்விடப் போகப் படாதுநா
லோதி யாது முணர்ந்தவ ருள்ளமும்
பேதி யாதிற்கும் பெண்ணெனும் பெயரே. 2

கூடிற் கைப்பொரு ளியாவையுங் கொள்ளுவர்
வீடி லாருயிர் தன்னையும் வீட்டுவ
ராட வற்கிவ் வரிவைய ரொப்பதோர்
கேடு முண்டோ முழுதுங் கெடுப்பதே. 24

படியினிரு மூன்றுமுழ மட்டகலம் வெட்டிப் பழிப்பினவ
ரத்தினமணிப் பீடமதி லிட்டுக், குடதிசையி லாமலரில் வைத்தி
லவ ணத்தைக் கொண்டுபொடி மஞ்சண்மிசை மண்கொடு நிறை
த்தங், கிடமுடைய பீடமது பண்ணிவிழ வங்கை யிரண்டுதிவ
சஞ்செய்தரை சாதிலியன்ற, படிசெய்ததி லாண்டுதொறு நல்வி
ழவு செய்யப் படுமென விதித்தது பழிப்பின் மறையன்றே. 25

சச்சிதா னந்தமாந் தன்னை யெய்தின
னிச்சியா னொருபொரு ளிச்சை செய்யுமேல்
வைச்சபா லடிசிலை மறுத்தி டாமலே
நச்சுநா யல்லது ஞானி யல்லனே. 26

தூமங் காட்டுஞ் சுடுதழ லுண்டென் பதுதுய்ப்பார்
காமங் காட்டு மயினி யுவர்ப்பட் படியேநல்
லேமங் காட்டு ஞானிக ளென்று லிவர் நெஞ்சிற்
காமங் காட்டும் பெற்றிலர் கற்றார் கலையன்றே. 27

ஒளிமணி யெறிதிரை யுவரி யொன்றிட
வளையெறி யுவரிமற் றொன்றில் வானுகத்
தொளைவழி கழிசெறி வென்னத் துர்லபம்
வளமிகு மாநுடப் பிறப்பு வாய்த்தலே. 28

சீரிய குருவினைச் சேர்த றுர்லபங்
கூறிய வறிவவன் கொடுத்த றுர்லபம்
நேரிய பொருணிகழ்த் திடினு நெஞ்சிலே
யாரிய னிலைவர லதுவுந் துர்லபம். 29

[க

வரும்பர நெறிதேர் விலரேனு மாய வாழ்க்கை நிலையாக
விரும்பா திறைவன் பதநோக்கி விரும்புற் றோது மெய்ம்மொழி
யிரும்பா முள்ளத் தவருங்கேட் டின்புற் றென்பெல் லாமுருகி
யரும்பா வங்கங் கண்பனிவந் திடுமே லாத்தர் வாக்கியமாம்.

தோன்றும் யாவும் நிலையா தொலைதலிற்
கான்ற சோறென யாவையுங் கைவிட்டுச்
சான்ற தாந்தமைக் கண்டவர் தம்முரை
யான்ற வாய்மை யருமறை யாவதே. 31

பார்த்த பார்த்தவெல் லாம்பர மாகிய
தீர்த்தன் மேனி யெனத்தெளி வுற்றவர்க்
கார்த்த ரான வவாரு ளிச்செயும்
வார்த்தை யேநல்ல மாமறை யாவவே. 32

சோகப் பந்தந் துறவுசெ யாதே லறமின்றே
லாகத் தந்தக் கரணந் தன்னை யடக்காதேற்
பாகச் செஞ்சொற் பனுவல்க ளேனும் பழுதாகுங்
காகந் தின்கத் தென்பர்கள் கல்விக் கரைகண்டோர். 33

உடம்புடை யோர்கட் குளதாவ தென்று
மிடும்பை யேயின்ப மிலதென் றுணர்க
மடம்படுஞ் சனன மரணநோய் தீரத்
திடம்படு முத்தியே சேரச்சிந் திக்க. 34

உலகெலா முணர்ந்த விடத்திலே யுறங்கி யுறங்கிய விடத்திலே யுணர்வ, ருலகிலெப் பொருளுந் தம்மினுந் தம்மை யுலகினெப் பெருளினுங்காண்ப, ருலகிலெப் பொருளு மன்றியே தம்மை யன்றியொன்றின்றியே யிருப்ப, ருலகமு முயிரும் பரமுமாய் நிகழ்ந்த லொருபொரு ளுணர்ந்தவுத் தமரே. 35

செயலி லோர்செய லின்மையு மொன்றையுஞ்
செயலி லாமையி லேயெச் செயலையு
மயலி லாவகை கண்டவர் வைகனுஞ்
செயலி லேபயின் றுஞ்செயல் செய்கிலார். 36

பகவனைப் பேணுக பல்லுயிர்க் கெல்லா
மகவெனப் புரிகநல் வாய்மை யோம்புக
தகவெனப் பெரியவர்ச் சார்க சந்தத
மிகவினைக் கஞ்சுக வெகுளி யற்றுக. 37

குருடன் புகரா மார்த்தாண்டன் குட்ட ரோகி யாமெஞ்ஞ
புருடன் றலைநோய் புரந்தரற்குப் புயத்தில் வாதந் தக்கற்குச்
சுரநோ யுண்டு கயரோகஞ் சோம னுக்கு நீரிழிவு
வருணற் கிவ்வா றவரர்க்கு நோயுண் டுண்டே மருத்துவரும்.

தீய வசுரர் பகையுண்டு செற்ற மார்வ மிகவுண்டு
நோயுண் டனங்க னுருண்டு நோய்கட் கெல்லாந் தாயான
காய முண்டு கைதொழுவேண் டினரு முண்டு கற்பத்தே
மாயுந் தன்மை யுண்டானல் வானோர்க் கென்னை வளனுண்டே.

பிறந்தவ ரிறத்தல்பிழை யாதென வறிந்தா
ருறுந்துய ரொழிந்தினிய துண்ணுநினை வாரோ
மறந்துவிட யத்தின்மய லுற்றிடுதல் வான்மீ
திறந்தவரை யுச்சிவிழு வோனிடைகொ ளின்பம். 40

பரண மாகிய பெண்டிருஞ் சுற்றமும் பண்டுதங் கையிற் றந்த, விரண மானவை கொண்டிட விவரைவிட் டியம்பிடா திவணேகு, மரண வேதனை யாவரா லறியலா மயங்கியைம் புலனங்

தக், கரண மியாவையுங் கலங்கிட வருந்துயர் கடவுளே யறிகிற்பான். 41

வில்வி ளங்கிய விண்ணவர் மிகுத்தவாழ் நாளு
மல்ல ரும்பக லென்னுமீர் வாளினு லரிந்து
கொல்லும் வெங்கொடுங் கூற்றையார் குலைவுறார் குறுகி
னல்வி ருந்தென வுவந்தெதிர் கொள்ளுவான் ஞானி. 42

பிராணு யாம மென்பதுதான் பிராணன் வசமாக் குதலதுதா
னிரேசா காதி மூன்றவைதா மெழுத்து மூன்றி னுருவாகும்
பராவு மிவையோங் காரமெனப் படமெற் றதனாற் பகர்வுற்ற
பிராணு யாம மோங்கார மயமென் றறிஞர் பேசுவரால். 43

ஊனே யுடம்பு நானல்லே னுரைக்குங் கன்மேந் திரியமலேன்
ஞானேந் திரியங் களுமல்லே னுனு கரணங் களுமல்லேன்
வானே வாயு பதினுனு மல்லேன் மாயை யல்லே னுன்
றூனே பிரம மெனநெஞ்சிற் றரிக்கு மதுதா ரணையாகும். 44

மனித்தனுமல் லேன்றெரியில் வானவனு மல்லேன்
சனித்தழி வுறுஞ்சகல பூதமுமல் லேனு
னுனித்தமறை யான்மன்னி நோக்கரிய நோக்காற்
றனிப்பர மெனத்தெளித லுரணைய தாகும். 45

பூத காரிய மானவெவ் வுடம்பைப் பூதத்தாற் போக்கியைம் பூத, மேது வாகிய மாயையாற் போக்கியுண் டில்லையொன் றது வேறென், றேது மாறருஞ் சேதன மாயையை யுண்மையா யுலப்பிலா வொன்றும், போத மாகிய பரம்பொரு டன்னிறாற் போக்கியப் பரத்தினைத் தரிப்பான். 46

பொருள தாய்நிகழ் விடத்திலப் பொருளுமெய் காண்பது புலத்தியான, மருளுரு மனனஞ்செய்யு மிடத்துமெய் மதிப்பது மனத்தியான, மருளி னுன்மன மிறந்திடத் துளதனை யறிவதாத் துமத் தியானந், தெருள தாகவெவ் விடத்தினுஞ் சிவமெனத் தெளிவது சிவத்தியானம். 47

அச்சமா முடலம்பி ராணனைம் புலன்க ளந்தகாற் கரணமஞ் ஞானத், துச்சமா முடல்கொண் டொழிந்திடுஞ் சீவன் றாலபூதங்கள்சூக் கங்க, ளச்சரா சரமு மீன்றமா மாயை யீசனென்

பேதமொன் றின்றிச், சச்சிதா னந்த மாகிய பரனே தானெனச் சமைவது சமாதி. 48

எற்பட விளங்கும் விவேகவன் னியினு லெண்ணுடைம் பூதத்தை யழித்து, நிற்பன நடப்பன யாவுமற் றவற்றை நேர்மையா மவற்றினே ராக்கி, யற்பமாம் பூதமாயையி லழித்து மாயையாத் மாவிலே யழித்துத், தற்பரப் பொருளாந் தன்னிலே மூன்றைத் தானிறைந் திருப்பது சமாதி. 49

பொன்னிலே பூணும் புவியிலே கடமும் புணரியே தரங்கமும் போல, வென்னிலே தோன்றி யென்னிலே யழியு மெச்சராசரங்களு மெனக்கு, முன்னிலேன் பின்னு மொன்றிலேன் யானே முடிவிலா முதலென மோனந், தன்னிலே தன்னுற் றுணையுணர் தனும்போய்த் தானிறைந் திருப்பது சமாதி. 50

பொறியுறு மனத்தை வாங்கிட நனவு பொன்றிடுங் கனவுதாரணையி, லிறவுறுஞ் சுழுத்தி யாகுதா ரணைதா னிறந்திடுந் தியானத்தி லிருந்தங், குறியறுஞ் சமாதி யத்திலே யழியுந் தோறுறுந் தியானமாந் துரிய, மறிவற விருந்த வதீதமாஞ் சமாதி யருப்பர முணர்ந்திட வழியும். 51

ஞால மமைத்தவ னாரண னீசன்
கால மவத்தைக ணற்குணம் வேதஞ்
சானுல குற்ற சமத்தமு மோமெனு
மூல வெழுத்தொரு மூன்றி னடங்கும். 52

அதுநீ யாயினை யென்றவாக் கியப்பொரு ளறையி
லதுவென் றேதிய பதம்பரம் பரனையே காட்டு
மதினீ யெனும்பத மயல்றுஞ் சீவனைக் காட்டு
மதிலா முயெனும் பதமயிக் கத்தினைக் காட்டும். 53

புருவமத் தியத்தே புலன்கர ணங்கள் பொருந்திய பொழுது சாக் கிரமாங், கருவியிற் றுக்கம் போகிமற் றவைதாங் களத்தினின் றிடுதசை கனவா, மிருதயத் தெல்லா மிறந்திடச் சித்த மொன்றிட நின்றது சுழுத்தி, யொருவிமற் றதுநாபியினுல் விரவி னும்பராய் நிற்பது துரியம். 54

உன்னு காமமுங் கோபமும் லோபமு
மன்னு மோக மதமாற் சரியமுந்

தன்னை மேலெனுந் தம்பம் பொருமையென்
றின்ன வாக்கிடு மெட்டுமின் னுதவாம். 55

யோனியுற் பவித்தனுற் பவித்துண் டாகுதன்
மேனிதான் வளருதல் விளைதல் வற்றுத
லானியா குதலெனு மாறு பாவமு
மூனமா முடம்பிற்கவ் வுணர்விற் கில்லையே. 56

செறிந்தமா யையினு ணீர்தொறுந் தோன்றுந் தினகர னென்னவே சீவன், பிறிந்துசி வனெனப் பெயர்பெறு மவன்று னுண்மையிற் பிரமமே யன்றே, யுறைந்தநீர் சலிக்க வுதயனன் சலித்த லொக்குமே யவன்சலிப் புண்மை, யறிந்தபோ தந்த மாயைபோய்ச் சலியா வமலநற் பிரமமே யாமால். 57

பொய்வண்ண மாகியவைம் பூத மல்லன் பொங்கொளிசேர் மதியல்ல னிரவி யல்ல,னைவண்ணங் களுமல்ல னுருவு மல்ல னருவல்ல னித்தனையு மல்ல னல்ல, னுய்வண்ண மடைந்தவர்க ளருளி னாலே யுணர்வென்னும் விழிதிறந்து நோக்கி யொன்று, யிவ்வண்ண மெனவியம்ப வரிய வீசற் கிதுவண்ண மென்றெங்க னியம்பு மாறே. 58

---

## மெய்ஞ்ஞான விளக்கம்.

உளனமா முடலுந் தானு மொக்கவே யிருக்க மேலாந்
தானதா முயிருந் தானே சாவது செத்தி ருக்கு
மோனமாந் துரியா தீத மதுவினை முழுந்தி யார்ந்த
ஞானநா யகனே யீச னெனமறை நவிலு மன்றே. 1

இந்திரன் செல்வ மாயு மிமையவர் பதங்கண் மாயு
மந்தரம் பொடியாய் வீழு மறிகடல் வறள வாகுஞ்
சந்திர னிரவி மாண்டு தரையது மழியு மென்று
லிந்தநீர்க் குமிழி யாக்கை யியல்பினை யசைத்தற் குண்டோ. 2

தேவின்மா னிடத்திற் றுன்பந் திகழ்வதிப் பரிசே யென்று
லாவகீழ் விலங்கு பக்கி யாதிதா வரமற் றெல்லா
மோவிலாத் துன்ப வெள்ளத் துழைத்தலோ ரளவு முண்டோ
பாவமா நிரயந் தன்னிற் படுதுயர் பகர வேண்டா. 3

எவ்விடத் தினுமெக் காலும் யாவையுந் துன்ப மாணுற்
பொய்வகைப் பிறப்பி றப்புப் போகுமா றதனை நாடி
மைவகைத் துவந்து வங்கண் மயக்கினை யறுத்து றந்தங்
குய்வகைத் திறத்தை யோர்வா னொருப்பட வடுப்ப னையா. 4

வேதமா நாமத் தாலும் வேதமான் மாவி னுண்மை
தீதற வுரைத்த லாலுஞ் செற்றமோ டார்வ மில்லாப்
போதமா மூர்த்தி தேசிற் புரிந்தநூ லாத லாலும்
வேதமா நூலின் றேசு விளம்பலா மளவைத் தன்றே. 5

வேதத்தின் பெருமை வேதந் தன்னாலு முரைக்கொ ணாதா
லோதத்தான் வேறு வல்லா ருலகினி லொருவ ருண்டோ
கோதற்ற வமிர்த ஞானங் குலவுமா மறையி னல்லான்
மீதுற்ற நூலிற் காண்டன் மின்மினி விளக்க மையா. 6

மேனோக்கி யுயிர்த்திடுதற் பிராணனபா னன்றான் மலங்கீழ் நோக்கித் தள்ளும்வியா னன்பி, னாமேனோக்குங் கால்கைமுதற் சேட்டையுதா னன்றா னுடல்வளர்த்திச் சமானனொத்தங் குட னிறைவுண் டாக்குந், தானோக்கு முற்கரனை முதனாகன் கூர்மன் சந்ததங்கண் ணிமைப்பு விக்க றும்மல்கிரி கரன்றான், மேனோக் குங் கொட்டாவி முரிதேவ தத்த னிருந்துடலை வீங்குவித்துத் தனஞ்சயன்பின் போமே. 7

காமக் குரோத லோபமொடு கவலை மோகங் களிக்குமத
மேமத் தினையங் கழித்திடுமாற் சரிய மென்ன வேயிவைதாம்
போமக் குரம்பை தனிற்பூத விகார மாமென் றேயறிந்தோர்
தாமப் பகையை யழித்துணர்வாந் தம்மைக் காண விரும்புவரால்.

சாக்கி ராதிக ளின்றி யெவற்றிலு
நீக்க மில்லறி வாகி நிமலமாய்த்
தாக்கி யாவையுந் தாக்கறு சோதிதா
மாக்கு வாரதி வன்ணாச் சிரமரே. 9

பூத பௌதிக மாய்ப்பொலி பேதமு
மேத மின்றி யிருஞ்சிவ மாய்விடப்
போத மாமனு பூதியிற் கண்டவ
ராதி யாமதி வன்ணாச் சிரமரே. 10

வார ணஞ்செயுட லிந்தி யாதியென வந்த காரிய வுபாதி போய்க், கார ணஞ்சகல வித்து விற்குமிறை யென்ற காரணவு பாதி போய்ப், பூர ணஞ்சுகமெய்ப் போத நம்வடி வெனத்தெ ளிந்தவனு பூதியா, ரார ணம்பகரும் யாவ ரும்பரவு மதிவன் னு ச்சிரம ராவரே. 11

மைய லாகிய வையத் தினைவெறும்
பொய்ய தாய்விட வேபரி பூரண
மெய்ய தாமனு பூதியிற் கண்டவ
ரைய கேளதி வன்னுச் சிரமரே. 12

மனையவனே வாகமகச் சவலையாக மனையிடிந்து விழமாடுங் கெடமுன் றந்த, வனையர்கடன் றனக்கலைக்க வடிமைசாக வரிய விருந் தினர்வரவூர்க் கிறையும் பூண,மனையிலொரு பொருளின்றி வாங்க லாகு மிடந்தேட வழக்கினருந் தடுக்க நின்று,நினைவரிய சலமதிபோற் குலையும் பொல்லா நிலைகுரும்பி தன்றுயர் நினைக்கி லந்தோ. 13

பிணியினால் வலியுங் கேடாம் பிணியினா லழகும் போகுந், துணிவெலாம் பிணியாற் குன்றுந் தொலைவில்லே தனையைச் செய்யுந், தணிவிலா துள்ளே நின்று சாலவு மொறுக்கும் பொல் லாப், பிணியதே யொக்குந் துன்பம் பேசிடிற் பிறிது முண்டோ.

நலமிலா மூப்புத் துன்ப நடைதளர்ந் துரைத ழூத்துச்
சலமதே மிகவுந் தோன்றித் தண்டுகண் ணாகிச் சித்தக்
கலனமே பிறந்து கண்டார் காறித்தங் குமிழும் வண்ண
மலைவெலாஞ் செய்யு மூப்பின் வருந்துய ரந்தோ பாராய். 15

வந்திடு மரணத் துன்ப மறித்துரை செய்யப் போமோ
வுந்திமே லையும் பித்து முணர்வொடு பொறிக லங்கி
நந்திடா விருளே மூடி நாவுலர்ந் தலமந் தென்னே
யிந்தமா விறப்பிற் றுன்பம் பவத்துன்பத் தெண்ம டங்கே. 16

பேதையர்க் கூட றுன்பம் பிரியினங் கதினுந் துன்ப
மேதமில் விழைவிற் காய முழத்தலா லெலையி றுன்பங்
காதலுற் றிடுமவ் வின்பங் கருதின்முள் ளித்தே னென்றுன்
மாதர்தம் பொருட்டா மெய்யே வந்திடு மெங்குந் துன்பம். 17

காலையின் மலாதி துன்பங் கடும்பகற் பசியாற் றுன்ப
மேலவே யிடையி னுள்ள வியாதியான் மிகவுந் துன்ப
மாலையிற் காம வெங்நோய் வந்திடு முறக்கம் பின்பு
கோலிடிற் றுன்ப மல்லாற் குறுகமற் றெருநா ளுண்டோ. 1

சீதமுங் குளிராற் றுன்பஞ் செழும்பனி யதனிற் றுன்பம்
போதவந் தேறும் வாதம் பொறுக்கொணு மிக்க துன்ப
மோதிய கோடைத் தீப்போ லுலைவிலா வழலாற் றுன்ப
மேதுதான் காலத் தின்ப மெப்போதுந் துன்ப மேகாண். 1

பொருளது தேட றுன்பம் பொருந்திடிற் காத்த றுன்பம்
வெருளுறக் கெடினுந் துன்பம் விபத்துவந் தழியிற் றுன்ப
மருளுற மனத்தின் மாளாத் துன்பமே வளர்ப்ப தானாற்
பொருளது துன்ப மெல்லாம் பொதிந்திடும் புஞ்ச மன்றே. 2

---

## தத்துவ ரத்னாவலி.

இதுவன் றன்றென வென்னு மாமொழி
சதிரொன் றன்று சமைந்த பார்வையி
னெதுமுன் கண்டது வெங்க ரந்தது
பொதுவொன் றுண்டுசொல் போத மன்றியே. 1

எல்லா மென்றெழு மென்னை யுங்கெட
வல்லா ராரவர் வாதி லாதவ
ரெல்லா மென்பது மென்கெட் டோபல
வில்லா தாதலி னேக மாயதே. 2

அதுநீ யாயினை யென்ற வாக்கிய
விதியா லேபொருள் வீட தாகுமோ
வெதுநா னாயின னென்ற போதினின்
முதியோன் வாயினின் மோன மாயிற்றே. 3

நானா னெனு நாம வாசக
மூனா நாதொழி யாது ணர்ந்திடி
ஞானே னென்முன் னாய தில்லையோ
மானா தீத மமத்துவ மாயதோ. 4

கோதிலா வமுத ஞானி குரைகழல் குறுகிற் கீழாஞ்
சாதியிற் கடைப்பட் டோர்க ளாகினுந் தலைவ ராவர்
வீதியி லொழுகு நீரு மகழிடை விரவு நீரும்
பாய்தலா னதியி லந்நீர் தீர்த்தமாம் பரிசு போல. 5

வேதத் தால்விதி மிக்க நற்கலை
யோதிப் பேத முரைத்தி ளைத்தலை
வாதை தீர மயக்க மறுத்தவர்
பாதத் தேதலை வைத்த பண்பரோ. 6

இழையார் மொழிபொய்ந் நெறியெய் திலரைக்
கழியார் கவலைப் படுகா மமுறா
ரழியா ருயரார் மன்மெப் பொருளும்
பழியா ரவர்தத் வபரா யணரே. 7

நன்றா தரியார் நலனல்ல செயார்
கன்றா ரவரோ டுகலக் கமுறார்
குன்றார் குறையின் மயில்கொண் டவையு
மொன்றா கவுணர்ந் துகொளுத் தமரே. 8

மதியார் மனைவாழ் வுகண்மன் னரையுந்
துதியார் துயரோ டுதுடக் கறியார்
நிதியான் மகிழார் நினைவற் றவிடம்
பதியா தியத்த வபரா யணரே 9

வேதனை படுத்தினும் விடினு மொப்பவர்
சாதலும் வாழ்தலு மொக்குந் தன்மைய
ரியாதொரு பொருளினு மிசைவி லாதவ
ருதிய மதுதனை யுணர்ந்த வுத்தமர். 10

தெரிதரு மொழியிடைச் செவிடு போலவு
முருகவி ரெரியிடைக் குருடு போலவும்
பரிவுடை யமுதிடைப் பாலர் போலவும்
பெரியவர் தம்மிலக் கணத்தின் பெற்றியே. 11

வையினும் வாழ்த்தினு மலர்கொ டேத்தினும்
வெய்யவா ரெரியிடை வீழ நூக்கினு
மெய்யினு மெறியினு மியாது செய்யினு
நைவொடு மகிழ்விலர் ஞானி சீலமே. 12

நல்லமு தூட்டினு நஞ்சை யூட்டினுந்
துல்லிய மாக்கினுந் தொழிலை மாற்றினுங்
கல்லினும் பொன்னினு மொத்த காட்சியர்
சொல்லிறந் தோரெனத் தொகுத்த தெங்கணும். 1

காலமு மகாலமுங் கருத வின்மையுஞ்
சீலமு மொருவராற் றெறிவொ ணாமையும்
பாலவுன் மத்தப சாச மாவது
மேலவர் தம்மிலக் கணத்தின் பெற்றியே. 1

தறையொடு சயனமு மொக்குந் தன்மையு
முறைபதி யிதுவென வொன்றி லாமையு
முறவொடு பிறரையு மொக்க நோக்கலு
மறிகுறி யிவையறி யறிவி னோர்கட்கே. 1

அகழினு மிகழுஞ் சாந்த மணியினு மடைய வைதிட்
டிகழினும் புரள வெட்டி யிடிப்பினும் பொடிய தாக்கித்
திகழினுஞ் செழுந்தண் மாலை தீயொடு மலத்தை யெயிட்
டிகழினும் பொறுத்த லானல் யோகியைப் போலு ஞாலம். 1

கணக்கண்ணுங் கல்விக் கண்ணுங் காரியத் தியல்பின் க
ணு, மணக்கண்ணு மகளிர் கண்ணு மாநிலத் தனைத்தின் கண்ணு
மிணைக்கண்ணு மிளைஞர் கண்ணு மெங்கண்ணும் யோகி நோ
கிற், பிணக்கண்ணும் பேயின் கண்ணும் பாவைகண் ணிவையு
போலாம். 1

சாதி பேதமே தோதிய சாதிக
ளாதி பேத மிலாமை யறிந்திலர்
ராதி பேத மிலாமை யறிந்தவர்
சாதி பேத மிலாது தரத்தவர். 1

குறியன்று நெறியன்று குணமன்று குணியன்று
பிறிதொன்று மதுவன்று பெரிதன்று சிறிதன்று
புறமன்ற தகமன்று புதிதன்று பழைதன்று
வறிவென்று மறிகின்ற பொருளன்ற தறிவொன்று. 1

படியொன்று மதுவின்றி யடைகின்ற பதமன்றி
யடியின்றி முடியின்றி யருகின்றி நடுவின்றி

வடிவொன்று மதுவின்றி மனமின்றி யுரையின்றி
யுடனென்று மதுவின்றி யுணர்கின்ற பொருளொன்று. 20

போக்கற்றது வரவற்றது புரையற்றது வரையற்றது
வாக்கற்றது மனமற்றது வடிவற்றது படியற்றது
நோக்கற்றது நுணுக்கப்படு பொருண்மற்றெரு பொருளின்
றூக்கற்றது தனையற்றது வெதுமெய்ப்பொரு ளதுதற்பரம். 21

ஒப்பி லமல னேதிவைத்த வுரையை யோத லோது வித்தல்
செப்பும் பொருளைத் திரிவுமறத் தெளிகை பிறரைத்தெளிவிக்கை
தப்பா ததனை மனத்தகத்தே தரிக்கை யெனவுந் தானைந்தாம்
வைப்பா யருந்தா மருந்தாகிச் சிறந்த ஞான மகவினையே. 22

ஒன்றெனி னென்றாய்ப் பலவெனிற் பலவா யுளதெனி னுள தென லாகி, நன்றெனி னன்றாய்த் தீதெனிற் றீதாய் ஞானமு ஞேயமு மெனலா, யன்றெனி னன்று யாமெனி னுமா யதுவிது வுதுவெனு மதுவாய்ப், பின்னொரு பொருளிற் பிறிதென லரிதா ய்ப் பிறிதற்ற பெருமையே பெருமை. 23

வேரொடு தோலுங் கொம்பும் விழுமிய விலைபூக் காயென்
றூர்பவை வெவ்வே ருக வறிந்தவ ரறிந்த தொன்றே
யேர்தரு மரமா மற்ற தன்றென வியம்ப லன்றே
சோர்வற வுண்மை காணுத் துகளுறு சமய மெல்லாம். 24

அருவென்ப ருருவென்ப ரீசன் றன்னை யனேகமு மாமென்ப ரேக மென்பர், கருவென்ப ரெவ்வுயிருங் கடந்தா னென்பர் கண் ணெண்பர் கரியென்பர் கரணி யென்பர், தெருளென்ப ரைம்பூத ஞ் சேரா னென்பர் சீவனே சிவனட்ட மூர்த்தி யென்பர், பொரு ண்முன்பு புகன்ற வற்றைத் தாமுங் கேட்டுப் புகன்றுபுகன் றே விடுவர் பொருள் காணுரே. 25

என்புற மெனச்சிறிது மில்லையென வொண்ணு
தின்புற விழிப்புல னியக்கியய லுண்டா
லன்புறு மவர்க்கெதிர் தமக்கென வகத்தே
பொன்பொதி யிருக்கவுழல் பிச்சைபுகு வாரே. 26

### தத்துவ சித்தி.

வைய நீபொரு ளீமதி நீயெனின்
மெய்யி னுவது வேறுகைம் மாறிலை
ஐய நின்கழல் சேரடி மைத்தொழில்
செய்யு மாறருள் தேசுடை வள்ளலே. 1

---

### தத்துவதேசிகம்.

காவி நேர்தடங் கண்ணியர் மையலை மெய்யெனக் கருதுற் றேன், ஆவி யேயமிர் தேயென வுவந்தரு நாகிடை யாழாமே, கூவி யேதனைத் தந்தெனைக் கொண்டவன் குரைகழல் பரவாதே, பாவி யேனிகழ்ந் தின்னெடு நாளெலாம் பாழிலுக் கிறைத்தேனே.

ஆவ தின்பமா மமிர்தசா கரத்தூ னின்றருந்திட வறியாதே, நாவ றண்டென வுண்மையா ஞானநன் னயனமின் மையினாலே, யாவ ருந்தொழு மிறைவ னென்னுள்ளத் துளே யென்றும் வீற்றி ருக்கப் போய்த், தேவு வந்துவெண் டேரைநீ ரென்று நான் சிந்தைசெய் தழிந்தேனே. 2

### தத்துவமாலை.

கூறும் பரிசுநீ கூறிய கொள்கையு நீ
மாறுங் கொடிய மயக்குநீ-தேறும்
பரிசுநீ யானுற் பரனேயுன் பண்பிங்
குரைசெய்வார் யாரே யுரை. 1

### அனுபூதி நிலைமை.

அன்பு பத்திநல் லாதர மார்வமங் கருத்தி யோடிறநேய
மின்ப மார்விருப் புடனெழிற் காதலு மிராகமோ டிலை யில்லாத்
துன்பி லைசையு மெனவிவை யிசைவற் றிவனைக் கழலுறுபத்திக்
கென்பதாம் பரியாயநற் பெயரென விசைத்தனர் பெரியோரே.

அறுவகைச் சமயத் துறையுமெய்ப் பொருளு மறுபத்து நான் குநற்கலையு, மறைவறப் பயின்று மாசறத் திகழு மதிஞரா மவர் களே யெனினும், குறைவறத் தன்னைக் கொடுத்திடுங் குரவன் குரைகழல் புனைந்தவ ரன்றேற், பறையர் மற்றவரே பறையரே யெனினு மருளுடையவர் பரம்பரரே. 2

மறைக ளீறுவா சாமகோ சரமென மாலயன் மயலெய்த
வறியு மாறொரு வரும்வி கறநிக ழரியவ னவனன்பிற்
செறியு மாசற வுளவிருள் கடியுமத் திகழுளங் குடிகொண்டே
யறையு மாதலி னன்பினன் பெருமையை யுணர்பவ ரெவரந்தோ.

## அதிக்கிருதா மிர்தம்.

சவலை வாதமுஞ் சாற்றிய தர்க்கமுங்
கவலை நூல்களுங் கற்பித வேடமு
மவல ஞானமு மாண்டவ னேவல்செய்
பவரும் வேண்டுவ ரோவிந்தப் பாழ்களே. 1

சத்த நூற்பல கற்குஞ் சழக்கது
மத்தி னுளுள தாமகங் காரமு
முத்த னூர்கழற் கேவன் முயன்றிடும்
பத்தர் பாலுமுண் டோவிந்தப் பாழ்களே. 2

## பேரொளி விளக்கம்.

நாடி னொளிமுற்று மாவன நாத மறையுச்சி சேர்வன
சூடின் மகுடத்தை நேர்வன தூய்நெறி வளர்க்கு நீரண
கூடி னமுதத்தை யீவன கூற வருமொப்பி லாதன
பாடி னளவிற் படாதன பாவை பரபத்தி பாதமே. 1

சித்தத் திருவைச் சிவயோ கினியைத் திகிரிப் படையாளைத் திகழ்நா மகளைத் தெரிவார் தெளிவைத் திசைசூழ் நிலமாதைச், சத்திச் சமைவைத் தவமா னவளைச் சமயங் களின்வேரைத் தனி நா யகியைச் சயமா மகளைச் சகதண் டத்தாயைச், சுத்தி சுடரைச் சுருதிக் குயிலை தொழுவார் பெருவாழ்வைத் துறவித் துணையைப் பிறவிப் பகையைத் தொலையா வமுதத்தைப்; பத்திப் பயனைப் பரபத் தியையெப் பதமுந் தருவாளைப் பரவுந் தொழிலார் படிறொன் றறியார் பவமுங் குறுகாரே. 2

## அனுபவசாரம்.

செய்வன மறையார் மறைவன செய்யார் செகமெலா மழியினு மசையார், மெய்யல துரையார் மேவின பவங்கள் வெந்துவீழ்ந் திடவலால் விழியார், கைதவ மறியார் காதலர் பகைஞர்க் கருளலாற் கருதிட வறியா, ரையநற் சொரூப னடியிணைக் குரிய வழகுறு மன்பரென் பவரே. 3

சாத்திரச் சடிலத் தலைபறி யறியார் சகல வேதாகமப் பொருளை, வார்த்தையொன் றாலே மகிழ்தர வறைவர் மதுரமாஞ் சிலமே மொழிவர், பார்த்தவப் பொழுதே பழவினை யழியப் பண்ணுவர் பயனில மொழியா, ரேத்துதற் கினிய வினையடிக் குரிய வெழின்மிகு மன்ப ரென்பவரே. 4

அன்பி லாதநல் லறங்களு மைவகை வேள்வியும் பிணமேயா, மன்பில் வாய்மையுந் தானமு மொழுக்கமும் விரதமும் பிணமேயாந், துன்பின் ஞானமுந் துகளிலச் சமயமுஞ் சொல்லிடிற் பிணமேயா, மன்பி லாதிய வளம்பொரு ளின்பம்வீ டவற்றினுக் குயிருண்டோ. 5

ஏவ லால்வரு மெண்வகைச் சித்தியு
மோவில் செல்வமு மொன்றுமெய்க் கல்வியுந்
தாவில் வீடதுந் தானெனை யாண்டவ
னேவ லாலிதற் கொப்பிலை யில்லையே. 6

பழுதி லேவல்செய் பாலன் மிசைச் செலும்
வழுவில் காலனு மாண முற்றன
னழிவி லாவம லன்கழற் கேழுய
லொழிவி லேவலுக் கொப்பிலை யில்லையே. 7

## சுவாநுபவ சித்தி.

உலகமா முருவு தானு முணர்பவன் றானு மாகி
யலகிலாப் பரமு மாகி யவைமிகு கண்ணா தாகி
யுலைவிலா வாதி கட்கு மொத்தவை யாகி யன்றுஞ்
சலமிலாச் சங்க ரன்றன் றாளினை வணங்க லுற்றும். 1

கொன்றிடு பவனாய்க் கொலையுறு பவனாய்க் குணமிலி யாய்க்குணி தானாய், வென்றிடு பவனாய்த் தோற்பவ னாகி விரைபவனாய்த்தணி பவனாய், நன்றுடை யவனாய்த் தீயவ னாகி நடுவொரு பொருளில தாகிச், சென்றுறு முணர்வாய்த் திகழ்தர நிகழுந் தேசிகன் றிருவினை யாட்டே. 2

உலகமதா யுயிர்பரமா யுருவி ரண்டென் றுரைளியமா மாயைதனை யுரைக்கநின்றே, யலகிலறி வதுவாகி யனந்தா னந்த

வழிவிலா மெய்யாகி யகண்ட மாகிப், பலவெனலா யொன்றாகிப் பலவொன் றென்னப் பார்ப்பவர்க்கங் கவையவையாய்ப் பார்ப் பா ளுகி, யிலகுவான் றுள்வணங்கி யிவனு மென்ன விங்குருவாய் வந்தான்ற ளிணையடியுள் வைப்பாம். 3

அநுபவ சித்தி.

இறைக ணன்பினை யுரைசெய்து தாமிறைக் கன்பது வில ரேனுந், துறவு நன்றென வுரைசெய்து துறவினி னிலைமைய தி லரேனுங், கறைக ளென்றுள செயல்களின் மூளுமக் கருத்தறு கிலரேனு, மறையி னன்குறு மவர்மொழி யாத்தவாக் கியமென வறையோமே. 1

ஊனெங்கே யுயிரெங்கே யுணர்வெங் கேதா னுயர்வெங் கே யிழிவெங்கே யூர்பே ரெங்கே, நானெங்கே யெனதெங்கே நாநாவெங்கே நலந்தீங்கா மவையெங்கே நாச மெங்கே, வானெ ங்கே வளிதீநீர் மண்ணதெங்கே மாசெங்கே தேசெங்கே வராதே வந்து, தானிங்கே யளித்த மலர்த் தாளேயாகிச் சமைந்திருந்த தல்லதுமற் றறியோ மொன்றும். 2

போத சித்தி.

ஒன்றேயொன் றென்று பாழா யொன்றின்மும் மூன்ற தென்னக், கன்றிய மாயா பேதங் கண்டனு பவத்திற் றீர்ந்தாற் றுன்றிய சுயம்பிர காசத் தொலைவிலா னந்த மாகி, யென்று மோர் படிய தாகி யிருந்திட லாகு மன்றே. 1

ஆதனஞ் சயனம் வாகன மிதியடி யத்திரங் குடையொடா பரண, மீதுவண் டயிலங் குளியொடு பூச்சந் தனமுதன் மேவி யங் கிடுத, லோதுபல் லுரிஞ்ச லொண்பதம் விளக்க லுரைத்த வெற் றிலைதின லிவைதா, மாதிரன் குரவ னரியசன் னிதியி னடி யவ ரறவிடுந் தொழிலே. 2

ஞான சித்தி.

தீர்த்தமர்ச் சனையத்துவா மந்திரஞ் செடியுடற்றிதி செப்பு மார்த்த சாதிபேதத் துடனளவை நூலலைதரு மிகுதர்க்கம் பார்த்திடார் மிகுகுருபர னருளினிற் பரம்பர மதுகாண்பார் போர்த்திடா தவரவையவை பொருளென வுழலுவருலகெல்லாம்.

அறிவினை வடித்து வாயா லகத்தனு பூதி யின்றிச்
செறிதரக் கற்ற தெல்லாஞ் செப்புமூ ணிமித்த மாகி
யிறைகழற் செறிதற் கின்றி யிருமையு மிழந்து வாளா
இறிபடக் கலைகள் கற்றுங் கெடுவதே கெட்டே னந்தோ. 2

தத்துவங் கலையிற் கேட்டுந் தாமது பிறர்க்கு ரைத்து
மெய்த்தனு பூதி யின்கண் வெறுங்குரு டாகி மெய்யே
யுய்த்தவர் போன டித்தங் குளங்குலைந் தகம்பா மூகி
வெத்தமே கழித்து நாளை விடுவதே கலைஞ ரந்தோ. 3

அகத்தினுட் டுயர்வர வயர்வு நீடிடச்
சகத்தினுக் கறிவு நாணுது சாற்றியே
மிகத்தமைத் தெறிவுறுர் மெய்ம்மை போனடித்
திகத்தினிற் றிரிவரீ தென்ன கேடுதான். 4

தன்னெஞ்சந் தனக்குச் சான்றது வாகச் சத்திய நன்குண ராதே, வன்னெஞ்ச னுகித் கூடமே புரிவோன் வஞ்சகக் கூற் றினுங் கொடியோன், பன்னுங்கா லவன்றன் றரிசனம் பரிசனம் பழுதுறு நிரயவே துவுமாம், புன்னெஞ்சா லவனும் போய்நர கெய்திப் பூமியுள் ளளவுமே ருனல். 5

ஞானமா மின்பந் தம்முளத் தின்றி ஞானிகள் வேடமே மருவி, யூனதே வளர்த்தங் குண்டிமை துனத்தின் பொருட்டுற வழித்தரு கின்ற, வீனமாஞ் சோர ஞானிக ணிரய மெய்துவ ரெய்தியங் குழைத்துத், தீனமாந் திரியக்கி யோனியை யடை ந்து செனிப்பது மரிப்பத வர்களே. 6

மறைமுதல் கலைகள் யாவையு முணர்ந்து மாசற வுரைத்து மா சொடுந்தான், கறையுறு விடயக் கடுவிடக் கடலிற் கருத்த ணுத் தினவிழு மாகி, லுறைதரு மவனே கன்மசண் டாள னறி வற மிருமையு மிழந்த பொறியிலி யிவனைப் போலும்பா தகரிப் புவியினி லொருவரு மிலையே. 7

மூலசித்தி.

மூப்புர மெண்ப வவத்தை மூன்றையு
மப்புர மூன்றும்வந் தகில லோகமு
மெய்ப்பட விழுங்குமா லவற்றை வென்றுளா
னப்பா மீசனென் றறைய வேண்டுமோ. 1

ஆன தாகி யழிந்தொழி யாவண
மூனே நானென தென்றுண ராவகை
தான தாகிய தன்மை யளித்திடு
ஞான வானந்த ஞம நவிற்றுவாம். 2

மறைக ளாகம முதற்கலை முழுமையு மயலற மிகவோதிக்
குறைவி லாவகை பொருடனை மதுரமாக் கூறவல் லவரேனு
நிறைவ தாகிய பொருளினுக் குத்தரு நிலையவ ரிலராகி
லறைவ தாகிய வவர்மொழி யாத்தவாக் கியமென வறையேமே.

உளவிரு ளொழிதர வொளிர்பவ னெவனவ
னளவறு மரியநல் லறிவின னெவனவன்
வளவலி யடியவர் மதிநல மெவனவ
னளிதரு மடிதொழு தனமன வரதமும். 4

உண்மையை யுணரு நெஞ்சே யெனக்குறு துணைநீ யானு
லெண்ணரு மெண்ண மெல்லா மெனக்கினி முடிந்த தன்றே
திண்ணிலை யடியர்க் கன்பன் றிருநடன் கழற்க ணன்பே
யெண்ணுமற் றென்றும் வேண்டா விதுவுனை யிரப்ப தென்றும்.

பொறிபுலன் கரணங் காணேன் புணர்தரு விடயங் காணே
னறிவுட னயர்வுங் காணே னகமித மெவையுங் காணேன்
மறவியு நினைவுங் காணேன் வள்ளலார் பார்த்த போதே
யறிவரு மறிவே யான வருள்விழி யாண்ட வாறே. 6

முட்டிய குரம்பையு முனைக்குமுட லியாவும்
பட்டுவிழ வேகொடிய பார்வைகொடு பார்த்தான்
றிட்டிவிட மோகொடிது தேசிகர்தந் நோக்கோ
வட்டவிரி நீருலகின் வாழ்பவர் தமக்கே. 7

உடம்பதென் வடிவ தென்று முலகமெய்ப் பொருள தென்று
மடம்படு மதியி னாலே மயங்கியே கழியு மென்னை
யுடம் பெலாங் கருணையாய வுத்தமன் பார்த்த போதே
யடங்கலு நானே யான வருள்விழி யாண்ட வாறே. 8

ஆநந்த சித்தி.

மண்க லங்கினும் வானது பொய்ப்பினும் வரைகளுந் தடுமாறி
விண்க லங்கினும் விரிசுடர் வீழினும் வேலையும் வறளாய்மற்

றெண்க லங்கினு மிலையிலை யொருதுய ரிதுவுண ரெழினெஞ்சே
கண்க லந்தெமை யாண்டநற் சொரூபநற்கழ லிணைநமக்குண்டே.

---

## வாசுதேவ சதகம்

உற்றவெம் பிறவிப் பௌவங் கடந்துயர் கரையி னேற
நற்றுணைப் புணையாய் நின்ற நன்முனி சுகசொ ரூபக்
குற்றமில் குணத்தெங் கோவைக் குரவனைக் கோதின் ஞானப்
பற்றினைப் பணித்தான் றன்னை வணங்குவன் பகலி ராவே. 1

இல்லையீ ருலகி லின்ப மெனமனத் தெழுந்த போதே
தொல்லைமூ வுலகும் விட்டார் சோறுகான் றதுவு ணுப்போ
னல்லவாங் காம போக நஞ்சென வெறுத்து நீத்தார்
சொல்லொடு மனமி றந்த சுத்தரூ பத்தை யுன்னி. 2

யோகாந்த சரிதை.

அறிவினின் மிக்கனு மரிய யோகியை
மறுவது பேசிடு மறிவில் பாதக
னுறுபுழு நரகின்வீழ்ந் தூழி யூழியங்
கிறுதுயர் படுவதை யியம்ப லாகுமோ. 1

கொடிய மொழிகொடு கோதின் ஞானியை
வடுவது பேசிடு மறிவில் பாதக
னிடைவிடா வெரிநர கத்தின் வீழ்ந்தழிந்
துடுமெதி யளவுமங் குழைத்து மாயுமே. 2

தன்னுணர் பரம யோகி தனக்கிழுக் கதனைச் சொல்லன்
மன்னுறு மறையோர் தம்மை வதைத்தபா தகத்திற் கோடி
சொன்னது கேட்ட லொக்கத் துணிதல்கோ வதையிற் கோடி
யென்னவே மறைக ளெல்லா மெடுத்துரை செய்த வன்றே. 3

தத்துவ வித்தா மேலோன் றனக்கொரு தீமை தன்னைப்
புத்தியா னினையி லுந்தான் பொருட்கள வதனிற் கோடி
மத்தமா மவனிற் கூடின் மத்யபா னத்திற் கோடி
யொத்தபா தகங்க ளென்றே யுறைத்தன மறைக ளன்றே. 4

பெரியனு முனிவன் றன்னைப் பேதைமை யதனின் மிக்குத்
தெரிவிலா தொருவன் சொல்லுந் தீமொழி யதனி னாலே

யரியதீ நரகந் தன்னி னழுந்துமோர் கற்ப மென்று
பொருவிலா மறைக ளெல்லாம் புகன்றிடும் போத மிக்கோய். 6

தேவர்க்குந் தேவ னாகித் திகழ்தரு ஞானி தன்னைப்
பாவத்தி னொருவன் மிக்குப் பண்ணிய நிந்தை சொல்லிற்
றூவற்ற வயன்மா லீசன் றான்முதல் சகத்தி லியார்க்கு
மோவறக் கொடிய நிந்தை யெனமறை யுணர்த்து மன்றே. 7

ஆர்ந்தவா தார சாலத் தழிவிலாப் பதமெ ழுத்து
நேர்ந்திவை யிரண்டு நின்ற விடத்திலே நிறுத்திச் சித்த
மோர்ந்தெழு மோங்கா ரத்தை யுச்சரித் தொளியை நோக்கிச்
சேர்ந்துறத் தியான சீலத் திருப்பது சித்த யோகம். 8

மூலமே தொடங்கி நாத முழங்குமா தார முட்டக்
கோலியே தடவிச் சித்தங் கொண்டுருத் தோறு மேறச்
சீலமா வுச்ச ரித்துத் திகழ்ந்தவோங் காரஞ் சிந்தை
ஞானவா ளொளியை நோக்கி யிருப்பது ஞான யோகம். 9

எழுதலும் விரிதல் கூம்ப லென்றுள விகாரமின்றி
யழிதலு மசைவு மின்றி யசிந்தமா யகண்ட மாகி
முழுமறை மயமாய் நின்ற மொய்கொள்சோ தியினை யுள்ளே
பழுதறச் சமாதி யோடே பார்ப்பது பரம யோகம். 10

போத ரத்னாகரம்.

மமதையோ டகங்கார வன்பிணியு மதமுமானமு மைய லுங் கழிய, வமைவதே மிகவாறு நெஞ்சினனா யறிவிலேனும் வந் தடையு நாளென்றோ, கமல நான்முகன் கண்ணனோ டமரர்கரு து மாறறியாவனை நின்ற, வமலனேயுன தாரருட் கடல் சேர்ந் தாரு மன்பர்தம் மழகுறுந் திரளே. 11

விடய வேட்கையும் வெகுளியு மதியா மேலெழுச்சியு மெனு மிவை யொழிய, வடையு மன்பினோடாறு நெஞ்சினனா யாத னேனும் வந்தடையு நாளென்றோ, குடிய தாகவந் தடிமைகொ ண் டருளுங் குருப ராவருட் குணப்பெருஞ் சொரூபா, தடையி லாவகை யுனதரு ளடியார் சரண பங்கயந் தன்னினின்குறவே.

செருக்குடன் சினமுஞ் செற்றமு மிகலுஞ் தீச்சொலுந் தீச் செயன் முழுதுங், திருக்குறும் பிறப்பு மிறப்புமூப் பொழியச்

சிறியனே னடையு நாளென்றோ, கருக்குழியினி நான் கண்டிடா
வண்ணங் கழலிணை தந்தகற் பகமே, யுருக்கிடு முனதா ளுடைய
நல் லடியா ரொண்கழ னன்குவந் துறவே. 13

மயல கற்றிடு மதிநல மளித்திடு மகிழ்வொடு மடியென்னுஞ்
செயல றுத்திடுஞ் சிவமது திகழ்த் திடுந்திகழ் தருதெளிவாகி
யயல றுத்திடு மகமித முதல்வரு மடையவு மொருநாமா
மியலி சைத்திடு மிறைவன தடியவ ரெழின்மிகு திரடானே. 14

ஆல மார்தரும் பிறவியை யறுத்திடு மன்போடு பகையில்லாச்
சீல மேத ருஞ்சினமுதல் களைதருஞ் சென்றடை பவர்க்கெல்லா
மூலமாகிய வொருபொருண் முழுத்திடு முனிவிலா வருளாய
கோல மார்தரு குருபர னடியவர் குலவிய திரடானே. 15

ஓது நான்மறைப் பொருண்முடி வினையொரு மொழியினை யுரை செய்யுங், காதம் வாதநற் கலையெலாங் கெடக்கருணை யே மிகநல்கும், பேத மாமயற் பேரிருள் கழிதரப் பேரொளி பெரிதோங்க, நாத னூய வந்தநற் சொரூபனல் லடியவர் திர டானே. 16

உரைப்பது ஞானம் போலவே யாகி யுணர்ந்தவர் வேட முங் கொண்டு, நிரைத்துற வகல நீளமுண் டாக நிலவிய கலை களு மொழிந்து, சுரைப்பயி விடங்கள் சுவடுகொண் டெய்திச் சொல்லொடு செயலவை வேறாய்ச், சரித்திடு மவர்க டாமருட் சொரூபன் றமரலா தவர்களென் றறியே. 17

ஊழலால் வருவ தொருபொரு ளில்லை யென்றுரைத் துண் டுடுத் திருக்கக், கேழிலாச் செல்வங் கிடைத்திடு மென்று கிறி படு சாதனை செய்து, பாழுதற் கிறைத்துப் பலாகந் திரியும் பண் பிலாக் கூடாசா ரங்க, டாழ்பவர்க் கருளுந் தலைவனற் சொரூ பன் றமரலா தவர்கடங் குறியே. 18

வடித்திடச் சொல்லி மனம்பறை யறைய மதியிலா தவர் களுக் கினமாய்ப், பிடித்தது பிடித்துப் பிணங்கியாய் வின்றிப் பித்தெனப் பொருள்களும் பிதற்றிப், படித்தவப் பொருளைப் பிறர்க்குரைத் தவர்கள் பக்கமே பிண்டமிட் டொன்று, மடித் தலை யறியா தவங்கழிக் திடுத லடியரல் லாதவர்க் கியல்பே. 19

தத்து வத்தொடு சமதம நியமனு யெவர்க்கு
மொத்த னுக்கிரக பானுவா யொன்றுடுந் தனக்குத்
தொத்து மற்றுறு விடயநிக் கிரகமுடைச் சுபாவ
சுத்த னற்றவன் மற்றவர் சோரஞா னிகளே. 20

சித்த னேயுனை யென்று மிரப்பனுன் றேசி காவுனை யென்று மிரப்பனு, னித்த னேயுனை யென்று மிரப்பனு னின்ம லாவுனையென்று மிரப்பனுன், சுத்த னேயுனை யென்று மிரப்பனுன் சொரூப னேயுனை யென்று மிரப்பனு, னெத்தி னுலுமெப் போது மிரப்பனு னெம்பி ரான்கழற் கெல்லை யன்பதே. 21

தந்தை தாயுறு தாரமு மகவுடன் சாற்றிய திரளெல்லாம், பெந்த மாமுறு பிணியென வறிந்துநான் பேரிடர்க் கடல்வீழ்ந்து, வந்து வந்திட ரின்பமாந் திரைபொர மடிந்தலைந் தழிந்தே விட், டெந்தை யென்னைவந் தாண்டவ னென்பதற் றென்செய்து முடிந் தேனே. 22

காய மானது நீரிடைக் குமிழிபோற்|கழியுமென் றறிந்தேயு
மாயு மூனினை மெய்யென முழுமல வயிறது வளர்த்தற்கே
மாய தீவினை மருவியங் கழிதொழி லவைசெய்து கழிந்தேவிட்
டேயுமாறெனை யாண்டவனென்பதற் றென்செய்து முடிந்தேனே

அறிவது வடிவ தாகி யகமொடு புறமுந் தானு
யுறுமுடல் கரண மாகி யுலகினுக் கொழிவில் சான்று
யிறைவனே யிருந்த தென்ன விறைவனு மவனை நோக்கி
யறைவுறு துரிய மென்ப திதுவென வறிந்து கொண்ணீ.

மையலோ ரிடத்து மின்றி மன்னியே நிகழும் போத
மையவிவ் வுடம்பின் மட்டோ வல்லவோ வதனை நீபார்
பொய்யதா முடலிற் றுக்கொன் றின்றியே புறம்பு முள்ளு
மையம தறவே யெங்கு மாகியே நின்ற தெந்தாய். 25

பின்பொடு முன்பு பக்கம் பெருகிய நடுவு கீழ்மே
லென்பன வறிவுக் குண்டோ வில்லையோ விசைய நீபா
ரின்பம துருவா யெங்கு முகமதா யொழிவிற் றேங்கு
நன்குறு மறிவிற் காணோ னவில்வுறு மவைமற் றெந்தாய்.

ஆதலா லெவையுந் தானே யறிந்தெங்கு மாகி யுள்ள
மோதிய வெவையுந் தோற்றி யொழிவதுந் தன்னி னுகி

நீதியா லெவற்றிற் குந்தா னீசனாய் நிகழும் போத
மேதம தறவெ னக்கு வடிவதா யிருந்த தெந்தாய். 27

பாய்ந்துமா வேழ மொற்றிப் பார்க்குமத் தறுகண் யாளி
தேய்ந்தவழி வுறினுந் தேரை யிரையெனச் செல்லா தற்போ
லாய்ந்த நன்முத்தி யின்ப மருந்திட வுற்ற நீரார்
சாய்ந்துயர் வரினு மொன்றிற் றளர்ந் தெழா ராகி விட்டார். 28

உடலினைப் பேணல் விட்டா ரொன்றிய செல்வம் விட்டார்
விடலருஞ் சுற்றம் விட்டார் வேட்கைவே ரோடும் விட்டா
ரிடனுடைக் குலமும் விட்டா ரியானென தறவே விட்டார்
கடனுடைக் கல்வி விட்டார் கற்பனை பலவும் விட்டார். 29

ஊரொடு பேரும் விட்டா ருலகியன் முழுதும் விட்டா
ராரொடு மார்வம் விட்டா ரதனினுஞ் செற்றம் விட்டார்
பாரொடு விண்ணுந் துன்ப மெனப்பழு தறவே விட்டா
ரோர்திக ழவ்வையும் பேய்த்தே ரெனநகை செய்து விட்டார்.

விரித்த மாயையின் மேவுமை வகையது மொன்றி லொன்றது தூலந், திரித்த பார்வையிற் றிகழ்பவை மிகமிக நுண்ணிதா மவைதம்மைக், கரத்தி னெல்லிபோற் கண்டனு பூதியிற் கழித்திடிற் கண்ணேயா, யிருத்தலாமல துரையினுற கழியுமோ வெலையிலாப் பெருமாயை. 31

தனக்குமுன் பின்னு மொன்றும் புறமதுஞ் சாற்ற லின்றி
யினைத்துமாம் பிரம மீசன் பரமவி காசி யென்ன
வுனப்படும் பொருளோங் காரத் துட்பொரு ளொன்றேங் காரந்
தனைத்திகழ் பிரம முத்தித் தாரக மெனினும் வேதம். 32

அறிவறி யாமை யென்னு மிருமையு மறவ டங்கி
யிருகலாம் பரமா பாவ விருளையுங் கழன்று மிக்குச்
செறிவுறு மறிவ தாகற் பாத்தினைத் திகழும் வண்ண
மிறையொரு மொழிய னித்தா னெறித்தது சிவம தேயாம். 33

மூல மாமறை நான்கு மறிந்தில முன்ன மாகிய மூவ ருணர்ந்திலர், கோது மாகர் கனவினுங் கண்டிலர் கூறு மாறினி மென்னைகொ லிம்பரை, யால மார்பவ மேவிழு வேனுய வழிவிலாவறி வாயமு கார்தருஞ், சீல மாரனு பூதி வியப்புற றெனிவிலேனுக்கெவ் வாறிது வாய்த்ததே. 34

இரப்பதோர் பொருளு மில்லை யிடருட னின்ப மெல்லா
முரக்கமா முடற்க மைந்த வூழ்முறை வந்து போமாற்
புரக்கும்வீ டதுவும் வேண்டேன் புனிதனு ரருளே வேண்டி
யிரப்பனெக் காலு மென்று மெங்குமெவ் வகையி னுந்தான். 35

சொல்லிய வியோம மாய துகளிலாப் பரமா பாவ
வெல்லையுங் கழன்று மிக்கங் கெலையிலாப் பெருங்க ளாகித்
தொல்லைநற் பரம தாநற் சோதியைப் பாரா யென்று
மெல்லவே யுரைத்தா னீசன் மிளிர்ந்தது சிவம தேயாய். 36

ஊனிறந் துயிரி றந்தங் குளமிறந் துணர்வி றந்து
தானுயர் பரமி றந்து தகுமன முதலி றந்து
வான்முதன் முழுதி றந்து வளரொளி யாகி நின்ற
தானிறந் திருந்த வின்பந் தனையுரை செய்ய லாமோ. 37

மணம தாயெழும் வித்திசெய் மருவுல கெவையும்
வணமி லாதொரு வடிவுகொ டெனதுள மருவுங்
குணமி லாதொரு குணகிரி யுருவல துலகென்
றணவு போது மலையிலை யதிசய மிதுவே. 38

இதமு மீள்வுறு மனிதமெ னிருமையு மறவே
யுதவு நாயக னுருவினை யுனியுனி வியவா
வெதுசெய் தாயென வறைவது மறிகிலே னிறைவா
பதம தாகிய பதுமவல் லபமெது பகர்வேன். 39

உதயவத் தமன மின்றி யொளிருநற் சொருப மாய
நிதியினைக் கண்ட போதே நின்மலா விதுநா ளெல்லை
யிதுவெனக் கண்டு வந்த யாவுமெங் கொளித்த தந்தோ
சதுமறைக் கெட்டா வுன்றன் சரணவல் லபமி தென்னே. 40

ஞான ஞேயமு ஞாதுரு வறிவரு முழுது
மான பேரரு ளுருவுகொண் டெனதுள முறையு
ஞான நாயக னலமிகு திருவுரு வதுவே
யான வாவிது வதிசய யதிசய மிகவே. 41

ஓலிக ளாயெழு முலகெனும் வித்திகண் முழுது
மலகி லாவரு ளுருவுகொண் டெனதுள முறையு
நலவொனுயக னுருவல துலகம தெனவே
யிலகு போது மிலையிலை மதிசய மிகவே. 42

பரிச மாயெழும் வித்திசெய் பகருல கெவையு
மரைசெ ஞருயி ரறிவுறு மெனதுள முறையும்
புரிச ஞர்புக ழுருவல துலகம தெனவே
வரைசெய் போது மிலையிலை யிதுவென வளமே. 43

உருவ மாயெழும் வித்திசெ யுலகெவை முழுது
மரிய வாரரு ளுருவுகொண் டெனதுள முறையு
முரிய தேசிக னுருவல துலகம தெனவே
யுரைசெய் போது மிலையிலை யதிசய முறவே. 44

இரத மாயெழும் வித்திசெ யுலகெவை முழுதும்
வரத மார்திரு வுருவுகொ டெனதுள மருவுங்
குரவ ஞர்குரை கழலை துலகம தெனவே
யுரைசெய் போது மிலையிலை யிதுவதி சயமே. 45

ஆனைகாண் குருடர் போல வறுவகை வாத பேத
ஊனதே பொருள தென்றிங் குழைத்தன னுவமை யில்லா
மானிட னாகி வந்தான் வள்ளலை மருவி டாதே
கானனீ ரயின்று தாகந் தீர்வுறக் கருதி னேனே. 46

கற்பிதப் பொறிக டம்மைக் கடவுளாக் கருதித்தொல்லை
யுற்பவந் தன்னு ளின்றே யுழைத்தன னுவமையில்லாத்
தற்பதப் பொருளாய் நின்ற தம்பிரான் றாடொ ழாதே
புற்புதக் கனவிற் பொன்னாற் பூண்செயக் கருதி னேனே. 47

என்னுளே யீறி லாத வின்பமா மிறைவ னென்று
மன்னியே யிருக்க மூடர் மொழிகளை மருவிக் கேட்டுப்
பின்னமா யிருளிற் றூங்கிப் பிறிதா யுளத்தி ருந்த
கன்னலை யருந்தி டாதே காஞ்சிரை விருப்பி னேனே. 48

உரைத்தொறு முன்னுந் தோறு முணர்தொறுந் தித்தித் துள்ளே
திருத்துறு மமிர்தா மீசன் றிகழ்ந்தினி திருக்க வென்று
யிளைத்துறு சமய வாத விடர் கடல் விழுந்து தேமாங்
கரத்துறு கனியி ருக்கக் கற்கடித் தெயிறிற் றேனே. 49

அன்ப தின்றியே யறைக்குறற் சாதன முழுதுடை யவர்க ட்கு, மின்ப னல்வெறு வெளிப்படு தின்றில னிசைத்தவை முழு தின்றி, யன்ப தொன்றையு முடையவர்க் கவன்வெளிப் பட்டவ

ரிதஞ்செய்தா, லன்பி னன்பெரு மைத்திற மொருவரா லறைந்
திடு மளவன்றே. 50

காயநீர்க் குமிழி யதினுறு மின்பங் கானலிற் புனலது தன
க்கங், காயவத் துயர மளவிலே யதுநீ யாய்வுரு மையினழிந் தற்
ருய், நீயினிக் கவலே மயல்களைத் தவிர்ந்து நெஞ்சமே வந்தெனக்
குடன்பட், டாயநற் சொரூபற் கன்பதே யிசைந்தா லாயாதே
தார்நமக் கெதிரே. 51

---

## நாராயண மனனம்.

ஆதித் திருநான் மறையின்க ணதுநீ யாகின் ருயென்று
போதிக் கின்ற வாக்கியங்க டம்மிற் ரேன்றும் பொருளதனு[து
லோதற் கரிய பரனையுமிங் குயிரா முணர்வொன் றையுமோர்ந்
பேதிப் பில்லா வகையெழுந்த வறிவு வீடு பேருமால். 1

ஆனந்தந் தானென்று மகிலசக மித்தனையுந்
தானந்த மில்லாத்தன் காரியமென் றுன்றனக்கு
மானந்தா னேயென்று மறையின்முடி வறையுமது
கோனந்தன் மகனுகிக் குலவுமவ னெனக்குறியாய். 2

அதுவென்று நீயென்று மறைந்தவரும் பதமிரண்டு
மிதுவொன்ருய் வுறப்யட்ட திப்போதிக் கினியிதனு
லெதுவந்த பயனென்னி னிரண்டாலுந் திரண்டபொருள்
பொதுவின்றி யொன்ருகை பொருண்முடிவு புகலுங்கால். 3

### மெய்ம்மொழிச் சரிதை.

பொருவிலா வுலகை மூடிப் பொலிந்துள விருளையெல்லா
மிரவிதா னீக்கி யெங்கும் விளக்கிய வியல்பே யென்ன
வுருவிலா மாயை யென்னு மோங்கிருள் கழித்தப் போதே
திரமதா மறிவைக் காட்டுந் தேசிகன் றேசி கன்ருன். 4

பிறிந்திடக் கடைந்த வெண்ணெய் பின்புமோ ரதனிற் கூடிச்
செறிந்திடா வாறு போலத் தேகமுந் தேகி தானும்
பிறிந்திடப் பார்த்த பின்பு பெயர்த்ததி னிற்பி னுங்கேள்
செறிந்திடா வாறு செய்யுந் தேசிகன் றேசி கன்ருன். 5

அடங்குதீக் கடைந்த பின்புக் காட்டமா கரித்தல் போல
நுடங்கிமுன் கிடந்த சீவ னுண்மைதீர்ந் தெழுந்தி ருந்து

வன்னகா லாச்சிரமஞ் சமய மாறு வகுத்தவற்றி னாசாரங்
குறிகண் மற்றும், பின்னமா யிடவுலகர் மொழிவ ரென்றும் பெ
ருகாத குறையாத பெரிய சோதி, மன்னவே கருணையினான் மனி
தனாய்வந் தாண்ட வன்றன் மலரடிக ளடையா ளந்தான், சொ
ன்னவா சாரமவ னடியா ரேவற் றொழிலெனவே யறிந்தோமற்
றறியோ மொன்றும். 4

ஆரணமெய்ப் பொருளுரைத்த தறிந்தோ மென்ப ராகமங்
க ளவையென்ப ரங்க மென்ப, ரோணமா மிருதிபுரா ணங்கண்
மற்று மியல்புடைநூல் பலவுலகை ரியம்பா நிற்பர், காரணமா யி
வையனைத்துங் கண்ட சோதி கருணையினான் மானிடனாய் வந்
தாட் கொண்ட, பூரணனா ரொருமொழியாற் பொருணா மாய்நம்
புரையறுமென் றறிந்தோமற் றறியே மொன்றும். 5

ஆகாய கமனாதி விபவ மென்ப ரணுவாதி நிதியடைத லென்
பர் சாலப், போகாத கருமமெலாம் புணர்க்குஞ் சத்தி மானாகை
செல்வமெனப் புகலா நிற்பர், பாகாய வுணர்வின்பன் பாரில் வந்
தாள் பரமகரு ணாகரன்றன் பதத்தே னுண்டு, சோகாதி கெடுஞ்
செல்வ மல்லாச் செல்வந் துரிசெனவே யறிந்தோமற் றறியோ
மொன்றும். 6

ஓங்குபர மயனென்பர் நெடுமா லென்ப ருருத்திரனுஞ் சிவ
னென்பர் சத்தி யென்ப, ராங்கருகன் புத்தனென மொழியா
நிற்ப ருருவாகுஞ் சிவம்பிரமங் கால மென்பர், நாங்களிவை யனை
த்துமாய் நின்ற சோதி ஞாலமதின் மானிடனாய் வந்தாட் கொ
ண்டு, தேங்கமழ்செந் தாமரைத்தாள் சென்னி சூட்டுஞ் செழுங்
குருவென் றறிந்தோமற் றறியோ மொன்றும். 7

ஒன்றென்பர் பலவென்ப ருபய மென்ப ருருவென்ப ரரு
வென்ப ரியோக மென்ப, ரன்றென்பர் சூனியமே யென்ப ரன்றி
யறிவென்ப ரறிவிறந்த பொருளொன் றென்ப ரொன்றொன்றை
யொவ்வாம லோதா நிற்ப ருலகரிவை யனைத்துமாய் நின்ற
சோதி, யின்றெம்மை யாளமா னிடனாய் வந்த விறையென்றே
யறிந்தோமற் றறியோ மொன்றும். 8

மேவரும்வீ டதுசுவர்க்கம் பிரம லோகம் விளங்கியபொன்
னெயில்வட்ட முலோகா லோகந், தாவருநற் சிவபுரம்வை குந்

தமற்றுந் தகவுலகர் பலபலவுஞ் சாற்று நிற்ப, ராவலினை யனை த்துமா யன்றி நின்றே யருள தனுன் மானிடனாய் வந்தாட் கொ ண்ட, தேவனடித் தாமரையே சிந்தையா விடாத் தெரிதரவை யறிந்தோமற் றறியோ மொன்றும். 9

## சிவப்பிரகாச தரிசனம்.

யாதொன் றின்றிக் கண்காணு செவிதான் கேளா மனமறியா
தியாதொன் றின்றிச் சுவைநாவு மறியா கந்த மூக்கறியா [ட்
தியாதொன் றுண்டா வவையிவைதா னறியு மதுவே சிவமென்றி
டோது மறையீ றாகமங்க ளொப்பி லுண்மைப் பொருளிதுவே.

## சமயாசாரம்.

அறிவென்ப தியாதோ வென்னி னறிகின்றோன் றனையுந் தன்கட்
பிறவியும் பிறப்புஞ் சாவும் பிறப்பது நிலையும் பேறு
நெறியினாற் பாசம் விடும் வீட்டினி னிலையு மெய்ம்மை
யறிவதா மறிவிவ் வாறு மறியாமை யதுவா மென்றான். 1

தனதறி வறிவி லாமை தானறி வென்ப னென்று
னனவையுங் கனவை யுந்தா னனவிலோ ருதல்போன் ஞானங்
கனவுதா னனவு மற்றக் கனவையுங் காணு தாற்போன்
மனமறி வறிவி லாமை மறியாமை மயக்க மென்றான். 2

## தத்துவதீபிகை

ஆதலான் மைந்த வறைந்ததத் துவங்க ளறிவிலா மையிதுவு வதுபோற், பேதமாய்த் தோன்றும் பெருமயல் கழியப் பேசி னத் தனைபிறி தில்லை, வாதிலா ஞான மயமதா யொழியா மதுர சிற் கனககக் கடலா, யேதுமோ ரவத்தை கருமிலா வுண்மை யிலங்குதத் துவமென வறிக. 1

## வீட்டுநெறி.

என்பொடு தோரைம் பிறைச்சி மயிரெனப்
பொன்படு பூமி பொருந்திய கூறே. 1

மூத்திரஞ் சுக்கில மூளை யொடுநிணம்
பேர்த்தெழு சோரியு நீரின் கூறே. 2

பசியே சோம்பு நித்திரை மறவி
வசிதரு மைதுன மங்கியின் வகையே. 3

ஓங்க லோட வுரைத்த விருத்தல்
வாங்க லென்றிவை வாயுவின் கூறே. 4

குரோத முலோப மிலச்சை பயமொடு
கிரோதமின் மோக நீள்விசும் பாமே. 5

## ஞானசாரம்.

நனவொடு கனவே நன்கெழு மொடுக்க ஞானமாந் துரிய மற் றதீத, மௌனமிவை யைந்து மவத்தையாய் மாறி யழிதலா லிவைபொரு ளன்று, னினைவருஞ் சிவந்தா னவத்தையோர் காலு மின்றியே யொருமையாய் கிகழுந், தனதியல் பரன்ற ஞகமமெ ல்லாந் தாமெழில்பெற வுறுமால். 1

## சதகம்.

நித்த நிர்க்குண நிரஞ்சன மனந்த நிரவய வம்புரம் பரநிரு பஞ், சுத்தமேகமா னந்தநற்சோதி சாந்தஞ் சூக்கும மக்கரம், தர்க்கம் பந்தம் புராண மெய்ப்பொருவிதீர் பொருளெம் புலன்க டாமறியாப் போதரூப, மித்தனைத் திறமும் வேதத்தில் விளம்பும் விமல மாகிய பிரமமிங் கிதுவே. 1

## நித்தியானந்த சரிதை.

அறிகின்ற வறிவுதன்னை யளக்கின்ற புலனென் றஞ்சிச்
செறிகின்ற காரணத்திற் றெளிகின்ற போதமென்றிக்
குறிகளைக் கடந்து நின்ற குறைவிலா வமுதந் தன்னைப்
பெருதவஞ் செய்தார்க் கன்றிப் பேசிட லாவதன்றே. 1

## அநுபூதிவிளக்கம்.

அருந்துயர்க் கிடமா யந்த காரமே மூடி யொன்றுந்
தெரிந்திடற் கின்றி நின்றே திகழுமா யைக்கு மேலாய்
விரிந்தநற் போத மாகி விளங்கிடுந் துரிய மெய்யே
தெரிந்திடக் கண்ட போதே திகழுநன் முத்தி யன்றே. 1

சாற்றிய பிறவித் துன்பந் தந்திடு மவத்தை மூன்று
மாற்றவங் கவைதா மாறி யழிந்திட வழியொன் றின்றித்
தோற்றிய வவற்றின் சான்றாய்த் துளக்கறு துரிய போதப்[னே.
போற்றிமெய் கண்டோர் தங்கள் பெருமைநாம் புகல்வ தென்

## முகுந்தப்பிரகாசம்.

அன்று பஞ்சவர்க் கரியதூ தறலாலரிய பாண்டவர் தூ
னென் பேரு, மொன்று பார்த்தனுக் கூருந்தேர்ப் பகராயோ,
பார்த்த சாரதி யெனும் பேரு, மென்று மீசனுக் கெலியே
மறைக ளிசைக்கு மாதலி னன்பர்தம் பெருமை, யொன்று மா
றை யோதுமா றறியா வோத வல்லவ ருலகினுங் கெவரே.

மிகுதி கூரியங் கன்பனை டயுனன் வெகுண்டு தூணினை
தட்டியங் கொட்ட, வகமெ லாமகிழ்ச் சுருகுமன் பனுக்கா
ன்று தூணினி லாதிநற் பிரம, மொடுமொ கென்றிட முழங்
யே தோன்ற விரைத லான்முக முடலம்வே றுருவாய்ச், சக
தாய்த்திடத் தோன்றலா லன்பர்தஞ் சிறப்பினைச் சாற்றுவ
ரெவரோ.

## சொருபானந்த தரிசனம்.

சாத்த மும்பிட சாயகன் சொருபனு மங்கலை நவின்றேத்தி
யார்த் தெழுந்தமுன் பெழுகென வுருகியங் கங்கள் விண்டு
தூறிப், பேர்த்தோர் போதினும் பிறிதொரு பொருளறப் பே
ருட் பெருமான்றன், கீர்த்தி பாடிட விரும்புவ னதுவலாற் கே
ட்கவும் வேண்டேனே.

## தத்துவசாரம்.

உடையி முந்தவன் கையேபோ லதனிரீ யூழி யூழி
யடைதரு மிடுக்க ணித்த வழுதினு மினியி னெஞ்சே
முடிவொடு முதலு மில்லா முழுமுதற் சொருபம் கன்பே
யிடைதா வேண்டு மென்றே மிகமிக விரப்ப னன்னே. 1

## தத்துவ சூளாமணி.

பானுவம்புலி யிருளதாய்த் திசைகெடப் பாணியுற்றமுலாகி
யானவங் கியுங்குணங் கெடக்குளிர்ந்த மற்றடங்கலு நிலைமாறித்
தானழிந்திடு பொழுதினு மொருதுய ரிலையிலை தனிநெஞ்சே
யூனழிந்திடு பொழுதினுஞ் சொருபனை யுவந்து கண்டிடு கின்றே.

## சிவானந்த நிலயம்.

மானு நான்முகத் தரியநற் பாதம் வழியெ லாங்குழி யாக
வொ ரிரவுஞ், சோனு மன்பர்நற் றுதுமாய்ப் பரவை கோயில்
சென்றுமுர் திட்டனு முன்னஞ், சானு சங்கிலிக் கொற்றிபூ சத

னிற் சந்து செய்துழந் திட்டதுங் கண்டாற், கோனு மன்பர்தங் குலவிய பெருமை கூற வல்லவர் குவலயத் தெவரே. 1

பத்தி யாகுமெய்க் கடலிடை யெழுதரு மமுதுநற் பரமென்று, மெய்த்த பத்திநன் பாலிடை யெழுதரும் வெண்ணெயா மவனென்று, மூய்த்த பத்திநல் லுளத்தினர்க் கடியர்போ லுழிதரு மிறை யென்றுஞ், சுத்த ஞானிகண் மொழிவர்க டேளறச் சுருதியுஞ் சொலுந் தானே. 2

திகழு மாத்தவாக் கியத்தொரு மொழியினிற் சித்தியாம் பொருள் போலப், பகரு மாகமப் பரப்பெலா மோதினும் பலிக்குமா றதுமுண்டோ, புகழுந் தேசிகன் புரணபூ ரணக்கழற் பொற்புடை யமுதுண்டோர், மகிழும் வாக்கிய மாதலா லம்மொழி மகிமையை யறிவாரார். 3

குரவ னேகுறி யேதுமி லாச்சிவ
னுரிய சத்தியே யொப்பிலா வம்பிகை
கருது மைந்தரே கந்தர்வி நாயகர்
பெரிய சுற்றமும் பேணுமப் பத்தரே. 4

## அனந்தபோதம்.

துரியங்கொள் வடிவன்று துரியம்பின் விடநின்ற
பிறிவன்று பெயர்வன்று பெயர்வற்ற விடமன்ற
தரியன்ற தயனன்ற தானென்ற வவனன்று
செறிவன்ற தகல்வன்று சிவமன்றி யுளதன்று. 1

அகமென்ற வரும்பதத்தின் பொருடா ணுக்கை யிந்திரிய மனம்புத்தி யுயிராங் காரந், தகவொன்று திரளன்றி யுணர்ந்து வேறாந் தன்மையுடைச் சிவனேயே சாற்று மற்றை, யிகநின்ற சிவமெனுநற் பதமும் பஞ்சத் தொழில்செய்தோர் தொழிலில்லா விமல வீசன், றெகவந்த சிவாயவெனும் பதமிரண்டின் சொன்னவுபா திகள்கழிந்தாற் சுகசிற் சத்தே. 2

சனித்திடுஞ் சராச ரத்திற் றன்மிக வரிய தொன்றே
மனித்தரா யறிவுண் டாகை மற்றதி லரிய தென்று
மனித்தமி றன்னை யாயு மறிவதி னரிய தையா
வினித்தமா மின்பங் காண்பா ரியாரினு மரிய ரன்றே. 3

அருணெறி யறிந்து சார்வா ரவர்களா யிரத்தி ஞென்றுங்
குருநெறி யறிந்து சார்வார் குருநெறி கூடு வாரிங்
பொருணெறி யறிந்து சார்வார் புகலினு மிரத்தி ஞென்றுங்
கருநெறி கடக்கின் றூரைக் காணமற் றரிதே யன்றே.

அந்தக ரறுவ ரானையினைத் தடவி யந்த வவ்வடிவை
யிந்த வடிவே யானையென விகலைப் புரியு மாறேபோற்
றந்த மறிவிற் றத்துவத்தைச் சார்ந்து சமய மாறுக்கி
வந்து வாது புரிந்தலறி மரிப்பர் வாத கற்பனையால்.

## அருணெறி விளக்கம்.

கருத்தெ லாங்கரைக் தருகினைக் திடுவார் கழலினை கண்
கண் டெப்பார், வருத்தமெய் திடுவார் வள்ளலே யென்னு மகிழ
வார் புகழுவார் வாழ்வார், சிரித்துபின் றழுவார் செயதுரை யி
ந்து சித்திரம் போலவே நிற்பார், திருத்தியென் றனையாள் செ
யகற் சொரூபன் றிகழுநல் லடியவர் திரளே.

தோத்திரப் பொருளைச் சொல்லுவார் கேட்பார் கடரு
கழல்களை முன்னே, நேத்திய வுரைக ளூடனிசைத் திடுவா ரெ
கிய பொருளைமெச் சிடுவா, ரோர்ந்துள மகிழ்வா ரொருவரு
கொருவ ருறவுறத் தழுவுவா ருவப்பார், பார்த்துவாழ்ந் தி
வார் பரமசற் சொரூபன் பதுவடி யார்திரட் பரிசே.

அருந்துயர்ப் பிறப்பே யாக வரியவீ டதுவே யாகப்
பொருந்துமற் றவற்றி னுமா காதெனும் பொருண்மை வேண்டு
திருந்துநற் கழல்கட் கன்பு தினந்தினம வளர்ந்து ளோங்க [
வருநதவர்க் கரசே நரயேற் கருளிட வேண்டும் வேண்டும்.

ஓது நீதியு மொழுக்கமும் விழுப்பமு முடலழி தருபோழ்து
மேது மொன்றனை யின்றிய நிலைமையும் யானென நினையாது
வோது ஞானமு மமுதநி லமுமொழி விரதமு முடையோர்க
ளாதி யாகுநல் லவர்களாத் தர்களென வறைகுவர் பெரியோ

## ஞானோபதேசம்.

எண்ணரும் பிறப்பி றப்போ டிவைதருபல் யோனி யெய்திக்
கண்ணெதிர் கண்ட தன்றிக் காண்கிலா வழிவி லேனைத்
தண்ணளி தந்து தன்று ளளித்தருள் செய்த ஞானப்
புண்ணிய னவனே யேத்திப் போக்கினம் பிறவி யெல்லாம்.

## தத்துவ ரத்னாகரம்.

வாக்கொடு மனமு மிறந்ததி மதுர வாரியா யொழிவற நிறை ந்து, போக்கொடு வரவ வின்றிய வமுதைப் பூரண மாகவுண் டவர்தாம், வீக்கிய கான வீரெனும் விடய மேவுற முயல் வரோ முயலி, ஞேக்குறு மந்த ஞானியு நாயு மொத்திடும் வாசி யொன் றிலதே. 1

## தத்துவ போதம்.

விளங்கிய கலைகட் கெல்லா மிறையதும் வேத நன்னூல்
களங்கமில் பொருளா ஞானக் கண்ணதும் வேத நன்னூ
லளந்தறி வொண்ணு வின்ப மளிப்பதும் வேத நன்னூ
லுளந்தெளி பவனே வேதத் தொப்புமற் றெங்கே யெங்கே. 1

## ஞானசூளாமணி.

ஆத்த வாக்கிய மருமறை யாகமப் பொருள்களின் முடி வாகச், சேர்த்த நற்சொரு பானு பவத்தினைத் திகழ்த்திடு மத ஞலே, யார்த்த வாயிரங் கோடி நூல் களினவ ரமுதமா மொழி யொன்றைப், பார்த்து மாசினற் பரமதாய் வாழலாம் பழுதற விதுமெய்யே. 1

சத்தையாய்ப் பரையா யிருந்துள சுருதி தணிந்தநற் பரம் பொரு டன்னை, வித்தக மாகக் கேட்டுமப் பொருளை விரித்துரை செய்துமெய் யாக, வத்திறந் தமக்கே யனுபவ மாகும் பரிச தென் றுணர்கில ரையோ, கத்துதல் பொருளாக் காகளம் போ லக் கதறியே விடுவதே யென்னே. 2

பாருளார் விசும்பி னுள்ளார் பாதாளத் துள்ளா ரெல்லாஞ்
சாருமா றறியா துன்னைத் தாக்தடு மாற வென்னைப்
பாருளே வினவி வந்தாள் பாமநின் கழல்கட் கன்பு
கூருமா விரும்பு வாருங் குறிப்பரோ பிறிது மொன்றை. 3

எவ்வகைப் பொருளு மிறைவனற் கழலா யிருந்தவா றென் னென வியப்பார், கைவகைப் பொருளா யெவர்க்குமொத் திரு ப்பக் கண்டிடா மையினெனக் கனும்வார், தெய்வநற் கழல்கள் செய்யும்வல் லபத்தைத் தெளியுமோ தானெனத் திகைப்பா, ரெவ்வகைச் செயலு மிழந்திருந் திடுவா ரிதுவிறை யடியவர்க் கியல்பே. 4

கண்க ளித்திட வந்துநற் கருணைக் கழல்கள் சூட்டிய க
வுளை யொழிய, மண்டு தித்திடு மாலய னாளுய் வந்து தோன்,
னும் வணங்குவ னேதா, னென்ட ரக்கழ லருளிறை யொழி
வேக தேசமோர் பொருளுமுண் டாகக், கண்டு கேட்டிடுஞ் ச
லை நாய்களை நான் கனவு தன்னினுங் காணவஞ் சுவனே.

---

## வினாவிளக்கம்.

அறிபவன் குறையு ஞான மறிவிப்போன் குறையு மார்க்கத்
தறிவதன் குறையும் வையத் தருந்தவக் குறையு மன்றே
வறிவறி விப்போன் ஞான மறிவின்றேன் றவமிக் நான்குங்
குறைவிலா நெறியு ளார்க்குக் காடெலாம் வீடதன்றே.

ஒன்றெ டொன் றெவ்வா வறிவுக ளெனிக்கும் பொருட
னியல்புவே றுகா, தொன்றவப் பொருளி னியல்பினு லறியு ம
வன்றே வுண்மையா மறிவா, மின்றிய பொருளை யுளதென்
மூளதை யிலதென்று முணருணர் வொழித்து, முன்றிகழ் கு
வோ டளவைதன் றேர்ச்சி மூன்றினு லறிவது மார்க்கம்.

அறைந்தவெச் சமயக் கலையினு மெடுத்துக் காட்டலா ய
மறை முடிவிற், சிறந்தநற் பொருளாய்ச் சிவனரி யயனுற் செ
பிய வருத்தமு மாகித், துறந்துமற் றவிரோ தத்தையே அவ
தோர் சொல்லிடும் பொருளுமா மொன்றை, நிறைந்ததைத் த
த்தின் மணியெனக் காட்டு நீதிசன் மார்க்கத்தி னியல்பே.

அரியவெட் டெட்டாங் கலைகளு மறியா தவருமொத் த
வுற வரிதாய்த், தெரிவுறத் திரித்துத் தேசிகன் றிகழ்த்திற் தெ
ளிதா வெவர்க்குமொத் தெளிதாய்க், கருவறப் பிறவிக் கட
லைக் கடிந்து கணத்தினிற் பரத்தினைக் காட்டற், குரியமற் ற
வே யமலபோ தகமென் றுணர்ந்தவ ருரைத்திடு நெறியே.

மூலமாங் கலைக ளியாவையு மோதி முடிக்கிடும் பொருளும
யுணர்ந்தோர், சாலவே யாறுந் தன்மையாய் வருத்த மென்ப
தாமென்று மிலதாய்க், கோலமாங் குரவன் கூறுமோர் மொழி
யால் விளங்கிடுங் கொள்கையா நெறியே, சிலமார்க் குளமுக் கெ
ளிதரும் புதல்வ திகழுசன் மார்க்கமென் றறியே.

சுட்டிய பொருள்க ளியாவையு மின்றித் துரிசற வெவையு மங் கதுவாய்க், கட்டொடு வீடு காரண கருமங் கழன்றொரு கலை களா லுணராய்ப், பட்டிடும் பொருளு மின்றியே கணத்திற் பரம ன்ற னருளினாற் பலிக்குக், தட்டிலா நெறியே ததுவவி ரோத மாகிய தத்துவ நெறியே. 6

மழித்தனீட் டுதலாம் வரைவினும் படாது மயக்கமற் றுல கினு முயர்ந்தோர், பழித்திடு மூளத்து மாசினை யொழித்துப் பரமதத் துவனையுள் ளத்தே, விழித்திடக் காட்டும் விமலமா நெ றியே விளங்குசன் மார்க்கவே தனமென், றளித்திடு மறைகளீ றொடா கமங்க ளருந்தவர் துணிந்தது மதுவே. 7

பேதமென் பதுவு மபேதமென் பதுவும் பிறிதுள மதங்களு மவற்றி, னீதியென் பதுவு நிகழ்த்துதத் துவங்க ளவத்தைக ணி றைத்தகோண் முழுது, மேதமொன் றறவே யெவற்றையு மிட ங்கண் டிதுவிது வெனவுணர்ந் திடலா, யோதுமொன் றுனு மு ணர்ந்திடப் படாத வதுமுத்திக் குண்மையா நெறியே. 8

செய்வதே தவமாய்ச் செறிவது விடுவ தின்றியே சகலசங் கற்பப், பொய்யதா மொழுக்கப் புலமைய தறவே போதமாய் மெய்யொழுக் கதுவாய்க், கையினு மலகம் போலவே வீட்டைக் காட்டவும் வல்லதே ததுவே, மெய்யதாம் வேத வேதன மல்லா தவையெலாம் வேதன மறியே. 9

மெய்யுணர் வொழியா ஞானம்விஞ் ஞானம் விமலபோ தக மதா மற்று, முய்தரு நெறிநற் சிவகதி யுபாய முபதேச முய ர்சிவ ஞான, மையமி லவிரோ தம்பர மார்த்த மரியதத் துவநெ றி பிரமத், தெய்வநன் விச்சை சொரூப விச்சை யெனத் திகழு சன் மார்க்கநற் பெயரே. 10

வேதனம் பரம வேதனம் விமல வேதனம் வேதவே தனமற், றோதரு மான்ம வேதனஞ் சிவவே தனமுட னுண்மைவே தன மா, மேதமில் பிரம வேதனம் வியர்த்த வேதனஞ் சொரூபவே தனமென், றோதரு முண்மை யுணர்ந்திடு நெறிக்கங் குணர்ந்தவ ருரைத்தவப் பெயரே. 11

உரைத்தநூன் முழுதுந் தமக்கென வுணர்ந்த
னன்மைகண் டுவப்பர், வரைத்திட வொன்றி னொ

ழுதா மாதலின் மாறுகொண் டயரார், திரித்திறைப் பொழுதிற்
சிற்சுக மளிப்பர் தேசகா லாதியாற் றிருப்ப, ரொருத்தரு மறியா
வொழிவிலா வுண்மை யுத்தம நெறியினர்க் கியல்பே. 12

ஆதலா லமல ரல்லா தவரையு மறிஞர் தங்க
ளோதரு மரிய சீலத் தன்மையு முணர்த்தி னற்போ
னீதியா லறிஞ ரேவற் சிறப்பையு நிகழ நாமேற்
காதியே யளவி லாத வமுதனை யருள வேண்டும். 13

நிராகரணம்.

சாத்திரத் தாலே யுண்மை தானறி வுறலா மென்னிற்
சாத்திரம் பயின்றா ரெல்லாந் தம்மைத்தா முணராப் பாடென்
சாத்திரச் சடலை விட்டுத் தாமுண்மை யுணர்வுற் றோர்க்கு
வார்த்தையொன் றிலை நீர்க்கால் வரம்பினால் செய்வதென்னே.

தம்மைமெய் யுணர்ந்த வுண்மைத் தன்மையா மவர்கள் கூடி
யுண்மையாம் பொருள் பாராட்டி யுவத்தலு முயர்ந்த ஞானச்
செம்மையா மாத்தர் வாய்மைத் திருமொழி யமுத மாந்தி
மெய்ம்மைகொண் டாட லாலும் வீதரா கத்தர் வாதம். 2

பயனி லாமொழி பாராட்டு மந்தனை
மயம் பெய்யுக லென்றுகன் மாதவ
ரயமிலா வீத ராகவா தத்தினாற்
பயன தாமின்பம் வீடெனப் பார்ப்பரே. 3

சிவப்பிரகாசம்.

பிரம சாரியே யிழிதொழில் புரியுமேற் பதிதன் பெரியவில்
லவ னிலைகுலைக் கிழிதரிற் பதிதன், வாம தாகிய வனத்தவ னில்
லறிற் பதிதன் வரமதாஞ் சன்னி யாசிகீழ் வுற்றறிற் பதித, னா
ம தாயவன் றுச்சிர மத்தினைக் கடந்தோ னுரைத்த வற்றிழிச் சிட்
டசா ரத்திலே யுறுமேற், கருது றுவகை பதிதரிற் பதிதனு மவ
னைக் காணல் கேட்டல்செய் தவர்களும் பதிதரே கண்டாய். 1

வேதவா கமங்கண் மிருதியும் புராண மிக்கவெக் கலைகளும்
பயின்று, போதமே சொல்லிப் போதமங் குணராப் புலையரும்
கழுதையு நிகராங், கோதிலா வாசங் குங்குமம் பனிநன் குலவிய

புழுகினு முழுது, மேதமே சுமந்த கழுதையிங் கிவனி னேற்ற
மாம் வஞ்சமின் மையினல். 2

---

## அவிசாராத போதம்.

பன்னிய மறைமீ ருகிப் பனுவற்கட் டளேயின் றன்மை
யுன்னிய வனுபூ திக்க ணுணரும்வா தனேயு மாய்ந்த
மன்னிய சிறப்பா லிஃதின் வான்பொருள் கொள்வர் நல்லோர்
துன்னிய குற்றந் தேடிச் சொல்லுவர் சிறியோ ரன்றே. 1

நற்பொரு ளெங்குங் கொண்டு நன்றலா தெங்கு நீக்கி
யற்புத வண்டே யென்ன வரும்பயன் கொள்வ தன்றித்
தற்பொரு ளென்று மற்றைத் தமதலாப் பொருள தென்றும்
பற்பல கூறிக் காதும் பரிசது பெரியோர்க் கின்றே. 2

எடுத்தவெம் மதமெந் நூல்க ளியாவையுந் தமதா யாங்கு
வடித்தநற் பொருளே கொண்டு வளம்பட மகிழ்வ தல்லாற்
படித்தொரு பொருளேப் பற்றிப் பாங்கினு லதிலொ துங்கிப்
பிடித்தது பிடித்துக் காதும் பேதைமை பெரியோர்க் கின்றே. 3

## ஆன்மப் பிரகாசம்.

ஓங்கு முயிர்க ளொருகாலு முணரும் வண்ண முணராமற்
பாங்கி லகமுழு தினேயு மறைத்த படலப் பெருமாயை
யாங்கு வேரோ டழியும்வண மகமும் புறமு மறநிறைந்து
நீங்கி லின்பந் திகழொளியாஞ் சிவப்பிர காசத் தினேப் பணிவாம்.

அறுகான் கதுவும் புருடனெடு பாழும் வியோம மானது
மங், கிறவே கழனற் கண்மெனனு நல் வியோமா தீத மெனுநா
ன்கு, மறவே நிறைந்து திகழ்குரவ னருளா லடியேன் கண்கா
ணப், பெறவே யுருவாய் வந்தாண்ட பெரிய சொரூபன் ருள்
பணிவாம். 2

## ஞான சாரம்.

கல்லவா முலக நூல்க ளோதினு ஞான நூலைச்
சொல்லுவா ரரிது சொன்னுற் பொருட்டுணி வரிது தேர்ந்து
சொல்லவப் பொருளே வாயாற் செப்புவ தரிது செப்ப
வல்லரே யெனினு மற்றப் பயன்றுய்ப்பா ரரியர் மன்னே. 1

தாக்கிய தனக்கின் னாத தான்பிறர்க் கொழிக வென்று
மாக்கமு மறிவுஞ் சேரு மழகுறு நெறியீ தன்றே. 2

நற்றவர் தம்மைச் சேர்மி னல்வொஞ் சித்த மஞ்சிப்
பெற்றதி லமைந்து வாழ்மின் பிறர்பொருள் வெஃகா தேய்மின்
மற்றவர் நலமுந் தீங்குந் தம்மில்வந் தனபோற் காண்மின்
கற்றவ ரெல்லாம் போன கருதரு நெறியு மீதால். 3

## மெய்னெறி.

அவமற மறைக ளெல்லா மருவமென் றுரைக்கு நீய
புவியினி லுருவ தாகிப் புகுந்துறத் தேடி யெங்கு
நவமுறு மன்ப ருள்ள நாடியே வாழ்தி யென்று
லவமறு மன்பர் மேன்மை யறிபவ ரெங்கே யெங்கே. 1

## தத்துவ தரிசனம்.

நற்றவ வேடங் கொண்டற முரைத்து நானிலத் துணவதின் பொருட்டாய், பற்றறு மவர்கள் போலவே நடித்துப் பற்றவா வொடும்பிறர் கடையின், முற்றவே யுழலு மூடரு மவரை யடைந்திடு மூடரு மொக்கச், சுற்றியே பாசப் பவக்கடற் பட்டுக் கறங்கெனச் சுழல்வர்வீ டிலரே. 1

## இதோப தேசம்.

கொல்லாதான் றன்மந் தன்மேற் கூறின்மற் றில்லைத் தன்மங்
கொல்லாதான் செல்வந் தன்மேற் குலவயத் தில்லைச் செல்வங்
கொல்லாதான் றுறவு தன்மேற் கொள்ளலாந் துறவு மில்லைக்
கொல்லாதான் ஞானந் தன்மேற் கூர்த்தமெய்ஞ் ஞான மில்லை. 1

## திட்டாந்த மாலை.

நெய்யொடு பாலுஞ் சோறு நிறையவே யுண்ட தம்பி
ஞெய்யொடு வெய்ய கூழை நுகர்ந்திடா வாறு போல
வையமி லறிவா நந்தத் தமிர்திரு லார்ந்த ஞானி
செய்திடான் கரும மொன்றுஞ் செய்யுமேல் யோகி யல்லன். 1

## பூரணப்பிரகாசம்.

ஊனுமெய்ப் பொறியு முறுபுல னைவையு முட்கர ணங்களு முயிர்ப்பு, மானமும் பகுதி யிருவினை கால மாயனும் மாயை யைம்பூதர், தானெனிற் சமமா மவைதனித் தனியே தான்பொருள்

போனடத் திடுதன்,ஞானநற் றலைவ னுயிரினை னையுமா ளுயகன்
றன்சுதந் தாமே. 1

இருகையு மெடுத்து நின்றங் கெழின்மறை யிசைத்த தொன்றே
பொருவிலா கமபு ராண முதலெலாம் புகன்ற தொன்றே
யரியய னமர ரெல்லா மறுதிசெய் தற்ற தொன்றே
யருபர னேவ றன்மை லரும்பொரு ளில்லை யென்றே. 2

தெய்வ வாணிநற் செந்தமி ழியலிசை தெரிந்துபா டைகளும்
போய், மெய்ய தாகவெப் பொருள்களும் விளங்கிட விளம்பவல்
லவரே னு, மையி லாவகை மொழிவதோன் றவர்செயன் மருவ
லொன் றெனி லஃதை, யைய முவரின் முதல்வரே மொழியினு
மாத்தவாக் கியமென்னுர். 3

பத்தியும் பத்திப் பரிசது முயனும் பண்பது மவன்விளை
யாட்டாகு, சித்தியுஞ் சித்தித் திறங்களின் பிறிவுஞ் செல்வமு
மவன்விளை யாட்டா, முத்தியு முத்திப் பயனுற மொழியும் விர
கது மவன்விளை யாட்டா, மெத்திற மதுவு மொழிவற நிகழு மி
றையவன் றிருவிளை யாட்டே. 4

உலகவன் விளையாட் டலவன் விளையாட் டுறுபொறி புல
னவன் விளையாட், டிலங்கிய நனவு கனவவன் விளையாட் டிருளு
றுமயலவன் விளையாட், டலர்தரு துரிய மதுவவன் விளையாட்
டதுகழல் வதுவவன் விளையாட், டலையற முழுது மொளியு
டையமல னிலங்கிய திருவிளை யாட்டே. 5

பிறப்பவன் விளையாட் டிறப்பொடு பிணியும் பேறிழ வவன்
விளை யாட்டா, மறப்பொடு நினைப்பு மகிழ்ச்சியுங் கலுழ்ச்சி மய
க்கமுந் தெளிவவன் விளையாட் டுறக்கமு முணர்ச்சி யொடுக்க
மும் விரிவு முண்டது மவன்விளை யாட்டா, மிறைத்தனை யொ
ழிவ தறமுழு தெனையா ளிறையவன் றன் திருவிளை யாட்டே. 6

கல்வியுங் கல்விப் பயனதும் பயனுங் கதிகளு மவன்விளை
யாட்டாகு,செல்வமுஞ திருவுந் திகழ்தரு மழகுஞ் சீலமு மவன்
விளையாட்டா, மல்லலுந் துயரு மழிபசி பிணியு மடைதரு மிடி
யவன் விளையாட், டெல்லையி லகிலத் தெழுதரு மெவையு மிறை
யவன் திருவிளை யாட்டே. 7

எறும்பது கடைகுஞ் சரமுத லான யோனிக ளவன்விளை யாட்டா, லிறும்புது முதற்கற் பகமுடி வாகி நாடுதா பரமவன் விளையாட், டறங்களு மறங்க ளமரரோ டசுர ரடையவு மவன் விளையாட்டா, முறும்பொருண் முழுது மெனையுய வருளு மொழிவறு பரன் விளையாட்டே. 8

## தத்துவப் பிரகாசம்.

மறையீ றறையா கமங்களுடன் மாகர் முனிவர் மற்றெவரு
முறையோ வெனவின் றினுமயா மூட னேனைப் பொருளாக
வறைதா என்கூவி யந்தாட்கொண் டடிய னேனைத் தானுக்கிச்
செறிவாய் நிறைந்து தித்திக்குஞ் சிவப்பிரகாசன் தாள்பணிவாம்.

## தத்துவ சரிதை

அந்தமு முதலு மின்றியே திகழு மமலமா மமுதினை யார்ந்து, பெந்தமும் வீடு மின்றியே திகழும் பெரியவப் பிரமவித் தர்கடா, முந்தொறு விடயத் துழல்வரோ கெட்டே யுழல்வரே லெனினவர் தாமு, முந்திய மலமே சுவடுகொ டுழலூர்ப் பன்றியு மன்றியொப் பிலதே. 1

தலையினைப் பறிப்பார் சடையினைப் பறிப்பார் தண்டுதோல் குண்டிகை சுமப்பார், நிலையினைத் துறப்பார் நியதியுற் றிளைப் பார் நித்தமோ ரூர்புகத் திரிவார், கலையினைத் துறப்பார் கலையினைத் தரிப்பார் கல்லொடு குவட்டிடைத் துயில்வா, ரெலையிலைத் துயரா விறைவனெட் டிடுமோ விவரிளைத் திடுவதே யென்னே. 2

செந்துகில் புனைவார் சீவரந் தரிப்பார் திரிதண்டோ டொரு தண்டு பிடிப்பார், தந்தமுத் திரைகள் பலபல தரிப்பார் தவமெனத் தம்முடம் பொறுப்பார், முந்துகாய் கிழங்கோ டிலையயின் றிடுவார் மோனமென் பார்கத றிடுவா, ரிந்தவா குலத்தா லீசன்மே விடுமோ விவர்துய ருறுவதே னந்தோ. 3

## பூரண போதம்.

ஞானவா ரமுதச் சுவையினைச் செவியா லைம்பெறக் கேட்டவப் பொழுதே, யானகா ரியமு மாகுகா ரியமு மாய்வறக் கடவகா ரியமும், கானனீ ராயே கழிதரு மென்றுற் களிதர வமுதமே யுண்ட, ஞானிதா னிழியும் விடயமே விடுமோ நண்ணிடின் ஞானியன் றவனே. 1

மித்தினுள அன்பமெடுக் கப்பாந்தா னேசுகசிற் சத்தாக விருக்குங் காணே. 7

பன்னுவர் பலபல தத்து வங்களை
மன்னிய பரமுண ராத மாந்தர்க
டன்னிலே தனையுணர் கின்ற போதினி
னன்னிய மிதுவென வறைய லானதோ. 8

கோனுமத் திரைநுரை குமிழி கொள்ளேதான்
வேலையிற் பிறிதென விளம்ப லானதோ
சானுதத் துவம்பல சாற்று மாயினு
மூலநற் பரமதே முடிவி னுள்ளதே. 9

பரத்தினைத் தேடியிப் பாரெ ரைத்திரித்
திரைத்தினைத் திடுவரீ தென்ன கேடுதான்
காத்தினு மலகம தென்னக் காட்டிடுங்
குருத்தனைத் தேடிடார் கொச்சை மாந்தரே. 10

அடுத்தவை யூத்தை யாக்கு மூடம்பைகல் லறிவாற் றேலை
விடுத்துளே வேறு வேறு நாம்பினே டிரைச்சி யென்பாற்
றொடுத்தவிம் மாலை தன்னைத் தாய்தன்மை நோக்கித் துன்ப
மெடுத்தவிக் காம பாச மெறிகில ரென்னே யென்னே. 11

அன்னமூர் தேனும் பாலு மமுதுடன் குழைத்திட் டாலு
முன்னமே மலத்தைத் தின்ற சுணங்கன்மோ வாது போலத்
தன்னையே யுணர்ந்த ஞானி தன்னையே யருளினாலும்
பின்னையு முணரார் மாந்தர் வினைசெய்த பெருமையாலே. 12

## மெய்ம்மொழி.

பண்டொ னெனதென் றெண்ணப் பண்ணிய மாயாக் கூட்டங்
கண்டிலே னென்னே யுன்றன் கண்வழி யிருந்த வாறெ
னண்டனே யண்டர் கோவே யளவில்பே ரறிவு தானே
யெண்டிசை யேழு மேனு மெங்கனு நிறைந்த தன்றே. 1

பிறப்பதும் பாசத் தாலே பிணிப்பதும் பாசத் தாலே
மறப்பதும் பாசத் தாலே மயக்கமும் பாசத் தாலே
யிறப்பதும் பாசத் தாலே யிளைப்பதும் பாசத் தாலே
துறப்பதும் பாசத் தாலே தொழிலெலாம் பாசத் தாலே. 2

கரையின்மெய்ஞ் ஞான விப்பப் பிரமமாங் கடலி னுள்ளே
யொருவனை துன்னி லொன்றி யொழிந்தே மலமேப் பெற்றா
பெரியபே றெல்லாம் பெற்றான் பேணுமக் குலமுந் தாய்தாம்
பொருவிலா விருக்கு தேசம் புண்ணிய தேச மன்றே.

சிவனும் பரனும் வேறே யென்றுபேதந் தெரியக் கேளீர்
சிவனாம் பரத்தின் வேறாந் தெரிந்துகா ரியமதாகு
மேவிய காரி யத்தா லிக்காலி னியு மென்போற்
பாவிய கடம்போ லாகி நாசமும் பயமு முண்டாம்.

இப்பரன் தன்னிற் பேத மிசைக்கிடா தெங்ங னென்னிற்
செப்பரு மாயை யாலே நிகைத்திடல் பேத மாகு
மப்பொரு டானே யென்று மளவிலத் தனித மாகு
மொப்பரு முலகம் பக்த மில்லையென் றுணர வேண்டும்.

ஆதலா லாகா யத்திற் கடாகாயம் வேறு றாற்போற்
பேதமி லான்மாச் சிவன் பரனெனப் பிராந்தி யாலே
யோதிட வின்ற தன்றி யுபாதியைப் பேத மின்று
நீதியி னின்ற சிவ னிலைமைய திவனே மன்றே.

## சித்தாந்த தீபிகை

ஒன்றிய தோலை நீக்க லொன்றிய வாவே யென்னத்
தான்றிய பறவை யெல்லாக் துவக்கற விட்ட தாயோன்
மன்றிய பிறவி மாளக் கருதரு முத்தி காண்பா
னின்றவச் சமய மெல்லா நெறிபட வாய துற்றான்.

பாலனும் பருவ மாயும் பன்னிய குமார மாயுங்
கோலவெவ் வனமு மாயுங் குலவிய கலனு மாயும்
வாலிய செல்வ மாயும் வலியுட னிளைத்து மாயுஞ்
சாலவே யின்னு லக்கத் தானிலை யாமை யன்றே.

தேடிய பொருளு மாயுந் திகழ்ந்திடுங் கல்வி மாயு
நாடிய வீர மாயு நலந்திகழ் குணமு மாயுங்
கூடிய சுற்ற மாயுங் கொண்டாடு மினைத்து மாயு
நீடிய ஞால மெல்லா நிலையாமை யமமென் றோராய்.

நேதி நேதிசெய் தெமைவரக் பெத்தினை விகழ்சகலமு நீக்கப்
பேத மாண்டபி னின்றது வெதுவது பிரமமென் றிதெற்றுப்

போத சஞ்செய்த விரகுமா வாக்கியப் புரையறு பொருளுக்கு
நேதி யாமுறை யுதவியென் றுபநிட நிகழ்த்துத றவிராதே. 4

ஓதிய கால மூன்று முணர்ந்துரை செய்த லானு
நீதியா லெல்லா நூலி னிலைவுதா னிகழ்த்த லானுங்
காதுறா வியாது மஃதின் கருத்தறி யாமை யானும்
வேதமே நூல்கட் கெல்லா மிக்கது வேறு முண்டோ. 5

பேதமு மபேதக் தானும் பெருகிய வுபய மற்று
மோதிய யாவும் வேத முரைத்திடு மல்லா நூல்க
ளோதமா மோரொன் றைத்தா னிசைத்தல தறியா வென்றால்
வேதமே யெல்லாங் காட்டும் விளக்கெனப் படுவ தையா. 6

சிவஞான நிலயம்.

தோமறு ஞானியைத் துகளு ரைத்தவ
ரேமுறக் கேட்டவ ரிசைந்தி ருந்தவ
ராமென மதித்தவ ரவரிற் கூடியோர்
தாமிவர் பஞ்சபா தகரிற் றண்ணியோர். 1

உள்ளத்தே யுணர்வு கட்ட யோகியி னிந்தை கேட்கிற்
றுள்ளாத்தஞ் செவி புதைத்துத் தூரத்தாம் போவ தேயாங்
கள்ளத்தார் தம்மைக் காணல் கருதுதன் மொழிதல் வேண்டா
வெள்ளற்பா தகரைக் கோற லறத்தையும் வித்த தன்றே. 2

ஆடையு மலருஞ் சாந்து மகிற்புகை தூப முன்னாக்
கோடிவே தியரைப் பூசை குறைவறச் செய்த றானும்
பீடுறு ஞானி தன்கைப் பிடிதிடு பிச்சை தானு
நாடிடிற் சமம தென்றே நாதனு னவினு மன்றே. 3

ஓதிய பரம யோகி யுண்டதெவ் வுலக மூண்ட
தாதலா லவனைப் பூசித் தவனுல கங்கண் மூன்றுங்
கோதிலாச் சிவன்மா லோடெங் கூடவே குறைவில் பூசை
காதலாற் செய்தா னென்றே யருளினன் கருணை வாரி. 4

காணுறி லெழுந்தி ருத்தல் காதலித் தெதிரே செல்லல்
பேணிநன் மொழிகள் சொல்லல் பின்புபோய்ச் செல்ல நிற்ற
லாணியா ஞானிக் கிவ்வா றனைவு செய்தன் மெய்யே
பேணியாம் பரக திக்கட் கேறுவோற் கென்றா னீசன். 5

## ஞான சூரியன்.

என்றுமோர் தன்மை யாகு மெழிலறி வுருவ தாகிப்
பொன்றுபூ தாதி யுந்தா னுகியே புரையொன் றின்றி
நின்றபே ரின்ப நாத னிலவுநா மகட்குக் கேள்வன்
பொன்றிகழ் தாமரைத் தாள் பொலிவுறச் சென்னி வைப்பாம்.

உடலை யொண்பொரு ளினையுல கியல்பினை யுயர்குல நெறி தன்னை, யடையு மைந்தர்தாய் தந்தைநன் மனையென வறைதரு மிவர்தம்மை, விடவி கழ்ந்திறை கழலிணை மருவிய விமலர் தங் களையெல்லா, முடைய நன்குறு மொழிமறை முனிவர்க ளுரைப்பராத் தர்களென்றே. 2

---

## தனிப்பாடற்றிரட்டு.

### ஔவையார்—இனியது.

இனியது கேட்கிற் றனிநெடு வேலோய்
இனிது வினிது ஏகாந்த மினிது
அதனினு மினிது ஆதியைத் தொழுதல்
அதனினு மினிது அறிவினர்ச் சேர்தல்
அதனினு மினிது அறிவுள் ளாரைக்
கனவினு நனவினுங் காண்பது தானே. 1

### பெரியது.

பெரியது கேட்கி னெரிதவழ் வேலோய்
பெரிது பெரிது புவனம் பெரிது
புவனமோ நான்முகன் படைப்பு
நான்முகன் கரியமா லுந்தி வந்தோன்
கரியமாலோ வலைகடற் றுயின்றோன்
அலைகடலோ குறுமுனி கையி லடக்கம்
குறுமுனியோ கலசத்திற் பிறந்தோன்
கலசமோ புவியிற் சிறுமண்
புவியோ வரவினுக் கொருதலை பாரம்
அரவோ வுமையவள் சிறுவிரல் மோதிரம்
உமையோ விறைவர் பாகத் தொடுக்கம்
இறைவரோ தொண்ட ருள்ளத் தொடுக்கம்
தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே. 2

அரியது.

அரியது கேட்கின் வரிவடி வேலோய்
அரிதரிது மானுட ராத லரிது
மானுட ராயினுங் கூன்குருடு செவிடு
பேடு நீக்கிப் பிறத்த லரிது
பேடு நீக்கிப் பிறந்த காலையும்
ஞானமுங் கல்வியும் நயத்த லரிது
ஞானமுங் கல்வியு நயந்த காலையும்
தானமுந் தவமுந் தான்செய லரிது
தானமுந் தவமுந் தான்செய்வ ராயின்
வானவர் நாடு வழிதிறந் திடுமே. 3

மாடில்லான் வாழ்வு மதியில்லான் வாணிபநன்
றூடில்லான் செங்கோ னடாத்துவதுங்-கூடுங்
குருவில்லா வித்தை குணமில்லாப் பெண்டு
விருந்தில்லான் வீடும் விழல். 4

நிழலருமை வெய்யலிலே நின்றறிமி னீசன்
கழலருமை வெவ்வினையிற் காண்மின்-பழகுதமிழ்ச்
சொல்லருமை நாலிரண்டிற் சோமன் கொடையருமை
புல்லரிடத் தேயறிமின் போய். 5

ஈதலறந் தீவினைவிட் டீட்டல்பொரு ளெஞ்ஞான்றுங்
காத லிருவர் கருத்தொருமித்-தாதரவு
பட்டதே யின்பம் பரனைநினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு. 6

இட்டமுட னென்றலையி லின்னபடி யென்றெழுதி
விட்டசிவ னுஞ்செத்து விட்டானோ-முட்டமுட்டப்
பஞ்சமே யானாலும் பாரமவ னுக்கன்றாய்
நெஞ்சமே யஞ்சாதே நீ. (ஔவையார்.) 7

அத்தி முதலெறும்பீ றானவுயி ரத்தனைக்குஞ்
சித்த மகிழ்ந்தளிக்குந் தேசிகன்-முற்றவே
கற்பித்தான் போனானோ காக்கக் கடனிலையோ
வற்பனோ யன்னா யான். (உப்பை.) 8

கருப்பைக்குள் முட்டைக்குங் கல்லினுட் டேரைக்கும்
விருப்புற் றமுதளிக்கு மெய்யன்-உருப்பெற்றால்
ஊட்டி வளர்க்கானோ வோகெடுவா யன்னாய்கேள்
வாட்ட முனக்கேன் மகிழ். (அதிகமான்.) 9

சண்டைப்பைக் குள்ளுயிர்தன் றாயருந்தத் தானருந்தும்
அண்டத் துயிர்பிழைப்ப தாச்சரியம்-மண்டி
அலைகின்ற வன்னா யானுடைய வுண்மை
நிலைகண்டு நீயறிந்து நில். (உறவை.) 10

கண்ணுழையாக் காட்டிற் கருங்கற் றவளைக்கும்
வுண்ணும் படியறிந் தூட்டுமவர்-கண்ணும்
நமக்குப் படியளப்பார் நாரியோர் பாகர்
தமக்குத் தொழிலென்ன தான். (கபிலர்.) 11

அன்னை வயிற்றி லருத்தி வளர்த்தவன்றான்
இன்னும் வளர்க்கானோ வென்றாயே மின்னரவஞ்
சூடும் பெருமான் சுடுகாட்டி னின்றாடினை
யாடும் பெருமா னவன். (வள்ளியம்மை.) 12

திருவள்ளுவ நாயனார்.

எவ்வுயிருங் காக்கவொரு வீசனுண்டோ வில்லையோ
அவ்வுயிரில் யானொருவ னல்லனோ-வவ்வி
அருகுவது கொண்டிங் கலைவதே னன்னை
வருகுவது தானே வரும். 13

ஐயரொன் றுரைத்தீர் நாயேற் கடுக்குமோ வருளிலேனைப்
பொய்யொடு களவு மற்றுப் புலன்களை யொடுக்கிக் கொண்டு
உய்யவே புலன்க ளைந்து முயர்பா வொளியுள் ளாக்கி
வெய்யவன் மதியும் போலே விரவுவ ரைய ராவர். 14

ஞானவா னென்று சொன்னீர் நாதவிந் துவுங் கடந்து
கானலை வரையுஞ் சுட்டுக் கடுவெளி பரமா னந்தந்
தானெனு மவையி ரண்டுந் தவிர்ந்துதன் வசமுங் கெட்டு
மோனமுங் கடந்தே யப்பான் முடிந்தவர் ஞானி யாவார். 15

சாதியிலே தொண்ணூற்றொன் பானுஞ்சாதி, சமயத்திற் பதின்மூன்றுஞ் சமய மாகும், நீதியிலே சிவனுடைய நீதி யாகும்,

நிலைமையிலே வேதாந்த நிலைமையாகும், ஆதியிலே யெங்களூர்
கருவூ ராகும், அந்ததநிற் போயடைவோம் பேரூர் தன்னிற்,
சோதியிலே பரஞ்சோதிக் கூட்ட மாகும், சொல்லுதற்கு மெங்
கள்குலஞ் சுக்கிலம தாமே. 16

எந்தவூ ரென்றீ ரிருந்தவூர் நீர்கேளீர்
அந்தவூர்ச் செய்தி யறியீரோ-வந்தவூர்
முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமாய்
அப்பாலும் பாழென் றறி. 17

நில்லுநில் லென்று சொன்னீர் நேசபா சங்க ளைந்தும்
புல்லறி வோடு வாங்கப் புலைகொலை களவு மற்றுச்
சொல்லுதற் கரிய ஞானச் சுழுமுனை முடியின் மீதில்
எல்லையுங் கடந்தே யப்பா லேகமா னவர்க ணிற்பார். 18

இருமிரு மென்று சொன்னீ ரேற்குமோ வேழை யேற்குத்
தருபொரு ளுணர்ந்து சைவ சமயமு மனைத்து நீங்கி
மருடனை வினையு நீங்கி மாசிலா வுண்மை ஞானம்
பொருந்தின ரிருப்பர் பின்பு பொருதவ ரிறப்பர் தாமே. 19

போமென வுரைத்தீ ரென்னைப் பொறியொடு புலன்க ளைந்தும்
ஆமெனும் விச்சை யோடு மங்ஙனே மதித்துக் கொண்டே
ஏமமுஞ் சாம மற்றே யிரவொடு பகலு மற்றுச்
சோமனூர் பதியை விட்டுத் துறந்தவர் போவ ரன்றே. 20

அடிசிற் கினியாளே யன்புடை யாளே
படிசொற் றவறுத பாவாய்-அடிவருடிப்
பின்றூங்கி முன்னெழுந்த பேதையே போதியோ
என்றூங்கு மென்கண் ணிரா. 21

மாதர்க் கிதங்கவி வாணர்க்குச் சால வணக்கங்குரு
நாதர்க்கு நீதியோ டாசார நண்பி னயந்த வர்க்குக்
கோதற்ற வாசகம் பொய்க்குப்பொய் கோளுக்குக்கோ ளறிவி
லாதர்க் கிரட்டிப் பறிவுடை யோர்செய்யு மாண்மைகளே. 22

சேய்கொண்டா ருங்கமலச் செம்மலுட னேயரவப்
பாய்கொண்டா னும்பணியும் பட்டைச் சுரத்தானே
நோய்கொண்டா னுங்கொளலா நூறுவய தாமளவும்
பேய்கொண்டா னுங்கொளலாம் பெண்கொள்ள லாகாதே. 23

நிட்டையிலே யிருந்து மனத் துறவடைந்த பெரியோர்க ணிமலன் றனைக், கிட்டையிலே தொடுத் தழுந்தி பெறுமனவும் பெரியசுகங் கிடைக்குங் காம, வெட்டையிலே மதிமயங்கிச் சிறுவருக்கு மணம்பேசி விரும்பித் தாலி, கட்டையிலே தொடுத்துநடுக் கட்டையிலே கிடந்துமட்டுங் கவலை தானே. 24

ஆக்கையெனும் புழுக்கூரம்ப யலைக்கலை யாப்பொருளை யருளொளியைப் பராபரத்துக் கப்புறமா மறிவை, நீக்கமற மயிர்முனைக்கு மிடமறவெங் கெங்கு நிறைந்துநின்ற பூரணமுதலை நினைவிலெழுஞ் சடமாய், பாக்கியங்கள் செய்தவர்க்குத் தவக்குறைகள் முடிக்கும் பழவடியார் தமக்குதவும் பசுந்துணர் கற்பகத்தை, வாக்குமன விகற்பத்தா லளவுபடா வொன்றை மாசற்ற வெறுவெளியை மனவெளியி லடைப்பாம். 25

ஐம்பொருளு நாற்பொருளு முப்பொருளும் பெய்தமைத்த
செம்பொருளை யெம்மறைக்குஞ் சேட்பொருளைத் தண்குருகூர்
சேய்மொழிய தென்பர் சிலரியா னிவ்வுலகிற் [ச்
தாய்மொழிய தென்பேன் றகைத்து. 26

---

பட்டினத்துப்பிள்ளையார் அருளிய திருவேகம்ப மாலை.

நன்றாரிற் பூட்டிய சூத்திரப் பாவைநன் றுந் தீதுமற்
றன்றாலு மாடிச் சலித்திடுமோ வந்தத் தன்மையைப்போ
லுன்றாலு மியானுந் திரிவதல் லான்மற் றனைப்பரிந்தா
லென்றாலிங் காவதுண் டோவிறை வாகச்சி யேகம்பனே. 1

பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லைப் பிறந்துமண்மே
லிறக்கும் பொழுது கொடுபோவ தில்லை யிடைநடுவிற்
குறிக்குமிச் செல்வஞ் சிவன்றந்த தென்று கொடுக்கறியா
திறக்குங் குலாமருக் கென்சொல்லு வேன்கச்சி யேகம்பனே. 2

கல்லார் சிவகதை நல்லோர் தமக்குக் கனவிலுமெய்
சொல்லார் பசித்தவர்க் கன்னங் கொடார்குரு சொன்னபடி
நில்லா ரறத்தை நினையார் நின்னாம நினைவிற்சற்று
மில்லா ரிருந்தென் னிறந்தென் புகல்கச்சி யேகம்பனே. 3

சொல்லால் வருங்குற்றஞ் சிந்தனை யால்வருந் தோடஞ்செய்த
தல்லாத தீவினை பார்வையிற் பாவங்கள் புண்ணியநூ

லல்லாத கேள்வியைக் கேட்டிடுந் திங்குக ளாயவுமற்
றெல்லாப் பிழையும் பொறுத்தருள் வாய்கச்சி யேகம்பனே. 4

நாறு முடலை நரிப்பொதி சோற்றினை நான்றினமுஞ்
சோறுங் கறியு நிரப்பிய பாண்டத்தைத் தோகையர்தங்
கூறு மலமு மிரத்தமுஞ் சோருங் குழியில்விழா
தேறும் படியருள் வாயிறை வாகச்சி யேகம்பனே. 5

அன்னை யெத்தனை யெத்தனை யன்னையோ வப்ப னெத்தனை யெத்தனை யப்பனோ, பின்னை யெத்தனை யெத்தனை பெண்டிரோ பிள்ளை யெத்தனை யெத்தனை பிள்ளையோ, முன்னை யெத்தனை யெத்தனை சன்மமோ மூடனாயடி யேனு மறிந்திலே, னின்ன மெத்தனை யெத்தனை சன்மமோ வென்செய்வேன் கச்சி யேகம்பனே. 6

சோறிடு நாடு துணிதருங் குப்பைதொண் டன்பரைக்கண்
டேறிடுங் கைக ளிறங்கிடுந் தீவினை யெப்பொழுது
நீறிடு மேனியர் சிற்றம் பலவர் நிருத்தங்கண்டா
லூறிடுங் கண்க ளுருகிடு நெஞ்சமென் னுள்ளமுமே. 7

காலை யுபாதி மலஞ்சல மாமன்றிக் கட்டுச்சியிற்
சால வுபாதி பசிதாக மாகுமுற் சஞ்சிதமா
மாலை யுபாதி துயில்காம மாமிவை மாற்றிவிட்டே
யால முகந்தரு ளம்பல வாவென்னை யாண்டருளே. 8

ஊட்டுவிப் பானு முறக்குவிப் பானுமிங் கொன்றொடொன்றை
மூட்டுவிப் பானு முயங்குவிப் பானு முயன்றவினை
காட்டுவிப் பானு மிருவினைப் பாசக் கயிற்றின்வழி
யாட்டுவிப் பானு மொருவனுண் டேதில்லை யம்பலத்தே. 9

தெய்வச் சிதம்பர தேவாவுன் சித்தந் திரும்பிவிட்டாற்
பொய்வைத்த சொப்பன மாமன்னர் வாழ்வும் புவியுமெங்கே
மெய்வைத்த செல்வமெங் கேமண்ட லீகர்தம் மேடையெங்கே
கைவைத்த நாடக சாலையெங் கேயிது கண்மயக்கே. 10

பிறவா திருக்க வரம்பெறல் வேண்டும் பிறந்துவிட்டா
லிறவா திருக்க மருந்துண்டு காணிது வெப்படியோ
வறமார் புகழ்த்தில்லை யம்பல வாண ரடிக்கமல
மறவா திருமன மேயது காணன் மருந்துனக்கே.

அண்ணாறன் வீதி யரசிருப் பாரு மணிபடையோர்
நண்ணொரு நாலொன்ப தாமவ ரேவனு நண்ணுமிவ்வூர்
துண்ணொன் பசிக்கு மடைப்பள்ளி யான சுகமுமெல்லா
மெண்ணிலி கால மவமே விடுத்தன மெண்ணரிதே. 20

கறையற்ற பல்லுங் கரித்துணி யாடையுங் கள்ளமின்றிப்
பொறையுற்ற நெஞ்சமும் பொல்லாத வூணும் புறந்திண்ணையுந்
தறையிற் கிடப்பு மிரந்துண்ணு மோடுஞ் சகமறியக்
குறைவற்ற செல்வமென் றேசால மாமறை கூப்பிடுமே. 21

எட்டுத் திசையும் பதினாறு கோணமு மெங்குமொன்றாய்
முட்டித் ததும்பி முளைத்தெழுங் சோதியை மூடரெல்லாங்
கட்டிச் சுருட்டித்தங் கக்கத்தில் வைப்பர் கருத்தில்வையார்
பட்டப் பகலை யிரவென்று கூறிடும் பாதகரே. 22

வாய்நாறு மூழன் மயிர்ச்சிக்கு நாறிடு மையிடுங்கண்
பீநாறு மங்கம் பிணம்வடி நாறும் பெருங்குழிவாய்ச்
சீநாறும் யோனி யழுநாறு மிந்தியச் சேறுசிந்திப்
பாய்நாறு மங்கையர்க் கோவிங்ங னேமனம் பற்றியதே. 23

உரைக்கைக்கு நல்ல திருவெழுத் தைந்துண்டு ரைப்படியே
செருக்கித் தரிக்கத் திருநீறு முண்டு தெருக்குப்பையிற்
றரிக்கக் கரித்துணி யாடையுமுண் டெந்தச் சாதியினு
மிரக்கத் துணிந்துகொண் டேன்குறை வேது மெனக்கில்லையே.

பேய்போற் றிரிந்து பிணம்போற் கிடந்திட்ட பிச்சையெல்லா
நாய்போ லருந்தி நரிபோ லுழன்றுநன் மங்கையரைத்
தாய்போற் கருதித் தமர்போ லனைவர்க்குந் தாழ்மை சொல்லிச்
சேய்போ லிருப்பர்கண் டீருண்மை ஞானந் தெளிந்தவரே. 25

நீற்றைப் புனைந்தென்ன நீராடப் போயென்ன நீமனமே
மாற்றிப் பிறக்க வகையறிந் தாயில்லை மாமறைநூ
லேற்றிக் கிடக்கு மெழுகோடி மந்திர மென்னகண்டா
யாற்றிற் கிடந்துந் துறையறி யாம லலைகின்றையே. 26

அஞ்சக் கரமெனுங் கோடாலி கொண்டிந்த வைம்புலனும்
வஞ்சப் புலக்கட்டை வேரற வெட்டி வளங்கள்செய்து
விஞ்சத் திருத்திச் சதாசிவ மென்கின்ற வித்தையிட்டுப்
புஞ்சக் களைபறித் தேன்வளர்த் தேன்சிவ போகத்தையே. 27

மையாடு கண்ணியு மைந்தரும் வாழ்வு மனையுஞ்செந்தீ
யையா இன்மாயை யுருவெளித் தோற்ற மகிலத்துள்ளே
மெய்யா யிருந்தது நாட்செல நாட்செல வெட்டவெறும்
பொய்யாய்ப் பழங்கதை யாய்க்கன வாய்மெல்லப் போனதுவே.

ஆங்காரப் பொக்கிசங் கோபக் களஞ்சிய மாணவந்தா
னீங்கா வரண்மனை பொய்வைத்த கூடம்வின் னேடிவளர்
தேங்கார் பெருமதிற் காமவி லாசமித் தேகங்கந்தல்
பாங்கா யுனைப்பணிந் தெப்படி ஞானம் பயிப்பதுவே. 29

மானார் விழியைக் கடந்தேறி வந்தனன் வாழ்குருவுங்
கோனாகி யென்னைக் குடியேற்றிக் கொண்டனன் குற்றமில்லை
போனாலும் பேறிருந் தாலுநற் பேறிது பொய்யன்றுகா
ணானா லிந்த வுடம்போ டிருப்ப தருவருப்பே. 30

வாவியெல்லாந் தீர்த்த மணலெல்லாம் வெண்ணீறு
காவனங்க ளெல்லாங் கணநாதர் பூவுலகி
லீது சிவலோக மென்றென்றே மெய்த்தவத்தோ
ரோதுந் திருவொற்றி யூர். 31

பொய்யை யொழியாய் புலாலைவிடாய் காளத்தி
யையரை யெண்ணா யறஞ்செய்யாய்-வெய்ய
சினமே யொழியாய் திருவெழுத்தைந் தோதாய்
மனமே யுனக்கென்ன மாண்பு. 32

மாதா வுடல்சலித்தாள் வல்வினையேன் கால்சலித்தேன்
வேதாவுங் கைசலித்து விட்டானே-நாதா
இருப்பையூர் வாழ்சிவனே யின்னமோ ரன்னை
கருப்பையூர் வாராமற் கா. 33

மண்ணுந் தணலாற வானும் புகையாற
வெண்ணரிய தாயு மிளைப்பாறப்-பண்ணுமயன்
கையாற வும்மடியேன் காலாற வுங்கண்பா
ரையா திருவையா று. 34

காலன் வருமுன்னே கண்பஞ் சடைமுன்னே
பாலுண் கடைவாய் படுமுன்னே-மேல்விழுந்தே

யுற்றா ரழுமுன்னே யூரார் சுடுமுன்னே
குற்றாலத் தானையே கூறு. 35

சிற்றம் பலமுஞ் சிவனு மருகிருக்க
வெற்றம் பலந்தேடி விட்டோமே-நித்தம்
பிறந்திடத்தைத் தேடுதே பேதைமட நெஞ்சங்
கறந்திடத்தை நாடுதே கண். 36

வாசற் படிகடந்து வாராத பிச்சைக்கிங்
காசைப் படுவதிலே யண்ணலே-யாசைதனைப்
பட்டிறந்த காலமெலாம் போதும் பரமேட்டி
சுட்டிறந்த ஞானத்தைச் சொல். 37

நச்சரவம் பூண்டானை நன்றாய்த் தொழுவதுவு
மிச்சையிலே தானங் கிருப்பதுவும்-பிச்சைதனை
வாங்குவது முண்பதுவும் வந்துதிரு வாயிலிலே
தூங்குவதுந் தானே சுகம். 38

இருக்கு மிடந்தேடி யென்பசிக்கே யன்ன
முருக்கமுடன் கொண்டுவந்தா லுண்பேன்-பெருக்க
வழைத்தாலும் போகே னரனேயென் றேக
மிளைத்தாலும் போகே னினி. 39

ஆவியொடு காய மழிந்தாலு மேதினியிற்
பாவியென்று நாமம் படையாதே-மேவியசீர்
வித்தார முங்கடம்பும் வேண்டாம் மடநெஞ்சே
செத்தாரைப் போலே திரி. 40

இருப்பதுபொய் போவதுமெய் யென்றெண்ணி நெஞ்சே
யொருத்தருக்குந் தீங்கினை யுன்னாதே-பருத்ததொந்தி
நம்மதென்று நாமிருப்ப நாய்நரிகள் பேய்கழுகு
தம்மதென்று தாமிருக்குந் தான். 41

நாப்பிளக்கப் பொய்யுரைத்து நவநிதியந்தேடி நலனொன்று மறியாத நாரியரைக் கூடிப், பூப்பிளக்கப் பொய்யுரைத்துப் புற்றீசல் போலப் புலபுலெனக் கலகலெனப் புதல்வர்களைப் பெறுவீர், காப்பதற்கும் வகையறியீர் கைவிடவு மாட்டீர் கமர்பிளந்த மரத்துளையிற் கானுழைத்துக் கொண்டே, ஆப்பதனை

யசைத்துவிட்ட குரங்கதனைப் போல அகப்பட்டோர் கிடந்துழல
வகப்பட்டோரே. 42

மண்ணு முருகு மாமுருகு மாயையுருகு மாலுருகும்
பெண்ணு முருகு மாலுருகும் பேதாபேத வகையுருகும்
அண்ணா லுருகு மிடத்தமர்க்க வாத்தா னுருகு மாவனையான்
எண்ணி யுருகுங் குருநாத னென்பா லுரைத்த மொழியே.

நெஞ்சோடு புலம்பல்.

முப்பாழும் பாழாய் முதற்பாழ் வெறும்பாழாய்
அப்பாழுக் கப்பாலின் குடியமைதப் போற்றாமல்
இப்பாழாம் வாழ்க்கைநம்பி யேற்றவர்க்கொன் றீயாமல்
துப்பாழாய் வந்தவினை சூழ்ந்ததனை யே நெஞ்சமே. 41

அஞ்சருளைப் போற்றி யைந்துபுல னைத்துறக்க
நெஞ்சே யுனக்கு நினைவுதான் சொல்லுகிறேன்
வஞ்சகத்தை நீக்கி மறுபிறவி வாராமல்
செஞ்சரணத் தானைச் சிந்தைசெய்வாய் நெஞ்சமே. 45

ஓட்டைத் துருத்தியை யுடையும் புழுக்கூட்டை
ஆட்டுஞ் சிவசித்த ருணமிகப் போற்றியே
வீட்டைத் திறந்து வெளியைவெளி யாவழைத்துக்
காட்டும் பொருளிதென்று கருதிலையே நெஞ்சமே. 46

அஞ்செழுத்தா யெட்டெழுத்தா யைம்பத்தோ ரட்சரமாய்ப்
பிஞ்செழுத்தாய் நின்ற பெருமானைப் போற்றாமல்
வஞ்சகமா யுற்றழலை மாதர்வலைக் குள்ளாகிப்
பஞ்சரித்துத் தேடிப் பாழுக் கிறைத்தேனே. 47

அஞ்சு முருவாகி யைமூன்று மெட்டொன்றாய்
மிஞ்சி யிருந்த விளக்கொளியைப் போற்றாமல்
பஞ்சிவிடு வன்னியைப்போற் பற்றிப் பிடியாமல்
நஞ்சுண்ட கெண்டையைப்போல் நானலைந்து கெட்டேனே. 48

ஊனை முடனே யுடையும் புழுக்கூட்டை
மானமுட னேசமது பண்ணுலகின் மாளாமல்
ஆனதொரு பஞ்சவர்க ளாண்டிருந்த தேசம்விட்டுப்
போனதுபோ லாகாம் போய்ப்பிழைத்தோ மில்லையே. 49

அருட் புலம்பல்.

வாக்கு மனமுங் கடந்த மனோலயன்காண்
நோக்க வரியவன்கா னுண்ணரிய னுண்ணியன்காண். 49

ஓசை யொடுங்குமிடம் ஓங்காரத் துள்ளொளிகாண்
பேசா திருக்கும் பிரமமிது வென்றாண்டி.
சின்மயநன் னோக்காற் சிற்சொருபங் காட்டியெனை
தன்மயமா யாக்கியே தானவனாய் நின்றாண்டி. 50

பிரபோத சந்திரோதயம் என்று வழங்குகின்ற
## மெய்ஞ்ஞான விளக்கம்.

அத்துவிதம் வாசாம கோசர மனோதீத மசல மூலந்
தத்துவமப் பிரமேயஞ் சர்வசமஞ் சச்சிதா னந்தஞ் சாந்தஞ்
சுத்தமவி யத்தமவி காரமனு பவந்துரியஞ் சுயம்பிர காசம்
நித்தியநிர்க் குணமனந்த நிரதிசயம் பிரமமென நின்றதொன்றே.

போந்துவிகா ரஞ்சிறிதும் பொருந்தாது தன்னியல்பிற் பொருந்தி நிற்பக், காந்தமசை யாதிருந்து மக்காந்தத் ததிரூசிகம் பித் தாற்போல், வாய்ந்தவதன் சந்நிதியின் மாயைவிகா ரம்புரிந்து மணிச்சூன் முற்றி, யேய்ந்தபெயர் மானதனென் றெடுத்தோத வொருமகவை யீன்றாண் மன்னோ. 2

இருளதனை யொளியாக்கி யொளியதனை யிருளாக்கி யின்பந் தன்னை, யரியகொடுந் துயராக்கி யத்துன்பந் தனையின்ப மாக்கிச் செய்கை,மருளுறுமக் கொடுமாயை மார்பிலணைத் தேவளர்க்க வளர்ந்தான் யாதும், பொருவறுதன் றாதையெனுந் தருவினுக் கோர் புல்லுருவிப்போல வன்றே. 3

இடம்பெறுஞ் சோதி ரூப மேகமா கியும்பல் கோடி
யுடம்புக டோறு மங்கங் குறைகின்ற தெவ்வாறென்னிற்
படர்ந்தொளி பரப்புஞ் சோதிப் பரிதியொன் றாயுந் தெண்ணீர்க்
கடந்தொறு மோரோர் விம்பங் காட்டுதல் போலு மன்றே. 4

வேறு.

கல்லாமை கொலைதீமை களவாசை யின்சொற்
சொல்லாமை நடுவின்மை சுடுகோப மிவையே

யல்லாம லறமேது மறியார் தமுளமாம்
பொல்லாவ வித்தியா புரமொன்ற மைத்தான். 5

காலி ரண்டுநி றுத்தி மேலிரு கைபி ணைத்தொரு புறவெனும்
பாலி ணைக்கிமு கட்டு மேல்வளை யடர்க ரம்பெனு மாக்கையாற்
கோலி யிட்டபழுக்க றிக்கொரு குறையு ளுமல்வ ரிக்குமேற்
றோலி ணக்கிய கற்றை வேய்ந்துயர் கவர்பு லால்கொ டியற்றியே.

வந்துபோக விரண்டு வாசல் வகுத்து மற்றெழு சாளரந்
தந்து சக்கிர மாதி யீரிரு தளமெ டுத்ததன் மேன்மலர்க்
கொத்து லாவிய பாழு டிக்கனை குப்பம் வைத்தவிர் கூந்தலா
மூந்து நீள்கொடி மாட நாலு முகக்கண் மாளிகை முற்றினான்.

காமனதியர் பெரும்படை கைபரக் கெழுந்து
பூமிமீதுள புண்ணியத் தலங்களைப் பொருக்கிச்
சேமமாயுறை விவேகனை முதலியோர் திறத்தி
றுமமானது நிலைகெடப் புடைக்கு மக்காளில். 8

நல்லற நடுங்கியது மாதவ மொழுங்கியது ஞான நெறியு
மல்லலின் மயங்கிய தொழுக்கநிலை குன்றிய தொரட்ட விதமாந்
தொல்லையிய மாதியெனும் யோகமு மயங்கியது தூய மறையோ
டெல்லையில் புராணமு மடங்கிய தடங்கிய திரக்க மதுவே. 9

மங்கையர்கள் கற்பழிய வாழ்குடிமை குன்றியது வாய்மை
குடிபோய்த், தங்கலி னெடும்பொறை தகர்ந்தது பெருஞ்சமத
மங்கள் குலையச், சிங்கமுற வற்றது சாந்தியொடு தாந்தியோ
ர் சிரத்தையுடனே, பொங்கிய மயித்திரி யுபேட்சை யருண்மா
முதிதை போயு லையவே. 10

காமாதி படைஞரெனு காலிபுகா தறங்வேலி கட்டித் தீய,
மாமோக மிகுமோக னெனுங்களையும் வேரோடு வாங்கி நீக்கிக்,
கோமானின் கருணை வெள்ள நீர்பாய்ச்சி யுணர்வெனும்பைங்
கூழ்மீ தோங்கற், காமாறு விளைக்கி னல்லா லாராகின் னமுத
மெவர்க் கனுக லாமே. 11

எறிகடனை யெப்புவியி லேது மிலரேனு
மறிவுடைய ரேயுடையர் யாதுமறி வில்லார்
செறிவுடைய செல்வமொடு சீருடைய ரேனும்
வறிதுடைய ரல்லதவர் மற்றுடைய ரன்றே. 12

மிக்கவலி யோரெனினு மேவலரை வெல்வோர்
தக்கபரு வத்தினொடு சாருமிட நோக்கி
யக்கரும முற்றும்வகை யாய்ந்தழிவு றாதே
தொக்கபடை கொண்டமர் தொலைத்திடுவ ரன்றே. 13

படைபொருவ தற்குரிய பருவம்வரு மட்டுந்
தடையிலமர் யாரும்வலி தாழ்ந்துறைதல் வேண்டுங்
கடையுகம தென்றுபடர் காலமுண ராதே
யிடையிலெழு வாரிதியு மெல்லைகட வாதால். 14

பொல்லா தவர் நன்மை பொருந்துவது
நல்லார் மிகவன் றுயர்நண் ணுவதுந்
தொல்லார் வினையால் வரினுந் தொடர்பாய்
நில்லா தெனும்வாய் மொழிநிச் சயமே. 15

அரிசிவ பத்தி யாகு மரிவைய ரருளை நம்பாற்
புரிதிருப் பார்வை யுண்டு புண்ணிய மனைய நீயுண்
டுரியநல் லறனு முண்டா லுளத்துறு சுமதி யோடுந்
தெரிவுற வியற்று மிங்கென் செய்கையு முற்றா துண்டோ. 16

முழுத்த வல்வினைக் கோடையான் முறுகிய மனுவின்
குழுத்த ளர்ந்திட நோக்கியு முபநிடக் கொம்பிற்
பழுத்து நின்றமெய்ஞ் ஞானமாம் பழத்தை நீபடைத்து
மழுத்து மன்பிகந் தருள்செயா திருப்பதோ வறமே. 17

பருவ நோக்கி வான் மழைபொழிந் திடுவதும் பகலோ
னிருடு ரப்பதுந் தண்புன னதிகண்மற் றெவையும்
பெருகு நிற்பது மொப்பிலா நற்குணப் பெரியோ
ரருள்சு ரப்பதுந் தமக்கொரு பொருள்குறித் தன்றே. 18

தீங்கர் வெம்பிணி தீர்க்கு மூலிகை
கானிடை யிருந்துதங் கைவந் தாலென
மானிடர் பவங்களை மாற்று தற்குமெய்ஞ்
ஞானநா யகன்படை நாட்டில் வந்ததால். 19

அலையேறும் வாரிதிசூ ழும்புவியி லென்னைவெல்வா ராரே செந்தீ, யுலையேறு மெழுகெனமுத் தேவரும்பூங் கணைக்காற்றா துருகி வெள்ளி, மலையேறி னானொருவன் கடலேறி னானொருவன்

மறைந்து விண்ணின், றலையேறி னொருவ னாயினும்போ யின்ன
மங்குந் தவிர்ந்தார் கொல்லோ. 20

ஒத்தேறு முருவமில்லாப் பிரமமொன்று மேயொழிய வுரு
வமுள்ளா, ரெத்தேவ ராயினுமோர் பூங்கணையாற் றும்போத
மெல்லா நீங்கி, மத்தேறி யுடைத்தயிர்போன் மனஞ்சுழன்று
செயன்மறந்து மடவா ராசைப், பித்தேறி யிதமுறைத்துப் பே
தையர்க்கும் பேதையராய்ப் பின்செல் வாரால். 21

எதிருறத் துடிதுடித் தெரிவிழித் துணைசிவத்
ததிர்கொள்சொற் படபடத் தங்கமும் பதைபதைத்
துதிரமெய்க் குலைகுலைத் துட்கொதித் தெழுசினக்
கொதிபொறாப் பவர்களைக் குவலயத் தவர்களே. 22

தெருளறக் கலையினிற் றிறனறச் சிந்தையூ
டருளறப் பெரிதலைத் தறிஞரா மவரையுங்
குருடெனச் செவிடெனக் கொடியர்மற் றிவரெனப்
பொருடெரித் தழலெழப் புகலுவித் திடுவனால். 23

அறிவு கற்ற கல்வி வாய்மை யன்பு முன்ப டுத்தநல்
லுறவு நட்பொ ழுக்க மென்மை யொருவர் செய்த வுதவிசீர்
பிறவு மின்ன செய்கை மற்ற தெவையு நெஞ்சு பேர்வென
மறதி யுற்ற போதி யாவர் மனிதர் தேவர் மதியுளார். 24

அந்தரத் தமரரி லவனி மாந்தரிற்
றந்தவப் பயனவ ரவர்க்குத் தக்கது
வந்தடுத் ததுவென மனங்கொ ளாதுளே
வெந்தவப் பொறுமையை யாவர் வெல்வரே. 25

பேருல கசத்தோ சத்தோ பிரமமொன் றோவி ரண்டோ
வோருறி னரக சொர்க்க முள்ளதோ வில்ல தேயோ
வாருணர்ந் தவர்தா மென்றே யலைக்குஞ்சந் தேக னென்முன்
னேருறி னிற்பா னந்த நிச்சயன் கொல்லோ வென்றான். 26

தேகாபி மானம் பற்றி யானெனுஞ் செருக்குத் தானே
போகாத சொரூப மாகு மென்னுளும் பொருளை யீட்டி
மாகாத லவைமேல் வைத்தி தெனதென்றல் வடிவா யார்க்கு
மேகாவென் னகந்தை யாது மெவர்கொலோ மாப்பு றுவோ. 27

பேரினும் பெரியன் மிக்க பிறப்பினும் பெரியன் செல்வச்
சீரினும் பெரியன் கல்வித் திறத்தினும் பெரியன் றெவ்வர்
போரினும் பெரியன் மற்றைப் பொருளினும் பெரியன் யானே
யாரினும் பெரிய னென்னு மென்னையா ரடக்கப் பாலார். 28

பிறர்வெகுண் டியற்றுமெப் பிழையு முட்கொளாப்
பொறைவடி வாகிய வெனக்கு மென்பொறைத்
திறனைவற் புறுத்தலே தேக மாயென்பா
லுறைமரி யாதைக்கு மொருவ ரொப்பரோ. 29

வைதவர் தம்மையும் வாழ்த்தித் தம்வயிற்
கைதவம் புரிந்தறக் கடிய தானவை
செய்தவர் செயலையுந் தேர்வுறு தவென்
மெய்தரு மேன்மைபோன் மேன்மை வேறுண்டோ. 30

பொதுவது வாம்பரம் பொருளின் செய்கைபோ
லெதுவெது வெவரெவர்க் கியன்ற தென்றுதேர்ந்
ததுவது வவரவர்க் காயி ருக்குமச்
சதுரது போமலது தருவ தின்பமே. 31

காய்தறு கண்ணராங் கயவர் கைமிகத்
தீதுறும் வாசகஞ் செப்பி னுலெதிர்
வாய்திற வாமையா மௌன மன்றிவே
றேதகை வெல்வதற் கியன்ற செய்கையே. 32

முனிவெனுங் கொடுந்தழன் மூண்ட போததிற்
பனிவருந் தண்புனல் பரவி னுலென
நனிமுக மலர்ந்துமா நகைபு ரிந்துநல்
லினியசொல் வர்க்கெதி ரியம்பல் செய்வனே. 33

கோதினல் லின்சொல்யான் கூறும் போழ்தினுந்
தீதெனும் வடிவினர் சினம்வந் தென்வயின்
மோதினு மவர்க்கெதிர் முனிதன் மாற்றியே
யீதென தனுபவ மென்று கொள்வனே. 34

நன்னகை நகைமுக மலர்ச்சி நன்மொழி
மன்னக மகிழ்ச்சியிவ் வகைய யாவையு
மென்னது சின்னமா யிருத்த லாலவை
யன்னவெவ் வெகுளியை யழிக்கற் பாலதே. 35

வந்தவர் வாழ்த்தினும் வசையு ரைக்கினுஞ்
சந்தனம் பூசினுந் தசையைக் கொய்யினு
முந்துறு வினையினான் மூண்ட தாமெனச்
சிந்தையி னுன்னியான் சினத்தை வெல்வனே. 36

ஒருமையு ளாமைபோ லொடுக்கு மைம்பொறிப்
பெருமைநல் லறிஞர்பாற் பெறவு நல்கிமேல்
வருமதன் செருக்கையு மடிக்க வல்லனா
லருமைசெய் குணத்தனென் மனன டக்கவே. 37

எப்பொருளை யாயினு மிகந்துவிட லேயோர்
மெய்ப்படிவ மாமெனையு மப்பொருளின் வேட்கை
தப்புற விடுத்தலொரு தன்னுருவ மாமென்
னொப்பரும் விரத்தியையும் யாருலகில் வெல்வார். 38

பேராசை யாலினர் பின்சென்று முன்றாஞ்
தீராத மிடியாளர் சிலர்பாரி னுண்டே
நேராக விரில்வாழ்வு நினையாமல் வருமேல்
வாராத தார்தாம் வருந்தினும் வாராதே. 39

புன்பாவி வாணாள் புலர்ந்தாலு மெய்வெள்
ளொன்பா யுகுந்தாலு மில்லாமை யென்னும்
வன்பாடு நல்லோர்கள் வாய்விண்டு தன்மே
லன்பாளர் தம்பாலு மறியச்சொ லாரே. 40

கனிகாய் கிழங்குண்டு கானத்தி னன்னீர்
நனிமாக தியினுண்டு நாமுண்டு வைகத்
தனியான முழையுண்டு தவஞான நெறியுண்
டினிதாகி யெப்போது மெம்போது போமே. 41

புக்கவழி யூடொருவர் புக்குமிலர் போம்போ
தொக்கவரு வாருமில ருற்றநடு வின்கட்
டக்கதொரு தாயர்கிளை தந்தையுடன் வந்தோர்
மக்கண்மனை சுற்றமென வந்தவிவர் தாமே. 42

துறவிற் சுகம்போலொர் சுகமில்லை யென்றே
பெறலுற்ற வாழ்வைப் பிறர்க்குக் கொடுத்தப்
புறமுற்ற கானிற் புகுந்தின்ப முற்று
றறமுற்ற பார்வேந்த ரளவற்ற பேரால். 43

நன்றாந்திய நெஞ்சத்திடை நாடித் தெளிவுற்றே
யென்றாந்தனி நிலைபெற்றிடு மின்பப் பொருளுடையார்
துன்றும்பெரு வெள்ளத்திடை தோன்றுங்குமி ழியைப்போற்
பொன்றும்பொரு ளையுமேயொரு பொருளாய்நினை வாரோ. 44

துன்பத்தினை யின்பத் தினுஞ் சுகமா மெனமகிழு
மென்பக்கலி னடன்மச்சா னிகல்செய் குவாதெவ்வா
றன்புற்றிடு கடல்வாயமு தவ்வானவ ருண்ண
வன்புற்றிடு விடமுண்டவர்க் கிடரார்செய வல்லார். 45

அறிவா மென்னு நல்ல வமைச்சா லகமென்னுந்
திறலா மன்னன் றீவழியின்கட் செல்லாமே
பொறிவா யைந்தும் பொத்தி யடக்கிப் புகுதுந்நன்
னெறிவா யேகச் செய்குவ திங்கென் னெறியாமால். 46

உடல்வாய் கண்மூக் குச்செவி யைந்தா லுயர்வேழ
மடைவா குஞ்சேல் விட்டிலொ டேவண் டசுணம்போற்
கெடவா திக்குத் தெவ்வரு முண்டே கெவுடேசன்
றொடாா மற்றன் னுண்மை செருக்குந் தொழிலோர்க்கே. 47

ஓங்க மற்றம் முட்புல னைந்து முள்ளூடே
வாங்கா நிற்போர்க் கெத்தனை செல்வம் வந்தாலு
நீங்கா வாலப் பக்குவ மென்னு நெறிநில்லா
வாங்கா ரப்பே யெங்குள தாமோ வறியேமால். 48

வேற்றுயிர்கள் யாவினுளு மேயுறினு மொன்றாய்த்
தோற்றியழி வின்றியொளிர் சோதிதனை நாளு
மாற்றும்வகை யின்றியறி கின்றவகை யாயே
சாற்றுவது யாவதது தானெனது ஞானம். 49

மேதகு பலஞ்சிறிதும் வேட்டுமுய லாதே
யோதிய விருப்பினொடு மோர்வெறுப்பு றாதே
மூதுலகி லியாவினுளு முற்றிய பற்றில்லா
வேதமறு மியாவதது வென்கரும மாமால். 50

ஓவறு மகந்தையொடு மோர்விருப்பு மற்றே
தாவறு மசித்திசித்தி தம்மிலலை யாதே
மேவிய முயற்சியொடு மிக்கதிட முற்றோன்
யாவனவ னேபுவியில் யான்மகிழ் கருத்தா. 51

ஆதிவரு காரிய மகாரிய மிவற்று
ளோதுபிர விர்த்தியொழி வோடபய மச்ச
மோதுமொரு பந்தமொடு மோட்சமறி விக்கும்
யாதுளது நாளுமது வென்மதிய தாமால். 52

ஓத்தமன மிந்திரிய மோதிய பிராணை
னத்தகைய வானதொழி லத்தனையு நன்றாய்
வித்தகநல் யோகமதில் வேறுதரிப் பிக்கு
மித்தகைய யாவதது வென்றிருதி யாமால். 53

மின்சொலு மிடத்திலது முற்றும்விட மொத்தே
பின்சொலு மிடத்திலது போமுத மாகி
வன்சொருப மற்றவன் மதித்தெளிவி லுண்டா
மென்சுகம தாகுமென வித்தகைய சொன்னான். 54

திமிர வெங்களிற் றினுஞ்சிற் றெறும்பினு
மமர்பவ னொருவனன் றனுவு மொருவுந்
சமமெனக் குறிக்குமென் றன்னெறு டார்கொலோ
வுமிழ்சினப் பகைஞரா யுறும்வி ரோதரே. 55

பாலகன் வரும்போது பால்காக் துடைய கொங்கை
மாலுற முயங்குங் கேள்வன் வருங்கான் மயக்கு றீரான்
மேலவர் தொழிலுங் கீழோர் செய்கையும் வேறன் றேனுஞ்
சாலவு மனத்தின் பான்மை வேறுறச் சாரு மன்றே. 56

நெஞ்சக முருகுந தன்மை நீடறி வுடையார்க் கன்றி
வஞ்சகர் திறத்து முண்டா மென்னினு மொவ்வார் மாத
ரஞ்சன விழியா லுள்ள மறிவிலார் குழைவ ரீசன்
றஞ்செனு மருட்க ளேறக்காற் றம்முளங் கரைவர் சான்றோர். 57

மாசற்றோர் செய்ய வேண்டு மாதவ மியாது மில்லை
யாசற்றோர் செய்வ தில்லை யாதலா லினிய செய்கை
பேசுற்ற பெரியோர்க் கில்லை பிறர்க்குமி தில்லையென் றாலு
மோசைத்தெண் டிரைசூழ் பாரி லவர்க்கிவ ரொவ்வா ரொவ்வார்.

பொன்னும்பித் தளையு மொன்றே போனிறம் பொலியு மேனு
மின்னும்பற் றறக்குங் கல்லூ றைக்கும்போ துரைபொ ருமற்
றன்னும்பற் றவர்தம் மீட்டார் றாயகம் மினமொத் தாலும்
பன்னும்பற் பலவாஞ் செய்கைப் பண்புவே றுரு மன்றே. 59

நீருற்ற தகற்றிப் பால்கொ ளன்னத்தி னீர்மை போலப்
போருற்ற புல்லர் தானை யெவற்றையும் புறத்திற் றள்ளிச்
சீருற்ற நமது ஞானச் சேனையோ டொருங்கு சென்று
தாருற்ற தும்பை சூடிச் சாடுமின் பகையை யென்றான். 60

சித்த மூல மாமென்று செப்பும் புரியட்டகந் தெரிக்கிற்
சத்த மாதி யோரைந்தாந் தன்மாத் திரையி னோடுமனம்
புத்தி யாங்கா ரமுமாகும் புகலும் விகுதி தேகாதிக்
கொத்த தாகும் பிரபஞ்சக் கூறு மெனக்கூ றுவர்மாதோ. 61

இயற்கருணை தன்னுயிர்போ லெவ்வுயிர்க்கு மிரங்கல் வஞ்ச மின்மை யென்றன், மயக்கறுநன் னடுநிலைமை பொறுமை பிறர் வருத்தி னுள்ள மலங்குறுமை, முயக்கிறிடன் மறைநெறியா லல து முத்தி மற்றொன்றான் முற்றுதென்ற, றுயக்கிலுண வதுமித வூண் சுசிபுனன்மண் கொடுமாசு துடைப்ப தாமே. 62

சத்தா யகண்ட பூரணமாய்த் தனியா யருவாய்த் தற்பரமாய்ச்
சித்தா யனந்தா னந்தமாய்த் திகழு மொளியா யுலகெவைக்கும்
வித்தாய் வேத வளவையதாய் விமல மாகி யனுபூதி
வத்தாய் நித்த மாயென்றும் வயங்கு மந்தப் பிரமந்தான். 63

மாலைப் பழுதைப் பணியெனவே வயங்குங் கதிரோன் வந்தெழுங்
காலைப் பழுதை மெய்யாகிக் கண்ட பணிபொய் யாமதுபோ [த
லோலப் பரவைச் செக மவித்தையுற மெய்யாகு மொழியாத
மேலப் பிரம வித்தையுற மெய்யா முலகம் பொய்யாமால். 64

இன்று முலகும் பிரமத்தி னிடத்திற் றோன்றுந் தோன்றுது
நின்று லழியா தாம்பொய்யாய் நிலவுஞ் சுத்தி காரசிதங்
கன்று ரழலிற் காணாது காணும் வாறு விவகாரத்
தொன்று தாகும் பரமார்த்தத் துண்டு போலு முலகமுமே. 65

ஆற்றும் பயன்வேண்டாக் கரும மந்தக் கரண சுத்திதரும்
போற்றுஞ் சுத்தி தரும்போதம் போதம் பிரம னானென்னு
மூற்றந் தருநா னுதித்தலுமே யுயர்வான் மதிநீர்த் துளக்கமெனத்
தோற்றந் தருமா யையிற்றன்னைத் துளக்க மின்றிக் காணுவனால்,

கருவி காரண தியினீங்கிக் காணுந் தானே தானாகி
மருவு மனுபூ தியிற்கண்டு மற்றொன் றினையுங் காணும

னுரையு மிறந்து வானாதி யொழிய வொழியா தேமன்னிப்
பிரம நானே யெனத்தெளியும் பேறேபெரிய மெய்ஞ்ஞானம். 67

மறையின் முடிவாம் வாக்கியந்தான் மாவாக் கியமவ் வாக்கியத்
யறிஞரறிவர் குருமுகத்தா லடுத்தக் கிலையி லறியாதார் [தை
முறையி னுணரும் பொருட்டாக மொழியும் பஞ்ச சாதனங்கொ
டுறுதி யியம நியமாதி யோக முயற்சி யுணர்குவரால். [ண்

பொங்கு கடலு மலையும் விண்ணும் புவியுஞ்சுரரு மானிடருஞ்
சிங்கம் புலியா தியவிலங்குஞ் சீவ கோடி பிறவுமென்ன
வங்கங் குறுநாம ரூபாதி யவற்றாற் பலவா யிருப்பதெல்லா
மெங்குஞ் சச்சி தானந்த மயமா யிருந்த தெனக்கென்றான். 69

அறிவு மறியப் படும்பொருளு மறிவான் றானு மவ்விகற்பம்
பிறிய மோக னாதியர்செய் பிழைகண் முழுதும் பிழையாக
நெறிமை யகலாத் தன்றனை நினைத்த படியே நிறைவேற்ற
மறிவி லகண்ட பூரணசின் மயத்தைத் தழுவி வயங்கினனால். 70

மடிவிலா மானதன் லயிப்ப மாயை யாரோபித மறைய
முடிவிலாத சின்மயமா மூர்த்தி யுபாதி முட்டகன்று
விடிவிலாத விருட்பிழம்பை விழுங்கி யிமிர்ந்த வியன் சுடர்போ
னெடிய சோதி பரப்பியெங்கு நிறைந்தொன் றாகி நின்றானே. 71

வேதாந்தமநசிந்தாமணி.

முற்றுப்பெற்றது.

சற்குருநாதன் திருவடி வாழ்க.

உ

ஸ்ரீசாம்ப சதாசிவாய நமஃ

# அக்ஷரமாலிகாஸ்தோத்ரம்.

சாம்ப சதாசிவ சாம்ப சதாசிவ சாம்ப சதாசிவ சாம்ப சிவாஹர
அத்புத விக்ரக வமரா தீச்வர அகணித குணகண அமித சிவாஹர சா
ஆநந்தா ம்ருத வாச்ருத ரக்ஷக ஆத்மா நந்த மஹேச சிவாஹர சா
இந்து கலாதர இந்த்ரா திப்ரிய சுந்தர ரூப சுரேச சிவாஹர சா
ஈச சுரேச மஹேச ஜனப்ரிய கேசவ ஸேவித கீர்த்தி சிவாஹர சா
உரகா திப்ரிய பூஷண சங்கர கரக விநாச நடேச சிவாஹர சா
ஊர்ஜித தானவ நாச பராத்பர ஆர்ஜித பாவ விநாச சிவாஹர சா
ருக் வேதச்ருதி மௌளி விபூஷண அர்ககசந் த்ராக்னி த்ருநேத்ர சிவாஹர
ரூப நாமாதி ப்ரபஞ்ச விலட்சண தாப நிவாரண தத்வ சிவாஹர சா
லிங்க ஸ்வரூப ஸபேச புதப்ரிய மங்கள மூர்த்தி மஹேச சிவாஹர சா
லூதா தீச்வர ரூபப்ரிய சிவ வேதாந்த ப்ரிய வேத்ய சிவாஹர சா
ஏகாநேக ஸர்வேச ஜன ப்ரிய போகாதி ப்ரிய பூரண சிவாஹர சா
ஐஸ்வர் யார்ச்சித சின்மய சிற்கன சச்சிதா நந்த மஹேச சிவாஹர சா
ஓங்கா ராதிப வுரக விபூஷண ஹ்ரீங்கார ப்ரிய யீச சிவாஹர சா
ஔரஸ லாளித அந்தக நாசன கௌரீ சகித கிரீச சிவாஹர சா
அம்பர வாச சிதம்பர நாயக தும்புரு நாரத ஸேவ்ய சிவாஹர சா
ஆஹார ப்ரிய வட்ட திகீச்வ யோகி ஹ்ருதி ப்ரிய வாச சிவாஹர சா
கமலா சனவர கைலா சாதிப கருணா ஸாகர காந்த சிவாஹர சா
கட்கசூல ம்ருக டங்க தநுர்த்தர விக்ரம ரூப விசேஷ சிவாஹர சா
கங்கா கிரிஜா வல்லப குணஹித சங்கர ஸர்வ ஜனேச சிவாஹர சா
காதுக பஞ்சன பாதக நாசன போத சொரூப பூரண சிவாஹர சா
ஸாந்த ஸ்வரூபா நந்தவ ஞச்ரய வேத வேதாந்த ஸ்வரூப சிவாஹர சா
சண்ட விநுசன ஸகல ஜனப்ரிய மண்டலா தீச மஹேச சிவாஹர சா
சத்ர கிரீட சுகுண்டா திப்ரிய புத்ர ப்ரிய புவனேச சிவாஹர சா
ஜன்ம ஜரா மரணாதி விநாசன கல்மஷ விரஹித காசி சிவாஹர சா
ஜங்கா ராச்ருத ப்ருங்கிரி டீச்வர ஓங்கா ரேச விஸ்வேச சிவாஹர சா
ஞானா ஞ்யான விநாசன நிர்மல தீன ஜனப்ரிய தீப்தி சிவாஹர சா
டங்கர் யாவ்ருத தாருண சத்வர கிங்கர ஸேவ்ய கிரீடி சிவாஹர சா
டங்க ஸ்வரூப ஸஹஸ்ர கரோத்தம வாகீ ஸ்வர தேவ சிவாஹர சா
டம்ப விநாசன தாடிம பூஷண அம்பர வாச கிலேச சிவாஹர சா
டண்டண் டமருக டாரிம நிச்சல டுண்டி விநாயக ஸேவ்ய சிவாஹர சா

நளின விலோசன நடன மனோஹர அளிகுண பூஷண அமித சிவாஹர சா
தத்வ மஸ்யாதி வாக்யார்த்த ஸ்வரூப நித்ய சொரூப நிஜேஸ் சிவாஹர சா
ஸ்தாவர ஜங்கம புவன விலக்ஷண வ்யாபக வரமுனி சேவ்ய சிவாஹர சா
தந்தி விஞசன நளின மனோஹர சந்தன லேபன சரண சிவாஹர சா
தரணீ தரதர தவள விபாஸித தாஞுநிப ஸகவாத சிவாஹர சா
நாஞு மணிகண பூஷண நிர்க்குண நதஜன போஷண நாத சிவாஹர சா
பார்வதி நாயக பன்னக பூஷண பரமா நந்த பரேச சிவாஹர சா
பால விலோசன பாநு கோடிப்ரிய ஹாலா ஹலதா அமிர்த சிவாஹர சா
பந்த விமோசன த்ருத சர்மாம்பர ஸ்கந்தா திப்ரிய கநக சிவாஹர சா
பஸ்ம விலேபர பவபய பஞ்சன விஸ்மய ரூப விசேஷ சிவாஹர சா
மன்மத நாசன மதுரா நாயக சர்ம விபூஷண ஸாக்ஷி சிவாஹர சா
யதிஜன ஹ்ருதய நிவாஸித யீஸ்வர விதி விஷ்ணுவாதி சுஸேவ்ய சிவாஹர
ராமேச்வர ரமணீ யமுகாபுஜ ஸோமேஸ்வர சுகிரு தேச சிவாஹர சா
லங்கா தீஸ்வர ஸேவித சுககர லாவண் யாம்ருத லலித சிவாஹர சா
வாஜா நந வரவாசுகி பூஷண வனமா லாதி விபூஷ சிவாஹர சா
சாந்த ஸ்வரூபா திப்ரிய சுந்தர காந்தீ மதிப்ரிய காசி சிவாஹர சா
ஷண்முக ஜனக ஸுரேந்திர முனிப்ரிய ஷாட் குண்யாதி ஸமேத சிவாஹர
ஸம்சா ரார்ணவ நாசன சாஸ்வத ஸாது ஹ்ருதிப்ரிய வாஸ சிவாஹர சா
ஹரபுரு ஷோத்தம அநந்தா ம்ருத முராரிபு ஸேவ்ய நடேச சிவாஹர சா
லளிதா கந்தித ஸுஜத்ர விஸ்வேஸ்வர காளி நடப்ரிய காசி சிவாஹர சா
அக்ஷர ரூபா திப்ரிய சுந்தர ஸாஹமி ஜகத்ரய ஸ்வாமி சிவாஹர சா
சங்கர நாரா யண தீர்த்தப்ரிய சிவ கங்கா திர சுவாச சிவாஹர சா
சாம்பச தாசிவ சாம்ப சதாசிவ சாம்ப சதாசிவ சாம்ப சிவாஹர சா

முற்றும்.

ஓம் தத்சத்.